# முன்னுரை

*ஸ்ரீ குருவின் அருளினுல் ஸகல காரியங்களும் ஸித்தியாகின்றன. ஸத்குருவின் கடாக்ஷம் ஒன்றுதான் கிடைத்தற்கரியது. நமது நாட்டில்தான் பாதுகையை வணங்குவதும் ஸாஷ்டாங்க நமஸ்காரமும் கைக் கொள்ளப்பட்டு வருகிறது. அப்படியே நமது நாட்டில் மட்டும்தான் நதியை புண்ணிய நதியாகக்கருதி பாபங்களைப் போக்கி மனிதனைத் தூய்மைப்படுத்துவதற்குச் சான்ருக கங்கை, யமுனை, காவேரி ஸ்நானம் என்று விசேஷமாகச் சொல்லி வருகிருேம். இன்றும் செய்து வருவதைப் பார்க்கிருேம்.*

*நமது ஆசார்யபுருஷர்களான ஸ்ரீ சந்திரஶேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தமது அருளுறையில் ஒரு ஸமயம், ''மேல் நாடுகளில் கடவுளை அடைய மதத்தைக் கொள்கிருன். இந்தியாவில் தான் தத்துவப் பாதையைக் கைக் கொள்கிருேம். இக்கடினமான ப்ரயாணத்திற்கு நமது சடங்குகள், விழாக்கள் வ்ரதங்கள் எல்லாம் வழிகாட்டிகளாக திகழ்கின்றன. மெய்ஞானத்தைக் தேடும் உணர்வில் என்று பக்தனின் மனம் ஈடுபடுகிறதோ அப்பொழுதே அவனது காரியமும் ஸித்தியடைந்து விடுகிறது'' என்று, கூறியிருக்கிருர்கள்.*

*கடினமான ப்ரயாணமான தத்துவப் பாதையில் ஆன்மீக முன்னேற்றம் காண, க்ரியைகளும் சடங்குகளும் வழிகாட்டியாக விளங்குகின்றன என்று அருளியதுபோல் நமது காசி யாத்திரையும் ஒரு புனிதச் சடங்காகவும், கடினமான யாத்திரையாகவும் இருந்து வருகிறது.*

**காஶீபாபம் ஶஶீதாபம் தைன்யம் கல்பதருஸ்ததா ।**
**பாபம் தாபம் ச தைன்யம் ச கரோதி குருதர்சனம் ॥**

*கங்கையின் ஸ்மரணமே பாபங்களைப் போக்கவல்லது. ஸகல லோகத்துக்கும் குருவாகவும் பிதாவாகவும் உள்ள ஸ்ரீ விச்வேச்வரரின் தரிசனம் ஸமஸ்த*

*ஜீவர்களுடைய மனதில் சாந்தியையும், ஆனந்தத்தையும் தருகிறது என்பதை இன்றும் கண் கூடாகக் காணலாம்.*

*1979ம் ஆண்டு நான் இலங்கைப் பயணத்தை மேற்கொள்ள வேண்டி வந்தது. அப்போது பல இடங்களுக்குச் சென்று வந்தோம். திரும்பி வரும்போது என்னோடு வந்த எனது தாயார், 'காசிக்குப் போய் ஸ்நானம் செய்தால் தேவலை' என்று கூறினார்கள். அதற்கேற்றாற்போல் ஒரு மாதத்திற்குள்ளேயே காசியாத்திரை பாக்கியம் திடீரென்று கிட்டியது. சென்று வந்த அப்ப்ரயாணம் முதன் முறையாக 1963ல் செய்த யாத்திரையைவிடப் பலமடங்கு மன நிறைவையும் நிம்மதியையும் அளித்தது.*

*எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போல் காலஞ்சென்ற ஸ்ரீ ஸுப்ரமண்ய வாஜபேயியின் க்ருஹத்தில் தங்க ஏற்பாடு செய்திருந்தான் கருணையே வடிவான கந்தன். நான் தங்கியிருந்த அந்த அறையிலிருந்து ஜன்னல் வழியே பார்த்தால் காமகோடியின் கோவில் கருவறை தெரியும். அப்போதுதான் எமது குரு சரணம் என்ற நூலுக்கு அவரிடம் முன்னுரை எழுதும்படிக் கூறியிருந்தேன். அவரும் மிக அழகாக எழுதினார். என்னுடன் பேசும்போது காசியின் மஹிமையை யமயாதனையுங்கூட இல்லாத பெருமையான புண்ணிய க்ஷேத்திரம் இது. இதனது புராணங்களை வெளியிடவேண்டும் என்று கூறினார்.*

*இறைவனின் கருணையினால் ஏற்கனவே தெரிந்த முகமான ஸ்ரீ வைகுண்டத்தில் இருந்த காலஞ்சென்ற வக்கீல் ராஜாங்கமய்யர் மனைவி ஸ்ரீமதி கோமதி ராஜாங்கத்தை அங்கே கேதார் கட்டத்தில் ஸ்நானம் செய்யும்போது தற்செயலாகச் சந்தித்தேன். காசியிலேயே வசித்துவரும் அம்மையார் கோமதி ராஜாங்கம். ஆரம்பத்திலேயே ஸத் கைங்கர்யங்களில் ஈச்வர பஜநம் முதலியனவற்றிலும் ராமக்ருஷ்ண மடத்து யதீச்வரர்களால்*

*வழி வகுத்துக் கொடுக்கப்பட்டு ஸ்ரீ சிருங்கேரி மஹா ஸந்நிதானத்தின் மடத்தில் தங்கியிருக்கிறார். 'சங்கரக்ருபா' என்ற மடத்து பத்திரிகைளில் தொடர்ந்து பக்திக் கட்டுரைகள் கதைகள் அவர் எழுதி வந்திருப்பதை யாவரும் அறிவர்.*

*தனது மன நிம்மதியின் பொருட்டு, படிக்கும் விஷயங்களைப் பிறருக்கும் பயன்பட அவ்வப்போது தமது முதுமையின் பிடியிலும் அவ்வம்மையார் காசீ கண்டம் என்ற இந்தப் புனித நூலை சிரமப்பட்டு மொழி பெயர்த்து எழுதி வைத்திருந்தார்.*

*'பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை' என்ற உலகமாயிற்றே! அச்சிடப் பொருள் பலம் படைத்த பலரை, அணுகிப் பார்த்தார். ஏழைச் சொல் அம்பலம் ஏறுமா? காலம்தான் சென்றதே தவிர ஒருவரும் உதவ முன்வரவில்லை.*

*கடைசியில் இப்பொறுப்பை என்னை ஏற்குமாறு என் தாய் கேட்டபோது, ஆம் என்பதற்கும், இல்லை, முடியாது என்பதற்கும் 'நான்' இல்லை என்பதால், ஆகட்டும் செய்யலாம் என்றேன். சிறிது சிறிதாக எறும்புபோல் பலரிடம் சேர்த்த பொருளையும், கைப்ப்ரதியையும் ஒரு பெட்டி நிறைய 100 அத்தியாயங்கள் என்னிடம் ஒப்புவித்தாள் அந்த அம்மா. அவள் நிம்மதிப் பெருமூச்சு விடுவதற்காக ஏற்ற இப்பணி தொடங்கி ஒன்றரை ஆண்டு 'எறும்பூறக் கல் தேயும்' என்று 50 அத்தியாயங்கள் பூர்த்தியாகி இன்று உங்கள் கரங்களில் உங்கள் உள்ளத்தையும் தூய்மைப்படுத்த இந்நூல் உருவாகியது. இது முதற்பாகமே.*

*தமிழ் மக்கள் ராமாயணம் போல் இப்புனித நூலையும் வீட்டில் வைத்திருந்து ஸந்ததிகளுக்குப் பாதுகாத்துக் கொடுக்கப் பெரும் அஸ்திவாரமாக இருந்த ஸ்ரீமதி கோமதி ராஜாங்கத்தின் பணி சிறப்பானது என்பதில் ஸந்தேஹமே இல்லை.*

**'கீதா கங்கா ச காயத்ரீ கோவிந்தேதி ஹ்ருதி ஸ்திதே ।
சதுஸ்சகார ஸம்யுக்தே புனர்ஜன்ம ந வித்யதே ॥**

*என்பது ப்ரமாணம்; கீதா, கங்கை, காயத்ரீ, கோவிந்தன் என்று இந்த நான்கு 'க' கார சப்தங்களும் மநத்தில் பதிந்தால் மீண்டும் ஓர் வினைப் பிறவி சாராமல் வாழலாம் என்பது கருத்து.*

*எல்லாம் வல்ல இறைவன் திருச்செந்திலதிபன் கருணையினாலும் எனது குருவின் அருளினாலும் இந்நூல் அழகாக மலர்ந்து தங்கள் கரங்களில் உள்ளது. வாழ்க குரு அருளும். திருவருளும்.*

**செந்தில்துறவி**



உ

*கணபதி துணை*

# கடவுள் வணக்கம்

***(காப்பு)***

***பிள்ளையார்***

***டுண்டி ராஜ்ஞ: ப்ரிய: புத்ரோ பவாநீ ஶங்கரஸ்ய ச ।***
***தஸ்ய பூஜன மாத்ரேண த்ரயோபி வரதா ஸ்ஸதா***
***ஸ்ரவன் மத கடாஸக்த: ஸங்குஜ தலிச்ங்குல:***
***லஸத் ஸிந்தூர பூரோஸௌ ஜயதி ஸ்ரீகணுதிப: ॥***

***மஹாதேவ ஸ்தோத்ரம்***

**க்ரஹமேத்யத்ர விஸ்வேஸோ, பவான்யேதத் குடும்பினீ**
**ஸர்வேப்ய: காசிஸம்பத்ப்ய: மோக்ஷபிக்ஷாம் ப்ரயச்சதி ।**
**ஶாந்திகந்தாலஸத் கண்டௌ, மனஸ்தாலி மிலத்கர:**
**த்ரிபுராரி: புரத்வாரி ஹதாஸ்யாம் மோக்ஷபிக்ஷக: ॥**

**துர்க்கா ஸ்தோத்ரம்**

**புஷ்ப வ்ருஷ்டிம் ப்ரகுர்வந்த: ப்ராப்தாதேவ மஹர்ஷிபி:**
**துஷ்டுவுஸ்ச மஹாதேவீம்  மஹாஸ்துதிபி: ஆதராத்: ॥**
**அத்ய ப்ரப்ருதி மே நாம துர்கேதி க்யாதிம் ஏஷ்யதி**
**துர்க்க தைத்யஸ்ச ஸமரே பாதநாத் அதிதுர்கமாத் ॥**

**துருவனுக்கு விஷ்ணு பகவானுடைய தரிசனம்**

**ப்ரோத்யத் காதம்பினீ மத்ய வித்யுத்தாம ஸமான ருக் ।**
**புர: பீதாம்பர: க்ருஷ்ண: தேன நேத்ராதிதி: க்ருத: ॥**
**நபோ நிகஷ பாஷாணே மேருகாஞ்சன ரேகித: ।**
**யதா ததா த்ருவேணௌஷிததா கருடவாஹன: ॥**
**ஸ¬நீல ககனம் யத்தத் பூஷிதம் து கலாவத: ।**
**பீதேன வாஸஸா யுக்தம் ஸ ததர்ஶ ஹரிம் ததா ॥**

### விஸ்வநாதரின் ஸ்வர்ண மந்திரம்

**மோக்ஷலக்ஷ்மீ விலாஸஸ்ய கலசோ யைர் நிரீக்ஷித: ।**
**நிதான கலசஸ்தந்து ந முஞ்சதி பதேபதே ॥**
**தூரதோபி பதாகாபி, மம ப்ராஸாத மூர்த்தஜா**
**நேத்ராதிதி க்ருதாயாஸ்து நித்யம் தேஹி தயாம்மம ॥**

### தசாஸ்வமேதத்துறை *(கட்டம்)*

**ததோ பகீரதேனைவ ஆநீதாம் நந்தகானனே ।**
**கங்கா தேவீ ததோ ஜாதா காச்யாம் உத்தரவாஹினீ ।**
**ததைவ சூலடங்கஸ்ய தக்ஷிணே யமுனாநதீ ।**
**பூர்வாபிவாஹிணி ஜாதா தத்ர குப்தா ஸரஸ்வதீ ।**
**பூர்வே கங்கா பரம் பாரம் தக்ஷிணே தசஹரேஸ்வராத் ॥**
**பஸ்சிமே அகஸ்த்ய குண்டஸ்ச உத்தரே ஸோமநாதகாத் । ।**
*(சிவரஹஸ்யத்திலிருந்து)*

### பஞ்ச கங்கா கட்டம்

**கிரணு தூத பாபா ச புண்ய தோயா ஸரஸ்வதீ**
**கங்கா ச யமுனு சைவ பஞ்சநத்யோத்ர கீர்த்திதா: ॥**
**அத: பஞ்சநதம் நாம தீர்த்தம் த்ரைலோக்யவிஸ்ருதம்**
**த்த்ரா புலதோ ந க்ருஹ்ண்ணீயாத் - தேஹம் ந பாஞ்சபௌதிகம்**

**(காசி கண்டத்திலிருந்து)**

### மணிகர்ணிகாகட்டம்

**கிமு நிர்வாண பதஸ்ய பத்ரபீடம்**
**ம்ருதுலம் தல்ப மதோ நு மோக்ஷலக்ஷ்ம்யா: ।**
**அதவா மணிகர்ணிகாஸ்தலீ பரமானந்த ஸுகந்த ஜன்மபூ: ।**
**சராசரேஷு ஸர்வேஷு யாவந்தஸ்ச ஸசேதனு: ।**

**தாவந்த: ஸ்ராத்தி மாத்யான்னே மணிகர்ணீ ஜலேமயே**
**ஆங்கங்கா கேசவாம்ஶைவ ஆஹரிஶ்சந்த்ரமண்டபாத் ।**
**ஆ மத்யாத் தேவசரித: ஸ்வர்த்வாரான் மணிகர்ணிகா ।**

*(காசீ கண்டத்திலிருந்து)*

## *(''மஹாராஜாவைப்பற்றி'') 52 வது அத்யாயம்*

## *50வது ஸ்லோகம்*

**விஸ்வேசானுக்ரஹேணைவ த்வயைஷா பால்யதே புரீ ।**
**ஏகஸ்யாபயவனுத் காஶ்யாம் த்ரைலோக்ய மவிதம்பவேத் ।**
**ஸ்ரீமன் மஹாராஜாதி ராஜத்விராஜ**
**காசீராஜ! மஹாராஜ! பஹதூர் ஸர் ஸ்ரீப்ரபு நாரயணஸின்ஹா**

### நமஸ்காரம்

**விஸ்வேசம் மாதவம் டுண்டிராஜௌ**
**ஸ்ரீதண்டபாணிம் ஸபைரவேண ।**
**காசீம் குஹாம் தேவதுனீம் க்ரஹேசம்**
**வந்தே பவானீம் மணிகர்ணிகாம் ச ॥**

### குருவந்தனம்

**கங்கா பாபம் சசீதாபம் தைன்யம் கல்பதருஸ்ததா ।**
**பாபம் தாபம் ச தைன்யம் ச ஹரதி குருதர்சனம் ॥**



# மொழிபெயர்ப்பாளரின்
# (மன்னிப்பு கோறுதல்) விநயம்

*காசி யாத்திரையை சாஸ்திர ப்ரகாரம் பூர்த்தி செய்வதுதென்பது கடினமான விஷயம். அதுபோலவே அதனுடைய முழு விதியையும் எழுதுவதும் கடினம். நான் எனது அல்ப புத்தியையனுஸரித்து அன்ய க்ரந்தங்களிலிருந்தும் செவி வழியே கேட்டவைகளிலிருந்தும் முக்கியமானவைகளைச் சேகரித்து இதை எழுதியிருக்கிறேன். இது கடினமான அனுபவம். ஆதலால் இதை எழுதும்பொழுது கவனக் குறைவில்லாமல் எழுதிய போதும் முக்யமான விஷயங்களை விட்டு விட்டு வேண்டாத விவரங்கள் வந்திருந்தாலும், அது ஆச்சர்யப்படக்கூடிய விஷயமல்ல. அதனுல் அறிவுமிக்க ஸஹோதர ஸஹோதரிகளிடம் விநயத்துடன் வேண்டிக்கொள்வது என்னவென்றால்* **யதாதத்தே தோஷாத் குணமகிலம் அத்ப்ய: பய இவ** *என்ற வாக்கியப்படி நீரை நீக்கிப் பாலை மட்டும் பருகும் அன்னப்பக்ஷி போல் குற்றம் நீக்கிக் குணத்தைக் கொள்ளவேண்டும் என்பதே என் ப்ரார்த்தனை -*

***கோமதி ராஜாங்கம்***



# காசியாத்திரை விதி

*காசீ கண்டத்தில், காசியில் செய்யவேண்டிய அநேக யாத்திரைகளைக் குறித்துக் கூறப்பட்டிருக்கிறது. அந்நிய புராணங்களிலும் கூறப்பட்டிருக்கிறது. காசியின் விளம்பரப் புத்தகங்களிலும் இவைகளைப்பற்றிக் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் அவைகளெல்லாம் முழுமையான யாத்திரைவிதி என்று கூற முடியாது. அதனால் யாத்ரிகர்களின் ஸௌகர்யத்திற்காகச் சுருக்கமாக இங்கு கூறப்பட்டிருக்கிறது. அதனால் யாத்திரையை விரும்புகிற ஜனங்கள் இதைப் பார்த்தே தெரிந்து கொள்ளலாம். அந்நிய ப்ரதேசங்களிலிருந்து வருகிறவர்களுக்கு காசி யாத்திரையைப் பற்றித் தெரிந்திருக்க நியாயமில்லை. அவர்களுக்கு வருகின்ற வழிகாட்டிகளும் படிப்பில்லாதவர்களாகவோ, விவரம் அறியாதவர்களாகவோ பணத்திற்கு ஆசைப்பட்டவர்களாகவோ இருக்கலாம். அதனால் எல்லோரும் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டுமென்றே இந்த யாத்திரைச் சுருக்கம் எழுதப்பட்டிருக்கிறது.*

*காசீகண்டம் கூறுகிறது:-* **காசியில் ஒருநாள் கூட யாத்திரையில்லாமல் கழிக்காதே** *என்றும் அப்படிக் கழித்தால், அவர்களுடைய பூர்வ புருஷர்கள் வருந்துகிறார்களென்றும் காசீகண்டம் கூறுகிறது. அந்நிய ப்ரதேசங்களிலிருந்து காசீயாத்திரைக்குப் புறப்படும் முன்னால், விதிப்ப்ரகாரம் யாத்திரை செய்யவேண்டுமென்றால், தங்கள் வீடுகளில் கணேசாதி பூஜைகளை முடித்துக் கொண்டு, ஹவிஸ், நெய் இவைகளினால் ஸ்ராத்தம் செய்து, ஸ்ராத்தசேஷமான நெய்யை ஆசமனம் பண்ணிவிட்டு, தன்னுடைய கிராமத்தைவிட்டுப் புறப்படவேண்டும். பிறகு காசியை அடைந்து உபவாஸம், முண்டனம், ஸ்நானம், ஸ்ராத்தம், தானம் இவைகளை முடித்துக்கொண்டு, தீர்த்த*

யாத்திரையைத் தொடங்க வேண்டும். யாத்திரைக்கு வாஹனங்களோ, வண்டியோ, குடையோ, செருப்போ, உபயோகப்படுத்தக் கூடாது. ஸ்த்ரீகளுக்கு முண்டனம் விதிவிலக்கு. தலைமுடியில் மூன்றங்குலம் முன்வகிட்டின் பக்கத்திலிருந்து கத்தரித்துவிட்டால் போதுமானது.

காசி ரஹஸ்யம் கூறுகிறது:- இஷ்டமித்ரபந்துக்களுக்கு தர்ப்பையைப் போட்டு முடிபோட்டு அதில் ஆவாஹனம் பண்ணி தீர்த்தாபிஷேகம் செய்வித்தால் அவர்களுக்கு எட்டில் ஒரு பங்கு பலன் (புண்ணியம்) கிடைக்கும். தனக்கு வரசௌகரியப்படாதவர்கள் கர்மானுஷ்ட ப்ராம்மணனை ஒருவரைக் காசியில் வசிப்பதற்காகப் பொருளுதவி செய்தால் அதைவிடப் புண்ணியம் ஸித்திக்கும். காசியில் வாஸம் செய்பவர்களைவிட அங்கு வசிப்பதற்காக அனுப்பியவர் அவருக்குக் கோடிப் புண்ணியம் அதிகமாகக் கிடைக்கிறது.காசியில் வாஸம் செய்கிறவன், தான் மாத்திரம் கடைத்தேறுகிறான்.ஆனால் அவனால் காசியில் வஸிக்க நேர்ந்தவர்கள் தாங்களும் கடைத்தேறித் தங்களுக்கு உதவினவனையும் கரையேற்றுகிறார்கள். இதனால் உதவினவனுக்கு இரண்டு பங்கு புண்ணியம் கிடைக்கிறது. இது யாத்திரை விஷயத்திலும் ஒக்கும். காசிகங்கையில் உள்ள மண்ணை அந்நிய இடங்களுக்கு எடுத்துக்கொண்டு போகக் கூடாது. காசியின் மண்ணை வெளியில் எடுத்துக்கொண்டு போக விரும்புகிறவன் (ரௌரவாதி) நரகில் வீழ்கிறான். இதைப்பற்றி 'விஷ்ணு தர்மோத்தர' புராணம் 'சௌபரி ஸம்ஹிதை' இவைகளில் கூறப்பட்டிருக்கின்றன. யாத்ரிகர்கள் தினந்தோறும் நித்ய கர்மங்களை முடித்துக்கொண்டே யாத்திரைக்குச் செல்ல வேண்டும். யாத்திரை செய்யும் பொழுது இஷ்டதேவதையை மனதில் நினைத்துக் கொண்டு (தியானித்து) மௌனமாகச் செல்ல வேண்டும் அல்லது கூட்டமாகச் செல்ல நேர்ந்தால் 'ஹரஹரமஹாதேவ சம்போ, காசீ விஸ்வநாத! கங்கே! என்று கோஷித்துக் கொண்டு செல்ல வேண்டும்.

ஏனென்றூல் கோஷ்டியுடன் செல்லும் போது, பேசாமல் செல்ல முடியாது; அதனுல் மந்த்ரம் மாதிரி இந்த பஜனேயை உச்சரித்துக் கொண்டு செல்ல வேண்டும் என்பது காசி வழக்கம். யாத்திரையில் எங்கெங்கு ஸ்ஞனம், ஆசமனம், தர்ப்பணம், தேவபூஜை, தானம் இவைகளே விதித்திருக்கிறதோ அவைகளேத் தங்கள் சக்திக்கு உகந்தவாறு செய்ய வேண்டும். கங்கா, விஸ்வநாதர் இவர்களுடைய யாத்திரையைப் ப்ரதி தினமும் செய்ய வேண்டும். யாத்திரையென்றூல் தவருமல் சென்று தரிசனம் செய்வதேயாகும். இவைகளில் முக்கியமானது இரண்டு யாத்திரை:- முதலாவது கங்காஸ்ஞனம்; இரண்டாவது விஸ்வநாதர் தரிசனம். இதை நித்ய கர்மா என்றே கூறலாம். ப்ரதி தினமும் மணிகர்ணிகையில் சென்று ஸ்ஞனம் செய்ய வேண்டும்; ப்ரதி தினமும், பூ, பழம், ஜலம், வில்வபத்ரம் இவைகளினுல் விஸ்வநாதரைப் பூஜிக்கவேண்டும். ஸனத் குமார ஸம்ஹிதை இதைப்பற்றிக் கூறுகிறது:-

அதாவது, கங்காதேவியின் இதய ரூபமும் பகவானுடைய முகரூபமான மணிகர்ணிகையில் ஸ்ஞனம் செய்பவன் சிவரூபமாகவே! ஆகிருன். அவனுக்குப் பிறகு ஜன்மம் இல்லே யென்று பார்வதிக்கு சிவபிரான் கூறுகிருர். 'மணிகர்ணிகா குண்டம்' என்பது கங்கையின் மேற்குக் கரையில் இருக்கிறது. அதிலிருந்து ஜலம் ப்ரம்மநாளத்திலிருந்து உருகி, கங்கையில் கலக்கிறது. அதையே 'மணிகர்ணிகைத் துறை' என்று கூறுகிருேம்; அதைப் போலவே 'தசாஸ்வமேத கட்டத்தில்' தர்மஹ்ரதா என்ற ஸரஸ்ஸின் தீர்த்தமும் கங்கையில் கலக்கிறது. அவைகளிரண்டும் மறைந்திருப்பதால் கங்காஸ்ஞனமே இவைகளில் ஸ்ஞனம் செய்வதற் கொப்பாகும் என்று கூறப்படுகிறது. 'காலேயில் பஞ்சகங்கா' கட்டத்திலும் மத்யான்னம் மணிகர்ணிகையிலும்' ஸ்ஞனம் செய்வது மகத்வடைந்தது. அல்லது காலேயில் 'தசாஸ்வமேத கட்டத்திலும் மத்யானனம் 'மணிகர்ணிகா' கட்டத்திலும்

ஸ்ஞனம் செய்வது நல்லது. 'மணிகர்ணிகாஸ்நாநத்தை ஒரு தீர்த்த யாத்திரை யென்றும், பஞ்ச கங்கையிலும், மணிகர்ணிகையிலும் ஸ்ஞனம் செய்வதை - இரு தீர்த்தயாத்திரையென்றும், பஞ்சகங்கா, தசாஸ்வமேதம், மணிகர்ணிகை இம்மூன்றிலும் ஸ்ஞனம் செய்வது மூன்று தீர்த்த யாத்திரை (த்ரிதீர்த்தயாத்திரை) என்றும் சொல்வார்கள். கங்கையின் தீர்த்த கட்டங்களிலேயே இம்மூன்றும் மிக முக்யத்வம் வாய்ந்தவை.

'காசீ தர்பணம்' என்னும் க்ரந்தம் நான்கு தீர்த்த யாத்திரையைப்பற்றிச் சொல்கிறது. கங்கை, யமுனை, ஸரஸ்வதீ அல்லது நர்மதை இவைகள் கலந்த புண்யமயமான த்ரிலோசனு காட்டில் (ghat) இருக்கும் பிப்பிலா தீர்த்தத்தில் க்ருஹ்ய சூத்திரத்தைச் சொல்லிக் கொண்டு, விதிப்படிக்கு ஸ்ஞனம் செய்து பித்ருதர்ப்பணங்களை முடித்துக் கொண்டு, பஞ்ச கங்கை, மணிகர்ணிகையில் ஸ்ஞனம் செய்து, அதன் பிறகு ஞானவாபியில் ஸ்ஞனம் செய்து விஸ்வநாதரைப் பூஜிக்க வேண்டும். இந்த யாத்திரை பாபங்களைச் சுத்தம் செய்யும் ப்ராயச் சித்தமாகக் கூறப்படுகிறது. காசீகண்டம் எண்பத்திநாலாவது அத்யாயத்தில் பஞ்சபூதங்களின் சேர்க்கையினுல் ஆன சரீர சுத்தியின் பொருட்டு, பஞ்சதீர்த்த யாத்திரை என்று கூறப்படுகிறது. ஸமஸ்த தீர்த்தங்களிலும் அஸி ஸங்கமமும் எல்லா தீர்த்தங்களினுல் ஸேவிக்கப்படுவது - (தசாஶ்வமேதமும்) ஆகும்.

வருணைஸங்கமத்து ஆதிகேசவருக்குப் பக்கத்தில் பாதோதகதீர்த்தம் இருக்கிறது. ஸ்ஞனமாத்திரத்திலேயே பாபச் சுமைகளை நீக்கி பவித்திரமாக்கும் பஞ்சநதீ தீர்த்தம் இருக்கிறது. இந்த நான்கு தீர்த்தங்களிலும் மிகவும் உத்தமமானது மணிகர்ணிகா தீர்த்தம். இது மனம், வாக்கு காயங்களை சுத்தப்படுத்துகிறது. ஒருவன் இந்த ஐந்து தீர்த்தங்களிலும் ஸ்ஞனம் செய்தால் பிறகு பஞ்ச பூதங்களின் சேர்க்கையினுலான சரீரம் எடுக்க மாட்டான்.

பஞ்சமுகத்தையுடைய சிவபிராஞகவே ஆவான். இந்த பஞ்சகங்கா யாத்திரை - காசியில் மிகவும் உத்தமம். பர்வ காலங்களில் படகுகளில் ஏறிச் சென்று இந்த யாத்திரையை முடித்துக் கொள்கிருர்கள். இத்துடன் 'கேதார காட்' - கௌரி குண்டத்தையும், 'த்ரிலோசஞ காட்' டிலுள்ள தப்பிலா தீர்த்தத்தையும் சேர்த்துக் கொண்டால் ஸப்த - தீர்த்த - யாத்திரை ஆகிறது.

ஆயதன யாத்திரை என்னவென்றால்:- கங்கையில் ஏதாவது ஒரு துறையில் (காட்) ஸ்ஞனம் செய்வது, விஸ்வேஸ்வரரைப் பூஜிப்பது, இது ஒரு ஏகாயதன யாத்திரை. நந்தி புராணத்தில் கூறியிருப்பதுபோல, இரண்டாவது யாத்திரையின் விதி :- மணிகர்ணிகையில் ஸ்ஞனம் செய்து மணிகர்ணிகேஸ்வரரை தரிசனம் செய்துவிட்டு, பிறகு ஞானவாபியில் ஸ்ஞனம் செய்து விஶ்வநாதரை தரிசனம் செய்து, பூஜிப்பது; இது இரண்டாவது யாத்திரை; இந்த யாத்திரை ப்ரம்ம ஸ்ரூபத்தையளிக்கிறது. மூன்ருவது ஆயதன யாத்திரை பற்றி லிங்கபுராணம் கூறுகிறது. ஹே! தேவி:- அவிமுக்தேஸ்வரர், ஸீவர்லீனேஸ்வரர், மத்யமேஸ்வரர், இவர்களைத் தரிசித்துப் பாபத்தைப் போக்கிக் கொள்வது மூன்ருவது யாத்திரையாகும்.

நான்காவது யாத்திரையைப்பற்றியும், ஐந்தாவது யாத்திரையைப் பற்றியும் கூட லிங்கபுராணத்திலும் கூறப்படுகிறது. அதாவது ஶைலேச்வரர், ஸங்கமேச்வரர், ஸ௱வர்லீனேச்வரர், மத்யமேச்வரர் இந்த நான்கு லிங்கங்களையும் தர்சித்தால் ஒருவன் துக்க ஸாகரமான ஸம்ஸாரத்தில் பிறக்க மாட்டான். ஐந்தாவது ஆயதன யாத்திரை என்னவென்ருல் க்ருத்திவாஸேஶ்வரர், மத்யமேஶ்வரர், ஓங்காரேஶ்வரர், கபர்தீஶ்வரர், விஶ்வேஶ்வரர் இவர்களைத்தரிசிப்பது உத்தமமான பஞ்சாயதன யாத்திரையென்று அறிய வேண்டும். இவர்களோடு கேதாரேஶ்வரரையும், த்ரிலோசனரையும்

*சேர்த்துக் கொண்டால் ஸப்தாயதன யாத்திரையாகும். அநேகம் யாத்திரைகளுக்கு திதி, வாரம், நக்ஷத்ரம் இவைகளின் கணக்கு உண்டு; இவைகளைப் பின்னால் கூறுவோம்.*

*ஆனால் எப்போது ப்ரத்தை ஏற்படுகிறதோ அப்பொழுது உடனே யாத்திரை முடிப்பது நல்லது; பர்வங்கள், திதி, வாரம், நக்ஷத்ரம், இவைகளை யனுசரித்து யாத்ரைகள் செய்வோமாயின் புண்யபலன்கள் ஏற்படும். பஞ்ச தீர்த்த யாத்ரைக்கு திதி, வாரம், நக்ஷத்ரம், பர்வம் இவையொன்றும் பார்க்க வேண்டிய அவசியமில்லை. அதனால் எல்லோரும் எப்பொழுதும் செய்யலாம்.*

*இப்பொழுது - வருஷம், பர்வம், மாதம், ருது, பக்ஷம், திதி, வாரம், நக்ஷத்திரம் இவைகளுடன் கூடிய யாத்திரைகளைக் க்ரமமாகக் கூறுகிறோம். இந்த யாத்திரைகளில் முதலாவது - சித்திரை மாதம் சுக்ல பக்ஷத்து (வருக்ஷ) ஆரம்பத்தில் பகல் பொழுது ஸ்நானத்திற்குப் பிறகு செய்யவேண்டியது. பங்குனி, ப்ராவணம் முதலிய மாதங்களில் பெரும்பாலும் விச்வேச்வரர் முதலிய தேவஸ்தானங்களில் ப்ருங்கார உற்சவம் நடக்கும். அப்பொழுது இரவு சென்று தரிசிக்க வேண்டும். இவைகள் ஶிஷ்டாசாரத்தையனுசரித்து நடக்கிறது. அதனால் வார்ஷிக யாத்திரைகளில் இந்த வர்ணனைகள் விடப்படுகின்றன. ஆதலால் தனிப்பட்ட முறையில் கொஞ்சம் எடுத்துக் கூறப்படுகிறது.*

## சித்திரை மாதம்

1. **துர்க்கா தேவீ துர்க்காகுண்ட யாத்திரை:-** *சித்திரை மாதத்தில் சுக்ல பக்ஷத்தில் ஒன்றிலிருந்து ஒன்பது தேதி வரையில்:- (நந்தி புராணம் இதற்கு ப்ரமாணம்))*

2. **மங்களா கௌரி** - *லக்ஷ்மண பாலாகட்டம்: சித்திரைமாதத்து சுக்லபக்ஷத்ருதீயை*

3. சித்ரகண்டா - சௌக்கிலிருந்து கிழக்கில் (சந்தூக்கி கல்வி) என்னும் சந்தில் இருக்கிறது. இதுவும் சித்திரைமாதத்து சுக்லபக்ஷத்து த்ருதியை;

4. பார்வதீச்வரர் - த்ரிலோசனருக்கு ஸமீபம்; அதுவும் சித்திரைமாதம் சுக்லபக்ஷத்து த்ரிதியை;

5. அன்னபூர்ணாதேவீ, விச்வநாதருக்கு ஸமீபம் - சித்திரைமாதம் சுக்லாஷ்டமி.

6. மஹாமுண்டா ஜேத்புராவுக்கு ஸமீபம் சித்திரைமாதம் சுக்லாஷ்டமி

7. மத்யமேய்வரர், கணேசகஞ்ச் - (கம்பனிபாக்) அதுவும் சித்திரைமாதத்து - சுக்லாஷ்டமி)

8. சுபத்ராதே - சந்திர கூபத்திற்கு ஸமீபத்தில் - சித்திரை மாதம் சுக்லாஷ்டமி;

9. ராமநவமி - ராமாகாட் சித்திரைமாதம் சுக்லநவமீ

10. காமேச்வரர் - மச்சோதரிக்கு ஸமீபம் - (சந்தில்) சித்திரைமாதம் சுக்லபக்ஷம் (பதிமூன்றும் நாள் சனி ப்ரதோஷம்)

11. பசுபதீய்வரர் - இதே பெயருடைய மஹாவில் - சித்திரைமாதம் சுக்லபக்ஷ பதினொலாவது நாள்-

12. க்ருத்திவாஸேச்வரர், ஹரதீர்த்தம் - விருத்தகாலம் என்னுமிடத்தில் சித்திரா பௌர்ணமியன்று.

13. சந்த்ரேய்வரர் - ஸித்தேஸ்வரி, சந்திரகூபத்தில்; சித்திரா பௌர்ணமியன்று.

## வைகாசிமாதம்

1. பஞ்ச முத்ரா தேவீ, பஞ்ச கங்கா கட்டத்தில், வைகாசி மாதத்து க்ருஷ்ணாஷ்டமி.

2. த்ரிலோசனர் - த்ரிலோசன கட்டம் - வைசாக சுக்ல அக்ஷயத்ருதீயை;

*3. பரசுராமேச்வரர் - நந்தனசாகு, வைசாக - சுக்ல அக்ஷயத்ருதீயை;*

*4. ஓங்காரேச்வர் - மத்ஸ்யோதரிக்கு வடக்கில் - மஹால் ஹுக்காலேசன் என்னுமிடத்தில் வைகாச சுக்ல சதுர்தசி*

*5. நரஸிம்மன் - ப்ரஹ்லாத கட்டம் - வைசாக சுக்ல சதுர்த்தி*

## ஜ்யேஷ்டமாதம் *(ஆனி)*

*6. ஜ்யேஷ்ட விஞயகர்:- காசிபுரா - கர்ணகண்டா - ஆனி மாதத்து - சுக்ல சதுர்த்தி*

*7. ஜ்யேஷ்டா கௌரி காசிபுரா - கர்ணகண்டா - ஜ்யேஷ்ட சுக்லாஷ்டமி*

*8. தசாஶ்வமேதேஶ்வரர்:- தஶாஶ்வமேதகட்டம் - ஆனிமாத சுக்லபக்ஷ - ப்ரதமையிலிருந்து தஶமிவரையில்-*

*9. கங்கேஶ்வரர் :- ஞான - வாபிக்குக் கிழக்கில் (அரசுக்கு அடியில்) ஜ்யேஷ்ட ஶுக்ல தஶமி.*

*10.ஜ்யேஷ்டேஶ்வரர் :- காசீபுரா - கர்ணகண்ட - ஜ்யேஷ்ட ஶுக்ல சதுர்தஶி.*

*11.ரதயாத்திரை - ராஜா தாலாப் கரையில் ஒன்று -வேணிராம் என்னுமிடத்தில் இரண்டு. காபகீச்சா ஸூர்யகுண்டத்தில் மூன்று.*

## ஆடிமாதம் *(ஆஷாடா)*

*ஆடிமாதம் ஶுக்லபக்ஷ த்விதீயையிலிருந்து சதுர்த்தி வரையில் -*

*12.ஆஷாடேஶ்வரர் :- காசீபுரா - ராஜபேந்தியா வளீவில் - ஶிவாலயத்திற்குப் பின்ஞல் ஆஷாடசதுர்தசியன்றே; அல்லது பௌர்ணமியன்றே -*

*13.வ்யாஸேஶ்வரர் :- கர்ண கண்டாவில் ஆடிபௌர்ணமியன்று.*

## ஆவணிமாதம் *(ஶ்ராவணம்)*

*14. வ்ருத்தகாலர் :- தாரா நகரத்தில், ப்ரஸித்தம். ஶ்ராவண மாதத்தில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும்.*

*15. கேதாரேஶ்வரர் :- கேதார கட்டம் - ஶ்ராவணஸோமவாரம் தோறும்*

*16. ஸாரநாத்தில் ஸாரநாதேஶ்வரர் :- ப்ரஸித்தம் ஶ்ராவண மாதம் ஸோமவாரம்தோறும்.*

*17. துர்க்காதேவி - துர்க்காகுண்டம் :- ஶ்ராவணமாதம் நான்கு செவ்வாய்க்கிழமைகளும்.*

*18. நாமயாத்ரா - வாஸுகீஶ்வரர், நாகக்குண்டம் அல்லது கார்கோடகவாபி - ஶ்ராவணமாத ஶுக்ல நாகபஞ்சமி.*

*19. ஆதிமஹாதேவர் த்ரிலோசனருக்குப் பக்கத்தில் :- ஶ்ராவண மாதத்து. ஶுக்லபக்ஷத்து சதுர்தசி.*

## புரட்டாசிமாதம்

*20. விஶாலாக்ஷி - தர்ம கூபத்திற்கு ஸமீபத்தில் புரட்டாசி மாதத்து க்ருஷ்ண - பக்ஷத்து - த்ருதீயையன்று.*

*21. ஆக்னேந்திரேஶ்வரர், இஸ்ரசிங்கியில் - ப்ரசித்தமான ஜாகீஶ்வாத்தில் புரட்டாசிமாதத்து - க்ருஷ்ணபக்ஷத்து ஷஷ்டி - (க்ருஷ்ணஜந்மாஷ்டமி) ஆதிகேஶவரிலிருந்து, பிந்துமாதவர், கோபாலமந்திர் வரையில் புரட்டாசிமாத க்ருஷ்ணாஷ்டமி.*

*22. ருணமோசனம் - அனுமானபாடக் புரட்டாசிமாத அமாவாஸ்யை.*

*23. மங்களா கௌரி - லக்ஷ்மண பாலாகாட் - புரட்டாசிமாதம் ஶுக்லபக்ஷ த்ருதியை.*

*24. படாகணேஷ் :- புரட்டாசி மாதம் ஶுக்லபக்ஷ சதுர்த்தி;*

*25. லோலார்க்கர் :- பதைனியில் ப்ரசித்தம் - புரட்டாசிமாத சுக்லபக்ஷ ஷஷ்டி.*

*26.மஹாலக்ஷ்மி : லக்ஷ்மீகுண்டம் :- புரட்டாசி மாதம் ஶுக்லபக்ஷ அஷ்டமியிலிருந்து ஆரம்பித்து, ஐப்பசிமாதம் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமி வரையில்.*

*27.குலஸ்தம்பம் - லாட்டுபைரவரில் - புரட்டாசி மாதம் பௌர்ணமி.*

## ஐப்பசிமாதம்

*28.லலிதாதேவி - லலிதாகாட், ஐப்பசிமாதம் க்ருஷ்ணபக்ஷத்விதியை.*

*29.லக்ஷ்மீ கோபா- லக்ஷ்மீ குண்டத்திற்கு வடக்கில் -கீஹட்டா -என்னும் இடத்தில் ஐப்பசிமாதம் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமி இதை 'சோரஹியா மேளா' என்று கூறுவார்கள்.*

*30.மாத்ருதேவி லாலாபூர் மாதா குண்டம் ஐப்பசிமாதம் க்ருஷ்ணபக்ஷ நவமி.*

*31.பித்ரீஸ்வரர் :- பித்ருகுண்டம், பித்ருபக்ஷத்தில் - பிதாவினுடைய மரணதிதியில்.*

*32.விஸ்வபுஜா :- கௌரி - தர்மகூபத்திற்கு பக்கத்தில் ஐப்பசிமாதம் ஶுக்லபக்ஷ -ப்ரதமையிலிருந்து நவமி வரையில் நவராத்ரியாக.*

*33.துர்க்காதேவி :- துர்க்காகுண்ட் :- புரட்டாசி மாத க்ருஷ்ணபக்ஷத்ருதியை (நவதுர்க்கையில் ஒன்று) ஒன்பது வெவ்வேறு ஸ்தானங்களில் அதுவும் புரட்டாசிமாதம் க்ருஷ்ணபக்ஷ த்ரிதியை (2) சதுஷ் ஷஷ்டிதேவீ சௌசுடி (காட்டிலும்) வேறு சில ஸ்தலங்களிலும் புரட்டாசிமாத க்ருஷ்ணபக்ஷத்ருதீயை.*

## கார்த்திகைமாதம்

*34.ஹனுமான் காட் :- கார்த்திகைமாதத்து க்ருஷ்ணபக்ஷ சதுர்தசி. யமேச்வரர் - யமகாட் கார்த்திகைமாத சுக்லபக்ஷத்விதீயை.*

*35. தர்மேஸ்வரா :- தர்மகூபத்தில் கார்த்திகைமாத சுக்லபக்ஷ அஷ்டமி.*

*36. பிந்துமாதவர் :- பஞ்சகங்கா = கார்த்திகைமாத ஶுக்லபக்ஷ துவாதஶியிலிருந்து பௌர்ணமி வரை = பீஷ்மபஞ்சகம் முழுவதும்.*

*37. விஸ்வேஶ்வரர் 'காசியில் (எப்பொழுதும்) ப்ரஸித்தம் கார்த்திகை மாதத்து. சுக்லபக்ஷத்து (வைகுண்ட) 'சதுர்தஶி. காஶிமஹா யாத்திரை - காஶி முழுவதும் எங்கிலும் கார்த்திகை பௌர்ணிமயன்று ஸ்வாமி கார்த்திக் கேதார கட்டத்தில் - கார்த்திகை பௌர்ணமியன்று.*



## மார்கழிமாதம்

39. காலபைரவர் - பைரவநாத் - மார்கழிமாதத்து க்ருஷ்ணாஷ்டமியன்று.

40. மாலதீச்வரர் :- வ்ருத்த காலருக்கு அருகில் வளைவில்; மார்கழி மாதத்து சுக்லபக்ஷ ஷஷ்டி. (40) காலமாதவர் :- பைரவநாத்துக்கு அருகில்; மார்கழி மாதத்து சுக்லபக்ஷ ஏகாதசி.

41. பாதோதக தீர்த்தம் :- வருணா ஸங்கமத்துக்கருகில்; மார்கழி மாதம் சுக்லபக்ஷ ஏகாதசியிலிருந்து பௌர்ணமி வரையில்;

42. கபர்தீஸ்வரர் :- பிசாசமோசனகாட் :- மார்கழி மாதத்து சுக்லபக்ஷத்து சதுர்தசி, கோபீகோவிந்தம்; லால்காட்; மார்கழி மாதத்து சுக்லபக்ஷபௌர்ணமி.

43. நகர்ப்ரதக்ஷிணம் :- வருணையில் - சௌகாகாட்டில்; மார்கழி மாதம் சுக்லபக்ஷ பௌர்ணமி;

## தைமாதம்

44. உத்தரார்க்கம் :- அலைப்பூர், தைமாதத்து ஞாயிற்றுகிழமை தோறும்.

45. விதீச்வரர் :- அகஸ்திய குண்டத்தின் அருகில் தைமாதம் ஸப்தமி-

46. நரநாராயணர் :- மகதாகாட் - தைமாத பௌர்ணமி

## மாசிமாதம்

47. கணேஷ் :- ப்ரசித்தமான படேகணேஷ் மாசிமாத க்ருஷ்ண பக்ஷசதுர்த்தி

48. டுண்டிராஜ் :- விச்வேச்வரருக்கு அருகில் ப்ரசித்தமானது. மாசிமாதத்து சுக்லபக்ஷ சதுர்த்தி.

49. முகப்ரேக்ஷணிவை :- மங்கள கௌரிக்கு மேற்குபக்கத்தில் மாசிமாதம் சுக்லபக்ஷ சதுர்த்தி.

*50.லோலார்கர் :- மதைனியில் ப்ரசித்தமானது. மாசி மாதத்து சுக்லபக்ஷ ஸப்தமியில்.*

*51.கேசவாதித்யர் :- வருணைஸங்கமத்தில் மாசிமாத சுக்லபக்ஷ பானு வாரமும், ஸப்தமியும் சேர்ந்திருக்கும் போது.*

*52.துவாதசாதித்யர் :- வெவ்வேறு பன்னிரண்டு ஸ்தானங்களில் சிவ ரஹஸ்யத்தில் கூறப்பட்டிருக்கும் (ரவிவார யாத்திரையைப் பார்க்கவும்)*

*53.ப்ரயாகைதீர்த்தம் :- தசாஸ்வமேதம் மாசிமாதம் முழுவதும்.*

*54.அவிமுக்தேச்வரர் :- விச்வநாதருக்கருகில் :- மாசியும் பங்குனியும் கூடிய க்ருஷ்ணபக்ஷத்து சதுர்தசியில்.*

*55.க்ருத்திவாஸேச்வரர் :- ஹரதீர்த்தத்தில் மாசிமாதம் சிவராத்ரியன்று.*

*56.ப்ரீதிகேச்வரர் :- ஸாக்ஷி விநாயகருக்குப் பக்கத்தில், சிவராத்ரியன்று;*

## பங்குனிமாதம்

*57.தாலபேஸ்வரர் :- (மாஸைமந்திர் காட்) பங்குனி மாத பௌர்ணமி.*

*58.★சதுஷ்ஷஷ்டி :- சௌசட்டி காட் (சித்திரை மாதத்து க்ருஷ்ணபக்ஷ ப்ரதமை)*

*★ (குறிப்பு - இந்த 64 யோகினியர்களின் பெயர்கள் காசீகண்டம் 45வது அத்யாயத்தில் 34வது ஸ்லோகத்திலிருந்து 44வது ஸ்லோகம் வரையில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் அறுபது யோகினிகளின் இருப்பிடம் சௌசட்டி காட்டிற்கு மேலே ராணமஹாலில் இருக்கிறது. மேலும் வாராஹியினுடைய மானமந்திர், மயூரியின் லக்ஷ்மிகுண்டம், சுகியினுடைய டௌடியா வீரம்,*

கமச்சாவில் காமாக்ஷி இவர்களடங்கியது அறுபத்திநாலு யோகினிகள். ஆனால் இவர்களின் யாத்திரை சௌசட்டி காட்டில் பண்ணினால் போதும்.)

59. வாருணிஸ்னனம் :- வருணை சங்கமத்தில் சித்திரை மாதத்து க்ருஷ்ணபக்ஷ - த்ரயோதசி.

60. கேதாரேச்வரர் :- கேதாரகட்டம் சித்திரைமாதம் க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியன்றுவது; சித்ரா பௌர்ணமியன்றுவது.

61. ஸாம்பாதித்யர் :- சூரியகுண்டம் சித்திரைமாதம் ஏதாவது ஒரு ரவிவாரம்.

62. வார்ஷிக ச்ருங்கார உற்சவம் :- இந்த எல்லா ச்ருங்கார உற்சவங்களும் வருஷந்தோறும் குறிப்பிட்ட திதிவாரத்தில் இருக்கிறது. எத்தனையோ இடங்களில் ந்ருத்யங்களும் கீதங்களும் நடைபெறுகின்றன. பெரும்பாலும் ஸாயங்காலத்தில் ஆரம்பித்து இரவு முழுவதும் அலங்காரம் செய்து, பாட்டுகளுடனும் வாத்யங்களுடனுமாக உற்சவம் கொண்டாடுகிறார்கள். அது மறுநாள் மத்யானம் வரை நீடிக்கிறது. அதைப்பார்த்து ஆனந்திக்க வேண்டுமே தவிர எழுதுவதற்கு ஸாத்தியமில்லை.

(உற்சவங்கள்)

1. எல்லாவற்றிலும் முக்யமாக விச்வநாதருடைய ச்ருங்கார உற்சவம் பங்குனிமாதத்து சுக்ல ஏகாதசியன்று நடக்கிறது. அதேநாளில் அன்னபூர்ணாதேவி, டுண்டிராஜ் கணேசர், ஹனுமான், ஞானவாபி முதலிய எல்லா இடங்களிலும் ச்ருங்கார உற்சவம் பார்த்து பரவசப்படக் கூடியதாக இருக்கும்.

2. இந்தப் பங்குனிமாதத்து சுக்கில த்ருதியையன்று ஸங்கடா தேவிக்கு ஸமீபத்தில் பஹுளாமுகி தேவியின் (பகுளா தேவி) அலங்காரம் மிக அழகாக இருக்கும்.

3. இந்தப் பங்குனி மாதத்து சுக்லபக்ஷத்து சுக்ரவாரம் லக்ஷ்மீகுண்டத்து லக்ஷ்மீதேவியின் அலங்காரம் விமரிசையாக இருக்கும். இதே ரீதியில் ச்ராவண மாதத்து சுக்லபக்ஷத்து சுக்ர வாரத்திலும் நடக்கும்.

4. சித்திரைமாதத்து சுக்லபக்ஷத்து ஏகாதசியன்று சித்ர கூடத்தின் பக்கத்தில் தூமாவதி தூபசண்டி என்னும் தேவிகளுக்கு அலங்காரம் மனோஹரமாக இருக்கும்.

5. வைகாசி மாதம் சுக்லபக்ஷ கங்கா ஸப்தமியன்று அநேக இடங்களில் அலங்காரமும் கானமும் நடக்கின்றன.

6. ச்ராவண மாதத்து சுக்லபக்ஷத்து மங்களவாரம் கமாச்சா பக்கத்தில் இருக்கும் வடுக பைரவருக்கு அலங்காரம் செய்து பஜனையும் நடக்கும்.

7. ஜன்மாஷ்டமி உற்சவம் : அநேக இடங்களில் நடக்கும், சில இடங்களில் ஜன்ம ஷஷ்டியும் நடக்கும்

8. ஜன்மாஷ்டமி ஆறுவது தினத்தன்று துர்க்கா குண்டத்தில் துர்க்காதேவியை ச்ருங்காரித்து ந்ருத்ய கீதங்களினால் ஸேவிக்கிறார்கள்.

9. கார்த்திகை மாதத்து சுக்லபக்ஷத்து ஏகாதசியிலிருந்து பௌர்ணமிவரையிலும் பஞ்சகங்கா கட்டத்தில் விசேஷ ச்ருங்காராதி அலங்காரங்கள் நடக்கும்.

10. ம்ருத்யுஞ்ஜய மஹாதேவர், ஸங்கடாதேவி, ஹனுமான் முதலிய ஸ்தானங்களில் பங்குனி மாதமே ச்ருங்கார உற்சவம் நடக்கிறது. கூறத் தொடங்கினால் விரியும் என்று விடப்படுகிறது.

காசீகண்டத்தில் பஞ்ச (க்ரோச) கோச யாத்திரையைப்பற்றி விஸ்தாரமாக வர்ணிக்கப்படவில்லை.

அயனம் :- ஆனால் காசீ ரஹஸ்யம் என்னும் க்ரந்தத்தில் பஞ்சகோச யாத்திரையைப்பற்றி விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டுள்ளது. காசீ க்ஷேத்திரத்து பஞ்சகோச யாத்திரை சரீரசுத்திக்காக மிகவும் வழக்கத்திலிருந்து

வருகிறது. காசியில் எல்லா யாத்திரையையும் விட இது மிகவும் மேலானது. இந்த யாத்திரையை அயன யாத்திரையென்றும் கூறுவார்கள்.

ஸனத் குமார ஸம்ஹிதையில் கூறப்படுகிறது:- **தக்ஷிணே சோத்தரே-சைவஹி அயனே சைவதாமயா; க்ரியதே க்ஷேத்ர தாக்ஷண்யம் பைரவஸ்ய பயாதபி ।**

மஹாதேவர் கூறுகிறார் :- நாம் பைரவரிடம் பயத்தினால் தக்ஷிணாயனத்திலும், உத்தராயணத்திலும் காசீக்ஷேத்திரத்தை வலம் வருவதான 'பஞ்ச கோச' யாத்திரை செய்கிறோம். காசிவாசிகள் மார்கழியிலும், பங்குனியிலும் இந்த யாத்திரையைச் செய்கிறார்கள். இதைத் தவிர வெவ்வேறு இடங்களில் ராமன்லீலை, க்ருஷ்ணலீலை, கானம், வாத்யம் இவைகள் நடக்கின்றன. பெரும்பாலும் அதிமாஸங்களில் வெளிஇடங்களிலிருந்தும் யாத்ரிகர்கள் வருகிறார்கள், ஆனாலும் எந்த மாதமானாலும் பஞ்சகோச யாத்திரை நடக்கிறது. ஆனால் உண்மையைக் கூறுமிடத்து எப்பொழுது மனம் வருகிறதோ அப்பொழுது யாத்திரை செய்யவேண்டும். காசீரஹஸ்யத்தில் இதைப்பற்றிக் கூறியிருக்கிறது; பஞ்சகோசயாத்திரை செய்பவர்கள் காலம், மாதம் இவைகளைப்பற்றிக் கவலைப்படவேண்டாம்.

சித்தத்தில் எப்பொழுது சிரத்தை ஏற்படுகிறதோ அப்பொழுது உடனே செய்ய வேண்டும். காசி ரஹஸ்யத்தில் இதைப்பற்றி அதிகமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. நாரத புராணத்தில் பஞ்சகோச யாத்திரையின் பலன் கூறப்பட்டிருக்கிறது, அதாவது மூன்று லோகங்களுக்கு பாவனமான காசீபுரியை எவன் ஒருவன் ப்ரதக்ஷிணம் செய்கிறானோ, அவன் ஸப்த த்வீபமும், ஏழு ஸமுத்ரம் பர்வதங்களுடன்கூடிய பூமண்டலம் இவைகளை ப்ரதக்ஷிணம் செய்ததற்கு ஒப்பாகும். காசீ ரஹஸ்யத்தில் ஒன்று , இரண்டு, மூன்று

நான்கு நாட்கள் பஞ்சகோசயாத்ரை மார்க்கத்தில் இருக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. சிவ ரஹஸ்யத்தில் ஏழு நாட்கள் வரைக்கும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆனுல் ஜனங்கள் மூன்று அல்லது ஐந்து தினங்களில் முடித்துக் கொள்கிருர்கள். இந்த யாத்திரையில் யாத்ரா மார்க்கத்திலிருந்து சற்று விலகியிருக்கும் கோவில்களுக்குத் தரிசனம் செய்யச் சென்ருலும் யாத்திரையை விட்டு அடியிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். (முதலிலிருந்து) எள்ளத்தனை பூமி கூட பாதம்படாமல் இருக்கக் கூடாது. பஞ்ச கோச யாத்திரை செய்பவர்கள் ப்ரும்மசர்யம் அனுஷ்டிக்க வேண்டும். யாத்திரைக்கு விதிக்கப்பட்டிருக்கும் எல்லைக்கு வெளியில் காலைக்கடன்களைக் கழிக்க வேண்டும். இதைப்பற்றி விசேஷமாக காசீரஹஸ்யம் 10வது அத்யாயத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

பஞ்சகோச யாத்திரை விதி :- பஞ்சகோசத்துக்குச் செல்வதற்கு முன்னுல் யாத்ரிகர்கள் கங்கா ஸ்னுனம், நித்யயாத்ரையை முடித்துக் கொண்டு, முக்தி மண்டலத்திலும், ஞானவாபியிலும் ஸங்கல்ப பூர்வமாக டுண்டிராஜனைப் பூஜித்து அன்றே ‘அந்தர் க்ருஹ யாத்திரையை’ முடித்துக் கொள்ள வேண்டும். ஒருவேளை ஹவிஸ் வைத்து உண்ண வேண்டும். இரண்டாவது நாள் ஸ்னுனம் செய்து நித்ய நியமங்களை முடித்துக் கொண்டு முக்தி மண்டபத்திற்குச் சென்று இவ்விதம் ப்ரதிக்ஞை செய்து கொண்டு, மனஸா, வாசா, க்ரியயா - அறிந்தோ, அறியாமலோ, பாபசுத்திக்காகவும், புண்ணிய லாபத்திற்காகவும் - பஞ்ச க்ரோசத்திற்குள்ளிருக்கும் ஜ்யோதிர் லிங்கஸ்வரூபமான விச்வநாதர், அன்னபூரணி, லக்ஷ்மீ நாராயணர், டுண்டிராஜர், ஐம்பத்தைந்து விநாயகர்கள், பன்னிரண்டு ஆதித்யர்கள், மூன்று நரஸிம்ம கேசவர்கள், இராமக்ருஷ்ண, கூர்ம, மத்ஸ்யாதி அவதாரங்களுடன் கூடின விஷ்ணு, (அநேக தேவதைகள் உள்ளடங்கிய) அநேக சிவ லிங்கங்கள், கௌரீ முதலிய

*அநேக தேவதைகள் உள்ளடங்கிய இந்த க்ஷேத்திரத்தை நாங்கள் ப்ரதக்ஷிணம் செய்கிறோம், இவ்வாறு ஸங்கல்பித்துக் கொண்டு, 'ஹே மஹாதேவா! தங்களுடைய மகிழ்ச்சிக்காகவும், ஸமஸ்த பாப ஸமூஹங்களின் சாந்தியின் பொருட்டும் விதிப்படிக்கு பஞ்ச க்ரோச யாத்திரையைச் செய்கிறோம்; இவ்விதம் ப்ரார்த்தித்துக் கொண்டு திரும்பவும் டுண்டிராஜரைப் பூஜித்து,* **ஹே டுண்டிராஜகணேசா, தாங்கள் மிகப் பெரிய விக்ன ஸமூஹங்களை நாசம் செய்பவர், அதனால் தாங்கள் தயவு செய்து கருணையுடன் எங்களுக்குப் பஞ்சக்ரோச யாத்திரை செய்ய உத்திரவு கொடுக்க வேண்டும்.** *என்று வேண்டிக் கொண்டு பிறகு விஸ்வேச்வரரை மூன்று ப்ரதக்ஷிணங்கள் செய்து ஸாஷ்டாங்கமாக வணங்கி எழுந்து, மோதகர் முதலிய ஐந்து விநாயகர்களையும், தண்டபாணி, காலபைரவர் இவர்களையும் பூஜித்துத் திரும்பவும் விஸ்வேச்வரரைப் பூஜிக்க வேண்டும். திரும்பவும் மணிகர்ணிகையில் ஸ்னானம் செய்து விட்டு ப்ரதக்ஷிணத்திற்குப் போக வேண்டும். பிறகு வழியில் இருக்கும் ஸ்தல தேவதைகளையும் தரிசனம் செய்து பூஜிப்பது உசிதம்.*

### தேவதைகளின் பெயர்கள்; இடங்கள்

1. மணிகர்ணிகேச்வரர்,ஸித்திவிநாயகர் =மணிகர்ணிகாகாட்
2. கங்காகேசவர் = லலிதாகாட்
3. ஜராஸந்தேச்வரர் =மீர்காட்
4. ஸோமநாதர்
5. தாலபேச்வரர் =மானமந்திர்காட்
6. சூலடங்கேச்வரர்
7. ஆதிவராஹேச்வரர் = தசாஸ்வமேதகாட்

*தசாஸ்வமேதேச்வரரை தசாஸ்வமேதத்திலுள்ள சீதளா கோவிலிலும், ப்ரயாகேச்வரர் கோவிலிலும்*

8. ஸர்வேச்வரர் = பாண்டேகாட் பக்கத்திலும்
9. கேதாரேச்வரர் =கேதார கட்டத்திலும்

10.ஹனுமந்தேச்வரர் = ஹனுமான் கட்டத்தில்

11.ஸங்கமேஸ்வரர் =அஸி சங்கமத்தில்

12.அர்க்க விநாயகர் = லோலார்ககரின் ஸமீபத்தில்

13.லோலார்க்கர் = பதைனியில்

14.துர்க்கா குண்டம்.

*இதுமுதலாவது தங்குமிடமாக முன்பு இருந்தது. ஆனுல் இப்போது அங்கு தங்குவதில்லே. கந்தாவில் தங்குகிருர்கள். அங்கு ஸமீபத்தில் நகவாவில் தர்மசாலேயிருக்கிறது.*

துர்க்கா விநாயகர் = துர்கா குண்டம்.

*துர்க்காதேவி =ப்ரசித்தமான இந்தக் கோவிலில் ப்ராமணர்களுக்கு பாயஸமும் லட்டும் அளிக்கவேண்டும். கீழே எழுதியிருக்கும் ஸ்லோகத்திஞல் துர்க்கா தேவியைத் துதிக்கவேண்டும்.*

**ஜய துர்க்காதேவி ஜயகாசீநிவாஸிநீ। க்ஷேத்ரவிக்ன ஹரே தேவி புனர்தர்சன மஸ்துதே** *(அதாவது,) ஹேமாதா! தேவிதுர்க்கே! ஜெய ஹே! காசிவாசினி! நீயே க்ஷேத்ரத்தில் விளேயும் இடையூறுகளே விலக்குகிருய். நான் திரும்பவும் வந்து உன்னே தரிசிப்பதற்கு அனுக்ரஹிக்க வேண்டும். இவ்விதம் ப்ரார்த்தித்து விட்டு மேலே செல்ல வேண்டும். விஷ்வக்னேஸ்வரர் வழியில் காமைதாபுரம் கிராமத்தில்;*

**கர்தமேச்வரர் கதவாம்காம்** - *அங்கு அக்ஷதையும் எள்ளும் ஸமர்ப்பிக்கவேண்டும். கர்தமதீர்த்தம்* - **கதவாம்** *கிராமத்துக் குட்டையில் குளிக்கவேண்டும்; கர்தமகூபம் -அதில் தன்னுடைய முகத்தைப் பார்க்கவேண்டும். ஸோமநாத் - விரூபாக்ஷர், நீல கண்டேச்வரர், கந்தவாவில், முதலாவது யாத்திரை தங்குமிடம். கந்தவாவில் - அநேகம் தர்மசாலேகளும் உள்ளன. கடைத்தெருவும் இருக்கிறது.*

கர்தமேச்வரரிடத்தில் **'கர்தமேச மஹாதேவ! காசீவாஸ! ஜனப்ரிய! உன்னுடைய பூஜையினுல் ஹே மஹாதேவ, புனதர்சனமஸ்து தே'** என்று ப்ரார்த்திக்க வேண்டும்.

நாகநாதர் - அமராகிராமத்தில், சாமுண்டாதேவீ அவடா கிராமத்தில்; மோக்ஷேஸ்வரர், கருணேஸ்வரர் - அவடாவிலேயே; வீரபத்ரேச்வரர் - தேல்ஹனு கிராமத்தில்; விகடதுர்க்கா - அங்கேயே, உன்மத்தபைரவர் - தேவுகிராமத்தில்; அதைச் சேர்ந்தது நீலகணன், கூடகணன் விமலதுர்க்கா, மஹாதேவா, நந்திகேஸ்வரர், ப்ருங்கிரிஷி கணம் கணப்ரியர்; விரூபாக்ஷர் - கௌரா க்ரமத்தில், யக்ஞேச்வரர், சக்கமாதல தேவீ = விமலேச்வரர், பயாநகபுரம் மோக்ஷதேஸ்வரர், ஞானதீஸ்வரர், அம்ருதேஸ்வரர் - அஸவாரி கிராமத்தில், கந்தர்வ ஸாகரம் - பீமசண்டி கிராமம், பாலாபோக்ர தடாகம், பீமசண்டிதேவீ- அங்கு இரண்டாவது தங்குமிடம். அநேக சாலைகளும் உண்டு.

பீமசண்டி விநாயகர் - தாலூகா ஜக்கினியில், ரவிரக்தாக்ஷ கந்தர்வர் அதைச் சேர்ந்தது; நரகார்ணவதாரணசிவா - பீமசண்டியின் ப்ராத்தனை; **பீமசண்டி ப்ரசண்டானி, மம விக்னனி நாசய । நமஸ்தேஸ்து கமிஷ்யாமி புனர்தர்சனமஸ்து தே ॥**

ஏகபாதகணர் - கசநார் கிராமத்தில், இங்கு எள்ளும் அக்ஷதையும் ஸமர்பிக்கவேண்டும். மஹாபீமர் - ஹரேம்காதாலாப் - ஹரபுர கிராமம். பைரவநாத் - ஹரஸோஸ கிராமத்தில், பைரவிதேவி- அங்கேயே, பூதநாதேஸ்வரர் - தீனதாஸபுரம். ப்ரசித்தமான ஸோமநாதேஸ்வரர், அங்கேதான் - லங்கோடிய ஹனுமான்ஜி -சிந்துரோதஸதீர்த்தம் சிந்துஸாகரகுளம் - மிகவும் ப்ரசித்தமானது. இங்கும் தர்மசாலையிருக்கிறது.

*காலநாதர் - ஜனஸா கிராமத்தில்; கபர்தீஸ்வரர் -அங்கேயேதான். காமேஸ்வரர் - சௌகண்டி கிராமத்தில், -அங்கேயே கணேஸ்வரர், வீரபத்ரகணர், சதுர்முகர்கணர்; கணநாதேஸ்வரர், -படோலி கிராமம். தேஹலிவிநாயகர் - மிகவும் ப்ரசித்தம்; இவருக்கு லட்டு, பொரிமாவு, சத்துமாவு, கரும்பு இவைகளை ஸமர்பிக்க வேண்டும். ஏழுதினங்கள் யாத்திரை போகிறவர்கள் இங்கு தங்குவார்கள்; ஒரு தர்மசாலையும் இருக்கிறது. ஷோடச விநாயகர் - பேவடியா விநாயகருக்கு அருகில் - உத்தண்ட விநாயகர், புயிலிகிராமம் - உத்கலேஸ்வரர் - ஸ்ரீ ராமபுரகிராமம் - ருத்ராணிதேவி, போகும் மார்க்கத்திலேயே இருக்கிறது. தபோபூமி; (ருத்ராணிதேவியின் தபோபூமி) - வழியிலேயே இருக்கிறது. வருணநதி - ராமேஸ்வர கிராமத்தில் - அங்கு ஸ்னனம் தர்ப்பணம் செய்யவேண்டும். ராமேஸ்வர் மிகவும் ப்ரசித்தம். வெள்ளை எள்ளும், வில்வபத்ரமும் கொண்டு அவரை அர்ச்சிக்க வேண்டும்; ஸோமேஸ்வரர், பரதேஸ்வரர், லக்ஷ்மணேஸ்வரர், சத்ருக்னேஸ்வரர், த்யாவா பூமீஸ்வரர், ராமேஸ்வரருக்கு அருகிலேயே இருக்கிறார். அங்கேயே நஹுஷேஸ்வரர் இருக்கிறார். ராமேஸ்வரர், இது ஒரு ப்ரதானதங்குமிடம். ஒரே நாளில் யாத்திரை முடிப்பவர்கள் கூட இங்கு தங்கிவிட்டுத்தான் செல்வார்கள். இங்கு அநேக தர்மசாலைகள் இருக்கின்றன. ராமேஸ்வரருடைய ப்ராத்தனை பின்வருமாறு :- ‘ஸ்ரீ* **ராமேஸ்வர! ராமேண பூஜிதஸ்த்வம் ஸனதந! ஆக்ஞாம்தேஹி மஹாதேவ! புனர்தர்சனமஸ்து தே ॥**

*அஸங்க்யாத தீர்த்தலிங்கம் - வரனுபாக் (புல்னிவாரி)க்குப் பக்கத்தில் தேவஸங்கேஸ்வரர் கரோமாபாக் - விசேஷமாக துர்க்கா குண்டத்தை விட்டதுபோல், சிவபுரத்தில் திரௌபதீகுண்டத்துக்கு*

*ஸமீபத்தில் பஞ்ச பாண்டவர்களுடைய பெயரில் 5 லிங்கங்கள் இருக்கின்றன. இது நாலாவது தங்குமிடம். ஆனால் நகரத்திலிருந்து செல்லுபவர்கள் தங்களது சொந்தக்காரர்களை ஸந்திக்கும் பொருட்டு, சிவபுரம் போய்விடுகிறார்கள். அதற்காகவே இங்கு அநேக தர்மசாலைகளும் குளங்களும் இருக்கின்றன. ஆனால் இந்த இடத்தைப் பற்றி காசி ரஹஸ்யத்தில் குறிப்பிட்டிருக்கவில்லை. பிகுன்சியிலிருந்து சற்று முன்னால் போய் ஸாரங்கதாலால் என்னுமிடத்தில் ஒரு தினம் தங்குவார்கள்.*

*பாசபாணிகணேசர் - முக்கியக்கடை வீதிக்குப்பக்கம்.*

*ப்ருத்வீச்வரர் - குஜரிகிராமம் - பின்காரியாவின் கிணற்றுப் பக்கம், ஸ்வர்கபூமி; இதற்கு முன்னால் பிகுன்ஜியின் 5 வது தங்குமிடம் ஸாரங்க குளக்கரையில் ஆகும். அங்கு ஒரு சிறு தர்மசாலையும் உள்ளது. இங்கு யாத்திரிகர்கள் தங்குவதில்லை; நேரே சிவபுரத்திலிருந்து கபிலதாராவிற்குச் சென்று விடுகிறார்கள்.*

*யூபஸரோவரதீர்த்தம் = தீனதயாபுரத்தில்; கபிலதாரா தீர்த்தம் = இதுதான் தற்சமயத்துக்கு தங்குமிடம்; அநேகம் தர்ம சாலைகளும் கடைத்தெருக்களும் இருக்கின்றன. காசீகண்டம் 62 வது அத்யாயத்தில் இது குறிப்பிடப்பட்டிருக்கிறது. வ்ருஷபத்வஜேஸ்வரர் =கபிலதாரா - ப்ரசித்த ஸ்தலம், கடைசி தங்குமிடம் - ப்ராத்தனுமந்திரம்*

**விருஷபத்வஜதேவேச! பித்ரூணும் முக்திதாயக !।**
**ஆக்ஞாம் தேஹி மஹாதேவ! புனர்தர்சனம், அஸ்து தே!**

*இது பித்ருக்களுக்கு முக்தியளிக்கும் ப்ரசித்தமான இடம். காசியில் எல்லாத் தீர்த்தங்களிலும் இருப்பதுபோல்*

*இங்கும் கயாதீர்த்தம் இருக்கிறது.*

*அதனுல் இதற்கு சிவகயா எனப்பெயர் வந்தது. இங்கு தர்பணம், ச்ராத்தம், ப்ராம்மண போஜனம் சக்தி அனுஸாரம் செய்யவேண்டும்:*

*ஜ்வாலா ந்ருஸிம்ஹம் = கோட்வாம் கிராமம்; (வருஞைசங்கமம் - புட்கிகோட்;)*

*வருஞைஸங்கமம் - புட்கிகோட்; நதி அணைகட்டு இருப்பதால் எப்பொழுதும் தண்ணீர் இருக்கும். தோணியில் அக்கரைக்குப் போகலாம். ஸங்கமத்தில் ஸ்ஞனமோ, ப்ரதக்ஷிணமோ செய்து கொள்ளவேண்டும்.*

*ஆதிகேசவர் - வருஞ ஸங்கம ஸமீபத்தில் புட்கிகோட்டின் முனையில் - ஸங்கமேஸ்வரர்.*

*ஆதிகேசவருக்குக் கீழுள்ள கோவிலில் -கர்வவிநாயகர்; புட்கிகோட்டைக்குள்ளே. இங்கிருந்து கங்கைக்கரையிலே ஜலத்தைத் தெளிப்பது வழக்கம். ப்ரஹ்லாதேஸ்வரர் - ப்ரஹ்லாத்காட்.*

*த்ரிலோசன மஹாதேவர் -த்ரிலோசனகாட்; பஞ்சகங்கா தீர்த்தம் (கட்டம்) பிந்து மாதவர், வேணிமாதவர், மாதவராய், ப்ரஸித்தமானது, கபஸ்தீஸ்வரர், லக்ஷ்மணபாலாகட்டம் மங்கள கௌரீ. அதே கோவிலில் ப்ரசித்தமான தேவி.*

*வஸிஷ்டேஸ்வரர் -சங்கடாதேவீ துறை (கட்டம்) வாமதேச்வரர் அதுவும் அங்கேயே, பர்வதேஸ்வரர், ஆத்மவீரேச்வரருக்கு ஸமீபத்தில்.*

*மஹேச்வரர் - மணிகர்ணிகா கட்டத்தில் -ஸித்தி விநாயகர் ப்ரஸித்தம் - ஸப்தாவரண விநாயகர். ப்ரம்ம நாளத்தில் ஜபவிநாயகர் ப்ரஸித்தம் = இத்துடன் யாத்திரை பூர்த்தி. இங்கு ஸ்ஞனம் செய்து விட்டு விச்வேஸ்வரரைப்*

பூஜிக்க வேண்டும். பிறகு அடிக்கடி ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்துவிட்டு, பிறகு அன்னபூர்ஞ, விஷ்ணு தண்டபாணி, டுண்டிராஜர், பைரவர், ஆதித்யர், மோதகாதிபஞ்ச விநாயகர் இவர்களைத் திரும்பவும் பூஜை செய்ய வேண்டும். பிறகு பஞ்சகோச ப்ரதக்ஷிணத்தை நினைத்துக்கொண்டு, எல்லா தேவதைகளையும் நினைத்துக் கொண்டு அக்ஷதை போடவேண்டும். பிறகு, திரும்பவும் விச்வேஸ்வர பகவானிடம் போய் ப்ரார்த்தனை செய்யவேண்டும்.

*ஜய விஶ்வேஸ்வர! விஶ்வாத்மன்! காசீநாத! ஜகத்குரோ! த்வத் ப்ரஸாதாத் மஹாதேவ! - க்ருதா க்ஷேத்ர ப்ரக்ஷிஞ ।। அநேகஜன்ம பாபானி க்ருதானி மம சங்கர! கதானி பஞ்சகோசாத்மா லிங்கஸ்யாஸ்ய ப்ரதக்ஷிஞத்।। த்வத்பக்தி காசி வாஸாப்யாம் ஸஹைவ பாபகர்மஞ; ஸத்ஸங்க ச்ரவஞத்யைஶ்ச யா லோகச்ச து ந : ஸதா ஹர சம்போ! மஹாதேவ! ஸர்வஞ! ஸுகதாயக! ப்ராயஶ்சித்தம் ச நிர்வ்ருத்தம் பாபாநாம் த்வத்ப்ராஸதத; புன:பாபரதிர்மாஸ்து தர்மபுத்தி: ஸதாஸ்து மே ।।*

*அர்த்தம் :- ஹே! காசிநாதா! ஹே ஜகத் குரோ! விஸ்வாத்மன்! விஸ்வேஸ்வரா! ஜெய ஹே! மஹாதேவா! தங்களுடைய க்ருபையிஞலே நான் இந்த க்ஷேத்திரத்தைப் ப்ரதக்ஷிணம் செய்து வந்தேன். அநேக தினங்களாக நான் செய்து வந்த பாபங்களெல்லாம் இந்த பஞ்சகோசாத்மக லிங்கத்தைப் ப்ரதக்ஷிணம் - செய்ததிஞல் போய்விட்டன. தங்களிடம் பக்தியும், காசீவாசமும், பாபமில்லாத கர்மாக்களும் ஸத்ஸங்க ச்ரவணங்களுமாக எங்களுடைய காலம் எப்பொழுதும் சென்று கொண்டேயிருக்கட்டும்; ஹேராஜன், சம்போ மஹாதேவா, ஸர்வக்ஞ! ஸுகதாயக! தங்களுடைய க்ருபையிஞல் எங்களுடைய பாபங்களுக்கு ப்ராயச்சித்தம் செய்து முடித்து விட்டோம். திரும்பவும்*

*பாபங்களில் எனக்கு ருசி ஏற்படாமல் இருக்கட்டும், தர்மபுத்தி எப்பொழுதும் திடமாக இருக்கட்டும். இந்த விதமாகப் ப்ரார்த்தித்து விட்டு, ப்ராம்மணர்களுக்கு யதாசக்தி - தக்ஷிணைக் கொடுத்துவிட்டு, கையைக் கூப்பிக் கொண்டு, பின்வரும் மந்திரத்தைக் கூறவேண்டும்.*

*பஞ்ச கோசஸ்ய யாத்ரீயம் யதாவத் யா மயா க்ருதா! ந்யூனம் -ஸம்பூர்ணதாம் யாது -த்வத்ப்ரஸாதாத் உமாபதே! - உமாபதியே - நான் விதிபூர்வமாக பஞ்சகோச யாத்திரையைச் செய்து முடித்து விட்டேன்; அதில் ஏதாவது குறைகள் இருந்தால் அது, தங்களுடைய அனுக்கிரஹத்திஞல் ஸம்பூர்ணமாகட்டும். இந்த விதமாகப் ப்ராத்தனை செய்து விட்டுத் தங்கள் தங்கள் வீடுகளுக்குச் சென்று ப்ராம்மணர்களுக்கும், குடும்பத்தில் உள்ளவர்களுக்கும் போஜனம் செய்து வைத்துவிட்டுப் பிறகு தான் உண்ண வேண்டும். இந்த விதமான ஸாதாரண பஞ்ச கோச யாத்திரையின் விதியை எனக்குத் தெரிந்த மட்டிலும் 'காசீரஹஸ்யம்' 'காசீதர்பணம்' என்ற கிரந்தங்களின் ஆதாரத்திலிருந்து எடுத்து எழுதியிருக்கிறேன். இந்த பஞ்சக்ரோச யாத்திரை மணிகர்ணிகையில் அல்லது முக்தி மண்டபத்தில் ஆரம்பமாகிறது. அங்கேயே வந்து ஸமாப்தியாகிறது. காசீகண்டத்தில் இந்த யாத்ராவிதி காசீரஹஸ்யத்தில் இருப்பதுபோல விஸ்தாரமாக இருப்பதில்லை. ஆஞல் இந்த தேவஸ்தானங்களின் வர்ணனையும் மஹாத்மியமும் விசேஷமாகக் கூறப்பட்டிருக்கிறது. மணிகர்ணிகாவில் இருந்து கர்தமேஸ்வரம் மூன்று க்ரோசம்; கபிலதாரா; 22 க்ரோசம் ; அங்கிருந்து மணிகர்ணிகை 23 1/2 க்ரோசம்) பிறகு 1 1/2 க்ரோசம் அன்னிய தேவதரிசனங்களுக்கு வேண்டி மார்க்கத்திலிருந்து பிறகு வந்துசேர வேண்டும். இந்த விதமான பஞ்சக்ரோச யாத்திரையெல்லாம் சேர்ந்து மொத்தம் 92 க்ரோசம் யாத்திரையாகிறது.*

*தொடக்கத்தில் மணிகர்ணிகையிலிருந்து அஸிஸங்கமம் வரையில்; பிறகு திரும்பி வரும்போது வருணாஸங்கமத்திலிருந்து மணிகர்ணிகை வரும்போது கங்கைக் கரை வழியாகவே செல்லவேண்டும். மழைக்காலத்தில் கங்கையில் வெள்ளம் வந்த ஸமயம் தோணியில் செல்லலாம்; தோணியில் செல்வதினால் தோஷமில்லை. பிறகு எங்கும் நல்ல சாலை செல்கிறது. சாலையின் வலது பக்கத்தில் கோவில்களும் பெரிய பெரிய தோப்புகளும் கிணறுகளும் வஸதியாக இருக்கின்றன. ஒவ்வொரு தங்குமிடங்களிலும் தர்ம சாலைகளும் உணவுப் பொருள்கள் வாங்குவதற்கான வஸதியான கடைகளும் இருக்கின்றன. இந்தவிதமாக வருஷத்திற்கு ஒருமுறை - சரத்காலத்து நவராத்திரியின்போது துர்க்கா யாத்திரையும், புரட்டாசி மாதம், மாசி - சதுர்த்தியில் - கணேச யாத்திரையும், அயன யாத்திரையாகவே எண்ண வேண்டும். இரண்டு அயனங்களிலும் யாத்திரை போக முடியாவிட்டாலும்கூட, வருஷத்தில் ஒரு தடவை - இந்த யாத்திரை அவசியம் செய்ய வேண்டும். ஏனென்றால் க்ஷேத்திரங்களில் அதிகமாக பாபங்கள் சேருவதினால் அதற்கு ப்ராயசித்தமாக பஞ்சக்ரோச யாத்திரை - வருஷம் ஒருமுறை செய்வது காசி வாஸிகளின் கடமையாகும்.*

*அந்தர் கிரஹயாத்திரை:*

*அந்தர் கிரஹயாத்திரை என்று கூறப்படும் -காசி நகரத்துக்குள்ளே செய்யப்படும் யாத்திரையை -அவகாசம் இருக்கிறவர்கள் தினமும் செய்யவேண்டும். பிரதி தினம் போக முடியாவிட்டாலும், ஒவ்வொரு சதுர்தசியும் செல்வது உசிதம். அதுவும் முடியாவிட்டால் அயனத்திலோ, வருஷத்திலோ - ஒருதடவை சென்று வந்தால் அது அநேகப் பிரகாரமான பாபங்களுக்கு சாந்தியாகும். முதலாவது ப்ராதஸ்ஸ்னானம் செய்து, (1) மோதகர், (2) ப்ரமோதகர், (3) துர்முகர், (4) ஸுமுகர், (5) கணநாயகர் - இந்த ஐந்து விநாயகர்களையும் நமஸ்கரித்து விட்டு முக்தி மண்டபத்துக்குச் சென்று பகவான்*

விஸ்வேஸ்வரரை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து விட்டு, பிறகு எல்லா பாபங்களும் சாந்தியடையும் பொருட்டு, அந்தர்க்ருஹ யாத்திரை செய்கிறேன் என்று ஸங்கல்பித்துக் கொண்டு, மௌனமாக மணிகர்ணிகைக்கு வரவேண்டும் - அங்கு ஸ்ஞனம் செய்து, மணிகர்ணிகேஸ்வரரைப் பூஜிக்க வேண்டும். மணிகர்ணிகா தீர்த்தம் ப்ரஸித்தம். மணிகர்ணிகேஸ்வரர் = கோமடத்துக்கு ஸமீபம் - பர்த்வான் கோட்டில் - ஸித்தி விநாயகர் -இங்கு தரிசனம் செய்ய வேண்டும்; கம்பலாஸ்வரதேஸ்வரர் - கோமடத்திற்கு ஸமீபம்; வாகீஸ்வரர், பர்வதேஸ்வரர் -சங்கடா காட் ஸமீபம்.

கங்காகேசவர் லலிதா தேவி - லலிதாகாட்-

ஜராஸந்தேஸ்வரர் - மீர்காட்;

ஸோமநாதர் மான்மந்திர்காட்

ஆதிவராஹேஸ்வரர் அங்கேயே -

தாலஸேஸ்வரர் - வழியில் இருக்கிருர், அதனுல் தரிசனம் செய்ய வேண்டும்.

ப்ரும்மேஸ்வரர் - பாலமுகுந்தருடைய மண்டபத்தில்

அகஸ்தீஸ்வரர் அகஸ்திய குண்டம் (கோதோலியாவின் ஸமீபம்)

கஸ்யபேஸ்வரர் ஹரிகேசவனேஸ்வரர், ஜங்கம்பாடி

வைத்யநாத் -வைத்யேஸ்வரர் - ஓதை சௌக்கி

துர்வேஸ்வரர் - இந்த பெயருடன் கூடிய பிரஸித்த மஹால் இருக்கிறது.

கோகர்ணேஸ்வரர் - ஓதை சௌக்கிக்கு பக்கத்தில்

-பாடகேஸ்வரர் , கடஹா, இந்த இடம் இப்பொழுது மறைந்துபோய் விட்டது.

அஸ்திக்ஷேபதடாகம் (தேனியா) இந்த இடமும் அநேகமாக மறைந்து விட்டது.

*கீக்கஸேஸ்வரர் - ராஜர தர்வாஜாவின் உள்ளே*

*பாரபூதேஸ்வரர் - கோவிந்தபுரா, மச்சர் கட்டாவிற்குப் பக்கத்தில்;*

*சித்ரகுப்தேஸ்வரர் -மச்சர் கட்டர் வில் -; சித்ரகண்டாதேவி- சௌக்கிற்கு முன்ருல் - சந்தூக்கி கல்லி-*

*பசுபதீஸ்வரர் - பிரசித்தமான பசுபதீஸ்வரமஹாலில் -*

*பிதாமஹேஸ்வரர் - சீதனா கல்லியில் ஒரு இருண்ட பள்ளத்தில் இருக்கிறது.*

*வருஷத்தில் ஒரு நாள் சிவராத்ரியன்று தான் தரிசனம் செய்ய முடியும்.*

*கலசேஸ்வரர் - ப்ரும்மபுரி கலஸேஸ்வரியில்*

*சந்த்ரேஸ்வரர் - சந்த்கூபத்தில் - ஸித்தேஸ்வரிகோவில் - சந்த்ரகூப கிணறும்-*

*வீரேஸ்வரர் - வீர தீர்த்தம் - ஸிந்தியாகாட்டில் -இந்த ஆத்ம வீரேஸ்வரர்*

*பிரஸித்தமானவர்; இங்கு பின்னும் அநேக தேவதைகள் இருக்கிருர்கள்;*

*வித்யேஸ்வரர் நீமவாளி, ப்ரும்மபுரி -; அக்னேஸ்வரர் - அக்னேஸ்வரகாட்டில் -*

*உபசாந்தேஸ்வரர் கோவிலில் மற்ருெரு கோவிலில் இருக்கிருர்;*

*நாகேஸ்வரர் - போன்ஸ்லாகாட்டில் சமீபத்தில் அதை ஒட்டிருல் போல் இருக்கிருர் -*

*அரிச்சந்த்ரேஸ்வர், சிந்தாமணி விநாயகர் சேஞ விநாயகர், வஸிஷ்டேஸ்வரர், காம தேவஸ்வரர், சீமாவிநாயகர் இவர்கள் எல்லாரும் சங்கடா காட்டில் (துறை) இருக்கிருர்கள்.*

*கருணேஸ்வரர், திருசந்தேஸ்வரர் - இவர்கள் லஹாவுரிடோவில்லா ஒரு ஹாலில் பிரசித்தம்*

*விசாலாக்ஷி - பிரசித்தம்; தர்மேஸ்வரர், விஸ்வபுஜாதேவி தர்மகூபத்தில்; ஆசாவிநாயகர், விருத்தாதித்யர், மீர்காட்டுக்குப் பக்கத்தில்.*

*சதுர்வக்த்ரேஸ்வரர், பிராமேஸ்வரர், சகர்கந்தகல்லியில் மனப்ரகாமேஸ்வரர், சாக்ஷிவிஞயகர் பக்கத்தில்.*

*ஈசானேஸ்வரர், கோத்தவால் புராவில்.*

*சண்டிகா தேவியும் சண்டீஸ்வரரும் காளிகா கல்லியில்.*

*பவானி சங்கர் சுக்ர கூபத்திற்கு சமீபத்தில்.*

*அன்னபூரணி பிரஸித்தம்; டுண்டிராஜ்க்ணேஷ்; பிரசித்த மஹால்*

*ராஜாராஜேஸ்வரர், ஜப விஞயகருக்கு சமீபத்தில்.*

*லாங்கலீஸ்வரர், - கோவாபஜாரில்*

*நகுலீஸ்வரர் - விஸ்வேஸ்வரருக்கு பக்கத்தில் அனுமான்ஜீக்கு பின்ஞல் வரான்னேஸ்வரர்; பரத்யேஸ்வரர், பிரதிக்ரகேஸ்வரர்,*

*நிஷ்களங்கேஸ்வரர்; மார்க்கண்டேஸ்வரர் இவர்கள் தண்டபாணிக்கு முன்ஞல்; ஞானவாபிக்குப் பின்ஞல்.*

*அப்ரஸரேஸ்வரர் வடக்கு வாசலுக்குப் பக்கத்தில்.*

*கங்கேஸ்வரர் - அரசடியில் மசூதிக்கு முன்ஞல் மூர்த்தி மறைந்திருக்கிறது.*

*ஞானவாபி - இதில் ஸ்ஞனம் செய்யவோ, ஜலத்தை ப்ரோக்ஷித்துக் கொள்ளவோ செய்யலாம். நந்திகேஸ்வரர் - ஞானவாபிக்குப் பக்கத்தில், தாரகேஸ்வரா, கௌரிசங்கர் மூர்த்திக்கு கீழே;*

*மஹாகாலேஸ்வரர் - மேற்கூறிய இடத்திற்குப் பக்கத்தில்;*

*தண்டபாணி - ஞானவாபியின் மேற்குபக்கத்தில் - வெளியில்,*

*மஹேஸ்வரர் அரசின் கீழே, நிருருதி கோணத்தில்.*

*மோக்ஷேஸ்வரர் - அங்கேயே; வீரபத்ரேஸ்வரர் வாயு கோணத்தில்*

*அவிமுக்தேஸ்வரர் - இப்பொழுது விஸ்வேஸ்வரருடைய கோவிலுக்குள் இருக்கிறது; ஆனால் பழைய ஸ்தானம் - ஞானவாபிக்கு வடக்கு வாசலில் இருந்தது -, மோதாதி பஞ்ச விநாயகர் - ஞானவாபிக்குப் பக்கத்தில் ஔரங்கசீப் கோவில்களை இடித்தபோது அநேகம் தேவதாமூர்த்திகள் மறைந்து விட்டன. ஆனால் மசூதிக்குக் கீழே நான்கு பக்கமும் பழைமையான தேவஸ்தானங்களில் பூஜை முதலியவைகள் செய்கிறார்கள். பிறகு விஸ்வநாதர் கோவிலுக்குள் வந்து தரிசித்துப் பூஜை செய்து மௌன வ்ரதத்தை முடித்துக் கொண்டு, இந்த மந்திரத்தைக் கூறவேண்டும், ''அந்தர் கிரஹஸ்ய யாத்ராயாம் - யதாவத் யா மயா க்ருதா, ந்யூனானி ரிக்தயா சம்பூஹா; ப்ரியதாம் அனயா விபு:'' (அர்த்தம்) அதாவது விதிப்படிக்கு என்னால் முடிக்கப்பட்ட இந்த அந்தர் கிரஹ யாத்ரையில் ஏதாவது அதிகமோ - குறைவோ ஏற்பட்டிருந்தால் அதை க்ஷமித்து பகவான், மகிழ்ச்சியடைய வேண்டும். இப்படி பிரார்த்தித்துக் கொண்டு முக்தி மண்டபத்திற்கு வந்து சற்று இளைப்பாறிவிட்டுத் தங்கள் தங்கள் கிரஹத்திற்குச் செல்லலாம். சக்தியையும் பக்தியையும் அனுசரித்துப் பிராமணர்களுக்குப் போஜனம் செய்வித்து தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும், யாத்திரையின் பூராபலமும் பெறவும் இந்த விதமாக அந்தர் கிரஹ யாத்திரையைப் பூர்த்தி செய்தால் பாபம் நீங்கி புண்ணியத்திற்குப் பாத்திரவானாகிறான்.*

ருதுயாத்திரை ;- *(1) வருஷருது :- துவாரகாபுரி சங்கூதாதா.*

*2.* சரத்ருது *:-* விஷ்ணுகாஞ்சிபுரி - *பஞ்சகங்கா பிராந்தியம்.*

*3.* வசந்தருது :- மதுராபுரி - *இது அலேப்புரத்தில் உத்தரார்த்தத்திலிருந்து ஆரம்பித்து, வருணு தீரத்திலே நக்கீகாட் வரையில்.*

*4.* கிரீஷ்மருது :- அயோத்யாபுரி ராமேஸ்வரம் - *பஞ்சக்ரோசத்தினுடைய ராமேஸ்வரம் வருணு நதிக்கரையில்.*

*5.* ஹேமந்தருது *:- அவந்திகாபுரி - ஹரதீர்த்தத்தில் வ்ருத்த காலேஸ்வரரிடமிருந்து, கிருத்திவாஸேஸ்வரர் வரையில்.*

*6.* சிசிரருது *:-* மாயாபுரி – *அஸ்ஸி சங்கமத்தில்.*

*ஒவ்வொரு* ருதுவிலும் காசீபுரி *லலிதா காட்டில் :- இவைகள் ஏழும் மோக்ஷபுரி யாத்திரைகள். இவைகளில் யதாசக்தி ஸ்ஞனம், பூஜை, சிராத்தம், தாஞதி கர்மங்களே செய்வதிஞல் முன்கூறிய ஏழுபுரியின் பலன்களும் கிடைக்கிறது. காசீகண்டத்தில் ஏழாவது அத்யாயத்தில் இந்தப் புரிகளின் மகாத்மியம் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. காசியில் இப்பொழுதும் எல்லாத் தீர்த்தங்களும், எல்லா தேவதைகளும் வசிக்கிருர்கள். அதஞல் காசிவாசிகளுக்கு இந்த ஏழு புரிகளும் இங்கேயே இருக்கின்றன. இதை ருதுயாத்திரை அல்லது ஸப்தபுரியாத்திரை என்று கூறுகிருர்கள்.*

மாதயாத்திரை :– சித்திரைமாதம் *:- காமகுண்டத்தில் ஸ்ஞனம், காலேஸ்வரருக்குப் பூஜை; இந்த யாத்திரை தேவதைகள் செய்திருக்கிருர்கள். இப்பொழுது காமகுண்டம் மறைந்து விட்டது, மஹாத்ரிலோச்சனம் இருக்கிறது.*

வைகாசிமாதம் :- விமலகுண்டத்தில் ஸ்ஞனம் - விமலேஸ்வரர் பூஜை, இந்த யாத்திரையை தைத்யர்கள் செய்திருக்கிருர்கள். விமலகுண்டம் ஜங்கம்பாடியில் இருந்தது - மறைந்து விட்டது.

ஆனிமாதம் :- ருத்ராவாஸதீர்த்தம், ருத்ராவாஸேஸ்வரர் பூஜை - தேவதைகள் -இந்த யாத்திரையைச் செய்திருக்கிருர்கள். தீர்த்தம், கங்கை, மணிகர்ணிகைதான்.

ஆடிமாதம் :- லக்ஷ்மிகுண்டம், லக்ஷ்மிதேவி இங்கு கந்தர்வர்கள் யாத்திரை செய்திருக்கிருர்கள்.

ஆவணிமாதம் :- காமாக்ஷிகுண்டம், காமாக்ஷிதேவி. இப்பொழுது இதை கமச்சா என்று கூறப்படுகிறது. வித்யாதரர்கள் இந்த யாத்திரையைச் செய்திருக்கிருர்கள்.

புரட்டாசிமாதம்:- கபால மோசனதீர்த்தம், குலஸ்தம்பம் ஹோால் ஹரவாலாட்ட பைரவர் தரிசனம், கின்னரர்கள் இந்த யாத்திரையைச் செய்திருக்கிருர்கள். லாட்ட பைரவர் பிரசித்தி வாய்ந்தவர்.

ஐப்பசிமாதம் :- மார்க்கண்டேய தீர்த்தம், மார்க்கண்டேயேஸ்வரர் - பித்ருக்கள் இந்த யாத்திரையை செய்திருக்கிருர்கள். இது ஞானவாபிக்குப் பக்கத்தில் இருக்கிறது. ஆனல் மறைந்து விட்டது.

கார்த்திகைமாதம் :- பஞ்ச கங்கா தீர்த்தம் - பிந்துமாதவம் - ரிஷிகள் இந்த யாத்திரையைச் செய்திருக்கிருர்கள்.

மார்கழிமாதம் :- பிசாசமோசனம் - கபர்தீஸ்வரர், வித்யாதரர்கள் இந்த யாத்திரையைச் செய்திருக்கிருர்கள்.

தைமாதம் :- தனதகுண்டம் - தனதேஸ்வரர் - குஹ்யர்கள் இந்த யாத்திரையைச் செய்திருக்கிருர்கள் - குண்டம் மறைந்துவிட்டது. அன்னபூரணி கோவிலில் குபேரேஸ்வரர் இருக்கிருர்.

மாசிமாதம் :- கோடி தீர்த்தம் கோடிலிங்கேஸ்வரர் - யக்ஷர்கள் இந்த யாத்திரையைச் செய்திருக்கிறார்கள். தீர்த்தம் மறைந்திருக்கிறது. சாக்ஷிவிநாயகருக்குப் பக்கத்தில்.

பங்குனிமாதம் :- கோகர்ணகுண்டம், கோகர்ணேஸ்வரர்; பைசாசர்கள் இந்த யாத்திரையைச் செய்திருக்கிறார்கள். இங்கிருக்கும் கோகர்ணகூபத்தைத்தான் குண்டம் என்கிறார்கள். இடம் கோதைசௌக்கி. இந்த மாதயாத்திரையைப் பற்றி லிங்க புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது. தீர்த்தஸ்நானம், அதிஷ்டான தேவதைகளின் பூஜை, தரிசனம்; லிங்க புராணத்தில் மாதம் முப்பதுநாளும் இந்த யாத்திரையைச் செய்யச் சொல்லியிருக்கிறது. பூராமாதம் முடியா விட்டாலும் யதாசக்தி செய்ய வேண்டியது. காசி கண்டத்தில் இந்த யாத்திரையைப்பற்றிக் கூறியிருக்கவில்லை. ஆனால் அந்தந்த மகாத்மியத்தையும், தேவதைகளின் வர்ணனைகளையும் கூறியிருக்கிறது. மாதம்தோறும் செய்யும் யாத்திரையை அநேகம்பேர்கள் செய்வதில்லை. ஆனால் வைகாசி மாதம் மணிகர்ணிகைஸ்நானம், கார்த்திகைமாதம் பஞ்ச கங்காஸ்நானம், மாசி மாதம் தசாஸ்வமேதஸ்நானம் இவைகளைச் செய்கிறார்கள். பக்தர்கள் யோசித்து, உசிதம்போல் செய்யவேண்டியது. இதுபோல்தான் பக்ஷயாத்திரையும்; ஆனால் எங்கு கொஞ்சம் அதிகமாக இருக்கிறதோ அதைக் குறிப்பிட்டிருக்கிறது.

''ஜேஷ்டேமாஸே, சிதே பக்ஷே பக்ஷம் ருத்ரசரோவர:

குருவன்வை வார்ஷிகீம் யாத்ராம் ந விக்னே ரபிஸியதே''

ஆனிமாதத்து சுக்லபக்ஷம் முழுவதும் தசாஸ்வமேகத்தில் ருத்ர சரோவருக்கு வருஷம் தோறும் யாத்திரை செய்பவன் விக்னங்களைத் தாண்டிவிடுகிறான்.

*அதனுல் ஆனிமாதத்து சுக்லபக்ஷ முழுவதும் தசாஸ்வமேதத்திற்கு யாத்திரையாகச் செல்ல வேண்டியது. அதே போல் ஆவணிமாத சுக்லபக்ஷத்தில் துர்க்காகுண்டத்தில் ஸ்ரீ துர்க்கா தேவி தரிசனத்துக்கும், பூஜைக்கும் (யாத்திரை) செல்ல வேண்டும். வைஷ்ணவ ஸ்தலங்களாகிய கோபாலமந்திர், ராம்நகர், ராம்பாக் இந்த இடங்களில் டோலோத்ஸவம் நடக்கும் . அப்பொழுது சந்தியா காலத்தில் மேளாவும், தரிசனமும் கோலாகலமாக நடக்கும்; அதேபோல் ஐப்பசி மாதத்தில் கிருஷ்ணபஷத்தில் கங்கா தேவியின் கரை -; அல்லது பித்ருகுண்டம் ஆகிய பவித்ர தீர்த்தங்களில் ஸ்ஞனம், தர்பணம், யாத்ரா காரியங்களைச் செய்து கொண்டு பித்ருபக்ஷத்து யாத்திரையைக் கொண்டாடுகிருர்கள். காசீ கண்டத்தில் அத்தியாயம் தெண்ணூற்றேழில் 235, 236 ஸ்லோகங்களில் இந்த மாகாத்மியம் எழுதப்பட்டுள்ளது. பிறகு கார்த்திகைமாதம் சுக்லபக்ஷம் முழுவதும் ஞாயிறு செவ்வாய் நீங்கலாக பெரும்பாலும் தோட்டங்களில் குடும்பத்துடன் சென்று நெல்லி விருஷத்தைப் பூஜைசெய்து, பிராம்மண போஜனம் செய்வித்து இஷ்டமித்ர பந்து ஜனங்களுடன் போஜனம் செய்து கொண்டாடுகிருர்கள். யோகிராஜர் பர்த்ரு ஹரி தன்னுடைய பிரசித்தி பெற்ற வைராக்ய சதகத்தில் இந்த அர்த்தம் தொனிக்கும்படி எழுதியிருக்கிருர். அதாவது எங்கு தோட்டங்களில் நாலு விதமான உணவு வகைகளைத் தயாரித்துச் சாப்பிடுவதே குடும்பம் நடத்துவதாக இருக்கிறதோ, கடினத்திலும் கடினம் தபஸ் எங்கு செய்யப்படுகிறதோ, கௌபீனம் மாத்திரம் அணிவது வஸ்திர அலங்காரமாகக் கருதப்படுகிறதோ, பிக்ஷையெடுத்து சாப்பிடுவதே பூஷணமாகக் நினைக்கப்படுகிறதோ, மரணத்தையே மங்களமாகக் கொண்டாடப்படுகிறதோ அந்தக் காசீபுரியை விட்டுக் பண்டிதர்கள் ஏன் வேறு இடங்களுக்கு செல்லுகிருர்கள் என்பது அதிசயமாக இருக்கிறது . இதுபோல் மார்கழிமாதம்*

சுக்லபக்ஷம் தோட்டங்களில் கடம்ப விருக்ஷங்களுக்கு அடியில் பூஜை செய்து உணவு சமைத்துச்சாப்பிடுகிறுர்கள், மாசிமாதத்தில் சுக்லபக்ஷம் முழுவதும் கங்கா தேவியின் மறுகரையில் வியாஸபுரு என்று அழைக்கப்படும் ஸ்ரீமான் காசி ராஜாவின் கோட்டையில் ''வியாஸ யாத்திரையை'' கொண்டாடுகிருகள்.

அங்கு சிவலிங்கத்தின் உருவில் இருக்கும் வியாஸரை தரிசிக்கிறுர்கள் பிறகு ராமநகரில் இருக்கும் தடாகத்திற்குச் சென்று உணவு சமைத்துச்சாப்பிட்டுவிட்டு சாயங்காலம் தங்கள் தங்கள் கிருஹத்திற்குச் செல்லுகிறுர்கள். வியாஸருடையத் தரிசனம் முக்யமாகக் கருதப்படுகிறது. தக்ஷிண தேசத்திலிருந்து வரும் யாத்ரிகர்கள் கூடவியாஸகாசிக்குச் சென்று வியாஸரைத் தரிசிக்கிறுர்கள். இந்த யாத்திரையெல்லாம் பக்ஷம் முழுவதும் நடக்கும் என்று சொல்ல முடியாது. பிதுர் பக்ஷத்தில் கூட எல்லாரும் தசாஸ்வமேதத்திற்குப் பூரி யாத்திரை செல்வதாக நினைத்துக் கொண்டு சென்று தர்ப்பணம் முதலியவைகள் செய்கிறுர்கள். மற்றும் ஆவணி, கார்த்திகை,மார்கழி, மாசி, சுக்லபக்ஷ முழுவதும் யாத்திரை போவதாகத்தான் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் இப்பொழுது ஜனங்கள் மேளா (திருவிழா) கொண்டாடுவதற்குச் செல்கிறுர்களே தவிர யாத்திரைக்கல்ல. இதன் ஆதாரம் யாத்திரையாகும்.

''திதியாத்திரை''

வருஷ முழுவதும் செய்யப்படுகிற திதியாத்திரையைப் பற்றி காசீ கண்டத்தில் கூறப்பட்டிருக்கிறது. அதையும் இங்கு கூறுகிறேும். ஒவ்வொரு சுக்லபக்ஷ திருதியையிலும், ''கௌரி யாத்திரை'' செய்யவேண்டும். சுக்லபக்ஷ திருதியையன்று பரம உத்தமமான கௌரி யாத்திரை செய்வதால் மிகவும் செழிப்பு உண்டாகும். தீர்த்தங்கள் ஸஹிதம் நவகௌரிகள் இருக்கும் இடம்கீழே குறிப்பிட்டிருக்கிறது.

**கௌரியாத்திரை :- முகநிர்மாலிககௌரி :-** *காய்காட், (கட்டத்திற்கு காட்) - கட்டம் துறை மேல் ஹனுமான்ஜியின் கோவில்;*

**ஜேஷ்டா கௌரி :-** *ஜேஷ்டா வாபி என்ற ஒரு கிணறு இருந்தது. அது இப்பொழுது மறைந்து விட்டது.*

*கர்ணகர்டா மஹாலில் ஜேஷ்டேஸ்வரருக்குப் பக்கத்தில்* **''சௌ பாக்ய கௌரி''**, *ஞானவாபி விஸ்வநாதர் கோவிலில் வாயு கோணத்தில் இருக்கும் பார்வதிஜி.*

**சிருங்காரகௌரி:-** *ஞானவாபியில் விஸ்வேஸ்வரருடைய ஈசான கோணத்தில் இருக்கும்* **அன்ன பூர்ணு தேவி;**

**விசாலாக்ஷிதேவி :-** *மீர்காட்டில் விசால தீர்த்தம்;*

**பிரசித்திமான லலிதாதேவி** *:- லலிதா தீர்த்தம் லலிதா காட்டில் பிரசித்தம்.*

**பவானிகௌரி :-** *பவானி தீர்த்தம் காளிகா கல்லி = சுக்ரேஸ்வரருடைய பக்கத்தில்;* **மங்களா கௌரி** *:- பிந்து தீர்த்தம்; பஞ்ச கங்கா காட் பிரசித்தமான கவர்தீஸ்வரர் கோவில் இருக்கிறது.* **மஹாலக்ஷ்மிகௌரி** *:- லக்ஷ்மிகுண்டம் = லக்ஷ்மி மஹால் பிரசித்தமானது.*

**''விநாயக யாத்திரை''**

*ஒவ்வொரு கிருஷ்ண பக்ஷ சதுர்த்தியன்று விநாயகர் யாத்திரை சொல்லப்பட்டிருக்கிறது. அந்தத் திதியும் செவ்வாய்க் கிழமை வந்தால் மிகவும் விசேஷம். ஒவ்வொரு சதுர்த்தியும் கணேசயாத்திரை செய்ய வேண்டும். அவரை உத்தேசித்து பிராம்மணர்களுக்கு லட்டு கொடுக்க வேண்டும்.*

*ஒரே தினம் ஐம்பத்து ஆறு கோவில்களுக்கும் யாத்திரை செய்ய முடியாது. அதனுல் ஒவ்வொரு சதுர்த்திக்கும் ஒவ்வொரு கோவிலுக்குப் போவது உசிதம். ஒவ்வொரு சுற்றளவிற்கும் எட்டு எட்டு விநாயகர் வீதம்*

ஐம்பத்தாறு விநாயகர்களின் பெயர் காசீ கண்டத்தில் கூறப்பட்டிருக்கிறது.

1. அர்க்க விநாயகர் :- லோலார்க்க குண்டத்திற்கு சமீபத்தில் கங்கைக் கரையில்.

2. துர்க விநாயகர் :- துர்கா குண்டத்தில்,

3. பீமசண்ட விநாயகர் :- பீமசண்டிகிராமம், பஞ்சக்ரோச வழியில்.

4. தேகலி விநாயகர் :- பிரசித்தபஞ்சக்ரோசத்தில்,

5. உத்தண்ட விநாயகர் :- புயலி கிராமத்தில் ராமேஸ்வரருக்கு சமீபம்.

6. பாசபாணி விநாயகர் :- மஹால் சதர் பஜார் லைனில்.

7. கர்வ விநாயகர் :- வர்ணு சங்கமத்தில் ஆதிகேசவருக்கு மேற்கு பக்கத்தில்.

8. ஸித்தி விநாயகர் :- மணிகர்ணிகா காட்டில் அமேட்டி சிவாலயத்தின் சமீபத்தில்.

9. லம்போதர விநாயகர் :- கேதாரத்திற்கு சமீபத்தில் சிந்தாமணி என்று பெயரில் பிரசித்தமானவர்.

10. கூடதந்த விநாயகர் :- கிருமிகுண்ட மஹாலில்,

11. சாலகண்ட விநாயகர் :- மடுவாடி பஜார்,

12. கூஷ்மாண்ட விநாயகர் :- குல்வாரியா கிராமம்; சண்டிகேஸ்வரருக்குப் பக்கத்தில்.

13. முண்ட விநாயகர் :- த்ரிலோசனருக்குப் பக்கத்தில் வாராணஸி தேவி கோவிலில்.

14. விகடதந்த விநாயகர் :- தூபச்சண்டியின் பின்பக்கத்தில்,

15. ராஜபுத்ர விநாயகர் :- ராஜகாட்டில் குடக்கிகோட்டையில்,

16. ப்ரணவ விநாயகர் :- த்ரிலோசனகாட்: ஹிரண்ய கர்மேஸ்வரருக்குப் பக்கத்தில்; இத்துடன் இரண்டாவது சுற்று முடிகிறது.

17. வக்ரதுண்ட விநாயகர் :- சௌசட்டிகாட், ராணுமஹாலில், இவரை ஸரஸ்வதி விநாயகர் என்று கூறுவார்கள்.

18. ஏகதந்த விநாயகர் :- பங்காலி தோலாவில் புஷ்பதந்தேஸ்வரருக்குப் பக்கத்தில்.

19. த்ரிமுக விநாயகர் :- சிகராவில் இவருக்கு வானரன், சிம்மம், யானை மூன்றுமுகம் உண்டு.

20. பஞ்சாசி விநாயகர் :- பிசாச மோசன தீர்த்தத்தில்.

21. ஹேரம்ப விநாயகர் :- பிசாச மோசனத்தின் பக்கத்தில் வால்மீகக்குன்று.

22. விக்னராஜ விநாயகர் :-சித்ரகூடகுளம் இருக்கும் தோட்டத்தில்.

23. வரத விநாயகர் :- ராஜகாட்டிலிருந்து பிரஹலாத காட்டுக்குச் செல்லும் ரோட்டில்.

24. மோதகப்ரிய விநாயகர் :- த்ரிலோசனத்தில் ஆதிமஹாதேவர் கோவிலில் - இத்துடன் மூன்ருவது சுற்று முடிவு.

25. அபயத விநாயகர் :- தசாஸ்வமேத காட்டில் சூலடங்கேஸ்வரர் கோவிலில்.

26. சிம்ஹ துண்ட விநாயகர் :- பாலமுகுந்த சௌக்கட்டாவிற்குப் பக்கத்தில் ப்ரும்மேஸ்வரர் கோவிலில்.

27. கூனிதக்ஷ விநாயகர் :- லக்ஷ்மி குண்டத்தில்,

28. க்ஷிப்ர ப்ரஸாதன விநாயகர் :- பித்தர குண்டத்தில்.

29. சிந்தாமணி விநாயகர் :- இஸ்ரகங்கியில்,

*30.* சுத்தஹஸ்த விநாயகர் *:- படேகணேசர் பிரதக்ஷிணத்தில் இவரை* ஹஸ்த *தந்த* விநாயகர் *என்று கூறுவார்கள்.*

*31.* பிச்சண்டில் விநாயகர் *:- பிரஹ்லாத காட்டில்.*

*32.* உத்தண்ட முண்ட விநாயகர் *:- த்ரிலோசனரின் பிரதக்ஷிணத்தில் வாராணசி தேவிகோவிலில், இத்துடன் நான்காவது சுற்று முடிவு.*

*33.* ஸ்தூல தந்த விநாயகர் *:- மானஸ மந்திர் காட் சோமேன்வரரின் வாசலில்.*

*34.* கலிமிய விநாயகர்*:- சாக்ஷிவிநாயகரில் மனப்ரகாமேச கோவிலில்.*

*35.* சதுர்த்த விநாயகர் *:- துருவேஸ்வரர் கோவிலில், ஓதை சௌக்கி பக்கத்தில்.*

*36.* த்விதுண்ட விநாயகர் *:- சூர்ய குண்டம் சாம்பாதித்ய கோவில் ப்ராகாரத்தில் இவரை இரட்டை முக விநாயகர் என்றும் கூறுவார்கள்.*

*37.* ஜேஷ்ட விநாயகர் *:- காசிபுரமஹாலில் கர்ணகண்டருக்குப் பக்கத்தில் ஜேஷ்டவரருக்கு பக்கத்தில்.*

*38.* கஜ விநாயகர் *:- மச்சர்கட்டாவில் பாரபூதேஸ்வரர் கோவிலில் ராஜவிநாயகர் என்றும் பிரசித்தம்.*

*39.* பால விநாயகர் *:- ராம்காட்டில்.*

*40.* நாகேஸ்வர விநாயகர் *:- போன்ஸ்லாகாட், நாகேஸ்வர கோவிலில்; இத்துடன் ஐந்தாவது பிரதக்ஷிணம் முடிவு.*

*41.* மணிகர்ணிகா விநாயகர் *:- மணிகர்ணிகை சௌக்கிற்குக் பக்கத்தில்*

*42.* ஆசாவிநாயகர் மீர்காட் *:- அனுமான் கோவிலில்.*

*43.* சிருஷ்டி விநாயகர் *:- காளிகா கல்லியில்.*

44. யக்ஷ விநாயகர் :- டுண்டிராஜருக்குப் பக்கத்தில், மேற்கு வாயிலில்.

45. கஜ கர்ண விநாயகர் :- பான்ஸ்கேபாடல், கொத்தவாலக புரத்தில் ஈசானேஸ்வரருக்கு சமீபத்தில். 46. சித்ரகண்ட விநாயகர், சாந்தினி சௌக் கிழக்கு வாயிலில்.

46. ஸ்தூல ஜங்க விநாயகர், பஞ்சகங்காவில் மங்கள கௌரி பக்கத்தில், இவரை மித்ர விநாயகர் என்று கூறுகிறார்கள்.

47. ஸ்தூல ஜங்க விநாயகர், பஞ்சகங்காவில் மங்கள கௌரி பக்கத்தில், இவரை மித்ர விநாயகர் என்று கூறுகிறார்கள்.

48. மங்கள விநாயகர் :- கார்த்த வீரேஸ்வரர் கோவிலில் - இத்துடன் ஆறாவது பிரதக்ஷிணம் முடிவு.

49. மோதக விநாயகர் :- ஞானவாபிக்குத் தெற்கு பக்கத்தில்.

50. பிரமோத விநாயகர் :-விஸ்வநாதரின் கச்சேரியில்.

51. ஸுமுக விநாயகர்,

52. துர்முக விநாயகர்,

53,கணநாத விநாயகர் அதிலேயே இருக்கிறது.

54. ஞான விநாயகர் :- ஞானவாபியில்.

55. துவாரவிநாயகர்:- கோவில் வாசலுக்கு அருகில்.

56. அவிமுக்த விநாயகர் :- அவிமுக்தேஸ்ரருக்குப் பக்கத்தில் இத்துடன் ஏழாவது ஆவரணம் முடிந்தது.

''ஸப்தரிஷி யாத்திரை''

ஒவ்வொரு பஞ்சமி திதிக்கும் யாத்ரா பிறவிகள் ஸப்தரிஷி யாத்திரை செய்கிறார்கள். இவருடைய பெயர்கள் காசீகண்டத்தில் யாத்ராவிதியை அனுசரித்து எழுதப்பட்டிருக்கிறது.

கஸ்யபேஸ்வரர் :- ஜங்கம்பாடி ரோடில் - காசீகண்டத்தில் இந்த ஸ்தானத்தில் ஆங்கிரஸேஸ்வரருடைய பெயர் - பதினெட்டாவது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. அத்ரீஸ்வரர்- ஓதைக் சௌக்கில் மேற்கு பக்கத்தில் இருக்கிறது. இப்பொழுது மறைந்திருக்கிறது.

மரீசீஸ்வரர் :- நாககூபத்தில்;

கௌதமேஸ்வரர் கதோலியாவில்; மஹாராஜா காசீ நரேஸ்வரருடைய சிவாலயத்தின் பிரதக்ஷிணத்தில். காசீகண்டத்தில் பதினெட்டாவது அத்யாயத்தில் இருபத்தோருவது ஸ்லோகத்தில் கேளதமேஸ்வரரை க்ருத்வீஸ்வரர் என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

புலகீஸ்வரர் :- புலஸ்தீஸ்வரர் - மணிகர்ணிகையில் ஸொர்க்கத்வாரத்தில் மேற்கில் வஸிஷ்டேஸ்வரர் :- சங்கடாகாட்டில்; இங்கேயே குருந்ததீஸ்வரரும் இருக்கிறுர் - ஆனுல் காசீகண்டத்தில் வருணைக்கரை என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

இந்த யாத்திரையை ஸப்தரிஷி யாத்திரை என்று கூறுகிறுர்கள். ஒவ்வொரு அஷ்டமிக்கும் பைரவயாத்திரை, துர்க்கா யாத்திரை, அஷ்டாயதன யாத்திரை, த்ரிலோசன யாத்திரை, ஸ்வப்னேஸ்வரி யாத்திரை, மஸ்ச்சோதரியாத்திரை, ஞானவாபியாத்திரை, என்றெல்லாம் யாத்திரை செய்யவேண்டுமென்று காசீகண்டத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஆனுல் அஷ்டாயனயாத்திரையைத்தான் விசேஷமாகச் செய்கிறுர்கள். பைரவ யாத்திரையையும், துர்க்கா யாத்திரையையும் ஜனங்கள் செவ்வாய்கிழமையில் செய்கிறுர்கள். அதனுல் அவற்றைப் பற்றி வாரயாத்திரையில் கூறப்பட்டிருக்கிறது. அதில் பார்த்துக் கொள்ளவும். த்ரிலோசன மகாத்மியம் - காசீகண்டத்தில் 75 - 76 வது அத்யாயத்தில் இருக்கிறது. ஸ்வப்னேஸ்வரியின் வர்ணனை எழுபதாவது அத்யாயத்தின் கடைசியில்

இருக்கிறது. மஸ்ச்சோதரியின் கதை - ஓங்காரேஸ்வரருடைய வர்ணனையில் 73 வது அத்யாயத்தில் இருக்கிறது. அதேபோல் ஞானவாபியின் மகாத்மியம் 33 -34 வது அத்யாயத்தில் பார்த்துக் கொள்ளலாம். அஷ்டமியில் செய்யவேண்டிய யாத்திரைகளெல்லாம் காசீகண்டத்தில் சதுர்த்தசி என்று குறிக்கப்பட்டிருக்கிறது. அதனுல் யாத்ரிகர்கள் தங்கள் சௌகரியப்படி அஷ்டமியிலோ, சதுர்தசியிலோ செய்துகொள்ளலாம். காசீகண்டத்தில் நூருவது அத்யாயத்தில் அஷ்டாயதன யாத்திரை குறிக்கப்பட்டிருக்கிறது.

தக்ஷேஸ்வரர் :- வ்ருத்திகால கூபத்திற்கு வடக்கே பெரிய சிவாலயத்தில்;

பார்வதீஸ்வரர் :- த்ரிலோசனத்தில் ஆதிமஹாதேவருக்குப் பக்கத்தில்,

பசுபதீஸ்வரர் :- பிரசித்தமான பசுபதி மஹாலில்.

கங்கேஸ்வரர் :- ஞானவாபிக்குக் கிழக்கில் அரசமரத்தடியில்.

நர்மதேஸ்வரர் :- த்ரிலோசனர் கோவிலுக்கு முன்ருல் சிவாலயத்தில்.

கபஸ்த்தீஸ்வரர் :- மங்களகௌளரியின் கோவிலில்.

சதீஸ்வரர் :- வ்ருத்த காலருக்குப் போகும் ரோடில், ரத்னேஸ்வரருக்கு சமீபத்தில்.

தாரகேஸ்வரர் :- ஞானவாபிக்கு கிழக்கில், கௌளரிசங்கருக்கு கீழே, ஆனுல் இப்பொழுது மூர்த்தி மறைந்திருக்கிறது.

ஒவ்வொரு நவமிக்கும், நவதுர்கா என்னும் நவசண்டி யாத்திரையைப் பற்றி லிங்க புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

திதி அஷ்டமியிலோ, நவமியிலோ சுபத்தைக் கொடுக்கும் சண்டிகையின் யாத்திரை செய்ய வேண்டும்.

நவசண்டிகளின் பெயரும் எழுதியிருக்கிறது. தக்ஷிணதிசையில், துர்க்கை, நிர்ருதி கோணத்தில் மஹாமுண்டா, கிழக்கு திக்கில் சங்கரி அக்னி கோணத்தில் ஊர்த்வகேசி, காசிபுரியின் நடுமத்தியில் சித்ரகண்டா, இந்த யாத்திரை அநேகமாக வழக்கத்தில் இல்லை. ஆனால் இரண்டு நவராத்ரியிலும் நவமியன்று அல்லது பிரதமையிலிருந்து நவமி வரையில் ஒன்பது தினங்களுக்கு நவதுர்க்காயாத்திரை செய்கிறார்கள். நவதுர்க்கைகளின் பெயர்கள் வராஹ புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

''தேவிகளுடைய பெயர்கள்''

1. சைலபுத்ரிதுர்க்கா - வர்ணா தடத்தில் மடியா காட்பக்கத்தில் சைலேஸ்வரருடைய கோவில் இருக்கிறது.

2. ப்ரும்மசாரிணீ துர்க்கா - பஞ்ச கங்கைக்கு அடுத்துள்ள துர்க்கா காட் என்ற இடத்தில் பிரசித்தியாகவுள்ளது.

3. சித்ரகண்டா துர்க்கை - சௌக்கிற்கு முன்னால் சந்தூகி கல்லியில்.

4. கூஷ்மாண்ட துர்க்கா - துர்க்கா குண்டத்திலுள்ள துர்க்கா தேவியே.

5. ஸ்கந்தமாதா - ஜெய்த்பூரா மஹாலிலுள்ள பிரசித்தமான வாகீஸ்வரி தேவியையே ஸ்கந்தமாதா என்கிறார்கள்.

6. காத்யாயிநீதுர்க்கா :–ஆத்மவீரேஸ்வரருடைய கோவிலில் இருக்கிறது.

7. காளராத்ரிதுர்க்கா :- காளிகாகல்லில் காளிகாமாதா வைத்தான் காளராத்ரி என்று கூறுகிறார்கள்.

8. மஹாகௌரி துர்க்கா :- பஞ்சகங்காவிலுள்ள அன்னபூர்ணா, மங்களகௌரி, சங்கடா - தேவி, இம்மூன்று தேவிகளையும் அவரவர்களுடைய இஷ்டபிரகாரம் பூஜிக்க வேண்டியது. முக்யமாக அன்னபூரணி கோவிலில் தான் கூட்டமிருக்கிறது.

9. ஸித்திதாத்ரீ :- புலானுலாவின் மஹாலில் ஸித்திமாதாவின் கல்லில் இருக்கிறது. சிலர் சந்தரகூபத்திற்கு வளேவில் இருக்கும் ஸித்தேஸ்வரி மஹாலில் இருக்கும் ஸித்தேஸ்வரியை தரிசிக்கிருர்கள். இது நவராத்ரி யாத்திரை; ஆனுல் காசீகண்டத்தில் நூருவது அத்தியாயத்தில் 76 வது ஸ்லோகத்தில் ஒவ்வொரு அஷ்டமிக்கும், நவமிக்கும் துர்கா யாத்திரை செல்லவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. (அஷ்டமிக்காவது, நவமிக்காவது) காசீகண்டம் 79 வது அத்யாயம் 90, 91 ஸ்லோகங்களில் எட்டு திக்குகளில் உள்ள துர்க்கையும் நகரத்தின் மத்தியில் ஒரு துர்க்கையுமாக ஒன்பது அதிஷ்டாத்ரீ தேவிகளாகக் கூறப்பட்டிருக்கிறது.

ஸனத்குமார ஸம்ஹிதையில் வியாஸேஸ்வரரின் யாத்திரையைக்குறிப்பிட்டிருக்கிறது; கர்ணகண்டாவில் நவமி அல்லது பௌர்ணமியன்று வியாஸபுரியை தரிசனம் செய்துவிட்டு உபவாஸம் இருந்து வியாஸேஸ்வரரை ஆராதித்துக்கொண்டு அவருக்கு ஸமீபத்திலேயே இரவு கண்விழித்துக் கொண்டு இருந்துவிட்டு மறுநாள் காலே வியாஸேஸ்வரரைப் பூஜித்து தரிசனம் செய்தால் ஸர்வபாபங்களிலிருந்தும் விடுபடுகிருர்கள்.

இந்த வியாஸபுரி கங்கைக்கு அக்கரையிலுள்ள வியாஸபுரா என்னும் கிராமம் என்று சிலர் கூறுகிருர்கள். அதுதான் வியாஸேஸ்வரரின் இருப்பிடமென்னும் பழைய கோவிலும் அங்குதான் இருக்கிறதென்று கூறப்படுகிறது. ஆனுல் காசீகண்டத்தில் 95 வது அத்தியாயத்தில் வியாஸேஸ்வரர் கர்ண -கண்டாவில் இருக்கிருர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

விஷ்ணு புராணம் யாத்திரை :- ஒவ்வொரு ஏகாதசி திதிக்கும் விஷ்ணுவை முன்னிட்டு தீர்த்தங்களுக்கு யாத்திரை செய்வது உசிதம். காசீகண்டத்தில் 61 வது அத்யாயத்தில் விஷ்ணு தீர்த்தவர்ணனே இருக்கிறது. இதுவே வாயு புராணத்தில் லக்ஷ்மீஸம்ஹிதையில்

சொல்லப்பட்டிருக்கிறது. காசியில் அநேக தீர்த்தங்களும், அநேக லிங்கங்களும் இருக்கின்றன. எங்கெங்கே தீர்த்தங்களும் லிங்கங்களும் இருக்கின்றனவோ - அங்கங்கே மோக்ஷம் அளிக்கும் விஷ்ணு மூர்த்தியும் எழுந்தளியிருக்கிருர். பஞ்சக்ரோசத்துக்கு உள்ளேயும், வெளியேயும் எங்குமே அந்தந்த தீர்த்தங்களுடன் பெயருடன் ஸஹிதனரான விஷ்ணுமூர்த்தியும் எழுந்தருளியிருக்கிருர். காசி சிவ புரியாஞலும் ஹரிக்கும், ஹரனுக்கும் பிரியமானது. இங்கு இருவருக்கும் பேதமில்லை. விஷ்ணுவாஸரமான ஏகாதசி திதியில் முன்குறிப்பிட்டது போல எல்லா விஷ்ணுதீர்த்தங்களிலும் ஸகல பலன்களும் கிடைப்பதற்காக யாத்திரை செல்ல வேண்டும். பஞ்சகங்கா கட்டத்தில் பிந்து மாதவர், கோபாலமந்திர் இவைகள் இருக்கின்றன. சிவலிங்கங்களைப் போலவே விஷ்ணு ஸ்தானமும் காசி முழுவதும் பரவியிருக்கின்றன. யாத்ரிகர்கள் தங்கள் விருப்பப்படி எங்கு வேண்டுமாஞலும் செல்லலாம். காசிகண்டத்தில் 79 வது ஸ்லோகத்தில சங்குதாரா தீர்த்தத்தின் ஸ்ஞனமாகாத்மியம் சொல்லப்படிருக்கிறது. ஒவ்வொரு துவாதசிக்கும் காசிதேவியின் யாத்திரை சொல்லப்பட்டிருக்கிறது. காலைவேளையில் லலிதா காட்டில் ஸ்ஞனமும் காசிதேவியின் பூஜையும், எந்த அறிவாளி செய்கிருனோ, அவனுடைய புத்தி பாபவழியில் செல்லாது.

தர்ம வழியில் செல்லும். மேற்கூறிய ஏகாதசியன்று ஞானவாபி செல்வதும் மிகவும் புண்ணியமானது என்று காசீகண்டம் 33 வது அத்யாயத்தில் சொல்லியிருக்கிறது, ஒவ்வொரு திரயோதசிக்கும் பிரதோஷ விரதம் இருந்து ஸாயங்கால வேளையில் மஹாதேவரைப் பூஜை செய்வது பற்றி பிரும்மோத்தர காண்டத்தில் கூறியிருக்கிறது. அதாவது சுக்லபக்ஷத்து இரண்டு திரயோதசிகளிலும் பகலில் ஆகாரம் இல்லாமல் இருந்து,சூரியன் அஸ்தமிக்க மூன்று நாழி பொழுது முன்ஞல் ஸ்ஞனம் செய்து

*சுத்தவஸ்த்ரம் உடுத்து, மௌனத்துடன்கூட தினம் செய்ய வேண்டிய சந்தியாஜபம் முதலியவைகளைச் செய்து முடித்து விட்டு, சாயங்காலத்தில் மஹா தேவரைப் பூஜைசெய்த பிற்பாடு இரவில் ஆகாரம் பண்ணலாம். சனிவாரத்தில் அல்லது ஸோமவாரத்திலாவது பிரதோஷம் வந்தால் அது மிகவும் விசேஷமானது என்று கூறப்பட்டிருக்கிறது. சனிப் பிரதோஷத்திற்கு த்ரிலோசனத்திலுள்ள காமேஸ்வரர் கோவிலுக்குப் பிரதான யாத்திரை செல்ல வேண்டும் என்று காசீகண்டம் 35 வது அத்யாயத்தில் 75 வது, 76 வது ஸ்லோகங்களில் வர்ணித்திருக்கிறது. பதிஞலாவது அத்யாயத்தில் 49 வது ஸ்லோகத்தில் சந்திரசேகரையும் பூஜிக்க வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆஞல் ஸோமப்பிரதோஷத்தன்றுதான் சந்திரசேகரர் என்று சொல்லும் ஸோமேச்வரரைப் பூஜிக்கிருர்கள். இந்த விரதத்திஞல் ஸந்தானபாக்யம் கிடைக்கும் என்பது பிரசித்தம். காசியிலிருக்கும் ஜனங்கள் (பெண்மணிகள்) இந்த பிரதோஷத்தை (விரதம்) கருத்துடன் அனுசரிக்கிருர்கள். சதுர்த்தசியில் செய்யக் கூடிய அநேக யாத்திரையைப் பற்றியும் காசீகண்டத்தில் அஷ்டமி யாத்திரையையும் சேர்த்துக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிரதமையில் ஆரம்பித்து சதுர்த்தசி பரியந்தம் அல்லது ஒவ்வொரு சதுர்தசியும் செய்யக்கூடிய மூன்று யாத்திரைகளைப் பற்றி வர்ணிக்கப் பட்டிருக்கிறது; மூன்று சதுர்த்தசி யாத்திரைகளும் வேறு வேருகச் செய்ய முடியாத பக்ஷத்தில் ஒரு சதுர்த்தசி யாத்திரையாவது அவசியம் செய்ய வேண்டும். காசி கண்டத்தில் 100 வது அத்யாயத்தில் 42 - 66 வது ஸ்லோகம் வரையில் இந்த யாத்திரையைப் பற்றி எழுதி இருக்கிறது. அந்த யாத்திரை செய்ய விருப்பமுள்ளவர்கள் புஸ்தகத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அது விசேஷ வாக்கியமானதிஞல் இங்கு வேருக எடுத்து எழுதவில்லை.*

''சதுர்தச லிங்கங்கள்''

*1.* ஓங்காரேஸ்வரர் :- *மச்சோதரிக்கு வடக்கில், கொய்லா பஜாருக்கு சமீபத்தில் ஹீக்காலேசன் மஹாலில்;*

*2.* த்ரிலோசனர் - *த்ரிலோசனகாட்டில்;*

*3.* ஆதிமஹாதேவர் -*த்ரிலோசன கோவிலுக்குக் கிழக்கு பக்கத்தில்.*

*4.* க்ருத்திவாஸேஸ்வரர் - *வ்ருத்த காலருக்குப் பக்கத்தில் ஹர தீர்த்தத்தில்;*

*5.* ரத்னேஸ்வரர் -*வ்ருத்த காலருக்குச் செல்லும் பாதையில்,*

*6.* சந்த்ரேஸ்வரர் - *ஸித்தேஸ்வரியின் கோவிலில்;*

*7.* கேதாரேஸ்வரர் - *கேதார்காட்;*

*8.* தர்மேஸ்வரர் - *மீர்காட் - தர்ம கூபத்தில்;*

*9.* வீரேஸ்வரர் - *சங்கடா காட்டில் இருக்கும் ஆத்மவீரேஸ்வரர்;*

*10.* காமேஸ்வரர் - *மச்சோதரியிலிருந்து தெற்கு செல்லும் பாதையில்;*

*11.* விஸ்வகாமேஸ்வரர் – *அனுமான்பாடக் பக்கத்தில் -குவாலகட்டாவில்;*

*12.* மணிகர்ணிகேஸ்வரர் - *மணிகர்ணிகை கட்டத்தில், மேலே கோமடத்துக்கு முன்னுல் காகார ராமச்சந்தில் பரத்வான் கோப் சுற்று வளேவில் கீழே;*

*13.* அவிமுக்தேஸ்வரர் - *விஸ்வநாதர் கோவிலில்;*

*14.* விஸ்வேஸ்வரர் - *காசிக்கு அதிபதியான விஸ்வநாத பாபாவே. இந்த ஓம்காரரேஸ்வரத்திலிருந்து - விஸ்வநாத்வரை (விஸ்வேஸ்வரர்) பதிஞன்கு லிங்கங்கள் காசியில் சதுர்தச யாத்திரையென்று சொல்லப்படுகிறது.*

''இரண்டாவது பதினான்கு லிங்கங்கள்''

*1.* அமிர்தேஸ்வரர் *:- சொர்க்க துவாரத்திலிருந்தும் முன்னால்; குஞ்சவிஹாரிஜிகங்காபுத்திரர் வீட்டில்.*

*2.* தாரகேஸ்வரர் *:- ஞானவாபிக்குக் கிழக்கில் - ஆனால் லிங்கம் இப்பொழுது மறைந்திருக்கிறது.*

*3.* ஞானேஸ்வரர் *:- லாஹௌரி தோலாவில் - தனிராம்கத்ரியினுடைய வீட்டு முற்றத்தில்;*

*4.* கருணேஸ்வரர் *:- லலிதா காட்டிற்குமேல்; பண்டிட் ரமாபதி - திவாரிஜினுடைய மாளிகையின் சமீபத்தில்*

*5.* மோக்ஷத்வாரேஸ்வரர்- *இதுவும் அங்கேயே;*

*6.* சொர்க்கத்வாரேஸ்வரர் *:- ப்ரும்ம நாளத்திற்குப் பக்கத்தில் பச்சா சிங் வீட்டில்.*

*7.* ப்ரும்மேஸ்வரர் *:- பாலமுகுந்த சௌகட்டில்,*

*8.* லாங்கலீஸ்வரர் *:- பஞ்சபாண்டவருக்கு அருகில் கோவா பஜாரின் முனையில்;*

*9.* விருத்தகாலேஸ்வரர் *:- தாரா நகரத்தின் பிரசித்தமான லிங்கம்,*

*10.* விருக்ஷேஸ்வரர் *:- கோரக்டீலாவில் மஹாலமதாக்கின் என்ற இடத்தில்;*

*11.* சண்டீஸ்வரர் :- *வருணையில் மலியா காட்டிற்குப் பக்கத்தில்*

*12.* நந்திகேஸ்வரர் *:- ஞானவாபியில்;*

*13.* மஹேஸ்வரர் :- *மணிகர்ணிகா மண்டியில்;*

*14.* ஜோதிரூபேஸ்வரர் *:- மணிகர்ணிகேஸ்வரருக்கு சமீபத்தில் ஒரு வீட்டின் முற்றத்தில்; இது அம்ருதேஸ்வரர் முதலிய 14 லிங்கங்கங்களுடைய இரண்டாவது சதுர்த்தச யாத்திரை முதலியன.*

''மற்ற14 லிங்கங்களின் பெயர்''

*1.* சைலேஸ்வரர் *:- வருணையில் மடியா காட்டில்;*

*2.* சங்கமேஸ்வரர் *:- வருணாசங்கமத்தில் ஆதிகேசவருக்கு சமீபத்தில்;*

*3.* ஸ்வலீயனீஸ்வரர் *:- ராஜா காட்டிற்கும் - ப்ரஹலாத காட்டிற்கும் மத்தியில் கங்கைக் கரையில்,*

*4.* மத்யமேஸ்வரர் *:- மதாக்கின் என்னும் இடத்தில் கணேஸ் கஞ்சில்.*

*5.* ஹிரண்யகர்ப்பேஸ்வரர் *:- த்ரிலோசன காட்டிற்கு வடக்கு பக்கத்தின் மண்டியில்,*

*6.* ஈசானேஸ்வரர் *:- பான்ஸ் பாடக் என்னும் இடத்தில் கொத்தவால்புருவில்,*

*7.* கோப்ரேக்ஷேஸ்வரர் *:- லால்காட்டில் கோபீ கோவிந்தஜியின் கோவிலில் கௌரீசங்கர் என்ற பெயரில் பிரசித்தமாயிருக்கிறார்.*

*8.* வ்ருஷபத்வஜேஸ்வரர் *:- கபிலதாராவில் பிரசித்தியானவர்,*

*9.* உபசாந்தசிவம் *:- அக்னீஸ்வரருடைய புதுப்படித்துறைக்கு மேல் சந்தில்.*

*10.* ஜேஷ்டேஸ்வரர் *:- காசிபுரியில் கர்ணகண்டாவிற்குப் பக்கத்தில்*

*11.* நிவாஸேஸ்வரர் *:- காசிபுரியில் பூதபைரவருக்கு மேற்குப் பக்கத்தில்; காசீகண்டத்தில் இதை சதுஸ்ஸமுத்ரேஸ்வரர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.*

*12.* சுக்ரேஸ்வரர் *:- காளிகாகல்லியில்;*

*13.* வியாக்ரேஸ்வரர் *:- காசீபுரியில் பூதபைரவருக்கு நிர்ருதி கோணத்தில்,*

*14.* ஜம்புகேஸ்வரர் :- *படாகணேசருக்குப் பக்கத்தில்; இப்பொழுது கூறிய இந்த 14 லிங்கங்களும் மூன்ருவது யாத்திரைக்குரிய தேவதைகள். இந்த விதமாக மூன்று சதுர்த்தச யாத்திரைகளும் சேர்ந்து மொத்தம் 42லிங்கங்கள்.*

ஏகாதச ருத்திரர்கள்

*1.* அக்னீந்த்ரேஸ்வரர் *:- இஸர கங்கையில்* ஜாகேஸ்வரர் *என்னும் பெயரில் பிரசித்தமானவர்;*

*2.* ஊர்வசீஸ்வரர் *:- ஔசானகஞ்சில் - கோலாபாகில்,*

*3.* நகுலீஸ்வரர் *:- விச்வநாதருக்கருகில் மஹாவீரருடைய கோவிலில் அக்ஷயவடத்திற்குக் கீழே;*

*4.* ஆஷாடீஸ்வரர் *:- காசீபுருவில் ராஜபேந்தியாவின் காம்பௌண்டின் பெரிய கோவிலுக்குப் பின்பக்கத்தில்;*

*5.* பாரபூதேஸ்வரர் *:- ராஜா தர்வாஜா கோவிந்தபுராவில், சிவகுமார் சாஸ்திரிஜியின் வீட்டிற்குப் பக்கத்தில்;*

6. லாங்கலீஸ்வரர் *:- பஞ்சபாண்டவருக்கு முன்ஞல் கோவா பஜாரில்;*

7. திரிபுராந்தகேஸ்வரர் *:- சிகாரா டீலாவில்,*

*8.* மனப்ரகாமேஸ்வரர் *:- சாக்ஷி விநாயகர் கோவில் மிகப் பிரஸித்தமானவர்,*

*9.* ப்ரீதிகேஸ்வரர் - *காளிகாகல்லி பாடாவில்,*

*10.* மதாலேஸ்வரர் *:- காளிகாகல்லிக்கு முன்ஞல்,*

*11.* திலபர்ணேஸ்வரர் :- *துர்க்கா குண்டத்தில், இது ஏகாதச ருத்ரர்களின் யாத்திரை, சிலயாத்ரா ப்ரேமிகள் ஏகாதசியன்றும் இந்த யாத்திரையைச் செய்கிருர்கள். ஆஞல் காசீகண்டத்தில் ஏகாதசிக்கு விதியொன்றும் கூறப்படவில்லை.*

## இனிமேல் த்ரிகுணயாத்திரை

*முதலாவது துர்க்கா குண்டத்தில் ஸ்ஞனம் செய்து துர்க்கா தேவியைப் பூஜிக்க வேண்டும்; அங்கிருந்து லக்ஷ்மீ குண்டத்திற்குச் சென்று, ஜலத்தைப்ரோக்ஷித்துக்கொண்டு, மஹாலக்ஷ்மியைப் பூஜிக்க வேண்டும். அங்கிருந்து ஜெயத்புராவுக்குச் சென்று வாகேஸ்வரியைப் பூஜிக்க வேண்டும். முன்பு வாகேஸ்வரி இருக்கும் இடத்தில் குண்டம் இருந்தது. இப்பொழுது உலர்ந்து விட்டது. காசியில் இம்மூன்று ஸ்தானங்களும் மஹாகாளி, மஹாலக்ஷ்மி, மஹாஸரஸ்வதி இவர்களுடையதாம். இம்மூன்றும் காசியில் மூன்று முக்கில் இருக்கிறது. அதாவது தக்ஷிணதிசை பதைனி கிராமத்தில் துர்க்கா தேவியும் மேற்குதிசை ராமாபுரி கிராமத்தில் லக்ஷ்மி தேவியும், வடக்குதிசை ஜெயத்புரு கிராமத்தில் வாகீஸ்வரியும் இருக்கிருர்கள். இம்மூன்று தேவிகளின் கிராமத்தில் புராதனமான பிராம்மணர்களின் கிராமங்கள் இருக்கின்றன. காசி நகரம் பூராவும் புரோகிதத்தொழில் இந்த பிராம்மணர்கள் கையில் இருக்கிறது.*

*காலக்ரமத்தில் முகமதியர்கள் இந்த ஸ்தானங்களுக்கருகில் வசிக்கத் தொடங்கி விட்டார்கள். இப்பொழுது மதன்புரு, லலாபுரு, அலைப்புரு என்ற பெயரில் பிரசித்தமான இடங்களில் முகமதியர்கள் வசிக்கிருர்கள். இவர்கள் இங்கு பிரசித்தமான காசீப்பட்டு, புடவைகள், துப்பட்டா முதலிய பட்டு வஸ்திரங்கள் நெசவு செய்கிருர்கள். தேவிபக்தர்கள் இந்தத்ரிகோண யாத்திரைக்கு செவ்வாய்க்கிழமைகளிலும் முக்யமாக சதுர்தசியுடன் கூடிய செவ்வாய்க் கிழமைகளிலும் செல்லுகிருர்கள். ஒவ்வொரு பௌர்ணமிக்கும் காசீகண்டத்தில் பதிஞலாவது அத்யாயத்தில் 42 - 43 ஸ்லோகங்களில் சொல்லியிருக்கிறபடி ஸித்தேஸ்வரி கோவிலிலுள்ள சந்த்ரேஸ்வரரை ஸேவிக்க வேண்டும். ஒவ்வொரு அமாவாசையன்றும் காசீகண்டத்தில் 62 வது. அத்யாயத்தில் 66 வது ஸ்லோகத்தில் கூறியபடி*

வ்ருஷபத்வஜர் தரிசனமும், கபிலதாராவில் சிராத்த தர்ப்பணமும் செய்வது மகத்வம் வாய்ந்ததாகும். இந்த விதமாக திதி (த்ரிகுண) யாத்திரை கூறப்பட்டிருக்கிறது. ஜனங்கள் அவரவர்கள் ஸெளகரியப்படி யாத்திரை செய்து கொள்ளலாம்.

## வார யாத்திரை

ஒவ்வொரு ரவி வாரத்தன்றும் ஸூர்ய நாராயணர் கோவிலுக்கு யாத்திரையாகச் செல்லவேண்டும்; காசியில் 12 ஆதித்யர்கள் பற்றியும் பிரமாணத்துடன் காசீகண்டத்தில் எழுதப்பட்டிருந்தது. ரவி வாரத்தில் பைரவரையும் சென்று தரிசிக்கிருர்கள்; இதைப் பற்றி ஸோமவார யாத்திரையில் எழுதியிருக்கிறது, அதைப் பார்த்துக் கொள்ளவும்.

## சூர்ய யாத்திரை

1. லோலார்க் :- பதைனியில் அஸ்ஸிசங்கமத்திற்கு அருகில் பிரசித்த லோலார்க்க குண்டம் இருக்கிறது.

2. உத்தரார்க்கர் :- அலைப்புரத்தில் பக்ரியா குண்டத்தில்,

3. ஸாம்பாதித்யர் :- சூரிய குண்டத்தில் பிரஸித்தமானது.

4. திரெளபதியாதித்யர் :- விச்வநாதருடைய சமீபத்தில் ஹநுமாரின் கோவிலில் அக்ஷய வடத்திற்குக் கீழே.

5. மயூகாதித்யர் :- பஞ்சகங்காவிற்கு ஸமீபத்தில் மங்கள கெளரியின் கோவிலில்.

6. ககோல்காத்தியர் :- த்ரிலோசனத்தில் காமேஸ்வரருடைய கோவில் ப்ராகாரத்தில், இவரை வினதாதித்யர் என்றும் கூறுவார்கள்.

7. அருணுதித்யர் :- த்ரிலோசனருடைய கோவிலில்,

8. விருத்தாதித்யர் :- மீர்காட்டில் அனுமாருடைய கோவிலுக்குப் பக்கத்தில் ஒரு வீட்டில்.

*9. கேசவாதித்யர் :- வருணஸங்கமத்தில் ஆதிகேசவருடைய கோவிலில்,*

*10. விமலாதித்யர் :- கதோலியாவிற்குப் பக்கத்தில் ஜங்கம் பாடியில்,*

*11. கங்காதித்யர் :- லலிதாகாட்டில்;*

*12. யமாதித்யர் :- சங்கடா கட்டில் இதுவே துவாதசாதித்ய யாத்திரை. ரவி வாரத்தன்று ஷஷ்டி, ஸப்தமி திதி இருந்தால் அதை பானுஷஷ்டி என்றும், பானுஸப்தமி என்றும் கூறுகிருர்கள். இது பத்மயோகம் என்று சொல்லப்படுகிறுது; அன்று இந்த ஆதித்யர்களின் யாத்திரை மிகவும் பலனே அளிக்க கூடியது. ஏனென்றால் இந்த பத்மயோகம் ஆயிரம் சூரியகிரணங்களுக்கு சமமானது.*

## ஸோமவார யாத்திரை

*காசீகண்டத்தில் 14 வது அத்யாயத்தில் கூறியபிரகாரம் ஸோமவாரத்தில் சந்திரேஸ்வரர் தரிசனம். 33 வது அத்யாயத்தில் கூறியபிரகாரம் ஞானவாபியின் யாத்திரை; 62 வது அத்யாயத்தில் கூறியபடி ஸோமவாரத்து அமாவாஸையுடன் கூடியதினத்தில் கபிலதாரா தீர்தத்தில் சிராத்தம் 84 வது அத்யாயத்தில் 20 வது 28 வது சுலோகம் வரைக்கும் கருணேஸ்வரரின் யாத்திரை பற்றி கூறியிருக்கிறது. ஆனுல் இந்த எல்லா யாத்திரைகளிலும் பிரதானமானது விச்வநாத தரிசனம். தினமும் சென்று தரிசனம் செய்யமுடியாதவர்கள் ஸோமவாரத்தன்று செய்ய வேண்டும். ஸோமவாரத்தன்று பிரதோஷம் வந்தால் வ்ரதமிருந்து சாயங்காலம் ஸ்ஞனம் செய்து சிவபூஜை செய்ய வேண்டும். எந்த இடத்தில் செளகரியப்படுகிறதோ அங்கே பூஜை செய்யலாம். நகரத்திலிருந்து 3 க்ரோசதூரத்தில் ஸாரநாத் என்ற கிராமம் இருக்கிறது. அங்கு பகவான் விஷ்ணு பௌத்த தர்மத்தைப்பற்றி உபதேசித்தார். அங்கு ஸோமவாரம் தோறும் மேளா நடக்கிறது. நகரத்தில் கேதார கட்டத்தில் ஸ்ஞனத்திற்கு*

*ஸோமவாரம் தோறும் ஜனங்கள் கூட்டமாக வருகிருர்கள். காசியில் கேதாரகண்டம் என்பது விஸ்வேஸ்வரத்திற்கு அடுத்தபடியாக இரண்டாவது (கண்டம்) ஸ்தானம் ச்ராவணமாதம் ஸோமவாரம் கேதாரேஸ்வரருக்கு அநேக விதமான புனித பூஜா சாமக்ரிகளால் பூஜை விசேஷமாகச் செய்ய வேண்டும். காசீகண்டத்தில் 72 வது அத்யாயத்தில் 82 வது சுலோகத்தில் செவ்வாய் கிழமையன்று துர்க்கா தரிசனம் செய்யவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. 31 வது அத்யாயத்தில் 155 சுலோகத்தில் மங்கள வாரத்தில் பைரவயாத்திரை கூறப்பட்டிருக்கிறது. 70 வது அத்யாயத்தில் 48 வது சுலோகத்தில் மங்கள வாரத்தன்று வந்தி தேவியின் யாத்திரைக் கூறப்பட்டிருக்கிறது. 17 வது அத்யாயத்தில் முதலிலிருந்து 21 வது சுலோகம் வரைக்கும் செவ்வாய்க்கிழமையன்று சதுர்த்தசி வந்தால் மிகவும் உத்தமம் என்றும் அங்காரகேஸ்வர யாத்திரை செய்ய வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. இவைகளெல்லாவற்றிலும் வேருக தற்காலத்தின் நாகரீகப்படி ஹனுமான்ஜியின் தரிசனம் விசேஷயாத்திரையாக பிரசித்தமாயிருக்கிறது.*

*செவ்வாய்க்கிழமையன்று அமாவாசையோ பிரதோஷமோ வந்தால் கேதாரத்திற்கு யாத்திரையாக சென்று, சிராத்தாதிகள் செய்வதுபற்றி காசீகண்டத்தில் 77 வது அத்யாயத்தில் 59 வது சுலோகத்தில் விசேஷமாக எழுதப்பட்டிருக்கிறது. சதுர்த்தியன்று செவ்வாய்கிழமையும் சேர்ந்திருந்தால் கணேசருடைய யாத்திரை செய்ய வேண்டும். அதுபோல் சதுர்தசியும் செவ்வாய்க் கிழமையும் கூடிஞல் கவஸேஸ்வரரைச் சென்று தரிசிக்க வேண்டும். இத்துடன் பரணிநக்ஷத்ரம் கூடிஞல் யமகாட்டிற்குச் சென்று ஸ்ஞனம், தர்பணம் சிராத்தாதிகள் செய்வது உசிதம். சிலாக்யம் ச்ரவணமாதத்தில் ஒவ்வொரு மங்கள வாரத்திலும் துர்க்கா குண்டத்தில் துர்கா தரிசனம் முதலியவை செய்வதற்காக பெரிய திருவிழாக் கூட்டமே சேருகிறது. கமாச்சாவிலும்*

காமாக்ஷி தேவியை இந்நாளில் பூஜிப்பது மிகவும் ச்ரேஷ்டம் என்று சிவ ரகஸ்யத்தில் கூறியிருக்கிறது.

## அஷ்டபைரவர்

1. ருரு பைரவர் - அனுமான் காட்டுக்குப் பக்கத்தில்,

2. சண்ட பைரவர் - துர்கா குண்டத்தில் துர்க்கா கோவிலின் பிரதக்ஷிணத்தில்

3. அஸித்தாங்க பைரவர் - விருத்த காலேஸ்வரருடைய ப்ராகாரத்தில், காளி கோவிலில் அமிர்த குண்டத்திற்கு முன்னால்.

4. கபால பைரவர் - பிரஸித்தமான லாட்டு பைரவத்தில் இருப்பவர் இவரேதான்.

5. க்ரோதன பைரவர் - கமாச்சாவில் இருக்கும் வடுகபைரவர் இவரேதான்.

6. உன்மத்த பைரவர் - பஞ்ச கோசத்தில் பீமசண்டிக்குச் செல்லும் பாதையில் தேவராகிராமத்தில்.

7. ஸம்ஹார பைரவர் - த்ரிலோசன கஞ்சில்;- பாட்டன் தர்வாஜாவிற்கு பக்கத்தில்

8. பீஷ்மபைரவர் - காசிபுராவில் பூதைபைரவர் என்னும்பெயரில் பிரசித்தமாக இருக்கிறார். அப்பெயரில் ஒரு மஹாலும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் இவர்கள் எல்லோரையும் காவல் காப்பது கால பைரவரேயாகும். அதனால் ப்ரதானபைரவயாத்திரையாக காலபைரவர் கோவிலுக்குச் செல்லுகிறார்கள். இதைத் தவிர இன்னும் அநேக பைரவ ஸ்தானம் இருக்கிறது ராம் காட்டுக்கு மேலே ஆனந்த பைரவ சௌக்கிற்கு முன்னால் நீச்சி பாக் என்னும் தோட்டத்திற்குச் செல்லும் பாதையில் மோகன பைரவர் விச்வநாதருடைய மேற்கு வாசலில் துவார பைரவர் இப்படியாக இருக்கிறார்கள். ஒவ்வொரு புதன் கிழமையன்றும் காசீகண்டத்தின் 15 வது அத்யாயத்தில் கூறியபடி புதேஸ்வரருக்கு யாத்திரை செல்ல

*வேண்டும். இது ஆத்ம வீரேஸ்வரருக்குச் சுற்று ப்ராகாரத்தில் உள்ளது. புதவாரத்தன்று அஷ்டமி இருந்தால் அது பர்வ தினமாகும் புதாஷ்டமியில் ஸ்ஞன தானத்திற்கு விசேஷ பலன் சொல்லியிருக்கிறது. புத வாரத்தன்று துவாதசி திதியும், ச்ரவண நக்ஷத்ரமும் இருந்தால் வருணு ஸங்கமத்தில் ஸ்ஞனம், தானம், சிராத்தம் முதலியவைகள் செய்தால் விசேஷ பலன் கிடைக்கும். ஒவ்வொரு வியாழக்கிழமையும் ஆத்ம வீரேஸ்வரருக்குப் பக்கத்தில் இருக்கும் ப்ருஹஸ்பதீஸ்வரரைக் தரிசிக்க யாத்திரை செல்ல வேண்டும். வியாழக்கிழமை புஷ்ய நக்ஷத்ரமும் சேர்ந்திருந்தால், அந்த குருபுஷ்ய யோகத்தில் அங்கு யாத்திரை செல்வது அதிகபலனை அளிப்பதாகும். குருபுஷ்ய யோகத்தில் சுக்லாக்ஷ்டமியும் வ்யதீபாத யோகமும் ஒன்று சேரும் போது ஞானவாபியில் ச்ராத்தம் செய்வது, கயாச்ராத்தத்தை விடக் கோடிமடங்கு அதிக விசேஷமுள்ளது. காசீ கண்டத்தில் 16 வது அத்யாயத்தில் கூறியிருக்கிறபடி வெள்ளிக் கிழமை தோறும் காளிகா கல்லியில் இருக்கும் சுக்ரேஸ்வரரைத் தரிசிக்க யாத்திரை செல்ல வேண்டும். ஆனுல் இந்தக்கால சிஷ்டாசாரத்தையொட்டி வெள்ளிக் கிழமையன்று லக்ஷ்மீ குண்டத்தில் இருக்கும் லக்ஷ்மியையும், சங்கடா காட்டில் இருக்கும் சங்கடா தேவியையும் ஜயத்புருவில் இருக்கும் வாகீஸ்வரி தேவியையும் தரிசனம் செய்யச் சொல்லுகிறுர்கள். ஆனுல் காசீகண்டத்தில் இதற்குப் ப்ரமாணம் ஒன்றும் கூறப்படவில்லை.*

*ச்ராவண சுக்ரவாரத்தில் இவ்விடங்களைத்தவிர துர்க்கா குண்டத்திலிருக்கும் துர்க்காதேவிக்கு விசேஷ அலங்கார ஆராதனை செய்து கொண்டாடுகிறுர்கள். ஒவ்வொரு சனிவாரத்தன்றும் விச்வநாதருடைய தென்மேற்கு ப்ராகாரத்தில் இருக்கும் சனீஸ்வரரைத் தரிசிக்க வேண்டுமென்று காசீகண்டம் 16 வது அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது. சனிவாரத்தில் ப்ரதோஷம் வந்தால் த்ரிலோசனத்திலுள்ள காமேச்வரரைப்*

*பூஜிக்க வேண்டும். மேலும் சனிவாரத்தில் மீர்காட் சிவாலாகாட், ஹனுமான்காட், ஸங்கடமோசன் ஆகிய இடங்களில் இருக்கும் ஹனுமான் கோவில்களுக்கு யாத்திரை செல்லுகிறுர்கள். இது வார யாத்திரை என்று கூறப்படுகிறது.*

*இதைப் போல நட்சத்திர யாத்திரை செய்ய விரும்புகிறவர்கள் காசீகண்டத்தில் 15 வது அத்யாயத்தில் முதலிலிருந்து 19 வது சுலோகம் பர்யந்தம் நட்சத்ரேஸ்வரரின் கதையைப் படித்துப் பார்த்துக் கொள்ளவேண்டும். நட்க்ஷத்ரேஸ்வரர் வருண ஸங்கமத்தின் பக்கத்தில் ஆதிகேசவரின் கோவிலின் ப்ராகாரத்திற்கு வெளியில் தெற்கு பக்கத்துக் கோவிலில் இருக்கிறுர். நக்ஷத்திர சாந்தியை உத்தேசித்து இவ்விடம் பூஜை, தரிசனம் முதலியவைகள் செய்வது நலம். அதுபோல் நவக்ரகங்களின் சாந்தியின் பொருட்டு கால பைரவருக்குக் கிழக்கில் இருக்கும் தெருவில் காலதண்டத்திற்கு ஸமீபம் இருக்கும் நவக்ரஹேஸ்வரரின் பூஜை அவசியம் செய்ய வேண்டும். வ்யதீபாதம் முதலிய துஷ்ட யோகங்களின் சாந்தியின் பொருட்டு அங்கேயே இருக்கும் வ்யதீபாதரைத் தரிசிக்க வேண்டும். ஜெத்புருவில் இருக்கும் மஹாலில் பிரசித்தமான வாகதீஸ்வரிக்கு சமீபத்தில் ஸித்தேஸ்வரர் கோவிலிலிருந்து சற்றே விலகினுற்போல இருக்கும் சிவாலயத்தில் ஜ்வரஹரேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அங்கு பால் அபிஷேகம் செய்வதினுல் ஜ்வரம் சாந்தியடையும். மேலும் காசீகண்டத்தில் 97 வது அத்தியாயத்தில் 13 - 14 சுலோகங்களில் விஜ்வரேஸ்வரரின் மாஹாத்மியம் கூறப்பட்டிருக்கிறது. விருத்த காலரின் கோவிலில் ம்ருத்யுஞ்ஜய மஹாதேவர் (பத்க்கௌவா) மிகவும் பிரசித்தமானது. அதைப்பற்றி காசீகண்டத்தில் 97 வது அத்தியாயத்தில் 129 வது சுலோகத்தில் ப்ருத்வீஸ்வரரை ஆராதிப்பது, இது ஜனங்களுக்கு மிகவும் உபகாரமாக இருக்கிறது. அநேகம் பேர்களுக்காக மஹா ம்ருத்யுஞ்ஜய ஜபம் செய்வதற்காகப் பிராம்மணர்கள் இந்த*

*சின்ன கோவிலில் கூடுகிறுர்கள். விருத்த காலத்தில் இருக்கும் அம்ருத குண்டத்தில் ஸ்ஞனம் செய்வதிஞல் எத்தனையோ கடினமான வியாதிகள், குஷ்டம் கூட குணமாகி இருக்கின்றன. அதைப்போலவே லோலார்க்கரும், சூரியகுண்டமும் இவ்விஷயத்திற் காகவே சேவிக்கப்படுகின்றன. இவர்களை ஆராதிப்பவர்களின் மஞேரதங்கள் பெரும்பாலும் நிறைவேறியிருக்கின்றன. இந்த எல்லா யாத்திரைகளும் காம்யம் என்றும், நைமித்திகம் என்றும் கூறப்படுகின்றன. அதாவது ஒரு விருப்பம் நிறைவேற வேண்டி செய்யப்படுகிறது. ஆஞல் காசீகண்டத்தில் அநேகம் யாத்திரைகள் நைமித்திகமாகவும் வருங்காலத்தைக் குறித்தும் எழுதப்பட்டிருக்கின்றன. அதிலிருந்து சில உதாஹரணங்கள் கொடுக்கிருேம். க்ரஹணத்தின் போது காசியில் நிறைய கூட்டம் சேருகிறது. சூரிய க்ரஹணத்தின் போது அதிகமானக் கூட்டம் குருக்ஷேத்ரத்தில் தான் சேரும். ஆஞல் சந்திரகிரகணத்தில் யாத்ரீகர் தேசதேசாந்திரங்களிலிருந்தும் காசிக்கு வருகிறுர்கள். பவிஷ்ய புராணத்தில் காசீக்ஷேத்திரத்தில் ஓடும் கங்கையின் மாஹாத்மியம் பற்றி எழுதப்பட்டிருக்கிறது. கங்கையில் கங்கோத்ரியிலிருந்து ஸமுத்ரபர்யந்தம் ஸ்ஞனம் செய்வதிஞல் குருக்ஷேத்ரத்தில் ஸ்ஞனம் செய்த பலன் கிடைக்கிறது. பிறகு விந்த்யாசலத்தில் கங்கையில் ஸ்ஞனம் செய்வதிஞல் குருக்ஷேத்திரத்தைவிட 100 மடங்கு அதிக புண்ய பலன் கிடைக்கிறது. எங்கெல்லாம் கங்கை மேற்கு நோக்கி ஓடுகின்றதோ அங்கு 100 பங்கு அதிக புண்ய பலன் கிடைக்கும். காசியில் கங்கை உத்தர வாஹினியாக ஓடுவதிஞல் ஆயிரம் மடங்கு பலனை அதிகம் தருகிருள் என்று சொல்லுகிருர்கள். இதஞல்* **கிரஹணேஷு** *காசீ என்று சொல்லும் பழமொழி சரியானதே.*

*சௌர புராணம் முதலியவைகளில் ஸமுத்திர ஸ்ஞனம் விசேஷம் என்று எழுதியிருக்கிறது.*

*வியாஸஸ்ம்ருதியில் கூறியிருக்கிறது;- ஸாதாரண நதியானாலும் வெறும் ஸ்னானத்தை விட சந்திர கிரஹணஸ்னானம் லக்ஷம் - பங்கு புண்ணியம் அளிக்கிறதென்று. சூரிய கிரஹண ஸ்னானம் 10 லக்ஷம் பங்கு புண்ணியம். ஆனால் கங்கா ஜலத்தில் க்ரஹண ஸமயத்தில் ஸ்னானம் செய்யக் கிடைத்தால் சந்திரகிரஹணம் கோடி பங்கு புண்ணிய பலத்தையும், சூரிய கிரஹணம் பத்து கோடி பங்கு புண்ணிய பலத்தையும் அளிக்கிறது. அது எப்படியானாலும் சரி, கிரஹண காலத்தில் காசியில் அதிகக் கூட்டம் சேருவதினால் தங்குவதற்குக் கூட இடம் கிடைக்காமல் போய் விடுகிறது. சூரியகிரஹண காலத்தில் காசியிலுள்ள துர்க்கா குண்டத்திற்கு சமீபத்தில் இருக்கும் குருக்ஷேத்திரம் என்னும் குளத்தில் ஸ்னானம் செய்து விட்டு பிறகு கங்காஸனானத்திற்கு வருகிறார்கள். காசியில் தசாஸ்வமேத கட்டத்தில் சூரிய கிரஹணத்தின் பொழுது ஸ்னானம் செய்வதால் குருக்ஷேத்திரத்தை விடப் பத்துமடங்கு அதிகபலன் கிடைக்குமென்று காசீ கண்டத்தில் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. அதனால் கிரஹண காலத்தில் காசியில் விசேஷமாக யாத்திரைக்கு ஜனங்கள் வந்து கூடுகிறார்கள். அதுவும் மணிகர்ணிகாவில் அபாரமான கூட்டம் வருகிறது. கிரஹணகாலத்தில் கோவில்களையெல்லாம் மூடிவிடுகிறார்கள் அச்சமயம் தரிசனம், பூஜை ஒன்றும் கிடையாது. இந்தப் பிரகாரம் வாருணி முதலிய சிறிதும், பெரிதுமான பர்வகாலங்களிலும் காசியில் விசேஷக் கூட்டம் ஏற்படுகிறது. பக்கத்து மாகாணங்களிலிருந்தும் தேசவெளிங்களிலிருந்தும் யாத்ரிகர்கள் வருகிறார்கள். அவைகளை எழுதுவதானல் புஸ்தகம் பெரிதாகும் என்று விட்டுவிட்டோம், அதை ஜனங்கள் கற்பனையில் பார்த்துக் கொள்ள வேண்டியது தான். அது - இருக்கட்டும். காசீகண்டத்திலேயே கூறியிருக்கும் அநேக யாத்திரைகள் இப்பொழுது வழக்கத்தில் இல்லை. பௌர்ணமியில் பாத்ரபதநக்ஷத்ரம் சேரும் பொழுது பத்ரஹ்ருதம் என்னும் யாத்திரை, ஆர்த்ரா நக்ஷத்ரம் கூடும் சதுர்த்தசியில் செய்யும்*

*யாத்திரை, ருத்ரகுண்டத்திற்குச் செல்லும் யாத்திரை, இவைகள் நின்றுவிட்டன. இன்னும் காசீ கண்டத்தில் எழுதியிருக்கும் குளங்களும் குட்டைகளும் தேவஸ்தானங்களும், தேவமூர்த்திகளும் காலக்ரமத்தில் சிதிலமாகப் போயும், மிலேச்ச ராஜாக்களின் கொடுமையினுல் அழிக்கப்பட்டும் தூர்க்கப்பட்டும் மறைந்து போயின. அதனுல் கிரந்தத்தில் கூறியிருக்கும் அநேகயாத்திரைகளின் பவித்ரதன்மை மறைந்துபோய் கேவலம் தமாஷாகப் பார்க்கும் கூட்டங்களாகப் போயின. அதனுல் யாத்திரையை விரும்பும் பவித்ர ஜனங்கள் தங்கள் கடமைகளை நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. அதனுல் இந்த விஷயத்தைப் பற்றி விஸ்தரித்து எழுதவேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறோம். மேலும் காசீ கண்டத்தில் வர்ணித்து இருக்கும் ஊற்றுகளும், ஓடைகளும் கூட இப்பொழுது மறைந்திருக்கின்றன. தசாஸ்வ மேதத்தை வர்ணித்து 61 வது அத்யாயத்தில் 33 வது சுலோகத்தில் யமுனை பூர்வவாஹினியாக வந்து கங்கையில் கலக்கிறதென்றும் எழுதியிருக்கிறது. அது இப்பொழுது இல்லை. சூலடங்கேஸ்வரருக்குத் தெற்குப் பக்கத்தில் 'கோட்டியாகாட்டை' ஒட்டி கோதோலியா ஓடை என்று ஒன்று வந்து கொண்டிருந்தது. அதற்கு மேல் ரோடு போட்டுவிட்டார்கள். ஆனுல் யமுனு ஸங்கமம் என்பது பொய்யாகாமல் படித்துறை கற்களிலிருந்து வருடம் பன்னிரண்டு மாதங்களிலும் ஜலம் பெருகிக் கொண்டிருக்கிறது. யமுனை பூர்வ வாஹினியாகக் கலக்கிறது என்பதற்கு ஒப்ப அந்தத் தண்ணீர் கங்கையில் வந்துவிழுகிறது. இது கங்கா யமுனை ஸங்கமம் என்பதை உறுதிப்படுத்துகிறது.*

*அதுபோல மணிகர்ணிகா குண்டத்தில் ப்ரும்மநாளம் என்று சொல்லப்படுகிற ஊற்று கோமுகி வழியாகப் பெருகுகிறது, காசீ கண்டம் 61 வது அத்யாயம் 151 வது சுலோகத்தில் கூறப்பட்டுள்ளது; இந்த ஊற்றினுல்*

மணிகர்ணிகைக்கு வடக்கில் வீரத் தீர்த்தம் என்று கூறப்படும் சேந்தியகாட் படித்துறை அமுங்கிவிட்டது. படித்துறை கட்டுகிறவர்கள் தெரியாமல் ப்ரும்மநாள ஊற்றின் வாயை அடைத்து விட்டார்கள். அதனுல் அந்தப் படித்துறை அமுங்கி விட்டது. ஆனுலும் அங்கிருந்து ஒரு ஊற்று ஓடிவந்து தத்தாத்ரேயக் கோவிலுக்கு கீழே வந்து கங்கையில் சேருகிறது. இதே மாதிரி பஞ்ச கங்கா காட்டில் ஜடார்கே மந்திர: லக்ஷ்மண பாலாஜி கே மந்திர்'' என்று கூறப்படும் இரு கோவில்களுக்கு மத்தியில் ஒருபாதை இருக்கிறது. அங்கு கபஸ்தீஸ்வரர் கோவில் இருக்கிறது. அந்தக் கோவிலுக்குக் கீழேயிருந்து ஒரு ஊற்று பெருகுகிறது. அந்த ஊற்றை காசீ கண்டத்தில் 59 வது அத்யாயத்தில் 109 சுலோகத்தில் கிரணுநதி என்று எழுதப்பட்டிருக்கிறது. அந்த ஊற்று இப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கிறது. இதே போல பஞ்ச கங்கா கட்டத்தில் அநேக ஊற்றுகள் ஓடுகின்றன. அதனுல் அதற்கு பஞ்ச கங்கையென்று பெயர் ஏற்பட்டது. அது உசிதமே. இந்த விதமாக காசீகண்டம் 97 வது அத்யாயத்தில் 255 வது சுலோகத்தில் அஸிநதியை உலர்ந்த நதி என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்பொழுதும் வருஷருது கழிந்ததும் அது உலர்ந்து போய்விடும். இதனுல் தெரிவது என்னவென்ருல் காசீகண்டம் சொல்லிய படிக்கு இங்குள்ள தேவஸ்தானங்களும் மற்றவைகளும் இடித்து சிதைந்து, சிதிலமாய் நஷ்டமாகப் போனுலும் மேற்கூறிய ஊற்றுகளும் அஸிவருணை நதிகளும் காசீ கண்டத்தில் குறிப்பிட்டுள்ளபடி அதனதன் ஸ்தானத்தில் இருந்து கொண்டு காசீ கண்டத்தில் இருக்கும் உண்மையை நிரூபித்துக் கொண்டிருக்கின்றன. உண்மையில் காசீயாத்திரையைப்பற்றி பூர்ணமாக அறிந்து எழுதுவது மிகவும் கடினம். சிவரஹஸ்யத்தில் ஒரு கதையிருக்கிறது. ஒரு ஸமயம் ப்ரம்மா விஷ்ணு முதலியவர்கள் காசியில் பஞ்சகோசயாத்திரை பண்ணவேண்டுமென்று ஸங்கல்பம் செய்து கொண்டு கிளம்பி பீமசண்டியின் அருகில் வரும்

பொழுது இருபதுவருஷங்கள் கழிந்து விட்டன. இத்தனை வருஷம் சென்ற பிறகும் கூட யாத்திரையை முடித்துக் கொண்டோம் என்ற பெயராக்கி விட்டு தங்கள் தங்கள் இருப்பிடத்திற்குச் சென்றார்கள். பஞ்ச கோச யாத்திரையைப் பூர்ணமாக முடித்தவர்கள் - நந்தி கணேசர், பைரவர் இவர்களாவார்கள்: தேவதைகளுக்கே இந்த கதியென்றால் காமாதி ஆறு குணங்களில் மூழ்கி அமுங்கி அடிபட்டிருக்கும் மனிதன் இந்த யாத்திரையை எப்படிச் செய்யமுடியும்? ஆகையினால் யாதாசக்தி பக்தி பாவத்துடன் முடிந்த இடங்களுக்குச் சென்று யாத்திரையைப் பூர்ணமாகச் செய்ததாக ஸந்தோஷப்பட வேண்டும். இப்பொழுது நாம் கூறியிருக்கும் இந்த யாத்திரை ஸாதாரண ரீதியாக எளிதாக அனுஷ்டிக்கக் கூடியது. இதைத் தவிர எத்தனையோ யாத்திரைகள் சாஸ்திரப்படியும், சாஸ்திர விரோதமாகவும் தற்காலத்துக்குரிய நாகரிக மனப்பான்மையுடனும் வழக்கத்தில் இருந்து வருகிறது. இன்னும் எத்தனையோ இதர வர்ணத்தாருக்கும் அன்னியமதஸ்தர்களுக்குக்கூட யாத்திரைகள் இருக்கின்றன. மேலும் ப்ரம்மோத்ஸவங்களும் சிருங்கார உற்சவங்களும், மேளாவும் (திருவிழாக்களும்) ராம லீலாவும் கிருஷ்ணலீலாவும் கூட எத்தனையோ நடக்கின்றன. அதனால் காசீ வாஸிகள் ஒரு நாள் கூட வீணாகக் கழிக்க வேண்டாம். அவைகளையெல்லாம் இங்கு எழுதுவோமானால் புஸ்தகம் இரண்டு கைகளால் தூக்க முடியாமல் போய்விடும், முடிந்தஅளவு சுருக்கமாக எழுதப்பட்டிருக்கிறது. காசீ ஒரு முக்கியமான தீர்த்தஸ்தானம். ஆனால் இதனுடைய உருவம் ஒரு நாகரிகப் பட்டணம்போல் தோற்ற மளித்தாலும் இது வாஸ்தவமாக ஒரு புண்ணிய ஸ்தலமாகும் என்பதில் ஸந்தேஹமில்லை.

இங்கிருக்கும் தேவ தரிசனங்களும் கோவிலின் அமைப்பும், படித் துறைகளின் அழகும் பார்க்க வேண்டிய விஷயங்களாகும். மேல் நாட்டுக்காரர்கள் கூடக்

காணவேண்டிய உத்தமோத்தமான காக்ஷிகள் இங்கு இருக்கின்றன. அத்தகைய இடங்களை இங்கு சுருக்கிஎழுதுவது அனுவசியமாகாது என்று தோன்றுகிறது.

1. அஸ்ஸியிலிருந்து ராஜகாட் வரையில் படித்துறையின் அழகும், அதன்மேல் கோவில்களும் ஸ்தூபிகளும், கட்டிடங்களும் கங்கையில் படகுவழியாகச் சென்று பார்க்க வேண்டியவைகளாகும்.

2. துர்க்கா குண்டத்தில் இருக்கும் துர்க்கா தேவியின் கோவில்,

3. பேலுபுராவில் நகரத்திற்கு ஜல சப்ளை செய்யும் பம்பிங் ஸ்டேஷன்,

4. கமாச்சாவில் இருக்கும் ஸென்ட்ரல் ஹிண்டு காலேஜ்,

5. கதோலியாவிலுள்ள பனரஸ் மஹாராஜாவின் சிவாலயம்,

6. விஸ்வநாதருடைய ஸ்வர்ணத்தினலேயும், வெள்ளியாலும் மூடப்பட்ட கோவில்,

7. அன்னபூர்ண தேவியின் கோவில்,

8. கோத்வாலியிலிருக்கும் டவுன் ஹால், இது இப்பொழுது பைரவ நாத் மஹாலில் இருக்கிறது.

9. கம்பெனித் தோட்டம், கம்பனிபாக் இது மந்தாகிநீ தீர்த்தம். இப்பொழுது ப்ரஸித்தமாக மதாக்கின் என்று கூறுகிறார்கள். இதற்குத் தென்கிழக்கு மூலையில் காசி நகரணியின் பிரசாரணை கட்டிடமும் புஸ்தகசாலையும் இருக்கிறது.

10.பிரின்ஸ் ஆப் வேல்ஸ் ஆஸ்பத்திரி அதன் பக்கத்தில் பெண்களுக்கான ஈஸ்வரி ஆஸ்பத்திரி இருக்கிறது.

11.கவர்மெண்ட் காலேஜ்- இக்கட்டிடம் கட்டுவதற்கு

*கட்டிட நன்கொடை அளித்தவர்களுடைய பெயர்கள், இக்கட்டிடத்தின் கற்களில் அந்தந்த தேச பாஷைகளில் பொறிக்கப்பட்டிருக்கின்றன.*

*12.*விக்டோரியா பார்க் *:- இதை பினியாபார்க் என்று கூறுகிறார்கள், இங்கு அஸதிக்ஷேப தடாக தீர்த்தம் இருக்கிறது. இவ்விடத்தில் காலம் சென்ற விக்டோரியா சிலை அவருக்குப் பின்னால் இங்கிலாந்திற்கு அரசராக வரப்போகிற வேல்ஸ் அரசரால் ஸ்தாபிக்கப்பட்டது.*

*13.*மாதவராயின் சமாதி *:- இது ஔரங்கசீப்பால் கட்டப்பட்ட மசூதி, இதற்கு உயரவரைச் செல்லுவதற்குப் படிக்கட்டுகள் இருக்கின்றன.*

*14.*ஸாரநாத் *:- இதை தமேஷ் என்று கூறுகிறார்கள். இங்கு பௌத்த காலத்தில் வழக்கில் இருந்துவந்த அநேக பழமையான பொருள்களை சர்க்காரின் புராதான இலாகா கண்டெடுத்து வைத்திருக்கிறது.*

*15.*ராமநகர் அரண்மனை *:- இது வ்யாஸகாசி என்று கூறப்படும் கங்கையின் அக்கரையில் உள்ள காசிராஜாவின் அரண்மனை. இதன் ஸ்தூபிகளுக்குள் வேதவ்யாஸரின் கோவில் இருக்கிறது. இன்னும் அநேகம் காணவேண்டிய ஸ்தலங்கள் இருந்தாலும் விரிவாகும் என்றதனால் விடப்பட்டிருக்கின்றன; கடைசி பிரார்த்தனை, காசி மாஹாத்மியம், காசீகண்டம் முதலிய அநேககிரந்தங்களில் நிறைந்திருக்கின்றன. அநேகம் துறைகளும் கோவில்களும் பழுது பட்டுக் கிடக்கின்றன. இவைகளைச் செப்பனிடுவதற்கு ஜனங்களுக்கு விருப்பமும் இல்லை, தனமும் இல்லை. அநேக ராஜாக்கள், மஹாராஜாக்கள் உயர்ந்த வம்சத்தினர்களாலும் கட்டப்பட்ட அநேக கோவில்களும் துறைகளும் இப்பொழுதும் இருக்கின்றன. ஆனால் அவர்களுடைய வம்சத்தினர் இதில் கருத்தைச் செலுத்தாதது கவலைக்குரிய விஷயம். அவர்களிடம் உதார குணமுடைய தானசீலர்களிடம் காசிவாசிகளாகிய நாங்கள் விண்ணப்பித்துக் கொள்வது என்னவென்றால் அநேகம்*

*படித்துறைகள் ஸௌகரியமாக ஸ்ஞனம் செய்ய முடியாதபடி இடிந்து போய் கிடக்கின்றன. பரிசயமில்லாத அயல் நாட்டு யாத்ரிகர்கள் அவைகளில் ஸ்ஞனம்செய்ய் இறங்கி காயமடைவதும், மரணமடைவதும் ஸஹஜமாகியிருக்கின்றன, படித்துறைகளுக்குக் கீழே கிடுகிடு பள்ளங்கள் இருக்கின்றன, தவறி அவற்றில் விழுந்து விட்டால் வெளியில் வருவது முடியாத கார்யம், அப்படியே மரணமடைய வேண்டியதுதான். கிரஹண முதலிய காலங்களில் மூங்கில்களினுல் தடுப்புகள் கட்டி இயன்றமட்டும் பாதுகாக்கின்றனர்.*

*அநேகம் கோவில்களின் கதியும் இப்படியே. எத்தனையோ பழமையான கோவில்கள் ஜனங்கள் வசிக்கும் வீடாகப் போய் விட்டது. எத்தனையோ தேவதைகள் இரண்டு புருஷ உயரத்திற்குக் கீழே போய்விட்டன. எத்தனையோ? கோவில்கள் இடிந்து தரை மட்டமாக ஆகிவிட்டன. எத்தனையோ கோவில்கள் பூஜைகள் முதலியவைகள் ஒன்றுமில்லாமல் நாதியற்றுக் கிடக்கின்றன. அதனுல் காசிக்கு வரும் தானசீலர்களிடம் எங்கள் பிராத்தனையென்ன வென்றால் உங்கள் முன்னோர்களின் கீர்த்தியை ஜீர்ணோத்தாரணம் செய்து புண்ணியத்தை ஸம்பாத்திதுக் கொள்ளுங்கள் என்பதுதான். புதுப்புதுகோவில்கள் கட்டி கும்பாபிஷேகம் பண்ணுவதையெல்லாம் நிறுத்தி விட்டுப் பழைய கோவில்களை எல்லாம் ஜீர்ணோத்தாரணம் செய்ய வேண்டும். காசிரஹஸ்யத்தில் புதியகோவில்களைக் கட்டுவதை விடப் பழமையான கோவில்களை ஜீர்ணோத்தாரணம், செய்வதே விசேஷ புண்யம் என்று கூறப்பட்டிருக்கிறது. இதையே கூறுகிறது:*

**''காலேன பங்க மாபன்னம் ஜீர்ணோத்தாரம் கரோதிய:**
**இஹ தஸ்ய பலஸ்யாந்த :- ப்ரளயேபி ந ஜாயதே''**

*காசியில் இப்பொழுது ஜீர்ணோத்தாரணஸபை என்று ஒன்று கூடி ஜீர்ணோத்தாரண காரியம் கொஞ்சம் கொஞ்சம்*

நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் இப்பொழுதும் பாக்கி இருக்கிறது. தர்மபுத்தியுடைய உதாரசீலர்கள் கொஞ்சம் உதவி செய்தால் ஒரு புண்ய கார்யம் ஸித்தியாகும். பாஷா டீக்கா ஸஹிதம் காசீகண்டத்தின் முகவுரை காசீகண்டம் ஸ்காந்த மஹா புராணத்தில் நான்காவது கண்டமாகும்.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களுக்கப்பால் துரீயம் இருப்பதைப்போல், அயோத்யா, மதுரா, மாயா, காசீ, காஞ்சீ, அவந்திகா, த்வாரவதீ இந்த ஏழும் மோக்ஷபுரிகள் என்று கூறப்படுகின்றன. அதுபோல ஏழு கண்டங்கள் கொண்ட ஸ்காந்த புராணத்தில் காசீகண்டம் மத்யஸ்தானம் வஹிக்கிறது. இந்த கிரந்தத்தில் புராணங்களில் கூறியிருக்கும் எல்லாநீதிகளும் அடங்கியுள்ளன. பதினெட்டு புராணங்களுக்கு கர்த்தாவான வேதவ்யாஸர் இந்த கிரந்தத்தை எழுதியுள்ளார். இந்த உவமை கூறமுடியாத நடை அமிர்தத்தைவர்ஷிப்பது - இதில் வரும் மதுரமான கவிதைகளோ ஒன்றை ஒன்று மிஞ்சுகிறது, ப்ராசீனமான கவிதைகளானாலும் சரி, நவீன கவிதைகளானாலும் சரி இதற்கு உவமை கூறமுடியாது; ஸம்ஸ்க்ருத கவிகளான ஸ்ரீஹர்ஷன், மாகன் முதலிய மஹாகவிகள் கூட இதன் பாவங்களை (Bha) எடுத்தும் கூறுவது இருக்கட்டும், இதன் சுலோகங்களையே தங்களுடைய மஹாகாவியங்களில் சந்தஸை மாத்திரம் மாற்றி, அப்படியே எழுதியிருக்கிறார்கள். நைஷத சரித்திரத்தில் ஐந்தாவது ஸர்கத்தில் எட்டாவது சுலோகத்திலும் இதைக் கையாண்டு இருக்கிறார். இதுபோல் மகாகவியும் தன்னுடைய சிசுபாலவதம் என்னும் பிரசித்த காவியத்தில் மூன்றாவது ஸர்கத்தில் 38 வது சுலோகத்தில் இதிலிருந்தே எடுத்து எழுதியிருக்கிறார்கள். இதுபோல் எத்தனையோ உதாஹரணங்கள் இருக்கின்றன. இந்த கிரந்தத்தின் கவிதைகளின் ஆனந்தத்தை ரஸிக ஜனங்கள் ஏகாந்தமாக அமர்ந்து, சுவைத்து, சுவைத்து ரஸிக்க வேண்டியது

ஒன்ருகும். இந்த அலோக்ய கிரந்தத்தில் கதைகளும், உபாக்யானங்களும் பரவிக்கிடக்கின்றன, என்பது மட்டுமல்ல, வேத வசனங்களின் பிரமாணங்கள் மனுஸ்ம்ருதி முதலியவைகள் கூறிய ஆசார விஷயங்கள் நிர்ணயம், வேதாந்த தத்வதர்சன சாஸ்திரங்களின் அதிரஹஸ்யமான தத்வங்கள், வேதாந்தஸாரங்களின் முழுமை, ஸாமுத்ரிகா சாஸ்திரத்தைக் கசக்கிப் பிழிந்த ரஸம், ஆசார சீலர்களான புருஷர்களுடையவும், பதிவ்ரதா ஸ்த்ரீகளுடையவும் கடமைகள்; பௌத்த தர்மத்தின் ஸாரம், - மேலும் காசீபுரியின் அதிபதி விச்வநாதர், கலிதோஷத்தை அபஹரிக்கும் கங்கா தேவியின் சரித்திர மாஹாத்மியம், ரகஸ்யஸ்தானங்கள், இவைகளெல்லாம் விஸ்தார பூர்வமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இந்த காசீகண்டம் ஸாதாரணப் புராணமல்ல. தர்ம சாஸ்திரங்களில் இது மிகவும் பிராமாணிகமானது. ப்ரமாணங்களை நிர்ணயிக்கும் நிர்ணயஸிந்து என்ற கிரந்தங்களில் இதிலுள்ள அநேக வசனங்கள் ப்ரமாண ரூபமாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. விரதங்களை அனுஷ்டிக்கும் முறைகளும் இதில் காட்டப்பட்டிருக்கின்றன. காசியின் வர்ணனையும் மஹாத்மியமும் யஜுர்வேதம், ஜாபாலி உபநிஷத்து, ராமதாபன், உபநிஷத், லிகிதஸ்ம்ருதி பராசரஸ்ம்ருதி இவைகளிலும் மஹாபாரதத்தில் வனபர்வத்தில் 64 வது அத்யாயம், பீஷ்ம பர்வம் 24 வது அத்யாயம், கர்ணபர்வம் 5 வது அத்யாயம் அனுசாஸனபர்வம் 30 வது அத்யாயம் இவைகளில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அதுபோலவே சிவபுராணம், ப்ரும்மவைவர்த்த புராணம், இவைகளில் இருக்கும் காசீ வர்ணனையைப் பார்த்தால் சிறிய காசீ கண்டத்திற்கு ஸமானமாகவே இருக்கும். நாரதீயபுராணம், ஆதிப்ரம்ம புராணம், கூர்மபுராணம், அக்னி புராணம், மார்க்கண்டேயபுராணம், வாயுபுராணம், ஸௌரபுராணம், மத்ஸ்யபுராணம் பத்மபுராணம், வாமனபுராணம், அக்னிபுராணம்,

பவிஷ்யத்புராணம், சிவரஹஸ்யம், ராமாயணம், பாகவதம், ஸனத்குமாரஸம்ஹிதை; நைஷதசரித்ரம் இவைகளெல்லாவற்றிலும் இருக்கும் காசீ வர்ணனையை எழுதினுல் இரண்டு மூன்று காசீ கண்டங்களத்தனே பெரிதாக ஆகிவிடும், இதைத்தவிர; 'காசீரஹஸ்யப்' பிராசீன ப்ரம்மவைவர்த்த புராணத்திலும், மத்ஸயபுராணத்திலும் ரஸமய சித்த கிருதியிலும், எடுத்து ஈஸ்வரிதத்தர் என்னும் பண்டிதரால் எழுதப்பட்டது. இதைத்தவிர கிருஷ்ண சந்திரரால் எழுதப்பட்ட காசீ தர்ப்பணம், 'காசீபிரகாஸ்', 'பூர்வார்த்தம்', 'உத்தரார்த்தம்' என்ற இரண்டு பாகங்கள், 'காசீக்ருதி, என்னும் பழமையான கிரந்தம், காசிமுக்தி, விவேகம் இதுவும் பழமையான கிரந்தமே. காசிதத்வ விவேகம் அதுவும் பழமையான கிரந்தம்: காசீவிஞேதம் இது நவீன கிரந்தம்; காசியாத்ராபிரகாசம் அது நவீனம். பண்டிட் ராமானந்தா த்ரிபாடி எழுதியது. காசி குதூகலம், இத்தகைய சிறியதும் பெரியதுமான கிரந்தங்கள் காசியின் பெருமையைப் பாடுகின்றன. இதைத்தவிர நித்யயாத்திரை பஞ்சகோச யாத்திரை இவைகளைப் பற்றி விவரம் தெரிவிக்கும் தனி புஸ்தகம் இருக்கின்றன. சரித்திர ரீதியான ஆதாரத்தின் மேல் ஸம்ஸ்க்ருதம், ஹிந்தி, ஆங்கிலம் முதலிய பாஷைகளிலும் புஸ்தகங்கள் வெளிவந்துள்ளன. இவைகளுக்கெல்லாம் அஸ்திவாரம் காசீ கண்டமே; உண்மையில் காசியைப்பற்றி மிக விரிவாகவுள்ள புஸ்தகம் காசீகண்டம் ஒன்றும்தான். மேலும் காசீகண்டத்தில் காசியின் எல்லையை நிர்ணயித்திருக்கிறது. அந்த காசீகண்டத்தை எழுதியுள்ள காலத்தை மந்த புத்தியுள்ள என்ஞல் நிர்ணயிக்க முடியவில்லை. ஆஞல் ஒன்று மாத்திரம் கூறுவேன். இதில் காசி மாஹாத்மியம் மாத்திரமல்ல. காசியின் விரிவானசரித்திரமும் அடங்கியுள்ளது. இங்கே எத்தனே படித்துறைகள், எத்தனே குளம் குட்டைகள் எத்தனே? கிணறுகள் எத்தனே? கோவில்கள் எத்தனே? சிவலிங்கங்கள் எத்தனே ராமர்கள்,

எத்தனை கிருஷ்ணர்கள், எத்தனை? நரசிம்மர்கள், என்பதும் காசியில் எத்தனை பிராம்மணர்கள் இருந்தார்கள் என்ற எண்ணிக்கையும், ஒவ்வொரு தீர்த்தத்தின் ஸ்னானங்களின் வர்ணனைகளும் இதில் அடங்கியுள்ளது.

மேலும் காசி விஸ்வநாதரின் ஸ்வர்ணமயமான கோவிலின் கம்பங்களில் புதிப்பித்திருக்கும் மாணிக்கமயமான பதுமைகளின் வர்ணனைகளும், கலாவதியின் கதை ரூபமாக அக்காலத்திய சிற்பக்கலை, சித்திரகலை எந்த நிலையில் இருந்தது என்ற வர்ணனையும் இருக்கிறது. இந்தக் காலத்திலுள்ள சரித்திரங்களைப் போல் வருஷம், மாதம், தேதி இவைகளுடன் இது எழுதப்படவில்லைதான். ஆனால் இது பழைய காலத்து சரித்திரமாகும். இந்தச் சரித்திரம் எழுதிய காலம் எது, அதன் நிலைமை என்ன, இது எந்த வருஷத்தில் எழுதப்பட்டது இங்கு எந்த ராஜாக்கள் ஆண்டு வந்தார்கள், என்றெல்லாம் யாரால் கூறமுடியும்? இதில் திரௌபதியாதித்யர் முதலியவர்களுடைய கதை வருங்காலத்தியது என்று எழுதப்பட்டிருக்கிறது. அதிலிருந்து தர்மபுத்திரர் ஆட்சிக்கும் முந்தியகாலத்தியது என்று தெரிய வருகிறது. ஆனால் குறிப்பாக எத்தனைக் காலத்திற்கும் எழுதியது. எழுதி பிரசுரித்து எத்தனை காலமாகிறது என்று யாரால் சொல்ல முடியும்?

இந்த க்ரந்தத்தில் எல்லாவற்றையும் விட முக்யமானது சைவர்களின் சிவபுராணமும், வைஷ்ணவர்களின் (விஷ்ணு) பாகவதம், சாக்தர்களின் தேவீ - பாகவதமும் எப்படித் தங்கள் கதாநாயகர்களை வர்ணிதிருக்கின்றதோ - அதுபோல் இந்தக் க்ரந்தமும் காசியை ஸர்வச்ரேஷ்டம் என்று ஸித்தம் செய்கிறது. ஆனால் இப்புராணம் சிவ - விஷ்ணு இவர்களை பேதமில்லாமல் வர்ணிக்கிறது என்று கூர்மபுராணம் கூறுகிறது. இந்தச் காசீகண்டம் சைவர்களின் கிரந்தமென்று கூறமுடியாது. இதுபஞ்ச பூதங்களிலான சரீரத்தை சுத்தம் செய்யும் ஐந்து தேவதைகளின் ஆராதனையைப்பற்றி

உபதேசித்திருக்கிறது. ஆனுல் நாம் மார்தட்டிக் கொண்டு பெருமைப்படும் விஷயம் ஒன்று இருக்கிறது. காசியில் இருக்கும் ஆஸ்திக ஜனங்களும் காசிவாஸம் செய்ய விரும்புகிறவர்களும், வேறு ஊர்களில் வசிப்பவர்களில் காசி விஸ்வநாதர், கங்கை இவர்களின் தத்வத்தை அறிய விரும்புகிறவர்களும் முக்தி அடைவதற்கு உபாயம் தேடுகிறவர்களும், உத்தமோத்தமான உபாக்யானங்களில் இருந்து உபதேசமாக சாரத்தை க்ரஹிக்க விரும்புகிறவர்களும் காசியை முக்திக்ஷேத்திரம் என்று ஏன் கூறவேண்டும்? அந்த மோக்ஷமும் அங்கு எப்படிப் பெற வேண்டும் என்பதை அறிய விரும்புகிறவர்களும், சிவவிஷ்ணு பேதத்தை மதிக்கிறவர்களும் கொஞ்சம் சிரமப்பட்டு தங்கள் விலையுயர்ந்த நேரத்தில் கொஞ்சம் மீதப்படுத்திக்கொண்டு, மனதை ஒருமைப் படுத்திக்கொண்டு பக்ஷபாதரகிதராய் ஆக்ரஹத்தை விட்டுவிட்டு காசீகண்டத்தை முதலிலிருந்து கடைசிவரையில் ஒருமுறை படித்துப்பார்க்க வேண்டிக் கொள்ளுகிறேன். நான் சொல்லுவது சரியா, இல்லையா என்பது பிறகு அவர்களுக்குத் தெரியும். இந்தப் புஸ்தகத்திலிருக்கும் கிரந்தத்திலிருந்தும் விசித்ரம் என்னவென்றால் இந்த க்ஷேத்திரத்தை 'அன்னபூர்ண க்ஷேத்ரம்' என்றுதான் கூறுவார்கள். காசியில் அன்னபூரணிதான் எல்லோருக்கும் உணவளிக்கிருள். ஒருவன் கூடப் பட்டினி இருக்க ஸஹிக்கமாட்டாள் என்பது பொது ஜனவாக்கு; ஆனுல் ஜகஜ்ஜனனீ அன்னபூர்ண மஹாராணியின் பெயர் ஒரு இடத்தில்கூட வரவில்லை. எப்பொழுது சிவபிரான் காசியில் விஸ்வநாதர் என்ற பெயரில் எழுந்தருளியிருக்கிருரோ, அப்பொழுது பகவதி அன்னபூரணியின் உருவமாக எழுந்தருளியிருப்பது அவசியமாகும். ஏனென்றால் அன்னத்திஞல் திருப்தியடையாத உலகம் எப்படிச் செயல்பட முடியும்? ஒரு பழமையான சுலோகம் இதைப்பற்றி வேடிக்கையாகக் குறிக்கிறது. அதன் அர்த்தம் பின்வருமாறு :- தான் ஐந்து

முகங்களையுடையவன், புத்திரர்களில் ஒருவன் யானை முகத்தவன், இன்னொருவன் ஆறுமுகத்தவன்; இப்படி நிர்மால்யத்துடன் இருக்கும் ஐந்து முகத்தவனும் அவனுடைய புத்திரர்களும் வீட்டில் அன்னபூரணி இல்லாவிட்டால் எப்படி ஜீவிப்பார்கள்'' என்று. இந்த காசீ கண்டத்தில் அன்னபூர்ணா என்ற சப்தத்தின் ஸ்தானத்தில் பவானி என்றேயிருக்கிறது.

61 வது அத்தியாயத்தில் 37 வது சுலோகத்தில் பவானீ என்ற சுலோகம் மத்திரரூபமாக எழுதப்பட்டிருக்கிறது. வ்யாஸ தேவராலேயே எழுதப்பட்ட காசீகண்டத்திற்கு ஜோடியான காசீ ரஹஸ்யத்தில் மாதாவிசாலாக்ஷி, பவானி, சுந்தரி த்வாம் அன்னபூர்னே சரணம் பிரவர்தயே என்றும் ஜெயஜெய அன்னபூர்ணா என்றும், அன்னப் பிரதானநிரதே என்றும், அன்னார்த்தி சங்க்ரகப் ப்ரதே, இத்யாதி எல்லாம் எழுதியிருக்கிறார். இதற்கு முக்கிய காரணம் என்ன என்றே எனக்குத் தெரியாது. பெரிய பெரிய புராணங்களிலும் கூட ஸங்கேதமாக அநேகம் பெயர்கள் இடப்பட்டிருக்கின்றன. அல்லது மிக்கப் பழக்கத்திலிருக்கும் சொற்களையே உபயோகப்படுத்துகிறார்கள். பாகவதத்தில் ராதை என்னும் சப்தம் ஓரிடத்தில் கூடவரவில்லை. அதுபோல் என்னவோ, காசீகண்டத்தில் அன்னபூர்ணாவின் சப்தம் எழுதவில்லைபோலும். ஆனால் ப்ரம்மவைவர்த்த புராணத்தில் பக்கத்திற்கு ஒரு ராதை வருகிறாள். வியாஸர்தான் இப்படி செய்திருக்கிறார் என்பதற்கில்லை, வால்மீகியும் ராமாயணத்தில் ராமசந்திரன் என்னும் பதத்தை ஒரு இடத்திலும் உபயோகிக்கவில்லை. ஆனால் ஒவ்வொரு ஆயிரம் சுலோகங்களுக்குப் பிறகு காயத்ரியின் அக்ஷரங்களை ஒவ்வொன்றாகப் பிரயோகப்படுத்தி யிருக்கிறார்கள். இதுபோல் வேறுகவிகளும் கிரந்தகர்த்தாக்களும் கூட இதுபோன்ற முக்யமான பெயர்களை விட்டு விட்டு மறை பொருளாக எழுதியிருக்கின்றார்கள். வ்யாஸபகவான் காசீகண்டத்தில்

அன்னபூர்ணு என்னும் பெயர் எக்காரணம் கொண்டும் எழுதாவிட்டாலும் சரி, ஆனால் நாம் இந்த பஞ்சகாலத்தில் அன்னபூரணியின் நினைவுடனேயே (உயிர் வாழ்வதற்கு துணையாக) இருக்கவேண்டும். நாம் எல்லோரும் ஒரு மனதுடனே அவளைப் பிரார்த்திக்க வேண்டும். அன்னையே ! இந்தப் பசிப்பிணியினால் வாடும் பாரத மக்களை வெறுத்துவிட்டு வேறு அன்னிய தேசங்களுக்குப் போக வேண்டும் என்ற எண்ணத்தைவிட்டு இந்த தேசத்தையும் மக்களையும் அன்னத்தினால் பூர்ணமாக்கிவை அம்மா என்று பிரார்த்திக்க வேண்டும். ஸகலபுராணங்களும் ஸம்ஸ்க்ருத பாஷையிலிருந்தே பிறந்தது. அதனால் இக்காலத்திய ஸம்ஸ்க்ருத பாஷை படிக்காத பாரதமக்களுக்கு தர்மவிஷயமாகவும் சரித்திரவிஷயமாகவும், பழக்கவழக்கங்கள் பேசும் பண்பு இவைகள் நன்றாகத் தெரிய வருவதில்லை. அதனால் நம்முடைய சொந்த பழக்கவழக்கங்களை விட்டுவிட்டு அந்நிய நாட்டு பழக்கவழங்களின்படி நடக்கிறார்கள். புராணக் கதைகளெல்லாம் பொய்யும், வம்பும் நிறைந்திருக்கின்றன. இத்தகைய கதைகளைப் படிப்பது நம் விலையுயர்ந்த நேரத்தை வீணாக்குவது எனக் கருதி துப்பறியும் நாவல்களையும் காதல் நவீனங்களையும் படிப்பதே ஜன்மம் அடைந்த ஸாபல்யம் என்றெண்ணுகிறார்கள். மந்த புத்தியுடைய என்னுடைய எண்ணம் என்னவென்றால் எந்த விஷயத்தையும் மேலெழுந்தவாரியாகப் பாராமல் அதன் மர்மத்தை அறிந்தால் அதன் ரஸம் உண்டாகும் என்பது. சற்றுப் பொறுமையுடன் சிரமப்பட்டு இப்புராணங்களைப் படித்தால் நம் தேசத்தின் பழைய பழக்கவழக்கங்கள் எத்தனை கண்யமானது என்பது தெரியவரும். இங்குள்ள பலவேத விற்பன்னர்களுக்கு இதை மொழிபெயர்ப்பது சரியில்லை என்பது அபிப்பிராயம். ஏனென்றால் இவைகளில் வேத மந்திரங்களில் உள்ள அநேக ரகஸ்யங்களும் மர்மங்களும் வருகின்றன. இதைப்

படிப்பதற்கும், வேதத்தில் அதிகாரம் இருந்தால்தான் முடியும் என்பது அவர்களின் அபிப்ராயம். ஆனால் ஈஸ்வரனைப் பற்றியும் அவருடைய லீலாவினோதங்களைப் பற்றியும், நினைக்கவும் படிக்கவும் அவனிடமிருந்து வந்த நம் எல்லோருக்கும் அதிகாரமுள்ளது. ஹரியை பஜிப்பதற்கு ஜாதி, ரீதி ஒன்றும் தேவையில்லை. எவன்ஹரியைபஜிக்கிறானோ அவனே ஹரியாகிறான். மற்றொரு விஷயம். பக்தியும், சிரத்தையும் கூடின ஜனங்களுக்குப் பரமகோப்யமான விஷயங்களை அவர்களிடமிருந்து மறைத்து வைப்பதே அபராதமாகும். காசியைப் பற்றியும் அதன் புராண வரலாறுகளைப் பற்றியும் தெரிய விரும்பும் சிரத்தா பக்திமான்களில் என்னுடைய மொழிபெயர்ப்பிலிருந்து சிறிதேனும் லாபமடைந்தார்களானால் அதுவே நான் புராண ரகஸ்யங்களை வெளியிட்ட குற்றத்திற்கு பிராயச்சித்தமாகும்.

இந்த காசி கண்டத்தை மஹாராஷ்ட்ரம், குஜராத்தி, பெங்காலி,தெலுங்கு ஏன் பாரசீக பாஷையில்கூட மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. காசியிலும் பிராசீனமான பாஷையிலோ இதுவரையிலும் வெளிவந்ததாகத் தெரியவில்லை என்று நான் தமிழ்படுத்தியஹிந்து அனுவாதி கர்த்தரான நாராயணபதி சர்மா த்ருபாடி அவர்கள் கூறுகிறார்கள். மேலும் என்னுடைய ஹிந்தி மொழி பெயர்ப்பிலும் சரியான ஸம்ஸ்க்ருத மூலத்தின் சரியான கருத்துக்கள் வந்திருக்கின்றனவோ, என்னவோ நான் அறியேன் என்று கூறுகிறார், அப்படியிருக்கும் பொழுது ஸம்ஸ்க்ருதத்திலும், ஹிந்தியிலும், மிக்க சொற்ப அறிவுள்ள நான் தமிழில் மொழி பெயர்க்கத் துணிந்தது என்னுடைய அஹங்காரமோ அல்லது பாஷா கர்வமா, அல்லது மூடதைரியமா -எனக்கே புரியலில்லை - அன்னபூரணியே அறிவாள் (எல்லாரும் எளிதாகப் படிக்கவேண்டும் என்ற ஒரே ஆர்வமேதவிர வேறொன்றுமில்லை)

தமிழிலும்கூட வேறு ஒரு மொழிபெயர்ப்பு இதுவரை வந்ததோ என்னவோ சரியாகத் தெரியவில்லை தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹாலில் தமிழ்ச் செய்யுள் வடிவில் ஒரு மொழி பெயர்ப்பு இருந்தாகத் தெரியவந்தது. மற்றபடி ஒன்றும் தெரியவில்லை. காசியிலேயே காசிவாசத்திற்காக வந்த தமிழ்ப் பெரியவர்கள் மொழிபெயர்க்க முயற்சித்துப் பாதியிலேயே எந்தக் காரணத்தைக் கொண்டோ நிறுத்தி விட்டார்கள் என்று தெரியவருகிறது. அதனுல் எனது தமிழ்நாட்டு ஸஹோதர ஸஹோதரிகளிடம் நான் தலைவணங்கி கைகூப்பி விண்ணப்பித்துக் கொள்வது என்ன வென்ருல் ஒரு வேளை ஏதாவது தமிழ் மொழிபெயர்ப்புகள் தமது அக்ஞானத்திஞல் தெரியாமல் இருக்கலாம். இந்த மொழிபெயர்ப்பைவிட அவைகள் மேன்மை யாகவும் அமைந்திருக்கலாம். ஆனுல் நம்முடையக் குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்டுவிட்டு நாம் ஆனந்தப்படுவது போல இந்த மொழிபெயர்ப்பையும் இதை எழுதியது நமது ஸகோதரிகளில் ஒருத்தி என்று கருதி இதன் குற்றம் குறைகளை (எழுதியதில்) மன்னித்து ஏற்று என்னை ஆசீர்வதிக்க வேண்டுகிறேன். இந்தப் புஸ்தகத்தைப்பற்றிய மற்ஞெரு விஷயம் என்னவென்ருல் இதற்கு அவிமுக்த க்ஷேத்ரம், ஆனந்தவனம், மஹாஸ்மசானம், வாராணஸி என்ற பெயரே ஆங்கிலேயர்களால் ‘பஞரஸ்’ என்று அழைக்கப்பட்டது மேலும் முகம்மதியர்களின் படையெடுப்பால் அநேகம் தேவஸ்தானங்களும் இடங்களும் இடிந்து மறைந்தும், பெயர் மாறிமாறி - உருத்தெரியாமல் போயிருக்கின்றன. மற்றவைகள் இருக்கட்டும். ஸ்வயம் பகவான் விஸ்வேஸ்வரர் கோவிலே ஞானவாபிக்கு வடக்குபக்கத்தில் இருந்தது. ஆனுல் இப்பொழுது பகவான் எழுந்தளியிருக்குமிடம் ஞானவாபிக்குத் தெற்குபக்கத்தில் உள்ளது. இதைப்போல இடம் மாறியதும் மறைந்ததுமான ஸ்தானங்களை முடிந்தமட்டிலும் இந்த மொழிபெயர்ப்பில் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. இப்பொழுது காசியில்

*புராதான தத்வ விசாரணைக் கமிட்டியினுல் இவ்விஷயங்களை அறிந்து ஆராய்ந்து தெளிவாக்க முயலுகிறது. அவைகளைச் சேகரித்தும் அதை உத்தரகாசி அல்லது குப்தகாசி என்று வெளியிட எண்ணியிருக்கிருர்கள். ஆனுல் அவைகளுக்கும் காசீ கண்டத்திற்கும் ஒரு ஸம்பந்தமும் கிடையாது. கடைசியில் மிகப் பழமையான ஒரு ஸம்ஸ்க்ருத வித்வான் ஹிந்தியில் எழுதிய சுலோகத்தின் ஒரு வரியையும் அதன் தமிழாக்கத்தையும் கீழே எழுதித் தங்களிடருந்து பிரியா விடைபெற்றுக் கொள்ளுகிறேன்:- சுலோகம்* - **அஸாரே கலு ஸம்ஸாரே ஸாரமேதத் சதுஷ்டயம் । காச்யாம் வாஸ: ஸதாம் ஸங்க:॥ கங்காம்ப: சிவபூஜனம்** *தமிழாக்கம்;- ஸாரமற்ற சக்கையாகிய இந்த ஸம்ஸாரத்தில் ஸாரமாயுள்ள ரஸம் நான்கு :- அது என்ன வென்ருல் காசீ வாஸம்; ஸத்ஸங்கம்; கங்காஸ்னனம், சிவபூஜனம்.*



# காசீ கண்டம்

## அத்யாயம் 1

*1. இந்தக்காசி பூமியில் இருக்கிறது. ஆனல் அது பூமியைச் சேர்ந்ததில்லை. கீழான பாகத்தில் இருந்தாலும் இது ஸ்வர்க்கத்துக்கும் உயரே இருக்கிறது. இது பூமண்டலத்துடன் ஸம்பந்தப்பட்டிருந்தாலும் முக்திதானத்தை அளிக்கிறது. இந்த பூமியில் மரணமடையும் பிராணிகள் அம்ருதபதத்தின் அதிகாரிகள் ஆகிறார்கள்.*

*2. அவர்களை த்ரிபதகாமிநீயான கங்கைக் கரையில் எப்பொழுதும் தேவகணங்கள் ஸேவிக்கிறார்கள். இந்த த்ரிபுராந்தகனுடைய ராஜதானியான ஸ்ரீ காசி அக்ஞானமாகிய ஆபத்திலிருந்து ஜகத்தை ரக்ஷிக்கட்டும் எந்த பரமாத்மாவின்*

*3. ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம் என்கிற வியாஜ மூலமான ஸந்தியில் த்ரைலோக்யாதிபதியிடம் ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரர் எப்பொழுதும் போவதும் வருவதுமாக (அதாவது ஜனன மரணம்) இருக்கிறார்களோ, அந்த மஹேஸ்வரனுக்கு நமஸ்காரம்.*

*4. பதினெட்டு புராணங்களையும் இயற்றியவரான ஸத்யவதியின் புத்ரர் வ்யாஸர் ஸூத முனிவருக்கு முன்னல் எல்லா பாபங்களையும் போக்கடிக்கும் காசீகண்டத்தின் கதையைச் சொல்லத் தொடங்கினர். வ்யாஸ பகவான் கூறினர். ஒருசமயம் நாரதமுனி நிர்மலமான நர்மதா நதியில் ஸ்நானம் செய்து சரீரம் எடுத்தவர்களுக்கெல்லாம் ஸமஸ்த ஐஸ்வர்யங்களையும் அளிக்கின்ற (அமரகண்டக அதிஷ்டாதா) ஸ்ரீ ஓங்காரேஸ்வரரைப் பூஜித்தபிறகு ஸத்முனிகளான-*

*5. ஸம்ஸார தேஹதாரிகளுக்கு, ஸம்ஸார ஸந்தாப ஸம்ஹாரியான நர்மதாவின் ஜலத்தினல் தூய்மையான விந்த்யாசலம் என்னும் பர்வதத்தைச்*

*6. சுற்றிப்பார்க்கக் கிளம்பினார். அந்தபர்வதம் சோபையுடன் கூடிய ஸ்தாவரம், ஜங்கமம் ஆகிய இரண்டு விதமான தன்னுடைய பூமிரூபமான ரஸத்தை, வாயுமய ரூபமான*

*7. ப்ருத்வீ என்னும் நாமத்தை அர்த்தமுடையதாக ஆக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து ரஸித்தார். அது (ரஸால) மரங்களினால் ரஸமயமாகவும், அசோக வ்ருக்ஷத்தினால் சோகத்தைப் போக்கக்கூடியதாகவும், பனை, மூங்கில்களாலும், தமாலகம், ஹிந்தாலம் முதலிய மரங்களினாலும் நிறைந்ததாகவும்,*

*8. பெரிய பெரிய (ஸோபாடி) என்னும் வ்ருக்ஷங்களால் ஆகாயத்தை மறைப்பதாகவும், கொடிகள், ஸ்ரீ பலம் முதலியவைகளால் அழகுபடுத்தப்பட்டதும், அகர் (ஸாம்பிராணி) வ்ருக்ஷங்களால் வாஸனை நிறைந்தும், தாழை வனப்புதர்களால் வானரங்களைப்போல்,*

*9. பிங்களவர்ணமுள்ளதாகவும் இருந்தது. அந்தப் பர்வதம் வனதேவியினுடைய குசங்களைப் போன்ற லகுசா மரங்களால் (சீமைச்சக்கை) மனோஹரமாயும். அம்ருதமயமாயும் இருக்கிறது. அந்தப் பர்வதம் பிளந்துவிட்ட மாதுளைப்பழங்களால் தன்னுடைய அன்பு*

*10. நிறைந்த இதயத்தைக்காட்டிக் கொண்டு, காட்டரசன் மாதிரி, மாதவிக்கொடியைத் தழுவிக்கொண்டு நிற்கிறது.*

*11. இந்த விந்த்யாசலம் விதவிதமான அநேக பழங்களை மாலையாக அணிந்து*

*12. வானளாவிய வடவிருக்ஷங்களினால் நான்கு பக்கங்களிலும் கோடிக்கணக்கான ப்ரம்மாண்டங்களைத் தாங்கிக் கொண்டு, அநேக உருவெடுத்த பகவானைப்போல் இருக்கின்றது. வனத்தலத்தின் நாபீபாகம் போன்ற பலாவினுடையவும், அமுதமயமான பழங்களையுடைய வாழைமரங்களாலும் சூழப்பட்டிருக்கின்றது. அழகான*

*ஆரஞ்சு, எலுமிச்சை, இலந்தை, நாரத்தை முதலியவைகள் மண்டபம்போல் அதை அலங்கரிக்கின்றன.*

*13 மந்த வாயு கங்கோலிப் பழத்தின் கொடியை மெதுவாக அசைந்து ராஸக்ரீடை செய்வதைப் போலும், விந்த்யாசலத்தின் இளங்கொடிகள் பெரிய கொடிகளைக்கூடச் சிறிய சிறிய விளையாட்டினால் நர்த்தன மண்டபம்போல் ஆக்கிக்கொண்டிருக்கின்றன.*

*14. மேலும் அந்தப் பர்வதம் மந்தமாக அசைகின்ற கற்பூர வாழை இலைகளினால் சைகைக் காட்டி வழிப் போக்கர்களை இளைப்பாற அழைக்கின்றதுபோல் உள்ளது.*

*15. பின்னும் அது நாகரிகர்கள் போல் நாககேஸர மரத்தின் இலைகளால் தன்னில் படரும் முல்லைக் கொடியின் புஷ்பக் கொத்துகளை இளம் பெண்ணின் ஸ்தனங்களைத் தொடுவதுபோல் வருடிக் கொண்டிருக்கின்றது.*

*16. பலாவினுடைய பழங்களைத் தனது ப்ரேமையினால் விரஹ தாபத்தை அடைந்த பெண்ணின் மாம்ஸத்தை சாப்பிடுவது போலும் அதனால் துக்கமடைந்து, இலைகளை யுதிர்த்து நிற்கும் பலரசரமரங்கள் சுகக் கூட்டங்களைப் போல் சூழப்பட்டிருக்கின்றன.*

*17. தங்களைக் கதம்பமரம் என்று ஆடம்பரப் படுத்திக் காட்டும் வேப்பமரங்களைப் பார்த்தவுடனேயே ரோமங்கள் குத்திட்டு நிற்பதைப்போல் அநேக கதம்பமரங்கள் வேப்ப மரங்களை நான்கு புறமும் சூழ்ந்து கொண்டிருக்கின்றன.*

*18. ஸுமேரு பர்வதத்தின் உயர்ந்த சிகரங்களைப் போல் உயர்ந்த ருத்ராக்ஷ மரங்களும், தத்தூரவிருக்ஷங்களும் காமிகளுடைய லீலாக்ருஹம்போல் பரவி இருக்கின்றன.*

*19 சில சில இடங்களில் வடவிருக்ஷங்களினால் கூடாரம் அடித்தாற்போல சூழப்பட்டிருக்கின்றது. குடம்போல் பூத்திருக்கும் குடஜவிருக்ஷத்தின் மேல் உட்கார்ந்திருக்கும் கொக்குகள் போல விளங்குகின்றன.*

*20.காம்தா கரீரம், காஞ்சம் இவைகளின் இலைகள் யாசகர்களுக்கு ஆயிரம் ஆயிரம் கைகளினுல் வாரி வழங்குவதைப்போல் அசைந்தாடி அழைக்கின்றன.*

*21.மஞ்சள் மல்லிகைகளுடைய மொட்டுகள் தீப ஹாரத்தி செய்வதுபோல் இருக்கிறது. புஷ்பங்கள் நிறைந்த ஸேமா விருக்ஷங்கள் பத்மங்கள் நிறைந்த ஸாரஸத்தின் சோபையைக்கூட ஜயிக்கின்ற மாதிரி இருக்கிறது.*

*22.சில இடங்களில் அரசும் ஸ்வர்ண கேதகியும் நக்தமாலாவும் அதன் சோபையை அதிகப்படுத்துகின்றன.*

*23.காஞ்சன கேதகி முதலிய புதர்கள் அடர்ந்திருப்பது கருணையைத் தூண்டுகிற மாதிரியுள்ளது.*

*24.உதிர்ந்த மதுரக புஷ்பங்களினுல் சில இடங்களில் பூமியில் சயனித்திருக்கும் மகேசுவரனுக்கு முத்தினுல் அர்ச்சனைப் பண்ணியிருப்பது போல் தோன்றுகிறது.*

*25.அர்ஜுனம் முதலிய வ்ருக்ஷங்கள் அந்த பர்வதத்திற்கு விசிறியால் வீசுவதுபோல் அமைந்துள்ளது.*

*26.பேரீச்சைத் தென்னை முதலியவைகள் ஆகாயத்திற்கே குடைபிடிப்பதுபோல் உள்ளன.*

*27.அநேக வ்ருக்ஷங்கள் அம்மலைக்கே திலகமிட்டதுபோல் அமைந்து உள்ளன.*

*28.மேலும் அம்மலை தேவதாருவைப் போன்ற அநேக மரங்களாலும் கொடிகளாலும் சூழப்பட்டிருக்கின்றது.*

*29.நாகமரம் போன்ற அநேக வர்ணப் பழங்கள் பழுக்கும் மரங்களினுலும் அநேகம் கொடிகளாலும் சூழப்பட்டிருக்கின்றன.*

*30.(கிராம்பு- லவங்கம்) இவைகளாலும் நெருங்கப்பட்டிருக்கின்றன. சங்கவிருக்ஷம், சந்தனம், ரக்தசந்தனம் ஆகிய மரங்களும் நெருங்கிச் சூழ்ந்துள்ளன.*

*31.திராக்ஷை வெற்றிலை ஆகிய கொடிகளாலும்,*

மல்லிகை முல்லை ஆகியக் கொடிகளாலும் சிறந்து விளங்குகின்றன.

32. மாலதீ புஷ்பங்களில் அமர்ந்த வண்டுகள் கோபியருடன் அநேக ரூபம் எடுத்துக் கொண்டு க்ரீடை செய்யும் க்ருஷ்ணனைப் போல் இருக்கிறது.

33. மான் முதலிய மிருகங்களாலும் நானுவித பக்ஷிகளின் நாதத்தாலும் நதி, அருவி குளங்கள் தடாகங்கள் ஆகியவைகளினுலும் மனோரமணீயமாக விளங்குகிறது.

34. அநேக தேவகணங்கள் ஸ்வர்க பூமியைத் துச்சமாகக் கருதி போகத்தில் இச்சைக் கொண்டவர்களாக இந்தப் பர்வதத்தில் ரமிக்கின்றனர்.

35. அந்த பர்வதம் இங்கும் அங்கும் சிதறிக் கிடக்கும் இலை, புஷ்பம் முதலியவற்ருலும் அர்க்யம் கொடுப்பது போலவும், மயில்களுடைய இனிய நாதத்தால் வரவு கூறுவது போலவும் இருக்கிறது.

36. அதன்பிறகு அந்த விந்த்யாசலம் நூற்றுக்கணக்கான கதிரவர்களுடைய பிரகாசம் பொருந்திய ஜ்வலிக்கிற வஸ்திரத்தைக் தரித்தவருமாகிய நாரத மஹரிஷியைக் கண்டு தூரத்தில் வரும் போதே எதிர் கொண்டழைக்கக் கிளம்பியது.

37. ப்ரம்ம புத்திரர் நாரத முனியினுடைய வருகையால் அவருடைய தேஜஸ் பட்டதும் மலைகளிலுள்ள குகைகளிலிருந்த இருட்டு பட்டென்று விலகியது. அதுபோல் பர்வதராஜனுடைய மாநஸிக அந்தகாரமும் விலகியது.

38. நாரத முனிவருடைய ப்ரம்ம தேஜஸ்ஸால் ப்ரமையடைந்த போதிலும் அந்தப் பர்வதராஜன் அவருடைய ஸத்காரத்தில் தத்பரனுகித் தன்னுடைய ஜடத்தனமான பாஷாண ஸ்வபாவத்தையும் விட்டு விட்டான்.

*39.அப்பொழுது நாரதமுனிவர் பர்வதராஜனுடைய சிலா ரூபத்திலும் மூர்த்திரூபத்திலும் ம்ருதுஸ்வபாவத்தைக் கண்டு ஆனந்தமடைந்தார். ஸாதுக்களுடைய ஹ்ருதயம் விநயத்தினுல் வசியமாகிறதன்றே!*

*40.எவன் ஒருவன் குலத்திலேயோ, பணத்திலேயோ உயர்ந்தவனுக இருந்தபோதிலும் தனது வீடு தேடி வந்த அதிதிக்கு விநயத்துடன் ஸேவை செய்கிருனே, அவனே மஹான். அவன் பெரிய குலத்தவனுனுலும் அவனிடம் பெருமையிருப்பதில்லை.*

*41.அந்த உயர்ந்த கிரி, அரசன் உன்னதமான சிகரங்களையுடையவனுக இருந்தாலும் முனிவரைக்கண்டு சிரம் தாழ்த்தி வணங்கினுன்.*

*42.அப்பொழுது நாரதமுனிவர் அவரைத்தன் கைகளால் தூக்கி நிறுத்தினுர்.*

*43.ஆசீர்வாதத்தினுல் அவரை ஸந்தோஷிக்கச் செய்து அவருடைய மனதைவிட உயரமாகிய ஸிம்மாஸனத்தில் அமர்ந்தார். பிறகு விந்த்ய அரசன் தயிர், தேன், ஜலம் அக்ஷதை, அருகு, எள்ளு, தர்ப்பை, புஷ்பம் இந்த எட்டுவித அர்க்கியங்களினுல் நாரத முனிக்குப் பூஜை செய்தார்.*

*44.முனிவரும் அர்க்கியத்தைக் க்ரஹித்துக் கொண்டார், பிறகு விந்த்யராஜன் நாரத முனிவரின் சிரமம் தீரக் கைகால்களை பிடித்துவிட்ட பிறகு கூறினுன்-*

*45.முனிவரே ! உங்களுடைய வருகையினுல் எனது ரஜோகுணமும் ஒழிந்தது- தங்கள் ஸேவையினுல் ஆந்த்ரிக தமோ குணமும் என்னை விட்டு நீங்கியது. இன்று நான் பூர்ணமானேன்.*

*46.இன்று எனது ஸுதினம். வெகு காலமாகக் பிரார்த்தித்தது இன்று பலன் கிடைத்தது.*

*47.இன்றுமுதல் எங்கள் பர்வத ஜாதியில் நாங்கள் பூமியைத் தாங்கிய கௌரவத்தில் நானும் தந்யனுனேன்*

என்ருன். இதைக் கேட்ட நாரதர் ஒரு நெடுமூச்சுவிட்டு விட்டுப் பேசாமல் இருந்தார்.

*48.*அப்பொழுது அந்த பர்வராதஜன் திகிலடைந்தான். ஸ்வாமி! தாங்கள் ஏன் நெடுமூச்செறிந்தீர்கள்! அதைச் சொல்ல வேண்டுமென்ருர்.

*49.*மூன்று உலகில் பிரார்த்தனையினுல் அடையவேண்டியதெல்லாம் நான் தங்கள் வருகையினுல் அடைந்து துவிட்டேன். ஒரு பொருள் கூட பாக்கியில்லை. தங்கள் காலைப் பிடிக்கிறேன். எனது பேரில் க்ருபை வைத்துக் காரணத்தைக் கூறுங்கள் ஸ்வாமீ.

*50.*தங்கள் வருகையினுல் நான் புளகாங்கிதமடைந்தேன். ஆனந்த மிகுதியினுல் பேசும்பொழுது நாக்குக்குளறுகிறது. அதனுல் மனதிலுள்ள எண்ணங்கள் முழுவதும் வெளிவிட முடியவில்லை, ஆனுல் ஒரு விஷயம் சொல்லாமல் இருக்கமுடியவில்லை.

*51.*நமது முன்னோர்கள் ஸுமேரு முதலாகிய பர்வதங்கள் பூமியைத் தாங்குகிருர்கள் என்று பெருமையுடன் வர்ணிக்கிருர்கள்; பெரியவர்கள் ஸமுதாயம் இப்படிக் கூறுகிறது. ஆனுல் என்னைப் பொறுத்தவரை நான் தனியாகவே இப்பூமியைத் தாங்குவேன்.

*52.*அந்த ஹிமாலயம் இருக்கிறதே, அவனையும் விச்வ புருஷர்கள் சிலாகித்துப் பேசுகிருர்கள்.

*53.*ஏனென்றால் அவன் பார்வதிதேவியின் பிதா அல்லவா? அரசன் மஹாதேவனுடைய மாமனுர் அந்தத் தங்கமயமான ரத்ந சிகரங்களுடன் கூடிய தேவதைகள் வசிக்கும் ஸ்தானமான அந்த ஸுமேருவைக்கூட நான் மதிப்பதில்லை.

*54.*இந்த உலகில் நூற்றுக்கணக்கான பர்வதங்கள் பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கின்றன. அவைகளைப் பற்றிப் பெரியவர்கள் ஒருவார்த்தைகூடக் கூறுவதில்லை.

*ஆனுல் இவைகள்கூட தங்கள் ஸ்தானங்களில் மதிப்பு வாய்ந்தவைகளே.*

*55. மந்தேந என்னும் ராக்ஷஸக் கூட்டத்தைப் பற்றி ஸந்தேஹப்படுவதால் உதயாசலபர்வதம் தயைக்குரியதாகிறது; நிஷத பர்வதத்தில் ஓஷதிகள் மருந்துக்குக்கூட இல்லை. அஸ்தாசலத்தின் கீர்த்தி அஸ்தமித்தே இருக்கிறது.*

*56. நீலகிழி மறைத்துக் கொண்டிருக்கிறது. மந்த்ராசலத்தினுடைய ப்ரகாசம் மங்கிவிட்டது; மலயாசலத்தில் கேவலம் பாம்புகள் மட்டுமே வஸிக்கின்றன. ரைவத பர்வதத்தின் செல்வத்தைப் பற்றி ஒருவரும் புரிந்த கொள்ளவேயில்லை.*

*57. பிறகு ஹேமகூடம் த்ரிகூடம் முதலிய பர்வதங்களில் குப்பை கூளங்களே உள்ளன. கிஷ்கிந்தை, க்ரௌஞ்சம், ஸஹ்யம் இவைகள் ஆதியிலிருந்தே பூமிபாரம் வஹிக்க யோக்யதை இல்லாதவைகளே; என்ருன்.*

*58. இந்த விதமான விந்த்யராஜனுடைய வார்த்தைகளைக் கேட்டு நாரதர் மனதில் சிந்தனை எழுந்தது. இத்தனை அஹங்காரம் உள்ளவனுக்கு பெருமையடைய முடியாது. என்ன,*

*59. இதே பூமியில் ஸ்ரீ சைலம் பர்வதங்கள் இல்லையா? அவைகளுடைய சிகர தரிசனமே மனிதர்களுக்கு முக்தி அளிக்கிறதே;*

*60. இன்று இந்த பர்வதத்தினுடைய பலத்தைப் பார்த்துவிட வேண்டும்: என்று மனதில் யோஜித்த நாரதர் கூறத் தொடங்கினுர்:- பர்வதங்களுடைய ஸாமர்த்தியங்களைப் பற்றி நீ கூறியவைஅனைத்தும் உண்மையே.*

*61 ஆனுல் எல்லா பர்வதங்களினுடையவும் அரசனுன ஸுமேரு உன்னை அவமானம் செய்கிருன். அதை நினைத்தே*

மூபெருச்செறிந்தேன். அதை உன்னிடம் சொல்லிவிட்டேன்.

62.இல்லாவிட்டால் என்னை ஒத்த ஸாது மஹாத்மாக்களுக்கு இவ்விஷயங்களெல்லாம் எதற்கு? உனக்கு ஷேமம் உண்டாகட்டும் என்று கூறி நாரதர் ஆகாய மார்க்கமாகக் கிளம்பினர்.

63 நாரத முனிவர் போனபிறகு மிகவும் சிந்தா-குலனாக விந்த்யன் தன்னைத்தானே இகழ்ந்து கொள்ளத் தொடங்கினான்.

64.சாஸ்திர ஞானம் இல்லாத ஜீவனும் ஒரு ஜீவனா?; இளப்பம், இளப்பம். ஒரு வேலையுமில்லாமல் ஜீவித்திருப்பது அதை விட இளப்பம்; சொந்த ஜாதிபந்துக்களிடம் அவமானப்படுவது அதைவிட இளப்பம்; வீணான ஆகாயக் கோட்டை கட்டுவது, அதை விட இளப்பம்.

65.ஆச்சர்யம், அவன் எப்படிப் பகலில் சாப்பிட்டுக் கொண்டும் இரவில் நித்திரை செய்து கொண்டும், சொந்தத்தில் ஸுகம் அனுபவித்துக் கொண்டிருக்கிறான்.

66.ஜ்வாலாமுகி அக்னிகூட இத்தனை வேதனை கொடுக்காது எனக்கு. இந்த சிந்தா ஸமூகங்கள் கொடுக்கிற வேதனைக்கு அது எத்தனையோ தேவலை.

67.பெரியவர்கள் கூறுவது சரியாகத்தான் இருக்கிறது. சிந்தை பயங்கரமான வியாதி; இந்த வியாதி உபவாஸம், ஔஷதம் இவைகளால் சாந்தி அடையாது.

68.இந்த சிந்தா ரூபமான ஜ்வரம், பசி, நித்திரை, பலம், ரூபம், புத்தி, சோபை ஏன் உயிரைக்கூடக் கவர்ந்து விடுகிறது. ஜ்வரம்கூட ஒரு வாரத்தில் சமனமாகிவிடும்.

69.ஆனால் இந்தச் சிந்தை என்னும் ஜ்வரம் ஒவ்வொரு நாள் ஒவ்வொரு விதமாக இருக்கும்.

*70.இந்தச் சிந்தா ஜ்வரத்துக்குத் தன்வந்தரியிடம் கூட மருந்தில்லை. சாக்ஷிகூடத் தோற்றவிடுவார் என்றால் அஸ்வினி குமாரர்களால் என்ன முடியும்?*

*71.போகிறது; என்ன செய்வது? எங்கு போவது? எப்படி ஸுமேருவை ஜயிப்பது? நான் ஒரு குதி குதித்தால் அவனுடைய சிகரத்தின்மேல் உட்கார்ந்து விடுவேன்.*

*72.ஆனால் ஒரு காரணத்தால் குதிக்க முடியவில்லை. அதாவது பூர்வ காலத்தில் எங்கள் ஜாதியைச் சேர்ந்த ஒருவரே, இந்திரனுக்குக் கோபம் மூட்டிவிட்டு எங்களுக்கு இருந்த சிறகுகளையும் கொய்யச் செய்தார். அதனால் சிறகில்லாத நான் என்ன பண்ண முடியும்? இளப்பம், இளப்பம்.*

*73.ஆனாலும் தான் அந்த ஸுமேரு உயரமாக இருந்து கொண்டு என் மேல் ஏன் பொறாமைப் படுகிறான்? பூமியின் பாரம் தாங்கும் சுமைதாங்கியாகத்தான் அவனிருக்கிறான்.*

*74.இல்லாவிட்டால் ஸத்யலோகவாஸி ப்ரம்ம புத்ரர், ப்ரம்மசாரி நாரதர், - ஏன் பொய்சொல்லுகிறார்? என்னைப்போல் உள்ளவர்கள் தகுதி தராதரம் அறிய முடியுமா?*

*75.அதனால் தானே மனம் விசாரஸாகரத்தில் முழுகுகிறது. எனக்கு பராக்ரமம் இருந்தால் தானே நல்லது. இந்த வீண் சிந்தையினால் என்ன லாபம்?*

*76.நான் விசுவரக்ஷகர், ஸ்ரீ பகவான் விஸ்வநாதரை ஏன் சரணமடையக்கூடாது? அவர் எனக்கு புத்தி கூறுவார்.*

*77.ஏனென்றால் விச்வநாதரே அநாதநாதன், என்று கூறப்படுகிறார்; இப்படி யோசித்து விந்த்யன் மனதில் ஒரு முடிவுக்கு வந்தான்.*

*78.காலத்தை வீணாகக் கழிப்பது புத்திசாலித்தனம் அல்ல. வளரும் ரோகத்துக்கும் சத்ருக்களுக்கும் இடம் தரலாகாது.*

*79.க்ரஹம் நக்ஷத்ரங்களுடன் ஸூர்யபகவான் இந்த ஸுமேருவை அதிக பலசாலி என்று நினைத்துக் கொண்டல்லவா வலம் வருகிறார்.*

*80.ஸீமேருவிடம் கோபம் கொண்ட விந்த்யன் இவ்வாறு எண்ணி எண்ணி எல்லையில்லாத ஆகாச மார்க்கத்துக்கு இருட்டை உண்டுபண்ணும்படித் தனது சிகரங்களை வளரவிட்டான்.*

*81.எங்கும் யாருடனும் விரோதம் வைத்துக் கொள்ளக் கூடாது. ஆனால் விரோதம் வைத்துக் கொண்டுதான் தீரவேண்டும் என்று வந்தால் அது பிறர் பரிகசிக்கும் படி இருக்கக் கூடாது.*

*82.பிறகு இந்த மகாபர்வதம் ஸூர்யனுடைய கதியைத் தடுத்து உயர்ந்து அக்கடா என்று சந்தோஷமாக இருந்தது. ப்ராணிகளின் வருங்காலம் இறைவன் கையில் அல்லவா இருக்கிறது?*

*83.இன்று யமராஜனுடைய பிதா இன்று யாருக்கு வலப்பக்கமாகத் திரும்பிச் செல்கிறாரோ, அவனே எல்லா பர்வதங்களிலும் ச்ரேஷ்டன், ஸ்ரீமான்! மஹான் பூஜிக்கத் தகுந்தவன்.*

*84.இந்த விதமாக விந்த்யன் மனதிலிருந்த வ்யாகுலமெனும் பெரியபாரத்தை இறக்கிவிட்டு-*

*85.பிராம்மணன் காலையில் ஸூர்ய பகவானை எதிர்பார்ப்பது போல், பார்த்துக் கொண்டிருந்தான்.*

*86.எங்கு ஆதிசக்தி விந்த்யேஸ்வரி இருக்கிறாளோ, அந்த விந்த்யாசலம் தனது சொந்த சக்தியை, கச்சை கட்டிக்கொண்டு காட்டவேண்டாமா?*

*ஸ்ரீ ஸ்காந்த புராணம் நான்காவதான காசீகண்டத்தில் பூர்வார்த்தத்தில், விந்த்ய பர்வதத்தின் வர்ணனம் என்ற*

*முதல் அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 2

*வ்யாஸர் கூறுகிருர்:- இந்த ஜகத்தின் ஆத்மா அமர்ந்திருக்கும் அந்தகாரத்தின் சத்ரு சூரியத் தேவன் தனது பவித்ரமான கிரணங்களைப் பரப்பினுன்.*

*1. ஸன்மார்க்க காமியின் தர்மத்தை வளரச் செய்து கொண்டு தமஸான நிலையைத் தூர விரட்டிக் கொண்டு இரவில் சோகத்தால் வாடி மூடியிருக்கும் தனது ப்ரேயஸீக் கமலினியை மலரச் செய்தான்.*

*2. தேவ பித்ருக்களுடைய ஹவ்ய கவ்ய பூதபலி ஆதிகர்மங்களில் ப்ரஜையை ப்ரவர்த்திக்கச் செய்தான்.*

*3. காலை மதியம் மாலை மூன்று வேளைகளும் ஸந்தி காயத்ரி முதலிய க்ரியைகளை வ்ருத்தி செய்தான். துஷ்டர்கள் மூடர்கள் இவர்களுடைய இதயத்தில் அந்தகாரத்தை ஸ்தாபித்தான்.*

*4. நிசி என்ற அசுரனுல் விழுங்கப்பட்ட ஜகத்துக்குத் திரும்பவும் ப்ராண தானம் செய்து கொண்டு உதயகிரியில் தோன்றினுன். ஸூர்ய உதயம் ஆனவுடனேயே எல்லா தார்மிக ஜனங்களுடைய மனமும் உதயமாயிற்று. பாருங்கள். பரோபகாரத்துக்குப் பலன் கைமேலே.*

*5. ஸூர்யன் ஸாயங்காலம் அஸ்தமித்துவிடுகிருன். பிறகு தினமும் காலையில் பூர்வ திசையில் உதிக்கிருன். பிறகு தன்னுல் கண்டனம் செய்யப்பட்ட பூர்வதிசை என்னும் நாயகியை கரஸ்பர்சத்தால் ஆச்வாஸம் செய்தான்.*

*6. பிறகு விரஹானலத்தால் தஹித்துக் கொண்டிருக்கிற அக்னிதிசை என்ற நாயகியை முஹூர்த்த காலம் ஸம்போகித்தான். பிறகு கிராம்பு, ஏலம், கஸ்தூரி, கற்பூரம், சந்தனம் இவைகளைப் பூசிக் கொண்டிருப்பவளும்*

*7. வெற்றிலைக் கொடியினுல் அதன் இலைகளைத் தரச்செய்து தாம்பூலம் தரித்துத் தனது உதடுகளை சிவப்பாக்கிக் கொண்டிருப்பவளும், திராக்ஷைக்*

*கொத்துகளைப்போல் ஸ்தனபாரத்தின் நுனியை உடையவளும், லவலி லதையைப் போன்ற கைகள் என்னும் கொடியினாலும் அசோகத்தளிர் போன்ற கரங்களினாலும் சோபிப்பவளும்;*

*8. மலயாசலத்தினுடைய வாயு ரூபமான ஶ்வாஸத்தை இழுப்பவளும் க்ஷீரஸாகரத்தையே வஸ்த்ரமாகத் தரித்தவளும், சித்ரகூட பர்வதத்தின் தங்கத்தையும், ரத்னங்களையும் தனது அணிகளாகப் பூண்டிருப்பவளும், ஸுமேரு கிரியையே தனது நிதம்பஸ்தானமாகக் கொண்டவளும்,*

*9.காவேரீ, கோதாவரீ ஆகிய துடைகளையுடைவளும் சோழதேசம் என்னும் ரவிக்கையை அணிந்தவளும், ஸஹ்யம், துர்துரம் ஆகிய பர்வதங்களை மார்பில் அலங்கரித்திருப்பவளும், காஞ்சிபுரம் என்னும் வங்கியால் சோபிப்பவளும்*

*10. மிகவும் கோரமான மஹாராஷ்டிரமெனும் வாக்கு விலாஸத்தால் பரம மனோஹரமாக இருப்பவளும், ஸத்குண சாலினி கோலாபுராதீஸ்வரி*

*11. மஹாலக்ஷ்மிக்குப் பீடபூமி மிகவும் சாதுர்யம் உடையவளும் அதை தக்ஷிண திசைக்கு இப்பொழுது திக் எனும் கன்னிகைகளின் ஸ்வாமியான ஸூர்யதேவன் செல்லத் தொடங்கினார். அவருடைய ரதக்குதிரைகள் ஸமஸ்த ஆசாச மண்டலத்தை விளையாட்டாகத் தாவிக்குதித்துக் கொண்டு செல்கையில்,*

*12. மேலே செல்ல முடியவில்லை. இதற்குள் சூரிய தேவருடைய ஸாரதி அருணன் கைகூப்பி வணங்கினான்.*

*13. அருணன் கூறினான், ஹே பானுதேவா! விந்த்யாசலம் கர்வத்துடன் ஆகாச மார்க்கத்தை அடைத்துக் கொண்டு நின்றுக்கொண்டிக்கிறது. தாங்கள் வழங்கும் பிரதக்ஷிணத்தைப் பெறுவதற்கு விரும்பி, ஸுமேருவுடன் போட்டிக் கொண்டு நின்று கொண்டிருக்கிறது.*

*15. ஸாரதியின் வார்த்தையைக் கேட்டுக் கதிரவன் மனதுக்குள், ஆலோசனை செய்யத் தொடங்கினார். என்ன பெரிய ஆச்சர்யமாக இருக்கிறது. ஏன் இவன் ஆகாச மார்க்கத்தை அடைத்துக் கொண்டிருக்கிறான்; வ்யாஸர் கூறுவார்; ஸூர்யன் ஸமர்த்தன்தான்; ஆனால் பாதி மார்க்கத்தில் தடைப்பட்டு அவன் என்ன செய்வான்?*

*16. மிகவும் வேகசாலிதான், உண்மை, தநியாக வழியைத் தடைப்படுத்தி ஒருவன் நிற்கும்போது அவர் என்ன செய்வார்? ஸூர்யன் ராஹுவினால் பீடிக்கப்பட்டும் கூட க்ஷணமாத்திரம் கூட வழியில் தங்கமாட்டார். சூன்ய மார்கத்தில் தடைப்படுத்தி நிறுத்தினால் அவர் என்னதான் செய்வார்?*

*17. விதி வலிது, எந்த ஸூர்யன் இரண்டாயிரத்து இருநூற்றிரெண்டு யோஜனை தூரம் நமது மனிதர்களுடைய இரண்டு நிமிஷங்களில் கடக்கிறானோ அவருக்குகூட இன்று வெகு நேரம் வரைத்தாமதமாக நிற்க வேண்டி வந்தது.*

*18. மிக நேரம் கழிந்து விட்டது, கிழக்கு, வடக்குத் திசையில் உள்ளவர்கள் ப்ரசண்டமார்த்தாண்டனுடைய கிரணங்கள் விழும் தருவாயில் உள்ளதைக் கண்டு மனக்லேசம் அடைந்தார்கள்.*

*19. மேற்கு தெற்கு திசையில் உள்ளவர்கள் கண்களை மூடித்தூங்கிவழிந்து கொண்டே க்ரஹநக்ஷத்ரங்களுடைய ஆகாசத்தைப் பார்த்தார்கள்.*

*20. சூரியனைக் காணவில்லையே, இது பகலும் இல்லை, இரவும் இல்லை. சந்திரனையும் காணவில்லையே; ஆகாசத்திலேயும் அநேகமாக எல்லா நக்ஷத்ரங்களும் மறைந்துக் கொண்டு வருகின்றன. இது என்ன காலம்? ஒன்றும் புரியவில்லையே.*

*21. காலம் வரும் முன்பே ப்ரம்மாண்டங்கள் லயமாகிவிடுமா? அப்படியும் இல்லை. அப்படியிருந்தால்*

இதற்குள் ப்ரளய அலைகள் ப்ரம்மாண்டங்களை மூழ்கடித்து விடும் அல்லவா?

22. ஸ்வாஹா, ஸ்வதா, வஷட்காரம் என்றும் மூன்று கிரியைகளையும் செய்யாமல் உலகில் பஞ்சயக்ஞங்கள் செய்யாமல், மூன்று உலகும் நடுங்கத் தொடங்கியது;

23. கதிரவன் உதித்ததும் உலகில் யக்ஞம் முதலிய காரியங்கள் ஆரம்பிக்கப்படும். அந்தக்ரியைகள் மூலமாக யக்ஞ அதிகாரிகளான தேவர்கள் திருப்தி அடைவார்கள். இதெல்லாவற்றிற்கும் காரணம் ஸூர்யநாராயணர்தான்.

24. சித்ரகுப்தன் முதலியவர்கள் ஸூர்ய பகவானிடம் இருந்தே காலத்தை அறிந்து கொள்கிறார்கள். அதனால் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம் முதலிய கார்யங்களுக்கு ஒரே காரணம் ஸூர்யன்தான்.

25. அந்த ஸூர்யனுடைய கதி தடைப்பட்டதும் மூன்று உலகங்களினுடைய கதி தடைப்பட்டதாகின்றன. யார், யார் எங்கு இருந்தார்களோ, அங்கங்கு சித்திரத்தில் எழுதியதுபோல் நின்றுவிட்டார்கள்.

26. ஒருபுறம் கோரமான ராத்ரியின் அந்தகாரம், மறுபுறம் பகலினுடைய ப்ரசண்ட உக்ரமான வெய்யில். எத்தனையோ இடங்களில் ப்ரளயமே ஏற்பட்டு விட்டது; உலகம் பயத்தினால் திகில் அடைந்தது.

27. இந்த விதமாக ஸுர, அஸுர, நர, நாக எல்லா ப்ராணிகளும் அநாயாஸமாக இது ஏதோ ஒன்று விபரீதம் நேர்ந்துவிட்டதே, என்று கூறிக் கொண்டு, 'அம்மா, ஐயோ' என்றெல்லாம் அழவும் தொடங்கி இங்குமங்குமாக ஓடவும் தலைப்பட்டார்கள்.

28. இதன் பிறகு தேவதைகள் இதையெல்லாம் பார்த்துவிட்டு, ப்ரம்மாவைச் சரணம் அடைந்தார்கள். 'ரக்ஷிக்க வேண்டும்' 'ரக்ஷிக்க வேண்டும்' என்று கூறிக்கொண்டே அநேக விதமாகத் துதிக்கத் தொடங்கினார்கள்.

*29. விராட் ரூபரும் ஹிரண்ய கர்ப்பரும், அறியக்கூடாத ஸ்வரூபரும், மோக்ஷரூபரும் ஆனந்த ரூபரும் ஆன ப்ரும்மதேவருக்கு நமஸ்காரம்.*

*30. யாரை தேவதைகள் கூட நன்றாக அறியவில்லையோ எவரை நினைக்க முடியாத படி மனமும் சிறுத்துப் போகிறதோ, எங்கு பேச்சும் தடைபடுகிறதோ, அப்படிப்பட்ட சைதந்யத்துக்கு நமஸ்காரம்.*

*31. 32. எவர் ஸத்வ குணத்தை ஆச்ரயித்து, விஷ்ணு உருக்கொண்டு பாலனமும், ரஜோ குணத்தை ஆச்ரயித்து ப்ரம்மரூபமாகி ஸ்ருஷ்டித் தொழிலும், தமோ குண ரூத்ர ரூபமாக ஸம்ஹாரத் தொழிலைச் செய்கிறாரோ அவருக்கு நமஸ்காரம்.*

*33. யோகிகள் நிஶ்சலமான மனதுடன் ஏகாக்ரமாக ஆகாசத்தைப் போல் சுத்த அந்த: கரணத்துடன் யாரை ஜோதி ரூபமாகப் பார்க்கிறார்களோ, அந்த ஸ்ரீ ப்ரம்ம தேவருக்கு நமஸ்காரம். எவர் காலத்துக்கு வேறானவரானாலும், காலஸ்வரூபரோ, தனது இச்சைப்படியே நரரூபம் எடுத்துக் கொள்ள வல்லவரோ மூன்று குணங்களையுடைய ப்ருக்ருதி மூர்த்தியும் ஆகின்றாரோ, அவருக்கு நமஸ்காரம். புத்திஸ்வரூபமாயும், வைகாரிகராயும் தேஜஸ், தாமஸ் முதலான மூன்று வித அஹங்கார ரூபராயும், பஞ்ச தன்மாத்ர ஸ்வரூபராயும், பஞ்சகர்மேந்த்ரிய ரூபராயும் இருப்பவருக்கு நமஸ்காரம்.*

*34. ஐந்து ஞானேந்த்ரிய ரூபமாயும், பஞ்ச பூதஸ்வரூபரும், ஸ்தூல விஷயாத்மக ரூபராகவும் உள்ள ப்ரம்ம ஸ்வரூபருக்கு நமஸ்காரம்.*

*35. எவர் ப்ரம்மாண்ட ஸ்வரூபராகவும் இருந்தும் அதன் மத்தியில் கார்ய ரூபமாகவும் பரிணமித்து இருக்கிறாரோ அவருக்கு நமஸ்காரம். கால தேசவர்த்த ப்ராசீன ரூபரோ அவருக்கு நமஸ்காரம்.*

*36. அநித்ய நித்ய ரூபராகவும், ஸத் அஸத்துக்குப் பதியாகவும் இருப்பவருக்கு நமஸ்காரம்; ஸமஸ்த*

*பக்தர்களுக்குக் க்ருபை செய்யதத் தன்னிச்சைப்படி சரீரம் எடுப்பவருக்கு நமஸ்காரம்.*

*37. தங்களுடைய ரேசகமான மூச்சு வேதம். தங்களுடைய வியர்வையினுலேயே இந்த ஸமஸ்த ஜகத்தும் உண்டானது. எல்லா பூதகணங்களும் தங்களுடைய பததலம்; ஸ்வர்கம் தங்களுடைய மஸ்தகத்திலிருந்து உண்டாயிற்று.*

*38,39 தங்கள் நாபியிலிருந்து ஆகாசம் வந்தது. தங்களுடைய ரோமம் வனஸ்பதிகளாயின. ஹே ப்ரபோ! தங்களுடைய மனதிலிருந்து சந்திரன் உதித்தான். ஹே தேவா! நேத்ரங்களிலிருந்து ஸூர்யன் உதித்தான். தாங்களேதான் எல்லாம்.*

*40. இந்த ஸமஸ்தமும் தங்களுக்குள் அடங்கினவையே; ஸ்துதி செய்பவனும், ஸத்தோத்ரமும், ஸ்துதிக்கு லக்ஷ்யமும் தாங்களே, இந்த ஸமஸ்த லோகங்களும் தங்களிடமே வஸிக்கின்றன. தங்களுக்கு அடிக்கடி நமஸ்காரம் செய்கிறோம்.*

*41. தேவர்கள் இந்த விதமாக ப்ரம்மாவைத் துதித்துப் பூமியில் தண்டத்தைப்போல் விழுந்தார்கள். அப்பொழுது ப்ரம்மா ஸந்தோஷமடைந்து கூறினுர்.*

*42. ஹே விநயரூபமான தேவக் கூட்டங்களே! உங்களுடைய யதார்த்தமான இந்த ஸ்துதியினுல் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். நீங்கள் எழுந்திருந்து கொள்ளுங்கள். நாம் சந்தோஷமடைந்தோம். இஷ்டமான வரங்களைக் கேளுங்கள்.*

*43. எந்த மனிதனே தேவனே பவித்ரமாக சிரத்தையோடு கூட இந்த ஸ்துதையைப் பிரதி தினமும் எனக்காவது விஷ்ணுவுக்காகவாவது, மஹா தேவருக்காவது அர்ப்பணம் செய்தால் நாங்கள் மூவரும் அவனிடம் ஸந்தோஷப்படுவோம்.*

*44. அவனுக்கு அவன் மனம்போல் புத்ர, பௌத்ர, பசு, தனம், ஸௌபாக்யம், ஆயுள் பயமின்மை, யுத்தத்தில் வெற்றி இவைகளை அளிப்போம்.*

*45. அவன் லௌகிக, பாரமார்த்திக யோகமும் அக்ஷயமான மோக்ஷமும், அவன் இச்சித்தயாவையும் அடைவான்.*

*46. அதனால் ப்ரயத்தனத்துடன் இந்தத் துதியை ஒவ்வொருவரும் கூற வேண்டும். இந்த ஸர்வஸித்திப்ரத ஸ்தோத்ரம் அபீஷ்டத என்னும் பெயருடன் பிரஸித்தமாக விளங்கும்.*

*47. தேவதைகள் வணங்கி எழுந்ததும் திரும்பவும் ப்ரம்மா கூறினார்- நீங்கள் ஸந்தோஷமாக இருங்கள். இங்கு வந்த பின்னும் ஏன் பயப்படுகிறீர்கள்?*

*48.49. பாருங்கள் இங்கு நான்கு வேதங்களும் மூர்த்திகரித்து இருக்கின்றன. பதினாறு வித்தைகளும், இந்த தக்ஷிணைகளுடன் பூர்த்தியான அக்னிஷ்டோமாதி யக்ஞங்களும் இருக்கின்றன. இதோ ஸத்யம், இதோ தர்மம், இதோ தபஸ், இதோ ப்ரம்மசர்யம், இதோ கருணை, இதோ பாரதிஸ்ருதி, ஸ்ம்ருதி புராணங்கள் அர்த்தத்துடன் படித்தவர்கள் இருக்கிறார்கள்.*

*50. இங்கு காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம் மாத்ஸர்யம், கோழைத்தனம் (அதீரதா) பயம், ஹிம்ஸை, துஷ்டத்தனம், அஹங்காரம், நிந்தை, அஸூயை, அபவித்ரம் இவைகள் கொஞ்சம் கூடக் கிடையாது.*

*51. எந்தப் ப்ராம்மணன் வேதாத்யாயியாகவும், தபோநிஷ்டனாகவும், தபோத்யானவானாகவும் ஒரு மாதம், ஆறு மாதம் சாதுர்மாஸ்யம் முதலிய உத்தம வ்ரதங்களை அனுஷ்டித்தவனாகவும் இருக்கிறானோ-*

*52.53 எங்கு பதிவ்ரதா தர்ம வழியைப் பின்பற்றுகிறவர்கள் ஆகிய பெண்கள் இருக்கிறார்களோ,*

மற்ற ப்ரம்மசாரிகள் இருக்கிறார்களோ, பரபெண்களைக் கண்டால் எங்கு நபும்ஸகர்களாக நடந்து கொள்கிறார்களோ பாருங்கள் அவர்களெல்லோரும் இங்கு இருக்கிறார்கள்.

*54.* இங்கு இருக்கிறவர்கள் மாதாபிதாக்களுக்கு பக்தர்கள்; இவர்கள் பசுவிற்காக ப்ராணத்யாகம் செய்பவர்கள்; இவர்கள் வ்ரதம், தானம் ஜபம், யக்ஞம் ஸ்வாத்யாயம், ப்ராம்மணார்ப்பணம், ஸமாராதனை தீர்த்தயாத்ரைகள், தபஸ், பரோபகாரம் முதலிய ஸத்கர்மங்களைப் பலனில் அபிலாஷை இல்லாமலேயே செய்தவர்கள்.

*55.* காயத்ரீ ஜபம் செய்வதில் தத்பரர். அக்னி ஹோத்ரத்தில் த்ருடநியமம், கன்று போட்ட பசுக்களை ரக்ஷிப்பவர்; கபிலபசுக்களை தானம் செய்பவர்கள்.

*56.* ஆசையில்லாமலேயே ஸோமபானம் செய்தவர்கள்; ப்ராம்மணர்களுடைய சரணோதகத்தைப்பானம் செய்பவர், புண்யதீர்த்தங்களில் மரணமடையும் ப்ராம்மணோத்தமர்களுக்கு ஶுஶ்ரூஷை செய்தவர்கள்.

*57.* தானம் வாங்கத் தகுதியுடையவராயினும் தானத்தில் இச்சையில்லாதவர்கள், தீர்த்தக் கரையில் பரிஹாரம் வாங்குவதிலிருந்து விலகி நிற்பவர்கள், இவர்கள் மிகவும் அன்பானவர்கள்.

*58.* எவர்கள் நிர்மலமான மனஸோடும் ஹ்ருதயத்தோடும் சூர்யனுடைய மகரராசி ஸஞ்சாரத்தில் தீர்த்தராஜ் ப்ரயாகையில் ஸ்னானம் செய்கிறார்களோ, அவர்களெல்லோரும் ஸூர்யனுக்கு ஸமமான தேஜஸ்ஸுள்ள பவித்ர வான்கள்;

*59.* வாராணஸிபுரி பஞ்ச கட்டத்தில் கார்த்திகை மாதத்தில் மூன்று நாட்களாவது ஸ்னானம் செய்வார்களானால் அவர்கள் பரம நிர்மலமான பவித்ர சரீரமுடைய புண்ய சீலர்கள் ஆவார்கள்.

*60. எவர்கள் மணிகர்ணிகா கட்டத்தில் ஸ்னனம் செய்து மிகுந்த தனராசியினுல் ப்ராம்மணர்களை ஸந்தோஷப்படுத்துகிறுர்களோ அவர்கள் பூர்ண போகம் அனுபவித்து கல்பகாலம் வரை எனது லோகத்தில் வஸிப்பார்கள்.*

*61. அதன் பிறகும் புண்ணிய ப்ரபாவத்தினுல் காசியை அடைந்து விஸ்வேஸ்வரருடைய தயையினுல் மோக்ஷமடைவார்கள்.*

*62. ஆஹா! விஸ்வநாதருடைய நரகத்தில் மரணமடைபவர்களுக்கு பயமே இல்லை.*

*63. அங்குள்ளவர்கள் மரணதேவனை தங்கள் ப்ரியமான அதிதியைப்போல் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறுர்கள் ஆஹா சம்புவின் நகரில் மரணமடைந்தால் பயமில்லை.*

*64. எவர்கள் குருக்ஷேத்ரத்தில் சுத்த தனத்தை தானம் செய்கிறுர்களோ, அந்தப் பவித்ர சரீரம் உள்ளவர்கள் எனது பக்கத்திலேயே இருக்கிறுர்கள்.*

*65. எவர்கள் கயா தீர்த்தத்தில் பிதா மஹேஸ்வரரை அடைந்து, ப்ராம்மண முகமாகத் தங்கள் பிதாமஹருக்கு ச்ராத்த ரூபமான த்ருப்தியைக் கொடுக்கிறுர்களோ, அவர்கள் என் பக்கத்தில் இருப்பவர்கள் அந்த பிதாமஹருடைய ஜனங்களே.*

*66. இந்த எனது லோகம் தானத்தினுலேயும், ஸ்நானத்தினுலேயேயும், ஜபத்தினுலேயும், பூஜையினுலேயும் அடைய முடியும்; கேவலம் பிராம்மணனை ஸந்தோஷப் படுத்தினுலேயே போதும்.*

*67. எவர்கள் குடித்தன ஸாமான்களுடன் ஒரு க்ருஹத்தைத் தானம் செய்தனரோ, இங்கு எனது உலகத்தில் காணப்படும் மாளிகையெல்லாம் அவர்களுடையதே;*

*68. பள்ளிக்கூடம் கட்டுபவர்களும், வேதம் சொல்லிக் கொடுப்பவர்களும், வித்யாதானம்*

*செய்பவர்களும், புராணம் படித்துக் கூறுபவர்களும்*

*69. புராணக்ரந்தத்தைத் தானம் செய்பவர்களும், தர்மசாஸ்திரங்களை தானம் செய்பவரும் மற்ற புஸ்தகங்களை தானம் செய்கிறவர்களும், எனது லோகத்தில் வஸிக்கிறார்கள்.*

*70. ப்ராம்மணர்களுக்கு யக்ஞத்திற்காகவும், விவாஹத்திற்காகவும், வ்ரதங்களுக்காகவும் பூர்ணமான செலவுகளுக்குப் பணம் கொடுக்கிறார்களோ - அவர்கள் இங்கு அக்னிபோல் ஜ்வலித்துக் கொண்டு வஸிக்கிறார்கள்.*

*71. யார் வைத்தியத் தொழிலை மேற்கொண்டு ஆஸ்பத்திரிகட்டி தானம் செய்கிறார்களோ, அவர்கள் பூர்ண போகம் அனுபவித்து கல்பகாலம் என் கூடவே வஸிக்கிறார்கள்.*

*72. எவர்கள் முதலை முதலான கெட்ட தடங்கல்களிலிந்து தீர்த்தங்களை விலக்குகிறார்களோ, அவர்கள் எனது அந்தப்புறத்தில் எனது சொந்தபிள்ளைகள் போல் வஸிக்கிறார்கள்.*

*73. ப்ராம்மணர்கள் எனக்கும், விஷ்ணுவிற்கும், சிவனுக்கும் ப்ரியமானவர்கள். அவர்கள் உருவிலேயே பூமியில் நாங்கள் ஸஞ்சரிக்கிறோம்.*

*74. ப்ராம்மணனும், பசுவும் ஒரு குலம். இரண்டாகப் பகிர்ந்திருக்கிறது. ப்ராம்மணனிடம் மந்திரம் இருக்கிறது. பசுவிடம் யக்ஞத்துக்கு இன்றியமையாத நெய் இருக்கிறது. ஒரே குலத்தின் இரண்டு பிள்ளைகள் ப்ராம்மணனும் பசுவும்.*

*75. ப்ராம்மணர்களே ஸார்வ பௌம ஜங்கம தீர்த்த ரூபிகள் ஆக இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்களுடைய ஸம்பாஷணையாகிய ஜலத்தில் பாமரர்கள் முழுகி சுத்தமாகிறார்கள்.*

*76. பசுக்கள் பரம பவித்ரமானவை, பசுக்களைப் போல பரம மங்களத்தைக் கொடுக்கும் பிராணி வேறில்லை.*

*அவைகளினுடைய குளம்புகள் எழுப்பும் தூளி கங்க ஜாலத்தைப் போல் பவித்ரமானது.*

*77. அவைகளுடைய கொம்புகளில் எல்லாத் தீர்த்தங்களும், குளம்புகளுடைய முன் பாகத்தில் ஸமஸ்த பர்வதங்களும் இருக்கின்றன. இரண்டு கொம்புகளுக்கு மத்தியில் மஹேஸ்வரி கௌரிதேவி வாஸம் செய்கிருள்.*

*78. பசுக்களை தானம் கொடுக்கும் ஸமயத்தில் ஒருவனுடைய பித்ருக்கள் ஸந்தோஷத்தால் தாண்டவ மாடுகிறுர்கள். ரிஷிகள் ஸந்தோஷமடைகிறுர்கள். எல்லாத் தேவதைகளுடன் கூட நாமும் ஸந்தோஷம் அடைகிறேம்.*

*79. ஆனுல் தரித்ரமும் வ்யாதியும் பிடித்த பாப கணங்கள் அழத் தொடங்குகிறுர்கள். எல்லா ஜனங்களேயும் ரக்ஷிக்கும் பசு தாய்க்கு ஸமானம்.*

*80. யார் பசுக்களைத் துதித்து நமஸ்கரித்து ப்ரதக்ஷினம் செய்கிறுர்களோ அவர்களுக்கு ஏழு தீவுகளுடன் கூடிய பூமி தேவியை ப்ரதக்ஷிணம் செய்த பலன் கிடைக்கிறது.*

*81. யார் எல்லாப் பிராணிகளுக்கும் லக்ஷ்மியோ, யாரை தேவதைக்கு ஸமமாக எண்ணுகிறேமோ, அந்தப் பசு ரூபமான தேவி என்னுடைய பாபங்களை விலக்கட்டும்.*

*82. எந்த லக்ஷ்மி விஷ்ணுவின் மார்பில் அமர்ந்திருக்கிறாளோ, யார் அக்னி தேவனுக்கு ஸ்வாஹாவோ, யார் பித்ரு தேவனுக்கு ஸ்வதாவோ, அந்தக் காமதேனு தேவி எனக்கு வரமளிக்கட்டும்*

*83. அவளுடைய சரணம் யமுனைக்கு ஸமம், சிறுநீர் நர்மதைக்கு ஸமம். அவளுடைய பால் கங்கையேதான். இவைகளை விடப் பவித்ரமான வஸ்து எங்கேயிருக்கிறது?*

*84. எந்தக் காரணத்தினுல் பசுவின் அங்கங்களில் பதினுலு புவனமும் வஸிக்கின்றனவோ, அதனுல் இந்த லோகமும் பரலோகமும் எனக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.*

*85. எவன் மேற்கூறிய மந்திரங்களைக் கூறிக்கொண்டு அநேகம் பசுக்களை அல்லது ஒரு பசுவையாவது உத்தம ப்ராம்மணனுக்கு தானம் செய்தானுனல் அவன் எல்லா ஜனங்களையும் விட வெகுமானிக்கத்தகுந்தவனுகக் கருதப்படுகிருன்.*

*86. நாம் விஷ்ணு, சிவன் மூவரும் மஹர்ஷிகளுடன் கூடப் பசுக்களின் குணங்களை வர்ணிக்கும் இந்தப் பிரார்த்தனையை தினமும் சொல்கிரேம்.*

*87. பசுக்கள் எனது முன்னுல் இருக்கட்டும், பசுக்கள் எனது பின்னுல் இருக்கட்டும், பசுக்கள் எனது ஹ்ருதயத்தில் இருக்கட்டும், நான் பசுக்களின் மத்தியில் இருப்பேனுகவும்.*

*88. எந்த பாக்யவான் பசுவின் வாலினுல் தன் சரீரத்தைத் தடவிக் கொடுக்கிருனே, அவனிடமிருந்து, தரித்ரம், கலஹம், ரோகம் ஆகியவை தூர விலகி விடுகின்றன.*

*89. பசு, ப்ராம்மணன், வேதம், கற்புடைய மங்கை, உண்மை பேசுபவன், லோபம் இல்லாதவன், தானசீலன் இந்த ஏழு பேருடைய நம்பிக்கையினுல்தான் பூமிதேவி ஸ்திரமாக இருக்கிருள்.*

*90. என்னுடைய இந்த லோகத்துக்கு மேலே வைகுண்டம் இருக்கிறது. அதற்கு மேலே குமார லோகம் இருக்கிறது; அதற்கு மேலே உமா லோகம்;*

*91. அதற்கு மேலேதான் சிவலோகம்; அதற்குப் பக்கத்திலேயே பூலோகம் இருக்கிறது. அங்கு ஸுஶீலா ஆகிய கோமாதாக்கள் இருக்கிருர்கள். அவர்கள் மஹாதேவனுக்கு மிகவும் பிரியமானவர்கள்.*

*92. பசுக்களுக்கு ஸேவை செய்பரும், பசுக்களை ரக்ஷிப்பவரும், இந்த லோகங்களின் மத்தியில் ஏதாவது ஒரு லோகத்தில் பரிபூர்ண நிறைவுடன் வஸிக்கிருர்கள்.*

*93.* அங்கு பாலே நதியாக இருக்கிறது. பாலினுல் செய்த பாயஸமே சகதியாக இருக்கிறது. அங்கு ஒருவரையும் வயோதிகத்தன்மை வருத்துவதில்லே. கோதானம் செய்பவர்கள் அங்கு வஸிக்கிருர்கள்.

*94.* ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராணம் இவைகளில் தேர்ந்துள்ளவர்கள், அதையனுசரித்து நடப்பவர்களே, உண்மையான ப்ராம்மணர்கள். மற்றவர்கள் பெயருக்கே ப்ராம்மணர்கள்.

*95.* வேதமும் தர்ம சாத்திரங்களும் இரண்டு கண்கள். புராணம் இதயம் என்று கூறப்படுகிறது. அதனுல் எந்த ப்ராம்மணன் ஶ்ருதி, ஸ்ம்ருதி இரண்டும் படிக்காமல் ஹீனனுக இருக்கிருனே, அவன் குருடன். அதில் ஒன்று படித்தவனுனுலும் ஒரு கண் குருடன்.

*96.* ஸ்ருதியும், ஸ்ம்ருதியும் எதைக் கூறுகிறது, அந்த தர்மத்தையே புராணம் விரிவாகக் கூறுகிறது. புராணம் படியாத இதய ஹீனனுனவன் கண் இருந்தும் குருடனேயாவான்; ஆனுல் அவன் இந்தக் கண் தெரியாதவர்களேவிட மோசமானவன். ஏன் என்றுல் ஸ்ருதி; ஸ்ம்ருதி இரண்டும் கூறும் விஷயங்களேயே புராணம் கூறுகிறது.

*97.* அதனுல் என்றும் எங்கும் ஸுகம் விரும்பும் ஒருவன் ஸ்ருதி, ஸ்ம்ருதி புராணம் அறிந்த ஒருவனுக்கே கோதானம் செய்ய வேண்டும்; பெயர் மாத்திரம் ப்ராம்மணன் என்று இருப்பவனுக்கு தானம் கொடுக்கக்கூடாது. அப்படிச் செய்தால் கொடுத்தவனும் அதோகதியடைகிருன்.

*98.* யார் தர்மத்தை அறிய விரும்புகிருர்களோ, எவனுக்குப் பாபத்தில் பயமிருக்கிறதோ, அவன் எல்லா தர்மங்களுக்கும் வேரான புராணத்தை அவச்யம் கேட்க வேண்டும்.

*99. பதினான்கு வித்தைகளிலும் தீபம் போன்றது புராணம்; அந்தத் தீபப்ரகாசத்தினால் குருடன்கூட ஸம்ஸார ரூபமான ஸமுத்ரத்திலிருந்து கரையேறுகிறான்.*

*100. எவர்கள் எனது லோகத்தை அடைய விரும்புகிறார்களோ, அவர்கள் புராண ஶ்ரவணம், கங்கைக்கரைவாஸம், ப்ராம்மணர்களை ஸந்தோஷப்படுத்துதல், இவைகளை அவசியம் செய்ய வேண்டும்.*

*1. ஹே தேவதைகளே ! ஏதோ ஒரு வாய்ப்பாக ஸத்ய லோகத்தின் நிலைமையை உங்களுக்கு எடுத்துக் கூறினேன். இது பயத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்கு ஒரு நிர்பய ஸ்தானம், நீங்கள் கொஞ்சம்கூட பயப்பட வேண்டாம்.*

*2. விந்த்யபர்வதம் ஸுமேருவுடன் போட்டி போட்டுக்கொண்டு ஸூர்ய பகவானை மறைத்துக் கொண்டிருக்கிறது. அந்த விஷயமாகவே நீங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள். இதற்கு நான் ஒரு உபாயம் கூறுகிறேன்.*

*3. ப்ரம்மா கூறுகிறார்:- எங்கு விஸ்வேஸ்வரர் தாரக மந்திரத்தை உபதேசம் செய்வதற்குத் தானே தயாராக உட்கார்ந்து கொண்டிருக்கிறாரோ, எல்லாருடைய முக்திக்கு ஒரே காரணமான அந்த அவிமுக்த க்ஷேத்ரத்தில் மித்ரா வருணருடைய புத்ரன் பரமதபஸ்வி அகஸ்தியமுனி விசுவேஸ்வரர் மேல் சித்தத்தை வைத்துக் கொண்டு கோரமான தபஸ் செய்து கொண்டு இருக்கிறார்.*

*4. அங்கு சென்று அவரைப் ப்ரார்த்தியுங்கள். அவரால்தான் உங்கள் காரியத்தை நிறைவேற்ற முடியும்.*

*5. ஒருமுறை வாதாபி, இல்வலன் எனும் இருஸஹோதரர்களையும் பூஜித்து எல்லா உலகங்களையும் காப்பாற்றி இருக்கிறார்.*

*6. அந்த இடத்தில் மித்ராவருணனின் புத்ரனான அகஸ்த்யமுனி மஹாநேஜஸ்ஸுடன் இருக்கிறார். அதனால் லோகத்தில் அகஸ்திய முனிவரிடம் பயம் இல்லாமல் எல்லாரும் நெருங்கலாம்.*

*7. இவ்விதம் கூறிவிட்டு ப்ரம்மா அங்கேயே மறைந்து விட்டார். அப்பொழுது அந்த தேவதைகள் ஸந்தோஷமடைந்து, ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள். ஆஹா நாம் தன்யராஞேம்.*

*8. பேச்சுவாக்கில் காசீ, காசீபதி மஹாதேவர், பார்வதி இவர்களுடைய தரிசனம் நமக்குக் கிடைக்கும். ஆஹா வெகு நாளைக்குப் பிறகு நமது மஞேரதம் பூர்த்தியாயிற்று. காசிக்குப் போவதற்காக எந்தக்கால்கள் கிளம்புகின்றனவோ அந்தக் கால்கள் தன்யமானவை, இன்று நான் ப்ரம்மாவிஞல் சொல்லப்பட்ட கதையைக் கேட்டோம்.*

*9. நாம் இப்பொழுது காசிக்குப் போகிரும். எப்பொழுது அதிகமாகப் புண்ணியம் சேருகிறதோ அப்பொழுது ஒரு கார்யத்தில் இரண்டு ப்ரயோஜனங்கள் ஏற்படுகின்றன.*

*10,11. இவ்விதமாக காசி யாத்திரைக்காகத் தீவிர ஸங்கல்பம் செய்து கொண்டு மலர்ந்த மலர்விழிகளுடன் சிரித்த முகத்துடன் பூர்வ புண்ணியத்திஞலே தேவர்கள் பரஸ்பரம் வார்த்தையாடிக் கொண்டு, காசிவந்து சேர்ந்தார்கள்.*

*12. வ்யாஸர் கூறுகிரார். இந்தப் பரம பவித்ரமான கதையை எந்த மனிதன் கேட்கிருஞே, அவன் இந்த லோகத்திலே எல்லா ஸுகங்களையும் அனுபவித்துத் தங்கள் வம்சாந்தர பந்து; ப்ரிய புத்ரனுடன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டுக் கடைசியில் வெகுகாலம் வரை ஸத்யலோகத்தில் வாஸம் செய்து அதன் பிறகு ஸாயுஜ்யபதவியை அடைகிருன்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் காசீகண்டத்தில் ஸத்யலோக வர்ணனம் என்ற*

*இரண்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 3

*1. ஸூதர் கூறுகிறுர்:- ஹே பகவான்! தாங்கள், இறந்த, நிகழ்காலங்களை அறிந்தவர். ஸமஸ்த ஞானிகளினுடைய கஜானு; தாங்கள் ஸாக்ஷாத் அச்சுதரூபமானவர். தேவர்கள் காசி சென்று என்ன செய்தார்கள்; கூறுவதைச் செய்ய வேண்டும். இந்த திவ்ய கதையைக் கேழ்ப்பதனுல் எனக்கு த்ருப்தியே ஏற்படவில்லை. தேவதைகள் தபோதநரான அகஸ்திய முனிவரிடம் எந்த விதமாக ப்ரார்த்தித்துக் கொண்டார்கள்.*

*2. பிறகு விந்த்யாசலம் தனது உயர்ந்த உருவத்தை எந்த விதமாகத் தன் இயற்கை உருவமாகத் தணித்துக் கொண்டது! எனது சித்தம் தங்களுடைய வசனும்ருத ஸாகரத்தில் எப்பொழுதும் ஸ்னுனம் செய்ய ஆவலாக இருக்கிறது.*

*3. பராசர புத்ரர் பகவான் வேதவ்யாஸர் இந்த விதமான எல்லா கேள்விகளுக்கும் தனது பரமசிஷ்யரான ஸூதமுனிவருக்குப் பதில் கூறத்தொடங்கினுர்.*

*4. ஹே அறிவாளியான ஸூதரே! நீர் பக்தி ஶ்ரத்தை நிரம்பியவராய், நான் சொல்லப் போவதைக் கேளும். ஸுதேவர், வைசம்பாயனர் ஆகிய எல்லாப் பிள்ளைகளும் கேட்டு வைக்கட்டும்.*

*5. அதன் பிறகு தேவதைகள் மஹர்ஷிகளுடன் காசிபுரிவந்து முதலில் வேகமாக மணிகாணிகையில்,*

*6. வஸ்திரத்துடன் விதிபூர்வமாகஸ்னுனம் செய்து பிறகு ஸந்த்யா முதலிய நித்யகர்மங்களை முடித்து, தர்ப்பை, சந்தநம், எள், ஜலம் இவைகளினுல் தேவ பித்ருக்குளுக்குத் தர்ப்பணம் செய்து*

*7,8. ரத்னம் தங்கம், வஸ்த்ரம், ஆபரணங்கள், குதிரைகள், பசுக்கள், தங்கம் வெள்ளியினுலான அநேகவிதமான பாத்திரங்கள், அம்ருதம் போன்ற, ருசியுள்ள பக்வான்னங்கள், கற்கண்டு கலந்த பால்*

கோவாவினுல் செய்த மிட்டாய்கள், பால் அன்னம்.

9. அநேகவிதமான தான்யங்கள், சந்தணம், வாஸனை த்ரவ்யங்கள், கற்பூரம், அழகான சாமரங்கள், விதவிதமான கட்டில்கள், தீபங்கள், கண்ணுடிகள் மெத்தைகளுடன் ஆஸனம், பல்லக்கு விமானங்கள், தாஸாதாஸிகள், பசுக்கள், வீடுகள்;

10. படங்கள், த்வஜங்கள், படங்கள், சந்திரன் மாதிரி அழகான மேல்கட்டில், க்ருஹஸ்தர்களுக்கு வேண்டிய சாமக்ரியைகளுடன் ஒரு வருஷத்துக்காக வேண்டிய உணவு பதார்த்தங்கள்.

11. காலணிகள், பாதுகைகள் முதலான ஸகல வஸ்துக்களின் தானத்தினுல் தீர்த்தவாஸிகளைத் தனியே ஸந்தோஷப்படுத்தி, ஸந்யாஸி தபஸ்விகளையும் கூட அவர்களுடைய தகுதிப்ரகாரம்

12,13. நானுவிதமான கம்பளங்கள், கம்புகள், கமண்டலம், மான்தோல், கௌபீனம், உயர்ந்தபீடம்; ஸேவகர்களின் சம்பளத்துக்கு வேண்டிய ஸ்வர்ணமுத்ரைகள்.

14. மடம்ப இவைகளும் மாணுக்கர்களுக்கு அன்னம், அதிதிகளுக்கு நிரம்பப்பணம், புத்தகக் குவியல்கள், எழுத்தாளர்களுடைய வாழ்க்கைக்குரியன; இது தவிர எத்தனையோ ஆஸ்பத்திரிகள்;

15. அநேக அன்னசாலைகள், வேனிற்காலத்துக்கு வேண்டிய- தண்ணீர் சாலைகளுக்கு வேண்டிய தனங்கள், குளிர்காலத்துக்கு வேண்டிய அடுப்புகள், விறகுகள், இவைகள் வாங்குவதற்கு பணங்கள்;

16. மழைக்காலத்துக்கு வேண்டிய சாவடிகள், குடைகள், மழை நனையாத போர்வைகள், ராத்திரி படிப்பதற்கு வேண்டிய தீபங்கள், கால் வைக்கும் முக்காலிகள் (ஸ்டூல்கள்) இவைகளைக் கொடுத்து ஸந்தோஷப்படுத்தி,

*17. ஒவ்வொரு தேவமந்திரங்களிலும் புராணம் படிக்கிறவர்களை அதிகதனத்தினுல் ஸந்தோஷப்படுத்தினுர்கள். தேவாலயங்களில் அநேக விதமான நாட்டியம் முதலியவைகளுக்குப் பணம்,*

*18. அநேகம் தேவஸ்தானங்களுக்குச் சுண்ணும்பு அடித்தல், அநேகக் கோவில்களுக்கு ஜீர்ணேத்தாரணம் செய்தல், முதலியவைகள் செய்தனர். அநேக இடங்களில் சித்திரங்கள் எழுதுவதற்குண்டான தொகையைக் கொடுத்தனர். வர்ணமாலைகளினுல் அலங்கரித்தனர்;*

*19. ஹாரத்தி, குக்குலு, முதலாகிய தஶாங்க தூபம், கற்பூரம், வத்தி, அநேகவிதமான தேவ பூஜைக்குள்ள ஸாமக்ரிகள்.*

*20. பஞ்சாம்ருதம், வாசனைத்ரவ்யங்கள், சேர்ந்த ஸ்ஞனத்துக்குணடான ஜலம்; தேவதைகளுக்கு முகர்வற்கான வாஸனை அத்தர்கள், பூஜைக்கு வேண்டிய புஷ்பத் தோட்டங்கள்.*

*21.மூன்றுகால பூஜைக்கு வேண்டிய மாலைகள் முதலியவை தொடுப்பதற்கான தானம், சிவாலயங்களுக்கு சங்கம், நகரா, ம்ருதங்கம், முதலியவாத்யக் கருவிகள்.*

*22. மணி, உடுக்கை முதலியவைகள், ஸ்ஞன ஜலம், கொண்டுவர பாத்திரங்கள், அபிஷேகமானதும் ஸ்வாமி துடைப்பதற்குண்டான வெள்ளை வஸ்த்ரம், யக்ஷகர்தமம் என்று சொல்லக்கூடிய கற்பூரம், கஸ்தூரி, அகர், கோரோஜனை இவைகளால் ஆன வாசனை த்ரவ்யம்.*

*23. ஜபம், ஹோமம், ஸ்த்தோத்ரம், உயர்ந்த குரலில் மஹாதேவ நாமோச்சாரணம் ருத்ர தாண்டவத்துடன் நடந்து ப்ரதக்ஷிணம்,*

*24. இந்த விதமாக அநேகப்ரகாரமான ந்ருத்யதாண்டவங்களுடன் ஐந்து இரவுகள் வசித்து, அநேகப்பிரகாரமான தீர்த்தயாத்திரையை முடித்தார்கள்.*

*25. இதன் பிறகு விஸ்வநாதரை நமஸ்கரித்து விட்டு. தீனர்களுக்கும் அநாதைகளுக்கும் தானங்கள் செய்து விதிப்படிக்கு ப்ரம்மச்சர்யம் அனுஷ்டித்து, அடிக்கடி*

*26. விஸ்வேஸ்வரரைத் தரிசனம் செய்தும் ஸ்தோத்ரம் செய்தும், நமஸ்கரித்தும் ஜனங்களின பரோபகாரத்திற்காக அகஸ்திய முனிவர் வஸிக்குமிடத்திற்குச் சென்றூர்கள். அங்கு அகஸ்திய முனி தன் பெயருக்கேற்ப சிறிய லிங்கம் ஒன்றை ஸ்தாபித்து, அதற்கு முன்னுல் தன்பெயரால் ஒரு குண்டம் ஏற்படுத்தி, த்ருட சித்தத்துடன் சதருத்ர ஸூக்தத்தை ஜபித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.*

*27, 28. தேவதைகள் தூரத்திலிருந்து இரண்டாவது சூரியனைப்போலவும் ஜ்வலிக்கும் அக்னியைப் போலவும், அங்கங்களில் காந்தியுடன் கூடிய அகஸ்தியரைக் கண்டு யோசிக்கத் தொடங்கினுர்கள்.*

*29. என்ன! இவர் வடவானலே மூர்த்திகரித்து வந்தமாதிரி மரத்தின் அடித்தடிபோல் ஸத்துக்களுடைய நிர்மலமான மனம் போல் ஸ்திரமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறூரா?*

*30. அல்லது எல்லாப் ப்ரகாசங்களும் இந்தப் ப்ராம்மண சரீரத்தை ஆச்ரயித்து, மோக்ஷத்தை அடையும் பொருட்டு பரம சாந்தமான ப்ரம்மத்தைத் தியானம் செய்து கொண்டிருக்கிறூரா?*

*31. இவருடைய தபஸ்ஸினுடைய தேஜஸ்ஸினுல் சூரியனே ஸந்தாபம் அடைவானே, அக்னிதேவனே தஹிக்கப் படுகிறுனே, மின்னலே தன்னுடைய சபலத் தன்மையை விட்டு விட்டு சாந்தியாக இருக்கிறதோ!*

*32. இங்கு இவருடைய ஆச்ரமத்தின் நான்கு பக்கமும் துஷ்ட ஜந்துக்களும், தங்கள் ஸ்பாவத்தை விட்டுவிட்டு ஸத்வ குணத்தோடு ஸஞ்சரிக்கின்றனவே;*

*33. அங்கு பாருங்கள்! யானே பயமில்லாமல் தன்னுடைய துதிக்கையால் சிங்கத்தைத் தடவிக்*

*கொடுக்கிறது; சிங்கமோ தன்னுடைய பிடரி மயிரைப் பரப்பிக் கொண்டு சரபத்தின் மடியில் உறங்குகின்றது;*

*34. ரோமங்கள் குத்திட்டு நிற்கும் காட்டுப் பன்றிகளும் மஹாபலம் பொருந்தியவையாயிருந்தும் கூட இளம் புற்களை முகர்ந்து கொண்டு காட்டு நாய்களுக்கு நடுவில் வளைய வருகின்றன.*

*35. அது பூமியைத் தோண்டும் ஸ்பாவம் உடையதாக இருந்தும் கூட இங்குள்ள பூமியை மற்ற இடங்களில் தோண்டுவது போல் தோண்டுவதில்லை. ஏனென்றால் காசிபூமிமுழுவதும் லிங்கமயமாகவே இருக்கின்றன.*

*36. அதனால் அது தடுத்தாற்போல் நிற்கின்றது. 'புலி' தந்துவா என்னும்விலங்கு, பன்றியின் குட்டிகளை மடியின் மேல் வைத்துப் பால் கொடுத்துக் கொண்டிருக்கிறது;*

*37. மான் குட்டிகள் புலிக்குட்டிகளை தாயினிடமிருந்து நீக்கிவிட்டுப் புலியினிடம் வாலை ஆட்டி ஆட்டிக் கொண்டு தங்கள் நுரைவழியும் முகத்தால் பால் குடிக்கின்றன.*

*38. வானரங்கள் அடர்ந்த மயிரையுடைய கரடிகள் தூங்கும் பொழுது மயிர்களைத் தங்கள் கைகளால் புரட்டி, புரட்டிப் பேன்களைப் பார்த்து, பார்த்து தங்கள் முன்பற்கலால் கடித்து எடுக்கின்றன. இந்த எல்லா சிகப்பு முகமுள்ள குரங்குகளும் பெரிய பெரிய வாலுள்ள கறுப்புக் குரங்குகளும்-*

*39. தங்கள் தங்கள் ஜாதிக்குண்டான சுபாவமான பொறாமையை விட்டுவிட்டு ஒரேயிடத்தில் விளையாடிக் கொண்டிருக்கின்றன. சிறு சிறு முயல்கள் ஓநாய்களுடைய முதுகில் அடிக்கடி ஏறி விளையாடுகின்றன.*

*40. எலிகள்கூட முகத்தை ஆட்டி ஆட்டிக்கொண்டு பூனையின் காதுகளைச் சொறிந்து கொடுக்கின்றன. பூனையும் மயிலின் இறகில் ஸுகமாகப்படுத்து, நித்திரை செய்கின்றது.*

*41. அந்தப் பாம்பு மயிலின் கழுத்தில் உரசிக் கொண்டிருக்கிறது? கீரியும் தன் ஸ்பாவமான விரோதத்தை மறந்துவிட்டு, படமெடுத்த பாம்பின் தலைமேல் குதித்துக் குதித்து விளையாடுகின்றது. ஸர்பமும் பசியினால் துடித்துக் கொண்டிருந்தாலும் முகத்துக்கு முன்னால் ஓடிக்கொண்டிருக்கும் எலிகளைப் பிடிப்பதில்லை; எலிகளும் அதைக் கண்டு பயப்படுவதில்லை. குட்டிபோட்ட மானைப் பார்த்துவிட்டுப் புலி தயையுடன் விலகிச் செல்கிறது. ஆஹா! புலி தன்னுடைய நடத்தையையும், மான் தன்னுடைய சேஷ்டையையும் மறந்துவிட்டு ஒன்றுக்கொன்று அளவளாவுகின்றன.*

*42.45. கோணல் புத்தியுடைய கவரி மானுடைய கவரியுடன் கூடப் பெரிய வில்லைக் கொண்டுவரும் வேடனைப் பார்த்துவிட்டு வழியிலிருந்து நகருவதில்லை.*

*46. நோய் கொண்ட மானும் கவலையில்லாமல் காட்டு எருமையுடன் மோதுகிறது.*

*46. மான்கள் கவரிமானுடைய கவரியுடன்கூடத் தங்கள் வால்களை வைத்து அழகு பார்க்கிறது.*

*47. பார், மானும் புலியும் தங்களுடைய பொறுமையை மறந்துவிட்டு, முனிராஜருடைய தேஜஸ்ஸுக்குக் கட்டுப்பட்டு அவருக்கு முன்னால் படுத்துக் கொண்டிருக்கின்றன.*

*48. நரியும் மான்குட்டிகளைத் தடவிக் கொடுக்கின்றன.*

*49. மாம்ஸ போஜனம் இழிவு. அது இஹலோகத்தையும், பரலோகத்தையும் கெடுக்கிறது. எல்லா ஆபத்துகளுக்கும் அதுவே காரணம். இப்படி எண்ணி மாம்ஸ பக்ஷிணி புலி முதலியவைகள் மாம்ஸத்தை விட்டுவிட்டுப் புற்களை மேய்கின்றன.*

*50. யார் பாபத்தின் மோஹத்தால் மாம்ஸம் சாப்பிடுகிறானோ: அவன் கொல்லப்பட்ட அந்த ம்ருகத்தின் உடலில் எத்தனை ரோமம் இருக்கிறதோ, அத்தனை காலம் நரகத்தில் உழலுகிறான்.*

*51. துர்புத்தியுள்ளவர்கள் பிறருடைய ப்ராணனால் தன்னுடைய ப்ராணனைப் போஷிக்க நினைக்கிறார்கள். அவர்கள் கல்பகாலம் நரகத்தில் உழன்று உழன்று திரும்பவும் தங்களால் கொல்லப்பட்ட ம்ருகங்களுக்கே இரையாகின்றனர்.*

*52. ப்ராணன் போவதாயிருந்தாலும் மாம்ஸ போஜனம் செய்யலாகாது; அப்படிச் சாப்பிட வேண்டும் என்று தோன்றினால் தனது மாம்ஸத்தையே சாப்பிடவேண்டும்.*

*53. மித்ரா வருணருடைய புத்திரர் அகஸ்த்யருடைய ஸங்கத்தினால் எல்லா ம்ருகங்களும் பிற ஹிம்ஸையில் பராமுகமாக இருக்கின்றன. பரஹிம்ஸையில் ஈடுபட்டிருக்கும் மனிதர்களைவிட அவைகள் மேலானதே.*

*54. கொக்குகள் கூடக் குண்டத்தில் கண் எதிரில் விளையாடும் மீன்களைப் பிடிப்பதில்லை. பெரிய பெரிய மீன்களும்கூடச் சிறிய சிறிய மீன்களைத் தின்பதில்லை.*

*55. ஒரு தராசில் ஒரு தட்டில் எல்லா ம்ருகங்களுடையவும் மாம்ஸம். மற்றொரு தட்டில் மீன் என்றால் - மீன் மீன் சாப்பிடுவதால்தான் அத்தனை தோஷங்களும்; இந்த சாஸ்திரம் கொக்குகளுக்குக் கூட தெரிந்திருக்கிறது போலும்! அதனால் அவைகள் மீன் பிடிப்பதை விட்டு விட்டன.*

*56. இந்தக் கழுகு முதலிய பக்ஷிகளும் சிறு குருவி முதலிய பக்ஷிகளைப் பிடிப்பதில்லை. ஆனால் பெரிய ஆச்சர்யம் என்னவென்றால் இழிவான எண்ணம் உள்ள வண்டுகளும் இங்கு பறக்கின்றன.*

*57. எவர்கள் மது அருந்துவதில் பழக்கம் உள்ளவர்களோ, அவர்கள் அநேகம் நாட்கள் நரக போகம் அனுபவித்து விட்டு வண்டுகளாகப் பிறக்கிறார்கள்.*

*58.அதனால் எல்லாப் புராணங்களிலும் மாம்ஸ போஜனம் எங்கே, சிவ பக்தி எங்கே! என்னும் பழமொழி*

*அடிக்கடி கூறப்படுகிறது. மஹா தேவர் மத்யபானம் செய்பவர்களிடமிருந்து தூர விலகியிருக்கிறுர்.*

*59. மஹாதேவருடைய அருள் இல்லாமல பிராந்தி ஒருநாளும் ஒழியாது.*

*60. அதனுலேயே இந்த வண்டுகள் மகா தேவருடைய தத்வ ஞானம் அறியாமலேயே இங்கு பறந்து திரிகின்றன.*

*61. இந்த ப்ராந்தியினுல் ஆச்ரமவாஸி பசு, பக்ஷிகளே முனிவருக்கு ஸமமாக இருப்பதை பார்த்து விட்டு இது இந்த க்ஷேத்ரத்தின் மஹிமை என்று கண்டுகொண்டார்கள்.*

*62. இங்கு வஸிக்கும் பசு, பக்ஷிகளுக்குக்கூட மஹாதேவர் மரண ஸமயத்தில் தாரக மந்திரத்தை உபதேசிக்கிறுர்.*

*63. எவர்கள் க்ஷேத்திரத்தின் மஹிமையை அடைந்து த்ருடஸங்கல்பத்துடன் இங்கு வாஸம் செய்கிறுர்களோ அவர்களே உயிருடன் இருக்கும்போதே கடைத்தேற்றுகிறுர் என்றுல் மரண ஸமயத்தைப் பற்றி என்ன சொல்ல?*

*64. ஞானி ஜனங்கள் இந்த க்ஷேத்ர ரஹஸ்யத்தை அறிந்து எப்படி முக்தியையடைகிறுர்களோ அதுபோல் பசு, பக்ஷி, ம்ருகங்களும் காசி மாகாத்ம்யத்தை அறியாமலேயே இங்கு சரீரத்தை விடுவதனுல் முக்தியடைகின்றன.*

*65. தேவதைகள் இந்தவிதமாக ஆச்சர்யமடைந்து முனிவருடைய ஆச்ரமத்தின் அருகில் வரும்போது பின்னும் அதி ஆச்சர்யமடைந்தார்கள்.*

*66. ஏன் என்றுல் ஸாரஸப் பறவைகள் ஸாரஸியின் கழுத்துடன் தன் கழுத்தை வளைத்துக் கொண்டு மெய்மறந்து அசைவற்றிருப்பதைப் பார்த்தார்கள் - அவைகள் தூங்காமல் விஸ்வநாதருடைய த்யானத்தில் அமர்ந்திருக்கின்றனவோ என்று நினைத்தார்கள். அவர்களுக்கு அப்படித் தோன்றியது.*

*67. அன்னபக்ஷிகள் காமம் மிகுந்து கோபத்திலுல் சிறகை அடித்துக் கொள்ளும் ஆண் அன்னத்தை - தங்களது*

சிறகினுல் கோதிக் கோதிக் கொடுத்துக் கொண்டு அவைகளை சாந்தமாக்குகின்றன.

68. சக்ரவாக பக்ஷிகள் ஒன்றையொன்று தழுவி முடித்தபின் தங்களுடைய பாஷையில் இங்கு வந்தும் காமபுத்தி போகவில்லையே என்று பரிஹஸித்துக் கொள்ளுகின்றன.

69. குஞ்சவனத்தில் இருக்கும் குயில்கள் மனோஹரமாகக் கூவுகின்றன. ஆனுல் ஆண் குயில்கள் இந்த இனிமையான சப்தத்தினுல் முனிவருக்கு த்யானம் கெட்டுவிடும் என்று கூறுகின்றன.

70. மயிலும் முனிவரின் த்யானம் கெட்டுவிடும் என்று கூவுவதில்லை. சகோரங்கள் நிலவை அருந்திக் கொண்டு வ்ரதமிருப்பது போல் இருக்கின்றன.

71. மைனுவும் இந்த ஸாரம் மிருந்த வசனத்தினுல் கிளிக்கு கூவுகிறது. எந்த ஸம்ஸார ஸாகரத்துக்குக் கங்கு கரையில்லையோ, அதைச் சரிவரக் காட்டுவது.

72. மஹாதேவர் ஒருவரே - என்று; மாடப்புறு தங்களுடைய சப்தத்தால் கூறுகிறது. கலியும் காலனும் காசிவாஸிகளை ஒன்றும் செய்ய முடியாது என்று கூறுவதுபோல இருக்கிறது

73. தேவதைகள் பசு, பக்ஷி இவைகளுடைய சேஷ்டைகளைப் பார்த்துவிட்டு ஸமயம் இல்லாத ஸமயத்தில் ஸ்வர்க்க போகத்திலிருந்து நழுவும் கஷ்டங்களை நினைத்து மிகவும் நிந்தித்தார்கள்.

74. ஏனென்றல் தேவதைகளைவிட இந்தக் காரிய காசிவாஸிகளான பசு, பக்ஷி, ம்ருகங்கள் மனிதர்கள் இவர்கள் மிகவும் மேலானவர்கள். ஏனென்றல் இவர்களுக்குப் புனர் ஜன்மம் கிடையாதே; ஆனுல் தேவதைகளுக்கு புனர் ஜன்ம கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது.

*75. நாம் ஸ்வர்க வாஸிகள்தாம். ஆனால் காசி வாஸிகளான பதிதர்களுக்கு ஸமானமாகக்கூட ஆகமாட்டோம். ஏனென்றால் காசியிலிருந்து வழுக்கிவிழும் பயம் கிடையாது. ஆனால் ஸ்வர்க்கத்திலிருந்து எப்பொழுது விழுந்து விடுவோமோ என்று பயம் எப்பவும் இருந்துகொண்டேயிருக்கிறது.*

*76. வேறு இடங்களில் ஆடம்பரமான ராஜஸுக போகங்களை ஒரு குடைநிழலின் கீழ் அனுபவிப்பதைவிட இடையூறில்லாமல் காசியில் ஒருமாதம் வரையிலும் கூட பட்டினி கிடந்துகொண்டு இருந்தாலும் உத்தமம்.*

*77. காசியில் கேவலம் சிறு முயல் என்ன கொசுவுக்குக்கூட அனாயாஸமாக பரமபதம் கிடைக்கிறது.*

*78. காசி வாஸியான தரித்திரன் கூட நம்மைவிட எவ்வளவோ மேல்; ஏனென்றால் யமராஜனுக்குகூட பயப்படுவதில்லை.*

*79. ஆனால் நாமோ முக்காலத்தை வென்றவர்கள் என்று பெயர் இருந்தும்கூட கேவலம் ஒரு பர்வதத்தின் காரணமாக துக்கத்தை அனுபவிக்கிறோம்; ப்ரம்மாவின் ஒரு பகலில் லோக பாலர்கள், ஸூர்யன், சந்திரன், க்ரஹ நக்ஷத்ரங்கள்கூட இந்த்ர பதவியும் அழிந்து விடுகிறது.*

*80. ஆனால் ப்ரம்மாவின் ஆயுள் நூறு வருஷங்கள் கழிந்த பிறகுகூடக் காசி வாசிகள் நாசமடைய மாட்டார்கள். ஆனால் எந்தவித ப்ரயத்நத்தினாலாவது கடும் முயற்சி செய்து காசியில் உத்தம கர்மங்கள் செய்து கொண்டு வஸிக்க வேண்டும்.*

*81. காசி வாசம் செய்வதில் என்ன ஸுகம் ஏற்படுகிறதோ அது ஸமஸ்த ப்ரம்மாண்டங்களில் எங்கும் கூடக்கிடையாது. அப்படியிருந்ததால் காசி வாசம் என்று ஜனங்கள் அடித்துக் கொள்கிறார்களே.*

*82. ஆயிரக் கணக்கான ஜன்மங்களில் செய்த புண்யத்தின் பலனாக ஒருவனுக்கு இந்தக் காசி வாசம் கிடைக்கிறது.*

*83. ஆனால் ஒன்று காசியில் வசித்தாலும்கூட பகவான் த்ரிலோசனர் ஸந்தோஷமடையாவிட்டால் ஸித்தி கிடையாது. அதனால் எல்லாதேவர்களும் எப்பொழுதும் சரணமடையும் சரணாகத வத்ஸலர் ஸ்ரீ விஸ்வேஸ்வரருடைய பாதங்களில் எப்பொழுதும் சரணமடையுங்கள்.*

*84. தர்மார்த்த, காம மோக்ஷ இந்நான்கு புருஷார்த்தங்களும் பூர்ணமாகக் காசியில் எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவு வேறு எங்கும் இல்லை.*

*85. சோம்பலாக இருந்தும்கூட எவனொருவன் வீட்டிலிருந்து விசுவநாதர் கோவில் வரைக்கும் போகிறானோ, அவனுடைய ஒவ்வொரு அடிவைப்புக்கும் அச்வமேத யாகம் செய்வதைவிட அதிக பலன் கிடைக்கிறது.*

*86. உத்தரவாஹினியான கங்கையில் ஸ்னானம் செய்து எவன் விஸ்வநாதருடைய தரிசனத்துக்கு மிகவும் ச்ரத்தையாகப் போகிறானோ, அவனுடைய புண்யத்திற்கு அளவேயில்லை.*

*87. கங்கையின் தரிசனம், ஸ்பர்சம், ஸ்னானம் ஆசமனம், ஸந்தியோபாஸனை, ஜபம் தர்ப்பணம், பூஜை;*

*88. பஞ்ச தீர்த்தங்களின் தர்சனம், இவைகளை முடித்துக் கொண்டு பிறகு விச்வேஸ்வரரின் தர்சனம், சிரத்தையோடு ஸ்பரிசனம், பூஜை, தூபதீபம் இவைகளின் தானம், ப்ரதக்ஷிணம், ஸ்த்தோத்திரம், ஜபம், நமஸ்காரம், நர்தனம் பிறகு, தேவதேவ மஹாதேவசம் சம்போ சிவ, சிவ,*

*89,90,91. தூர்ஜடே! நீலகண்ட! ஈச, பீனாகி! சசிசேகர! த்ரிசூலபாணே! விஸ்வேஸர! ரக்ஷிக்க வேண்டும்; என்று புலம்பிக் கொண்டு; பிறகு முக்தி மண்டபத்தில் அரை நிமிஷமாவது உட்கார வேண்டும்; தர்மக் கதைகளைப் பற்றிக் கொஞ்சம் பேச வேண்டும்.*

*92. புராண ச்ரவணம்; நித்யகர்மானுஷ்டானம்; அதிதிபூஜை பரோபகாரம் இவைகளைச் செய்வதினால் மேலும் மேலும் தர்மம் வ்ருத்தியடையும்.*

*93. சுக்லபக்ஷத்தில் சந்த்ரன் ஒவ்வொரு கலையாக வ்ருத்தியடைவது போல் காசிவாசிகளின் தர்மராசியும் பதத்திற்குப் பதம் வ்ருத்தியடையும்.*

*94. தர்ம ரூபமான வ்ருக்ஷத்தை எல்லோரும் ஆச்ரயிக்க வேண்டும்; தர்ம வ்ருக்ஷத்தின் விதை ச்ரத்தை. அது ப்ராம்மணர்களின் சரணோதகத்தினால் வளருகிறது. அதன் சாகைகள், அதனுடைய- கிளைகள் பதினான்கு கலைகள் இதனுடைய புஷ்பம் ஞானவழியில் ஸம்பாதித்தவை; இந்த வ்ருக்ஷத்தின் உள்ளும், வெளியும் காமம் மோக்ஷம் இரண்டினுடைய பலன், காசி க்ஷேத்ரத்தில் நான்கு புருஷார்த் தங்களையும் வாரிவழங்கும் பவானி அன்னபூரணி இருக்கிறாள்.*

*95. எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றும் டுண்டிராஜர் கணபதி இருக்கிறார்; பகவான் விஸ்வநாதர் அந்திமக் காலத்தில் எல்லா ஜந்துக்களுடையவும் காதில் தாரக மந்த்ரத்தை உபதேசித்து பவபந்தனங்களிலிருந்து முக்தியளிக்கிறார்.*

*96. காசியில் தர்மம் நான்கு கால்களிலும் நிற்கிறது. அர்த்தமும் காசியில் அநேகவிதமாகக் கிடைக்கிறது; காமமோ காசியில் ஸமஸ்த ஸௌக்யஙகளையும் ஒருங்கே கொடுக்கும் ஆச்ரயமாக விளங்குகிறது. காசியில் அல்லாமல் சிறந்த பொருள் வேறெங்கே கிடைக்கிறது?*

*97. எங்கு, தர்ம, அர்த்த, காம மோக்ஷத்தையும் ஒருங்கே கொடுப்பதற்கு பகவான் விஸ்வேஸ்வரர் ப்ரத்யக்ஷமாக விளங்கும் போது அங்கு எல்லாம் கிடைக்குமென்பதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது; ஏனென்றால் அந்த விஸ்வநாதர் அகண்ட ஸச்சிதானந்த ஸாக்ஷாத் விஸ்வரூபர். அதனால் மூன்று உலகங்களிலும் காசிக்கு ஸமமான உலகம் கிடையாது.*

*98. இந்த விதமாக தேவதைகள் பேசிக் கொண்டு ஹோமதூப வாசனையால் வியாபித்துக் கொண்டு அநேக ப்ரும்மச்சாரிகளால் நிறைந்து இருக்கும் அகஸ்திய முனியின் பர்ணசாலையைப் பார்த்தார்கள்.*

*99. பிறகு ஹவிஷ்யான்னத்தைப் பெறுதற்காக வாயில் உபக்ரஹங்களைப் போல் இருக்கும் தர்ப்பைகளைக் கடித்துக் கொண்டு ரிஷிகன்னிகைகளுக்குப் பின்னால் திரியும் மான்குட்டிகளினால் அலங்காரமானதும்,*

*100. மரக்கிளையில் தொங்க விடப்பட்டிருக்கின்ற மரவுரி, கௌபீனம் இவைகள் விக்னரூபி மான்களை சிக்கவைப்பதற்காக நான்கு பக்கங்களிலும் வலைகளைப் போல சூழ்ந்து கொண்டிருப்பதும்*

*1. மேலும் பதிவ்ரதாசிரோமணி லோபாமுத்திரையினுடைய சரணரூபமான முத்திரையினால் முத்தரிக்கப்பட்ட பர்ணசாலையையுடைய உத்தமமான அங்கணத்தைப் பார்த்து நமஸ்கரித்தனர்.*

*2. ஸமாதியினின்றும் எழுந்திருநது ஜெபமாலையைக் காதில் சொருகிக் கொண்டு, யோகாசனத்திலமர்ந்து, ஸாக்ஷாத் ப்ரம்மாவைப் போல் இருக்கும் முனிவரர்.*

*3. அகஸ்த்யருடைய எதிரில் இந்த்ராதி தேவர்கள் ஸந்தோஷமடைந்து உயர்ந்த குரலில் 'ஜய ஜய;, என்று கோஷம் செய்தனர்,*

*4.அபிமானமும் ஸந்தோஷமும் கொண்ட யதிராஜர் அவர்களை உபசரித்து யதாஸ்தானத்திலமர்த்தி ஆசீர்வதித்து அவர்கள் அங்கு வந்த விபரத்தைப் பற்றிக் கேட்கத் தொடங்கினார்.*

*5. வியாஸர் கூறுகிறார்: பக்தி நிரம்பிய இந்தப் பரமகதையைக் கேட்பதனாலும், படிப்பதனாலும் பக்திமான்களுக்குப் படித்து சொல்வதினாலும் மனிதன் அக்ஞானத்திலோ, ஞானத்தினாலோ செய்த ஸமஸ்த*

*பாபங்களேயும் தூரவிலக்கி ஹம்ஸ ரூபமான விமானத்திலேறிக் கொண்டு நிச்சயமாக சிவபுரத்துக்குப் போகிருன்.*

*இது ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான, தேவர்கள் அகஸ்த்யரிடம் வருகை என்னும் மூன்ரும் அத்யாயம்*

*ஸம்பூர்ணம்*



## அத்யாயம் 4

*1. சூதர் கூறுகிறுர்: ஹே பகவன்! அகஸ்தியமுனி கேட்டவுடன் எல்லா ஜனங்களுக்கும் ஹிதத்துக்கு வேண்டி தேவதைகள் என்ன கூறிஞர்கள்? மஹா முநிவரரே, அதை விளக்கமாகக் கூறுங்கள் :- அப்பொழுது வேதவ்யாஸர் கூறுவார்; அப்பொழுது அகஸ்தியருடைய வார்த்தையைக் கேட்டு எல்லா தேவர்களும் மிக மர்யாதையுடன் ப்ருஹஸ்பதி பகவானுடைய முகத்தைப் பார்த்தார்கள்.*

*2. ப்ருஹஸ்பதி கூறுவார் : அகஸ்திய முநியே! தேவதைகள் வந்த விவரத்தைக் கேளுங்கள்: தாங்கள் தன்யர், க்ருதக்ருத்யர், வெகு ஜனங்களால் மதிக்கப்பட்டவர். எத்தனேயோ ஆச்ரமங்கள் இருக்கின்றன.*

*3. அவைகளில் எத்தனேயோ தபஸ்விகன் இருக்கிறுர்கள். ஆனுல் தங்களுடைய பஹுமானம் வேறேதான்.*

*4. தங்களிடம் தபோ பலமும், ப்ரம்ம தேஜஸ்ஸும் அமோகமாக இருக்கின்றது.*

*5. புண்ணிய லக்ஷ்மியும் ப்ரஸன்னமாகத் தீவிரமாக இருக்கிறுள். உதாரணமும், தாராள மனப்பான்மையும் குடிகொண்டிருக்கின்றன. யாருடைய கதையைக் கேட்பதினுல் உலகம் புண்ணியம் அடைகின்றதோ அந்த உம்முடைய ஸஹதர்மிணி உத்தமி, கல்யாணமயீ, பதிவ்ரதா லோபாமுத்திரை தங்கள் சரீரத்தின் நிழல் போல் தங்களுடன் இருக்கிறுள்.*

*6. அருந்ததி, ஸாவித்ரி, அனஸூயா, சாண்டில்யை, ஸதீ, லக்ஷ்மீ, சத ரூபை, மேனகை, நுநீதி, ஸம்க்ஞா, ஸ்வாஹா ஆகிய பதிவ்ரதைகளில் லோபாமுத்ரை உன்னதமாகக் கருதப்படுகிறுள்.*

*7. இவளேப்போல் மற்ருெருவள் இல்லே. இது நிச்சயம்.*

*8. முநிவரே! தாங்கள் உண்ட பின்தான் அவள் உண்கிறுள்; நீங்கள் அமர்ந்த பின் அவள் அமருகிறுள். தாங்கள் நித்திரை செய்தபின் அவள் தூங்குகிறுள். தாங்கள் எழு முன்பே எழுந்து விடுகிறுள்.*

*9.அலங்காரம் இல்லாமல் தங்கள் முன்ஞல் வருவதில்லை. ஏதாவது கார்யமாகத் தாங்கள் வெளியில் சென்றிருந்தால் அவள் ச்ருங்காரம் செய்து கொள்வதில்லை.*

*10.தங்களுடைய வயது வ்ருத்தியாக வேண்டுமென்பதற்காகத் தங்கள் பெயரைக் கூறுவதில்லை. வேறு புருஷர்களின் பெயரைக் கனவிலும் கூறுவதில்லை.*

*11.தாங்கள் கோபம் அடைந்து திட்டிஞலும் பதில் கூறுவதில்லை. அடித்தாலும் ஸந்தோஷமாகவே இருக்கிறுள். தாங்கள் ஒரு கார்யத்தைச் செய் என்று சொல்வதற்கு முன்ஞலேயே - ஸ்வாமி, அதை முடித்தாகி விட்டது என்கிறுள்.*

*12.தாங்கள் அழைத்தால் தன் கைக்கார்யத்தை உடனேயே போட்டு விட்டுத் தங்கள் முன்ஞல் ஆஜராகி விடுகிறுள். தாங்கள் அடிமையை எதற்கு அழைத்தீர்கள் ஆக்ஞையிட்டு அனுக்ரஹம் செய்யுங்கள் என்கிறுள்.*

*13.வெகு நேரம் வெளிவாசலில் நிற்பதில்லை. அமர்வதும் இல்லை. தாங்கள் கூருமல் ஒருவருக்கும் ஒன்றும் கொடுப்பதுமில்லை.*

*14.தாங்கள் கூறுவதற்கு முன்ஞலேயே பூஜை உபகரணங்கள் எல்லாம் ஜோடித்து வைத்து விடுகிறுள். ஜலம், குஶம், புஷ்பம் அக்ஷதை முதலானவைகளைத் தயாராக வைத்து இருக்கிறுள்.*

*15.பர்த்தாவின் உச்சிஷ்டத்தையே பரம ப்ரேமையுடன் புஜிக்கிறுள். எது எப்பொழுது அவசியமோ அதை அப்பொழுது பரம ஸந்தோஷத்துடன் ஜோடித்து விடுகிறுள்.*

*16.ஸ்வாமி கொடுத்த வஸ்துகளைப் பரமப்ரஸாதம் என்று ஏற்று மகிழ்கிருள்.*

*17.தேவதை, பித்ருக்கள், அதிதி, ஸேவகர்கள், பசு, பிச்சைக்காரர்கள் இவர்களுக்குக் கொடுக்காமல் தான் ஒருபொழுதும் உண்ண மாட்டாள்.*

*18.க்ருஹகாரியங்களுக்குண்டான ஸாமக்ரியைகளையும், நகைகளையும் வஸ்த்ரம் முதலானவைகளையும் மிகவும் ஜாக்ரதையாகவும் அழகாகவும், பாங்காகவும் வைத்துக் கொண்டிருக்கிருள். அதிகம் செலவு செய்யமாட்டாள், தங்கள் உத்தரவு இல்லாமல் வ்ரதம், உபவாஸம் முதலியவைகளை அனுஷ்டிக்க மாட்டாள்.*

*19.கூட்டம், திருநாள் திருவிழாக் கூட்டம் மேளா இவைகளையெல்லாம் பார்க்கப்போவதை எப்பொழுதோ த்யாகம் செய்து விட்டாள்.*

*20.தீர்த்தயாத்திரை கல்யாணங்கள் முதலியவைகளுக்குச் செல்வதில்லை. பதி ஸுகமாகத் தூங்கும்பொழுதும் உட்கார்ந்திருக்கும் பொழுதும் ஸ்வதந்திரமாக கேளிக்கைகளில் ஈடுப்பட்டிருக்கும் போதும் எத்தனை அவசியக் காரியமாளுலும் அவரை எழுப்ப மாட்டாள்.*

*21.ரஜஸ்வலையாளுல் தன் முகத்தையே நான்கு நாட்களும் வெளியில் காட்டமாட்டாள். எதுவரை ஸ்ஞனம் செய்து சுத்தமாகவில்லையோ அதுவரைப் பேசவும் மாட்டாள்*

*22.ருது ஸ்ஞனம் செய்து வந்தபிறகு தன் பர்த்தாவின் முகத்தையே முதலில் பார்ப்பாள். வேறொருவர் முகத்தைப் பார்ப்பதில்லை. பதி எங்காவது வெளியூர் சென்றிருந்தால் பதியின் முகத்தையே மனதில் த்யானித்துக்கொண்டு ஸூர்யனைத் தரிசனம் செய்வாள்.*

*23.பர்த்தாவின் தீர்க்க ஆயுளுக்காக அந்தப் பதிவ்ரதை மஞ்சள், குங்குமம் ஆந்தூரம், மை, ரவிக்கை, தாம்பூலம், உத்தம பூஷணங்கள் இவைகளைத் தரிப்பதுடன்,*

*24.தலை வாருதல், கொண்டையிடுதல், கை, காதுகளில் நகையணிதல் இவைகளை ஒருநாளும் விடுவதில்லை.*

*25.இந்த ஸதி, ரஜோகுணமுள்ளவர்கள், ஸத்கர்மாக்களுக்கு விரோதமாய் பேசுபவர்கள், நடப்பவர்கள், பாஷண்டி, துர்பாக்யவதி இவர்களுடன் ஸ்நேகமாக வைத்துக்கொள்ளமாட்டாள்.*

*26.பர்த்தாவிடம் வித்வேஷம் வைத்துக் கொண்டிருப்பவளிடம் பேசவும் மாட்டாள். வஸ்த்ரம் இல்லாமல் ஸ்னானம் செய்ய மாட்டாள்.*

*27.இவள் எப்பொழுதும் உரல், உலக்கை, அம்மி, பெறுக்கும் வாரியில் வாசற்படி இவைகள் மீது உட்காரமாட்டாள்.*

*28.ஸௌபாக்யத்தைத் தவிர வேறொன்றிலும் அடம் பிடிக்க மாட்டாள். கணவன் விரும்புவதேதான் அவளுக்கும் விருப்பும்,*

*29.பெண்களுக்கு இது ஒன்றே வ்ரதம். இதே பரமதர்மம்; இதே தேவபூஜை. கணவனின் பேச்சை உதாஸீனம் செய்யக் கூடாது,*

*30.பேடித்தனத்தை தூர விலக்க வேண்டும். பெரியவர்கள் இடையில் கேலி செய்வதோ சத்தம் போட்டுப் பேசவோகூடாது. பரிஹாசம் செய்யக் கூடாது.*

*31.கிழவன் நோயுற்றவன், அசடு, ஏழை, குருடன், செவிடு, கோபி, மிகவும் தீனமானவன் இப்படிப்பட்டவர்களை அவமதித்தால் நாரீ யமபுரம் செல்வாள். ஸ்வாமி ஸந்தோஷமாகயிருக்கும்போது தானும் ஸந்தோஷ ஸமாசாரம் சொல்ல வேண்டும்.*

வருத்தமாக இருக்கும்போது அவளும் வருத்தத்துடன் இருப்பாள். வஸ்திரம், ஸம்பத் விஷயத்தில் எப்போதும் ஒரே மாதிரியிருப்பாள்.

32.நெய், உப்பு, எண்ணை இவைகள் தீர்த்துவிட்டால் பதிவ்ரதையான நாரீ ஒருபொழுதும் இல்லையென்று சொல்லிப் பதியை ஆயாஸம் செய்யமாட்டாள்.

33.ஸ்த்ரீ தீர்த்தஸ்னானத்தை விரும்பினால் பதியின் கால்களை அலம்பி அந்த ஜலத்தைப்ரோக்ஷித்து, பருகவேண்டும், ஸ்த்ரீஜாதிகளுக்கு பகவான் மஹாதேவர், விஷ்ணுவைவிட தன் பதியே தெய்வம்.

34.பதியின் வார்த்தையை மீறி உபவாஸமோ வ்ரதமோ இருப்பான் பதியின் அபகரிக்கிறவளாவாள் கடைசியில் நாசத்தை அடைவாள்.

35.எந்தப் பெண் பதியின் கடுமையான வார்த்தைகளைக் கேட்டு அதற்குத் தானும் கோபமாக எதிர்த்துக் கூறினால் அவள் க்ராமத்து நாயாகவும் காட்டு நரியாகவும் பிறக்கிறாள். ஸ்த்ரீகளுக்கு பர்த்தாவே, தேவதை, குரு, தர்மம், தீர்த்தம் எல்லாம்.

36.பெண்களுக்கு எல்லாவற்றிலும் பெரிய நியமம் என்ன வென்றால் அவள் த்ருட ஸங்கல்பத்துடன் பதியின் ஸேவை செய்த பிறகே உண்ண வேண்டும்.

37. ஸ்த்ரீகள் உயர்ந்த ஆஸனங்களில் உட்காருவது, பிற வீடுகளுக்குப் போவது, அல்லது வெட்கம் அடையும் வசனங்களைக் கூறுவது ஸர்வதா அநுசிதம்.

38.ஒரு பொழுதும் யாரையும் அபவாதம் கூறக்கூடாது. கலகத்தை தூர இருந்தே விட்டுவிடுவது உசிதம். பெரியவர்கள் வயோதிகர்கள் முன்னிலையில், உயர்ந்த குரலில் பேசுவது உரக்கச் சிரிப்பது இவைகள் சரியல்ல.

39.துர்புத்தியினால் காமவசப்பட்ட பெண் தன் பதியை விட்டு விட்டுக் கெட்ட காரியத்தில் பிரவேசிகிறாள்.

இதனுல் அவள் மறு ஜன்மத்தில் மரப்பொந்தில் விளங்கும் ஆந்தையாகப் பிறக்கிருள்.

40.எந்த ஸ்த்ரீ தனது புருஷன் அடித்தாஞனுல் அவனைத் திரும்பவும் அடிக்க வேண்டும் என்று மனதில் நினைக்கிருளோ அவள் புலியாகவோ, காட்டுப் பூனையாகவோப் பிறக்கிருள். எவள் பரபுருஷனைக் கடைக் கண்ணில் வைத்தும் பார்க்கிருளோ, அவள் மாறு கண்களுடன் அவலக்ஷணமமாகப் பிறக்கிருள்.

41.எந்த நாரீ புருஷனை விட்டுவிட்டு ருசியான உணவை உண்கிருளோ அவள் கிராமப்பன்னியாகவோ, அல்லது தனது மலத்தைத் தானே தின்னும் வௌவாலாகப் பிறக்கிருள்.

42.எவள் தன் பர்த்தாவை நீ நான் என்று அலட்சியம் செய்கிருளோ அவள் ஊமையாகக் பிறக்கிருள். யார் தன் சக்களத்தியிடம் பொருமைப்படுகிருளோ, அவள் அடிக்கடி துர்பாக்யவதியாகிருள்.

43.எவள் பதியின் கண்களை ஏமாற்றிவிட்டு பரபுருஷனை நோக்குகிருளோ அவள் மறு ஜன்மாவில், அவலக்ஷணமுள்ளவளாயும் ஆகிருள்.

44.எவள் தன் பதி வெளியில் சென்று வந்தவுடன் ஜலம், ஆசனம், தாம்பூலம், விசிறி இவைகளால் சைத்யோபசாரம் செய்து, கால்களைப் பிடித்துவிட்டு வருத்தத்தைப் போக்கும் இனிமை வசனங்களைக் கூறுகிருளோ அவள் மூன்று லோகங்களையும் ஸந்தோஷப் படுத்துகிறவளாகிருள்.

45,46.பிதா, புத்ரன் இவர்களெல்லாம் ஒரு எல்லைவரை தான் ஸ்த்ரீகளுக்கு ஸுகம் தரமுடியும். அதனுல் அபரிமிதமான ஸுகங்களைத் தரும் பர்தாவையே எப்பொழுதும் பூஜை பண்ண வேண்டும்.

47.புருஷன் கெட்டகாலத்தையடைந்திருந்த போதும் நோய்வாய்பட்டவஞக இருந்தாலும் எப்படியிருந்தாலும்

ஸ்த்ரீ ஒரு பொழுதும் உல்லங்கனம் செய்யலாகாது. தரித்ரன் ஆனுலும் தீயவனுனுலும், அலட்சியம் செய்யக் கூடாது. ஸ்வாமி ஸந்தோஷமாக இருந்தால் இவளும் ஸந்தோஷத்தைப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். அவர் துக்கத்தில் பங்கு கொள்ள வேண்டும். ஸதி ரமணி ஸந்தோஷத்திலும் துக்கத்திலும் ஒன்று போலிருக்க வேண்டும்.

*48.ஜீவன் பிரிந்ததும் உடல் எப்படி அசுத்தமாகிறதோ அதுபோல் பர்த்தா இல்லாத ஸ்த்ரீ ஸ்நானம் செய்தாலும் அசுத்தமானவளே.*

*49.உலகத்தில் எல்லா அமங்களங்களையும் விடபூர்த்திகரித்த அமங்களம் விதவாஸ்த்ரீயே, ஒரு காரியம் ஆரம்பிக்குமுன் ஒரு விதவைஸ்த்ரீயைப் பார்த்தால் அந்தக் கார்யம் எங்கு நடந்தாலும் ஸித்தியாகாது.*

*50.பண்டிதர்கள் தனது தாய் அமங்களவதியானுலும் அவளை வணங்கலாமே தவிர வேறு எந்த விதவாஸ்த்ரீகளுடைய ஆசிர்வாதங்களையும் பாம்பைத் தவிர்ப்பது போல் தவிர்க்க வேண்டும்.*

*51.ப்ராம்மணர்கள் கன்னிகைகளுக்கு விவாஹம் செய்யும் பொழுது இந்த மந்திரத்தைத்தான் ஓதுகிருர்கள் அதாவது பதி உயிருடன் இருந்தாலும் இறந்தாலும் அவருக்கு ஸஹதர்மிணியாக இரு என்பது.*

*52.எவ்விதம் தேகத்தை நிழல் பின்பற்றுகிறதோ, சந்திரனை நிலவு தொடருகிறதோ மின்னல் மேகத்தில் எவ்விதம் இருக்கிறதோ அதுபோல் ஸதி எப்பொழுதும் பதியைப் பின்பற்ற வேண்டும்.*

*53.எந்தப் பெண் பதியுடன் ஸஹமரணம் செய்யும்பொருட்டு அதாவது ஸதியாக விரும்பி ஸந்தோஷமாக வீட்டிலிருந்து ஸ்மசானம் வரையில் பின்பற்றுகிருளோ அவளுடைய ஒவ்வொரு அடி வைப்பிலும் அசுவமேத யாகத்தின் பலன் கிடைக்கிறது.*

*54.எப்படிப் பாம்புபிடாரன் பலவந்தமாகப் பாம்பை வளையிலிருந்து வெளியில் இழுக்கிறானோ அதுபோல் ஸதி யமராஜருடைய தூதர்களிடம் இருந்து பிடுங்கி ப்ராணநாதனை ஸ்வர்க்கத்திற்கு இட்டுச் செல்கிறாள்.*

*55.யமகிங்கரஜனங்கள் ஸதியைப் பார்த்தவுடன் அந்தக் கணவன் கோரமான பாபம் செய்திருந்தாலும் விட்டுவிட்டு தூர விலகிவிடுவார்கள்.*

*56.நாங்கள் யமதூதர்கள் பதிவ்ரதாஸ்திரீகளைப் பார்த்து விட்டு எப்படி பயப்படுகிறோமோ அதுபோல் அக்னிக்கும், மின்னலுக்கு கூட பயப்பட மாட்டோம் என்று யமதூதர்கள் கூறுகிறார்கள்.*

*57.பதிவ்ரதையின் தேஜஸைக் கண்டுவிட்டு ஸூர்யனும் அக்னியும் கூடத் தவிக்கத் தொடங்குகிறார்கள். அவளுக்கு முன்னால் எந்த ப்ரகாசமும் நடுங்குகிறது.*

*58.பதிவ்ரதை தன் தேஹத்தில் எத்தனை ரோமங்கள் இருக்கின்றனவோ அத்தனை வருஷகாலம் (ஆயிரமகோடி) வர்ஷங்கள் வரைபதியுடன் ஸ்வர்க்கத்தில் ஸுகபோகம் அனுபவிக்கிறாள்.*

*59.எவ்வீட்டில் ஸதியிருக்கிறாளோ அவ்வீட்டு மாதா, பிதா,பதி எல்லாரும் தன்யர்கள்.*

*60.பிதாவின் வம்சத்திலும், மாதாவின் வம்சத்திலும் பூர்வ மூன்று மூன்று புருஷர்கள் ஸதியின் புண்ணிய பலத்ினால் ஸவர்க்க போகத்தையனுபவிக்கிறார்கள்.*

*61.கெட்ட குணத்தையும் நாரீ தன் மாதா, பிதா, பதி இம்மூவருடைய குலத்தையும் தனது தீய குணத்தினால் பதிதமாக்குகிறாள். அவளும் இஹ, பரலோகங்களில் துக்கமே அனுபவிக்கிறாள்.*

*62.பூமியில் எங்கெங்கு பதிவ்ரதையின் பதச் சின்னங்கள் படுகின்றனவோ அங்கங்கு பூமிமாதா தன்னைப் பவித்ரமாகவும் பாபரஹிதமாகவும் எண்ணுகிறாள்.*

*63.சூர்ய சந்திர வாயுக்கள் கூடப் பயந்து பயந்துத் தங்களை பவித்ரமாக்கிக் கொள்வதற்காக ஸ்பர்சிக்கிறார்கள். வேறு பிரயோஜனத்திற்காக வல்ல.*

*64.ஜலமும் எப்பொழுதும் பதிவ்ரதையின் உடம்பை ஸ்பர்சிக்க இச்சிக்கிறது. எதற்காக என்றால் இன்று நமது ஜடத்தன்மை விலகிவிட்டது. நாமும் மற்றொருவரை தூய்மையாக்க அருகதையாகி விட்டோம் என்று.*

*65.ரூப லாவண்யத்தால் கர்வப்படும் பெண்கள் வீட்டிற்கு வீடு இருக்கிறார்கள். ஆனால் பதிவ்ரதையான நாரீ விஸ்வேஸ்வரருடைய பக்தியினாலேதான் கிடைப்பாள்.*

*66.மனைவியே க்ருஹஸ்தாசிரமத்தின் வேர். எல்லா ஸுகத்திற்கு மூலமும் அவளே. எல்லாப் பலன்களும் ஒருவனுக்குக் கிடைக்க மூலகாரணம் மனைவிதான். பார்யையினால்தான் வம்ச விருத்தியேற்படுகிறது.*

*67.ஒரு மனைவியின் ஸஹாயத்தினால்தான் ஒருவன் இஹலோகம் பரலோகம் இரண்டையும் ஜயிக்கிறான், ஏனென்றால் பார்வையில்லாதவன் தேவகார்யம், பித்ருகார்யம் அதிதிஸத்காரம், மேலும் அநேக ஸத்காரியங்கள் இவைகள் செய்வதற்கு அருகதையாக மாட்டாள். அதிகாரியாக மாட்டாள்.*

*68.எவனுடைய வீட்டில் பதிவ்ரதா நாரீ இருக்கிறாளோ அவனே உண்மையான க்ருஹஸ்தன். இல்லாவிட்டால் மற்றொரு ஸ்திரீயானால் ராக்ஷஸிபோல் பதியை பதத்திற்குப் பதம் விழுங்குபவள்.*

*69.கங்காஸ்நானம் செய்வதினால் எப்படி தேஹம் பவித்ரமாகிறதோ அதுபோல் பதிவ்ரதையின் சுபத்ருஷ்டிபட்டால் தேஹம் பவித்ரமாகிறது.*

*70.ஸ்த்ரீ ஏதோ தெய்வகாரணத்தினால் பதியுடன் ஸதியாக முடியாவிட்டால்கூட சுத்தரீதியாகத் தனது சீலத்தை அவள் பாதுகாக்க வேண்டும். அவள் சீலம் நஷ்டமடைந்துவிட்டால் அவள் பரமபதிதையாகிறாள்,*

அவள் தான் மட்டும் பதிதையாவதில்லை, அவளுடைய மாதா, பிதா, பதி, ஸகோதரவர்க்கம், பந்துவர்க்கம் எல்லோரும் ஸ்வர்க்கத்திலிருந்து விழுகிறார்கள். இதற்கு ஸந்தேஹமேயில்லை.

71. அதனால் பதி இறந்தபிறகு எந்த ஸ்திரீ யதாரீதியாக வைதவ்ய வ்ரதத்தை யனுஷ்டிக்கிறாளோ அவள் திரும்பவும் ஸ்வர்க்க லோகத்தில் தன் பதியுடன் ஸுகபோகம் அனுபவிக்கிறாள்.

72. விதவை தலைவாரி முடிந்தால் பர்த்தாவிற்கு பந்தனம் ஏற்படும், அதனால் ஸ்த்ரீகள் விதவையாகிவிட்டால் தலை முண்டனம் செய்துகொள்ளவேண்டும்.

73. விதவை பகலும் இரவுமாக ஒரு நேரம்தான் போஜனம் செய்யவேண்டும். இரண்டு வேளையும் ஒரு பொழுதும் போஜனம் செய்யக்கூடாது. விதவாஸ்த்ரீகள் மூன்று இரவுகள், பஞ்சராத்ரி பக்ஷவிரதம்.

74. மாஸோபவாஸம், சாந்த்ராயணம், ப்ராஜாபத்யம், பராகம், தநுக்ருச்ரம் இந்த விரதங்களைச் செய்து கொண்டிருக்கவேண்டும்.

75. எதுவரை ப்ராணன் தன்னைத் தானே போகவில்லையோ அதுவரை ஜவதான்யம், அல்லது பால் மட்டிலும் அருந்தி வாழ்வாகிய ப்ரயாணத்தை நிர்வஹிக்க வேண்டும்.

76. கட்டிலில் படுத்துறங்கும் விதவை பதியைப் பதிதனுக்குகிறாள் . அதனால் பதிக்கு ஸுகத்தை விரும்புகிறவள் தரையில் படுத்துறங்க வேண்டும்.

77. விதவை சரீரத்தில் எண்ணையோ வேறு எந்த ஸுகந்த பதார்த்தங்களையோ தேய்க்கக்கூடாது.

78. அவள் ப்ரதி தினமும் அவளுடைய பதி, பிதா , பிதாமஹர் அவர்களுடைய நாம கோத்ரங்களைக் கூறி

*தர்ப்பை எள்ளு முதலியவைகளால் தர்பணம் செய்யவேண்டும்.*

*79.பிறகு விஷ்ணு பகவானிற்குப் பூஜை செய்ய வேண்டும், விஷ்ணு ரூபஹரியைப் பதிதேவன் என்று எண்ணி த்யானம் செய்ய வேண்டும்.*

*80.உலகில் தனக்கு எந்தெந்த வஸ்து ப்ரியமோ, தனது பதி எதை விரும்புவாளுே அவைகளையெல்லாம் பதிக்கு ப்ரீதியாக குணவான்களான பிராம்மணர்களுக்கு தானம் செய்யவேண்டும்.*

*81.விதவா நாரீ வைசாகம், கார்த்திகை, மாசி இந்த மாதங்களில் சில விசேஷ நியமங்களை அனுஷ்டிக்க வேண்டும். அதாவது ஸ்நானம், தானம், தீர்த்த யாத்திரை இவைகளைச் செய்ய வேண்டும்.*

*82.வைசாகத்தில் ஜலம் நிரம்பிய குடம் தானம் செய்ய வேண்டும், கார்த்திகை மாதத்தில் தேவாலயத்தில் நெய் தீபம் போடவேண்டும்; மாக மாதத்தில் தான்யம் எள் முதலியவைகளைத் தானம் செய்தால் ஸ்வர்கத்தில் விசேஷஸுகம் ஏற்படும்.*

*83.விதவாஸ்த்ரீ வைசாக மாதத்தில் தண்ணீர் பந்தல் தேவதைகளுக்கு ஜலதாரை விசிறி, குடை, மெல்லிய வஸ்த்ரம் சந்தனம்,*

*84.கற்பூரத்துடன் கூடிய தாம்பூலம் புஷ்பம், விதவிதமான ஜல பாத்ரம், புஷ்ப மண்டபம்,*

*85.குடிப்பதற்கு ரஸம் நிரம்பிய ஜல பதார்த்தம், திராக்ஷை, வாழைப்பழம் முதலிய இதர பழங்கள் இவைகளைத் தன்னுடைய பிராணபதி ஸந்தோஷமாக இருக்கவேண்டும் என்று மனதில் நினைத்துக் கொண்டு பிராமணர்களுக்கு தானம் செய்ய வேண்டும். கார்த்திகை மாதம் ஒருவேளைதான் சாப்பிட வேண்டும், கத்திரிக்காய், சேனைக்கிழங்கு அவரை முதலிய காய்கறிகளைச் சாப்பிடக் கூடாது.*

*86.கார்த்திகை மாதம் எண்ணெ, மது இவை உபயோகப்படுத்தக் கூடாது. பீங்கான் பாத்திரங்கள் உபயோகிக்கக் கூடாது. கார்த்திகை மாதம் ஊறுகாய் சாப்பிடக்கூடாது.*

*87.கார்த்திகை மாதம் மௌன விரதம் அனுஷ்டிக்க வேண்டும், மணிதானம் செய்யவேண்டும். ஒருவர் இலையில் உண்பவரானுல் அவருக்கு நெய் நிரம்பிய வெண்கலப் பாத்திரம் தானம் செய்ய வேண்டும்.*

*88.பூமியில் படுத்துத் தூங்கும் விரதம் எடுத்துக்கொண்டால் ம்ருதுவான மெத்தை ஸஹிதம் படுக்கை தானம் செய்ய வேண்டும். பழத்தை விடுவதாக இருந்தால் நல்ல வகை பழ தானங்கள்;*

*89.ருசியான பான பதார்த்தங்கள் சாப்பிடுவதை விடுவதாக இருந்தால் அவைகளை தானம் செய்ய வேண்டும்.*

*90.அப்படி தான்யங்களை தானம் செய்வதாக இருந்தால் அரிசி தானம் செய்ய வேண்டும். பிறகு மிகவும் சிரத்தையுடன் தங்கத்தினுல் அலங்கரிக்கப்பட்ட பசு தானம் செய்ய வேண்டும். இவை ஒருபுறம்*

*91.மறுபுறம் தீபதானம், கார்த்திகை மாதம் எந்த தானமும் தீப தானத்திற்குப் பதிஞறில் ஒரு பங்கு கூட ஆகாது.*

*92.சூர்யோதயத்திலேயே மாகஸ்நானம் பண்ண வேண்டும், மாகஸ்நானத்திற்குக் கூறிய எல்லா விதிகளையும் அனுஷ்டிக்க வேண்டும்.*

*93.ப்ராம்மணன் சந்யாஸி, தபஸ்வி, இவர்களுக்கு சித்ரான்னங்கள், லட்டு, சேமியாகேஸரி, வடை, இண்டரி (போஜனம் செய்யும்போது தபஸ்விகள் நூலால் செய்த மெதுவான ஆசனம் போன்ற ஒன்றை தலையில் வைத்துக் கொண்டு சாப்பிடுவார்கள்) இவைகள்*

*94.நெய்யினுல் செய்யப்பட்ட மரீசம் என்னும் ஒரு வகை பண்டத்தினுல் நிரம்பிய சுத்த கற்பூரத்தினுல் வாசனையூட்டி, அதன் மத்தியில் சர்க்கரையை நிரப்பிக் கண்ணுக்குக் குளிர்ச்சியாகவும், வாசனையுடன் கூடினதுமான பதார்த்தத்தை போஜனம் செய்விக்க வேண்டும்.*

*95.குளிர் காலத்தில் உலர்ந்த விறகுக் கட்டுகள், பஞ்சு வைத்து தைத்த சட்டைகள், துப்பட்டாக்கள் மெத்தைகள்,*

*96.மஞ்சளில் நனைத்த ஸுந்தர வஸ்த்ரங்கள், பஞ்சு நிரம்பிய ரஜாய், ஜாதிபத்ரி லவங்கத்துடன் கூடிய தாம்பூலம்.*

*97.விசித்ரமான கம்பளங்கள், காற்றில்லாத அறைகள், ம்ருதுவான மோஜாக்கள், ஸுகந்நமான ஸ்நானப் பொடி.*

*98.பிறகு மஹாஸ்நான விதிப்படி (பதரீ நாராயணத்தில் பிரசித்தமான நெய்யில் நனைத்த கம்பளம்) பூஜையுடன் கூட காரகில் முதலியவைகளால் தேவாலயங்களுக்குள்ளே தூபதானம்.*

*99.பருமஞன திரியுடன்கூட தீபதானம், விதவிதமான நைவேத்யங்கள் இவைகளால் பதிரூபமான பகவான் ஸந்தோஷமடையட்டுமென்று;*

*1.இந்த விதமான நானுப்ரகாரமான நியமம்; தானங்கள் முதலியவைகளினுல் விதவாநாரீ வைசாகம், கார்த்திகை, மாக மாதத்தைக் கடத்த வேண்டும்,*

*2.ப்ராணன் தொண்டைக்கு வந்து விட்டால்கூட காலைமேல் ஏருதீர்கள்; ரவிக்கை விதவிதமான வஸ்திரங்களை உடுத்தாதீர்கள்.*

*3.பதிவ்ரதையானவள் பிள்ளைகளிடம் கேட்காமல் ஒன்றும் செய்யக்கூடாது. இந்த விதமாக வெல்லாம் நடக்கும் வேஶ்யா கூடஉத்தமமானவளாகக் கருதப்படுவாள் என்று சொல்லப்படுகிறது.*

*4. இந்த விதமான தர்மானுஷ்டானத்தில் ஈடுபட்டிருக்கும் விதவை பதிவ்ரதையேயாவாள். அவள் ஒரு பொழுதும் துக்கத்திற்கு ஸகோதரியாக மாட்டாள். அந்திம காலத்தில் பதியின் உலகத்திற்குச் செல்வாள்.*

*5.எந்த நாரீ பதியைத் தேவதையாகக் கருதுகிருளோ அவளுக்கும் கங்கைக்கும் கொஞ்சம்கூட பேதமில்லை. அவள் ஸாஷாத் சிவபார்வதிக்கு ஸமானமானவள்தான், அதனுல் வித்வான்கள் பதிவ்ரதையைப் பூஜிக்க வேண்டும்.*

*6.பிறகு ப்ருஹஸ்பதி மீண்டும் கூறுவார் :- லோபா முத்ரே! மஹாமாதாவே! நீ உன் பதியின் சரணுரவிந்தங்களையே பார்த்துக் கொண்டிருக்கிருயே, ஏ தேவீ! இன்று உன் தரிசனம் ஆனதினுல் கங்காஸ்நான பலன் கிடைத்தது.*

*7.தன்னலத்தில் வித்வானுன தேவகுரு இந்த விதமாக பரம பதிவ்ரதை, மஹாபாக்கியவதி ராஜபுத்ரி லோபா முத்ரையைத் துதித்து நமஸ்கரித்து பிறகு அகஸ்த்ய முனிவரைப் பார்த்து கூறத் தொடங்கினுர்:*

*8.ஹே மஹா முனியே, நீர் ப்ரணவ ரூபர், இந்த லோபாமுத்தை ச்ருதிரூபா; நீர் சாக்ஷித்தபஸ்; இவள் க்ஷமையே உருவானவள். இவள் ஸத்காரியங்கள்; தாங்கள் அவைகளின் பலன். மொத்தத்தில் நீர் பரம தன்யர்.*

*9.இவள் ஸாக்ஷாத் பதிவ்ரதா தேஜஸ்வினீ, தாங்கள் ப்ரம்ம தேஜஸ்ஸே, இந்தத் தபஸ்ஸின் தேஜஸ்ஸினுல் நீர் செய்யும் எந்தக் காரியம்தான் அஸாத்யமாகும்?*

*10.தங்களிடம் ஒன்றும் மறைக்க முடியாது என்ருலும், நான் விண்ணப்பித்துக் கொள்கிறேன். ஹே முநிவரே! இந்த தேவதைகள் என்ன காரியத்துக்காக வந்திருக்கிருர்களோ அதைக்கேளும்.*

*11.இவர்கள் நூறு அச்வமேதங்கள் செய்தவர்கள், வ்ருத்ராஸுரனைக் கொன்ற இந்திரன், இவருடைய ஆயுதம் வஜ்ராயுதம் இவருடைய வாயிலில் அணிமாதி*

*அஷ்டஸித்திகளும் இவருடைய க்ருபாகடாக்ஷத்திற்காக காத்து நிற்கிறுர்கள்.*

*12.இவரது அமராவதிப் பட்டணத்திற்கு நார்புரமும் காமதேனுப் பசுக்கள் மேய்ந்து கொண்டிருக்கின்றன. கல்பக வ்ருக்ஷத்து நிழலில் படுத்துறங்குகின்றன.*

*13.இவருடைய புரியில் சாலைகளில் சிந்தாமணிக்கற்களை உடைக்கிறுர்கள்; இவர் ஜகஜ்ஜோதியாகிய அக்னிதேவர்; இவரோ தர்மராஜர்.*

*14.இவர்களோ நிருருதி, வருணன், வாயு, குபேரன், ருத்ரன் முதலிய தேவகணங்களும் ஆவார்கள். ஸமஸ்த விருப்பங்களும் நிறைவேறும் பொருட்டு இவரை உலகில் ஆராதிக்கிறுர்கள்.*

*15.ஆகையால் இவர்கள் யாவரும் உலகத்தின் உபகாரத்தின் பொருட்டு தங்களைப் பிரார்த்திக்க இங்கு வந்திருக்கிறுர்கள். அந்த உலகக் கார்யம் தங்களுடைய வரிக்கின்ற முயற்சியால்தான் ஸாத்யம் ஆகும்.*

*16.ஒரு விந்த்ய பர்வதமானது ஸுமேரு பர்வதத்தின் மீதுள்ள பொறுமையினுல் ஸூர்ய பகவானின் மார்க்கத்தை மறைத்துக் கொண்டு வளர்ந்து நிற்கிறது. அது மேலும் வளராமல் தடுக்க வேண்டியது தங்கள் கையில்தானுள்ளது. தயவுடன் அது செய்யவேண்டும்.*

*17.யார் கடின ஸ்வபாவம் உள்ளவர்களோ அவர்களால் மார்க்கத்திற்குத் தடை ஏற்பட்டிருக்கிறது. கேவலம் பொறுமையினுல் மேலும் வளர இருக்கிறது. அவருடைய இந்த வளர்ச்சியைப் பெருக விடுவது நன்மையல்ல.*

*18.ப்ருஹஸ்பதியின் இந்த விதமான வார்த்தைகளைக் கேட்டு அகஸ்தியர், ஒன்றும் யோசிக்காமலேயே ஒரு நிமிஷம் மௌனமாக இருந்து பிறகு ததாஸ்து என்று சொன்னுர்.*

*19. 'நான் உங்களுடைய கோரிக்கையை நிறைவேற்றுவேன்' என்று கூறி அகஸ்தியர் தேவதைகளுக்கு விடைகொடுத்து அனுப்பினுர். அவர் பிறகு சிந்தனேயில் ஆழ்ந்து தியானத்தில் உட்கார்ந்து விட்டார்.*

*20. வேதவ்யாஸர் கூறுகிருர்: இந்தப் பதிவ்ரதை பற்றிக் கூறும் அத்தியாயத்தை யாதொரு ஸ்த்ரீ புருஷன் கேட்கிருர்களோ, அவர்கள் பாம்பு, சட்டையைக் கழற்றுகிறது போல, தங்களது பாப சட்டையைக் கழற்றிவிட்டு இந்திரலோகம் அடைகின்ருர்கள்.*

*ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா மகாவான* பதிவ்ரதாக்யானம் *என்ற 4ம் அத்யாயம் ஸம்பூர்ணம்.*



## அத்யாயம் 5

*வேதவ்யாஸர் கூறுகிறார்: ஹே ஸூத முனிவரே! இதற்குப் பிறகு அகஸ்திய முனிவர் த்யானத்தில் விச்வேச்வரரைத் தரிசித்து அந்தத் தூய்மையான லோபாமுத்ரையிடம் கூறத்தொடங்கினுர்:*

*1. அடி வரருசே! எங்கிருந்து இந்தக் கார்யங்கள், எங்கு வந்து முளைத்தது பார். எங்கு நாம் முநிவ்ருத்தியை அனுஸரித்துக் கொண்டிருக்கிறோம்?*

*2. அந்த கிரிகளை உடைக்கும் இந்திரன் ஸமஸ்த பர்வதங்களுடைய இறகுகளையும் பிய்த்தெறிந்தான். அவன் விந்த்யபர்வதத்தைத் தனியாக அடக்க ஸாமர்த்தியம் இல்லாதவனு?*

*3. அவனுடைய அரண்மனை அங்கணத்தில் கல்ப விருக்ஷம் இருக்கிறது. வஜ்ராயுதம் கையில் இருக்கிறது. அவனுடைய அரன்மணை வாசலில் ஸித்திப் பெண்கள் கைகட்டிக் காத்துக் கொண்டிருக்கிறுர்கள். அந்த இந்திரன் பிராம்மணனிடத்தில் வந்து ஸித்திக்கு யாசிக்கிறுன்.*

*4. மிக ஆச்சர்யம். காட்டுத் தீயின் சேர்க்கையினுல் ஸமஸ்த பர்வதங்களும் வியாகூல மடைந்திருக்கின்றன. இன்று விந்த்ய பர்வதத்தின் வளர்ச்சியைத் தடுக்க அந்தக் காட்டுத் தீயின் யஜமானனுன அக்னிபகவானின் சக்தி எங்கே போயிற்று?*

*5. எல்லா பூதங்களுடையவும் அதிகாரி தண்டமேந்திய பிரபு யமராஜர் இருக்கிறுரே, அவர் இந்த ஒரு பர்வதத்திற்கு தண்டனையளிக்க சச்தியில்லாமல் போனுரா?*

*6. ஆதித்யர்கள், வஸுக்கள், ரிஷிகள், மருத்துக்கள், விச்வேதேவர்கள், அச்வினீ குமாரர்கள் வேறு தேவதைகள்,*

*7. இவர்களுடைய கண்பட்ட மாத்திரத்திலேயே பதினுன்கு புவனங்களும் பட்டுப் போகாதா? அவர்கள்*

*அந்த பர்வதத்தின் வளர்ச்சியைத் தடுப்பதற்கு ஸமர்த்தர்கள் இல்லையா?*

*8. ஓஹோ காரணம் தெரிந்து கொண்டேன் ஒரு ஸமயம் காசியை உத்தேசித்து விட்டு தத்துவ தரிசிகளான முனிவர்கள் என்ன சொன்னார்களோ அந்த அழகிய வசனம் எனக்கு நினைவு வந்து விட்டது*

*9. முமுக்ஷுக்கள் ஒரு பொழுதும் காசியைத் தியாகம் செய்யக் கூடாது. அங்கு வஸிக்கும் ஸத்ஜனங்களுக்கு அநேகம் விதம் இடையூறுகள் ஏற்படும்.*

*10. ஹே கல்யாணி! இப்படி முனிவர்கள் கூறுகிறார்களே அதன்படி என்னுடைய காசிவாஸத்தில் இந்தப் பெரிய இடையூறு நேர்ந்திருக்கிறது. ஏனென்றால் விச்வேச்வரரே எப்பொழுதும் பராமுகமாக இருக்கிறார்.*

*11. பிராம்மணனுடைய ஆசீர்வாதத்தினாலேயே காசீவாஸம் கிடைத்திருக்கிறது. மோக்ஷத்தை விரும்புகிற எவன்தான் இதைத் தியாகம் செய்வான்? ஆஹா ஆச்சர்யம்! இந்த மூடபுத்தி கையில் கிடைத்த மனோஹரமான கவனத்தைத் தூர எறிந்து விட்டு கேவலம் கையை நக்க விரும்புகிறேனே!*

*12. அஹோ லோகங்கள் புண்ணியத்தின் குவியலாகிய இந்தக் காசியை மூர்க்கர்களைப் போல் எவ்விதம் விடமுடியும்? ஒவ்வொரு முழுக்கிலும் தாமரைக் கிழங்குகள் கையில் கிடைக்கிறது. அது போல் இந்தக் காசியும் ஸுலபமாக இருக்கிறதல்லவா?*

*13. ஆனபொழுதிலும் ஜன்மாந்தரமாகக் குவித்து வைத்த ஸஞ்சித புண்யக் குவியலின் மூர்த்தியான இந்த வாராணசியுடைய தத்வம் தெரிந்த பிறகும் மிகவும் கஷ்டத்தோடுகூட இந்தக் காசியை யடைந்த பிறகு மோஹவசத்தால் துர்க்கதியை லாபமாகக் கொண்டு வேறு இடங்களுக்குப் போகும் இச்சையை எவன் கொள்வான்?*

*14.பரமாத்ம பதத்தைச் சுட்டிக் காட்டுகிற காசி எங்கே? எல்லா விதத்திலும் துக்கத்தைக் கொடுக்கக்கூடிய அந்நியப் பிரகாரமான காரியங்கள் எங்கே? பண்டித ஜனங்கள் காசியை விட்டு விட்டு வெறெங்கும் போவார்களா? பூசணிப்பழம் எங்கேயாவது ஆட்டின் வாயில் புகமுடியுமா?*

*15.அதிநச்வர மனுஷன்கூடப் பரம புண்ணியப் பிரகாசிகையான இந்தக் காசியை ஏன் தியாகம் பண்ணுகிறுன்? எனக்கு என்ன தோன்றுகிறதென்றுல் யாருடைய புத்தி அன்னிய இடங்களில் வசிப்பதற்குப் பிரவர்த்திக்கிறதோ அவனுடைய புண்ணியம் க்ஷயமாகி விட்டது. எந்த மனுஷனுக்கு அந்நிய இடங்களில் வசிக்க மனம் போகவில்லையோ அந்த மனுஷன் ஸமஸ்த ஜந்துக்களுக்கும் அடைக்கலமாகவுடைய நற்செய்கைகளின் குவியலான காசியை விட்டு வெளியில் செல்வதற்குப் பிரயத்தனம் செய்ய மாட்டான்.*

*16.எவனெருவன் காசிவாசத்தை தியாகம் செய்ய மாட்டானே அவன் ஸம்ஸார லோகத்திலிருந்து முக்திலாபத்தை அடைகிறுன். மற்றவர்கள் இல்லை.*

*17.பாபவிஞசினி தேவகணங்களுக்குக்கூட துர்லபம். எப்பொழுதும் கங்கா ஸங்கம் ஸம்ஸார பாபச்சேதினீ. சிவ பார்வதியை விட நவஸ்த்ரிபுவனத்துக்கும் அதீதமான மோக்ஷஜனனீ காசிபுரியை முக்த ஜனங்கள் ஒருபோதும் விடமாட்டார்கள்.*

*18.அஹோ மனிதர்களே நீங்கள்! நிச்சயமாகப் பாபக்குவியல்களிஞல் வஞ்சிக்கப்பட்டிருக்கிறீர்கள். புண்ணியஸம்பத்தின் லக்ஷ்யமான இந்தக் காசியை மிகப் பிரயத்னத்துடன் அடைந்துவிட்டுப் பின்னும் வேறெங்கேயோ போவதற்காக ப்ரயத்தனத்தைச் செய்கிறீர்களே?*

*19.ஓ ஜனங்களுடைய மடத்தனத்தை என்னவென்று கூற? அவர்கள் எல்லோரும் பவித்ர கங்கா ஜலத்திஞல் மஞேஹரமானதும் ப்ரளய காலத்திலும் கூட மஹாதேவருடைய சூலத்தின் முனேயில் பத்திரமாக இருக்கும் இந்தக் காசியை தியாகம் செய்து விட்டு வேறு எங்கோ போவதற்கு விரும்புகிருர்களே,*

*20.ஜனங்களே! மோக்ஷ பதத்திற்கு விரோதி, பாபங்களே விலக்கவல்லதான காசி என்னும் படகை விட்டுவிட்டு சோகமென்னும் ஜலத்தால் நிரம்பிய இந்தப் பாபமய ஸம்ஸாரத்தில் விழுகிறீர்களே?*

*21.வேதவிஹிதமான கர்மங்களே ஆச்ரயித்துக் கொண்டு அல்லது யோகாப்யாசம் செய்து கொண்டு தானம் தபஸ் இவைகளேச் செய்து கொண்டிருப்பவர்களுக்குக்கூட காசி கிடைத்தலரிது, கேவலம் பிராம்மணஜனங்களுடைய ஆசீர்வாதம், விச்வநாதருடைய க்ருபாபாத்திரவான்களுக்கே இது ஸுலபமாகக் கிடைக்கிறது.*

*22.சில இடங்களில் நிறைய தனத்தைச் செலவழித்தால் தர்மலாபம் அடையலாம், சில இடங்களில் தான போகங்களிஞலும் அர்த்த காமத்தின் ஸம்பத்து கிடைக்கலாம். சில இடங்களில் இவையனேத்தும் கிடைக்கலாம். ஆஞல் மோக்ஷம் காசியைப் போல் வேறெங்கும் கிடைக்காது,*

*23.சுருதி, ஸ்ம்ருதி, புராணம் இவைகளின் அனுஸாஸனத்தின் படி இந்த அவிமுக்த க்ஷேத்ரத்தைப் போல் வேறு பவித்ரமான இடம் கிடையாது. அதஞல் அவிமுக்த க்ஷேத்ரத்தில் சரணுகதியடைவதே பரம புருஷார்த்தம். ஜகத் பிரஸித்த*

*24.ருஷி கூறுகிருர்: அஸிநதி இடாவென்னும் நாடி, வருணு நதி பிங்களா நாடி என்று கூறப்பட்டிருக்கிறது. இந்த இரண்டிற்கும் மத்தியில் அவிமுக்த க்ஷேத்ரமான*

காசியிருக்கிறது, இந்தக் காசீ ஸுஷும்ஞ நாடியாகும்.

25.இந்த மூன்று நாடிகளும் சேர்ந்தே வாராணஸியாகும். இந்த வாராணஸியில் ஸமஸ்த ஜீவர்களுடைய ப்ராண ப்ரயாண ஸமயத்தில் பகவான் விச்வேச்வரர் அவர்கள் காதுகளில்

26.தாரக நாம உபதேசம் செய்கிறூர். அதனுல் ஜீவர்கள் ப்ரம்மஸ்வரூபர்களாக ஆகிறூர்கள். இப்படி ஒரு ஸ்லோகம் இருக்கிறது. அதை ப்ரம்மவாதிகள்

27.இந்தக் காசீ க்ஷேத்ரத்தில் பகவான் பூதபாவனன் அந்திம காலத்தில் தாரகப் ப்ரம்ம உபதேசத்தைச் செய்து அவிமுக்த க்ஷேத்ரத்தில் இருக்கும் ஜந்துக்களுக்கு முக்தியளிக்கிறூர். இதில் ஸந்தேஹமில்லே.

28.அவிமுக்த க்ஷேத்ரத்திற்கு ஸமமான வேறு க்ஷேத்ரம் கிடையாது. அவிமுக்தத்திற்கு ஸமமான வேறு கதியும் கிடையாது. அவிமுக்தேச்வரருக்கு ஸமமான வேறு லிங்கமும் கிடையாது. இது முக்காலே மூன்று வீசம் ஸத்யம்.

29.அவிமுக்தத்தை விட்டு வேறு அந்நிய இடங்களில் வசிக்க நினேக்கின்றவன் கைத்தலத்தில் கிடைத்த முத்திரையை விட்டுவிட்டு மற்றொரு ஸித்தியைத் தேடுகிறவன் ஆவான்.

30.இந்தப் பிரகாரம் மகாத்மா முநிசிரேஷ்டர் அகஸ்தியர் வேதபுராணம் முதலியவைகள் மூலமாக ஸ்ரீ விஸ்வநாதரைப் போன்ற சிவலிங்கமும் காசி ஸமானமானபுரியும் மூன்று உலகங்களிலும் மற்றொன்றும் கிடையாது. இந்த விதமாக க்ஷேத்ரத்தை நிச்சயம் செய்து

31.பிறகு காலபைரவரிடம் சென்று நமஸ்கரித்து ஹே காலராஜரே! தாங்கள் இந்தக்காசிபுரிக்கு ஸ்வாமி, இந்தக் காரணத்தினுல் தங்களே ஒன்று கேட்க வந்தேன்.

32.ஐயோ காலராஜரே! நான் சதுர்தசிதோறும் அஷ்டமி தோறும் ஒவ்வொரு மங்களவாரமும் ரவிவாரமும்

*பழம் கிழங்கு புஷ்பம் முதலியவைகளினுல் தங்களை ஆராதிக்கவில்லையா? நான் ஒரு நிரபராதியல்லவா? இருந்த போதிலும் என்னை ஏன் அபராதி என்று ஸ்திரம் செய்கிறீர்கள்?*

***33.** ஹே காலபைரவ! நீர் உத்கடபாபனாசனீ பயங்கர உருவை தரித்துக்கொண்டு பயப்படாதீர்கள் என்று கூறிக்கொண்டு கைகளை நீட்டி காசீவாஸியான பயந்த ஜீவகணங்களை ஸர்வ பாபத்துடன் ரக்ஷிக்கவில்லையா?*

***34.**பிறகு தண்டபாணியிடம் சென்று ப்ரலாபிக்கத் தொடங்கினுர். ஹே யக்ஷராஜா சந்த்ரனைப் போல அழகான சரீரம் உடையவரே! ஏ பூர்ணபத்ரநந்தனு! ஏ நாயகா! ஏகாசிவாஸி வாசிரக்ஷகா !கோதண்டபாணி! தாங்கள் எல்லா தபஸ்ஸினுடையவும் க்லேசங்களை அறிந்தே இருக்கிறீர்கள். அப்பொழுது ஏன் என்னை வெளியில் தள்ளுகிறீர்கள்?*

***35.**ஏ தேவா! தாங்களே காசிவாசிகளுக்கு அன்னதாதா! பிராணதாதா! ஞானதாதா! மோக்ஷதாதாவுமாக இருக்கிறீர்கள். தாங்களே சிறந்த ஸர்ப்பஹாரம், ஜடாகலாபம் முதலியவைகளால் ஜனங்களுக்கு அந்திம காலத்துக்குத் தகுந்த ஆபரணங்களை அணிவிக்கிறீர்கள்.*

***36.**தங்களுடைய ஸம்பிரமன், உத்ப்ரமன் என்னும் பெயருடைய அந்த இருகணங்களும் இங்கு வசிக்கும் எல்லா ஜனங்களுடைய விருத்தாந்தங்களை அறிவதில் நிபுணர்களாக இருக்கிறுர்கள். இவர்கள் துர்ஜனங்களுக்கு மிகவும் மோஹத்தை உண்டுபண்ணி இந்த முக்தி க்ஷேத்ரத்திலிருந்து அப்பால் தள்ளி விடுகிறுர்கள்.*

***37.**இதற்குப் பிறகு டுண்டிராஜ கணேச ஸ்வாமியின் முன்னுல் நின்றுகொண்டு ப்ரலாபிக்கத் தொடங்கினுர்- ஹேப்ரபோ! விநாயகா? எனது வார்த்தையைக் கேளுங்கள். நான் அனுதையைப் போல் தங்கள் முன்னுல் புலம்புகிறேன். எல்லா இடையூறுகளும் தங்களுடைய*

*ஆளுகைக்குள்தான் இருக்கிறது. பாபி ஜனங்கள்தான் விக்னங்களிஞல் நிரம்பிருக்கிருர்களென்ருல் நானும்தான் இங்கே இப்பொழுது நிற்கிறேனே?*

*38.இப்பொழுது சிந்தாமணி விநாயகர், கபர்திவிநாயகர், ஆசாவிநாயகர், கஜவிநாயகர், ஸித்திவிநாயகர் இந்த ஐந்து விநாயகர்களும் என்னுடைய பிராத்தனையைக் கேட்கட்டும்.*

*39.கேளுங்கள்! நான் ஒருபொழுதும் ஒருவரையும் நிந்தித்ததில்லை. ஒருவிதமான அபகாரமும் செய்ததில்லை. பிறர் திரவ்யத்தை அபகரித்ததில்லை. பரஸ்த்ரீகள் பேரில் புத்தி செலுத்தவில்லை. பிறகு எந்த கர்மத்தின் பங்கிலிருந்து வந்திருக்கிறது?*

*40.நான் மூன்று வேளைகளும் கங்காஸ்நானம் செய்தேன். எப்பொழுதும் விஸ்வநாதரை தர்சித்தேன். ஒவ்வொரு பர்வத்திலும் எல்லாவிதமான யாத்ரைகளும் செய்து கொண்டேயிருக்கிறேன். பின் ஏன் எனக்கு விக்னத்திற்குக் காரணமான பாபம் உண்டாகியிருக்கிறது?*

*41.அம்மா! ஹே விசாலாக்ஷி! ஹே பவானீ! ஹே மங்களே! எல்லா ஸௌபாக்யங்களும் கொண்ட ஸுந்தரியே! ஜ்யேஷ்டேஸ்வரி! சிவே! விதே! விஸ்வபுஜே! சித்ரகண்டே! விகடே! துர்கே! உங்களுக்கும் ஒவ்வொரு தேவீகணங்களுக்கும் என் நமஸ்காரம்.*

*42.இந்தக் காசியில் எத்தனையெத்தனைத் தேவதைகள் உண்டோ அத்தனை பேர்களும் ஸாக்ஷி. அவர்களெல்லாம் கேட்கட்டும், நான் தன்னலத்திற்காகக் காசியை விட்டு வேறெங்கும் போகவில்லை, தேவர்களின் பிரார்த்தனைக்கு இசைந்து நான் போகிறேன். பின் என்ன செய்வது? பரோபகாரத்திற்கு வேண்டி பின் எதுதான் செய்யக் கூடாது?*

*43.பூர்வ காலத்தில் ததீசி முனிவர் மற்றவர்களுக்கு உபகாரத்திற்கு வேண்டித் தன் முதுகெலும்பைக் கொடுக்க*

*வில்லையா? அஸுரேந்திரர் பலிசக்ரவர்த்தி யாசகர்களுக்கு மூன்று உலகங்களையும் கொடுக்கவில்லையா? மது கைடபர் என்ற இரு அசுரர்களும் தங்கள் தலையைக் கொடுப்பதற்கு அனுமதிக்கவில்லையா என்று பிரார்த்தித்து விட்டு*

*44.பிறகு, காசியில் வசிக்கும் எல்லா முனிஜனங்களுக்கும், பாலவிருத்த ஜனங்களுக்கும், புல் வ்ருக்ஷங்கள் லதைகள் ஒன்று பாக்கியில்லாமல் இவைகளிடமெல்லாம் விடைபெற்றுக் கொண்டு காசீபுரியைப் பிரதக்ஷிணம் செய்து விட்டு அங்கிருந்து வெளியே கிளம்பினர்.*

*45.ஒரு சுபலக்ஷணமும்கூட இல்லாத நீசத் தொழிலைச் செய்யும் ஒரு மனிதன்கூட சந்திரசேகரனைத் தரிசித்து விட்டு யாத்திரை செய்வானானால் அவசியம் அவனுக்கு ஸர்வாபீஷ்டமும் லாபமும் உண்டாகும்.*

*46.காசியில் புல் பூண்டு, விருக்ஷமாகவும் இருப்பதும் மிகவும் உத்தமம், ஏனென்றால் அவைகள் பாபம் செய்வதில்லை. அயலூர்களுக்கும் போவதில்லை. ஆனால் ஐயோ சைதன்ய ஜீவர்களாய்ப் பிறந்து ஸர்வோத்தமர்களாயுமிருந்தும் நமக்கு ஐயோ! இழிவு, இழிவு நாமெல்லோரும் காசியை விட்டுவிட்டு எங்கெல்லாமோ போகிறோமே,*

*47.அடிக்கடி அஸி நதி ஜலத்தை ஸ்பர்சித்துவிட்டு காசீபுரியில் இருக்கும் பெரிய பெரிய மாலைகளைப் போல அலங்கரிக்கும் மாளிகைகளைப் பார்த்துவிட்டு அகஸ்தியரிஷி தன்னுடைய நேத்திரங்களைப் பார்த்துக் கூறுவர், ''ஏ ஸகா நயனங்களே! காசி புரியை நீங்கள் நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள். இன்றைக்குப் பிறகு நீங்கள் எங்கேயோ, காசீபுரி எங்கேயோ ?*

*48.இன்று இந்தக் காசியின் எல்லைகளில் சூழ்ந்திருக்கும் பூத கணங்கள் கைகொட்டிக் கொண்டும், கைகளைக் கோர்த்துக்கொண்டும் யதேஷ்டமாக என்னைக்*

*கேலி செய்யட்டும். ஸுஹ்ருத்துக்களின் ஒரேயிருப்பிடமாகக் காசியை விட்டுப் போய்விடப்போகிறேனே.*

*49.ஹா, பத்தினியுடன் கூட அகஸ்திய முனிவர் க்ரௌஞ்ச பக்ஷிகளின் ஜோடிகளைப் போல மிகவும் பிரலாபித்துக் கொண்டு ஓ காசி! ஓ காசி! நீங்கள் மீண்டும் மீண்டும் வந்து தரிசனம் தரவேண்டும் என்று பெரிதாய் ஜனங்களைப்போல புலம்பிக்கொண்டு மூர்ச்சித்து விழுந்து விட்டார்.*

*50.க்ஷணகாலம் மூர்ச்சித்திருந்து மூர்ச்சை தெளிந்ததும் அகஸ்திய முனி சிவ, சிவ, என்று உச்சரித்துவிட்டு பத்தினியைப் பார்த்து விட்டுக் கூறுவார், ப்ரியே, வா போவோம். பார் இந்தக் தேவதைகள் மிகவும் கடின ஹ்ருதயம் படைத்தவர்கள். மூன்று உலகங்களும் ஸுகத்தையளிக்கும் காமதேவனை த்ரயம்பக பகவானிடம் அனுப்பி இவர்கள் என்னென்ன செய்தார்கள் என்று உனக்கு நினைவில்லையா?*

*51.முத்து முத்தாய் நெற்றியில் துளிர்த்த வேர்வையுடன் அகஸ்திய முனிவர் மிகவும் வேதனையுடன் நாலைந்து அடிகள் எடுத்து வைத்திருப்பார். அப்பொழுது பூமிதேவி இவரை நாம் நல்வரவு கூறுவிட்டால் விஞசத்தையடைவோம், என்று எண்ணி மிகவும் பயத்தினால் உடல் குறுகிப் போனாள்.*

*52.முனிவர் தபஸ்ரூபமான விமானத்தில் ஏறிக்கொண்டு அரை நிமிஷத்தில் ஆகாச மண்டலத்தைக் கடந்து கொண்டு விந்த்ய கிரியை முன்னால் பார்த்தார்.*

*53.அந்த விந்த்ய பர்வதமும் வாதாபி இல்வலனை நாசம் செய்தவரான அகஸ்திய முனிவரை ஸஹதர்மிணியுடன் தன்னை நோக்கி வருவதைப் பார்த்து விட்டு, தபஸ்ஸினாலும்,*

*54.க்ரோதத்தினாலும் காசியை விட்டுவந்து விரஹ தாபத்தினால் ஏற்பட்ட வருத்தத்தினால் மூன்றுவித*

அக்னியைப் போல ஊழித்தீயைப் போல் ஜ்வலித்துக் கொண்டு வரும் அகஸ்திய முனிவரைப் பார்த்து-

55.மிகவும் குறுகிய பூமிக்குள் பிரவேசித்து விடமாட்டோமா என்று விந்தய பர்வதம் சொல்லிற்று. பகவான், நான் தங்கள் வேலைக்காரன், நான் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்லி விட்டு அனுக்ரஹம் செய்யுங்கள் என்றது.

56.அகஸ்திய முனி கூறுகிறார். ஹே அறிவாளியான விந்தியா! நீ ஒரு ஸஜ்ஜனன் அல்லவா? என்னை உனக்கு நன்றாகத் தெரியும். நான் உன்னைத் தாண்டி அப்பால் செல்கிறேன். நீ அது வரைக்கும் இப்படிக் குறுகியே இரு.

57.தபோதநராகிய அகஸ்திய முனி இப்படிக் கூறிவிட்டுத் தனது பதிவிரதையுடன் தனது சரண கமலத்தின் அடிககளினால் தக்ஷிண திசையை ஸனாதனமாக்கினார்.

58.முனிவர் சென்ற பின் - அந்த நடுங்கும் விந்த்யன் மிகவும் கலவரமடைந்தான் - முனிவர் அம்மட்டுமாவது போனாரே க்ஷேமம் தான்.

59.இன்று நான் மறுபடியும் பிறந்தவனாகிறேன். நல்ல வேளை ரிஷிஎன்னை சபிக்கவில்லை. என்னைப் போல் தந்யன் ஒருவருமில்லை என்று விந்த்யன் மனதில் எண்ணிக் கொண்டான்.

60.அதே சமயம் காலத்தின் கதியை நன்கு அறிந்த சூரிய பகவானுடைய ஸாரதியான அருணன் குதிரைகளை நடத்தினான். பிறகு பழையபடி ஜகத்தானது ஸூர்யனுடைய ஸஞ்சாரத்தினால் க்ஷேமம் அடைந்தது.

61.இன்று அல்லது, நாளை, அல்லது அதற்கு மறுநாள் முநிநிச்சயமாக வருவார். இந்த விதமான சிந்தை பாரமாக அழுத்த அந்த விந்த்யாசலம் ஸ்திரமாக உட்கார்ந்திருந்தான்.

62.இன்று வரை முனி திரும்பவில்லை. அந்த கிரியும்

*முன் போல் ஏங்கவில்லை. துர்ஜனங்களுடைய எண்ணங்கள் நிறை வேருததுபோல்.*

*63.யாதொரு நீசன் மற்றவர்களிடம் பொருமைப்பட்டு தனது வளர்ச்சியை விரும்புகிருனே அவன் வளருவது இருக்கட்டும், பழைய நிலைமையாவது இருக்குமா என்பது ஸந்தேஹம் தான்.*

*64.துஷ்ட ஜனங்களுடைய மனோரதம் முதலாவது நிறை வேருது. தெய்வ யோகத்திஞல் நிறைவேறிஞல் கூட சிக்கிரம் நஷ்டமாகிவிடும். அதஞல்தான் விச்வேஸ்வரரால் ரக்ஷிக்கப்படும் இவ்வுலகம் பாதுகாப்புடன் இருக்கிறது.*

*65.பால விதவைகளுடைய ஸ்தனம் பெருத்து பிறகு நெஞ்சோடு நெஞ்சாய் ஒட்டிவிடுவது போல துஷ்டர்களுடைய மனோரதங்களும் இதயத்தில் உதித்து உதித்து இதயத்திலேயே ஒடுங்கி விடும்.*

*66.சிறிய நதிகள் கொஞ்சம் மழை பெய்தவுடன் கரையை உடைத்துக் கொண்டு ஓடுவது போல் துஷ்ட ஜனங்களுடைய ஸம்பத்தும் சில வருஷங்களுக்குள்ளாகவே தனது குலத்தை நாசம் செய்துவிடும்.*

*67.எவனொருவன் பிறருடையஸாமர்த்யத்தை அறியாமலேயே தனது பலத்தைக் காண்பிக்கிருனே அவனைப் போல் இந்த விந்த்ய கிரியும் பரிஹாஸத்திற்குப் பாத்திரமாகியது.*

*68.வேதவ்யாஸர் கூறிஞர்: அகஸ்திய முனி ரமணீயமான கோதாவரிக் கரையில் வாஸம் செய்தும் கூட அவருடைய காசி விரஹத்திஞல் ஏற்பட்ட தாபம் சாந்தமடையவில்லை.*

*69.அந்த முனிவர் வடதிசையில் இருந்து வரும் காற்றைக் கூடக் கைகளை நீட்டி ஆலிங்கனம் செய்து கொள்வார். காசியின் குசலத்தை விசாரிப்பார்.*

70.ஹே லோபாமுத்ரே: காசியின் இந்த ஸ்ருஷ்டியின் பரிபாடி பூமியில் எங்கும் காணமுடியவில்லை,. பிறகு எப்படி? ஜகத் ஸ்ருஷ்டி கர்த்தா ப்ரம்மாவினுடைய ஸ்ருஷ்டியில் இதுமாதிரி வேறு ஸ்ருஷ்டி தோன்றவேயில்லை.

71.அகஸ்திய முனி எங்காவது தங்குவார்; தனக்குத் தானே பேசிக் கொள்வார். சில இடங்களில் ஓடுவார். இடங்கள் சிலதில் அமருவார். சில இடங்களில் திரிவார். சில இடங்களில் தடுமாறுவார். பாக்யவான்.

72.ஸமபுத்தியை அடைந்ததுபோல், புண்ணியராசி தபோநிதி அகஸ்திய முனிவருக்கு உதயமாகும் சரத் சந்திரனைப்போல் விளங்கும் மஹாலக்ஷ்மி கண்முன் தென்பட்டார்.

73.தனது பிரகாசமாகிய ஜோதியினால் சூரியனைத் தோற்கடித்துக் கொண்டு, பகலிலேயே பகலுக்கே பிரகாசமாக அகஸ்த்யரின் தாப புஞ்சத்தைக் தணித்துக் கொண்டு,

74.விளங்கும் மஹாலக்ஷ்மியை அகஸ்திய ருஷி கண்டார்.

75.இரவில் தாமரை ஒடுங்குகிறது. அமாவாஸ்யையன்று சந்திரனும் எங்கேயோ சென்று விடுகிறான். க்ஷீரஸாகரமும் மந்தர பர்வதத்திற்கு பயப்படுகிறது. அதனால் லக்ஷ்மியானவள் தனக்கு முன்னால் கூறப்பட்ட நிவாஸஸ்தானங்களைத் திரஸ்கரித்துவிட்டு இங்கு வஸிக்க வந்தாள் போலும்!

76.எப்பொழுது பகவான் மாதவன் பூமியைத்தாரணம் செய்தாரோ அப்பொழுதிலிருந்து மானவதியாகிய லக்ஷ்மி தனது ஸகபத்னியான பூமிதேவியிடம் பொறாமைப்பட்டு இங்கு வந்து ஸ்திரவாஸம் செய்கிறாள் போலும்!

77.பன்றிரூபமான மஹாஸுரன் மூன்று லோகங்களையும் பயப்படுத்திக் கொண்டிருந்தான். அவனை

*நாசம் செய்து மஹாலக்ஷ்மி இந்த அழகான கோல்ஹாபூர் என்ற நகரத்தில் வந்து தங்கியிருக்கிருள்.*

*78. இப்பொழுது அகஸ்தியமுனிவர் அந்த மஹாலக்ஷ்மியின் ஸமீபத்தில் ஸந்தோஷத்துடன் வந்து ஸகலாபீஷ்டங்களேயும் தரும் லோகமாதாவாகிய மஹாலக்ஷ்மியை நமஸ்கரித்து வசனத் தொடர்களினுல் ஸந்தோஷப்படுத்தத் தொடங்கினுர்.*

*79. அகஸ்திய முனி கூறுவார்: கமலத்தை நிகர்த்த விசாலநேத்ரமுடையவளே! ஸ்ரீ விஷ்ணு ஹ்ருதய கமலவாஸினி, ஜகஜ் ஜனனீ, மாதா, கமலே! உன்னே நமஸ்கரிக்கிறேன். க்ஷீரஸாகரத்தில் பிறந்தவளே! ம்ருதுவான கமலத்தின் மத்யபாகத்தைப் போன்ற வர்ணமுடையவளே! சரணுகத ரக்ஷகி!.*

*80. லக்ஷ்மீ! தாங்கள் சந்தோஷப்படவேண்டும். ஏ மதனின் தாயே! விஷ்ணுவின் அரண்மனேயின் லக்ஷ்மீகரம் தாங்கள்தான். சந்த்ரனேப்போன்ற அழகானமுகத்தை உடைவளே! தாங்களே சந்த்ரனின் நிலவு. ஸூர்ய மண்டலத்தின் பிரபை. த்ரைலோக்யத்தின் சோபை; ப்ரணத பாலிநி! லக்ஷ்மி! தாங்கள் எப்பொழுதும் ப்ரஸன்னமாக இருக்கவேண்டும்.*

*81. ஹே தேவி! தாங்களே அக்னியின் தஹிக்கும் சக்தி, ப்ரம்மா தங்கள் அருளினுல்தான் இந்த விசித்ர உலகை (ஜகத்தை) ஸ்ருஷ்டி செய்கிருர். மஹாவிஷ்ணு தங்களுடைய ஸஹாயத்தினுல்தான் ஸமஸ்த உலகங்களேயும் காப்பாற்றுகிருர், ஹே ஸதா சரணுர்த்தி ஹரே லக்ஷ்மி! தாங்கள் ஸந்தோஷமடைய வேண்டும்.*

*82. ஹே அமலே! தாங்கள் இந்த ஜகத்தை வேண்டாமென்று தியாகம் பண்ணின பிறகுதான் ருத்ரதேவர் இதை ஸம்ஹாரம் செய்கிருர். அதனுல் தாங்களே ஸ்ருஷ்டி, ஸ்திதி, வினாசம் செய்கிறவர். தாங்கள் கார்ய, காரணரூபிணீ. ஹே லக்ஷ்மி! தங்களேப் பெற்ற பிறகே நாராயணரும் பூஜிக்கத்தகுந்தவராஞர். ஹே*

*சரணுகதவத்ஸலே ! தாங்கள் எப்பொழுதும் ஸந்தோஷமாக இருக்க வேண்டும்.*

*83. ஹே சுபே! உன்னுடைய கருணுகடாக்ஷம் விழுந்த ஒருவன் சூரனுகவும், குணவானுகவும், பண்டிதனுகவும், தந்யனுகவும் மாந்யனுகவும், பவித்ரனுகவும், குலீனனுகவும், ஸுஜீவனுகவும், ஸமஸ்த கலாபங்களுடன் கூடியனனுகவும் ஆகின்முன்.*

*84. ஹே! ஸர்வஸ்வரூபிணீ! அங்கு தாங்கள் க்ஷணநேரமாவது ஒரு இடத்தில் தங்கினீர்களானுல் அந்த இடத்துப் புருஷர்கள், யானே, குதிரைகள், ஸ்த்ரீகள், புற்கள், ஸரோவரம், தேவகுலங்கள், வீடு, அன்னம், ரத்னம், பக்ஷி, பசு, படுக்கை, பூமி இவைகளெல்லாம் லக்ஷ்மீகரமாகிறது. மற்ற இடத்து ஜனங்கள் ஜகத்தில் ஸ்ரீமானுக இருக்க முடியாது.*

*85. ஹே லக்ஷ்மி! தங்கள் கரகமலம் பட்ட ஸகலவஸ்துகளும் உலகில் பவித்ரமாகின்றன. எதைத் தாங்கள் விட்டுவிடுகிறீர்களோ அப்பொருள் அசுத்தமாகின்றது. ஹேவிஷ்ணுபத்நி! கமலாலயே! ஸ்ரீ கமலே! பத்மே! ரமே! நளினஸமமான கரங்களேயுடையவளே! இந்திரே, விஷ்ணுப்ரியே! உன்னுடைய பன்னிரண்டு நாமங்களேயும் ஜபிப்பவர்களுக்கு துக்கம் எப்படி வரும்? எங்கு தங்கள் பெயர் ஒலிக்கின்றதோ அங்கு ஸர்வ மங்களங்களும் ஸாந்நித்யமாகின்றன.*

*86. லக்ஷ்மி! ஸ்ரீ கமலே! கமலாலயே! க்ஷீரஸாகரத்தில் பிறந்தவளே! அம்ருதகுடும்பத்தைக் கையில் ஏந்தியவளே! உன் நாமத்தை ஜபிப்பவர்கள் ஒருநாளும் துக்கத்தில் ஆழமாட்டார்கள்.*

*87. இந்தப் பிரகாரமாக பத்னியுடன் கூட அகஸ்தியமுனிவர் ஹரிப்ரியை, பகவதி மஹாலக்ஷ்மியை ஸ்துதி செய்து ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார்.*

*88. லக்ஷ்மீ கூறுவாள்; மித்ராவருணபுத்ர, அகஸ்திய! எழுந்திருப்பா எழுந்திரு. உனக்கு மங்களமுண்டாகட்டும். சுபவ்ரதே! பதிவ்ரதே!*

*89. லோபாமுத்ரே! நீயும் எழுந்திரம்மா, உங்கள் ஹ்ருதயாபீஷ்டங்களை பிரார்த்தித்துக் கொள்ளுங்கள். ஹே மஹாபாகே! பவித்ரே! ராஜபுத்ரீ நீ.*

*90. இங்கு அமருவாய். உன்னுடைய பதிவ்ரதா லக்ஷணங்களை ஸூசிப்பிக்கும் உனது அங்கங்களினால், உனது பரம பவித்ர வ்ருத்தங்களினாலும் அஸூராஸ்திரங்களினாலும் ஸந்தாபம் அடைந்திருக்கும் இந்த சரீரத்தை சீதளமாக்கிக் கொள்ள விரும்புகிறேன்.*

*91. விஷ்ணுப்ரியையான லஷ்மி! இவ்வாறு கூறிவிட்டு முனி பத்நியை ஆலிங்கனம் செய்து கொண்டு பரமஸந்தோஷத்துடன் அநேக ஸௌபாக்யங்களை அளிக்கும் ஆபரணங்களினால் அலங்கரித்து விட்டாள்.*

*92. லக்ஷ்மி பிறகு கூறினாள்; முனீஸ்வரா! உன்னுடைய ஹ்ருதய தாபத்தின் காரணம் நானறிவேன். காசியினுடைய விரஹதாபம் சேதனத்துடன் இருக்கும் ஸகல பிராணிகளையும் துன்புறுத்தத்தான் செய்யும்.*

*93. பூர்வகாலத்தில் தேவதேவர் விச்வேஸ்வரர் மந்த்ராசலத்திற்குச் சென்றிருந்தார். அச்சமயம் அவருக்கும் காசியின் வியோகத்தினாலே இந்த மாதிரி நிலைதான் ஏற்பட்டது.*

*94. சூலபாணி உடனே காசியின் நிலைமையை அறிவதற்காக முறையே, ப்ரம்மா, கேசவன், பூதகணங்கள், கணேசன் பாக்கி தேவதைகள் முதலானவர்களைக் காசிக்கு அனுப்பினார்.*

*95 அந்த எல்லா தேவதைகளும் அடிக்கடி காசியின் குண விசேஷங்களைப் பார்த்து ஆராய்ந்து இன்று வரை ஸ்திரமாக அங்கேயே தங்கி விட்டார்கள். உண்மையில் அது மாதிரி நகர் எங்குள்ளது?*

*96.* இந்த வார்த்தையைக் கேட்டு பாக்யவானுன அகஸ்தியர் பக்தியுடன் நமஸ்கரித்து மஹாலக்ஷ்மியிடம் கூறினுர்-

*97.* நீங்கள் எனக்கு வரம் கொடுக்க விரும்பினீர்களாஞல் நானும் வரத்திற்குத் தகுதியுடையவஞுல் எனக்குத் திரும்பவும் காசிவாஸம் கிடைக்கட்டும். அந்த வரத்தைத் தாருங்கள்.

*98.* எவனெருவன் என்னுல் துதிக்கப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தைப் பக்தி பூர்வமாக ஸ்துதிக்கிருனே அவனுக்கு ஒரு பொழுதும் ஸந்தாபம், தரித்ரம்,

*99.* இஷ்டஜன வியோகம், ஸம்பத்துநாசம் இவைகள் ஏற்படக் கூடாது. எப்பொழுதும் எங்கும் அவனுக்கு ஜயம் உண்டாக வேண்டும்.

*100.* வம்சச் சேதம் ஏற்படக்கூடாது. லக்ஷ்மி கூறினுள். ஹேமுனி ! நீ என்ன சொல்கிருயோ அது நடக்கும்.

*101.* இந்த ஸ்த்தோத்திரத்தைத் துதிப்பவர்கள் முன்னுல் நானே ப்ரத்யக்ஷமாகிறேன். எந்த க்ருஹத்தில் இந்த ஸ்த்தோத்திரம் படிக்கப்படுகிறதோ அந்த இடத்தில் தரித்திரம் உள்ளே நுழையாது. யானே, குதிரை, பசு இவைகளின் சாந்திக்காகவும் இந்த ஸ்தோத்திரம் படிக்கப்பட வேண்டும்.

*102.* இந்த ஸ்தோத்திரத்தை போஜபத்ரத்தில் எழுதி குழந்தைகளுக்குக் கட்டிஞல் பாலக்ரஹதோஷத்திற்கு சாந்தி ஏற்படும். அபவித்ரமானவர்களுக்கு இந்த ஸ்தோத்திரத்தைக் கொடுக்கக் கூடாது.

*103.* என்னுடைய இந்தக் கருவைப் போன்ற ரஹஸ்யத்தை மிகவும் ப்ரயத்தனத்துடன் ரக்ஷிக்க வேண்டும். ச்ரத்தை யற்றவர்களுக்கு இந்த (ரஹஸ்யத்தை) ஸ்தோத்திரத்தைக் கொடுக்கக் கூடாது.

*104.ஏ பிராம்மஞ்ஞோத்தமா! இதைக் கேள்; வருகிற 29வது த்வாபர யுகத்தில் நீ நிச்சயமாக வ்யாஸ பகவானுக ஆவாய்.*

*105.அப்பொழுது வேதங்களை விபாகித்துப் புராண தர்ம சாஸ்திரங்களை உபதேசம் செய்து கொண்டு வாராணஸியை அடைந்து உன்னுடைய அபீஷ்ட ஸித்தியின் லாபத்தை நீ அடைவாய்.*

*106.இப்பொழுது ஒரு ஹிதமான விஷயத்தைச் சொல்கிறேன். அதைச்செய்ய, இங்கிருந்து இன்னும் சற்று தூரம் முன்னேறிப் போவாயானல் அங்கு பகவான் கார்த்திகேயரை ஸந்திப்பாய்.*

*107.ஏ ப்ரம்ம ஸ்வரூபரே, அங்கு ஷண்முகப்பிரபு சிவபிரானுல் திருவாய் மலர்ந்தருளப்பட்ட வாராணசியின் ரஹஸ்யத்தைக் கேட்பாய். அதனுல் உனக்கு ஸந்தோஷம் உண்டாகட்டும்.*

*108.அகஸ்திய முனிவர் இந்தவிதமான வரத்தைப்பெற்று மஹாலக்ஷ்மியை வணங்கிவிட்டு எங்கு மயில் வாஹநர் குமாரஸ்வாமி வஸிக்கிருரோ, அவ்விடத்தை நோக்கிப் பிரயாணம் ஆனுர்.*

**இவ்விதம் ஸ்காந்த புராணம் நான்காவதான காசீகண்டம் பூர்வார்த்தத்தில் அகஸ்திய ப்ரஸ்தான வர்ணனம் என்ற ஐந்தாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.**



# அத்யாயம் 6

*வேதவ்யாஸர் கூறுகிறூர் :- ஹே மஹாபாகரே, ஸௌதரே! காதுக்கு இனிமையளிக்கும் கதையைக் கேளுங்கள். இதை மனதில் இருத்தி உலகில் மனிதர்கள் ஸமஸ்த புருஷார்த் தங்களேயும் அடைகிறூர்கள்.*

*1. ஸஹதர்மிணியுடன் கூட அகஸ்திய முனிவர் மஹாலக்ஷ்மியின் தரிசனத்துக்குப் பிறகு அந்த ஆனந்தரூப அம்ருததாரா நதியில் ஸ்நானம் செய்து பரமானந்தம் அடைந்தார்.*

*2. ஓ அக்னிகுண்டத்தில் பிறந்தவரே! நிர்மல ஹ்ருதயரே! சூதபுராதத்வத்தை அன்வேஷணம் செய்தவர்கள் கூறும் கதையைக் கேளுங்கள்-*

*3. எந்த ஸாதுக்களின் ஹ்ருதயத்தில் பரோபகாரம் விழித்தெழுகிறதோ அவர்களுடைய ஆபத்துக்கள் நசிக்கின்றன. நிமிஷத்துக்கு நிமிஷம் ஸம்பத்து விருத்தியாகிறது.*

*4. பரோபகாரச் செயல் தூய்மையான பலன் கிடைக்கிறது. அந்த சுத்தி தீர்த்த ஸ்நானத்திஞல் கிடைக்காதது மிகுந்ததான தபஸ்ஸிஞலும் கிடைக்காது.*

*5. பரோபகாரமான தர்மத்தையும் தானதபாதிகளிஞல் ஏற்படும் தர்மத்தையும் ப்ரம்மா தராசில் வைத்து நிறுத்த பரோபகார தர்மமே (தட்டு) தாழ்ந்தது.*

*6. ஸமஸ்த சாஸ்த்ரீய வாக்ஜாலங்களே கடைந்தெடுத்த பரோபகாரத்தைப் போன்ற பெரிய தர்மம் கிடையாது. பர அபகாரத்தைப் போன்ற பெரிய பாபமும் கிடையாது.*

*7. பார் உபகாரமே ஜீவநாடியாக விளங்கும் அகஸ்தியமுனிவர் இதற்கு உதாரணம். காசியைப் பிரிந்த துக்கமெங்கே? ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மி தரிசனம் எங்கே?*

*8. வாழ்க்கையும் அதில் ஏற்படும் ஸுகபோக தனங்களும் யானையின் காதுகளின் நுனியைப் போல சஞ்சலமானவை. இதனால் புத்திமான்கள் பரோபகாரமே செய்ய வேண்டும்.*

*9. மஹாலக்ஷ்மியின் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் உலகில் மனுஷ்யர்கள் அளவிலா ஸம்பத்துகளை அடைகிறார்கள். அகஸ்திய முனி அதே மஹாலக்ஷ்மியை ப்ரத்யக்ஷமாகத் தரிசனம் செய்து க்ருதக்ருத்யர் ஆனார் என்றால் அது பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது?*

*10.இதன் பிறகு அவர்கள் சுயேச்சையாக யாத்திரை செய்து கொண்டு வரும்போது தூரத்தில் வரும்போதே ஸ்ரீ சைலத்தைப் பார்த்தார்கள். அங்கு ஸாக்ஷாத் த்ரிபுராந்தகர் வாஸம் செய்கிறார்.*

*11.சந்தோஷ சித்தராய் முனிவர் பத்தினியிடம் கூறினார்: காந்தே! நீ இங்கேயே சற்று நின்று மனோஹரமும் ஶோபையும் பொருந்திய*

*12.ஸ்ரீ சைலத்தின் சிகரத்தைப்பார். அதைத் தரிசனம் செய்தவர்களுக்குப் புனர்ஜன்மம் கிடையாது.*

*13.இந்தப் பர்வதம் இருபத்துநாலு யோஜனை விஸ்தாரம், இந்தப் பர்வதமே சிவலிங்கமயம். அதனால் இதைப் பிரதக்ஷிணம் செய்ய வேண்டும்.*

*14.இதைக் கேட்டதும் லோபாமுத்ரை கூறினாள்- ஹேநாதா! நீங்கள் உத்தரவு தந்தால் நான் ஒன்று கேட்கிறேன். பதியின் உத்தரவு இல்லாமல் பேசும் பெண் பதிதையாகிறாள்.*

*15.அகஸ்திய முனி கேட்கிறார்- தேவீ! என்ன சொல்ல விரும்புகிறாய்? தயக்கமில்லாமல் கேள். உன்னைப் போன்ற பெண்களின் வார்த்தையினால் பதிக்கு வருத்தம் ஏற்படாது. அதன்பிறகு,*

*16.லோபாமுத்ராதேவி முனிவரை வணங்கி எல்லோருக்கும் ஹிதத்தைக் கொடுக்கக்கூடியதும் மன*

*சஞ்சலத்தைப் போக்கக் கூடியதுமான கேள்வியைக் கேட்டாள்.*

*17.லோபாமுத்ரை கூறுவாள்- ஸ்ரீ சைல சிகரத்தைத் தரிசனம் செய்வதால் புனர் ஜன்மம் கிடையாது என்பது உண்மையானுல் காசி வாஸத்தை ஏன் விரும்ப வேண்டும்?*

*18.அகஸ்தியர் கூறுகிருர்: ஹே ஸுந்தரீ! நீ சரியான கேள்வியைக் கேட்டாய். ஹே நிர்மலே! இந்த விஷயத்தில் தத்துவ சிந்தனம் செய்யும் முனிவர்கள் அடிக்கடி எந்த முடிவைக் கூறுகிருர்களோ அந்த முடிவைக் கேள்.*

*19.முக்தி க்ஷேத்ரங்கள் அநேகம் இருக்கின்றன. அவைகள் விஷயமாக முனிவர்கள் ஸ்திரப்படுத்திவைத்த உண்மைகளெல்லாம் நான் சொல்கிறேன். மனம் ஒன்றிக் கேள்.*

*20.முதலாவது ப்ரம்மப் பிரஸித்தமான தீர்த்த ராஜ ப்ரயாகை. எல்லாத் தீர்த்தங்களிலும் மேலாக இது விரும்புவதைக் கொடுக்கும் தர்ம அர்த்த காம மோக்ஷதாதா.*

*21. நைமிசாரண்யம், குருக்ஷேத்ரம், ஹரித்வாரம், அவந்தி, அயோத்யா, மதுரா, த்வாரகை, கங்கா*

*22.ஸரஸ்வதி, ஸிந்து நதி ஸங்கமம், கங்காஸாகர ஸங்கமம், காஞ்சி, ப்ரம்மபுரி, ஸப்த கோதாவரி,*

*23.காலஞ்சர், பிரபாஸ், பதரிகாஸ்ரமம் மஹாலயம், அமரகண்டகம், ஜகந்நாத்.*

*24.கோகர்ணம், ப்ருகு கச்சம், ப்ருது துங்கம், புஷ்கரம், ஸ்ரீ பர்வதம், தாராதீர்த்தம் இவைகள் பாஹ்யதீர்த்தங்கள்.*

*25.ஸத்யம் முதலானவைகள் மானஸ தீர்த்தங்கள். ஏ! ப்ரியே! இந்தத் தீர்த்தங்கள் மோக்ஷத்தைக் கொடுக்க வல்லவை.*

*26.சாஸ்திரமே கயையைப் பற்றிக் கூறியிருக்கிறது. அங்கு ச்ராத்தம் செய்தால் பித்ருக்களுக்குத் திருப்தியேற்படும். பிதா, பிதாமஹர்களுடைய ருணத்திலிருந்து அவர்களுடைய புத்திர பௌத்திரர்கள் விடுபடுவார்கள். ரிஷிபத்னி கூறுவாள்:*

*27.ஸத்யம் முதலிய மானஸ தீர்த்தம் என்றீர்களே அவை எவை? அவைகளையும் தயை செய்து கூறவும்.*

*28.ஏ பாவமற்றவளே! எல்லா மானஸ தீர்த்தங்களையும் கூறுகிறேன் கேள். அவைகளில் ஸ்நானம் செய்தால் நரர்கள் மோஹமடைவார்கள். பரமகதி கிடைக்கும்.*

*29.ஸத்யம், பொறுமை, இந்திரிய நிக்ரஹம் பிராணிகளிடத்தில் தயை, நிர்மல உள்ளம், நன்னடத்தை, தானம், சந்தோஷம், ப்ரம்மசர்யம், இனியபேச்சு, ஞானம், தைர்யம், தபஸ் இவைகள் ஒவ்வொன்றும் தீர்த்தங்கள். மனஸ் சுத்தி இந்தத் தீர்த்தங்களுக்கு மேலான தீர்த்தம்.*

*30-33.கேவலம் ஜலத்தில் மூழ்குவது மாத்திரம் ஸ்நானம் அல்ல. பாஹ்யேந்த்ரியங்களை அடக்குவது என்ற ஸ்நானமே உண்மையில் ஸ்நானமாகும். எவனுடைய ஹ்ருதயம் நிர்மலமாக இருக்குமோ அவனே பவித்ரன். லோபி, பரநிந்தை செய்பவன், கொடூரமனமுள்ளவன், டம்பன், காமுகன் இவர்கள் எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தாலும் மலினமானவன்தான்.*

*34-36.மனிதன் சரீரத்திலுள்ள அழுக்கைப் போக்கினால் மட்டும் சுத்தமாக மாட்டான். மன மாசு விளக்குபவன்தான் யதார்த்தத்தில் சுத்தனாவான். அட்டைகள் ஜலத்திலேயே பிறக்கின்றன. அங்கேயே சாகின்றன. அவைகள் ஸ்வர்கத்திற்கும் போவதில்லை. அவைகளுக்கு சித்தசுத்தி இருக்கிறது என்று கூறமுடியுமா? விஷய போகங்களில் இருந்து நிர்மலமான மனதே சுத்த மனம்.*

*37.சித்தம் என்பது நமது அந்தரங்கப் பொருள். அது கெட்டு விட்டால் தீர்த்தஸ்ஞானங்களிஞல் சுத்தமாகாது. நூறு முறை அலம்பிஞலும் மதுக்குடம் எப்போதுமே அசுத்தமாக இருப்பது போல்,*

*38.தானம், யக்ஞம்; தபஸ், சுத்தி, தீர்த்தயாத்திரை, தர்ம புராணங்களைக் கேட்டால் இவைகளெல்லாம் மனேபாவம் சுத்தமாக இல்லையாஞல் தீர்த்தங்களிஞல் என்ன பலன்?*

*39.ஜிதேந்த்ரியனுன புருஷன் ஒருவன் எங்கிருந்தாலும் அங்கேயே அவனுக்கு ஒரு க்ஷேத்ரமாகிறது, நைமிசாரண்யம், புஷ்கரம் எல்லாம் கிடைத்த மாதிரியே.*

*40.த்யானத்திஞல் பவித்ரமாகி ராகத்வேஷமலத்தைத் தூர விலக்கிவிட்டு ஞானஜலம் நிரம்பிய மானஸ தீர்த்தத்தில் எவன் ஸ்நானம் செய்கிருனே அவனே பரமகதியை அடைகிருன்.*

*41.ஹே தேவி! நான் உன்னிடம் இந்த எல்லா மானஸ தீர்த்தங்களின் மகிமைகளையும் பற்றிக் கூறினேன். இப்பொழுது பூமியில் இருக்கும் தீர்த்தங்களின் மகிமைகளைப்பற்றிக் கூறுகிறேன் கேள்.*

*42.சரீரத்தில் சில சில அங்கங்கள் பவித்ரமாக இருப்பது போல பூமியிலும் சிலசில இடங்கள் புண்ணியமானவைகள்.*

*43.பூமியினுடைய விசித்ரப்ரபாவம் ஜலத்தினுடைய வேகம், முனிவர்கள் வசித்த இடமே, புண்ணிய தீர்த்தங்களின் மகிமைக்குக் காரணம்.*

*44.அதஞல் எவனெருவன் மானஸ தீர்த்தத்திலும், பூமியிலுள்ள இந்தப் புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்கிருனே, அவன் பரம உத்தம கதியை அடைகிருன்.*

*45.எந்த மனிதன் மூன்று இரவு உபவாஸம் இருக்கும் விரதம், தீர்த்த யாத்திரை, ஸ்வர்ண தானம், கோதானம்*

*இவைகளைச் செய்யவில்லையோ, அவன் அடுத்த ஜன்மத்தில் தரித்ரன் ஆகிறான்.*

*46.தீர்த்த ஸேவனத்தினால் என்ன பலன் கிடைக்குமோ, அதுபோல் பலன் அக்னிஷ்டோமாதி யக்ஞங்கள் செய்யினும் கிடைப்பதில்லை.*

*47.எவனுடைய மனம், கை, கால்கள் நியமத்துடன் இருக்கின்றனவோ, எவன் வித்தை, தபஸ், கீர்த்தி இவைகளுடன் கூடியவனாக இருக்கிறானோ, அவன் தீர்த்தயாத்திரை செய்தால் அதன் பலனை அனுபவிக்கிறான்.*

*48.எவன் தானம் வாங்கவில்லையோ, எந்த வேளையிலும் ஸந்தோஷமாக இருக்கிறானோ, அஹங்காரம் இல்லாமல் இருக்கிறானோ, அவன் தீர்த்த பலனை அடைகிறான்.*

*49.எவன் ஜம்பம் இல்லாமலும்; கர்ம ப்ரவ்ருத்தியில்லாமலும் அரைவயிற்று உணவிலும் திருப்தியாக இருக்கிறவனும் ஸம்பூர்ண ஸங்கங்களிலிருந்து விலகியிருக்கிறானோ, அவன் தீர்த்த யாத்திரை பலனையனுபவிக்கிறான்.*

*50.கோபம் இல்லாதவன் நிர்மலபுத்தியுள்ளவன் உண்மை பேசுபவன்; த்ருடவ்ருதன், தங்களைப் போலவே பிராணிகளையும் த்ருடபுத்தியுடன் நோக்குகிறவன் எவனோ அவன் தீர்த்த பலனை அனுபவிக்கிறான்.*

*51.தீரத்தன்மையுடனும், சிரத்தை, ஏகாக்ரசித்தம் இவைகளுடன் எவன் தீர்த்தாடனம் செய்கிறானோ அவன் பாபியானாலும் சுத்தனாகிறான். அப்படியிருக்கும் புண்ணியவானைப் பற்றி என்ன சொல்லவிருக்கிறது?*

*52.தீர்த்தாடனம் செய்பவன் பசு, பக்ஷி இவைகளாகப் பிறக்க மாட்டான். துக்கப்படவும் மாட்டான். ஆனால் ஸ்வர்கம் மோக்ஷம் இவைகளை அடைகிறான்.*

*53.சிரத்தையில்லாதவன், இயற்கையாகவே பாபம் செய்பவன், நாஸ்திகன், ஸந்தேஹி, சாக்கு சொல்பவர்கள் தீர்த்த புண்ணிய பாகியாக மாட்டார்கள்.*

*54.எவன் சீதம், உஷ்ணம் ஸுகம், துக்கம் ஆதி இரட்டைகளை ஸஹித்துக் கொண்டு உசிதமான விதியுடன் தீர்த்த யாத்திரை செய்கிருனே அந்த தீரன் ஸ்வர்க லோகத்தையடைகிருன்.*

*55. தீர்த்தயாத்திரை செய்ய விரும்பும் மனிதன் முதல் நாள் க்ருஹத்தில் உபவாஸம் இருக்க வேண்டும். பிறகு*

*56.கணேச பூஜை, பித்ரு சிராத்தம், ப்ராம்மண போஜனம், ஸாதுக்கள் சேவை, இவைகளை முடிந்த மட்டிலும் செய்யவேண்டும். பிறகு பாரணை செய்துவிட்டு நியமத்துடன் த்ருடசித்தத்துடன் யாத்திரை செய்யவேண்டும், திரும்பி வந்ததும் சிராத்தம் செய்ய வேண்டும். அப்பொழுது தீர்த்தயாத்திரையினுடைய ஸம்பூர்ண பலனும் கிடைக்கிறது.*

*57.தீர்த்த யாத்திரை ஸமயம் பிராம்மணர்களை பரீக்ஷிக்கக் கூடாது. அன்னத்தை விரும்புகிறவனுக்கு உணவு அளிக்க வேண்டும். ஸத்துமா, கஞ்சி இவைகள் இல்லாமல் அன்னம், பாயஸம், திரட்டுப் பால்* இவைகளால் பிண்டதானம் செய்யவேண்டும். வெல்லம் எள்ளுருண்டையின் பிண்டதானம் ரிஷிகளுக்கு உகந்தது.

*58.தீர்த்தத்தில் அர்க்யம் ஆவாஹனம் இல்லாமல் சிராத்தம் நிச்சயம் செய்யவேண்டும்.*

*59.சாஸ்திரம் விதித்த நேரமோ, காலம் இல்லாதகாலமோ தீர்த்தஸ்தானத்தில் சென்ற போதிலும் ச்ராத்தம் தர்பணம் முதலியவைகள் செய்யவேண்டும்.*

*60.எந்த பிரயோஜனத்திலுைம் தீர்த்த ஸ்தானத்திற்குப் சென்று தீர்த்த ஸ்னனம் செய்து கொண்டால் ஸ்னனம் செய்த பலன் கிடைக்கும்.*

*61.ஆனால் தீர்த்தியாத்திரையில் பலன் கிடைக்காது; தீர்த்த யாத்திரையில் பாபிகளுக்கும் பலன் ஏற்படும்; அப்படியிருக்க சிரத்தையுடன் தீர்த்த யாத்திரை செய்பவனுக்கு பலன் கிடைத்தே தீரும்.*

*62.எவன் பிறருக்காக தீர்த்தஸ்தானத்திற்குப் போகிறானோ அவன் பதினாறில் ஒருபங்கு புண்ணியம் பெறுகிறான். எவன் ஏதாவது நிமித்தமாகப் போகிறானோ அவனுக்கு பாதிபலன் கிடைக்கிறது.*

*63.தர்ப்பையினால் பிரதிமூர்த்திசெய்து தீர்த்தஸ்தானத்து ஜலத்தினால் நீராட்டினாலும், அவனுக்கு ஒரு பங்கு பலன் கிடைக்கிறது.*

*64.தீர்த்தத்தில் சென்று உபவாசம் முண்டனம் செய்ய வேண்டும். ஏனென்றால் முண்டனத்தினால், சிரஸினால் செய்த பாபங்கள் சென்றுவிடும்.*

*65.எந்த தினம் தீர்த்த ஸ்தானத்தில் போய் சேர வேண்டுமோ அதற்கு முதல்நாளே உபவாசம் இருந்து ச்ரார்த்தம் செய்ய வேண்டும்.*

*66. தீர்த்தத்தைப் பற்றிச் சொல்லும்போதே தீர்த்த யாத்ரையில் சரீரத்தால் செய்யும் கார்யங்களைப்பற்றி முன்னாலேயே உனக்குக் கூறியிருக்கிறேன். அதே ஸ்வர்க்க ஸாதனம் மோக்ஷத்திற்கு உபாயம்.*

*67.காசீ, காஞ்சீ, மாயாபுரி, அயோத்யா, த்வாரவதீ மதுரா, அவந்திகா, இந்த ஏழு ஊர்களும் உலகில் மோக்ஷம் தரவல்லன.*

*68.மேலும் ஸ்ரீ சைலம் மோக்ஷத்தைக்* கொடுக்கவல்லது. கேதார க்ஷேத்ரம் அதைவிட அதிகம். ஸ்ரீ சைலம், கேதாரம் இவைகளைவிட பிரயாகை அதிக முக்தி அளிக்கவல்லது.

*69.தீர்த்தராஜ் ப்ரயாகையை விட* காசியாகிய அவிமுக்த க்ஷேத்ரம் அதிகம் பலனைத் தரக்கூடியது.

*அப்படியே ஸாயுஜ்யம் முதலிய முக்தி அவிமுக்த க்ஷேத்ரத்தில்தான் கிடைக்கும். வேறு எங்கும் இல்லை இது நிச்சயம்.*

**70.அந்நிய முக்தி க்ஷேத்ரங்களைவிட காசி, பிராப்தியைத்தரும். காசி கிடைத்தால் தான் நிர்வாணபதம் கிடைக்கும். அல்லாமல் கோடிதீர்த்தங்களை ஸேவித்தாலும் நிர்வாணபதம் கிடையாது.**

*71.இந்த விஷயமாய் விஷ்ணுவின் தூதர்கள் சிவசர்மா எனும் பிராம்மணருக்குக் கூறினார்கள். ஒரு பழமையான இதிஹாஸத்தைக் கூறுகிறேன்.*

*72.எவனொருவன் இந்தத் தீர்த்த அத்யாயத்தை கவனமான மனதுடன் கேட்கிறானோ, அல்லது ச்ரத்தா பக்தியுடன்கூடிய ப்ராம்மணருக்கோ; தர்ம சீலனான க்ஷத்ரியனுக்கோ, ஸத்ய வழி செல்லும்வைச்யனுக்கோ, த்விஜாதி பக்த ப்ராம்மணனிடமோ க்ஷத்ரியனிடமோ பக்தியுள்ள சூத்திரனுக்கோ சொல்லுகிறானோ அவனுடைய பாபங்கள் அகன்று விடுகின்றன.*

*73.இந்த விதமாக லோபாமுத்ரைக்கு அகஸ்தியர் கூறத் தொடங்கினார்,*

*இவ்விதம் ஸ்ரீஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டம் பூர்வார்த்த பாஷாடீகாவான தீர்த்தயாத்திரை வர்ணனம் என்னும் ஆறுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்தியாயம் 7

*அகஸ்திய முனிவர் கூறுகிருர்: மதுராபுரியில் ப்ராம்மணோத்தமரான ஒரு பிராம்மணன் இருந்தார். அவருக்கு மஹா தேஜஸ்வியான சிவசர்மா என்று ஒரு புத்திரர் இருந்தார்.*

*1. வேத அத்யாயனம் செய்து, அதன் தத்வார்த்தத்தை அறிந்து, தர்ம சாஸ்திரங்களைப் படித்து*

*2. புராணங்களை அறிந்து வேதத்தின் ஆறு அங்கங்களையும் அத்யாயனம் பண்ணி, தர்க்க சாஸ்திரத்தையும் அறிந்து, பூர்வம், உத்தரம் மீமாம்ஸாதிகளை ஆரார்ய்ந்து.*

*3. தனுர் வேதத்தில் தேர்ந்து ஆயுர் வேதத்தில் விசாரம் செய்து, கந்தர்வ வேதமான நாட்டிய வேதத்தில் பரிச்ரமித்து அநேக அர்த்த சாஸ்திரங்களையறிந்து - யானை, குதிரைகளைப் பற்றி அனுபவ பூர்வமாக ஆராய்ந்து,*

*4. அறுபத்தி நான்கு கலைகளிலும் நிபுணத்வம் வாய்ந்து மந்திர சாஸ்திரத்தில் விலக்ஷணமாகத் தேர்ந்து, அநேக தேச பாஷைகளில் நிபுணனுய் அநேக தேசத்து இலக்கிய ஞானங்கள் ஸம்பாதித்து விட்டு, பிறகு,*

*5. தர்ம பூர்வமாக பணம் ஸம்பாதித்து அநேக போகங்களை அனுபவித்தான். பிறகு, அழகும், குணமும் உள்ள புத்திரர்களைப் பெற்று அவர்களுக்கு ஸம்பத்துகளை பங்கிட்டுக் கொடுத்து விட்டு,*

*6. பின் யெளவனத்திற்குள்ள நிலையில்லாமையை எண்ணி உலகப் பிரசித்தமான காதுகளின் அருகில் இருக்கும் கேசம் நரைத்து கிழத்தன்மை வெளிப்படுவதைப் பார்த்து பிராமணோத்தமஞன சிவசர்மா மிகவும் சிந்தாகுலஞனன்.*

*7. ஐயோ! ஐயோ! படித்துப் படித்து பணம் சம்பாதித்து எனது காலம் கழிந்துவிட்டதே, ஆனுல் கர்மக்ஷயம் செய்யும் மஹேஸ்வரனை ஆராதிக்கவில்லையே.*

*8. எல்லா பாபங்களையும் நசிப்பிக்கும் ஸர்வவ்யாபி ஹரியையும் நான் ஸந்தோஷப்படுத்தவில்லையே. மனுஷ்யன், மனுஷ்யர்களுடைய எல்லாக் காமங்களையும் அளிக்கின்ற கணேசனையும் நாம் பூஜை செய்யவில்லையே.*

*9. அந்தகார ஸமூஹத்தை விநாசம் செய்யும் ஸூர்யனையும் நான் அர்ச்சிக்கவில்லையே. ஸம்ஸார பந்த விமோசினி மஹா மாயையான ஜகத்தாத்ரியையும் நான் த்யானிக்கவில்லையே.*

*10. செழிப்பைத் தரும் தேவதா கணங்களையும் ஸமஸ்த யக்ஞங்களின் மூலமாக த்ருப்திப்படுத்தவுமில்லயே. பாவங்களின் சாந்திக்காகத் துளசி வனத்தையும் ஸேவிக்கவில்லையே.*

*11.இங்கு பரலோகத்திலும் ஏற்படும் ஆபத்துகளையெல்லாம் கடக்கக் கைதூக்கிவிடும் பிராம்மணர்களுக்கு அறுசுவையுணவளித்து ஸந்தோஷப்படுத்தவில்லையே.*

*12. பாதை ஓரங்களில் புஷ்பங்களும் பழங்களும் மிகுந்திருக்கும் வழுவழுப்பான இலைகளின் தளிர்களையுள்ள நல்ல நிழலைத் தருகிற மரங்களையும் வரிசையாக நடவில்லயே. அவைகள் இந்த லோகத்திலும் அந்த லோகத்திலும் மிகப் பலன்களைத் தருகின்றன.*

*13. இவ்வுலகிலும், பர உலகிலும் அழகான வாழ்வையளிக்கிறது. கன்னிகைகள், ஸுமங்கலிகளுக்கு அவரவர் மனதுக்குகந்தபடி வஸ்த்ரங்கள், ரவிக்கைகள் இவையளித்து ஒவ்வொரு அங்கங்களையும் ஆபரணத்தினுல் அலங்கரிக்கவில்லையே.*

*14. நான் யம லோகத்தைப் போக்கடிக்கும் செழிப்பான நிலங்களை*

*15. பிராம்மணனுக்கு தானம் செய்யவில்லயே. பரம பாப ஹாரி ஸ்வர்ணமும் பிராம்மணோத்தமர்களுக்கு அளிக்கவில்லையே.*

*16. இந்த ஜன்மத்தில் சீக்கிரத்தில் பாபத்தைப் போக்கக் கூடிய ஏழு ஜென்மம் வரை ஸுகத்தை அளிக்கக்கூடிய அலங்கரிக்கப் பட்ட கன்றுகளோடு கூடிய பசுக்களை ஸத்பாத்திரங்களுக்கு அர்ப்பணிக்கவில்லயே. பிறகு மாதாவின் கடனிலிருந்து விடுபடக் கிணறு குளங்களை வெட்டவில்லையே. ஸ்வர்க்க மார்கங்களைக் காட்டும் அதிதிகளுக்கு சந்தோஷம் அளிக்கக்கூடிய ஸாதனங்களைக் கொடுக்கவில்லையே.*

*17. நான் யமபுரி யாத்திரையிலிருந்து ஸ்வர்க்கமார்கம் திரும்புவதற்கு நிழலளிக்கும் குடையையும், மிதியடிகளும், கமண்டலங்கலும் யாத்திரை செய்தவர்களுக்கு தானம் செய்யவில்லயே?*

*18. இங்கு ஸுகம் அடையும் பொருட்டும் பரலோகத்தில் ஸ்வர்க்க கதிகளையடையும் பொருட்டும் பெண்களின் விவாகத்திற்கான தனம் அர்ப்பணித்தது கிடையாது.*

*19. இரு உலகங்களிலும் ருசியான அன்னபானத்தையளிக்கக் கூடிய வாஜபேயயக்ஞத்தைச் செய்து, அவப்ருத ஸ்நானமும் லோபவசத்தால் பண்ணுமல் போனேன்.*

*20. எந்த ஓர் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தால் ஓர் உலகத்தையே ஸ்தாபனம் செய்த பலன் கிடைக்குமோ அந்த லிங்கத்தை நான் தேவாலயம் கட்டி அதில் பிரதிஷ்டை செய்யவுமில்லையே.*

*21. ஸகல ஸம்பத்தும் அருளும் விஷ்ணுவின் கோவிலும் கட்டவில்லை. சூரியன் கணேசன் இவர்களது ப்ரதிமையும் நிர்மாணிக்க வில்லை.*

*22. அந்த மூர்த்திகளை நிர்மாணித்தால் அவலக்ஷணம், துர்பாக்யம் நம் அருகே அண்டாது. அப்படிப்பட்ட பார்வதி மஹாலக்ஷ்மியின் சித்திரங்களையும் வரைந்ததில்லையே.*

*23. பிராம்மணர்களுக்கு திவ்ய வஸ்த்ரங்கள் கிடைக்க வேண்டுமென்ற எண்ணத்தினுல் அதி சூக்ஷ்ம பிரகாசமான மெல்லிய விசித்ரமான வஸ்த்ரங்களேயும் தானம் பண்ணவில்லேயே.*

*24. எல்லா பாபங்களும் க்ஷயமாகும் பொருட்டுஜ்வாலேவிட்டு எரியும் அக்னியில் மந்த்ரம் ஜபித்து பவித்ரமான தேனுடன் கலந்த எள்ளே ஹோமம் செய்யவில்லேயே.*

*25. ஸ்ரீ ஸூக்தம், பாபமானி மந்த்ரம், ப்ராம்மண மந்த்ரம், மண்டல மந்த்ரம், (புருஷ - ஸூக்தம்) சதருத்ரம், ஆகிய பாபத்தை நாசம் செய்யக்கூடிய வேத மந்த்ரங்களே க்ருஹஸ்த பிராமணுக இருந்தும் ஜபிக்கவில்லேயே.*

*26. ரவி வாரம், சுக்ரவாரம், த்ரயோதசி, ராத்திரிவேளே, இவைகளேத் தவிர்த்து ஸர்வபாப நாசினியான அச்வத்த வ்ருக்ஷத்தை ப்ரதக்ஷிணம் செய்யவில்லே.*

*27. மிகவும் செழிப்பைத் தரக்கூடிய மிருதுவான விரிப்பு, கொசுவலே, கண்ணுடி படுப்பதற்கான படுக்கையும் தானம் செய்யவில்லே.*

*28. வெள்ளாடு, குதிரை, எருமை, செம்மறியாடு, தாதி, கறுப்பு மான்தோல், எள், தயிருடன் கூடின சத்துமா, ஜலம் நிறைந்தகுடம், ஆஸனம், மெதுவான பாதுகை,*

*29. பாத ரக்ஷை, விசேஷ தீபஹாரத்தி, தண்ணீர் பந்தல்கள், விசிறி, வஸ்த்ரம், தாம்பூலம், வேறு வாஸனே திவ்ய பதார்த்தங்கள்,*

*30. நித்ய ச்ராத்தம் பூதபலி, அதிதி பூஜை இவைகள், அந்நிய உத்தமதானங்கள், பல வேறு திவ்ய தானங்கள், கர்மானுஷ்டானங்கள், தேவதை பிராம்மண பூஜை நமஸ்காரங்களால் சந்தோஷமடைந்து, பாராயணம் செய்த பிறகு யாத்திரை செய்யவில்லே. இவைகளேச் செய்த புண்யவான்கள் - யமபுரிப்ரவேசனம், யம தூதர்களேக்*

காண்பது, யமயாதனை இவைகளையனுபவிக்க மாட்டார்கள். என்னுல் இவைகள் ஒன்றும் செய்ய முடியவில்லை.

*31-32.* க்ருச்ரம், சாந்த்ராயணம், நக்த வ்ரதம் முதலியவைகளான சரீரசுத்தி செய்யும் வ்ரதங்களையும் ஒரு பொழுதும் அனுஷ்டிக்கவில்லை.

*33.* நான் தினமும் பசுக்களுக்கு கவளம் கொடுக்கவில்லை. பசுக்களைத் தடவியும் கொடுக்கவில்லை. கோலோகத்தில் ஸுகம் கொடுக்கும் பசுக்களை சகதியிலிருந்து விடுவிக்கவுமில்லை.

*34.* பிராத்தனை செய்தும் பணம் கொடுத்துப்பணக் கஷ்டம் உடையவர்களை க்ருதார்த்தர்களாக்கவில்லையானுல் மறு ஜன்மத்தில் கொடு, கொடு என்று பிதற்றும் தீனபிக்ஷுவாக ஆகிவிடுவேன்.

*35.* வேதம், சாஸ்திரம், தனம், ஸம்பத், ஸ்த்ரீ, புத்ரன், வீடு, மாளிகை ஒன்றும் பரலோக யாத்திரையில் எனது உற்ற துணையாகாது.

*36.* சிவசர்மா இந்த விதமாகச் சிந்தனை செய்து எல்லா விஷயங்களிலிருந்தும் புத்தியைத் திருப்பி ஏகாக்ர சித்தத்துடன் என்ன நிச்சயம் செய்தார் என்ருல், இதே காரணத்திஞல்தான் எனக்கு மங்களமுண்டாகும்:-

*37.* எதுவரை எனது சரீரம் நன்ருக இருக்கிறதோ எதுவரை இந்த்ரியங்கள் வலுவை இழக்கவில்லையோ அதுவரை மங்களம் தரும் ஜடரூபமான தீர்த்தயாத்திரையை மேற்கொள்வேன்.

*38.* அந்த அறிவாளியான பிராம்மணன் இவ்வாறு யோசித்து ஐந்தாறு தினங்கள் வீட்டில் இருந்துவிட்டு சுபதிதி, சுப வாரம், சுப லக்னத்தில் யாத்திரைக்கு பரஸ்தானம் ஆனுன்.

*39.* தீர்த்தாடனத்தில் நியாயபூர்வமாக வியவகாரம் செய்யும் எல்லா பிராணிகளுக்கும் முக்திக்குச் செல்லும்

*ஏணிப்படி தீர்த்த யாத்திரையாகும். இப்படி முன்பே நிச்சயம் செய்து கொண்டு யாத்திரைக்கு முன்னால் ஒரு ராத்திரி உபவாசம் ஆக இருந்து காலையில் ச்ராத்தம் செய்து கணேசர் முதலிய தேவதைகள், பிராம்மணர்கள் இவர்களைப் பூஜித்து நமஸ்கரித்து ஸந்தோஷப்படுத்தி யாத்திரை கிளம்பினான்.*

*40,41. பிறகு கொஞ்சம் தூரம் சென்ற பிறகு ஒரு முஹூர்த்த நேரம் இளைப்பாறிவிட்டு அந்த பிராம்மணன் எண்ணத் தொடங்கினான். முதலாவது எங்கு செல்வது?*

*42. உலகில் அநேகத் தீர்த்தங்கள் இருக்கின்றன. மனிதனுடைய ஆயுளோ நிலையில்லாதது. மனது மிகவும் சஞ்சலமானது; அதனால் முதலில் ஸப்தபுரி யாத்திரையை முடித்துக் கொள்வோம். ஏனென்றால் அங்கு எல்லா தீர்த்தங்களும் இருக்கின்றன.*

*43. இப்படியெண்ணி சிவசர்மா* அயோத்யைக்குச் சென்று ஸ்னானம் செய்தான். ஒவ்வொருத் தீர்த்தத்திலும் ஸ்நானம், பிண்டதானம் முதலியவைகள் செய்துவிட்டு,

*44.* ஐந்து ராத்திரி அங்கு வஸித்துவிட்டு, பிராம்மண போஜனம் முதலிய கர்மங்கள் செய்து விட்டு, ஸந்தோஷமான மனமுடைவனாகி தீர்த்தராஜ் ப்ரயாகைக்கு வந்தான்.

*45. மாகஸ்னானத்திற்கு விரும்பி முதலாவது தீர்த்தராஜ்ஜுக்கு செல்லாமல் அயோத்தியாவிற்குச் சென்றான், பிறகு பிரயாகை சென்றான், எங்கு தேவதைகள் (ஸிதா, அஸிதா) கங்கை, யமுனை என்ற இரு நதிகளும் இருக்கின்றதோ அங்கு ஸ்னானம் செய்து பரப்ரம்மத்தை மனிதன் அடைகிறான்.*

*46. அந்த ப்ரஜாபதியின் க்ஷேத்ரம் எல்லாருக்கும் கிடைப்பதரிது. பரம புண்ணியக்குவியல்களால் தான் கிடைக்கிறது. நிறை பணம் செலவழித்தாலும் தீர்த்தராஜருடைய ஸமாகமம் கிடைக்காது.*

*47. கலி காலன் இருவரையும் அடக்கிவிட்டு சுபத்தைக் கொடுக்கும் காளிந்திபுத்ரி யமுனையுடன் பரம புண்ய ஜலாஸ்வர்க்கத்தரங்கிணியாகிற கங்கை வந்து சேருகிறது.*

*48. ஸமஸ்த யாகங்களால் நிரம்பியிருப்பதனுல்தான் அதற்குப் பிரயாகை எனப்பெயர் வந்தது. அந்த ப்ரயாகைத் தீர்த்தத்தில் ஸ்னனமாகிய யக்ஞத்தைச் செய்தவர்களுக்குப் புனர் ஜன்மம் கிடையாது.*

*49. அங்கு அதிஷ்டான தேவதை சூலடங்கேஸ்வரர். அங்கு ஸ்நானம் செய்பவர்களுக்கு அவரே நேரில் வந்து மோக்ஷ மார்க்கத்துக்கு உபதேசம் செய்கிருர்.*

*50. அங்கு அக்ஷய வடமும் இருக்கிறது.அதன் வேர் ஸப்த பாதாளம் வரை செல்கிறது. பிரளய காலத்தில் கூட அதை ஆதாரமாகப் பற்றி மார்க்கண்டேயர் ஜீவித்திருக்கிருர்.*

*51.அதை, வடவ்ருக்ஷ ரூபத்தை ஹிரண்ய கர்பர் என்ற பெயருடைய (ப்ரும்மா) என்று கூறவேண்டும். அதன் சமீபத்தில் பிராம்மண போஜனம் பண்ணினுல் அக்ஷயமான புண்ணிய பலன் கிடைக்கும்.*

*52.அங்கு ஸாக்ஷாத் லக்ஷ்மீபதியான விஷ்ணு வைகுண்டத்தில் இருந்து வந்து மனிதர்களுக்கு வேணீமாதவஸ்வரூபத்துடன் பரமபதம் அளிக்கிருர்.*

*53. இந்த ப்ரயாகையின் ஸம்பந்தமாய் வேதங்கள்கூடக் கூறுகிறது; (ஸிதாஸித்) (யமுனை - கங்கை) இரண்டு நதிகளும் எங்கு சேருகின்றனவோ அங்கு ஸ்நானம் செய்தால் நிச்சயமாக அம்ருதபதம் கிடைக்கும் என்று.*

*54. சிவலோகம், ப்ரம்மலோகம், தர்மலோகம், உமாலோகம், குமாரலோகம், வைகுண்டலோகம், ஸத்யலோகம், தபோலோகம், ஜனலோகம், மஹர்லோகம், ஸ்வர்கலோகம், புவர்லோகம், பூலோகம்*

*இவைகள் கிடைகின்றன. மேலும் நாகலோகம் அதிகம் கூறவேண்டாம். ஸமஸ்த ப்ரம்மாண்டத்திலும் நான்கு திக்குகளிலிருந்து ப்ரத்யேக புவன வாஸிகள், ஹிமாலயம் முதலான பர்வதங்கள், கல்பவ்ருஷங்கள் மாகமாஸத்தில் அருணோதய காலத்தில் ஸ்னானம் செய்வதற்காக ப்ரயாகைக்கு வருகின்றன.*

*55,56,57. திக்குகள் என்னும் கணங்கள் ப்ரயாகைக்ஷேத்ரத்தில் வீசும் வாயுவைக்கூட பிரார்த்திக்கின்றன. ஹே!வாயு பகவானே! நீ வந்து எங்களையெல்லாம் பவித்ரமாக்குவாயா; என்ன செய்வது? நாங்களோ முடமானவர்கள்.*

*58. அச்வமேத யக்ஞத்தையும் ப்ரயாகைப் புழுதியையும் ஒரு ஸமயம் ப்ரம்மா நிறுத்துப் பார்த்தார். ஆனால் அந்த எல்லா யக்ஞங்களும் ப்ரயாகை தூளிக்கு ஸம எடையாகவில்லை.*

*59. அநேக ஜன்மங்களாக ஸஞ்சிதமாகிய அஸ்தியின் உள்ளுக்குள் இருக்கும் பாப புஞ்சம் கூட ப்ரயாகையின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே மிகவும் கலவரமடைந்து நாசமடைகின்றன.*

*60. இந்த ப்ரயாகையே தர்ம தீர்த்தம், அர்த்ததீர்த்தம், காமதீர்த்தம், மோக்ஷதீர்த்தம். இது விஷயமாக ஸந்தேஹமில்லை.*

*61. ப்ரம்மஹத்யாதி பாபங்களையும் போக்கும் ப்ரயாகைத் தீர்த்தத்தில் மாகஸ்நானம் செய்கிறவரையில் ப்ரம்மஹத்யாதி மஹா பாபங்கள் தேகதாரிகளிடம் ஒட்டிக்கொண்டுதான் இருக்கும்.*

*62. விஷ்ணுவின் பரம பதத்தை ஞானிகள் எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று ஒரு மந்திரம் வேதத்தில் அடிக்கடி வருகிறது. அது ப்ரயாகை தான்.*

63. ரஜோ குணரூபமான ஸரஸ்வதீ, தமோ குணரூபமான யமுனை, ஸத்வகுணரூபமான கங்கை இவைகள் அங்கு நம்மை நிற்குண ப்ரம்மத்தையடையச் செய்கின்றன.

64. இதே த்ரிவேணியில் ச்ரத்தையுடனே அசிரத்தையாகவோ ஒரு தடவை ஸ்நானம் செய்தவர்க்குக்கூட பிராணிகளுடைய சரீரத்தை சுத்தமாக்கி ப்ரம்ம மார்கத்தை அடைவிக்கிற படிகளாகின்றன.

65. காசி என்று பெயருள்ள ஒரு ஸ்த்ரீ மூன்று லோகங்களுக்கும் தெரிந்தவள். லோலார்கம், கேசவம் இரண்டும் அவளுடைய சஞ்சல நயனங்கள். வருணையும், அஸியும் அவளுடைய இரண்டு கைகள். இந்தத் திரிவேணி என்று கூறினோமே - இது அக்ஷயமான ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய அவளுடைய தலைமயிர்.

66. அகஸ்திய முனி பின்னும் கூறினார். ஹே ஸுதர்மிணி! எல்லாத் தீர்த்தங்களாலும் ஸேவிக்கப்படும் தீர்த்தராஜர் ப்ரயாகையின் குணாதிசயங்களை உலகில் யாரால் வர்ணிக்க முடியும்!

67. பாபி ஜனங்கள் தங்கள் ஸஞ்சித பாபங்களை வேறு தீர்த்தங்களில் பலாத்காரமாக விடுகிறார்கள். ஆனால் எல்லா தீர்த்தங்களும் விசேஷமாகத் தங்களிடம் ஸகல மனிதர்களாலும் விடப்பட்ட அநேக பாபங்களை விலக்கும் பொருட்டு, ப்ரயாகையை ஸேவிக்கின்றன.

68. அந்த புத்திசாலியான பிராம்மணன் ப்ரயாகையினுடைய குணங்களை யோசனை செய்து, மாகமாசம் பூராவும் அங்கிருந்து விட்டுப் பின்பு வாராணஸியை வந்தடைந்தான்.

69. காசியில் பிரவேசித்தவுடனேயே, காசிமுகத்துவாரத்திலிருக்கும் (துவார விநாயகர்) தேஹலி என்னும் விநாயகரைத் தரிசனம் செய்து விட்டு பக்தியுடன்கூட நெய்யில் குழைத்த ஸிந்தூரத்தை அவருக்குப் பூசினான்.

*70. பெரிய பெரிய கஷ்டங்களிலிருந்து தன் பக்தர்களை ரக்ஷிக்கும் கணேசமூர்த்திக்கு ஐந்து மோதகங்களை நிவேதனம் செய்து காசீக்ஷேத்ரத்திற்குள் பிரவேசனம் பண்ணினர்.*

*71. மணிகர்ணிகைக்கு வந்து உத்தரவாஹினீ, ஸ்வர்க்க தரங்கிணீ கங்காமாதாவை, சிவகணங்களைப்போல பாப புண்ணிய கர்மங்கள் இல்லாத ஜனங்கள் நிறைந்திருப்பதையும் பார்த்தார்.*

*72. ஏ நிர்மல உள்ளத்தையுடையவளே! நிர்மல சுத்த புத்தியுள்ள சிவசர்மா அந்தத் தெளிந்த ஜலத்தில் வஸ்த்ரத்துடன் நீராடிவிட்டு, தேவர்கள், ரிஷிகள், மனுஷ்யர்கள் திவ்யபித்ருக்கள், சொந்த பித்ருக்களான பிதா, பிதாமஹர் இவர்களுக்கும் தர்ப்பணம் செய்தார். பிறகு அந்தக்கர்ம காண்டத்தையறிந்த பிராமணன்*

*73. முதலாவது பஞ்ச தீர்த்தயாத்ரையைப் பண்ணினன். பிறகு வைபவத்துடன்கூட ஸ்ரீ விஸ்வேஸ்வரரை ஆராதித்தான். பிறகு அடிக்கடி த்ரிபுராந்தக பகவானுடைய காசீபுரியைப் பார்த்து இந்த இடத்தை நான் இதற்கு முந்தி பார்த்திருக்கிறேனே இல்லையோ என்று ஆச்சர்யப்பட்டார்.*

*74. வாராணஸியைப் பார்த்து சிவசர்மா சொல்லிக் கொண்டார். தத்வவிசார த்ருஷ்டியிலும் சரி, விவகாரத்ருஷ்டியிலும் சரி, ஸ்வர்கபுரி காசிக்கு ஸமம் ஆகாது. எப்படியாக முடியும்? ஸ்வர்கபுரி ப்ரம்மா படைத்தது. காசி ஸ்வயம் ஈஸ்வரரின் ஸ்ருஷ்டி. ஸாமான்ய மனிதர்களினல் ஸ்வர்க நிர்மாணம் ஆகியிருக்கிறது. மிகவும் விலை உயர்ந்த ரத்ன வரிசைகளினல் காசி நிர்மாணம் ஆகியிருக்கிறது. ஸ்வர்க்கத்தில் நானுவிதமான பவபத்தனங்கள் இருக்கின்றன. காசியில் இவையொன்றும் கிடையாது. அப்போ காசியை ஸ்வர்க்க புரிக்கு ஸமமாக எப்படிச் சொல்வது? அஸத்ய சாஸ்திரத்திற்கும் ப்ரம்ம நிரூபணம் செய்யும்*

*சாஸ்திரத்திற்கும் உள்ள பேதம் காசிக்கும் ஸ்வர்கத்துக்கும் உண்டு. சித்ரகுப்தனுல் நெற்றியில் எழுதப்பட்டிருக்கும் அக்ஷரங்களைக்கூட காசி அழித்து விடுகிறது. ஏனென்றால் அங்கு புனர்ஜன்மம் கிடையாது.*

*75. இந்தக் காசியின் ஜலத்தினுடைய சக்தியை நினைக்கவே முடியாது. ஸ்வர்கத்தில் தேவர்கள் பண்ணும் அம்ருதபானம் வீணே. ஏனென்ருல் காசியின் ஜலத்தை ஒருதரம் குடித்தால் போதும். பிறகு அவர்களுக்குத் தாயின் ஸ்தன்யபானம் செய்ய வேண்டாம். அம்ருத பானத்திலுலும் இந்தப்பலன் கிடையாது.*

*76. நீதி நெறி செலுத்தும் மஹாதேவனை நினைப்பதின்மூலம் மூன்றுவித தாபங்களும் அற்று, ஸத்கர்மங்கள் செய்பவர்கள் அல்பகாரியம்கூட விஸ்வேஸ்வரருக்கு ஸமர்ப்பணம் செய்யாமல் ஒரு காரியமும் செய்வதில்லை. அதனுல் அவர்கள் சிவனுடைய பாரிஷத கணங்களாகிய நந்தி, ப்ருங்கி, இவர்களைப் போலாகிருர்கள்.*

*77. தான் பெற்ற பலனை தானம் செல்வதன் மூலம் ஏற்படும் புண்ணிய பலத்தினுல் காசியின் வசிக்கும் பிராணிகளுடைய அந்திம காலத்தில் சந்திரசேகரர்மஹாதேவர் தானே வந்து ப்ரணவ மந்திரத்தை உபதேசிக்கிருர். அதனுல் இந்தக் காசியின் மஹிமையை யார் தான் புகழமாட்டார்கள்.*

*78. ஸம்ஸாரிகளுக்கு சிந்தாமணி ரூபமான பகவான் சிவன் அங்கிருக்கும் ஜனங்களுடைய கர்ணிகையில் (காதில்) திடீரென்று தாரக மந்திரத்தை உபதேசம் செய்கிருர். அதனுல் இதற்கு மணிகர்ணிகை என்று பெயர் வந்தது.*

*79. இந்த இடம் மோக்ஷ லக்ஷ்மியின் மஹா பீடமான மணிஸ்ரூபமான காசியில் இருக்கிறது. மேலும் இதை மோக்ஷ லக்ஷ்மியின் சரண கமலத்தின் கர்ணிகையென்றும் கூறலாம். அதனுல் மணிகர்ணிகையென்றும் கூறுகிருர்கள்.*

*80. இந்தப்புரத்தில் வஸிக்கிறவர்கள் கருப்பையி லிருந்தும், முட்டையிலிருந்தும், அழுக்கிலிருந்தும் (உற்பவ) வியர்வையிலிருந்தும் (ஜராயுஜ, அண்டஜ, உத்பிஜ, ஸ்வேதஜ) இவைகளிலிருந்து உற்பத்தியான பிராணிகள்கூட தேவதைகளைவிட நன்ருகயிருக்கிருர்கள். ஏனென்ருல் இவர்களுடைய முக்தி இவர்கள் கையிலேயே இருக்கிறது; தேவதைகளுக்கு அப்படியில்லை, அவர்கள் முக்தி லாபத்திலிருந்து வஞ்சிக்கப்படுகிருர்கள்.*

*81. நான் மிகவும் கெட்டகாரியம் செய்தவன், ஜடபுத்தி. இத்தனை நாட்கள் வரை எனது ஜன்மம் வீணுகக் கழிந்தது. இந்நாள் வரை முக்திப் பிரகாசிகையான காசியைத் தரிசனம் செய்யவில்லை.*

*82. சிவசர்மா இந்த விசித்ரமும் பவித்ரமுமான க்ஷேத்ரத்தை அடிக்கடி கண்கூடாகக் கண்டும் கூட திருப்தியடையவில்லை.*

*83. அவனுடைய மனதில் காசிதான் மிகவும் மேலான நிர்வாண பதத்தைக் கொடுக்ககூடிய ஏழு புரிகளிலும் மிக ச்ரேஷ்டமானது எனக் கண்டான்.*

*84. ஆனுலும் மற்ற ஆறு புரிகளை நான் பார்த்ததில்லை யாகையால் அப்புரிகள் எல்லாவற்றின் ப்ரபாவத்தையும் பார்த்து விட்டுத் திரும்பவும் நான் இங்கேயே வந்து வஸிப்பேன்.*

*85. அந்தப் பிராம்மணன் ஒரு வருஷம் வரையில் காசியில் தீர்த்த யாத்ரை செய்தும்கூட காசியில் உள்ள எல்லாத் தீர்த்தங்களையும் அடைய முடியவில்லை. ஏனென்ருல் காசியில் எள் விழுவதற்குக்கூட இடமில்லாமல் தீர்த்தங்கள் நிறைந்து இருக்கின்றன.*

*86.அகஸ்திய முனி கூறுவார்:- தேவீ லோபாமுத்ரே! ஆச்சர்யத்தைப் பார். சிவசர்மா அநேக ப்ரமாணத்தால் காசீ க்ஷேத்ரத்தின் மஹிமையை அறிந்து உள்முகமாய்போன பின்கூட அங்கிருந்து கிளம்பியே விட்டான்.*

*87.* ஹே ஸுந்தரீ! ஸகல ப்ரமாணங்களோடு கூட சாஸ்திரம் நிரூபித்தும் பலன் என்ன? மஹாமாயையி னுடைய பவிஷ்யத்தை யாரால் நீக்க முடியும்?

*88.* வேகத்துடன் குதித்து ஓடிக்கொண்டு வரும் நதி ஜலத்தை விபரீதமான வேறு பாதையில் யாரால் திருப்பமுடியும்? அதுபோல நிலேயில்லாது குதித்துக் கொண்டிருக்கும் சித்தத்தை அதற்கு நேர் விபரீத கதிக்கு யாரால் மாற்ற முடியும்? இரண்டும் தங்கள் தங்கள் இடத்தில் ஸ்திரமாக இருந்தும்கூட அந்த இரண்டின் ஸ்பாவமும் சஞ்சலமாகவேயிருக்கிறது.

*89.* பிறகு சிவசர்மா முறையே தேசாந்திரமெல்லாம் ஸஞ்சரித்து கலிகாலத்தின் செயல் இல்லாத மஹாகாலபுரம் (உஜ்ஜயினி) வந்து சேர்ந்தான்.

*90.* யார் யுகயுகாந்தரமாகத் தன்னுடைய லீலேயினுல் அகில ப்ரம்மாண்டத்தையும் லயமடையச் செய்கிருனே, அந்தக் காலனேயும் லயமடையச் செய்யும் மஹாதேவருடைய பெயர் காலகாலர்.

*91.* பாபத்திலிருந்து ரக்ஷிப்பதினுல் அந்நகர் அவந்தீ என்று கூறப்படுகிறது. யுகயுகமாக மஹாகாலபுரியினுடைய பெயர் மாறிக் கொண்டே வருகிறது. இப்பொழுது கலியுகத்தில் அதனுடைய பெயரை உஜ்ஜயினீ என்று கூறுகிருர்கள்.

*92.* அந்த உஜ்ஜயினியில் பிராணிகள் மரணமடைந்து பிணமான பின்னும் துர்கந்தம் வீசுவதில்லே. அழுகுவதும் இல்லே.

*93.* அந்த ஊரில் யமதூதர்கள் வரவே மாட்டார்கள். அங்கும் கோடிக்கணக்கான அடிக்கொரு சிவலிங்கம் இருக்கின்றது.

*94.* ஒரே ஜ்யோதிர் லிங்கம், ஹாடகேசுவரர், மஹாகாலர், தாரகேஸ்வரர் என்று மூன்று உருவத்துடன் மூன்று உலகிலும் வியாபித்து ஸ்திரமாக இருக்கின்றன.

*95. பிராம்மணர்கள் உஜ்ஜினியிலுள்ள ஸித்த வடவிருக்ஷத்தில் ஜ்யோதிர்லிங்கமான மஹா காலரை ஜ்யோதிரூபமாக தர்சனம் செய்கிறார்களோ அவர்கள் பரஞ்சோதியைப் பார்க்கிறார்கள்.*

*96.ஸம்ஸாரத்தில் மஹாகாலரான அந்த லிங்கத்தைக் தரிசனம் செய்த தீனர், துக்கிகளை மஹாபாபம் தொடக்கூட மாட்டாது.*

*97. ஆகாசத்தில் சூரியனுடைய ரதத்தின் குதிரைகள், மஹாகாலருடைய கோவிலின் கொடியின் நுனிபாகம் (கொடி மரத்தின்) தங்கள் முதுகுகளில் பட்டபொழுது அவைகள் முதுகிலிருந்து ஸாரதியான அருணனுடைய சவுக்கடியினால் ஏற்பட்ட காயங்கள் க்ஷணமாத்திரத்தில் ஆறிவிடுகின்றன.*

*98.மஹாகாலா, மஹாகாலா என்று எப்பொழுதும் உச்சரித்துக் கொண்டிருக்கும் பிராணிகளை ஸ்மரன் என்னும் பெயருடைய மன்மதனின் பிதாவான விஷ்ணுவும், அந்த ஸ்மரனுக்கு சத்ருவான சிவனும் எப்பொழுதும் நினைத்துக் கொண்டேயிருக்கிறார்கள்.*

*99. சிவசர்மா என்னும் பிராம்மணர் பகவான் பூதபாவனர் மஹாகாலரை ஆராதித்து, அதன் பிறகு த்ரிபுவநங்களிலும் கமனீயமாக இருக்கும் காஞ்சீபுரியை அணுகினார்.*

*100. இங்கு லக்ஷ்மீகாந்தன் அங்கு வஸிக்கும் ஜனங்களுக்கு இங்கும் பர உலகத்திலும் அவர்களுக்குத் தன் உருவமாகிய ஸாரூப்ய பதவியை அளிக்கிறான். தேஜஸ்வியான மஹான்களால் ஸேவிக்கப்பட்ட*

*1. பரம காந்திமதியாகிய அந்த காஞ்சிபுரியைப் பார்த்து சிவசர்மா காந்தியுடன் பிரகாசித்தான். அங்கு தேஜஸ் இல்லாத மனிதர்களே இல்லை.*

*2. கர்ம காண்டத்தை அறிந்தவனான சிவசர்மா அங்கு சில கர்மங்களைக் கடமை என்று எண்ணிச் செய்தான். ஏழு*

நாட்கள் அங்கு தங்கிவிட்டு துவாரகாபுரிக்கு யாத்திரையாகக் கிளம்பினன்.

*3. தத்துவக்ஞர்களான வித்வான்களால் சதுர்வர்ணுச்ரமிகளும் தத்துவக்ஞர்களாய் நான்கு பக்கங்களும் சூழ்ந்து இருப்பதால் அதற்குத் த்வாரவதீ என்னும் ஒரு பெயரும் உண்டு.*

*4. அங்கு இருக்கும் ஒவ்வொரு பிராணிகளுடைய எலும்பும் சங்கமுத்ரை பொறிக்கப்பட்டிருந்தது. அங்குள்ள ஆதிவாஸிகள் கையில் சங்க சக்ரமுத்ரைகள் பொறிக்கப்பட்டு இருந்தால் அதில் ஆச்சர்யமென்ன?*

*5. யமராஜர் அடிக்கடி தனது தூதர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிருர். எவர்கள் அடிக்கடித் துவாரவதீ என்று பெயர் சொல்லிக் கொண்டிருக்கிருர்களோ அவர்களை விட்டுவிட்டு வாருங்களென்று.*

*6. த்வாரகாபுரி, கோபி சந்தநத்தின் வாஸனை சந்தநத்திலும் இல்லை. அதன்நிறம் தங்கத்திலும்கூட இல்லை. துவாரகையிலுள்ள கோபி சந்தநத்தின் பவித்ரம் அந்நியத் தீர்த்தங்கள் ஒன்றிலும் கிடையாது.*

*7. ஹே தூதர்களே! கேளுங்கள். எவருடைய நெற்றி கோபி சந்தநத்திஞல் அலங்கரிக்கப்பட்டுள்ளதோ அவரை எரியும் நெருப்பாக எண்ணி ஜாக்கிரதையாக தூர இருந்தே விலக்கி விடுங்கள்.*

*8. படர்களே! எவர்கள் துளஸிதளத்திஞல் தன்னை. அலங்கரித்துக்கொண்டு ஹரி என்ற மந்திரத்திஞல் அனவரதமும் ஜபம் செய்து கொண்டிருக்கிருர்களோ துளஸி வனத்தை ரக்ஷிப்பவஞக இருக்கிருஞே, அவர்களுக்கும் தூர இருந்தே வந்தனம் செய்யுங்கள்.*

*9. ஸமுத்ரம் யுகயுகமாக துவாரகையினுடைய ரத்ன ஸமூகத்தைச் சேகரித்து சேகரித்து இன்றும் ஜகத்தில் ரத்ஞகரம் எனும் பெயரை அடைந்திருக்கிறது.*

*10. எந்த ஜந்து காலவசமாக துவாரகையில் சாகிறதோ அது வைகுண்டத்தில் பீதாம்பரம் அணிந்து சதுர்புஜ உருவமாகிறது.*

*11. சிவசர்மா சோம்பலில்லாமல் துவாரகையிலும் மற்றும் பிரத்யேகத் தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தும், தேவரிஷிகளுக்கும் பித்ருக்களுக்கும் தர்பணம் செய்தான்.*

*12. பிறகு அவன் பாபகாரியங்களே அரிதில் கிடைக்கும் மாயாபுரியை அடைந்தான்.*

*13. இங்கு வைஷ்ணவி மாதாவின் மாயாபாசம் இவர்களைக் கட்டுப்படுத்தாது. இந்தஸ்தானத்தை சிலர் ஹரித்வாரம் என்று கூறுகிறார்கள், சிலர் மோக்ஷத்வாரம் என்றும் மற்றும்சிலர் கங்காத்வார் என்றும் கூறுகிறார்கள். சிலர் மாயாபுரி என்ற பெயரால் கூப்பிடுகிறார்கள்.*

*14. கங்கை இந்த இடத்திலிருந்து கிளம்பி பாகீரதீ என்ற பெயரினால் பிரஸித்தமடைந்தது. இதன் பெயரை மாத்திரம் உச்சாரணம் பண்ணினால் (ஆயிரம்தரம்) பாபராசி நிவ்ருத்தியாகிறது.*

*15. ஜனங்கள் இந்த ஹரித்வாரத்தை வைகுண்டத்துக்கு ஏகமாத்ரமானபடி என்று கூறுகிறார்கள். இங்கு ஸ்நானம் செய்யும் நரன் விஷ்ணுவின் பிரஸித்த பதம் அடைகிறான்.*

*16. பிராம்மணோத்தமனான சிவசர்மா அங்கு தீர்த்த உபவாஸம், இரவு கண் விழித்தல், காலையில் கங்காஸ்நானம், பித்ருக்களுக்கு குறைவில்லாமல் ஸம்பூர்ணமாக தர்பணம் முதலியன செய்துவிட்டு ப்ரயாணம் செய்ய விரும்பினான்.*

*17. ஏனென்றால் சீதஜ்வரத்தினால் பீடிக்கப்பட்டு, அவன் மிகவும் ஆச்வாஸம் இல்லாமல் நடுங்கத் தொடங்கினான்.*

*18. முதலாவதாக தனியாக விதேசத்திற்கு வந்திருக்கிறான். இரண்டாவது ஜ்வரத்தினால் மிகவும்*

*பீடிக்கப்பட்டு அந்தப் பிராம்மணன் மிகவும் கவலைப்பட ஆரம்பித்தான். மேலும் யோசிக்கத் தொடங்கினான். என்ன நேர்ந்துவிட்டது.*

*19. ஆழம் காணமுடியாத மஹா ஸமுத்ரத்தில் கப்பல் உடைந்து விட்ட ஸமுத்ர வியாபாரி மாதிரி கவலையில் ஆழ்ந்து அந்தப் பிராம்மணன் உயிரைப் பற்றியும் தனத்தைப் பற்றியும் அவநம்பிக்கையடைந்தான்.*

*20.எனது வயலும், களத்ரம், புத்திரர்கள், தனம் இவைகள் எங்கே, அந்த விசித்ர மஹால் எங்கே, எனது அநேக புஸ்தகங்கள் நிரம்பிய நூல் நிலையம் எங்கே?*

*21. இதுவரை எனது ஆயுள் பூர்ணமாகவில்லை. தலைகூட நரைக்கவில்லை; ஆனால் இந்த பயங்கார ஜ்வரம் உபத்ரவப்படுத்துகிறதே. எனக்கு இது எத்தனை பயங்கரமாக இருக்கிறது.*

*22.தலையில் ம்ருத்யு வஸிக்கிறான். எனது க்ருஹம் இங்கிருந்து வெகு தூரத்தில் இருக்கிறது. எப்படியிருந்தாலும் வீட்டில் தீப்பிடித்தால் கிணறு வெட்டுவதால் காரியம் ஆகுமா?*

*23. மிகவும் தாபத்தைக் கொடுக்கும் இந்த விதமான கவலையினால் எனக்கு என்ன பலன்? இந்த நாழிகையில் நான் ரிஷீகேஸ் சிவப்ரதமஹா தேவனை த்யானிப்பேன்.*

*24. அல்லது உத்தமமான மோக்ஷத்தை அனுஷ்டானிப்பேன். இந்த ஏழு மோக்ஷப்ரதாயினி புரிகளை தரிசனம் செய்து விட்டேன்.*

*25. வித்வான்கள் ஸ்வர்கம், அல்லது முக்திக்கு வேண்டிச் செய்கிறார்கள். இது இரண்டையும் ஸாதனம் செய்யாவிட்டால் பச்சாதாபத்தினால் பரிதபிக்க வேண்டிவரும்.*

*26. அல்லது எனக்கு இந்த வீணை சிந்தாப்ரவாஹத்தினால் என்ன ப்ரயோஜனம்? (ஸங்கிராமம்) அதாவது யுத்தத்திலாவது ச்ரேயஸை அளிக்கும். பின்பும் எனது இப்படிப்பட்ட தீர்த்தத்தில் மரணம் ஸம்பவிக்குமானால் மிகவும் நல்லது.*

*27. நான் இன்று மந்தபாக்யவான் மாதிரி வழியில் மரணம் அடையவில்லை அல்லவா? ஆனால் கங்கை மடியில் இறக்கிறேன். அப்பொழுது முட்டாளைப் போல ஏன் கவலைப்பட வேண்டும்?*

*28. அஸ்தி தோல் மயமான இந்த சரீரத்தை விடுவதால் எனக்கு நிச்சயமாக புதிதான ச்ரேயஸ் கிடைக்கும்.*

*29. இந்த விதமாக சிந்தையினால் பீடிக்கப்பட்ட சிவசர்மனுக்கு அதிக பயங்கரமான துக்கம் ஏற்பட்டது. தேள் கொட்டினபோது எந்த நிலை ஏற்பட்டதோ, சிவசர்மா அதே நிலையடைந்தான்.*

*30. நினைக்கத் தகுந்த எல்லா வார்த்தைகளும் மறக்கவில்லை; நான் எங்கு இருக்கிறேன்? நான் யார்? - இந்த நினைவு கூட அவனிடமிருந்து சென்றுவிட்டது. பதினான்கு நாட்கள் இந்த விதமாக இருந்ததன் பின் சிவசர்மா பஞ்சத்வத்தை (முடிவை) அடைந்தான்.*

*31. அதே ஸமயத்தில் வைகுண்டத்தில் இருந்த மிகவும் உயரமாக இருக்கும் கருடத்வஜத்தினால் சின்ன செய்யப்பட்ட சிறு மணிகளினால் சலசலக்கிற பெரிய விசாலமான விமானம் வந்து ஆஜராகியது.*

*32. அந்த திவ்ய விமானத்தில் சிவந்த பட்டு வஸ்த்ரம் தரித்து, சாமரம், விசிறி இவைகளைக் கையில் எடுத்துக் கொண்டு இருக்கும் ஆயிரக்கணக்கான தேவ ஸுந்தரப் பெண்களுடன் கூடிய புண்ணிய சீலன் ஸுசீலன் இவர்கள் இரண்டு விஷ்ணு பாரிஷதர்கள் ப்ரஸன்ன வதனம், நான்கு கைகளுடன் அந்த விமானத்தில் இருந்தார்கள்.*

*33,34.* *சிவசர்மா உடனே இந்த மண்ணிஞல் ஆன தேஹத்தை விட்டு அந்த விமானத்தில் ஏறி திவ்ய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டு பீதாம்பரம் அணிந்து சதுர்புஜத்துடன் ஆகாச மார்கத்தை அலங்காரம் செய்யத் தொடங்கிஞன்.*

*இது ஸ்கந்த புராணத்தில் நாலாவது கண்டமான காசி கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான ஸப்தபுரி வர்ணனம் என்ற பெயருள்ள ஏழாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 8

*லோபாமுத்ரை கூறுவாள் : ஹே! பிராணநாதா! தங்களுடைய திருமுகத்திலிருந்து பொழிந்த இந்த புண்ணியபுரி விஷயமான பவித்ரமான கதையைக் கேட்டு எனது ஆவல் சாந்தமாயிற்று என்று கூறமாட்டேன்.*

*1. ஹேப்ரபோ! ப்ராம்மஞேத்தமஞன சிவசர்மா முக்தியைக் கொடுக்கும் மாயாபுரியில் பிராணத்யாகம் செய்த போதிலும் மோக்ஷத்தை அடையவில்லேயே. இதற்குக் காரணம் என்ன?*

*2. அகஸ்த்யர் கூறுவார். ஹே! ப்ரியவாதினீ! இந்தப் புரியில் எல்லாம் மோக்ஷம் கிடைக்காது.இது விஷயமாகப் பழைய சரித்திரம் ஒன்று நான் கேட்டிருக்கிறேன்.*

*3. ஹே! ப்ரியே! இப்பொழுது புண்யசீலன். ஸுசீலன் இவர்கள் மூலமாக சிவசர்மாவைப் பற்றிக் கூறிய விசித்ர அர்த்தம் மிகுந்த பாபநாசினி கதையைக் கேள்.*

*4.சிவசர்மா கூறிஞன். ஓ கமலலோசனர்களே! பவித்ரமான விஷ்ணுகணங்களே! உங்களிடம் கைகூப்பி ஒன்று கேட்க விரும்புகிறேன்.*

*5. எனக்கு உங்கள் பெயர் தெரியாது. ஆஞல் உருவத்திலிருந்து தெரியவருகிறது. உங்களுடைய பெயர்கள் புண்ணியசீலன், ஸுசீலன் என்றுதான் இருக்க வேண்டும்.*

*6. அவர்கள் கூறிஞர்கள்- தங்களேப் போன்ற பகவத் ஜனங்களுக்குத் தெரியாதது என்று ஒன்று உண்டா? தாங்கள் கூறிய இரண்டும் தான் எங்களுடைய பெயர்கள்.*

*7. ஹே! மகாத்மா! தங்ளுக்கு மேலும் ஏதாவது கேட்க வேண்டுமாஞல் ஸந்தேஹம் கொள்ளாமல் கேளுங்கள். ப்ரேமையுடன் நாங்கள் பதிலளிப்போம்.*

*8. இந்த விதமாக ஹ்ருதயபூர்வமான வசனங்களைக் கேட்டு பிராம்மணன் கூறுவான்.*

*9. இந்த அல்பமான சோபையுடன் கூடிய க்ஷீணபுண்ணிய ஜனங்கள் இருப்பதைக் காட்டிலும் பூர்ணரூபமான வேறு புண்யலோகம் இருக்கிறதா? அப்பா அதற்கு நேர் விக்ருதமாக இருக்கும் இவைகள் எல்லாம் என்ன? எனக்கு இவைகளைப் பற்றிக் கூறுங்கள்.*

*10-11. கணங்கள் கூறுகிறார்கள். இது பிசாசலோகம் மாம்ஸம் புஜிக்கும் ஜனங்கள் இங்கு வசிக்கிறார்கள். எவர்கள் தானம் கொடுத்தபின் பச்சாதாபப்படுகிறார்களோ, எவர்கள் இல்லை இல்லை என்று கூறிக்கொண்டே தானம் கொடுக்கிறார்களோ, அதே அல்ப புண்ணியம் செய்த, அல்பசோபையுடன் கூடிய பிசாச கணங்கள் வசிக்கும் இடம் இது. இதை, அவர்களுக்கு எப்படிக் கிடைத்ததென்றால் - யதேச்சையாக ஒருதரம் சுத்தமில்லாத மனதுடன் மஹாதேவருடைய பூஜை செய்த அல்பபுண்ய பலன் இது.*

*12. பிறகு சிவசர்மா போய்க்கொண்டிருக்கும் போதே இன்னொரு உலகத்தைக் கண்டான். அங்கு பெரிய தொந்தியுடன் கூடிய பெரியமுகமும் கம்பீரநாதமும்.*

*13. சியாமள வர்ணத்துடன் கூடிய லோபம் நிறைந்த கட்டு மஸ்தான தேகத்தையுடைய கணங்களால் நிறைந்ததொரு லோகத்தைக் கண்டான். இது என்ன லோகம்? இந்த லோகத்தின் பெயர் என்ன? எந்த புண்யத்தினால் இவர்கள் இங்கு வந்தனர் என்று கேட்டான்.*

*14. இதற்குப் பெயர் குஹ்யலோகம் என்பது. இவர்களை குஹ்யர்கள் என்று கூறுவார்கள். இவர்கள் நியாய பூர்வகமாக சம்பாதித்துப் பூமியில் புதைத்து வைத்தவர்கள்.*

*15. தர்ம மார்க்கத்தில் சம்பாதித்த பணம் இருந்தும் சூத்ரர்களைப் போல் வாழ்ந்தார்கள். ஆனால் தங்கள் குடும்பத்திற்கு பாகம் செய்து கொடுத்தார்கள். கோபமும் பொறாமையும் இல்லாதவர்கள்.*

*16. திதி, வாரம், சங்கராந்தி, பர்வதினங்கள் இவைகளையொன்றும் அறியார்கள். தர்மம். அதர்மம் இவைகளொன்றும் தெரியாது.*

*17. எப்பொழுதும் ஸுகமாக இருந்தார்கள். தங்கள் குலத்து உபாத்யாயரை மாத்திரம் அறிவார்கள். அவருக்கு கோதானம் செய்வார்கள். அவருடைய வாக்யத்திற்கு மதிப்புக் கொடுத்து அதைப் ப்ரமாணமாக மதிப்பார்கள்.*

*18. அந்தப் புண்ய பலத்தினுல் இங்கும் நிறை வாழ்வு வாழ்ந்து கொண்டு, இந்த குஹ்யர்கள் தேவதைகளைப்போல் நிர்பயமாக ஸ்வர்க்க ஸுகம் அனுபவிக்கிருர்கள்.*

*19. பிறகு கண்களுக்கு ஸுகமளிக்கும் இந்த லோகத்தைப் பார்த்துவிட்டு மற்ருெரு லோகத்தைப் பார்த்து, சிவசர்மா இங்கு யார் வஸிக்கிருர்கள்? என்று கேட்டார். அந்த லோகத்தின் பெயரையும் கேட்டார்.*

*20. கணங்கள் கூறுவார்கள்: இந்த லோகம் கந்தர்வலோகம்; இங்கு கந்தர்வர்கள் வசிக்கிருர்கள் என்றனர்; மேலும் இவர்கள் உத்தமதர்மவான்கள்; தேவதைகளுக்கும் பாடகர்கள். சாரணர்கள், ஸ்துதி பாடகர்கள்.*

*21. ஸங்கீதத்தில் நிபுணர்கள் (மநிதயோநியில்) அழகான பாட்டினுல் அரசர்களை ஸந்தோஷப்படுத்துகிருர்கள் தனத்தின் லோபத்தால் மோசமடைந்து பணக்காரர்களைத் துதிக்கிருர்கள்.*

*22. அரசர்களின் சந்தோஷத்தால் அழகான வஸ்த்ரம், கற்பூராதி ஸுகந்ததிரவ்யங்களைப் பெற்று*

*23. பிராம்மணர்களுக்கு அளிக்கிருர்கள். எப்பொழுதும் பாடிக்கொண்டேயிருக்கிருர்கள். நாட்டிய சாஸ்திரத்தை சிரமத்துடன் கற்றுணர்ந்தவர்கள். ஸ்வரத்தில் மனம் லயித்தவர்கள்.*

*24. கான வித்தையினுல் கிடைக்கும் பணத்தைப் பிராம்மணர்களுக்குக் கொடுக்கும் புண்ணியத்தினுல் அந்த கந்தர்வ ஜனங்கள் இந்த கந்தர்வ லோகத்தில் வசிக்கிருர்கள்.*

*25. கீத வித்யையின் பிரபாவத்திஞல் நாரதர் விஷ்ணு லோகத்தில் மதிக்கப்பட்டார்.*

*26. தும்புரு, நாரதர் இருவருமே தேவதைகளுக்கு மிகவும் பிரியமானவர்கள். ஏனென்ருல் சிவன் நாதரூபமானவரே, இவர்கள் இருவரும் நாதாந்த தத்துவத்தை நன்ருக அறிந்தவர்கள்,*

*27. விஷ்ணு, மஹாதேவர் இவர்கள் ஸமீபத்தில் பாடினுர்களாஞல் அவர்களுக்கு மோக்ஷ பயன் கிட்டும், ஹரிஹர ஸாந்நித்ய பதவியும் கிட்டும்.*

*28. உத்தம காயகன் பாட்டினுல் பரமபதம் அடையமுடியாது. ஆனுல் ருத்ரதேவருடைய அநுசரராக இருந்து ஆனந்தம் அனுபவிப்பார்கள்.*

*29. இந்த லோகத்தில் எப்பொழுதும் ஒரு பழமொழி வழங்கப்பட்டு வருகிறது. கீதமாலேயினுல் ஹரி, ஹரன் இருவரும் பூஜிக்கப்பட்டு வருகிருர்களென்று.*

*30. இப்படிப் பேசிக்கொண்டே க்ஷணப்பொழுதில் மற்ருெரு இடத்திற்கு வந்தார்கள். இந்நகரின் பெயர் என்ன என்று சிவசர்மா கேட்டார்.*

*31. விஷ்ணு தூதர்கள் கூறினுர்கள் :- இது வித்யாதரர்களுடைய உலகமென்று. நாஞவித வித்யையில் பண்டிதர்கள் இங்கு வசிக்கிருர்கள். இவர்கள் மாணவர்களுக்கு அன்னம், வஸ்த்ரம், கம்பளி மேஜோடுகள் அளித்து,*

*32. அவர்களுடைய பீடையைப் போக்கி சாந்தி தரக்கூடிய மருந்துகள் இவைகளேயளிக்கிருர்கள். வித்யாகர்வமில்லாமல் நாஞவிதமான வித்யைகளே பிறருக்குக் கற்றுக்கொடுக்கிருர்கள்.*

*33. சிஷ்யனைப் புத்திரனுக்கு ஸமமாகக் கருதுபவர்கள்; வஸ்த்ரம், போஜனம், தாம்பூலம் இவைகளையளித்து இந்த லோகத்தில் வசிக்கின்றார்கள்.*

*34-35. இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டு இருக்கும்போது தேவதைகளுடைய நகராசப்தம் கேட்கும் ஸம்யமநீபுரம் (ஸம்யமநீபுரம்) அதிகாரி தர்மராஜரை ஸந்தித்தார்கள்.*

*36. அவர் சாந்தஸ்வரூபராய், தர்ம தாதாவாய் இருந்தார். மேலும் சேவை செய்வதில் மிகவும் நிபுணர்களான நாலைந்து வேலைக்காரர்கள்கூட விமானத்தில் அமர்ந்திருந்தார்.*

*37. தர்மராஜர் கூறினார்- ஹே புத்திமான், சிவசர்மா, பிராம்மணோத்தமா, பேஷ் பேஷ் தாங்கள் பிராம்மண குலத்திற்கு உசிதமான தர்மத்தைச் செய்து முடித்தீர்கள்.*

*38. முதலில் வேதாத்யயனம் செய்தீர்கள். பெரியவர்களை சந்தோஷப்படுத்தினீர்கள். பிறகு தர்ம சாஸ்திரம் புராணங்களிலுள்ள மரியாதைக்குரிய தர்மங்களைப் பார்வையிட்டீர்கள்.*

*39. சீக்கிரமாகவே இந்த நச்வர தேஹத்தை முக்திபுரிகளின் ஜலத்தினால் கழுவினீர்கள். அதனால் தாங்கள் வாழ்வு, மரணம் இரண்டையும் நன்றாக அறிந்தவர்.*

*40. எப்பொழுதும் துர்கந்தத்தினால் நிரம்பிய அபவித்ரபாத்ரமான சரீரத்தைத் தாங்கள் மேலான புண்ணிய தீர்த்தமாகிய திரவியத்தினால் பண்டமாற்று செய்து கொண்டீர்கள்.*

*41. அதனால்தான் பண்டிதர்கள் பாண்டித்யத்தை மதிக்கிறார்கள். தங்களுக்கு ஹிதத்தைக் கொடுக்கக்கூடிய ஸாதனங்களில் அந்த அறிவாளிகள் ஒருக்ஷணம் கூடக் காலத்தை வீணாக அடிப்பதில்லை.*

*42. பூமியில் பிராணிகள் ஐந்தாறு நிமிஷங்களே ஜீவிக்கிறுர்கள். இது ஸத்யம். அதில் கூட இழிவான ஈனகர்மங்களில் ப்ரவர்த்திக்கக் கூடாது.*

*43. சரீரம் எப்பொழுதும் நிச்சயமாக விநாசத்தையடையக் கூடியது. இதை தனத்திஞல் மரணத்திலிருந்து காப்பாற்ற முடியாது. அப்பொழுது மூடபுத்தியான ஜனங்கள் மகத்தான மோக்ஷ ஸாதனத்தில் தங்களைப்போல எப்படி முயற்சி செய்யமுடியும்?*

*44. ஆயுளோ மிக சீக்கிரத்தில் கழிந்து கொண்டிருக்கிறது. அதஞல் தார்மிகர்கள் தங்களைப்போலவே ஸத்கர்மத்தில் புத்தியைச் செலுத்த வேண்டும்.*

*45. நல்ல காரியங்களின் பலன் என்னவென்றுல் தங்களுக்கும் எனக்கும்கூட பூஜிக்கத் தகுந்த இரு பக்தர்களும் தங்களுக்கு மித்ர பாவத்தில் கிடைத்திருக்கிறுர்கள்.*

*46. நல்லது. நீங்கள் எனக்கு உத்தரவு கொடுங்கள். நான் உங்களுக்கு எந்தவிதமான ஸஹாயம் செய்ய வேண்டும்? ஏனென்றுல் என் போன்றவர்கள் என்ன செய்யவேண்டுமோ அதைத் தாங்களே செய்து காட்டிவிட்டீர்கள்.*

*47. இன்று நான் பரம தன்யஞனேன். ஏனென்றுல் இங்கேயே அந்த இரண்டு பகவத் ஜனங்கள் வந்திருக்கிறுர்கள். ஸ்ரீமத் வைகுண்ட நாதனுடைய சரணங்களில் எப்பொழுதும் என்னுடைய சேவை சொல்லத் தகுந்தது.*

*48. இதற்குப் பிறகு இந்த இரு பக்த ஜனங்களிடம் விடை பெற்றுக்கொண்டு தர்மராஜர் தனது புரிக்குத் திரும்பிஞர். தர்ம ராஜர் போன பிற்பாடு அந்தப்பிராம்மணன் (சிவசர்மா) அந்தக் கணங்களிடம் கேட்டான்.*

*49. இங்கே ஸாக்ஷாத் தர்மராஜர் மிகவும் சாந்தஸ்வரூபராகயிருக்கிருரே; இவருடைய வார்த்தை மனதிற்கு ஸந்தோஷமாக இருக்கிறது.*

*50. பிறகு இவருடைய ஸம்யமநீபுரீ என்ற பட்டணமும் மிகவும் சுபலக்ஷணங்களுடன் விளங்குகிறது. இதன் பெயரைக் கேட்ட உடனேயே பாபி ஜனங்கள் பயப்படத் தொடங்குகிருர்கள்.*

*51. ஆனுல் பூலோகத்தில் யமராஜருடைய உருவத்தை வேறு விதமாக வர்ணிக்கிருர்கள். ஆனுல் நான் இங்கு அவரை அதற்கு நேர் எதிராகப் பார்க்கிறேன்.*

*52. யாரும் இந்த யமபுரியைப் பார்த்ததில்லே, அங்கு யார் யார் வசிக்கிருர்கள்? அவர்களும் இவர் மாதிரி ஸௌம்யமூர்த்தியகளாக இருப்பார்களா? அல்லது வேறு விதமாக இருப்பார்களா? என்று அவைகளே எல்லாம் எனக்குச் சொல்ல வேண்டும்.*

*53. கணங்கள் கூறுகிருர்கள். ஏ! ஸௌம்யா! கேளும்; யமராஜர் தங்களேப் போன்ற ஸந்தேஹிக்க முடியாத புண்ணிய குணங்களேயுடையவர்களுக்கு இயற்கையாகவே பரம ஸௌம்ய தர்ம மூர்த்தியாகத் தென்படுகிருர்.*

*54. ஆனுல் இதே யமராஜர் செந்நிறக் கண்களும் கோபத்தால் சிவந்த கண்களும் பெரிய பெரிய பற்களுடன் கூடிய பயங்கரமான முகமும், மின்னலேப் போல் துடிக்கும் நாக்குடனும் ,*

*55. பயங்கரமான குத்திட்டு நிற்கும் மயிர்களுடன் மிகவும் கறுத்த பிரளய காலத்து மேகத்துக்கு ஸமமான நிறமுடன் தூக்கிய கையினில் காலதண்டத்தை உடையவரும், நெறித்த புருவத்துடன் கூடின முகமுடையவராய்.*

*56. ஏ அடக்கமுடியாதவர்களே! இவனேக் கொண்டுவாருங்கள் இவனே பூமியில் அறையுங்கள்; இவனேக் கட்டுங்கள், இந்ததுராத்மாவை சிரஸில் பெரிய*

*தீக்ஷ்ண்யமான இரும்பு உலக்கையினால் அடியுங்கள்.*

*57. அந்தப் பாவிகளுடையக் கால்களையும் தூக்கிக் கல்லில் அடியுங்கள், ஏய், நீ இவன் கழுத்தில் இரண்டு காலையும் வைத்து அழுத்தி இருகண்களையும் வெளியில் எடு.*

*58. இவன் கழுத்தில் சுருக்குப் போட்டு மரத்தில் தொங்கவிடு. இவனுடைய உப்பியிருக்கும் கன்னங்களையும் கத்தியினால் குத்துங்கள்.*

*59. இவன் தலையை மரத்தைப் போல் ரம்பத்தினால் அறுங்கள். இவனது முகத்தைக் கடினமான குதிகால்களால் பொடிப் பொடி யாக்குங்கள்.*

*60. இந்தப் பாபியிடைய பரஸ்த்ரீகளைத் தழுவின கையை வெட்டுங்கள். பரஸ்த்ரீயின் வீட்டிற்குச் சென்ற இவன் கால்களை ஒடியுங்கள்.*

*61. பரஸ்த்ரீயின் அங்கத்தில் நகங்களைப் பதிக்கும் இந்த துராத்மாவினுடைய சரீரத்தினுடைய ஒவ்வொரு ரோமக்கால்களிலும் ஊசியைக் குத்துங்கள்;*

*62. பரஸ்த்ரீயின் முகத்தை முத்தமிடும் அந்தத் துஷ்டன் முகத்தில் காரிக்காரி உமிழுங்கள். இந்த பர நிந்தனை செய்பவனுடைய முகத்தில் கூரிய ஆணியை அடியுங்கள்.*

*63. ஏ! பயங்காரமான முகத்தையுடையவனே; நீ, இந்த பிறருக்குத் தாபத்தைக் கொடுப்பவனை முட்செடிகளினால், கடலையைப் போன்று வறுத்து, மண்டையோட்டில் வறுங்கள்.*

*64. ஏ! கொடூரக் கண்களையுடையவனே! நிர்தோஷிகளிடம் எப்பொழுதும் குற்றம் கண்டு பிடிக்கும் இந்தப் பாபியை ரக்தமாம்ஸம் முதலான சகதியில் அமுக்குங்கள்.*

*65. ஏ! பயங்கரமானவனே! ஒருவருக்கும் ஒன்றும் கொடாமல் பிறருடையதையே எப்பொழுதும் எடுத்துக்*

*கொள்ளும் இந்த அல்பனுடையக் கையை எண்ணேயில் நனைத்து நனைத்து நெருப்பில் சுடுங்கள்.*

*66. ஏ! பயங்கரமானவனே! குருவை நிந்திக்கிறவனும் தேவர்களை அபவாதம் செய்பவனுமான இவனுடைய முகத்தில் காய்ந்த இரும்புப் பாளங்களை சொருகுங்கள்.*

*67. மற்றவர்களை அவர்களுடைய ரகசியங்களை பேதிக்கும் மற்றவர்களுடைய பலவீனத்தைப் பிரகாசப்படுத்தும் இவனுடைய எல்லா மூட்டுகளிலும் காய்ந்த இரும்பாணிகளைச் சொறுகுங்கள்.*

*68. ஏ துர்முகா! பிறரைத் தானம் கொடாமல், தடுப்பவனும் மற்றவர்களின் பிழைப்பினைக் கெடுப்பவனுமான இந்தப் பாபியின் நாக்கையறுங்கள்.*

*69.(கோவில் சொத்துக்களை அபகரிக்கும்) கோவில் சொத்துக்களையும் பிராம்மணருடையசொத்துகளையும் அபகரிக்கும் இந்தப் பாபினுடைய வயிற்றைக் கிழித்து விஷ்டையின் புழுக்களால் நிரப்புங்கள்.*

*70. ஏ அந்தகா, எவன் எப்பொழுதும் தேவர்களுக்காகவும், பிராம்மணர்களுக்காகவும், அதிதிகளுக்காகவும் உணவு தயாரிக்க வில்லேயோ, அந்த தன்னலம் மிகுந்த பாபியை - கும்பீ பாகத்தில் தள்ளுங்கள்.*

*71. ஏ! உக்ரமான முகத்தையுடையவனே! குழந்தைகளை ஹிம்ஸிப்பவனும், நம்பிக்கை துரோகியும் நன்றி கெட்டவர்களான இவர்களை சீக்கிரமாக ரௌரவம் மஹாரௌரவம் ஆன நரகத்தில் தள்ளவும்.*

*72. இந்தப் பிராம்மணத் துரோஹியை அந்த கூபத்தில் மத்யபானம் செய்பவனே ஜலமும் ரத்தமும் நிறைந்த குழியில் தங்கத்தைத் திருடியவனே கால சூத்ரத்தில் - குருபத்னி கமனம் செய்தவனே அறுவாச்சி என்னும் நரகத்தில்*

*73. இந்தப்பாபிகளுக்கு உபகாரம் செய்தவர்களை, ஒரு வருஷம் வரை அஸிபத்ரவனம் என்னும் நரகத்தில் இந்த*

*மஹா பஞ்சபாதகம் செய்தவர்களை எரிகின்ற எண்ணைக் கொப்பரையில்*

*74,75. வறுவுங்கள். ஏ கோரமான பற்களையுடையவர்களே! ஸ்த்ரீயைக் கொலை செய்தவன், கோஹத்தி செய்தவன், ஸ்நேகத் துரோஹம் செய்தவன் இவர்களைக் கருவேல மரத்தில் தலைகீழாக வெகுகாலம் தொங்க விடுங்கள்.*

*76. ஹே! மஹாபுஜ! இந்த மித்ர பத்னியை ஆலிங்கனம் செய்தவனை, காலைவாரிப்பற்றி, தோலை உரித்துக் கைகளை வெட்டி விடுங்கள்.*

*77. பிறர் பூமியை, பிறர் வயலை எரித்தவர்களை வாலசீலம் மகாநரகத்தில் தள்ளுங்கள்.*

*78,79. விஷம் வைத்தவன், பொய் ஸாக்ஷி கூறினவனைக் கால கூடத்தில் தள்ளுங்கள்; கள்ள நிறுவை நிறுத்தவன், சாமான்களில் கல்லைக் கலந்தவன் இவர்களைக் கண்ட மோடம் என்னும் நரகத்தில் தள்ளுங்கள்; கர்ப்பத்தை அழித்தவளை, பிறருக்கு ஸந்தாபம் அளித்தவளையும் சூலபாக நரகத்திற்குக் கொண்டு போங்கள்.*

*80. மதுரஸம் விற்பவனுன பிராம்மணனை எண்ணை ஆட்டும் செக்கில் இட்டு ஆட்டுங்கள். பிரஜைகளைத் துன்புறுத்தும் அரசனை அந்தக் கூபத்தில் தள்ளுங்கள்.*

*81. ஹே ஹலாயுத, பசு, எள், குதிரை இவைகளை விற்பவனை பங்க், அபினி, மது விற்கும் பிராம்மணனை.*

*82. மதுவிற்கும் வைச்யனையும் உரலில் போட்டு உலக்கையினுல் இடைவிடாமல் இடியுங்கள். ப்ராம்மணர்களை அவமானம் படுத்துபவனை பிராம்மணனுக்கு முன்னுல் கட்டிலில் உட்காருபவனை, அவன் சூத்ரனுக இருந்தால்*

*83. அதோமுக நரகில் அதிக வேதனையைக் கொடு;*

*84. பிராம்மணனை ஜயித்த சூத்ரன் விப்ராபிமானி வைச்யன், யக்ஞம் செய்யும் க்ஷத்ரியன், வேதம் தெரியாத பிராம்மணன்;*

*85. இரும்பு, உப்பு, மாம்ஸம், தைலம், விஷம் அம்ருதம், வெல்லம் கரும்பிலிருந்து செய்யும் மற்ற பதார்த்தங்கள் இவைகளை விற்கும் அதமனான பிராம்மணனை*

*86. இவர்களைக் கால்களை இறுகக்கட்டி சவுக்கினால் அடித்துக் கொதிக்கும் சகதியில் அமுக்குங்கள்.*

*87. இந்தக் குலத்திற்கு அவமானம் தரும் வியபசார ஸ்த்ரீயை எரியும் இரும்பினால் செய்த இந்த வியபசார புருஷனைக் கட்டிக் கொள்ளச் செய்யுங்கள்.*

*88. நியமங்களைப் பின்பற்றாமல் நடுவில்விட்ட அந்தத்துஷ்டனை வண்டுகள் நிறைந்திருக்கும் நரகத்தில் தள்ளுங்கள்.*

*89. இந்த விதமாக யமன் கிங்கரர்களுக்கு ஆக்கினையிடுவதை நேரில் கேட்டிருக்கிறோம். இவர் தங்கள் கர்மங்களைப் பற்றி ஸந்தேஹிக்கும் பாபிகளுக்குப் பயங்கரமாகத் தென்படுவார்.*

*90. இந்த உலகில் தனது சொந்த புத்திரர்களைப் போல் பிரஜைகளை ரக்ஷிக்கிற ராஜனை, தர்ம விதிப்படி சிக்ஷை கொடுக்கின்ற ராஜனை தனது ஸபாஸதர்களாக ஆக்குகிறார்.*

*91. எந்த அரசனுடைய ராஜ்யத்தில் நான்கு வர்ணத்தவரும் தங்கள். தங்கள் கர்மங்களை விதிப்ரகாரம் அனுஷ்டிக்கிறார்களோ, காலக்ரமத்தில் மரணம் அடைந்தபின், அவர்களும் இந்தப் பிரஜைகளாகின்றனர்.*

*92. யாருடைய தேசத்தில் தீனர்கள், துஷ்டர்கள், ஆபத்தில் ஆழ்ந்திருப்பவன், சோகப்படுவன் இவர்கள் காணப்படுவதில்லையோ, அந்த தேசத்து அரசர்களும் யமராஜருடைய தர்பாரிகளாக ஆகின்றனர்.*

*93. எப்பொழுதும் தங்கள் கர்மத்தில் ஆழ்ந்து இருக்கிற நான்கு வர்ணத்தவரும் மற்றவரும் யமபுரத்துப் பிரஜைகளாகின்றனர்.*

*94. உசீனர், ஸுதன், வ்ருஷபர்வா, ஜயத்ரன், ராஜீ ஸஹஸ்ரஜித், த்ருடதன்வா, ரிபும்ஜயன்.*

*95. யுவனுஸ்வன், தந்தவக்த்ரன், தாபாகன், ரிபுமங்களன், கர்தமன், தர்மஸேனன், பரமாதகன், பராந்தகன்.*

*96. முதலிய அரர்களும் மற்றும் நீதிமார்க்கத்தில் நடக்கிற தர்மம், அதர்மம் இவைகளை நன்கு தெரிந்தவர்களும், ஸ்வதர்மம் என்னும் யமராஜருடைய தர்பாரில் உட்காருகிறுர்கள்.*

*97. இன்னெரு விதமான ஜனங்கள் உள்ளனர், யமராஜரையோ, தண்டம், பாசம் இவைகளை ஏந்திய பயங்கர முகமுடைத்தான யமதூதர்களையோ பார்த்ததேயில்லை. அவர்களையும் சொல்லுகிறோம்.*

*98. ஹே கோவிந்தா, ஹே மாதவா, முகுந்தா ஹரேமுராரே, சம்போ; சிவ, ஈசா, சசிசேகரா, சூலபாணி, தாமோதரா, அச்யுதா, ஜனர்தன, வாஸுதேவா; ஹே தூதுவர்களே, எவர்கள் இந்த நாமங்களை ஸதாமனனம் செய்து கொண்டு இருக்கிறுர்களோ அவர்களைவிட்டு விடுங்கள்.*

*99. ஹே கங்காதரா, அந்தகரிபோ, ஹரா, நீலகண்டா, வைகுண்ட, கைடபரிபோ, கமடஅப்ஜபாணே, பூதேசா, கண்ட பரசோ, ம்ருடசண்டிகேச, ஹே கணங்களே, யார் இவ்விதம் எப்பொழுதும் ஜபிக்கிறுர்களோ, அவர்களை விட்டுவிடுதல் உசிதம்.*

*100. ஹே விஷ்ணு, நிருஸிம்ம, மதுசூதன, சக்ரபாணி, கௌரீபதே, கிரீசா, சங்கர, சந்த்ரசூடா, நாராயண, அக்ஷர; நிபர்கண, சாரங்கபாணி, இந்தவிதமாக நிரந்தரமாகச் சொல்லுபவரையும் விட்டுவிடுங்கள்.*

*1. ஹே ம்ருத்யுஞ்ஜய, உக்ர, விஷமேஷண, காமசத்ரோ, ஸ்ரீகாந்தா, பீதவஸன, அம்புதநீல, சௌரே, ஈசான க்ருத்திவஸனு, த்ரிதசகநாதா, இப்படி எவர்கள் தினமும் ஜபம் செய்கிறார்களோ, ஏ! படர்களே! அவர்களையும் விட்டுவிடவேண்டும்.*

*2. ஹே லக்ஷ்மீபதே, மதுரிபோ, புருஷோத்தமா, ஆத்ய, ஸ்ரீகண்ட, திக்வஸன, சாந்தபிநாகபாணே, ஆனந்தகந்ததர, ஸ்ரீதர, பத்மநாபா, இப்படி சிந்தனைபண்ணுகிறவர்களையும் விட்டுவிடுங்கள்.*

*3. ஹே ஸர்வேஸ்வர, த்ரிபுரஸூதனு, தேவதேவா, ப்ரம்மண்ய தேவா, கருடத்வஜ, சங்கபாணே, த்ரயக்ஷ, உரகாபணு, பாலம்ருகாங்கமௌலே, இப்படிக் கூறுகிறவர்களிடம் தூர விலகியே இருங்கள்.*

*4. ஹே ஸ்ரீராமா, ராகவ, ராமேஸ்வர, ராவணாரே, பூதேசா, மன்மதரிபோ, ப்ரமதாதி நாத, சாணூரமர்த்தனு, ரீஷகபதே, முராரே, இந்த ப்ரகாரம் சொல்லிக்கொண்டு இருக்கிறவர்களையும் பரித்யாகம் செய்வதே உசிதம்.*

*5. ஹே ஆலின், கிரீச, ரஜனீ கலாவதம்ஸ, கம்ஸப்ராண நாசன, ஸனாதனு, கேசிநாதா, பத்ரிநேத்ரா, பவ, பூதபதே, முராரே எவர்களிப்படி ஸந்ததம் மனனம் செய்கிறார்களோ அவர்களையும் த்யாகம் செய்ய வேண்டும்.*

*6. ஹே கோபீபதே; யதுபதே, வஸுதேவஸுதா, கர்ப்பூர கௌர, வ்ருஷபத்வஜ, பாலநேத்ர, கோவர்த்தனோத்தாரணு, தர்மதுரீணு, கோப - இப்படி பஜனை செய்கிறவர்களிடம் இருந்தும் விலகி நில்லுங்கள்.*

*7. ஹே ஸ்தாரிணோ, த்ரிலோசனு, பினாகதா, ஸ்மராரே, க்ருஷ்ண, அநிருத்த, கமலா காந்தா, கஸ்மபாகே, விச்வேச்வரா, த்ரிபதகார்த்ரா, ஜடாகலாபா, இந்தவிதமாக எவர்கள் த்யானம் செய்கிறார்களோ, இவர்களையும் எப்பொழுதும் விட்டுவிடுவது நல்லது.*

*8. அஹோ பிராம்மணரே, சிவசர்மா இந்த ஸுந்தரமான நாமரூபமான நூற்றெட்டு லலிதமான பதங்களையுடைய ரத்ன கூட்டத்தைத் தொடுத்த பிரஸித்த ஹாரமத்ய மணியால் சோபிக்கப் பட்ட மாலையை எவன் (கண்டஸ்திதி) பாராமல் சொல்லுகிறுனே, அவன் யமராஜனைப் பார்க்கமாட்டான்.*

*9. இந்த விதமாக பூமிக்கு செல்லும் தனது தூதுவர்களை எப்பொழுதும் சொல்லியனுப்புவது வழக்கம்; மேலும் பூமியில் யாராவது சிவ விஷ்ணு சின்னங்களைத் தரித்திருந்தாலும் சரி, அவர்களை தூர இருந்தே விலக்குவது நல்லது.*

*10. யாதொரு தீரன் தர்மராஜாவினுல் சொல்லப்பட்ட பல விதமான ப்ரபந்தங்களுடன் கூடிய இந்த ஸமஸ்த பாபவிநாசினி ஹரி ஹராத்மிகமான இந்த நாமாவளியை நித்யம் ஜபம் பண்ணுகிறவன் மறுபடியும் மாதாவிடம் ஸ்தன்ய பானம் செய்யமாட்டான்.*

*11. ஹே! ப்ரியே! இந்த விதமான பாபத்தைப் போக்கும் மனேகரமான கதையைக் கேட்டுக் கொண்டே அந்த சிவசர்மா தனக்குமுன் அப்ஸரஸ் பெண்களைப் பார்க்கத் தொடங்கினுன்.*

*12. துர்ஜனருக்கு யமராஜர், ஸத்ஜனருக்கு தர்மராஜர்.*

*ஸ்ரீ ஸ்கந்தபுராணத்தில் நான்காவது காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான பிசாச லோகம் ஆரம்பித்து யமலோக வர்ணனம் எட்டாவது அத்தியாயம் ஸம்பூர்ணம்.*



# அத்தியாயம் 9

*சிவசர்மா கேட்டான், ரூபலாவண்யரும், ஸௌபாக்யசாலியாகவும், திவ்ய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களும் ஸ்வர்க போகத்தில் பரிபூர்ணமாகத் திளைக்கும் இவர்கள் யார்?*

***1. கணங்கள் கூறினார்கள், இவர்கள் அப்ஸரஸ்கள். இந்திரன் முதலான தேவ கணங்களுக்குப் ப்ரீதிக்கு பாத்ரமான கன்னிகைகள் கீதத்தில் நிபுணைகள்,***

***ஆட்டத்தில் கெட்டிக்காரிகள், வாத்யம் வாசிப்பதில் மிகவும் தேர்ந்தவர்கள், காமகேளி விளையாட்டில் நிபுணர்கள்.***

***2. சதுரங்க விளையாட்டில் நிகரில்லாதவர்கள், ரஸிகத்தன்மையுடன் கூடிய மனோபாவத்தில் (புத்திசாலிகள்) ஸமயோசிதமாகப் பேசுவதில் சதுரர்கள்.***

***3. அநேக தேச விசேஷங்களையறிந்தவர்கள். நானாவித பாஷைகளில் பாண்டித்யம் பெற்றவர்கள். ஸங்கேத பாஷையில் இங்கிதக்ஞைகள். இவ்வித குணம் நிரம்பிய இவர்கள் கட்டுப்பாட்டுடன் ஸந்தோஷமாக, ஸ்வதந்த்ரமாக உலாவி வருகிறார்கள்.***

***4. அலங்காரம் செய்து கொண்டு, லீலாவிளையாட்டில் ஆவல் நிரம்பியவர்களாக மதுர பாஷிணிகளாக இருக்கிறார்கள்; இவர்கள் யாவரும் சைகைகளினாலும், நடிப்பினாலும் யுவர்களின் மனதை ஆகர்ஷிக்கின்றனர்.***

***5. பூர்வ காலத்தில் அம்ருதம் கடையும் பொழுது இவர்கள் பாற்கடலிலிருந்து உற்பத்தியானவர்கள். மூன்று லோகங்களையும் ஜயித்தவர்கள், காமதேவனுடைய மோஹாஸ்த்ர ஸ்வரூபமானவர்கள் ஊர்வசீ, மேனகா, ரம்பா, சந்த்ரலேகா, திலோத்தமா.***

***6. வபுஷ்மதிகா, காந்திமதி, நீலாவதி, உத்பலாவதி.***

*7. அலம்புஷா, குணவதி, ஸ்தூலகேசி, கலாவதி, குணநிதி, கற்பூர திலகா, உர்வரா*

*8. அனங்கலதிகா, மதன மோஹிநீ, சகோராக்ஷீ, சந்திரகலா, முனிமனோஹரா, த்ராவத்ராவா, தபோத் பேஷ்டரீ, சுருநாமா ஸுகர்ணிகா, வாரஸஞ்ஜீவிநீ, ஸுஸ்ரீ*

*9. க்ருதுசுக்லா, சுபாநநா.*

*10. தபசுக்லா, தீர்த்தசுக்லா, ஞானசுக்லா, ஹிமாவதீ, பஞ்சாஸ்வமேதிகா, ராஜஸூயார்த்தினீ,*

*11. அஷ்டானி ஹோமிகா, வாஜபேய ஸதோத்பவா, முதலிய ப்ரதான அப்ஸரஸ்கள் எட்டாயிரம்.*

*12. அந்த அப்ஸரலோகத்தில் எப்பொழுதும் அழியாத அழகுடன் கூடின நிலேத்திருக்கிற யௌவன வனத்துடன் அநேகம் ஸுந்தரிகள் வஸிக்கிறுர்கள்.*

*13. அவர்கள் எல்லாரும் கூட திவ்ய வஸ்த்ரம், திவ்யமாலே, திவ்யசந்தனம் இவைகள் தரித்துக்கொண்டு திவ்யமான போகங்களுடன் நிறைந்தவர்களாக இச்சைப்படி சரீரம் எடுக்கும் வல்லமை பொருந்தியவர்களாக இருக்கின்றனர்.*

*14. எந்த ஸ்த்ரீகள் மாஸோபவாஸ வ்ரதம் இருந்துகொண்டு தெய்வாதீனத்தால் ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை ப்ரம்மசர்யத்திலிருந்து தடுமாறுகிறுர்களோ,*

*15. அந்த ஸ்த்ரீகளே, இங்கு திவ்ய போகங்களுடனும் ரூபலாவண்யங்களுடனும், திவ்ய ஸம்பத்துகளுடனும், எல்லா இச்சைகளிலும் பரிபூர்ணர்களாக இருக்கிறுர்கள். அவர்கள் இந்த அப்ஸரலோகத்தில் வஸிக்கிறுர்கள்.*

*16. விதி பூர்வமாக ஸாங்கோபாங்கமாக காமவ்ரதத்தை அனுஷ்டித்ததினுல் இந்த லோகத்தை யடைந்து, ஸ்வதந்த்ரர்களாய் தேவபோகத்துடன் இருக்கிறுர்கள்.*

*17. ஏ! ப்ராம்மணோத்தமரே! எந்தப் பதிவ்ரதா ஸ்த்ரீகள் பலவானுன புருஷனுல் பலாத்காரம் செய்யப்பட்டு பர்த்தாவிற்காகவே அவனுடன் ஸம்போகம் செய்கிறுர்களோ, அவர்களே இங்கு வந்து வஸிக்கிறுர்கள்.*

*18. ஸ்வாமி அசலூருக்குப்போன போது எப்பொழுதுமே ப்ரம்மசர்யம் அனுஷ்டிக்கிறவள் தெய்வாதீனமாக ஒருமுறை ப்ரம்மசர்யத்திலிருந்து வழுவினவள். அந்த அழகிய பெண்மணிகள் அந்த அப்ஸரஸ்லோகத்தில் வஸிக்கின்றனர். எந்த வராங்கனைகள் விதவிதமான வாஸனையுள்ள சந்தனங்களைப் பூசிக்கொண்டு மிகவும் வெளுப்பான கற்பூரத்தைப் போன்ற*

*19. அதிசூக்ஷ்மமான வெளுத்த மேகலையும், புராணகடம் நுனி பக்கமுள்ள*

*20. ஸ்வர்ண வர்ணமான கடம் நீலவர்ணமும், பருமனுமான கச்சை.*

*21. ஸுகதிரவ்யங்கள் சேர்த்தத் தாம்பூலம், விசித்ரமான அலங்காரங்களுடன் கூடிய ரதியின் மாளிகை மந்திரத்திற்குப் பொருத்தமான படுக்கைகள்;*

*22. அநேக நூதன வஸ்துக்கள் இவைகளினுல் ப்ராம்மண தம்பதிகளுக்குப் பூஜை செய்து இந்தக் காம்யபோக தானத்தை, ஒவ்வொரு சூரிய ஸங்கராந்தி ஸமயத்திலும்,*

*23. ஒவ்வொரு த்விதீய பாதத்தின் போதும் கோதாத் முதலிய மந்த்ரங்களைச் சொல்லி தானம் செய்கிறுர்கள்.*

*24. காம ரூபமுடைய தேவன் ஸந்தோஷமடையட்டும், என்று சொல்லுகிறுர்கள். ஏ, த்விஜோத்தமா! இந்த அங்கனைகள், அப்ஸரஸ்த்ரீகள் மத்தியில் மதிப்புடையவர்களாய், கல்ப பர்யந்தம் இங்கு வஸிக்கிறுர்கள்.*

*25. யாதொருபெண் கன்னிகையாக இருக்கும் பொழுது ஏதாவது ஒரு தேவதையினுல் மோஹிக்கப்பட்டு, ஆனுல் அதன் பிறகு ப்ரம்மசாரிணியாக இருந்து*

*26.அந்தப் பூர்வ விருத்தாந்தத்தை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, யதாசமயத்தில் மரணம் அடைந்தால் அவள் திவ்ய ரூபதாரிணியாக, அந்த அப்ஸரலோகத்தில் சேர்ந்து வஸிக்கிருள்.*

*27. ப்ராம்மஞேத்தமரான சிவசர்மா அப்ஸரலோகத்தை அடைவதற்கான காரணத்தைக் கேட்டுக் கொண்டே, அதன் பிறகு க்ஷணமாத்திரத்தில் விமானமூலமாகவே விஷ்ணுவின் இரண்டு பாரிஷதர்களுடன் சூரியலோகமடைந்தார்.*

*28.கதம்பபுஷ்பத்தின் மகரந்தப் பொடிகளால் எங்கும் வ்யாபிக்கப்பட்டிருப்பதுபோல ஸுூர்யலோகம் ஸுூர்ய கிரண ஸமூஹங்களினுல் வியாபிக்கப்பட்டிருப்பதைப் பார்த்தார்.*

*29. அங்கு ஸுூர்ய மண்டலம் எப்படியிருக்கிறதென்பதையும் பார்த்தார். ஒன்பதாயிரம் யோஜனை சுற்றளவு இருக்கிறது; ஏழு குதிரைகள் பூட்டியிருக்கிற கடிவாளங்களைக் கையில் பிடித்துக் கொண்டு, அருணன் ஸுூர்ய ரதத்தின் முகப்பில் உட்கார்ந்திருக்கிருன். அவன் முன்னுல் அப்ஸரஸ்களும், முனீஸ்வரர்கள், கந்தர்வர்கள், ஸர்பங்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் இவர்கள் ஆச்ரயித்து இருக்கிருர்கள். அதிவேகமாகச் செல்லக்கூடிய விசித்ரமான சக்ரத்துடன் கூடிய ரதத்தில் ஸுூர்ய பகவான் வீற்றிருக்கிருர். இரண்டு கைகளிலும் இரு ரக்த நிறமுள்ள தாமரைப் பூக்கள் வைத்துக் கொண்டிருக்கிருர். அப்படிப்பட்டஸுூர்ய பகவானை அறிந்து சிவசர்மா, கையைக் குவித்துக் கொண்டு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார்.*

*30-31-32. ரவிதேவரும் அந்த நமஸ்காரத்தை ஒருசிறிது புருவத்தின் அசைப்பால் க்ரஹித்துக் கொண்டு*

*க்ஷணமாத்ரத்தில் மிகவும் அதிதூரம் ஆகாசமார்க்கத்தை ஆக்ரமித்துக் கொண்டார்;*

*33. பரம ஸந்தோஷமடைந்த சிவசர்மா, தினமணி ஆக்ரமித்துப் போனபிறகு தன்னுடன் இருக்கும் இரு பகவத்பக்தர்களையும் பார்த்துக் கூறினார். எந்தப் புண்ணியத்தின் மூலமாக சூரிய லோகத்தின் ப்ராப்தி எனக்குக் கிடைத்தது?*

*34. நீங்கள் பந்துக்கள் என்றெண்ணி விஸ்தரித்துச் சொல்லுங்கள். ஏழடி ஒன்றாய் எடுத்து வைத்தால் ஸாதுக்களுக்குள் ஸ்நேகிதபாவம் ஏற்பட்டு விடுகிறது.*

*35. விஷ்ணுவின் இரண்டு பாரிஷதகணங்களும் கூறினார்கள், ஓ மஹாப்ராக்ஞரான ப்ராம்மணோத்தமரே! தங்களிடம் சொல்லக் கூடாத ஸமாசாரம் ஒன்றுமில்லை. ஏனென்றால் ஸத் ஜனங்களுடைய ஸங்கத்தினால்தான் ஸாது மஹாத்மாக்களின் ஸத் கதை ஆரம்பமாகிறது.*

*36. எல்லா பூதங்களையும் ஒன்று சேர ஆள்பவன் எல்லாவற்றுக்கும் மூலகாரணமும் நாமரூபகோத்ரமில்லாதவரும்*

*37. ஜகத்தில் உற்பத்தியும் ப்ரளயமும் எவருடைய புருவ நெருப்பின் பலனோ, அவர்களுமான ஸர்வாத்மா வேத புருஷர்கள் ஸ்பஷ்டமாக என்ன சொல்கிறார்கள் என்று கேட்டால்,*

*38. ஆதித்ய மண்டலத்தில் நானே எந்த ஜனங்கள் மற்றவர்களை உபாஸிக்கிறார்களோ, அவர்கள் அந்தகாரமாகிய தமஸ்ஸில் பிரவேசிக்கிறார்கள்.*

*39. ஓ ப்ராம்மணோத்தமரே! இப்படி நிச்சயமாகக் கூறும் வேதத்தின் மூலமாகப் ப்ராம்மணர்கள் திரும்பத்திரும்ப நிச்சயம் செய்துகொண்டு இந்த ஆதித்யரூபமான ப்ரம்மம் ஒன்றையே உபாஸனை செய்கிறார்கள்.*

*40. எந்தப் பிராம்மணர்கள் காயத்ரீ உபதேசம் பெற்று மூன்று காலமும் ஜபம் செய்யவில்லையோ, அவர்கள் ஒரு வாரத்திற்குள்ளேயே பதிதன் ஆகிறார்கள். இதற்குக் கொஞ்சமும் ஸந்தேஹமில்லை.*

*41-42-43. அதிகாலையில் ஸூர்யன் பாதி உதயமாகிற பரியந்தம் ஆதித்யனின் முன்னால் நின்று கொண்டு ஸாவித்ரி மந்த்ரத்தை ஜபிப்பவர்கள், ஸாயங்காலம் ஆஸனத்தில் அமர்ந்துகொண்டு நக்ஷத்ரங்கள் உதயமாகும்வரையில் ஸூர்யனுக்கு முன்னால் ஜபம் செய்கிறவர்கள் சரியாக மத்யான காலத்தில் அதாவது சூரியன் மறுபக்கம் சாயாமல் தலைக்கு நேராக நிற்கிறானோ அதுவரை மத்யான ஸந்த்யை என்று கூறப்படும். அந்தக் காலங்களில் ஸூர்யனுக்கு நேராகப் பார்த்து ஜபம் செய்கிறவர்கள் காலம் நழுவி விடாமல் சரியான காலத்தில் செய்ய வேண்டும்.*

*44. சரியான காலத்தில்தான் எல்லா ஓஷதிகளும் பலனைத் தருகின்றன. எல்லா வ்ருக்ஷங்களும் காலமறிந்துதான் பூக்கின்றன. மேகங்களும் காலம் அறிந்துதான் மழை பொழிகின்றன. அதனால் காலத்தை ஒரு பொழுதும் அலட்சியம் செய்யக்கூடாது. மந்தேகம் என்னும் பெயருடைய ராக்ஷஸ கணங்கள் தேக நாசமடையும் நிமித்தம் ரவிதேவருடைய உதய அஸ்தமன ஸமயங்களில் ப்ராம்மணர்கள் மந்திரத்துடன் கூடக் கொடுக்கும் மூன்றுகை ஜலத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.*

*45. எவர்கள் காலகாலத்தில் காயத்ரீ மந்த்ரத்தினால் புனிதமாகப்பட்ட மூன்றுகை ஜலத்தை ஸூர்யதேவனுக்கு அர்ப்பிக்கிறார்களோ, அவர்களுக்கு மூன்று லோகங்களையும் தானம் செய்த பலன் கிடைக்கிறது.*

*46. ஸூர்ய நாராயணன் காலமறிந்து ஒழுங்காக உபாஸனை செய்கிறவர்களுக்கு எதைத்தான் கொடுக்கமாட்டான்? அவர் ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம், தனராசி, பசுக்கள்.*

*47. புத்ரன், மித்ரன், களத்ரம் அநேக க்ஷேத்ர தர்சனம், சுகந்தம், ஸ்த்ரீ, வஸ்த்ரம், கீதம், தாம்பூலம், போஜனம், வாஹனம், தேவாலயம் இந்த அஷ்டவிதமான ஸ்வர்க மோஹங்களும் சொர்க்க மோக்ஷத்தையும் கொடுக்கிறார்.*

*48-49. பதினெட்டு விதமான வித்தைகளில் மீமாம்ஸை மிகவும் ச்ரேஷ்டமானது. அதைவிட மேலானது தர்க்க சாத்திரம், தர்க்க சாஸத்திரத்தைவிடப் புராணம் மேலானது. தர்ம சாஸ்த்ரம் புராணங்களை விட மேலானது. தர்ம சாஸ்த்திரங்கள் விட வேதம் பரம ச்ரேஷ்டமானது. வேதங்களைவிட உபநிஷத் மேலானது. காயத்ரீ உபநிஷதங்களைவிட மேலானது.*

*50. ப்ரணவத்துடன் கூடிய காயத்ரீ எல்லா மந்த்ரங்களையும் விட துர்லபமானது. மூன்று வேதங்களும் காயத்ரியைவிட மேலானது ஒன்றுமில்லை என்று கூறுகின்றன.*

*51. காயத்ரிக்கு ஸமமான மந்திரமில்லை காசிக்கு ஸமமான புரியுமில்லை. விச்வேச்வரரை ஒத்த லிங்கமும் இல்லை. இது முக்காலும் ஸத்யம்.*

*52. காயத்ரீ வேதத்தினுடைய மாதா, காயத்ரியே ப்ராம்மணர்களுக்குத்தாய்: தன்னை ஓதுபவர்களை கரை ஏற்றுவதால் காயத்ரீ என்று பெயர் வந்தது.*

*53. ஸுூர்யனுக்கும் காயத்ரிக்கும் வாச்ய வாசக ஸம்பந்தமுண்டு; காயத்ரிக்கு ஸாக்ஷாத் வாச்யர் ஸவிதா; காயத்ரீ ஸவிதா (சூரியனுடைய) வாசகா.*

*54. ஜிதேந்த்ரியரான விச்வாமித்ரர் க்ஷத்ரியனாக இருந்த போதிலும் இந்த காயத்ரீ மந்திரத்தை ஜபித்து ராஜர்ஷியாக இருந்தவர் - ப்ரம்மர்ஷியானார்.*

*55. மேலும் அவர் வாழ்க்கையினுடைய ப்ரபாவத்தினால் புதிதாக லோகம் ஒன்றை ஸ்ருஷ்டி பண்ணும் சக்தியையடைகிறார். ஒழுங்கான முறையில் காயத்ரியை ஜபித்து வந்தால் அவளுடைய*

*அனுக்ரஹத்திஞல் என்னதான் கிட்டாது!*

*56. வேதத்தைப் பாடம் செய்வதிஞலும் சாஸ்திரத்தை அத்யயனம் பண்ணுவதிஞலும் ப்ராம்மணஞக மாட்டான், கேவலம் காயத்ரியை மூன்றுகாலம் அப்யாஸம் பண்ணுவதிஞலேயே ப்ராம்மணஞகிருன். மற்றவிதமாக ஆகமுடியாது.*

*57. காயத்ரியே மஹாவிஷ்ணு, காயத்ரியே பரமசிவன், காயத்ரியே ப்ரம்மா; ஆகையிஞல் காயத்ரியே ப்ரம்மா விஷ்ணு சிவஸ்வரூபமான மும்மூர்த்திகளுமான வேதமும்கூட.*

*58. இந்தக்கிரண ஸமூகத்திஞல் அலங்கரிக்கப்பட்ட திவாகர தேவனே ப்ரம்ம விஷ்ணு மஹேச்வரஸொரூபரும் ஆவார் ஸ்வரூபரும் ஸம்பூர்ண ஜ்யோதி ஸமூகமும். காலமும் அதை நடத்துபவரும் அவரேதான்.*

*59. ஸாரம் அஸாரம் இவைகளே அறிந்த விவேகிகளாகிற தாங்கள் வஸிக்கின்ற வைகுண்ட லோக வாஸிகள் ஸூர்ய தேவனே உத்தேசித்து இந்தஸ்துதியைப் பாடுகிருர்கள்.*

*60. ஏ மனிதர்களே! இதே தேவன் ஸமஸ்ததிக்குகளுக்கும், திக்குகளுக்கப்பாலும், உயரேயும் கீழேயும், பசு, பக்ஷி பகுதிகளிலும் வ்யாபித்து இருக்கிருர்- இவரே அஞதி நாதஞக உற்பத்தியாகியிருக்கிருர்- இவரே மாதாவின் கர்பத்தில் பிரவேசித்துப் பிறக்கிருர். பிறந்தார், பிறப்பார். ஒவ்வொரு பொருளிலும் இவரே வ்யாபித்திருக்கிருர், இவரே ஸர்வவ்யாபி.*

*61. ஏ! விப்ரா! யாதொரு ப்ராம்மணன் சோம்பலில்லாமல் மேற்கூறிய ஸூர்ய ஸூக்தத்திஞல் ஜபம் செய்கிருனே, அவன் எப்பொழுதும் ஸூர்யனுக்கு ஸமமாக ஆகிஸூர்ய லோகத்தில் வசிக்கிருன்.*

*62. பிராம்மணு! புஷ்ய நக்ஷத்ரத்துடன் கூடிய ஞாயிற்றுகிழமை பூசம், ஹஸ்தம், மூலம், உத்தராடம்,*

*உத்திர பங்குனீ, இந்த நக்ஷத்ரங்களுடன் கூடின ஆதித்யவாரத்தில் எது செய்கிருேஞே அது கட்டாயம் பலனிக்கும்.*

*63. சிரத்தையுடன் ஒருவேளை உணவுடன் காமக்ரோதம் இல்லாமல் வ்ரதம் இருந்து புஷ்யமாதத்து (தைமாதம்) ரவிவாரத்தில் ஸூர்யோதய காலத்தில் ஸ்நானம் செய்து ஸூர்யனை உத்தேசிந்து, தான, ஹோம ஜபம் பூஜைகளை ஒருவன் செய்தானேயாஞல் அவன் அதிக தேஜஸ்ஸுடன் போகங்களை அனுபவித்து அப்ஸரஸ்த்ரீகளுடன் ஸூர்ய லோகத்தில் வஸிக்கிருன்.*

*64-65. மகர சங்க்ராந்தி, துலாம், மேஷம் - தனுர், மிதுனம், கன்யா மீனம், விருஷப விருச்சிகம், சிம்மம், கும்பம், இந்த சங்க்ராந்தி மஹாவ்ரதம் இருந்து மஹாதானம் செய்ய வேண்டும்.*

*66. எண்ணை நெய்யுடன் ஹோமம் செய்ய வேண்டும். ப்ராம்மண போஜனம் செய்விக்கவேண்டும். பித்ருக்களை உத்தேசித்து அந்தந்த திதிகளில் ச்ராத்தம் செய்யவேண்டும்.*

*67. மஹாபூஜை பண்ணவேண்டும், மஹாமந்திரங்களை ஜபிக்க வேண்டும். அப்படி செய்யும் அறிவாளிகள் ஸூர்ய லோகத்தில் ஸூர்யனுக்கு ஸமமாக வஸிக்கிருர்கள்.*

*68. எவர்கள் ஸங்கராந்தியன்று ஸூர்ய தேவனை ஆராதிக்கிருர்களோ அவர்கள் ஒரு பொழுதும் தரித்ரஞகவோ துக்கியாகவோ, ரோகியாகவோ குரூபியாகவோ, துர்பாக்யஞகவோ ஆகமாட்டார்கள்.*

*69. யார் ஸங்கராந்திகளில் புண்ணிய தீர்த்ததில் ஸ்நானம், தானம், கபிலபசுவின் நெய்யுடன் எள்ளைச் சேர்த்து விசேஷ ஹோமம் செய்யாதவர்கள் கண்ணில்லாமலும்,*

*70. வாயில்லாமலும் நலிந்தவுடலும், மலினவஸ்திரமுமாக வாயில் வாயிலாக நுழைந்து கொடு,*

*கொடு என்று கேட்பவர்களாகக் காணப்படுகிறார்கள்.*

*71. அறிவாளியானவன் ஸூர்யக்ரஹணத்தன்று குருக்ஷேத்ரத்தில் கடுகாகிலும் தங்கத்தை தானம் செய்வானானால் சூரிய லோகத்தில் புண்ணியசாலியாக வாஸம் செய்வான்.*

*72. திவாகரனை ராஹு விழுங்கிய ஸமயத்தில் அதாவது க்ரஹண ஸமயத்தில் எல்லா ஜனங்களும் கங்கா ஜலத்திற்கு ஸமானமானவைகளாகவும், எல்லா பிராம்மணர்களும் சாக்ஷாத் ப்ரும்மாவிற்கு சமானமானவர்களாகவும், நம்மால் கொடுக்கப்படும் எல்லா வஸ்துகளும் தங்கத்திற்கு துல்யமாகவும் ஆகின்றன.*

*73. ஸூர்ய க்ரஹண ஸமயத்தில் கொடுக்கப்படும் தானம், ஜபம், ஹோமம், ஸ்நானம் முதலிய எந்தெந்த நற்கர்மங்கள் செய்கிறோமோ, அவைகள் எல்லாம் ஸூர்யன் உதயமாவதற்குக் காரணமாகின்றன.*

*74. ரவிவாரத்துடன் கூடிய ஸங்கராந்தியில். அல்லது க்ரஹணத்தில் நாம் ஸம்பாதிக்கும் புண்ணியமெல்லாம் அக்ஷயமாய் விளங்குகின்றன.*

*75. ஷஷ்டி ஸப்தமி திதிகளில் ரவிவாரமும் கூடியிருந்தால் அந்தத் திதியில் செய்யும் புண்ணிய காரியங்களின் பலன் ஸூர்யலோகத்தில் அனுபவிக்கப்படுகிறது.*

*76. ஹம்ஸம், பானு, ஸஹஸ்ராம்ஸு, தபனன், தாபனன், ரவி, விகர்த்தனன், விவஸ்வான், விஸ்வகர்மா, விபாவஸு:*

*77. விஸ்வரூபன், விஸ்வகர்த்தா, மார்த்தாண்டன், மிஹிரன்; அம்ஶுமான், ஆதித்யன், உஷ்ணபூ:, சூரியன், அர்யமா, ப்ரத்ந, திவாகரன்.*

78. த்வாதஶாத்மா, ஸப்தஹயன், பாஸ்கரன், அஹஸ்கரன், ககன், சூரன், ப்ரபாகரன், ஸ்ரீமான், லோகசக்ஷு, ககேஸ்வரன்,

79. த்ரிலோகேசன், லோகாக்ஷீ, தமோரி, சாச்வதன், சுசி, கபஸ்திஹஸ்தன், தீவ்ராம்ஶு, தரணி, ஸீமஹோரணி:

80. த்யுமணி: ஹரிதஸ்வன், அர்க்கன், பானுமான், பயநாஸனன், சந்தோஷவான், வேத வேத்யன்: பாஸ்வான், பூஷா, உஷாகபி:

81. ஏகசக்ர ரதன், மித்ரன் மந்தேஹாரி, தமிஸ்ரஹா; தைத்யஹா, பாபஹர்த்தா, தர்மா, ப்ரும்மப்ரஹாஸகன்

82. ஹேலிகா, சித்ரபானு:, கலிக்ன: தார்க்ஷ்யவாஹன:, திக்பதி:, பத்மிநீநாதன்:, குசேசேகரன் ஹரி:

83. தர்மரஸ்மி: துர்நிரீக்ஷ்யன், சண்டாம்சு: கஸ்யபர்த்மஜன்; இந்த எழுபது பேர்களும் சூரியனுடைய பவித்ர நாமங்களாகும்.

84. இந்த ஒவ்வொரு நாமங்களின்கூட நான்காவது விபக்தியை ஏகவசனமாக ஆக்கி முதலில் ப்ரணவமும், கடைசியில் நம: என்றும் சேர்த்து ஒவ்வொரு நாமம் சொல்லும் பொழுதும் சூரியனைப்பார்த்து பார்த்து

85. இரண்டு கைகளையும் சேர்த்து ஜலத்தை எடுத்துக்கொண்டு அதிநிர்மலமான செம்பாலான பாத்திரத்தின் மத்தியில்

86. செவ்வரளிப்பூ, ரக்தசந்தனம், அருகம்புல்லின் தளிர்கள், அக்ஷதை, தர்ப்பை, இவைகளை வைத்து,

87. பரம பூஜ்யனை சூரிய பகவானைக் குறித்து, தலைபக்கம் இரு கைகளையும் உயர்த்தி முழந்தாள் பணித்து, கண்களையும், மனத்தையும் ஒருமனப்படுத்தி அர்க்யம் கொடுக்க வேண்டும்.

*88.* உதயத்திலும் அஸ்தமனத்திலும் பிரத்யேக மந்திரங்களை உச்சாரணம் செய்து கொண்டு, எழுபது எண்ணிக்கை வரை பரம ரஹஸ்யமான மஹா மந்திரங்களை உச்சரித்து நமஸ்காரம் பண்ண வேண்டும்.

*89.* இம்மாதிரி அனுஷ்டானம் பண்ணுகிறவன் ஒரு பொழுதும் துக்கமனுபவிக்கமாட்டான், தரித்ரனுமாகமாட்டான்.

*90.* ஜன்ம ஜன்மாந்திரங்களில் சேர்த்து வைத்த பாபத்துடைய பலனுகப் பீடித்த பயங்கரமான வியாதிகளிலிருந்து ஔஷதமில்லாமலும், வைத்யனில்லாமலும், பத்யமிருக்காமலும், விடுபடுகிருன். பிறகு காலகதியடைந்த பிறகு ம்ருத்யுவை அடைந்த பிறகு எப்பவும் கௌரவத்துடன் சூரிய லோகத்தில் வசிக்கிருன்.

*91.* ஏ! உத்தமனே, உமக்கு சூரிய லோகத்தைப்பற்றி மிகவும் சில அம்சங்களே கூறியுள்ளேன். ஆச்சர்யம்! இந்த மஹா தேஜோ நிதியின் விசேஷங்களை யார்தான் அறியமுடியும்?

*92.* சிவசர்மா இந்த பவித்ரமான கதையைக் கேட்டுக் கொண்டே க்ஷணமாத்திரத்தில் இந்திரனுடைய மஹாபுரியைப் பார்க்கத் தொடங்கினுன்.

*93.* அகஸ்திய முனி கூறினுர். அப்ஸரலோகம். சூரியலோகம், ஆகியகதைகளைத் கேட்பதால் மனுஷன் ஒருபொழுதும் தரித்ரத்தை அனுபவிக்க மாட்டான், அதர்மத்திலும் ப்ரவர்த்திக்க மாட்டான்.

*94.* ப்ராம்மணர்கள் இக்கதையை அவசியம் கேட்க வேண்டும். வேதம் ஓதுவதினுல் பெறும் புண்ணிய பலனைப்போல இக்கதையைக் கேட்பதினுலும் கிடைக்கிறது.

*95.* ப்ராம்மணன். க்ஷத்ரியன், வைச்யன் இவர்கள் இந்த உத்தம அத்யாயத்தைக் கேட்ட மாத்ரத்தில் இந்த

***லோகத்தில் பாதகங்களிலிருந்து விடுபட்டு, அதி உத்தமகதியடைவார்கள்.***

***96. இது ஸ்காந்த புராணத்தில் நான்காவது காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான அப்ஸா, ஸூர்ய லோகவர்ணனம் என்ற ஒன்பதாவது அத்யாயம் முடிந்தது.***



# அத்யாயம் 10

*சிவசர்மா கூறினார்: மிகவும் மனோபிராமம் ஆனதும் நேத்ரங்களுக்கு ஸுகமளிக்கக் கூடியதுமான இந்த உத்தமமான புரியின் பெயரென்ன? இதன் அரசன் யார் என்றான்.*

*1. விஷ்ணு கணங்கள் கூறினார்கள்; பாக்யவானான சிவசர்மாவே, இது இந்திரனுடைய அமராவதிப் பட்டணமாகும். இங்கு நன்றாக ஜலம்விட்டதனால் வளர்ந்த விருக்ஷங்களுக்கு ஸமமான ஜனங்களே விஹரிக்கிறார்கள்*

*2. இதை விசுவகர்மா மிகவும் தபோபலத்தினால் கட்டி முடித்தான். இங்கு பகலிலுல் கூட சந்திரிகை மாளிகைகளின் சோபைகளை,*

*3. சந்திரன் அமாவாஸ்யை அல்லது வேறு சில விசேஷமான ஸமயங்களில் கண்களுக்குத் தென்படாமல் இருப்பானல்லவா? அப்பொழுதுகூட அவன் தன்னுடைய பிரியமான நிலவை இந்த மாளிகைகளில் ஒளித்து வைக்கிறான்.*

*4. இந்த நகரத்தினுடைய நிர்மலமான சுவர்களில் தங்களுடையவே பிரதி பிம்பங்களைப் பார்த்து லயிக்கும் இந்திரனால் கொண்டு வரப்பட்ட அவனுடைய காதலிகள் தங்களுடைய நிழல்களையே இந்த்ரனால் கொண்டு வரப்பட்ட அந்நியக் காதலிகள் என்றே நினைத்து, சித்திரசாலையில் பிரவேசிக்க மாட்டார்கள். என்ன ஆச்சர்யம்!*

*5. இந்தப் பட்டிணத்தில் அந்தகாரம் இந்த்ர நீலக்கற்களால் கட்டப்பட்ட அழகிய கோவில்களில் தங்களுடைய இருட்டாகிய நீலத்தை மறைத்துப் பகலில்கூட நிர்பயமாய் உட்கார்ந்திருக்கிறது.*

*6. இந்தப் பட்டணத்து ஜனங்கள் சந்திரகாந்த மணி என்ற பெயர் பெற்ற கற்களில் பெருகும் ஊற்றிலிருந்து*

*நிர்மலமான ஜலத்தைக் குடமாக நிரப்பி வைத்த பின் வேறு ஜலத்தை விரும்புவதில்லை.*

*7. இந்த உலகத்தில் சிற்பிகள் ஒருவர் கூட இல்லை. தட்டானுமில்லை, ஏனென்றால் இங்கு கற்பக விருக்ஷங்களே வஸ்திரங்களையும், நகைகளையும் ஏராளமாக அளிக்கின்றன.*

*8. இந்த நகரத்தில் சித்த வித்யாப்ரவீணர்களான ஜனங்களும் இல்லை, ஏனென்றால் இங்கு ஸாக்ஷாத் சிந்தாமணியே எல்லாருடைய கவலைகளையும் அறுத்து விடுகிறது.*

*9. இந்த இடத்தில் சமையல் கலையில் தேர்ந்த சமையல் காரனும் கிடையாது. ஏனென்றால் காமதேனுவிடமிருந்து ஷட்ரஸங்களும் கறக்கப்படுகின்றன.*

*10. எதனுடைய உத்தமமானக் கீர்த்தி ச்ரவணம் செய்யப்படுகிறதோ, எது உத்தமமான சிறந்த குதிரைகளுக்குள் ரத்னமாகக் கருதப்படுகிறதோ, அந்த மஹாபலம் பொருந்திய உச்சைச்ரவம் என்ற குதிரையும் இந்தப் பட்டணத்தில் இருக்கிறது.*

*11. ஸ்படிகத்தைப்போல் உஜ்வலமானதும் நடமாடும் கைலாசமலைக்கு ஸமமானதுமான நான்கு தந்தங்களையுடைய ஐராவதம் என்ற யானையும் இங்கு தானியிருக்கிறது.*

*12. இந்த உலகத்தில் வ்ருக்ஷங்களுக்குள் ரத்னமான பாரிஜாதமும், ஸ்த்ரீ ரத்னங்களுக்குள் ப்ரஸித்தமான ஊர்வசியும், வனங்களுக்குள் பிரஸித்தமான நந்தனவனமும், ஜலத்துக்குள் ரத்னமான மந்தாகினியும் இருக்கின்றன.*

*13. வேதங்களில் குறிப்பிடப்பட்ட முப்பதுத்துமுக்கோடி தேவகணங்களும் இங்கேயே அனுதினமும் ஸேவை செய்யும் தருணத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.*

*14. ஸ்வர்க்கத்தில் இந்த்ர பதவியைவிட மேலானது ஒன்றும் கிடையாது. மூன்று உலகங்களில் உள்ள ஸமஸ்த ஐஸ்வர்யங்களும் இதற்கு ஈடாக மாட்டாது.*

*15. ஆயிரம் அச்வமேத யாகங்களுடைய ஆவர்த்தனத்தினுல் யார் லாபம் அடைகிருர்களோ அவர்களுக்கு ஸமமான பவித்ரமான மகான் உலகில் வேறு ஒருவரும் இருக்க முடியாது.*

*16.அர்ச்சிஷ்மதி, ஸம்யமினி, புண்ணியவதி, அமராாவதி, கந்தவதி, அனகா என்னும் திக் பாலர்களுடைய பட்டணங்கள் கூட நிறைசெல்வம் கொழிக்கும் இந்த அமராவதிக்கு ஈடாகாது.*

*17. ஸஹஸ்ராஜன், திவஸ்பதி, தேவராஜன், சதக்ரிது, ஆகிய பேர்கள் தேவராஜனைத் தவிர மற்றவர்களுக்கில்லை.*

*18. மற்ற ஏழு லோக பாலர்களும் இவனையே பூஜிக்கிருர்கள். நாரதாதி முனீஸ்வரர்களும் ஆசீர்வாதத்தினுல் இவரையே ஸ்துதிக்கிருர்கள்.*

*19. இந்த இந்த்ரனுடைய உறுதியினுல் மற்ற மூன்று லோகங்களும் ஸ்திரமாக இருக்கின்றன. இந்திரன் தோல்வியடைந்தால் மற்ற மூன்று லோகங்களும் தோல்வியடைந்த மாதிரி.*

*20. இந்த இந்த்ர பதவியை அடையும் அபிலாஷையுடன் தைத்யர்கள், தானவர்கள், மனிதர்கள் கந்தர்வர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள் எல்லாரும் நியமத்துடன் உக்ரமாக தபஸ் செய்கிருர்கள்.*

*21. அச்வமேத யக்ஞங்களுடன் கர்த்தாக்களான ஸகரர் முதலிய பூபாலர்கள் இந்த இந்த்ர பதவியை அடைவதற்காகப் பெரியபெரிய முயற்சிகள் செய்தார்கள்.*

*22. எவனெருவன் உலகில் ஜிதேந்திரியர்களாக விதிபூர்வமாக நூறு அச்வமேத யாகங்களை விக்கினமில்லாமல் செய்து முடிக்கிருர்களோ, அவர்களே அமராவதியில் இந்த்ராணியை அடைய முடியும்.*

*23. யார் இந்த நூறு அச்வமேத யக்ஞங்களைச் செய்து முடிக்க வில்லையோ அந்த ராஜமஹாராஜர்கள், மேலும் ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களைச் செய்து முடித்த பிராம்மணோத்தமர்கள் இந்த அமராவதியில் வசிக்கின்றனர்.*

*24, 25. துலாபுருஷர், ஹிரண்யகர்ப்பர், ப்ரம்மாண்ட கல்பதரு, கோஸஹஸ்ர, ஹிரண்யகாமதேனு ஹிரண்யாஸ்வ, ஹிரண்யாஸ்வரத, ஹிரண்யஹஸ்திரத, பஞ்சலாங்கலா, தராதரன், விஸ்வசக்ர, கல்பலதா, சப்தஸாஹர், ரத்னதேனு, மஹாபூத இந்த பதினைந்து மஹாதானங்களைச் செய்தவர்களான நிர்மலாத்மாக்கள் இந்த அமராவதியை அடைகிறார்கள். இன்பமான வசனங்களைப் பேசுகிறவர்கள், யுத்தத்தில் புறமுதுகிட்டு ஓடாதவர்கள், வீரப்படுக்கையில் படுத்தவர்கள், தீரர்கள், சூரர்களான அரசர்கள் இங்கு வசிக்கின்றனர்.*

*26. மகத்தான யக்ஞ வித்யாயஜுகர்கள் (வித்யாவிசாரதர்கள்) இங்கு வஸிக்கின்றனர். பேச்சுவாக்கில் நாங்கள் உனக்கு இந்திர பதவியைப் பற்றி வர்ணித்தோம்.*

*27. இப்பொழுதும் அர்ச்சிஷ்மதீ என்னும் பெயருடைய மங்கள கரமான அக்னிபுரியைப் பாருங்கள். அக்னி தேவரை உபாஸிக்கிற ஜனங்கள் இங்கு வஸிக்கிறார்கள்.*

*28. ஸத்வ குணத்தில் த்ருடமாயிருக்கிறவர்கள் ஜிதேந்திரியர்கள் ஆகிய புருஷர்களும் திடமான ஸத்வ குணத்துடனும் அக்னிப்ரவேசம் பண்ணியவர்களும், அக்னிக்கு ஸமமான தேஜஸ் உள்ள பெண்களும் இந்த அக்னி லோகத்தில் வஸிக்கிறார்கள்.*

*29. அக்னிஹோத்ரத்தில் தத்பரராய் உள்ள ப்ராம்மணரும், அக்னி உபாஸகர்களான ப்ரம்மசாரிகளும், பஞ்சாக்னியில் தபஸ் பண்ணினவர்கள், அக்னியைப்*

போல் தேஜஸ்ஸுள்ளவர்களும் இந்த அக்னிலோகத்தில் வஸிக்கிறார்கள்.

30. குளிர் காலத்தில் குளிர் நீங்குவதற்குள் விறகு கட்டுகளை எவர்கள் செய்கிறார்களோ அவர்கள் இந்த அக்னிலோகத்தில் வஸிக்கிறார்கள். குளிர்காலத்தில் குளிர் காய அக்னிகுண்டங்கள் ஏற்படுத்துகிறவர்களும் அக்னிக்கு சமீபத்தில் இடம் பெறுகிறார்கள்.

31. எவர்கள் ச்ரத்தையுடன் அநாதைகளுக்கு அக்னி ஸம்ஸ்காரம் செய்கிறார்களோ, தனக்கு முடியவில்லையானால் யாரையாவது கொண்டு செய்யச் சொல்லிகிறார்களோ, அவர்கள் அக்னி லோகத்தில் பூஜிக்கப்படுகிறார்கள்.

32. யார் ஜாடராக்னி மந்தமாகயிருக்கிறவர்களுக்கு நன்றாக ஜீரணிக்கக்கூடிய ஔஷதம் கொடுக்கிறார்களோ, அவர்கள் வெகு காலம் வரை அக்னி லோகத்தில் வஸிக்கிறார்கள்.

33. யக்ஞத்திற்கு வேண்டிய பொருள்கள் யக்ஞத்திற்கு வேண்டிய பணம் யதாசக்தி கொடுக்கிறார்களோ அவர்கள் இந்த அக்னிலோகமாகிய அர்ச்சிஷ்மதியில் வஸிக்கிறார்கள்.

34. இந்த அக்னியே ப்ராம்மணர்களுக்குப் பரமபதத்தைக் கொடுக்கிறவர். அவரே பிராம்மணர்களுக்குக் குரு, தேவதை, விரதம், தீர்த்தம் எல்லாம்.

35. எல்லா அபவித்ரமான வஸ்துக்களும் அக்னியைச் சேர்ந்ததனால் பவித்ரமாகின்றன. அதனாலேயே அக்னியின் பெயர் பகவான் எனப்படுகிறது.

36. வேதமறிந்த ப்ராம்மணனானாலும் அக்னியைத் தவிர்த்து வேறு இடங்களில் ச்ரத்தை வைப்பானானால் அவன் உண்மையில் வேத மறிந்தவனல்ல.

*37. நிச்சயமாக அக்னியே ஸாக்ஷாத் அந்தராத்மா. அவனே நம்முடைய உதரத்தில் இருந்து கொண்டு மாமிச உணவைக்கூட ஜீரணிக்கச் செய்கிறுன். ஆனுல் ஸ்த்ரீயின் கர்ப்பத்திலிருக்கும் பாலகர்களுக்கு ஒருவிதக் கெடுதலும் செய்வதில்லே.*

*38. இவனே ப்ரத்யக்ஷ ஸம்ஹார மூர்த்தி; ஈஸ்வரனுடைய தேஜஸ்மூர்த்தி. இவரே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயத்தின் அதிபதி. இவனில்லாமல் ஜகத்தில் வேறு என்ன காணப்படுகிறது?*

*39. இந்த சித்ரபானுவே ஸாக்ஷாத் மஹாதேவனுடைய அக்னி நேத்ரம் கோர அந்தகாரமான இந்த உலகத்தில் பிரகாசமளிப்பதற்கு வேறு யார் இருக்கிறுர்கள்?*

*40. ஸ்வர்கத்தில் எல்லா தேவதைகளும் இந்த அக்னியினுல் பூஜிக்கப்பட்ட தூபம், தீபம்,*

*41,42. நைவேத்யம், பால், தயிர், நெய், கரும்புரஸம் இவைகளேப் புஜிக்கிறுர்கள். சிவசர்மா கூறினுர்- இந்த அக்னி தேவதை யார்? யாருடைய புத்ரர்? இவர் எந்த விதமாக அக்னி பதத்தை அடைந்திருக்கிறுர்? அதை எனக்கு வர்ணியுங்கள். விஷ்ணு தூதர்கள் கூறினுர்கள், ஓ புத்திமானே! கேளும். இவர் யார்? யாருடைய பிள்ளே? எந்த விதமாக இவர் ஜ்யோதிஷ்மதிபுரியை அடைந்திருக்கிறுர் என்பதை க்ரமமாக வர்ணிக்கிறேும். சிவபக்தரான முனி ஒருவர் இருந்தார்.*

*43. முன்காலத்தில் ஸுகமான நர்மதைக் கரையில் நர்மபுரம் என்ற நகரத்தில் சாண்டில்ய கோத்ரத்தில் பிறந்தவரான விச்வாநரன் என்ற சிவபக்தரான முனி ஒருவர் இருந்தார்.*

*44. வேதாத்யயனத்தின் ஸ்வரூபர். ப்ரம்மதேஜாமயர், ஜிதேந்த்ரியர், பவித்ரவான், ப்ரம்மசர்ய நிஷ்டர் ஆன இம்முனி*

*45.* *எல்லா சாஸ்திர ஞானமும் அடைந்தவராய் லௌகிக ஆசாரத்தில் கெட்டிக்காரராய் இருந்தார். ஒருசமயம் மஹாதேவரே*

*46.* *ஹ்ருதயத்தில் த்யானம் செய்து கொண்டே சிந்திக்கத் தொடங்கினுர். நான்கு ஆச்ரமங்களிலும் ஸஜ்ஜனங்களுக்குப் பரம கல்யாணத்தைக் கொடுக்கக்கூடிய ஆச்ரமம் எது? எதையனுசரித்தால் இஹலோகத்திலும், பரலோகத்திலும் ஸுகம் கிடைக்கும்?*

*47.* *இப்படி யோசித்து இது மிகவும் சிறந்ததா, இல்லை, இல்லை இது மிகச் சிறந்ததா? எது நன்மையைச் செய்யக் கூடியது? என்று இந்த விதமாக எல்லா ஆச்ரமங்களேயும் பற்றித் தீவிரமாக எண்ணி எண்ணி கடைசியில் க்ருஹஸ்தாச்ரமமே எல்லாவற்றிற்கும் சிறந்த ஆதாரம், இந்த ஆச்ரமம் இல்லாமல் மற்ற ஆச்ரமங்களை நிர்வஹிக்க முடியாது. என்று க்ருஹஸ்தாச்ரமத்தை ஸ்த்தோத்ரம் செய்யத் தொடங்கினுர்.*

*48.* *ப்ரம்மசாரி, க்ருகஸ்தர், வானப்ரஸ்தர், ஸன்யாஸி இந்த நான்கு ஆச்ரமங்களில் வைத்து க்ருஹஸ்தாச்ரமமே எல்லாவற்றுக்கும் ஆதாரம். இந்த ஆச்ரமம் இல்லாமல் மற்ற ஆச்ரமங்களை நிர்வஹிக்க முடியாது.*

*49.* *தினந்தோறும் க்ருஹஸ்தனுலேயே தேவதைகள், பித்ருக்கள், மனுஷ்யர்கள், பசு, பக்ஷி ஜாதி இவைகளுடைய ஜீவனம் நடக்கிறது. அதனுல் எல்லா ஆப்ரமங்களை விட க்ருஹஸ்தாச்ரமே மேலானது.*

*50.* *ஒரு க்ருஸ்தன் ஸ்நானம், ஹோமம், தானம் இவைகளைச் செய்யாமல் உணவு அருந்துவானுனுல் அவன் தேவதை முதலியவர்களுக்குக் கடன்காரனுகி நரகத்திற்குச் செல்கிருன்.*

*51.* *ஒரு க்ருஹஸ்தன் ஸ்நானம் செய்யாமல் போஜனம் செய்வானுனுல் அவன் மலத்தை உண்பவனுகிருன்.*

*ஜபாதிகள் செய்யாமல் சாப்பிடுகிறவன் ரத்தம், சீழ் இவைகளைச்சாப்பிடுகிறவனுகிறுன். ஹோமம் செய்யாமல் சாப்பிடுகிறவன் புழுவைத்தின்பவனுகிறுன். தானம் செய்யாமல் சாப்பிடுபவன் அது விஷ்டையைப் பூஜிப்பதற்கு ஸமானமாகும்.*

*52. நினைத்த பொழுதிலேயே பரித்யாகம் செய்துவிட்டுச் செல்லும் ப்ரம்மசர்யம், க்ருஹஸ்தாச்ரமம் ஆகுமா? ஸ்பாவத்திலேயே சஞ்சல சித்தமுள்ள ப்ரம்மசாரியால் என்ன செய்ய முடியும்?*

*53. பிடிவாதத்திலேயோ அல்லது உலக பயத்திற்காகவோ அல்லது தன்னலத்திற்காகவோ ப்ரம்மசர்யம் எடுத்துக்கொண்டவன் ஆச்ரமத்திற்கு விரோதமான கர்மத்தை மனஸாலும் நினைப்பானுனல் அவன் ப்ரம்மசர்யம் அனுஷ்டித்தாலும் அனுஷ்டிக்காதவனுகிறுன்.*

*54. பரஸ்த்ரீயை நினைக்காமல் தன் மனைவியிடமே திருப்தியுற்று ருதுகாலத்தில் மாத்திரம் அவளுடன் கூடுபவன் கர்மத்தினுல் க்ருஹஸ்தன் ஆனுலும் ப்ரம்மசாரியே.*

*55. எவளிடம் ராகத்வேஷமில்லையோ, காமக்ரோதங்கள் இல்லையோ அந்த பத்னியுடன் கூடின அக்னிஹோத்ரியான க்ருஹஸ்தன் வாநப்ரஸ்தனைவிட உத்தமமானவன்.*

*56. எவனெருவன் வைராக்கியத்தினுல் ஜகத்தைத்தியாகம் பண்ணிவிட்டுப் போனுலும்கூட ஹ்ருதயத்தில் க்ருஹஸ்த தர்மத்தை நினைப்பானேயானுல் அவன் வானப்ரஸ்தனும் அல்ல க்ருஹஸ்தனுமல்ல. இரண்டிலும் ப்ரஷ்டனுகிறுன்.*

*57. யாதொரு க்ருஹஸ்தன் ஒருவரிடமும் ஒன்றும் அபேகைஷயில்லாமல் தன்னிடமுள்ள வரும்படியினுலே தன்னுடைய ஜீவிதம் நடத்திக்கொண்டு ஏதோ ஒருவிதம்*

*திருப்தியும் ஸந்தோஷமும் பெற்றுக்கொண்டு வாழ்வானுனல் அவன் ஸந்யாஸியைவிட ச்ரேஷ்டனுகிறுன்.*

*58. ஸந்யாஸி துர்லாபமானது அல்லது எளிதான பொருளை ஒரு க்ருஹஸ்தனிடம் யாசித்தானேயானுல், அவன் கொடுக்கும் பொருளில் திருப்தி அடையவில்லையானுல் அவன் ஸந்யாஸிபதிதனுகிறுன்.*

*59. இப்படியாக அந்த விஸ்வாநரன் என்னும் ப்ராம்மணன் நான்கு ஆச்ரமங்களின் குணதோஷங்களைப் பற்றி நன்கு ஆராய்ந்து தனக்கு ஸமமான ஒரு குலத்துப் பெண்ணைத் தேர்ந்தெடுத்து விதிப்ரகாரம் மணந்தார்.*

*60. வேதம், யக்ஞம், அக்னிஹோத்ரம், பஞ்சயக்ஞம், படனம், பாடனம் (கற்றுக்கொடுத்தல்) இஷ்டி தானம் கொடுத்தல், தானம் வாங்குதல் ஆறு இந்த கர்மங்களை செய்து கொண்டுதேவதைகள் பித்ருக்கள் அதிதிகள் இவர்கள் ப்ரீதிக்குப் பாத்திரனுக இருந்தான்.*

*61. அவன் தைரியமான மனதுடன் ஸமயா ஸமயங்களில் ஒருவருக்கொருவர் விரோதபாவமில்லாமல் தர்மார்த்த காமத்தை அனுபவித்துக் கொண்டிருந்தான்.*

*62. கர்ம காண்டத்தின் நிபுணனுன அந்தப் பிராம்மணன் காலையில் தேவகர்மமும், மத்யான்னத்தில் மனுஷ்யகர்மமும், ஸாயங்காலம் பித்ருகர்மமும் செய்துவந்தான்.*

*63. இந்தப் பிரகாரம் வெகுகாலம் கழிந்தபின் ரதியைப்போல பதிவ்ரதையான அந்தப் ப்ராம்மணனுடைய பத்னி சுசிஷ்மதி*

*64. ஸ்வர்க பிராப்திக்கு ஸாதனமான வம்சத்துக்கான ஒரு முளையைக்கூடக் காணுமல் தனது பதியே தனக்கு மங்களத்தைச் செய்வாரென்று சொல்லி நமஸ்கரித்துக் கூறுவார்;*

*65. ஏ மஹாமதியே! ப்ரியவ்ரதரே! பிராணநாதா! ஆர்ய புத்ரா! தங்களுடைய ஸ்ரீ சரணங்களை பூஜிப்பதனுல் இந்த உலகத்தில் எனக்குக் கிடைக்காதது ஒன்றுமில்லை.*

*66. உயர்ந்த வஸ்திரங்கள் மற்றும் போகப்பொருள்களெல்லாம் தங்களருளால் கிடைக்கப் பெற்று அனுபவிக்கிறேன். பேச்சுவாக்கில் அவைகளைச் சொல்லுகிறேன் கேளுங்கள்-*

*67. உயர்ந்த வஸ்திரங்கள், ஸௌகர்யமான வீடு, மெதுவான படுக்கை, நல்ல வேலைக்காரிகள், புஷ்ப மாலைகள், தாம்பூலம், போஜனம், பானம், ஸ்வதர்ம நிஷ்டையுடன் கூடிய இவைகள் எல்லாவற்றையும் நான் அனுபவித்து வருகிறேன். நாதா!*

*68. வெகுநாட்களாக என்னுடைய ஹ்ருதயத்தில் க்ருஹஸ்தர்களுக்கு இன்றியமையாததான ஒரு பிரார்த்தனை இருந்தது. அதைத்தாங்கள் பூர்த்தி செய்யவேண்டும்.*

*69. விஸ்வாநரன் கூறினுர்: பதிக்குப்ரியமானவளே, அழகிய நிதம்பத்தையுடையவளே! ஏ மஹா பாக்யவதியே! உனக்கு இல்லாத வஸ்து எது இருக்கிறது? என்ன வேண்டுமோ அதைக் கேள். சீக்கிரத்தில் உன்னுடைய ப்ராத்தனையைப் பூர்த்தி செய்கிறேன்.*

*70. ஏ கல்யாணி! ஸர்வ மங்களங்களையும் கொடுக்கக்கூடிய மஹாதேவனின் அருளினுல் எனக்கு இந்த லோகத்திலும் பரலோகத்திலும் துர்லபம் ஒன்றுமில்லை.*

*71. பதியே தெய்வம் என்று மதித்து சுசிஷ்மதி பதியின் வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷமுடன் சொல்லுவாள். எனக்கு வரதானம் செய்வீர்களானுல்,*

*72. நான் வரத்திற்குத் தகுதியுடையவளானுல் நான் வரங்களொன்றும் விரும்பவில்லை. தாங்கள் மஹேசனுக்கு ஸமமான புத்திரன் ஒருவனையளிங்கள் என்ருள்.*

*73. பவித்ரமான வ்ரதத்தையுடைய அந்த முனி சுசிஷ்மதியின் வார்த்தையைக் கேட்டுவிட்டு க்ஷணகாலம் சித்தத்தை ஸமாதி நிலேயில் நிறுத்தி யோசிக்கத் தொடங்கினுன்.*

*74. ஒ இந்தத்துடி இடையாள் என்னுடைய எண்ணத்திலிருந்து மிகவும் விலகியுள்ளாள். அதிதுர்லபமான ஒரு ப்ரார்த்தனையைக் கேட்கிருளே. எப்படியோ அந்தப்பரம சிவனே எல்லாம் செய்வார்.*

*75. அதே மஹேச்வரர் வாக்குரூபமாக இவளது நாக்கில் இருந்து கொண்டு இந்த வார்த்தையைப் பேசியிருக்கிருர். இதற்குப் புறம்பாகப் போக யாருக்கு ஸாத்யம்? இதே நடக்கட்டும்.*

*76. அதற்குப் பிறகு ஏகபத்நீ வ்ரதரான விச்வாநரமுனி பத்னி சுசிஷ்மதியிடம் கூறினுர் :- ஏ ப்ரியே, அப்படியேயாகட்டும் என்று.*

*77. இந்த விதமாகப் பத்தினிக்கு ஆறுதல் அளித்துவிட்டு, எங்கு காசி விச்வேச்வரர் ஸ்திரமாக இருக்கிருரோ, அங்கு தவம் பண்ணும் பொருட்டுச் சென்ருர்.*

*78. அவர் சீக்கிரமாகக் காசியையடைந்து, மணிகர்ணிகையைப் பார்த்தவுடனேயே நூற்றுக்கணக்கான ஜன்மங்களாகச் சேகரித்து வைத்திருந்த மூன்று வகை தாபத்திலிருந்து முக்தியடைந்தார்.*

*79. அங்கு விச்வேச்வரர் முதலான எல்லா லிங்கங்களையும் தரிசனம் செய்து, ஸகல குண்டங்கள் வாபிகள், கூபங்கள், ஸரோவரங்கள் இவைகளில் ஸ்நானம் செய்தார்.*

*80. ஒருவர் பாக்கியில்லாமல் தேவிகளையும், கணேச மூர்த்திகளையும் நமஸ்காரம் செய்தார். பாபத்தை நசிப்பிப்பவரான பைரவரை ஒழுங்காகப் பூஜை செய்து நமஸ்கரித்தார்.*

*81. தண்டபாணி முதலான முக்கிய கணநாதர்களை ப்ரயத்னபூர்வகஸ்தோத்ரம் செய்தார். ஆதிகேசவர் முதலிய விஷ்ணு மூர்த்திகளை ஆராதனையால் ஸந்தோஷப்படுத்தினர்.*

*82. லோலார்க முதலான ஸூர்ய மூர்த்திகளையும் அடிக்கடி நமஸ்காரம் செய்தார், சோம்பலில்லாமல் எல்லாத் தீர்த்தங்களிலும் பிண்டப்ரதானம் செய்தார்.*

*83. போஜனுதிகளால் ஆயிரக்கணக்கான ஸந்யாஸிகளையும் ஆயிரக்கணக்கான ப்ராம்மணர்களையும் த்ருப்தி செய்தார்.*

*84. பக்தி பூர்வமாக மஹா பூஜோபசாரங்களால் எல்லா சிவலிங்கங்களையும் பூஜித்தார். இத்தனை லிங்கங்களிலும் மிக சீக்கிரமாகப் பலன் கொடுக்கக்கூடிய லிங்கம் எது? என்று யோசித்தார். எதைச் செய்தால் என்னுடைய இந்த புத்ரகாமனையான தபஸ் நிச்சயமாகப் பூர்த்தியடையும்? (அதாவது) எந்த லிங்கத்தின் முன் தபஸ்செய்தால் மற்ற லிங்கங்களுக்குமுன் தபஸ் செய்ய வேண்டாமோ?*

*85. ஸ்ரீமான் ஓங்காரேஸ்வரர், க்ருத்தி வாஸேஸ்வரர், காலேஸ்வரர், வ்ருத்தகாலேஸ்வரர், கலாசேகர்,*

*86. கோதாரேசுவரர், காமேசுவரர், சந்திரசேகரர், த்ரிலோசனர், ஜ்யேஷ்டேச்வவரர், ஜம்புகேசுவரர், ஜயகிஷேஸ்வரர்*

*87. தஸாஸ்வமேதேஸ்வரர், ஈசானேஸ்வரர், த்ருமிசண்டீச்வரர், துர்க்கேசர், கருடேஸ்வரர், கோகர்ணேசுவரர், கணேசுவரர்.*

*88. டுண்டிகணேசர், ஆசா கணேசர், ஸித்திகணேசர், தர்மேசர், தாரகேச்வரர், நந்திகேச்வரர், ஈசானேஸ்ஸ்வரர், நிவாஸேஸ்வரர், பத்ரீசர், ப்ரீதிகேசவர், பர்வதேசுவரர், பசுபதி நாதர், ப்ரும்மேசுவரர், மத்யமேசுவரர், ப்ருஹஸ்பதீஸ்வரர், தில்பாண்டீசுவரர்.*

*90. பாரபூதேசுவரர், மஹாலக்ஷ்மீஸ்வரர், மருத்தேரர், மோக்ஷேசர், கங்கேஸ்வரர், நர்மதேஸ்வரர்.*

*91. மார்க்கண்டேசுவரர், மணிகண்டேசுவரர், ரத்னேஸ்வரர் (ஸாதன ஸித்தியையளிக்கக்கூடிய யோகினீபீடம்)*

*92. யமுனேஸ்வரர், லாங்குலீஸ்வரர், ஸ்ரீமான் விபுவிச்வேச்வரர், அவிமுக்தேஸ்வரர், விசாலாக்ஷீஸ்வரர், வ்யாக்ரேஸ்வரர், வாராஹீஸ்வரர்,*

*93- 94. வ்யாஸேசர், வ்ருஷபத்வஜர், வருணேஸ்வரர், விதீசர், வஸிஷ்டேஸ்வரர், சனீஸ்வரேஸ்வரர், ஸோமேஸ்வரர், இந்த்ரேஸ்வரர், ஸ்வர்லினீஸ்வரர், ஸங்கமேஸ்வரர், ஹரிசந்தேஸ்வரர், ஹரிகேசேஸ்வரர்,*

*95. த்ரிசந்தீஸ்வரர், மஹாதேவர், உபசாந்தி சிவம் பவானீசுவரர்; கபர்தீச்வரர், கந்தகீசுவரர், யக்ரேஸ்வரர்,*

*96. மித்ராவருணேஸ்வரர் இவ்வளவு லிங்கங்களிலும் சீக்ரமாகப் புத்திரனையளிக்ககூடியவர் யார்? பரம புத்திமானுன முனிவிச்வாநரர் க்ஷணமாத்ரம் இவ்விதம் யோசித்து, சொல்லிக் கொண்டார்.*

*97. ஆம் இப்பொழுது நினைவு வந்தது. நான் மறந்தே போய் விட்டேனே, இத்தனை நாட்களுக்குப்பிறகு இன்று என் மனோரதம் நிறைவேறியது. ''ஸித்தகண ஸேவித ஸர்வ ஸித்திகர்த்தா'', பரம உக்ரமான ஒரு லிங்கமிருக்கிறது.*

*98. அவரைத் தர்சித்துத் தொட்டாலும் சரி மனதில் மிகவும் ஆனந்தும் ஏற்படுகிறது. அந்த லிங்கத்தைப் பூஜிப்பதற்காகவே தேவதைகள் இந்திரனுடைய அனுமதி பெற்று எப்பொழுதும் ஸ்வர்க்க வாசலைத் திறந்தே வைத்திருக்கிறார்கள்.*

*99. எங்குப் பிரஸித்த விகடாதேவீ ஸித்தி ரூபமாக ஆவிர்பவித்திருக்கிறாளோ, எங்கு ஸாக்ஷாத் வித்யா விநாயகர் எழுந்தருளி இருக்கிறாரோ? அங்கு இருப்பவர்களுடைய ஸர்வ இடையூறுகளையும்*

*100, 101. நீக்கி ஸித்தி அளிக்கிருரோ, அங்கேயே ஸர்வ பிராணிகளுக்கும் ஸித்திகளை அளிக்க வல்ல பஞ்சமுத்ராமஹா பீடத்தில் அந்த அவிமுக்த க்ஷேத்ரத்தில் பரம ஸித்தி க்ஷேத்ரம் இருக்கிறது.*

*102. அதாவது மிகவும் ரஹஸ்யமான வீரேச்வரலிங்கம் தான் இங்கு எழுந்தருளியிருக்கிறது. காசியில் எந்த இடத்திலும் ஒரு எள்ளளவு பூமிகூட லிங்கம் இல்லாமல் இருக்கவில்லை.*

*103. ஆனுலும் வீரேஸ்வரரைப் போல சீக்கிரம் ஸித்தியளிக்க வல்ல வரும் ஒழுங்கான முறையில் தர்மார்த்த காமமோக்ஷங்களைத் தருபவர் வேறு லிங்கம் ஒருவருமில்லை.*

*104. காசியில் இந்த வீரேசுவரருக்கு ஸமமான ஸித்தியைக் கொடுக்கக்கூடிய வேறொரு லிங்கமில்லை, இது நிச்சயம்.*

*105. பூர்வ காலத்தில் பஞ்சஸ்வரன் என்னும் பெயருள்ள ஒரு கந்தர்வன், ஸ்வச்சவித்யா என்று பெயருள்ள வித்யாதரன், வஸுபூர்ணன் என்ற பெயருள்ள யக்ஷராஜன் எல்லோரும் இந்த சிவலிங்கத்திடம் தானபரம ஸித்தியைப் பெற்ருர்கள். இதற்கு வெகு காலத்திற்கு முன்பு கோகிலாலாபா என்னும் அப்ஸரஸ் பக்தி பாவத்துடன் நாட்டியமாடிக் கொண்டே சரீரத்துடன் இந்த லிங்கத்தில் ஐக்யமானுள். அதற்கு முன்னுல் வேத சிரா என்னும் ரிஷி சதருத்ர மந்த்ரத்தை ஜபித்துக் கொண்டே*

*106, 107. இந்த ஜோதிர் லிங்கத்தில் சரீரத்துடன் ப்ரவேசித்தார். சந்திரமௌலி, பரத்வாஜர் என்னும் பெயருள்ள வீரசைவர்கள்,*

*108. வீரேஸ்வரரைப் பூஜித்து, பாட்டுப்பாடிக் கொண்டே இங்கு லயமானுர்கள். ஸர்ப்ப ராஜர் ஸங்கசூடர் ராத்திரி காலத்தில் தன் படங்களை விரித்து நாகரத்னங்களினுல் இவருக்கு ஆரத்தி எடுத்து இந்த*

*இடத்தில் ஆற மாஸத்தில் ஸித்தியடைந்தார். இங்கேயே ஹம்ஸவதி என்னும் பெயருள்ள கிங்கரி தனதுபர்த்தாவான விஷ்ணுப்ரியனுடன்*

*110. ஸுஸ்வரமாகப் பாடிக் கொண்டே பரம முக்தி பதத்தையடைந்தாள்.*

*111. இந்தக் காரணத்தினுல் ஜகத்தில் வீரேஸ்வரர் பரமஸித்தி லிங்கம் என்று ப்ரஸித்தியடைந்தார்.*

*112, 113. விதேஹ வம்சத்தைச் சேர்ந்தவரான ஜயத்ரதன் என்னும் அரசன் ராஜ்யத்தை யிழந்து இந்த வீரேஸ்வரலிங்கத்தை ஆராதித்துப் பூஜை செய்து, சத்ருக்களைக் கொன்று ஜயித்து இடையூறில்லாமல் இழந்த ராஜ்யத்தைத் திரும்பவும் பெற்ருர். மகததேசாதிபதியான ஜிதேந்த்ரனுன விதுரதன் என்னும் அரசன் புத்ரன் இல்லாததால் வீரேஸ்வரரை யாசித்துப் புத்ரவாஞனுன்.*

*114. வஸுதத்தன், ரத்னதத்தன் என்னும் இருவைச்யர்கள் ஒரு வருஷம் வரை இந்த இடத்தில் வீரேஸ்வரரை ஆராதித்து தேவ கன்னிக்கு ஸமமான கன்னிகையை அடைந்தார்கள்.*

*115. நானும் மூன்று ஸந்தியும் வீரேஸ்வரரை ஆராதித்து பத்தினியின் விச்வாநரமுனி இச்சைப் படிக்கு புத்ரலாபத்தையடைவேன்,*

*116. தைர்யகுண ஸம்பன்னரும், ஸத்காரியங்களைச் செய்பவருமான விச்வாநரமுனி இவ்விதம் தீர்மானித்து சந்த்ரகூப ஜலத்தில் ஸ்நானம் செய்து நியமங்களை கைக்கொண்டார்.*

*117. ஒரு மாதபரியந்தம் ஒருவேளை ஆகாரம்; ஒரு மாதம் போஜனம் இல்லாமல்; ஒருமாதம் யதேச்சையாகக் கிடைத்ததைப் புஜித்தும்; ஒரு மாதம் இரவு போஜனம் மாத்திரம்;*

*118. ஒரு மாதம் பால் மாத்திரம்; ஒரு மாதம் கீரைகளும்*

*பழங்களும், ஒரு மாதம் ஒரு பிடி எள்ளு; ஒரு மாதம் கேவலம் ஜலம்;*

*119. ஒரு மாதம் பஞ்சகவ்யம், ஒரு மாதம் சாந்த்ராயண வ்ருதம்; ஒரு மாதம் தர்ப்பை துனியில் உள்ள ஜலம்: ஒரு மாதம் வாயுபக்ஷணம்; இவ்வாறு ஆஹாரநியமத்துடன் இருந்தார்.*

*120. இதற்குப் பிறகு அந்த முனி பதிமூன்றும் மாதம் முதல்தேதியன்று ப்ராத: காலத்தில் கங்கா ஜலத்தில் ஸ்நானம் செய்து, வீரேஸ்வரரை அடைந்தார்.*

*121. அடைந்தவுடனே அந்தத் தபோதனன் லிங்கத்தின் மத்தியில் விபூதிபூஷிதராய், எட்டு வயது மதிக்கத்தக்க அழகான சிறுவனைக் கண்டார்.*

*122. அவனுடைய கண்கள் காது வரை நீண்டு மிகவும் அழகான செவ்வரி படர்ந்திருந்தன. ரக்த வர்ணமான உதடுகள், மேன்மையான தங்க நிறத்தில் ஜடாபாரம்,*

*123. சிரிக்கும் முகம், நிர்வாண தேஹம், பாலர்களுக்குத் தகுந்த நகைகளைப் பூண்டிருந்தான். மனோஹரமான வேதஸூக்தங்களைப் படித்துக் கொண்டு தன் இச்சைப்படி சிரித்துக் கொண்டிருந்தான்*

*124. இந்த விதமான பாலகனைப் பார்த்து ஸந்தோஷத்தினால் புளகாங்கிதமடைந்த முனி தழுதழுத்த குரலினால் ஸ்துதித்து அடிக்கடி நமஸ்காரம் செய்யத் தொடங்கினார்.*

*125. ஸத்யம் அஸத்யம் இரண்டற்ற ப்ரம்மமே ஸத்யம், ஜகத்தில் நானாவிதமாக ஒன்றுமே கிடையாது. ஒரு ருத்ரனே உண்டு, அந்நியம் ஒன்றுமில்லை. ஆதலால் தாங்களே ஒரு இரண்டற்ற மஹேஸ்வரப்ரம்மம், நான் தங்களை பஜிக்கிறேன்.*

*126. ஹே சம்போ! உலகில் தாங்களே எல்லாவற்றுக்கும் கர்த்தா; சூரியன் ஒருவனாயிருந்தும்*

*நாளுவிதமான ஜவாயங்களினுல் ப்ரதிபலித்து பலவிதமாகத் தெரிகிற மாதிரி, நிராதாரமான தாங்களே ஒரு ரூபமாக இருந்தும் நாளு ரூபமாகத் தோன்றுகிறீகள். அதனுல் ஹே ஈசா! நான் தங்களைத் தவிர வேறு ஒருவரையும் பூஜிக்கமாட்டேன்.*

*127. கயிறைப் பாம்பென்றும் சிப்பியை வெள்ளியென்றும் கானலை நீரென்றும் ப்ரமையடைந்தவன் ஞானம் வந்தவுடன் கயிரைக் கயிரென்றும், சிப்பியை சிப்பியென்றும், கானலைக் கானலென்றும் அறிவதுபோல் அக்ஞானம் ஆகிய ப்ரமை நீங்கி, ஞானம் வந்தவுடன் ப்ரம்மாண்டமாகிய ப்ரபஞ்சத்தின் ப்ரமை நீங்குகிறது. அப்பேர்பட்ட ஞானஸ்வரூபமான மஹேஸ்வரளுகத் தங்களைச் சரணடைகிறேன்.*

*128. தாங்களே ஜலத்தில் தன்மையாகவும், அக்னியின் எரிக்கும் சக்தியாகவும் சூரியனின் தபிக்கும் சக்தியாகவும் சந்திரனில் ஸந்தோஷமான நிலவாகவும், புஷ்பத்தில் வாசனையாகவும் பாலில் நெய்யாகவும் இருக்கிறீர்கள்.*

*129. தங்களுக்குக் காதில்லை ஆனுல் சப்தங்களைக், கேட்கிறீகள். தங்களுக்கு மூக்கில்லை, ஆனுல் முகருகிறீர்கள், தங்களுக்குக் காலில்லை, ஆனுல் வெகு தூரத்திலிருந்து வருகிறீகள். தங்களுக்குக் கண்களில்லை ஆனுல் பார்க்கிறீகள். தங்களுக்கு நாக்கில்லை ஆனுல் ரஸத்தைச் சுவைக்கிறீகள். ஆனுல் தங்களைப் பூர்ணமாக அறிந்தவர் யார்? நான் தங்களைச் சரண் அடைகிறேன்.*

*130. வேதமும் தங்களுடைய உண்மை ஸ்வரூபத்தை அறியவில்லை. விஷ்ணுவும் அறியவில்லை, உலகை ஸ்ருஷ்டிக்கும் ப்ரம்மாவும் அறியவில்லை. யோகீச்வரர்களும் இந்த்ராதி தேவகணங்களும் அறியவில்லை.*

*131. கேவலம் பக்தர்கள்தாம் தங்களை அறிகிருர்கள். அதனுல் தங்களைச் சரணடைகின்ருேம். தங்களுக்கு*

*கோத்ரமில்லை, நாமமில்லை, ஜன்மமில்லை, ரூபமில்லை, ஸ்பாவம் இல்லை, தேசம் இல்லை. ஆனால் தாங்கள் த்ரிலோகத்திற்கும் ஈசர். பக்தர்களுடைய ஸகல காமனைகளையும் பூர்த்தி செய்கிறீகள்.*

*132. ஏ ஸ்மராரே! தாங்களே எல்லாமாக இருக்கிறீர்கள். தங்களிடமிருந்தே எல்லாம் உற்பத்தியாகின்றன. தாங்கள் கௌரீசர்; தாங்கள் நிர்வாணமாக இருக்கிறீர்கள், தாங்கள் பரமசாந்தர்; தாங்களே விருத்தன், யுவன், பாலன், தாங்கள் இல்லையென்றால் வேறு என்ன இருக்கிறது? அதனால் தங்களை நமஸ்கரிக்கிறேன்.*

*133. இந்த விதமாக அந்தப் ப்ராம்மணன் விஸ்வாநரன் மிகவும் ஸந்தோஷத்துடன் ஸ்துதி செய்து பூமியில் ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்தான். அப்பொழுது அந்த எல்லா விருத்தர்களின் விருத்தரான அந்த பாலகன் கூறினான்- பிராம்மணா! வரத்தை வேண்டிக் கொள் என்று.*

*134. அதன் பிறகு சாதுர்யவானான அந்த விஸ்வாநரமுனி ஸந்தோஷ அந்த: கரணத்துடன் கூறினான்- தாங்கள் ஸர்வக்ஞர். தங்களுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது?*

*135. பகவான் தாங்கள் ஸர்வாந்தர்யாமி, ஸர்வஸ்ரூபர், ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கும் தாதா; தாங்கள் ஈஸ்வரர், தீனனுக யாசிக்க என்னிடம் தாங்கள் ஏன் கட்டளையிடுகிறீர்கள்.*

*136. பாலரூபமான அந்த தேவ பவித்ரனும், புண்ணிய வானான வ்ரதமிருக்கும் விஸ்வாநரனுடைய அந்த வசனத்தைக் கேட்டு பவித்ரமான சிரிப்புடன் உடனே பதில் கூறினான்-*

*137. ஏ! பவித்ரா! நீ சுசிஷ்மதிக்கு வேண்டி, நீ எந்த ஆசையை ஹ்ருதயத்தில் கொண்டாயோ?*

*138. கொஞ்சம் நாட்களில் ஸந்தேகமில்லாமல் அந்த ஆசை பூர்த்தியாகும், ஏ! மஹாமதி! நான் சுசிஷ்மதியின் கர்ப்பத்தில் ஸர்வ தேவர்களுக்கும் ப்ரியனுன பவித்ர க்ருஹபதி என்னும் பெயருடன் ப்ரஸித்தமாக உன் புத்திரனுக அவதரிக்கின்றேன்.*

*139. நீ இப்பொழுது கூறிய அந்த அபிலாஷாஷ்டகத்தை (அபிலாஷா அஷ்டக ஸ்தோத்ரம்) ஒரு வருஷ பர்யந்தம் சிவனுடைய சமீபத்தில் தினமும் மூன்று காலம் பாராயணம் செய்து வந்தால் எல்லா எண்ணங்களும் நிறைவேறும்.*

*140. உன்னுல் சொல்லப்பட்ட இந்த அபிலாஷாஷ்டகம் ஒரு வருஷம் மூன்றுவேளையும் சிவனுக்கு முன்னுல் படிப்பதனுல் உன்னுடைய எல்லா மனோரதங்களும் பூர்த்தியடைகிறது. புஸ்தக பாராயணமும், புத்திரபௌத்திரதனங்களையும் வ்ருத்தி பண்ணக் கூடியது. எல்லா விதத்திலும் சாந்தியளிக்கவல்லது. ஸகல ஆபத்துக்களையும் போக்கடிக்க வல்லது.*

*141. ஸ்வர்க மோக்ஷ ஸம்பத்துக்களையும் அளிக்கவல்லது. இதில் ஸந்தேஹமில்லை. புத்ரஹீனனுன நான் ஒரு வருஷம் வரையில் ப்ராத: காலத்தில் தூங்கியெழுந்தவுடன் நிர்மலமாக நீராடி சிவனைப் பூஜித்து இந்த ஸ்துதியைப் படித்தால் அவன் புத்ரவானுவான். வைசாக, கார்த்திக மாகமாதங்களில் விசேஷ நியமத்துடன் விரதம் இருந்து,*

*142- 143. ஸ்நான ஸமயத்தில் இந்த ஸ்தோத்திரத்தைச் சொன்னுல் அவனுக்கு ஸமஸ்தமான பலன்களும் கிடைக்கும். நான் நிர்குணன். ஆனுலும்கூட கார்த்திகை மாதத்தில்*

*144. உனக்குப் புத்ரனுக வந்து பிறப்பேன். வேறு யார் இதைப் படித்தாலும் அவனும் புத்ரவானுவான். இந்த*

**அபிலாஷாஷ்டகத்தைக் கண்ட பேருக்கெல்லாம் கொடுக்கக்கூடாது.**

***145.*** ***ஜாக்ரதையாக இதை ரகசியமாக வைத்துக்கொள்வது உசிதம். இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பதனுல் மலடர்களுக்கும் குழந்தையுண்டாகும், ஸ்த்ரீயானுலும், புருஷனுனுலும்-***

***146.*** ***ஒருவருஷகாலம் நியமத்துடனிருந்து, சிவனுக்கு ஸமீபத்தில் இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பதனுல் நிச்சயமாகப் புத்ரபாக்யம் ஏற்படும். இவ்விதம் கூறிவிட்டு அந்த பாலகன் அந்த சிவலிங்கத்திற்குள்ளே மறைந்தான்.பிறகு அந்தப் பிராம்மணன் விஸ்வாநர முனியும் தன் வீட்டிற்குச் சென்ருன்.***

***ஸ்ரீஸ்காந்த புராணத்தில் 4வது காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான அமராவதி, ஜோதிஷ்மதி (ஜ்யோதிஷ்மதி) வர்ணனம் என்னும் பத்தாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.***



# அத்யாயம் 11

*அகஸ்தியர் கூறினுர்; ஏ! பாக்யவதி, கேட்பதில் ஆர்வமுள்ளவளே, புண்ணியசீலன், சுசீலன் என்னும் இரு விஷ்ணு பக்தர்களும் அக்னிபகவானுடைய உற்பத்திக் கதையை எப்படிக் கூறினுர்களோ, அப்படியே நீ கேள் :-*

*1. அதன்பிறகு உசித சமயத்தில் ஹ்ருதய பூர்வமாக கர்ப்பாதான கர்மம் முடிந்து, விஸ்வாநரரின் பத்னி சுசிஷ்மதி கர்ப்பவதியாஞள்.*

*2. பிறகு பண்டிதஞன விஸ்வாநரன் கருத்தரிப்பதற்கு முன்ஞலேயே மூன்ருவது மாதத்தில் குழந்தையின் ஆண்மையின் விருத்தியின் பொருட்டு க்ருஹஸ்தர்களுக்குச் சொல்லப்பட்ட ஒழுங்கான முறையில் பும்ஸவன கர்மம் செய்து முடித்தார்.*

*3. பிறகு சாதுர்யவாஞன விஸ்வாநரன் ஸுகபூர்வமான ப்ரஸவம் ஆகவேண்டும் என்றும் கர்ப்பத்தில் இருக்கும் சிசுவின் வளர்ச்சி பூர்ணமாக இருக்கவேண்டும் என்பதற்காகவும்*

*4. எட்டாவது மாதத்தில் ஸீமந்த முஹூர்த்தத்தை நடத்திஞர். அதன் பிறகு உத்தமமான நக்ஷத்திரத்தில் ப்ருஹஸ்பதிகேந்த்ர ஸ்தானத்தில் இருக்கும் பொழுது மற்ற சுபகிக்ருஹங்கள் ஐந்து, ஒன்பது முதலிய மாறுபாடான இடங்களில் இருக்கும் பொழுது, சுபலக்னத்தில் விஸ்வாநரரின் பத்னி சுசிஷ்மதியின் கர்ப்பத்திலிருந்து, எல்லா இடையூறுகளையும் நீக்குபவனும்; சந்திரனைப் போல் அழகியமுகமுடையவனுமான ஒரு புத்திரன் பிறந்தான். அவன் பூமியில் விழுந்தவுடன் அவனுடைய ப்ரபையிஞல் ஸூதிகா க்ருஹம் ப்ரகாசம் அடைந்தது.*

*5,6. அதே ஸமயம் பூமியிலும் ஸ்வர்கத்திலும், புவர்லோகத்திலும் வஸிக்கும் ஜனங்கள் பூரண ஸந்தோஷமடைந்தனர். திக்குகளாகிய பெண்களுடைய*

*முகங்களை வாசனையடையச் செய்யக்கூடிய ஸுகந்த வாயு வீசியது.*

*7,8,9. மேக மண்டலத்திலிருந்து வாஸனை புஷ்பங்களின் வாஸனை வீசியது. தேவதுந்துபி முழங்கியது. எல்லாத் திசைகளும் ஸம்பூர்ண ஸந்துஷ்டியடைந்தது. எல்லா நதிகளும், ஜனங்களுடைய சித்தமும் நிர்மலமாயின. தமோகுண, அக்ஞான அந்தகாரம் நஷ்டமடைந்தது. ரஜோகுணப் புழுதிகள் அடங்கின. பிராணிகள் ஸத்வ குணங்களுடனும் வீரியத்துடனும் விளங்கினார்கள். பூமியும் அந்த சமயம் மங்களமயமானாள். எல்லா ஜனங்களுடைய ஸந்தோஷத்தை அதிகரிக்கச் செய்கிற மங்களமயமான பேச்சுகள் நிலவின.*

*10. திலோத்தமா, ஊர்வசி, ரம்பா, பிரபா, வித்ப்ரபா, ஸுபா ஸுமங்களா, ஸுபாலாபா, ஸுஸீலா முதலிய அப்ஸரஸ்கள்,*

*11. சிறந்த முத்து மணிகளினால் நிறைந்த தட்டுகளுடன், கற்பூரம், கஸ்தூரி, அகர், இவைகளுடனும்,*

*12. வைரம், வைடூர்யகரமான தீபங்களுடன் கூடியதும் மஞ்சள் பூசியதும், மரகதமணி போன்ற சங்கு, சிப்பி, தயிரினால் நிரம்பிய பாத்திரங்களும்*

*13. பத்மராகம், பவழம், கோமேதகம், புஷ்பராகம், இந்த்ர நீலம், குங்குமரத்னம் சிறந்த மணிமாலைகளினால் அலங்கரித்ததுமான சப்திக்கின்ற மணிகளினால் அலங்கரிக்கப்பட்டப் பாத்திரங்களைக் கையில் எடுத்துக் கொண்டு*

*14. ஆயிரக்கணக்கான வித்யாதரிகளும், கின்னரிகளும், தேவ மாதர்களும் சாமரங்களைச் சுழற்றிக் கொண்டு, மங்கள வாத்யங்களையும் கையில் எடுத்துக் கொண்டு அங்கு வந்தனர்.*

*15.அழகான குரல் சம்பத்துள்ள கந்தர்வர்கள், நாக, யக்ஷர்கள் அநேக ஸுமங்கலிகள் லலிதமான பாடல்களைப்*

*பாடிக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தார்கள்.*

*16. மரீசி, அத்ரி, புலகர், புலஸ்தியர், க்ரது, அங்கிரஸ், வஸிஷ்டர், கச்யபர், நரன் விபாண்டகர், மாண்டவ்யர்,*

*17. லோமசர், லோமசானர், பரத்வாஜர், கௌதமர், ப்ருகு, காலவர், கர்க்கர், ஜாது கர்கர்ணர், பராசரர்,*

*18. ஆபஸ்தம்பர், யாக்ஞவல்க்யர், தக்ஷர், வால்மீகி, முத்கலர், சதாதபர், லிகிதர், சிலாதர், சங்கர், உஞ்சபுச் ஜமதக்னி ஸம்வர்த்தர், மதங்கர், பரதர், அம்சுமான் வ்யாஸர், காத்யாயனர், குத்ஸர், சௌனகர், ஸுச்ருதர், சுகர்,*

*19,20. ருஷ்யச்ருங்கர், துர்வாஸர், ருசி, நாரதர், தும்புரு, உத்தங்கர், வாமதேவர், ச்யவனர் ஸீதா, தேவலர்,*

*21. சாலங்காயனர், ஹாரீதர், விச்வாமித்ரர், பார்க்கவர், புத்ர மார்கண்டேயனுடன் ம்ருகண்டு, தாலப்யா உத்தாலகர்*

*22. தௌம்யர், உபமன்யு, வத்ஸப்ரப்ருதி, முனிஸமானும், முனிகன்னிகைகள் கூட்டம், அந்த பாலகனுக்கு சாந்தியளிக்க விச்வாநரருடைய ஆசிரமத்துக்கு வந்தார்கள்.*

*23. ப்ருஹஸ்பதியுடன் ப்ரம்ம, தேவ ச்ரேஷ்டரான கருடத்வஜர், நந்தி, ப்ருங்கி, கௌரியுடன் மஹாதேவர்*

*24. இந்திரன் முதலானவர்கள், பாதளவாஸிகளான நாககணங்கள், நதிகளுடன்கூட ஸமஸ்த ஸமுத்ரங்கள், மிக ரத்னங்களை எடுத்துக்கொண்டு*

*25. அநேக ஆயிரக்கணக்கான ஸ்தாவரமான பர்வதக் கூட்டங்கள், ஜங்கம உருவெடுத்துக் கொண்டு அந்த மஹா மஹோத்ஸவத்திற்காக வந்தார்கள். அச்சமயம் அங்கு காலமில்லாக் காலத்தில் சந்த்ரிகை ப்ரகாசித்தது.*

*26. பிதாமஹரே தானே அந்தக் குழந்தைக்கு ஜாதகர்மா செய்தார். பிறகு ஜாதகர்மத்தை விளக்கும்படி*

*சிந்தித்துப் பார்த்து இந்தக் குழந்தைக்கு க்ருஹபதி என்ற யோக்யமான*

*27. பெயர், பதினொன்றும் நாள் நாமகர்ம முறைப்படி அதன் அர்த்த பாவமான வேத மந்திரங்களை அனுசரித்து அக்குழந்தைக்கு பெயரிட்டனர்.*

*28. அந்த வேதமந்த்ரம் அயமக்னி, க்ருஹ பதியென்றாகும் (க்ருஹபதி)*

*29. மேலும் இரண்டாவது சாகையுடன் அக்னேர் க்ருகபதே என்பதான நான்கு வேதங்களுக்கும் யுக்தமான ஆசீர்வாதத்துடன் அபிநந்தனம் செய்து*

*30. எல்லா ஜனங்களுக்கும் பிதாமஹரான ப்ரம்மா பாலகனுக்கு உசிதமான ரக்ஷாகார்யம் செய்த பிறகு ஹரி, ஹரன் இவர்கள் கூட ஹம்ஸத்தில் ஏறிக்கொண்டு சென்றார்.*

*31. ஆஹா! அந்தக் குழந்தையின் ரூபத்தை என்னவென்று கூற? என்ன தேஜஸ்! என்ன ஸர்வாங்க லக்ஷணம்! சுசிஷ்மதியினுடைய பாக்யம்தான் என்னே! இங்கு ஸ்வயம் மஹேஸ்வரர் அல்லவா அவதரித்திருக்கிறார்.*

*32. மேலும் சிவபக்தர்களுக்கு இதில் விசேஷம் என்ன இருக்கிறது, சிவனே ஸ்வயம் ஆவிர்பவிப்பதற்கு ஆச்சர்யம் என்ன இருக்கிறது. ஏனென்றால் சிவபக்தர்களே ஸ்வயம் ருத்ரர்களல்லவா!*

*33. க்ருஹஸ்தாச்ரம வாஸிகள் இதற்காக வல்லவா புத்திரர்களை யாசிக்கிறார்கள். ஸனாதனக்ருதி கூறுகிறது.*

*34. புத்திரனால் ஸகல உலகத்தையும் ஜயிக்கலாமென்று.*

*35. புத்ரனில்லாத வீடு சூன்யம்; புத்ரன் இல்லாதவன் ஸம்பாதிப்பது வீணே. அபுத்ரனுக்கு வம்சம் ஏது? புத்ரனில்லாது இருப்பதைவிட அபவித்ரம் கிடையாது.*

*36. புத்ர லாபத்தைப் போன்ற ஸுகமளிக்கும் பொருள் வேறில்லை. இந்த உலகிலும், பரஉலகிலும் சரி, புத்ரனைப் போன்ற மித்திரன் வேறில்லை.*

*37. ஔரஸ, க்ஷேத்ரஜ, க்ரீத, தத்தகன், ஸ்வயம்ப்ரத, புத்ரியுடைய புத்ரன், ஆபத்திலிருந்து காப்பாற்றப்பட்டவன் இந்த ஏழுவிதமான புத்ரன் இங்கு கூறப்பட்டுள்ளது.*

*38. பண்டிதனான க்ருஹஸ்தன் இந்த ஏழுவித புத்ரர்களில் ஏதாவது ஒரு புத்ரனை எடுத்துக் கொள்ளலாம். இவைகளில் வரிசைக்கிரமமாக ச்ரேஷ்டரிலிருந்து மேலும் மேலும் ச்ரேஷ்டர் வரை இருக்கிறது.*

*39. பிதா விஸ்வா நான். நான்காவது மாதம் (குழந்தையை) வீட்டிலிருந்து வெளியில் எடுக்கும் கர்மத்தைச் செய்தார். ஆறுவது மாதம் அன்னப் பிராசனம் செய்தார்.*

*40. முதல் வயது முடிந்ததும், குடுமிக்கல்யாணமும் பண்ணினர்; இதற்குப் பிறகு அந்த கர்ம காண்டம் தெரிந்தவர் சிரவண நக்ஷத்திரத்தில் காதுகுத்துக் கல்யாணமும் செய்தார். ப்ரம்மதேஜஸ் வ்ருத்திக்காக ஐந்தாவது வயதில் யக்ஞோபவீத கர்மமும் நடத்தினர்.*

*41. அதற்குப் பிறகு புத்திமானான விஸ்வாநரன் உபாகர்ம என்னும் சிரவணக்ரியைக்கு பின் வேதங்களைக் கற்றுக் கொடுக்க ஆரம்பித்தார். மூன்று வருஷங்களில் விதிமுறைப்படி அங்கம், பதம், க்ரமம், இவைகளுடன் நான்கு வேதங்களையும்,*

*42. ஸமஸ்த வித்தைகளையும் அந்த சக்தி வாய்ந்த பாலகன் விநயம் முதலிய குணங்களுடன் அவைகளை வெளிக்காட்டிக் கொண்டு ஸாக்ஷிமாத்ரமான குருவிடம் இருந்து வித்தைகளை க்ரஹித்தான்.*

*43. தத்வ ஞானியும் ஸுயேச்சையாகத் திரிபவரும் விஸ்வாநரருடைய புத்திரனுமான க்ரஹபதி ஒன்பதாவது*

வயதில் மாதா பிதாக்களின் சிச்ருஷையில் தத்பரராய் இருப்பதைக் கண்டு நாரத மஹா முனி

44. விஸ்வாநரரின் ஆசிரமத்துக்கு வந்து அவர்கள் கொடுக்கும் அர்க்யம் ஆசமனீயம் முதலியவைகளைக் கிரமப்படி கிரஹித்துக் கொண்டு, குசலப்ரச்னம் செய்தார்.

45. நாரதர் கூறினார் :- மஹாபாகா, விஸ்வாநரரே; ஹே ஸுவ்ருதே சுசிஷ்மதி! இந்த உங்கள் புத்ரனை க்ரஹபதி உங்கள் இருவருடைய உத்திரவிற்குக் கீழ்படிகிறவன்.

46, 47. மாதாபிதாக்களைக் கொண்டாடுவதைவிட வேறு அரிய தீர்த்தம் கிடையாது; தேவதைகள் கிடையாது; ஸத்கர்மம் இல்லை, அந்யதர்மமும் இல்லை. மூன்று உலகங்களிலும் புத்திரர்களுக்கு மாதாபிதாக்களைப்போல் வேறு ஒன்றுமே கிடையாது: கர்ப்பத்தில் சுமந்து மாதாவானவள் பிதாவைக் காட்டிலும் மேல்.

48. ஜனனியின் பாதகமலங்களை அலம்பி, ப்ரோக்ஷணம் பண்ணிக் கொள்வானேயானால், அபிஷேகம் செய்துகொள்வானானால் கங்கையின் புண்ய ஜல ஸ்நானத்தைவிட அதிகப்புண்ணியமே.

49. ஸமஸ்த கர்மத்தையும் த்யாகம் செய்த த்யாகிஸந்யாசி பிதாவைவிட மேலானவர். வணங்கத் தகுந்தவர். எல்லோராலும் வணங்கத் தகுந்தவராகயிருந்தாலும்கூட யதியும் அன்னையைக் கட்டாயம் வணங்க வேண்டும்.

50. மாதாபிதாக்களை சந்தோஷப்படுத்துவதே அதி உக்ர தபஸ் பரமவ்ருதம், மிகவும் மேலான தர்மம்.

51. முகபாவத்திலேயே விநயத்தைக் காட்டும் இந்த கிரஹபதி உங்கள் இருவரையும் எப்படி வெகுமானிக்கிறானோ அப்படி ஒரு பாலகனும் செய்யமாட்டான்.எனக்கு இது நன்றாகத் தெரியும்.

*52.* ஹே வைச்வாநர வரா! எனது மடியில் உட்கார்; நான் உனது லக்ஷணங்களை பரீக்ஷிக்கட்டும்; வலது கையைக் கொஞ்சம் காட்டு;

*53.* தேவரிஷி அப்படிக் கூறியதும் அந்த ஸ்ரீ மான் பாலகன் மாதாபிதாவின் உத்தரவைப் பெற்று பக்தியுடனும் விநயத்தடனும் நாரதர் மடிமீதமர்ந்தான்.

*54.* பிறகு நாரதர் அவனுடைய ஸமஸ்த அங்கங்களையும். உள்நாக்கையும், நாக்கையும், பற்களையும் கூடப்பார்த்துவிட்டு குங்குமத்தில் நனைத்த முப்புரி நூலைக் கொண்டு வரச்செய்து,

*55.* மஹாதேவர், கணேசர், பார்வதி இவர்களைத் தியானித்துக் கொண்டே, முனிவர் வடக்குப் பக்கமாகப் பார்த்து நின்று கொண்டு அந்தக் கயிற்றினால், காலிலிருந்து தலை வரை அளந்தார். பிறகு கூறினார்.

*56.* பாலகன் இரண்டு கைகளையும் நீட்டி அகலத்திலும், உயரத்திலும் சமமாக 108 அங்குலம் இருப்பானாகில் அவன் லோக பாலன் ஆகுவன். உமது பிள்ளை அப்படியிருக்கிறான்.

*57.* யாருடைய 5 இடங்கள் சிறியதாகவும், 5 இடங்கள் பெரிதாகவும், 6 இடங்கள் ரக்தமாகவும், ஆறு உயரமாகவும், 3 பளுவாகவும், 3 லகுவாகவும், 3 ஆழமாகவும் இருக்குமோ அந்த புருஷன் 32 லக்ஷணங்களும் பொருந்தினவனாக இருப்பான்.

*58.* உமது இந்தத் தீர்க்காயுஸ் புத்ரனின் இரண்டு நேத்ரங்களும் முகவாயும், மூக்கும். முழங்கால்களும் இந்த 5 அங்கங்களும் நீளமாக இருக்கின்றன. அது மிகவும் புகழத்தக்கது.

*59.* கழுத்து, தொடை, லிங்கம் இந்த மூன்றும் குட்டையாக இருக்க வேண்டும். ஸ்வரம் அந்தக்கரணம் நாபீ இவைகள் கம்பீர மாக இருக்க வேண்டும். அப்படியிருப்பதால் இந்த பாலகனுக்கு ஸுபலக்ஷணங்கள் இருக்கின்றன.

*60.* தோல், முடி, விரல்கள், பற்கள், விரல்களின் நுனிகள் இவைகள் இந்த பாலகனிற்கு சிறியதாகவும் மெல்லியதாகவும் இருக்கின்றன.

*61.* திக்பாலர்களுடைய பதங்களைப் போல பாலகனுடைய மார்பும், வயிறும், நெற்றியும் தோள்களும்

*முகமும் இந்த ஆறு பாகங்களும் உயரமாக இருக்க வேண்டும். அதனுல் இந்தப் பையன் மிகவும் ஐஸ்வர்யசாலியாக இருப்பான்.*

*62. இரண்டு கை உள்ளங்கைகளும், இரண்டு கண்களின் ஓரமும், இரு உள்ளங்கால்களும், நாக்கும், கீழ் உதடும், நகங்களும் ஆன இந்த ரக்தவர்ணமாக இருப்பதனுல் ராஜ்ய ஸுக லாபம் உண்டாகும்.*

*63. இந்தப் பையனுடைய நெற்றியும் இடுப்பும், மார்பும் விசாலமாக இருக்கின்றன. அதனுல் ஸர்வ தேஜஸ்ஸுகளையும் அளவு கடந்த ஐஸ்வர்யங்களையும் அடைவான்.*

*64. இப்பாலகனுடைய இரண்டு கைகளும் ஒரு வேலையும் செய்யாவிட்டாலும் ஆமையின் முதுகைப்போல் கடினமாக இருக்கின்றன. ஆனுல் பார்ப்பதற்கும் நடப்பதற்கும் காரணமாக இருக்கும் கால்களும் மிருதுவாக இருக்கின்றன. அதனுல் அரசாட்சி செய்யும் பாக்யம் ஏற்படலாம்.*

*65. தீர்க்காயுளுக்கு அறிகுறியாக இரண்டு கைகளின் ரேகைகளும் ஆள்காட்டிவிரலின் அடியிலிருந்து சுண்டு விரலின் மறுபுறம் வரைக்கும் போயிருக்கிறது.*

*66. இரண்டு பாதங்களும் சதைப்பற்றுள்ளதாக சிவந்து அதிகம் பருமனில்லாமலும் வெளுப்பில்லாமலும் அழகாக, சமமான முட்டுகளுடனும் வழுவழுப்பாகவும் இருப்பது ஐஸ்வர்யத்தைக் குறிக்கிறது.*

*67. உன்னுடைய இந்த பாலகன் சிவந்த மிகச்சில கைரேகைகளுடன்கூட இருப்பதனுல் எப்பொழுதும் ஸுகமாகவேயிருப்பான். குறி லேசாகவும் சிறியதாகவும் இருப்பதனுல் ராஜாதி ராஜனுக இருப்பான்.*

*68, 69. இவனுடைய முழங்கால்களும், இடுப்புப்ரதேசங்களும் வழுவழுப்பாக இருக்கின்றன. இவன் உயர்ந்த ஆஸனத்தில் இருக்கத்தக்கவன். இவனுடைய தொப்புள் வட்டமாகவும் வலது பக்கம் சுழித்தும் ரக்தவர்ணமாக இருப்பது ஸகல ஐஸ்வர்யங்களையும் சூசிப்பிக்கிறது. இந்த பாலகனுடைய மூத்திரதாரை வலது பக்கமாக விழுந்தாலும், வீர்யம் மீன், தேன் இவைகளின் வாஸனையாக இருந்தாலும்.*

70. இவனது அகலமானதும், சதைப்பற்றுள்ளதும், வழவழப்புள்ளதுமான கடிப் பிரதேசம் சுகத்தைக் கொடுக்கும். அழகான சரீர அமைப்பு, முழங்கால் வரை இடிக்கும் கைகள் இரண்டும் திக்பாலகனுவதைக் குறிக்கிறது.

71. மார்பிலுள்ள ஸ்ரீ வத்ஸம் என்னும் மரு, வஜ்ரம், மத்ஸ்யம், சக்ரம், கமலம், தனுஸ், தண்டம் இந்த சின்னங்களுடைய இரண்டு கைகள் ஸ்வர்க்காதிபதியாாவன் என்பதைக் குறிக்கிறது.

72. இவனுடைய 32 பற்களும்; யானையின் துதிக்கைப் போன்றும், சங்கைப் போன்றதும், மூன்று ரேகைகள் கூடின கழுத்தும் க்ரௌஞ்ச துந்துபி ஹம்ஸ மேகங்களைப் போன்றதுமான இவனுடைய சப்தம் எதைக் குறிக்கிறது. என்றால் - இந்தச் சிறுவன் சமஸ்த ராஜாதி ராஜாக்களுக்கும் மேலான விசேஷம் பொருந்தினவனுவான் என்பதை.

73. இவனுடைய விசேஷம் பொருந்திய கண்கள் தேனைப்போல சற்று பிங்கள வர்ணமாக உள்ளன. அதனால் லக்ஷ்மி இவனை ஒரு பொழுதும் கைவிடமாட்டாள். இவனுடைய நெற்றியில் ஐந்து ரேகைகள் இருக்கின்றன. வயிறும் சிம்மத்துடையதுபோல் இருக்கிறது. அதனால் இப்பாலகன் மிகவும் சுபலக்ஷணங்களுடன் இருக்கிறான்.

74. இவனுடைய உள்ளங்கால்களில் ஊர்த்வ ரேகை இருக்கிறது. மூச்சு விடும்போது தாமரையின் வாசனை இருக்கிறது. எல்லா விரல்களையும் சேர்த்து வைத்துக் கையை விரித்தால் கையில் இடைவெளியில்லை. நகங்கள் மிகவும் அழகாக இருக்கின்றன. இந்த பாலகன் உயர்ந்த மஹாலக்ஷணங்களுடன் கூடி இருக்கிறான்.

75. ஆனால் ஸர்வ குண ஸம்பன்னனுகவும், ஸமஸ்த லக்ஷணங்களுடன் கூடியும் இருந்த பொழுதிலும் நிர்மலமான பரிபூரணமான கலைகளுடன் கூடின சந்திரனைப் போல இந்த பாலகனுக்கு ஒரு குறையிருக்கிறது. ப்ரம்மா இந்தக் குழந்தையை நாசம் செய்யாமல் இருக்கவேண்டும்.

76. அதனால் எல்லாவித பிரயத்தனங்களினாலும் இந்தக் குழந்தையை ரஷிக்க வேண்டும். ஏனென்றால் விதி வக்கரித்துக் கொண்டால் குணங்களும் தோஷமாகின்றன.

*77. இந்த பாலகனுக்குப் பன்னிரண்டாவது வயதில் மின்னலாகிற அக்னியின் மூலம் தீங்கு ஏற்படக் கூடும் என்று எனக்கு ஸந்தேஹம் தோன்றுகிறது, என்று இப்படிச் சொல்லிவிட்டு புத்திமானுன நாரதமுனி வந்ததுபோல் திரும்பிப் போய் விட்டார்.*

*78. நாரதருடைய இவ்வாக்கியத்தைக் கேட்ட விஸ்வாநரமுனி பத்தினியுடன் அதே ஸமயத்தில் பயங்கரமான இடி விழுந்த மாதிரி துக்கித்தார்.*

*79. விஸ்வநாதர் ஐயோ மோசம் போனேனே என்று மார்பில் அடித்துக் கொண்டார். வரப்போகும் புத்ர சோகத்தை நினைத்து வியாகுலத்தினுல் வெகு நேரம் மூர்ச்சையாகிக் கிடந்தார்.*

*80. சுசிஷ்மதியும் வியாகுலத்தினுல் பரபரப்படைந்து இந்திரியங்களுடைய துக்கத்தினுல் தீனையாகி ஐயோ! ஐயோ! என்று மிகவும் தீனஸ்வரத்துடன் அழத்தொடங்கினுள்.*

*81. ஐயோ குழந்தையே, குணநிதியே! பிதாவின் ஆக்ஞையைத் தட்டாதவனே! என்னைப் போன்ற இந்த அபாக்யவதியின் வயிற்றில் ஏன் பிறந்தாய்?*

*82. குழந்தாய்! நீ எனக்கு ஒரே ஒரு புத்ரபாக்கியமல்லவா? உன்னுடைய குணங்களாகிற அலையினுல் நிறைந்து, சோகஸமுத்ரத்தில் விழுந்த என்னை உன்னையல்லாமல் வேறு யார்தான் காப்பாற்றுவார்கள்!*

*83. ஏ! பாலா! பவித்ரமான கமலத்தைப் போன்ற கண்களையுடையவனே, உலகத்துக்கண்களாகிய சகோதரத்து சந்திரனே! ஏ! அப்பனே ! உன் தகப்பனுருடைய நேத்ர கமலத்துக்குரிய சூரியனே! என்னுடைய ஆயிரக்கணக்கான விரதோத்ஸவத்திற்குக் காரணமானவனே!*

*84. பூர்ண சந்திரனைப் போன்ற முகத்தையுடையவனே! பிரிய வசனங்களைப் பேசுகிறசுதாஸாகரமே, ஐயோ! குழந்தையே! க்ரஹ பதியே! நான் எவ்வளவோ துக்கங்களை ஸஹித்துக்கொண்டு உன்னைப் பெற்றேனே, உன்னைப் பெறுவதற்காக நான் என்னதான் செய்யவில்லை.*

*85. ஐயோ குழந்தையே! உன்னைப் பெறுவதற்காக நான் எந்த தேவதையைத்தான் பூஜிக்கவில்லை. எந்தத் தீர்த்தங்களில் தான் ஸ்நானம் செய்யவில்லை. புண்ணியவசத்தால் கிடைத்த குழந்தையே, உனக்காக எத்தனை நியமாநுஷ்டானங்கள், மருந்துகள், மந்த்ரங்கள், யந்த்ரங்கள் இவையெல்லாம் பூஜை செய்யவில்லை. ஸம்ஸார ஸாகரத்தைக் கடப்பதற்குத் துணையாக வந்த குழந்தையே! என்னுடைய துக்கத்தின் பாரத்தை நீக்குவாயா சுகசமுத்ரமே? உன்னுடைய முகசந்திரனைக் காட்டப்பா குழந்தாய்,*

*86. நீ தான் எங்களுடைய புத் என்னும் நரகமாகிய ஸமுத்ரத்தை வற்றவைக்கிற வடவானல், உன்னுடைய வசனமாகிற அம்ருதத்தைப் பொழிந்து உன்னுடைய பிதாவிற்கு உயிரூட்டு.*

*87. இந்த வரப்போகும் அமங்களத்தைத் தெரிந்திருந்தும், இந்த தேவதைகள் உன்னுடைய ஜன்மோத்ஸவத்திற்கு ஏன் வந்தார்கள்? ஒரேயிடத்தில் சகல குணங்கள், ஸ்வபாவங்களும் கலைகளும் சௌந்தர்யமும் நல்ல லக்ஷணமும் ஒன்று சேர்ந்து, இருப்பது கண்டு சந்தோஷமடைந்தார்கள்.*

*88. ஹே சம்போ, மஹாதேவா, கருணாகரா, சூலபாணே! உங்களை வேதமறிந்த ஞானிகள் ம்ருத்யுஞ்ஜயன் என்று கூறுகிறார்களே, உங்களால் கொடுக்கப்பட்ட இந்த பாலகன் காலனுக்கு இரையாவானானால் உலகத்தின் யார்தான் இரையாகமாட்டார்கள்!*

*89. ஐயோ! ஏ படித்தவனே! நீ மிகவும் முயற்சியுடன் இந்த உலகத்தின் தாபத்தைப் போக்க வந்த பாலகனுக்கு ஆழமான மத்யமும் உத்தமமும் ஆன ரத்னஸாரத்தையும், ப்ரபலமானதும் விசாலமானதுமான குணஸாகரத்தை ஏன் கெடுத்தாய்?*

*90. காலனே! உன்னுடைய ராணிக்குக் குழந்தைகள் இல்லையா? இல்லை அவள் புத்ரவதியாக இருந்தும்கூட புத்ரனுடைய முகசந்திரனைப் பார்க்க ஒட்டாமல் உன்னுடைய நாச வேலையான அந்தகாரம் மறைக்கிறதா? வஜ்ராயுதத்தைப்போல் நிஷ்டூரமானவனே! கமலநாளத்தைப்போல அதிகக் கோமளமாயுள்ள இந்த*

*பாலகனின் சரீரத்தின் மேல் கடினமான கோடாரியைப் போன்ற உன் கோரைப்பற்களை ஏன் பதிக்கிறுய்?*

*91. சுசிஷ்மதி அநேகவிதமாய் இவ்விதம் வெகு நேரம் பிரலாபித்துத் தன்னுடைய கண்ணிரின் தாரையினுல் பொங்குகின்ற அலைகளினுல் நிரப்பப்பட்ட மிகவும் சூடான பெருமூச்சு விட்டுவிட்டு அவள் உலர்ந்தே போய்விட்டாள்.*

*92 அவளுடைய இந்த தீனமான பிரலாபத்தைக் கேட்டு மரங்களும் வாயுவின் அசைவாகிய வ்யாஜத்தினுல் அடிக்கடி தலையையாட்டி, புஷ்பரூபமான கண்ணீர்த்துளிகளைச் சிதறியது பக்ஷிகளுடைய கலமாகிய தீனஸ்வரத்தினுல் அவை அழ ஆரம்பித்தன.*

*93. சுசிஷ்மதி வாய்விட்டுக் கதறி அழ ஆரம்பித்தாள். அதனுல் பர்வதங்களிலுள்ள குகைகளாகிற முகம் மிருகங்கள் பக்ஷிகளுடைய வருகையில்லாமல் சூன்யமாயின. அதனுல் அவைகள் இவளுடைய துக்கத்தினுலே பரிதவித்து, எதிரொலி என்னும் வ்யாஜத்தினுல் அவைகளும் உயர்ந்தகுரலில் அழ ஆரம்பித்தன.*

*94. விஸ்வாநரமுனியும் இந்த அழுகைப் பிரலாபத்தைக் கேட்டு மூர்ச்சை தெளிந்து, எழுந்து என்ன என்ன என்னுடைய அந்தராத்மாவிலும் சரீரத்திலும் நிரம்பியிருக்கிற என்னுடைய உயிர் என்னுடைய இந்திரியங்களுக்கு ஸ்வாமியான க்ரஹபதி எங்கே என்று கத்திக் கொண்டே எழுந்திருந்து உட்கார்ந்தார்.*

*95. இப்பொழுது அகஸ்தியமுனி கூறுவார்:- இதற்கு பிறகு கிரஹபதி மாதா பிதாக்கள் மிகவும் சோகத்தினுல் துடிப்பதைக் கண்டு சிறிது புன் சிரிப்புடன் கூறினுர், ஏ அம்மா, இத்தனை பயம் உங்களுக்கு எங்கிருந்து வந்தது?*

*96. சிவனுடைய சரண தூளியாகிற கவசத்தை அணிந்தபிறகு அந்தக் காலனுல் கூட என்னைக் கொல்லமுடியாது. அதிக்ஷுத்ரமான அந்த மின்னல் என்னை என்ன செய்யும்?*

*97. நீங்கள் இருவரும் நான் இப்பொழுது செய்யும் சபதத்தைக் கேளுங்கள்; நான் தங்களுடைய புத்ரனுக இருந்தால் எல்லாமறிந்த ஸத்ஜனங்களுககு ஸர்வாபீஷ்டத்தைக் கொடுப்பவரும் காலகூடமெனும் பயங்கர விஷத்தைப்*

பருகினவரும் காலனுக்கு காலஞன அத்தமஹாகாலலான ம்ருத்யுஞ்ஜயனை ஆராதித்து இப்படி ஒரு கர்மத்தைச் செய்வேன். அதஞல் மின்னலும் என்னைப் பார்த்து பயப்படும்.

98,99. வ்ருத்தர்களான பிராம்மண தம்பதிகள் பஞ்ச காலத்தில் பெய்த மாரிக்கு சமமான புத்ரனுடைய வசனத்தைக் கேட்டு, ஸந்தாபத்தை விட்டு விட்டுக் கொஞ்சம் சாந்தமாகி அப்பொழுது கூறுவார்கள்.

100. இந்த மேகமில்லாத மழையைப் போன்றும் க்ஷீரஸாகரத்தின் அம்ருதத்தின் உற்பத்தியைப் போன்றும், ஆன இந்த வசனங்கள் எங்கிருந்து வந்தன? எங்களுக்கு மிக்க சந்தோஷத்தை அளிக்கின்றன.

1. என்ன சொன்ஞய், என்ன சொன்ஞய்! இன்னும் ஒருமுறை சொல்லு. காலனே கொல்லமாட்டானென்ருல், அற்பமான மின்னல் என்ன செய்யும்? என்று கூறிஞயல்லவா? 2. உண்மையிலேயே எங்களுடைய தாபம் சாந்தியடையும் பொருட்டு தேவ தேவஞன ம்ருத்யுஞ் ஜயனின் ஆராதனையென்னும் மகத்தான உபாயத்தை நீ கூறிஞயல்லவா? 3. அப்பனே மேலும் மஞேரதத்தை விட அதிக பலன் கொடுப்பவரும், காலத்தையே நாசம் செய்பவரும், ஆன மஹாதேவருடைய சரணுகதியைப் போய் அடைய அவரைவிட ஹிதம் செய்பவர் வேறு ஒருவரும் கிடையாது.

4. அப்பனே! பூர்வ காலத்தில் கால பாசத்தால் கட்டுண்ட ஸ்வேத கேதுவே எப்படிக் காப்பாற்றிஞர் என்பதை நீ கேட்டதில்லையா?

5. எட்டு வயது புத்ரஞன சிலாத முனிவரின் புத்ரனின் மரணத்தின் வாயில் விழுந்தவுடன் அந்த சிவன் அவனை ரக்ஷித்து ஜகத்துக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய நந்தியின் ரூபமாக தனது பாரிஷதராக வைத்துத் கொண்டார்.

6.க்ஷீர ஸமுத்ரத்தைக் கடைந்தவுடன் உண்டான ப்ரளயாக்னிக்கு ஸமமான கோர ரூபமான ஹாலாஹலத்தை (விஷத்தை) குடித்து மூன்று உலகங்களையும் ரக்ஷித்தார்.

7. த்ரை லோக்யத்தின் சம்பத்தையும் அபகரிக்கின்ற மிகவும் கர்வியான ஜாலந்தர் என்னும் அஸுரனைத் தனது கால்

*பெருவிரல் ரேகையிலிருந்து உண்டான சக்கரத்திஞல் வெட்டி எறிந்தார்.*

*8.பின்னம் தூர்ஜடி தேவன் விஷ்ணுவை பாண ரூபமாகக் கொண்டு அந்தப் பாணம் வீழ்ந்ததால் உண்டான அக்னி மூலமாக த்ரிபுரத்தையும் எரிந்தார்.*

*9. த்ரைலோக்யத்திலும் உள்ள ஐஸ்வர்யத்திஞல் மதர்த்த அந்தகன் என்னும் அசுரனே த்ரிசூலத்தின் முன் பாகத்தில் கோர்த்துக் கொண்டு பதிஞயிரம் வருஷங்கள் சூரியனுடைய வெய்யிலில் உலர்த்திக் கொண்டேயிருந்தார்.*

*10. மூன்று உலகங்களேயும் ஜயித்து கர்வத்துடன் இருந்த மன்மதனே ப்ரம்மாதி தேவகணங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போது தனது நெற்றிக் கண்ணுல் பஸ்மமாக்கி சரீரமற்றவஞக்கிஞர் (அனங்கன்).*

*11. தேவர்களேயும் படைக்கக் கூடிய மேகவாகநன் அச்சுதன் ஸம்ஸாரத்தை ரக்ஷிக்கக் கூடிய மஹா மணியான சிவனே சரணமடைவாய். ஏ புத்ரா! சிவனேயே சரணமடைவாய்.*

*12. மஹா க்ரஹபதி மாதா பிதாக்களின் ஆக்ஞையைப் பெற்று அவர்கள் சரணங்களில் வணங்கி அவர்களே ப்ரதக்ஷிணம் செய்து மிகவும் ஆறுதல் கூறிக் கிளம்பிஞன்.*

*13. ப்ரம்மா, நாராயணன் முதலிய தேவதைகளுக்கு துர்லபமான இயற்கையாக உண்டா ப்ரளயத்திஞல் ஏற்பட்ட ஸந்தாபத்திலிருந்து விச்வேச்வரர் எவரை ரக்ஷிக்கிறுரோ அந்த விசித்ர குணங்களுடன் கூடிய பணியிஞல் செய்த பணியே மாலேக்கு சமானமாகியும் வெள்ளே வர்ணமாகிய கங்கை புஷ்பமாலேயைப் போன்று யாருடைய கழுத்தில் பிரகாசிக்கிறதோ*

*15. ஸம்ஸாரத்தின் ஸந்தாபத்திஞல் க்லேசமடைந்து ஜனங்களுடைய பூர்வ ஜன்மத்தை வருஞ நதி மூலமாக நிவாரணம் செய்கின்றதோ, அஸியின் தாரையிஞல் சேதனம் செய்கின்றதோ மிகவும் த்ருடமான அஷ்டாங்க யோகத்தின் மூலம் எங்கு முக்தியடைகிறதோ,*

*16. அதை ஸ்பஷ்டமாக வெளிப்படுத்தும் பெயர் காசி என்று பண்டிதர்கள் சொல்கிறுர்கள்.*

*17.அதே காசியில் வந்து க்ருஹபதி ஸம்ஸார துக்கத்தினுல் தஹித்துக் கொண்டிருக்கும், காதுவரை நீண்டிருக்கும் விழியினுல் தர்சனம் செய்து முதலாவது மணிகர்ணிகையை அடைந்தான்.*

*18. அங்கு அவன் விதிப்படி ஸ்நானம் செய்து மூவுலகத்துப் பிராணிகளேயும் ரக்ஷிக்கும் விபு விஸ்வேஸ்வரரைத் தரிசனம் செய்து நமஸ்காரம் செய்தான்.*

*19. கிரஹபதி அந்த லிங்கத்தைப் பார்த்துப் பார்த்து ஹ்ருதயத்தில் மிகவும் ஆனந்தத்தையடைந்தான். அவன் தீர்மானித்தான் அதாவது ஆனந்தத்தின் மூலமே இங்கேதான் பிறந்ததென்று.*

*20. மூன்று உலகங்களிலும் சராசரங்களிலும் என்னேப்போல் பாக்யசாலி யாருமில்லேயென்று, காரணம் இன்று நான் விபு விஸ்வநாதனே தரிசனம் செய்யப் பெற்றேன்.*

*21.இது த்ரைலோக்யத்தின் ஸாரமே இங்கு லிங்க ரூபமாக விளங்குகிறது*

*22.அது தீர்மானம் அல்லது ப்ரம்மானந்தத்தின் உத்தமமான வேர் இதுதானே? இது என்ன ப்ரம்மாரஸாயனமா?*

*23. யோகி ஜனங்களுடைய இதயகமலத்தில் இருக்கும் ஆனந்தரூபமான நிராகார ப்ரம்மம் என்றும் கூறுகிறுர்களே, அது இதுதாஞ? லிங்க ரூபமாக உருவாகியிருக்கிறது?*

*24. அல்லது இது ப்ரம்மாண்டத்தின் ஆதாரஸ்வரூபமான அநேக விதமான ரத்னங்கள் நிரம்பிய பாண்டமா? அல்லது இந்த லிங்கம் மோக்ஷ வ்ருக்ஷத்தின் பலமா? அப்படித்தான் இது விஷயத்தில் கொஞ்சமும் ஸந்தேஹமில்லே.*

*25. அல்லது மோக்ஷ லக்ஷ்மியின் புஷ்பத்தினுல் அலங்கரிக்கப்பட்ட கேசபாகமா? அல்லது இது கைவல்ய ரூபமான மல்லிகை லதாவினுடைய புஷ்பக் கொத்தா? ஸ்துதியில் ஆழ்ந்திருக்கும் ஜனங்களுக்கு அபீஷ்ட பலனேக் கொடுக்கக்கூடியதா?*

*26. இல்லே, இது மோக்ஷலக்ஷ்மி ஆனந்தமாக விளேயாடும் பந்தலா? அல்லது ஸ்வர்க்கரூபமான உதயாசலத்தில் உதித்த சந்திரனு?*

*27. அல்லது ஸம்ஸாரத்தின் மோகரூபமான இருட்டைப் போக்கடிக்கும் ஸூர்யனு? அல்லது கல்யாணமய ரமணியுடைய அழகான சிங்காரக்கண்ணுடியா?*

*28. ஓ சரி சரி, இப்போது புரிந்தது. இது வேறு ஒன்றுமல்ல. எல்லா தேஹதாரிகளுடைய கர்ம விதைகளையும் சேகரித்து வைத்திருக்கிற அற்புதமான பீஜபுரி என்ற பழமேதான்.*

*29. ஏனென்ருல் இந்த நிர்வாண முக்தியைக் கொடுக்கக்கூடிய லிங்கத்தில் உலகத்தில் உள்ள கர்மம் என்ற பெயருள்ள வித்துகளெல்லாம் லயமாகின்றன. அதனுலேயே விஸ்வலிங்கமென்று சொல்லப்படுகிறது.*

*30. என்னுடைய மகத்தான பாக்யத்தினுல் நாரதர் வந்து இந்த விஷயத்தைக் கூறினுர். அவராலேயே நான் க்ருதார்த்தனுனேன்.*

*31. இந்த விதமாக ஆனந்த ரூபமான அம்ருத ரஸத்தைப் பானம் செய்துகொண்டு இந்த கிருஹபதி ஒரு சுபதினத்தில் அனைவருக்கும் ஹிதத்தையளிக்கும் லிங்கத்தை ஸ்தாபித்து,*

*32. இந்த்ரியங்களை ஜயிப்பதற்கு ஜனங்கள் கஷ்ட ஸாத்யமான எந்தக் கடூர வ்ரதங்களை அனுஷ்டிப்பார்களோ அவைகளை அனுஷ்டிக்கத் தொடங்கினுன். அந்த பவித்ராத்மா நூற்றெட்டு குடங்களில் கங்கா ஜலத்தை நிரப்பி வஸ்திரத்தினுல் வடிக்கட்டி சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்தான்.*

*33. நூற்றெட்டு நீலக்கமல புஷ்பங்களை மாலையாகத் தொடுத்து அணிவித்தான். பிறகு ஆறு மாதபர்யந்தம் ஏழு தினங்களுக்கு ஒரு தரம் கந்தமூல பலங்களை புஜித்திருந்தான்.*

*34. 35. பிறகு ஆறு மாதத்திற்கு, பக்ஷத்திற்கு ஒருநாள் உலர்ந்து விழுந்த இலைகளைப் புஜித்துக் கொண்டிருந்தான். பிறகு மாதத்திற்கு ஒருமுறை வாயுபக்ஷணம். பிறகு ஆறுமாதம்வரை ஜலத்தின் ஒரு துளியாகச் சாப்பிட்டு வந்தான்.*

*36. இந்தப் பிரகாரம் தபஸ் செய்து கொண்டு வருஷங்கள் இரண்டு கழிந்தன. க்ருஹபதியுடைய ஜன்மத்தில் பன்னிரண்டாவது வருஷம் வந்தது. நாரதர் சொன்ன வார்த்தையை.*

*37. பூர்த்தி செய்வதைப் போல வஜ்ராயுதபாணியான இந்திரன் அவனிடம் வந்து சொன்னுன். வரம் கேள், உன் மனத்தில் என்ன தோன்றுகிறதோ அந்த வரம் தருகிறேன் என்ருன்*

*38. ஓ ப்ராம்மணு! நான் ஸாக்ஷாத் இந்திரன், உன்னுடைய சுபக்ருதத்திஞல் நான் மிகவும் ஸந்தோஷம் அடைந்தேன் என்ருன். அந்த தீரஞன முனிகுமாரன் மஹேந்திரனுடைய இந்த வார்த்தையைக் கேட்டு*

*39. கிளியைப் போன்று மதுர அக்ஷரங்களிஞல் ஆன இனிமையான வார்த்தைகளைப் பேசத் தொடங்கிஞன். ஏ! வ்ருத்ராஸுரா சத்ருவே, ஏ! மகவன்! தாங்கள் தான் வஜ்ராயுதன் என்றறிந்தேன்.*

*40. ஆஞலும் நான் தங்களிடம் வரம் வாங்குவதற்கு விரும்பவில்லை. எனக்கு வரமளிக்கக் கூடிய தாதா சங்கரர்.*

*41. இந்திரன் கூறிஞன்; ஏ! பாலகா, என்னைத் தவிர வேறு சங்கரர் என்று ஒருவர் இல்லை. நான்தான் எல்லா தேவதைகளுக்கும் ஸ்வாமி. அதஞல் நீ சிறுபிள்ளைத் தனத்தைவிட்டு என்னிடம் வரத்தைக் கேள்.*

*42. பிராம்மணச் சிறுவன் கூறிஞன். ஏ! அகல்யையை ஏமாற்றியவனே! துஷ்டனே, கோத்ர சத்ருவே! பாகசாஸனனே, நான் ஸ்பஷ்டமாகக் கூறுகிறேன். நான் பசுபதியைத் தவிர வேறு எந்த தேவதைகளிடமும் பிரார்த்தனை செய்ய விரும்பவில்லை.*

*43. இந்திரனுக்கு, இவ்வாறு சொல்லப்பட்ட பாலகனுடைய வார்த்தைகளை கேட்டவுடன் அவனுடைய கண்கள் கோபத்திஞல் ரத்தப்பிழம்பாயின. பயங்காரமான வஜ்ராயுதத்தைத் தூக்கி பாலகனை பயமுறுத்திஞன்.*

*44. அதன்பின், பாலகன் நூற்றுக்கணக்காக மின்னல்கள் ஒரே சமயத்தில் வீசிஞல் போல் உள்ள ஜ்வாலைகள் உடைய வஜ்ராயுதத்தைப் பார்த்து நாரதரின் வசனங்களை நினைத்துக் கொண்டு பயத்திஞல் அதிர்ந்து மூர்ச்சித்து வீழ்ந்தான்.*

*45. அதன் பிறகு அக்ஞானமாகிய இருட்டை விநாசிக்கும் கௌரீபதி பகவான்சம்பு ப்ரஸன்னமானுர். எழுந்திரு! எழுந்திரு! உனக்கு மங்களம் உண்டாகட்டும் என்று கூறிக்கொண்டு கைகளால் தடவி அவனை எழுப்பினுர்.*

*46. பாலன் இரவில் தூங்கி எழுவதுபோல், கமலத்திற்கு ஸமமான கண்களைத் திறந்து எழுந்து உட்கார்ந்து கொண்டான். முன்னுலேயே நூற்றுக்கணக்கான ஸூர்யர்களைவிட அதிகமான பிரகாசத்துடன் கூடிய பகவான் சம்புவை தரிசித்தான்.*

*47. நெற்றியில் கண்ணும், நீல கண்டனும், வ்ருஷபத்வஜனும் ஜடாபாரத்துடன் அடர்ந்த முகமும்; பிறைசந்திரனைத் தலையில் தாங்கியும், விசாலமான த்ரிசூலமும், பிணுகி என்ற பாணம் முதலானவைகளைத் தாங்கினவரும், ஜ்வலிக்கின்ற கற்பூரம் போன்ற வெண்மையான தேஹமும் யானைத்தோலை அணிந்துகொண்டு இடப்பக்கம் பார்வதிதேவியுடன் பகவான் சம்பு, பாலகனின் எதிரில் வந்து நின்றுர்.*

*48,49. குரு வாக்யங்களினுலும், சாஸ்திரங்களினுலும் மஹாதேவனை அறிந்துகொண்டு, ஸந்தோஷத்தினுல் ஆனந்தக் கண்ணீர் பெருக, அடைப்பட்ட குரலுடன் புளகாங்கிதனுய்,*

*50. சிறுவன் தன்னையே மறந்து ஒரு க்ஷணமாத்ர நேரம் பொம்மையைப்போல் அசையாமல் நின்றுன்.*

*51. அந்தச் சிறுவன் ஸ்துதிக்கவோ, வணங்கவோ ஏதாவது வேண்டிக் கொள்ளவோ முடியாமல் நின்றதைப் பார்த்து சங்கரர் சற்று புன்சிரிப்புடன் கூறினுர்.*

*52. அஹோ குழந்தாய்! 'கிரஹபதி' வஜ்ராயுதபாணியாக இந்திரன் வந்து நின்றவுடன் நீ பயந்து விட்டாய் அல்லவா? நான் அறிவேன் பயப்படாதே; நான் உன்னை பரீட்சித்துப் பார்த்தேன்.*

*53. என்னுடைய பக்தன் மேல் இந்திரன் வஜ்ராயுதத்தை விடுவது இருக்கட்டும். யமராஜருக்குக்கூட அதிகாரம் கிடையாதே நான்தான் இந்திரரூபமாக வந்த உன்னேச் சோதித்தேன்.*

*54. ஹே மங்களமானவனே! உனக்கு நான் வரம் கொடுக்கிறேன். இன்றிலிருந்து நீ அக்னி பதவியில் இருக்கப்போகிருய்.*

*ஹே பாலகா! நீ தான் எல்லா தேவதைகளுக்கும் வாயாக இருக்கப்போகிருய்.*

*55. ஹே அக்னி! நீ எல்லா பிராணிகளுடைய தேகத்திற்குள் ஸஞ்சரிப்பாய், தர்மராஜன், இந்திரன் இவர்களுக்கு மத்யஸ்தானத்தில் அமர்ந்து நீ ஒரு திக்பாலனுகி ராஜ்யத்தைப் பங்கிட்டுக் கொள்வாய்.*

*56. உன்னுல் ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கம் எல்லா தேஜஸ்களேயும் வளர்த்துக்கொண்டு உனது பெயரால் அக்னீஸ்வரர் என்று அழைக்கப்படுவார். அந்தப் பெயரால் பிரஸித்தமடைவார்.*

*57. எவன் அக்னீஸ்வரரின் பக்தன் ஆவானே அவனுக்கு மின்னலாலும் அக்னியினுலும் பயம் கிடையாது. மந்தாக்னியாகவும் இருக்கமாட்டான். அவனுக்கு அகால ம்ருத்யுவும் ஏற்படாது.*

*58. காசியில் ஸமஸ்தஸித்தியையும் கொடுக்கவல்ல அக்னீஸ்வரரைப் பூஜை பண்ணிய பின் தெய்வச் செயலால் அவன் வேறு எங்காவது சென்று மரித்தாலும் அக்னி லோகத்தில் மரியாதையுடன் வாழ்வான்*

*59. அந்த கல்பம் முடிந்தவுடன் அவனுக்குக் காசி பிராப்தி ஏற்படும். அங்கேயே முக்தியடைவான் . வீரேஸ்வரருக்குக் கிழக்கே கங்கையின் மேற்கு பக்கத்தில்*

*60. இருக்கும் அக்னீஸ்வரரை ஆராதனே செய்தாலும் மனிதன் அக்னி லோகத்தையடைவான். ஹே திக் பால! நீ*

*மாதா, பிதா, மித்ரன், பந்து சொந்த ஜனங்களுடன் இந்த விமானத்திலேறிக் கொண்டு இப்பொழுதே செல்.*

*61. சிவன் இப்படிச் சொல்லிவிட்டு அவனுடைய பந்து பாந்தவர்களை அழைத்து வந்து மாதா பிதாவையும் க்ருஹபதியையும் திக்பாலர் பதத்தில் அபிஷேகம் செய்து வைத்து அதேலிங்கத்தில் மறைந்துவிட்டார்.*

*62. விஷ்ணு தூதர்கள் கூறினார்கள், ஹே சிவசர்மா! உனக்கு நாங்கள் அக்னியின் ஸ்வரூபத்தை வர்ணித்தோம் இன்னும் என்ன கேட்க விரும்பினாலும் நாங்கள் சொல்லத்தயாராக இருக்கிறோம்.*

*ஸ்ரீஸ்காந்த புராணத்தில் காசிகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான அக்னி உத்பத்தி வர்ணனம் என்ற 11வது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 12

*சிவசர்மா கூறினார்' ஹே விஷ்ணுவின் சரணதூளி படிந்த கேச பாசத்தையுடையவர்களே! இரு புருஷோத்தமர்களே! நிர்ருதி முதலிய லோகங்களைப் பற்றிய விருத்தாந்தங்களைக் கூறுங்கள்;-*

*1. விஷ்ணு பகவானுடைய இரண்டு பாரிஷதர்களும் கூறினார்கள்:- கேளும்! ஸம்யமநீ புரிக்குப் பிறகு புண்ணிய ஜனங்கள் வசிக்கும் திக்பாலனின் நைர்ருதி யெனும் பவித்ரமான நகரம் இருக்கிறது.*

*2. பரத்ரோகம் செய்யாத ராக்ஷஸர்கள் எப்பொழுதும் இங்கு வஸிக்கிறார்கள். இவர்கள் ஜாதியில் மாத்திரம்தான் ராக்ஷஸர்கள். ஆனால் ஸதாசாரத்தில் தார்மிக புருஷர்கள்.*

*3. எவர்கள் நீச ஜாதியில் பிறந்து ச்ருதிஸ்ம்ருதி காட்டிய வழியில் செல்லுகிறார்களோ தர்ம சாஸ்திரத்தில் கூறாத அன்ன பானாதிகளை வெறுக்கிறார்களோ,*

*4. அதம ஜாதியில் பிறந்தாலும் பிற த்ரவ்யத்தை அபஹரித்தல், பரத்ரோகம் இவைகளைச் செய்யாமல் தர்மத்தை அனுஸரித்து நடக்கிறார்களோ?*

*5. எந்த ஜனங்கள் பிராம்மண, க்ஷத்ரிய, வைச்யர்களின் ஸேவை மூலமாகக் கிடைத்த பணத்தைக் கொண்டு வாழ்வை நடத்துகிறார்களோ, இரு பிறவிக்காரர்களுடன் பேசும்போதும் ஸங்கோசத்தினால் அங்கத்தைக் குறுக்கிக் கொள்கிறார்களோ,*

*6. அவர்கள் அழைத்தபோது வாயை வஸ்த்ரத்தினால் மூடிக்கொண்டு, ஜெய, சிவ, பகவன், நாத, ஸ்வாமின் ஆதி சப்தங்களை உச்சரித்துக் கொண்டு பிராம்மணர்கள் ஆகிய மூன்று வர்ணத்தார்களிடமும் பேசுகிறார்களோ?*

*7. எவர்கள் தினமும் தீர்த்தங்களில் ஸ்நானமும் பூஜையும் செய்கிறார்களோ, தங்களுடைய பெயரைக் கூறிக்கொண்டு த்விஜர்களுக்கு வந்தனம் செய்கிறார்களோ, மேலும்,*

*8. தபம், தானம், தயை, க்ஷமை, சௌசம், இந்திரிய நிவாசம், இந்திரிய நிக்ரஹம், ஸத்யம், அஹிம்ஸை இவைகள் எல்லா ஜீவர்களுக்கும் தர்மத்துக் காரணமாக அமைகின்றன.*

*9. எவர்கள் அவசியமான கடமையென்றும் தர்மத்தில் எப்பொழுதும் முயற்சியுடையவர்களாக இருக்கிறார்களோ அவர்கள் நீச ஜாதியில் எங்கு ஜன்மம் எடுத்தாலும் அவர்கள் யாவரும் ஸம்பூர்ண போகங்களை அனுபவித்துக் கொண்டு இந்த உத்தம நகரத்தில் வஸிக்கிறார்கள்.*

*10. மிலேச்சர்களும் முக்தி தாயினி காசியை விட்டு விட்டு மற்ற ஏதாவது ஒரு உத்தம தீர்த்தத்தில் ஆத்ம ஹத்தி செய்து கொண்டு இறந்தாலும் அவர்களும் இங்கு பரிபூர்ண போகம் அனுபவிக்கிறார்கள்.*

*11. யார் தற்கொலை பண்ணிக் கொள்ளுகிறார்களோ அவர்கள் அந்த மஹா நரகத்தில் பிரவேசிக்கிறார்கள்; ஆயிரக்கணக்கான நரகத்தை அனுபவித்துவிட்டு பட்டிக்காட்டுப் பன்றியாகப் பிறப்பார்கள்.*

*12. அதனால் வித்வான்கள் ஒரு பொழுதும் தற்கொலை பண்ணிக் கொள்ளக்கூடாது. ஏனென்றால் ஆத்மஹத்தி பண்ணிக் கொள்கிறவர்களுக்கு இஹலோகத்திலும் பரலோகத்திலும் கூட நற்கதி கிடையாது.*

*13. சில சில தத்வ ஞானிகள் எல்லாத் தீர்த்தங்களுக்கும் ராஜாவும் எல்லாருடைய விருப்பங்களையும் பூர்த்தி செய்யும் தாதாவுமான ப்ரயாகையில் இச்சைப்படி மரணம் கிடைக்கும் என்று கூறுகிறார்கள்.*

*14. தயா தர்மத்தைப் பின்பற்றி வரும் பரோபகாரத்தில் தத்பரனாய் இருப்பவனுமான ம்லேச்சர்கள் கூட நல்ல கீர்த்தியுடன் இந்த உலகத்தில் வசிக்கிறார்கள்.*

*15. இப்பொழுது இந்த திக்பாலனுடைய விருத்தாந்தத்தைக் கூறுகிறோம். க்ஷணநேரம் கேளும்- பூர்வகாலத்தில் விந்த்யாசலத்தின் காட்டில் நிர்வித்யா என்னும் பெயருள்ள நதிக்கரையில் ஜனங்களுடைய முக்ய தளபதி மிகவும் பராக்ரமசாலியான பிங்காக்ஷன் என்று ஒருவன் கீர்த்தி வாய்ந்தவனாக இருந்தான். அவன் வீரனானாலும் கெட்ட காரியங்களில் வெறுப்புடையவனாக இருந்தான்.*

*16, 17. அவன் காட்டில் தூர இருந்தாலும் வழிப் போக்கர்களுக்கு இடையூறாக இருந்த புலி சிங்கம் முதலியவைகளை வேட்டையாடிக் கொன்று விடுவான்.*

*18, 19. அவன் தனது ஜீவிதத்தை வேடுவர்கள் தர்மப்படி நடத்தி வந்த போதிலும் அந்தக் கர்மத்திலும் தயையுடையவனாவே இருந்தான். விசுவாசத்தோடுகூடிய வளர்த்த மிருகங்கள், ஜலம் குடிக்கும் குட்டிமிருகங்கள், கர்ப்பமாக இருக்கும் பசு, பக்ஷி இவைகளை அந்நிய வேடர்களைப் போல் தயாதாக்ஷிண்யம் இல்லாமல் தர்மத்துக்கு விரோதமாகக் கொல்லமாட்டான்.*

*20. அந்த வேடன் களைப்புடன் வரும் வழிப்போர்களுக்கு களைப்பாற்றி உதவி செய்வான். பசியுடன் வந்தவர்களுக்கு உணவளிப்பான். பாதரக்ஷையில்லாமல் வந்தவர்களுக்கு பாதரக்ஷையளிப்பான்.*

*21. வஸ்த்ரம் இல்லாவிட்டால்அவைகளை அளிப்பான்; அவர்களுக்கு ம்ருதுவான மான்தோல் அளிப்பான். அங்குக் கடக்க முடியாத இடையூறுள்ள வழிகளைத் தானேக் கூடச் சென்று அவர்களைக் கடத்திவிடுவான்.*

*22. அவர்கள் பணம் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ளமாட்டான். அவர்களுக்கு அபயதானம் செய்து நீங்கள் விந்த்யாசலத்தில் எந்தப் பகுதியில் இருந்தாலும்*

*எனது பெயரைக் கூறினால் துஷ்டர்கள் தொந்திரவு செய்யமாட்டார்கள் என்பான்.*

*23. அவன் வழியில் வரும் கோஸாயிகளை புத்ரனைப்போல் பார்த்துக் கொள்வான். அவர்களும் ஒவ்வொரு தீர்த்தஸ்தானத்தை தரிசிக்கும்போதும் அவனை ஆசீர்வதிப்பார்கள்.*

*24. பிங்காக்ஷனுடைய இப்படிப்பட்ட நடத்தையினால் அந்தக் காடு நகரம் போலவே ஆயிற்று. பிங்காக்ஷனைப் பற்றின பயத்தால் துஷ்டர்கள் அந்நிய யாத்ரிகர்களை ஆக்ரமிக்கமாட்டார்கள்.*

*25. ஒருதரம் பிங்காக்ஷனுடைய சிறிய தந்தை நிறைய பணம் எடுத்துக் கொண்டு வரும் மரவுரி உடுத்தி வரும் தபஸ்விகளின் கோலாஹலமான சப்தத்தைக் கேட்டான்.*

*26. நீசனும், குரூபியான அவன், பணத்தின் பேராசையினால் அந்த ஸாதுக்களின் கூட்டத்தைக் கொல்லுவதற்கு யத்தனித்தான். அவன் ஸாதுக்களின் கூட்டத்திற்குச் சற்று முன்னால் சென்று அவர்களைக் கொல்லுவதற்கு முயற்சித்தான். அதற்காக மறைவாக இருந்து அவர்கள் செல்லும் மார்கத்தைத் தடுத்தான்.*

*27. அந்த யாத்ரிகளுக்கு ஆயுள் கொஞ்சம் பாக்கியிருந்தது. அதனால் பிங்காக்ஷன் அதே ராத்ரியில் அதே வனத்தில் அந்த மார்க்கமாகவே வந்து தங்கியிருந்தான்.*

*28. பிறருடைய பிராணனை அபஹரிக்கும் புருஷர்களுடைய மனோரதம் ஒருபோதும் நிறைவேறாது. ஏனென்றால் ஜகதீச்வரனால் பாதுகாக்கப்பட்ட இந்த இடம் அவருடைய க்ருபையினாலேயே பாதுகாப்பாக அமைந்திருக்கிறது.*

*29. அதனால் வித்வான்களே! ஒரு பொழுதும் மற்றவர்களுக்குத் தீங்கை நினைக்காதீர்கள், ஏனென்றால் படைத்தவன் ஒன்று யோசித்து ஸ்திரமாக வைத்திருப்பான். அதுவே நடக்கும்; பிறகுக்குத் தீங்கைச்*

செய்வதினால் நாம் பாபத்தைச் சேர்த்து வைத்துக் கொள்கிறோம்.

*30. அதனால் தனக்கு சுகத்தை விரும்பும் ஜனங்கள் தனக்கு இஷ்டம், அனிஷ்டம் என்பது பற்றி யோசிக்கக் கூடாது. ஆனால் மனது சிந்தனை தான் செய்யும் என்றிருந்தால் மோக்ஷத்திற்கு ஏது உபாயம்? என்று சிந்தியுங்கள்- வேறு ஒன்றும் யோசிக்காதீர்கள்.*

*31. இரவு கழிந்து பொழுது புலரும்போது பெரிதானதொரு சப்தம் ஏற்பட்டது, 'ஏ வீரர்களே! கீழே தள்ளுங்கள், கொல்லுங்கள், எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டு நக்ன(நிர்வாண)மாக்குங்கள், என்ற வேடுவர் குரலும்,*

*32. அடுத்தாற்போல் ''ஏ! வேடுவர்களே, நாங்கள் மரவுரி உடுத்தும் ஸாதுக்கள், எங்களை அடிக்காதீர்கள், கொல்லாதீர்கள், எங்களை ரக்ஷியுங்கள், பிரயாஸையில்லாமல் எங்களைக் கொள்ளையடிக்கலாம், எங்களிடம் என்ன இருக்கின்றதோ அதை நீங்கள் எடுத்துக் கொண்டு போகலாம்.*

*33. நாங்கள் விஸ்வநாதருடைய வேலைக்காரர்கள். விஸ்வநாதரே எங்களுக்கு நாதன்.*

*34. எங்களுடைய அத்ருஷ்டம் இந்த ஸமயம் அவரும் எங்களை விட்டு விலகி விட்டாரோ, ஐயோ! இந்தக் காட்டு வழியில் எங்களுக்குப் பிராண ரக்ஷையளிப்பதற்கு வேறு யார் இருக்கிறார்களோ?*

*35. நாங்கள் பிங்காக்ஷன் பேரில் நம்பிக்கை வைத்தே எப்பொழுதும் இவ்வழியாக வந்து போவது வழக்கம். ஆனால் அவனும் இவ்வனத்திலிருந்து எங்கு போய் விட்டானோ! என்று புலம்பினார்கள்.*

*36. அந்த க்ஷணமே அவ்வார்த்தைகளைக் கேட்ட பிங்காக்ஷன் தூரத்திலிருந்து வந்து கொண்டே 'நீங்கள் பயப்படாதீர்கள்!' என்று சொல்லி கொண்டே ஓடோடி*

*வந்து சேர்ந்தான். அந்த தபஸ்விகளின் ப்ரியனுன அவ் வேடன் அவர்களுடைய கர்ம ஸூத்ரத்தில் தன்னை பந்தப் படுத்திக் கொண்டு, மூர்த்திகரித்துவந்த அவர்களுடைய ஆயுளைப் போல க்ஷண நேரத்தில் அவர்கள் முன்னுல் வந்து நின்றுன்.*

*37. அடே யாரடா, எந்த துஷ்டனடா, இந்த பிங்காக்ஷன் உயிருடன் இருக்கும்போதே என்னுடைய பிராணனுக்கு ஸமமான இந்த வழிப் போக்கர்களுடைய தனத்தைக் கொள்ளையடித்து அவர்களை ஹிம்ஸை செய்யப் பார்க்கிறீகள்?*

*38. பிங்காக்ஷனுடைய சிறிய தந்தையாகிய அந்தபாபிஷ்டன் தாராக்ஷன் பிங்காக்ஷனுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு பிங்காக்ஷனையே பாப சிந்தனைக்கு உள்ளாக்கத் தொடங்கினுன்.*

*39. ''இந்தக் குலத்துரோகி தன்னுடைய குலதர்மத்தை விட்டுவிட்டு இருக்கிறுன். மிக நாட்களாக இவனைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தேன். இன்று அவனை நிச்சயமாகக் கொல்வேன்.*

*40. இந்தப் பிரகாரம் எண்ணி அந்த துஷ்டாத்மா கோபத்துடன் கூடத் தன்னுடைய ஏவலாட்களுக்கு ஆக்ஞையிட்டான். ''முதலாவது நீங்கள் இந்த பிங்காக்ஷனைக் கொல்லுங்கள். பிறகு அந்த மரவுரி உடுத்த ஸந்யாஸிகளைக் கொல்லலாம்.''*

*41. இந்த வார்த்தையைக் கேட்டுத் தாராக்ஷனுடைய வேலைக்காரர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து கொண்டு இந்த பிங்காக்ஷனுடன் யுத்தம் செய்யத் தொடங்கினுர்கள். அந்த பிங்காக்ஷனும் யுத்தம் செய்து கொண்டே ஒரு விதமாக அந்த ஸந்யாஸிப் பிரயாணிகளைத் தன் கிராமத்துக்கு ஸமீபமாகக் கொண்டு வந்து விட்டான்.*

*42. அநேகருடன் ஒருவன் எத்தனைக் காலம் தான் யுத்தம் செய்ய முடியும்? அதனுல் தனித்திருக்கும்*

வீரனுடைய தனுஸ், பாணம் கவசம் இவைகளை அந்த தாராக்ஷனுடைய ஆட்கள் அம்புக் கூட்டத்தினால் தகர்த்தெறிந்து விட்டார்கள். நான் மாத்திரம் ராஜாவாக இருந்தால் இவர்களை நிர்மூலமாக்கி விடுவேனே.

*43*. இவ்வாறு எண்ணிக் கொண்டு அந்த வேடன் ஸாதுக்களின் பணத்தைத் தன் பிராணனைக் கொடுத்துக் காப்பாற்றினான். அந்த மரவுரி ஸந்யாஸிகளும் பிங்காக்ஷனின் கிராமத்தையடைந்து நிர்பயமானார்கள்.

*44*. அந்திமக் காலத்தில் எப்படி புத்தியிருக்கிறதோ அதுபோல் அவர்களுக்குப் பரலோகத்தில் கதி கிடைக்கிறது. இந்தக் காரணத்தினால் அந்தப் பிங்காக்ஷனுக்கு நிர்ருதர்களுக்கு அரசனாக, தென்திசையிலுள்ள நிர்ருதிப் பட்டணத்தின் திக்பாலனாகப் பதவி கிடைத்தது.

*45*. நாங்கள் இருவரும் இந்த நிர்ருதேஸ்வரரின் வரலாற்றைச் சொன்னோம். இதற்கு வடக்கில் வருணனுடைய அற்புதமான லோகம் இருக்கிறது.

*46*. நியாய வழியில் ஸம்பாதித்த பணத்தினால் கிணறு தடாகம் இவற்றை நிர்மாணிப்பவர்கள் இந்த வருணலோகத்தில் வருணனுக்கு நிகரான அந்தஸ்து உடையவர்களாகி மரியாதையுடன் வாழ்கிறார்கள்.

*47*. எவர்கள் ஜலம் கிடைக்காத இடத்தில் ஜலதானம் செய்கிறார்களோ, மற்றவர்களுடைய ஸந்தாபத்தைப் போக்கடிக்கிறார்களோ, யாசகர்களுக்குக் குடைசெம்பு இவைகளை தானம் செய்கிறார்களோ,

*48*. போஜன ஸாமக்ரியைகளையும், சுவாஸிதமான ஜலத்தால் நிரம்பிய குடத்தையும் தானம் செய்கிறார்களோ, அவர்கள் இந்த லோகத்தையடைகிறார்கள்.

*49*. அரச மரத்திற்குத் தண்ணீர் விடுபவர்களும், சாலையில் மரங்கள் நடுபவர்களும் மார்க்கத்தில் வழிப்போக்கர்களுக்கு இளைப்பாற மடங்கள் கட்டிவைத்து,

*சிரமப்பட்டு வருபவர்களுடைய தாபத்தை நீர்குகிறவர்களும்,*

*50. வேனிற்காலத்தில் உஷ்ணத்தைப் போக்குவதற்கு மயில் இறகுகள் முதலியவைகளால் செய்த விசிறி, முதலானவற்றை தானம் செய்பவர்கள்,*

*51, 52. வேனிற் காலத்தில் நல்ல ரஸமான வாஸனேயுடன் கூடிய சீதளபானகம், மரியாதையுடன் த்ருப்திபடும் வரையில் தானம் செய்தல்; கரும்பு பயிரிட்டு வயல்களே ஸங்கல்பித்துப் பிராம்மணர்களுக்குத் தானம் செய்பவர்கள், பலவிதமான கரும்பிளுல் செய்த பண்டங்களேத் தானம் செய்பவர்கள்,*

*53. நெய், பால், தயிர் முதலிய கோ-ரஸத்தைத் தானம் செய்கிறவர்கள், பசு, எருமை, இவற்றை தானம் செய்கிறவர்கள், ஊற்று பெருகும் ஜலதாரைகளே ஏற்படுத்துபவர்கள், நிழல் தரும் மண்டபம் அமைத்தவர்கள்,*

*54. தேவாலயத்தில் தாராபிஷேகத்திற்கு (பகவானுக்கு) (தாராபாத்திரம்) ஜலதாரை ஏற்படுத்தியவர்கள், தீர்த்தஸ்தாநங்களில் வரியை விலக்கினவர்கள், தீர்த்தஸ்தானங்களே சுத்தப்படுத்தி வழி ஏற்படுத்தியவர்கள்,*

*55, 56. பயம் அடைந்தவர்களேக் கையைத் தூக்கி அபயம் அளித்தவர்கள்; அவர்கள்யாவரும் இந்த வருண லோகத்தில் நிர்பயமாய் வஸிக்கிருர்கள். கெட்ட புத்தியிளுல் தூக்குப் போட்டுக் கொண்டு சாகிறவர்களே - அவர்கள் தூக்கு போட்டுக் கொள்ளும் போது காப்பாற்றியவர்கள் - இந்த பாசபாணியாகிய வருணனுடைய லோகத்தில் வஸிக்கிருர்கள்.*

*57.ஓ பிராம்மணு! யாத்ரிகர்களுக்கு ஆற்றைக் கடக்க ஓடம் விடுகிறவர்கள், துக்கஸாகரத்திலிருந்து காப்பாற்றியவர்கள் இவர்கள் வருணபுரி ஜனங்களாக வஸிக்கிருர்கள்.*

*58. ஜலம், தீர்த்தம் இவைகளை ஏற்படுத்தியவர்களுடைய சிலைகளை நதி, குளம் இவைகளின் படிகளில் ஸ்தாபிப்பவர்களும் வருண லோகத்தையடைகிறார்கள்.*

*59. புண்ணியாத்மாக்கள் குளித்த ஜலத்தினால் தாஹத்துடன் வந்தவர்களுக்கு தாஹத்தைத் தணிக்கிறார்கள், அதனால் வருண லோகத்தில் அவர்கள் ஸுகமாக வஸிக்கிறார்கள்.*

*60. இந்த வருணன் ஜல ஜந்துக்களுக்கு ஸ்வாமி, பிரசேதா என்ற பெயர் பெற்றவர். நீர் நிலைகளுக்கு முக்யமான அதிபதி, எல்லாக் கர்மங்களுக்கும் ஸாக்ஷி மாத்ரம்.*

*61. நண்பரே! இந்த மஹாத்மாவான லோக பாலன் வருணனுடைய ஜன்மத்தைப் பற்றிக் கேளுங்கள். கர்த்தம ப்ரஜாபதிக்கு சுசிஷ்மா என்ற கியாதி பெற்ற ஒரு புத்ரன் இருந்தான். அவன் அபரிமிதமான புத்திசாலி, விநயமும், உறுதியும், இனிமையும் தீரத்தன்மையும், எப்பொழுதும் நல்லதையே விரும்பும் குணங்களுடன் கூடினவனாக இருந்தான்.*

*62,63. ஒரு சமயம் பாலகர்களுடைய அச்சோதனம் என்ற ஸரோவரத்தில் ஸ்நானம் செய்யச் சென்றான். ஜலக்ரீடை செய்து கொண்டிருந்த அந்த முநிகுமாரனை சும்சுமார் என்று ஜலஜந்து விழுங்கியது.*

*64. அந்த முனிபுத்ரன் அபஹரிக்கப்பட்டவுடன் எப்பொழுதும் அநிஷ்டமே பேசும் அவர்களுடைய தோழர்களான ரிஷிகுமார்கள் வந்து அவனுடைய பிதாவான கர்தமரிடம் விவரம் சொன்னார்கள்.*

*65. அந்த சமயம் சிவபூஜையில் அமர்ந்திருக்கும் அந்த ரிஷி நிச்சலமாசன மனதுடன ஸமாதியில் இருந்தார். குழந்தையின் ஆபத்தைக் கேட்ட பிற்பாடுகூட மனதைச் சிவனிடமிருந்து திருப்பவில்லை.*

*66. இந்த ஸமாசாரத்தைத் கேட்டு ஸர்வஞரும், த்ரிலோசனருமாகிய பகவானிடத்தில் மேலும் மனத்திடம் செய்து கொண்டு தியானம் செய்யத் தொடங்கினர்.*

*67. அவர் சிவனுடைய சமீபத்தில் சென்றுவிட்டார். அங்கு பதினன்கு உலகங்களும், அநேக கோடிப்ரம்மாண்டங்களும், அவைகளுக்குள் நாலுவிதமான பிராணி ஸமூஹங்களும், சந்திரன், சூரியன், கிரஹங்கள் நக்ஷத்ரங்கள் பர்வதங்கள், நதிகள், விருக்ஷங்கள்,*

*68. சமுத்ரங்கள், தீவுகள், காடுகள், ஸரோவரங்கள், அநேக தேவபுரிகள் கிணறுகள், குளங்கள்,*

*69. தடாகங்கள், சிறுசிறு செயற்கைக் கால்வாய்கள் புஷ்கரிணிகள் முதலியவைகளைப் பார்த்தார். அவைகளுக்கு மத்தியில் ஒரு ஸரோவரத்தின் மத்தியில் முனி குமாரர்களைப் பார்த்தார்.*

*70. குழந்தைகள் முழுகுவதும், எழுவதும் ஒருவர் மீது ஒருவர் மற்றவர் கையிலுள்ள பீச்சாங்குழலினல் ஜலத்தைப்பீச்சிக்களிப்பதும்,*

*71. ஜலத்தைக் கையால் அறைந்து, அறைந்து திக்குகளில் எதிரொலிக்கும் சப்தத்தைச் செய்வதும் கண்டார்.*

*72, 73. அந்த ஸமாதியில் இருக்கும் ப்ரஜாபதி அந்த பாலகர்களுக்கு மத்தியில் தன்னுடைய புத்திரனை இழுத்துக் கொண்டுபோகும் சும்சுமாரத்தைக் கண்டார். அந்த சும்சுமாரத்துக்குப் பின்னல் ஒரு ஜலதேவி அந்தக் கொடூரமான ஜலஜந்துவிடமிருந்து பிள்ளையைப் பிடித்து இழுத்துக் கடலில் சேர்த்து வந்ததையும் கண்டார். அதற்குப் பிறகு.*

*74. ஒரு த்ரிசூலத்தைத் தாங்கித் கொண்டிருக்கும் ருத்ர ரூபியாக ஒருவர் ரோஷத்தினல் சிவந்த கண்களை யுடையவராய் ஸமுத்ரராஜனை அதட்டிக் கொண்டு கூறினர்-*

*75. ஏ ஜலாதிபனே! மஹாபாஹோ! புத்திமானே! சிவபக்தனுன கர்த்தமப்ரஜாபதியுடைய புத்திரனை இத்தனை நேரம் வரையில் ஏன் வைத்துக் கொண்டிருக்கிருய்? உனக்கு சிவனுடைய ஸாமர்த்யம் தெரியாதா? என்ருல் அவருடைய வார்த்தையைக் கேட்டு பயத்தினுல் நடுங்கும் ஸமுத்ரராஜன்*

*76,77. அந்த பாலகனை ரத்னுபரணங்களினுல் அலங்கரித்து அந்த சும்சுமாரத்தையும் கட்டி மஹாதேவருடைய சரணகமலங்களில் ஸமர்ப்பித்தான்,*

*78. பிறகு நமஸ்கரித்துக் கூறினுன், ஏ! விபோ! அனுதிகளுக்கு நாதரே! விஸ்வநாதா! தாங்கள் பக்தர்களின் விபத்துக்களைப் போக்கடிப்பவர். இந்த விஷயமாக என் குற்றமொன்றுமில்லை.*

*79. பக்தர்களின் கல்ப விருக்ஷமே! சம்போ! இந்த ஜலஜந்து பிள்ளையை இழுத்துக் கொண்டு போயிற்று. நாதா! சிவபக்தர்களுடைய குழந்தைகளை என்னிடம் மூழ்கவிட மாட்டேன் என்ருர்.*

*80. அந்த ருத்ரர் மஹேசருடைய மனுேபாவத்தையறிந்து ஜலஜந்துவைப் பாசத்தால், கட்டி அந்தப்பிள்ளையின் கையில் கொடுத்தார்.*

*81. ஏ குழந்தாய்? நீ உன் வீட்டிற்குப் போ! முனிவரே! நீர் உமது பிள்ளையை ஏற்றுகொள்ளும். இவ்வாறு மஹாதேவருடைய ஆக்ஞையால் அத்த ருத்ரர் சொல்லவே உதாரகுணமுடைய கர்தமரிஷி-*

*82. சமாதி காலத்தில் நிகழ்ந்ததையும், கண்டதையும் கேட்டதையும் அறிந்து*

*83. கண்களைத் திறந்து பார்க்கவே பிள்ளை நிற்பதையும் சும்சுமாரத்தை பிடித்துக்கொண்டிருப்பதையும் பார்த்தார். அவனுடைய இருகாதுகளும் ஆபரணங்களினுல் நிறைந்து இருந்தன.*

*84. அவனுடைய குடுமியின் முன்புறம் ஜலத்தால் நனேந்திருந்தது. கண்கள் ஓரங்களில் சிவந்திருந்தன. சரீரம் உலர்ந்திருந்தது. தோல் சுருங்கியிருந்தது. சித்தம் திகிலடைந்திருந்தது.*

*85. அவரை நமஸ்காரம் செய்து வணங்கினன். ரிஷி பாலகனே உச்சி முகர்ந்து, பிறகு அடிக்கடி பார்த்துக் கொண்டு பிள்ளேப் புனர்ஜன்மம் எடுத்ததாக எண்ணினர்.*

*86. சிவபகவானுடையப் பூஜையைச் செய்து, செய்து ஸமாதியில் ஆழ்ந்த அந்த கர்த்தம ப்ரஜாபதிக்கு ஐநூறு வருஷங்கள் ஓடி விட்டன.*

*87. ஆனல் அவருக்கு ஒரு க்ஷணமே கழிந்தது போலத் தோன்றிற்று. ஏனென்ருல் மஹாகாலருடைய காலத்துக்கு முன்னல் ம்ருத்யு லோகத்தில் அற்பகாலம் என்ன எண்ணிக்கை.*

*88. இதற்குப் பிறகு புத்ரஞன சுசுஷ்மான் பிதாவை வணங்கி அவருடைய அனுமதியைப் பெற்றுக் கொண்டு காசீபுரியை அடைந்தான்.*

*89. அங்கு ஒரு சிவலிங்கத்தை ஸ்தாபித்து ஐயாயிரம் வருஷங்கள் வரைக்கும் கல்லேப்போல் நிச்சலமாக நின்று கொண்டு தபஸ் செய்தான்,*

*90. அதன்பிறகு தபஸ்ஸினுல் ஸந்தோஷமடைந்த மஹாதேவன் அவன் முன்னல் ப்ரஸன்னமானர். கர்தம நந்தன! உனக்கிஷ்டமான வரத்தைக்கேள் என்ருர்.*

*91. பாலகன் கூறினன். பக்தர்களிடம் கருணேக் காட்டும் நாதரே! தாங்கள் என்மீது ஸந்தோஷமடைவீர்களானல் எனக்கு எல்லா நீர் நிலைகளுக்கும், நீரில் வாழும் ஜந்துகளுக்கும் தலேவனுக இருக்கும் வரத்தையளியுங்கள்.*

*92. எல்லாருடைய மனேரதங்களேயும் பூர்த்தி செய்யும் பரமேஸ்வரர் அவனுடைய வார்த்தையைக்*

கேட்டு அவனே மிகவும் மேலான வருண பதவியில் அமர்த்திஞர்.

*93.* மேலும் கூறிஞர்: கடலில் உண்டாகும் ஸகல ரத்னங்களும், ஸாகரங்களும், நதிகளும், குளங்களும், குட்டைகளும், கிணறுகளும், ஜல ஊற்றுக்களுமான எல்லா நீர் நிலேகளுக்கும், மேற்கு திசைக்கும் அதிபனுவாய்.

*94.* நீ ஸமஸ்த தேவதைகளுக்கும் பிரியமுள்ளவனுக இருப்பாய். பாசமே உன் கைக்கு அஸ்த்ரமாக இருக்கும்.

*95.* மேலும் எல்லோருக்கும் ஹிதத்தைச் செய்யும் மற்ளுெரு வரத்தையும் அளிப்பேன். உன்னுலேயே ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கம் உன் பேரை அனுசரித்துக் காசியில் வருணேஸ்வரர் என்ற பெயருடன் பிரஸித்தமாய் விளங்கும்.

*96.* மிகவும் ஸித்திகளே வழங்கும் தென்மேற்குத் திக்கில் அதாவது மணிகர்ணிகேஸ்வரரின் தென்மேற்கு பக்கத்திலிருக்கும்

*97.* இந்த லிங்கத்தை நிரந்தரமாக ஆராதனே செய்வதால் புருஷர்கள் முதலியவர்களுக்கு ஜடத்தன்மை முதலியவை விலகும். இப்படி நினேத்து எவர்கள் வருணேச்வருடைய பக்தர்களாவார்களோ, அவர்களுக்கு ஜலத்திஞல் ஒரு போதும் தீங்கு ஏற்படாது.

*98.* ஒரு பொழுதும் ஸந்தாபத்திஞல் கஷ்டபடமாட்டார்கள். மார்க்கத்தில் மரணமேற்படாது. ஜலோதாரோகம் (மஹோதரம்) ஏற்படாது;

*99.* தாகத்திஞல் தாபமடையமாட்டார்கள். அன்னபானுதிகள் வருணேஸ்வரரை ஸ்மரித்த மாத்திரத்திலேயே ருசிகரமாகி விடும்.

*100.* ஓ பிராம்மணரே! சம்பு இந்த விதமாக வரங்களேக் கொடுத்துவிட்டு அந்தர்தானமாகி விட்டார். அதன் பிறகு கர்தமரின் புதல்வனுன சுசுஷ்மான் வருணஞக ஆஞர்.

*தனது பந்து பாந்தவர்களுடன் இந்த லோகத்தை சோபையாக்கிக் கொண்டு இங்கேயே நிரந்தரமாக வஸிக்கிறார். இந்த வருண லோகத்தைப் பற்றி நாங்கள் உமக்கு வர்ணித்தோம். இதைக் கேட்ட ஒருவரும் அகாலமரணத்திற்குட்படமாட்டார்கள்.*

*இது ஸ்கந்த புராணத்தில் நாலாவதான காசீகண்டத்தில் நிர்ருத வர்ணனமான பன்னிரெண்டாம் அத்யாயம்*

*ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 13

*விஷ்ணுவின் இரண்டு பாரிஷர்தகளும் கூறினார்கள்: ஓ! மஹா பாக்ய நிதியான ப்ராம்மணரே! வருண லோகத்துக்கு வடக்குப் பக்கத்தில் (வாயுவின்) கந்தவதி என்னும் பெயருள்ள நகரத்தைப் பாருங்கள்:-*

*1. இந்த ஊரில் ப்ரபஞ்சன் என்னும் பெயரையுடைய திக்குகளுக்கெல்லாம் ஈசஞன வாயு இருக்கிறார். அவரும் மஹா தேவரை ஆராதித்து திக்பால பதவியைப் பெற்றிருக்கிறார்.*

*2. பூர்வகாலத்தில் கச்யப முனிவரின் புத்ரஞன பூதாத்மா என்று ஒருவர் இருந்தார். அந்த மஹாபாக்யசாலி சிவனுடைய ராஜதானியான வாராணஸி புரியில் மிகவும் பவித்ரமான புவனேஸ்வரர் என்னும் லிங்கத்தை ஸ்தாபித்தார். அதன் முன்னால் பத்துலக்ஷம் வருஷங்கள் வரைக்கும் மகத்தான தவம் புரிந்தார்.*

*3, 4. அந்த சிவலிங்கத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே பூதாத்மா பவித்ரவான் அவன் பாபமாகிய சட்டையைக் கழற்றி எறிந்துவிட்டு அந்த புவனபுரியில் வசிக்கப் பெறுகிறான்.*

*5. பிறகு அளவில்லாத தவத்தின் பலனைக் கொடுக்கக்கூடிய மஹேஸ்வரர் (சிவன்)*

*6. பூதாத்மாவின் உக்ரமான தபோபலத்தினால் அந்த சிவலிங்கத்தில் ஜ்யோதி ரூபமாகத் காக்ஷி கொடுத்தார். தயாம்ருத ஸாகரரான சிவன் ஸந்தோஷ சித்தராய் கூறினார். ஹே பூதாத்மா! 'எழுந்திரு! எழுந்திரு' மஹா வ்ருதனே! வரத்திற்குப் பிராத்தனை செய்.*

*7. ஹே பூதாத்மா! அந்த உக்ரமான தபஸ்ஸினாலும் லிங்கத்தின் ஆராதனையினாலும் சராசரங்களுடன் கூடிய மூன்று லோகத்திலும் உனக்குக் கொடுக்கக் கூடாத வஸ்து ஒன்றுமில்லை.*

*8. பூதாத்மா கூறினர்: ஹே! தேவதைகளுக்கு அபயம் அளிப்பவரே, தேவ தேவா! மஹா தேவா! தாங்களே ப்ரம்மா, விஷ்ணு, இந்த்ராதி ஸமஸ்த தேவதைகளுக்கும் பதவி அளிப்பவர். தேவதேவா!*

*9. ப்ரபோ! வேதாந்திகள் நேதி நேதி (ந+இதி) என்று சொல்லிக் கொண்டு தங்களுடைய ஸ்வரூபத்தைப் பிரார்த்தித்துக் கொண்டுபரமபதத்தையடைகிருர்கள் ஆனுலும் தாங்கள் யார் என்று அறியவில்லை.*

*10. ப்ரபோ! தாங்கள் ப்ரம்மா, விஷ்ணு, வாக்பதிக்கும் எட்டாதவர். அப்பேர்ப்பட்ட ஆதிநாதரான உங்களுடைய ஸ்துதியைச் செய்வதில் என்னைப்போல் ஸாமான்ய ஜீவன் எப்படி ஸமர்த்தன் ஆகமுடியும்?*

*11. ஏ! ஈசா! பக்தியே என்னைப்பலவந்தமாக ஸ்துதி செய்ய ஏவுகிறது. ஜகந்நாதா! என் செய்வேன்? என்னுடைய இந்திரியங்கள் என் வசத்தில் இல்லை.*

*12. விச்வத்துக்கும் தங்களுக்கும் துளிக்கூட பேதமில்லை. ஏனென்ருல் தாங்கள் எங்கும் நிறைந்தவர், ஆனுல் ஒருவர். துதிக்கத் தகுந்தவர், துதி செய்பவர், ஸ்தோத்ரம், மூன்றும் தாங்களே. ஸகுணம், நிர்குணம் இரண்டும் நீங்களே.*

*13. ஸ்ருஷ்டிக்கு முன்னுலும் நாம ரூபமற்றுத் தாங்களே இருந்தீர்கள்; யோகிகளும் உண்மையில் யதார்த்த ரூபமாகத் தங்கள் தத்வத்தை அறியவில்லை.*

*14. ஏ! தனியாக விகாரிப்பவரே! நீர் தனியாக லீலை புரிய முடியாதபோது தங்களுடைய இச்சையே ஒரு பெண் ரூபமாக உற்பத்தியாயிற்று. அவளே தங்களை ஸேவிக்கத் தகுந்த பராசக்தியாவள்.*

*15. தாங்கள் ஒருவரே, ஆனுல் சிவசக்தியென்ற பேதத்தினுல் இரண்டாக ஆனீர்கள். தாங்களே ஞானரூபமான பகவான். தங்களுடைய இச்சையே சக்திஸ்ரூபிணி. சிவசக்தி ஸ்வரூபமாக*

*16. தாங்கள் இரண்டு பேருமே தங்களுடைய லீலையினுல்! க்ரியா சக்தியைப் பிறப்பித்தீர்கள். அவளாலே ஸமஸ்த ஜகத்தும் ஏற்பட்டது.*

*17. ஏ ஈசா; தாங்களே ஞானசக்தி, உமையே இச்சாசக்தி. தங்களால் படைக்கப்பட்ட விஸ்வமே க்ரியாசக்தி அதனுல் தாங்களே இந்த ஸமஸ்த ஜகத்துக்கும் காரணமாகிறீர்கள்.*

*18. தங்களுடைய வலது பக்கள் ப்ரம்மாவும், இடது பக்கம் விஷ்ணுவும் இருக்கின்றவர். சூரியன், சந்த்ரன், அக்னி இம்மூன்றும் தங்களுடைய நேத்ரங்கள். தங்களுடைய நிச்வாசமே நான்கு வேதங்களும்;*

*19. தங்களுடைய வியர்வையே இந்த ஸமுத்ரம்; வாயு தங்களுடைய காது; பத்து திக்குகளும் தங்களுடைய புஜங்கள்; ப்ராம்மணர்கள் தங்களுடைய முகத்திலிருந்து வந்தவர்கள்.*

*20. தங்களுடைய இரு புஜங்களிலிருந்து க்ஷத்ரியர்கள் தோன்றினுர்கள். துடைபாகத்திலிருந்து வைச்யர்கள் தோன்றினுர்கள். தங்களுடைய இரண்டு சரணங்களிலிருந்தும் சூத்ரர்கள் வந்தனர். மேகக் கூட்டம் கலாபம்.*

*21. பூர்வ காலத்தில் தாங்களே ப்ருக்ருதி புருஷ ரூபமாக ப்ரம்மாண்டத்தையும், அதற்குள் அடங்கியிருக்கும் சராசர உலகத்தையும் ஸ்ருஷ்டித்தீர்கள்.*

*22. ஏ! ஜகன்மயா! அதனுல் தங்களிடமிருந்து வேருக ஒன்றுமில்லே. தாங்களே இறந்த காலம், நிகழ்காலம் ஸர்வ பூதங்களும் தாங்களே. இப்படி நான் எண்ணுகிறேன்*

*23. தங்களுக்கு வணக்கம், வணக்கம், வணக்கம்; அடிக்கடி வணங்குகிறேன் - திரும்பவும் திரும்பவும் தங்களே வணங்குகிறேன். தங்களிடம் என் புத்தி நிலேத்திருக்கும் படியான வரத்தைக் கொடுங்கள்.*

*24. பூதாத்மா இவ்விதம் கூறியவுடன் தேவேச்வரனுன ப்ரபு அவரைத் தன்னுடைய அஷ்டமூர்த்திகளில் ஒருவராய் திக்பால பதவியில் அமர்த்தி அருளினுர்.*

*25. என்னுடைய உருவுடன் எங்கும் ஸஞ்சரிப்பாய். எல்லாத் தத்வங்களேயும் அறிந்து கொள்வாய். எல்லாருடைய ஆயுள் ரூபமாகவும் ஆவாய்.*

*26. மனிதர்கள் உன்னுல் ப்ரதிஷ்டக்கப்பட்ட திவ்ய லிங்கத்தைத் தரிசனம் செய்வார்களேயானுல் இந்த லோகத்தில் ஸமஸ்த போகங்களேயும் பரிபூர்ணமா அனுபவித்து உன்னுடைய ஸுகத்தில் பங்கு கொள்வார்கள்.*

*27. மனிதன் ஜன்மாவில் ஒரு தடவையாவது இந்த பவமானேஸ்வரலிங்கத்துக்கு வாஸனே கலந்த ஜலத்தால் அபிஷேகம் செய்து ஸுகந்த சந்தன புஷ்பாதிகளினுல் விதிப்ரகாரம் பூஜை செய்தால் என் லோகத்தில் வெகுமானத்துடன் வஸிக்கிருன். ஜ்யேஷ்டேஸ்வரருக்கு மேற்கு பாகத்தில் வாயுகுண்டத்திலிருந்து வடக்கில்.*

*28, 29. பவமான லிங்கேஸ்வரரை ஆராதனே செய்பவன் இந்த லோகத்தில் அந்த க்ஷணமே பவித்ரவானுகிருன். மஹா தேவர் இந்த எல்லாவரங்களேயும் அளித்து அதே லிங்கத்தில் மறைந்தார்.*

*30. இரண்டு விஷ்ணு கணங்களும் கூறினுர்கள், கந்தவதி புரியைப் பற்றி இதுவரைக்கும் கூறினேும். இதற்குக்கிழக்கு திசையில் குபேரனுடைய சோபை பொருந்திய அளகாபுரி இருக்கிறது.*

*31. இந்த நகரின் நாதனுன குபேரன் தன்னுடைய பக்தியின் பிரபாவத்தினுல் மஹாதேவனேடு தோழமை பூண்டான். சிவனே ஆராதித்து பிறகுதான் பத்மம் முதலிய நிதிகளுக்கு தாதா வாகவும் போக்தாவாகவும் ஆனுன்.*

*32. சிவசர்மா கேட்டார்- இந்த பாக்யவான் யாருடைய பிள்ளை? ஸதாசிவனிடம் இவனுக்கு எத்தனை பக்தி? தேவ தேவ ஸகாவான தூர்ஜடியாக எப்படியானுன்?*

*33. தங்களுடைய வசனும்ருத்தை அருந்தும் த்ருப்தியினுல் ஸ்திரத்தன்மையடைந்த என் மனது இவருடைய கதையைக் கேட்கும் ஆவலினுல் காதுத்வாரங்களில் புகுந்து காத்துக் கொண்டிருக்கிறது என்ருர்.*

*34. ஏ மஹா ப்ராக்ஞா! சுத்தாத்மாவே! பவித்ர தீர்த்தங்களில்ஸ்நானம் செய்து அநேக ஜன்மங்களால் சேர்த்து வைத்துக் கொண்டிருந்த பாபங்களைப் போக்கடித்துக் கொண்ட சிவசர்மாவே,*

*35. நீர் எங்களுக்கு நேசமுள்ள தோழராவீர். நல்லது உங்களுக்குச் சொல்லகூடாதது ஒன்று உண்டோ, விசேஷமாக ஸஜ்ஜனங்களுடன் கூட ஸம்பாஷிப்பதால் ஸகலவிதமான மங்கள ஸித்தியும் ஏற்படுகிறது.*

*36, 37. காம்பில்ய நகரத்தில் யக்ஞவித்யை விசாரதனுன ஸோமயாஜியின் குலத்தில் பிறந்த யக்ஞதத்தன் என்ற தீக்ஷிதர் ஒருவர் இருந்தார். அவர் வேதத்தின் ஆறு அங்கங்களையும் கற்றுணர்ந்தவர். வேதத்தில் கூறின ஆசாரங்களையனுஷ்டிப்பதில் நிபுணர். ராஜ ஸபையில் மதிக்கத் தகுந்தவர். பெருந்தனவான். உதார குணசீலர்; தாதா என்ற கீர்த்திகளைப் பெற்றிருந்தார்.*

*38. அவர் எப்பொழுதும் அக்னியை ஆச்ரயிப்பதில் ஈடுபட்டு வேதாத்யயனத்தில தத்பரனுய் இருந்தார்.அவருக்கு சந்திரபிம்பம் போன்ற குணவானுய் ஒரு புத்ரன் இருந்தான்.*

*39. அவன் யக்ஞோபவீதம் ஆனவுடன் அநேக வித்தைகளை அப்யஸிக்கத் தொடங்கினுன். ஆனுல் சில நாட்கள் சென்ற பிறகு பிதாவிற்குத் தெரியாமல் திருட்டுத்தனமாகச் சூதாடுவதில் ஈடுபட்டான்.*

*40. அவன் மாதாவிடமிருந்து பணம் வாங்கி வாங்கி சூதாடிகளுக்குக் கொடுத்து வந்தான். அவர்களுடன் நெருங்கின தோழமை பூண்டு வந்தான்.*

*41,42. மெல்ல மெல்ல அவன் ப்ராம்மண ஆசாரங்களை விடத் தொடங்கினான். வேதம், சாஸ்திரம் தேவதைகள், ப்ராம்மணர்கள் இவைகளையெல்லாம் நிந்திக்கத் தொடங்கினான். தர்மாசாரங்களோ அவனிடம் இருக்கவேயில்லை. எப்போதும் வாத்யம் வாசிப்பது, பாடுவது முதலிய கேளிக்கைகளில் ஈடுபட்டிருந்தான். நடர்கள், பாஷண்டிகள் இவர்களிடம் இவனுக்கு நேசம் அதிகமாயிற்று.*

*43. அன்னையனுப்பினால் கூட அவன் பிதாவை ஸந்திப்பதில்லை. வீட்டில் அந்நிய காரியங்களில் ஈடுபட்டிருக்கும் தீக்ஷிதாயினி ஸ்திரீயிடம் ஒரு நாள் அவள் கணவர் கேட்டார்-*

*44. எப்போது பார்த்தாலும் புத்ரன் குணநிதியை வீட்டில் பார்க்க முடியவில்லையே, ஏன்? அவன் எங்கு போகிறான்? என்ன செய்கிறான்? என்று அடிக்கடி கேட்பார். அவள் ஸ்நானம் செய்யப் போயிருப்பான் என்பாள்;*

*45. இவ்வளவு நேரம் தேவதைகளுக்குப் பூஜை செய்தான், என்பாள். வேதாத்யயனம் செய்வதற்காக இரண்டு மூன்று ஸ்நேகிதர்களுடன் அடுத்த ஊருக்குப் போயிருக்கிறான் என்றும் சொல்வாள்; ஒரே புதல்வனாக இருந்தபடியால் எப்போதும் அவனைப் புகழ்ச்சி யாகவே தன் கணவனிடம் சொல்வாள்.*

*46,47. தீக்ஷிதர் புத்ரனுடைய காரியங்களைப் பற்றியோ நடத்தையைப் பற்றியோ அறியவேயில்லை. அவனுடைய பதினாறுவது வயதில் அவனுக்கு முடி எடுக்கும் வைபவத்தைச் செய்து க்ருஹத்திற்கு உசிதமான வழியுடன் அவனுக்கு விவாஹத்தைச் செய்தார்.*

*48. அன்பினுல் இளகிய மனமுடைய அவன் அன்னே தினமும் புத்ரனே மென் சொல்லால் அறிவுறுத்துவாள். 'அப்பா உன் தந்தை மிகவும் கோபக்காரர்,*

*49. அவர் உன் நடத்தையைப்பற்றி அறிந்தால் என்மீது மிகவும் கோபம் கொள்வார்.*

*50. நான் தினமும் உன் வெறுக்கத்தக்கதாயுள்ள நடவடிக்கைகளேப்பற்றி அவரிடம் மறைத்தே வைத்திருக்கிறேன். உன் பிதா தன்னுடைய நன்னடத்தையின் காரணமாகவே உலகத்தாரால் வெகுமானிக்கப்பட்டவர்; பணத்திஞல் அல்ல.*

*51. அப்பா, உத்தம வித்தையும், ஸாது ஜனங்களின் சேர்க்கையுமே ப்ராம்மணர்களுக்குத் தனம். உன்னுடைய பிதாமஹன் முதலிய முன்னேர்கள் வ்யாக்யானங்களோடும் அங்கங்களோடும் வேதத்தை அத்யயனம் பண்ணினவர்கள். ஸத்ச்ரோத்தியர்கள். ஸாமயாகங்கள் பண்ணி ஸோமயாஜி தீக்ஷிதர் என்று பேர் ப்ரஸித்தி பெற்றவர்கள். நீ துஷ்டர்களின் ஸங்கத்தை விட்டு ஸாது ஸங்கத்தில் ஈடுபடு.*

*52,53. உத்தமமான வித்தையில் மனதை லயப்படுத்து, ப்ராம்மணர்களுக்குள்ள ஆசாரங்களேக் கைக்கொள், புத்திரனே! உனக்குப் பத்தொன்பது வயது பூர்த்தியாகிறது. மதுரபாஷிணீ, அதி ஸாத்வீயான உனது மனேவிக்கு வயது பதினுறு. ரூபம், வயது, குலம், குணம், ஸ்பாவம் எல்லாவற்றிலும் அவள் ஏற்றவள்தான்.*

*54,55. இந்தப் பண்பாடு உள்ள இவளிடம் நீ ஸுகமாக இரு. பிதாவிடம் பக்தியாக இரு. உன்னுடைய மாமனுரும் தன்னுடைய பணத்திஞலும், ஸ்பாவத்திஞலும் எல்லோராலும் மதிக்கப்பட்டவர்.*

*56. அவரையும் நீ வெட்கமடையச் செய்கிருய். குழந்தாய்! இப்பொழுதாவது நீ கெட்ட நடத்தையை விட்டுவிடு. பிள்ளாய்! உன்னுடைய அம்மாவின் குலமும்,*

*வித்தையும், சீலமும், ஸ்பாவம் இவற்றில் தன்னிகர் இல்லாதது.*

*57. அவர்களுக்காகவாவது நீ பயப்பட வேண்டாமா? நீ இரண்டு வம்சத்தாலும் சுத்தமாக இருக்க வேண்டியவன். பின் ஏன் இப்படியிருக்கிறுய்? வீட்டுக்கு வீடு இருக்கும் ப்ராம்மணச் சிறுவர்களைப்பார்.*

*58. அவ்வளவு தூரம் போவானேன்? உன்னுடைய பிதாவிடம் பாடம் சொல்லிக் கொள்ளும் விநயமுள்ள பிள்ளைகளைப்பார். ராஜாவும் உன்னுடைய இந்தக் கெட்ட நடவடிக்கைகளைக் கேழ்ப்பாரானுல் உன் அப்பாவிடம் அவருக்குள்ள மதிப்பு குறைந்து போகும்.*

*59. பிறகு அவர் உன் அப்பாவிற்கு அளிக்கும் மான்யத்தை நிறுத்திவிடுவார். இதுவரை எல்லாரும் சிறுபிள்ளைத்தனம் என்று உன்னைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கிருர்கள்.*

*60. ஆனுல் இனிமேல் சிரிப்பார்கள், கேலி செய்வார்கள். தீக்ஷிதர் குடும்பம் நன்ருகத் தான் இருக்கிறது என்று உன்னைக் குத்திக் காட்டுவார்கள். என்னையும் உன் அப்பாவையும், இதற்கெல்லாம் மூலகாரணம் நீங்களே என்று குற்றம் சாட்டுவார்கள்.*

*61. புத்ரன் அம்மாவின் நடத்தையைத்தான் பின்பற்றுவான், அவனுடைய அப்பா ஸ்ருதி, ஸ்ம்ருதிகளையும் பின்பற்றுவராயிருந்தாலும் கூட அவர் பாபிஷ்டர் என்று திரஸ்கரிப்பார்கள்.*

*62. உன்னுடைய பிதாவின் சரணங்களே கதி என்று நானிருக்கிறேன். இதற்கு மகேசுவரனே ஸாக்ஷி. நான் ருதுஸ்நானம் பண்ணின அன்றுகூட துஷ்டர்களின் முகத்தில் விழித்ததில்லையே. என்னுடைய விதி வலிது.*

*63, 64, 65. உன்னைப்போல் குலத்ரோஹியைப் பெற்றேன். மாதா நிமிஷத்திற்கு நிமிஷம் இப்படி புத்தி கற்பித்தும்கூட அந்த துர்புத்தியும் நீசனுமான குணநிதி*

*தன்னுடைய அஸத்கர்மத்தை ஒரு ஒருபொழுதும் விடவில்லை. துர்நடத்தையில் பழக்கம் ஏற்பட்டு விட்டால் பின் யார் சொன்னாலும் கேட்கமாட்டார்கள். வேட்டையாடுதல், குடித்தல், கோள் சொல்லுதல், வேசியாகமனம், திருட்டு, சூது, பரஸ்த்ரீகமனம் இந்தக் கெட்ட நடத்தைகளினால், உலகில் யார்தான் அழிந்து போகாமல் இருந்தார்கள்? அந்தத் துஷ்டன் வீட்டில் பாத்ரம் பண்டம் இவைகள் கண்டால் போதும் அவைகளை எடுத்துப் போய் சூதாடிகளிடம் கொடுத்து விடுவான்.*

*66. ஒரு ஸமயம் தகப்பனாருடைய நவரத்ன மோதிரத்தைத் தூங்கும் அன்னையின் கையிலிருந்து கழற்றிக் கொண்டுபோய்க் கொடுத்து விட்டான். அதன்பின் ஒருநாள் தீக்ஷிதர் ராஜபவனிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார்.*

*67,68. அப்பொழுது, தற்செயலாகச் சூதாடி ஒருவன் கையில் மோதிரத்தைப் பார்த்து அடையாளம் கண்டு கொண்டார். அவனிடம் அப்பனே இந்த மோதிரம் உனக்கு எங்கிருந்து கிடைத்தது என்று கேட்டார். மிகவும் நயத்துடன் அடிக்கடி கேட்டதும் அந்தச் சூதாடி கூறினான்-*

*69. ஏ! ப்ராம்மணா! என்னிடம் நீ ஸந்தேஹப்படுகிறாயா? நான் இந்த மோதிரத்தைத் திருடினேன் என்கிறாயா? அட உமது பிள்ளை தானய்யா என்னிடம் கொடுத்தான் என்று கூறினான்.*

*70. நேற்றுதான் உமது பிள்ளை என் தாயாரிடமிருந்து நான் கொண்டு வந்திருந்த சேலைகளை ஜயித்துக் கொண்டு போனான், அவன் எனக்கு மாத்திரம்தான் மோதிரத்தை தந்தான் என்று நினைக்காதீர்கள்.*

*71. இன்னும் அநேக சூதாடிகளுக்கு த்ரவ்யங்களும், ரத்னங்களும் ஸுவர்ணங்களும் வெள்ளியினால் செய்த பாத்திரங்களும்*

*72. வெண்கலம், செம்பு இவைகளாலான பாத்திரங்களும் கொடுத்திருக்கிறுன், அவனேப்ரதி தினமும் சூதாடிகள் அம்மணமாக்கி விட்டு ஸகல வஸ்துக்களேயும் மூட்டை கட்டிக்கொண்டு போகிறுர்கள்.*

*73. இந்த பூமண்டலத்தின் அவனேப்போல் பகடைப்பாய்ச்சி விளேயாடுகிற சூதாடிகள் ஒருவரும் கிடையாது. ஓ! விப்ரரே! உமது பிள்ளேயைப் போன்ற மரியாதையில்லாதவனும், துராசாரங்களில் பண்டிதனும் சூதாடிகளுக்கு சிரோமணியான ஒருவரும் கிடையாது.*

*74. உமது பிள்ளேயை நீர் அறிந்து கொள்ளவில்லேயே என்றுன். தீக்ஷிதர் இதைச் கேட்டுவிட்டு மிகுந்த லஜ்ஜையினுல் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு,*

*75. துணியினுல் தலேயை மூடிக்கொண்டு வீட்டிற்கு வந்து தனது மஹாபதிவ்ரதையான பத்தினியைக் கோபத்துடன் அழைத்துக் கூறினுர்:*

*76. அடீ நீ எங்கு இருக்கிறுய்? உனது பிள்ளே குணநிதி எங்கே? அவனுல் எனக்கொன்றும் ஆக வேண்டாம். எனது உத்தமான மோதிரம் எங்கே?*

*77. அதை நீ எனக்கு எண்ணெய், தேய்க்கும் போது என்னுடைய விரலிலிருந்து கழற்றினுயே, அது எங்கே? அந்த நவரத்ன மோதிரத்தை இப்பொழுது என்னிடம் கொடு என்றுர்.*

*78. தீக்ஷிதர்பத்னி அவருடைய இவ்வார்த்தைகளேக் கேட்டு மிகவும் பயந்து கொண்டே கூறினுள், இப்பொழுது நீங்கள் உங்களது மத்யானக் காரியங்களே முடித்துக் கொள்ளுங்கள்.*

*79, 80. தேவ பூஜைக்குரிய ஸாமக்ரிகளேச் சேகரித்து வைத்துக் கொண்டிக்கிறேன். அதிதிகளுக்குப் பிரியமானவரே! அதிதிகள் வரும் ஸமயம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இப்பொழுது நான் சமைப்பதில் முனேந்துள்ளேன். நான் மோதிரத்தை எங்கோ பாத்திரத்தில்*

போட்டு வைத்திருக்கிறேன். எங்கு வைத்தேன் என்று நினைவில்லை.

81,82. தீக்ஷிதர் இடக்காகப் பேசினர். ஓஹோ! நற்குணவானுடைய அன்னையோ அல்லவோ, அதனுல் நிச்சயம் உண்மையேதான் பேசுவாய், பிள்ளை எங்கே என்றால், நாதா! இங்கு தான் இத்தனை நேரம் படித்துக் கொண்டிருந்தான், இப்பொழுதுதான் இரண்டு மூன்று ஸ்நேஹிதர்களுடன் படிப்பதற்காக வெளியில் சென்றிருக்கிறான், என்றெல்லாம் சொல்வாய். அடீ! அந்த குங்குமக் கலர் சேலை உனக்கு நான் வாங்கித் தந்தேனே, அதை இந்தக் கொடியில் மாட்டி வைத்திருப்பாயே, அது எங்கு போயிற்று,

83. பயத்தை விட்டு விட்டு உண்மையைக் கூறு.

84. அந்த ரத்னங்கள் பதிந்த வெள்ளிக் கூஜா எங்கே? அதையும் காணோம், அந்த அரசனளித்த பட்டு நூலினல் செய்த போர்வை எங்கே?

85. அந்தத் தென் தேசத்து வெண்கல லோட்டா எங்கே? கன்னட தேசத்துப் பாத்திரமான செப்புக் குடமெங்கே? ஸந்தோஷத்தையும் குதூஹலத்தையும் தரக்கூடிய அந்த யானை தந்தத்தினல் செய்த சிறிய ஊஞ்சல் எங்கே?

86. அந்த மலைநாட்டிலிருந்து வந்த சந்திரகாந்த மணியினல் செய்த கையை உயர்த்தி உள்ளங்கையில் தீபத்தை வைத்திருக்கும் ஆபரணங்களணிந்த அலங்காரப் பதுமை எங்கே?

87. ஏ சீலே! மிகவும் உளறுவதிலும் என்ன பலன்? உன்னிடம் கோபித்துக் கொள்வதிலும் பயன் இல்லை. நான் உன்னை நீக்கி இரண்டாவது விவாஹம் செய்து கொள்வேன். இனி இங்கு போஜனம் கூடச் செய்யமாட்டேன்.

88, 89. குலத்தைக் கெடுக்கும் அந்த துஷ்டன் எனக்குப் பிள்ளையுமில்லை. நான் மலடன். எழுந்திரு. எள்ளும் ஜலமும்,

தர்ப்பமும் கொண்டு வா, அவனுக்கு தர்பணம்பண்ணி விடுகிறேன். குலத்தைக் கெடுக்கும் துஷ்டனுன பிள்ளை இருப்பதைவவிட மனுஷ்யன் பிள்ளையில்லாமலேயே இருக்கலாம். அதுவே மேல். ஸநாதன தர்மத்தில் இந்த நீதி வெகுகாலமாக இருக்கிறது. ஒரு குலத்தின் நன்மைக்காக ஒருவரைத் த்யாகம் செய்யலாம் என்று கூறி

*90.* தீக்ஷிதர் ஸ்நானம், பானம் நித்யகர்மங்கள் எல்லாம் முடித்துக் கொண்டு ஒரு வேதமறிந்த ப்ரம்ம நிஷ்டரின் மகளை கல்யாணம் செய்து கொண்டு விட்டார்.

*91.* தீக்ஷிதரின் புத்ரனுன குணநிதி இந்த எல்லா ஸமாசாரங்களையும் கேள்விப்பட்டுவிட்டுத் தன்னுடைய அத்ருஷ்டத்தை நிந்தித்துக் கொண்டு மிகவும் கவனத்துடன் ஸாவதானமாக ஏதோ ஒரு திசையை நோக்கிச் சென்று விட்டான்.

*92.* அவன் மிகவும் கவலையுடனே யோசித்துக் கொண்டு நடக்கத் தொடங்கினுன். என்னசெய்வேன்? எங்கே செல்வேன்? நான்படிக்கவுமில்லையே? பணமும் இல்லையே.

*93.* பரதேசத்தில் ஒன்று பணம் வேண்டும் அல்லது வித்தை வேண்டும். அவர்கள் தான் ஸுகப்படுவார்கள். மேலும் பணமிருந்தால்கூட திருடர்களுக்குப் பயப்பட வேண்டிவரும். பண்டிதர்கள் நிர்ப்பயமாய் எங்கும் ஸஞ்சரிக்கலாம்

*94.* நான் யாகம் செய்த ப்ராம்மணர்குலத்தில் ஜனித்தது எங்கே? இந்த ஈனத் தொழில் செய்தது எங்கே! இரண்டிற்கும் ஆகாசத்திற்கும் பாதாளத்திற்கும் உள்ள வித்தியாஸம் அல்லவா! வரப்போகும் ஆபத்துக்களுக்கு விதி அல்லவோ பலமாக இருக்கிறது.

*95.* பிச்சைஎடுக்கவும் தெரியாது, வேறு ஊரில் அறிமுகமானவர்களும் இல்லை. கையில் பணமும் இல்லை. இந்த நிலைமையில் வேறு யார்தான் என்னை ரக்ஷிப்பார்கள்?

*96. ஸூர்யோதயத்திறற்கு முன்னுலேயே எனது அன்னே சிற்றுண்டியும் பானமும் எனக்குத் தருவாளே! இனி இதை இங்கு யாரிடம் போய் யாசிப்பேன்? இனிமேல் எனக்கேது அன்னே?*

*97. குணநிதி இவ்வாறு சிந்தித்துக் கொண்டு நடக்கும்போது ஸூர்யன் அஸ்தமனமடைந்தான். அதே ஸமயம் ஒரு சிவபக்தர் - சிவராத்திரியில் மஹாதேவருக்குப் பூஜை செய்வதற்கான த்ரவ்யங்களே எடுத்துக்கொண்டு நகரத்திலிருந்து வெளியெ போய்க் கொண்டிருந்தார்.*

*98,99. பசியோடு செல்லும் குணநிதி அவர் கொண்டு செல்லும் பக்வான்னங்களின் வாசனேயை முகர்ந்துவிட்டு யோசித்துக் கொண்டே அவர் பின்னுல் சென்முன். ராத்திரியில் சிவ நிவேதமான பின் இந்த அன்னத்தை வாங்கி புஜிப்பேன்.*

*100. அவன் இந்த எண்ணம் கொண்டு சிவாலயத்தின் நிலேப் படியில் உட்கார்ந்து கொண்டு அந்த பக்தர் செய்யும் மஹா பூஜையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.*

*1. பூஜை முடிந்த பிறகு சிவபக்தரும், மற்ற பக்தர்களும் ஆட்டம் பாட்டம் எல்லாம் செய்து முடித்தபின் சில நிமிஷ நேரம் உறங்கி விட்டனர். இதுதான் தக்க ஸமயம் என்று நிவேதனத்தை எடுத்துக் கொள்ளலாம் என்று தீக்ஷிதரின் புதல்வன் கோவிலுக்குள் சென்முன்.*

*2. அங்கு விளக்கு மிகவும் சிறிதாக எரிந்தபடியினுல் பக்வான்னங்களேக் காணும் பொருட்டு தனது அங்க வஸ்த்ரத்தைக் கிழித்து அதைத் திரியாகத் திரித்து விளக்கிட்டு விளக்கைப் பிரகாசப் படுத்தினுன்.*

*3. பிறகு நைவேத்யங்களே எடுத்துக் கொண்டு சீக்கிரமாக வெளியில் வந்தான். வரும் அவஸரத்தில் அவனுடைய கால் ஒரு மனிதனின் மேல் இடரவே அந்த மனிதன் எழுந்துவிட்டான்.*

*4. அட இது யார்? வேகமாக ஓடுகிறுனே', திருடன், பிடி, பிடி என்றெல்லாம் அவன் கத்தினவுடன் நகர் வலம் வரும் காவல்காரன் காதில் அது விழுந்தது. அவன் உடனே*

*5. ஓடி வந்ததுமல்லாமல் வேகமாக ஓடி வரும் குணநிதியின் தலேயில் கம்பால் ஓங்கி ஒரு அறை அறைந்தான். அந்தக் கணமே அவன் பிணமாகிக் கீழே விழுந்தான். அன்று சிவராத்திரி புண்ணிய வ்ரதம்; சிவனுடைய நிவேதனத்தை எடுத்தும் அவனுல் சாப்பிட முடியவில்லே.*

*6. பிறகு பாசமும், உலக்கையும் கையுமாக வந்த யமதூதன் அவனே யமபுரிக்கு அழைத்துச் செல்வதற்காக பாசத்தால் கட்ட முயன்ருன்.*

*7. அதற்குள் சிவனுடைய பாரிஷதர்கள் குணநிதியைக் கொண்டு செல்வதற்காக கிங்கிணி ஜாலர்களினுல் அலங்கரிக்கப்பட்ட திவ்யவிமானத்துடன் வந்து சேர்ந்தார்கள். அந்த யமகிங்கரர்கள் சிவகணங்களேப் பார்த்து பயந்துபோய் கைகூப்பிக்கொண்டு கூறினுர்களாம். ஏ! சிவகணங்களே! இந்தப் ப்ராம்மணன் மிகவும் துர்நடத்தையுள்ளவன்.*

*8,9. இவன் குலாசாரத்துக்கு விபரீதமாக நடந்தவன். மாதாபிதாக்களின் வார்த்தைகளுக்குக் கீழ்ப்படியாதவன். ஸத்யம் என்பது இவனிடம் லவலேசமும் இல்லே. சௌசஆசாரங்களும், ஸந்தியாஸ்ஞுதிகளும் கிடையாது.*

*10. இவனுடைய இந்தக் கர்மங்கள் எல்லாவற்றையும் விட்டுத் தள்ளுங்கள். ப்ரத்யக்ஷமாகப் பாருங்கள். இவன் சிவ நிர்மால்யத்தைத் திருடியிருக்கிறுன் பாருங்கள். இப்பேர்பட்டவர்களே தொடக்கூட யோக்யதையில்லே.*

*11-14. சிவநிர்மால்யத்தைச் சாப்பிடுபவன், சிவநிர்மால்யத்தை எடுத்துச் செல்பவன், சிவநிர்மால்யத்தை மற்றவர்களுக்குக் கொடுப்பது இவைகளேச் செய்தாலே புண்ணியம் நசித்துவிடும்.*

விஷத்தைக் குடித்தாலும், பட்டினி கிடந்தாலும் பரவாயில்லை. ப்ராணன் போவதாக இருந்தாலும்கூட சிவநிர்மால்யத்தை ஒரு பொழுதும் சாப்பிடலாகாது. தர்மத்தின் விஷயத்திற்குத் தாங்கள் தான் ப்ரமாணம். ஆதலால் ஏ சிவ கணங்களே! இவன் சிறிதளவாவது தர்மம் செய்து இருந்தானுனல் எங்களுக்கும் சொல்லுங்கள். யமதூதற்களின் வார்த்தையைக் கேட்டுவிட்டு சிவ கணங்கள் சொல்லலானுர்கள் யமதூதர்களே சூக்ஷ்மசிவதர்மம்.

15. உங்களுக்கு எப்படித் தெரியும்? சூக்ஷ்மதர்சிகளுக்குத்தான் புலப்படும். இந்த பாபமில்லாத பிராம்மணன் ஒரு நல்ல கர்மத்தை செய்திருக்கிறுன் கேளுங்கள்-

16. இவன் சிவராத்திரியில் தன்னுடைய வஸ்த்ர்தைதைக் திரியாகக் கிழித்து தீபத்தில் இட்டு தூண்டியிருக்கிறுன். அதனுல் லிங்கத்தின் தலையில் பரவியிருந்த நிழலை நிவர்த்தி செய்திருக்கிறுன்.

17. இவனுக்கு இதைவிட மேலான ஒரு கர்மம் சிவாலயத்தில் கிடைத்திருக்கிறது. யம கிங்கரர்களே! பக்தர்களுடைய முகத்திலிருந்து கிளம்பிய சிவநாமங்களைக் கேட்கிறுன்.

18. இவன் விதி பூர்வமாய் பக்தர்கள் செய்யும் பூஜையைப் பார்த்து இருக்கிறுன்.

19. இவன் பாபக்குழியிலிருந்து ரக்ஷிக்கப்பட்டு கலிங்கதேசத்து அரசனுகப் போகிறுன். நீங்கள் வந்த வழியே திரும்பிச் செல்லுங்கள்.

20. சிவகணங்கள் மூலமாக இவ்வாறு யமதூதர்கள் விரட்டப்பட்டு, இந்தப் பிராம்மணன் கலிங்க தேசாதிபதி அரிந்தமனுடைய புத்ரனுகப் பிறந்தான், தமநாமன் என்ற பெயரும் பெற்றுன்.

*21. முறையே யுவாவான பின்பு பிதாவின் அவஸானத்திற்குப் பிறகு ராஜ்யத்தை யடைந்தான். இந்த அடங்காத துஷ்ட குணங்களுடைய பூபதி தமன் என்பவன் எல்லா சிவாலயங்களிலும் தீபங்கள் போடுவதற்கு உத்தரவு கொடுத்தான். இதைத் தவிர அவனுக்கு வேறு ஒரு தர்மமும் தெரியாது. அவன் ராஜ்யம் பெற்றவுடன் ராஜ்யத்திலுள்ள ஸமஸ்த பிரதிநிதிகளேயும் அழைத்து ஒரு உத்தரவு போட்டான். உங்களுடைய ஆளுகைக்குள் எத்தனை சிவாலயங்கள் இருக்கின்றனவோ அவைகளில் ப்ரதி தினமும் விளக்கேற்ற வேண்டும். இது விஷயமாக நீங்கள் யோசிக்க வேண்டியது அவசியமில்லே. எவன் எனது உத்தரவை மீறுகிருனே அவன் தலையை வெட்டி விடுவேன் என்ருன்.*

*22,23,24. இதனுல் எல்லா சிவாலயங்களிலும் அரசன் மீதுள்ள பயத்திஞல் தீபங்கள் எரியத் தொடங்கின.*

*25. இந்தச் தர்மத்தின் பிரபாவத்திஞல் ஜீவன் முடியும் வரை அந்த ராஜா தமன்*

*26. தர்மம் வழுவாத ஸம்பத்தையே அனுபவித்து விட்டு உசிதமான ஸமயத்தில் காலதர்மன் வசப்பட்டான். இந்த தீபதான ஸம்ஸ்காரத்திஞல் ராஜா தமன் அடுத்த ஜன்மத்திலும் அநேக சிவாலயங்களில் அநேக தீபங்கள் ஏற்றி வைத்து அந்த புண்ணிய பலத்திஞல்*

*27. ரத்னங்களிஞல் ஆன தீபங்கள் சுடர் விட்டெரியும் அளகா புரிக்கு அரசஞுன். சிவ நிமித்தமாக அதி அல்ப தர்மம் செய்தாலும் காலக்ரமத்தில் அதிமகத்தான பலனேயடைகிருன்.*

*28. இதை நன்கு யோசித்த ஆத்ம ஸுகத்தை விரும்பும் ஜனங்கள் சிவனே ஸேவிக்க வேண்டும். எல்லா தர்மங்களேயும் விட்ட தீக்ஷிதருடைய அந்த மகன் எங்கே? பசியின் காரணமாக வஸ்த்ரத்தைக் கிழித்து தீபத்திற்குத் திரிபோட்டு லிங்கத்தின் மீதுள்ள அந்தகாரத்தை விலக்கின*

*ஒரு புண்ணிய ப்ரபாவத்திஞல் தர்மநிஷ்டஞன கலிங்கத்து அரசஞனவன்*

***29,30.*** *அதற்குமேல் பூர்வ ஜன்மத்தின் வாசனையின் காரணமே அடுத்தடுத்த ஜென்மங்களில் சிவாலயங்களில் தீபங்கள் எரியும்படி ஏற்றியவன் சிவசர்மா, அதே குணநிதி மனுஷ்யர்களுள் மிகச் சிறந்த தர்ம நிஷ்டரான குபேரஞகி இப்பொழுது திக்பால் பதவியை அனுபவித்துக் கொண்டிருக்கிறுன். எப்படி இருந்தவன் எந்தப் பதத்திற்கு வந்து விட்டான்!*

***31.*** *விஷ்ணு கணங்கள் திரும்பவும் கூறிஞர்கள். ஏ! ப்ராம்மணு! இந்தக் குபேரன் எந்த விதமாகச் சிவனுடன் எப்பொழுது தோழமையை யடைந்தான்? அதையும் சொல்கிறேம். ஒரு மனதுடன் கேளுங்கள்.*

***32.*** *ப்ராம்மணு! பூர்வ காலத்தில் பத்ம கல்பத்தில் ப்ரம்மாவினுடைய மானஸ புத்ரரான புலஸ்த்யருக்கு விஸ்வரா என்ற புத்திரன் இருந்தான்.*

***33.*** *அதி உக்ர தபஸ்ஸிஞல் த்ரிலோசனரை ஆராதித்து அந்த வைச்ரவணன் அதற்கு முன்ஞலேயே விஸ்வகர்மாவிஞல் ஏற்படுத்தப்பட்ட இந்த அளகாபுரியை ஆண்டு வந்தான்.*

***34.*** *அதற்குப் பிறகு பத்ம கல்பம் கழிந்த பிறகு மேகவாகன கல்பம் ஆரம்பித்துவுடன் அந்த வைச்ரவணனே யக்ஞதத்தனுடைய புத்ரஞன குணநிதியாகப் பிறந்தான்.*

***35.*** *முன்பு தீபத்தைத் தூண்டி விட்டபலஞல் பூர்வ ஜன்ம நினைவு வந்து காசியில் சென்று கடின தபஸ் செய்தான்.*

***36.*** *குபேரன் தன் பூர்வ ஜன்மத்தில் மாஹாத்மியத்தை எண்ணி ஸத்பாவனை என்னும் புஷ்பத்திஞல் சிவலிங்கத்தை ஸ்தாபித்து அதன் ஸமீபத்திலேயே தன் சித்தத்தை தீபமாக வைத்து மஹாப்ரகாசப்படுத்திஞன்.*

*இந்த தீபத்தில் சிவனே வட்டிலாகவும், சிவநேத்திரியாக, சிவபக்தியே எண்ணெயாகவும், சிவனே நிச்சலமாக த்யானிப்பதையே ஜ்யோதியாகவும் கொண்டான்.*

*37. சிவனுடன் கூட ஸோஹம்பாவ ஞானமே தீபத்தினுடைய பெரிய பாத்திரம். அந்த தீபம் தமஸ்ஸாகிற இந்த அக்னியினுல் ஏற்பட்டது. இந்த தீபம் காமக்ரோதாதி மஹாவிக்ன ரூபமான விட்டில் பூச்சிகள் வந்து விழுவதிலிருந்து காப்பாற்றுகிறது.*

*38. ப்ராணவாயுவை ஸதம்பனம் பண்ணினதினுல் வாயுவும் இந்த தீபத்தை அணைப்பதில்லை. பாவனையாகிற சுடர் தட்டாததினுல் நிர்மலமாக எரிந்தது.*

*39. அவன் இந்த விதமாக தீப தபஸ்ஸினுல் பத்து லக்ஷம் வருஷம் வரைக்கும் தியானம் செய்து சரீரத்தினுல் கேவலம் எலும்பு மாத்திரமே இருந்தவனுக ஆனுன்.*

*40. பிறகு தேவி விசாலாக்ஷியுடன் கூட விஸ்வேஸ்வரதேவர் ஸ்தாணு ரூபமாக அந்த லிங்கத்தில் ஆவிர்பவித்து ஸந்தோஷ மனதுடன் கூறினுர்கள். ஏ! அளகாதீஸ்வ்ரா! தபஸ் போதும். வரம்கேள் என்றுர்.*

*41, 42. அந்தக் தபோதனன் கண்ணைத் திறந்து பார்த்தான் உற்றுப் பார்க்க விரும்பினுன். ஆனுல் உதிக்கும் ஸஹஸ்ரஸூரியனுடைய ப்ரகாசம்பொருந்திய உமாபதி சந்திரசேகர் ஸ்ரீகண்டபகவான் பேரில் அவனுடைய த்ருஷ்டி பட்டதுமே மின்னல் வீசியதைப் போல அவனுடைய கண்கள் தானுக மூடிக்கொண்டன.*

*43,44. அப்பொழுது மனேரதம் செல்லக்கூடிய வழிக்குள் எட்டாதவரான மஹாதேவரைப் பார்த்துக் கூறினுன், ஓ ஸ்வாமி! உங்கள் சரணங்களை தரிக்கும் பாக்யத்தைத் தாங்களே எனக்கருள வேண்டும்.*

*45. இவ்வரங்களை எனக்களியுங்கள். ஈசா! உங்கள் ஸாக்ஷாத் தரிசனம் எனக்குக் கிடைத்து விட்டால் பிறகு எனக்கு எந்த வரம் தேவை? சசிசேகரா! உமக்கு நமஸ்காரம்.*

*46. தேவ தேவரான அந்த மஹா தேவர் குபேரனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு விட்டு அவனைக் கரகமலங்களால் ஸ்பர்சித்ததால் தம்மைப் பார்க்கக்கூடிய பாக்யமாகிய வரத்தையளித்தார்.*

*47. அப்பொழுது குபேரன் கண்களைப் பரவவிட்டதுமே முதலில் உமா தேவியைத் தான் தரிசித்தான்.*

*48. சிவனுடைய ஸமீபத்திலேயே இருக்கும் இந்த ஸர்வாங்க ஸுந்தரியான ரமணி யார்? இவளென்ன நம்மை விட அதிகம் தபஸ் செய்திருக்கிறுளா? என்ன உருவம்! என்ன தேஹம்! அஸாதாரண ரூபவதியாக ஸௌபாக்யவதியாக இருக்கிறுளே.*

*49. இவ்விதம் கூறிக்கொண்டு தனது இடது கண்ணின் கடைக் கண்ணுல் பார்த்துக் கொண்டேயிருந்தான். அப்பொழுது அவனது இடது கண் பட்டென்று வெடித்துக் குருடாயிற்று. தேவி கூறினுள்.*

*50. இந்த துஷ்ட தபஸ்வி அடிக்கடி என்னைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறுனே. என் தபஸ்ஸின் பிரபாவத்தைப் பற்றி அஸூயையால் அடிக்கடி ஏதோ கூறுகிறுனே, பிதற்றுகிறுனே;*

*51. என் ரூபத்தையும் ப்ரியத்தையும் ஸௌபாக்ய ஸம்பத்தையும் பார்த்துக் பெருமையடைந்து, இப்பொழுது தனது வலது கண்ணுலும் அடிக்கடி பார்க்கிறுனே. தேவியினுடைய வார்த்தையைக் கேட்டு பிரபு சிரித்துக் கொண்டே கூறினுர்-*

*52. ஏ உமே! இவன் உன் பிள்ளை, கெட்ட எண்ணத்துடன் உற்றுப் பார்க்கவில்லை. மேலான உன்னுடைய தபோலக்ஷ்மியை வர்ணிக்கிறுன். ஈசன் பார்வதியிடம் இவ்வாறு வர்ணித்துவிட்டு குபேரனிடம் சொல்கிறுர்.*

*53,54. ஏ குழந்தாய்! உன் தபஸ்ஸினுல் ஸந்தோஷமடைந்தேன். உனக்கு அதிகமாக வரங்கள் தருகிறேன். எல்லா நிதிகளுக்கும் அதிபதியாய் குஹ்யர்களுக்கும் அரசனுவாய்.*

*55. ஏ வ்ரதசாலியே! யக்ஷ கின்னரர்களுக்கும், அரசர்களுக்கும் அரசனுய் ராக்ஷஸர்களுக்கும் அதிபதியாவாய், யாவர்க்கும் தனத்தை வழங்குபவனுக இருப்பாய்.*

*56. என்னுடன் கூட உனக்கு நட்புத்தன்மை ஏற்பட்டு விட்டது. அதனுல் ஏ மித்ரா! உன்னுடைய ப்ரீதியை அதிகரித்துக் கொண்டு உனக்கு சமீபத்திலிருக்கும் ஸ்தானத்திலேயே அளகா புரிக்கு சமீபத்திலேயே எப்பொழுதும் வசிப்பேன்.*

*57. இந்த உமையின் சரணங்களில் விழு. இவள் உனது அன்னே' என்று சொல்லி, மஹாதேவர் இந்த விதமாகக் குபேரனுக்கு ஸகல வரங்களேயும் அருளித் திரும்பவும் பார்வதியிடம் கூறுவார். தேவேஸ்வரீ! இந்த புத்ரனே சந்தோஷத்துடன் கடாக்ஷிப்பாய்.*

*58. பகவதி கூறினுள். புத்ரா! உன்னுடைய பக்தி சிவனிடம் உறுதியாக இருக்கட்டும், குருடாய்ப் போன உனது இடதுகண் காரணமாக எல்லோரும் உன்னே ஒற்றைக்கண்ணன் என்று அழைப்பார்கள்.*

*59. தேவர்தேவர் எந்தெந்த வரங்களேயெல்லாம் அளித்தாரோ - அவையெல்லாம் உனக்கு ஸித்தியாகட்டும். என் ரூபத்தைப் பார்த்துப் பொருமைப் பட்டதினுல் குபேரன் என்ற பெயரால் கீர்த்தியடைவாய்.*

*60. உன்னுல் ஸ்தாபிக்கப்பட்ட இந்த சிவலிங்கம் ஸாதகர்களுக்குப் பரம ஸித்தியைக் கொடுப்பதாயும் பாபத்தைப் போக்கக் கூடியதாயும், உன்னுடைய பெயருடன் விளங்கட்டும்.*

*61. குபேரேஸ்வரருடைய லிங்கத்தை எவனொருவன் தினமும் தரிசனம் செய்கிருனே அவனுக்குத் தனத்திற்கு ஒரு போதும் குறைவு இருக்காது. நண்பர்களிடமிருந்து வியோகம் ஏற்படாது, உறவினர்கள் பிரியமாட்டார்கள்.*

*62. விஸ்வேஸ்வரருக்குத் தென்பக்கத்தில் இருக்கும் இந்த லிங்கத்தை எவன் ஒருவன் தரிசனம் பூஜை செய்கிருனே அவனை பாபமும் தரித்திரமும் அண்டாது.*

*63. இந்த விதமாக உமாதேவியுடன் கூட மஹேஸ்வரர் குபேரனுக்கு எல்லா விதமான வரங்களேயும் அளித்துவிட்டுத் தன்னுடைய பதத்திற்கேகினுர்.*

*64. இவ்விதமாக தனேசனுன குபேரன் இந்த உருவத்துடன் மஹாதேவருக்குப் பிரியமான உத்தமமான பதவியை யடைந்தான்.*

*65. யக்ஷேஸ்வரனின் குபேரபுரியிலுள்ள வ்ருத்தாந்தத்தை முறையாக வர்ணித்தோம். இந்த வைச்ரவணனுடைய கதையைக் கேட்ட மாத்திரத்திலேயே மனிதன் எல்லா விதமான பாபங்களிலிருந்தும் விடுபடுகிருன்.*

*ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த வாயு லோக குபேர வர்ணனமான பதிமூன்ருவது அத்யாயம்.*

*ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 14

*பிறகு, திரும்பவும் விஷ்ணு கணங்கள் இருவரும் கூறத் தொடங்கினூர்கள். இந்த அளகாபுரியுடைய முன்பாகத்தில் மஹா புண்ணிய புரியான 'ஈசானபுரி' இருக்கிறது. இதில் எப்போதும் தபோதனர்கள் சிவபக்தர்களாக வஸிக்கிறூர்கள்.*

*1. சிவத்யானத்தில் ஆழ்ந்திருப்பவர்களும், சிவ வ்ரத தீக்ஷை எடுத்துக் கொண்டவர்களும், தங்கள் தர்மங்களை சிவார்ப்பணம் செய்தவர்களும், எப்போதும் சிவபூஜையில் ஆழ்ந்தவர்களும் இங்கு வஸிக்கின்றனர்.*

*2. நமக்கு ஸ்வர்க போகம் இங்கேயே கிடைக்குமென்று இச்சையோடு தபஸ் செய்பவர்களான ருத்ரரூபிகள் இந்த ரம்யமான ருத்ரபுரியில் வஸிக்கிறூர்கள்.*

*3. அஜன், ஏக பாத, அஹிர் புத்னி முதலிய ஏகாதச ருத்ரர்கள் கையில் த்ரிசூலம் தரித்துக் கொண்டு இந்த ஸ்தானத்திற்கு யஜமானர்களாக இருக்கிறூர்கள்.*

*4, இந்த ஏகாதச ருத்ர கணங்கள் மேற்சொன்ன அஷ்டபுரிகளிலும் துஷ்டர்களிடமிருந்தும் தேவத்ரோகிகளிடமிருந்தும் எப்போதும் ரக்ஷிக்கிறூர்கள். சிவபக்தர்களுக்கு வரமளிக்கிறூர்கள்.*

*5,6. இந்த ருத்ர கணங்கள் வாராணஸியையடைந்து மங்களகரமான ஈசானேஸ்வரர் என்ற மஹாலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து தபஸ் செய்திருக்கிறூர்கள்.*

*7. இவர்களுக்கெல்லாம் நெற்றியில் கண் உண்டு. நீலகண்டர்கள். வெண்மை சரீரம் படைத்தவர்கள். ரிஷபக் கொடியையுடைவர்கள். பூமியில் எண்ணிக்கையற்ற ஆயிரக் கணக்கான ருத்ர கணங்கள் இருக்கிறூர்கள்.*

*8. அவர்களெல்லாரும் ஸமஸ்த போகங்களுடன் திருப்திகரமாக இந்த ஈசானபுரியில் வஸிக்கிறூர்கள். இவர்கள் காசியில் ஈசானேஸ்வரரைப் பூஜித்தவர்கள்.*

*9. தேசாந்தரங்களில் மரணமடைந்தாலும் கூட இந்த லோகத்தையடைந்து புண்ணிய பலத்திளுல் இங்கு புரோகிதர்களாக இருக்கிருர்கள். அஷ்டமியிலும் சதுர்தசியிலும் ஈசானேஸ்வரரைப் பூஜிப்பவர்கள்,*

*10. இவர்கள் இங்கேயும் பரலோகத்திலும் ருத்திர ஸ்ரூபமாக ஆகிருர்கள். ஈசானேஸ்வரர் சமீபத்தில் சதுர்தசி இரவில் உபவாசத்துடன் கண் விழித்துக் கொண்டிருப்பவர்கள் மறுபடியும் கர்ப்பவாஸம் பண்ணமாட்டார்கள். இப்படியாக சொர்க்க மார்கத்தில் விஷ்ணு கணங்களால் சொல்லப்பட்ட இந்தக் கதையைக் கேட்டுக்கொண்டு*

*11,12. சிவசர்மா எல்லா இந்திரியங்களுடன் மனதையும் ஆனந்தப்படுத்திக் கொண்டு வரும்போது பகலிலும் சந்திரனின் நிலவு,*

*13. மிகவும் சோபையாக பிரகாசிப்பதைப் பார்த்துக் கேட்டார்' விஷ்ணு கணங்களே! இது எந்த லோகம்? என்று கேட்டான். அப்போது அவர்கள் பிராம்மணர்களிடம் கூறிஞர்கள்,*

*14. ஏ சிவசர்மன்! யாதொரு அம்ருதம் வர்ஷிக்கின்ற கிரண ஸமூகத்திளுல் உலகம் த்ருப்தியடைகின்றதோ அந்த சந்திரனுடைய உலகமிது.*

*15. ஏ, விப்ரரே! அக்காலத்தில் பிரஜைகளே ஸ்ருஷ்டிக்கிற முறையில் இச்சை கொண்டவரான ப்ரம்மாவினுடைய மனதிலிருந்து இந்த சந்த்ரனுடைய பிதா, அத்ரி மகரிஷி உத்பவித்தார்.*

*16. அந்த தேவரிஷி தேவ வர்ஷங்களில் மூவாயிரம் வருஷங்கள் அனுத்தரம் என்ற பெயருள்ள மேன்மையான தபஸ்ஸை செய்தார். என்று நாங்கள் கேள்விப்பட்டிருக்கிருேம்.*

*17. அச்சமயத்தில் அவருடைய ஊர்த்வ கதியாகப் போகின்ற ஸோமாம்ருதத்தை அடைந்து, திக்*

*மண்டலங்களைப் பிரகாசிக்கச் செய்கிற அவருடைய இரண்டு கண்களிலிருந்து ஆறு தடவைகள் அம்ருதம் பெருகிற்று.*

*18. அதன் பிறகு ப்ரம்மாவின் ஆக்ஞைபடிக்கு பத்து திக் தேவிகளும் ஒன்று சேர்ந்து அதை ஏற்றுக்கொண்டனர். ஆனால் வைத்துக்கொள்ள முடியவில்லை.*

*19, 20. எப்பொழுது அந்த பத்துதிக்குகளினால் அந்த கர்ப்பத்தைத் தரிக்க முடியவில்லையோ அவர்கள் எல்லோருடனும் கூட அந்த கர்ப சிசுவான சந்திரன் பூவுலகில் வந்தான். லோக பிதாவான ப்ரம்மா அந்த சந்திரன் இவ்வாறு வந்ததைப் பார்த்து மூன்று உலகுக்கும் ஹிதத்தைச் செய்ய விரும்பி, அவனை ஒரு ரதத்தில் ஏற்றி வைத்தார்.*

*21. இப்படிப் ப்ரம்மா சந்திரனை ரதத்தில் ஏற்றி வைத்துக் கொண்டு இருபத்தி ஒருமுறை ஸமுத்ரத்தை எல்லையாகக் கொண்ட பூமி முழுவதையும் பிரதக்ஷிணம் செய்தார்.*

*22. அப்படி அவனைச் சுற்றும் பொழுது பூமியில் எங்கெல்லாம் அவனுடைய தேஜஸ் விழுந்ததோ அங்கெல்லாம் ஓஷதிகள் வளர்ந்தன. அவைகளால் ஜகத்திற்கு க்ஷேமம் உண்டாயிற்று.*

*23. ஏ! மஹா பாகா! இப்படிப்ரும்மாவினால் விருத்தி செய்யப்பட்ட சந்த்ரனின் தேஜஸ்ஸினால் சந்த்ரன் முக்தியடைந்து, பரம பாவனமான அவிமுக்த க்ஷேத்திரத்தையடைந்து, தன்னுடைய பெயருள்ள சந்திரசேகரன் என்ற அம்ருத லிங்கத்தை பிரதிஷ்டித்து பத்மம் என்ற எண்ணிக்கைப்படிக்கு ஒருகோடி வருஷம் தவம் செய்தான்.*

*24,25. தேவ தேவரான, பினாகி விஸ்வேஸ்வரருடைய ப்ரஸாதத்தால் விதைகள், ஓஷதிகள், ஜலம் இவை களுக்கும், பிராம்மணர்களுக்கும் அதிபதியானார்கள்.*

*26.* சந்திரன் தபஸ் பண்ணிக்கொண்டிருக்கும்போது காசியில் அம்ருதோதயம் என்ற கிணறு வெட்டினுன். அந்த ஜலத்தில் ஸ்நானம் பானம் பண்ணுபவர்கள் அக்ஞானத்திலிருந்து விடுபடுவார்கள்.

*27.* மஹாதேவர் சந்தோஷமடைந்து ஜகத் சஞ்சீவினி என்ற ஒரு கலையை தலையில் இருத்திக் கொண்டிருக்கிருர்.

*28.* அந்த சந்திரன் தக்ஷப்ரஜாபதியின் சாபத்திஞல் மாதக்கடைசியில் ஒவ்வொரு கலையாக இழந்து வருகிருன். ஆஞல் பரமசிவன் தலையில் தரித்துக் கொண்டிருக்கும் ஜகத்சஞ்சீவினி என்ற ஒரு கலையிஞல் மறுபடியும் பதினைந்து நாட்களில் பூரணத்வம் பெற்று விடுகிருன்.

*29, 30.* ஸோமயாகம் செய்கிறவர்களில் தலைசிறந்த சந்திரன் இந்த விதமாக சங்கரருடைய பெரிய ஸாம்ராஜ்யத்தைப் பெற்று ஆயிரம் நூறு தக்ஷிணைகளிஞல் பூர்த்தியாகிற ராஜஸூய யாகத்தை ஆரம்பித்தான். ஓ! பிராம்மணரே! நாங்கள் பெரியவர்களிடமிருந்து கேள்விப் பட்டிருக்கிருேம். அதாவது சந்திரதேவன் ஸபையோர்களுக்கு மூன்று உலங்களையும் தக்ஷிணையாகக் கொடுத்து விட்டான் அந்த யக்ஞத்தில் -

*31.* ப்ரம்மாவே ஸ்வயம் ப்ரம்மாவாக இருந்தார். அத்ரி, ப்ருகு, மரீசி ஆகியரிஷிகள் ரித்விக்குகளாக இருந்தார்கள். ரிஷி மண்டலத்திஞல் சூழப்பட்ட பகவான் ஹரி ஸபாநாயகஞக இருந்தார்.

*32.* வாலி, குஹூ, த்யுதி, புஷ்டி, ப்ரபா, வசு, கீர்த்தி, ருதி, சோபாலக்ஷ்மி இந்த ஒன்பது தேவியர்களும் சந்திரனுக்கு ஸேவை செய்தார்கள்.

*33.* சந்த்ரன் உமாஸஹிதரான ருத்ரதேவரை, யக்ஞங்களிஞல் திருப்தி செய்வித்து உமையுடன் கூடின சிவஞல் கொடுக்கப்பட்ட ஸோமனென்னும் பட்டத்தைப் பெற்ருர்.

*34. ஸோமன் காசியில் சந்திரசேகரருக்கு முன்னுல் மிகவும் கஷ்ட ஸாத்யமான தவத்தைச் செய்து ராஜஸூய யக்ஞத்தை முடித்தார்.*

*35. அந்த இடத்திலேயே பிராம்மணர்கள் மிகவும் ஸந்தோஷமடைந்து மூன்று லோகங்களேயும் தக்ஷிணேயாகக் கொடுத்த தாதாவான சந்திரனே (ஸோமனே) தாங்கள் பிராம்மணர்களுக்கு ராஜா என்று கூறி ஆசிர்வதித்தார்கள்.*

*36. சந்திரன் அந்த இடத்திலேயே (பகவானுடைய) இடக்கண்ணுக இருக்கும் பேற்றையடைந்தான். அத்யந்த ஸந்தோஷ ஸஹிதரான பரமசிவன் மூன்று உலகங்களும் ஆனந்திக்கும் பொருட்டு*

*37. சந்திரனிடம் கூறினுர்: உன்னுடைய தபோபலத்திஞல் நீ என்னுடையவே பிரதிரூபமாகிவிட்டாய். உலகம் உன்னுடைய உதயத்திஞல் ஸுகப்படும்.*

*38. உன்னுடைய அமுதமயமான கிரண ஸமூஹங்கள் பட்டவுடனேயே சூரியனுடைய தாபத்திஞல் மிகவும் தவித்துக் கொண்டிருக்கும் இந்த சராசர ஜகத்தானது தங்களுடைய தாபம் நீங்கி ஸுகமடையும்.*

*39. மஹேஸ்வரர் இவ்விதம் கூறிப் பின்னும் ஸந்தோஷமடைந்தார்; சந்திரனுக்கு மேலும் மேலும் அதிக வரங்களே வழங்கினுர். பிராம்மணர்களுக்கு அரசே, நீ இந்தக் காசியில் பெரும் தபஸ் பண்ணிஞய்.*

*40. நீ செய்த யாகத்துடைய பலனே எனக்களித்தாய்; அர்ப்பணம் செய்தாய். சந்திரசேகரன் என்ற மஹாலிங்கத்தையும் ஸ்தாபித்தாய்.*

*41. இந்த எல்லாக் காரணங்களிஞல் உமையுடன் கூடிய நான் (இங்கு தன்னை அர்த்தசந்த்ரன் என்று கூறுகிறுர்) (அதாவது உமைபாதி சந்த்ரன், தான் பாதி சந்த்ரன்) அர்த்த சந்த்ர ரூபதாரியான நான் எங்கும்*

*நிறைந்திருந்த போதிலும் உன்னுடைய பெயரைக் குறிக்கும் (இந்த சந்த்ரசேகர லிங்கத்தில் ஒவ்வொரு மாதத்துப் பூர்ணிமையன்றும்*

*42. மூவுலகத்து ஐச்வர்யங்களின்கூட இரவும் பகலும் விசேஷரூபமாக இதில் ஸாந்நித்யமாக இருப்பேன். ஆனால் பூர்ணிமாதிதியன்று இந்த லிங்கத்துக்கு முன்னால் ஜபம் ஹோமம் பூஜை தானம் த்யானம் ப்ராம்மண போஜனம் முதலிய ஸத்கர்மங்களைச் சிறிய அளவில் செய்தால் கூட அதை ஒரு மஹாபூஜையாக எண்ணி ஒப்பற்றபலனைக் கொடுப்பேன்.)*

*43,44. கோவில் ஜீர்ணோத்தாரணம், நாட்டியம், வாத்யகோஷம்.*

*45. த்வஜாரோஹணம். தபஸ்வி யதிகளுக்கு திருப்தியளிக்க கூடிய ஸாதனங்கள் இவைகளெல்லாம் சந்திரசேகரலிங்கத்திற்கு முன்னால் நடந்தால் அதிக பலனைக் கொடுக்கும். இன்னும் ரஹஸ்யமான வார்த்தை கூறுகிறேன் கேள்.*

*46. பக்தியில்லாதவன், நாஸ்திகன், வேதத்ரோஹி, அவர்களுக்கு அதைக் கூறக் கூடாது. ஸோமவாரத்தன்று* அமாவாசை திதி வந்தால் அப்போது நல்ல பக்தர்கள்.

*47. ச்ரத்தையுடன் சதுர்த்தசியன்று உபவாசம் இருந்து த்ரயோதசி நித்ய கர்மத்தை முடித்து*

*48. அதே த்ரயோதசி சனிக்கிழமை இருந்ததானல் சந்திர சேகரருக்குப் பூஜை பண்ண வேண்டும். அன்று பகலில் உபவாஸம் இருந்து இரவில் சாப்பிட வேண்டும். பிறகு*

*49. சதுர்தசியில் உபவாஸம் இருந்து இரவில் கண்விழிக்க வேண்டும். மறுநாள் காலையில் ஸோமவாரத்தோடு கூடிய அமாவாஸை யோகத்தில் சந்திர கூபம் என்ற கிணற்றில் ஸ்நானம் செய்வது,*

*50. விதிபூர்வமாக ச்ராத்தத்தைப் பண்ண வேண்டும். பிறகு விதிப்ரகாரம் தேவருணம், ரிஷிருணம், பித்ருருணம் இவைகளைச் செய்ய வேண்டும்.*

*51. தீர்த்த ச்ராத்தத்தில் அவர்கள் அர்க்கியம் செய்ய வேண்டாம், வஸு ருத்ர, ஆதித்யஸ்வரூப பிதா பிதாமஹர் ப்ரபிதாமஹர் இவர்கள் மூவருக்கும் ச்ரத்தையுடன் பிண்டதானம் செய்ய வேண்டும்.*

*52. இந்த விதம் மாதாமஹர் முதலியவர்களுக்கும் மூன்று வம்சத்துக்கும், மேலும் ஸகோத்ரர், குரு மாமனர் மற்ற பந்துக்கள் இவர்கள் நாமத்தை உச்சரித்துக் கொண்டு பிண்டத்தைக் கொடுக்கவும்*

*53. இந்தக் தீர்த்தத்தில் ச்ரத்தையுடன் ச்ராத்தம் செய்வதினுல் எல்லோரும் கடைத்தேறுகிறுர்கள். கயையில் பிண்ட ப்ரதானம் செய்வதால் முன்னேர்களுக்கு எந்தவிதமான த்ருப்தி ஏற்படுகிறதோ அது,*

*54. இந்த சந்திர கூபத்தில் ச்ராத்தம் செய்வதினுல் பூர்ண திருப்தி கிடைக்கிறது. மனிதன் கயையில் பிண்டதானம் செய்வதனுல் ஸமஸ்தபித்ருக்களிடமிருந்து விடுபடுகிறுன்.*

*55. அதுபோல் சந்திர கூபத்தில் பிண்டதானம் செய்து பித்ருகடனிலிருந்து விடுபடலாம். எப்பொழுது ஒரு உத்தமமான நரன் சந்திரேஸ்வரனுடைய தர்சனத்திற்காகச் செல்லுகிறுனே,*

*56. அவன் அதே நிமிஷம் அவனுடைய பூர்வபுஷருர்கள், பிதா, பிரபிதாமஹர் முதலியவர்கள் ஸந்தோஷத்தினுல் நர்த்தனம் செய்கிறுர்கள். இந்த சந்திர கூபத் தீர்த்தத்தில் நமக்குத் தர்ப்பணம் செய்வான் என்று ஸந்தோஷிக்கிறுர்கள்.*

*57. நம்முடைய துர்பாக்யத்தினுல் தர்பணம் செய்யாமல் சென்று விட்டால் என்ன ஆகும், அந்தத் தீர்த்தத்தின் ஜலத்தையாவது தொடுவார் அல்லவா? அதனுல் கூட நமக்குத் திருப்தி கிடைக்கிறது.*

*58. முட்டாள் தனமாக ஜலத்தையும் தொடாவிட்டால், அதைப் பார்க்கவாவது செய்வார்களல்லவா? பின் அதனாலேயே ஸந்தோஷம் ஏற்படும். ஒவ்வொரு மனிதனும் மேற்கூறிய விதிபூர்வமாக ச்ராத்த ஸம்பன்னம் செய்து பிறகு சந்திரேசுவரர் தரிசனம் செய்து பிறகு பிராமணன், யதி, இவர்களை போஜனங்களினால் திருப்திப் படுத்தினால் அப்பொழுது தனது வ்ரதத்தைக் காத்துப் பாரணை செய்யலாம்.*

*59. ஹே மிருகாங்க! காசியில் தீர்த்த விதியினால் ஸோமவதி அமாவாஸையன்று விரதம் இருந்தால் எனது அனுக்ரகத்தினால் தேவருணம், பித்ருருணம், ரிஷிருணம் இவைகளிலிருந்து விடுபட்டு முக்தர்களாகலாம்.*

*60. காசி க்ஷேத்ரத்தில் வஸிப்பவர்கள் சித்ரா நக்ஷத்ரத்துடன் கூடிய சித்ரமாத் பூர்ணிமையில் தாரக ஞானம் கிடைப்பதற்காக, க்ஷேத்ரத்தில் ஏற்படும் இடையூறுகளை அழிக்கும் பொருட்டு, மஹாயாத்ரை அவசியம் செய்ய வேண்டும்.*

*61. ஒருவன் சந்திரேஸ்வரர் லிங்கத்தைப் பூஜை செய்துவிட்டு, வேறு எங்காவது சென்று மரணமடைந்தாலும், பாபஸமூஹமாகிய திசையைக் கிழித்துக் கொண்டு சந்திரலோகத்தையடைகிறான்.*

*62. கலிகாலத்தில் அத்ருஷ்ட ஹீனர்களான ஜனங்கள் சந்திரேஸ்வர லிங்கத்தின் மஹிமையைஅறிகிறார்களில்லை. ஏ! நிசாபதி இன்னும் ஒரு முக்யமான ரஹிஸ்யத்தைக் கூறுகிறேன் கேள்.*

*63. இந்த ஸ்நானம் ஸித்த யோகீஸ்வரபீடம்; ஸாதகர்களுக்கு ஸித்தியளிக்கவல்லது, ஸுரர், அஸுரர், நாகர், வித்யாதரர் கந்தர்வர்,*

*64. ராக்ஷஸர்கள் குஹ்யர்கள், யக்ஷகின்னரர்கள், மனுஷ்யர்கள் இவர்களில் ஏழுகோடி ஸாதகர்கள் எனக்கு*

*முன்னுல் (எனது ஸந்நிதானத்தில்) ஸித்தியடைந்திருக் கிருர்கள்.*

*65. ஆறுமாத பரியந்தம் நியமமான ஆஹார விஹாரத்துடன் விஸ்வேஸ்வரரைத் தியானம் பண்ணிஞல் சந்திரேஸ்வர பூஜைக்காக வரும் ஸித்த கணங்களைப் பார்க்கலாம்.*

*66. ஸாக்ஷாத் ஸித்த யோகீஸ்வரிதேவி அவர்களுக்கு வரம் கொடுக்கிருள். ஸித்த யோகீஸ்வரி தரிசனத்திஞல் உனக்கும் பெரிய ஸித்திகள் கிடைத்திருக்கின்றன.*

*67. உலகத்தில் ஸாதகர்களுக்கு ஸித்தியைக் கொடுக்கக்கூடிய அநேக ஸித்த பீடங்கள் இருக்கின்றன. இந்த யோகீஸ்வரி பீடத்தைப் போல வெகு சீக்கிரத்தில் ஸித்தி கொடுக்கும் மற்ருெரு பீடம், ஏ! சசியே இந்த உலகில் வேறெங்கும் இல்லை.*

*68. ஏ! சசியே! எங்கு நீ இந்த சந்திரேஸ்வர லிங்கத்தைப் பிரதிஷ்டித்து இருக்கிருயோ அது அஜிதேந்த்ரியர்களுக்கு (இந்த்ரியங்களை ஜெயிக்காதவர்களுக்கு) கண்களுக்குப் புலப்படாது.*

*69. கோபத்தை ஜயித்தவர்கள், காமத்தை ஜயித்தவர்கள், லோபம், ஆசை இவைகளையும் ஜெயித்தவர்கள் ஆகியவர்களே இந்தப் பரம சக்தி வாய்ந்த யோகீஸ்வரி தேவியை தரிசிக்க முடியும்.*

*70. எவர்கள் ஒவ்வொரு அஷ்டமியன்றும், ஒவ்வொரு சதுர்தசியன்றும் கண்ணுக்குத் தெரியாதவளும், பாக்கியசாலியும் ஸகல ஸித்திகளையும் கொடுக்க வல்லவளான,* இந்த பிங்களா

*71. தேவியை இந்த ஸித்த யோகீஸ்வரி பீடத்தில் தியானித்து தூப, தீப, நைவேத்யம் முதலிய உபசாரங்களுடன் பக்தி பூர்வமாகப் பூஜித்தால் அவர்களுக்கு முன்னுல் அந்த தேவி ப்ரத்யக்ஷமாகிருள்.*

*72. ஏ பிராம்மணோத்தமரே! மஹாதேவர் இந்த விஸ்வேஸ்வர நகரில் எல்லா வரங்களையும் கொடுத்துவிட்டு அந்த இடத்திலேயே மறைந்தார்.*

*73. அப்பொழுதிலிருந்து பிராம்மணர்களுக்கு அரசஞன சந்திரன் தன்னுடைய கிரணங்களைப் பரவச் செய்துகொண்டு, திக்மண்டலத்திலுள்ள அந்தகாரத்தைப் போக்கிக் கொண்டு இவ்வுலகத்தில் ஆதிபத்யம் செலுத்திக் கொண்டிருக்கிருர்.*

*74. ஸோமவார வ்ரதம் இருப்பவர்களும், ஸோமயாகம் செய்து ஸோமபானம் பண்ணினவர்கள் ஆகியவர்கள் ஸோமப்ரபையொடு கூட விமானத்திலேறி ஸோம லோகத்தையடைகிருர்கள்.*

*75. எவர் சந்திரனுடைய உற்பத்தியையும் தபஸ்ஸையும் பற்றிப் பக்தி பூர்வமாகக் கேட்கிருர்களோ, அவர்கள் சந்திரலோகத்தில் பூஜிக்கப்படுகிருர்கள்.*

*76. அகஸ்தியர் கூறுகிருர்: விஷ்ணுவின் இரு பாரிஷதர்கள் இந்த ஸ்வர்க்க மார்க்கத்தில் சிவசர்மாவிற்கு மங்களமானதும் ச்ரமங்களைப் போக்கடிக்கக் கூடியதும் சுபத்தைக் கொடுக்கக் கூடியதுமான நக்ஷத்ர லோகத்தை யடைந்தார்கள்.*

*77. ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான சந்திரலோக வர்ணனம் ஈசான லோக வர்ணனமான 14வது அத்யாயம் முற்றிற்று.*



# அத்தியாயம் 15

*அகஸ்தியமுனி கூறினார். மஹாபாகே! ஸஹதர்மிணி! பத்னீ லோபாமுத்ரே! விஷ்ணுலோகத்து இரண்டு பாரிஷதர்களும் இப்பொழுது எந்தக் கதையைக் கூறுகிறார்களோ அதை நீ கேள்.*

*1. சிவராமன் கேட்டார்- ஓ கணங்களே அந்தச் சந்திரனின் கதை கேட்பதற்கு மிகவும் விசித்ரமாக இருக்கிறது. தாங்கள் எல்லாக் கதைகளிலும் பாண்டித்யம் அடைந்திருக்கிறீர்கள். அதனால் இந்த நக்ஷத்ர லோகத்தைப் பற்றி வர்ணித்துக் கூறுங்கள் என்றார்.*

*2. அவர்கள் கூறுகிறார்கள் :- பூர்வ காலத்தில் ப்ரஜைகளை ஸ்ருஷ்டிப்பதற்கு அதிகம் விருப்பமுள்ள ஸ்ருஷ்டிகர்த்தாவான அயனின் கட்டைவிரலின் மேல் பாகத்திலிருந்து ப்ரஜைகளை ஸ்ருஷ்டிப்பதில் நிபுணரான தக்ஷப்ரஜாபதி உற்பத்தியானார்.*

*3. அந்த தக்ஷருடைய தபோ ரூபமான லாவண்யத்திலிருந்து மங்களகரமான ரோஹிணி முதலிய அறுபது கன்னிகைகள் பிறந்தார்கள்.*

*4. இவர்களெல்லாரும் விச்வநாதபுரீ (காசி) யில் வந்து தீவிர தபஸ்ஸினால் உமாஸஹித சந்திரபூஷண மஹாதேவரை ஆராதிக்கத் தொடங்கினார்கள்.*

*5. அப்பொழுது மஹேச்வரர் ஸந்தோஷமடைந்து வரங் கொடுப்பதற்காகப் பிரஸ்ஸன்னம் ஆனார். ஸந்தோஷ சித்தத்துடன் கூறினார்- நீங்கள் உத்தமமான வரங்களைக் கேளுங்கள் என்றார்.*

*6. அப்பொழுது அந்தக் குமாரிகள் சிவவாக்யத்தைக் கேட்டுக் கூறினார்கள். ஏ சங்கரா! எங்களுக்கு வரம் கொடுப்பீர்களானால்*

*7. மஹாதேவா! தங்களைவிட அதிகமாக ஸந்தாபத்தைப் போக்கடிக்கக் கூடியவரும், தங்களுக்கு*

*ஸமமான அழகுடையவரான ஒருவரும் எங்களுக்கு பர்த்தாவாக ஆகவேண்டும் என்றூர்கள்.*

*8. அவர்கள் எல்லோரும் வருணு நதியின் ரம்யமான கரையில் ஸங்கமேஸ்வரருக்கு ஸமீபத்திலேயே நக்ஷத்ரேஸ்வரர் என்ற ப்ரதிஷ்டையைப் பண்ணிஞர்கள்.*

*9. தேவ வருஷத்தை அனுஸரித்து ஒரு புருஷ ஆயுஸ் வரைக்கும் மஹாதபஸ் செய்தார்கள். ஒரு புருஷனுல் கூடச் செய்ய முடியாத தபஸ். அதன்பிறகு ஸந்தோஷமடைந்து விச்வேச்வரர் அவர்கள் எல்லோரையும் ஒரேயிடத்தில் நாட்டமுடையவர்களாகவும் ஒருவருக்கே ஏகபத்நீ விரதராய் அபிலாஷையிருக்கக்கூடிய அந்த உத்தம வரத்தைக் கொடுத்தார்.*

*10,11. விச்வேச்வர தேவர் கூறினுர்: பூர்வ காலத்தில் மற்றொரு அபலை இங்கு மற்றொரு உக்ரமான தபஸ்ஸை ஸஹிக்க முடியாமல்போனுள் (ந க்ஷாந்தா) என்றுல் ஸஹிக்க முடியவில்லையென்று அர்த்தம். அதனுல் உங்களுக்கு நக்ஷத்ரம் என்று அதே பெயரைக் கொடுக்கிறேம்.*

*12. இந்த ஸமயம் நீங்கள் எல்லோரும் புருஷாயுஸில் செய்யக் கூடிய புருஷாயுத என்ற தபஸ்ஸைச் செய்திருக்கிறீகள். அதனுல் நீங்கள் எல்லோரும் உங்கள் இச்சைப்படிக்கு புருஷரூபம் தரித்துக் கொள்ளலாம் என்ற வரத்தை கொடுக்கிறேன்.*

*13. ஜோதிஷ் சக்கரத்திலே நீங்கள் அகர பாகத்தில் இருப்பீர்கள். மேஷம் முதலிய ராசிகளில் உற்பத்தி ஸ்தானமாகவும், நீங்கள் இருப்பீர்கள்.*

*14. ஏ ஸுமுகிகளே! ஒஷதிகளுக்கும், அம்ருதத்திற்கும் ப்ராமணர்களுக்கும் பதியான சந்திரனுல் நீங்கள் பதியையுடையவர்கள் ஆவீர்கள்.*

*15. உங்களால் ஸ்தாபிக்கப்பட்ட நக்ஷத்ரேஸ்வரர் என்ற லிங்கத்தை பூஜிப்பதனுல் மனிதர்கள் உங்கள் லோகத்தையடைவார்கள்.*

*16. சந்திரலோகத்திற்கு மேலே நீங்கள் இருப்பதற்கு ஒரு லோகம் தயாராகும். எல்லா நக்ஷத்ரங்களினாலும் நீங்கள் மதிக்கப்படுவீர்கள்.*

*17. ஜனங்கள் நக்ஷத்ரங்களை முன்னிட்டு வ்ரத நியமங்களை அனுஷ்டித்து வந்தார்களேயானால், அவர்கள் எல்லோரும் நக்ஷத்ரத்திற்கு ஸமமான ஒளியுடன் உங்கள் உலகத்தில் வஸிப்பார்கள்.*

*18. காசியில் நக்ஷத்ரேஸ்வரரைத் தரிசனம் செய்பவர்களுக்கு ஒருபொழுதும் நக்ஷத்ரங்களினாலோ ராசிகளினாலோ, க்ரஹங்களினாலோ உபத்ரவங்கள் உண்டாகாது.*

*19. அகஸ்தியர் கூறுகிறார்- விஷ்ணு தேவரை பூஜிப்பவர்களான இந்த இரண்டு கணங்களும் நக்ஷத்ர லோகத்தை வர்ணித்த பிறகு சில க்ஷண நேரத்திற்குப் பிறகு சிவசர்மாவின் கண்ணிற்கு புதலோகம் தென்பட்டது.*

*20. சிவசர்மா கூறினார்- பகவானுடைய பக்தர்களே! ஒப்பில்லாத இந்த லோகம் யாருடையது? இந்த லோகம் சந்திர லோகத்தைப்போல வெகு அழகாக இருக்கிறதே.*

*21. விஷ்ணு கணங்கள் கூறினார்கள். ஸ்வர்க மார்கத்தை ஸந்தோஷமாகக் கழிக்கும் பொருட்டு பாபத்தைப் போக்குவதும் தாபத்ரயத்தை நீக்குவதுமான இந்தக் கதையை நீங்கள் கேளுங்கள்.*

*22. நாங்கள் சற்று முன்னால் ஸாம்ராஜ்ய பதவியை அடைந்த மஹா காந்திமான் ஆன த்விஜராஜன் (சந்திரன்) கதையை உங்களுக்குக் கூறுகிறோம்-*

*23. அவர் ராஜஸூய யாகத்தில் மூன்று உலகங்களையும் தக்ஷிணையாகக் கொடுத்தார். ஒரு சதபத்ம வருஷம் வரைக்கும் அதி உக்ரமான தபஸ் செய்தார்.*

*24. அவர் அத்ரி மகர்ஷியின் கண்களிலிருந்து பிறந்தார். அவர் ப்ரம்மாவிற்கு பௌத்ரர். எல்லா ஒஷதிகளுக்கும் நாதன்; ஸகல ஜோதிகளுக்கும் அதிபதி.*

*25. அவர் அகில நிர்மலமான கலைகளுக்கும் பொக்கிஷம் என்று கூறுகிறார்கள். அவர் உதயமானவுடன் மற்றவர்களுடைய ஸந்தாபத்தைக் கழுத்தைப் பிடித்து வெளியேற்றிவிடுகிறார்.*

*26. அவர் உதயமானவுடன் ஜகத்தினில் குமுதினி முதலியவைகளுக்கு ஆனந்த தானம் முதலியவைகள் பண்ணுகிறார். அவர் திக்குகளாகிய ஸுந்தரிகளின் பார்க்கும் கண்ணாடியாகிறார்.*

*27. இப்படி குணதிசயங்களை வர்ணித்துக் கொண்டே போவதினால் என்ன ப்ரயோஜனம்? ஸர்வக்ஞான மஹா தேவரே அவருடைய கலையை நெற்றியில் தரித்துக் கொண்டிருக்கிறார். இப்பொழுது சந்திரனுக்கு ஸமானமான யாரைக்கூற முடியும்?*

*28. அந்த ஸௌந்தர்யமான சந்திரன் தன்னுடைய ஐச்வர்ய மதத்தினால் மோஹித்து குருவும், புரோஹிதரும், சிறிய தந்தையின் புத்திரனான ஸஹோதரனும், அங்கீரஸ ருஷியின் புத்திரனுமான ப்ருஹஸ்பதியின் பார்யையான பரமரூபவதி தாராவை - தேவர்ஷிகளும் அநேகம் தரம் தடுத்த போதிலும் பலாத்காரமாக இழுத்துச் சென்று விட்டார்.*

*29,30. இவர் இந்தக் கலாவதியைக் குற்றம் சொல்வதில் ஒன்றுமில்லை. த்ரிலோசன மஹாதேவரைத் தவிர காமன் யார் மனதையும் தூண்டிக் கொண்டிருக்கவில்லை.*

*31. விசேஷமாக நான்கு பக்கமும் பரவிவரும் இருட்டை விலக்குவதற்காக ப்ரம்மா, தீபமும், ஸூர்யகிரணமும் ஆகிய ஓஷதிகளை அளித்தார். ஆனால் அதிகாரப்பதவியிலிருந்து பிறக்கும் மதமாகிய அந்த இருட்டை விலக்கவில்லை.*

*32. ஏனென்றால் அதிகாரப் பதவிமோஹத்தில் இருக்கும் ஜனங்களை ஹிதவார்த்தைகளோ, ஹிதத்தைச்*

*சொல்லும் ஹரி கதைகள்கூட ஒன்றும் செய்ய முடியாது. விபரீத புத்தியுள்ள ஜனங்கள் தீர்த்த ஸ்நானங்கள் பண்ணிஞல்கூட சுத்தபுத்தி அவர்களை ஸ்பர்சிக்காது. அதைப்போல இதையும் நினைத்துக் கொள்ளுங்கள்.*

*33. ஏனென்ருல் விபரீத புத்தியிஞல் மதமடைந்த துர்ஜனங்களுடைய நேத்ரங்கள் க்ஷணமாத்ரமயக்கத்திஞல் சுழலும் விழிகளுக்கு எல்லாம் சுற்றுவது போல எல்லாம் விபரீதமாகவே தெரியும். இப்படி அஹிதத்தையே ஹிதமாக எண்ணக்கூடிய காரணமான பெரும் ஸம்பத்தைப் பெருக்குவது மிகவும் இழிவு, இழிவு.*

*34. ஆச்சர்யம்! காமதேவன் புஷ்பங்களையே ஆயுதமாகக் கொண்டு மூன்று உலகங்களிலேயும் யாரைத்தான் ஜெயிக்காமல் வைத்திருக்கிருன்? எவன் க்ரோதத்திற்கு வசமாவதில்லை? லோபம் யாரைத்தான் மோஹிக்கச் செய்வதில்லை? காமனைகளுடைய கண் பார்வையிஞல் கிழிக்கப்படாத இதயம் யாருக்குத்தான் இருக்கிறது? ராஜஸ்த்ரீயை அடைந்து அழகான கண்களைப் படைத்தாலும் யார் தான் குருடனுடைய பதவியில் இருக்கவில்லை.*

*35. அதிகாரமும் ஐச்வர்யமுமான லக்ஷ்மி மிகவும் சஞ்சலமானவள். அவளைப்பெற்று உலகில் நல்லது கெடுதல் எவ்வளவு வேண்டுமோ அவைகளைப் பெற்றுக் கொள்ளலாம், பலனும் அதற்குத் தகுந்தபடி கிடைக்கும். அதஞல் நன்னடத்தையுள்ள ஜனங்கள் தங்களுக்கு எது ஹிதமோ அதைச் செய்ய வேண்டும்.*

*36. எப்பொழுது சந்திரன் ப்ருஹஸ்பதிக்காகத் தாராவை விடமாட்டேனென்ருனே அப்போது ருத்ரதேவர் பிநாகம் என்ற தநுஸ்ஸை எடுத்துக்கொண்டு ப்ருஹஸ்பதிக்கு ஸஹாயமாகச் சென்றார்.*

*37. அப்பொழுது சந்திரன் ப்ரம்மசிரஸ் என்ற அஸ்திரத்தை மஹாதேவர் மீது பிரயோகித்தார்.*

மஹாதேவர் அந்த அஸ்திரத்தை நாசமடையும் படிச்செய்து விட்டார்.

38. பரஸ்பரம் இருவருக்கும் மஹா பயங்கரமான யுத்தம் நடந்து. இதைப் பார்த்து விட்டு பிதாமஹர் காலமில்லாக் காலத்தில் ப்ரம்மாண்டம் அழிவதைப் பார்த்து மிகவும் பயந்தார்.

39. அப்பொழுது பிதாமஹர் ப்ரளயகாலத்து அக்னிபோல் ஜ்வலிக்கும் மஹாதேவரைச் சரண் அடைந்து மஹாதேவரைச் சண்டையிலிருந்து விலக்கிக்கொண்டே தாராவை ப்ருஹஸ்பதியிடம் சேர்த்தார்.

40. அதற்குப் பிறகு ப்ருஹஸ்பதி தாரா கர்ப்பவதியாக இருப்பதைக் கண்டு அதை வெளியாக்கி விட்டு இங்கு வா, மற்ெருருவருடைய கர்பத்தைத் தரித்துக் கொண்டு என்னிடம் வரக்கூடாது என்ருர்.

41. அப்பொழுது தாரை ஒரு மூங்கில்புதர்கடியில் தனது கர்ப்பத்தைத் விழச் செய்துவிட்டு வந்துவிட்டாள். அந்தக் குழந்தை உற்பத்தியானவுடன் எல்லாத் தேவதைகளுடைய சரீரமும் சாந்தியிழந்து போயிற்று.

42. பிறகு ப்ரதான தேவதைகளெல்லாம் ஒன்று கூடி தாரையையழைத்து உண்மையைச் சொல்லும்படிக் கேட்டனர். அதாவது அந்த கர்ப்பம் ஸோமனுடையதா? அல்லது ப்ருஹஸ்பதியினுடையதா என்று கேட்டனர்.

43. இப்படி தேவர்கள் கேட்ட பிறகும் கூட தாரை லஜ்ஜையினுல் பேசாமல் தலை குனித்து கொண்டாள்.

44. அப்பொழுது அந்த அதிதேஜஸ்ஸுள்ள குமாரன் அவளுக்கு சாபம் கொடுக்கத் தொடங்கினுன். அப்பொழுது ப்ரம்மா அந்தக் குமாரனைத் தடுத்து அந்த ஸந்தேஹத்தை விளக்கக் கூறினுர்.

45. அப்பொழுது தாரா அந்த கர்ப்பம் சந்திரனுடையது என்பதை உரைத்தாள். இதற்குப் பிறகு

ப்ரம்மாவும் சந்திரனுமாகத் தாரையின் கர்ப்பத்திலுதித்த அந்தக் குழந்தையின் புத்திசாலித் தனத்தைப் பார்த்து வியந்து புதன் என்று பெயரிட்டனர்.

46. பிறகு புதன் எல்லா தேஜஸ்ஸுடன் (எல்லா தேவதைகளை விட) பலமும் புத்தியுமாக இருப்பதைக் கண்டு எல்லாரும் அதிசயித்தனர். அப்பொழுது அந்த புதன் தபஸ் செய்ய வேண்டும் என்ற நிச்சயத்துடன் சந்திரனிடத்தில் அனுமதி கோரி வந்தான்.

47. விஸ்வேஸ்வரரால் பாலிக்கப்பட்ட நிர்வாண முக்தியையளிக்கவல்ல காசியையடைந்தான். அங்கு தனது பெயரால் புதேஸ்வரலிங்கம் என்று ஒரு லிங்கத்தை ஸ்தாபநம் செய்தான்.

48. பாலசந்திரனைத் திலகமாக அணிந்தவருமான உமாபதியை ஹ்ருதயத்திலுல் த்யானித்துக் கொண்டு பதினுயிரம் வருஷம் கோர தபஸ் செய்தான்.

49. பிறகு விச்வபாவனஞன விஸ்வநாத பகவான் புதேஸ்வரர் என்ற மஹாலிங்கத்தில் ஆவிர்பவித்தார்.

50. அந்த ஜ்யோதிரூபமான மஹேச்வரர் புதனிடம் ஏ மஹா புத்திசாலியே! தேவதோத்தமஞன புதனே; வேண்டும் வரத்தைக் கேள் என்ருர்.

51. ஏ! ஸௌம்யா! உன்னுடைய தபஸ்ஸினுலும், இந்த லிங்கத்தைப் பூஜித்ததினுலும் நான் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். உனக்குக் கொடுக்கக் கூடாதது என்று என்னிடம் ஒன்றுமில்லை. வேண்டும் வரம் தருகிறேன் என்ருர்.

52. புதனும் வாடும் பயிருக்குப் பெய்யும் மழையைப் போன்ற அமுதசுரபியை வர்ஷிக்கும் மேகத்திற்கு சமானமான அந்த கர்ஜனையைக் கேட்டு

53. கண்களைத் திறந்து பார்க்கும்பொழுது லிங்கத்தில் சந்திர சேகர பகவான் ஆவிர்பவித்திருப்பது கண்டான்.

*54,55,56. உடனே புதன் இவ்வாறு ஸ்துதி செய்யத் தொடங்கினன். ஏ பவித்ரா! ஆத்ம ஸ்ரூபா! உமக்கு நமஸ்காரம். ஜ்யோதி! உமக்கு நமஸ்காரம்; விஸ்வரூபா! விஸ்வஸ்வரூபா! உமக்கு நமஸ்காரம். ரூபாதீதரே! உமக்கு நமஸ்காரம், ஹே ப்ரணதார்த்திஹர! உமக்கு நமஸ்காரம், ஏ சிவஸ்வரூபா! ஏ ஸர்வ சாரணஸ்வரூபா! உமக்கு நமஸ்காரம், ஏ தயாளோ! உமக்கு நமஸ்காரம். ஏ! பக்தி மாத்ரமே லக்ஷ்யமாக உடையவரே! உமக்கு நமஸ்காரம். ஏ! தபஸ்ஸின் பலனையளிக்கும் தபோரூபா! உமக்கு நமஸ்காரம்;*

*57. ஏ சம்போ! சிவா ஹே சிவாகாந்தா! ஸ்ரீகண்டா, சூலபாணே! சசிசேகரா! ஸர்வேசா! ஈசா! சங்கரா! ஈஸ்வரா! தூர்ஜடே!,*

*58. பிநாகபாணே! கிரீசா! சிதிகண்டா! ஸதாசிவா! தேவ தேவா! உங்களுக்கு நமஸ்காரம்.*

*59. ஏ ஸ்துதிப்ரிய! எனக்கு ஸ்துதிக்கத் தெரியாது. ஏ மஹேஸ்வர! உமது சரணாரவிந்தங்களில் எனக்கு இடையூறில்லாத பக்தியைத் தாருங்கள்.*

*60. ஹே ஈஸ்வர! தாங்கள் என்னிடம் க்ருபையுடையவராக இருப்பீர்கள். இந்த வரத்தைத் தாருங்கள், ஏ கருணாம்ருத ஸாகர! நான் தங்களிடம் வேறு வரங்கள் கேட்கவில்லை.*

*61. மஹாதேவர் புதன் இவ்வாறு துதிப்பதைப் பார்த்து ஸந்தோஷமடைந்து கூறினர் :- ஏ ரோஹிணீ புத்ர! (சந்திரனுக்குப் புதனே முதலாவது குழந்தை. (சந்திரனுடைய மனைவிகளான இருபத்திஏழு பேரில் ரோஹிணிக்கு மாத்திரம்தான் குழந்தை பிறந்திருக்கிறது. அதைப் புஷ்டியாக்குவதற்காகத்தான் ரோஹிணீ புத்ரா! என்றார். ஏ மஹாபாகா, ஸௌம்யா, மதுரமாகப் பேசுபவனே புதனே!*

*62. நக்ஷத்ர லோகத்திற்கப்பால் உன்னுடைய லோகமிருக்கும்; அதில் மற்ற க்ரஹங்களைவிட அதி உத்தமமான பூஜையைப் பெறுவாய்.*

*63. உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கம் எல்லோருக்கும் அதிபுத்தியைக் கொடுக்கக் கூடியதாயும், துர்புத்தியை நாசம் செய்வதாயும் உன்னுடைய லோகத்தில் வஸிக்கும் யோக்யதையைக் கொடுக்கட்டும்.*

*64,65. இவ்விதம் சொல்லி சம்புபகவான் லிங்கத்திலேயே மறைந்தார். புதனும் தன்னுடைய உலகத்துக்குச் சென்றான்.*

*காசியில் புதேஸ்வர மஹாலிங்கத்தைப் பூஜித்தால் அடையும் புத்தியினால், நரர்கள் ஆழம் காணமுடியாத ஸம்ஸார ஸாகரத்தில் வீழ்ந்து மூழ்கமாட்டார்கள். ஸாதுஜனங்களுடைய நேத்ரத்தில் சந்திரனுக்குத் துல்யமான காந்தியடைந்து, அழகிய உடலோடு கூட புதலோகத்தில் வஸிப்பார்கள்.*

*சந்த்ரேச்வரருடைய கிழக்குப் பக்கத்தில் இருக்கும் புதேச லிங்கத்தைத் தரிசனம் பண்ணினால் ஒருவரும் அந்திமகாலத்தில் புத்தியை இழக்கமாட்டார்கள்.*

*இப்பொழுது விஷ்ணு பக்தர்கள் புத லோகக் கதையைச் சொல்லி கொண்டிருக்கும் பொழுது விமானம் அதி உத்தமமான சுக்ர லோகத்தைப் போய்ச் சேர்ந்தது.*

*இவ்விதம் கந்தபுராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான நக்ஷத்ரலோகம், புதலோக வர்ணனம் ஆகிய பதினைந்தாம் அத்யாயம் முற்றிற்று.*



# அத்யாயம் 16

*மஹாபுத்திசாலியான சிவசர்மாவுக்கு, விஷ்ணுகணங்கள் கூறினார்கள்- இந்த சுக்ரலோகம் மிகவும் அற்புதமானது, இங்கு தைத்ய தானவர்களாகிய கவிஞர்களின் குரு வஸிக்கிறார். இந்த சுக்ர பகவான் அதிக கஷ்டத்தைக் கொடுக்கக்கூடிய வைக்கோலின் ஈகையை மாத்திரம் குடித்துக்கொண்டு ஆயிரம் வருஷ பர்யந்தம் மஹாதேவனை ஆராதித்து ம்ருத ஸஞ்ஜிவிநீ என்ற மஹாவித்யையை அடைந்தார்.*

*மிகவும் கடினமான இந்த வித்யையை தேவாசார்யரான ப்ருஹஸ்பதி பகவான் கூட அறியமாட்டார், இந்த வித்தையை மஹாதேவரும், பார்வதியும், கணேசனும், கார்த்திகேயனும் மாத்திரம்தான் அறிவார்கள்.*

*சிவசர்மா கேட்டார், இவர் யார்? சுக்ரர் என்று ப்ரசித்தி பெற்றவரா? அவருடைய உத்தம லோகமா இது? அவர் எதற்காக ம்ருத்யுஞ்ஜயரிடம் இருந்து ம்ருதஸஞ்ஜீவினி வித்தையைக் கற்றார்?*

*இரண்டு பேர்களுக்கும் என்னிடம் ப்ரீதியிருந்தால் சொல்லுங்கள் என்றார். பிறகு அந்த விஷ்ணு தூதர்களிருவரும் சுக்ரதேவனின் மேன்மையான கதையைச் சொல்லத் தொடங்கினார்கள்.*

*இதை ச்ரத்தையோடுக் கேட்டால் அகால மரணம் ஏற்படாது.*

*கணங்கள் கூறினார்கள் :- எளிதில் பிளக்க முடியாத கிரிவ்யூஹம், வஜ்ரவ்யூஹம் ஆகிய இரண்டிற்கும் யஜமானர்களான அந்தகன், அந்தகாரி இருவருக்கும் யுத்தம் ஏற்பட்டது.*

*ஒரு தடவை அந்தகன் ரணபூமியிலிருந்து ரதத்தில் கிளம்பி சுக்ரதேவரைப் பார்க்க வந்தான். அவரை வணங்கிவிட்டுக் கூறினான்-*

*பகவன்! நாங்கள் தங்களை ஆச்ரயித்தவர்கள், தங்களுடைய க்ருபையினால் ருத்ரர், உபேந்திரர் ஆகிய கணங்களை அவர்களுடைய அநுசரர்களுடன் கூட துரும்புக்கு ஸமமாய் மதித்து வந்தோம்.*

*குருவே! தங்களுடைய அனுக்ரஹத்தினால் தேவதைகள் ஸிம்மத்தைக்கண்ட யானையைப் போலும் கருடனைக் கண்ட ஸர்ப்பம் போலும் பயப்படுகிறார்கள்.*

*தாபத்தால் தவிக்கும் ஜனங்கள் குளத்தில் இறங்குவதைப் போல தைத்யதானவ கணங்கள் தேவர்களுடைய முதற்படையைக் கலங்கச் செய்து விட்டு பேதிக்க முடியாத வஜ்ரவ்யூஹம் வஹித்து அதனுள் ப்ரவேசித்தார்கள்.*

*பிராம்மணேந்த்ரா! நாங்கள் எல்லோரும் தங்களை ரக்ஷகராக அடைந்து பர்வதங்களைப் போன்ற சலியாத மனதோடு கூடி கோரயுத்தத்தில் ப்ரவேசித்து சங்கையில்லாமல் உலாவிக் கொண்டிருக்கிறோம்.*

*நாங்கள் எல்லோரும் புத்திரர்களுடன் கூடவிச்வாசத்துடனும் ச்ரத்தையுடனும் ஸுகத்தைக் கொடுக்கக் கூடிய தங்கள் சரணங்களின் சிச்ரூஷையில் இரவும் பகலுமாக ஈடுபட்டிருந்தோம்.*

*ஏ! விப்ரா! தங்களைச் சரண் அடைந்த எங்களை எல்லாவிதத்திலும் ரக்ஷியுங்கள். பாருங்கள், குண்டன், துண்டன், குஜம்பன், ஜம்பன், பாக்கன், கார்த்தஸ்வரன், விபாகன், பாகஹாரி, சந்த்ரதமனன், சூரன், வீரன், அமரவிதாரணன்-15.*

*இவர்களை ம்ருத்யுவை ஜயித்த கோரமான (ப்ரமதகணங்கள்) சிவகணங்கள் ஆக்கிரமித்து பாமர ஜனங்கள் சந்தனமரத்தை எப்படி அனாயாஸமாக வெட்டி வீழ்த்துகிறார்களோ,அப்படி எங்களை வீழ்த்துகிறார்கள்.*

*பூர்வ காலத்தில் தாங்கள் புகையை மாத்திரம் குடித்து ஆயிரம் வருஷம் எந்த மேலான தபஸ்ஸைச் செய்து பலன்*

அடைந்தீர்களோ அதனை வெளியிடும் ஸமயம் வந்துவிட்டது

இப்பொழுது அந்த வித்தையினுடைய பலனை உபயோகித்து காயமடைந்த அசுரர்களை, எழுப்புவதை ஸகல பூதகணங்களும் தைத்யர்களின் உருவில் பார்க்கட்டும்.

ஸ்திரபுத்தியுடைய பார்க்கவமுனி அந்தகனுடைய இந்த வசனத்தைக் கேட்டுக் கொஞ்சம் சிரித்துக்கொண்டே அந்த தானவேசனிடம் கூறினார்-

ஏ! தானவராஜன்! நீ கூறியது முற்றிலும் உண்மை. தானவர்களுக்கு வேண்டியே நான் இவ்வித்தையைக் கற்றேன்

ஆயிரம் வருஷ காலங்கள் மிகவும் ஸஹிக்க முடியாததான உமிப்புகையைப் பானம் செய்து நான் பந்து ஜனங்களுக்கு மிகவும் ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய இந்த வித்தையை மஹா தேவரிடமிருந்து அடைந்தேன்.

நான் இந்த வித்தையினால் ரணஸ்தலத்தில் ப்ரமத (பூத) கணங்களினால் காயமடைந்த அசுரர்களை வாடியபயிருக்கு உயிரூட்டும் மேகத்தைப்போல எழுப்பி நிற்க வைப்பேன்.

ராஜன்! இதே வேளையில் நாளை நீங்கள் தூங்கி எழுந்தவுடன் இந்த இறந்த தானவர்களைக் காயமில்லாமலும் வேதனையில்லாமலும் ஆரோக்யமாக எழுந்து நிற்பதையும் காண்பீர்கள்.

கவி தைத்ய அரசரிடம் இவ்வாறு கூறிவிட்டு ஒவ்வொரு இறந்து போன அரசர்களையும் உத்தேசித்து மந்திரித்து ஜபிக்கத் தொடங்கினான்.

ஸம்பிரதாயங்கள் சிதில மடைந்து மறதி உண்டானவுடன் திரும்பவும் எப்பவும் அப்யாஸம் செய்வதனால் வேதம் எப்படி ஸ்பஷ்டமாக வருகிறதோ,

*மற்ற காலங்களிலெல்லாம் மறைந்திருக்கிற மழைத் துளிகள், ச்ரத்தையுடன் பிராம்மணர்களுக்குக் கொடுத்த தானம் பெரிய பெரிய ஆபத்துக் காலங்களில் பலனைக் கொடுக்கும் ரூபமாக வருகின்றனவோ, அதுபோலவே இறந்து கிடந்த அஸுரர்கள் தங்கள் தங்கள் அஸ்திரங்களுடன் எழுந்து நின்றார்கள்.*

*துகுண்டன் முதலான மஹா அஸுரர்கள் எழுந்திருப்பதைப் பார்த்துவிட்டு மற்ற அஸுரர்கள் ஜலம் நிறைந்த மேகத்தைப்போல் கர்ஜிக்கத் தொடங்கினார்கள்.*

*சிவகணங்கள் இந்த இறந்ததானவர்கள் சுக்ரனால் மறுபடியும் பிழைத்து எழுந்திருப்பதைப் பார்த்துவிட்டு தங்களுக்குள் ஆலோசனை செய்தார்கள். இந்த ஸமாசாரத்தை நமது மஹா தேவரிடம் கூறவேண்டும் என்று நினைத்தார்கள்.*

*அதன் பிறகு ப்ரமதாதிபதிகள் (சிவகணங்கள்) ஆச்சர்யமான இந்த யுத்த யக்ஞத்தை ஆரம்பித்த பிறகு பார்கவன் என்னும் சுக்ராசாரியரின் இந்த வேலையைப் பார்த்துவிட்டு சிலாதரின் புத்ரனான நந்தி மஹோசரிடம் சென்றார்கள்.*

*அப்பொழுது நந்தி 'ஜெயஜெய' என்று கோஷமிட்டுக்கொண்டு மஹாதேவனிடம் சொன்னார்- மஹாதேவா! இந்த்ராதி தேவர்களை விட மலை போன்ற இந்த சுத்த கர்மத்தை நாங்கள் எல்லா கணநாயகர்களும் செய்தோம்.*

*இதை பார்க்கவன் திடீரென்று ம்ருத சஞ்ஜீவினீ மந்த்ரத்தை ஜபித்து யுத்தத்தில் வீழ்ந்த அஸுரர்களை (சத்ருக்களை) உயிர்ப்பித்து விளையாடி வீணாகச் செய்கிறார். துகுண்டன், குண்டன், குஜம்பன், ஜம்பன், விபாகன், பாகன் முதலிய மஹா அசுரர்கள் இமாலயத்திலிருந்து திரும்பி வந்து இன்று ப்ரமதகணங்களை மிகவும் உபத்ரவித்துக் கொண்டு திரிகிறார்கள்.*

*பார்க்கவன் இப்படியாகத் திரும்பத் திரும்ப அசுரகணங்களை உயிர்ப்பித்துக் கொண்டிருந்தாராஞல், மஹேசா! எங்களுக்கு எப்படி ஜெயம் கிட்டும்? கணநாயகர்கள் எப்படி இளைப்பாறுவார்கள்?*

*ப்ரமதகணங்களின் நாயகரான நந்தித்தேவர் இவ்வாறு கூறினவுடன் ப்ரமதாதி மஹாராஜ் மஹேச்வரன் சிரித்துக்கொண்டு இவ்வாறு கூறிஞர்-*

*ஏ! 'நந்தி' விரைவாகச் சென்று, கழுகு, மாடப்புருவை எப்படி விரைவாகப் பிடிக்கிறதோ - அப்படி அஸுரர்களுக்கு மத்தியில் இருக்கும் அந்த ப்ராம்மணேத் தமரைத் தூக்கி வாரும் என்ருர்.*

*வ்ருஷபத்வஜர் இவ்வாறு கூறினதும் வ்ருஷபசிம்மமான நந்த கர்ஜனை செய்து கொண்டு வெகு வேகமாக எங்கு ப்ருகு வம்ச குலவிளக்கான சுக்ரர் இருக்கிருரோ - அந்த ஸேனையின் மத்தியில் நுழைந்து சென்ருர்.*

*ஸகல அசுரர்களிஞலேயும், பாசம், கட்கம், வ்ருக்ஷம், கற்கள், பர்வதம் இவைகளைக் கையில் எடுத்துக்கொண்டு பாதுகாத்துக் கொண்டிருக்கிற அந்தக் காவிய மணியை தைத்ய கணங்களை அதிரச் செய்து விட்டு பலவானுன நந்தி சரபக்ஷியானையைத் தூக்கிச் செல்வதுபோல வேகமாக தூக்கிக் கொண்டு வந்து விட்டார்.*

*நழுவும் ஆடையுடனும் சிதறும் ஆபரணங்களுடனும் அவிழ்ந்த தலைமயிருடன் நந்தியால் பிடிக்கப்பட்ட சுக்கிரனை விடுவிக்கும் பொருட்டுத் தானவர்கள் சிம்மநாதம் செய்து கொண்டு நந்திக்குப் பின் ஓடத் தொடங்கிஞர்கள்.*

*அப்பொழுது அந்த தானவக் கூட்டம் மேகமண்டலத்தைப் போல் நந்திகேஸ்வரரின் நான்கு பக்கமும் சூழ்ந்து கொண்டு அவர் மேல் வஜ்ரம் கட்கம், கோடாரி அநேகவிதமான சக்ரங்கள் பாஷாணம்,*

கம்பஞுஸ்திரம் இவைகளை வேகமாக வர்ஷிக்கத் தொடங்கினர்.

அந்த கணுதிபஞுன நந்தி நடந்து கொண்டிருக்கும் இந்த மஹா யுத்தத்தில் சத்ரு ஸைன்யங்களை வருந்தச் செய்து முகத்திலிருந்து அக்னியை வர்ஷித்து நூற்றுக்கணக்கான அஸ்திரங்களை எரித்துவிட்டு பார்கவரைத் தூக்கிக் கொண்டு மஹாதேவருக்கு முன்ஞல் வந்தார்.

உடனே சிவனிடம் விண்ணப்பித்துக் கொண்டார். இதோ அந்த சுக்ரன் என்ருர்.

அப்பொழுது தேவதேவன் பவித்ரமான பக்தர்களின் நைவேத்யத்தை க்ரஹிப்பதுபோல் சுக்ரனை வாங்கிக் கொண்டார்.

அப்பொழுது அந்த பூதபதி ஒன்றுமே கூருமல் பழத்திற்கு சமானமாக அந்த சுக்கிரனை வாயில் போட்டுக் கொண்டார். அப்பொழுது அந்த எல்லாதைத்யர்களும் ‘ஆஹா ஹீ ஹீ, ஹோ ஹோ, என்று உச்ச ஸ்வரத்தில் கத்தத் தொடங்கிஞர்கள்.

கிரிஜாபதி சுக்ரனை விழுங்கியவுடன் அசுரகணங்கள் ஜயத்தில் நம்பிக்கையிழந்தனர். அப்பொழுது தும்பிக்கையில்லாத யானை போலவும், கொம்பில்லாத ரிஷபத்தைப் போலவும் சரீரம் இல்லாத உயிர்கூட்டத்தைப் போலவும் அத்யயனம் இல்லாத பிராம்மணர்களைப் போலவும் முயற்சி இல்லாத பிராணிகள் எப்படி பாக்யமில்லாமல் போகிறதோ; அதைப் போலவும்.

பதியையிழந்த ரமணியைப் போலவும் இறகை இழந்த பாண ஸமூஹங்களைப் போலவும், புண்ணியம் க்ஷீணித்த ஆயுளைப் போலவும் நடத்தை கெட்டவனுடைய சாஸ்த்ராதி படனத்தைப் போலவும்,

ஒரு வைபவ சக்தியில்லாவிட்டால், அதாவது பாக்யமில்லா விட்டால் செய்யும் காரியமெல்லாம் நிஷ்பலமாகுமே அது போல் அந்த அஸுரக் கூட்டம் பிராம்

*மனோத்தமரில்லாத (சுக்ரனில்லாமல்) ஜயித்ததால் நம்பிக்கையிழந்தவர்களானார்கள்.*

*நந்தி சுக்ரனைத் தூக்கி வந்ததும் ஹாலாஹல விஷத்தைக் குடித்தவரான பரமசிவன் அவரை விழுங்கியதும் யுத்தத்தில் உற்சாகம் இழந்த அசுரகணங்கள் வருத்தத் தொடங்கினார்கள்.*

*அவர்கள் அப்படி உற்சாகமிழக்கவே, அந்தகன் கூறினான்- மிகுந்த பராக்ரமம் உள்ள நந்தியால் நாம் ஏமாற்றப்பட்டு விட்டோம். இப்பொழுது நாம் எல்லோரும் சரீரத்தை இழந்த ப்ராணனைப்போல தைர்யம், வீர்யம், உற்சாகம், பராக்ரமம் இவைகளெல்லாவற்றையும் ஒரேடியாக பார்க்கவனுடன் இழந்து விட்டோம். நமது குலத்துக்கு பூஜ்யரானவரும் விப்ரகுலச்ரேஷ்டரும், ஸர்வ ஸமர்த்தரும் ஆபத்து ஸமயங்களில் ரக்ஷிப்பவருமான, நமது ஒரே ஒரு குருவான அவரை நம்மால் பாதுகாக்க முடியவில்லையே - ஐயோ இழிவு இழிவு.*

*எது நடந்ததோ அது நடந்து விட்டது. இப்போது தைரியத்தைக் கையில் பிடித்துக்கொண்டு சத்ருக்களுடன் கூட யுத்தம் செய்வோம். நான் நந்தியுடன்கூட ஸகலப்ரமத கணங்களையும் கொல்லுவேன்.*

*இன்று இந்த்ராதி தேவர்களெல்லோரையும் அவர்களுக்கு வேறுவழியிலாலாமல் ஆக்கி விட்டு, அவர்களைக் கொன்று, சுக்ர பகவானை - யோகியர்கள் ஜீவனை கர்ம பந்தனத்திலிருந்து விடுவிப்பது போல நாம் சுக்ர பகவானை விடுவிப்போம்.*

*ஒரு கால் அந்தப்பிரபு யோகியானவர் யோக பலத்தினால் சிவனுடைய சரீரத்திலிருந்து வந்து விட்டாரானால் மீதியிருக்கும் நம் எல்லோரையும் காப்பாற்றுவார்.*

*அந்தகனுடைய இந்த வார்த்தைகளைக்கேட்டு தானவ கணங்கள் மேகத்தைப்போல கர்ஜித்துக் கொண்டு நமக்கு*

*மரணம் நிச்சயம் என்ற உறுதி கொண்டு சிவகணங்களை உபத்ரவிக்கத் தொடங்கினார்கள்.*

*ஆயுள் இருக்கும் மட்டிலும் ப்ரமதகணங்கள் நம்மைக் கொல்ல முடியாது. பின் நமது ஆயுள் குறைந்து விட்டால் நமது ஸ்வாமியை யுத்தகளத்தில் விட்டுவிட்டு ஓடுவதில் என்ன பிரயோஜனம்?*

*மதிக்கக் கூடிய ஜனங்கள் தங்கள் யஜமானரை ரணகளத்தில் விட்டு விட்டு ஓடிப் போவார்களானால் அந்ததாமிஸ்ர நகரத்தில் விழுவார்கள்.*

*நமக்குக் கிடைக்கும் சுகீர்த்தியை அபகீர்த்தியாக மலினமாக்கி விட்டு நாம் யுத்த களத்திலிருந்து ஓடுவோமானால் இந்த லோகத்திலும், பரலோகத்திலும் நமக்கு ஸுகம் கிடையாது.*

*புனர் ஜன்மமாகிற மறுபிறவி அழுக்கை நீக்கும் ரணக்ஷேத்ரத்தில் அஸ்த்ரதாரை, (சரவர்ஷம்) என்னும் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வோமானால் அவர்களுக்கு வேறு தீர்த்த ஸ்நானத்தினால் என்ன பிரயோஜனம்?*

*அஸுர கணங்கள் இப்படி யோஜித்து யுத்தத்திற்கு ஆயத்தமாக தனுஸ்ஸை டங்கார சப்தம் செய்து யுத்தத்தில் சிவகணங்களை நசுக்க ஆரம்பித்தார்கள்.*

*அங்கு சிவகணங்களும் தைத்யகணங்களும் ஒருவருக்கொருவர் பாணம், வாள், வஜ்ராயுதங்கள், கடகட என்னும் சப்தம் செய்யும் பீரங்கிகள், புசுண்டில கேடயங்கள் சக்தி (வேல்) ஈட்டி, கோடரி*

*கட்கம், பட்டீசம், சூலம், தடிகள், உலக்கைகள் இவைகளால் அடிக்கு ப்ரதி அடி கொடுத்துக்கொண்டு கோரமான யுத்தம் செய்தார்கள். வேகமாய் இழுக்கப்பட்ட தனுஸ்ஸின் சப்தம், விர்ரென்று இழுக்கும் பாணங்களுடைய சப்தம், பிண்டி, பாலம் புசுண்டி இவைகளின் சப்தமும், சிம்மநாதமுமாக கோரமாக சப்தம் போட்டனர்.*

தனுஷ்களின் டங்காரமும் யானைகளின் கர்ஜனையும் குதிரைகளின் கனைப்பும் ஒரே கோலாகலமாக சப்தத்தை எழுப்பின.

ஆகாயத்துக்கும் பூமிக்கும் மத்தியில் எதிரொலி எழும்பிற்று. கோழைகளுக்கும், வீரர்களுக்கும் மயிர் சிலிர்ப்பு உண்டாயிற்று. இரண்டு பக்கத்து ஸைன்யங்களுடைய காதுகளும் குதிரைகள், யானைகள் இவைகள் போடும் சப்தத்தினுல் பிளந்தன. கொடிகள் ஆலவட்டங்கள் எல்லாம் விழத் தொடங்கின. கொஞ்சம் நஞ்சம் அஸ்திரங்கள் எல்லாம் பொடிந்தும், தகர்ந்தும் விழுந்தன.

குதிரை, யானை, ரதம் இவைகளெல்லாம் ரதத்தார் வீழ்ந்தனுல் சித்திரத்தில் எழுதியதுபோல் விளங்கின. எல்லோரும் தாஹத்தினுல் மூர்ச்சையடையத் தொடங்கினுர்கள். அப்பொழுது அந்தகன் பார்த்தான். சிவகணங்களால் தன்னுடைய சேனைகள் இங்கும் அங்கும் ஓடுவதைப் பார்த்துவிட்ட, தானும் ரதத்தில் ஏறி விரட்டத் தொடங்கினுன்

அப்பொழுது சிவகணங்கள் வஜ்ராயுதத்தால் தாக்கப்பட்ட பர்வதங்கள் போலும், கொடுங்காற்றினுல் ஜலம் இல்லாத மேகம் போலவும், அந்தகாசுரனுடைய பாணங்களினுல் நஷ்டமடையத் தொடங்கின.

அந்த சமயத்தில் அந்தகன் போகிறவர்களையும் வருகிறவர்களையும், தூரத்தில் இருப்பவர்களையும், அருகில் இருப்பவர்களையும் ஒவ்வொருவரையும் நன்ருகப் பார்த்து ஒவ்வொருவருடைய ரோமக்காலுக்கு சரியாக ஒவ்வொரு பாணமாக விடத் தொடங்கினுன்.

மஹாபலசாலிகளான கணேசர், கார்த்திகேயர். நந்தி, ஸோம நந்தி, நைகமேயர், ஸாஹகன், விசாகன் ஆகிய உக்ர வீரர்களும் த்ரிசூலங்களினுலும், பாணங்களினுலும் வர்ஷ தாரையையாகப் பொழிந்து அந்த அசுரனை அந்தகன் ஆக்கிவிட்டார்கள்.

*அதன் பிறகு இருதரப்பு சைன்யங்களுடைய கோலாஹலமான சப்தங்கள் வானையளாவின. அந்தப் பெரிய சப்தத்தினுல் சிவனுடைய உதரத்தில் இருக்கும் சுக்ரன்*

*வெளியில் போவதற்கு விரும்பி எங்கேயாவது த்வாரம் இருக்கிறதா என்று சுற்றி சுற்றிப் பார்த்து ஆச்ரயமில்லாதக் காற்றைப் போல சுற்றி சுற்றி வந்தார். அப்படி வரும்பொழுது அந்த ருத்ரருடைய வயிற்றில் பாதாளத்ததையும் சேர்த்து ஏழு லோகத்தையும் கண்டார்.*

*ப்ரம்மா, நாராயணன், ஆதித்யன், இந்திரன் அப்ஸரஸ்ஸுகளுடைய சித்ர விசித்ரமான உலகங்களையும், இப்பொழுது நடக்கும் அசுரசிவ கணங்களுடைய யுத்தத்தையும் பார்த்தார். இந்த விதமாக மஹாதேவரின் வயிற்றில் நூறு வருஷ பரியந்தம் - சுற்றிச் சுற்றி நான்கு பக்கங்களில் பார்த்தும் கூட வெளியில் செல்வதற்கு ஒரு சிறு த்வாரம் கூட அவனுல் கண்டுபிடிக்க முடியவில்லை. பாறையுள்ள துளையைப் பார்க்க முடியுமா? கபடனின் நெஞ்சை எப்படி ஆழம் காண முடியாதோ, அதுபோல மஹாதேவரின் வயிற்றிலிருந்து வெளிவர ஒரு துவாரம் கூட சுக்ரனுல் பார்க்க முடியவில்லை.*

*அதன் பிறகு பார்க்கவன் சிவயோக பலத்தினுல் சிவனுடைய விர்யமாகப் பரிணமித்து; மஹாதேவனை நமஸ்கரித்தார்.*

*ஏ ப்ருகு நந்தனு! நீ சுக்லரூபமாக வந்தாய். அதனுல் உன் பெயர் இனிசுக்ரன் என்றிருக்கட்டும். நீ இப்பொழுது எனது வீர்யத்திலிருந்து வந்ததால் எனது புத்ரனுகிருய் நல்லது. இப்போது நீ போ, சுக்ரன் வயிற்றிலிருந்து வெளி வந்தபொழுது மஹாதேவன் மிகவும் ஸதோஷப்பட்டார். ஏனென்ருல் இந்தப் பிராம்மணன் வயிற்றில் சுற்றி சுற்றி வந்து தன் வயிற்றிலேயே இறந்து விட்டால் ப்ரம்மஹத்தி தோஷமாகுமே. மஹாதேவர் இப்படிக் கூறியவுடன் சூரியனைப்போல் பிரகாசிக்கின்ற சுக்ர பகவான் இருண்ட*

மேகத்தினுள் சந்திரன் ப்ரகாசிப்பதுபோல் தைத்ய சேனை மத்தியில் ப்ரவேசித்தார்.

தானவ ஸேனைகள் அதிகாலையில் சூர்யோதயம் ஆனது போலவும், சந்திரன் உதயமானதும் அலைகள் மாலைகளாகவுடைய ஸமுத்ரம் கோஷிப்பது போல் கோஷமிட்டார்.

அந்தகனும் அந்தகாந்தகனும் சிவகணங்களுடன் யுத்தம் பண்ணின சமயம் பார்க்கவநந்தனன், இந்த விதமாக சுக்ரன் என்ற பெயர் பெற்றான்.

ஓ 'ப்ராம்மணா'!! எந்த விதமாக சுக்ரன் சிவனுடைய அனுக்ரஹத்தினால் ம்ருதஸஞ்ஜீவினி என்ற வ்ருத்தாந்தத்தைச் சொல்கிறோம் என்று விஷ்ணு பக்தர்கள் கூறினார்கள்.

பூர்வ காலத்தில் ப்ருகு நந்தனன் என்ற சுக்ரபகவான் அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜம், ஜராயுஜம் இந்த நான்குவித பிராணிகளுக்கும் கதியைக் கொடுக்கக்கூடிய வாராணஸிபுரி சென்று சிவலிங்கத்தைப் ப்ரதிஷ்டை செய்து அதற்கு முன்னால் கிணறும் தோண்டி வைத்து அதற்கு முன்னால் பிரபு விஸ்வேஸ்வரரைத் தீவிரமாக த்யானம் செய்து கொண்டு நெடுநாட்கள் வரை தபஸ் செய்தார். ராஜ செம்பகம், செம்பகம், அரளி, இருவாக்ஷி பிச்சி வெண்தாமரை, செந்தாமரை, முல்லை, கதம்பம், வில்வம், ஸிந்தூரபுஷ்பம், பலாசபுஷ்பம், அசோக புஷ்பம், புன்னாகபுஷ்பம், நாககேசரபுஷ்பம், சிறுமல்லிகை, பாடலிபுஷ்பம், ரோஜா, கொடிசம்பகம், நவமல்லிகை, இருவாக்ஷி, மந்தாரம், துளஸி, மகிழம்பூ, தமனகம், பாரிஜாதம், மாம்பூ; தேவகாந்தாரி, பெரிய வில்வம், அருகம்புல், தமகம், ஸால புஷ்பம், தேவதாரு புஷ்பம், அரளி முதலியன அன்னிய விதமான நூற்றுக்கணக்கான விதம்விதமான புஷ்பங்கள், தளிர்களினால் ஒவ்வொன்றாகப் போட்டு சங்கரரை அர்ச்சித்துப் பூஜை புரிந்தார்.

அருகம்புல், ஜலம், பஞ்சாம்ருதம், சந்தனம் இவைகளால் மஹாதேவருக்கு லக்ஷம் தரம் அபிஷேகம் செய்தார். பிறகு தேவேசருக்கு வாசனைத்ரவ்யங்கள் ஸமர்ப்பித்து சந்தநாக முதலிய த்ரவ்யங்களை மிகவும் பயபக்தியுடன் ஆயிரம் தடவை தடவினார். பிறகு நிருத்யம், கீதம் முதலியவைகளை ஸமர்ப்பித்து, வேதோக்த ஸ்துதிகளாலும், அன்னிய ஸஹஸ்ரநாமங்கள் முதலிய நானாவித ஸ்துதிகளினாலும் மிகவும் போற்றினார்.

சுக்ரன் இந்தவிதமாக மஹாதேவனை ஐயாயிரம் வருஷங்கள் வரை ஆராதித்தார்.

இவ்வளவு செய்தும் கூட மஹாதேவர் ப்ரஸன்னமாகி தரிசனம் கொடுக்கவில்லை. இதைப் பார்த்துவிட்டு வேறுவிதமான கஷ்ட ஸாத்யமான கோர நியமத்தை அனுஷ்டிக்கத் தொடங்கினார்.

இந்திரியக் கூட்டங்களுடன் கூட சித்தத்தை சஞ்சலம் என்னும் ஜலத்தினால் பாவனாரூபமாகக் கரைத்துவிட்டு அடிக்கடி அலம்பி,

நிர்மலசித்த ரூபமான ரத்னத்தைப் பினாகி தேவருக்கு அர்ப்பணித்து ஸஹஸ்ரவருஷம் வரைக்கும் உமிப் புகையைக் குடித்துக் கொண்டு விரதம் இருந்தார். அப்பொழுது மஹாத்மா பார்க்கவரிடம் மிகவும் ஸந்தோஷமடைந்தார்.

ஸாக்ஷாத் தாக்ஷாயணியின் பதி விரூபாக்ஷர் ஆயிரம் சூரியர்களுடன் அதிக தேஜஸ்ஸுடன் அந்த லிங்கத்தில் ஆவிர்பவித்து ஏ பார்க்கவா, 'நான் ஸந்தோஷமடைந்தேன். வேண்டியவரம் கேள்' என்றார்.

கமலத்தைப் போன்ற அழகிய கண்களையுடைய அந்தப் பிராம்மணன் சிவபெருமானின் இந்த வார்த்தைகளைக் கேட்டு புளகாங்கிதமடைந்து, மலர்ந்த கண்களுடையவராய்,

*சென்னிமேல் கரங்குவித்து ஜெயஜெய என்ற ஸந்தோஷத்துடன் அஷ்டமூர்த்தியான மஹா தேவரைஸ்தோத்திரம் செய்யத்தொடங்கிஞர்.*

*ப்ருகு நந்தன் கூறிஞர். 'ஏ ஜகதீசா' உங்களுடைய இந்த ஜோதிப்ரகாசத்திஞல் அந்தகாரத்தை விலக்கி நிசாசரர்களுக்கும் இஷ்ட வஸ்துக்களே த்வம்ஸம் பண்ணினீர்கள். த்ரிபுவனத்துக்குள் ஹிதம் செய்யும் பொருட்டு தினமணியின் உருவமாக ஆகாச மண்டலத்தில் ஜ்வலிக்கிறீர்கள். ஆதலால் தங்களுக்கு நமஸ்காரம். ஹே அம்ருதத்திஞல் பரிபூர்ணமான சந்திர ஸ்வரூபரே, தாங்களே உலகின் அந்தகாரத்தை விலக்கி எல்லேயில்லா தேஜஸ் மூலமாக குமுத மலருக்கும் ஸமுத்ரத்திற்கும் ஸந்தோஷத்தையளிக்கிறீர்கள். அதீதமான சோபையுடன் கூடினவரே! உமக்கு நமஸ்காரம். ஏ புவனஜீவஞ! தாங்களே எப்பொழுதும் சலிக்கும் வாயுஸ்வரூபமாக வேதமார்கத்தில் உபாஸிக்கப்படுகிறீகள். தாங்களில்லாமல் உலகில் எப்படி ஜிவிக்க முடியும்?*

*ஏ அனம்ர ப்ரபஞ்சத்தை உத்தண்டமாக அழிக்கும் தொழில் செய்பவரே! ஸர்வப்பிராணிகளேயும் வர்த்திக்கச் செய்பவரே! ஸர்ப்ப குலத்துக்கும் ஸந்தோஷம் அளிப்பவரே, தங்களுக்கு நமஸ்காரம்.*

*உலகத்தின் ஒரே பாவன மூர்த்தியே! ஏ அம்ருதமே, ஜகத்தின் அந்தராத்மாவே! தங்களுடைய அக்னி சக்தியில்லாமல் இந்த தேவதைகளின் இந்திரியங்களும், பஞ்ச பூதங்களும் ஜதரக்ஷணேகளேயடைய முடியாது. அதஞல் ஏ அக்னிஸ்வரூபா, அக்னியை அளிப்பவனே தங்களுக்குப் பிரதக்ஷிண நமஸ்காரம்.*

*ஏ ஜகத் பவித்ரா! விசித்ரமான அழகான சரித்ரா, தீர்த்தஸ்வரூபா, ராமேஸ்வரா, விஸ்வநாதா! தாங்களே இந்த அத்புத ஸம்ஸாரத்திற்கு, ஸ்நானத்திற்குமம், பானத்திற்குமாக உள்ளேயும் வெளியேயும் இருந்து*

*கொண்டு பவித்ரமாகவும் தூய்மையாகவும் ஆக்குகிறீகள். அதனுல் தங்கள் முன்னிலேயில் தங்கள் காலடியில் வணங்குகிறேன்.*

*ஹே தயாநிதியே, ஆகாச ஸ்வரூபா, தாங்களே உள்ளும் வெளியுமாக ஆகாசத்தையளிக்கிறீர்கள், வெளியிடம் அளிக்கிறீர்கள். அதனுலேயே ஜகத்தானது விகஸித்து இருக்கிறது. தங்களாலேயே இந்த உலகம் மூச்சுவிடுகிறது. தங்களோடு சுபாவத்தினுலேயே இது சுருங்கவும், விரியவும் செய்கிறது. ஆதலால் தங்களுக்கு நமஸ்காரம்.*

*தமோ விநாசகா, ப்ருத்வீஸ்வரூபா விஸ்வநாதா, தாங்களில்லாமல் வேறு யார் இந்த உலகை பாலித்து ரக்ஷிக்கிருர்கள். ஏ கௌரீ பூஜிதா, புஜகபூஷணு, நன்று. சாந்திப்ரதான புருஷர்களில் வேறு யார் ஸ்துதிக்கு பாத்திரராக இருக்கிருர்கள்? அதனுல் பராத்பரா, உங்களுக்கு நமஸ்காரம். யஜமானஸ்வரூபா, எங்கும் ஆத்ம ரூபமாய் இருப்பவனே, தங்களுடைய இந்த உருவம் தொடர்ச்சியாக சராசார உலகில் வ்யாபித்திருக்கிறது. ஒவ்வொரு லிங்க சரீரத்திலும் தாங்கள் சிதாபாஸ ரூபமாக வசிக்கிறீர்கள். அதனுல் பரமாத்ம ரூபா! அஷ்ட மூர்த்தியான தங்களே நான் தினமும் நமஸ்கரிக்கிறேன்.*

*பார்வதியால் வந்திக்கப்படுவரே, வந்தனேயாயிருப்பவரே! ஸர்வ ஜனங்களுக்கும் ஹிதத்தைக் கொடுப்பவரே! பக்த ஜனங்களுக்கு மாத்திரம் எளிதாய் கிடைக்கக் கூடியவரே! ஏ பவா, தாங்கள் ஒவ்வொரு வாக்கின் பொருளுக்கு மத்தியில் அப்பொருள்களுக்கும் அர்த்தத்தைக் கொடுக்கும் பரம் பொருளாக இருக்கிறீர்கள். தங்களுடைய இந்த அஷ்டமூர்த்தி ஸ்வரூபம் ப்ரம்மாண்டங்களிலும் வ்யாபித்து இருக்கிறது. ஆதலால் தங்களுக்கு நமஸ்காரம்.*

*பார்கவர் இந்த அஷ்டமூர்த்தி அஷ்டகஸ்தோத்திரத்தினுல் மஹாதேவருக்கு பிடித்த*

*விதமாக ஸ்துதிசெய்து பூமியில் தலை படும்படி வணங்கினார். மீண்டும் மீண்டும் வணங்கினார்.*

*மஹாதேவர் இவ்வாறு வணங்கிய ப்ராம்மணனைத் தன்னுடைய இரு கர கமலங்களிலும் பூமியிலிருந்து தூக்கி நிறுத்தினார். தன்னுடைய சிரிப்பில் தன்னுடைய பற்களின் காந்தியினாலே திக்கு, எல்லைகளையும் பிரகாசப்படுத்திக் கொண்டு கூறினார். மற்றெவராலும் செய்யமுடியாத இந்த உன்னுடைய உக்ரமான தபஸ்ஸும் லிங்கஸ்தாபனமும், புண்ணியலிங்கத்தின் ஆராதனையும், நிர்மலமான சித்தஸ்வரூபமான காணிக்கையாகக் செலுத்தியது ஆகும்.*

*இந்த அவிமுக்த மஹாக்ஷேத்திரத்தில் உன்னுடைய பவித்ரமான நடத்தையும் உன்னை எனது இரண்டு புத்திரர்களுக்கு ஸமமாக ஆக்கி விட்டன. நீ இந்த சரீரத்தோடு கூடவே என்னுடைய வயிற்றில் பிரவேசித்து, என்னுடைய புருஷேந்திரிய மார்க்கமாக வெளியில் வந்து புத்ரனாகக் கடவாய்.*

*என்னை அண்டியவர்களுக்கு அடைய ஸாத்யப்படாத மற்றொரு வரம் உனக்கு அளிக்கிறேன். இதை ப்ரம்மா, விஷ்ணு இவர்களிடமிருந்துகூட மறைத்து வைத்திருக்கிறேன்.*

*நானே கடுந்தபஸ் பண்ணி அடைந்த ''ம்ருதஸஞ்ஜீவிநீ'' என்ற வித்தை என்னிடம் இருக்கிறது. மந்த்ரரூபமாக அந்த வித்தையை உனக்குத் தருகிறேன் ஏ பவித்ர தபோநிதி! அந்த வித்தையை ஏற்றுக் கொள்ளும் தகுதி உனக்குத்தான் இருக்கிறது.*

*விஸ்வேசனிலும் ஸ்ரேஷ்டமானவனே! யார் யாரை உத்தேசித்தும் இந்த மந்த்ரரூபமான வித்தையை ஒழுங்கான முறையில் ஜபாவ்ருத்தி செய்வாயானால் அவர்கள் அவசியம் பிழைத்தெழுவார்கள்.*

*ஆகாசமண்டலத்தில் உன்னுடைய பிரகாசம் சூரியன், அக்னி மேலும் நக்ஷத்ர கணங்களையும் பின்னடையச் செய்து*

*கொண்டு மிகவும் பிரகாசமாக ஜ்வலிக்கும். அதனால் நீ எல்லா க்ரஹங்களிலும் ச்ரேஷ்டமாக விளங்குவாய்.*

*உன்னுடைய உதயத்தை முன்னிட்டுக் கொண்டு ஸ்திரீ புருஷர்கள் யாத்திரை செய்வார்களேயானல் உன்னுடைய த்ருஷ்டிபட்ட மாத்திரத்தில் அவர்களுடைய எல்லாக் காரியங்களும் நஷ்டமாகிவிடும்.*

*ஏ ஸுக்ருதா! ஆனல் உன்னுடைய உதயத்தில் உலகத்தில் மனிதர்கள் செய்கிற விவாஹாதிகள் முதலான ஸம்ஸ்த சுபகாரியங்களும், அனுஷ்டிக்கும் தர்மங்களும், கர்மங்களும் சுப பலனையடையும்.*

*ஸகல க்ரஹங்களும் மந்தமாகும்பொழுது அந்த க்ரஹங்களில் உன்னுடைய சேர்க்கையால் சுப பலனையளிக்கும். உன்னுடைய பக்த கணங்கள் வீரியமுள்ளவர்களாகவும், ஸந்தான ஸம்பத்தடனும் இருப்பார்கள்.*

*உன்னல் ஸ்தாபிக்கப்பட்ட சுக்ரேஸ்வரர் என்ற நாமம் உள்ள இந்த லிங்கத்தை பூஜிப்பவர்களுக்கு எல்லா ஸித்திகளும் கைகூடும்.*

*ஒரு வருஷம் வரை தக்க வ்ரதம் இருந்து, சுக்ர கிணற்றில் எல்லா க்ரியைகளும் செய்து சுக்ரேஸ்வரரைப் பூஜை பண்ணுகிறவர்கள் அடையும் பலனைக் கேள். அவர்கள் வீர்யம் ஒருக்காலும் மலடாகாது; புத்தர ஸம்பத்துடன் வீர்யவானுகவும், புருஷத்வத்துடன் ஸகல ஸௌபாக்யங்களும் அனுபவிப்பான். அவர்களுக்கு ஒரு விக்னமும் ஏற்படாது. கடைசியில் ஸுகமாக சுக்ரலோகத்தில் வசிப்பார்கள். இந்த வரங்கள் எல்லாம் அளித்துக் கடைசியில் மஹாதேவர் அதே லிங்கத்தில் மறைந்தார்.*

*விஷ்ணு தூதர்கள் கூறினர்கள்: சுக்ரேஸ்வரருடைய பக்தர்கள் சுக்ரலோகத்தில் வஸிப்பார்கள். ஓ பார்க்கவா விஸ்வேஸ்வரருக்குத் தெற்கு பக்கத்தில்*

*சுக்ரேஸ்வரலிங்கம் இருக்கிறது. அதை தரிசித்த மாத்திரத்தில் மனிதர்களுக்கு சுக்ரலோகத்தில் ஸகல மரியாதைகளுடன் வசிக்கும் பாக்யம் கிடைக்கிறது. ஹே மஹாமதே! இப்பொழுது சுக்ரலோகத்தைப் பற்றிக் கூறினோம்.*

*அகஸ்தியர் கூறுவார்: அந்த ப்ராம்மணன் சிவசர்மா இந்த விதமாக சுக்ரலோகத்தின் கதையைக் கேட்டார். அங்கிருந்து செவ்வாய் க்ரஹம் தென்பட்டது.*

*இப்படி ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான சுக்ரலோக கதாவர்ணனமான பதினாறுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 17

*சிவ சர்மா கூறினார்: இரட்டையர்களான தேவர்களே. சுக்ர ஸம்பந்தமான கதையைக் கேட்டேன். இதைக் கேட்ட மாத்திரத்திலேயே எனது இரு காதுகளும் ஸந்தோஷத்தால் நிரம்பின.*

*இப்பொழுது இந்த நன்றாக கண்ணுக்குப் புரிகின்ற நிர்மலமான லோகம் எந்த புண்ணியவானுடையது? இதை எனக்குக் கூறுவதற்கு நீங்கள் முயற்சியுங்கள்.*

*தங்கள் முகத்திருந்து வருகிற அம்ருத துல்யமான வசனங்களை கர்ண ரூபமான தொன்னைகளில் ஏந்திப் பானம் பண்ணும்போது இன்னும் திருப்தி ஏற்படவில்லையே என்று இருக்கிறது.*

*இரு தூதர்களும் கூறினார்கள் ஹே சிவசர்மன்: லோஹிதாங்க பிராம்மணனுடைய லோகம் என்று கூறுவார்கள். இதை மங்கள கிரகம் என்றும் கூறுவார்கள். இவர் எப்படி பூமிதேவியின் புத்ரனாக பிறந்தாரரென்னும் விருத்தாந்தத்தை கூறுகிறோம் கேளும்.*

*பூர்வ காலத்தில் தாக்ஷாயணீ (ஸதி) தேவியின் பிரிவினால் தபஸ் செய்யும் சம்புவின் நெற்றியிலிருந்து ஒரு வேர்வைத் துளி பூமியில் விழுந்தது.*

*அதிலிருந்து பூமியில் இந்த லோஹிதாங்க குமாரன் பிறந்தான். பூமிதேவி செவிலித்தாயாக - அன்பாக இந்தக் குமாரனை வளர்த்தாள்.*

*அதனால் லோஹிதாங்கனுக்கு பௌமகுமாரர் என்ற ஒரு கீர்த்தி வாய்ந்த நாமமும் உண்டு. இதற்குப் பிறகு அந்தக் குமாரன் சிவபுரியில் கடினமான தபஸ் செய்தான்.*

*அந்த இடத்தில் ஜகத்துக்கு ஹிதத்தைச் செய்யும் அஸி, வருணை என்ற இரு நதிகளும் உத்தரவாஹினியான கங்கையில் கலக்கிறது.*

ஸர்வ வியாபகமான பகவான் குறிப்பாக நியமித்த ஸமயம் மரணம் அடைந்தவர்களை முக்தியளிக்கும் பொருட்டு நித்யமே விசேஷ ரூபத்துடன் ஸாந்நித்யமாக இருக்கிறார்.

எந்த இடத்தில் விசுவநாதருடைய அனுக்ரஹத்தைப் பெற்று தேஹமெடுத்த எல்லாப் பிராணிகளும் மரணமடைந்தவுடனே. அம்ருதபதத்தை அடைகின்றனவோ?

எந்த அவிமுக்த க்ஷேத்திரத்தில் ஸாங்க்ய யோகம் மற்றும் நானு ரூபமான வ்ரதாதிகள் இல்லாமலேயே சரீரத்தை விடுபவர்கள் பிறகு ஜன்மம் எடுத்து சரீரத்தைப் பெறமாட்டார்களோ,

இதே காசியில் பஞ்சமுத்ரை என்னும் பெயருள்ள மஹா மஹா பீடத்தில் கம்பலன், அசுவதரன் என்னும் இரண்டு நாகங்களுக்கு வடக்கு பக்கத்தில் அங்காரகன் தன் பெயரால் விதி பூர்வமாக அங்காரக லிங்கத்தை ஸ்தாபித்திருக்கிறார்.

எதுநாள் வரை அவர் சரீரத்திலிருந்து எரிகிற நெருப்பு ஜ்வாலை வெளிப்படவில்லையோ அதுவரை அந்த மகாத்மா தபஸ் செய்து கொண்டிருந்தார்.

இதனால் எல்லா உலகங்களிலும் அவர் அங்காரகன் என்னும் பெயருடன் பிரஸித்தியடைந்தார். விஸ்வேஸ்வரர் மகிழ்ந்து அவருக்கு மஹாக்ரகம் என்னும் பதவியைக் கொடுத்தார்.

உத்தமமான நரர்கள் சதுர்த்தி திதியன்று உத்தரவாஹினி கங்கையில் ஸ்நானம் செய்து பிறகு அங்காரகேஸ்வரருடைய பூஜை செய்து பிறகு நமஸ்கரித்தார்களானல்

அவர்களுக்கு ஒரு பொழுதும் க்ரஹங்களுடைய பீடை ஏற்படுவதில்லை. செவ்வாய்க் கிழமையன்று சதுர்த்தி திதியும் வந்தால் க்ரஹத்தின் கால நிலையறிந்த பண்டித

*கணங்கள் அதை க்ரஹணத்திற்கு ஸமமான புண்ணிய காலம் என்கிறுர்கள். அன்று தானம், ஜபம், ஹோமம் இவைகள் அக்ஷய பலனேக் கொடுக்கின்றன.*

*அங்காரக சதுர்த்தியன்று சிரத்தையுடன் ச்ராத்தம் செய்தால் அவர்களுடைய பித்ரு கணங்கள் இந்த ஒரே ஒரு ச்ராத்தத்திஞல் 12 வருஷங்கள் வரை திருப்தியடைகிறுர்கள்.*

*அந்தக் காலத்தில் அங்காரக சதுர்த்தியன்று விநாயகர் உத்பவித்தார், இந்தக் காரணத்திஞலும் அந்தநாள் புண்ணியம் நிறைந்த திதியாக எண்ணப்படுகிறது.*

*இந்த அங்காரக சதுர்த்தியன்று ஒரு பக்தன் வ்ரதமிருந்து கணநாயகனேப் பூஜித்து கணபதியை உத்தேசித்து அற்பமாகிலும் தானம் செய்தால் விக்னங்களிஞல் ஒரு பொழுதும் பீடிக்கப்படமாட்டான். வாராணஸியில் அங்காரகேஸ்வர லிங்கத்தைப் பூஜிப்பதிஞல் அங்காரகேஸ்வரரிடமிருந்து பரம ஸம்பத்துக்களேயும் அடைகிறுர்கள்.*

*இது மங்கள உலகத்தின் கதை. அகஸ்தியர் மேலும் கூறுவார். விஷ்ணு பக்தர்கள் இருவரும் இந்த ரமணீயமான புண்ணியம் நிரம்பிய கதையைக் கீர்த்தனம் செய்து கொண்டே ப்ருஹஸ்பதியின் நகரைத் தங்கள் நேத்ரங்களுக்கும் விருந்தாக அளித்தார்கள்.*

*அதற்குப் பிறகு சிவசர்மா அந்த நேத்ரானந்தத்தை அளிக்கும் ஆசார்யபுரியைப் பார்த்துவிட்டு இது யாருடைய உத்தமபுரி என்று கேட்டார்.*

*விஷ்ணு பாரிஷதர்கள் கூறிஞர்கள்- ஹே ஸகே! உனக்குச் சொல்லக் கூடாதது ஒன்றுமில்லே. வழிப்பிரயாணத்திஞல் ஏற்படும் களேப்பை நீக்க நாங்கள் இந்தப் புரியின் கதையை ஸந்தோஷமாக உரைப்போம்.*

*முன்காலத்தில் ஆனந்தமாக த்ரிபுவனங்களேயும் படைத்த ப்ரம்மாவிற்கு மரீசி, அங்கிரஸ் அத்ரி ஆகிய*

ஆத்மாவிற்கு ஸமமான மானஸிக புத்ரர்கள் பிறந்தார்கள்.

அவர்கள் முறைப்படி ஸ்ருஷ்டித் தொழிலில் இறங்கிஞர்கள். அவர்களில் அங்கிரஸருக்கு அங்கீரஸ் என்ற பெயருடைய தேவனுக்குத் துல்யமான ஒரு புத்ரன் பிறந்தான்.

அவன் தேஹம் தரித்தவர்களிலெல்லாம் புத்திசாலித்தனத்தில் ப்ரதானமாக இருந்தான். சாந்தி, தாந்தி ஜிதேந்த்ரியன் கோபம் இல்லாதவன், ம்ருதுபாஷி, நிர்மல உள்ளம் படைத்தவர். மேலும் ஸகல வேத வேதார்த்தி தங்களுடைய தத்துவத்தையறிந்தவர், அறுபத்து நான்கு கலேகளிலும் குசலன், அக்ஞான ரூபமான மலம் நீங்கிய ஸகல சாஸ்திரங்களிலும் கரை கண்டவர், நீதி தெரிந்தவர்களின் முதல்வர்.

ஹிதோபதேசம் செய்வதில் தலேவர், நன்மையையே செய்பவர், அதிஹிதத்தை, அதிக்ரமணம் செய்பவர், ரூபவான், குணவான், தேசகால குணநிலேயறிந்தவர்.

இவரிடம் ஸமஸ்த சுபலக்ஷணங்களும் பரிபூர்ணமாகப் பொருந்தியிருந்தது. குருவுக்கு மிகவும் பிரியமானவர். திவ்ய தேஜஸ்வி. மஹா தபஸ்வியுங்கூட. அங்கீரஸ்கா காசியில் அநேக சிவலிங்கங்களே பிரதிஷ்டித்தான். மிகவும் மேன்மையான தபஸ்விருத்தியைக் கொண்டு ஏகாக்ரசித்தத்துடன் திவ்ய பரிமாணமாக 6 ஆயிரம் வருஷ பர்யந்தம் தபஸ்செய்தான்.

அதற்குப் பிறகு விசுவபாவனரான விஸ்வநாதர் ப்ரஸன்னமடைந்து அதேலிங்கத்தில் ஜோதிஸ்வரூபராக ஆவிர்பவித்தார். பிறகு கூறிஞர்-

உன்னிடம் ஸந்தோஷமடைந்தேன். என்ன வரம் வேண்டுமாஞலும் கேள். அங்கீரஸ் சம்புவை தரிசித்தமாத்ரத்தில் ஆனந்தமடைந்து இவ்விதமாகத் துதிக்கத் தொடங்கிஞர்.

ஹே சங்கரா, ஹே சாந்த, ஹே சந்திரப்ரபா, இஷ்டவரம் தருபவரே, ஹே சர்வ, நான்கு புருஷார்த்தமும் தருபவரே, ஹே ஸர்வஸசியே, தாங்கள் பவித்ரமான ஜனங்கள் கொடுக்கும் மகத்தான காணிக்கையையும் ஏற்றுக் கொண்டீர்கள். பக்தர்களுடைய பெரிய ஸந்தாபங்களேயும் தீர்த்து வைக்கிறீர்கள். தங்களுக்கு வெற்றி.

வரத கணங்களால் வணங்குபவரே! தாங்கள் எல்லா ஜனத்தினுடையவும் இதயாகாசத்தில் வஸிக்கிறீர்கள். வணங்கும் ஜனங்களுடைய பாபரூவமான வனத்தை அக்னியாகப் பொசுக்குகிறீர்கள். விதவிதமான குணங்களேயுடைய சரீரதாரிகளுக்கு நீரே கர்த்தா. அழகிய சரீரம் உடையவரே, தைரிய நிதியான தாங்களே அனங்னுடைய பாண விசேஷங்களாக இருக்கிறீகள். தங்களுக்கு ஜயம்.

ஹே சட்டதிட்டங்களுக்கு அப்பாற்பட்டவரே, தங்களே வணங்கும் பண்டித ஜனங்களுடைய, மனேவாஞ்சித பலனேக் கொடுக்கிறீகள். ஸர்பம் தரிப்பவரே! தாங்கள் கிரிஜா தேவிக்குத் தங்கள் இடது பக்கத்தைக் கொடுத்தருளினீர்கள். தாங்களே எட்டு மூர்த்திகளாய் வடிவம் தாங்கி ஸமஸ்த லோகங்களேயும் பரிபூர்ணமாக ஆக்குகிறீகள். தங்களுக்கு ஜெயம்.

ஏ மூவுலகஸ்வரூபமே, ஹே விரூப, அழகான கண்களேயுடையவரே, தங்கள் நேத்ரங்களேத் திறந்து ப்ரளய அக்னியை உற்பத்தி செய்கிறீர்கள். ஹே பவ, ஹே பூதபதே! ப்ரமதகணங்களுக்குப் பதி! தாங்கள் பதித பதியே! ஜனங்களுக்குக் கைகொடுத்து ஆதரவு அளிக்கிறீர்கள். ஜய விஜயீ பவ.

ஸகல பூதலத்திலும் வ்யாபகமாக இருப்பவரே, ப்ரணவத்வனி கூடத் தங்களேயே ஆச்ரயித்து இருக்கிறது ஹே சந்திரதரா! சித்ரூப கிரிஜாகுமாரி தங்களே எப்பொழுதும் ஸந்தோஷப்படுத்துகிருள். ஹே கல்யாணஸ்வரூபா, தங்களே வணங்குகிறேன்.

ஹே சிவ, ஹேதேவா, ஹே கிரீசா! ஹே மஹேச, ஹே விபோ, ஹே விபவப்ரத, ஹே கைலாசவாஸி, ஹே பார்வதீபதே, ஹே, ம்ருட, தாங்கள் காமக்ரோத ரூபமான த்ரிபுராந்தகர்களுக்கு பீடையைக் கொடுத்தவர்! ஹே!தாராபதியைத் தரித்தவரே, மூவுலகையும் ஸுகமாக்குங்கள்.

ஹே ஆசையில்லாதவர்களுக்குப் பதியே, நான் யம ராஜனுக்குக் கூட பயப்படமாட்டேன். ஹே ஹரா, தாங்கள் சீக்கிரமாக எனது பாபங்களை நாசம் செய்யும். நான் மஹாதேவருடைய சரணங்களை சரணமடைகிறேன், வேறு மதவாதிகளை மங்களம் தருபவர்கள் என்று நினைக்கமாட்டேன், அதனால் தங்களுக்கு நமஸ்காரம்.

இந்த விஸ்தாரமான அகில ப்ரம்மாண்டங்களிலும் சிவனை ஸந்தோஷப்படுத்துவதே பாபத்தைப் போக்கும் பரம முக்யமான குணங்களையளிக்கும். அதனால் ஈஸ்வரா, நிர்குண, நாகராஜனைக் கங்கணமாக அணிந்தவனே - ப்ரளய காலத்தில் ஸர்வ ஸம்ஹாரம் செய்பவனே!

அங்கீராவின் புத்ரன் இந்த ப்ரகாரம் மஹாதேவனை ஸ்துதி செய்து விட்டு மௌனமானார். மஹாதேவனும் ஸ்துதியினால் ஸந்தோஷப்பட்டு வேண்டிய வரங்கள் அருளினார். மஹாதேவர் கூறினார்-

இந்த மஹா தபஸ்ஸினுடைய ப்ரபாவத்தினால் நீ மஹத்துக்களான இந்த்ராதி தேவர்களுக்கும் ஸ்வாமியாக ஆவாய். இந்தக் காரணங்களினால் ப்ருஹஸ்பதியென்னும் பெயரால் பூஜிக்கப்படுவாய்.

நீ இந்த லிங்க பூஜையினுடைய ப்ரபாவத்தினால் நீ என்னுடைய ஜீவஸ்வரூபமாகவே ஆகிவிட்டாய். அதனால் மூன்று லோகங்களிலும் ஜீவன் என்னும் பெயரினால் பிரஸித்தி பெறுவாய்.

ப்ரபஞ்சம் இல்லாத என்னை அழகிய வாக்சாதுர்யம் என்ற ப்ரபஞ்சத்தினால் ஸ்துதிசெய்து விட்டாய். அதனால் நீ

இந்த வாக்பிரபஞ்சத்திற்கு அதிபதியாகிய வாசஸ்பதி என்னும் பெயரைப் பெற்ருய். இந்த ஸ்தோத்திரத்தை மூன்று வருஷங்கள் பக்தியுடன் பாராயணம் செய்வர்களும் கேழ்ப்பவர்களுமாகிய இருவருக்கும் வாக்சுத்தமேற்படும்.

யார் ஒருவர் இந்த வாயவ்யம் என்ற பெயருள்ள ஸ்தோத்திரத்தைப் பிரதிதினம் படிக்கிறுர்களோ அவர்கள் பெரிய பெரிய காரியங்கள் செய்ய வேண்டி வரினும் புத்தி கலங்கமாட்டார்கள்.

எனது ஸந்நிதியில் இந்த ஸ்தோத்திரத்தை நியமத்துடன் பாராயணம் செய்வதினுல் அவிவேகிகளுக்குக்கூட இழிவான செயல்களில் புத்தி செல்லாது.

நரர்கள் இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பதினுல் க்ரஹபீடைகள் அவர்களே அணுகாது. அதனுல் இந்த ஸ்தோத்திரத்தை எனது ஸந்நிதியில் பாராயணம் செய்யவேண்டும்.

எந்த மனிதன் நித்யம் அதிகாலேயில் எழுந்து இந்த ஸ்துதியைப் பாராயணம் செய்கிறுனே அவனுடைய அதி பயங்கரமான இடையூறுகளேயும் நான் போக்கடிக்கிறேன்.

விதி வழுவாது உன்னுல் ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கத்தைப் பூஜித்து இந்தஸ்தோத்திரத்தைப் படித்தால் அவனுடைய மனேகாமனேகளெல்லாம் பூர்த்தியாகும்,

பரமேஸ்வரன் அங்கிரஸுக்கு இந்த எல்லா வரங்களேயும் அளித்து விட்டுப் பின் இந்த்ராதி தேவதைகள் யக்ஷர், கின்னரர்கள் புஜங்கர்கள் இவர்களுடன் ப்ரம்மாவையும் அழைத்தார்.

மஹாதேவன் எல்லோரும் தன்னேச் சூழ்ந்திருப்பதைக்கண்டு ப்ரம்மாவிடம் கூறினுர் - ஏ! விதியே! தனது குணுதிசயங்களினுல் ச்ரேஷ்டகுருவான இந்த வாசஸ்பதி முனியை என் வார்த்தைப்படி ஸமஸ்த தேவதைகளுக்கும் குருவாக ஆக்குவாய். எல்லோரும்

ஸந்தோஷிக்கும் பொருட்டு விதிபூர்வமாக தேவாசார்ய பீடத்திலமர்த்தி அபிஷேகம் செய்வாய்.

என்னுடைய ப்ரேமைக்கு பாத்திரமான முனி மிகவும் புத்திசாலிகளுக்கு அதிபதியாய் விளங்குவான். ப்ரம்மாவும் மஹாப்ரசாதம் என்று மஹாதேவருடைய ஆக்ஞையை சிரமேற் கொண்டு அந்த பிதாமஹர் அந்த க்ஷணமே அங்கீராவுடைய புத்திரனை தேவர்களுக்கு ஆசார்யராக ஆக்கினார். தேவதுந்துபி முழங்கிற்று. அப்ஸரஸுகள் ஆடினார்கள். வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகள் மந்திரத்தினால் பரிசுத்தமான ஜலத்தால் ப்ருஹஸ்பதிக்கு அபிஷேகம் செய்தார்கள்.

பிறகு கிரீசர் வாசஸ்பதிக்கு மேலும் மற்றொரு வரம் அளித்தார். ஏ தர்மாத்மா! குல நந்தனா! தேவர்களால் பூஜிக்கப்பட்ட அங்கீரஸா! கேள்.

உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த ஸுபுத்தி பரிவர்த்தக லிங்கம் காசியில் ப்ருஹஸ்பதீஸ்வரர் என்னும் பெயரால் ப்ரசித்தமாவார்.

மனிதர்கள் பூச நக்ஷத்ரத்தோடு கூடிய ப்ருஹஸ்பதிவாரத்தில் இந்த லிங்கத்தைப் பூஜித்து எந்தக் காரியங்களைச் செய்கிறார்களோ அவைகள் ஸித்தியாகும்.

கலியுகத்தில் இந்த ப்ருஹஸ்பதீஸ்வர லிங்கத்தை நான் மறைத்து விடுவேன். இந்த லிங்கத்தைத் தரிசனம் பண்ணின மாத்திரத்திலேயே மேதஸ் ஏற்படும்.

சந்திரேஸ்வர லிங்கத்துக்குத் தென் பக்கத்தில் வீரேச்வர லிங்கத்துக்கு வடமேற்குப் பக்கத்தில் நிர்ருதிகோணத்தில் இருக்கும் ப்ருஹஸ்பதீச்வர லிங்கத்தைப் பூஜை செய்வதினால் ப்ருஹஸ்பதி லோகத்தில் மர்யாதையுடன் வசிப்பார்கள்.

ஆறுமாதம் தொடர்ந்தாற்போல் இந்த லிங்கத்தைத் தரிசித்தால் குருபத்நீகமனம் ஆன பாபம் கூட ஸூர்யனைக் கண்ட பனி போல் மறைந்துவிடும். இந்த மகா பாதக நாசம்

*செய்யும் ப்ருஹஸ்பதிலிங்கத்தைப் பூஜிக்கும் பலனை ரஹஸ்யமாக வைத்துக் கொள்ள வேண்டும். யாரிடமும் சொல்லக் கூடாது.*

*தேவதேவர் இந்த எல்லா வரங்களையும் அளித்துவிட்டு அந்த லிங்கத்திலேயே மறைந்தார். ப்ரம்மா விஷ்ணு இந்த்ராதிகளும் ப்ருஹஸ்பதியுடன் கூட இந்த லோகத்திற்கு வந்து, இந்த ப்ருஹஸ்பதிக்கு அபிஷேகம் செய்வித்த பின் இந்த்ராதி தேவர்களை அனுப்பி விட்டு விஷ்ணுவின் உத்தரவைப் பெற்று தனது லோகத்தில் ப்ருஹஸ்பதி இனிது வஸித்திருந்தார்.*

*அகஸ்தியர் கூறினர் :- லோபா முத்ரே! சிவசர்மா ப்ருஹஸ்பதி லோகத்தைத் தாண்டி ப்ரபாமண்டலம் சூழ்ந்த சனீஸ்வர பகவான் லோகத்தைப் பார்க்க ஆரம்பித்தார்.*

*ஹே அழகான புன்னகையுடைய பிராம்மணனே! கேட்பாயாக. இரு விஷ்ணு தூதர்களும் இந்தப் புரியின் விவரம் சொல்ல என்று ஆரம்பித்தார்கள்.*

*இருவரும் கூறினர்கள்- மரீசியின் புதல்வரான கச்யபர் தாக்ஷயணியின் கர்பத்தில் ஸூர்யனைப் பிறப்பித்தார். த்வஷ்டா ப்ரஜாபதியின் பெண் ஸம்க்ஞா அவருக்கு மனைவியானள். தேஜோ மயமான தபஸ்ஸினல் பின்னும் தேஜஸ்ஸை அடைந்த ஸம்க்ஞாபதிக்கு மிகவும் ப்ரியமானவளாக விளங்கினள்.*

*அவள் ஸூர்யமண்டலத்தின் தேஜஸ், ஆதித்யனுடைய உஷ்ணம் இரண்டையும் தேஹத்தால் பொறுத்துக் கொண்டாள். இதனல் இவளுடைய தேஹம் மெள்ள மந்தமாக க்ஷீணிக்கத் தொடங்கியது.*

*இந்த மண்டலத்திலுள்ள தன் புத்ரன் இறந்து போகக் கூடாது என்று பிதா கச்யபர் சொன்னர். அதிலிருந்து சூரியனுக்கு மார்த்தாண்டன் என்று பெயர் உண்டாயிற்று.*

*தீக்ஷ்ணகிரணங்களுடைய மார்த்தாண்டனுடைய தேஜஸ்ஸினல் மூன்று லோகங்களும் தபித்தன. இந்த*

*அதிக தீக்ஷ்ணத்தை (அதிப்ரகாசம்) ஸம்க்ஞா தேவியினுல் தாங்க முடியவில்லே.*

*ஹே பிராம்மணு! ஆதித்யன் இந்த ஸம்க்ஞாவினிடத்தில் ஆண்கள் இரண்டும், பெண் ஒன்றுமாக மூன்று குழந்தைகளே உற்பத்தி செய்தான்.*

*பெரிய புதல்வன் வைவஸ்வதமனு, இளேய புத்ரன் யமராஜன், இதற்குப் பிறகு யமுனு என்னும் பெயருள்ள புத்ரி. இதற்குப் பின்னும் ஸம்க்ஞா ஸூர்யனுடைய தேஜஸை (தீக்ஷ்ணத்தை) மேலும் மேலும் தாங்க முடியாதவளானுள்.*

*அப்பொழுது அவள் தன் சரீரத்திலிருந்து மாயாமயியான ஒரு பெண்ணே ஸ்ருஷ்டித்தாள். அவளேச் சாயா தேவீ என்பார்கள். அவள் கைகூப்பி வணங்கி ஸம்க்ஞாவிடம் கூறினுள்.*

*தேவி! நான் தங்களுடைய ஆக்ஞைக்குக் கீழ்ப்படிபவள். அப்பொழுது ஸம்க்ஞா கூறுவாள்- என்னேப் போலவே உள்ள ஸுந்தரியே! கேள்.*

*நான் என் பிதா விச்வகர்மாவினுடைய வீட்டிற்குப் போகிறேன். ஹே! ஸுந்தரீ! நீ என் உத்தரவின்படி ஸங்கோசப்படாமல் எனது வீட்டில் வஸி.*

*இந்த மனுவையும் இரட்டையர்களான தர்மன் யமுனே இருவரையும் நீ உனது குழந்தைகளேப் போலவே கவனித்து வர வேண்டும். ஏ அழகான புன்சிரிப்பையுடையவளே! இந்த விஷயத்தை எனது ஸ்வாமியிடம் சொல்லிவிடாதே. இதைக் கேட்டதும் சாயாதேவீ விச்வகர்மாவினுடைய புதல்வியிடம் கூறினுள்.*

*''தேவீ! எனது தலேமுடி நரைக்காமல் இருக்கும் வரை, அல்லது ஸ்வாமி உண்மையையறிந்து சாபம் கொடுக்காமல் இருக்கும்வரை, நான் உனது விஷயத்தை வெளியிடாமல் இருக்கும் வரை, நான் ஸுகமாக இருப்பேன். நீங்கள் ஸந்தோஷமாகச் சென்றுவாருங்கள்,''*

*இந்த விதமாக ஸம்க்ஞா தேவி சாயாதேவிக்கு ஆக்ஞையிட்டு, சாயாதேவி ஸம்மதித்தவுடன் ப்ரயாணப்பட்டு விச்வகர்மாவின் வீட்டிற்கு (அவள் தகப்பனாரிடத்தில்) சென்று கூறினாள்.*

*தந்தையே! வணக்கம். மகாத்மா தேஜோநிதி, கச்யபபுத்ரரான ஸூர்ய தேவனுடைய தீவ்ர தேஜஸ்ஸை என்னால் ஸஹிக்க முடியவில்லை என்றாள்.*

*அவளைப் பார்த்த அவளுடைய பிதா அவளை அடிக்கடி கடிந்து, இகழ்ந்து, நீ உன் பர்த்தாவிடமே திரும்பிச் செல் என்று ஆக்ஞாபித்தார்.*

*அந்த சமயம் ஸம்க்ஞாவானவள் மிகவும் கவலையில் ஆழ்ந்தாள். ஸ்த்ரீகளுடைய முயற்சி மிகவும் இழிவானது என்று சொல்லித் தனது பெண் ஜன்மத்தையே நிந்தித்துக் கொண்டாள்.*

*ஸ்த்ரீ ஜன்மத்திற்கு ஒருபொழுதும் ஸ்வதந்த்ரம் கிடையாதா? இப்படி பராதீனப்பட்டிருப்பது எப்பொழுதும் இழிவு. பிள்ளைப் பிராயத்தில் பிதா, யௌவனத்தில் பர்த்தா, கிழப்பருவத்தில் பிள்ளை. இப்படி இவர்களுக்கு பயந்து சாக வேண்டுமா?*

*ஓ! நான் தீர ஆலோசியாமல் பதியின் க்ருஹத்தைத் தியாகம் செய்து விட்டு வந்தேன். இது இப்பொழுது பதிக்குத் தெரியாது.*

*இப்பொழுது பதியின் க்ருஹத்திற்குத் திரும்பச் சென்றால் அங்கு என் பரிபூர்ண மனோரதத்துடன் நான் வைத்திருக்கும் என்னுடைய சாயா இருக்கிறாள். பிதா அவமானமாகக் கூறினாலும், நான் இங்கேயே இருந்தாலோ, அப்பொழுது அது என் பதிக்குத் தெரியவந்தால் அந்த அதிப்ரசண்டசண்டாம்சு, எனது மாதா பிதாக்கள் மேல் பயங்கரக்கோபம் கொள்வார்.*

*ஜனங்கள் கூறும் பழமொழி முற்றிலும் உண்மை. நான் இன்று அதை ஸ்பஷ்டமாகப் பார்த்து விட்டேன்.*

நானே என் மேல் நெருப்பை வாரிப் போட்டுக் கொண்டேன். எனது காலில் நானே கோடரியைப் போட்டுக் கொண்டேன். முட்டாள் தனத்தால் பதியின் க்ருஹத்தையும் இழந்தேன். இனி பிதாவின் வீட்டில் இருப்பது க்ஷேமம் இல்லை.

ஸௌந்தர யௌவனப் பருவம், மூன்று உலகமும் விரும்பும் உருவம்; யாரும் லோபப்படும் ஸ்திரீ ஜன்மம் மிகவும் நிரவலமான குலம்.

இதற்குமேல் ஸர்வக்ஞரும் உலகத்துக்குக் கண் (லோகசக்ஷு) என்ற பெயர் பெற்றவரும் இருட்டை நாசம் செய்பவரும், எல்லாக் கர்மங்களுக்கு ஸாக்ஷியும் ஸர்வ ஸ்வரூபரும் எங்கும் செல்லும் சக்தி வாய்ந்தவரும் ஆன என் கணவரே துணை.

பின் எனக்கு நல்லது வேறு எந்த விதத்தில் முடியும்? நிந்திக்கத் தகாத ஸம்க்ஞா ஆனவள். இப்படிச் சிந்தித்துக் கொண்டு தபஸ் செய்வதற்காக வடவை என்ற பெண் குதிரை ரூபமாக (காட்டிற்கு) சென்றாள்.

உலர்ந்த புற்களைத் தின்றுகொண்டு உத்தர குருப்ரதேசம் சென்று இதயத்தில் பதியை நன்றாகத் தியானம் செய்து கொண்டு தீவிர தபஸ் தொடங்கினாள். அவளுடைய தபஸ்ஸின் குறிக்கோள் என்னவென்றால் தன்னுடைய பதியின் தேஜஸ்ஸை ஸஹிக்கக்கூடிய சக்தியைக் கொடுக்க வேண்டும் என்பதே. அங்கு ஸூர்யன் ஸம்க்ஞா தேவினுடைய சாயையை ஸம்க்ஞா என்று நினைத்து முறையே அவளிடமிருந்து எட்டாவது மனுவான ஸாவர்ணி இரண்டாவது குழந்தையாக சனைஸ்சரன், மூன்றாவது குழந்தையாக பத்ரை (தபதி) யென்னும் புத்ரியையும் அடைந்தான். சாயா தன்னுடைய குழந்தைகளை எவ்விதம் நேசித்தாளோ, அவ்விதமே ஸம்க்ஞாவின் குழந்தைகளை நேசிக்கவில்லை, அது சக்களத்தி ஸ்வபாவமோ அல்லது ஸ்திரீகளிடம் உண்டான குற்றமோ தெரியாது, தன்னுடைய மூத்தவளின் குழந்தைகளின் மீது

ப்ரேமை வைக்கவில்லே. மூத்தவஞன மனு இந்தக் கஷ்டங்களே ஸஹித்துக் கொண்டான். ஆஞல் சிறியவஞன யமன், உணவு, நகைகள், சீராட்டல், போஷித்தல் இவைகளில் இளேயவளின் மகஞன ஸாவர்ணி. முதலியவர்களிடம் மாற்ருந் தாய் அதிக ப்ரேமை செலுத்துவதைக் கண்டு ஒருநாள் சிறுபிள்ளேத் தனத்திஞலோ அல்லது தனது வருங்கால கௌரவத்தையறிந்தோ ரோஷத்திஞல் ஸம்க்ஞா ப்ரதிநிதிரூபமாக இருக்கும் சாயையை எட்டி உதைத்தான். அப்பொழுது ஸாவர்ணியின் மாதாவான சாயா கோபத்தால் யமனுக்கு சாபம் கொடுத்தாள்.

அவள் மிகவும் துக்கமடைந்து அடபாவி என்னே உதைப்பதற்காக எந்தக் காலேத் தூக்கிஞயோ அந்தப் பாதம் சீக்கிரத்தில் வீழ்ந்து விடட்டும்.

மாதாவின் சாபத்திஞல் பீதியடைந்த யமன், ''காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்'' என்று கூறிக்கொண்டே சென்று ஓடி தன் பிதாவினிடம் சென்ருன்.

மாதா எல்லாபிள்ளேகளிடமும் சமமாக நடந்து கொள்ள வேண்டும். ஆஞல் இவள் அப்படி நடக்கவில்லே. அதஞல் நான் அவளே உதைப்பதற்காகக் காலேத் தூக்கத்தான் செய்தேன். ஆஞல் உதைக்கவில்லே.

இந்த அபராதம் எனது சிறுபிள்ளேத் தனத்திஞலும் மோகத்திஞலும் ஏற்பட்டு விட்டது. அதஞல் என்னே மன்னிக்க வேண்டும். அம்மாவின் சாபத்திஞல் எனது இந்தக் கால் விழுந்து விடாமல் இருக்க வேண்டும்.

ஏ! குழந்தாய்! ஆயிரம் குற்றங்கள் செய்தாலும் ஒரு தாய் தன் குழந்தைகளே சபிக்க மாட்டாள். இந்த விஷயத்தில் ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும்.

எதஞல் அவள் உன்னேப் போன்ற தர்மம் அறிந்த உண்மை பேசுபவனேக் கோபத்தால் சபித்தாளோ? தாயின் சாபத்தை வேறு ஒருவராலும் நீக்கமுடியாது.

உன்னுடைய இந்தக் காலின் மாம்ஸத்தைப் புழுக்கள் எடுத்துக் கொண்டு பூமிக்குள் செல்லட்டும். இதனுல் உன் தாயாரின் சாபமும் வீணுகப் போகாது. உனக்கும் ஆபத்து நேராது.

இந்தப் பிரகாரமாக புத்ரனுக்கு ஆறுதல் கூறிவிட்டு ரவி அந்தப்புறத்திற்குச் சென்ருர். சிறிது நேரம் கழித்து மெதுவாகவேத் தன் பத்னியை நோக்கி ஸவிதா இந்த வார்த்தையைக் கூறினுர்-

ஏ பாமினீ! உனக்கு எல்லாக் குழந்தைகளும் ஸமம்தானே! பின் ஏன் இந்த ஸாவர்ணீ முதலியவர்களை அதிகமாக நேசிக்கிருய்?

சூரியன் இவ்வாறு கேட்ட பிறகும் சாயா பதில் கூறவில்லை: அப்பொழுது அவர் ஆத்மாவில் மனதை லயித்து எல்லா விஷயங்களையும் அறிந்து கொண்டார்.

அப்பொழுது சூரியபகவான் சாபம் கொடுப்பதற்குத் தயாராஞர். சாயா பயந்து எல்லா வ்ருத்தாந்தங்களையும் அப்படியே ஒப்புவித்தாள், பகவானும் ஸந்தோஷமடைந்தார்.

எல்லா விஷயங்களையும் உண்மையாகச் சொன்னதினுல் சாயாவை குற்றமற்றவள் என்றறிந்து சாபம் கொடுக்கவில்லை. ஆனுல் கோபித்துக் கொண்டு மாமனுரான விச்வகர்மாவிடம் சென்ருர்.

தன்னை எரித்துவிட விரும்பும் தீக்ஷ்ண்யமான தேஜஸ்ஸுடன் வரும் ஸூர்யபகவானைப் பார்த்து அவர் சற்று சாந்தம் அடையும் பொருட்டு ஆறுதல் வார்த்தைகளைக் கூறி அவருக்கு அதிதி பூஜை செய்தார். பிறகு அவருடைய அபிப்ராயத்தையறிந்து உடனேயே கூறினுர்.

விச்வகர்மா கூறினுர்: ஏ ரவே! உங்களுடைய தீக்ஷ்ண்ய தேஜஸ்ஸினுல் பயமடைந்து ஸம்க்ஞா உத்தர குருப்ரதேசத்தில் சென்று வடவை உருவில் உலர்ந்த புற்களைத் தின்று கொண்டு வனத்தில் ஸஞ்சரிக்கிருள்.

*அவளுடைய தேஜஸ், நியமம் இவைகளின் பலத்தில் ப்ராணிகளின் கண்களுக்குத் தென்படாமல் ஆர்யர்களின் விதியை அனுஸரிக்கும் தங்கள் மனைவியை இன்று பார்ப்பீர்கள்.*

*விச்வகர்மா ஸூர்யனுடைய அனுமதியைக் கேட்டுக் கொண்டு மிகவும் கவனமாக ஒரே கல்லில் ஏற்றி அவருடைய தேஜஸ்ஸைக் சிறிதளவு குறைத்து விட்டார். இதனால் அவர் மேலும் அழகாக விளங்கினார்.*

*பிறகு மாமனாரின் ஆக்ஞையைப் பற்றி ஸவிதா உடனேயே உத்தர குருப்ரதேசத்திற்குச் சென்று கடுமையான தபஸ்ஸைச் செய்பவளும் தவமே உருக்கொண்ட ஸாக்ஷாத் லக்ஷ்மியைப் போன்றவளும், வடவானலையே போன்ற தேஜஸ்ஸுள்ளவளும் பெண் குதிரையின் உருவில் உள்ள அவளை யோக மாயையின் க்ருபையினால் - உலர்ந்த புற்களைத் தின்று கொண்டிருக்கும் ஸம்க்ஞாவைக் கண்டார்.*

*ஸூர்யன் பெண்குதிரை வடிவில் இருக்கும் அந்த விசுவகர்மாவின் புத்ரியைக் குற்றம் செய்யாதவள் எனக் கண்டு தானும் அச்வ ரூபத்தை எடுத்துக் கொண்டு அந்தப் பெண்குதிரையுடன் ஸங்கமித்தார்.*

*அந்தப் பெண்குதிரை வடிவில் இருக்கும் ஸம்க்ஞா நான்கு பக்கங்களிலும் அவஸரமாகப் பார்த்துவிட்டுப் பரபுருஷன் என்று ஸந்தேஹித்து, ஸூர்யனின் வீர்யத்தை மூக்கு த்வாரத்தின் வழியாகக் கசக்கிவிட்டாள்.*

*அதிலிருந்துதான் தேவதைகளின் சிறந்த வைத்யர்களான அச்வினீ குமாரர்கள் தோன்றினார்கள். பிறகு ஸூர்யன் தன் நிஜ ரூபத்தைக் காட்டினார்.*

*அப்பொழுது அந்தப் பதிவ்ரதையும் ஹ்ருதய தாபத்தை ஒழிக்கும் கண்களுக்கு ஆனந்தத்தைத் தரும் அழகான உருவம் தரித்தாள். தன்னுடைய பதியைப் பார்த்து மிகவும் ஸந்தோஷமடைந்தாள். பரமானந்தமடைந்தாள்.*

உண்மையே. தபஸ்ஸின் மூலமாக எதுதான் துர்லபம்? தபஸ்ஸே பரம மங்களத்தைத் தருவது. தபஸ்ஸே உத்தம தனம்.

தபஸ்ஸே தேவதைகளாக ஆவதற்கு முக்கிய காரணம். ஏ, சிவசர்மா! ஆகாயத்தின் மேலேயும் கீழேயும் அந்த ஜாஜ்வல்யமாக ஜ்வலிக்கின்ற ஜோதி ஸ்வரூபத்தைப் பார்த்திதீரா? அந்த தபஸ்ஸே தேஜஸ் ஸ்வரூபம்.

இந்த விதமாக அந்த ஸம்க்ஞா தேவியிடமிருந்து உண்டாகிய சாயா தேவியின் கர்ப்பத்திலிருந்து ஸூர்யனின் புத்ரரான சனைஸ்சரர் பிறந்தார். பிறகு எல்லா தேவர்களும் வணங்கும் வாராணஸிபுரீ சென்று தபஸ் செய்து சிவலிங்கத்தைப் ப்ரதிஷ்டை செய்து மஹாதேவரையும் அர்ச்சித்ததினுல் உயர்ந்த லோகமான இந்த க்ரஹ பதத்தையடைந்தார்.

காசியில் சுப சோபனமான சனைச்சர லிங்கத்தை தர்சித்து, சனி வாரத்தன்று இந்த லிங்கத்தைப் பூஜை செய்தால் சனிக் க்ரஹத்தினுல் ஏற்படும் பீடை நீங்கும்.

விச்வேவரருக்குத் தெற்குப் பக்கத்தில் ஸுகரேஸ்வரருக்கு வடக்குப் பக்கத்தில் இருக்கும் சனைஸ்வர லிங்கத்தைப் பூஜை செய்வதால் மனிதன் இந்த சனி லோகத்தை ஆனந்தமாக அடையலாம்.

காசியில் வசிப்பவர் யாராக இருந்தாலும் சரி இந்தப் புண்யமய அத்யாயத்தைக் கேட்டால் அவர்களுக்கு சனிக்ரஹத்தினுல் பீடைகள் ஏற்படாது. அது ஸம்பந்தமான வ்யாதிகளும் இருக்காது.

இந்த விதமாக ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான மங்களம், ப்ருஹஸ்பதி, சனிலோகம் இவைகளின் வர்ணனை பூர்ணம்.

பதினேழாம் அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 18

*அகத்தியர் கூறினுர்: முக்திபுரியான காசியில் ஸ்நானம் செய்துவிட்டு ஹரித்வாரத்தில் ப்ராணத்யாகம் செய்த மதுர வாஸியான சிவசர்மா விஷ்ணுபுரியை தரிசிக்கும் ப்ரபாவத்திஞல் இந்தக் கதைகளேக் கேட்டுக் கெண்டே கடைசியில் விஷ்ணு லோகத்திற்குப் போய்க் கொண்டிருக்கும்போது, ஸப்தரிஷி மண்டலம் கண்ணுக்குத் தென்பட்டது.*

*சாரணர்களும் மாகதர்களும் சிவசர்மாவைப் புகழ்ந்து துதிக்கத் தொடங்கிஞர்கள். தேவகன்னிகைகள், இவ்விடத்தில் தயவு செய்து கொஞ்சம் நில்லுங்கள், நில்லுங்கள் என்று பிராத்தனே செய்தார்கள்.*

*இந்த விதமாக அவர்கள் எல்லோரும் நெடுமூச்செறிந்து நாங்கள் எல்லோரும் மிகவும் குறைவாகப் புண்ணியம் செய்திருக்கிறோம். இந்த நரன் மிகவும் புண்ணியம் செய்துள்ளவன். இவன் பாக்கியசாலி, பரம பவித்ர லோகத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறுன் பாருங்கள் என்று எல்லோரும் வழிநெடுக நின்று கூறிக் கொண்டிருக்கும்போது விமானத்தில் இருக்கும் சிவசர்மா அவர்கள் கூறும் இம்மொழிகள் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு விஷ்ணுவின் பக்தர்களிடம் ''இந்தக் தேஜஸ்ஸூடைய உவமையற்ற சுப லோகம் யாருடையது?'' என்று கேட்டார். அந்தப் பிராம்மணர்களிடம் இரண்டுதூதர்களும் கூறிஞர்கள்'' ப்ரம்மாவிஞல் ஸ்ருஷ்டி பண்ணின இவ்வுலகில் அவர்கள் வஸிக்கிறுர்கள். அவர்கள் மரீசி, அத்ரி, புலகர், வஸிஷ்டர் புலஸ்தியர், க்ரது. அங்கிரஸ் முதலிய ஏழு மஹாபாக்யசாலிகளும் ப்ரம்மாவின் மானஸ புத்திரர்கள். இவர்களே ஸப்தப்ரம்மா என்றும் கூறுகிறுர்கள்.''*

*''அநஸூயா, ஸம்பூதி, க்ஷமா, ப்ரீதி, உன்னதி, ஸ்ம்ருதி, அருந்ததி இவர்கள் முறையே அந்த ஸப்தரிஷிகளுக்கும் தர்ம பத்னிகள். இவர்களே ஸப்த லோக*

மாதாக்கள் என்றும் கூறுவார்கள். இந்த ஸப்தரிஷிகளின் தவ மஹிமையினுல் மூன்று புவனங்களும் ரக்ஷிக்கப்படுகின்றன.'' பூர்வ காலத்தில் ப்ரம்மா இவர்களை ஸ்ருஷ்டித்துக் கூறினுர்-

'ஹே புத்ரர்களே! கவனமாக நானுவித ஜீவராசிகளை ப்ரஜைகளை ஸ்ருஷ்டி செய்யுங்கள் என்ருர். பிறகு தபஸ் செய்வதற்கு த்ருட நிச்சயம் கொண்ட ஸப்தரிஷிகள் ப்ரம்மாவை நமஸ்கரித்து எல்லாப் பிராணிகளுக்கும் முக்தியளிக்கும் சிவபிரான் எங்கு ஸாந்நித்யமாக இருக்கிருரோ, அந்த க்ஷேத்ரமாகிய காசீபுரியை அடைந்து பெயருள்ள லிங்கங்களை ஸ்தாபித்து சிவபிரானிடம் ஆழமான பக்தியுடையவர்களாய் உக்ரமான தபஸ் செய்யத் தொடங்கினுர்கள்.

சிவபிரான் அவர்களுடைய தபஸ்ஸை மெச்சி அவர்களுக்கு ப்ரஜாபதியென்னும் பட்டத்தைக் கொடுத்தருளினுர். காசியில் அத்ரீச்வராதி லிங்கங்களை யத்ன பூர்வமாகக் காணலாம்.

அவர்கள் இந்த ப்ராஜாபதி லோகத்தில் (ஸப்தரிஷி மண்டலத்தில்) ஸுகமாக வஸிக்கிருர்கள், கோகர்ணேச்வர ஸரோவரத்துக்கு மேற்குக் கரையில் ப்ரதிஷ்டிக்கப்பட்டிருக்கும்-

இந்த அத்ரீஸ்வர லிங்கத்தைத் தரிசித்த மாத்ரத்திங் ப்ரம்ம தேஜஸ் விருத்தியாகிறது. கார்க்கோட கிணறுக்குக் கிழக்குப் பக்கத்தில் மரீசியின் உத்தமமான தடாகம் இருக்கிறது.

இங்கு பக்தி பூர்வமாக ஸ்னனம் செய்யும் மனிதன் ஸூர்யனைப் போல் ப்ரகாசவானுகிருன். அதே இடத்தில் மரீசீஸ்வரர் என்ற பெயருள்ள லிங்கம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அந்த லிங்கத்தைத் தரிசனம் செய்தால் மரீசீ லோகம் கிடைக்கிறது. அந்த புருஷச்ரேஷ்டன் மரீசிமாலி என்ற பெயரோடு ஸூர்யனுக்கு ஸமானமாகிருன்.

*புலகேஸ்வரர், புலஸ்தேஸ்வரர் என்ற இரண்டு லிங்கமும் ஸ்வர்கத்வாரத்தின் மேற்குப் பக்கத்திலிருக்கின்றன. மனிதர்கள் அவைகளைத் தரிசனம் செய்வதால் ப்ரஜாபதி லோகத்தில் வெகுமானமாக வஸிக்கிறார்கள்.*

*ரம்யமான ஹரிகேஸ் என்னும் வனத்தில் அங்கீரேஸ்வரர் என்னும் லிங்கத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே தேஜஸ் பரிபூர்ணமாக நிரம்பியவர்களாக இந்த லோகத்திலேயே வஸிக்கிறார்கள். க்ரத்லீஸ்வரர் வருணா நதியின் கரையில் ரமணீயமான சோகாவன வனத்தில் இருக்கும் வஸிஷ்டேச்வரர் க்ரத்லீஸ்வரர் இவர்களைத் தரிசனம் செய்தாலும் ப்ரஜாபதி லோகத்தில் வஸிக்கும் பாக்யம் கிடைக்கிறது. மங்களத்தை விரும்பும் யாராயிருந்தாலும் சரி அந்த எல்லா ஸேவகர்களுக்கும் இரண்டு விதமான மனோ வாஞ்சைகளும் பரிபூர்ணமாகும். கணங்கள் கூறினார்கள்.*

*மஹாபாக்யசாலியான சிவசர்மாவே! இங்குதான் அந்த மஹாபுண்யவதி பதிவ்ரதை பாராயணை அருந்ததி வசிக்கிறாள்.*

*அவளை நினைத்த மாத்திரத்திலேயே பலன் கங்காஸ்நானம் கிடைக்கிறது. தனது அந்த: புரத்திலுள்ள இரண்டு மூன்று பவித்ரவான்களோடு கூட விபுவாகிய நாராயண தேவர் பதிவ்ரதா தர்மத்தினால் பரமஸந்தோஷமடைந்து எப்பொழுது தேவி அருந்ததியின் கதையைப்பரம ஸந்தோஷத்துடன் கூட லக்ஷ்மிதேவிக்குக் கூறுகிறார்.*

*ஏ! கமலே! பதிவ்ரதைகளுக்குள் அருந்ததியைப் போல் நிர்மலமான நடத்தையும்: சீலமும் குலாசாரமும் கலைகளின் பதிஸேவையும் மாதுர்யமும், கம்பீரமும் பெரியவர்களை ஸந்தோஷப்படுத்தும் விதமும், இந்த எல்லா நற்குணங்களும் அருந்ததியிடம் பொருந்தியிருப்பதுபோல் வேறு ஒருவரிடமும் இல்லை.*

*எந்தப் பெண்கள் ஸம்பாஷணையின் மத்தியிலாவது அருந்ததியின் பெயரைக் கூறுகிறார்களோ அந்த சுத்த புத்தி ஸௌபாக்யவதி பெண்கள் பாக்யசாலிகள்.*

*எவருடைய வீட்டில் எப்பொழுது பதிவ்ரதைகள் பற்றிய சர்ச்சைகள் எழும்புகின்றனவோ அப்பொழுது ஸதி அருந்ததியும் நாமும் எல்லாவற்றுக்கும் முன்பாக அலங்காரமாக இருப்போம். இந்த விதமாக ஸந்தோஷத்தைக் கொடுக்கிற கதைகளையும் உபகதைகளையும் சொல்லிக் கொண்டு இரண்டு விஷ்ணு கணங்களும் கற்பகங்கள் முழுவதும் ஸாந்நித்யமாக விளங்கும் துருவ லோகத்தைப் பார்க்கத் தொடங்கினார்கள்.*

*இப்படி ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான ஸப்ரிஷி லோக வர்ணனமான பதினெட்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 19

*சிவசர்மா கூறத் தொடங்கினுர். ''உத்தமர்களே! இவ்விடத்தில் ஒற்றைக் காலில் நின்று கொண்டும் வாயுமயம் போல் மெல்லியதான அநேகக் கயிறுகளால் கட்டி இழுப்பதால் வ்யாகுலமடைந்த கைகளும் சஞ்சலமான நேத்ரங்களும் உடைய இவர் யார்? ஏன் சுற்றிக் கொண்டிருக்கிறுர்?*

*தேஜஸ்ஸினுல் சூழ்ந்த த்ரைலோக்ய மண்டபத்தின் ஸ்தம்பம் போல நிற்கும் புருஷன் தராசை வைத்துக் கொண்டு ஒப்பிட முடியாத ஜ்யோதி ராசியை நிறுத்துக் கொண்டிருப்பவர் யார்?*

*ஸூத்ரதாரியைப் போல ஆகாசத்தை அளந்து கொண்டிருப்பவர் யார்? த்ரிவிக்ரம அவதாரமான மஹாவிஷ்ணுதான் இவ்விதம் அளந்து கொண்டிருக்கிறுரா?*

*ஒருவேளை இது ஆகாச ரூபமான ஸரோவரத்தினுடைய அஸ்திவாரமான ஸ்தம்பமாக ஆகியிருக்கிறுரா? தேவா? மிகவும் க்ருபை செய்து எனக்குச் சொல்லுங்கள்.*

*விமானத்தில் இருக்கும் இரண்டு தேவதூதரும் மித்ரனுகிய சிவசர்மாவின் வசனத்தைக் கேட்டு துருவனுடைய, சீரஞ்ஜீவியான கதையைக் கூறுகிறுர்கள்.*

*ஸ்வாயம்புவ மனுவிற்கு உத்தானபாதன் என்று ஒரு புத்திரர் இருந்தார். உத்தானபாதருக்கு இரு மனேவிமார்கள் இருந்தனர்.*

*அவர்கள் ஸுநீதியும், ஸுருசியும் ஆவர். ஸுநீதிக்கு துருவனும்; ஸுருசிக்கு உத்தமனும் பிறந்தார்கள்.*

*ஒரு ஸமயம் மஹாராஜா தர்பாரில் இருந்தார். ஸுருசி தன் புத்திரனே வஸ்திராபரணங்கலால் அலங்காரம் செய்து இருந்தாள். விநயமே வடிவாயுள்ள (துருவன்) அப்பொழுது*

*செவிலித்தாயின் குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது துருவன் ஸுருசியின் மகனுன உத்தமன் ராஜ ஸபைக்குச் செல்வதைப் பார்த்துத் தானும் சென்று தந்தையான ராஜா உத்தானபாதரை நமஸ்கரித்தான். அந்த ஸமயம் ஸுநீதியின் புத்ரன் த்ருவன் - மஹாராஜாவின் மடியில் உத்தமன் அமர்த்திருப்பதைப் பார்த்தான். அவனும் குழந்தையாதலால் சஞ்சல மனதுடையவனுய் தானும் மஹாராஜாவான தனது பிதாவின் மடியில் உட்கார ஆசைப்பட்டான்.*

*அப்பொழுது அங்கிருந்த ஸுருசியானவள் பிதாவின் மடியில் உட்காரப்போன த்ருவனைப் பார்த்து ''ஏ! அபாக்யவதியின் மகனே! நீ குழந்தை புத்தியினுல் மஹாராஜாவின் மடியில் அமரப் பார்க்கிருய் அல்லவா? அபாக்யவதியின் கர்ப்பத்தில் பிறந்தவனே! நீ இந்த ஸிம்மாஸனத்தில் அமருவற்குப் புண்ணியம் பண்ணவில்லை.*

*கொஞ்சம் புண்ணியம் செய்திருந்தாயானுல் ஏன் அந்த அபாக்யவதியின் வயிற்றில் பிறக்கிருய்? இதிலிருந்தே நீ உன் புண்ணியத்தை அறிந்துகொள். ராஜகுமாரனுய் இருந்தும்கூட நீ என்னுடைய கர்பத்தை அலங்கரிக்கக் கொடுத்து வைக்கவில்லை.*

*மஹீபதியின் மடியில் உட்கார்ந்து மரியாதையும் கௌரவமும் பெருகும்படி இந்தச்சிறந்த ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்க விரும்புவாயானுல் சுருசியின் சோபனமான கர்ப்பத்தை விட்டு மற்றவளுடைய கர்ப்பத்தில் போய் ஏன் பிறந்தாய்? இவ்விதமாக ராஜஸபையின் மத்தியில் துருவனை மிகவும் இழிவாக ஏசினுள்,*

*துருவன் கண்களின் (தளும்பும்) ஜலத்தை அடக்கிக்கொண்டு பேசாமல் இருந்தான். பட்டமஹிஷி ஸுருசியின் ஸௌபாக்ய கர்வத்தில் ஊறிப்போயிருந்த அரசனும் இது உசிதம் அநுசிதம் என்று ஒரு வார்த்தையும் கூருமல் இருந்தான். துருவன் ஸபையை விட்டு குழந்தைகளுக்குண்டான சேஷ்டைகள் மூலமாக*

*சோகத்தை மறைத்துக் கொண்டு ராஜாவை மறுமுறை வணங்கிவிட்டுத் தன்னுடைய இருப்பிடத்திற்குத் திரும்பினுன். ஸுநீதியும் குணசீலனுனத் தன் புதல்வனைப் பார்த்துவிட்டு குழந்தையின் முகத்திலிருந்தே அவன் அவமானப்பட்டு வருவதை அறிந்து கொண்டாள். உடனே அவள் குழந்தையின் ஸமீபம் சென்று வருத்தத்தால் வாடியிருக்கும் மகனுக்கு ஆறுதல் கூற விரும்பினுள். முத்தமிட்டு இதயத்துடன் அணைத்தாள். பிறகு அந்தப்புரத்தில் ஸுநீதி தனியாக இருக்கும் ஸமயம் பார்த்து, துருவன் நெடுமூச்செறிந்து தன் மாதாவின் முன்னுல் அழத் தொடங்கினுன். மாதாவும் கண்ணீர் வடிக்கும் புத்திரனை ஸமாதானப்படுத்தினுள்.*

*மென்மையான கைகளினுல், மிருதுவான வஸ்திரத்தின் முந்தானையினுல், அவன் முகத்தைத் துடைத்துக் கொண்டே கூறினுள். மகனே! ஏன் அழுகிறுய் அப்பா? ராஜா அங்கிருக்கும் போது உன்னை யார் அவமானப்படுத்தினுர்கள்?*

*இதன் பிறகு ஜலத்தை எடுத்து வாய் கொப்பளித்து ஆஹாரம் உட்கொள் கொள் என்று வற்புறுத்திக் கேட்டவுடன் துருவன் சொல்ல ஆரம்பித்தான்.*

*தாயே! நான் உன்னிடம் ஒன்று கேட்பேன், நீ சரியாக பதில் சொல்ல வேண்டு, நீயும், ஸுருசியும் மஹாராஜாவிற்கு ஒரே மாதிரி தானே மனைவியாக இருக்கிறீகள். அப்படியிருக்கும்போது ஸுருசியிடம் மாத்திரம் ஏன் பிதா - மிகவும் அன்பாக இருக்கிறுர்?*

*நீ மாத்திரம் ஏன் பூபதிக்கு அன்பானவளாக இருக்கவில்லை? நானும், உத்தமனும் இருவருமே ராஜகுமாரர்கள் தானே - நான் அநுத்தமனு? நீ அபாக்கியவதியா? பின் ஏன் ஸுருசி அவ்விதம் கூறுகிறுள்? ராஜாவின் ஸிம்மாஸனம் உத்தமனுக்குத் தான் ஏற்றது என்றும், நான் அதில் உட்காரப் புண்ணியம் பண்ணவில்லை என்றும் கூறி. உன்னையும் அபாக்யசாலி*

என்கிறுளே, நான் செய்த புண்ணியம் துச்சமானதா? என்றுன்.

மிகவும் புத்திசாலியான, ராஜநீதிகளை யறிந்த ஸுநீதி நியாயமாகப் பேசும் துருவனுடைய வார்த்தைகளைக் கேட்டு நெடுமூச்செறிந்து மெல்ல மெல்ல மகனை சாந்தப்படுத்தும் பொருட்டு ஸாமான்யமாக இருக்கும் சக்களத்திப் பொறுமையை விட்டு விட்டு இயற்கையான மதுரவசனத்தில் சொல்லத் தொடங்கினுள்.

ஸுநீதி கூறினுள்- அப்பனே அதிபுத்திமானுன குழந்தாய்! நான் நிர்மலமான உள்ளத்துடன் உனக்கு எல்லாம் கூறுகிறேன். மனதில் கூட அவமானமாக நினைக்காதே. ஸுருசி கூறியதெல்லாம் உண்மையே ஒன்றும் பொய்யல்ல. அவள் தான் அரசரின் பட்டமகிஷி. மற்ற ராணிகளையெல்லாம் விட அரசருக்கு மிகவும் பிரியமானவள்.

அவள் முன் ஜன்மத்தில் புண்ணியம் செய்திருக்கிறுள். அதனுலேயே அதை இந்த ஜன்மத்தில் அனுபவிக்கிறுள். அரசரும் அவளிடம் அதிப்ரியமாக இருக்கிறுர்.

நான் அபாக்யவதி. அரசரின் எத்தனையோ மனைவிகளில் ஒருவளாகக் கருதப்படுபவள். ராஜ பத்னியை ராஜமாதா என்று கூறுவார்கள். மற்றவர்கள் பெயருக்குதான் ராஜபத்னிகள். இவர்கள் எல்லாரிடமும் ராஜாவிற்கு அதிகம் ப்ரியம் கிடையாது.

உத்தமன் மிகவும் புண்ணியம் சேர்த்து வைத்திருப்பதால் புண்ணியவதியான மாதாவின் கர்பத்தில் பிறந்திருக்கிறுன். அதனுல் அவனே ஸிம்மாஸனத்திற்குத் தகுந்தவன்.

சந்திரப்ரபை, சத்ரம், சாமரம், அத்தனை உயரமான ராஜ ஸிம்மாஸனம், மதமத்தமான யானைகள், வேகமுடைய குதிரைகள், நிஷ்கண்டகமான ராஜ்யம், ஸர்வச்ரேஷ்டமாக ஹரிஹரன் இவர்களுக்குப் பூஜை.

விபுலமான கலைஞானம், அத்யயனம், ஒருவராலும் ஜயிக்க முடியாத வீரம், காமக்ரோதங்களாகிய ஆறு சத்ருக்களிடத்தும் ஜயம், ஸ்வாபிமானம், நிறைந்த புத்தி கருணையோடு கூடிய பார்வை, மதுரமான பேச்சு, காரியங்களில் நிபுணத்வம், குருஜனங்களிடத்து விநயம் எப்பொழுதும் தூய்மை, எப்பொழுதும் பரோபகாரம், தேஜஸ்ஸுடன் கூடின மனோவ்ருத்தி,

நிரந்தரமான அதீனமான வாத ஸபாவில் பேசக் கூடிய சாதுர்ய புத்தி, யுத்தத்தில் தைர்யம், பந்துவர்கத்தில் ஸரளத்தன்மை, கொடுக்கல் வாங்கல்களில் கடினத்தன்மை.

ஸ்த்ரீகளிடத்தில் ம்ருதுத்தன்மை, ப்ரஜைகளிடத்தில் வாத்ஸல்யம், ப்ராம்மணர்களிடம் பக்தி, ஸதாசார வ்ருத்தியில் வாழ்க்கை. பாகீரதீ தீரத்தில் வாஸம், தீர்த்தக்ஷேத்ரத்திலேயே, ரணக்ஷேத்ரத்திலேயே மரணம் யாசகர்களிடம் பராமுகமாக இல்லாதிருத்தல், விசேஷமாக சத்ருக்களிடத்தில் கவனம்.

குடும்ப ஜனங்களுடன் போஜனம், தானாதிகளினால் நரர்களைப் பலனுள்ளதாகச் செய்வது, தினம் வித்யாப்யாஸம் எப்பொழுதும் மாதா பிதாக்களுக்கு ஸேவை.

ப்ரதி தினமும் கீர்த்தியை சேகரித்து வைத்துக் கொள்ளுதல், ஸத்ய தர்மத்தை சேகரித்தல், ஸ்வர்கம், மோக்ஷம் இவைகளை அடைய ஸித்தி பண்ணுதல், எப்பொழுதும் நன்னடத்தையுடனன் இருப்பது தினம் இதிஹாஸ புராணாதிகளைக் கேட்டல், ஸாது ஸங்கம், தகப்பனின் நண்பர்களுடன் தோழமை; ஆபத்து சமயத்தில் தீரம், உறுதியான மனப்பான்மை, வாக்விலாஸத்தில் ஆழம், பாத்ரம் ஏந்தி பிக்ஷை எடுப்பவர்களிடம் உதாரம். தபஸ்ஸினாலும், நியமத்தினாலும் ஒருவித ஆர்வம். அதனால் சரீரத்தைப் பெருக்க விடாமல் வைத்துக் கொள்ளுதல் முதலான தபஸ்யாரூபமான வ்ருக்ஷத்தில் மனோரதங்களான பழம் பழுக்கும்.

*அதனுல் மஹாதேவரிடம் நீயும் நானும் அதிக தபஸ் பண்ண முடியவில்லே. ராஜஸாந்தித்யம் கிடைத்தும் ராஜலக்ஷ்மியிடம் நமக்குப் பங்கில்லே. அதனுல் மானமும் அவமானமும் நமது கர்ம வசத்திஞலேயே ஏற்படுகிறது. ப்ரம்மாவிஞல்கூட நமக்கு ஏற்பட்டிருக்கும் விதியின் பலனேக் குறைக்க முடியாது. அதனுல் எனது குழந்தாய்! நீ வருத்தப்படாதே. முன் ஜன்ம பாக்கியமே இஷ்ட வஸ்துக்களேக் கொடுக்கிறது.*

*ஸுநீதியின் இந்த நீதிமயமான வாக்யங்களேக் கேட்டு துருவன் பதில் கூற ஆரம்பித்தான். ஏ ஜனனீ! எனது வார்த்தைகளே உறுதியுடன் கேள். ஹே! தபஸ்வினீ! கஷ்டம் ஸஹிப்பவளே! என்னேப் பாலன் என்று நினேத்து அவமானப்படுத்தாதீர்கள்.*

*அம்மா! நான் பவித்ரமான மநு வம்சத்திலேயே பிறந்திருப்பது நிஜமானுல், உத்தானபாதருடைய சொந்த பிள்ளேயானுல் உன்னுடைய கர்ப்பத்தில் பிறந்தது நிச்சயமானுல், தபஸ்தான் எல்லா ஸம்பத்துக்களுக்கும் காரணமானுல் மற்றவர்களால் அடைய மிகவும் கஷ்ட ஸாத்யமான பதவியை அடைந்ததாகவே நினேத்துக் கொள்.*

*அம்மா! பாச பந்தந்தை நீக்கி விட்டு எனக்கு தபஸ்ஸிற்கு செல்ல அனுமதி கொடு. உன்னுடைய ஆசீர்வாதத்திஞல் என்னே ஸந்தோஷப்படுத்து போதும். இந்த ஒரு உதவி மாத்திரம் எனக்குச் செய்.*

*தனது குமாரனே அதிக புத்திசாலியும், பரம உத்தமஞகவும் எண்ணின போதும்கூட அவள் சொன்ஞள்-பால் மணம் மாருத பாலகனே! இப்பவும் உன் வயது ஒன்பதைத் தாண்ட வில்லேயே, அப்பா, இந்த விஷயத்தில் உனக்கு ஸம்மதம் கொடுக்க முடியுமா?*

*ஆஞல் கூறுகிறேன். சக்களத்தியின் வசனரூபமான ஈட்டியிஞல் துளேக்கப்பட்ட உன்னுடைய ஹ்ருதயத்தில், உன்னுடைய கண்ணிலிருந்து விழுந்த கண்ணீர் ஒரு நிமிஷம் நேரம் தங்கவில்லேயே. நான் என்ன செய்யட்டும்!*

குழந்தாய் அந்தக் கண்ணீர் பெருக்கே என் ஹ்ருதயத்திலிருந்து என் கண்களின் மூலமாக எப்பொழுதும் பெருகிக் கொண்டேயிருக்கிறதே. அந்த துக்கக் கண்ணீர் பெருக்கானது ஒரு பூரண நதியாகும் போலிருக்கிறதே.

அப்பா! நீ எனக்குப் புதல்வனல்லவா? என் வாழ்விற்கு ஒரே ஆதாரமல்லவா? நீயே குருடியான எனக்குக் கோலல்லவா? என்னுடைய கண்கள் உனது முகத்திலேயே பதிந்திருக்கிறனவே.

இஷ்ட தெய்வத்திடம் எத்தனைக் காலமோ ப்ரார்த்தித்த பிறகு மிகவும் கஷ்டத்துடன் உன்னைப் பெற்றேன். அப்பா! உன்னுடைய முக சந்திரனைப் பார்த்த என்னுடைய ஹ்ருதய ரூபமான க்ஷீரஸமுத்ரம் ஆனந்தப் பெருக்கான அலைகளைப் பெருக்கி எனது ஸ்தன ரூபமான கரையை உடைத்துக் கொண்டு கிளம்புகிறதே. உன்னுடைய அங்க ஸம்ஸர்கம் எவ்வளவு தன்மையாக இருக்கிறது. அதனால் ஏற்பட்ட புளகாங்கிதரூபமான வஸ்த்ரத்தை இருத்திக் கொண்டு நான் கட்டிலில் ஸுகமாகத் தூங்குகிறேன். ஏ! சந்திரவதனா! உன்னுடைய அதரரூபமான க்ஷீரஸாகரத்தை மதித்து வந்த அமுதமென விளங்கும் உமிழ்நீரை பானம் பண்ணின பிறகும் கூட எனது அபிலாஷை தீரவில்லையே.

உனது குளிர்ந்த குரல் எனது செவியில் விழும்பொழுது சக்களத்தியின் கடும் சொல்லின் வேதனை சற்று நேரத்திற்குக் குறைந்து போகிறது.

குழந்தாய்! நீ சற்று நேரத்திற்கு தாமதித்து எழுந்திருந்தாயானால், நான் எண்ணுவதுண்டு- சூர்ய உதயம் ஆகிவிட்டதே, எனது குழந்தையின் முககமலம் இன்னும் மலரவில்லையே என்று,

நீ உன் தோழர்களுடன் விளையாடிவிட்டு வந்தவுடன் உனக்கு அர்க்யம் கொடுக்க வேண்டும் என்று

எண்ணுவதுபோல் எனது ஸ்தனங்கள் பாலைப் பொழிகின்றன.

நீ மாளிகையிலிருந்து இறங்கி வெளியில் போகும்போது உனது கால்களின் பத்ம ரேகைகளைப் பார்த்துவிட்டு எனது ப்ராணன் ஒரு ஆதாரம் கிடைத்த மாதிரி ஸந்தோஷப்படும்.

நீ இரண்டு அடி நடந்து வெளியில் சென்றுயானுல் எனது ப்ராணன் நீ வரும்வரை முள்ளில் விழுந்ததுபோல் தவிக்கிறது.

அம்ருதம் பொழிகிற மேகத்தைப் போல் நீ சற்று வெளியில் சென்றுயானுல் எனது இதயம் சாதகபக்ஷி மாதிரி வெகு ஆச்சர்யமாக வெளியே சென்றுவிடுகிறது. அல்லது உனது சந்திரனை நிகர்த்த முகம் சற்று நேரம் காணுவிட்டால் இந்த ஹ்ருதய ரூபமான சகோரம் - பறந்து உன்னிடம் வரத் தவிக்கிறது.

நீ தபஸ்ஸிற்காகச் சென்றுயானுல் எனது கடினமான உயிரும் தவித்துக் கொண்டு முள்கள் நிறைந்த வனத்திற்குப் போய்த் தவியாய் தவிக்கும் என்றுள்.

கடைசியில் துருவன் மாதாவிடம் இருந்து ஆக்ஞையை அரிதில் பெற்று அவளது சரண கமலங்கள் இரண்டையும் தனது கேச பாசமாகிற சகதியில் பதித்து எடுத்துக்கொண்டு புறப்பட்டான். அவளும் தனது கண்ணீர் நிரம்பிய கமலபுஷ்பங்களைத் தைர்யமாகக் கயிற்றில் கோர்த்து மாலையாக அணிவித்தாள்.

மஹாபராக்ரமசாலியான அந்த பாலகன் தனது மாளிகையிலிருந்து புறப்பட்டு அனுகூலமாக வாயு தேவன் வழிகாட்ட அந்தத் திசை நோக்கிச் சென்றுன். வனத்தில் வாயுவினுல் அசைக்கப்பட்ட மரக் கிளைகள் வா வா என்று அவனுக்கு முகமன் கூறின. அன்னை ஒருவளே அவன் வணங்கும் தெய்வம். துருவன் அரசபாட்டை ஒன்றைத்தான் பார்த்திருக்கிறுன். வனத்தின் வழியைப்

*பற்றிச் சிந்தித்ததேயில்லே. அதனுல் க்ஷண நேரம் நின்று கொஞ்சம் சிந்தித்தான்.*

*க்ஷண நேரம் சென்ற பிறகு அவன் கண்களேத் திறந்து பார்த்த போது வனத்தின் மார்கத்தில் தடையில்லாமல் பாதை வகுத்துச் செல்லும் ஸப்தரிஷிகளேத் தரிசித்தான்.*

*அஸஹாய அக்ஞானி ஜனங்களுக்கு அதிர்ஷ்டமே ஸஹாயமாக இருக்கிறது. வனத்திலாகட்டும், யுத்தத்திலாகட்டும், ஏன்? வீட்டில் தாஞகட்டும் எங்கும் பாக்யமே காரணமாக இருக்கிறது.*

*இந்த ராஜகுமாரன் எங்கே? அந்த அடர்ந்த காட்டுப்ரதேசம் எங்கே? ஹே! வருங்காலமே! உனக்கு வணக்கம். நீ பலவந்தமாகச் சிலரைத் தனதாக்கிக் கொள்கிருய். உனக்கு நமஸ்காரம்.*

*எங்கு சுபமோ, அசுபமோ ஏற்படுகிறதோ அங்கு அவர்களே பலவந்தமாக இழுத்துச் செல்கிருய்.*

*மனிதன் தன் புத்தி பலத்தாலே என்ன செய்ய விரும்புகிருனே அதற்கு நேர் எதிரிடையாக நீ அவனேச் செய்ய பலவந்தப்படுத்துகிருய்.*

*நிலேமை, விசித்ரமான காரியங்களேச் செய்து முடிக்கும் திறமை, பலம், உத்யோகம் அதாவது முயற்சி இவைகள் ஒன்றும் அவனது வருங்காலத்துக்கு உதவி செய்யாது. இவைகளுக்கு நேர் எதிராகவே செய்ய அவனேக் கட்டாயப்படுத்துகின்றன.*

*த்ருவன் அந்த வருங்கால தேவதையுடைய பாக்யரூபி. அதனுடைய ஸூத்ர ஜாலத்திஞல் ஆகர்ஷித்து தேஜஸ்விகளான ஸப்தரிஷிகளுடைய முன்புகொண்டு அவனே நிறுத்தியது. அவர்களே தரிசித்து அவன் மிக ஸந்தோஷமடைந்தான்.*

*அவர்களுடைய விசாலமான நெற்றியில் திலகம், கைவிரல்களில் தர்பையிஞலான பவித்ரம், கட்கத்தில்*

க்ருஷ்ணாஜினம், அணிந்திருந்த அலங்கார யக்ஞோபவீதம், கையில் தண்டம், கண்கள் எப்போதும் தியானத்தில் இருந்ததற்கு அடையாளமாகப் பாதி திறந்திருந்தன. உடுத்தியிருந்தும், தோளில் தொங்கியதுமான காஷாயவஸ்த்ரம்.

அவர்கள் ஸமயமில்லாத ஸமயத்தில் ஜனங்களுக்கு ஸஹாயம் செய்து அவர்களைத் தூக்கி நிறுத்த வென்றே அவர்கள் ஒன்று சேர்ந்து வந்திருக்கிறார்கள் போலும்!

அவர்கள் அருகில் வந்ததும், த்ருவன் பக்தி பூர்வமாகக் கரம் குவித்து நமஸ்காரம் செய்தான். பிறகு மெதுவான வசனங்களினால் துதிக்கத் தொடங்கினான்- ஹே முனீச்வரர்களே, தாங்கள் என்னை மஹாராஜா, உத்தானபாதருடைய பிள்ளை என்பதையறிந்து கொள்ளுங்கள். எனது தாய் ஸுநீதி. அதிர்ஷ்டம் கெட்ட நான் துருவன் என்று பெயர் உள்ளவன். தங்கள் எல்லாருடைய ஆசீர்வாதத்தாலும் இந்த வனத்திற்கு வந்திருக்கிறேன்.

எனக்கு உலக விஷயங்கள் எதுவும் தெரியாது. ஏனென்றால் இன்று வரை சித்தம் ராஜ ஸம்பத்திலேயே முழுகியிருந்தது.

மஹர்ஷிகள் இந்த மிகுந்த தேஜஸ்ஸோடு கூடிய, மதுரமான ஆக்ருதியுடைய அரிதான நீதி வாக்யங்களை உச்சரிக்கிற பிள்ளையின் மதுரமான கம்பீர வசனத்தைக் கேட்டு, பாலகனைத் தங்கள் மத்தியில் ப்ரியத்தோடு உட்காரவைத்துக் கேட்டார்கள்- அப்பனே! மலர்ந்த விசாலமான கண்களையுடைய மஹாராஜகுமாரனே கேள்!

நாங்கள் ஆலோசித்துப் பார்த்தும் உனது வருத்தத்தின் காரணம் புலப்படவில்லை. அதனால் நீயே அதன் காரணத்தைக்கூறு. இந்த வயதில் பண ஆசை இருக்க முடியாது. அன்னையின் க்ருஹத்தில் இருப்பதனால் அவமானமடைய இடமேயில்லை.

*சரீரத்திலும் ஒரு ரோகமும் இருப்பதாகச் தெரியவில்லே. பின் இத்தனே வேதனேக்குக் காரணம் என்ன! யாருடைய மனோரதங்கள் ஈடேறவில்லேயோ, அவர்களுக்கு மனதில் வைராக்யம் ஏற்படும்.*

*ஆனுல் நீ ஸப்தத்வீபாதிபதியின் பிள்ளே. உனது மனதில் இப்படிப்பட்ட எண்ணம் உதித்திருக்கவே ந்யாயமில்லே. ஆனுல் ஒவ்வொருவரின் ஸ்வபாவம் ஒவ்வொரு மாதிரி இருக்கும். அதனுல் இந்த ஸம்ஸாரத்தில் யுவனே, கிழவனே, பாலகனே, யார் யாருடைய மனோ வ்ருத்திகள் எப்படி எப்படிப் போகும் என்று ஊஹிக்க முடியாது.*

*அவர்களுடைய இயற்கையான அன்பு நிறைந்த வசனங்கள் கேட்டு, அந்த உயர்ந்த மனோரதத்தை உடைய அந்த பாலகன் துருவன் கூறத் தொடங்கினுன்- ஹே! ரிஷி புங்கவர்களே! எனது அம்மா - என்னே அரசனே தரிசிக்கும் பொருட்டு ராஜஸபைக்கு அனுப்பினுள்.*

*பிறகு அங்கு நான் அரசனுடைய மடியில் அமர எண்ணினேன். அப்பொழுது எனது இளேய மாதாவான ஸுருசி என்னே அதட்டி, என்னேயும் என் அன்னேயையும் அவமான வார்த்தைகளால் இகழ்ந்தாள். தன்னேயும் தன் புத்ரன் உத்தமனேயும் மிகவும்மெச்சிக் கொண்டான். இதுதான் வருத்தத்திற்குக் காரணம். பையனுடைய வார்த்தையைக் கேட்டுத் தாங்கள் ஒருவரை ஒருவர் ரிஷிகள் பார்த்துக் கொண்டனர்.*

*அவர்கள் க்ஷத்ரியனுடைய குணுதிசயங்களேப் பற்றிப் பெருமையாகக் கூறிவிட்டுக்- கூறினுர்கள்.*

*நாங்கள் உனக்கு என்ன செய்ய வேண்டும் அப்பா! உன்னுடைய மனோரதம் என்ன? அது தெரிந்தால் நலம், எங்களுக்கு அதைத் தெரிவிப்பாய் என்ருர்கள். துருவன் கூறினுன்-*

*ரிஷிகளே! எனது ஸஹோதரன் தான் உத்தமோத்தமனுன உத்தமன். எனது பிதாவினுடைய*

*ஸிம்மாஸனத்தில் இருந்து ராஜ்யத்தை ஆளவேண்டும்.*

*ஏ மஹா வ்ரததாரிகளே! தங்களிடம் நான் இதையே யாசிக்கிறேன்- அதாவது தாங்கள் எனக்கு ஏதாவது ஒரு உபாயத்தை உபதேசியுங்கள், ஏனென்றால் நான் பாலகன். எனக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் எந்த ஸாம்ராஜ்யத்தை இதுவரை ஒரு அரசனும் ஆளவில்லையோ, எல்லா ராஜ்யங்களுக்கும் மேலானதோ, இந்திரன் முதலிய தேவர்களுக்கும் கூடக்கிடைப்பது துர்லபமோ, அதுவே எனக்கு வேண்டும்.*

*நான் பிதாவால் கொடுக்கப்படும் ராஜ்யத்தை விரும்பவில்லை. நான் எனது புஜங்களினாலேயே முயற்சி செய்து கிடைக்கும் ராஜ்யத்தையே அடைய விரும்புகிறேன். அது எனது பிதாவினுடைய மனோரத பதத்திற்கும் மேற்பட்டதாக இருக்கவேண்டும்.*

*பிதாவினுடைய ஸம்பத்தை அனுபவிப்பவர்களுக்குக் கீர்த்தி கிடையாது. எவன் பிதாவை ஆச்ரயிக்காமல் தனது பராக்ரமத்தினால் ஸம்பத்தை அடைகிறானோ அவனே (பராக்ரமன்) நரோத்தமன் எனப்படுகிறான்.*

*யார் பிதாவினால் ஸம்பாதிக்கப்பட்ட ப்ரஸித்தியான கீர்த்தியையோ, தனத்தையோ அழிக்கிறார்களோ, அவர்களுடைய ஸம்ஸர்கத்தைவிட இழப்பதே மேல்.*

*மரீசி முதலிய ரிஷிகள் த்ருவனுடைய நீதிநிறைந்த அந்தப் பேச்சைக் கேட்டதும் அவனுக்கு உண்மையில் பரிவாகப் பதில் கூறத்தொடங்கினார்கள். முதலாவது மரீசி முனிவர் கூறினார்- நீ கேட்ட கேள்விக்கு நானும் அதே மாதிரிப் பதில் கூறுகிறேன். நான் பொய் கூறமாட்டேன். அச்சுதனைச் சரணடையாமல் வேறு யார் இந்தப் பதம் தருவார்கள்?*

*அத்ரி முனிவர் கூறினார்: கோவிந்தனுடைய சரண தூளியில் ரஸம் அருந்தாமல் இந்த மனோரதப்படி ஸுந்தரபதவி ஒருவனும் அடையமாட்டான்.*

அங்கிரஸ் கூறினார்- யார் கமலாகாந்தனுடைய ஸுசீலமான சரணகமலங்களைப் பற்றுவாரோ, அவனுக்கு மைஸ்த ஸம்பத்தியும் அதிக தூரத்தில் இல்லை.

புலஸ்தியர் கூறினார் :- யாரை நினைத்த மாத்திரத்திலேயே பாபராசிகள் நிமிஷமாக விநாசம் அடைந்து விடுகின்றனவோ, அந்த விஷ்ணு பகவான் எல்லாம் கொடுக்கத் தயாராக இருக்கிறான்.

ஸ்ரீ புலகர் கூறினார்- யாரை ப்ருக்ருதி புருஷனிலும் அப்பாற்பட்டவர்கள் என்று கூறுகிறார்களோ, எந்த பரப்ரம்மத்தின் யோகமாயை எல்லா ப்ரமாண்டங்களையும் மறைத்து இருக்கிறதோ, அந்த நாராயணன் எல்லாம் செய்வான்.

க்ரது ரிஷி கூறினார்: வேதம் அறிந்த அந்த பத்ம புருஷன் ஜகத்தின் அந்தராத்மா, ஸர்வ வ்யாபி, ஜனார்த்தனர் ஸந்தோஷம் அடைந்தால் எதுதான் ஸாத்யமாகாது?

வஸிஷ்டர் கூறினார் :- ராஜகுமாரா! யாருடைய புருவம் சலித்தால் அணிமாதி ஸித்திகள் கைகூடுமோ அந்த ரிஷீகேசனை ஆராதனை செய்தால் மோக்ஷமும் அதிதூரத்தில் இருக்காது.

அப்பொழுது துருவன் கூறினான்: ரிஷிகளே! தாங்கள் பகவான் விஷ்ணுவை ஆராதிக்கும்படிச் சரியாகத்தான் யோசனை கூறினீர்கள். ஆனால் அவரை எந்தவிதமாக ஆராதனை செய்ய வேண்டும்? அந்த விதியையும் தயவு செய்து எனக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்றான்.

அப்பொழுது முனிவர்கள் கூறினார்கள், தூங்கும் பொழுதும், விழித்திருக்கும் போதும், நடக்கும் போதும், அமரும் போதும், எப்போதும் நாராயணனை பூஜித்துக் கொண்டேயிருக்க வேண்டும். சதுர்புஜ விஷ்ணுவை த்யானம் செய்துகொண்ட பரமபாவனமான த்வாதசாக்ஷர மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தால் யாருக்குத்தான் ஸித்தி கிடைக்காது?

*காயாம்பூ புஷ்பத்தைப் போன்றவரும், பீதாம்பரரும், வனமாலையை அணிந்தவரும். க்ஷணமாத்ரத்திலேயே ஸர்வ வ்யாபியாக இருப்பவருமான அவரை த்யானித்தால் உலகில் ஸித்தி அடையாதவர்கள் யார்?*

*மனிதன் வாஸுதேவனைப் பூஜிப்பதனால், புத்ரன், களத்ரம், மித்ரன், ராஜ்யம், ஸ்வர்கம், அவரவர்களுக்கு வேண்டியதெல்லாவற்றையும் ஸந்தேஹத்திற்கு இடமில்லாமல் அடைகிறான்.*

*வாஸுதேவனின் ஜபத்தில் ஆழ்ந்தவர்களுக்கு (பாபிகளாலும்) பயங்கரமான விக்னங்களும், யமதண்டனையும் கூட அவர்களைத் தொடுவதற்குக் கூட இடம் கிடையாது.*

*மிக ஸம்ருத்தி ஸம்பன்ன ச்ரேஷ்டரான வைஷ்ணவர் உன் பிதாமகன் ராஜ்யகார்யங்களில் இந்த மஹா மந்திரத்தை ஜபித்து வந்தார்.*

*ஏ! உத்தமா! நீயும் இந்த மந்திரத்தை (ஜபித்து) க்ரஹித்து ஜபித்து வாஸுதேவ பராயணராக ஆகுவாய். உன் இடத்துக்கு சீக்கிரமே ஸகலஸம்பத்துகளும் வரும். இவ்விதம் கூறிவிட்டு அந்த மகாத்மாக்கள் மறைந்தனர். இதன்பிறகு த்ருவனும் வாஸுதேவரிடம் ஏகாக்ரசித்தத்தைச் செலுத்தித் தபஸ் செய்யலானான்.*

*இவ்விதம் ஸ்காந்தபுராணம், நான்காவதான காசீகண்டத்தில் பூர்வார்த்தபாஷா டீகாவான த்ருவ ப்ரத்யானம் என்று பெயருள்ள 19வது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 20

விஷ்ணு தூதர்கள் கூறினார்கள்: ஹே! ப்ராஹ்மணா! உத்தானபாதருடைய புத்ரனை. த்ருவன் அந்த வனத்திலிருந்து வந்து யமுனா தீரத்தில் மிகவும் அழகான ரமணீயமான மது வனத்தையடைந்தான். மதுவனம் என்பது வாயுதேவனுடைய பவித்ரமான வஸிக்கும் இடமாகும். இங்கு வந்து வஸிக்கும் பாபிகள் கூடப் பாபமில்லாதவர்களாக ஆகிவிடுவார்கள்.

இங்கு த்ருவன் ஒருவிதமான இடையூறுமில்லாமல் வாஸுதேவனுடைய மந்த்ரத்தை உச்சரித்துக் கொண்டிருந்தான். த்யானத்திலமர்ந்து எல்லா உலகங்களையும் விஷ்ணு ஸ்வரூபமாகப் பார்க்கத் தொடங்கினான்.

ஸகல திக்மண்டலங்களிலும் ஹரியையே பார்த்தான். ஸூர்ய தேவனுடைய கிரண ஜாலங்களிலும் ஹரியையே கண்டான். வனத்திலிருந்த ஸிம்மம், நரி, மான் ஆகிய ம்ருங்கங்களிலும் ஹரியையே கண்டான். ஜலத்திலும் மீன், ஆமை போன்ற ஜந்துக்களிலும் ஹரியிருக்கக் கண்டான். ராஜாக்களிடத்திலும் அஸுரர்களிலிடத்திலும் ஹரி நிறைந்திருப்பதை உணர்ந்தான்.

அவரே பாதாளத்தில் ஆதிசேஷனாகவும், ஆகாசத்தில் அனந்தன் என்ற நாமத்துடனும் இருக்கிறார். அநந்த வேதங்களால் அனந்தமாக இருக்கக் கண்டான். அவரே தேவதைகளின்

மத்தியில் இருக்கிறார், இதனாலேயே அவர் வாஸுதேவர் என்று போற்றப்படுகிறார், பின்னும் வாஸனா பலத்தினால் அவித்தை என்னும் மாயையுடன் சேர்த்து லீலையும் புரிகிறான், அதனாலேயே அவருடைய பெயர் வாஸுதேவர்.

இந்த ஸர்வவ்யாபகமாக இருக்கும் பகவானுடைய பெயர்தான் விஷ்ணு. 'விஷ்' எனும் தாதுவுக்கு எங்கும் பரந்தது என்று ஸம்ஸ்க்ருதத்தில் அர்த்தம். இவருடைய விஷ்ணு என்னும் பெயரிஞல் அந்த தாதுவானது அர்த்த புஷ்டியுள்ளதாக ஆயிற்று.

எங்கும் நிறைந்த பரமேச்வரன் ஸகல இந்த்ரியங்களுக்கும் போஷகராக இருப்பதால் 'ரிஷீகேசர்' என்னும் பெயரிஞல் புகழ் பெற்றிருக்கிருர்.

மஹா ப்ரளய காலத்திலும்கூட இவருடைய பக்தர்கள் அழிவதில்லே. இதஞலேயே அகிலலோகத்திலும் எங்கும் நிறைந்த அவ்யய புருஷனே அச்சுதன் என்று கூறுகிருர்கள்.

இவரே இந்த சராசர நிகில உலகை லீலா மாத்திரமாக, தனது ஸ்வரூப ஸம்பத்தை யளித்து போஷிக்கிருர். அதஞல் விச்வம்பரர் என்னும் பெயரை உடையவராக இருக்கிருர்.

அந்த பாலனுடைய மனக் கண்கள் ஸர்வவ்யாபி பகவானுடைய பாத கமலங்களில் பதிந்திருந்ததே ஒழியே வேறு ஒருபுறமும் நோக்கவில்லே. ஏனென்ருல் இந்த நியமத்தை அனுஸரித்தவர்களுக்குத் தான் புண்டரீகாக்ஷனுடைய தரிசனம் கிடைக்கும்.

அவனுடைய இருகாதுகளும் முகுந்தன், கோவிந்தன், தாமோதரன், சதுர்புஜன், என்ற இந்த சப்தங்களேத் தவிர வேறு எந்த சப்தங்களேயும் கேட்கவில்லே. சங்கு சக்கரங்கள், முத்திரையிட்ட த்ருவனுடைய இரண்டு கரங்களும் கோவிந்தனுடைய சரணும்புஜங்களேத் தவிர வேறு பூஜை செய்யவில்லே. பகவானுடைய கைங்கர்யங்களிலேயே அவனது கைகள் ஈடுபட்டிருந்தன.

த்ருவனுடைய சித்தம் மற்ற கவலேகளே எல்லாம் விட்டு விட்டு வாஸுதேவனுடைய த்வந்த்வமற்ற சரணங்களேயே நினேத்துக் கொண்டிருந்தது. ஆச்சர்யமான தபஸ் செய்து வரும் அந்த த்ருவனுடைய இரண்டு கால்களும் அசையாமல் நின்று விஷ்ணு பகவானே

அடைக்கலமடைந்து மனம் மட்டும் நாராயண மந்த்ரம் ஒன்றையே ஜபித்துக் கொண்டு வேறு ஒரு இடத்திலும் அலையாமல் நின்றது. மௌனமாக மஹாஸாரரூபமான தபஸில் தத்பரனுக இருக்கும் த்ருவன் கோவிந்தனுடைய குணத்தை கானம் செய்வதிலேயே வாணிக்கு (நாக்குக்கு) இடம் கொடுத்தான். அவனுடைய நாக்கு கமலாகாந்த-நாமாம்ருத ரஸத்தைப் பருகுவதினுலே வேறு ரஸங்களின் இச்சை அதற்கு ஏற்படவில்லை. அவனுடைய நாஸி முகுந்தனுடைய சரணும்புஜங்களுடைய வாஸனையை முகருவதினுல் மற்ற கந்தங்களை அதனுல் முகரமுடியவில்லை. அந்த ராஜகுமாரனுடைய தோல் மதுஸூதனனுடைய சரணங்களை ஸ்பர்சித்து ஆனந்தத்தை அனுபவிக்கத் தொடங்கியது. த்ருவனுடைய எல்லா இந்த்ரியங்களும் தாமோதரனைத் தங்களது விஷயத்துக்கு ஆதாரமாக அடைந்து பரம க்ருதார்த்தத்தையடைந்தன. மூன்று லோகங்களையும் ப்ரகாசிக்கச் செய்யும் த்ருவனுடைய தபோரூபமான ஸூர்யன் உதயமானவுடவன் சந்த்ரன், ஸூர்யன், அக்னி, க்ரஹங்கள் இவைகளுடைய ப்ரகாசம் மங்கிவிட்டது.

இந்த்ரன், சந்த்ரன், வாயு, வருணன், யமன், குபேரன், அக்னி, நிர்ருதி முதலியவர்களுக்குத் தங்கள், தங்கள் பதவி நிலைக்குமோ என்று ஸந்தேஹம் வந்து விட்டது. வஸு முதலிய விமானசாரிகளும். தேவகணங்களும் த்ருவன் நமது பதவியை எங்கே பிடித்து விடுவனே என்று த்ருவனைக் குறித்து பயப்பட ஆரம்பித்தார்கள்.

பூமியில் த்ருவன் எங்கெங்கு கால் வைக்கிருனே, அங்கங்கு பூமி பதிய ஆரம்பித்தது. ஆச்சர்யம் அவனுடைய பயத்தினுல் ஜலராசிகளும் தங்கள் ஜடத்தன்மையை மறந்து எங்கு நிறை ஜலம் இருக்கும் என்று தேடி அங்குபோய்ச் சேர்ந்துவிட்டன. உலகத்தில் எத்தனை ஸித்திகள் இருக்கின்றனவோ, அவைகள் த்ருவனுடைய தபஸ்ஸின் ப்ரபாவத்தினுல் த்ருவனுக்கு எதிரில் கண்கூடாகத் தோன்ற ஆரம்பித்தன.

என்ன ஆச்சர்யம்: உலகில் வாயு எதை எதை ஸ்பர்சிக்கிறதோ, அந்த ஸ்பர்சங்கள் எல்லாம் த்ருவனுடைய உடலில் ஸ்பர்சித்தன.

சப்தகுண ரூபமான ஆகாசமும், த்ருவனுக்கு ஸேவை செய்ய வேண்டும் என்ற புத்தியினால் உண்டாகும் சப்தங்கள் அனைத்தையும் அவனுடைய காதுகளுக்குக் கேட்கச் செய்தது.

இந்த விதமாக ப்ருத்வீ முதலிய பஞ்ச பூதங்களும் த்ருவனை ஆராதித்தபோதிலும், த்ருவன் கோவிந்தனிடத்திலேயே மனதை நிலை நிறுத்தி தபஸ்ஸே பரம முக்யம் என்று கருதி வந்தான். அந்த பாலகன் கௌஸ்துபமணி சோபிக்கும் வக்ஷஸ்தலமும், பீதாம்பரமும் தரித்த பகவானுடைய த்யான ப்ரபாவத்தினால் இந்த உலகைத் தேஜோமயமாக ஆக்கிவிட்டான்.

அவனுடைய தபஸ்ஸினால் பயமடைந்த இந்த்ரன் மிகவும் விசாரத்தில் ஆழ்ந்தான். என்னுடைய பதவியை இவன் விரும்பினால் அவசியம் அவனுக்குக் கொடுத்து விடுவார் பகவான். இந்த அப்ஸரஸ்ஸுகள் ஜிதேந்த்ரியர்களின் உருக்கத்தையும் கெடுத்து விடுவார்கள். ஆனால் அவர்களுடைய மாயை யௌவன புருஷர்களை அல்லவா தாக்கும், இந்த பாலகன் விஷயமாக நான் என்ன செய்வது? தபஸ்விகளின் தபஸ்ஸை பங்கப்படுத்தக் காமமும், க்ரோதமும் எனக்கு உதவி செய்யும்,ஆனால் அவைகள் இரண்டும் இந்த பாலகனிடத்தில் சக்தியற்றுப் போயிற்றே.

இந்தச்சிறுவனை ஒரே ஒரு உபாயத்தினால் பயமுறுத்தலாம் என்று தோன்றுகிறது. பயங்காரமான பூதங்களை இவனிடம் ஏவிவிடலாமா? பாலகனை பூதங்களை விட்டு பயமுறுத்தினால் அவசியம் தபஸ்ஸை விட்டுவிடுவான். இந்த்ரன் இவ்வாறு யோசித்து பூதகணங்களை பாலகனிடத்தில் ஏவிவிட்டான்.

ஒன்று கரடியைப் போலவும், மற்ருென்று ஒட்டகை மாதிரி கழுத்தை மாத்திரம் நீட்டிக்கொண்டிருக்கும். ஒன்று பயங்கரமான பற்களையுடையதாகவும் வந்து பாலகன் மேல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தது. புலியைப் போலவும் யானையைப் போல் பெரிய உடம்புடனும், பயங்கரமான முகத்துடனும் வாய்திறந்து கொண்டும் அடிக்கடி கர்ஜித்துக் கொண்டும், பாலகன் மேல் பாய்ந்தது.

பயங்கர முகத்தைடைய ஒரு பூதம் மாம்ஸத்தைக் கடித்துக் கொண்டு கோபத்துடன் த்ருவனைப் பார்த்துக் கொண்டே ஓடிவந்தது. ஒரு பூதம் காளை மாதிரி உருவத்தில் மிகவும் கூர்மையான இரண்டு கொம்புகளையும் நீட்டிக்கொண்டு பூமியைக் குத்திக் குதறிக்கொண்டு, த்ருவனை நோக்கிப் பாய்ந்தது. ஒரு பூதம் பயங்கர ஸர்ப்ப உருவில் இரண்டு நாக்குகளையும் வெளியில் நீட்டிக் கொண்டு அவன் அருகில் வந்து சீறத்தொடங்கியது

மற்ருென்று எருமை உருவத்தில் கொம்புகளினுல் மலைகளைப் பெயர்த்துக்கொண்டு வாலைப் பூமியில் அடித்துக்கொண்டு பெருமூச்சுடன் த்ருவன் மேல் பாயத் தொடங்கிற்று. ப்ரளயாக்னியில் எரிந்த கஜூர வ்ருக்ஷத்தைப் போல் இரு தொடைகளையுடைய ஒரு பூதம் வாயைப் பெரிதாகப் பிளந்து கொண்டு அவனைப் பயமுறுத்தியது. ஒரு பூதத்தின் முடி மேகமண்டலத்தை உராய்ந்து கொண்டிருந்தது. அதனுடைய வயிறு நீண்டதாகவும் க்ருசமாகவும் இருந்தது. வெளியில் பதுங்கி நிற்கும் இரு மஞ்சள் கண்களுடன் த்ருவனை பயமுறுத்தியது. இடது கையில் வாளும், வலது கையில் மந்தனுடைய மண்டையோடும் எடுத்துக் கொண்டு சிதைந்த முகத்துடன் ஒரு பூதம் ப்ரசண்ட ஸிம்மநாதம் செய்து கொண்டு பாலகன் மேல் பாய்ந்தது.

ஒன்று பெரிய ஸால வ்ருக்ஷத்தைப் பிடுங்கிக் கொண்டு சிவ, சிவ என்று சப்தித்துக் கொண்டு தண்டத்துடன் வரும் யமராஜரைப் போல் அவன் மேல்

பாய்ந்தது. இருளடைந்த குகைபோல் முகத்தைக் காட்டிக்கொண்டு, வாயைப் பிளந்து கொண்டு ஒரு பேய் அவன் மேல் விழுந்தது. மற்றொரு பூதம் ஆந்தையைப் போல் விழித்துக்கொண்டு, கீச்கீச் சென்று கத்திக்கொண்டு அவன் மேல் பாய்ந்தது.

ஒரு யக்ஷிணி ஒரு அழுகிற குழந்தையைத் தூக்கிகொண்டு வந்து கிழித்து, நரி, ஓநாய் மாதிரி அதன் ரத்தத்தைக் குடிக்கத் தொடங்கியது.

அந்த பூதம் த்ருவனைப் பார்த்து த்ருவா! இந்தக் குழந்தையின் ரத்தத்தை குடித்த மாதிரி உன்னையும் கிழித்து உன்னையும் உண்பேன் என்றது.

ஒரு யக்ஷிணி சுள்ளிகளைச் சேகரித்து நான்கு புறமும் கொளுத்தி கொடுங்காற்றாக அதை ஜ்வலிக்கச் செய்தது. ஒரு வேதாளம் பர்வதத்தையும் வ்ருக்ஷத்தையும் பெயர்த்து வந்து த்ருவனுடைய தலைக்குமேல் காட்டி அவனை நடுங்கச் செய்வதற்காக ஆகாச மார்க்கத்தைத் தடுத்தது. மற்றொரு பூதம் த்ருவனுடைய மாதா ஸுநீதியின் உருவம் எடுத்துக் கொண்டு தூரத்திலிருந்தே த்ருவனைப்பார்த்து துக்கம் தாளாமல் வயிற்றில் அடித்துக்கொண்டு அலறியது. மற்றொன்று மிகவும் தீனமான குரலில் ப்ரிய வசனங்களைக் கூறிக்கொண்டு வாத்ஸல்யத்தை வெளியிட்டது.

சரணாகத வத்ஸல! குழந்தாய் த்ருவ! நீ ஒருவன்தான் என்னைக் காப்பாற்றத் தகுதியுள்ளவன். ஐயோ, ம்ருத்யுதேவன் என் ப்ராணனைப் பறித்து இழுத்துச் செல்கிறான். நான் செத்துக் கொண்டேயிருக்கிறேனே. என்னைக் காப்பாற்று! என்னை ரக்ஷி என்றது.

உன்னைப் பார்ப்பதற்காகவே க்ராமம், நகரம், பர்வதம் இங்கெல்லாம் அலைந்து களைத்துப் போயிருக்கிறேன்.

அடே! குழந்தாய்! எந்த தினத்திலிருந்து, நீ தபஸ் செய்ய வேண்டுமென்று வெளியில் கிளம்பி வந்தாயோ, அந்த தினத்திலிருந்து உன்னைப் பார்ப்பதற்காக வெளிக் கிளம்பி வந்தேன்.

எப்படி என்னுடைய சக்களத்தியின் வசனத்திஞல் பீடிக்கப்பட்டாயோ நானும் அவளுடைய வசன ரூபமான பாணங்களிஞல் மிகவும் வருந்திக்கொண்டிருக்கிறேன்.

அந்த நாளிலிருந்து நான் தூங்கவும் இல்லே விழிக்கவுமில்லே. உணவு அருந்தவும் இல்லே. தண்ணீர் பருகவும் இல்லே. நான் உன்னுடைய பிரிவிஞல் யோகினியைப் போல எப்பொழுதும் உன் சிந்தையிலேயே மூழ்கியிருக்கிறேன்.

என்னுடைய கண்கள் நித்திரைக்கு ஏங்கி தரித்ரமாயிருக்கின்றன. எப்பொழுதாவது எனக்கு நித்திரை வந்தால் அபாக்கியவதியான எனக்கு எல்லாவிதத்திலும் ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய உனது முகம் கனவிலும் தோன்றுகிறது.

ஹே! த்ருவா, உனது பிரிவிஞல் தீனேயாகிய எனது ஸந்தாபம் விலக உனது முகத்துக்கு ப்ரதிநிதியாக நான் சந்த்ரனேக் கூடப் பார்ப்பதில்லே.

உனது குரலேப் போன்ற கோகிலமும் தனது காலத்துக்கேற்றவாறு கூவுகிறது. இதனே யறிந்து நான் தலேமயிரிஞல் காதுகளே மூடிக்கொண்டு அதன் குரலேயும் கேட்பதில்லே.

த்ருவா! உனது ஆசையிஞல் மிகவும் ஸந்தாபம் அடைந்து ஏதாவது ஒரு இடத்தில் இளேப்பாற உட்கார்ந்தேஞஞல் உனது அங்க ஸ்பர்சத்துக்கு ஸமமான வாயுவைக்கூட நான் விரும்புவதில்லே.

அப்பனே! நான் ராஜபத்னியாஞலும் கூட உனது ஆசையால் எந்த தேசமோ எந்த நதியோ, எந்தப் பர்வதமோ ஒன்றும் பாராமல் கடினமாகத் கால்நடையாக நடந்து வந்திருக்கிறேன்.

நான் எல்லா ஸ்தானங்களிலும் த்ருவனில்லாமல் பார்த்து விட்டுக் குருடியாகி விட்டேன் அப்பா. இப்பொழுது நீயே இந்தக் குருடியான மாதாவிற்கு ஊன்று

கோல். ஹே நரச்ரேஷ்டா! உனது அதிக ம்ருதுவான தேஹம் கடினமான புருஷர்களுக்குரிய கடினமான தபஸ்ஸை எப்படித் தாங்கும்? இந்தத் தபஸ்ஸினுல் நிஷ்பாபனுன நீ வேறு என்ன அடையப் போகிருய்? அதை இப்பொழுது கூறு.

குழந்தாய்! இந்த வயதில் விளையாட்டு சாமான்களை வைத்துக் கொண்டு உனது சிநேகிதர்களுடன் விளையாட வேண்டும். பிறகு கிசோர அவஸ்தையை அடைந்து கல்வியில் தத்பரனுகிக் கற்று வித்யாபாரங்கதனுக வேண்டாமா? பிறகு யௌவன வயதில் இந்த்ரியங்களை ஸுகப்படுத்த ஸ்த்ரீ, மாலை, புஷ்பம், சந்தனம் இவைகளை அநுபவிக்க வேண்டாமா? அதன் பிறகு தர்ம வத்ஸலனுக குணவானுக ராஜ்ய பரிபாலனம் செய்து தனது புத்திரனிடம் ராஜ்ய லக்ஷ்மியை ஒப்படைத்துவிட்டுப் பிறகு தபஸ்ஸுக்குப் போனுல் நன்ருக இருக்கும்.

இந்த பால்ய வயதில் தபஸ் செய்வது எவ்வளவு கடினம்? கால் கட்டைவிரலின் கரீஷாக்னீ தலைக்குப் எப்போது போய்ச் சேரும்? சத்ருக்களினுல் ஜயிக்கப்பட்டு அவமானமடைந்து ராஜ்ய ஸ்ரீயை இழந்து ஜனங்களுக்கு மத்தியில் ஒருவன் தபஸ் செய்வான். நீ இவர்களில் எந்த மூலை?

அவரமானமடைந்தவர்கள் தபஸ் செய்து உசிதம். இந்த வார்த்தைகளைக் கேட்டுவிட்டு த்ருவன் நீண்ட பெருமூச்செறிந்து, பிறகு ஹ்ருதயத்தில் பகவானை த்யானம் செய்யத் தொடங்கினுன்.

மாதாவிடம் ஒன்றும் பேசாமலேயே பயம் இன்றி திரும்பவும் அச்சுதனின் நாமஜபத்தில் ஒன்றினுன்.

பயங்கரத்தையே பூஷணமாக உள்ள பூதக்கூட்டங்கள் த்ருவனை பயமுறுத்துவதற்காக அவன் அருகில் வந்தவுடன் அவனைச் சுற்றிலும் நான்கு ஸுதர்ஸன சக்கரங்கள் சுழல்வதைப் பார்த்தன.

ஸூர்யனைச் சுற்றியுள்ள மண்டலங்களைப் போல துருவனைச் சுற்றிச் சுற்றி வந்தன. பகவான் பூதங்களிடமிருந்து அவனை ரக்ஷிப்பதற்காக அவைகளை அனுப்பினார்.

துருவனுடைய நான்கு பக்கங்களிலம் ஜ்வலிக்கும் அந்த ஸுதர்சன சக்கரங்களை அந்த பூதங்கள் பார்த்தன.

மிகவும் திடசித்தனாய் கோவிந்தனிடம் அற்பித்த இதயத்தோடு, பூமியைத் துளைத்து வரும் தபோரூபியான வ்ருக்ஷத்தைப் போலும் திடநிச்சயத்துடன் கூடிய த்ருவனைக் கண்டு, அவைகள் பயமடைந்தன. பிறகு தங்கள் மனோரதம் வீணானதைக் கண்டு த்ருவனுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு தத்தம் இருப்பிடம் சென்றன. கர்ஜித்துக் கொண்டு ஆகாசம் முழுவதும் வ்யாபித்துக் கொண்டு மேக மண்டலம், மிகவும் லேசாகக் காற்று எழும்பியதும் சின்னாபின்னமாகுமல்லவா?

இதற்குப் பிறகு பயமடைந்த தேவக் கூட்டங்கள் இந்த்ரனுடன் ஆலோசித்துக் கொண்டு ப்ரஹ்மாவைச் சரணடைந்தார்கள். வழக்கம் போல் எல்லோரும் ஸ்துதி செய்து வணங்கி எழுந்தபின் ப்ரம்மா அவர்களுடைய வருகையின் காரணத்தை கேட்டதும், ஸமயம் கிடைத்தது என்று தேவர்கள் கூறத்தொடங்கினார்கள். தேவா! மிகவும் தேஜஸ் வாய்ந்த உத்தானபாதனின் புத்ரன் தன்னுடைய கடுமையான தபஸ்ஸினால் மூவுலகத்து ஜனங்களையும் தாபமடையச் செய்திருக்கிறான். ஏ பிதாமஹா! இந்த மஹாதபஸ்வி எங்களில் யாருடைய பதவியைப் பிடுங்குவதற்காக இவ்விதம் தபஸ் செய்கிறான் என்பது எங்களுக்கு விளங்கவில்லை. அவனுடைய மனோரதம் என்னவென்பதை நாங்கள் அறிய விரும்புகிறோம்.

தேவர்கள் இவ்விதம் ப்ராத்தனைகள் செய்தவுடன் த்ருவனால் பீதியடைந்த தேவர்களிடம் சதுர்முகன் சிரித்துக் கொண்டு கூறினார். தேவகணங்களே! நித்ய பதத்தை விரும்பும் த்ருவனால் உங்களுக்கு ஒருபொழுதும் பயம்

ஏற்படாது. நிஸ்சிந்தையாக நீங்கள் செல்லலாம். அவன் உங்கள் பதவிகளை விரும்பவில்லை. அந்த பகவத் பக்தனைக் குறித்து ஒருவரும் எங்கும், எப்பொழுதும் பயப்பட வேண்டாம். விஷ்ணுபக்தர்கள் மற்றவர்களுக்குக் கிலேசம் கொடுக்கமாட்டார்கள் என்பது தெரிந்த விஷயம். இவன் அவரிடமிருந்து வரம் பெற்று உங்களுடைய பதவிகளை வேண்டுமானால் இன்னும் கொஞ்சம் கூட ஸ்திரமாக்குவான். கவலை வேண்டாம். தேவர்கள் ப்ரஹ்மாவின் வசனத்தைக் கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்தார்கள். பிறகு அவரை வணங்கி தங்கள் தங்களிருப்பிடம் சென்றனர்.

இதற்கு ஸ்ரீமன் நாராயணன் த்ருவனுடைய த்ருடசித்தத்தையும், அனன்யபக்தியையும் கண்டு ஸந்தோஷமடைந்து கருடாரூடனாக அவன்முன் தோன்றினார். விஷ்ணுபகவான் கூறலானார்- ஏ பாலகனே! அநேக தினங்களாக நீ தபஸ்ஸினால் மிகவும் கஷ்டமனுபவித்துக் கொண்டிருக்கிறாய். இப்பொழுது அதை நிறுத்திவிடு. ஏ பாக்யசாலியே! நான் ஸந்தோஷமடைந்தேன். சுபவிருத்தத்தைக் கூடியவனே! வேண்டும் வரம் கேள். த்ருவன் அந்த அம்ருதமயமான வசனத்தைக் கேட்டு எதிரில் நோக்கினான். தனது முன்னால் இந்த்ர நீல மணியினுடைய ஜ்யோதியைப் போல ஒரு ஜ்யோதியை தரிசித்தான், ஆகாசத்திற்கும் பூமிக்குமாக நீலநிறத் தடாகம் ஒன்றிருந்து. அதில் புதிதாக மலர்ந்த ஏராளமான நீல நிறக்கமலங்கள் சோபையுடன் விளங்குவதைப் போல் இருந்தன.

திரும்பவும் அவனுக்கு இப்படித் தோன்றியது. அதாவது ஆகாயம் மத்தியில் இருக்கும் ஸமஸ்தலக்ஷ்மீதேவியின் கடாக்ஷ வீக்ஷண்யத்தினால் பரிபூர்ணமாக நிரம்பி இருந்தது. புதிதான நீருண்ட மேகங்களுக்கு மத்தியில் மின்னலைப் போன்ற காந்தியுடன் பகவான் க்ருஷ்ணன் நிற்பதைப் பார்த்தான். வானமென்னும் மலையில் ஸுமேரு பர்வதத்தின் தங்க

ரேகைகளை உரைத்திருப்பதைப்போல் பகவானிவன் பீதாம்பரத்தை நோக்கினுன். த்ருவன் மஞ்சள் பீதாம்பரம் உடுத்த பகவானை மஞ்சள் சந்த்ரனுல் அலங்கரிக்கப்பட்ட ஆகாசத்தில் தரிசனம் செய்தான். துக்கமடைந்த குழந்தை அநேகம் தினங்களுக்குப் பிறகு தன்னுடைய பிதாவைப் பார்த்து விசித்துவிசித்து அழுவதைப்போல த்ருவன் பகவானைக் கண்டதுமே பகவானைச் சுற்றி நான்கு புறமும் புரண்டு, புரண்டு அழுதான்.

நாரதர், ஸநகர், ஸநந்தநர், இன்னும் ஸநத்குமாரர் மற்றும் அநேக யோகியர்களால் துதிக்கப்படும் யோகீஸ்வரர் சக்ரதரர் கருணையால் ஏற்பட்ட கண்ணீரால் தனது கமல நயனங்கள் நிரம்ப, கையைப் பிடித்து த்ருவனைத் தூக்கி நிறுத்தினுர். பகவான் எப்பொழுதுமே அஸ்த்ரங்கள் தரித்துக் கொண்டிருப்பதனுல் கரடுமுரடாக இருந்த தன் கைகளினுல் த்ருவன் மீது படித்திருந்த தூளியைத்துடைத்தார். அந்த தேவதேவருடைய கரகமலத்தின் ஸ்பர்சம் பட்ட மாத்திரத்திலேயே அவன் வாயிலிருந்து கோர்வையான ஸ்துதிவசனங்கள் வெளி வந்தன. உடனே பகவானைத் துதிக்கத் தொடங்கினுன்.

ஸ்ரீஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான த்ருவதபஸ்ய-விஷ்ணு தர்சனம் என்ற இருபதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 21

த்ருவன் துதிக்கத் தொடங்கினுன். ஸர்வஸ்ருஷ்டிரூபா! ஞானம் அளிப்பவரே! பரமாத்மா! ஹிரண்கர்பஸ்வரூபா! ஹிரண்யரேதஸே! நிர்மல ஞானம் அளிப்பவரே! தங்களுக்கு நமஸ்காரம். பூத ஸம்ஹாரகர்த்தா! மஹாபூதாத்மா! பூதபதே! ஹரஸ்வரூபா! தங்களுக்கு நமஸ்காரம். ரக்ஷிப்பதில் தத்பரமாக ஆழ்ந்திருப்பவரே! விஷ்ணு ஸ்வரூபா! மஹாபாரத்தை ஸஹித்துக் கொள்பவரே! த்ருஷ்ணையை விலக்குபவரே! ஸர்வப்ரபுவே! க்ருஷ்ணனே! உமக்கு நமஸ்காரம்.

தைத்யகுலக் காட்டுக்கு (அக்னி) தாவானலனே, (காட்டுத் தீ) உமக்கு நமஸ்காரம். தாநவகுல ஸமூகத்துக்குக் கோடாரியே, உனக்கு நமஸ்காரம் கதாதரா! கௌமோதகீ எனும் கதையைத் தாங்குபவனே! நந்தகம் எனும் கட்கத்தைத் தரித்தவரே! மஹா தானவ விநாசக! உமக்கு நமஸ்காரம். தாங்கள் வராஹ ரூபமாக பூமியை உத்தாரணம் செய்தீர்கள். சக்ரம் தரித்த பரமாத்மாவான ஸ்ரீ ஹரியை வணங்குகிறேன். யாருடைய கையில் கமலமும், மார்பில் ஸ்ரீ கௌஸ்துபமும் சோபிக்கிறதோ, அந்த மத்ஸ்ய ரூபதாரி கமலாவல்லபனுக்கு நமஸ்காரம். வேதாந்த வேத்யரே! உமக்கு நமஸ்காரம். ஸ்ரீவத்ஸம் என்னும் அடையாளம் தரித்தவருக்கு நமஸ்காரம். த்ரிகுணுத்மக, குணத்ரயங்களை வர்ஜித்தவரே! குணஸ்வரூபமே! உமக்கு நமஸ்காரம். பாஞ்ச ஜன்யத்தைத் தரித்த பத்மநாபனுக்கு நமஸ்காரம். ஹே தேவகீ நந்தன! வாஸுதேவ! உமக்கு நமஸ்காரம். தாங்கள் ப்ரத்யும்நன், தங்களுக்கு வந்தனம். அநிருத்தஸ்வரூபா! உமக்கு வந்தனம். தாங்களே கம்ஸனை வதைத்தவர். சாணூரனை நசுக்கியவர். தங்களுக்கு நமஸ்காரம். ஹே தாமோதரா, ருஷீகேசா, கோவிந்தா, அச்சுதா, மாதவா, உபேந்த்ரா, கைடபாரே, மதுஸூதனு, அதோக்ஷஜ,

ஹே நரகாந்தக, பாபத்தைத் தொலைப்பவரே, நாராயண, வாமனு; தங்களுக்கு நமஸ்காரம். ஹே! ஹரே,

சௌரே! தங்களுக்கு வந்தனம். அனந்தரூப, அனந்தசாயி, பர மதன, ருக்மிணீபதி - தங்களுக்கு நமஸ்காரம். ஹே சிசுபால விநாசக, தானவசத்ருவே! முகுந்தபரமானந்த, நந்தகோபப்ரியா, தங்களுக்கு நமஸ்காரம். தாங்களே கோபிகைகளுக்கும் ப்ரியதமன், ஹே தனுஜேந்த்ரா, நிஷூதன, புண்டரீகாக்ஷ, எனது நமஸ்காரம். வேணுவின் மதுரநாதத்தை எழுப்பும் கோபாலதாரி, தங்களுக்கு நமஸ்காரம். தாங்களே கோபியர்களுக்கு ப்ரியமானவர், தாங்களே ராமன், ரகுநாதன், ராகவன், தங்களை அடிக்கடி வணங்குகிறேன்.

ஹே! ராவண சத்ருவே, விபீஷணனுக்கு சரணம் அளித்தவரே, ரண க்ஷேத்ரத்தில் விசக்ஷணமாகி விளங்குபவரே, ஜயஸ்வரூப, தங்களுக்கு நமஸ்காரம்.

தாங்களே க்ஷணம் முதலிய காலரூபர், அநேக அவதாரங்களை எடுத்தவர். சார்ங்கதாரி, தாங்களே சக்ரதாரி, கதாதரர், தைத்ய கூட்டத்தை நாசம் செய்பவர், தங்களுக்கு நமஸ்காரம். ஹே! பலதேவா, பலபத்ரா, பலாராதி! இந்த்ரப்ரியா, பலியக்ரத்தை கெடுத்தவரே! பக்தஜனங்களுக்கு வரம் அளிப்பவரே! நமஸ்காரம்.

ஹே! அஸுரானனு, ஹிரண்யகசிபுவின் மார்பபைப் பிளந்தவரே, யுத்தத்தில் ப்ரியமுள்ளவரே கோபிராம்மணர்களுக்கு ஹிதத்தைச் செய்பவரே, ப்ரஹ்மண்யத்துக்கு தேவரே! தங்களுக்கு நமஸ்காரம். தர்மஸ்வரூபா உமக்கு நமஸ்காரம். ஸத்வகுண ஸ்வரூபரே! உமக்கு நமஸ்காரம். ஸஹஸ்ரசீர்ஷா, பரமபுருஷா! உமக்கு நமஸ்காரம் ஹே ஸஹஸ்ராக்ஷா, ஸஹஸ்ரபாதா! ஸஹஸ்ர கிரணு! ஸஹஸ்ர மூர்த்தே! யக்ஞபுருஷா! ஸ்ரீ காந்தா! தங்களுக்கு நமஸ்காரம் உங்களுடைய ஸ்வரூபத்தை வேதத்தினுல் தான் அறியமுடியும். தங்களுக்கு வேதம் ப்ரியமானது. வேதத்தை மொழிந்தவர் நீங்களே, தாங்களே வேதமூர்த்தி. தாங்களே வேதத்தின் மூலமாக ஸதாசார வழிகளை உலகத்திற்குப் பரப்பினீர்கள். தங்களுக்கு

நமஸ்காரம். ஏ வைகுண்டா! உங்களுக்கு நமஸ்காரம், வைகுண்ட வாஸி, கருட வாஹனு! யாகங்களுக்குத் தலைவனே, உங்களுக்கு நமஸ்காரம், விஷ்வக்ஸேனு, ஜனுர்த்தனு! ஜகன்மயா! உமக்கு நமஸகாரம்; ஏ ஸத்யா, ஸத்யப்ரிய, ஜகன்மயா, த்ரிவிக்ரமா உமக்கு நமஸ்காரம், வேதநாயகா, மாயாமயா, கேசவா, தபோரூபா, தபஸ்ஸின் பலனைக் கொடுப்பவரே, உங்களுக்கு நமஸ்காரம். தாங்கள் துதிக்கத் தகுந்தவர், ஸ்தோத்திரஸ்வரூபர், பக்தர்களின் துதியில் ஆழ்ந்திருப்பவர். ஸ்ருதியின் ஸ்வரூபர், துதிவழி நடக்கும் ஆசாரத்தில் ப்ரியமுள்ளவர்,

அண்டஜம், ஸ்வேதஜம், ஜராயுஜம், உத்பிஜம், நான்கு வர்கத்திற்கும் ஸ்ருஷ்டிகர்த்தா; தங்களுக்கு நமஸ்காரம். தேவர்களில் இந்த்ரன், க்ரஹங்களில் ஸூர்யன், லோகங்களில ஸத்யலோகம், ஸமுத்ரங்களில் க்ஷீரஸாகரம், நதிகளில் கங்கை, ஸரோவரத்தில் மானஸஸரோவரம், பர்வதங்களில் ஹிமாலயம், பசுக்களில் காமதேனு ஆவீர்கள்.

தாங்கள் தாதுக்களில் ஸ்வர்ணம், கற்களில் ஸ்படிகம். புஷ்பத்தில் நீலோத்பலம், கற்பக - வ்ருக்ஷத்தில் துளஸீ. தாங்கள் தான் எல்லோராலும் பூஜிக்கப்படும் ஸாளிக்ராமம். முக்தி க்ஷேத்ரத்தில்காசீ, தீர்த்த க்ஷேத்ரத்தில் ப்ரயாகை, வர்ணங்களில் வெள்ளை, இரண்டு கால் ஜீவர்களில் ப்ராஹ்மணன்.தாங்கள் பக்ஷிகளில் கருடன், விவகாரங்களில் வசனம்; தாங்கள் வேதங்களில் உபநிஷத், மந்த்ரங்களில் ப்ரணவம், அக்ஷரங்களில் அகாரம், யக்ஞ -கர்த்தாக்களில் சந்த்ரன். ப்ரதாபசாலிகளில் அக்னி, ஸஹிப்புத் தன்மையிலோ எல்லாவற்றையும் ஸஹித்துக் கொள்பவர். அதாவது பூமி, கொடுப்பவர்களின் தேஹம். பவித்ரமான வஸ்துகளில் ஜலம். எல்லா அஸ்திரங்களிலும் தாங்கள் தநுஸ். செய்பவைகளில் கை.

எங்கும் நிறைந்துள்ள வஸ்துகளில் தாங்கள் ஆகாசம். ஸகல ஆத்மாக்களின் மத்தியில் தாங்கள் பரமாத்மா! நித்யகர்மங்களில் ஸந்தியோபாஸனம். யக்ஞங்களில்

தாங்கள் அசுவமேதம், யாகங்களில் அபயதானம், லாபங்களில் புத்ரலாபம்; ருதுக்களில் வஸந்தம்; யுகங்களில் ஸத்யயுகம், திதிகளில் அமாவாஸ்யை, நக்ஷத்ரங்களில் பூசம், பருவங்களில் ஸங்கராந்தி யோகங்களில் த்விதீயபாதம்: த்ருணங்களில் தர்ப்பை, ப்ரபோ! தாங்கள் தர்மார்த்த காம மோக்ஷங்களில் மோக்ஷம்; ஸமஸ்த புத்திகளில் தர்மபுத்தி: எல்லா வ்ருக்ஷங்களிலும் அரசு, லதைகளில் ஸோமலதை; ஸாதனங்களில் ப்ராணாயாமம். ஸமஸ்த சிவலிங்கங்களிலும் நீங்கள் ஸர்வ அபீஷ்டங்களையும் கொடுக்கும் விச்வேச்வரர். பந்துக்களிலும், மித்ரர்களிலும் தாங்கள் பத்னீ, பந்துக் கூட்டங்களில் தர்மம். உலகத்தின் சராசரங்களில் தங்களைத் தவிர வேறொன்றும் இல்லை.

தாங்களே மாதா, பிதா, மித்ரன், பரம தனம், தாங்களே ஸுகஸம்பத்தி; ஜீவன்களில் ஆயுஸ்; எவைகளில் உங்கள் பெயர் இருக்கிறதோ அவைகளே புராணக் கதைகள். தங்களுக்கு ஸமர்பிக்க வேண்டியவைகளில் தாங்கள் மனம்; தங்களுக்காகச் செய்ய வேண்டிய காரியங்ளில் தாங்கள் கர்மம்; எப்பொழுது தங்கள் நினைவு வருகிறதோ அதே தபஸ், தனிகர்களின் தனங்களில் தங்களுக்காகச் செலவு செய்யப்படும் தனமே சுத்த தனம், தங்களை பூஜை செய்யும் காலமே புண்ணிய காலமாகும்.

தங்களை ஹ்ருதய கமலத்தில் நினைப்பது தான் சரியான வாழ்வு. தங்களுடைய திருவடித் தீர்த்தங்களைப் பானம் செய்வதாலேயே ஸமஸ்த ரோகங்களும் சமனம் ஆகின்றன. ஹே கோவிந்தா! தங்களுடைய வாஸுதேவன் என்ற பெயரை ஸ்மரித்த மாத்திரத்திலேயே ஜன்மம் ஜன்மங்களாகச் செய்து சேர்ந்துள்ள பாபங்கள் எல்லாம் நாசமடைகிறது.

ஐயோ மனிதர்களுக்குத்தான் எவ்வுளவு மோஹம்! வாஸுதேவனை நினைத்து ஸேவியாமல் வேறு எங்கெல்லாமோ மனதைச் செலுத்தி சிரமப்படுகிறார்களே.

அந்த மனிதர்களின் பிழை எப்படிப்பட்டது? தங்களைப் பூஜிக்கும் காலமே மங்களத்தைக் கொடுக்கக் கூடியது. அதுவே தனம் ஸம்பாதிக்கும் வழி. அதுவே வாழ்வு ஸாபல்யமாவதற்கு வழி. தாமோதரன் என்னும் பெயரைக் கூறுவதே போதும். அதோக்ஷஜம் என்னும் பெயரைக் கூறுவதை விடவேறு தர்மம் ஒன்றுமில்லை. நாராயணன் என்னும் அர்த்தத்தைத் தவிர வாக்கியங்களுக்கு வேறு அர்த்தம் கிடையாது. கேசவனை விட்டால் வேறு ப்ரயோஜனம் ஒன்றுமில்லை. ஹரியைவிட வேறு முக்தி கிடையாது.

வாஸுதேவனை நினைக்காவிட்டால் அதுவே பெரிய ஹானி. அதுவே பெரிய உபத்ரவம். அதுவே பெரும் அபாக்யம். ஹரியை ஆராதிப்பதால் மனுஷ்யனுக்கு என்னதான் ஸித்திக்காது; இந்த ஹரிநாமமே புத்ரன், நண்பன், மனைவி, தனம், ராஜ்யம், ஸ்வர்கம், மோக்ஷம் வரைக்கும் அளிக்கிறது. ஹரியை ஆராதிப்பது பாபத்தைப் போக்குகிறது. ஆதி (மநோவ்யாதிகளை) நசிப்பிக்கிறது. மனோரதங்களை சீக்கிரமே பூர்த்தி செய்கிறது.

ஏகாக்ர சித்தத்துடன் பகவானுடைய சரணகமலங்களைத் த்யானிப்பது மிகவும் உத்தமம். ஒரு பாபியானாலும் அவன் யதேச்சையாகத் த்யானம் செய்வானேயானால் அது அவனுக்குப் பரமஹிதமான ஸாதனமாகும். பகவானை ஏகாக்ர சித்தத்துடன் த்யானம் செய்தவன் கூட நாமோச்சாரணம் செய்வதினால் பாபிகளுக்குப் பாபம் மாத்திரமன்றி மஹாபாதகங்களும் நாசமாகின்றன. அக்னி தன்னிச்சையில்லாமல் தொட்டாலும் சுடுவதைப் போல் ஹரிநாமத்தை ஜெபிக்கத் தொடங்கினவுடனேயே அது எல்லா பாபத்தையும் நசிப்பித்து விடுகிறது.

க்ஷண காலமேனும் கமலாகாந்தனை ஏகாந்தமாக ப்ரசாந்த சித்தத்துடன் த்யானம் செய்தால் சஞ்சலையான கமலையும் அவனை விட்டுப் போகாமல் அவனிடம் ஸ்திர

வாஸம் செய்வாள். விஷ்ணு பாதோதகத்தை (திருவடித் தீர்த்தத்தை)ப் பானம் செய்வது பரமதர்மம், அதுவே ஸர்வோத்தம தீர்த்தம்.

ஏ யக்ஞ புருஷா! தங்களுக்கு நிவேதித்த ப்ரசாதத்தை எவன் பக்தி பூர்வமாக உண்ணுகிருனே அந்த மஹா புத்திமான் யக்ஞத்தில் கொடுக்கப்பட்ட ஹவிஸ்ஸாகிய புரோடாசத்தை ஸேவிக்கும் பலனே அடைகிருன். விஷ்ணுவின் திருவடி தீர்த்தத்தை சங்கத்தில் நிறுத்தி அதில் ஸ்நானம் பண்ணிஞல் அவன் யக்ஞ முடிவில் செய்யும் அவப்ருதஸ்நானத்திற்கும், கங்கா ஸ்நானத்திற்கும் உண்டான பலனேயடைகிருன்.

எவன் துளஸீ தளத்திஞல் ஸாளக்ராம சிலேயைப் பூஜிக்கிருனே, அவன் தேவலோகத்தில் பாரிஜாதமாலேயிஞல் பூஜிக்கப்படுகிருன். ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன் ஆகிய எந்த ஜாதியராஞலும் சரி அவர்கள் விஷ்ணு பக்தியுடன் இருப்பார்களாஞல் அவர்கள் ஸர்வோத்தமர்களாக மதிக்கப்படுகிருர்கள். சரீரத்தில் இரண்டு புஜங்களிலும் கோபீசந்தனத்திஞல், சங்கசக்ர முத்திரையைப் பதித்துக்கொண்டு, தலேயில் துளஸியின் பூங்கொத்துக்களேச் சொறுகிக் கொண்டு, கோபீசந்தனத்தைத் தேஹம் முழுவதும் பூசிக்கொண்டு நிற்பவரை தரிசித்த மாத்ரத்திலேயே பாபம் விலகுகிறது. ப்ரதி தினமும் த்வாரகா சக்ரத்தோடு பன்னிரண்டு ஸாளிக்ராமங்களேப் பூஜை செய்பவன் வைகுண்டத்தில் மர்யாதையுடன் வஸிக்கிருன்.

எந்த வீட்டில் தினந்தோறும் துளஸிபூஜை நடக்கிறதோ அங்கு யமதூதர்களுக்கு வேலேயில்லே. வாயில் ஹரிநாமம், நெற்றியில் கோபீசந்தன திலகமும், மார்பில் துளஸிமாலேயுமாய் இருக்கிறவரை யமனுடைய தூதர்கள் தொடக்கூடமாட்டார்கள். கோபீசந்தனம், துளஸி, சங்கு, ஸாளக்ராமம், துவாரகாசக்கரம் இவ்வைந்தும் இருக்கிற வீட்டில் பாபத்திற்காகப் பயப்பட வேண்டிய

அவசியமில்லை. விஷ்ணு ஸ்மரணமில்லாமல் ஒவ்வொரு நாழிகையும் ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு விநாடியுமாகக் கழிக்கும் மனிதர்களால் யமராஜன் ஏமாற்றப்படுகிறான். அக்னியைப்போல் ஜ்வலிக்கிற இரண்டு அக்ஷரமான ஹரிநாமம், முன்பு பஞ்சைப்போல் பறக்கிற பாப ராசி எங்கே? நான் கோவிந்தன், பரமானந்தன், முகுந்தன், மதுஸூதனன் என்ற நாமங்களைத்தவிர மற்றவையறியேன். வேறு ஒரு தெய்வங்களையும் வணங்கமாட்டேன்.

ஹரியைத்தவிர வேறு ஒருவரையும் பூஜிக்கமாட்டேன், துதிக்க மாட்டேன், நேத்ரங்களால் பார்க்கவும் மாட்டேன், பாடமாட்டேன். ஹரியின் கோவிலைத்தவிர எங்கும் போகமாட்டேன். நான், ஜலம், பூமி, பாதாளம், காற்று அக்னிபர்வதம், வித்யாதரர், அஸுரர், கின்னரர், வானரர், நரர், புல்பூண்டுகள், பெண்கள், கற்கள், வ்ருக்ஷங்கள், லதை எல்லாவற்றிலும் ச்யாமசுந்தர சரீரமும், ஸ்ரீவத்ஸ மருவால் அலங்கரிக்கப்பட்ட வக்ஷஸ்தலத்தையுடைய ஸ்ரீ க்ருஷ்ணனையே காண்கிறேன்.

தாங்கள் எல்லோருடைய ஹ்ருதயத்திலும் வஸிக்கிறீர்கள். எல்லோருக்கும் ஸாக்ஷிமாத்ரம், தங்களைத்தவிர உள்ளிலும் வெளியிலும், எங்கும் வேறு ஒருவரையும் நான் பார்ப்பதில்லை. ஏ சிவசர்மன்! த்ருவன் இவ்வாறு துதித்துவிட்டு ஒரு நாழிகை சும்மாயிருந்தான். அப்பொழுது பகவான் விஷ்ணு தேவர் ஸந்தோஷமடைந்தவராய் த்ருவனைப் பார்த்துக் கூறினார்- விசாலமான கண்களையுடைய பாலனே! குற்றமற்றவனே! கூர்மையான புத்தியுடையவனே! த்ருவா! நான் உன்னுடைய இதயத்தில் இருக்கும் மனோரதத்தை நன்றாக அறிந்துகொண்டேன்.

ஏ த்ருவா! அன்னத்தினாலேயே ஸகல ஜீவராசிகளும் உண்டாகின்றன. அந்த அன்னம் மழையினால் உண்டாகிறது. அந்த மழைக்குக் காரணம் ஸூர்யபகவான்.

அவருக்கும் நீ ஆதாரமாவாய். ஓயாமல் ஆகாசமண்டலத்தில் நான்கு பக்கங்களும் சுழலுகின்ற க்ரஹம், நக்ஷத்ர ஜ்யோதிசக்ரங்களுக்கு ஆதாரமாகவும், நீ அவைகளுக்கு மத்தியஸ்தானத்திலிருந்து வாயு பாசத்தினுல், அவைகளை ஒழுங்கு படுத்திச் சுழலச் செய்வாய். ஒரு கல்பம் வரையில் இந்தப் பதவியில் இருப்பாய். நான் பூர்வ காலத்தில் மஹாதேவனை ஆராதித்து இந்தப் பதவியை அடைந்தேன். உன்னுடைய தபோபலத்திற்காக நான் இந்தப் பதவியை உனக்குக் கொடுக்கிறேன்.

ஏ த்ருவா! தேவர்கள் எல்லாரும் ஒரு சதுர்யுகம் முடியும் வரை அல்லது மன்வந்த்ரம் முடியும் வரை தங்கள் பதவியில் இருக்கிருர்கள். ஆனுல் நீ ஒரு கல்பத்தின் முடிவு வரையில் இந்தப் பதத்தில் அதிகாரம் வஹிப்பாய். குழந்தாய் த்ருவா! மற்ற மனிதர்களைப் பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? மனிதனுக்கே இந்தப் பதம் கிடைக்கவில்லை: இந்த்ராதி தேவர்களுக்குக் கூடக் கிடைப்பதற்கு அரிதான இந்தப் பதத்தை நான் உனக்குத் தந்து விட்டேன்.

மேலும் இந்தத் துதியினுல் ஸந்தோஷமடைந்து இன்னும் அநேக வரங்களை உனக்குக் கொடுக்கிறேன். உன்னுடைய தாயான ஸுநீதி எப்போதும் உன் அருகிலேயே இருப்பாள். எவன் ஸ்திரமனதுடன் மூன்று வேளையும் இந்த உத்தம ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்கிருனே, அவனுடைய பாபங்கள் தானே நசித்துப் போகின்றன. லக்ஷ்மி அவனுடைய வீட்டை விட்டு ஒரு நாளும் வெளியே போகமாட்டாள். அவனுக்கு மாதாவின் பிரிவு ஏற்படாது, இது நிச்சயம்.

இந்த த்ருவனுல் செய்யப்பட்ட துதி புண்ணியம் பொருந்தியது. மஹாபாதங்களும் நசித்துப்போகின்றன. இதைப் பாராயணம் செய்வதினுல் ப்ரஹ்மஹத்தி செய்தவனும் சுத்தனுகிருன். பின் பாபத்தைப் பற்றிச்

சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? இந்த ஸ்துதி மஹா புண்ணியத்தைக் கொடுக்கிறது. மஹத்தான ஸம்பத்தைக் கொடுக்கிறது. ஸர்வவ்யாதிகளேயும் போக்கடிக்கிறது.

நிர்மல சித்தமுள்ளவர்களுக்கு என்னிடம் பக்தியுமிருந்தால் என்னிடம் ப்ரியமும் பக்தியுமுள்ள த்ருவனுடைய சரித்திரத்தை தினமும் பாராயணம் செய்ய வேண்டும். எண்ணிறந்த தீர்த்த ஸ்நானங்களினுல் என்னென்ன பலன்கள் ஏற்படுகின்றனவோ, அந்தப் பலன்கள் இந்த ஸ்துதியைப் படிப்பதினுல் கிடைக்கும். என்னே ஸந்தோஷப்படுத்தக்கூடிய அநேக ஸ்தோத்திரங்கள் இருக்கின்றன. ஆனுல் த்ருவஸ்துதி பதினறு அம்சங்களிலும் எனக்கு ப்ரியமானதாக அமைந்திருக்கிறது மனிதர்கள் ஸந்தோஷத்துடனும், ச்ரத்தையுடனும் இந்த ஸ்துதியைக் கேட்ட மாத்திரத்திலேயே அதே ஸமயத்தில் பாபங்களிலிருந்து விடுபட்டு மகத்தான புண்ணியத்தை அடைகிருர்கள்.

புத்திரனில்லாதவர்கள் இதனேப் படித்தால் புத்திரனே அடைவார்கள் தனமில்லாதவர்கள் தனத்தை அடைவார்கள். பக்தியில்லாதவர்கள் பக்தியை அடைவார்கள். அநேகவித தானங்களினுலும், நானுவித வ்ரதங்களே அனுஷ்டிப்பதினுலும், அபீஷ்டங்கள் இந்த ஸ்துதியைப் படிப்பதினுல் கிடைக்கும்.

எல்லா கர்மங்களேயும் த்யாகம் செய்து, எல்லா ஜபங்களேயும் விட்டொழித்து ஸகலவிருப்பங்களேயும் நிறைவேற்றும் இந்த ஸ்துதியைப் படிப்பதே மிகஉசிதம். பகவான் கூறுகிருர்:- ஏ மஹா புத்திமானுன த்ருவனே! உனக்கு ஹிதத்தைச் செய்யும் ஒரு வார்த்தையைச் சொல்லுகின்றேன். அதை மனமொருமித்துக் கேள். அதை நீ கேட்பாயானுல் உன்னுடைய இந்தப்பதவி ஒழுங்காக என்றும் நிலேத்து நிற்கும். நான் இங்கு வருவதற்குமுன் சுபமான வாராணஸிபுரிக்குச் செல்லவேண்டு மென்றிருந்தேன். அங்கு மோக்ஷத்திற்கு ஆதாரமான

விஸ்வேஸ்வரர் எழுந்தருளியிருக்கிறுர். அந்தக் காசியில் ஸ்வயம் விஸ்வேஸ்வரர்தானே இறந்தவர்களின் காதுகளில் கர்மத்தை நிர்மூலமாக்க வல்ல தாரக மந்த்ரத்தை உபதேசிக்கிறுர். எல்லா உபத்திரவங்களுக்கும் மூல காரணமான ஸம்ஸார துக்கத்திலிருந்து கரையேறுவதற்கு ஆனந்த பூமியான காசி ஒன்றே அடைக்கலமாகும், இது ரம்யமானது. இது கஷ்டமானது, இது ப்ரியமானது, இது அப்ரியமானது என்ற அறிவே மகத்தான துக்க ரூபமான வ்ருக்ஷத்திற்கு மூலமாக இருக்கும் விதை. ஆனந்தவன அக்னியினுல் இந்த விதையை எரித்து விட்டால் பின் துக்கத்திற்கு இடமேது? எதன் மூலமாக அடையவேண்டிய எல்லா வஸ்துக்களுக்கும் ப்ரதானமான பொருள் கிடைக்கிறதோ, ஸம்ஸார கஷ்டத்திலிருந்து எங்கு வருந்த வேண்டியதில்லையோ, அங்கு பரம ஆனந்தத்தைக் கொடுக்க வேண்டிய இடம் ஆனந்தவனமேயாகும்.

எவனெருவன் அம்ருதமயமான சிவனுடைய ஆனந்த வனத்தை விட்டுவிட்டு வேறு இடங்களில் வஸிக்கிருனே, அவனுக்கு ஸுகத்தினுடைய உதயமே ஏற்படாது. காசியில் சண்டாளர்கள் என்று கூறப்படும் நீச ஜாதிகள் வசிக்கும் தெருவில் மண்கப்பரையை எடுத்துக்கொண்டு பிச்சை வாங்கித் திரிவது எத்தனையோமேல். அன்னிய இடங்களில் இடையூறு இல்லாத ராஜ்யாதிகாரம் கிடைத்தாலும் அது இதற்கு இணையாகாது. நான் ஜகத் பூஜ்யரான விஸ்வேஸ்வரனைப் பூஜை செய்வதற்காக அவராலேயே பூஜை செய்யப்படும் காசிக்ஷேத்திரத்திற்கு வைகுண்டத்திலிருந்து தினமும் வருகிறேன். மூன்று லோகங்களையும் பாலிக்கும் சக்தி என்னிடம் இருக்கிறது அல்லவா? அதற்குக் காரணம் விஸ்வேஸ்வரரே ஆகும். ஏனென்றுல் அவர்தான் இந்த ஸுதர்ஸன சக்கரத்தை எனக்களித்தவர். பூர்வ காலத்தில் எனக்கே பயத்தை அளிக்கும் ஜாலந்தரன் என்னும் அசுரனை மஹேஸ்வரர் தனது கால் பெருவிரல் நுனியினுல் இந்த

சக்கரத்தை உண்டு பண்ணி அதனுல் அவனே ஸம்ஸாரம் செய்தார். இந்த அசுர சக்ரங்களே நாசம் செய்யும் ஸுதர்சன் என்று பெயருள்ள அந்த சக்கரத்தை நான் என் கண்களாகிய கமலங்களினுல் அவருடைய பாதத்தை அர்ச்சித்துப் பெற்றேன். அதே பரம பூதங்களே விரட்டும் ஸுதர்சன சக்கரத்தை முன்பே உனது ரக்ஷைக்காக நான் இங்கு அனுப்பியிருந்தேன். அதன் பிறகே நான் இங்கு வந்தேன்.

இப்பொழுது நான் விஸ்வேஸ்வரரைத் தரிசிக்கக் காசிக்குச் செல்கிறேன். ஏனென்ருல் இன்று கார்த்திகைமாதத்துப் பௌர்ணமி திதியாகும். அது புண்ணியத்தைத் தரும் யாத்ரா காலமாகும். கார்த்திகை மாதத்து சதுர்த்தசியன்று ஒருவன் உத்தரவாஹினீயான கங்கையில் ஸ்நானம் செய்து விஸ்வேஸ்வரரைத் தரிசித்தானேயானுல் அவனுக்குப் புனர்ஜன்மமே கிடையாது. மஹாவிஷ்ணு இந்தக் கதையை த்ருவனுக்குக் கூறி அதனுல் ஆனந்தமடையும் த்ருவனேயும் தன்னுடன் கருடன் மீது ஏற்றிக்கொண்டு விஸ்வேஸ்வரரின் இடமான காசிக்கு க்ஷணமாத்திரத்தில் வந்தார்.

ஜனுர்த்தனன் பஞ்சக்ரோசத்தின் எல்லேயை அடைந்து, கருடனிலிருந்து இறங்கி த்ருவனேக் கையில் பிடித்துக்கொண்டு மணிகர்ணிகையில் ஸ்நானம் செய்து விஸ்வேஸ்வரரின் பூஜையை முடித்துக் கொண்டு பகவான் விஷ்ணு த்ருவனுக்கு ஹிதம் செய்வதற்காக இந்த வார்த்தைகளேக் கூறினுர். இந்த அவிமுக்த க்ஷேத்ரத்தில் லிங்கஸ்தாபனம் செய். அதனுல் மூன்று உலகங்களிலும் லிங்கம் ஸ்தாபித்த புண்ணியம் உனக்கு நிச்சயமாகக் கிடைக்கும்.

மற்ற இடங்களில் பத்து லக்ஷம் லிங்கங்கள் ஸ்தாபித்த புண்ணியமும் இந்தக் காசியில் ஒரு லிங்கம் ஸ்தாபித்தாலே ஏற்படும். இங்கு காலக்ரமத்தில் இடிந்து பாழடைந்த தேவாலயங்களே ஜீர்ணேத்தாரணம் செய்தால் அதனுடைய பலம் ப்ரளய காலத்தில் கூட முடிவடையாது. ஒருவன் கஞ்சத்தன்மையை விட்டுவிட்டு உன் சிவாலயத்தைக்

கட்டினுல் அவனுக்கு ஸமஸ்த ஸுமேரு பர்வதத்தைத் தானம் பண்ணின பலன் கிடைக்கும்.

இந்த ஸ்தானத்தில் கிணறு, நடைகிணறு, தடாகம் இவைகளைத் தன் வசதிக்குத் தக்கவாறு ஏற்படுத்திஞல் அவைகளை வேறு இடங்களில் ஏற்படுத்துவதைவிடக் கோடிக்கணக்கான புண்ணியம் அவனுக்கு கிடைக்கும். எவனெருவன் இந்தக் காசியில் பூஜைக்கு ஸுரிய புஷ்பங்களைத் தரக்கூடிய நல்ல நந்தவனங்களை அமைக்கிருனே அவனுக்கு, பகவானுடைய காலடியில் ஸமர்ப்பிக்கும் ஒவ்வொரு புஷ்பமும், ஒவ்வொரு ஸ்வர்ண புஷ்பத்தையும் விட அதிக பலனைக் கொடுக்கும்.

இந்த க்ஷேத்ரத்தைப் ப்ராஹ்மண க்ஷேத்ரமாக நினைத்து, ப்ராஹ்மணர்களுக்கு ஒரு வருஷம் வரைக்கும் போஜனத்துக்குரிய செல்வமோ, பூமியோ தானம் செய்தால் அதனுடைய பலத்தைக் கேள். ஸமுத்ரத்தில் ஜலம் வற்றிப் போகட்டும், பூமியின் துகள் ஒரு அணுக்கூட இல்லாமல் க்ஷயமாகட்டும். ஆனுலும் சிவலோகத்தில் அவனுக்குக் கிடைக்கும் புண்ணியம் ஒரு பொழுதும் க்ஷயமாகாது. இந்த காசி தாமத்தில் மடங்களைக் கட்டி ஜீவனேபாயத்திற்கு ஏற்பாது செய்து, தபஸ்விகளை வஸிக்க வைப்பானேயானுல் அவனுக்கு மேற்கூறிய புண்ணியம் கிடைக்கும். இவ்விதமிங்கு ராசி ராசியாகப் புண்ணியங்களை சம்பாதித்து, விஸ்வேஸ்வரருக்கு ஸமர்ப்பணம் பண்ணிஞல் அவன் இந்த ஸம்ஸார ஸாகரத்தில் திரும்பி வரமாட்டான்.

இந்த இடத்தில் என்னுடைய அனந்தன் என்ற பெயர் மிகவும் கீர்த்தி வாய்ந்தது. நானும் இந்தக் காசியினுடைய குண ராசிகளின் முடிவைக் காணவில்லை. அதனுல் த்ருவா! காசியில் ச்ரத்தையுடன் கூட தர்மகர்மங்களை அனுஷ்டானம் செய்ய வேண்டும். ஏனென்ருல் காசியில் அனுஷ்டிக்கும் தர்மத்தின் பலன் அக்ஷயமாக விளங்குகிறது. இவ்வாறு கூறி கருடத்வஜர் த்ருவனுக்கு அநேக புத்திமதிகளைக் கூறி,

அவனை அங்கு விட்டு விட்டுச் சென்றார். த்ருவனும் வைத்ய நாதனுக்கு சமீபத்தில் லிங்கப்ரதிஷ்டை செய்தான்.

அதற்கு ஒரு பெரிய கோவிலைக் கட்டி முடித்து, அதற்கு முன்னால் ஒரு ஜலகுண்டமும் ஏற்படுத்தி விஸ்வேஸ்வரரைப் பூஜித்து வீட்டிற்குப் புறப்பட்டான். எவனொருவன் துருவேஸ்வரரைப் பூஜித்து த்ருவகுண்டத்தில் ஸ்நானம், தர்பணம் இவைகளைச் செய்கிறானோ, அவன் ஸகல போகங்களுடன் கூட த்ருவலோகத்தில் வசிக்கிறான்.

த்ருவனுடைய இந்தப் பரம புண்ணியமான வரலாற்றைப் படிப்பவனும், படிக்கச் சொல்லுபவனும் விஷ்ணு லோகத்தையடைந்து விஷ்ணுவின் ப்ரீதிக்கு பாத்திரவானாகிறான்.

ஒருவன் பேச்சு வாக்கிலாவது இந்த த்ருவ சரித்ரத்தை நினைப்பானேயாகில் அவனைப் பாவம் ஒரு போதும் அணுகாது. அவன் மஹா புண்ணியத்தை ஸம்பாதிப்பான். இந்த மகத்தான வரலாற்றை துருவேசன் என்ற லிங்கம் காசியில் ஸூரியகுண்டத்தின் ஸமீபத்தில் இருக்கிறது.

இந்த விதமாக ஸ்ரீ ஸ்காந்த புராணத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான த்ருவன் செய்த விஷ்ணு ஸ்துதி, த்ருவன் வரத்தையடைதல் ஆகிய இருபத்து ஒன்றாவது அத்தியாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 22

சிவசர்மா கூறினார்:- விஷ்ணு தூதர்களே! மஹாபாதகத்தை நாசம் செய்வதும் அதிவிசித்ரமானதும், பவித்ரமானதும், ரம்யமானதுமான இந்த த்ருவ சரித்திரத்தைக் கேட்டு நான் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். அகஸ்தியர் கூறினார்:- விப்ரனை சிவசர்மா இப்படிக் கூறிக்கொண்டிருக்குள் பொழுதே, வாயு வேகமாச் சுழலும் விமானம் ஸ்வர்க லோகத்தைவிட மஹா அற்புதமான மஹர்லோகத்தைச் சென்றடைந்தது.

அப்பொழுது விப்ரன் மிகவும் சீக்கிரமாக சென்றடைந்த அந்த லோகத்தைப் பார்த்துவிட்டு விஷ்ணு கணங்களிடம் கூறினார். இது எந்த லோகம்? மிகவும் அற்புதமாக இருக்கிறதே! என்றார். அப்பொழுது அவர்கள் இருவரும் கூறினார்கள். ஏ! மஹாமதே! கேளும். இது ஸ்வர்க லோகத்தைவிட மிகவும் அற்புதமான மஹர்லோகமாகும். தபஸ்ஸினால் யாருடைய பாபங்கள் கழுவப்படுகின்றனவோ அந்த மஹத்துக்கள் வாழும் உலகம். கற்பகாலம் வரைக்கும் வாழும் ப்ருகு முதலிய ரிஷிகணங்கள் விஷ்ணுவை ஸ்மரித்துக்கொண்டு ஸகல க்லேசங்களிலிருந்து விடுபட்டவராய், இருந்து நிர்விகல்ப ஸமாதியின் மூலமாக ஜகத்தை தேஜோ ரூபமாகப் பார்க்கும் மஹா யோகத்துடன் கூடின ஸுரோத்தமர்கள் இங்கு வஸிக்கின்றனர். ஏ, ப்ரியே, லோபாமுத்ரே, பகவத்கணங்கள் இவ்வாறு வர்ணித்துக்கொண்டு இருக்கும் பொழுதே ஒரு அரைக்ஷணத்தில் அந்த விமானம் அவர்களை ஜன லோகத்திற்கு கொண்டு சென்றது. அந்த ஜனலோகத்தில் ப்ரஹ்மாவின் மானஸ புத்திரர்களான ஸநந்தனன் ஆகிய யோகியர்கள் வசிக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் ஊர்த்வ ரேதஸ், மற்றும் நழுவாத ப்ரஹ்மசர்யத்தை உடையவர்களும் ஸுகதுக்காதிகளான த்வந்தத்திலிருந்து விடுபட்டவர்களும், மும்மலத்தையும் அழித்த யோகி ஜனங்களும் அங்கே வஸிக்கின்றனர்.

மனோ வேகத்துடன் செல்லும் அந்த விமானம் ஜனலோகத்திற்கும் அப்பால் தபோலோகத்தை அவர்களுக்குக் காண வைத்தது. அங்கு மகத்தான தேவகணங்களும் வாஸுதேவனிடத்திலேயே மனதைச் செலுத்தியவர்களும், எல்லா கர்மங்களையும் வாஸுதேவருக்கு அர்ப்பணிப்பவர்களும், அபிலாஷை என்பதே இல்லாதவர்களுமான மஹாபுருஷர்கள் (தபோலோகத்தில்) வஸிக்கிறார்கள். மேலும் ஜிதேந்த்ரியர்களான மஹாபுருஷர்கள் நிஷ்காம தபஸ்ஸுடன் கோவிந்தனை ஸந்தோஷப்படுத்திக் கொண்டு இந்தத் தபோ லோகத்தில் வஸிக்கிறார்கள்.

இது மட்டுமா? உஞ்சவிருத்தியினால் வாழ்க்கை நடத்துபவர்களும் (உஞ்சவிருத்தியென்றால் அருவடையான பின்பு அங்குமிங்கும் சிதறிக் கிடக்கும் நெற்களைப் பொறுக்கிக் கொண்டு வந்து உரலில் இட்டுக் குத்துவதற்கும் அசக்தர்களாய், பற்களால் உமியைக் கொதறி தான்யத்தை சாப்பிடுவர்களாய் இருப்பவர்கள். சிலபேர் கற்களால் நெற்களை நசுக்கி அதைச் சமைத்து அந்த அன்னத்தை சாப்பிடுபவர்கள்) பற்களால் மென்று தின்பவர்களை ஸம்ஸ்க்ருதத்தில் தந்தோலூகலிக் என்றும், கற்களால் நசுக்குவதை அஸ்மகுட்ட வ்ருத்தியென்றும் கூறுகிறார்கள். இன்னும் சில ரிஷி கணங்கள் முதிர்ந்த இலைகளைச் சாப்பிடுவார்கள். கோடைகாலத்து வெயிலில் 'பஞ்சாக்னி' மத்தியில் தபஸ் செய்பவர்கள். மாரிக் காலத்தில் கட்டாந்தரையில் படுப்பவர்கள்; ஹேமந்தருதுவும் பாதி சிசிரருதுவும் ஜலத்தில் அமர்ந்து கழிப்பவரும் தாகத்தினால் தொண்டை வரண்டாலும் தர்ப்பத்தின் நுனியினாலே ஜலத்தைப் பருகுவர்களும், அகோர பசியிருந்தாலும் வாயுவையே போஜனம் பண்ணுபவர்களும், கால் பெருவிரலையே பூமியில் இருத்தி தபஸ் செய்பவர்களும், இருகைகளையும் தூக்கிக்கொண்டு தபஸ் செய்கிறவர்களும், இமை கொட்டாமல் ஸூர்யனையே பார்த்துத் தபஸ் செய்பவர்கள்,

மரக்கட்டையைப்போல் ஒற்றைக்காலை ஊன்றிக் கொண்டு தபஸ் செய்கிறவர்கள், பகல் மூச்சை அடக்கிக்கொண்டு நிற்பவரும், ஒரு மாதம்வரை மூச்சையடக்கிப் பிறகு விடுபவரும்; மாதம் பூராவும் உபவாஸம் இருப்பவரும், நான்கு மாதத்திற்கு ஒரு தரம் உண்பவரும், ஒவ்வொருருதுவின் முடிவிலும் ஜலபானம் மாத்திரம் செய்பவரும், ஆறுமாதம் வரையிலும் உபவாஸம் இருப்பவரும், ஒரு வருஷம் வரை இமையா நாட்டமுடன் இருப்பவரும், மழைக்காலத்தில் மழை ஜலத்தை மாத்திரம் அருந்திக் கொண்டிருப்பவரும், மரக்கட்டைகள் போலமர்ந்து மிருகங்கள் தங்கள் தேகத்தை உரசிக் கொண்டிருப்பதற்கு (உரசுவதனுல் உண்டான) தேகஸுகம் கொடுப்பவர்களும் அங்கு வஸிக்கிறுர்கள்.

சில பேருக்கு ஜடை வளர்ந்து கூடு போல் இருக்கிறது. அதில் பக்ஷிகள் வந்து முட்டையிட்டு வஸிக்கும். சிலபேர்கள் சரீரத்தில் நரைமுடி இருக்கும். சிலருடைய சரீரத்தில் எடுப்பாக நரம்புகள் வெளியில் தெரியும். சில பேருடைய சரீரத்தில் செடி கொடிகள் அடர்ந்திருக்கும். அதில் புற் பூண்டுகள் முளைத்து மழைத் தண்ணீரால் உறைந்து இருக்கும். இந்த விதமான தபஸ்ஸினுல் தங்கள் சரீரத்தை க்ஷீணப்படுத்தியுள்ளனர்.

அப்படிப்பட்ட தபஸ்விகள் ப்ரஹ்மாவிற்கு ஸமமாக ஆயுளை உடையவர்கள், இத்தபோ பூமியில் கிஞ்சித்தும் பயமில்லாமல் வஸிக்கின்றனர். அந்த புண்ணியாத்மாவான ப்ராஹ்மணன் அந்த விஷ்ணு தூதர்களிடமிருந்து இந்த புண்யமான வர்ணனைகளைக் கேட்டுக்கொண்டிருக்கும் ஸமயம் மிகவும் ப்ரகாசமான ஸத்ய லோகத்தை விமானம் அடைந்தது.

அப்போது அந்தத் தூதர்கள் இருவரும் ப்ராஹ்மணனுடன் சீக்கிரமாக விமானத்திலிருந்து இறங்கி பூமியில் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார்கள். அங்கு ப்ரம்மா ப்ரஸன்னமாகிக் கூறினுர். ஹே! தூதர்களே! இந்தப்

ப்ராஹ்மண புத்திமான் வேத வேதாந்தங்களைக் கரை கண்டவன். ஸ்ம்ருதி கூறியிருக்கும் ஆசாரங்களை அனுஷ்டிப்பதில் வல்லவன். பாபகர்மங்களிலிருந்து ஒதுங்கியிருப்பவன்.

மஹா ப்ராக்ஞுன சிவசர்மாவே! எனக்கு உன்னைத் தெரியும். உத்தம தீர்த்தத்தில் ப்ராணனைத் த்யாகம் பண்ணிஞய். நீ நன்றே செய்தாய்.

நீ பூலோகத்திலிருந்து ஸத்ய லோகம் வரை எதையெல்லாம் பார்த்தாயோ அவைகள் எல்லாம் அழியக் கூடியதே. அடிக்கடி தோன்றும் ப்ரளயத்திலிருந்து இவைகளை மறுபடியும் ஸ்ருஷ்டிக்கிறேன். ருத்ரரூபி விராட் பர்யந்தம் ஸம்ஹாரம் செய்கின்ருர் என்ருல் பின் கொசுபோல் ப்ராணனைவிடும் மனிதன் எம்மாத்திரம்?

ஜராயுஜம், அண்டஜம், உத்பிஜம், ஸ்வேதஜம் இவைகளிலிருந்தும் மனிதனுக்குத்தான் குணம் வேருக இருக்கிறது. அது எளிதென்ருல், அவர்கள் கர்மபூமி பாரத வர்ஷத்தில் மனத்துடன் கூட சஞ்சலமான இந்த்ரியங்களை நன்கு ஜெயித்து எல்லா குணங்களுக்கும் வைரியான லோபத்தைத் த்யாகம் செய்தது. தர்மகுலத்தை நாசம் செய்யும் பணத்தை சேமிப்பதை விநாசப்படுத்துவதும், ஜரையைத் தருவதாயும் உள்ள காமத்தை விசாரணையிஞல் விலக்கி தைரியத்துடன் தபஸ், கீர்த்தி, ஸம்பத்தி, தனது அசிரத்தையே நாசம் செய்யும், தமஸ்ஸை அளிக்கும் கோபத்தை ஜெயித்த எப்பொழுதும் பதத்திற்கு ஒரே காரணமான மதத்தை விலக்கி ப்ரமாதத்துக்கு ஒரே காரணமான ஸம்பத்தியை நிவ்ருத்தி செய்த எதையும் சிறுபான்மையோடு நோக்கும் அஹங்காரத்தை நீக்கி, சாது ஜனங்களின் செய்கைகளைக் குற்றக் கண்ஞல் பார்த்து மகத்தான த்ரோஹத்தை விளைவித்து, மதியைக் கெடுத்து கண் மூடித்தனமான காரியங்களைச் செய்து கொண்டு, கண்ணிரண்டும் குருடாகி, நரகத்துக்குப் போய் விழும் மோகத்தைத் த்யாகம் செய்து ச்ருதி, ஸ்ம்ருதி புராணங்களை

ஆதரிக்கும் மஹாஜனங்களை ஆச்ரயித்து தர்மத்தின் உன்னதமான படிகளில் ஏறி இந்த ஸத்ய லோகத்திற்கு ப்ரயாசை இல்லாமலே மஹாஜனங்கள் வருகிறார்கள்.

ஏ! ப்ராஹ்மணா! ஸ்வர்க்க வாசிகள் யாவரும் கர்மபூமியான பாரதத்தில் பிறப்பதற்கு இச்சைப்படுகிறார்கள். இந்தக் கர்ம பூமியில் எதையெல்லாம் ஸம்பாதிக்கிறார்களோ, அவைகளை மேலானதும், கீழானதுமான உலகங்களில் அனுபவிக்கிறார்கள்.

ஆர்யாவர்த்தத்துக்கு ஸமமான தேசம், காசிக்கு ஸமமானபுரி, விஸ்வேஸ்வரருக்கு ஸமமான லிங்கம் ஒரு ப்ரம்மாண்டத்திலும் கிடையாது.

துக்கமில்லாமல் நற்கர்மங்களின் கூடிய ஏகமாத்ர பதஸ்வரூபமான எல்லாவித ஸௌபாக்யங்களுடனும் அநேகவித ஸ்வர்க்கங்கள் இருக்கின்றன.

இந்த ப்ரம்மாண்ட கோளத்தில் ஸ்வர்க்கத்தைவிட மேலான மிகவும் ரம்யமான, மற்றொரு லோகம் கிடையாது. ஏனென்றால் எல்லாரும் தபஸ், தானம் வ்ரதாதிகள் மூலமாக ஸ்வர்க்க போகத்தை அடைய முயற்சிக்கிறார்கள்.

நாரதர் ஒரு ஸமயம் பாதாளத்திற்குச் சென்றிருந்தார். அங்கிருந்து வந்து ஸ்வர்க லோகத்தில் ஒரு ஸமயம் கூறினார்:- பாதாளம் ஸ்வர்க்கத்தைவிட ரமணீயமாக இருக்கிறதென்று. அந்த பாதாளத்தில் ஆனந்தத்தையளிக்கும் அழகான ப்ரபை வீசும் மணிகள், நாகர்களுடைய அங்க ஆபரணங்களில் பதிந்திருக்கின்றன. அந்தப் பாதாளத்தைப் போல் வேறு லோகம் எங்கிருக்கிறது? அந்த உலகம் தைத்யதானவப் பெண்களால் சோபிக்கப்பட்டிருக்கிறது. எந்த விமுக்தனுக்குத்தான் ப்ரீதி ஏற்படாது!

அங்கு பகலில் ஸூர்யனுடைய சோபைதான் இருக்கிறதே தவிர வெய்யிலின் சூடு இருப்பதில்லை.

சந்திரிகையின் ப்ரகாசம் மாத்திரமேயிருக்கிறது. அங்கு வஸிக்கும் அசுரர்கள் காலம் போவதை அறிவதில்லை. அங்கு ரம்யமான நதிகளும், நிர்மலமான ஜலம் உள்ள தடாகங்களும் மதுரமான ஆண் குயில்களின் இனிய த்வனியும்; நிர்மலான வஸ்திரங்களும், மநோஹரமான பூஷணங்களும் ஸுகந்தமான வாசனையுள்ள த்ரவ்யங்களும், வீணை, குழல், ம்ருதங்கம் இவைகளின் அதிமதுரமான த்வனிகளும், இவ்வளவுக்கும் மேல் காமங்களை அளிக்கும் ஹாடகேஸ்வரரான மஹாலிங்கத்தின் ஸந்நிதானமும் இருக்கிறது. இவைகளைத் தவிர மேலும் அநேக ரம்யமான போகவஸ்துகளையும் பாதாள வாஸிகளான தானவர்களும் உரகர்களும் அநுபவிக்கிறார்கள்.

ஏ ப்ராம்மணா! இங்கு அந்த பாதாளத்தைவிட ரமணீயமான இளாவ்ருத்தவர்ஷம் இருக்கிறது, அது நான்கு பக்கமும் ஸுமேருபர்வதத்தை ஆச்ரயித்துக் கொண்டிருக்கிறது.

விப்ரனே! அந்த ஸ்தானத்தில் புண்ணியங்களைச் செய்கிறவர்கள் எப்போதும் அந்த எல்லா போக வஸ்துக்களையும் அனுபவித்துக் கொண்டேயிருக்கிறார்கள். அங்கே மானைப் போன்ற மருண்ட விழிகளுடைய பெண்கள் எப்போதுமே நவயௌவனத்துடன் இருக்கிறார்கள்.

அதை போக பூமியென்று சொல்லுகிறார்கள். தபத்தின் பலனாக அது கிடைக்கிறது. உன்னைப் போன்ற புண்ணிய தீர்த்தங்களில் தேஹத்தியாகம் செய்தவர்களுக்கும் கிடைக்கிறது. தீனமில்லாத வார்த்தைகளைச் சொல்லுகிறவர்களும், புத்ரகளத்ராதிகள் இல்லாதவர்களும், தன்னுடைய ஸுகம் ஆயுள் தனராசி இவைகளை த்யாகம் செய்து பரோபகாரம் செய்கிறவர்களும், இவர்களே இங்கு போகம் அனுபவிப்பதற்கு யோகம் உடையவர்கள்.

மஹோததிக்கு அடியில் இருக்கும் அநேக த்வீபங்களில் ஜம்பூத்வீபத்திற்கு ஸமானமான மற்ரொரு தவீபம் பூவுலகத்தில் இல்லை. இந்த ஜம்புத்வீபத்தில் பாரதவர்ஷம் ஒன்பதாவது வர்ஷம் ஆகிறது. அது தேவதைகளுக்கும் கிட்டாத உத்தம கர்ம பூமியென்று சொல்லப்படுகிறது. மற்ற எட்டு வர்ஷங்களும் கிம்புருபுஷம் முதலிய பேர்களால் ப்ரஸித்தம் ஆகிறது. அது தேவதைகளுக்கு போக்ய பூமியாக இருக்கிறது. அங்கு ஸ்வர்கவாஸிகள் ஸ்வர்க்கத்திலிருந்து போகம் அனுபவித்து க்ரீடை செய்கிறார்கள்.

இந்த பாரத வர்ஷத்தின் விஸ்தாரம் ஒன்பதாயிரம் யோஜனை விஸ்தீர்ணம். இந்த ஜம்பூத்வீபத்தின் முதல் வர்ஷம் ஸுமேருபர்வதத்தின் தென்பாகம். இதில் கூட விந்த்யாசலத்துக்கும் ஹிமாலாயத்துக்கும் மத்யபிரதேசம் மிகவும் புண்ணிய ப்ரதேசம். அதிலும் கங்கை யமுனை மத்யஸ்தலம், மிகவும் மேலானது.

குரு க்ஷேத்ரம் எல்லா க்ஷேத்ரங்களுக்கும் மேலானது. அதிலும் நைமிசாரண்யம் பூலோக ஸ்வர்க்கமேயாகும்.

இந்தப் பூவுலகில் நைமிசாரண்யம் ஸகலதீர்த்தராஜன் என்பது ப்ரஸித்தம். இது மோக்ஷத்தையும் ஸகல காமனையும் தீர்மானமாகக் கொடுக்கக் கூடியது. ஆனால் ப்ரயாகை என்பது தீர்த்தத்துக்கு எல்லாம் ராஜஸ்தானமாகும். முன் காலத்தில் எனது எல்லையாகக் கர்மங்களையும் காம்யப் பொருள்களையும் தீர்த்தராஜா ப்ரயாகையையும் சீர்தூக்கிப் பார்த்தேன்.

தக்ஷிணைகளில் புஷ்டியும் யாகங்களில் உயர்ந்ததுமாக இது விளங்கியது. அதனால் ஹரிஹராதி தேவர்கள் இதனை ப்ரயாக் என்று பேரிட்டு அழைத்தார்கள். ஒருவன் மூன்று காலங்களிலும் ப்ரயாகை என்னும் நாமத்தை உச்சரித்தாலும், அவர்களுடைய சரீரத்திலிருந்து எல்லாப் பாபங்களும் அகன்றுவிடும்.

பாபத்திலிருந்து காக்க அநேக தீர்த்தங்கள் உள்ளன. ஆனால் அநேக காலமாக ஸஞ்சிதமாகயிருந்த பாபங்களைப் போக்க ப்ரயாகையைத் தவிர வேறு புண்ணியஸ்தலங்களை நான் கண்டதில்லை.

அநேக ஜன்மங்களாகச் சேர்ந்திருந்த பாப கர்மங்கள் ஜபம், தானம், தபம், இவைகளாலும் கூடப்போக்க முடியாததை இந்த ப்ரயாகைக்குக் கிளம்பிய ஒரு ஜீவனுடைய சரீரத்தில் வாயுவில் அகப்பட்ட விஷம் போல் நடு நடுங்கி இருப்பதைப் போக்கடிக்க முடியும். ப்ரயாகை யாத்திரையில் த்ருடசித்தனாக இருக்கும் ஒருவன் பாதிவழி போகும் போதே அவனுடைய பாபங்கள் அவனுடைய தேகத்தினின்றும் நழுவி வேறு இடங்களைப் பார்க்கச் செல்லுகின்றன. பிறகு பாக்யவசத்தால் தீர்த்த ராஜனுடையத் தரிசனம் ஆனவுடனேயே ஸூர்ய உதயத்தைக் கண்டவுடனேயே அந்தகாரம் சீக்கிரத்திலேயே அழிவதைப் போல் ஓடிவிடுகின்றன.

ஸப்த தாதுக்களால் ஆன சரீரத்தில் என்னென்ன பாபங்கள் உள்ளனவோ எல்லாம் அவர்கள் தலைமீது போய் உட்கார்ந்து கொள்ளுகின்றன. புண்ணிய ஸ்தலத்தில் முண்டனம் செய்வதால் அவைகள் ஓடிப்போய் விடுகின்றன.

இந்த விதமாக நிஷ்பாபமாகி கறுப்பும் வெளுப்புமான யமுனை, கங்கை கூடுகிற இடத்தில் ஸ்னானம் செய்தால் அவன் விரும்பும் காமனையெல்லாம் பூர்த்தியாகின்றன. ஒருவன் காமனையை விரும்பி ஸ்னானம் செய்தால் அவனுடைய புண்ய பயனினால் எல்லையில்லாத புண்ணியராசிகளை அடைந்து பவித்ரமான போகமனுபவித்து ஸ்வர்க்கத்தையடைகிறான். அந்நிய காமனை விட்டுவிட்டு எவன் மோக்ஷத்தை மாத்திரம் விரும்பி ஸ்னானம் பண்ணுகிறானோ அவனும் தீர்த்த ராஜனுடைய மஹிமையினால் மோக்ஷத்தையடைகிறான்.

*பாரத வர்ஷத்தில் தீர்த்தராஜனைத் தவிர்த்து வேறு தீர்த்தங்களில் பலனை விரும்பி ஸ்னானம் செய்கிறவர்கள், நிச்சயமாகப் பலனையடையமாட்டார்கள். ஹே! ப்ராம்மணா! ஸத்ய லோகத்துக்கும் ப்ரயாகைக்கும் எனக்கு வித்தியாஸம் தெரியவில்லை. ஏனெனில் ப்ரயாகையில் சுபகாரியங்களைச் செய்பவர்கள் ஸத்ய லோக வாஸிகளாகிறார்கள்.*

*பூமியில் தீர்த்தங்களை விரும்புவர்கள் ப்ரயாகையை விட்டு அந்நிய தீர்த்தங்களை விரும்பக்கூடாது. ஏ ப்ராம்மணோத்தமா! அரசனுக்கும் ஸேவகனுக்கும் என்ன வித்தியாசமோ, அதுவே ப்ரயாகைக்கும் மற்ற லோகங்களுக்கும் இருக்கிறது. இது ஒரு உவமைக்கு வேண்டிக் கூறினேன். ஒருவன் எந்த விதத்திலேயானாலும் ப்ரயாகையில் ப்ராணனை விடுவானேயானால் அவனுக்கு ஆத்ம ஹத்தி தோஷம் கிடையாது. அத்துடன் விரும்பிய பலனும் அடைகிறான். எந்த பாக்யவானுடைய அஸ்தி ப்ரயாகை திரிவேணியில் கரைக்கப்படுகிறதோ, அவன் எந்த ஜன்மம் எடுத்தாலும் க்லேசம் அனுபவிக்கமாட்டான். ஒருவனுக்கு ப்ரம்மஹத்தி தோஷத்திற்குப் ப்ராயச் சித்தம் வேண்டுமென்றால் அவனுக்கு ப்ராம்மணோத்தமர்களின் வசனப்ரகாரம் விதிபூர்வமாக ப்ரயாகையில் வசிப்பது உசிதம்.*

*அதிகம் கூற என்ன இருக்கிறது? ஒருவன் உன்னத கதியடைய விரும்பினால் அவன் பூவுலகில் ஸர்வோத்தமான ப்ரயாகையில் ஸ்னானம் செய்யவேண்டும். உலகமெங்கும் ப்ரயாகையைவிட அதிகமாகக் காசியில் சரீரத்யாகம் செய்பவருக்கு அநாயாஸமாக முக்தி கிடைக்கிறது. அதனால் அவிமுக்த க்ஷேத்ரமான காசி ப்ரயாகையைவிட ஸர்வ உத்தமமானது; ஏனென்றால் அங்கு சாக்ஷாத் விஸ்வேஸ்வரர் இருக்கிறார். விஸ்வேஸ்வரர் இருக்கிற அவிமுக்த க்ஷேத்ரத்தைவிட அதிக ரம்யமானது ப்ரம்மாண்ட மண்டலங்களில் ஒன்றுகூட இல்லை. இந்த அவிமுக்த க்ஷேகூரமும்*

ப்ரும்மாண்டத்தில் அடங்கினதுதான். ஆனால் அது பஞ்சக்ரோச ப்ரமாணமாக ப்ரம்மாண்டத்துக்கு மத்தியில் இல்லை. ப்ரளய காலத்தில் கடல் நீர் பொங்கி வரும்போது மஹாதேவர் ஜலம் பொங்க பொங்க இந்த க்ஷேத்ரத்தை மேலே தூக்குகிறார்.

இந்த க்ஷேத்திரம் விஸ்வநாதருடைய திரிசூலத்தின் நுனியில் அந்தரிக்ஷத்தில் இருக்கிறது. பூமியில் இல்லை. மூட புத்தி உடையவர்கள் இதை அறியமாட்டார்கள். இந்த விச்வேசருடைய ஆசிரமத்தில் நித்தியமே ஸத்தியயுகம் விளையாடுகிறது. எப்பொழுதும் மஹா பர்வதம்தான். இங்கு க்ரஹங்கள் அஸ்தமிக்கவும் உதயமாகவும் செய்தால் அதற்கு ஒரு பொழுதும் தோஷம் உண்டாவதில்லை

எங்கு பகவான் விஸ்வநாதருடைய கண்காணிப்பு இருக்கிறதோ, அங்கு ஸௌம்யமான அயனமும் மஹோதய பர்வமும் எப்பொழுதும் மங்களமாக இருந்து வருகிறது. உலகில் ஆயிரக்கணக்கான புரிகள் இருக்கின்றன. ஆனால் காசியை அவைகளுள் ஒன்றாக நினைக்கக்கூடாது. காசி உலகத்துக்கும் அப்பாற்பட்டதான ஒரு நகரம்.

நான் பதினான்கு உலகங்கள் ஸ்ருஷ்டி செய்திருக்கிறேன். ஆனால் இந்தப் புரியை நான் ஸ்ருஷ்டி செய்யவில்லை. இது ப்ரபுவிச்வேச்வரருடைய மகத்தான ஸ்ருஷ்டி பூர்வகாலத்தில் இயமராஜர் மிகவும் கடுமையான தபஸ் செய்து கேவலம் வாராணஸிப் புரியை தவிர மற்ற புரிகளுக்கெல்லாம் அதிகாரம் வாங்கிக் கொண்டார். சித்ரகுப்தனும் ஸமஸ்த சராசர கர்மங்களை அறிந்திருக்கிறான். ஆனால் அவன் காசிவாசிகளின் கர்ம பலனை அறியவில்லை.

மஹாதேவருடைய கணங்களால் பாதுகாக்கப்பட்ட காசி நகரியில் எங்கும் யமதூதர்கள் ப்ரவேசிக்க மாட்டார்கள். காசி நகரில் தேஹத்யாகம் செய்பவர்களின் நியந்தா விச்வேச்வரரே தான் அங்கு பாப கர்மங்களுக்கு நீதி

வழங்குபவர்காலபைரவர். அதனுல் அங்கு ஒரு பொழுதும் பாபம் செய்யக்கூடாது. ஏனென்ருல் ருத்ரயாதனை பயங்கரமானது. ஸமஸ்த நரக யாதனைகளைவிட ருத்ர பிசாசத்வம் மிகவும் பயங்கரமானது.

பாபம் செய்வதுதான் நமது கடமையென்ருல் இத்தனை பெரிய பூமி இருக்கிறது. காசியை விட்டு விட்டு வேறு எங்காவது ஸுகமாகப் பாபத்தைச் செய்யலாம். ஜீவன் காமாதுரனுக இருந்தால் கூட தனது தாயைக் காப்பாற்றுகிருன். அது போல் பாபியானுலும்கூட மோக்ஷத்திற்க்குக் காசி ஒன்றையாவது விட்டு வைக்க வேண்டும். பிறரை நிந்திப்பது வழக்கமாக இருப்பவர்க்கும், பரஸ்த்ரீ கமனமே அபிலாஷை என்று இருப்பவர்க்கும் காசி வாஸம் வேண்டாம். அது உசிதமும் இல்லை ஏனென்ருல் பரமபதம் அருளும் காசி எங்கே? நரகத்துக்குத் துல்யமாக அந்தப் பாபம் செய்பவன் எங்கே? இங்கு தானம் வாங்கிப் பணம் சேமிக்க முயலுபவர், அல்லது கபடமாக தனத்தைக் கபளீகரம் பண்ணுகிறவர், முதலியவர்கள் காசியில் தாமதிக்க வேண்டாம். காசியில் தினமும் பரபீடனத்தைத் தவிர்க்கவும். அது முடியாவிட்டால் அப்படிப்பட்ட துராத்மா காசியில் வஸிப்பது என்ன லாபம்?

யார் விஸ்வநாதருடைய பக்தியை விட்டுவிட்டு மற்ற தேவதைகளிடம் பக்தி பாவம் வைக்கிருர்களோ அவர்களும் பினுகபாணியின் ராஜதானியில் வஸிக்க வேண்டாம். விப்ரா! ஜனங்கள் தனலாபம் அடைய விரும்பினுல் அல்லது காமுகனுனுல் அவிமுக்த க்ஷேத்ரத்தில் அவன் வஸிக்க வேண்டாம். ஏனென்ருல் இது மோக்ஷக்ஷேத்ரமாகும்.

மஹாதேவனை நிந்திப்பவரும் வேதத்தை நிந்திப்பவரும், வைதிக ஆசாரத்துக்கு விரோதமாக நடப்பவரும் வாராணஸியில் வஸிக்க உசிதமில்லை. பரத்ரோஹ புத்தியுடையவர், பிறரைக்கண்டு பொருமைப் படுபவர்கள், மற்றவர்களை வருத்துகிறவர்கள் இவர்கள்

காசியில் இருக்க வேண்டாம். அவர்களுக்கு காசியில் ஒரு ஸித்தியும் ஏற்படாது.

துர்புத்தியுள்ள ஜனங்கள் மனதினுலாவது காசியைப் புகழாதிருந்தால் அந்த துஷ்ட ஜனங்களுக்கு மோக்ஷகர்த்தா என்றும் விளக்கியிருக்கிறுர். பூதலத்தில் ஞானமில்லாமல் எங்கும் மோக்ஷம் கிடைப்பது அரிது. அந்த ஞானம் சாந்த்ராயண வ்ரதங்களினுலும் கிடைப்பதில்லை. சிரத்தையோடுகூட உத்தமதேசத்தில் காலமறிந்து விதிபூர்வமாக ஸத்பாத்ரங்களுக்கு துலாபுராணம் ஆகிய தானம் செய்தாலும், யமம், ப்ரம்மசர்யம், பூஜை சரீரத்தை உலர்த்தி உக்ரமாகத் தபஸ் செய்தாலும்கூடக் கிடைப்பதில்லை.

குரு உபதேசித்த மஹாமந்திரத்தைத் தவருமல் அனுஷ்டித்தாலும், ஸ்வாத்யாயம் செய்தாலும் அக்னியில் ஒரு வேளையும் ஆஹுதி கொடுத்தாலும் குருவுக்கு ஸேவை செய்தாலும் பித்ருக்களுக்கு ச்ரத்தையுடன் ச்ராத்தம் செய்தாலும் தேவதைகளைப் பூஜித்தாலும் அநேக தீர்த்தயாத்ரைகளைச் செய்தாலும் அந்த ஞானம் கிடைக்காது. ஸாதனமில்லாமல் ஞானம் உண்டாகாது. இந்த ஸாதனமான யோகம் தத்வார்த்த ச்ரவணத்தால் கிடைக்கும். அதுவும் குரு உபதேசித்த மார்க்கத்தில் அப்யாஸம் செய்தால்தான் கிடைக்கும். ஜடாமகுடத்துடன் வடவிருக்ஷத்தினடியில் ஸர்வாங்கமும் பஸ்மம் தரித்து, விசித்ரமான ஸர்ப்பங்களை அலங்காரமாகக் கொண்டு இருப்பவரை பூஜித்தாலே கிடைக்கும். அதற்கும்கூடச்ரவணம் முதலிய அநேக விக்னங்கள் ஏற்படும்; அதனுல் ஒரே ஜன்மத்தில் யோக ஸாதனத்தின் மூலமாக ஞானம் கிடைப்பது அரிது. ஹே! சுபவ்ரத! ஜபம் தபம் இவைகள் இல்லாமலேயே யோக ஸாதனம் இல்லாமலேயே காசியில் ஒரே ஜன்மத்தில் முக்தி கிடைக்கும்.

சுத்த புத்தியினுல் காசியில் நீ என்ன ச்ரேயஸ்ஸை ஸம்பாதிக்கிருயோ அதனுடைய பலனே மிக மேலானதாக இருக்கும். அந்த இரண்டு விஷ்ணு பக்தர்களின் முன்னுல் இவ்வாறு கூறி ப்ரம்ம தேவர் பேசாமல் இருந்தார். மஹாதபஸ்வியான சிவசர்மா இதைக் கேட்டுப் பேரானந்தப்பட்டான்.

ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான தீர்த்த மஹாத்ம்ய வர்ணனம் என்ற

இருபத்தி இரண்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



## அத்யாயம் 23

விச்வகர்மா கூறினுர்:- ஹே! ப்ரபோ! ஸத்யலோகஸ்வாமின்; எல்லாப்ராணிகளுடைய பிதாமஹரே! நான் தங்களுடைய ஸந்நிதியில் கொஞ்சம் விண்ணப்பித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். பயத்தினுல் சொல்லக்கூடவில்லை. ப்ரம்மா கூறினுர், ஹே ப்ராம்மணேத்தமா! நீ என்ன கூற நினைக்கிருயோ அந்த மநோபாவத்தை நான் அறிந்து கொண்டேன். நீ நிர்வாண முக்திப்பயன் பற்றிக் கேட்க விரும்புகிருய். அதை உனக்கு இந்த இருதூதர்களும் கூறுவார்கள். இந்த இரண்டு விஷ்ணு தூதர்களுக்கும் இங்கு தெரியாத விஷயம் ஒன்றுகூட இல்லை. ப்ரம்மாண்ட மண்டலத்தில் என்ன இருக்கிறதோ, என்ன நடக்கிறதோ, இவர்கள் இருவரும் நன்கு அதை அறிவார்கள்.

ப்ரம்மா இவ்வாறு கூறி அந்த இரு கணுதிபதிகளையும் உபசரித்தார். அவர்களும் லோக கர்த்தா ப்ரம்மாவை நமஸ்கரித்து அங்கிருந்து கிளம்பினுர்கள். பிறகு அவர்கள் தங்கள் விமானத்திலேறி வைகுண்ட லோகத்திற்குக் கிளம்பினுர்கள். போய்க் கொண்டிருக்கும் போதே சிவசர்மா அவர்கள் இருவரிடமும் தனது எண்ணத்தைப் பற்றிக்கேட்டார்.

நாம் எத்தனை தூரம் வந்திருக்கிருேம்! இன்னும் எத்தனை தூரம் செல்ல இருக்கிறது? ஹேபக்தர்களே, இன்னும் கொஞ்சம் கேட்டுத் தெரிந்துகொள்ள பாக்கி இருக்கிறது. ப்ரீதியுடன் அதையும் கூறுங்கள் என்ருர். காஞ்சி, அவந்தி, துவாரகை, காசி, அயோத்யா, மாயாபுரீ, மதுரை- இந்த ஏழு புரிகளும் முக்திகொடுக்க வல்லவை அல்லவா? அவைகள் எல்லாவற்றையும்விட காசியை மட்டும் ஸ்ருஷ்டிகர்த்தா ஏன் உயர்வாகக் கூறினுர்? இன்னும் எனக்கு முக்தி கிட்டவில்லையா? தாங்கள் தயவுசெய்து இதற்கு பதில் உண்மையாகக் கூற வேண்டும். சிவசர்மாவின் இந்த வார்த்தையைக் கேட்டு

*மரியாதையுடன் கூட பதில் கூறினார்கள். ஹே! பாபமற்றவரே! நீர் கேட்ட கேள்விக்குச் சரியாக பதில் கூறுகிறோம். எங்களுக்கு விஷ்ணு பகவானின் கிருபையால் பூத, பவிஷ்யத் வர்த்தமானம் மூன்றும் தெரியும். சந்திர சூரிய கிரணங்கள் எங்கு வரைப் ப்ரகாசிக்கின்றனவோ, இந்த இடங்களை ஸமுத்திரம், வனம், பர்வதம் இவைகளுடன் சேர்ந்து பூமி என்று கூறுகிறார்கள். இதற்கு மேல் ஆகாசமண்டலம் அப்படியே, விஸ்தாரமாக இருக்கிறது, பூமியிலிருந்து சூரியன் எத்தனையோ 10000 லக்ஷம் யோஜனை தூரத்தில் இருக்கிறார், சூரியனிலிருந்து 8 லக்ஷ யோஜனை சந்திரன் காணப்படுகிறான். சந்திரனிடமிருந்து எத்தனையோ லக்ஷயோஜனை தூரத்தில் நக்ஷத்ரமண்டலம் இருக்கிறது. அங்கிருந்து இரண்டு லக்ஷம் யோஜனை தூரத்தில் புதக்ரஹம் இருக்கிறது; புதனிலிருந்து இரண்டு லக்ஷம் யோஜனை தூரத்தில் சுக்கிரக்ரஹம் இருக்கிறது; சுக்ரனிலிருந்து இரண்டு லக்ஷம் யோஜனை தூரத்தில் செவ்வாய் க்ரஹமும், செவ்வாயிலிருந்து இரண்டு லக்ஷயோஜனை தூரத்தில் ப்ருஹஸ்பதி க்ரஹமும், ப்ருஹஸ்பதிக்ரஹத்திலிருந்து இரண்டு லக்ஷம் யோஜனை தூரத்தில் சனிக்ரஹமும் இருக்கிறது.*

*சனியிலிருந்து ஒரு லக்ஷம் யோஜனை தூரத்தில் ஸப்தரிஷி மண்டலம் இருக்கிறது. ஸப்தரிஷிமண்டலத்திலிருந்து ஒரு லக்ஷம் யோஜனை தூரத்தில் த்ருவமண்டலம் இருக்கிறது. தரணி மண்டலத்தில் கால்களால் நடந்து செல்லும் ஸமுத்ர த்வீபம், பர்வதம், காடுகள் முதலியவைகள் சேர்ந்து பூமண்டலம் என்னும் பேருடன் ப்ரக்யாதிபெற்று இருக்கிறது.*

*பூலோகத்திலிருந்து ஸூர்யன் வரை புவர்லோகம்: சூரியனிலிருந்து த்ருவநக்ஷத்ரம் வரை ஸ்வர் லோகம் எனும் ஸ்தலம், பூமியிலிருந்து ஒரு கோடி யோஜனை தூரத்தில் மஹர்லோகம் இருக்கிறது. அதிலிருந்து இரண்டு கோடி*

யோஜனை தூரத்தில் ஜனலோகம் இருக்கிறது. பூமியிலிருந்து நாலு கோடி யோஜனை தூரத்தில் தபோலோகம் இருக்கிறது. அங்கிருந்து எட்டு கோடி யோஜனை தூரத்தில் ஸத்ய லோகம் உள்ளது.

ஸத்யலோகத்துக்கப்பால் - பூமியிலிருந்து பதினாறு கோடி யோஜனை தூரத்தில் வைகுண்டலோகம் இருக்கிறது என்கிறார்கள். அங்கு எல்லாருக்கும் அபயமளிக்கும் ஸாக்ஷாத் கமலாபதி மஹாவிஷ்ணு இருக்கிறார். அங்கிருந்து பதினாறு குணம் யோஜனை தூரத்தில் மஹாதேவருடைய ஸ்தானமான கைலாஸம் இருக்கிறது.

அங்கு ஸர்வகுணச்ரேஷ்டரான பகவான் சிவன் பார்வதி, கணேசன், ஸ்வாமி கார்த்திகேயன், நந்தி முதலியவர்களுடன் இருக்கிறார். இங்கு காணும் ப்ரபஞ்சங்கள் பூராவும் அவருடைய லீலாவிநோதப் பொருள்கள். தனது லீலா விநோதத்தினால் அதை நடத்துகிறார். அவர் விஸ்வேஸ்வரன் என்று ப்ரசித்தியடைந்தவர். அவருடைய ஆக்ஞைக்குட்பட்டதே மற்ற லோகங்கள். அவரே எல்லாவற்றையும் ஆளுகிறார். வேறு ஆள்பவர் கிடையாது. அவர்தான் பூதங்களை ஸ்ருஷ்டித்து, பாலனம், ப்ரளயம் இவைகளைச் செய்கிறார்.

அவர் ஒருவரே ஸர்வக்ஞர். அவர் காரியங்கள் ஸ்வதந்த்ரமாக நடக்கின்றன. அவரைத் தடுப்பதற்கும் தூண்டுவதற்கும் ஒருவரும் கிடையாது. வேதங்கள் கூறும் ஸகுண, நிர்குணப்ரம்மம் அவரே; ஸர்வவ்யாபி, ஸனாதனர், நீதியில் ஸத்ய ஸ்வரூபர், இரண்டற்றவர். அவரே- மகத் ஆதி காரணங்களுக்கு யார் ப்ரதானமானவர்களோ, அவர்களுக்கும் மேலானவர். அவரை சுருதிகள் ப்ரம்மரூபன், ஆனந்தன் என்று கூறுகின்றன. அவரை யாராலும் அறியமுடியாது; விஷ்ணு ப்ரமணக்களும் அறியமாட்டார்கள். அவரை அறியமுடியாமல் (வாணி) பேச்சுடன் மனத்துடன் திரும்பிவிடுகிறது.

எவர் அறிவதற்குத் தகுதியானவரோ, பரம் ஜ்யோதியோ, ஸர்வ அந்தக்கரண -நிவாஸியோ, யோகி கணங்களால் அறியத் தகுந்தவரோ, பெயர் அற்றவரோ, ப்ரமாணங்களாலும் அறியத் தகாதவரோ அநேக ரூபமாகவும, ரூபமில்லாமலும் ஸர்வ வியாபகராலுலும் புலப்படாதவரும், அனந்தராலும் எல்லாரிதயத்திலும் உள் அடங்கினவரும் ஸர்வக்ஞ நாதராலுலும் கர்மவர்ஜித மானவர். அவருடைய ஈச்வர முஹூர்த்தம் இத்தகையது. இளம்பிறையை ஆபரணமாக உள்ளவர். பனேயைப்போல் சியாமளமான கழுத்தையுடையவர்; நெற்றியில் மூன்று கண்களேயுடையவர்; சரீரத்தின் இடபாகம் நாரீரூப மானவர்; சேஷபகவான் அவருடைய புஜபூஷணம்; ஜடாமகுடம் உடையவர். ஸர்வாங்கமும் மன்மதனே எரித்த சாம்பலேப் பூசிக்கொண்டிருக்கிருர் விசித்ரமான உடலுடன் கூடிய பெரிய பெரிய பாம்புகளே பூஷணமாக உடையவர்

முகா வ்ருஷபமாகிய ரதத்தில் ஏறுபவர், பிஞகி என்னும் வில்லினேத் தரித்தவர்; கஜாஸூரனேக் கொன்று அவனுடையத் தோலேப் போர்த்திக் கொண்டிருப்பவர். ஐந்து முகங்களேயுடையவர். சுபமானவர்; மஹா ம்ருத்யுஞ்ஜயர்; மஹா பலம் பொருந்திய ப்ரமத கணங்களால் சூழ்திருப்பவர்: சரணுகதர்களே ரக்ஷிப்பவர். பணியும் ஜனங்களுக்கு மோக்ஷம் அளிப்பவர், மனோகாமனேக்கும் மேலான வரங்களே அளிக்க எப்போதும் காத்துக் கொண்டிருப்பவர் ஹே ப்ராம்மணு! தந்தஸ்வரூபர்; ரூபத்திற்கும் அதீதமானவர். அந்த ஈச்வரருடைய ஸகுண நிற்குணமான ஈச்வர ரூபம் ஸர்வவ்யாபகமாக இருக்கிறது.

நிராகாரராலுலும் உருவமுடையவராகி சிவன் புக்திமுக்திக்கும் காரணமாவார்; சிவனேத் தவிர அன்னியர் ஒருவரும் மோக்ஷம் அளிக்க வல்லவர் அல்ல. அந்த நிற்குண ஈச்வரர் பார்வதீபதி. காணும் காணுததுமான ஜகத்தைத்தன் அதீனத்தில் வைத்துக் கொண்டிருக்கிருர். அது போலவே உமாபதியான பகவான் ஸமஸ்த

ஜகத்தையும் விஷ்ணுபகவானிடம் ஒப்படைத்துவிட்டு லீலாவிநோதமாக க்ரீடை செய்து வருகிறார்.

சிவன் எப்படியோ அப்படியே விஷ்ணு; சிவன் விஷ்ணு இருவரிடமும் கொஞ்சம்கூட பேதமில்லை. முன்காலத்தில் சிவன், ப்ரம்மா முதலான ஸமஸ்தமான தேவ கணங்கள்; வித்யாதரர், உரகர், கந்தர்வர் சாரணர்கள் இவர்களை அழைத்துத் தன்னுடையதைப் போன்ற ஒரு ஸிம்மாஸனம் செய்துவிட்டு அதில் விஷ்ணுவை உட்கார்த்தி மனோகரமான அதிரம்யமான விசுவகர்மாவினால் நிர்மாணிக்கப்பட்ட பாண்டுவர்ணமான ரத்னமயமான கால்கள் உடையதும், கலசத்துடன் கூடியதும், ஸஹஸ்ர யோசனை தூரம் விஸ்தீர்ணமானதும் எல்லா ரத்னங்களும் பதிக்கப்பட்டதும், ஸர்வ உத்தமமானதும் பட்டு நூல்களால் ஆன சாமரத்தால் சுத்தம் செய்யப்பட்டதுமான குடையுடன் கூடியதும் ராஜ்யாபிஷேகத்துக்குத் தகுந்த ஸர்வௌஷதம் முதலிய பதார்த்தங்களோடும் கூடியதும் ஐந்து கும்பங்களுடன் கூடிய கடுகு அக்ஷதை, தூர்வைப்புல், முதலியவைகளுடன் கூடிய தீர்த்தங்கள் நிரம்பியதும்; வேத மந்திரங்களினால் தூயதானதும், தேவதை, ருஷி, ஸித்தர், நாகர், பதினாறு; மங்களப் பொருள் நிரம்பிய - கன்னிகைகளைக் கொண்டு வந்து வீணை, ம்ருதங்கம், சங்கு, பேரி, டமரு, டிண்டிமம் ஆனகபேரி ஜாலர்கள் ஆதி வாத்யங்களின் ஒலியும்; லலிதகானமும் வேதத்வனி ஆகாசத்தை பேதித்து எங்கும் எதிரொலிக்க; தாரா பலனும், சந்திரபலனும் கூடின சுபதினத்தில் மகுடம் சூட்டி, ரமணீயமாக குதூகலமாகும்படி வர்ணிக்கப்பட்ட, பார்வதியால் அழைத்துவரப்பட்ட சோபையுடன் கூடின லக்ஷ்மீஸமேதராக, விஷ்ணு தேவரை ப்ரம்மாண்டமான மண்டபத்திலமர்த்தித் தானே தனது கையால், அபிஷேகம் செய்து அனன்யனாக அனுபவிக்கத் தகுந்த தனது ஸர்வ போகங்களையும் ஐஸ்வர்யங்களையும் அளித்தார்.

பிறகு ப்ரமத கணங்களுடன் தானும் சாரங்கபாணியைத் துதித்து ப்ரம்மாவிடம் கூறலானுர். இந்த விஷ்ணு என்னுலும் வணங்கத் தகுந்தவர்; நீர் இவரை வணங்கும்; என்று இவ்விதம் கூற அவரும் கருடத்வஜரை வணங்கினுர். அப்பொழுது ஸமஸ்தகணுதிபர்கள், ப்ரம்மா, தேவதைகள் ஸனகாதி யொகியர்கள், ஸித்தர்கள் தேவரிஷி ஸமூகம்; வித்யாதரர், கந்தர்வர், யக்ஷர், தக்ஷர், ராக்ஷஸர், அப்ஸரஸ் கூட்டங்கள், குஹ்யகர்கள், சாரணர், சேஷன், வாஸுகி, தக்ஷகன் முதலிய நாகர்கள் பக்ஷிகூட்டங்கள் கின்னரர்கள் எல்லா ஸ்தாவர ஜங்கமங்கள் இவைகள் ஜெய ஜெய என்று வணக்கமுடன் கோஷிக்கத் தொடங்கின.

பிறகு பரம காந்தியுடைய மஹாதேவர் அச்சமயம் தேவர்கள் சபையில் ரம்யமான மஹா மந்திரத்தினுல் விஷ்ணுவை பூஜித்தார். நீரே ஸர்வ பூதங்களேயும் காத்து ரக்ஷிப்பவர் ஸம்ஸாரத்தரும்கூட, நீரே ஸகல ஜகத்திலுள்ளவர்களும் வணங்கி பூஜிக்கத் தகுந்தவரும் கூட, நீரே தர்மார்த்த காமங்களேயும் அளிப்பவர். அநியாயம் செய்பவர்களே தண்டிப்பவர்; யுத்தத்தில் என்னுல்கூட ஜயிக்கப்படாதவர்.

உத்தமமான இச்சாசக்தி, க்ரியாசக்தி, ஞான சக்தியாகிய மூன்று சக்திகளேயும், என்னுல் ப்ரேரேரிக்கப்பட்ட மூன்று சக்திகளேயும் க்ரஹித்துக் கொள்ளுங்கள். உனது விரோதிகளே நான் கருதித் தண்டிப்பேன்; உனது பக்தர்களுக்கு நான் மோக்ஷம் அளிப்பேன். ஸுராஸுரர்களால் கூட விலக்க முடியாத இந்த மாயையையும் க்ரஹித்துக் கொள்ளுங்கள். இவளுடைய மோக பாசத்தினுல் கட்டுண்ட உலகம் தேவ ரஹஸ்யங்கள் ஒன்றையும் அறியாது. எனது இடதுதுபுறம் நீர் எனது வலதுபுறம் ப்ரம்மா, நீரே ப்ரம்மாவை ரக்ஷிக்கிறவரும் ஆளுகிறவரும் ஆகிறீர்.

இந்த விதமாகத்தானே ஹரிக்கு வைகுண்டத்தை யளித்துவிட்டு பரம கணங்களுடன் உமாபதியாகிய

பகவான் ஹரர் க்ரீடித்துக் கொண்டிருக்கிறுர். அப்பொழுதிலிருந்து பகவான் சாரங்கபாணிகதாதரர் தானவர்களை அந்தமாக்கும் விஷ்ணுதேவர் ஆகிய லோகங்களையும் சாஸனம் செய்கிறுர். இப்பொழுது எல்லா லோகங்களின் நிலையையும் உமக்கு எடுத்துக் கூறினேன். இப்பொழுது உமது முக்திக்குக் காரணத்தைக் கூறுகிறேும்; எவனொருவன் மேன்மையான இந்த வியாக்யானத்தை மனம் ஒன்றிக் கேட்பானே. அவன் எல்லா லோகங்களையும் அனுபவித்து காசியில் முக்தியடைவான்.

யக்ஞம், உத்ஸவம், விலாஸம் எல்லா மங்கள காரியங்களையும் ராஜ்யாபிஷேக முஹுூர்த்தம், தேவாலயங்களின் காரியங்கள் அதிகாரப் பூர்வமாகத் தானம் புதுவீட்டுக்ருஹப்ரவேசம் இவைகள் நன்ருக நடக்கும் பொருட்டு இதனைப் பாராயணம் செய்யவேண்டும். இதைப் படிப்பவன் புத்ரனை அடைவான், அவன் எல்லா பந்தனங்களிலிருந்தும் விடுபடுவான்; அதனுல் மங்களத்தை விரும்பும் ஜனங்கள் மனம் ஒருமிக்கது-இதைப் படிக்க வேண்டும்; இந்த வியாக்யானம் அமங்கலத்தை சமனம் செய்யும். ஹரிஹரன் இருவருக்கும் ப்ரியமானவர்.

இவ்விதத்தில் ஸ்ரீஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான விஷ்ணு அபிஷேக வர்ணனம் என்ற இருபத்து மூன்ருவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 24

இரு விஷ்ணு தூதர்களும் கூறினார்கள்:- நாங்கள் இருவருமே உமக்கு லாபமாகும் நற்செய்கைகளைப் பற்றிக் கூறுவோம், கேளும். நீர் இந்த வைகுண்டலோகத்தில் போகங்களை அனுபவியும். அன்னபானாதி நேர்த்தியான போஜனங்களை புஜியும்.இங்கு ப்ரம்மாவினுடைய ஆயுள் ஒரு வருஷம் வரை அப்ஸரஸ்களுடன் போகம் அனுபவித்துவிட்டு புண்ணிய தீர்த்தத்தில் மரணம் அடைந்த புண்ணியம் பின்பும் மீதியிருப்பதால் நந்திவர்தனம் என்ற நகருக்கு அரசனாவீர், முதலில் பத்னி இல்லாமல் பலமுள்ளவனாய், வாகனாதிகளுடன் கட்டுமஸ்தான சரீரத்துடன் ஸுந்தரமான ஆபரணங்கள், வஸ்த்ரம் இவைகளைத் தரித்துக் கொண்டும், தினமும் இஷ்டமான ஸத்கர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டும் பண்டிதர்கள் மத்தியில் ப்ரகாசித்துக் கொண்டு எப்பொழுதும் உண்மை பேசுவீர். விளைநிலங்களால் சூழப்பட்ட ஸுதேசத்தில் பேராவலுடையவனாய் நான்கு லக்ஷம் பசுக்கள் உடையவனாய் தேவாலயங்களுடைய மாலைபோல் அதாவது சுற்றும் தேவாலயங்களுள்ள ராஜ்யத்தை அடைவீர்; அந்த ராஜ்யத்தின் க்ராமங்கள் தோறும் யக்ஞஸ்தம்பங்கள் கூடியதாக சாலைகளாலும், தானஸம்பத்துடன் இருப்பீர்.

அங்கு இயற்கையாகவே பூத்துக் குலுங்குகிற உத்யானவனங்களும் எப்போழுதும் பழம் தருகிற வ்ருக்ஷங்களும், தாமரை பூத்துக் குலுங்கும் தடாகங்களும் இருக்கும். அங்குள்ள நதிகள் நிர்மலமானதும், ருசியுள்ளதுமான தண்ணீருடன் இருக்கும். அங்குள்ள ஜனங்களிடம் டம்பமே இருக்காது. எல்லாரும் உயர்ந்த வம்சத்தில் பிறந்தவர்களாகவேயிருப்பார்கள். அநியாயமாகப் பணத்தை ஸம்பாதித்து, யாருக்கும் பயனில்லாமல் பூமியில் புதைத்து வைப்பவர்கள் அங்கில்லை.

*அங்குள்ள பெண்கள் நிறைந்த மனதுள்ளவர்களாகவும் மடமையுடையவர்களாகவும் விநயத்துடனும் இருப்பார்கள். வித்வான்கள் ப்ரமையடைய மாட்டார்கள். அங்குள்ள நதிகள் மட்டுமே கோணலும் மாணலுமாகப் போகும்; ப்ரஜைகள் அப்படியில்லை. அங்கு கிருஷ்ணபக்ஷத்து இரவே இருட்டாக இருக்கும்; ஆனால் மனிதர்கள் அக்ஞான இருட்டுடன் கூடி இருக்கமாட்டார்கள். அங்குள்ள பெண்கள் ரஜஸ்ஸுடன் (ரஜஸ்வலை) இருப்பார்கள். அங்குள்ள புருஷர்கள் ரஜஸ்ஸுடன் (ரஜோ குணத்துடன்) இருக்கமாட்டார்கள். அங்குள்ள புருஷர்கள் தனத்தினால் மதாந்தகர்களாக இருக்கமாட்டார்கள்; ஆனால் போஜன மதம் (ஸாரம்) நிரம்பியதாக இருக்கும். அங்கு ரதங்கள் இரும்புகளால் செய்யப்பட்டிருக்கும். மனிதர்கள் இரும்பு இதயம் படைத்தவர்களாக இருக்கமாட்டார்கள். இங்கு பரசு, கோடலி, சாமரம் இவைகள்தான் தண்டத்துடன் கூடினவைகளாக இருக்கும். ஆனால் மனிதர்கள் கோபத்தினாலோ, அபராதத்தினாலோ, தண்டனை அடைந்தவர்களாக இருக்க மாட்டார்கள்.*

*அங்கு சூதாடும் இடம் ஒன்றுதான் கேளிக்கை நிறைந்ததாக இருக்கும். மற்ற இடங்களில் அனுவச்யமான கேளிக்கைகளே இருக்காது. சூதாடுகிறவர்கள் கையில்தான் (பாசம்) பகடைக்காய் இருக்கும். மற்றவர்கள் கையில் தூக்கு தண்டனைக்கு உதவும் பாசம் இருக்காது. அங்கு ஜலம்தான் ஜடமாக (குளிர்த்தன்மை) இருக்கும்; மனிதர்களிடம் ஜடத்தன்மையிருக்காது. ஸ்த்ரீகளின் இடுப்புதான் துர்பலமாக இருக்கும். மனிதர்களின் இடுப்பு துர்பலமாக இருக்காது. பெண்களின் ஸ்தனங்கள் கடினமானதாக இருக்கும், மனிதர்களின் இதயம் கடினமானதாக இருக்காது. அங்கு ரத்னங்களில் தான் வித்யாஸம் இருக்கும். மனிதர்களிடம் இல்லை மூர்த்திகளுடைய கரத்தில்தான் சூலம் இருக்கும், மனிதர்களுடைய இதயத்தில் சூலரோகம் இருக்காது.*

*அங்கு ஸத்வகுண பாலனத்திஞல்தான் நடுக்கம் ஏற்படுகிறதே தவிர பயத்திஞல் ஒருவரும் நடுங்க மாட்டார்கள். கர்மம் மீறி சந்தாபம் அடைவார்களே தவிர, பணமில்லாமல் ஸந்தாபம் அடையமாட்டார்கள். பாபம்தான் அந்த ஊரில் தரித்ரமே தரித்ரமே தவிற இதர வஸ்துக்களுக்கு ஒரு போதும் தரித்ரமே ஏற்பட்டதில்லே. அங்கு கிடைக்காதது பாபமயமான பொருள்கள்; புண்யமய வஸ்துகள்தான் கிடைப்பவை. யாஃனக்குத்தான் மதம் பிடிக்குமே தவிர மனிதர்களுக்கில்லே. தடாகம் போன்ற நீர் நிலேகளில்தான் அலேகள் ஒன்ருேடு ஒன்று மோதுமே தவிர, மனிதர்கள் விரோதத்திஞல் மோத மாட்டார்கள், மரத்தில்தான் முள் இருக்குமே தவிர மனிதர்கள் மனத்தில் இராது. மனிதர்கள் ஜலக்ரீடையில் விஹாரிப்பார்களே தவிர, அவர்கள் நெஞ்சில் விஹாரம் கிடையாது (விஹாரம் கிடையாது; ஹாரமுண்டு) (மாலேயில்லாமல் இருக்கமாட்டார்கள்.)*

*பாணங்களில்தான் (குணம்) நாண் விதம் விதமாக இருக்கும்; மனிதன் குணத்தில் குணங்கள் விதவிதமாக இருக்காது. பாணங்களில்தான் குணம் அறுபடும். (நாண் அறுபடும்) மனிதர்கள் குணங்கள் அறுபடாது). பந்தனம் என்பது புத்தகங்களில்தான் இருக்கும். அதாவது, (புத்தகங்களே) நாடாவிஞல் கட்டுவார்கள், மனிதர்களுக்கு பந்தனம் கிடையாது. பாசுபதமதத்தினர்; மமதையை தியாகம் செய்வர்; (மமதை என்பதுதான் ஸ்நேகம்) ஸ்நேகம் என்ருல் எண்ணே (இந்த அத்யாயம் பூராவும் இரண்டு அர்த்தம் த்வனிக்கும்: சிலேடைகள்:) பாசுபதமத பரமஹம்ஸர்கள் தாம் சிநேகத்தை த்யாகம் பண்ணுவார்கள்; மனிதர்கள் மமதையை விடுவதில்லே. கேவலம் ஸந்யாஸிகளே தண்டம் பிடித்திருப்பார்கள்; மற்றவர்களுக்கு தண்டம் (அதாவது தண்டனே) கிடையாது. தனுஸ்ஸில்தான் (மார்க்கண்ட) பாணம் தொடுப்பார்கள். மற்றவர்கள் மேல் இல்லே. ப்ரம்மசாரிகள் தான் பிக்ஷையெடுப்பார்கள், பிச்சைக்காரர்கள் பிக்ஷு என்று*

அர்த்தம்) பிச்சை எடுக்க மாட்டார்கள். அங்கு சஞ்சலமாக அலையும் வண்டுகள் தானுண்டு; மனிதர்களுக்கு சஞ்சலமே கிடையாது,

மேற்கூறிய இந்த பரிபூர்ண குணங்கள் கொண்ட இந்த ப்ரதேசத்தில் ஸௌபாக்யவானகவும், பாஹுபலத்துடனும், அழகுடனும் சூரம், உதாரம் முதலிய குணங்களுடனும் ராஜதர்மம் அறிந்தவனுகவும் நீர் இருப்பீர். பிறகு உமது ராஜரீகத்தில் லாவண்யவதியும் ரமணீயமுமான பத்தாயிரம் ராணிகள் உமக்கு ஸேவை செய்வார்கள். முன்னூறு ராஜகுமாரர்கள் உமக்குப் பிறப்பார்கள். நீர் ப்ரசண்ட எதிரிகளுக்கு வைரி வ்ருத்த காலன் என்னும் பெயருடன் இருப்பீர்.

அநேக யுத்தங்களில் ஜயித்த பிக்ஷுகர்களை தனத்தினுல் திருப்தி படுத்தியுள்ள எல்லா குணங்களுடன் பரிபூர்ணமாய் பூர்ணசந்திரனுக்கு நிகரான ப்ரகாசவானுய் எப்பொழுதும் அவப்ருதஸ்நானத்தினுல் ஈரத்தலையுடனும் ப்ரஜா பாலனத்தில் கெட்டிக்காரனுயும் அரசர்களில் உத்தமனுயும் கஜானு மூலம் ப்ராம்மண ஜனங்களைத் திருப்திபடுத்திக் கொண்டும் பிறரை ஆச்ரயிக்காமல் கோவிந்தனுடைய பாதாரவிந்தத்தையே இதயத்தில் தியானம் செய்து கொண்டும், இரவும் பகலும் வாஸுதேவனுடைய கதாப்ரவசனத்தில் பொழுதைக் கழிப்பீர். ஹே! ப்ராம்மணரே! உமது பாக்யத்தால் ஒருசமயம் நீர் ராஜதர்பார் நடத்தும்போது காசியிலிருந்து யாத்ரை மார்க்கமாக வருகிற ஒரு ஏழைப்பிராம்மணர் உமக்கு அநேகம் ஆசீர்வாதங்கள் பண்ணி இவ்விதம் கூறுவார்:- ஹே! அரச சிங்கமே! எப்பவும் ஆனந்தமாக இரும்;

எல்லா ஜகத்துக்கும் குருவான காசிநாதன் விசுவேச்வரர் உமது கெட்ட புத்தியை நாசம் செய்யட்டும். அவர் நினைத்த உடனேயே முக்தி ஸம்பத் அளிப்பார். அந்தக் காசிநாதன் உமக்கு நிர்மலமான ஞானத்தை உபதேசித்து அருளட்டும். எந்த புண்ணிய பலத்தினுல்

அகண்டமான இந்த ராஜ்ய பதவியை அடைந்தீரோ அதனுடைய பாக்கி பாக்ய விசேஷத்தால் உமது புத்தி விஸ்வநாதரிடம் அர்ப்பிக்கப்படட்டும். எந்த விஸ்வநாதருடைய ஸந்தோஷத்தால் ஆயுள், புத்ரன் பெண், வரன், வதூ, புத்ரி, பாக்யம், ஸ்வர்கம், மோக்ஷம். இவைகள் சுலபமாகக் கிடைக்கிறதோ, அந்த விசுவநாதன் உம்மிடம் ஸந்தோஷப்படட்டும்.

எவருடைய பேரைக் கேட்ட மாத்திரத்தில் பாவங்கள் க்ஷணத்தில் நசிக்குமோ, அந்த விச்வேச்வரர் உமது இதயத்தில் வஸிக்கட்டும். இந்த ஆசீர்வாதத்தைக் கேட்டு விருத்தகாலன் எனும் அரசஞன உமக்கு புளகாங்கிதம் ஏற்படும். அதே சமயம் இங்கு நடக்கும் இந்த விருத்தாந்தத்தை நிீனத்துக்கொள்வீர். பிறகு அதை மறைத்துக் கொண்டு உமது புத்திரனுக்குப் பட்டம் கட்டிவிட்டு, ப்ராம்மணர்களுக்கு வெகு தனங்கள் கொடுத்து அவர்களை ஸந்தோஷப்படுத்திவிட்டு, பட்டமஹிஷி அநங்க லேகையுடன் காசிக்கு ப்ரயாணமாவீர். அநேக தானங்களிஞல் யாசகர்களை ஸந்தோஷப் படுத்தி உமது பெயரைக் கொண்ட ஒரு சிவலிங்கத்தை அங்கு ஸ்தாபித்து, மிகவும் பெரிய உன்னதமான சிவாலயம் கட்டுவீர். அதன் முன்ஞல் அதே பெயருடைய ஒரு கிணற்றையும் வெட்டுவீர்.

விதிப்ரகாரம் கலசாரோஹணம் செய்து, மணி, மாணிக்கம், ஸ்வர்ணம், யானை, குதிரை, பசு, தநம் த்வஜங்கள் கொடிகள், குடை, சாமரம் கண்ணுடி முதலிய அநேக பூஜைக்குரிய ஸாமக்ரிகளை லோபபுத்தியில்லாமல் ஏற்படுத்தி வ்ரதம், உபவாஸம் ஆகிய நியமங்களுடன் மிகவும் மெலிந்த சரீரமுடையவராகி இருக்கும் ஸமயம் அங்கு ஒரு மத்யான்ன ஸமயம் ஒரு தபோதனரைப் பார்ப்பீர்.

அந்த க்ஷீண சரீரமும் பவஹரமான ஜடாமுடியும் கொண்ட தபஸ்வி உந்நதமான சரீரத்துடன் கூடியவர்,

தர்மத்தைப்போல் ஜனங்கள் மனத்திற்கு ச்ரத்தைய ளிப்பவர்,

தனது சரீரமாகிய கடினமான பாரத்தை இன்னொரு தடியால் சமாளித்து சிவன் கோவிலின் உள்ளேயிருந்து வெளிப்பட்டு ஸபாமண்டபத்துக்கு வருவார்.

இந்த சிவாலயம் யார் கட்டினார்கள்? என்று, உமது சமீபம் வந்து உட்கார்ந்து கொண்டு, க்ரமமாகக் கேட்பார்; நீ யார்? நீ இங்கு ஏன் வந்திருக்கிறாய், உன்னுடன் கூட யார் யார் இருக்கிறார்கள்?'' என்றெல்லாம் கேட்பார்.

இந்த சிவாலயம் யார் கட்டினார்கள் தெரியுமா? இந்த லிங்கத்துக்குப் பெயர் என்ன? வயோதிகத்தினால் எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை.

அந்த வ்ருத்த தபஸ்வி இவ்வாறு கேட்டதும் நீர் கூறுவீர். 'எனது பெயர் வ்ருத்தகாலன், தக்ஷிண தேசத்து அரசன்; இது எனது ஸஹதர்மிணி. இவள்கூட இங்கு வசிக்கிறேன். இதே லிங்கத்தைத் தியானம் செய்து வருகிறேன்.

ஜடிலரே! இந்த சிவாலயத்தைக் கட்டுவித்தவர் மஹாதேவர். விசேஷமாக இந்த லிங்கத்தின் பெயர் எனக்குத் தெரியாது.

அந்த ஜடாதாரி ராஜாவின் வார்த்தையைக் கேட்டுக் கூறினார்:- லிங்கத்தின் பெயர் தெரியாது என்று கூறினாய். அது சரி.

நீ இங்கு ஸ்திரமாக உட்கார்ந்திருப்பதை நான் நிதமும் பார்க்கிறேன். அதனால் இந்த சிவாலயம் யார் கட்டினார்கள் என்பது உனக்குத் தெரிந்திருக்குமென்று நினைத்தேன்.

உனக்குச் சரியாகத் தெரிந்தால் அதை என்னெதிரில் கூறு என்றார். அந்த தபஸ்வியின் வார்த்தையைக் கேட்டு நீர் மறுபடியும் கூறுவீர்;

நான் பொய் சொல்லவில்லை ஸ்வாமி, கட்டினவரும், கட்டச் செய்தவரும் மஹாதேவரே. அதிருக்கட்டும், தபஸ்வியே! இந்தக் கவலையினுல் ஆகப்போவதென்ன?

இவ்விதம் கூறி நீர் சும்மா இருப்பதைக் கண்டு தபஸ்வி மறுபடியும் கூறுவார்; எனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது; சீக்கிரம் தண்ணீர் கொண்டு வந்து கொடு என்பார்.

அவரது வார்த்தையைக் கேட்டு நீர் கிணற்றிலிருந்து ஜலம் இறைத்துக் கொண்டு வந்து கொடுப்பீர்; அதைக் குடித்தவுடன் அந்தக் கிழவன் பௌர்ணமியின் பூர்ண சந்திரன்போல் யௌவனவாலிபனுக மாறுவார். சட்டையைக் கழற்றியது போல் நூதனமாக மாறி சோபிப்பார். அப்பொழுது நீர் ஆச்சர்யத்தில் ஆழ்ந்து, திரும்பவும் கூறுவீர், பகவானே! இது என்ன ஆச்சர்யம்! எதனுல் நீர் இந்த வயதான உருவம் மாறி யௌவன வாலிபனுக சோபிக்கிறீர்? தபோ தனரே! தங்களுக்கு அவகாசம் இருந்தால் கூறுங்கள் என்பீர்.

மஹாத்மா நரபதி வ்ருத்த காலரே! எனக்கு உன்னைத் தெரியும். உனது பதிவ்ரதையான இந்த பத்னியையும் தெரியும். இவள் பூர்வ ஜன்மத்தில் துர்வஸுு என்னும் ப்ராம்மணனுடைய ஸதாசார சீலையான பெண்ணுகும். மகாத்மா தைத்ரூவருக்கு துர்வஸுு இவளை விவாகம் செய்து கொடுத்தார். அந்த தைத்ரூவர்யௌவன துர்வஸுு இவளை விவாகம் செய்து கொடுத்தார். அந்த தைத்ருவர் யௌவன பருவத்திலேயே கால தர்மத்துக்கு வசமானுர்.

இந்த ஆசாரசீலை வைதவ்யத்தை அநுபவித்துக் கொண்டு அவந்திபுரியில் இறந்தாள். அந்த புண்ணியத்தினுல் பாண்டிய ராஜனுக்கு மகளானுள். இப்பொழுது அந்த பதிவ்ரதை உமக்கு விவாஹம் செய்து கொடுக்கப்பட்டிருக்கிருள். உமது கூட இங்கு வந்து உத்தம கதியடைவாள்.

ஹே அரசே, அயோத்யா, அவந்திகா, மதுரை. த்வாரவதீ, காஞ்சீ, மாயாபுரீ இவைகளில் பாதகம் செய்தவர்கள் உரிய காலத்தில் மரணம் அடைவார்களானுல் அவர்கள் முறையே ஸ்வர்க போகம் அநுபவித்துப் பிறகு காசியில் வந்து மரணமடைவார்கள்.

உம்மை எனக்கு நன்ருகத் தெரியும். நீர் பூர்வ ஜன்மத்தில் மதுரைவாஸியான சிவசர்மன் என்னும் பெயருள்ளவர். உமக்கு ஹரிவாரத்தில் மரணம் ஏற்பட்டது. அந்தப் புண்யபலத்தால் வைகுண்டபதவி கிடைத்தது. அங்கு மனோரம்யமான போகங்களை அனுபவித்து விட்டு நந்திவர்த்தினத்திற்கு அரசரானீர். ஹே விருத்த காலரே, அந்த பூர்வ புண்ய வசத்தால் உமக்கு இப்பொழுது காசீவாஸம் கிடைத்திருக்கிறது. உத்தம முக்தியை அடைவாய். ஹே ராஜேந்த்ரா! இதையும் நீ கேள். இந்த சிவாலயத்தைக் கட்டினதும் கட்டுவித்ததும் மகாதேவரே என்று, கூறிஞய். அது மிகவும் சரியான வார்த்தை.

நாம் செய்யும் புண்ணிய கர்மத்தை ஒருவருக்கும் கூறக்கூடாது. நான் செய்தேன் என்று நினைத்தவுடனேயே புண்ய பலன் நசித்து விடுகிறது. அதனுல் புண்ணிய கர்மத்தைப் பெரிய நிதியைப் பத்திரப்படுத்துவது போல் பத்திரமாக வைத்திருக்க வேண்டும். வெளியில் கூறினுல் சாம்பலில் செய்த ஆஹுதி போல் பயனற்றதாகிவிடும்.

நிச்சயமாக நீ விச்வநாதரால் ஏவப்பட்டு இந்த சிவலிங்கத்தை அமைத்து க்ருதக்ருத்யர் ஆனுய். இதை நான் அறிவேன். ஏ மஹீபதே! இதை நீ அறிந்துகொள். இந்த வ்ருத்த காலேச்வரர் என்ற லிங்கம் அநாதிஸித்தமானது. இதற்கு நீ நிமித்த மாத்ரமே (பெயர் அளவுக்கே) ஆவாய்.

இந்த வ்ருத்த காலேஸ்வரருடைய லிங்கத்தைத் தர்சனம், ஸ்பர்சனம், பூஜனம்; அதைப் பற்றிக் கேட்டல் நமஸ்கரித்தல் இவைகளினுல் மனோவாஞ்சித பலன்கள் உடன் கிடைக்கும். இந்த காலோதகம் என்ற பெயர் பெற்ற கிணறு ஜரைத்தன்மையையும், வ்யாதிகளையும்

போக்கவல்லது. இந்த ஜலத்தைப் பானம் பண்ணினவன் மாதாவின் ஸ்தனத்தின் பாலே மறுபடியும் பருக மாட்டான்.

இந்தக் கிணற்று ஜலத்தில் ஸ்நானம் செய்து இந்த லிங்கத்தைப் பூஜை பண்ணியவன் ஒரு வருஷத்தில் தனது மனோவாஞ்சிதமான பலனைப் பெறுவான். இந்த ஜலத்தைக் குடித்து; ஸ்பர்சித்தவர்க்கு, சொறி, சிரங்கு, அம்மை, கபம், குஷ்டம் முதலிய ரோகங்கள் ஏற்படாது. அஜீர்ணம் வயிற்றுவலி, இருமல், வயிற்றுப் போக்கு முதலிய ரோகங்கள்வராது. இந்த ஜலத்தைக் குடித்த மாத்திரத்தில் வ்யாதிகள்தூரவிலகிவிடும்.

இந்த ஜலத்தின் ஆசமனத்தினுல் பூதஜ்வரம், எத்தனை ப்ரகாரமான விஷஜ்வரங்கள் உண்டோ அவையெல்லாம் சீக்கிரமாக சமனம் ஆகிவிடும். உனது முன்னுலேயே இதன் ஜலத்தை குடித்த எனக்கு வாலிபம் திரும்பவில்லையா?:-க்ஷணமாத்ரத்தில் யுவபுருஷன் ஆகவில்லையா? இந்த வ்ருத்த காலேஸ்வரரை ஸேவிப்பதினுல் தரித்ரம், ரோகங்கள், பாபத்தின் பலம், இவைகள் ஏற்படாது. வாராணஸி க்ஷேத்ரத்தில் ஸித்தியை விரும்புவர்களுக்கு யத்னத்துடன் க்ருத்திவாஸேஸ்வரருக்கு உத்தரபாகத்தில் வ்ருத்த காலேஸ்வரர் லிங்கத்தைத் தரிசனம் செய்ய வேண்டும். அந்தத் தபோதனர் இவ்விதம் கூறி அனங்கலேகாவுடன் கூட அந்த அரசனின் கையைப் பிடித்து அந்த லிங்கத்திலேயே உடன் மறைந்துவிட்டார். மனுஷ்யர் மஹாகால, மஹாகால, மஹாகால என்று இப்படி ஜபித்தால் நூற்றுக்கணக்கான பாபங்களிலிருந்து விடுபடுவோம். இதைப்பற்றி யோசிக்க வேண்டாம்.

இந்த விதமாக விஷ்ணு பகவானைத் தரிசித்து விட்டு உத்தமமான வைகுண்ட லோகத்தில் அநேக போகங்களை அனுபவித்துவிட்டு, கடைசியில் உமக்கு முக்தி கிடைக்கும். பிறகு அந்த ப்ராம்மணன் சிவசர்மா பகவத் தூதர்களின் வாயிலிருந்து தனது வருங்கால

விருத்தாந்தத்தைக் கேட்டுவிட்டு, புளகாங்கிதமான சரீரமுடையவராய், கோடி சூர்யப்ரகாச மயமான ரமணீயமான விஷ்ணு லோகத்தைத் தரிசனம் செய்யத் தொடங்கினுர். இப்போழுது அகஸ்தியர் கூறுகிருர்; லோபாமுத்ரே! இந்த விப்ரேந்திரன் மாயபுரியில் ப்ராணத்யாகம் செய்து மனோரம்யமாக போகங்களை அடைந்து வைகுண்ட லோகத்திலிருந்து நந்திவர்த்தனம் என்ற தேசத்திற்கு வந்து பூதலத்தின் போகங்களை அனுபவித்துவிட்டு அழகான புதல்வர்களைப் பெற்று பிறகு புத்ரர்களிடம் ராஜ்யத்தை ஒப்புவித்துவிட்டு வாராணஸி வந்து விச்வேச்வரரை ஆராதித்து மோக்ஷத்தை அடைந்தான். சிவசர்மாவின் இந்த பரம புண்யமான வ்யாக்யானத்தைக் கேட்ட மனிதன் ஸமஸ்த பாபங்களிலிருந்து விடுபட்டு உத்க்ருஷ்டமான ஞானத்தை அடைவான்.

இவ்விதம் ஸ்கந்த புராணம் நான்காவதான காசீகண்டம் பூர்வார்த்த பாஷாடீகாவான சிவசர்மா பரம வர்ணனமான

இருபத்தி நான்காவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 25

வியாஸர் கூறுகிறார்: ஹே ஸூத! கும்பமுனியான அகஸ்திய முனியின் கதையைக் கூறுகிறேன் கேள். அதைக் கேட்பதனால் ரஜோ குணத்திலிருந்து விடுபட்டு ஞானத்திற்குப் பாத்திரவானாகலாம். பத்னியுடன் அகஸ்திய முனிவர் ஸ்ரீ சைலத்தை ப்ரதக்ஷிணம் செய்து விசாலமான பரமரம்யமான ஸ்கந்தவனத்தைத் தரிசித்தார். இந்தவனம் எப்பொழுதும் எந்த ருதுக்களிலும் புஷ்பங்கள் நிறைந்து பசுமையாகப் பழம் கொடுக்கும் விருக்ஷங்களுடன் ஸுகமாக புஜிக்கதகுந்த கந்த மூலங்களுடன் மிருதுவான மரவுரியைக் கொடுக்கும் மரங்களுடனும் நிறைந்திருந்தது. இந்த வனத்தில் கொடும் ஹிம்சை தரும் ப்ராணிகள் கிடையாது. நதி, தடாகங்கள் நிறைந்தது. நிர்மலமான நீர் நிலைகள் உள்ளன, ஸமஸ்த பூமியின் ஸகல உத்தம குணங்களும் நிறைந்தது. நானாவித பக்ஷிஜாதிகளுடைய இனிமையான கலரவம் நிறைந்தது; அநேகமுநிச்ரேஷ்டர்கள் தங்குவது. தபஸ்விகளுக்கு முற்றிலும் தகுந்த இடம், எல்லா ஞான ஸம்பத்துக்கும் ஒரே ஆச்ரயமானது.

அங்கு ஸ்வர்ணகிரிக்கு ஸமமான பர்வதம் இருக்கிறது. அதன் குகைகளும், ஊற்றுகளும் அடிவரையும் சிகரமும் மனோரம்யமானது. கைலாஸ பர்வதத்தின் ஒரு உயர்ந்த முடி(சிகரம்)அநேக ஆச்சர்யமான பொருள்களுடன் சொல்லத்தகுந்ததாக இருக்கும் பொருட்டே இங்கு வந்து அமைந்தது போல் உள்ளது. அங்கு முனிவர் அகஸ்தியர் ஸாக்ஷாத் முருகப்பெருமானைத் தரிசனம் செய்தார். அப்பொழுது அந்த மகாதபஸ்வி பூமியில் விழுந்து ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். இரண்டு கரங்களையும் கூப்பிக்கொண்டு வேதத்தில் கூறியபடி தன்னால் நிர்மிதமாக்கப்பட்டு துதியினால் கிரிஜாபுத்ரன் கார்த்திகேயனை ஸ்த்தோத்தரிக்கத் தொடங்கினார். அகஸ்தியர் கூறினார் - தேவதைகள்

வந்திக்கத் தகுந்த சரணகமலங்கள்; ஸுதாகரமானது, மஹாகாலமயமானது. கௌரிக்கு இதயானந்தம் கொடுக்கக்கூடியது. அப்படிப்பட்ட ஷண்முக தேவனுக்கு நமஸ்காரம்.

வந்தித்தவர்களுடைய துக்கத்தை விலக்குபவரே, எல்லாருடைய மனோரதங்களையும் நிறைவேற்றுபவரே, வீரர்களின் வீரனான தாரகனை வதைத்தவரே, உமக்கு நமஸ்காரம். உருவமும், அருவமும் ஸஹஸ்ர மூர்த்தமும் விராட்ரூபமும், கொண்டவருக்கு நமஸ்காரம். புகழும் குணங்களுக்குத் தலைவர்களுக்குத் தலைவரே; மாயையினால் கார்யகாரண ரூபங்களைக் கொண்டவரே, மயூரவாஹனரே! உமக்கு நமஸ்காரம். ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் கொண்டவரே! உமக்கு நமஸ்காரம். ப்ரும்மஞானிகளுள் ஸ்ரேஷ்ட்டரே! திகம்பரா! ஸுவர்ண வர்ணரே! ஸ்வர்ணாபரணங்களினால் அலங்கரிக்கப்பட்ட புஜங்களையுடையவரே; ஸ்வரூபரே! ஹிரண்யரேதஸே! உமக்கு நமஸ்காரம், தபஸ்வரூபரே; தபோதனரே; தபஐஸ்வர்ய பலத்தின் ப்ரதிநிதியே; என்றும் குமாரஸ்வரூபரே; காமனை ஜெயித்தவரே; ஐச்வர்யத்தை த்ருணமாக மதிப்பவரே! உமக்கு நமஸ்காரம். தபமூர்த்தியே சரவணபவனே; ஸூர்யனுக்கு நிகர் அருணவர்ணமாகிய தேர்ந்த வரிசையால் சோபிதமானவரே; பாலஸ்வரூபமானவரே! உமக்கு நமஸ்காரம். விசால பராக்ரமமானவனே! மிகவும் சாதுர்யமானவரே! உமக்கு நமஸ்காரம்.

ஹே விபோ, ஹே மாதாக்களையுடையவனே; உமக்கு நமஸ்காரம்: ஜன்மமும், வயோதிகமும் அற்றவரே உமக்கு நமஸ்காரம்; அழகான சக்தி ஆயுதம் தரித்தவரே! உமக்கு நமஸ்காரம்; விசாகனே நமஸ்காரம்.

உலக நாயகனுடைய குமாரரே; க்ரௌஞ்ச பர்வதத்தின் சத்ருவே, தாரகனை ஸம்ஹரித்தவரே, கங்கா புத்திரரே, க்ருத்திகா ஸுதரே, பார்வதீநந்தன; என்றும் உமக்கு நமஸ்காரம்;

அகஸ்தியர் இவ்வாறு கார்த்திகேயரை ஸ்துதித்து ப்ரதக்ஷிண நமஸ்காரம் செய்து, கரங்குவித்து அவர் முன்னுல் வந்து நின்ருர். பிறகு குமாரஸ்வாமி, முனீஸ்வரரே! உட்காரும் என்று கூறினபின் உட்கார்ந்தார்.

கார்த்திகேயர் கூறிஞர், தேவதைகளுக்கு ஒரே அவலம்பனமான கும்பமுனிவரே; விந்த்யாசலம் உயர்ந்த காரணத்திஞல் நீங்கள் இங்கு வந்தீர்கள் என்பதை நானறிவேன்.

சிவஞல் பாவிக்கப்படும் அவிமுக்த க்ஷேத்ரத்தின் குசலத்தைப் பற்றி நான் என்ன கேட்பது? ஏனென்ருல் ஆயுஸ் கழிந்த பிறகு ஸாக்ஷாத் விரூபாக்ஷர் அவர்களுக்கு முக்தியளிக்கிருர் அல்லவா? அங்கு எல்லோரும் க்ஷேமமாக இருக்கிருர்களா?

பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், பாதாள லோகம், ஊர்த்வ லோகம் எங்கும் இது மாதிரி நான் கண்டதில்லே. ஹே! ரிஷே! நான் தனியஞக இங்கு அந்த க்ஷேத்திர ப்ராப்தியைப் பற்றியே தபஸ் செய்து கொண்டிருக்கிறேன். அந்த க்ஷேத்ரம், புண்ணியம், தானம், தபம், ஜபம், நாஞவித யக்ஞம், இவைகளால் அடையமுடியாது. ஈச்வாரானுக்ரஹம் இருந்தாலொழியக் கிடைக்காது:

அதிக துர்லபமான காசிவாஸம் ஈச்வரனுடைய ஆக்ஞை இருந்தால்தான் கிடைக்கும், இல்லேயாஞல் மகத்தான கர்மங்கள் செய்தாலும் கிடையாது.

இது ப்ரும்மாவின் ஸ்ருஷ்டியில்லே. ஸ்வயம் ஈச்வரரே இந்த க்ஷேத்ரத்தின் மஹிமைகளே உரைக்கத் தகுதியுள்ளவர்;

ஆஹா புத்தியின் பலவீனம்: பாக்யத்தின் போருத காலம்: காசிஸேவனம் கிடைக்கவில்லே. மோகத்தின் ஆதிக்கம் எத்துணே சக்தி வாய்ந்தது. எனக்குக் காசி வாஸம் கிடைக்கவில்லேயே. இந்த சரீரம் நாளுக்கு நாள் நலிந்து வருகிறது. இந்திரியங்கள் அதற்கு முன்னேலேயே

க்ஷீணமடைந்து வருகின்றன இருந்தும் ஆயுள் ரூபமான மான் மரண ரூபமான வேடனுக்கு தினம்தினம் இலக்காகிக் கொண்டு வருகிறது.

சம்பத்துக்களை ஆபத்துக்களுடனும், தேஹத்தை அபாயத்துடனும், ஆயுளை மின்னலுக்கு ஸமமாகவும் சஞ்சலமானது என்று அறிந்து காசியை அடைய வேண்டும்;

ஆயுள் முடிவதற்கு முன் அங்கு அடைந்து, அதைவிட்டு வரவே கூடாது. ஏன் என்றால் காலன் காலத்தின் திலையளவு ஸமயம்கூட எண்ணிக்கையிலிருந்து தவறி விடுவதில்லை.

வியாதிகள் ஜரையுடன் இணைந்து மிகவும் துயரம் தருகின்றன. இருந்தும் சரீரம் அநேக விதமான வ்யவஹாரங்களில் ஆழ்ந்து கிடக்கிறது. ஆனாலும் காசியை ஸேவனம் செய்யவில்லை.

தீர்த்த ஸ்நானம் பரோபகாரம் இவைகள் வாய்ப்பேச்சுடனேயே நின்று அர்த்த மற்றதாக ஆகிவிடுகின்றன. ஆனால் தர்மத்தின் ப்ரயோஜனம் தானாகவே ஆகிறது. அர்த்தோபார்ஜனம் இல்லாமலேயே தர்மத்தினாலேயே அர்த்தம் ப்ரயோஜனப்படுகிறது. அதனால் அர்த்தத்தில் கவலையை விட்டுவிட்டு, தர்மத்தையே சரண் அடைய வேண்டும்.

தர்மத்தால் அர்த்தம், அர்த்தத்தால் காமம், காமத்திலிருந்து எல்லா ஸுகங்களும் கிடைக்கின்றன. அதிகம் சொல்லுவதற்கென்ன இருக்கிறது? தர்மத்தினால் ஸ்வர்க்கமே ஸுலபமாகக் கிடைக்கிறது. ஆனால் காசிமாத்திரம் ஸுலபமாகக் கிடைக்கவில்லை.

மஹாதேவர் இவ்விதம் தீர்மானம் செய்து பார்வதியிடம் மோக்ஷஸாதனத்துக்கு மூன்று உபாயங்கள் கூறியிருக்கிறார். முதலாவது பாசுபததர்மம், இரண்டாவது ப்ரயாகை தீர்த்தம், மூன்றாவது அதையும்விட அநாயாஸமாக முக்தி கொடுக்கிற அவிமுக்த க்ஷேத்ரம்.

ஸ்ரீசைலம், ஹிமாலய பர்வதம், அதையும்விட புண்யமான க்ஷேத்ரங்கள், கர்மங்கள், த்ரிதண்டதாரணம்; ஸமஸ்த கர்மங்களையும் துறத்தல். நானுவிதமான தபஸ்ஸுகள்; வ்ரதம், யமம், நியமம், நதிகளின் சங்கமங்கள், அநேக புண்ணிய ஆரண்யங்கள், தைரியம் க்ஷமை முதலிய மானஸ தீர்த்தங்கள். உலகிலுள்ள அந்நியத் தீர்த்தங்கள் விந்த்யம் முதயான ஸமஸ்தக்ஷேத்ர பீடங்கள். இடைவிடாத வேதாப்யாஸம், மந்த்ரஜபம், அக்கினியில் ஆஹுதிகள், அநேக ப்ரகாரமான தானங்கள், நானுவிதமான யக்ஞங்கள், தேவதைகளை அநேக உருவில் உபாஸித்தல். மூன்று இரவுகள் உபவாஸம் இருத்தல். பாஞ்சராத்ரவ்ருதம். ஸாங்க்யம், யோகம், முதலிய சாஸ்திரப் பயிற்சி; விஷ்ணுவினுடைய ஆராதனை இவைகள் எல்லாம் முக்திக்கு ஸாதனங்கள் என்று கூறப்படுகிறது.

அயோத்யா முதலிய நகரங்கள் எல்லாம் மரித்தப் பிராணிக்கு மோக்ஷத்தையளிக்கிறது. இவைகள் எல்லாமே நிச்சயமாக மோக்ஷம் கொடுக்க வல்லவைகள்.

இதுவரை கூறிய எல்லாமே காசியில் தானுகவே கிடைக்கின்றன. ஏனென்றால் ஒரு ப்ராணி காசி வந்தடைந்ததுமே முக்தியடைந்து விடுகிறது. வேறு எங்கும் அவ்விதம் இல்லை. அதனுல் இந்த பவித்ர க்ஷேத்ரம் மிகவும் விசித்ரமானது. இந்த ப்ரம்மாண்ட மண்டலத்தில் இது விச்வேஸ்வரருக்கு மிகவும் ப்ரியமானது.

நீர் அந்த க்ஷேத்ரத்திலிருந்து வருகிறீர். தபஸ்ஸில் சிறந்தவரே! வருக! தங்கள் சரீரத்தின் ஸ்பரிச ஸுகத்தை எனக்குத் தாரும்.

நான் இங்கு இருந்து கொண்டு காசியிலிருந்து வரும் காற்றை தினமும் ஸ்பர்சிக்கவே ஆசைப்படுகிறேன். நீரோ நேராக அங்கிருந்து வருகிறீர்.

ஒருவன் மூன்று நாட்களாவது நியமத்துடன் கூடிய இந்த்ரிய நிக்ரஹங்களுடன் காசியில் இருந்தானுனல்

அவனுடைய பாததூளியை ஸ்பர்சனம் செய்தாலே பவித்ரமாவதற்குப் போதும். நீரோ காசியிலேயே வாழ்ந்து நிறையப் புண்ணியத்தைச் சேகரித்துக் கொண்டு, உத்தரவாஹினியான கங்கையில் ஸ்நானம் செய்து கொண்டு தலேமயிரை நரைக்கச் செய்திருக்கிறீர்.

அதே காசியில் அகஸ்த்யேசுவரருடை ஸமீபத்தில் உமது பெயராலாயாகிய குண்டம் இருக்கிறது. அதில் ஸ்நானம், பானம் மற்ற தர்ப்பணுதிக்ரியைகள் செய்து, ச்ரத்தையுடன் கூட ச்ராத்தவிதிப் பிரகாரம் பித்ரு பிண்டம், தர்பணம் செய்பவன் க்ருதக்ருத்யஞகிறுன். அவன் காசிவாஸத்தின் பூர்ணபலனே அனுபவிக்கிறுன்.

ஸ்கந்தன் இவ்விதமாகக்கூறி அந்தக் கும்பமுனியின் சரீரத்தைத் தடவிக் கொடுத்து அமிர்தவாஹினியில் ஸ்நானம் செய்த மாதிரி ஆனந்தம் அனுபவித்தார்.

பிறகு ஸ்கந்தமூர்த்தி கண்களே மூடிக் கொண்டு ஜெய! விஸ்வேஸ்வரா! என்று கூறி மரக்கட்டையைப் போல் கொஞ்சம் நேரம் தனக்குள்ளே ஆழ்ந்தவராய் நிச்சலனமாக இருந்தார். பிறகு ஸ்கந்த மூர்த்தி தியானம் கலேந்து அவரை ஸந்தோஷ சித்தத்துடன் பார்த்தார். அப்பொழுதுதான் பேசுவதற்குத் தருணம் கிடைத்ததா? என்று அகஸ்தியர் கேட்டார்.

ஸ்வாமின்! ஸ்கந்தா! பகவான் மஹாதேவர் கிரிஜாகுமாரியிடம் வாராணஸியின் மஹிமைகளேக் கூறினுர். தாங்கள் மாதா பார்வதி தேவியின் மடியிலிருந்து அதைக் கேட்டுக் கொண்டேயிருந்தீர்கள். ஹே! ஷண்முகா! அதை எனக்குக் கூறுங்கள். எனக்கு அந்த க்ஷேத்ர மஹிமை மிகவும் பிடித்தமானதாகும்.

கார்த்திகேயர் கூறுகிறுர்:- ஹே! அகஸ்தியா! பூர்வ காலத்தில் என் தந்தை எனது தாயிடம் அவிமுக்த க்ஷேத்ரத்தின் மஹிமையைக் கூறினுர். அதை நான் என் தாயின் மடியிலிருந்து கேட்டேன்; ஹே குற்றமற்ற முனிவரே! அதை நான் வர்ணிக்கிறேன். கேளும்.

இந்த உலகில் அவிமுக்த க்ஷேத்திரம் மிகவும் ரஹஸ்யமானது. அங்கு எல்லா ஸித்திகளும் ஸாந்நித்யமாக இருக்கின்றன. ஸர்வ தேவரான விபு இங்கு என்றும் ஸாந்நித்யமாக இருக்கிறார்.

இந்த க்ஷேத்ரம் பூமியுடன் ஒட்டிக் கொண்டிருக்கவில்லை. அந்தரிக்ஷத்திலேயே இருக்கிறது. யார் யோகியில்லையோ அவர்களால் இதைப் பார்க்க முடியாது. ஆனால் யோகிகள் ஸந்தேஹமின்றிப் பார்க்கிறார்கள்.

ஓ! ப்ராம்மணரே! ஒருவன் இந்திரியங்களை ஸமமாக்கிக் கொண்டு, அங்கு வஸிப்பானானால் அவன் மூன்று கால போஜனம் செய்தாலும், ரிஷிக்கு ஸமானமானவனாவான். ஒரு நிமிஷத்திற்காவது ப்ரம்மசர்யத்தை மனதில் உன்னி பக்தியோடுகூட ஒருவன் அவிமுக்த க்ஷேத்ரத்தில் வசிப்பானேயானால் அவன் பெரிய கம்பீரமான தபஸ்ஸை அனுஷ்டித்தவனுக்கு ஸமானமாகிறான்.

ஒருவன் ஒரு மாதம் அல்ப ஆஹாரத்துடன் ஜிதேந்த்ரியனாகக் காசியில் வாசம் பண்ணினால் அவன் திவ்யமான பாசுபத வ்ரதத்தை அனுஷ்டித்தவனாகிறான்.

எவன் க்ரோதம் முதலானவை இன்றி இந்திரியங்களை ஜயித்து தனது த்ரவ்யத்திலேயே தன்னை நிர்வஹித்து வருகிறானோ, பரான்னம், பரநிந்தை இவைகளை விட்டு இயன்ற அளவு தானம் செய்துகொண்டு ஒரு வருஷபர்யந்தம் காசியில் வசிப்பானானால் அவனுக்கு பிற புண்ய க்ஷேத்ரங்களில் ஆயிரம் வருஷம் தபஸ் செய்த பலன் கிட்டும்.

க்ஷேத்ர மகிமையை ச்ரத்தையுடன் மனதில் உன்னி காசியில் வாழ்வை பூர்ணமாகக் கழிப்பானாகில் அவன் ஜன்ம ம்ருத்யு பயத்திலிருந்து விடுபட்டு பரமகதியை அடைகிறான்.

வேறு இடங்களில் ஜன்மம் முழுவதும் யோகாப்யாஸத்தில் செலவழித்தால் என்ன கதி கிடைக்குமோ அதுவும் அரிதில், இங்கு ஈசுவர, ப்ரஸாதத்தினுல் அனுயாஸமாகக் கிடைக்கிறது. ப்ராரப்தத்தினுல் ப்ரம்மஹத்தி செய்தவன் காசிக்கு வந்தானுனுல் க்ஷேத்ரவாஸத்தின் ப்ரபாவத்தினுலேயே அவன் ப்ரம்மஹத்தி தோஷத்திலிருந்து விடுபடுகிருன்.

ஒருவன் மரண பர்யந்தம் காசியில் வஸிப்பானேயானுல் அவனுக்கு ப்ரம்மஹத்தி என்ன? இயற்கையாகிய மாயையே அவனே விட்டுவிலகும். அனன்யசித்தனுக இந்த க்ஷேத்ரத்தை விட்டுப் போகமல் இருப்பானுனுல் அவன் ஜரை ம்ருத்யுவை அளிக்கும் கர்ப்பவாஸத்திலிருந்து விடுபட்டவனுகிருன்.

புத்திமானுன ஒருவன் மறுபடியும் பூமியில் பிறக்கக்கூடாது என்று நினேத்தானுனுல் அவன் தேவர்களும் ரிஷிகளும் ஸேவிக்கும் இந்த அவிமுக்த க்ஷேத்ரத்தை அடைந்து ஸேவித்துக் கொண்டு இங்கேயே தங்க வேண்டும். ஸம்ஸார பந்த மோசகமான அவிமுக்த க்ஷேத்ரத்தை ஒரு பொழுதும் இங்கிருந்து போகாமல் இருந்தால் விஸ்வேஸ்வரரைப் பெற்றுவிட்ட அவனுக்குப் புனர்ஜன்மம் கிடையாது. ஆயிரம் பாபம் செய்து இங்கு பிசாசாக அலேவது மேல்; ஆனுல் நூற்றுக்கணக்கான யாகம் செய்து கிடைக்கும் ஸ்வர்க்கம் கூடக் காசி இல்லாமல் ஸித்திக்காது.

அந்திம காலத்தில் மனிதனுடைய மர்மஸ்தானம் சிதையும் போது அவன் வாயு சரீரத்தில் துடிக்கும்போது, அவனுக்கு ஞாபகசக்தி போய்விடும். ஆனுல் காசியில் பிராணன் பிரியும் ஸமயம் ஸாக்ஷாத் விஸ்வேஸ்வரரே வந்து அவனுக்குத் தாரக ப்ரம்மமாகிய ராமமந்திரத்தை உபதேசிக்கிருர்.

அதனுல் அவன் ப்ரம்ம மயமாக ஆகிருன். அத்யந்த பாபமயமான இந்த மனிதத்தன்மையை அநித்யம் என்று

எண்ணி ஸம்ஸார பயநாசகமான அவிமுக்த க்ஷேத்ரத்தையே உனதாக்கிக் கொள்.

அநேக இடையூறுகள் வந்தாலும் அவிமுக்த க்ஷேத்ரத்தை விட்டுப் போகாமல் இருந்தால் அவன் முக்தி லக்ஷ்மியை அடைந்து ஸமஸ்த துக்கங்களையும் போக்கடித்து, பெருத்த லாபம் அடைகிறான்.

மஹா பாபங்களை நாசம் செய்வதும் புண்யத்தைப் பெருக்குவதும் புத்தியையும் முக்தியையும் கொடுப்பதுமான காசி க்ஷேத்ரத்தை அந்திம காலத்தில் அடையாதவன் புத்திசாலியாக மாட்டான். இதை எண்ணி புத்திமான் காசியை விட்டு ஒரு பொழுதும் செல்லக்கூடாது. ஏனென்றால் அவிமுக்த க்ஷேத்ரத்தின் ப்ரபாவத்தால் அவன் பந்தங்களிலிருந்து விடுபடுகிறான்.

இந்த அவிமுக்த க்ஷேத்ரத்தை வர்ணிக்க ஆயிரம் தலை படைத்த ஆதிசேஷனாலும் ஆகாது எனில் நான் எனது ஆறுமுகத்தாலும் எப்படி வர்ணிப்பேன்?

லோபாமுத்ரையுடன் கூட அகஸ்தியர் இவ்விவரங்களையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார்.

இவ்விதம் ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான காசிகண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான, அகஸ்திய முனிக்கு ஸ்வாமி ஸ்ரீ ஸுப்ரமண்ய தர்சனமான

இருபத்தைந்தாவது அத்யாயம் ஸம்பூர்ணம்



# அத்யாயம் 26

அகஸ்தியர் கூறுகிறுர்:- ஹே! பகவன் ஸ்கந்த! தாங்கள் ஸந்தோஷமாக இருக்கிறீர்கள். என்னிடத்தில் உமக்கு உத்தமமான ப்ரீதி இருக்கும் பக்ஷத்தில் யாதொரு விஷயம் நாட்களாக உறுத்திக் கொண்டேயிருக்கிறதோ, அதைத் தாங்கள்தான் விளக்கிக் கூற வேண்டும். எந்த காலத்திலிருந்து இந்த அவிமுக்த க்ஷேத்ரம் உலகில் பிரஸித்தி பெற்றதாயிற்று? எவ்விதம் இது மோக்ஷப்ரதமாக ஆனது?

மூவலுகிலும் போற்றப்படும் மணிகர்ணிகை எப்பொழுது பிரஸித்தமாயிற்று? அப்பொழுது அங்கு கங்கா நதியிருந்ததா? ஹேஸ்வாமின்! ஏன் இந்த அவிமுக்த க்ஷேத்ரத்திற்கு வாராணஸி, காசி, ஆனந்தகானனம் என்ற பெயர் உண்டாயிற்று.

சிகித்வஜரே! இதற்கு மகாஸ்மசானம் என்று எப்பொழுது பெயர் ஏற்பட்டது? இவைகளை எல்லாம் தங்களிடமிருந்து கேட்க விரும்புகிறேன். எனது ஸந்தேஹத்தை விலக்க வேண்டும்.

கும்பமுனியே! நீர் ஒரு ஈடு இணையில்லாத மிகவும் முக்கியமான கார்யத்தை கேட்டு விட்டீர்-இதையே தான் அம்பிகையும் மஹாதேவரிடம் கேட்டாள். அவள் கேட்டதை உமக்கு நான் கூறுகிறேன்-

மஹாப்ரளயத்தின் போது ஸ்தாவர ஜங்கமங்களும் நஷ்டமடைந்தன. எங்கும் தமோமயமான ஒரே இருட்டாக இருந்தது. ஆகாயம் சந்திரன் இல்லாமல் அக்னி வாயு, பூதலம் இவைகளும் இல்லாமல் தேஜஸ்ஸும் பிரகாசமும் இல்லாமல் சூன்யமாக இருந்தது. அப்பொழுது பார்ப்பவரோ, கேட்பவரோ இல்லை. ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம், இவைகளுமில்லை. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ஆகிய திசைகளுமில்லை.

இப்படி ஊசியால் பிளக்கும் அளவுக்கும் கூட இடம் இல்லாமல் ப்ரம்மவித்தை ஒன்ருலேயே மாத்திரம் போதிக்கத் தக்கதாய் கோர அந்தகாரமயமாக ஆனபிறகு தத்ஸத் ப்ரும்ம என்ற வேதவாக்யத்திஞல் கொண்டாடப்படும் இரண்டற்ற ஒன்றே நிறைந்திருந்தது. மனதுக்கும் வாக்குக்கும் எட்டாததான நாமரூபவர்ணனம் இல்லாததான ஸ்தூலமும் இல்லாமல் க்ருசமும் இல்லாமல், சிறிதும் பெரிதும் இல்லாமல், லேசும், கனமுமில்லாமல், வ்ருத்தியும் க்ஷயமும் இல்லாமல், இருப்பதுமானதையே வேதமும் திகிலடைந்து 'அஸ்தி' (இருக்கிறது) என்ற ஒரே ஒரு வார்த்தையை மாத்திரமே திரும்பத் திரும்பக் கூறுகிறது.

எது ஸத்ய, ஞான, அனந்த, ஆனந்த, பரம் ஜ்யோதியோ, எது அப்ரமேயம்; அஞுதாரம்; அவிகாரம் உருவில்லாதது, நிர்குணம், யோகி ஜனங்களால் மாத்திரமே அறியக்கூடியதோ அந்த எங்கும் வியாபித்து இவ்விதம் கூறப்பட்டதுமான காரணரூபமானது விகல்பம் அற்றது; ஆரம்பம் இல்லாதது; மாயாசூன்யமானது; உபத்ரவம் இல்லாதது. இந்த விதமான எனது என்ற நாம ரூபமற்ற ப்ரம்மமென்று விகல்பித்துக் கூறப்படுகிறதோ, பெயரற்ற ப்ரம்மத்தை விகல்பப்படுத்துகிறதோ, அந்த நிராகாரன் தனது லீலையால் நாமரூபங்களுடன் இங்கு கல்பிக்கப்படுகிறது.

எல்லா ஐச்வர்யங்களுடனும் கூடிய எல்லா ஞானங்களுடனும் கூடிய சுபரூபை என்றும் நிறைந்த ஸர்வஸ்வரூபி, ஸர்வ திருஷ்டி, ஸர்வ காரிணி எல்லாரும் வந்திக்கக் கூடிய ஒரே பொருள் எல்லாவற்றிற்கும் ஆதியானது எல்லோரையும் காப்பாற்றுவது; எல்லாப் பிரயத்னங்களையும் செய்வது, சுத்தரூபன் ஈசுவரன் ஆக உருவபாவனை செய்யப்படுகிறது.

அந்த ஸர்வ வ்யாபகமான அவ்யமாய, பரப்ரம்மம் ஏ! ப்ரியே! இந்த நிராகாரமான ப்ரும்மத்தின் ஸாகாரமான

மூர்த்தி நானே, என்னையே பழைய காலத்தும், இந்த காலத்துமான பழம் பெரும் புத்திமான்கள், 'ஈசுவரன்' என்றும் கூறுவர்.

பிறகு நான் ஸ்வதந்த்ரமாக ஸஞ்சரித்துக் கொண்டு எனது சுய உருவத்தில் இருந்து களங்கமில்லாத மூர்த்தியாக என்னை நானே படைத்துக் கொண்டேன்.

ப்ரதானமானதும் இயற்கையானதும், குணம் நிரம்பியதும் புத்தி தத்வத்துக்கு ஜனனியும் விகாரமான விசேஷமாகிவிட்டதும், உயர்ந்ததும் மாயரூபமான மூர்த்தி நீயே; சக்திரூபிணியான உன்னுடன் கூட காலஸ்வரூபியானதும் ஆதிபுருஷனும் ஆன நானும் சேர்ந்து இந்த க்ஷேத்திரத்தை நிர்மாணித்தோம்.

ஸ்கந்தர் மேலும் கூறினார்:- அந்த சக்தியான நீயே ப்ரக்குதி, என்று கூறப்படுகிறாய்; நான் பரமேஸ்வரனான புருஷன். நமது காலடியில் நிர்மாணமாகி இருக்கிறது பரமானந்த ரூபமான பஞ்சகோச அளவில் நிர்மிதமான இந்த க்ஷேத்ரம்; ஹேமுநியே!

விஹார பராயணரான பரம ஆனந்தமயமான மஹாதேவர் பார்வதியுடன் கூட ப்ரளய காலத்தில் கூடவிட்டுப் ப்ரியாதவராக இங்கு இருப்பதால் இதை அவிமுக்த க்ஷேத்ரம் என்று கூறுகிறார்கள். ஜலம் உற்பத்தியாவதற்குமுன் பூமி பரவி இருக்கும் போது, பரமசிவன் லீலை புரியவேண்டி இந்த க்ஷேத்ரத்தை நிர்மாணித்தார்.

க்ஷேத்திரத்தின் இந்த ரஹஸ்யம் ஒருவருக்கும் தெரியாது. ஊனக் கண்களையுடைய நாஸ்திக மனிதனிடம் இதைப்பற்றிச் சர்ச்சை செய்யவே கூடாது, சிரத்தையுடன் கூடிய விநயமுள்ள முக்காலமும் அறிந்த சிவபக்தனும் சாந்தஸ்வரூபரும் ஆன முமுக்ஷுக்களிடம் இதைக் கூறலாம்.

அப்பொழுதிலிருந்து இது அவிமுக்த க்ஷேத்ரம் என்று கூறப்படுகிறது. இது சிவை சிவன் இவர்களுடைய இருப்பிடம் என்று கூறவேண்டும். மிகவும் ஸுகாஸ்பதமானது;

மூடஜனங்கள் சிவபார்வதி என்றே இருவர் கிடையாது என்று கற்பனை செய்கிறார்கள். அவர்கள் இந்த க்ஷேத்ரம் முக்தி கொடுக்கக்கூடியது என்பதையும் நம்ப மாட்டார்கள். யோகிகள் உபாயங்களை அறிந்தவன் மகேச்வரருடைய ஆராதனை செய்யாமல் காசிவாஸமாக இருந்து மோக்ஷத்தை அடையலாம் என்பது ஒரு பொழுதும் முடியாது.

இந்த புரீ மோக்ஷஸ்வரூபானந்தமானதினாலேயே முன்பு பினாகி இதற்கு 'ஆனந்தகானனம்' என்று பெயர் வைத்தார். பிறகுதான், 'அவிமுக்த க்ஷேத்ரம்' என்று பெயர் பெற்றது. அங்குள்ள எல்லாலிங்கங்களையும் ஆனந்த கந்தத்தின் முளை என்று கூறவேண்டும்.

ஏ! அகஸ்த்ய! இந்த விதமாக காசி க்ஷேத்ரம் 'அவிமுக்தக்ஷேத்ரம்' என்றும் ஆனந்தகானனம் எனவும் பெயர் பெற்றது. இதற்கு மணிகர்ணிகை என்று பெயர் வந்ததையும் கூறுகிறேன்.

கும்ப முநியே! பூர்வகாலத்தில் இந்த ஆனந்த வனத்தில் விஹரிக்கும் சிவபார்வதிகளுக்கு ஒரு எண்ணம் எழுந்தது. மற்றொரு பொருளையும் ஸ்ருஷ்டிக்க வேண்டும் என்று தோன்றியது.

அப்பொருளில் எல்லாம் மகாபாரத்தையும் ஒப்படைத்துவிட்டு நாமிருவரும் விட்டேற்றியாக கேவலம் காசியில் மரணமடைபவர்களுக்கு மோக்ஷதானம் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். அப்படி ஸ்ருஷ்டிக்கப்பட்ட வஸ்து எல்லா ஐச்வர்யங்களுக்குகூட நிதியாகவும், ஸ்ருஷ்டி, ஸ்திதி, பாலனம், ஸம்ஹாரம் இவைகளைச் செய்யக் கூடிய வல்லமை பொருந்தியதாக

இருக்க வேண்டும். சிந்தா தரங்க ஸ்புரணு, ஸத்வரூபாத்மானங்கள், நிரம்பிய ராகங்களான முதலைகள் நிரம்பிய ரஜோகுணரூபமான பவழக் கொடிகள் நிரம்பிய, சித்த ஸமுத்ரத்தை ஸ்திரமாக நிறுத்தி வைக்க வேண்டும்.

அந்த ஸந்தோஷத்தில் ஆனந்த கானனத்தில் ஸுகமாக வசிக்க வேண்டும்; ஏன் என்றால் சஞ்சல சித்தமுள்ள சிந்தாகுலனான நரனுக்கு ஸுகம் எங்கிருந்து கிடைக்கும்? ஜகத் விதாதாவான தூர்ஜடி சித்ரூப சிவையுடன் இவ்விதமாக ஆலோசனை செய்தபிறகு அன்புடன் கருணாம்ருதம் பொழியும் தனது பார்வையை தனது இடபாகத்தில் செலுத்தினார். அதிலிருந்து மூவுலகிலும் அழகான (நிகரற்ற) ஒரு ஸுந்தர புருஷன் தோன்றினான்.

ஹே முனியே! அந்தப் புருஷன் சாந்தகுண, ஸத்வம் நிரம்பியவனாக, கம்பீரத்தில் ஸமுத்ரத்தை நிகர்த்து உவமையற்ற க்ஷமாசீலனாக இந்த்ர நீலமணியின் காந்தியுடையவனாக ஸ்ரீயுடன் கூடியவனாக தாமரை போன்ற மாதிரி கண்களுடன் ஸ்வர்ண வர்ணமாக, பீதாம்பரமும் உத்தரீயமும் தரித்தவனாக சோபிக்கின்ற இரண்டு பலம் பொருந்திய புஜங்களுடன் நாபி கமலத்தில் இருந்து வரும் ஸுகந்தத்தினால் நிரம்பியவனாகவும், எல்லா நற்குணங்களுக்கு இருப்பிடமாகவும் கலைகளின் உருவமாகவும் புருஷர்களின் உத்தம குணசீலனாதலால் புருஷோத்தமன் என்று அழைக்கப்பட்டவனாகத் தோன்றினான்.

பிறகு அந்த மஹாமஹிம பூஷணரைப் பார்த்து மஹாதேவர் கூறினார்! அச்சுதா! நீ மஹாவிஷ்ணுவேதான்.

எல்லா வேதங்களும் உனது மூச்சுக் காற்றேயாகும்; உனக்கு த்ரிகாலமும் தெரியும். வேதம் காட்டிய வழியில் யதோசித ரூபமாக எல்லாக் காரியங்களும் செய்பவன்.

மஹேஸ்வரர் புத்திஸ்வரூபமான அந்த

மஹாவிஷ்ணுவிடத்தில் இவ்வாறு கூறி சிவையுடன் ஆனந்த கானனத்துள் ப்ரவேசித்தார்.

அதன் பிறகு மஹாவிஷ்ணு அந்த ஆக்ஞையை சிரமேற் தாங்கி சில நாட்கள் த்யானத்தில் இருந்தார். தபஸ்ஸில் மனதைக் கொடுத்து ஈடுபட்டிருந்தார்.

ஹரி பிறகு தனது ஸுதர்சன சக்ரத்தினுல் ஒரு அழகான புஷ்கரிணியை உண்டு பண்ணிஞர். தனது அங்கத்திலிருந்து துளிர்த்த வியர்வை ஜலத்தினுல் அதை நிரப்பிஞர். அதே சக்ரபுஷ்கரிணி தீர்த்தத்தில் ஸ்தாணுவைப் போன்ற உருவத்துடன் ஐம்பதாயிரம் வருஷங்கள் தபஸ் செய்து வந்தார்.

பார்வதி தேவியுடன் கூட மஹேஸ்வரர் தபஸ்ஸினுல் தேஜோமயமாக ப்ரகாசிக்கும் மூடிய கண்களையுடைய அவரைப் பார்த்து அடிக்கடி தலையை ஆட்டிக்கொண்டு, கூறத் தொடங்கிஞர். ஆஹா! தபஸ்ஸின் மகத்வம்தான் என்னே!, என்ன ஆச்சர்யம்! விறகில்லாத அக்னிபோல் அல்லவா ஜ்வலித்துக் கொண்டிருக்கிருர்; மஹாவிஷ்ணுவே! இனி தபஸ்ஸினுல் ப்ரயோஜனமில்லை. ஹே, புருஷோத்தமா! எழுந்திரு! மஹா தேவரால் இப்படி மூன்று நான்கு தரம் கூறப்பட்ட வார்த்தையைக் கேட்டவுடனே, இது மஹாதேவருடைய வாக்யம் என்று அறிந்து, தன் கமலநேத்ரங்களைத் திறந்து உடனே எழுந்து நின்ருர்.

பிறகு கூறிஞர்: ஹே! தேவேசா, தேவதேவ! மஹேஸ்வரா, தாங்கள் சந்தோஷமடைந்தீர்களல்லவா? தாங்கள் எனக்கு ஒருவரம் அருள வேண்டும்; பவானியுடன் தங்கள் எப்போதும் தரிசித்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

ஹே சந்திரசேகரா, இங்கு எல்லாக் கர்மங்களிலும் தாங்களே ஈடுபட்டு நடமாடிக் கொண்டிருப்பதாக நான் உணர்கிறேன். எனது சித்தமான வண்டு தங்களுடைய

சரணகமல மகரந்த மதுவைப் பருகுவதற்கு ஆவலுடன் ஸ்திரமாக இருக்கட்டும்.

சங்கரர் கூறினர்; ஜனர்தன! நீ என்ன சொன்னயோ அதன் படியே ஆகட்டும்! மற்றொரு வரமும் உனக்குக் கொடுக்கிறேன். உனக்குத் தபஸ்ஸில் இருக்கும் தீவ்ரபுத்தியைப் பார்த்து விட்டு, காதில் இருக்கும் பூஷணமான ஸர்பத்தை ஆட்டுவிக்கிறேன்.

அந்தக் கம்பனத்தினல் எனது காது ஆபரணமான மணிகர்ணிகை கீழே விழும். அதனல் இந்தத் தீர்த்தத்திற்கு மணி கர்ணிகை என்று பெயர் விளங்கட்டும்.

ஹே சங்கசக்ர கதாதரா! பூர்வ காலத்தில் உன் ஸுதர்சன சக்ரத்தினல் தோண்டியதால்-இந்தத் தீர்த்தத்திற்கு சக்ரபுஷ்கரிணி என்று பெயர் ஏற்பட்டது. இப்பொழுது எனது காது குண்டலம் விழுந்ததனல் இன்றிலிருந்து மணிகர்ணிகை என்ற பெயர் விளங்கட்டும்.

ஹே கிரிஜா வல்லபா! தங்களுடைய முத்தினலான குண்டலம் விழுந்ததால் சிறந்ததான முக்தி தீர்த்தம் என்று பெயர் விளங்கட்டும். ஸ்ரீ விஷ்ணு கூறினர் ஹேவிபோ, இந்த இடத்தில் வர்ணிக்க முடியாத பரஞ்சோதியின் பிரகாசம் ஒளி வீசுவதனல் இந்தத் தீர்த்தத்திற்குக் காசி என்றொரு நாமமும் விளங்கட்டும்.

ஹே ஜகத்ரக்ஷகா! சிவா! நான் இன்னுமொரு வரமும் கேட்கிறேன்; அதைப் பரோபகார்த்தமாக, சற்றும் யோசிக்காமலேயே கொடுத்து விடுங்கள்.

ஸ்ருஷ்டியில் ஜராயுஜம் முதலிய நான்கு விதமான ஜீவராசிகள் ப்ரம்மத்திலிருந்து ஸ்தம்ப பரியந்தம் எந்த ஜந்துக்கள் உயிர் வாழ்கின்றனவோ அவைகளெல்லாம் இந்தக் காசியில் முக்தி அடையட்டும்.

ஹே! சம்போ! ஆயுளே க்ஷணத்தில் நசிக்கக் கூடியது என்றும், ஆபத்துக்களே அதிகம் என்றும், ஸம்பத்தை நீர் மேல் குமிழி என்றும், எண்ணி இந்த ச்ரேஷ்ட தீர்த்தமான

மணிகர்ணிகையில் ஸ்ஞனம் செய்பவரும், ஜபம், ஹோமம், உத்தமவேதபாராயணம், தர்ப்பணம் பிண்டதானம், தேவதைகளுக்குப் பூஜை, பசு, பூமி, எள், தங்கம், குதிரை, தீபம், அன்னம், வஸ்த்ரம், ஆபரணம், கன்யாதானம் இவைகள், அக்ஷதை அக்னியுடன் அக்னிஷ்டோமம் முதலிய யாகம், வ்ரதோத்யாபனம், காளைமாட்டு தானம், வ்ருஷோத்ஸர்கம், லிங்கம், ப்ரதிமா, முதலியவைகளை ஸ்தாபனம் செய்தல்; இந்தக் கர்ம பலன்-தானம் செய்பவனுக்கு அக்ஷயமான பலனைக் கொடுக்கும்.

ஹே ஈசான, தற்கொலை, ப்ராயோபவேசனம், இவைகளைத் தவிர வேறு எந்த சுபகர்மங்களைச் செய்தாலும், ஹே! ஜகதீசா! அந்த முக்தி லக்ஷ்மியின் காரணத்தினுல் ஆகட்டும், இந்தக் கர்மங்களைச் செய்து, காலாந்தரத்தில் கூட பச்சாத்தாபப் படவேண்டாம். ஒருவரிடத்தில் பெருமைப்பட வேண்டாம்.

ஹே! ஈசா! தங்களுடைய அனுக்ரகத்தினுல் இவைகள் அக்ஷயமாக விளங்கட்டும். இந்த ஸத்கர்மங்கள் தங்களுடைய தயவினுல் அக்ஷயமாக விளங்கட்டும். ஸதாசிவா, எதுவரை இந்தத் தீர்தம் இருக்குமோ, வற்றி விட்டாலும் வற்றும் போல் இருந்தாலும் எப்படியானுலும் இந்தத் தீர்த்தஸ்ஞனம் சுபத்துக்குக் காரணமாக விளங்கட்டும்.

ஹே! ஸதாசிவா! தங்களைப் போல் மங்களகரமான தெய்வம் வேறு கிடையாது. அதுபோல் ஆனந்த வனத்தைப்போல் வேறு புண்ணிய ஸ்தலம் கிடையாது. இந்த க்ஷேத்திரத்தில் ஸாங்கிய யோகம் ஆத்ம தரிசனம், வ்ரதம், தவம், தானம் முதலியவைகள் இல்லாமல் தீர்த்த ஸ்தலத்தினுலேயே பிராணிகளுக்கு மங்களம் உண்டாகட்டும்.

முயல், கொசு, புழு, பூச்சி, குதிரை, பாம்பு இவைகளும் பஞ்சக்ரோசத்துக்குள் இருக்கும்; காசியில்

இவைகள் எங்கு இறந்தாலும் நிர்வாணபதத்தையடையும்.

கேவலம் காசியின் பெயரைக் கூறினாலும் அவர்களின் ஆபத்துக்களும், பாபங்களும் க்ஷயமாகட்டும். காசிவாசி ஜனங்களுக்கு எப்பொழுதும் ஸத்ய யுகமாக விளங்கட்டும், ஸதா உத்தராயணமாக விளங்கட்டும்; நித்யமும் மஹோதய பர்வமாக விளங்கட்டும்.

ஹே! த்ரிலோசனா! பவித்ரா! ஸதாசிவா! எத்தனை வேதங்களில் கூறியிருக்கிற, பவித்ர க்ஷேத்ரங்கள் உள்ளனவோ அவைகள் எல்லாவற்றையும்விட இந்த க்ஷேத்ரம் அதிக புண்ணியம் வாய்ந்ததாக விளங்கட்டும்.

நான்கு வேதங்களையும் அத்யயனம் செய்தால் என்ன புண்ணியமோ அந்தப் புண்ணியம் காசியில் காயத்ரீ ஜபத்தை உருவேற்றினால் கிடைக்கும். அஷ்டாங்க யோகஸாதனத்தினால் என்ன புண்ணியம் கிடைக்குமோ, அதே புண்ணியம் மிகவும் அதிகமாகக் காசியில் வாழ்ந்தாலே கிடைக்கும். க்ருசா, சாந்திராயண வ்ரதத்தினால் எந்த ச்ரேயஸ் ஸம்பாதிக்கப்படுகிறதோ அது, ஆனந்த வனத்தில் ஒரே உபவாசம் இருந்தால் கிடைக்கும்; இதர புண்ணியம் இடங்களில் ஒருவருஷம் தபஸ்ஸினால் என்ன புண்ணியம் கிடைக்குமோ அது காசியில் ஒரு வருஷம் கட்டாந்தரையில் படுப்பதினால் கிடைக்கும்.

மற்ற இடங்களில் ஜன்மா பூராவும் மௌனமாக இருப்பதனால் ஏற்படும் புண்ணியம் காசியில் ஒரு பக்ஷம் உண்மையைப் பேசுவதாலேயே கிடைக்கிறது.

மற்ற இடங்களில் நமது உடமைகள் பூராவும் தானம் செய்வதினால் என்ன புண்ணியம் கிடைக்குமோ, அது காசியில் ஆயிரம் பிராம்மணர்களுக்கு சாப்பாடு போட்டால், பத்தாயிரம் பேர்களுக்கு சாப்பாடு போட்டதைவிட அதிகமாகவே புண்ணியபலன் கிடைக்கும்.

ஸமஸ்த முக்தி க்ஷேத்ரங்களை ஸேவித்தால் என்ன புண்ணியம் கிடைக்குமோ, அது காசியில் ஐந்து ராத்ரி மணிகர்ணிகையில் தங்கினுல் கிடைக்கும்.

ப்ரயாகை ஸ்நானத்தினுல் மங்களத்தைக் கொடுக்கும் எந்த புண்ணியம் கிடைக்குமோ, அது காசியைத் தரிசித்தாலேயே கிடைக்கும். அச்வமேதம், ராஜஸூய யாகம் பண்ணினுல் என்ன பலன் கிடைக்குமோ அது, காசியில் நியம பூர்வமாக மூன்று இரவு தங்கினுலேயே கிடைக்கும்.

ஒழுங்காகத் துலாபுருஷ தானம் பண்ணினுல் என்ன புண்ணியம் கிடைக்குமோ அது காசியில் சிரத்தையுடன் தரிசித்தால் அதே புண்ணியம் கிடைக்கும். தேவ தேவ விஸ்வநாதன் விஷ்ணுவின் ப்ரார்த்தனையைக் கேட்டு ஸந்தோஷ சித்தத்துடன் மதுஸூதனு, அப்படியே ஆகட்டும் என்ருர்.

ஸ்ரீ மஹாதேவர் கூறினுர்- ஹே மஹாபாகா! ஜகத்ப்ரபோ! விஷ்ணுவே! வேதத்தில் கூறியபடி அநேகவிதமான ஸ்ருஷ்டிகளைச் செய்யும்.

பிதாவைப்போல் எல்லாப் பிராணிமாத்திரத்தையும் தர்மபூர்வமாக ரக்ஷியும். தர்மத்தை அழிப்பவர்களை நீரும் அநேகப் பிரகாரமாக த்வம்ஸம் செய்யும்.

அதர்ம மார்க்கத்தில் செல்லுபவர்களை நாசம் செய்வதில் நீரே காரணமாத்திரமாக விளங்குவீர். அவர்கள் எல்லாரும் அவரவர் கர்மத்தின் காரணமாகவே இருக்கிறவர்கள். ஆதலால் நீர் அவர்களுடைய த்வம்ஸத்திற்குக் காரணமாக விளங்கினுல் அதனுல் உமக்குக் கேடு ஒன்றுமில்லை.

பழங்களும் கதிர்களும் பக்குவமானவுடன் அது தன் ஆதாரத்தை விட்டு விட்டுக் கீழே விழுவதைப் போல் பலத்தைக் கொடுக்கும் பாபாத்மாக்களும் விழுவார்கள். ஹரி! யார் தமது தபோபலத்தால் கர்வமடைந்து உன்னை

அவமானப்படுத்திஞல் அவர்களே ஸம்ஹாரம் செய்வதர்க்கு நான் எப்பொழுதும் தயாராக இருக்கிறேன்.

யார் உபபாதகங்களோ, மஹாபாதகங்களோ செய்தால் அவர்கள் எல்லாரும் காசியையடைந்து பாபமில்லாதவர்களாகிறுர்கள். இந்த பஞ்சகோசத்துக்குள் அடங்கிய இந்த க்ஷேத்திரம் எனக்கு மிகவும் பிரியமானது. இங்கு என்னுடைய ஆக்ஞையே செல்லும், மற்றவர்களுடைய ஆக்ஞை செல்லாது.

ஹே! சுபநேத்ரே! பார்வதி! நான் திரும்பவும் கூறினேன். மூன்று உலகமும் ஸஞ்சரிக்கும் நானே அதிகார தபஸ்ஸிஞல் வெளிப்பட்டு அவிமுக்த வாஸியான பாபிஜந்துக்களே அடக்கியாள்வேன்; ஹே விஷ்ணுவே! அவர்களுக்கு என்னைத் தவிர வேறு அடக்கியாள்பவர்கள் கிடையாது.

நூற யோஜனே தூரத்திலிருந்து கொண்டு ஒருவன் அவிமுக்த க்ஷேத்ரத்தை நினைத்தாஞுல் அவன் அநேக பாபங்களேச் செய்திருந்த போதிலும், பாபங்களால் அவன் பாதிக்கப் பட மாட்டான்.

தூரதேசத்தில் இருந்தாலும் ப்ராணப்ரயாண ஸமயத்தில் அவிமுக்த க்ஷேத்ரத்தை நினைப்பாஞுல் அவன் பாபக் கூட்டங்களேத் தியாகம் செய்து ஸ்வர்க போகங்களே அநுபவிப்பான்.

காசியில் மரணத்திஞல் ஏற்பட்ட புண்ணியம் அவன் ஸ்வர்க போகங்களே அனுபவித்து பிறகு ப்ரஷ்டஞுல் கூட அவன் பூதலத்தில் ஒரு ப்ரதான அரசஞக ஆவான். அங்கு பல போகங்களே அனுபவித்துவிட்டு, அந்த புண்யத்தின் ப்ரபாவத்திஞல் அவிமுக்த க்ஷேத்திரத்தையடைந்து மோக்ஷ பதத்திற்கு அரசஞுவான்.

ஹே! அழகான புன்னகையுடன் கூடியவரே! எவன் இந்திரியங்களே மனதுடன் நிக்ரஹம் பண்ணி வெகுகாலம் வரை காசியில் இருந்தாஞுல் அல்லது தெய்வ

*இச்சையால் வேறு இடங்களுக்குப் போய் மரணமடைவானுனல், அங்கிருந்து அவன் ஸ்வர்க போகத்தை யடைந்து பூமிக்கு அதிபதியாகி பிறகும் காசியை அடைந்து பிறகு மோக்ஷலக்ஷ்மியை அவசியம் அடைவான்.*

*ஹே! விஷ்ணு! இந்த அவிமுக்த க்ஷேத்ரத்தை அடைந்தவன் எப்பொழுதும் காமங்களை நிர்மூலம் செய்வதற்கு ஸமர்தன் ஆகிறுன்.*

*யாரொருவன் இந்த க்ஷேத்ரத்தின் உண்மையான மாகாத்மியத்தை அறியமாட்டானே, அல்லது சிரத்தையின்றி இருந்தும்கூட இங்கு மரிப்பானுகில் அவனுக்கு என்ன கதி ஏற்படும் என்று விஷ்ணு கேட்டார்.*

*ஹே வ்ருத! ஜனுர்தனு! எங்கு அன்னிய ஸ்தானங்களில் மிகவும் கோர பாபங்களைச் செய்து விட்டு ச்ரத்தையில்லாமல் தத்துவ ஞானம் இல்லாமலேயே இங்கு மரிப்பானுனல் அல்லது யார் இந்த க்ஷேத்ரத்தின் மஹிமையறியவில்லையோ அவர்களுக்கு என்ன கூறப்பட்டிருக்கிறதோ கேளுங்கள், என்று சிவன் கூறினுர்.*

*பஞ்சக்ரோசத்துக்குள் வந்து சேர்ந்தவுடனேயே பாதகக்கூட்டங்கள் வெளியில் தங்கி விடுகின்றன. ஒருபொழுதும் உள்ளே நுழைய முடியாது.*

*காசியின் எல்லைக்குள் இருப்பவன் த்ரிசூல பாசபாணிக் கூட்டங்களின் பயத்தால் அவனுடைய பாபஸமூஹங்கள் வெளியிலேயே இருந்த வரையில் இருந்தவைப்ரவேசம் பண்ணின உடனே நிர்முக்தனுய் பாபங்களிலிருந்து விடுபட்டு, மஹா ஸர்வோத்தம புண்ணியத்தை அடைகிறுன்.*

*எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணினுல் என்ன புண்ணியலாபம் கிடைக்கிறதோ அதே புண்ணியம் மணிகர்ணிகையில் ஒரே தரம் ஒழுங்கான முறையில் முழுகி எழுந்தவுடன் கிடைத்து விடுகிறது.*

மண், சாணம், தர்ப்பை, அருகம்புல் இத்யாதிகளுடன் தனது வேத சாகையின் மந்திரத்திஞல் வருண மந்திரத்தை சிரத்தையுடன் ஜபித்து விதிப்படி ஸ்நானம் செய்வதிஞல் ஸகல தீர்த்த ஸ்நானமும், ஸமஸ்த வஸ்துக்கள் தானமும் செய்த பலனே அடைகிருன்.

ச்ரத்தை இல்லாமலும் விதிபூர்வமாக மணிகர்ணிகையில் ஸ்நானம் செய்வபனும் ஸ்வர்கத்தை அடைந்து மேலான புண்யத்தை அடைகிருன்.

ச்ரத்தா பூர்வகமாக விதிப்படிக்கு ஸ்நானம் செய்து, திலம், யவம், தர்பையிஞல் தேவதைகளுக்கு தர்பணம் செய்கிருனே, அவன் ஜனங்கள் விதிபூர்வகமாக ஸ்நானம் செய்து பிறகு, ஸ்மஸ்த ஜலதர்ப்பணங்களேச் செய்து, ஜபம் பண்ணிக் கொண்டு, தேவதைகளுடைய பூஜை முதலியவைகளேச் செய்பவன் ஸமஸ்த மந்திரங்களுடையவும் லாபத்தையடைகிருன்.

ஹே சிவே! ஒருவன் ஜிதேந்திரியனுக மௌனமாகி விஸ்வேஸ்வரருடைய தரிசனம் செய்தாஞஞல் அந்த மௌனி ஸகல புண்ணிய வ்ரதங்களேயும் அனுஷ்டித்த பலனே அடைவான்.

ஸ்ஞனம், தேவபூஜை, ஜபம், ஹோமம், தந்தசுத்தி, மலமூத்ரத்தைத் விஸர்ஜனம் செய்யும் ஸமயம் யத்ன பூர்வமாக மௌனமாக இருக்க வேண்டும்.

உத்தம உபசாரங்களிஞல் விதிப்பிரகாரம் ஒருமுறையாவது விஸ்வேஸ்வரருக்குப் பூஜை செய்வாஞஞல் ஜீவன் உள்ளவரை சிவ பூஜையின் பலனே அடைகிருன்.

என்னுடைய இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தில், நியாயப்படி ஸம்பாதித்த பணத்தை மிகவும் அற்பமாகத் தானம் செய்தாலும் அவன் ஒரு பொழுதும் தரித்ரத்தை அடையமாட்டான். ஒருவன் நாஞவிதமாகப் பணம் ஸம்பாதித்து வைத்திருந்தாலும் கூட அவிமுக்த

க்ஷேத்ரத்தில் தானம் செய்யாவிட்டால் அந்த மூட மனிதன் சாவையடைந்து பரலோகத்தில் எப்பொழுதும் சோகமடைவான்.

எத்தனையோ ரமணீய ரத்னங்கள், பசு, யானை, குதிரை, வஸ்திரம் இவைகளிருந்தாலும் அவைகளையெல்லாம் அவிமுக்த க்ஷேத்ரத்தில் செலவழிக்க வேண்டியேதான் இறைவன் நமக்குத் தந்திருக்கிறான்.

எங்கு பஞ்சக்ரோச பரிமாணத்துக்குள் இருக்கும் அவிமுக்த க்ஷேத்ரம் இருக்கிறதோ, அதை விஸ்வேஸ்வர ஜ்யோதிலிங்கமாக நினைக்க வேண்டும்.

சூரிய தேவர் ஒரேயிடத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்த போதிலும் எங்கும் யாவருக்கும் ஸர்வ வியாபகமாக இருப்பது போல காசியில் விஸ்வநாதர் எங்கும் நிறைந்திருக்கிறார். வேறு இடங்களில் அநேக ஜன்மங்களாக நிர்விக்ன யோகங்கள் மூலம் எந்தப் பலனைப் பெறுகிறோமோ, அந்தப் பலனை காசியில் கேவலம் சரீரத்தை விடுவதினாலேயே அடைகிறோம்.

வேறு எங்காவது வெகுகாலம் ஜிதேந்திரியனாக தபஸ் பண்ணி என்ன லாபம் அடைகிறானோ, அதைக் காசியில் ஒரு ராத்ரி ஜபம் பண்ணினாலும் அப்பலன் கைமேல் கிடைக்கிறது. எந்த மனிதன் க்ஷேத்ரத்தின் மஹிமையை அறிய மாட்டானோ, அவன் சிரத்தையில்லாதவனாக இருந்தும், அவன் யதேச்சையாகக் காசிக்கு வந்தானானால் பாபங்கள் நீங்கி, மரணமடைந்தவுடன் அம்ருதபதமான மோக்ஷத்தையடைகிறான்.

கொடுமையான பாபத்தைப் பண்ணி காலவசத்தினால் காசியையடைந்து, எனது அருளால் சரீரத்தை விடுபவன் என்னை அடைகிறான். எனது அருளில்லாமல் எவன் காசியை அடைவான்? ஹே! விசாலாக்ஷீ! ஸூர்யனை விட்டு மற்ற யாரை ஸூர்யன் என்று கூற முடியும்?

*ஹே! தேவீ! காசியை அடையாமல் ஒருவன் எப்படி நிரந்தரமாக ஸௌக்யத்தையடைய முடியும்? ஏன் என்ருல் ப்ரம்மாதி தேவர் முதல் யாவரும் ப்ருக்ருதியுடைய பாசத்தில் கட்டுபட்டேயிருக்கிருர்கள்.*

*மகத் முதலான இருபத்திநாலு பாசங்கள் தர்மார்த்த காமாதிக்ரியைகளில் உறுதியாக ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் மூலமாகக் கட்டப்பட்ட ஜனங்கள் காசியில் எப்படி வஸிக்க முடியும்? காசி வாஸம் இல்லாமல் அவர்கள் எப்படி முக்தியடைவார்கள்?*

*யோகமார்கம் அநேக விக்னங்கள் நிரம்பியுள்ளது. தபஸோ மிகவும் கஷ்டஸாத்யமானது. அதனுல் யோகம் தபஸ் இவைகளிலிருந்து நழுவி அடிக்கடி கர்ப்பக்லேசத்தை அனுபவிக்க வேண்டி இருக்கிறது. காசியில் பாபம் செய்து காசியிலேயே இறந்தால் ருத்ர பிசாசு ஆகி சிறிது காலம் அலேந்து விட்டுப் பிறகு முக்தியடைவார்கள். பாபம் செய்த கூட்டம் காசி வந்து மரணமடைந்தால் அவர்களுக்கு நரகயாதனே கிடையாது. ஏனென்ருல் அவர்களேயடக்கியாள்வது நானேயல்லவா!*

*சரீரத்தை நாசமடையக் கூடியதென்றும்,கர்ப்ப வாஸத்திலுல் ஸஹிக்க முடியாத வேதனேயை அனுபவிக்க வேண்டுமென்று நினேத்து, பெரியதொரு ராஜ்யத்தை ஆளுபவனுலும் அதை விட்டுவிட்டுக் காசிவாசம் செய்ய வேண்டும். மிகவும் பயங்கரமான யமதூதர்கள், திடும் ப்ரவேசமாக வந்து, பாசத்திலுல் கட்டியிழுப்பார்கள். இதையே யோசித்துப் பார்த்து சீக்ரமாகவே காசிக்கு வந்து வசிக்க வேண்டும். இங்கு பாபங்களால் யமராஜனுக்கும் பயப்பட வேண்டாம், கர்ப்ப வாசத்திற்கும் பயப்பட வேண்டாம். காசியை ஆச்ரயித்தவர்கள் யார் இருக்கிருர்கள்?*

*இன்ருே, நாளேயோ, நாளேமறுநாளோ மரணம் நிச்சயமாக ஏற்படத்தான் போகிறது. அப்பொழுது ஸமயம் கிடைத்தவுடன் காசிக்குச் செல்ல வேண்டும். இறப்பதும்*

பிறப்பதுமாக ஒய்வில்லாமல் நடந்து கொண்டேயிருக்கிறது. அதனால் பண்டிதர்கள் எங்கு இறந்தால் பிறப்பு இல்லையோ அந்தக் காசியை அடைய வேண்டும், புத்ரன், வீடு, களத்ரம், முதலிய ஜன்ம ஜன்மாந்தரமாகத் தொடர்ந்துவரும், விஷ்ணுமாயையைத் துறந்துவிட்டு பவநாசினி காசியை அடைய வேண்டும்.

ஸ்கந்தர் கூறினார்:- 'நான் இப்பொழுது யௌவன தசையில் இருக்கிறேன், மரணத்துக்கு வெகுதூரம் உள்ளது என்ற எண்ணம் ஒருபொழுதும் வரவேண்டாம், நிச்சயமாக ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் யமராஜனுடைய வாகனமான கடாவினுடைய கழுத்தில் கட்டியிருக்கும் மணியோசையைக் கட்டாயம் கேட்கத்தான் வேண்டும். அதனால் வயோதிகம் வரும்முன்பே, ஸமூஹத்திலிருந்து மிகவும் கஷ்டப்பட்டும் சிரமம் அனுபவிப்பதற்கு முன்பே,பழைய குடிசையைத் தியாகம் செய்துவிட்டு, புத்திசாலியாக இருப்பவன் சிவபுரியான காசிக்கு வந்து விடவேண்டும். வ்யாஸர் கூறுகிறார் ஹே ஸூத! ஸ்கந்தர் அகஸ்தியருக்கு இந்தப் பாபத்தை நாசம் செய்யும் விவரங்களைக் கூறிவிட்டுப் பின்னும் கூறுவார்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவது கண்டமான காசி கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான காசீ விவரணம், மணிகர்ணிகையின் வர்ணனமான இருபத்து ஆறுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 27

இந்த ஆனந்த கானனம் எப்படி வாராணஸி என்னும் பெயரால் ப்ரஸித்தியடைந்ததோ அதுவிபரங்களே மஹாதேவர் கூறியபடியே நானும் கூறுகிறேன். மூவுலகிலும் அழகிய தோளுடைய விஷ்ணுவே! அவிமுக்த க்ஷேத்ரம் எப்படி வாராணஸி என்று பிரஸித்தி பெற்றது என்ற விவரத்தையும் கேட்பாயாக. ஸூர்ய வம்சத்து பரம தேஜஸ்வியான பகீரதன் தன் முன்னோர்களான ஸகரராஜாவினுடைய புத்ரர்களே கபிலருடைய கோபாக்னியால் எரித்து சாம்பலாக்கிவிட்டார்கள் என்பதை கர்ண பரம்பரையாக, அறிந்து, கங்கையை ஆராதனே செய்ய எண்ணிக்கொண்டு ராஜ்யபாரத்தை மந்த்ரியிடம் ஒப்புவித்துவிட்டு, தனது பிதாமஹர்களைக் கரையேற்ற எண்ணிய ஒரே நோக்கத்துடன் பர்வதங்களுக்குள் ச்ரேஷ்டமான ஹிமாலயத்தை் வந்தடைந்தான்.

ஹே! விஷ்ணு! ப்ராம்மண சாபாக்னியால் தஹிக்கப்பட்டு மஹாதுர்கதியடைந்த பிராணிகளே ஸ்வர்க்கம் இட்டுச் செல்லுவதற்கு கங்கை மாதாவைத் தவிர வேறு எவர் கெட்டிக்காரனுக இருக்க முடியும்? சிவமஹிமையால் வெளிவந்த ஜலரூபமான கங்கை அநேக ப்ரம்மாண்டங்களுக்கும் ஆதாரரூபமானவள், சுத்த வித்யா ரூபிணீ, த்ரிசக்திமயீ, ஆனந்தாம்ருதரூபிணீ; சுத்த தர்மஸ்வரூபிணியானவள்.

நான் இந்த ஜகத்தாத்ரீ பரப்ரம்மஸ்வரூபிணி கங்கையை உலக க்ஷேமத்தின் பொருட்டு அழைத்து வருவேன் என்று புறப்பட்டான். மூவுலகிலும் எத்தனே புண்ணிய தீர்த்தங்கள் உண்டோ, எத்தனே புண்ணிய க்ஷேத்ரங்கள் உண்டோ, எங்கும் எந்த தர்மம் வ்யாபித்துக் கொண்டிருக்கிறதோ, தக்ஷிணேகளுடன் எத்தனே யாகங்கள் நடந்தனவோ, எத்தனே தபஸ்ஸுகள் உண்டோ ஆறு

அங்கங்களுடன் நாலு வேதங்கள் உண்டோ, நான், நீர், ப்ரம்மா, இந்த தேவதைகள் நான்கு புருஷார்த்தங்கள் எத்தனையோ நானாவிதமான சக்திகள் அவைகள் எல்லாம் ஸூக்ஷ்ம ஸ்வரூபமாக கங்கையில் ப்ரவேசித்திருக்கின்றன.

ஸமஸ்த தீர்த்தங்களிலும் ஸ்னானம் பண்ணினவன், எல்லா யாகங்களையும் தீக்ஷை எடுத்துக் கொண்டு செய்தவன், எல்லா வ்ரதங்களையம் முடித்தவன், யார் என்றால் ஒருமுறை கங்கா ஸ்னானம் பண்ணினவனே.

யார் கங்கையில் தீர்த்தமாடினவனோ, அவனே ஸகலதபஸ்ஸுகளையும் செய்தவன்; எல்லா தானங்களையும் செய்தவன், எல்லா யோகாப்யாஸங்களையும் நியமத்தோடு முடித்தவன் ஆவான் . கங்கையில் ஸ்னானம் செய்தவனே எல்லா வர்ணாஸ்ரமங்கள், வேத சாஸ்திரங்களையும் கரை கண்டவன், உலகத்தால் பெரிதும் மதிக்கப்பட்டவன் ஆவான். மனோ, வாக், காயங்களின் அநேக தோஷங்களோடு கூடிய துஷ்டன் இந்த லோகத்தில் கேவலம் கங்கா தர்சனத்தினாலேயே பவித்ரமாக ஆகிவிடுகிறான். இதில் ஸந்தேஹமேயில்லை.

ஸத்ய யுகத்தில் எங்கும் தீர்த்தங்களாகவேயிருந்தது; த்ரேதாயுகத்தில் புஷ்கரம் ஒன்றுதான் தீர்த்தமாக இருந்தது; த்வாபரயுகத்தில் குரு க்ஷேத்ரம் ஒன்றே தீர்த்தமாக இருந்தது, கலியுகத்தில் கங்கை ஒன்றே தீர்த்தமாகும்.

மனிதன் பூர்வ ஜன்ம புண்ணியத்தினால் என்னுடைய பரம அனுக்ரகத்தினால் கங்கை தடத்தில் வசிக்கிறான். ஸத்யயுகத்தில் மோக்ஷத்திற்குக் காரணம் த்யானம் ஒன்றுதான்; த்ரேதாயுகத்தில் தானமும், தவமும் காரணமாக இருந்தது, த்வாபரயுகத்தில், த்யானம், தவம், யக்ஞம் இவைகள் மூன்றும் காரணமாக இருந்தன. கலியுகத்தில் கேவலம் கங்கை ஒன்றே மோக்ஷ காரணமாகும்.

எவன் மரணபர்யந்தம் கங்கையைவிட்டுச் செல்லாதிருக்கிறுனே, அவன் வேதாந்தவேத்தா ஸதாப்ரம்மசாரி ஆவான். கலிகாலத்தில் பிறர் பொருளே அபஹரிக்கும் பாப சித்தத்துடன் விதிக்கப்படாத கர்மங்களேச் செய்பவர்களுக்கு கங்கையை விட்டால் வேறு கதியில்லே. கங்கா, கங்கா, கங்கா, என்று ஜபம் செய்தால், தரித்ரம், அலக்ஷ்மீகரம், துஸ்ஸ்வப்னம், துஸ்சிந்தை முதலியன இராது.

ஸதா ஸர்வஜகத்துக்கும் ஹிதம் செய்யும் கங்கை அவரவர்களுடைய பாபப்படிக்கு ஸமஸ்த ப்ராணிகளுக்கும் இஹ, பர, பலன் அளிக்கிறுள். கலியில் யக்ஞம், தானம், தபஸ், யோகம், ஜபம், நியமம், யமம் இவைகள் கங்கா ஸ்நாந பலனில் ஆயிரத்தில் ஒரு பங்கு பலன்கூடக் கொடுக்கிறதில்லே. அஷ்டாங்க யோகம், தபஸ்யாதி யக்ஞங்களிஞல் கிடைக்கும் பலனேவிட கேவலம் கங்கா தீரவாஸமே, ப்ரம்மஞானத்தின் காரணமாகிறது.

கங்கா மாஹாத்மயத்தின் ஸாரம் அறிந்தவஞக இருந்தால் அயோக்யனுக்குக்கூட கங்கை அருள் புரிகிறுள். ச்ரத்தையே பரமஸூக்ஷ்ம தர்மம், ச்ரத்தையே ஞானம். ச்ரத்தையே பரம தபஸ், மேலும் ச்ரத்தையே ஸ்வர்கம், மோக்ஷம். அதஞல் ச்ரத்தையிஞலே ஸந்தோஷப்படுகிறேன். அக்ஞானராக போகத்தின் மூலம் மோஹ மடைந்த ச்ரத்தையடைய மனிதனுக்கு தர்மத்தில் ச்ரத்தை ஏற்படாது.

தென்னேக்கு விட்ட ஜலம் எப்படி இளநீராகப் பரிணமிக்கிறதோ, அதுபோல் ப்ரம்மாண்டத்தின் பாஹ்யரூபமாகும் ப்ரம்மஸ்வரூபமே கங்கா ஜலமான ஜான்னவியாகும். கங்காப்ராப்தியைப் போல வேறு லாபம் கிடையாது. அதஞல் கங்கையை உபாஸிப்பதே நம் கடமை. ஏனென்ருல் கங்கை பரம புருஷரூபிணீ; பண்டிதன், ஸத்குணன் தானவாஞஞலும் கூட உடம்பில்

சக்தியிருக்கும் போதே கங்காஸ்நானம் செய்யா விட்டால் அவனுடைய ஜன்மம் வீண்.

ஒருவன் கலிகாலத்தில் இவ்வுலகில் கங்கையை ஸேவிக்காவிட்டால், அவனுடைய, குலம், வித்தை, யக்ஞம், தபஸ் எல்லாமே வீண். விதிப்படிக்கு கங்கா ஜலத்தில் ஸ்நானம், பூஜை இவைகளினால் என்ன பலன் கிடைக்கிறதோ, அந்தப் பலன் ஸத்குண ஸம்பன்னனுடைய பூஜையில் கூடக் கிடைக்காது.

இந்த கங்கை என்னுடைய தேஜஸ்ரூபமான அக்னியைத் தன்னுடைய கர்ப்பத்தில் தரித்துக் கொண்டிருக்கிறாள். என்னுடைய வீர்யத்துடன் கூடியிருக்கிறாள். அதனால் அவள் எனக்கு ஸமானமானவள். இவள் எல்லா தோஷங்களையும் பஸ்மீகரமாக்குவாள். ஸர்வ பாபங்களையும் நாசம் செய்வாள். கங்கையை ஸ்மரித்த மாத்திரத்திலேயே பாபக்கூட்டமான அஸ்திபஞ்ஜரம் இந்திரனுடைய வஜ்ராயுதத்தால் அடிபட்ட பர்வதத்தைப் போல் நூற்றுக்கணக்கான துண்டுகளாய்ச் சிதறிப் போகும். ஒருவன் கங்கா யாத்ரைக்குச் செல்ல விரும்பினால் கேவலம் அவனிடம் இருக்கும் நட்பினால் மற்றொருவன் கூடச் சொன்னானேயானால் இருவருக்கும் ஸமமான புண்யம் கிடைக்கும். இதற்கு முக்கியக் காரணம் பக்தியும் சிரத்தையுமே.

நடக்கும் போதும், இருக்குப் போதும், ஜபிக்கும் போதும் தியானிக்கும் போதும், உண்ணும் போதும், விழித்திருக்கும் போதும், உறங்கும் போதும் ஒருவன் கங்கையை ஸ்மரித்தால் அவன் நிச்சயமாக பவபந்தனத்திலிருந்து விடுபடுகிறான். ஒருவன் பித்ருக்களை உத்தேசித்து பக்தியோடு கூட தேன், நெய், வெல்லம், திலம் (எள்) இவைகளோடு கூடிய பாயஸத்தை கங்கா ஜலத்தில் ஸமர்ப்பிப்பானேயானால் அவனுடைய பித்ருக்கள் நூறு வருஷத்திற்குத் திருப்தியடைகிறார்கள்.

மேலும் ஏ! ஹரே! அந்த பிதாமஹர் முதலிய பித்ருக்கள் ஸந்தோஷமடைந்து அந்தக் கர்மம் செய்யும் கர்த்தாவுடைய நாலுவிதமான இச்சைகளையும் பூர்த்தி செய்கிறார்கள்.

ஒரு லிங்கத்தைப் பூஜித்தால் எப்படி ஸமஸ்த ஜகத்தையுப் பூஜித்ததாக ஆகிறதோ, அதுபோல் கேவலம் கங்கா ஸ்னானத்தினால் ஸமஸ்த தீர்த்தங்களுடைய பலனும் கிடைக்கும்.

ஒருவன் நித்யம் கங்கா ஸ்னானம் செய்து சிவலிங்கத்தைப் பூஜித்தானேயானால் அவன் ஒரே ஜன்மாவில் பரம மோக்ஷத்தையடைகிறான்.

அக்னிஹோத்ரம், வ்ரதம், தானம், தபஸ்ஸுகள் இவைகள் எல்லாம் கங்கா தீரத்தில் ஒரு சிவலிங்கத்தைப் பூஜை செய்வதில் உண்டான பலனில் கோடியில் ஒரு பங்குகூட ஈடாகாது. கங்கா யாத்ரை செய்வதாக உத்தேசித்துத் தன்னுடைய க்ருஹத்தில் தீர்த்த ச்ராத்தம் செய்துவிட்டு உட்கார்ந்திருக்கும் ஒருவனுடைய த்ருட ஸங்கல்பத்தினால் அவனுடைய பூர்வ புருஷர்கள் பரமானந்தம் அடைகிறார்கள்.

அவனுடைய பாபங்கள் ஐயோ! நாம் இனி எங்கு செல்வோம்? என்று அழுது கொண்டு, லோபம், மோஹம் இவைகள் எப்படியாவலும் இவன் கங்கா ஸ்னானத்திற்குச் செல்வதை நாம் தடுக்க வேண்டும். அதற்கு இடையூறு செய்ய வேண்டும். இவன் கங்கா தீரத்திற்குச் சென்றுவிட்டால் நம் எல்லோரையும் நாசமடையச் செய்துவிடுவான் என்று யோசனை செய்யுமாம்.

கங்கா ஸ்னானத்திற்கு வீட்டிலிருந்து புறப்பட்டவுடனேயே அவன் ஒவ்வொரு அடிவைக்கும் போதும் பாபக் கூட்டங்கள் நிராசையடைந்து ஒவ்வொன்றாக யாத்ரிகளின் சரீரத்திலிருந்து கிளம்பிப்போய் விடுகின்றன. அந்தப் புண்ணியவான் பூர்வ ஜன்மத்தில் செய்த புண்ணியத்தினாலேயே காம லோப

மோஹாதிகளை விட்டு இடையூறுகளை விலக்கிவிட்டு கங்கையைப் போய் அடைகிறான். உலகப் பொருள்களில் இச்சை வைக்கும் மனிதன்கூடச் சேர்ந்துக் கொண்டு வ்யாபாரத்தின் நிமித்தம் கொஞ்சம் பணம் எடுத்துக் கொண்டு உத்யோகத்தின் நிமித்தமாவது சென்று கங்காஸ்னானம் செய்வானேயானால் அவன்கூட ஸ்வர்கத்தை அடைகிறான்.

இச்சை இல்லாமல் தொட்டாலும் அக்னி எப்படி எரிக்கிறதோ, அதுபோல் இச்சையில்லாமல் கங்கையில் ஸ்னானம் செய்தாலும்கூட கங்கை எல்லாப் பாபங்களையும் தஹிக்கிறது. ஜீவர்கள் கங்காஸ்னானம் செய்யாதிருக்கும் வரையில் ஸம்ஸாரத்தில் உழன்று அலைந்து கொண்டிருப்பார்கள். அவன்கூட ஒருதரம் கங்கையை ஸேவித்து விட்டானானால் ஸம்ஸாரக் கஷ்டங்களை அடையமாட்டான். ஒருவன் ஸந்தேஹமின்றி பக்தியுடன் கங்கையில் ஸ்நாநம் செய்வானே ஆனால் அவன் மனிதரில் தேவதையேயாவான். இதில் கொஞ்சம்கூட ஸந்தேஹமேயில்லை.

கங்கா ஸ்னானத்தின் நிமித்தம் க்ருஹத்திலிருந்து யாத்ரையாகக்கிளம்பி வழியில் மரணம் அடைந்தாலும்கூட ஸந்தேகம் இல்லாமல் அவன் கங்காஸ்னான பலனை அடைகிறான். கங்கா மாஹாத்ம்யம் படிக்கிறவர்கள், அல்லது படிக்க நினைக்கிறவர்கள் ஸமஸ்த மஹாபாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள்.

துர்புத்தி, துராசாரரான, குதர்க்கம் பேசுகிறவர்கள், எல்லாம் மோகத்தினால் கங்கையை மற்ற நதிகள்போல் கருதுகிறார்கள். ஜன்மாந்தரத்தில் செய்த தானம், நியமம் வ்ரதம் இவைகளின் ப்ரபாவத்தினால் அவர்களுக்குக்கூட இந்த ஜன்மத்தில் கங்கையிடம் பக்தி ஏற்பட்டு விடுகிறது. ப்ரம்மா கங்கையை பக்தி பண்ணுகிறவர்களுக்காக இந்த்ராதி லோகங்களிலும் ரம்யமான போகத்தை அனுபவிக்க மாளிகைகள் அமைத்து வைத்திருக்கிறார்.

அணிமாதி ஸித்திகள், ப்ரத்யக்ஷ ஸித்திகளேக் கொடுக்கும் லிங்கம் அநேக ஸ்பர்சவேதிக் கற்களால் ஆன லிங்கம், ரத்னங்கள் பதித்த சிவாலயம், சிந்தாமணிக் கூட்டங்கள்; கலிகல்மஷத்தின் பயத்திஞல் கங்கா ஜலத்தின் அடியில் இருக்கின்றன. அதஞல் கலிகாலத்தில் இஷ்டஸித்திகளே அளிப்பவளான கங்கையே ஸேவிக்கத் தகுந்தவள்.

ஸூர்யோதயத்தில் அந்தகாரம், வஜ்ராயுதத்துக்குப் பயந்த பர்வத ஸமூஹம், கருடனுக்குப் பயந்த ஸர்ப்பங்கள், காற்றுக்குப் பயந்த மேகங்கள், தத்வ ஞானத்திஞல் மோஹம், ஸிம்மத்தைப் பார்த்த மான் கூட்டத்தைப் போன்று ஸமஸ்த பாபங்களும் கங்காமாதாவினுடைய தர்சனத்திஞல் நசித்துப் போகின்றன. உத்தமமான மருந்துகள் சாப்பிடுவதிஞல் - சமனமாகிற ரோகங்கள், லோபத்திஞல் குணங்கள், க்ரீஷ்மகாலத்து வெப்பம் ஆழ்ந்த ஜலாசயத்தில் ஸ்ஞனம் செய்வதால் - பஞ்சுக்குன்று அக்கினி பொறியிஞல் சீக்கிரமாக நசித்துப் போகிற மாதிரி ஸமஸ்த தோஷங்களும் கங்கா ஜலத்தை ஸ்பர்சித்தாலே நிச்சயமாக நாசமடைகிறது.

க்ரோதத்திஞல் நாசமடையும் தபஸ்போல், காமத்திஞல் மங்கும் புத்தி, அநீதியிஞல் நாசமாகும் ஸம்பத், கர்வத்திஞல் நாசமடையும் வித்யா, டம்பம், குடிலம், மாயை இவைகளால் நாசமடையும் தர்மம் போலவும், கங்கையின் தர்சனத்திஞலேயே - ஸகல பாபங்களும் நஷ்டமடைகின்றன. மின்னலின் சஞ்சலம் போல் சஞ்சலமான துர்லப மனிதனுடைய ஜன்மத்தை அடைந்து யார் கங்கையை ஸேவிக்கிருர்களோ, அவனே இந்த லோகத்தில் புத்தியின் எல்லேயை அடைகிருன். எந்த மனிதன் பாபமற்றவஞக இருக்கிராஞே, அவர்கள் இதே பூமியில் ஆயிரம் கோடி சூரியனேப் போலவும் பரஞ்சோதி ஸ்வரூபமாகவும் பார்க்கப்படுகிருர்கள். பாபத்திஞல் ஹதமான நேத்ரங்களுடன் நரபதி கணங்கள் கங்கையை ஸாதாரண ஜலம் நிரம்பிய ஸாமான்ய நதியைப் போல் பார்க்கிருர்கள்.

*Sunday, October 24, 2010*

நான் தயையுடன் ஜனங்களை ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிக்கும் பொருட்டு, கங்கையுடைய அலைகள் ரூபமாக ஸ்வர்கத்துக்குச் செல்லப் படிக்கட்டு அமைத்திருக்கிறேன். ஸ்ரீமதி ஜன்னுபுத்ரி நதியின் கரையில் எல்லா தேசங்களும் மங்கள மயமாயின. எல்லோரும் தானத்துக்கு அர்ஹதையுள்ளவர்களாக, இருக்கிறார்கள். யக்ஞத்தில் அச்வமேதமும், பர்வதத்தில் ஹிமவான், வ்ரதத்தில் ஸத்யம், தானத்தில் அபயம், தபஸ்ஸுகளில் ப்ராணாயாமம், மந்திரத்தில் ப்ரணவம், தர்மத்தில் அஹிம்ஸா, இச்சிக்கும் பொருள்களின் உத்தமமான லக்ஷ்மி, வித்தையில் ஆத்மவித்யா, ஸ்த்ரீகளில் பார்வதி, ஸமஸ்த தேவதைகளில் விஷ்ணு, எல்லா நற்குண பாத்திரவான்களிலும் பக்தன் இவர்கள் ஸர்வப்ரதானம் ஆவதுபோல் ஸமஸ்த தீர்த்தத்தில் கங்கையே ஸர்வச்ரேஷ்டம்.

புத்திசாலி நம்மில் பேதத்தை எப்படிப் பார்க்கமாட்டானோ, அது போல் சிவபக்தன் மஹா பாசுபத தத்வத்தை அறிய வேண்டியது உசிதம். புண்ணிய நதி கங்கா, பாபமாகிய தூசைப் பறக்கவிடும் கொடுங்காற்றும் பாபரூப மரத்தை வெட்டுவதற்குக் கோடரியும், பாபமாகிம கட்டைகளை எரிக்கும் காட்டுத்தீக்கும் ஒப்பாகும். நானாரூபமான பித்ரு கணங்கள் நம் வம்சத்தில் ஒருவனாவது கங்கையில் நீராடுவானென்று எப்பொழுதும் பாடுபடுகிறார்கள்.

தேவதை, ரிஷிகள் இவர்களை திருப்தி செய்ய, தீன, அநாதை துக்கிப்பவர்கள் ச்ரத்தாபூர்வமாக ஸ்னானம் செய்து விடுவார்கள்.

நமது குலத்திலும் ஒருவன் சிவ, விஷ்ணு பேதம் இல்லாதவன் பக்திபூர்வமாக சிவ விஷ்ணு கோவில்களைக் கட்டுபவன், அல்லது அவர்களது கோவிலைப் பெருக்கிக் குப்பைக் கூட்டுபவன் ஒருவன் அவசியம் இருப்பான். விருப்பத்துடனோ விருப்பம் இல்லாமலோ ப்ராணிகளுடைய ஜன்மமாகவோ மனித ஜன்மமாகவோ

ஒரு ஜீவன் கங்காதீரத்தில் மரணமடைந்தால் பின் நரகத்தைக் காணமாட்டான்.

கங்கா தீரத்தில் இருந்து கொண்டு மற்ற தீர்த்தங்களைப் புகழ்பவன், கங்கையை மரியாதையுடன் நினைக்காதவன், நரகத்தில் விழுவான். புருஷர்கள் என்னையும் உன்னையும் கங்கையை அவமதித்து த்வேஷம் பாராட்டினால், தனது பந்துக்களுடன் நரகத்தில் வீழ்வான். கங்கையை அறுபதாயிரம் கணங்கள் எப்பொழுதும் ரக்ஷித்து வருகிறார்கள். ஆனால் அவர்கள் பக்தியில்லாதவர்களையும் பாபிகளையும் பக்கத்திலேயே வரவிடமாட்டார்கள்.

அவர்கள் காமக்ரோதம், மஹாமோகம், லோபாதி ரூபமான கூர்மையான பாணங்களினால் ஜனங்களின் சித்தத்தைப் பேதிக்கிறார்கள். கங்கா வாஸம் செய்யவும் விடமாட்டார்கள். யார் கங்கையை ஆச்ரயிக்கிறார்களோ, அவர்கள் முநிவர்கள், பண்டிதர்கள் - அந்த ஜனங்கள் தர்மார்த்த காமமோக்ஷங்களில் க்ருதார்தர்கள் ஆனவர்கள் என்று எண்ண வேண்டும்.

ஒருதரம் கங்கையில் ஸ்னானம் செய்தாலும் அசுவமேத யக்ஞபலன் கிடைக்கும். கங்கையில் பித்ரு தர்பணம் செய்பவர்கள் அவர்களை நரகமாகிய ஸமுத்திரத்தினின்றும் கரையேற்றுவார்கள். புண்ணியவான் ஒருவன் ஒருமாதம் நிரந்தரமாக கங்கா ஸ்னானம் செய்தானானால் அவன் தனது முனிவர்களுடன் எப்பொழுதும் இந்திர தேவனுகப் பதவியில் வாஸம் செய்கிறான்,

ஒரு புண்ணியவானானவன் ஒரு வருஷம் பிரதி தினம் கங்கையில் குளித்தால் அவன் விஷ்ணு லோகத்தை அடைந்து சிரஞ்ஜீவியாக இருக்கிறான்.

பிரதி தினம் ஒருவன் வாழ்நாள் மழுவதும் கங்கையின் குளித்தால் அவன் ஜீவன் முக்தனேயாவான். சரீரம் விழுந்தவுடன் அவன் முக்தியையே அடைகிறான். திதி நக்ஷத்ரம், பர்வம் இவைகளின் நியமம் கங்கை

ஜலத்துக்குக் கிடையாது. ஏனென்றால் கங்காஸ்னன மாத்திரத்தில் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும் பாபங்களை நாசமடையச் செய்வாள்.

ஸுகமாக ஆச்ரயிக்க வேண்டிய பாகீரதிக்கரையை அடையவில்லையானல் அவன் பண்டிதனுனுலும் மந்தபுத்தியுடையவனுவான். கங்கா ஸேவை செய்ய முடியவில்லையானல், ஆரோக்ய வாழ்வினுலும் வளரும் ஸம்பத்தினுலும் நிர்மலமான புத்தியிருந்தும் என்ன பிரயோஜனம்? ஒருவன் கங்கை மூர்த்தியை ப்ரார்த்திக்க கோவிலைக் கட்டினுல் அவன் எல்லா போகங்களையும் அநுபவித்து இறந்த பின் கங்கா லோகத்தில் வஸிக்கிருன்.

எவன் கங்கை மஹிமையை ச்ரத்தையுடனே கேட்டு புராணிகரைப் பணத்தினுல் ஸந்தோஷப்படுத்துகிருனே, அவனுக்கு கங்காஸ்னனபலன் கிடைக்கிறது. பித்ருக்களை உத்தேசித்து கங்கை ஜலத்தினுல் சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்தால் அவனுடைய பித்ருக்கள் மஹா நரகத்தில் கிடந்தாலும், திருப்தியடைகிருர்கள். பண்டிதர்கள் எட்டு தடவை மந்திரம் ஜபித்து வஸ்த்ரத்தால் வடிக்கட்டின ஸுகந்தமான கங்கா ஜலத்தை அபிஷேகம் பண்ணினுல் நெய்யினுல் செய்ததைவிடப் பலன் அதிகம் என்கிருர்கள்.

ஒருவன் சொல்லப்படும் எட்டு திரவ்யத்தை கங்கை ஜலத்தில் கலந்து அந்த ஜலத்தை ஒருதடவையாவது (அபிமந்திரித்து) 50 ரூபாய் எடையில் ஒரு தாமிரபாத்திரத்தில் வைத்து ஸூரிய நாராயணருக்கு அர்க்யம் கொடுத்தால் அவன் தனது பித்ருக்களை அத்யந்த ப்ரகாசமாக விமானத்திலேற்றி ஸூர்ய லோகத்தில் மர்யாதையுடன் வஸிக்கச் செய்கிருன். ஜலம், பால், தர்ப்பை, நெய், மது, பசுந்தயிர், செவ்வரளிப்பூ, ரக்தசந்தனம் ஆகிய அஷ்டாங்க அர்க்யம் கொடுக்கிருனே, அவனுல் ஸூர்யதேவன் மிகவும் ஸந்தோஷமடைகிருன், வேறு ஜலங்களைவிட கங்கா ஜலத்துடன் கொடுக்கும்

அர்க்கியத்துக்குக் கோடிபங்கு பலன் கிடைக்கிறது. புத்திமான்கள் கங்கா தீரத்தில் தேவாலயங்களைத் தங்களது சக்திப்படிக் கட்டினல் அந்ய இடங்களில் கட்டுவதைவிடக் கோடி பங்கு பலன் கிடைக்கிறது.

வேறு எங்காவது அச்வத்தம், ஆலமரம், மாமரம் இவைகளை நடுவதனுல் என்ன பலன் கிடைக்கிறதோ, கிணறு, நடைகிணறு, தடாகம் முதலியவைகளை ஏற்படுத்துவது, பெரிய ஏரியை ஏற்படுத்துவது, போஜனசாலை நடத்துவது, நந்தவனம் அமைப்பது போன்ற காரியங்களால் என்ன பலன் கிடைக்கிறதோ, அவை கங்கையை தரிசித்தாலேயே கிடைக்கிறது. மேலும் கங்காஜலஸ்பரிசத்தினுல் அதிகப் பலன் கிடைக்கும். கன்னியாதானத்தினுல் ஏற்படும் பலன், கோதானத்தினுல் ஏற்படும் பலன் அன்னதானத்தினுல் எற்படும் புண்ணியம் இவை ஒரு வாய் கங்கை ஜலம் குடித்தாலே மேற்கூறியவைகளைவிட நூறு மடங்கு புண்ணியம் கிடைக்கிறது.

ஜனுர்த்தனு! நூற்றுக் கணக்கான சாந்த்ராயண வ்ரதத்தால் ஏற்படும் பலன் கங்காம்ருதம் குடிப்பதினுல் நூறு பங்கு அதிகமாகிறது. பக்தி பூர்வமான கங்கா ஸ்னனத்தைவிட, வேறு எதனுல்தான் பலன் கிடைக்கும்? அக்ஷயமான ஸ்வர்கம், அல்லது நிர்வாண பதவி இரண்டும்தான் பலன்.

கங்கா தேவியின் இரண்டு பாதுகைகளையும் பூஜை தினமும் செய்பவனுக்கு ஆயுதம் புண்யம்தான். பஹு புத்ர ஸ்வர்க்கம் மோக்ஷம் இவைகள் எளிதில் கிடைக்கும்.

கங்கைக்கு ஈடாக கலிகல்மஷத்தை நாசம் செய்யும் அந்யதீர்த்தம் ஒன்றும் கிடையாது. மேலும் அவிமுக்தத்துக்கு நிகரான முக்தியைக் கொடுக்கும் க்ஷேத்ரமும் கிடையாது.

யமராஜருடைய கிங்கரர்கள் கங்காஸ்னன பராயண மனிதர்களைப் பார்த்தவுடனேயே ஸிம்மத்தைப் பார்த்த

மான்போல் நான்கு திசையும் ஓடுவார்கள். கங்கா ஜலத்தில் ஆழ்ந்து இருப்பது, கங்கைக் கரையில் இருப்பது, இவைகளைச் செய்யும் மனிதர்களுக்கு உசிதமான மரியாதையுடன் பூஜை செய்தால் அச்வமேத யக்ஞ பலன் கிடைக்கும்.

பக்தி பூர்வமாக பவித்ர கங்கா தீரத்தில் பசு, பூமி, ஸ்வர்ணம் இவைகளை தானம் செய்வதினால் மனிதன் துக்ககரமான ஸம்ஸாரத்தில் திரும்பவும் பிறக்கமாட்டான். வஸ்திர தானத்தினால் தீர்ககாயுஸூம், புஸ்தக தானத்தினால் ஞானமும், அன்னதானத்தினால் ஸம்பத்தும் கன்னியாதானத்தினால் புகழும் கிடைக்கும்.

வேறு இடங்களில் வ்ரதமும், தானமும், ஜபமும், தபமும் செய்வதுவிட கங்கா தீரத்தில் செய்வதினால் கோடி மடங்கு அதிக பலன் கிடைக்கும்.

ஒருவன் கங்கைக் கரையில் கன்றுடன் கூடின பசுவை தகுந்த அலங்காரத்துடன் தானம் செய்வதினால் அது காமதேனுவைக் கொடுத்ததற்கு சமானமாகும். பித்ருக்கள் திருப்தியடைவார்கள். பந்துமித்ரர்களுடன் அவன் ஸகல போகங்களையும் அடைவான். ஸமஸ்த ஸம்பத்துக்களுக்கும் அதிபதியாவான். பசுவின் உடலில் எத்தனை ரோமங்கள் உள்ளனவோ அத்தனை யுகங்கள் வரை கோலோகத்தில் வஸிப்பான் அல்லது என்னுடைய உலகத்தில் தேவதைகளுக்கு கிடைத்தற்கறிய நானாவித திவ்ய போகங்களை அனுபவித்து தனதான்யங்களால் நிரம்பப் பெற்றவனாய் ரத்னஸ்வர்ணங்கள் நிரம்பியவனாய் குணத்திலும் வித்தையிலும் ரத்ன ஸ்வர்ணங்கள் நிரம்பியவனாய் குணத்திலும் வித்தையிலும் தனக்கு ஸமானமில்லாதவனாய் நல்ல குலத்தில் பிறப்பான்.

அங்கும் புத்ரபௌத்ரர்களுடன் ஸகல ஸௌபாக்யங்கள் அனுபவித்துவிட்டு பூர்வ ஜன்ம வாசனையினால் திரும்பவும் காசிக்ஷேத்ரத்தில் உத்தரவாஹினியான கங்கையையடைந்து

விஸ்வேஸ்வரரை ஆராதித்துக் கொண்டிருப்பான். அந்திமக் காலத்தில் விதேஹகைவல்யத்தையடைவான்.

ஒருவன் பாகீரதீ தீரத்தில் இரண்டு விவர்த்தன் அளவு (4 அடி ஒரு தண்டம்; 30 தண்டம் ஒரு விவர்த்தம் 1 விவர்த்தம் - 120 அடி) பூமிதானம் செய்தானேயானுல் அதன் புண்ணிய பலன் என்னவாகிறதென்று சொல்கிறேன் கேள்; அந்த பூமியின் தூளியில் எத்தனை பரமாணுக்கள் இருக்கின்றனவோ அத்தனை யுக பர்யந்தம் இந்திர, சந்திரலோகத்தில் மனம் திருப்தியடையும்படி போகங்களை அனுபவித்து இருப்பான். மேலும் அந்த புண்ணியாத்மாவானவன்,

மஹா தர்மவாஞய் ஸப்த த்வீபாதிபதியாகி நரகத்தில் இருக்கும் தன்னுடைய பித்ருக்களை ஸ்வர்க்கத்துக்கு அனுப்புவான். ஸ்வர்க்கத்தில் இருக்கும் எல்லா பித்ருக்களையும் அங்கிருந்து முக்தி கொடுத்து அனுப்புவான. மஹாதேஜஸ்வியான அவன் கடைசியில் ஞானமாகிற வாளிஞல் பஞ்ச பூதமயமான அவித்தையை வெட்டி விட்டுப்பரம வைராக்யத்தையடைந்து உத்தம யோகாப்யாஸம் செய்துகொண்டு அவிமுக்த க்ஷேத்ரத்துக்கு வந்து பரப்ரும்ம பதத்தையடைகிருன்.

பாகீரதி தடத்தில் ஒரு ரூபாய் எடையுள்ள சுத்த தங்கத்தை உத்தமபிராம்மணனுக்குத் தானம் செய்வாஞனல் அவன் அகில ப்ரம்மாண்டத்துக்குட்பட்ட எல்லா லோகங்களிலும் எல்லோராலும் பூஜிக்கப்படுவான். எல்லையில்லாத ஐச்வர்யங்களிலும் எஜமானனும் ஆவான். அவன் ஸுவர்ண, ரத்னங்கள் பதித்த எங்கும் தடையின்றி போகக்கூடிய விமானத்தில் ஏறி மஹாப்ரளய காலம் பரியந்தம் ரம்யமான போகங்களை அனுபவிப்பான். பிறகு ஜம்புத்வீபத்தில் மஹாப்ரதாப சாலியாக ஒருகுடை கீழ் உலகையாளும் மஹா சக்கரவர்த்தியாகப் பிறப்பான். பிறகு அவிமுக்த க்ஷேத்ரத்தையடைந்து மோக்ஷபதத்தை அடைவான்.

ஒருவனுடைய ஜன்ம தினத்தன்று பக்தி பூர்வமாக கங்கையில் ஸ்னனம் செய்தால் அந்த க்ஷனத்திலேயே ஸர்வபாபங்களிலிருந்தும் விடுபடுவான்; வைசாக மாதம், கார்த்திகை மாகமாதங்களில் கங்காஸ்னனம் கிடைப்பது மிகவும் துர்லபம். அமாவாசையன்று ஸ்னனம் பண்ணிஞல் நூற்றுக்கணக்கான பலன்.

மாசம்தோறும் சங்கராந்தியில் பண்ணிஞல் ஆயிரக்கணக்கான பலன். சந்திர சூரிய க்ரஹணங்களில் லக்ஷமடங்கு பலன் த்விதீய பாதத்தில் எண்ணிக்கையற்ற பலன். விஷ்ணு சங்கராந்தியில் ஆயிரம் கோடி மடங்கு பலன்.

ஸோம வாரத்தில் சந்திர க்ரஹணமும், பானுவாரத்தில் ஸௌர்ய கிரஹணமும் ஆஞல் அந்தப் பர்வத்தைச் சூடாமணி பர்வம் என்று சொல்லலாம். அந்த சூடாமணி பர்வத்தில் கங்காஸ்னனம் செய்தால் எண்ணிக்கையில்லாத பலன் கிடைக்கும்.

ஹே ! விஷ்ணோ ! இந்த பூலோகத்தில் பாகீரதீ தீரத்தில் ஸ்னன, தான, ஜபம், தபம், ஹோமம் இவைகளை இந்தச் சூடாமணி பர்வத்தில் செய்வதால் அக்ஷயமான பலன் கிடைக்கும்.

ச்ரத்தை பக்தியுடன் விதி பூர்வமாக கங்காஸ்னனம் செய்வதால் ப்ரம்மஹத்தி செய்தவனும் சுத்தமாகிருன், வேறு பாதங்களைப் பற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

ஜான்னவீ தீரத்தில் புழு பூச்சி க்ருமியாகிய ஜந்துக்கள் இறந்தாலும், வ்ருக்ஷங்கள் கரையோரத்திலிருந்து விழுந்தாலும் அவைகள் நல்ல கதியடையும்,

ஜ்யேஷ்ட மாதத்தில் சுக்லபக்ஷம் ஹஸ்த நக்ஷத்ரத்தோடு கூடிய தசமி திதியில் ஒரு புருஷனே, ஸ்த்ரீயோ கங்கா தீரத்தில் பக்தியோடுகூட, ராத்ரி கண்விழித்து மறுநாள் பகலில் பத்துவிதமான புஷ்பங்கள்,

ஸுகந்தங்கள், நைவேத்யங்கள் பத்துவித பழம், பத்துதீபம், தசாங்க தூபம் இவைகள் மூலமாக விதிப்படிக்கு ச்ரத்தையுடன் கூட பத்து தடவை கங்கைக்கு பூஜை செய்யவேண்டும்.

தேனுடன் கலந்த நெய்யயை இருகையளவு கங்கா ஜலத்தில் ஸமர்ப்பிக்க வேண்டும், பத்துவிதமான மந்திரங்களை உச்சரித்து, ஸத்து மாவும், வெல்லம் கலந்த பத்து பிண்டங்கள் ஸமர்ப்பிக்க வேண்டும். (மந்திரங்கள்:- நமச்சிவாய, நாராயணுய, தஸஹராய, கங்காயை இந்த விதமாகப் பத்து மந்திரங்களாகிறது) இதன் பிறகு ஸ்வாஹாவைச் சேர்த்து ப்ரணவத்தை உச்சரித்து 20 அக்ஷரத்துடன் கூடிய ஒரு மந்திரம் உண்டு; இதனுல் பூஜா, தான, ஹோமம், ஜபம் இவைகள் செய்ய வேண்டும். பிறகு, நம்முடைய சக்தி அனுஸாரம், தங்கமோ, வெள்ளியோ, எதனுலாவது மூர்த்தி செய்து வஸ்திரத்தினுல் வாயை மூடிக்கொண்டு, ஜலம் நிரம்பிய குடத்தின்மேல் ப்ரதிஷ்டை பண்ணி பஞ்சாம்ருதத்தால் ஸ்னனம் செய்வித்துப் பூஜிக்க வேண்டும், பிறகு கங்கை நான்கு புஜங்களோடு கூடியவள்; மூன்று கண்களையுடையவள், நதிகளினுலும், நதங்களினுலும் பூஜிக்கப்பட வேண்டியவள்.

அவளுடைய சரீரத்தில் ஸௌந்தர்யம் ஊற்றுப் பெருக்காகச்சுழலுகிறது. உத்தமமான அவளுடைய நான்கு கரங்களிலும், பூர்ணகும்பம், வெள்ளைத் தாமரை, வரம், அபயத்துடன் விளங்குகின்றன. அவள் மிகவும் ஸௌம்ய ரூபத்துடன் இருக்கப்பட்டவள், கோடிசந்த்ரனுக்கு ஸமமான காந்தியுடையவள். சாமரங்களால் வீசப்படுபவள். தலைக்குமேல் வெள்ளைக் குடையால் சோபிதமானவள். தன்னுடைய அம்ருதத் துளிகளால் பூமியை வளம் பெறச் செய்தவள். வாசனையுடைய சந்தனத்தைப் பூசிக்கொண்டிருப்பவள்; மூன்று உலகத்தாராலும் அவளுடைய சரணங்கள்

பூஜிக்கப்படுகின்றன. தேவதைகளும் ரிஷிகளும் அவளை ஸ்துதிக்கிறார்கள்.

இந்த விதமாக தியானித்து முன்கூறிய மந்திரத்தினால் தூபதீபாதி உபசாரங்களை செய்வித்து ப்ரதிமைக்கு முன்னால் சந்தனத்தினாலும், அக்ஷதையினாலும் பீடம் அமைத்து என்னை, உம்மை, ப்ரம்மாவை சூரியனை, ஹிமாலயத்தை, பகீரதனைப் பூஜை செய்ய வேண்டுமே, பிறகு பத்து ப்ராம்மணர்களை மரியாதையுடன் அழைத்து அவர்களுக்கு பத்து கலசத்தில் எள் தானம் செய்ய வேண்டும்; பலம் (ஒரு பிடி தான்யம்) குடவம், பிரஸ்தம், ஆடகம் இவைகளெல்லாம் எண்ணிக்கைகள். பலம் ஒருமுட்டி, (பிடி) தான்யமானால் மேற்கூறிய அளவைகள் முறையே, 4 பங்கு அதிகம் என்று தெரிந்து கொள்ள வேண்டும்;

மீன், ஆமை, முதலை, தவளை முதலிய ஜலஜந்துக்கள், நீர்க் கோழி, சக்ரவாஹம், கொக்கு, வாத்து இவைகள் முதலிய ஜலபட்சிகளை; யதாசக்தி ஸ்வர்ணம், வெள்ளி, தாமிரம் ஆகிய தட்டுகளில் சந்தனத்தினால் பண்ணிவைத்து, கந்தபுஷ்ப தூபாதிகளினால் பூஜை செய்து விரதம் செய்பவர்கள்; அதை கங்கையில் விட வேண்டும்.. சோம்பல் இல்லாமலே இந்த விதமாக உபவாசம் வ்ரதம் இருந்தால் பத்துவிதமான பாபங்களிலிருந்து விடுபடுகிறான்.

ஒருவரின் பொருளை அவன் தராமல் எடுத்துக் கொள்வது, யக்ஞவிதிகள் இல்லாமல் வேறு எதற்காகவாவது பிராணிகளை ஹிம்ஸை செய்தல். பரஸ்த்ரீகமனம் இவைகள் சரீரத்தால் செய்யும் பாவம்; கடுமையான சொல், பொய் பேசுதல், பிசுநாரித்தனம்; உபகாரம் இல்லாமல் வளவளவென்று பேசுதல் இவைகள் வாக்கினால் செய்யும் பாபம்; பிறர் பொருளில் இச்சை; மனதில் பிறர்க்கு தீங்கு நினைத்தல், நிஷித்தமான அஸத்யப் பொருளைப்பெற ஆக்ரகம் இவைகள் மானஸிகமான பாபம்; ஹே! கதாதரா. இந்த தசவித பாபங்களை ஜன்மம் ஜன்மமாகச்

சேர்த்து வைத்து வைத்திருந்தாலும், நிச்சயமாக இதிலிருந்து விடுபடுகிறுன்; மேலும் மேலும் இது ஸத்யமே.

இந்த தசமி வ்ரதத்திஞல் பத்து பேரைக் கடந்த ஜன்மாவதலிருந்தும் பத்து பேரை இனிவரப்போகும் ஜன்மத்திலிருந்தும் நரகத்திலிருந்தும் காப்பாற்றுவதற்கு ச்ரத்தையுடன் ஒருவன் கங்கைக்கு முன் படிக்கவேண்டும். மங்களத்தைத் தருபவளான கங்கைக்கு நமஸ்காரம்; விஷ்ணு ரூபமான உங்களுக்கு நமஸ்காரம்; ப்ரும்மரூபிணியான உனக்கு நமஸ்காரங்கள், ருத்ரஸ்வரூபிணியான உங்களுக்கு நமஸ்காரங்கள், ஸர்வ தேவஸ்வரூபிணியான உங்களுக்கு நமஸ்காரங்கள், ஸர்வ தேவஸ்வரூபிணி ஸாங்கரிக்கு நமஸ்காரங்கள், ஸம்ஸாரத்திற்கு மருந்தானவள்; உங்களுக்கு நமஸ்காரங்கள், ஸகலருடைய வ்யாதிகளேயும் நாசம் செய்வதில் வைத்ய ரூபிணியாக உள்ளவளே, உங்களுக்கு நமஸ்காரம், ஸ்தாவரஜங்கமங்களிலிருந்து விஷங்களே நாசம் செய்பவளுக்கு நமஸ்காரம்;

ஸம்ஸாரமாகிய விஷத்தைப் போக்கடிக்கும் உயிர்நிலேயான உங்களுக்கு நமஸ்காரம். தேவஸம்பந்தமான, தேஹஸம்பந்தமான பௌதிகமான மூன்று பாபங்களேப் போக்கும் ப்ராணேச்வரி உங்களுக்கு நமஸ்காரம், புக்திமுக்தி ப்ரதாயினி, மங்களம் அருளுபவளுக்கு நமஸ்காரம், இஹபர, லோக பேதங்கள், உபபோகங்கள் இவைகளேத் தரும் போகவதி என்ற பெயரையுள்ள, பாதாளகங்கை என்ற பெயர் பெற்ற உங்களுக்கு நமஸ்காரம். மந்தாகினி என்ற பெயர் பெற்ற ஸ்வர்க்க கங்கைக்கு நமஸ்காரம்; ஸ்வர்க்கத்தை அளிப்பவளே உங்களுக்கு நமஸ்காரம், த்ரைலோக்யத்துக்கும் பூஷணமாக விளங்கும் மூர்த்தியே உங்களுக்கு நமஸ்காரம்; த்ரிமார்க்க காமினியான உங்களுக்கு அடிக்கடி நமஸ்காரம்,

கங்காத்வாரம், ப்ரயாகை, கங்கா ஸங்கமம் மூன்று உன்னத ஸ்தானங்களில் விசேஷமாக அருள்பாலிக்கும்

உங்களுக்கு நமஸ்காரம்; கார்ஹபத்யம், தக்ஷிணம், ஆஹவநீயம் மூன்று அக்னிகளுக்கும் வாஸபூமியான தேஜஸ்வதிக்கு நமஸ்காரம்.

அளகநந்தா, சிவலிங்கதாரிணி, அமிருதஸ்ரோவதியான உங்களுக்கு நமஸ்காரம்; ப்ரம்மாண்ட சிரேஷ்டைக்கு ரேவதி நக்ஷத்ர ரூபிணிக்கு பரிபூர்ண பரருக்ருதிக்கு, லோகதாத்ரிக்கு, ஸம்ஸாரமித்ர ரூபமான தங்களுக்கு; நந்தினியான உங்களுக்கு அடிக்கடி நமஸ்காரம்; அம்ருத விஸ்வரூபமான, நிர்மல ஜலஸ்வரூபமான உத்தம மூர்த்திக்கு நமஸ்காரம்; நூற்றுக்கணக்கான ப்ரம்மாதி தேவகணங்களாலும் எங்களைப் போன்ற ஸாதாரண கணங்களாலும் ஸேவிக்கப்படும் தாரிணி தங்களுக்கு அடிக்கடி நமஸ்காரம்.

ஸம்ஸார பாச ஜாலத்தை அறுக்கிறவரே, மேதாஹிதமானவரே, தங்களுக்கு நமஸ்காரம்; பரமசாந்தாயை, ஸர்வச்ரேஷ், வரதாயினி, உக்ரரூபிணி, ஸுகபோக காரிணி, பரம ஸஞ்ஜீவினீ, தங்களுக்கு நமஸ்காரம்: ப்ராமிஷ்டயே, முக்திதாயினி; துக்க நிவாரிணி தங்களுக்கு நமஸ்காரம்,

சரணாகத துக்க நிவாரிணி, ஜகன்மாதா, தங்களுக்கு நமஸ்காரம், ஸமஸ்த ஆபத்துக்களுக்கு சத்ருவே, மங்கள மூர்த்தயே, தங்களுக்கு நமஸ்காரம். ஹே! நாராயணி தேவி, சரணடைந்த தீநதுக்கிகளை ரக்ஷிப்பதில் தத்பரமானவளே, தாங்கள் எல்லோருடைய துக்கங்களையும் தீர்க்கிறீர்கள். அவித்யா ரஹிதையே; கஷ்ட நிவாரிணி, பரமஸமர்த்தே, ஸர்வ உத்தமருக்கும் உத்தமமானவளே, முக்தி யளிப்பவளே! கங்கே! தங்களுக்கு நமஸ்காரம்.

கங்கே, தாங்கள் எப்போதும் எனது முன்னால் வரவேண்டும்; கங்கே எனக்குப் பின்னாலும் இருக்க வேண்டும்; நீங்கள் எனக்கு இருபுறமும் இருக்க வேண்டும்; நான் உங்களையே சார்ந்திருக்க வேண்டும். ஹே!

பூதலவாஸினி சிவே, ஆதி அந்தம், மத்யம், எல்லாம் நீங்களே, தாங்களே மூலப்ருக்ருதி. தாங்களே பரமபுருஷர்; கங்கே தாங்களே பரமாத்மாவான சிவன், தங்களுக்கு நமஸ்காரம்.

யாதொருவர் சிரத்தையுடன் இந்த ஸ்தோத்ரத்தைப் படிக்கிருரோ, கேட்கும்படிச் சொல்லுகிருரோ, அவர் உடலால் செய்த பாபம், வாக்கால் சொன்ன பாபம், மனதால் நினைத்த பாபம் ஆக தசவிதபாபங்களிலிருந்தும் விடுதலையடைவார். ரோகியின் ரோகம் நீங்கிவிடும். ஆபத்து நீங்கிவிடும்.

இதைப் படிப்பவர்கள் வாஞ்சித பலனையடைவார்கள்; மரித்தும் ஸவர்க்கம் சேருவர்; அவர்களை திவ்ய விமானத்திலிருந்து அப்ஸரஸ்கள் சாமரம் வீசுவார்கள். இந்த லிகிதஸ்தோத்திரம் எவர் வீட்டில் இருக்கிறதோ, அந்த வீட்டிற்கு அக்னி, ஸர்பம் இவைகளால் பயம் இல்லை.

ஜ்யேஷ்ட மாதம் சுக்லபக்ஷத்து புதவாரம் ஹஸ்த நக்ஷத்ரத்துடன் கூடிய தசமி திதியில் இந்த ஸ்தோத்திரத்தை, கங்கை ஜலத்தில் நின்று கொண்டு முற்கூறியபடி கங்கைக்கு பூஜை செய்து தன்மயமாக பத்துதரம் படிக்க வேண்டும்; தரித்ரனுனுலும், ஸாமர்த்யம் இல்லாதவனுனுலும் மேற்கூறிய பலன்களைக் கட்டயம் அடைவான். அந்த தசமி திதி மூன்று விதமான பாபங்களையும் போக்கக்கூடியது.

எப்படி கௌரியோ, அப்படியே கங்கையும். கௌரி பூஜையின் விதியே கங்கா பூஜைக்கு உண்டு. ஹே! விஷ்ணு! நான் எப்படியோ அப்படியே நீரும், நீர் எப்படியோ அப்படியே கௌரியும் கௌரி எப்படியோ அப்படியே கங்கையும். இந்த நான்கு ரூபத்திலும் பேதமில்லை. ஒருவன் விஷ்ணு ருத்ரர்களில், லக்ஷ்மீ பார்வதிகளில், கங்கை கௌரிகளில் பேதம் நினைத்தால் அவன் மந்தபுத்தியுடையவனே.

ஸ்ரீ ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான கங்கா மகிமை தச ஹரா ஸ்தோத்ரம் இருபத்தியேழாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 28

எனது ஸந்தேகத்தைத் தீர்க்கும்படி, தங்களிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன் என்று பார்வதி கூறினாள். த்ரிகால ஞானத்தில் சிறந்தவரே, தங்களுக்கு ச்ரமம் இல்லாமல் இருந்தால் சொல்ல வேண்டும். விஷ்ணுவானவர் சக்ர தீர்த்தக் கரையில் தபஸ்ஸைச் செய்து கொண்டிருக்கும்போது, ராஜா பகீரதன் எங்கிருந்தார்?

சுசீலையே, விசாலாக்ஷீ! இந்த விஷயத்தில் ஸந்தேஹப்பட வேண்டாம். ஏனென்றால் ச்ருதி, ஸ்ம்ருதி புராணங்களில் பூத, பவிஷ்யத், வர்த்தமான மூன்று காலங்களைப் பற்றியும் ஸமான ரூபமாகவே சொல்லப்பட்டிருக்கிறது. பவிஷ்யத்தில் - பூதகாலத்தைப் போல் வர்த்தமான காலத்தில் - காரணங்கள் கல்ப பேதத்தினால் ஏற்பட்டிருக்கிறது. அதனால் வீணாக ஸந்தேஹப்படாதே. இப்படிச் சொல்லிவிட்டுப் பின்னும் சங்கரர் கங்கையின் மகிமையை வர்ணிக்கத் தொடங்கினார்.

ஹே பார்வதீ நந்தந! மஹாதேவர் விஷ்ணுவிடம் கங்கையின் மஹிமைகளை எந்த ப்ரகாரமாக வர்ணிக்கத் தொடங்கினாரோ அதை தயை பண்ணிக் கூறவேண்டும் என்று அகஸ்தியர் கேட்டார். மஹாதேவர் பாபங்களைப் போக்கும் கங்கா மஹிமையை எப்படிக் கூறினாரோ, அதே விதமாகக் கூறுகிறேன் என்று ஸ்கந்தர் கூறினார்.

மூன்று லோகங்களிலும் ஓடும் கங்கையில் ஒருதரம் பிண்டதானம் செய்தானானால் அந்த தில (எள்) ஜலத்தால் அவனுடைய பித்ருக்களை ஸம்ஸாரஸமுத்ரத்திலிருந்து கரையேற்றுகிறான். கங்கைக் கரையில் மனிதன் பித்ரு கார்யத்துக்காக எத்தனை எள்ளை எடுத்துக் கொள்கிறானோ அத்தனை ஆயிரம் வருஷங்கள் பித்ரு ஜனங்கள் ஸ்வர்க்கவாஸம் செய்கிறார்கள்.

தேவ கணங்களும், பித்ருகணங்களும் எப்போதும் கங்கைக்கரையில் வாஸம் செய்கிறார்கள். அதனால் கங்கைக் கரையில் அவர்களை ஆவாஹனம், விஸர்ஜனம் பண்ண வேண்டாம். மாத்ரு குலத்தில் மரித்தவர்களும், பித்ரு குலத்தில் மரித்தவர்களும், குரு, மாமனார் குலத்தில், பந்துக்களிலும் யாராவது மரித்தாலும், வேறு பாந்தவர்கள் மரித்தாலும் பல் முளைப்பதற்கு முன் மரித்தாலும், கர்ப்ப வேதனையில் மரித்தாலும், தீயில் மரித்தாலும், மின்னல் விழுந்து மரித்தாலும், திருடர்களால் அடிபட்டு மரித்தாலும், புலி முதலிய துஷ்ட ம்ருகங்களால் கொல்லப்பட்டாலும், தூக்குப்போக்குக் கொண்டு இறந்தாலும், விபசாரத்தினால் - ஆத்மஹத்தி செய்து கொண்டாலும், ஆத்மாவை க்ரயம் பண்ணினாலும், யாசிக்கத் தகுதி இல்லாத யாசகம் பண்ணினாலும், அன்னவிக்ரயம் பண்ணினாலும்; மற்ற பாபங்களைச் செய்தாலும், கொடிய வியாதியினால் பீடிக்கப்பட்டாலும், தீ வைத்தாலும் விஷம் கொடுத்தாலும், கோஹத்தி செய்தாலும், இப்பேர்பட்ட பாபங்களினால் தன்னுடைய முன்னோர்கள் அஸிபத்ர நரகத்தில் கிடந்தாலும். கும்பீபாகத்தில் அழுந்தினாலும், ரௌரவம், தாமிஸ்ரம் காலஸூத்ரம் ஆகிய நரகங்களை அடைத்திருந்தாலும், அல்லது

ஜனங்கள் தங்களுடைய கர்மானுஸாரம் ஆயிரம் ஜாதிகளில் சுழன்று கொண்டிருந்தாலும் பக்ஷி, ம்ருகம், வ்ருக்ஷம், கொடி எண்ணிக்கையில்லாத பேர்களுடன் எண்ணிக்கையில்லாத யோனிகளில் பிறந்து அலைந்து கொண்டிருந்தாலும் ஜனங்களை அதி கோரமான யமகிங்கரர்கள் யமபுரிக்குக் கொண்டு சென்றாலும், பந்துக்கள் இல்லையானாலும், பந்துக்கள் இருந்தாலும், முன்ஜன்மங்களிலே பந்துக்களாக இருந்தாலும்,

அவரவர்களுடைய பெயர் தெரியாவிட்டாலும், குழந்தைகள் இல்லையானாலும், தன்னுடைய கோத்ரத்தில் பிறந்தவர்களானாலும்,

விஷத்தினால் இறந்தவர்களானாலும், கொம்புள்ள பசுவினால் குத்தப்பட்டு இறந்தவரானாலும் நன்றியற்றவர்களும், குருத்ரோஹிகளானாலும், தன் மனைவிகளையும் புத்திரர்களையும் கொன்றவர்களானாலும், விச்வாஸத்ரோஹிகளானாலும், அஸத்யம் பேசுகிறவர்களானாலும், பரஹிம்ஸையே தன்னுடைய தொழிலானாலும் பாபத்தில் மூழ்கியிருப்பவர்களானாலும், குதிரைகளை விற்றவரும் மற்றவர்களுடைய தனத்தை அபகரிப்பவர்களும், அனாதைகளும் கஞ்சர்களும், தீனர்களும், மனிதஜன்மம் எடுக்க யோக்யதை இல்லாதவர்களும் இவர்களில் யாரானாலும் விதிப்ரகாரம், ஒரு மனிதன் இவர்களுக்காக விதிபூர்வமாகத் தர்ப்பணம் செய்தால்இவர்களனைவரும் த்ருப்தியடைந்து ஸ்வர்கத்தைச் சேருகிறார்கள்; ஸ்வர்க்கவாஸிகளாக இருந்துவிட்டுப் பிறகு மோக்ஷலாபம் அடைகிறார்கள்.

முன்கூறிய கங்கா ஸ்தோத்ரத்தை உச்சரித்து கொண்டு ஒருவன் பித்ருதர்ப்பணம், ச்ராத்தம், பிண்டதானம் இவைகள் செய்தால் அவன் ஒருவனே இவ்வுலகில் விதிமுறை தெரிந்து கொண்டவன் என்று கொண்டாடப்படுகிறான். மூன்று உலகங்களிலும் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்ற வல்ல எத்தனை தீர்த்தங்கள் உள்ளனவோ, அவைகளெல்லாம் காசியில் உத்தரவாஹினியான கங்கையை ஸேவித்து அதில் கலந்திருக்கின்றன.

பொதுவாக கங்காநதி எல்லாஸ்தானங்களிலும் பவித்ரமானது, ப்ரம்ம ஹத்யாதி பாபங்களைப் போக்கடிக்கக் கூடியதுதான் ஆனாலும் காசியில் எங்கு

கங்கை உத்தர வாஹினியாக ஓடுகிருளோ, அங்கு அபாரமஹிமை உள்ளது. தேவகணங்களும், ருஷிகளும் பித்ருகணங்களும் ஓயாமல் காசியில் உத்தரவாஹினியான கங்கை எங்கள் கண்களுக்குத் தென்படமாட்டாளா? என்று தேடிக்கொண்டேயிருக்கிருர்கள். இந்த ஜலத்திஞல் சந்தோஷமடைந்து, மூன்றுவித பாபங்களேயும் விலக்கி, விஸ்வநாதருடைய அருளிஞல் முக்தி பதத்தை அடையலாமென்று கூறுவார்கள்.

எல்லாவிதமான முக்திகளுக்கும் கங்கா ஜலமே போதும். அதுவும் எனது சைதன்யம் அதிலே இருப்பதால் எந்த கௌரவத்திஞல் அவிமுக்த க்ஷேத்ரம் இன்னும் விசேஷம்; கலியுகம் கோரமானது. ஆனபோதிலும் கங்கையின் மஹிமை மறைத்து வைக்கப்பட்டிருந்தது. அதஞல் முக்திமார்க்கத்தைக் காட்டும் கங்கையின் மஹிமையை யாராலும் அறியமுடியாது.

அநேக ஜன்மங்களாக எல்லா யோனிகளிலும் விழுந்து எழுந்து எந்த நரன் இந்த ஜன்மத்தில் கங்கையை ஸேவிக்காமல் முக்தியடைய முடியும்? பாபத்திஞல் மறைந்த சித்தம், அல்பபுத்தி, பவரோகம், இவைகளில் இருந்து விடுபட மனித கணங்களுக்கு கங்கையே பரம ஔஷதம். கங்கைக் கரையில் யார் உடைந்தும், தகர்த்தும். பாழடைந்ததுமான சிவாலயங்களேப் பழுது பார்க்கின்ருர்களோ, அவர்களுக்கு எனது லோகத்தில் அக்ஷயமான ஸுகம் கிட்டும். யாதொருவன் தனக்காகவோ, பிறருக்காகவோ, கங்காயாத்திரைக்காகப் புறப்பட்டு நின்று விட்டாஞஞல், அவன் அவனுடைய பித்ருக்களுடன் பதிதன் ஆகிருன். எவனுடைய ஸமஸ்தக்ரியைகளும் கங்கா ஜலத்திஞலேயேஆகிறதோ அவன் பூவுலகில் பிறந்த மனிதஞஞலும் தேவர்களுக்கு அடுத்த துல்யமானவன்.

எவன் ஸகல பாபங்களையும் செய்துவிட்டு வயோதிக பருவத்திலாவது கங்கா ஸேவனம் செய்கிருனே, அவனும்கூட முக்தியடைகிருன். மனிதன் முதலானவர்களுடைய அஸ்தி எத்தனை காலம் கங்கா ஜலத்தில் கிடக்கிறதோ அவன் ஆயிரம் வருஷங்கள்வரை ஸ்வர்க லோகத்தில் ஸ்திரமாக வாழ்கிருன். மூவுலகிற்கும் ஹிதத்தைச் செய்பவனே! தேவதேவ! பிரபோ! ஸச்சிதானந்தா! கங்கா ஜலத்தில் அகால மரணமடைந்தவன், துர்நடத்தையுள்ளவன் இவர்களுடைய அஸ்தி கிடந்தாலும் அவனுக்கு பரமகதி கிடைக்குமா? ஈசா சொல்லுங்கள், என்று மஹாவிஷ்ணு கேட்டார்.

மஹேச்வரர் பதில் கூறுவார்: ''ஹே! அதோக்ஷஜா! இந்த விஷயமான, புராதன காலத்தில் இருந்த வாஹிகன் என்னும் பெயருடைய ப்ராமணனுடைய கதையைக் கூறுகிறேன். கேவலம் யக்ஞோபவீதத்தினுல்தான் அவனைப் பிராம்மணன் என்று சொல்லமுடியும். உப்பு வியாபாரம் செய்யும் ஒரு பிராம்மணன் இருந்தான். அவன் ஸந்த்யோபாஸனம் செய்யமாட்டான்; வேதம் ஓதமாட்டான். அவன் ஒரு நெசவாள ஜாதியைச் சேர்ந்த ஒரு விதவா பெண்ணை விவாஹம் செய்து கொண்டான்.''

அப்பொழுது பஞ்சம் ஏற்பட்டதால் அவன் அந்த சூத்ர ஸ்த்ரீயையும் அழைத்துக் கொண்டு அன்ய தேசம் சென்ருன். பசியினுல் பீடிக்கப்பட்டு, வேறு வழியில்லாமல் அந்த பிராம்மணன் காட்டுவழியில் ஒரு புலியினுல் கொல்லப்பட்டான்,

அது தண்டகாரண்ய வன சமீபம். ஒரு கழுகு சிதறிக் கிடந்த அவனுடைய இடதுகாலை அலகில் கொத்திக் கொண்டு அங்கிருந்து பறந்தது. ஆகாசத்திலேயே அந்த மாம்ஸத்திற்காக மற்ருெரு கழுகு அதனுடன் சண்டை

போட்டது. இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று சண்டை போட்டபோது அந்த இடது பாதமான மாமிசத்துண்டு, கீழே விழுந்தது. யுத்தம் செய்யும் அந்தக் கழுகுகளின் வாயிலிருந்து விழுந்த மாமிஸத்துண்டு தற்செயலாக கங்கையின் மத்யபாகத்தில் விழுந்தது.

புலி - வாஹிகனை அரண்யத்தில் கொன்றவுடன் சூலபாணி யமனுடைய தூதுவர்கள் வந்து வாஹிகனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவனைக் கசையினால் அடிக்கத் தொடங்கினார்கள், அரத்தால் நான்கு பக்கமும் அறுக்கத் தொடங்கினார்கள். அவன் வாயிலிருந்து ரத்தத்தைக் கக்கத் தொடங்கினான். அவனை யமராஜர் முன்னால் கொண்டுவந்து நிறுத்தினார்கள்.

இதற்குப் பிறகு யமராஜன் சித்ரகுப்தனிடம், இந்தப் பிராம்மணனுடைய தர்மாதர்மத்தை சீக்கிரம் கணக்குப் பார்த்துச் சொல்லும்படிக் கேட்டார்; ஸமஸ்த ப்ராணிகளுடைய ஸர்வ கர்மங்களையும் அறிகிற விசித்ரபுத்தியுடையவர் சித்ரபுத்ரன்தான் வைவஸ்வதனிடம் கூறுவார்; ஹே யமுனா ஸஹோதரனே! துஷ்ட ப்ராம்மணனான வாஹிகனுடைய ஜன்மம் முழுவதும் உள்ள சுப, அசுப விஷயங்களை எடுத்துரைக்கிறேன் கேளும்.

இவனுடைய ஜன்மமானதுமே - கர்ப்பாதானம் ஆதிகர்மங்கள் செய்யவில்லை; இவனுடைய அறிவுகெட்ட பிதா கர்ப்பத்தில் ஜனித்த பாபத்தைப் போக்க ஸமஸ்த ஆயுள்கர்மம், ஜாதகர்மமும் முதலியன செய்யவில்லை. பதினொன்றாம் நாளன்று நாமகர்மமும் செய்யவில்லை.

எந்த கர்மங்கள் செய்தால் பாலகன் எங்கும் புகழ் பெறுவானோ அந்த ஸம்ஸ்காரமும் செய்யவில்லை. ஆறாவது மாதத்து அன்ன ப்ராசனமும் செய்யவில்லை. எந்த ஒரு கர்மத்தை ஸூர்யோதய ஸமயத்தில் செய்தால் தினமும்

ஷட்ரஸ போஜனம் கிடைக்குமோ, அந்தக்கர்மத்தைச் செய்யவில்லை. குலாசார வழக்கப்படி சூடாகரணமான சிகை வைக்கும் விசேஷத்தையும் நடத்தவில்லை. அவனுடைய பிதா அவனுக்குக் காது குத்தும் சடங்கும் செய்யவில்லை.

அந்தக் கர்மம் செய்வதால் இரு காதுகளும் செவிடாகாது; காதுகளில் ஸ்வர்ண குண்டலம் அணிவதால் காது மந்தம் முதலிய சீக்குகள் ஏற்படாது. அதையும் அவன் பிதா செய்யவில்லை. இவனுக்கு எட்டு வயது நிரம்பியதும் பூணூல் கல்யாணம் செய்யவில்லை. அது செய்தால் ப்ரம்மசர்யம் விருத்திக்கும். வேத ச்ரவணத்துக்கு ஞாபகசக்தியும் உண்டாகும், அந்த மௌஞ்ஜீபந்தனமான யக்ஞோபவீதமும் செய்யவில்லை. பிறகு இவனுடைய பிதா ஸமாவர்த்தன கர்மமும் செய்யவில்லை. அந்தக் கர்மத்தைச் செய்தால் உன்னதமான க்ருஹஸ்தாச்ரமம் அமையும்.

பிறகு இவனுக்கு அப்படியுமிப்படியுமாக வயது யௌவனத்துக்கு எட்டியவுடன் இவன் பரதாரகமனத்திலும் நாட்டம் கொண்டான். ஒரு விபசாரிணி பெண்ணை விவாகமும் செய்து கொண்டான். ஐந்தாவது வயதிலிருந்தே இந்த துராசாரி திருடும் சூதும் நன்ருகக் கற்றுக் கொண்டிருந்தான்.

இவன் உப்பு பண்டாராமான சிந்து தேச மத்தியில் இருந்த படியால் உப்பு வ்யாபாரமும் செய்து வந்தான். அது பிராம்மணனுகப் பிறந்தவனுக்கு நீசகர்மமாகும். அந்த உப்பை நக்கிய ஒரு சிறு கன்றை ஒரு தடியால் அடித்துக் கொன்ற பாபி இவன்; அநேகம் தடவை அன்னையைக் காலால் உதைத்திருக்கிருன். தகப்பன் வார்த்தையை ஒருநாள் கூட இவன் கேட்டது கிடையாது'

இந்த வீண் சண்டையை விலைக்கு வாங்குகிறவன், ஒருஸமயம் விஷமும் குடித்தான்; தனது பகைவனைச்

சிறைதண்டனை அனுபவிக்கச் செய்வதற்காகத் தனது வயிற்றைத் தானே கீறிக்கொண்டான். இவன் விளையாட்டுச் சண்டை பிடித்துக் கொண்டும் கருவேலம், விஷச்சுரக்காய் முதலியவைகளை அரைத்துக் குடித்திருக்கிறான். ஹே! ஸூர்யநந்தனு! நல்லோரால் இகழப்பட்ட இந்த பாபி, ஒருநாள் தன்னை நெருப்பினால் வதைத்துக் கொள்ளப்பார்த்தான். அவனை நாய்கள் கடித்திருக்கின்றன. கொம்புள்ள பசு, எருது இவைகள் இவனை அநேகம் தரம் கொம்புகளால் குத்திக் கொதறியிருக்கின்றன. பாம்பைக் கடிக்க விட்டுக் கொண்டான். செங்கல், கற்கள், தடி இவைகளால் மோதுண்டிருக்கிறான்.

உத்தமாங்கம் என்று கூறப்படும் சிரஸை அறிஞர்கள் அநேக விதமாகப் பூஜிப்பார்கள். இவன் அதற்கு நேர் எதிராக - தன் தலையில் அடித்துக் கொள்வான். இவன் ப்ராம்மணனாக இருந்தும் காயத்ரீ ஜபம், ஜபித்ததேயில்லை. இஷ்டப்படி மாம்ஸம் முதலானவற்றை உண்டான். தேவதைகளுக்கு நிவேதனம் பண்ணாமல் தனக்கு வேண்டிய பாயசம் முதலானவற்றை உண்பான். க்ரமமாக, இரும்பு, உப்பு, மாம்ஸம், பால், தயிர், நெய், விஷம் ஆயுதம், தாஸி, பசு, குதிரை, மயிர், தோல் இவைகளை விற்றிருக்கிறான்.

இந்த துராத்மாவின் சரீரம் சூத்ரனுடைய அன்னத்தினாலேயே வளர்த்திருக்கிறது. பர்வ நாட்களிலும், பகலிலும் இவன் போகித்திருக்கிறான். தேவகர்மம், பித்ருகர்மம் இவைகளைச் செய்யவேமாட்டான். நூற்றுக்கணக்கான பசுபக்ஷிகளைக் கொன்றிருக்கிறான். அகாரணமாகவே மரங்களை வெட்டியிருக்கிறான். தயை என்பது இவனுக்கு மருந்துக்கும் கிடையாது. தனது பந்துக்களை எப்பொழுதும்

துன்பப்படுத்துவான். பொய்யே பேசுவான்; எப்பொழுது யாரையாவது ஹிம்ஸிக்கும் எண்ணத்துடனேயே இருப்பான்.

இவன் இதுவரை ஒரு தானம்கூடச் செய்ததில்லே. மகாகஞ்சத்தனமே இவனுடைய தர்மம். உதர ஸேவையும் போகமுமே இவன் தொழிலாக இருந்தது. ஹே சூர்யதயா! எத்தனே தான் கூறுவது இவனேப்பற்றி? பாதகமே உருவெடுத்தவன் இவன். ரௌரவ, அந்த தாமிஸ்ர, கும்பீபாக, அதிரௌரவ, காலசூத்ர, க்ருமி போஜன, பூயசோணித, கர்தம, அஸிபத்ரவன, கோரலந்தாபீட, சூததம்ஷ்ட்ரக, அதோமுக, பூதிகந்த, விஷ்டாகர்த்த, சவபோஜன, சூச்சபேத்ய, சம்தஸா, லாலாபாண ஹ"ரதான், இந்த ஒவ்வொரு நரகத்திலும் கல்ப்பகாலம் இவனேத்தள்ள வேண்டும்.

சித்ரகுப்தன் இவ்வாறு சொல்வதைக் கேட்டுவிட்டு, யமராஜன் துன்மார்க்கனே மிகவும் இகழ்ந்தான். புருவ நெருப்பினுல் யமகிங்கரர்களுக்கு உத்தரவிட்டான். அதன் பிறகு பாபிகளுடைய கூக்குரலால் ரோமங்களேக் குத்திட்டுச் செல்லும் அலறல்கள் நிறைந்த இடத்திற்கு யமதூதர்கள் வாஹிகனேக்கட்டி இழுத்துச் சென்றுர்கள். ஈஸ்வரன் கூறினுன்; அந்த வாஹிகன் இங்கு தீவிர யமயாதனேயை அனுபவித்துக்கொண்டு இருக்கும் போது, அதே சமயம் புண்யபலத்தைக் கொடுக்கும் நிர்மலமான கங்கா ஜலத்தில் கழுகினுடைய வாயிலிருந்து விழுந்த அவனுடைய பாதத்தின் எலும்புத்துண்டு விழுந்த காரணமாக ஏ! ஹரி; அதேசமயத்தில் நூற்றுக்கணக்கான தேவ ஸ்த்ரீகளே ஏற்றிக் கொண்டு மணிகள் ஒலித்திடும் தேவவிமானம் ஒன்று தேவலோகத்திலிருந்து வந்து சேர்ந்தது. கங்கையில் அந்த அஸ்தி துண்டு விழுந்த காரணத்திஞல் அந்த வாஹிகன் என்னும் பிராம்மணன் திவ்ய ரூபத்தை எடுத்துக் கொண்டு

திவ்யமான வாசனை சந்தனத்தை பூசிக்கொண்டு - அந்த விமானத்தில் ஏறிக்கொண்டு அப்ஸரஸ்ஸ்த்ரீகள் விசிறியினுல் வீசும் காற்றின் ஸுகத்தை அனுபவித்துக் கொண்டு, ஸ்வர்கலோகம் போனுன்.

இங்கே ஸ்கந்தர் கூறுகிறுர்:- ஏ கும்ப முனியே! இந்த விஷயத்தினுடைய சக்தியை விசாரித்துப் பார்த்தால் மிகவும் அற்புதமாக இருக்கிறதே! இந்த கங்கை ஜலரூபமாக இருந்தும் சொல்ல முடியாத பரமசக்தி ஸ்வரூபமாக அல்லவா இருக்கிறது.

கருணும்ருத பூர்ணுன பகவான் மஹாதேவன் ஜகத்தை உத்தாரணம் செய்யும் பொருட்டே இந்த கங்கையை ஓடச் செய்திருக்கிறுர். உலகில் மற்ற எத்தனையோ நதிகள் ஆயிரக்கணக்கானவை, பூர்ண ஜலப்ரவாஹத்தோடு கூடி இருக்கிறது. மூன்று உலகிலும் ஒப்பாக நினைக்க வேண்டாம்.

கங்காதரரான சம்பு கருணை நிறைந்த பார்வையினுலே வேதாக்ஷரங்களைப் பிழிந்து அந்த ரஸத்தினுல் கங்கையை நிர்மாணித்திருக்கிறுர். சங்கரர் எல்லாப் பிராணிகளிடத்திலும் கொண்ட தயையினுல் வேதம், உபநிஷதம் இதன் ஸாரங்களை எடுத்து, அடையும் இந்த கங்கா நதியில் கங்கை ஓடும் கோமுகமாகச் செய்தார். எந்தெந்த தேசங்களில் இந்த கங்கையில்லையோ - அவைகளெல்லாம் சந்திரனில்லாத இரவுகள் போலும், புஷ்பங்கள் இல்லாத வ்ருக்ஷங்கள் போலும் இருக்கின்றன.

கங்கையில் ஜலம் ஓடாத மற்ற தேசங்களும், திசைகளும், ந்யாயவழியில் சேர்க்காத ஸம்பத்து போலவும் தக்ஷிணை கொடுக்காத யக்ஞத்தைப் போலவும் பலனற்று இருக்கின்றன. மேலும் ஸூர்யனில்லாத ஆகாசத்தைப் போலவும் இருளில் விளக்கில்லாத க்ருஹத்தைப்

போலவும், ஓதாத ப்ராம்மணனைப் போலவும் - கங்கை செல்லாத திக்குகள் இவ்விதம் வீணாகவுள்ளன.

இதைச் சோதித்துப் பார்ப்பதற்கு - ஒருவன் ஆயிரம் தரம் சாந்த்ராயண வ்ரதம் இருக்கிறான், ஒருவன் கங்கா ஜலத்தையே குடித்துக் கொண்டு இருக்கிறான். இவர்களில் கங்கா ஜலத்தைக் குடிப்பவனே மேல் என்று நான் சொல்லுவேன். ஒருவன் நூறாயிரம் வருஷங்கள் ஒற்றைக் காலில் நின்று கொண்டு தபம் செய்து கொண்டிருந்தாலும் சரி,மற்றொருவன் ஒரே ஒரு வருஷம் கங்கா ஜலத்தைப் பானம் செய்து கொண்டிருந்தாலும் சரி, கங்கா ஜலத்தைப் பானம் செய்பவனே வெகு ச்ரேஷ்டன்.

ஒருவன் நூற்றுக்கணக்கான வருஷங்கள் தலைகீழாகத் தொங்கிக் கொண்டு தபஸ் செய்தாலும் சரி, அவனைவிட கங்கைக்கரை மணலில் சயனித்துக் கொண்டிருப்பவனே மேல். இந்த உலகில் அதுவும் கலிகாலத்தில் பஞ்ச மஹா பாதங்களினாலும், ஆசை நிறைவேறா ஸந்தர்ப்பங்களினாலும் துடித்துக் கொண்டிருக்கும் ஜனங்களின் பாபத்தையும் தாபத்தையும் ஜான்னவியான கங்கை எப்படித் தீர்க்கிறாளோ, அப்படி ஒருவராலும் தீர்க்க முடியாது.

கருடனைக் கண்டவுடனேயே பாம்புகள் விஷத்தை இழப்பது போல கங்கையை தரிசித்தவுடனேயே பாபக்கூட்டங்கள் சோபையை இழந்து விடுகின்றன. ஒருவன் கங்கைக் கரையில் இருக்கும் மண்ணை எடுத்து பயபக்தியுடன் நெற்றியில் தரித்துக் கொண்டானானால் அவன் இருளை விலக்க ஸூர்யனை நெற்றியில் தரித்துக் கொண்டதற்கு ஒப்பாவான்.

மனோ வியாதியினால் பீடிக்கப்பட்டிருப்பவர் களுக்கும், தனமில்லாமல் தரித்திரப்படும் பாபிகளுமான ஜனங்களுக்கு கங்காதேவி ஒருத்தியே கதி. வேறுவிதமான

கதியும் கிடையாது. அவளுடைய மாஹாத்மியங்களைக் காதுகள் ஆசையுடன் கேட்பதாலும், கங்கையில் ஸ்னானமும், தரிசனம், தொடுதல் பானம் செய்தல், வருகை கூறல் இவைகளைச் செய்யும் புருஷனுடைய இரு வம்சங்களையும் கங்காதேவி கரையேற்றுகிறாள். இதில் ஸந்தேஹமில்லை.

கங்கையை வர்ணித்துப் பாடல், தர்சித்தல், ஸ்பர்சித்தல், பானம் செய்தல், இவற்றால் பாபங்கள் க்ஷயமும், புண்ணியங்கள் சேர்க்கையும் பத்து பங்கு அதிகமாகத்தான் கிடைக்கிறது. கங்கையை அடைந்தவர்களுக்கு புண்ணியத்தின் லாபம்... அவனுக்கு புத்தியினாலும், தனத்தினாலும் மற்றும் அநேகக் கர்மங்களினாலும் கிடைக்காது. சக்தியிருக்கும் பொழுதே எவனொருவன் முக்தி கர்பிணியான கங்கையில் ஸ்னானம் செய்யவில்லையோ, அவன் கண்ணிருந்தும் குருடன், கால் இருந்தும் நொண்டியும், கையிருந்தும் முடவன், உயிர் இருந்தும் பிணமேயாவான்.

கங்கா மாஹாத்மியத்தைப் பாராயணம் செய்வது அதைக் கேட்டுவிட்டு கங்கையை ஆச்ரயிப்பது, ஐராவதி, மதுமதி, பயஸ்வினி, அம்ருதரூபா, ஊர்ஜஸ்வதி, இந்த ஐந்து நதிகளையும் பேதம் செய்து ஸ்வர்க்கத்தை அருளும் கங்கையை எவனொருவன் ஆச்ரயிக்கிறானோ, அவன் ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் அடைகிறான்.

எந்த ஜனங்கள் ரிஷிசிரேஷ்டர்களால் ஸேவிக்கப்படும் புண்யப்ரவாஹினி, புராதனி, விஷ்ணு பாதத்தில் உற்பத்தியாகும் ஜான்னவியை இந்த லோகத்தில் த்ரிகரண சுத்தியுடன் மனதினால் உணர்ந்து ஸேவிக்கிறார்களோ அவர்கள் ப்ரம்ம லோகத்திற்குப் போகிறார்கள்.

அன்னை தனது புத்திரர்களை ஸுக ஸௌகரியத்துடன்

கண்காணிப்பது போல் ஸர்வகுணசாலியான இந்த கங்கை இஹத்துக்கும் பரத்துக்கும் அதிகாரிகளாக ஆக்குகிருள். அதனுல் தங்களுக்கு இஷ்டமான ப்ரும்ம பதத்தை விரும்பும் ஜிதேந்த்ரியர்கள் கங்கையை எப்பொழுதும் உபாஸனே செய்ய வேண்டும்.

ஆத்ம ஸித்திக்கு இச்சைப்படுகிறவர்கள். தேவர்களாலும் ஸேவிக்கப்படுகிறவனும், ஸ்கந்தனின் ஜனனியும், எப்பொழுதும் புண்ணிய தீர்த்தத்துடன் கூடியவனும், இராவதியும், சிஷ்டர்களால் ஸேவிக்கப்படுபவனும், அமிர்தமயியும், விஸ்வரூபிண்யையும், ப்ரம்மகாந்தியுடைய கங்கையை ஆச்ரயிக்க வேண்டும்.

ஒருவன் ப்ரம்மசாரியாகவும், ஏகாக்கிர சித்தத்துடனும் கங்கையில் ஸ்ஞனம் செய்வாஞனுல் பாபமில்லாதவஞகிருன். வாஜபேயயக்ஞம் செய்த பலனே அடைகிருன். துஷ்டகர்மங்களால் பீடிக்கப்பட்டு ஸம்ஸார ஸாகரத்தில் உழன்று நரகத்தை நோக்கிச் செல்லும் ஜனங்கள் கூட கங்கையை ஆச்ரயிப்பார்களாஞல் அவர்களேயும் கரையேற்றுவாள்.

ஸமஸ்த லோகங்களிலும் ப்ரம்ம லோகம் உத்தமம். அதுபோல ஸகல நதிகளும், ஸரோவரத்தில் வைத்து கங்கையே ச்ரேஷ்டமானவள்.

வேறு புண்ணிய ஸ்தலங்களில் ஒழுங்காக ஸங்கல்பம் செய்து கொண்டு மூன்று வருஷங்கள் தபஸ் செய்வதால் என்ன பலன் கிடைக்குமோ, அந்த பலன் பக்தி பூர்வமாக அரை நாழிகைப் பொழுது கங்கா தீரத்தில் ஸ்ஞனம் செய்வதால் கிடைக்கிறது. மனிதர்களுக்கு சந்ரோதயமானவுடன் கங்காதீர்த்தத்தில் கிடைக்கும். ஆனந்தம் அக்ஷயசுகங்களே அனுபவிக்கும் ஸ்வர்க்க வாசிகளுக்குக்கூட கிடையாது.

வயோதிகத்திஞலும், வியாதிகளிஞலும் நலிந்து போன தேஹத்தை தைரியத்துடன் கங்கா ஜலத்தில் த்ருணத்தைப்போல் நீனத்து எறிவதஞல் அவர்கள் அமராவதியில் பிரவேசிக்கிருர்கள். சந்திர மண்டலம் கங்கையின் ஜலராசியிஞல் கழுவப்பட்டு பகல் கழித்தும் மிகவும் சோபையுடன் விளங்குகிறது.

கங்கா ஜலத்தில் ஸ்ஞனம் செய்வதிஞல் அந்த நிமிஷமே பாபங்கள் நாசமடைந்து அநேக மங்களங்கள் பொருந்தின நலன்கள் கிடைக்கின்றன.

ஹே! அச்சுதா! கங்கா ஜலத்தில் ஒரு வம்சத்தில் பிறந்த புருஷர்களிஞல் ச்ரத்தா பூர்வகமாக பித்ருக்களுக்குச் செய்யும் தர்பணம் மூன்று வம்சங்கன் வரையில் திருப்தி செய்கிறது.

ஹே! விஷ்ணு! கங்காமாதா மண்ணுலகில் வசிக்கும் மனிதர்களுக்கும், அதலமான பாதாளத்தில் வசிக்கும் ஸர்ப்பாதிகளுக்கும், ஸ்வர்க்கவாஸிகளுக்கும் ஒரே சமயத்தில் புண்ணியத்தைக் கொடுப்பதிஞல் 'த்ரிபதகாமிநீ' என்ற பெயரால் மூன்று உலகிலும் ப்ரஸித்தமாக இருக்கிருள்.

அவள் எல்லாத் தீர்த்தங்களுக்கும் மேலானவள்; எல்லா நதிகளிலும் உத்தமநதி, அதஞல் இந்த உலகில் மகாபாபங்கள் செய்தவர்கனேக்கூட ஸ்வர்கத்தில் ஏற்றுகிருள். விஷ்ணுவே! ஸ்வர்கம், பூமி, ஆகாசம் ஆகிய மூன்று இடங்களிலும் இருக்கும் கோடிக்கணக்கான தீர்த்தங்கள் இந்த நதியில் வஸிக்கின்றன.

ஒருவன் ஆத்ம ஹத்தி செய்யாமல் ஞானத்துடன் கூடியிருந்தாஞஞலும் சரி, அவன் கங்கையில் மரணமடைந்தால் ஸ்வர்க வாசியாகிருன். நரகங்கனேப் பார்க்கவே மாட்டான். கங்கையே ஸமஸ்த தீர்த்தம்;

கங்கையே தபோவனம், கங்கையே ஸித்தி க்ஷேத்ரம். இந்த விஷயத்தில் சிந்திப்பதற்கு ஒன்றுமில்லை.

கும்பமுனியே! எங்குள்ள மரங்கள் விசித்ரபலனைத் தருகிறதோ, எங்குள்ள பூமி ஸ்வர்ண மயமாக இருக்கிறதோ அந்த பூமியை கங்கையில் ஸ்னானம் பண்ணுகிறவர்கள் அடைகிறார்கள்.

நல்ல குணமுடையதும், நிறையபால் கொடுக்கக் கூடியதுமான பசுவை வஸ்திராபரணங்களினால் அலங்கரித்து கங்கா தீரத்தில் ப்ராம்மணர்களுக்குத் தானம் கொடுத்தால், ஏ! கும்பமுனியே! இந்த தானம் கொடுப்பவன் - அந்தப் பசுவினுடையவும், அதன் ஸந்ததிகளிடமும் சரீரத்தில் எத்தனை ரோமங்கள் இருக்கின்றனவோ - அத்தனை ஆயிரம் வருஷங்கள் அவன் ஸ்வர்கத்தில் ஸுகவாஸியாய் இருக்கிறான்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் - நான்காவது கண்டமான காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான வாஹிகாக்யானத்துடன் கங்கையின் மஹிமையின் வர்ணனம் என்னும் இருபத்தெட்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்தியாயம் 29

*அகஸ்தியர் கேட்கிறார்; கங்கா ஸ்னானம் இல்லாவிட்டால் மனிதனுடைய ஜன்மம் வீண் என்று கூறினீர்களே, அப்போழுது அதற்கு வேறு உபாயமே கிடையாதா! அப்படிப்பட்ட உபாயத்தினால் ஸ்னான பலன் கிடைக்காதா?*

*சக்தியில்லாதவன், நொண்டி, சோம்பேறி, தூரதேசத்திலிருப்பவன் இவர்களுக்கு எப்படி கங்கா ஸ்னான பலன் கிடைக்கும்!*

*ஹே! ஷண்முக! எதனால் கங்காஸ்னான பலன் ஏற்படுமோ, அந்த மாதிரியான தானம், தவம், வ்ரதம், மந்திரம், ஸ்தோத்திரம், ஜபம், அந்யதீர்த்தங்களில் ஸ்னானம், மற்ற தேவதைகளின் உபாஸனைகள், முதலிய அந்ய கர்மாக்கள் செய்தால் அந்தப் பலன் கிடைக்காதா? வணங்கும் எனக்கு அதைப்பற்றிக் கூறுங்கள்.*

*ஹே! மகாபுத்திமானே! ஸ்கந்த! நீங்கள் கங்கையின் கர்ப்பத்தில் பிறந்திருக்கிறீர்கள். அதனால் ஸ்வர்க்க தரங்கிணியான கங்கையின் மஹிமை உங்களைத் தவிர வேறு ஒருவருக்கும் அவ்வளவாகத் தெரிந்திருக்க நியாயம் இல்லை.*

*இந்த உலகில் புண்ணியமான ஜலத்துடன் கூடிய கங்காஸ்னான கட்டங்கள் ஸரோவரங்கள் இருக்கின்றன. ஸ்தான ஸ்தானமாக; ஆத்மாவை ஜயித்த ஜனங்களால் அனுஷ்டிக்கப்பட்ட எத்தனையோ தீர்த்தங்கள் உள்ளன .*

*ஆனால் ப்ரத்யக்ஷபலன் தருவதாக இருந்தாலும் மஹிமை பொருந்தியதாக இருந்தாலும் இந்த கங்கைக்குக் கோடியில் ஒரு பங்கு கூட அவைகள் வராது என்று ஸ்கந்தர் கூறினார். கும்பமுனியே! அதிகமாக என்ன கூறுவது? இதிலிருந்து தெரிந்து கொள். தேவ தேவனான சம்புவே அவளை சிரஸில் தரித்துக் கொண்டிருக்கிறார்.*

ஜனங்கள் வேறுதீர்த்தங்களில் ஸ்னானம் செய்யும் போது கூட கங்கையையே நினைத்துக் கொள்கிறார்கள். இந்த விஷ்ணு பாதத்திலிருந்து பெருகும் கங்கையைவிட பாபங்களைப் போக்கடிக்க வேறு தீர்த்தங்கள் வல்லது.

திராக்ஷைப் பழத்தின் ருசி திராக்ஷைப் பழத்திற்குத்தான் உள்ளதல்லவா. அதுபோல் கங்காஸ்னான பலனை கங்கை மாத்திரம்தான் தரமுடியும். மற்ற தீர்த்தங்களால் தரமுடியாது. ஆனால் கங்கா ஸ்னான பலன் பெறுவதற்கு வேறு ஒரு உபாயம் இருக்கிறது. ஆனால் அது மிகவும் ரஹஸ்யமானது.

அந்த உபாயத்தினால் , சிவபக்தர்கள், சாந்தன், விஷ்ணு பக்தியில் தத்பரனாக இருப்பவர், ஆஸ்திகன் இவர்கள் கர்ப்பவாசத்திலிருந்து விடுபடுவார்கள். இந்த மஹாபாதகநாசனமான ரஹஸ்யமான விஷயத்தைக் கூறுவேன்.

ஆனால் அதை எங்கும் ஒரு பொழுதும் ஒருவரிடத்திலும் வெளியிடலாகாது. அது மிகவும் மங்களகரமானது; புண்யமானது; பரமமனோரதங்களை பூர்த்தி செய்யவல்லது, கங்கையின் பிரதிநிதி; சிவனுக்கு பரம ஸந்தோஷத்தைக் கொடுக்க வல்லது.

ஸ்துதி சக்கரவர்த்தியானது; சோபமான கங்காவின் ஆயிரம் நாமங்கள் உன்னால் ஜபிக்கத் தகுந்தது; ச்ரேஷ்டமானது.

வேதங்கள் உபநிஷதங்களுக்கு ஸமமாக இந்த ஸஹஸ்ர நாமத்தை ப்ரியத்துடன் மௌனமாக பவித்ரமான இடத்தில் மிகவும் ஸ்பஷ்டமான அக்ஷரங்களினால் பிறருடைய உதவியில்லாமல் தானே பவித்ர எண்ணத்துடன் ஜபம் செய்ய வேண்டும்.

ஸ்கந்தர் கூறினார். கங்காதேவிக்கு நமஸ்காரம். ஓங்கார ரூபிணி, அஜரா, அதுலா, அனந்தா, அம்ருதஸ்ரவா, அத்யுதாரா, அபயா, அசோகா.

அளகநந்தா, அமிர்தா, அமலா, அனுதவத்ஸலா, அமோகா, அபாமாயோனி, அமிர்தப்ரதா, அவ்யக்தலக்ஷணு, அக்ஷோப்யா, அனவச்சின்னு, அபராஜிதா, (நாமம் 30)

அனுதநாதா, அபீஷ்டார்த்தஸித்திதா, ஆனந்தவர்திநீ, அணிமாதிகுண ஆதாரா, அக்ரகண்ய, அலீகஹாரிணீ, அசிந்தேஸ்யசக்தி, அனகா, அற்புதரூபா, (நாமம் 30)

அகஹாரிணீ, அத்ரிராஜஸுதா, அஷ்டாங்கலோக சித்ரப்ரதா, அச்சுதா, அக்ஷுண்ணசக்தி, அச்சுதா, ஆனந்ததீர்த்தா, அமிர்தோதகா, ஆனந்தமஹிமா, அபாரா, (நாமம் 40) ஆனந்த ஸௌக்யப்ரதா, அசேஷதேவதாமூர்த்தி, அகோர அம்ருதரூபிணீ, அவித்யா ஜாலசமனீ, அப்ரத அர்க்யகதிப்ரதா,

அசேஷவிக்ன ஸம்ஹர்த்ரீ, அசேஷகுணகும்பிதா, அக்யானதிமிரஜ்யோதி (நாமம் 50) அனுக்ரகபராயணு; அபிராம, அனவத்யாங்கீ, அனந்தஸாரா, அகளங்கிணீ, ஆரோக்யதா, ஆனந்தவல்லீ ஆபன்னார்தி விநாசினீ;

அர்க்கிய மூர்த்தி, ஆயுஷ்ய, ஆட்யா, ஆப்ர, ஆர்யஸேவிதா, ஆப்யாயினி, ஆத்மவித்யா, ஆக்யா, ஆனந்தா, ஆஸ்வாஸதாயினி, ஆயஸ்யக்னி; நாமம் 70) ஆபதாம்ஹந்த்ரீ, ஆனந்தாம்ருதவர்ஷிணி; இஷ்டதாத்ரீ; இஷ்டா இஷ்டாபூர்த்தபலப்ரதா, இதிஹாஸ ஸ்ருதீயார்த்த இஹாமுத்ரபலப்ரதா, இஜ்ஜாசீலா, ஸமீஜேஷ்டா, இந்த்ராதிபதிவ்ரதா, (நாமம் 80)

இலாலங்காரமாலா, இத்தா, இந்திரா, ரம்யமந்திரா, இந்திராதி ஸம்ஸேவ்யா, ஈஸ்வரீ, ஈஸ்வரவல்லபா, இதிபீதிஹரா, ஈட்யா ஈடனியா, க்ஷயித்ரபிருது, (நாமம் 90) உத்க்ருஷ்ய சக்தி, உத்க்ருஷ்டா, உடுப்ப மண்டலதாரிணி, உதிதாம்பாமார்கா, உஸ்ரா, உரலோகவிஹாரிணீ, ஊர்வரா, உத்பலா, உத்கும்பா, (நாமம் 100)

*உபேந்த்ரசரணத்வா, உதன்வத்பூர்த்திஹேது, உதார உத்சாகப்ரவாதினி, உத்வேகக்னி, உஷ்ணசமனி, உஷ்ணரஸமிசுதாப்ரியா, உத்பத்தி ஸ்திதிஸம்ஹாரகாரிணீ, ஊர்ஜம்வஹந்தீ, (நாமம் 110) ஊர்ஜதரா; ஊர்ஜாவதி, ஊர்மிமாலினி,*

*ஊர்த்வரேதப்ரியா, ஊர்த்வாதிவா, ஊர்மிளா, ஊர்த்வ கதிப்ரதா, ரிஷிவிருந்தஸ்துதா, ருத்தி, ரணத்ரய விஞசினி, (நாமம் 120)*

*ரிதம்பரா, ரித்திதாத்ரி, ரிக்ஸரூபா, ருஜுப்ரியா, ரிஷ்ஷமார்க்கப்ரதா, ரிக்ஷ்க்ஷரர்சி, ருஜுமார்க்கப்ரதர்சினி, ஏதிதிகில தர்மார்த்தா, ஏகா, ஏகாம்ருததாயினி, (நாமம் 130) ஏதனீயசுபா, ஐந்தீவித்யதீ, ஒஜஸ்வினி, ஒஷதீக்ஷேத்ரா, ஒஜோதா (நாமம் 140) ஒதனதாயினி, ஒஷ்டாம்ருதா;*

*ஔன்னத்யதாத்ரீ, ஔஷதம், பவரோகிணும், ஔதார்யசஞ்சுரா, ஔபேத்ரி, ஔக்ரி, ஔமேயரூபிணி, அம்ராத்வஹா, அம்வஷ்டா, (நாமம் 150) அம்பரமாலா, அம்புஜேக்ஷணா அம்பிகா, அம்புமஹாயோனி, அந்தோதா, அந்தாக்ஷதாரிணி,*

*அம்சுமாலா, அம்சுமதீ, அங்கீக்ருதா, ஷடானன, அந்த தாமிஸ்ரஹந்திரீ, (நாமம் 160) அந்தூ, அஞ்சஞு, அஞ்சஞுவதி, கல்யாண காரிணி, காமீயா, கமலோத்பயகந்தினி, குமத்யுதி, கமலினி, காந்தி, கல்ப்பிதாயினி, (நாமம் 170)*

*காஞ்சலாக்ஷி, காமதேனு, கீர்த்திகிமுதா, க்லேசநாசினீ, க்ரதுச்ரேஷ்டா, க்ரதுபலா, கர்மபந்தநிவேதனி: கமலாக்ஷீ, க்லமஹரா, க்ருசானுதபனத்யுதி, (நாமம் 180) கருணுப்த்ரீ, கல்யாணி, கலிகல்மஷநாசினீ, காமரூபா, க்ரியாசக்தி, கமலோத்பலமாலினீ, கூடஸ்தா, கருஞு, கந்தா, கூர்ஷமயாஞு, (நாமம் 190) கமலாவதி*

*கமலா, கல்பலதிகா, காளீ, கலுஷவைரிணீ,*

*கமனீயஜ்வாலா, கம்ரா, கபர்தி, சுகபதர்கா, காலகூடப்ரசமனீ, கதம்பகுஸுப்ரியா, (நாமம் 200) காலிந்தீ, கேலிலலிதி); கலகலலோபமாலிகா, க்ராந்த லோகத்ரயா கண்டூ: கண்டூதயை, வத்ஸலத, கட்கினீ கட்கதாராபா, ககா, கண்டேந்துதாரிணி, (நாமம் 210)*

*கேகேலகாமினீ, கஸ்தா, கண்டேந்து திலகப்ரியா, கானதன; கந்தர்பஸந்தோஹா, (220) கட்க கட்வாங்க சேடினீ, கரஸந்தமா நாசினீ, கனிபீயூஷபாதரஸம், கங்கா, கந்தவதீ, கௌரீ, கந்தர்வ நகரப்ரியா, கதிப்ரியா, கணநாதாம்பிகா, கத்யபத்யபரிஷ்டுதா, கம்பீராங்கி, குணமயி, ஸுதாதாங்கி, கீதா.(230) காந்தாரீ, கர்பசமனீ, கதிப்ரஷ்ட்டா, கதிப்ரதா, கோமதீ, குஹ்யவித்யா கௌரி கோப்த்ரீ, ககனகாமினி, கோத்ரப்ரவர்தினி, குண்யாணண குணதீதா, குணச்ரணி, குஹாம்பிகா, கிரிஸுதா, கோவிந்தாங்க்ரி, ஸமுத்பவா, குணநீயசரித்ரா, (250) காயத்ரீ, கிரிசப்ரியா, கூடரூபா, குணவதீ, குர்வீ, கௌரவர்தினி;*

*க்ரஹபீடஹாரா, குந்தரா, காக்னி, கானவத்ஸலா (260) கர்மஹந்த்ரி, க்ருதவதி, க்ருதுஷ்டிப்ரதாயினி; கண்டீரவப்பிரியா, கோரகௌசவித்வசகாரிணீ, க்ராணதுஷ்டிகரீ, கோஷாசஞனந்தா கனப்ரியா,*

*கதுகா, (270) கூர்ணத்ஜலா, க்ருஷ்ட்டபாதகஸந்ததி, கடகோடிப்ரியா, கடகோடிப்ரபீதாபா, கடிதாசேஷமங்களா க்ருஞவதி, கருணநிதி, கஸ்மரா, கூகநாதினீ, க்ருஸ்ருணர்ப்பிஞ்ஜாதனு; கர்காரா, (280) கர்காஸ்வரா,*

*சந்த்ரிகா! சந்த்ரகாந்தாம்பூ, சஞ்சதாபா, சலத்யுதி, சின்மயீ, சிதிரூபா, சந்த்ராயத சதாஞ ‘சாம்பேயலோசஞ, சாரு, (290) ஸர்வாங்கீ, சாருகாமினிசார்யா, சாரித்ரநிலயா, சித்ரக்ரது, சித்ரரூபிணி,*

*சம்பூ, சந்தன சுச்யம்பூ, சர்சநீயா, சிரஸ்திதா (300) சாரு*

*சம்பகமாவாட்யா, சமிதா, சேடிதுஷ்க்ருதா, சிதாகாசவஹா, சிந்தயா சஞ்சசாமானீதா, சோரிதாசேஷவிரஜிஞு, சரிதா சேஷ மண்டல:*

*சேதிதாகில பாபௌகா, சத்மக்னி (310) சலஹாரிணி, சன்னத்ரி விஷ்டபதல சோடிதா சேஷபந்தன, சுரிதாம்ருதரலௌகா சடீக்ருதநிஜாம்ருகா,*

*ஜான்னவீ, ஜ்யா (320) ஜகன்மாதாஜய்யா, ஜங்காலவீசிகா ஜயா, ஜஞர்தனப்ரீதா, ஜுஷணீயா, ஜகத்திதா. ஜீவஞ, ஜீவனப்ராஞ, ஜகத் (330) ஜ்யேஷ்டா, ஜகன்மயீ, ஜீவஜீவாதுலதிகா, ஜன்மி, ஜன்ம நிபர்ஹணி.*

*ஜாட்யவித்வம்ஸநகரீ, ஜகத்யோனி: ஜலலீலா, ஜகதானந்த ஜனனீ, ஜலஜா, ஜலஜேக்ஷஞ, ஜனலோசஞ, பீயுஷா ஜபாதடவிஹாரிணீ, ஜயந்தி ஜஞ்ஜபூகக்னி, ஜனிதஞான விக்ரஹா,*

*ஜல்லரீவாத்யகுசலா, ஜலஜ்ஜாலஜலாவ்ருதா, ஜிண்டீசவந்த்யா ஜங்காரகாரிணி, ஜர்ஜராவதி, (350) டீகிதாகிலபர்தாலா, டங்கிகைட, ஹோத்ரிபாடனே, டங்காநிருத்யகல்லோலா, டீசநீய மகாதடா, டம்பாம்ரவஹ, டீனராஜஹம்ஸகுலா, குலா, டமடமரு ஹஸ்தா, டாமரோக்தமகாண்டகா*

*டௌகிதாக்ஷே நிர்வாஞ, டக்காநாத ஜலஜ்ஜலா (370) டுண்டிவிக்னேஸஜனனி, டண்டணிதபாதகா.*

*தர்பணீதீர்த்த தீர்த்தா, த்ரிபதாத்ரிதேஸவரி, த்ரிலோசகோத்ரி, தோயேசி, த்ரைலோக்ய பரிவந்திதா, தாபத்ரயஸம்ஹர்த்ரி*

*தோஜாபவ விவர்தினீ, த்ரீலக்ஷாரிணீ, நாரதாராபதி கார்சிதா,*

*த்ரைலோக்ய பாவனீ, புண்யா, துஷ்டதா, துஷ்டிரூபிணீ, த்ருஷ்ஞசேத்ரீ, தீர்த்தமாதா, (380) த்ரிவிக்ரம பதோத்பவா, தபோமஸி, தபோரூபா,*

*தபஸ்தோம பலப்ரதா; த்ரைலோக்யவ்யாபினி, த்ருப்திதி, திருப்திக்ருத், தத்வரூபினீ,*

*த்ரைலோக்ய சுந்தரீ, துர்யா (390) துர்யாதீத பயப்ரதா, த்ரைலோக்ய லக்ஷ்மீ த்ரிபதி தத்யா, திமிரசந்த்ரிகா; தேஜோகர்ப்பா, தபஸ்ஸாரா, த்ரிபுராரி, சிரோக்ருஹா, தரயீஸ்வரூபிணி, தந்தலீ.(400) தபனுங்கபீதிறுது.*

*த்ரிதாஸிஜா, மித்ரிதர்மிதா, கோடிபூர்வஜா, துலாவிரஹிதா, தீவ்ரப்ரபாப, துராவாப்யா, த்ராக்ஷா மதுரா, வாரிப்ருது.*

*தர்சிதானே கருதுகா, (410) துஷ்டதுர்ஜய துக்கக்ருது, தைன்யக்ருது, துரிதக்னி, தானவாரிபதாப்ஜா, தந்த சூகவிஷக்னி, தாரித்ரகௌக சந்ததி, (420) த்ருதா, தேவ த்ருமச்சன்னு, துர்வாரகா, விகாதினி.*

*தமக்ராஹ்யா, தேவமாதா, தேவலோகப்ரதர்சனி. தேவ தேவப்ரியா, தேவி, திக்பாலபததாயினி,*

*தீர்க்காயு காரிணி (430) தீர்கா, தூஷணவர்ஜிதா, துக்தாம் பூவாகினி, தோஹ்யா, திவ்யா, திவ்யகதிப்ரதா, த்யூஜதி, தீனசரணு, தேஹிதேஹறிவாரிணி, (440) த்ராஹியஸி, தாஹேந்த்ரி, திதபாத சந்ததி: தூரதேசாந்த்ரசரீர, துர்கமா தேவவல்லபா, துர்வ்ருத்தக்னி, துர்விகாஹ்யா, தயாதாரா, தயாவதி,(450)*

*துராஸதா, தானசீலா, திராவிணி, த்ருகிணஸ்த்தா. தைத்யதான வாசம் சுத்திகர்த்திரி, துர்புத்திஹாரிணி. தானசார, ரயாசாரா, த்யாவாபூமி விகாஹானி, திருஷ்டா, அத்ருஷ்டா, பலப்ராப்தி, தேவதா வ்ருத்த வந்திதா; (460) தீர்க்கவ்ருதா, தீர்க்க திருஷ்டி, தீப்தோதயா, துராலபா, தன்யித்ரீ, தண்டநீதி, துஷ்டதண்டதரார்ச்சிதா,*

*தூரேதரக்னி, தாவார்சி (470) த்ரவ்யவ்யஸேவதி, தீனஸந்தாபசமனீ, தாத்ரீ, தவதூவைரிணீ,*

*த்ரிவிதா, தீனசந்தாடசமனி, தாத்ரீ,*

*த்ரிவிதாரணப்பரா, தாந்தா, தாந்தஜனப்ரியா, தாரிதாத்ரிதடாதுர்ஜா, (480) துர்வாரணயப்ரசாரிணி, தர்மத்ரவா, தர்மத்துரா, தேனூ, தீரா,த்ருதி, துர்வா, தேனுதானபலப்ரஸ்ஸா, தர்ம காமார்த்த மோக்ஷதா,*

*தர்மோர்மிவாகினி (490) துர்யா, தாத்ரீ, தாத்ரீ விபூஷுணு, தர்மிணீ, தர்மசீலா, தன்விகோடி, க்ருதாவனு, த்யாத்ரு பாபஹர, த்யேயா, தாவனி, தூதகல்மஷா, (500) தர்மதாரா, தர்மசாரா, தனதா, தனவர்த்தினீ,*

*தர்மாதர்ம குணச்சேத்ரீ, தத்தூரகுஸுமப்ரியா, தர்மேஸி, தர்மசாஸ்த்ரகஞா, தனதான்ய சமர்த்திக்ருது*

*தர்மலப்யா, (510) தர்மஜலா, தர்மப்ரஸவ தர்மிணீ, த்யானகம்யா ஸ்வரூபா, தரணீ தாத்ருபூஜிதா*

*தூர்தூர்ஜடீஜடாஸம்ஸ்தான்யா, தீ, தாரணுவதீ, (520) நந்தா, நிர்வாணஜனனீ, நந்தினீ, துன்னபாதகா*

*நிஷிலிக்னவிஜயா, நிஜாநந்தப்ரகாசினி, தர்மோஸ்கணச்சரி, நூதி, நம்யா: நாராயணி, (530) நுதா, நிர்மலா, நிர்மாக்யாணு, தாரசம்பதா, நாசினி, நியதா, நித்யசுகதர, நாணுஸ்சர்யமஹாநிதி,*

*நதீநதசரோமாதா, நாயிகா, (540) நாகதீர்க்கிஹா, நஷ்போத்தரணதீரா, நந்தனு நந்ததாயினி, நிரணிக்காசேஷபுவனு, நிஸ்சல்கா நிருபத்ரவா, நிராலம்பா, நிஷ்ப்ரபஞ்சா, நிருநாத மஹாமலா, (550)*

*நிர்மலரந்தஜனனீ, நிஸ்ஸேப்ராணிதாபக்ருது, நித்யோத்ஸவா, நித்யபதிருப்தா, நமஸ்கார்யா, நிரஞ்சனு,*

*நிஷ்டாவதி, நிராதங்கா, நிர்லேபா, நிஸ்சலாத்மிகா (560) நிரவத்யா. நிரிஹர, நீலலோகிதமூர்தஹா, நந்திப்ருங்கி கணஸ்துத்யா, நாகா, நனத்தா, நாகாத்மஜா, நிஷ்ப்ரத்யூகா, நாகநந்தி, நிர்யார்ணவதீர்கநௌஹு, (570)*

*புண்யப்ரதா, புண்யகர்பா, புண்யா, புண்யதரங்கணீ, பிருது; ப்ருதுபலா, பூர்ணு, ப்ரணுதார்த்தி ப்ரபஞ்சனீ*

*ப்ரணீதா, ப்ராணிஜனனீ (580) ப்ராணேசி, ப்ராணரூபிணீ, பத்மாலயா, பராசக்தி, புரஜித், பரமப்ரியா,*

*பராபரபலப்ராப்தி, பாவனி, பயஸ்வினி, பரானந்தா, (590) ப்ரகிர்ஷ்டார்தா, ப்ரதிஷ்டா, பாலனி, பரா புராணபடிதா,*

*ப்ரீதா, ப்ரணவாக்ஷரரூபிணீ, பார்வதீ, ப்ரேமஸம்பன்னு, பசுபாசவிமோசனீ, பரமானந்த நிஷ்பந்தா, ப்ரியஸ்சித்தஸ்வரூபா, (600) பரம்மகாரிணி பரமானந்த நிஷ்டந்தா, ப்ரியஸ்சித்தஸ்வரூபிணி,*

*பானீயரூப நிர்வாணு; பாரித்ராணுபாராயணு, பாபேந்தனுதஜ்வாலா, பாபரீ, பாபநாமநுது, பரமைஸ்வர்யஜனனீ, (610) பரக்ஞா, பராக்ஞா, பராபரா, பரத்யக்ஷலக்ஷ்மீ, பத்மாக்ஷீ, பரவ்யோமா, மிர்தஸ்ரவா,*

*ப்ரஸன்னரூபா, ப்ரணதீ, பூதா, ப்ரத்யக்ஷதேவதா, (620) பிளுகிபரம்ப்ரீதா, பரமேஷ்வடிகமண்டலு, பத்மநாபா, பதார்கேணப்ரஸுதா, பத்மமாலின், பரார்திதா, பத்யா, பூர்த்தி, பராபாவதி, புளுனா, (630) பீதகர்பக்னி, பாபபர்வதநாசினி, பாலினி, ப்ரஹஸ்தா, புல்லாம் புஜவிலோசனு, பாலிதமஹா க்ஷேத்ரா, பணிலோகவிபூஷணு, பேனச்சலப்ரம் தைனு, புல்லகைரவகந்தினி, பேனிலா சாம்புதாராபர, (640) புடுசாட்டிதபாதகா, பாணிதாஸவாது சலிலா, பாண்டபத்ய ஜலாவிலா,*

*விஸ்வமாதா, விஸ்வேசி, விஸ்வா, விஸ்வேஸ்வரப்ரியா, ப்ரும்மண்யா, ப்ரும்மக்ருது, ப்ராம்மி, (650) ப்ரம்மிஷ்டா, விமலோதகா, விபாவரி, விரஜா, விக்ராந்தானேகவிஷ்டபா, விஸ்வமித்ரா விஷ்ணுபதி, வைஷ்ணவீ, வைஷ்ணப்ரியா, விரூபாக்ஷப்ரியகரீ, (660) விபூதி, விஸ்வதோமுகி, விபாகா வைபுதி, வேத்யா, வேதாக்ஷரஸஸ்ரவா,*

*வித்யா, வேகவதி, வந்த்ய, ப்ரும்மணி,*

*ப்ரும்மவாதினி, (670) வரதா, விப்ரக்ருஷ்டா, வரிஷ்டா, விசோதினி, வித்யாதரி விசோகா, வயோவிருத்த நிஷேவிதா, பஹீதகபலவதி. (680) வ்யோமஸ்த்தா விபுதப்ரியா.*

*வாஸிவேதவதி, வித்தா, ப்ரும்மவித்யா, தரங்கிணி ப்ரும்மாண்ட கோடி வ்யாத்தாம்பு. ப்ரும்மஹத்யாப ஹாரிணி, (விலாஸிஸுகதா, வைஸ்யா,) வ்யாபினி, வ்ருஷாரஸி, ப்ரும்மேசவிஷ்ணு ரூபா, புத்தி (690) விவர்த்தினி.*

*வ்ருஷாங்க மௌலி, நிலயா, விபன்ஞர்த்திப்ர பஞ்சனி, விந்தா, விந்தா, விந்தா, ப்ரத்னதயா, (700) விநயான்விதா, விபஞ்சி, வாத்யகுசலா, வேணு கிருதி விசக்ஷுணு, வசஸ்கரி, பலகரி, பலோன் மூலிதகல்மஷா விபரப்மா, விகதாந்தகா, விகல்ப்ப பரிவர்ஜிதா, (710) வ்ருஷ்டிகர்த்ரி 'வ்ருஷ்டிஜலா, விதி விச்சின்ன பந்தனு!*

*விபாவஸு விஜயா, விஸ்வபீஜா, வாமதேவி, வரப்ரதா, வ்ருஷாகிரிதா, வஸுக்னீ,விக்ஞானேர்மியம், ஸுமாலினீ,*

*பவ்யா, போகாவதீ, பத்ரா, பாவாநீ, பூதபாவினீ, பூததாத்ரீ, பயஹரா, பக்ததாரித்ரிஹாரிணி புக்தி முக்திப்ரதா, பேசி, பக்தஸ்வர்காபவர்கதா, பாகீரதி, (740)பானுமதி, பாக்யா; போகவதிப்ருதி, பவப்ரியா, வக்ரா, பூதபவ்ய பவத்ப்ரபு (750)*

*ப்ராந்தி ஞானப்ரசமனி, பின்னப்ரம்மாண்ட மண்டபா, பூரிதா, பக்திஸுலபா, பாக்யத்ருஷ்டி, கோசரி,*

*பஞ்சிதோப ப்லவகுலா, பக்ஷ்யபோஜ்ய ஸுகப்ரதா, பிக்ஷுஸிபிக்ஷுணியா, பிக்ஷுமாதா, பாவா, (760) பவஸ்ரூபிணி. மந்தாகினீ, மஹானந்தா, முதாகரீ, முனிஸ்துதா, (770) போகஹந்த்ரி, மஹாதீர்த்தா, மநுஸ்வா, மாதரி, மாலினி, மான்யா, மனேரதபதாவிஸா.*

*மோகதாமுதிதா முக்யா, (780) மகாமகிமபூஷணு*

*மகாப்ராவா, மஹதி, மீனசஞ்சலலோசனு, மகாகாருண்ய சம்பூர்ணு, மஹர்தி. (790) மஹோத்பலா, மூர்த்திமதி முக்திரமணி, மணிமாணிக்யபூஷணு, முக்தாகலாபரேபத்யா,*

*மனுேநயனநந்தின், மஹாபாதகவிஸிக்னி, தேவார்தஹசரிணி, மஹோர்மிமாலினி, முக்தா (800) மஹாதேவி, மனுேன்மணி, மஹாபுண்யோதயப்ராப்யா, மாயாதிமிரசந்த்ரிகா, மஹாவித்யா, மஹாமாயா, மஹாமேதா, மஹௌஷதா,*

*மாலாதரீ, மஹாபாயா, (810) மஹோரக விபூஷணீ, மஹாகோகப்ரமனி, மஹாமங்கள, மங்களா, மார்த்தாண்ட மண்டலச்ரி, மஹாலக்ஷ்மி, மதோஜ்சிதா, யஸஸ்வினி, யசோவினி, யசோதா, யோக்யா, யக்தாத் தமஸேவிதா, (820)யோகஸிதிப்ரதா, யாக்ஞா, யக்ஞேசபரிபூரிதா, யக்ஞேசி, யக்ஞபலதா, யஜனியா, லஸஸ்கரி, யமிஸேவ்யா யோகயோனி (830) யக்த புக்திதா, யோகஞானப்ரதா, யுக்தா, யாமத்யஷ்டாக யோகயுகு;*

*யத்ரிதாகௌக கஞ்சாரா, யமலோகநிவாரிணி, யாதாயாதப்ரசமனி, யாதனுநாமக்னநந்தினி, யாமினீச ஹிமாத்சோதா, யுகதர்மவிவர்ஜிதா (840)ரேவதி, ரசிக்ருது ரம்யா, ரத்னகர்பா ரமாரிதி, ரத்னுகர ப்ரேமபாத்ரா, ரஸக்ஞா, ரஸரூபிணி, ரத்னப்ரஸாதகர்பா, (850) ரமணீயதரங்கிணீ.*

*ரத்னுர்ச்சி, ருத்ராமணி, ராக்த்வேஷ விஞசினி, ரமா, ராமா, ரம்யரூபா, ரோகி ஜீவாத்ரூபிணி, ருசிக்ருது, லோசனி, (860) ரம்யா, ருசிரா, ரோகஹர்ணி. ராஜஹம்ஸா, ரத்னவதி ரதனகல் லோல ராஜிகா.*

*ரமணீயகரேகா, ருஜாதி, ரோகரோஷணி, ராகா. (870) ரங்கார்த்திலுமனி. ரம்யாரோலம்பாஹாரிணி, ராகிணி, ரஞ்சிதசிவா, ரூபாலாவண்ய சேவதி, லோகப்ரசு லோகவந்த்யா; லோலத்கல்லோலமாலினீ*

*லீலாவதி. (800) லோதபூமி, லோகலோசனசந்த்ரிகா, லேகஸ்ரவந்தி, லடபா, லகுவேகா, லகுவேகா, லகுத்வஹ்ருது; லாஸ்ய தரங்க ஹஸ்தா, லலிதா, லயபங்கிகா, லோகபந்து, லோகதாத்ரி, லோகோத்ரகஞார்ஜிதா.*

*லோகதர்யஹிதா லோகா, லக்ஷ்மி, லக்ஷணலக்ஷிதா, லீலாலக்ஷிதநிர்வாண, லாவண்யா அம்ருதவர்ஷிணி.*

*வைஸ்வரதி (900) வாஸவேட்யா, வந்த்யவ பரிஹாரிணி, வாஸுதேவாங்க்ரிரேணுக்ணி வர்ஜிரவஜ்ர நிவாரிணி.*

*சுபாவதி, சுபகலா, சாந்தி, சாந்தஜவல்லவா, குலினிசைவவயா (910) சீதளாம்ருதவாஹினி. சோபாவதீ சீலவதீ, சோஷிதாசேஷகில்பிஷாசரண்யா, சிவதா, சிஷ்ட்டா, சரஜனம்ப்ரஸு சிவாசக்தி (920) சசாங்கவிமலா, சமனஸ்வஸ்ருஸம்மதா, சமா, சமனமார்கக்னி சிதிகண்டமகரப்ரியா,*

*சசி, சுசிகரி, சேஷா சேஷசாயிபதோத்பவா, ஸ்ரீநிவாஸ்ருதி, (930) சிரத்தா, ஸ்ரீமதீ, ஸ்ரீ, சுபவ்ரதா, சுத்த வித்யா, சுபா வார்த்தர, கிருதானந்தா, கிருதிஸ்திதி. சிவேதரக்னி, சவரீ (940)*

*சாம்பரீரூபதாரிணீ, ஸ்மசான சோதனி. சாந்தா சாஸ்வது, சதத்ருதிஷ்டுதா, சாலினி, சாலிசோபாட்யா, சிகிவாஹன கர்ப்பது. சம்ஸநீயசரீத்ரா, சாதிதாசேவுபாதகா. (950) ஷட்குணைஸ்வர்யஸம்பன்ளு, ஷடங்கக்ருதிரூபிணி.*

*ஷண்டதாஹினி, ஸவிலா, ஷட்யான்னதனதிசதா, ஸரித்வாரா, ஸுரஸா, ஸுப்ரபா, ஸுரதீர்க்கிகா,*

*ஸ்வஸிந்து, ஸர்வதுக்கக்னி (960) ஸர்வ்வயாதி மஹௌஷதா, ஸேவ்யா, ஸதீ, ஸுக்தி ஸ்ந்தஸு ஸரஸ்வதீ, ஸம்பத்தரங்கிணீ, ஸதுத்யா, ஸ்தாணுமௌலிக்ருதாலயா. (970) ஸ்தைர்யதா, ஸுபகாஸாங்க்யா, ஸ்த்ரீஷு, ஸௌபாக்யதாயினீ.*

*ஸ்வர்க நிச்ரேணிகா; ஸுக்ஷ்மா, ஸ்வதா, ஸ்வாஹா, ஸுதா ஜலா, ஸமுத்ரரூபிணீ. (980) ஸ்வர்க்யா, ஸர்வபாதக வைரிணீ*

*ஸம்ருதாக ஹாரிணீ, ஸீதா, ஸம்வஸாராப்திதரண்டிகா, ஸௌபாக்யஸுந்தரீ, ஸந்த்யா, ஸ்வதா, ஸர்வஸாரஸமன்விதா, ஹரப்ரியா, ஹ்ருஷீகேசி, (990) ஹம்ஸரூபா, ஹிரண்மயி, ஹ்ருதாகஸங்கா; ஹிதக்ருது, ஹேவாககர்வ ஹ்ருது.*

*க்ஷேமதா க்ஷாஸிதா கௌக க்ஷரத்ரவித்ராவிணி க்ஷமா (1000) ஹே கும்பமுனியே, கங்கையினுடைய இந்த ஸஹஸ்ர நாமத்தை பஜனை செய்தால் ஒழுங்காக கங்காஸ்னானம் செய்த பலனைப் பெறுவான்.*

இந்த ஸஹஸ்ர நாமம் ஸர்வபாப விநாசனம். ஸமஸ்தவிக்ன நிவாரகம்; முழு ஸ்தோத்ரத்தையும் பாராயணம் செய்வதால் ச்ரேஷ்ட அசேஷ பவித்ரங்களுக்கும் பவித்ரனுவான்.

ச்ரத்தையுடன் பாடம் செய்வதால் நினைத்த பலனை அளிக்கும். நான்கு வர்ணத்தாருக்கும் உன்னதியளிக்கும். முநியே, இதை ஒருதரம் பாராயணம் செய்தால் ஒரு யாகம் செய்த பலன்.

எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்னானம் செய்தவன், எல்லா யக்ஞங்களிலும் தீக்ஷையெடுத்துக் கொண்டவனுக்கு என்ன நல்ல பலன் உண்டோ அதே பலன் இந்த ஸ்துதியை த்ரிகாலம் பாராயணம் பண்ணினவனுக்குக் கிடைக்கிறது.

ப்ரம்மன்! ஸமஸ்த வ்ரருதங்களையும் முழுமையாக அனுஷ்டித்து வந்தால் என்ன பலன் கிடைக்குமோ, அது நியமமாக இந்த ஸ்துதியை மூன்று காலம் படித்தவனுக்குக் கிடைக்கிறது.

எந்த தீர்த்தத்திலாவது ஸ்னானம் பண்ணும்போது ஒருவன் இதைப் படித்தால் மூவுலகும் செல்லும் கங்கை

கட்டாயம் ஸாந்நித்யமாக இருப்பாள்.

இந்த ஸ்தோத்திரத்தை விரும்பிப் படிப்பவர்கள் மங்களத்தை விரும்பினால் மங்களம், தனத்தை விரும்பினால் தனம், இச்சையை விரும்பியவனுக்கு இஷ்டசித்தி முமுக்ஷுக்கு மோக்ஷ பலன் கிடைக்கிறது.

பவித்ரமான உள்ளத்துடன் ச்ரத்தையுடன் ஒரு வருஷம் மூன்று ஸந்தியும் இதைப் படிப்பதனால் பிள்ளை இல்லாதவர்கள் புத்ரவான்களாவார்கள். ஒருவன் ச்ரத்தையுடன் இந்த ஸஹஸ்ர நாமத்தைப் படித்தால் அவனுக்கு அகால ம்ருத்யு ஏற்படாது. அக்னி, திருடன், ஸர்ப்பம் இவைகளால் பயம் ஏற்படாது.

கங்கா ஸஹஸ்ர நாம ஜபம் செய்து கொண்டு க்ராமாந்தரங்களில் யாத்ரை செய்பவர்களுக்கு யாத்ரையின் பலன்கள் ஸித்தியாகும்; விக்னமில்லாமல் தனது வீடு திரும்புவான்.

இந்த ஸ்தோத்திரத்தைப் பாடம் செய்து கொண்டு மற்ற ஸ்தானங்களுக்குச் சென்றால் திதி, வாரம், நக்ஷத்ரம், யோகம் இவைகளால் தோஷம் ஏற்படாது. இந்த கங்கா ஸஹஸ்ர நாமம் புருஷனுக்கு ஆயுளை விருத்தி செய்யும். ஆரோக்யத்தை அளிக்கும். ஸர்வ உபத்ரவங்களையும் நசிப்பிக்கும். ஸமஸ்த ஸித்திகளையும் அளிக்கும். ஸஹஸ்ர ஜன்மங்களாகச் சேர்த்து வைத்திருக்கும் பாபங்கள் கங்கா ஸஹஸ்ரநாமம் பாராயணம் செய்வதால் நாசமடைகின்றன.

ப்ரம்மஹத்தி, மதுபானம், மஹா பாபங்களை செய்தவனுடைய கூட்டாளி, கர்ப்ப நாசம், குழந்தைகளைக் கொல்லுதல் விச்வாஸத்ரோகி, விஷமளிப்பவன், நன்றி கெட்டவன், மித்ரத்ரோஹீ, கோ வதை செய்பவன் குருத்ரவ்யத்தை அபஹரிப்பவன் முதலிய மஹாபாதக உத்பாதங்கள் இவைகளைச் செய்தவர்கள், ச்ரத்தையுடன் கங்கா ஸஹஸ்ர நாம பாராயணம் செய்தால் இவைகளிலிருந்து விடுபட்டு முக்தியடைவான்.

ஆதிவ்யாதியினுல் பீடித்தவன், தாபத்தால் தபிப்பவர்கள், இந்த ஸ்துதியைப் படித்தால் ஸமஸ்த துக்கங்களிலிருந்தும் விடுபடுவார்கள். மனோ நியமத்துடன் பக்தியுடன் வருஷம் பூராவும் இந்த ஸ்தோத்திரத்தைப் படித்தால் அபீஷ்ட ஸித்தியடைவார்கள். ஸமஸ்த பாபங்களிலிருந்தும் விடுதலையடைவார்கள்.

ஸந்தேக ப்ராணி, தர்மத்வேஷி, டம்டன், ஹிம்ஸை செய்பவன் இவர்கள் அந்த:கரண சுத்தியுடன் பாராயணம் செய்தால் அவன் தர்மவானுவான்.

வர்ணுச்ரம க்ரமப்படி நடப்பவன், காமக்ரோதங்களை விட்ட ஞானிகள் என்ன பலன் அடைவார்களோ அந்த பலன் இந்த கங்கா ஸஹஸ்ர நாம பாடத்தினுல் கட்டாயம் கிடைக்கும்.

பத்தாயிரம் காயத்ரீ ஜபித்தால் ஏற்படும் பலன் இந்த ஸ்தோத்திரத்தை ஒழுங்காக ஒருமுறை ஜபிப்பதாலும் கிடைக்கும். ஸுக்ருத்களான வேத வேதார்த்தவாதிகளுக்கு என்ன புண்ணியம் கிடைக்குமோ அந்த ஸமஸ்த புண்ணியம் கங்கை ஸஹஸரநாமத்தை ஒருதரம் படித்தால் கிடைக்கும். இப்படி சாஸ்திரம் கூறுகிறது. ஸத்துகளான வேத வேத்தாக்களுக்கு என்ன புண்ணியம் கிடைக்குமோ, அவர்களுக்கு கன்றுடன் கூடிய பசுவை தானம் பண்ணினுல் என்ன புண்ணியம் கிடைக்குமோ அந்த ஸமஸ்த புண்ணியமும் கங்கா ஸ்தோத்திரத்தை ஒருதரம் ஜபித்தால் கிடைக்கிறது.

புருஷச்ரேஷ்டர்கள் வாழ்நாள் பூராவும் குருவுக்கு ஸேவைசெய்து என்ன புண்யம் ஸம்பாதிக்கிறுர்களோ அது வருஷம் பூராவும் ஸ்துதிராஜாவான இந்த ஸ்தோத்திரத்தை மூன்று வேளையும் ஜபிப்பாரானுல் அந்த புண்யத்திற்கு உரியவனுகிறுன். வேத பாராயணம் செய்வதனுல் என்ன புண்ணியம் கிடைக்கிறதோ அதே புண்ணியம் ஆறு மாதம் இந்த ஸ்தோத்ரம் செய்தால் கிடைக்கிறது. தினந்தோறுமே இந்த ஸ்தோத்ரத்தைப் படித்துவந்தால் பகவான் சிவனிடம்

ஆழ்ந்த பக்தி உண்டாகிறது. அல்லது விஷ்ணு பக்தனுகிறுன்.

ஒருவன் தினமும் கங்கா ஸஹஸ்ர நாமத்தை ஜபம் செய்தால் கங்கை எப்பொழுதும் அவனுடன் கூடவே இருக்கிறுள். இந்த ஜான்னவிஸ்தோத்திரத்தை பாடம் செய்வதால் எல்லாருமே பூஜிக்கத் தகுந்தவர்களாகவும், எங்கும் ஜயகோஷமாகவும் எல்லாருமே ஸுகபோகிகளாகவும் இருக்கிறுர்கள்.

ஒருவன் இந்த ஸ்தோத்ரத்தைப் பாடிக்கொண்டேயிருந்தானுனுல் அவன் ஆசார சீலனுகவும், தூய்மையள்ளவனுகவும் எல்லா தேவதைகளாலும் பூஜிக்கப்படுவான் என்று அறிய வேண்டும். அப்படிப்பட்ட ஒருவரை திருப்தி செய்வதனுல் ஜான்னவி தானே திருப்தி அடைந்து விடுகிறுள். இதில் ஸந்தேகமில்லை. அதனுல் எல்லா விதங்களிலும் கங்காதேவியை பக்தர்கள் பூஜிக்க வேண்டும்.

ஒருவன் கங்கா ஸ்தோத்திரம் படிக்கக் கேட்டானுனுல் அல்லது தான் படித்தானுகில் அல்லது டம்பமும் இல்லாமல் கங்கா பக்தர்களுக்கு சொல்வானுனுல் அவன் கர்மத்தினுலும் வாக்கினுலும் மனதினுலும் செய்யப்படும் மூன்றுவித தாபங்களும் தீர்ந்து உடனே பாபமில்லாதவனுகிறுன். பித்ருக்கள் ப்ரேமைக்குப் பாத்திரனுகிறுன்.

மேலும் எல்லா தேவதைகளுக்கும் பிரியமுள்ளவனுகிறுன். எல்லா ரிஷிகளும் அவனை மதிக்கிறுர்கள். கடைசியில் அவன் விமானத்தில் ஏறிக்கொண்டு ஸ்வர்க்கத்தில் திவ்ய பூஷணங்களை அணிந்து திவ்ய போகங்களை அனுபவித்துக் கொண்டு நந்தனம் முதலான வனங்களில் இஷ்டபடி தேவதைகளுக்கு ஸமானமாக ஆனந்தத்துடன் இருக்கிறுன்.

விசேஷமாக ச்ரார்த்த சமயத்தில் வரித்த பிராம்மணர்கள் போஜனம் செய்யும்பொழுது பித்ருக்களை திருப்தி அளிக்கும் பொருட்டு இந்த மஹா ஸதோத்ரத்தை ஜபம் செய்தால் பாத்திரத்தில் எவ்வளவு அன்னம் இருக்கிறதோ, அவர்கள் அருந்தும் ஜலபாத்ரத்தில் எவ்வளவு ஜலத்துளி இருக்கிறதோ அத்தனை வருஷ பரியந்தமும் ஸ்வர்க்க லோகத்தில் பித்ருக்கள் ஆனந்தமாக இருக்கிறார்கள்.

கங்கையில் பிண்டதானம் செய்வதனால் பித்ருக்கள் திருப்தியடைவதுபோல ச்ராத்தத்தில் இந்த ஸ்லோகம் கேட்டதினால் அவர்கள் திருப்தி அடைகிறார்கள். எந்த க்ருஹத்தில் இந்த ஸ்தோத்திரம் எழுதிவைத்து பூஜிக்கப்படுகிறதோ அந்த க்ருஹத்தில் பாபமே நுழையாது அந்த கிருஹம் எப்பொழுதுமே பவித்ரமாக இருக்கும்.

அகஸ்தியா, எவ்வளவு சொல்லுவது? என்னுடைய தீர்மானமான வார்த்தையைக் கேளும். இந்த விஷயத்தில் ஸந்தேஹமே இல்லை. ஏனென்றால் ஸந்தேஹப்படுபவர்களுக்குப் பலன் கிடையாது. உலகத்தில் எத்தனையோ நானாவிதமான தோத்திரங்களும் மந்திரங்களும் மலைபோல் மண்டிக் கிடக்கின்றன. அவைகளெல்லாம் ஒரு பொழுதும் இந்த கங்கா ஸஹஸ்ரமத்திற்கு ஸமானமில்லை.

ஒருவன் ஜன்மம் முழுவதும் கங்கா ஸஹஸ்ர நாமத்தைப் படித்துக் கொண்டிருந்தானானால் இவன் மகத தேசத்தில் மரணடைந்தாலும்கூட கர்ப்பத்தில் பிரவேசிக்க மாட்டான். ஒருவன் தினமுமே இந்த உத்தமஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்வதனால் அவன் இவ்வுலகில் எங்கு மரணமடைந்தாலும் அவனுக்கு கங்காதீரத்தில் மரணமடைந்த பலன் கிடைக்கும்.

புராண காலத்தில் பகவான் பரமேச்வரன் தன்னுடைய பக்தனை விஷ்ணுவிற்து முக்திக்கு வித்தான

அக்ஷரங்களுடன் சேர்த்த இந்த கங்காஸ்தோத்திர அரசை உபயோகித்தார்.

பகவதி பாகீரதி கங்காஸ்னுனத்துக்குப் ப்ரதிநிதியாக கங்கா ஸஹஸ்ர நாமத்தை உமக்கின்று கூறினேன். அப்படியே புத்திமான்களாகிய ஜனங்கள் கங்காஸ்னுனத்தின் அபிலாஷையிருந்தும் கங்கைக்கு வரமுடியாமல் போனுல் இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்யட்டும்.

இவ்வித ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான கங்கா ஸஹஸ்ர நாமஸ்தோத்ரம் அகராதி க்ஷகாரபர்யந்தம் க்ரமப்படிக்கு இருபத்தொன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 30

*ராஜரிஷிகளில் ச்ரேஷ்டரான அரசன் பகீரதன் ப்ராம்மண சாபத்திஞல் அக்னியில் வெந்து சாம்பலானுன். தனது பித்ருக்களை உத்தாரணம் செய்யும் பொருட்டு மஹாதேவரை உத்தேசித்து கோரமான தபஸ் மூலமாக த்ருபதகாமினியான கங்கையை இப்பூவுலகத்துக்குக் கொண்டு வந்தார் என்று கார்த்திகேயர் அகஸ்திய முனியிடம் கூறிஞர்.*

மூன்று உலகிற்கும் நன்மையை விரும்பும் அந்த நரபதி மணிகர்ணிகையில் கங்கையை அழைத்தார். லீலாமாத்ரத்திஞல் மோக்ஷத்தையளிக்கும் தாதாவான சம்புபகவானின் ஆனந்தகானனத்தில் விஷ்ணு பகவானுடைய சக்கரபுஷ்கரிணி பரப்ரம்ம ஸ்வரூபத்தினுடைய ப்ரதான க்ஷேத்ரமாகும். இந்த இடம் நிர்வாண பதவியை ப்ரத்யக்ஷமாகக் காட்டுவதான காசியென்னும், பெயரையுடைய ப்ரசித்தக்ஷேத்ரம். ஹே! முனியே! இது மஹாதேவரால் ஒருபொழுதும் விடப்படாத 'அவிமுக்த க்ஷேத்ரம்.' ஏற்கனவே விலைமதிப்பற்றது. இப்பொழுது கங்கையும் அதைச் சென்றடைந்ததஞல் உத்தமமான ஸ்வர்ணத்தில் நீரோட்டமுள்ள வைரத்தைப்பதித்தது போன்ருகிவிட்டது. பின் கேட்பானேன்? சக்கரபுஷ்கரிணீ தீர்த்தம் ஆதியிலிருந்தே மங்களகரமானது.

பிறகு பகவான் சங்கரருடைய மணிமயமான காதணியால் மிகவும் ச்ரேஷ்டமாகிவிட்டது. அதஞல் சிவனுடைய இருப்பிடமாகிய 'ஆனந்த கானனம்' என்னும் 'அவிமுக்த க்ஷேத்ரம்' ஸர்வதேவர்களுக்கும் முக்தியைக் கொடுப்பதற்கு ஸித்திபெற்ற போதிலும், கங்கா ஸங்கமத்திஞல் மேலும் ச்ரேஷ்டமாகி விட்டது. ஜீவர்கள் அநேக விதமான நல்லவையும் கெட்டவையுமான கர்மங்களைச் செய்து, காசியில் தேஹத்யாகம் செய்வாரேயாஞல் க்ஷணமாத்ரத்தில் கர்மபந்தனங்கள்

அறுந்து மோக்ஷ பதவியை அடைகிறுர்கள். இவ்விடத்தில் வேதாந்த வேத்ய ப்ரம்மசூத்திர நிதித்யாஸநம் செய்யாமலேயே, ஸாங்க்ய யோகபடனம் இல்லாமலேயே முக்திலாபம் ஏற்படுகிறது. அங்கேயோ கர்மபந்தனத்தைச் சேதிக்கும் ஞானத்துக்கும் பிரயோஜனமில்லை.

ஏனென்றுல் பகவான் சந்திரசேகருடைய அருளினுல் காசியில் மரணமடைந்தவுடனேயே, அம்ருதபதம் கிடைக்கிறது. முயற்சியுடனேயானுலும் சரி, அநாயாஸமரணமானுலும் சரி, காலதர்மானுஸாரம் சரீரத்தை த்யாகம் செய்துவிட்டு தாரகமந்தர உபதேசம் பெற்று, காசியில் உடனே மரித்தால் உடனே முக்தி, அநேக ஜன்மங்களில் சேர்ந்த ப்ருக்ருதியினுல் உண்டான குணதோஷ பந்தனங்களில் சிக்கியிருந்த போதிலும் அவைகளை வேருடன் அறுத்தெறியும் அஸி நதியின் ஸங்கமத்துடன் கூடிய வாராணஸியில் மரித்து மோக்ஷத்தை அடைகிறுர்கள். காசியில் தேஹத்தை விடுவதும் ஒரு தானம். தேஹத்தைத் த்யாகம் பண்ணுவதே தபஸ், தேஹத்யாகமே யோகம். இங்கு இதனுலேயே முக்தி கிடைக்கிறது. காசியில் மிகப்பெரிய பாகங்கள் கூட உத்தரவாஹினீயாகிய கங்கையினுல் தீரும்.

விளையாட்டாக ஆடிவந்த சரீரத்தை தியாகம் பண்ணினவுடனே விஷ்ணுபதத்தை அடைகிறுர்கள்; பூர்வகாலத்தில் யமன், இந்த்ரன், அக்னி முதலான தேவதைகள் எல்லோரையும் முக்தி மார்க்கத்தில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்துக் காசீபுரியைக் கீழ்க்கண்டவாறு அதன் எல்லையை வரையறுத்து ரக்ஷித்தார்கள். எப்படியென்றுல் அந்த தேவகணங்கள் அஸத்ய புத்தியைத் தொலைப்பதும் துஷ்ட எண்ணங்களைத்தொலைப்பதுமான வாளைப் போலத் தனது ஜ்வாலையால் ஜ்வலிக்கும் அஸி நதியை ஸ்ருஷ்டித்தார்கள்; மேலும் காசீக்ஷேத்ரத்திற்கு விக்னத்தை நிவர்த்திப்பதும் துர்நடத்தையுடைய ஜனங்களின் கெட்ட வ்யவகாரங்களைத் தடுப்பதற்காகவும், வருணை நதியை ஸ்ருஷ்டித்துக்

காசிக்குத் தென்வடக்கு திசையில் ஓடச்செய்தார்கள்.

இந்த விதமாக க்ஷேத்ரத்திற்கு முக்தியளிக்கக்கூடிய சக்தியைப் பாதுகாத்துத் தேவர்கள் பரமஸந்தோஷமடைந்தார்கள். பிறகு ப்ரபு சசிசேகரன் காசிக்ஷேத்திரத்தின் மேற்குபாகத்தை ரக்ஷை செய்யும் பொருட்டு துவார விநாயகர், தேகலி விநாயகருக்கு உத்தரவிட்டார். இந்த அஸிவருணு, தேகலி விநாயகர் இவர்களை விஸ்வேஸ்வரர் காசியில் வருவதற்கு ஆக்ஞையளித்திருக்கிருர். மற்றவர்களை நுழையக்கூட விடமாட்டார். இந்த விஷயமாகக் காசியைப் பற்றி ஒரு புராண இதிஹாஸம் ஒன்று இருக்கிறது. அதைக்கேளும். ஸ்கந்தர் கூறுகிருர்:- அகஸ்தியா! தக்ஷிணஸமுத்ர தடத்தில் ஸேதுபந்தனத்துக்கருகில் அன்னையிடம் பக்தியும் ப்ரேமையும் கொண்ட தனஞ்ஜயன் என்ற ஒரு வ்யாபாரி இருந்தான்.

அவன் பகவான் கிருஷ்ணனை மிகவும் பக்தியுடன் உபாஸித்து வந்தான். புண்ணிய வழியில் தனம் சேகரித்து தனத்திஞல் தரித்ரர்களை ஸந்தோஷப்படுத்தி வந்தான். யாசகர்கள் தங்களுடைய அபீஷ்டங்களை நிறைவேற்றும் அந்த வ்யாபாரியை தேசம்தோறும் புகழ்ந்து அவனுடைய ஐச்வர்யத்தை வ்ருத்தி செய்தார்கள். தனஞ்ஜயன் பணத்திஞல் மிக உன்னத நிலையில் இருந்தபோதிலும் விநயத்தால் வணங்கிய கழுத்துடையவஞக இருந்தான். ஸகல குணஸம்பன்னஞக இருந்தும் தனது குணங்களை வெளியாருக்குத் தெரியாமல் மறைத்து வைத்துக் கொள்வான்.

உருவமும் ஸம்பத்துக்கு மேல் நோக்கியே இருந்தாலும் பரஸ்த்ரீகளிடம் உதாஸீனமாக இருப்பான். எல்லாக் கலைகளையும் அறிந்தவஞக இருந்தாலும் கொஞ்சம் கூடக் களங்கமும், கர்வமும் இல்லாதவஞக இருப்பான். வியாபாரம் என்பது பொய்யும் மெய்யும் கலந்ததாக இருந்தாலும் பெரும்பாலும் அவன் ஸத்ய வழிலிலேயே,

நடந்து வந்தான்.

ஸுஹ்ருத்தான தனஞ்ஜயன் ஸதாசாரசீலன் ஆனாலும் ஸுகமானவாஹனங்களில் தான் செல்லுவான், அவன் தனத்தினால் மேதாவிதான்; தரித்ரன் இல்லை. இந்த குணஸம்பன்னனுடைய தாயார் மிகவும் தொண்டு கிழம். அத்துடன் வியாதியினால் பீடிக்கப்பட்டவள்; ஒரு சமயம் அவள் காலம் முடிந்து மரணமடைந்தாள்.

அவனுடைய அன்னை சரத்ருதுவின் மேகக் கூட்டத்தைப்போல் அதிசஞ்சலமாவும், வர்ஷா காலத்து நதியைப் போல் அஸ்திரமான யௌவன காலத்தில் தனது பதியை வஞ்சித்திருந்தாள். நாரி சில காலமே இருக்கும் யௌவனத்தினால், மதமடைந்து மோதத்தினால் பர்த்தாவை வஞ்சித்தாள். அதனால் அக்ஷயமான நரகில் வீழ்ந்தாள்.

ஸ்த்ரீகள் சீலமிழந்தால் அவர்களுடைய பதி தர்மாத்மாவானாலும் மிகவும் கஷ்டப்பட்டு ஸம்பாதித்த ஸ்வர்க்கத்திலிருந்து விழுகிறான். இதனால் ஸ்த்ரீகள் தங்கள் சரித்ரத்தைக் களங்கமற்றதாக வைத்திருக்க வேண்டும். (இல்லையானால் -) அந்தஸ்த்ரீ விஷ்டாக்ருது என்ற நரகில் விழுகிறாள். அதன் பிறகு பிரளயகாலம் வரை கிராமப்பன்றியாகத் திரிகிறாள்.

அல்லது வ்ருக்ஷங்களில் அதோ முகமாகத் தொங்கும் வௌவாலாகத் தொங்கி தனது மலத்தையே புஜிக்கும் பிராணியாகிறாள். இல்லா விட்டால் மரப்பொந்தில் பகலில் குருடாக இருக்கும் ஆந்தையாகப் பிறக்கிறாள். அதனால் ஸ்த்ரீ ப்ரயத்ன பூர்வமாக பரபுருஷனுடைய ஸ்பர்சத்திலிருந்து தன்னை ரக்ஷித்துக் கொள்ள வேண்டும்.

பதிவ்ரதையான நளாயினி பர்த்தாவிற்கு அர்ப்பணித்து அளித்த (பௌதிக சரீரத்தினால் ஆக்ஞையிட்டு உதயமாகும் ஸூர்ய நாராயணனைத் தடுத்து நிறுத்தவில்லையா? அத்ரி முனியின் பத்னி பரம பதிவ்ரதை அனசூயா பர்த்தாவிடம் கொண்ட பக்தியின் பெருக்கினால்

வேதஹ்ருதயரூபமான ஸோமன் தத்தாத்ரேயன், துர்வாஸர் இவர்களை கர்பத்தில் தரிக்க வில்லையா? ஸ்த்ரீகள் கற்புமஹிமையினால் இந்த லோகத்தில் விபுலமான கீர்த்தியும் ஸ்வர்க்கத்தில் நிரந்தர நாசமும், லக்ஷ்மிதேவிக்கு நிரந்தரத் தோழியாகவும் ஆகவில்லையா!

அந்த தனஞ்ஜெயனுடைய ஜனனீ துர்வ்ருத்தத்தினால் ஸனாதனமான பதிவ்ரதா தர்மத்துக்கு எள் தர்பணம் செய்து விட்டு இஷ்டப்படி வ்யபிசாரம் செய்த படியால் இறந்தபின் நரகையடைந்தாள்.

முனிவரே! தனஞ்ஜயன் இப்படிப்பட்ட ஸ்த்ரீகளிடம் பிள்ளையாகப் பிறந்தும் பாக்ய வசத்தால் சிவயோகியின் ஸத்ஸங்கத்தையடைந்து தபோபயனால் தர்ம தத்பரனாகத் திகழ்ந்தான்.

பிறகு அன்னையின் மரணத்துக்குப் பிறகு அன்னையின் மீதுள்ள பக்தியினால், தன் மாதாவின் எலும்புகளை எடுத்துக் கொண்டு முதலாவது அவைகளைப் பஞ்சகவ்யத்தால் சுத்தி பண்ணி பஞ்சாமிர்தத்தால் ஸ்னானம் செய்வித்து, பிறகு ரக்த சந்தனம் பூசி உத்தம புஷ்பங்களினால் பூஜித்தான். பிறகு சித்ரங்கள் நிறைந்த வஸ்திரத்தினால் மூடி பிறகு பட்டினாலும், பருத்தித் துணியினாலும், மூடி, மஜீடா என்னும் கொடியில் வரும் ரஸத்தில் (ரக்தவர்ணமுள்ளது) அதை நனைத்தான்.

அதற்கு மேலே நேபாள கம்பளத்தினால் மூடி சுத்த மண்ணினால் பூசி, அந்த வ்யாபாரி அன்னையின் அஸ்தியை செம்பு சம்புடத்தில் வைத்து, கங்கையில் விடுவதற்காக ஸேதுபந்தனத்திலிருந்து வடக்கு மார்கமாக ப்ரயாணப்பட்டான்.

அந்த வழியில் நீச ஜாதிகளுடைய ஸ்பர்சத்தைத் தவிர்த்து பவித்ரமாக ராத்ரியில் கட்டாந்தரையில் படுத்து, இப்படி நியமம் அனுஷ்டித்ததனால் தனஞ்ஜயனுக்கு ஜ்வரம் வந்துவிட்டது. அப்பொழுது அந்த ஸாமக்ரிகளை எடுத்துக்

கொண்டு தனியாக வழியில் போவது கடினம் என்று எண்ணினான். உசிதமான கூலி கொடுத்து ஒரு சுமையாளனைக் கூட்டிக் கொண்டான். ஹே கும்பமுனியே, நிரம்பச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? மிகவும் கஷ்டப்பட்டுக் காசியை அடைந்தான்.

பிறகு தனஞ்ஜயன் அங்கு வந்து தனது வஸ்துக்களைப் பார்த்துக் கொள்ளும்படி அந்த சுமையாளனை நியமித்து விட்டுக் கடைவீதியில் சாப்பாட்டுக்கான பொருள்களை வாங்கச் சென்றான். இதே ஸமயம் அந்த சமையாளன் அந்த மூட்டையில் நிறைய பணம் இருப்பதாக எண்ணி, மனிதர்கள் இல்லாத இடமாகச் சென்று, அந்த மூட்டையை அவிழ்த்து அந்தச் செப்பு ஸம்புடத்தை எடுத்தான்.

அந்த வியாபாரி தனஞ்செயன் தான் இறங்கியிருக்கும் இடத்திற்கு வந்து, சுமையாளனைக் காணமல் அங்குள்ள தனது மூட்டையைப் பார்த்தான். அதன் கட்டுகளை அவிழ்த்துப் பார்த்ததில் அவன் வைத்திருந்த சம்புடத்தைக் காணவில்லை.

அப்பொழுது அவன் மிகவும் கலக்கமடைந்து ‘ஐயோ, ஐயோ’ என்று கூறி மார்பிலும், வயிற்றிலும் அடித்துக் கொண்டு அழத் தொடங்கினான்.

அந்தச் சுமையாளனை நெடுநேரம் வரையில் இங்குமங்குமாக அலைந்து திரிந்து தேடத் தொடங்கினான். பிறகு தன்னிருப்பிடம் வந்தான். தனஞ்சயன் கங்கா ஸ்னானம் விஸ்வநாதர் தரிசனம் செய்யாமல் அந்தச் சுமையாளனைத் தேடிக் கொண்டு அவன் வீட்டிற்கு வந்தான்.

அந்தச் சுவையாளனோ காசியிலிருந்து வெளியே வந்து ஓர் அடர்ந்த வனத்திற்குள் புகுந்து அங்கு அந்த சம்புடத்தைத் திறந்து பார்க்க எண்ணினான். அவன் திறந்து பார்த்ததும் அதில் உள்ள அஸ்தி துண்டுகளைக் கண்டு நடு நடுங்கி அவைகளை அங்கு அப்படியே தூக்கி எறிந்துவிட்டுச் சென்றுவிட்டான்.

தாகத்தால் நாக்கு அண்ணுக்கில் ஒட்டிக் கொண்ட வியாபாரி மனவருத்தத்துடன் வழியில் ஒரு வீட்டிற்கு வந்தான், அங்கு ஒரு குடிசையின் கூறையின் மீது தன் சம்புடத்தைச் சுற்றி வைத்த துணியைக் கண்டு கொண்டான். பிறகு அதிலிருந்த ஸம்புடத்தைப் பார்த்தான்.

சற்று நம்பிக்கையுடன் அந்த வீட்டிலிருந்த சுமையாளனின் மனேவியிடம் மெல்ல விஞவிஞன். அம்மா உண்மையைச் சொல். ஒருவிதமான பயமும் வேண்டாம். நான் உனக்கு நிறைய பணம் தருவேன்.

எனது அம்மாவின் எலும்புகளேத் திருப்பித் தரவும். ஏ பெண்ணே! நாங்கள் யாத்ரிகர்கள், ஒருவருக்கும் தீங்கு செய்ய மாட்டோம்.

உன்னுடைய பதி அக்ஞானத்திஞல் லோபவசத்தஞகி எலும்புகள் வைத்திருக்கும் ஸம்புடத்தை எடுத்துவந்திருக்கிருன். இதில் அவன் பேரில் ஒரு குற்றமும் இல்லே. என்னுடைய அன்னே செய்த கர்ம வசத்தால் இப்படியாகி விட்டது.

அதுகூட அவளுடைய தோஷமென்பதில்லே. என்னுடைய மந்த பாக்யமே அப்படி நேர்ந்தது. மாதாவிற்குப் புத்ரன் கர்மம் செய்ய வேண்டுமென்று என் தலேயில் எழுதியிருக்கவில்லே.

நான் என்ஞல் முடிந்த மட்டும் முயற்சி பண்ணினேன். எனது துர் அத்ருஷ்டத்திஞல் அது ஸித்தியாகவில்லே. பின் என்ன செய்வது? உன் கணவன் எனக்குப் பயப்பட வேண்டாம். இங்கு வரச்சொல். அந்த எலும்புகளே எனக்குக் காட்டச் சொல். உனக்கு இன்னும் அதிகப் பணம் தருகிறேன் என்று கூறி அவளே மெதுவாக ஸமாதானம் செய்ய அந்த வேடுவச்சி தன் பதியிடம் கூறிஞள்.

அந்த மூட்டை தூக்கும் வேடன் லஜ்ஜையிஞல்

தாழ்ந்த தலையுடன் வியாபாரி, தனஞ்ஜயன் முன்னால் வந்து உள்ளது உள்ளபடி கூறி, அவனைக் காட்டிற்குள் அழைத்துச் சென்றான்.

ஆனால் விதிவசத்தால் எந்த இடத்தில் அந்த எலும்பை எறிந்தானோ அந்த இடம் அவனுக்கு மறந்து விட்டது. இடம் தெரியாத ப்ரமையினால் அவன் இங்குமங்கும் வளைய வந்து தேடினான். கடைசியில் ப்ரமை பிடித்த மனத்துடன் ஒரு வனத்திலிருந்து மந்றோர் வனம் சுற்றி வரும்போது மிகவும் களைத்துப் போய்விட்டான்.

அதனால் தனஞ்யனை அவ்விடமே விட்டுத் தான் மட்டும் வீடு வந்து சேர்ந்தான். தனஞ்ஜயன் இரண்டு மூன்று நாள் சுற்றிவிட்டு அதன் பிறகு பசி தாஹத்துடனும் உலர்ந்த தொண்டையுடனும், மிகவும் களைப்படைந்தவனாகி எப்படியோ காசீபுரி வந்து சேர்ந்தான்.

அங்குப் படித்தவர்களிடம் சொல்ல, அவர்கள் 'உன் தாயின் பாபமே இப்படியாயிற்று' என்று கூற அவன் மனம் ஒடிந்து கயாவிலும், ப்ரயாகையிலும் செய்ய வேண்டிய விதிமுறைகளைச் செய்து விட்டு ஊர் திரும்பிப் போனான்.

கேளும், அகஸ்திய முனியே! தனஞ்ஜயன் விபசாரியான அவனது அன்னையின் எலும்புகள் காசிக்குக் கொண்டுவந்தும் கூட விஸ்வேஸ்வரரின் உத்திரவு இல்லாததினால் அந்த க்ஷணமே வெளியில் எறியப்பட்டது.

இந்த விதமாக பாபிகள் காசிக்ஷேத்ரத்தை அடைந்தாலும் க்ஷேத்ரபலனை அனுபவிக்க மாட்டார்கள். விரைவிலேயே வெளியேற்றப்படுகிறார்கள்.

இந்த எல்லாக் காரணங்களிலும் நமக்குத் தெரியவருவது என்னவென்றால் காசியில் வசிப்பதற்கு விஸ்வேஸ்வரருடைய ஆணை வேண்டும். அதற்காகக் காசியின் எல்லையை நிர்துஷ்டப்படுத்துவதற்காகவே அஸிவருணை என்ற இரு நதிகளும் ஸ்ருஷ்டிக்கப்பட்டன. ஏ முனியே! அஸியும் வருணையும் இங்கு ஸங்கமம் ஆவதால்

இந்தக் காசீபுரிக்கு வாராணஸி என்று பெயர் வந்தது.

இந்த உலகில் வாராணஸி ஸாக்ஷாத் கருணைமயமான உலகில் மற்றெங்கும் காணப்படாத ஒருமூர்த்தமாக இருக்கிறது. ஏனென்றால் இங்கேதான் ப்ராணிகள் ஸுக பூர்வமான தேஹத்தைத் தியாகம் செய்து, அதே ஸமயத்தில் விஸ்வேஸ்வரருடைய ஞான ஜோதியில் கலந்து கைவல்யபதத்தை அடைகிறார்கள்.

வாராணஸி என்ற தேவி கூவி அழைக்கிறாள். ஏ ஜந்துக்களே! உலகில் அநேகம் தடவை பிறந்தீர்கள், புண்ணியம் ஸம்பாதிக்க அநேகம் நதியில் மூழ்கினீர்கள்; கடைசியில் ம்ருத்யு வசமானீர்கள், இதுவரை உங்களுக்கு சாந்தி ஸுகம் கிடைக்கவில்லை. இப்பொழுது, என்னுடைய பலத்தினால் என் மடியில் பிராணனை விடுவீர்களானால் அம்ருதத்வத்தையடைந்து மஹாதேவனாகவே ஆவீர்கள். மற்ற புண்ணிய க்ஷேத்ரங்களில் மரணமடைவீர்களேயானால் ப்ராம்மணனாகவோ தேவர்களாகவோ பிறக்கலாம்; ஆனால் காசியில் அப்படியில்லை. இங்குள்ள விசித்ரம் என்னவென்றால் ப்ராம்மணர்களென்ன சண்டாளனாகவேயிருந்து இறந்தாலும் கர்ப்பத்திற்குத் திரும்பாமல் முக்தனாகிறான்.

இந்தக் காசீபுரீ அபார ஸம்ஸார ரூபமான கடலைக் காக்க ஒரு தோணியாக உதவுகிறது. ஏனென்றால் இங்கு த்ரிபுராந்தகனான பகவான் ஜனங்களின் பரம்பரையை அவர்களிச்சைப்படி பரமபுருஷார்த்த ஸித்தியை அடையச் செய்கிறார். மனிதர் மற்றத் தீர்த்தங்களில் எல்லாம் அடிக்கடி ஸ்னானம் செய்வதால் களங்கம் கொண்ட மனித சரீரம் மட்டும் தேவஸ்ரூபம் கொண்டு ஸ்வர்கத்துக்குப் போகிறான். ஆனால் வாராஸி எல்லைக்குள் தேஹத்தைத் தியாகம் பண்ணினவன் திரும்பவும் தேஹம் எடுப்பதில்லை. அதாவது விதேக கைவல்யத்தையடைகிறான். ஸாரூப்யாதி நான்கு நிலைகளுக்கும் அவன் போவதில்லை.

எல்லா ஜனங்களுடையவும் மூன்று விதத் தாபங்களையும் போக்கடிக்கும் இந்த வாராணஸி யோகாப்யாசம் செய்யாமலேயே மரண சமயத்தில் ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்று என்ற தத்துவத்தை அறியாத பேர்களுக்கும் ப்ரஸித்த தாரக மந்திரத்தைக் காதில் உபதேசித்து பரப்ரம்ம ஸாக்ஷாத்காரம் கிடைக்கச் செய்கிறது: அதனுல் திரும்பவும் புனர் ஜன்மம் ஏற்படுவதில்லை.

தங்கள் தங்களுக்குப் பிடித்தமான மோக்ஷம் முதலிய பதவிகளுக்கு இச்சை கொண்டு தர்மார்த்த காமங்களுக்கு இருப்பிடமானங்கள் சரீரத்தை வாராணஸி எல்லைக்குள் த்யாகம் செய்யாமலேயே மிகவும் ஸந்தோஷப்படுகிருர்களோ, அவர்களைப் பற்றி என்ன சொல்வது? அவர்களுக்கு இஷ்ட லாபமும் கிடைப்பதில்லை. இவைகளுக்கு ஆதாரமான சரீரமும் இருப்பதில்லை.

ஆஹா! காசீவாஸி மனிதர்களுடைய ஸமூஹம் பகவான் நெற்றிக் கண்ணர், அர்த்தநாரீசர், விஸ்வநாதத்தின் மூலமாக நல்ல ஸுக்ருத்துகளாக்கி முதலில் தங்களிஷ்ட சரீரங்களையெடுத்து புனர் ஜன்மமில்லாத நிர்வாண பதவியிலிருந்து கட்டாயம் சேர்க்கப்படுகின்றனர்.

வாராணஸி என்பது ப்ரகாசிக்கின்ற எல்லையற்ற குணங்களைக் கொண்ட ஒரே பூமியாகும். ஏனென்ருல் இங்கிருக்கும் சரீர உருக்கொண்ட பகவான் சந்திரசேகரருடைய ப்ரபாவத்திணுலேயே எல்லாரும் கழுத்தில் விஷமும் நெற்றியில் கண்ணும் வாமபாகத்தில் பெண்ணையுடைய சரீரமுள்ள வராகி கடைசியில் விதேஹ முக்தி அடைகின்றனர்.

ஏற்கனவே காசிக்ஷேத்ரம் ஸுக பூர்வமான ஆனந்தவனம்; அங்கு சக்ரபுஷ்கரிணி, மணிகர்ணிகை இவையிரண்டும் இருக்கின்றன. மேலும் ஸ்வர்க

ஸிந்துவான கங்கையுடன் கூடியிருப்பது இன்னும் விசேஷம். எல்லாவற்றிற்கும் மேல் பகவான் விச்வேஸ்வரர் ஸ்திரமாக இருக்குமிடம். அப்படியிருக்கும் போது எவன்தான் இங்கு முக்திக்கு தகுதி உள்ளவனுக இருக்கமாட்டான்!

இந்த இடத்தில் அஸி, வருணு என்ற இரு நதிகளும் வந்து சேர்வதினுல் மிகவும் ச்ரேஷ்டமானதும் பேதங்களாகிற இடையூறுகளுக்கு வருத்தத்தைக் கொடுக்கும் ஜனனியாகிய தேவநதி ஓடுவதால் அதிக சோபையுள்ளதுமாகும். மோக்ஷ லக்ஷ்மி இங்கு ஸ்திரவாஸம் செய்கிறுள். அப்படியிருக்கையில் மூடபுத்தியுள்ள ஜந்துக்கள் இந்த பூமியை விட்டு வேறு எங்கெங்கோ போய் வீணுக அலேகிறுர்கள்.

ஐயோ! கஷ்டம்! கஷ்டம்! இந்த மூட ஜீவர்கள் கர்ப்ப வேதனேயும் யமதூதர்களுடைய பாசபந்தத்தின் துன்பத்தையும் நிச்சயமாக மறந்துவிட்டனர். அப்படியில்லாவிட்டால் மஹாதேவருடைய அனுக்ரகத்தினுலேயே கிடைக்கக்கூடிய கைக்கெட்டிய முக்தி ஸ்வரூபமான காசியை விட்டு விட்டு எங்கெல்லாமோ ஏன் அலேய வேண்டும்?

மற்ற தீர்த்தங்களெல்லாம் அருந்தினுலும், ஸ்னுனம் செய்தாலும், பூஜை செய்தாலும் ஏன் சரீரத்தை விட்டாலும் கூட உடனே பாபவிமோசனம் செய்கிறது. மேலும் மங்களங்களேக் கொடுத்துக் கொண்டிருக்கிறது. ஸ்வர்கம் வரை இட்டுச் செல்லும் ஸாமர்த்தியம் கூட இருக்கிறது, ஆனுல் இந்த வாராணஸியோ ஜன்மம் எடுப்பது என்பதையே வேருடன் களேந்து விடுகிறதே!

காசியில் அதுவும் மணிகர்ணிகையில் சரீரம் எடுத்திருக்கும் ஜீவர்கள் தேஹத்துடன்கூட அக்ஞானத்தையும் விட்டு விட்டு நெற்றியில் கண்ணும் கழுத்தில் நீலமான மச்சமும் வாமாங்கத்தில் பெண்ணும் கூட சிவரூபமான தேஹத்தை எடுக்கின்றனர்.

அதுவும் இதன் அளவிட முடியாத ப்ரபாவத்தையுணர்ந்து மணிகர்ணிகையில் அபவித்ரமான மலம், ரத்தம், அழுக்கு இவைகளால் கூடின சரீரத்தை விடுகிறுனுல் அதே க்ஷணத்தில் ஆத்மஞான ரூப தேஜஸ்ஸுடன் கூடுகிறுன். கல்பம் முடிந்தால்கூட அந்த தேஜஸ் அவனிடமிருந்து விலகாது.

ராகத்வேஷாதி தோஷங்களுடன் பரிபூர்ணமான சித்தம் இந்த்ரியம் இவைகளுடன் கூடின பாவிகளுக்குத்தான் உவமையற்ற திவ்ய மஹாப்ரபாவத்தோடு கூடின காசீபுரிக்கும் மற்ற தேசங்களுக்கும் என்ன வித்யாசம் என்று தோன்றுகிறது. அப்படித் தோன்றும் ஜனங்களுடன் பேசுவதுகூடச் சரியல்ல.

ஏ! மூட மனிதா! பகவான் மன்மதனை அழித்தவரின் ப்ரியமான ராஜதானி, வாராணஸியை விட்டு ஏன் எல்லாத்திக்குகளிலும் சுற்றி அலைகிறுய்? ப்ரம்மாதி தேவதைகளுக்கும்கூடக் கிடைப்பதற்கரிய ஸ்திரமான மோக்ஷலக்ஷ்மியை அடையும் பொருட்டு ஸித்தியுள்ள அஷ்டலக்ஷ்மிகளை ஏன் விரும்புகிறுய்?

இந்த உலகத்தில் நற்குணசீலர்களான மனிதர்களுக்கு, தனம், ஜனம், வீடுகள், யானை குதிரை, ஸேவகர்கள், மாலை, சந்தனம், ரமணீயமான பெண்கள் ஏன் ஸ்வர்கம்கூடக் கிடைக்காத வஸ்து அல்ல. ஆனுல் புழு பூச்சிகளுக்குக்கூட எளிதில் முக்திதரக்கூடிய வாராணஸி கிடைப்பது மிகவும் துர்லபம்.

ஒரு சமயம் ப்ரம்மா பரீட்சை செய்வதற்காக வைகுண்டம் முதலிய மற்ற லோகங்களை ஒரு தராசிலும் காசியை மற்ருெரு தராசிலும் வைத்தார். அப்பொழுது மற்ற உலகங்கள் இருக்கும் தட்டு லேசாக உயரக் கிளம்பியது. நான்கு புருஷார்த்தங்களின் பாரத்தினுல் 'காசீபுரி'யுள்ள தட்டு கீழே தாழ்ந்தது.

விச்வேஸ்வரரின் தயையினுலே காசியில் உள்ள மனிதர்களென்ன மற்ற ஜந்துக்களென்ன, எல்லாம் ருத்ர தேவரைப்போல மதிப்புக்குரியவர்களாகி விடுகின்றனர். அவர்கள் ஏற்கனவே அநேக ஜன்மங்களெடுத்து இயற்கையாகவே துக்கபாரத்தினுல் பீடிக்கப்பட்டு பரமாத்ம ஜோதியில் கலக்கின்றனர்.

ஆஹாஹா! ஆச்சர்யம்! இந்த பரம மூட ஜந்துக்கள் நச்வரமான ஜனனமரணுதி க்லேசங்களின் வீடாகிய உடலைக் காசியில் த்யாகம் செய்துவிட்டு, பரமானந்த அரண்மனையான தேஜோ மயமான ரூபத்தை ஏன் அடையமாட்டான்?

உடைந்த மண்பாத்திரம் பித்தளையாக மாறுகிறதுபோல எங்கு மரண காலத்தில் பகவானே ஜீவர்களின் காதில் ஏதோ ஒரு விஷயத்தை சொல்லுகிருரோ, அந்தச் சொல்லினுல் மாதாவின் உதரமாகிய குகையில் வாஸம் பண்ணுவதான துக்கம் விலகுகிறதோ, அந்தக் காசீபுரி இந்த உலகத்தில் இருக்கும் பொழுதே ஜனங்கள் புத்தி மயங்கி தனநாசம் என்ற ஆபத்துக்களில் சிக்கி ஏன் சோகப்படுகிருர்கள்?

ஒருவன் காசியில் இருந்து கொண்டு இரண்டு மூன்று முறை புஜித்துக் கொண்டும் இஷ்டப்படியெல்லாம் இருந்தாலுகிலும், அவன் காற்றைக் குடித்துக் கொண்டு ஜிதேந்த்ரியனுக இருக்கும் வானப்ரஸ்தனைக் காட்டிலும் மேலானவன்.

இந்தக்காசியில் இருந்தால் புண்ணியாத்மா, பாபாத்மா என்ற பேதம் அவர்களுக்கில்லை. ஏனென்ருல் இந்தப் பாலைவனமான ஆனந்தவனத்தில் எல்லாருடைய கர்மங்களிலிருந்தும் விளைந்த விதைகள் அரனுடைய நேத்ர ஜ்வாலையினுல் தகிக்கப்பட்டிருப்பதனுல் முளைவிடுவதில்லை. ஏ! கிரிஜே! கொக்கு முதலிய பக்ஷி ஜாலங்களும் நரி, குதிரை முதலிய மிருக ஜாதிகளும்

நீந்துவன, பறப்பன, நடப்பன ஆன எந்தப் பிராணியாக இருந்தாலும் அவைகளுக்குக் காசியில் முக்தி கிடைப்பது என்பது நிச்சயம்.

ஏ! சைலபுத்ரியே! காசியில் வஸித்துக் கொண்டிருக்கும் ஜனங்கள் சோபிக்கும் ருத்ராக்ஷ மாலைகளாகிற பாம்புகளைத் தரித்துக் கொண்டு த்ரிபுண்ட்ரமாகிற அர்த்த சந்த்ரகலையையும் தரித்துக் கொண்டு அவர்கள் இந்த பூமியில் இருந்தாலும் அவர்கள் என்னுடைய கணங்களாகவே மதிக்கப்படுகிறார்கள். இந்தக்காசீபுரியில் ஜலத்தில், ஸ்தலத்தில், மரத்தில் எங்கு வஸிக்கும் ஜீவராசிகளானாலும், சரி, என்னுடைய க்ருபையினால் அவர்கள் ருத்ரரூபம் தரித்துக் கொண்டு தேஹாந்த காலத்தில் என்னில் ஐக்யமாகிறார்கள். ஸ்வர்கத்தில் வர்ஷம் என்ற பெயருடனும், ஆகாயத்தில் வாயு என்ற பெயருடனும் ருத்திரகணங்கள் வஸிக்கின்றனர்.

கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு ஆகிய திசைகள் தோறும் பத்து பத்து ருத்ர கணங்கள் வஸிக்கிறார்கள். மேல் லோகத்தில் வஸிக்கும் ருத்ர கணங்களின் எண்ணிக்கையை வேதம் கூறுகிறது. பாதாளத்தில் எண்ணிக்கையற்ற ஆயிரக்கணக்கான ருத்ரகணங்கள் வஸிக்கிறார்கள். இவர்கள் எல்லாவற்றையும்விட காசியில் வஸிக்கும் ருத்திரகணங்களே மேலானவர்கள்.

இந்தக் காரணத்தினால் அவிமுக்த க்ஷேத்ரமான காசி ருத்ரவாஸம் என்று கூறப்படுகிறது. அதனால் காசியில் வஸிக்கும் எல்லா ஜாதிக்காரர்களும் (ருத்ரவாஸி) இந்த நான்கு ஜாதியும் கலந்த மற்ற ஜாதியானாலும், எந்த ஆச்ரமத்தைச் சேர்ந்தவர்களானாலும் இவர்கள் எல்லோரையும்கூட ச்ரத்தையுடன் பூஜை செய்தால் மனுஷ்யன் ருத்ர பூஜையின் பலனை அடைகிறான்.

முனியே சப்தங்களை அன்வயப்படுத்திக்கூறும் நிபுணர்கள் ஸ்ம சப்தத்தை (சவம் என்றும்) சான் சப்தத்திற்கு

அர்த்தம் இருப்பிடம் என்றும் கூறுகிறார்கள். ஸ்மசான்=சவத்தின் இருப்பிடம் என்றும் கூறுகிறார்கள்.

ப்ரளய காலம் வந்ததும் மஹா பூதகணங்களும்கூட இங்குப் பிணமாகக் கிடக்கிறார்கள். அதனால் காசியை மஹாஸ்மசானம் என்று கூறுகிறார்கள். ப்ரளய காலம் வந்தவுடன் இந்தக் காசி க்ஷேத்திரத்தில் பூமி ஜலத்திலும், ஜலம் தேஜஸ்ஸின் உக்ரமான குகையிலும் மகாதேஜஸ் வாயுவும். வாயு ஆகாசத்திலும் லயமாகிறது. இந்த விதமாக ஆகாசமும் அஹங்கார தத்வத்திலும் (பஞ்ச ஞானேந்த்ரியங்கள், பஞ்சகர்மேந்த்ரியங்களும் மனம்) பஞ்சபூதம் இந்த 16 விகாரங்களுடன் அஹங்கார தத்வமும் புத்தி எனும் மகா தத்வத்திலும், மகா தத்வம் பிரக்ருதிக்கு மத்தியிலும் லயமாகிறது. இதே பரமபுருஷனில் 25 வது தத்வமான மகத்தத்வத்தினாலும் தேஹமாகிற வீட்டில் ஏகாதிபதியாக ஜீவன் இருக்கிறது.

இதைப் ப்ராக்ருத -இயற்கையான ப்ரளயம் என்று கூறுகிறார்கள். இதில் ப்ரம்மா, விஷ்ணு ருத்திரர் இவர்களும் இருக்கமாட்டார்கள்.

பிறகு மகாகாலமூர்த்தியாம் பரமேச்வரர் இந்த ஜீவனை ரூபமாகத் தனது தேகத்தின் உள்ளே லயம் ஆக்கிவிடுகிறார். பண்டிதர்கள் அந்த மஹாகால பரமேஸ்வரரை மஹாவிஷ்ணு என்று கூறுகிறார்கள். அவரை மஹாதேவன் என்று கூறுகிறார்கள். அவரே ஆதி அந்த மத்யம் இல்லாத சிவன். மேலும் லக்ஷ்மீபதி, பார்வதீபதி, தினம் நடக்கும் ப்ரளயத்தில், ப்ரதோஷ ஸமயம் எலும்பு மாலைகளால் அலங்கரித்துக் கொண்டு பகவான் தனது காசீபுரியை த்ரிசூலத்தின் முனையில் தூக்கி வைத்துக்கொண்டு ரக்ஷிக்கிறார். இதனால் காசியில் கலிகாலத்தின் ஆதிக்கம் நடக்காது.

ஸ்கந்தன் கூறுவார்:- ப்ராம்மணோத்தமா! தேவ தேவர் சங்கரன் பூர்வகாலத்தில் பார்வதீ தேவி, விஷ்ணு

இவர்களுடைய முன்னிலேயில் அவிமுக்த க்ஷேத்ரத்தை வாராணஸி, காசி, ருத்ரவாஸ், ஆனந்தகானனம் என்னும் பெயர்களால் இவ்விதம் வர்ணித்திருக்கிருர். நான் இப்படித்தான் அவர் சொல்வதைக் கேட்டிருக்கிறேன். இப்படிக் காசியின் பரம ரஹஸ்யத்தை உனக்குக் கூறுகிறேன்.

இந்த பவித்ர அத்யாயத்தைப் படித்ததனுல் மகாபாதங்கள் நாசமடையும். மேலும் இரு வர்ணத்தாருக்கும் விதிப்பிரகாரம் சொல்வதனுல் சிவலோகத்தில் மரியாதை பெறுகிருர்கள்.

ஏ கும்ப முனியே! இதற்கு பிறகு இன்னும் காசி விஷயமாகக் கேட்பதற்கு ஆசையிருந்தால் சொல்லும். அதைப்பற்றிக் கூறுவதில் எனக்கு மிகவும் ஆனந்தமாகிறது.

இந்தவிதம் ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷி டீகாவான தனஞ்ஜெயன் கதையுடன் கூட காசீரஸஸ்ய வர்ணனம் என்ற முப்பதாம் அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 31

*அகஸ்தியர் கூறுகிறார்:- ஏ! ஸர்வக்ஞனுடைய ஹ்ருதயநந்தனே, ஸ்கந்தா! வாராணஸியின் கதையை மாத்திரம் கேட்டுவிட்டு எனக்குத் திருப்தியாகவில்லை. அதனால் தங்களுக்குக் க்ருபையிருக்கும் பக்ஷத்தில் நானும் கேட்பதற்குத் தகுதி வாய்ந்தவன் என்று எண்ணினால் காசியில் இருக்கும் பைரவரின் கதையைக் கூறுங்கள்.*

*இந்தக் காசி க்ஷேத்ரத்தில் பைரவர் என்ற பெயருடன் யார் இருக்கிறார்கள்? அவருடைய உருவம் எப்படியிருக்கிறது? அவருடைய கர்மம் யாது? அவருக்கு எத்தனை பெயர்கள் உண்டு. அவரை ஆராதித்தால் அவர் எந்தவிதமான ஸாதனைகளுக்கு ஸித்திகள் கொடுப்பார்? எந்தெந்த ஸமயங்களில் அவரை ஆராதித்தால் அவர் சீக்கிரமாக ஸித்தி கொடுப்பார்?*

*ஸ்கந்தன் கூறினார்:- வாராணஸியிடம் உனக்கு மிகவும் அன்பு இருக்கிறது. உன்னைப் போல வேறு ஒருவரும் அறியவில்லை. அதனால் மகா பாதகங்களையும் நாசமாக்கும் பைரவருடைய வ்ருத்தாந்தத்தை உனக்குக் கூறுகிறேன். அதைக் கேட்பதினால் காசி வாஸத்தின் பலன் நிர்விக்னமாக நிறைவேறும். நன்றாகப் பழுத்த மாம்பழத்தை இருகைகளாலும் சேர்த்துப் பிடித்து நான்கு பக்கமும் அமுக்கி அதன் ரஸத்தைக் குடித்துவிட்டு அதன் கொட்டையை எறிவதுபோல பைரவர் ப்ரும்மாண்ட மண்டலமாகிய மாம்பழத்தை நன்றாகக் கசக்கி அதன் ரஸத்தைப் பருகிவிட்டு உன்மத்தனைப்போல உத்தண்டமாக ஆடிக்கொண்டிருக்கிறார். அந்த மஹாபைரவர் மூன்று லோகங்களையும் ரக்ஷிக்கட்டும்.*

*கும்பமேனியே! விஷ்ணுவின் நான்கு கைகளும் ப்ரம்மனுக்கு நான்கு முகமும் இருந்தும்கூட அவர்களே மஹாதேவரின் மஹிமையை உள்ளபடி அறிந்ததில்லை. மண்ணில் பிறந்தவனே! இதில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. காரணமென்னவென்றால் சிவனுடைய மாயையை*

ஒருவரும் தாண்டமுடியாது. அந்த மாயையினுல் மோஹமடைந்து தத்வத்தை ஒருவரும் அறியவில்லை. அந்த பரமேஸ்வரர்தானே தன்னை அறிந்து கொள்வதற்கு இடம் கொடுத்தால்தான் ப்ரம்மா முதலிய தேவகணங்கள் அவரை அறிய முடியும். நம் இச்சைப்படிக்கு நாம் அவரை அறியமுடியாது.

ஆத்மாராமனுன பரமேஸ்வரனை அவர் எங்கும் நிறைந்தவராலுலும் ஒருவராலும் பார்க்க முடியாது. மூட ஜனங்கள் வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத அந்த மஹாதேவனை இதர தெய்வங்களுக்கு ஸமமாக நினைக்கிருர்கள்.

ஏ ப்ராம்மணரே! பூர்வகாலத்தில் ஸுமேரு பர்வதத்தின் உச்சியில் மஹர்ஷிகள் எல்லோரும் ஒன்றுகூடி மஹர்ஷியான ப்ரம்மாவை நமஸ்கரித்துக் கேட்டனர்- நாசம் அடையாத தத்வம் எது? அதைச் சொல்லுங்கள். அதற்கு ஸ்ருஷ்டிகர்த்தாவான பிதாமஹர் ஸாம்பவி மாயையினுல் மோஹமடைந்து அந்தப் பரமதத்வத்தை அறியாமல் தன்னையே அந்த அழியாத பரதத்வம் என்று மனதில் எண்ணிக்கொண்டு கூறினுர்:

ரிஷிகளே ! நான் ஜகத்யோனி, நானே ஸ்ருஷ்டிகர்த்தா, நானே ஸ்வயம்பு, நானே ஈஸ்வரன் அநாதியான ப்ரம்மஸ்வரூபம் என்னைப் பூஜை செய்யாமல் ஒருவனும் முக்தனுக முடியாது. மூன்று உலகம் முழுவதும் பாலிப்பதும் ஸம்ஹாரம் செய்வதும் நானே; உண்மையில் என்னைவிட மேலானவர்கள் ஒருவருமில்லை. எல்லா தேவதைகளிலும் நான் ஸ்ரேஷ்டன். ப்ரம்மாவுடைய இந்த வார்த்தையைக் கேட்டு நாராயண ரூபமான யக்ஞேஸ்வரர் கோபச்சிரிப்பு சிரித்துக் கொண்டு ரோஷத்தினுல் சிவந்த கண்களையுடையவராகிக் கூறினுர். பரமதத்வத்தை யறியாமலேயே நீர் என்ன இப்படிச் சொல்லிவிட்டீர்? உம்மைப்போல் யோகியர்க்கு இந்த விதமான அக்ஞானம் உசிதமில்லை.

ஸமஸ்த லோகங்களுக்கும் கர்த்தாவான நான் யக்ஞராஜன்; பராத்பரரான நானே நாராயணன். ப்ரம்மனே என்னை அநாதரவு செய்து ஸமஸ்த லோகங்களும் ஜீவித்திருப்பது என்பது முடியாது. நானே பரமஜோதி; பரமகதி, நான் உன்னை இந்த வேலையில் அமர்த்தியிருப்பதால்தான், நீ இந்த ஸ்ருஷ்டி கார்யத்தைச் சரிவரச் செய்கிறாய். இந்த விதமாக மாயை வசப்பட்டு இருவரும் போட்டி மனப்பான்மையுடன் ஜயத்தை விரும்பியவர்களாக ஒருவருக்கொருவர் விரோதித்துக் கொண்டு ப்ரம்மாவும் யக்ஞ - ராஜனும் ப்ரமாணத்திற்கு எல்லையாக இருந்து சதுர்வேதத்தினிடம் கேட்டார்கள்.

ஏ! வேதக்கூட்டங்களே! உங்களுடைய ப்ரமாணம் எங்கும் கீர்த்திவாய்ந்ததாக இருக்கிறது. இதில் கொஞ்சம் கூட ஸந்தேஹமில்லை. எவரைப் பரமதத்வம் என்று கூறுகிறீர்கள்? வேதங்கள் கூறின; ஹே! ஸ்ருஷ்டிக்கும் ஸ்திதிக்கும் காரணமான ப்ரஸித்தி பெற்ற தேவர்களே! எங்களைத் தீர்ப்புக்கூற யோக்யதை உள்ளவர்களாக எண்ணினீர்களானால் உங்கள் ஸந்தேஹத்தை நிவர்த்தி செய்யும் ப்ரமாணத்தைச் சொல்கிறோம். வேதங்களினுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு ப்ரம்மாவும் யக்ஞேஸ்வரரும் கூறினார்கள், ஆம் உங்களுடைய சொல்லே ப்ரமாணம். அதனால் பரதத்வம் என்பதை நன்றாகக் கூறுங்கள்.

முதலாவது ருக்வேதம் கூறியது; எவருடைய உதரத்தில் ஸமஸ்த பஞ்சபூதச் சேர்க்கையினாலான ஜீவர்கள் அடங்கி இருக்கின்றனவோ எதனால் இவைகளெல்லாம் செயல் புரிகின்றனரோ எதைப் பண்டித ஜனங்கள் தத் என்ற பதத்தால் குறிப்பிடுகிறார்களோ? அந்த ருத்ரனே கேவலம் பரமதத்வம். யஜுர்வேதம் கூறியது, இந்த ஸமஸ்த யாகம், யோகம் இவைகளின் மூலமாக எதை ஆராதிக்கிறோமோ, எதனால், எதனுடைய பலத்தினால் நாங்கள் ப்ரமாணமாத்திரம் என்று கூறுகிறீர்களோ அந்த ஸம

தர்மியான சிவனே பரதத்வம். ஸாமவேதம் கூறியது. இந்த விச்வமண்டலத்தை எவர் ஆட்டுவிக்கிருரோ, எவரை யோகிகள் ஸதா தியானிக்கிருர்களோ, எதனுடைய ஜோதியால் உலகம் பிரகாசிக்கின்றதோ, அதே த்ரயம்பகமே பரமதத்வம்.

பிறகு அதர்வணவேதம் கூறியது, அந்த தேவாதி தேவனுடைய அனுக்ரகத்திஞலேயே அவரை பக்தி ஸாதனத்தின் மூலம் பார்க்கிறோம். அவரே துக்கத்தைத் தூர விலக்கும் கைவல்ய ஸ்வரூபம். அந்த சங்கரரே பரமதத்வம்.

முனியே! இந்த விதமாக, வேதங்களுடைய வசனங்ககளைக் கேட்டு மாயையிஞல் மிகவும் மோஹித்துப் போன அந்த ப்ரம்மனும் யக்ஞநாராயணரும் சிரித்தார்கள். யார் புழுதி படிந்தும் பூத கணங்களுக்குத் தலைவஞக இருந்து ஸ்மசானத்தில் நிர்வாணமாக ஆடிக்கொண்டும் சிவையுடன் எப்போதும் க்ரீடித்துக்கொண்டும் ஜடையில் தரித்துக்கொண்டும் எருதில் ஏறிக்கொண்டும் பாம்புகளை ஆபரணமாக அணிந்து கொண்டும் பயங்கர ரூபத்தில் இருக்கிருரோ, அவஞ சங்கரஹிதஞன அத்விதீய பரமப்ரம்மத்தையடைந்தவன்?

பிறகு அந்த இருவர்களுடைய அக்ஞானமயமான வசனத்தைக் கேட்டு அந்த ஸஞதன ப்ரணவ ஸ்வரூபம் உருவ ரஹிதஞக இருந்தும் உருவத்துடனே அவர்கள் எதிரில் நின்று விநோதமாகச் சிரித்துக் கொண்டு அவர்களிருவரிடமும் கூறத் தொடங்கிஞர். ப்ரணவஸ்ரூபம் கூறியது! லீலாதாரி இந்த ருத்ரமூர்த்தி பகவான்தான். தனது ஆத்மாவிலிருந்து அந்நியமான ஒரு சக்தியுடன் விளையாடவில்லை.

இந்த பகவான் ஈசுவரர் ஸநாதனன், ஸ்வயம் ஜ்யோதிரூபர், இந்த சிவையும் அவருடைய ஆனந்த ரூபியான சக்தி ஸ்வரூபம். அவரிடமிருந்து அன்னியமல்ல. இப்படி ப்ரணவமே உருக்கொண்டு வந்து கூறியும்

ஸ்ரீகண்டருடைய மாயா விலாஸத்தால் ப்ரம்மனும் யக்ஞரூபரும் தங்கள் அக்ஞானத்திலேயே முழுகியிருந்தார்கள்.

அப்பொழுது இவர்கள் இருவருக்கும் மத்தியில் ஆகாசமும் பூமியும் மத்ய பாகமும் ஒன்றாக ஒரு பெரிய ஜ்யோதி ஸ்வரூபம் கிளம்பியது. இந்த ஜோதி மண்டலத்தின் மத்தியில் ஒரு புருஷ ஸ்வரூபம் காணப்பட்டது. அதைப் பார்த்தவுடனேயே ப்ரம்மனுடைய ஐந்தாவது தலை கோபத்தால் ஜ்வலிக்கத் தொடங்கியது. நமது மத்தியில் புருஷாகாரமாக ஜ்வலிக்கும் இவன் யார்? என்று ப்ரம்மா மனத்திற்குள்ளேயே விசாரிக்கத தொடங்கினார். உடனேயே அந்தப் புருஷன் த்ரிசூல - பாணி நெற்றிக்கண்ணன் ஸர்பம் சந்திரன் இவைகளால் அலங்கரித்துக் கொண்டு நீலக் கழுத்துடன் நிற்பதைக் கண்டு கொண்டார்.

பிறகு ஹிரண்ய கர்பர் அந்தப் புருஷனிடம் கூறினார்- ஹே சந்திரசேகரா! உன்னை எனக்கு நன்றாகத் தெரியும். முன்பு நீயே எனது நெற்றிக் கண்ணிலிருந்து ருத்ரரூபமாக உற்பவித்தாய். பலமாக அழுததால் நான் உனது பெயர் ருத்ரன் என்று வைத்தேன், சரி பிள்ளாய்! இப்பொழுது நீ என்னை சரணாகதி அடைவாய். உன்னை நான் பாதுகாப்பேன்.

இதற்குப் பிறகு ப்ரம்மனுடைய இந்த கர்வம் நிரம்பிய சொற்களைக் கேட்டு பைரவ ரூபமான ஒரு புருஷனை ஸ்ருஷ்டித்து அவனிடம் கூறினார்- ஹே! காயரூபமான நீ இந்த ப்ரம்மனை அடக்கு. ஸாக்ஷாத் காலரூபமாக நீ உத்பவத்தன்றி காலராஜனாக ஆகுவாய். நீ உலகைப் பாலிப்பதற்கு அருகதையுள்ளவன்; அதனால் உனக்குப் பெயர் 'பைரவர்' என்று இருக்கட்டும். உனக்குக் காலனும் பயப்படுவான். அதனால் உனது நாமம் 'கால பைரவர்' என்று இருக்கட்டும், நீ ஸந்தோஷமடைந்து துஷ்டர்களை வதைப்பாய். அதனால் உனது பெயர் எங்கும் நசுக்குபவன்

(ஆமதர்க்) என்று பிரஸித்தமாக இருப்பாய்.

பக்த ஜனங்களடைய பாபங்களை க்ஷணப்பொழுதில் புஜித்துவிடுவாய். அதனுல் உனது பெயர் 'பாப பக்ஷகன்' என்று இருக்கட்டும். எனது முக்யமான பக்தியைப் பரவச் செய்யும் பக்திபுரி இந்தக் காசி, அதில் எப்பொழுதும் உனது அதிகாரம் செல்லட்டும்.

இங்குப் பாபிகளை அடக்கி ஆள்வது உனது வேலையாக இருக்கட்டும். ஏன் என்ருல் சித்ரகுப்தன் காசிவாசிகளுடைய சுபாசுபகர்மங்களைக் கணக்கில் எழுதமாட்டான். இத்தனை வரங்களையும் அளித்துவிட்டு மஹாதேவர் ஆசீர்வதித்ததும் காலபைரவர் உடனேயே தனது இடது கைவிரல் நக நுனியால் ப்ரம்மாவின் சிரஸைக் கொய்தார்.

சரீரத்தில் எந்த அங்கம் அபராதம் செய்கிறதோ அதை நசுக்குவது அவரது வேலை. ஆதலால் ப்ரம்மா எந்தத் தலையால் பரமேஸ்வரனை நிந்தித்தாரோ, அதே ஐந்தாவது சிரசைக் கொய்துவிட்டார். இதைப் பார்த்ததுமே பயந்து நாராயணனுகிய விஷ்ணு சங்கரனைத் துதிக்க ஆரம்பித்துவிட்டார். ஹிரண்ய கர்ப்பனும் பயமடைந்து ருத்ரஜபம் செய்ய ஆரம்பித்தார்.

அப்பொழுது ப்ரணத மஹாதேவன் ஸந்தோஷமடைந்து ப்ரம்மா விஷ்ணுக்களை ஸமாதானப்படுத்தி தனது மற்ருெரு மூர்த்தியான கபர்திபைரவரிடம் கூறினுர்-

ஹே நீலலோஹிதா! இந்த யக்ஞ புருஷன், ப்ரம்மா இருவரும் உன்னுல் மதிக்கப்பட வேண்டியவர்கள். நீ ப்ரம்மனின் இந்தக் கபாலத்தை ஏந்திக் கொண்டிரு. ப்ரம்மஹத்தி தோஷத்தை விலக்கு. காபாலிக வ்ரதம் இருந்து ஜனங்களுக்கு பிக்ஷை செய்து வ்ரதத்தை எடுத்துச் சொல்லி எங்கும் சுற்றித்திரிவாயாக. இவ்விதம் கூறி அந்த தேஜோ ரூபமான பகவான் சிவன் அந்தர்தானமாகி விட்டார்.

பிறகு சிவனும் ரக்த வர்ணமாய் ரக்தத்துகில் உடுத்து, ரக்தமாலேயணிந்து, ரக்த சந்தனம் பூசிக்கொண்டு, கோர பற்களும் பயங்கரமான முகமும், துடிக்கும் நாக்கை வெளியில் நீட்டிக் கொண்டு ஆகாசத்திலேயே ஒரு காலின் நுனி பாகத்தைத் தூக்கிக்கொண்டு, மிகவும் ரக்தபானம் செய்து கொண்டும் கட்கமும், தலே ஓடும் கையில் ஏந்தி பளபளக்கும் மஞ்சளான தாரகைகளால் பார்க்கும்படி, மஹா வேகத்துடன் கர்ஜித்துக் கொண்டும் பைரவரையும் பயமடையச் செய்யும் ப்ரம்மஹத்யா என்னும் பெயருள்ள ஒரு பெண்ணே உற்பத்தி செய்து, ஹே! உக்ரரூபிணி! இந்த க்ஷணமே இந்தக் கால பைரவர் இந்த வாராணஸிபுரியிலிருந்து எதுவரை போகமாட்டாரோ அதுவரை அவர் பின்னுலேயே சுற்றிக் கொண்டிரு. உனது கதி வாராணஸியை மாத்திரம் விட்டுவிட்டு மற்றவிடம் சுற்றுவாயாக. என்று கூறிவிட்டு அவர் அந்தர்தானமானுர்.

அந்த ப்ரம்மஹத்தியின் முன் காலனுக்குக் காலனுக பைரவர் கூட (பயத்தால்) முகம் கறுத்துவிட்டார். மஹாதேவருடைய ஆக்ஞையின்படிக்கு கையில் கபாலத்தை ஏந்திக்கொண்டு உலகத்துக்கெல்லாம் ஆத்மாவாக இருந்தால் கூட மூன்று உலகங்களிலும் சுற்றத் தொடங்கினர். ஆனுல் அந்த அதிக பயங்கரமான ப்ரம்மஹத்தி என்னும் காளியானவள் அவரைப் பின்தொடர்வதை நிறுத்தவில்லே. மூன்று உலகங்களேயும் காத்து ரக்ஷிப்பவரும் மூன்று உலகத்துக்கு நாயகனும் காபாலிக வ்ரதம் தரித்தவரும் உக்ரமான உருவம் உடைய பைரவர் ஸத்ய லோகத்திலும், வைகுண்டத்திலும் இந்த்ராதி தேவர்களுள்ள நகரிலும், எல்லாத் தீர்த்தங்களிலும் சுற்றி வந்த பிறகும் கூட, அவரால் அந்த ப்ரம்மஹத்தியிலிருந்து விடுபட முடியவில்லே.

ஏ கும்பமுனியே! இதிலிருந்து ப்ரம்மஹத்தியை நீக்கும் காசியின் மஹிமையை அனுமானித்துக்கொள். மூன்று உலகங்களிலும் அநேக தீர்த்தங்களும் அநேக க்ஷேத்ரங்களும் இருக்கின்றன. அவைகளெல்லாம்

காசியின் பதினாறு கலைகளுக்கு ஒரு கலைக்குக் கூட ஈடாகாது. பாதகமாகிய பர்வதங்களுக்கு வஜ்ராயுதமாயும், காசியின் கதைகளைக் கேட்கும் வரையில்தான்; ப்ரம்மஹத்யாதி மஹா பாதகங்கள் கர்ஜித்துக் கொண்டு சுற்றிக்கொண்டிருக்கும்.

அதற்குப் பிறகு ப்ரமத கணங்களால் ஸேவிக்கப்படுபவரும், காபாலிக வ்ரததாரியும், ஆன மஹா (தேவ) பகவான் கால பைரவர் மூன்று உலகங்களையும் சுற்றிக் கொண்டு நாராயணரின் இருப்பிடமான ஸேதுத்வீபத்திற்குப் போய்ச் சேர்ந்தார். பிறகு கருடத்வஜர் ஸர்பகுண்டலங்கள் அணிந்தவரும் மூன்று கண்கள் உள்ளவரும் பயங்கரஸ்வரூபரும், மஹாதேவருடைய அம்சமான மஹாகாலபைரவர் வருவதைப் பார்த்துவிட்டு பூமியில் விழுந்து நமஸ்கரித்தார். அதைப் பார்த்துவிட்டு தேவதைகளும் முனீச்வரர்களும் தேவஸ்த்ரீகளும் கூட அவரை வணங்கின நிலையிலேயே சிரஸின் மீது கைகளைக் கூப்பிக் கொண்டு அநேகவிதமான ஸ்தோத்திரங்களை ஸ்துதித்து க்ஷீரஸமுத்ரத்தைக் (கடைந்ததும்) அதனின்று உத்பவித்த பத்மாலயாவான மஹாலக்ஷ்மியிடம் கூறினார்.

ப்ரீயே! கமலநேத்ரே! இன்று நாம் தந்யரானோம், குற்றமில்லாதவளே! அழகான கேள்வி ஞானமுடையவளே! தேவீ! நாம் இருவரும் இன்று மூன்று உலகத்துக்குமான பதியைப் பார்க்கிறோம்; கொடுப்பதும் இவரே; படைப்பதும் இவரே, உலகத்துக்கெல்லாம் ப்ரபு ஈஸ்வரர், அநாதி, சரணமடையத் தகுந்தவர், சாந்தர், பராத்பரர், பரமாத்மா, ஸர்வக்ஞர், ஸர்வ பூதங்களுக்கும் அந்தராத்மா; என்றும் எல்லாருக்கும் ஸர்வாபீஷ்டங்களையும் அருளும் தாதா; யோகீகணங்கள் தன்மயமாய் மூச்சை உள்ளடக்கி த்யானபராயணராக ஞானக்கண்களினால் இவரை ஹ்ருதயத்தில் பார்க்கிறார்கள். ச்ரேஷ்டரான இவரைப் பார்;

ஜிதேந்த்ரியர்களான, தேவதத்வக்ஞர்களான யோகிகளால் மாத்திரமே, அறியக்கூடிய இவர் எங்கும் வ்யாபித்தும், உருவமில்லாமல் இருக்கும் இவர் இங்கு உருவம் தரித்துக் கொண்டிருக்கிறூர். பகவான் பரப்ரம்மத்தின் லீலே மிகவும் விசித்ரமானது; இவருடைய நாமத்தை தினமும் ஸங்கீர்த்தனம் பண்ணினபேர், தேஹம் தரிக்க மாட்டார்கள். அவர் தேஹம் தரித்து நம் முன்னே வந்திருக்கிறூர். அவரைத் தரிசனம் செய்தால் மனிதர்கள் மீண்டும் பிறக்க மாட்டார்கள். அதே சந்திர சேகர பகவான் நம் முன்னே வந்து கொண்டிருக்கிறூர்; இது கமலதளத்தைப் போன்ற விசாலமான எனது இரு நயனங்களேயும் சபலமாக்கின; இந்ததேவதைகள் பகவான் சங்கரரைத் தரிசனம் பண்ணியும் கூட ஸகல துக்கங்களேயும் நாசம் செய்யும் நிர்வாணபதத்தை அடையவில்லே.

தேவலோகத்தில் தேவர்களாக இருப்பது போன்ற அசுபலக்ஷணம் வேறூென்றும் கிடையாது; ஏனென்றூல் ஸமஸ்த தேவதைகளுக்கும் ஸ்வாமியைப் பார்த்துக்கூட முக்தி கிடைக்கவில்லேயே; ஆனந்தத்தால் புளகாங்கிதத்துடனுள்ள சரீரமுள்ள ரிஷீகேசர் லக்ஷ்மியிடம் இவ்வாறு கூறிவிட்டு வணக்கத்துடன் கூட வ்ருஷபத்வஜரான மஹாதேவரைப் பார்த்துக் கூறிஞர்; ஸர்வ பாபஹரா! அழிவில்லாதவரே, விபோ! தாங்கள் தேவதேவர், ஸர்வக்ஞர், த்ரிலோகங்களுக்கும் அதிகாரி, அப்படியிருந்தும் தாங்கள் இங்கு என்ன செய்கிறீர்கள்? ஏ! தேவேச்வரா! மஹாமதே! த்ரிலோசஞ! இதுவும் தங்கள் விளேயாட்டில் ஒன்ரு? ஏ காமதஹஞ! விரூபாக்ஷா! தங்களுடைய இந்த நடத்தைக்குக் காரணமென்ன? ஏ சக்தி பாலகா? பகவான் சம்போ! தாங்கள் ஏன் பிக்ஷை எடுத்துக் கொண்டு திரிகிறீர்கள்? ஜகன்ஞதா! தங்களே வணங்கினவர்களுக்குத் தாங்கள் த்ரைலோக்ய ராஜ்யத்தையும் அளிக்க வல்லவரல்லவா! தங்களுடைய இந்த நிலே எனக்கு மிகவும் ஸந்தேஹத்தைக் கொடுக்கிறது.

விஷ்ணு இவ்வாறு கூறியதும் பிரபு கூறுவார்; விஷ்ணுவே! நான் கைநகத்தின் நுனியினுல் ப்ரம்மாவின் தலையைக் கொய்தேன். அந்தப் பாப நிவர்த்திக்காக இந்தச் சுப வ்ரதத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறேன். இவ்வாறு கூறியதும் புண்டரீகாக்ஷர், தலையைக்குனிந்து புன்சிரிப்புடன் விண்ணப்பித்துக் கொண்டார். ஏ! ஸர்வலோக நாதா, தங்களுக்கு இதுவே விருப்பமானுல் இந்த லீலையைச் செய்யுங்கள். தாங்கள் அநாதி; மஹாதேவா! தங்கள் மாயையினுல் இவ்விதம் மறைப்பது தகாது; ஏ ஈசா; தங்களுடைய ஆக்ஞையின் பலத்தினுல் என்னுடைய நாபீகமலக் கோசத்திலிருந்து கல்ப - கல்பமாக கோடி கோடியான ப்ரம்மாக்களை ஸ்ருஷ்டித்துக் கொண்டிருக்கிறேன். ஏ! விபோ! மூடஜனங்களுக்கு கடப்பதற்கரிதான இந்த மாயையை விட்டு விடுங்கள்; ஏ தேவதேவா! நாங்கள் எல்லாரும் தங்களுடைய மாயையினுல் மோஹிக்கப்பட்டவர்கள். அதனுல் நான் தங்களுடைய விளையாட்டைப் பற்றி நன்ருக அறிவேன். ஏ ஹரா! தாங்கள் ப்ரளய காலம் வந்தவுடன் எல்லா தேவதைகள் தேவர்கள் முனீஸ்வரர்களையும் நான்கு வர்ணுஸ்ரமத்தவர்களையும் ஸம்ஹரிப்பீர்கள்.

தங்களுடைய ப்ரம்மஹத்தி அப்பொழுது எங்கே போகும்? சம்போ! தாங்கள் ஒருவருக்கும் பராதீனமானவர் அல்ல, அதனுல் தங்கள் தங்களிஷ்டப்படியெல்லாம் விளையாடலாம். குற்றமில்லாதவரே! ப்ரம்மாக்களுடைய எலும்புகளின் மாலை தங்கள் கழுத்தில் விளக்குகிறது. அப்பொழுது தங்களுடைய ப்ரம்மஹத்தி எங்கு சென்றிருந்தது?

உலகில் பெரிய பெரிய பாபங்களைச் செய்துவிட்டு பக்திபரவசத்துடன் தங்களை ஸ்பர்சித்தால் அந்தப் பாபங்கள் விலகி ஓடுகின்றன.

ஸூர்யன் இருக்குமிடம் அந்தகாரம் இருக்குமா? அதுபோல் தங்களுடைய பக்தர்களுடைய பாபமும்

நசித்துவிடுகிறது. புண்ணியசாலிகள் தங்கள் பாதபத்மங்களை தியானித்தவுடனேயே அவர்களுடைய ப்ரம்மஹத்தி முதலிய பாபங்கள் விலகுகின்றன. ஹே ஜகத்பதே! ரஜோகுண தமோகுணங்களால் மூடப்பட்ட ஸந்தாபத்தைக் கொடுக்கும் பாபங்கள் எங்கே? ஸம்ஸார நாமரோக விநாசினியான எல்லா ஜீவர்களுக்கும் பரம ஔஷதமான தங்களுடைய மங்கள மயமான நாமம் எங்கே?

அந்தக சத்ருவே, மனிதர்களுடைய உதடுகளிலிருந்து சிவசங்கரா, சந்திரசேகரா, இத்யாதி நாமங்கள் கிளம்பியதுமே அவர்கள் திரும்பிய ஸம்ஸார ஸாகரத்தில் பிறக்க மாட்டார்கள். ஹே ஈசா! தாங்கள் பரமாத்மா, பரந்தாமர் இஷ்டப்படி ரூபமெடுத்து ஸஞ்சரிக்க வல்லவர்; இந்த தங்களுடைய வேஷம் எல்லோருக்கும் ஆவலையும் குதூஹலத்தையும் தருவதாக இருக்கிறது. பின் ஈசுவரனிடம் பராதீனத் தன்மை ஏது?

ஹேதேவேசா! இன்று நான் தன்யனுனேன். யோகிகளுக்கும் தங்கள் தரிசனம் கிட்டுவது அரிது. அதே அக்ஷயமான ஜகத்துக்கு மூலமான பரமேஸ்வரரை ஸாக்ஷாத்காரமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேனே. இன்று எனக்குப் பெருத்த லாபத்துக்குரிய நாள்; இன்று எனக்கு மங்களத்துக்குரிய நாள். தங்கள் தரிசனமாகிய அம்ருதத்திஞல் திருப்தியுற்று ஸ்வர்க அபவர்க்கங்களைத் தூசியாக நினைக்கிறேன் என்ருர்.

விஷ்ணு இவ்வாறு கூறிய பிறகு, லக்ஷ்மிதேவி பகவானுடைய பிக்ஷாபாத்ரத்தில் சுத்தமஞேரத பூர்ணம் எனும் பிக்ஷையை இட்டாள். அப்பொழுது பைரவ தேவரும் மிகவும் ஸந்தோஷத்துடனும் பிக்ஷையேற்று அங்கிருந்து வேறிடம் சென்ருர். அதற்குப் பிறகு ஜஞர்த்தனர் ப்ரம்மஹத்தியானவள் அவரைப் பின்தொடர்வதைப் பார்த்துவிட்டுச் சொன்ஞர்:- நீ த்ரிசூலினியை விட்டுவிட்டுச் செல் என்ருர்.

அதற்கு ப்ரம்மஹத்தியானவள் கூறிஞள்: நான் இதையே சாக்காக வைத்துக் கொண்டு வ்ருஷபத்வஜருக்கு ஸேவை செய்ய என்னைப் பவித்ரமாக்கிக் கொண்டிருக்கிறேன். இவரை விட்டால் எனக்கு வேறெங்கு சிவதரிசனம் கிடைக்குமென்ருள். விஷ்ணு கூறியும் அவள் பைரவரைப் பின் தொடர்வதை நிறுத்தவில்லை. இதைப் பார்த்துவிட்டுப் புன்சிரிப்புடன் சம்பு இந்தச் சில வசனங்களைக் கூறிஞர்.

ஏ! மான்யரே, கோவிந்தா! நான் உமது வாக்யாம்ருதத்தைப் பானம் செய்து மிகவும் ஸந்தோஷமடைந்தேன். அதஞல் உமக்கு வரம் தருகிறேன். நீர் கேளும் என்ருர். பிக்ஷுகர்கள் விதியுடன் பிக்ஷாத்ரவ்யங்களிஞல் திருப்திப்படுவதில்லை. விஷ்ணுவின் மரியாதையுடன் கூடிய வார்த்தைகளைக் கேட்டு அவருடைய பிக்ஷாடன ரூபமான ஜ்வரம் இறங்கிவிட்டது.

மஹாவிஷ்ணு கூறிஞர்; புகழ் பெற்ற ஒரு வரம் கேட்கிறேன். ஸமஸ்த தேவதைகளுக்கு அதிபதியும் மனோரதபதத்திற்கு அதீதருமான ஏ தேவ! தேவா! தங்களை தரிசனம் செய்து கொண்டிருக்கிறேன். தங்களுடைய தரிசனம் ஸஜ்ஜனங்களுக்கு அம்ருததாரையாகும். அநாயாஸமாகக் கிடைத்த ஒரு திருவிழாவாகும். பிரயத்தனம் தங்களுடைய சரணகமலங்களிலிருந்து எனக்கு ஒருபோதும் பிரிவு ஏற்படக்கூடாது. சம்போ! இதுவே என் பிரார்த்தனை. வேறு ஒரு வரத்தையும் நான் விரும்பவில்லை.

பைரவர் கூறிஞர்:- ஏ மஹாமதி! ஆனந்தா! நீ கேட்டதே உனக்குக் கிடைக்கும்; மேலும் நீயே எல்லா தேவதைகளுக்கும் வரம் அளிப்பவஞவாய். விஷ்ணுபகவானுக்கு இந்த வரத்தையளித்துவிட்டு காலபைரவர் ப்ரம்மா இந்திரன் முதலியவர்களின் உலகில் ஸஞ்சரித்துவிட்டு முக்திபுரியான காசீபுரிக்கு வந்தார்.

காசியில் வஸிக்கும் ஜந்துக்களுக்கு பதினாறு கலைகளுக்கு சமமான ஆபத்துகள் வந்தாலும் ப்ரம்மாதி தேவதைகளின் பதவி ஒருபோதும் கிடைக்காது. இந்த வாராணஸி நகரில் ஜடாதாரியாகவோ, முண்டனம் செய்யப்பட்ட தலையினராகவோ, நிர்வாணராக இருப்பதோ மிகவும் நல்லது. ஆனால் மற்ற இடங்களில் ஏக சக்ராதிபதியாகவோ கடலால் சூழப்பட்ட மண்டலாதிபதியாக இருப்பது சரியில்லை. காசியில் பிக்ஷை எடுத்துக் கொண்டு உண்டு கொண்டிருப்பது எவ்வளவோ மேல்; வேறு இடங்களில் லக்ஷாதிபதியாக இருப்பதும் அவ்வளவு சரியில்லை. ஏனென்றால் லக்ஷாதிபதிக்கு மறுபடியும் கர்ப்பத்தில் பிரவேசிக்க வேண்டும்; ஆனால் காசியில் பிக்ஷையெடுத்துச் சாப்பிடுபவர் கர்ப்பவேதனையை ஒரு போதும் அனுபவிக்க வேண்டாம்.

காசியில் நெல்லிக்கனியளவு பிக்ஷையானாலும் பிக்ஷுகர்களுக்குக் கொடுப்பதால் அது ஸுமேரு பர்வதத்தைக் காட்டிலும் அதிகம் கொடுத்ததிற்கு சமம்; காசியில் ஒரு தரித்ர குடும்பத்திற்கு ஒரு வருஷத்திற்குக் காணும்படியான போஜன ஸாமக்ரிகள் தானம் செய்தால் அவன் எத்தனை வருஷங்கள் கொடுக்கிறானோ, அத்தனை வருஷங்கள் தேவதைகளால் பூஜிக்கப்படுகிறான்.

ஒருவன் காசீ க்ஷேத்ரத்தில் ஒரு வருஷத்து உணவு தானமாக அளித்தானேயானால் அவன் ஒரு பொழுதும் பசி தாகத்தினால் துக்கத்தையனுபவிக்க மாட்டான். ஒருவன் காசியில் தான் வஸிப்பதினால் என்ன புண்ணியம் அடைகிறானோ அதே புண்ணியம் மற்றொருவரை அங்கு வஸிக்கச் செய்வதினால் அடைகிறான்.

காசி என்னும் பெயரைக் கூறினாலேயே ப்ரம்மஹத்தி தோஷங்கள் பாவிகளை விட்டகலுகின்றன. இந்தக் காசிக்கு ஸமமாக வேறு எந்த நகரைக் கறிப்பிட முடியும்? இதற்குப் பிறகு பயங்கர ஸ்வரூபமுள்ள பைரவர் காசீக்ஷேத்ரத்தில் பிரவேசித்ததுமே ப்ரம்மஹத்தியானவள் 'ஐயோ ஐயோ'

என்று கதறிக்கொண்டு பாதாளத்தில் நுழைந்துவிட்டாள்.

இதுவரையிலும் அவர் கையில் விடாது ஒட்டிக் கொண்டிருந்த ப்ரம்மகபாலமும் எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கீழே விழுந்துவிட்டது. இதனுல் பைரவர் பரமானந்தம் கொண்டு நர்தனம் செய்யத் தொடங்கினுர்.

பைரவர் நானு க்ஷேத்ரங்களிலும் அலேந்து கொண்டிருக்கும் பொழுதுகூட துக்க ஸாதனமான ப்ரம்மகபாலம் அவர் கையை விடவில்லே. காசியடைந்த க்ஷணமாத்திரத்திலேயே அது அவர் கையை விட்டுவிட்டு விழுந்துவிட்டது. இதுவரை அவரை விடாமல் தொடர்ந்த ப்ரம்மஹத்தியும் அவர் காசிக்கு வந்த க்ஷணமாத்திரத்திலேயே நழுவி விட்டாள். அப்பேர்ப்பட்ட காசியை யடைவது துர்லபம் அல்லவா?

அதனுல் அந்த புண்ணிய புரியை ப்ரதக்ஷிணம் செய்வது மிகவும் மேன்மையான காரியம். ஒரு ஜீவன் தன்வாழ்வில் வாராணஸி, காசி என்று மந்திரம் போல் ஜபித்துக் கொண்டிருப்பானேயாகில் அவன் மறுபடியும் ஜன்மமே எடுக்கமாட்டான். ஒருவன் தேசாந்தரங்களில் இருந்தாலுனுலும் கூட இந்த அவிமுக்த மஹா க்ஷேத்ரத்தை அந்திமகாலத்தில் நிலேத்துக் கொண்டு ப்ராணலே விடுவானேயாகில் இவனுக்குப் புனர்ஜன்மம் எடுக்க வேண்டிய அவசியமில்லே. ஒருவனுடைய சித்தரங்கத்தில் ஆனந்த கானனம் எப்பொழுதும் காக்ஷியளித்துக் கொண்டிருக்குமானுல் அவன் அந்திம காலத்தில் அந்த நாமத்தைக் கேட்டாலும் போதும், அவனுக்கு ஜன்மாவில்லே. ஒருவன் சிந்தலே யோகத்துடன்கூட வாராணஸியில் எப்பொழுதும் வஸித்து வருவானேயானுல் அவன் பாபச்சுமையை எப்பொழுதும் தாங்கிக் கொண்டிருந்தாலுங்கூடக் காலம் வந்தவுடன் முக்தியடைவான்.

ஒருவன் மஹாஸ்மசானமாகிய இந்நகரில் வந்து அநாயாஸமாக மரணமடைவானேயானுல் பிறகு மறுபடியும் அவனுக்கு ஸ்மசானத்தில் படுக்க வேண்டிய அவசியமே இல்லே. ஒருவன் காசியில் கபால மோசனம் ஆன சிவனே ஸ்மரிப்பானுனுல் அவன் ஜன்ம ஜன்மாந்திரங்களில் செய்த பாபங்கள் அவனேவிட்டுச் சீக்கிரம் விலகிவிடுகின்றன.

ஒருவன் அயலூரில் இருந்து வந்து கபால மோசனம் என்னும் மேலான தீர்த்தத்தில் விதிமுறைப்படி ஸ்நானம் செய்தால் அவனும் ப்ரும்மஹத்யாதிதோஷங்களிலிருந்து விடுபடுவான். எவர்களாவது இந்த ஜகத்தை அநித்யம் என்று எண்ணிக்கொண்டு வாராணஸியில் வஸித்து வந்தார்களேயானுல் அவர்களுடைய அந்திமக்காலத்தில் பகவான் சங்கரர் தத்பதவாக்யார்த்தமான பரம ஞானத்தைக் கொடுக்கிருர்.

பரம உத்தமரே! இந்தக் காசீபுரி ஸாக்ஷாத் ருத்ரதேவருடைய விவரிக்க முடியாத பரம ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடிய மற்ருெரு உருவமாகும். சிவ விரோதிகளுக்கு இது மிகவும் அலக்ஷ்யமானது. இந்தக் காசியின் தத்துவத்தை நான் அறிவேன். எவன் சிவ பக்தனே அவன் அறிவான். இந்த ஸ்தானத்தில் யோக பலத்திஞல் யோகிகள் அடையும் முக்தியை ஸாதாரண ஜனங்கள் ஸாதாரணமாகவே அடைகிருர்கள். காசியே பரமபதம்; இந்த புரியே பரமானந்தம். இது மிகவும் மேன்மையான ஞானஸ்வரூபம். மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் இங்கேயே தபஸ் செய்ய வேண்டும். இந்தக் காசியில் இருந்தும் சிவபக்தர்களேப் பிடிக்காதவனுக்கு அல்லது காசியை நிந்திக்கிறவனுக்கும் இந்த மூடர்களுக்கு இங்கே கதிமோக்ஷம் கிடையாது என்ருல் வேறே எங்குதான் உண்டு? அதன் பிறகு கபாலபைரவர் கபாலமோசன தீர்த்தத்துக்கு முன் வந்து பக்தர்களுடைய பாபங்களேப் புஜித்துக் கொண்டு அங்கேயே ஸ்திரமாக அமர்ந்தார்.

*பாபபக்ஷணம் செய்யும் பைரவரின் ஸமீபத்தில் சென்று நூற்றுக்கணக்கான பாபம் செய்கிறவர்களும் காலபைரவருடைய ஸேவகனுனல் அவர்களுக்குப் பாபம் ஏது! இந்தப் பாப புஞ்சத்தையுடைய துஷ்டர்களுடைய மனோரதத்தை நசிக்கச் செய்கிருர். அதனுல் கால பைரவருடைய பெயர் 'ஆமர்தகர்' (மரணமில்லாதவர், நசிப்பிக்க முடியாதவர்,) என்று பெயர் பெற்றிருக்கிறது. காசிவாசிகளுடைய கலி, காலர் என்ற பயங்களை நிவாரணம் செய்கிருர். அதனுல் அவருக்குக் கால பைரவர் என்ற பெயர் மிகவும் ப்ரஸித்தமாக இருக்கிறது.*

*அவர்களுடைய பக்தர்களுடைய மஹாபயங்கர யமதூதர்கள் கூட பயமடைந்து விடுகிருர்கள். அதனுல் இவருடைய பெயர் பைரவர் என்று ஏற்பட்டது. இந்தக் காலபைரவரிடம் மார்கழி மாதம் க்ருஷ்ணுஷ்டமியில் உபவாஸமிருந்து இரவுகள் விழிப்பதனுல் மகாபாபங்களிலிருந்து விடுதலையடைகிருர்கள். கால பைரவருடைய தரிசனத்தினுல் மானஸ புத்தியுடன் செய்யப்பட்ட எல்லா சுபாசுபகர்மங்களும் பஸ்மமாகி விடுகின்றன. இந்தக்கால பைரவரை தரிசனம் செய்துவிட்டால் ஸமஸ்த ஜந்துக்களுடைய அநேக ஜன்மங்களாகச் சேர்த்து வைத்திருந்த ஸகல பாபங்களும் மறைந்து விடுகின்றன.*

*மார்கழி மாதத்து க்ருஷ்ணுஷ்டமி திதியன்று அநேக திரவ்யங்களினுல் விஸ்தாரமாகப் பூஜை செய்தால் ஒரு வருஷம் வரும் விக்னங்களெல்லாம் நாசமடைகின்றன. ஞாயிறு, செவ்வாய்க் கிழமைகளிலும் அஷ்டமி சதுர்த்தசி திதியன்றும் காலபைரவர் கோவிலுக்கு யாத்திரையாகச் சென்றுல் ஸகல பாபங்களும் விடுபடுகின்றன.*

*மூட ஜனங்கள் காசியில் வஸிக்கும் காலபைரவருடைய பக்தர்களுக்குத் தீங்கு செய்தால் அவர்கள் துர்கதி அடைவர். ஒருவன் விசுவநாதரிடம் பக்தி செலுத்திக் காலபைரவரிடம் பக்தி செலுத்தவில்லையானுல்*

அவனுக்கு ஒவ்வொரு அடியிலும் இடையூறு ஏற்படுகிறது.காலோதக தீர்த்தத்தில் ச்ரத்தையுடன் ஸ்னனம் செய்து பிறகு காலபைரவரை தர்சனம் செய்தால் மனிதர்களுடைய பித்ருக்களை அவர் உத்தாரண செய்கிறர்.

ஒருவன் பாபபக்ஷிணியான பைரவரை எட்டு ப்ரதக்ஷிணம் செய்வானுனுல் அவன் உடலாலும் மனதாலும், வாக்காலும், செய்த பாபத்தால் ஒரு பொழுதும் சூழமாட்டான். ஒரு ஸாதகன் ஆமர்தகர் என்ற பைரவருடைய அந்த பீடத்தில் அமர்ந்து ஆறுமாத பர்யந்தம் விடாமல் ஜபம் செய்வானுனுல் பைரவருடைய ஆக்ஞையினுல் அவனுக்கு ஸித்திகள் கிடைக்கின்றன.

ஒருவன் வாராணஸியில் இருந்தும் பைரவரை பஜியாமல் இருப்பானுனுல் அவனுடைய பாபங்கள் சுக்லபக்ஷத்துச் சந்திரகலை போல் வளர்ந்துவிடும். நானுவிதமான பலிபூஜை காணிக்கைகள் மூலம் ஒருவன் காலபைரவரை பஜித்தானுனுல் அவன் வேண்டும் ஸகல காமனைகளையும் அடைவான்.

காசியில் ஒரு புருஷன் ஒவ்வொரு சதுர்தசி, அஷ்டமி, செவ்வாய்கிழமை காலராஜனை பஜிக்காமல் இருந்தால் அவனுடைய புண்யம் க்ருஷ்ணபக்ஷத்து சந்த்ரிகையைப்போல் நஷ்டமடைந்துவிடும். ப்ரம்மஹத்யாதி நாசனம் பைரவருடைய பிறப்புக்களடங்கிய இந்தப் பவித்ரமான அத்யாயத்தைக் கேட்பவன் ஸகல பாபங்களிலிருந்து விடுபடுகிறுன். ஒருவன் ஜெயில் தண்டனை அனுபவிக்கட்டும் அல்லது மகத்தான ஆபத்தில் சிக்கியிருக்கட்டும் அவன் பைரவருடைய உற்பத்தியின் கதையைக் கேட்டானுனுல் அவனுடைய ஸங்கடங்கள் எல்லாம் விலகும்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவது கண்டமான காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான காலபைரவர் உற்பத்தி எனும் முப்பத்திஒன்ருவது அத்யாயம் ஸம்பூர்ணம். 

## அத்யாயம் 32

*அகஸ்த்யர் கூறுவார்:- ஹே மயூரவாஹனு! இப்பொழுது ஹரிகேசருடைய பிறப்பைப் பற்றிக் கொஞ்சம் கூறுங்கள். அவர் யார்? யாருடைய புதல்வர் என்ன? கடினமான தபஸ்ஸினுல் அவர் இவ்விதம் ஸ்ரீமானுக ஆனுர்? எப்படி அவர் தேவ தேவருக்கு இத்தனை பரம ப்ரியத்துக்குப் பாத்திரமாக ஆனுர்? எப்படி அவர் காசிவாஸிகளுக்கு ஹிதத்தைச் செய்யும் தண்டநாயகர் என்னும் பதவியைப் பெற்ருர்?*

*எப்படி இந்த மகாமதியூகி அன்னதாதா என்னும் பட்டத்தைப் பெற்ருர்? க்ஷேத்ரத்தைத் த்வேஷிப்பவர்களுடைய மதியை மயங்கச் செய்யும் ஸம்ப்ரமன், விப்ரமன் என்னும் இரு கணங்களும் அவரைப் பின்பற்றுபவர்களாக எவ்விதம் ஆனுர்கள்? விபோ! நான் இந்தக் கதையை கேட்க விரும்புகிறேன். அதைக்கூறி என்னை அனுக்ரஹியுங்கள்.*

*ஸ்கந்தர் கூறுவார்:- மகர்ஷே! கும்பஸம்பவரே! நீங்கள் மிகவும் உத்தமமான கேள்வியைக் கேட்டீர்கள். தண்டபாணியின் இந்தக் கதை காசிவாஸிகளுக்கு மிகவும் ஹித காரிணியாகும். மதியூகியே! இதைக் கேட்பதினுல் விஸ்வநாதருடைய அனுக்ரஹத்தால் காசிவாஸத்தின் பலனை நிர்விக்னமாக அனுபவிப்பார்கள்.*

*பூர்வகாலத்தில் கந்தமாதனம் என்னும் பர்வதத்தில் ஸாதுருதியான ரத்னபத்ரன் என்னும் ஒரு யக்ஷன் இருந்தான். அவன் பூர்ணபத்ரன் என்ற ஒரு பிள்ளையைப் பெற்று பூர்ண ஸந்தோஷத்துடன் இருந்தான். பிறகு அவன் அநேக போகங்களை அநுபவித்து வயோதிகப் பருவத்தை அடைந்தான்.*

*ஸர்வ இந்திரியங்களும் சாந்தமடைந்து சைவயோகத்தினுல் பார்த்திவ சரீரத்தைத் தியாகம் செய்து சாந்திமய சிவபதவியை அடைந்தான். பிறகு பிதாவின்*

தேஹாந்தத்துக்குப் பிறகு மிகவும் கீர்த்தி வாய்ந்த பூரணபத்ரன் புண்யம் ப்ராப்தமாகும் அசல ஸம்வ்ருத்தியின் மூலம் ஸந்யாஸ போகங்களை நன்றாக அனுபவித்தான்.

அவன் எல்லா மனோரதங்களையும் அடைந்தான். ஆனால் ஸ்வர்கம் அடைவதற்கு ஒரே ஸாதனம் க்ருஹஸ்தாச்ரமம். பூஷணத்தையும், பித்ருக்களுக்குத் திருப்தியும், ஸம்ஸார தாபங்களைப் போக்கும் அம்ருதத்தைப் போன்றதும், மிகவும் பாரமான துக்கரூபி ஸமுத்ரத்தில் விழுந்தவர்களைக் காப்பாற்றுவதற்கு அப்பால் மாதிரியுமான புத்ரபாக்யம் அவனுக்குக் கிடைக்கவில்லை. அப்படிப்பட்ட புத்ரன் முகத்தைப் பாராததாலும் மதுமழலையில்லாத அவனுடைய ஸர்வசுத்ததரமான க்ருஹம் சூன்யமாக இருந்தது.

தரித்ரர்களின் இதயத்தைப்போல் சூன்யமானதும் அல்லது பட்டுப் போன மரங்களையுடைய அரண்யத்துக்கு ஸமானமாக இருந்தது. தன்னென்ற நிழலைத் தராத வடவ்ருக்ஷத்தின் அடியில் தங்கும் வழிப்போக்கனைப் போன்று, அவன் குழந்தையில்லாததால் மிகவும் வருத்தமும் வெறுப்பும் அடைந்தான்.

கும்பமுனியே! பிறகு பூர்ணபத்ரன் என்னும் யக்ஷன் யக்ஷிணிகளுள் சிறந்த கனககுண்டலாவை அழைத்துக் கூறினன், காந்தே! எனது இந்த அழகான மாளிகையில் கண்ணாடிகள் மாட்டப்பட்டிருக்கின்றன; முத்து சரங்களின் தோரணங்களினால் ஜன்னல்கள் அலங்கரிக்கப் பட்டிருக்கின்றன; சந்திரகாந்தக் கற்கள் முற்றத்தில் பதிக்கப்பட்டிருக்கின்றன.

மாளிகை பத்மராகக் கற்களும் நீலமணிகளும் பதித்து எதிரொளி காட்டுகிறது. பவழத்தால் ஆன தூண்கள் மாளிகையைத் தாங்கி நிற்கின்றன. அஸ்திவாரமோ ஸ்படிகக் கற்களால் ஆனது. நவரத்ன மணிகளால் ஆன ஜாலர்களோடு கூடின கொடிகள் பறந்து கொண்டிருக்கின்றன. நான்கு பக்கங்களும் காரகில்

*சந்தனத்துடன் கூடிய புகை நறுமணத்தைப் பரப்பி ஆனந்திக்கச் செய்கின்றன.*

*உயர்ந்த பட்டுகளாலான மெத்தை, தலையணைகளால் கட்டில்கள் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் அகர், தாழம்பூ இவைகளின் வாஸனையை வீசுகின்றன. மண்டபங்களுக்குப் பட்டு வஸ்திரங்களான மேற்கட்டுகள் கட்டப்பட்டிருக்கின்றன.*

*ரம்யமான ஆடல் அரங்குகள்; குதிரைகள் கூட்டம் கூட்டமாகக் கட்டப்பட்டிருக்கின்றன. குதிரைகளின் கழுத்தில் கப்டப்பட்டிருக்கிற மணிகளினால் சின்னச் சின்ன சப்தங்கள் எழுகின்றன. அரண்மனை நூற்றுக்கணக்கான தாசிகளினால் நிரப்பப்பட்டிருக்கின்றது. நாட்டியத்தின் நூபுரசப்தத்தினால் மெய்சிலிர்த்து மயில்கள் கேகா என்ற இனிய சப்தத்தை எழுப்புகின்றன. மாடப்புறுக்கள் வட்ட வட்டமாகப் பறந்து சப்தம் எழுப்பிக்கொண்டிருக்கின்றன. கிளியும், மைனாவும் தங்களுக்குள் பேசிக் கொண்டிருக்கின்றன.*

*அங்கிருக்கும் மனோஹரமான நீர் நிலைகளில் அன்னபக்ஷிகள் ஜோடி ஜோடியாக நீந்துகின்றன. அங்கு சகோர பக்ஷிகளும் விளங்குகின்றன. மலர் மாலைகளின் ஸுகந்தத்தினால் கவரப்பட்டு வரும் வண்டுகளின் ரீங்காரம் எங்கும் வ்யாபித்திருக்கிறது.*

*அங்கு வீசும் காற்றில் கற்பூரம் கஸ்தூரி இவைகளின் மணம் மெல்ல மெல்லத் தவழ்கின்றது. அலங்கரித்திருக்கும் சித்திர பொம்மைகளைப் பார். அந்த வானர பொம்மையின் பற்களுக்கு இடுக்கினால் மாணிக்கத்தினாலான மாதுளம் பழம் தொங்குகிறது. சிதறிக்கிடக்கும் முத்துக்களைக் கிளிகள் மாதுளம் விதைகள் என்று எண்ணி ஏமாறுகின்றன. லக்ஷ்மி தேவியின் மற்றொரு க்ருஹமோ என்று தனமும் தான்யமும் நிரம்பியிருக்கின்றன.*

ப்ரியே! கனககுண்டலே! லக்ஷ்மியின் ஸந்தோஷ ரூபமான கர்ப்பத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிருயே. சிசுவைத் தாங்கும் கர்பம் இல்லாமல் இருக்கிருயே; ஐயோ நான் எப்படி புத்ரனுடைய முகத்தைப் பார்ப்பேன்; ஏதாவது ஒரு உபாயம் இருந்தால் கூறு; ஐயோ புத்ரன் இல்லா ஜீவன் இளப்பம், இளப்பம்; புத்ரனில்லாத அந்தக் க்ருஹம் சூன்யமாகத் தோன்றுகிறதே! அடீ ப்ரியதமே; புத்ரனில்லாத இந்தச் சூன்ய மாளிகையில் அழகு எதற்கு; இந்தச் சேர்த்து வைத்த பணத்திற்கு இளப்பம்; நாம் இருவரும் வாழ்ந்து கொண்டிருக்கிரோம் பார். அது இதைவிட இளப்பம்.

பதி இந்த விதமாக உச்சத்தொனியில் ப்ரலாபிப்பதைக் கண்டு அந்தப் பதிவ்ரதா கனககுண்டலா என்ற யக்ஷிணியானவள் மனதிற்குள்ளேயே நெடு மூச்செறிந்து ஏதோ சொல்வாள்-

காந்தரே! தாங்கள் ஞானவாளுக இருந்தும் ஏன் வருந்துகிறீர்கள். இப்பொழுது ஸந்தானம் கிடைப்பதற்கு ஓர் உபாயம் நான் சொல்கிறேன். நீங்கள் நம்பிக்கையுடன் கேட்பீர்களாளுல் சொல்வேன்;

முயற்சியுள்ள புருஷர்களுக்கு இந்தச் சராசரத்தில் எதுதான் துர்லபம்! ஈஸ்வரனிடம் சித்தத்தை ஸமர்ப்பிப்பவர்களுக்கு அவர்களுடைய மஞேரதங்கள் உடனேயே ஸித்தமாகும்.

நாதா! புருஷர்கள்தான் எப்போதும் தெய்வத்தைக் குற்றம் சொல்வார்கள். தெய்வ லோகம் என்பது பூர்வஜன்மத்தில் செய்த பலனேயன்றி வேருென்றுமில்லை.

அதளுல் பூர்வஜன்மத்தில் செய்த பலனை நிவர்த்திக்கும் பொருட்டு புருஷார்த்தத்தை முன்னிட்டுக் கொண்டு எல்லாக் காரணங்களுக்கும் காரணரான இறைவனைச் சரண் அடைவதே உசிதம். ஸந்தானம், தனம், ஸ்த்ரீ, புருஷன், பூஷணம், பவனம், அசுவங்கள், கஜங்கள், ஸ்வர்கம், மோக்ஷம் இவைகளெல்லாம்

சிவபக்தியிலிருந்து அப்பாற்பட்டது அல்ல. அதிகம் சொல்லுவானேன்! ஸர்வாந்தர்யாமியான பகவான் நாராயணன் கூட ஸ்ரீகண்டரை ஸேவித்தே ஜகத்தைப் பரிபாலிப்பவர் ஆனுர். அதே பகவான் சம்பு ப்ரம்மாவை ஆக்கினுர். அந்த மஹாதேவருடைய அனுக்ரஹத்தினுல் இந்த்ராதி தேவதைகள் லோகபாலகர்கள் ஆனுர்கள்.

சிலாத முனி என்பவர் ஸந்தானம் இல்லாமல் இருந்து ஈசன் அருளினுல் மரணத்தை ஜயித்தவர். ஆனுல் ம்ருத்யுஞ்ஜயன் என்னும் பிள்ளையைப் பெற்ருர், கால பாசத்தால் கட்டப்பட்ட ஸ்வேத கேதுவும் சம்புவின் தயவினுல் வாழ்க்கையைத் திரும்பிப் பெற்ருர்.

உபமன்யுவும் க்ஷீரஸமுத்ரத்தின் பேரில் தன் அதிகாரத்தையடைந்தான்; அந்தகன் என்னும் அசுரனும் ப்ருங்கி என்னும் பெயருடன் சிவகணங்களுக்கு நாயகரானுர்.

சம்புவின் க்ருபையினுல் சிவனே ஸேவித்து ததீசி மஹர்ஷி யுத்தத்தில் விஷ்ணு பகவானே ஜெயித்தார். தக்ஷப்ரஜாதிபதியும் சங்கரரை ஆராதித்து ப்ரஜாபதி பதவியைப் பெற்ருர். மஹாதேவர் கண்களுக்குத் தென்பட்டால் நம் எல்லா மனோரதங்களிலும் மேலான பதவியைத் தருவார். வாக்கிற்கும் எட்டாத பதவி அது தேஹமெடுத்தவர்களுக்கு ஸர்வ அபீஷ்டத்தையும் உடனே அருளும் தாதாவான மஹேஸ்வரனே ஆராதிக்காமல் இந்த உலகில் ஒருவரும் இச்சாசக்தியை அடையமாட்டார்கள். இது நிச்சயம். அதனுல் ஸ்வாமீ! தாங்கள் ஸர்வ ஜனங்களுக்கும் ஹிதத்தைச் செய்யக் கூடிய புத்ரனுக கிடைக்க வேண்டுமென்று விரும்பினீர்களானுல் ஸர்வ ப்ரயத்தனத்துடன் முயன்று சங்கரனே சரணுகதி அடையுங்கள்.

இந்த விதமாக பத்னியுடைய வார்த்தைகளேக் கேட்டு ஸங்கீதத்தில் தேர்ச்சியடைந்த யக்ஷனுன பூர்ண பத்ரன் த்ருடவ்ரதனுய் கீதவித்யையினுல் மஹாதேவனே

ஆராதித்து, சில நாட்களுக்குள்ளாகவே தன்னுடைய பத்னியின் கர்பத்தில் தன்னுடைய உயர்ந்த புத்ர வாஞ்சையைப் பெற்று பரிபூர்ண மனோரதத்தையடைந்தார்.

காசியில் நாதேசுவரர் ஆன சிவனே உபாஸனே செய்து யார் தான் தங்களது அபீஷ்டங்களே அடையவில்லே? ஆதலால் எல்லோரும் ப்ரயத்ன பூர்வமான நாதேசர் பகவானுக்கு ஸேவை செய்ய வேண்டும். இப்படி காலக்ரமத்தில் பத்தினி கர்பவதியாகி புத்ர ரத்னத்தைப் பெற்றெடுத்தவுடன் பிதா பூர்ணபத்ரர் மிகவும் ஸந்தோஷமடைந்து தன் புத்திரனுக்கு ரிஷீகேசன் என்ற பெயரை வைத்தார்.

அகஸ்தியரே! பிறகு பூர்ணபத்ரன் புத்ரனுடைய முகத்தைப் பார்த்து, வெகு தானதர்மங்களேச் செய்தான், கனககுண்டலாவும் பரமானந்தமடைந்தாள். மதனனுக்கொப்பான அந்தப் பூர்ண பத்ரனின் பாலகனும் சுக்லபக்ஷத்து சந்திரனேப் போல் ப்ரதி தினமும் வளரத் தொடங்கினன்.

இந்த விதமாக அந்தக் குழந்தை ஹரிகேசனுக்கு வயது எட்டாயிற்று. அவன் ஸர்வதேவர் சிவனேத் தவிர வேறு ஒருவரையும் அறியவில்லே. குழந்தை விளேயாட்டில் கூட அவன் மண்ணினல் சிவலிங்கம் பிடித்து பசுமையான புற்களேப் பறித்து அதற்கு அர்சனேகள் செய்வான்.

தன்னுடைய தோழர்களேச் சிவனுடைய பெயரைச் சொல்லியே அழைப்பான். சந்திரசேகரா! பூதேசா! ம்ருத்யுஞ்ஜயா! ம்ருடா! ஈஸ்வரா! தூர்ஜடீ! கண்டபரசு! ம்ருடானீசா! நீலகண்டா! ஈசா! ஸ்மராரி! பார்வதீபதி! கபாலி! பாலநயனு! சூலபாணி மஹேஸ்வரா! சர்மாம்பரன்! திகம்பரா! கங்காதரா! விரூபாக்ஷா! ஸர்வபூஷணு! சிவா! இத்யாதி பேர்களேச் சொல்லியழைப்பான்.

தனது ஸமவயதுக் குழந்தைகளே மிகவும் அன்புடன் இப்படிக் கூறுவான். அவனுடைய இரண்டு காதுகளும்

மஹாதேவனின் நாமங்களைத் தவிர, மற்றொரு பெயரைக் கேட்கவே கேட்காது. அவனுடைய கால்கள் சிவாலயத்தைத் தவிர வேறெங்கும் செல்லாது. அவனுடைய கண்கள் வேறு உருவங்களைப் பார்க்காது.

அவனுடைய நாக்கு ஹரனுடைய நாமாம்ருதத்தைத் தவிர வேறு ருசியை ஏற்காது. அவனுடைய நாஸி சிவனுடைய பாதபத்ம மகரந்தத்தைத் தவிர ஸுகந்தத்தை முகராது. அவனுடைய கைகள் சிவனுக்கு உற்சாகம் விளைவிக்கும் காரியங்களையே செய்யும். மனம் வேறு இடங்களுக்குச் செல்லவே செல்லாது. நல்ல புத்தியுள்ள அந்தக் குழந்தை உண்ணக்கூடிய பருகக்கூடிய பதார்த்தங்களையெல்லாம் மஹாதேவனுக்கு நிவேதித்த பின்பே உண்பான். அவன் எங்கும் எல்லா நிலைகளிலும் சிவன் உருவத்தைத் தவிர வேறு உருவத்தைக காண்பதில்லை.

போகும் பொழுதும், எழும்பொழுதும், கனவிலும், உண்ணும்பொழுதும், பருகும்பொழுதும் எல்லா ஸமயங்களிலும் தனது நான்கு பக்கங்களிலும் த்ரிலோசனனையே பார்த்தான். வேறு ஒருவிதபாவமும் அவன் அறியவில்லை.

அந்த பாலகன் ராத்ரியில் தூங்கும்போதும்கூட த்ரிலோசனு! நீ எங்கு போகிறாய்? க்ஷணநேரம் நில்லேன் என்பான். ஹரிகேசருடைய பிதா குழந்தையின் இந்த நிலையை கவனித்துவிட்டு புத்திரனுக்கு அறிவுரை கூறுவார். 'குழந்தாய் வீட்டுக்காரியங்களை கொஞ்சம் கவனித்துப்பார்.

இந்தக் குதிரைகள், மாடுகள், கன்றுகள், விதவிதமான வஸ்திரங்கள், நேர்த்தியான சால்வைகள், களஞ்சியத்திலுள்ள அநேகவிதமான ரத்னங்கள், விதம் விதமான தங்கம் வெள்ளியினால் செய்யப்பட்ட பொருள்கள், மிகவும் பெரியபசுச் சாலை, வெள்ளி, பித்தளைகளாலான விதம் விதமான பாத்திரங்கள், நாஞ

தேசங்களிலிருந்து வாங்கிய விலையுயர்ந்த வஸ்துக்கள், நேர்த்தியான சாமரம், விதம் விதமான வாசனைத்ரவ்யங்கள், அபரிமிதமான தனராசி இப்படி நம்மைச்சுற்றி நாலாபக்கங்களிலும் இருக்கப்பட்ட ஸமஸ்த வஸ்துக்களும் பணம் ஸம்பாதிக்கிற வ்யாபாரத்துக்கான ஸமஸ்த வித்தைகளும் கற்றுக்கொள். புழுதியில் பிரளும் தரித்ரர்களைப் போல் இருக்கப்பட்ட இந்த சேஷ்டைகளை விடு. எல்லா வித்தைகளயும் கற்றுக்கொள். உத்தமமான போகங்களையனுபவித்து சுகமாக நாட்களைக்கழி, வயோதிகப் பருவம் வந்த பிறகு பக்தி யோகத்தில் ஈடுபடலாம்.

இப்படி பிதா அடிக்கடி வற்புறுத்தியும் ரிஷீகேசன் ஒன்றையும் கேட்கமாட்டான். ஒரு சமயம் பிதா பராமுகமாக இருக்கும் போது, இந்த உதார புத்திமான் பாலகன் பயந்து கொண்டே வீட்டைவிட்டு வெளியேறினன். நடக்க நடக்க திக்கு திசைத் தெரியாமல் கலங்கினன். யோசிக்கத் தொடங்கினன். ஐயோ நாம் சிறு பிள்ளைத்தனமாக ஏன் வீட்டை விட்டு வந்தோம்!

சம்போ! நான் எங்கு போவேன்? எங்கே சென்றால் எனக்கு நல்லது? நான் எனது தந்தையை விட்டுக் கிளம்பிவந்து விட்டேனே? என்ன செய்வேன்? எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே; முன்னொருதரம் நான் என் பிதாவின் மடியில் உட்கார்ந்து கொண்டிருக்கும்பொழுது ஒரு ஸாது என் பிதாவிடம் பேசிக் கொண்டிருக்கும் ஸ்பஷ்டமான சில வார்த்தைகளை நான் கேட்டேன். மாதா, பிதா, சொந்த பந்து ஜனங்கள் இவர்களை யார் விட்டு வருகிறார்களோ? யாருக்கு வேறு கதியில்லையோ அவர்களுக்கு கதி வாராணஸிதான் என்று கூறினர்.

வயோதிகம் யாரை ஆக்ரமித்துள்ளதோ, நோயினல் யார் வ்யாகுல மடைந்திருக்கிறார்களோ, யாருக்கு ஒரு இடத்திலும் கதியில்லையோ, அவர்களுக்கெல்லாம் வாராணஸியே கதி, அடிக்கடி ஆபத்தில் சிக்கிக்

கொண்டவர்களும், தரித்திரத்தினுல் வ்யாகுலமடைந்தவர்களும் உலக பயத்தால் பீதியுற்றவர்களும், கர்ம பந்தங்களினுல் கட்டப்பட்டவர்களும் சுருதி, ஸ்ம்ருதி தெரியாதவர்களும், சௌசாசாரங்கள் தெரியாதர்களும், உலகத்தால் சிக்கி விழுந்தவர்களும், தானம், தபம் இவை செய்யாதவர்களுக்கும் இந்தப் பதியை விட்டால் வேறு கதியில்லை. அவர்களுக்கு வாராணஸியே கதி.

யாருக்கு பந்து ஜனங்களால் அடிக்கடி அவமானம் நேருகிறதோ, அவர்களுக்கு விஸ்வேஸ்வரருடைய ஆனந்த கானனமே ஆனந்த மளிக்கவல்லது; ஏனென்றுல் விஸ்வநாதருடைய அனுக்ரஹத்தையுடைய காசி வாசி ஸத்ஜனங்களுடைய பிடித்த இடம் ஆனந்த கானனமே ஆகிறது. அவர்களுடைய நிரந்தரமான ஆனந்தம் காசியிலேயே உதயமாகிறது.

இந்த மஹா ஸ்மசானத்தில் வாஸம் செய்வதால் ஸமஸ்த கர்ம ரூபமான விதைகள் விஸ்வநாதருடைய அக்னியினுல் வறுபட்டு பஸ்மமாகிவிடுகிறது. இதே காரணத்தினுல் அங்கு அனுதைகளுக்குக் கதி கிடைக்கிறது.

ஹரிகேசன் இவ்வாறு யோசித்து அதாவது இந்த மஹாதேவருடைய க்ருபையால் இந்த மனித சரீரத்தைத் தியாகம் செய்வதால் பிறகு தேஹ ஸம்பந்தம் ஏற்படாது என்று எண்ணியவாறு ஆனந்தவனம், அவிமுக்த க்ஷேத்ரம் காசீபுரிக்குச் சென்று தபஸ்ஸைச் செய்து விஸ்வேஸ்வரரைச் சரண் அடைந்தார்.

அதன் பின் சில நாட்கள் கழிந்த பின்னர், ஒரு தடவை பகவான் சம்பு, ஆனந்த கானனத்தில் பிரவேசித்து, பார்வதிக்கு தனது உத்தமமான நந்தவனத்தைக் காட்டத் தொடங்கினுர். பிரியே! உத்யானத்தில் சோபை எவ்விதம் இருக்கிறதென்று. பார் ! இந்த உத்யானத்தில் மந்தாரை, மாலதி, நவமல்லிகை, கதம்பம், சம்பகம், கோவிதாரம், சாலீரம், கேதகி, குரபகா, விஜகியத, பகுளம், அசோகம்,

புன்னுகம், பாடலம் இத்யாதி புஷ்பங்கள் மலர்ந்து எப்படி தச திசைகளையும் பரம ஸுகந்தத்துடன் கூடியதாகச் செய்கின்றன பார். இந்த நவமல்லிகைக்கு மேல் மகரந்தப் பொடிக்கு ஆசைப்பட்டு வண்டினங்கள் ரீங்காரம் செய்வதைப் பார்.

அநேக இடங்களில் வண்டின் வரிசைகள் மாலாரூபமாக பூதலத்தில் வரிசையாக இறங்குவதைப் பார். இந்த அசைந்தாடும் சந்தன மரங்களின் கிளைகளின் நுனியில் குயில் இனங்கள் க்ரீடிக்கின்றன. இந்த விசால அகர் விருக்ஷத்தில் அகர் வாசனைக்காக உத்தம ஜாதி பக்ஷிக் கூட்டங்கள் மதோன்மத்தமாக க்ரீடிக்கின்றன. இந்த நாக கேஸரியின் இருக்கும் ஸாலபஞ்சிகா எனும் பறவைகள் விநோதமாக விளையாடுகின்றன.

இந்த ஸுமேருவைப் போல் உன்னதமான ஸுமேரு ருத்ராக்ஷ மரத்தின் கிளையில் உட்கார்ந்து கின்னரகணங்கள் விளையாடுகின்றன. கின்னரி ஜோடிகள் உச்சஸ்வரத்தில் பாடுகிறுர்கள். கதம்பவ்ருக்ஷத்தின் கூட்டங்களில் வண்டுகளுடைய ஜோடிகள் ரீங்காரம் செய்கின்றன. இந்தத் தங்க வர்ணத்தையும் விட அதன் வர்ணங்கள் ச்ரேஷ்டமாக இருக்கிறது.

இங்கு சால, தாலம், தமாலம், ஹிந்தாலம், வபுடி, முதலிய விருக்ஷங்கள் நிரம்பியிருக்கின்றன. புஷ்பங்களின் ஸுகந்தம் பரவி வருகிறது. கஜுரை வ்ருக்ஷத்தின் பங்க்திகளில் விளங்கிக் கொண்டு தென்னை மரங்களை மறைத்துக் கொண்டு எலுமிச்சை மரங்களின் வர்ணத்தினுல் தானும் வர்ணமாகிக் கொண்டு, நார்த்தை மரங்களினுல் பசுமையாகிக் கொண்டு, வண்டுகளின் ரீங்காரத்தினுல் சோபிதமாகி, வேப்பமரங்கள் அடர்ந்து, பருத்தி மரங்களினுல் பூர்ணமானதாக இருக்கிறது.

மதுரமான ஸுகந்தத்தைத் தரும் மருக்கொழுந்து மருவு இவைகளினுல் ப்காசித்தெழுந்து லவலை என்னும் விருக்ஷம் அசைந்தாடுவதற்குக் காரணமாகக் கொண்டு

மந்தமாருதம் க்ரீடித்துக் கொண்டிருக்கிறது. வேடுவச்சியின் வாத்யத்தைப் போல சில்வண்டின் த்வனி ஜங்காரம் செய்து கொண்டிருக்கின்றது. தடாகத்தின் கரையில் பன்றிகள் க்ரீடித்துக் கொண்டிருக்கின்றன.

அந்தப் பெண் அன்னத்தினுடைய கழுத்துடன் ஒன்றியிருக்கும் தாமரைத் தண்டின் அசைவிஞல் ஆண் அன்னம் அதை ஆசையுடன் பார்த்துக் கொண்டிருக்கிறது. ஆனந்தத்துடனிருக்கும் சக்ரவாக பக்ஷியின் க்ரோங்கார சப்தம் மதுரமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறது.

கொக்குகளின் குஞ்சுகள் திரிந்து கொண்டிருக்கின்றன. மதமுள்ள மயில்கள் சப்தித்துக் கொண்டிருக்கின்றன. மைஞ பக்ஷிகளுடைய கூட்டம் வ்யாகுலத்தோடு பறந்து கொண்டிருக்கின்றன.

மந்தமாக அசைந்தாடும் கமலத்தோடு மகரந்தப் பொடிகள் நான்கு பக்கமும் பறந்து கொண்டிருக்கிறது. இந்த உத்யானம் என்னும் வனத்தைப் பார்; மலர்ந்த தாமரையே முக மண்டலமாகவும், நீலோத்பலமே நேத்ரங்களாகவும், தமால வ்ருக்ஷமே ஜடையாகவும், வெடித்த மாதுளேகளே பல் வரிசைகளாகவும், வண்டுகளின் வரிசையே புருவங்களாகவும், கிளிகளின் அலகுகளே மூக்காகவும், கமலத்தின் வாசனேயே நிச்வாசமாகவும், அழகான தாமரை இலேகளே வஸ்திரமாகவும், கர்ணிகா பூவே ஆபரணமாகவும், கமனீயமான சங்கமே கழுத்தாகவும் ஒடிந்த வ்ருக்ஷங்களின் அடிபாகமே மேலும் கீழுமான தோள் பாகமாகவும், சந்தன வ்ருக்ஷத்தின் சுற்றியுள்ள ஸர்ப்பராஜனே கைகளாகவும், அசோக புஷ்பத்தளிர்களே விரல்களாகவும், தாழம்பூவே நகங்களாகவும், கம்பீரமாக விளங்கும் சிங்கமே வக்ஷஸ்தலமாகவும், குன்றுகளிலிருந்து பிளந்து விழுந்த பாறைகளே பெரிய உதரமாகவும், ஜலத்தின் சுழிகளே நாபிக் கமலமாகவும், பெரிய பெரிய விருக்ஷங்களே இரண்டு தொடைகளாகவும் ஸ்தல பத்மமே

*சரணங்களாகவும், மத்தகஜ ராஜனின் நடையே இதனுடைய நடையாகவும் காணப்படுகிறது. இளம் வாழைக் கூட்டங்களின் பாத்திகளில் துளிர்த்திருக்கும் இளம் வாழை இலைகளே வஸ்திரமாகவும், நானுவிதமான புஷ்பக் கொத்துகளே மாலைகளாகவும் உள்ளன. இவ்வனத்தில் முள் வ்ருக்ஷங்கள் இல்லை. துஷ்ட மிருகங்களும் எருதுக் கூட்டங்களும் தங்கள் பகையைவிட்டு ஸஞ்சரிக்கின்றன.*

*ஆஹா! சந்திரகாந்த மணியின் சிலையில் தூங்கும் கலைமானைப் பார்த்தும் மான் களங்கத்துடன் கூடிய சந்திரனை நினைவு படுத்துகிறது. வ்ருக்ஷங்களிலிருந்து சிதறி விழும் புஷ்பங்கள் நக்ஷத்ரங்களின் சோபையை ஜயித்திருக்கின்றன. இவ்விதமாகப் பார்வதி தேவிக்கு உத்யானவனத்தின் அழகைக் காட்டிக் கொண்டு மஹாதேவர் அவ்வனத்திற்குள் பிரவேசித்தார்.*

*தேவதேவர் கூறினுர், சர்வசுந்தரீ! நீ எனக்கு எப்படி ப்ரியதமையோ, அப்படியே இந்த ஆனந்த வனமும் எனக்கு ப்ரியமானது;*

*தேவீ! இந்த ஆனந்த வனத்தில் காலகதியடைந்த ஜீவர்களின் தேஹம் என்னுடைய அனுக்ரகத்தினுல் அம்ருத பதவியை அடைகின்றன. பிறகு அவர்கள் ஜன்மமே எடுக்க வேண்டாம்.*

*எத்தனை ஜீவர்கள் வாராணஸியில் ம்ருத்யுவை அடைகிருர்களோ என்னுடைய ஆக்ஞையினுல் ஸ்மசானத்தில் ஜ்வலிக்கும் அக்னியில் அவர்களின் கர்ம விதையும் பஸ்மமாகிவிடுகிறது.*

*கிரிராஜகுமாரீ! எவர் இங்கு மஹா ஸ்மசானத்தில் மீளா நித்ரையில் ஆழ்கிருர்களோ, அவர்கள் திரும்பவும் கர்ப்பத்தில் ஜனிக்கமாட்டார்கள்.*

*ஜந்துக்கள் ப்ரம்மஞானம் அடைந்தால் தான் த்ருப்தியடைவார்கள்; ப்ரயாகையாக இருந்தாலுமே,*

அல்லது ப்ரம்மஞான க்ஷேத்ரமான காசியாக இருத்தலுமே ப்ரம்மஞானமில்லாமல் மோக்ஷம் கிடையாது. அதனாலேயே நான் காசிவாசிகளுடைய அந்திமக் காலத்தில் ப்ரம்ம ஞானமாகிய தாரக மந்திரத்தை அவர்களுக்கு உபதேசம் செய்கிறேன். அதனால் அவர்கள் அதே க்ஷணத்தில் முக்தியடைகிறார்கள்.

காசியில் மரணமடைந்தவர்களை நிந்திக்கிறவர்கள் அவர்களுடைய பாபத்தை ஏற்றுக்கொள்கிறார்கள். புகழ்ந்து பேசுபவர்கள் புண்ணியத்தை ஏற்றுக் கொள்கிறார்கள். அதனால் அவர்கள் பாபம் புண்ணியம் இரண்டும் சூன்யமாகி முக்தியடைகிறார்கள்.

தேவீ! கலி காலத்தினால் மழுங்கிய புத்தியும் இயற்கையிலேயே சஞ்சல புத்தியுள்ள மனிதர்களுக்கு ப்ரம்ம ஞானம் எங்கிருந்து ஸித்திக்கும்? இதனாலேயே நான் அவர்களுக்கு இந்த ஸ்தானத்திலேயே ப்ரம்ம ஞானத்தை உபதேசம் செய்கிறேன். யோக்ய ஜனங்கள் ஐஸ்வர்யத்தின் மோஹத்தினால் யோகப்ரஷ்டராகி பதிதராகின்றனர். ஆனால் காசியில் பதிதன் ஆனவனைக்கூட உலகத்தில் பதிதன் என்று கூறமாட்டார்கள்.

அநேக யோக ஸாதனங்களைப் பயின்றாலும்கூட ஒருவன் ஒரே ஒரு ஜன்மத்தில் தத்வஞானமடைய மாட்டான். ஆனால் காசியில் மரணமடைந்தவன் இந்த ஜன்மாவிலேயே முக்தியடைகிறான். ஜீவர்கள் என்னுடைய அனுக்ரஹத்தினால் இந்த அவிமுக்த மஹாக்ஷேத்ரத்தில் முக்தியை அடைவது போல வேறு எங்குமடைய மாட்டார்கள்.

யோகி அநேக ஜன்மங்களில் யோகாப்யாஸம் செய்தாலும் மோக்ஷத்தை அடைவானோ, மாட்டானோ, என்ற ஸந்தேஹம் இருக்கும். ஆனால் காசியில் மரிப்பவனுக்கு இதே ஜன்மத்தில் மோக்ஷம் கிடைக்கும். கலி காலத்தில் யோகத்தினால் ஸித்தி கிடையாது. தபஸ்ஸினாலும் கிடையாது. கேவலம் நியாயவழியில்

ஸம்பாதித்த தனத்தை தானம் செய்தாலேயே அவன் ஸித்தியடைகிறுன்.

வ்ரதம், தபஸ் யக்ஞும், ஜபம் தேவபூஜை இவைகளொன்றும் முக்திக்கு ஸாதனமல்ல. தானமொன்றே கலியுகத்தில் முக்திக்கு ஸாதனமாகும். தானம் ஒன்றிஞல்தான் ஒருவனுக்குக் காசி கிடையாது. கோர கலிகாலத்தில் விஸ்வநாதன் ஒருவனே தெய்வம்; வாராணஸி ஒன்றே மோக்ஷபுரி. பாகீரதியான கங்கை நதி ஒன்றே புண்ணியப் ப்ரவாஹினி; தானம் ஒன்றே விசேஷ தர்மம்.

காசியில் உத்தரவாஹினியான கங்கையும் என்னுடைய லிங்கமும்தான் முக்திதரும் தாதாக்கள். ஆனுல் கலியுகத்தில இவையிரண்டு தானத்தின் பலஞல்தான் கிடைக்கும்.

ஏ! தேவேஸ்வரி! என்னுடைய இந்த க்ஷேத்ரத்தில் வசிப்பவன் 'பாபியானுலும், புண்ணியவானுலும் அவன் ஜீவன் முக்தனுக ஆகியே தீருவான். இந்த விஷயத்தில் துளிகூட யோசிக்கத் தேவையில்லே. மனுஷ்யர்களுடைய நூறு ஜன்மத்தில் சம்பாதித்த பாபபுண்யங்கள்கூட இந்த அவிமுக்த க்ஷேத்ர மாஹாத்மிய ஜன்மத்திற்கு ஈடாகாது.

அதஞல் ஏ! தேவீ! முமுக்ஷுக்கள் ஆனவர்கள் அடிக்கடி நூற்றுக்கணக்கான இடையூறுகளாலும், கர்மங்களாலும் இடறி விழுந்தாலும் அவிமுக்த க்ஷேத்ரத்தை விட்டுப் போகவேக் கூடாது. எவர்கள் மோக்ஷஸன்யாஸம் வாங்கிக் கொண்டு இருக்கிறுர்களோ அவர்கள் எல்லாரும் ஜீவன் முக்தர்கள். நான் அவர்களுடைய விக்னங்களே விலக்குகிறேன். யோகிகளுடைய ஹ்ருதயாகாசம், கைலாஸம் மந்தரபர்வதத்தின் மேல் என்னுடைய ஆசை இல்லே. காசியில் ப்ரேமையுடன் இருப்பதே எனக்கு ஆசை.

காசி வாஸிகள் எனது கர்ப்பத்திலேதான் இருக்கிறுர்கள். அதஞல் அந்திம காலத்தில் அவர்களுக்கு

முக்தி கொடுக்கிறேன். ஏன் என்றால் இது எனது பிரதிக்ஞையாகும். ப்ரளய காலத்தில் தாமஸப்ருக்ருதி காலமூர்த்தியின் உருவத்துடன் சராசர உலகத்தை லீலையாகவே விழுங்கிவிடுகிறேன். ஆனால் காசியை முயற்சியுடன் ரக்ஷிக்கிறேன். தபதனமே! கௌரி தேவி! நீயும் ஆனந்த பூமியான காசியும் எனக்கு எல்லாவற்றையும் விட இஷ்டமானவர்கள். வேறு ஒருவரும் இல்லை.

காசியைவிட எனக்கு வேறு இருப்பிடம் இல்லை. காசியைவிட வேறு எங்கிலும் எனக்கு அநுராகமில்லை. இதுஸத்யம், ஸத்யம், ஸத்யம், இந்த ப்ரம்மாண்ட உருண்டையின் மத்தியில் காசியில் முக்தியென்று அநாயாஸமாக ஏற்படுவது ஒன்றாகும். மற்ற இடங்களில் அஷ்டாங்க யோகம் செய்தாலும் கிடையாது. தேவதேவர் தேவியிடம் இப்படி வார்த்தையாடிக் கொண்டு அசோகத்தரு அடியில் தபஸ் பண்ணிக்கொண்டு அமர்ந்திருக்கும் ஹரிகேசனைக் கண்டார்.

அவனுடைய தேஹம் எலும்புகள் வரை உலர்ந்து போய்விட்டது. அஸ்திகூடு ஒன்றுதான் இருக்கிறது, சரீரம் சிதிலமடைந்துவிட்டது. கரையான் மாம்ஸத்தையும், ரத்தத்தையும் தின்றுவிட்டு, சரீரத்தை உலர்த்திவிட்டன.

உடம்பில் மாம்ஸமே இல்லை. அவன் ஸ்படிக சிலைமாதிரி அசையாமல் உட்கார்ந்திருக்கிறான். அவனுடைய சோபை சங்கு, மல்லிகை, சந்திரன், பனி இவைகளுக்குச் சமமாக வெளுத்து விட்டிருக்கிறது. அந்த:கரணத்தின் ஆதாரத்திலேயே பிராணன் இருந்து கொண்டிருக்கிறது. ஆயுள் மீதி இருக்கிறது. அது உயிரைக் காப்பாற்றுகிறது என்று ஊகிக்க முடிகிறது. இமைகள் அசைவதைப் பார்த்தால் இது ஒரு ஜந்துவோ என்று தோன்றுகிறது. மஞ்சள் நக்ஷத்ரம் போல் இருக்கும் கண்களில் தீக்ஷ்ண பார்வையினால் ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறது.

அவனுடைய தபாக்னியினுல் பக்கத்தில் உள்ள மரங்கள் வாடி நிற்கின்றன. ஆனுலும் அவனுடைய ஸௌம்யமான த்ருஷ்டியின் காந்தியினுல் அவைகள் தளிர் விட்டுக் கொண்டிருக்கின்றன. அவனைப் பார்த்தால் நிராகாரமான நிராகதங்கையுடன் ஸாக்ஷாத் தபமே பக்தி வசத்தால் மனிதரூபம் எடுத்துக்கொண்டு தபஸ் செய்கிறதோ என்று தோன்றுகிறது. அவனைச் சுற்றிலும் மான்குட்டிகள் விளையாடிக் கொண்டிருக்கின்றன. அவைகளை பயங்கர முகத்துடன் கூடிய சிங்கம் ஒன்று பாதுகாத்துக் கொண்டிருக்கிறது.

அவனை இவ்வித நிலையில் கண்ட பகவதி பார்வதி பர்த்தாவிடம் விண்ணப்பித்துக் கொண்டாள். தங்களிடமே சித்தத்தை வைத்தவனுய் தங்களுடைய அதீனமான இந்த ஜீவன் தங்களுடைய தபஸ்ஸே கர்மம் என்றும் தாங்களே ஆச்ரயமென்பதும், தங்களைக் குறித்துச் செய்யும் தபஸ்ஸே உக்ரதபஸ்; சரீரம் உலர்ந்து இருக்கு. இந்த தபஸ்வியாகிய பாலனுக்கு அனுக்ரஹியுங்கள் நாதா; இதைக் கேட்டு பகவான் நந்தி கையாகுக் கொடுக்க பார்வதியுடன் விருஷப வாஹனத்தில் இருந்து இறங்கி தயை நிரம்பிய இதயத்துடன் ஸமாதி அவஸ்தையில் மூடிய நேத்ரங்களுடன் இருக்கும் பாலகன் அருகில் அமர்ந்து அவனைத் தடவிக் கொடுத்தார்.

பிறகு அந்த யக்ஷபாலகன் தனது நேத்ரங்களைத் திறந்து எதிரில் கோடி ஸூர்ய ப்ரகாசத்துடன் ஜ்வலிக்கும் த்ரிலோசனனைப் பார்த்தான்; ஸந்தோஷத்தால் குழம்பித் தழுதழுத்த குரலில் கூறலானுன். ஹே! ஈசா, சம்போ, கிரிஜேசா, சங்கரா, த்ரிசூலபாணி, சசிகண்ட சேகரா, தங்களுக்கு ஜயம். க்ருபாளு, கமலஸ்பர்சத்தினுல் எனது இந்த சரீரமாகிய லதை அம்ருதம் ஊற்றினதுபோல் ஆயிற்று.

பிறகு மஹேஸ்வரர் அந்த மகா தபோநிதி தீரபக்தனுக்கு த்ராக்ஷையைப் போன்ற இனிமையான

வாக்கினுல் ஸந்தோஷமாக வரங்களேக் குவிக்கத் தொடங்கினுர். ஏ! யக்ஷ, நீ என்னுடைய வரத்தினுல் நீ என்னுடைய ப்ரிய க்ஷேத்ரத்திற்கு தண்டம் தரித்தக் காவலாளியாகி இன்றிலிருந்து இங்கு ஸ்திரமாக இரு. துஷ்ட நிக்ரஹமும் சிஷ்டபரிபாலனமும் செய். எனது ப்ரியத்துக்குப் பாத்திரவானுக ஆவாய் என்ருர்.

இப்பொழுது என்னுடைய ஆக்ஞையினுல் உனது பெயர் தண்டபாணி என்றிருக்கட்டும். நீ இந்த உத்தண்டமான கணங்களே அடக்கி ஆள்வாயாக. பிறகு மநுஷர்களிடமிருந்து வந்த ஸம்ப்ரமன், உத்ப்ரமன் என்னும் இருகணங்களும், உனக்கு அநுசரர்களாக இருப்பார்கள்; நீ காசி வாசிகளுடைய அந்திம காலத்தில் கழுத்தில் நீல ரேகையும், ஸர்ப்பராஜ கங்கணமும் நெற்றியில் அழகான கண்களும், யானேத்தோலே வஸ்திரமாகத் தரித்தும், இடப்பக்கத்தில் அழகான அங்கனேயுடனும், தலேயில் பிங்கள வர்ணமான ஜடாமகுடமும், சந்திரகலேயின் சோபையுடனும், ஸமஸ்த சரீரத்திலும் பஸ்மம் பூசிக் கொண்டும் விரூபராஜன் போல் மந்தகதியின் கௌரவ நடையுமாக இருப்பாய்.

காசி வாசிகளுக்கு அன்னதாதா, ப்ராணதாதா, ஞாநதாதா என்று வாயில் இருந்து வந்த ஸுந்தர அக்ஷரத்தால் - மோக்ஷதாதா எல்லாம் நீயே ஆவாய். நிச்சல உத்தமமான நடத்தையுடையவனுக ஆவாய். பாபிகளேப் பெரிய விக்னங்களால் பீடித்து அவர்களே ஸம்ப்ரமமான எச்சரிக்கையுடன் காசியிலிருந்து வெளியாக்கிவிடு; பக்தர்களே க்ஷணமாத்ரத்திலேயே எத்தனே தூரத்தில் அவர்கள் இருந்தாலும் அழைத்து வந்து பரம மோக்ஷத்தைக் கொடுப்பாய்.

யக்ஷராஜ! இந்த க்ஷேத்ரம் எல்லாவிதத்திலும் உன்னுடைய அதீனத்திலேயே இருக்கும். இங்கு உன்னே ஆராதிக்காமல் ஒருவனும் முக்திக்கு பாத்திரவானுக ஆகமாட்டான். அதனுல் பக்தர்கள் முதலில் உனக்குப்

பூஜை செய்துவிட்டுப் பிறகு என்னை ஆராதிக்கட்டும் போதும். நீ எனது இந்தப் புரத்தில் அத்யக்ஷகராக இருந்து, கிராம வாஸத்தில் தாதாவாகவும், தண்ட நாயகனுகவும் ஆவாய். காசியில் உள்ள சத்ரு துஷ்டர்களைப் பெயர்த்து, எப்போதும் ஸந்தோஷமாகக் காசியை ரக்ஷிப்பாய்.

ஹே! பூர்ணபத்ர, ஸுதா, தண்டநாயகா, யக்ஷ, பிங்கள, ஹரிகேசா, நீ முக்கண்கள் உடையவனுகி, காசிவாஸிகளுக்கு அன்னம், ஞானம் மோக்ஷம் இவைகளையளிக்கும் தாதாவாகி எல்லா கணங்களுக்கும் தலைவனுக இரு.

ஒருவன் தனது பக்தனுக இருந்தாலும் உன்னை பக்தி செய்யாமல் காசியில் இருக்கும் ப்ராப்தத்தை அடையமாட்டான். தண்டபாணி! நீ ஸமஸ்த கணங்கள், தேவதைகள் இவர்களுக்குத் தலைவனுக இருப்பாய்.

ஞானவாபித் தீர்த்தத்தில் ஸ்நானம் தர்பணம் இந்த விதிகளைச் செய்து முடித்து எவன் உன்னை ஆராதிப்பானே அந்தப் புண்யவான் எனது அதுல அனுக்ரகத்தினுல் பரமக்ருதக்ருத்யனுகிருன். தண்டபாணி! நீ எனக்கு முன்பாக தக்ஷிண திசையில் துஷ்டர்களைத் தண்டித்து சாந்த பக்தர்களுக்கு அபயதானம் அளித்து இங்கு உனது இருக்கையை ஸ்திரமாக்கிக்கொள்.

ஸ்கந்தர் கூறினுர்:- பிராம்மணரே, பகவான் கிரீசர் இந்தப்படி தண்டபாணிக்கு வரம் அளித்து ரிஷப வாஹனத்தில் ஏறி ஆனந்தவனத்திற்குச் சென்றுர். அப்பொழுதிலிருந்து யக்ஷராஜன் தண்ட நாயகனுகி பகவானுடைய ஆதேசப்ரகாரம் வாராணஸிபுரியை பூர்ணரூபமாக அடக்கி ஆளுகிருர். நான் கூட அவன் மீது பொருமையால்தான் இங்கு இருக்கிறேன். ஏனென்ருல் நான் காசியில் இருக்கும்பொழுது அவனுடைய சட்டதிட்டங்கள்படி நான் நடக்க முடியவில்லை.

முனிவரே! தங்களைப் போன்ற ஜிதேந்த்ரிய புருஷர்கூட அவனை அவமானப் படுத்தியது இதனுல்தான்

என்று நினைக்கிறேன். காசியில் இருப்பவர்கள் கொஞ்சமாவது தனக்கு எதிராக நடந்துகொண்டால்கூட அந்த ஹரிகேசனுக்குத் தெரிந்துவிட்டால் அங்கிருந்து சுகமனுபவிப்பது எங்கே?

தண்டபாணி ஆராதிக்காததனுல் ஒருவிதமும் அங்கு ஸௌகரியமாக இருக்க முடியாது. அதனுல் நான் காசியிலிருந்து இவ்வளவு தூரம் தள்ளியிருப்பினும் காசிக்குப் போக வேண்டுமென்ற இச்சையினுல் இங்கேயே அவனை பஜிப்பேன். ஏ! ரத்னபத்ரபுத்ரா, பூர்ணபத்ரனின் தநயஸ்ரேஷ்டா, ஏ! யக்ஷா, சிவப்ராப்தியான மோக்ஷத்தையடைவதற்கு விக்னமில்லாமல் எனக்கு காசிவாஸத்தையளியுங்கள்.

மஹாமதே! தண்டபாணி! உங்களை உலகுக்கு அளித்த பூர்ணபத்ரன் எனும் யக்ஷனும், கனககுண்டலா என்ற யக்ஷிணியும் தன்யமானவர்கள்; ஏ! யக்ஷ ராஜா! நீங்கள் மிகவும் மேலானவர்கள், ஏ பிங்கள நயனு! தங்களுக்கு வெற்றி கிட்டட்டும். ஏ பிங்கள ஜடாபாரா தங்களைவிட உத்தமமான வேறு ஒருவரும் கிடையாது; ஏ தண்ட மஹாவீரா, தங்களுக்கே வெற்றி, ஏ பயங்கரமானவர்களுக்கும் பயங்கரமானவனே.

ஏ அவிமுக்த க்ஷேத்ரத்தின் சூத்திரதாரனே, உக்ரமான தபஸ்வியே, தண்டநாயகா, பயங்கர முகத்தையுடையவனே! விஸ்வேஸ்வரருக்கு பிரியமானவரே, உங்களுக்கு ஜயம்.

ஸௌம்யமான முகத்துடன் கூடியவனே! இந்த க்ஷேத்ரத்தில் பாவத்தைச் செய்பவர்களுக்கு காலனுக்கும் காலனே! நீர் மஹாகாலருடைய பரமப்ரேமைக்குப் பாத்திரமானவர்.

ஏ ப்ராணப்ரதா, யக்ஷேந்த்ரா, தாங்கள் காசியில் வஸிப்பவர்களுக்கு அன்னத்தையும் மோக்ஷத்தையும் அளிக்கும் தாதா; தங்களுடைய சரீரம்

மஹாரத்னங்களுடைய ஜ்வலிக்கும் கிரணஸமூஹங்களால் சூழப்பட்டிருக்கின்றன. தங்களுக்கே ஜயம்.

தாங்கள் எப்பொழுதும் பக்தியில்லாத ஜனங்களுக்கு ஸம்ப்ராந்தியையும், உத்ப்ராந்தியையும் அளிக்கிறீர்கள், பக்தியோடு கூடினவர்களுக்கு ஸம்ப்ரமத்தையும், உத்ப்ரமத்தையும் நாசம் செய்கிறீர்கள். ஏ! அந்திம ச்ருங்கார சதுரா, ஞானநிதிப்ரதா! தங்களுக்கு ஜயம். கௌகியின் சரணகமலங்களுடைய ஏ வண்டே, மோக்ஷகாலத்தில் ஞானத்தை அளிக்கும் நிபுணரே, தங்களுக்கு ஜெயம்; ஏ! அகஸ்திய முனிவரே! எனக்குக் காசி கிடைக்க வேண்டுமென்பதற்காக மூன்று காலமும் யக்ஷராஜ அஷ்டகத்தை தினந்தோறும் பாராயணம் செய்கிறேன்.

அறிவாளி ஒருவன் இந்த தண்டபாணி அஷ்டகத்தை சிரத்தையுடன் பாராயணம் செய்வானுனுல் அவனுக்கு ஒரு பொழுதும் விக்னங்கள் ஏற்படாது. அவனுக்கு பலனும் அவனுக்குக் கிடைக்கும் தண்டபாணியின் உற்பத்தியான இந்த பவித்ர அத்யாயத்தைக் கேட்பதும், இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்வதாலும், ஒருவன் வேறு இடத்தில் மரணம் அடைந்தால்கூட அடுத்த ஜன்மாவில் காசியை அடையச் செய்கிறது.

தண்டபாணியின் உற்பத்தியான பவித்ர அத்யாயத்தைக் கேட்பதாலும், பாராயணம் செய்வதாலும், மற்றவர்களுக்குக் கூறினுலும் விக்னங்கள் ஆகிய இடையூறுகள் ஏற்படாது.

இப்படி ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான தண்டபாணியின் உற்பத்தி வர்ணனம் என்ற முப்பத்தி இரண்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 33

*அகஸ்தியர் கூறுவார்:- ஏ! ஸ்கந்தா! இப்பொழுது தாங்கள் ஞானவாபியின் வர்ணனையைப் பற்றிச் சற்றுக் கூறுங்கள், ஏனென்றால் ஸ்வர்க வாஸிகள் கூட ஞானவாபியைப்பற்றி மிகவும் புகழ்கிறார்கள். ஸ்கந்த சுவாமி கூறுவார்:- ஏ! மஹாப்ராக்ஞா! கும்பமுனியே! மிகவும் நல்லது. நான் இப்பொழுது பாபாரிஹணியான ஞானவாபியின் உற்பத்திக் கதையைச் சொல்லுகிறேன் கேளும். ஏ! முனியே! பூர்வத்தில் ஓர் ஸத்ய யுகத்தின் போது அனாதி சித்தமாக இருக்கும் இந்த ஸம்ஸாரத்ததில் மேகங்கள் மழையே பொழியவில்லை. நதிகளும் வறண்டுவிட்டன. மேலும் அந்தக் காலத்தில் ஜனங்கள் ஸ்னானபானத்திற்கு ஜலத்தை விரும்பவுமில்லை. அப்பொழுது மஹோததியான ஸமுத்ரங்கள்கூட ஜலத்தைப் பார்க்கவுமில்லை.*

*உலகில் அங்குமிங்கும் சில மனிதர்கள் அந்தக் காலத்தில் ஈசானன் என்ற பெயருள்ள ஒரு திக் பாலகர் எங்கெல்லாமோ சுற்றி அலைந்துகொண்டு அப்பொழுது மோக்ஷலக்ஷ்மியின் க்ஷேத்ரமும் மஹாஸ்மசானமும் தர்மமாகிய விதையே முளையாத கிளர் பூமியும், மஹாநித்ரையில் உறங்கும் ஜந்துக்களுக்கு ஞானவிழிப்பைக் கொடுக்கும், ஸம்ஸார ஸாகரத்தின் சுழிகளில் சிக்கி சுற்றி மூழ்கும் ஜனங்களுக்குப் பெரிய ஆதாரமான பெரிய தோணியாகவும் ஜனன மரணமாகிய போக்குவரத்தில் சுற்றிச் சுழன்று களைத்துப்போன ஜீவர்களுக்கு இளைப்பாறும் மண்டபமாகவும் அநேக ஜன்மங்களாகச் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும் கர்ம சூத்திரத்தை அறுக்கும் கத்தியாகவும், நல்ல சந்தனத்திற்குத் தகப்பனும், மோக்ஷசாதனமான ஸித்திகளைக் கொடுக்கும் தாதாவாகவும், ஸத்து, சித்து ஆனந்தத்தின் மாளிகையும், பரப்ரம்மமாகிற ரஸாயனமும், ஆனந்த கானனமான காசி இருந்த இடத்திற்கு வந்தான்.*

அப்பொழுது சோபையுடன் விளங்கும் த்ரிசூலத்தின் நிர்மல கிரண ஸமூஹங்களால் சூழப்பட்டவனுன அந்த ஜடாதாரி ஈசானன் அந்தக் காசியில் ப்ரவேசித்து எந்த மஹாலிங்கம் ப்ரும்மாவும் விஷ்ணுவும் தாங்கள் தான் பெரியதென்று போட்டியிடும் சமயத்தில் வெளிப்பட்டதோ, அந்த லிங்கத்தைப் பார்த்தான். இந்த லிங்கத்திற்கு நான்கு பக்கமும் ஜோதிர்மயமான மாலைகள் விளங்கிக் கொண்டிருக்கின்றன; தேவர்கள் ரிஷிகள் ஸித்தகணங்கள் இவர்கள் ப்ரதக்ஷிணமும் பூஜைசெய்து கொண்டிருந்தனர். கந்தர்வர்கள் பாடிக் கொண்டிருந்தனர். சாரணர் துதி செய்து கொண்டிருந்தனர்.

அப்ஸரஸ்கள் ஆடினுர்கள். நாககன்னிகைகள் மாணிக்க தீபங்களால் ஆரத்தி சுற்றிக் கொண்டிருந்தார்கள். வித்யாதரகின்னர ஸ்த்ரீகள் மூன்று வேளையும் அலங்காரம் செய்தார்கள். தேவப்பெண்கள் நான்கு பக்கமும் நின்று கொண்டு சாமரம் சுழற்றிக் கொண்டிருந்தார்கள். இந்த ஈசானன் என்ற திக்பாலகனுக்கு இந்த மஹாலிங்கத்தை கலசத்தில் சீதள ஜலம் கொண்டுவந்து அபிஷேகம் செய்ய வேண்டுமென்று இச்சைத் தோன்றியது.

அப்பொழுது ருத்ரமூர்த்தியான த்ரிசூலத்தினுல் கோவிலுக்குத் தெற்கு திசையில் மிக சமீபமாகவே ப்ரசண்ட வேகத்துடன் ஒரு குண்டம் தோண்டினுன். அப்பொழுது அதிலிருந்து ப்ருத்விமண்டலத்தை மறைக்கும் படியாகவே பூமிப்ரமாணத்திலிருந்து பத்து பங்கு அதிகம் ப்ரமாணத்திலுள்ள இதுவரையும் பூமியினுல் மறைத்து வைக்கப்பட்டிருந்து அத்தனை ஜலமும் கிளம்பி பெருக்கெடுத்தது.

ஏ! கும்பமுனியே! அப்பொழுது அந்த திக்பாலகன் ஈசானன் இதுவரைக்கும் சரீரம் எடுத்தவர்களால் தொடப்படாததும், மிகவும் சீதளமானதும் ஜடத்தன்டையை அபகரித்ததும், பாபங்களை நாசமடையச் செய்யும் சாது ஜனங்களின் சித்தத்தைப்போல்

*நிர்மலமானதும், ஆகாசத்தைப்போல் கொஞ்சம் நீயநிறமுள்ளதும், சந்த்ரிகையைப் போல் தவளமானதும், சம்புவின் நாமங்களைப் போல் பவித்ரமானதும், அமுதத்தைப் போல் ருசியுள்ளதும், கோமாதாவின் அங்கத்தைப் போல் தூய்மையானதும், ஸுகமான ஸ்பர்சம், பாபமற்ற புத்திமான்களுடைய அறிவைப் போல் ஆழமானது, பாபிகள் மனதைப் போல் சஞ்சலமானதும்,*

*கமலம், பாடலம் இவைகளைப் போல் ஸுகந்தம் நிறைந்ததும், கண்களுக்குத் தெரியாத அதிர்ஷ்டம் வந்த ஜனங்களைப் போல் கண்களுக்கு மனோகரமானதும், அக்ஞான ரூபமான ஸந்தாபத்தால் சிக்கும் பிராணிகளுக்கு ப்ராண ரக்ஷகமானதும், பஞ்சாமிர்த கலசஸ்னானத்தைவிட பலன் அளிக்கவல்லதும்,*

*ச்ரத்தையுடன் ஆசமனம் செய்பவர்களுக்கு இதயத்தில் லிங்கத்ருச்யத்தைத் தருவதும் அக்ஞானமான இருளுக்கு சூரியோதயமும் ஞானதானம் கொடுப்பதில் வல்லதும் உமாவுடைய ஸ்பர்ச சுகத்தைவிட விஸ்வேஸ்வரருக்கு அதிக ஸுகத்தைக் கொடுக்கக் கூடியதும், பெரும் அவப்ருதஸ்னானத்தைவிட சுத்தியளிக்கவல்லதுமான அப்படிப்பட்ட அந்த ஜலத்தினால் ஸஹஸ்ரதாரா கலசத்தால் சந்தோஷ மனத்துடன் ஆயிரம் தடவை அபிஷேகம் செய்தார்.*

*பிறகு விஸ்வ விலோசனனான பகவான் விசுவாத்மா சந்தோஷமடைந்து, அந்த ருத்ர மூர்த்தி ஈசானனிடம் கூறத் தொடங்கினார். ஹே ! ஸுவ்ருதா ! ஈசான ! மற்றவர்களால் செய்ய முடியாததான எனக்கு ப்ரியமானதான, உன்னுடைய இந்தப் பெரிய கார்யத்தினால் நான் சந்தோஷமடைந்தேன்.*

*அதனால் ஏ! தபோதனனே! ஜடில, ஈசான, நீ வரம் கேட்பாய், ஹே! மஹா உத்தம பராயண; முயற்சியடையவனெ, இன்று உனக்குக் கொடுக்கப் படாதது என்னிடம் ஒன்றும் இல்லை.*

ஈசானன் கூறினன்:- தேவேச, தாங்கள் சந்தோஷடைடைந்தீர்களாஞல், நானும் வரம் பெற பாத்ரவான் ஆனல், ஹே! ஈசுவர, இந்தத் தீர்த்தம் தங்களுடைய நாமத்தால் இனேயற்று விளங்கட்டடும் விஸ்வேசர் கூறினர்:- திருபுவனமான, பூ:, புவ, ஸுவ, உலகில் எத்தனேத் தீர்த்தஸ்தானம் உண்டோ அவைகளெல்லாவற்றையும்விட இந்தத் தீர்த்தம் ச்ரேஷ்டமானது.

சிவ சப்தத்திற்கு அர்த்தம் தெரிந்த நிபுணர்கள் - சிவம் என்றல் ஞானம் என்றே கூறுவார்கள். அந்த ஞானமே எனது க்ருபையினல் உருகி ஜல ரூபமாக ஆகியிருக்கிறது. அதனல் இந்தத் தீர்த்தம் ஞானேதகம் என்ற பேரில் வேறு உலகிலும் விளங்கப்படும். இதைப் பார்த்த மாத்திரத்திலேயே சகல பாபங்களும் விலகும்.

ஞானேதய தீர்த்தத்தை ஸ்பர்சித்தால் அசுவமேத யக்ஞத்தின் பலன் ஸித்திக்கும்; ஸ்பர்சனம் ஆசமனீயம் இவைகளினல் ராஜஸூயம், அஸ்வமேதம் இரண்டு யக்ஞங்களுடைய பலனும் ஸித்திக்கும். பல்குனி நதியில் ஸ்ஞனம், பித்ருக்ளுக்குத் தர்ப்பணம் இவைகளினல் ஜனங்கள் என்ன பலன் அடைகிறர்களோ, அதே பலன் இங்கு ஸ்ஞனம், சிரார்த்தம் இவைகள் செய்வதாலும் கிடைக்கிறது.

குருவாரம் பூசநக்ஷத்ரம் அஷ்டமி திதி இத்துடன் வ்யதீமாத யோகமும் சேர்ந்தால் அச்சமயம் இதில் ஸ்ஞனம், சிரார்த்தம் இவைகள் செய்தால் கயாசிரார்த்தம் செய்வதைவிட கோடிபங்கு அதிகம் புண்யம் கிடைக்கும். புஷ்கர தீர்த்தத்தில் பிதுர்தர்ப்பணம் செய்தால் என்ன புண்ணியம் கிடைக்குமோ அந்த பலன் இந்த (ஞான) ஞானதீர்த்தத்தில் எள்ளுடன் அர்ப்பணித்தால் அதைவிட அதிகபங்கு புண்யம் கிடைக்கும்.

ராமரால் ஏற்படுத்தப்பட்ட குருக்ஷேத்ர தீர்த்தத்தில் சூர்யகிரகணத்தில் பிண்டதானம் செய்தால் என்ன பலன்

ஸித்திக்கமோ, அது ஞான தீர்த்தத்தில் பிரதி தின ஸ்ஞானத்திஞல் கிடைக்கும், யாருடைய புத்ரர்கள் இந்த ஞான தீர்த்தத்தில் பிண்டதானம் செய்கிருர்களோ, அவர்கள் ப்ரளய காலம் வரும்மட்டும் சிவலோகத்தில் ஆனந்தம் அனுபவிக்கிருர்கள்.

ஒரு நரோத்தமன் அஷ்டமி சதுர்தசி இரு தினங்களிலும் உபவாசமிருந்து இந்த தீர்த்தத்தில் ஸ்ஞானமும், ஜலபானமும் செய்தாஞுல் அவனுடைய அந்நக்கரணம் சிவலிங்கமயமாகும். ஒருவன் ஏகாதசி சுத்த உபவாசமிருந்து, இந்த ஜலத்தை மூன்றுகை குடித்தானேயாஞல் அவனுடைய ஹ்ருதயத்தில் சந்தேகமில்லாமல் மூன்று லிங்கங்கள் உற்பத்தியாகும்.

ஒருவன் ஸோமவாரத்தில் இந்த ஈசானஞல் ஏற்படுத்தப்பட்ட இந்த ஞான தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து, தேவ, ரிஷி, பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து யதாசக்தி தானம் செய்து பிறகு விஸ்தாரமாக ளிஸ்வேஸ்வரருக்கு பூஜை செய்து அங்கே தானே நாஞுவிதமான திரவ்யங்கஊச் சிதறிஞல் அவன் க்ருதக்ஞன் ஆகிருன்.

உரிய காலத்தில் ஸந்தியாவந்தனம் செய்யாவிட்டால் காலலோபமாகிய தோஷமேற்படும்; அதற்கு இந்த ஞாஞேதகி (ஞானவாபி) தீர்த்தத்தில் ஸந்தியோபாசனம் செய்வதால் க்ஷணமாத்ரத்தில் அந்த பாபம் விலகும். அந்தப் பிராம்மணன் ஞானவாஞகிருன். இதையே சிவதீர்த்தம் என்றும் ஸுபமான ஞானதிர்த்தம் என்றும் சொல்லப்படுகிறது. இந்த ஞாஞேதகத்தை ஸமரித்த மாத்திரத்தைலேயே பாபராசிகள் நஷ்டமடைந்துவிடுகின்றன.

இதை தரிசனம், ஸ்பரிசனம், ஸ்ஞனம், பானம் செய்வதிஞல் தர்மாதி புருஷார்த்தங்கள் நாலும் கைகூடி வரும். இந்த சிவ தீர்த்தத்தின் ஜலத்தைப் பார்த்தவுடனே, பாகினீ, சாகினீ, பூதம், ப்ரேதம், வேதாளம் நாக்ஷஸக்ரஹம், கூஷ்மாண்டம், காலகர்ணி, பாலக்ரகம்,

ஜ்வரம், அபஸ்மாரம், அம்மை, சீதளம் ஆகிய எல்லா ரோகங்களும் சாந்தமடைகின்றன.

புத்திமானுன ஒருவன் ஞானோதய ஜலத்தினுல் அபிஷேகம் செய்தால் அவன் எல்லாத் தீர்த்தஙகளேயும் கொண்ட அபிஷேகம் பண்ணின பலன் கிடைக்கும். இந்த ஸ்தானத்தில் ஞானரூபியான நானே ஜலரூபமாக இருக்கிறேன். ஜனஙகளின் ஜடத்தன்மையை நாசம் செய்து ஞானோபதேசத்தைச் செய்கிறேன். இப்பிரகாரமாக மரங்களேக் கொடுத்து பகவான் சம்பு அங்கேயே அந்தர்தானமாஞர்.

பிறகு த்ரிசூலதாரியும், ஜடிலரும், ருத்ரமூர்த்தியுமான ஈசானன் தன்னே க்ருதார்த்தனுக எண்ணி அந்த உத்தமமான தீர்த்தத்தைப் பருகி பரம ஞானலாபத்தையடைந்தான். அதன் மூலமாக ப்ரும்மானந்தத்தையும் அடைந்தான்.

ஸ்வாமி கார்த்திகேயர் கூறிஞர், கலசோத்பவா, இந்த ஞானவாபியில் ஒரு விசித்ரமான சம்பவம் நிகழ்ந்தது. அந்தப் பழமையான நிகழ்ச்சியை உனக்கு கூறுகிறேன் கேள். அந்தக் காலத்தில் ஹரிஸ்வாமி என்ெருரு ப்ராம்மணன் காசியில் இருந்தான். அவருக்கு ஒரு பெண் இருந்தாள். அவள் உலகத்தில் ஈடு சொல்ல முடியாத ஸௌந்தர்யவதியாக இருந்தால் அவளுக்கு சமமான குணவதியான ஒரு பெண்கூட இந்த, பூதலத்தில் கிடையாது. சகல கலேகளிலும் வல்லவள்; குயிலேவிட குரலினிமைவாய்ந்தவள்.

மற்ெருரு பெண்ணே அவள் தேவியாஞலும், கின்னரியாஞலும் கந்தர்வ தேவகன்னியாஞலும் ஒருவரையும் அவளுக்கு உவமை சொல்ல முடியாது. ஸமஸ்த ஸௌந்தர்யத்துக்கும் அவள் இருப்பிடமாகத் திகழ்ந்தாள். சுபலக்ஷணங்களின் பொக்கிஷம். இருள் சூரியனுக்குப் பயந்து அவளுடைய கேசத்தில் ஒளிந்துவிட்டது. அவளுடைய முகத்தைப் பார்த்தால் அமாவாசையன்று நாம் நாசமடைந்து விடுவோமோ என்று

சந்திரன் அவள் முகத்தில் குடிகொண்டிருக்கிறுன் என்று கூறலாம். இருளில் மாத்திரம் அல்லும் பகலும் சூரியன் பயத்தால் அங்கேயும் ஒளிந்து கொண்டிருக்கிறுன்.

அவளுடைய புருவம் வண்டுகளின் வரிசை; அவளுடைய முகமண்டலம் மத்யபாகத்தில் உயரேயும், கீழேயுமாக வரிசையாகப் பறப்பது போல் இருந்தன. அவளுடைய அழகியக் கண்களாகிய நிலத்தில் இரு கஞ்சன பக்ஷிகள் சுதந்திரமாக விளையாடிக் கொண்டு சரத்ருதுவின் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும்.

அவளுடைய பல் வரிசைகளாகிற இலைகளின் மேல் பஞ்சபாணன் தங்க ரேகைகளைக் கீறியிருப்பது போல் தோன்றும். சந்திரனில் கூட நாம் அப்படிப்பட்ட தங்க ரேகைகளை எங்கு பார்த்திருக்கிறோம். பவழத்திற்கு சமமான அவளுடைய இரண்டு உதடுகளும் மதனனுடைய அனுக்ரஹத்தில் அமைந்த ரத்னங்களின் பொக்கிஷமோ, என்று விளங்குகிறது.

அவளுடைய கழுத்தில் இருக்கும் மூன்று ரேகைகளும் எப்படியிருக்கிறது என்றுல் ஸ்வர்க்க, மத்யம், பாதாளம் ஆகிய மூன்று உலகிலும் ஒரு ஸ்த்ரீயினுடையதும் இப்படியிராது என்று சொல்வது போல் இருக்கிறது. அவளுடைய இரண்டு குசபாரத்தையும் பார்த்து மனதில் மனோ ஜனனுனவன் தன்னுடைய விலையுயர்ந்த ரத்னங்களால் நிரம்பிய இரண்டு கும்பங்களை நிறுத்தி வைத்திருக்கிறுனோ, என்ற சங்கை எழுகிறது.

பிரமன் அவளுடைய கண்களுக்குத் தெரியாத மத்யப்தேசத்தில் காமதேவனுடைய ஸ்தானம் என்று சூசிக்கும் பொருட்டு ரோமாவளி என்னும் வியாஜத்தில் ஒரு நரம்பை நட்டிருக்கிறுனோ என்று தோன்றுகிறது. அவளுடைய நாபியாகிற குகையில் விழுந்து அனங்கன் அவனது தேகத்தை இழந்தான். அதனுல் அவன் திரும்பியும் தன் தேகத்தைப் பெற அங்கு அமர்ந்து தபஸ் செய்கிறுனோ என்று தோன்றுகிறது.

*அவளுடைய நிதம்ப ப்ரதேசத்தைப் பற்றி என்ன சொல்கிறது. மன்மதன் மஹாமந்த்ர தீக்ஷைப் பெற்றுக் கொண்டு உலகத்தில் உள்ள எல்லா யௌவன வாலிபர்களுடையவும் இரப்பைகளைக் கட்டிவிட்டானோ என்று தோன்றுகிறது. அவளுடைய மிகவும் உருண்டை வடிவமான இரண்டு தொடைகளாகிற சித்தம் ஸ்தம்பத்தைப் போல ஸ்தம்பித்து நிற்காது?*

*ஏ! முனியே! அந்த மான் விழியாளுடைய இரண்டு கால்பெருவிரல்களின் காந்தியினால் யாருடைய விவேக ரூபியாகிற ப்ரபைதான் நாசமடையவில்லை. அப்படிப்பட்ட அந்த் கன்னிகையானவள் தினந்தோறும் ஞானவாபியில் ஸ்னானம் செய்து, தினமும் சிவாலயத்தைப் பெருக்கி மெழுகி, கோலமிட்டு வந்தாள்.*

*அந்தப் பெண்ணினுடைய சரணத்தினுடைய நிழலின் ஒரு ரேகையை சுவைத்துப் பார்ப்பதற்காக, ஆனந்தவனத்திலுள்ள யௌவன ரேகை ரூபமான புல்லை வாலிபர்களுடைய மனதாகிய மான்கள் மேய்ந்து கொண்டு அதை விட்டு வேறெங்கும் போகாது.*

*யுவர்களின் நேத்ர ரூபமான வண்டு வரிசைகள் அவளுடைய முகமாகிய கமலத்தைவிட்டு வாசனை மிகுந்த புஷ்பங்களைத் தாங்கி நிற்கும் வேறு கொடிகளிடத்து போவதில்லை. இத்தனைக்கும், அந்தப் பெண் விசாலமானக் கண்களையுடைவளாக இருந்தும் ஒரு புருஷனுடைய முகத்தைக்கூடப் பார்ப்பதர்க்கில்லை. அழகான காதுகளிலிருந்தும் ஒரு புருஷனுடைய வசனங்களைக்கூடக் கேட்டதில்லை. இந்த சீலவதி நற்குண சம்பன்ன விரகத்தினால் தவிக்கும் அழகான புருஷர்கள் ரகசியமாக அவளிடம் விவாகம் செய்து கொள்ளப் பிராத்தித்தும் கூட அவள் காதுகொடுத்தே கேட்பதில்லை.*

*வாலிபர்கள் அவளுடைய தகப்பனிடமும் நிறை தனம் கொடுப்பதாக பிரதிக்ஞை செய்து விவாகம் செய்து தரும்படியாகப் பிரார்த்தித்தும் கூட நற்குணமாகிய*

தனத்தினையுடைய அப்பெண்ணை அவர்கள் கையில் ஒப்படைக்க சம்மதிக்கவில்லை.

அந்த நாட்களில் அந்தப் பெண் ஞானோதகத் தீர்த்தத்தையே எப்பொழுதும் ஸேவித்து வந்தக் காரணத்தினால் உள்ளும் வெளியும் எப்பொழுதும் லிங்க மயமாகவே காக்ஷியளித்தாள். ஒரு சமயம் ஒரு வித்யாதரன் தங்களுடைய வீட்டு அங்கணத்தில் அவள் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் போது அவளுடைய ரூபலாவன்யத்தைப் பார்த்து மோகமடைந்து அவளைத்தூக்கிச் சென்று விட்டான்.

அவளை எடுத்து மலைய பர்வதத்திற்குக் கொண்டு செல்ல விரும்பினான். ஆனால் அதற்குள் நகரகாவலர்கள் அணியும் குண்டலமணிந்து, கொழும்பையும் உதரத்தையும் தன் ஸர்வாங்கங்களிலும் பூசிக்கொண்டு, கட்டுமஸ்தான தேஹத்துடனும், பிங்களவர்ண கண்ணுடனும் பயங்கரமான வித்யுன்மாலி என்னும் ஒரு ராக்ஷஸன் அவன் முன்னால் வந்து நின்றான்.

அவன் கூறினான்:- ஹரே வித்யாதரகுமார, வெகு நாட்களுக்குப் பிறகு தான் இன்று உன்னைப் பார்க்கிறேன். இப்பொழுதே அந்தப் பெண்ணுடன் உன்னையும் யமலோகத்திற்கு அனுப்புகிறேன், இந்த வார்த்தையைக் கேட்டவுடன் அந்தப் பெண் புலியினால் முகர்ந்து பார்க்கப்பட்ட மானைப் போல மிகவும் பயமடைந்து அடிக்கடி வாழையிலையைப் போல் நடுங்க (ஆட) ஆரம்பித்தாள்.

ராக்ஷஸன் த்ரிசூலத்தினால் அந்த வித்யாதரனைக் குத்தினான். அத்யந்த மதுர மூர்த்தியும் மஹாபலவானுமான அந்த வித்யாதரர் குமாரனும் அந்த பயங்கரமான த்ரிசூலத்தினால் தாக்கப்பட்டு விரிந்த மார்புடனும் மனிதனுடைய மாம்ஸத்தையும் கொழுப்பையும் தின்ற மத்தனான அந்த வித்யுத்மாலியுடன் யுத்தம் புரிந்து தனது முஷ்டியினால் இடியைப் போன்று

அவனுடைய முதுகில் தாக்கினன். பிறகு அந்த ராக்ஷஸன் இவனுடைய குத்திணல் பொடிபொடியாகி பூமியில் விழுந்து மரணவசமான அந்த வித்யாதரனுடனும் அவனுடைய சூலத்தின் தாக்குதலிணலே, வியாகூலமடைந்து குறுகிய கண்பார்வைகளுடையளனய் தழுதழுத்த கண்களுடன் கூறினன். பரியே! உன்னை வீணகத் தூக்கிவந்தேன். போதும் என்று, அரைகுறை வார்த்தையாகக் கூறிவிட்டு முற்றிலும், தன்னுடைய ப்ரியையே நினைத்துக் கொண்ணடு அந்த வீரனும் அந்த யுத்தத்தில் பிராணனை விட்டாள்.

அந்தப் பெண்ணும் அவன் தன்னைத் தொட்டுப் தூக்கிய ஸ்பர்ச சுகத்தையெண்ணி அவனையே பதியாக எண்ணி சோக அனலில் பிராணனை விட்டாள்.

ஒரு புறம் ராக்ஷஸன் மூன்று லிங்களோடு கூடின சரீரத்தையுடையவளான அந்தக் கன்னிகையின் பக்கத்தில் மடிந்ததிணல் திவ்ய தேஹமெடுத்து ஸவர்க்கத்திற்குச் சென்ருன். மற்ருெரு பக்கத்தில் அந்த வித்யாதர குமாரனும் அந்த யுத்தத்தில் தன்னுடைய ப்ரியை நினைத்துக் கொண்டே ப்ராணனை விட்டவன் மலைய கேது என்ற அரசனின் புத்ரனகப் பிறந்தான். அந்த வித்யாதரக் குமாரனையே நினைத்து பிராணனனை விட்ட அந்தப் பெண் கர்நாடக தேசத்தில் பெண்ணகப் பிறந்தாள்.

சிலகாலம் சென்றவுடன் மலைய கேதுவின் புத்ரனன மதன சுந்தரன் தன்னுடைய பிதாவான மலைய கேதுவிற்கு கர்நாடக அரசனல் கொடுக்கப்பட்ட கலாவதி என்ற பெண்ணை மணந்தான் அவள் எப்பொழுதும் சுந்தரமாக இருப்பவள், பதிவ்ரதை, பூர்வஜன்ம ஸம்ஸ்காரத்திணல் சிவலிங்கத்தையே பூஜை செய்வாள். சந்தனம் பூசுவதைவிட விபூதியணிவதே நல்லதென்பாள். முத்துக்களும் சவடூர்யம், மாணிக்கம், புஷ்பராகம் இவைகளை அணிவதைவிட ருத்ராக்ஷத்திணல் சிங்காரித்துக் கொள்வதே மிகவு மேலாகக் கருதிஞள்.

பரம ஸதியான கயாவதி மால்யகேதுவைப் பதியாக அடைந்து த்ருப்தியான திவ்ய போகங்களை அனுபவித்து மூன்று பிள்ளைகளைப் பெற்றெடுத்தாள்.

ஒரு தடவை உத்தரப் பரதேசத்திலிருக்கும் ஒரு சித்திரக்காரன் மால்யகேதுவின் அரசனுக்கு ஒரு விசித்ரமான படத்தைக் கொடுத்தான். கலாவதி அந்த அழகான சித்திரத்தில் தன்னுடைய பிராணநாதனைப் பார்த்து அடிக்கடி புளகாங்கிதமடைந்து, ஆனந்நத்தினுல் மெய் சிலிர்த்து ஸமாதியில் இருக்கும் யோகினியைப் போலத் தன்னை மறந்தாள்.

அநேக நிமிஷங்களுக்குப் பிறகு கண்களைத் திறந்து சித்திரத்தை மறுபடியும் பார்த்தாள். அந்தப் படத்தில் சில சில இடங்களில் தனது ஆள்காட்டி விரலின் நுனியை வைத்துக் கொண்டு, தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். இது லோலார்க்கத்துக்கு சமீபத்திலுள்ள அஸி நதியின் சங்கமம்; அதற்கு நேர் எதிர் பக்கத்தில் ஆதிகேசவருடைய சரணத்துக்கு அடியில் நதிகளின் மேன்மையான வருணு நதி.

அதற்கு மேற்புரத்தில் சொர்க்கத்தில் இருக்கும் தேவதைகள் கூட எதை ஸ்பர்சிப்பதற்கு ஆவலாக இருக்கிறுர்களோ, அந்த சுவர்க்க தரங்கிணீ கங்கா வடக்கு நோக்கிச் செல்கிறுள். ஸத்ஜனங்களின் முக்திக்காக வேதாந்த சாஸ்திரம், மறைமுகமாகக் கூறும் மோக்ஷலக்ஷ்மி இந்த ஸ்ரீ மதி மணிகர்ணிகா தேவியாகும்,

ஆஹா! ஆஹா! எங்கு மரணமடைவது மங்களகரம் என்று கருதப்படுகிறதோ, எங்கு மரணமடைந்தால் ஜீவன் பலனடைகிறது என்று கருதப்படுகிறதோ, எதற்கு முன்னுல் சொர்க்கமும் துரும்புக்கு சமானமோ, அது இந்த ஸ்ரீமதி மணிகர்ணிகையேதான்;

எங்கு ஜனங்கள் மரணத்தை விரும்பி சகல சம்பத்துக்களையும் தானம் செய்துவிட்டு கந்தமூல

பலங்களையும் புஜித்துக் கொண்டிருக்கிறார்களோ, பதியை அவலம்பிக்கும் பதிவ்ருதைகளைப் போல் இருக்கிறார்களோ, எந்த இடத்தில் பகவான் ஹரன் தனது தலையிலுள்ள பாலசந்திரன் பிரகாசத்தினால் முக்தி மார்க்கத்துக்கு வழியைக் காண்பித்துக் கொண்டு த்ரிபதகாமினீ கங்கையினுடைய இடத்தில் மாண்ட ஜனங்களைத் தேடிக்கொண்டிருக்கிறார்களோ, அந்தக் காசிபுரி இதுவே.

எந்த இடத்தில் சங்கரர் தானே கடக்க முடியாத ஸம்ஸார ஸாகரத்தைக் கடக்க வைக்கிறாரோ, மனிதர்கள் எவரை ஸம்ஸாரக் கடலைத் தாண்டும் தோணிக்கு மாலுமியாக இறந்து போனபின்பும் அம்ருதத்தை யடைகிறார்களோ, எங்கு கருணா ஸாகரரான மஹேச்வரர் காதில் மந்திரத்தைக் கூறியவுடனே, அவர்களுக்கு ஸம்ஸாரத்திலிருந்து போகும் வழி உறுதியானதில்லையென்று தோன்றுகிறதோ, எங்கு ஜனங்கள் அநேக ஜன்மங்களாகச் செய்யப்பட்ட புண்ணியத்தினால் அந்திம காலத்தில் பவதாபத்தைப் போக்கடிக்கும் பகவான் பவாநீபதியின் உபதேசத்தைக் காதில் ஏற்றுக் கொள்கிறாரோ,

யாருடையப் பரபாவத்தினால் மிக புத்திசாலிகள் க்ஷேத்திர ஸன்யாஸம் எடுத்துக் கொண்டு யமராஜனைக் கூடத் துரும்பாக மதிக்கிறார்களோ, அதுவே - இந்த மணிகர்ணிகையாகும். இங்குதான் உத்தமரான ராஜரிஷி ஹரிசந்திரன் தன்பத்தினியுடன் தன் சரீரத்தைத் துரும்பாக நினைத்து விலைப்படுத்தினான். அது இந்த இடம்தான். வைகுண்டவாசிகள்கூட கங்கைக்கரை மணலை ம்ருதுவான படுக்கைக்கு ஸமமாக எண்ணுகிறார்கள்.

இங்குதான் ஜீவர்கள் அநேக ஜன்மங்களாகக் கட்டப்பட்டிருக்கிற பந்த சூத்திரத்தின் கயிற்றை அறுத்து முக்தியடைகிறார்கள். சத்திய லோகவாஸிகள் கூட எந்த ஸ்தலத்தில் தாங்கள் மீளா நித்ரையில் ஆழவேண்டும்

என்று பிராத்தனே செய்கிருர்களோ, அந்த மணிகர்ணிகையின் சித்திரமே இந்தப் படத்தில் காட்டப்பட்டிருக்கிறது.

எங்கு ஸ்ரீ கால பைரவர் பயங்கரமான தீக்ஷையினுல் இந்த க்ஷேத்ரத்திலுள்ளவர்களேக் கட்டியடித்து தண்டிக்கிருரோ, அந்த மேன்மையான ஸ்தலம் இதுவே. மற்ற இடங்களில் செய்யப்பட்ட பாபம் காசியைப் பார்த்தவுடனே நசித்துவிடுகிறது. ஆனுல் காசியில் செய்யப்பட்ட பாபங்களுக்கு பைரவ தண்டனே ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

இது அந்த பவித்ர கபால மோசனத் தீர்த்தமாகும். இங்குதான் பைரவர் கையிலிருந்து கபாலம் விழுந்த இடமாகும். இங்கு ஸ்னைம் செய்வதனுல் உத்தமமான நரர்கள், தேவர்கள், ரிஷிகள் இந்தப் பித்ரு குண்டத்தில் முக்தியடைகிருர்கள். இதுவே தேஹத்துக்குத், தூய்மையாக்கும் ருண மோசன தீர்த்தம் (ரண மோசன தீர்த்தம்)

ப்ரணவம் என்னும் பரப்ரம்மம் இங்கு நித்யமும் விளங்கிக் கொண்டிருக்கிறது. பஞ்சாயத்ன ரூபமாக அத்புத சக்தி வாய்ந்த பகவான் ஓங்காரேஸ்வரர் இங்கு இருக்கிருர். இங்கு அகாரம், உகாரம், மகாரம், நாதம், பிந்து ஆகிய பஞ்சாதமக ப்ரம்மம் நித்யமுமே ப்ரகாசித்துக் கொண்டிருக்கிருர்.

இந்த ரம்யமான மத்ஸ்யோதரி தீர்த்தத்தில் ஸ்னைம் செய்யும் உத்தம மனிதர்கள் பிறகு மாதாவின் ஹ்ருதயகுஹையில் பிரவேசிக்க மாட்டார்கள். இது நிச்சயம். தேசாந்திரங்களிலுள்ள தன்னுடைய பக்த ஜனங்களுக்குக்கூட முக்கண்ணரான தன்னுடைய உருவத்தைத் தருவது பகவான் த்ரிலோசன ரேயாகும்.

இவர் காமேஸ்வர தேவர்; ஸஜ்ஜநங்களுடைய ஸகல காமத்தையும் பூர்த்தி செய்பவர். இங்கு துர்வாஸரைப் போன்ற க்ரோதரிஷி கூடத் தன்னுடைய விருப்பத்தின்

பூர்ணத்வத்தையடைந்தார். இங்கு தான் மஹேஸ்வரர் பக்த ஜனங்களுடைய விருப்பத்தின் ஸித்திக்கு வேண்டி தன்மயமாக இங்கு உட்கார்ந்திருக்கிறார். அதனால் இந்த சிவலிங்கத்தின் பெயர் ஸ்வலீனேஸ்வரர் (ஸ்வயம் லீனேஸ்வரர்) 'மஹாதேவர்'

வாராணஸியில் க்ஷேத்ராபிமான பகவான் 'மஹாதேவர்' இங்கு இருக்கிறார். அவரைப் பற்றித்தான் புராணங்களில் விமரிசையாகப் படிக்கிறோம்; அடுத்தாற்போல் ஸ்கந்தேஸ்வரர். இவரை ச்ரத்தையுடன் தரிசனம் செய்தால், மனிதன் வாழ்நாள் பூரா ப்ரம்மசர்யம் அனுஷ்டிக்கும் லாபத்தை அனுபவிக்கிறான்.

இவர் ஸர்வ ஸித்திப்ரத விநாயகர், இவர்களை பஜித்தால் மனிதர்களின் ஸர்வ விக்னங்களும் நீங்கிவிடும். இது ஸாக்ஷாத் மூர்த்தீ கரித்த வாராணசிதேவி; இவளை தரிசித்தால் மனிதர்கள் பிறகு கர்ப்பயந்த்ரிணியை அனுபவிக்க மாட்டார்கள். இது பார்வதீச்வர லிங்கத்தினுடைய பெரிய கோவில். இங்கு பார்வதி ஸஹிதமாக பகவான் சிவன் முக்தி தானம் செய்து கொண்டிருக்கிறார். இவர் மஹாபாதங்களையும் நாசம் செய்யும் ப்ருங்கீஸ்வரலிங்கம். இந்த லிங்கத்தை பஜித்தே ப்ருங்கி மஹரிஷி ஜீவன் முக்தரானார்.

இவர் சதுர்வேதேஸ்வரர். இவருக்கு நான்கு முகமுள்ளன; சர்வ உத்பாதங்களையும் விலக்குபவர். இவரை தரிசித்த பிராம்மணன் நான்கு வேதத்தையும் அத்யயனம் பண்ணின பலனையடைகிறான்.

இந்த லிங்கம் யக்ஞங்களினால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அதனால் யக்ஞேஸ்வரர் என்ற பெயரையுடையது. இதை ஸேவித்த மனிதன் ஸமஸ்தயக்ஞங்களின் பலத்தை அடைகிறான். இது பதினெட்டு அங்குலமுள்ள புராணேசுவரலிங்கம். இதை தரிசித்தால் பதினெட்டு வித்தையும் அவர்களுக்கு லபிக்கும் ஸமஸ்த ஸ்ம்ருதி சாஸ்திரங்களினால்

பிரதிஷ்டிக்கப்பட்ட இந்த லிங்கம் தர்ம சாஸ்த்ரேஸ்வர. இவரை தரிசித்தால் ஸ்ருதி, ஸ்ம்ருதி இவைகளைப் பாராயணம் பண்ணின பலன் கிடைக்கும்; எல்லாவித ஜடத்தன்மையும் போக்கும் இந்த லிங்கத்தின் பெயர் ஸாரஸ்வத லிங்கம்; இவரை ஸேவித்தவுடனேயே ஒருவன் உள்ளும் புறமும் சுத்தியடைவான்.

ஆஹா! இது சைலேஸ்வரரை ஸ்தாபித்த மஹாமண்டபம்; ஸமஸ்த ரத்னங்களையும் பதித்த அதிவிசித்ரமான மண்டபம் ஸப்த ஸாகரங்களிலும் ஸ்ஞனம் செய்த பலனைக் கொடுக்கக்கூடிய இந்த அழகான லிங்கத்தின் பெயர் ஸப்த ஸாகரலிங்கம்.

பூர்வயுகத்தில் ஸப்த கோடி மஹா மந்த்ரங்களை ஜபித்த பலனைக் கொடுக்கக்கூடிய இந்த மஹாலிங்கத்தின் பெயர் ஸப்தகோடி மஹாலிங்கம்; இது த்ரிபுரேஸ்வர லிங்கம் இதற்கு முன்னால் த்ரிபுரசத்ருவிற்கு பரமப்ரியமான த்ரிபுராசுரர்களால் தோண்டப்பட்ட அந்தப் பெரிய குண்டம் இருக்கிறது.

பாணுஸுரனுக்கு இரண்டு கைகளிருந்தாலும் கூட அவனுக்கு ஆயிரம் கைகள் ஏற்பட்டதும் அவனுடைய ஆயிரம் கைகளால் பூஜிக்கப்பட்ட பாணேச்வரலிங்கம் இது.

இது ப்ரஹ்லாத கேசவர்; அதற்கப்பால் மைரோசனேஸ்வரர்; மைரோசனனுல் ஏற்படுத்தப்பட்டது. (ப்ரஹலாதனின் பேரன்) அதற்கு பிறகு பலிகேசவர். மேலும் இது நாரத கேசவர்: ஆதிகேசவருக்கு முன்னுல் இது ஆதித்யகேசவர், அதற்குப்பின் நிற்கும் லிங்கத்துக்குப் பெயர் பீஷ்ம கேசவர், இது தத்தாத்ரீசுவரர்;

இதற்குக் கழக்குப் பக்கத்தில் இருப்பது ஆதி கதாதரர், அதற்கப்பால் ப்ருகுகேசவர், இது வாமன கேசவர், இந்த இரண்டும் நரநாராயண லிங்கம், இது யக்ஞவராஹேஸ்வரர். இது விதார. நரசிம்மன்: இது

கோபிகோவிந்தலிங்கம், ப்ரஹ்லாதர் யாருடைய க்ருபையாயினுலே இந்த்ரபதவியை அடைந்தாரோ, அந்த லக்ஷ்மீ நரசிம்மருடைய ரத்ன கேதனம்;

புருஷர்களுக்கு அநேக ஸித்திகளைக் கொடுக்கும் இவர் கறுவவிநாயகர். (புருஷர்களின் குறையை நீக்குபவர்; இது ஆதிசேஷனுல் ஸ்தாபிக்கப்பட்ட சேஷமாதவர்; பகவானுடைய பக்தனுன சங்காசுரனை ப்ரளயாக்னிக்குகூட அவனுக்கு தீங்கு செய்ய முடியவில்லை. (தீங்கு செய்யவில்லை) அவனுல் ஸ்தாபிக்கப்பட்ட சங்கமாதவர் இது.

இங்கு (பரப்ரும்ம ரஸாயனத்தின் ஊற்று.) பரப்ரும்ம ரஸாயன ஸரஸ்வதியின் ஊற்று இங்குள்ளது. இங்கு மஹா நதி ஸரஸ்வதி கங்கையோடு கலக்கிருள்.இந்த இடத்தில் ஸ்னனம் செய்பவர்கள் திரும்பவும் பூதலத்தில் பிறக்கமாட்டார்கள். இந்த இடம் ஸர்வஸ்ரேஷ்ட ஸாஷாத் லக்ஷ்மீபதியான பிந்துமாதவர் இருக்குமிடம் மனிதர்கள் சிரத்தையோடு இவரை வந்தனம் செய்தால் கர்ப்பச் சிறைக்குச் செல்ல மாட்டார்கள். தரித்ரம், வ்யாதி, இவைகளால் பீடிக்கப்பட மாட்டார்கள்.

யமராஜர் கூட பிந்து மாதவரின் பக்தர்களை நமஸ்கரிக்கிருர். நாரதரே பிந்துஸ்வரூப ப்ரணவாத்மாவாக வந்து இருக்கிருர். அருவமான பரப்ரம்மம் எதுவோ, அதுவே பிந்து மாதவம். இந்த பஞ்சப்ரம்மாத்வ தத்வத்தை விளக்கும் பஞ்சந்த தீர்த்தம் பஞ்ச கங்கர்;

இங்கு ஸ்னனம் பண்ணினுல் பஞ்சபூதமான இந்த சரீரம் எடுக்க வேண்டாம். இந்த ஸ்தானத்தில் மங்கள கௌரி இருக்கிருள். அவளுடைய அனுக்ரகத்தினுல் காசியில் இஹலோக, பரலோக மங்களம் ஸித்திக்கும்.

இது அக்ஞான ரூபமான அந்தகாரத்தைத் தொலைக்கும். மயூகாதித்ய சூரிய நாராயணன் இது. அதி தேஜஸ்ஸைக் கொடுக்கும் கபஸ்தீஸ்வரர், என்னும் மஹாலிங்கம். இந்த இடத்திலேயே மார்க்கண்டமுனி

தன்னுடைய பெயரால் ஆயுஷ்ப்ரதலிங்கத்தை மார்க்கண்டமுனி தன்னுடைய பெயரால் ஆயுஷ்ப்ரத லிங்கத்தை ஸ்தாபித்து அக்காலத்தில் தபஸ் செய்தார். இது மூன்று லோகத்திற்கும் க்யாதி பெற்ற கிரணேஸ்வரலிங்கம்; இவரை ஒருதரம் நமஸ்கரித்தவர்களை சூரிய லோகத்திற்கு அனுப்புகிறார். இது பாதகங்களைக் கழுவும் தௌத பாதேஸ்வர லிங்கம்.

ஒருதரம் வணங்கினால் இந்த கிரேணஸ்வர லிங்கம் (சிவன்) அவர்களை சூரிய லோகத்திற்கு அனுப்புகிறார். பக்தர்களுக்கு நிர்வாண முக்தியை அளிக்கும் இவர் நிர்வாண நரசிம்ம லிங்கம்; இது மஹாமணி பூஷணமான மணிப்ரதீப நாகலிங்கம்,

இதைப் பூஜித்தவர்கள் ஸர்ப்பத்தினால் பீடிக்கப்பட மாட்டார்கள்; இது கபிலரிஷியால் ஸ்தாபிக்கப்பட்ட கபிலேஸ்வரலிங்கம். இவரைத் தரிசிப்பதினால் மனிதர்களென்ன வானரங்களும் முக்தியடைகின்றன. இது ப்ரிய வரதேஸ்வரர் என்னும் பிரகாசமான பெரிய லிங்கம். இதை அர்ச்சனை செய்வதினால் பிராணிகள் எல்லா ஜந்துக்களுக்கும் பிரியமானவர்களாகிறார்கள்.

இது கலிகாலத்தினுடைய துக்கங்களைப் போக்கும் ஸ்ரீ மான் காலராஜனுடைய மாணிக்கங்கள் இழைத்த உத்தமமான கோவில். இங்கு கால பைரவர் நம்முடைய பாபங்களை பக்ஷித்துவிட்டு, ஜனங்களை பாபத்தினின்றும் காப்பாற்றுவார். க்ஷேத்திரத்திற்கு இடையூறு செய்யும் பாபிகளை நூற்றுக்கணக்கான இடையூறுகளைக் கொடுத்து வெளியில் தள்ளுகிறார். இங்கு ரமணீயமான மந்தாகினி தபஸ் செய்ய வந்தாள். ஆனால் காசீ வாசத்தின் சுகத்தை அனுவித்துக் கொண்டு இதுவரை ஸ்வர்க்கத்திற்குத் திரும்பிப் போகவில்லை. இங்கு விதிப்பிரகாரம் பித்ரு - தர்ப்பணம், ஸ்ராத்தம் ஸ்னானம் இவைகளைச் செய்வதனால்,

பாபிகளான நாதர்களுக்குக் கூட நகரத்தைப் பார்க்க வேண்டாம். காசியில் ஆயிரக்கணக்கான லிங்கங்கள்

இருக்கின்றன. இவைகளில் ரத்னபூத ரத்னேஸ்வரர் என்ற லிங்கம் இருக்கிறது. இந்த ரத்னேஸ்வரரின் தயையினுல் அநேக விதமான ரத்னங்களை அனுபவித்து விட்டு, புருஷார்த்தத்தால் மஹாரத்னமான, நிர்வாண பதத்தை யார்தான் அடையமாட்டார்கள்.

இது க்ருத்திவாஸேஸ்வரருடைய பெரிய சிவாலயம். மனுஷ்யர்கள் இவரை தூர இருந்து பார்த்தாலும் கூட சுகத்தையடைவார்கள். இந்த க்ருத்திவாஸேஸ்வரமே எல்லா லிங்கங்களுக்கும் தலைமையானவர். இவருக்கு ஓங்காரேஸ்வரர் தலை. த்ரிலோசனேஸ்வரர் மூன்று கண்கள், கோகர்ணேஸ்வரரும் பாரபூதேஸ்வரரும் இவருடைய இரண்டுகாதுகள்; விஸ்வேஸ்வரரும் அவிமுக்தேஸ்வரரும்இவரது வலதுகை, தர்மேஸ்வரரும் மணிகர்ணிகேஸ்வரரும் இவரது இடதுகை;

காலேஸ்வரரும் கபர்தீஸ்வரரும் இரண்டு நிர்மலமான பாதங்கள். ஜ்யேஷ்ஷ்டர் நிதம்பர், மத்யமேஸ்வரர் நாபீ; மஹாதேவர் ஜடைமுடி: ஸ்ருதீஸ்வரர் சிரோ - பூஷணம் சந்திரசேகரர் ஹ்ருதயம். வீரேஸ்வரர் ஆத்மா;

கேதாரேஸ்வரரும் சுக்ரேஸ்வரரும் வீர்யம்: இவைகளைத்தவிர மற்றும் நூறுகோடியிலும் அதிகமான லிங்கங்கள் இங்கு உள்ளன. அவர்களை சரீரத்தினுடையமயிர்கள். நகங்கள், ஆபரணங்கள் என்று என்ன வேண்டும்; வலங்கையான விஸ்வேஸ்வரர், அவிமுக்தேஸ்வரர் என்ற இரண்டுலிங்கங்ளுக்கும் மோஹ சாகரத்தில் வீழ்ந்திருக்கும் மனிதர்களுக்கு ஹிதமளித்து, அவர்களுக்கு நிர்வாண பதவியை அளிக்கின்றன. பிறகு இவள் பகவதி துர்க்கை; அதன் பிறகு ஸ்ரேஷ்டமான பிதிர்லிங்கம். இவள் சித்ரகண்டாதேவி; இது கண்டாகர்ணம் என்னும் தடாகம்; இது லலிதா கௌரி தேவி; இது அத்புத விசாலாஷி;

இவர் ஆசா விநாயகர்; இது விசித்திரமான தர்ககூபம் இதில்: பிண்டதானம் செய்வதினுல் ஜீவர்கள் பித்ருக்களைப்ரம்மபதத்திற்கு அனுப்புகிருர்கள். உலகமனைத்துக்கும் அன்னையான இவள் ஸர்வஸநஷ்டா. இவள் விஸ்வபுஜா; இவள் நித்யமும் மூவுலகும் வணங்கும் மஹாதேவியான வந்தி (பந்தீஸ்வரரி) இவளை ஸ்மரித்த மாத்திரத்தில் விலங்கிட்டு சிறைச்சாலை சென்றவர்களைக் கூட பந்தத்திலிருந்து விடுதலையளிக்கிருள். இது மூவுலகங்களாலும் பூஜிக்கப்படும் தஸாஸ்வமேதத் தீர்த்தம். இங்கு மூன்று ஆஹுதிகள் பண்ணின மாத்திரமே அக்னிஹோத்ரபலனைக் கொடுக்கிறது.

இது ப்ரயாகை என்னும் தீர்த்தம்; உத்தமோத்தமானது, இது அசோகத்தீர்த்தம். இது கங்கா கேசவர்; இதுவே மோக்ஷத்வாரம், சொர்க்கத்வாரம் என்று கூறுகிருர்கள்,

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டம் பூர்வாதர்த்த பாஷாடீகாவன ஞானவாபீவர்கண்னம் என்னும் முப்பத்து மூன்ருனது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்தியாயம் 34

*ஸ்கந்தன் கூறுவார்: குப்பமுநியே, அந்தத் துடியிடையாள் கலாவதி முதலாவது எல்லாச் சித்திரங்களேயும் பார்த்துவிட்டுத் திரும்பவும் ஸ்வர்க்கத்வாரத்தின் முன் தலேப்பில் ஸ்ரீமதி மணிகர்ணிகையைப் பார்த்து கொண்டேயிருந்தாள். இங்கு ஸ்வயம் சங்கரர் ஸம்ஸாரஸர்ப்பத்தால் கடிபட்ட பிராணிகளுக்கு வலது காதில் வலதுகையால் தொட்டுக் கொண்டு தத்வஞானத்தை உபதேசம் செய்து கொண்டேயிருக்கிறார்.*

*கபிலயோகம் அல்லது ஸாங்க்ய யோகம் என்று கூறப்படும் யோகத்திலாவது, அல்லது வ்ரத அனுஷ்டானத்திலும் கிடையாத அது இந்த மோக்ஷபூமி அதையேத்தருகிறது.*

*விஷ்ணு பகவானுடைய வைகுண்ட லோகத்தில் விஷ்ணுவின் பக்த கணங்களும் கூட முக்திக்காக இந்த ஸ்ரீமதிமணிகர்ணிகையையே ஜபிக்கிறார்கள். பிராம்மணோத்தமர்கள் வாழ்நாள் பூராக அக்னி ஹோத்ரம் பண்ணியும், வேத பாராயணம் செய்தும், விதிப்படிக்கு ப்ரம்மயக்ஞத்தில் தத்பரனுக இருந்தும்கூட, கடைசியில் பூமியில் முக்தி கிடைப்பதற்காக எதை ஆச்ரயிக்கிறார்களோ, அது இதே மணிகர்ணிகை, அரசர்கள் ஸமூகம் தக்ஷிணுதானத்திஞல் பரிபூர்ண யக்ஞங்களேச் செய்து தன்யர்களாலும் இந்த மணிகர்ணிகையையே அந்த நிலேயையடைய சரணுகதியடைகிறார்கள். ஸதா பதிவ்ரதா தர்மத்தில் ஈடுபட்டிருக்கும் ஸ்த்ரீகளும் மோக்ஷ ஆசையிஞல் பதியுடன் ஸதியாக இந்த மணிகர்ணிகையை ஆச்ரயிக்கிறார்கள்.*

*நியாயமான பணம் ஸம்பாதிப்பவர்களான வைசியர்களும் பாத்திரவானுன ஸாதுக்களுக்கு தனத்தை*

தானம் பண்ணி கடைசியில் இந்த மணிகர்ணிகையையே ஆச்ரயிக்கருர்கள். ஸத்தான பாதையில் போகும் ஸாதுக்கலான சூத்திரங்களும் ஸ்த்ரீபுத்ரர்கள் இவர்களை விட்டு விட்டு நிர்வாணப்ராப்திக்காக மணிகர்ணிகையையே அடைகிருர்கள். வாழ்வு முழுவதும் ப்ரும்மசர்யமாக இருக்க ஜிஜேந்திரியர்களும் நிச்ரேயயஸான லாபத்துக்காக மணிகர்ணிகாவை ஆச்ரயிக்கிருர்கள்.

பஞ்சயக்ஞத்தில் தத்பரராக இருக்கும் க்ருஹஸ்தர்களும், அதிதிகளுக்கு யதேஷ்டமாக ஸ்ருப்தி செய்து விட்டு இந்த மணிகர்ணிகையை விரும்புவதில்லை ஆனுல் வானப்ரஸ்த ஆச்ரமவாஸிகளும் மோக்ஷஸாதன ஞானமான இந்திரியங்களை ஸம்யமம் செய்து மணிகர்ணிகையை அடைகிருர்கள்.

தண்டி ஸந்யாசிகளான முமுக்ஷுக்களும் அநேக பிரகாரமான சாஸ்திரத்திலிருந்து முக்தியைப் பெறும் மற்ற ஸாதனங்கள் அசாத்யம் என்றறிந்து, மணிகர்ணிகாவை விரும்புகிருர்கள். த்ரிதண்டமில்லாத துறவிகளும், மனம், வாக்கு, காயங்களை தினம் தண்டித்துக் கொண்டிருந்தாலும் கைவல்யப் பதவிக்காக மணிகர்ணிகையை அடைகிருர்கள். ஸகல கர்ம ஸந்யாஸிகளும் ஏக தண்ட விருத்தியான சஞ்சல மனத்தை நியமப்படுத்தி மோக்ஷத்தையடைய மணிகர்ணிகாவை அடைகிருர்கள்.

சிகையுடையவர்கள், முண்டிதமானவர்கள், ஜடாதாரிகள், கௌபீனஸந்யாஸிகள், திகம்பரர் இவர்கள் என்னவாஞலும் மோக்ஷாபிலாஷியாக முக்தியைக் கொடுக்கும் மணிகர்கிகையையேதான் ஸேவிக்கிருர்கள்.

தபஸ் செய்வதற்கு இயலாதவர்களும், தானம் கொடுக்க வகையில்லாதவர்களும், யோகாப்யாஸம் செய்யாதவர்களுக்கும் கூட இவள் முக்தியைக்

கொடுக்கிருள். முனிவரே, முக்திக்கு ஆயிரக்கணக்கான உபாயங்கள் இருக்கலாம்; ஆனுல் ஒரு உபாயம் இல்லாமலேயே மணிகர்ணிகை முக்தியைக் கொடுக்கிருள்.

நிர்ஜல வ்ருதம் இருப்பவராக இருக்கட்டும் மூன்று வேளை உண்பவர்களாக இருக்கட்டும், இருவருக்கும் மணிகர்ணிகை சமமான முக்தியைக் கொடுக்கிருள்.

ஒருவன் விதிப்படிக்கு மனே நியமத்துடன் பாசுபத விருதத்தை அனுபவித்துக் கொண்டிருந்தாலும், சரி மற்ருெருவன் ஒன்றும் செய்யாமல் மணிகர்ணிகையையே நினைத்துக் கொண்டிருந்தாலும் சரி, இந்த இருவர்களுடைய சரீரம் விழும்பொழுது இந்த இருவர்களுக்கும் ஒரே கதிதான் அளிக்கப்படுகிறது. அதனுல் மற்ற எல்லாக் காரியங்களையும் நிறுத்திவிட்டு, (மணிகர்ணிகையை ஸேவித்தால்) சீக்கிரமாக எல்லாம் விட்டுவிட்டு மணிகர்ணிகையை ஸேவிப்பதே உசிதம்.

எவனொருவன் மணிகர்ணிகையில் வந்து ஸ்வர்கத்வாரத்தைப் பிரவேசிக்கிருனே, அவனுடைய பாபம் கழுவப்படுகிறது. அவனுக்கு ஸ்வர்க்கத்தில் பிரவேசிக்க முடியும். ஸ்ர்க்கத்வாரம் தான் ஸ்வர்க்க பூமி; மணிகர்ணிகை மோக்ஷபூமி; அதனுல் ஸ்வர்கமும் அபவர்க்கம் இரண்டும் இங்கேயேயிருக்கின்றன. உபரேயோ, கீழேயோ இல்லை.

மணிகர்ணிகையில் அநேக ஸ்நாநமும் தான தர்மங்களும் செய்கிறவர்கள் ஸ்வர்கத்வாரத்தில் பிரவேசிக்கிருர்கள். அவர்கள் நரகத்தில் பிரவேசிப்பதில்லை. பண்டிதர்கள் ஸ்வர்கம் அபவர்க்கம் இந்த இரண்டு சொல்லிற்கும் அர்த்தம் சொல்கிருர்கள். அதாவது ஸொர்க்கத்தில் சுகம்; அபவர்க்கத்தில் மகாசுகம்.

மணிகர்ணிகையில் அமரும் ஸாது ஜனங்களுக்கு ஸுகம் கிடைக்கிறது; ஸமாதி அவஸ்தையில் தன்னை மறந்து இருக்கும் யோகியர்களுக்கு என்ன மஹாசுகம் கிடைக்கிறதோ, அதே சுகம் ஸ்ரீ மதிமணி கர்ணிகையில் ஸஜமாகவே கிடைக்கிறது.

ஸ்வர்கத்வாரத்தின் கிழக்கில் கங்கைக்கு மேற்கில் ஸௌபாக்யமும், பாக்யமும் அளிக்கும் ஏகமாத்ரநிதி; இது இயற்கையிலேயே புனித பூமியாகும்; சூரியனுடைய ரஸ்மிகளை ஸ்பர்சிப்பதினால், கங்கை கரையில் எத்தனை மணல்கள் மிரகாசிக்கிறதோ, அத்தனை ப்ரும்மாக்கள் லயம் அடைந்துவிட்டனர்; ஆனால் இந்த மணிகர்ணிகையையோ அப்படியேயிருக்கிறது:

மணிகர்ணிகைக்கு நான்கு திக்கிலும் எண்ணிறந்த தீர்த்தங்கள் உள்ளன; தீர்த்தமில்லாத பூமி எள்ளத்தனையும் கூட கிடையாது. ஒருவருடைய குலத்தில் ஒருவராவது வந்து மணிகர்ணிகையில் முக்தியடைந்தார்களானால் அவனுடைய ஸந்தானங்கள் அதே ப்ரபாவத்தினாலேயே ஸ்வர்க்கத்திலுள்ள தேவதைகளால் மதிக்கப்படுவார்கள்.

மணிகர்ணிகைக்குச் சென்று எவன் பித்ருக்களுக்குத் தர்பணம் செய்கிறானோ அவனுடைய முன்னோர்கள் ஏழுபேர், பின்னோர்கள் ஏழுபேர் முக்தியடைகிறார்கள். மணிகர்ணிகையின் எல்லை கங்கைக்கு மத்யத்திலிருந்து ஆரம்பித்து ஸ்வர்கத்வார பரியந்தம் கிழக்கிலும் மேற்கிலும், ஹரிசந்த்ரேஸ்வரரிடமிருந்து கங்கா கேசவர் வரை வடக்கிலிருந்து தெற்கு வரை;

மூன்று உலகங்கள் கூட மணிகர்ணிகையின் தூளிக்கு சமமாகாது; மூன்று உலகத்திலுள்ள ஸமஸ்த ஜீவர்களும் இதையடைவதற்கு பிரயத்னம் செய்கிறார்கள். இந்த விதமாகக் கலாவதி அந்த சித்திரபடத்தை அடிக்கடிப் பார்த்துக் கொண்டு விஸ்வேஸ்வரருடைய தக்ஷிண

பாகத்தில் ஞானவாபியைப் பார்க்கத் தொடங்கினுள். அதனுடைய ஜலத்தை தண்டபாணியும், அவருடைய ஸகாக்களான ஸம்ப்ரமா, விப்ரமா என்ற இருவரும் அதை மஹாபயங்கரமாகக் குழப்பம் விளைவிக்கும் துஷ்டர்களிடமிருந்து ரக்ஷிக்கிறுர்கள்.

புராணங்களிலே அஷ்டமூர்த்தி மஹாதேவரைப் பற்றிப் படித்திருக்கிறேம்; அவருடைய ஜலமயமான மூர்த்தி ஞானத்தைக் கொடுக்கக்கூடிய மூர்த்தி இந்த ஞானவாபீ.

கலாவதி ஞானவாபியைப் பார்த்த மாத்திரத்திலேயே ஒரு க்ஷணத்தில் கதம்பப்புஷ்டத்தைப்போல் புளகாகிதமுடையவளானுள். அவளுடைய சரீரம் முழுவதும் நடுங்க ஆரம்பித்தது; நெற்றியில் வேர்வை துளிர்த்தது. இரண்டு கண்களும் ஆனந்தக் கண்ணீரை உதிர்த்தன.

சரீரம் சிதிலமாகிவிட்டது, முகம் நிறம் மாறிவிட்டது. தொண்டை அடைத்தது, பேச்சு குழறியது. அந்த சித்திரபடம் அவள் கையிலிருந்து கீழே விழுந்துவிட்டது. ஒரு க்ஷணத்திற்கு அவள் தன்னையே மறந்தாள். நாம் யார் எங்கிருக்கிறேம் என்று அவளுக்கு நினைவே இல்லை. நிச்சலமாக அவள் படுத்திருந்தாள்.

அதற்கு பிறகு அவளுடைய தாதிகள் இங்குமங்குமிருந்து அட என்ன நேர்ந்தது, என்ன நேர்ந்தது என்று ஒருவரை ஒருவர் கேட்டுக் கொண்டனர். அந்த தாதிகளில் ஸாத்விக சுபாவத்துடைய ஒரு புத்திசாலியானவள் அவளுடைய அந்த நிலைமையைப் பார்த்து விட்டு பரஸ்பரம் கூறிக் கொண்டாள்.

இவள் போன ஜன்மத்தில் தனக்குப் பிரியமான ஒருவரை நினைத்துக் கொண்டிருக்கிறுள். அதுதான்

காரணம், வெகு நாட்களுக்குப் பிறகு இன்று அவருடன் சேர்ந்ததாக அவளுக்குத் தோன்றியதால் அந்த ஸுக நினைவினுல் மூர்ச்சையடைந்திருக்கிருள்.

இல்லாவிட்டாள் இவள் அகாரணமாக ஏகாந்தத்தில் இந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டேயிருந்தவள் ஏன் மூர்ச்சையடைய வேண்டும்? அவர்கள் எல்லோருமாக ஒரே காலத்தில் மூர்ச்சையின் காரணத்தைப் பற்றி விசாரித்துக் கொண்டு நன்ருக ஸ்திரமான ரீதியில் மிகவும் சாந்தத்துடன் அவளுக்கு சைத்யோபசாரம் செய்யத் தொடங்கினுர்கள்.

அவர்களில் ஒருவள வாழையிலையைக் கொண்டு விசிறத் தொடங்கினுள். மற்ருெருவள் தாமரைத் தண்டைக் கொண்டு வந்து கையிலும் காலிலும் கங்கணமாக அணிவித்தாள்.

மற்ருெர்வள் வாசனையுள்ள சீதளமான சந்தநத்தைப் பூசத் தொடங்கினுள். மற்ருெருவள் வாஸனையுள்ள அசோக புஷ்பத்தைக் கொண்டு அவள் மேல் தடவி சோகத்தை நிவர்த்தி செய்யத் தொடங்கினுள். பின்ஞெருவள் ஏதோ ஒரு பிரியவஸ்துவை நினைத்துக் கொண்டு மூர்ச்சித்திருக்கும் கொடியைப் போன்ற அவள் மேல் குளிர்ச்சியான பன்னீர் தாரையைச் சிதற ஆரம்பித்தாள். ஒருவள் மெல்லிய துணியை நனைத்து அவள் மேல் மூடத் தொடங்கினுள். வேருெருவள் கற்பூரத்தைப் பொடி செய்து அவள் மேல் தடவினுள். பிறகொருவள் அவள் அங்கத்திலுள்ள வைர நகைகளை கழற்றி விட்டு அவளுடைய அழகிய மார்பில் முக்தாஹாரத்தை அணிவித்தாள். மற்ருெரு சந்திரமுகி சீதளமான ஜலத்தைப் பெருக்கும் தண் என்றுள்ள சந்திரகாந்த கல்லின் மேல் அவளைத் தூங்க வைத்தாள். இந்த விதமாக எல்லா தாதிகளும் அவளுக்கு சைத்யோபசாரம் செய்வதைப் பார்த்து விட்டு புத்திசரீரிணி என்னும் ஒரு ஸகி

மிகவும் தாபமடைந்து மற்ற ஸகிகளிடம் கூறினுள். எனக்கு இவளுடைய தாபத்தை விலக்கும் சிறந்த மருந்தொன்று தெரியும். நீங்கள் அவளை அந்த சைத்யோப சாரத்திலிருந்து விலக்குங்கள்.

நான் அவளை இப்போதே மூர்ச்சை தெளிவிக்கிறேன். பாருங்கள். நீங்கள் இதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருங்கள். அவள் இதைப் பார்த்துதான் மூர்ச்சையடைந்திருக்கிருள். இதனுல் இந்த சித்திரத்தில் அவளுடைய ப்ரேமைக்குப் பாத்திரமாக ஒரு வஸ்து இருக்கிறறுது. அதனுல் அவளுடைய தேஹத்தில் இந்த சித்திரத்தை ஸ்பரிசித்து அவளுடைய ஸந்தாபத்தை விலக்குகிறேன் பாருங்கள் என்று கூறிய புத்தி சரீரிணியின் சொல் கேட்டு மற்றவர்கள் அவளுக்கு முன்னுல் அந்த சித்திரத்தை வைத்து, சசீகலாவதி இந்த சித்திரத்தைப் பார். இதில் உனக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் இஷ்ட தேவதை இருக்கிறது பார் என்று கூறினவுடனேயே அந்த சித்திரத்தினுடைய ஸ்பர்சத்திணுல் ஏற்பட்ட அம்ருத தாரையிணுல் அவளுடைய மூர்ச்சை தெளிந்தது. எழுந்து உட்கார்ந்தாள்.

ஸூரியனுடைய தாபத்திணுல் வாடிய ஒஷதிகள் மழையிணுல் தளிர்ப்பது போல் அவள் மலர்ந்து எழுந்து உட்கார்ந்தாள். படத்தை எடுத்து ஞானவாபியான ஞானத்தைப் பார்க்கத் தொடங்கினுள். பிறகு அவள் சித்திரத்திலிருக்கும் ஞானவாபியைத் தொட்டுத் தொட்டு பூர்வஜன்ம விருத்தாந்தத்தை, அறிந்து கொண்டாள். மனதுக்குள்ளேயே ஞானவாபியைப் பற்றி நினைக்கத் தொடங்கினுள். ஆஹா! என்ன விசித்ரம், வெகு நாட்களுக்குப் பின் இந்தச் சித்திரத்தில் ஞானவாபியை ஸ்பர்சிக்கும் போது எனது கடந்த ஜன்ம ஞாபகம் முழுவதும் வருகிறதே. பிறகு அந்த ஸுந்தரி தன்

ஸகிகளிடம் ஞானவாபியின் பிரபாவத்தினுல் உண்டான தனது பூர்வஜன்ம விருத்தாந்தத்தை வெகு சந்தோஷத்தோடு கூறத் தொடங்கினுள். நான் போன ஜன்மத்தில் பிராம்மண கன்னிகையாக இருந்தேன்.

காசி விஸ்வேஸ்வரருடைய சமீபத்தில் ஞானவாபியைப் பார்த்து சந்தோஷத்துடன் விளையாடுவேன். எனது தகப்பனுர் ஹரிஸ்வாமி; என் அன்னையின் பெயர் ப்ரியம்வதை: எனது பெயர் சுசீலா. என்னை ஒரு வித்யாதரன் எடுத்துக் கொண்டு போய்விட்டான். பிறகு பாதி ராத்ரி மலயாசலத்தின் அருகில் ஒரு ராக்ஷஸன் அந்த வீரனைக் கொன்றுவிட்டான். அவனும் அந்த ராக்ஷஸனை வதம் செய்து விட்டான். அந்த ராக்ஷஸன் சாபம் விடுபட்டு திவ்ய தேகத்துடன் ஸ்வர்க்கம் சென்றுன்.

அந்த வித்யாதரனே இப்பொழுது மலயகேது அரசனுடைய புத்திரனுகப் பிறந்திருக்கிறுன். நான் கர்நாடக ராஜாவின் புதல்வி கலாவதியாகப் பிறந்திருக்கிறேன். ஞானவாபியை தர்சித்த மாத்திரத்தில் எனக்கு இந்த பூர்வஞானம் ஏற்பட்டிருக்கிறது. அவளுடைய இந்த வசனத்தைக் கேட்டு புத்தி சரீரிணி மற்றும் சகிகள் ஸந்தோஷமடைந்தார்கள். பிறகு அவர்கள் அந்தப் புண்யவதி கலாவதியை வணங்கினுர்கள். பிறகு கூறத் தொடங்கினுர்கள்.

ஆனுல் ஞானவாபியின் பிரபாவம்தான் என்னே! அதை எவ்விதம் அடைவது? ஞானவாபியைப் பாராது இந்த மண்ணில் பிறந்திருப்பவர்களுக்கு இழிவு, இழிவு. கலாவதி உன்னுடையக் கால்களைப் பிடிக்கிறேம்; எங்களுடைய இந்த அபிலாஷையைத் தீர்த்துவை. நீ மஹாராஜாவை வேண்டிக் கொண்டு எங்கள் யாவரையும் அங்கு கூட்டிக் கொண்டு போ; எங்கள் துன்பங்களை

ஸாபல்யமாக்கு; ராணி கலாவதீ, நாங்கள் இன்று பிரதிக்ஞை செய்கிறோம். அந்த ஞானவாபியைப் பார்த்து மஹாபோகத்தை அனுபவிப்போம்.

அதன் பெயர் ஞானவாபியா, அது மிகவும் உசிதமே; கேவலம் படத்தைப் பார்த்தே அது உனக்கு பூர்வ ஞானத்தைத் தந்துவிட்டது. இதன் பிறகு கலாவதி தோழிகளிடம் அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டு தனது நிஜ அறிவை ஒப்புக் கொண்டு ஒரு தினம் அரசனுக்கு ப்ரியமான ஸேவைகள் எல்லாம் செய்து முடித்துவிட்டு அரசனிடம் சுமயம் பார்த்துப் பிரார்த்தித்துக் கொண்டாள். ஆர்யரே, ஜீவிதேச, தங்களை விடப் பிரியமானது எனக்கொன்றுமில்லை; தங்களைப் பதியாக அடைந்து என் மனோரதங்கள் எல்லாம் பூர்த்தியாயின.

எனது ஒரே ஒரு வேண்டுகோள் இருக்கிறது. அதை நிறைவேற்றப் பிரார்த்திக்கிறேன். தாங்கள் யோசித்துப் பார்த்தால் தங்களுக்கும் அது ஹிதமானது ஒன்றாகத் தோன்றும்.

தங்களை அடைந்த எனக்கு வேண்டுமானால் அந்த ஆசை நிறைவேறுவது கடினம். ஆனால் தங்களைப் போன்ற ஸ்வதந்த்ரமாக இருப்பவருக்கு அது ஸித்தியான விஷயம்; மிக எளிதானது. பிராணநாதா! அதிகம் சொல்வானேன்? எனது பிராணனால் தங்களுக்குச் சற்றாவது பிரயோஜனம் உண்டானால் எனது மனோரதத்தைப் பூர்ணமாக்க வேண்டும்; இல்லையானால் என் பிராணன் போயே விடும்.

ராஜா தன் பிராணனைவிட அதிக ப்ரியமுள்ளவளான கலாதேவியின் வார்த்தையைக் கேட்டு விட்டுக் கூறத் தொடங்கினான். அரசர் கூறுவார். எனக்கு உனக்குக் கொடுக்கக்கூடாத பொருள் ஒன்றுகூட இந்த உலகில் இருப்பதாக தோன்றவில்லை. நீ உனது சீலம், கலை, குணங்களால் எனது பிராணனைக்கூட விலைக்கு

வாங்கிவிட்டாய். கலாவதி! எதுவானுலும் உடனேகூறு. அது நிறைவேறிவிட்டமாதிரியே நினே. எனது பிராணனேக்கூட உன் போன்ற பதிவ்ரதைகளுக்குக் கொடுப்பது துர்லபம் அல்ல. அடிப்ரியே! யாரிடம் என்ன பொருளேக் கேட்கவேண்டும்? பிரார்த்திக்க வேண்டிய விஷயம் என்னது? என்னிடம் உனது சிநேகமும் நடத்தையும் மற்றவர்களேப் போன்ற ஸாதாரணமான விஷயமல்ல. இந்த ராஜ்யம், இங்கு பொக்கிஷம், ஸேனேகள், கோட்டை அந்நிய எல்லாப் பொருள்களும் உனது, என்னுடையது என்று ஒன்றும் கிடையாது. நான் பெயருக்குத்தான் யஜமானன் என்றிருக்கிறேன்;

எனது அதிகார ஆணேகூட, ஏ! பிராணேஸ்வரி உன்னேத்தவிர வேறு அந்யர்களுக்குத்தான்; அடிபாமினீ, நீ கூறினுல் ராஜ்யத்தைக் கூடத்ருணமாக மதித்துவிட்டு விடத் தயாராக இருக்கிறேன். இந்த விதமாக மால்யகேது ராஜாவைக்கேட்டு கலாவதி கம்பீரமான வார்த்தைகளேக் கூறத் தொடங்கினுள். பிராணநாதா, முன் காலத்தில் பிரஜாபதி நாலுவிதமான பிரஜைகளே ஸ்ருஷ்டித்தான். அவர்களுக்கு ஹிதத்தைச் செய்யும் பொருட்டு தர்மார்த்த காமமோக்ஷமான நான்கு புருஷார்த்தங்களேயும் படைத்தான். அந்த புருஷார்த்தங்கள் மதிப்பற்றுப் போகும்போது, இங்கு ஜன்மம் நீர்க்குமிழிபோல் அர்த்தமற்றதாகி விடும். அதனுல் இந்த புவியிலிருந்து ஒரு புருஷார்த்தத்தையாவது ஸாதனம் செய்வது உசிதம்.

எங்கு ஸ்த்ரீ புருஷர்களிடம் ஒற்றுமைலிருக்கிறதோ அங்கு மூன்றுலங்களுக்கும் விருத்தி ஏற்படுகிறது. இப்படி பழமையான ஞானிகள் கூறுகிறுர்கள். இது உண்மை என்றே தோன்றுகிறது தங்கள் அரண்மனேயில் என்னேப்போல் நூற்றுக்கணக்கான தாஸிகள் இருக்கிறுர்கள். ஆனுல் ஸ்வாமி தங்களுக்கு என்மேலேயே

நெருக்கமான ஸ்நேகம் இருக்கிறது. தங்களுக்கு தாஸியாக இருப்பதே பெரியபாக்ய விசேஷமாகும். பிறகு அங்கசாயினியாக இருப்பதைப்பற்றி என்ன கூற. அதிலும் ஸந்தான ரத்னமாகிய ஸம்பத்து உங்களிடமிருந்து பெற்றிருக்கிறேனே. மனம்போல் நடக்கும் கணவனைப் பெற்றிருக்கிறேனே என்னைப் போன்ற ஸௌபாக்யவதிகள் மிகச்சிலரே இருப்பார்கள்.

வித்வான்கள் இஷ்டமான காரியங்களைச் செய்ய வசதியான ஸம்பத்தும் தபஸ்செய்ய விக்னமில்லாமல் இருக்க நோயற்ற வாழ்வோடு கூடிய ஆயுஸூம் ஸந்தானத்திற்காகவே பத்னியையும் விரும்புகிறுர்கள்.

விஸ்வேஸ்வரரின் அனுக்ரகத்திஞல் இது முழுதும் தங்களுக்குக் கிடைத்திருக்கிறது. நாதா! தாங்கள் எனது அபிலாஷை நிறைவேற்றத் தகுந்தது என்று எண்ணினீர்களாஞல் நான் விண்ணப்பித்துக் கொள்கிறேன். கேளுங்கள். என்னைக் கூடிய சீக்கிரம் காசிக்கு அனுப்புங்கள். ஏன் என்ருல் என் பிராணன் ஏற்கனவேயே அங்கே போயாகிவிட்டது, இங்கு சரீரம் மாத்திரமே இருக்கிறது.

மால்யகேது ராஜா கலாவதியினுடைய இந்த ஸ்பஷ்டமான வார்த்தைகளைக் கேட்டு க்ஷணநேரம் மௌனமாகவே யோசித்துவிட்டு ராஜ்யலக்ஷ்மியை வைத்துக் கொண்டு எனக்கு என்ன பிரயேகஜனம்! ஆறு அங்கங்கள் இல்லாத ராஜ்யம் ராஜ்யமே இல்லை என்று கூறுகிறுர்கள். பிரியதமே! நிச்சயமாக ராஜ்யலக்ஷ்மி நீ இல்லாமல் இந்த ராஜ்யம் துரும்புக்கு ஒப்பாக துச்சமானது.

பிரியே நான் இடையூறில்லாமல் பல ராஜ்யங்கள் ஆண்டாகிவிட்டது. போகங்களையும் நிரந்தரமாக அனுபவித்து விட்டேன். இந்த்ரியங்களையும்

விஷயங்களால் த்ருப்தி பண்ணிவிட்டேன் நான்கு பக்கங்களிலிருந்தும் தைரியத்தையும் பெற்று விட்டேன். குழந்தைகளும் பிறந்தாகிவிட்டது. இனி இந்த உலகில் நான் செய்ய வேண்டிய கடமை என்ன பாக்கியிருக்கிறது. அதனுல் நாமிருவரும் வாரணாஸிபுரி செல்வதற்கு யோக்யமானவர்களாக இருக்கிறோம். மால்யகேது இந்த விதமாக மனைவியிடம் கூறிவிட்டு போவதற்கு நிச்சயித்து, ஜோஸ்யரை அழைத்து வாராணஸி செல்வதற்கு சுப முஹுூர்த்த நாளை நிச்சயிக்கும்படி கேட்டுக் கொண்டான், பிறகு புரவாஸிகளையும், அமைச்சர்களையும் அழைத்து வேண்டிய வெகுமதி (ஸம்மானம்) எல்லாம் அளித்தான்.

புத்திரர்களிடம் ராஜ்யபாரத்தை ஒப்படைத்து விட்டு, கொஞ்சம் த்ரவ்யம், ரத்னங்கள் இவைகளை எடுத்துக் கொண்டு, காசிக்குப் பிரயாணப்பட்டு விட்டான. ராஜா மால்யகேது விஸ்வநாதபுரியைக் கண்டதுமே ரோமாஞ்சிதம் அடைந்து, தன்னை ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டத் தகுதியுடையவராகத் தீர்மானித்து விட்டான். அந்த ராணி கலாவதியும் பூர்வஜன்ம வாசனையால் எல்லா வழிகளையும் வேறு கிராமத்திலிருந்து வந்த ஜனங்கள் கவனிப்பதுபோல் தனது யோகபலத்தால் கவனித்து விட்டாள்.

இதற்கு பிறகு இருவரும் மணிகர்ணிகையில் ஸ்னனம் செய்து அநேகத் திரவ்யங்களைத் தானம் செய்துவிட்டு அநேக ரத்னங்களினுல் விஸ்வேஸ்வரரைப் பூஜித்தார்கள். பிறகு ரத்னங்கள், குதிரைகள், யானைகள் பசுக்கூட்டங்கள் விசித்ரமான ஆடைகளுடன், அநேக பூஜா உபகரணங்களுமன் தங்கள் வெள்ளி இவைகளினுல் ஆகிய குடங்கள், தீவட்டிகள், கண்ணுடிகள்,சாமரங்கள், கொடி, தண்டம், பாதுகை, விசித்ரமான வெண்கொற்றக் குடைகள் இவைகளைத் தானம் செய்தார்கள்.

ப்ரதக்ஷிணம் செய்து விட்டு முக்திமண்டபம் சென்று அமர்ந்தார்கள். அங்கு தர்மகதைகளைக் கேட்டு அங்கும் தனங்களை தானம் செய்துவிட்டு திரும்பவும் சாயங்கால பூஜையை முடித்து விட்டு நிருத்ய, கீத, வாத்யங்களின் மஹத்வத்துடன் இரவு கண்விழித்துருந்து பிறகு காலையில் எழுந்திருந்து சௌசாதி கடன்களை முடித்துவிட்டு ராணி கூறியமார்க்கமாக ஞானவாபியை அடைந்தார்.

ராஜா அங்கு கலாவதியுடன் ஸந்தோஷமான மனத்தினளாக ஸ்னானம் செய்து, பிண்டதானம் செய்து சிரத்தையுடன் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்தார். பிறகு ஸத்பாத்திரங்களுக்கு தங்கம், வெள்ளி முதலான தானங்கள் செய்துவிட்டு அவர்களை சந்தோஷப் படுத்திவிட்டு, பிறகு பாரணை செய்தார். பாரணை செய்துவிட்டு கலாவதி ஞானவாபியின் படிகளை ரத்னத்தினால் மூடி பதியோடுகூட பக்தியினால் ஸ்த்தோத்தரித்தாள். பிறகு அந்தத்தபஸ்வினி ஒரு சமயம் ஒருவேளை போஜனத்துடன் உபவாஸம், சில சமயம் மூன்று நாட்கள், ஒருசமயம் ஆறுநாட்கள், பக்ஷம், ஒருமாதம் என்றபடி உபவாசிமிருந்தாள். பிறகு க்ருச்ர சாந்த்ராயணம் முதலிய (உபவாசம்) விருதம் முதலிய அனுஷ்டானங்கள் செய்தாள். பதியின் ஸேவானுஷ்டானம் இவைகளைக் கறைவில்லாமல் செய்து, வாழ்வின் எஞ்சிய நாட்களைக் குறைவில்லாமல் கழிக்கத் தொடங்கினாள்.

ஒரு சமயம் இருவரும் அதிகாலையில் ஞானவாபியில் ஸ்னானம் செய்து மண்டபத்தில் அமர்ந்தார்கள். அப்பொழுது ஒரு ஜடாதாரி வந்து அவர் கையில் விபூதியைக் கொடுத்தார். பிறகு சந்தோஷ சித்தத்துடன் ஆசீர்வாதம் செய்து கூறினார். இப்பொழுது நீங்கள் இருவரும் எழுந்து அழகாக அலங்காரம் செய்து கொள்ளுங்கள்.

இப்பொழுது உங்களிருவருக்கும் இன்று க்ஷணத்திற்குள்மாக தாரகோதய மஹாப்ராப்தி, (முக்தி) கிடைக்கப்போகிறறுது. இவ்விதமாக அந்த ஜடாதாரி அவ்விருவரிடமும் பேசிக்கொண்டிருக்கும்போது அதே சமயம் எல்லா ஜனங்களுக்கும் முன்ருல் கிங்கிணிகள் ஒலியுடன் ஒரு விமானம் வந்தது. பகவான் சந்திரமௌலி அந்த விமானத்திலிருந்து இறங்கிஞர். இறங்கி அவ்விருவருடைய காதுகளிலும் தானே மந்திரத்தை உபதேசித்தார். அதே சமயத்தில் வர்ணிக்க இயலாத ஒரு ஜோதி கிளம்பியது.

பகவானும் ஆகாசமார்க்கத்தில் ஒளி வீசிக்கொண்டு தன் இடத்திற்குச் சென்ருர்; ஸ்கந்தர் கூறிஞர்:- அதுமுதல் இந்த ஞானவாபி இந்த உலகங்களில் எல்லாத் தீர்த்தங்களையும் விட மேலானதாகவும் கூறப்பட்டு வருகிறது. இந்த ஞானவாபி ஸர்வஞானமயீ, ஸர்வலிங்கமயி ஞானகாரணீ, ஸுபமயீ, சிவஸொரூபீ உலகத்தில் உடனே சுத்தியைக் கொடுக்கக் கூடிய அநேகத் தீர்த்தங்கள் இருக்கின்றன. ஆஞல் அவைகள் ஞானவாபியினுடைய பதிஞறு கலையில் ஒருபங்குகூட ஆக முடியாது.

இந்த பவித்ர உபாக்யானம், மஹாபாதகத்தை நாசம் செய்யக் கூடியது. மஹாதேவர் பார்வதிக்கு ப்ரீதியை அதிகரிக்கச் செய்வது; ஞானவாபியின் இந்த சுபவர்ணனையை சிரத்தையோடு படித்தும் கேட்டும், பாராயணம் செய்தும் மனிதன் சிவலோகத்தில் மதிக்கப்படுகிருன். இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான ஞானவாபியின் புகழின் வர்ணனம்



# அத்தியாயம் 35

அகஸ்த்யர் கூறுவார்:- இந்த அவிமுக்த க்ஷேத்ரம் எல்லா க்ஷேத்ரங்களுக்கும் மேலான க்ஷேத்ரம். மங்களங்களுக்கும் மங்களங்களை அளிக்கவல்லது. நிர்வாணத்றுதுக்குக் காரணம். ஸ்மசானங்களுக்குள் மஹாச்ரேஷ்டமான மஹாஸ்மசானம். எல்லா சூன்ய தேசங்களுக்கும் மேலான சூன்ய க்ஷேத்ரம்.

மயூரவாஹனு! இந்த க்ஷேத்ரம் தர்மத்தை விரும்பும் புத்தியுள்ளவர்களுக்கு யதேஷ்ட தர்மத்தைக் கொடுக்கக் கூடியது. அர்த்தத்தை விரும்புகிறவர்களுக்கு பரமார்த்தத்தைக் கொடுக்கக் கூடியது. இதுகாமுகர்களுக்கு காமத்தைக் கொடுக்கக் கூடியது. முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியது. தாங்கள் சொன்னதிலிருந்து எப்படிக் கேட்டாலும் இது பரம மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியது என்று அறிந்து கொண்டோம்.

ஏ! கௌரீ ஹ்ருதய நந்தனு! இந்த அவிமுக்த, க்ஷேத்ரத்தின் ஒரு பக்கமாக இருக்கும் ஞானவாபியின் உத்தமக் கதையைக் கேட்டு நான் என்ன நினைக்கிறேன் என்றால் இந்தக் காசியின் மத்திய ப்ரதேசத்தில் அணு, பரமாணு அத்தனை பூமிகூட முக்தி, ஸர்வஸித்தி தருவதில் அத்தனை உத்தமமாய் விளங்குகிறது. இந்த அகில பூமி முழுவதிலும் எத்தனைத் தீர்த்தங்கள் தானில்லை. ஆனால் அவைகள் எல்லாம் காசியின் ஒரு தூளிக்குச் சமமாகச் சொல்ல முடியுமா?

ஸமுத்ரத்தை ஆனந்திக்கச் செய்யும் எத்தனையோ நதிகள் இருக்கின்றனவே. ஆனால் காசியில் ஓடும் கங்கைக்கு சமமான நதி வேறு எங்கு இருக்கிறது. ஹே! ஷண்முகா! இந்த பூமியில் எத்தனையோ க்ஷேத்ரங்கள் பரவிக் கிடக்கின்றன. ஆனால் எனக்குத் தெரிந்த மட்டில் அவைகள் எல்லாம் இந்த அவிமுக்த க்ஷேத்ரத்திற்குக் கோடியில் ஒரு பங்குகூட இல்லை என்பது கருத்து. எங்கு கங்கை,

விஸ்வேஸ்வரர், காசி, இம்மூன்றும் விழிப்புடையதாய் இருக்கிறதோ அங்கு மோக்ஷலக்ஷ்மி ஸித்தியாவாள் என்பதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது!

ஏ! ஸ்கந்தா! மனிதர்கள் அதிலும் கலியுகத்தில் அத்யந்த சஞ்சல சித்தமுடையவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் இம்மூன்றையும் எவ்வாறு அடைவார்கள்? கலியுகத்தில் அதற்குத் தகுந்த தபஸ் எங்கு இருக்கிறது? அதற்குத் தகுந்த யோக்யதைதான் எங்கு இருக்கிறது? அதை அடைவதற்குத் தகுந்த விரதமும் தானமும்தான் எங்கு இருக்கிறது? அப்போது கலியில் மோக்ஷம் எப்படி ஸித்திக்கும்?

ஏ! ஷடானனா! ஸ்கந்தா! தபஸ்ஸில்லாமலும் யோகாப்யாஸம் இல்லாமலும் விரதம் தானம் இவைகளில்லாமலும் காசியில் முக்தி கிட்டும் என்று கூறினீர்கள். ஏ! கார்த்திகேயா! எந்த விதமான நடத்தையினால் காசியை அடைய முடியும்? தாங்கள் அதைக் கூறுங்கள். ஆனால் ஸதாசாரம் இல்லாமல் மனோரதம் ஸித்தியாகாது என்று நான் கூறுகிறேன். ஆசாரமே பரம தர்மம். ஆசாரமே மகத்தான தபஸ். ஆசாரத்தினாலேயே மனுஷ்யர்களின் ச்ரேயஸ் விருத்தியாகிறது. ஆசாரத்தினாலேயே பாபங்கள் க்ஷயமாகின்றன.

ஏ! ஷடானனா! முதலாவது ஆசாரத்தைப் பற்றி எடுத்துக் கூறுங்கள், தேவதேவனான பிதா தங்கள் முன்னிலையில் எப்படி எடுத்துக் கூறினாரோ அப்படியே இங்கு வர்ணியுங்கள். ஸ்கந்தர் கூறினார்; ஏ! மித்ராவருண புத்திரரே! ஸஜ்ஜனகளுக்கு ஹிதத்தைச் செய்யும் ஸதாசாரத்தைப் பற்றி இப்பொழுது வர்ணிக்கிறேன். கேளுங்கள். அதை ஆச்ரயிப்பதனால் மனிதர்கள் தினமும் சகல காமனையும் அடைகிறார்கள். ஸ்தாவரம் பூமி நீர்வாழும் இனங்கள், பக்ஷிகள், மிருகங்கள் வெறும் மனிதர்கள் இவைகளெல்லாம் க்ரமம் க்ரமமாகக் கொஞ்சம்

கொஞ்சமாக தார்மிக விருத்தியை அதிகரித்துக் கொண்டு வருகின்றன. இவைகள் எல்லாவற்றையும் விட தேவதைகள் அதிகம் தர்மாத்மாக்களாக இருக்கிறார்கள்.

இவர்கள் வரிசை க்ரமப்படிக்கு ஆயிரத்தில் ஒரு அம்சமாக இருக்கிறார்கள். ஆனால் இந்த எல்லா மஹாபாக்யசாலிகளும் முக்தி பரியந்தம் சமமான ஆச்ரயத்தை உடையவர்களாக இருக்கிறார்கள். முனியே ஸ்வேதஜம், அண்டஜம், உத்பிஜம், ஜராயுஜம் என்ற இந்த நான்குவித உத்பத்திகளில் கர்மம் செய்யும் ச்ரேஷ்ட சீலர்களான பிராணிகள் மிகவும் உத்தமம். ஆனால் இவை எல்லாவற்றையும் விட புத்தியினால் கர்மம் செய்யும் பிராணிகள் மிகவும் ச்ரேஷ்டமானது. அந்த புத்திசாலி ஜீவர்களில் மனிதன் ஸர்வஸ்ரேஷ்டன். மனிதர்களிலும் பிராம்மணன் மிகவும் உத்தமன். பிராம்மணர்களிலும் கூட வித்வான்கள் மிகவும் உத்தமர்கள். அந்த வித்வான்களிலும் சாஸ்திரத்தில் கூறியபடி விவகார புத்தியுள்ளவர்கள் உத்தமர்கள். அந்த விவகார புத்திசாலிகளிலும் அதையனுசரித்துக் கர்மம் செய்பவர்களே மேல். அந்தக் கர்ம யோகிகளிலும் ப்ரம்ம நிஷ்டர்கள் மிகவும் மேல். மூன்று உலகங்களிலும் அவர்களால் பூஜிக்கத் தகுந்தவர்கள். ஒருவரும் இல்லை.

ஞான மயமான தவமும் ப்ரம்ம வித்தையில் அபேத சித்தமானவர்களும், அவிசேஷமும் உள்ளவர்களும், தங்களுக்குள் ஒருவரை ஒருவர் பூஜிக்கத் தகுந்தவர். ஏனென்றால் ப்ரம்மா ப்ராம்மணர்களையே ஸமஸ்த ஜீவராசிகளுக்கும் தலைவர்ளாக்கியிருக்கிறார். அதனால் பிராம்மணர்களே ஜகத்தில் உள்ள ஸர்வவஸ்துக்களையும் பெருவதற்கு யோக்கியமானவர்கள், வேறு ஒருவருமில்லை. ஆனால் ஸதாசார்யனு பிராம்மணன்தான் அதிகாரி, ஆசாரத்தை இழந்தவன் அப்படி ஒரு பொழுதும் ஆகமாட்டான். அதனால் பிராம்மணர்கள் எப்பொழுதும் ஆசாரசீலராக இருக்க வேண்டும்.

ஏ! முனியே! வித்வான்கள் ராகத்வேஷங்கள் இல்லாமல் எந்தக் கர்மத்தை அனுஷ்டிக்கிறுர்களோ, அந்த தர்மத்தைப் பண்டிதர்கள் தர்மத்தின் வேராக நினேக்கிறுர்கள். ஸாமுத்ரிகாலக்ஷணங்கள் இல்லாத மனிதனும் கூடப் பொறுமையை விட்டு விட்டு சிரத்தையோடு கூட மேன்மையான வழியில் ஆசார்ய தத்பரனுக ஆவானுனுல் அவன் நிச்சயமாக நூறுவருஷ பரியந்தம் ஆயுளை அடைவான்.

மனுஷ்யன் சோம்பலில்லாமல் தங்கள் தங்கள் கர்மங்களில் ச்ருதி, ஸ்ம்ருதி கூறிய வழியில் ஸதாசாரத்தை கடைபிடிக்க வேண்டும். துராசார புருஷர்கள் நிந்திக்கத் தகுந்தவர்களாகவும், ஸதா வியாதியினுல் பீடிக்கப்பட்டவர்களாகவும், அல்பாயுஸாயும், மிகுந்த துக்கத்தில் பீடிக்கப்பட்டவர்களாகவும் ஆவார்கள். எப்பொழுதும் பராதீனகர்மத்தை தியாகம் செய்ய வேண்டும். தன்னுடைய கர்மத்தையே செய்ய வேண்டும். ஏனென்றுல் பராதீன கர்மத்தைச் செய்பவர்கள் மிகவும் துக்கிகளாகவும், தனது கர்மத்தைச் செய்பவர்கள் சுகிகளாகவும் கருதப்படுகிறுர்கள்.

அந்த ஸ்வதர்ம கர்மம் செய்வதாலேயும் எந்த கர்மத்தால் அந்தராத்மா ப்ரஸன்ன மடையுமோ, அதே கர்மத்தைச் செய்ய வேண்டும். அதற்கு விபரீதமான கர்மத்தை ஒருபொழுதும் செய்யக் கூடாது. (இமயம் நியமம் இவை இரண்டும் தர்மத்தின் முதல்படி என்று கூறப்படுகிறது.) அதனுல் தர்மாபிலாஷைகள் முயற்சியுடன் செய்ய வேண்டும். ஸத்யம், க்ஷமை நேர்மை, த்யானம், க்ரோதமின்மை, அஹிம்ஸை, இந்திரயங்களே அடக்குதல், சந்தோஷம், இனிமை, மென்மை இந்தப் பத்தும் இயமத்துக்குள் அடங்கியுள்ளன. அகமும் புறமும் சுத்தஸ்ஞனம், தானம், தபம், மௌனம், யக்ஞம், அத்யயனம், விரதம், உபவாசம், போகத்திரவ்யங்களில் நியமம் இவைகள் பத்தும் கொண்டது நியமம். காமம், க்ரோதம், லோபம், மோஹம்,

மதம், மாத்ஸர்யம் இந்த ஆறு சத்ருக்களையும் ஜயித்து எங்கும் ஜயம் பெறவேண்டும்.

பிறரைப் பீடிப்பதை விட்டு விட்டு மெல்ல மெல்ல கரையான் புற்றைச் சேர்ப்பதைப்போல பரலோகத்துக்கு ஸாதனமான தர்மத்தைச் சேர்த்து வைக்க வேண்டும். ஏனென்றால் பரலோகத்தில் தர்மம் ஒன்றே நமக்கு உதவக் கூடியது. மாதா, பிதா, புத்ரன், சகோதரன், பத்னி, உற்றார், உறவினர், யானை, குதிரை, வீடு, ஸம்பத்து இவைகள் ஒன்றும் பரலோகத்தில் உதவாது. (ஜீவன் தனியாகத்தான் உற்பத்தியாகிறது. தானேதான் இறந்து போகிறது. தனியாகத்தான் பாப, புண்யங்களையும் அனுபவிக்கின்றது.)

மரணமடைந்த சரீரத்தை பந்து ஜனங்கள் பூமியில் மரக்கட்டைக்கும் கல்லுக்கும் சமமாக எறிந்து விட்டுத் திரும்பிபாராமல் வருகிறார்கள். அந்தப் பிரயாணம் செய்யும் மனிதனுடன் கேவலம் தர்மம் ஒன்றேகூடப் போகிறது அதனால் க்ருதக்ருத்யன் பரலோகத்துக்கு சமமான தர்மத்தைச் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் அவன் தர்மத்தின் துணையுடன் தான் கடினமான ஸம்ஸாரத்தைக் கடக்க முடியும். புத்திசாலியான ஜனங்கள் தர்மத்தின் சேர்க்கையை விட்டு உத்தம தர்மத்தைக் கைகொள்ள வேண்டும். இதனால் அவர்கள் தன் குலத்தையே மேன்மையாக்குகிறார்கள்.

(உத்தமர்களுடன் சேர்க்கை வைத்துக் கொண்டு இழிவானவர்களுடைய சேர்க்கையைத் தவிர்ப்பதினால்தான் பிராம்மணன் மேன்மையடைகிறான்.) அப்படிச் செய்யாமல் இதற்கு மாறான வழியில் பிரவேசித்தானானால் சூத்திரத்தன்மையடைகிறான். அத்யயனம் இல்லாமல் ஸதாசாரமும் இல்லாமல் சோம்பேரியாகவும் சாப்பிடக் கூடாதனவைகளைச் சாப்பிடுபவனாக இருக்கும் பிராம்மணனுக்குத் துன்புற்ற மரணம் ஏற்படுகிறது. ஆகவே இந்த எல்லாக் காரணத்தினாலும் பிராம்மணன் முயற்சியுடன் நித்யம் ஸதாசாரத்தை அனுபவிக்க வேண்டும். ஏனென்றால்

புண்ணியதீர்த்தங்கள் கூட ஸதாசாரிகளான மகாத்மாக்களை தன்னிடம் சேரவைக்கின்றது.

(இரவில் கடைசி ஜாமத்தில் இரவு நான்கு நாழிகை மீதம் இருக்கும் போது, அதை ப்ரம்மமுகூர்த்தம் என்று கூறப்படுகிறது. அறிவாளிகள் அதே ஸமயத்தில் எழுந்திருந்து தங்களுக்கு நன்மைக் கொடுக்கக் கூடியனவைப் பற்றி சிந்திக்க வேண்டும். நித்திரையை விட்டு எழுந்தவுடனேயே கணேசரை த்யானம் செய்ய வேண்டும்;) பிறகு அம்பிகையுடன் மஹேஸ்வரர், லக்ஷ்மியுடன் கூட நாராயணர், ஸரஸ்வதி ஸஹிதரான ப்ரம்மா இந்திரன் முதலான ஸமஸ்த தேவதைகள், வஸிஷ்டர் முதலான ஸகல முனீஸ்வரர்கள் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்கள், ஸ்ரீ சைலம் முதலிய ஸகல பர்வதங்கள்.

பாற்கடல் முதலிய ஏழு ஸமுத்ரங்கள் மானஸஸரோவரம் முதலிய ஸரோவரங்கள், நந்தன முதலிய உத்யான வனங்கள், காமதேனு முதலிய பசுக்கள், கல்ப விருக்ஷங்கள், ஸ்வர்ணம் முதலிய தாதுக்கள்,ஊர்வசி முதலிய தேவஸ்த்ரீகள், கருடன் முதலிய பக்ஷிகள், ஆதிசேஷன் முதலிய ஸர்ப்பங்கள், ஐராவதம் முதலிய யானைகள், உச்சைஸ்வரஸ் முதலிய அச்வங்கள் கௌஸ்துபம் முதலிய ரத்தினங்கள்,

அருந்ததி முதலிய பதிவ்ரதைகள், நைமிசாரண்யம் முதலிய அரண்யங்கள், காசீ முதலிய க்ஷேத்ரங்கள்; விஸ்வேஸ்வரர் முதலிய லிங்கங்கள்; ருக் முதலிய வேதங்கள், காயத்ரீ முதலிய மந்திரங்கள், சனகாதி முதலான யோகிகள், ப்ரணவம் முதலிய பீஜமந்திரங்கள் நாரதர் முதலிய வைஷ்ணவர்கள்; பாணஸுரன் முதலிய சிவ பக்தர்கள்; ப்ரஹ்லாதன் முதலிய த்ருடவ்ரதர்கள்;

ததீசி முதலிய தானசீலர்கள், ஹரிச்சந்திரன் முதலிய அரசர்கள்; இவ்வளவுக்கும் மேலான, பரம உத்தமமான

தன்னுடைய அன்னையின் இரு பாத கமலங்களையும் ஸ்மரித்துக் கொண்டு, பிரஸன்ன சித்தத்துடன் பிதா மற்றும் பெரியவர்களை ஹ்ருதயத்தில் த்யானித்துக் கொள்ள வேண்டும். இதற்குப் பிறகு, மல ஜலாதிகளை விஸர்ஜனம் செய்வதற்கு நிருருதி திக்கில் செல்ல வேண்டும்; அதுவும் கிராமமானால் நூறு பாணங்கள் செல்லும் தூரமும், நகரமானால் நானூறு அம்புகள் செல்லும் தூரமும், செல்ல வேண்டும். அங்கு சென்று உலர்ந்த புற்களால் பூமியைமூடி, தலையில் வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு,

பூணூலை வலது காதில் மாட்டிக் கொண்டு மௌனமாக பகலிலும் இரு சந்திகளிலும் வடக்குமுகமாக இருந்து, இரவானால் தெற்கு முகமாக இருந்து மலமூத்ர விஸர்ஜனம் பண்ண வேண்டும். ஜலத்தில் நின்று கொண்டு பிராம்மணன், பசு, அக்னி இவைகளின் முன்னால் நின்று கொண்டோ, உழுதுவிட்ட வயலிலோ, தெருவில் உட்கார்ந்து கொண்டு நடக்கும் இடங்களிலோ மலமூத்ர விஸர்ஜனம் செய்யக் கூடாது.

திசைகள் கூடும் பாகத்தை, நக்ஷத்திரக் கூட்டத்தை, ஆகாச மண்டலத்தைப் பார்க்கக் கூடாது, இப்படி நிவர்த்தி செய்துவிட்டு இடது கையினால் மர்மஸ்தாவனத்தைப் பிடித்துக் கொண்டு அங்கிருந்து எழுந்திருக்க வேண்டும்.

பிறகு ஜந்துக்களும், மூஞ்சுறுகளும், கீரிகளும் தோண்டியதும், மலம் கழிந்த இடமும் ஆன மண்ணைவிட்டு விட்டு சுத்த மண்ணாக எடுத்து ஒரு தடவை குறியில் சுத்தம் பண்ணி, பிறகு நடுநடுவில் ஜலத்தால் அலம்பி ஐந்து தடவை மலத்வாரத்தையும் பத்து தடவை இடக்கையையும், பிறகு இரண்டு கால்களையும் கைகளை மூன்று தரமும் மண் தடவி அலம்ப வேண்டும். இந்த விதமாக கிருகஸ்தர்கள் நாற்றம், மண் இவைகள் போகும் வரை சௌசம் செய்ய வேண்டும்.

ப்ரம்மசாரி முதலிய மூன்று ஆச்ரமிகளும் இந்த

விதமாக இரண்டு தடவைகள் சௌசம் செய்ய வேண்டும்; அதாவது க்ருஹஸ்தரைவிட இரண்டு மடங்கு ப்ரம்மசாரியும், அவனைவிட இரண்டு மடங்கு வானப்ரஸ்தனும், அதைவிட இரண்டு மடங்கு ஸந்யாஸியும் சௌசம் செய்ய வேண்டும். இந்த மாதிரி ஒரு நாளைக்குச் செய்ய பேவண்டியதை கூறியிருக்கிறது. இரவில் இதில் பாதி சௌசம் செய்ய வேண்டும்.

நோயுற்ற நிலையில் இதில் பாதி சௌசம் செய்தால் போதும். வழியில், நாற்சந்தியில் சிறு தேவதைகள் ஸ்தானத்தில் அதிலிருந்து பாதி சௌசம் செய்தால் போதும். பெண்கள் இதில் பாதி சௌசம் எப்போதும் செய்தால் போதும். ஆரோக்ய நிலையில் இதைக் குறைக்கக்கூடாது. எவன் பாபி துஷ்டனோ, பக்தன் இல்லையோ, அவன் எல்லா நதிகளின் ஜலத்தினாலும், குவியல் குவியலாக மண்ணினாலும், கோமயத்தாலும் காலிலிருந்து தலைவரை சௌசம் பண்ணினாலும் அவன் சுத்தனாக மாட்டான்.

சௌசம் கிரியையில் இலந்தை, நெல்லியளவு மண் எடுத்துக் கொண்டால் போதும், இதே அளவில் அக்னி ஹோத்ரியும் சாந்த்ராயண வ்ரதம் இருப்போரும் செய்ய வேண்டும். இதற்குப் பிறகு வைக்கோல் உமி, நெருப்பு, அஸ்தி, பஸ்மம் இவைகள் இல்லாத பவித்ரமான இடத்தில் வாய் கொப்புளிக்க வேண்டும். வடக்கு முகமாக உட்கார்ந்து நன்றாகக் கொப்புளிக்க வேண்டும். தென் மேற்கு (நிர்ருதி) திக்கில் ப்ராம்மணன் ஸ்திரமாக அமர்ந்து பாஹ்ய தீர்த்தமான கட்டைவிரல் ஜலத்தினால் இதயத்தைத் தொட்டுப் பின் நன்றாகப் பார்த்து ஆசமனீயம் செய்ய வேண்டும்.

க்ஷத்திரியர்கள் கழுத்துவரை ஜலத்தினால் கொப்புளிக்க வேண்டும். வைசியர்கள் உள்நாக்குவரை ஜலதினால் கொப்புளிக்க வேண்டும்; சூத்திரர்களும், ஸ்த்ரீகளும் முகத்தில் ஜலத்தைவிட்டு கொப்புளித்ததும், சுத்தமாகிறார்கள். தலையையும் கழுத்தையும் துணியால்

மூடிக்கொண்டு, குடுமியை அவிழ்த்துக்கொண்டு இரண்டு கால்களேயும் கழுவாமல் ஆசமனீயம் செய்தால் அவன் ஆசமனீயம் செய்தாலும் அசுத்தனுகவேயிருக்கிருன். மூன்று தடவை ஜலம் குடித்துவிட்டு அதற்குப் பிறகு இந்த ரீதியாக துவாரங்களே சுத்தி செய்யலாம்.

கட்டைவிரலின் அடியால் இரண்டிரண்டு தடவை சிரஸைத் தொடவேண்டும். பிறகு புத்திமான் ஆள்காட்டி விரல், மத்திம விரல், பவித்ர விரல் இம்மூன்றிலும் வாயைத் தொடவேண்டும். ஆள்காட்டிவிரல், கட்டைவிரல்கள் இரண்டு நுனியிலுைம் நாசிகாத்துவாரத்தை சுத்தம் செய்ய வேண்டும். பிறகு கட்டைவிரலிலுைம் பவித்ரவிரல்கள் நுனியிலுைம் நாலேந்து தடவைகள் கண்ணேயும் காதையும் தொடவேண்டும். பிறகு சுண்டுவிரல் கட்டைவிரல்கள் நுனியிலுைம் நாசித்வாரங்களே ஸ்பர்சிக்க வேண்டும். பிறகு வலதுகை உள்ளங்கையில் மார்பைத் தொட்டு, எல்லா விரல்களிலும் இரண்டு தோள்களேத் தொடவேண்டும், இப்படி ஸ்பர்சிக்கும்போது எப்பொழுதும் கையில் ஜலத்தை விட்டுக் கொள்ள வேண்டும்.

தெருவில் போதும்போது, ஸ்ஞனம் போஜனம், ஜலம் பருகும்போதும், சுபகர்மங்களே ஆரம்பிக்கும் போதும் ஆசமனம் செய்துவிட்டு முடிந்ததும் மறுபடியும் ஆசமனம் செய்ய வேண்டும். தூங்கி எழுந்தவுடனும், வஸ்திரம் மாற்றும் பொழுதும், அமங்களமான பொருள்களேப் பார்த்தால், மறதியிஞல் அபவித்ர வஸ்துகளேத் தொட்டால் இரண்டு தடவை ஆசமனம் செய்தால் சுத்தமாகிவிடும்; இந்த விதமாக ஆசமன விதிகளே முடித்துக் கொண்டு வாயைசுத்தி செய்வதற்குக் குச்சியை எடுத்துக் கொள்ள வேண்டும்; ஏனென்ருல் ஆசமனம் செய்தாலும் கூட பற்களே சுத்தி செய்யாவிட்டால் சுத்தியாகாது.

*பிரதமை, அமாவாஸை, ஷஷ்டி, நவமி ஆகிய திதிகளிலும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் குச்சியினுல் பல்துலக்கினுல் ஏழுதலைமுறைகளுக்கு புருஷர்கள் தகிக்கப்படுகிருர்கள், இந்த நிஷித்த தினங்களில், அல்லது பல்குச்சி கிடைக்காத ஸமயங்களில் பன்னிரண்டு தடவைகள் வாய் கொப்புளித்தால் சுத்தியாகிவிடும். பற்குச்சி சுண்டுவிரலின் நுனியத்தனைப் பருமன் இருக்க வேண்டும்; பட்டையுடன் இருக்க வேண்டும்; பூச்சி, பொட்டு, சிதள் இவைகளிருக்கக் கூடாது. ம்ருதுவாக இருக்க வேண்டும்; பாதிபிளந்ததாக இருக்கக் கூடாது. பன்னிரண்டு அல்லது 12 1/2 அங்குல நீளம் இருக்க வேண்டும், இது பிராம்மணர்களுக்குள்ள விதி.*

*க்ஷத்திரியர்கள், மற்ற வர்ணத்தவர் இவர்களுக்கு ஒவ்வொரு அங்குலம் குறைவாகவேயிருக்க வேண்டும்: மாமரத்தின் குச்சி, நெல்லிமரத்தின் (ஆம்லா) குச்சி, சீதளசீனி, கக்கோல மரம், ஸம்யம், கர்ஜுரி, ஸேலூ, ஸ்ரீபரணி, பேலுஜம், ராஜாதனம், நாரங்கமரம், கண்டகம் இந்த மாதிரியான பால் மரங்களின் குச்சிகள் மிகவும் உத்தமம். பிறகு இளம் வளையும் குச்சிகளினுல் இரு கைகளினுலும் வளைத்து நாக்கைச் சுத்தி செய்து கொள்ளவும்.*

*கீழ்க்கண்டவாறு மந்திரத்தை உச்சரிக்க வேண்டும்:* ஆவரத்யாய யூகத்வம் ஸோமோராஜய மகாமத் ஸமேமுகம் ப்ரமார்க்ஷயந்தே, யஸஸ்ஸாச பகேனச, ஆயுர்பலம் யசோ வர்ச்ச: பிரஜா, பசு வஸுனிச, ப்ரம்மப்ரக்ஞாம் ஸமேதாம் ஸத்வன்ஞே தேஹி வனஸ்பதே.'' *அதாவது அன்ன போஜனம் பண்ணுவதற்கு ஸ்திரமாகவும், வரிசையாகவும் திடமாகவும் இருங்கள். ஏனென்ருல் ராஜ ஸோமம் எந்த வனஸ்பதியில் இருக்கிறதோ அது என்னுடைய வாயைக் கீர்த்தியாலும் பாக்யத்தாலும் துடைக்கட்டும். ஏ! வனஸ்பதே! நீ எங்களுக்கு ஆயுஷ், பலம், கீர்த்தி, தேஜஸ், பசு, ப்ரஜை, தனம், ப்ரம்மபுத்தி இவைகளைக் கொடு. நீ எங்களுக்கு*

இப்படி அர்த்தமுள்ள என் மந்திரங்களைக் கூறி ஒருவன் தந்தசுத்தி செய்தானுனுல் அவர்களிடம் வனஸ்பதியில் இருக்கும் ஸோமன் எப்பவும் ஸந்தோஷமடைவான்.

வாயைச் சுத்தமாக்காவிட்டால் மனிதன் அபவித்ரமடைவான். அதனுல் தினமும் தந்த சுத்தி செய்வது அவசியம். உபவாஸமாக இருந்த போதிலும்கூட தந்தசுத்தி, மை, வாசனைத் திரவியங்கள், சந்தநம், அலங்காரம் நல்ல புஷ்பங்கள் இவைகள் அவசியம் தரிக்க வேண்டும். அதன் பிறகு தந்தசுத்தி செய்துவிட்டு ப்ராதக்காலஸந்தி செய்ய வேண்டும்; விசேஷமாக சுத்த தீர்த்தத்தில் ப்ராத:கால ஸ்னுனம் செய்வது நலம்.

பிராதக் கால ஸ்னுனம் செய்வதால் எப்பொழுதும் அழுக்கடைந்திருக்கும் இந்த நைந்த சரீரத்திலிருந்து இரவும் பகலும் உடலிதன் ஒன்பது துவாரங்கள் வழியாக ஒழுகும் அழுக்கு நீங்கி தேஹம் சுத்தியாகும். ப்ராதஸ்ஸ்னுனம்: ஜனங்களுக்கு உற்சாகத்தையும், புத்தியையும் ஸௌபாக்யத்தையும் ரூபத்தையும், ஸம்பத்தையும் மனஸ்ஸம்பத்தையும் கொடுப்பதற்கு முக்கிய காரணமாதலினுல் அதை மிகவும் புகழ்ச்சியாகக் கூறுகிருர்கள்.

ஏனென்ருல் மனிதன் நித்ராதீனனுய் இருக்கும்பொழுது வேர்வையினுலும் வாய் மூக்கு இவைகளிலிருந்து நீர் ஒழுகுவதினுலும் அசுத்தனுக இருக்கிருன். ஸ்தோத்திரம் இவைகளைச் செய்வதினுல் மந்திரம், ஜபம், ஸ்தோத்ரம் இவைகளைச் செய்வதற்கு அதிகாரியாகிருன். ப்ராதக் காலம் அருணுேதயம் ஆகும் காலம் ஸ்னுனம் செய்வதினுல் ப்ராஜாபத்ய வ்ரதம் இருந்ததற்கு சமானமாகும். மேலும் இந்த ஸ்னுனம் மஹாபாதகங்களையும் விலக்குகின்றது.

மேலும் ப்ராதஸ்னுனம் பாபம், தரித்ரம், சோர்வு, அசுத்தம் துர்ஸ்வப்னம் இவைகளையெல்லாம் நாசம் செய்து

சந்தோஷத்தையும் புஷ்டியையும் தருகிறது. ப்ராதஸ்ஞனம் செய்யும் ஜனங்களை ஒரு தோஷங்களும் எதிர்க்காது. ப்ராதஸ்ஞனத்தினுல் தெரிந்தது, தெரியாமலுமிருக்கிற பாபங்களெல்லாம் நாசமாகினறன. அதனுல் அவசியம் பிராதஸ்ஸ்ஞனம் செய்ய வேண்டும்.

ஹே! குடமுனியே! தொடர்ச்சியாக ஸ்ஞனத்தின் முறையை உமக்குக் கூறுகிறேன். ஏனென்ருல் விதி பூர்வமாக ஸ்ஞனம் செய்வது ஸாதாரணமாக ஸ்ஞனம் செய்வதிலிருந்து கோடி பங்கு பலன் தருகிறது. பவித்ரமான தர்ப்பை, எள்ளு, சாணம் அதை சுத்தமான இடத்தில் வைத்துக்கொண்டு ஸ்ஞனம் செய்ய வேண்டும்.

முதலாவது தர்ப்பையைக் கையில் எடுத்துக் கொண்டு தலையை முடிந்து கொண்டு ஜலத்தில் இறங்க வேண்டும். பிறகு ஆபோஹி முதலான மந்திரங்களை ஜபித்துக் கொண்டு நான்கு பக்கமும் ஜலத்தை நல்வரவு கூற யேதே சதம் முதலிய மந்திரங்களை ஜபிக்க வேண்டும். பிறகு ஸுமித்ரியான்: முதலான மந்திரங்களினுல் ஜலதர்பணம் செய்ய வேண்டும். பிறகு துர்மித்ரியா முதலான மந்திரத்தினுல் சத்ருக்களை உத்தேசித்து ஜலத்தை இறைக்க வேண்டும்.

இதன் பிறகு இதம் விஷ்ணு முதலிய மந்திரங்களை ஜபித்து ஸர்வாங்கங்களிலும் மண்ணைப் பூசிக் கொள்ள வேண்டும். ஒருதரம் மண்ணைத் தலையில் ப்ரோக்ஷணம் செய்து கொண்டு இரண்டு தடவைகள் தொப்பூழின் மேல் பாகத்தை; மூன்று தடவை தொப்பூழுக்குக் கீழ்பாகம் 6 தடவை இருபாதங்களையும் சுத்தி செய்ய வேண்டும். பிறகு உதிதாட்ய சுசி: முதலிய மந்திரத்தை ஜபித்துக் கொண்டு ஜலத்திலிருந்து மேல் எழும்பி மானஸ்தோகம் முதலிய மந்திரத்தை ஜபித்துக் கொண்டு உடம்பில் கோமயத்தைப் பூசிக்கொள்ள வேண்டும்.

பிறகு இமம்மே வருண, தத்வாயாமி, த்வனன ஸத்வம் ந: உதுத்தமம். தாம்ஞே தாம்ன: மாபோ

மேளஷதீ: யாதாஹீதத்னயா: முசந்துமா அவப்ருத என்ற மந்திரம் மூலமாக ஆத்மாபிஷேகம் செய்து கொள்ளும்படிக் கூறப்பட்டிருக்கிறது.

இதன் பிறகு ச்ருதீ ப்ராஹ்மண: ப்ரணவம்கான்யாஹ்ருதி காயத்ரி இவைகளால் தன்னை சுத்திப் படுத்திக் கொள்ள வேண்டும். ஆபோஹிஷ்டா முதலிய மூன்று ருசுக்களும் தூய்மையானதென்று கருதப்படுகிறது. இதன் மூலமாகவும் ஆத்மாபிஷேகம் செய்து கொள்ளலாம். இதமாப: இத்யாதி ஹவிஷ்மதி தேவீராப: அபோதேவா: த்ரபததிவ: இத்யாதி ஹவிஷ்மதி தேவீராப: அபோதேவா: த்ரபததிவ, சன்னோதேவீ அபாம்ரஸம் புனந்துமா, இந்த ஒன்பது சுத்தி தரும் மந்திரங்களால் அபிஷேகம் செய்து கொள்வதும் பவித்ரமாகக் கருதப்படுகிறது.

பிறகு ஜலத்தில் மூழ்கி அகமர்ஷண மந்திரத்தை ஜபித்த பிறகு த்ரிபத மந்திரத்தை ஜபிப்பது அல்லது விதிபூர்வகமாகப் ப்ராணயாமம் ஜபம் செய்வது, இல்லாவிட்டால் மூன்று தடவை ப்ரணவ மந்திரத்தை உச்சரிக்க வேண்டும், இல்லாவிட்டால் விஷ்ணுவை ஸ்மரிக்க வேண்டும். பிறகு பஞ்சகச்சம் வைத்து வஸ்த்ரம் கட்டிக் கொண்டு உத்தரீயம் அணியவும், பிறகு ஆசமனம் செய்து தர்ப்பை எடுத்துக் கொண்டு ப்ராதஸந்த்யா பண்ண வேண்டும்; எவன் ப்ராதஸந்த்யா பண்ணவில்லையோ,

அவன் உயிருடன் இருக்கும் பொழுது சூத்ரனுக்கு ஸமானம், இறந்த பிறகு கோழியாகப் பறக்கிறான். ஸந்த்யா செய்யாதவர்கள் அசுத்தர்கள். ஒரு கர்மமும் பண்ண லாயக்கற்றவர்கள். அவன் செய்யும் எந்தக் கர்மங்களும் பலனளிக்காது. முதலாவது கிழக்குத் திசையில் ப்ரணவத்தை ஜபித்துக் கொண்டே குசாஸனம் விரித்து சித்தம் திருஷ்டி இவைகளை லயப்படுத்தி, சுதுஸ்ரக்த முதலிய மந்திரங்களை ஜபித்து கிழக்கு முகமாகவோ அல்லது வடக்கு முகமாகவோ, அமர்ந்து, தலையை

*முடிப்பது கொண்டு, தென்பக்கம் முகமாகவோ தன்மேல் ப்ரோக்ஷணம் செய்து கொண்டு, தென்பக்கம் தன்மேல் ப்ராணாயாமம் செய்ய வேண்டும்;*

*ஏழு தடவைகள் சிரோமந்திரம் ப்ரணவத்துடன் காயத்ரியை மூன்று தரம் ஜபிக்கவும் (பூரகம், கும்பகம், ரேசகம்;) த்துடன் இதுவே பராணாயாமம். பிராம்மணன் மனது இந்திரியங்களை ஸ்திரப்படுத்தி, ப்ராணாயாமம் செய்வதினால் க்ஷணமே அஹோராத்ரியாகச் செய்த பாபங்கள் நஷ்டமடைகின்றன. ஒருவன் மனதை நியமனம் செய்து கொண்டு 10, அல்லது 12 பராணாயாமம் செய்வானானால் பெரிய தபஸ்ஸின் பலன் கிடைக்கிறது.*

*ஒரு மாதம் வரை ப்ரதி தினமும் 16 ப்ராணாயாமம் செய்வானானால் அவன் ப்ராணஹத்தி செய்தவனைக் கூடப் பவித்ரமாக்குவான். அக்னியில் ஸ்புடம் போட்டால் மண் ஸம்பந்தமான அழுக்குகள் விலகுவது போல், ப்ராபணாயாமம் செய்வதால் இந்த்ரியங்களால் செய்யப்பட்ட ஸமஸ்த தோஷங்களும் பஸ்மமாகிவிடும். ஒரு ப்ராம்மணனை விதி பூர்வமாக போஜனம் செய்வித்தால் என்ன புண்யம் கிடைக்குமோ, சிரத்தையுடன் 12 ப்ராணயாமம் செய்வதினால் அதே பலன் ஏற்படும்.*

*வேதம் முதலிய ஸமஸ்த வாக்ஸ்வரூபங்களும் ப்ராணாயாமத்தில் அடங்கியிருக்கின்றன. வேதம் ஜபம் செய்யும் ப்ராம்மணன் இதே வேதாதி ஜபங்களைச் செய்ய வேண்டும். ப்ரணவம் 7 தடவை, மூன்று பதம் காயத்ரி இவைகளை ஜபிப்பதில் எவன் தத்பரனாக இருக்கிறானோ, அவனுக்கு ஓரிடத்திலும் பயமேற்படாது.*

*கும்ப முனியே! ப்ரணவமே பரப்ரம்மம், ப்ராணாயாமமே பரமதபம், காயத்ரியைப் போன்ற புனித மந்த்ரம் வேறு கிடையாது, இரவில் மனஸா வாசா, கர்மணா பாபம் செய்திருக்கிறானோ. (காலையில் ஸந்தியா வந்தன ஸமயத்தில் ப்ராணாயாமம் மூலமாக எல்லாப் பாபங்களும் நசிக்கும்.)*

இது போல் பகலில் மனத்தாலும் கர்மத்தாலும் காயத்தாலும் செய்யும் பாபங்கள், ஸாயங்கால ஸந்த்யா ப்ராணுயாமத்தின்போது விசேஷமாக சுத்தியாகும். இந்த விதமாக நின்றுகொண்டு காயத்ரி ஜபம் செய்து கொண்டு சூரிய தர்சன பர்யந்தம் காலே ஸந்தியா செய்யவும். மாலேயில் உட்கார்ந்து ஒழுங்காக நக்ஷத்ரங்கள் தெரியும் வரை ஸந்தியோபாஸனம் செய்யவும்.

(நின்றுகொண்டு காலே ஸந்தியின் ஜபம் செய்வதால் இரவின் பாபம் நசிக்கிறது. அதுபோல அமர்ந்து ஸாயங்கால ஸந்தியா ஜபம் செய்வதால் பகலில் செய்து வந்த பாபம் விலகுகிறது.) காலே. மாலே ஸந்தியா ஜபம் செய்யாதவர்களே சூத்திரர்களாக நினேத்து பஹிஷ்கரிக்க வேண்டும். ஜலாசயத்தின் ஸமீபம் சென்று நித்ய கர்மானுஷ்டானம் செய்ய வேண்டும். அரண்யத்துக்குச் சென்று திடசிகதமாக காயத்ரீ ஜபம் செய்யவேண்டும். ஏனென்ருல் வீட்டிலிருந்து வெளியே சென்று செய்யும் ஸந்தியோபாஸனம் வீட்டில் செய்யும் ஸந்தி ஜபங்களே விட அதிகப்பலனளிக்கும். ஜிதேந்திரியஞன புருஷன் காயத்ரீ ஒன்றையே அப்யஸித்து வந்தால் சிரேஷ்ட பலன் கிடைக்கும். அவன் மூன்று வேதாத்யாயியாக ஆனுலும் எவன் எல்லாம் புஜிப்பவஞனுலும் எல்லாவற்றையும் விட்டவர்கள். அவர்கள் மதிப்புடையவர்கள் அல்ல. யாருடைய தேவதை ஸவிதா, முகம் அக்னி, ரிஷி விச்வாமித்ரரிஷி, சந்தஸ்த்ரிபதா காயத்ரியோ அவனே எல்லாவற்றிலும் விசேஷமானவன். காலேயில் சிவந்த வர்ணமான ப்ரம்மதேவதா;

ஹம்ஸவாஹினீ; எட்டு வயது, ரக்தமாலா; ரக்த சந்தனம் பூசிக் கொண்டவள், ருக்வேதஸ்வரூபா, அபயம் அளிப்பவவ் அக்ஷமாலேயைத் தரித்துக் கொண்டிருப்பவள். வ்யாஸருஷியால் ஸ்துதிக்கப்பட்டவள்; அநுஷ்டுப் சந்தஸ்ஸோடு கூடியவள்; காயத்ரியை த்யானம் செய்ய வேண்டும். காலேயில் காயத்ரீ தேவியை மேற்கூறியவாறு

தியானம் செய்தால் இரவில் செய்த ஸமஸ்த பாபங்களும் விலகும். பிறகு சூர்யஸ்ச்ச முதலான மந்திரங்களின் மூலம் ஆசமனம் செய்து பிறகு ஆபோஹிஷ்ட்டா, முதலிய மூன்று ருசாக்களினுல் ஜலம் விடவேண்டும்.

மார்ஜனத்தின் விதி ஏதென்ருல் பூமியில் தலே, மேல் ஆகாசத்தில்; பிறகு ஆகாசத்தில் பூமியில், தலேயில்; மூன்ரும் முறை தலே ஆகாசம், பூமி, இந்த விதமாக 9 தடவைகள் ஜலம் தெளித்து விட்டு பிறகு, மார்ஜனம் செய்து கொண்ட ஜனங்கள் பூமிசப்தத்திஞல் இரண்டு சரணங்கள்! ஆகாசத்திஞல் இதயம், மஸ்தகத்திஞல் மஸ்தகத்தை உதாஹரணம் செய்திருக்கிருர்கள்.

(ஜலத்திஞல்) வாருணீகஸ்ஞனம்; அக்னிஹோத்ரபஸ்மத்திஞல் ஆக்னியிஸ்ஞனம், (வாயு) விஞல் பறக்கும் பசுமாட்டின் காலின் தூளியிஞல் வாயுஸ்ஞனம், மேகமில்லாமல் மழையிஞல் ஐந்திர ஸ்ஞனம்; முதலிய வைதிகாதி மந்திரத்திஞல் மந்திர ஸ்ஞனம் சிறந்தது. கிழக்கு := ஐந்திரம், தென்கிழக்கு:= அக்னி; தெற்கு:= யமன், தென்மேற்கு:= வருணன்; மேற்கு:= வாயு; வடமேற்கு:= குபேரன், வடக்கு ஈசான்யம்; வடகிழக்கு:= நிருருதி; ஆஞல் மானஸிகஸ்ஞனம் பாஹ்யஸ்ஞனத்தைவிடச்சிறந்தது. இந்த பாஹ்யஸ்ஞனம் செய்கிறவர்கள் வெளியிலும் உள்ளிலும் பவித்ரமாகிருர்கள்; இதஞல் தேவபூஜை முதலிய ஸத்கர்மம் செய்வற்கு அதிகாரியாகிருன்.

படகு விடுகிறவன் இரவும் பகலும் ஜலத்தில் முழுகி இருக்கின்ருன். அவன் பவித்ரஞகுவாஞ? அதுபோல் பாவம் இல்லாத ஜனங்கள் நூற்றுக்கணக்கான தடவைகள் ஸ்ஞனம் செய்தாலும் சுத்தஞக மாட்டார்கள். சுத்த அந்த:கரணத்தோடு கூட விபூதி தாரணம் செய்தால் அது உடனே பவித்ரமாக்குகிறது. கழுதை சாம்பலில் புரளுகிறது. அது உடனே பவித்ரமாகிறதா? இந்த உலகில் எவனுடைய ஹ்ருதயம் நிர்மலமாக இருக்கிறதோ அவன் எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்ஞனம் செய்து எல்லா

அசுத்தங்களிலிருந்தும் விடுபட்டு நூற்றுக்கணக்கான யக்ஞங்கள் செய்த பலனையடைகிறான்.

ஏ! முனிவரா, அந்த சித்தம் எந்த விதத்தில் சுத்தியாகிறது என்று கேள், அது விஸ்வேஸ்வரர் நம் செய்கைகளினால் சந்தோஷமடைந்தாரானால் விஸ்வேஸ்வரன் நம்மிடம் ப்ரஸன்னமாகிறானானால் நம் சித்தம் நிர்மலமாகிறது. வேறு ஒரு வகையிலும் அது சரியாகாது. அதனால் அந்தக்கரண சுத்தி கிடைப்பதற்காக காசிநாதருடைய திருவடிகளில் சரண் அடைய வேண்டும். ஏனென்றால் அவனை ஆச்ரயித்தால் மனதின் ஸகல அசுத்தமும் நாசமடைந்துவிடும். விச்வேஸ்வரரின் பரம அனுக்ரகத்தினாலேயே மனிதன் மனத்தின் அழுக்குகளை ஸம்பூர்ணமாக சுத்தம் செய்துவிட்டானானால் அப்பொழுது அவன் சரீரத்தைத் தியாகம் செய்து பரப்ரம்மத்தையடைகிறான்.

கேவலம் ஸதாசாரம் ஒன்றுதான் மனிதன் விச்வேச்வரரின் அனுக்ரகம் பெறுவதற்குக் காரணமாகிறது. அதனால் ஸ்ருதி ஸ்ம்ருதி இவைகள் கூறும் ஸதாசாரத்தை நடைமுறையில் பயிலுவது எப்போதும் உசிதம். பிறகு விதிமுறை தெரிந்தவர்கள் த்ரிபதாமந்திரத்தை ஜபித்துக் கொண்டு கையில் ஜலத்தை எடுத்துக் கொண்டு அதன் மூலமாக அகமர்ஷண மந்திரத்தை ஜபிக்க வேண்டும். பண்டிதர்கள் ஜலத்தில் மூழ்கிக் கொண்டு அகமர்ஷண மந்திரத்தை ஜபிக்க வேண்டும். ஜபித்தானானால் அசுவமேத யக்ஞம் செய்து அவப்ருதஸ்னானம் பண்ணின புண்ணியம் கிடைக்கும்;

ஜலத்திலும் சரி, ஸ்தலத்திலும் சரி ஒருவன் அகமர்ஷண மந்திரத்தை ஜபித்தானானால் அவனுடைய பாபங்கள் சூரியனைக் கண்ட இருளைப்போல் நசித்துவிடும். சில சில ஆசார்யர்கள் அந்தஸ்சரதி என்ற மந்திரத்தை ஜபித்து ஆசமனீம் செய்யுமாறு உபதேசிக்கிறார்கள். சில ஆசார்யார்கள் வேதசாகா பேதத்தை அனுசரித்து ஆசமனீயத்தைப் பற்றி வேறுவிதமாகக் கூறுகிறார்கள்.

இதற்கு பிறகு சிரோமந்த்ரமில்லாமல் ப்ரணவம் முதலிய மகத்தான மந்திரத்துடன் கூட காயத்ரியை ஜபித்து நின்று கொண்டு ஜலார்ப்பணம் செய்ய வேண்டும். இந்த ஜலாஞ்சலி வஜ்ராயுதத்திற்கு ஸமமான பலனைத் தரும். சூரியனுடைய சத்ருக்களான மந்தேகம் என்ற பெயருடைய ராக்ஷஸ கணங்கள் வஜ்ராயுதத்தினால் அடிக்கப்பட்ட பர்வதங்களைப் போல் ப்ரளயத்தில் மூழ்குகிறார்கள்.

யாதொரு ப்ராம்மணன் ஸூர்ய தேவனுக்கு ஸஹாயம் செய்யும் பொருட்டு மந்தேக ராக்ஷஸ கணங்கள் நாசமடைவதற்காக மூன்று கை ஜலம் அர்ப்பணம் செய்யவில்லையோ அவன் தானே மந்தேக ராக்ஷஸனாகிறான். காலை வேளையில் ஸூர்ய நாராயணருடைய தரிசனம் ஆகும் வரை நின்று கொண்டே காயத்ரியை ஜபம் செய்து கொண்டிருக்க வேண்டும். ஸாயங்கால வேளையில் உட்கார்ந்து கொண்டு நக்ஷத்ர தர்சன பர்யந்தம் காயத்ரீ ஜபிக்க வேண்டும்.

தனக்கு நன்மையை விரும்பும் எந்த ப்ராம்மணனும் காலத்தை வீணாகக் கழிக்காமல் ஸூர்யனுடைய அர்த்தோதகம் அர்த்தாஸ்தமனம் இரண்டு சமயங்களிலும் வஜ்ரோதகம் என்னும் அர்க்யத்தைக் கொடுக்க வேண்டும். ஸந்தியா காலம் கடந்த பிறகு விதிபூர்வமாக ஸந்தியா வந்தனம் செய்தாலும் அதற்குப் பலன் கிடையாது. இதற்கு உபமானம் என்ன வென்றால் ஒரு ஸ்த்ரீதான் மலடி என்று தெரிந்த பின்னும் சந்தானத்திற்காக தன் புருஷனுடன் இருப்பது போல். பிராம்மணன் இடது கையில் ஜலம் எடுத்து ஸந்தியா செய்யக்கூடாது. அவர்களை 'வ்ருஷலி' என்று கூறுகிறார்கள். அவர்களுடைய செய்கையினால் ராக்ஷஸர்கள்தான் ஸந்தோஷப் படுகிறார்கள்.

'உத்வயம், உதுத்யம், சித்ரம் தேவானாம், தத்சக்ஷு; இவைகள் நான்கும் ஸூர்யனுடைய உபஸ்தான மந்திரங்கள். இவை நான்கும் மிகவும் ஸித்தியைத்

தரக்கூடியது. உபஸ்தானம் என்ருல் சான்ருேர்களுக்கு அருகில் இருப்பது. ஸூர்யனுக்கு முன்னிலேயில் ஆயிரம் தடவையும், நூறு தடவையும், பத்து தடவையும் காயத்ரி ஜபம் செய்ய வேண்டும். இது உசிதம்.

இதில் ஸஹஸ்ர நாமம் ஸர்வோத்தமம், ஸதநாமம் மத்யமம், தசநாமம் அதமம். இதில் கேவலம் பத்து தடவையாவது ஒரு பிராம்மணன் ஜபிப்பானேயாகில் அவனேப் பாபங்கள் அணுகாது. இதற்கு பிறகு விப்ராட் அனுவாகம் அல்லது புருஷஸூக்தம் அல்லது சிவஸங்கல்பம் அல்லது பிராம்மண மண்டலம் இவைகளே ஜபிக்க வேண்டும். இவைகளெல்லாம் உபஸ்தான மந்திரங்கள் தாம். இந்த எல்லா உபஸ்தான மந்திரங்களும் சூரிய நாராயணருக்கு மிகவும் பிரியமானது. இதற்குப் பிறகு வேதோக்தமான அல்லது ஆகமோக்தமான மந்திரங்களே ஜபித்துக் கொண்டே ரக்த சந்தனம், அக்ஷதை, புஷ்பம், தர்ப்பை இவைகளே ஜலத்துடன் கூட ஸூர்ய பகவானுக்கு அர்க்யம் விடவேண்டும். இந்த விதமாக ஸூர்யனேப் பூஜிப்பது மூன்று உலகங்களேயும் பூஜிப்பதற்கு சமமாகும்.

ஸூர்யதேவன் இந்த விதமாகப் பூஜிக்கப்பட்டால் பூஜை செய்பவர்களுக்கு புத்ரன், பசு, தனம், ஆயுஸ் இவைகளெல்லாம் அளிப்பதுமல்லாமல் அவர்களின் வியாதியையும் போக்கடிக்கிருர். அவர்களது எல்லா விருப்பங்களேயும் நிறைவேற்றுகிருர். இந்த சூரிய தேவரே ருத்ரர், விஷ்ணு, ப்ரம்மா. இவரே மும்மூர்த்திகளும் ஒன்று சேரும் சொரூபம்.

ஸூர்யன் ஒருவனே சந்தோஷபடுத்திஞல் ப்ரம்மா, விஷ்ணு, மஹேசன் இந்திரன் முதலிய ஸமஸ்த தேவதைககள், மரீசி முதலிய மஹர்ஷிகள், மனு முதலிய மனிதர்கள், ஸோமபர் முதலிய பித்ருகணங்கள் எல்லோரும் ஸந்தோஷமடைகிருர்கள். இந்த விதமாக சூரியனேப் பூஜித்து பிறகு தர்பணம் செய்ய ஆரம்பிக்க வேண்டும்.

ப்ராம்மணன் வலது கையில் புதிதான, நுனியுடன் கூடின ஐந்து அல்லது ஏழு தர்ப்பைகளை எடுத்துக் கொள்ள வேண்டும் (அடியும் நுனியுமுள்ளதாக இருக்கவேண்டும்) இப்படிப்பட்ட தர்ப்பைகளை எடுத்துக் கொண்டு, இடது கையோடு வலது கையைச் சேர்த்துக் கொண்டு ஷடவிநாயகர், ப்ரம்மாதிஸமஸ்த தேவதைகள், மரீசி முதலிய ரிஷிகள் இவர்களுக்கு த்ருப்யந்து என்ற பதத்தை உச்சாரணம் செய்து கொண்டு சந்தனம் அகர் கஸ்தூரி முதலிய வாசனை த்ரவ்யங்கள் கூட பவித்ரமான ஜலத்தினால் தர்பணம் செய்ய வேண்டும்.

பிறகு யக்ஞோபவீதத்தைக் கழுத்தில் சுற்றிக் கொண்டு இரண்டு கை கட்டை விரல்களுக்கு மத்தியில் வைத்துக் கொண்டு ஸநகாதி முதலிய முனிவர்களுக்கு யவை தான்யத்துடன் கூடிய ஜலத்தில் தர்பணம் செய்யவேண்டும். பிறகு வலது தோளில் பூணலை மாற்றிக் கொண்டு பெருந்தர்பைகளாகக் கையில் எடுத்துக் கொண்டு எள் கலந்த ஜலத்தினால் கவ்யவாஹன், அனலன் முதலிய திவ்ய மனிதர்களுக்குத் தர்பணம் செய்ய வேண்டும்.

ச்ரேயஸ்ஸை விரும்பும் பிராம்மணன் ரவிவாரம், சுக்ரவாரம், த்ரயோதசி, ஸப்தமி - இரவு காலம், இரண்டு ஸந்தி இவைகளில் எள்ளினால் தர்பணம் செய்யக் கூடாது. அப்படி பண்ணித்தான் ஆகவேண்மென்றால் வெள்ளை எள்ளினால் செய்ய வேண்டும். பிறகு க்ருதக்ருத்யனான அந்த பிராம்மணன் சதுர்த்தசியன்று யமனுடைய பெயரைச் சொல்லித் தர்ப்பணம் செய்ய வேண்டும், அதன் பிறகு மௌனமாக, இடது முட்டை மடக்கிக்கொண்டு சந்தோஷமாகத் தன்னுடைய கோத்ரத்தை உச்சரித்துக் கொண்டு பித்ரு தீர்த்தத்தில் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

தர்பணத்தில் தேவர்களுகளுக்கு ஒரு அஞ்ஜலியும், ஸநகாதி ரிஷிகணங்களுக்கு இரண்டிரண்டு அஞ்ஜலியும், பித்ருக்களுக்கு மூன்று மூன்று அஞ்ஜலியும், ஸ்த்ரீகளுக்கு

ஒரு அஞ்ஜலியும் ஜலத்தைத் தர்ப்பணம் செய்ய வேண்டும். விரல்களின் நுனிபாகத்தில் தேவதீர்த்தமும் அடியில் ப்ரம்ம தீர்த்தமும்; உள்ளங்கை மத்தியில் ப்ரஜாபதி தீர்த்தமும்,

கட்டை விரலுக்கும் ஆட்காட்டி விரலுக்கும் மத்தியில் பித்ரு தீர்த்தமும் சொல்லியிருக்கிறது. பண்டிதர்கள் ஒன்பது ருசாக்களை சொல்லிக் கொண்டு தர்பணம் செய்யவேண்டும். அந்த ருசாக்கள் என்னவென்றால் உதீரகாம் முதலியவைகள். அங்கீரஸா முதலியவைகள், ஆயம்துன: முதலியவைகள், ஊர்ஜம் வஹந்தீ முதலியவைகள்; பித்ருப்ய முதலியவைகள். ஏசே ஹ பிதர: முதலியவைகள், பிறகு மதுவாதா முதலியவைகள்; இவைகளில் மூன்று ருசாக்கள். இந்த ஒன்பது ருசாக்களையும் சொல்லி நமோவை பித்ரா என்பதையும் உச்சரித்துக் கொண்டு பூமியில் ஜலத்தை விடவேண்டும். பிறகு ஆப்ரும்மஸ்தம்பம் பரியந்தம் முதலியன; அதீத குல கோடிளும் முதலியன, இவ்விரண்டு மந்திரங்களையும் தர்ப்பணத்திற்கு பிறகு உச்சரிக்க வேண்டும்.

பிறகு ஏச அஸ்மாகம் முதலான மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு வஸ்திரத்தின் ஜலத்தை பூமியில் பிழிய வேண்டும்; பிறகு பீஷ்மருக்கு அர்க்யமும் தர்ப்பணமும் செய்ய வேண்டும். அதன் பிறகு அக்னி கார்யமான ஹோமமும் செய்துவிட்டு வேதாப்யாஸம் ஆரம்பிக்க வேண்டும். இந்த வேதாப்யாஸம் ஐந்து விதமுள்ளன. முதலாவது ஸ்வீகார் அல்லது குருவினிடம் படிப்பது, இரண்டானது அர்த்தவிசாரணம்.

மூன்றுவது அப்யாஸம், நான்காவது ஜபம் செய்வது, ஐந்தாவது சிஷ்யர்களுக்கு சிக்ஷாதானம், பிறகு தெரிந்து கொண்ட அர்த்தத்தை பிரதிஉபாதனம் செய்யும் பொருட்டு தெரியாத அர்த்தத்தைக் கேட்டுக் கொள்ளும் பொருட்டும் குருவினிடம் போக வேண்டும். சென்று தன்னுடைய கௌரவத்தை அதிகரித்துக் கொள்ள வேண்டும். ஏ! பிராம்மேணுத்தமரே! ப்ராம்மணர்களுக்கு இதுதான்

காலேயில் செய்யும் க்ருத்யம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பிராதக்கால ஸ்னனம் செய்ய முடியாதவர்கள் பிராத:காலத்தில் எழுந்திருந்து அவசியமான காரியங்களேச் செய்துவிட்டு, அதாவது சௌசம், ஆசமனம், தந்தசுத்தி இவைகளேச் செய்துவிட்டு, சரீரத்தை வஸ்திரத்தினுல் நனேத்துப் பிழிந்து, துடைத்துக் கொண்டு சுத்தனுகி, பிராதஸ்ஸந்த்யோபாஸனத்தைச் செய்யவும். பிறகு வேதத்தையும் விவித சாஸ்திரத்தையும் படிக்கவும். பிறகு புத்திசாலியும், தூய்மையுடையவனும், ஹிதத்தை விரும்புபவனுமான சிஷ்யர்களுக்குச் சொல்லிக் கொடுக்கவும். பிறகு தன்னுடைய யோக க்ஷேமங்களின் ஸித்தியின் பொருட்டு யஜமானரையோ, ராஜாவையோ அவர்களே ஸேவிக்கப் போகலாம்.

பிறகு பண்டிதர்கள் மத்யான்ன கர்மங்கள் ஸித்தியாகும் பொருட்டு மத்யான்னமும் மேற்கூறிய விதிப்படி ஸ்னனமும் பிறகு மத்யான்ன ஸந்தியோபாஸனமும் செய்ய வேண்டும். பிறகு மத்யான்ன ஸந்தியோபாஸன ஸமயத்தில் காயத்ரியின் தானத்தைப் பின் வருமாறு த்யானம் செய்ய வேண்டும்; நவ யௌவனத்திலிருந்து வேறுபட்ட சரீரமுடையவள், சுத்தஸ்படிகத்துக்கு ஸமமான நிர்மலமானவள், த்ருஷ்டுப் சந்தஸ்ஸோடு கூடியவள், ருத்ர தேவதையோடு கூடியவள்.

கஸ்யபரிஷியோடு கூடியவள், யஜுர்வேதஸ்வரூபிணி, பிரணவாத்மிகை, ரிஷபத்தில் ஏறிக் கொண்டிருப்பவள்; ஸாவித்ரி ரூபமாக பக்தர்களுக்காக அபயமுத்ரையோடு கூடியிருப்பவள் என்று இப்படி த்யானிக்க வேண்டும். பிறகு தேவதைகளேப் பூஜித்து நித்யகர்மங்களேச் செய்ய வேண்டும்; சமையல் செய்த அக்னியை ஜ்வலிக்கச் செய்து வைஸ்வதேவம் செய்ய வேண்டும்.



சிம்மி - பட்டாணி, கோதவ: உரத் - உளுந்து மட்டர் - பட்டாணி, செஞ - கடலே, இவைகளே எண்ணெயில் வறுத்தோ, உப்பு கலந்த பக்குவான்னங்களோ, ரஹர் - துவரை, மஸீர் பருப்பு, சோவேபடே - உண்டு மீந்தது பழையது இவைகளெல்லாம் வைச்வதேவத்திற்கு ஆகாது. முதலாவது தர்பையைக் கையில் எடுத்துக் கொண்டு ஆசமனீயமும், ப்ராணுயாமமும் செய்ய வேண்டும்; ப்ருஷ்டோ தேவீ என்று மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு அக்னியை வளர்க்க வேண்டும்; பிறகு ப்ரதக்ஷிண நமஸ்காரம் செய்ய வேண்டும்; செய்து தர்ப்பையை மூன்றுதரம் கீழே வைத்து யேஷே தேவா முதலிய மந்திரங்களினுல் அக்னி முகத்தில் வைக்க வேண்டும்.

பிறகு நெய், புஷ்பம் அக்ஷதை முதலியவைகளினுல் அக்னிக்குப் பூஜை செய்து ப்ரணவாதிவ ஸ்வாஹாந்த பூ: முதலிய மந்திரங்களினுல் ஆஹுதிகள் கொடுக்க வேண்டும். பிறகு ப்ராம்மண பூ: முதலிய மந்திரங்களே ஒரு தடவை ஒருமித்து உச்சரித்து ஒரு ஆஹுதி செய்ய வேண்டும். அதற்குப் பிறகு தேவ க்ருதஸ்ய மந்திரங்களினுல் ஆறு ஆஹுதி செய்ய வேண்டும்.

அதற்குப் பிறகு மௌனமாக யமனுக்கு ஒரு ஆஹுதி பிறகு விஸ்வேதேவருக்கு ஒரு ஆஹுதி கொடுக்க வேண்டும். இதற்குப் பிறகு தேவருக்கு பூமிக்குமேல் வடக்கு திக்கில் எல்லா பூதங்களுக்கும் நமஸ்தே என்று பலியை வைக்க வேண்டும். பிறகு பூணூலே வலது பக்கம் மாற்றிக் கொண்டு அந்த பூதபலிக்கு வடக்கு பக்கத்தில் பித்ருக்களே உத்தேசித்து அன்னபலி கொடுக்க வேண்டும். பிறகு யக்ஷ்மாவிற்கு ஈசானதிக்கில் ஜலமும் அன்னமும் ஸமர்ப்பிக்க வேண்டும். பிறகு வடக்கில் ப்ரம்மாதி தேவதைகளுக்கு நம: என்று சொல்லிவிட்டு பலியை வைக்க வேண்டும்.

கண்ட சூத்ரத்தினுல் ஸநகாதிகளுக்கு, மறைத்து விட்டு பித்ருக்களுக்கு பலியைக் கொடுக்க வேண்டும்.

கிராஸ் என்பது கவளம் பதினாறு கிராஸ். ஒரு ஹந்தம், புகிருஸ் ஒரு புஷ்கலம் என்று கூறுவார்கள். (ஒரு கவளம் பிக்ஷையே க்ருஹஸ்தர்களுக்கு நன்மையைச் செய்ய வல்லது.) பிரயாணிகள், பிக்ஷையெடுத்துச் சாப்பிடுபவர்கள், குரு, போஷகர், ஸந்யாஸி, ப்ரம்மசாரி இவர்கள் ஆறுபேரும் தர்ம பிக்ஷுக்கள், வழிப்போக்கர்களையும், ப்ரம்மசாரிகளையும் யதார்த்த பிக்ஷுவாக எண்ண வேண்டும்: ப்ரம்ம லோகத்தை விரும்பும் க்ருஹஸ்தர்கள் இவர்கள் இருவரையும் மதிக்க வேண்டும்.

சண்டாளனுக்கு, கோழிக்கு அன்னமிட்டாலும் அதனால் ஒரு கெடுதலும் இல்லை. அன்னத்தை விரும்பிக் கேட்டவன் யாராகிலும் வந்தாலுமே, அவன் ஸத்பாத்ரனா, குபாத்திரனா என்று விசாரிக்க வேண்டாம் (யோசனை செய்ய வேண்டாம்) பதிதனானாலும், பாபியாகிலும், சண்டாளனானாலும் ரோகியானாலும், கோழியோ, காகமோவானாலும் அன்னமிட வேண்டும். (பூச்சி புழுக்களுக்கு பூமியில் அன்னத்தைச் சிதற வேண்டும்.) சிதறிவிட்டு இப்படிக் கூற வேண்டும், இந்த்ரனானாலும், வருணனானாலும், சௌம்யனானாலும், நிர்ருதியானாலும், எல்லாரும், காகரூபமாக வந்திருக்கிறீர்கள். பூமியின் மேல் என்னால் வைக்கப்பட்ட இந்த பிண்டத்தை எடுத்துக் கொள்ளுங்கள். வைவஸ்வதருடைய குலத்தில் உற்பத்தியான சாம, சபல் என்னும் நாய் ரூபமாகவும் வந்திருக்கிறீர்கள்;

நான் அவைகளுக்குப் பிண்டம் கொடுக்கிறேன்; அவர்களும் ஹிம்ஸை செய்யாதவர்களாக! இருக்கட்டும். மனுஷ்யர், பசு, ராக்ஷஸர், யக்ஷர், உரகர், ககர், தைத்யர், சித்தர், பிசாசர், ப்ரேதம், பூதம், தானவர், புற்கள், மரம் பூச்சி, புழு, விட்டில்கள் இவைகளெல்லாம் கர்ம சூத்திரத்தினால் கட்டப்பட்டு பசியுள்ளவர்களாய், என்னால் கொடுக்கப்பட்ட இந்த அன்னத்தை ஏற்றுக்கொள்ளட்டும்.

அவர்களுடைய ப்ரீதிக்காக நான் இந்த அன்னத்தைக் கொடுக்கிறேன். இதனுல் அவர்கள் ஸந்தோஷமடையட்டும்.

இந்த விதமாக பூதபலி கொடுத்து விட்டு பால் கரக்கும் வேளைவரை அதிதிகளை எதிர்பார்த்து விட்டு போஜன க்ருஹத்துக்குப் போக வேண்டும். காகபலி கொடுக்காமலேயே நித்யஸ்ராத்தம் செய்யலாம். தங்கள் தகுதிக்குத் தகுந்தபடி, நித்யச்ராத்தத்தில் மூன்று அல்லது இரண்டு அல்லது ஒரு பிராம்மணனுக்கு பித்ரு யக்ஞத்திற்காக அன்னம் அளிக்க வேண்டும். தரித்ரனுக இருந்தால் அவன்தான் சாப்பிடும் உணவிலிருந்து கொஞ்சம் கொஞ்சம் எடுத்து ஒரே பலியாகக் கொடுக்கலாம். நித்ய ஸ்ரார்த்தம் என்பது தேவ கருமங்கள் இல்லாமல் விசேஷ நியமங்கள் இல்லாமல் தக்ஷிணை இல்லாமலேயே செய்ய வேண்டும்.

ஸ்ராத்த கர்த்தாவும், போஜனம் செய்பவரும் விசேஷமாக ப்ரம்மசர்யம் முதலிய வ்ரதங்களை அனுஷ்டிக்கத் தேவையில்லை. இந்த விதமாக ஸ்திரபுத்தியுடனும், பரபரப்பில்லாமல் பித்ருயக்ஞத்தை முடித்துவிட்டு ஸ்திரமான ஆஸனத்தில் அமர்ந்து சந்தனமும் மாலையும் தரித்து, சுத்தமான வஸ்த்ர உத்தரீயங்களை அணிந்து கிழக்கு முகமாகவோ, வடக்கு முகமாகவோ அமர்ந்து ப்ரஸன்னமான மனதுடன் ஸ்ராத்தத்தில் எஞ்சிய போஜனத்தைக் குழந்தைகளுடன் அமர்ந்து புஜிக்க வேண்டும்.

புத்திமானுன ப்ராம்மணன் ஆபோஜன விதிப்படிக்கு மேலேயிருநதும் கீழேயிருந்தும் அன்னத்தை ஒதுக்காமல் போஜனம் செய்ய வேண்டும். பூமிபதி, புவனபதி, பூதபதி, இவர்கள் மூவருக்கும் ஸ்வாஹாந்த மந்த்ரம் மூலம் ஒவ்வொரு கவளமாக அன்னத்தை பூமியில் வைக்க வேண்டும். முதலாவது ஒரு தடவை ஆசமனம் செய்து ப்ரஸன்ன சித்தத்துடன் கூட ஜடரகுண்டத்தில் இருக்கும்

அக்னியில் ப்ராணன் பஞ்சவாயு இவைகளுக்காக அன்னத்தை அக்னியில் ஆஹுதி செய்ய வேண்டும்.

இதுதான் ஆபோஜனவிதி; ஒருவன் கையில் தர்ப்பையை வைத்துக் கொண்டு, போஜனம் செய்வானேயானால் போஜனத்தில் புழுக்கள், பூச்சிகள், ரோமம் முதலானவைகளால் தோஷம் ஏற்படாது. அதனால் கையில் தர்ப்பையை இடுக்கிக் கொண்டு போஜனம் செய்ய வேண்டும். ஆனால் போஜனம் செய்யும் வரைக்கும் அன்னத்தைப் பற்றின குணதோஷம் ஒன்றும் சொல்லக் கூடாது.

ஏனென்றால் (நீங்கள் போஜனம் செய்யும்பொழுது பித்ருக்கள் உங்கள் கூடவே போஜனம் செய்கிறார்கள், அதனால் மௌனத்துடன் போஜனம் செய்கிறவர்கள் அம்ருதத்தையே சாப்பிடுகிறார்கள்.) அதற்குப் பிறகு குடுவையில் இருக்கும் பாலையோ, ஜலத்தையோ பருகி ஒரு துளி ஜலத்தை அம்ருதாபிதாநமஸி என்ற மந்திரத்துடன் குடிக்க வேண்டும். ஒரு துளிதான் குடிக்க வேண்டும். அதிகம் விழுந்ததானால் அதை பூமியில் விட்டுவிட வேண்டும்.

எதற்காக என்றால் எந்த பித்ருக்கள் கோடிக்கும் மேலான 'பத்மம்' 'அத்புதம்' வருஷம் வரையில் பாவஸ்தானமான ரௌரவாதி நரகத்தில் வாஸம் செய்யும் பித்ருக்கள் உத்தாரா (ரௌரவம்) போஜனம் செய்து மீதியுள்ள ஜலத்தை வலதுகை கட்டை விரலின் அடிபாகம் வழியாக மறித்துவிடும் ஜலத்தை விரும்புகிறார்கள். என்னுடைய இந்த உச்சிஷ்ட ஜலம் அக்ஷய திருப்தியை உண்டாக்கட்டும் என்று நினைக்கட்டும்.

புத்திமான்கள் திரும்பவும் ஆசமனம் செய்து பவித்ரமாகி, கையில் ஜலத்தை எடுத்துக் கொண்டு இந்த மந்திரத்தைச் சொல்ல வேண்டும்; கட்டைவிரலில் உள்ள பரமபுருஷன் கட்டைவிரலில் ஆச்ரயித்திருக்கிறான். அந்த ஜகத்துக்கெல்லாம் ஈசன் உலகையே உணவாகக்

கொள்பவர் சந்தோஷமடையட்டும். இந்த விதமாக அன்னத்தை ஸங்கல்பித்துக் கொண்டு இருகைகளேயும் கால்களேயும் அலம்பிக் கொண்டு, அன்னம் ஜீரணமடைவதற்காகப் பின்வரும் மந்திரத்தைக் கூற வேண்டும்:-

என்னுடைய ஜாடராக்னி வாயுவினுல் ஏவப்பட்டு பஞ்ச பூதங்களின் பிரிவாக என் தேஹத்தில் இருக்கும் தாதுக்களே புஷ்டியாக்கும் பொருட்டு ஆகாசத்திஞல் கொடுக்கப்பட்ட என் தேஹத்தில் இருக்கும் இடைவெளியில் நான் உண்ட அன்னத்தை ஜீரணிக்கச் செய்யட்டும். அதனுல் எனக்கு சுகம் உண்டாகட்டும்; நான் சாப்பிட்ட இந்த அன்னம் ப்ராணன், அபானன், உதானன், வியானன், ஸமானன் என்னும் பேர்களுடன் என் சரீரத்தில் இருக்கும் வாயுக்களே புஷ்டியுள்ளதாக ஆக்கட்டும் அதனுல் எனக்கு ஸந்தோஷம் உண்டாகட்டும்.

ஸமுத்ரம், வடவானலம், ஸௌர்யன், ஸௌர்யநந்தனன் இவர்களெல்லோரும் நான் சாப்பிட்ட அன்னத்தை ஜீர்ணிக்கச் செய்யட்டும். இதற்குப் பிறகு முகசுத்தி செய்து கொண்டு, புராணங்கள் முதலிய சிரவணங்களினுல் எஞ்சிய நாழிகையைக் கழித்துவிட்டு திரும்பவும் ஸந்தியை ஆரம்பிக்க வேண்டும். ஸந்தியை க்ருஹத்தில் அல்லாமல் நதி தீரத்திலோ, அல்லது பசு தொழுவத்திலோ, பண்ணிலால் பத்துபங்கு அதிக பலன்: இரு நதிகள் சேரும் இடத்தில் பண்ணினுல் நூறுபங்கு, ஒரு சிவலிங்கம் இருக்குமிடத்தில் (சமீபம்) பண்ணினுல் எல்லேயில்லாத பலன். வீட்டைவிட்டு வெளியில் ஸந்தியோபாசனே செய்வதினுல் பகலில் செய்த போகம், அஸத்ய ஸம்பாஷணம், மதுவருந்திய பாபம், எல்லாம் சமனம் ஆகிறது.

ஸாயங்காலம் ஸந்தி பண்ணும் போது த்யானிக்க வேண்டிய காயத்ரியின் உருவம் இப்படிப் பட்டது. 'காயத்ரீ ஸாம வேதஸ்வரீபிணீ, வஸிஷ்டரிஷியுடன் கூடியவள்,

க்ருஷ்ணவர்ணனே க்ருஷ்ணவஸ்த்ரம் தரித்துக் கொண்டவள், நடுவயதுடையவள்; ஸரஸ்வதி ஸ்வரூபா, கருடவாஹனு, விஷ்ணுதேவதா, விக்னவிநாசினீ, ஜகதீசந்தஸ்ஸுடன் கூடியவள்; ஏகாக்ஷரம் மயமானவள்;

இந்த ஸாயங்காலம் ஸந்தியில் அக்னிஸ்ச முதலிய மந்திரங்களினுல் ஆசமன்யம் செய்து கொண்டு புத்திமான்கள் மேற்கு முகமாக அமர்ந்து கொண்டு, நக்ஷத்ரங்கள் காணும் வரையில் ஜபம் செய்ய வேண்டும். ஸாயங்காலம் அதிதிகளே உபசரித்து அவர்களுடன் இன்மொழி பேசி இடம் ஆஸனம் ஜலம் முதலியவைகள் அளித்து, மரியாதையுடன் போஜனம் அளிக்க வேண்டும், இந்த விதமாகப் புத்திமான்கள் இரவின் முதல் ஜாமத்தைக் கழிக்க வேண்டும். பிறகு படிக்கவோ, சொல்லிக் கொடுக்கவோ செய்துவிட்டு, நித்ய கர்மங்களேச் செய்து த்ருப்தியில்லாத மனதுடன் ஒரே பலகையினுல் செய்த கட்டிலில் படுக்க வேண்டும். நான் தற்செயலாகக நித்யகர்ம விதிகளேச் சொல்லி முடித்தேன். இந்த விதமாக நடத்தி வரும் பிராம்மணன் ஒரு பொழுதும் நஷ்டமடையமாட்டான்.

இந்த விதமாக ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான ஸதாசார நிரூபணம் என்ற முப்பத்தைந்தாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்தியாயம் 36

கும்பமுனியே! நான் இதே ஸதாசாரத்தைப் பற்றித் திரும்பவும் சொஞ்சம் கூட விசேஷமான ரூபத்தில் கூறுகிறேன். இதைக் கேட்பதினுல் புத்திமான்களான ஜனங்கள் அக்ஞான அந்தகாரத்திஞல் தடவப்பட மாட்டார்கள். பிராம்மணர், க்ஷத்ரியர், வைச்யர் இம்மூன்று வர்ணத்தாரையும் த்வி ஜாதி இரு பிறப்புள்ளவர்கள் என்று கூறப்படுகிறது. இவர்களுக்கு முதல் ஜன்மம் ஜனனியிடம், இரண்டாவது ஜன்மம் உபநயநமானவுடன். இந்த இரட்டைப் பிறவியர்களுக்கு கர்ப்பாதானத்திலிருந்து, ஸ்மசானம்வரை எல்லாக்கிரியைகளும் வேதத்தை அனுஸரித்துதான் நடக்கின்றன. புத்திசாலிகள் ருதுகாலம் வந்த அளவில் மகம், மூலம், ஆகிய இரு நக்ஷத்தரங்களையும் தவிர்த்து கர்ப்பாதானம் செய்ய வேண்டும்.

கர்ப்பம் ஆவதற்கு முன்ஞலேயே பும்ஸவனம் செய்ய வேண்டும். பிறகு 6வது மாதமோ 8வது மாதமோ செய்ய வேண்டும். கர்ப்பமான பின் ஜாதகர்மம் செய்ய வேண்டும். 11வது தினம் நாமகரணம், 4வது மாதம் வீட்டிற்கு வேளியே எடுத்தல், 6வது மாதம் அன்னப்ராசனம், பிறகு ஒரு வர்ணத்திலேயோ, அல்லது குலாசாரப்படியோ குடுமிக் கல்யாணம்; இந்தக்கர்மத்திஞல் பீஜாரோபணம், கர்ப்பதோஷம் முதலிய குற்றங்கள் நீங்குகின்றன. ஸ்த்ரீகளுக்கு இந்த க்ரியைகள் எல்லாம் மந்திரம் இல்லாமலேயே செய்யப்படுகின்றன. விவாஹம் மாத்திரமே மந்திர விதிப்படிக்குச் செய்யப்படுகிறது.

ப்ராம்மணனுக்கு 7வது வயதிலோ எட்டாவது வயதிலோ உபநயனம் செய்ய வேண்டும்; க்ஷத்திரியர்களுக்கு 11வது வயதில் வைச்யர்களுக்கு 12வது வயதில் குலாசாரப்படி செய்ய வேண்டும். ப்ரம்மதேஜஸ் வ்ருத்தியாவதற்கு 5வது வயதில் ப்ராம்மணர்களுக்கும் பலத்தை அடைய க்ஷத்திரிகர்களுக்கு 6வது வயதிலும், க்ருஷியாதி வ்ருத்திக்காக 8வது வயதில் வைச்யர்களுக்கும் யக்ஞோபவீதம் செய்யலாம்.

குரு சிஷ்யனுடைய உபநயன ஸம்ஸ்காரம் செய்து மஹாவ்யாஹ்ருதி பூர்வமாக வேதத்தைப் படிக்க வேண்டும், சௌசம் முதலிய விஷயங்களில் ஈடுபடுத்த வேண்டும். முன் கூறிய பிரகாரம் விதிப்படிக்கு முறையாக மனத்யாகம் சௌசம், ஆசமனம், தந்தசுத்தி, நாக்கு வடித்தல் முதலியவைகளைச் செய்து ஜல தெவதைகளுக்குரிய மந்திரங்களுடன் விதிப்படிக்கு ஸ்நானம் செய்துவிட்டுத் தவறாமல் இரு ஸந்திகளிலும் ப்ராணயாமமும் ஸுர்ய வழிபாடும் செய்ய வேண்டும்.

பிறகு அக்னி கார்யமாக ஹோமங்கள் முதலியவைகள் முடித்துக் கொண்டு என்னுடைய கோத்ரத்தைச் சொல்லி நான் நமஸ்கரிக்கிறேன் என்று ப்ராம்மணர்களை வணங்க வேண்டும். ஒருவன் வணங்கும் குணமுள்ளவனாய் பெரியவர்கள் ஸேவையில் ஈடுபட்டிருந்தால் தினமும் அவனுடைய ஆயுள் வ்ருத்தி கீர்த்தி, பலம், புத்தி இவை வ்ருத்தியடையும். இது மநுவினால் சொல்லப்பட்ட ஸ்லோகம்; (அபிவாதன ஸீலஸ்ய நித்யம் வ்ருத்தோபஸேவின: சத்வாரி தஸ்ய வர்தந்தே ஆயுர் வித்யா யசோ, பலம்.) குரு அழைத்தபின் போய் வித்தையைப் படிக்க வேண்டும், சக்தியனுசரித்து சிறிய பொருள்களை அவருக்குக் காணிக்கையாய்க் கொடுக்க வேண்டும். கர்மத்தாலும், மனஸாலும், வாக்காலும் எப்பொழுதும், அவர் நன்மையைத் தேடவேண்டும்.

குருவும் சாந்த சுபாவமும், விசுவாசமும், ஞானமும், தனம் கொடுப்பவனும், சக்திசாலியும், நன்றியுள்ளவனும், பவித்ரமானவனும், துரோகமில்லாதவனும், அசூயை இல்லாத மாணக்கர்களை தர்ம பூர்வமாகப் படிப்பிக்க வேண்டும். அவர்களிடம் பணத்தை எதிர்பார்ப்பது உசிதமல்ல. ப்ரம்மசாரி மேகலை, தண்டம், உபவீதம், மான்தோல் இவைகளையணிய வேண்டும், தன்னுடைய வாழ்வின் நிர்வாஹத்தின் பொருட்டு

ஸாதுப்ப்ராம்மணர்களின் க்ருஹத்தில் பிக்ஷை எடுப்பது நலம்.

ப்ராம்மணன், க்ஷத்ரியன், வைச்யன் இவர்கள் பிக்ஷை வாங்கும் பொழுது சொல்லும் வசனம் முறையே, ஆதி, மத்யம், அந்தம் இவைகளில் பவத் என்ற சப்தம் ப்ரயோகிக்கப்பட வேண்டும். அதாவது ப்ராம்மணன் பவதி பிக்ஷாம் தேஹி என்று சொல்ல வேண்டும். க்ஷத்ரியர்கள் பிக்ஷாம் பவதி தேஹி என்றும் வைச்யர்கள் பிக்ஷாம்தேஹி பவதி என்றும் சொல்ல வேண்டும்.

குருவின் அனுமதி பெற்று அந்த அன்னத்தை மௌனமாக புஜிக்க வேண்டும்; அன்னத்தை நிந்திக்கக் கூடாது, ஆனால் ஒரே வீட்டில் கொடுக்கும் பிக்ஷையை சாப்பிடக் கூடாது, ஆனால் ச்ரார்த்த்திலும், ஏதாவது ஆபத்துக் காலத்திலும் ஒரே வீட்டு அன்னத்தைப் புஜிப்பதில் தவறு இல்லை. அதிகம் அன்னம் புஜிப்பது ஆரோக்யத்திற்குக் கெடுதி, ஆயுளுக்குக் கெடுதி, புண்ணியத்திற்கு தூஷணையானது, உலக நிந்தைக்குக் காரணமானது, அதிகம் அன்னம் உண்ணுமல் இருப்பது நலம்.

அதனால் அவன் ஒரு நாளில் இருவேளை போஜனம் செய்யக் கூடாது, அக்னிஹோத்ர விதியை அனுஸரிக்கும் ப்ராம்மணன் பகலில் ஒருவேளையும், இரவில் ஒருவேளையும் போஜனம் செய்யலாம். மத்யபானம், மாம்ஸாஹாரம், ஜீவஹிம்ஸை, உதயத்திலும், அஸ்தமனத்திலும், ஸூர்யதர்சனம், கண்ணுக்கு மை, ஸ்த்ரீ ஸம்போகம், பழைய உணவு, எச்சில் உணவு, நிந்தை இவைகளை விட்டு விடுவதுஎப்போதும் உசிதம்.

ப்ராம்மணர்களுக்கு உபநயனம் செய்வதற்குக் கடைசி வயது. 16; க்ஷத்ரியர்களுக்கு வயது 22, வைச்யனுக்கு 24: இது உபநயனம் செய்ய வேண்டிய கால எல்லை. இந்தக் கால எல்லைக்குள் உபநயனஸம்ஸ்காரம் செய்யயவில்லையானல் அவன் தர்மத்தினுல்

ஒதுக்கப்பட்டவனுகவும், பதிதனுகவும் ஆகிருன். வ்ராத்யத்ஸ்தோமாம் என்னும் யக்ஞத்தைச் செய்தால் அவர்களுக்கு பதிததோஷம் நிவர்த்தியாகும்.

இந்த காயத்ரீ பதிதர்களுடன் ஒருவிதமான ஸம்பந்தமும் வைத்துக் கொள்ளக்கூடாது. இரு பிறப்பாளர்களான ப்ராம்மணன், க்ஷத்ரியன், வைச்யன் என்ற இரு வர்ணத்திலுள்ள ப்ரம்மசாரிகளுக்கு கலேமானின் தோல், மளா என்னும் மானின் தோல், இவைகளே மேலே போர்த்திக் கொள்ள வேண்டும்,

உடுத்துவதற்கு சணல் நூலினுல் செய்த வஸ்த்ரம், பருத்தி நூலினுல் செய்த வஸ்த்ரம், ஆட்டின் ரோமத்தினுல் செய்த வஸ்த்ரம், கம்பளி இவைகளேயணிய வேண்டும். ப்ராம்மணர்களுக்கு மேகலே மௌஞ்சி - (மூஞ்சா என்ற தர்ப்பையிலிருந்து எடுத்தது) க்ஷத்ரியர்களுக்கு மௌர்வீ - மூர்வாபிலில் எடுத்தது, வைச்யர்களுக்குச் சணலிலிருந்து முறுக்கியது. இவைகள் முப்புரியாகவும் வழவழப்பாகவும் இருக்க வேண்டும். மூஞ்ச புல் கிடைக்கவில்லேயாஞல் தர்ப்பைப் புல்லாலும் செய்யலாம், அதில் 3, அல்லது 5 முடிச்சுகள் போடவேண்டும்;

இது போலவே யக்ஞோபவீதமும் பருத்தி, சணல், ஆட்டின் ரோமத்தாலும், முறையே ப்ரம்ம, க்ஷத்ரிய வைச்யர்களுக்கு, இருக்க வேண்டும். அவைகள் முப்புரியாயும், வலது பக்கம் முறுக்கியதாகவும் இருந்தால் ஆயுள் வ்ருத்திக்கும். ப்ராம்மணனுடைய தண்டம் வில்வம் அல்லது பலாசகுச்சியாக இருக்க வேண்டும். அவனுடைய தலேவரை உயரம் இருக்க வேண்டும். க்ஷத்ரியனுடையது வடவ்ருக்ஷகுச்சியோ பபூல வ்ருக்ஷத்தின் குச்சியாகவோ இருக்கலாம். அந்தக் குச்சி அவனுடைய நெற்றி உயரம் இருக்க வேண்டும். வைச்யனுடையது பீலு குல்லார் என்ற மரத்தின் குச்சி; அவனுடைய மூக்கின் உயரம் இருக்க வேண்டும்; இரு பிறப்பாளர்களுடைய குச்சி தோளுடன் இருக்க வேண்டும்; அக்னியில் எரிக்கப்பட்டதாக இருக்கக் கூடாது.

அக்னியையும் சூரியனையும் ஸேவித்து யக்ஞோபவீதமாக மேற்கூறிய விதம் பிக்ஷை வாங்க வேண்டும். முதல் பிக்ஷை மாதாவிடம், இரண்டாவது அன்னையின் சஹோதரியிடம் (சித்தி முதலானவர்கள்) பிறகு தகப்பனாரின் ஸஹோதரி; பிறகு இல்லையென்று கூறுதவர்களிடம் வாங்க வேண்டும், பிறகு வேதம் படித்து முடிக்கும் வரை, வேதம் படிக்க வ்ரதம் இருக்கும் வரை ப்ரம்மசாரியாக இருக்க வேண்டும், பிறகு ஸ்நானம் செய்து க்ரஹஸ்தனாக இருக்கலாம். இப்படி இருக்கும் ப்ரம்மசாரியை உபகுர்வாணர் என்று கூறுகிறார்கள். மற்றவர்களை ஜன்மம் முழுவதுமே குருகுல வாஸம் செய்பவர்களை நைஷ்டிகர் என்று கூறுவார்கள்.

ஒருவன் க்ருஹஸ்தாச்ரமம் இருந்து பிறகு ப்ரம்மசாரியானால் அவன் ப்ரம்மசாரியும் அல்ல, யதியும் இல்லை வானப்ரஸ்தனும் ஆக மாட்டான். அவன் எல்லா ஆச்ரமங்களிலிருந்தும்: ப்ரஷ்டனாகிவிடுகிறான். த்விஜர்களுக்கு அனாச்ரமியாக ஒருபொழுதும் இருக்கக் கூடாது. ஆச்ரமம் இல்லாமல் இருப்பவன் ப்ராயச்சித்தம் செய்து கொள்பவனாக இருக்க வேண்டும். ஒருவன் ஆச்ரமப்ரஷ்டனாகி ஜபம், ஹோமம், வ்ரதம், தானம், ஸ்வாத்யாயம் பித்ருதர்ப்பணம் முதலியன எது செய்தாலும் அதனால் அவனுக்கு ஒரு பலனும் ஏற்படாது.

மேகலை க்ருஷ்ணாஜினம் தண்டம் இவைகள் ப்ரம்மசாரியின் லக்ஷணம் வேதம், யக்ஞம் க்ருஹஸ்தர்களுடைய லக்ஷணம்; நகம், மயிர் வளர்த்தல் முதலியன வானப்ரஸ்தர்களுடைய லக்ஷணம், யதிக்கு த்ரிதண்டம் லக்ஷணம், இந்த மேற்கூறிய லக்ஷணங்கள் இல்லாத ஆசிரமிகள் ப்ரதிதினமும் ப்ராயச்சித்தம் செய்ய வேண்டும். அதனால்தான் அந்தந்த ஆச்ரமத்திற்குத் தகுதியுடையவர்களாகிறார்கள்.

பழைய கமண்டலம், தண்டம், யக்ஞோபவீதம், தோல் முதலியனவற்றை நதியில் எரித்துவிட்டு மந்திர

உச்சாடனத்துடன் புதிது எடுத்துக் கொள்ள வேண்டும், க்ருஹஸ்தாசிரமத்துக்குரிய வயது பிராம்மணனுக்கு - 16 வயது, க்ஷத்ரியனுக்கு 22; வைச்யனுக்கு 24: பிறகு க்ஷவரம் முதலிய ஸம்ஸ்காரங்கள் செய்து கொள்ளலாம்.

த்விஜாதியர்களுக்கு மோக்ஷலக்ஷ்மியை யடைய, யக்ஞம், தபஸ், வ்ருதம் சுபகர்மங்கள் இவை எல்லாவற்றையும் விட வேதமே முக்யம். வேதத்தின் முதலிலும் முடிவிலும் ப்ரணவத்தை உச்சரிக்க வேண்டும். ப்ரணவம் இல்லாத வேத பாராயணம் ஸித்தியாகாது. அழகான சுத்த உச்சாரணத்துடன் கூடிய மூன்று பதமுள்ள காயத்ரியே முகம் என்று கூறப்படுகிறது;

ப்ரணவம், உச்சாரணம், காயத்ரீ இந்த மூன்றையும் கிராமத்துக்கு வெளியில் விடாமல் ஒரு மாதம் வரை கூறினுல் மாத பாதகங்கள் விடுபட்டு முத்தனுகலாம், ஒருவன் ஏகாக்ரசித்தத்துடன் ஒரு வருஷம் வரை ஜபம் செய்வானுனல் அவன் ஆகாசரூப சுத்தாத்மாவாக ஆகி பரப்ரம்மத்தையடைகிறுன்.

மூன்று அக்ஷரங்களுடையண ப்ரணவம், 3 உச்சரிப்புகள் காயத்ரியின் 3 சரணங்கள் வேதத்தின் ஸாரம் என்று கூறப்படுகிறது. வேதம் தெரிந்தவர்கள் மேற்கூறிய ப்ரணவம், உச்சாரணம், காயத்ரீ இவைகளை ஜபிப்பானுனல் அவனுக்கு வேதம் பூராவும் அப்யாஸம் பண்ணின பலன் கிடைக்கும். விதி பூர்வகமாக யக்ஞம் செய்தால் ஜபத்தின் பலன் பத்து பங்கு அதிகம் என்று கூறப்படுகிறது. இந்த ஜபயக்ஞத்திலும் ரகஸ்ய ஜபம், பத்து பங்கு அதிகம். மானஸ ஜபம் இவைகள் எல்லாவற்றையும் விட 1000 பங்கு அதிகம் எனக் கூறப்படுகிறது.

ப்ராம்மணன் தனது சக்திப்படி 3 வேதம் அல்லது 2 வேதம் அல்லது ஒரு வேதம் அத்யயனம் செய்தானுனல் ஸ்வர்ணம் நிரம்பிய பூமியைத் தானம் செய்த பலனை அடைகிறுன். ப்ராம்மணன் தபஸ் செய்வதைவிட

எப்போதும் வேதத்தை அப்யஸிப்பது மேல்; ஏனென்றால் ப்ராம்மணனுக்கு வேதமே மேலான தவம் என்று கூறப்படுகிறது.

வேதாப்யாஸத்தை விட்டுவிட்டு வேறு ஏதாவது படிக்க விரும்பினால் பால் கொடுக்கும் பசுவை விட்டுவிட்டு கிராமப் பன்றியிடம் பால் கறப்பதற்கு ஒப்பானவனாவான். குரு சிஷ்யனுக்கு உபநயனம் செய்து வைத்து கல்பத்துடன் ரஹஸ்யமயமான வேதத்தைச் சொல்லிக் கொடுத்தால் அது மிகவும் நல்லது. அவரை பண்டிதர்கள் ஆசார்யர்கள் என்று கூறுகிறார்கள்.

ஜீவன் வ்ருத்திக்காக வேதம் படிப்பவனை உபாத்யாயர் என்று கூறுகிறார்கள். எவன் கர்ப்பாதானாதி கர்மம் செய்கிறானோ, வளர்த்து போஷித்து வித்தையைக் கற்றுக் கொடுக்கிறானோ அவரை குரு என்றோ பிதா என்றோ கூறுகிறார்கள். எவன் ஸங்கல்பம் பண்ணிக் கொண்டு அக்கினி கர்மம், பாகயக்ஞம், அக்னிஷ்டோமம் முதலிய கர்மங்களைப் பண்ணுகிறானோ, அவனை ருத்விக்குகள் என்று கூறுகிறார்கள்.

உபாத்யாயரை விட ஆசார்யரின் கௌரவம் பத்து பங்கு அதிகம், ஆசார்யரைவிட பிதாவின் கௌரவம் 100 பங்கு அதிகம். பிதாவையும் விட மாதாவினுடைய கௌரவம் 1000 மடங்கு அதிகம்.

ஞானத்தினால் ப்ராம்மணனுடைய மேன்மையும், வீரத்தினால் க்ஷத்ரியனுடைய மேன்மையும், தனதான்யத்தினால் வைச்யனுடைய மேன்மையும், பிறப்பினால் சூத்திரனுடைய மேன்மையும் கூறப்படுகிறது. மரத்தினாலும் தோலினாலும் செய்யும் விளையாட்டு பொம்மையைப் போல் அத்யயனம் இல்லாத ப்ராம்மணனும் கருவிமாத்ரமே.

ப்ரும்மசாரி ப்ராம்மணன் யதேச்சையாக வெளிப்பட்டால் ஸ்னானமும், ஸூர்ய பூஜையும் மூன்று

தரம் செய்து மூன்றுதரம் புனர்மாம் எனும் ருசஸை ஜபம் செய்ய வேண்டும். ப்ரம்மசாரி ஸ்வதர்மத்தை ஜாக்கிரதையாக அனுஷ்டிப்பவனும், வேதம் யக்ஞம் முதலிய கர்மயோகங்களை வழுவாது அனுஷ்டிப்பவனும் ஆனக்ருஹஸ்தனின் வீட்டில் தினமும் பிக்ஷைசெய்ய வேண்டும். பரபரப்பு, ஆவல் இல்லாமல் 7 இரவு பிக்ஷாசாஸமோ, அக்னி ஸமிந்தமோ செய்தபிறகு அவகீர்ணம் என்னும் வ்ரதம் இருக்க வேண்டும்.

குருவின் முன்பு யதேச்சாதிகாரமாகத்திரியக் கூடாது. அவர் இல்லையானலும் அவருடைய பெயரைக் காரணமில்லாமல் கூறக்கூடாது. எங்கு குருவைப் பற்றி ஏளனமோ, அவமர்யாதையோ செய்கிருர்களோ, அங்கிருந்து எழுந்து செல்வது உத்தமம். இருந்துதான் தீரவேண்டியது என்று நேர்ந்தால் இரு காதுகளையும் மூடிக்கொள்ள வேண்டும், குருவிடம் எதிர்த்துப் பேசுபவன் கழுதையாகவும், நிந்தை செய்பவன் கோழியாகவும், பொருமை கொள்வதால் புழுவாகவும் முன்னுல் உட்கார்ந்து போஜனம் செய்தால் பூச்சியாகவும் பிறக்கின்ருன்.

குண தோஷங்களை அறிந்த 20 வயது சிஷ்யன் குரு பத்னியுவதியாக இருந்தால் அவளுடையக் காலைத் தொட்டு வணங்கக் கூடாது. பெண்களுடைய ஸ்பாவம் சஞ்சலமானது. அதனுல் புருஷர்களை விகாரமடையச் செய்யும். பண்டிதர்கள் இந்த மாதிரி; புரட்சிகரமான விஷயங்களில் ஜாக்ரதையாக இருக்க வேண்டும்.

ஸ்திரீகள் வித்வாம்ஸினியாக இருந்தாலும், முட்டாளாக இருந்தாலும் புருஷர்களை அடக்குவதில் கெட்டிக்காரிகள். கயிற்றில் கட்டிய பசு மாதிரி புருஷர்களைத் தன் வசமாக்கி விடுவார்கள். மாதா, புத்ரி, ஸஹோதரியானலும் ஏகாந்தமான இடத்தில் அவர்கள் உட்காரக் கூடாது. ஏனென்ருல் இந்திரியங்கள் பலம் பொருந்தியன. இது பண்டிதர்களைக் கூட மோகம் அடையச்

செய்கிறது. மனு கூறுகிருர்:- மாத்ரா, ஸ்வஸ்ரா, துத்ரா வா ந ஏகசய்யாஸ நோ பவேத் । பலவான் இந்திரியக்ராம: வித்மாம்ஸமபி கர்ஷதி ॥

இடைவிடாது தோண்டிஞல் பூமிக்குள்ளிருந்து ஜலம் வருவது போல சிஷ்யனும் இடைவிடாது அப்யாஸத்திஞல் குரு ச்ரூஷையிஞல் வித்தையை அடையமுடியும். ப்ரம்மச்சாரி சயனித்திருக்கும் போதே சூரியன் உதயமாகிவிட்டால், அல்லது அஜாக்ரதையுடன் இருக்கும்போதே அஸ்தமனம் ஆகி விட்டால் ப்ரம்மசாரி ஒருநாள் பூராவும் உபவாஸம் இருந்து காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும்.

ஒரு ஸ்த்ரீ குழந்தையின் ஜனனத்தின் போது எவ்வளவுக்லேசத்தை ஸஹித்துக் கொள்கிருர்கள்? அந்தக் கடனே 100 வருஷங்கள் வரை தீர்த்தாலும் போருது.

அதஞல் மாதா, பிதா, குரு இவர்களிடம் எப்போதும் ப்ரியமாக இருக்க வேண்டும். ஏனென்ருல் இம்மூவரும் ஸந்தோஷமாக இருந்தால் எல்லா தபஸ்ஸுகளும் செய்து முடித்த மாதிரி, இம்மூவருக்கும் செய்யும் சிச்ருஷையே பரம தபஸ் என்று கருதப்படுகிறது. அவர்களே உதாஸீனம் செய்து எந்தக் காரியம் செய்தாலும் ஸித்தியாகாது. புத்திமான்கள் இம்மூவரையும் ஆராதித்து மூன்று உலகங்களேயும் ஜயிக்கலாம். இவர்களே ஸந்தோஷப்படுத்தி ஸ்வர்கத்தில் ஸந்தோஷமாக வாழலாம்.

நற்செய்கை செய்யும் சீலர்கள் மாதாவிடம் பக்தி செலுத்திஞல் பூலோகத்தையும், பிதா பிதாவின் ஸேவையிஞல் புவர்லோகத்தையும் குருவிற்கு ச்ரூஷை செய்வதிஞல் ஸ்வர்க லோகத்தையும் ஜயித்து அடைவதற்கு ஸமர்த்தர்களாகிருர்கள். இவர்கள் ஸந்தோஷமடைவதே மனிதர்களுக்கு தர்ம, அர்த்த காம மோக்ஷமாகிய நான்கு புருஷார்த்தங்கள் என்று

கூறப்படுகிறது. வேறு எல்லா தர்மங்களும் சில்லறை தர்மங்களே.

ப்ராம்மணர்கள் க்ரமமாக மூன்று வேதங்களேயும், க்ஷத்ரியர்கள் இரண்டு வேதங்களேயும் வைஸ்யர்கள் ஒரு வேதத்தையும் படித்து வழுவாது ப்ரம்மசர்யத்தோடு இருந்து விட்டு க்ருஹஸ்தாச்ரமத்தை ஏற்கலாம். விஸ்வேஸ்வரருடைய அனுக்ரகத்தினுலேயே ப்ரம்மசர்யம் வழுவாது நடக்கும். அதே விஸ்வேஸ்வரருடைய பரம அனுக்ரஹமே காசி ப்ராப்திக்குக் காரணமாக இருக்கிறது.

காசி வாஸம் கிடைத்தால் ஞானம் உண்டாகிறது. ஞானம் உண்டானுல் நிர்வாண பதம் கிடைக்கிறது. எந்த நிர்வாண பதத்திற்காக ஸதாசாரர்கள் ப்ரயத்தனப் படுகிருர்களோ அதே நிர்வாணபதம். க்ருஹஸ்தா ச்ரமத்தில் அனுஷ்டிக்கப்படும் ஸதாசாரம் மற்ற ஆசிரமங்களில் இல்லே. அதனுல் ப்ரம்மச் சாரியாக வித்யா வர்கங்களே அறிந்து பிறகு க்ருஹஸ்தச்ரமத்தை அணிய வேண்டும்.

(பத்தினி மனதிற்கிசைந்தவளாக ஏற்கப்பட்டாளேயானுல் க்ருஹஸ்தா ச்ரமத்தைப் போல் வேறு எந்த ஆச்ரமும் பயனேத்தராது. ஏனென்றுல் தம்பதிகளின் பரஸ்பர அன்னியோன்யமே மூன்று வர்க்கங்களும் மேன்மையடையக் காரணமாகிறது. பத்தினி அனுகூலமாக இருப்பாளானுல் ஸ்வர்க்கத்தினுல் என்ன ப்ரயோஜனம்? பத்தினி ப்ரதி கூலமாக இருந்தால் அதைப்போல் வேறு நரகமொன்றுமில்லே.)

(க்ருஹஸ்தாச்ரமத்தின் முக்கிய ப்ரயோஜனம் ஸுகம். அந்த ஸுகத்தின் வேர் மனேவி. மேலும் விநயத்துடன் எவள் இருக்கிருளோ அவள்தான் லக்ஷிய மனேவி.) அந்த விநயமே மூன்று உலகங்களேயும் கொடுக்கும் மோக்ஷபதம். மந்த புத்தியுள்ளவர்கள் தான் ஸுக போகங்களே அட்டைக்குவமை கூறுகிருர்கள்;

அதனுல் யோசித்துப் பார்த்தால் மான் விழியாளுக்கும் அட்டைக்கும் எவ்வளவோ வித்தியாஸங்கள் உள்ளன.

அப்பாவி அட்டைகள் கேவலம் ரத்தத்தை மாத்திரம் தான் உறிஞ்சுகின்றன. ஆனுல் போகிகள் எப்போதும் மனம், தனம், பலம், இவைகளின் சுகத்தையனுபவிக் கிருர்கள். சாதுர்யம், ஸந்தானஸம்பத்தும் பதிவ்ரதைத் தன்மையும் ப்ரிய வசனமும் பதிக்கு அனுகூலமாகச் செல்லும் குணமும் எந்த ஸ்த்ரீயிடம் ஒன்று சேர்ந்து காணப்படுகிறதோ அவள் ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியேதான்.

குருவின் அனுமதியைப் பெற்று வ்ரதம் வேதபாடம் இவைகளை முடித்துக் கொண்டு தன் சுய ஜாதியில் சுப லக்ஷணமான பெண்ணை (கன்னிகையை) விவாஹம் செய்து கொள்ள வேண்டும்; (பிதாவின் கோத்ரமில்லாதவளும்) மாதாமகனுடைய ரத்த ஸம்பந்தமில்லாதவளான கன்னிகையே ப்ராம்மணர்களுக்கு தர்மவிருத்தியை அளிக்கும் விவாஹத்திற்கு யோக்யமானவள்.

அபஸ்மாரம் (வலிப்பு) என்னும் வ்யாதி இருக்கும் குலத்திலும், க்ஷயம், வெள்ளைகுஷ்டம் இருக்கும் குலத்திலும், விவாஹ சம்பந்தம் வைத்துக் கொள்ளாமலிருத்தல் நலம். ப்ராம்மணர்கள் வ்யாதி இல்லாதவளும், ஸஹோதரர்களுடையவளும், அழகான முகத்தையடைவளும் ம்ருதுவாகப் பேசுபவளும், வயதில் சிறியவளுமான பெண்ணை விவாஹம் செய்து கொள்ள வேண்டும்.

புத்திமான்கள் பர்வதம், நக்ஷத்ரம், நதி, ஸர்பம், பக்ஷி, நாகம், தாஸர் என்றும் வாசகங்களுள்ள பேரில் இருக்கும் கன்னிகைகளுடன் விவாகம் செய்து கொள்ளக்கூடாது. பெயரே ஸௌம்யமாக இருக்கப்பட்டவர்களுடன் விவாஹம் செய்து கொள்ள வேண்டும். அங்கஹீனை, அதிக அங்கமுள்ளவள், அதிக உயரமுள்ளவர்கள், மிகவும் மெலிவாக உள்ளவர்கள் தலைமயிர் மிகக் குறைவாக உள்ளவர்கள், மிக அதிகத் தலைமயிருள்ளவள், கரடு

முரடான மயிர் உள்ளவள் இவர்களை விவாஹம் செய்து கொள்ளக் கூடாது.

குலமில்லாத பெண்ணைக் கட்டாயம் விவாஹம் செய்து கொள்ளக்கூடாது. ஆகையினுல் அப்படிச் செய்து கொள்ள நேரிட்டால் அவளது சந்தானத் தொடர்பு. அற்றுப் போய் விடும். பெண்ணின் லக்ஷணங்களைப் பரீக்ஷை செய்து விட்டுப் பிறகு கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். நல்ல லக்ஷணமும், நல்ல நடத்தையும் உள்ள பதியின் ஆயுளை நீடிக்கச் செய்கிருள்.

ஏ! கும்பமுனியே! இதுவரையில் நான் உமக்கு ப்ரும்மசாரிகளின் லக்ஷணத்தைப் பற்றி விவரித்தேன். இப்பொழுது அதைத் தொடர்ந்து பெண்களின் லக்ஷணங்களை வர்ணிக்கிறேன், அதைக் கேளுங்கள். இந்த விதமாக ஸ்கந்த புராணத்தில் நான்காவது கண்டமான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான ப்ரம்மசர்யவர்ணனம் என்ற முப்பத்தாருவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 37

ஸ்கந்தர் கூறினூர்:- ஸ்த்ரீகள் லக்ஷணவதிகளாக இருந்தால் புருஷன் ஸதா ஸுகத்தையனுபவிக்கிறுன். அதனுல் தங்கள் ஸுகத்தின் விருத்திக்கா லக்ஷணமுள்ள பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டம்.சரீரத்தில் சுழிகள் கந்தம் சாயை அந்தக்கரணம், ஸ்வரம், கதி, நிறம் இவையெல்லாம் லக்ஷணம் என்று சொல்கிறுர்கள்.

உள்ளங்காலிலிருந்து கேசபர்யந்தம் சுபஅசுபலக்ஷங்களைப்பற்றிக் கூறுகிறேன் கேளுங்கள். முதலாவது கால் உள்ளங்கால்களிலுள்ள ரேகைகள், கால் கட்டைவிரல், விரல்கள், நகம், புறங்கால்கள் இரண்டு குதிகால்கள், அதற்கு மேலுள்ள ஆட்டுசதைகள், அதற்கு மேலுள்ள ரோமங்கள், முழங்கால்கள், துடைகள், இடுப்பு, நிதம்பம், கலை, யோனி, சந்து, வயிறு, தொப்புள், அடிவயிறு இரண்டு ஈரல்கள், வயிற்றின் மத்யபாகம் மூன்று ரேகைகள், ரோமாவளி, ஹ்ருதயம், மார்பு, இரண்டு ஸ்தனங்கள், கழுத்து, உள்ளங்கழுத்து, இரண்டு தோள்பட்டைகள், கஷ்கம், புஜம், மணிக்கட்டு, இரண்டு கைகள், உள்ளங்கை, புறங்கை, உள்ளங் கையிலுள்ள ரேகைகள், விரல்கள், நகம், விரல்களின் முடிச்சுகள், முகவாய் இரண்டு உதடுகள், குரல்வளை, பற்கள், நாக்கு, உள்நாக்கு, மூக்கு, தும்மல்கள், இரண்டு கண்கள், இமைகள், புருவம், காது, நெற்றி, தலை, வகிடு, தலை, கேசம் இந்த அறுபத்தாறும் ஸ்த்ரீகளின் அங்க லக்ஷணங்கள் கஜானுவாகும். ஸ்த்ரீகளுடைய உள்ளல்கால்கள் வழுவழுப்பாக இருக்க வேண்டும், அது போகத்துக்குரிய லக்ஷணங்கள், சுரசுரப்பாகவும், வண்ணமில்லாமலும், கடினமாகவும், ஒட்டியும், முறத்தின் உருவமாகவும் பாதத்தின், சின்னங்கள் பூமியில் பதியாது இல்லாமல், உள்ளவளும் அவைகள் துக்கத்திற்கும் துர்பாக்யத்திற்கும் ஸூசகம்;

ரேகைகள், சக்கரம், முக்கோணம், சங்கு, கமலம், கொடி, மத்ஸ்யம், கொடை இந்த ரேகைகள் ஒருவரின் உள்ளங்காலில் உள்ள - ஊர்த்வ ரேகை விரல்கள் வரைக்கும் சேர்ந்திருந்தால் அவள் ஸுபபோகமனுபவிக்க வல்லவள். மூஞ்சூறு, பாம்பு, காக்கை இவைகளின் ரேகைகள் இருந்தால் தரித்திரத்துக்கு அடையாளம்; உள்ளங்கால்கள் மோதியும், சதைப்பற்றுள்ளதாகவும், உருண்டையாகவும் உள்ள கட்டைவிரலுடன் இருந்தால் ஸுகபோகம் தரக்கூடியது. வளைந்தும், சிறியதாகவும், சப்பிட்டு இருந்தால் ஸுக ஸௌபாக்யத்திற்குத் தீங்கு விளைவிக்கக் கூடியது. கட்டை விரல்கள் பெரியதாக இருந்தால் அந்த ஸ்த்ரீ விதவையாவாள்: நீண்ட விரல்களாக இருந்தால் துர்பாக்யத்தை அனுபவிப்பாள்; நெருங்கியும் உயர்ந்தும், உருண்டும், ம்ருதுவாகவும் இருக்கும் விரல்கள் மேன்மையானவை; விரல்கள் நீண்டு இருந்தால் அவள் வேசியாவாள், மெலிதாக இந்தால் அவள் தரித்ரத்தை அனுபவிப்பாள்; சிறியதாக இருந்தால் அல்பாயுள்; வளைந்திருந்தால் தந்த்ரமான கெட்ட விவகாரங்களில் ஈடுபடுபவளாக இருப்பாள். சப்பையான விரல்களாக இருந்தால் அவள் வேலைக்காரியாவாள். இடம்விட்டு அகல அகலமாக இருந்தால் அவள் தரித்ரமுள்ளவளாவாள். ஒரு விரலுக்கு மேல். இன்னுமொரு விரல் ஏறிக்கொண்டிருந்தால், அவள் அநேகக் கணவர்களைக் கொன்று, பிறகு ஒருவனுக்கு ஜோடியாக இருப்பாள். வழியில் நடக்கும்போது பாதத்திலிருந்து, தூளி கிளம்பினால் அவள் மூன்றுகுலங்களையும் நாசம் செய்பவளாவாள், பூமியில் நடக்கும் பொழுது கால் சிறுவிரல்கள் அழுந்தாமல் இருந்தால் அவள் ஒரு பதியைக் கொன்றுவிட்டு இன்னுமொரு கணவனுக்குப் பதியாக இருப்பாள். யாருடைய கால் பூமியில் படாமல் இருக்குமோ, அவள் இரு பதிகளைக் கொன்றவள்; நடுவிரல் கீழே பாவாமல் இருந்தால் மூன்று பதிகளைக் கொன்றவளாவள், பவித்ரவிரலும் நடுவிரலும்

இல்லாமலிருந்தால் அல்லது சிறியதாக இருந்தால் அவள் பதி இல்லாதவளாகவேயிருப்பாள்.

எந்தப் பெண்ணின் ஆள்காட்டிவிரல் கட்டை விரலுடன் ஒட்டியிருக்கிறதோ, அல்லது பெரிதாக இருக்கிறதோ, அவள் கன்னியாக இருக்கும் போதே கெட்டவள் ஆகிறாள். இது நிச்சயம். யாருடைய பாதம் வழவழப்பாகவும், உயர்ந்தும், செம்புவர்ணமாக இருக்கிறதோ, மிகவும் நரம்புகள் தெரிந்து வெள்ளையாகவும் இல்லாமல் இருக்கிறதோ அது ராணியாவதற்கு அறிகுறி, பாதத்தின் மேல் புறம் அதுங்கியிருக்குமேயானால் தரித்ரையாவள்; நரம்புகள் தெரியும் படி இருந்தால் இங்குமங்கும் அலைபவள். ரோமம் இருந்தால் தாதி; சுருங்கியிருந்தால் துர்பாக்யவதியாக இருப்பாள்; இரண்டு முட்டுகளும் மறைந்திருந்தால் நரம்பு இல்லாமலிருந்தால், உருண்டையாக இருந்தால் சுபலக்ஷணம் என்று கூறலாம்; மேலும், கீழும் மறைந்து இருக்குமேயானால் துர்பாக்யத்துக்கு அறிகுறி.

ஒரு பெண்ணின் குதிகால் ஸமமாக இருந்தால் அது சுபலக்ஷணம், பருமனாக இருந்தால் துர்பாக்யம், குதிகால் உயர்ந்திருந்தால் விபசாரி, பெரிதாக இருந்தால் துர்பாக்யம்; அநுபவிப்பாள். ஆடுசதை ரக்த வர்ணமாகவும், ரோமம் இல்லாமலும், வழுவழுப்பாகவும், உருண்டையாகவும் நரம்புகள் இன்றியும், அழகாகவும் இருந்தால் மஹாராணியாவாள்; ஒருவளுடைய சுழி ஒரு மயிருடன் இருந்தால் ராஜபத்னி, இரண்டு ரோமத்துடன் இருந்தால் ஸுகி மூன்று ரோமத்துடன் இருந்தால் விதவையாக துக்கம் அனுபவிப்பாள்.

உருண்டையாக சதைப்பற்றுள்ளதாக முட்டங்கால்கள் இருந்தால் நல்லது. இச்சைப்படி திரிபவளுடைய முழங்கால்கள் மாம்ஸம் இல்லாமல் இருக்கும், எவளுடைய துடைகள் நரம்பில்லாமல் யானை துதிக்கைப் போல் பருமனாகவும், வழவழப்பாகவும்

உருண்டையாகவும், அழகாகவும், ரோமம் இல்லாமலும் இருந்தால் அவள் ராஜபத்னியாவள்.

ஒருவளுடைய தொடை ரோமம் அடர்ந்திருக்குமாஞல் அவள் விதவையாவாள், தட்டையாக இருந்தால் அவள் துர்பாக்யவதி: நடுவில் பள்ளம் இருந்தால் மஹாதுக்கிணி; தோல் கடினமாக இருந்தால் தரித்ரிணீ, மான் விழியாளுடைய இடுப்பு 24 அங்குலம் அளவில் உயர்ந்த நிதம்பப் பிரதேசத்துடன் சோபிதமாகி, நாலு முக்காக இருந்தால் உத்தமம்.

ஒரு பெண்ணின் கடிப்ரதேசம் கூன்விழுந்து சப்பையாக, நீளமாகவோ, உயரமாகவோ, மாமிஸம் இல்லாமல் நெருங்கி, சிறியதாக ரோமங்கள் நிறைந்ததாகவும் இருந்தால் துக்கம், வைதவ்யம் இவைகளை ஸூசிப்பிக்கிறது.

பெண்களுடைய நிதம்பம் உயரமாகவும் சதைப்பற்றுள்ளதாகவும், கனமாகவும் இருக்குமேயாஞல் அவள் மகாபோகி; அது இதற்கு எதிராக இருக்குமாஞல் அது அசுபஸூசகம். ஒருவளுடைய சந்து விளாம்பழம் போல் உருண்டையாகவும் கனமாகவும், பலம் பொருந்தியாதாகவும் இருந்தால் ரதியாகவும் ஸௌபாக்யசாலியாகவும் இருப்பாள்.

ஸ்த்ரீயினுடைய யோனி ஆமையைப்போல் கடினமாகவும் யானையினுடைய கழுத்துபோல் உயரமாகவும் இருந்தால் சுபம். அது இடது புறம் உயர்ந்திருந்தால் பெண்ணைப் பெறுகிறவள்: வலதுபுறம் உயர்ந்திருந்தால் புத்ரனைப் பெறுவாள்.

இதன்மேல் மூஞ்சூறுனுடையதுபோல் அழுக்கு நிறைந்த ரோமம் இருந்தால், மத்ய பாகம் மறைந்திருந்தால், இரண்டு பக்கமும் ஒட்டியிருந்தால் கடினமாகவும், பருமஞகவும் உயர்ந்ததாகவும், தாமரைப்பூ வர்ணமாகவும், ஆலமரத்து இலையைப்போல்

உருவமுள்ளதாகவும் இருந்தால் அது சுகத்தைத் தரக்கூடியது. மானுடைய குளம்புபோல், இலையின் மத்யபாகத்தைப்போல் ரோமமுடையதாக திறந்த வாயுடையதாக இருந்தால் அதன் தண்டு காணப்படுவதாக இருந்தால் அது மிகவும் அபாக்யமானதாகும், அது சங்கத்தின் வடிவில் மூன்று ரேகைகளுடன் கூடியிருந்தால் அவள் கர்ப்பமாக மாட்டாள். எட்டியும் செங்கல் வடிவமாகவும் இருந்தால் அவள் தாஸியாவாள்.

மூங்கில் அல்லது பிரம்புக் கொடியின் இலை போலிருந்தால் யானையைப்போல் கடின ரோமமுள்ளதாக இருந்தால் மூக்கு பெருத்து இருந்தால், அல்லது கோணல் மாணலாக இருந்தால், கீழ் பாகம் பெரிய முகமாக இருக்குமானல் அது அசுப சூசகம்.

அடித்துடையின் சதை பரவலாக உயர்ந்து, மாம்ஸத்துடன் ம்ருதுவாகவுமம் வலது பாகம் சுழிக்கும் ரோமம் உள்ளதாகவும் இருந்தால் அது சுபம்,

இடது பக்கம் சுழியிருந்தால் கோணலும் மாணலுமாக இருந்தால் அது வைதவ்யசூசகம்; இறுக்கமாகவும், கீழறங்கியும், உலர்ந்தும் இருந்தால் ஸதா துக்கம் அனுபவிப்பாள். வயிறு பெரியதாகவும், ம்ருதுவாகவும், மோதியும் இருந்தால் நல்லது; ரோமம் நரம்புளால் நிறைந்து ரேகைகளுடன் இருந்தால் அது நல்லதல்ல.

தொப்புள் ஆழமாகவும் வலது பக்கம் சுழித்தும் இருந்தால் அது சுகத்தையளிக்கும் சூசகம், இது இடது பக்கம் சுழியுடன் உயர்ந்து அதன் முடிச்சு வெளியில் தெரிந்தால் அந்த நாபி சோபமானது அல்ல. ஒருவளுடைய வயிறு பெரிதாக இருந்தால் காமஇச்சை உள்ளவளாகி அநேகம் புத்திரர்களைப் பெறுவாள். யாருடைய வயிறு சிறியதாக இருக்கிறதோ அந்த ஸ்த்ரீ ராஜபுத்திரனைப் பெறுவாள்.

வயிறு துருத்திக் கொண்டிருந்தால் அவள் மலடியாவாள்; யாருக்கு மேல் வயிறு அதிகமாக

இருக்கிறதோ அவள் ஸந்நியாஸினியாவாள். ஒருவளுக்கு வயிற்றின் இருபக்கங்களும் ஸமமாகவும், ம்ருதுவாகவும் அழகாகவும், எலும்புகள் தெரியாவண்ணம் இருந்தால் அவள் ஸௌபாக்கியவதியாக இருப்பாள்.

வயிற்றின் பக்கங்களின் எலும்புகள் தெரிந்தாலும், ரோமம் வளர்ந்திருந்தாலும், துருத்திக் கொண்டிருந்தாலும், அவள் சந்தானமில்லாமலும், துஷ்ட சுபாவம் உள்ளவளாகவும் இருப்பாள். யாருடைய வயிறு சிறிதாகவும், நரம்புகள் தெரியாமலும் வழவழப்பாகவும் இருக்கும் பெண்போகத்துடன் இருப்பவளாகவும் அறுசுவையுண்டி சாப்பிடுவளாகவும் இருப்பாள்.

எந்தப் பெண்ணின் வயிறு பானைப்போல் பெரிதாகவும் மிருதங்கத்துடைய வடிவமாகவும் இருந்தால் அவள் எவ்வளவு உணவு போட்டாலும் திருப்தியடைமாட்டாள். உதரம் பெரிதாக இருப்பவள் சந்தானம் இல்லாமலும் துர்பாக்யவதியாகவும் இருப்பாள். நீண்டு பருத்து இருக்கும் வயிறையுடையவள் மாமனாரையும் மைத்துனர்களையும் வதம் செய்வாள்.

எந்த ஸுந்தரியின் ஸ்தனத்திற்கு அடிபாகம் மெல்லியதாக இருக்குமோ, அவள் பாக்யவதியாவாள். யாருடைய வயிற்றில் மூன்று மடிப்புக்கள் உள்ளனவோ, அவள் போகவதியாக இருப்பாள். ஒருவளுடைய ரோமாவளி சிறியதாகவும் மெல்லியதாகவும் இருக்குமானால் அவள் ஸுகத்தையும் இன்பக் கேளிக்கைகளையும் அனுபவிப்பாள்.

ஒருவளுடைய ரோமாவளி பழுப்பு நிறமாகவுமம், பருமனாகவும், கோணல் மாணலாகவும் இருந்தால் அவள் திருடியாகவும், விதவையாகவும், துர்பாக்கியவதியாவும் இருப்பாள். யாருடைய மார்பு ரோமமில்லாமலும், ஸமமாகவும், பள்ளமில்லாமலும் இருக்குமோ அந்தப் பெண்ணுக்கு ஐஸ்வர்யமும், ஸௌமங்கல்யமும் நாயகனின் அன்பும் ஏற்படும்.

எந்த ஸ்த்ரீயின் மார்பு பரந்திருக்கிறதோ அந்த ஸ்த்ரீ தயை இல்லாதவளாகயிருப்பாள், மார்பில் ரோமங்கள் அடந்திருக்கும் நாரீ பதியை அவசியம் கொல்லுவான்.

பதினெட்டு அங்குல விஸ்தாரமாகவும், பருமனுகவும் மோதிக் கொண்டிருக்கும் மார்பு ஸுகத்திற்கு அறிகுறி. மேலும் அது ரோமங்களுடனே, கனமாகவோ, உயர்ந்தோ, தாழ்ந்தோ, இருந்தால் அது துக்கத்திற்கு அறிகுறி. பெண்களுக்கு இரண்டு ஸ்தனங்களும் கனமாகவும், உயரமாகவும், பருமனுகனும், உருண்டையாகவும், ஸமமாகவும், இருந்தால் புகழத்தக்கது. நுனிபாகம் கனமாகவும், ஒன்றுடன் ஒன்ற இடைவிட்டிருந்தால் அது சுபத்திற்கு அறிகுறியல்ல.

வலது ஸ்தனம் சற்று உயர்ந்திருந்தால் அவள் புத்திரவதியாவாள். அவள் ஸ்த்ரிகளில் புகழப்படுவாள். இடது ஸ்தனம் சற்று பெருத்திருந்தால் அவள் பெண்களைப் பெருபவளாகவும், ஸௌபாக்யவதியாகவும் இருப்பாள்.

மாடு கறக்கும் பாத்திரம் போல் ஸ்தனமிருந்தால் கெட்ட சுபாவமுடையவளாக இருப்பாள். நுனிபாகம் பருமனுகவும் இரண்டு ஸ்தனங்களுக்கிடையில் இடைவெளியிருந்தாலும், அடிப்பாகம் கனமுள்ளதாகவும் இருந்தால் அது மங்களகரமானதல்ல. ஸ்தனங்கள் அடியில் பருத்தும் க்ரமேண சிறிதாகி நுனியில் சிறுத்திருந்தால் முதலில் அவளால் ஸுக மேற்பட்டு பின்னுல் துக்க முண்டாகும்.

ஸ்தனத்தின் காம்புகள் கடினமாயும், உருண்டும் சாம்பல் வர்ணமாகவும் இருந்தால் சிறந்தது. கீர்த்தி வாய்ந்ததாக இருக்கும். உள்குழிந்து மெல்லியதாக இருக்குமாளுல் க்லேசத்தை விளைவிக்கும். ஒரு பெண்ணின் இரண்டு தோள்பட்டைகளும் நிரம்பியிருந்தால் அவள் தனதான்யம் மிகுதியாக உடையவள் ஆவாள். ஆனுல் எவளுடைய தோள்பட்டைகள் தளர்ந்தும் எலும்பின் கீழே ஒன்று போலில்லாமல் ஏற்றத்தாழ்வாய் இருந்தால் அவள்

தரித்ரத்தை அனுபவிப்பாள். கழுத்து அடைத்த மாதிரியும் வளைந்தும், பெரிதும் மெலிந்தும் இல்லாமல் இருந்தால் அது சுபலக்ஷணம்.

கோணலாகவும், பெருத்தும், ரோமங்கள் உடைத்தாகவும் இருந்தால் அவள் தாதியாகவும் விதவையாகவும் ஆவதற்கடையாளம். புஜத்தின் மேல்பாகம் மறைந்தும் இணைந்தும் முன் பக்கம் சற்று தாழ்ந்தும் நன்ருகச் சேர்க்கப்பட்டும் இருந்தால் சுபத்தைக் கொடுக்கக் கூடியது; முன்பக்கம் துருத்திக் கொண்டும் சுருக்கங்கள் விழுந்தும் இருந்தால் அது வைதவ்யத்துக்கு அறிகுறி, துக்கத்தைக் கொடுக்கக் கூடியது.

இரு கஷ்கங்களும் சிறிய ரோமங்களுடன் கூடியதாகவும் சற்று மோதியும் வழவழப்பாகவும் மாம்ஸப்பற்றுள்ளதாக இருந்தால் அது உத்தமம். ஆனல் எவைகள் பள்ளம் விழுந்தோ, நரம்புகள் மோதிக் கொண்டோ, வியர்வையுள்ளதாக இருந்தால் அது மெச்சத் தகுந்த ரோமங்கள் இல்லாமலும் ம்ருதுவாகவும் இருந்தால் இரண்டு கரங்களும் குற்றமற்றவைகளாகும்.

இரண்டு கைகளும் (ரோமம் நிரம்பியதாக இருந்தால் வைதவ்யத்துக்கு அறிகுறி. சின்னதாக இருந்தால் துர்பாக்யம். நரம்புகள் தெரிந்தால் க்லேசத்துக்கு அறிகுறி.) மான் விழியாள்களின் இரண்டு கைகளின் கட்டை விரல்களும் சேர்ந்து நீட்டினுல் தாமரைப்பூவின் மொட்டின் உருவமாக இருந்தால் அது மிகவும் நல்லது. அவள் மிகவும் போகத்தைக் கொடுப்பவளாவள்.

இரண்டு கைத்தளங்களும் கோமளமாகவும் மத்தியில் சற்று மோதியும் ரக்தவர்ணமாகவும் மெல்லிய ரேகைகளுடன் கூடிய குழிகள் இல்லாமலும் இருந்தால் அது மிகவும் உத்தமம். ஒரு நாரியுடைய கைத்தலம் மிகவும் அதிகம் ரேகையுடன் இருந்தால் அவள் விதவையாவாள். ரேகைகளே இல்லாவிட்டால் அவள் தரித்ரம்

அனுபவிப்பாள். நரம்புகள் தூக்கியிருந்தால் அவள் பிச்சை எடுப்பவள் ஆவாள். புறங்கைகள் ரோமங்களும் நரம்புகளும் இல்லாமல் சற்று மோதிக் கொண்டிருக்குமானல் மிகவும் உத்தமம், ரோமங்கள் நரம்புகளுடன், மாம்ஸம் இல்லாமல் இருந்தால் அது வைதவ்யத்துக்குக் காரணம்.

பெண் கைரேகை ரக்த வர்ணமாகவும் தெளிவாய்த் தெரியக் கூடியதாகவும், ஆழ்ந்தும் வழுவழுப்பாகவும் இருந்தால் அது சுபலக்ஷணம். உள்ளங்கையில் மத்ஸ்ய ரேகையிருந்தால் அது சுபலக்ஷணம்: த்ரிகோணமோ, ஸ்வஸ்திக்கோ இருந்தால் தனவதியாக இருப்பாள்; மத்ஸ்ய ரேகையிருந்தால் ராஜமாதாவோ, ராஜபத்னியோ ஆவாள்.

சக்கரவர்த்தினி ராணியின் கையில் வலப்பக்கம் சுழிக்கும் ரேகையோ, சங்கு, குடை, ஆமை இவைகளின் ரேகையிருந்தால் அவள் ராஜமாதாவாக ஆவாள். ஒருவள் கையில் தராசு போன்றோ, தராசின் இரு தட்டுகள் போல் இருந்தால் வைச்ய பத்னியாவள். இடது கையில் யானை, குதிரை, எருது இவைகளின் ரேகை அல்லது மானிகை, வஜ்ரம் இவைகளின் ரேகைகள் இருந்தால் அவள் தீர்த்தாடனம் செய்யும் பிள்ளையைப் பெறுவாள். க்ருஷிகனின் பத்னி கையில் சகடம், கலப்பை இவைகளின் ரேகைகள் இருக்கும்.

எவளுடைய உள்ளங்கையில் சாமரம், அங்குசம், தனுஸ் இவைகளின் ரேகைகள் இருக்கின்றனவோ அவள் ராஜமஹிஷியாவள். கட்டை விரலடியிருந்து, சுண்டுவிரல் அடிவரைக்கும் ரேகை போனல் அது சுபலக்ஷணமல்ல. அவள் புருஷனைக் கொல்லுபவளாக இருப்பாள். அதனல் பண்டிதர்கள் அந்தப் பெண்ணை விலக்க வேண்டும். கையில் த்ரிசூலம், வாள், ஈட்டி, கதை, துந்துபி முதலிய ரேகைகள் இருந்தால், அவள் தானம் செய்பவளாதத் திகழ்ந்து பெரும் கீர்த்தி வாய்ந்தவளாக இருப்பாள்.

நரி, தவளை, தேள், ஸர்பம், கழுதை, ஒட்டகம் முதலிய உருவத்தில் ரேகைகள் இருந்தால் பெண்களுக்கு மிகவும் துக்கம் ஏற்படும். உருண்டையாகவும், மெதுவாகவும், நகங்கள் இருந்தால் அது சுபத்தைக் கொடுக்கும். நகங்களும், நல்ல கணுக்களுடன் கூடிய கீழேயிருந்து உயர வர, வரப் பெரிதாக நீண்டு இருந்தால் சுபம், தட்டையாகவும் வளைந்தும், கரடுமுரடாகவும், பின்புறத்தில் ரோமத்துடன் இருந்தால் அசுபம். மிகவும் சிறிய மெலிந்த, வளைந்த, இடம் விட்டு இடம் இருக்கும் விரல்கள் ரோகத்தைக் குறிக்கின்றன. மேலும் நகத்திலிருந்து கணுக்கள் இருந்தால் மேலும் துக்கத்தைத் தருவதற்கு அறிகுறியே;

பெண்களுக்குச் சிவந்த நுனியுடன் கூடிய உயர்ந்த நகங்கள் சுப லக்ஷணம். கீழ்பாகம் வெளிறியும் பளபளப்பாகவும் மஞ்சளாகவும் இருந்தால் தரித்ரத்தைக் குறிக்கிறது. நகத்தில் வெள்ளைப் புள்ளிகள் இருந்தால் வ்யபிசாரியாவாள். புருஷர்களுடன் சேரும் சந்தில் புள்ளிகள் இருந்தால் துக்கம் அனுபவிப்பார்கள். மாம்ஸத்தினுல் முதுகெலும்பு மறைக்கப்பட்டிக்குமானுல் அது சுப லக்ஷணம். முதுகில் ரோமம் இருந்தால் வைதவ்யம் ஏற்படும்.

வளைந்து கூனி நரம்புகள் மிகுந்த முதுகாயிருந்தாலும் அவர்கள் துக்கம் அனுபவிப்பார்கள். சதைப்பற்றுள்ள உயர்ந்த குரல்வளையிருந்தால் நலம், நரம்புகள் பெரிதாயும் வளைந்தும் இருந்தால் அசுபம், மாம்ஸம் மூடியதும். உருண்டையுமான நாலு அங்குல நீளமுள்ள கழுத்து உத்தமம். மூன்று ரேகைகளுடன் எலும்புகள் மறைந்திருக்கும் கழுத்து நல்லது. சதைப்பற்றில்லாத சப்பட்டையான நீண்ட அல்லது தாழ்ந்த கழுத்து நல்லதல்ல. பருமனுன கழுத்தாக இருந்தால் அவள் விதவையாவாள், வளைந்த கழுத்தானுல் தாஸியாவாள், சப்பட்டைக் கழுத்தானுல் மலடியாவாள். சிறிய கழுத்தானுல் குழந்தைகள் இல்லாமல் ஆவாள்.

முகவாய் உருண்டு மென்மையாக இரண்டு அங்குலம் அளவுக்கு இருந்தால் நல்லது. பருமனாக இரட்டை முகவாய் ரோமங்கள் நிறைந்ததானால் உத்தமமில்லை. முகவாயுடன் ஒட்டிய கனமான தாடை கூடம் வளைந்து பருமனாய் ரோமத்துடன் இருக்கும் தாடை நல்லதல்ல. மேடு பள்ளங்கள் இல்லாமல் உருண்டையாக பருத்த மோதிய இரு கன்னங்கள் உத்தமம், ரோமத்துடன் கடினமான உள்குழிந்து சப்பி இருக்கும் கன்னங்கள் சேர்க்கக் கூடியவைகள் அல்ல.

முகம் ஸமமாகவும் சதைப் பற்றுடனும் மிகவும் வழுவழுப்பாகவும், நறுமணமாகவும். உருண்டையாகவும் அப்பாவின் ஜாடையாகவும் இருந்தால், ரோஜா கலரில் உருண்டையாக வழவழப்பாக மத்தியில் ரேகைகளுடன் இருக்கும் ஸௌந்தரிகளுடைய அதரங்கள் அரசன் விரும்பக்கூடியவை மெலிதாக மிக நீண்ட, வெடித்த உலர்ந்த அதரம் துர்பாக்யத்துக்கு வடிவம்.

சியாமவர்ணமான உதடு உடையவள் விதவையாவாள். பருமனாக இருப்பவள் கலகக்காரியாக இருப்பாள். மேலுதடு நடுவில் சந்து தூக்கி வழவழப்பாக ரோமம் இல்லாமல் இருந்தால் போகத்தைக் கொடுப்பாள். இதற்கு விபரீதமாக இருந்தால் பலனும் விபரீதமே, பசும்பால்போல் வெண்மையாய், வழவழப்பாய் கொஞ்சம் தூக்கிக்கொண்டு மேலும் கீழும் சமமான 32 பற்களுடன் இருப்பது சுபலக்ஷணம்.

மஞ்சள் நிறமாக, கபிலவர்ணமாக பெரிதாக நீண்ட பல் வரிசைகள் ஸ்பூன் உருவத்துடன் இடைவிட்டு இருந்தால் துர்பாக்யத்துக்குக் காரணம்.

கீழ் வரிசையில் அதிக பற்கள் இருந்தால் அவளுக்கு அம்மா இருக்கமாட்டாள்: உதட்டுக்கு வெளியில் பல் நீட்டிக் கொண்டிருக்குமானால் பதியிருக்கமாட்டான் - இடம் விட்டு இடம் இருக்குமானால் விபசாரியாவாள். நாக்கு மேல் பக்கம் ரக்தவர்ணமாகவும், கீழே

கறுப்பாகவும், மெதுவாகவும் இருந்தால் அறுசுவை உண்டி உண்பாள். நுனியில் பரந்து மத்தியில் ஒடுங்கி, ஒடுக்கமான நாக்கு துக்கத்துக்கு அறிகுறி.

நாக்கு வெண்மையாக இருந்தால் அவளுக்கு ஜலத்தில் மரணம்; சியாமவர்ண நாக்காக இருந்தாள். அவள் கலகையாக இருப்பாள்; தடித்த நாக்குக்காரி தரித்ரம் அனுபவிப்பாள்; நீண்ட நாக்குக்காரி சாப்பிடத் தகாததையெல்லாம் சாப்பிடுவாள், அகலமான நாக்காக இருந்தால் மதர்த்த உல்லாஸினியாக இருப்பாள். வழுவழுப்பான, சிகப்புத் தாமரையைப் போன்ற உள்நாக்கு உத்தமம்.

உள்நாக்கு வெள்ளையாக இருந்தால் விதவா; மஞ்சள் வர்ணமாக இருந்தால் பிக்ஷுணி, கறுப்பாக இருந்தால் குழந்தைகளைச் சாகக் கொடுத்து வேதனையடைவாள். உலர்ந்திருந்தால் பெரிய குடும்பியாவாள். மேலும் இதுவரை கூறியது. தொண்டைக்குள் நாக்கின் அடிப்பாகத்தைப் பற்றி. கண்டி என்பதுதான் உள்நாக்கு.

அது ஸ்தூலமாக இல்லாமல் உருண்டையாக மிகவும் சிகப்பாக, அதிகம் தொங்காமல் இருந்தால் சுபம். பருமனுகவும், கறுப்பாகவும் இருந்தால் துக்கத்திற்குத் தாயாவாள்.

பெண்களின் புன்சிரிப்பு உத்தமம். சிரிக்கும் போது பற்கள் வெளியில் தெரியாமல் இருக்க வேண்டும். கண்கள் இமைக்காமல் இருக்க வேண்டும். கன்னங்கள் கொஞ்சம் மலர்ந்து இருக்க வேண்டும், நாசி இதழ்கள் இரண்டும் சமமான அளவில் வட்டமாக இருக்க வேண்டும். துவாரம் சிறியதாக இருந்தால் அது சுப ஸூசகமில்லை. மூக்கின் நுனி பாகம் பருமனுகவும் மத்யத்தில் அமுங்கியும் எடுப்பாகவும் இருந்தால் அந்த நாசி உத்தமம் இல்லை.

வளைந்தும், சற்று திரும்பியும் சிகப்பாக மூக்கின் நுனியிருந்தால் அது வைதவ்யத்தின் லக்ஷணம். சப்பையாக

இருந்தால் பிறருக்கு தாசியாவாள். பெரியதாகவோ, சிறியதாகவோயிருந்தால் கலகக்காரியாவாள்.

ஒரு பெண்ணினுடைய தும்மல் தீர்க்கமாகவும் ஒரே ஸமயத்தில் இரண்டு மூன்று தும்மல்களாகவும் ஏற்பட்டால் நீடித்த ஆயுளுடையவளாக இருப்பாள். பெண்களின் கண்களின் கடையில் ரக்த வர்ணமாகவும் கறுத்த விழியுடனும் கறந்த பாலைப்போல நிர்மல வெள்ளையாகவும், மிகவும் வழவழப்பாகவும், இறுத்த இமை மயிர்களுடனும், இருப்பது புகழத் தக்கது. மேல் ஏறிய விழிகளுடன் இருந்தால் அற்பாயுள், வட்டமாக இருந்தால் வேசியாவாள்.

எந்த பெண்ணினுடைய கண்களாவது எருமையின் கண்களைப் போல் இருந்தால் அதுநல்லதல்ல. மற்றும் கண்கள் பிங்களவர்ணமாக இருந்தால் கெட்ட நடத்தையுள்ளவளாகவும், காமக்கழுகாகவும் இருப்பாள். புறுவைப் போன்ற கண்கள் உடையவள் கெட்ட ஸ்வபாவத்தையுடையவளாகவும், ரக்தவர்ணமாக இருந்தால் பதிக்குத் தீங்கு நினைப்பவளாகவும் மாறுகண்களுடையவள் துஷ்டையாகவும் யானையின் கண்கள் போலிருந்தால் அமங்களத்தையும் குறிக்கும்.

இடதுகண் மாறு கண்ணுனல் கெட்ட ஸ்வபாவத்தவள் ஆவாள். வலது கண் மாறுகண்ணுக இருந்தால் மலடியாவாள்; தேனின் வர்ணமாகக் கண் இருந்தால் அவளுக்குத் தன-தான்யங்கள் பரிபூர்ணமாக இருக்கும்.

கண் இரப்பைகள் மிகவும் அடர்ந்து வழுவழுப்பாகவும், கறுப்பாகவும், மெல்லியதாகவும் இருந்தால். அவள் ஸௌபாக்யவதியாவாள். எவளுடைய கண் இரப்பைகள் இடைவெளிவிட்டுக் கபில வர்ணமாக, பருமனுக இருக்கிறதோ அவள் நிந்திக்கித் தகுந்தவளாவாள். அழகான புருவங்கள் வளைந்தும் வழுவழுப்பாகவும் கறுத்த மிருதுவான ரோமங்களுடன்

விற்கள்போல் வளைந்தும், இரண்டும் ஒன்றுக்கொன்று தொடாமலும் இருந்தால் அது மிகவும் மெச்சத் தகுந்தது.

தடித்த ரோமமாகவும், நீளமாகவும் மிகவும் பருமனாகவும், இடைவெளியுடனும், பிங்கள வர்ணத்துடனும் ஒன்றை ஒன்று தொட்டுக்கொண்டு இருந்தால் அது நல்லதல்ல. மங்களமான சுழியுடனும் நீண்டு இருக்கும் காதுகள் ஸுகத்தையும், சுபத்தையும் கொடுக்கும். பானையை வைக்கும் வாணையைப்போல் குழியில்லாமல் நரம்புகளுடன் கூடியும் மிகவும் சிறிதாக இருந்தால் அது மெச்சத் தகுந்ததல்ல.

நாரியின் நெற்றி நரம்புகள் இல்லாமலும், ரோமத்துடன் இல்லாமலும், அர்த்த சந்திராகாரமாகவும் உன்னதமாகவும் மூன்றங்குல அகலத்துடன் இருந்தால் அது ஸௌபாக்யத்தையும் ஆரோக்யத்தையும் குறிக்கிறது.

ஸ்வஸ்திக், முக்கோணம் ஆகிய ரேகைகள் தெளிவாகத் தெரிந்தால் அது ராஜ்ய ஸம்பத்தைக் குறிக்கிறது. நீண்ட நெற்றியுடையவள் கொழுந்தனக்குத் தீங்கு நினைப்பவளாக இருப்பாள். ஒரு பெண்ணுடைய முன்னெற்றி உயர்ந்தும், ரோமங்களுடனும் இருந்தால் நோயாளியாவாள். வகிடு தெளிவாகக் காணப்பட்டால் உத்தமம், உச்சிமண்டை மிகவும் உயர்ந்து யானையின் மஸ்தகத்தைப் போலவம் உருண்டையாகவும் இருப்பது ஸௌபாக்யத்தையும் ஐஸ்வர்யத்தையும் குறிக்கும்.

ஒரு பெண்ணினுடைய தலை பிளவாகவிருந்தால், அவள் விதவையாவாள், நீண்ட சிரசாக இருந்தால் அவள் வேசியாவாள். ஒருவளுடைய தலை பெரிதாக இருந்தால் அது தௌர்பாக்ய சூசகம். அளகபாரம் கருவண்டுக் கூட்டங்களுக்கு சமமாகவும், சுருண்டும், மெல்லியதாகவும் வழவழப்பாகவும், முன்பாகம் சுருங்கி வளைந்து இருந்தால் மிகவும் சோபனம், முரடாகவும் நுனியில் பிளந்தும் இடம் விட்டும், செம்பட்டை படர்ந்தும் சிறியதாகவும் வரண்டும் இருக்கும் கேசம், துக்கம், தரித்ரம், பந்தனம் இவைகளைக் குறிக்கும்.

ஸ்த்ரீகளுடைய இரண்டு புருவங்களுக்கு மத்தியில் மச்சமிருந்தால் அது ராஜ்ய போகங்களைக் குறிக்கிறது. இடது கன்னத்தில் சிகப்பு மச்சம் இருந்தால் அது போகத்தைக் குறிக்கிறது. ஸ்த்ரீயின் நெஞ்சில் மருவோ மச்சமோ இருந்தால் அது ஸௌபாக்யத்தைக் குறிக்கிறது. ஒருவளுடைய வலது ஸ்தனத்தில் சிகப்பு மச்சம் இருந்தால் அவளுக்கு நான்கு கன்னிகைகளும் மூன்று புத்ரர்களும் பிறப்பார்கள்.

இடது ஸ்தனத்தின் சிகப்பு மச்சமிருந்தால் முதலாவது அவள் ஒரு புத்ரனைப் பெற்றுவிட்டு விதவையாகி விடுவாள். ஸ்த்ரீகளின் மர்மஸ்தானத்தில் வலது பாகத்தில் மரு இருந்தால் அவள் ராஜபத்னியோ ராஜ மாதாவோ ஆவாள். சிகப்பு மரு, பட்டராணியின் நாஸிகையின் முன்பாகத்தில் இருக்கும். அதே நாஸிகையின் நுனியில் இருக்கும் மரு கறுப்பாக இருந்தால் அவள் பதிக்குத் தீங்கு செய்து விட்டு விபசாரியாவாள்.

நாபிக்குக் கீழே மச்சமோ மருவோ இருந்தால் இது சுப சூசகம். கால் முட்டுகளில் மச்சமோ மருவோ இருந்தால் அது தரித்ரத்தின் லக்ஷணம். ஒரு ஸ்த்ரீயீன் இடதுகை, காது, கழுத்து, கன்னம் இவைகளில் மருவோ மச்சமோ இருந்தால் அவள் முதல் கர்பத்தில் புத்ரன் பிறப்பான். பெண்ணின் நெற்றியில் விதியால் குறிக்கப்பட்ட த்ரிசூல ரேகையிருந்தால் அவள் ஆயிரக்கணக்கான ஸ்த்ரீகளுக்கு அதிபதியாவாள். ஒரு பெண் தூங்கும்போது புலம்பினாலும், பற்களைக் கடித்தாலும், அவள் ரூபவதியாக இருந்தாலும் விவாஹம் செய்து கொள்ள யோக்யதை இல்லை.

கைகளில் ரோமச்சுழிகள் வலதுபக்கம் சுழிந்திருந்தால் தர்ம ஸூசகம், இடது பக்கமாகச் சுழித்திருந்தால் அசுப சூசகம். நாபி, காது, மார்பு இவைகளில் அதுபோல் ரோமம் வலதுபுறம் சுழியிருந்தால் உத்தமம். முதுகுபக்கம் வலப்புறமாக ரோமச் சுழியிருந்தால் சுபம். முதுகிற்கு மத்தியில் வட்டமான

சுழியிருந்தால் அவள் தீர்க்காயுளுடன் உத்தமமாக இருப்பாள். ராஜபத்னியின் யோனியில் வலது புறமாக ரோமச்சுழியிருக்கும்.

அதே சுழி வண்டி சக்கரம் போல் இருந்தால் அநேக ஸந்தானங்களையும் ஸுகத்தையும் அளிப்பாள். இடுப்பிலிருந்து மர்ம ஸ்தானம் வரை நீண்டதாக சுழிகளிலிருந்தால் அது பதிக்கும், சந்தானத்திற்கும் நாசத்துக்கு அறிகுறி. முதுகுப் பக்கத்தில் இருசுழிகள் ஏற்பட்டு அது வயிறு வரை எட்டியிருக்குமால அது நல்லதல்ல. அப்படி ஒரு ரோமச் சுழி ஏற்பட்டிருந்தால் அவள் பதி இறந்து விடுவான். இரண்டானால் அவள் வ்யபிசாரியாவாள்.

அவள் கழுத்திலும், வகிட்டிலும், நெற்றியிலும் வலதுபக்கம் ரோமச் சுழியிருந்தால் அவள் துக்கமும், வைதவ்யமும் அனுபவிக்க வேண்டியிருக்கும். அப்படியுள்ள ஒரு ஸ்த்ரியை புருஷன் முன்பே தூர விலக்க வேண்டும். ஒரு ஸ்த்ரீயின் கழுத்தின் வலதுபக்கம் ரோமச் சுழியிருந்தால் அவளுடைய புருஷன் ஒரு வருஷத்தில் கொலை செய்யப்படுவான்.

ஒரு பெண்ணின் தலையில் ஒன்றோ இரண்டோ ரோமச் சுழிகள் இருந்தால் விவாஹமான பத்து நாட்களில புருஷன் கொல்லப்படுவான். அதனால் புத்திமான்களான ஜனங்கள் சுழிகள் உள்ள பெண்களை விலக்கி விட வேண்டும். இடுப்பில் சுழியிருந்தால் அவள் வியபிசாரியாவாள். நாபியில் சுழியிருந்தால் அவள் பதிவ்ர்தையாவள், முதுகில் எங்காவது சுழியிருந்தால் அவள் விபசாரியாகவும் பதியைக் கொல்லப்பட்டவளாகவும் இருப்பாள்.

ஸ்கந்தர் கூறுவார்:- ஒரு ஸ்த்ரீ சுபலக்ஷணங்களோடு கூடியிருந்தும் சீலம் நன்றாக இல்லாவிட்டால் அவள் அவலக்ஷணத்தின் சிரோமணிதான். அவலக்ஷணமாக இருந்தும் ஸதியாக இருந்தால் அவள் லக்ஷணத்திற்கு இருப்பிடமானவள். விஸ்வேஸ்வரருடைய

அனுக்ரஹத்தினுல் நல்ல லக்ஷணமும், நல்ல நடத்தையும் பதியின் ஸ்பாவத்தை அறிந்து நடப்பவள்தான் க்ருஹஸ்தா ச்ரமத்தைப் பார்க்க முடியம்.

பூர்வ ஜன்மத்தில் ஸுமங்கலிகளுக்கு ஸந்தோஷபடுத்துபவள் மறு ஜன்மாவில் அழகானவளாகப் பிறப்பாள். பூர்வ ஜன்மத்தில் ஒரு புண்ணிய தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்யவோ, சரீரத்தை விடவோ செய்தவள் இந்த ஜன்மத்தில் சுபலக்ஷணமாகப் பிறப்பாள்: எந்தப் பெண் ஜகதம்பிகையைப் பூஜித்திருக்கிருளோ அவள் பகவதி பவானியைப் போல் நன்னடத்தையுள்ளவளாக இருப்பாள். பதி எப்பொழுதும் பத்னிக்கு ஒத்து அடங்கி நடப்பான், பதியை ஸ்வாதீனமாகக் கொண்ட ஸுசீலைக்கு ஸ்வர்க்கம் அபவர்க்கம் இரண்டின் ஸுகமும் இந்த ஜன்மத்திலேயே கிடைக்கும். சுப லக்ஷணமாக இருப்பதற்கு இதுவே பலன்.

பெண்கள் தங்கள் ஸுந்தரலக்ஷணத்துடனும் நன்னடத்தையாலும் பதியை தீர்க்காயுளுடனும் ஆனந்தத்தை அனுபவிக்கும் படியாகவும் செய்கிருர்கள். அதனுல் பண்டிதர்கள் முதலாவது ஸமஸ்த லக்ஷணங்களேயும் பரீசீலனே செய்து துர்லக்ஷணங்கள் உடையவளேத் தவிர்த்து நல்ல சுபலக்ஷணமுடைய பெணண்ணேயே விவாஹம் செய்ய வேண்டும்.

ஹே கும்பமுனியே! க்ருஹஸ்தர்களுடைய நன்மைக்காகப் பெண்களின் லக்ஷணத்தை விவரித்தேன். இப்பொழுது விவாஹத்தைப் பற்றிக் கூறுகிறேன். கேட்டு அறிந்து கொள்ளுங்கள், இவ்வித் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான பெண்களின் ஸாமுந்த்ரிகா லக்ஷணம் என்னும் முப்பத்தேழாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்தியாயம் 38

*ஸ்கந்தர் கூறுகிறார்:- முனிராஜ் ப்ரம்மதேவ! ஆர்ஷம் ப்ராஜா பத்யம், ஆஸுரம், காந்தர்வம், ராக்ஷஸம், இவ்விதம் எட்டுவிதமான விவாஹங்களைப் பற்றி சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது. இதில் வரனை அழைத்து அலங்காராதிகளோடு கூடிய கன்னிகையை தானம் செய்து கொடுப்பது. இதை ப்ரம்மவிவாஹம் என்று கூறுவர். இப்படி விவாஹம் செய்து கொண்ட கன்னிகையின் புத்திரன் தனது முன்னோர்களை இருபத்தியொரு தலைமுறைவரைக்கும் பவித்ரன் ஆக்குகிறான்.*

*யக்ஞத்தில் வரித்த ரித்விஜுக்குப் பெண்ணைக் கொடுப்பது தெய்வ விவாஹம். இவளுடைய புத்திரன் தன்னுடைய முன்னோர்களை பதினான்கு தலைமுறை வரைக்கும் கரை ஏற்றுகிறான்; வரனிடத்தில் இருந்து ஒரு ஜோடி பசுக்களை வாங்கிக் கொண்டு பெண்ணைக் கொடுப்பதற்கு ஆர்ஷ விவாஹம் என்று பெயர். இவளுடைய ஸந்தாநம் ஆறு தலைமுறைகளைக் கரையேற்றுகிறான். விவாஹத்தை விரும்பி வரும் ப்ரம்மசாரிக்கு கன்யாதானம் செய்து கொடுத்து நீங்கள் இருவரும் க்ருஹஸ்தாச்ரம தர்மத்தை அனுஷ்டியுங்கள் என்று கூறி அனுப்புவது ப்ராஜாபத்ய விவாஹம். இவளுடைய பிள்ளையும் ஆறு தலைமுறைகளையும் புனிதமாக்குகிறான்.*

*இந்த நான்கு விவாஹங்களும் ப்ராம்மணர்களுடைய தர்மானுஸாரப்படி நடப்பது; பணத்தைக் கொடுத்துக் கன்னிகையை விலைக்கு வாங்குவது ஆஸுரவிவாஹம். பரஸ்பரம் காதல் ஏற்பட்டு ஒன்று சேருவதே காந்தர்வவிவாஹம். ஒரு பெண்ணை பலாத்காரம் செய்து அபஹரித்துச் செல்வதே ராக்ஷஸ விவாஹம். பின்னால் கூறிய இம்மூன்று விவாஹங்களும் - உயர்குலத்தில்*

*பிறந்தவர்களுக்கு அவமானமாகும். வஞ்சனையாகப் பெண்ணை அபகரித்துச் செல்வது பைசாசவிவாஹமாகும். இது மிகவும் நிந்திக்கப்படுகிறது.*

*இந்த விவாஹங்களில் காந்தர்வம், ஆஸுரம், ராக்ஷஸம், இம்மூன்றும் க்ஷத்ரியர்கள், வைச்யர்களிடையே வழக்கத்தில் இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் இந்த எட்டாவது பாபமயமான பைசாசவிவாஹம் பாபிகளுடைய மத்தியில்தான் நடக்கிறது. சொந்த ஜாதியில் பெண்ணை விவாஹம் செய்யும் பொழுது கை பிடித்து ஏற்றுக்கொள்வது; ஆனால் க்ஷத்ரிய குமாரியை பாணத்தின் நுனியைப் பிடிக்கச் சொல்லி அழைத்துக் கொள்வது, வைச்ய கன்னிகையை சவுக்கைப் பிடிக்கச் சொல்லி அழைத்துக் கொள்வது, சூத்ரஜாதிக் கன்னிகையை வஸ்திரத்தின் முந்தானையைப் பிடித்து அழைத்துக் கொள்வது உசிதம்.*

*இந்த விதிமுறை அந்யவர்ணத்துப் பெண்ணை விவாஹம் செய்யும் பொழுது பார்த்ததாகச் சொல்லப்படுகிறது. (ஆனால் ஸ்வஜாதிப் பெண்ணுடன் விவாஹம் கையைப் பிடித்து அழைத்துக் கொள்வதேதான். அதுதான் விதிமுறை.)*

*ஸ்வஜாதி விவாஹத்தினால் பிறக்கும் பிள்ளை தர்மிஷ்டனாகவும், நூறு வயது ஜீவித்திருப்பவனாகவும் ஆகிறான். அதர்ம விவாஹத்தினால் பிறக்கும் பிள்ளை அதர்மனாகவும், தனமில்லாதவனாகவும் பாக்யமில்லாதவனாகவும் அல்பாயுஸுடையவனாகவும் ஆகிறான். ருது காலத்தில் ஸ்வபத்நீகமனம் க்ருஹஸ்தர்களின் பரமதர்மம், ஸ்த்ரீகள் வரனை ஸ்மரித்துக் கொண்டு காமனைப்பிரகாரம் ஸம்போகம் செய்வது தர்மம்.*

*(பகலில் ஸ்த்ரீ கமனம் செய்வது புருஷர்களுக்கு ஆயுள் நாசனம், அதனால் புத்திமான்கள் ஸ்ராத்த தினம்,*

பர்வதினம் அவைகளில் ஸ்த்ரீகளுடன் சேரக்கூடாது. இந்த சமயங்களில் புருஷன் மோகத்தில் ஸ்த்ரீகமனம் செய்வதால் பதிதன் ஆகிறுன். ஒரு புருஷன் ருதுகாலங்களில் (அதுவும் தன் ஸ்த்ரீயினிடம் மாத்திரமே) ஸம்போகம் செய்தால் அவன் உத்தம க்ருஹஸ்தன் என்றுலும் ப்ரம்மசாரி என்றே மதிக்கலாம், (ஏக நாரீ ப்ரம்மசாரீ)

ஸ்த்ரீகளின் ருதுகாலம் பதினுறு ராத்ரி வரைக்கும் என்பார்கள். அதில் முதல் நான்கு ராத்திரிகள் வர்ஜிதம். பாக்கி தினங்களில் ஒற்றைபடை நாட்களில் சேர்ந்தால் புத்ரனும். இரட்டை படை நாட்களில் சேர்ந்தால் கன்னியும் ஜனிப்பார்கள். அனிஷ்டஸ்தானங்களில் பீடிக்கப்பட்ட சந்திரனிருந்தால் மகம், மூலம் இந்த நக்ஷத்ரங்களை விட்டுவிட்டு விசேஷமாக புருஷ நக்ஷத்ரத்தில் பவித்ரமாக பத்னியைச் சேர்த்தால் நான்கு புருஷார்த்தத்துக்கும் ஸாதகமான பவித்ரமான புத்ரன் பிறப்பான்.

ஆர்ஷ விவாஹரீதியாக ஒரு ஜோடி பசுக்களை வாங்கிக் கொண்டு பெண்ணைக் கொடுப்பதாகச் சொல்லப்பட்டதல்லவா? அது புகழ்ச்சிக்குரியதல்ல. கன்னிகையைக் கொடுத்து அல்ப கிரயமாவது வாங்குவது என்றுல் அது கன்னிகையை விலைக்குக் கொடுக்கிறபாபமாக ஆகிறது. ஸந்தானத்தை கிரயம் கொடுப்பவன் கல்ப காலம் முழுவதும் புழுக்களை புஜிக்கும் விட்கிருமி என்னும் நரகத்தில் இருப்பான். அதனுல் பிதா கன்னிகையினுடைய அணுவளவு தனம் எடுத்து வாழ்க்கையை நடத்துவது தகாது. பந்துக்கள் உலகத்தில் மோஹத்திலுல் ஸ்த்ரீதன சொத்தையெடுத்து வாழ்க்கை நடத்துகிறுர்கள். அதனுல் அவர்கள் மாத்திரம் அல்ல, அவர்களின் பூர்வபுருஷர்களும் நரகத்தில் வீழ்கிறுர்கள்.

பதி பத்னியிடத்திலும், பத்னீ பதியிடத்திலும் மிகவும் ப்ரியமாக இருப்பார்களானுல் அதனுல்

ஸந்தோஷமடைந்து மஹாலக்ஷ்மி மஹாவிஷ்ணுவுடன் கூட அங்கு வஸிக்கிறாளாம். வாணிபத்திஞலும், அரசாங்க ஸேவையிஞலும், வேதாத்யனத்தை விடுவதிஞலும், வேறு வர்ணத்தில் விவாஹம் செய்தல் கர்மத்தை விடுதல் இந்தக் காரணத்திஞலும் குலம் படு வீழ்ச்சியடைகிறது. க்ருஹஸ்தன் பிரதிதினமும் பாகம் செய்யும் பாப நிவர்த்திக்காக ஆஹுதியும் பண்ண வேண்டும்.

க்ருஹஸ்தாச்ரமி பஞ்சயக்ஞம் பண்ணுவது எதற்காகவென்ருல், குத்துவது, இடிப்பது, அரைப்பது, பொடிப்பது, அடுப்பை மூட்டுவது, தண்ணீர் குடத்தை சுமப்பது, பெருக்குவது இவைகளில் ஏற்படும் ஜீவஹத்திக்காக ப்ரதிதினமும் செய்ய வேண்டும்.

இந்த ஐந்து தோஷங்களும் நீங்குவதற்காக மங்களங்தைக் கொடுக்கும் இந்த ஐந்துயக்ஞங்களும் பண்ண வேண்டும். வேதம் சொல்லிக் கொடுப்பது, ப்ரம்மயக்ஞம், தர்பணம் செய்வது, பித்ருயக்ஞம், ஹோமம் செய்வது தேவயக்ஞம், வைஸ்வதேவம் பண்ணுவது பூதயக்ஞம், அதிதி பூஜை செய்வது நரயக்ஞம். இவைகளேயும் பஞ்சயக்ஞம் என்று சொல்வார்கள்.

க்ருஹ்ஸ்தர்கள் பித்ருக்களின் ப்ரீதிக்காக அன்னம், ஜலம், பால், கிழங்கு, பழம் இவைகளுடன் ஸ்ராத்தம் செய்ய வேண்டும்; ஸுபாத்திரனுக்கு விதி பூர்வமாக கோதானம் செய்வதிஞல் என்ன புண்ணியம் கிடைக்கிறதோ அதே புண்ணியம் ஒரு யாசகனுக்கு அன்னமிடுவதால் கிடைக்கிறது.

தபஸ், வித்தை என்னும் விறகிஞல் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் ப்ராம்மணனுடைய வாய்ரூபமான அக்னியில் அன்னமாகிற ஆஹுதியைக் கொடுப்பதால் க்ருஹஸ்தன் கடினமான பாபஸம்பந்தத்தினின்றும்

விடுபடுகிருன். ஒருவருடைய க்ருஹத்திலிருந்து அதிதி மரியாதை கிடைக்காமையால் அவநம்பிக்கையுடன் போய்விட்டாளுல் அந்த க்ருஹஸ்தனுடைய ஸஞ்சித புண்ணியங்களிலிருந்து அவனும் வெளியேறி விடுகிருன்.

ஒன்றும் முடியவில்லையாளுலும் வந்த அதிதியை ஸந்தோஷப் படுத்த இனிமையான வார்த்தையைச் சொல்வது, அவருக்குப் படுப்பதற்கு இடமும், பாயுமாவது அளிப்பது, குடிப்பதற்குத் தண்ணீர் கொடுப்பது, இவைகளையாவது அவசியம் செய்ய வேண்டும். க்ருஹஸ்தன் ஒரு பொழுதும் பரான்னம் சாப்பிடக் கூடாது. அப்படிச் சாப்பிட்டாளுல் அன்ன தாதாவின் பசுவாகப் பிறக்கிருன். ஏனென்ருல் இந்தப் பரான்ன போஜனத்தின் புண்ணியத்தை அந்த அன்ன தாதா பெறுகிருன். ஸூர்யாஸ்த மனம் ஆனபிறக ஒரு அதிதி வந்தாராளுல் அவருக்கு ச்ரத்தையுடன் மரியாதை செய்ய வேண்டும். அப்படி அவருக்கு மரியாதை செய்யாமல் அயலிடம் போவாரேயாகில் அந்தப் பாபம் க்ருஹஸ்தரைச் சாரும்.

(ஒரு க்ருஹஸ்தன் அதிதிக்கு போஜனம் அளித்துவிட்டுப் பின்தான் உண்ணவேண்டும். அவன் இந்த உலகத்தில் தீர்க்காயுள் பெற்றுத் தனவாளுகிருன்.) ஒருவன் அதிதியை விலக்கிவிட்டு அன்னத்தை உண்பாளுல் அவன் பாபத்தால் பீடிக்கப்படுகிருன். வைச்வதேவ பலிக்குப் பின் அல்லது (மாலைநேரம் ஒருவர் வந்தால் அவர் அதிதி என்று அழைக்கப்படுகிருர். )அதற்கு முன்னுலேயே ஒருவர் வந்தாலும், அல்லது முதலாவதாகக் காணப்பட்டாலும் அவர் அதிதியாக மாட்டார்.

ப்ராம்மணன் பலி பாத்ரத்தைக் கையில் எடுத்தவுடன் மற்ருெரு அதிதி வந்தால் அந்த பலியைக்

கொடுக்காமலேயே அந்த அதிதிக்கே யதாசக்தி அன்னம் அளிக்க வேண்டும். புதிதாக விவாகம் ஆகி வந்த மருமகள், பெண், பாலகன், கர்ப்பிணி, அதிகம் நோயால் வருந்துகிறவர்கள் இவர்களுக்கு அதிதிக்கு முன்னாலேயே உணவு அளிக்க வேண்டும். இதைப் பற்றிச் சற்றும் யோசிக்க வேண்டியதில்லை.

க்ருஹஸ்தர், பித்ருக்கள், தேவர்கள், மனிதர்கள் இவர்களுகளுக்குப் போஜனம் அளித்துவிட்டுப் பின்னால் உண்ணும் மனிதர் அம்ருதமே சாப்பிடுகிறவன் என்று அர்த்தம். எவன் தனக்காகவே வயிற்றை நிரப்ப உணவு சமைத்துச் சாப்பிட்டால் அவன் பாபத்தையே உண்பதாக அர்த்தம். க்ருஹஸ்தர் மத்யான்ன காலத்தின் வைச்வ தேவத்தைத் தானே செய்ய வேண்டும். ஆனால் மாலை நேரத்து வைச்வதேவ பலி அவருடைய பத்னி சமைத்த உணவுகளால் மந்திரமில்லாமலேயே பலியைக் கொடுக்கலாம்.

க்ருஹஸ்தாச்ரமத்தில் இதன் பெயர் ஸாயந்தன வைச்வ தேவம் என்பது ஆகும். இதைப் போல ஸாயங்காலமும், காலை வேளையிலும் இடும் பலிக்கும் பெயர் வைச்வதேவம் என்பது. ப்ராம்மணர்கள் பூணூல் உள்ளவர்கள் வைச்வதேவமும், அதிதி ஸத்காரமும் செய்யவில்லையென்றால் அவர்கள் வேதம் படித்திருந்த போதிலும் அவனை சூத்திரன் என்றே எண்ணவேண்டும்.

இரு பிறப்பாளர் வைச்வ தேவம் செய்யாமலேயே உண்பானானால் இந்த உலகிலேயே அன்னமில்லாமல் தவித்து இறந்தபின் காகயோனியில் பிறப்பான். ப்ராம்மணோத்தமன் சோம்பலில்லாமல் தினந்தோறும் வேதத்தில் கூறியியிருக்கிறபடி கர்மங்களைச் செய்துவர வேண்டும். ஏனென்றால் முடிந்தவரைக்கும் அவைகளைச் செய்து வருவதினால் அதி உத்தம கதியை அடைகிறான்.

ஷஷ்டியன்று எண்ணெயிலும், அஷ்டமியன்று மாம்ஸத்திலும், சதுர்தசியன்று கர்மத்திலும், அமாவாஸை, பௌர்ணமி திதிகளில் பாபம் நியமமாக இருக்கிறது. உதயத்திலும் அஸ்தமன வேளையிலும் ஆகாசத்தின் மத்ய பாகத்தை அடைந்த ராகுவினுல் விழுங்கப்பட்டதும், ஜலத்தில் ப்ரதி பிம்பிப்பதும் ஆன ஸுர்ய பிம்பத்தைப் பார்க்கக் கூடாது. அடிக்கடி அல்லது ஜலத்திலே தன் உருவத்தைப் பார்க்கக் கூடாது. கன்றின் கயிற்றைத் தாண்டக் கூடாது.

நக்னமாக (வஸ்த்ரமில்லாமல்) ஜலத்தில் அமரக்கூடாது, தேவதைகளுடைய கோவில், ப்ராம்மணன், பசு, மது, மண்மேடு, நெய், உயர் குலத்தோர், வயதில் பெரியவர், பெரிய வித்வான் இருக்குமிடத்தில் வலது பக்கமாகப் போக வேண்டும். ரஜஸ்வலேஸ்த்ரீயுடன் சேரக்கூடாது. பார்யையுடன் ஒரே பாத்திரத்தில் புசிக்கக் கூடாது.

ஒரே வஸ்திரத்தைத் தரிக்கக் கூடாது. ஒரே பீடத்தில் அமர்ந்து உண்ணக்கூடாது. (தேஜஸ்ஸை விரும்பும் ப்ராம்மணன் உண்ணும் ஸ்த்ரீயை ஒருபொழுதும் பார்க்கக்கூடாது.) வெகுதினம் வாழ விரும்பினுல் ஒருவன் புது அன்னம், பக்வான்னம், இவைகளே தேவதைகளுக்கு அளிக்காமல் சாப்பிடக்கூடாது. கோசாலே, கறையான்புற்று, பஸ்மம், ஜீவராசிகள் வாழும் பொந்துகள், இவைகளில் நின்றுகொண்டோ, நடந்து கொண்டோ சிறுநீர் கழிக்கக்கூடாது; பசு, ப்ராம்மணன், சூரியன், வாயு, அக்னி, சந்திரன், நக்ஷத்ர கூட்டம், ஜலம் பெரியவர்கள் இவைகளேப் பார்த்துக்கொண்டு மலமூத்ரம் கழிக்கக்கூடாது.

செங்கல், மரம், புற்கள் இவைகளால் பூமியை மூடிவிட்டு வஸ்திரத்தால் தலேயை மூடிக்கொண்டு, மௌனமாக மலமூத்ரம் கழிக்க வேண்டும். ராத்ரி

காலத்தில், பகலில் கூடத்தான் எங்கு நிழல் இருக்கிறதோ, அந்த இடங்களில், பயப்படும் இடங்களில், மிகவும் நோயில் வருந்தும்போது, இச்சமயங்களில் எந்த திசை வேண்டுமானாலும் நோக்கிக் கொண்டு மலமூத்ரம் கழிக்கலாம். அக்னியை வாயால் ஊதக்கூடாது, அக்னியில் அசுத்த வஸ்துகளைப் போடக்கூடாது. நிர்வாண ஸ்த்ரீயைப் பார்க்கக்கூடாது. அக்னியில் இரண்டு கால்களையும் வாட்டிக்கக் கூடாது. உயிர்வதை செய்யக் கூடாது. (இரு சந்திகளிலும் உண்ணக் கூடாது:)

ஸந்த்யா காலத்தில் தூங்கக் கூடாது; மேற்கு திக்கில் தலைவைத்துத் தூங்கக் கூடாது. தீர்க்காயுளை விரும்புகிறவன் ஜலத்தில் மலம், மூத்திரம், எச்சில் இவைகளைக் கழிக்கக் கூடாது. கன்றிற்குப் பால் கொடுக்கும் பசுவைப் பற்றி ஒருவரிடமும் சொல்லக்கூடாது. இந்த்ர தனுஸ்ஸை ஒருவருக்கும் காட்டக் கூடாது. சூன்யமான இடத்தில் தனியாகத் தூங்கக் கூடாது. தூங்குகிற ஜனங்களை எழுப்பக் கூடாது.

தனியாய் வழி நடக்கக் கூடாது, கைகளைக் குவித்து ஜலம் குடிக்கக் கூடாது; பகலில் ரஸமில்லாத, சத்து நீங்கிய பொருள்களை உண்ணக் கூடாது. இரவில் தயிர் சாப்பிடக் கூடாது. மாதவிடாய் ஆன பெண்ணிடம் பேசக்கூடாது. இரவில் வயிறு நிரம்ப உண்ணக்கூடாது. நாட்டியம், கீதம், வாத்யம் இவைகளில் மிகவும் ஆழக்கூடாது பித்தளைப் பாத்திரங்களில் கால் அலம்பக்கூடாது.

அறிவில்லாதவன் ஸ்ராத்தம் பண்ணிவிட்டு மற்றொரு இடத்தில் நிமந்த்ரணம் சாப்பிடக் கூடாது. அப்படிச் சாப்பிடுகிறவன் பாபத்தையே புஜிக்கிறான். ச்ராத்தம் செய்கிறவனுக்கும் ஸ்ராத்த பலன் கிடையாது. மற்றவர்கள் காலணியை அணியக்கூடாது. உடைசல் பாத்திரத்தில் சாப்பிடக் கூடாது. அக்னி

*முதலியவைகளினுல் அசுத்தப்படுத்தப்பட்ட இடத்தில் உட்காரக் கூடாது.*

*காளேயின் மீது ஏறக்கூடாது. சிதாபஸ்மத்தை அணியக் கூடாது. சிதையைக் கலேக்கக்கூடாது. ''நாஹூப்யாம் நதீம்தரேத்'' பிரேதத்தைப் பிடித்துக் கொண்டு அக்கரைக்கு ஏறக்கூடாது. காலே வெயில், மத்யான தூக்கம் இவைகளே தீர்க்காயுள் வேண்டியவர்கள் தவிர்க்க வேண்டும்.*

*ஸ்ஞுனம் செய்தபின் தேஹத்தைத் தேய்த்துக் கொள்ளக் கூடாது. ஸ்ஞுன வஸ்திரத்திஞலும் தேஹத்தைத் தேய்த்துக் கொள்ளக் கூடாது. அப்படிச் செய்தால் மறுபடியும் ஸ்ஞுனம் செய்ய வேண்டும். வழியில் தலேமயிரை சுருட்டி எரியக் கூடாது. கால்களேயும், கைகளேயும், சிரத்தையும் ஆட்டக்கூடாது. காலிஞல் ஆஸனத்தை இழுக்கக்கூடாது.*

*பற்களால் மயிரையோ நகத்தையோ கடிக்கக் கூடாது. நகத்தாலே நகத்தைக் கிள்ளவோ துரும்பைக் கிள்ளவோ கூடாது. எந்தக் காரியத்தின் முடிவு நன்ருக இராதோ அந்தக் காரியத்தை விட்டுவிட வேண்டும், (தனது வீடாஞலும் சரி, பிறத்தியார் வீடாஞலும் சரி பிரதான வாசலே விட்டு வேறு வழியாகப் போகக் கூடாது.) சதுரங்கம் சூது விளேயாடக் கூடாது. (அதர்மியுடனும் ரோகியுடனும் உட்காரக் கூடாது.) நிர்வாணமாக எங்கும் படுக்கக் கூடாது. கையில் வைத்துக் கொண்டு உணவு உண்ணக்கூடாது.*

*(கைகால்கள் முகம் கழுவிக் கொண்டு வாயைக் கொப்பளித்து விட்டு உண்பவன் தீர்க்காயுளுடையவஞக இருப்பான்.) ஈரக்காலுடன் உறங்கக் கூடாது. எச்சில் வாயுடன் எங்கும் செல்லக் கூடாது. (படுக்கையில் அமர்ந்து ப்ராம்மணன் சாப்பிடக் கூடாது. ஒன்றும் பருகவும் கூடாது.*

*ஜபம் பண்ணக் கூடாது. நின்று கொண்டு தண்ணீர் குடிக்கக் கூடாது. காலணி அணிந்துகொண்டு ஜபம் செய்யக் கூடாது. புத்திசாலிகள் இரவில் எள்ளினால் செய்த பதார்த்தம் ஒருபொழுதும் உண்ணக் கூடாது. மலம் மூத்ரத்தைப் பார்க்கக் கூடாது. எச்சில் வாயுடன் தலையைத் தொடக்கூடாது.)*

*வைக்கோல், உமி, கரி, சாம்பல், கேசம், பண்டைஓடு கபாலம் இவைகளின் மீது உட்காரக் கூடாது. (நீசர்களுடன் உறவாடுபவனும் நீசனே. சூத்ரனுக்கு வேதமந்திரங்களைச் சொல்லக் கூடாது. அப்படிச் செய்தால் ப்ராம்மணன் தனது ப்ரம்மண்யத்திலிருந்தும், சூத்ரன் தன் தர்மத்திலிருந்தும் ப்ரஷ்டனாகிறான்.)*

*சூத்ரனுக்குத் தர்மோபதேசம் செய்வதால் தனது நலனுக்கே தீங்கிழைத்துக் கொண்டதாகும். ஏன் என்றால் சூத்ரனுடைய பரம தர்மம் ப்ராம்மணனுக்கு ஸேவை செய்வது என்று வேதம் கூறுகிறது. (இரண்டு கைகளாலும் தலை சொறிந்து கொள்வது, அடித்துக் கொள்வது, கூச்சலிடுவது, பிய்த்துக் கொள்வது இதெல்லாம் நல்லதல்ல.)*

*லோபத்தினால் சாஸ்த்ரத்துக்கு எதிராக நடக்கும் ராஜாவிடம் இருந்து தானம் வாங்கும் ப்ராம்மணன் இருபத்தியோரு தலைமுறை நரகத்தில் வஸிக்கிறான். வேத வேதாந்தங்களில் இதெல்லாம் கூறியிருக்கிறது. மழையில்லாமல் மேகம் கர்ஜித்தால், மழையில் தூளிகிளம்பினால், இரவு ஹோ ஹோ என்று காற்று இரைந்தால். பனிக்கட்டி மழை பெய்தாலும், மின்னல், வால் நக்ஷத்ரம் விழுந்தால், பூகம்பம் ஏற்பட்டால், தீ பிடித்தால், பாதி இரவு நேரம், இரு ஸந்திகள், சூத்ரனின் ஸமீபம்,*

*அரசனின் தீண்டல், சீதக தினம், சந்த்ர ஸூர்ய*

க்ருஹணம், ப்ரதமை, அஷ்டமி சதுர்தசி, அமாவாஸ்யை, பௌர்ணமி, ச்ராத்தத்தின் நிமந்த்ரணம் ஏற்றுக் கொண்டு, யானை ஒட்டகைக்கு மத்தியில் போக வந்தால், கழுதை ஒட்டகை, நரி கத்தும் போது, எல்லோரும் சேர்ந்து அழும்போது, உபாகர்மத்தின் போது, வேதம் ஆரம்பத்திலும் முடிவிலும் தோணியில் வழியில், மரத்தில், ஜலத்தில், ஆரண்யபாகம், ஸாமவேதம், பாணத்தின் த்வனி கேட்கும் இடத்தில் இந்த எல்லா அனர்த்தமான ஸமயங்களிலும் ப்ராம்மணன் அத்யயனம் செய்யக் கூடாது.

குரு சிஷ்யர்களின் நடுவில், தவளை, மூஞ்சூறு, ஸர்பம், கீரி இவைகள் நடுவில் வந்தால் பின் படிக்கக் கூடாது. சதுர்தசி, அமாவாஸ்யை, பௌர்ணமி திதிகளில் ப்ரம்மசர்யம் அநுஷ்டிக்க வேண்டும். பரஸ்தரீகமனம் ஆயுள்நாசகம். அதைத் தூர இருந்தே விலக்க வேண்டும். சத்ருவுக்கு உதவலாகாது. முன்னோர்களுடைய ஸம்பத்து அழிந்து விட்டதென்று தன்னை நிந்தித்து கொள்ளாதீர்கள். ஏன் என்றால் முயற்சியுடைய புருஷனுக்கு ஸம்பத்து வித்தை இரண்டும் அடைவது கஷ்ட ஸாத்யமல்ல.

ஹே கும்பமுனியே! உண்மையே பேசவேண்டும், அதுவும் ப்ரியமான உண்மையே பேச வேண்டும். உண்மை அப்ரியமாக இருந்தால் அதைக் கூறக்கூடாது. எப்பொழுதும் நல்லவனாகவே இருக்க வேண்டும். (இந்த உலகத்தில் நல்லவர்களுடனேயே உறவு வைத்துக் கொள்ள வேண்டும், நீசர்களுடன் ஒரு பொழுதும் ஸம்பந்தம் வைத்துக் கொள்ளக் கூடாது.)

அறிவாளிகள் தன்னைவிட ரூபத்திலோ, குலத்திலோ, தாழ்ந்தவர்களைக் கண்டால் ஒரு பொழுதும் அவர்களை அவமானப்படுத்தக் கூடாது. அசுத்தமாகிஇருந்தால் சந்திர, சூரிய, நக்ஷத்ரங்களைப் பார்க்கக் கூடாது. வார்த்தைகளின் வேகத்தையும், மனத்தினுடைய வேகத்தையும், நாக்கின்

வேகத்தையும் கட்டுப்படுத்தல் வேண்டும். லஞ்சம், சூது, தரகு, துக்கித்த ஜனங்களுடைய திரவ்யம் இவைகளை தள்ளியிருந்தே விலக்கிவிடு.

பசு, ப்ராம்மணன், அக்னி இவைகளை எச்சில் கையினுல் தொட வேண்டாம். அவசியமில்லாமல் அகாரணமாகத் தன்னுடைய இந்த்ரியங்களைக் கூடத் தொடவேண்டாம். மர்மஸ்தானத்தின் ரோமங்களைத் தொட்டால் கூட அபவித்ரவான் ஆவான். கால் கழுவிய ஜலம், சிறுநீர், கபம், துப்பல், எச்சில் அன்னம் இவைகளை வீட்டில் இருந்து மிகவும் தள்ளி எறிய வேண்டும். ப்ராம்மணன் பகலும் இரவும் வேதத்தை ஜபித்துக் கொண்டு சௌசம் ஆசாரம் இவைகளைக் கைவிடாமல் ஒருவருக்கும் த்ரோகம் நினைக்காமல் இருப்பானுனுல் அவன் தனது புத்தியினுல் பூர்வ ஜன்மத்தை அறிகிறுன்.

(வயோதிகர்களை ச்ரத்தையுடன் வணங்க வேண்டும். அவர்களுக்குத் தனது ஆசனத்தைக் கொடுத்து அமரச் செய்து நாம் விநயத்தோடு கீழே அமர வேண்டும். அவர் எழுந்து போகும்போது அவருக்குப் பின்னுல் போக வேண்டும்.) வேதம், ப்ராம்மணன், தேவதைகள், ஸாது, அரசன், தபஸ்வி, ஸந்யாஸி, பதிவ்ருதாஸ்த்ரீ இவர்களை ஒரு பொழுதும் நிந்திக்கக் கூடாது.

ஒருவரையும் முகஸ்துதி செய்யக் கூடாது. தன்னை அவமதித்துக் கொள்ளக் கூடாது. கிடைத்த பொருளைத் தியாகம் செய்யக் கூடாது. மற்றவரின் ரஹஸ்யத்தைச் சொல்லக் கூடாது.

அதர்மமான கார்யம் செய்தால் முதலாவது விருத்தி, சத்துருக்களிடமிருந்து ஜயம், நான்கு பக்கங்களிலிருந்து நன்மை கிடைக்கும். ஆனுல் முடிவில் வம்சத்துடன் அழிய வேண்டியிருக்கும். (மற்றவர்களுக்கு உரிமையான தடாகத்திலோ, குளத்திலோ ஸ்னனம் செய்ய நேரிட்டால்

அதிலிருநது ஐந்துபிடி மண் எடுத்துவிட்டு ஸ்னானம் செய்ய வேண்டும்.) இல்லையென்றால் அந்த நீர் நிலைகளை வெட்டியவர்களுடைய பாபத்தில் நான்கில் ஒருபங்கு ஸ்னானம் பண்ணியவர்களுக்கு ஏற்படும்.

தேசம், காலம், ஸத்பாத்ரம் இவைகளை அனுஸரித்து கொஞ்சமாவது சிரத்தையுடன் திரவ்யம் தானம் செய்தால் அவனுடைய பலத்திற்கு எல்லையே இல்லை. (ஒருவன் பூமிதானம் செய்தானானால்மண்டலாதிபதியாவான். அன்னதானம் செய்தானானால் ஸுகியாவான். தாஹத்துக்குத் தண்ணீர் கொடுப்பவன் எப்பொழுதும் ஸந்தோஷமாக இருப்பான். வெள்ளிதானம் செய்பவன் எப்பவும் ரூபவானாக இருப்பான்.)

தீபதானம் செய்பவன் தெளிவான பார்வையுடையவனாக இருப்பான். கோதானகர்த்தா ஸூர்ய லோகத்தில் பங்கு பெறுவான். ஸ்வர்ண தானத்தினால் சிரஞ்ஜீவியாக இருப்பான். எள்ளுதானம் செய்வதனால் நல்ல குழந்தைகளும், க்ரஹங்களும், உயர்ந்த மாளிகைக்கு யஜமானனாகவும் இருப்பான். வஸ்த்ர தானம் செய்பவன் சந்த்ரலோக வாசியாவான். குதிரை தானம் செய்வதினால் திவ்ய விமானத்தில் ஏறிச் செல்வான். வ்ருஷபதானம் செய்பவன் லக்ஷ்மீபதியாவான்.

பல்லக்கு, கட்டில் தானம் செய்தால் செழிப்புள்ளவனாவான். அழகானமனைவியடைவான். தான்யம் தானம் செய்தால் செழிப்புள்ளவனாவான். வேததானம் செய்வதனால் ப்ரம்மலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். வேத தாதா எல்லாவற்றையம் தானம் செய்தவனாக மதிக்கப்படுகிறான். மற்றொருவனைக் கொண்டு வேத தானம் செய்யச் சொன்னால் அல்லது படிக்கச் சொன்னால் அவனும் வேத தாதாவுக்கு ஸமமான பலனை அடைவான்.

ச்ரத்தையுடன் தானம் கொடுப்பவனும், வாங்குபவனுமான இருவருமே ஸ்வர்கத்தை அடைகிறுர்கள். ச்ரத்தையில்லாமல் வாங்குபவனும் கொடுப்பவனுமே மிகவும் பதிதனுகிறுர்கள். அஸத்யத்தினுல் யக்ஞமும், ஆச்சர்யத்தினுல் தபஸ்ஸுூம், வர்ணிப்பதினுல் தானமும், ப்ராம்மணர்களை தூஷிப்பதினுல் ஆயுளும் வீணுகின்றன.

சந்தனம், புஷ்பம், தர்ப்பை, காய்கறி, படுக்கை, மாம்ஸம், பால், தயிர், மணி, மீன், க்ருஹம், தான்யம் இவைகள் எவரிடமிருந்து கிடைத்தாலும் வாங்கிக் கொள்ள வேண்டும். மது, ஜலம், பழம், கிழங்குகள், விறகு, அபயதக்ஷிணை இவைகளெல்லாம் கேட்காமலேயே கிடைத்தால் நீச ஜனங்களிடமிருந்து கூட வாங்கிக் கொள்ளலாம்.

சூத்திரர்கள் கூட தாஸன், நாவிதன், இடையன், குடும்ப நண்பன், உழவன் இவர்கள் பக்தர்களாக இருந்தால் இவர்கள் கொடுக்கும் அன்னத்தை போஜனம் செய்யலாம். இந்த விதமாக தேவர், ரிஷி, பித்ருக்கள் இவர்கள் கடனிலிருந்து விடுதலை பெற்று வீட்டு பாரத்தை புத்ரனிடம் ஒப்படைத்து விட்டு உதாசீனனுக வானப்ரஸ்தத்தை அனுஸரிக்க வேண்டும். வீட்டிலிருந்தாலும் கூட ஞானுப்யாஸத்தைச் செய்ய வேண்டும். அல்லது காசியை அடைய வேண்டும். ஏனென்றுல் ஸம்பூர்ண ஞானமடைந்தால்தான் முக்திலாபமடைய முடியும். ஆனுல் காசியிலேதான் முக்தியடைய முடியும். ஸம்பூர்ண ஞானம் எங்கிருந்து எப்படியடைய முடியும்? ஆனுல் காசியில் கேவலம் சரீரம் தியாகம் பண்ணுவதாலேயே முக்தி கிடைக்கிறது.

இன்றே, நாளையோ, மறுநாளோ, நூறு வருஷங்கள் கழிந்த பின்போ, ஒரு நாள் இல்லா விட்டால் சரீரம் நிச்சயமாக நம்மை விட்டு விலகிவிடும். பின் இந்த நிகழ்ச்சி

காசியிலே நடந்தால் முக்தி அனுயாஸமாகவே கிடைக்குமல்லவா? அந்தக் காசியும் எளிதாக எல்லாருக்கும் கிடைக்காது; எவன் மேற்கூறிய ஸதாசாரத்தைத் தினம் அநுஸரித்து வருகிருனே, அவனுக்குத்தான் கிடைக்கும். அதனுல் வித்வான்கள் இந்த ஸதாசாரம் என்ற உபவாஸத்தை விடுவதற்கு மனஸிலேயே இடம் கொடுக்க வேண்டாம்.

இதற்குப் பிறகு அகஸ்திய முனி இதைக் கேட்டு ஸ்வாமி கார்த்திகேயரிடம் கூறினுர்- ஸதாசாரத்தினுல் தான் காசி கிடைக்குமென்று கூறினேனே - அதை விவரமாகக் கூறுங்கள்:- ஸ்கந்தர் காசியில் எந்தெந்த லிங்கங்கள் ஞானத்தைத் தருபவர்கள் அதைக் கூறுங்கள் என்ருர்.

ஷடானனு! காசியைவிட்டு அன்னிய இடங்களில் எனக்கு ஸுகமுமில்லை. எனக்குப் ப்ரியமுமில்லை. தினம் காசி என்ற இரு அக்ஷரங்களை அம்ருதம் மாதிரி குடித்துக் கொண்டிருக்கிறேன். காசிஸ்மரணம் இல்லாமல் நான் உண்டதில்லை. தண்ணீர் பருகுவதில்லை. தூங்குவதில்லை. என்னுடைய நிலைமை மரப்பாவையைப்போல் இருக்கிறது.

அகஸ்தியர் கூறிய இந்த வசனங்களை கேட்ட பகவான் ஸ்கந்தர் அவிமுக்த க்ஷேத்ரமாகிய காசியின் மஹிமையை வர்ணிக்கத் தொடங்கினுர். இந்த விதமாக ஸ்கந்த புராணத்தில் நான்காவது கண்டமான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான க்ருஹஸ்தாசிரம தர்ம நிரூபணம் என்ற முப்பத்தெட்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 39

*ஸ்கந்தர் கூறத் தொடங்கினார்:- மஹா பாக்யவானான அகஸ்தியரே! பாப புஞ்ஜநாசினீ, முக்தி ஸம்பத்திதாயினீயான காசியின் கதையைக் கேளும்-*

*ஆஹா! எத்தனை ஆச்சர்யம்! சாஸ்திரத்தில் எதை நிஷ்ப்ரபஞ்சம், நிராத்மகம், நிராகாரம், அவ்யக்தம், காரியகாரணரூபம், பரப்ரம்மம் என்று எதைக் கூறுகிறார்களோ, அது எங்கும் நிறைந்திருந்த போதிலும் அதே இந்த க்ஷேத்ரத்தில் மூர்த்தீகரித்து இருக்கிறது. அப்படி எங்கும் நிறைந்திருக்கும் ஒரு வஸ்து வேறு இடங்களிலும், பவபந்தனத்திலிருந்து முக்தி கொடுக்க ஸாமர்த்தியம் இல்லாமல் இருக்கிறதா? அப்படியில்லை.*

*அது இங்கேதான் ஸ்திரமுக்தி கொடுக்கிறது என்றால் அதன் காரணத்தைக் கேளுங்கள். மற்ற இடங்களில் பரப்ரம்ம பகவானான சிவன் மஹாயோகம், நிஷ்காம்ய மஹாதானம், அல்லது மஹா தபஸ்ஸின் மூலமாகத்தான் முக்தியளிக்கிறார். ஆனால் அவர் இந்தக் காசியில் அவர் யோகத்தையோ, தபஸ்ஸையோ எதிர்பார்க்கவில்லை. மிகப் பெரிய, பெரிய ஆபத்து வந்த போதிலும்கூட ஒருவர் காசியை விடாமல் இருந்தால் அதுவே மஹாயோகம். இங்கு மற்றவையெல்லாம் ப்ரதான யோகமல்ல. (நியமத்துடன் கூட நிர்மல உள்ளத்துடன் கூட விஸ்வநாதர் மேல் பத்ரம், புஷ்பம், பலம், ஜலம் எதை நாம் ஸமர்ப்பிக்கிறோமோ அதுவே மஹாதானம்.) (பவித்ரமான கங்கா ஜலத்தில் ஸ்னானம் செய்து முக்தி மண்டபத்தில் க்ஷண நேரமாவது உட்கார்ந்தாலே அதுவே மஹா தபஸ்.) (காசீ க்ஷேத்ரத்தில் மரியாதையுடன் ஒரு பிக்ஷுவிற்கு அளிக்கும் அன்னம், பதினாறு கலைகளுடன் கூட துலா புருஷதானம் செய்தாலும் கூடக் கிடையாது.)*

*(ஹ்ருதயத்தில் விஸ்வேஸ்வரரைத் தியானம் செய்து கொண்டு பகவானுக்குத் தென்பக்கத்தில் ஒரு நிமிஷ நேரம் கண்ணை மூடிக் கொண்டிருந்தால் அதுவே ஸர்வோத்தம*

*மஹாயோகம்.) (பசி தாஹத்தைக் கொஞ்சம்கூட நினைக்காமல், இந்த்ரியத்தின் சஞ்சலத்தையடக்கிக் காசியில் வஸிப்பதே கோர தபஸ். மற்ற இடங்களில் ஒவ்வொரு மாதமும் சாந்த்ராயண வ்ருதம் இருந்தால் என்ன பலனோ, அதே பலன் இங்கு சதுர்தசி திதியன்று பகல் உபவாஸம் இருந்து இரவில் போஜனம் செய்தால் கிடைக்கும்.)*

*(மற்ற இடங்களில் ஒரு மாதம் உபவாஸம் இருந்தால் என்ன பலனோ, அதே பலன் கேவலம் காசியில் ஒரே தினம் உபவாஸம் இருந்தால், ஸந்தேஹம் இல்லாமல் கிடைக்கிறது.) வேறு இடங்களில் சாதுர்மாஸ்ய விரதத்திற்கு மகத்தான என்ன பலன் சொல்லப் படுகிறதோ அது இந்தக் காசியில் ஏகாதசி வ்ரதம் ஒன்றிலேயே கிடைக்கிறது. ஆறுமாதம் வரைக்கும் அன்னத்தைத் தியாகம் செய்வதினால் வேறு இடங்களில் என்ன பலன் கிடைக்கிறதோ அதே பலன் காசியில் ஒரு சிவராத்ரி வ்ரதத்தால் கிடைக்கிறது.*

*வ்ரதம் இருப்பவர்கள் வேறு இடங்களில் (உபவாஸமிருந்து ஒரு வருஷ பரியந்தம் என்ன பலன் கிடைக்கிறதோ அதே பலன் இங்கு (காசியில்) மூன்று நாட்கள் உபவாஸம் இருப்பதினால் கிடைக்கிறது. ஏ முனியே! எது வரைக்கும் சொல்வேன்! அந்திய ஸ்தலங்களில் தர்பையின் நுனியிலிருந்து விழும் ஜலத்தை ஒரு சொட்டு பானம் பண்ணி விரதம் இருப்பதினால் என்ன பலன் உண்டாகிறதோ, அது காசியில் உத்தர வாஹினியான கங்கையில் ஒருகை பானம் பண்ணினால் கிடைக்கும். காசியின் மஹிமையை யாரால் அறிய முடியும்? இங்கு பகவான் சிவன் தானே வந்து, மரணத்தை விரும்பும் ஜனங்களுக்கு (ஜந்துக்களுக்கு) மந்திர உபதேசம் செய்கிறார்.*

*ஆஹா! மரித்துக் கொண்டிருக்கும் பிராணியிடம் பகவான் சம்பு எந்த அக்ஷரத்தைக் கேட்டவுடனேயே*

அம்ருத பதவியைத் தருகிருனே அந்தப் பதத்தை முக்தியடைந்த ஜீவன் அடைகிருன். மந்த்ரா சலத்திற்குச் சென்று மன்மதனை எரித்தவரான சிவன் திரும்பத் திரும்பத் தன்னுடைய காசீபுரியை நினைத்துக் கொண்டு உம்மைப் போலவே திரும்பவும் நமக்குக் காசி கிடைக்குமோவென்று புலம்பித் தவித்தார்.

அகஸ்தியர் கூறுவார்:- ஸ்வாமி! என்னைத் தங்கள் காரியஸித்திக்காக தேவதைகள் பலவந்தமாகக் காசியை விடும்படிச் செய்தார்கள். ஆனால் பரம ஸமர்த்தரான சிவன் ஏன் அதை விட்டார்? என்னைப் போல் பினுகபாணி மஹாதேவரும் பராதீனரா? இல்லையென்றால் முக்தி மணிராசியான காசியை அவர் ஏன் விட்டார்?

ஸ்கந்தர் கூறினுர்:- ஹே மித்ரா! வருணனுடைய புத்திரரே, முனியே! தேவதைகளுடைய பிரார்த்தனைக் கிணங்கி தாங்கள் பரோபகார்த்தத்துக்காகக் காசியை விட்டீர். அதுபோல் தன்னைக் காப்பாற்றிக் கொள்வதில் சதுரரான ப்ரம்மாவினுடைய ப்ரார்த்தனைக் கிணங்கி மஹாதேவரும் காசியை விட நேர்ந்தது. அந்தக் கதையைக் கூறுகிறேன். கேளும். அகஸ்தியர் வினவினுர்: ப்ரம்மா தயா ஸாகரரான ருத்ரரிடம் எதைக் குறித்து ப்ரார்த்தனை செய்தார்? அதை எனக்குக் கூறுங்கள் என்ருர்.

ஸ்கந்தர் கூறினுர்:- விப்ரேந்திரரே! கடந்த பாத்ம கல்பத்தில் ஸ்வாயம்பு மன்வந்திரத்தில் எட்டு வருஷத்துக்கு ஸர்வ லோகமும் பயந்து நடுங்கும்படி மழை இல்லாமல் ஏற்பட்டது. அதனுல் ப்ராணிகள் மிகவும் அல்லல் பட்டன. அப்பொழுது சிலர் கடற்கரையிலும், சிலர் பர்வதங்களின் குகைகளிலும் வேறு சிலர் கீழே ஜலம் இருக்கும் இடம் தேடியும் முனி வ்ருத்தியினுல் தினத்தைக் கழித்துக் கொண்டிருந்தார்கள். ஸமஸ்தநகர, கிராமங்கள் ஜனசூன்யமாகப் போய் காடுகள் மண்டிக் கிடந்தன.

பூரண நகரங்களிலும் கிராமங்களிலும் ஜனங்கள் மாம்ஸம் புஜிக்கத் தொடங்கினுர்கள். பூமி பூராவும்

ஆகாசத்தைத் தொடும் பெரிய பெரிய வ்ருக்ஷங்களே காணப்பட்டன இங்கு மங்குமிருந்து கொள்ளைக் கூட்டத்தார் வந்து திருடர்களையே கொள்ளையடிக்கத் தொடங்கினார்கள். ப்ராணனைக் காப்பாற்றிக் கொள்ள ஜனங்கள் மாம்ஸத்தையே ஜீவனோபாயமாகக் கருதினார்கள்.

அச்சமயம் அராஜகம் பரவி அநிஷ்டங்கள் விளைய ஆரம்பித்தது கண்டு ஸ்ருஷ்டி கர்த்தா ப்ரும்மாவிற்குத்தான் இனி மேலும் ச்ருஷ்டிப்பதே வ்யர்த்தம் என்று தோன்ற ஆரம்பித்தது. அப்பொழுது ப்ரம்மா பிராணிகள் அழிவதைக் கண்டு கவலையடைந்தார். இந்த ப்ரஜைகள் அழிந்தால் யாகம் முதலியவை அழியும்.

யக்ஞக்ரியைகள் உலகில் நடக்கவில்லையானால் ஹவிப்பாகம் புஜிக்கும் தேவதைகளும் க்ஷீணித்து விடுவார்கள். ஸ்ருஷ்டிகர்த்தா இவ்வாறு யோசித்துக் கொண்டிருக்கும் போது இச்சமயத்தில் ராஜரிஷிகளில் உயர்ந்தவரும், வீரரும், க்ஷத்ரிய தர்மமே உடல் கொண்டு வந்ததோ என்று எண்ணுமாறு உதித்தவரும், மனுவம்சத்தில் பிறந்தவருமான பரம உத்தமரான ப்ரஸித்த அரசன் ரிபுஞ்ஜயன் என்பவர் அவிமுக்த மஹா க்ஷேத்திரத்தில் நிச்சய இந்த்ரியங்களுடன் தபஸ் செய்து மிகவும் கௌரவத்துடன் கீழ்க் கண்டவாறு கூறினார்; ஹே! மகாமதே, ராஜன், ரிபும்ஜயரே, இந்த ஸமுத்ரம், பர்வதம் காடுகள், இவைகளால் அலங்காரமாகக் காணப்பட்ட பூமண்டலத்தை ஆள்வாயாக.

ஹே! பூபால! நாகராஜன் வாஸுகி தனது நற்குண பூஷிதையான அனங்க மோகினி என்னும் நாகக்கன்னிகையை உனக்கு மனைவியாக அளிப்பான். ஹே அரசே! ஸ்வர்கத்து ஜனங்கள் கூட உம்முடைய அரசாட்சியினால் ஸந்தோஷமடைந்து ஒவ்வொரு நிமிஷமும் புஷ்பமும் மணிகளும் வர்ஷிப்பார்கள். இதனால் உமக்கு 'திவோதாஸ்' என்ற பெயர் ப்ரஸித்தமாக

விளங்கும். ஹே நரபால! என்னுடைய அனுக்ரஹத்திஞல் உமக்கு திவ்ய புத்தி ஏற்படும்; என்ருர்.

அதன் பிறகு அந்த ராஜோத்தமன் ப்ரம்மதேவருடைய வசனத்தைக் கேட்டு அவரை மிகவும் ஸ்துதித்துவிட்டுக் கூறிஞர். அரசன் கூறுவார்: ஓ மஹா ப்ராம்மணு! பிதாமஹரே, இந்த ஜனங்கள் நெருங்கியிருக்கும் பூமியில் வேறே ஒரு அரசர்களும் இல்லேயா? பின் ஏன் நீர் இவ்வாறு கூறுகிறீர்!

ப்ரும்மா கூறுவார்:- ராஜன்! நீர் அரசு புரிந்தால் தேவர்கள் மழை பொழியச் செய்வார்கள்.அரசர்கள் பாபிகளாக இருந்தால் அங்கு மழை பொழியாது. ராஜா திரும்பவும் கூறுவார். மூவுலங்களேயும் ஸ்ருஷ்டிப்பதில் ஸமர்த்தரே! மகாமான்யரே! பிதாமஹரே! இது தாங்கள் எனக்குச் செய்யும் மகா அனுக்ரகம் ஆகும். தங்களுடைய இந்த ஆக்ஞையை சிரஸால் தாங்குகிறேன்.

ஆஞல் நான் தங்களிடம் ஒரு விஷயத்திற்காகப் ப்ராத்திக்கிறேன். நீங்கள் அந்தக் காரியத்தை நிறைவேற்றிஞல் நாதன் இடையூறில்லாமல் ராஜ்யத்தைப் பரிபாலனம் செய்வேன். பார்த்திவ, நீர் மனதில் நிஜேத்துக் கொண்டிருக்கும் விஷயத்தை சீக்கிரமாகக் கூறவும். ஏ மஹாபாகா! அந்தக் காரியம் இப்பொழுதே நிறைவேறி விட்டதாக எண்ணிக் கொள்ளவும். உமக்குக் கொடுக்கக் கூடாதது ஒன்றும் என்னிடம் இல்லே.

ஹே! ஸர்வலோக பிதாமஹரே! நான் இந்த பூதலத்தின் அரசஞக இருக்க வேண்டுமாஞல் தேவர்கள் ஸ்வர்கத்திலேயே இருக்க வேண்டும், பூமிக்கே வரக்கூடாது. ஏனென்ருல் தேவதைகள் ஸ்வர்க்கத்திலேயும், நான் ராஜ்யத்திலேயும் இருந்தால் தான் ராஜ்யபாரம் இடையூறில்லாமல் வசிக்க முடியும். அதஞல் ஜனங்களுக்கு ஸுகம் கிடைக்கும்.

ப்ரம்மா அரசனிடம் அப்படியே ஆகட்டும் என்று கூறிஞர். அரசனும் முரசு அறைந்து விளம்பரப் படுத்திஞர்.

'என் அதிகாரம் செல்லும் பொழுது தேவதைகள் ஸ்வர்க்கத்திலேயே தான் இருக்க வேண்டும், நாக கணங்கள் இங்கு வரக்கூடாது; இன்றிலிருந்து மனிதர்கள் ஸௌக்யமாக வாழ வேண்டியது.

இதற்குப் பிறகு ப்ரும்மா விஸ்வேஸ்வரருக்கு வணக்கம் தெரிவித்து இந்தக் காரியத்தைச் சொல்ல விரும்பிஞரோ இல்லேயோ, பகவான் விஸ்வேஸ்வரரே ப்ரம்மாவிடம் கூறிஞர்:- வாருமய்யா லோகநாதரே! மந்த்ரம் என்னும் ஒரு பர்வதம் குசத்வீபத்திலிருந்து இங்கு வந்து கோரமான தபஸ்செய்து கொண்டிருக்கிறது. அது தபஸ் செய்யத் தொடங்கி வெகு நாட்களாகிவிட்டன. ஆதலால் வாரும், நாம் அதற்கு வரம் அளித்துவிட்டு வருவோம், என்று கூறி பார்வதி நாதன், நந்தி, ப்ருங்கி இவர்களேயும் முன்னிட்டு கொண்டு ரிஷபத்தின் மீது ஏறிக்கொண்டு மந்த்ராசலத்தில் தபஸ் பண்ணிக் கொண்டிருக்கும் இடத்திற்கு வந்தார். அங்கு வந்து தேவாதிதேவர் வ்ருஷபத்வஜர் ஸந்தோஷமனத்தினராய் கூறிஞர்-

ஹே! பர்வதஸ்ரேஷ்டா! எழுந்திரு, எழுந்திரு, உனக்கு மங்களம் உண்டாகட்டும், வரம் கேள் என்று கூறினவுடனேயே அந்த பர்வதம் 'தேவதேவர் திரிலோசன மஹேஸ்வரரை அநேகம் தடவைகள் பூமியில் விழுந்து வணங்கிவிட்டு பிரார்த்தனே செய்யத் தொடங்கினது. ஹே! லீலா விக்ரகதாரகா! ப்ரணதஜன கிருபாநிதே! சம்போ! தாங்கள் ஸர்வக்ஞராக இருந்தும் கூட என்னுடைய மஞேரதத்தை ஏன் அறிந்து கொள்ளவில்லே? ஹே! சரணுகதரக்ஷகா, தாங்கள் எல்லா விஷயங்களேயும் அறிவீர்கள்.

தாங்கள் ஸர்வாந்தர்யாமி, ஸர்வ வியாபி, ஸர்வகர்த்தா, ஸர்வமும் நீரே, ஹே! பிரணதார்த்தி பஞ்ஜகா, இந்த ஸ்வபாவத்தில் கடினமானவனும், கல் சரீரத்தையுடையவனும், மிகவும் கவலேயுடையவனும்

ஆன எனக்கு வரம் கொடுக்க விரும்புகிறீர்களானுல் நான் அவிமுக்த க்ஷேத்ரத்திற்கு ஸமானமாக ஆக விரும்புகிறேன்.

ஹேநாதா! குசத்வீபத்தில் என்னுடைய தலைக்குமேல் பார்வதியுடனும், பரிவாரத்துடனும் தாங்கள் இன்றிலிருந்து வசிக்க வேண்டும். இவ்வரங்களை நான் விரும்புகிறேன் என்றுர்.இதைக்கேட்டு யாவருக்கும் ஸர்வாபீஷ்டங்களும் அருளும் தாதாவான பகவான்சம்பு அப்படியே சற்று நேரம் யோசிக்கத் தொடங்கினுர். இதுதான் சமயம் என்றிருந்த ப்ரம்மா, முன்வந்து வணக்கத்துடன் சிரஸ்ஸின் மேல் இரு கரங்களையும் குவித்துக் கொண்டு விண்ணப்பித்துக் கொள்ளத் தொடங்கினுர்.

ப்ரம்மா கூறினுர்: ஹே! மூன்று உலகங்களுக்கும் நாதரே! ப்ரபோ! விஸ்வேஸ்வரா! தாங்களே சந்தோஷடமடைந்து என்னை நான்குவித ஸ்ருஷ்டியும் செய்யும்படி ஆக்ஞையிட்டருளியிருக்கிறீர். நானும் தங்கள் ஆக்ஞைபடிக்கு முயற்சியுடன் அந்த சிருஷ்டிச்காரியங்களை சரிவரச் செய்து வருகிறேன். ஆனுல் பூவுலகில் எட்டு வருஷங்களாக ஜனங்கள் மழையில்லாமல் நஷ்டமடைநது வருகிறுர்கள்.

மிகவும் கடுமையான அராஜகம் பரவிவிட்டது. உலகமே முழுவதும் கோர துக்கத்தில் மூழ்கியுள்ளது. இதைப் பார்த்து விட்டு நான் மனுவம்சத்தில் உதித்த மிகவும் சிறந்த ராஜரிஷியான ரிபுஞ்ஜயன் என்னும் பெயருடைய நராதிபனை ப்ரஜைகளைப் பரிபாலனம் செய்யும் பொருட்டு ராஜ்யாபிஷேகம் செய்துவிட்டேன். ஆனுல் அந்தப் பரம தபஸ்விதான் அரசனுக இருப்பதற்கு என்னிடமிருந்து ஒரு பிரதிக்ஞை கேட்டு வாங்கிக் கொண்டான்.

அதாவது, அவன் அரசனுக இருக்க வேண்டுமானுல் தேவ கணங்கள் ஸ்வர்க்கத்திலேயும், ஸ்வர்க்கம் நாக கணங்கள் பாதாளத்திலேயும் இருக்க வேண்டும் என்பதே.

அப்படியானுல்தான் நான் ராஜபதவி வகிப்பேன் என்முன். இல்லாவிட்டால் என்னுல் இயலாது என்முன். நானும் அப்படியே ஆகட்டும் என்று சொல்லிவிட்டேன். இப்பொழுது அந்த வரத்தை நான் காப்பாற்றியாக வேண்டும். அதனுல் ஹே! கிருபாநிதே, மந்த்ராசலத்திற்கு நீர் கொடுக்கும் வரம் இவ்விதம் இருக்கட்டும்.

அந்த அரசன் பிரஜைகளை பரிபாலிக்க வேண்டும். அவனுடைய மனேரதமும் நிறைவேற வேண்டும். சற்று யோசித்துப் பாருங்கள். என்னுடைய இரண்டு நாழிகைப் பொழுது இந்திரனுடைய வாழ்வு அவனுடைய ராஜ்யமும் நடக்க வேண்டும்.

என்னுடைய அரை நிமிஷ மாத்ரத்தில் கண்களை மூடிவிடும் ம்ருத்யுலோக ஜனங்களைப் பற்றி இங்கு என்ன சொல்வது? இதைக் கேட்டு பகவான் ஹரன் ப்ரும்மாவின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காக அழகான குகைகளால் சோபிக்கப்படும் மந்த்ராசலத்தையும், தூய்மையானது என்று கருதி அதனுடைய வேண்டுகோளையும் ஒப்புக் கொண்டார். இந்த ஜம்புத்வீபத்தில் காசி எப்படி க்ஷேமத்தைக் கொடுக்கின்றதோ, அதைப்போல,

குசத்வீபத்திலும் மந்த்ராசலம் மிக நாள்வரை மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடிய தாதாவாக ஆகிவிட்டது. பகவான் விஸ்வேஸ்வரர் எப்பொழுது விசித்ர குகைகள் நிறைந்துள்ள மந்த்ராசலத்துக்குப் போகத் தொடங்கினுரோ,

ஸாதகர்களுக்கு எல்லா ஸித்திகளையும் காசியில் மரிக்கும் ஜந்துக்களுக்கு மோக்ஷ ஸம்பத்தையும் கொடுப்பதற்காக, மேலும் அங்கிருப்பவர்களையும், க்ஷேத்ரங்களையும் ஸம்ரக்ஷணம் செய்யும் பொருட்டு மேலான ஏகலிங்கமாக ப்ரம்மாவினுடைய மூர்த்தியையும் ப்ரதிஷ்டை செய்திருந்தார். பிஞகபாணி மந்த்ராசலத்துக்குப் போன பின்பும் கூட காசி க்ஷேத்ரத்தை

விடவில்லை. லிங்கரூபமாக அங்கேயே யிருந்தார். காசியை விடாமல் இருந்த காரணத்திற்காகவே அவிமுக்தர் என்ற பேர் அவருக்கு வந்தது.

பூர்வகாலத்தில் இந்த க்ஷேத்ரத்தினுடைய பெயர் ஆனந்தவனம் என்றிருந்தது. ஆனால் இப்பொழுதிலிருந்து அவிமுக்தம் என்ற பேர் உலகத்தில் பிரசித்தமாயிற்று. இந்த விதமாக க்ஷேத்ரம், லிங்கம், இரண்டினுடைய பெயர் அவிமுக்தமாயின. இவையிரண்டையுமே பெற்ற மனிதர் பிறகு கர்வத்தை அடையமாட்டான்.

அவிமுக்த க்ஷேத்ரத்தில் அவிமுக்தேஸ்வரரைத் தரிசனம், செய்பவன் ஸமஸ்த பந்தனங்களிலிருந்தும் விடுபடுகிறான். இந்த உலகத்தில் எல்லாரும் விஸ்வேஸ்வரரைப் பூஜை செய்கிறார்கள். ஆனால் அதே விஸ்வகர்த்தாவான விஸ்வேஸ்வரர் முக்தியளிக்கவல்ல அவிமுக்தேஸ்வரரைத் தினமும் பூஜை செய்கிறார்.

பழைய காலத்தில் எங்கும் ஒருவரும் லிங்கபிரதிஷ்டை செய்ததில்லை. லிங்கத்தின் உருவம் எப்படியென்று ஒருவருக்கும் தெரியாது. அவிமுக்தேஸ்வருடைய உருவத்தைப் பார்ததுவிட்டு, ப்ரம்மா, விஷ்ணு, முதலிய தேவதைகள் வஸிஷ்டர் முதலிய ரிஷிகள் தங்கள் லிங்கத்தைப் ப்ரதிஷ்டை செய்தனர்.

உலகில் இந்த அவிமுக்தேஸ்வர லிங்கம் தான் ப்ரதமமானது. மற்றவையெல்லாம் அதன் பின் தான் ப்ரதிஷ்டையாயின. கேவலம் மனிதர்கள் இந்த அவிமுக்தேஸ்வரரின் பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே ஜனங்களின் ஜன்மந்தோறும் செய்து வைத்திருந்த பாபக் கூட்டங்களிலிருந்து விடுதலையாகின்றனர். இதில் கொஞ்சம்கூட ஸந்தேஹமில்லை.

தூர தேசத்துக்குச் சென்றிருந்த ஜனங்கள்கூட அவிமுக்தேஸ்வர லிங்கத்தை நினைத்த மாத்திரத்திலேயே

இரண்டு ஜன்மங்களில் செய்த ஸஞ்சிதபாபம் அதே க்ஷணத்தில் நசிக்கின்றன. ஒரு மனிதன் அவிமுக்த மஹா க்ஷேத்ரத்தில் அவிமுக்த லிங்கத்தை ஒரு தரம் தரிசனம் செய்தானுனல் அவனுடைய மூன்று ஜன்மங்கள் செய்த பாபங்கள் விடுபட்டு புண்ணியமயமாகிறுன். அவிமுக்தேஸ்வரரை ஸ்பர்சித்தால் அக்ஞானவசமாக ஐந்து ஜன்மத்தில் செய்த பாபங்கள் உடனே நசித்து விடுகின்றன. இதைத் தவிர வேறில்லை.

இந்த உலகத்தில் ஒரு நரன் அவிமுக்தேஸ்வர மஹாலிங்கத்தைப் பூஜை செய்தானுனல் அவனே க்ருதக்ருத்யன். அவனுக்கு மறுபடி ஜன்மமில்லை. (ஒருவன் சக்தியை அனுசரித்தும், புத்தியை அனுசரித்தும் கசசிக்ஷேத்ரத்தில் அவிமுக்தேஸ்வரரை ஸ்துதித்தும், வணங்கி பூஜை செய்தானுனல் அவன் எங்கும் ஸ்துதித்தும், வந்தித்தும் பூஜை செய்யத் தக்கவனுகிறுன்.)

இந்த ஸ்வயம் விஸ்வேஸ்வரரால் பூஜிக்கப்பட்ட, அநாதிசித்தரான அவிமுக்தேஸ்வர லிங்கம் அவிமுக்த க்ஷேத்ரத்தில் முயற்சி பூர்வமாக ஸேவிக்கத்தக்கவர். எத்தனையோ பவித்ர தீர்த்த ஸ்தானங்கள் இருக்கின்றன. அவைகளில் எத்தனையோ லிங்கங்களும் இருக்கின்றன; மாகமாசம் க்ருஷ்ண சதுர்தசியன்று உலகில் உள்ள எல்லா லிங்கங்களும் அவிமுக்தேஸ்வரரைத் தரிசிக்க வருகின்றன.

ஒருவன் இந்த அவிமுக்தேஸ்வரரின் ஸமீபத்தில் மாக கிருஷ்ண சதுர்தசியான சிவராத்ரி சமீபத்தில் மாககிருஷ்ண சதுர்தசியான சிவராத்ரியன்று அவன் கண் விழித்துக் கொண்டிருந்தானுனல் அவன் எப்பொழுதும் கண்விழித்துக் கொண்டிருக்கும் யோகி ஜனங்களுடைய கதியை அடைகிறுன். நானு தீர்த்தங்களிலுமுள்ள எல்லா லிங்கங்களும் நான்கு வித பலன்களையும் கொடுக்கக்கூடியதாக இருந்த போதிலும் மாகக்ருஷ்ண சதுர்தசியன்று அவிமுக்தேஸ்வரரை உபாஸிக்கிறுர்கள்.

ஒரு தீரபுருஷன் அவிமுக்தேஸ்வரரிடம் இருக்கும் த்ருடபக்தி ரூபமான வஜ்ராயுதத்தைத் தரித்துக் கொண்டிருந்தால் அவன் ஸஞ்சிதபாபரூபமான பர்வதங்களிடம் ஏன் பயப்பட வேண்டும்? நான்குவித பலன்களையும் கொடுப்பதற்காக உதயமான அவிமுக்தேஸ்வர மஹாலிங்கமெங்கே? பெயரைச் சொன்னவுடனேயே சிறிதளவு க்ஷயமாகிற பாபிகளுடைய பாபமலைக் கூட்டங்கள் எங்கே? விஸ்வேஸ்வரருடைய பீடமான இந்த அவிமுக்த மஹாக்ஷேத்ரமதில் அவிமுக்தேஸ்வரரைத் தரிசனம் செய்யாதவன் மிகவும் மோகாந்தகாரத்தில் மூழ்கியிருப்பவன்.

இந்த அவிமுக்தேஸ்வரரைத் தரிசனம் செய்பவரைப் பார்த்து விட்டு தண்டம் தரித்துக் கொண்டிருக்கும் யமராஜர் தூர இருந்தே இரு கைகளையும் தூக்கி நமஸ்கரிக்கிறார். அவிமுக்தேஸ்வரரைத் தரிசனமும், ஸ்பரிசனமும் செய்தவனுடைய கண்கள் தான் உண்டான பலத்தை அடைகின்றன. எந்தக் கைகள் அவரைப் பூஜை செய்து ஸ்பர்சித்தனவோ அவைகள் தான் பெற்ற பலனை அடைகின்றன.

ஒருவன் பவித்ரமாய் நியமத்துடன் மூன்று காலமும் அவிமுக்தேஸ்வரரை ஜபித்துக் கொண்டிருந்தானானால் அவன் தூரதேசத்தில் மரணமடைந்தாலும் காசியில் மரணமடைந்த பலனைப் பெறுவான். ஒருவன் அவிமுக்தேஸ்வர மஹா லிங்கத்தைத் தரிசனம் செய்துவிட்டு தூர இருக்கும் தன்னுடைய கிராமத்துக்குச் சென்றானானால் அவனுடைய காரியம் ஸித்தியாகும்.

இப்படி ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான ஸ்ரீ அவிமுக்தேஸ்வர கதாவர்ணனமென்னும் முப்பத்தொன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



## அத்யாயம் 40

ஸ்கந்தர் கூறுவார்:- முனிவரரே! நான் அவிமுக்தேஸ்வரர் மகாத்மியத்தை வர்ணித்தேன். இன்னும் ஏதாவது கேட்க விரும்பினுல் சொல்லுவதற்குத் தயாராக இருக்கிறேன்.

அகஸ்தியர் கூறினுர்:- ஹே ஷண்முகா! அவிமுக்தேஸ்வருடைய பலனைக் கேட்டு என் காதுகள் பலனையடைந்தன ஆனுலும் திருப்தியாகவில்லை. நல்லது. அவிமுக்தேஸ்வரலிங்கம், அவிமுக்தக்ஷேத்ரம் இரண்டையும் அடையும் உபாயம் என்னது?

ஸ்கந்தர் கூறத் தொடங்கினுர்:- மகாமதியே! கும்பமுனியே! எந்த விதமாக தனக்கு நலனைக் கொடுக்கும் அவிமுக்த ப்ராப்தி எப்படி ஏற்படுமோ அதைக் கூறுகிறேன், கேளும்.

வாஞ்சிதபலப்ராப்தி மிக்க புண்யத்தினுல் தான் கிடைக்கும். ஆனுல் விப்ரரே! ஆனுல் விப்ரரே! அந்தப் புண்யம் வேதம் கூறும் மார்கத்தைப் பின்பற்றி நடந்தால் தான் கிடைக்கும்.

எங்கு பலவீனம் உள்ளதோ அந்தத் துணையில் நுழையும் கலி எப்பொழுதும் நசிப்பிக்கத் தயாராகும், காயம் இவை இரண்டும் வைதிக மார்க்கத்தில் செல்லும் புருஷனைத் தொடவே மாட்டாது, தொட்டதும் நாசமடைந்துவிடும். இப்பொழுது நிஷித்த ஆசாரத்தைப் பற்றிக் கூறுகிறேன், கேளும்.

மனிதன் இவைகளைத் தூரவிலக்கிவிட்டு நரகத்துக்கு பாசவானாக ஆகக் கூடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். வெங்காயம், மலத்தை புஜிக்கும் கிராமத்துப் பன்றி, உள்ளிகஞ்சா, கன்று பிறந்ததும் கறக்கும் பால் (சீம்பால்) ஆகியவைகளை க்ருஹஸ்தன் விலக்க வேண்டும்.

வ்ருக்ஷங்களை வெட்டினுல் வரும் கோந்து, தேவ தேவதைகளுக்கு நிவேதனம் செய்யாத பொருள்கள்,

கன்றில்லாத மாட்டின் பால், இவைகளை விலக்க வேண்டும். ஒரு குளப்புள்ள பசுவின் பால், ஒட்டகை, வெள்ளாடு இவற்றின் பால் இவைகளைக் குடிக்கக் கூடாது.

இரவு தயிர் பகலில் வெண்ணை இவைகளை சாப்பிடக்கூடாது. மாம்ஸபக்ஷிணி பக்ஷிகள், ஜலத்தில் மூழ்கி மீன் கொத்தும் பறவைகள் இவைகளைப் புஜிக்கக் கூடாது. மீன் சாப்பிடும் எல்லா ஜீவர்களும் மாம்ஸம் புஜிப்பவைதான் அதனால் மீனையும் சாப்பிடக் கூடாது.

தேவதைகள், பித்ருக்கள் இவர்களுடைய கார்யங்களுக்கு ரோஹு என்ற ஒருவகை மீனைச் சாப்பிடலாம். யார் மாம்ஸம் சாப்பிடுகிறார்களோ அவர்கள் முயல், ஆமை முதலிய மாம்ஸங்களைச் சாப்பிடலாம்.

ஸாஹி, கோஹா என்னும் இருவகை ஜீவன்களுடைய மாம்ஸம் மேலானது. ஆனால் தீர்க்காயுள் வேண்டுமானாலும், ஸ்வர்கத்தை அடைய இச்சை உண்டானாலும் வெகு ஜாக்கிரதையாக மாம்ஸத்தை விலக்க வேண்டும். ஏனென்றால் யக்ஞத்திற்கு மாத்திரமே பசு ஹிம்ஸை செய்யலாம்.

ஏனென்றால் அது ஸ்வர்கத்தை யடைய அனுகூலமானது. ஆனால் மற்ற ஸமயங்களில் பசு ஹிம்ஸை கூடாது. வெல்லம் முதலிய இனிப்பு பதார்த்தங்கள், நெய் முதலிய கொழுப்புப் பதார்த்தங்கள் பழையதாக இருந்தால் சாப்பிடக்கூடாது.

பசியால் ப்ராணன் போய் விடும்போல் இருந்தால் ச்ராத்தத்தில், யக்ஞத்தில் மருந்தில் பீராம்மணர்களின் ஆக்ஞைபெற்று மாம்சம் சாப்பிடுவதினால் தோஷமில்லை. வேட்டையாடிய பிராணிகளைக் கொண்டு ஜீவிதம் நடத்துபவர்களுக்கு, லோபத்தினால் மாம்ஸம் சாப்பிடும் மற்றவர்களைப் போல் மாம்ஸம் சாப்பிடுவதினால் தோஷமில்லை.

ப்ரம்மா யக்ஞத்திற்காகவே பசு, வ்ருக்ஷம், மான் ஒஷதிகள் இவைகளை ஸ்ருஷ்டித்தார். அதனால் பிராம்மணன் இவைகள் எல்லாவற்றையும் கொல்வதினால் அது ஹிம்ஸையாகாது. ஆனால் அவைகளுக்கெல்லாம் ஸத்கதி கிடைக்கிறது. பித்ருக்கள் தேவதைகள், அதிதிகள், யக்ஞம் இவர்களுக்கு வேண்டி ஹிம்சை செய்வது ஹிம்சையாகாது. ஆனால் ஆம் இவைகளைத் தவிர்த்து வேறு காரியங்களுக்கு ஹிம்சை செய்தால் அவைகளுக்கு கதிமோக்ஷம் கிடையாது.

அறிவுகெட்ட ஜனங்கள் உதரபோஷணைக்காக பிராணிகளைக் கொல்லுகிறார்கள். அந்த துராசாரிகளுக்கு இகத்திலும் பரத்திலும் சுகமே கிடையாது. மாம்சத்தை உண்பவன், உண்ணுவதற்கு சம்மதிப்பவன், ஆயுதங்களால் அறுப்பவன், விற்பவன், விலைக்கு வாங்குகிறவன், வாங்கிக் கொண்டு போகிறவன், கொல்லுகிறவன், கொல்லச் சொல்லுகிறவன் இவர்கள் எல்லாருமே ஜீவஹிம்சை செய்கிறவர்கள் என்று கூறப்படுகிறார்கள்.

ஒருவன் நூறு வருஷ பரியந்தம் ஒவ்வொரு வருஷமும் அசுவமேத யக்ஞம் செய்யட்டும், ஆனால் ஒருவன் ஆயுள் பூராவும் மாம்சம் சாப்பிடாதவனாக இருந்தால் அவனே அசுவமேத யக்ஞம் செய்தவனைவிட மேலானவனாகக் கருதப்படுகிறான்.

ஸுகத்தை விரும்புகிறவர்கள் தன்னைப் போலவே மற்றவர்களின் ஸுகத்தையும் விரும்பவேண்டும். ஸுகத்தையும் துக்கத்தையும் நாம் எப்படி அனுபவிக்கிறோமோ, அது போல்தான் மற்றவர்களும் அனுபவிக்கிறார்கள் என்று கொள்ள வேண்டும்; அதனால் ஸுகமாகட்டும், துன்பமாகட்டும் மற்றவர்கள் அனுபவிப்பதற்கு நாம் காரணமாக இருந்தால் அவைகளின் பலாபலனை நாமே அனுபவிக்க வேண்டி வரும்.

கஷ்டப்படாமல் தனம் சம்பாதிக்க முடியாது. தனமின்றி க்ரியைகளைச் சரிவர எப்படிச் செய்ய முடியும்? கர்மம் சரிவரச் செய்யாதவனுக்குத் தர்மம் எங்கிருந்து வரும்? தர்மஹீனனுக்கு ஸுகம் எங்கிருந்து கிடைக்கும்? ஸுகத்தை எல்லோரும் விரும்புகிறார்கள். ஆனால் ஸுகம் தர்மத்திலிருந்துதான் வருகிறது. அதனால் இந்த உலகில் நான்கு வர்ணத்தவர்களும் பெரும் முயற்சி செய்து தர்மத்தையே சம்பாதிக்க வேண்டும், நியாய பூர்வகமாக சம்பாதித்த பணத்தினால் பரலோக சம்பந்தமான கர்மங்களைச் செய்வது உசிதம். காலத்தையும் ஸத்பாத்திரத்தையும் அறிந்து விதிபூர்வமாக சுத்தமனதுடன் தானம் செய்ய வேண்டும்.

விதிமுறை தெரியாமல் கெட்டவர்களுக்குத் தானம் செய்வதால் அந்த தானம் வியர்த்தமாக போவதல்லால், நாம் இதுவரை செய்த புண்ணியமும் நஷ்டமாகிறது. ஆபத்திலிருந்து மீள குடும்பத்தைச் சரிவர ரக்ஷிக்க கடனிலிருந்து விடுபட இவைகளுக்கு வேண்டி தானம் செய்தால் அது இஹலோகத்திற்கும் பரலோகத்திற்கும் நன்மை தருகிறது.

ஒருவன் தன்னுடைய தனத்தினால் மாதாபிதா இல்லாத அநாதைக் குழந்தைகளுக்கு யக்ஞோபவீதமோ, விவாஹமோ நடத்தி வைத்தால் அனந்த பலன் உண்டாகிறது.

ஒரு ப்ரம்மணனை குடும்பப் ப்ரதிஷ்டை செய்து வைப்பதால் என்ன புண்ணியம் கிடைக்கிறதோ அப்புண்ணியம் அநேக அக்னிஹோத்ரங்கள், அக்னிஷ்டோமாதி யக்ஞங்கள் செய்பவர்களுக்குக் கூடக் கிடைப்பதில்லை.

ஒரு அனாதை பிராம்மணப் குமாரனுக்கு விவாஹம் செய்து வைத்தால் அவன் இந்த லோகத்திலும் ஸௌக்யத்தையடைவான், பரலோகத்திலும் அக்ஷய

ஸ்வர்க்கத்தை அடைவான். பிதாவின் க்ருஹத்தில் ஒரு கன்னிகை கல்யாணத்திற்கு முன்னால் ரஜஸ்வலையாகிவிட்டால் கருச்சிதைவு செய்வதினால் என்ன தோஷமோ, அத்தகைய தோஷம் அந்தக் கன்னிகையின் பிதாவிற்கு ஏற்படும்.

அந்தப் பெண்ணும் சூத்திரப் பெண்ணாகக் கருதப்படுவாள். ஒருவன் ஆசைப்பட்டு அந்தப் பெண்ணை விவாகம் செய்தாலும் அவனும் சூத்திரப் பெண்ணின் பதியாகத்தான் கருதப்படுவான். அவர்கூட ஸம்பாஷணையும் பந்தி போஜனமும் வைத்துக் கொள்ளக் கூடாது.

கன்னிகை, வரன் இரண்டு பேர்களுடைய தோஷங்களையும் நன்றாக ஆராய்ந்து பார்த்து ஸம்பந்தம் வைத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் பிதாவே அந்த தோஷத்திற்குப் பங்கு கொள்வான். ஸ்த்ரீகள் பொதுவாகப் பவித்ரமானவர்களே, இவர்களை ஒருபொழுதும் தூஷிக்க முடியாது. ஏனென்றால் மாதாமாதம் ரஜஸ்வலையாவதால் அவர்களுடைய பாபங்கள் நீங்கி விடுகின்றன.

ஸ்திரீகளை முதலாவது அக்னி அனுபவிக்கிறான், பிறகு சந்திரன், பிறகு கந்தர்வன் அதற்குப் பிறகுதான் மனிதர்கள் அனுபவிக்கிறார்கள். இதனால் அவர்கள் அபவித்ரமானவர்கள் என்று எண்ண முடியாது.

சந்திரன், பெண்களை உள்ளும் புறமும் தூய்மையாக்குகிறான். அக்னிமேதஸ்ஸைக் கொடுக்கிறான். கந்தர்வன் மங்களகரமான பேச்சைக் கொடுக்கிறான். அதனால் பெண்கள் எப்பொழுதும் பவித்ரமானவர்களே.

ரஜஸ் கண்டவுடன் அக்னி, ரோமம் முளைக்கும் ஸமயம் சந்திரன், ஸ்தனம் எழும்பும் சமயம் கந்தர்வன் முறையே ஒரு பெண்ணை அனுபவிக்கிறார்கள். அதனால்

*அவர்கள் அனுபவிக்கும் முன்பே ஒரு பெண்ணை தானம் செய்வது, உசிதம்*

*ரோம தரிசன காலத்தில் விவாஹம் செய்வதினால் ஒரு பெண்ணிற்கு ஸந்தானம் தக்காது. யௌவனம் வந்தபிறகு கல்யாணம் செய்வதால் பிதாவின் குலம் நாசம் அடையும், ரஜஸ் உதயமானதும் கல்யாணம் செய்தால் பிதாவின் மரணத்திற்குக் காரணமாகிறாள். இதனால் அந்நிலைகளையெல்லாம் விட்டுவிட வேண்டும்.*

*அதனால் கன்னிகாதான பலனையடைய விரும்புகிறவர்கள் ரஜோ தரிசனத்திற்கு முன்னாலேயே பெண்ணை தானம் கொடுத்துவிட வேண்டும். இல்லாவிட்டால் கொடுப்பவனுக்குப் பலன் கிடையாது. வாங்கினவனும் வீழ்ச்சியடைவான். சந்திராதி தேவதைகள் அனுபவிப்பதற்கு முன்னாலேயே பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுப்பதினால் கன்னிகாதானப் பலனையடைகிறான். தேவர்கள் அனுபவித்த பெண்ணை தானம் செய்வதினால் தாதா ஸ்வர்க்கத்தையடைய மாட்டார்.*

*அறிவாளிகள் படுக்கை, ஆஸனம், சவாரி, கம்பளி, ஸ்த்ரீயினுடைய முகம், தர்ப்பை, இவைகளைக் குற்றம் கூறமாட்டார்கள். கன்று ஊட்டிய பசுவின் மடியும், பழத்தைக் கடித்து விழச்செய்த பக்ஷியும், ஸம்போக காலத்தில் எல்லா ஸ்த்ரீகளும், வேட்டையில் மானைப்பிடிக்கும் நாயும் எப்பொழுதும் தூய்மையாகக் கருதப்படுகிறது. அதாவது இவர்கள் எச்சில் பண்ணினாலும் அது எச்சிலாகக் கருதப்படுவதில்லை.*

*ஆடு, குதிரை இவைகளின் வாய், பசுக்களின் பின்பக்கம், பிராம்மணர்களின் சரணம், ஸ்த்ரீகளுடைய ஸர்வ அங்கங்களும் சுத்தமானவைகளே. பலாத்காரமாக அனுபவிக்கப்பட்ட பெண்ணும், திருடர்களால் கைப்பற்றிச் செல்லப்பட்ட பெண்ணும் அபவித்ர மானவர்களில்லை. அவர்களைத் தியாகம் செய்ய வேண்டுமென்ற சட்டமும் இல்லை.*

புளியினுல் செம்புப் பாத்திரங்களும், சாம்பலினுல் வெண்கலப் பாத்திரங்களும், ரஜோ தர்மத்தினுல் ஸ்த்ரீகளும், ப்ரவாஹத்தின் வேகத்தினுல் நதிகளும் சுத்தமாகின்றன. உலகத்தில் மனத்தாலும் கூடப் பரபுருஷனைச் சிந்திக்காமலிருக்கும் ஸ்த்ரீ இந்த உலகத்திலேயே புகழுடையவளாகிருள். பரலோகத்திலும் பார்வதி தேவியுடன் ஸுகத்தை அனுபவிக்கிருள்.

பிதா, பாட்டனுர், சகோதரன், ஒரு குலத்தவர்கள், மாதா இவர்களின் ஒருவர் இல்லாவிட்டால் ஒருவர் கன்னிகாதானம் செய்து கொடுக்க அதிகாரம் உள்ளவர்கள். அப்படி தானம் செய்யாவிட்டால் ஒவ்வொரு ருதுகாலத்திலும் கருச்சிதைவு செய்தபாதகம் ஏற்படுகிறது. இப்படி ஒருவரும் ஒரு பெண்ணுக்கு தானம் செய்ய இயலாவிட்டால் அவள் தானுகவே பர்த்தாவை வரித்துக் கொள்ளலாம். ஒரு ஸ்த்ரீ வ்யபசாரிணியாக இருந்தால் அவளுக்குள்ள உடமைகளெல்லாம் பிடுங்கப்பட்டு, அழுக்கு வஸ்திரத்தைக் கொடுத்து அவள் உயிர் வாழ்வதற்கு மாத்திரம் போதுமான ஆகாரம் கொடுத்து அருவருக்கத்தக்க உருவுடன் கட்டிலுக்கடியில் வாசம் செய்விக்க வேண்டும்.

விபசாரிணி விபசாரத்திற்கு பிறகு ருதுவாகி விட்டால் சுத்தியாகி விடுகிறது. ஆனுல் கருச்சிதைவு, கருநிறைவு, கணவனை வதிப்பது முதலிய பெரிய பெரிய பாவங்கள் முதலியவைகள் செய்தால் அவளைத் த்யாகம் செய்வதே நல்லது.

சூத்திரன் சூத்திரப் பெண்ணுடனேயே விவாகம் செய்ய வேண்டும், வைச்யன் ஒரு வைச்ய பெண்ணுடனேயே, ஒரு சூத்திர பெண்ணையோ, யாரை வேண்டுமானுலும் விவாகம், பண்ணலாம். ஒரு க்ஷத்திரியன் ஒரு க்ஷத்ரிய பெண்ணையோ, வைச்ய பெண்ணையோ, சூத்திர பெண்ணையோ யாரை வேண்டுமானுலும் விவாகம் செய்து கொள்ளலாம்.

ஒரு பிராம்மணன் பிராம்மணப் பெண் அல்லது மற்ற மூன்று ஜாதிகளுடன் கல்யாணம் செய்து கொள்ளலாம். பிராம்மணன் சூத்திர பெண்ணின் படுக்கையில் ஏறினுலேயே அதோகதியடைகிருன். அவளுடைய கர்ப்பத்தில் புத்திரன் உதித்தால் தன்னுடைய பிராம்மணத் தன்மையையே இழந்துவிடுகிருன்.

அவன் செய்யும் ச்ராத்தம், ஹோமம், அதிதிஸத்காரம் இவைகளெல்லாம் சூத்திரப் பெண்ணின் அதிகாரத்தில் நடந்தால் தேவதைகள், பித்ருக்கள், அதிதிகள் அவன் இடும் உணவைப் புஜிக்கமாட்டார்கள். அவன் ஸ்வர்கத்தையடைய மாட்டான்.

ஒரு வீட்டில் ஸஹோதரி முதலிய அக்குலத்தைச் சேர்ந்தவர்கள் மரியாதையாக நடத்தப்படாவிட்டால் சாபமிடுகிருர்கள். அப்பிராம்மணன் தனம், பசு இவைகளுடன் கூட நிச்சயமாக நாசமடைகிருன்.

அதனுல் ஐச்வர்யத்தை விரும்புகிறவர்கள், ஸுவாஸினிகளை போஜனம், வஸ்த்ரம் பூஷணங்கள் மூலமாக உத்ஸவ காலங்களிலும் மங்களகரமான காலங்களிலும் பூஜிக்க வேண்டும். எங்கு ஸ்த்ரீகள் போஜனம், வஸ்திரம் இவைகளினுல் ஸந்தோஷப்படுத்தப் படுகிருர்களோ, அங்கு தேவதைகள் வஸிக்கிருர்கள். அதனுல் அந்தக்ருஹம் செழிப்புற்று விளங்கும்.

ஒரு க்ருஹத்தில் பர்த்தாவினுல் மனைவியும், மனைவியினுல் கணவனும் ஸந்தோஷமாக இருக்கிருர்களோ அவ்வீடு நிமிஷத்திற்கு நிமிஷம் கல்யாண கரமாய் விளங்குகிறது.

அஸுதம், ஹுதம், ப்ரஹுதம், ப்ராசிதம், ப்ரம்மஹுதம் இந்த ஐந்து யக்ஞங்களும் மங்களகரமானது. ஜபத்தின் பெயர் அஹுதம், ஹோமத்தின் பெயர் ஹுதம், பூதபலியின் பெயர் ப்ரஹுதம், பித்ருதர்பணத்தின் பெயர் ப்ராசிதம்.

ப்ராம்மணனைப் பூஜை செய்வதின் பெயர் ப்ரம்மஹூதம் என்று கூறப்படுகிறது. இந்த பஞ்சஹோமமும் பண்ணிக் கொண்டிருக்கும் வரை ப்ராம்மணன் நஷ்டமடைய மாட்டான். ஆனால் இவைகளைச் சரிவர அனுஷ்டானம் செய்யவில்லையானால் அவனை தோஷம் வந்தடையும். ப்ராம்மணர்கள் நம்மிடம் வந்தாலும் சரி, ப்ராம்மணனிடம் குசலம் விசாரிக்க வேண்டும். க்ஷத்ரியனிடம் வேலையில்லால் இருக்கிறாயா என்று கேட்க வேண்டும். சூத்ரனிடம் ஸந்தோஷமாக இருக்கிறாயா? என்று கேட்க வேண்டும்.

பிறந்ததிலிருந்து எட்டு வயது வரை குழந்தை என்று சொல்ல வேண்டும். யக்ஞோபவீதம் ஆகும்வரை பக்ஷ்யம், அபக்ஷ்யம் என்னும் தோஷம் ஏற்படாது. போஷித்து வளர்ப்பவர்களுக்கு த்ருஷ்டம் அத்ருஷ்டம் இரண்டு பலன்களும் கிடைக்கும். இந்தப்படி பின்பற்றி வந்தால் தோஷம் ஏற்படாது.

மாதா, பிதா, குரு, பத்னி, ஸந்தானம் நம்மை அண்டியிருக்கும் வேலையாட்கள், நம் போஷிப்பில் இருப்பவர்கள், அதிதி அக்னி இந்த ஒன்பது பேரும் நம்மால் போஷிக்கப்படுபவர்கள் என்று கூறப்படுகிறது. எவன் ஒருவன் தன்னை அண்டிப் பிழைக்கிறவர்களுக்கு உதவுகிறானோ அப்புருஷனே உலகில் வாழ்பவன் ஆகிறான். எவன் தனது வயிறை மாத்திரம் வளர்க்கிறானோ அவன் ஜீவித ம்ருகம் என்று கூறப்படுகிறான்.

ஐச்வர்யம் அடைய விரும்பினால் தீனர்கள், அநாதைகள், கனவான்கள் இவர்களுக்குக் கொஞ்சம் கொடுக்க வேண்டும். ஏனென்றால் எவன் தானம் கொடுக்கவில்லையோ அவன் அடுத்த ஜன்மத்தில் மற்றவரை அண்டிப் பிழைக்கிறவனாகிறான்.

க்ருஹஸ்தன் தன் வீட்டில் உள்ளவர்களுக்கு அவர்களுக்கு உசிமான ஸம்ரக்ஷணை செய்ய வேண்டும். நற்குண தயாவானாக, பொறுமைசாலியாக இருக்க

வேண்டும். அவனே தார்மிகன் எனப்படுவான். எந்த ப்ராம்மணன் இரவின் மத்தியில் இரண்டு நாழிகை மட்டுமே படுக்கிறுனே, ஹோமம் செய்து மிஞ்சிய வஸ்துகளை புஜிக்கிறுனே அவன் ஒரு பொழுதும் நாசம் அடைய மாட்டான்.

ஒருவன் வீட்டிற்கு வந்தால் க்ருஹஸ்தன் இந்த ஒன்பது கார்யங்களையும் செய்ய வேண்டும். அமுதம் போன்று குசலப்ரச்னம், இனிமையான பேச்சு, ஸௌம்யமான பார்வை, ஸ்திரசித்தம், ப்ரஸன்னமுகம். எழுந்து நின்று வரவேற்றல், வாருங்கள் வாருங்கள் என்ற நேசஉபசரிப்பு, தனது அருகில் அமர்த்திக் கொள்ளல், அவர் பின்னுல் போதல் இவைகள் யாவும் க்ருஹஸ்தருடைய உன்னத லக்ஷ்யங்கள்.

இதற்கு அதிகம் காசு பணம் செலவில்லை. அதனுல் இதை அவசியம் செய்ய வேண்டும். ஆஸனம், கால்கழுவ நீர், யதாசக்தி போஜனம், இருக்கும் இடம், படுக்கை, தனியாக சமைப்பவனுனுல் விறகு, குடிக்கத் தண்ணீர் எண்ணெ, தீபம் இவைகளைக் கொடுப்பதினுல் க்ருஹஸ்தர்ளுடைய அபீஷ்டங்கள் நிறைவேறும். பின் வரும் இந்த ஒன்பது கெட்ட கர்மங்களையும் தவிர்க்க வேண்டும். கொடூரம், பரஸ்த்ரீகமனம், விரோதம், கோபம், அஸத்யம், ப்ரியமற்ற வசனம், பொருமை, ஏமாற்றுதல், கபடம் இவைகள் ஸ்வர்கத்வாரத்தை அடைக்கும் கதவு என்று கூறவேண்டும்.

க்ருஹஸ்தன் கீழ்க்கண்ட இந்த ஒன்பது கர்மத்தையும் ப்ரதிதினம் செய்ய வேண்டும். ஸ்னுனம், ஸந்த்யை, ஜபம், ஹோமம், வேத பாராயணம் தேவபூஜை, வைஸ்வதேவம், அதிதிஸத்காரம், பித்ருதர்பணம், ஹே முனியே! இன்னும் ஒரு ஒன்பது விஷயங்கள் கூறுகிறேன் கேளும். ஆனுல் இதை ரகஸ்யமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

ஜன்ம நக்ஷத்ரம், ஸம்போக(புணர்ச்சி)மந்த்ரம், க்ருஹபேதங்கள், பணம் சேமிப்பு, ஆயுள், தனம்,

அவமானம், ஸ்த்ரீ இவைகளை ஒரு பொழுதும் வெளிப்படையாகக் கூறலாகாது. இப்பொழுது கூறப் போகும் ஒன்பது விஷயங்களை வெளியில் கூறவேண்டும்.

மறைத்துச் செய்யும் பாபம், களங்கமில்லாத உள்ளம், கடன் கொடுப்பது, கடனைத் தீர்ப்பது. நமது வம்சம், க்ரயம், விக்ரயம், கன்யாதானம் குணங்களின் பெருமை, இவைகளைத் தவிர்த்து ஒருவரிடமும் ஒரு இடத்திலும் கூறக்கூடாது.

இந்த ஒன்பதும் கொடுப்பதனுல், அக்ஷய பலன் கிட்டும். ஸத்பாத்ரம்; மித்ரன், விநயன், தீனன் அநாதை, உபகாரம் செய்தவர்கள், மாதா, பிதா, குரு இந்த ஒன்பது பேர்களுக்குக் கொடுப்பதனுல் நிஷ்பலனுகாது. இனி கூறப்போகும் ஒன்பது பேர்களுக்குக் கொடுப்பதனுல் நிஷ்பலனுகும். போக்கிரி, புராணிகன், திருடன், கெட்டவைத்யன், வஞ்சகன், தூர்த்தன், துஷ்டன், மல்லன் துதிபாடகர்.

பின்கூறும் ஒன்பது வஸ்துக்களை எத்தனை பெரிய ஆபத்து வந்தாலும் ஒருவருக்கும் கொடுக்கக் கூடாது. தனது ஸர்வஸ்வபத்தினி, சரணமடைந்தவர், அடமானப் பொருள், ஆபத்து, சேமிப்புநிதி, குலவிருத்தி அடமானம், ஒருவர் பத்திரப்படுத்தி வைக்கும்படிக் கொடுத்த பொருள், மனைவியின் ஸம்பத்து, புத்ரன், மூடன் ஆனவன் இவைகளைக் கொடுத்து விடுவான்.

ப்ராயச்சித்தம் செய்து கொண்டால் இந்த பாபத்திலிருந்து விடுபடுவான். இந்த எட்டு விஷயங்களையும் அறிந்து வைத்திருப்பவன் ஸுகமடைவான். இன்னும் ஒரு ஒன்பது விஷயங்கள் கூறுகிறேன். அது எவருக்கும் ஸ்வர்க்கத்தைக் கொடுக்கக் கூடிய விஷயம்.

ஸத்யம், சௌசம், அஹிம்ஸை, க்ஷமை, தயா, தமம், திருடாமை, இந்த்ரிய நிக்ரஹம், இவைகள் யாவருக்கும்

தர்ம ஸாதனம். ஒரு க்ருஹஸ்தன் ஸ்வர்க்க மார்க்கத்துக்கு ப்ரகாசம் கொடுக்கும் தீவட்டி போன்ற ஸஜ்ஜனங்கள் மதிக்கும் இந்தப் பவித்ரவிஷயங்களையும் அப்யாஸம் செய்ய வேண்டும்.

அவன் ஒரு பொழுதும் நஷ்டமடைய மாட்டான். ஒருவனுடைய நாக்கு, பார்வை, புத்ரன், ப்ராதா, மித்ரன், ஸேவகர், ஆச்ரித ஜனங்கள் இவர்கள் விநயம் உள்ளவர்களாக நடந்து கொண்டால் அவர்களுக்கும் வெகு கௌரவம் அளிக்கவேண்டும்.

மத்யபானம், துர்ஜனஸங்கம், பதியின் விரசம், ஊர் உலகம் யாத்ரை செய்வது, அயலார் வீட்டில் இருப்பது, அங்கு இரவில் உறங்குவது, பெண்களுடைய இந்த ஆறு குற்றங்களும் வ்யபிசாரத்துக்கு ஸமம்.

குறைந்த விலைக்குத் தான்யத்தை வாங்கி அதிக விலைக்குக் கொடுப்பது, அதன் பெயர் வார்துஷிகம், அவர்களுடைய அன்னத்தைப் புஜிக்கக் கூடாது. துர்நடத்தையுடையவளிடம் செல்பவன் மாதிரி மலடியின் பதி. இவர்களிடம் பித்ருக்கள் நிராசையடைகிறார்கள். வியபசாரிணியின் ஸ்த்ரி மஹிஷியாவாள், அதாவது மஹிஷிகள் என்று பெயர். தனது பதியை விட்டு அந்யனிடம் செல்பவள் வ்ருஷலீ. அவள் கணவன், வ்ருஷலீபதி. சூத்ரன் - மனைவி வ்ருஷலீ அல்ல.

(சூடான அன்னம், மௌனமாக போஜனம் செய்வது, அன்னத்தை நிந்திக்காமலிருக்கும் வரை பித்ருக்கள் போஜனம் செய்கிறார்கள்.) (வித்தையையும், விநயமும், கூடிய வேதவித்து ஒருவன் வீட்டிற்கு வந்தால் ஸமஸ்த உணவுப் பொருள்களும் பரமானந்தம் அடைகின்றன. அதனால் அவைகள் எண்ணுகின்றன- நாம் யாவரும் பரமகதியை அடைவோமென்று;)சௌசத்துடனும் விரத ஆசாரங்களில் ப்ரஷ்டனும், வேதம் ஓதாத பிராம்மணனும் வந்தால் தானம் செய்த அன்னம் 'நான் என்ன பாவம்

செய்தேனே இவர்கள் வயிற்றில் சென்று விழ’ என்று அழும்.

யாருடைய வயிற்றுக்குள் சென்று வேதாப்யாஸத்தின் பரிச்ரமத்தால் அவைகள் பக்வமாகின்றனவோ அந்த தாதாவுடைய மேலும் கீழுமாக பத்து முன்னோர்கள் குலம் பவித்ரமாகும். ஸ்த்ரீகள் முழு மொட்டை அடித்துக்கொள்ளக்கூடாது. உழக்கூடாது, இரவு மாட்டின் கொட்டிலில் இருக்கக்கூடாது. வேத மந்த்ரங்களைக் கேட்கக் கூடாது. ஸ்த்ரீகளின் கூந்தலை ஒன்றுசேர்த்து இரண்டு அங்குலம் வெட்டி விடுவதே அவர்களுக்கு முண்டனம்.

ராஜாவானாலும், ராஜ குமாரனானாலும் பஹுச்ருத ப்ராம்மணன் ஆனாலும் முண்டனம் செய்து கொள்ளக்கூடாது. அப்படிச் செய்து கொண்டால் ப்ராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டி வரும். கேசத்தை ஸம்ரக்ஷிப்பதற்கு த்விகுணம் என்று வ்ரதம் இருக்க வேண்டும். வேதம் படித்த ப்ராம்மணனானால் இரு மடங்கு தக்ஷிணை கொடுக்க வேண்டும். விவாஹ அக்னியில்லாமல் பெண்ணை க்ரஹித்துக் கொண்டு தன்னை க்ருஹஸ்தன் என்று கூறிக் கொண்டால் அவனுடைய அன்னம் புஜிக்கத் தகுந்ததல்ல. அது வீணாக சமைத்த அன்னம், என்று பொருள்பட வ்ருதாபாகம் என்று கூறப்படுகிறது.

அக்னி இல்லாமலும் விவாஹம் செய்து கொண்டு பெரிய தமையன் இருக்கும் போது ஒருவன் விவாஹமும், அக்னிஹோத்ரமும் தீக்ஷையும் செய்வானானால் அவன் பரிவேத்தா என்றும் அவன் தமையனை பரிவ்ருத்தி என்றும் அறியவேண்டும். பரிவேத்தா, பரிவ்ருத்தி இவர்கள் எந்தப் பெண்ணை விவாஹம் செய்து கொள்கிறானோ, அக்கன்னிகையைக் கொடுக்கிறவன், வாங்குகிறவன், விவாஹம் செய்து வைக்கும் புரோஹிதன் இவர்கள் ஐந்து பேரும் நரகத்துக்குப் போகிறார்கள்.

ஸஹோதரன், நபும்ஸகன், தேசாந்தரஸ்தன், ஊமை, ஸந்யாஸி, ஜடம், கூனன், குள்ளன், பதிதன் இப்படியாக

இருந்தால் விவாஹம் செய்து கொள்வதில் குற்றமில்லை. பணலோபத்தினுல் ஒருவன் வேதத்தை விற்ருனுல் அந்த வேதத்தை விற்றவன் கருச்சிதைவு செய்த தோஷத்திற்குள்ளாகிருன்.

*(ஒருவன் ஸந்யாஸம் வாங்கிக் கொண்டு மறுபடியும் ஸ்த்ரீ போகத்துக்கு இச்சைப் படுவானுனுல் அவன் 600,00 வருடங்கள் மலத்தில் க்ருமியாகப் புரளுவான்.)* சூத்ரனுடைய அன்னம் சூத்ரனுடைய ஸஹவாஸம், சூத்ரனுடன் ஒரே ஆஸனத்தில் இருப்பவன், சூத்ரனிடமிருந்து வித்தை கற்பது இவைகள் தேஜஸ்வியான ப்ராம்மணனைக் கூடப் பதிதன் ஆக்குகிறது.

அக்ஞாநியான ப்ராம்மணனே சூத்ரனிடமிருந்து தானம் வாங்கி புஜிக்கிருன். அவன் ப்ரம்ம தேஜஸ்ஸிலிருந்து நழுவி கோர நரகத்தில் விழுகிருன்.

தேன், கரும்புரஸம், கீரை, பால், உப்பு, நெய், இவைகளைக் கையால் கொடுக்க நேர்ந்தால், ஒருதினம் உபவாஸம் இருக்க வேண்டும். நெய் முதலிய வழுவழுப்பான பதார்த்தங்கள், உப்பு காய்கறிகள் இவைகளைக் கையினுல் கொடுக்கக் கூடாது. கொடுத்தால் கொடுப்பவனுக்குப் பலன் கிடையாது. அதை உண்பவன் பாபத்தையே புஜிப்பவன்.

*(இரும்புப் பாத்திரத்தில் சாப்பிடுபவன் மலம் புஜிப்பது போல் ஆகிருன். பரிமாறுகிறவனும் நரகத்துக்குச் செல்கிருன்.) (ஆள் காட்டி விரலினுல் தந்த சுத்தி செய்வது, தனி உப்பைத் தின்பது, மண் தின்பது இவைகளெல்லாம் கோமாம்ஸத்தைப் புஜிப்பதற்கு ஒப்பானது.)*

ஜலம், பாயஸம், பிக்ஷை எடுத்த பொருட்கள் இவைகளைக் கையால் கொடுத்தால் திரும்பக் கையால் வாங்கக் கூடாது. அவைகள் கோ மாம்ஸத்துக்கு ஸமமாக பூஜிப்பதற்குத் தகாதவைகளாக ஆகிவிடுகின்றன.

ஒரு முட்டாள் அண்டையில் இருந்தானுனல், ஒரு குணவான் தள்ளியிருந்தானுனல் அந்த குணசீலனைக் கூப்பிட்டுத் தானம் கொடுப்பது உசிதம். இப்படிச் செய்தால் மூர்க்கனை அதிக்ரமித்து விட்டோமா என்று பயம் வேண்டாம்.

வேதஞானம் இல்லாத ப்ராம்மணனை அதிக்ரமித்தால் ஒரு குற்றமும் கிடையாது. ஏனென்றால் ஜ்வலிக்கும் அக்னியை விட்டு பஸ்மத்தில் ஆஹுதி செய்வார்களா? ஒருவன் அருகில் இருக்கும் வேத விற்பன்னரான ப்ராம்மணனுக்கு போஜனம் தானம் இவைகளைக் கொடாமல் அதிக்ரமித்தால் அவனுடைய ஏழுவம்சங்கள் கருகிப் போய்விடும்.

பசுபாலனம் பண்ணுபவன், வ்யாபாரம் பண்ணுபவன், சில்பி, பாடகன், ஸேவா வ்ருத்தி செய்பவன், வட்டி வாங்குபவன் இத்தொழிலைச் செய்யும் ப்ராம்மணர்களைச் சூத்திரனுக்குச் சமமாகக் கருத வேண்டும்.

தெய்வ யோகத்தினுல் கிடைத்த தனம், ப்ரம்ம சொத்தைப் பிடுங்கினுலும், ப்ராம்மணர்களை அதிக்ரமம் பண்ணினதினுலும் அவனுடைய குலம் சீக்கிரமே நஷ்டமடைகிறது.

பசு, ப்ராம்மணன், அக்னி இம்மூன்றுக்கும் கொடுக்காதே என்ற வார்த்தையைச் சொல்லக்கூடாது. அப்படிச் சொல்லுபவன் நூறுதடவை திர்யக்யோனியில் பிறந்து சண்டாளனுகப் பிறப்பான். வாயினுல் ப்ரதிக்ஞை செய்து கர்மத்தால் அதை நடத்தாமலிருந்தால் அல்லது செய்கிறேன் என்று சொல்லிவிட்டுப் பிறகு செய்யாமல் இருந்தால் அவன் இந்த லோகத்திலும் பரலோகத்திலும் தர்ம ஸங்கதிக்குக் கடனுளியாகிறுன்.

யக்ஞ சேஷ அன்னத்தை அம்ருதமாகவும், அதிதிகள் உண்டபோஜனத்தை எச்சில் என்றும் கூறுகிறுர்கள். க்ருஹஸ்தர்கள் தினமும் அம்ருத போக்தாக்களாகவும்

இருக்க வேண்டும். அதிதிகளுடைய உச்சிஷ்ட போக்தாக்களாகவும் இருக்க வேண்டும். யாருடைய வஸ்திரம் இடது தோளிலிருந்து நழுவி கொப்பூழ் ப்ரதேசத்திற்கு வருகிறதோ அதே ஏகவஸ்திரமாக இருந்தால் தேவகர்மம் என்றும், பித்ரு கர்மம் என்றும் எண்ணி விட்டு விடவேண்டும்.

ஒரு ப்ராம்மஞேத்தமன் ஸ்ஞனம் செய்துவிட்ட ஜலத்தாலேயே பித்ருதர்பணம் செய்வாஞனல் அதஞல் எல்லா பிதுர்யக்ஞ கர்மபலங்களேயும் அடைகிருன். போஜனம் செய்ததற்குப் பிறகு இரண்டு கைகளேயும் கழுவிவிட்டு வாயிலிருந்து கொப்புளித்த ஜலத்தை குடித்து விட்டாஞனல் அது தேவகர்மம் பித்ருகர்மம் இரண்டையும், தன்னேயும் நாசம் செய்வதாகிறது

சந்தா வசூலித்துக் கொண்டு வரும் அன்னம், வேசியுடைய அன்னம், புரோகிதருடைய அன்னம், ஸ்த்ரீகளின் கர்ப்பாதான சமயத்திலிடும் அன்னம் இவைகளே சாந்த்ராயண வ்ரதம் என்று சொல்வார்கள். ஒரு க்ருஹஸ்தன் இல்லத்தில் மாஸத்துக்கு ஒரு தரமோ, அல்லது பக்ஷத்தக்கு ஒரு தரமோ ஒரு பிராம்மணன் போஜனம் செய்யவில்லே யென்ருல் அந்த துராத்மாவின் அன்னம் சாப்பிடுவதற்காகவே சாந்த்ராயண வ்ரதம் இருக்க வேண்டும்.

யக்ஞகர்த்தா, யக்ஞத்துக்கு தீக்ஷை எடுத்துக் கொண்டவர், ஸந்யாஸி, ப்ரம்மசாரி, கர்மகாரி, ரித்விக் இவர்களுக்குச் சூதகம் கிடையாது. (அஜீர்ணமாக இருந்தால், வாயிலெடுத்தால், க்ஷவரம் செய்து கொண்டால், ஸம்போகத்தால், துஸ்ஸ்வப்னம் கண்டால், துஷ்டர்கள் தொட்டால் உடனே ஸ்ஞனம் செய்ய வேண்டும். இது அவசியமான கடமை.)

ஸ்மசான வ்ருக்ஷம், சிதை, ஸ்மசானாபூபம், ஸதி, ப்ரம்ம நிஷ்டன் இவர்களுக்குக் கட்டியிருக்கும் ஸமாதி, சிவநிர்மால்யம் புஜித்தவன், வேதத்தை விற்றவன்

இவைகளைத் தொட நேர்ந்தால் கட்டியிருக்கும் வஸ்திரத்துடன் ஜலத்தில் இறங்க வேண்டும். அக்னியிருக்கும் இல்லத்தில், மாட்டுத் தொழுவத்தில், தேவதை, ப்ராம்மணன் இவர்களுக்கு ஸமீபம், வேதாத்யயனம், பானம் பண்ணும் ஸமயம், காலணியை அகற்ற வேண்டும்.

வயல் களஞ்சியம், அன்னம், கிணறு, நடைகிணறு இவைகளின் ஜலம், மாட்டுத் தொழுவத்தில் தரும் பால் இவைகளை வாங்க அதிகாரம் இல்லாதவர்களும் வாங்கலாம். தலை கட்டுடன், தென்புறம் பார்த்து அமர்ந்து காலணி அணிந்து ஏதாவது உண்டால் அவனை ராக்ஷஸர்கள் சாப்பிடுவார்கள்.

பரிஷேசனம் செய்யாத அன்னத்தை தைத்யர்கள், பிசாசுகள், ராக்ஷஸர்கள், க்ரூரகர்மம் செய்பவர்கள், இவர்கள் போஜனத்தின் ஸத்தை உறிஞ்சி விடுகிறார்கள். ப்ரம்மா முதலிய தேவதைகள், வஸிஷ்டர் முதலிய ருஷிகள் பரிஷேசநத்தை ஆச்ரயிக்கிறார்கள், அதனால் போஜனம் செய்யும் ஸமயம் பரிஷேசநத்தை ஆச்ரயிக்கிறார்கள். அதனால் போஜனம் செய்யும் ஸமயம் பரிஷேசனம் செய்ய வேண்டும்.

ப்ராம்மணர்களுக்கு நான்கு மூலைகள், க்ஷத்திரியர்களுக்கு முக்கோணம், வைச்யர்களுக்கு வட்டமாக, சூத்ரர்களுக்குத் தெளித்துவிட்டு இடம் பண்ண வேண்டும் என்று கூறப்படுகிறது. சம்மணம் இருக்கும் மணைக்கு மேல் அப்புறம் இவைகள் அழுக்கடைந்திருந்தால் போஜனம் செய்யக் கூடாது.

தர்மசாஸ்திரமாகிய ரதத்தில் உட்கார்ந்து கொண்டு வேதமாகிய கட்கத்தைத் தாங்கிக் கொண்டு ப்ராம்மணர்கள் விளையாட்டாக ஏதாவது கூறினாலும் அதுவே பரமதர்மம் என்று கூறப்படுகிறது. (தர்மத்தை விரும்பும் ஜனங்கள் இரவில் தயிருடன் பொரி சாப்பிடக் கூடாது.)

ஏனென்றால் அதனால் தர்மத்துக்குத் தீங்கு, வியாதிகளின் பீடை ஏற்படும். எந்த ப்ராம்மணன் பால், தேன்பாகு, ஜலம், உப்பு, மது, மோர் இவைகளைக் கையினால் கொடுக்கிறானோ அவன் க்ருச்ரசாந்த்ராயண வ்ரதம் இருக்க வேண்டும்.

தர்மம் அறிந்த புருஷன் கந்தம், பூஷணம் மாலா இவைகளை தானம் செய்கிறார்கள். அவர்கள் எந்த யோனியில் பிறந்தாலும் அங்கு மனோரம்யமான ஸுகந்தத்துடன் இருக்கிறார்கள்.

நீலவஸ்திரத்தைக் தூர இருந்தே தியாகம் செய்துவிட வேண்டும். ஆனால் ஸ்திரீகளுடன் க்ரீடிக்கும் போது, சயனத்தில் படுக்கையில் நீலவஸ்திரம் குற்றமில்லை.

நீலச்சாயத்தை வளர்ப்பது, க்ரயம் செய்வது. அந்த வ்ருத்தியில் வாழ்க்கை நடத்துவது, அந்த மண்டிகளுக்குச் செல்வது இவைகளினால் ப்ராம்மணன் அபவித்ரவானாகிறான். பிறகு மூன்று கிருச்ரசாந்த்ராயண வ்ரதம் இருந்தால்தான் சுத்தியாகிறான்.

நீலவர்ணவஸ்த்ரம் உடுத்தி ஸ்னானம், தானம், தபம், ஹோமம் வேத அத்யயனம், பித்ருதர்ப்பணம் முதலிய ஐந்து மகா யக்ஞங்களைச் செய்தால் அவைகள் வீணாகவே ஆகின்றன. நீலவஸ்திரத்தை உடுத்தால் அந்த வஸ்திரத்தில் எத்தனை இழைகள் இருக்கின்றனவோ அத்தனை வருஷங்கள் நரகவாசம் பண்ணுவான்.

நீலவஸ்திரம் உடுத்தினால் இரவு பட்டினி இருந்து பஞ்சகவ்யம் சாப்பிட்டால் சுத்தனாகிறான்.

நீலவஸ்த்ரம் உடுத்தி அன்னம் பரிமாறினால் அதைச் சாப்பிடுகிறவன் மலத்தை சாப்பிடுகிறவனாகிறான், கொடுப்பவன் நரகத்துக்குப் போகிறான். ப்ராம்மணன் அன்னம் அம்ருதம், க்ஷத்ரியனின் அன்னம் பால், வைச்யனுடைய அன்னம், சூத்ரனுடைய அன்னம், ரத்தம் என்று கூறப்படுகிறது. வைச்வதேவ கர்மம், தேவபூஜை

ஜபம், ருக், யஜுர், ஸாமவேதம் இவைகளுடைய ஸம்ஸ்காரத்தினுல் பவித்ரமாக்கப் பட்டதால் ப்ராம்மணனுடைய அன்னம் அம்ருதமாகும். வியவகாரத்தை அனுஸரித்து நியாய வழியில் ஸம்பாதித்த க்ஷத்ரியனுடைய அன்னம் ப்ரஜைகளை ஸம்ரக்ஷிப்பதால் பால் ஆகிறது.

வைச்யன் நாழிகை முழுவதும் பூட்டிய எருதுகளினுல் உழுவதான யக்ஞ விதானத்தினுல் உற்பத்தி செய்து தானம் செய்வானுனுல் அந்த தான்யத்திலிருந்து வந்த அன்னம் சுத்தமானது.அக்ஞானமாகிய இருளினுல் அந்தகாரமாய் மதுவருந்துவதிலேயே நினைவாக இருக்கும் சூத்திரனுடைய அன்னம் வேத மந்திரத்தினுல் வர்ஜிக்கப் படுவதினுல் அதை ரத்தம் என்று கூறப்படுகிறது. நரோத்தமர்கள் ஸாதாரணப் பிரியத்துக்காக வீணுக சபதம் செய்து அதை நிறைவேற்ருவிட்டால் அவனுக்கு இஹமும் இல்லை, பரமும் இல்லை.

பெண்களின் ஸம்பந்தப்பட்ட மட்டும் விவாஹக் கார்யங்களில், பசுக்களுக்குத் தீனி வைக்கும் ஸம்பந்தமாக, ஸர்வ ஸம்பத்தும் அழியும் காலம் வந்தால், ப்ராம்மணர்களுக்கு உபகாரம் செய்வதற்கு, ப்ராம்மணன் ஸத்தியத்தைப் ப்ரமாணமாக வைத்து சபதம் செய்ய வேண்டும். க்ஷத்ரியன் வாஹனத்தையும், ஆயுதத்தையும் தொட்டுக் கொண்டும், வைச்யன் பசுவையும், தான்யத்தையும், ஸ்வர்ணத்தையும் தொட்டுக்கொண்டும், சூத்ரர்கள் ஸமஸ்த பாபத்தின் பேரால் சபதம் செய்யலாம்.

சூத்ரன் சபதம் நிறைவேருவிட்டால் நெருப்பை விழுங்கச் சொல்லுதல், ஜலத்தில் மூழ்கடித்தல், ஸ்த்ரீ புத்ராதிகளின் தலையை வேராக்குதல் இவ்வளவும் செய்யலாம். யமராஜன் யமனல்ல, ஆத்மாவை ஒழுங்கு படுத்தி விட்டால் அவனே யமன்தான் என்ன பண்ண முடியும்? கூர்மையான வாள், கடுவிஷமுள்ள ஸர்ப்பம், எப்பொழுதும் கோபத்துடன் இருக்கும் சத்ரு,

இவைகளுக்கெல்லாம் பயப்பட வேண்டாம். ஒழுங்கீனமான ஆத்மா பயமடைந்தால் இவைகளெல்லாம் பற்றி பயப்பட வேண்டும்.

பொறுமைசாலி ஜனங்களைப் பற்றி ஒரே ஒரு குற்றம் தான் சொல்ல முடியும். அவனை வேறொன்றும் கூற முடியாது. அந்தப் பொறுமைசாலியை ஸாமர்த்தியம் இல்லாதவன் என்று வேண்டுமானால் கூறலாம். அந்தக் குற்றம் மாத்திரம்தான் சொல்லலாம். (ஸப்த சாஸ்திரம் தெரிந்தவன், மங்களகரமான வீட்டை விரும்புபவன், சாப்பாட்டுப் பொருளை மறைப்பவன், உலகில் பணம் சேர்ப்பது ஒன்றே தொழிலாக எண்ணுபவன் இவர்களுக்கு மோக்ஷம் கிடையாது.) ஏகாந்தத்தை விரும்புகிறவன் இந்திரியங்களின் இஷ்டத்திலிருந்து நிவர்த்தியானவன், ஸ்வாத்யாய யோகத்தில் ஈடுபட்டவன் எப்பொதும் அஹிம்ஸையே விரும்புபவன் ஸந்தேகமில்லாமல் இவர்களுக்குத்தான் மோக்ஷம் கிட்டும். இந்த உலகத்தில் எந்தப் புருஷன்தான் ஏகாந்தத்தை விரும்புகிறான்? இந்திரியங்களின் ப்ரீதியிலிருந்து எவன் தன்னை நிவர்த்தி செய்து கொள்கிறான்? யோகம் எங்கு பழகுகிறான்? விதியுடன் கூடிய தேவ பூஜனம் எங்கு நடக்கிறது? அப்பொழுது? ஆமாம் மேற்கூறிய இவைகளொன்றும் இல்லாமலேயே காசியில் முக்தி கிடைக்கிறது.

(காசியில் விஸ்வேஸ்வரரை ஸேவிப்பதே யோகாப்யாஸம், விஸ்வநாதருடைய காசிபுரியில் வஸிப்பதே, தபஸ், உத்தரவாஹினியான கங்கையில் ஸ்நானமே நியமம், யமம், தானம், விரதம் எல்லாம்.)

ஸ்கந்தர் கூறுகிறார்:- ந்யாயமான வழியில் பணம் ஸம்பாதிப்பதும், தத்வ ஞானத்தில் மனதைச் செலுத்துவதும், உண்மை பேசுபவனுமான க்ருஹஸ்தனுக்குக் காசியில் முக்தி கிடைக்கிறது.

காசியில் க்ருஹஸ்தர்கள், தீனர்கள், க்ருபணர்கள்,

பிக்ஷுகர்கள் இவர்களுக்கு விசேஷமாக அன்னதானம் செய்தால் வேறு க்ருஹஸ்தர்களுக்குக் கூறிய எல்லாக் கர்மங்களும் செய்வதினுல் அவர்களுக்கும் காசியில் முக்தி கிடைக்கிறது. இப்படி ஆசார நிஷ்டர்களாக இருக்கும் மனிதர்களைக் கண்டு காசிநாதர் மிகவும் ஸந்தோஷப்படுகிருர். அதே விஸ்வநாதருடைய க்ருபையினுல் காசி கிடைத்தால் முக்தியும் கிடைக்கும்.

காசியில் வசிப்பவன் எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்னனம் பண்ணினவன்தான். ஒன்று பாக்கி இல்லாமல் எல்லா யக்ஞங்களிலும் தீக்ஷை பெற்றுக் கொண்டவன்தான். எல்லாவித தானங்களையும் செய்து முடித்தவன்தான்.

இந்த விதம் கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான கிருஹஸ்தர்களின் கர்த்தவ்யம் அகர்த்தவ்யம் என்ற நாற்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 41

*ஸ்வாமி கார்த்திகேயர் கூறினூர்:- இந்த விதமாக ப்ராம்மணன் க்ருஹஸ்தாச்ரமத்தில் ஸதாசாரங்களேப் பரிபாலித்துக் கொண்டுவரும் பொழுதே சரீரத்தில் சுருங்கிய தோலேயும், சிரஸில் நரைத்த மயிரையும் பார்த்தாஞுல் மூன்ருவதான வாநப்ரஸ்தாச்ரமத்தைக் கைக்கொள்ள வேண்டும்.*

*ஒரு க்ருஹஸ்தன் தன் புத்திரனே புத்திரவாஞுகக் கண்டுவிட்டுத் தன் பத்தினியை ரக்ஷிக்க வேண்டிய பாரத்தைத் தன் புத்திரனிடம் ஒப்படைத்து விட்டு அல்லது பத்தினியுடன் கூடவே க்ராம்ய உணவுகளேத் திரஸ்கரித்துவிட்டு வனத்திற்குச் செல்ல வேண்டும். அங்கு தோலே உடுத்தும் முனிவர்களின் அன்னமான நீவாரம் முதலியவைகளே உபயோகித்துக் கொண்டு காலேமாலேயும் ஸ்ஞனம் செய்து கொண்டும் ஜடையும் தாடியும் வைத்துக் கொண்டும், நகத்தையும் ரோமங்களேயும் அகற்ருமல் இருக்க வேண்டும்.*

*அக்கினி வளர்த்துக் கொண்டும், கீரை, கிழங்கு, பலம், மூலம் இவைகளேக் கொடுத்துக் கொண்டு எது கிடைக்கிறதோ அது கொண்டு ஸந்தோஷத்துடன் இருக்க வேண்டும். ஒருவரிடமும் தானம் வாங்க வேண்டாம். ஆஞல் அவரவர்களால் முடிந்ததைக் கொடுக்க வேண்டும். ஜிதேந்த்ரியஞக வேதாத்யயனத்தில் ஈடுபட்டிருக்க வேண்டும். வைதானிகம் என்ற விவாஹ அக்னியை வளர்க்க வேண்டும்.*

*தானே கொண்டுவந்த (முனிவர்களுக்குரிய) நீவாரம் முதலியவைகளிஞல் பலி, வைச்வதேவம் முதலியவைகளேச் செய்ய வேண்டும். தானே பண்ணின வ்யஞ்ஜநங்களாலும், பழங்களாலும் மெதுவான போஜனம் செய்ய வேண்டும். கீரை வகைகள், மாம்ஸம், மது, இவைகளே விட்டுவிட வேண்டும்.*

கிராமங்களில் விளேயும், காய்கறி, பழங்கள், தான்யங்கள் இவைகளேச் சாப்பிடுவது நல்லதல்ல. சாப்பிடும் பொருள்களே நன்ருகக் கடித்து மென்று தின்ன வேண்டும். அல்லது அரைத்துத்தின்ன வேண்டும். உரல், அம்மி, இவைகளே உபயோகப் படுத்தக் கூடாது.ஒருநாள், ஒரு மாதம், மூன்று மாதங்கள், ஆறு மாதங்கள் ஒரு வருஷத்துக்குண்டான உணவைச் சேமித்து வைத்துக் கொள்ளக்கூடாது. இரவு சாப்பிடுதல் அல்லது ஒன்று விட்டு ஒரு நாள் உண்ணுதல், பகலின் மூன்ருவது ஜாமம் உண்ணுதல், சாந்த்ராயண வ்ரதம், பக்ஷபோஜனம், மாதாந்தர போஜனம், இவைகளே அநுஷ்டிக்க வேண்டும்.

முனி வ்ருத்திகளே அநுஷ்டித்துக் கொண்டு பல மூலாதிகளே ஆஹாரம் செய்துக் கொண்டு, தபஸ்ஸிஞல் தேஹத்தை ஒடுக்க வேண்டும். தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் ஸந்தோஷம் கொடுக்கும் ஸாதனம் செய்தல் வேண்டும். அக்னியை ஆத்மாவில் ஸ்தாபனம் செய்து கொண்டு வீடு இல்லாமல் அலேந்துகொண்டிருக்க வேண்டும். ப்ராணயாத்ரை நீடிக்கும் பொருட்டு தபஸ்வி வனவாஸி பிராம்மணர்களிடம் பிக்ஷை எடுத்து உண்ண வேண்டும்.

அல்லது வனத்தில் இருந்து கொண்டே கிராமத்திலிருந்து உணவு வரவழைத்து, எட்டு கவளம் போஜனம் செய்யலாம். இந்த விதமாக அனுஷ்டித்து வரும் ஒரு வானப்ரஸ்த ப்ராம்மணன் ப்ரம்மலோகத்திலும் பூஜிக்கப்படுகிருன். இந்த விதமாக வாழ்க்கையில் மூன்ரும்பாகத்தை வனத்தில் கழித்து வயதின் நான்காம் பாகம் வந்ததும் எல்லாவித ஸங்கத்தையும் த்யாகம் செய்து ஸ்ந்யாஸம் வாங்கிக் கொள்ள வேண்டும்.

தேவர்ஷி பித்ருகடன்கள், யக்ஞானுஷ்டானம், வேதாத்யயனம், புத்ரஉற்பத்தி, இவைகளேத் தீர்க்காமல் ஒருவன் ஸந்யாஸம் வாங்கிக் கொண்டால் அதோகதியில் வீழ்வான். ஒருவன் ஸந்யாஸம் வாங்கிக் கொண்டு ஒருவருக்கும் பயம் உண்டாகும்படி நடந்து

கொள்ளக்கூடாது. ஸர்வஜீவகணங்களும் எப்பொழுதும் அவனுக்கு அபயதானம் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

அக்னியையும், க்ருஹத்தையும் த்யாகம் செய்து ஸந்யாஸி மோக்ஷஸித்திக்கு வேண்டி அஸஹாயனாய் தனியாகவே எப்பொழுதும் திரிந்து கொண்டிருக்க வேண்டும். அவன் உணவுக்காக மட்டுமே க்ராமங்களுக்குச் செல்ல வேண்டும்.

ஸந்யாஸி இருக்கவோ, சாகவோ இச்சைப்படக்கூடாது. வேலையாள் யஜமானனுடைய ஆக்ஞையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது போல் ஸந்யாசி காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். ஒரு ஸந்யாஸி உலகில் ஒருவரிடத்திலும் ஆசையில்லாமல் எங்கும் ஸமநோக்குடன் மரத்தின் அடியில் படுத்துக்கொண்டு இருக்க வேண்டும். அவனையே முமுக்ஷு என்று புகழ்கிறார்கள்.

த்யானம், சௌசம், பிக்ஷா, (பிக்ஷை) நிர்ஜனஸ்தானத்தில் வாஸம், இந்த நான்கு கர்மங்களையும் தவிர ஸந்யாஸிக்கு ஐந்தாவதாக ஒரு கர்மமும் கிடையாது. வர்ஷ ருதுவின் நான்கு மாதங்களும் ஸந்யாஸி ஒரு இடத்துக்கும் போகக் கூடாது. அந்த ஸமயத்தில் போக்குவரத்து இருந்தால் அநேக வித்துக்களுக்கும், ஜந்துக்களுக்கும் கால் மிதிபட்டு ஹானி ஏற்படும்.

ஸந்யாஸி நடக்கும்போது கீழே குனிந்து ஜாக்கிரதையாகப் புழுபூச்சிகளை மிதிக்காமல் செல்ல வேண்டும். வஸ்த்திரத்தால் வடிக்கட்டியே ஜலம் குடிக்க வேண்டும். திகில்தரும் வார்த்தைகளையே உரைக்கக் கூடாது. எங்கும் ஒருவருடனும் கோபம் கொள்ளக் கூடாது. சண்டை போடக் கூடாது. ஒரு அபேக்ஷையும் இல்லாமல் நியதிநிவாஸம் இல்லாமல், ஆத்மஸஹாயமே துணையாய், ஜிதேந்த்ரியனாய், கேசம், நகம் இவைகளை வளர்த்துக் கொண்டு, எப்பொழுதும் ப்ரம்மத்தியானத்தில் இருக்க வேண்டும்.

ஸந்யாஸி குஸும்பாலில் முக்கிய துணியையே அணிய வேண்டும். தண்டத்தை எப்பொழுதும் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். தனது புகழை விரும்பக் கூடாது. சுரை அல்லது பூஷணி ஓடு, மரம், மண், ஓடு இவைகளை விட்டு ஐந்தாவதாக வேறு உலோஹத்தில் பாத்திரம் வைத்துக் கொள்ளக் கூடாது.

பிக்ஷுகன் ஒரு பொழுதும் உலோஹத்தால் ஆனபாத்திரம் வைத்துக் கொள்ளக்கூடாது. ஒரு ஸந்யாஸி ஒரு பைசா கூட வைத்துக் கொள்ளக்கூடாது. அப்படிவைத்துக் கொண்டால் அவர் ஒரு நாளைக்கு ஆயிரம் கோஹத்தி செய்த பாபம் அவரைச் சேருகிறது என்று ஸனுதன ஸம்ருதி சொல்கிறது. ஒரு ஸ்த்ரீயை ஸ்நேக பாவத்துடன் ஒரு தரம் பார்த்தால் போதும். இரண்டு கோடி வருஷங்கள் ஹிரண்ய கல்பம் வரைக்கும் கும்பீபாகம் என்னும் நரகம் அனுபவிக்க வேண்டி வரும். ஸந்யாஸிக்கு இரவு பகல் இரு நேரங்களும் சேர்ந்து ஒரு வேளைதான் போஜனம் செய்யலாம். அதுகூட விதம் விதமான உணவு வகைகளை உட்கொள்ளக்கூடாது.

க்ருஹஸ்தனுடைய வீட்டில் புகை அணைந்து, உலக்கை சப்தம் நின்று, நெருப்பும் அணைந்து ஜனங்கள் சாப்பிட்டு உண்டு பின்பு எச்சில் இலையை வாசலில் எறிந்த பின்பு மூன்றும் ஜாமத்திற்குப் பிறகு ஸந்யாஸி உண்ண வேண்டும். சொல்ப ஆகாரமும், ஏகாந்த ஸேவனமும் ஜிதேந்த்ரியனுகவும் ராகத்வேஷம் இல்லாமலும் எந்த பிக்ஷுகன் இருக்கிருனே, அவனே மோக்ஷத்தையடைகிருன். (எந்த இடத்தில் யதி ஒரு க்ஷணமாத்திரமாவது ஓய்வெடுத்துக் கொள்கிருனே அந்த ஓய்வு எடுத்துக் கொள்வதற்கு வேண்டிய ஸௌகர்யங்களை யார் செய்து கொடுக்கிருர்களோ அவர்கள் தன்யராவர். ஒரு க்ருஹஸ்தர் வீட்டில் ஒரு யதி ஒரு ராத்ரி தங்கினுலும் போதும், அந்த க்ருஹஸ்தன் ஜன்மம் முழுவதும் செய்த ஸஞ்சித பாபங்கள் பஸ்மமாகின்றன.)

எந்த ஆச்ரமத்தில் இருந்தாலும் தேஹம்

வயோதிகத்தின் விகாரங்களை அனுபவிக்கிறது. ஸஹிக்க முடியாத ரோகத்தினுல் பீடை ஏற்படுகிறது. மரணம், பிறகு கர்ப்பவாஸம் கர்பத்தில் அனுபவிக்கும் பயங்கர வேதனை, அநேக யோனிகளில் பிறப்பு, ப்ரியமானவர்களுடைய வியோகம், ப்ரியமில்லாதவர்களுடைய சேர்க்கை அதர்மத்தினுல் துக்கங்களின் உற்பத்தி, பிறகு நரகவாஸம், அநேக விதமான நரகயாதனைகள் கர்மதோஷத்தினுல் ஏற்பட்ட அநேக கதிகள்.

ஸ்திரமில்லாத, சரீரம், இவைகளை (யெல்லாம் யோசித்துப் பரமாத்மா ஒருவனே நித்யமானவன் என்று எண்ணி முக்திக்காக முயலவேண்டும்.) (பிக்ஷாபாத்திரத்தையும் தியாகம் செய்து கையிலேயே பிக்ஷை வாங்கிச் சாப்பிடும் ஜனங்களுக்கு நாள்தோறும் நூறு மடங்கு புண்ணியம் அதிகரிக்கிறது.)

அறிவாளி இந்த நான்கு விதமான ஆச்ரமங்களையும் அனுபவித்துவிட்டு நிரந்தர ஸங்கஹீனராகி ப்ரம்மத்தின் ஸாயுஜ்யதத்தை அடைகிறுன். கெட்ட புத்தியுள்ள ஜனங்களின் ஆத்மா ஒழுங்கீனமான நிலையில் திரிவதால் மாயையின் பந்தனத்தில் சிக்கிக் கொள்கிறுர்கள். புத்திமான்களால் வசப்படுத்தப்பட்ட ஆத்மாவோவெனில் ஒரு இடையூறுமில்லாமல் மோக்ஷபதத்தைக் கொடுக்கும் தாதாவாக ஆகிறது.

ச்ருதி, ஸ்ம்ருதி, புராணம், இதிஹாஸம், ச்லோகம், ஸூத்ரம், பாஷ்யம் இதைப்போல் மற்றும் வாக்கினுல் உச்சரிக்கக்கூடிய சாஸ்திரங்களும் வாக்கியங்களும் இருக்கின்றனவோ மற்றும் மேலும் வேதத்தின் ஆக்ஞையைப் பின்பற்றின ஞானம், ப்ரம்மசர்யம், தவம், ச்ரத்தை, வ்ரதம், ஸ்வதந்த்ரம், பற்றின்மை இவைகளெல்லாம் ஆத்ம ஞானத்தின் லக்ஷணங்கள்.

எந்த ஆச்ரமத்தில் இருந்தாலும் சரி, இந்த ஆத்மாவை ப்ரயத்தனப்பட்டு ஆராய்ந்தறிய வேண்டும், கேட்கவேண்டும், ஊஹிக்க வேண்டும்,

பார்க்கவேண்டும். ஆத்மஞானம் அடைந்தால்தான் முக்தி கிட்டும். ஆனால் அந்த ஆத்மஞானம் யோகமில்லாமல் கிட்டாது. யோகமும் வெகுகாலம் அப்யாஸத்தால்தான் கிட்டும். அரண்யவாஸம் அநேகக்ரந்தங்களைச் சிந்தித்து ஆராய்தல், தானம், உபவாஸம், தபஸ், யக்ஞம்.

பத்மாஸனம் முதலிய ஆஸனங்கள், பயிலுதல் மூக்குநுனியில் பார்வையை நிறுத்துதல், சௌசம், மௌனவ்ரதம், அநேகமந்த்ரஜபம் இவைகளினால் யோகஸித்தி ஒருபொழுதும் கைகூடாது. ஆனால் இந்த விஷயங்களை அடிக்கடி ஸாதனம் செய்து தோல்வியடைந்த பின்னர் விரக்தனாகப் போகவேண்டாம். கழிவிரக்கத்துடன் த்ருடநிச்சயத்துடன் அதிலேயே அப்யாஸத்துடன் ஈடுபட்டு வந்தால் யோகஸித்தி கிட்டும். இதைத்தவிர வேறு உபாயம் ஒன்றுமில்லை.

ஆத்மா ஐக்ய அனுஸந்தானம் செய்த பின்னர் ஆத்மாவிலேயேக்ரீடித்துக் கொண்டு அதிலேயே ஸந்தோஷமாக இருப்பவனுக்கு யோகஸித்தி அதிதூரத்தில் இல்லை. ஒருவன் இந்த உலகில் ஆத்மாவைத்தவிர வேறு ஒன்றுமில்லை என்று கண்டு, கேட்டுத் தெரிந்து கொண்டு யோகீந்த்ரனாய் ஆத்மாராமனாய் ப்ரம்ம ஸ்ரூபனாய் ஆகிறான்.

சில பண்டிதர்கள் மனதை, ஆத்மாவை லயிக்கச் செய்வதே யோகம் என்றும் சிலர் ப்ராணவாயு அபான வாயுவுடன் சேருவதே யோகம் என்கிறார்கள். ஆனால் முட்டாள்கள் விஷய போகங்களோடு இந்த்ரியங்களைச் சேர்ப்பதே யோகம் என்கிறார்கள். இந்த விஷயத்தில் ஆஸக்தியுடைய ஜனங்களுக்கு ஞானமும் முக்தியும் கிடைப்பது மிகவும். கடினம். சஞ்சலமான மனோவ்ருத்திக்குத் தடை ஏற்படாத வரை யோகத்தினுடைய வதந்திகூட எவ்விதம் கிட்ட நெருங்கும்?

மனதை உலக வ்யாபார விஷயங்களிலிருந்து இழுத்து க்ஷேத்ரக்ஞுன பரமாத்மாவுடன் ஐக்யப்படுத்துபவனே முக்தியடைகிறுன். முதலாவது வெளியில் செல்லும் இந்திரியவ்ருத்திகளை இழுத்து உள்முகமாக்க வேண்டும். அப்படிக் கட்டுப்பட்ட இந்திரியங்களை மனதுடன் சேர்க்க வேண்டும். அந்த மனதை ஆத்மாவுடன் சேர்க்க வேண்டும். அதற்குப் பிறகு பாவங்களோ எண்ணங்களோ இல்லாமல் க்ஷேத்ரக்ஞுன ஆத்மா பரமாத்மாவான ப்ரம்மத்திடம் லயிக்க வேண்டும். இதுவே சுருக்கமான த்யான யோகம் என்று குறிக்கப்படுகிறது. இதைத் தவிர மற்றவையெல்லாம் விஸ்தாரமான துஷ்ப்ரசாரமேயாகும்.

சிலருடைய ஹ்ருதயத்தில் ப்ரம்மாக்னி கனன்று சுடர்விடவில்லையானுல் அவர்கள் ப்ரம்மம் என்று ஒன்று இருக்கிறதா என்ற வாதத்திலேயே விரோதமான வாதங்கள் செய்கிறுர்கள். அவர்கள் செய்யும் ப்ரசாரங்களும் வாதங்களும் மற்றவர்கள் மனதினுள் நுழைந்து ஸ்திரமாக இராது.

(தினமும் ஒழுங்காக யோகாப்யாஸம் செய்து வருபவர்களுக்கு ப்ரம்மம் தன்னைத்தானே காட்டி வருகிறது.) வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத அந்த ஸூக்ஷ்மமான வஸ்துவை ஒருவன் மற்றொருவனுக்கு எப்படி எடுத்துரைப்பான்? மற்றவர்களுக்கு எப்படிக்காட்ட முடியும்? தடாகத்தில் காற்று வீசினுல் தண்ணீர் ஒரு க்ஷணம்கூட ஸ்திரமாக இருக்காது. அதுபோல சித்தமாகிய தடாகத்தில் ஜலமாகிய எண்ணங்களை ஆசைகளாகிய வாயுக்கள் அலைக்கழிக்கிறது. அதனுல் சித்தத்தை நம்பாதே.

அப்பொழுது என்ன செய்ய வேண்டும்? சித்தத்தை ஸ்திரப்படுத்துவதற்கு ப்ராண வாயுவைத் தடுக்க வேண்டும். வாயுவைத் தடுக்க என்ன செய்ய வேண்டும்? ஆறுவகை யோகாப்யாஸங்கள் செய்ய வேண்டும். அவை எவைகள்? ஆஸநம், ப்ராணுயாமம், ப்ரத்யாஹாரம்,

தாரணை, த்யானம், ஸமாதி, இவை ஆறுதான் யோகத்தின் அங்கங்கள். உலகத்தில் எத்தனை வகை ஜீவர்களின் யோனிகள் உள்ளனவோ, அத்தனை விதமான ஆஸநங்களும் இருக்கின்றன.

எண்பத்திநாலு லக்ஷம் ஆஸநங்கள் இருக்கின்றன. குறியின் மேல் இடது குதியின் காலை வைத்துச் சேர்க்க வேண்டும். இதற்கு ஸித்தாஸனம் என்று பெயர். இந்த ஸித்தாஸனம் யோகிகளுக்கு யோக ஸித்திகளைக் கொடுக்கக்கூடிய தாதா என்று கூறப்படுகிறது. இதை தினமும் அப்யஸித்து வந்தால் சரீரத்தில் தைர்யம் ஏற்படுகிறது.

வலதுகாலை இடது தொடையிலும், இடதுகாலை வலதுகால் தொடையிலும் வைத்து உட்கார்ருவது பத்மாஸனம் என்பது; இந்த பத்மாஸனத்தில் உட்கார்ந்து கொண்டு இரண்டு கைகளாலும் இரண்டு கால் கட்டை விரல்களை பின்பக்கம் மூலமாக வந்து பிடித்துக் கொள்ள வேண்டும். இந்த பத்மாஸனம் அப்யாஸத்தால் ஸகல வியாதிகளும் நிவர்த்தியாகிறது. அல்லது ஸ்வஸ்திக் முதலிய ஆசனங்களினுலும் யோகிகளுக்கு ஸுகம் கிடைத்தால் அவ்விதமாக உட்கார்ந்து யோக ஆஸநம் அப்யாஸம் செய்யலாம்.

ஜலம், அக்னி இவைகளுக்கு ஸமீபம் ஜீர்ணமான வனங்கள், பசுத்தொழுவம், முதலிய இடங்களில் எங்கு கொசு முதலிய பூச்சிகள் இருக்கின்றனவோ அங்கு கிராமங்களில் பூஜை செய்யும் வ்ருக்ஷங்களின் (அரசு முதலிய) அடியில் அல்லது மேடையில், கேசம், பஸ்மம், உமி, கரி, எலும்பு இவைகளினுல் அசுத்தப்படுத்தப்பட்ட, துர்கந்தமான மிகவும் ஜனநெருக்கமான இடங்களில் யோகாஸனம் செய்யக்கூடாது.

(ஒருவிதமான இடைஞ்சல் இல்லாமலும் இந்திரியங்கள் எல்லாம் சாந்தமாக இருக்கத் தகுந்ததும் மனதிற்கு மகிழ்ச்சி ஏற்படக்கூடியதும்,

*புஷ்பமாலைகளினாலும் தூப, தீபாதிகளினாலும் மணம் நிறைந்திருக்கும் இடத்தில் அமர்ந்து செய்ய வேண்டும். அதிக போஜனம் பண்ணிய பிற்பாடும், மலமூத்திரங்களை அடக்கிக் கொண்டு வழியில் செல்லும் போது களைப்படைந்திருக்கும் போதும், கவலையால் பீடிக்கப்பட்டிருக்கும் போதும் யோகாப்யாஸம் செய்வது நல்லதல்ல.)*

*இரண்டு தொடைகளின் மேலும் இடது கையை சற்றுத்தூக்கி மலர்த்தி வைத்துக் கொண்டு முகத்தை மார்புடன் ஒட்டிவைத்துக் கொண்டு, இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு ஸத்வகுணத்தில் ஸ்திரமாகி நின்று பல்லுடன் பல் சேர்க்காமல் நாக்கை தொண்டையில் ஸ்திரமாக வைத்துக் கொண்டு வாயை மூடிக்கொண்ணடு, அசைவில்லாமல் எல்லா இந்திரியங்களுடைய தொழிலைத் தடுத்து அதிக தாழ்வும் அதிக உயரமும் இல்லாமல், ஸமமாக இருக்கும் ஆஸநத்தில் அமர்ந்து - உத்தமம், அல்லது மத்யமம், அல்லது எளிதான முறையில் ப்ராணாயாமத்தை ஆரம்பிக்க வேண்டும். வாயு சஞ்சலமாக வீசினால் தேஹமும் சலிக்கும். வாயு ஸ்திரமாக இருந்தால் எல்லாமும் ஸ்திரமாக இருக்கும். அதனால் யோகி வாயுவை நிறுத்தினால் ஸ்திரத்தன்மை அடைவான்.*

*எதுவரை சரீரத்தில் ப்ராணன் இருக்கிறதோ அதுவரை உயிர் சரீரத்தில் இருப்பதாகக் கருதப்படுகிறது. உயிர் சென்றுவிட்டால் மரணம் என்று கூறுகிறோம். அதனால் ப்ராணனையே தடுத்து நிறுத்த வேண்டும். எதுவரைக்கும் சித்தம் வெளிவிஷயங்களை உருவகப்படுத்தாமலும் சூன்யமாக, ஸ்திரமாக இருக்கிறதோ, எதுவரைக்கும் பார்வை இரண்டு புருவத்திற்கும் மத்தியிலும் ஸ்திரமாக இருக்கிறதோ, அதுவரைக்கும் காலனால் பயமுண்டாகாது.*

*ப்ரம்மாவும்கூட காலபயத்தால் தினமும் ப்ராணாயாமம் செய்கிறார். அநேக யோகியர்கள் கூட இதே*

ப்ராணுயாம மூலமாக பூர்ணஸித்தியை அடைகிருர்கள். எளிதான முறை அல்லது லகு என்ருல் அக்ஷரங்களுக்கு மாத்திரை உண்டு. அதாவது ஒரு அக்ஷரத்தை உச்சரிக்கும் அளவுக்கு மாத்திரை என்று பெயர். அது போல பன்னிரண்டு மாத்திரைகள் கொண்ட ப்ராணுயாமம் லகு என்று கூறுகிருர்கள். அதில் இரண்டு மடங்கு மாத்திரைகள் கொண்டது மத்யமம். அதில் மூன்று மடங்கு கொண்டது உத்தமம். ப்ராணுயாமம் செய்யும் பொழுது க்ரமபூர்வமாக வியர்வை, நடுக்கம், க்லேசம் உண்டாகும். ஆனுல் நியமத்துடன் ப்ராணுயாமம் செய்து வந்தால் லகுப்ராணுயாமத்தினுல் வியர்வையும் மத்யமபிராணுயாமத்தினுல் நடுக்கமும் உண்டாகும்.

உத்தம ப்ராணுயாமத்தினுல் க்லேசமும் ஜயிக்கப்பட்டு யோகியானவன் ப்ராண சித்தனுகிருன். பிறகு க்ரமமாக நிச்சலமாகிருன். அதன் பிறகு யோகி க்ரமமாக அப்பியாஸம் செய்து கொண்டு வந்தால் அந்த வாயு யோகி, எங்கெங்கே ஸஞ்சரிக்க விரும்புகிருனே அங்கங்கு அவனைச் சேர்ப்பிக்கிறது. இந்த ப்ராணவாயுவைப் பிடிவாதமாகத் தடுத்து நிறுத்தினுல் மயிர்க்கால்கள் வழியாக வெளிச்சென்று விடும். (தேஹத்தைக் கிழித்துவிடும், குஷ்டம் முதலிய ரோகங்களைத் தோற்றுவிக்கும்; அதனுல் காட்டிலிருந்து பிடிக்கும் யானையைப் பழக்குவதுபோல் மெதுவாக இதைப் பழக்கவேண்டும். காட்டுயானை, சிங்கம் முதலியன பழக்க பழக்கக் கீழ்ப் படியும்.)

தன்னை ஆள்பவன் சொல்லைக் கேட்கும். அவனுடைய எந்த உத்தரவையும் தட்டாது. அதே போல் இதயத்தில் இருக்கும் ப்ராணனும் க்ரமமான யோகாப்யாஸத்தால் ஈர்க்கப்பட்டு ஸமமானதும் நம்பிக்கைக்குப் பாத்திரமாகிறது. இந்த வாயு நாசியின் வலது இடது த்வாரங்கள் வழியாக வெளிப்பட்டு முப்பத்தாறு அங்குலம் வெளியில் செல்கிறது. இந்தப் ப்ரயாணத்தின் காரணத்தினுல் தான் இது ப்ராணன் என்று கூறப்படுகிறது.

எப்பொழுது எல்லா நாடிசக்கரங்களும் வ்யாகுலத்தைக் கொடுக்காமல் சுத்தமாகிறதோ அப்பொழுது யோகியும் ப்ராணனைத் தடுத்து நிறுத்துவதில் ஸமர்த்தனாகிறான். முதலாவது திடமான ஆஸநத்தில் அமர்ந்து முடிந்த மட்டும் சந்திரநாடி, இடாநாடி, என்று கூறப்படுகிற இடது நாசியின் துவாரத்தின் வழியாகப் ப்ராணன் உள்ளுக்கு இழுக்கப்படுகிறது.ஸூர்யை நாடி பிங்களநாடி என்று கூறப்படும். பிறகு வலது நாசியின் வழியாக வெளியில் விடவேண்டும். யோகீஸ்வரர்கள சந்திரனுடைய பீஜத்திலிருந்து பெருகும் அம்ருததாரைப் பெருக்குகளைத்யானம் செய்து கொண்டு ப்ராணாயாமத்தின் மூலமாகச் சீக்கிரமாகவே ஸுகானுபாவம் பெறுகிறார்கள்.

ஸூர்யநாடி வழியாகப் ப்ராணவாயுவை உள்ளுக்கு இழுத்து அதனால் உதர ரூபமான குகையை நிரப்ப வேண்டும். இதைக் கும்பகம் என்று கூறுகிறார்கள். பிறகு யோகி சந்திரநாடி மூலமாக மெள்ள மெள்ள வெளியில் விடவேண்டும். ஜ்வலிக்கின்ற அக்னிக்கு ஸமமான ஸூர்ய தேஜஸ்ஸில் ஸூர்யனை இதயத்தில் த்யானம் செய்யும் யோகிராஜன் வலது இடது நாசித்வாரம் வழியாகப் ப்ராணாயாமத்தைச் செய்து ப்ரம்ம ஸுகத்தை அனுபவிக்கிறான். அந்த யோகி ப்ராணஸித்தி பண்ணினவனாக ஆகிறான்.

இந்த விதமாக மூன்றுமாத பர்யந்தம் தக்ஷிண வாமமூலமாக இரண்டு விதமாகப் ப்ராணாயாமங்களையும் அப்யாஸம் செய்து கொண்டிருப்பதனால் யோகியின் நாடிகள் சுத்தமாகின்றன. அந்த யோகி ஸித்தப்பிராணன் என்று அழைக்கப்படுகிறான். இந்தவிதமாக நாடிகள் சுத்தீகரிக்கப்பட்டபின் யோகிக்குப் பெருமளவு வாயுவை உள்ளடக்க முடியும். அவனுடைய ஜாடராக்னி ஜ்வலித்து எழும். அப்பொழுது ஆதாரசக்கரத்தில் இருக்கும் பரா என்னும் வாக்கை அவன் செவிகள் கேட்கத் தொடங்கும். அவனுடைய சரீரத்தில் ஒரு நோயும் அணுகாது.

*சரீரத்தில் இருக்கும் வாயுவின் பெயர் ப்ராணன். அந்த ப்ராணனைத் தடுத்து நிறுத்துவதை ஆயாமம் என்று கூறுகிறார்கள். அந்த ஒரு சுவாஸ மயமான மாத்திரை அதாவது ஒரு முறை உச்சரிக்கிற அளவு (காலம்) ப்ராணாயாமம் என்ற பெயரினால் உச்சரிக்கப்படுகிறது.*

*லகு ப்ராணாயாமம் செய்யும் பொழுது வியர்வை உண்டாகும். மத்யம ப்ராணாயாமம் செய்யும் பொழுது நடுக்கம் உண்டாகும். உத்தமப் பிராணாயாமம் செய்யும் பொழுது பத்மாஸனத்தில் அமர்ந்திருக்கும் சரீரம் அடிக்கடி பூமிக்கு மேலே கிளம்பும். ப்ராணாயாமம் செய்வதால் சரீரக் குற்றங்களும், ப்ரத்யாஹாரத்தினால் ஸஞ்சித பாதகங்களும் நீங்கும். தாரணையின் பலத்தினால் மனஸ்ஸில் தைர்யம் பிறக்கும். (த்யானத்தின் மூலமாக ஸாக்ஷாத் ஈஸ்வரரின் தரிசனம் கிடைக்கும்.)*

*ஸமாதி ஸாதனத்தைச் செய்யும் பொழுது சுப அசுப கர்மங்கள் நீங்கி மோக்ஷ லாபம் அடைகிறோம். (ஆஸனத்தின் பலத்தினால் சரீர ஆரோக்யம் ஏற்படுகிறது.) இது ஷடங்கயோகம் என்று சொல்லப்படுகிறது. பன்னிரண்டு ப்ராணாயாமம் ஒரு ப்ரத்யாஹாரம்; (பன்னிரண்டு ப்ரத்யாஹாரம் ஒரு தாரணை. பன்னிரண்டு தாரணைகள் ஒரு த்யானம். இந்த த்யானத்தினால் ஈச்வர ஸாக்ஷாத்காரம் கிடைக்கிறது. பன்னிரண்டு த்யானம் ஒரு ஸமாதி.)*

*ஸமாதிக்கு அப்பால் ஸ்ப்ரகாச அனல்ஜோதி தென்படுகிறது. இதைப் பார்த்த பிறகு ஸமஸ்த க்ரியா காண்டங்களும் உலகத்திற்கு திரும்பத் திரும்ப வரும் போக்குவரவு முடிவடைந்து விடுகிறது. ப்ராணவாயு ஆகாச தத்வத்தை அதாவது ப்ரம்மமந்த்ரத்தை அடையும் பொழுது மணியடிக்கும் சப்தம், வாத்யங்களின் த்வனியும் கேட்கப் படுகின்றன. பிறகு ஸித்தி ஸமீபித்து விடுகிறது என்று எண்ணலாம்.*

ப்ராணயாமத்தைச் சரியான ரீதியில் அனுஷ்டிப்பதினால் யோகியின் ஸமஸ்த ரோகங்களும் நாசமடைகின்றன. இந்த ப்ராணயாம யோகத்தைத் தவறுதலாய் அனுஷ்டித்தால் வ்யாதிகள் உற்பத்தியாகின்றன. விக்கல், மூச்சு முட்டல், இருமல் தலை, காது, கண்கள் இவைகளில் வலி ஏற்படும். அநேக தோஷங்கள் வாயுவினுடைய ஒழுங்கீனத்தினால் ஏற்படுகிறது.

அதனால் குறுகிய அளவில் கொஞ்சம் கொஞ்சமாக மூச்சை வெளியில் விடவேண்டும். அதே அளவிற்கு அடக்க வேண்டும். இப்படிச் செய்து வந்தால் யோகி ஸித்தியடைவான். சுயேச்சையாக விஷயங்களில் திரிந்து கொண்டிருக்கும் இந்திரியங்களை யுக்தி பூர்வகமாகத் திரும்பக் கொண்டு வருவதின் பெர் ப்ரத்யாஹாரம்.

ஆமைகள் தங்கள் அங்கங்களை உள்ளடக்கிக் கொண்டிருப்பது போல யோகி இந்த ப்ரத்யாஹார விதியை அனுஷ்டிப்பதினால் பாபமில்லாதவனாகிறான். சந்திரன் தொண்டைப் பிரதேசத்திலிருந்து கொண்டு அதே முகமாக அம்ருத இஷ்டி செய்கிறான். நாபீ தேசத்தில் இருக்கும் ஸூர்யன் ஊர்த்வ முகமாகி அதை க்ரஹிக்கிறான். அதனால் யோகி இந்த விதமாக ஸாதனம் பண்ண வேண்டும் (அதாவது மேலே நாபியும், கீழே தொண்டையும்) அப்படிச் செய்வதினால் மேல் பாகம் ஸூர்யனும், கீழ் பாகம் சந்த்ரனுமாக அமைக்க முடியும். இந்த விபரீத ஸாதனம் அப்யாஸத்தினால்தான் அமைக்க முடியும்.

ப்ராணயாமத்தின் விதி தெரிந்த யோகி காக்கை தன் அலகால் ஜலத்தை உறிஞ்சுவது போல தனது வாயால் அத்யந்தசீதளமாகிய ப்ராண வாயுவைக் குடித்து ஜரையில்லாமல் ஆகிறான். தொண்டைத் துவாரத்தில் நாக்கை மடித்து வைத்து ஊர்த்வ முகமாக அம்ருதத்தைப் பானம் செய்வதினால் ஸந்தேஹமில்லாமல் அவன் ஆறுமாதத்திற்குள் ஜரையில்லாத் தன்மையடைகிறான்.

இவ்விதம் நாக்கை மேல் நோக்கி வைத்து ஸ்திரமாக அம்ருதபானம் செய்யும் ஒரு யோகி ஒரு பக்ஷத்திற்குள்ளாகவே ம்ருத்யுவை ஜயித்து விடுகிருன். நாக்கின் நுனியிஞல் அவனுடைய மூலாதாரத்தில் இருக்கும் பெரிய துவாரத்தை யடைத்து ஸுதாமை தேவியை த்யானம் செய்வதிஞல் ஆறே மாதங்களில் கவியாகிருன். யோகியினுடைய சரீரம் அம்ருத பானத்திஞல் பூர்த்தியாகும்போது அவன் இரண்டு மூன்று வருஷங்களுக்குள்ளாகவே, ஊர்த்வ ரேதஸ்ஸுடன் அணிமாதிஸித்திகளை யடைகிருன்.

தினமே இம்மாதிரி அம்ருத பூர்ண சரீர தாரியாக யோகியிருந்தால் அவனை தக்ஷகஸர்ப்பம் கடித்தால் கூட விஷம் ஏருது. அதஞல் முதலில் ஆஸனத்தை ஸ்திரமாக்கிக் கொண்டு ப்ராணுயாமத்தை அப்யஸிக்க வேண்டும். பிறகு ப்ரத்யாஹாரம் கூடும் போது தாரணையை அனுஷ்டிக்க வேண்டும். மனதை ஸ்திரமாக்கிக் கொண்டு இதயத்தில் பஞ்ச பூதங்களையும் வெவ்வேருக தாரணை செய்வதையே இங்கு தாரணம் என்று கூறப்படுகிறது. பஞ்ச பூதங்களையும் வேறு வேருக தாரணை செய்யும் முறை. (1) அரிதாரத்திற்கு ஸமமான பீதவர்ணமும், நாற்கோணமும், லகாரபீஜமும் ஆன ப்ரம்மதேவதையான ப்ருத்வீதத்வத்தை இதயத்தில் த்யானம் செய்ய வேண்டும். இதுதான் ப்ருத்வீதாரணமாகும்.

குந்த புஷ்பத்திற்கு ஸமமான வெள்ளை வர்ணமும், லகாரபீஜமும் அர்த சந்திரஹாரமும், விஷ்ணு தேவதையும், கொண்ட ஜலதத்துவத்தை, கழுத்து ப்ரதேசத்தில் த்யானம், செய்ய வேண்டும். இது ஜலதாரணையாகும். இந்திர கோபம் பூசியதுபோல ரக்தவர்ணமும், த்ரிகோணமும், ரகாரபீஜமும் கொண்ட ருத்திர தேவதையாம் அக்னிதத்வத்தை தொண்டைப் பிரதேசத்தில் தியானம் செய்வது அக்கினி தாரணையாகும். மையைப் போன்ற ச்யாமளவர்ணமும், வட்டவடிவமும், யகாரபீஜமும், ஈசஞகிற தேவதையும், கொண்ட வாயு

தத்வத்தை இரண்டு புருவங்களுக்கு மத்தியில் த்யானம் செய்வது வாயு தாரணையாகும்.

ஜலத்தைப் போன்று வர்ண சூன்யமாகவும் சாந்த நிராகாரமாகவும், ஹகார பீஜமும், ஸதாசிவன் என்ற தேவதையும் கொண்டு ஆகாச தத்துவத்தை ப்ரம்மமந்திரத்தில் இருத்தி த்யானம் செய்ய வேண்டும். இது ஆகாச தாரணையாகும். இது ஐந்து நாழிகைவரைக்கும் ப்ராணனை த்யானத்தில் நிறுத்தினால் அந்த ஆகாச தாரணை மோக்ஷ வாயிலுக்குத் தாழ்ப்பாளாக இருக்கும் விக்னங்களை விலக்குவதற்கு வல்லமையுள்ளதாகிறது. இதே ஐந்து பூதங்களின் தாரணையாகும். இதன் பலரூபமாக முறையே ஸ்தம்பினீ, ப்லாவினீ, தஹனீ, ப்ராம்மிணீ, சமனீ இவைகள் பலஸ்வரூபமாகும்.

தயை: இந்த தாது சிந்தை என்னும் அர்த்தத்தில் கூறப்படுகிறது. தத்வ விஷயத்தில் ஏகாரமாகி இருக்கும் ஸ்திரமே சிந்தையாகும். யோக சாஸ்திரத்தில் நிர்குண ஸகுணம் வித்யாஸத்தில் இரண்டு விதமாக த்யானிக்கச் சொல்லப் பட்டிருக்கிறது. த்யானம் செய்வது ஸகுண த்யானமாகும். கேவலம் உருவமில்லாமலும் மந்திரமில்லாமலும், த்யானிப்பது, நிர்குண த்யானநிலைநிறுத்தி சுகமான ஆசனத்தில் இருந்து சரீரத்தை ஸமத்வமாக வைத்துக் கொள்வது த்யான முத்ரையாகும். இது மிகவும் ஸித்திப்ரதமாக இருக்கிறது.

(யோகி ஸித்தாசனத்திலமர்ந்து எந்த புண்ணியத்தை ஸம்பாதிக்கிறானோ அந்த புண்ணியம் அசுவமேதமோ, ராஜஸூயமோ நடத்தினாலும் கிடையாது.) காது முதலிய இந்திரியங்களில் சப்தம் முதலிய விஷயங்கள் புகுந்து கொண்டிருக்கும் வரையில் (ஒரு மாத்ரை அளவாவது) அதற்கு த்யானம் என்று பெயர். அதற்கு மேல்தான் ஸமாதி அவஸ்தை. ஐந்து நாழிகைப் பொழுது தாரணை; எட்டுமணி நேரம் த்யானம், ஜலமும் உப்பும் கலந்தால் அவை ஒன்றுவது போல் ஆத்மாவும் மனமும் கலப்பதே ஸமாதி.

எந்த நிமிஷமும் ப்ராணன் க்ஷீணமடைந்து மனம் லவலேசமாயினும் அதில் கலந்தால் அந்த வேளையில் நடக்கும் ஸமரஸத்தை ஸமாதி என்று கூறுகிறோம். இந்த சரீரத்தில் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றாகக் கலக்கும் போது ஒரு மானஸிகக் கன்மமும் மீதியிருக்காது. இதுவே ஸமாதிநிலை எனப்படுகிறது.

ஸமாதியில் அமர்ந்திருக்கும் (நிலைத்திருக்கும்) யோகீந்திரன் தன்னையோ, பிறரையோ, சீதத்தையோ, உஷ்ணத்தையோ ஸுகத்தையோ, துக்கத்தையோ ஒன்றையும் உணர்கிறாரில்லை. யோகி ஸமாதியில் ஆழ்ந்திருக்கும் போது அவனைக் காலமும் அசைக்காது, கர்மமும் மறைக்காது; அஸ்திர சஸ்திரங்களும் வெட்டாது. ஒரு யோகியானவுடன் ஆஹார விவஹாரங்கள், நித்திரை, விழிப்பு ஸமஸ்தகர்மங்களையும் அளவாகச் செய்து கொண்டிருப்பவன் அதனால் ஸஹஜமாக தத்துவத்தைப் பார்க்கிறான்.

ப்ரம்ம ஞானிகள் காரணம், கார்யம், உவமை இவைகளில்லாமல் வசனத்துக்கும் மனதிற்கும் எட்டாமல் விக்ஞான ரூபமும் ஆனந்த மயமுமான ப்ரம்மதத்வத்தை அறிகிறார்கள்.

யோகி ஷடங்க யோகாப்யாஸத்தின் மூலமாக நிராலம்பமும், நிராதங்கம், நிராமயமுமான பரப்ரம்மத்தில் லயிக்கிறான். நெய்யை நெய்யிலும், பாலைப் பாலிலும் விடும் ரீதியில் பரப்ரம்மத்தில் யோகியும் தன் மயமாகிறான்.

ஜலம் விடாமல் பஸ்மம் முதலிய த்ரவ்யங்களை தேஹத்தில் தேய்த்துக் கொண்டு அதிகூடான பொருள் உப்பு முதலியவை உண்ணாமல் பாலினால் ஆன உணவையே சாப்பிட்டுக் கொண்டிருக்க வேண்டும். ஜிதேந்த்ரியனாய் ப்ரம்மசர்யத்தை அனுஷ்டித்துக் கொண்டு க்ரோதம், (கோபம்) மோஹம், மாத்ஸர்யம் இவைகளை விலக்கி ஒரு வருஷ பரியந்தம் அப்யாஸம் செய்து வருபவன்

யோகி என்ற பெயரால் அழைக்கப்படகிருன். மஹா முத்திரை, நபோமுத்திரை, உட்டியானம், ஜாலந்தர், மூலபந்தனம் என்பவைப் பற்றி யோகி நன்ருகக் கற்றுக்கொண்டிருந்தால் அவன் யோகஸித்திகளை நன்ருக அறிந்ததாகக் கருதப்படுகிருன்.

மஹா முத்திரையாவது நாடிகளைச் சுத்தம் செய்தல், சந்திரநாடியையும் ஸூர்யநாடியையும் ஒன்று சேர்ப்பது, சரீரத்தில் உள்ள ரஸங்களை நன்ருக உலர்த்துவது. இடது காலிஞல் ஆண்குறியை அமுக்கிக் கொண்டு வக்ஷஸ்தலத்தில் முகவாய்க் கட்டையைச் சேர்த்து ஒட்டிக்கொண்டு இரண்டு கைகளாலும் வலது காலை வெகு நேரம் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். பிறகு ப்ராண வாயுவை உதரத்தில் நிரப்பிக் கொண்டு மெதுவாக வெளியில் விட வேண்டும். இதே மஹாபாபக் கூட்டங்களை விலக்குகின்ற மஹாமுத்ரை என்று கூறப்படுகிறது.

முதலாவது சந்திர (இடை) நாடியில் ப்ராணயாமத்தை அப்யஸித்து பிறகு ஸூர்ய நாடியில் அப்யஸிக்க வேண்டும். எப்பொழுது பூரகம் முதலியவைகளின் எண்ணிக்கை ஸமமாகுமோ, அப்பொழுது முத்ரைகள் அவசியமில்லை. இந்த மஹா முத்ரையை அப்யஸிக்கும் போது பத்யம், அபத்யம் இவைகளில்லை. ரஸமற்ற ஸகலபதார்த்தங்களும் கூட ரஸமுள்ளவைகளாக ஆகின்றன. மஹாக்கடும் விஷம் குடித்தாலும் அது அமுதத்துக்குத் துல்யமாகும். ஜீரணமாகும்.

மஹாமுத்ரையை அப்யஸிப்பவனுக்கு க்ஷயம், குஷ்டம், மூலம், வயிற்றுநோவு, அஜீரணம் முதலிய ரோகங்கள் அகன்று விடும். தொண்டையின் த்வாரத்தில் நாக்கை அடைத்து இரண்டு புருவங்களுக்கு மத்தியில் தருஷ்டியை நிலைநிறுத்துவது கேசரி முத்ரையாகும்.

இக்கேசரி முத்ரையை அறிபவன் பர ஸமூஹத்திஞல் பீடிக்கப்பட மாட்டான். கர்ம ஜாலங்களில் விழமாட்டான். காலத்தின் இடையூறுகளை அடையமாட்டான். இதை

அப்யஸிக்கும் போது சித்தமும் நாக்கும் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்றன. அதனுல் இந்த முத்திரைக்கு பெயர் கேஸரி முத்திரை என்பதாகும். ஸித்தகணங்கள் இதை வெகுவாக மதிக்கிருர்கள்.

பிந்து சரீரத்தில் சரியான இடத்தில் சரியாக இருக்கும் வரை ம்ருத்யுபயம் இல்லே. கேசரிமுத்திரை பந்தனப் பட்டு இருக்கும் வரை பிந்து நிலே பெயராது. இரவும் பகலும் மஹாப்ராணன் எழும்பிக் கொண்டிருப்பதால் அதைக் கட்டுபடுத்தும் நியமத்தை உட்டியாணம் என்று கூறுகிருர்கள்.

வயிற்றின் மேல் இரண்டு கைகளின் நுனியினுல் விரிந்திருக்கும் இரண்டு கால்களுடைய மத்திய பாகத்தைப் பிடித்து கொண்டு கொப்பூழுக்கு மேலே கொண்டுவர வேண்டும். இதை உட்டியாண முத்திரை என்று கூறுகிருர்கள். இதை ஸாதனே புரிந்தால் ம்ருத்யு பயம் இருக்காது.

எதன் மூலமாகக் கீழ் நோக்கிச் செல்லும் சரீரத்தில் உள் இருக்கும் த்வாரங்கள் வழியே போகும் ஜலத்தைக் கழுத்து பிரதேசத்தில் நாடி, நாடிக் கூட்டங்களால் தடுத்து நிறுத்த வேண்டும். இதுவே ஜாலந்தரபந்தகம். துக்க நாசனம் செய்யும் கண்டத்தைச் சுருக்கும். இந்த ஜாலத்தர பந்தத்தை அப்யஸித்தால் நெற்றிக்கட்டு வழியாகப் பெருகும் அம்ருதம் ஜாடராக்னியில் விழாது. சரீரத்திலிருந்து வாயுவும் சலிக்காது (செல்லாது). குதிகாலினுல் குதஸ்தானத்தை அமுக்கிக் கொண்டு அபாநவாயுவை மேலுக்கு இழுப்பதால் மூல பந்தனம் செய்வதாகிறது.

இந்த மூலபந்தனத்தினுல் எப்பொழுதும் அபானன், ப்ராண வாயுவுடன் ஒன்று கூடுகிறது. இதனுல் கிழவனும் குமரனுகிறுன். ஜீவப்பிராணன் அபானவாயுவுடன் சேர்ந்து இடது வலது பக்கமாகக் கீழேயும் மேலேயும் செல்கிறது. அது எப்பொழுதும் சலித்துக் கொண்டிருப்பதால்

க்ஷணம்கூட ஸ்திரமாக இருக்காது. நூலில் கட்டிய பறவை உயரப் பறக்க முயற்சித்து நூல் இழுக்கும் பொழுது கீழே வருகிற மாதிரி ஸத்வாதி குணங்களில் பந்தப்பட்ட ஜீவனும் ப்ராணாயாமத்தினுல் ஆகர்ஷிக்கப்படுகிறது.

அபான வாயுவுடன் ப்ராணவாயு, ப்ராணவாயுவினுல் அபான வாயு இவைகள் பரஸ்பரம் ஒன்றுகொன்று இழுக்கப்படுகின்றன. இரண்டு வாயுக்களும் எப்பொழுதும் மேலும் கீழேயுமாக இழுத்துக் கொண்டேயிருக்கும். இதை யோகி ஒன்று சேர்ப்பான்.

ஜீவன் ஹகாரத்தால் வெளியே போகிறது. ஸகாரத்துடன் உள்ளே ப்ரவேசிக்கிறது. அதனுல் அது ஹம்ஸ ஹம்ஸ என்னும் மந்திரத்தை ஸதா ஜபித்துக் கொண்டிருக்கிறது. ஒரு இரவும் பகலுமாக ஜீவன் இருபத்தோராயிரத்து அறுநூறு தடவை இந்த மந்திரத்தை நித்தம் ஜபிக்கிறது. இதை ஸங்கல்பித்த மாத்திரத்திலேயே ஸமஸ்த பாபங்களும் விடுபடுகின்றன.

இந்த யோக ஸாதனத்தில் யோகிகளுக்குக் கெடுதல் செய்யும் எல்லா இடையூறுகளும் நேருகின்றன. தூரத்துப் பேச்சு கேட்கிறது. தூரத்துப் பொருள்கள் முன்னுல் கிட்ட இருப்பதாகத் தெரிகிறது. அரை நிமிஷத்தில் ஒரு நூறு யோஜனை தூரம் செல்லும் சக்தி ஏற்படுகிறது. இதுவரை படிக்காத எல்லா சாஸ்திரங்களும் கண்டஸ்தமாகிறது. (பாராமல் வாய்மொழி வருகிறது.)

தாரணு சக்தி மிக அதிகரிக்கிறது. மிகவும் பாரமான வஸ்து லகுவாகுகிறது. நினைத்த பொழுது துர்பலமாகவோ ஸ்தூலமாகவோ, பெரியவனுகவோ, சின்னவனுகவோ முடியும். பிறர் சரீரத்தில் ப்ரவேசிக்க முடியும். பசு பக்ஷிகளுடைய பாஷை அர்த்தமாகும். சரீரத்தில் திவ்ய வாஸனை வரும். தேவபாஷை பேசவரும். ஸ்வர்க கன்னிகைகள் ப்ரார்த்திக்கத் தொடங்குவார்கள். தேவ சரீரம் ஸித்திக்கும். இந்த எல்லா விக்னங்களும் ஸூசக ரூபமாக வருகிறது.

இப்படி யோகியருடைய சித்தம் இந்த

விக்னரூபமான ஸித்திகளில் சிக்கிக் கொள்ளாமல் இருக்குமானால் பிறகு அவன் ப்ரம்மாதி தேவர்களுக்கும் துர்லபமான பரமபதத்தை அடைவான். அந்தப் பதவி கிடைத்தால் பிறகு ஸம்ஸாரத்துக்குத் திரும்பிவர வேண்டாம். ஒருவரையும் பற்றிச் சிந்திக்கவோ, துக்கப்படவோ வேண்டாம். கும்பமுநியே! இவையெல்லாம் ஆறு அங்கரூபமான ஷடங்க யோகாப்யஸத்தினால் ஸித்திக்கும்.

ஒரே ஜன்மத்தில் இந்த யோகம் எப்படி ஸித்தியாகும்! யோக ஸித்தியில்லாமல் இந்த லோகத்தில் எப்படி முக்தி கிடைக்கும்? ஹே! கும்பமுநியே! முக்திக்கு இரண்டே இரண்டு மார்கங்கள்தான் உள்ளன. அதில் காசியில் சரீரத்தை விடுவது. மற்றொன்று மேற்கூறிய விதம் (யோகிகளுடைய) யோகாப்யாஸம் செய்வது.

இந்திரியங்களின் செயல்கள் சஞ்சலமாகி இருப்பதால், மனிதர்களின் ஆயுள் மிகக் குறைவாகயிருப்பதனால் இந்த போக பூமியில் எப்படி ஸித்தி ஏற்படும் அதனால் அந்த தயாஸாகரர் பகவான் விஸ்வேஸ்வரர் ப்ராணிகளுக்கு அதனால் மோக்ஷதாதாவாக எப்பொழுதுமே காசியில் வஸிக்கிறார்.

ப்ராணிகள் காசியில் எவ்விதம் அனாயாஸமாக மோக்ஷத்தை அடைகிறார்களோ அதுபோல வேறு எங்கும் யோகம் முதலாகிய நானாவித உபாயங்களினால்கூட முக்தியடைய முடியாது. காசியில் நம்முடைய தேஹத்தோடு கூடியிருப்பதே ஸம்பூர்ண யோகம் என்று சொல்லப்படுகிறது. இந்த யோகத்தினால் காசியில் எத்தனை சீக்கிரமாக மோக்ஷத்தை அடையக்கூடுமோ அத்தனை வேறு எங்கும் அடைய முடியாது.

(காசியிலோ என்றால் விச்வேஸ்வரர், விசாலாக்ஷி, கங்கா, காலபைரவர், டுண்டிகணபதி, தண்டபாணி இவர்களே ஆறு யோகங்களின் அங்கஸ்வரூபமாகும்.) இங்கு காசியில் இந்த ஆறு அங்கமான யோக ஸாதனத்தை

தினமும் செய்து வந்தால் மஹாயோக நித்திரை அடையும் பொழுது மோக்ஷலாபம் உண்டாகிறது.

காசியில் ஓங்காரேஸ்வரர், க்ருத்திவாஸேஸ்வரர், கேதாரேஸ்வரர், த்ரிலோசனர், வீரேஸ்வரர் விச்வேஸ்வரர் இவர்களை ஸேவித்தலே இரண்டாவது ஷடங்கயோகமாகும். வருணஸங்கமம், அஸ்ஸிஸங்கமம், ஞானவாபி, மணிகர்ணிகை, ப்ரம்ம குண்டம், தர்மநதம் என்று கூறப்படும் பஞ்சகங்கை, இந்த ஆறும் மற்றொரு விதமான யோகாங்கமாகும்.

ஹே! நரோத்தமா! காசியில் இந்த ஷடங்கயோக ஸாதனத்தால் ப்ராணிகள் ஒரு பொழுதும் அன்னையின் உதரத்தில் மறுபடியும் பிறக்க மாட்டார்கள். காசியில் கங்காஸ்னனமே மஹாபாதக நாசினியான மஹாமுத்திரையாகும். இந்த மஹாமுத்திரையை அப்யாஸம் செய்தாலே போதும். மோக்ஷம் கிட்டும்.

காசி வீதிகளில் திரிவதே கேசர முத்திரையாகும். கேசரி முத்ரா ஸாதனத்தால் அவசியம் கேசர தேவதையாகிறான். கே என்றால் ஆகாயம். 'சர' என்றால் ஸஞ்சரிப்பவன். கேசரா என்றால் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவன். எல்லா தேசங்களிலிருந்தும் ஆவலுடன் பறந்து கொண்டு வாராணஸியை நோக்கிச் செல்லுவதே உட்டியாணபந்தம் என்று கூறலாம். இதை மகாபந்தமென்றும் அப்யாஸத்தினால் முக்தி என்னும் ஸித்தி கிடைக்கிறது.

(விச்வேஸ்வரருடைய அபிஷேக ஜலத்தை எடுத்துத் தலையில் தெளித்துக் கொள்ளுவதே ஸமஸ்த தேவர்களுக்கும் கிடைக்க அரிதான ஜாலந்தர பந்தமாகும். நூற்றுக் கணக்கான இடையூறுகள் ஏற்பட்டாலும் கூட அறிவாளிகள் காசியை விட்டுச் செல்ல மாட்டார்கள். இதுவே மூலபந்த யோகமாகும்.) இதன் மூலமாக துக்கங்களெல்லாம் பாக்கியில்லாமல் வேறுடன் பறிக்கப்படுகிறது.

முனிவரரே! மஹாதேவரால் கூறப்பட்ட முக்திக்கு

ஸாதனமான இந்த ஆறு அங்கங்களையும் முத்திரைகளோடு கூடிய இரண்டு விதமான யோகாப்யாஸங்களையும் நான் உமக்குக் கூறினேன். இந்திரியங்கள் தளர்வடையாத வரைக்கும் வ்யாதியாகிய இடையூறுகள் நம்மை விழுங்காத வரைக்கும் மரணம் எத்தனை தாமதமாக வருகிறதோ அதுவரைக்கும் யோகாப்யாஸத்தில் கருத்துடையவராய் இருக்க வேண்டும்.

மேற்கூறிய இந்த இரண்டுவித யோகங்களிலும் காசியோகமே உத்தமம். இந்தக் காசியோகத்தை அப்யாஸம் செய்வதால் ச்ரேஷ்டமான யோகங்கள் நமக்குக் கிடைக்கும். ம்ருத்யுவின் அடையாள ரூபியான ஆதிவ்யாதி இவர்களுடைய ஸஹாய ரூபியான ஜரை என்பவள் நம்மை அடித்துக் கொண்டு போகிறாள். அப்படி அடித்துக் கொண்டு போகப்பட்ட ஜரையினால் நமக்குக் காலம் சமீபித்து விட்டது என்றறிந்து காசிநாதனை ஆச்ரயியுங்கள்.

காசீபதியை சரணாகதியடைந்த பிறகு காலத்தினால் நமக்கென்ன பயம்? ஏனென்றால் காலம் கோபமடைந்து உயிரைத்தானே எடுத்து கொள்கிறது. அதுகூடக் காசியில் பரம மங்களகரமானதாகும். தர்மவான்கள் அதிதி பூஜையின் வேளை வந்ததும் அதிதியை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதைப் போலக் காசியில் பாக்கிய சாலிகளான புருஷர்கள் அதிதியைப் போலவே காலனை எதிர்ப்பார்க்கிறார்கள்.

கலி, காலம், செய்தவினை இவைகளை த்ரிகண்டகம் என்று கூறுகிறார்கள். ஆனால் காசிவாசிகளுக்கு இவைகளால் ஒன்றும் தீங்கில்லை. வேறு இடங்களில் திடும் என்று வந்து காலன் நம்மை கபளீகரம் செய்கிறான். ஆனால் யார் யாருக்கு காலனிடம் அபய ப்ரதானத்திற்கு விருப்பம் இருக்கிறதோ அவர்கள் காசியை அடையட்டும்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்தபாஷா டீகாவான வாநப்ரஸ்த ஸந்யாஸ தர்ம யோகாப்யாஸ தர்ம வர்ணனம் எனும் நாற்பத்தொன்றாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.

# அத்யாயம் 42

*அகஸ்தியர் கேட்கிறார்:- ஹே! ஹர நந்தனு! மரணம் ஸமீபித்து விட்டது என்று எப்படி அறிந்து கொள்ள முடியும்? அதற்கு என்னென்ன அடையாளங்கள்? அவைகளெல்லாம் எனக்கு விவரமாகக் கூறுங்கள்.*

*ஸ்கந்தர் கூறுகிறார்:- முனிவரே! மரணம் ஸமீபித்து விட்டவுடன் சரீரம் எடுத்தவர்களுக்கு மரணத்தின் லக்ஷணங்கள் எப்படித் தெரியும் என்பதை உமக்கு விவரமாகச் சொல்லுகிறேன். யாருக்குக் கேவலம் வலது நாசியின் துவாரத்தின் வழியாக இரவும் பகலும் வாயு சென்று கொண்டிருக்கிறதோ, அவன் தீர்க்காயுளுடன் கூடினவன் ஆனபொழுதிலும்கூட மூன்று வருஷங்களுக்குள்ளாக மரணம் அடைவான்.*

*ஒருவனுக்கு இரண்டு மூன்று பகலும், ராத்திரியும் தொடர்ந்தாற்போல் வெளியில் வரும் மூச்சு வலது நாசி வழியாக ஓடிக் கொண்டிருந்தால் அவனுடைய வாழ்வுநாளின் வாய்தா ஒரு வருஷம்தான். நிரந்தரமாக பத்து தினங்கள் வரை எவனுக்கு இரண்டு நாசித்வாரங்கள் வழியாகவும் சென்று கொணடிருந்தால் அதுவும் ஒரே ஸமயத்தில் இரண்டும் சேர்ந்து கொண்டிருந்தால் அவனுடைய ஜீவன் மூன்றே தினங்கள் மாத்திரம் தான் தங்கும்.*

*நாஸியின் இரண்டு த்வாரங்களையும் விட்டுவிட்டு ஒருவனுக்கு மூச்சு வாயால் சென்று கொண்டிருந்தால் அவன் இரண்டே தினங்களுக்குள் யமராஜனுடைய வழியை நோக்கிச் சென்று கொண்டிருப்பான்.*

*எப்பொழுது எந்தக் காலத்தில் திடீரென்று மரணம் ஸம்பவிக்குமோ அதனுல் மரணத்திற்கு பயப்படுகிறவர்கள் அந்தக் காலத்தை ஜாக்கிரதையாக சிந்தித்துக் கொண்டிருக்க வேண்டும்.*

ஸுர்யன் ஸப்தம ராசியில் இருக்கும் பொழுது சந்திரன் ஜன்ம நக்ஷத்ரத்துடன் சேரும்போதும் ச்வாசம் வலது நாசியின் வழியாகச் செல்லத் தொடங்குகிறது. இதை ஸுர்யா த்ருஷ்டித காலம் என்று சொல்வார்கள். இதை விசேஷமாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த ஸமயத்தில் ஒருவன் க்ருஷ்ண வர்ணமும் பிங்களவர்ணமுமான புருஷனைப் பார்த்தால் அதுவும் ஒரு க்ஷணத்தில் ஒருவனிடத்திலேயே இந்த இரு வர்ணங்களும் மாறி மாறிக் காணப்பட்டால் அவன் இரண்டு வருஷங்கள் வரைதான் ஜீவித்திருப்பான்.

ஒருவனுக்கு வீர்யம் மலமூத்ரம், அல்லது மலம் தும்மல் இவை ஒரே சமயத்தில் வெளிவந்தால் அவன் ஒரு வருஷமே வாழ்ந்திருப்பான்.

ஆகாசத்தில் இந்த்ர நீல வர்ணத்தில் இங்குமங்குமாகச் சென்றுக் கொண்டிருக்கும் பாம்புக் கூட்டங்களைப் பார்ப்பானுனல் அவன் ஆறுமாதங்கள் வரையில் உயிருடன் இருக்கமாட்டான்.

ஒருவன் வாய் நிரம்ப ஜலத்தை வைத்து கொண்டு சூரியனுக்கு பின்புறம் காட்டிக் கொண்டு பூ என்று ஜலத்தை ஊதினுல் அந்த ஜலத்தில் ஆகாய வில்லின் வர்ணங்களைப் பார்க்கா விட்டால் அவன் வாழ்வு ஆறுமாதம்தான்.

யாருக்கு மரணம் ஸமீபித்து விட்டதோ அவன் அருந்ததி துருவன், விஷ்ணுபதம் மாத்ரு மண்டலம் இந்த நான்கையும் பார்க்க மாட்டான். நாக்கை அருந்ததி என்றும் மூக்கின் நுனியை த்ருவபதம் என்றும், புருவ மத்தியை விஷ்ணுபதம், கண்களின் மத்ய பாகத்தை மாத்ருபதம் என்றும் சொல்கிறுர்கள்.

நீலம் முதலிய வர்ணங்கள் வேறு வர்ணங்களாகத் தோன்றினுல் புளிப்பு கசப்பு முதலிய ருசிகள் நாக்கிற்கு வேறு ருசிகளாகத் தோன்றினுல் அவனுக்கு மரணம் ஸமீபித்து விட்டது என்று நிச்சயம். ஒரு மனிதனுடைய

ஆயுள் ஆறு மாதங்களே, பாக்கியிருக்கும்போது அவனுடைய தொண்டை, நாக்கு, பற்கள் கழுத்து இவைகள் வெளிறிப்போய் எப்போதும் உலர்ந்து போகும்.

சுக்லமும், கை நகங்களும், கண் ஓரங்களும் கறுத்தால் அவன் ஆறுமாதத்திற்குள் யமபுரிக்கு யாத்திரை போவான் என்பது நிச்சயம். ஒருவன் ஸ்திரீ ஸம்போகத்தின் மத்தியிலோ, அல்லது முடிவிலோ, தும்மினுல் அவன் ஐந்து மாதத்திற்குள் கட்டாயம் (யமபுரியின்) அதிதியாவான்.

ஓணன் ஒன்று நாம் பராக்காக இருக்கும் பொழுது நம்முடைய தலைமீது ஏறிச் செல்லுமானுல் ஆறு மாதத்திற்குள் மரணம் நிச்சயம். நன்ருக அமிழ்ந்து ஸ்னனம் செய்த பின்பும் எவனுடைய ஹ்ருதயமும் இரண்டு கைகளும் கால்களும் சீக்கிரமாகவே உலர்ந்து போகிறதோ அவன் மூன்று மாதத்திற்கதிகம் இருக்க மாட்டான்.

ஒருவனுடைய பாதச் சின்னம் (சுவடு) தூளியிலோ சகதியிலோ பதியும்போது நடுவில் வெட்டுண்ட மாதிரித் தோன்றினுல் அவனுக்கு ஐந்துமாதம் தான் கெடு. (மரணத்திற்கு) வெயிலிலோ விலக்கடியிலோ நாம் ஸ்திரமாக அமர்ந்திருந்தாலும் நம்முடைய நிழல் ஆடிக்கொண்டிருந்தால் நேரே - நான்காவது மாதம் யமதூதர்கள் அவனை பாசத்தினுல் கட்டுவார்கள்.

ஜலத்திலோ, உருக்கிய நெய்யிலோ, கண்ணுடியிலோ நம் ப்ரதிபிம்பம் தோன்றும்போது தலையில்லாமல் உடல் மாத்திரம் தெரிந்தால் அவன் ஒரு மாதத்திற்குள் இறந்து விடுவான். மதி மயக்கம் வார்த்தை தடுமாற்றம், ஆகாயத்தில் திடீரென்று இந்திரதனுஸ், இரவில் இரண்டு சந்திரர்கள், பகலில் இரண்டு ஸூரியன்கள், நக்ஷத்ர மண்டலங்கள், இரவில் நக்ஷத்ரங்களே இல்லாத ஆகாசம் ஒரே சமயத்தில் நான்கு பக்கங்களிலும் இந்திரதனுஸ் விருக்ஷங்களுக்கு மேலும் பர்வதங்களின் உச்சியிலும் கந்தர்வ நகரம் தெரிந்தால் பகலில் பிசாசுகள் ஆடுவது போலத் தெரிந்தால்

இவைகளைப் பார்ப்பதே ம்ருத்யுவிற்கு அறிகுறி.

இந்த லக்ஷணங்களுக்கு மத்தியில் ஏதாவது மாறுபட்ட லக்ஷணங்கள் தோன்றினால் ஒரு மாதத்திற்கு அவன் மரணத்தை எதிர்பார்க்க வேண்டாம். கையால் காதுகளைப் பொத்திக் கொண்டு ஒரு சப்தமும் கேட்காமலிருந்தால், திடீரென்று சரீரம் பருத்தோ, இளைத்தோ போகுமானால், ஒரு மாதத்திற்கு மேல் இருக்கமாட்டான். நாம் நடக்கும்பொழுதோ, அல்லது இருக்கும் பொழுதோ, நமது நிழலைத் தென்திக்கில் பார்ப்போமானால் ஐந்தே தினத்தில் பஞ்ச பூதத்தைச் சென்றடைவோம்.

ஒருவர் கனவில் பிசாசையும், அசுரர்களையும் காகத்தையும் பூதப்ரேதங்களையும், நாய் கழுகு இவைகளையும், நரி, பன்றி இவைகளையும், கழுகு ஒட்டகம், வானரம், ராஜாளி கோவேறு கழுதை கொக்கு இவைகளையும் அவைகளின் முதுகில் நாம் ஏறிக்கொண்டு அவைகளுக்கே ஆஹாரமானல், ஒரு வருஷத்திற்குள் உயிர்விட்டு யமராஜரை தரிசிப்போம். ரக்த சந்தனத்தையும் சிகப்பு புஷ்பங்களையும், சிகப்பு வஸ்த்ரங்களையும் அணிந்து கொண்டு இருப்பதாகக் கண்டால் ஆறு மாதம்தான் உயிர் வாழ்வான்.

சொப்பனத்தில் நம்மைப் புழுதியினால் மூடியிருக்கிற மாதிரியும் பலிஸ்தம்பத்தில் கட்டுண்டு இருப்பது போலவும் பார்த்தால் அவன் ஆறுமாதத்திற்குள் மரணமடைவான். ஒருவன் தன்னைக் கழுதையிலேறிக் கொண்டு எண்ணெய் தேய்த்துக் கொண்டு தலையில்லாத முண்டமாகத் தென் திசையில் ஏறிப் போவதுபோல் கனவு கண்டால், தனது பித்ருக்கள் தன் தலைமீது ஏறி அமர்ந்திருப்பது போல் கனவு கண்டால் அல்லது தன் சரீரத்தில் தூசுகள் நிரம்பியோ, அல்லது மரக்கட்டைகள் நிரம்பியிருப்பது போல் சொப்பனம் கண்டால் அவன் ஆறுமாதம் வரை கூட இருக்க மாட்டான்.

தனக்கு முன்னால் கறுப்புத் துணியை உடுத்திக் கொண்டு இரும்பு தண்டத்தையெடுத்துக் கொண்டு

காலபுருஷன் நிற்பதாகக் கண்டால் அவன் தனது மூன்ருவது மாதத்தைத் தாண்டான். சொப்பனத்தில் கறுப்புநிறக் குமாரி ஆலிங்கனம் செய்வதுபோல சொப்பனம் கண்டால் அவன் ஒரே மாதத்திற்குள் யமபுரி செல்வான். மீண்டும் கனவில் குரங்கின் மீது ஏறிக் கொண்டு கிழக்கு திசை போவதுபோல் கண்டால் அவன் ஐந்தே தினங்களில் யமராஜபுரிக்கு யாத்திரை புறப்படுவான்.

ஒரு கஞ்சன் தாதாவாக மாறிஞல், ஒரு தாதாவே திடீரென்று கஞ்சஞக மாறிஞல் இந்த மாதிரி ஸ்வபாவங்கள் அகஸ்மாத்தாக மாறிஞல் அவன் மீளமாட்டான். இவைகளெல்லாம் காலத்தின் லக்ஷணங்கள். இதுபோல் இன்னும் எத்தனேயோ லக்ஷணங்கள் உள்ளன. இவைகளேயெல்லாம் எண்ணிப் பார்த்து ஒன்றில் யோகாப்யாஸம் செய்ய வேண்டும், அல்லது காசிவாசம் செய்ய வேண்டும். ஏ முனியே! ஸஹிக்க முடியாத கர்ப்ப துக்கத்தை நிவாரணம் செய்யும் ம்ருத்யுஞ்ஜெயரும் காசீஸ்வரருமான ஈஸ்வரனே விட்டு காலத்தை ஏமாற்றும் உபாயமுள்ளவரை நான் அறியமாட்டேன்.

எதுவரைக்கும் பகவான் விஸ்வேஸ்வரரை ஒழுங்காக சரணுகதி அடையவில்லேயோ, அதுவரை பாபராசியும் யமராஜரும் அவனேப் பார்த்து கர்ஜித்துக் கொண்டேதான் இருப்பார்கள். காசீ பட்டண வாசமும் உத்தரவாஹினியான கங்கையில் ஜலபானமும் விஸ்வேஸ்வரராகிய லிங்கத்தின் ஸ்பர்ஸச்ரேஷ்டமும் செய்த பிறகு, பூஜிக்கத் தகுந்தவர்களாக யார்தான் ஆகமாட்டார்கள்! எந்தக் காசியில் ஸ்வயம் ஸதாசிவன் தாரகத்தை உபதேசம் செய்கிருரோ, அங்கு மரிப்பதே நன்று! காலன் அங்கு வஸிக்கும் மனிதர்களிடம் கோபித்துக் கொண்டு என்ன செய்ய முடியும்?

சில தினங்களுக்குள்ளேயே பால்யம், கௌமாரம் ஆகிய தசைகள் கழிந்து விடுகின்றன. அதே போல யௌவனமும், வார்த்தக்யமும் கூடச் சீக்கிரம் சென்று

விடுகின்றன. அதனுல் ஜரை வந்து அழுத்துவதற்குள் இந்திரியங்கள் தளர்வதற்கு முன்பு எல்லா துச்ச விஷயங்களையும் த்யாகம் செய்துவிட்டு அறிவாளியானவன் காசியை வந்து அடைய வேண்டும்.

ஏ! அகஸ்தியா! மரணத்தின் மற்ற சின்னங்களெல்லாம் இருக்கட்டும். வயோதிகம் என்பது முதல் சின்னமல்லவா? வயோதிகமடைந்த பின்பு ஜனங்கள் பயப்பட மாட்டேன் என்கிருர்களே! என்ன ஆச்சர்யம்! ஒருவன் ஜரையினுல் ஆக்கிரமிக்கப்பட்டவுடன் தன்னுடைய சுதந்திரத்தை இழந்துவிடுகிருன். தன்னுடைய யௌவனமாகிய மாணிக்கத்தை இழந்து பரம தரித்ரனுகி விடுகிருனே. வயதான மனிதனின் சொல்லை புத்திரனும் மதிக்க மாட்டான். அவனை பத்தினியும் நேசிக்க மாட்டாள். பந்து ஜனங்களும் உதாஸீனம் செய்வார்கள்.

ஜரை வந்து நம்மை மூடும்பொழுது அன்பான மனைவியும் கூட காமினி பரஸ்த்ரீயைப் போல் சங்கையும், அருவருப்படைந்து பராமுகமாகப் போய்விடுவார்கள். ரமணி ரமிக்க மாட்டாள். சத்ருவும் பயப்படமாட்டான். அரசனும் மரியாதை செய்யமாட்டான். வயோதிகத்திற்கு ஸமமான வியாதியும் கிடையாது. ஒரு துக்கமும் கிடையாது. எல்லாராலும் அவன் அவமானம் செய்யப்படும் வயோதிகமே ஒருவனுக்கு மரணகாலம். மெள்ள மெள்ள ஜரை வருகிறது. தேஹம் பூராவும் ஜரித்து விடுகிறது. வியாதியின் கூண்டாக ஆகிறோம். ஜரை மரணத்திற்கு இல்லம்.

அல்ப ஸமயம் காசிவாசம் செய்தால் எவ்விதம் காலனை ஜயிக்க முடியுமோ அவ்விதம் தபஸ் யோகாப்யாஸம் இவைகளால் ஜயிக்க முடியாது. நாலுவிதமான யக்ஞும், தானம், விரதம், மிகப்புண்யம் இவைகளை சேகரிக்காமல் காசியடைய முயற்சி ஒருவராலும் செய்ய முடியாது. (காசியை அடைவதே யோகம், காசிவாசமே தபஸ். காசி கிடைப்பதே தானம்;

*காசியில் மரணமே சிவ ஐக்யஸ்வரூபம். காசியை அடையக் கொடுத்து வைத்திருந்தோமானுல் கலி ஏது? காலம் ஏது? ஜரை ஏது? பாபம் ஏது? ரோகம் ஏது? இடையூறு ஏது? இவைகளொன்றும் நம்மை ஏதும் செய்ய முடியாது.)*

*காசியை ஆச்ரயிக்காதவர்களேயே கலி கட்டுகிறது. காலம் கொல்லுகிறது. பாபராசிகள் துக்கத்தைக் கொடுக்கின்றன. எவர் காசியில் வஸிக்கிறுர்களோ, விச்வேஸ்வரரைப் பூஜிக்கிறுர்களோ அவர்கள் தாரக ஞானத்தை யடைந்து கர்மபந்தனத்தில் இருந்து விடுபடுகிறுர்கள். வாராணஸியில் மரணம் அடைந்தால் எப்படிப்பட்ட அனந்தஸுகம் ஏற்படுகிறதோ (அது) வேறு இடத்தில் பெரிய தனவந்தவர்களுக்குக் கூட ஏற்படாது.*

*சாஸ்திர விதிப்படி காசியில் வஸிப்பவர் நல்லது செய்தவர்கள். இது தவிர ஸ்வர்க்கத்தில் தேவதைகளின் பதவியை அடைபவர்கள் நல்லவர்கள் என்று சொல்ல முடியாது. எங்கு துக்கத்தின் எல்லேயான மோக்ஷத்தை அடைகிறுர்களோ அவர்களே ச்ரேஷ்டர்கள். மற்றவர்கள் ஸுகத்தின் எல்லேயை அடைபவர்களே. அதாவது மறுபிறவி எடுப்பவர்கள்.*

*இந்தப் பண்டைய பழமொழி முக்காலும் ஸத்யமே. அதாவது கடலேயை மென்று கொண்டிருந்தாலும் விசுவநாத தத்பரரான காசியை விட்டுப் போகாதீர்கள்; பகவான் விச்வேஸ்வரர் அழகான குகைகளே உடைய மந்த்ராசலத்தில் எழுந்தருளி இருந்தும் கூட தேவதாஸர்களான அரசர்களால் ஆளும் காசியில்லாமல் அவர் ஸந்தோஷடமடைவதில்லே.*

*ஜீவப் பிராணியை - வழியில் கொள்ளேயடித்து உயிரையும் அடைபவரான காலன் ஏமாற்றுகிறுன். தேஹமாகிய சின்னம் இருக்கும் பொழுதே காசியை அடையுங்கள். இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் காசிகண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான காலவஞ்சன உபாய வர்ணம் என்ற 42வது அத்யாயம் ஸம்பூர்ணம்.*

# அத்யாயம் 43

*அகஸ்தியர் கூறினர்:- ஏ ஸ்கந்தா, பகவான் த்ரிலோசனர் ராஜா திதோதாஸிடம் காசியை எப்படி விட்டுவந்தார்; பிறகு மந்த்ராசலத்திலிருந்து எப்படிக் காசி வந்து சேர்ந்தார்? கேட்பவர்கள் ஆனந்தப்படுவதற்காக இதைத் தாங்கள் விஸ்தாரமாகக் கூறவேண்டும்.*

*ஸ்கந்தர் கூறுவார்:- மஹாதேவர் ப்ரம்மாவுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு மந்த்ராசலத்துடைய தபஸ்ஸால் ஸந்தோஷித்து அங்கு சென்றூர். பகவான் விச்வேச்வரர் அழகான மந்திரகிரிக்குச் சென்றவுடன் எல்லா தேவர்களும் அங்கு சென்று விட்டனர்.*

*நாராயணர் கூடத் தனது நிலேயான விஷ்ணு க்ஷேத்திரத்தை விட்டுவிட்டு அங்கு சென்று விட்டார். எல்லா தேவதைகளும் பூமியில் தங்களுக்குரிய ஸ்தானங்களே சூன்யமாக்கிவிட்டு அங்கு யாத்திரை செய்யத் தொடங்கினர்.*

*ஹே! முனியே! நானும் இந்த நிலேயான விஷ்ணு க்ஷேத்திரத்தை விட்டுவிட்டு அங்கு சென்றேன். இந்த விதமாக தேவ கணங்களெல்லாம் போன பிறகு ப்ரதாபசாலியான பூபாலன் திவோதாஸ் போட்டியில்லாமல் பூமியை ஆளத் தொடங்கினன். வாராணஸிபுரியைத் தன்னுடைய சொந்த ராஜதானியாக ஆக்கிக்கொண்டு பிரஜைகளே தர்ம பூர்வகமாக பரிபாலித்துக் கொண்டு நாளுக்கு நாள் பிரகாசிக்கத் தொடங்கினன்.*

*ஸுூரியனேப் போல தேஜஸ்வியாக அவன் துஷ்டர்களுடைய இதயத்தைத் தபிக்கச் செய்து கொண்டு ஸஜ்ஜனங்களும் ஆத்மீக பந்துக்களும் ஆனவர்களிடம் சந்திரனேப் போல ஸௌக்யமாகக் குளிர்ச்சியைக் கொடுத்துக் கொண்டு ஆண்டு வந்தான்.*

இந்திரனைப் போலத் தன்னுடைய தனுஸ்ஸை வளைத்து, டங்கார சப்தத்தை எழுப்பிக் கொண்டு யுத்தத்தில் பின்வாங்கி ஓடிக் கொண்டிருக்கும் சத்துரு ஸைன்யமாகிற மேகக் கூட்டங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். இந்த விதமாக நல்லவர்களையும் துஷ்டர்களையும் ஆண்டு கொண்டு தர்மா தர்மத்தை ஆராய்ந்து அந்த அரசன் தர்மராஜரைப் போல விளங்கினான்.

அவன் அர்ஜுனனைப் போல் அனேக தடவைகள் சத்ருரூபமான வனங்களை எரித்துக் கொண்டிருந்தான். மிகவும் தூர இருந்தும் வருணனைப் போல சத்துரு மண்டலத்தை பாசத்தால் சிக்க வைத்தான். அவன் சத்துரு ரூபமான ராக்ஷஸர்களைச் சோதித்து புண்ய தனேச்வரனான குபேரனையும், ஜகத்தையும் ரக்ஷிப்பதில் ஜகத்துக்குப் பிராணனாக ஆகிவிட்டான்.

எல்லா நல்லவர்களுக்கும் தனதாதா ஆகிவிட்டதனால் அவனே ராராஜனான குபேரனைப் போலாகிவிட்டான். ரணக்ஷேத்ரத்தில் அவனைப் பகைவர்கள் ருத்ர மூர்த்தியின் உருவமாகவே பார்த்தார்கள். அவன் தன்னுடைய தபோ பலத்தினால் ஸமஸ்த தேவதைகளுடைய உருவத்தை எடுத்துக் கொள்வதில் வல்லவனாக விளங்கினான். அதனால் விஸ்வதேவகணங்கள் அவனைத் துதித்து பூஜிக்கத் தொடங்கினார்கள்.

அவன் ஸத்திய தேவதைகளை விட அஸாத்யமாகவும், வஸுகணங்களை விட அதிக தனவானாகவும் இருந்தான். அவன் நவக்ரஹங்களின் உருவங்களை எடுத்துக் கொள்வதில் ஸமர்த்தன்; அஸ்வினி குமாரர்களைப் போல் அழகு வாய்ந்தவனாக இருந்தான்.

அவன் எல்லா வித்யாதரர்களுக்கும் மேலான வித்யாதரனாக விளங்கினான், அவன் மருத கணங்களை வகை வைக்காமல் தன்னுடைய குணங்களினால் ஸந்தோஷப்படும் தேவதைகளை மேலும் ஸந்தோஷப்படுத்தினான். மேலும் அவன் தன்னுடைய

ஸங்கீதத்தினுல் கர்தர்வர்களேயும் கர்வமில்லாதவர்க ளாக்கினுன். அவனுடைய ஸ்வர்கத்துக்குத் துல்யமான கோட்டையை யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பாதுகாத்து வந்தனர்.

அவனுடைய பராக்ரமத்தைக் கண்டு நாக கணங்களும் குற்றம் செய்யாமல் அடங்கி ஒடுங்கியிருந்தன. மேலும் தானவர்கள் மானிட உருவம் தாங்கி அவனுக்குப் பணிவிடை புரிந்து வந்தார்கள். ஒற்றர்கள் ஜனங்களேச் சூழ்ந்து கொண்டு அவனுக்கே ஒற்றர்களானுர்கள். அஸுரகணங்கள் ஹே ராஜா, நாங்கள் எங்களுடைய வைபவத்துக்குத் தகுந்தபடி உங்களுக்கு ஸேவை செய்வோம் என்றுர்கள். தாங்கள் தங்களுடைய ராஜ்யத்தில் தேவதைகள் வஸிப்பதை அஸாத்யமாக்கி விட்டீர்கள். அதனுல் நாங்கள் மனித ரூபம் எடுத்துக் கொண்டு தங்களுக்கு ஸேவை செய்வோம்.

பூமியில் அரசர்களின் குதிரைகளேப் பயிற்சி செய்யும் சாஸ்திரத்தை வாயுவே சிக்ஷகர் ஸ்தானத்தில் அமர்ந்து கொண்டு பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்தார். பர்வதத்திற்கு சமமான ஸ்தூலதேகத்தையுடைய பர்வத ஜாதி யானேகள் ஸதா தானப் பெருக்குடன் இருப்பதைப் பார்த்துவிட்டு, ஜனங்கள் தானியாக ஆனுர்கள் (தானமென்றுல் மதஜலம்). அவ்வரசனுடைய தர்பாரில் வித்வான்கள் சாஸ்திர வாக்குவாதங்களில் ஒருபொழுதும் தோல்வியடைந்ததில்லே. அதுபோல வீரர்கள் ரணபூமியில் அஸ்திரங்களினுல் ஒருவரிடமும் தோல்வியடைந்ததில்லே.

அந்த அரசன் ராஜ்யத்தில் அந்த ஊர் ஜனங்கள் ஆச்ரயமில்லாதவர்களாகவோ குற்றம் செய்பவர்களாகவோ காணப்படவில்லே. எல்லாருக்கும் தகுந்த ஆச்ரயங்களும் இருந்தன. த்வேஷம் பாராட்டாமலும் இருந்தனர். ஸ்வர்க்கதில் தேவதைகளுக்கு மத்தியில் மயன் ஒருவனே கலாவானுக இருந்தான். ஆனுல் அந்த அரசனுடைய ஆளுகையில்

பூமியில் எல்லாரும் கலைகளுக்கும் இருப்பிடமாக இருந்தார்கள்.

ஸ்வர்க்கத்தில் ஒரே ஒரு காமன்தான் இருந்தான். அவன் அநங்கன். ஆனால் இந்த அரசனுடைய ஆளுகையில் ஜனங்கள் எல்லா காமங்களையும் பெற்று ஸாங்கோ பாங்கமாக இருந்து சோபித்து வந்தார்கள். அவனுடைய ராஜ்யத்தில் ஒருவன் கூட கோத்ரநாசகனாக இருக்கவில்லை. ஆனால் ஸ்வர்கத்தில் ஸ்வயம் தேவராஜனே கோத்ரமில்லாதவனாக இருந்தான். ஸ்வர்க்கத்தில் சந்திரன் ஒவ்வொரு கிருஷ்ணபக்ஷத்திலும் க்ஷயமாகிக் கொண்டிருந்தான். ஆனால் இவனுடைய ராஜ்யத்தில் க்ஷயரோகம் என்ற பெயரே எங்கும் கேட்டதில்லை.

ஸ்வர்க்க லோகத்தில் நவக்ரஹங்கள் இருக்கிறார்கள். ஆனால் இந்த ராஜாவுடைய தேசத்தில் ஒருவரும் கிரஹங்களால் பீடிக்கப் பட்டிருக்கவில்லை. ஸ்வர்க்கத்தில் ஒரே ஒரு ஹிரண்யகர்ப்பர் தானிருக்கிறார். ஆனால் இந்த அரசனுடைய எல்லாப் பிரஜைகளும் ஹிரண்ய கர்ப்பர்களாகவே இருந்தனர். அதாவது ஸ்வர்ணம் நிரம்பிய க்ருஹங்கள் உடையவர்களாக இருந்தனர்.

ஸ்வர்க்க லோகத்தில் ஒரே ஸூர்யன் ஏழு குதிரைகளையுடைவனாக இருந்தான். ஆனால் இவனுடைய புரத்தில் ஒவ்வொருவரும் அநேகக் குதிரைகளையுடையவர்களாக இருந்தனர். இவனுடைய நகரத்திலோ அப்ஸரஸுக்கு ஸமமான அழகிய பெண்கள் நிரம்பியிருந்தனர். வைகுண்டத்தில் ஒரே ஒரு லக்ஷ்மியிருந்தாள். ஆனால் இந்தப் புரியில் நூற்றுக்கணக்கான லக்ஷ்மிகள் இருந்தனர் (அதாவது எல்லோருமே) லக்ஷ்மீகடாக்ஷம் உடையவர்களாக இருந்தனர்.

அந்த அரசனுடைய எல்லாக் கிராமங்களிலும் கிராமத்தைப் பாதுகாக்க அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருந்தார்கள். ஸ்வர்க்கத்தில் குபேரன்

ஒருவன்தான் பணக்காரனுக இருந்தான். ஆனுல் இங்கு வீடுகள் தோறும் குபேரர்கள் இருந்தனர். இந்த விதமாகக் காசீபுரியில் திவோதாஸ் என்னும் அரசன் ராஜ்யத்தைப் பூர்ண திருப்தியுடன் பரிபாலித்துக் கொண்டு எண்பதினுயிரம் வருஷங்கள் ஒரு தினம் கூடக் கஷ்டப்படாமல் கழித்து வந்தான்.

இதற்குப் பிறகு தேவதைகள் தர்மமார்க்கத்தை அனுஸரித்துச் செல்லும் அந்த ராஜாவிற்கு பொறுமையினுல் தீங்கிழைக்கக் கருதி ப்ருஹஸ்பதியுடன் சேர்ந்து சதியாலோசனைகள் நடத்திஞர்கள். ஏ முனிவரா! தேவகனங்கள் பெரும்பாலும் தங்களைப் போன்ற தார்மிக மனிதர்களுக்கு ஆபத்துக்களைத் தொடர்ச்சியாகச் சுமத்துகிருர்கள். இந்த அரசன் திவோதாசன் கடுமையான யக்ஞங்களினுல் யக்ஞபோஜிகளான தேவதைகளுக்கு ஸந்தோஷத்தை உண்டு பண்ணிக் கொண்டுதான் இருந்தான். ஆனுல் இவர்கள் அவனுக்கு நண்பனுக இருக்கவில்லை.

ஏனென்றுல் தேவதைகளின் ஸ்வபாவமே இப்படித்தான். அவர்கள் பிறர் செழிப்படைய ஸம்மதிக்கமாட்டார்கள். பலி, பாணுஸுரன், ததீசி இவர்கள் தேவர்களுக்கு என்ன கெடுதல் செய்தார்கள்? தர்மத்தினுடைய பதங்களை அனுஷ்டிக்கும் போது அநேக இடையூறுகள் ஏற்பட்டுக் கொண்டே தானிருக்கின்றன. அதற்காக தர்மவான்கள் தங்களுடைய தர்மத்தை விட மாட்டார்கள்.

அதர்மவான்கள் ஆரம்பத்தில் தனதான்ய ஸம்பத்துகளால் முன்னேறுவார்கள். ஆனுல் அந்த அதர்மத்தின் ப்ரபாவத்தினுல் கடைசியில் வேறுடன் கில்லி எறியப்பட்டு அதோகதியையடைவார்கள். தன்னுடைய சொந்த குமாரர்களைப் போல பிரஜைகளைப் பாலித்து வந்த அந்த திவோதாசனை அதர்மம் லேசம்கூடத் தொடவில்லை. தேவதைகள் ஸந்தி விக்ரஹம் முதலிய ஆறு குணங்களையும்

நன்கு அறிந்து பிறகு ஊக்கம், ப்ரபாவம், உற்சாஹம் ஆகிய மூன்று சக்திகளினுல் சாந்தசித்தனும், தர்மார்த்தாதிகளாகிய நான்கு புருஷார்த்தங்களின் உபாயங்களே அறிந்தவனுமான அந்த அரசனிடத்தில் சிறிதளவு பலஹீனம் கூட அவர்களால் கண்டு பிடிக்க முடியவில்லே.

தேவதைகள் புத்திசாலியாகளாக இருந்தாலும் அபகாரம் செய்வதில் எப்பொழுதும் முயற்சியுடையவராக இருப்பார்கள். இருந்தும் அவர்களால் அந்த அரசனே ஒன்றும் செய்யமுடியவில்லே. அவர்களால் அவனேக் கெடுக்க முடியவில்லே. அந்த அரசனின் ராஜ்யத்தில் எல்லா புருஷர்களும் ஏகபத்தினீ வ்ரதர்களாகவே இருந்தார்கள். ஸ்த்ரீகளும் பதிவ்ரதா வ்ரதத்தைக் கடைபிடிக்காதவர்கள் ஒருவரும் இல்லே.

இந்த திவோதாஸ் என்னும் அரசனுடைய ராஜ்யத்தில் படிக்காத ப்ராம்மணனே, வீரமில்லாத க்ஷத்ரியனே, பணம் ஸம்பாதிப்பதில் அனுபவமில்லாத வைச்யனே இல்லே. சூத்திரர்கள் கூட ப்ராம்மண வர்க்கத்தை ஸேவை செய்வதை விட்டுவிட்டு வேறு ஜீவிதத்தில் ஆசையுள்ளவர்களாக இருக்கவில்லே.ப்ரம்மசாரிகள் சுத்த ப்ரம்மசர்யத்தை அனுஷ்டித்துக் கொண்டு குருகுலத்தைச் சார்ந்து தினமும் வேதாத்யயனம் செய்வதில் கருத்துடையவர்களாக இருந்தார்கள்.

க்ருஹஸ்தர்கள் அதிதி ஸத்காரத்தில் உற்சாகமுடையவர்களாகவும், தர்மசாஸ்திரத்தின் நுட்பத்தை அறிந்தவராகவும், தினமும் ஸத்கர்மம் செய்வதில் ஆசையுடையவர்களாகவும் இருந்தார்கள். வானப்ரஸ்தர்கள் வேதமார்க்கத்தை யனுஸரித்து எப்பொழுதும் மர்யாதையுடன் வநவ்ருத்தியையே பின்பற்றிக்கொண்டு கிராமத்து க்ஷேமலாபங்களில் ஆசையில்லாதவர்களாகவும் இருந்தார்கள்.

ஸன்யாஸிகளும் ஜநஸமூஹங்களைத் தியாகம் செய்து மனம், வாக்கு, செயல் என்னும் த்ரிதண்டத்தை தரித்துக்கொண்டு வாங்குவதில் உதாஸீநராகவும் நிர்முக்தராகவும் இருந்தார்கள். மற்ற வர்ண ஸங்கரமான ஜாதிகளும் தங்கள் பரம்பரை வழக்கத்தை விடவில்லை.

அவருடைய ராஜ்யாதிகாரத்தில் புத்திரன் இல்லாமலோ, தரித்திரர்களாகவோ, ஒருவரும் இருக்கவில்லை. எல்லோரும் கிழவர்களாகியே - பிறகு மரணமடைந்தார்கள். அந்தக் காலத்தில் வம்பு அடிக்கிறவனோ, ஏமாற்றுகிறவனோ, ஹிம்ஸை பண்ணுகிறவனோ, முகஸ்துதி செய்பவனோ, ஏமாற்றுபவனோ, மலடனோ, விபசாரியோ, கழிவிருப்பவனோ ஒருவரும் கிடையாது.

எங்கும் அடிக்கு அடி வேதத்வனியும், சாஸ்திர படனமும், மேன்மையான வாக்வாதங்களும், ஸந்தோஷமான மங்கள கீதங்களும், வீணை, குழல், ம்ருதங்கம் இவைகளின் மதுரநாதங்களும் நிரம்பியிருந்தன. அந்த ராஜ்யத்தில் யாகத்துக்குண்டான ஸோமபானத்தைத் தவிர மற்ற பானத்தை விரும்புபவர்களில்லை.

புத்திரன் பிதாவின் சரண சேவையையே தேவ பூஜையாகவும், உபவாஸ வ்ருதமாகவும் தீர்த்தாடனமாகவும், இஷ்ட தேவாராதனமும் மதித்துவந்தான். ஸ்த்ரீகளும் பதியின் சரண ஸேவையைத் தவிர, அவருடைய வார்த்தையைக் கேட்பதைத் தவிர ஒன்றும் அறியாதவராகி இருந்தார்கள். எல்லா இளையவர்களும் தங்கள் தமையன்மார்களுக்கு எப்பொழுதும் ஸேவை புரிந்து வந்தார்கள். தாழ்ந்த ஜாதியினர் உயர்ந்த ஜாதியினருடைய குணங்களை எப்பொழுதும் புகழ்ந்து கொண்டிருந்தார்கள்.

ஜனங்கள் அடிக்கடி காசியையும் தேவதைகளையும் பூஜித்து வந்தார்கள். எல்லா இடங்களிலும் வித்வத்

ஜனங்களுடைய மனோரதங்கள் பூர்த்தியாக்கப்பட்டு வந்தன. பண்டிதர்கள் தபஸ்விகளையும் ஜிதேந்த்ரிகளையும், ஜிதேந்த்ரியர்கள் ஞானிகளையும் மதித்து வந்தார்கள்.

அந்த ராஜ்யத்தில் இரவும் பகலும் மந்திரத்தினால் தூய்மையாக்கப்பட்ட உத்தமமான விதியுடன் கூட ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட ஹவிஸ் அன்னம், ப்ராம்மணர்களின் முகமாகிய அக்னியில் ஆஹுதி செய்யப்பட்டு வந்தது. அந்த ராஜ்யத்தில் அடிக்கு அடி நடைகிணறு, கிணறு, தடாகம், புஷ்பத் தோட்டங்கள் இவைகளை மிகவும் த்ரவ்யம் செலவு செய்து சுத்தமாக்கி பராமரிக்கக் கூடிய ஜனங்கள் இருந்தனர்.

அங்குள்ள எல்லா ஜாதிக்காரர்களும் கட்டு மஸ்தான தேஹத்துடன் இருந்தனர். கேவலம் வேடனும், கசாப்புக் கடைக்காரனும் மற்ற எல்லோரும் புகழத்தக்க காரியங்களே செய்து வந்தனர். இந்த விதமாக எங்கும் நல்ல செய்கைகளைச் செய்பவர்களோடு கூடியிருந்த அந்த அரசனின் விஷயத்தில் மிகவும் சிந்தித்துப் பார்த்தும் கூட தேவர்களால் எந்த விதமான அபகாரமும் செய்யக்கூடிய ஸந்தர்ப்பமும், ஸமயமும் வாய்க்கவில்லை.

பிறகு தேவகுரு ப்ருஹஸ்பதி அந்த மந்திரசக்தி வாய்ந்த பெரியவர்களால் மதிக்கப்பட்ட தர்மானுஷ்டமான மேன்மைபெற்ற அந்த அரசனின் விஷயமாக தேவர்களுக்கு அபகாரம் செய்ய வேண்டுமென்ற எண்ணம் இருப்பதைக் கூறினார். ப்ருஹஸ்பதி கூறுவார்:-

ஏ தேவர்களே! அந்த ராஜா ஸந்தி, விக்ரஹம், ப்ரயாணம், ஆஸனம், ஸம்ஸ்ரயம், வேதம் இந்த ஆறு நீதிகளையும் அறிந்தவனாக இருக்கிறான். அந்த மாதிரி அறிந்தவர்கள் தேவர்களில் ஒருவர் கூட இங்கு இல்லை. அந்தத் தபோ பலசாலி அரசனின் விஷயமாக ஸாம, தான பேத, தண்டம் என்னும் நான்கு உபாயங்களும் எது

மூலமாவது ப்ரயோகித்து ஸித்தி பெற வேண்டுமென்றால் அது வேதம் ஒன்றினுல் தான் முடியும் என்று தோன்றுகிறது.

அந்தப் பூபதி தேவர்கள் எல்லோரையும் பூமியிலிருந்து விரட்டி விட்ட போதிலும் அங்கு நமது பக்ஷத்தைச் சார்ந்த சிலரும் இருக்கத்தான் செய்கிறுர்கள். அவர்களில்லாமல் ஒரு க்ஷண நேரமாவது நாமாகிலும் சரி, அரசனுகிலும், சரி, ஸுகமாகக் காலம் கழிக்க முடியாது. அந்த ஜனங்கள் அங்கு எல்லாருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாகவும், ராஜ்யத்தின் உள்ளும் சரி, வெளியிலும் சரி, விவரங்களே நுட்பமாக அறிந்து வாழ்கிறுர்கள். அவர்கள் அங்கிருந்து போய்விட்டார்களாஞல் நம்முடைய விருப்பம் கட்டாயம் நிறைவேறிவிடும்.ஜனங்கள் அடிக்கடி காசியையும் தேவதைகளேயும் பூஜித்து வந்தார்கள். எல்லா இடங்களிலும் வித்வத் ஜனங்களுடைய மனேரதங்கள் பூர்த்தியாக்கப்பட்டு வந்தன. பண்டிதர்கள் தபஸ்விகளேயும் ஜிதேந்த்ரியர்களேயும், ஜிதேந்த்ரியர்கள் ஞானிகளேயும் மதித்து வந்தார்கள்.

அந்த ராஜ்யத்தில் இரவும் பகலும் மந்திரத்தினுல் தூய்மையாக்கப்பட்ட உத்தமமான விதியுடன் கூட ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட ஹவிஷ்யான்னம் பிராம்மணர்களின் முகமாகிய அக்னியில் ஆஹுதி செய்யப்பட்டு வந்தன. அடிக்கு அடி நடைகிணறு, கிணறு, தடாகம், புஷ்பத் தோட்டங்கள் இவைகளே மிகவும் த்ரவ்யம் செலவு செய்து சுத்தமாக்கி பராமரிக்கக் கூடிய ஜனங்கள் இருந்தனர்.

அங்குள்ள எல்லா ஜாதிக்காரர்களும் கட்டு மஸ்தான தேஹத்துடன் இருந்தனர். கேவலம் புகழத்தக்க காரியங்களே செய்து வந்தனர். இந்த விதமாக எங்கும் நல்ல செய்கைகளேச் செய்பவர்களோடு பார்த்தும்கூட தேவர்களால் ஒரு விதமான அபகாரமும் செய்யக்கூடிய ஸந்தர்ப்பமும், ஸமயமும் வாய்க்கவில்லே.

பிறகு தேவகுரு ப்ருஹஸ்பதி அந்த மந்திரசக்தி வாய்ந்த பெரியவர்களால் மதிக்கப்பட்ட தர்மானுஷ்டமான மேன்மை பெற்ற அந்த அரசனின் விஷயமாக தேவர்களுக்கு அபகாரம் செய்ய வேண்டுமென்ற எண்ணம் இருப்பதைக் கூறினார். ப்ருஹஸ்பதி கூறுவார்:-

ஏ தேவர்களே! அந்த ராஜா ஸந்தி, விக்ரஹம், ப்ரயாணம், ஆஸனம், ஸம்ஸ்ரயம், வேதம் இந்த ஆறு நீதிகளையும் அறிந்தவனாக இருக்கிறான். அந்த மாதிரி அறிந்தவர்கள் தேவர்களில் ஒருவர்கூட இல்லை. அந்த தபோ பலசாலி அரசனின் விஷயமாக ஸாமதாந பேத தண்டம் என்னும் நான்கு உபாயங்களும் எது மூலமாவது ப்ரயோகித்து ஸித்தி பெற வேண்டுமென்றால் அது வேதம் ஒன்றினால்தான் முடியும் என்று தோன்றுகிறது.

அந்த பூபதி தேவர்கள் எல்லோரையும் பூமியிலிருந்து விரட்டி விட்ட போதிலும் அங்கு நமது பக்ஷத்தைச் சார்ந்த சிலரும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களில்லாமல் ஒரு க்ஷணநேரமாவது நாமாகிலும் சரி, அரசனாகிலும் சரி, ஸுகமாகக் கழிக்க முடியாது. அந்த ஜனங்கள் அங்கு எல்லாருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாகவும், ராஜ்யத்தின் உள்ளேயும் சரி, வெளியிலேயும் சரி, விவரங்களை நுட்பமாக அறிந்து வாழ்கிறார்கள். அவர்கள் அங்கிருந்து போய்விட்டார்களானால் நம்முடைய விருப்பம் கட்டாயம் நிறைவேறிவிடும்.

தேவதைகள் ப்ருஹஸ்பதியின் வசனத்தைக் கேட்டுவிட்டு, உள்ளும் வேளியுமாய் அறிந்தவர்களை நிர்ணயம் செய்து கொண்டு, ப்ருஹஸ்பதியைப் புகழ்ந்து பாடி, அப்படியே செய்வோம் என்று கூறினார்கள். அப்போது இந்திரன் ஸமீபத்திலேயே இருக்கும் அக்னியை மிகவும் மரியாதையுடன் அழைத்து மிகவும் மதுர வசனங்களால் சொல்ல ஆரம்பித்தார்-

ஏ! ஹவ்யவாஹனு! உங்களுடைய உருவம் பூமியில் பிரதிஷ்டிக்கப்பட்டிருப்பதை அந்த அரசனுடைய ராஜ்யத்திலிருந்து மாத்திரம் சீக்கிரம் நீக்கி விடுங்கள். தங்களுடைய சின்னம் அங்கில்லா விட்டால் எல்லாப் ப்ரஜைகளும் அக்னியில்லாவிட்டால் ஹவ்யம், கவ்யம் முதலிய க்ரியைகளைச் செய்யும் அந்த ராஜாவிடம் வைராக்யம் கொள்வார்கள்.

ராஜ்யத்தின் காமதேனுவான ப்ரஜைகள் விரக்தியடைவார்களேயானுல் மிகவும் கஷ்டப்பட்டு ஸம்பாதித்த அரசன் என்ற பேரும் வீணுகப் போய்விடும். ப்ரஜைகளின் மனதை ஸந்தோஷப் படுத்துவதினுல்தான் பூபதிகளை ராஜா என்று கூறகிருர்கள். அப்படி அந்த ராஜ்யத்தில் ப்ரஜைகள் விரக்தியடைந்துவிட்டால் அரசனும் அழிவான். ராஜ்யமும் த்வம்ஸமாகிவிடும்.

ஒரு ராஜாவிற்குப் ப்ரஜைகள் எதிராகக் கிளம்பினுல் அவனுடைய நிறைந்த கஜானுவும், கோட்டை, ஸேனை நிரம்பியிருநதாலும், அவன் வெகு சீக்கிரத்தில் நதிக்கரையில் இருக்கும் வ்ருக்ஷத்தைப்போல் கீழே விழுந்துவிடுவான். ப்ரஜைகளே அரசனின் தர்ம, அர்த்த, காமத்துக்கு ப்ரதானகாரணம். ஆனுல் ப்ரஜைகள் க்ஷீணமடைந்தால் அரசனுடைய ஸ்வர்க்க போகமும் க்ஷீணமடைந்துவிடும்.

ஒருவனுடைய ஸ்வர்கமே நாசமடைந்துவிட்டால் பிறகு அவனுடைய இஹலோகம் பரலோகம் இரண்டின் கதிகளும் அதிகமாக இருக்காது என்று இந்திரதேவன் இவ்விதம் சொன்னவுடன் அக்னிதேவன் உடனேயே பூமண்டலத்திலிருந்து தன்னுடைய சாயையை யோகமாயையின் பலத்தினுல் இழுத்துக்கொண்டு விட்டார். அவர் ஆஹவநீயம், தக்ஷிணுக்னி, கார்ஹபத்யம் இந்த மூன்றையும் ஆகர்ஷணம் செய்யவில்லை. ஆனுல் நம்முடைய ஜீர்ண சக்தியுடன் ஜாடராக்னியையும் கூட இந்திரனின் சொல்கேட்டு இழுத்துக் கொண்டுவிட்டார்.

இந்த விதமாக அக்னி ஸ்வர்க்கத்திற்குச் சென்ற பிறகு மத்யான காயத்தி உபாஸனேயும் முடித்துக் கொண்டு அரசன் போஜன மண்டபத்திற்குச் சென்ருர்.

அப்படிப் போனவுடன் சமையற்காரர்கள் அடிக்கடி நடுங்கிக்கொண்டு அரசன் பசியுடன் இருக்கிருர் என்பதையறிந்துகொண்டும், மெதுவாக விண்ணப்பித்துக் கொண்டார்கள்-

அவர்கள் கூறினர்கள்:-ஸூர்யனே விட அதிக தேஜஸ் வாய்ந்தவரே! தன்னுடைய ப்ரதாபத்திஞல் அக்னியையும் ஜயித்தவரே! ரணதீரரான எங்கள் அரசரே! நாங்கள் ஸமயம் தெரிந்திருந்தும் ஒரு விஷயம் விண்ணப்பித்துக் கொள்கிருேம்-

நீங்கள் எங்கள் யாவருக்கும் அபயதானம் அளித்தீர்களாஞல் நாங்கள் கைகூப்பி, எங்கள் ப்ரார்த்தனேயை விண்ணப்பித்துக் கொள்கிருேம் என்ருர்கள். இதற்குப் பிறகு அரசன் ஸௌம்ய முகத்துடன் புருவத்தை உயர்த்தி தமது ஸம்மதத்தைத் தெரிவித்தான். இதன் பிறகு சமையற்காரர்களுக்குள் அதிகாரி கூறத் தொடங்கிஞர்-

ஸ்வாமீ! தங்கள் ப்ரதாபத்தின் பயத்திஞலோ, அல்லது எந்த துர்புத்தியிஞலோ, முட்டாளான அக்னிதேவன் நகரைவிட்டே போய்விட்டான்; பிறகு அக்னியில்லாமல்கூட சில பதார்த்தங்களே ஸூர்யனின் ஒளியின் உதவி கொண்டு சமைத்திருக்கிருேம்.

மஹாராஜ் உத்தரவிட்டால் அவற்றை இங்கு கொண்டு வருகிருேம். அரசரே! நாங்கள் அறிந்தமட்டிலும் இன்றைய சமையல் நன்ருகத்தானிருக்க வேண்டும் என்று எண்ணுகிருேம். இந்த மஹாபலியும் அறிவாளியுமாகிய அரசன் சமையற்காரர்களின் பேச்சைக் கேட்டு யோசிக்கத் தொடங்கிஞர்.

இவைகளெல்லாம் தேவதைகளின் திருவிளையாடல்களேயாகும். பிறகு அந்த அரசன் க்ஷணநேரம் த்யானத்திலிருந்து தனது தபோபலத்தினுல் பார்த்தான். அக்னி சமையற் கட்டிடத்தை மாத்திரம் விட்டுவிட்டுப் போகவில்லை. நமது ஜாடராக்னியையும் எடுத்து கொண்டு போய்விட்டான்.

அவன் இந்த பூமண்டலத்தையே விட்டுவிட்டு ஸ்வர்க்கம் சென்று விட்டான் இருக்கட்டுமே அக்னி போய்விட்டால் எனக்கு அதனுல் என்ன நஷ்டம்? இதனுல் அந்த தேவதைகளுக்கே தான் நஷ்டம். நான் அவர்களை நம்பிக் கொண்டு ராஜ்யபாரத்தைத் தாங்கவில்லை. நான் ப்ரம்ம தேவனிடமிருந்து மிகவும் கௌரவமாக இந்த ராஜ்யத்தைப் பெற்றேன்.

அரசன் இந்த விதமாக யோசித்துக் கொண்டு இருக்கும் பொழுது, தேசப் பிரஜைகளை முன்னிட்டுக் கொண்டு தலைவர்கள் அரண்மனை வாசலையடைந்தார்கள். அப்பொழுது வாயிற்காப்போன் அரசனின் ஆக்ஞையை ஏற்று அவர்களை எல்லோரையும் உள்ளே அழைத்து வந்தான்.

அவர்கள் எல்லோரும் தங்கள் சக்திக்குத் தகுந்தபடி அரசனுக்குக் காணிக்கைகள் சமர்ப்பித்து, அரசனை வணங்கினுர்கள்; அரசனும் சிலரை மர்யாதையுடன் சில வார்த்தைகள் கூறி வரவேற்ருன்; சிலரை ஸந்தோஷகரமான பார்வையால் பார்த்து, சிலரை கைகளால் சைகை காட்டி, மிகவும் மரியாதைகளுடன் ஆசனங்கள் அளித்து, அமரச்செய்தார்.

அவர்கள் எல்லோரும் ரத்தினங்களால் சோபிக்கப்பட்டதும் தேவ வ்ருக்ஷங்களின் வாசனையையைவிட அதிக வாசனையுள்ளதும், ஆயிரம் சலாகைகளின் மேல் விரிக்கப்பட்ட வெண்கொற்றக்குடையினுல் நிழல் பரவியதுமான அந்த அரசனுடைய அங்கணத்தில் அமர்ந்தார்கள்.

அப்பொழுது அரசன் அவர்கள் எல்லாருடைய முகத்தைப் பார்த்தே அவர்களது அபிப்ராயத்தை ஊஹித்துக் கொண்டு கூறினுர்- சற்றும் அஞ்சாதீர்கள், அக்னியை பூமியிலிருந்து நீக்கிவிட்டால் என்னைத் தோல்வியடையச் செய்ததாகுமா? என்னைத் இவர்களால் எவ்விதம் கெடுக்கமுடியும்? பிரஜைகளே! இதற்கு முன்னுலேயே நான் இம்மாதிரி கார்யத்தை எதிர்பார்த்துக் கொண்டேதான் இருந்தேன்.

என்னதான் நடக்குமென்று உபேக்ஷை செய்து கொண்டிருந்துவிட்டேன். இப்பொழுது வெகுதினங்களுக்குப் பிறகு அவர்கள் அதை எனக்கு நினைப்பு மூட்டினுர்கள். அக்னி போய்விட்டானுனல் நல்லது; வாயுவும் போகட்டும். வருணனும் சந்திரனும் கூட இப்பொழுதே சூரியனுடன் சென்று விடட்டும்.

நம் தேசவாஸிகளின் ஆனந்தத்திற்காக ஸமஸ்த தான்யங்களையும் செழிப்பாகக் கொடுக்கும் இந்திரனுகி எனது தபோபலத்தினுல் மழை பொழியச் செய்வேன். நான் என்னையே என்னுடைய தபோ, யோக பலத்தினுல் அக்னியுடைய மூன்று உருவமாக ஆக்கிக் கொண்டு சமையல், யக்ஞம், தஹனம் இம்மூன்று காரியங்களையும் செய்வேன்.

ஜனங்களின் உள்ளும் புறமும் வாயுவாகப் புகுந்துகொண்டு, எல்லாருடைய அந்த: கரணத்தின் சேஷ்டைகளையும் அறிவேன். நானே ஜீவர்களை ரக்ஷிப்பதற்காக ஜலமாகிப் பிரஜைகளை உயிர்ப்பிப்பேன். ஜடரூபமான ஜலத்தினுல் எனது ராஜ்யத்தில் என்ன ப்ரயோஜனம்? புரவாஸிகளே, ஸூர்ய சந்திரர்களை ராஹு விழுங்கிய சந்திரனின் நிலவாகக் காய்ந்து ஜனங்களை ஆனந்தமடையச் செய்வேன். இந்தக் களங்கத்துடன் கூடிய க்ஷயரோகம் பிடித்த துர்நடத்தையுள்ளவனுல் என்ன பலன்?

ஆனுல் சூரிய தேவர் எனது வம்சத்தின் மூலபுருஷன். அதனுல் என்னுல் மதிக்கத்தகுந்தவன். அவன் தனியாகவே

இங்கு வந்து போய்க் கொண்டு இருக்கட்டும். ஏனென்றால் அவர் ஜகத்திற்கெல்லாம் ஆத்மா. அவர் அத்துடன் எங்கள் குலதேவதை. அவர் ஒருவருக்கும் அபகாரம் செய்யமாட்டார். இதுவே அவருடைய உத்தம வ்ரதம்.

புரவாசி ஜனங்கள் இந்த விதமாகக் காதாகிற தொன்னைகளால் அரசனின் வசனங்களாகிற அம்ருதத்தை ஏந்திக் குடித்துவிட்டு மலர்ந்த முககமலங்களுடன் ப்ரஸன்ன சித்தத்தினராய் தங்கள் வீடுகளுக்குச் சென்றனர். ராஜா எப்படிக் கூறினரோ அப்படியே அக்கினி, சூரியன் இவர்களைவிட அதிக தேஜஸ்வியாய் தேவதைகளுடைய ஹ்ருதயத்தில் பெரிய சூலத்தைப் புதைத்தார். ஆச்சர்யம்! இம்மூன்று உலகங்களிலும் தபோ பலத்தினுல் ஆகாத காரியம் என்ன இருக்கிறது?

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான திவோதாஸ நரபதியின் ப்ரதாபவர்ணனம் என்னும் நாற்பத்தி மூன்றுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்தியாயம் 44

*கார்த்திகேயர் கூறினார்:- விச்வேச்வரர் மந்த்ராசலத்தின் அழகான குகையில் உவமை கூற முடியாத ரத்ன சோபையினால் காந்தியுடன் கூடிய நான்கு பக்கங்களிலும் தேவதைகளால் சூழப்பட்டு ஆகாயமளாவும் கோபுரங்களுடைய தனது சொந்தக் கோவிலில், வஸித்து வந்தும் கூட ஸந்தோஷமில்லாமல் காசியை விட்டு வந்த ஸந்தாபத்தால் வ்யாகுல சித்தமுடையவராக, பாலசந்திரர் கலையைத் தாங்கியிருந்த போதிலும் ஸுகசாந்தியுடனிருக்க முடியவில்லை. த்ரிபுராந்தக பகவான் தனது விரஹசாந்தியின் பொருட்டு சரீரத்தில் மலயாசலத்திலிருந்து வந்த சந்தனத்தைப் பூசிக்கொண்டார். அது பூசினவுடனேயே உலர்ந்து போயிற்று.*

*ஸந்தாபத்தை விலக்கும் தமரைத் தண்டுகளைக் கையில் கங்கணமாகத் தரித்துக் கொண்டார். ஆனால் அது பாம்பு மாதிரியிருந்தது. அன்று அவர் அவ்வாறு கூறியதால் இன்று ஸர்ப பூஷணமாகிவிட்டது போலும். ஈசுவரன் விரும்பினால் அது அவ்விதமேயாவதில் என்ன ஆச்சர்யம்? தேவதைகள் க்ஷீரஸாகரத்தைக் கடைந்து கோமளமான சீதளக்கலையுடன் பொருந்திய சந்திரனைக் கொண்டு வந்தார்கள்.*

*அது சிவனுடைய தலையில் இருக்கும் தாபச் சூட்டினால் உலர்ந்து கருகி ஒரு கலை மாத்திரமே மீதமிருக்கும் படியாயிற்று, அப்பொழுது சிவன் தாபத்தினால் தலையில் இருக்கும் பாரமான ஜடாமகுடத்தின் மேல் பாபநாசினி ஸுரநாசினி ஸுரநதியைத் தரித்துக் கொண்டார். இன்றுவரை அதைக் கீழேயிறக்கி வைக்கவில்லை. விரஹத்தின் வசிபூதமான சங்கரர் அந்தப் பெரிய வியோகத்தால் வசீகரிக்கப்பட்டார்.*

*இந்த ரஹஸ்ய வேதனை ஸஹித்திருந்தும் ஸபையில்*

உள்ளவர்கள் அதைக் கொஞ்சமும் அறியவில்லை. இதைவிட என்ன ஆச்சர்யம் இருக்கப் போகிறது? ஸ்வயம் த்ரைலோக்யநாதன் பவித்ரவானாக இருந்தும் தனது உருவத்திலிருந்து உண்டான அக்னியினால் தனது புரியில் வியோகத்தினால் தஹிக்கத் தொடங்கினார்.

தனது நெற்றி ப்ரதேசத்தைக் கலாநிதியின் கலையினால் ப்ரகாசமடையச் செய்தவர். அதே சந்திரனே அவருக்கு விரோதியாகித் தனக்கு அடைக்கலம் கொடுத்தவரையே தஹிக்கத் தொடங்கினார். தக்கஸமயத்தில் எல்லோருமே விரோதிகளாகத்தான் மாறுவார்கள் என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாமே.

ஆச்சர்யம்! கண்ட தேசத்தில் விஷத்தை வைத்துக் கொண்டுகூட அவர் இப்படி ஸந்தாபப்படவில்லை. ஸதாசரனுடைய அதிசீதள கிரணங்களினால் இப்பொழுது தஹிக்கப்படுகிறார். ப்ரதிக்ஷணமும் தனது சரீரத்திலிருக்கும் பாம்புகளுடைய விஷ ஜ்வாலையினால், சீற்றத்தினால் சிறிதும் க்லேசமடையாதவர்.

இப்பொழுது தாப சமனத்தின் பொருட்டு இதயத்தில் பூசியிருக்கும் ஹரிசந்தனப் பூச்சினால் கூட மேலும் தாபமடைந்தார். யாருடைய க்ருபையினால் ஸமஸ்த ஜீவர்கள் ஸம்ஸாரத்தின் மாயவலையிலிருந்து விடுதலையடைகிறார்களோ, அந்த சிவனுக்கு புஷ்பமாலைகளைக் கண்டாலே ஸர்ப்பங்களாகத் தோன்றுகிறது. இது ஆச்சர்யமல்லவா?

நினைத்தவுடனேயே ஜனங்களைத் தாபங்களிலிருந்து அதிதூரம் விலக்குவாரே, அதே தேவர் காசியின் வியோகத்தால் வ்யாகுலமடைநது தனக்குத்தானே கூறிக் கொள்ளத் தொடங்கினார்.

காசியிலிருந்து காற்றுவது என் சரீரத்தின் மீது படாதா? எனது விரஹத்தினால் ஏற்பட்டிருக்கும் நடுக்கம் குறையாதா? என்று இந்தப் பனிக்கட்டிகள் சுற்றியிருந்தும்

என்ன பிரயோஜனம்? எந்த தக்ஷனுடைய ஸுதா பிதாவின் வாயிலிருந்து பதியின் தூஷண வார்த்தைகளைக் கேட்டு தேஹத்தை விட்டாளோ, எவளது பிரிவினால் எனக்கு ஸஹிக்க முடியாத வேதனை உண்டாயிற்றோ, அது எனது வாழ்வின் மருந்து என்றும்; பார்வதியில்லையென்றால் எப்படி தூர விலகும்?

அடி, காசீ! இனி நான் எப்பொழுது உனது அங்க ஸங்கத்தினால் உண்டான ஸுகத்தை ஸந்தோஷமாக அனுபவிப்பேன்? எதனால் எனது இந்த தஹிக்கும் சரீரம் சீதளமாகும்? அடி; பாபிபுஞ்சவிநாசினி காசீ? உன்னைப் பிரிந்த வ்யாகுலத்தினால் உண்டான அக்னி விசித்ரமாக அல்லவா இருக்கிறது?

அக்னி போலல்லவா தஹிக்கிறது?

முன்பு ஸதியினால் ஏற்பட்ட விரஹானலம் பார்வதியாகிய ஓஷதியினால் சாந்தியடைந்தது. அதுபோல் இப்பொழுது சீக்கிரம் காசியினுடைய தரிசனம் கிடைக்காவிட்டால் எனக்கு சாந்தி கிட்டாது. இந்த விதமாக ரஹஸ்யமான ஸந்தாபத்திலாழ்ந்து மனதிற்குள் ப்ரலாபித்துக் கொண்டிருக்கும் சிவபிரானை புத்தியின் ஜனனியாக ஜகதம்பிகை எப்படியோ தெரிந்துகொண்டு விட்டாள்.

சிவபிரானுக்கு யாருடையவோ பிரிவு ஏற்பட்டிருக்கிறதென்று. ஆனால் சிவபிரான் பார்வதி தன்னுடைய அர்த்தாங்கி ஆனபொழுதிலும் கூட பார்வதி தேவிக்குக் கூட இந்த ரஹஸ்யம் தெரிந்திராதபடி பரம ரஹஸ்யமாகவே வைத்திருந்தார்.

அவள் வழக்கம்போல் பக்த ஜனங்களின் ஸந்தாபத்தைப் போக்கும் ஸேவை சிச்ரூஷைகளை வழக்கம் போல் செய்து வந்தாள். ஒரு தினம் பார்வதி தேவி கூறினார்:- ஸர்வ வ்யாபகரே! யோகேஸ்வரா! பிரபோ! எல்லாம் தங்கள் கையிலேயே இருக்கின்றன. தங்களுக்கு

*இந்த வியோகம் ஏன் ஏற்பட்டது? தங்களுடைய இந்த விபூதி மஹிமையினுல் ப்ரம்மாதிதேவதைகள் கூட ஐச்வர்யவான்களாகிறுர்கள். தங்களுடைய விபூதி மஹிமை ஜனங்களை ரக்ஷிப்பதிலும், ஆபத்துகளை நாசம் செய்வதிலும் வல்லமை உள்ளதாய் இருக்கிறது.*

*ஏ நாதா! இந்த ஸம்ஸாரம் தாங்கள் பராமுகமானுல் ஒருநிமிஷத்தில் ப்ரளயமாகி சிந்திக்கத் தக்க நிலையில் ஆகிவிடுகிறது. தங்களுடைய க்ருபையில் லவலேசத்திற்குக் கூடப் பாத்திரமாகாதவன் ப்ரஷ்டனுகிறுன். ஹே! த்ரிலோசனு! சந்திர, ஸூர்ய, அக்னி மூவரும் தங்கள் சரீரத்திலே நேத்ர ரூபமாக எப்பொழுதுமே இருந்து கொண்டிருப்பதனுல் தங்களுடைய மஸ்தகத்தில் ப்ரமையே மங்களகரமான ஜலரூபமான கங்கையிருக்கிறுள்.*

*ஹே! விஷபக்ஷகரே! நீலகண்டரே! இந்த எல்லா ஸர்ப்பங்களும் தங்களுடைய கைகளுக்கு ஆபரணமாக இருக்கின்றன. நல்லது! இவைகளுடைய விஷம் தங்களை என்ன செய்ய முடியும்? நானே தங்களுடைய அர்த்தாங்கினி! தங்களுடைய தாசியாயிருந்தும் தங்களுடைய ஸந்தாபத்திற்குக் காரணம் எனக்குத் தெரியவில்லை.*

*இந்த விதமாக உலகத்தின் ஆதிஜனனீ பார்வதிதேவி ஹிதமாகக் கூறின வார்த்தைகளைக் கேட்டு பகவான் பரமேச்வரர் கூறினுர். அடி காசீ! அஷ்டமூர்த்தியாகவும், ப்ரணவஸ்ரூபியாகவும் உலகத்தில் வ்யாபித்திருக்கும் மஹாதேவருக்குக்கூட உன்னுடைய விரஹத்தினுல் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்று கூறிக்கொண்டார்.*

*அப்போது பார்வதி தெரிந்து கொண்டாள். காசியினுடைய விரஹத்தினுல் தான் பகவான் ஹரன் இப்படி உலர்ந்து போகிறுராரென்று அப்பொழுது பார்வதி பால்ய பால்ய காலத்து ஸகியான வனத்தின் கொடிகளால்*

அலங்கரிக்கப்பட்டு விளங்குகிற முக்தி கொடுக்கும் தாயாகிய காசீபுரியைப் பற்றி பேசத் தொடங்கினாள்.

பார்வதி கூறினாள்:- மன்மதாரியை ப்ரளய காலத்தில் ஜலம் ஆஹாசம் முழுவதும் மூடி வ்யாபித்திருக்கும் ஸமயத்தில் கூடத் தங்களுடைய சூலத்தின் அக்ரபாகத்தில் விரிந்த கமலத்தைப் போல விகஸிக்கும் காசீபுரிக்கு நாம் இருவரும் இப்பொழுதே புறப்படுவோம் என்று கூறினாள்.

ஏ தூர்ஜடியே! பூமியில் ஒருபாகமாக இருந்தும் கூட அந்தக்காசீ பூமியில்லை. தங்களுடைய, ச்ரேஷ்டமான காசீபுரி எத்தனை ஸுகமளிக்கிறதோ அத்தனை ஆனந்தம் என்னுடைய பிதாவான ஹிமாலயமும். இந்த மந்த்ராசலமும் கூட அளிக்கவில்லை.

ஏ விபோ! எங்கு கலிகாலம் இவற்றின் பயமில்லையோ, பாபத்திற்க்குக்கூட பயமில்லையோ! எங்கு மரணமடைந்தால் புனர் ஜன்மத்தின் துக்கத்தைக் கூட அனுபவிக்க வேண்டாமோ, அந்தக்காசீபுரி எப்பொழுதும் இந்தக் கண்களை க்ருதார்த்தராகச் செய்யமுடியும். இந்த பூமியில் அடிக்கொரு இடத்தில் தனதான்யங்களினால் செழித்த ஆயிரக்கணக்கான நகரங்கள் இருக்கின்றனவே, ஆனால் ஹே சிவா! நான் தங்கள் மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன் அதாவது காசிக்கு சமமான மற்றொரு நகர் நான் கண்டதில்லையென்று. ஹே த்ரிபுராந்தகா! ஸ்வர்கத்தில் அநேக நகரங்கள் இருக்கின்றன. அவைகளைப் பார்த்தால் இதயத்தில் குதூகலம் ஏற்படத்தான் செய்கிறது. ஆனால் அவைகளெல்லாம் பவபயத்தை நாசம் செய்யும் தங்களுடையக் காசிக்கு முன்னால் துரும்புக்கு ஸமானமாகக் கருதப்படுகிறது.

ஹே நாதா! இங்கு காசியினுடைய விரஹஜ்ஜுரம் தங்களுக்கு மாத்திரம்தான் துக்கத்தைத் தருகிறது என்பதில்லை. எனக்கும் கூட தங்களை விட அதிகமான ஸந்தாபம் ஏற்படுகிறது. இந்த கோர விரஹாக்னியுடைய

சாந்திக்கு உபாயம் காசியேதான். என்னுடைய ஜன்ம பூமி ஹிமாலயம். ஆனால் ஹே ப்ரபோ! அந்தக் காலத்தில் நான் ஸமஸ்த ஸந்தாபங்களையும் நாசம் செய்யக் கூடியதும், பரம சாந்தியை அளிக்கக் கூடியதுமான காசிக்கு வந்து எனது ஜன்ம பூமியின் பிரிவினால் ஏற்பட்ட துக்கத்தைக்கூட மறந்திருந்தேன்.

ஏ! சர்மப்ரதா, இந்த உலகத்தில் சரீரமெடுத்த எவனும் மோக்ஷலக்ஷ்மியைப் பார்த்ததில்லை. ஆனால் எல்லாருக்கும் மங்களத்தைச் செய்யும் பொருட்டு முக்தியைக் கொடுக்க காசி ரூபமாக இருக்கிறாள். காசியில் சரீரத்தை விடுவதனால் யாதொரு முக்தி கிடைக்கிறதோ அந்த முக்தி இந்திரியங்களின் சஞ்சலத்தை நஷ்டமடையச் செய்யும் சமாதி, யோகாப்யாஸம் யக்ஞானுஷ்டானம் வேதவித்தை இவைகளால் கூடக் கிட்டுவதில்லை.

காசியில் சரீரமெடுத்த ஜீவர்களுக்கு யாதொரு அபூர்வ சுகம் கிட்டுகிறதோ இந்த ஸுகம் மிகவும் ரமணீயமான ஸ்வர்கத்திலோ, பாதாளத்திலோ கூடக் கிட்டுவதில்லை. ம்ருத்யுலோகமான பூமியோ இருக்கிறது. இதில் ஸுகம் என்றும் சொல்லக்கூடியது என்ன இருக்கிறது.

த்ரிசூலதாரியே! மோக்ஷலக்ஷ்மி ஒரு பொழுதும் நீங்காத தங்களுடைய அவிமுக்த க்ஷேத்ரத்தில் புண்ணியம் செய்தவர்கள் தங்கள் மனோயோகத்தை அடைகிறார்கள். அதனால் ஷடங்கயோக அப்யாஸபலன் அவர்களுக்குக் கிடைக்கிறது. நாதரே! காசியை அடைந்து தங்கள் மேல் க்ஷணமாத்திரமே பார்வையைப் பதித்தார்களானால் முகத்தில் தேஹத்தின் நிலை தானாகவே தெரிந்துவிடும். இந்த உலகத்தில் மனிதர்களுக்கு ஷடங்கயோகப் பயிற்சியால் கூட அவ்வித நிலை கிடைக்காது.

(அறிவுடன் பிறந்த ஒருவன் காசியைத் தரிசிக்கும் ஸௌபாக்யம் அடையானாகில் தாமரை இலைத் தண்ணீரென க்ஷணமாத்திரமே ஸ்திரமாக இருக்கும் ஜன்மம் அத்யந்த நிஷ்பலமாகிவிடும். அவனை விட புத்தி

வளர்ச்சியில்லாத பசு, பக்ஷி இவைகளின் ஜனனம் மிகவும் ச்ரேஷ்டமானது. ஹே! பிரானே, காசியைத் தரிசிக்கும் இரண்டு கண்களும், காசியில் வசிக்கும் சரீரமும் இங்கும் அங்கும், அலேவதை விட்டுவிட்டு காசியிலேயே லயிக்கும் மனமும், காசியைப் பார்த்து இருக்கும் முகமும் க்ருதார்த்தமானவைகளே.)

மிகவும் பாவனமானதும் ரஜஸ் தமோ குணங்களே நாசம் செய்வதும், சந்திரனேப் போல் பரம உஜ்வலமாகப் பிரகாசிக்கும் காசியின் தூளியும் எல்லாவற்றையும் விட மேலானதே. ஏனென்றால் மணிகர்ணிகையின் பூமியில் தேவர்கள் நமஸ்கரித்து அதை நெற்றியில் தரித்துத் தங்களே மேலானவர்களாகக் கருதுகிறார்கள்.

தேவலோகம், ஸத்யலோகம், நாகலோகம் இவைகள் கூட மணிகர்ணிகைக்கு நிகரானவைகளல்ல. ஏனென்றால் காசியில் மரிக்கும் ஜனங்களுடைய காதுகள் ப்ரம்ம ரஸாயனத்துக்கு இருப்பிடமாகிறது, மணிகர்ணிகையோ, அற்புத தேஜோமயமானதாகும். இங்கு நூற்றுக் கணக்கான ஜன்மங்களில் சேர்த்து வைக்கப்பட்ட சந்திர ஸூர்யாதிகளால் கூட நீக்க முடியாத அக்ஞான ரூபமான அந்தகாரத்தின் பரம்பரை தானே க்ஷயமாகிறது.

ஆஹா! இந்த நிர்வாண ராஜ்யத்தின் ஸிம்மாஸனம் எப்பேர்பட்டது? மோக்ஷலக்ஷ்மியின் ம்ருதுவான இளேப்பாறும் இடம் எப்பேர்ப்பட்டது? பரமானந்த ரூபமான சுந்தரத்தின் அஸ்திவாரத்திற்கு இது ஜன்மபூமி. இதுவே மணிகர்ணிகைக்கு ஜன்மஸ்தலம்.

இந்த ஸ்தானத்தில் மரண மஹோத்ஸவத்தை மிகவும் விருப்பமுடன் சுகமாக அமர்ந்துகொண்டு தங்களுக்கு முன்பாக மரணமடைந்து முக்தியடைந்த ஜந்துக்களின் எண்ணிக்கையை ப்ரகாசிக்கிற சிறு சிறு கற்களால் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இந்த மணிகர்ணிகாவின் பாக்கியம் நன்று நன்று.

*கந்தன் கூறுகிறார்:- ஏ! அகஸ்தியா, பார்வதிதேவி இந்த விதமாகக் காசீபுரியை வர்ணித்துவிட்டு பிறகு அங்கு போவதற்காக மஹாதேவரைப் பிரார்த்தனை செய்தாள். பார்வதிதேவி கூறினாள்:- ப்ரதமநாதரே! ஸர்வேஸ்வரா! தாங்கள் எப்பொழுதும் ஸ்வந்த்ரமான நடத்தையுடையவர். வர நாயகா! எவ்விதமாக ஆனந்த வனத்திற்குப் போவது எளிதோ அதைச் செய்யுங்கள்.*

*மஹாதேவர் இவ்விதமாக அமுதத்தின் மதுரத்தையும் பழிக்கும் காசியின் மனோஹரமான புகழைப் பாடுகின்ற கிரிஜா தேவியின் வார்த்தையைக் கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்து சொல்லத் தொடங்கினார்:- பகவான் சிவபிரான் கூறுகிறார்:- ஏ! ப்ரியே, கௌரீ! நான் உன்னுடைய இந்த வசனாம்ருதத்தின் திவலைகளினால் மிகவும் திருப்தியடைந்தேன். இப்பொழுதே காசி செல்வதற்கு முயற்சி செய்வேன்.*

*ஆனால் ஹே மஹாதேவீ! என்னுடைய கடினமானவ்ரதத்தைப் பற்றி நீ நன்கு அறிவாய் அல்லவா. நான் மற்றவர்கள் உபயோகித்த பொருளை ஒரு நாளும் உபயோகிக்கமாட்டேன் என்பது உனக்குத் தெரியும்.*

*ப்ரம்மாவின் சொற்படி அங்கு அரசன் திவோதாஸ் தர்ம பூர்வமாகக் காசீபுரியை ஆண்டு வருகிறான். பின் நான் அங்கு செல்வதற்கு எவ்விதம் உபாயம் செய்ய முடியும்? பிரஜாபாலனத்தில் ஆழ்ந்திருக்கும் தர்மநிஷ்ட பூபாலனை அந்த அரசன் திவோ தாஸை எவ்விதம் காசியிலிருந்து நீக்குவது?*

*ஏ தேவீ! ஒருவன் பாவியாக இருந்தால் அவனை இடையூறுகளினால் நீக்கலாம். தர்ம நிஷ்டனை நம்மால் ஒன்றும் செய்ய முடியாது. அதனால் காசிக்கு யாரை அனுப்புவது? அவனைக் காசியில் இருந்து எவ்விதம் வெளியில் அனுப்புவது?*

*ஏ ப்ரேம வர்தினீ! தர்ம மார்க்கத்தை அனுஸரித்துச் செல்லும் ஜனங்களுக்கு ஒரு இடையூறு செய்தோமானால்*

அந்த இடையூறை விளைவித்த கர்த்தாவிற்குத்தான் அது இடையூறாய் முடியும். தர்மிஷ்டர்களுக்கு அதனால் ஒரு கெடுதலும் வராது.

அவனது தர்ம ராஜ்யத்தில் ஒரு சிறிதளவு விரிசல் காணாத வரைக்கும் அவனை அங்கிருந்து நீக்க முடியாது. ஏனென்றால் ஏ ப்ரியே! தர்ம துரந்தரர்களை ரக்ஷிக்க வேண்டியது எனது பொறுப்பு. இந்த உலகத்தில் தார்மீக ஜனங்களை வயோதிகத்தினாலும் அழிக்க முடியாது. காலதேவனும் அவர்களைக் கொல்ல முடியாது. ஒரு வியாதியும் அவர்களுக்கு இடையூறு விளைவிக்க முடியாது.

மஹாதேவர் பார்வதியிடம் சொல்லிவிட்டு யோசனையில் ஆழ்ந்தார். அதே சமயத்தில் மிகவும் கடினமான காரியங்களையும் ஜெயிக்கவல்ல கம்பீரமான யோகினி மண்டலத்தைத் தனக்கு முன்னால் பார்த்தார்.

அப்பொழுது பகவதி பார்வதியுடன் சற்று யோசனை செய்து அபிப்ராயத்தைக் கலந்து கொண்டு வ்யோமகேசர் யோகினி கணங்களை அழைத்தார். ஏ அகஸ்திய முனிவரே! அதன் பிறகு சிவபிரான் கூறினார். ஏ! யோகினி கணங்களே, நீங்கள் இப்பொழுது என்னுடைய வாராணஸிபுரிக்குச் செல்ல வேண்டும்.

அங்கு ராஜா திவோதாஸ் தர்மபூர்வமான ராஜ்ய பரிபாலனம் செய்து கொண்டிருக்கிறார். அதனால் நீங்கள் அங்கு போய் உங்கள் யோகமாயையின் பலத்தினால் அவனுடைய ஸ்வதர்மத்திலிருந்து நழுவச் செய்யவும். சீக்கிரம் காசியை விட்டுப் போகக் கூடிய வழியை ஏற்படுத்தவும்.

ஏ! யோகினி கணங்களே! எப்படியானாலும் வாராணஸிபுரியை மறுபடியும் புதுப்பித்து நான் மறுபடியும் காசியைச் சென்று அடையக் கூடிய வழியைச் செய்யவும். இந்த விதமாக யோகினி கணங்கள் மஹாதேவருடைய வாக்கை அருள் பிரசாதமாக ஏற்று அவருடைய

ஆக்ஞையைச் சிரமேற் கொண்டு, அவரை வணங்கி விட்டுச் சென்றார்கள்.

அவர்கள் எல்லோரும் ஆனந்தமாக தங்களுக்குள் ஸம்பாஷித்துக் கொண்டு, மனோ வேகத்தைவிட அதிவேகமாகப் பறந்து வந்தனர். அவர்கள் வழியில் நாம் மிகவும் தன்யர்களானோம், மஹாதேவரே நம்மை அனுக்ரகித்து அனுப்பியுள்ளார்.

நமக்கு இன்று இரண்டு துர்லபமான வரங்கள் கிடைத்தன. ஒன்று பகவானின் ராஜ்ய வெகுமதி. மற்றொன்று காசி தரிசனம். இந்த விதமாகப் பிரசன்ன சித்தத்துடன் அந்த யோகினி கணங்கள் மந்த்ராசலத்தின் குஞ்ஜக்ரஹங்களிலிருந்து கிளம்பி ஆகாச மார்கமாக மிகவும் வேகத்துடன் பறந்து கொண்டு சில நாழிகைக் குள்ளாகவே தள்ளியிருந்த அந்தப் புரியைத் தங்கள் கண்கள் செய்த பாக்யத்தின் பலனாகப் பார்க்கத் தொடங்கினார்கள்.

இந்த விதமாகக் காசீபுராணத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான விச்வேஸ்வர காசீ விரஹமும் யோகிநீகண ப்ரஸ்தான வர்ணனமுமான நாற்பத்து நான்காவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்தியாயம் 45

கார்த்திகேயர் கூறினர்: இதற்குப் பிறகு யோகினீகணங்கள் தள்ளியிருந்தே கண்களின் பார்வையை வீசி காசீ தர்சன பாக்யத்தைப் பெற்ற தங்கள் கண்கள் பெற்ற பயனை வர்ணிக்கத் தொடங்கினர்-

இந்தக் காசீ மஹோன்னதமான உப்பரிகைகளின் வரிசையின் மேல் பறக்கும் கொடிகளை வீசி வீசிக் கொடிகளின் நுனியினுல் தூர தேசத்திலிருக்கும் யாத்ரிகர்களை மரியாதையுடன் வாருங்கள் வாருங்கள் என்று அழைப்பதுபோல் இருக்கிறது. இந்த மாளிகைகளில் பதித்திருக்கும் மணிமாணிக்கங்களின் பளபளப்பான கிரணங்கள் மிகவும் நீலமான ஆசாச மண்டலத்தைக் கூட ஜ்வலிக்கச் செய்து மிகவும் அதி நிர்மலமுள்ளவர்களாக்குகிறது.

இவ்விதம் காசியை நோக்கிக் கொண்டு அந்த யோகினிகள் அனைவரும் தங்கள் மாயா பலத்தினுல் தங்கள் தேவ உருவத்தை மறைத்துக் கொண்டு, ஸாதாரண யோகினி வேஷத்தைத் தரித்துக் கொண்டு அங்குமிங்கும் ஒவ்வொருவராய், ஒருத்தி யோகினியாகவும், ஒருத்தி அயல்வீடு தேடிவருபவளைப் போலவும், ஒருத்தி ஒரு மாதமாகச் சாந்த்ராயண வ்ரதம் அனுஷ்டிப்பவள் போலவும், ஒருத்தி செவிலித்தாயைப் போலவும், ஒருத்தி அப்பாத்துக்காரியைப் போலவும், ஒருத்தி கொடுக்கல் வாங்கலில் கெட்டிக்காரியைப் போலவும், ஒருத்தி பாம்பு பிடிப்பவளைப் போலவும், ஒருத்தி பௌராணிகரைப் போலவும், ஒருத்தி குழலூதுபவளைப் போலவும், ஒருத்தி வீணைவாசிப்பதில் பராங்கதியாகவும், ஒருத்தி தாசியைப் போலவும், ஒருத்தி நர்த்தகியைப் போலவும், ஒருத்தி ம்ருதங்கம் வாசிப்பதில் தேர்ந்தவளாகவும், ஒருத்தி தாளம் போடுவதில் கெட்டிக்காரியாகவும், ஒருத்தி மந்திரவாதியாகவும், ஒருத்தி முத்துக்கள் கோர்ப்பதில் கெட்டிக்காரியாகவும், ஒருத்தி வாசனைத்ரவ்யங்கள்

விற்பவளாயும், ஒருத்தி சதுரங்கம் விளையாடுவதில் வல்லவளாயும், ஒருத்தி வார்த்தையாடுவதில் சாதுர்யவதியாகவும், ஒருத்தி வீடு வீடாகச் செல்லும் அவதூத ஸன்யாஸினியாகவும், ஒருத்தி கயிற்றின் மேல் ஏறி வித்தைகள் காட்டும் வித்தைக்காரியாகவும், குழந்தையில்லாதவர்களுக்குக் குழந்தை பிறப்பதற்கான யுக்தி சொல்லித் தருபவளும், கைரேகையைப் பார்த்துப் பலன் சொல்பவளும், சித்திரம் எழுதுபவளும், வசீகரண மந்திரத்தை உபதேசம் பண்ணுபவளும், குளிகஸித்தி, அஞ்சனஸித்தி ரஸாயனஸித்தி, பாதுகாஸித்தி இவைகளை (ஸித்தி) உபதேசம் செய்பவர்களும், அக்னி ஸ்தம்பம், ஜலஸ்தம்பம், வசனஸ்தம்பம் முதலியவைகள் கற்றுத் தருபவளும், கேசரிவித்தை கற்றுத் தருபவளும், காணுமல் - மறைய வித்தை கற்றுத் தருபவளும்,

ஆகர்ஷணசக்தி கற்றுக் கொடுப்பவளும், உச்சாரண மந்த்ரம் சொல்லித் தருபவளும், தனது அங்கத்தின் காந்தியினுல் யெளவன சித்தங்களைத் திருடுபவளும், ஜோதிடக்கலையில் நிபுணையும், இச்சைப்பட்ட பொருளை வரவழைத்துக் கொடுப்பவளும், பலவித வேஷங்களைத் தரித்துக் கொண்டு அதற்கு அனுரூபமான வேஷம், பாஷை இவைகளோடு கூட அந்த யோகினிப் பெண்கள் ஒவ்வொரு க்ருஹஸ்தர்கள் வீட்டிலும் போய் நுழைந்தனர். ஆனுல் இந்தவிதமாக ஒரு வருஷம் வரையில் காசீ அலைந்து திரிந்தும்கூட,

ராஜா திவோதாஸிற்கு அநிஷ்டத்தைக் கொடுக்கக்கூடிய ஒரு விரிசலைக் கூடக் காண முடியவில்லை. பிறகு அந்த யோகினிகள் எல்லாரும் ஒன்று சேர்ந்து தங்கள் காரியங்கள் வ்யர்த்தமாகிப் போவதைப் பற்றிப் பேசிக் கொண்டு ஒருவருக்கொருவர் ஆலோசனைகள் செய்து கொண்டு மந்த்ராசலத்திற்குத் திரும்பிச் செல்ல விருப்பமில்லாமல் காசியிலேயே வாஸம் பண்ணத் தொடங்கினுர்கள்.

ராஜ ஸபையில் எல்லா விதத்திலும் கெட்டிக்காரிகள் என்று பெயர் வாங்கிக் கொண்டு வெகுமதி வாங்கிக் கொண்டு என்ன ப்ரயோஜனம்? ஸ்வாமி சிவபிரானுடைய காரியத்தை நிறைவேற்ருமல் உயிருடன் அவர் முன்பு எந்த முகத்துடன் செல்வது? ஏ முனிவரே! அந்த யோகினிகள் மற்றும் ஓர் காரணத்தைப்பற்றி யோசித்தனர். நாம் எல்லோரும் பிரபுவின் பக்கத்தில் இருக்க பாக்கியம் செய்யாவிட்டாலும் உயிர் வாழ முடியும். ஆனுல் காசியை விட்டால் பிழைப்பது அரிது.

ஏனென்ருல் ஸ்வாமி கோபித்துக கொண்டால் வேலைக்காரர்களுடைய ஜீவிதத்தைப் பறித்துக் கொண்டு தூரத் தள்ள முடியும். ஆனுல் கையில் கிடைத்த காசியைத் தவற விட்டோமானுல் தர்மார்த்த காமமோக்ஷம் நான்கும் இழந்து போய்விடும். ஏ! முனிநாதரே, இவர்களெல்லோரும் அன்றைய தினத்திலிருந்து மூன்று லோகங்களிலும் சுற்றி வந்தாலும் கூடக் காசியை விட்டு வேறு எங்கும் போக மாட்டார்கள்.

கெட்ட புத்தியுடைவர்கள் ஒரு தடவை ஸ்ரீ காசிபுரியை அடைந்து விட்டுச் சென்ருர்களானுல் நான்கு புருஷார்த்தங்களையும் விட்டுச் சென்றவர்களாவார்கள். எந்த மடையன் தான் துச்சமான லக்ஷ்மிக்கு வசமாகி மோக்ஷதனம் நிரம்பிய கலசமான காசியை விட்டுப் போவான்!

பரமேஸ்வரர் நம்மை வெறுத்தாரென்ருலும் காசி வாசத்தின் புண்ணிய பலத்தால் கட்டாயம் நம்மை விரும்புவார். அப்பொழுது நாம் க்ருதக்ருத்யர்களாகி விடுவோம். இன்னும் சில தினங்களுக்குள்ளாகவே ஸர்வாந்தர்யாமியாகிய பகவான் த்ரிலோசனனும் இங்கேயே வந்துவிடுவார். ஏனென்ருல் அவர் வேறு எங்கும் காசியை விட்டு விட்டு ஸந்தோஷமாக இருக்கவே முடியாது.

இந்தக் காசி க்ஷேத்ரம் பகவான் சங்கருடைய அலௌகசக்தியாகும். அதை ஒருவரும் அடைய முடியாது. ஏனென்றால் இதனுடைய உண்மையான அனுபவ ஸுகத்தை கேவலம் சங்கரர் ஒருவர் அறிவார். இப்படியாக மனதில் நிச்சயித்துக் கொண்டு அந்த யோகினி கணங்கள் மாயைக்கு வசப்பட்டவர்களாய் அந்த ஆனந்த வனத்திலேயே வஸித்து வந்தனர்.

இப்பொழுது வியாசர் கூறுவார்:- இவ்விஷயங்களையெல்லாம் கேட்டு ஸ்வாமி கார்த்திகேயர் அகஸ்திய முனிவரிடம் கேட்டார்:- ஏ பகவன்! அந்த யோகினிகளுடைய பெயர்கள் என்னென்ன? தயவு செய்து அவைகளைச் சொல்ல வேண்டுமென்றார். மேலும் - அந்தக் காசியில் அந்த யோகினீ தேவதைகளைப் பூஜை செய்வதினால் என்னென்ன பலன்கள் கிடைக்கும்? எந்தெந்தப் பர்வங்களில் அவர்களைப் பூஜை செய்ய வேண்டும்? அவைகளுடையப் பூஜா விதிகள் எத்தகையது? இவைகளையும் கூற வேண்டும் என்றார்; இந்த விதமாக அகஸ்திய முனிவர் யோகினிகளைப் பற்றிக் கேள்விகளின் மேல் கேள்விகளாகக் கேட்கவே, பார்வதி குமாரனான ஸ்கந்தன் பதில் கூறினார்:- நான் அவைகளைக் கூறுகிறேன், நீங்கள் அவைகளை ஜாக்கிரதையாகக் கேட்க வேண்டுமென்றார்.

ஏ! கும்ப முனியே, யோகினிகளின் பெயர்களைக் கூறுகிறேன்; அவைகளைக் கேட்டதினால் மனிதர்களின் பாபங்கள் தானே க்ஷயமடையும்; அந்தப் பெயர்கள் முறையே கஜானனா, ஸிம்ஹமுகீ, க்ருத்ராஸ்யா, காகதுண்டிகா, உக்ரக்ரீவா, ஹயக்ரீவா, வாராஹீ, சாபானனா, உலூகிகா, மயூரீ, விகடானனா, அஷ்டாவக்ரா, சிவாராவா, கோடராக்ஷீ, குப்ஜா, விகடலோசனா;

சுஷ்கோதரீ, லோலஜிஹ்வா, ஸ்வதம்ஷ்ட்ரா, வானரானனா, ருக்ஷாக்ஷி, ம்ருகதுண்டா, ஸுராப்ரியா, கபாலஹஸ்தா, ரக்தநேத்ரா, ஸுகீ, சேனி, கபோதிகா,

பாசஹஸ்தா, தண்டஹஸ்தாப்ரசண்டா, சண்டவிப்ரமா, சிசுக்னீ, பாபஹந்த்ரீ, காளி, ருதிரபாயினி, வஸாதாயா, கர்பபக்ஷா, ஸ்வஹஸ்தா, அந்தரமாலினி, ஸ்தூலகேசீ, ப்ருஹத்குக்ஷி, ஸர்ப்பாஸ்யா, ப்ரேதவாஹனு, தந்தஸ¬கஹரா, க்ரௌஞ்சி, ம்ருகசீரிஷா, ம்ருஷானனு,

யாத்தாஸ்யா, தூமநிஸ்வாஸா, வ்யோமேகசரணு, ஊர்த்வத்ருக்தாபனீ, ஸோஷனீஸ்த்ருஷ்டீ, ஸ்தூலநாஸிகா, வித்யுத்ப்ரபா, பலாகாஸ்யா, மார்ஜரீ, கடபூதனு, அட்டாட்டஹாஸா, காமாக்ஷீ, ம்ருகாக்ஷீ, ம்ருகலோசனு, இந்த அறுபத்துநான்கு யோகினிகளின் பெயர்களையும் தினமும் மூன்று நேரமும் ஜபித்து வந்தால் துஷ்ட பாதைகள் சாந்தமடையும்.

இந்த எல்லாப் பெயர்களையும் பாராயணம் பண்ணி வந்தால் பாகினீ, ஸாகினீ, கூஷ்மாண்டா, வேறு ராக்ஷஸ கணங்கள் இவைகளால் ஒரு உபத்ரவமும் உண்டாகாது. இந்த அறுபத்தி நான்கு கன்னிகைகளும் பாலகர்களுக்கு சாந்தியளிக்கவும், யுத்தத்தில், ராஜதர்பாரில், வாதப்ரதிவாதங்களிலும் வெற்றியைக் கொடுக்கவும் செய்வார்கள்.

எவன் ஒருவன் யோகினீ பீடத்தை ஸேவிக்கிறுனே, அவனுடைய ஸகல மனேரதங்களும் ஸித்தியாகும். மேலும் யோகினீ பீடத்திலமர்ந்து மற்ற மந்திரங்களை உச்சரித்தாலும் ஸித்தி கிடைக்கும், தூபம், தீபம், பலி இவைகளுடன் மற்ற காணிக்கைகளுடன் யோகினிகளைப் பூஜை செய்தால் அவர்கள் ஸந்தோஷமடைந்து நமக்கு அனுக்ரஹம் செய்வார்கள்.

மந்திரஸித்தி வாய்ந்தவர் யோகினி பீடத்தில் சரத் காலத்தில் விதிபூர்வகமாக மஹாபூஜை செய்தால் மஹத்தான ஸித்தி கிடைக்கும். ஐப்பசி மாதம் சுக்லபக்ஷப்ரதமையிலிருந்து தொடங்கி நவமி வரையில் எவனெருவன் யோகினிகளைப் பூஜை செய்கிறுனே அவன்

ஸகல ஸித்திகளையும் பெறுகிறான்.

உத்தம ஜனங்கள் காசியில் கிருஷ்ண பக்ஷத்து சதுர்த்தசியன்று உபவாஸம் இருந்து, (விழித்தார்களானால்) இரவு கண் விழித்தார்களானால் அவர்களுடைய எல்லா அபீஷ்டங்களும் நிறைவேறும். பக்திமான்கள் இந்த நாமங்களுக்கு முன்னால் ப்ரணவத்தையும், முடிவில் நான்காவது விபக்தியையும் சேர்த்து இரவு நெய்யுடன் குல்குலுவை ஒவ்வொரு நாமத்துக்கும் 108 சங்கை வீதம் ஹோமம் செய்தால் எந்த ஸித்தியை வேண்டுமானாலும் அடையலாம்.

சித்திரை மாதத்து கிருஷ்ணபக்ஷத்து பிரதமையன்று க்ஷேத்திரத்தின் விக்ன சாந்திக்காக ஒவ்வொரு புண்யாத்மாவும் சிரத்தையுடன் யாத்ரையைச் செய்ய வேண்டும்.

காசிவாஸி மர்யாதையில்லாமல் 64 யோகினிகளுடைய இந்த வருஷ யாத்திரையைச் செய்யா விட்டால் அவர்களுக்கு எடுத்த காரியங்களுக்கெல்லாம் இடையூறு ஏற்படும்; யோகினிகள் மணிகர்ணிகையை முன்னிட்டுக் கொண்டு வஸிக்கிறார்கள். எல்லோரும் அவர்களை வணங்கினாலேயே அவர்களின் ஸமஸ்த இடையூறுகளும் நீங்கிவிடும்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவது கண்டமான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான யோகினிகள் காசீப்ரவேச வர்ணனமான நாற்பத்தைந்தாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்தியாயம் 46

கார்த்திகேயர் கூறுவார்:- கும்பமுனியே! யோகினிகள் சென்ற பிறகு மஹாதேவர் காசியின் செய்தியை அறிய எண்ணம் கொண்டு ஸூர்யதேவனை அனுப்பினார்.

தேவதேவர் கூறினார்:- திவாகர, தர்மாவதாரரான அரசன் திவோதாஸர் - அரசாளும் பவித்ரமான வாராணஸிபுரியில் நீ சீக்கிரமாகச் செல்வாய். தர்மத்துக்கு விரோதமாக அவரை நடத்தவிட்டு அந்த க்ஷேத்ரத்தை நிலைகுலையச் செய்துவிடு. அதை முதலில் செய். ஆனால் அதனால் அரசனுக்கு ஒருவிதமான அவமானமும் நேரிடக்கூடாது.

ஏனென்றால் தர்மவழி போகிற ஜனங்களை அவமரியாதை செய்தால் தன்னையே அவமதித்துக் கொள்வது போலாகும். மேலும் பளுவான பாபத்தைச் சுமக்க வேண்டிவரும். பானுவே! உன்னுடைய புத்தி பலத்தினால் எந்த வழியிலாவது அந்த அரசனை நழுவச் செய்து, உனது ஸஹிக்க முடியாத கிரணங்களின் தீக்ஷ்ண்யத்தினால் அந்த நகரைப் பாழாக்கு. காம க்ரோதம், மதம், மோஹம், லோபம், மாத்சர்யம் இவை ஒன்றினால்கூட அவனை வசப்படுத்த முடியாது. சொல்லப்போனால் காலனால்கூட அவனை ஜயிக்க முடியாது.

மனிதர்களுடைய புத்தியும், மனமும் தர்மத்தில் ஊறியிருக்கும்வரை ஆபத்து காலத்தில்கூட அவர்களுக்கு இடையூறு செய்ய முடியாது. ஏ ஸூர்யா! நீ உலகத்தில் எல்லாருடைய செயல்களையும் பற்றி அறிவாய். அதனால் உன்னை ஜகத்சக்ஷு என்று கூறுகிறார்கள். அதனால் இந்த காரியஸித்திக்காக நீ அங்கு போ. இதற்குப்பின் ஸூர்யன் மஹாதேவனின் ஆக்ஞையைப் பெற்று வானவெளியில் செல்வதற்குத் தன்னைப் போன்று மற்றொரு மூர்த்தியைக்

கல்பித்து வைத்துவிட்டுக் காசிக்குப் போனுர்.

அந்த வேளேயில் அவர் காசியைத் தரிசிக்க அதிக ஆவல் கொண்டவராய் அவருக்கு ஆயிரம் பாதங்களிலிருந்தும் எண்ணற்ற பாதங்கள் நமக்கு இருக்கக் கூடாதா என்று ஆசைப்பட்டார்.

காசி யாத்திரைக்கு ஆவலுடன் செல்லும் ஸுர்யனுக்கு அவர் எப்பொழுதும் ஆகாசமார்க்கமாகச் செல்லும் யாத்ரிகராக இருந்தாலும்கூட ஹம்ஸம் என்ற பெயர் அப்பொழுதிலிருந்து வழங்கலாயிற்று. இதற்குப் பிறகு ஸுர்யதேவர் காசியை யடைந்து உள்ளும் வெளியுமாக இரண்டு இடம் சுற்றிப் பார்த்தும்கூட அந்த ராஜாவைப் பற்றி அதர்மமான செய்கைகள் ஒரு இடத்திலும் காணப்படவில்லே.

ஸுர்யபகவான் அநேக ரூபங்கள் எடுத்துக் கொண்டு ஒரு வருஷபர்யந்தம் காசியைச் சுற்றிப் பார்த்தும்கூட அந்த அரசனின் விஷயமாக ஒன்றும் கண்டு பிடிக்க முடியவில்லே. கடைசியில் ஒரு தடவை அதிதியாக அரசனிடம் சென்று கிடைக்க முடியாத துர்லபமான ஒரு வஸ்துவை யாசித்தார். ஆனுல் அந்த அரசனின் ராஜ்யாதிகாரத்தில் கிடைக்க அரிதான ஒரு வஸ்துவுமில்லே.

ஸுர்யதேவர் யாசகராகச் சென்ருர். தாதாவாகப் போனுர். தீனராகப் போய் அலேந்து திரிந்தார். சில ஸமயம் ஜோதிஷராஞர். சிலஸமயம் ஜனங்களுக்கு மத்தியில் சாஸ்திரத்தை மிகவும் குடிலமாக வ்யாக்யானம் செய்தார். சிலசமயம் நாஸ்திகர்களேப்போல ஜகத்தில் கேவலம் ப்ரத்யக்ஷ ஞானத்தைவிட வேறு விஷயங்கள் கிடையாது என்று நாஸ்திக வாதத்தை ஆமோதித்தார். சில ஸமயம் ஜடாதாரியாஞர். சில ஸமயம் திகம்பரராஞர், சில ஸமயம் விஷவித்தை தெரிந்த வைத்யராகச் சுற்றினுர். சில ஸமயம் காட்டுப் பாம்பின் விஷத்தையும் மந்திரிக்கும் பிடாரனுய்ச் சுற்றினுர்.

சில ஸமயம் பாஷண்ட தர்மத்தை அறிந்தவர்போலச் சுற்றினார், சில ஸமயம் ப்ரம்மமே ஸத்யம். ஜகத்வித்தை என்று ப்ரசாரம் செய்தார். சில ஸமயம் நானுவித வ்ரதங்களைப் பற்றி உபதேசங்களைச் செய்து, அனேக விதமான உபமானக் கதைகளினுல் பதிவ்ரதாஸ்த்ரீகளின் மனதை மாற்ற எண்ணினுர். சில ஸமயம் பாஷாண்ட மதத் தலைவனுகச் சுற்றினுர். சிலஸமயம் ப்ரம்ம ஞானியானுர். சில ஸமயம் ரஸாயன ஸித்தர் ஆனுர்.

ஒரு ஸமயம் ப்ராம்மணர், ஒரு ஸமயம் ராஜகுமாரன், ஒரு ஸமயம் வ்யாபாரி, ஒரு ஸமயம் க்ருஹஸ்தர், ஒரு ஸமயம் வானப்ரஸ்தர் ஒரு ஸமயம் ஸந்யாஸி ஒரு ஸமயம் ஸர்வ வித்யாபண்டிதர், இப்படியாக ஜனங்களைத் தனது அநேக வேஷங்களால் மறக்கடித்தார். இந்த விதமாக க்ரஹாதிபதியான ஸூர்யதேவர் காசீ க்ஷேத்ரத்தில் இரவும் பகலும் சுற்றியும்கூட எங்கும் ஒரு மனிதனிடத்திலும் யாதொரு குற்றத்தையும் காணமுடியவில்லை.

கடைசியில் கச்யபகுமாரன் கவலையில் ஆழ்ந்து தன்னையே நிந்தித்துக் கொள்ளத் தொடங்கினுர். உண்மையாகப் பராதீனம் என்பது மிகவும் இழிவு. அதில் ஒரு போதிலும் புகழைப் பெற முடியாது. இப்பொழுது நான் மந்த்ராசலத்திற்குப் போனேனுனுல் மஹேஸ்வரரான பகவான் என்னையும் ஸாமான்ய ஸேவகர்களைப் போல் நினைத்துக் காரியத்தை நிறைவேற்றுமல் வந்ததற்காக அவசியம் கோபிப்பார்.

பின்பும் அவருடைய கோபத்தை ஏற்றுக்கொண்டு ஒருவிதமாகச் சென்றுலும் அதமசேவகனைப் போல் அவர் முன்னிலையில் எப்படி நிற்க முடியும்? இந்த அவமானத்தையும் ஒருவிதமாக ஸஹித்துக் கொண்டு அவர் முன்னுல் போய் நின்றேனுனுல் அந்த முக்கண்ணர் அவருடைய கோபத்தினுல் என்னை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தாரானுல் நான் மஹாதேவருடைய கோபாக்னிக்கு விட்டில் பூச்சியாகப் போய் விழுவேனுனுல் அப்பொழுது

ப்ரம்மாகூட என்னைக் காப்பாற்ற முடியாது. இது நிச்சயம்.

அதனால் நான் இங்கேயே தங்கிவிடுவேன். இந்தக் காசியிலேயே ஒரு ஆச்ரமம் அமைத்துக் கொண்டு க்ஷேத்ர ஸந்யாஸியாக இங்கேயே தங்கிவிடுவேன். ஆமாம் த்ரிபுராந்தகரிடம் சென்று கார்யம் ஸித்தியாகிவிட்டது அல்லது அஸித்தியாகி விட்டது என்பதைத் தெரிவிக்காமல் இங்கேயே உட்கார்ந்திருந்தால் - அது நஷ்டமடையச் செய்துவிடும். ஏனென்றால் ஸாது ஜனங்கள் காசியில் ப்ரவேசித்தவுடனேயே அவர்கள் செய்த பாபங்கள் உடனேயே க்ஷயித்து விடுமல்லவா! அப்படியிருக்க-

நாம் மனதறிந்தோ, அறியாமலோ ஒரு பாபமும் செய்தது கிடையாது. ஏனென்றால் பகவான் சிவபிரானே இந்த ஆக்ஞையிடும்பொழுது முதலாவது தர்மத்தை ரக்ஷித்துக்கொள்ளவேண்டும் என்று கூறியுள்ளார். எவன் இந்த க்ஷணபங்குரமான சரீரத்தில் இருக்கும்போதே தர்மத்தை ரக்ஷிக்கிறானோ, அவன் மூன்று உலகையும் ரக்ஷிப்பதற்கு ஸமானமாகும். இந்தக் காமம் அர்த்தம் முதலியவைகளைப் பாதுகாப்பதினால் என்ன ப்ரயோஜனம்? காமத்தை ரக்ஷிக்க வேண்டியதே என்று இருந்தால் எண்ணிக்கையற்றவர்களுக்கு ஸுகமளிக்கும் இந்தக் காமத்தை சங்கரர் ஸத்குரு என்று கருதி அவனை ஏன் அங்கமில்லாமல் ஆக்கினார்? அர்த்தத்தைப் பாதுகாப்பது நல்லது என்று சில பேர் சொல்கிறார்கள். ஆனால் வேந்தன் அரிச்சந்திரன் விச்வாமித்ரர் விஷயமாக ஏன் அர்த்தத்தைக் காப்பாற்றவில்லை. ததீசி முனீஸ்வரர், சிபிச் சக்கரவர்த்தி முதலியவர்கள் தங்கள் சரீரத்தையே த்யாகம் செய்து தர்மத்தை ரக்ஷிக்கவில்லையா?

இந்தக் காசீ க்ஷேத்திரத்தில் வாஸம் செய்யும் தர்மமே ருத்திர தேவருடைய கோபாக்னியில் இருந்து என்னை ரக்ஷிக்கும். இதில் ஸந்தேஹமில்லை. ஆறறிவுள்ள ஒருவன் கிடைத்தற்கரிய காசி வாஸத்தை அனுபவித்த பிறகு விடுவானா? கையில் கிடைக்கத் தகாத ரத்னத்தை வீசி

எறிந்துவிட்டு யாராவது கண்ணுடிச் சில்லே எடுத்துக் கொள்வாளு?

ஒருவன் வாராணஸியை விட்டு வேறு எங்கேயாவது சென்ருனுல் அது கிடைத்தற்கரிய அபூர்வ நிதியைத் தள்ளிவிட்டு பிக்ஷையெடுத்து தனம் சேர்க்கச் செல்வது போல் ஆகும். உலகத்தில் புத்ரன், மித்ரன், களத்ரம், வீடு, வாசல், தனம் இவைகள் ஒவ்வொரு ஜன்மத்திலும் கிடைக்கக்கூடும். ஆனுல் காசி எப்பொழுதும் கிடைக்காது.

பாக்யவான்கள் த்ரைலோக்யத்தையும் உத்தாரணம் செய்யக்கூடிய திறமை வாய்ந்த காசியை அடைந்த பிறகு மூன்று உலக ஐச்வர்யங்களே விட மேலான மஹாஸுகம் கிடைத்தற்கு ஸமம். பகவான் ருத்ரர் கோபித்துக் கொண்டு என்னுடைய தேஜஸ்ஸை வேண்டுமானுலும் நஷ்டமடையச் செய்யட்டும், ஆனுல் காசியிலேயே இருந்தேனுனுல் ஆத்மஞானத்தினுல் ஏற்படும் பரம தேஜஸ் எனக்குக் கிட்டும்.

காசியைச் செர்ந்து அதனுல் ஏற்படும் ப்ரகாசத்தின் மலர்ச்சிக்கு முன்பு மற்றையப் பிரகாசங்களெல்லாம் மின்மினிப் பூச்சியினுடைய ஒளியே. இந்த விதமாகக் காசியின் ப்ரபாவத்தைப் பற்றி நன்கு அறிந்தவரும், இருளே நாசம் செய்யக் கூடியவரமான ஸூர்ய தேவர் தன்னேப் பன்னிரெண்டு மூர்த்திகளாகச் செய்து கொண்டு காசியிலேயே நிலேத்து விட்டார்.

அந்தப் பன்னிரண்டு ஸூர்யர்களின் பெயர்களும் முறையே:- லோலார்க்கர், உத்தரார்க்கர், ஸாம்பாதித்யர், த்ராபதாதித்யர், மயூகாதித்யர், ககோல்காதித்யர், அருணுதித்யர், வ்ருத்தாதித்யர், கேசவாதித்யர், விமலாதித்யர், கந்தாதித்யர், யமாதித்யர், ஏ! அகஸ்தியா இந்த பன்னிரண்டு ஆதித்யர்களும், காசீபுரியை தாமஸ துஷ்ட பாபிகளிடமிருந்து ஸதா ரக்ஷித்துக் கொண்டிருக்கின்றனர்.

ஆதித்ய பகவானுடைய மனம் காசீக்ஷேத்திர தரிசனத்திலேயே லயித்துவிட்டது. (லோலார்க்) மனம் அசைந்தாடுதல். தக்ஷிண திசையில் அஸிஸங்கமத்துக்கு அருகில் லோலார்க் ஸூர்யமூர்த்தி இருக்கிறார். அதன் மூலமாகக் காசிவாஸிகளின் யோக க்ஷேமங்கள் ஸதா வஹிக்கப்படுகிறது.

ஐப்பசி மாதம் ஏதாவது ஒரு ஞாயிற்றுக்கிழமையில் ஸப்தமியோ ஷஷ்டியோ திதி சேர்ந்திருந்தால் அன்று லோலார்க்கருடைய கோவிலுக்கு யாத்திரை செய்து ஸமஸ்த பாபங்களிலிருந்து விடுபடலாம். ஜனங்களுடைய ஒரு வருஷத்திய ஸஞ்சித ஸமஸ்த பாபங்களையும் இந்த பானு ஷஷ்டி பர்வதத்தில் லோலார்க்கரை தரிசனம் செய்வதினால் த்வம்ஸம் ஆக்கிவிடலாம்.

அஸி ஸங்கமத்தில் ஸ்னானம் செய்து தேவதைகள் பித்ருக்களுக்குத் தர்பணம், ச்ராத்தங்கள் செய்தால் அவன் பித்ருக்கடனிலிருந்து விடுபடுகிறான். லோலார்க்க குண்டத்தின் ஸமீபமாக ஸ்னானம் செய்து, ஹோமம், தேவபூஜை இவைகளைச் செய்தால் அது எண்ணிக்கையற்ற பலனைக் கொடுக்கும்.

ஸூர்ய க்ரஹண ஸமயத்தில் அங்கு ஸ்னானம் செய்து, அங்கு தானதிக்ரியைகளைச் செய்தால் ஒருவனுடைய குருக்ஷேத்திரத்தை விடப் பத்து மடங்கு பலன் ஸந்தேஹம் இல்லாமல் கிடைக்கும். அங்கு மாகமாதத்து சுக்ல ஸப்தமியன்று லோலார்க்ககுண்டத்தில் ஸ்னானம் செய்தால் ஒருவனுடைய ஏழு ஜன்மத்து ஸஞ்சிதபாபங்கள் விலகி முக்தியடைகிறான்.

ஒருவன் பவித்ரமாக வ்ரதமிருந்து ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் லோலார்க்கரைத்தரிசனம் செய்தால் இந்த லோகத்தில் ஒருவிதமான துக்கத்தையும் அவன் அனுபவிக்க மாட்டான். ஒவ்வொரு ரவி வாரமும் லோலார்க்கரை தரிசித்து அவருடைய பாதோதகத்தைப்

பருகினல் - சிரங்கு, சொறி, சோகங்கள், துக்கங்கள் இவைகளேற்படாது.

ஒருவர் காசியிலிருந்தும் லோலார்க்கரைத் தரிசனம் செய்யாவிட்டால் பசி, வ்யாதி இவைகளைத் தரக்கூடிய துக்கங்களை அனுபவிப்பார். லோலார்க்க காசியில் எல்லாத் தீர்த்தங்களிலும் தலைமைதாங்கக்கூடிய தீர்த்தம். மற்ற தீர்த்தங்களெல்லாம் அங்கங்களுக்கு ஸமானம்.

ஸிரஸில் விட்ட ஜலம் உடலில் விழுவதைப்போல மற்ற தீர்த்தங்களெல்லாம் அஸ்ஸியினல் கழுவப் பட்டதேயாகும். உலகில் உள்ள எல்லாத் தீர்த்தங்களும் இந்த அஸ்ஸி தீர்த்தத்திற்கு பதினுறில் ஒரு பங்கு கூட ஆகாது. எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்ஞனம் செய்தால் என்ன பலன் கிடைக்கிறதோ அது இந்த கங்கா அஸி ஸங்கமத்தில் ஒன்றில் ஸ்ஞனம் செய்தாலே கிடைக்கிறது.

இது அர்த்த வாதமுமல்ல; ஸ்துதி வாதமுமல்ல; ஸத்யத்தினுடைய யதார்த்தம். அதனல் ஸாது ஜனங்கள் மர்யாதையுடன் இதில் ஸ்திரத்தை வைக்க வேண்டும். எங்கு பகவான் விஸ்வநாதர் எழுந்தருளியிருக்கிருரோ அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தைப் பற்றிப் பொருமைப்படுபவர்கள் தாம் குதர்க்கம் செய்து வீணுக அநுமானம் செய்வார்கள்.

முட்டாள் ஜனங்கள் தங்கள் குதர்க்க பலத்தினல் கர்வமடைந்து காசியின் விஷயமாக இந்த வார்த்தைகளை அர்த்தவாதமென்று எண்ணுகிருர்களோ, அவர்கள் யுகயுகமாக மலத்தில் புழுவாய் நெளிவார்களே தவிர ஸத்கதியடைய மாட்டார்கள்.

முனிவரரே! ஸமஸ்த த்ரையோக்ய மண்டலங்களும்கூடக் காசியின் ஒரு மஹிமைக்குக்கூட ஸமமாகாது. அதனல் நாஸ்திகர்கள் வேதத்தை நிந்திப்பவர்கள் நீச ஜாதியைச் சேர்ந்தவர்கள் இப்படி இருப்பவர்களிடம் இந்தக் காசியின் வர்ணனையை வர்ணிக்கக்கூடாது.

லோலார்க்கருடைய கிரணங்களினுல் எரிக்கப்பட்டு அஸி என்னும் வாளின் கூர்மையினுல் துண்டமிடப்பட்டு மஹத்தான பாபங்களெல்லாம் தென்பக்கம் மூலமாகக் காசியில் ப்ரவேசிக்கவே ப்ரவேசிக்காது. உத்தம புருஷரான லோலார்க்கரின் மஹிமையைக் கேட்டாலே போதும். துக்க ஸாகரமான ஸம்ஸாரத்தில் அழுந்தவே மாட்டார்கள்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான லோலார்க்க கதாவர்ணனம் என்னும் நாற்பத்தாறுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 47

ஸ்கந்தர் கூறுவார்:- காசிக்கு உத்தர திசையில் உத்தமமான அர்க்ககுண்டம் இருக்கிறது. உத்தரார்க்கர் என்ற பெயருடைய ஸௌர்ய பகவான் இருக்கிறுர். அந்த மஹா தேஜஸ்வியான உத்தரார்க்க ஸௌர்யன் ஸாது ஜனங்களுடைய துக்க நெருக்கங்களை நீக்கி எப்பொழுதும் ஆனந்தத்தைக் கொடுத்துக்கொண்டு காசியைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறுர்.

ஏ! சுபவ்ரதரான அகஸ்த்ய முனியே! இந்த ஸௌர்ய விஷயமாக ஒரு சரித்ரம் இருக்கிறது. அக்காலத்தில் ஆத்ரேய கோத்ரத்தில் பிறந்தவரான பிரியவ்ரதன் என்னும் பெயருள்ள ஒரு ப்ராம்மணன் காசியில் இருந்தான்.

அவன் ஆசார சீலன். எப்பொழுதும் அதிதிகளிடம் மிகவும் பக்தியுடையவன். அவனுடைய அழகான மனைவியின் பெயர் சுபவ்ருதை. அவள் தனது பதியின் ஸேவையையே முதல் வ்ரதமாகக் கொண்டு குடும்ப நடவடிக்கைகளில் மிகவும் ஸாமர்த்திய சாலியாக இருந்து கொண்டிருந்தாள். காலாகாலத்தில் தம்பதிகளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதை அருமையாகப் பாராட்டி ஸுலக்ஷ்ணு என்று பெயர் வைத்தனர்.

அந்தக் குழந்தை மூல நக்ஷத்ரத்தில் முதல் பாதத்தில் பிறந்தது. ப்ருஹஸ்பதி ஜாதகத்தின் ராசியில் நான்காவது கட்டத்தில் இருந்தார். காலக்ரமமாக அந்தப் பெண் சுக்ல பக்ஷத்து சந்திரகலையைப் போல் க்ரமேண வளர்ந்து வந்தாள். அக்கன்னிகை மிகவும் ரூபவதியாகவும் விநயம் முதலிய குணங்களுடன் அன்னை தந்தை இவர்களின் அன்பிற்குக் காரணமாகவும், வீட்டு வேலைகளிலும், வீட்டை சுத்தமாக வைத்துக் கொள்வதிலும் நிபுணையாக இருந்தாள். அந்தக்குழந்தை வளர வளரத் தந்தையின் கவலையும் வளர்ந்து கொண்டேயிருந்தது.

பரம ஸுந்தரியான ஸுலக்ஷணையை யாருக்கு

விவாஹம் செய்து கொடுப்பது? உயர்ந்த குலமும், யௌவனமும், கல்வியும் குணங்களும் ரூபமும் ஸம்பத்தும் நிரம்பிய ஒரு வரன் தான் இந்த ஸுலக்ஷணைக்கு ஏற்றவன். அவனிடம் கையைப் பிடித்துக் கொடுத்தால் ஸுகமாக வாழ்வாள். அம்மாதிரி நல்ல பாத்திரம் எனக்கு எங்கிருந்து கிடைக்கும்?

இந்த மாதிரிக் கவலைப்பட்டு பட்டு சுபவ்ரதன் ஒருநாள் கடுமையான ஜ்வரத்தால் பீடிக்கப்பட்டான். பெரும்பாலும் புருஷர்களுடைய இந்த சிந்தாஜுரம் ஔஷதங்களினால் சாந்த மடைவதில்லை. கன்னிகை மூல நக்ஷத்ரத்தில் பிறந்ததின் பலன் சிந்தா ஜுரத்தினால் பீடிக்கப்பட்டு அந்த ப்ராம்மணன் க்ருஹம் முதலிய ஸகல ஸம்பத்துக்களையும் துறந்து ஒருநாள் பரலோகம் எய்தினான்.

பிதா இப்படி இறந்ததும் அக்கன்னிகையின் அன்னையும் அருமையான புத்ரியைத் தவிக்கவிட்டுப் பதியைப் பின்பற்றினாள். ஸதாசாரிணியான பதிவ்ரதைகளுக்கு இதுவே தர்மம். பதி வாழ்ந்தாலும் இறந்தாலும் பதிவ்ரதைகளுக்கு நாரீ ஒரு பொழுதும் பின் பற்றத் தயங்கமாட்டாள். ஏனென்றால் ஸ்த்ரீகளின் த்ரமத்தை குழந்தைகளும் ரக்ஷிக்கமாட்டார்கள். மாதா, பிதா, பந்து வர்க்க ஜனங்கள் இவர்கள் ஒருவரும் ரக்ஷிக்கமாட்டார்கள். அப்பொழுது அவளைப் பதிவ்ரதா தர்மமே ரக்ஷிக்கிறது.

இதற்குப் பிறகு அந்த அப்பாவிப்பெண் ஸுலக்ஷணை குமுறும் துக்கத்துடன் நடுங்கிக் கொண்டு அன்னை தந்தை இவர்களின் அந்திமக்ரியைகளை முடித்துவிட்டு எப்படி எப்படியோ தசாஹத்தையும் முடித்தாள். அதன் பிறகு அனாதையானாள். தீனமாய் அழத் தொடங்கினாள். மஹத்தான கவலையில் ஆழ்ந்தாள். நான் அன்னை தந்தையை இழந்து தனியாகிவிட்டேனே, இப்பொழுது தாண்ட முடியாத இந்த ஸம்ஸார ஸாகரத்தை எப்படி நான் கடப்பேன்?

பெண்ணுய்ப் பிறந்தாலே அவர்கள் மானமிழந்து தான் போவார்கள். அன்னையும் தந்தையும் என்னை ஒருவர் கையிலும் பிடித்துக் கொடாமல் போய்விட்டனரே, இப்பொழுது நான் அப்படி ஒப்படைக்கப்படாமல் என்னிச்சைப்படிக்கு யாரை வரனுக வரிப்பேன்? அப்படி நான் யாரையாவது வரித்து மணந்து கொண்டாலும் அவன் குலவானுகவும் என் மனத்துடன் ஒத்துழைக்காவிட்டால் அவனை வைத்துக்கொண்டு நான் எப்படி நிர்வஹிப்பேன்! இப்படிச் சிந்தையுடன் வ்யாகுலமுடன் ஸதா அந்த ரூபவதியான ஸுலக்ஷணே,

அநேக யௌவன இளைஞர்களை ப்ரதி தினமும் ஸந்தித்து, ப்ரார்த்தித்தும் கூடத் தன்னுடைய ஹ்ருதயத்தில் நுழைவதற்கு ஒருவனுக்குக் கூட அதிகாரம் கொடுக்கவில்லை. அந்தக் கன்னிகை மாதா பிதாவின் மனத்தைப் பார்த்து அவர்களுடைய அன்பான வாத்ஸல்யத்தை நினைத்து, நினைத்து ஸம்ஸாரத்தை ஸாரமற்றதாகக் கருதி தன்னையே நிந்தித்துக் கொள்ளத் தொடங்கினுள்.

ஐயோ, யார் என்னைப் பெற்ருர்களோ, யார் என்னை வளர்த்தார்களோ, அந்த அன்னை தந்தை என்னை விட்டு எங்கோ சென்று விட்டார்களே; இந்த நிலையில்லாத சரீரம் இழிவு இழிவு. எந்த விதமாக என் கண் முன்னுலேயே என் பெற்ருேர்கள் சரீரத்தை விட்டு விட்டனரோ, அந்த நிலை என்தேஹத்திற்கும் வராது என்பது என்ன நிச்சயம்?

இப்படிச் சிந்தையுடன் ஒரு முடிவிற்கு வந்து, அந்தக் கன்னிகை ஸுலக்ஷணே, இந்த்ரியங்களையும் மனதையும் அடக்கிக் கடுமையான ப்ரம்மசர்ய வ்ரதத்தைக் கைக்கொண்டு திடமான மனதுடன் முன்பு கூறிய உத்தரார்க்க ஸூர்யனின் ஸமீபத்தில் கோரமான தபஸ் செய்யத் தொடங்கினுள்.

அப்படி அவள் தபஸ் ஆரம்பித்த நாளிலிருந்து ஒரு சிறிய வெள்ளாடு பிரதி தினமும் அங்கு வந்து அசையாமல்

அவளைப் பார்த்துக் கொண்டு நின்று கொண்டிருக்கும். பிறகு எப்பொழுது மாலை வருமோ அப்பொழுது அந்த வெள்ளாடு அங்கு பக்கத்தில் அனுயாஸமாகக் கிடைக்கும் புற்களை இலைகளைத் தின்றுவிட்டு இந்த ஸூர்ய குண்டத்தின் ஜலத்தைக் குடித்து விட்டுத் தன் எஜமானனின் வீட்டிற்குச் செல்லும்.

இவ்வாருக ஐந்தாறு வருஷங்கள் சென்றன. ஒருநாள் பகவான் மஹேச்வரர் பார்வதி தேவியுடன் கூட யதேச்சையாக உலாவிக் கொண்டே அவ்விடம் வந்து சேர்ந்தார். அங்கு உத்தரரார்க்க ஸூர்யனின் பக்கத்தில் தவத்திஞல் மிகவும் உலர்ந்த சரீரத்துடன் மரக்கட்டையைப் போல் சலிக்காமல் கோரமான தபஸ் செய்து கொண்டிருக்கும் ஸுலக்ஷணையைப் பார்த்தார். அப்பொழுது அவளைப்பார்த்தவுடனேயே பார்வதிதேவி கருணையால் உருகின மனத்துடன் பந்துக்கள் இல்லாத அனுதையான அந்தக் கன்னிகைக்கு வரம் கொடுத்து அருளும்படிக் கணவனை வேண்டத் தொடங்கினுள்.

க்ருபாநிதியான மஹாதேவரும் கிரிஜாதேவியின் வார்த்தைக் கிணங்கி வரம் கொடுத்தருள எண்ணிக் கண்களை மூடி ஸமாதியில் இருக்கும் அந்த ஸுலக்ஷணையைப் பார்த்துக் கூறினுர். ஏ! ஸுவ்ருதே, ஸுலக்ஷணி, வெகு காலமாக தபஸ் செய்து மிகவும் வருத்தமடைந்திருக்கிருய். இதோ பார். நான் சந்தோஷமடைந்திருக்கிறேன். உன் மனேரதத்தைக் கேள். வரம் தருகிறேன் என்ருர்.

விஸ்வநாதருடைய அந்த மழையெனப் பொழியும் மஹா ஸந்தாபத்தை நாசம் செய்யக் கூடிய மதுரமான வசனத்தைக் கேட்டு ஸுலக்ஷணை தன் கண்களைத் திறந்தாள். திறந்ததும் முன்னுல் பகவான் த்ரிலோசனரும், அவருக்கு இடப்பக்கத்தில் ஜகதம்பிகையும் அவளுக்கு வரம் கொடுக்கத் தயாராக நிற்பதைக் கண்டாள். உடனேயே கைகளைக் கூப்பி வணங்கினுள்; பிறகு அந்த ஸுந்தரகுமாரி

என்ன வரம் கேட்பது என்று யோசிக்கத் தொடங்கினுள். உடனேயே அவளுக்கு முன்னுல் அந்த ஆட்டுக் குட்டி நிற்பதைக் கண்டாள்.

இந்த உலகத்தில் எல்லோரும் தன்னுடைய சுய நலத்திற்காகவே வாழ்கிருர்கள். ஆனுல் பரோபகாரத்திற்காக எவன் வாழ்கிருனே, அவனுடைய வாழ்வே உபயோகமானது. இந்த ஆட்டுக்குட்டி என்னுடைய தபஸ்ஸிற்கு ஸாக்ஷியாக வெகுகாலமாக எனக்கு முன்னுல் நின்று கொண்டிருக்கிறது. அதனுல் ஜகத்பதியிடம் அதற்காக ஒரு வரம் கேட்பேன், என்று ஸுலக்ஷணே மனதில் உறுதி செய்து கொண்டு, பகவான் த்ர்யம்பகரிடம் கூறினுன். ஹே! தயாநிதியே, ஹே! மஹாதேவா! தாங்கள் எனக்கு வரம் அருளுவதாக இருந்தால், முதலாவது இந்த ஆட்டுக்குட்டிக்காக வரம் அருளுங்கள். இது என்னிடம் மிகவும் ப்ரியமுள்ளது. அதனுல் தனது ப்ரியத்தை வாய் திறந்து கூறமுடியவில்லை. ஏனென்ருல் அது ஒரு ம்ருகம் அல்லவா? என்ருள்.

பக்தர்கள் பயத்தைப் போக்கவல்ல பகவான் பூதபாவனர் ஸுலக்ஷணேயுடைய இந்தத் தன்னலமற்ற பரோபகாரம் நிரம்பிய பேச்சைக் கேட்டுப் பரம ஸந்தோஷமடைந்தார். பிறகு சங்கர பகவான் பார்வதியை நோக்கிக் கூறினுர். ஸாது ஜனங்களின் புத்தி இப்படித் தான் பரோபகாரத்தாலே நிரம்பியிருக்கும். இவர்களே தன்யர்கள். முழுவதும் தர்மஸ்வரூபமானவர்கள். எப்பொழுதும் பரோபகாரத்திற்காகவே பாடுபடுவார்கள்.

ஏ ப்ரியே! எந்தப் பொருள்களேச் சேர்த்து வைத்தாலும் நிலேக்காது. ஆனுல் இந்த பரோபகாரம் என்னும் மஹா புண்ணியம் வெகு காலம் வரை நிலேத்திருக்கும். ஓ! தேவி! இந்த ஸுலக்ஷணே பரம தன்யை. நாம் அனுக்ரகிப்பதற்கு மிகவும் தகுதி வாய்ந்தவள். ஹே ப்ரியே! இவளுக்கும் இந்த ஆட்டுக் குட்டிக்கும் எத்தகைய வரம் கொடுக்கலாம்; நீயே சொல் என்ருர்.

பார்வதி கூறினார்:- ஏ! ஸமஸ்த ஸ்ருஷ்டி கர்த்தாக்களுக்கும் தலைவரே, எல்லாம் அறிந்தவரே, பக்தர்களின் ஆபத்தை விலக்குபவரே, இந்த மங்களகரமான ஸுலக்ஷணை ஸுசீலை. ஆகையால் இவள் எனக்கு ஸகியாவாள். என்னுடைய ஜயா, விஜயா, ஜயந்தி, ஸுபாநந்தா, ஸுனந்தா, கௌமுதி, ஊர்மிளா, சம்பகமாலா, மலயவாஸினீ, கற்ப்பூரலதிகா, கந்ததாரா, சுபா, அசோகா, விசோகா, மலயகந்தினி, சந்தன நிச்வாஸா, ம்ருகமதோத்தமா, கோகிலாலாபா, மதுரபாஷிணீ, கத்ய பத்யநிதி, அனுக்தாக்ஞா, த்ரிகஞ்சலேங்கிதக்ஞா, க்ருதமனோரதா, கானமனோஹரா முதலிய எனது ஸகிகளுடன் சுலக்ஷணாவும் ஒருவளாகட்டும்.

இவள் பாலப்ரம்மசாரிணியாகையினால் எனக்கு மிகவும் ப்ரியமானவளாவள். இவளுடைய இந்த சரீரத்துடனேயே திவ்யாலங்கார, திவ்யபூஷண, திவ்யவஸ்திர, திவ்ய கந்தாவாகி திவ்ய ஞானத்தினால் பரிபூர்ணமாக எப்பொழுதும் எனது பக்கத்திலேயே சாமரம் வீசிக் கொண்டிருக்கட்டும். இந்த ஆட்டுக்குட்டியும் காசி ராஜாவின் பெண்ணாய்ப் பிறக்கட்டும்; இந்த உலகத்திலுள்ள ஸமஸ்த போகங்களையும் அனுபவித்த பிறகு முக்தியடைவாள்.

ஏ! தேவா! இந்த ஆட்டுக்குட்டி புஷ்யமாதத்து ரவி வாரத்தில் மிகவும் குளிராக இருந்தபோதிலும் தைரிய சித்தத்துடன் ஸூர்யோதயத்திற்கு முன்பாகவே இந்த அர்க்க குண்டத்தில் ஸ்னானம் செய்திருக்கிறது. ஏ! விச்வேஸ்வரா! ப்ரபுவே, தங்களுடைய வரதானத்தின் ப்ரபாவத்தினாலும் ஸ்னானத்தின் பலனாகவும் இந்த ஸுலோசனையான ஆட்டுக்குட்டி காசி ராஜனுக்கு அருமைப் பெண்ணாய்ப் பிறக்கட்டும்.

இந்த அர்க்கக்குண்டத்தின் பெயர் இன்றையிலிருந்து (வக்கரிக்குண்டம் - ஆட்டுக் குண்டம்) என்று

ப்ரஸித்தியாகட்டும், எல்லோராலும் இங்குள்ள ஆட்டுக் குட்டியின் சிலைக்குப் பூஜை செய்யப்படும். காசி வாசத்தின் பலனை விரும்பும் எல்லா பக்த ஜனங்களும் புஷ்யமாதத்து ரவிவாரத்தன்று இந்தக் குண்டத்தில் ஸ்நானம் செய்து உத்தரார்க்க சூரியனுக்குப் பூஜை செய்து வார்ஷிகயாத்திரையாக இதைக் கொண்டாடட்டும். இந்த விதமாக பகவதி பார்வதி தேவியினுடைய ஸமஸ்த வேண்டுகோளையும் நிறைவேற்றிவிட்டு, ஸமஸ்த வ்யாபகரான விஸ்வ நாதர் தன்னுடைய நிலையத்துக்குத் திரும்பினார்.

ஸ்கந்தர் கூறினார்:- ஏ மஹா பாக்யவானான அகஸ்திய முனிவரே! இந்த விதமாக நான் லோலார்க்கர், உத்தரரார்க்கர் இவர்களுடைய மாஹாத்மியத்தைக் கூறினேன். இப்பொழுது ஸாம்பாதித்யருடைய வராலாற்றைக் கூறுகிறேன்- ஒருவாரம் இந்தக் கதையை ச்ரவணம் செய்தால் அவனுக்கு வ்யாதி, பயம், தரித்ரம் இவைகளால் கஷ்டம் ஏற்படாது.

ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷா டீகாவான உத்தரார்க்கரான ஸூர்ய பகவானின் வர்ணனம் என்ற நாற்பத்தியேழாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 48

ஸ்கந்தர் கூறினர்:- ஏ மைத்ரா வருணரே! கேளும் துவாரகாபுரியில் யதுகுல வம்ச விளக்காய் அக்னிக்குத் துல்யமான ப்ரதாபத்துடன் கூடிய பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அஸுரர்களை வதித்து பூமியின் பாரத்தைக் குறைப்பதற்காக தேவகி கர்ப்பத்தில் வஸுதேவரின் குமாரராக அவதரித்தார்.

ஏ கும்பஜ! ஸ்வர்க வாஸிகளைவிட அதிக குணவான்களும் அதிமனோஹரரூப ஸௌந்தர்யத்தோடு கூடினவர்களாயும் அதியசயிக்கத்தக்க பலவான்களும் எல்லா யுத்த சாஸ்திரங்களிலும் விற்பன்னரும் பரம சுபலக்ஷணங்களோடு கூடினவர்களான எண்பது லக்ஷம் குமாரர்கள் கோபஸ்த்ரீகளுக்குப் பிறந்தார்கள்.

ஒரு தடவை ப்ரம்மாவின் மானஸ புத்திரரும் தபோநிதியுமான நாரதர் மரவுரியைக் கௌபீனமாக அணிந்து க்ருஷ்ணஜினத்தை உடுத்து, ப்ரம்மதண்டத்தைக் கையில் ஏந்தி தேஹரி என்னும் புல்லினால் செய்த மௌஞ்ஜியைத் தரித்துக் கொண்டு மார்பில் துளசி மாலை புரள, கோபீ சந்தநத்தைத் தேகஹம் முழுவதும் பூசிக்கொண்டு, தபஸ்ஸினல் ஒடுங்கிய தேகமுடையவராய், அக்னிபோல் ஜாஜ்வல்ய உருவுடன் ஆகாசமார்க்கமாக, விச்வகர்மாவினல் நிர்மாணிக்கப்பட்ட ஸ்வர்க்கபுரியின் சோபையைப் பழிக்கும்,

அந்த துவாரகாபுரிக்கு, அந்த க்ருஷ்ண குமாரர்களைப் பார்ப்பதற்காக வந்து இறங்கினர், அந்த யாதவ குமாரர்கள் யாவரும் தேவரிஷி நாரதரைப் பார்த்தவுடனேயே, மிகவும் விநயத்துடன் கைகளைக் கூப்பித் தலையில் வைத்துக் கொண்டு வணங்கினர்கள்.

அவர்கள் எல்லாரிலும் தான் தான் மிகவும் ஸௌந்தர்யம் உடையவள் என்ற கர்வத்தினல் மோஹித்திருந்த ஜாம்பவதியின் புதல்வனன ஸாம்பன்

மாத்திரம் நாரதரின் ரூபத்தையும் வேஷத்தையும் பரிஹஸித்து, அவரை வணங்கவுமில்லை. முனிராஜர் நாரதரும் ஸாம்பனுடைய இந்த அபிப்பிராயத்தை அறிந்து, மனதில் வைத்துக் கொண்டு க்ருஷ்ணருடைய பரம ரம்யமான மாளிகைக்கு எழுந்தருளினார்.

பகவானான க்ருஷ்ணன் நாரதர் வருவதைப் பார்த்துவிட்டு எழுந்திருந்து வந்து எதிர்க் கொண்டழைத்து மதுவர்க்க முதலிய பூஜா விதிகளினால் அவரை ஸந்தோஷப்படுத்தி, உயர்ந்த ஸிம்மாஸனத்தில் அவரை எழுந்தருளியிருக்கச் செய்தார். அவருடன் கூட அநேக விஷயங்களைப் பற்றி ஸம்பாஷணை செய்து முடித்த பிறகு, பகவான் தனித்திருக்கும் போது நாரதர் அவருடைய காதில் ஸாம்பனின் கர்வத்தைக் குறித்து மெல்லக் கூறினார்.

யசோதானந்த வர்த்தனான நான் கூறுவது ஒருவேளை அஸங்கதமாக இருக்கலாம்; ஆனால் ஸாம்பனது குணசித்ரங்களையும், ரூப ஸௌந்தர்யங்களையும் பார்க்கும் பொழுது ஸ்த்ரீகளை தர்மத்தில் பாதுகாத்து வைத்துக் கொண்டிருப்பது சற்று சிரமமானக் காரியம் என்று எனக்குப் படுகிறது.

ஏனென்றால் ஸ்திரீகள் என்னதான் செய்யமாட்டார்கள்? இது ஒன்றும் ஆச்சர்யப்படக் கூடிய விஷயமொன்றுமில்லை. ஏனென்றால் ஸாம்பன் மூன்று உலகிலுள்ள யுவர்கள் எல்லாரையும்விட மிகவும் ரூபவானாக இருக்கிறான். மேலும் இயற்கையாகவே சஞ்சல நயனங்களையும் பெண்களின் மனோவ்ருத்தி இதனால் மேலும் சஞ்சலங்களுள்ளாகும்.

இந்த அழகிய கண்களையுடைய பெண்கள் இருக்கிறார்களே, அவர்கள் வித்தை மூலம், சீலம், தனம் இவைகளை மட்டும் விரும்புவதில்லை. காமத்தால் மோஹமடைந்து, கேவலம் உருவத்தையே விரும்புகிறார்கள். அதிகம் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

கோபிகளுடைய விஷயம் உங்களுக்குத் தெரியாததா? உங்களுடைய எட்டு பட்ட ராணிகளைத் தவிர, மற்ற எல்லாப் பெண்களும் ஸாம்பனுடைய உருவத்தில் மயங்கியிருக்கிறார்கள். இந்த விதமாக நாரதருடைய கூற்றையும், பெண்களின் சஞ்சல ஸ்பாவத்தையும் அறிந்த கிருஷ்ணன் மஹா மேதாவியாக இருந்தும்கூட உண்மையென்றே நம்பினார்.

எதுவரைக்கும் தன்னுடைய ப்ரேமைக்குப் பாத்திரமான புருஷனுடன் தனித்திருக்க வாய்ப்புக் கிடைக்க வில்லையோ, அது வரைக்கும் தைரியத்துடன் விவேகபுத்தியுடனும் இருப்பார்கள். ஆனால் ஏகாந்தம் கிடைத்ததும் வேறுவிதமாக ஆகிவிடும். பகவான் கிருஷ்ணர் இந்தப் பிரகாரம் யோசனை செய்து விவேகம் என்னும் ஸேதுவால் கோபமென்னும் நதியின் பிரபல வேகத்தைத் தடுத்து நிறுத்தி, நாரதரிஷியை விடை கொடுத்து அனுப்பினார்.

அந்த தேவரிஷி சென்ற பிறகு கிருஷ்ணன் இரவும் பகலுமாக ஜாக்கிரதையாகக் கவனித்தும் கூட, ஸாம்பன் விஷயமாக எங்கும் ஒரு குற்றத்தையும் காணவில்லை. இப்படிச் சில நாட்கள் சென்ற பிறகு நாரதமுனி திரும்பவும் துவாரகைக்கு வந்தார். அந்த சமயம் ஸ்த்ரீகளுக்கு மத்தியில் க்ருஷ்ணர் க்ரீடையில் கலந்திருப்பதை அறிந்து, வெளியில் விளையாடிக் கொண்டிருக்கும் ஸாம்பனை அழைத்து, நீ, க்ருஷ்ணனிடம் நான் வந்திருப்பதைக் கூறிவிட்டுவா என்று சொன்னார்.

இதைக் கேட்ட ஸாம்பன் உள்ளே செல்வதா, வேண்டாமா, என்று க்ஷணநேரம் யோசனை செய்து நின்றான். ஏனென்றால் ஸத்ரீகளுடன் ஏகாந்தமாக இருக்கும் பிதாவை எப்படிச் சென்று அழைப்பது என்று தயங்கினான். அந்த எரியும் நெருப்பாய் ஜ்வலிக்கின்ற ஸர்வாங்க தேஜஸ்வியான பரப்ரம்மசாரி கூறியபடி போவதா அல்லது போகாமல் இருப்பதா, என்றும், எப்படிப் போகாமல் இருப்பது என்றும் யோசித்தான்.

ஏனென்றால் முன்பு ஒருபொழுது இவர் வந்தவுடன் என்னைத் தவிர எல்லா யாதவ குமாரர்களும் இவரை வணங்கினார்கள். நான் மாத்திரம் இவரை வணங்காமல் வெட்கத்துடன் இருந்தேன். ஆனால் இப்பொழுது இந்த மஹாமுனி சொற்படி போகாமல் இருந்தால், இவ்விரு குற்றங்களையும் எண்ணிப் பார்த்து அவர் எனக்கு மிகவும் தீங்கு செய்வார்.

இந்த ஸமயம் பிதாவைப் பார்க்கச் சொன்னால் அவரும் என்னை மிகவும் கோபிப்பார். ஆனால் பிதாவின் கோபம் இவருடைய கோபத்தினை விடக்கடினமாக இராது. ஆனால் என் மேல் இந்த பிராம்மணர் கோபிப்பது சரியில்லை. ஏனென்றால் ப்ராம்மணனுடைய கோபாக்னியினால் எரிந்தவர்கள் தலைதூக்க முடியாது. மற்ற அக்னியினால் எரிந்த வனங்கள் கூடமுளை கிளம்பலாம்.

இந்தவிதமாக யோசனை செய்து கொண்டு ஸாம்பன் அந்தப் புரத்தில் பிதாவைப் பார்க்கச் சென்றான். அந்த ஜாம்பவதீகுமாரன் பெண்களுக்கு மத்தியில் எழுந்தருளியிருக்கும் கிருஷ்ணபகவானை மிகவும் தள்ளியிருந்தே வணங்கிச் சலன சித்தத்துடன் மகரிஷிநாரதர் வந்திருப்பதைக் கூறத் தொடங்கினான். அப்பொழுது நாரதரும் பார்த்தார். தன்னுடைய காரியம் ஸித்தியாவதற்கு இதுவே நல்ல தருணமென்று ஸாம்பன் பின்னாலேயே அவரும் அந்த: புரத்தில் பிரவேசித்தார்.

க்ருஷ்ணபகவானும் ஸாம்பனையும் நாரதர் வருவதையும் பார்த்துவிட்டுத் திடுக்கிட்டு எழுந்து நழுவிய பீதாம்பரத்தை சரி செய்து கொண்டு நின்றார். தேவகி நந்தனன் எழுந்து நின்றவுடன் அவருடைய எல்லா நாயிகைகளும் எழுந்து மிகுந்த லஜ்ஜையுடன் தங்கள் தங்கள் வஸ்திரங்களைச் சரிசெய்து கொண்டார்கள். பிறகு கிருஷ்ணர் நாரதரைக் கையைப் பிடித்து அழைத்து வந்து விலையுயர்ந்த சப்ர - மஞ்சகட்டிலின் மீது அமரச் செய்தார். இதைப் பார்த்தவுடன் ஸாம்பனும் மெல்லத் தன்னுடைய விளையாட்டு ஸ்தலத்திற்கு நழுவலானான்.

பிறகு நாரதமுனி அவரைக் கண்டவுடன் அவஸரத்தில் எழுந்து வந்த க்ருஷ்ணனுடைய கலவியினுல் நெகிழ்ந்த அந்தப் பெண்கள் கலவரத்துடன் நிற்பதைப் பார்த்து விட்டுக் கூறத் தொடங்கினுர்-

பாருங்கள் பாருங்கள் மஹாமதே! இந்த ஸ்த்ரீகளெல்லாம் ஜாம்பவதி நந்தனுடைய ரூபத்தைப் பார்த்துவிட்டு மோஹித்த மனதுடன் பரவசமாய் நிற்கிருர்கள் - பாருங்கள் என்ருர். இதனுல் மிகவும் மனம் வருந்திய கிருஷ்ணன் ஆராய்ந்து பாராமலேயே ஸாம்பனே அழைத்து சாபம் கொடுத்துவிட்டார். ஆனுல் ஸாம்பன் இந்த விஷயத்தில் நிரபராதியே.

ஏனென்ருல அவன் இந்தப் பெண்மனிகளே யெல்லாம் தாயைப் போலவே மதித்து வந்தான். கிருஷ்ணபகவான் ஸாம்பனுக்கு என்ன சாபம் கொடுத்தார் தெரியுமா? 'நீ ஸமயா ஸமயம் தெரியாமல் உள்ளே வந்தாய், இந்த ஸ்த்ரீகளெல்லாம் உன்னேப் பார்த்து காமவசமாகி நெகிழ்ந்து போய் நிற்கிருர்கள். அதனுல் நீ குஷ்டரோகியாக ஆகக்கடவாய்! என்ருர்.

ஸாம்பனும் இந்தப் பயங்கர மஹாவ்யாதியின் பயத்தினுல் நடுநடுங்கிக்கொண்டு தன்னுடைய அபராதத்தை க்ஷமிக்குமாறு அடிக்கடி வேண்டினுன். கிருஷ்ணனும் தன் சொந்த புத்திரனுன ஸாம்பனே அவருடையச் செயலினுல் நிரபராதி என அறிந்து, நீ இந்த குஷ்டம் நீங்க விஸ்வநாதபுரி (காசி) செல்வாய். ஏனென்ருல் பெரிய பெரிய பாபங்களுக்குப் பிராயச்சித்தம் வாராணஸிபுரியைத் தவிர வேறு எங்கும் கிடையாது.

அதனுல் அங்கு சென்று பகவான் ஸூர்ய நாராயணரை ஒழுங்காக ஆராதித்து வந்தாயானுல் உன்னுடைய நிலேமாறி இயற்கை ரூபத்தை அடைவாய் என்ருர்.

பெரிய பெரிய பாபங்களிலிருந்து கடைத்தேறுவதற்கு உபாயம் மஹாமுனிவர்களுக்கும்

தோன்றவில்லை. அப்பாபங்களிலிருந்து விடுதலை பெற எங்கு பகவான் விஸ்வேஸ்வரரும், ஸ்வர்க ப்ரவாஹினீ கங்கையும் எழுந்தருளியிருக்கிறார்களோ, ப்ரவாஹினீ அந்த வாராணஸிபுரி சென்றதுமே - பாபங்களனைத்தும் நீங்கிவிடும்.

காரணமென்னவென்றால் வாராணஸியில் நாம் செய்த பாபங்களிலிருந்து மாத்திரம்தான் விடுதலைப் படுவோம் என்பதல்ல ஆனால் மஹாதேவருடைய ஆக்ஞையினால் இயற்கையால் உண்டாகும் பாபங்களிலிருந்தும் விடுபடுவோம். அக்காலத்தில் பகவான் த்ரிபுராரி அந்திம காலத்தில் சரீரத்தை விடும் எல்லா ஜந்துக்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுப்பதற்காக, இந்த அவிமுக்த ஜந்துக்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுப்பதற்காக, இந்த அவிமுக்தக்ஷேத்ரத்தை மகத்தான க்ருபையுடன் ஸ்ருஷ்டித்தார்.

அதனால் ஏ ஸாம்பா! அந்த மஹாதேவருடைய ஆனந்தவனத்தில் உன்னுடைய பாபத்திற்கு (சாபத்திற்கு) விடுதலை கிட்டும். நான் உண்மையைக் கூறுகிறேன். நீ அங்கு போவாய். மற்ற எந்த விதமாகவும் உன் சாபத்திற்கு விமோசனம் கிடையாது.

இதற்குப் பிறகு சுபம், அசுபம் என்று கூறக்கூடிய விஷயங்களிலிருந்து வேறுபட்ட ஜீவன்முக்தரான நாரதமுனி தன்னுடைய காரியத்தில் வெற்றி பெற்றவராக பகவான் க்ருஷ்ணரிடம் விடை பெற்றுக் கொண்டு ஆகாசமார்க்கமாகச் சென்றுவிட்டார். பிறகு ஸாம்பனும் வாராணஸிக்கு அங்கு கோவிலுக்கு முன்னால் குண்டம் அமைத்து ஸூர்யதேவனை ஆராதித்து பழையபடி தன் ஆரோக்யத்தைப் பெற்றான்.

அப்பொழுதிலிருந்து காசிபுரியில் ஸூர்யபகவான் ஸர்வவியாதி வினாசகராய் அவதரித்து, எல்லா பக்த ஜனங்களுக்கும் ஆபத்தை நீக்கி ஸம்பத்தை அருளிவருகிறார்.

ஆதித்ய வாரத்தில் அருணோதய காலத்தில் பக்தியுடன் கூட ஸாம்ப குண்டத்தில் நீராடி ஸாம்பாதித்யனைப் பூஜைசெய்தவர் ரோகத்தினால் பீடிக்கப்பட மாட்டார்கள். அந்த ஸாம்பாதித்யனை ஸேவித்த எந்தப் பெண்ணும் விதவையாகமாட்டாள். மலடியும் கூட நல்ல நடத்தையுள்ள அழகான புத்திரனைப் பெற்றெடுப்பாள்.

ப்ராம்மணோத்தமரே! சாஸ்திரம் கூறுவது என்னவென்றால் மாகமாதத்து சுக்லபக்ஷஸப்தமியன்று ரவிவாரம் இருக்குமானால், ஸூர்ய க்ரஹணத்தைப் போல் சுபத்தை அளிக்கும் மங்களகரமான மஹாபர்வதினமாகும். அன்று அருணோதயத்தில் ஸாம்ப குண்டத்தில் நீராடி ஸாம்பாதித்யனைப் பூஜை செய்தால் கடுமையான ரோகங்களும் சாந்தமடையும், அளவற்ற புண்ணியமும் கிட்டும்.

ஸூர்ய க்ரஹண ஸமயத்தில் புண்ய ஸரஸ்ஸான குரு க்ஷேத்ரத்தில் ஸ்னானம் செய்தால் என்ன புண்ணியம் கிட்டுமோ அதே புண்ணியம் மாகமாதத்து திதியும் ரவிவாரமும் கூடிய தினத்தில் காசியில் ஸூர்ய குண்டத்தில் ஸ்னானம் செய்தாலும் கிட்டும். சித்திரை மாதத்து ரவி வாரத்தன்று ஸாம்பாதித்யனுக்கு வருஷ யாத்திரை நடக்கிறது, அந்த தினத்தில் விதிமுறைப்படி குண்டத்தில் ஸ்னானம் செய்து அசோக புஷ்பங்களினால் ஆதவனைப் பூஜை செய்பவன் ஒரு பொழுதும் சோக ஸாகரத்தில் அழுந்தமாட்டான். அதே ஸமயம் வருஷம் பூராவும் செய்த பாபங்களிலிருந்து விடுபடுவான்.

காசிபுரியில் விஸ்வேஸ்வரத்திலிருந்து மேற்கு திக்கில் மஹாத்மா ஸாம்பனால் செய்யப்பட்ட ஸூர்ய மூர்த்தியிருக்கிறது. அது மிகவும் மங்களத்தைத் தரக்கூடியது. ஏ! அகஸ்தியா! நான் இப்பொழுது ஸாம்பாதித்ய மூர்த்தியைப் பற்றி வர்ணித்தேன். அவரைப் பூஜை செய்வதாலும் பாபரஹிதராகிறான். காசி வாஸப் பலனையும் பூர்ணமாக அடைகிறான்.

ஹே! மஹாமதியே! என்னுல் உனக்குக் கூறப்பட்ட ஸாம்பாதித்ய மாஹாத்ம்யத்தைக் கேட்கும் மனிதனும் கூட யம லோகத்தைக் காணமாட்டான். ஹே! குற்றமில்லாதவனே உனக்கு இப்பொழுது நான் திரௌபதி ஆதித்யனுடைய கதையைக் கூறுகிறேன். அதைக் கேட்ட பக்தர்கள் மனோ வாஞ்சித பலனை அடைகிறார்கள்.

இவ்விதம் ஸ்ரீ ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான ஸாம்பாதித்ய கதா வர்ணனமாகிய நாற்பத்தெட்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 49

சூதமுனிவர் கூறுகிறார்:- ஹே! பராசராத்மஜரே! வ்யாஸராஜரே! முனியே! ஸ்வாமி கார்த்திகேயர் அகஸ்தியரிடம் இக்கதையைக் கூறும் போது, திரௌபதி எங்கிருந்தாள்? வ்யாஸர் கூறுகிறார்:- புராணக் கதைகள் இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் மூன்றையும் பற்றிக் கூறுகிறது. இவ்விஷயங்களெல்லாம் அவைகளுக்குத் தெரியும். அதனால் அவைகளைப் பற்றி ஸந்தேஹப்படுவது நமக்கு உசிதமில்லை.

ஸ்கந்தர் கூறினார்:- முனிவரே கேளும், அந்தக் காலத்தில் உலகின் நன்மையின் நிமித்தம் ஐந்து முகங்களைக் கொண்டு சிவன் தன்னை ஐந்தாகப் பகுத்துக் கொண்டு பஞ்சபாண்டவர்கள் என்ற பெயருடன் பூமியில் அவதரித்தார். ஜகன்மாதா உமையும் த்ருபத ராஜன் யாகம் செய்யும் பொழுது மிகவும் அழகிய உருவத்துடன் த்ருபதனின் யாககுண்டத்திலிருந்து அவதரித்தாள். ருத்திராம்சத்தைக் கொண்ட ஐந்து பாண்டு புத்திரர்களும் துஷ்டர்களை ஸம்ஹாரம் செய்வதற்காக ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில் அவதரித்தார்கள்.

வைகுண்ட பதியான ஹரியும் அவர்களுக்கு உதவி செய்ய க்ருஷ்ணன் என்னும் பெயரில் அவர்களுக்குத் தோழராய் துஷ்டர்களை அழிப்பதற்கும் சிஷ்ட ஜனங்களைப் பரிபாலிப்பதற்கும் பூமியில் தோன்றினார். அந்த ஸமயத்தில் மஹாப்ரதாபிகளான அந்த பூமியில் பாண்டவர்களும் ஆபத்து ஸம்பத்து இந்த இரண்டையும் வேறு வேறாக அவைகளுடைய உதயத்தையும் அஸ்தமனத்தையும் அனுபவித்தார்கள்.

ஒரு சமயம் அந்த மஹாவீரர்கள் ஐவரும் ஸஹோதரர்களின் த்ரோஹத்தினால் ஆபத்துக்குள்ளாகி வனவாஸத்திற்காளானார்கள். அவர்களுடைய ஸஹதர்மிணியும், தர்மசீலையும் ஸௌந்தரியுமான

த்ரௌபதியும் பதிகளுக்கு, நேர்ந்த ஆபத்தினால் துக்கமடைந்து காசியையடைந்து அங்கு ஸூர்யனை ஆராதித்துக் கொண்டிருந்தாள்.

அப்பொழுது திரௌபதியின் ஆராதனையினால் ஸந்தோஷமடைந்த பானுதேவர் எடுக்க எடுக்கக் குறையாததான ஒரு அக்ஷயபாத்திரத்தை அதனுடைய மூடி ஸஹிதம் அவளுக்குக் கொடுத்து, ஸந்தோஷ சித்தராய் ஸ்வாமி பாஸ்கரர் பக்தி பாவத்தினால் தன்னை ஆராதித்திருப்பவளும் எப்பொழுதும் நிர்மல உள்ளம் படைத்தவளுமானத்ரௌபதியிடம் பாக்கியவதியே! இந்த அன்ன பாத்திரத்தில் நீ போஜனம் செய்யாதவரையில் பசியுடன் அதிதிகள் எத்தனை பேர்கள் வந்தாலும் அத்தனைப் பேர்களும் திருப்தியுடன் புஜிக்கும் வண்ணம் இதில் உணவுப் பொருள்கள் நிரப்பிக் கொண்டேயிருக்கும்.

ஏ முனியே! இந்த விதமாக அவள் காசியில் ஸூர்ய நாராயணரை ஆராதித்து வரம் பெற்றாள். பின்னும் ஸூர்ய பகவான் அவளுக்கு மற்றொரு வரம் கொடுத்தருளினார். ஸூர்யன் கூறினார்:- விஸ்வேஸ்வரருடைய தக்ஷிணபாகத்தில் உனக்கு முன்னால் என்னை ஆராதித்தவர்கள் பசியின் தொல்லைக்கு நிச்சயமாக ஆளாக மாட்டார்கள். பதிவ்ரதையே பகவான் விஸ்வநாதர் என்னுடைய தபஸ்ஸினால் ஸந்தோஷமடைந்து, எனக்கு ஒருவரம் கொடுத்தார். அதைக் கூறுகிறேன் கேள்; அவர் கூறினார்; 'ஏ' ஸூர்யா! உன்னை முதலில் பூஜித்துவிட்டுப் பிறகு என்னை தரிசிக்க வருபவர்களை துக்க ரூபமான அந்தகாரத்தை உன்னுடைய கிரணங்களினால் விலக்குவாய்.

அதனால் ஏ! த்ரௌபதி! விச்வேஸ்வரரிடமிருந்து வரம் பெற்று நான் காசிவாசிகளுடைய ஸஞ்சித பாபத்தை நாசம் செய்து கொண்டிருக்கிறேன். இங்கு வரும் பக்த ஜனங்கள் உனக்கு வரம் கொடுப்பதற்காக உயர்த்திய கையுடன் இருக்கும் என்னை சிரத்தையுடன் ஆராதித்தால் அவர்களுடைய மனோரதங்களைப் பூர்ணமாக்குவேன்.

ஒரு புருஷனோ, பெண்மணியோ பக்தியுடன் கூட விச்வேஸ்வரருக்குத் தெற்குப் பாகத்தில் தண்டபாணிக்கு ஸமீபமாக இருக்கும் எனக்கு முன்னால் பரமபதிவ்ரதையான உன்னைப் பூஜித்தால் அவர்களுக்குத் தனது அன்புக்குரியவர்களிடமிருந்து பிரிவின் பயம் ஏற்படாது. ஹே! நிஷ்பாபே, தர்மப்ரியே, த்ரௌபதி! காசியில் உன்னைத் தரிசினம் செய்வதினால் வ்யாதியினாலோ, பசியினாலோ, தாஹத்தினாலோ ஒருவன் எப்பொழுதும் கஷ்டப்படமாட்டான்.

ஸாது ஜனங்களுக்கும் ஸர்வ அபீஷ்டங்களையும் தரும் ஸூர்ய தேவர் த்ரௌபதிக்கு இந்த விதமாகக வரதானம் செய்துவிட்டு, தான் மஹாதேவரை ஆராதிக்கத் தொடங்கினார். த்ரௌபதியும் தன் கணவர்களிடம் திரும்பிச் சென்றாள். திரௌபதியினால் பூஜிக்கப்பட்ட ஆதித்ய பகவானின் கதையை ஒருவன் பக்தி பூர்வகமாகக் கேட்டால் அவனுடைய பாபங்கள் நஷ்டமடையும்.

ஸ்கந்தர் கூறினார்:- ஏ! கும்பமுனியே, இந்த த்ருபதாதித்யருடைய மாஹாத்ம்யத்தை நான் உமக்குச் சுருக்கமாகக் கூறினேன். இப்பொழுது மயூகாதித்யருடைய கதையைக் கூறுகிறேன் கேள்:- முன் காலத்தில் மூன்று உலகங்களிலும் க்யாதி பெற்ற பஞ்சநத தீர்த்ததில் பகவான் ஸஹஸ்ரகிரணர் கபஸ்தீஸ்வரர் என்னும் மஹா சிவலிங்கத்தையும் பக்த ஜனங்களுக்கு எப்பொழுதும் மங்களத்தையே செய்யும் மங்கள கௌரியையும் ப்ரதிஷ்டை செய்து தேவ வருஷத்திற்கு ஒரு லக்ஷம் வருஷம் வரைக்கும் பார்வதியுடன் கூட சந்திரசேகரான சிவபிரானை ஆராதனை செய்துகொண்டு கடுந்தபஸ் செய்தார்.

சூரிய பகவான் தன்னுடைய தேஹ காந்தியினாலேயே மூன்று உலகங்களையும் தபிக்கச் செய்வதில் ஸமர்த்தர். மேலும் தபஅக்னியினால் இன்னும் அதிகமாகவே தஹிக்க ஆரம்பித்தார். அந்த ஸமயத்தில் மூன்று உலகங்களையும் தஹிப்பதில் ஸமர்த்தரான

ஸூரியனுடைய தபாக்கியினுல் ஸ்வர்க்கமும், ம்ருத்யு லோகத்தின் ஸமஸ்த மத்யபாகமும், நிரம்பி வழிந்தது.

எப்பொழுதும் விமானத்திலேறி யாத்திரை செய்ய விருப்பமுள்ள தேவர்களும் பகவான் ஸூர்யனுடைய கிரண வெப்பத்தைத் தாங்காமல் நெருப்பில் விழுந்துவிட்டல் பூச்சியைப் போல் மடிந்து விழுந்து விடுவோமோ என்று பயத்தினுல் ஆகாய மார்க்கமாகப் போக்குவரத்தை நிறுத்தி விட்டார்கள்.

ஸூர்ய நாராயணருடைய கீழே, மேலே அக்கம்பக்கத்திலெங்கும் அவருடைய தஹிக்கிற கிரணங்கள், மலர்ந்த கதம்ப புஷ்பத்தைப் போலக் காணப்பட்டன. நேருக்கு நேராக ஸூர்ய தரிசனமே கிடைக்கவில்லே. அச்சமயம் தபோமயமான மஹாதேஜஸ்வி ஸூர்யனுடைய தபஸ்ஸின் ஜ்வாலேயினுல் பயந்து மூவுலகமும் நடுங்க ஆரம்பித்தது.

ஜகத்துக்கு ஆத்மா ஸூர்யன் என்று வேதங்களே கூறுகின்றன. அந்த ஆத்மாவே நம்மை எரிப்பதற்குத் தயாராக இருந்தால் இந்த உலகத்தில் நம்மை யார் ரக்ஷிப்பார்கள்? இவரே ஜகத்துக்கு நேத்ரம், இவரே ஜகத்துக்கு ஆத்மா. ஏனென்ருல் ப்ரதி தினமும் அதிகாலேயில் தான் எழுந்து ஏறக்குறைய மரண நிலேயில் இருக்கும் ஜகத்தையும் எழுப்பி விடுகிருரன்ருே!

இவரே ப்ரதி தினமும் உதயமானவுடன் தன்னுடைய கிரண ரூபமான கரங்களினுல் அந்தகார மயமாகிற பாழுங் கிணற்றில் வீழ்ந்து கிடக்கும் எல்லாப் பிராணிகளேயும் வெளியில் எடுக்கிருர். ஸூர்யன் உதயமானவுடன் நாமும் எழுகிருேம். அவர் அஸ்தமித்ததும் நாமும் மயங்குகிருேம். அதனுல் நம்முடைய உதயத்திற்கும் அஸ்தமனத்திற்கும் காரணம் ஸூர்யனே.

இந்த விதமாக வ்யாகுலமடைந்த உலகத்தைப் பார்த்துவிட்டு ஜகத்பாலகரான பகவான் விச்வேஸ்வரர்

ஸூர்யனுக்கு வரப்ரதானம் செய்யும் பொருட்டு அங்கு சென்றார். கிரணங்களை மாலையாகவுடைய ஸூர்யன் அங்கு ஸமாதி நிலையில் தன்னை மறந்து மிகவும் நிஸ்சலமாய் ஸ்திரமாய் இருப்பதைப் பார்த்துவிட்டு, பக்தவத்ஸலனும் ஸ்ரீ கண்டனுமான சம்புதேவர் அந்த தபஸ்ஸை அதிப்ரஸன்ன சித்தத்துடன் பார்த்து ஆச்சர்யமடைந்து கூறினார்:- ஹே! தேஜோராசியே, சூரியா, இப்பொழுது தபஸ்போதும். வரதானத்திற்கு வேண்டிக்கொள் என்றார்.

த்யான ஸமாதியினால் இந்திரியங்களுடைய வ்யாபாரம் தடைபட்டதினால் வெளி வ்யவஹார ஞானம் சூன்யமான ஸூர்யன் சிவபிரானுடைய இந்த வார்த்தைகளை இரண்டு மூன்று தரம் கேட்டும் கூட பதில் கூறவில்லை. அப்பொழுது மஹாதேவர் அவர் மரக்கட்டை போலிருக்கிறாரென்பதைக்கண்டு, கடின தபஸ்ஸினால் உண்டான ஸந்தாபத்தைக் குளிர்ச்சியடையச் செய்யும் பொருட்டு அமுதம் பெருகும் தனது கையினால் தடவிக் கொடுத்தார்.

இதற்குப் பிறகு உலகிற்குக் கண்ணாய் விளங்கும் ஸூர்யன் அதிகாலையில் தனது கிரணங்கள் பட்டு மலரும் தாமரையைப் போலத் தனது கண்களை விரித்தார். உலர்ந்து வாடிக் கிடக்கும் பயிர்கள் மேகத்தின் துளிகளால் மலருவதைப் போல பகவானுடைய ஸ்பர்ச மாத்திரத்தினால் தபன தேவனுடைய தபஸ்ஸினால் உண்டான ஸந்தாபம் முற்றும் விலகப் பெற்றது.

அப்பொழுது சூரியன் தனக்கு முன்னால் பிரத்யக்ஷமாய் நிற்கும் முக்கண்தேவரைத் தன்னுடைய கண்களுக்கு அதிபதியாக்கி தண்டத்தைப்போல் விழுந்து வணங்கி ஸ்துதி செய்யத் தொடங்கினார். ஹேதேவதேவ! ஜகதீஸ்வரா! விபோ! பர்க! பீமா! பவா! சந்திரசேகரா! பூதநாதா! தாங்களே ஸம்ஸார பயத்தைப் போக்கடிப்பவர். பக்தஜனங்களுக்கு இஷ்டபலனைத் தருபவர். நான் தங்களை வணங்குகிறேன்.

*ஹே! சந்திரசூடா! ம்ருடா! தூர்ஜடி! ஹரா! த்ரிலோசனு! தாங்களே தக்ஷப் ப்ரஜாபதியினுடைய யக்ஞத்தை த்வம்ஸம் செய்தவர். ஹே சாந்தா! ஹே சாஸ்தவதா! சிவபதே! சிவா! தாங்களே வணங்கினவர்களுக்கு அபீஷ்டபலனே அளிப்பவர். தங்களுக்கு எனது வணக்கம்.*

*ஹே நீலலோஹிதா! யாவராலும் விரும்பப்படும் பொருள்களை யளிப்பவனே! முக்கண்ணனே! விரூபாக்ஷா, வ்யோமகேசா! தாங்கள் எல்லாப் ப்ராணிகளுடைய ஸம்ஸார பந்தனத்தை நாசம் செய்பவர். வணங்கியவர்களுக்கு வாஞ்சித பலனையளிப்பவர். தங்களைத் தண்டத்தைப்போல் விழுந்து வணங்குகிறேன். ஹே வாமதேவா, சிதிகண்டா, சூலியே, சசாங்கசேகரா, பணீந்த்ர! பூஷணு, காமாந்தகா, பசுபதே, மஹேச்வரா, தாங்களே பக்தர்களுக்கு அபீஷ்டபலனே அளிப்பவர். தங்களுக்கு வந்தனம்.*

*ஹே த்ர்யம்பகா! த்ரிபுராஸுரமர்த்தநா, பரமேஸ்வரா, பரித்ராண பராயண, த்ரிநேத்ரா, த்ரயீமயா, தாங்களே காலகூட மஹாவிஷத்தை யருந்தியவர், அந்தகனுக்கு அந்தகன். ஸேவித்தவர்களுக்கு மனேரதங்களை ஸாதிப்பவர். தங்களுக்கு வந்தனம். ஹே மாயாவிநிர்முக்தா, ஸர்வா, தாங்கள் எங்கும் நிறைந்தவர். ஸ்வர்க மார்க்கத்துக்கு பந்து. ஸுகத்தையளிப்பவர். மோக்ஷத்தையருளுபவர். கபர்தியே, தாங்களே அந்தகாசுரனைக் கொன்றவர். தனக்குற்றவர்களின் விருப்பத்தை நிறைவேற்றுபவர். தங்களுக்கு வந்தனம்.*

*ஹே சங்கரா, ஓங்கார, கிரிஜாபதே, ஸ்வாமீ, விஸ்வநாதா, ப்ரம்மாவும், விஷ்ணுவும் எப்பொழுதும் தங்களைத் துதித்துக் கொண்டேயிருக்கிறார்கள். ஹே வேதவேத்யா, தாங்கள் எல்லாருடைய உள்ளங்களையும் அறிவீர்கள். வணங்கியவர்களுக்கு ஸுகத்தை யருளுபவரே, வணக்கம். ஹே! விஸ்வரூபா, பராத்பரா,*

*தாங்களே உருவமில்லாத ப்ரம்மம், மாயாரஹிதர். அம்ருதத்தையளிப்பவர். மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதவர். அதனுல் தூரத்திலும் இருப்பவர். ஆனுல் பக்தர்களுடைய மனம் விரும்பும் ஸித்திகளை அளிக்கவல்லவர். அடிக்கடி தங்களை வணங்குகிறேன்.*

*சூரியநாராயணர் ப்ரதக்ஷிண பூர்வமாக மஹாதேவரின் ஸ்துதியை கானம் செய்து ஸந்தோஷ சித்தராக சிவனுடைய அர்த்தாங்கினியான பார்வதி தேவியையும் ஸ்துதிக்கத் தொடங்கினுர். ஏ! தேவீ! உன்னை வணங்குபவர்களில்வல்லவரான ஜனங்கள் தங்களுடைய நெற்றிக்கட்டில் உன்னுடையப் பாதகமலங்களின் தூளியைத் தரித்துக் கொள்கிருர்கள். அவர்களுடைய நெற்றியில் ஜன்ம ஜன்மத்திரங்களாக உன்னுடைய அழகான சந்திரகலை விளங்குகிறது.*

*ஹே! மங்களே, நீ ஸமஸ்த மங்களங்களுக்கு இருப்பிடம். ஸகல பாபரூபமான தூசுகளைச் சாம்பலாக்குவதற்கு அக்னி ஜ்வாலை. ஏ மங்களே, தேவீ, நீயே தானவர்களின் கர்வத்தை அடியுடன் நாசம் செய்பவள். அகில ஜகத்தையும் ரக்ஷிப்பவள் நீதான் அம்மா, ஏ விஸ்வேஸ்வரீ! நீயே உலக மாந்தர்களை ஸ்ருஷ்டித்துக் காத்து பிரளய காலத்தில் ஸம்ஹரிக்கவும் செய்கிருய்.*

*உன்னுடைய நாம கீர்த்தனமான புண்ணியநதி (பாபரூபமாகக் கரையில் இருக்கும் வ்ருக்ஷங்களை வீழ்த்துகிருய்) ஏ பவானீ! அம்பா! இந்த உலகத்தில் உன்னைச் சரண் அடைந்தால் மாத்திரமே ஜன்மம் எடுத்தலாகிய துக்கபாரம் நீங்குகிறது. இந்த மூவுலகங்களிலும் எவர்மேல் உன்னுடைய கருணை மயமான சுப த்ருஷ்டி விழுகிறதோ, அவர்கள் தன்யர்கள். அவர்களே மதிக்கத் தகுந்தவர்கள். சுத்த புத்தியுடைய ஸாது ஜனங்கள் பக்தர்களின் மோக்ஷலக்ஷ்மியும், காசி வாஸினியும், ஸகலஜகத்ப்ரகாசினியும் ஆன உன்னை எப்பொழுதும் ஸ்மரிக்கிருர்களோ அந்த முக்தி*

ரக்ஷகர்களான அதிகாரிகளை பகவான் மஹாதேவர் ஒருபொழுதும் மறக்கமாட்டார்.

அம்மா தாயே! யாருடைய ஹ்ருதயத்தில் உன்னுடைய நிர்மலமான சரணங்கள் தங்கியிருக்கின்றனவோ, இவ்வுலக முழுவதும் அவன் கையில் தான் இருக்கிறது. உன்னுடைய நாமத்தைத் தினமும் ஜபித்துக் கொண்டிருப்பவனின் க்ருஹத்தில் அணிமாதி அஷ்டஸித்திகளும் எப்பொழுதுமே தங்குகின்றன.

ஓ! தேவீ! நீ இரு பிறப்பாளர்களுக்கும் காமதேனு, ப்ரணவ ஸ்வரூபிணீ, வேதமாதா, காயத்ரீ. உலகில் எல்லாக் கர்மங்களும் ஸித்தி பெருவதற்காக நீயே - பூர், புவஸ், ஸுவஸ் என்று மூன்று வ்யாஹ்ருதியாக இருக்கிறுய், தேவதைகளின் ஸந்தோஷத்திற்காக மாதாவாகவும், பித்ருக்களின் த்ருப்த்திக்காக ஸ்வதாவாகவும் இருக்கிறுய்.

ஏ நிர்மல ரூபே! நீயே மஹா தேவரின் கௌரீ! ப்ரம்மாவின் ஸாவித்ரி; விஷ்ணுவின் லக்ஷ்மீ. காசியில் முக்தி ஸ்வரூபிணியாகவும் இருக்கிறுய். அதனுல் ஏ! மாதா! மங்கள கௌரீ! நீ தான் எங்களை ரக்ஷிக்க வல்லவள். பானுபகவான் மங்களாஷ்டகம் என்னும் மஹா ஸ்தோத்ரத்தின் மூலமாக, சிவபிரானுடைய அர்த்தாங்க ஸ்வரூபிணியான மங்கள கௌரியை ஸ்துதித்து, சிவபார்வதியை அடிக்கடி நமஸ்கரித்து அவர்களுக்கு முன்னுல் மௌனமாக நின்ருர்.

தேவதேவன் கூறினுர்:- ஏ மஹாமதியே! எழுவாய், எழுவாய். நான் ஸந்தோஷமாக இருக்கிறேன். உனக்கு நன்மையுண்டாகட்டும். நீ என் கண்ணுயிருந்து இந்த சராசரங்கள் நிறைந்த உலகைப் பார்த்துக் கொண்டிரு. ஏ ஸூர்யா, நீ என்னுடைய சரீரமேதான். அதனுல் நீயும் ஸர்வக்ஞனே. ஸர்வ வ்யாபகனே. நீ எல்லா தேஜஸ்ஸுகளுக்கும் தேஜஸ். ஜனங்களுடைய எல்லாக் கர்மங்களையும் அறிந்தவன்.

நீ எல்லா பக்தர்களுடைய ஸமஸ்த துக்கங்களையும் விலக்கிக் கொண்டிரு. நீ என்னுடைய இந்த அறுபத்திநான்கு நாமங்கள் கூடிய எட்டு ஸ்லோகங்களையும் துதித்தாயல்லவா? இதைப் படித்தவர்கள் என்னுடைய பக்தியைப் பெறுவார்கள். உன்னால் துதிக்கப்பட்ட மங்கள கௌரியின் எட்டு ஸ்லோகங்களும் மங்களாஷ்டகம் என்று பெயர் பெறும். இந்த மங்கள கௌரியின் அஷ்டகத்தைத் துதித்தால் மங்களமே தங்கும். இது சதுஷ்ஷஷ்டி அஷ்டகம் என்றும் கூறப்படும்.

இது ஸ்தோத்ரங்களில் மேலானது. புண்ணியத்தை தாதாவைப் போல் கொடுக்கக் கூடியது. ஸர்வபாதகத்தையும் நாசம் செய்யவல்லது. உத்தமர் ஒருவன் தூரதேசத்தில் இருந்த போதிலும் சுத்த அந்த:கரணத்தோடு இதைத் தினமும் பாராயணம் செய்தானானால் காசியை அடைவது மிகவும் கஷ்டமானாலும் அடைந்தே தீருவான். இந்த ஸ்தோத்திரத்தைப் படித்தாரானால் அன்றன்று செய்த பாபங்களும் கழுவப்படும். இது ஸத்யம். இதில் கொஞ்சம்கூட ஸந்தேகமில்லை. அந்த தேஹியின் தேகத்தில் கொஞ்சம்கூட பாபம் மீதியிருக்காது.

ஒருவன் த்ரிகாலங்களிலும் இந்த இரண்டு ஸ்தோத்திரங்களையும் படிப்பானானால் சஞ்சல லக்ஷ்மி என்று கூறப்படும் அந்நிய சில்லறை ஸ்த்தோத்திரங்களைப் படிப்பதினால் என்ன பிரயோஜனம்? இந்த இரண்டு ஸ்தோத்திரங்களும் காசியில் மோக்ஷஸம்பத்தைக் கொடுக்கவல்லது. மோக்ஷத்தை இச்சிக்கும் ஜனங்களுக்கு மற்ற சுலோகங்களெல்லாம் விட்டு விட்டு இந்த இரண்டு ஸ்லோகங்களையும் கருத்தாகப் பாராயணம் செய்வது நல்லது. ஸமஸ்த சராசரங்களும் இந்த இரண்டு ஸ்தோத்ரங்களுக்குள்ளேயே அடங்கியிருக்கிறது. அதனால் இதுவே நமது ப்ரபஞ்சம்.

ஏனென்றால் நமக்கு இந்த ஸ்லோகங்களைப்

பாராயணம் செய்வதினுல் ப்ரபஞ்சம் நம்மைவிட்டு அகலும். இங்கேயே புத்திர பௌத்திரர்கள் ஸஹிதம் ஸுக போகத்தையனுபவித்துவிட்டுக் கடைசியில் நிர்வாண பதத்தைக் கொடுக்க வல்லது. ஏ! ஸப்தாஸ்வா, ஏ! க்ரஹராஜா, ஏ! திவாகரா! இன்னும் கூறுகிறேன் கேளும்.

ஒருவன் உம்மால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட கபஸ்தீஸ்வரர் என்னும் பெயருள்ள லிங்கத்தை பக்தி பாவத்துடன் சேவித்தால் அவன் ஸமஸ்தஸித்திகளையும் அடைவான். ஏ! பாஸ்கரா, நீ சம்பகம், கமலம் முதலிய புஷ்பங்களுக்கு ஸமானமான உன்னுடைய கிரணமாலையினுல் மிகுந்த பாவத்துடன் இந்த சிவலிங்கத்தைப் பூஜித்திருக்கிருய். அதனுல் இந்த லிங்கத்திற்கு கபஸ்தீஸ்வரர் என்ற பெயர் இருக்கட்டும். ஒருவன் பஞ்சநதத் தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து இந்த கபஸ்தீஸ்வர லிங்கத்தைப் பூஜித்தால் அவனுடைய பாபம் நீங்குவதுடனல்லாமல் மாதாவின் கர்ப்பத்தால் பிறக்கும் யாதனையை மீண்டும் அனுபவிக்க மாட்டான்.

ஒரு பெண்மணியோ, ஒரு புருஷனே சித்திரை மாதத்து சுக்லத்ரிதீயை யன்று உபவாஸமிருந்து, வஸ்திராபரணுதிகளினுல் அலங்கரித்து, இந்த மங்கள கௌரியைப் பூஜித்து, இரவில் ந்ருத்யம் கீதம் கதைகள் இவைகளின் உதவி கொண்டு கண் விழித்து காலையில் பன்னிரண்டு குமாரிகளுக்கு வஸ்திரம் முதலியவைகள் கொடுத்து, பூஜித்து, அறுசுவையுண்டியுடன் தக்ஷிணையும் கொடுத்து மற்றவர்களுக்கும் யதாசக்தி தக்ஷிணையும் கொடுக்க வேண்டும்.

பிறகு ஜாதவேதஸே என்னும் வேதமந்திரத்தைக் கூறி எள்ளும் நெய்யும் நூற்றெட்டு ஆஹுதிகள் கொடுத்து காலையில் ஹோமம் செய்ய வேண்டும்.

பிறகு ஒரு க்ருஹஸ்தருக்கு ஒரு ஜோடி பசுக்களை தானம் செய்து ச்ரத்தையுடன் அந்த ப்ராம்மணன் தம்பதிகளை பூஷணுதிகளினுல் அலங்கரித்து, மிகவும் உயர்ந்த

போஜனமளித்து, மங்கள கௌரியும் பரமேஸ்வரரும் ஸந்தோஷமடையட்டுமென்று அந்த மந்திரத்தை உச்சரித்துக் காலையிலேயே பாரணை செய்ய வேண்டும். இப்படிச் செய்து வந்தால் அமங்களமும் தரித்திரமும் அவர்களையண்டாது.

அவர்களுக்கு ஒரு பொழுதும் ஸந்தான வியோகம் ஏற்படாது. போக ஸுகங்களும் நழுவாது. புருஷனுக்கு ஸ்திரீவியோகம் ஏற்படாது. அவனுடைய பாபக் கூட்டங்கள் பறந்து விடுகின்றன. புண்ணியங்கள் ராசி ராசியாக அவனைச் சேருகின்றன. இந்த மங்களகௌரி அனுஷ்டானத்தினால் மலடியும் குழந்தை பெறுவாள்.

இந்த வ்ரதம் அனுஷ்டிப்பதால் அவலக்ஷணம் மாறிவிடும். கன்யைகளும், குணவானும், ரூபவானும் ஆன பதியை அடைவார்கள். ஒரு இளைஞனும் இந்த வ்ரத்தை அனுஷ்டித்தால் உத்தம ஸ்திரீ ரத்னத்தை யடைவான். எத்தனையோ அபீஷ்டத்தைக் கொடுக்க வல்லதும், தனஸம்பத்தைக் கொடுக்க வல்லதும் இருக்கின்றன.

ஆனால் அவைகள் ஒன்றும் மங்கள கௌரி வ்ரதத்திற்கு ஸமமாகாது. காசிவாஸிகள் எல்லா விக்னங்களும் சாந்தியாகும் பொருட்டு, சித்திரை மாதத்து சுக்லபக்ஷ த்ருதியை யன்று மங்கள கௌரி வ்ரதத்தை வார்ஷிக த்ருதியை ஸதா செய்ய வேண்டும். ஏ! தினமணியே மற்றொரு விஷயத்தைக் கூறுகிறேன்.

இங்கு பூஜை செய்யும் ஸமயத்தில் ஆகாசமண்டலத்தில் உன்னுடைய கிரணங்களே தெரிகின்றன. சரீரம் தெரிவதில்லை. அதனால் ஏ! திதி புத்திரா! உனது பெயர் மயூகாதித்யன் என்று இருக்கட்டும். உன்னைப் பூஜை செய்யும் மனிதருக்கு ஒருவித வியாதியும் அணுகாது. ரவி வாரத்தில் உன்னைத் தரிசிப்பவருக்கு தரித்ரம் அணுகாது.

மஹாதேவர் இந்த விதமாக மயூகாதித்யனுக்கு அநேக வரங்கள் அளித்து விட்டு அந்தர்தானமாகி விட்டார். சூரியன் அங்கேயே வஸிக்கத் தொடங்கினுர். த்ரௌபதி ஆதித்யனுடன் மயூகாதித்யனுடைய இந்த பவித்ரமான கதையைக் கேட்கும் நரர்கள் ஒரு பொழுதும் நரகத்தையடைய மாட்டார்கள்.

இவ்விதம் ஸ்ரீ ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான திரௌபதியாதித்ய, மயூகாதித்ய வர்ணனமான நாற்பத்து ஒன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 50

*கார்த்திகேயர் கூறுவார்:- ஏ! கும்ப முனியே! காசியில் இன்னும் எத்தனை எத்தனை ஆதித்யர்கள் இருக்கிறார்களோ, அவர்கள் எல்லோரும் பாப நாசனம் செய்ய வல்லவர்கள். ஆதலால் நான் உன்னுடைய ஸந்தோஷத்திற்காக, அவைகளை வர்ணித்தேன். த்ரிலோசன மஹாதேவருடைய வடக்கு பாகத்தில் ஸமஸ்த வியாதிகளையும் நாசம் செய்கிற பகவான் ககோல்காதித்ய என்னும் பெயருடைய சூரியன் எழுந்தருளியிருக்கிறார்.*

*அவருக்கு ககோல்காதித்யர் என்று ஏன் பெயர் வந்தது என்னும் காரணத்தைக் கூறுகிறேன். பூர்வ காலத்தில் தக்ஷப்ரஜாபதிக்கு கத்ரூ, வினதை என்று இரண்டு பெண்கள் இருந்தார்கள். பிற்பாடு அவர்களிருவருமே மரீசி முனிவரின் புத்திரரான கஸ்யப முனிக்கு பத்னிகளானார்கள். ஒரு தடவை அவர்களிருவருக்குள் கேலியும் பரிஹாஸமுமாகக் கதைகளையும் உவமைகளையும் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.*

*கத்ரு கூறினாள்:- ஏ வினதே, ஆகாச மண்டலத்தில் நீ எங்கும் ஸஞ்சரிக்கின்றாய். அதனால் அங்குள்ள ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்கிறேன். உனக்குத் தெரியுமானால் கூறு- இந்த சூரியன் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கிறாரல்லவா? அவருடைய ரதத்தில் உச்சைஸ்ரவா என்று கூறப்படும் ஒரு குதிரையும் பூட்டப்பட்டிருக்கிறது. அந்தக் குதிரை பல நிறங்களுடையதா, அல்லது வெள்ளையா, அதை எனக்கு சீக்கிரம் சொல்லுவாய்.*

*உனது ஆர்வத்துக்குத் தகுந்த பந்தயமும் வைத்துக் கொள்வாய். ஏ குற்றமற்றவளே! நாம் விளையாட்டில்லாமல் ஒரு தினமும் கழிப்பதில்லையல்லவா? வினதா பதில் கூறினாள்:- ஸஹோதரியே! இது விஷயத்தில் போட்டி*

என்ன வேண்டியிருக்கிறது? பந்தயம் என்ன வேண்டியிருக்கிறது? நிஜமாகத்தான் கூறுகிறேன். உன்னே ஜயிப்பதால் எனக்கு என்ன ஸந்தோஷம் இருக்கிறது? இல்லே, என்னே ஜெயித்துதான் நீ அப்படி என்ன ஸுகத்தையடையப் போகிருய்; இப்படியே பரஸ்பரம் பிரிய பாவத்துடன் பழகுவதற்கு விருப்பமுள்ளவர்களுக்கு பந்தயம் வைப்பது தகாது. ஏனென்ருல் ஒருவர் ஜெயிப்பது நிச்சயம். அதனுல் மற்றவர்களுக்குக் கோபம் வருவது நிச்சயம்.

இதற்கு கத்ரு கூறுவாள்:- அடி ஸஹோதரீ! இது சும்மா ஒரு விளேயாட்டுக்குத்தானே. இதில் கோபம் வருவதற்கு என்ன இருக்கிறது? இது விளேயாட்டில் நடக்கும் சாதாரண விஷயம். இதில் ஒரு பந்தயம் வைத்தால் என்ன கெட்டுவிடப் போகிறது?

வினதை கூறிஞள்:- ஏ காற்றைப் புஜிப்பவளே! உனக்கு விருப்பமான விஷயத்தைப் பந்தயம் வையேன் என்ருள். இதைக் கேட்ட கடின ஹிருதயம் படைத்த கத்ரு வினதையிடம் கூறிஞள். இப்பந்தயத்தில் யார் தோற்பார்களோ, அவர்கள் ஜெயிப்பவர்களுக்கு அடிமையாக வேண்டும்; நம்முடைய இந்தப் பந்தயத்திற்கு இங்கு கூடியிருக்கும் ஸகிகள் யாவரும் சாக்ஷி.

இந்த விதமாக ஸர்ப்பங்களுக்குத் தாயான கத்ருவும், பக்ஷிகளுக்குத் தாயான வினதையும் பந்தயம் கூறி முடித்தவுடன் கத்ரு அக்குதிரையின் வால் பல வர்ணங்கள் உள்ளது என்றும், வினதை இல்லே அது வெண்மையென்றும் கூறிஞர்கள். இதன் பிறகு பரீக்ஷை செய்ய வேண்டிய ஸமயத்தை நிச்சயித்துக் கொண்டு, விளேயாட்டை நிறுத்திவிட்டு தங்கள், தங்கள் வீட்டிற்குச் சென்ருர்கள். வினதை அங்கிருந்து சென்ற பிறகு கத்ரு தன்னுடைய புதல்வர்களேக் கூப்பிட்டுக், கூறிஞள்; பிள்ளேகளே நான் கூறுவதை நீங்கள் கேட்டுக் கொள்ளுங்கள்.

ஒரு சமயம் தேவர்களும், அசுரர்களும் சேர்ந்து மந்த்ராசலத்தை மத்தாக்கிக் கொண்டு பாற்கடலைக் கடைந்தார்கள். அப்பொழுது பாற்கடலிலிருந்து உச்சைஸ்ரவா என்ற குதிரை தோன்றியது. புதல்வர்களே, காரணத்தையனுஸரித்தே காரியம் நடக்கிறது என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் கூறுகிறேன். நீங்கள் அந்த பாற்கடலினின்றும் கிளம்பிய பாலைப் போன்ற வெண்மையான அந்தக் குதிரையைப் பலவர்ணமுள்ளதாக ஆக்கவேண்டும்.

நீங்கள் எல்லோரும் அக்குதிரையினுடைய வாலில் சுற்றிக் கொண்டால் அவ்வாலிலுள்ள மயிர்களைக் கறுப்பாக ஆக்கமுடியும். விஷம் நிறைந்த உங்களுடைய சீற்றத்தினுல் அதனுடைய உடல் முழுவதும் சாம்பல் வர்ணமாக ஆக்கவேண்டும். மாதாவினுடைய இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டுக் குரூபியான கத்ருவின் பிள்ளைகள் தங்களுக்குள் கலந்து யோசித்துத் தாயிடம் கூறினுர்கள்.

தாயே! நீங்கள் எங்களைக் கூப்பிட்டவுடன் அம்மா நமக்குத் தின்பண்டம் தரப்போகிருளென்று எண்ணி ஸந்தோஷத்துடன் விளையாட்டை நிறுத்தி விட்டு வந்தோம். இப்பொழுது தின்பண்டம் இருக்கட்டும், நீங்கள் கூறின இந்த வார்த்தையிருக்கிறதே, அது விஷத்தைவிடக் கசப்பானது. இதற்கு மாற்று மந்திரங்களிலும் இல்லை. மருந்துகளிலும் இல்லை. இதனுல் எங்களுக்கு என்ன வேண்டுமானுலும் நேர்ந்து விட்டுப் போகட்டும். நாங்கள் ஒரு பொழுதும் இந்தக் காரியத்தைச் செய்யமாட்டோம். அச்சமயம் குடிலமான நடத்தையுடைய விஷத்தை வாயிலுடைய அவர்கள் தாய்க்கு இவ்வாறு பதில் கூறினுர்கள்.

ஸ்கந்தர் கூறினுர்:- ஏ முனியே! இந்த ஸந்தர்ப்பங்களைப் போலவே கொடூர நடத்தையுடைய மற்றவர்களைத் தாங்கும் காதில்லாத க்ரூர ஹ்ருதயம்

உடையவர்களே தன்னுடைய மாதாவை வெட்கிக்கச் செய்வார்கள். அகங்காரிகள் மாதாபிதாக்களின் வார்த்தைகளை அவமரியாதை செய்வார்கள். அவர்கள் மரணத்தை அடைவார்கள்.

பிறகு அவர்கள் எல்லோரும் ஒரே வார்த்தையாக நாங்கள் போகமுடியாது என்று கூறவே கத்ரூ மிகவும் கோபமடைந்து குற்றமுள்ள அவர்களை சபித்தாள், நீங்கள் எனது வார்த்தைகளை மீறி அவமதித்தீர்கள். நீங்கள் அதனால் கருடனுக்கு இரையாவீர்கள். உங்கள் மனைவிகள் குழந்தைகள் பிறந்ததும் அதை உண்ண அநேக ஸர்ப்பங்கள் பாதாளத்துக்கு ஓடிப்போயின. மீதி இருக்கும் ஒன்றிரண்டு ஸர்ப்பங்கள் அவள் சாபத்திலிருந்து தப்பும்பொருட்டு அவள் கூறுவதைப்போல் செய்யத்தயாராயின.

அவைகள் எல்லாம் புத்திசாலித்தனமாக உச்சை ச்ரவஸ்ஸினுடைய வாலில் சென்று சுற்றிக்கொண்டன. அந்த வாலை மிகவும் கறுப்பாக இருப்பதுபோல் செய்துவிட்டன. தங்களது விஷம் கலந்த பெருமூச்சினால் அந்த குதிரையின் உடலைச் சியாமள வர்ணமாக்க முயற்சித்தன. அன்னையின் ஆக்ஞையைப் பின்பற்றுவதால் அவைகளை சூரியரஸ்மியும் அடக்கின. பாதிக்கவில்லை. அதே சமயம் கத்ருவும், வினதையின் தோளில் ஏறிக்கொண்டு சூர்யமண்டலத்தைப் பார்க்கத் தொடங்கினாள்.

மெல்ல மெல்ல ஸௌர்ய கிரணங்கள் தாக்க ஆரம்பிக்கவும் வ்யாகுலமடைந்தவளாக ‘விநதே என்னைக் கீழே கொண்டுபோ’ என்றாள். தபன தேவனுடைய உஷ்ணத்தால் தனது சரீரம் பொசுங்குகிறது. நான் இயற்கையாக எண்ணினேன், நீதான் என்னைவிடப் பாசம் நிறைந்தவளென்று, மகத்தான அபேக்ஷயுடையவள் நீ என்று கண்டேன். உனது சரீரம் நெருப்புப்பொறி மாதிரி; சூரியனும் நெருப்பே. அதனால் ஆகாசத்தில் நெருப்பினால்

உனக்குச்சுடுகிறது. அதனுல் ஆகாசத்தில் தாபம் ஏற்படாதே என்று பார்த்தேன்.

ஆகாசமாகிய தடாகத்தில் ஸூர்யன் ஹம்ஸரூபம், நீ, உனது நடையில் அன்னத்தைப் பழிப்பவர்; அதாவது ஹம்ஸகாமினி, அதனுல் சூர்யப்ரகாசங்களின் ப்ரதாபம் உன்னிடம் பலிக்காது என்று நினைத்தேன். இத்தனை கூறியும் விநதா கத்ருவைச் சுமந்து கொண்டு பின்னும் மேலே மேலே சென்ருள், அப்பொழுது கத்ரூ கூறினுள்;

அடி ஸஹோதரி! என்னுல் இனிமேல் தாங்க முடியாது, திரும்பு, எனது உயிரைக் காப்பாற்று. அடி விநதே! உனது கால்களில் விழுகிறேனடி, உனது எச்சிலைச் சாப்பிடுகிறேனடி, ஏன் இப்படி என்னை எரிக்கிருய்? ஜன்மம் பூராவும் நான் உனது அடிமையாக இருக்கிறேனடி, உனது காலை அலம்பிய நீரைக் குடிக்கிறேன், இப்படி தீனக் குரலில் கூறத் தொடங்கினுள், ஆகாசத்திலுள்ள தீ நாக்குகள் என்மேல் விழுகின்றன.

வளையில் பதுங்கும் கத்ரூ, பயத்தினுல் நடுநடுங்கி, தீ நாக்கு, தீ நாக்கு, என்று கூறிக்கொண்டு, விநதையின் சிறகிற்குப் பின்னுல் பதுங்கிக் கொண்டு மூர்ச்சையாளுள். அதனுல் பகவான் விநதாவுடைய ஸ்துதியினுல் சந்தோஷமடைந்து தனது, சூட்டைச் சிறிது நேரத்திற்குத் தணித்துக் கொண்டு சென்ருர்.

அதே ஸமயம் விநதா, கத்ரு இருவருமே அந்தக் கதிரவனின் ரதத்தில் ஒரு குதிரையின் நிறம் கலவையாக இருக்கக் கண்டார்கள். அந்த ஸமயம் விநதா, ஸத்யமே (எண்ணுபவள்) பேசுபவளான அவள் சூர்ய தாபத்தினுல் தஹிக்கும் த்ருஷ்டியையுடைய, க்ரூர இதயம் படைத்த கத்ருவிடம் கூறினுள்-

கத்ரூ! நீ ஜயித்தாயடி, அந்த சூர்யனுடைய குதிரை உச்சைச்ரவஸ் சந்திரனைப்போல் வெண்மையாக இருந்தாலும் பல வர்ணங்களாகக் கருதப்படுகிறதடி, ஏ

புஜங்கினியே, வெற்றியிலும் தோல்வியிலும் அதிர்ஷ்டமே பலியாகிறதடி.

மிகவும் ஆச்சர்யம்! தர்மத்தைச் சூது வெல்வது ஆச்சர்யமல்லவா? தர்மம் ஆன நிஷ்கபடம் தோற்றுப் போகின்றதல்லவா. விநதா விநயத்துடன் இப்படிக் கூறிக்கொண்டு எங்கிருந்து சென்றனளோ திரும்பி வந்து, கத்ருவின் வீட்டில் அடிமை வேலே செய்யத் தொடங்கினுள். ஒரு ஸமயம் கருடன் தன்னுடைய தாயைக் கண்ணீர் நிறைந்த கண்களுடனும் வருத்தம் தோய்ந்த முகத்துடனும் மிகவும் மெலிந்து அடிக்கடி பெருமூச்சு விட்டுக் கொண்டிருப்பதையும், கண்டான்.

அம்மா தினமும் பொழுது விடிந்ததும் எங்கு போகிறுய்? பிறகு மாலேயானதும் வருத்தமான முகத்துடனும், தீனமான ஹ்ருதயத்துடனும் திரும்பி வருகிறுயே, உதவாக்கரைப் பிள்ளேகளுடனும், பதியினுல் வெறுக்கப்பட்ட மனேவிக்கு ஸமானமாகக் கண்களில் நிரம்பிய கண்ணீருடன் பெருமூச்சு விடுகிறுய்.

ஹே! ஜனனி! என்னிடம் சீக்கிரமாகக் கூறுவாய். நீ ஏன் இத்தனே வருத்தமாய் இருக்கிறுய் என்பதை, ஹே தபஸ்வினி! என்னேப் போன்ற காலனேயும் பயமுறுத்தும் புத்திரன் உயிருடன் இருக்கும் பொழுது நீ கண்ணீர் பெருக்குவதற்கு என்ன காரணம்? ஏன் என்றுல் உலகத்தில் ஸத்குணவதிகளான ஸ்திரிகளுக்கு அமங்களம் உண்டாகாது.

ஒரு புத்திரன் உயிருடன் இருக்கும் போது அவனுடைய தாய் துக்கத்தையனுபவிக்கிறுள் என்றுல் அப்பிள்ளே இழிவானவன் என்று அர்த்தம். ஒரு குமாரன் தாயினுடைய மனேரதத்தைப் பூர்த்தி செய்யாவிட்டால் அவள் மலடாய் இருப்பது மிகவும் நல்லது. இந்த விதமாக மாத்ரு பக்தனுன கருடனுடைய உத்வேகமான வார்த்தைகளேக் கேட்டு விநதை புத்திரனிடம் கூறுவாள்.

அப்பா! நான் கொடூர சித்தமுள்ள கத்ருவிற்கு வேலைக்காரியாய் இருந்து, அவளையும், அவள் குழந்தைகளையும் தினமும் முதுகில் தூக்கிக் கொண்டு அலைகிறேன். ஒரு ஸமயம் மந்திராசலம், ஒரு சமயம் மலயாசலம், சில சமயம் ஸமுத்திரங்களுக்கு மத்தியில் இருக்கும் த்வீபங்களுக்குச் சுமந்து செல்கிறேன்.

அந்த மதம் பிடித்த கத்ருவினுடைய பிள்ளைகள் எங்கெங்கு விரும்புகிறார்களோ அங்கங்கு சுமந்து செல்ல வேண்டியிருக்கிறது. நான் என்ன செய்வேன்? அவர்களுக்கு அடிமையாக அல்லவா இருக்கிறேன். கருடன் வினவினான்; தாயே இப்படி நீ வேலைக்காரியாகப் போவதற்கு என்ன காரணம்? வடிவழகியே, குற்றமற்றவளே; நீயும் தக்ஷப்ரஜாபதியின் புதல்விதான், பகவான் கச்யபரின் மனைவிதான், பின் நீ இப்படி ஏன் தாஸியானாய்?

அப்பொழுது விநதை தான் தாஸியானதற்குக் காரணம் ஸூர்யனுடைய குதிரையைப் பார்த்தது முதல் - நடந்த ஸகல வ்ருத்தாந்தங்களையும் ஆதியோடந்தமாகக் கூறினாள். இதைக் கேட்டுவிட்டு கருடன் கூறினான். அம்மா நீ இப்பொழுது மறுபடியும் சென்று, அந்தத் துஷ்டையான கத்ருவின் பிள்ளைகளிடம் கேள், உங்களுக்கு எந்தப் பொருளின் மேல் அதிக ஆசை, எந்தப் பொருள் கிடைப்பது உங்களுக்கு அரிதாக இருக்கிறது? அந்தப் பொருளை நான் உங்களுக்குக் கொண்டு வந்து கொடுத்தால் உங்களது அடிமைத்தளையிலிருந்து என்னை விலக்குவீர்களா? என்று.

அப்பொழுது விநதை அப்படியே சென்று கருடன் சொன்னதை அந்தக் கத்ருவின் பிள்ளைகளிடம் கூறினாள். இதைக் கேட்டு அந்த ஸர்ப்பங்களெல்லாம், தங்களுக்குள் கலந்து ஆலோசித்துக் கொண்டு ஸந்தோஷ மனத்தினராய் விநதையிடம் கூறுவார்கள். நீ எங்கள் தாயினிடம் இருந்து உங்கள் அடிமைத்தனம் நீங்கிப் போக வேண்டுமானால் அம்ருதத்தைக் கொண்டு வந்து எங்களுக்குக் கொடு,

அப்பொழுதுதான் உன்னிஷ்டம் நிறைவேறும். இல்லாவிட்டால் அடிமையாகவே இருக்க வேண்டியதுதான்.

விநதா கத்ருவிடமும் சென்று விஷயத்தைக் கூறி அவளுடைய அங்கீகாரமும் பெற்று சீக்கிரமாகவே திரும்பி ஸந்தோஷத்துடன் கருடனிடம் வந்து விஷயத்தைத் தெரிவித்தாள். பிறகு ஸர்ப்பங்களின் அந்திமகாலத்தைப் பற்றி யோசித்த கருடன் மாதாவிடம் கூறினன்- அன்னேயே அமுதம் வந்துவிட்டது என்று எண்ணிக்கொள். எனக்கு இப்பொழுது கொஞ்சம் ஆஹாரம் கொடு என்றான்.

ஸந்தோஷத்தால் மயிர்கூச்செறிந்த விநதை கருடனிடம் கூறினள்- ஹே! ஸுபர்ணு! உனக்கு மங்களம் உண்டாகட்டும். நீ இப்பொழுதே ஸமுத்திரக்கரைக்கு அழைத்துக் கொண்டு செல். அங்கு மீன் பிடிக்கிற அநேகம் வலேயர்கள் சமுத்திரக் கரையில் வஸிக்கிறார்கள். அந்த துராத்மாக்களே ஆஹாரமாக எடுத்துக்கொள். துர்புத்தியுள்ளவர்கள் உலகத்தில் மற்றவர்களைக் கொண்டு தங்களுடைய ப்ராணனே ரக்ஷிக்கிறார்கள். அவர்களே முக்யமாக அடக்க வேண்டும். உலகத்தில் துஷ்டர்களே அடக்குவது மங்களகரமான காரியம். பரஹிம்ஸை செய்பவர்களே வதைப்பது ஸ்வர்க்கத்துக்கு ஸாதகமான காரியம்.

ஜீவ ஜாதிகளில் ஒரு ஜீவ ஜாதியைக் கொல்லுவதினல் எத்தனேயோ ஜீவர்களே ரக்ஷித்த மாதிரியாகும். புத்திரனே! இந்த வலேயர்களில் ஒரு ப்ராம்மணன் இருந்தால் அவனே மட்டும் கொன்றுவிடாதே. கருடன் கூறினர்:- அம்மா மீன் தின்னும் செம்படவர்களுக்கு மத்தியில் ஒரு ப்ராம்மணன் இருந்தால் அவனேக் கொல்லக் கூடாது. ரக்ஷிக்க வேண்டும் என்று கூறினயல்லவா? அவனுடைய அடையாளங்களே எப்படிக் கண்டு கொள்வது? அதனே எனக்குக் கூறு.

விநதை கூறினுள்:- அவனுடைய தோளில் யக்ஞோபவீதமிருக்கும். நிர்மலமான உத்தரீயம் போட்டுக் கொண்டிருப்பான். அவனுடைய வஸ்திரங்கள் தினமும் துவைக்கப்பட்டு, சுத்தமாக இருக்கும். நெற்றியில் திலகம் இட்டுக் கொண்டிருப்பான்.

அவனுடைய இரண்டு கைகளிலும் பவித்ரம் அணிந்து கொண்டிருப்பான். இடுப்பில் தர்ப்பையைச் சொருகிக் கொண்டிருப்பான். தலைமயிரை முடிந்து கொண்டிருப்பான். அவனே ப்ராம்மணன் என்றறிவாய். ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் இவைகளில் ஒரு ருக்காவது உச்சரித்துக் கொண்டிருப்பான். அல்லது காயத்ரியை மாத்ரமாவது உச்சரித்துக் கொண்டிருப்பான்.

கருடன் கூறினுன்:- ஏ! ஜனனி! ப்ராம்மணன் செம்படவன் மத்தியில் இருப்பான் என்று கூறினுய், அவனிடம் நீ கூறின லக்ஷணங்களில் ஒன்ருவது இருக்குமென்று கூறினுய். இது எனக்கு விளங்கவில்லை. ப்ராம்மணனைக் குறிக்கிற வேறு ஏதாவது லக்ஷணங்கள் இருந்தால் அதனை எனக்குக் கூறு. அதனுல் நான் அவனை ப்ராம்மணன் என்று அறிந்துகொண்டு தவறி தொண்டை வரை விழுங்கியிருந்தேனுனுலும் வெளியில் இழுத்து விட்டுவிடுவேன்.

இதைக் கேட்டு விநதை கூறினுள். தொண்டைவரைப் போன உடல் கட்டையை பற்றின அக்னியைப் போல் தொண்டையை எரிக்கும். அப்பொழுது அவனைப் ப்ராம்மணன் என்று அறிந்து கொண்டு விட்டுவிடு. ஏனென்ருல் ப்ராம்மணன் சுய ஆசாரஹீனனுக இருந்தாலும் ப்ராம்மணனைக் கொல்லுவதால் கொலை செய்தவனுக்கு க்ஷேமம் உண்டாகாது. அவனுடைய தேசம், குலம், ஐச்வர்யம் இவைகளெல்லாம் காலக்ரமத்தில் வேருடன் நசித்துவிடும்.

இவ்விதமாக ப்ராம்மணர்களுடைய ஆசாரத்தை அன்னையிடமிருந்து தெரிந்து கொண்டு கச்யப புத்திரனுன பக்ஷிராஜன் கருடன் அவளை வணங்கி ஆசீர்வாதம் பெற்றுக் கொண்டு ஆகாசமார்க்கமாகப் பறந்து சென்றான். கருடன் சில நாழிகைக்குள் இவ்விதமாகப் பறந்து சென்று தூரத்தில் மீன்களைக் கொன்று தின்னும் செம்படவர்களைப் பார்த்து சிறகுகளைப் படபடவென்று அடித்துக் கொண்டான். அதனால் ஆகாசம், பாதாளம், மத்யபாகம் எல்லாம் புழுதியால் நிரப்பப்பட்டது. இந்தப் புழுதி படலத்தினால் ஸமஸ்த திக்குகளிலும் அந்தகாரம் சூழ்ந்து கொண்டது. அப்பொழுது கருடன் குகையைப் போன்ற தன்னுடைய வாயைத் திறந்து கொண்டு ஸமுத்ரதீரத்தை அடையத் தொடங்கினான்.

பயத்தினால் திகிலடைந்த செம்படவக் கூட்டம் அனுயாஸமாகத் தாங்களே அவனுடைய பிலத்தைப போன்ற வாயினுள் நுழையத் தொடங்கினார்கள். அப்படி அவர்கள் போகும் பொழுது அவனுடைய கழுத்தாகிய குகை நெருப்பாய் எரிந்தது. அப்பொழுது அன்னை கூறினது போல் ஒரு ப்ராம்மணனையும் விழுங்கியுள்ளதாக நினைத்து, கருடன் முதலில் விழுங்கியசெம்படவர்களைத் தன் வயிராகிய குகையில் தள்ளின பிறகு, தொண்டையிலும், உன் நாக்கிலும் அடைத்துக் கொண்டிக்கிற ப்ராம்மணனை உண்மையான ப்ராம்மணனென அறிந்துத் தன் தாயின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அந்த ப்ராம்மணனை வெளியில் உமிழ்ந்து விட்டான்.

பிறகு உமிழ்ந்த அந்த மனிதனைப் பார்த்து பக்ஷிராஜன் கேட்டான்- உம்முடைய வர்ணம் என்ன? உம்மை விழுங்கின பின் என் தொண்டை எரிவானேன். அதைக்கூறும் என்று கேட்க, கருடனின் முன்னால் நின்று ப்ராம்மணன் கூறினான்- நான் ஜாதியில் ப்ராம்மணன், ஜீவிதத்திற்கு வேறு மார்க்கம் தெரியாமல் இந்தச் செம்படவர்கள் மத்தியில் இருக்கிறேன் என்றான். பிறகு

கருடன் அவரை வேகமாக விலக்கிவிட்டு, அநேக செம்படவர்களை விழுங்கினான். பிறகு ப்ரளய வாயுவைப்போல், மிகுந்த வேகத்துடன் ஆகாசமார்க்கமாகப் பறந்து சென்றார்.

அச்சமயம் தேவதைகள் ஸ்வர்கத்தை நோக்கிப்பறந்து வரும் பரமதேஜஸ்வியான கருடனை படவாக்னிபற்றி எறியப்பட்ட பர்வதமோ என்று எண்ணினார்கள். பின்னும் அவனுடைய தேஜஸ் திக்குகள் பூராவும் வ்யாபித்து வருவதைப் பார்த்துவிட்டு மிகவும் பயமடைந்து தங்கள் அஸ்திரசஸ்திரங்களைக் கொண்டு கவசம் பூண்டு தங்கள் தங்கள் சொந்த வாஹனங்களில் ஏறிக்கொண்டு யுத்தத்திற்குத் தயாராய் எதிர்ப்பார்த்தார்கள்.

கருடனுடைய உருவத்தைப் பார்த்துவிட்டு அவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள்- இவன் வக்ரகதியில் வருகிறான். அதனால் ஸூர்யனல்ல. இவன் அக்னியுமல்ல. அக்னியென்றால் புகையுடன் கூடக் காணப்படுவான். இவன் மின்னலாக இருக்கவே முடியாது. ஏனென்றால் அது க்ஷணநேரமே பளிச்சிட்டு மறையும். பின் இவன் யார்? நம்மை எதிர்ப்பதற்குப் பாய்ந்து வருகிறான் போலிருக்கிறது.

தானவனோ என்றால் அவர்கள் யார் இவ்வளவு தேஜஸ்ஸுடன் இருக்கிறார்கள்? மேலும் தானவர்களில் இவ்வளவு பெரிய உரு யாருக்கு இருக்கிறது? நம்முடைய இதயத்தை நடுங்கச் செய்யும் பயரங்கமான இவன் யார்? தேவதைகள் இவ்வாறு தர்க்கம் செய்து கொண்டு இருக்கும்போது மஹாபலசாலியான பக்ஷிராஜர் தனது இரு சிறகுகளையும் படபடவென்று அடித்துக் கொண்டார்.

சிறகுகளிலிருந்து எழுந்த காற்றினால் தேவதைகள் தாங்கள் ஆயுதங்களுடனும் வாஹநங்களுடனும் சருகு, துரும்புகளைப் போல் எங்கெங்கோ சென்று விழுந்தனர். இப்படி அவர்கள் தூரச் சென்று விழுந்த தருணத்தில்

*பக்ஷிராஜன் புத்திசாலித் தனமாக அம்ருதம் வைத்திருக்கும் கஜாஞவை அணுகித் தேடித்தேடிப் பார்க்கும் பொழுது அம்ருதத்தை ரக்ஷிக்கும் காவலர்களைக் கண்டார்.*

*அஸ்திரசஸ்திரங்களிஞல் அணிவகுத்து அங்கு நிற்கும் ரக்ஷகர்களை சிறகின் வேகத்திஞல் தூர எறிந்துவிட்டு அம்ருத கலசத்துக்கு மேல் சுழலும் சுக்ரயந் (சக்ரயந்த்ரம்) திரத்தையும் கண்டார். மனது வாக்கு இவைகளையும் விட வேகமாக அது சுழன்று கொண்டிருந்தது. அதில் பட்ட கொசு கூடக் கோடிக்கணக்கான துண்டுகளாய் விழும்.*

*கருடன் அந்த யந்த்ரத்திற்கு ஸமீபத்திலேயே பயமில்லாமல் உட்கார்ந்து கொண்டார். சரி இப்பொழுது என்ன செய்வது என்று க்ஷணநேரம் யோசித்தார். இந்த யந்த்ரத்தைத் தொடுவது என்பது பெரும்பாலும் முடியாத காரியம். இதை வாயுபகவாஞல் கூடத் தொடமுடியாது. இப்பொழுது செய்யக்கூடிய உபாயம் என்ன? என்னுடைய எல்லா முயற்சிகளும் இப்பொழுது வீஞக அல்லவோ ஆயின.*

*இங்கு புருஷார்த்தமோ, பலமோ, ஒன்றும் உபயோகப்படாது. ஆஹா! இந்த அம்ருதத்தைக் காப்பாற்றுவதற்காக தேவதைகள் எவ்வித முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கிருர்கள்! எனக்கு பகவான் விஸ்வநாதர் பேரில் அத்யந்தத்ருடமான பக்தியிருந்தால் இந்த அம்ருதத்தை எடுத்துச் செல்வதற்குச் சரியான யுக்தி எனக்குக் கிடைக்கட்டும். அந்த தேவாதி தேவர் உசிதமான யுக்தியை எனக்கு அளிக்கட்டும்.*

*திரும்பவும் நான் ஸ்வாமி மஹாதேவரைவிட அன்னையின் சரணங்களில் த்ருடமான பக்தியிருப்பவஞஞல் அந்த அம்ருதத்தை எடுத்துச் செய்வதற்குள்ள சரியான யுக்தி எனக்கு விளங்கட்டும். எங்கும் நிறைந்துள்ள பகவான் என் இதயத்திலும் வீற்றிருக்கிருர். இந்த அமுதத்தை நான் என் சொந்த*

உபயோகத்திற்காக எடுத்துச் செல்லவில்லை என்று அவருக்கு நன்ருகத் தெரியும். இதனுடைய உத்தேசம் என் அன்னையை அடிமைத்தலையிலிருந்து விடுவிப்பதுதான்.

சாஸ்திரம் கூறுகிறது: வயோதிகப் பெற்ருேர், சிறு குழந்தைகள், ஸதியாக மனைவி இவர்களைக் காப்பாற்றுவதற்கு ஒருவன் அனுசிதமான கர்மங்கள் செய்தாலும் தோஷம் இல்லை. இப்படி யோசனை செய்து கொண்டிருந்த கருடனுக்குத் திடீரென்று ஒரு யோசனை உதித்தது.

அவர் தனது சரீரத்தைச் சிறியதிலும் சிறியதாக, பரமாணுவாக ஆக்கிக் கொணடு, அதிலும் ஆயிரத்தில் ஒரு பங்காக விசித்ர ரூபமாக எடுத்துக் கொண்டார். சரீரம் லகுவானதும் அந்தயந்தரத்தின் அடியில் பயந்து கொண்டே அந்த வாயு கண்டன யந்திரத்திலிருந்து நான்கு பக்கமும் தனது உடலைப் பாதுகாத்துக் கொண்டு மிகவும் சீக்கிரமாக, பதிந்திருந்த அமுத பாத்திரத்தைப் பெயர்த்து எடுத்துக்கொண்டு தேவதைகளுடைய கூக்குரலில் நடுவில் ஆகாசமார்க்கமாகக் கிளம்பிஞர்.

அங்கு, தேவதைகள் பெருத்த கூக்குரலுடன் க்ஷீரஸாகர வைகுண்ட வாஸியான பகவானிடம் சென்று முறையிட்டார்கள். ஹே சக்ரதரா! கருடன் எங்களை ஜயித்து, எங்களுடைய ஜீவனுதாரமான அமுத பாத்திரத்தை எடுத்துக் கொண்டு செல்கிருன்.

இதைக் கேட்டதும் விஷ்ணு பகவான் அவர்களை அபயதானத்திஞல் ஆச்வாஸப்படுத்தி கருடனுடன் யுத்தம் செய்யக் கிளம்பிஞர். ஹே! ஸூத! முன் சும்ப நிசும்பருக்காகச் சண்டிதேவியுத்தம் செய்தது போல் பெருத்த யுத்தம் நடந்தது.

கருடனும் சளைக்காது எதிர்த்துப் போர் புரிந்தான். ஒரு இரவும் பகலும் சளைக்காமல் கடுமையான யுத்தம் நடந்த பிறகு கருடனைத் தன்னைக் காட்டிலும் பலசாலி என்று

பகவான் அறிந்து கொண்டு அவருடைய கடும் போரினுல் சந்தோஷமடைந்து பகவான் விஷ்ணு தானே அவருடைய அருகில் சென்று கூறத் தொடங்கினுர்.

ஹே தேவதைகளை ஜயித்த பக்ஷிராஜ கருடனே! உனக்கு நன்மையுண்டாகட்டும், நான் ஸந்தோஷமடைந்தேன். வேண்டும் வரங்களைக் கேள் என்ருர்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட கருடன் சிரித்துக் கொண்டு ஜனுர்த்தரிடம் கூறினுர்- நானும் ஸந்தோஷமடைந்தேன். நீரும் என்னிடம் சீக்கிரமாக இரண்டு வரங்கள் கேளும், தந்து விடுகிறேன் என்ருர். புத்திமான்களுக்கு உசிதம் என்னவென்றால் ஒரு அருமையான கிடைத்தற்கரிய வஸ்து கிடைத்தால், சூது முதலியவைகளில் ஜயித்தால், தகுந்தவர்களுக்கு அதிலிருந்து கொஞ்சம் கொடுக்க வேண்டும்.

ஏனென்ருல் லாபம் ஜயம் இரண்டும் தினம் கிடைத்துக் கொண்டே இருக்காது? ஸ்ரீ விஷ்ணு கூறினுர்- நீர் மிகவும் பலசாலி. அதனுல் நீ எனக்கு வாஹநமாக வேண்டும். இது எனது முதலாவது வரம். ஹே வரம் கொடுப்பதில் தானியான காச்யபகுமார? இரண்டாவது வரத்தையும் கூறுகிறேன் கேள்.

ஸர்ப்பங்களுக்கு இந்த அமுதத்தைக் காட்டிவிட்டு, அன்னையை அடிமைத்தனத்திலிருந்து மீட்பாய்; ஆனுல் ஹே பராக்ரம! அந்த ஸர்ப்பங்கள் இந்த அம்ருதத்தைக் குடிக்காமல் மாத்திரம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

பிறகு இந்த அம்ருதத்தைத் தேவர்களுக்குத் திரும்பவும் கொடுத்துவிட வேண்டும். இதுவே இரண்டாவது வரம் என்ருர். பக்ஷிராஜனும் மிகவும் நல்லது என்று கூறி ஸ்வர்க்கத்திலிருந்து தனது வழி சென்ருர்.

பிறகு ஒருநிமிஷத்தில் சென்று காச்யபகுமாரர் அம்ருதபாத்ரத்தை ஸர்ப்பங்களுக்கு முன்னுல் வைத்து,

தாயின் அடிமைத்தளையை நீக்கினார். பிறகு ஸர்ப்பங்கள் அனைத்தும் அம்ருதத்தைக் குடிப்பதற்காகச் சென்றன.

அப்பொழுது மதியூகியான கருடன் கூறுவார்;- ஸர்ப்ப ஸஹோதரர்களே! நீங்கள் முதலில் ஸ்னானம் செய்துவிட்டு சுத்தமாக வாருங்கள், வந்து இந்த உத்தம அமுதத்தைப் பாருங்கள். ஸ்னானம் செய்யாத அசுத்தமான ஜனங்கள் தொட்டால் அம்ருதம் மறைந்துவிடும், ஏனென்றால் தேவதைகள் இதைக் காவல் புரிகிறார்கள்.

பாருங்கள், ஒரு சாதாரண திண்பண்டத்தைக் கூட அசுத்தமானவர்கள் தொட்டார்களானால் தேவதைகள் வேகமாக அதன் ரஸத்தை உறிஞ்சிவிடுகிறார்கள். பிறகு அது வெறும் சக்கையாகவேதான் இருக்கிறது.

இவ்விதம் கூறிவிட்டு அவர்கள் சொல்படி அந்த அம்ருத பாத்திரத்தை அந்த தர்ப்பாஸனத்தின்மேல் வைத்துவிட்டுத் தன்னுடைய தாய் விநதையை அழைத்துக்கொண்டு அங்கிருந்து சென்றுவிட்டார் கருடன். இங்கு ஸர்ப்ப கணங்கள் நீராடப் போனவுடனேயே பகவான் விஷ்ணு அந்த அம்ருத பாத்திரத்தை எடுத்துக் கொண்டுபோய் தேவதைகளுக்கு உயிர் பிச்சையளிப்பது போல் கொடுத்தார்.

இங்கு ஸர்ப்பங்கள் ஸ்னானம் செய்துவிட்டு சுத்தமாக வந்து பார்த்தால் அம்ருதபாத்திரத்தைக் காணாமல் உடனே கூக்குரலிடத் தொடங்கினார்கள். அடே! நம் எல்லோரையும் ஏமாற்றிவிட்டு அவன் அம்ருத பாத்திரத்தை எடுத்து சென்று விட்டானடா,

அடிக்கடி இவ்விதம் கூச்சலிட்டுக் கொண்டே அம்ருதத்தை நாக்கால் நக்கியாவது பார்க்க வேண்டும் என்ற விருப்பத்தினால் அம்ருத பாத்திரம் வைத்திருந்த தர்பாஸனத்தை நக்கத் தொடங்கினார்கள். இதனால் அவர்களுக்கு அம்ருதம் கிடைத்ததா அல்லது இல்லையா

என்றிருக்கட்டும். தர்ப்பையை நாக்கினுல் நக்கினதால் அவைகளின் நாக்கு அறுந்து இரு கூறுகப் பிளந்து போயிற்று.

ஒருவர் அயோக்கியமான வழியில் கிடைத்த பொருளை அனுபவிக்க ஆசைப்பட்டால் அதையனுபவிக்கவும் முடியாது. அதன் முடிவு நல்லதாகவும் இருக்காது. நியாயமான வழியில் சென்றதினுல்தான் கருடன் துர்லபமான அம்ருதத்தை அடைய முடிந்தது.

ஆனுல் ஸர்ப்பங்கள் அயோக்கியமான வழியில் சென்றதனுல் அவைகள் அம்ருத பாத்திரத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே அது காணுமல் போய்விட்டது. இந்த விதமாக விநதை அடிமைத் தனத்திலிருந்து விடுவிக்கப்பட்டதும் கருடனிடம் கூறினுள்-

அப்பனே! இந்த அடிமையாக இருந்த பாபத்தை நீக்கும் பொருட்டு காசிக்குச் செல்வேன். ஏனென்ருல் மனிதர்களின் இதயத்தில் புனர்ஜன்மத்தை நஷ்டமடையச் செய்யும் காசிக்கு இடமில்லையென்ருல் அவர்களை அனேக ஜன்மங்களில் செய்த ஸஞ்சித பாபங்கள் ஆட்கொள்ளும்.

காசியில் இருப்பதால் விஸ்வேஸ்வரருடைய பரமானுக்ரஹம் கிடைத்தவுடன் கர்ப்பவாஸ துக்கமும் இல்லாமல் போய்விடுகிறது. அப்பேர்ப்பட்ட காசியை நினைத்த மாத்திரத்தில் பாபம் விலகிப்போவதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது?

ஆஹா! எங்கு ஸாஷாத் சந்திரபூஷண பகவான் விஸ்வநாதர் தாரக மந்திர ரூபமான தோணியின் மூலமாக இந்தக் கடப்பதற்கரிய ஸம்ஸார ஸாகரத்தைக் கடத்திச் சென்று அக்கரை சேர்ப்பிக்கிருர். விஸ்வநாதருடைய தயைக்குப் பாத்திரமாகித் தங்களுடைய ஸமஸ்த கர்மபந்தனங்களையும் வேரறுத்து விட்டவர்களுக்கே காசிக்குச் செல்ல புத்தி போகும். அதில்லாமல்

மற்றவர்களுக்கு அங்கு போகும் எண்ணமே புத்தியில் வராது.

தங்களுடைய ஸமஸ்த பாபங்களேயும் கழுவி விட்டவர்களுக்கே மனம் காசியின் பக்கமாகச் சாயும். அவர்களே இந்த உலகில் உண்மையான மனிதர்கள் எனப்படுவார்கள். மற்றவர்கள் மனித உருவில் இருக்கும் ம்ருகங்களே யாவார்கள்.

இந்த உலகில் எவர்கள் காசியைப் பெற்ருர்களோ, அவர்களே காலத்தையும் ஜயிக்கவல்லவர்கள், அவர்களே பாபமற்றவர்கள். அவர்கள் மறுபடியும் கர்ப்பவாஸத்தின் துக்கத்தை அநுபவிக்கமாட்டார்கள். எல்லா மங்களங்களுக்கும் ஆதாரமாயும் தேவதைகளுக்குக் கூடக் கிடைக்க அரிதாக இருக்கும் இந்தக் காசியையடையாமல் இந்த மனித ஜன்மத்தை வீணுகக் கழிக்கக் கூடாது.

பரம ஆனந்தத்தையளிக்கும் இந்த அவிமுக்த க்ஷேத்ரமானக் காசீபுரியைத் தரிசிக்கும் பேறுபெற்ருல் காலம் ஏது? கவிதான் ஏது? அநேகப் ப்ரகாரமாகக் கர்மங்கள் தான் ஏது? எவனெருவன் கர்ம ரூபமான வனத்தையழிக்கும் வருணு, அஸி என்னும் இரண்டு வாட்களே உபயோகப்படுத்தவில்லேயோ, அவனே கர்ப்பவாஸத்தை அடிக்கடி அநுபவிக்கிருன்.

இந்த வார்த்தைகளேக் கேட்டதும் கருடனும், ''அம்மா' மஹாதேவரால் பூஜிக்கப்படும் காசீக்ஷேத்திரத்தைப் பார்க்க நானும் வருகிறேன் என்ருர். பிறகு மாதாவின் அனுக்ரஹத்தையும் பெற்று அவளேயும் அழைத்துக் கொண்டு பக்ஷிராஜா க்ஷணநேரத்தில் காசீபுரியை அடைகிருர். அங்கு சென்று ஜிதேந்த்ரியனுன கருடன் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தார். விநதையும் ககோல்கர் என்ற பெயருள்ள ஆதித்ய மூர்த்தியைப் ப்ரதிஷ்டை செய்தார். பிறகு இரண்டு அறிஞர்களும் கோரதபஸ் செய்யத் தொடங்கினுர்கள்.

கடுந்தபஸ்ஸினுல் ஸந்தோஷமடைந்த பாஸ்கரரும் காசியில் அவர்களுக்கு ப்ரத்யக்ஷமானுர்கள், கருடனுல் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கத்திலேயே பகவான் உமாபதி ப்ரஸன்னமாய் அநேக அரியவரங்களைக் கொடுத்துக் கூறுவார். நீ என்னுடைய பக்தன் அப்பா; அதனுல் உனக்கு உண்மையான ஞானம் வரவேண்டுமென்று வரமளிக்கிறேன்.

உனக்கு என்னைப்பற்றி ஒரு ரஹஸ்யம் கூறுகிறேன். இன்றுவரை தேவதைகளும் கூட அதை அறியவில்லை. இங்கு உன்னுல் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கத்திற்கு கருடேஸ்வரர் என்று பெயர் வழங்கும். எவர்கள் அதைத் தரிசித்து, ஸ்பர்சித்துப் பூஜிக்கிறுர்களோ, அவர்களுக்கு இது பரம ஞானத்தைக் கொடுக்கும். மேலும் உனக்கு ஹிதமாக இருக்கும் மற்ெறுரு விஷயத்தைக் கூறுகிறேன் கேள்- நானே விஷ்ணு, விஷ்ணுவே நான்.

எங்களிருவருக்கும் துளிக்கூட பேதம் கிடையாது. ஏ பக்ஷிராஜனே, தைத்யர்களின் பலத்தை த்வம்ஸம் செய்யும் விஷ்ணு தேவருக்கு நீ உத்தமமான வாஹனமாக ஆவாய்; ஏ கருடா, நீ எங்கும் எல்லாராலும் பூஜிக்கப்படுவாய். இந்த விதமாகத் தனது பக்தன் கருடனுக்கு வரமளித்து பகவான் சம்பு அங்கேயே அந்தர்தானமானுர். கருடனும் விஷ்ணுவிற்கு வாஹனமாக அவரிடம் சென்று எல்லோராலும் பூஜிக்கப்படுபவர் ஆனுர்.

காசிவாஸிகளுடைய அநேக ஜன்மங்களில் உள்ள ஸஞ்சித பாபங்களை க்ஷயம் செய்யும் பகவான் மஹாதேவருடைய மற்ெறுரு உருவாகக் கருதப்பட்ட ககோல்க்க ஆதித்யரும் கடுமையான தபஸ் செய்யும் விநதையைக் கண்டு பாபநாசகரான சிவபிரான் பேரில் அவளுக்கு பக்தியையும் ஞானத்தையும், மற்றும் உத்தமமான வரங்களையும் அளித்தார்.

அப்பொழுது முதல் அவர் விநதாதித்யர் என்ற பெயருடன் ப்ரஸித்தமடைந்து, அங்கேயே தங்கினார். இந்த விதமாக பகவான் ககோல்காதித்யர் காசிவாசிகளுடைய விக்ன ரூபமான அந்தகாரத்தை விலக்கிக் கொண்டிருந்தார், காசியில் த்ரிலோசனத்தில் பில்பிலா தீர்த்தத்திலிருக்கும் ககோல்காதித்யரை தரிசனம் செய்வதினால் மனிதன் ஸமஸ்த பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான். தனது அபீஷ்டமான பலன்களைப் பெற்று ஆரோக்யத்துடன் வாழ்கிறான்.

இந்த ககோல்காதித்யருடையவும் மஹாத்மியத்தைக் கேட்கும் எல்லோரும் ஸமஸ்த பாபங்களிலிருந்து விடுதலையடைந்து முக்தி பெறுவார்கள்.

இவ்விதம் ஸ்கந்த புராணம் 4வது கண்டமான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான ககோல்காதித்ய கருடேச்வர வர்ணனம் என்னும் **50வது அத்யாயம்** ஸம்பூர்ணம்.

★ ★ ★



# “காசீ கண்டம்”

## (இரண்டாம் பாகம்)

## 51வது அத்தியாயம்

*ஶ்ரீ கணேசாய நம:*

*அகஸ்தியர் கூறினார்: ப்ரபோ! பார்வதீ ஹ்ருதயானந்த வர்த்தகரே, ஸர்வக்ஞ குமாரா, ஸ்வாமீ, ப்ரபோ, நீங்கள் க்ருபை புரிந்து, இன்னும் சொல்வதானால் நான் கேட்க விரும்புகிறேன். நன்னடத்தையுள்ள விநதை தக்ஷப்ரஜாபதியின் புத்திரி, மஹரிஷி காஸ்யபரின் ஸஹதர்மிணி, கருடனின் மாதா இத்தனை பாக்யமிருந்தும் ஏன் அவள் அடிமையானாள்?*

*ஸ்கந்தர் கூறினார்: மஹாமதியே அகஸ்தியா! இந்த தபஸ்வினி விநதை எந்தக் காரணத்தினால் அடிமையானாளோ அந்தக் கதையைக் கூறுகிறேன் கேள். கச்யப ரிஷியிடம் கத்ருவிற்கு நூறு புதல்வர்கள் பிறந்தார்கள். விநதைக்கு உலுகன் (ஆந்தை) கருடன், அருணன் என்ற மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள்.*

*முனிவரே, உலுகன்(ஆந்தை) வினதாவின் ஜ்யேஷ்ட புத்திரன் அதனால் பக்ஷிகளுக்கு அரசனானான். ஆனால் பக்ஷிகளெல்லாம் சபை கூடிப் பேசி இவன் நிர்குணன், அதனால் அரசுரிமைக்குத் தகுதியற்றவன் என்று பேசி ராஜ்ய உரிமையிலிருந்து தள்ளி விட்டார்கள்.*

*இவன் கொடூரமானக் கண்களையுடையவன். பகலில் குருடாயிருப்பான். வளைந்த நகத்தையுடையவன், மேலும் இவனுடைய சப்தம் ஜனங்களை மிகவும் பயமுறுத்துவதாக இருக்கிறது என்று இந்தவிதமாக உலுகனை நிந்தித்து, பக்ஷிகள் சுயேச்சாதிகாரமாய் இன்றுவரைக்கும் ஒருவரையும் தன்னுடைய அரசனாக மதிக்கவில்லை. விநதை தன்னுடைய மூத்த குமாரனுடைய இந்த அவநிலையைப் பார்த்துவிட்டு, மற்ற புத்திரர்களும் எப்படியிருப் பார்களோ என்று பார்க்க வேண்டும் என்ற ஆவலினால் பாக்கியுள்ள இரண்டில் ஒரு முட்டையை உடைத்துவிட்டாள்.*

*ஏ! கும்பமுனியே! இம்முட்டைகள் ஆயிரம் வருஷங்கள் கழித்து உடையவேண்டியவை. அவள் எண்ணூறு வருஷங்கள் ஆனவுடனேயே உடைத்து விட்டாள். எண்ணூறே வருஷங்கள் கழித்ததினால் அந்த முட்டைக்குள்ளிருக்கும் பரமதேஜஸ்விகளான குழந்தைகள் துடையின் மேலுள்ள அங்கங்களே முழுமையாகப் பெற்றிருந்தன. துடையின் கீழ்உள்ள ஆடுசதைகள், கால்கள் இவைகளின் அமைப்பு இன்னும் ஆகவில்லை.*

*அந்த முட்டையிலிருந்து கிளம்பிய முக்கால் அங்கமே முழுமை பெற்றிருந்த அந்தக் குழந்தை கோபத்தினால் முகம் சிவந்து அம்மாவை சபித்தான்.*

*ஏ! ஜனனீ! நீ உன்னுடைய ஸஹமனைவியுடைய குழந்தைகள் சுயேச்சையாய் விளையாடுவதைக் கண்டு பொறாமையினால் முட்டையை இரண்டாக உடைத்து விட்டாய். அதனால் என்னுடைய அங்கங்கள் பூரண அமைப்பைப் பெறவில்லை. அதனால் ஏ! பெண்பறவையே! உன்னை நான் சபிக்கிறேன். நீ உன் சக்களத்தியின் குழந்தைகளுக்கு அடிமையாவாய் என்று சொல்லியது.*

*புத்திரனின் சாப பயத்தினால் நடுங்கிக்கொண்டு விநதை கூறினாள் - குழந்தாய் 'அநூரா' (துடையில்லாதவன்) இந்த அன்னையின் சாப விமோசனத்தைப் பற்றிச் சொல்லப்பா என்றாள்.*

*அருணன் கூறினுன்: நீ இந்த மூன்ருவது முட்டையை என்னேச் செய்ததுபோல் அவசரப்பட்டு உடைத்துவிடாதே. ஏனென்ருல் அந்த முட்டையிலிருந்து பிறக்கும் குழந்தையே உன்னே அடிமைத்தளேயிலிருந்து விடுவிப்பான்.*

*இப்படிக்கூறி அந்தக் குழந்தையான அருணன் விரைவாக ஆகாசத்தில் பறந்து ஆனந்த வனத்தையடைந்தான். ஏனென்ருல் விஸ்வேஸ்வரர் அங்கஹீனமானவர்களுக்கு நல்லகதி கொடுக்கிருரன்ருே!.*

*ஏ முனியே! நீர் கேட்டதால் நான் இப்போது வினதை அடிமையான காரணத்தைக் கூறினேன். இப்பொழுது அருணனேப் பற்றிப் பேச்சு வந்ததால் அருணுதித்யனுடைய கதையைக் கூறுகிறேன் கேளுங்கள்.*

*துடையில்லாததால் அநூரு என்றும், கோபத்தால் ரக்த வர்ணமாகச் சிவந்ததால் அருணன் எனப்படும் அந்த விநதையின் புத்திரன் காசிக்கு வந்து தபஸ்ஸினுல் சூரிய நாராயணரை அணுகினுன்.*

*பகவான் சூரியனும் ப்ரஸன்னமாகி அந்த பக்தனுன துடையில்லாத அருணனுக்கு வரமளித்து, அவனுடைய பெயரான அருணுதித்யன் என்ற பெயரையும் சூட்டிக் கொண்டார்.*

*சூரியன் கூறினுர்: விநதாபுத்திரா! துடையில்லாதவனே! நீ எப்பொழுதும் என் ரதத்தில் உட்கார்ந்திரு. மூன்று உலகங்களின் நன்மைக்கு வேண்டி, உனக்கு முன்னுல் இருக்கும் அந்தகாரத்தை த்வம்ஸம் செய்து கொண்டிரு. இந்தக் காசீபுரியில் நரர்கள் மஹாதேவருக்கு வடக்குப் பக்கத்தில் உன்னுல் ஸ்தாபிக்கப்பட்ட என்னுடைய மூர்த்தியை ஸேவித்தார்களானுல் அவர்களுக்குப் பயமேது?*

*அருணுதித்யன் என்னும் என்னுடைய பெயரைப் பூஜை செய்பவன் துக்கம், தரித்ரம், பாதகம் இவைகளே அநுபவிக்க மாட்டான். அருணாதித்யனே ஸேவிப்பதால்*

ஒருவிதநோயும் அணுகாது. மேற்கொண்டு ஒருவித இடையூறும் விளையாது. சோகாக்னி ஒரு பொழுதும் தஹிக்காது.

இதற்குப் பின் சூரியன் அருணனைத் தன்னுடைய ரதத்தில் ஏற்றிக்கொண்டான். அன்றிலிருந்து இன்றுவரை சூரியனின் ரதத்தில் அருணன் தினந்தோறும் காலைவேளையில் உதயமாகிறான்.

தினமும் காலைவேளையில் தூங்கி எழுந்தவுடன் சூரியனையும் அருணனையும் வணங்குகிறவனுக்கு துக்கத்தின் பயம் ஒருநாளும் ஏற்படாது.

அருணாதித்யனுடைய மகாத்மியத்தைக் கேட்பவன் ஒருவன் எந்தவிதமான துர்ச் செய்கைகளிலும் ஈடுபடமாட்டான்.

ஸ்கந்தன் திரும்பவும் கூறத்தொடங்கினார்: அகஸ்திய முனியே! நான் இப்பொழுது விருத்தாதித்யனுடைய மகிமையைக் கூறுகிறேன் கேளும்.

பூர்வ காலத்தில் இந்த வாராணஸிபுரியில் வயோதிகனான ஹாரிதன் என்ற பெயருள்ள பெரிய தபஸ்வியிருந்தார். அவர் உறுதியான பக்தியுடையவராக இருந்தார். அவர் தபஸ்ஸை விருத்தி செய்யும் பொருட்டு விசாலாக்ஷிக்குத் தென் பாகத்தில் மங்களத்தைக் கொடுக்கக்கூடிய ஸர்வலக்ஷணங்களும் பொருந்திய ஒரு சிலையை ஸ்தாபித்து, அதில் சூரிய தேவனை ஆராதித்து பூஜை செய்யத் தொடங்கினார்.

இந்தத் தபஸ்ஸினால் சந்தோஷமடைந்து சூரியத்தேவர் விருத்தரான தபஸ்வியிடம் கூறினார். இப்பொழுது நீர் தாமதிக்காமல் என்னிடம் வேண்டிய வரன்களை வாங்கிக் கொள்ளும். நான் வரம் கொடுக்கத் தயாராக இருக்கிறேன், கேளும் என்றார். அப்பொழுது அந்தமுனி இந்த வரத்தைக் கேட்டார். - ஏ பகவான்! நீங்கள் சந்தோஷமாகயிருக்கிறீர்களானால் எனக்குத் திரும்பவும்

யௌவனத்தைத் தாருங்கள் என்றார். ஏனென்றால் நான் இப்பொழுது வயோதிகன் ஆகிவிட்டேன். இப்பொழுது எனக்கு தபஸ் செய்வதற்கு சக்தியில்லை. என்னை யௌவனன் ஆக்கிவிட்டால் மேலும் அதி உத்தமமான தபஸ் செய்வேன். தபஸ்ஸே பரமதர்மம், தபஸே பரமதனம், தபஸ்ஸே பரமகாமம், தபஸ்ஸே பரம மோக்ஷம். தபஸ்ஸைவிட அதிகமான சம்பத்தோ, ஐஸ்வர்யமோ, மோக்ஷமோ வேறு எங்கும் கிடைக்காது. துருவன் முதலிய மகாத்மாக்கள் தபஸ்ஸினாலேயே மேன்மையான பதவியை அடைந்தார்கள்.

இதனால் நான் தங்களுடைய அனுக்ரஹமான வரதானத்தினால் ஸர்வ ஸம்மதமான யௌவனத்தையடைந்து, இரண்டு உலகங்களிலும் பெருமை தரக் கூடிய தவத்தையே அனுஷ்டிப்பேன்.

இந்த உலகத்தில் எல்லோராலேயும் வெறுக்கத் தக்கதான வயோதிகம் என்பது மிகவும் இழிவு, ஏனென்றால் இந்திரியங்கள் ஜரையினால் பீடிக்கப்படும் போது பெண்கள் கூட அவனுக்கு அடங்கமாட்டார்கள்.

இதைவிட மரணமடைவது நல்லது. ஆனால் மிகவும் சிந்தனை தரக்கூடிய இந்த வயோதிகத்தைவிட மரணமே மேலானது, ஏனென்றால் இறப்பதில் க்ஷணமாத்திரம் தான் துக்கம் - ஆனால் இந்த ஜரையினால் ஏற்படும் துக்கம் அணு அணுவாக வதைக்கிறது.

ஜிதேந்த்ரியர்கள் வெகுகாலம் தபஸ் செய்வதற்கு வேண்டிய தீர்க்காயுளும், தானம் செய்வதற்கெனவே தனமும், நல்ல புதல்வர்களைப் பெறவே மனைவியும், முக்தியடைவதற்கென்றே மேலான புத்தியும் வேண்டுமென்று பிரார்த்தனை செய்வார்கள். பகவான் சூரியன் உடனேயே கிழவருடைய வயோதிகத்தை நீக்கி மிகவும் அழகுக்கு இருப்பிடமும் புண்ணியங்களுக்கு சாதனமான யௌவனத்தையும் அளித்தார்.

*இந்த உருவோடு மஹாமுனி வயோதிக ஹாரிதன் வாராணஸியில் சூரிய நாராயணருடைய க்ருபையினுல் யௌவனத்தைப் பெற்று மீண்டும் தவம் புரிந்தார்.*

*தபஸ்வியான கிழவர் ஹாரிதனுல் ஆராதனே செய்யப்பட்டதால் அந்த சூரியமூர்த்திக்கு வ்ருத்தாதித்யர் என்று பெயர் வந்தது. அந்த மூர்த்தியை ஆராதித்தால் வயோதிகம் வராது என்று கருதப்படுகிறது.*

*ஏ! கும்ப முனியே! காசியில் அநேக மகான்கள் இந்த வயோதிகம், துர்கதி, க்ரோதம் இவைகளே நாசம் செய்யக்கூடிய இந்த விருத்தாதித்யரை உபாஸனே செய்து அநேக ஸித்திகளே அடைகிறுர்கள்.*

*வாராணஸி க்ஷேத்திரத்தில் ஏதாவது ஒரு திவ்ய வாரத்தன்று விருத்தாதித்யரை தரிசித்து வந்தனம் செய்தால் அவர்கள் ஒரு நாளும் துர்த்தசையடைய மாட்டார்கள். மேலும் தங்கள் அபீஷ்டஸித்திகளே அடைகிறுர்கள்.*

*ஸ்கந்தர் கூறினுர்: ஏ முனியே! இப்பொழுது கேசவாதித்யருடைய மேலான மகிமையைக் கேளுங்கள். சூரியன் கேசவனே ஆராதித்து எப்படி ஞானம் அடைந்தார் என்பதையும் கூறுகிறேன்.*

*ஆகாசத்தில் சஞ்சரிக்கும் சூரியன் ஒரு தடவை ஒரு சிவலிங்கத்தை ஆதிகேசவர் பக்தி பாவத்துடன் பூஜித்துக்கொண்டிருப்பதைக் கண்டார்.*

*இதைப்பார்த்தக் கதிரவன் ஆவலே அடக்க முடியாதவராய் காசீக்ஷேத்ரத்தில் இறங்கி பகவான் கேசவரின் அண்டையில் சென்று நிச்சலமாக லயமடைந்த மனத்துடன் ஆச்சர்யமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்.*

*கேசவரிடம் ஏதோ கேட்க வேண்டும் என்ற விருப்பத்துடன் ஸமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர் போலக்காணப்பட்டார். விஷ்ணு பகவான் பூஜை செய்து முடித்துவிட்டு, திரும்பியதும் சூரியன் கை கூப்பி வணங்கினுன்.*

விஷ்ணுவும் வெகு மரியாதையுடன் கதிரவன் வருகைக்கு நல்வரவு கூறி வணங்கி அவரை ஏற்றுத் தன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டார்.

பிறகு க்ஷேமலாபங்களுக்குப் பின்னர் சமயம் பார்த்து சூரிய பகவான் நாராயணரை வணங்கி அவருடைய அனுமதி பெற்று விண்ணிப்பித்துக் கொள்ளத் தொடங்கினுர்-

சூரியன் கூறினுர்: ஏ ஜகத்பதே, விஸ்வம்பரா, தாங்கள் ஜகத்துக்கெல்லாம் அந்தராத்மா, அதனுலே மாதவா! தாங்களல்லவா ஜகத்தால் பூஜிக்கத்தகுந்தவர். இங்கு தங்களால் பூஜிக்கப்படுபவரும் இருக்கிருரா?

ஹே! ஜகதாதார! இவ்வுலகம் முழுவதும் தங்களிடமிருந்தே உண்டாயின. மேலும் தாங்கள் இதை பாலிக்கிறீர்கள். பிறகு இவைகளெல்லாம் தங்களிடமே லயமடைகின்றன. அப்படியிருக்கத் தாங்கள் யாரை பூஜிக்கிறீர்கள்?

நாதா! இந்த ஆச்சர்யத்தைப் பார்த்துவிட்டே நான் தங்களிடம் வந்தேன். தாங்கள் உலகத்தின் தாபத்தைப் போக்கடிப்பவர். அப்படியிருந்தும் நீங்கள் யாரைப் பூஜிக்கிறீர்கள்?

சூரியனுடைய இந்த வார்த்தையைக்கேட்டு அவரை சப்தமிட்டுப் பேசவேண்டாம் என்று ஸமிக்ஞை செய்தார்.

மாதவர் கூறுவார்: இந்தக் காசீக்ஷேத்ரத்தில் காரணத்துக்கும் காரணராய், தேவர்களுக்கும் தேவராய் நீலகண்டராய் இருக்கும் பகவான் உமாபதி மஹாதேவரே - பூஜிக்கத் தகுந்தவர்.

இங்கு அறிவுள்ளவர்கள் பகவான் திரிலோசனரைவிட்டு வேறு பூஜை செய்வர்களானுல் அவர்கள் கண்ணிருந்தும் குருடர்களாவர்.

ஜனனம், மரணம் ஜரை இவைகளை நீக்கும்

ம்ருத்யுஞ்ஜயரே பூஜிக்கத்தகுந்தவர். ராஜா ஸ்வேதகேது ம்ருத்யுஞ்ஜயரையே பூஜை செய்து பலம் பெற்று ம்ருத்யுவையும் தோற்கடித்தார்.

ம்ருத்யுமுனி காலத்துக்கும் காலராஞர், மஹாகாலரைப் பூஜை செய்து அவருடைய பலத்திஞல் காலத்தையும் ஜயித்தார். ம்ருத்யு சிலாதனின் புதல்வனே அவன் ம்ருத்யுஞ்ஜயரை உபாஸிப்பவன் என்று கண்டு கொண்டு அவரை விட்டுவிட்டான்.

அஞயாஸமாக ஒரு அம்பு எய்ததுமே த்ரிபுரங்கள் தோல்வியடைந்தன. அந்த த்ரிபுராந்தகரும் பூதநாதருமான அந்த சிவபிரானே பூஜை செய்வதைத் தவிர வேறு என்ன இருக்கிறது?

மூன்று உலகங்களேயும் ஜயித்தவரும், காரணபூதரும் ஆன பகவான் மஹா தேவரை ஆராதிப்பதே புருஷார்த்தத்துக்கு ஸாதனமாகும். ஏ சூர்யா! யாரிடம் உலகம் லயமடைகிறதோ, யார் ஒருதரம் விழித்தவுடனேயே உலகம் மலர்கிறதோ, அந்தக் காம நாசனன் விஸ்வநாதன் யாருக்குத்தான் பூஜைக்குரியவராக மாட்டார்! எவர்தான் அவரைப் பூஜை செய்திருப்பார்?

இவ்விடத்தில் மஹாதேவர் லிங்கத்தைப் பூஜை செய்து நான்கு புருஷார்த்தங்களேயும் உடனே அடைகிருன். இதில் கொஞ்சமும் ஸந்தேஹமில்லே.

சிவலிங்கத்தைப் பூஜித்தால் மனிதன் நூற்றுக் கணக்கான ஜன்மங்களில் சேர்த்து வைத்த பாபங்கள் பஸ்மமாகின்றன. இது உண்மை.

இங்கு சிவலிங்கத்தை அர்ச்சிப்பதிஞல் என்னென்ன பலன் தான் கிடைக்காது? ஸந்தேகமில்லாமல் புத்திரன் மனேவி, வீடு, வாசல், ஸ்வர்க்கம், மோக்ஷம், எல்லாம் அவனே அடைகின்றன.

ஏ! ஸஹஸ்ர கிரணங்களுடையவரே, நானும் கேவலம் சிவலிங்க அர்சனே ஒன்றிஞலேயே மூன்று

*உலகங்களிலும் உண்டான ஸகலஐஸ்வர்யமும், ஸம்பத்தும் அடைந்திருக்கிறேன். இதுமுற்றிலும் உண்மை.*

*இந்த ஸ்தானத்தில் ஒரு சிவலிங்கத்தினுடைய பூஜையே பரம யோகாப்யாஸம், உக்ரமான தபஸ், ஸர்வோத்தமஞானமாகும்.*

*எவர்கள் இங்கு ஒரு தரமாவது பார்வதீ நாதஞன சிவனுடைய லிங்கத்தைப் பூஜை செய்தாஞே அவனுக்கு துக்கத்திற்கிருப்பிடமான இந்த உலகத்தில் அவன் துக்கத்தைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்?*

*ஏ திவாகரா! எவஞெருவன் எல்லாவற்றையும் தியானம் செய்துவிட்டு, சிவலிங்கமே கதியென்றிருந்தாஞுல் ஏ! ரவியே, அவன் மகத்தான பாபத்தால் கூட துக்கமடையமாட்டான்.*

*ஏ பாஸ்கரா! மஹேஸ்வரன் எவனை மறுபிறப்பு எனும் துக்கத்திலிருந்து விடுதலை ஆக்க நினைக்கிருஞே அவனுடைய புத்தியே இங்கு சிவலிங்க அர்சனையில் திடப்படுகிறது.*

*சிவலிங்க ஆராதனையைவிடப் புண்ணிய கர்மம் மூவுலகிலும் இல்லை. ஒரு சிவ லிங்கத்திற்கு அபிஷேகம் செய்தால், தீர்த்தத்தை அருந்திஞலே போதும். அது எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்ஞனம் செய்த பலனைக் கொடுக்கும்.*

*அதஞல் ஏ சூர்யா! மிக உன்னதமான மஹா தேஜஸை விருத்திசெய்யும் லக்ஷ்மியைப் பெற விரும்புவாயாஞல் சிவ லிங்கத்தைப் பூஜைசெய்.*

*ஏ முனி! விஷ்ணுவின் இந்த வார்த்தையை கேட்டுவிட்டு சூரியதேவர் அப்பொழுதே ஸ்படிக மணியிஞலான சிவலிங்கத்தை ஸ்தாபித்து விதிமுறைப்படி இன்று வரை பூஜை செய்து வருகிருர்.*

ஆதிகேசவரை குருவாக பாவித்து பகவான் சூரியன் இன்று வரை ஆதிகேசவருடைய வடபாகத்தில் நின்று கொண்டிருக்கிறுர்.

அவருடைய பெயர் கேசவாதித்யர். அவர் காசியில் பக்தர்களின் தமோகுணமாகிய அக்ஞானத்தை விலக்குகிறுர். பூஜை செய்தால் எப்பொழுதும் மனோவாஞ்சிதமான பலனைத் தருகிறுர்.

உத்தம பக்தனொருவன் வாராணஸிபுரியில் கேசவாதித்யரை ஆராதித்து, உத்தமஞானத்தையடைந்து அதன் மூலமாகக் கடைசியில் நிர்வாண பதவியில் பங்குகொள்கிறுன்.

அவருடைய பாதோதக தீர்த்தத்தில் ஸ்னனம் முதலிய ஜலகர்மங்களை முடித்துக்கொண்டு கேசவாதித்யனை தரிசனம் செய்வதால் ஜனங்கள் ஸமஸ்த பாபங்களிலிருந்து முக்தி பெருகிறுர்கள்.

அகஸ்தியரே! மாகமாதத்து சுக்ல ஸப்தமியன்று ரவிவாரம் கூடினுல் அவருடைய பாதோதக ஜலத்திலேயே ஆதிகேசவருடைய ஸமீபத்திலேயே காலை வேளையில் மௌனமாக இருந்து ஸ்னனம் செய்து கேசவாதித்யனைப் பூஜை செய்தால் அவன் ஏழு ஜன்மங்களாகச் செய்து வைத்திருந்த பாபங்களிலிருந்து நிவர்த்தியடைந்து முக்தியடைவான்.

நான் ஏழு ஜன்மங்களாக என்ன பாபங்கள் செய்தேனே அவைகளையும், என்னுடைய சோகத்தையும் ரோகத்தையும் இந்த மகரஸங்க்ராந்தியின் ஸப்தமி தினமானது நிவர்த்தி செய்யட்டும்.

இந்த ஜன்மத்திலேயோ அடுத்த ஜன்மத்திலேயோ மனஸாலும், வாக்காலும் சரீரத்தாலும், ஞானத்தாலும், அக்ஞானத்தினுலும் நான் என்னென்ன செய்திருந்தேனே அந்த ஏழுவிதமான பாபங்களையும் ஏழுவிதமான வியாதிகளையும் கூட ஏ ஸப்த ஸப்திகே! மாகரி ஸப்தமி அவைகளை நீ நாசம் செய்து விடு.

இவ்விதக் கருத்துள்ள மூன்று ஸ்லோகரூபமான மந்திரங்களையும் ஜபித்துக்கொண்டு பாதோதக தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து ஆதி கேசவரைத் தரிசனம் செய்தவன் க்ஷணமாத்திரத்தில் பாபரஹிதனாகினான்.

ஒருவன் மிகுந்த சிரத்தையோடு கேசவாதித்யருடைய மகாத்மியத்தைக் கேட்பானானால் பாபம் அவனை அணுகாது. சிவபக்தியையும் பெறுவான். இதில் ஐயமில்லை. ஸ்கந்தன் பின் கூறினான்: ஏ முனிவரரே! இப்பொழுது விமலாதித்யரின் உத்தம சரித்திரத்தைக் கூறுகிறேன். கேளும். அவர் காசியில் ஹரிகேசவ வனத்தில் எழுந்தருளியிருக்கிறார்.

வெகு காலத்திற்கு முன்னால் மலைப்பாங்கான ஒரு மேடான தேசத்தில் விமலன் என்ற பெயருள்ள ஒரு க்ஷத்ரியன் இருந்தான். அவன் ஆரோக்கியமான வழியில் சென்று கொண்டிருந்தாலும், பூர்வ ஜன்ம பலனாய், குஷ்டரோகியாகி விட்டான்,

ஆனால் அறிவாளியான அவன் மனைவிமக்கள் வீடுவாசல் எல்லாவற்றையும் துறந்து விட்டுக் காசியில் வந்து சூரியனை ஆராதிக்கத் தொடங்கினான்.

அவன் தினம் தளிர்களாலும், துபஹிரியா என்னும் பூவினாலும் (காலையில் மலரும்) பலாச புஷ்பத்தினாலும் சிவப்பான அசோக புஷ்பத்தினாலும், ரக்தகமலம், பாடலீபுஷ்பத்தினாலும், சம்பகபுஷ்பத்தினாலும் சித்ரமாகத்தொடுக்கப்பட்ட மாலையினாலும், குங்குமப்பூ, அகர் இவைகளோடு சேர்ந்த ரக்தசந்தனத்தினாலும்,

பிறகு மிகுந்த வாசனையுள்ள தேவர்களையும் மோஹிக்கச் செய்யும் தூபத்தினாலும் கர்ப்பூரவத்திகளை ஏற்றின தீபத்தினாலும், நெய், பாயஸம் முதலிய நிவேதனங்களினாலும்,

விதிப்படிக்கு அர்க்யம், சூர்யஸ்தோத்திரம் படனம், ஆராதனை இவைகளைச் செய்து வந்தான். இதனால் சூரிய

பகவான் விமலவர்மாவிடம் மிகவும் ஸந்தோஷமாகி ப்ரஸன்னமாகி வரம் கொடுக்கத் தயாரானுர். ஏ நிர்மலமான செய்கைகளையுடையவனே! விமலா! வரம் கேள், உன்னுடைய குஷ்டம் விலகிவிடும், மற்றும் வரங்களைக் கேள்.

பகவான் ரஸ்மிமாலியுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு ஸந்தோஷத்திஞல் புளகாங்கிதமடைந்த சரீரத்துடன் விமலன் பூமியில் விழுந்து நமஸ்கரித்து, மெதுவாக ஒற்றைச் சக்கர ரதத்தையுடைய சூரியனிடம் விண்ணப்பித்துக் கொண்டான். ஏ அபரிமேய ஆத்மன், கோரமான இருட்டை நாசம் செய்பவனே பகவான்,

தாங்கள் என்னுடைய தபஸ்ஸிஞல் ஸந்தோஷமடைந்து, என்னை வரம்கேட்கச் சொல்கிறீர்கள். அதஞல் ஏ நாதா, நான் சொல்கிறேன் தங்களுடைய பக்தர்களுடைய குலத்தில் ஒருவருக்குமே குஷ்ட நோய் வரக்கூடாது.

ஏ ஸஹஸ்ரகிரணு! தங்களுடைய ஸேவார்த்திகளுக்கு வேறு ரோகமும் வரக்கூடாது. ஒருவிதமான தாபங்களும் ஏற்படக் கூடாது.

ஸ்ரீ பகவான் கூறிஞர்: அவ்விதமே ஆகட்டும், ஏ பரமஞானியே விமலா! மற்றொரு உத்தமமான வரத்தைக் கொடுக்கிறேன். அதையும் கேள். காசியில் இருக்கும். என்னுடைய மூர்த்தியை நீ பூஜித்தாய் அல்லவா.

அதஞல் ஹே மஹாமுனியே, நான் இந்த மூர்த்தியில் எப்பொழுதும் ஸாந்நித்யமாக இருப்பேன். இந்த சிலாவிக்ரஹம் உனது பெயரால் பிரஸித்தமாக விளங்கும். அதாவது இதன்பெயர் விமலாதித்யன் என்று இருக்கும். இந்த மூர்த்தி பக்தர்களுக்கு எப்பொழுதும் வரமளிக்கும்; எல்லா ரோகங்களையும் நாசம் செய்யும், எல்லாபாபங்களும் க்ஷயமாகும்.

*இவ்விதம் கூறி பகவான் சூரியநாராயணர் அங்கேயே மறைந்தார். அந்த விமலனும், விமலமான சரீரத்துடன் தனது இருப்பிடம் திரும்பினர்.*

*இந்த விதமாகக் காசியில் விமலாதித்யர் சுபத்தைக் கொடுப்பவராக இருக்கிறுர். தர்சன மாத்திரத்திலேயே குஷ்டரோகம் நாசமடைந்துவிடும்.*

*இந்த விமலாதித்யனுடையக் கதையைக் கேட்டும் ஒருவன் மிகவும் நிர்மலமான புத்தியுடன் இருப்பான். மனத்தில் மலங்களைக் கழுவினவனுக இருப்பான். ( ஸுர்ய மூர்த்தி இருக்கிறுர். அவருடைய பெயர் கங்காதித்யர். அவரைப்பார்த்தவுடனே பரம சுத்தனுகிறேம்.)*

*சக்கரவர்த்தி பகீரதனுடைய ரதத்துக்கு பின்னுல் வந்த கங்காமாதாவைத்துதிக்க அங்கு சூரியன் எழுந்தருளினர்.*

*அன்றிலிருந்து இன்றுவரை பகவான் பாஸ்கரன் கங்கைக்கு முன்னுல் இருந்துகொண்டு, ப்ரஸன்ன மனத்துடன் கங்கையின் பக்தர்களுக்கு வரன் கொடுத்துக் கொண்டு, கங்கையை ஸ்தோத்திரம் செய்து கொண்டு அங்கேயே இருக்கிறுர்.*

*உத்தம புருஷன் ஒருவன் காசியில் கங்காதித்யனை ஆராதனை செய்வானுனுல் அவனுக்கு துர்க்கதியே ஏற்படாது. துரோகமும் அண்டாது.*

*கார்த்திகேயன் பின்னும் கூறுவார். இப்பொழுது யமாதித்யனுடைய அவதாரத்தைப் பற்றிக் கூறுகிறேன் கேளும். அதைக் கேட்பவன் யமலோகத்தைக் கண்ணுல் பார்க்கவே மாட்டான்.*

*ஹே முனிவரா! எந்த யமாதித்யனைப் பார்த்தால் யமலோகத்தைப் பார்க்கமாட்டோமோ, அது யம கட்டத்தில் யமேஸ்வரருடைய மேற்கு பக்கத்தில் ஆத்மநாதர் விஸ்வேஸ்வரருடைய கிழக்கு பாகத்தில் இருக்கிறது.*

*செவ்வாய்க்கிழமையன்று சதுர்த்தி வந்தால் அன்று யமதீர்த்தத்தில் ஸ்னனம் செய்து யமேஸ்வரரைத் தரிசனம் செய்பவன் சீக்கிரமே துளிக்கூடப் பாபம் பாக்கியில்லாமல் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபடுவான்.*

*யமதீர்த்தத்தில் யமராஜன் மிகவும் உக்ரமான தபஸ்செய்து யமேஸ்வரர் என்ற சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து யமாதித்யன் என்று பெயருடைய ஸூர்யமூர்த்தியையும் ப்ரதிஷ்டை பண்ணினர். அது பக்தர்களுக்கு ஸித்தியை யளிக்க வல்லது. (8) யமராஜர் பிரதிஷ்டை செய்ததால் அதற்கு யமாதித்யர் என்னும் பெயர் வந்தது. ஹே கும்பமுனியே! யமாதித்யர் யமயாதனையிலிருந்து நம்மைக் காப்பாற்றுகிறர்.*

*யமதீர்த்தத்தில் ஸ்னனம்செய்து யமராஜனல் ஸ்தாபிக்கப்பட்ட யமேஸ்வரரையும் யமாதித்யரையும் வணங்கியவர் யமலோகத்தைத் தரிசிக்கமாட்டார்கள்.*

*செவ்வாய்க்கிழமையும் பரணிநக்ஷத்ரம் கூடிய சதுர்த்தசியன்று திலதர்பணமும், பிண்டதானமும் செய்தால் பித்ரு கடனிலிருந்து விடுபடுவார்கள்.*

*நரகத்திலிருக்கும் பித்ருக்கள் செவ்வாய்க்கிழமையன்று பரணி நக்ஷத்ரத்துடன் கூடிய சதுர்த்தசியன்று எப்பொழுது, தனது வம்சத்தைக் காக்க ஒரு ஞானவான் காசிக்ஷேத்ரத்தில் யம தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து நமது முக்திக்காக திலதர்பணம் செய்தவனே அப்பொழுது நாம் திருப்தியடைவோம் என்றிருக்கிறர்கள்.*

*கயாசெல்வதினுலும், நிறைய தக்ஷிணை கொடுத்து சிரார்த்தாதிகள் செய்வதைவிடப் பலன் காசியில் மேற்கூறிய யமதீர்த்தத்தில் மேற்கூறிய யோகங்கள் சேர்த்த அன்று சிராத்தம் செய்வதால் கிடைக்கும்.*

*ஒருவன் யமதீர்த்தத்தில் ஸ்னனம் செய்வது, யமமேஸ்வரரை வணங்குவது, யமாதித்யனை நமஸ்கரிப்பதினல் பித்ரு கடன்களிலிருந்து விடுபடுகிறன்.*

*ஸ்கந்தன் கூறுகிறார்: ஏ அகஸ்தியா! நான் உமக்கு பாபங்களை நாசம் செய்யும் பன்னிரண்டு ஆதித்யர்களைப்பற்றிக் கூறினேன். இவர்களைத்தவிர வேறு ரஹஸ்யமாக எத்தனையோ ஆதித்யமூர்த்திகள் காசியில் இருக்கிறார்கள்.*

*இந்த பன்னிரண்டு ஆதித்யர்களின் அத்யாயங்களைக் கேட்டவர்களும், கேட்கச் செய்பவர்களும் ஆன அறிஞர்கள் ஒரு பொழுதும் துர்கதியடையமாட்டார்கள்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான அருணாதித்யர், வ்ருத்தாதித்யர், கேசவாதித்யர், விமலாதித்யர், கங்காதித்யர், யமாதித்யர் இவர்களின் கதாவர்ணனமான*

*ஐம்பத்தொன்றாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 52

*ஸ்கந்தர் கூறுவார்: ஹேமுனியே! சூரியதேவர் த்ரைலோக்ய மோஹினியான காசீபுரிக்குச் சென்ற பிறகு மந்த்ராசலவாஸியான (சிவபிராஞன) பகவான் மஹாதேவர் திரும்பவும் கவலேயுடன் யோசிக்கத் தொடங்கிஞர்- இது என்னவாயிற்று ! இன்று வரை யோகினிகளும் திரும்பவில்லேயே! சூரியனும் திரும்ப வரவில்லே, மிகவும் ஆச்சர்யமாக இருக்கிறதே. எனக்குக் காசியின் ஸமாசாரம் கிடைப்பதே - அரிதாகப் போய்விட்டதே.*

*இது மிகவும் விசித்ரமாக அல்லவோ இருக்கிறது. இந்தக் காசி என்னுடைய த்ருடசித்தத்தையே யல்லவோ சஞ்சலமடையச் செய்கிறது. மற்றவர்களேப் பற்றிக் கூற என்ன இருக்கிறது? த்ரைலோக்ய விஜயன் காமதேவனே நானே எனது நெற்றிக்கண்களின் ஜ்வாலேயிஞல் எரித்துவிட்டேன். ஆஞல் காசியின் பாசம் என்னேயே எரிக்கிறதே!*

*காசியின் ஸமாசாரங்கள் அறிந்துவர இப்பொழுது இங்கிருந்து யாரையனுப்புவது? ப்ரும்மனேயே அனுப்பலாமா? இதையறிந்தவர் பிரும்மாதான். மிகவும் சாதுர்யவான். ஏனென்ருல் அவன் பெயரே சதுரானனன் அல்லவா!*

*இப்படி நிச்சயித்து மஹாதேவர் ப்ரம்மாவை மிக்க மரியாதையுடன் அழைத்துத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டு கூறிஞர்-*

*ஹே! கமலஸம்பவா! நான் முதலாவது யோகினிகளே அனுப்பினேன். பிறகு சூரியனேயும் அனுப்பினேன். இதுவரை அவர்கள் ஒருவரும் காசியிலிருந்து திரும்பவில்லே.*

*இந்தக் காசி என் மனதை மிகவும் துன்புறுத்துகிறது. ஒரு சஞ்சலாக்ஷிக்காக ஒரு சாதாரண மனிதன்*

*ஆசைப்படுகிருனே, அதுபோல் என் மனமும் ஆவல் கொள்ளுகிறது.*

*ஒரு சிறு பள்ளத்தில் ஆழமாகத் தண்ணீர் இல்லாவிடில் ஒரு முதலை அங்கு வசிக்க இஷ்டப்படுமா! அதுபோல் இந்த மந்த்ராசலத்தின் குகை மிகவும் ரமணீயமாக இருந்த போதிலும் அதில் வஸிக்க என் மனம் துளிக்கூட விரும்பவில்லை.*

*முன்னால் நான் காலகூட விஷத்தைக் குடித்தவுடன்கூட எனக்கு இவ்வளவு தாபம் ஏற்படவில்லை. இப்பொழுது காசியின் விரஹம் என்னை மிகவும் துன்புறுத்துகிறது.*

*அதிகம் சொல்வானேன்? எனது சிரஸில் இருக்கும் குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனுக்கும் கூடத் தன்னுடைய அமுதகிரணங்களைப் பொழிந்தும் கூட எனக்கு இந்தக் காசியினால் ஏற்பட்டிருக்கும் விரஹத்தின் தாபத்தைத் தணிக்கும் ஸாமர்த்யம் போதவில்லை.*

*ஏ மஹாமதியே! விதியே! ஸர்வஸ்ரேஷ்டா! நீர் என்னுடைய நன்மைக்காகக் சிறிது சிரமம் எடுத்துச் செல்லும், ஏ, ப்ரும்மன்! நான் எதற்காகக் காசியை விட்டு வந்தேனென்று உமக்கு நன்ருகத் தெரியும். அட! ஒரு முட்டாள் கூடக் காசியை விட்டு வரமாட்டான். எனில் கொஞ்சமாவது அறிவுள்ளவனைப் பற்றி என்ன சொல்வது?*

*ஹே விதாதா! என்னுடைய மாயையின் திறமையினால் நான் இன்றே காசிக்குச் செல்லக் கூடும்; ஆனால் என்ன செய்வது! தர்ம வழியில் செல்லும் திவோதாஸை நான் உதாஸீனம் செய்ய முடியுமா?*

*ஹே விதியே! நீர் எல்லா விதிகளையும் இயற்றுபவர். அதனால் உமக்கு - நீர் அப்படிச் செய்யும், இப்படிச் சொல்லும் என்றெல்லாம் உபதேசிப்பது வீண்.*

*நீர் இடையூறு இல்லாமல் யாத்திரை செய்யும். உம்முடைய வழி மிகவும் சுப பலத்தைக் கொடுக்கக்*

*கூடியதாக இருக்கிறது என்ருர். இந்த விதமாக மஹா - தேவருடைய உத்தரவை சிரமேற்தாங்கி ப்ரம்மதேவர் மிகுந்த ஸந்தோஷத்துடன் காசிக்குச் சென்ருர்.*

*பிறகு வெண்மையான ஹம்ஸத்தை வாஹனமாகவுடைய ப்ரம்மா மிகவும் சீக்கிரமாகக் காசி போய் சேர்ந்து விட்டபடியால் தன்னை க்ருதக்ருத்யராக எண்ணிஞர். அங்கு சென்று தன் மனதிற்குள் சொல்லிக் கொண்டார்-*

*எனக்கு ஹம்ஸவாஹனம் இருப்பது இன்று காசி வந்தடைவதற்கு வெற்றிகரமாக அமைந்தது. ஏனென்ருல் காசி கிடைப்பதற்கு அடிக்கடி அடிக்கு அடி இடையூறுகள் ஏற்படுமென்று சாஸ்திரம் கூறுகிறது.*

*இன்றுதான் நான் என்கண்கள் படைத்த பயனை அடைந்தேன். இந்த ஆனந்தவனமாகக் காசி என்கண்ணிற்குத் தெளிவாகத் தெரிகிறது.*

*ஆஹாஹா! எந்த நகரத்தில் புண்ணிய தீர்த்தவதியான ஸ்வர்க தரங்கினி கங்கை ஓடுகிருளோ, அங்கிருக்கும் மனிதர்களைப் பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? வ்ருக்ஷங்கள் கூட ஆனந்த உருவாகவே காணப்படுகின்றன. எந்தக் காசியில் வேறு தேசங்களிலிருந்து வந்தவர்கள் கூட ஆனந்தத்தைத் தருபவர்களாக இருக்கிருர்களோ?*

*(அன்னிய இடங்களில் விளைந்த பழம் முதலியவைகள் எல்லாம் காசியில் வந்தவுடனேயே ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியவைகளாகின்றன. இந்தக் காசி எப்பொழுதுமே ஆனந்த பூமிதான். ஆகையால் எப்பொழுதும் ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடிய மஹாதேவர் இங்கேயே எழுந்தருளியிருக்கிருர்.)*

*அதஞல் காசியில் ஆனந்தத்தைக் கொடுக்க எல்லா ஜந்துக்களும் ஆனந்த ரூபமாகவேயிருக்கின்றன. எந்தப் புண்ணிய பிராணிகளின் சரணங்கள் விஸ்வநாதருடைய நகரத்தின் பூமியில் உலாவுகிறதோ அந்த சரணங்கள்*

உலகத்திலேயே நடப்பதற்குத் தெரிந்தவைகள். கேட்கிறவர்களுடைய காதுகள் ஒரு தடவையாவது காசியின் பெயரைக் கேட்டிருந்ததானுல் அநேகம் விஷயங்களைக் கேட்டதன் பலனைப் பெறுகிறது. எவன் ஸமஸ்த ப்ரமாணங்களுக்கும் இருப்பிடமென்று நினைக்கிருனே, அவன் தான் இந்த உலகத்தில் எல்லா மஹாத்மாக்களைப் பற்றி சிந்தனை செய்யக் கூடியவன். எந்த புத்திமானுன ஸஜ்ஜனங்கள் தாங்கள் பேசுவதற்கு மஹாதேவருடைய வீடானக் காசியையே தன்னுடைய விஷயமாக எடுத்துக் கொள்கிருர்களோ, அவர்களால் எல்லா விஷயங்களையும் நிச்சயம் செய்யமுடியும்.

கொடுங்காற்றுச் சுழலில் சுற்றும் புல் இவைகளில் எது காசியில் வந்து விழுகிறதோ, அவைகள்தான் நல்லவை. ஜகத்தில் காசியைப் பாராதவர்கள் நல்லவர்களல்ல.

என்னுடைய இரட்டிப்புப் பரிணுமம் உள்ள ஆயுளே இன்று பலனை அடைந்தது. அதனுலேயே இந்த கிட்டுவதற்கு அரிதான காசி எனக்குக் கிட்டியிருக்கிறது.

ஆஹாஹா! என்னுடைய தர்ம சம்பத்துதான் என்னே! என்னுடைய பாக்கியத்தின் கௌரவம்தான் என்னே! வெகு நாட்களாக எதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தேனே, அந்தக் காசியை இன்று பார்க்க முடிந்தது. சிவபக்தி எனும் ஜலதாரையினுல் நீர் பாய்ச்சப்பட்ட என்னுடைய தபோவ்ருக்ஷம் மனேரதம் என்னும் பழங்களால் நிறைந்து இருக்கின்றது.

நான் ஸ்ருஷ்டி செய்ய ஆரம்பித்து அநேகவிதமான ஸ்ருஷ்டிகள் செய்தாகி விட்டன. ஆனுல் விஸ்வநாதரால் நிர்மாணிக்கப்பட்ட இந்தச் காசீ க்ஷேத்ரம் வேறு முறையான ஸ்ருஷ்டியாக இருக்கிறது.

வாராணஸிபுரியைப் பார்த்து ஸந்தோஷத்துடன் ப்ரம்மா வயோதிகப்பிராம்மண ரூபம் எடுத்துக்கொண்டு, அரசனையும் பார்த்தார்.

*கையில் ஜலத்தையும், நனேந்த அக்ஷதையையும் எடுத்துக் கொண்டு ஸ்வஸ்தி வசனம் கூறி பூர்ணமான ஆசீர்வாதங்களேயும் பண்ணிஞர். பிறகு அரசனே நமஸ்கரித்து அவரால் அளிக்கப்பட்ட ஆசஸநத்தில் அமர்ந்தார்.*

*அரசன் திவோதாஸ் ஆசனம் அளிப்பது, எழுந்து நின்று வரவேற்பது முதலிய மரியாதை விசேஷங்கள் செய்து இங்கு தாங்கள் எழுந்தருளியிருப்பதின் ப்ரயோஜனம் என்னவோ என்று வ்ருத்தப்பிராம்மணரைக் கேட்டார்.*

*பிராம்மணன் கூறிஞர்: நான் இங்கு அநேக நாட்களாகத் தங்கியிருக்கும் பழைய காலத்துக் கிழவன், உமக்கு என்னேத் தெரியாது, ஆனுல் எனக்கு உம்மை நன்ருக தெரியும்.*

*நான் நூற்றுக்கணக்கான அரசர்களேப் பார்த்திருக்கிறேன். மிகுந்த தக்ஷிணேகளேக் கொடுப்பவர்கள், அநேக யுத்தங்களே ஜயித்தவர்கள், பெரிய பெரிய யாகங்களேச் செய்தவர்கள், ஜிதேந்த்ரியர்கள்.*

*காமம் முதலிய ஆறு சத்ருக்களே ஜயித்தவர்கள், பரம ஸத்குணசீலர்கள், ஸாத்வீக ஸ்வபாவம் உள்ளவர்கள், சாஸ்திரபாரங்கதர்கள், ராஜ நீதியின் மர்மத்தை அறிந்தவர்கள், தயை தாக்ஷிண்யத்தில் பெரியவர்கள்.*

*ஸத்யவ்ரதத்தில் திடமாக இருப்பவர்கள், பூமியைப் போல் பொறுமையாக உள்ளவர்கள், கம்பீரத்தில் ஸமுத்திரத்தை விட ஆழமானவர்கள்.*

*கோசத்தின் வேகத்தைத் தடுப்பவர்கள், சூரர்கள், பரம ஸௌம்யர்கள், ஸுந்தர ரூபர்கள், கீர்த்தியுள்ளவர்கள், தனம் சேமித்து வைத்தவர்கள், மிகவும் குணஸம்பன்னர்கள். இவர்களேயெல்லாம் நான் பார்த்திருக்கிறேன்.*

*ஆனால் ராஜர்ஷியே! இரண்டு மூன்று உத்தமான குணங்கள் உம்மிடம் இருக்கின்றன. பெரும்பாலும் மற்ற அரசர்களிடம் நான் காணவில்லை.*

*ப்ரஜைகளை உம்முடைய குடும்பமாகவே மதிக்கிறீர், ப்ராம்மணர்களை தேவதைகளாகவே மதிக்கிறீர், தபஸ்ஸை உமக்கு ஸஹாயமாகவே கொண்டிருக்கிறீர். இந்த மாதிரி வேறு ஒரு அரசனும் இல்லை.*

*ஏ திவோதாஸ்! நீரே தன்யர், நீரே மான்யர், உம்முடைய உத்தம குணங்களினால் ஸாது மகாத்மாக்களாலும் பூஜிக்கத் தகுந்தவர். உமக்கு பயந்துகொண்டு தேவதைகளும் கூட கெட்ட வழிகளில் செல்வதில்லை.*

*ஏ அரசே! நாங்கள் விருப்பு வெறுப்பற்ற ப்ராம்மணர்கள், தன்நலத்திற்காக உம்மைப் புகழவில்லை. ஆனால் என்ன செய்வது? உம்முடைய குணங்களுக்கு வசப்பட்டு உமக்கு அதீனர்களானோம்.*

*நல்லது, இந்த வார்த்தைகளினால் ஒரு பிரயோஜனமும் இல்லை. இப்பொழுது நான் வந்த கார்யத்தைக் கூறுகிறேன். ஏ மஹா ராஜனே! நான் யக்ஞம் செய்ய விரும்புகிறேன். அதற்கு நீர் கொஞ்சம் உதவி செய்யவேண்டும்.*

*இந்த உலகத்தில் உம்மாலேயே ராஜ்யங்கள் அரசுரிமை உடையனவாக இருக்கின்றன. ஸமஸ்த ஸம்பத்துக்களுக்கும் தகுதி உள்ளவைகளாக இருக்கின்றன. நான் உம்முடைய ராஜ்யத்தில் ஒரு அற்ப பிரஜையான போதிலும் கூட உம்முடைய ராஜ்யத்தில் நியாயமாக ஸம்பாதித்து காலக்ஷேபம் செய்து வருகிறேன்.*

*உம்முடைய ராஜதானியான இந்தச் காசிபுரி ஸமஸ்த கர்ம பூமிகளுக்குள் (உன்னுடையதே) ச்ரேஷ்டமானது, ஏனென்றால் இவ்விதம் எந்தவிதமான கர்மம் செய்தாலும், பிரளய காலத்தில் கூட அது நாசமடைவதில்லை.*

எவர்கள் இங்கு நல்ல வழியில் ஸம்பாதிக்கிறார்களோ, அதைக் காசியிலேயே செலவு செய்யவேண்டும். இல்லையென்றால், அந்த தனத்தினால் க்லேசமே அனுபவிக்க வேண்டிவரும்.

ஏ பூபாலனே! இந்தக் காசியின் உண்மையான மஹிமையை எல்லோருக்கும் ஞானத்தைக் கொடுக்கும் முக்கண்ணன் மஹாதேவனைத் தவிர வேறு ஒருவரும் அறியமாட்டார்கள்.

நான் அறிந்தமட்டில் நீ மஹாபாக்யவான், அநேக ஜன்மங்களில் சேர்த்த புண்ணிய பலத்தினால் விஸ்வநாதருடைய மற்றொரு வடிவமாக இந்தக் காசியைப் பாலித்து வருகிறாய்.

இந்தக் காசி மூன்று உலகங்களையும்விட மேலான சாரபூமி, மூன்று உலகங்களையும் பிழிந்தெடுத்தரஸம் இதிலேயே மூன்று வர்க்கத்திற்கும் பிற்பாடு மோக்ஷம் கிடைக்கிறது. இப்படியே மஹான்களான ரிஷிகள் நிர்ணயம் செய்திருக்கிறார்கள்.

ஏ அரசனே! விஸ்வநாதருடைய மஹத்தான அனுக்கிரத்தினாலோ அனுக்ரகத்தினாலேயே இந்த நகரை நீ பரிபாலித்து வருகிறாய். ஏனென்றால் இந்தக் காசியில் ஒரு உயிரைக் காப்பாற்றினாலும் மூன்று உலகங்களையும் ரக்ஷிப்பதற்கு ஸமம்.

குற்றமற்றவனே! உனக்கு நன்மை செய்யக்கூடிய மற்றொரு விஷயமும் சொல்லுகிறேன். உனக்கு அது சரியென்று தோன்றினால் அதை அவசியம் செய். அது என்னவென்றால் எல்லாவித கர்மங்களினாலும் பகவான் விஸ்வேஸ்வரரை எப்பொழுதும் சந்தோஷமடையச் செய்.

விஸ்வேஸ்வரரை நீ மற்ற தேவதைகளைப்போல் நினைக்காதே, ஏனென்றால் ப்ரம்மா, விஷ்ணு, இந்திரன், சந்திரன் தேவதைகள் இவர்களை லீலார்த்தமாக சிருஷ்டித்திருக்கிறார்.

*சுபத்தை விரும்பும் பிராம்மணர்களுக்கு அரசர்கள் நன்மையை போதிப்பதே உசிதம். உமக்கு நன்மைசெய்யும் இந்த விஷயத்தைக் கூறினேன். இல்லாவிட்டால் என்னைப் போன்ற சாமான்ய மனிதனுக்கு இதனால் என்ன ப்ரயோஜனம் ?*

*இந்த விதமாகக் கூறி ப்ராம்மணன் மௌனமானதும் அரசனான திவோதாஸன் பதில் கூறினான். உத்தம ப்ராம்மணரே! தாங்கள் இத்தனை தினங்களுக்குப் பிறகு என்னிடம் கேட்க வந்தீர்கள். நீங்கள் சொன்னதை எல்லாம் என் இதயத்தில் பத்திரப்படுத்திக் கொண்டேன்.*

*பிறகு அரசன், நான் தங்களுடைய ஸேவகன். அதனால் தாங்கள் யாகம் செய்ய விரும்பினால் என்னுடைய கஜானாவிலிருந்து வேண்டிய தனம் எடுத்துச் செல்லுங்கள் என்று கூறினான்.*

*ஏ! ப்ரம்மன்! என்னுடைய இந்த ராஜ்யத்தில் உள்ள எல்லா வஸ்துக்களுக்கும் தாங்களே யஜமானன். அதனால் தாங்கள் ஸமாதானமாக யக்ஞத்தைச் செய்யுங்கள். அதற்கு வேண்டுமென்கிற எல்லா சாமான்களும் வந்துவிட்டதாகவே நினையுங்கள்.*

*விப்ரரே! நான் என்னுடையய தன்னலத்திற்காக இந்த ராஜ்யத்தை ஆளவில்லை. நான் எனது புத்திரன், எனது மனைவி, எனது சரீரம் இவைகளால் பரோபகாரம் செய்யவே உபயோகப்படுத்தி வருகிறேன்.*

*பண்டிதர்கள் அரசர்கள் செய்யும் யக்ஞத்தையும் தீர்த்தாடனத்தையும்விட ப்ரஜாபாலனமே முக்யதர்மம் என்று கருதுகிறார்கள்.*

*ஏனென்றால் பிரஜைகளின் தாபமாகிய மூச்சுக்காற்று என்னும் அக்னி இடியிலிருந்து வரும் அக்னியைவிட பயங்கரமானது பாருங்கள். இடி மின்னலிலிருந்து வரும் அக்னி இரண்டு மூன்று பேர்களைத் தான் எரிக்கும். ஆனால் பிரஜைகளுடைய ஸந்தாப அக்னி ராஜகுலத்தையும் அவர்கள் சரீரத்தையும் பஸ்மமாக்கி விடும்.*

*ஏ ப்ராம்மணோத்தமா! நான் யாகங்கள் செய்து முடித்து, அவப்ருத ஸ்னானம் செய்ய விரும்பினால் ப்ராம்மணர்களுடைய சரணோதகத்தாலேயே ஸ்னானம் செய்கிறேன்.*

*ஏ மஹாமதியே! ப்ராம்மணோத்தமா! நான் ப்ராம்மணர்களுக்கு போஜனம் அளிப்பதை யக்ஞ க்ரியைகளைவிட மேலானதாக எண்ணுகிறேன்.*

*என்னுடைய மனதில் எத்தனையோ அபிலாஷைகள் நிரம்பியிருக்கின்றன. அவைகளில் எல்லாம் முக்யமாக விழித்துக் கொண்டிருக்கும் ஆசை என்னவென்றால் என்னுடைய இந்த சரீரத்தை யாசிக்கிறவன் யாராவது வரமாட்டானா என்பதுதான்.*

*ஏ! பிராம்மணோத்தமரே! இன்று என்னுடைய அந்த வரம் நிறைவேறிவிட்டது. தாங்கள் எதை யாசித்துத் தேடி என்னுடைய இருப்பிடம் வந்திருக்கிறீர்கள் ?*

*ஏ! விப்ரா! தாங்கள் ஒரு மனப்பாட்டுடன் மிகவும் தக்ஷிணைகள் கொடுக்கக் கூடிய அநேக யக்ஞங்கள் ஆரம்பியுங்கள். எல்லாவற்றுக்கும் நான் உதவி செய்வதாகவே எண்ணுங்கள்.*

*இந்த விதமாக அந்த மஹாபுத்திமானும் தர்மசாலியுமான திவோதாஸனுடைய வார்த்தையைக் கேட்டு, பரம ஸந்தோஷமடைந்து ப்ரம்மாவானவர் எல்லா ஸாமக்ரியைகளையும் சேர்க்கத் தொடங்கினார்.*

*இந்த விதமாக பரம ராஜர்ஷியான திவோதாஸன் ஸஹாயத்தினால் ப்ரம்மா காசியில் பத்து அச்வமேத யாகங்கள் நடத்தினார்.*

*அந்த யக்ஞ ஹோமத்திலிருந்து கிளம்பிய புகைப்படலங்கள் ஆகாச முழுவதும் வியாபித்து நீலவர்ணமாகிவிட்டன. அன்றிலிருந்து இன்றுவரை அந்த நீலவர்ணம் ஆகாசத்தில் அப்படியே இருக்கிறது.*

*வாராணஸிபுரியில் எங்கு ப்ரம்மா அச்வமேத யாகம் நடத்திஞரோ, அந்த ஸ்தானம் அன்றிலிருந்து இன்றுவரை சுபத்தைக் கொடுக்கும் தசாஸ்வமேததீர்த்தம் என்று பூமியில் ப்ரஸித்தி பெற்றது.*

*முன்பு அந்த தீர்த்தத்திற்கு ருத்ர ஸரோவர் என்று பேர் இருந்தது. பிறகு ப்ரம்மா யக்ஞம் செய்ததிஞல் தசாஸ்வ மேதம் என்ற பெயர் ஏற்பட்டது.*

*அதற்குப் பிறகு அரசன் பகீரதன் கங்கையை அங்கு அழைத்து வர அந்த உத்தம தீர்த்தம் மேலும் பரம பவித்ரமாக ஆயிற்று.*

*பின்பு ப்ரம்மாவும் அங்கு தசாஸ்வமேதேஸ்வரர் என்ற லிங்கத்தை ஸ்தாபிதம் செய்து அங்கேயே இருக்கத் தொடங்கிஞர். இன்றுவரை காசியை விட்டுவிட்டு வேறு எங்கும் செல்லவில்லை.*

*அந்த தர்மசீல அரசஞன திவோதாஸனிடம் ஒரு பலவீனத்தையும் காணுமல் ப்ரம்மா, மஹாதேவருக்கு முன்ஞல் போய் என்ன சொல்லுவார்! என்று யோசித்து, அந்த க்ஷேத்திரத்தின் மகிமையை என்னவென்று சொல்வது? பகவான் விஸ்வேஸ்வரரைத் தியானம் செய்துகொண்டு, ப்ரம்மா அங்கு மற்ஞெரு ப்ரம்மேஸ்வரர் என்ற லிங்கத்தை ஸ்தாபித்து, தன்னுடைய இருப்பிடத்தை ஸ்தாபித்துக் கொண்டார்.*

*காசியே விஸ்வேஸ்வரருடைய மற்ஞெரு மூர்த்தி என்பதையும் ஸ்திரப்படுத்திக்கொண்டார். அதஞல் இதை ஸேவிப்பதஞல் விஸ்வேஸ்வரர் கோபிக்கமாட்டார், என்று கருதிஞர்.*

*அநேக ஜன்மங்களாகச் சேர்த்து வைத்த கர்ம ஸூத்திரங்களை அறுக்கும் காசியை அடைந்து, எந்த புத்தியுடையவன் தான் அதை விடுவான்?*

*உலகின் ஸந்தாபத்தைப் போக்கடிக்கும்*

விஸ்வநாதருடைய சரீரம் காசியின் விரஹாக்னியினுல் மிகவும் தஹித்துக் கொண்டிருக்கிறதென்றுல் அது சரி தான்.

ஸமஸ்த பாபங்களேயும் நாசம் செய்யும் காசியையடைந்து ஒருவன் அதை விட்டுச் செல்வானுனுல் அவன் தனக்கு ஹிதத்தைச் செய்யும் ஒரு பொருளிடமிருந்து முகத்தைத் திருப்பிக் கொள்கிறுன் என்ற காரணத்தினுல் அவனே மனித ம்ருகம் என்றே கூறலாம்.

ஒருவன் ஸம்ஸாரத்தின் துர்கதியை விட்டு மோக்ஷலக்ஷ்மியை அடைய விரும்பி, பரமமேஸ்வரரின் தயையினுல் காசியை அடைந்தானுனுல் அதைவிட்டு ஒருபொழுதும் திரும்பிப் போகக் கூடாது.

ஒரு முட்டாள் காசியை விட்டுவிட்டு வேறு எங்காவது சென்றுனுல் அவனுடைய உள்ளங்கையில் இருக்கும் தர்மார்த்த காமமோக்ஷம் என்னும் நான்குவித பலனும் நழுவி விடும்.

பாபச் சுமைகளே நாசம் செய்யும் மேன்மையான புண்ணியங்களேப் பெருக்குவதும் மோக்ஷ ஸுகத்தைக் கொடுப்பதுமான காசியையும் தியாகம் பண்ணிவிட்டு செல்லக்கூடிய ஒரு துர்புத்தியுடையவன் எங்கேயாவது இருப்பானு ?

காசியில் அரைநிமிஷமாவது தங்கியவனுக்கு என்ன ஸுகம் கிடைக்கிறதோ, அந்த ஸுகம் ஸத்யலோகத்திலும் வைகுண்டத்திலும்கூட எங்கு கிடைக்கும் ?

இந்தவிதமாகக் காசியின் புண்ணிய விஷயங்களே எண்ணி, திரும்ப மந்திராசலத்திற்குப் போக ப்ரம்மா விரும்பவில்லே.

ஸ்கந்தர் கூறினுர்! ஏ!மைத்ரா வருணரே! நான் இப்பொழுது காசியில் எல்லாத் தீர்த்தங்களுக்கும் சிரோமணியான தசாஸ்வ மேதத்தின் மஹிமையை உமக்குக் கூறுகிறேன் கேளும்.

*அந்தப் பரம உத்தமமான தசாஸ்வமேத தீர்த்தத்தில் ஸ்னானம், தானம், ஜபம், ஹோமம், வேதாத்யயனம், தேவபூஜை, ஸந்தியோபாஸனே, தர்ப்பணம், ச்ராத்தம் ஆகிய ஸத்கர்மங்களையும், பித்ருகர்மங்களையும் ஒருவன் செய்தால் அது, அக்ஷயமான பலனைக் கொடுக்குமென்று கூறப்படுகிறது.*

*ஒரு உத்தம புருஷன் ஒரு தரமாகிலும் தசாஸ்வமேத தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து, தசாஸ்வமேதேஸ்வரரை தரிசனம் செய்தானுனால் அவன் பிறகு ஸமஸ்த பாபங்களிலிருந்தும் விடுபடுகிறுன்.*

*ஆனிமாதத்தில் சுக்லபக்ஷ ப்ரதமையன்று இந்த தசாஸ்வமேத தீர்த்தத்தில் ஸ்னானம் செய்தால் ஜன்மபலங்களில் செய்த ஸஞ்சிதபாபங்களும் விலகிப்போய் விடுகின்றன.*

*அதே ஆனிமாதத்து சுக்லபக்ஷத்து த்விதீயையன்று இந்த ருத்ர ஸரோவர தீர்த்தத்தில் ஸ்னானம் செய்வதனுல் இரண்டு ஜன்மங்களில் சேர்த்து வைத்திருக்கிற பாபங்கள் சீக்கிரம் விடுதலையடைந்து விடுகின்றன.*

*இதுபோலவே தசமிவரை ஒவ்வொரு திதியிலும் க்ரமமாக ஸ்னானம் செய்து வருகிற ஸத்ஜனங்கள் ஒவ்வொரு திதிக்கு ஒவ்வொரு ஜன்மத்துப்பாபம் வீதம் தியாகம் செய்கிறுர்கள்.*

*பத்து ஜன்மங்களில் செய்யும் பாபங்களை நாசம் செய்யக் கூடிய தசமி திதியன்று இந்த தசாஸ்வ மேதத்தில் ஸ்னானம் செய்கிறவன் யம யாதனையை அடையமாட்டான்.*

*அதே தசமியன்று தசாஸ்வமேதேஸ்வரரைத் தர்சனம் செய்தால்கூட அவனுடைய பத்து ஜன்மங்களுடைய பாபங்கள் நஷ்டமடைகின்றன. இதில் கொஞ்சம்கூட ஸந்தேஹமில்லை.*

*ஒருவன் தசமியன்று தசாஸ்வமேத தீர்த்தத்தில்*

ஸ்ஞனம் செய்து தசாஸ்வமேதேஸ்வரரை பக்தியுடன் பூஜித்தால் அவன் கர்ப்பத்தில் ஏற்படும் துக்கத்தை ஒருபொழுதும் அனுபவிக்க மாட்டான்.

எந்த மனிதன் ஆனிமாதத்தில் சுக்லபக்ஷந்தோறும் இந்த ஸரோவரத்தில் வருஷயாத்திரை செய்து ஸ்ஞனம் செய்கிருஞே அவனே விக்னங்கள் ஒருபொழுதும் துன்புறுத்தாது.

தசாஸ்வமேதயாகம் செய்து கடைசியில் அவப்ருத ஸ்ஞனம் செய்தால் என்னபலன் ஏற்படுமோ, அந்தப் பலன் தசாஸ்வமேதத்தில் ஒருமுறை ஸ்ஞனம் செய்தவனுக்குக் கிடைக்கிறது.

பரம புண்ணிய புருஷன் ஒருவன் கங்கையின் மேற்குக் கரையிலிருக்கும் சீதளாதேவி கட்டத்தில் எழுந்தருளியிருக்கும் தஸ்கரேஸ்வரரை வணங்கிஞலும்கூடக் கெட்டகாலம் அவனேப் பிடிப்பதில்லே.

காசியில் அந்தர்க்ரஹ யாத்திரையின் தெற்குபாகம் என்று கூறப்படும் இடத்தில் எழுந்தருளியிருக்கும் ப்ரம்மேஸ்வரரை தரிசனம் செய்வதிஞல் ப்ரம்மலோகத்தில் அவனுக்கு மரியாதை கிட்டும்.

ப்ரம்மா இந்தவிதமாக மிகவும் புத்தி சாதுர்யத்துடன்கூட காசீ புரியில் கிழட்டு ப்ராம்மணர் வேஷத்தில் பகவான் விஸ்வநாதர் வரும்வரையில் அங்கேயே இருந்தார். மஹாராஜன் திவோதாஸ் அந்த கிழட்டு ப்ராம்மண வடிவம் கொண்ட ப்ரம்மாவின் யாகங்கள் முடிந்தபின் அவருக்கு ப்ரம்மசாலே என்ற ஆஸ்ரமம் அமைத்தான். ப்ரம்மேஸ்வரருக்குப் பக்கத்திலேயே அந்த மஞேஹரப் ப்ரம்மசாலேயில் ப்ரம்மதேவர் ஆகாயத்தில் எதிரொலிக்கும் வேத கோஷங்கள் ஒலித்துக் கொண்டு அங்கு வஸித்து வந்தார்.

*ஏ முனியே! ஸர்வ பாபங்களேயும் நாசம் செய்யும் மஹாமஹிமை பொருந்திய தசாஸ்வமேத தீர்த்தத்தின் மாஹாத்ம்யத்தை நான் உமக்கு எடுத்துக் கூறினேன்.*

*இந்தப் பவித்ர அத்யாயத்தை ஒரு உத்தம புருஷன் ச்ரத்தையுடன் கேட்டாலுைல் அல்லது மற்ருெருவனுக்குச் சொன்னுல் அவன் ப்ரம்மலோகத்தை அடைவான்.*

*இவ்விதம் ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான ஐம்பத்திரண்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்தியாயம் 53

அகஸ்தியர் கூறினார்: ஏ! ப்ரம்மஞானத்தில் சிறந்தவரே! தங்களிடமிருந்து இந்த அபூர்வ ப்ரம்மகதையைக் கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்தேன். எப்பொழுது ப்ரம்மா காசியிலேயே தங்கி விட்டாரோ? அப்பொழுது மஹாதேவர் என்ன செய்தார்?

ஸ்கந்தர் கூறினார்:- ஏ மஹாபாகா அகஸ்தியா! கேளும்- ப்ரம்மா காசியிலேயே தங்கின பிறகு மஹாதேவர் மிகவும் பரபரப்படைந்து யோசிக்கத் தொடங்கினார்.

இந்தக் காசீபுரி என்ன சித்தத்தை அபகரிக்கும் மோஹினியாக இருக்கிறாளே! இதைப்போன்ற மற்றொரு பூமி எனக்குத் தெரிந்தமட்டில் இந்த பூமண்டலத்தில் வேறெங்கும் இல்லை என்றே கூறலாம் - இது நிச்சயம்.

யார் யார் அங்கு போகிறார்களோ, அவர்கள் அங்கேயே தங்கி விடுகிறார்களே! முதலாவது யோகினியர்கள் போனார்கள். அவர்கள் இதுவரை திரும்பவேயில்லை. பிறகு ஆயிரம் கரங்கள் உள்ள சூரியன் சென்றான். அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை, அதற்குப் பிறகு பலதரப்பட்டகார்யங்களைப்ரம்மா செய்வதிலும் கெட்டிக்காரராக இருந்தும், என்னுடைய காரியத்தை முறையாகச் செய்யமுடியவில்லை.

இவ்விதமான எல்லா விஷயங்களையும் யோசித்து மஹாதேவர் தன்னுடைய கணங்களை அழைத்து, நீங்கள் இப்பொழுதே காசிக்குச் செல்லுங்கள்.

அங்கு சென்று என்னால் அனுப்பப்பட்ட யோகினியர்களும் ஸூர்யனும் ப்ரம்மாவும் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று தேடிப்பாருங்கள்.

இதற்குப் பிறகு பகவான் சம்பு மிக மரியாதையுடனே அவர்களை எல்லோரையும் பெயர்களைச் சொல்லியழைத்துக் கூறலானார். ஏ! சங்குகர்ண! ஏ மஹாகாலரி!

*ஏ! கண்டாகர்ணு, ஏ! மஹோதரா, ஏ! ஸோமா, ஏ! நந்தியே, ஹே நந்தி க்ஷேணனே, ஏ! காலா, ஏ! பிங்களா, ஏ! குக்குடா, ஏ! குண்டோதரா, மயூரநேத்ரா, ஏ! பாணு, ஏ! கோகர்ணு, ஏ தாரகா!*

*ஏ! திலபர்ணு! ஏ! ஸ்தூலகர்ணு! ஏ! த்ருமிசண்ட! ஏ! ஏ! ப்ரபாமயா, ஏ! ஸுகேசா, ஹே பிந்ததி, ஹே சாகா, ஏ! கபர்தியே, ஏ! பிங்களாக்ஷா,*

*ஏ! வீரபத்ரா, ஹே! சிராதா, ஏ! சதுர்முக! ஹே நிகும்பா! ஹே பஞ்சாக்ஷா! ஹே பாரபூதா! ஹே த்ர்யக்ஷணே! க்ஷேமகா, ஹே லாங்கலீ,*

*ஹே! விராதா! ஹே! ஸுமுகா! ஏ! ஆஷாடா! நீங்கள் எல்லோரும் எனக்குப் புத்திரர்கள் போல, கார்த்திகேயனும், கணேசனும் நீங்கள் எல்லோரும் எனக்கு ஒன்றுதான். நான் நைகமேஷேயும், சாகவிசாகர்களேயும், நந்தி ப்ருங்கிகளேயும் எப்படி நேசிக்கிறேனே, அதேபோல் உங்களிடம் ப்ரியம் வைத்திருக்கிறேன். உங்களேப் போன்ற மிக்க பராக்ரமிகள் இங்கு இருந்தும் கூட எனக்குக் காசிராஜா திவோதாஸ், யோகினியர்கள், சூரியன், ப்ரம்மா இவர்களேப்பற்றின ஒரு தகவலும் தெரியவில்லே. இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். உங்களுக்குள் சங்குகர்ணன் மஹா காலன் ஆகிய நீங்கள் இருவரும் காசீவிஷயமறிவதற்காக சீக்கிரமாக இங்கிருந்து செல்லுங்கள் என்ருர்.*

*பிறகு இருவரும் பிரதிக்ஞை செய்துவிட்டு வாராணஸிபுரிக்குப் புறப்பட்டனர். அங்குபோய்ச் சேர்ந்ததும் சங்குகர்ணனும் மஹாகாலனும் இந்த்ரஜாலமான மாயையைப் பார்த்து விட்டு புத்தி மான்களும் க்ஷணநேரம் மோஹமடைவார்களல்லவா! அதைப் போல மஹாதேவரின் ஆக்ஞையை மறந்தே போய்விட்டார்கள்.*

*ஆஹாஹா, மோகத்தின் மகிமைதான் எவ்வளவு இருக்கிறது! பாக்கியத்தின் மாறுபாடுதான் எப்படியிருக்கிறது: முட்டாள்கள் முக்தி ராசியான காசியை அடைந்த பிறகு அங்கிருந்து போகிருர்களே!*

*எவர்கள் இந்த மகத்தான ஆசீர்வதிக்கும் பூமியான காசியை விட்டுச் செல்லுகிருர்களோ; அவர்கள் உள்ளங்கையில் கிடைத்த முக்தியைத் தூர எறிந்தவர்களாவார்கள்.*

*காசியில் வெந்நீரில் ஸ்ஞனம் செய்தாலும், யாகம் முடிந்து அவப்ருதஸ்ஞனம் செய்ததைவிட அதிகமாகப் பலன் கிடைக்கிறது. நன்கு இதைவிட யாரால் கூற முடியும்?*

*எங்கு சிவலிங்கத்தின்மீது புஷ்பத்தை சமர்ப்பித்தாலும் பத்து ஸுவர்ண புஷ்பங்களை சமர்ப்பிக்கின்ற பலன் கிடைக்கிறதோ, அந்தக் காசியை யாரால் விட்டுப் போகமுடியும் ?*

*எங்கு மஹாதேவரின் ஸன்னிதியில் ஸாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணிஞலும் இந்த்ர பதவியே மிகவும் துச்சம் என்று தோன்றுமோ, அவ்விதமானக் காசியை யாரால்தான் விட்டு விட்டுப் போக முடியும் ?*

*எந்தக் காசியில் ஒரு ப்ராம்மணனுக்கு அறுசுவையோடு உணவளித்தாலும் வாஜபேய யக்ஞத்தின் பலன் கிடைக்கிறதோ, அந்தச் காசியை யார்தான் விட்டுவிட்டுச் செல்வார்கள்?*

*எந்த ஸ்தானத்தில் ஒரு ப்ராம்மணனுக்கு விதிப்படிக்கு ஒரு கோதானம் செய்தால் பத்தாயிரம் பசுக்களை தானம் செய்த புண்ணியம் கிடைக்குமோ, அந்தக் காசியை விட்டுவிட்டு எந்த புத்திசாலிதான் திரும்புவான் ?*

*எங்கு ஒரே ஒரு சிவலிங்கத்தைப் ப்ரதிஷ்டை செய்தால் அகிலப்ரம்மாண்டங்களையும் ப்ரதிஷ்டை செய்த*

*பலன் கிடைக்கிறதோ, அந்தக் காசியை யாரால் தான் விடமுடியும் ?*

*அவர்களிருவரும் தங்களுக்குள் இவ்வாறு பேசிக்கொண்டு புண்ணியத்தை அளிக்கும் இரண்டு சிவலிங்கங்களைப் ப்ரதிஷ்டை செய்து அங்கேயே வஸிக்கத் தொடங்கினார்கள். இன்றுவரை அவர்கள் காசியை விட்டுப் போகவில்லை.*

*சங்கு கர்ணன் என்னும் பெயருடைய சிவகணத்தினால் பூஜிக்கப்பட்ட சங்கு கர்ணேஸ்வரர் என்ற பெயருடைய லிங்கத்தை தரிசனம் செய்த ஒரு ஜந்துவானாலும் மாதாவின் உதரத்தில் மறுபடியும் ஜனிக்காது.*

*பகவான் விஸ்வநாதருடைய வாயுகோணத்தில் சங்கு கர்ணேஸ்வர சிவலிங்கம் இருக்கிறது. அதைப் பூஜிப்பவன் இந்த கோர ஸம்ஸார ஸாகரத்தில் விழமாட்டான்.*

*இதுபோலவே மஹாகாளன் என்ற பெயருடைய சிவகணத்தினால் பூஜிக்கப்பட்ட சிவலிங்கத்தை ஸ்கந்தர் கூறுவார்: இதற்குப் பிறகு சங்குகர்ணனும் மஹாகாலனும் திரும்பிவராமல் தாமதிப்பதைக் கண்ட ஸர்வக்ஞரான மஹாதேவர் அவர்கள் திரும்பாத காரணத்தையறிந்து, மற்றும் இரண்டு கணங்களையனுப்பிவிட்டு அவர்களிடம் கூறினார்:*

*ஏ! மஹாமதி வாய்ந்த கண்டாகர்ணா! மஹோதரா! நீங்கள் இருவரும் சீக்கிரம் காசிக்குக் கிளம்பிச் சென்று அங்குள்ள வ்ருத்தாந்தங்களை நன்றாக அறிந்து திரும்பி வாருங்கள்.*

*ஏ அகஸ்தியா! அவர்களிருவரும்கூடக் காசிக்குச் சென்றார்கள், அங்கேயே தங்கினார்கள், இன்றுவரை திரும்பவில்லை.*

இந்த கணங்களில் சிறந்தவனுன கண்டாகர்ணன் காசியில் கண்டாகர்ணேஸ்வரர் என்ற சிவலிங்கத்தை ஸ்தாபித்து, அவருக்கு அபிஷேகம் செய்வதற்காக கர்ண - கண்டா என்னும் பெயருள்ள ஒரு குண்டத்தையும் ஏற்படுத்தி, அதே இடத்தில் சிவனைத் த்யானம் செய்துகொண்டு, இன்று வரை காசியிலிருந்து திரும்பாமல் அங்கேயிருக்கிறுர்.

ஓ பிராம்மணோத்தமா! அகஸ்தியரே! காசியில் ஒருவன் மஹோதரேஸ்சவரரை ஆராதனம் செய்தால் அவன் திரும்பவும் மாதாவின் உதரரூபமான குகையில் ப்ரவேசிக்க மாட்டான்.

கண்டாகர்ண குண்டத்தில் ஸ்ஞனம் செய்யவேண்டும், பகவான் வ்யாஸேஸ்வரரைத் தரிசிக்கவேண்டும். இவர்கள் காசியில் எவ்விடத்தில் இறந்தாலும் மறுபடியும் பிறக்க மாட்டார்கள்.

இந்த கண்டாகர்ண தீர்த்தத்தில் விதிபூர்வமாக ச்ராத்தம் செய்பவர்கள் தங்களுடைய ஏழு தலைமுறை முன்னோர்களையும் அவர்கள் நரகத்தில் விழுந்திருந்தாலும் உத்தாரணம் செய்து விடுகிறுர்கள். இன்று வரைக்கும் இந்த குண்டத்தில் மூழ்கி எழுந்து க்ஷணநேரம் சித்தத்தை ஏகாக்ரப்படுத்தி காதுகொடுத்துக் கேட்டோமானுல் விஸ்வநாதருடைய பெரிய ஹாரத்தி மணியின் சப்தம் கேட்கும்.

பித்ருக்கள் அடிக்கடி நம்முடைய குலத்திலிருந்து கண்டாகர்ண குண்டத்து நிர்மலமான ஜலத்தில் நமது குலத்துக்குத் தண்ணீர் இறைக்கமாட்டானு என்று பித்ருக்கள் சொல்வார்களாம்.

ஏ! கும்பமுனியே! காசியில் யாருடைய வம்சத்தில் கண்டாகர்ண என்னும் பெயருள்ள மஹத்தான ஸரஸ்ஸில் ஜலதர்பணம் செய்தானுனுல் அவர்கள் முன்னவர்களைப் போல பரம ஸித்தியடைவார்கள்.

*ஸ்வாமி கார்த்திகேயர் கூறினர். கண்டாகர்ணன் மஹோதரன் இந்த இருவரும் சென்ற பிறகு, சிலநாட்கள் சென்றதும் திரும்பவும் மஹாதேவர் அடிக்கடி தலையை அசைத்துக் கொண்டு ஆச்சர்யப்படத் தொடங்கினர்.*

*திரும்பத் திரும்பச் சிரித்துக் கொண்டு தனக்குள்ளேயே சொல்லத் தொடங்கினர். ஏ! காசீ! நீ மஹா மோகினி வித்தையடீ, இதை நான் நன்ருக அறிவேன்.*

*பழைய காலத்தவர் உன்னை மஹாமோஹத்தை அபஹரிக்கிறவள் என்று கூறுவார்கள். ஆனல் நீ மஹா மோஹத்தைக் கொடுக்கிறவள் என்று அவர்களுக்குத் தெரியாது.*

*நான் யார் யாரையெல்லாம் இங்கிருந்து அனுப்புகிறேனே அவர்களையெல்லாம் நீ மோஹமடையச் செய்கிருயே காசீ! நீ மோஹிக்கச் செய்யும் ஓஷதியென்று உன்னை நான் மிக நன்ருக அறிவேன்.*

*ஆனல் என்னல் முடியும் மட்டும் எல்லாரையும் அனுப்பிக் கொண்டுதான் இருப்பேன். ஏனென்ருல் அறிவுள்ளவர்கள் தங்களால் முடியுமளவும் முயற்சி செய்வதிலிருந்து நீங்க மாட்டார்கள்.*

*எந்தக் காரியமானலும் சரி. புத்திமான்கள் முயற்சி செய்வதிலிருந்து பின்வாங்க மாட்டார்கள். விடாமல் முயற்சி செய்து வந்தால் ப்ரதிகூலமான விதியும் அனுகூலமாகும். முயற்சியிலிருந்து விலகாதீர்கள் என்பது ஞானியின் வார்த்தை.*

*இதற்கு உதாஹரணம் சந்திரனும் ஸூர்யனும் தான். வழியில் ராஹு வந்து விழுங்கினலும் ஆகாசமண்டலத்தில் தாங்கள் போய்ச் சேரவேண்டிய இடம் வரைக்கும் நடுவில் ஓரிடத்திலும் தங்குவதில்லை.*

*உலகத்தில் ஒருபக்கம் தெய்வ யோகம் ப்ரதிகூலமாகி அடிக்கடிகார்யங்களைக் கெடுத்துக் கொண்டிருக்கிறது. அடுத்தபக்கம் விடாமுயற்சியினால் எல்லா கார்யங்களும் தானே வெற்றி பெறுகின்றன.*

*பூர்வ ஜன்மத்தில் செய்த கர்மங்களையே ஆதிதெய்வீகமென்கிறார்கள். அதனால் புத்திமான்கள் அதை விலக்குவதற்கு எப்போதும் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும்.*

*தட்டில் பரிமாறப்பட்ட உணவு தானே தெய்வஸஹாயம் கொண்டு வாயில் நுழையாது. ஆம்! கையாலேயும் வாயாலேயும் முயற்சி செய்த பிறகு தான் அது வயிற்றினுள் செல்லுகிறது.*

*விஸ்வநாதர் இந்த விதமாக, முயற்சியே தெய்வயோகத்தை ஜயிக்கக்கூடியது என்பதை உறுதிப்படுத்திக்கொண்டு, ஸோமநந்தி, நந்திஷேணன், காலன், பிங்களன், குக்குடன் என்னும் ஐந்து வேகமாகச் செல்லும் கணங்களையும் அனுப்பினார்; அவர்களும் காசிக்குச் சென்று மரணமடைந்தவர்களைப்போல, இன்றுவரை திரும்பவில்லை.*

*அவர்களும் உலகத்தில் மோக்ஷத்தைக்கொடுக்கும் ஜன்ம பூமியான காசியில் மஹாதேவரின் ப்ரீதியின் பொருட்டுத்தங்கள் தங்கள் பெயரால் ஐந்து லிங்கங்களை ஸ்தாபித்து அங்கேயே இருந்தார்கள். பக்திமான்கள் ஆனந்தவனத்தில் ஸோம நந்தீச லிங்கத்தைத் தரிசனம் செய்வதினால் பரமானந்தத்தை அடைகிறார்கள்.*

*அதற்கு வடபாகத்தில் நந்திஷேணேஸ்வரருடைய தரிசனத்தினால் மனிதன் ஆனந்தத்தையே பக்கபலமுடைய ஸேனையாகக் கொண்டு க்ஷண நேரத்தில் ம்ருத்யுவை ஜயித்து விடுவார்கள்.*

*கங்கையின் வடமேற்கு பாகத்தில் காலேச்வரரை வணங்கிஞல் கால பாசத்தில் கட்டுப்பட வேண்டும்.*

*காலேஸ்வரரிலிருந்து சற்று வடக்குப் பக்கம் தள்ளி பிங்களேஸ்வரர் இருக்கிறுர். அவரைத் தர்சிப்பதிஞல் பிங்கள ஞானம் கிடைக்கிறது. அதாவது ஹடயோகி ஆகிறுன். அதில் தன்மயமாகிறுன்.*

*கோழி முட்டை வடிவத்தில் இருக்கும் குக்குடேஸ்வரரை பக்திபண்ணிஞல் ஸம்ஸாரத்தில் பிறகு கர்ப்பவாஸத்து துக்கத்தை அனுபவிக்க வேண்டாம்*

*ஸ்கந்தர் கூறுவார்:- ஏ! முனியே! ஸோமநந்தன் முதலிய ஐந்து கணங்களும் காசி சென்று தாமதித்தால் அவர்களேயும் சிவபிரான் என்றே மதிக்கிறுர்கள்.*

*யோசித்துப் பார்த்தால் இதுநமது கார்யமேயாகும். இதே சிவபதவி பெற்றே இவர்கள் எல்லோரையும் ('எனது ஜனங்கள்' என்று சிவபிரானே கூறிஞர்.) அங்கு சென்று வஸிக்கிறுர்கள்.*

*மாயையிலும் பராக்ரமத்திலும் எனக்கு ஸமமான இந்தக் கணங்கள் காசியில் நுழைந்து இருப்பதால் நானே அங்கு இருப்பது போல் தோன்றுகிறது. இதில் கொஞ்சமும் ஸந்தேஹமேயில்லே.*

*நான் வரிசைக்ரமமாக என்னேச் சேர்ந்தவர்களேயே அங்கு அனுப்பி விடுகிறேன். இவர்கள் எல்லோரும் சென்ற பிறகு நானும் செல்வேன்.*

*மஹாதேவர் இப்படி மனதில் யோசித்து, குந்ததேவன், மயூரன், பாணன், கோகர்ணன் இந்த நால்வரையும் திரும்பவும் அனுப்பிஞர். அவர்களும் மாயை வசத்தால் காசியில் சென்று நுழைந்தனர்.*

*ராஜா திவோதாஸை ப்ரமையடையச் செய்வதற்கு இந்த கணங்கள் நூற்றுக்கணக்கான உபாயங்களேக்*

கையாண்டார்கள். ஆனுல் ஒன்று கூடப்பலிக்கவில்லே. பிறகு அவர்கள் ஸாமர்த்யமில்லேயெனக் கண்டு, அங்கேயே வஸிக்கத் தொடங்கினுர்கள்.

எத்தனே அபராதங்களே இழைத்திருந்தாலும் ஸ்வாமி எந்த கர்மத்தைச் செய்தால் ஸந்தோஷமடைவாரோ, அந்த லிங்க ஆராதனேயிலேயே அவர்கள் தத்பரர்கள் ஆனுர்கள்.

ஏனென்ருல் இந்தக் காசியில் விதிப்படிக்கு ஒரு சிவலிங்கத்தையாவது பூஜை செய்தால் பகவான் சிவபிரான் நூற்றுக்கணக்கான அபராதங்களே க்ஷமிப்பதுடன் மோக்ஷத்தையும் அருளுகிருர்.

மஹாதேவர், யக்ஞம், தானம், தவம் இவைகளினுல் ஸந்தோஷப் படுவதைவிட விதிப்படிக்கு ஒரு தடவையாவது சிவலிங்கத்தைப் பூஜை செய்வதினுல் அதிக ஸந்தோஷம் அடைகிருர். எவனெருவன் லிங்கார்சனே விதிகளே நன்கு அறிந்து எப்பொழுதும் சிவலிங்கத்தைப் பூஜை செய்வதில் ஈடுபட்டு இருந்தானுனல் அவன் முக்கண்ணனேயாவான்.

ஒரு தடவையாவது சிவலிங்கத்தைப் பூஜித்து ஒருவன் என்ன பலனேயடைகிருனே, அந்தப்பலன் நூற்றுக்கணக்கான ஸ்வர்ண தானம் கோதானம் செய்தாலும் கிடைக்காது.

நித்யம் சிவலிங்கத்தைப் பூஜை செய்வதினுல் கிடைக்கக்கூடிய பலன் அஸ்வமேதம் முதலிய யக்ஞங்கள் செய்தாலும் கூடக் கிடையாது.

ஒருவன் விதிமுறைப்படி சிவலிங்கத்தைப் பூஜைசெய்து அந்தத் தீர்த்தத்தை மும்முறை ஆசமனம் செய்தானுனல் அவனுடைய உலகாயதமான மூன்று விதமான பாபங்களும் சீக்கிரமே நாசமாகும்.

ஒருவன் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்த ஜலத்தை ஒரு முறை தலேயில் தெளித்துக் கொண்டானுனல்

*அவனுக்கு கங்கையில் ஸ்னனம் செய்த பலன் கிடைக்கிறது.*

*ஒருவன் பூஜை செய்து முடித்தவுடன் சிவலிங்கத்தை ஒரு தடவையாவது வணங்கினுல் அவன் திரும்பவும் சரீரம் எடுப்பான் என்பது ஸந்தேஹம்.*

*இங்கு ஒருவன் சிவலிங்கத்தைப் ப்ரதிஷ்டை செய்தானுனுல் அவனுக்கு ஏழு ஜன்மங்களாகச் செய்த பாபம் நீங்குகிறது. அத்துடன் ஸ்வர்கத்துக்கும் பங்கு தாரகிருன்.*

*ப்ரமத கணங்கள் இவ்வாறு யோசித்து யஜமானனின் கோபத்தை சமனம் செய்து தங்கள் தங்கள் நாமங்களின் பெயரால் லிங்கங்களை ஸ்தாபித்தார்கள்.*

*லோலார்க்கரின் ஸமீபத்தில் குண்டோதரேஸ்வரரை தர்சித்தால் எல்லாப் பாபங்களும் நீங்கி சிவலோகத்திலும் பூஜிக்கப்படுகிருன்.*

*அதே குண்டேஸ்வரலிங்கத்தின் மேற்கு பக்கத்திலிருந்து அஸிநதிக்கரையில் எழுந்தருளியிருக்கும் மயூரேஸ்வரரைப் பூஜை செய்தால் தாயின் உதரவேதனையை ஸஹிக்க வேண்டாம்.*

*இதைப் போலவே பாணேஸ்வரர் என்னும் மஹாலிங்கத்தைக் கேவலம் தரிசனம் செய்வதினுலேயே எல்லாப் பாபங்களும் விலகிப் போய்விடுகின்றன.*

*காசியில் அந்தர் யாத்திரையில் மேற்கு பக்கத்தில் கோகர்ணேஸ்வரர் என்னும் பெரியலிங்கம் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. அதைப் பூஜை பண்ணுவதால் காசியில் ஒருவித விக்னமும் ஏற்படாது.*

*கோகர்ணேஸ்வரருடைய பக்தனுக இருப்பவனுக்கு மரணம் எந்த இடத்தில் ஏற்பட்டாலும் சரி, நல்ல அறிவு நிலையிலேயே அவனுக்கு மரணம் ஏற்படும்.*

*ஸ்வாமி கார்த்திகேயர் கூறுவர்: ப்ரமதநாதரான சிவபிரான் இந்த நான்கு கணங்களும் திரும்புவதற்கு வெகு தாமதம் ஆவது பார்த்துவிட்டு, காசீபுரியை இடைவிடாது வர்ணிக்கத் தொடங்கினுர்.*

*உலகத்தை மோஹமடையச் செய்யும் இந்தக் காசி அண்டப்ரம்மாண்டங்களேயும் சுழலச் செய்துவிட்டு ஆட்டுவிக்கும் விஷ்ணுவின் மாயாமூர்த்தியே ஆகும், இது ஸத்யம்.*

*ஜனங்கள், ஸஹோதரர்கள், பந்துக்கள், மனேவிமக்கள், நிலம், நீச்சு, வீடு, வாசல், தனம் இவைகள் எல்லாவற்றையும் துறந்து விட்டு கேவலம் மரணமடைவதற்கென்றே காசீவாஸம் செய்கிருர்கள்.*

*பின்னும் எந்தக்காசியில் ஜனங்கள் மரணமடைவதற்குக் கொஞ்சம் கூடப் பயப்படுவதில்லேயோ, அங்கு சென்று நிரந்தரமாக வாழும் எனது கணங்கள் பின் எனக்கேன் பயப்படுகிருர்கள்!*

*எங்கு மரணமடைவது மங்களமோ, எங்கு விபூதி தரித்துக் கொள்வது தேஹத்திற்கே பூஷணமோ, எங்கு கௌபீனமே உத்தமப் பட்டுவஸ்திரமோ, அந்தக்காசிக்கு உவமை எங்கேயிருந்து எவ்வாறு கொடுப்பது?*

*எங்கு ஸ்ரீமதி முக்திரமணி பிணத்தை பூஷணங்களிஞல் அலங்கரிக்கிருளோ, தரித்திரஞே, அரசஞே, ப்ராம்மணஞே, சண்டாளஞே எல்லோரையும் ஒரே பாவத்தோடு வரித்துக் கொள்கிருளோ. அந்தக் காசிக்கு ஸமானமாக எதைக் கூறுவது ?*

*எங்கு இந்திரன் முதலிய தேவகணங்கள் மரணமடைந்து, முக்திபதத்திற்கேகும் ஜீவர்கள் இவர்களுக்குக் கோடியில் ஒரு அம்சம் கூட ஆகார்களோ, எந்தக்காசியில் மரணமடைந்தால் ஒரு சிறிய ஜந்துவாஞலும் ப்ரம்மா, விஷ்ணு முதலிய*

*தேவதைகளினுல் மிகவும் மர்யாதையுடன் வணங்குவதற்கு அர்ஹதையாகிறதோ, எந்த நகரத்தில் பிணமும் அபவித்ரமாகாதோ, அந்தப் பிணத்தினுடைய காலே நான் கூடத் தொடுகிறேன்.*

*ஒரு புண்ணியாத்மா இரண்டு மூன்று முறை காசி, காசி என்று சொன்னுல் பவித்ரவான்களுக்கு மேலே மஹாபவித்ரவானுவான்.*

*எவனொருவன் இந்தக் காசியை த்யானிக்கிருனே அவன் என்னையே த்யானித்து ஸேவிக்கிறவனுகிருன்.*

*எவனொருவன் வ்யாகுலமற்ற சித்தத்துடன் காசியை ஸேவிக்கிருனே அவனே மிகவும் ச்ரத்தையுடன் என்னுடைய ஹ்ருதயத்தில் தியானிக்கிறேன்.*

*ஒருவன் ஸ்வயம் காசியில் வஸிப்பதற்கு அசக்தனுனுலும் - அக்காசியில் வஸிக்க விரும்பும் ஒருவனுக்கு ஜீவிதத்திற்கு உபகாரம் செய்கிருனே நிச்சயமாக அவன் காசியில் வஸித்தவனுடைய புண்ணியத்தைப் பங்கு கொள்கிருன்.*

*எந்த தைர்யசாலி காசியில் மரணபர்யந்தம் வஸிக்கத் தீர்மானித்திருக்கிருனே, அவனே ஜீவன் முக்தன் என்றே கூறவேண்டும். அவன் எல்லோராலும் வந்திக்கத் தகுந்தவனுகவும் பூஜிக்கத் தகுந்தவனுகவும் இருக்கிருர்.*

*இந்த விதமாக மஹாதேவர் அநேகவிதமாகக் காசியைப் பற்றி எண்ணி எண்ணி மற்ற கணங்களே அழைத்து அன்புடன் காசிக்கு அனுப்பினுர்.*

*களங்கமில்லா மனதுடைய தாரக தர்மத்தை அனுஷ்டிக்கும் திவோதாஸ் காசியை ஆண்டு வருகிருர். அங்கு நீங்கள் செல்லுங்கள்.*

*ஏ! திலதர்ப்பண! ஸ்தூலகர்ண, ஹே! த்ருமி! சண்ட, ப்ரபாமய, ஸுகேச, பின்ததே, சாக, கபர்தின், பிங்களாக்ஷ,*

*வீரபத்ர, கிராத, சதுர்முக, பஞ்சாக்ஷ, பாரபூத, த்ரயக்ஷ, க்ஷேமக, லாங்கலின், விராத, ஸுமுக, ஆஷாட, நீங்கள் தனித் தனியாக அங்கு செல்லுங்கள். கார்த்திகேயர் கூறுவார்: இந்த எல்லா ஸ்வாமி பக்தரான மகாத்மா - த்ருட பிரதிக்ஞரான கணங்கள் ஸ்வாமியின் ஆதேசத்தைப் பெற்றுக் காசி சென்று அநேக விதமாக மாயை செலுத்தி, அநேக விதங்களான உருவத்தை எடுத்து ஏகாக்ரசித்தர்களாக ராஜா திவோதாஸருடைய பலவீனத்தைத் தேடிக்கொண்டு அங்கு இருக்கிறார்கள்.*

*ஆனால் அரசர்களிடத்தில் ஒரு குற்றத்தையும் காணமல் தங்களுடைய புகழ், கீர்த்தி இவைகளையே இழந்தவர்களாக, 'சீ' இது என்னவென்று கூறி, தன்னைத் தானே இகழ்ந்து கொண்டார்கள் - கணங்கள்.*

*தினமும் நம் ஸ்வாமியிடம் புகழ்மாலை சூட்டிக்கொள்ளும் நமக்கு இப்பொழுது என்ன நேர்ந்தது? சீ, சீ என்ன இளப்பம், இளப்பம், நாம் இங்கு கேவலம் ஒரு மனிதனையும் வசப்படுத்த முடியவில்லையே.*

*பிரபு த்ரிநயனனிடமிருந்து தனம் புகழ்ச்சி இவைகளை பெற்றப் பிறகும் அவருடைய கார்யத்தை நடத்த முடியாதவர்களானோமே. 'இழிவு, இழிவு' இந்த தயாளுவான யஜமானருடைய கார்யத்தில் அஜாக்கிரதையாக இருக்கும் நமக்கு என்ன கதிதான் ஏற்படும்! நிச்சயமாக நாம் எல்லோரும் அந்தகார மயமான உலகில் வஸிக்கவேண்டி வரும்.*

*காலுடன் கையுடன் சக்தியுடன் இருக்கும்போதே ஸ்வாமியின் காரியத்தை முடிக்க முடியவில்லையே. அடிக்கடி நாம் அந்த விஷயத்தில் தோற்கவல்லவா செய்கிறோம்.*

*ஹே! ம்ருத்யுகணங்களே, முதலாவதாக ஸ்வாமியிடம் ஸத்காரம் பெற்று கார்யங்களில்*

படாடோபம் காண்பித்து, டம்பப்படும் ஜனங்களுடைய எண்ணங்கள் ஒருபொழுதும் பூர்த்தியாகாது.

ஸ்வாமியுடைய கார்யத்தை முடிக்காமல் எந்த முகத்தைக் கொண்டு யஜமானரைப் பார்ப்பது? நாம் இப்போது பூமியில் அவளுக்குப் பாரமேயாகும்.

பெரிய பெரிய பர்வதங்கள், ஸமுத்ரங்கள் வ்ருக்ஷங்கள் இவைகள் பூமிதேவிக்குப் பாரமில்லை. ஆனால் யஜமானத் துரோஹியின் பாரம் சுமக்க முடியாமல் அமுங்கிப் போய்விடுகிறாள்.

நமக்கு இந்தச் சமயம் புராணத்திலுள்ள பழையகதை ஞாபகத்திற்கு வருகிறது. அந்தக் கதையின் அர்த்தத்தை ஆதாரமாகக் கொண்டு, இந்தக் காசியிலேயே இருந்து விடுவோம்.

புண்ணியமும் சேர்த்து வைக்க முடியவில்லை, தனத்தையும் ஆயுளையும் பெருக்கமுடியவில்லை. அந்த அசக்தர்களுக்கு கதி வாராணஸிபுரியேயாகும்.

பாபச்சுமையினால் தளர்ந்தவரும் அந்த பாபத்தின் காரணத்தால் ஏற்படும் துன்பத்தினால் நானாவிதமாகக் கலங்கியவரும் ஆன நமக்கு காசிபுரியே கதி.

ஸ்வாமித்ரோஹீ, நன்றி கொன்றவன், நம்பிக்கைத்ரோஹீ இவர்களுக்குக் காசியை விட்டால் வேறு கதி ஏது? (வேறு தங்குமிடம் ஏது?)

இந்தவிதமாகப் புராணம் கூறியிருக்கும் வார்த்தையை அனுஸரித்து அரசன் திவோதாஸன் கண்பார்வைக்கு மறைந்து கொண்டு அங்கேயே வஸிக்கத் தொடங்கினார்கள்.

மிகவும் புத்திமானான அரசன் சிவபிரானுடைய ப்ரபாவத்தால் அவருடைய பூத கணங்கள் காசியில் மறைந்திருக்கும் செய்தியை அறியமுடியவில்லை.

இதில் அதிசயம் என்னவிருக்கிறது? சித்ரகுப்தருக்கே காசியின் போக்கு, கண்டுபிடிக்கமுடியவில்லையே, கணக்கில் அடங்கவில்லையே, மற்றபடி மிகுந்த லோகவாஸிகளான வெறும் மனிதர்கள் எப்படியறிவார்கள்?

எவர்கள் இங்கு லிங்கஸ்தாபனம் பண்ணி அளவில்லாத தேஜஸ்ஸுடன் இருக்கும் அவர்களை தர்மராஜர்கூட ஸந்திக்க முடியவில்லை.

ஹே! கும்பமுனியே! இந்தவிதமாக அந்தச் சிவகணங்களெல்லாம் ஆராதித்து, மங்களகரமான காசியைவிட்டு இன்று வரை நீங்கவில்லை.

ஹே! முனிச்ரேஷ்டனே, கணங்களில் சிறந்த தாரகன் பிரதிஷ்டை செய்த தாரகேஸ்வரரை ஸேவித்தவர்களுக்கு தாரக ஞானம் கிட்டும். இன்றுவரை, அதைப் பூஜை செய்கிறார்கள்.

உத்தம பக்தன் தாரகேஸ்வரலிங்கத்தை பக்தி பண்ணினால் அவனுக்கு எளிதாக தாரக ஞானம் கிடைக்கிறது.

திலபர்ண கணனால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டதில் பர்ணேஸ்வரரை எள்ளத்தினையாவது மனதில் இருத்தி தரிசித்தால் பாபம் இருக்காது ஓடிவிடும்.

அதுபோல் ஸ்தூல கர்ணேஸ்வர லிங்கத்தைப் பூஜித்தால் மனிதர்கள் துர்கதியடைய மாட்டார். பரம உத்தமான புண்ய லாபத்தையடைவார்கள்.

இதற்கு மேற்பக்கத்தில் த்ருமிசண்டேஸ்வரர், ப்ரபாமயேஸ்வரர் என்ற இரண்டு லிங்கங்கள் இருக்கின்றன.

எவரொருவர் இந்த ப்ரபாமயேஸ்வரரைத் தரிசனம் செய்து, வேறு எங்காவது சென்று இறந்தாலும் அவர்கள் ப்ரகாசமான விமானம் ஏறி சிவலோகத்தை அடைவர்.

*ஹரிகேசம் என்னுமிடத்தில் ஸுகேஸ்வரர் என்னும் லிங்கம் உள்ளது. அதைப் பூஜிப்பவனுக்கு, தோல், மாம்சம், உதிரம், நரம்பு, எலும்பு இத்யாதிகளை அடிக்கடி சுமக்க நேரிடாது.*

*பூமசண்டிக்கு ஸமீபமாக பிந்ததீஸ்வரர் என்னும் சிவலிங்கம் இருக்கிறது. அதைப் பூஜிப்பவர் மஹத்திலும் மஹத்தான பரமபதத்தையடைந்து மோக்ஷமெய்துவர்.*

*இந்த ஸமயத்தில் பித்ரீச்வரர் என்பவர் சிவனுடைய ஸமீபத்தில் இருப்பவரான சாளகேஸ்வரரை தர்சனம் செய்வதினுல் ம்ருகத்தைப்போல் இயற்கை பாபங்களையனுபவிக்க மாட்டான்.*

*இவ்விதம் ஸ்கந்தபுராணம் நான்காவது காசீகண்டத்தில் உத்தரார்க்க பாஷாடீகாவான காசீமகாத்மியம் என்னும் கணங்களின் வர்ணனை என்ற 53-வது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்தியாயம் 54

*மஹாதேவருடைய கணங்களில் அவருக்குப் பிரியமான கபர்தி எனும் பெயருடைய தலைவன் பிகீஸ்வரருடைய வடக்கு பக்கத்தில் ஒரு சிவலிங்கத்தை பிரதிஷ்டை பண்ணிஞன்.*

*அவருக்கு முன்ஞல் விமலோதகம் என்னும் குண்டம் தோண்டப்பட்டிருக்கிறது. குண்டத்தின் ஜலத்தை ஸ்பர்சித்தாலே நம்முடைய மலினத்தன்மை நாசமடைகிறது. இது விஷயமாக ஒரு சிறு ஸம்பவம் இருக்கிறது. அதைச் கூறுகிறேன். அது முன் யுகமான த்ரேதாயுகத்தில் நடந்தது. அதைக் கேட்டவுடனேயே பாபங்கள் நஷ்டமடைகின்றன. ஹே! கும்பமுனியே அகஸ்தியா! வால்மீகி என்ற ஒரு பெரிய சைவி இருந்தார். அவர் கபர்தீஸ்வரரைப் பூஜித்துத் தவம் புரிந்து வந்தார்.*

*ஒரு ஸமயம் அந்தத் தபோதனர் ஹேமந்தருதுவில் மார்கழி மாதம் இந்த விமலோதகம் என்னும் குண்டத்தில் மத்யான ஸ்ஞனம் செய்து, பாதாதிகேச பர்யந்தம் பஸ்மத்தையும் தரித்துக்கொண்டார். லிங்கத்துக்குத் தெற்கு பக்கத்திலமர்ந்து மத்யான கர்மாதிகளே முடித்து, மத்யான ஸந்தியைப் பண்ணிக் கொண்டு, பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்து கபர்தீச்வரரையும் த்யானித்து வந்தார்.*

*பிறகு ப்ரதக்ஷிண நமஸ்காரம், ப்ராஞயாமமும் செய்து மூன்று தரம் உச்சஸ்வரத்தில் ப்ரணவத்தை உச்சரித்தார். பிறகு ஷட்ஜம் முதலிய ஸ்வரபேதங்களுடன் கைகளே அசைத்து ஆனந்தத்துடன் மண்டலாகாரமாகச் சுற்றி சுற்றி வந்து நர்த்தனம் செய்யத் தொடங்கிஞர். அங்காபிநயத்துடன் கீதம் பாடி முடித்து அந்த விமலோத குண்டத்தில் ஒரு பக்கத்தில் உட்கார்ந்தார்.*

*அந்த ஸமயம் அவர் ஒரு பயங்கர ஸ்வரூபத்துடன் கூடிய ஒரு கோர ராக்ஷஸனேக் கண்டார். அவனுடைய நெற்றியும், கன்னமும் முகமும் சுருக்கம் விழுந்திருந்தன. மஞ்சளான கண்கள் உள்ளே அமுங்கி இருந்தன.*

*தலை ரோமங்கள் உலர்ந்து விரித்து குத்திட்டு நின்றன. கழுத்து பருமனாக இருந்தது. மூக்கு அமுங்கி சப்பையாக இருந்தது. உதடுகள் பிளந்திருந்தன. பெரிய பெரிய பற்கள் வெளியே நீட்டிக் கொண்டிருந்தன.*

*முகம் கனமாகப் பருமனாக இருந்தது. ரோமங்கள் குத்திட்டு இருந்தன. காதின்மேல் புறம் தொங்கியிருந்தது. மஞ்சளான தாடி பயங்கரமாக இருந்தது.*

*நீள நாக்கு லவலவ என்று தொங்கிக் கொண்டிருந்தது. கழுத்தெலும்பு துருத்திக்கொண்டிருந்தது. காரை எலும்பு இரண்டும் பருமனாக வெளியில் தெரிந்துகொண்டிருந்தன. இரு தோள்களும் மோதிக் கொண்டிருந்து.*

*கஷ்கம் பள்ளமாக இருந்தது, முன்பக்கத்துக் கை விரல்கள் தள்ளித்தள்ளி இருந்தன.*

*மார்பு புழுதிபடிந்திருந்தது. வயிற்றின்தோல் பின்பக்கம் ஒட்டிக்கொண்டிருந்தது. கடிப்ரதேசம் பயங்கரமாக இருந்தது. எலும்பு முட்டுகளில் மாம்ஸம் இல்லை.*

*இடுப்பெலும்புகள் இரண்டும் தொங்கிக் கொண்டிருந்தன. அண்டகோசம் ஒட்டியிருந்தது. குறி பெயரளவுக்குத் தானிருந்தது. துடை நீளமாக இருந்தது, மாம்ஸம் என்ற பெயரே இல்லை. மூட்டு பெறிய எலும்பினால் இறுக்கப்பட்டுருந்தது.*

*அதில் எலும்பும் தோலுமேயிருந்தது. சரீரம் பூராவாக நரம்புக் கூட்டமாக இருந்தது. முழந்தாளுக்குக் கீழ் குதியங்கால் வரை பருமனாகவும் பயங்கரமாகவும் இருந்தது.*

*கால் பாதங்கள் பெரியதாக இருந்தன. விரல்கள் நீளமாகவும், வளைந்தும் மெலிதாக இருந்தன. எலும்பும் தோலும் நரம்புமே தேஹம் முழுவதும் மோதிக்கொண்டு தெரிந்தன.*

*இப்படி பயங்கரமான மிகவும் கோரமான உருவமும் பசியினுல் உயிர்போகும் தசையில் உள்ளது. மயிர்க்கால்கள் தோறும் குத்திட்டு இருக்கும் சரீரத்திலும் காட்டுத்தீயால் தஹிக்கப்பட்ட மரத்தின் அடிக்கட்டைபோலும் மிகவும் சஞ்சலமான நேத்ரத்துடன்,*

*ஸமஸ்த ப்ராணிகளுக்கும் பயத்தைக் கிளரிவிடக்கூடிய பயாநக ரஸம் உருவெடுத்து வந்ததுபோலவும், உள்ளதுமான மிகவும் தீனமான பிசாசத்தைப்பார்த்து மிகவும் தைரியத்துடன் அந்த வயோதிகர் 'நீ யார்?'*

*நீ இங்கு எப்படி வந்தாய்? உனக்கு இந்த நிலே எப்படி ஏற்பட்டது? நான் தயையினுல் கேட்கிறேன். நீ பயமில்லாமல் கூறு என்று கூறினுர்.*

*சிவ ஸஹஸ்ர நாமத்தை ஜபித்துக்கொண்டு, விபூதியைக் கவசமாக அணிந்து கொண்டிருக்கும் என் போல தபஸ்விகளுக்கு உன்னேப்போன்றவர்களிடம் கொஞ்சம் கூடப் பயம் கிடையாது.*

*மிகவும் ப்ரியத்துடன் கூடிய தபஸ்வியின் சொல்லேக்கேட்டு, கைகளேக்கூப்பிக்கொண்டு தயையே உருவான தபோதனரிடம் பிசாசு கூறியது-*

*பகவன்! தாங்கள் என்மீது தயாதிருஷ்டிவைப்பதினுல் ஏ! தாபஸோத்தமா, நான் என்னுடைய வ்ருத்தாந்தத்தைக் கூறுகிறேன். ஒருக்ஷணம் கவனமாகக் கேட்க வேண்டும். கோதாவரி நதிக்கரையில் ப்ரதிஷ்டானம் என்ற ஒரு தேசமிருக்கிறது.*

*நான் அங்கிருக்கும் தீர்த்தக் கரையில் தானம் வாங்கும் ஒரு ப்ராம்மணன். அந்தக் கர்மபலனுல் எனக்கு இந்த தசை ஏற்பட்டது.*

*வ்ருக்ஷங்களும் ஜலமும் இல்லாத பெரிய பாலேவனத்தில் வெகு தினங்களாக வஸிக்க வேண்டியிருந்தது. முனிராஜனே, அச்சமயம் எனக்கு பசி,*

*தாகம், குளிர், வெயில் எல்லாவற்றையும் தாங்க வேண்டியிருந்தது.*

*மழைக்காலத்தில் இரவும் பகலும் யானைத்துதிக்கைப்போல் பெய்யும் பயங்கரமான மழையில் காற்று ப்ரசண்ட மாருதமாக வீசிக்கொண்டிருக்கும்போதில் எனக்கு இந்த தேஹத்தை மூட ஒரு சிறு கந்தல் துணிகூட இருக்கவில்லை.*

*யார் தீர்த்த ஸ்னனங்களில் ப்ரதிக்ரஹம் வாங்குகிறார்களோ, அவர்களும் பர்வங்களில் தன்னால் இயன்ற அளவு தானம் செய்ய வேண்டும். அப்படிச் செய்யாதவர்களுக்கு மிகவும் துக்கத்தில் ஆழ்ந்தும் இந்த பைசாச யோனி கிடைக்கிறது.*

*முனியே! இந்தப் பாலைவனத்தில் இவ்விதமாக அநேக தினங்கள் கழிந்தன. இப்படியிருக்கும்போது ஒருநாள் யதேச்சையாக ஒரு ப்ராம்மணச் சிறுவன் அங்கு வருவதைக் கண்டேன்.*

*ஸூர்யன் உதயமான பின்பும் சந்திமுதலியவைகள் செய்யாதவனும், மலமூத்திரம் கழித்தபின்பு சௌசம் பண்ணி, கச்சமில்லாமல், சௌசம் பண்ணாமல், ஸந்தியாகர்மத்தைச் செய்யாமலும், அப்ப்ராமணன் வருவதைக்கண்டு, நான் போகத்திற்காக அவன் சரீரத்திற்குள் நுழைந்து விட்டேன்.*

*ஏ! முனிநாதரே! நான் அத்ருஷ்டம் இல்லாதவனாதினால் இந்த ப்ராம்மணகுமாரன் பண்டு ஸம்பாதிக்கும் லோபத்துடன் ஒரு வ்யாபாரியின் துணைகொண்டு இந்தப் பவித்ரமான காசீபுரியையடைந்தான்.*

*ஏ! முனிஸத்தமா! எப்பொழுது அவன் நகரத்தில் எல்லையைத் தாண்டி உள்ளே நுழைந்தானோ அப்பொழுதே அவனுடைய தேஹத்திலிருந்து பாபங்கள் வெளியாக வேண்டி வந்தது.*

*ஏ! தபோநிதியே! அப்படி வெளியேறி நான் வெளியிலேயே தங்கவேண்டிய காரணம் என்னவென்றால் மஹா தேவருடைய ஆக்ஞையினால் இந்த வாராணஸிபுரியில் பெரிய பெரிய பாதகங்களும் உள்ளே நுழைய முடியாது.*

*அதனால் இதுவரைக்கும் மற்ற பாபங்களுடன் நானும் அந்த பிராம்மண குமாரன் காசியைவிட்டு வெளியில் வரும் வேளையை எதிர்பார்த்துக் கொண்டு, சிவகணங்களுக்கு பயந்துகொண்டு, எல்லைக்கு வெளியிலேயே தங்கியிருக்கிறோம்.*

*தபோதனரே! அவன் இன்று அல்லது நாளை அல்லது நாளன்றைக்கு வெளியில் வருவான் என்ற ஆசையில். நாங்கள் இங்கேயே காத்துக் கொண்டிருக்கிறோம். இதுவரை அவன் வெளியில் வரவுமில்லை. எங்கள் நம்பிக்கை எங்களை விட்டு விலகவுமில்லை. இந்த ஆசாபாச வலையில் சிக்கித் தவித்துக் கொண்டு, ஒரு ஆதாரமும் இல்லாமல் நாங்கள் இங்கு விழுந்து கிடக்கிறோம்.*

*ஏ! தபஸ்வியே! இப்பொழுது நான் இன்றைய விசித்ரமான விஷயத்தைச் சொல்கிறேன். தாங்கள் அதைக் கேளுங்கள். என்னுடைய அறிவுக்கெட்டிய மட்டில் இந்த நிகழ்ச்சியினால் ஒரு பெரிய மங்களமான கார்யம் நடக்க இருக்கிறது.*

*நாங்கள் பிரதினமும் பசியினால் வ்யாகுலமடைந்து ஆஹாரம் தேடிக்கொண்டு இங்கிருந்து ப்ரயாகைவரை போகிறோம். ஆனால் ஒன்றும் கிடைப்பதில்லை.*

*எல்லா வனங்களிலும் பழங்களைச் சுமந்துகொண்டு அநேக வ்ருக்ஷங்கள் இருக்கின்றன.*

*இதைத் தவிர அநேகவிதமான உணவு வகைகளும் விசித்ர விசித்ரமான பருகும் பானங்களும் மற்றவர்களுக்கு ஸுலபமாகக் கிடைக்கின்றன. ஆனால் எங்களுடைய திருஷ்டி பட்டவுடனேயே அவைகளெல்லாம் தூர தூர விலகிச் செல்கின்றன.*

*ஏ! முனியே, இன்று அகஸ்மாத்தாக ஒற்றை ஆடையுடுத்திய ஸன்யாஸி வருவதைப் பார்த்துவிட்டு,*

*பசியால் பீடிக்கப்பட்ட நான் இவனை பலாத்காரமாக அடித்துப் பிடித்துக் கொன்றுவிட வேண்டும் என்று நினைத்து சீக்கிரமாகவே அவனிடத்தில் சென்றேன்.*

*நான் அவனைப் பிடிக்கப் பாய்ந்த அதேஸமயத்தில் அவனுடைய முகாரவிந்தத்திலிருந்து விக்னங்களை நாசம் செய்யும் சிவநாமமாகிய பவித்ரமான த்வனி வெளி வருவதைக் கண்டேன்.*

*இப்பொழுது சிவநாமத்தைக் கேட்டவுடனேயே என்னுடைய ஸஞ்சித பாபங்கள் எல்லாம் அழுங்கிவிட்டன. அதனால் இந்த ஊரின் உள்ளே ப்ரவேசிக்க முடிந்தது.*

*எல்லையில் இருக்கும் சிவகணங்களும் கூட என்னை ஒரு தரம் கூடப் பார்க்கவில்லை, ஏனென்றால் அவனுடைய காதுகளில் சிவ நாமம் நுழைகிறதோ, அவனை யமராஜர் கூடத் திரும்பிப் பார்க்க மாட்டார்.*

*நான் அந்த ஸன்யாஸியுடன் கூட பஞ்சக்ரோசத்தின் எல்லையைத் தாண்டிக்கொண்டு காசியின் உள்ளுக்குள் வர விரும்பினேன். ஆனால் ஸன்யாஸி உள்ளே சென்று விட்டான், நான் இங்கேயே தங்கிவிட்டேன்.*

*முனீஸ்வரா! தங்கள் தரிசனத்தை நான் பெற்றதினால் நான் என்னை மிகவும் க்ருதார்த்தனாக எண்ணுகிறேன். ஏ! க்ருபாநிதியே! தாங்கள் இந்த பயங்கரமான பைசாச யோனியிலிருந்து என்னை உத்தாரணம் செய்யுங்கள்.*

*இதற்குப் பிறகு அந்தப் பிசாசினுடைய வார்த்தைகளைக் கேட்டு விட்டு அந்த தயாளுவான தபஸ்வி யோசிக்கத் தொடங்கினார். சீ! தன்னலத்திலேயே ஆழ்ந்திருக்கும் ஜனங்கள். வெட்கக்கேடு.*

*பசு பக்ஷி ம்ருகங்கள் கூடத்தான் தன் வயிறு வளர்க்கின்றன. ஆனால் இவ்வுலகில் மனிதனாகப்*

பிறந்தவன் எப்பொழுதுமே பரோபகாரம் செய்வதற்குத் தயாராக இருப்பானுனுல் அவனே தன்யன்.

அதனுல் நான் இந்தப் பாபச்சுமையினுல் அமுக்கப்பட்டு என்னைச் சரணடைந்த இந்தப் பிசாசை என்னுடைய தபோ பலத்தினுல் உத்தாரணம் செய்வேன்.

அந்த ஸாது மகாத்மா மனதிற்குள் இவ்விதம் நிச்சயம் செய்து கொண்டு பிசாசினிடம் கூறினுர். நீ இந்த விமலோதகம் என்னும் ஸரோவரத்தில் உன்னுடைய பாபங்கள் கரைவதற்காக மூழ்கி வா.

ஏ! பிசாசே! தீர்த்தப் ப்ரபாவத்தினுலும், கபர்தீஸ்வரரின் தரிசனத்தினுலும் க்ஷண நேரத்தில் உன் பிசாசு உருவம் நீங்கி விடும்.

முனியின் வார்த்தையைக் கேட்டு பைசாசம் ப்ரஸன்னசித்தத்துடன் கூட கைகூப்பி ஸந்தோஷ மனத்துடன் நமஸ்காரம் பண்ணிக் கூறத்தொடங்கியது-

ஏ! நாதா, ஜலதேவதைகள் ஜலத்தை ரக்ஷை செய்வதினுல் எனக்கு அருந்தக் கூடத் தண்ணீர் கிடைப்பதில்லை. பிறகு ஸ்னுனம் செய்வதுபற்றி எப்படி யோசிக்க முடியும்?

எனக்கு ஜலத்தைத் தொடுவதே மிக்க கடினம். பிசாசின் இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு உலகத்தை உத்தாரணம் செய்வதில் வல்லவரான அந்த தபஸ்வி அதனிடம் கூறினுர். நல்லது. இப்பொழுது இந்த விபூதியை நீ நெற்றியில் தரித்துக் கொள்.

ஏ! பைசாசமே! இந்த விபூதியினுடைய விசித்ரமான மஹிமை என்னவென்ருல் இந்த விபூதியைத் தரித்துக் கொண்டவன் எப்பேர்ப்பட்ட பாபியாக இருந்தாலும் சரி; அவனுக்கு ஒருவரும் எங்கும் ஒரு விதமான இடையூறும் ஏற்படுத்த முடியாது.

யமராஜருடைய தூதர்கள் நெற்றியில் வீபூதி பூசியிருப்பதைப் பார்த்துவிட்டு, அவன் பாபியானுலும்

பகவானுடைய பாசுபதாஸ்தரத்திற்குப் பயந்து ஓடிவிடுகிறுர்கள்.

யோகிகள் எலும்பு சித்ரம் வரையப்பட்ட கொடியினுல் அடையாளம் இடப்பட்டத் தீர்த்தங்களேக் கண்டுவிட்டு எவ்விதம் ஓடுவார்களோ அப்படியே யமகிங்கரர்கள் பஸ்மம் பூசிய நெற்றியைப் பார்த்துவிட்டு அண்டையில் அணுகார்கள்.

உத்தம புருஷர்கள் எப்பொழுதும் சிவமந்திரத்தை உச்சரித்து பஸ்மரூபமான கவசத்தைச் சரீரத்தில் எப்பொழுதும் தரித்துக் கொள்கிறுர்கள். அவர்கள் பக்கத்தில் ஹிம்சிக்கும் ஜந்துக்களும் அணுகுவதில்லே!

சிவமந்திரத்தை உச்சரித்து பஸ்மரூபமான கவசத்தை பக்தி பூர்வமாக நெற்றியிலும், வக்ஷஸ்தலத்திலும், கை இடுக்குகளிலும் தரித்துக் கொண்டால் ஹிம்ஸிக்கும் மனிதன் கூட அவனேக் கொல்ல முடியாது.

ஸமஸ்த துஷ்ட ஜந்துக்களிடமிருந்து எப்பொழுதும் ரக்ஷை செய்வதினுல் பூத (ஐச்வர்யம்) கொடுப்பதினுல் விபூதியென்றும், ஸம்ஸாரத்தில் விளங்கியிருந்தது அக்ஞானமான கர்மங்களே அழிப்பதினுல் பஸ்மமென்றும், பாம்ஸத்வ தோஷத்தை நீக்குவதினுல் பாம்ஸீ என்றும், பாபங்களே க்ஷரணம் செய்வதினுல் க்ஷாரம் என்றும் பண்டிதர்கள் இதைக் கூறுவார்கள்.

இவ்விதம் கூறி அந்தத் தபஸ்வி குளிர் காயும் அடுப்பிலிருந்து பஸ்மத்தை எடுத்து அந்தப் பிசாசின் கையில் கொடுத்தார். பிசாசும் மிகுந்த சிரத்தையுடன் அதை எடுத்துத் தன் நெற்றியில் தரித்து கொண்டது

இப்பொழுது ஜலதேவதைகள் விபூதி தரித்துக் கொண்டிருக்கும் பிசாசு ஜலத்தில் இறங்குவதைப் பார்த்தும் கூட ஒன்றும் செய்ய முடியவில்லே. அந்தப் பிசாசு இந்தவிதமாக ஸ்னுனம் செய்து, ஜலமருந்தி ஸரோவரத்திலிருந்து வெளிவந்தவுடனேயே,

*அதனுடைய பிசாசு உருவம் நீங்கிவிட்டது. உடனே திவ்யதேகம் உள்ள மனிதனுகப் காணப்பட்டான்.*

*திவ்யமாலே, திவ்யகந்தம், திவ்ய வஸ்திரம் இவைகளால் அலங்கரித்துக்கொண்டு அந்த புருஷன் திவ்ய விமானத்திலேறிக் கொண்டு தூய்மையான பரமபதமார்க்கத்திற்குச் சென்ருன்.*

*அந்த ஆகாச மார்க்கத்தில் போய்க்கொண்டிருக்கும் திவ்ய புருஷன் அங்கிருந்தவாறே அந்தத் தபஸ்வியை வணங்கி உச்சஸ்வரத்தில் கூறினுன். ஓ! பாவமற்றவரே! பகவான் தாங்களே மிகவும் பிறரால் நிந்திக்கப்பட்ட அந்த பிசாசு சரீரத்திலிருந்து என்னே விடுவித்தீர்கள். இந்தத் தீர்த்த மஹிமையினுல் எனக்கு இந்த திவ்யதேகம் கிடைத்தது. இன்றிலிருந்து இந்தத் திவ்ய தீர்த்தத்தின் பெயர் பிசாசமோசனம் என்றிருக்கட்டும். இதில் ஸ்ஞனம் செய்வதினுல் பிசாசயோனியில் இருக்கும் மற்றவர்களும் விடுதலேயடைவார்கள்.*

*எவனெருவன் இந்தப்பரம புனித தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து, ஸந்தியா தர்பணம் இவைகளே செய்து, பித்ருக்களுக்குப் பிண்டதானம் செய்கிருனே, தெய்வ யோகத்தினுல் அவனுடைய முன்னேர்கள் பிசாசுகதியில் இருந்தால் அதிலிருந்து விடுபட்டு உத்தம கதியை அடைவார்கள்.*

*ஏ! தபோதனரே! இன்று மார்கழி மாதத்து சுக்ல பக்ஷ சதுர்தசி, இன்றைய தினம் இங்கு ஸ்ஞனுதிகள் செய்வதினுல் பிசாசயோனியிலிருந்து விமோசனம் கிடைக்கிறது.*

*எவரொருவர் இந்த தீர்த்தத்திற்குப் ப்ரதி தினமும் யாத்திரையாக வருகிருர்களோ, அவர்கள் இந்தத் தீர்த்தக் கரையில் தானம் வாங்கின சாபத்திலிருந்து விடுபடுகிருர்கள்.*

இந்த பிசாசமோசன தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து கபர்தீஸ்வரரைத் தரிசனம் செய்து அன்னதானம் செய்வார்களாஞல் அவர்கள் எப்பொழுதும் பாபத்திலிருந்து நிர்பயமாய் இருக்கிறுர்கள்.

மார்கழிமாத சுக்லபக்ஷ சதுர்தசியன்று கபர்தீஸ்வரருக்கு ஸமீபத்தில் இருக்கும் பிசாசமோசன தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்வதிஞல் அவன் எங்கு இறந்தாலும் பிசாசு ஆகமாட்டான். இந்த மஹா பாக்கியசாலி புருஷன் இவ்விதம் கூறி இந்த முனியை அடிக்கடி வணங்கி திவ்யகதியடைந்தார்.

ஏ! கும்ப முனியே! அந்த தபஸ்வியும் இந்த ஆச்சரியமான ஸம்பவத்தைப் பார்த்து விட்டு கபர்தீச்வரரை ஆராதித்து காலக்ரமத்தில் மோக்ஷலாபத்தையடைந்தார்.

ஏ! முனிவரரே! வாராணஸிபுரியில் அன்றிலிருந்து இந்த பிசாசமோசன தீர்த்தம் ஸர்வ பாப நாசனமென்று மிகவும் ப்ரஸித்தமடைந்து விட்டது.

இந்தப் பிசாசமோசன தீர்த்தக்கரையில் ஒரு சிவயோகிக்குப் போஜனமளித்தால் ஆயிரம் ஸன்யாஸிகளுக்கு பிக்ஷையளித்த பலன் பூர்ணரீதியாகக் கிடைக்கிறது.

ஒருவன் மஞேயோகத்துடன் இந்த பவித்ர அத்யாயத்தைக் கேட்டாஞஞல் அவனுக்கு ஒரு பொழுதும் பூதம், பிரேதம், பிசாசு இவைகளிலிருந்து பயம் ஏற்படாது.

இந்த உத்தம உபாக்யானத்தை க்ரஹ தோஷத்திஞல் பீடிக்கப்பட்ட பாலகர்களுக்கு முன்னிலேயில் பாராயணம் செய்வதிஞல் மிகவும் சாந்தியுண்டாகும்.

இந்த ஆக்யானத்தைக் கேட்டுவிட்டு ஒரு மனிதன் வேறு தேசத்திற்கு யாத்திரை செய்தாஞஞல் அவனுக்கு ஒரு இடத்திலும் திருடன், துஷ்டமிருகங்கள் பிசாசம் இவைகளிஞல் பயமேற்படாது.

***இந்த ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்க்க பாஷாடீகாவான பிசாசமோசன கதாவர்ணனம் என்னும் ஐம்பத்திநான்காவது அத்தியாயம் ஸம்பூர்ணம்.***



# அத்தியாயம் 55

ஸ்கந்தர் கூறினார்:- ஏ! கும்பமுனியே! காசியில் மற்ற கணங்களெல்லாம் எந்தெந்த லிங்கங்களை ஸ்தாபிதம் பண்ணினார்களோ அவைகளைப்பற்றிக் கூறுகிறேன், கேள்.

பிங்களாக்ஷன் என்னும் பெயருள்ள, பாரிஷதன் கபர்தீஸ்வரருக்கு வடக்குபாகத்தில் பிங்களாக்ஷேச்வரர் என்ற பெயருள்ள லிங்கத்தைப் ப்ரதிஷ்டை பண்ணினார்.

கேவலம் அதைத் தரிசனம் செய்த மாத்திரத்திலேயே பாபங்கள் நசித்துவிடும். பகவான் மஹாதேவருடைய பரம ப்ரீதிக்குப்பாத்திரமான வீரபத்திரர், நிஸ்சலமாக இன்று வரையிலும் வீரபத்ரேஸ்வரரைத் தியானித்துக்கொண்டிருக்கிறார். அந்த லிங்கத்தைத் தரிசனம் செய்தால் வீரத்தன்மையுண்டாகும்.

ஒருவன் அவிமுக்தேஸ்வரருக்கு பின்னால் இருக்கும் வீரபத்ரேஸ்வரரைப் பூஜை செய்தால் அவன் போர்க்களத்தில் ஒருபொழுதும் தோற்கமாட்டான்

அகஸ்தியமுனியே! வீரபத்ரர் ஸாக்ஷாத் வீரரூபத்தை எடுத்துக் கொண்டு அவிமுக்த க்ஷேத்ரவாஸிகளுடைய விக்னங்களை த்வம்ஸம் செய்கிறார்.

ஸுபப்ரதா பத்ரா, பத்ரகாளி இவர்களோடுகூட எழுந்தருளியிருக்கும் வீரபத்ரரையும் மனிதர்கள் பூஜைசெய்து காசிவாஸ பலனையடைகிறார்கள்.

இதைப் போலவே கிராதன் என்னும் பெயருடைய கணன் காசியில் கேதாரேச்வரருடைய தக்ஷிணபாகத்தில் பக்தர்களுக்கு அபயம் கொடுக்கும் கிராதேஸ்வர லிங்கத்தைப்ரதிஷ்டை பண்ணியிருக்கிறார்.

ஸ்ரீமான் சதுர்முகன் என்னும் பெயருடைய கணன் வ்ருத்தகாலேஸ்வரருக்குப் பக்கத்திலேயே த்ருடமாக சதுர்முகேஸ்வரரை ஸ்தாபித்து இன்றுவரை அங்கு தியானத்தில் அமர்ந்திருக்கிறார்.

*இந்தச் சதுர்முக லிங்கத்தை பக்தி செய்பவர்கள் ஸ்வர்க்க லோகத்தில் எல்லா போகங்களேயுமம் பூர்ணமாக அனுபவித்துவிட்டு ஸாக்ஷாத் ப்ரம்மாவைப் போலவே தேவர்களால் பூஜிக்கப்படுகிருர்கள்.*

*குபேரேஸ்வரர் பக்கத்திலிருக்கும் நிகும்பேஸ்வர லிங்கத்தைத் தரிசித்துப் பூஜித்தபின் மற்ற நாடுகளுக்கு யாத்திரை செய்தால் காரியஸித்தியாகும். அந்திமகாலத்தில் சிவலோகத்தில் மரியாதையுடன் வசிக்கும் புகழ் கிட்டும்.*

*மஹாதேவர் என்னும் பெயருள்ள லிங்கத்திற்குத் தென்பக்கத்தில் இருக்கும் பஞ்சாக்ஷேஸ்வர லிங்கத்தைப் பூஜை செய்தால் மனிதனுக்குத் தன் ஜாதியில் ஸ்மரண சக்தியேற்படும்.*

*கர்ப்பக்ருஹத்தின் உத்தர த்வாரத்தின் பக்கம் பாரபூதன் என்னும் கணனுல் அர்ச்சிக்கப்பட்ட பாரபூதேஸ்வரர் என்னும் மஹாலிங்கத்தைத் தியானம் பண்ணிஞல் முக்தி கிட்டும்*

*எவர்கள் காசியில் பாரபூதேஸ்வர் லிங்கத்தைப் பார்க்க வில்லேயோ அவர்கள் பூத்துக் காய்க்காத வ்ருக்ஷத்தைப்போல் பூமிக்குப் பாரமாக இருப்பார்கள்.*

*ஏ! கும்பமுனியே! த்ரயக்ஷன் என்னும் கணம் த்ரிலோசன லிங்கத்திற்கு முன் இருக்கும் பெரிய லிங்கத்தைத்தியானித்துக் கொண்டு இன்றுவரை அங்கேயேயிருக்கிருன்.*

*த்ரயக்ஷேஸ்வர லிங்கத்துடைய பரமபக்தர்கள் அந்திம காலத்திற்குப்பின் ஸாக்ஷாத் த்ரயக்ஷேஸ்வரராகவே ஆகிவிடுகிருர்கள். இதில் ஸந்தேஹமில்லே.*

*க்ஷேமகன் என்னும் பெயருடைய பாரிஷதன் காசியில் தானே சிலேயாகி ஸ்திரமாக இன்று வரைக்கும் ஸர்வ வியாபகரான பகவான் விஸ்வநாதருடைய தியானத்தில் ஆழ்ந்திருக்கிருன்.*

*ஒருவன் காசியில் ப்ரதான கணனை க்ஷேமகனைப் பூஜை செய்தால் அவனுக்கு யாதொரு விக்னமும் ஏற்படாது, என்பது மட்டுமல்ல. க்ஷணத்திற்கு க்ஷணம் க்ஷேமமே கூடிவரும்.*

*ஒருவன் பரதேசம் போயிருந்தால் அவன் திரும்ப பத்திரமாக வரவேண்டும் என்னும் விருப்பமுடன் இந்த க்ஷேமகரைப் பூஜித்தால் ஸௌக்யமாகத் திரும்பிவிடுவான்.*

*விஸ்வேஸ்வரருடைய வடக்குப் பக்கத்தில் லாங்கலி என்னும் கணனல் பூஜிக்கப்பட்ட லாங்கலீஸ்வரரைத் தரிசனம் செய்தால் மனிதன் ஒரு பொழுதும் நோயாளியாக மாட்டான்.*

*ஒரு தடவையாகிலும் லாங்கலீஸ்வரரைப் பூஜைபண்ணினல் ஐந்து (ஏர் தானம் பண்ணின,) கலப்பைதானம் பண்ணின பூர்ணபலனும், ஸமஸ்த ஸம்பத்துக்களும் கிடைக்கும்.*

*விராதனல் ஸ்தாபிக்கப்பட்ட விராதேஸ்வரரை ஆராதனை பண்ணினல் ஒருவன் அபராதங்களினல் மூடப்பட்டிருந்தாலும் அவன் அபராதியாக மாட்டான்.*

*காசி வாஸிகள் தினந்தோறும் அபராதம் பண்ணினல் விராதேஸ்வரரைப் பூஜை பண்ணினல் ஸமஸ்த அபராதங்களும் சீக்கிரத்தில் க்ஷயமாகிவிடும்.*

*விஸ்வேஸ்வரருக்கு நிர்ருதி கோணத்தில் இருக்கும் விராதேஸ்வரரை மனேயோகத்துடன் நமஸ்கரித்தால் ஸந்தேஹமில்லாமல் எல்லா அபராதங்களும் விடுபடும்.*

*ஸுமுகன் என்னும் கணனல் பிரதிஷ்டிக்கப்பட்ட மேற்கு முகமாக இருக்கும் ஸுமுகேஸ்வர லிங்கத்தைப் பார்ப்பதினலேயே ஸமஸ்த அபராதங்களும் நீங்கிவிடும்.*

*பிப்லா தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து ஸுமுகேஸ்வரரைத் தரிசனம் செய்தால் யமராஜரை எப்பொழுதும் ஸௌம்யமாகவே பார்ப்பான்.*

*மனிதன் ஆஷாட பௌர்ணமியன்று ஆஷாட கணனல் ஸ்தாபிக்கப்பட்ட ஆஷாடீக லிங்கத்தை பக்தி பூர்வகமாக தரிசனம் பண்ணினலேயே பாபரஹிதனுகிருன்.*

*பார பூதேஸ்வரருக்கு வடக்குப் பக்கத்தில் இருக்கும் ஆஷாடீஸ்வரரை ஆஷாட பௌர்ணமியன்று பூஜை செய்வதினல் பாபத்தினல் ஸந்தாபம் அடையமாட்டார்கள்.*

*ஆஷாட மாதத்தில் சுக்லசதுர்தசியல்லது பௌர்ணமியன்று வருஷயாத்திரையாக வருகிறவர்கள் நிஷ்பாபமுடையவர்களாகிருர்கள்.*

*ஸ்வாமி கார்த்திகேயர் மேலும் கூறுகிருர்: முனியே! வாராணஸியில் விஸ்வநாதரை மகிழ்விக்கும் பொருட்டு தம்தம் நாமங்களால் லிங்கங்களைப் பிரதிஷ்டை பண்ணி எல்லா கணங்களும் அங்கேயே இருக்கத் தலைப்பட்டனர்.*

*திரும்பவும் காசி ஸமாசாரம் அறிவதற்காக பகவான் விஸ்வேஸ்வரர் மிகவும் கவலைப்படத் தொடங்கினர். இனி இங்கியிருந்து நம்முடைய நன்மையை விரும்புபவனுக எவனையனுப்பலாம்? எதனல் என் மனம் ஸந்தோஷமடையும்?*

*யோகினியர்கள் ஸூரியன், ப்ரம்மா, சங்குகர்ணன் முதலிய கணங்கள் இவர்கள் எல்லோரும் கடலில் வந்துசேர்ந்த நதியைப் போல் திரும்பிவரவேயில்லையே.*

*எவர்கள் இங்கிருந்தே சென்று காசியிலேயே உட்கார்ந்திருக்கிருர்களோ அவர்கள் எல்லோரும் என்னுடைய உதரத்தில் உட்கார்ந்திருப்பதுபோலத் தான். எரியும் ஜ்வாலையில் விழுந்த நெய்யைப்போல் அவர்கள் இனித்திரும்பார்கள்.*

*அவர்களெல்லாரும் லிங்கங்களைப் பூஜைபண்ணிக் கொண்டு காசியில் தத்பரர்களாய் வஸிக்கிருர்களானலும்*

*அந்த லிங்கங்களெல்லாம் என்னுடைய ஜங்கம ரூபமேயாகும். இதில் ஸந்தேஹமேயில்லை.*

*காசியில் இருக்கும் ஸ்தாவரம், ஜங்கமம், அசேதனம், சேதனம் அவைகளெல்லாம் என்னுடைய லிங்க ரூபமேயாகும். அவைகளை தூஷணை சொல்பவர்கள் துர்புத்தியுடைவர்கள். காசியில் உள்ள ஒவ்வொரு சிறு கல்லும் ஒவ்வொரு சங்கரருக்கு ஸமானம்.*

*எவர்கள் வாயில் காசிநாமம் வருகிறதோ, எவர்களுடைய காதில் விஸ்வநாதருடைய கதைகள் நுழைகின்றனவோ அவர்களெல்லாம் காசியில் லிங்கஸ்வரூபமே. என்னைப் போலவே அவர்களும் பூஜைக்குரியவர்களாவார்கள்.*

*வாராணஸி, காசி, ருத்ரவாஸம் என்னும் இந்த வாக்யங்களை எவர்கள் சுத்தமாக உச்சரிக்கிறார்களோ; அவர்களை யமராஜரால் ஒன்றும் செய்ய முடியாது.*

*எவர்கள் ஆனந்தவனத்தையடைந்து, வேறு நிரானந்த பூமியை மனதால் நினைக்கவோ, விரும்பவோ செய்தார்களானால் அவர்களுக்கு இந்த உலகில் ஆனந்தமே இருக்காது.*

*இன்றோ, அல்லது அநேக நாட்கள் சென்றோ நிச்சயமாக மரணம் அடைய வேண்டும். அதனால் கலிக்கும் காலனுக்கும் பயந்தவர்கள் காசியை ஒரு பொழுதும் விடக்கூடாது.*

*எது நடந்து தீருமோ அது அடிக்கு ஒருதரம் அவசியம் நடந்தே தீரும் என்றால் புத்தியில்லா ஜனங்கள் லக்ஷ்மி ஆச்ரயித்திருக்கும் காசியை ஏன் விடவேண்டும்?*

*காசியில் அடிக்கொரு தடவை ஆயிரமாயிரமாக துக்கங்களை ஸஹித்துக் கொண்டாவது இருப்பதுதான் நல்லது. வேறு எங்காவது விக்ன இடையூறில்லாமல் ராஜ்யம் கிடைத்தாலும் அதை அடைவதற்கு எதிர்பார்ப்பதை விடக் காசியில் இருப்பது தான் நல்லது.*

*ஐஸ்வர்யத்தினுடைய போகம் எவ்வளவு காலம்தான் கொண்டு செல்லும்? காசியில் ஒவ்வொரு அடிவைக்குந்தோறும் இஹலோகம் பரலோகம் இரண்டிலும் நிரந்தரமான ஸுகத்தையளிக்கிறது.*

*விஸ்வத்திற்கெல்லாம் நாதனுன நானும் தானே முக்தி பிரகாசினியாயிருக்கிற காசியும் அமுத அலைகள் வீசும் ஸாக்ஷாத் கங்கையும் இம்மூன்றும் ஓரிடத்தில் சேர்ந்தால் எதைத்தான் தராது ?*

*அளவில் அடங்காது செல்வச் சிறப்பு நிரம்பிய ஐந்து கோசப்பிரமாணம் உள்ள இந்த நகரம் என்னுடைய சரீரமே தான். அதனுலேயே இது மோக்ஷத்திற்குக் காரணமாக இருக்கிறது. என்னுடைய இந்தக் காசீபுரி ஸம்ஸார பாரத்தைச் சுமந்து தளர்ந்தவர்களுக்கும் ஜனன மரண போக்குவரத்திற்கு ஈடுபட்டிருக்கும் ஜீவர்களுக்கும் நிச்சயமாக இளைப்பாறும் ஸ்தலம்.*

*ஸம்ஸார யாத்ரிகர்களுக்கு இந்தச் காசியே மனோரத ரூபமான பழங்களினுல் பாரமடைந்திருக்கும் கல்பத்தைச் சூழ்ந்த மண்டபம்*

*மோக்ஷ ஸாம்ராஜ்ய சக்கரவர்த்திக்கு இந்தக் காசியே தாபத்தை நீக்கும் விசித்ரமான குடை. இந்தக் குடையின் கம்பே என்னுடைய த்ரிசூலம்.*

*புண்ணியாத்மாக்கள் நிரந்தரமான ஸுகத்தைப் பெற ச்ரமப்படாமலேயே மோக்ஷ லக்ஷ்மியை விரும்பினுர்களானுல் அவர்கள் ஒரு பொழுதும் காசியை விட்டுச் செல்லக் கூடாது. எவர்கள் ஆனந்த வனத்தில் உறுதியாக வாஸம் பண்ணுகிருர்களோ அவர்கள் ருசிகரமான மோக்ஷலஷ்மி என்னும் பழத்தைப் பரலோகத்தில் கட்டாயம் பெறுகிருர்கள். மமதா மோகமில்லாத என்னையே மோஹிக்கச் செய்யும் அந்த விஸ்வமோஹினி காசியை யார்தான் விரும்பமாட்டார்கள்?*

*எவர்கள் ஸர்வதா காசீநாமரூபமான அம்ருதத்தைக் குடித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்களுக்கு பூதலமெங்கும் க்யாதி பெற்றிருக்கும் உத்தமமான காசியென்னும் ஸ்தலமே மார்க்கமாகிறது.*

*நான் எப்பொழுதுமே மமதையில்லாமல் த்ருடமான ஸர்வாத்மாவாக இருக்கிறேன். ஆனபோதிலும் காசியின் நாமத்தை ஜபிப்பவர்களே என்னுடைய சொந்த ஜனங்கள்.*

*வாராணஸியுடைய இந்த ரஹஸ்யத்தை அறிந்ததினாலேயே யோகினியர்களும், ப்ரம்மா, ஸூரியன், ப்ரதானகணங்கள் இவர்கள் யாவரும் அங்கேயே தங்கி விட்டார்களே தவிர, இதற்கு வேறு ஒரு காரணமுமில்லை.*

*அப்படியில்லாவிட்டால் அந்த யோகினியர்கள், சூரியன், ப்ரம்மா, சிவகணங்கள் யாவரும் என்னை விட்டுவிட்டு வேறு இடத்தில் எப்படியிருக்க முடியும்?*

*அவர்கள் எல்லோரும் காசியில் இருப்பதே மிகவும் நல்லதாகி விட்டது. ஏனென்றால் மற்றதேசத்து ஜனங்களில் ஒருவனாவது அங்கிருந்தால் போதும், ராஜ்யத்தினுடைய ரஹஸ்யத்தைப் போதிப்பதற்கு ஸாமர்த்யசாலியாகி விடுகிறான்.*

*ஆனால் என்னுடைய உருவத்தை தரித்தவர்களே அங்கு நுழைந்து உட்கார்ந்திருக்கிறார்கள். அதனால் நானும் அங்கு செல்வதற்குண்டான ப்ரயத்னத்தை அவர்கள் அவசியம் செய்து கொண்டிருப்பார்கள்.*

*நல்லது, இப்பொழுது எனது பாரிஷதர்களை அங்கு அனுப்புகிறேன். இந்தப் பிரதான அதிகாரிகள் எல்லாம் அங்கு தங்கினால் தான் நானும் பின்னோடு அங்கு செல்வதற்கு ஸௌகரியமாக இருக்கும்.*

*மஹாதேவர் இப்படியெல்லாம் யோசனை செய்து கொண்டு புத்திரனான கஜானனனை அழைத்துக் கூறினார். ஏ!*

*புத்ரா! நீ இங்கியிருந்து காசிக்குச் செல். அங்கு ஸ்திரமாய் இருந்துகொண்டு என்னுடைய காரியம் ஸித்தியாவதற்குண்டான பிரயத்தனத்தைச் செய். அங்கு நமக்கேற்படும் விக்னங்களை விலக்கி விட்டு அரசனுக்கு இடையூறுகளை ஏற்படுத்து.*

*இதற்கு பிறகு தந்தையின் ஆணையைப் பாலிக்கின்ற கணநாதன் மஹாதேவனுடைய ஆக்ஞையை சிரமேற்தாங்கி அதைப் பரிபாலிக்கும் பொருட்டு சீக்கிரமாகக் காசியை நோக்கிப் புறப்பட்டார்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவது காசீகண்டத்தில் உத்தரார்க்க பாஷா டீகாவான ஐம்பத்து ஐந்தாவது அத்தியாயம்*

*ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 56

*ஸ்வாமி கார்த்திகேயர் கூறுவார் :- இதற்குப் பிறகு மஹாதேவர் ஆஜ்ஞைப்படிக்கு கணேஸ்வரர் மந்த்ராசலத்திலிந்து சிவபிரான் காசி உபாயம் என்னவென்று யோசித்துக் கொண்டே புறப்பட்டார்.*

*மூஷிக வாஹனனுன பகவான் கணேசர் சீக்கிரமாகக் காசீ புரியை அணுகி ப்ராம்மணவேஷம் எடுத்துக் கொண்டு மிக நல்ல சகுனங்கள் தோன்ற நகரில் ப்ரவேசித்தார்.*

*விருத்த ஜ்யோதிஷருடைய வேடத்தை எடுத்துக் கொண்டு நகரமத்தியில் எல்லோருடைய வீடுகளிலும் நுழைந்து கொண்டு நகரத்து ஜனங்களுடைய ப்ரீதிக்குப் பாத்திரமாகிச் சுற்றிக் கொண்டிருந்தார்.*

*அவர் தானே இரவு காலங்களில் ஜனங்களுக்கு கனவுகள் ஏற்படச் செய்வார். பிறகு காலையில் அவரவர்களுடைய வீடுகளுக்குப் போய் அந்தக் கனவுகளின் குணதோஷங்களை எடுத்துச் சொல்லுவர்.*

*நீங்கள் நேற்று இரவு என்ன கனவு கண்டீர்களோ, அதுபற்றி அறிய உங்களுக்கு ஆவலாக இருக்கும். அதற்காக அதைக் கூறுகிறேன். அதைக் கேளும்-*

*இரவு நான்காம் ஜாமத்தில் நீங்கள் ஒரு பெரிய குளத்தைப் பார்த்தீர்கள். அந்தக் குளத்தில் மூழ்கி மூழ்கி நீந்தினீர்கள்.*

*ஆனுல் கரைக்கு ஏற நினைத்தவுடன் அந்த ஜலத்தில் பெரிய சுழலில் அகப்பட்டு அநேக தடவை மூழ்கி எழுந்திருந்தீர்கள். இது மிகவும் கெட்ட கனவு - இதனுடைய பலனும் பயங்கரமானது.*

*இப்பொழுது காவியுடை தரித்துத் தலையை முண்டனம் செய்திருந்த ஒரு மனிதனைப் பார்த்தீர்கள். அப்படிப் பார்ப்பது மிகவும் பயங்கரமான ஸந்தாபத்தைக் கொடுப்பதே.*

ராத்ரியில் ஸுர்ய க்ரஹணத்தைப் பார்த்தீர்கள். அதுவும் நிச்சயமாக அநிஷ்டத்தைக் (அநிஷ்டம்) கொடுக்கக் கூடியதே. மேலும் இரண்டு தனுஷ்களைப் பார்த்தீர்களல்லவா, அதுவும் நல்லதல்ல. ஆகாயத்தில் சூரியன் மேற்குப் பக்கமாக உதயமாவதைப் பார்த்தீர்களல்லவா!

ஆகாசத்திலிருந்து சந்திரன் நழுவி பூமியில் விழுந்தானல்லவா? இதெல்லாம் ராஜ்யத்திற்குக் கேடு விளைவிப்பதற்கான ஸுசகம்.

கூடவே இரண்டு கேது க்ரஹங்கள் ஒன்றுக்கொன்று சண்டை போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தீர்களல்லவா? அதுவும் ராஜ்யத்தின் பிளவிற்குக் காரணம்.

நீங்கள் கனவில் தலைமுடியும் பற்களும் தானாகவே விழுவதைப் பார்த்தீர்கள். நீங்கள் தெற்கு நோக்கிச் செல்லுவதாகப் பார்த்தீர்களல்லவா! அது உங்களுக்கு மாத்திரமல்ல உங்கள் குடும்பத்திற்கே கேடு விளைவிக்கக் கூடியது.

நீங்கள் இரவின் கடைசி பாகத்தில் மாளிகையின் மேலிருந்த கொடி அறுந்து கீழே விழுவதைப் பார்த்தீர்களல்லவா ? அதனால் ராஜ்யமே க்ஷயமடையும், பெரிய உத்பாதம் விளையும் என்று அறிந்து கொள்ளுங்கள்.

தாங்கள் கனவில் க்ஷீரஸாகரம் பொங்கிவந்து நகரத்தை மூழ்கடிப்பதாகப் பார்த்தீர்களல்லவா? அதனால் எனக்கென்ன தோன்றுகிறதென்றால் இன்னும் மூன்று நான்கு பக்ஷங்களுக்குள்ளேயே நகரத்து ஜனங்களுக்குப் பெரிய கேடு வருமென்று நினைக்கிறேன்.

நீங்கள் கனவில் வானரர்களால் இழுத்துச் செல்லப்பட்ட விமானத்தில் தெற்கு நோக்கிப் போவதாகப் பார்த்தீர்களல்லவா ? அதனால் ஏ! அறிவாளிகளே! அதிலிருந்து மீள என்ன உபாயம் என்றால் - நகரை -விட்டுச் செல்வதேயாகும்.

இரவின் கடைசி ஜாமத்தில் ஒரு ஸ்தீரி தலையை விரித்துக் கொண்டு வஸ்த்ரம் இல்லாமல் அழுது கொண்டு போவதைப் பார்த்தீர்களல்லவா ? அதற்கு அர்த்தம் என்னவென்றால் ராஜ்ய லக்ஷ்மியே இங்கிருந்து போய்விட்டாள் என்பதாகும்.

கோவில்களிலுள்ள கோபுரக்கலசங்கள் கீழே விழுவதைப் பார்த்தீர்களல்லவா? அதற்கு அர்த்தம் ராஜ்யம் சிதிலமடையும் என்பதாகும்.

இந்தப் புரியானது ஒரு மாதத்திற்குள்ளாகவே பாழாகிவிடும் என்பதாகும். புரிக்கு மேலே ஆகாசத்தில் கழுகு, ராஜாளி இவைகள் வட்டமிடுவதைப் பார்த்தால் ஏதோ ஆபத்து வரப்போவதாக ஸூசனை தென்படுகிறது.

இந்தப் ப்ரகாரமாக விக்னராஜன் இங்குமங்குமாக அநேகரிடம் இப்படிப்பட்ட கனவுகளைப் பற்றி வர்ணித்து புரவாஸிகளுடைய மனதில் பயத்தைப் பதிய வைத்து விட்டார்.

சிலரிடம் அவர் ஜாதகமுறைப்படி க்ரஹ நிலையை ஆராய்ந்து சொன்னார். சனியும், சுக்ரனும், செவ்வாயும் ஒரே ராசியில் போய் உட்கார்ந்து கொண்டார்களானால் அது நல்லதல்ல.

இந்த தூமகேது ஆகாசத்தில் ஸப்தர்ஷி மண்டலத்தைப் பேதித்துக் கொண்டு மேற்கு திசையில் போவதைப் பார்த்தீர்களா ? அது அரசனின் நாச காலத்துக்கு அறிகுறி.

சனீஸ்வரன் ராசியைத் தாண்டிப்போய் வக்ரமாகப் பாபக் க்ரஹங்களோடு சேர்ந்திருக்கிறார். அது மிகவும் அசுபமாகும்.

நேற்று பகலில் பூகம்பம் நேர்ந்ததல்லவா ? நான் இந்த நகரில் இருப்பதால் என்னுடைய இதயத்தையும் நடுங்கச் செய்கிறது.

இந்த எரிநக்ஷத்திரம் வடக்கிலிருந்து தெற்கு பக்கமாக சப்தத்துடன் வேகமாகச் சென்று ஆகாசத்திலேயே மறைந்து விட்டது. அதுவும் நன்மைக்கல்ல.

நான்கு பக்கமும் பெருத்த விழுதுகள் படர்ந்த இந்த வடவ்ருக்ஷம் பட்டுப்போய் வேகமாகப் பெயர்ந்து இருப்பதைப் பார்த்தால் ஒரு உத்பாதம் அவசியம் நேரும்.

ஸூர்யோதயம் ஆகாமலேயே இந்தப் பெயர்ந்து விழுந்த மரத்தின் மேல் உட்கார்ந்து கொண்டு காகம் இடைவிடாமல் கரைவதைப் பார்த்தால் பெருத்த பயங்காரமான ஒரு விஷயம் நடக்கப் போகிறது.

இரண்டு காட்டு மான்கள் சந்தைக்கு நடுவில் புரவாசிகள் முன்னால் ஓடிப்போனால் அதுவும் மிக அபசகுனம்.

சரத் காலத்திலேயே ஸாலம், மா முதலிய மரங்களில் மொட்டுக்கட்டியிருப்பதைப் பார்த்தால் உசித பருவமில்லாமலேயே காலமில்லாத காலத்தில் ஜனங்களுக்குக் காலன் வருவான் என்ற பயம் ஏற்படுகிறது.

இந்த விதமாக பயத்தை விளைவித்துக் கபடமாக கபடவேஷதாரியான அந்த விக்ன ராஜன் எத்தனையோ ஜனங்களை அந்த நகரிலிருந்து வெளியேற்றி விட்டார்.

பிறகு அவர் தன் மாயையின் பலத்தினால் அரசனின் அந்தப்புரத்தில் நுழைந்து, பிரத்யக்ஷ பலன்களைப் பற்றிக் கூறுவதினால் ஸ்த்ரீகளின் நம்பிக்கைக்குப் பாத்திரவான் ஆனார்.

ஒரு ரமணியைப் பார்த்துக் கூறினார் :- ஏ! சுபலக்ஷணே! உனக்கு பிள்ளைகள் பிறந்தன. அவர்களில் ஒருவன் குதிரையின் மேல் ஏறிச் சென்று பாலத்தைக் கடக்கும்பொழுது விழுந்து இறந்துவிட்டான். மற்றொருவளிடம் இந்த கர்ப்பவதியாக இருக்கும் ஸ்த்ரீ ஒரு அழகான பெண்ணை பெறுவாள் என்று கூறினார்.

*அப்புறம் இவளும் பதி ப்ரியமாக இருக்காததால் ஓடிப் போயிருந்தாள். ஆனால் இப்பொழுது ஸௌபாக்யவதியாகி விட்டாள். ஆம்! இவளோ, மற்ற ராணிகளுக்குப்ரியமானவள், இவளுக்கு அரசன் தன் மார்பில் புரளும் அழகான முத்து மாலையையே கொடுத்திருக்கிறார்.*

*இந்தவிதமாக பிரத்யக்ஷ பலன்களை இவர் கூறியதினால் ராணிகளின் நன்மதிப்புக்கு பாத்திரமாகி விட்டார்.*

*இவர் போனபின்பு இவருடைய அநேக குணங்களைப்பற்றி அரசனுடைய ராணிகள் கூறிக் கொண்டார்கள், ஆச்சர்யம். இந்த பிராம்மணன் எல்லா விஷயங்களையும் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறாரே; நல்லகுணமும் நல்ல அழகுமாக இருக்கிறார். உண்மையே பேசுகிறார், அதுவும் மிதமாகப் பேசிகிறார்.*

*லோபமில்லாத உதாரகுணமுடையவர், ஸதாசாரசீலர், ஜிதேந்த்ரியர், அல்பஸந்லோஷி, தானம் வாங்கக் கூசுபவர்.*

*கோபமில்லாதவர், மகிழ்ச்சி உள்ளவர், அஸூயை வஞ்சனை ஒன்றும் தெரியாதவர், செய்நன்றியுடையவர், அன்பு ததும்பும் முகமுடையவர், பிற நிந்தையை வெறுப்பவர்,*

*ஹிதோபதேசர், புண்ணியாத்மா, வ்ருதங்களை நிஷ்டையோடு செய்பவர், பவித்ரமான தூயநடத்தையுடையவர், ச்ருதி, ஸ்ம்ருதி இவைகளில் பண்டிதர்.*

*பரமாதீதர், உன்னத இதிஹாஸங்களையறிந்தவர், ஸமத்வ நோக்குடையவர். எல்லோராலும் விரும்பப்படுபவர், எல்லாக் கலைகளிலும் தேர்ந்தவர், ஜ்யோதிஷத்திலும் மஹா நிபுணர்.*

*பொறுமைசாலி, உயர்குடி பிறந்தவர். கஞ்சத்தனமில்லாதவர், நல்ல சுகபோகமுடையவர்,*

*நிர்மலலான உள்ளம் படைத்தவர், இவ்வளவு அருங்குணங்கள் பொருந்திய ஒருவர் இதுவரை நம் கண்ணில் படவேயில்லை.*

*இப்படியாக அந்தப்புரத்தில் உள்ள ராணிகள் திவோதாஸரிடம் விண்ணப்பித்துக் கொண்டானர்.*

*'மஹாராஜா, பரம குணவானுன ஒரு கிழப்பிராம்மண பண்டிதர், பார்த்தாலேயே ப்ரம்ம தேஜஸ் ஜொலிக்கின்றது. தாங்கள் கட்டாயம் அவரை தரிசிக்க வேண்டும்' என்றாள்.*

*பிறகு ராஜாவின் அனுமதி பெற்று ராணி தன்னுடைய சாதுர்யவதியான தாதியை அனுப்பி ப்ரம்ம தேஜஸே உருவெடுத்து வந்திருக்கும் அந்த ப்ராம்மணனை அழைத்து வரச் சொன்னாள்.*

*ராஜாவும் வரும் ப்ராம்மணனைத் தூரத்திலிருந்தே பார்த்து விட்டு அழகு இருக்குமிடத்தில் குணமும் இருக்கும் என்பது உண்மையே என்று மனதில் சொல்லிக்கொண்டு, பரமஸந்தோஷமடைந்தார்.*

*பிறகு அரசன் எழுந்திருந்து மூன்றடி முன்னால் சென்று அந்த ப்ராம்மணனை வரவேற்றார். அந்த ப்ராம்மணனும் நான்கு வேதங்களும் கூறும் ஆசீர்வாதத்தினால் வணக்கம் தெரிவித்தான்.*

*அரசனும் வணங்கி மரியாதையுடன் ஆஸநத்தில் இருத்தி குசல பிரச்னம் செய்தார். ப்ராம்மணரும் அரசனிடம் குசலம் விசாரித்தார்.*

*ப்ராம்மணனும் அரசனும் இருவருமே பேசுவதில் ஸமர்த்ர்கள். ஆதலால் ஒருவரையொருவர் குசல, பிரச்ன நிமித்தமாகவே கேள்விபதில்களை பறிமாறிக்கொண்டு, ஸந்தோஷமடைந்தார்கள்.*

*இவ்வாறு கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு, அரசன் பிராம்மணரை வீட்டுக்கு அனுப்பி வைத்தார் அவரும் ஸன்மானமும் மரியாதையும்*

*பெற்றுத் தன் ஸ்தானத்திற்குத் திரும்பினார்.*

*அந்த ப்ராம்மணர் தனது ஆச்ரமத்திற்குத் திரும்பிய பிறகு, நரேந்திரன் திவோதாஸ் ராணி லீலாவதியிடம் அவருடைய பெருமையைப் பற்றி மிகவும் வர்ணித்தார்.*

*மஹாபுத்திமதியான தேவி லீலாவதி! அந்த ப்ராம்மணரைப் பற்றி நீ எவ்வளவு கூறினாயோ, அதைவிட அதிக குணவானாக இருக்கிறார்.*

*அவர் கடந்த காலத்தையும், நிகழ்காலத்தையும் பற்றி நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறார். அதனால் நாளை காலை அவரை வரவழைத்து வரும் காலத்தைப் பற்றிக் கேட்டறிய வேண்டும் என்றார்.*

*பிறகு மிக்க ஐச்வர்ய சுக போகத்துடன் இரவு கழிந்தபின் காலையிலேயே அரசன் அந்த ப்ராம்மணரை அழைத்துவரச் சொன்னார்.*

*மிகவும் பக்தியுடன் பொன்னுடை போற்றி மிக்க உபசாரத்துடன் ஏகாந்தமான ஒரு இடத்திற்கு அழைத்துச் சென்று தன் மனதிலுள்ளதைச் சொன்னார்.*

*ராஜா கூறினார்: ஸ்வாமி! ப்ராம்மணர்களிலெல்லாம் நீரே ஸர்வோத்தமராக எனக்குத் தென்படுகிறீர். யான் அறிந்த மட்டும் தத்வதர்சனையான தங்கள் புத்தி வேறு ஒருவருக்கும் இல்லை. இது நிச்சயம்.*

*சாந்தமும் பொறுமையும் வித்வத்தும் தபோதனருமான தங்களைப் பார்த்துவிட்டு நான் தங்களிடம் சில விஷயங்களைக் கேட்க விரும்புகிறேன். அதற்குத் தாங்கள் சரியானபடி உத்தரம் தரவேண்டும்.*

*நான் இந்த பூமியை ஆண்ட விதம் வேறு ஒரு அரசனும் ஆண்டிருக்கமாட்டார்கள். நான் அநேகவிதமான வைபவங்கள் கூடிய திவ்ய போகங்களை அனுபவித்து விட்டேன்.*

*நான் இரவும் பகலும் சோம்பல் இல்லாமலும்*

*பலாத்காரமாய் துஷ்டர்களை ஜயித்து என் வயிற்றுப் புதல்வர்களைவிட அதிகமாகப் பிற பிரஜைகளைப் பரிபாலித்து வருகிறேன். ப்ராம்மணர்களுடைய சரண பூஜையைக் காட்டிலும் வேறு புண்ணியம் இருக்கிறதாக நான் அறியவில்லை. அதிருக்கட்டும், இந்த வேண்டாத விஷயங்களைப் பற்றிக் கூறி ப்ரயோஜனமில்லை.*

*ஆர்யரே, இப்பொழுது என் மனம் எல்லாக் கர்மங்களிலிருந்தும் விரக்தியடைந்தது போல் தோன்றுகிறது. எனது அந்திமகாலத்தில் எது நன்மையோ, அதை யோசனை செய்து சொல்ல வேண்டும்.*

*ப்ராம்மணர் கூறினார்:- உலகத்தில் அரசர்களுக்கு மிகவும் அல்ப விஷயமானாலும் ஏகாந்தத்தில் அழைத்துக் கேட்காத வரையில் சொல்லத் கூடாது.*

*மந்திரிகூட கேட்காமல், தனக்கு அவமானம் நேரிடும் என்ற பயத்தினால் ராஜாவிற்கு முன்னால் ஒன்றும் சொல்லக்கூடாது.*

*அதனால் தாங்கள் ஏகாந்தத்தில் கேட்டீர்கள். நானும் அவசியம் கூறுவேன். அதைச் செய்வதினால் தங்கள் சித்தத்தின் விருத்தி அவசியம் விலகும். அதைப் பற்றி ஸந்தேஹம் கொள்ள வேண்டாம்/*

*ஏ! மஹாராஜ்! கேளுங்கள். நான் ஸத்தியமில்லாததைக் கூற மாட்டேன். தாங்கள் எல்லா விதத்திலும் பரம பாக்கியசாலி, மிகச் சிறந்த வீரன்.*

*நான் அறிந்தமட்டும் அமராவதி இந்திரனைவிடத் தாங்கள் புண்ணியத்திலும், கீர்த்தியிலும், புத்தியிலும் மேலானவர்.*

*தாங்கள் புத்தியில் ப்ருஹஸ்பதி, மகிழ்ச்சியில் சந்திரன், தேஜஸ்ஸில் ஸூரியன், பிரதாபத்தில் அக்னி; பலத்தில் வாயு, தனத்திலும், தானத்திலும் குபேரன், அதிகாரத்தில் ருத்திரன், யுத்த பூமியில் நிர்ருதி.*

துஷ்டர்களைச் சிக்கவைப்பதில் வருணன், கெட்டவர்களை ஒழுங்குபடுத்துவதில் யமராஜன், பிரபுத்வத்தில் மஹேந்திரன் (மஹத்துவம்) பொறுமையில் - எல்லாவற்றையும் ஸஹிக்கும் பூமி. மரியாதையில் ஸமுத்திரம், பெருமையில் ஹிமாசலம், நீதி சாஸ்திரத்தில் சுக்ராசாரியர், ராஜ்யாதிகாரத்தில் ஸாக்ஷாத் மனு.

மேகத்துக்கு ஸமானமானவர், கங்கையைப் போல பவித்ரமானவர், எல்லா ஜீவர்களுக்கும் ஸத்கதியைக் கொடுப்பவர்; காசிக்கு ஸமானமானவர்

ஸம்ஹரிப்பதில் ருத்திரர், ஸ்ருஷ்டிப்பதிலும் நியமத்திலும் ப்ரம்மாவே, தங்கள் முககமலத்தில் ஸரஸ்வதி எழுந்தருளியிருக்கிறாள்.

தங்களுடையக் கரகமலத்தில் கமலை அமர்ந்திருக்கிறாள். கோபத்தீயில் ஸாக்ஷாத் விஷமேதான். தங்கள் வார்த்தைகள் அம்ருதத்திற்குத் துல்யம். இரண்டு புஜங்கள் அஸ்வினீ குமாரர்கள்.

ஏ! பூபதே! தாங்கள் ஸர்வவேதமயமானவர்; மேற்கூறியவைகளெல்லாம் தங்களிடம் நிரம்பியிருக்கின்றன. அதனால் தங்களுடைய வருங்காலத்து சுபபலனை நான் யதார்த்தமாக அறிவேன்.

இன்றிலிருந்து பதினெட்டாவது நாள் உத்தர தேசத்திலிருந்து ஒரு ப்ராம்மணன் வந்து தங்களுக்குச் சில உபதேசங்களைச் செய்வான்.

ஏ! மஹாராஜ! அவன் என்ன கூறுவானோ, அதைத்தாங்கள் முன்பின் யோசிக்காமல் செய்யவேண்டும். அதனால் தங்கள் மனோரதங்கள் பூர்த்தியாகும்.

இவ்வாறு கூறி அந்த பிராம்மணன் ராஜாவின் அனுமதி பெற்றுத் தன்னிருப்பிடத்திற்குச் சென்றார். அரசனும் மிகவும் ஆச்சர்யமடைந்தார்.

*இந்த விதமாக விக்னராஜர் தன்னுடைய மாயாஜாலத்திஞல் ஊர் ஜனங்கள், ராஜா, ராணிகள் ஸமஸ்த ஜனங்கள் எல்லோரையும் தன் வசப்படுத்திக் கொண்டார்.*

*பிறகு கணேசர் தன்னை க்ருதக்ருத்யஞக மதித்துத் தன்னை அநேக உருவங்களாகக் செய்து கொண்டு காசியில் அநேக இடங்களில் வஸிக்கத் தொடங்கிஞர்.*

*ஏ! அகஸ்தியா! ராஜா திவோதாஸ் இல்லாத வேளைகளில் தன்னுடைய அந்தந்த ஸ்தானங்களில் எழுந்தருளியிருந்தார்.*

*விஷ்ணுபகவான் அரசன் திவோதாஸை அவர் நிலைகுலையச் செய்த பிறகு திரும்பவும், நகரத்தை விஸ்வகர்மா புதுப்பித்த பிறகு, பகவான் விஸ்வநாதர் மந்த்ராசலத்திலிருந்து புறப்பட்டு வந்து இந்த அழகான நகர் வாராணஸிக்கு வந்து முதல் கணங்களுக்கு நாயகனென்று கணபதியை ஸ்துதி செய்தார்.*

*அகஸ்தியர் கேட்டார்- பகவான் மஹாதேவர் விஸ்வேஸ்வரரை எப்படித் துதித்தார்? விநாயகர் எந்தெந்த மூர்த்திகளாக எங்கெங்கு ஆவிர்பவித்தார்?*

*எந்தெந்த நாமங்களுடன் அவர் காசியில் எழுந்தருளியிருந்தார்? ஏ! ஷடானனு, இந்த விஷயங்களெல்லாம் நீர் எனக்கு சுருக்கமாகக் கூறும் என்ருர்.*

*கார்த்திகேயர் அகஸ்தியருடைய இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு கணநாதருடைய மங்களமான கதையை உள்ளது உள்ளபடி கூறத் தொடங்கிஞர்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான 56வது அத்தியாயம் (காசீ வர்ணன கணேசப்ரேஷண வர்ணனம்)*

*ஸம்பூர்ணம்.*

# அத்தியாயம் 57

ஸ்கந்தர் கூறுகிறூர் : ஹே! முனிஸத்தமரே! எப்பொழுது பகவான் விஸ்வேஸ்வரர் என்னேயும் பவானியையும் அழைத்துக் கொண்டுப் போனுரோ அந்த ஸமய ஆகம முறைப்படிக்கு மஹா ஸாகர், விசாகர் இவர்களுடன் கூட நந்திப்ருங்கி முதலியவர்கள் முன்னுல் சென்றூர்கள். ருத்ர கணங்கள் நான்கு பக்கமும் சூழ்ந்து சென்றூர்கள். தேவரிஷிகளுடன் கூட சங்காதிகள் துதிக்துக் கொண்டிருந்தார்கள்.

எல்லா தேவாலய மூர்த்திகளும் ஸமஸ்த திக்பாலர்களும் வணங்கினுர்கள். எல்லாத் தீர்த்தகணங்களும் தங்கள் தீர்த்தங்களே தர்சிப்பித்தார்கள். சுந்தர்வர்கள் மங்கள கீதங்கள் பாடினுர்கள்.

அப்ஸரஸ்கள் ஆடிக்கொண்டே தங்கள் தங்கள் கைகளாகிய கமல மலரை நாட்டிய பாவனேயாக அர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள். ஆகாச மண்டலத்தில் துந்துபி ஒருவரும் அடிக்காமலேயே தானே ஒலியே நாற்புறமும் எதிரொலிக்கச் செய்து கொண்டிருந்தன.

ரிஷிகளுடைய வேதத்வனியினுல் திசைகள் செவிடுபட்டன. சாரணர்கள் ஸ்தோத்ர கீதங்களேப் பாடினுர்கள். விமானங்கள் நான்கு பக்கங்களிலும் பறந்து நிரம்பின.

ஸந்தோஷத்தினுல் புளகாங்கிதமடைந்த தேவகன்னிகைகள் மஹாதேவர்மேல் கை நிறையப் பொரியை வாரி வர்ஷித்தார்கள்.

வித்யாதரப் பெண்கள் மாலேகளேப் காணிக்கையாக அளித்தார்கள். ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் யக்ஷர், குஹ்யகர், ஸித்தர்கள் முதலியோர் ஜய கோஷமிட்டார்கள்.

சகுனத்தை ஸூசிப்பிக்கும் மிருகங்கள், பக்ஷிகள் முதலியவைகள் முன்னுல் பிரவேசித்துக் கொண்டிருந்தன.

*ப்ரஸன்ன முகத்துடன் கின்னரர்கள், கின்னரிகள், மிகவும் மதுரமாகப் பாடிக்கொண்டிருந்தார்கள்.*

*விஷ்ணு, மஹாலக்ஷ்மி, ப்ரம்மா, விச்வகர்மா, நந்தி, கணேசர் இவர்கள் இந்த மஹோத்ஸவத்தை மிகவும் ப்ரபலமாக முழக்கிக் கொண்டிருந்தார்கள்.*

*நாக கன்னியர்கள் நான்கு பக்கங்களிலிருந்தும் மங்கள ஹாரத்தி எடுத்துச் கொண்டிருந்தார்கள். அந்த வேளையில் பகவான் விஸ்வநாதர் சுப மயமான வாராணஸியில் ப்ரவேசித்தார்.*

*வ்ருஷபத்வஜர் வ்ருஷபராஜர் மேலிருந்து இறங்கி எல்லா தேவதைகளும் பார்த்திருக்க கணேசரை ஆலிங்கனம் செய்து கொண்டு கூறத் தொடங்கினர்.*

*என்னையும் விட பரம துர்லபமான சுபமயீ வாராணஸி புரியில் வரும்படிச் செய்தது இந்தப் பிள்ளையினுடைய அன்பினால்தான்.*

*மூன்று உலகங்களிலும் பிதாவுக்கே கிடைப்பதற்கு துர்லபமாயிருக்கிற வஸ்து புத்திரனால் தந்தைக்கு கிடைக்க ஸாத்தியமாயிருக்கும் என்பதற்கு உதாரணம் நானே.*

*இதே கஜானனன் எனக்குக் காசி கிடைப்பதற்குத் தன்னுடைய புத்தி விபவத்தினால் என்னென்ன அனுஷ்டானம் செய்தானோ எனக்குத் தெரியாது.*

*நானே உண்மையில் புத்திரவானானேன். ஏனென்றால் எந்த விஷயம் அநேக தினங்களாக எனக்குக் கவலைக்குக் காரணமாக இருந்ததோ என்னால் ஒன்றும் செய்ய முடியாத நிலையில் அந்த விஷயத்தை எனது புத்திரன் தன்னுடைய பௌருஷத்தினால் முடித்து என்னுடைய அபிலாஷையை என் கையில் அளித்து விட்டான்.*

*இந்த்ராதி தேவர்களானும் கூடத்துதிக்கத் தகுந்தவரான பகவான் த்ரிபுராந்தகர் இவ்வாறு கூறிவிட்டு ஸந்தோஷத்தினால் தெளிவான வார்த்தைகளில் கணேசரைத் துதிக்கத் தொடங்கினர்.*

*பகவான் நீலகண்டர் கூறினர்: ஏ! விக்னவிநாயக ஸ்ரேஷ்டனே! பக்த ஜனங்களின் இடையூறுகளை நீக்குவதற்குக் காரணமானவனே! நீ ஒரு இடையூறும் இல்லாமலேயே விக்னங்களை சமனம் செய்பவன். இடையூறு செய்பவர்களுக்கு இடையூறு செய்பவன். அதனுல் நீ எல்லாவற்றையும் விட மேலானவன்.*

*எல்லா கணங்களுக்கும் தலைவனே! எல்லா கணங்களுக்கும் முன்னுல் மதிக்கப்படுபவனே! எல்லா கணங்களும் உன்னுடைய சரணகமலங்களில் வணங்குகிருர்கள். உன்னுடைய ஸத்குணம் எண்ணிக்கைக்கு அடங்காதது. அதனுல் நீ ஜய விஜயீ பவ!*

*ஸர்வ வ்யாபகனே! ஸர்வஸ்வாமியே! நீயே எல்லா புத்திகளுக்கும் இருப்பிடம். எல்லா மாயைகளையும் இயற்றுவதில் வல்லவன். எல்லாக் காலங்களிலும் முதலில் பூஜிக்கத் தகுந்தவன் அதனுல் மேலான லாபத்தை அடைவாய்.*

*ஏ! ஸர்வமங்களங்களுக்கும் மங்களனே, ஸர்வமங்களஸௌரபா! நீயே எல்லா அமங்களங்களையும் சமனம் செய்பவன். மஹா மங்களத்துக்குக் காரணமானவன். உனக்கு ஜயமுண்டாகட்டும்.*

*ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரம்மாவினுலும் வந்திக்கத் தகுந்தவனே, உனக்கு ஜயமுண்டாகட்டும். பாவனகர்த்தாவான விஷ்ணுவுக்கும் வணங்குவதற்கு பாத்திரமானவன். ஸம்ஹாரகர்த்தா ருத்திரனுலும் துதிக்கத்தகுந்தவனே! உனக்கு ஜெயமுண்டாகட்டும். ஸத்க்ரமங்களின் ஸித்தியை அளிப்பவனே! உனக்கு ஜயமுண்டாகட்டும். ஸித்தியை இயற்றுபவனே! உன்னுடைய பாதபத்மம் ஸித்தர்களாலும் வணங்குவதற்குரியது. நீயே எல்லா ஸித்தர்களுக்கும் ஏக மாத்ராதாரம். மஹாஸித்தி மஹாருத்தி இவைகளை ஸூசிப்பவனும்; நீயே ஸர்வஸ்ரேஷ்டன்.*

ஏ! குணுதீதனே! ஸமஸ்த குணங்களேயும் ஆக்குபவர். தன்னுடைய குணங்களினுல் எல்லோருக்கும் முதல்வன்; பூர்ணமான நன்னடத்தையுள்ளவன்; க்ருதார்த்தன், குணங்களால் வர்ணிக்கப்பட்டவன்; உனக்கு ஜயமுண்டாகட்டும்.

ஏ! ஸர்வ ஸேநாநாயகா! இந்திரனுக்கு பராக்ரமத்தை தானம் செய்பவனே! உன்னுடைய தந்தங்களின் நுனிகள் கொக்கைக் போல வெண்மையாக இருக்கின்றன. நீ பாலகனுக இருந்தாலும் கூட மிகவும் பராக்ரமி. அதனுல் உனக்கு ஜயமுண்டாகட்டும்

எல்லேயில்லாத மஹிமைகளுக்கு ஆதாரமே; பர்வதங்களேப் பிளப்பவனே! நீ திக்கஜங்களே உனது தந்தத்தின் நுனியில் கோர்த்துகொண்டாய். அதனுல் ஏ! நாகபூஷணு! உனக்கு ஜயமுண்டாகட்டும்.

ஏ! கருணுமயனே, திவ்யமூர்த்தியே, இந்த பூமண்டலத்தில் எவர்கள் உன்னே வணங்கிஞர்களோ, அவர்கள் பாபத்திற்கு இருப்பிடமாக இருந்தாலும் கூட முக்திக்கு அதிகாரிகளாவார்கள். நீ எப்பொழுதும் அவர்களுடைய விக்னங்களே விலக்கிக் கொண்டிருக்கிருய்; அவர்களுக்கு ஸ்வர்கத்தையும் மோஷத்தையும் கூடக் கொடுக்கிருய்.

ஏ விக்னராஜா! இந்த புவிதலத்தில் எவர்களே நீ உன்னுடைய கருணுகடாக்ஷத்திஞல் க்ஷணமாத்ரமாவது பார்த்து விட்டாயானுல் அவர்களுடைய ஸமஸ்தபாதக ராசிகளும் உடனுக்குடனேயே க்ஷயமடைந்து விடும். அந்த புருஷோத்தமர்களின் மேல் லக்ஷ்மி தேவீ தனது கடாக்ஷத்தை வீசுகிருள். வணங்கியவர்களின் இடையூறுகளே நீக்குவதில் சதுரனே! பார்வதியின் ஹ்ருதயாரவிந்தத்திற்கு சூரியனே! எவர்கள் உன்னே ஸ்துதி செய்கிருர்களோ அவர்கள் ப்ரஸித்தியாகிருர்கள். ஆனுல் அதில் ஒன்றும் விசித்ரமில்லே. ஆனுல் அவர்களே இங்கு கணநாயகர்களாக வருவதுதான் அவசியம்.

*உன்னுடைய பதகமலங்களை ஸேவிப்பவர்கள் புத்ர, பௌத்ர தனதாந்ய ஸம்பத்துடன் வாழ்கிறார்கள். அவர்களுடைய பத கமலங்களுக்கு அநேக தாஸதாஸிகள் ஸேவை புரிகிறார்கள். அது மட்டுமல்ல, நிர்மலமான ராஜ்ய லக்ஷ்மிக்கு அதிகாரிகளாகவும் வருகிறார்கள்.*

*ஏ! பரமகாரணா! நீயே ஸமஸ்த காரணங்களுக்கும் காரணன். வேத வித்துகளால் அறியப்படுபவன் நீ ஒருவனே. வாக்குக்கு மூலமே! நீ வாக்குகளுக்கும் எட்டாதவன். சராசர ஸ்வரூபியே! திவ்ய மூர்த்தியே! உலகத்திற்கும் அப்பால் ஆராய வேண்டிய வஸ்து நீ.*

*இந்த சராசரமான நாடகத்துக்கு ஸூத்ரதாரியே! நான்கு வேதங்களும், ப்ரம்மா முதலிய தேவர்களும் கூட உன்னை அறிந்தவர்களில்லை. மனத்திற்கும் அதீதமானவனே! நீ ஒருவனே உலகம் முழுமையும் பாலித்து ரக்ஷிக்கிறாய். உன்னை எதைச்சொல்லித் துதிப்பது?*

*உன்னுடைய குடில பார்வையாகிற பாணத்தினால் முன்னாலேயே கொல்லப்பட்ட த்ரிபுரன், அந்தகன், ஜலந்தரன் இவர்களை நான் கொல்ல முடிந்தது. ஸித்தியளிப்பவனே! நீ இல்லாமல் ஒரு துச்சமான காரியத்தைக்கூடச் செய்து முடிக்க இங்கு யாருக்கு சக்தியிருக்கிறது?*

*'டுண்டி' என்ற தாதுவுக்கு ஸம்ஸ்க்ருதத்தில் தேடுவது என்று அர்த்தம். ஸமஸ்த வாக்குகளின் அர்த்தங்களைத் தேடுவதற்கு நீயே காரணமாதலினால் உனக்கு டுண்டு எனப்பெயர் வந்தது. இந்த உலகத்தில் உன்னுடைய ஸந்தோஷமும் த்ருப்தியும் இல்லாமல் ஹே டுண்டுராஜ் விநாயகா! காசீபுரியில் யாரால் ப்ரவேசிக்க முடியும்?*

*இந்தக் காசீவாசிகள் முதலில் உன்னை வணங்கி விட்டுப் பிறகு தான் என்னை வணங்க வருகிறார்கள். அப்படி வணங்கி அவர்களின் அந்திமகாலத்தில் திரும்பவும்*

*ஸம்ஸாரத்தில் ஜனனமெடுக்க முடியாதபடி ஒரு மந்திரத்தை உபதேசம் செய்கிறேன்.*

*பக்தர்கள் முதலில் மணிகர்ணிகையில் வஸ்திரத்துடன் ஸ்நானம் செய்து விட்டு தேவரிஷி பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து முடித்து விட்டு வெறுங்காலுடன் ஞானவாபிக்கு வந்து உன்னைப் பூஜிக்கட்டும்.*

*ஹே! டுண்டே! யாராயிருந்தாலும் காசீபுரியின் பலனைக் கொடுப்பதில் சதுரனான உனக்கு ஸுகந்த சந்தனம் பூசி தூபம், தீபம், மாலை இவைகளுடன் ஆனந்தத்தைக் கொடுக்கும் மோதகங்களைக் கொடுத்து உன்னை ஸந்தோஷப்படுத்திப் பிறகு என்னைப் பூஜை செய்வார்களானால் அவர்கள் எந்த ஸித்தியைத்தான் அடைய மாட்டார்கள்?*

*இதற்குப் பிறகு ஒருவன் காசியின் மற்றதீர்த்தங்களிலெல்லாம் உருண்டு எழுந்து பிரதக்ஷிணமாக வந்தானானால் உன்னுடைய தயை நிறைந்த பார்வையினால் தனக்கு ஹிதமும் அஹிதமும் ஆன விக்னங்களைத் தூர விலக்கி இந்தக் காசியின் ஸம்பூர்ண பலத்தை அடைகிறான்.*

*ஹே! டுண்டி விநாயகா! காசியில் ஒருவன் ப்ரதி தினமும் காலை வேளையில் உன்னை வணங்கினால் அவனுடைய ஸமஸ்த இடையூறுகளும் நஷ்டமடைகின்றன. அவனுக்கு இங்கும் பரலோகத்திலும் உலகத்தில்உள்ள எந்த வஸ்துக்களும் ஒருபோதும் துர்லபமில்லை.*

*ஹே! டுண்டிராஜ்! ஒருவன் உன்னுடைய பெயரைப் ப்ரதி தினமும் ஜபிப்பானாகில் அவனுடைய நாமத்தை எட்டு ஸித்திகளும் தங்கள் ஹ்ருதயத்தில் எப்பொழுதும் ஜபித்துக்கொண்டிருக்கிறார்கள். பிறகு அந்த மனிதன் தேவதைகள் போகிக்கும் அநேக போகங்களை அனுபவித்து*

*விட்டுப் பிறகு மோக்ஷலக்ஷ்மியால் அனுபவிக்கப் படுகிறுன்.*

*ஹே! டுண்டி விநாயகா, நீ ஸகல ஸித்திகளுக்கும் தாதா, அதனுல் தூர தேசத்தில் இருக்கும் ஒரு மனிதனும் கூட ப்ரதி தினமும் உன்னுடைய பாத பீடத்தை ஜபித்துக்கொண்டிருப்பாஞகில் அவனுக்குக் காசிவாஸம் செய்யும் பலன் வ்யாகுலமில்லாமல் கிடைக்கும். அப்படிச் செய்யாவிட்டால் அந்தப் பலன் ஒருநாளும் கிடைக்காது. என்னுடைய வார்த்தை ஒருநாளும் பொய்யாகாது.*

*ஏ! மஹா பாக்யாசாலியே, நீ இந்த காசி க்ஷேத்திரத்தில் எண்ணிக்கையில்லாத அநேக விதமான விக்னங்களை நாசம் செய்வதற்காக அநேக ரூபங்களை எடுத்துக்கொண்டு இங்கு எழுந்தருளியிருக்கிறுய் என்பதை நானறிவேன்.*

*ஏஂ குற்றமற்றவனே! எங்கு எங்கு நீ எந்த எந்த உருவத்தில் இருக்கிறுய் என்பதை நான் இங்கு கூறுகிறேன், அதை இங்குள்ள தேவதைகளும் கேட்கட்டும்.*

*முதலாவது நீ எனக்குத் தெற்குப்பக்கத்தில் ஸமீபத்திலேயே டுண்டிராஜ் என்னும் உருவில் எழுந்தருளியுள்ளாய். எல்லா மனோரதங்களையும் பூர்ணமாக்குகிறுய்.*

*ஏ! ஸுபுத்திரனே, கணேசா! எவர்கள் செவ்வாய்க் கிழமையும் சதுர்த்தியும் கூடின திதியன்று நல்ல வாஸனையோடு கூடின லட்டுகளினுலும், சந்தனம், மாலைகள் இவைகளினுலும் விதம் விதமாக அலங்கரித்துப் பூஜை செய்வார்களானுல் அவர்கள் எல்லாரையும் நான் என்னுடைய பாரிஷதர்களாக ஆக்குகிறேன்.*

*ஹே டுண்டிகஜானனு! ஒவ்வொரு சதுர்த்தியும் உன்னைப் பூஜித்து அர்ச்சிப்பவன் மஹா புத்திமானுவன். அவன் எல்லா விபத்துக்களின் தலையில் தனது இடது காலைத் தூக்கி வைத்துக் கொண்டு தானே கஜாநனன் ஆகிறுன்.*

ஹே! டுண்டே! மாகமாசத்து சுக்ல சதுர்த்தியன்று சுத்த நிர்ஜல வ்ரதமிருந்து யார் இரவு கண்விழித்து உன்னைப் பூஜை செய்வார்களோ அவர்கள் தேவதைகளாலும் பூஜிக்கத்தகுந்தவர்களாகிறார்கள்.

மாகமாஸத்து சுக்லபக்ஷத்து சதுர்த்தியன்று உன்னுடைய வருஷ யாத்திரையை முடித்து வெள்ளை எள்ளினால் நிவேதனம் செய்து விட்டு வ்ரதகர்த்தா போஜனம் செய்ய வேண்டும்.

ஹே! டுண்டிராஜ்! க்ஷேத்ர ஸித்தியை விரும்புகிறவர்கள் இந்த மாகமாதத்து சுக்ல சதுர்த்தி அன்று உன்னுடைய ஸந்தோஷத்திற்காக முயற்சியுடன் உன்னுடைய யாத்திரையைச் செய்ய வேண்டும். இந்த யாத்திரையே அவர்களுடைய எல்லா இடையூறுகளையும் விலக்கும். யார் இந்த யாத்திரையைச் செய்யவில்லையோ, யார் வெள்ளை எள்ளை நிவேதனம் செய்யவில்லையோ, அவர்கள் ஆயிரக்கணக்கான விக்னங்களால் பீடிக்கப்படுவார்கள். மந்திரம் அறிந்தவர்கள் இதே சதுர்த்தியன்று பக்திபூர்வமாக எள், நெய் முதலிய த்ரவ்யங்களினால் ஹோமம் செய்தால் அவர்களுக்கு மந்திரம் ஸித்தியாகும்.

ஏ! டுண்டுராஜ்! உன்னுடைய வைதிக மந்திரங்களினாலும் சரி, தாந்த்ரிக விதிகளினாலும் சரி, எந்த மந்திரங்களானாலும் உன்னுடைய சமீபத்தில் உட்கார்ந்து ஜபித்தால் விரும்பிய ஸித்திகள் கிடைக்கும்.

மஹேச்வரர் கூறுவார்! ஸத்புத்தியுள்ளவர்கள் என்னால் இயற்றப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்வார்களேயானால் அவர்களைப் பெரிய பெரிய விக்னங்கள்கூட ஒரு பொழுதும் பிடிக்காது.

இந்த டுண்டி ராஜ ஸ்தோத்திரத்தை டுண்டி ராஜருக்கு ஸமீபத்தில் படிப்பவருக்கு ஸமஸ்த ஸித்திகளும் அவர்களண்டையில் இருந்து செய்து கொண்டிருக்கும்.

மன ஒருமையுடன் ஒருவன் இந்த ஸ்தோத்திரத்தை பாராயணம் செய்தானேயானுல் அவனுடைய மானஸிக பாபங்கள் கூட அவனை அழுத்தாது.

டுண்டி ராஜ ஸ்தோத்திரத்தை பாடம் செய்வதால் புத்திரன், களத்திரம், க்ஷேத்ரம், உத்தமக்குதிரைகள், நேர்த்தியான க்ரஹங்கள், தனம், தான்யம் எல்லாமடைவான்.

மோக்ஷத்தை விரும்புபவன் என்னுல் இயற்றப்பட்ட ஸர்வ ஸம்பத்திகரம் என்னும் ஸ்தோத்திரத்தை மிகவும் ச்ரத்தையுடன் எப்பொழுதும் பாராயணம் பண்ண வேண்டும்.

முதலாவது இந்த ஸ்தோத்திரத்தைப் படித்து விட்டு ஒரு காரிய ஸித்திக்காக யாத்திரை செய்தானேயானுல் நிச்சயமாக எல்லா ஸித்திகளும் அவனுக்குக் கிட்டும்.

நன்று; ஏ! தேவ கணங்களே! நீங்கள் வேறு ஒரு விஷயத்தையும் கேட்டுக் கொள்ளுங்கள். கணேசன் இந்த க்ஷேத்திரத்தைக் காவல் புரியும் பொருட்டு எங்கெல்லாம் தன்னுடைய முகாம் ஏற்படுத்திக் கொண்டிருக்கிருனே அவைகளைக் கூறுகிறேன்.காசியில் கங்கையில் அஸி ஸங்கமத்தில் அர்க்க விநாயகர் என்ற கணேசர் இருக்கிருர். ரவிவாரத்தன்று அவரை தரிசனம் செய்தால் எல்லா தாபங்களும் சாந்தி அடையும்.

இந்த க்ஷேத்திரத்திற்குத் தென்பாகத்தில் துர்க்கதிகளை நாசம் செய்யும் துர்க விநாயகர் என்ற கணேசர் இருக்கிருர். அவருடைய பூஜைகளை மிகவும் முயற்சியுடன் செய்ய வேண்டும்.

பீமசண்டிக்கு ஸமீபத்தில் க்ஷேத்திரத்தின் நிர்ருதி கோணத்தில் பீமசண்டி விநாயகர் இருக்கிருர். அவரை தரிசித்த மாத்திரத்தில் அவர் எல்லா பயங்களையும் தூர விலக்குகிருர்.

*காசியின் மேற்கு எல்லேயில் தேஹலி விநாயகர் இருக்கிருர் (எல்லே விநாயகர்). அவர் பக்தர்களுடைய எல்லா விக்னங்களேயும் இந்த இடத்தில் ஸந்தேஹம் இல்லாமல் நிவாரணம் செய்கிருர்.*

*இந்த க்ஷேத்திரத்தின் வாயுகோணத்தின் உத்தண்ட விநாயகர் இருக்கிருர். அவர் எப்பொழுதும் பக்தர்களின் பெரிய பெரிய உத்தண்டமான விக்னங்களேயும் தண்டிக்கிருர்.*

*காசியின் உத்தர திசையில் பாசபாணி விநாயகர் எழுந்தருளியிருக்கிருர். அவரை பக்தி பண்ணுவதால் காசி வாஸிகளுடைய ஸகல விக்னங்களேயும் எப்பொழுதும் பாசத்தால் கட்டி விடுகிருர்.*

*கங்கா வருணு ஸங்கமத்தில் ரமணீயமான கர்வ விநாயகர் இருக்கிருர். ஸஜ்ஜனங்களாகிய பக்தர்களுடைய பெரிய பெரிய ஸமூஹங்களேயும் அடக்கிச் சிறியதாக்கி விடுகிருர்.*

*கிழக்குப் பக்கத்தில் காசீ க்ஷேத்திரத்தில் ரக்ஷிப்பதற்காக பிரஸித்த ஸித்த விநாயகர் யமதீர்த்தத்திற்கு மேற்கு பக்கத்தில் எழுந்தருளியிருக்கிருர். அவர் ஸாதகர்களுக்கு அதி சீக்கிரத்தில் ஸித்தியளிக்கிருர்.*

*காசியின் வெளி எல்லேகளில் இந்த எட்டு விநாயகர்களும் எழுந்தருளியிருக்கிருர்கள். இவர்கள் எவர்கள் பக்தர்களில்லேயோ அவர்களே இங்கிருந்து பெயர்த்து விடுவார். எவர்கள் பக்தர்களோ அவர்களுக்கு ஸகல ஸித்திகளும் தந்தருளுவார்.*

*நான் இப்பொழுது இரண்டாவது சுற்று வட்டாரத்திலுள்ள அவிமுக்த க்ஷேத்திரத்தை ரக்ஷிக்கும் விநாயகரைப் பற்றிக் கூறுகிறேன்.*

*கங்கையினுடைய மேற்கு பக்கத்தில் அர்க்க விநாயகருக்கு வடக்கில் லம்போதர விநாயகர் இருக்கிருர். அவர் விக்ன ரூபமான சக்தியைக் கழுவி விடுவார்.*

அவருக்கு வடக்குப் பக்கத்தில் துர்கவிநாயகருக்கும் வடக்கில் கூடதந்தம் என்னும் விநாயகர் இருக்கிறார். அவர் கடினமான இடையூறுகளைக் களைந்து எப்பொழுதும் காசீ க்ஷேத்திரத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறார்.

பீமசண்ட கணேசருக்குச் சற்று தள்ளி ஈசான கோணத்தில் க்ஷேத்திரத்தை ரக்ஷிப்பவரான ஸாலகண்டர் என்னும் பெயருடைய கணேசர் பூஜிக்கத் தகுந்தவர்.

தேஹலி விநாயகருக்குக் கிழக்கில் கூஷ்மாண்டர் என்னும் பெயருடைய கணுத்யக்ஷர் இருக்கிறார். பக்தர்களுக்கு உசிதம் என்னவென்றால் மஹா உத்பாதங்கள் சாந்தியடையும் நிமித்தம் அவரையே பூஜை செய்ய வேண்டும்.

உத்தண்ட விநாயகருக்கு அக்னி கோணத்தில் பக்தர்களால் பூஜிக்கத் தகுந்த மஹாப்ரஸித்தமான முண்ட விநாயகர் எழுந்தருளியிருக்கிறார்.

அவருடைய சரீரம் முழுவதும் பாதாளத்தில் இருக்கிறது. கேவலம் முண்டம் மாத்திரம் காசியில் தெரிகிறது. அதனுலேயே காசியில் இவரை முண்ட விநாயகர் என்கிறார்கள். (பாச பாணி கணேசருடைய தெற்குப் பக்கத்தில் விகடதந்த கணேசர் எழுந்தருளி இருக்கிறார். அவரைப் பூஜித்தால் கணேச பதவியே கிடைக்கும்.

கருவ விநாயகருடைய நிர்ருதிக் கோணத்தில் ராஜ புத்ர கணேசர் இருக்கிறார். அவரை பூஜித்தால் ராஜ்யத்தை இழந்த அரசர்களுக்கும் திரும்பவும் ராஜ்யம் கிடைக்கும்.

கங்கையினுடைய மேற்குக் கரையில் ராஜபுத்ர கணேசருடைய வடமேற்குப் பக்கத்தில் ப்ரணவ கணேசர் இருக்கிறார். அவரை வணங்கினால் ஸ்வர்கத்தில் ஏற்றி விடுவார்.

காசியில் இரண்டாவது சுற்றுப் ப்ராகாரத்தில் இந்த எட்டு விநாயகர்களும் கோவில் கொண்டிருக்கிறார்கள்.

இவர்கள் காசியில் வசிப்பவருடைய விக்ன ராசிகளை வேருடன் கெல்லி எறிகிறார்கள்.

இப்பொழுது காசி க்ஷேத்திரத்தின் மூன்றாவது சுற்றுப் ப்ராகாரத்தின் க்ஷேத்திரத்தைக் காவல் காக்கிற எந்தெந்த விக்ன ராஜர்கள் இருக்கிறார்களோ அவர்களைப் பற்றி வர்ணிக்க விரும்புகிறேன்.

உத்தர வாஹினியான கங்கையினுடைய ரமணீயமான கரையில் லம்போதர கணேசருக்கு வடக்கில் வக்ரதுண்ட விநாயகர் இருக்கிறார். அவர் பாபக்குவியல்களை அபஹரிக்கிறார்.

கூடதந்த கணேசருக்கு வடபாகத்தில் ஏகதந்த கணேசர் இருக்கிறார். அவர் எப்பொழுதும் உப்த்திரவங்களின் பிடியில் இருந்து ஆனந்த வனத்தை ரக்ஷிக்கிறார்.

ஸாலகண்ட கணேசருடைய ஈசான கோணத்தில் தினமே காசியின் பயத்தைப் போக்கடிக்கும் த்ரிமுக விநாயகர் இருக்கிறார். அதில் ஒரு முகம் வானரம், இரண்டாவது ஸிம்மம், மூன்றாவது யானை இப்படியாக கணேசர் இருக்கிறார்.

கூஷ்மாண்ட கணபதிக்குக் கிழக்குப்பக்கத்தில் பஞ்சமுக விநாயகர் இருக்கிறார். பஞ்சானனம் (சிங்கம்) அவர் வாராணஸி புரியை ரக்ஷிக்கிறார். முண்ட விநாயகருக்கு அக்னி கோணத்தில் ஹேரம்ப விநாயகர் இருக்கிறார். அவரை எப்பொழுதும் பூஜை செய்ய வேண்டும். அவர் அன்னையைப்போல எல்லா காசிவாஸிகளுடைய விருப்பங்களையும் நிறைவேற்றுகிறார்.

புத்திமான்கள் ஸித்திக்காக விகடதந்த கணேசருடைய மேற்கு பாகத்தில் ஸர்வவிக்ன விநாசகரான விக்ன ராஜர் என்ற கணபதியைப் பூஜிக்க வேண்டும்.

ராஜபுத்ர கணேசருடைய நிர்ருதி கோணத்தில்

இருப்பவரும் பக்தர்களுக்கும் எப்பொழுதும் வரதானம் அளிக்கும் வரதர் என்னும் கணேசரைப் பூஜிக்க வேண்டும்.

தக்ஷிண கங்கையின் பவித்ரமான கரையில் ப்ரணவ விநாயகரின் தக்ஷிணபாகத்தில் த்ரிலோசன தீர்த்தத்தில் மோதக ப்ரியர் என்னும் கணேசரும் மிகவும் பூஜிக்கத் தக்கவர்.

காசியில் நான்காவது சுற்று வட்டாரத்தில் பக்தஜனங்களின் விக்னங்களைக் கொய்து எறியும் இந்த எட்டு விநாயகர்களும் ப்ரஸன்ன சித்தத்துடன் தெளிவான உருவுடன் தரிசிக்கத் தகுந்தவர்களாக இருக்கிறார்கள்.

வக்ரதுண்ட கணேசருடைய வடபாகத்தில் கங்கைக் கரையிலேயே எல்லோருடைய பயத்தையும் போக்கடிக்கும் அபயப்ரத விநாயகர் இருக்கிறார்.

ஏகதந்த கணேசருடைய வடபாகத்தில் ஸிம்ஹதுண்டர் என்னும் பெயருடைய விநாயகர் இருக்கிறார். அவர் காசிவாஸிகளுடைய எஞ்சியிருக்கும் ஹஸ்திரூபமான பாபங்களை நஷ்டமடையச் செய்வார்.

த்ரிமுக கணேசருடைய ஈசான கோணத்தில் கூணிதாக்ஷர் என்னும் பெயருடைய விநாயகர் இருக்கிறார். அவர் இந்த மஹாஸ்மசானமான காசியை துஷ்டர்களின் கொடுந்திருஷ்டியிலிருந்து ரக்ஷிக்கிறார்.

பஞ்சமுக கணேசருடைய பூர்வபாகத்தில் க்ஷிப்ரப்ரஸாதர் என்னும் பெயருடைய கணேசர் நகரத்தை ரக்ஷிக்கிறார். இவரை பூஜித்தால் எல்லா ஸித்திகளும் சீக்கிரமாக ஸித்தியாகும்.

ஹேரம்ப கணேசருடைய தக்ஷிண பாகத்தில் சிந்தாமணி விநாயகர் இருக்கிறார். அவர் பக்தர்களுக்கு ஸாக்ஷாத் சிந்தாமணியாகவே விளங்குகிறார். ஏனென்றால் அவர் நாம் சிந்திக்கின்ற எல்லாப் பொருள்களையும் நமக்கு ஸமர்ப்பிக்கின்றார்.

விக்னராஜ விநாயகரின் தெற்கு பக்கத்தில் தந்த ஹஸ்த

*விநாயகர் இருக்கிறார். இவர் காசிக்குத் துரோகம் செய்யும் மனிதர்களின் ஆயிரக்கணக்கான விக்னங்களை எழுதி வைத்துக் கொள்கிறார்.*

*வரத விநாயகரை நிர்ருதி கோணத்தில் ராஜகுணமுள்ள கணங்களால் சூழப்பட்ட பிசண்டிலர் என்னும் பெயருடைய கணேசர் இருக்கிறார். அந்தத் தேவர் இந்த நகரினை இரவும் பகலும் ரக்ஷிக்கிறார்.*

*பிலப்பிலா என்னும் பெயருள்ள த்ரிலோசன தீர்த்தத்தில் மோதகப்ரிய கணேசருடைய தெற்கு பாகத்தில் உத்தண்ட முண்டர் என்னும் பெயருள்ள விநாயகர் பக்தர்களுக்கு எதுதான் கொடுக்கமாட்டார்?*

*இப்பொழுது காசி ஐந்தாவது சுற்றளவில் எட்டு விநாயகர்கள் இந்த க்ஷேத்திரத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைப்பற்றிக் கூறுகிறேன்.*

*கங்கைக்கரையிலேயே ஜான்னவீ தீரத்தில் அபயப்ரத கணேசருக்கு வடபக்கத்தில் ஸ்தூலதந்த கணேசர் இருக்கிறார். அவர் ஜனங்களுக்கு ஸ்தூல ரூபமான ஸித்திகளை அருளுகிறார்.*

*ஸிம்மதுண்ட விநாயகருக்கு வடக்குப் பக்கத்தில் கலிப்ரிய விநாயகர் இருக்கிறார். அவர் இந்தத் தீர்த்தவாஸிகளின் த்வேஷிகளை எப்பொழுதுமே அவர்களுக்குள் கலஹத்தை விளைவித்துக் கொண்டே இருக்கிறார். கூணிதாக்ஷகணபதியின் ஈசானத்திக்கில் சதுர்தந்த விநாயகர் இருக்கிறார். அவரை தரிசித்த மாத்திரத்திலேயே விக்னவர்க்கங்கள் தன்னைத்தானே க்ஷயமாக்கி விடுகின்றன.*

*க்ஷிப்ரப்ஸாத கணபதியின் கிழக்குப் பக்கத்தில் இருமுக விநாயகர் இருக்கிறார். முன் பக்கத்தில் இருக்கும் அழகைப் போலவே பின்பக்கமும் இருக்கிறது.*

*அவரை தரிசனம் செய்வதால் மனிதர்களுக்கு நான்கு பக்கங்களிலிருந்தும் லக்ஷ்மீகடாக்ஷம் குவிகிறது.*

*இவர்களெல்லாம் என்னுடைய புத்திரர்கள். இந்த புத்திர பாக்கியங்களில் எல்லோருக்கும் பெரியவரான ஜ்யேஷ்ட விநாயகர் இருக்கிறார்.*

*அவர் சிந்தாமணி விநாயகரின் அக்னி கோணத்தில் வீற்றிருக்கிறார். ஆனி மாதத்து சுக்ல சதுர்த்தியன்று ச்ரேஷ்டத்தன்மை பெறுவதற்கு அவரைப் பூஜை செய்ய வேண்டும்.*

*தந்த ஹஸ்த கணபதியின் தெற்கு பாகத்தில் பூஜிக்கத் தகுந்த கஜவிநாயகர் இருக்கிறார். அவரை பக்தியுடன் பூஜித்தால் யானைகளையும் கட்டியாளும் ஸம்பத்து கிடைக்கும்.*

*பிச்சிண்டில் கணபதியினுடைய தெற்கு பாகத்தில் கால விநாயகர் இருக்கிறார். அவரை ஸேவிக்கும் நரர்களுக்குக் காலபயம் ஏற்படாது.*

*உத்தண்ட முண்ட கணபதியின் தெற்கு பாகத்தில் இருக்கும் நாகேச கணபதியைப் பார்த்தவுடனேயே நாகலோகத்தில் வெகுமானத்துடன் வஸிக்க முடியும்.*

*இப்பொழுது காசியில் ஆறாவது ப்ராகாரத்தில் இருக்கும் கணேசர்களைப்பற்றிக் கூறுகிறேன். அவர்களுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே மனிதர்களுக்கு ஸித்தி கிடைக்கும்.*

*கிழக்கில் விக்னங்களைக் கொல்லும் மணிகர்ண விநாயகர் இருக்கிறார். அக்னி கோணத்தில் பக்தர்களின் ஆசையைப் பூர்த்தி செய்யும் ஆசா விநாயகர் இருக்கிறார். தென்திசையில் ஸ்ருஷ்டிகளை ஸம்ஹரிக்கும் ஸ்ருஷ்டி விநாயகர் இருக்கிறார். நிர்ருதி கோணத்தின் ஸர்வ விக்னங்களையும் ஸம்ஹரிக்கும் பகவான் யக்ஷவிநாயகர் இருக்கிறார்.*

*மேற்குப்பக்கத்தில் எல்லோருக்கும் மங்களத்தைக் கொடுக்கும் கஜகர்ண விநாயகர் இருக்கிறார். வாயு கோணத்தில் சித்ரகண்ட விநாயகர் காசியைப் பாலித்துக்*

*கொண்டிருக்கிறார்.*

*வடக்கில் ஸ்தூல ஜங்க கணபதி சாந்த குணமுடையவர்களின் பாபங்களை சமனம் செய்கிறார். ஈசான கோணத்தில் மங்கள விநாயகர் இந்தச் சிவபுரியைப் பாலிக்கிறார்.*

*யமதீர்த்தத்திற்கு வடக்குப் பக்கத்தில் இருக்கும் மித்ர விநாயகரும் பூஜிக்கத்தகுந்தவர். இப்போது நான் ஏழாவது ஆவரணத்தில் இருக்கும் விநாயகர்களைப்பற்றிக் கூறுகிறேன்.*

*ப்ரஸித்த மோத விநாயகர் முதலிய ஐந்து விநாயகர்; ஆருவது ஞான விநாயகர், ஏழாவது த்வார விநாயகர், இவர்கள் ஆசாரவாசலின் முன்னணிப் பாதுகாவலர்கள்.*

*எட்டாவது அவிமுக்த விநாயகர்; அவர் அவிமுக்த க்ஷேத்ரத்தின் பக்த ஜனங்களை எல்லாவித கஷ்டங்களினின்றும் காப்பாற்றுகிறார்.*

*இந்த ஐம்பத்தாறு விநாயகர்களையும் ஒருவன் நினைத்துக் கொண்டேயிருப்பானாகில் துரதேசங்களில் மரணமடைந்தாலும் ஞானம் பெறுவான்.*

*எவன் ஒருவன் டுண்டிராஜ் ஸ்தோத்திரத்தையும் ஐம்பத்தாறு விநாயகர்களின் கதைகளையும் படிக்கிறானோ. அவன் ஆத்மா புனிதமடையும். அவன் தொட்டதெல்லாம் ஸித்தியாகும்.*

*எங்கேயாகட்டும்: இந்த கணேசர்களை நினைத்துக் கொண்டால் பெரிய ஆபத்தாகிய ஸமுத்திரத்தில் விழுந்தால் கூட இவர்கள் கரையேற்றுகிறார்கள்.*

*இந்த பரம புண்ணிய ஸ்தோத்திரத்தையும் விநாயகர்களின் கதையும் கேட்பதினால் ஸகல இடையூறுகளும் விலகுவதுடன் பாபமே அவர்களையண்டாது.*

*இப்படியாக உபன்யாஸ கர்த்தரான தேவதேவர் இந்தப் பெரிய மஹோத்ஸவத்தினுல் ஸந்தோஷமடைந்து ஸந்தோஷ சித்தத்துடன் இதைச் சொல்லி முடித்த பிறகு ப்ரம்மாதி தேவதைகளுக்கு அபிஷேக மரியாதைகள் உபசாசரங்கள் செய்த பின்னர் அவரவர்களுடைய மனதிற்குகந்த பொருள்களைக் கொடுத்து அவரவர்களுக்குத் தகுந்தவாறு ஸந்தோஷப்படுத்தி விச்வகர்மாவால் நிர்மாணிக்கப்பட்ட ராஜபவனத்துக்கு எழுந்தருளினுர்.*

*ஸ்கந்தர் கூறுவார்:- இந்த விதமாக பகவான் மஹாதேவர் விக்னராஜரை ஸ்தோத்திரம் செய்தார். கணேசரும் அவர் கூறியவிதமே அநேக வித ரூபங்களை எடுத்துக் கொண்டார்.*

*ஏ! கும்பமுனியே! இப்பொழுது கூறியவையெல்லாம் டுண்டி ராஜருடைய வெவ்வேறு பெயர்களே.*

*இவைகளை ஜபித்தால் மனிதன் வாஞ்சித பலன்களை அடைகிருன்.*

*இதுமட்டுமா? அங்கு இவர்களைத்தவிர மேலும் டுண்டி ராஜருடைய ஆயிரக்கணக்கான மூர்த்திகள் எழுந்தருளியிருக்கிறுர்கள். அவர்களையும் பக்தர்கள் பக்தி பூர்வமாக பூஜித்திருக்கிறுர்கள்.*

*பகீரத கணேசர், ஹரிச்சந்திர விநாயகர், கபர்திகணபதி, பிந்து விநாயகர், இப்படியாக பக்தர்களால் பிரதிஷ்டிக்கப்பட்ட அநேக கணேசர்கள் காசியில் இருக்கிறுர்கள். அவர்களெல்லோரையும் கூட பூஜித்தாலும் ஜனங்களுக்கு எல்லாவித ஸம்பத்துகளும் கிடைக்கும்.*

*ஒருவன் சிரத்தையுடன்கூட இந்த பவித்ர அத்யாயத்தைக் கேட்பானுல் அவனுடைய எல்லா விக்னங்களும் விலகுகின்றன, தனது அபீஷ்ட பலன்களைப் பெறுவார்கள்.*

*இப்படி ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் பூர்வார்த்த பாஷாடீகாவான டுண்டுராஜர்*

**ஸ்தோத்ரம் விநாயக கதாவர்ணனம் என்னும் பெயருள்ள ஐம்பத்தேழாவது**

**அத்யாயம் ஸம்பூர்ணம்**



# *அத்தியாயம் 58*

*அகஸ்திய ரிஷி கேட்டார் :- ஏ! ஸ்கந்தா! கணேசரும் தாமதித்ததும் மந்த்ராசலத்திலிருந்து மஹாதேவர் என்ன செய்தார்?*

*ஏ! அகஸ்தியா! ஸமஸ்த பாபங்களையும் நாசம் செய்வதற்கு ஒரே காரணமான இப்பொழுது நான் கூறும் பவித்ரமான கதையைக் கேளும்.*

*அந்த உத்தமமான அவிமுக்த க்ஷேத்ரத்திற்குச் சென்ற கஜானனரும் திரும்புவதற்குத் தாமதமாகவே, மஹாதேவர் சீக்கிரமாக விஷ்ணுவைக் கூப்பிட்டு,*

*மிகவும் பஹுமானத்துடன் அநேகம் தரம் திரும்பித்திரும்பி இதையேக் கூறினார். இதோ பாருங்கள். கிழக்குப் பக்கத்திற்குச் சென்றவர்கள் என்ன செய்தார்களோ அதையே நீங்களும் செய்யாதீர்கள்.*

*ஸ்ரீ விஷ்ணு பகவான் கூறினார் :- எல்லாப் ப்ராணிகளும் தங்கள் தங்கள் புத்திலாபம் இவைகளுக்கேற்ப முயற்சி செய்வார்கள். ஆனால் ஏ சங்கரா! கர்மங்களுக்குப் பலன் கொடுப்பதென்பது தங்கள் கையிலேதானே இருக்கிறது.*

*ஏனென்றால் எல்லாக் கர்மங்களும் அசேதனம். ப்ராணிகளுக்கும் சுதந்திரம் கிடையாது. ஆனால் கர்மங்களும் சாக்ஷியும், ப்ராணிகளை ஊக்குவிப்பவரும் தாங்களே. அப்பொழுது அதன் முடிவு என்னவாகுமென்றால், தங்கள் பாதபத்மங்களில் பக்தி செய்பவரின் புத்தியும் தங்களைப் போலவேயிருக்கும். அதனால் இவன் சரியாகவே செய்தான் என்று தாங்களே சொல்ல வேண்டியிருக்கிறது.*

*ஏ! கிரீசா! இந்த உலகத்தில் ஒரு கர்மம் பெரிதானாலும் சரி, சிறிதானாலும் சரி, தங்கள் பாதார விந்தத்தை நினைத்துக்கொண்டு ஆரம்பித்தால் அது கட்டாயம் ஸித்தியாகும்.*

*ஒரு கார்யம் புத்திசாதுர்யத்துடன் அனுஷ்டித்தாலும் அக்கார்யம் முக்காலும் ஸித்தியைக் கொடுக்கக் கூடியதாக இருந்தாலும் தங்கள் பாதகமலங்களை ஸ்மரிக்காமல் செய்தால் அந்தக் கார்யம் அதே சமயத்தில் நாசமாகிவிடும்.*

*இன்று நான் சிவபிரானுல் ஏவப்பட்டு உத்தமமான இக்கார்யத்திற்கு முயற்சி செய்கிறேன். அதனுல் பக்தியே ஐச்வர்யமாகக் கொண்ட எங்களுடைய முயற்சிகட்டாயம் வெற்றியாகும்.*

*சிவபிரானே! ஒரு காரியம் எங்களுடைய புத்திபலம் பௌருஷம் இவைகளுக்கு அப்பாற்பட்டதாக இருந்தாலும் தங்களைத் தியானித்த மாத்திரத்திலேயே அந்தக் காரியம் கைகூடும்.*

*ஏ! விபோ, ஹே! பவா! தங்களை ப்ரதக்ஷிணம் செய்துவிட்டுச் செல்பவர்களுடைய ஸகலகாரியங்களும் தங்களிடமிருக்கும் பயத்தினுல் இவர்கள் போவதற்கு (முன்பே) ஸித்தியாகிவிடும்.*

*மஹாதேவா! இந்தக் கார்யம் நடந்தேறிவிட்டதென்றே நினையுங்கள். அது நிச்சயமாய் நடக்கும். இப்பொழுது தாங்கள் காசியில் பிரவேசிப்பதற்கு உத்தமலக்னங்களைக் குறித்துக் கொள்ளவும்.*

*ஆனுல் காசியில் பிரவேசிப்பதற்கு சுபா சுபத்தைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஏனென்றுல் காசியில் எப்போது ப்ரவேசிக்கிருமோ, அதுவே சுபலக்ஷணம் தான்.*

*இதற்குப் பிறகு கருடத்வஜன் சிவனைப் ப்ரதக்ஷணம் செய்து அடிக்கடி வணங்கினுன். பிறகு லக்ஷ்மியுடன் மந்த்ராசலத்தை விட்டுப் புறப்பட்டார்.*

*அதன் பிறகு விஷ்ணுபகவான் வாராணஸிபுரியைப் பார்த்தவுடனேயே தனக்குப் புண்டரீகாக்ஷன் என்ற பெயர் கிடைத்த பலனையடைந்தார். அதாவது தாமரை இதழ் போன்ற கண்களை மலர விழித்துப் பார்க்கலானுர்.*

பிறகு கங்காவருணு ஸங்கமத்தில் விஷ்ணுபகவான் சுத்தஹ்ருதயத்துடன் கைகால்களை அலம்பிக் கொண்டு வஸ்திரத்துடன் ஸ்னனம் செய்தார்.

அப்பொழுது முதல் இந்த கட்டத்திற்கு பாதோதக தீர்த்த கட்டம் என்ற பெயர் வழங்கலாயிற்று. ஏனென்றல் பீதாம்பர தாரியான பகவான் ஸர்வ மங்களங்களையும் தரும் ஸ்ரீசரணங்களை முதல் முதலாக அந்த இடத்தில் கழுவினர்.

அந்தப் பாதோதக தீர்த்தத்தில் ஸ்னனம் செய்பவர்களுடைய ஏழு ஜன்மத்து ஸஞ்சிதபாபங்களும் உடனேயே நஷ்டமாகி விடும்.

இந்த இடத்தில் ச்ராத்தமும் திலதர்ப்பணமும் செய்தால் அவர்களுடைய வம்சத்தைச் சேர்ந்த இருபத்தியொரு தலைமுறை பித்ருக்களும் கடைத்தேறுவார்கள்.

கயா தீர்த்தத்தில் பித்ருக்களுக்கு எப்படிப்பட்ட த்ருப்தியேற்படுகிறதோ, காசியிலிருக்கும் இந்த பாதோதக தீர்த்தத்திலும் அப்படிப்பட்ட த்ருப்தி நிச்சயமாக உண்டாகும்.

ஒருவன் பாதோதக தீர்த்தத்தில் ஸ்னனம் பண்ணி பாதோதக ஜலத்தைப் பானம் பண்ணி, பாதோதக ஜலத்தை ஒருவருக்குக் கொடுத்தால் நரகம் அவனைத் தொடக்கூடத் தொடாது.

பாதோதக தீர்த்தத்தின் ஜலத்தினுல் கழுவின விஷ்ணுபகவானின் சரணும்ருத தீர்த்தத்தை ஒருதரம் குடித்தால்கூடப் போதும்; பிறகு அவனுக்கு அன்னையின்பாலைப் பருக வேண்டிவராது.

கோமதி சக்கரத்துடன் கூடிய பாதோதக ஜலத்தை சங்கத்தில் எடுத்து அபிஷேகம் செய்து அந்த ஜலத்தை ஒருவன் குடித்தானேயாஞல் அவன் அம்ருதபதத்தையடைவான்.

*விஷ்ணு பகவானுடைய பாதோதக தீர்த்தத்திலேயே விஷ்ணு பகவானுடைய சரணும்ருத தீர்த்தத்தையருந்தியவனுக்கு வெகு நாளைக்கு முன்புள்ள, பழைய அந்த அம்ருதத்தைக் குடிப்பதில் என்ன பலன்?*

*ஒருவன் காசியில் பாதோதக தீர்த்தத்தில் ஜலக்ரியைகள் செய்யாவிட்டால் அவனுடைய ஜன்மம் வீணே.*

*லக்ஷ்மி, கருடன் இவர்களுடன் பகவான் ஆதிகேசவர் நித்ய க்ருத்யங்களை முடித்துகொண்டு மூன்று உலகங்களும் வியாபித்திருக்கும் தன்னுடைய மூர்த்தியை ஒடுக்கித் தன்னுடைய கையினுலேயே சிலா உருவாகிய ஸமஸ்த ஸித்திகளையும் செழிப்பாகக் கொடுக்கும் அந்த மூர்த்தியைத் தானே பூஜித்தார்.*

*மனிதனும் பரமேசனின் ஆதிகேசவன் என்னும் அந்த மூர்த்தியைப் பூஜித்தால் வைகுண்ட லோகத்தைத் தன் வீட்டிற்கு அங்கணமாகக் கருதுவார்.*

*காசியின் எல்லையில் அந்த இடம் ஸ்வேத தீபம் என்னும் பெயருடன் பிரஸித்தமாக விளங்குகிறது. அந்த ஆதிகேசவமூர்த்தியின் ஸேவார்த்திகளே அந்த ஸ்வேத த்வீபத்தில் வஸிக்கிருர்கள்.*

*அங்கேயே ஆதிகேசவருக்கு முன்னுல் க்ஷீரஸமுத்திரம் என்னும் மற்ருெரு தீர்த்தம் இருக்கிறது. அந்தத் தீர்த்தத்தில் ஜலக்ரியை செய்பவர்களுக்கு க்ஷீரஸாகரக் கரையில் வாஸமும் கிடைக்கிறது.*

*அந்த இடத்தில் ச்ராத்தம் செய்து, தங்கம் கட்டிய கொம்பும், வெள்ளி கட்டிய குளம்பும், ஸகல ஆபணங்களும் அணிவித்த பால் கறக்கும் பசுவைக் கன்றுடன் தானம் செய்தால் அவன் தன்னுடைய பித்ருக்களை க்ஷீரஸாகரத்தில் வஸிக்கச் செய்கிருன்.*

*அந்த இடத்தில் ஒரு புண்யாத்மா பக்தியுடன்கூட ஒரு கோதானம் செய்தாலும் போதும், அவன் தன்னுடைய*

*முன்னோர்களை (நூற்றியொருபூர்வபுருஷர்களை) பாயஸமே சேறாக இருக்கும் க்ஷீரஸாகரத்தின் கரையில் அவர்களை அனுப்பிவைக்கிறான்.*

*அங்கு தக்ஷிணை ஸஹிதம் அநேகம் உத்தம பசுக்களை ச்ரத்தையுடன் தானம் செய்வானானால் தன்னுடைய பித்ருக்கள் ஒவ்வொருவரையும் க்ஷீரஸாகரத்தில் ஸ்திரமாக இருக்கச் செய்து மெத்தையில் ஸுகமாகத் தூங்க வைக்கிறான்.*

*க்ஷீரஸாகர தீர்த்தத்தின் தெற்கு பக்கத்தின் அதே கரையில் பரம உத்தமமான சங்க தீர்த்தமிருக்கிறது. அங்கு பித்ருக்களின் தர்பணம் செய்வதினால் விஷ்ணுலோகம் கிடைக்கிறது.*

*அதற்கும் தென்பக்கத்தில் சக்கர தீர்த்தம் இருக்கிறது. அங்கு பித்ருக்களுக்குத் தர்பணம் செய்வது மிகவும் கஷ்டம். அங்கு ச்ராத்தம் செய்தால் பித்ரு ருணத்திலிருந்து விடுபடுவோம்.*

*அதற்கு ஸமீபத்திலேயே கதாதீர்த்தம் இருக்கிறது. அது ஸமஸ்த மானஸிக பீடைகளையும் நாசம் செய்கிறது. அது பித்ருக்களைக் கரையேற்றுகிறது. பாபங்களைக் கொல்லுகிறது.*

*அதற்கு முன்னால் பத்ம தீர்த்தம் இருக்கிறது. அதில் உத்தமமான மனிதன் ஸ்னானம் செய்து விதி பூர்வமாகத் தர்பணம் செய்தானானால் அவன்கூடவே லக்ஷ்மி வாஸம் செய்வாள்.*

*மூன்று உலகங்களுக்கும் ஸந்தோஷத்தையளிக்கும் மஹாலக்ஷ்மி எங்கு ஸ்னானம் செய்தாளோ, மூவுலகும் புகழும் அந்த மஹாலக்ஷ்மி தீர்த்தமும் அதன் பக்கத்திலேயே இருக்கிறது.*

*அந்தத் தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து ஸுவர்ணம், ரத்னம், பட்டுவஸ்திரம் இவைகளைப் பிராம்மணர்களுக்குத் தானம் செய்பவன் ஒருக்காலும் பாக்கிய ஹீநன் ஆகமாட்டான்.*

அந்த தீர்த்தத்தின் ப்ரபாவத்தினுல் அதில் ஸ்னனம் செய்தவன் அங்கங்கு செழிப்புள்ள செல்வந்தனுகவேயிருப்பான். அவனுக்குப் பின்வந்தவர்களும் ஸ்ரீமான்களாகவேயிருப்பார்கள்.

அங்கு மூவுலகம் வணங்கும் மஹாலக்ஷ்மியின் மூர்த்தியிருக்கிறது. அதை வணங்கினவன் ஒருநாளும் நோயால் பீடிக்கப்படமாட்டான்.

ஒருவன் வ்ரதமிருந்து புரட்டாசி மாதத்தில் கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமி இரவு கண்விழித்திருந்து மஹாலக்ஷ்மியைப் பூஜை பண்ணினுல் அந்த வ்ரதத்தின் பலன் உடனே கிடைக்கும்.

அதே ஸ்தானத்தில் கருட கேசவருக்கு ஸமீபத்திலேயே கருட தீர்த்தமிருக்கிறது. அதில் பக்தியுடன் ஸ்னனம் செய்வதால் அவனுக்கு ஸம்ஸார ரூபமான ஸர்ப்பத்தின் தரிசனம் பிறகு காண வேண்டியிராது.

அதற்கு முன்னுலேயே நாரததீர்தம் இருக்கிறது. அது மஹாபாதகங்களையும் நாசம் செய்கிறது. அது கேசவரால் நாரதருக்கு ப்ரம்ம வித்யைஉபதேசம் செய்யப்பட்ட இடம்.

அங்கு ஒழுங்கு முறையாக ஒரு ஸ்னனம் செய்தால் அவன் கேசவரிடமிருந்து ப்ரம்ம வித்தையை அடைகிருன். அதனுல் காசியில் அந்த ஸ்தானத்திற்கு நாரதகேசவம் என்று பெயர். அங்கு இருக்கும் மூர்த்தியை தியானித்து பக்தியுடன் பூஜை செய்தால் அவன் மாதாவின் உதர வேதனையின் துக்கத்தை ஒருபொழுதும் அனுபவிக்கமாட்டான்.பின் அதற்கு முன்னுல் ப்ரஹ்லாத தீர்த்தம் இருக்கிறது. அங்கு ப்ரஹ்லாத கேசவமூர்த்தி எழுந்தருளியிருக்கிருர். அந்த இடத்தில் ஸ்னனம் முதலியவைகளைச் செய்தால் வைகுண்ட லோக வாஸம் கிடைக்கும்.அதற்குப் பக்கத்தில் அம்பரீஷ தீர்த்தம் இருக்கிறது. அது பாபநாசம் செய்வதில் மிகவும் பெயர்

*பெற்றது. அங்கேயும் தர்பணம் முதலிய ஜலக்ரியைகளைச் செய்வதினால் மனிதன் நிஷ்பாபன் ஆகிறான்.*

*ஆதிகேசவரின் கிழக்கு பாகத்தில் ஆதித்யகேசவர் இருக்கிறார், அவருடைய தர்சன மாத்திரத்திலேயே மஹாபாபங்கள் எல்லாம் விலகுகின்றன.*

*அங்கேயே தத்தாத்ரயேஸ்வரர் தீர்த்தமும் இருக்கிறது. அங்கு கதாதரர் எழுந்தருளியிருக்கிறார். அங்கேயும் பித்ருக்களுக்குத் தர்பணம் செய்வதனால் ஞானபோகம் கிடைக்கிறது. அதனருகிலேயே ஆதிகதாதரரும் எழுந்தருளியிருக்கிறார்.*

*அதற்கு முன்னால் பூமிகேசவருக்கு முன்னால் கிழக்கில் பார்க்கவ தீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்வதினால் ஜனங்கள் பார்க்கவருக்கு ஸமானமான புத்திமான்களாகிறார்கள்.*

*அதே இடத்தில் வாமன கேசவருக்குக் கிழக்கில் வாமன தீர்த்தம் இருக்கிறது. அங்கு விஷ்ணு பகவானைப் பூஜித்தால் வாமநபகவானுக்கு அருகில் வஸிக்கும் பாக்கியம் கிடைக்கும்.*

*பிறகு நரநாராயணருக்கு முன்னால் நர நாராயண தீர்த்தம் இருக்கிறது. அந்தத் தீர்த்தத்தில்! ஸ்னானம் செய்தால் நரனும் நாராயணனாகிறான்.*

*அதற்கு முன்னால் யக்ஞ வராஹ தீர்த்தமிருக்கிறது. அது பாபநாசக தீர்த்தம். அங்கு ஸ்னானம் செய்வதினால் ஒவ்வொரு முழுக்குக்கும் ஒவ்வொரு ராஜஸூய யக்ஞத்தின் பலன் கிடைக்கிறது.*

*அங்கேயே விதாரநரசிம்ம தீர்த்தம் இருக்கிறது. அது மிகவும் நிர்மலமானது. அங்கு ஸ்னானம் செய்தாலும் நூற்றுக்கணக்கான ஜன்மங்களில் சேர்த்துவைத்த ஸஞ்சிதபாபங்கள் உடனேயே விலகுகின்றன.*

அதற்கு முன்னுல் கோபிகோவிந்தத்தின் கிழக்குபக்கத்தில் கோபிகோவிந்த தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னனும் செய்து மஹாவிஷ்ணுவைப் பூஜித்தால் விஷ்ணுவின் ப்ரீதிக்கு பாத்திரமாகலாம்.

கோபிகோவிந்த தீர்த்தத்திற்குத் தெற்குப் பக்கத்தில் லக்ஷ்மீ நரஸிம்ம தீர்த்தம் இருக்கிறது. அந்த தீர்த்தத்தில் முழுகுகிறவர்களை லக்ஷ்மி ஒரு பொழுதும் கைவிடமாட்டாள்.

அங்கிருந்து சற்று முன்னுல் போனுல் சேஷமாதவருக்கு ஸமீபத்திலேயே சேஷமாதவ தீர்த்தம் இருக்கிறது. அங்கு பித்ருக்களுக்குத் தர்பணம் செய்வதினுல் அவர்களது த்ருப்தியில் (சேஷமேயிருக்காது.)

அதற்கு தக்ஷிணபாகத்தில் மாதவர் என்னும் பெயருள்ள பெரிய நிர்மலமான தீர்த்தமிருக்கிறது. அங்கு தீர்த்தக்ரியை செய்வதினுல் பாபிகளும் தூய்மையடைகிருர்கள்.

அதற்கும் சற்று முன்னுல் பரமபாவனமான ஹயக்ரீவ தீர்த்தமிருக்கிறது. அங்கேயே ஸ்னனம் செய்து ஹயக்ரீவரைப் பூஜித்து ஹயக்ரீவரண்டையில் பிண்டதானம் செய்தால் ஹயக்ரீவரின் க்ருபையாகிற ஸம்பத்தையடைந்து ஒருவன் தன்னுடைய பூர்வ புருஷர்களுடன் த்ருப்தியடைகிருன்.

ஸ்கந்தர் கூறினுர். பேச்சுவாக்கில் நான் இந்த எல்லா தீர்த்தங்களையும் பற்றி உன்னிடம் வர்ணித்தேன். ஆனுல் காசியில் பூமியில் எள்ளுகூட விழ இடமில்லாதபடி அநேக தீர்த்தங்கள் இருக்கின்றன.

ஹே! கும்பமுனியே! இந்த எல்லா மேன்மையான தீர்த்தங்களின் பெயரை மாத்திரம் கேட்டமாத்திரத்திலேயே மனிதன் பாபமற்றவனுகிருன்.

*ஏ விப்ரா! நான் இப்பொழுது உனக்கு ஒரு விஷயம் கூறுகிறேன்; என்னவென்ருல் சங்குசக்ரகதாதாரியான ஸ்ரீ விஷ்ணுவானவர் காசியில் வந்து என்ன செய்தார் என்பதை இதற்குப் பிறகு மஹாவிஷ்ணு கேசவமூர்த்தியில் ஆவிர்பவித்து, மஹாதேவரின் கார்ய ஸித்திக்காக திடசங்கல்பம் செய்து கொண்டு தன்னுடைய அம்சத்திலும் அம்சமாகக் கிளம்பினுர்.*

*அகஸ்தியர் வினுவினுர்:- ஹே! ஷடானனு, சக்ரபாணி அம்சத்திலும்அம்சமாக ஏன் கிளம்பினுர்? காசிக்கு வந்தபிறகு அப்படிக் கிளம்பி வேறெங்கு போனுர்?*

*ஏ! முனியே! எந்தக் காரணத்தினுல் விஷ்ணு தனது பூர்ண உருவுடன் செல்லவில்லை! என்ற விஷயத்தைப்பற்றி நான் சொல்கிறேன். ஒரு நிமிஷம் கவனமாகக் கேள்.*

*மகத்தான புண்ணிய ப்ராப்தியினுல் வாராணஸியை அடைந்த ஞானிகள் அதைவிட்டு விட்டுச் செல்ல முக்காலும் ப்ரியப்படுவதில்லை. அவர்களுக்கு வேறு பெரிய பெரிய லாபஸித்திகளும், காரியங்களும் இருந்தால்தான் என்ன?*

*அதனுல் ஏ! அகஸ்தியா! அதனுலேயே விஷ்ணுபகவான் காசியில் தன்னுடைய மூர்த்தியை ஸ்தாபித்து முழு உருவுடன் ஆவிர்பவித்தார். தான் அதிலிருந்து அம்ச ரூபமாக வெளிக் கிளம்பினுர்.*

*பகவான் விஷ்ணு காசியிலிருந்து வடக்கு நோக்கிச் சென்று தனக்கிருப்பதற்கு ஒரு இடத்தைத் தயார் பண்ணிக் கொண்டார். அதைத் தர்ம க்ஷேத்திரம் என்றும் ஹிந்தியில் 'தமேக்' என்றும் கூறுகிருர்கள்.*

*அதன் பிறகு பகவான் விஷ்ணு மிகவும் ஸௌந்தர ரூபமான மூன்று உலகங்களையும் மோஹமடையச் செய்யும் பௌத்த ஸந்யாஸி உருவைத் தாங்கிக்கொண்டார்.*

*லக்ஷ்மியும் அத்யந்த ரூபவதியாக பரிவ்ராஜகியாகி*

*பிக்ஷுணி ரூபியானுள். புஸ்தகமும் கையுமாய் விளங்கும் அந்த ஜகத்தாத்ரீ விச்வமாதாவைப் பார்த்தவர்கள் சித்திரத்தில் எழுதிய உருவமாய் நின்றார்கள். கருடனும் கையில் புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு, எல்லாப் பொருள்களிலும் நிராசையுடையவராகி, பரம வைராக்ய சித்தராய் பூமியில் காணமுடியாத அழகுடன் பரம விசித்ர மஹா வித்வானுகிய பரம குருவிற்கு சிய்ரூஷை செய்யும் சிஷ்யனுய்த் தீர்ந்தார்.*

*பிறகு அந்த சிஷ்யர் ஸௌம்யமான முகத்துடனும், ஸந்தோஷசித்தத்துடனும் பரம உத்தம தர்ம சாஸ்திரத்தில் நிபுணராய் ஞான வித்தாய் ஸுஸ்வரத்துடன் சோபிதமான பதங்களை உச்சரிப்பதில் மிகவும் மென்மைவாய்ந்த மதுரபாஷியாய், ஸ்தம்பனம், உச்சாடனம், ஆகர்ஷணம், வசீகரணம் ஆகிய வித்தைகளில் விக்ஞராய் தன்னுடைய தர்ம வாக்ய உபதேசத்தால் ஆகர்ஷிக்கபட்ட பக்ஷிகளைக்கூட புளகாங்கிதமடையச் செய்பவராய், அவருடைய கீதமாகிய அம்ருதத்தை அமுதமாய்ப் பருகும் மான் கூட்டங்களினுல் சூழப்பட்டவராய் பரமானந்தத்தின் பாரத்தினுல் வாயுவைக்கூட ஆகர்ஷித்து அதனுடைய சஞ்சலத் தன்மையை விலக்குபவராய் அவர் செல்லுமிடங்களெல்லாம் புஷ்பங்களை உதிர்க்கும் இந்த வ்யாஜத்தில் வ்ருக்ஷங்களாலும் பூஜிக்கப்பட்டவராய் தன்னுடைய ஆசார்யவர்யரிடம் ஸம்ஸார விமோசனத்திற்கான பரம தர்மத்தைக் கேட்கத் தொடங்கினுர். அப்பொழுது அந்த புண்யாத்மாவான புண்ய கீர்த்தியெனும் பெயருடைய பௌத்தர் விநயமே பூக்ஷணமாகக் கொண்ட விநயகீர்த்தி என்ற பெயருடைய அந்த சிஷ்யரிடம் கூறினுர்.*

*புண்யகீர்த்தி கூறினுர்:- ஏ! விநயகீர்த்தே! நீ என்னிடம் ஸநாதன தர்மத்தைப்பற்றிக் கேட்டாயல்லவா! அதை நான் ஸாங்கோபாங்கமாகக் கூறுகிறேன்.*

*இந்த உலகம் அநாதிகாலம் தொட்டு*

*ஸித்தமாகயிருக்கிறது. இதற்குக் கர்த்தாவும் கிடையாது. இதை அமைத்தவனும் கிடையாது. இதுதானே அழியவும் செய்கிறது.*

*ப்ரம்மாவிற்குப் புல்பூண்டுகள் பர்யந்தம் எல்லாம் தேஹ பந்தத்தில் கட்டுண்டவைதாம். தன்னைத் தானே உண்டாக்கி எல்லாம் தன்னில் தானே லயமடைகிறது. இவைகளின் நியந்தா ஆத்மாவேதான். இந்த ஆத்மாவை நியமித்தவர் ஒருவருமில்லை.*

*ப்ரம்மா விஷ்ணு ருத்திரர் இவர்களும் சரீரங்களின் பெயர் மாத்திரமேயாகும். நம்மைப் புண்யகீர்த்தி விநயகீர்த்தி என்று கூறுகிறார்களல்லவா? அது போல நம்முடைய சரீரம் காலக்ரமத்தில் நஷ்டமாவதுபோல ப்ரும்மாவிலிருந்து கொசு பரியந்தம் ஸகல ஜீவன்களும் காலக்ரமத்தில் நஷ்டமாகின்றன.*

*நன்றாகச் சிந்தித்துப் பார்த்தால் இந்த தேஹத்தைப் பற்றி விசேஷமாகச் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. ஆஹாரம், நித்ரை, பயம், மைதுனம் (சேர்க்கை) எல்லா உயிர்களிலும் ஸமமாகவேயிருக்கிறது.*

*தங்கள் தங்கள் பரிமாணத்தின் அளவிற்கு ஆஹாரம் கிடைத்தால் எல்லா ஜீவராசிகளும் திருப்தியடைகிறார்கள். ஒருவருக்குக் கொஞ்சம் திருப்தி மற்றவர்களுக்கு அதிகம் திருப்தி என்றில்லை.*

*தாஹமெடுத்தவுடன் தண்ணீர் குடித்தபின் நாம் எப்படி ஆனந்தத்துடன் தாகம் தணிந்தவர்களாக ஆகிறோமோ, அது போல் தாஹமெடுத்த மற்ற ப்ராணிகளுக்கும் ஆகிறது. இதில் குறைவோ நிறைவோ இல்லை.*

*ரூபலாவண்யவதிகளாக ஆயிரம் பெண்களிருந்தாலும் ஒருத்தியிடம் தான் மனம் த்ருப்தியடைகிறது.*

*நூற்றுக் கணக்கான குதிரைகளும் யானைகளும் இருந்த*

போதிலும் நமக்கு ஏதாவது ஒன்றில்தான் சவாரிசெய்ய முடிகிறது.

கட்டிலில் பஞ்சணை மெத்தைமேல் படுப்பவர்களின் நித்திரை ஸுகமும் உலகமெங்கிலும் பூமியில் படுத்துறங்குபவனின் நித்திரை ஸுகமும் ஒன்று போல் தானிருக்கிறது.

மானிட தேஹமெடுத்த நமக்கெல்லாம் எப்படி மரணபயம் ஏற்படுகிறதோ, அது போல ப்ரம்மாவிலிருந்து புழுவரைக்கும் எல்லா ஜீவராசிகளுக்கும் மரணபயம் ஏற்படுகிறது.

புத்திபூர்வமாகச் சிந்தனை செய்யுமிடத்து எல்லாப் பிராணிகளின் உயிரும் ஒன்று போலவேயிருக்கிறது. அதனால் எங்கும் ஒருவனையோ, ஒரு ப்ராணியையோ ஒருபொழுதும் ஹிம்ஸை செய்யக் கூடாது என்ற எண்ணத்தைத் திடமாகக் கொள்ள வேண்டும்.

புவி தடத்தில் ஜீவகாருண்யத்தைப் போன்ற மற்றொரு தர்மம் கிடையாது. அதனால் எல்லாப் ப்ராணிகளிடத்தும் தயையைக் காட்டுவதே மனுஷதர்மமாகும்.

சராசரங்களைக் கொண்ட மூவுலகங்களிலும் ஹிம்ஸைக்கு ஸமமான ஒரு பாபமும் கிடையாது, ஏனென்றால் ஹிம்ஸை செய்பவன் நரகத்திற்குப் போகிறான் - அஹிம்ஸை செய்பவன் ஸ்வர்கத்திற்குப் போகிறான்.

தானங்களில் அநேக விதங்கள் இருக்கின்றன. துச்சபலன்களைக் கொடுக்கக் கூடியதான அந்த தானங்களினால் என்ன பிரயோஜனம். ஆம்! ஆனால் இந்த ஜகத்தில் அபயதானத்திற்கு ஸமமான ஒருவிதமான தானமும் கிடையாது.

பெரிய பெரிய ருஷிகள் முனிகள் நானுவிதமான சாஸ்திரங்களைப்படித்துவிட்டு, சிந்தனை செய்து நான்கு வித

தானங்களை இவ்வுலகிற்கும், பரவுலகிற்கும் நன்மையைக் கொடுக்கக் கூடியது என்று தீர்மானம் செய்கிறார்கள்.

பீதி அடைந்தவர்களுக்கு அபயதானமும், நோயாளிகளுக்கு ஔஷததானமும், மாணவர்களுக்கு வித்யாதானமும், பசித்தவர்களுக்கு அன்னதானமுமாக நான்கு தானங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

மணி. மந்த்ரம், ஔஷதம் இவைகளின் ப்ரதாபம் சிந்தனைக்கும் அப்பாற்பட்டது. அநேகவிதமாகப் பணம் ஸம்பாதிப்பதற்கு இவைகளை எல்லாம் முயற்சியுடன் அப்யஸிக்க வேண்டும்.

மிகவும் பொருளீட்டி எப்பொழுதும் பன்னிரண்டு ஸ்தானங்களைப் பூஜிக்க வேண்டும். மற்றவிதமான பூஜைகளினால் ஒரு பயனும் இல்லை.

ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து ஞானேந்த்ரியங்கள், மனம், புத்தி இவைபன்னிரண்டும் புண்ணிய ஸ்தானங்கள் என்று கூறப்பட்டிருக்கின்றன.

உயிர்களுக்கு ஸ்வர்கம், நரகம் என்பது இங்கேயே நம்மிடத்தில் தானியிருக்கிறது. நம்மைவிட்டு அந்நியமாக ஓரிடத்திலும் இல்லை. ஸுகத்தை ஸ்வர்கமென்றும், துக்கத்தை நரகம் என்றும் கூறுகிறார்கள்.

ஸுகத்தையனுபவித்துக் கொண்டிருக்கும் பொழுது தேகம் விழுமாகில் அதுவே பரம மோக்ஷம். வேறுமோக்ஷமென்று ஒன்று கிடையாது.

ஸமஸ்த வாசனைகளுடன்கூட மனக்லேசத்தைத் துறந்து விட்டு விக்ஞானத்தில் இளைப்பாறுவதையே தத்வ சிந்தைக்கர்த்தர்கள் நிச்சயமாக அதுதான் மோக்ஷமென்கிறார்கள். ஹிம்ஸை செய்யும்படி ஒரு ச்ருதிருயும் கூறுவதில்லை.

வேதாந்திகளும் ஒருவரையும் ஹிம்ஸிக்காதீர்கள் என்று கூறுவதையே ப்ராமாணிகமான ச்ருதி என்கிறார்கள்.

யக்ஞத்திற்காகப் பசுக்களைக் கொல்லலாமென்று சுருதி கூறுவதாகச் சொல்வது துர்ஜனங்களின் மனப்பிராந்தியினுல் கூறப்பட்ட வாக்காகும். ஆனுல் ஞானவான்களுக்கு இந்தப்பசுஸம்ஹார சுருதி ஒரு ப்ரமாணமாகாது.

என்ன ஆச்சர்யம்! வ்ருக்ஷங்களை வெட்டுவது, பசுக்களைக் கொல்வது, ரத்தைச் சேறுக்குவது, அக்னியில் எள்ளையும் நெய்யையும் ஹோமம்செய்து ஸ்வர்க்கத்தை விரும்பலாம்.

இந்தவிதமாகப் புண்ணிய கீர்த்திக்கு நாம் வ்யாக்யானங்களால் அறிவுறுத்தின பிறகு நகரவாஸிகள் ஒருவர் மற்றொருவருக்குச் சொல்லும்படியாகச் செய்து அங்கு யாத்திரை செய்தார்கள்.

இந்த எல்லா வித்தைகளிலும் தேர்ந்த பரிவ்ராஜகை விக்ஞான கௌமுதியான மஹாலக்ஷ்மியும் புரஸ்த்ரிகளுக்கு இந்த விதமாக உபதேசம் செய்யத் தொடங்கினுர்கள்.

அவர்கள் எல்லாருக்கும் ப்ரத்யக்ஷபலனையளிக்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமானதும் இந்த சரீரத்திற்கு ஸுகமாக ஸாதனம் செய்யும் ஒரே மார்க்கமானதுமான பௌத்த தர்மத்தைப் பற்றி விவரித்து வர்ணிக்கத் தொடங்கினுர்கள்.

விக்ஞான கௌமுதீ சொன்னுள்- வேதம் ஆனத்தத்தையே ப்ரும்மஸ்வரூபம் என்று சொல்கிறது. அதுவே சரியும், ஒப்புக் கொள்ளக் கூடியதுமாக இருக்கிறது. இந்த அநேக ஜன்மங்கள் முதலிய கற்பனைகள் எல்லாம் முற்றிலும் அஸத்தியமே.

சரீரம் ஆரோக்கியமாக இருக்கும் பொழுதே இந்திரியங்கள் சிதிலமடைந்து முன்னுலேயே வயோதிகம் அண்டையில் வருவதற்கு முன்னுலேயே ஸுகத்தின் ஸாதனத்திற்கு வழிதேடிக்கொள்ள வேண்டும்.

*சரீரம் நோயுற்று இந்திரியங்கள் சிதிலமடைந்து கிழத்தன்மை வந்து விழுங்கும் நேரத்தில் ஸுகம் எங்கிருந்து கிடைக்கும்? அதனால் ஸுகத்தை அனுபவிக்க விரும்புகிறவர்கள் ஒருவர் கேட்கும் பொருளை இல்லையென்னாது உடனே அளிக்க வேண்டும். அது சரீரமாசு இருந்தாலும் கொடுக்க வேண்டும்.*

*ஒருவன் ஜன்மமெடுத்து யாசகர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவில்லையானால் அவன் பூமிக்குப் பாரமாகிறான். மற்றபடி கடல், மலை, வ்ருக்ஷங்கள் இவைகள் பாரமல்ல.*

*சரீரம் சாச்வதமில்லை. எப்பொழுது சென்றுவிடுவோமோ தெரியாது. சேர்த்து வைத்துப் பொருள்களும் க்ஷீணித்துப் போவது நிச்சயம். இப்படி நினைத்து அறிவாளிகள் சரீர ஸுகத்தினுடைய ஸாதனைகளை உடனே தேடிக்கொள்ள வேண்டும்.*

*இந்த தேஹம் கடைசியில் ஒரு காகம், பன்றி, புழுக்கள் இவைகளுக்கு ஆஹாரமாகிறது. அல்லது இந்த சரீரத்தின் முடிவு பஸ்மம் ஆகிறது. இது வேதத்தில் ஸத்யமாக விளக்கப்படுகிறது.*

*ஜனங்கள் ஜாதிபேதங்கள் என்று கற்பனை செய்வது பொய்யேயாகிறது. மனிதர்களுக்குள் ஸமத்துவம் ஏற்பட்டபோது யார் உத்தமன்? யார் அதமன்?*

*ப்ரம்மாவிலிருந்தே இந்தஸ்திதி ஆரம்பமாகிறது என்று கூறுவது கிழவர்களின் கூற்று. பாருங்கள் அந்த ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரம்மாவிற்கு தக்ஷன் மரீசி என்று இரண்டு ப்ரஸித்தி பெற்ற புத்திரர்கள் இருந்தார்கள்.*

*அதே மரீசியின் பிள்ளையான கச்யபர் தனதுபிதாவின் ஸஹோதரனான தக்ஷனுடைய ஸுந்தர லோசனிகளான பதிமூன்று பெண்களையும் விதிமுறைப்படியே மணந்துகொண்டார்.*

*ஆனுல் இந்நாட்களில் சிறிதளவு புத்தியும், சிறிதளவு பலம் வீர்யமே கொண்ட ஜனங்கள் இதுதான் முறை, அதுமுறையல்ல என்று வீணுகக் கூறுகிருர்கள்.*

*முதலாவது முகத்திலிருந்து ப்ராம்மணனும், புஜத்திலிருந்து க்ஷத்ரியனும், துடையிலிருந்து வைச்யனும், பாதங்களிலிருந்து சூத்திரனுமாக நாலுவர்ணத்தார்கள் உண்டாஞர்கள் என்று கூறுகிருர்கள். இது கிழவர்களின் கல்பிதமாத்திரமேயாகும். ஆனுல் யோசித்துப் பார்த்தால் இது அஸங்கதமாகவே படுகிறது.*

*எங்காவது ஒரு புருஷன், ஒரு ஸ்த்ரீயின் சரீரத்திலிருந்து நான்கு பிள்ளைகள் பிறந்தால் அவர்கள் வேறு வேறு வர்ணத்தாராக எப்படியாக முடியும்? அதனுல் இந்த ஜாதி வேற்றுமையென்னும் யோசனை உசிதமாகப்படவில்லை.*

*அதனுல் மனிதனுக இருக்கும் எவனும் இப்போதங்களை ஒப்புகொள்ள முடியாது.*

*நகரத்துப் பெண்கள் இந்த விக்ஞான கௌமுதியின் வார்த்தைகளைக் கேட்டு பதிஸேவை செய்யவேண்டும் என்ற புத்தியை திரஸ்கரித்தார்கள்.*

*ஆண்களும் ஆகர்ஷணம் வசீகரம் முதலிய வித்தைகளைக் கற்று, பரஸ்த்ரீகளிடத்தில் மோஹித்து அதில் வெற்றி பெறவும் தொடங்கிஞர்கள்.*

*அரசனின் அந்தப்புரத்து ஸ்த்ரீகளும், ராஜகுமாரர்களும், நகரத்து ஜனங்களும் அவர்களின் மனைவிமக்களும் இந்த வித்தையைக் கற்று மோஹமடையத் தொடங்கிஞர்கள்.*

*பரிவ்ராஜகியான விக்ஞான கௌமுதி தன்னுடைய மாயா வித்தையினுலே மலடிகளின் மலட்டுத் தன்மையை நீங்கச் செய்தார். அத்ருஷ்ட ஹீனர்களையும் ஸௌபாக்ய ஸம்பன்னர்களாக ஆக்கிஞள். சில பெண்களுக்கு*

அபிமந்திரித்த வேர், சிலருக்கு மை, முதலியவற்றைக் கொடுத்தாள்.

அநேகம் பேர்களுக்கு வசீகரண மந்திரத்தைக் கற்றுக் கொடுத்தாள். ஒருத்தி மந்திரம் ஜபிக்கத் தொடங்கினுள். ஒருத்தி யந்த்ரம் எழுதத் தொடங்கினுள்.

ஒருத்தி அசையாமல் அமர்ந்து அக்னிகுண்டத்தில் அநேக ஹோமங்கள் செய்யத் தொடங்கினுள். இந்தவிதமாக எல்லா நகரத்து ஜனங்களும் எப்பொழுது தங்கள் தர்மத்திலிருந்து பராமுகம் ஆனுர்களோ அப்பொழுது அதர்மம் உல்லாஸமாகப் பரவிப் பெருகத் தொடங்கியது.

உழுது, விதைத்து ஒன்றும் செய்யாமலேயே பயிர்கள் செழித்து விளங்கி வந்த அந்த ஊரில் இந்த பாபங்கள் நுழைத்தவுடன் எல்லாம் அழிய ஆரம்பித்தன. அரசன் திவோதாஸனின் ஸாமர்த்யமும் மெள்ளமெள்ள நழுவ ஆரம்பித்தது.

இதன் மத்தியில் விச்வேஸ்வரரும், டுண்டிராஜரும் எட்டியே அமர்ந்திருந்து ரிபுஞ்ஜயனுன அரசன் திவோதாஸரை அரசு ஆதிக்கத்தில் வெறுப்படையச் செய்துவந்தனர்.

அரசன் திவோதாஸ் டுண்டிராஜாரான ஜோதிஷர் கூறியிருந்த பதினெட்டாவது தினத்தை எண்ணிக் கொண்டே வந்தார்.

அந்தபிராம்மணன் எப்போது வருவார், எப்பொழுது எனக்கு உபதேசம் செய்வாரென்று காத்திருந்தார். அப்படியுமிப்படியுமாகப் பதினேழு நாட்கள் சென்றுவிட்டன. பதினெட்டாவது நாள் சரியான உச்சிவேளையில் ஒரு உத்தமப் ப்ராம்மணர் வந்து சேர்ந்தார்.

அந்தப் ப்ராம்மணர் வேறு ஒருவருமல்ல,

விஷ்ணுபகவானே தர்மக்ஷேத்ரமான ஸாரநாத்திலிருந்து புண்ணியகீர்த்தியென்று பௌத்தசார்யா பிராம்மண வேஷத்தில் அரசனிடத்தில் வந்தார்.

ஜீவனுக்கு ஜெய் என்னும் கோஷங்களைச் செய்யும் இரண்டு மூன்று பவித்ரமான ஜனங்கள் பின்தொடர அந்தப்ராம்மணன், மூர்த்திகரித்த அக்னியைப் போல மிகவும் ஆவலாக அந்தப் பிராம்மணரைத் தூர இருந்தே பார்த்துவிட்டு மனதிற்குள்ளேயே இந்தப் பிராம்மணன் எனக்கு உபதேசம் செய்வதற்குத் தகுந்தவர்தான் என்று நினைத்துக் கொண்டார்.

பிறகு அரசன்தானே எதிர்கொண்டழைத்து, அடிக்கடி வணங்கி, ஸ்வஸ்திவாசனம் கூறி ஆசீர்வாதம் பெற்று , அந்தப் பிராம்மணனை நேராகத் தன்னுடைய அந்தப்புரத்திற்கு அழைத்து வந்தார்.

ஜனுதிபதி திவோதாஸ் மதுபர்க்க விதிகளினுல் அவரைப் பூஜித்து, வழிநடந்த சிரமம் தீர சைத்யோபசாரம் செய்து ஸந்தோஷமான முக கமலத்தையுடைய அந்தப் பிராம்மணனுக்கு மற்றும் வேண்டிய உபசாரங்கள் செய்து, ருசிகரமான உணவு பதார்த்தங்களையளித்து, அவர் உணவருந்தி திருப்தியான பின் அவர் உண்ட சிரமம் தீரக்களைப்பாறி எழுந்தபின் அவரிடம் பேசத் தொடங்கினுர்; அரசன் கூறினுர்:-

ஏ! விப்ரவரரே, நான் ராஜ்யபாரத்தைச் சுமந்துசுமந்து மிகவும்களைத்துப் போயிருக்கிறேன். ஆனுல் வைராக்யம் ஏற்பட்டு அதனுல் களைப்புத் தெரியவில்லை.

ஏ! பிராம்மணு, நான் எங்கு செல்வேன்? என்ன செய்வேன்? எனக்கு இதிலிருந்து எப்படி நிவர்த்தியுண்டாகும்? இதே கவலையில் எனக்கு இரு பக்ஷங்கள் சென்றுவிட்டன.

நான் என்னுடைய ஸாமர்த்தியத்தினுலேயே மேகம், அக்கினி, வாயு, இவர்களை ஸ்ருஷ்டித்து, சொந்தக்

குழந்தைகளைப் போல ஜனங்களை நன்ருகப் பாவித்து வந்தேன்.

ப்ரதி தினமும் பூலோக தேவர்களான ப்ராம்மணோத்தமர்களை த்ரவ்யங்களிஞல் ஸந்தோஷப்படுத்தினேன். ஆஞல் நான் என்னுடைய ராஜ்ய சாஸன காலத்தில் ஒரே ஒரு குற்றம் செய்தேன்.

அது என்னவென்ருல் நான் என்னுடைய தபோபலத்தின் அஹங்காரத்திஞல் தேவதைகளைத் துச்சமாக மதித்தேன். ஆஞல் நான் தங்கள் பேரில் ஆணையாகக் கூறுகிறேன்; இக்காரியங்களெல்லாம் என்னுடைய பிரஜைகளின் க்ஷேமத்திற்காகச் செய்யப்பட்டது அல்லாமல் எனக்காக அல்ல.

இப்பொழுது எனக்கு பாக்கிய சூரியன் உதித்திருக்கிறது. அதஞல்தான், நீங்கள் வந்திருக்கிறீர்கள். தங்களை நான் குருவாக வரிக்கிறேன். என்னுடைய இந்த ராஜரீகத்தில் யமராஜருக்குக் கூட பயப்பட வேண்டாம்.

என்னுடைய இந்த ராஜ்யத்தின் அகால ம்ருத்யுவேயில்லை; வயோதிகம், நோய், தரித்ரம் இவைகள் என்னுடைய ராஜ்யத்தில் ஒருவரையும் வியாபிக்கவில்லை.

என்னுடைய சாஸன காலத்தில் ஒருவரும் அதர்மவ்ருத்தியை தரிக்கவில்லை. ஆஞல் தர்மத்திலும் ஸுகத்திலும் எல்லோரும் உயர்வை அடைந்திருக்கிருர்கள். எல்லோரும் உத்தம வித்தையைக் கற்பதிலும், ஸன்மார்கத்தில் கருத்துடையவர்களாகவும் இருக்கிருர்கள்.

ஆஞல் என்னுடைய ஆயுள், கல்பம் முடியும்வரை நீடித்திருந்ததாலும் அதஞல் என்ன பயன்? போக வஸ்துக்கள் மென்று உமிழ்ந்த எச்சில்களாகவே காணப்படுகின்றன. இப்பொழுது அரைத்த மாவையே திரும்பும் அரைப்பதில் என்ற ப்ரயோஜனம்?

ஏ! மேதாவியே! கர்ப்பவாஸ துக்கத்தை இனிமேல் நான் அனுபவியாமல் இருக்க ஏதெனும் உபதேசம் செய்யுங்கள். நான் எப்பொழுது தங்களின் சரணமே கதி என்று வந்துவிட்டேனே, பிறகு இந்த மாதிரி சிந்தனைகளில் என்ன பிரயோஜனம்?

தாங்கள் என்ன கூறுகிறீர்களோ, அதை ஸந்தேஹமில்லாமல் இன்றே செய்யத் தயாராக இருக்கிறேன். ஏனென்றால் தங்களுடைய தரிசனத்தினாலேயே என்னுடைய மனோரதம் பூர்ணமாகிறது.

என்னுடைய மனோரதமே பூர்ணமாகிவிட்டதென்றே நினைக்கிறேன். தேவதைகளை விரோதித்துக் கொண்டால் யார் தான் நஷ்டமடைய மாட்டார்கள்? இதைப்பற்றி நான் நன்றாகவே யோசித்துள்ளேன்.

முன்காலத்தில் த்ரிபுராஸுரர்கள் தங்கள் பிரஜைகளை பரிபாலிப்பதில் கருத்துடையவர்களாக தங்கள் சொந்த தர்மத்தின்றும் வழுவாதவர்களாய் சிவபிரானோடு பக்தியில் ஈடுபட்டவர்களாய் இருந்தபோதிலும்கூட

சிவபிரான் பூமியை ரதமாகவும், நாலுவேதங்களைக் குதிரைகளாகவும், சந்திர - சூரியர்களை ரதத்தின் சக்கரங்களாகவும், ப்ரணவத்தை சவுக்காகவும், நக்ஷத்ரங்களையும், க்ரஹங்களையும் ரதத்தின் கீலாகவும், ஆகாசத்தையே ரதத்தின் ஸ்தூபியாகவும், கல்ப - விருக்ஷத்தை த்வஜமாகவும், ஸர்ப்பங்களை கட்டும் கயிறாகவும், வேதாங்கங்களை அங்கரக்ஷகர்களாகவும், ப்ரம்மாவை சாரதியாகவும், ஹிமாலயத்தை தனுஸாகவும், வாஸுகி நாகத்தை நாணாகவும், காலாக்னிருத்ரரை ஈட்டியாகவும், விஷ்ணுவை பாணமாகவும், வாயுவை - பாணத்தில் கட்டிய சிறகுகளாகவும் ஆக்கிக் கொண்டு, லீலாவிநோதமாக ஒரே பாணத்தினால் த்ரிபுராதிகளை பஸ்மமாக்கிவிட்டார்.

*மிகவும் புராதன காலத்தில் மஹாவிஷ்ணு கபடரூபமாக வாமனரூபத்தையெடுத்துக்கொண்டு, மஹாபலியின் யாகத்திற்கு வந்து, த்ரிவிக்ரம அவதாரம் எடுத்து, யக்ஞம் செய்வதில் ச்ரேஷ்டரான ராஜா பலியை பாதாளத்திற்கு அனுப்பிவிட்டார். நற்குண சீலனுக இருந்தாலும் வ்ருத்ராஸுரனை இந்திரன் கொன்றேவிட்டான்.*

*ஜயத்தை அடைய விரும்பி, யுத்தம் செய்த மஹாவிஷ்ணு ததீசி மஹாமுனிவரின் தர்ப்பாஸ்திரத்தால் தோற்று விட்டார். இந்தப் பழமையான பகையை மனதில் கொண்டு தேவதைகள் ப்ராம்மணோத்தமரான ததீசிமுனிவரின் முதுகெலும்பைக் கேட்கும் வ்யாஜமாய் அவரைக் கொன்றே விட்டனர்.*

*இன்னுமொரு பழைய வ்ருத்தாந்தத்தைக் கூறுகிறேன். மஹாவிஷ்ணு சிவபிரானின் பரம பக்தரான பாணஸுரனுடைய ஆயிரம் புஜங்களையும் யுத்தத்தில் வெட்டினர். ஸாது சீலனை அந்தப் பாணஸுரன் இவருக்கு என்ன கெடுதல் செய்தான்?*

*அதனுல் தேவதைகளுடன் விரோதித்துக் கொள்வது நல்லதல்ல. ஆனுல் எனக்கு தேவதைகளைப் பற்றிச் சிறிதும் பயமில்லை. ஏனென்றுல் நான் ஒரு பொழுதும் கெட்ட வழியில் செல்லவில்லை. அவர்களால் என்னை என்ன செய்ய முடியும்?*

*இந்திரன் முதலிய தேவர்கள் யக்ஞத்தின் பலத்தினுலேயே தேவபதவியடைந்திருக்கிறுர்கள். அதனுல் நான் யக்ஞம், தானம், தபஸ் இவைகளின் மூலமாக அதிக பலனை அடைந்திருக்கிறேன்.*

*ஆனுல் கூடுதலாகவோ, குறைவாகவோ இருந்தால்கூட அதனுல் எனக்கு என்ன பிரயோஜனம்?*

*தங்களுடைய தரிசன மாத்திரத்திலேயே இந்த நிமிஷம் ஸுகமாக இந்திரியங்களின் சக்தியை அனுபவிக்கறேன்.*

*ஆதலால் ஐயனே! உபாயங்கள் கூறுவதில் தாங்கள் சதுரர், அதனுல் இவ்வேளை எதனுல் நான் ஸமாதானம் அடைவேனே, அந்த கர்மத்தை நிர்மூலமாக்குவதில் சக்திவாய்ந்த ஓர் உபதேசத்தைச் செய்யுங்கள்.*

*ஸ்கந்தர் கூறினுர் :- இப்போது கணேசர் அரசரின் மேல் ஆவிர்பவித்திருப்பதினுல் இவைகளெல்லாம் கூறினுன், ப்ராம்மண உருவம் தரித்த மஹாவிஷ்ணு இவைகளெல்லாவற்றையும் கேட்டு விட்டுக் கூறினுர்.*

*ஏ! மஹாமேதாவியே! பாபமற்றவனே! பூபால சூடாமணியே! நன்று, நன்று. நான் எதை உபதேசம் செய்ய வேண்டுமென்று நினைத்தேனே, அதை*

*தாங்கள் முன்னமேயே ஸமாதானம் அடைந்து விட்டீர்கள். இப்பொழுது என்னை கௌரவிப்பதற்காக இப்படிக் கூறுகிறீர்கள். தாங்கள் தங்களுடைய நிர்மலமான தபஸ் ரூபமான தெள்ளிய ஜலதாரையினுல் இந்த்ரிய ரூபமான சக்திகளைக் கழுவிக் கொண்டு விட்டீர்கள்.*

*ஓ! ராஜன்! கூறியவையனைத்தும் உண்மை. ஏ! மஹாமதியே, நான் தங்களுடைய சக்தியையும், வைராக்யத்தையும் நன்ருக அறிவேன். தங்களைப் போன்ற ஒரு அரசன் பூமியில் இதுகாறும் இருந்ததில்லை.*

*இப்பவும் இல்லை; இனிமேலும் இருக்கவும் போகிறதில்லை. ராஜ்ய போகமென்பது எப்படியென்று தாங்களே அறிவீர்கள். இப்பொழுது மோக்ஷமடைவதற்கு விரும்புவது மிக்கவும் யுக்தமேயாகும்.*

*தேவதைகளுக்கு நீங்கள் விரோதம் செய்தாலும்கூட ஒரு அபகாரமும் பண்ணவில்லை. மேலும் உங்கள் ராஜ்யத்தில் அதர்மமும் நுழையவில்லை. ஸ்வதர்மத்தில் பற்றுள்ளவனே! தாங்கள் தர்மவழியில் நடப்பதனுல்தான்*

*ப்ரஜைகளும் அவ்வழியே செல்கிருர்கள். ஆதனுல் தேவதைகள் ஸந்தோஷமடைந்தார்கள்.*

*தங்களிடம் ஒரே ஒரு தோஷம் இருப்பதாக என் ஹ்ருதயத்திற்குப்படுகிறது. அது என்னவென்ருல் தாங்கள் காசியிலிருந்து விஸ்வேஸ்வரரை விலக்கி விட்டீர்கள்.*

*ஏ! பூபதியில் உத்தமனே! நான் அறிந்தமட்டில் இது ஒன்று தான் பெரிய அபராதம். இந்தப் பாபத்தின் சாந்தியின் பொருட்டு ஒரு நேர்த்தியான உபாயம் சொல்கிறேன் கேளும்.*

*நம் சரீரத்தில் எத்தனே ரோமங்கள் இருக்கின்றனவோ அத்தனே பாபங்களும் உண்டு. அதற்கு பரிஹாரம் ஒரு சிவ லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தால் விலகிவிடும். இங்கு யாராயினும் சரி, சிவபிரானிடத்திலுள்ள பக்தியினுல் ஒரு லிங்கத்தையாவது செய்வார்களானுல் தன்னுடைய ஆத்மாவுடன் ஸமஸ்த உலகத்தையும் ப்ரதிஷ்டை செய்வதற்கு ஒப்பாம்.*

*ஆனுல் லிங்கஸ்தாபனம் செய்த - புண்ணியம் எண்ணிக்கைக்கு அடங்காது. அதனுல் மற்ற முயற்சிகளெல்லாம் விட்டு விட்டு ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தாலே போதும். அதனுலேயே க்ருதக்ருத்யனுகி விடுகிருய்.*

*இப்படிச் சொல்லி அந்த அந்தணர் திடசித்தத்துடன் க்ஷண நேரம் தியானத்தில் அமர்ந்தார். பிறகு அவனேக் கைகளால் தடவிக் கொடுத்து மிகவும் ஸந்தோஷமாகக் கூறினுர்.*

*நான் தியானத்திலிருந்து ஞானத்ருஷ்டியினுல் வேறெருரு விஷயத்தையுமறிந்தேன். ஏ! அறிவில் சிறந்தவரே! அதையும் கேளுங்கள்.*

*தாங்கள் தன்யர்; க்ருதார்த்தர்; மஹத்ஜனங்களாலும் மதிக்கப்பட்டவர்; உலகத்தில் சுபபலனே விரும்புபவர்கள்*

காலையில் தங்கள் பெயரை ஜபிக்க வேண்டும்.

ஹே! திவோதாஸ்! உமது சமீபத்தில் இருக்கும் நாங்களும் பரம தன்யராகி விட்டோம். இந்த உலகத்தில் யார் தங்கள் பெயரைக் கூறுகிறுர்களோ, அவர்கள் தன்யர்களிலும் தன்யர்கள்.

இதைக் கூறிவிட்டு ப்ராம்மணன் புன்சிரிப்புடன் இதயத்தில் பரமஸந்தோஷத்துடன் மெய்சிலுர்த்து, அடிக்கடி தலையை ஆட்டிக்கொண்டு கூறத் தொடங்கினுர்.

ஆஹா! ஆச்சர்யம்! இந்த அரசனுக்குத்தான் ஏப்பேர்ப்பட்ட பாக்யம் உதயமாகியிருக்கிறது. இவர் எவ்வளவு தூய்மையானவர்? யாவராலும் த்யானம் செய்து அடைய வேண்டிய பகவான் விச்வேச்வரரே, இரவும், பகலும் உங்களை த்யானித்துக் கொண்டிருக்கிறுர்!

ஆஹா! இந்த அரசருடைய முடிவுதான் என்ன ஆச்சர்யமானது! இதுபோல் முடிவு வேறு எந்த அரசருக்கும் ஏற்படவில்லை. எந்த விஷயம் நமக்கெட்டாத அதிதூரத்தில் இருக்கிறதோ, அதே இவருக்கருகில் இருக்கிறது.

இந்தவிதமாகப் பிராம்மணர் தன் இதயத்தில் உதயமான உண்மையை வர்ணித்துத்தான் ஸமாதி நிலையில் எதைப் பார்த்தாரோ, அதை வெளியிட்டார்.

பிராம்மணர் கூறினுர்:- அரசனே! இன்று உன் மனேரதமான வ்ருக்ஷத்தில் நேர்த்தியான பழம் பழுத்தது. தாங்கள் இந்த சரீரத்துடனேயே பரமபதத்தையடைவீர்கள்.

விஸ்வேஸ்வரர் தங்களை எப்போதும் தன்னுடைய ஹ்ருதயத்திலேயே நினைத்துக்கொண்டிருக்கிறுர். அவருடைய சரணங்களை ஸேவிக்கும் என்னைப்போன்ற பிராம்மணர்களைக்கூட இப்படி அவர் விரும்பவில்லை.

லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்த பிறகு இன்றிலிருந்து ஏழாவது தினம் சிவபிரானுடைய திவ்யவிமானம் வந்து

*தங்களை அழைத்துச் செல்லும்.*

*அரசே! இது தங்களுக்கு எவ்வித புண்ணியத்தினுல் கிடைத்திருக்கிறது தெரியுமா? நான் அறிந்த மட்டும் தாங்கள் வாராணஸி புரியை நேர்த்தியாகப் பாலித்து வந்ததனுல் கிடைத்தது என்று சொல்வேன்.*

*மஹாராஜனே! ஒருவன் காசியிலிருக்கும் ஒருவனையாவது ஆதரித்தால் போதும். அவன் சரீரத்தின் அந்திமகாலம் வரும் பொழுது அவன் முடிவும் இதேமாதிரியிருக்கும்.*

*பிரதாபியான ராஜரிஷி திவோதாஸ் இதைக்கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்து, சிஷ்யர்களுக்கும். அந்தணர்களுக்கும் அவர்கள் விரும்பிய த்ரவ்யத்தைத்தானம் செய்தான்.*

*தான் பிறகு ஸந்தோஷமடைந்து அந்தப் பிராம்மணரை அடிக்கடி வணங்கி, தாங்களே என்னை இந்த ஸம்ஸார ஸாகரத்தில் இருந்து கரையேற்றினீர்கள் என்று கூறினுர்.*

*மனேரதம் பரிபூர்ணமாக நிறைவேறியதால் அந்தப் பிராம்மணரும் ஸந்தோஷமடைந்து ராஜாவிடம் விடைபெற்றுக் கொண்டு தன்னிடத்திற்குத் திரும்பினுர்.*

*மாயாவசத்தினுல் ப்ராம்மண வேஷம் தரித்த விஷ்ணு பகவான் காசியை நான்குபக்கமும் அடிக்கடி சுற்றி சுற்றிப் பார்த்து, இங்கு மிகவும் பவித்ரஸ்தானம் எது என்று யோசிக்கத் தொடங்கினுர்.*

*அப்படி ஒரு பவித்ரமான இடத்தைப் பார்த்து அமர்ந்து என்னுடைய பக்தர்களையெல்லாம் விஸ்வேஸ்வரருடைய பரம அனுக்ரஹத்தினுல் பமரபதத்திற்கு அனுப்புவேன்.*

*பகவான் விஷ்ணு இந்த விஷயத்தை மனதில் வைத்துக் கொண்டு பஞ்ச கங்கா தீர்த்தத்தைப்*

*பார்த்துவிட்டு, விதிப்படி ஸ்ஞனம் செய்துவிட்டு அங்கேயே ஸ்திரமாக அமர்ந்து விட்டார்.*

*அதற்குப் பிறகு லக்ஷ்மீபதி அரசன் திருவோதாஸின் விருத்தாந்தங்களையெல்லாம் கூட இருந்து அறிந்தவரான கருடனை விஸ்வேஸ்வரரிடம் அனுப்பி, அவருடைய வருகையை சீக்கிரமாக எதிர்பார்க்கத் தொடங்கினுர்.*

*ராஜேந்திரர் ஆன திவோதாஸுᵐம் பிராம்மணேத்தமருடைய குணங்களைப் பாடிக்கொண்டு தன்னுடைய பிரஜைகள், அமைச்சர்கள், சிற்றரசர்கள், கஜான்சிகள், குதிரை, யானை இவைகளைப் பரிபாலிக்கும் ஸேனைத்தலைவர்கள், ஐநூறு புத்திரர்கள் இளவரசரான ஸமரஞ்ஜயன், புரோஹிதர்கள், காவலாளிகள், கவிகள், ப்ராம்மண ஸமூஹம், அதிகாரிகள் அரச குடும்பத்துக் குமாரர்கள், சமையல்காரர்கள், வைத்தியர்கள், அநேகக் காரியங்களுக்கு நியமிக்கப்பட்டிருந்த அந்நிய நாட்டு ஜனங்கள், அந்தப்புரத்து ஸ்த்ரீகள் ஸஹிதம் பட்டமஹிஷி வயோதிகர்கள், கோபாலர்கள், குழந்தைகள். இவர்களெல்லாரையும் அழைத்து ஸந்தோஷ ஹ்ருதயத்துடன் தன்னிரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு, அவர்களிடம் இன்னும் ஏழு நாட்கள் கழித்து தனக்கு நடக்கப் போகும் ஸம்பவத்தைக் குறித்துக் கூறினுர்.*

*அந்த ஜனங்கள் இந்த ஆச்சர்யகரமான கதையைக் கேட்டு விட்டு, வாடிய முகமுடையவர்களாஞர்கள். பிறகு புத்திமாஞன அந்த அரசன் ராஜகுமாரன் ஸமரஞ்ஜயனை கோமதி நதி தடத்தில் இருக்கும் தன் சொந்த அரண்மனைக்கு அழைத்துச் சென்று பட்டாபிஷேகம் செய்வித்தார். பிறகு நகரவாஸிகளையும் தேச வாஸிகளையும் ஸந்தோஷப்படுத்தி விட்டு புண்யாத்மாவான அந்த அரசன் திரும்பவும் காசிக்கு வந்தார்.*

*அந்த மேதாவியான அரசன் ரிபுஞ்ஜயன் காசிக்குத்*

திரும்பி வந்து கங்கையின் மேற்குக் கரையில் மிகவும் துரிதமாக ஒரு சிவன் கோயில் கட்டுவித்தார். அந்த பூபாலர் யுத்தத்தில் சத்ருக்களை ஜயித்து எந்தப் பொக்கிஷங்களை ஸம்பாதித்து வந்தாரோ, அவைகளை முழுவதும் செலவு செய்து ஒரு பெரிய சிவாலயத்தை எழுப்புவித்தார்.

ராஜாவின் ஸமஸ்த ஸம்பத்தும் இக்கோவிலைக் கட்டுவதில் செலவழிந்துவிட்டது. அதனால் இந்த சுபமயமான பூமிக்கு பூபாலஸ்ரீ என்ற பெயர் பிரஸித்தமாயிற்று. நரேந்த்ரனான ரிபுஞ்ஜயன் திவோதாஸேஸ்வரர் என்ற சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து தன்னை க்ருதக்ருத்யனாக எண்ணினான்.

அதற்கு பிறகு அரசன் ஒரு தினம் விதிப்படிக்கு பூஜை செய்து அப்படியே ஸந்தோஷத்துடன் ஸ்தோத்திரங்களினால் ஸ்துதிக்கத் தொடங்கினான். இப்படித் துதித்துக் கொண்டிருக்கும்போது வேகமாக ஒரு திவ்ய விமானம் கீழே இறங்கியது, அதன் நான்கு பக்கங்களிலும் கையில் த்ரிசூலமும் கட்வாங்கமும் தரித்துக் கொண்டு, பானுவையும், அக்னியையும் தேஜஸ்ஸில் தோற்கடித்துக் கொண்டு, நெற்றிக்கண்ணும், ஜடா மகுடமாய் சோபித்துக்கொண்டு ஆகாசத்திலும் மின்னலைவிட அதிக தேஜஸ் வாய்ந்த ஸ்படிகத்துக்கு ஸமமான அங்கத்துடன்கூட பூஷணமாக அணிந்து கொண்ட ஸர்ப்பங்களின் நாகமணிகளால் சோபிக்கப்பட்ட சரீரத்தோடும் ஸ்வயம்ப்ரகாசத்தின் பயத்தினால் பீதியடைந்த தமஸ் ஓடி ஒளியவும் நீலகண்ட சிவனுடைய பாரிஷதர்கள் விமானத்தின் நாலு பக்கங்களிலும் நிரம்பி வழிந்தனர்.

சாமரம் வீசுவதில் கவனத்துடன்கூட நூற்றுக்கணக்கான ருத்திரகன்னிகள் விமானத்தைச் சூழ்ந்து நின்றார்கள்.

இவர்களுக்குப் பின்னால் மஹாதேவருடைய

*பாரிஷதர்கள் ஆனந்தமாக திவ்விய மாலைகள், பூசும் வாசனை த்ரவியங்கள், உயர்ந்த ஆடை ஆபரணங்கள் இவைகளினால் அரசனை அலங்கரித்தார்கள்.*

*பிறகு அவர்கள் திவோதாஸனுடைய நெற்றியில் கீறி நெற்றிக் கண்ணைத் திறந்தார்கள். கழுத்தில் நீல மருவை ஏற்படுத்தினார்கள். அங்கங்களை சுத்தஸ்படிக வர்ணமாக மாற்றினார்கள். தலையை ஜடாமகுடமாக்கினார்கள். நான்கு கைகளை சிருஷ்டித்தார்கள். ஸர்ப்பங்களை பூஷணமாக அணிவித்தார்கள்.*

*தலையில் பிறைமதியைச் சூடி அவரை விமானத்தில் அமர்த்தி அவரைச் சூழ்ந்த, சிவதூதர்கள் ஸ்வர்க்கத்துக்கு அழைத்துச் சென்றார்கள்.*

*அப்பொழுதிலிருந்து இந்த தீர்த்தம் பூபாலஸ்ரீ என்ற பெயரால் விளங்குகிறது. அங்கு ச்ராத்தம் முதலியவைகளையும் செய்து பக்தியுடன்கூட திவோதாஸேஸ்வரைத் தரிசனம் செய்து பூஜை பண்ணி, ராஜாவினுடைய கதையைக் கேட்கச் செய்தால் திரும்பவும் கர்ப்பப்பிரவேசம் செய்ய மாட்டான்.*

*ராஜாதாஸின் இந்தக்கதை மிகவும் பாவனமானது. (திவோதாஸ்) இதைப்படித்தவனும் கேட்டவனும் பாபத்திலிருந்து விடுதலையாகிறான்.*

*திவோதாஸருடைய இந்தப் பவித்திர உபாக்யானம் கேட்டு ஒருவன் யுத்த க்ஷேத்திரத்திற்குச் செல்வானேயாகில் அவனுக்கு சத்ருக்களால் பயமே ஏற்படாது.*

*பெரியபெரிய ஆபத்துகளை நீக்கும் இந்த ராஜாதிவோதாஸினுடைய இந்தப் புனிதக் கதையை விக்னங்கள் நீங்கி சாந்தியடைவதற்காக கட்டாயம் படிக்க வேண்டும்.*

*பாபங்களை நாசம் செய்யும் பரமபாவனமான*

திவோதாஸினுடைய கதை எங்கு படிக்கப்படுகிறதோ, அங்கு பஞ்சமும் ஏற்படாது. அகால மரணத்தின் பயமும் ஏற்படாது. மஹாதேவருடைய சிந்தையைத் திருப்பும் இந்தக் கதையைப் பாராயணம் செய்வதினுல் விஷ்ணுவைப்போல ஸகல மனேரதமும் பூர்த்தியாகும்.

இந்த விதமாக ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் உத்தரரார்த்த பாஷாடீகாவான விஷ்ணு பகவானின் காசீ யாத்திரை, திவோதாஸினுடைய முக்தி வர்ணனம் என்னும் பெயருடைய ஐம்பத்தெட்டாவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 59

*அகஸ்தியர் கேட்டார்:- ஸர்வக்ஞரே, ஹ்ருதயத்திற்கு ஆனந்தத்தையளிப்பவனே! கௌரியால் உச்சி முகரப்பட்டவனே, தாரகாந்தகா, (தாரகாஸுரனுக்கு முடிவுகொடுப்பவனே) ஷண்முகனே, நீர்தான் கரையேற்றும் மங்களத்தைச் செய்பவர், ஹே! ஸர்வஞானநிதே, நீர் பகவான் ஸர்வக்ஞரின் புத்திரர். எல்லாவிதத்திலும் காமத்தை ஜயிக்கும், மஹாத்மாவான குமாரர், தங்களுக்கு நமஸ்காரம்.*

*தாங்கள் குமாரராக இருந்தாலும் மன்மத சத்ருவான மஹா தேவருக்குக் காமத்தைச் செய்யும் அர்த்த நாரீஸ்வரர் ஸ்வரூபத்தைப் பார்த்துவிட்டு, மன்மதனையே ஜயித்து விட்டீர்கள். அதனால் தங்களுக்கு நமஸ்காரம்.*

*ஹே! ஸ்கந்தா! தாங்கள் என்ன கூறினீர்கள் என்றால் மாயையினால் பிராம்மண வேஷம் பூண்ட ஹரி காசியில் பரம பவித்ர பஞ்சநத தீர்த்தத்தில் ஏன் வஸிக்கிறார்?*

*பூலோக, புவர்லோக, ஸ்வர்க்க லோகத்திற்கு மத்தியில் காசி பவித்ரமான க்ஷேத்திரம்தான், ஆனால் விஷ்ணு பகவான் அங்கேயும் ஏன் பஞ்சநத தீர்த்தத்தை ஸ்ரேஷ்டமாகக் கருதினார்?*

*ஹே! ஷடானனா, அந்த தீர்த்தத்திற்கு பஞ்சநதம் என்று ஏன் பெயர் வந்தது? மற்ற எல்லா தீர்த்தங்களையும்விட எப்படிப் பாவனமாக ஆகியது?*

*அந்த விஷ்ணுபகவான் லீலாவிநோதமாகவே ஸமஸ்த ப்ரம்மாண்டங்களையும் படைத்து காத்து, அழிக்கிறவர்; அவரே ஜகந்நாதர்;*

*உருவற்றவரானாலும் உருவத்தைத் , தரிக்கிறவர். காண முடியாதவரானாலும் காண்பிக்கிறவர். நிராகாரர் ஆனாலும் உருவத்துடன் கூடியவர் - ப்ரபஞ்சம் அற்றவரானாலும் ப்ரபஞ்சத்தைப் பங்கு கொள்கிறவர்.*

*ஜன்மமற்றவர்; நாமமற்றவராஞலும் அநேக ஜன்மங்களும், நாமமும் கொண்டவர். தான் ஆதாரமற்றவராயினும் எல்லோருக்கும் ஆதாரமாக விளங்குபவர். நிர்க்குணராஞலும் குணத்தோடு கூடியவர்; இந்திரியங்கள் அல்லாதவராஞலும் இந்திரியங்களுக்கு ஸ்வாமி; சரணமற்றவராஞலும் எங்கும் ஸஞ்சரிக்கிறவர். அப்படிப்பட்ட அந்தர்யாமியான விஷ்ணுபகவான் எங்கும் நிறைந்திருக்கும் தன் உருவத்தைக் குறுக்கி, ஸர்வாத்ம பாவமாக பஞ்சநத தீர்த்தத்தில் வந்து ஏன் தங்கிஞர்? ஹே! ஷண்முகா! இந்த விஷயமாகத் தாங்கள் பஞ்சானனன் மஹாதேவரிடம் எதைக் கேட்டீர்களோ, அதைக் கேளுங்கள்; ஸ்கந்தர் கூறுவார்; மஹேச்வரனே வணங்கிவிட்டு, ஸர்வபாபங்களேயும் அபகரிக்கும், ஸர்வ மங்களங்களேயும் கொடுக்கும், அந்த ஸர்மங்களங்களுக்கும் காரணமான அந்தக் கதையைக் கூறுகிறேன்.*

*இந்தப் பஞ்சநத தீர்த்தம் காசியில் ஏன் பிரஸித்தமாயிற்று என்றும், அதன் பெயரைக் கேட்டவுடனேயே பாபம் ஆயிரக்கணக்கில் சிதள்களாய்ச் சிதறுகின்றன என்றும், கூறுகிறேன்.*

*ஸாஷாத் தீர்த்தராஜ் ப்ரயாக் அங்கு வந்து தானே எழுந்தருளியிருக்கிருர். பாபிகளின் குவியல் குவியலான பாபங்களே ப்ரயாகையின் பலத்திஞலேயே ஸகல தீர்த்தங்களும் பலவந்தமாக ஆகர்ஷிக்கின்றன, அபஹரணம் செய்கின்றது;*

*மாகமாதத்தில் சூரியன் மகர ராசியின் ஸஞ்சரிக்கும்போது, ப்ரதிவருஷமும் தீர்த்தராஜரில் (ப்ரயாகை) ஸகல தீர்த்தங்களும் ஸங்கமமாகித் தங்களேத் தூய்மையாக்கிக் கொள்கின்றன; தீர்த்த ராஜரான ப்ரயாகையும் எல்லாத் தீர்த்தங்களும் தன்னிடம் அர்ப்பிக்கப்பட்ட மலத்தையும் பெரிய பெரிய மஹாபாபிகளுடைய கோரமான பாபங்களேயும் இந்த*

பஞ்சநத தீர்த்தத்தினுடைய பலத்தினுல்தான் ஆகர்ஷிக்கின்றது.

தீர்த்த ராஜ் ப்ரயாகை வருஷம் பூராவும் தான் ஆகர்ஷித்துக் கொண்ட பாபக்குவியல்களை கார்த்திகை மாதத்தில் இந்த பஞ்சநத தீர்த்தத்தில் ஒரு தடவை முழுகி அந்தப் பாபங்களைப் போக்கிக் கொள்கிறது.

ஏ! மஹாபாகா! மித்ராவருணநந்தனு! இந்தப் பஞ்சநத தீர்த்தம் எப்படி உற்பத்தியாயிற்று? என்று சொல்லுகிறேன் கேளும்.

பூர்வகாலத்தில் ப்ருகு வம்சத்தில் பிறந்தவரும், பெரிய தபஸ்வியும் வேதங்களே உருவெடுத்து வந்தனவோ என்னும்படியான தோற்றமுள்ளவருமான வேதசிரா என்ற முனிவர் ஒருவர் இருந்தார்.

ஒரு தடவை தபஸ்ஸில் ஆழ்ந்திருக்கும் அம்முனிவருக்கு முன்னுல் அப்ஸரஸ்ஸுகளின் முக்யமானவளும்; பரமரூபலாவண்ய சாலினியுமான ஸுசி என்னும் பெயருடைய அப்ஸரஸ் அவருக்கு முன்னுல் காணப்பட்டாள்.

அவளைப் பார்த்தவுடனேயே முனிவர் மனது சலித்துவிட்டது. உடனேயே அவரது வீர்யம் நழுவி வீழ்ந்துவிட்டது.

இதைப்பார்த்ததும் அந்த அப்ஸரஸ் நடுங்கிப்போய் விட்டாள். முனி சாபமிடுவரோ எனப் பயந்து மிகத்தள்ளியிருந்தே அந்த ஸுசி அவரை நமஸ்கரித்துக் கூறினுள்.

ஏ! மஹா உக்ரமான தபோநிதே! இதில் என்னுடைய அபராதம் ஒன்றுமில்லை. க்ஷேமசீலரே! என்னை க்ஷமித்தருளும். ஏனென்ருல் தபஸ்விகள் பொறுமையே உருவானவர்கள்.

ஹே! உத்தமரே! முனிவர்களுடைய ஹ்ருதயம் பெரும்பாலும் கமலத்தைப்போல் ம்ருதுவானது, ஆனுல்

*ஸ்த்ரீகளுடைய ஹ்ருதயம் இயற்கையிலேயே கடினமானது.*

*இப்படிக்கூறிய அப்ஸரஸ் ஸுசியினுடைய வார்த்தையைக் கேட்டு அந்த முனி க்ரோதரூபமான நதியின் வேகத்தை விவேகம் என்னும் அணையினுல் தடுத்து நிறுத்தினுர்.*

*அவர் ஸந்தோஷ சித்தத்துடன் கூறினுர். ஸசி, நீ உண்மையிலேயே ஸுசியானவள் (தூய்மையானவள்), இது உன்னுடைய குற்றமில்லை, என்னுடைய குற்றமில்லை.*

*ரமணிகள் அக்னிஜ்வாலைக்கு ஸமானமென்றும், புருஷர்கள் வெண்ணைக்கு ஸமானமென்றும் அறிவாளிகள் கூறுவார்கள். ஆனுல் இரண்டும் யோசனை பண்ணிப்பார்த்தால் வித்யாஸம் தெரிகிறது. வெண்ணை அக்னியில் அனல் பட்டவுடனேயே உருகுகிறது.*

*ஆனுல் புருஷனே விலகியிருந்தே ஸ்த்ரீயின் பேரைக்கேட்டவுடனேயே உருகத் தொடங்கி விடுகிறுன்.*

*அதனுல் ஏ! ஸுசே! உனது மனேபாவம் சுத்தமானதே, என்னையே மோஹமடையச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தினுல் நீ இங்கு வரவில்லை. இதற்காக நீ கொஞ்சமும் பயப்படாதே, ரேதஸ் நழுவினுல் என்ன மோசம் ஏற்பட்டுவிட்டது?*

*ரிஷிகளுக்குத் தங்கள் இச்சயைில்லாமலேயே ரேதஸ் நழுவினுல் அதனுல் அவர்கள் தபஸ்ஸிற்கு ஒரு தீங்கும் ஏற்படாது. க்ஷணமாத்ரத்தில் நம்மைக் குருடாக்கும் கோபமாகிற சத்ருவினுல் எங்களுக்கு என்ன தீங்கு நேரிடுமோ அம்மாதிரித் தீங்கு - அற்ப வீர்யஸ்கலனத்தினுல் ஏற்படாது.*

*கோபமடைவதனுல் மிகவும் சிரமப்பட்டுச் சேர்த்துவைத்த தபஸ்செல்வம் நஷ்டமடைந்து விடும். மேகம் மறைப்பதினுல் சந்திர சூரியர்கள் மங்கலாகத்*

தெரிவதுபோல அனர்த்தம் விளைவிக்கும் கோபத்தினுல் புருஷார்த்தங்கள் எங்கு நிறைவேறும்? துஷ்டர்கள் பெருகினுல் நல்லவர்கள் உன்னதி எப்படி ஏற்படும்?

மனது கோபத்தினுல் இழுக்கப்படுமானுல் காமம் எப்படி ஏற்படும்? ராகு சந்திரனை விழுங்கிவிட்டால் நிலவு எப்படி ஏற்படும்?

க்ரோதமான வடவாக்னி எறியத் தொடங்கினுல் சாந்தியாகிற விருக்ஷங்களுக்குப் பாதுகாப்பு எப்படி ஏற்படும்? சிங்கம் யானைக் குட்டியைக் கொஞ்சுவதை யாராவது பார்த்திருக்கிருர்களா? ஆகையால் புத்திமான்கள் நான்கு வர்கமான தர்மார்த்த காமமோக்ஷங்களுக்கும் இன்னல் விளைவிக்கும் பிரதிகூலமான கோபத்தை என்றுமே விட்டொழிக்க வேண்டும். ஏ! கல்யாணி! சுசீயே! இப்பொழுது உன்னுடைய கடமை என்னவென்ருல் கூறுகிறேன் கேள். எங்களுடைய வீர்யம் ஒருநாளும் நிஷ்பலனுகாது. அதனுல் அதனை நீ ஏற்றுக்கொள்.

உன்னைக் கண்டவுடனேயேதான் வீர்யம் நழுவியது அதனுல் அதைப் பாதுகாக்க வேண்டியது உன் பொறுப்பு. அதனுல் ஒரு ஸ்ரேஷ்டமான கன்னியாரத்னம் பிறப்பாள்.

அந்த முனியின் சொல்லைக் கேட்டு புதுப்பிறவி எடுத்தது போல அந்த அப்ஸரஸ் ஸந்தோஷித்து மஹாப்ரஸாதம் என்று கூறி அந்த வீர்யத்தை விழுங்கினுள்.

பிறகு காலக்கிரமத்தில் அந்த அப்ஸரஸ்ஸுக்கு கண்ணுக்கு ஆனந்தத்தையளிக்கும் ரூபமாகிற ஸம்பத்தின் சுரங்கத்தைப் போல ஒரு கன்னியாரத்னம் பிறந்தாள்.

அப்பொழுது அப்ஸரஸ்ஸுகளில் சிறந்த அந்த ஸுசி அந்த வேதசிகாமணியின் ஆச்ரமத்திலேயே அந்த சிசுவைக்கொண்டு விட்டுவிட்டுத் தன்னிருப்பிடத்திற்குப் போனுள்.

*அதற்குப் பிறகு வேதசிகாமணி தன்னுடைய ஆசிரமத்து மானினுடைய பாலை அந்த மான்விழியாளான கன்னிகைக்குக் கொடுத்து, அந்தக் கன்னிகைக்கு தூதபாபா எனப் பெயரிட்டார். ஏனென்றால் அந்தப் பெயரை உச்சாரணம் செய்த மாத்திரத்திலேயே பாபராசிகள் நடுங்குகின்றன.*

*முனிராஜ் ஸர்வ லக்ஷண சோபையுடன் கூடிய அந்த ஸர்வாங்க ஸுந்தரியான கன்னிகையை ஒரு க்ஷணம் கூடத் தன்னுடைய மடியிலிருந்து இறக்குவதில்லை. நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக நாளுக்கு நாள் வளர்ந்துவரும் அந்தக் கன்னிகையைக் கண்டு சந்திரனைக் கண்ட ஸமுத்திரத்தைப்போல் ஸந்தோஷித்தார்.*

*அக்குழந்தைக்கு எட்டு வயதாகும்போது இவளை யாரிடம் ஒப்படைக்கலாம். என்ற கவலை ஏற்பட்டுவிட்டது. இதைப்பற்றி அவளிடமே கேட்டுவிட்டார்.*

*வேதசிகாமணி கூறினார்:- ஸுநயனே! எனது புத்திரியே! தூதபாபே! உன்னை எப்படிப்பட்டவனிடம் ஒப்படைக்க வேண்டும். அதை நீயே சொல்.*

*அப்பொழுது தூதபாபா மிகவும் அன்பினால் உருகும் தன்னுடைய பிதாவின் வார்த்தையைக் கேட்டு மிகவும் வெட்கத்தினால் பூமியைப் பார்த்துக் கூறலானாள்-*

*பிதாவே! தாங்கள் ஒரு அழகான வரனுக்கு என்னைக் கொடுக்க விரும்பினீர்களானால் நான் யாரை விரும்புகிறேனோ அவருக்கு என்னைக் கொடுங்கள்.*

*தாங்களும் அதைக் கேட்டுவிட்டு மிகவும் சந்தோஷமடைவீர்கள். மிகவும் கவனமாகக் கேளுங்கள். நான் விரும்பும் வரன் எல்லாவற்றையும்விட பவித்ரமான வரன். யாவரும் வணங்குவதற்குத் தகுதியுள்ளவர்.*

*எல்லோராலும் விரும்பப்படுபவர். எல்லா ஸுகங்களும் உதயமாகும் ஸ்தானம். ஒருக்காலும்*

அழிவில்லாதவர், எனக்கு எப்பொழுதும் உகந்தவராக இருப்பவர்.

இந்த லோகத்திலிருந்தும், பரலோகத்திலிருந்தும் நம்மை நிச்சயமாக பெரியபெரிய ஆபத்துக்களிலிருந்து காக்க சக்தி வாய்ந்தவர். அவரால் நமது மனோரதங்கள் பூர்த்தியாகும்.

அவரிடத்தில் நாளுக்குநாள் ஸகல ஸௌபாக்யங்களும் வளர்ந்து வருகின்றன. அவரை ஸேவை செய்தோமானால் நமக்கு எங்குமே பயமேற்படாது.

அவருடைய நாமத்தை ஜபித்தால் போதும்: ஒரு இடையூறும் நம்மை ஒன்றும் செய்யமுடியாது. அவருடைய ஆதாரத்தினால்தான் இந்தப் பதினான்கு புவனங்களும் இயங்குகின்றன.

இப்படிப்பட்ட ஸகல நற்குணங்களும் எவரிடம் இருக்கின்றதோ அவரிடம் என்னை ஒப்படைத்தால் தங்களுக்கும் எனக்குமே அளவில்லாத ஸந்தோஷம் ஏற்படும்.

குமாரியின் அந்த வார்த்தைகளைக் கேட்டுவிட்டு வேதசிகாமணி மிகவும் ஸந்தோஷப்பட்டார். இப்படி நம் குலத்தில் ஒரு கன்னியாரத்னம் பிறந்ததினால் நாமும் நம் முன்னோர்களும் தன்யர்களானோம் - என்று அடிக்கடிச் சொல்லிக் கொண்டார். இவளுக்கு தூதபாபா என்னும் பெயர் நிச்சயமாகப் பொருந்தும். இல்லாவிட்டால் இந்தமாதிரி புத்தி எப்படி ஏற்படும்? நல்லது. இப்படிப்பட்ட பரிபூர்ண குணங்கள் நிரம்பியவர் உலகத்தில் யார் இருக்கிறார்கள்?

மிகமிகப் புண்ணியம் செய்திருந்தாலொழிய இப்படிப்பட்ட பரிபூர்ண குணங்கள் நிரம்பியவர் உலகத்தில் யார் இருக்கிறார்கள்?

*மிகமிகப் புண்ணியம் செய்திருந்தாலொழிய இப்படிப்பட்டவர் உலகத்தில் நமக்கு எங்கிருந்து கிடைக்கப் போகிருரென்று இப்படி நினைத்துக்கொண்டு ஒரு க்ஷண காலம் - தன் நிலையை சமாதியில் செலுத்திஞர். பிறகு ஞான திருஷ்டியிஞல் இப்படிப்பட்ட புத்ரியிடம் கூறிஞர். குழந்தாய் கல்யாணி கேள்.*

*ஏ! புத்திமதே! இத்தனை நற்குணங்களுடன் கூடின வரனைப் பற்றி நீ கூறிஞயல்லவா? அப்பேர்ப்பட்ட ஸர்வ குணஸம்பன்னரான ஒரு வரன் நிச்சயமாக இருக்கிருர். ஆஞல் அந்தப் பரம ஸுந்தர மூர்த்தியான அந்த வரன் பிரயாஸம் இல்லாமல் எளிதில் கிடைக்கமாட்டார். ஏதாவது ஒரு உத்தமமான தீர்த்தத்துறையில தபஸ்ஸாகிற க்ரயத்தைக் கொடுத்து அவரை வாங்கலாம்.*

*அம்மா குழந்தாய்; அந்த வரனை தனம், சம்பத்து, உயர்ந்த குலம் வேதசாஸ்திரங்களின் அப்யாஸம் ஐஸ்வர்யம், அழகான சரீரம், புத்திவைபவம், பராக்ரமத்தின் பலம் இவைகளால் வாங்க முடியாது. கேவலம் சித்தசுத்தி, இந்திரிய நிக்ரகம், தமம், தானம், தயை இவைகளுடன் கூடிய கடுமையான தபஸ்ஸின் ஸகாயத்திஞலேயே அந்தப் பரம பராக்ரமஞன வரனை அடைய முடியும். இல்லாவிட்டால் அவனைப்போல் வேறெருரு பதி கிடைப்பது மிகவும் துர்லபம்.*

*இதைக்கேட்டு விட்டு அந்தக்கன்னிகை தபஸ்ஸுக்கு ஸங்கல்பம் செய்துகொண்டு பிதாவை வணங்கி அனுமதி தரும்படிப் பிரார்த்தித்தாள்.*

*இப்பொழுது ஸ்கந்தர் கூறுவார். பிதாவின் ஆக்ஞையைப் பெற்ற அந்தக் கன்னிகை பரம பாவனமான காசீ க்ஷேத்ரத்தையடைந்து முதிர்ந்த தபஸ்விகளுக்கும் அஸாத்யமான கடுமையான தபஸ் செய்யத் தொடங்கிஞர். புத்திசாலிகளான மகான்களுக்கு எப்பேர்ப்பட்ட அசாத்யமானதைர்யம் ஏற்படுகிறது.*

மிகவும் ம்ருதுவான கோமள சரீரமுள்ள இந்தக்கன்னிகை எங்கே! கடினமான சரீரத்திஞலேயே சாத்யமாகும் கடினமான கோர தபஸ் எங்கே?

அவள் வர்ஷாகாலத்து பயங்கரமான சுழல் காற்றிலும் யானைத்துதிக்கைபோல் பெய்யும் கடும் மழையிலும், பாறைகளிலேயே இரவின் அநேக ஜாமங்களைக் கழித்தாள்.

மேகத்தின் கோரகர்ஜனையைக் கேட்டும், கண்கூசும் மின்னலின் பிரகாசத்தை சகித்தும், சங்கிலித் தொடர் எனப் பெய்யும் மழையில் நனைந்தும் அவள் கொஞ்சம்கூட அசையவில்லை.

இருண்ட இரவுகளில் கண்கூசும் மின்னல்கள் அவளுடைய தபஸ்ஸின் நிலையைப் பார்ப்பதற்கெனவே தபோவனத்தில் ஐந்து அக்னியையும் கொண்டு தபஸ் செய்தது. வந்து போய்க் கொண்டிருந்தது.

க்ரீஷ்மருது அந்தப் பெண்ணை வ்யாஜமாகக் (வியாஜம்) கொண்டு அந்தத் தபோவனத்தில் ஐந்து அக்னியையும் கொண்டு தபஸ் செய்தது.

அந்தப் பெண் பஞ்சாக்னி மத்தியில் தபஸ் செய்துகொண்டு அதிக தாகமெடுத்தாலும் ஒரு தர்ப்பைப் புல்லின் நுனியில் இருக்கும் ஜலம்கூட அருந்தாமலும் இருந்தாள். குளிரிஞல் மயிர்சிலிர்ப்பதே ரவிக்கையாகக் கொண்டாள்.

தபத்திஞல் க்ருசமாகப் போன அந்த பாலிகை ஸர்வாங்கமும் நடுங்கிக்கொண்டு ஹேமந்த ருதுவின் இரவுகளைக் கழித்தாள்.

சிசிர ருதுவின் இரவுகளில் ஸரோவரத்தின் ஜலத்தில் உட்கார்ந்து தபஸ்செய்யும் அவளைப் பார்த்து ஸாரஸபக்ஷிகள் இது ஏது புதிதாக ஒரு காலம் மலர்ந்திருக்கிறதே என்று எண்ணும்.

வஸந்த ருதுவில் விக்ஞர்களான முனிவர்களின்

*மனதில் ராகம் (அன்பு) உண்டாகும். ஆனால் இங்கு மாந்தளிர்கள் கூட அவளுடைய அதரபுடங்களில் இருக்கும் ராகத்தை (சிவப்பு) திருடின.*

*அந்தப் பாலிகை வசந்தருதுவிலும் வனவாஸினியாக இருந்தும் உயிர்களினுடைய குகூ சப்தத்தைக் கேட்ட போதிலும் கூட தபஸ்வியே அவளுடைய மனம் லயித்தது.*

*சரத் ருதுவிலும் அந்தச்சிறுமி தன்னுடைய அதர காந்தியை தினமல்லிகைக்குக் கொடுத்துவிட்டுத் தன்னுடைய மந்தநடையை ஹம்ஸங்களிடம் பாதுகாக்கும்படி விட்டுவிட்டுத் தபஸ்ஸிலேயே ஈடுபட்டிருந்தாள்.*

*அந்த தபஸ்வினியான தூதபாபா எல்லா போகங்களையும் தியாகம் செய்துவிட்டுப் பசியின் நிவர்த்திக்காக வாயுவை பக்ஷணம் செய்து வந்தாள்.*

*ரத்னங்கள் சாணைக்கல்லில் உரைபட உரைபடப் பிரகாசம் அடைவதுபோல அவளது சரீரம் தபஸ்ஸினால் மிகவும் க்ருசமாகி மேலும் உஜ்வலமாகிற்று.*

*இதற்குப்பின் ப்ரம்மா நிர்மல இதயத்துடன் தபஸ் செய்யும் அந்த அணங்கைக் கண்டு, ஹே ப்ருக்னே, நான் சந்தோஷமடைந்தேன். வேண்டும் வரம் கேள் என்றார்.*

*அப்பொழுது அவள் அன்ன வாகனத்தில் இருக்கும் ப்ரம்மாவைப் பார்த்து வணங்கி, மிக ஸந்தோஷத்துடன கைகளைக் குவித்துக்கொண்டு கூறினாள்.*

*ஹே வரப்ரதா, பிதாமகரே, தாங்கள் என்னை வரம் கொடுப்பதற்குத் தக்கவள் என்று நினைத்தீர்களானால் முதலில் என்னை மிகவும் தூய்மையுடைவளாக ஆக்குங்கள்.*

*அவளுடைய மனோரதத்தை அறிந்த பிதாமகர் பெரிதும் சந்தோஷம் கொண்டு தூய்மையை விரும்பும் அந்த பவித்ரமான பெண்ணிடம் கூறினார்.*

*ஹே தூதபாபே, இவ்வுலகில் எத்தனை பவித்ரங்கள் உண்டோ, அவைகளை எல்லாவற்றையும்விட நீ பவித்ரமானவள் என்றவரம் உனக்கு அளிக்கிறேன் என்றார்.*

*ஸ்வர்க்கம், மிர்தயம், அந்தரிக்ஷம் இவைகளில் எல்லாம் மேன்மேலும் பவித்ரமாக்கத் தகுதியுடைய 3 1/2 கோடி தீர்த்தங்கள் எல்லாம் உனது சரீரத்து ரோமக்காலங்களில் வாசம் செய்யட்டும். இவைகளை எல்லாவற்றையும்விட நீ பவித்ரமானவள் என்று வரம் கொடுத்து,*

*ப்ரம்மா அந்தர்தானமானார். அந்தப் பெண்ணும் பவித்ரமாகி, தன்பிதா வேத - சிராவின் பர்ணகுடிக்குத் திரும்பிவந்தாள்.*

*இதற்குப்பிறகு சிலநாட்கள் சென்றபிறகு பகவான் தர்மராஜர் அவளுடைய தவத்துக்கு வசப்பட்டு பர்ணகுடியின் அங்கணத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் அவளிடம் வந்து பிரார்த்திக்கத் தொடங்கினார்.*

*தர்மர் கூறுவார்:- ஏ! கற்றுத்தேர்ந்தவளே, அழகான காதுகளை உடையவளே, ஆலிலை போன்ற வயிறையுடைவளே, தடி இடையாளே, விசாலாக்ஷி, அழகிய முகமுடையவளே, உன்னுடைய அழகைக் கண்டு மயங்கிவிட்டேன். ஏகாந்தமாக சற்று என்கூட இருக்கும் கிருபையை தானம் செய்.*

*அடீ சுலோசனீ, உனக்காகவே என்னைக் காமன் மிகவும் தொந்திரவு செய்கிறார். இந்த விதமாக மிகவும் ஆக்ரஹத்துடன்கூட அடிக்கடி ஒரு அறிமுகம் இல்லாத ஓர் உயர்ந்த புருஷன் பிரார்த்தித்தவுடனே அவள் கூறினாள்:-*

*ஏ! துர்புத்தியுடைவனே! என்னை தானம் கொடுக்க என் பிதா அருகில் இருக்கிறார். நீ அவரிடம் பிரார்த்தித்துக் கொள். ஏனென்றால் ஸநாதனமான ஸ்ருதி அவ்விதம் கூறுகிறது.*

*அப்பொழுது தர்மராஜன் இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு அதைர்யம் அடைந்து திரும்பவும் தைரியசாலியான கன்னிகையிடமே பிடிவாதம் பிடிக்கத் தொடங்கினுர்.*

*தர்மர் கூறுவார்:- ஏ! பாக்யவதியே, என்னுல் உன் தகப்பனுரிடம் கேட்க முடியாது. ஏ! சுந்தரி! நீ காந்தர்வ விவாகம் செய்து கொண்டு என்னிஷ்டத்தைப் பூர்த்திசெய்.*

*இந்தப் பிடிவாதமான வார்த்தையைக் கேட்டுவிட்டு குமாரி தூதபாபா தன்னுடைய பிதா கன்னிகாதானப் பலனே அடைய வேண்டுமென்ற எண்ணத்தினுல் தர்மரிடம் கூறுவாள்.*

*ஏ! ஜடமதே, திரும்பவும் இந்த வார்த்தைகளேக் கூருதே, இங்கிருந்துபோ, என்ருள். ஆனுலும் அந்தக் கன்னிகை இவ்வளவு தூரம் சொன்னபின்னும் அந்தக் காமாதுரன் அவள் கூறியதை ஒப்பவில்லே.*

*அப்பொழுது தபோபலத்தினுல் பலமடைந்த அந்த பெண், அட எத்தனேதரம் கூறினுலும் நீ ஜடம் மாதிரியிருக்கிருய். அதனுல் நீ நதமாக (ஆண்நதி) ஆகுவாய் என்று சாபமிட்டாள். இவ்விதம் சாபத்தைப் பெற்ற அந்த பிராம்மணனும் 'ஏ துர்புத்தியே, கடின ஹிருதயம் படைத்தவளே, நீயும் சேதன சக்தியில்லாத சிலேயாகப் போவாய் என்று மறு சாபமிட்டான்.*

*ஸ்கந்தர் கூறினுர்: ஏ முனிவரே! இந்த விதமாக பரஸ்பரம் சாபமிட்டுக்கொண்டு (இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தில்) தர்மர் நதமானுர்.*

*அவிமுக்த க்ஷேத்ரத்தில் தர்மநதர் என்ற பிரசித்தியான பெயரையும் பெற்ருர். அப்பொழுது தூதபாபாவும் பயந்து கொண்டு தனது பிதாவிடம் சென்று தன்னேச் சிலேயாகப் போகும்படி தர்மர் சபித்ததையும் கூறினுள். உடனே முனிவர் தன்னேடைய தியான பலத்தினுல் தர்மர் கூறின எல்லா விஷயங்களேயும் அறிந்து அவளிடம் கூறினுர்,*

அம்மா குழந்தாய்! நீ கொஞ்சமும் பயப்படாதே; நான் உனக்கு எல்லா விதத்திலும் நன்மையைத் தரும் மங்களத்தையே செய்வேன். ஆனுல் அவனுடைய சாபம் வீணுகாது. நீ கருங்கல் சிலேக்குப் பதிலாக சந்திரகாந்த சிலேயாக ஆகிவிடு.

ஏ! சாத்வீ! சந்திரோதயம் ஆகும்பொழுது உனது சிலா சரீரம் ஜலமாக உருகிப்பாயும். அப்பொழுது நீயும் தூதபாபா என்ற பெயர் பெற்ற ஒரு நதியாக ஆவாய். அடிபெண்ணே! அந்த தர்மநதமே உனக்கு அனுரூபமான பர்த்தா. ஏனென்ருல் நீ எந்தெந்த குணங்கள் வேண்டுமென பிரார்த்தித்தாயோ, அக்குணங்கள் முற்றிலும் அவனிடத்தில் பொருந்தியுள்ளதுன.

ஏ! ஸத்புத்ரீ, ஸத்புத்தியுடைவளே, இன்னும் கேள் என்னுடைய தபஸ்ஸின் பிரபாவத்தால் நீ எனது பெண்ணுகவும், அதே சமயம் ஜலரூபமாகவும் (நதியாக) இருப்பாய்.

ஏ! பரந்தபா! இந்த விதமாக புத்திமானுன பிதா வேதசிராமுனி தன்னுடைய கன்னிகை சந்திரகாந்த சிலாரூபமான தூதபாபாவிற்கு அனுக்ரகம் செய்தார்.

ஏ! அகஸ்தியமுனே! அப்பொழுதிலிருந்து காசியில் தர்மநதமென்று பெயர்பெற்ற மடுவும் பிரசித்தியடைந்தது. மஹாபாதகங்களேயும் நாசம் செய்யும் ஜலரூபமான அந்நதமும் எல்லாத் தீர்த்தங்களிலும் பவித்ரத்தைப் பெற்ற தூதபாபா நதிக்கரையில் இருக்கும் விருக்ஷங்களேப் போன்ற கோமளமான பாபக்கூட்டங்களே நாசமடையச்செய்கிருர்.

காசியில் கங்கை பெருகுவதற்கு முன்னுல் தூதபாப என்றும் நதியுடன் கலந்த தர்மபதிக் கரையில் சூரியன் தபஸ் செய்தார். (இங்கு பவான் கபிஸ்த்மாலி கபஸ்தீஸ்வரருக்கு சமீபத்திலேயே மங்கள கௌரியை ஆராதனே செய்து கொண்டு மிக உக்ரமான தபஸ் செய்யத் தொடங்கியிருந்தார்.

அந்தத் தீர்த்தக் கரையில் தபஸ் செய்து கொண்டிருக்கும் மயூகாதித்யர் என்னும் பெயரையுடைய சூரியனுடைய கிரணங்களிலிருந்து பரிஸ்மத்தால் பெருகிய வியர்வை ஆறுக ஓடத்தொடங்கியது.

இவ்விதம் கிரணங்களிலிருந்து உண்டான வியர்வையிலிருந்து ஓடியதால் கிரணநதி என்று பெயர் பெற்றது.

இந்தக் கிரணு என்னும் பெயரையுடைய நதி தூதபாபா நதியில் கலக்கிறது. இதில் ஸ்ஞனம் செய்த மாத்திரத்திலேயே அந்நதி ஸமஸ்த பாபாந்தகாரங்களை த்வம்ஸமாக்குகிறது. தூதபாபா நதி ஸர்வ தீர்த்தமயமாக எல்லாப் பாபங்களையும் நடுங்கச் செய்கிறது. இதில் ஸ்ஞனம் செய்த மாத்திரத்திலேயே அந்நதி ஸமஸ்த பாபாந்தகாரங்களை த்வம்ஸமாக்குகிறது.

தூதபாபா நதி ஸர்வ தீர்த்தமயமாக எல்லாப் பாபங்களையும் நடுங்கச் செய்கிறது. முதலில் அதில் புண்ணிய நதமான தர்மநதம் கலந்தது.

பிறகு யாருடைய பெயரை ஸ்மரித்தமாத்திரத்திலேயே மஹா மோஹமாகிற வலை அறுந்து போகிறதோ, அந்த சூரியனுல் உண்டு பண்ணப்பட்ட கிரணுவும் போய்ச் சேருகிறது.

காசியில் அந்தப் பவித்ரமான தர்ம நதமும் பாவத்தைப் போக்கடிக்கும் கிரணுவும் தூதபாபாவும் ஆகிய சுபங்களே உருகிப்பெருகி ஓடும் நதிகளும் கலந்து ஓடுகின்றன.

இதற்கு பிறகு தீலீபனுடையப் புத்திரனுகிய பகீரதனுடன் கூட பாகீரதியும் வந்து சேர்ந்தாள். கங்கையுடன் யமுனையும் ஸரஸ்வதியும் வந்தார்கள்.

எந்த இடத்தில் பவித்ரமான ஜலத்தையுடைய கிரணு, தூதபாபா, ஸரஸ்வதி, யமுனு, கங்கா ஆகிய ஐந்து நதிகளும்

சேர்ந்து ஓடுகின்றனவோ, அதே காரணத்திஞல் இதை பஞ்சநத தீர்த்தமென்றும், பஞ்சகங்கா என்றும் மூன்று லோகத்திலும் பிரசித்தமாயிற்று. இந்தத் தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்வதிஞல் மனிதர்களுக்கு பஞ்சபூதங்களிஞலான தேகம் தரிக்க வேண்டாம்.

பாபக் கூட்டங்களே ஒழிக்கும் பஞ்சநதி சங்கமத்தில் கேவலம் ஸ்ஞனம் மாத்திரம் செய்தாலுமே, அவன் பிரும்மாண்டத்தைப் போதித்துக்கொண்டு அதற்குமேல் சென்று விடுகிருன்.

காசியில் அடிக்கொரு தீர்த்தகட்டம் இருக்கிறது. அவைகள் இந்த பஞ்சநதத் தீர்த்தங்களின் கோடிமுறை ஒருமுறை ஸ்ஞனம் செய்தாலுமே அந்தப்பலன் நிச்சயமாகக் கிடைக்கிறது.

பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்ஞனமும், பித்ருக்களுக்குத் தர்ப்பணமும், ஸ்ரீ பிந்துமாதவருக்குப் பூஜையும் செய்வதிஞல் அவன் ஜென்மத்தில் பங்கெடுத்துக் கொள்ளமாட்டான்.

பவித்ரமான பஞ்சநத தீர்த்தத்தில் ஜலத்தில் தர்ப்பணம் செய்யும்பொழுது எத்தனே என் ஜலத்தில் விழுகிறதோ, அத்தனே வருஷம் பித்ருக்கள் திருப்தியடைகிருர்கள்.

இந்த சுபத்தைக் கொடுக்கும் பஞ்சநத தீர்த்தத்தில் எவர்கள் சிரத்தையுடன் சிராத்தம் செய்கிருர்களோ, அவர்களுடைய பித்ருக்கள் எந்தயோனியில் பிறந்திருந்தாலும் சரி, அவர்கள் முக்தியை அடைகிருர்கள்.

பித்ருக்கள் ச்ராத்த விதானத்தில் பஞ்ச நதத்தின் மகிமையைப் பார்த்துவிட்டு, யமலோகத்தில் இருந்தாலும் சரி, இப்படியொரு சொல்லே அடிக்கடி பாடிக்கொண்டேயிருப்பார்கள்.

நம்முடைய வம்சத்தில் ஒருவஞவது காசிக்குப் போவான், அவன் பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்ஞனம்

செய்வான், அப்பொழுது நமக்கு முக்தி கிடைக்கும் என்று பாடுவார்கள்.

இந்தக் கதையைப் பிரதிதினமும் ஸ்ராத்த தேவரான யமராஜருக்கு முன்ஞல் பித்ருக்கள் எப்பொழுதும் பாடிக்கொண்டேயிருப்பார்கள்.

இந்தப் பஞ்சநத தீர்த்தத்தில் என்ன தானம் தர்மம் செய்கிருேமோ, அவைகளின் புண்ணியம் கல்பம் முடிவேற்பட்டாலும் க்ஷயமாகாது.

பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து ஒருவருஷம் வரையில் மங்களகௌரியை பூஜித்தால் மலடிக்கும் கூட புத்திர பாக்யம் கிடைக்கும்.

பஞ்சநத தீர்த்தத்தைத் துணியிஞல் வடிக்கட்டி இஷ்டதெய்வத்திற்கு அபிஷேகம் செய்வதால் மிகவும் புண்ணியபலம் கிடைக்கிறது.

பஞ்சாம்ருதத்தை நூற்றிஎட்டு குடங்களில் நிரப்பி திராசில் ஒரு தட்டில் ஒரு துளி பஞ்சநத தீர்த்தம் வைத்து, நிறுத்தால் பஞ்சாம்ருதம் நிரப்பி வைத்துள்ள தட்டு உயரும்.

பஞ்ச கவ்யத்தைப் பானம் பண்ணிஞல் சரீரசுத்தி ஏற்படும் என்று கூறுவார்கள், சிரத்தையுடன் பஞ்சநத தீர்த்தத்தை ஒரு துளி பருகிஞல் அதஞலேயே தேகம் சுத்தியடையும்.

ராஜஸூய அஸ்வமேத யக்ஞங்கள் முடிந்து அவப்ருத ஸ்ஞனம் செய்தால் என்ன பலன் கிடைக்கிறதோ, அதில் பஞ்சநத தீர்த்தத்தில் ஒரு தரம் ஸ்ஞனம் செய்தாலும் நூறுமடங்கு அதிகமான பலன் கிடைக்கிறது.

ராஜஸூய யக்ஞங்களின் பலன்கள் ப்ரம்மாவின் ஆயுளில் இரண்டு நாழிகைக்கே ஸ்வர்க்கத்திற்கு ஸாதகமாகிறது.

ஆஞல் பஞ்சநதத்தில் ஸ்ஞனம் முக்திக்கே ஸாதகமாகிறது. ஸ்வர்கத்தின் ராஜ்யாபிஷேகத்தை

*ஸத்ஜனங்கள் அதிகம் விரும்பமாட்டார்கள். மஹாஸுகத்தைக் கொடுக்கும் பஞ்சநத தீர்த்தத்தின் ஸுகத்தையே பெரிதும் விரும்புவார்கள்.*

*வாராணஸி புரியில் பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து கொண்டு, ஸேவகத்தொழில் புரிவதே மிக நல்லது. அன்னியமாக கோடிக்கணக்கான அரசர்களுக்கு சக்கரவர்த்தியாக இருப்பது இந்த ஸேவகத்தொழிலைவிடச் சிறந்ததல்ல.*

*கார்த்திகை மாதத்தில் பாபத்தைப் போக்கும் பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்னானம் பண்ணுதவர்கள் இன்றைய வரைக்கும் கர்ப்பவாஸிகளாக இருக்கிறார்கள். இனிமேலும் இருப்பார்கள்.*

*இந்த தீர்த்தத்தை ஸத்யயுகத்தில் தர்மநதம் என்றும், த்ரேதாயுகத்தில் தூதபாபா என்றும், த்வாபரயுகத்தில் பிந்து தீர்த்தம் என்றும், கலியுகத்தில் பஞ்சநதம் என்றும் சொல்லப்படுகிறது.*

*ஸத்ய யுகத்தில் நூற்றுக்கணக்கான வருஷம் தபஸ்செய்தால் என்ன பலன் கிடைக்குமோ, அந்தப் பலன் கார்த்திகை மாத மத்தியில் ஒருதடவையாவது பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்னானம் செய்தால், வேறே ஸ்தானங்களில் யாகம், கிணறுவெட்டுவது, குளம் வெட்டுவது, இதர தர்மகார்யங்கள் வாழ்வு முழுவதும் செய்துகொண்டிருந்தால் என்ன புண்ணியம் கிட்டுமோ, அது கார்த்திகை மாதம் கேவலம் ஒருதடவை பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்னானம் செய்தால் அவசியம் கிடைக்கிறது.*

*தூதபாபாவைப் போன்ற தீர்த்தம் உலகத்தில் எங்குமில்லை. ஏனென்றால் அதில் ஒரே தடவை ஸ்னானம் செய்தாலும் போதும், மூன்று ஜன்மத்தில் செய்த ஸஞ்சித பாபம் கரைகிறது.*

*ஒருவன் பிந்துக்கரையில் ஒருகுன்துமணி அளவு ஸ்வர்ணம் தானம் செய்தானானால் அவன் ஒரு பொழுதும்*

தரித்திரனுகமாட்டான். அவன் வீட்டில் ஒருபொழுதும் ஸ்வர்ணம் இல்லாமல் இருக்காது.

இந்த பிந்து தீர்த்தத்தில் பசு, பூமி, எள்ளு, ஸ்வர்ணம், குதிரை, துணி, தான்யம், மாலைகள், பூஷணங்கள் இவைகளைத் தானம் செய்தால் அவனிடம் அவைகள் அக்ஷயமாக விளைந்து கொண்டேயிருக்கும்.

பவித்ரமான பஞ்சநதக் கரையில் விதிப்ரகாரம் ஜ்வலிக்கும் அக்னியில் ஒரு ஆஹுதி கொடுத்தால் போதும். கோடி ஹோமங்கள் செய்த பலன்கள் கிடைக்கும்.

நான்கு புருஷார்த்தங்களுக்கும் இருப்பிடமான பஞ்சநத தீர்த்தத்தின் அபார மஹிமையை யாரால் வர்ணிக்க முடியும்?

இந்தப் பவித்ரமான அத்யாயத்தை பக்தியுடனே கேட்பவனும், சொல்பவனும் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டு விஷ்ணு லோகத்தில் பூஜிக்கப்படுகிறுர்கள்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான பஞ்சநத உற்பத்தி வர்ணனம் என்னும் ஐம்பத்தொன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்தியாயம் 60

*ஸ்கந்தர் கூறினார்! ஹே! மித்ராவருணகுமாரரே! நான் இப்பொழுது உற்பத்திக் கதையைக் கூறிவிட்டேன். பிந்துமாதவர் ஆவிர்பவித்த கதையைக் கூறுகிறேன் கேளும்.*

*இந்தக் கதையை சிரத்தையுடன் கேட்கும் அறிஞர்களின் ஸர்வபாபங்களும் ஒரு க்ஷணத்தில் நசிக்கும். லக்ஷ்மி அவர்களை விட்டு ஒருபொழுதும் நீங்கமாட்டாள். மேலும் தர்மம் அவனிடம் பரிபூர்ணமாகத் தங்கியிருக்கும்.*

*பகவான் மஹாவிஷ்ணு மஹாதேவரின் ஆக்ஞையைப் பெற்று கருடன்மேல் ஏறிக்கொண்டு பந்த்ராசலத்திலிருந்து வாராணஸி புரியை அடைந்தார்.*

*அங்கு தனது யோகமாயையினால் திவோதாஸை அரசுரிமை துறக்கச் செய்து, பாதோதக தீர்த்தக்கரையில் கேசவரூபமாக இருக்கும்பொழுது, காசியின் அபார மஹிமையை யோசித்து, யோசித்து பஞ்சநத தீர்த்தத்தைக் கண்டு மிகவும் ஆனந்தம் அடைந்தார்.*

*பிரஸன்ன சித்தத்துடன் கூடின அந்த புண்டரீகாக்ஷர் தனக்குத்தானே கூறிக்கொண்டார். எண்ணிக்கையற்ற குணங்களுடன் கூடிய வைகுண்டலோகமே எனக்கு குணமற்றதாகத் தோன்றுகிறது. அப்படியிருக்கும்பொழுது, க்ஷீரஸாகரத்தில் இவ்வளவு நிர்மலமான குணம் எங்கிருக்கிறது? அதை இந்தக் காசியில் பஞ்சநத தீர்த்தத்திற்கு ஒப்பிடமுடியுமா? ஸ்வேதத்வீபத்தில் இவ்வளவு பெரும்குணம் பொருந்திய இடம் எங்கு இருக்கிறது? அந்தக் காசியில் பரமபவித்ரமான தூதபாபா என்னும் நதி ஓடுகிறதினால் அல்லவா இத்தனை ப்ரபாவம்!*

*தூதபாபா ஜலத்தைத் தொடுவதினால் ஏற்படும் ஆனந்தம் என்னுடைய கௌமோதகி என்னும் கதையைத் தொடும்பொழுது ஏற்படுவதில்லை.*

*இந்த தூதபாபா ஜலத்தைத் தொடுவதிஞல் என்ன ஸுகம் ஏற்படுகிறதோ, அது க்ஷீரஸாகரத்தின் புதல்வியான லக்ஷ்மியின் ஆலிங்கனத்திஞல் ஏற்படுவதில்லே.*

*இப்படி யோசனே செய்துகொண்டே மஹாதேவரிடம் எல்லா விருத்தாந்தங்களேயும் ஸமர்ப்பிக்கும் பொருட்டு ஆனந்த வனமான காசி, ராஜா திவோதாஸ், பஞ்சநத தீர்த்தம் இவைகளின் குணங்களே வர்ணித்துக் கொண்டே பகவான் மாதவர் பஞ்சநத தீர்த்தக்கரைக்கு வந்தார். அங்கு ஓங்கிய மனத்துடனும் நிலேத்த பார்வையுடனும் ஸுகாஸனத்தில் அமர்ந்து தபம் செய்யும் மெலிந்த தேகமுடைய ஒரு தபோதனரைக் கண்டார்.*

*புண்டரீகாக்ஷஞன அச்சுதன் லக்ஷ்மீ ஸமேதராய் வனமாலேயிஞல் சோபிதமானவராய், நான்கு கைகளிலும் சங்கு, சக்ரம், பத்மம், கதை இவைகளேத் தரித்துக்கொண்டு, இதயத்தில் கௌஸ்துபமணி துலங்க பீதாம்பரதாரியாய் ஸுந்தர நீலகமலத்துக்கு ஸமமான மேனியுடன் அதிமஞேஹரரூபமுடனும் நாபியாகிற மடுவை பத்மம் அலங்கரிக்க பாடலீபுஷ்பத்தைப் போன்ற சிவப்புடன் இரு அதரங்களும் துலங்க, மாதுளம் விதைபோன்ற பல்வரிசைகளுடன் கிரீடத்திஞல் ஆகாசத்திற்குப் பிரகாசத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கும் அந்த மாதவரை, அந்தரிஷி தபத்திலிருந்து எழுந்து ஸமீபத்தில் சென்று கண்டார். தேவராஜன், இந்திரன், பகவானின் சரணகமலங்களில் வீழ்ந்து வணங்கிக் கொண்டிருக்கிருர். ஸனகாதிரிஷிகள் துதிபாடல்கள் பாடுகிருர்கள்.*

*நாரதர் முதலிய திவ்ய முனீஸ்வரர்கள் அவரைப் புகழ்ந்து பாடுகிருர்கள். பிரகலாதர் முதலிய பக்தகணங்கள் அவர் மனதிற்கு ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடிய வார்த்தைகளேப் பேசுகிருர்கள்.*

*அஸுரர்களே வேறுடன் தண்டித்தவரும்*

*மதுகைடபர்களைக் கொன்றவரும், கம்ஸனைத்வம்ஸம் செய்தவருமானஅவர் சார்ங்கம் என்னும் வில்லைத் தனது கையில் தரித்துக் கொண்டிருக்கிறார்.*

*எவர் கைவல்ய ரூபராயும் பரப்ரம்மமாகவும் நிராகாரமாயும் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதவராயும், (பக்திக்கு வேண்டி,) அவரை வாக்கின் சக்திக்கும் அப்பால் இருப்பதனால் அவரை என்னைப்போன்ற சின்னபுத்தியுள்ளவனால் எப்படி ஸ்துதிக்க முடியும்? அவர் பக்தர்களுடைய பக்திக்காகவே புருஷரூபராக அவதரிக்கிறார்.*

*வேதங்கள் உபநிஷத்மூலமாக அவரை வர்ணிக்க முயற்சிசெய்தும் அவருடைய உருவத்தை அறிய முடியவில்லை. அவரை ப்ரம்மாதி தேவருடைய உருவத்தை அறிய முடியவில்லை. அவரை ப்ரம்மாதி தேவர்களும் அறிய முடியாது. அப்பேர்ப்பட்டவரை நான் கண்கூடாகப் பார்க்கிறேன்.*

*பிறகு மஹா தபஸ்வியான அக்னிபிந்துரிஷி மிகவும் ஸந்தோஷமடைந்து பூமியில் தலைபடும்படி பகவான் மாதவரை வணங்கினார்.*

*விஸ்தாரமான ஒரு சிலையில் அமர்ந்திருக்கும் பலித்வம்ஸகரான பகவான் அச்சுதரை பக்திபரவசமாய் கை கூப்பிக் கொண்டு துதிக்கத் தொடங்கினார்.*

*மார்க்கண்டேயன் முதலிய மகத்துக்களான ரிஷிகளினால் ஸேவிக்கப்படும் அந்த பஞ்சநத தீர்த்தத்திற்கு ஸமீபத்திலேயே அக்னிபிந்து ரிஷி கீழ்க்கண்டவாறு துதிக்க ஆரம்பித்தார்-*

*ஏ புண்டரீகாக்ஷா, நீங்கள் உள்ளும் புறமும் தூய்மையாக்குபவர். ஆயிரக்கணக்கான சிரஸும் ஆயிரக்கணக்கான நேத்ரங்களும், ஆயிரக்கணக்கான சரணங்களையும் உடைய புருஷர். அப்படிப்பட்ட உமக்கு நமஸ்காரம்.*

இந்த்ராதி தேவர்களால் வர்ணிக்கக் கூடிய இரண்டற்ற ஏகாக்ர புத்தியினுல் ஸர்வ விதமும் இரண்டற்றதான (அதாவது தர்மாதர்மம், பாபபுண்ணியம், ஸுகதுக்கம், முதலிய இரட்டைகளை) நிவாரணம் செய்யும் தங்களுடைய இரண்டு திருவடிகளுக்கும் நமஸ்காரம்.

வாக்தேவதையின் வாணியும், (வாக்கும்) எவரைத்துதிப்பதற்கு அசக்தியடைகிறதோ, அவரை யாரால் துதிக்க முடியும்?

பகவானுகிய தாங்கள் பழமையான ஸத்மஹாத்மாக்களுக்கும் எட்டாதவர், அவர்களுடைய வாக்சக்திக்கும் அப்பாற்பட்ட உம்மை என்னைப் போன்ற அற்பபுத்தியுள்ளவனுக்கு துதிப்பதற்கு யோக்யதை ஏது?

அப்படி வாணிக்கும் எட்டாததும் மனதில் சிந்திக்க முடியாததும் என, அந்த மனோவாக்கிற்கு அதீதமான ஈஸ்வரனை வர்ணித்துப்பாட யாருக்குத்தான் சக்தியிருக்கிறது?

ஆறு அங்கங்களோடும், பதங்களோடும், கர்மத்தோடு கூடிய நான்கு வேதங்களும் எவருடைய மூச்சிலிருந்து அனுயாஸமாக உற்பத்தியாகிறதோ, அப்பேர்ப்பட்ட அந்த பகவானுடைய அபார மஹிமையை யார் அறிவார்?

சலிக்காத மனம், புத்தி இந்திரியங்களோடு ஸனகாதிமுனிகள் ஹ்ருதயாஸநத்தில் தியானித்துக் கொண்டிருந்த போதிலும் யதார்த்த ரூபமாக அறிந்து கொள்ளவில்லை.

பால பருவத்திலிருந்தே ப்ரம்மசாரிகளாக இருக்கும் நாரதாதி மகரிஷிகள் கூட அவருடைய சரித்திரத்தை கானம் செய்துகொண்டிருந்தபோதிலும் ஒழுங்காக அவரை அறியவில்லை.

ப்ரம்மாதி தேவதைகளுக்கும் எட்டாதவர், அஜய அனந்தசக்தி ஸம்பன்னர், ஸூக்ஷ்மஸ்வரூபர்

*ஜன்மரஹிதர், அழிவில்லாதவர், இரண்டற்றவர், ஆதி, அனுதி நித்யநிராமயர், நிராகாரர், சிந்திக்க முடியாத உருவத்தை உடையவர். சராசரமயமாக இருந்தும் சராசரத்திலிருந்து வேருனவர்; அப்படிப்பட்ட தங்களை யாரால் அறியமுடியும்?*

*ஹே! முராரே, ஹரே, உங்களுடைய ஒவ்வொரு நாமமும் பாபிகளுடைய ஜன்ம ஜன்மாந்தரமாக ஸஞ்சிதம் செய்யப்பட்ட ஆபத்துகளினுல் நிறைந்திருக்கும் பாபங்களை நிமிஷத்தில் விலக்கிவிடும், முகுந்தன், மதுஸூதனன், மாதவன் முதலிய பூஜ்யநாமங்கள் ஜபித்தவுடனேயே பெரிய பெரிய யாகத்தினுல் ஏற்படும் பலன்களை அளிக்கின்றன. நாராயணர், நரகார்ணவதரணர், ராமபத்திரர், மதுஸூதனர், சதுர்புஜர், விச்வம்பரர், விரஜர், ஜனுர்த்தனர் முதலிய நாமங்களை ஜபிப்பவருக்கு ஸம்ஸாரத்தில் பிறப்பு ஏது? யமராஜரிடத்தில பயம்தான் ஏன் ஏற்படுகிறது?*

*ஹே! த்ரிவிக்ரமா! எவர்கள் தங்கள் ஹ்ருதயத்தில் மேகஸமானமான ச்யாமள ஸௌந்தர வடிவுடன் சோபிப்பவரோ, மின்னலுக்கு ஸமானமான பீதாம்பரதாரியோ, புண்டரீகாக்ஷ ரூபமான தங்களைத் தியானம் செய்பவர் தங்களுடைய சிந்தனைக்கெட்டாத சாந்தியையடைகின்ருர்கள். (அதாவது தங்களது ஸாரூப்யபதவியை அடைகிருர்கள்.)*

*ஸ்ரீ வத்ஸம் என்னும் மருவுடையவரே! ஹரே! ஏ! அச்சுதா, கைடபாரே, கோவிந்தா, கருடவாஹனு, கேசவா, சக்ரபாணியே, லக்ஷ்மீபதியே, தானவசூதரே, சாரங்கத்தைத் தரித்தவரே! தங்களுடைய பக்தர்களுக்கு ஒரு பொழுதும் பயமில்லை.*

*பகவான் கஸ்தூரி வாசனையையும் தோற்கடிக்கும் திவ்யவாசனை நிரம்பிய துளசி தளத்தின் கொத்துக்களினுல் எவர்கள் உம்மைப் பூஜிக்கிருர்களோ நிர்மலமான உள்ளம் படைத்த அவர்களை எல்லா தேவதைகளும் மந்தார பாரிஜாத*

*புஷ்பமாலைகளினால் பூஜிக்கிறார்கள்.*

*ஏ! கமலலோசனா! யார் பேச்சு வாக்குகளின் மத்தியிலும் ஆர்வத்துடன் தங்கள் நாமத்தை ஜபிக்கிறார்களோ, எவர்களுடைய காதுகளில் தங்களுடைய மதுர அக்ஷரங்களின் ஒலி பாய்கிறதோ, எவருடைய சித்தமாகிய சுகத்தில் தங்களுடைய உருவம் சித்தரிக்கப்பட்டிருக்கின்றதோ, அப்படிப்பட்டவருக்கு நிராகாரமான ப்ரம்ம பதத்தையடைவதும் எளிதே.*

*தங்களுடைய ஞான ஸந்ததிகளுக்கு ஸ்வர்க்க அபவர்க்கத்தைத் தானம் செய்வதில் சதுரரே, சேஷ சாயியே, ஸ்ரீபதியே இந்த உலகில் தங்களை பற்றி எவர்கள் எப்போதும் ஜபித்துக் கொண்டும், பூஜித்துக் கொண்டும் இருக்கிறார்களோ, அவர்களை ஸ்வர்க்கத்தில் இந்திரன், யமன், குபேரன் முதலிய தேவகணங்கள் எப்பொழுதும் மதித்துப் பூஜிக்கிறார்கள்.*

*ஹே! கமலாயதலோசனா! பத்ம பாணியே! எவர்கள் எப்பொழுதும் தங்களுடைய ஸ்துதியைப் பாடுகிறார்களோ, அவர்களை ஸித்தர்களும், அப்ஸரஸுகளும் தேவதைகளும் ஸ்வர்க்கத்தில் எப்பொழுதும் ஸ்துதிக்கிறார்கள்; ஹே! ஸர்வ ஸித்திப்ரதா, தங்களைத் தவிர, முக்தி லக்ஷ்மியை எவர்தான் தானமாகக் கொடுப்பார்கள்?*

*தங்களுடைய யோகமாயையினால் லீலாரூபமான நானாவிதமான அவதார ரூபங்களையெடுத்தவரே! ப்ரம்மாவினால் வணங்கப்படும் சரணங்களையுடையவரே! தாங்களே க்ஷண நேரத்தில் உலகத்தை ஆக்கி அளித்து அழிக்கின்றவரே! ஏ! ஸர்வஸ்ரேஷ்டா! தாங்களே ஜகத்தாயும் அதன் நாதனாயும் ஜகத்திற்கு பீஜமாயும் இருக்கிறீர்கள். அப்படிப்பட்டத் தங்களை நான் எப்பவும் வணங்குகிறேன். ஏ! ராவண சத்ருவே! ஸ்துதிப்பவனும், ஸ்துதிக்குப் பாத்ரமும் தாங்களே, தாங்கள் ஒருவரே,*

*எல்லாமாகவும் இருக்கிறீர்கள். ஏ! விஷ்ணு! நீங்களே நான். தங்களைத் தவிர வேறு ஒன்றும் அறியேன். ஜி! பவநாசகா, என்னுடைய ஸம்ஸார தாகத்தை விலக்க வேண்டும்.*

*இந்த விதமாக மஹாதபஸ்வியான அக்னி பிந்துரிஷி, ரிஷீகேசரை ஸ்துதித்துவிட்டு மௌனமாக நின்று கொண்டிருந்தார். அப்பொழுது வரதாயகரான விஷ்ணு அந்த முனியிடம் கூறினார். ஏ! தபோநிதே அறிவில் சிறந்தவரே! அக்னிபிந்து நான் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். தங்களுக்குக் கொடுக்க முடியாத வஸ்து ஒன்றும் என்னிடமில்லை. நீங்கள் வேண்டும் வரம் கேளுங்கள் என்றார். அக்னி பிந்துரிஷி கூறினார்:-*

*ஏ வைகுண்ட நாயகா, ஜகன்னயகா, பகவான், கமலாகாந்தா, தாங்கள் என்னிடம் மகிழ்ச்சி கொண்டவராகிய தங்களை நான் ஒன்று கேட்பேன். காதைக் கொடுங்கள். அப்பொழுது பகவான் விஷ்ணு புருவத்தையசைத்து அந்தத் தபஸ்விக்கு அனுமதி கொடுத்தார். அப்பொழுது அவர் ப்ரஸன்ன மனத்துடன் கேசவரை வணங்கிப் பிரார்த்தித்துக் கொண்டார்.*

*ஹே! நாதா! நீங்கள் ஸர்வ வியாபி. அதனால் விசேஷமாக எல்லா ஜந்துக்களுடையவும், முமுக்ஷு மகாத்மாக்களின் நன்மைக்காகவும், இந்த பஞ்சநத தீர்த்தத்தில் தாங்கள் ஸ்திரமாக இருக்க வேண்டும். ஏ மாதவா! யோசியாமல் தாங்கள் இந்த வரத்தை எனக்களிக்க வேண்டும். தங்கள் சரணகமலங்களின் பக்தியைத் தவிர நான் வேறொன்றும் வேண்டவில்லை.*

*இந்த விதமாக அக்னிபிந்துமுனியின் வரப்பிரார்த்தனையைக் கேட்டுவிட்டு மதுஸூதனராகிய மாதவர் ஸந்தோஷமடைந்து பரோபகாரத்திற்காக அப்படியே ஆகட்டும் என்று கூறினார்.*

*விஷ்ணு கூறினார்:- ஏ! முனிஸ்ரேஷ்டா, அக்னிபிந்து, காசியில் வாழும் பக்த ஜனங்களுக்கு முக்தி மார்கத்தை*

உபதேசித்துக் கொண்டு இந்த மார்கத்தில் அவசியம் இருப்பேன். ஏ! முனியே! நீர் எனக்கு மிகவும் நெருங்கியவர், பக்தர்; அதனுல் உம்முடைய பக்தி என்னிடம் ஸ்திரமாக இருக்கும். நான் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். அதனுல் வேறு வரங்களும் நான் உமக்குத் தருவேன். அவைகளேயும் கேட்டுக் கொள்ளவும்.

ஏ! தபோநிதியே! நான் முன்பே இங்கேயே இருப்பதற்கு மிகவும் விரும்பினேன். இப்பொழுது நீரும் பிரார்த்திப்பதனுல் நான் இனி இங்கேயே இருப்பேன். என்ருர்.

கொஞ்சமாவது அறிவு இருந்தால் காசிக்கு வந்துவிட்டு எந்த துர்புத்தியுடையவனும் கூட திரும்பிப் போகமாட்டான் ஏனென்ருல் விலேமதிப்பற்ற மாணிக்கம் கிடைத்த பிறகு கண்ணுடித் துண்டுக்கு எவனுவது ஆசைப்படுவானு?

ஒரு அற்ப முயற்சியினுலேயே இந்த நஸ்வரமான சரீரம் விழுந்தவுடன் சீக்கிரமாக இங்கு எப்படி முக்தி கிடைக்கிறதோ, அப்படி வேறெங்கு கிடைக்கும்?

அறிவில் சிறந்த ஞானிகள் வயோதிகத்திஞல் கரைந்துபோன மண்ணினுலான இந்த தேஹத்திற்குப் பதிலாக ஜரை நரையற்ற அமரமயமான இந்த தேஹத்தை அடைகிருர்களல்லவா?

வேறு எந்த ஸ்தானங்களிலும் தவம், தானம், பூர்ண தக்ஷிணேகளோடு கூடின அநேக யாகங்கள் இவைகளாலும் பூர்ண லாபம் ஸித்திக்காது. ஆனுல் காசியில் கேவலம் சரீரத்தை விடுவதிலேயே கிடைக்கிறது.

ஒருமையுற்ற சித்தத்துடன் யோகி ஜனங்கள் யோகாப்யாஸம் செய்து கொண்டிருந்த போதிலும் கூட ஒரே ஜன்மத்தில் முக்தியடையமாட்டார்கள். ஆனுல் காசியில் கேவலம் சரீரத்தைத் தியாகம் செய்வதினுலேயே முக்தி கிடைக்கிறது.

காசியில் முக்தி அடைவதே மஹாதானமாகும். இதுவே பெரிய தபம். அதுவே மிகவும் ச்ரேஷ்டமான வ்ரதம்.

உலகத்தில் காசியையடைந்து எவன் திரும்புவதில்லையோ அவனே மஹாபண்டிதன், அவனே ஜிதேந்த்ரியன். அவனே தன்யனுன புண்ணியவான்.

ஏ! முனியே! காசியிருக்கும் வரை நான் இங்கிருப்பேன். இந்தக் காசி பகவானின் த்ரிசூலத்தின் மேல் இருப்பதால் ப்ரளயகாலத்தில் கூட இங்கு விநாசம் கிடையாது.

மஹாமுனி அக்னிபிந்து விஷ்ணுவுடைய இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு புளகாங்கிரதராய்க்கூறினுர். இப்பொழுது நான் தங்களிடம் மற்ருெருவரம் கேட்கிறேன்.

ஏ! மாதவா! இந்த சுபஸ்தானமான பஞ்சநதி தீரத்தில் என்னுடைய பெயருடன் தாங்கள் இருந்து பக்தர்களுக்கும் பக்தரல்லாதவர்களுக்கும் கூட முக்திதானம் தந்தருள வேண்டுகிறேன்.

ஒருவன் பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்னனம் செய்துவிட்டு அந்நிய தேசங்களுக்குச் சென்று மரணமடைந்தாலும் அவர்களுக்கும் தாங்கள் முக்தியளிக்க வேண்டும்.

எவனெருவன் பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து தங்களைப் பூஜிக்கிருனே, அவனுக்கு ஸம்பத்தைக் கொடுக்கும் சஞ்சல லக்ஷ்மியும் முக்தியைக் கொடுக்கும் நிப்சல லக்ஷ்மியும் அவனைவிட்டு விலகாமல் இருக்கட்டும்.

விஷ்ணு கூறினுர்:- ஏ! முனியே, அக்னிபிந்து, நீர் கேட்கும் வரங்களையெல்லாம் அளித்தேன். லக்ஷ்மீ ஸஹிதமான என்னுடைய பெயரும் உம்முடைய பெயரில் பாதியுமாக எடுத்துக்கொண்டு நான் இங்கு வஸிப்பேன். காசியில் மூன்று லோகங்களிலும் ப்ரக்யாதி பெற்ற பிந்து

*மாதவர் என்று என்னுடைய பெயர் விளங்கும். பெரிய பெரிய பாபராசிகளையெல்லாம் அது மடுவில் ஸ்னானம் செய்து என்னைப் பூஜிப்பானாகில் அப்புறம் அவனுக்கு ஸம்ஸாரபயம் ஏது? ஜனங்கள் இந்த பஞ்சநத தீர்த்தத்தில் என்னை ஹ்ருதயத்தில் தியானித்தார்களானால் தனலக்ஷ்மியும் மோக்ஷலக்ஷ்மியும் அவர்களிடம் எப்பொழுதும் வசிப்பார்கள்.*

*ஒருவன் பஞ்சநத தீர்த்தத்திற்கு வந்து பிராம்மணர்களை தனத்தினால் சந்தோஷப்படுத்தாவிட்டால் அவன் சில நாட்களில் மரணமடைந்தால் அவனுடைய தனம் வாய்விட்டு அழும்.*

*ஒருவன் வந்து எனக்கு த்ரவ்யங்களை ஸமர்ப்பித்தால் அவன் க்ருதக்ருத்யனாகவும் தன்யனாகவும் ஆவான்.*

*ஏ! முனிஸ்ரேஷ்டர் அக்னிபிந்து! ஸர்வபாபங்களையும் நாசம் செய்யும் இந்தத் தீர்த்தத்திற்கு பிந்துதீர்த்தம் எனப் பெயர் விளங்கட்டும். ஒருவர் ப்ரம்மசர்ய வ்ரதத்துடன் கார்த்திகை மாதத்தில் ஸூர்யோதயத்திற்கு முன்னால் ஸ்னானம் செய்வானானால் அவனுக்கு யமபயமில்லை.*

*மனிதன் மோஹவசத்தினால ஆயிரக்கணக்கான பாபங்கள் செய்தாலும்கூட கார்த்திகை மாதத்து மத்தியில் இந்த தர்ம நதியில் (தர்மநதம்) ஸ்னானம் செய்வானானால் க்ஷணமாத்திரத்தில் பாபமற்றவனாகிறான்.*

*இந்த சரீரம் ஸ்வஸ்தமாக இருக்கும்போதே இந்திரியங்கள் தளர்வதற்கு முன்னால் இந்த வ்ரதங்களை அனுஷ்டிக்க வேண்டும். ஏனெனில் தேஹத்தினுடைய பலனே வ்ரதம்தானே.*

*இந்த அபவித்திர களஞ்சியமான தேஹம் பத்தியினாலும் வ்ரதங்களினாலும் பலனைக் கருதாத வ்ரதங்களினாலும், உபாவாஸங்களினாலும், சுத்தப்படுத்த வேண்டியதொன்றாகும்.*

க்ருச்ர சாந்த்ராயண விரதம் முதலியவைகளை மிகவும் முயற்சியுடன் செய்யவேண்டும். ஏனென்றால் இந்த வ்ரதங்களை அனுஷ்டிப்பதினால் அசுத்தமான சரீரங்களும் சுத்தமாகின்றன.

வ்ரதங்களினால் சுத்தப்படுத்தப்பட்ட தேஹத்தில் தர்மம் ஸ்திரமாக வஸிக்கிறது. எங்கு தர்மம் இருக்கிறதோ அங்கு அர்த்த காமமோக்ஷமும் ஒன்று சேருகின்றன.

அதனால் நான்கு புருஷார்த்தங்களின் பலனை இச்சிப்பவர்கள் தர்மத்திற்கு ஸாதன மார்க்கமான வ்ரதங்களை அனுஷ்டிக்க வேண்டுவது அவசியம்.

மனிதன் எப்பொழுதும் வ்ரதம் அனுஷ்டிக்க முடியாவிட்டால் சாதுர்மாஸ்ய வ்ரதத்தை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

பூமியில் சயனமும், ப்ரம்மசர்யமும், சில உணவுவகைகளை விலக்குவதும், ஒருவேளை உணவு கொள்வதும், தங்கள் சக்திப்படி கொஞ்சம் தானம் செய்வதும், புராண சிரவணமும், அவைகளில் சொல்லியிருக்கும்படி நடத்தலும், அகண்ட தீபதானமும் இஷ்டதெய்வத்தின் பூஜையும் அவசியம் செய்ய வேண்டும்.

அறிவாளிகள் முளைகளும், விதைகளும் நிரம்பியிருக்கும் இடத்திற்குப் போக்குவரத்தைக் கண்டிப்பாக விட்டுவிட வேண்டும்.

சாதுர்மாஸ்ய வ்ரதத்தை அனுஷ்டிப்பவர்கள் ஈனமான ஜனங்களுடன் பேச்சுவார்த்தைகள் அதிகம் வைத்துக் கொள்ளக்கூடாது. ஸத்யமே பேச வேண்டும். கூடுமானவரையில் மௌனமாக இருக்க வேண்டும்.

படைத்த தான்யங்கள், பருத்த தான்யங்கள், சப்பையாகவும் வழவழப்பாகவும் இருக்கும் தான்யங்களை வ்ரதமிருப்பவர்கள் உபயோகிக்கக்கூடாது. பவித்ரமான

*மனதுடன் இருக்க வேண்டும். வ்ரதமிருக்காதவர்களைத் தொடக்கூடாது.*

*பற்கள், தலை, வஸ்திரம் இவைகளை தினமும் சுத்தப்படுத்த வேண்டும். மனதிலும் அநிஷ்டமான எண்ணங்களை நினைக்கக் கூடாது. பன்னிரண்டு மாதங்களும் விரதங்களால் என்ன பலன் கிடைக்கிறதோ, அதே பலன் நான்கு மாதங்கள் சாதுர்மாஸ்ய விரதம் இருப்பவர்களுக்குக் கிடைக்கிறது.*

*ஒரு வருஷத்துப் பலனை விரும்புவர்கள் சாதுர்யமாஸ்ய விரதம் இருக்க முடியாவிட்டால், கார்த்திகை மாதம் முழுவதுமாவது விரதம் இருக்க வேண்டும்.*

*மூட ஜனங்கள் கார்த்திகை மாதம் வ்ரதம் இருக்காமலேயே கழிக்கிறார்கள். இந்தப் பன்றியினுடைய ஹ்ருதயம் படைத்தவர்களுக்குப் புண்ணியம் லவலேசமும் கிடையாது. புண்ணியவான்கள் கார்த்திகை மாதம் வந்தால் சக்திக்குத் தகுப்தபடி க்ருச்ரசாந்த்ராயணமோ, க்ருச்ர ப்ராஜாபத்யமோ ஏதாவது ஒரு வ்ரதமாவது இருக்க வேண்டும்.*

*இவ்விரதங்களில் கார்த்திகை மாதம் நித்ய விரதம், ஒன்று விட்டு ஒருநாள் விரதம், மூன்று இரவுகள் விரதம், பஞ்சராத்ர விரதம், பக்ஷ - வ்ரதம் மாஸோபவாஸ விரதம் இவைகளில் எதையாவது ஒன்றையாவது அனுஷ்டிக்க வேண்டும். எப்பொழுதும் எங்கும் வ்ரதமிருக்காமல் கார்த்திகை மாதத்தை வீணாகக் கழிக்கக்கூடாது.*

*கார்த்திகை மாதம் வந்தவுடன் வ்ரதகர்த்தாக்கள் கீரை, காய்கறி கலந்த உணவோ, பால் கலந்த உணவோ பழமுடன் கூடின உணவோதான் புஜிக்க வேண்டும். வ்ரதம் இருப்பவர்கள் கார்த்திகை மாதத்தில் நித்யமாகவும், நைமித்தகமாகவும் ஸ்னானம் செய்ய வேண்டும். மிக்க பலனை எதிர் பார்ப்பவர்கள் கார்த்திகை மாதம் முழுவதும்*

ப்ரம்மசர்யம் அனுஷ்டிக்க வேண்டும்.

ஒருவன் கேவலம் கார்த்திகை மாதமாவது பவித்ரமான மனதுடன் ப்ரம்மசர்யம் அனுஷ்டித்தால் அவனுக்கு வருஷம் முழுவதும் ப்ரம்மசர்யம் அனுஷ்டித்த பலன் கிடைக்கும்.

ஒருவன் இந்தமாதிரி வ்ரதம் இருந்து கார்த்திகை மாதத்தைக் கழித்தானுனல் அவன் வருஷம் முழுவதும் வ்ரதமிருந்தவனை ஒத்தவனுகிருன்.

காய்கனிகளையும் பாலையும் மாத்திரம் உண்டு கார்த்திகை மாதத்தைக் கழிக்கிறவன் மேற்படி ஆஹார நியமங்களுடன் ஒரு வருஷம் உபவாஸம் இருந்த பலனை அடைகிருன்.

கார்த்திகை முழுவதும் இலையிலேயே சாப்பிடவேண்டும். வெண்கலம் முதலிய பாத்திரங்களை கவனமாக ஒதுக்க வேண்டும். வ்ரதமிருந்து வெண்கல பாத்திரத்தில் புஜிப்பானுனல் அவனுக்கு வ்ரதபலன் கிடையாது.

இப்படி வெண்கலப் பாத்திரத்தை ஒதுக்கி மாத முழுவதும் வ்ரதமிருந்தவன் மாத முடிவில் நெய்யால் நிரம்பிய வெண்கலப் பாத்திரத்தைத் தானம் செய்யவேண்டும். மிகவும் இழிவான கதியைக் கொடுக்கும் தேனையும் அருந்தக் கூடாது.

மதுவை விட்டால் நெய்யும் சர்க்கரையும் சேர்ந்த பாயஸம் சாப்பிடலாம். கார்த்திகை மாதத்தில் எண்ணை உடம்பில் தடவவோ சாப்பிடவோ கூடாது.

ஏ! குற்றமற்றவனே! கார்த்திகை மாதத்தில் ஒருவன் எண்ணை உபயோகப்படுத்தினுல் நரகத்தையடைகிருன். தேனுக்குப் பரிஹாரமாக நெய்யும் சர்க்கரையும் சேர்ந்த பாயஸத்தைத் தானம் செய்ய வேண்டும். எண்ணைக்கு பதிலாக ஐந்து படி எள்ளும், கொஞ்சம் தங்கமும் கொடுக்க

*வேண்டும். கார்த்திகை மாதம் மீன் சாப்பிடுபவன் திமிங்கலத்தின் யோனியில் ஜனிக்கிறுன். மாம்ஸம் சாப்பிடுபவன் ஜலம், ரத்தம் இவைகளில் புழுவாக ஜனிக்கிறுன். அரசர்கள் மாம்ஸம் சாப்பிடுபவர்களாக இருந்தால் கார்த்திகை மாதத்தில் விட்டுவிட வேண்டும். மத்ஸ்யம் மாம்ஸம் சாப்பிடுபவர்களாஞல் கார்த்திகை மாதத்தில் அவற்றைத் தவிர்த்துவிட்டு வ்ரதத்தில் சிரத்தையாக இருக்க வேண்டும்.*

*கார்த்திகை மாதம் மத்ஸ்யம் மாம்ஸம் சாப்பிட்டவர்கள் அந்த தோஷத்திஞல் ஸர்ப்பமாகப் பிறப்பார்கள். கார்த்திகை மத்ஸ்யம் மாம்ஸத்திற்குப் பரிஹாரமாக உளுந்தும், கொஞ்சம் ஸ்வர்ணமும், பத்து பூசணிக்காயும் தானம் செய்ய வேண்டும்.*

*கார்த்திகை மாதத்தில் உண்ணும்பொழுது மௌனமாக உண்ணவேண்டும். மௌனமாக உண்பவன் அம்ருதத்தை உண்டவஞவான். அவன் எள்ளும் ஸ்வர்ணமும் உயர்ந்த மணியும் தானம் கொடுக்க வேண்டும்.*

*எந்த வ்ரத கர்த்தா கார்த்திகை மாதம் உப்பை விடுகிறுனே, அவனுக்கு எல்லா ரஸங்களேயும் விட்ட பலன் கிடைக்கிறது. அப்படி உப்பில்லாமல் இருப்பவனுக்கு கோதானம் பண்ண வேண்டும்.*

*கார்த்திகை மாதத்து விதி வெறும் தரையில் படுக்க வேண்டும். அப்படிப் படுப்பவனுக்கு மறுபடியும் பூமியில் ஜனனம் எடுக்க வேண்டாம். அப்படிப் படுப்பவன் மெத்தை தலேயணேகள் ஸஹிதம் கட்டில் தானம் செய்யவேண்டும். ஒருவன் கார்த்திகை மாதமுழுவதும் அகண்டதீபம் (நெய்விளக்கு) ஏற்றிஞல் அவன் மேகாந்தகாரத்தில் விழுந்தாஞலும் அவனுக்கு துர்கதி ஏற்படாது.*

*கார்த்திகை மாதத்து இரவுகளில் ஒருவன் தீபவரிசைகளே ஏற்றிவைத்து நிலவைப் பழிக்கும்படி*

*செய்கிருேனே, அவன் தமிஸ்ரம், அந்த தாமிஸ்ரம் என்ற நரகத்தைப் பார்க்கமாட்டான்.*

*கார்த்திகை மாதம் தீபதானம் செய்வதால் அவர்கள் பாபரூபமான அந்தகாரத்தைக் கோபமடையச் செய்கிருர்கள். அப்படி அவர்கள் அந்தகாரத்தைக் கோபிக்கச் செய்வதிஞல் கண்தலே தெரியாமல் கோபிக்கும் யமராஜனேப் பார்க்கமாட்டார்கள்.*

*ஒருவர் எனக்கு முன்ஞல் ஜ்வலிக்கும் தீயுடன் கூடின விளக்கை ஏற்றிஞர்களாஞல் அவர்கள் மூன்று உலகங்களேயும் ஜோதிர்மயமாகப் பார்க்கிருர்கள்.*

*ஒருவன் கார்த்திகை மாதம் குடம் நிறைந்த பஞ்சாம்ருதம் கொண்டுவந்து எனக்கு அபிஷேகம் செய்வாஞஞல் அந்தப் புண்ணியவான் க்ஷீர ஸமுத்திரகரையில் கல்பமுழுவதும் வஸிப்பான்.*

*கார்த்திகை மாதத்து ஒவ்வொரு ராத்ரியிலும் பக்திபரவசமாய் தீபவரிசைகளே ஏற்றி வைத்தாஞஞல் கர்ப்பத்தின் அந்தகாரத்தை அவன் பார்க்கமாட்டான்.*

*கார்த்திகை மாதம் நெய்யிஞல் நனேத்த திரியுடைய விளக்கை என் முன்ஞல் சுழற்றுவாஞஞல் மஹாம்ருத்யுவிஞல் பயம் ஏற்படும் ஸமயத்தில்கூட புத்திப்ரமத்தையடைய மாட்டான்.*

*எவர் கார்த்திகை மாதத்தில் பக்தியுடன் கூட பிந்து தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து என்னிடம் யாத்திரையாக வருகிருர்களோ, அவர்களுக்கு மோக்ஷம் அதிக தூரத்தில் இல்லேயென்பதையறிவாய்.*

*அஸுரேந்திரர்களே யழித்தவனே! தாமோதரா! கார்த்திகை மாதத்தில் விதிப்படிக்கு ஸ்ஞனம் செய்து வ்ரதத்துடன் இருக்கும் நான் கொடுக்கும் அர்க்கியத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்; ஏ! கிருஷ்ண பாபத்தை உலர்த்தும் கார்த்திகை மாதத்தில் பருவங்களில் ஸ்ஞனம் செய்து,*

*நான் கொடுக்கும் அர்க்கியத்தை ராதிகாவுடன் ஏற்றுக்கொள்ளுங்கள்,* **வ்ரததின கார்த்திகேயமாஸி; ஸ்ஞதஸ்ய விதிவன் மம; தாமோதர க்ருஹாணர்க்யம் தநுஜேந்த்ரநிஷூதந. ஸ்னே நைமித்திகே, க்ருஷ்ண கார்த்திகே பாபசோஷணே, க்ருஹான அர்க்யம் மயா தத்தம் ராதயா ஸஹிதோ பவான்.**

*இந்த இரண்டு மந்த்ரங்களையும் சொல்லி ஒரு புண்ணியாத்மா ஸ்வர்ணம், ரத்னம் புஷ்பம் ஜலம் இவைகள் நிரம்பிய சங்கதீர்த்தத்திலை எனக்கு அர்க்யம் கொடுத்தால், அவனுக்கு உத்தமமான பர்வத்தில் ஸங்கல்பம் செய்து கையில் ஜலத்தை ஏந்தி ஸ்வர்ணம் நிறைந்த பூமிதானம் செய்யும் பலன் பூர்த்தியாகக் கிடைக்கிறது.*

*என்னுடைய ப்ரபோதின ஏகாதசியன்று (இரவு முழிக்கும் ஏகாதசி) பிந்து தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து இரவு முழுவதும் கண் விழித்திருந்து அநேக தீபாலங்காரங்களைச் செய்து, அவரவர்கள் சக்திக்குத் தகுந்தபடி என்னை அலங்கரித்து, ஆட்டம், பாட்டு, பஜனை, விநோதம், புராணம் இவைகளை என்னைக் கேட்கச் செய்து மிகப்பெரிய மஹோத்ஸவமாகக் கொண்டாடி ஏகாதசி திதிமுடிந்து துவாதசி ஆரம்பத்தில் என்னுடைய ப்ரீதிக்காகப் பெரிய அளவில் அன்னதானம் செய்ய வேண்டும்.*

*அப்படிச் செய்வதால் எப்பேர்ப்பட்ட பாபியாக இருந்தாலும் கூட ஸ்த்ரீயின் கர்ப்பத்தில் நுழையமாட்டான்.*

*பிந்து தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து பிந்து மாதவர் என்னும் பெயரைக்கூறி எனக்குப் பூஜை செய்பவர் நிர்வாண பதவியை அடைகிறுர்கள்.*

*ஏ! முனியே ஸத்திய யுகத்தில் நான் ஆதிமாதவர் என்னும் பெயரால் பூஜிக்கப்பட்டேன்.*

த்ரேதாயுகத்தில் என்னை ஸர்வஸித்தியருளும் அனந்தமாதவன் என்னும் பெயரால் பூஜிக்க வேண்டும்; த்வாபரயுகத்தில் பரமார்த்தங்களையும் அளிக்கும் கர்த்தாவாக நானே ஸ்ரீ மாதவா என்னும் பெயரால் விளங்குவேன்.

கலியுகத்தில் கலிமலத்வம்ஸீ பிந்துமாதவர் என்று என்னையறிய வேண்டும். கலியுகத்தில் இருக்கும் ஜனங்களில் பாபிகள் என்னையறிய மாட்டார்கள்.

மேலும் என்னுடைய மாயையினுல் மோஹித்து பேதவாதத்தில் தத்பரனுய் என்னை பக்திசெய்து கொண்டு விஸ்வேஸ்வரனை தூஷித்தால் அவர்கள் எல்லோரும் எனக்கு சத்ரு ஆவார்கள்.

அவர்கள் கடைசியில் பிசாச லோகத்தில் ஒருவனுய் ஆகிறுர்கள். இப்படி பிராச யோனியை யடைந்தபிறகு காலபைரவரின் ஆக்ஞையினுல் மூவாயிரம் வருஷங்கள் வரை துக்கஸாகரத்தில் முழுகியிருந்து பிறகு விச்வேச்வரரின் அனுக்ரகத்தினுலேயே மோக்ஷத்தையடைகிறுர்கள்.

அதனுல் பரமாத்மா விஸ்வேஸ்வரர் பேரில் த்வேஷ புத்தி வைக்காதீர்கள். ஒருவன் விஸ்வநாதருக்கு த்வேஷியானுல் அவனுக்கு ஒரு பிராயஸ்சித்தமும் கிடையாது.

அதர்மர்கள் இந்த உலகத்தில் மனத்தினுலாவது விஸ்வேஸ்வரரைத் தூஷித்தால் அவன் இறந்த பிறகு யமலோகத்தில் அந்ததாமிஸ்ர நரகத்தில் வஸிக்கிறுர்கள்.

ஒருவர் சிவபிரானை நிந்தித்து சைவபக்தர்களையும் தூஷித்தார்களானுல் அவர்கள் எல்லோரும் என்னுடைய த்வேஷிகள் என்று கருதத்தகுந்தவர்கள். அவர்கள் கோர நரகத்தை ஏற்கிறுர்கள்.

விஸ்வேஸ்வரரை நிந்திக்கிறவர்கள் இருபத்தெட்டு கோடி நரகத்தில் முறையே ஒவ்வொரு கல்பந்தோறும் வஸிக்கிறுர்கள்.

*ஏ! முனியே! நான்கூட விச்வேஸ்வருடைய தயையினுலேயே முக்திதானம் அளிப்பதில் ஸமர்த்தனுக இருக்கிறேன். அதனுல் என்னுடைய பக்தர்கள் எப்பொழுதும் விசேஷரூபமாக விச்வேஸ்வரரை ஸேவிக்க வேண்டும்.*

*ஏ! ரிஷியே! இந்த வாராணஸியை மஹாதேவரின் ராஜதானி என்று எண்ணுங்கள். அந்தக் காரணத்தினுல் காசியின் மோக்ஷாபிலாஷிகள் விஸ்வேஸ்வரரை ஸேவிப்பது உசிதம்.*

*இந்தப் பஞ்சநத தீர்த்தத்தில் கார்த்திகை மாதத்தில் ஸ்வயம் பகவான் விஸ்வேஸ்வரரே கண ராஜர்களுடன் பரிஜனங்களுடனும் ஸ்கந்தருடனும் க்ருத்திகை மாதத்தில் ஸ்னனம் செய்கிருர்.*

*நான்கு வேதங்களுடனும், யக்ஞங்களுடனும் ஸாக்ஷாத் ப்ரம்மாவும், ப்ரம்மாணியும் மாத்ரு கணங்களுடனும் எல்லா நதிகளுடனும் கூட ஸப்த ஸமுத்ரங்களும் கார்த்திகை மாதம் இந்த தூதபாப தீர்த்தத்தில் ஸ்னனம் செய்கிருர்கள்.*

*மூன்று உலகங்களிலும் எத்தனை சைதன்ய தேஹதாரிகள் இருக்கிருர்களோ, அவர்கள் எல்லோரும் ஒருமித்து கார்த்திகை மாதத்தில் இந்த தூத பாப தீர்த்தத்தில் ஸ்னனத்திற்காக வருகிருர்கள்.*

*சுபமயமான கார்த்திகை மாதத்தில் எவர்கள் இந்த பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்னனம் பண்ணவில்லையோ, அவர்கள் ஜலத்தில் தோன்றும் நீர்க்குமிழிகளைப்போல் வீணுகப்போகிருர்கள்.*

*ஏ! மஹாமுனி அக்னிபிந்துவே! எல்லாவற்றிலும் பவித்ரமானது ஆனந்தவனமேயாகும். அதிலும் இந்த பஞ்சநதத்தீர்த்தம் மிகவும் பவித்ரமானது. இங்கே நான் எழுந்தருளியிருப்பது முற்றிலும் பவித்ரமானதே.*

*அறிவில் சிறந்த ஞானியே! இந்த அனுமானத்திஞல் பஞ்சநததீர்த்தம் எல்லாப் புண்ணிய தீர்த்தங்களிலும் வைத்து பரம புண்ணிய தீர்த்தமாகிறது என்றறிவீர்.*

*இதையறிவதால் முட்டாள்கள் கூடப் பெரிய பெரிய பாபத்திலிருந்து விடுபடுகிருர்கள்.*

*இப்பொழுது அக்னிபிந்து மஹாமுனி விஷ்ணுபகவான் திருவாய் மலர்ந்தருளிய இந்தக் கதையைக் கேட்டுவிட்டு பிந்து மாதவரூபமான பகவான் அச்சுதரை வணங்கி விட்டுக் கேட்டார் -*

*ஹே! பகவான் பிந்துமாதவா! இந்தக் காசியில் தங்களுடைய மூர்த்திகள் வேறு ஏங்கெங்கெல்லாம் ஸாந்நித்யமாகி இருக்கிருர்கள்?*

*ஹே! ஜஞர்த்தஞ! இதை நான் கேட்க விரும்புகிறேன். கூறுங்கள். மேலும் ஓ அச்சுதா இன்னும் எங்கெங்கெல்லாம் தாங்கள் திரு அவதாரம் செய்யப் போகிறீர்கள்! எவைகளையெல்லாம் பூஜித்தால் தங்கள் பக்த ஜனங்கள் க்ருதார்த்தர்கள் ஆவார்கள்? அவைகளையும் தயவுசெய்து வர்ணித்துக்கூறுங்கள்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான பிந்துமாதவ கதாவர்ணனம் என்னும் அறுபதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# *அத்யாயம் 61*

*அகஸ்திய முனிகூறினர்:- ஏ! ஷடானனு! பாபத்தை நசிப்பிக்கும் பிந்துமாதவர் உபாக்யானமும் பஞ்சநத தீர்த்தத்தின் மஹிமையையும் முழுவதும் கேட்டுக் கொண்டேன். இப்பொழுது தாங்கள் அக்னிபிந்து மஹர்ஷி கேட்டவுடன் தானவ சூதரான மாதவர் என்ன பதில் கூறினர் என்பதைக்கூறுங்கள்;-*

*ஸ்கந்தர் கூறினர்:- ஏ! அகஸ்தியா, மஹரிஷியே, பகவான் மாதவர் அக்னிபிந்து ரிஷியிடம் என்ன கூறினரோ இதையே நானும் உமக்குக் கூறுகிறேன் கேளும்.*

*பிந்துமாதவர் கூறினர்:- ஏ! மஹா பண்டிதர்; அக்னிபிந்துவை முதலாவதாக பாதோதக தீர்த்தத்தில் எழுந்தருளியிருக்கும் என்னை பக்த ஜனங்களுக்கு முக்தியளிக்கும் ஆதிகேசவ ஸ்வரூபராக அறியவேண்டும்.*

*அம்ருத ஸ்வரூபமான அவிமுக்த க்ஷேத்ரத்தில் எவர் என்னை ஆதிகேசவ ஸ்வரூபமாகப் பூஜிக்கிறார்களோ, அவர்கள் எல்லா துக்கங்களிலிருந்தும் விடுபட்டு கடைசியில் அம்ருதத்வத்தையடைகிறார்கள்.*

*ஆதிகேசவர் தரிசன மாத்திரத்திலேயே பாபத்தை நாசம் செய்யும் ஸங்கமேஸ்வர மஹாலிங்கத்தை பிரதிஷ்டை செய்து மனிதர்களுக்கு எப்பொழுதும் போக மோக்ஷத்தை தானம் செய்கிறார்.*

*பாதோதக தீர்த்தத்திற்குத் தெற்கில் ஸ்வேத தீபம் என்னும் மஹாதீர்த்தம் இருக்கிறது. அங்கு ஜனங்களுக்கு ஞானத்தைக் கொடுப்பதற்காக நான் ஞான கேசவர் என்னும் பெயருடன் எழுந்தருளியிருக்கிறேன்.*

*ஞானகேசவருக்கு சமீபத்தில் உள்ள ஸ்வேத த்விபதீர்த்தத்தில் ஸ்னனம் செய்வதினுலும் ஞானகேசவரைப் பூஜை செய்வதினுலும் மனிதன் ஒரு பொழுதும் ஞான பிரஷ்டன் ஆகமாட்டான்.*

*பிறகு கருட தீர்த்தத்தில் நான் தார்க்ஷ்ய கேசவர் என்னும் பெயருடன் இருக்கிறேன். உத்தம ஜனங்கள் பக்திபூர்வகமாக அங்கும் என்னைப் பூஜிக்கிறார்கள். அவர்களும் கருடனைப்போல என்னுடைய ப்ரீதிக்கு பாத்திரவான்களாகிறார்கள்.*

*அதே இடத்தில் நாரத தீர்த்தம் என்னும் தீர்த்தத்தில் நாரதகேசவர் என்னும் பெயருடன நான் இருக்கிறேன். அத்தீர்த்தத்தில் ஸ்னானம் பண்ணுபவர்களுக்கு நான் ப்ரம்ம வித்தை உபதேசித்துக் கொண்டிருக்கிறேன்.*

*அங்கு அவ்விடத்திலேயே ப்ரஹ்லாத தீர்த்தம் என்றும் ஒன்றுள்ளது. அங்கு நான் பிரஹ்லாத கேசவர் என்ற பெயருடன் இருக்கிறேன். பக்த ஜனங்களுக்கு பக்தி முதிர வேண்டுமானால் அங்கு என்னைப் பூஜிக்க வேண்டும்.*

*அதற்கும் சற்று முன்னால் உள்ள அம்பரீஷ தீர்த்தத்தில் ஆதித்யகேசவர் என்னும் பெயருடன் பாபாந்தகார ராசியை தரிசன மாத்திரத்திலேயே துலைத்துக் கொண்டிருக்கிறேன்.*

*தத்தாத்ரேயருக்கு தக்ஷிண பாகத்தில் ஆதிகதாதரர் என்ற பெயருடன் நான் இருக்கிறேன். அங்கு பக்தர்களுடைய ஸம்ஸார ரூபமான ரோகராசியை விலக்கிக் கொண்டிருக்கிறேன்.*

*அதே ஸ்தானத்தில் பார்க்கவ தீர்த்தம் என்னும் ஒரு கட்டம் இருக்கிறது. அங்கு நான் ப்ருகு கேசவர் என்னும் பெயருடன் விளங்கிக் கொண்டிருக்கிறேன். அங்கு நான் காசியில் வாசம் செய்யும் மனிதர்களின் மனோரதங்களைப் பூர்த்தி செய்து கொண்டிருக்கிறேன்.*

*சுபத்தை இச்சிக்கும் ஜனங்களுக்கு அபீஷ்ட பலனை அளிக்கும் வாமனன் என்னும் பெயருள்ள மஹா தீர்த்தத்தில் என்னை வாமனகேசவன் என்னும் உருவத்தில் பூஜிக்க வேண்டும்.*

*பிறகு நர நாராயண தீர்த்தத்தில் நர நாராயணர் என்னும் பெயருடன் இருக்கிறேன். பக்த கணங்கள் என்னை*

*அங்கு பூஜை செய்தார்களானுல் நரநாராயண உருவமாகவே ஆகிருர்கள்.*

*யக்ஞ வராஹ தீர்த்தத்தில் யக்ஞ வராஹன் என்ற பெயருடன் இருக்கிறேன். யக்ஞ பலன்களை விரும்புகிறவர்கள் அங்கு என்னைப் பூஜை செய்யலாம்.*

*காசியில் விக்னங்களை நிவர்த்திப்பதற்காக எழுந்தருளியிருக்கும் விதாரநரசிம்மர் என்னை அதே பெயருடைய தீர்த்தத்தில் உபத்திரவங்கள் சாந்தியடையும் பொருட்டு பூஜிப்பது நல்லது;*

*கோபீ கோவிந்த தீர்த்தத்தில் பக்தி பூர்வமாக கோபீ கோவிந்த என்ற என்னுடைய பெயரைச் சொல்லி அர்ச்சனை செய்பவர்களுக்கு என்னுடைய மாயையின் மயக்கம் கிடையாது.*

*ஏ முனியே, லக்ஷ்மீ நரஸிம்மர் என்னும் பெயருள்ள என்னை அதே பெயருள்ள பாவன தீர்த்தத்தில் பஜிக்கும் பக்த ஜனங்களுக்கு நான் எப்பொழுதுமே மோக்ஷலக்ஷ்மியை அளிக்கிறேன்.*

*பாபத்தை நீக்கும் சேஷதீர்த்தத்தில் நான் சேஷமாதவன் என்னும் பெயருடன் இருந்து பக்தர்களின் சிந்தித மனோரதங்களை விசேஷமில்லாமலும், நீதியில்லாமலும் அளிக்கிறேன்.*

*அங்கு சங்க மாதவ தீர்த்தம் என்று ஒன்றுள்ளது. அங்கு சங்க மாதவராகிய என்னை சங்கு ஜலத்திஞல் அபிஷேகம் பண்ணிஞல் அவர்கள் சங்க நிதிக்கு அதிகாரியாகிருர்கள்.*

*ஹயக்ரீவ தீர்த்தத்தில் ஹயக்ரீவ கேசவர் என்னும் பெயருடன் இருக்கிறேன். அங்கு என்னை ஸேவிப்பதிஞல் மிகவும் பயங்கரமான உபத்ரவங்களையெல்லம் விலக்குகிறேன்.*

*லோலார்க்கரின் வடக்கு பாகத்தில் நிர்வாண கேசவர் என்னும் பெயருடன் இருக்கிறேன். பக்தர்களின் நிர்வாண*

*பதத்தை ஸூசிப்பிக்கும் பொருட்டு சித்தத்தின் சஞ்சலங்களை நான் க்ரஹித்துக் கொள்கிறேன்.*

*த்ரைலோக்ய ஸுந்தரி வந்தி தேவியின் தக்ஷிணகாசியில் பெயர் பெற்ற புவனகேசவர் என்னும் பெயருடன் என்னைப் பூஜிப்பவர்கள் பிறகு கர்ப்பபாகிகளாக ஆகமாட்டார்கள்.*

*ஞானவாபியின் முன்னுலேயே நான் ஞான மாதவராக எழுந்தருளியிருக்கிறேன். அங்கு என்னை பக்தியுடன் பூஜிப்பவர்கள் பிறகு ஞானமார்க்கத்தை ஸ்திரமாகப் பெறுவார்கள்.*

*விசாலாக்ஷி தேவியின் சமீபத்திலேயே ச்வேதமாதவர் என்னும் பெயரில் இருக்கும் என்னைப் பூஜை பண்ணினுல் ச்வேத த்வீபேச்வரர் உருவமாக ஆக்கி விடுவேன்.*

*தசாஸ்வமேதத்திற்கு வடக்குப்பக்கத்தில் ப்ரயாகைத் தீர்த்தத்தில் விதிப்படி ஸ்னைம் செய்து ப்ரயாகை மாதவரை தரிசித்தால் அவன் பாபங்களிலிருந்து விடுபடுவான்.*

*மாகமாதத்தில் ப்ரயாகை ஸ்னைத்தினுல் என்ன பலன் என்று கேள்விப் படுகிருேமோ, ப்ரயாகை கட்டத்தில் ஸ்னைம் செய்தால் அதே பலன் கிடைக்கிறது.*

*கங்கா யமுனை ஸங்கமத்தில் ஸ்னைம் செய்தவர்களுக்குக் கிடைக்கும் புண்ணியம் காசியில் என் ஸாந்நித்ய தீர்த்தத்தில் ஸ்னைம் செய்பவர்களுக்குப் பத்து மடங்கு அதிகமாகக் கிடைக்கிறது.*

*சூரிய க்ருஹணத்தில் குருக்ஷேத்ரத்தில் அநேக தானத்தினுல் கிடைக்கும் பலன் காசியில் இதே ஸ்தானத்தில் பத்து மடங்கு அதிகமாகக் கிடைக்கிறது.*

*உத்தரவாஹினியான கங்கையும் பூர்வவாஹினியான யமுனையும் சேரும் ஸங்கமத்தில் அந்த இடத்தில் ஸ்னைம் செய்தவுடனேயே ப்ரம்மஹத்தியான பாபங்களும் விலகுகின்றன. இதை ரகுவம்சத்தில் ஸீதையிடம் ராமர்*

கூறுகிறார். (ஸமுத்ரபத்நயோர் ஜலஸன்னிபாதே பூதாத்மநாம் யத்ர கிலாபிஷேகாத்! தத்வாவபோதேன பிளுகிபூய: தனுத்யஜாம் நாஸ்தி சரீரபந்த:॥)

அங்கு கேச முண்டனம் செய்துகொண்டு பிண்டதானம், மற்ற பிரகாரமான அநேக தானங்கள் இவைகளை மிகவும் பலனை உத்தேசிப்பவர்கள் செய்வது யோக்யமாகும்.

ப்ரஜாபதி க்ஷேத்ரமான ப்ரயாகை ராஜ் என்னும் ப்ரயாகையில் எவைகளை அதிகபலன் என்று கூறுகிறோமோ அவைகளெல்லாம் அவிமுக்த மஹாக்ஷேத்ரத்தில் எண்ணிக்கையற்றவைகளாகின்றன.

ப்ரயாகையில் எல்லா விருப்பங்களையும் கொடுக்கும் தாதாவான ப்ரயாகேஸ்வரருடைய ஸாந்நித்யத்தில் இருக்கும் தீர்த்தம் காமததீர்த்தம் என்று சொல்லப்படுகிறது.

ஸூர்யன் மகரராசிக்குப் பிரவேசித்தபின் மாகமாதத்தில் எவர்கள் அருணோதய ஸமயத்தில் ஸ்னானம் செய்யவில்லையோ, அவர்களுக்கு மோக்ஷம் எவ்விதம் கிடைக்கும்?

எவர்கள் காசியில் ப்ரயாகை தீர்த்தத்தில் மாகமாதத்தில் ஒழுங்கோடு கூட ஸ்னானம் செய்கிறார்களோ அவர்களுக்கு பத்து அஸ்வமேத யக்ஞம் பண்ணின பலன் கிடைக்கிறது.

மாகமாதத்தில் ப்ரயாகைத் தீர்த்தமான தசாஸ்வமேத கட்டத்தில் பக்தியுடன் கூட ப்ரதிதினம் ஸ்னானம் செய்து ப்ரயாகை மாதவர் காமப்ரத ப்ரயாகேஸ்வரர் இவர்களைப் பூஜிப்பவர்கள்

இந்த உலகத்தில் தனம், தான்யம் புத்ரஸம்பத்துகளும் பெற்று பரமானந்தத்துடன் மனோரம்யமான போகங்களையும் அனுபவித்துக் கடைசியில் மோக்ஷத்தையும் அடைகிறார்கள்.

*மாகமாகத்தில் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு பூமி ஆகாயம் இவைகளிலுள்ள ஸமஸ்த தீர்த்தங்களும் தீர்த்தராஜரான ப்ரயாகைக்குச் செல்லுகின்றன. அதனுல் ஹே முனியே! வாராணஸியில் எத்தனே தீர்த்தங்கள் இருக்கின்றனவோ, அவைகள் ஒரு இடமும் போவதில்லே. இங்கேயே பரம உத்தமமான மூன்று தீர்த்தங்களுக்கே போகின்றன.*

*முதலாவது மஹா பாதகங்களேயும் நாசம் செய்யும் பரம மங்களத்தைக் கொடுப்பதுமான பஞ்சநத தீர்த்தத்தில் ப்ரதி தினமும் ப்ராத:காலத்தில் என்னுடைய சமீபத்தில் வருகின்றன.*

*பிறகு பாபங்களே ஹரணம் செய்யும் மாகமாதத்தில் ப்ரயாகேஸ்வரருக்கு ஸமீபத்தில் ப்ரயாகை தீர்த்தத்தில் எனது ஸமீபத்திலேயே ஸ்ஞனம் செய்கின்றன.*

*பிறகு எல்லா தீர்த்தங்களும் ப்ரதிதினமும் மத்யான வேளேயில் முக்தியளிக்கும் மணிகர்ணிகைக்கு ஸ்ஞனம் செய்யப்போகின்றன.*

*ஸ்ரேஷ்டமுனியே! அந்தந்த உசித ஸமயங்களில் காசியில் இம்மூன்று தீர்த்தங்களும் எப்படி முக்யத்வமாக ஆகின்றன என்ற ரஹஸ்யத்தை விசேஷ ரூபமாக உமக்கெடுத்துக் கூறினேன்.*

*இப்பொழுது மற்ெருரு மிகவும் ரகசியமான விஷயத்தைக் கூறுகிறேன். இவைகளேக் கண்ட இடங்களிலெல்லாம் கூறலாகாது. பக்திமான்களுக்கு அவசியம் கூறலாம். பக்தியில்லாதவர்களுக்கு ஒருபொழுதும் கூறக்கூடாது.*

*காசியில் எல்லாத் தீர்த்தங்களும் ஒன்றை ஒன்று முந்திக்கொண்டு தங்கள் தங்கள் தேஜஸ்ஸிஞல் பலம் பொருந்தியவைகளாகப் பெரிய பெரிய பாபங்களேயும் நஷ்டமடையச் செய்கின்றன.*

ஆனுல் வாராணஸியில் எல்லாத் தீர்த்தங்களிலும் மேற்பட்டது மணிகர்ணிகையே யென்று விரலே மடக்கி உம்மிடம் உறுதி கூறுவேன்.

கேவலம் மணிகர்ணிகையிலிருந்தே தங்கள் தங்கள் பலத்தைப் பெற்று மற்ற தீர்த்தங்களெல்லாம் தங்கள் தங்கள் ஸ்தானங்களில் பாபங்களேத் தொலேத்து விடுவோம் என்று கர்ஜித்துக்கொண்டிருக்கின்றன.

காசியில் உள்ள மற்ற தீர்த்தங்களெல்லாம் பாபிகளுடைய மகத்தான பாபங்களேயெல்லாம் தொலேத்து பாபம் தீர மத்தியான சமயத்திலும் எல்லாப் பருவங்களிலும், பருவங்கள் அல்லாத மற்ற நாட்களிலும்கூட நித்யமும் மணிகர்ணிகையில் ஆவிர்பவித்து தங்களே நிர்மலமாக்கிக் கொள்கின்றன.

ப்ரதி தினமும் மத்யான வேளேயும் பகவான் விஸ்வநாதரே பவானி அன்னபூர்ணுவுடன் மணிகர்ணிகைக்கு வந்து ஸ்னுனம் செய்கிருரென்ருல் வேறு சொல்வதற்கு என்ன இருக்கிறது?

ஏ! முனியே! நானும் தினமும் உச்சி வேளேயில் லக்ஷ்மியுடன் கூட வைகுண்டத்திலிருந்து வந்து மிகவும் ஆனந்தமாக மணிகர்ணிகையில் ஸ்னுனம் செய்கிறேன்.

தினமும் ஒருமுறையாவது ஒருவன் எனது பெயரைக்கூறினுல் அவனுடைய பாபத்தை நான் ஹரணம் செய்கிறேன் என்பதினுல் எனக்கு ஹரி என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. இந்த ப்ரபாவம் எனக்கு மணிகர்ணிகையில் வந்ததாகும்.

பிதாமஹரான ப்ரம்மாவும் மாத்யான்னிகக்ரியைகளேச் செய்வதற்கு ஹம்ஸத்தின் மீது ஆரோஹணித்து பிரதிதினமும் ஸத்திய லோகத்திலிருந்து மணிகர்ணிகைக்கு வருகிருர்.

இந்திராதி லோகபாலர்களும் மரீசி முதலிய மஹர்ஷிகளும் மாத்யானிகக் கர்மங்களே

அனுஷ்டிப்பதற்காக மணிகர்ணிகைக்கு வருகிறார்கள்.

நாகலோகமான பாதாளத்திலிருந்தும் சேஷன் வாஸுகி முதலிய நாகராஜாக்கள் மாத்யான்னிக ஸமயம் ஸ்நானம் செய்வதற்காக இதே மணிகர்ணிகைக்கு வருகிறார்கள்.

அதிகம் கூறுவானேன்? சராசரத்திலுள்ள ஸமஸ்த சேதனப்பிராணிகளும் உச்சிகாலத்தில் மணிகர்ணிகையில் ஸ்நானம் செய்வதற்கு வருகிறார்கள்.

ஏ! விப்ரா! நம்மாலேயே இந்த மணிகர்ணிகையின் குணங்களை வர்ணிக்க முடியவில்லை. அதன் மேன்மையான குணங்களை வேறு யாரால் வர்ணிக்க முடியும்?

ஆரண்யங்களில் உக்ரமான தபஸ்ஸைச் செய்து புண்ணியங்களைச் சேர்த்து வைத்திருக்கும் முனீச்வரர்கள் கூடக் கடைசியில் முக்தி பூமியான மணிகர்ணிகையை அடைகிறார்கள்.

எவர்கள் அந்திம அவஸ்தையிலாவது மணிகர்ணிகையைப் பெறுகிறார்களோ அவர்களே ஞானிகள். அவர்களே ச்ரேஷ்டர்கள். விதிமுறை வழுவாது எவர்கள் எல்லா வ்ரதங்களையும் பூர்ணமாக முடித்து இருக்கிறார்களோ குறிப்பிடத்தக்க அவர்களே மணிகர்ணிகையை யடைந்து அதன் மெதுவான பூமியில் தங்கள் அந்திமப் படுக்கையை அமைத்துக்கொள்ள முடியும்.

இந்த ம்ருத்யு லோகத்தில் எல்லா யக்ஞங்களையும் முடித்தவர்களும் தங்கள் புண்ணியத்தினால் சேர்த்து வைத்த எல்லா ஸம்பத்துகளையும் தியாகம் செய்து விட்டு மணி கர்ணிகையைப் பார்க்கிறார்களோ, அவர்களே தன்யவான்கள்.

உண்மையைக் கூறுமிடத்து நானாவிதமான தங்களாசைகளைப் பூர்த்தி செய்துகொண்டு, எல்லா தர்மங்களையும் அனுஷ்டானம் செய்து முடித்தவர்களே

தங்களுடைய வயோதிக பர்வத்தில் மணிகர்ணிகையை அடைய முடியும்.

அறிவாளிகள் செய்யும் உசிதமான கார்யம் என்னவென்றால் மிகவும் முயற்சியுடன் ரத்னம், ஸ்வர்ணம், வஸ்திரம், யானை, குதிரை முதலிய வஸ்துகளை மணிகர்ணிகையில் தானம் செய்வதே.

ஏ முனியே, மணிகர்ணிகையில் தர்மபூர்வமாக ஸம்பாதித்த சிறிதளவு தனத்தையாவது தானம் செய்தால் அது நித்யம் அக்ஷயமாக விளங்கும்.

ஒரு உத்தமன் இந்த இடத்தில் விதிமுறைப்படி வணங்கினால் அவன் ஆறு அங்கங்களோடு கூடின உயர்ந்த ஸாதனத்தையடைகிறான்.

ஒருவன் மணிகர்ணிகையில் தடத்தில் ஒரு காயத்ரியை ஜபித்தாலும் பத்தாயிரம் காயித்ரியை ஜபித்த புண்ணியம் ஏற்படும்.

ஒரு அறிஞன் மணிகர்ணிகையில் ஒரே ஒரு ஆஹுதி கொடுத்து ஹோமம் பண்ணினாலும் அவன் ஆயுள் முழுவதும் அக்னிஹோத்ரம் பண்ணின பலனையடைகிறான்.

இந்தப் ப்ரகாரம் மஹாதபஸ்வியாக பகவான் மாதவரின் வாக்கியத்தைக் கேட்டு மிகவும் பக்தியுடன் வணங்கி எழுந்து நின்று கேட்டார்.

'ஹே! மாதவா, இந்த புண்ணிய பூமியான மணிகர்ணிகையின் விஸ்தீர்ணம் சுற்றிலும் எவ்வளவு? என்று கேட்டார். தங்களைபோலத் தத்துவம் அறிந்தவர் வேறு ஒருவரும் இல்லை.

பகவான் விஷ்ணு பதில் கூறுவார்; தெற்கில் கங்காகேசவனும், வடக்கில் ஹரிச்சந்திர மண்டபமும், கிழக்கில் ஆதிகங்காவும், மேற்கில் ஸ்வர்க்கத்வாரமும் மணிகர்ணிகையின் எல்லைகள்.

இது ஒரு மேலெழுந்தவாரியாகப் போட்ட கணக்கு. இப்பொழுது அதை உனக்கு ஸூக்ஷ்மமாகக் கூறுகிறேன். ஹரிச்சந்திரதீர்த்தத்திற்கு அப்பால் ஹரிச்சந்திர விநாயகர் இருக்கிறார்.

மணிகர்ணிகா குண்டத்தின் வடக்கு பக்கத்தில் எல்லை விநாயகர் இருக்கிறார், அங்கு உத்தம புருஷன் பக்தியுடன் ஸீமா விநாயகருக்கு பக்தி பூர்வமாக மோதகம் முதலியவைகள் ஸமர்ப்பித்துப் பூஜை செய்து ஹரிச்சந்திர தீர்த்தத்தில் தன்னுடைய பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து மணிகர்ணிகையையடைய வேண்டும்.

அப்படிச் செய்பவர்களின் பூர்வ புருஷர்கள் நூறு வருஷங்கள் வரை திருப்தியடைந்து வாஞ்சித பலனைப் பெறுகிறார்கள். ஒரு மனிதன் ச்ரத்தையுடன் கூட ஹரிச்சந்திர மஹாதீர்த்தத்தில் ஸ்னானம் செய்து, ஹரிச்சந்திரேஸ்வரரை வணங்கி எழுந்தானானால் அவன் ஸத்தியத்திலிருந்து ஒரு பொழுதும் தவறமாட்டான். அங்கு பர்வதேஸ்வரருக்கு ஸமீபத்திலேயே பர்வத தீர்த்தம் இருக்கிறது.

அது ஸுமேரு பர்வதத்தினுடைய ஸ்தானமாகும். மஹாபாபங்களை நசிப்பிக்கும் அங்கு ஸ்னானம், சிவபூஜனம், யதாசக்தி தானமும் செய்யவேண்டும்.

இப்படிச் செய்தால் ஸுமேரு பர்வதத்தின் சிகரத்துக்குச்சென்று திவ்யபோகங்களை அனுபவித்ததின் பலன்கள் ஏற்படும். அதற்கப்பால் பர்வதேச்வரருடைய தெற்கு பக்கத்தில் கம்வலாஸ்வ தீர்த்தம் இருக்கிறது.

அந்தத் தீர்த்தத்தின் மேற்கு பாகத்தில் கம்வலாஸ்வதேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அந்தத் தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து மங்களத்தைக் கொடுக்கும் அந்த லிங்கத்தைப் பூஜை செய்தால், அவர்கள் வம்சத்தில் பிறப்பவர்களெல்லோரும் கானவித்தையில் நிபுணர்களாகவும், ஸ்ரீமான்களாகவும் இருப்பார்கள்.

*இங்கேயே யோனி சக்கர ப்ரயோகத்திற்கு நிவாரணம் செய்யும் சக்கரபுஷ்கரிணீ தீர்த்தம் இருக்கிறது.*

*அதில் ஸ்ஞனம் செய்பவர்கள் ஆழமான ஸம்ஸார சக்கரத்தில் உழல வேண்டாம். இங்கு சக்கர புஷ்கரிணீ தீர்த்தமே எனது ப்ரதான வாஸஸ்தலமாகும்.*

*நான் இதே தீர்த்தத்தில் ப்ரம்மாயுஸுக்குப் பாதிகாலம் வரையில் கோரமான தபஸ்ஸில் இருக்கிறேன். இங்குதான் பகவான் விஸ்வேஸ்வரரைப் ப்ரத்யக்ஷமாகத் தரிசனம் செய்தேன்.*

*பிறகு அங்கேயே எனக்கு அழியாத ஐஸ்வர்யத்தைக் கொடுத்தார். அதுவே சக்கர புஷ்கரிணீ மணிகர்ணிகா என்னும் பெயரால் ப்ரசித்தமாகிறது.*

*அங்கேயே நான் ஜலரூபத்தை விட்டு ப்ரத்யக்ஷ ஸ்த்ரீ ரூபமெடுத்துக் கொண்ட மணிகர்ணிகா தேவியை தரிசித்தேன்.*

*நான் இப்பொழுது பக்தர்களுக்குப் பரம மங்களத்தைக் கொடுக்கக்கூடிய அவளுடைய உருவத்தை வர்ணிக்கிறேன். ஒருவன் ஏழு மாத பரியந்தம் இடைவிடாமல் அவளுடைய உருவத்தைப் பார்க்க வேண்டுமென்று த்யானம் செய்தாலுல், ப்ரத்யக்ஷ ரூபமாக மணிகர்ணிகா தேவியைத் தரிசனம் செய்ய முடியும். அந்த தேவீ நான்கு கைகளும், விசாலமான கண்களுடனும் நெற்றிக்கண்களுடனும் விளங்குகிறுள்.*

*தினமுமே இரண்டு கைகளேயும் கூப்பிக்கொண்டு மேற்குமுகமாக நிற்கிறுள். வலது கையில் நீலோத்பல மாலேயை வைத்துக்கொண்டிருக்கிறுள்.*

*வரம் கொடுப்பதற்காகத் தூக்கியிருக்கும் கையில் மாதுலங்கம் என்று கூறப்படும் (கிடாரப் பழத்தை) வைத்துக்கொண்டிருக்கிறுள். பன்னிரண்டு வயது பெண்ணுகவே நிற்கிறுள். அவளுடைய நிறம் ஸ்படிக*

வர்ணமாக இருக்கிறது. கூந்தல் ஆழ்ந்த நீல வர்ணமாக இருக்கிறது. மிகவும் ம்ருதுவாகவும் இருக்கிறது.

கூந்தலின் மத்தியில் தாழம்பூவைச் சொருகிக்கொண்டிருக்கிருள். பவழத்தையும் மாணிக்கத்தையும் தோற்கடிக்கும் ரமணீயமான உதடுகளுடனும் ஸர்வாங்கமும் முத்தாலங்கார பூஷிதையாக சந்திரகாந்தியைப் போல வெள்ளை வஸ்திரம் தரித்துக் கொண்டு, மார்பில் சோபிதமான தாமரை புஷ்பமாலையைத் தரித்துக் கொண்டு நிற்கும் இந்தத் தேவியை மோக்ஷத்தை விரும்புபவர்கள் எப்பொழுதும் தியானம் செய்ய வேண்டும்.

ஏனென்ருல் மோக்ஷலக்ஷ்மியின் கோவில் மணிகர்ணிகையாகும். இப்பொழுது நான் பக்த கல்பத்ரும என்னும் பெயருடைய அவளுடைய மந்திரத்தைக் கூறுகிறேன். அவளுடைய மந்திரத்தை ஜபிப்பவர்களுக்கு அஷ்டஸித்திகளும் கைகூடும்.

முதலாவது ப்ரணவமும், பிறகு ஸரஸ்வதி பீஜமும், புவனேஸ்வரி பீஜமும், லக்ஷ்மீ பீஜமும், காமபீஜமும், பிந்துவுடன் கூட மகரமும் மறுபடியும் ப்ரணவமும் சேர்த்து ஸங்குசிதமாக **மணிகர்ணிகாயை நம:** என்று உச்சாரணம் செய்ய வேண்டும்.

இந்தப் பதினைந்து அக்ஷரங்களைக் கொண்ட மந்திரத்தை கல்பவிருக்ஷத்தைப்போல் மனதிலெண்ணி ஜபித்தால் வித்யா புத்தியுள்ளவர்களுக்கு ஸமஸ்த ஸுகமும் ஸந்ததியைக் கொடுக்கும் தாதாவாகவும் ஆகும். பிறகு கடைசியில் பரம பதத்தையும் அளிக்கும்.

மற்ெருரு மனு ஸங்க்யை என்ெருரு மந்திரம் இருக்கிறது. அது பதினுன்கு அக்ஷரங்களுடன் கூடியது. இது முதலாவது ப்ரணவமும் பிந்துவுடன் கூடிய மகாரமும் பிறகு **மணிகர்ணிகே ப்ரணவாத்மிகே நம:** என்றும் ஜபிக்க வேண்டும்.

*மோக்ஷத்தை விரும்பும் மனிதர்கள் சிரத்தையுடன் எப்பொழுதும் இந்த மந்திரத்தை ஜபிக்க வேண்டும். பிறகு மிகவும் தூய்மையுடன் பசுவின் நெய், சர்க்கரை, மது இம்மூன்றிலும் தாமரைப் புஷ்பத்தைத் தோய்த்து மந்திரத்தில் ஒரு பங்கு ஹோமம் செய்ய வேண்டும்.*

*ஒருவன் இம்மந்திரத்தை மூன்றுலக்ஷம்தரம் ஜபம் பண்ணினுல் அவனுக்கு வேறு தேசங்களில் மரணம் ஏற்பட்டாலும் நிக்சயமாக முக்தி கிடைக்கும்.*

*நவரத்தினங்களேயும் பதித்த ஸ்வர்ணப்ரதிமையை உத்தம விதிப்பிரகாரம் செய்து முயற்சியுடன் பூஜிக்க வேண்டும்.*

*மோக்ஷத்தை விரும்புவர்கள் இந்த மூர்த்தியைத் தங்கள் தங்கள் வீடுகளில் பூஜை செய்து முடித்தவுடன் மூர்த்தியை மணிகர்ணிகையில் எறிந்துவிட வேண்டும்.*

*ஸம்ஸாரத்திற்குப் பயந்தவர்களும், ச்ரத்தையுள்ளவர்களும் வேறு தேசத்தில் உள்ள ச்ரத்தாவான்களும் இந்தப் பூஜையை அவசியம் செய்ய வேண்டும்.*

*மணிகர்ணிகையில் ஸ்னனம் செய்து மணிகர்ணிகேஸ்வரரைத் தரிசனம் செய்தவர்கள் மாதாவின் கர்ப்பயாதனேயை அனுபவிக்கமாட்டார்கள்.*

*பூர்வகாலத்தில் நானே மணிகர்ணிகையின் உள் ப்ராகாரத்தில் கிழக்குவாயிலில் மணிகர்ணிகேச்வரரின் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தேன். அதனுல் மோக்ஷத்தை விரும்புபவர்கள் அதற்குப் பூஜை செய்யவேண்டும்.*

*மணிகர்ணிகையிலிருந்து மேற்குப் பக்கத்தில் பாசுபத தீர்த்தமிருக்கிறது. அங்கு ஜல தர்ப்பணங்கள் முதலியவைகளேச் செய்து பசுபதி நாதரைத் தரிசனம் செய்ய வேண்டியது அவசியம்.*

*அங்கு பகவான் சங்கரர் எனக்கும் ப்ரம்மாதி தேவதைகளுக்கும் பசுபாசத்தை நீக்கும் பாசுபத யோகத்தை உபதேசம் செய்தார்.*

*அதனால் பசுவிற்கு ஸமமான ஜீவர்கள் இவர்களுக்கு மாயையாகிற பாசத்தை அறுப்பதற்கென்றே பகவான் பசுபதீஸ்வரர் லிங்க ரூபமெடுத்துக் கொண்டு காசியில் எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார்.*

*சித்திரை மாதத்து சுக்லபக்ஷத்து சதுர்தசியன்று பவித்ரசித்தத்துடன் அங்கு யாத்திரை போய் இரவில் கண்விழித்து, உபவாஸமிருந்து பசுபதீஸ்வரரைப் பூஜித்து, அமாவாஸையன்று பாரணை செய்தால் பசுவைப்போல பாசமாகிற கயிற்றில் அகப்பட்டுக் கொள்ள மாட்டார்கள்.*

*இந்தப் பசுபதி தீர்த்தத்திற்குமப்பால் ருத்ரவாஸ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ருத்ரவாஸேஸ்வரர் என்னும் மஹாதேவரைப் பூஜிப்பது உசிதம்.*

*மணிகர்ணிகேசுவரருக்கு தக்ஷிண பாகத்தில் இருக்கும் ருத்திர வாஸேஸ்வரரைப் பூஜை பண்ணினால் அவர்கள் ருத்திரவாஸத்தில் வஸிக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.*

*அதற்குத் தெற்குபக்கத்தில் உலகத்திலுள்ள ஸமஸ்த தீர்த்தங்களிலும் ஆவிர்பவித்த விஸ்வநாத தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஒருவன் ஸ்நானம் செய்து விஸ்வநாதரைத் தரிசனம் செய்ய வேண்டும்.*

*பிறகு மிகவும் பக்தியுடன்கூட அங்கேயே விஸ்வ கௌரி என்னும் அன்னபூர்ணாவைத் தரிசிக்க வேண்டும்; இவ்விதம் பூஜை செய்தால் உலகத்தையே பூஜித்ததாகவும், உலக ரூபமாகவும் ஒருவனாகிறான்.*

*அதற்குப் பிறகு முக்தி தீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்நானம் செய்து, அங்கு இருக்கும் மோக்ஷேச்வரரை அர்ச்சிக்க வேண்டும். அவன் மோக்ஷத்தையடைவான் என்பதில் ஸந்தேஹமில்லை.*

*அவிமுக்தேஸ்வரருக்குப் பின்புறம் இருக்கும் மோக்ஷேச்வரரைத் தரிசனம் பண்ணிஞல் மனிதன் திரும்பவும் ம்ருத்யுலோகத்திற்கு வந்துகொண்டும் போய்க்கொண்டுமிருக்கமாட்டான்.*

*முக்தி தீர்த்தத்திற்குச் சற்று அருகில் அவிமுக்தேஸ்வரரைத் தரிசனம் செய்தால் அவர்கள் முக்தியடைகிருர்கள்.*

*அதற்குப் பிறகு தாரகதீர்த்தமிருக்கிறது. அங்கு பகவான் விஸ்வேச்வரர் தானே வந்து மரணமடைந்து ஜந்துக்களின் காதில் அம்ருதத்திற்கொப்பான தாரக மந்திரத்தை உபதேசிக்கிருர்,*

*அந்தத் தாரக தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து தாரகேஸ்வரரை ஸேவித்தால்தான் ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டுவதோடல்லாமல் தன்னுடைய பித்ருக்களேயும் கரையேற்றுகிருன்.*

*ஸ்கந்த தீர்த்தமோ, அதற்கு ஸமீபத்திலேயே இருக்கிறது. உத்தமன் ஒருவன் அதில் ஸ்ஞனம் செய்தபின் ஆறுமுகனேத் தரிசித்தால் தோல், மாம்ஸம், ரத்தம், நரம்பு, எலும்பு, கொழுப்பு என்னும் ஆறுகோசங்களுள்ள சரீரத்தைத் திரும்பவும் எடுக்கமாட்டான். அதுவுமில்லாமல் தாரகேச்வரருக்கு முன்ஞல் ஸ்வாமி கார்த்திகேயரைத் தரிசனம் செய்வதிஞல் குமாரஸ்வாமியைப் போன்ற சரீரத்தையடைந்து ஸ்கந்தலோகத்தில் வஸிக்கிருன்.*

*அதற்குப் பிறகு பவித்ரமான டுண்டிதீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்து கர்மங்களே முடித்துக் கொண்டு டுண்டிவிக்னேஸ்வரரை ஸ்த்தோத்தரித்தால் அவனுக்கு வாழ்வில் விக்னமே வராது.*

*இந்த டுண்டி தீர்த்தத்திற்குத் தெற்குப் பக்கத்தில் உவமைசொல்ல முடியாத பவானி தீர்த்தம் இருக்கிறது. அங்கு விதிப்படி ஸ்ஞனம் செய்து பவானியாகிய*

அன்னபூர்ணுமாதாவைத் தரிசித்துப் பூஜிக்கவேண்டும்.

அதாவது வஸ்த்ரம், ரத்னம், பூஷணம், நாஞுவிதமான நைவேத்யங்கள், புஷ்பம், தூபம், தீபம் இவைகளிஞல் பவானியையும், பவதேவரையும் பூஜிக்கவேண்டும்.

காசியில் சிரத்தையுடன் பவானீ - சங்கரர் இருவரையும் பூஜித்தால் - அவன் சராசரங்களுடன் மூன்றுலோகங்களையும் பூஜித்தமாதிரி. பண்டிதர்களுக்கு உசிதமான காரியம் ஏதென்ருல் சித்திரைமாதம் நூற்றெட்டு பிரதக்ஷிணம் செய்ய வேண்டும்.

ஏனென்ருல் அங்கு அம்பிகையை ப்ரதக்ஷிணம் செய்தால் பர்வதங்கள், ஸமுத்ரங்கள், ஆசிரமங்கள், நவத்வீபங்களுடன் பூமிமுழுவதும் பிரதக்ஷிணம் செய்த பலன் கிடைக்கிறது.

ஸந்தோஷத்தை விரும்பும் ஜனங்கள் ஒவ்வொரு தினமும் எட்டு ப்ரதக்ஷிணங்களாவது செய்யவேண்டும். ச்ரத்தையுடன் பவானி சங்கரரை நமஸ்கரிக்க வேண்டும்.

பக்தர்களுக்கு மஞேரத பலனைக் கொடுப்பவளான பவானி நம்மைக் காசியில் ஸ்திரவாஸம் செய்வதற்கு அனுமதிக்கிருள். அதஞல் காசியில் தீர்த்தவாஸம் செய்பவர்கள் பவானியை அவசியம் பூஜை செய்ய வேண்டும்.

பவானியே எப்பொழுதும் காசியின் லோகக்ஷேமங்களை வஹிக்கிருள். அதஞல் அங்கு வஸிப்பவர்கள் பவானியை எப்பொழுதும் ஸேவிக்க வேண்டும்.

மோக்ஷ பிக்ஷையை விரும்பும் பிக்ஷுக்கள் காசியில் பிக்ஷையளிக்கும் குடும்பினியான பவானியிடமே மோக்ஷபிக்ஷையை யாசிக்க வேண்டும்.

காசியில் பகவான் விஸ்வநாதர் க்ருஹஸ்தராயிருக்கிருர். அவருடைய குடும்பினி

*பவானிதேவி. அதனுல் அவளே காசிவாஸிகள் யாவருக்கும் மோக்ஷபிக்ஷையை அளிக்கிருள்.*

*காசியில் வஸிப்பவர்களுக்கு ஏதாவது கஷ்டஸாத்யமாகத் தோன்றினுல் பவானியைப் பூஜை செய்தவுடனேயே அது ஸுலபமாகிவிடும்.*

*சித்திரை மாதத்து மஹாஷ்டமியன்று இரவுமுழுவதும் கண்விழித்திருந்து அதிகாலேயில் பவானியைப் பூஜை செய்ய முடியுமானுல் அவனுடைய எல்லா விருப்பங்களும் பூர்ணமாக நிறைவேறும்.*

*விஸ்வேஸ்வரருக்கு மேற்கு திக்கில் விளங்கும் பவானியைத் தரிசனம் செய்தால் நமது மனோரதங்கள் யாவும் ஸந்தேஹமில்லாமல் ஸித்தியாகும்.*

*சுக்ரேஸஸ்வரருக்கு மேற்குப் பக்கத்தில் எழுந்தருளியிருக்கும் பவானியைத் தரிசனம் செய்யவேண்டும். அப்பொழுது அவரவர்களது எல்லா மநோரதங்களும் பூர்த்தியாகும். காசியில் எப்பொழுதும் வாசமும், உத்தரவாஹினியான கங்கையில் ஸ்னனமும், பவானிசங்கரரின் ஸேவையும் செய்தால் பக்தியும் முக்தியும் கிடைக்கும்.*

*ஹே மாதா பவானீ! நான் தங்களுடைய சரணதூளியாக ஆவேன். நான் தங்களுடைய பரமஸேவகியாக ஆவேன்; ஹே மாதா! நான் இந்த ஸம்ஸாரத்தினுடைய க்லேசம் அனுபவிக்காமல் ஆகவேண்டும்.*

*நான் மறுபடியும் பூமியில் பிறக்காமல் செய்யவேண்டும். அம்மா, காசிவாசிகளுக்கு ஸுகம் வேண்டுமானுல் உட்காரும்போதும், நடக்கும்போதும் பவானியை த்யானம் செய்து கொண்டும் பவானீ என்று சொல்லிக்கொண்டும் இருக்க வேண்டும்.*

*பவானி தீர்த்தத்திற்கருகிலேயே, ஈசான தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து, ஈசனுரை தரிசித்தால் மறுபடியும் ஜன்மம்*

*எடுக்கவே வேண்டாம்.*

*அங்கேயே மனிதர்களுக்கு ஞானத்தைக் கொடுக்கும் ஞான தீர்த்தம் இருக்கிறது.*

*அதில் ஸ்நானம் செய்து ஞானவாபிக்கு ஸமீபத்திலேயே ஞானேஸ்வர மஹாதேவரைத் தரிசனம் செய்து பூஜையும் செய்தால் ம்ருத்யு அணுகும் சமயத்திலும் ஞானம் மனதிலிருந்து வழுவாது.*

*அதே இடத்தில் பரமஸம்பத்திற்கும் காரணமான நந்தி தீர்த்தம் இருக்கிறது. அங்கே பிண்டதானமும், தனது சக்தியை அனுஸரித்து மற்ற தானங்களும் செய்யவேண்டும்.*

*நந்தீஸ்வரரைத் தரிசனம் செய்வதில் விஷ்ணுதீர்த்தம் இருக்கிறது. அங்கு பிண்டதானம் செய்தால் பித்ருக்கள் கடனிலிருந்து விடுபடுவார்கள்.*

*விஷ்ணு தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து விஸ்வேஸ்வரருக்குத் தெற்குபக்கத்தில் இருக்கும் என்னைத் தரிசனம் செய்தால் அவன் விஷ்ணுலோகம் அடைவான்.*

*ஒவ்வொரு ஏகாதசியும் அல்லது ஐப்பசி மாதத்து சுக்லபக்ஷ ஏகாதசியும் கார்த்திகை மாதத்து சுக்லபக்ஷத்து ஏகாதசியும் என்னுடைய மூர்த்திக்கு முன்னும் கண்விழித்து பஜனை செய்ய வேண்டும்.*

*பிறகு மறுதினம் என்னை பக்தி பாவத்துடன் பூஜைசெய்து, ப்ராம்மண போஜனம் செய்வித்து கோதானம், பூதானம், ஸர்வதானம் இவைகளைச் செய்பவன் மறுபடியும் பூமியில் பிறக்கமாட்டான்.*

*அறிவாளிகள் சிக்கனமில்லாமல் தாராளமாகச் செலவு செய்து விரத உத்தாபனம் செய்தால் அவர்கள் என்னுடைய ஆக்ஞையினால் ஸம்பூர்ண பலனையடைகிறார்கள்.*

*என்னுடைய தீர்த்தத்திற்குத் தென்பக்கம் சுபத்தைக் கொடுக்கும் பிதாமஹ தீர்த்தம் இருக்கிறது. அங்கும் ச்ராத்தம் செய்து, பித்ருக்களுக்குத் தர்பணம் செய்து பக்தி பூர்வமாக ப்ரம்ம நாளத்தின் மேல் எழுந்தருளியிருக்கும் பிதாமஹேஸ்வரலிங்கத்தைப் பூஜை செய்வதினுல் மனிதன் ப்ரம்மலோகத்தையடைகிமுன்.*

*ப்ரம்ம ஸ்ரோதஸ்ஸுக்கு ஸமீபத்தில் சுபகர்மமோ, அசுப கர்மமோ செய்தாஞலுல் அவன் அவிநாசியாகிறுன். அதனுல் அங்கு எப்பொழுதும் நல்ல கர்மத்தையும் செய்ய வேண்டும்.*

*ஏ! முனிஸத்தா! இந்த இடத்தில் சிறிதளவேனும், ஸத், அல்லது அஸத் கர்மமோ செய்தாஞலுல் அது ப்ரளய காலத்திலும் அழியாது.*

*இந்த இடம் உலகத்தில் நாபீஸ்தானத்தில் இருப்பதினுல் இதற்கு நாபி தீர்த்தம் என்று பெயர் வந்தது, இது பூமிக்கே மாத்திரம், ஏன்? ஸமஸ்த ப்ரம்மாண்ட கோளங்களுக்குமே ஸுகத்தைக் கொடுக்கும் நாபியாகிறது.*

*இதே கம்பீரமயமான பூமிக்கு மணிகர்ணிகா நாபீ. இங்கேயே ஸமஸ்த ப்ரம்மாண்ட கோளங்களும் உதயமும் அஸ்தமனமும் ஆகிக்கொண்டிருக்கிறது.*

*மூன்று லோகங்களுக்கும் ப்ரதானமாகிற ப்ரம்ம நாபீ நாளமும் ப்ரசித்தி பெற்றது. அதனுல் இந்தத் தீர்த்த ஸங்கமத்தில் ஸ்ஞனம் செய்தால் கோடிக்கணக்கான ஜன்மங்களில் செய்த பாப அழுக்குகள் கழுவப்படுகின்றன.*

*ஒரு சரீரத்தினுடைய ஒரு எலும்பாவது ப்ரம்ம நாளத்தில் விழுந்தால் அவர்கள் திரும்பவும் இந்த ப்ரம்மாண்ட மண்டலத்தில் பிரவேசிக்க வேண்டாம்.*

*இந்த ப்ரம்ம நாளத்தின் தெற்குப் பக்கத்தில் பாகீரதீ தீர்த்தம் இருக்கிறது. இதில் ஸ்ஞனம் செய்பவன்*

*ப்ரம்மஹத்யாதி தோஷங்களிலிருந்து முற்றிலும் விடுபடுகிறான்.*

*ஸ்வர்க்கத்வாரத்தின் ஸமீபத்திலேயே இருக்கும் பாகீரதீஸ்வரலிங்கத்தைத் தரிசனம் செய்வதினாலேயே ப்ரம்மஹத்யாதி தோஷம் நீங்க புனஸ்சரணபலன் ஏற்படும்.*

*ஒருவனுடைய பூர்வ புருஷர்கள் அதோகதியை அடைந்து இருந்தார்களானால் அவர்களுக்கு பாகீரதி தீர்த்தத்தில் ச்ரத்தையுடன் தர்ப்பணம் செய்ய வேண்டும்.*

*மேலும் அந்த பாகீரதீ தீர்த்தத்தில் விதிபூர்வமாக ச்ராத்தம் செய்வித்தால் பித்ருகணங்கள் ப்ரம்ம லோகத்தில் சேர்க்கப் படுகிறார்கள்.*

*அதற்குத் தென்பக்கத்தில் குரகர்த்ரீ என்ற ஒரு மஹாதீர்த்தம் இருக்கிறது. பூர்வ காலத்தில் கோலோகத்திலிருந்து வந்த பசுக்கூட்டங்களின் குளம்பின் நுனிகள், படிந்ததினால், அந்த பூமிபாகத்தைக் குதறியதனால் இதற்குக் குரகர்த்ரீ என்ற பெயர் வந்தது. அங்கு ஸ்னானம் செய்து பிண்ட தர்பணம் செய்து, குரகர்த்ரீஸ்வர லிங்கத்தைப் பூஜை செய்வதால் அவர்கள் கோலோகத்தையடைகிறார்கள். மேலும் இந்த லிங்கத்தைப் பூஜை செய்வதால் பசு ரூபமான தனம் அவர்களிடம் செழிப்பாக இருக்கும்.*

*குரகர்த்ரீ தீர்த்தத்திற்குத் தென் பக்கத்தில் உத்தம மார்க்கண்டேய தீர்த்தம் இருக்கிறது. அந்த உத்தமமான பாதக நாசன தீர்தத்தில் ச்ராத்தம் முதலியவைகள் செய்துவிட்டு மார்க்கண்டேயேச்வரரைத் தரிசிப்பதினால் பூமியில் தீர்க்காயுஸ்ஸுடனும், ப்ரம்ம தேஜஸ்ஸுடனும் விருத்தியடைந்து மிகவும் கீர்த்திகரமாக வாழ்வார்கள்.*

*பிறகு மஹாபாதங்களையும் நாசம், செய்து வஸிஷ்டர் என்னும் பெயருள்ள தீர்த்தம் இருக்கிறது.*

*அங்கும் பித்ரு தர்ப்பணமும், வஸிஷ்ட தரிசனமும் செய்வதினுல் மனிதர்கள் மூன்று ஜன்மங்களின் ஸஞ்சித கர்மங்கள் நசித்து தேஜஸ்ஸுடன் வஸிஷ்ட லோகத்தையடைவார்கள்.*

*அதன் பக்கத்திலேயே ஸ்த்ரீகளுக்கு ஸௌபாக்யத்தையளிக்கும் அருந்ததி தீர்த்தம் இருக்கிறது. அந்தத் தீர்த்தத்தில் பதிவ்ரதா ஸ்த்ரீகள் விசேஷமாக ஸ்னனம் செய்யவேண்டும்.*

*அந்தத் தீர்த்தத்தில் ஸ்னனம் செய்வதினுல் ஒரு நிமிஷத்திலேயே அருந்ததியுடைய ப்ரபாவத்தினுயே விபசார தோஷம் நீங்குகிறது.*

*மார்கண்டேயேச்வரருடைய கிழக்கு பாகத்தில் எழுந்தருளியிருக்கும் வஸிஷ்டேஸ்வரரைப் பூஜை செய்வதனுல் அவன் பாவம் நீங்கி புண்ணியவானுகிருன்.*

*அந்த இடத்தில் வஸிஷ்டர், அருந்ததி முதலியவர்களுடைய மூர்த்திகளை மிகவும் ச்ரமப்பட்டாவது பூஜை செய்ய வேண்டும். அப்படிப் பூஜை செய்வதினுல் ஸ்த்ரீகளுக்கு வைதவ்யம் ஏற்படாது, புருஷர்களுக்கு ஸ்த்ரீ வியோகம் ஏற்படாது.*

*வஸிஷ்ட தீர்த்தத்திற்குத் தென்பக்கத்தில் உத்தமமான நர்மதை தீர்த்தம் இருக்கிறது. அறிவாளிகள் அங்கு சென்று ச்ராத்தம் செய்து நர்மதேஸ்வரரைத் தரிசனம் செய்து மஹத்தான தானதர்மங்களைச் செய்தால் அவன் தனமில்லாதவனுக ஒரு பொழுதும் ஆகமாட்டான். பிறகு த்ரிஸந்தியேஸ்வரருக்குக் கிழக்கில் த்ரிஸந்தி தீர்த்தம் இருக்கிறது.*

*அந்த தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து விதிப்பிரகாரம் ஸந்தியா வந்தனம் செய்கிறவன், ஸந்தியோபாஸன கர்மத்தைக் காலம் தாழ்த்தாமல் செய்வதினுல் பாபங்களிலிருந்து விடுபடுகிருன்.*

ப்ராம்மணரே! மூன்று காலங்களும் ஸந்தியோபாஸனமும் செய்து, த்ரிசந்தியேஸ்வரரை சிரத்தையுடன் தரிசனம் செய்வதினால் மூன்று வேதங்களை அத்யயனம் செய்த புண்ணியம் கிடைக்கிறது.

அதன் பிறகு யோகினித் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்து, யோகினி பீடத்தைத் தரிசனம் பண்ணுவதினால் யோகஸித்திகள் கிடைக்கின்றன.

பளுவான பாபராசிகளைத் தொலைப்பது அந்த தீர்த்தம். அங்கு ஸ்னானம் செய்து நிஷ்டையுடன் அகஸ்த்யேஸ்வர சிவனைத் தரிசனம் செய்ய வேண்டும். பிறகு அகஸ்திய குண்டத்தில் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து, அகஸ்தியருடனும் கூட லோபாமுத்திரையையும் வணங்க வேண்டும்.

அவன் எல்லா பாபங்களிலிருந்தும், ஸமஸ்த க்லேசங்களிலிருந்தும் விடுபட்டுத் தன் முன்னோர்களுடன சிவலோகத்தைச் சென்றடைகிறான்.

அகஸ்திய தீர்த்தத்திற்குத் தென்பக்கத்தில் மிகவும் பவித்ரமான கங்கா கேசவத் தீர்த்தமிருக்கிறது.

அது எல்லா பாபங்களையும் சமனம் செய்கிறது. அதேதீர்த்தத்தில் அதே பெயருள்ள மங்களகரமான என்னுடைய மூர்த்தியிருக்கிறது. புத்திமான்கள் ச்ரத்தையுடன் பூஜை செய்தால் என்னுடைய லோகத்தில் பூஜிக்கப்படுவார்கள்.

அந்தத் தீர்த்தத்தில் பிண்டதானம் செய்து தன்னால் இயன்ற மட்டும் தானங்கள் செய்வதினால் நூறுவருஷங்கள் பித்ருக்களுக்குத் திருப்தியேற்படுகிறது.

நான் இந்த மணிகர்ணிகாவினுடைய பெரிய சுற்றுப் ப்ராகாரத்தைப் பற்றி உன்னிடம் வர்ணித்தேன். ஸமஸ்த விக்னங்களை நிவர்த்திக்கும் தக்ஷிண திசையிலிருக்கும் சீமா விநாயகரிடம் ஆரம்பித்துக்கூறினேன்.

*வைரோசனேஸ்வரருக்குக் கிழக்கு பாகத்தில் நான் வைகுண்டமாதவர் என்னும் பெயருடன் இருக்கிறேன். அங்கு பக்தி பாவத்துடன் என்னைப் பூஜை செய்தால் வைகுண்ட லோகத்தில் என்னைப் பூஜை செய்த பலன் கிடைக்கிறது.*

*ஹே! முனியே! வீரேஸ்வரருக்கு மேற்குப் பக்கத்தில் நான் வீரமாதவர் என்னும் பெயருடன் இருக்கிறேன். அங்கு ஒருவர் வ்ரதமிருந்து எனக்குப் பூஜை செய்தால் அவர் யம யாதனை அனுபவிக்கமாட்டார்.*

*நான் கால பைரவருக்குப் பக்கத்தில் காலமாதவர் என்னும் பெயருடன் இருக்கிறேன. அந்த ரூபத்தில் என்னை பூஜித்த பக்தர்களுக்குக் கலியும் காலனும் துக்கம் கொடுக்கமாட்டார்கள்.*

*மார்கழி மாதத்து சுக்ல ஏகாதசியன்று உபவாஸம் இருந்து, இரவு கண் விழித்துப் பூஜிப்பவர்களுக்கு யமராஜருடைய முகத்தைப் பார்க்க வேண்டி வராது.*

*புலஸ்தேஸ்வரருக்கு தக்ஷிண பாகத்தில் நான் நிர்வாண நரஸிம்மரூபத்தில் இருக்கிறேன். அந்த மூர்த்தியை வணங்கும் பக்தர்கள் நிர்வாண பதத்தையடைகிறுர்கள்.*

*ஹே! முனியே! ஓங்காரேஸ்வரருடைய கிழக்கு பாகத்தில் மஹாபல நரஸிம்மருடைய உருவில் இருக்கிறேன். அங்கு என்னைப் பூஜிக்கிறவர்கள் ஒருவரும் யமராஜருடைய மஹாபலிஷ்டரான தூதர்களைப் பார்க்கமாட்டார்கள். சண்ட பைரவருக்குக் கிழக்கு பாகத்தில் ப்ரசண்ட நரஸிம்மர் என்னும் உருவில் நான் இருக்கிறேன்.*

*பிரசண்ட நரசிம்மரைப் பூஜிப்பதினுல் பிரசண்ட பாபங்களிலிருந்து விலகி நிஷ்பாபிகளாகிறுர்கள்.*

*தேஹலி விநாயகருடைய கிழக்கு பாகத்தில் மஹத்தான பாபரூபமான யானைகளின் மஸ்தகத்தைப்*

*பிளந்தெரியும் கிரீசர் என்ற ரூபத்துடன் நான் விளங்குகிறேன். ஏ! தபோதனரே, பிதா மஹேஸ்வரருக்குப் பின்பக்கம் மஹாபயங்கர நரஸிம்மர் என்னும் பெயருடன் பக்தர்களுடைய பயத்தை ஹரணம் செய்து கொண்டிருக்கிறேன்.*

*கமலேச்வர சிவனுடைய மேற்குப் பக்கத்தில் உக்ர நரஸிம்மர் என்னும் பெயருடன் இருக்கிறேன். ச்ரத்தையுடன் பூஜித்தால் மஹா உக்ரமான பாபராசிகளை விலக்குகிறேன்.*

*ஜ்வாலா முகியின் ஸமீபத்திலேயே ஜ்வாலாமாலி என்னும் பெயருடன் இருக்கிறேன். அங்கு என்னைப் பூஜித்தவுடன் பாபக்குவியல்களாகிய துரும்புகளை எரித்து விடுகிறேன்.*

*எங்கு காசியை ரக்ஷிப்பதில் ஜாக்ரதையான புத்தியுடைய கங்காள பைரவர் இருக்கிறரோ, அங்கேயே நான் தைத்யதானவர்களை ரக்ஷிக்கும் கோலாஹல நரசிம்மர் என்னும் பெயருடன இருக்கிறேன். இப்படிப் பெயர் வருவதற்கு என்ன காரணம் என்றல் என்னுடைய பெயரைச் சொன்னவுடனேயே பாபங்கள் குழப்பமடையத் தொடங்குகின்றன. அங்கே பக்தி பூர்வமாக என்னை அர்சனை செய்வதினுல் ஒருவிதமான இடையூறுகளோ, உபாதைகளோ ஏற்படாது.*

*நீலகண்ட மஹாதேவருக்குப் பின்புறம் நான் விடங்க நரஸிம்மர் என்ற பெயருடன் இருக்கிறேன். அவரை ச்ரத்தையுடன் பூஜிப்பவர்கள் பயமில்லாமல் இருப்பார்கள்.*

*அனந்தேஸ்வரருக்கு ஸமீபத்தில் அனந்தவாமனன் என்னும் மூர்த்தியாக நான் இருக்கிறேன். அங்கு என்னைப் பூஜை செய்யும் பக்தர்களுடைய எண்ணிக்கையற்ற குறைகளை நான் நீக்குகிறேன்.*

*பக்தர்களுக்கு தயிரும், சாதமும் அளிக்கவல்ல ததிவாமனன் என்ற என்னுடைய பெயரை*

*ஸ்மரித்தமாத்திரத்திலேயே ஒருவன் தரித்ரனுகமாட்டான்.*

*த்ரிலோசனருக்கு வடக்கு பாகத்தில் த்ரிவிக்ரம ரூபமாக இருக்கிறேன். அங்கு பூஜை செய்வதினுல் லக்ஷ்மியையும் அளிப்பேன், அவர்களுடைய பாபத்தையும் தொலேப்பேன்.*

*நான் அஸுர அரசனுன பலியினுல் பூஜிக்கப்பட்ட பலிவாமனன் என்ற பெயருடன் பலிபத்ரேசருடைய கிழக்கு பாகத்தில் இருக்கிறேன். அந்த மூர்த்தியை வணங்குகின்ற பக்தர்களுடைய பலத்தை அதிகரிக்கிறேன்.*

*நான் தாமர த்வீபத்திலிருந்து காசிக்கு வந்து பவதீர்த்தத்திற்குத் தெற்கு பக்கம் தாமரைவராஹர் (பூவராஹர்) என்ற பெயருடன் பக்தர்களின் அபீஷ்டங்களை நிறைவேற்றுகிறேன். ப்ரயாகேஸ்வரருக்குப் பக்கத்திலேயே இருக்கிறேன்.*

*(2) ஹே தபஸ்வின்! நான் தரணீ வராஹர் (பூவராஹர்) என்ற பெயருடன் ப்ரயாகேச்வரருக்குப் பக்கத்திலேயே இருக்கிறேன். அங்கு வராஹ தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து என்னே வராஹ ரூபத்துடன் ஸ்மரித்தவர்களுக்கும் என்னே அந்த விதமாகப் பூஜிப்பவர்களுக்கும் அநேக யோனிகளில் திரியும் சங்கடம் ஏற்படாது.*

*அந்தத் தீர்த்தத்தின் கரையில் அற்பமளவாவது அன்னதானம் செய்தால் பூமிதானம் செய்த பலன் ஏற்படுகிறது. என்னுடைய பக்திரூபமான தோணியில் ஏறியவர்களுக்கு அது அதி ஆழங்காண முடியாத ஸமுத்ரத்தில் வீழ்ந்திருந்த போதிலும் ப்ரளய காலத்திலும் கூட அது முழுகாது.*

*நான் வராஹேஸ்வரருடைய சமீபத்திலேயே கோகோவராஹர் என்னும் பெயருடன் இருக்கிறேன். அங்கு என்னேப் பூஜித்தவர்களுக்கு நினேத்த பலன் கிட்டும்.*

*என்னுடைய ஐநூறு மூர்த்திகளாக நாராயண ஸ்வரூபமாகவும், ஒரு நூறு க்ஷீரஸாகரசாயியாகவும்,*

முப்பது கூர்மாவதாரமாகவும், இருபது மத்ஸ்யாவதார மாகவும், நூற்றெட்டு கோபாலஸ்வரூபமாகவும், ஆயிரக்கணக்கானவைகள் பௌத்தரூபமாகவும், முப்பது பரசுராமஸ்வரூபமாகவும், நூற்றிஒன்று ராமஸ்வரூப மாகவும் இருக்கிறேன்.

மேலும் முக்தி மண்டபத்தின் மத்தியில் விஷ்ணுஸ்வரூபமாகவும் தனியாக இருக்கிறேன். ஹே முனியே, விச்வேஸ்வரர் என்னிடம் மிகவும் ஸந்தோஷித்து எனக்கு இங்கு இடம் கொடுத்திருக்கிறார்.

என்னுடைய அறுபது லக்ஷம் அநுசரர்கள் நாராயணஸ்வரூபமாகவே சக்கரமும், கதையும் தரித்துக் கொண்டு இந்த க்ஷேத்திரத்தை நான்கு பக்கங்களிலிருந்தும் ரக்ஷிக்கிறார்கள்.

இந்த எல்லா விஷயங்களையும் கேட்டு அக்னிபிந்து ரிஷி ஸந்தோஷத்தினால் புளகாங்கிதம் அடைந்தார். பிறகு அந்த புத்திமான் பகவானிடம் கேட்டார்.

ஏ! பிரபோ! தங்களுடைய பக்தர்களின் நன்மையின் பொருட்டும் என்னுடைய ஸந்தேஹத்தை விலக்கும் பொருட்டும் தாங்கள் மூர்த்திகளின் பேதங்களை வர்ணியுங்கள். ஏ! அனந்தா! தங்களுடைய மூர்த்திகள் எத்தனை இருக்கின்றன? அவைகள் எல்லாவற்யையும் எவ்விதம் அறிய முடியும்? அதையும் கூறுங்கள்.

தபோநிதியான அக்னிபிந்து ரிஷியினுடைய அந்த வார்த்தைகளைக் கேட்டு பகவான் விஷ்ணு தன்னுடைய மூர்த்தியின் பேதங்களைக் கூற ஆரம்பித்தார்.

பகவான் விஷ்ணு, கேசவன் முதலிய தனது இருபத்திநான்கு தத்துவங்கள் நிறைந்த நாமங்களைக்கேட்டு மனிதர்கள், முக்தியடைவதற்காக, அதாவது யமராஜனின் மந்தையில் மேய்க்கும் பசுக்கூட்டங்களாக ஆகிவிடாமல் இருக்கும் பொருட்டு சொல்லத் தொடங்கினார்.

*ஏ! மஹா ப்ராக்ஞா, அக்னிபிந்து முனியே! நான் உன்னிடம் கூறுகிறேன் கேள். முதலாவது வலது புறத்தின் மேலிருக்கும் கை, பிறகு இடப்புறத்தின் மேலிருக்கும் கை, பிறகு கீழே தொடங்கும் இடப்பக்கத்து கை, பிறகு கீழே தொங்கும் வலதுகை; இந்த க்ரமத்தில் சங்கு, சக்கரம், கதை, பத்மம் இவைகளால் அலங்கரித்து விளங்கும் உருவத்தை கேசவமூர்த்தி என்று அறிந்துகொள். இம்மூர்த்தியைப் பூஜிப்பதனுல் ஸந்தேஹமில்லாமல் வாஞ்சிதபலன் கிடைக்கும்.*

*இதே முறைமாறி மேற் கைகளில் சங்கும் சக்கரமும், கீழ்க் கைகளில் கதையும் பத்மமும் வைத்திருக்கும் மூர்த்தியை மதுஸூதனமூர்த்தி என்றறியவேண்டும். அவரை ஸேவிப்பதனுல் சத்ருக்களின் விநாசம் ஏற்படுகிறது.*

*எந்த மூர்த்தியில் முறையே சங்கு, பத்மம், சக்கரம், கதை என்று மாறியிருக்கிறதோ, அது ஸங்கர்ஷண மூர்த்தியென்று அறியவேண்டும். அவைகளைப் பூஜிப்பதனுல் ஜீவன் ஜன்மபாத்திரமாகாது.சங்கும், கதையும், சக்கரமும், பத்மமுமாக மாறியிருக்கும் மூர்த்தியை தாமோதரமூர்த்தியென்று அறியவும். இவரைப் பூஜித்தால் அளவில்லாத கோதனமும், புத்ரதனமும், தனதான்யங்களும் கிடைக்கும்.*

*வாமன மூர்த்தி சங்கம், சக்ரம், பத்மம், கதை இவைகளால் லக்ஷ்யப்படுத்தப்பட்டிருக்கும் இந்த மூர்த்தியைக் கொண்டாடி பூஜிக்கும் வீடுகளில் அவர் செழிப்பான தனத்தைக் கொடுப்பார்.*

*என்னுடைய எந்த மூர்த்தியில் பாஞ்சஜன்யம் என்ற சங்கமும், கதையும் பத்மமும், ஸுதர்சன சக்கரமும் க்ரமமாய் இருக்குமோ அது ப்ரத்யும்ந மூர்த்தியாகும்; இதைப் பூஜிப்பவருக்குச் செழிப்பான தனலாபம் உண்டாகும்.*

விஷ்ணு முதலிய இந்த ஆறு மூர்த்திகளும் மேல்தூக்கியிருக்கும் இடது கையிலிருந்து ஸ்ருஷ்டி முறையாகச் சொல்லப்பட்டது. அதை ஸ்மரித்த மாத்திரத்திலேயே பாபராசிகள் ஓடிவிடுகின்றன.

சங்குசக்ர, கதாபத்மத்துடன் கூடின விஷ்ணு மூர்த்தியைப் பூஜை செய்வதனுல் மனிதன் ஸ்ரீமான் ஆகிருன். இவைகளுடன் சோபிதமான மாதவமூர்த்தி ஸம்பத்தையளிக்கிருர். சங்கம், பத்மம், சக்கரம், கதை இவைகளுடன் கூடின அநிருத்த மூர்த்தியைத் தியானம் செய்தால் ஸித்தி கிடைக்கிறது. புருஷோத்தம மூர்த்தியும் சங்கும், சக்கரமும் பத்மம் கதையுடன் கூட இருக்கிறது.

ஏ! முனியே! சங்கம், சக்கரம், பத்மம், கதையுடன் கூடின மூர்த்தி ஜன்ம துக்கத்தைப் போக்கும் அதோக்ஷஜ மூர்த்தியாகும். மேலும் சங்கம் கௌமோதகீ என்னும் கதை, இவைகளுடன் கூடின மூர்த்தி ஜனுர்த்தன மூர்த்தியாகும். ஸ்ருஷ்டிக்ரமப்படி கீழே கோவிந்தன் முதலிய ஆறுமூர்த்திகளின் பேதங்களாகும். முன்பு கூறிய க்ரமத்தை அனுசரித்து கோவிந்தமூர்த்தி சங்கம், சக்கரம், பத்மம் கதை இவைகளைத் தரித்துக் கொண்டிருக்கிறது.

லக்ஷ்மிக்காக சங்கம், சக்கரம், பத்மம், கதை இவைகளுடன்கூடின த்ரிவிக்ரமமூர்த்தி பூஜிக்கத் தகுந்தது. மேலும் சங்கம், பத்மம், சக்கரம், கதை இவைகளுடன் கூடின ஸ்ரீதரர்மூர்த்தி ஸ்ரீயாகிய லக்ஷ்மியின் லாபார்த்தம் பூஜிக்கத்தகுந்தவை.

ரிஷீகேச மூர்த்தியில் மேற்குறிப்பிட்ட க்ரமப்படிக்கு சங்கம், கதை, சக்கரம், பத்மம் இவைகளுடன் கூட விளங்குகிறது. சங்கம், சக்கரம், பத்மம், கதை இவைகளைத் தரித்துக் கொண்டிருக்கும் மூர்த்தி நரஸிம்மமூர்த்தி.

சங்கம், கதை, பத்மம், சக்கரம் இவைகளைத் தரித்துக் கொண்டிருப்பது அச்யுத மூர்த்தியாகும். இப்பொழுது

*கீழேயுள்ள வலதுகை க்ரமப்படிக்கு வாஸுதேவர் முதலிய ஆறு மூர்த்திகளைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது.*

*சங்கம், சக்கரம், கதை, பத்மம் இவைகளுடன் கூடின மூர்த்தியை பத்மநாபர் என்றறியவேண்டும்.*

*சங்கம், சக்கரம், பத்மம், கதை இவைகளால் பூர்ணமானமான மூர்த்தி ஹரியினுடையதாகும். இந்த மூர்த்தி மனிதர்களுடைய பாபங்களை அபஹரிக்கிறது. கிருஷ்ணனுடைய மூர்த்தியும் சங்கம், கதை, பத்மம், சக்கரம் இவைகளுடன் கூட விளங்குகிறது.*

*ஏ! மஹா தபஸ்வியே! நான் என்னுடைய எல்லா மூர்த்தி பேதங்களையும் வர்ணித்துவிட்டேன். மனிதர்கள் அறிந்து துதித்தால் நிச்சயமாக புக்தியும் முக்தியும் கிடைக்கும்.*

*ஸ்கந்தர் கூறினர்:- இப்படியாக பகவான் விஷ்ணு அக்னி பிந்து முனியிடம் இந்த எல்லா விஷயங்களையும் கூறிக்கொண்டிருக்கும் அதே வேளையில் பக்ஷம் என்னும் சிறகுகளால் விபக்ஷிகளாகிற சத்ருக்களைச் சிதறித்துவிடும் பக்ஷி ராஜனுகிய கருடன் வருவது தெரிந்தது.*

*அவர் மிகவும் ஸந்தோஷத்துடன விளங்கி மிகவும் வேக வேகமாக பகவான் த்ரிலோசனருடைய வருகையைப் பற்றித் தெரிவித்தார். இவ்வார்த்தையைக் கேட்ட ரிஷீகேசர் பதட்டத்துடன் மஹாதேவர் எங்கே? என்று வினவினர்.*

*கருடர் கூறினர்:- பாருங்களேன்? இதோ வ்ருஷபத்வஜம் வருகிறதல்லவா; அந்த த்வஜத்தில் ஜ்வலிக்கின்ற ரத்னங்களின் ஒளியினுல், ஆகாசமும், பூமியும் ஒளிப்பிழம்பாய் திகழ்கின்றன பாருங்கள்.*

*அதன் பிறகு புண்டரீகாக்ஷனை விஷ்ணுபகவான் த்ரிநேத்ரருடைய வ்ருஷபத்வஜத்தோடு கூடின ரதம் வருவதைப் பார்க்கலானுர். அதனை தரிசித்த யாவருமே*

கண்கள் படைத்த பலனைப் பெற்றார்கள். கோடி சூர்யர்களுடைய கிரணங்களை மாலையாக அலங்கரித்த மாதிரி அந்த ரதம் திக்மண்டலங்களை சோபிக்கச் செய்துகொண்டு வந்தது. அதற்கு நான்கு பக்கங்களும் தேவதைகள் தங்கள் தங்கள் விமானங்களினால் வானவீதியை நெருக்கியடித்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களுடைய அநேக விதமான வார்த்தைகளின் த்வனிகளினால் பர்வதத்தின் குகைகள் எதிரொலிக்கின்றன. வித்யாதரர்களால் சிதறப்பட்ட பாஞ்சாலியின் சுகந்தம் நான்கு பக்கமும் பரவியது.

அப்பொழுது சங்கு சக்ர கதாதாரியாக பகவான் விஷ்ணு, ஸந்தோஷத்தினால் புளகாங்கிதம் அடைந்த சரீரத்துடன் கூடத் தள்ளியிருந்தே வணங்கி வரவேற்பு கூற ஆசைப்பட்டார்.

பிறகு சந்தோஷத்தையும் முக்தியையும் அளிக்கும் பகவான் அக்னி பிந்துவிடம் கூறினார், முனியே! இந்த என்னுடைய ஸுதர்சன சக்கரத்தை உனது வலது கையினால் தொடு என்றார்.

இப்படிச் சொல்லி முடிந்ததுமே அக்னிபிந்து ரிஷி ஸுதர்சனத்தைத் தொட்டார். உடனே ஸ்ரீமத் நாராயணனுடைய பரம அநுக்ரஹத்தினால் அவரே ஸுதர்சனனாகி விட்டார். அதாவது திவ்ய ஞானியாகிவிட்டார்.

இப்பொழுது ஸ்கந்தர் கூறுவார்:- ஏ! அகஸ்தியா, இதற்குப் பிறகு அந்த அக்னிபிந்து மாதவரை ஸேவித்ததினால் ஜோதிரூபமாக ஆகி கௌஸ்துபதாரியினுடைய ஜோத்மயமான சரீரத்தில் கலந்துவிட்டார்.

ஏ! கும்ப முனியே! எவர் தன்னுடைய மனதை பிந்துமாதவருடைய சரணங்களில் மொய்க்கும் வண்டாக

ஆக்கிக்கொள்கிருர்களோ அவர்கள் எல்லோரும் அக்னிபிந்துவிற்கு ஸமானமாக ஆகிவிடுகிருர்கள். இதில் கொஞ்சம்கூட ஸந்தேகமேயில்லே.

காசியில் எப்பொழுதும் வஸிக்கின்றவர்கள் பகவான் பிந்து மாதவரை தரிசித்துவிட்டு இந்த விருத்தாந்தத்தையும் கேட்பார்களாளுல் அவர்கள் ஸம்ஸாரத்தை வேகத்தில் ஜயிக்கிருர்கள்.

பஞ்சநதி தீர்த்தத்தில் உற்பத்தியும் பிந்துமாதவருடைய கதையும் இரண்டுமே மிகப் பவித்திரமானவை; அதற்கு மேலும் புண்ணிய க்ஷேத்திரமான காசீபுரிவாஸமும் புண்ணியவான்களின் பாக்கிய விசேஷங்களிளுல் கிடைக்கக்கூடியதாகும்.

காசியில் பிந்துமாதவரின் முன்ளுல் அக்னி பிந்து ரிஷியிளுல் இயற்றப்பட்ட இந்த ஸ்துதியைப் படித்தால் அவன் இஹத்திலேயே ஸகல ஸௌபாக்யங்களேயும் பெற்று கடைசியில் மோக்ஷலக்ஷ்மியை அடைகிருன்.

ச்ராத்த ஸமயத்தில் ப்ராம்மணர்கள் போஜனம் செய்து கொண்டிருக்கும்போது, அவர்களுக்கு முன்ளுல் அவர்கள் ஸந்தோஷமடைவதற்காக இந்த உபாக்கியானத்தை அவசியம் பாராயணம் செய்ய வேண்டும்.

விசேஷமாக பர்வதினங்களில் பவித்ரமான பஞ்சநதிக்கரையில் புண்ணியலக்ஷ்மியின் வ்ருத்திக்காக இக்கதையை அவசியம் படிக்கவேண்டும்.

மோக்ஷ வ்ருத்திக்கும் போக ஸித்திக்குமாக பிந்து மாதவர் சுகவருகைதந்த இந்த விவரத்தைக் கருத்துடன் படிக்கவேண்டும். மிகவும் பக்தியுடன் அதைக் கேட்கவும் வேண்டும்.

விஷ்ணு வாஸரமான ஏகாதசி திநத்தன்று ராத்திரி கண்விழித்து இந்தப் பவித்ரமான உபாக்யானத்தைக் கேட்பதிளுல் வைகுண்டலோகம் கிடைக்கிறது.

***இப்படி ஸ்கந்த புராணத்திஞல் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷா டீகாவான வைஷ்ணவ தீர்த்த மஹாத்ம்யமும், மூர்த்தி பேதவர்ணனமுமான அறுபத்து ஒன்ருவது அத்யாயம் ஸம்பூர்ணம்.***



# *அத்யாயம் 62*

**மஹாதேவர் காசிப்ரவேசனம்:**

**கபிலதாராதீர்த்தத்தின் வர்ணனை**

*அகஸ்தியர் கூறினார்:- ஸ்கந்தா! தாங்கள் திருவாய் மலர்ந்தருளிய வசனாம்ருதத்தைக் கேட்டுக் கேட்டுக் த்ருப்தியே அடையவில்லை. தாங்கள் இந்த பிந்து மாதவரின் உபாக்கியானத்தை மிகவும் அற்புதமாக வர்ணித்தீர்கள்.*

*நான் இப்பொழுது தங்களிடம் பகவான் மஹாதேவருடைய வருகையைப் பற்றிய கதையைக் கேட்க விரும்புகிறேன். த்ரிலோசனரான சிவபிரான் ராஜா திவோதாஸருடைய செய்கைகளையும் பகவான் விஷ்ணுவினுடைய மாயாவிநோதங்களையும் கேட்டு நாராயணரிடம் என்ன கூறினார்? மந்த்ராசலத்திலிருந்து மஹேஸ்வரர் வரும்பொழுது யாரையெல்லாம் காசிக்குக்கூட அழைத்து வந்தார்?*

*பிறகு ப்ரம்மா லஜ்ஜையினால் கீழ்நோக்கிய பார்வையுடன் சங்கரரை எப்படி ஸந்தித்தார்? பிறகு சிவபிரான் ப்ரம்மாவிடம் என்ன கூறினார்? சூரியதேவரும் தன் விஷயமாக அவரிடம் என்ன கூறினார்?*

*யோகினிகள் தங்களுடைய அபராதத்திற்கு சிவபிரானிடம் எவ்விதம் மன்னிப்புகேட்டுக் கொண்டார்கள்? லஜ்ஜையடைந்த சிவகணங்கள் எவ்விதம் நடந்துகொண்டார்கள்? இவைகளையெல்லாம் தாங்கள் எனக்குக் கூறவேண்டும். இவைகளெல்லாம் கேட்க எனக்கு மிக ஆவலாக இருக்கிறது.*

*சங்கர குமாரன் கும்ப முனிவருடைய இந்தக் கேள்விகளையெல்லாம் கேட்டு, வணங்கியவர்களுக்கு ஸித்தி கொடுக்கவல்ல மஹாதேவரையும், பார்வதிதேவியையும் நமஸ்கரித்து வணங்கிப் பதில் கூறினார்;*

*ஸ்கந்தர் கூறினார்; கும்பமுனியே !*

*ஸமஸ்தபாபங்களையும் விக்னங்களையும் தொலைக்கும் இந்த பரம மங்களகரமான கதையைக்கேளும்.*

*இதற்குப் பிறகு தானத்தைத் தண்ணீரைப்போல வாரி வழங்கும் ஹரிசங்கரரின் வருகையாகிய வ்ருத்தாந்தத்தைக் கேட்டுவிட்டு மிகவும் ஸந்தோஷத்துடன் சிவபிரானின் வருகையின் ஸந்தோஷத்தைக்கொண்டு வந்த பக்ஷிராஜன் கருடனுக்கு மிகவும் வெகுமதிகளை வாரி வாரி வழங்கினார்.*

*பிறகு வாராணஸிபுரியில் ஸமீபத்திலேயே தனது அன்பிற்குப் பாத்திரமான ப்ரஜாபதியை முன்னிட்டுக்கொண்டு, சிவபிரானை வரவேற்றார்.*

*சூரியநாராயணன், கணபதி, சிவகணங்கள், யோகினிகள், இவர்களுடன் கலந்து குலாவிக்கொண்டு வெகுநேரம் வரையில் பகவான் விஷ்ணு அங்கேயே இருந்தார்.*

*அதன் பிறகு வ்ருஷபத்வஜரான மஹாதேவர் கண்ணிற்குத் தென்பட்டதுமே, பகவான் லக்ஷ்மீபதி தன்னுடைய வாஹனமாகிற கருடன் மீதிருந்து இறங்கி சிவபிரானை நமஸ்கரித்தார்.*

*பிறகு மஹாதேவர் கிழவரான பிதாமஹர் மிகவும் குனிந்து வணங்குவதைப் பார்த்துத்தானே அவரை வணங்கி, அவர் வணங்குவதைத் தடுத்தார்.*

*அப்பொழுது ப்ராஜாபதி தன்னுடைய இருகரங்களையும் குவித்து மங்களவாக்கியங்களைக்கூறி பொரி, அக்ஷதை புஷ்பங்கள் இவைகளையிறைத்து ருத்ரஸூக்கத்தினால் அபிமந்த்ரணம் செய்தார்.*

*கணேசனும் உடனேயே மிகவும் வணக்கத்துடன் தந்தையின் காலடியில் தலை வைத்து வணங்கினார். மஹாதேவரும் மிகவும் ஸந்தோஷித்து மகனை உச்சி முகர்ந்தார். பிறகு அவரைத் தனது ஆஸனத்தின்*

*அருகிலேயே அமர்த்திக் கொண்டார்.*

*ஸோமநந்தி முதலிய கணங்களும் சிவபிரானை வணங்கி மங்கள கீதங்களைப் பாடினார்கள்.*

*பிறகு பகவான் பாஸ்கரன் ப்ரதம நாதரான மஹாதேவனை வணங்கினார்.*

*இதற்கு பிறகு பகவான் சந்திரசேகரன் மிகவும் மர்யாதையுடன் கூடத் தன்னுடைய சிம்மாஸனத்தின் அருகிலேயே இடப்பக்கமாக ஸ்ரீவைகுண்டநாதனை அமர்த்திக்கொண்டார்.*

*பிறகு தகுந்த ஆஸனமளித்து ப்ரம்ம தேவரை வலதுபக்கமாக அமர்த்திக்கொண்டார். பிறகு வணங்கிய சிவகணங்களையும் ப்ரஸன்ன முகத்துடன் கடாக்ஷித்து ஆசீர்வித்தார். இதே விதமாகத் தலையை அசைத்து யோகினிகணங்களை வெகுமானப்படுத்தி, சூரிய தேவரையும் கையினால் ஸமிக்ஞை செய்து அமரும்படிச் செய்தார்.*

*இதற்குப் பிறகு ப்ரம்மா கைகளைக் கொண்டு ஸந்தோஷத்தினால் மலர்ந்த வண்ணம் விநயத்துடன் விண்ணப்பித்துக்கொண்டார். ப்ரம்மா கூறினார். பகவான் தேவ தேவனே! தேவேசா! கிரிஜாபதே! நான் காசிபதிக்கு வந்தபின் தங்களிடம் திரும்பி வரமுடியவில்லை.*

*என்னுடைய மகத்தான அபராதத்தை க்ஷமித்தருள வேண்டும். ஏ! சந்த்ரவதனா! வயோதிகத்தினால் பீடிக்கப்பட்ட இந்தக் கிழவன் தங்களுடைய உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து அதை நிறைவேற்ற சக்தியிருந்தும் கூட காசிக்கு வந்த பிறகு இவ்விடத்தை விட்டுவர மனது வரவில்லை.*

*மேலும் மற்றொரு விஷயம் - இயற்கையாகவே ப்ராம்மணனாகிய நான் ஒருவருக்கும் அபகாரம் செய்ய முடியாது. மேலும் அபகாரம் செய்வதற்கு ஸமர்த்தர்களாக இருந்தும்கூட ஒரு உத்தமமான நல்லகாரியத்தை*

அபகாரத்திஞல் கொடுப்பதற்கு எப்படி முடியும்?

மேலும் ஸ்வாமீ ! தங்களுடைய உத்தரவு எப்படியென்ருல் ஒருவன் தர்மமார்க்கத்தில் சென்று கொண்டிருக்கிருன் என்று தெரிந்தும், வேண்டுமென்றே ஒருவனுக்கு அபகாரம் (அபராதம்) செய்யக்கூடாது என்பது தங்கள் வாக்கு. மேலும் ஒருவிதமான ஆதாரமும் இல்லாமல் காசியைப் பரிபாலிக்கும் ராஜா திவோதாஸின் மேல் எவ்விதம் குற்றம் காட்டுவது?

இந்த வார்த்தைகளைக் கேட்டு ஸந்தோஷமடைந்து ஞான நிதியான பகவான் சங்கரர் சிரித்துக்கொண்டார்; பிறகு கூறத்தொடங்கிஞர்:- ஏ ப்ரம்மன்! நான் இதெல்லாம் அறிவேன் என்று கூறிப் பின்னும் கூறுவார்.

முதலாவது இதில் உன்னுடைய குற்றம் ஒன்றும் கிடையாது. ப்ராம்மணனுக்குப் பிரம்மண்யத்தைக் காப்பாற்றுவது கடமையும் தர்மமுமாகும். மேலும் நீர் இந்தக் காசீபுரியில் பத்து அச்வமேத யக்ஞமும் செய்து முடித்திருக்கிறீர்.

இதுவுமல்லாமலேயே, ஏ! ப்ரம்மன்! இவைகள் எல்லாவற்றையும் விட மேலாகப் ப்ராணிகளுக்கு ஹிதம் கொடுக்கக்கூடிய காரியத்தைச் செய்து இருக்கிறீர். அதாவது எனது லிங்கத்தை இங்குப் ப்ரதிஷ்டை பண்ணினீர். அதஞல் ஆயிரக்கணக்கான அபராதங்கள் விலகிவிட்டன.

ஸகலவிதமான அபராதங்கள் நிரம்பியிருந்தாலும் கூட ஒருவன் எங்காவது என்னுடைய லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்வாஞஞல், அபராதத்தின் லேசம் மாத்திரம்கூட அவனை அணுகாது.

மேலும் ஆயிரக்கணக்கான தோஷங்களிஞல் ஒருவன் நிரம்பியிருந்தும் கூட ஒரு ப்ராம்மணனை அபராதியாக்கிஞல் சில தினங்களுக்குள்ளாகவே அவனது ஐஸ்வர்யங்கள் கெட்டுவிடும்.

*பகவான் சிவபிரானுடைய இந்த இனிமையான சொல்லேக்கேட்ட கணங்களும், யோனிகளும்கூட ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு மனதிற்குள் மிகவும் ஸந்தோஷமாக இருந்தார்கள்.*

*அச்சமயத்தில் சராசரங்களேயும் ப்ரகாசிக்கச் செய்யும் ஸுூரியபகவானும் இதுதான் ஸமயமென்று கருதி ஸந்தோஷத்திறைல் மலர்ந்த முகத்துடன உமாகாந்தரிடம் விண்ணப்பித்துக் கொண்டார் -*

*ஸுூரியன் கூறினர்:- நானும் மந்த்ராசலத்திலிருந்து காசிக்கு வந்து என்றைல் முடிந்தமட்டும் என்னுடைய ஆயிரம் கரங்களாலும் அவருக்கு இடையூறு செய்தும்கூட ஸ்வதர்மத்தைப் பரிபாலிக்கும் அந்த ராஜா திவோதாஸருடைய விஷயத்தில் ஒன்றும் செய்ய முடியவில்லே. மேலும் தாங்கள் காசிக்கு வருவது நிச்சயம் என்று தெரிந்திருந்ததால் இங்கேயே தங்கிவிட்டேன்.*

*ஏ! தேவேசா! தங்களுடைய வருகையை வழிமேல் விழிவைத்துப் பார்த்துக் கொண்டு தங்களே அநேக உருவங்களிறைல் ஆராதித்துக் கொண்டிருக்கிறேன்.*

*ஏ! நாதா! எத்தனே தினங்களாக என்னுடைய மறேரதம் என்னும் விருக்ஷத்திற்கு பக்தி என்னும் ஜலம் வார்த்து வந்தேன். அது இப்பொழுது தியான ரூபமான புஷ்பமாக சோபித்து இருக்கிறது. இன்று தங்கள் தரிசனம் ஆகிய பூர்ணபலன் பழமாகக் கிடைத்துவிட்டது.*

*ஸுூர்யனேயே நேத்ரமாகவுடைய பகவான் சந்திரமௌலி ஸுூர்யனுடைய இந்த வசனங்களே செவிமடுத்துக் கூறினர். ஏ! பாஸ்கரா! இதில் உம்முடையது குற்றம் ஒன்றுமில்லே. இதில் உம்முடைய குற்றம் ஒன்றுமில்லே.*

*இங்கு நீ தங்கினதிறைல் என்னுடைய காரியத்தை நிறைவேற்றினய். ஏனென்றல் அரசன் திவோதாஸன் ராஜ்ய சாஸனகாலத்தில் தேவர்களில் ஒருவர் கூடக் காசியில் நுழையவில்லே.*

க்ருபாநிதியான மஹேஸ்வரதேவர் இந்த விதமாக சூரியநாராயணரை ஆச்வாஸப்படுத்தி லஜ்ஜையின் பாரத்தினுல் பூமிக்குள் அமுக்கி விடுவோமோ என்ற யோகினி கணங்களையும் தன்னுடைய க்ருபா கடாக்ஷத்தினுல் பார்த்து ஆறுதல் வார்த்தைகளைக் கூறினுர்.

இதற்குப் பிறகு பகவான் சங்கரர் தன்னுடைய க்ருபாகடாக்ஷத்தினுல் பார்த்து ஆறுதல் வார்த்தைகளைக் கூறினுர்.

இதற்குப் பிறகு பகவான் சங்கரர் தன்னுடைய நேத்திரங்களை நாராயணருடைய முகத்தில் பதித்தார். ஆனுல் அந்த மஹாமனஸ்வியான ஹரி பகவான் ஹரனிடம் ஒன்றுமே கூறவில்லை.

மஹாதேவர் முன்பே கருடனிடமிருந்து கணேசர், விஷ்ணு இவர்களுடைய விருத்தாந்தத்தையறிந்து கொண்டிருந்தார். அதனுல் மனதிற்குள்ளேயும் மிகவும் ஸந்தோஷித்துக்கொண்டு வெளிப்படையாக அவர்களிடம் ஒன்றும் கூறவில்லை. அதே ஸமயத்தில் கோலோகத்திலிருந்து ஸுனந்தா, ஸுமனு, ஸுரதி, ஸுலா, கபிலா என்னும் பெயர்களையுடைய கருணுகடாக்ஷம் அந்த ஐந்து பாபநாசினிகளான பசுக்களின் மேல் பட்டவுடன் அவைகளின் மடியிலிருந்த பால் பெருக்கெடுத்து ஓடியது. அவைகளின் மடியிலிருந்து யானைத் துதிக்கையைப் போலொத்த பால் பெருக்கு பாய்ந்தது. அந்த இடத்திலேயே ஒரு தடாகமாக மாறியது. அந்த மடுவைப் பார்த்துவிட்டு மஹாதேவருடைய பாரிஷத ஜனங்கள் மற்றொரு க்ஷீரஸமுத்திரம் என்று கருதி அதிசயப்பட்டார்கள். பிறகு தேவதேவர் அதில் முழுகுவதற்கு அமர்ந்ததும் அதுமிகவும் பரிசுத்தமான தீர்த்தஸ்தானமாயிற்று.

பிறகு பகவான் சிவபிரான் அந்த தீர்த்தத்திற்குக் கபில தீர்த்தம் என்று பெயர் வைத்தார். அவருடைய உத்தரவைப்

பெற்று ஸமஸ்த ஸ்வர்க்க வாஸிகளும் அதில் ஸ்னனம் செய்தார்கள். அதே ஸமயத்தில் அந்தத் தீர்த்தக்குள்ளேயிருந்து பித்ரு கணங்கள் மிகவும் தேஜஸ்ஸுடன் வெளிப்பட்டனர். அவர்களைப் பார்த்ததுமே தேவதைகள் மிகவும் ஸந்தோஷத்துடன் ஜலதர்பணம் செய்தார்கள்.

அக்னிஷ்வர்த்தா, சோமபா, ஆஞ்யபா, பருகிஷது முதலிய பித்ருகணங்கள் பரம திருப்தி அடைந்து, சிவனிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

பக்தர்களுக்கு அபயமளிப்பவரே ! ஜகதீஸ்வரா ! தேவதேவா ! தாங்கள் இந்த தீர்த்தத்தில் எழுந்தருளியிருப்பதனால், நாங்கள் அக்ஷய திருப்தி அடைந்தோம்.

இந்தக் காரணத்தினால் சம்போ வரமளிக்க வேண்டும், என்றார்கள். மஹாதேவர் இந்த விதமாக திவ்ய பித்ருக்களுடைய வாக்கியத்தைக் கேட்டு எல்லாதேவதைகளுக்கு முன்னால் சரியென்று தலையாட்டினார். அதைக்கேட்டு பித்ரு ஜனங்கள் மிகவும் ஸந்தோஷமடைந்தார்கள்.

தேவதேவர் கூறினார்:- ஏ! மஹாபாகோ, விஷ்ணு, ஏ! பிதாமஹா, ப்ரும்மன், எல்லோரும் கேளுங்கள். இந்த கபிலை முதலிய பசுக்களுடைய பாலினால் நிரம்பிய இந்தக் கபில தீர்த்தத்தில் ச்ரத்தையுடன்கூட சிராத்த விதிப்படிக்குப் பிண்டதானம் செய்வதனால் என்னுடைய ஆக்ஞைபடிக்கு பித்ரு கணங்களுக்கு மிகவும் திருப்தி ஏற்படும்.

இப்பொழுது நான் இவர்களுக்கு மிகவும் மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடிய மற்றொரு விஷயத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள். ஸோமவாரத்தோடு கூடிய அமாவாஸையில் திதியன்று இங்கு சிராத்தம் செய்வதனால் அக்ஷய பலம் ஏற்படும்.

*ப்ரளய காலத்தில் ஸமுத்திரத்தின் ஜலமும் உலர்ந்துவிடும்; ஆனுல் அமாவாஸையும் ஸோமவாரம் சேர்ந்த தினத்தன்று இங்கு செய்யும் சிராத்தத்தின் பலன் ஒருபொழுதும் க்ஷயமடையாது.*

*இந்தத் திங்கள் அமாவாஸையன்று கபிலதாரா தீர்த்தத்தில் ஸ்னனம் செய்தால் அதற்கு முன் கயை, புஷ்கரம் இவைகளுடைய சிரார்த்தானுஷ்டானங்களின் ஒருபலனுகுமா? கதாதரரே நீரே நேரில் வந்திருக்கிறீர்: பிதாமகரே நீங்களும் இங்கு இருக்கிறீர்கள். வ்ருஷபத்துவஜரே நானும் இங்கு இருக்கிறேன். அப்பொழுது பல்குன நதியும் ப்ரவஹிக்கிறது என்பது ஸந்தேஹமன்று,*

*அதிகம் கூறுவதற்கு என்ன இருக்கிறது? ஸ்வர்கம் என்ன அந்தரிக்ஷம் என்ன பூமண்டலம் என்ன அங்கெல்லாம் எத்தனே தீர்த்தங்களுண்டோ, அவைகளெல்லாம் ஸோமவதி அமாவாஸை அன்று இந்தக் கபிலதீர்த்தத்தில் வந்து சேருகின்றன.*

*ஸூர்யக்ரஹண ஸமயத்தில் குருக்ஷேத்ரம், நைமிசாரண்யம், கங்கா ஸாகரஸங்கமம் இவைகளில் ச்ராத்தம் செய்வதனுல் என்ன பலன் கிட்டுகிறதோ, இந்த வ்ருஷப தீர்த்தத்தில் ஸ்னனம் செய்வதனுல் அதே பலன் கிட்டும்.*

*ஏ! திவ்ய பித்ருகணங்களே ! இந்தத் தீர்த்தத்தினுடைய பெயர்களில் எவை உங்களுக்கு மிகுந்த திருப்தியளிக்கிறதோ, அவைகளேக்கூறுகிறேன். முதலாவது இந்தத் தடாகத்தின் பெயர் மதுஸ்ரவா என்று இருந்தது.*

*பிறகு வரிசைக்ரமமாக க்ருதக்ருத்யா, க்ஷீரநதி, வ்ருஷபத்வஜ தீர்த்தம், பிதாமஹத் தீர்த்தம், கதாதர தீர்த்தம், பித்ரு தீர்த்தம், கபிலதாரா, ஸுதாக்கனி, சிவகயா தீர்த்தம், என்று இப்படி அநேக தீர்த்தங்களாயின.*

*இந்த பத்து நாமங்களேயும் ச்ராத்த, தர்ப்பணம் பண்ணுமலேயே உச்சரித்தால் உங்களுக்குப் பூர்ண திருப்தி ஏற்படும்.*

*அமாவாஸை திதியன்று பித்ருக்களின் த்ருப்தியை உத்தேசித்து ப்ராம்மண போஜனம் நடத்திஞல் அது சிராத்த பலனேவிட அதிக பலனே அளிக்கிறது.*

*இந்த ஸ்தானத்தில் பித்ருக்களின் த்ருப்திக்காக சிராத்த தினத்தில் உத்தமமான கபில பசுவை தானம் செய்தால் பித்ரு கணங்கள் இந்த க்ஷீரோதகக் கரையில் வாஸம் செய்வார்கள்.*

*இந்த வ்ருஷபத்வஜ தீர்த்தக்கரையில் வ்ருஷபோத்ஸர்க்கம் (அதாவது வ்ருஷபத்தைப் பூஜைசெய்து சுயேச்சையாகவிடுவது) அதைப் பண்ணிஞல் பித்ரு கணங்கள் அச்வமேத யக்ஞத்தில் புடோஸா என்னும் ஹவிஸ்ஸை புஜித்து திருப்தியடைவார்கள்.*

*ஏ! பித்ருக்களே, கபிலதாரா தீர்த்தத்தில் அமாஸோமவாரத்தன்று ச்ராத்தம் செய்வதஞல் கயாச்ராத்தத்தைவிட எட்டு பங்கு பலன் அதிகம் கிடைக்கிறது.*

*கர்ப்பசேதத்திஞல் இறந்த குழந்தைகள், பல்லுமுளேப்பதற்கு முன் இறந்த குழந்தைகள், இவைகளுக்கெல்லாம் இந்தக் கபிலதார தீர்த்தத்திஞல் முக்தி கிடைக்கிறது.*

*யக்ஞோபவீதம் பண்ணுவதற்கு முன் பாலகனும், விவாஹம் செய்வதற்கு முன் இறந்த பெண்ணுக்கும் இந்த தீர்த்தத்தில் பிண்டதானம் செய்வதிஞல் அக்ஷய திருப்தி கிடைக்கிறது. தீயிஞல் இறந்தவர்க்கும், பிரேத ஸம்ஸ்காரம் ஆகாதவர்களுக்கும், கபிலதாராபிண்ட தானத்திஞல் முக்தி கிட்டும்.*

*இறந்த பின் பத்துநாட்கள் க்ரியை செய்யாதவர்களுக்கும் இந்தத் தீர்த்தத்தில் பிண்டதானம்*

*செய்வதனுல் திருப்தி ஏற்படுகிறது. புத்ரன் இல்லாமல் இறந்தவர்களுக்கும், எள்ளும் தண்ணியும் இறைக்கக்கூட இல்லாமல் போனவர்களுக்கும் இந்த மதுஸ்ரவா தீர்த்தத்தினுல் தர்ப்பணம் செய்வதினுல் முக்தி கிடைக்கிறது.*

*திருடர்களாலோ, மின்னல் ஜலம் இவைகளினுலோ மரணம் அடைந்தவர்களுக்கு இங்கு சிராத்தம் உத்தமகதி கிடைக்கிறது.*

*தற்கொலே செய்து கொண்ட பாபிகளுக்கும் சிவகயா தீர்த்தமான இதில் பிண்டதானம் செய்வதனுல் திருப்தி ஏற்படுகிறது. பிதாவின் கோத்திரத்திலாவது, மாதாவின் கோத்திரத்திலாவது மரணமடைந்த, பெயர் தேரியாதவர்களுக்கு இங்கு பிண்டதானம் செய்வதால் அக்ஷயதிருப்தி ஏற்படுகிறது.*

*பத்தினியின் வர்க்கத்திலும், நண்பர்களில் ஒருவர் மரணமடைந்தால்கூட அவர்களுக்கு கூட திருப்தி ஏற்படுகிறது (இங்கு பிண்டதானம் செய்வதனுல்) ப்ராம்மணன் ஆனுலும் க்ஷத்திரியனுனுலும் சூத்திரனுனுலும், அந்திம ஜாதியில் பிறந்த எவர்களானுலும் சரி அவர்கள் பெயரைக்கூறி யார் இங்கு பிண்டதானம் செய்தாலும் நற்கதி கிடைக்கும்.*

*இறந்த பிறகு பசு, பக்ஷி, பிசாசயோனி இவைகளில் பிறந்தவர்களுக்கு இந்தக் கபிலதாராத் தீர்த்தத்தில் திருப்தி செய்வித்தால் அவர்களும் ஊர்த்வகதி யடைகிறுர்கள். மதுஸ்ரவா தீர்த்தத்தில் தர்ப்பணம் செய்வதனுல் மனுஷயோனியில் இறந்த பித்ருக்கள் திவ்ய யோனியை அடைந்து பித்ருக்களாகின்றனர்.*

*திவ்யலோகத்துப் பித்ருகணங்கள் தேவத்வத்தை அடைகிறுர்கள். அவர்களும் வ்ருஷபத்வஜ தீர்த்தத்தினுல் திருப்தியடைந்து ப்ரம்ம லோகத்தையடைகிறுர்கள். இந்தத் தீர்த்தம் சத்திமயுகத்தில் பாலாகவும்,*

*திரேதாயுகத்தில் தேனுகவும், த்வாபர யுகத்தில் நெய்யாகவும் (நெய்) கலியுகத்தில் ஜலமாகவும் மாறுகிறது.*

*இந்த உத்தமத் தீர்த்தம் வாராணஸியில் எல்லேக்கு வெளியிலிருந்த போதிலும் என்னுடைய ஸாந்நித்யத்திஞல் முக்யம் வாய்ந்த இந்தத் தீர்த்தத்தை வாராணஸிக்கு மத்தியில் இருப்பதாகவே கருதவேண்டும்.*

*பிதாமஹ கணங்களே! காசி ஜனங்கள் இங்குதான் முதலாவதாக வ்ருஷபச் சின்னம் பொறிக்கப்பட்டக் கொடியுடன் என்னே தரிசித்தார்கள். அதஞல் நான் இங்கு வ்ருஷபத்வஜன் என்னும் பெயருடன் எப்பொழுதும் இங்கு இருக்கிறேன்.*

*ஏ! பித்ருகணங்களே ! நான் உங்களுடைய சந்தோஷத்திற்காக ப்ரும்மா, நாராயணர், சூரியன் மற்றும் பாரிஷத கணங்களுடன் இங்கேயே வசித்துக் கொண்டிருப்பேன்.*

*பகவான் திவ்ய பித்ருகணங்களுக்கு இந்தவிதமாக வரம் கொடுத்துக் கொண்டிருக்கும்போது நந்தி என்னும் பெயருடைய முதல் பாரிஷதர் மஹாதேவரை வணங்கி இவ்வாறு கூறிஞர்.*

*நாதா! ஜயவிஜயீபவ, தங்களுடைய ஆக்ஞைப் பிரகாரம் ரதம் அலங்கரித்து நிறுத்தப்பட்டிருக்கிறது. அதில் ப்ருக்ருதி ரூபமான எட்டு சிம்மங்களும், தாது ரூபமான எட்டு வ்ருஷபங்களும் கஜங்களின் சின்ன ரூபமான எட்டு யானேகளும், ஐந்து ஞானேந்த்ரியங்களும், சித்தபுத்தி அஹங்காரம் ஆகிய எட்டுக் குதிரைகளும் பூட்டப்பட்டிருக்கின்றன.மனதான ஸாரதி கையில் சவுக்குடன் ரதத்தட்டில் தயாராக அமர்ந்திருக்கிருன்.*

*கங்கையும் யமுனேயும் கால்களாகவும், காற்றே சக்கரங்களாகவும், சந்தியும், காலேயுமே இரு சக்கரங்களாகவும், ஆகாசமே பவித்ரமுடைய குடையாகவும் இருக்கிறது. நக்ஷத்ரக்கூட்டங்கள் ரதத்தில்*

*அடித்த ஆணியாகவும், ஸர்ப்பக்கூட்டங்களே ரதத்திலுள்ள கயிறுகளாகவும் இருக்கின்றன.*

*மார்க்க தரிசினிகளாகிற ஸ்துதிகளே அதிலிருக்கும் சிகரமாகவும், ஸ்ம்ருதிகளே கூறையாகவும், தக்ஷிணைகளே அச்சாகவும், யக்ஞங்களே தேரின் பாதுகாவலர்களாகவும், ஆசனமே ப்ரணவமாகவும், காயத்ரியே கால் வைக்கும் பீடமாகவும், ஏழுபுவனங்களே எழு படிகளாகவும், சந்திர சூரியர்களே த்வாரரக்ஷகர்களாகவும் இருக்கிறார்கள்.*

*மற்றபடி - அக்னிதேவர்; ரதம் செல்லுமிடம் சந்திரிகையாகவும், சூரியப்ரபையே கொடியாகவும்; ஸாக்ஷாத் வாக்தேவதையே சஞ்சலமான சாமரம் வீசுபவளாகவும், இருக்கிறாள். கந்தர் கூறினார்: நந்திகேசர் இவ்வாறு கூறியதும் தேவதேவரான சங்கரர், பினாகமெனும் தனுஸைக்கையிலேந்திக் கொண்டு பகவான் நாராயணர் கைகளுக்குக்கொடுக்க, அஷ்டலக்ஷ்மிகளும் ஆரத்தி சுழற்ற எழுந்திருந்து நின்றார்.*

*அச்சமயம் சாரணர்கள் பாடும் மங்கள கீதத்தின் த்வனி திவ்யவாத்யங்களின் த்வனிகளைவிட மேலோங்கி ஸ்வர்க்க மத்யபாதாளத்திலும் எதிரொலித்தது. அந்தத் திவ்யத்வனிகள் நான்குப் பக்கங்களும் முழங்க ஸமஸ்த புவனங்களிலிருந்தும் ஜனங்கள் அழைப்புவந்த விருந்தினர்களைப் போல் காசியை நோக்கிப் பிரயாணம் ஆனார்கள்.*

*அச்சமயம் முப்பத்து முக்கோடி தேவதை கணங்களும், இருபதாயிரம் கோடி சிவகணங்களும், தொண்ணூறு கோடி சாமுண்டிகளும், பத்துகோடி பைரவிகளும்,*

*எண்பது கோடி பலம் பொருந்திய மயூர வாஹனங்களில் ஏறிய என்னுடைய அநுசரர்களான ஷண்முக கணங்களும், தோழர்களான குமாரகணங்களும்; பளபளக்கும் எட்டுக்கோடி கோடரிகளைக் கையிலேந்தி*

*தொந்தி குலுங்க வேகமாக நடக்கும் விக்னங்களைப் போக்கும் கஜமுக கணங்களும், 80,000 ப்ரம்மவாதிகளான முனிகணங்களும் ; அதே எண்ணிக்கையுள்ள க்ருஹஸ்த தர்மத்தை அனுசரிக்கும் ரிஷிகணங்களும், முப்பதுகோடி பாதாளவாசிகளான நாக கணங்களும், நாற்பதுகோடி பரமசைவ தைத்யதானவ கணங்களும், எட்டு லக்ஷம் கந்தர்வ கணங்களும், ஐந்து லக்ஷம் யக்ஷராக்ஷஸ கணங்களும், இரண்டுலக்ஷத்து பதினாயிரம் வித்யாதர கணங்களும், ஸ்வர்க்கவாசிகளான உத்தம அப்ஸரகணங்கள் எட்டா யிரமும், எட்டுலக்ஷம் - கோமாதாக்களும், அறுபதினாயிரம் கருடகணங்களும் நானாவிதமான ரத்ன சமூகங்களையும் காணிக்கையாகக் கொண்டுவந்திருக்கும் ஏழு சமுத்ரங்களும், எண்பதினாயிரம் நதிகளும், எண்ணாயிரம் பர்வதங்களும், முன்னூறு வனஸ்பதிக் கூட்டங்களும்; எட்டுதிக்பாலர் களும், பினாகபாணி எழுந்தருளியிருக்குமிடத்திற்கு வந்தனர்; இந்த எல்லா ஜனங்களுடனும் சேர்ந்து பரம சந்தோஷ சித்தராய் நான்கு பக்கங்களும் அன்பர்களுடைய ஸ்துதி வசனங்களைக் கேட்டவராய் அந்த மனோகரமான ரதத்தில் ஏறி பகவான் த்ரிலோசனர் காசீ புரியில் ப்ரவேசித்தார்;*

*ப்ரவேசிக்கும் பொழுது மிக்க மகிழ்ச்சியுடன் பகவதி கிரிஜா தேவியுடன் சிவன் ஆனந்தமங்களத்தின் சுரங்கமான, ஸ்வர்க்கத்தைவிட அதி ரமணீயமான வாராணஸிபுரியில் பிரவேசித்து இங்கும் அங்கும் நோக்கினார்.*

*ஸ்வாமி கார்த்திகேயர் கூறினார்:- ஒருவர் கோடிகோடி ஜன்மங்களின் பாபங்களை நசிப்பிக்கும் புண்ணியமான இந்த ஸம்பவத்தைப் படிப்பவர்களும், படிக்கச் சொல்லிக் கேட்டவர்களும், சிவஸாயுஜ்யபதவியை அடைவார்கள்.*

*விசேஷமாக ச்ராத்த சமயத்தில் இதை அவசியம் படிக்க வேண்டும்; இதனைப் படிப்பதினால் அந்த ச்ராத்தம்*

*பித்ருக்களுக்கு அக்ஷய திருப்தியைக் கொடுப்பதாகும்;*

*ஒருவருஷம் வரையில் சிவனுடைய சமீபத்தில் இந்த வ்ருஷபத்வஜர் மஹாத்ம்யத்தைப் படிப்பதனுல் புத்திரன் இல்லாதவர்கள் புத்ரலாபத்தை அடைவார்கள்.*

*இந்த விதமாக விஸ்வேஸ்வரர் காசியில் ப்ரவேசித்த வ்ருஷபத்வஜர் மஹாத்ம்யத்தைப் படிப்பதனுல் புத்திரன் இல்லாதவர்கள் புத்ரலாபத்தை அடைவார்கள்.*

*இந்த விதமாக விச்வேஸ்வரர் காசியில் ப்ரவேசித்த வ்ருத்தாந்தத்தை நான் உமக்கு வர்ணித்தேன். இது ஆனந்தமான கிழங்கின் விதை;*

*ஒருவன் ஸந்தோஷமாக இந்த வ்யாக்யானத்தைப் படித்துக் கொண்டு புதுக்ருஹத்தில் பிரவேசித்தானுனுல் அந்தக்ருஹம் எல்லா வஸ்துக்களும் நிரம்பியதாக இருக்கும்; இது நிச்சயம். இதைக்கேட்டதனுல் பகவான் ஸ்வயம் விஸ்வநாதரே ஸந்தோஷமடைவாரென்ருல் உலகத்திலுள்ள ஜனங்கள் யாவரும் ஸந்தோஷமடைவார்கள் என்பதில் என்ன ஸந்தேஹம் இருக்கிறது.*

*இந்தக் கதையில் பகவான் விஸ்வேஸ்வரரே காசியை அடைவதற்கு சிரமப்பட்டார் என்பதை வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதனுல் நாம் இச்சிக்கும் பொருள் நமக்குக் கிடைப்பது மிகவும் துர்லபம் என்று தோன்றினுல் இந்த உபாக்கியானத்தை நிரந்தரம் பாராயணம் செய்யவேண்டும்.*

*இவ்வித ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷா டீகாவான வ்ருஷபத்வஜ ஆவிர்பாவம், கபிலதாரா தீர்த்த வர்ணனம் ஆகிய இவைகள் அடங்கிய அறுபத்தி இரண்டாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*

# அத்யாயம் 63

அகஸ்திய ரிஷி கூறினார்:- ஏ! தாரகாஸுரனுடைய சத்ருவே! பகவான் த்ரிபுராந்தகன் கண்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பதும் ஸமஸ்த மனோரதங்களும் நிரம்பிய காசீபுரியைப் பார்த்துவிட்டு, என்ன செய்தார்? அதை எனக்கு விவரியுங்கள்.

ஸ்கந்தர் கூறினார்:- பதிவ்ரதையின் பதியே, அகஸ்தியா! பகவான் சந்திரசேகரன் காசியைத் தன்னுடைய நேத்திரங்களுக்கு விருந்தாக அமைத்துக்கொண்டு என்ன செய்தார் என்பதை இப்பொழுது கூறுகிறேன்.

பரம பக்தர்களிடம், வாத்ஸல்யத்தோடு கூடிய சித்தமுடைய பகவான் ஸர்வக்ஞநாதன் ஒரு குஹையில் அமர்ந்திருக்கும் ஜயகீஷ்யர் என்னும் மஹாமுனியைப் பார்த்தார்.

விஸ்வநாதர் வ்ருஷபராஜர் மீது ஆரோஹணித்து கிரிஜாதேவியுடன் காசியிலிருந்து மந்த்ராசலத்துக்குப் புறப்பட்ட (பிரயாணப்பட்ட) ஸமயத்திலிருந்து இந்த மஹாமுனி பகவான் விஸ்வேஸ்வரர், திரும்பவும் இங்கு வந்து அவருடைய சரண கமலங்களை தரிசிக்கும் வரையில் இந்தக் குஹையை விட்டு வெளிவரமாட்டேன். ஒரு சொட்டுத் தண்ணீர்கூட அருந்தவும் மாட்டேன், ஒன்றும் உண்ணவும் மாட்டேன் என்று கடினமான வ்ரதம் எடுத்துக் கொண்டிருந்தார்.

ஏ! கும்பமுனியே, இந்த யோகி ராஜனான ஜெயகீஷ்யர் என்னும் ரிஷி எந்த யோகதாரணையின் பலத்தினாலேயோ அல்லது சம்புவின் அனுக்ரகத்தினாலேயே அன்னம் தண்ணீரைத் தியாகம் செய்து அங்கு அமர்ந்து தபஸ் செய்து கொண்டிருந்தார்?

இந்த ரஹஸியத்தை மஹாதேவர் ஒருவரே தான்

அறிவார்; மற்றவர்கள் இந்த ரகசியத்தைப் பற்றி என்ன அறிவார்கள்?

இதே காரணத்தினுலே ப்ரமதகணங்களின் நாதனுன சிவபிரான் முதன் முதலில் அவரைக் காணச் சென்ருர். அந்த குஹையைச் சென்று தரிசிக்க வேண்டிய சுபதினத்தைக் கூறுகிறேன். கேளுங்கள்; ஆனி மாதம் சுக்லபக்ஷத்து சதுர்தசி திதியன்று ஸோமவாரமும் அனுஷம் நக்ஷத்ரமும் என்று கூடுகிறதோ அந்தப் புண்ணிய தினத்தன்று அந்த இடத்திற்கு மஹாயாத்ரை செய்ய வேண்டும்.

அந்த நாளிலிருந்து காசியில் புண்ணியமான ஜ்யேஷ்டஸ்னனம் பிரஸித்தமாயிற்று. அங்கு ஜ்யேஷ்டேஸ்வரர் என்னும் சிவலிங்கம் தானுகவே வெளிப்பட்டிருக்கிறது.

சூரியனுடைய ப்ரகாசம் பரவுவதால் அந்தகாரம் எப்படி விலகுகிறதோ, அதுபோல் இந்த லிங்கத்தைத் தரிசனம் செய்த மாத்திரத்திலேயே நூற்றுக்கணக்கான ஜன்மங்களில் சேகரித்து வைத்திருக்கும் பாபங்கள் க்ஷணத்தில் மறைகின்றன.

அங்கு ஒருவன் ஜ்யேஷ்டவாபி என்னும் கிணற்றில் ஸ்னனம் செய்து பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து ஜ்யேஷ்டேஸ்வரரையும் தரிசனம் செய்தால் அவர்களுக்குத் திரும்பவும் பூமியில் பிறக்க வேண்டியே வராது.

அதே ஸ்தானத்தில் ஜ்யேஷ்டேஸ்வரருக்கு சமீபத்திலேயே ஸர்வஸித்திப்ரதாயினியும், எல்லோரிலும் ச்ரேஷ்டமானவளும், ஜ்யேஷ்டகௌரிதானே ஆவிர்பவித்திருக்கிருள்.

ஜ்யேஷ்ட மாதத்து சுக்லாஷ்டமியன்று அங்கு மஹோத்ஸவம் நடக்கும். அன்று இரவில் கண்விழித்து மிகவும் மனநிறைவுடன உற்சவம் கொண்டாட வேண்டும்.

மிகவும் அபாக்யவதியான பெண்ணும்

*ஜ்யேஷ்டவாபியில் ஸ்னனம் செய்து ஜ்யேஷ்டா கௌரியை தரிசித்தாளானல் பரம ஸௌபாக்யத்தைப் பெறுவாள்.*

*அங்கு மஹாதேவர் தானே எப்பொழுதும் வஸித்துக்கொண்டிருப்பதனுல் நிவாஸேஸ்வரர் என்ற மற்றொரு லிங்கமும் அங்குத்தோன்றி பிரஸித்தியடைந்திருக்கிறது.*

*அந்த நிவாஸேஸ்வர லிங்கத்தை ஸேவிப்பதனுல் க்ருஹத்தில் ஸர்வ ஸம்பத்துகளும் பெருகி எப்பொழுதும் நிரம்பியிருக்கின்றன.*

*உத்தம நரன் ஒருவன் ஜ்யேஷ்டேஸ்வரரின் சமீபத்தில் நெய் தேன் முதலிய உபகரணங்களுடன் ச்ராத்தம் செய்வானுனல் பித்ருக்களை அவன் மேன்மையான நிலையில் ஸந்தோஷப்படுத்துகிறவனுகிறுன்.*

*காசியில் ஜ்யேஷ்ட தீர்த்தக்கரையில் சக்தி அனுஸாரம், தானம் செய்வதினுல் உத்தமஸ்வர்க்காதி போகங்களை அனுபவித்து விட்டு கடைசியில் முக்தியடைகிறுன்.*

*காசிக்கு வரும் மங்களத்தை விரும்பும் ஜனங்கள் முதன் முதலாகக் காசியில் ஜ்யேஷ்டேஸ்வரரை ஸேவித்து அர்சித்து ஜ்யேஷ்டா கௌரியைப் பூஜித்தால் எல்லாவற்றிலும் உன்னத பதவியை அடைகிறுர்கள்.*

*இதற்குப் பிறகு க்ருபாநிதியான பகவான் தூர்ஜடி எல்லா தேவதைகளும் கேட்கும்படி நந்தியை அழைத்துக் கூறினுர் - ஏ நந்தியே ! இங்கு ஒரு மனேஹரமான குஹையிருக்கிறது. அதில் நீ நுழைந்து செல். அதற்குள் என்னுடைய பக்தரான ஜயகீஷ்யர் என்னும் தபோதனர் இருக்கிறுர்.*

*ஏ! நந்தி, அவர் மிகவும் கடுமையான நியமத்தை அனுஷ்டித்துக் கொண்டிருப்பதில் அவருடைய தேஹத்தில் தோலும், எலும்பும், நரம்பும் மாத்திரமே*

மீதியிருக்கின்றன. நீ எனது தரிசனத்திற்காக த்ருடவ்ரதஞக இருக்கும் என்னுடைய பக்தனைத் தூக்கிக் கொண்டுவா.

எப்பொழுது நான் இந்தக் காசியிலிருந்து மிக்க அழகு வாய்ந்த மந்த்ராசலத்துக்குக்குப் போனேனே, அப்பொழுதிருந்து இந்த ரிஷி உணவு, ஜலம் இவைகளை திரஸ்கரித்துவிட்டுக் கடுமையான நியமத்தில் இருக்கிருர். அதஞல் நீ எனது கையிலிருக்கும் இந்த லீலாகமலத்தை எடுத்துச் செல்லவும். பரம போஷணைதரும் இந்த லீலாகமலத்தால் அவரது சரீரத்தைத் தொடு என்ருர்.

இதற்குப் பிறகு நந்தி தேவர் பகவானிடமிருந்து அந்த லீலா கமலத்தை வாங்கிக்கொண்டு மஹா தேவரை வணங்கி அந்த கம்பீரமான குஹையில் பிரவேசித்தார். அங்கு சென்று தபரூப அக்னியால் உலர்ந்த தேகத்துடனும் ஏகாக்ரசித்ததாரணையிஞல் வெளிஞானம் அற்றவருமான முனிவரைப் பார்த்தவுடனே தன் கையில் இருக்கும் லீலா கமலத்திஞல் அவரைத் தொட்டார்.

பிறகு என்ன? அந்தக்கமலம் அவர்மீது பட்டவுடனேயே கடும் கோடையிலும் உலர்ந்திருக்கும் தடாகத்தில் மழையில் தாராப்பிரயோகம் சேரும்பொழுது தவளை எப்படி ஸந்தோஷத்திஞல் துள்ளிக்குதிக்குமோ அதுபோல முனிவரும் உல்லாஸத்திஞல் துள்ளிக்குதித்தார். அப்பொழுது நந்தி முனிராஜரை சீக்கிரமாக தூக்கியெடுத்துக் கொண்டு வந்து தேவ தேவரின் சரணங்களுக்கு முன்ஞல் வணங்கிக்கொண்டு நிறுத்திஞர்.

இதற்குப் பிறகு அந்த திகிலடைந்த முனி தனக்கு முன்ஞலே வாமபாகத்தில் பகவதி கௌரி தேவியிடம் விளங்கும் பகவான் ஸ்ரீ சங்கரரைப் பார்த்தவுடனே வணங்கத் தொடங்கிஞர். பிறகு அம்முனி பூமியில் வணங்கியெழுந்து மிகவும் பக்தியுடன் சந்ரசேகரரைத் துதிக்கத் தொடங்கிஞர்.

சிவபிரானும், சாந்தரும், ஸர்வக்ஞரும்,

*சுபமயமானவரும் ஜகத்தின் ஆனந்தத்திற்குக் கிழங்கு போன்றவரும், பரம ஆனந்தத்தின் நிலையானவரும் உருவமற்றவரானாலும் உருவத்துடன் இருப்பவரும், அநேக உருவமெடுத்தவரும், விதிஸ்வரூபரும், ப்ரம்மா விஷ்ணு இவர்களால் துதிக்கப்படுபவரும், விரூபாக்ஷருமான அவரை அடிக்கடி வணங்குகிறேன்.*

*ஏ! நாதா! தாங்களே அசையும் பொருள், அசையாப்பொருள் எல்லாம்; தங்களுக்கு வணக்கம்; தாங்களே மூன்று உலகங்களிலும் சிறந்தவர்; தாங்களே காமதேவனை பஸ்மமாக்கினவர்; தாங்கள் சேஷம் விசேஷம் இரண்டுமில்லாதவர். சேஷ நாகத்தை அங்கத்தில் தரித்துக் கொண்டிருக்கும் தங்களுக்கு நமஸ்காரம்.*

*ஹே! ஸ்ரீகண்டா! தங்கள் கழுத்தில் விஷம் விளங்குகிறது. வைகுண்டநாதரே! தங்கள் சரணத்தில் வணங்குகிறார். தங்கள் சக்தி ஒருபோதும் குன்றாது, தங்களுக்கு வணக்கம். ஸ்வயம் சக்தியே தங்களது இடபாகத்தில் விளங்கிக் கொண்டிருக்கிறாள்.*

*தங்களுக்குத் தேஹம் கிடையாது. ஆனாலும் ஸுந்தரதேகத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறீர்கள். தேஹத்தைத் தரித்துக்கொண்டிருக்கும் உங்களை ஒருதரம் வணங்கியவர்கள் மறுபடியும் தேஹம் எடுக்கமாட்டார்கள். அதனால் தங்களுக்கு நமஸ்காரம்.*

*தாங்களே காலம். காலத்திற்கும் காலர்; மஹாகாலர் தாங்களே, உலகின் நன்மையின் பொருட்டு காலகோடி விஷத்தைப் பானம் பண்ணினீர்கள்; தாங்கள் ஸர்ப்பத்தை ஆபரணமாகவும், யக்ஞோபவீதமாகவும் அணிந்துள்ளீர்கள்.*

*ஏ! கண்ட பரசுவே, தாங்கள் சந்திரகண்டத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறீர்கள்.*

*ஸமஸ்த துக்கங்களையும் கண்டனம் செய்கிறீர்கள்.*

*கட்கத்தையும் கேடயத்தையும் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அப்படிப்பட்ட தங்களை வணங்குகிறேன். தேவதைகள் எப்பொழுதும் தங்கள் குணத்தையே பாடுகிறார்கள். ஜடா மகுடத்தில் கங்கை அலைகளாகிய மாலைகளை அணிவிக்கிறாள். தாங்கள் கௌரியின் ப்ராணநாதர்; தாங்கள் கிரீசர், கிரிகளுக்கு நாயகன்.*

*அர்த்த சந்திரன் தங்களுக்கு சிரோபூஷணமாக விளங்குகிறான். பூர்ணசந்திரனும் ஸூர்யனும், அக்னியும் தங்களுக்கு மூன்று கண்களாக இருக்கிறார்கள். திக்குகளை வஸ்திரமாக அணிந்தவரே தங்களுக்கு வணக்கம்.*

*ஏ! ஜகதீசா! தாங்கள் புராணபுருஷர். பக்தர்களின் ஜரை என்னும் ஜன்மத்தைத் தொலைப்பவர். பாபங்களுக்கு முடிவைக்கொடுப்பவர்; ஜீவன்களுக்கு ஜீவார்த்தமாக இருக்கிறீர்கள்.*

*ஹே! கங்காதரா! தாங்களே ஜகத்துக்கு நேத்ரமாக இருக்கிறீர்கள். அதைத் தவிர தாங்கள் முக்கண்ணராகவும் இருக்கிறீர்கள். தங்கள் கையில் பிநாகமும், டமருவுகமும் த்ரிசூலமும் விளங்குகின்றன. தேவலோகத்து வாஸியான தேவேந்த்ரனுக்கும் ஆதிநாதனாக விளங்குகிறீர்கள். மூன்று வேதங்களும் தங்களுடைய மஹிமையைப் பாடுகின்றன. அதனால் தங்களை அடிக்கடி வணங்குகிறேன்.*

*மூன்று வேதஸ்ரூபமாக இருக்கிறீர்கள். எப்பொழுதும் ஸந்தோஷமாக இருக்கிறீர்கள். பக்தர்களுக்குப் பரம ஸந்தோஷத்தை அளிப்பவராக இருக்கிறீர்கள். தாங்களே யாகத்தின் தீக்ஷிதர். தேவதைகளுக்கும் தேவதை; அப்படிப்பட்ட தங்களை வணங்குகிறேன்.*

*தூரதர்சியே; தாங்களே ஸமஸ்த பாபங்களையும் தூரவிலக்குகிறீர்கள். எல்லாவற்றையும் விட விலகி நிற்கின்றீர்கள். குற்றங்களைப் பொடிப் பொடியாக்குபவர். அடைவதற்கு துர்லபமாக உள்ளீர்கள். அப்படிப்பட்ட*

*தங்களுக்கு நமஸ்காரம். ஹே! சந்திரகலாதரா, ஸமஸ்த தோஷங்களும் அற்றவர் தாங்கள். தத்தூர புஷ்பத்தை விரும்புபவர்; தூர்ஜடி, தங்களுக்கு நமஸ்காரம்.*

*ஏ! நீலகண்டா, தாங்களே தீரர், தாங்களே தர்மம்; தர்மத்தைப் பரிபாலிப்பவரும் தாங்களே; ஹே! நீலலோஹிதா, நான் தங்களேயே அடிக்கடி வணங்குகிறேன்.*

*தாங்கள் கேவலம் தங்களுடைய நாமத்தை ஸ்மரணே செய்பவர்களுக்கே த்ரைலோக்ய ஐஸ்வர்யங்களேயும் அருளுகிறீர்கள்; தாங்கள் பிஞகத்தைத் தாங்கிநிற்கும் ப்ரமத நாதர்; தங்களுக்கு நமஸ்காரம்;*

*தாங்களே பசு பாசங்களே அறுக்கும் பசுபதி; தங்கள் நாமத்தை உச்சரிப்பவர்களுடைய கோரமான பாபங்களேத் தாங்களே விலக்குகிறீர்கள். தங்களுக்கு நமஸ்காரம்.*

*தாங்கள் பராத்பரர்; ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டிவிடப்பட்டவர், தாங்கள் பரம் அபரம் இரண்டிற்குமே மேலானவர்; தங்கள் குணவிசேஷம் அபாரம். தங்களுடைய கதை பரம பவித்ரம்; அதனுல் தங்களுக்கு வணக்கம்.*

*தாங்களே வாமதேவர்; பாதி சரீரத்தைத் தரித்தவர்; வ்ருஷபத்தில் ஸஞ்சரிப்பவர். பீமர் (பயங்கரமானவர்) மஹாதேவர், பணிந்தவர்களின் பயத்தைப் போக்கடிப்பவர். தங்களுக்கு என் வணக்கம்.*

*ஹே! மஹாதேவா! தாங்கள் எல்லா தேஜஸ்ஸுகளுக்கும் ஸ்வாமீ, பரமேஸ்வரர்; பவமும் தாங்களே; பவநாசகரும் தாங்களே; தாங்களே பூதபதி; தங்களுக்கு வணக்கம்.*

*தாங்கள் பார்வதிநாதர். தாங்கள் ம்ருத்யுஞ்ஜயர், தாங்களே தக்ஷயக்ஞத்தை த்வம்ஸம் செய்தவர். தர்மராஜனுக்கும் குபேரனுக்கும் பரமப்ரியமானவர்*

*தங்களுக்கு வணக்கம்; தாங்களே யக்ஞபுருஷர், தாங்களே யக்ஞகர்த்தா, தாங்களே யக்ஞத்தின் பலனை அருளுபவர்; தாங்களே ருத்ரபதி, வெறுக்கத்தக்க ரோதனத்தை யழிப்பவர். ஸர்வ ஸம்பத்தையும் அருளுபவர்.*

*தாங்கள் த்ரிசூலத்தைத் தரிப்பவர். சாஸ்வதமான ஈஸ்வரர். ஸ்மசான பூமியில் ஸஞ்சரிப்பவர்.*

*ஏ! க்ஷமிப்பவரே, தாங்களே க்ஷமையின் உருவம். க்ஷேத்ரக்ஞன ஆன்மாவும் தாங்களே, ஸகல விஷயங்களிலும் சதுரர், குறையைப் போக்கடிப்பவர், பால் போன்ற நிறத்தவர்; தங்களுக்கு வணக்கம்.*

*அந்தகாசுரனை அழித்தவரே, தாங்கள் ஆதியந்தமற்றவர், தாங்களே இடாவிற்கு (பிருத்வி, வாணி) ஆதாரம், தாங்களே ஈசன், தாங்களே இந்திரன்; உபேந்த்ராதி தேவர்கள் தங்களைத் துதிக்கிருர்கள். தங்களுக்கு வணக்கம்.*

*தாங்கள் உமாகாந்தர்; ஊர்த்வரேதா; தனியானவர், ஏக ரூபமானவர், ஸகல ஸம்பத்துக்களையும் கொடுக்கும் தாதா, தங்களுக்கு வணக்கம்.*

*தாங்கள் செய்யாத கர்மம் இல்லை. அம்பிகா தேவியின் ஸ்வாமி, தாங்களே ப்ரணவம் வஷட்கார பூ: புவ: ஸுவ: அதனுல் தங்களுக்கு நமஸ்காரம்.*

*ஏ உமாநாதா, இவ்வுலகில் காண்பதும், காணுததுமான ஸகல பொருள்களும் தாங்களே. தங்களைத் தவிர வேறென்றும் கிடையாது. ப்ரபோ! நன்று; நான்கூட உங்களைத் துதிக்க முடியுமா? அந்த ஸாமர்த்யம் எனக்கேது? துதியும், துதிசெய்பவரும், துதிக்கப்படுபவரும் தாங்களே.*

*வாச்யமும், வாசகமும், வசனமும் தாங்களே, அதனுல் வணங்குகிறேன். ஏ மஹாதேவா, தங்களைத் தவிர மற்றெருவரை நான் அறிவதுமில்லை. ஹே! மஹேஸ்வரா! அப்படியிருக்கும்போது துதிப்பது எப்படி?*

*ஹே! கௌரீசா! மற்றவர்களை நான் வணங்கக்கூட*

*மாட்டேன். ஹே! சிவா, மற்றவர்கள் பேரை நான் உரைக்கக் கூட மாட்டேன். மற்றவர்கள் பேரை உரைக்கும்போது நான் ஊமையாகிவிடுவேன், மற்ருெருவர் கதையை நான் கேட்கும்போது செவிடாகி விடுவேன். மற்ருெருவரை அடைவதற்கு முன் நான் நொண்டியாகிவிடுவேன். மற்ருெருவரைப் பார்க்கும்போது நான் குருடனுகி விடுவேன். எனக்குத் தாங்களே ஸ்வாமி, தாங்களே கர்த்தா, தாங்களே போஷிப்பவரும், அழிப்பவரும்; அநேக தெய்வங்கள் உண்டென்று நினைப்பது மூடர்களுடைய கற்பனை. அதனுல் ஏ! மஹேச்வரா, அதனுலேயே நான் தங்களை அடிக்கடி சரணடைகிறேன்.*

*நான் ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிறேன். என்னைக் கரையேற்றுங்கள். இந்தவிதமாக மஹாமுனி ஜலகீஷ்வ்யர் ஸ்தாணுவாகிய பகவானுக்கு முன்னுல் தானே ஸ்தாணுவாக நின்று மௌனமானுர். (ஸ்தாணு என்ருல் மரத்தின் அடிபாகம்) அப்பொழுது சந்திரபூஷணன் முனியின் இந்தஸ்தியைக் கேட்டுவிட்டு ஜயகீஷ்வயர் கூறினுர்! வரம் கேள் என்று. ஜயகீஷ்வ்யர் கேட்டார். ஏ! பரமபதத்தை அளிப்பவரே, பவாநீசா! தேவதேவா! தாங்கள் பதத்தை அளிப்பவரே! பவாநீசா! தேவதேவா! தாங்கள் சரணக் கமலங்களை விட்டு நீங்காமல் இருக்க வரம் தாருங்கள்.*

*ஹே! நாதா! தாங்கள் சற்றும் யோசியாமல் இன்னும் ஒரு வரம் தரவேண்டும், நான் தங்களுடைய லிங்கத்தை ஸ்தாபிக்கிறேன். அதில் தாங்கள் எப்பொழுதும் வஸிக்க வேண்டும்.*

*ஈச்வரர் கூறினுர்:- குற்றமற்றவனே மஹாபாகா, ஜெயகீஷ்வ்யா, நீ சொன்னவைகளெல்லாம் நடந்துவிடும்; நானுக மற்ருெரு வரமும் தருகிறேன்.*

*நான் உனக்கு நிர்வாண நிலைக்கு ஸாதகமான யோக*

சாஸ்ரத்தைத் தருகிறேன். இன்றையிலிருந்து நீ எல்லா யோகிகளுக்கும் மத்தியில் யோகாசார்யனுகத் திகழ்வாய்.

ஏ! தபோதனு! நீ என்னுடைய அருளினுல் யோகசாஸ்திரத்தின் ஸம்பூர்ண கூடத த்வத்தையும் கூட நீ அறிவாய். அதன் உதவியால் கடைசியில் நிர்வாண பதவியை அடைவாய்.

நந்தி, ப்ருங்கி, ஸோமநந்தி முதலியவர்களைப் போல் நீயும் ஜராமரணம் இல்லாமல் என்னுடைய பரம பக்தனுகத் திகழ்வாய்.

அநேக வ்ரதங்கள், அநேகவித தபங்கள், அநேகவித நியமங்கள், அநேகவித தானங்கள் இருக்கின்றன.

அவைகளைக் கல்யாணத்திற்கு ஸாதகமாகவும், பாபத்திற்கு இடையூறு என்றும் கூறுகிருர்கள். ஆனுல் எந்த நியமத்தை எடுத்துக் கொண்டாயோ, அது முற்றிலும் கடுமையானது.

என்னைத் தரிசித்து விட்டே உணவு உட்கொள்வேன் என்று நீ எடுத்துக் கொண்ட விரதம் உத்தமமானது. ஏனென்ருல் என்னைத் தரிசியாமல் உணவு உண்ணும் மூடர்கள், பத்திரம், பஷ்பம், பலம் இவைகளால் என்னைப் பூஜியாமலேயே உண்கிருர்கள். அவர்கள் இருபத்தோரு ஜென்மம் மணலை புஜிக்கிறவர்களாகிருர்கள்.

நீ எந்த கடினமான விரதத்தை எடுத்துக் கொண்டு அனுஷ்டானம் செய்தாயோ இமயமும், நியமமும் அதில் பதினுறில் ஒரு பங்கு கூடப் பெருது.

அதனுல் நீ எப்போதும் எனது சரணங்களின் ஸமீபத்தில் வசித்துக் கொண்டிருக்கக் கடவாய்; உன்னுடைய அந்திமக்காலத்தில் அங்கேயே ஸந்தேஹமில்லாமல் உனக்கு நிர்வாணம் கிடைக்கும்.

ஒருவன் காசியில் பரமதுர்லபமான இந்த

*ஜெயகீஷ்வ்யேஸ்வரர் என்னும் இந்த மூன்று வருஷபரியந்தம் இடைவிடாது ஸேவித்து வந்தானுனல் நிச்சயமாக ப்ராப்தியடைவான்.*

*ஒருவன் இந்த ஜெயகீஷ்வ்யருடைய குஹைக்குச் சென்று யோகாப்யாஸம் செய்தானுனல் அவன் என்னுடைய அனுக்ரஹத்தினுல் ஆறு மாதங்களிற்குள்ளாகவே அபீஷ்டஸித்தியைப் பெறுவான்.*

*மஹத்தான ஸித்திகளை விரும்பும் பக்தர்கள் விடாமுயற்சியுடன் உன்னுல் ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கத்தைப் பூஜை செய்து இந்த ரமணீயமான குஹையை தரிசிக்க வேண்டும்.*

*ஜேஸ்டேஸ்வர க்ஷேத்திரத்தில் இருக்கும் இந்த சிவலிங்கம் எல்லா ஸித்திகளையும் அருளும் தாதா. இதை தரிசித்து, ஸ்பர்சித்து, பூஜித்தால் பாபராசிகள் விலகிவிடும்.*

*இந்த ஜ்யேஷ்டேஸ்வர க்ஷேத்திரத்தில் ஏதாவது ஒரு சிவயோகியை பிக்ஷை செய்வித்தால் கோடி ஜனங்களுக்கு உணவு அளித்த பலன் கிடைக்கும்.*

*ஜெயகீஷ்வ்யேஸ்வரர் என்னும் லிங்கத்தைக் கலியுகத்தில் விசேஷமாக பாபபுத்தியுள்ளவர்களிடமிருந்து முயற்சியுடன மிக ரஹஸ்யமாகப் பாதுகாத்து வரவேண்டும்.*

*ஏ! தபோதனு, நான் ஸாதகர்களுக்கு யோகஸித்தியருளுவதற்காக எப்பொழுதும் இந்த லிங்கத்தில் ஆவிர்பவித்திருப்பேன்.*

*ஏ! மஹாபாகா ஜெயகீஷவ்யா, நான் வேறொரு வரம் கூட அளிப்பேன் கேள்:- உன்னுல் இயற்றப்பட்ட இந்த ஸ்தோத்திரம் பரமயோக ஸித்தியளிக்க வல்லது; மஹாபாபத்தைப் போக்கடிக்க வல்லது. பரம புண்ணியத்தைப் பெருக்க வல்லது.*

*இந்த ஸ்த்தோத்திரத்தைப் பாராயணம் செய்யும்*

ஜனங்களுக்கு இவ்வுலகில் அஸாத்தியமான விஷயம் ஒன்றுமில்லை. அதனால் உன்னதமான ஸாதகர்கள் இதைப்பெறும் முயற்சியுடன் படிப்பார்களாக.

ஸந்தோஷத்தினுல் மலர்ந்த பார்வையுடய பகவான் காமசத்ரு ஜெயகீஷ்வ்ய ரிஷிக்கு இந்த விதமான வரங்களேயளித்து அங்கு கூடியிருக்கும் காசிவாசிகளான ப்ராம்மணர்களேப் பார்த்தார்.

ஸ்கந்தர் கூறினுர்: ப்ராக்ஞர்கள் பெரும் முயற்சியுடன் இந்த ஒப்பு உவமையில்லாத உபாக்கியானத்தைச் கேட்பார்களானுல் அவர்கள் பாவம் அற்றவர்களாக ஆகிறுர்கள். அவர்களே ஒருவிதமான இடையூறுகளும் உபத்திரவிக்காது.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்திரார்த்த பாஷாடீகாவான ஜேஷ்டேஸ்வரர், ஜெயகீஷ்வ்யேஸ்வரர் கதாவர்ணணமான ஜெயகிஷ்வ்யேஸ்வரர் அறுபத்து மூன்றுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# *அத்யாயம் 64*

*அகஸ்தியர் திரும்பவும் கேட்டார். ஏ! ஷடானனு! ப்ராம்மணர்களைப் பார்த்துவிட்டு சம்பு என்ன கூறினுர்? வேறு என்னென்னவெல்லாம் லிங்கங்கள் உள்ளன, அவைகளைக் கூறுங்கள்.*

*பிறகு அந்தப்பரம பவித்ரமஹாதேவருக்கு அதிப்ரியமான ஜ்யேஷ்டஸ்தானத்தில் என்ன என்ன விஷயங்கள் விசேஷமாக நடந்தன. அதை எனக்கு விவரமாகக் கூறுங்கள்.*

*ஸ்கந்தர் பதில் கூறினுர், ஏ! அகஸ்தியா, நீர் என்னிடம் எதை எதையெல்லாம் பற்றிக் கேட்கிறீரோ அவைகளுக்கெல்லாம் நான் கட்டாயம் பதில் கூறுவேன். பகவான் சிவபிரான் ப்ரம்மா வேண்டிக் கொண்டதற்காக மந்த்ராசலத்திற்குச் சென்றுர்.*

*அப்பொழுதிலிருந்து இந்த நிர்மல தீர்த்தத்தில் ஸன்யாஸி பிராம்மணர்கள் எல்லோரும் நிராதரவாகப் போய் இந்த மஹாக்ஷேத்ரத்தில் தானம் வாங்கக் கூடாது என்ற காரணத்தினுல் என்ன செய்வது என்று திகைத்தார்கள். அப்பொழுது அவர்கள் தண்டத்தினுல் பூமியைக் கெல்லி கிடைக்கும் கந்தமூலங்களை புஜித்து, வாழ்க்கையை ஓட்டினுர்கள். இப்படி அவர்கள் தோண்டியவுடன் அவ்விடத்தில் ரமணீயமான தேவகாதம் என்னும் பெயருடைய புஷ்கரிணி உண்டாயிற்று.*

*அந்த ஜனங்கள் அந்த தீர்த்தத்தில் நான்கு புறமும் பெரிய பெரிய லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்து மஹேசருடைய ஆராதனையில் தத்பராகத் தவம் செய்து வந்தனர்.*

*அவர்கள் தினமும் ஸ்ஞனம் செய்து உடல் முழுவதும் விபூதியைத் தரித்துக் கொண்டு, ருத்ராக்ஷ தாரணர்களாய், சிவலிங்கத்தில் பூஜையும் சதருத்ரபாராயணமும் நடத்தி வந்தார்கள்.*

*இந்த ஜனங்கள் தவத்திஞல் க்ருசமடைந்த சரீரத்துடன மேலும் தபஸ்ஸிலேயே தத்பரகளாய் ஐயாயிரம் பிராம்மணர்கள், தேவ தேவர்கள் திரும்பி வந்ததைக் கேள்வியுற்று (தேவ தேவர் - பரமசிவன்) பரமானந்தத்துடன் அவரை தரிசிப்பதற்காக தண்டகாதம் என்னும் தீர்த்தக்கரையிலிருந்து அவ்விடம் வந்தார்கள்.*

*மந்தாகினீ தீர்த்தக் கரையில், பாசுபதவ்ரதத்தை எடுத்துக்கொண்டு சிவபிரான் ஒருவனையே ஆராதித்துக் கொண்டு வந்த பத்தாயிரம் ப்ராம்மணர்களும் அங்கு வந்தார்கள்.*

*அதுபோலவே ஹம்ஸ தீர்த்தத்திலிருந்து பதிஞயிரத்து முந்நூறு பிராம்மணர்கள் துர்வாஸ தீர்த்தத்திலிருந்து பன்னிரண்டு நூறு, மச்சோதரி தீர்த்தத்திலிருந்து ஆருயிரம், கபால மோசனத்திலிருந்து எழுநூறு, ரிண மோசன தீர்த்தத்தியிருந்து பன்னிரண்டு நூறு, வைதரணி தீர்த்தத்திலிருந்து ஐயாயிரம், மஹாராஜா ப்ருதுவிஞல் நிர்மாணிக்கப்பட்ட ப்ருது தீர்த்தத்திலிருந்து பதிமூன்று நூறு, அப்ரஸரஸுகளின் தீர்த்தமான மேனகா குண்டத்தின் கரையிலிருந்து இருநூறு, ஊர்வசிகுண்டத்திலிருந்து பன்னிரண்டுநூறு.*

*ஐராவத குண்டலத்திலிருந்து முன்னூறு, கந்தர்வ குண்டத்திலிருந்து எழுநூறு; அப்ஸரா - குண்டத்திலிருந்து முந்நூறு, மறுபடியும், வ்ருஷபத்வஜ தீர்த்த கரையிலிருந்து முனனூற்றித் தொண்ணூறு, யக்ஷிணிகுண்டத்திலிருந்து ஆயிரத்து முன்னூறு.*

*லக்ஷ்மி குண்டத்திலிருந்து பதிஞறுநூறு, பிசாசமோசன தீர்த்தத்திலிருந்து ஏழாயிரம், பித்ரு குண்டத்திலிருந்து ஒரு நூறும்; கொஞ்சம் அதிகமும்; துருவ தீர்த்தத்திலிருந்து அறுநூறு; மானஸஸரோவரத்திலிருந்து ஐநூறு. வாஸுகி தடாகத்திலிருந்து பத்தாயிரம், சீதாகுண்டத்தியிருந்து எண்ணூறு, கௌதம குண்டத்திலிருந்து ஒன்பதுநூறு;*

*துர்க்கா குண்டத்திலிருந்து ஆயிரத்துநூறு; இப்படியாக பூஸுர குலத்திற்குப் பெருமையைக் கொடுக்கும் பிராம்மணர்கள் பரமானந்தத்தைக் கொடுக்கும் பகவான் காசிநாதர் உமாபதி தேவரைத் தரிசனம் செய்வதற்காக அங்கு வந்து குழுமினார்கள்.*

*ஏ! கலச முனியே! இந்த விதமாக அஸி சங்கமத்திலிருந்து வருணா சங்கமத்தின் ஸங்கமேஸ்வரர் வரையில் உள்ள கங்கா தீரத்தில் வசிப்பவர்களான பதினெண்ணாயிரத்து ஐநூற்று ஐம்பது பிராம்மணர்கள் கங்கா தடத்திலிருந்து அங்கு வந்து, வாசனை புஷ்பமாலைகளும் எடுத்துக்கொண்டு, ஜெயகோஷத்துடன், அடிக்கடி மங்களஸூக்தத்தை உச்சரித்துக் கொண்டும்; அடிக்கடி வணங்கிக் கொண்டும் சென்று கொண்டிருந்தார்கள். பகவான் சங்கரரும் அவர்களுக்கு அபயப்ரதானம் செய்து மிகவும் ஸந்தோஷத்துடன் அவர்களைக் குசலம் விசாரித்தார்.*

*அப்பொழுது அந்த பிராம்மணர்கள் கைகூப்பிக்கொண்டு கூறத்தொடங்கினார்கள். ஏ! நாதா! தங்களுடைய இந்த க்ஷேத்திரத்தில் வஸித்துக் கொண்டிருப்பவர்கள் எப்பொழுதும் க்ஷேமமாகவே இருக்கிறார்கள். பின் யாருடைய ஸ்ரூபத்தை அவரே அறிந்துகொள்ள முடியாதோ, அப்படிப்பட்ட தங்களை ஸாக்ஷாத் நேத்திரங்களினாலேயே பார்த்துக் கொண்டிருக்கிறோம். அப்படியிருக்கும்பொழுது எங்களுடைய க்ஷேமத்தைப் பற்றி என்ன ஸந்தேஹம்?*

*தங்களுடைய க்ஷேத்திரத்திற்குப் பராமுகமாக இருப்பவர்களுக்குத்தான் எப்பொழுதும் அமங்களங்கள் நேருகின்றன. பதினாலு புவனங்களும் விபரீதமாகச் செயல்படுகின்றன. ஏ! ஸர்ப பூஷணா! யாருடைய ஹ்ருதயத்தில் காசி எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கிறதோ, அவர்களை ஸம்ஸாரம் ஆகிய ஸர்ப்பம் ஒரு பொழுதும் கடிக்காது;*

*காசி என்று இரு அக்ஷரங்களின் மந்திரம் கர்ப்பத்தை ரக்ஷிக்கிற மணியாகும். அது யாருடைய தொண்டையில் எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கிறதோ, அவர்களுக்கு அஸௌக்யம் ஏன் ஏற்படுகிறது? எவன் ஒருவன் காசி என்னும் இரு அக்ஷரங்களின் அம்ருதத்தைப் பருகுகிருனே, அவன் ஜராவஸ்தையைத் தாண்டி அம்ருதமயமாக ஆகிவிடுகிருன்.*

*எவனொருவன் இரண்டு அக்ஷரங்களையுடைய காசி என்னும் நாமத்தைக் காதில் போட்டு வைக்கிருனே, பிறகு அவனுக்கு கர்ப்ப விஷயமான வாக்கு வாதத்தைக் கேட்கவேண்டியே வராது.*

*ஏ! சந்திர சேகரா! யாருடைய நெற்றியில் ஒரு தரமாவது தெய்வக்ருபையினுல் காசியின் தூளி காற்றினுல் கிளம்பிப் படுகிறதோ, அவனுடைய தலை சந்திரபிரபையினுல் அலங்கரிக்கப்படுகிறது.*

*தற்செயலாக ஒரு தடவை இந்த ஆனந்தகானனம் யாருடைய திருஷ்டிகளில் படுகிறதோ, அவர்கள் ஸம்ஸாரத்தில் பிறக்க மாட்டார்கள். ஒருவன் அமரும்பொழுதும், எழும்பொழுதும் தூங்கும்பொழுதும், விழிக்கும்பொழுதும் எந்த நிலையில் இருந்தாலும் காசி என்னும் மந்திரத்தை எப்பொழுதும் ஜபித்துக் கொண்டிருந்தாஞனுல் அவன் எப்பொழுதும் பயமில்லாதவனுகிருன்.*

*எவனொருவன் காசீ என்னும் பீஜமந்திரத்தை (மந்திரத்தின் இரு அக்ஷரங்களை) தன்னுடைய ஹ்ருதயத்தில் நிறுத்தி வைக்கிருனே, அவனுடைய கர்மபீஜம் முளைக்கும் சக்தியை இழக்கிறது.*

*ஒருவன் எப்பொழுதும் காசி, காசி, காசி என்று ஜபித்துக் கொண்டிருந்தாஞனுல் அவன் எங்கிருந்தாலும் அவனுக்கு முன்னுல் முக்தி பிரகாசமாகிறது.*

*ஏ! பவா! இந்தக் காசி எப்பொழுதும் கல்யாண*

மூர்த்தியாக இருக்கிறது. தாங்களும் ஸ்வரூபமாகவே அமர்ந்திருக்கிறீர்கள்.

இந்த கங்கையும் இங்கே கல்யாணப் பெருக்காகவே ஓடுகிறது. உலகத்திற்கு க்ஷேமத்தைச் செய்யும் இந்த மூன்றும் வேறெங்கே கிடைக்கிறது!

பார்வதி நாதன் பகவான் ஹரன் பிராம்மணர்களுடைய க்ஷேத்திர பக்தியால் நிறைந்த பரிபூர்ண வசனங்களைக் கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்தார். பிறகு கூறத்தொடங்கினுர்:-

ஏ! பிராம்மண ச்ரேஷ்டர்களே! நீங்கள் தன்யர்கள். என்னுடைய பரம பாவனமான இந்த க்ஷேத்திரத்தில் தங்களுக்கு இருக்கும் பரம பக்தியைக் கண்டு மகிழ்ந்தேன்.

நீங்கள் இந்த க்ஷேத்திரத்தை ஸேவித்து வாஸம் பண்ணுவதினுலேயே - ரஜோகுண, தமோ குணமில்லாமல் ஸத்வ குணம் நிரம்பியவர்களாகவே இருக்கிறீர்கள். இதனுலேயே ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டிவிட்டீர்கள்.

வாராணஸியில் பக்தி கொண்டிருப்பவர்கள் எவர்களோ, ஸந்தேஹமில்லாமல் அவர்கள் என்னுடைய பக்தர்களே. நீங்களெல்லாம் மோக்ஷ லக்ஷ்மியின் கடாக்ஷத்தினுல் ஜீவன் முக்தர்களாகயிருப்பீர்கள். இது நிச்சயம்.

எவர்கள் காசியில் உள்ள ஒரு அற்ப ஜீவனிடமாவது விரோதம் வைத்துக் கொண்டார்களானுல், அது இந்த உலகம் முழுவதும் சேர்த்து என்னையும் விரோதித்துக் கொண்டதாக ஆகும். ஒருவன் வாராணசிப் பெருமையைக் கேட்டு அதை ஆமோதித்தானுனுல் இது ஸமஸ்த ப்ரம்மாண்டங்களையும் ஆமோதித்ததாகும். இந்த ஆனந்தவனத்திலிருப்பவர்கள் எல்லாம் நிர்மலமாகி என்னுடைய ஹ்ருதயத்திலேயே வஸிக்கிறுர்கள்.

*என்னுடைய க்ஷேத்திரத்தில் வஸித்துக்கொண்டும், என்னை பக்தி பண்ணிக்கொண்டும், என்னுடைய சின்னத்தைத் தரித்துக் கொண்டும், இருப்பவர்களுக்கே நான் உபதேசம் செய்கிறேன்.*

*என்னுடைய க்ஷேத்திரத்தில் வசித்துக் கொண்டிருந்தாலும் என்னை பக்தி பண்ணுமலும் என்னுடைய சின்னங்களைத் தரியாமல் இருந்தால் அவர்களுக்கு நான் உபதேசம் பண்ணவே மாட்டேன்.*

*யாருடைய மனதில் நிர்வாண நகரியான காசி ப்ரகாசிக்கிறதோ, அவர்கள் என் எதிரிலேயே மோக்ஷலக்ஷ்மியினுல் ஜயமாலை அணிவிக்கப்பட்டுப் பிரகாசமாய்த் திகழ்கிருர்கள். யாருக்கு மோக்ஷலக்ஷ்மி ஸ்ரூபமான காசி பிடிக்கவில்லையோ அவர்கள் ஸ்வர்க ஸம்பத்தைப் பெறுவதற்கு இச்சைப்பட்டாலும் கூட ஸந்தேஹமில்லாமல் அவர்கள் பதிதர்களே.*

*ஏ த்விஜோத்தமர்களே! பிராம்மண ச்ரேஷ்டர்களே! காசியை விரும்புபவர்களுக்கு முன்னுல் என்னுடைய அனுக்ரகத்தினுல் நான்கு புருஷார்த்தங்களும் கிங்கரர்களாகக் கைகட்டி நிற்கும்.*

*இந்த ஆனந்தவனத்தில் நான் ஜ்வலிக்கும் ஊழித்தீயாய் விளங்குகிறேன். ஜீவர்களின் கர்மவிதைகளை அவைகள் திரும்பவும் முளை எழும்பா வண்ணம் எரித்து விடுகிறேன்.*

*இந்தக் காசீபுரியில் தற்போது வஸித்துக்கொண்டு கருத்துடன் என்னைப் பூஜைசெய்துகொண்டும் இருந்தால் கலிபுருஷனையும் காலனையும் ஜயித்து முக்தியைப் பெறலாம்.*

*துர்புத்தியுள்ளவர்கள் காசியை அடைந்தும் என்னை ஸேவிக்காவிட்டால் மோக்ஷலக்ஷ்மி அவர்கள் கையில் சிக்கினுலும் நழுவிவிடுவாள்.*

ஏ பிராம்மணோத்தமர்களே, என்னுடைய பக்தி சின்னங்களைத் தரித்துக்கொண்டு, காசியில் வாசம் செய்யும் நீங்கள் கொடுத்து வைத்த தன்யர்கள். ஏனென்றால் உங்கள் சித்த விருத்தியிலிருந்து நானும் விலகுவதில்லை. காசியும் விலகுவதில்லை.

உங்கள் விருப்பப்படி நீங்கள் என்னிடம் வரம் கேட்கலாம். நீங்கள் க்ஷேத்திரஸன்யாஸம் எடுத்துக்கொள்வதினால் என்னுடைய பரமப்ரீதிக்குப் பாத்திரவான்களாகிறீர்கள்.

இவ்விதமாக மஹேஸ்வரருடைய திருவாய் மலரிலிருந்து உதிர்ந்த வசனமாகிய அம்ருதத்தைப் பருகி, அந்த பிராம்மணர்களெல்லோரும் உத்தமமான வரத்தை யாசிக்கத் தொடங்கினார்கள்.

பிராம்மணர்கள் கூறினார்கள்:- ஹே! உமாபதே! மஹேசா! ஸம்ஸார நாசகா! ஸர்வக்ஞா! இந்தக் காசீபுரியைவிட்டு நாங்கள் ஒருநாளும் அகலாமல் இருக்கும் வரத்தைத் தாருங்கள்.

காசியில் இருப்பவர்களை அவர்களுடைய மோக்ஷத்தைத் தடுக்கும்படியாக எந்த பிராம்மணன் சாபம் கொடுத்தாலும் அது ஒருநாளும் பலிக்ககூடாது.

தங்களுடைய இரண்டு சரண கமலங்களிலும் எங்களுடைய பக்தித்ருடமாக இருக்கட்டும். இந்த சரீரம் விலகும்போது காசிவாசிகளாகவே இருக்க வேண்டும்.

எங்களுக்கு மற்றவர்களால் யாதொரு பிரயோஜனமுமில்லை, எங்களுக்கு இந்த வரம் அருளுங்கள், ஹே! அநதகாந்தகா! தங்களை மற்றொரு வரம் கூட வேண்டுகிறோம். அதைச் சற்று செவிமடுத்துக் கேட்கவேண்டும்.

நாங்கள் பக்திபாவனையினால் தங்களுடைய பிரதிநிதிஸ்வரூபமாக பிரதிஷ்டை பண்ணியிருக்கும்

லிங்கங்களிலெல்லாம் தாங்கள் ஸாந்நித்யமாக இருக்கவேண்டும்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட பகவான் (ததாஸ்து) அப்படியேயிருக்கட்டுமென்றார். இருங்கள்; மற்றொரு வரம்கூடத் தருகிறேன் என்று கூறி உங்களுக்கு ஞானம் ஏற்படட்டும் என்று சொன்னார்.

ஏ! பிராம்மணர்களே! கேளுங்கள்; நான் உங்களுக்கும் கூறும் ஹிதமான வார்த்தைகளைக் கேளுங்கள். அதைக் கட்டாயம் அனுஷ்டியுங்கள்.

முக்தியை விரும்புபவர்கள் உத்தரவாஹினியான கங்கையை ஸேவித்து கருத்துடன் லிங்கத்தைப் பூஜித்து இந்திரியங்களை அடக்கிக்கொண்டு சக்திக்குத்தக்கவாறு தானமும், செய்துகொண்டு ஜீவர்களிடம் தயையுடன் வாழவேண்டும்.

க்ஷேத்திரவாஸிகளுக்குத் தங்கள் புத்தியைப் பிறருக்கு நலனைச் செய்யவே உபயோகிக்க வேண்டியது என்பது பரம ரஹஸ்யமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

மற்றவர்கள் திடுக்கிடும்படியான வார்த்தைகளைப் பேசக்கூடாது. பாபகாரியங்களை செய்யக்கூடாது. ஏனென்றால் இங்கு செய்யும் புண்ணியங்கள் அக்ஷயமாய் வளரும்.

மற்ற இடங்களில் செய்யும் பாபங்கள் காசியில் நஷ்டமடைகின்றன. காசியில் செய்யும் அந்தர்க்ருஹத்தில்தான் நஷ்டமடைகின்றன. (காசியில் அந்தர்க்ருஹம் என்பது புண்ணியஸ்தலம்) ஆனால் அந்தர்க்ருஹத்திலும் அநுஷ்டித்த பாபங்கள் பிசாசநரக போகத்திற்குக் காரணமாகின்றன. அதுபோல பிசாச நரகத்திற்குரிய பாபங்கள் அந்தர்க்ருஹத்திற்கு நிச்சயமாகப் போகின்றன.

காசியில் செய்த பாபங்கள் கோடி கல்பமானாலும் நஷ்டமடைவதில்லை; மேலும் இங்கு அவை

*முப்பதினுயிரம் வருஷங்கள் வரைக்கும் ருத்ரபிசாச ரூபமாக அனுபவிக்க வேண்டும்.*

*ஒருவன் காசியில் இருந்துகொண்டு எப்பொழுதும் பாபத்திலேயே ஈடுபட்டிருந்தால் அவன் முப்பதினுயிரம் வருஷம் வரையிலேயே பிறந்து, உவமை கூறமுடியாத ஞானத்தையடைந்து, அந்த ஞானத்திலேயே இதற்கு மேல் ஒன்றுமில்லையென்று சொல்லும்படியான மோக்ஷத்தை யடைகிறுன்.*

*ஏ! ப்ராம்மணோத்தமர்களே! இந்தக் காசியிலேயே இருந்துகொண்டு, துஷ்கர்மங்களையே செய்துகொண்டு இருந்துவிட்டு அன்னிய இடங்களுக்குச் சென்றுமரணமடைகிறுர்கள். அவர்களுக்கு என்னகதியென்று சொல்லுகிறேன் கேளுங்கள்.*

*என்னுடைய யமன் என்னும் பயங்கரமான மூர்த்தியும் அவரைச் சேர்ந்த பயங்கரமான கணங்களும் அந்தப் பாபிகளை தட்டான், குகை என்னும் குடுவையில் தங்கத்தை உருக்குவதைப் போலப் பெரிய குஹையிலிட்டுத் தீயில் வைத்து உருக்குகிறுன்.*

*பிறகு மழைகாலத்தில் ஆழங்காண முடியாத தண்ணீர் நிறைந்துள்ள, இடத்திற்குச் சென்று அந்தத் தண்ணீருக்குள் அமிழ்த்தி சிரமப்படுத்துகிறுன்.*

*அந்த இடத்தில் இரவும் பகலும் இறக்கைகளுள்ள அட்டைகளும், நீர்ப்பாம்புகளும் விலக்க முடியாத நீர்க் கொசுக்களும் அவர்களைக் கடித்துத் துன்புறுத்துகின்றன.*

*பிறகு குளிர் வந்தபிறகு என்னுடைய யமகணங்கள் அவர்களை ஹிமாலயத்திற்கு அழைத்துச் சென்று அங்கு உண்பதற்கும், உடுத்துவதற்கும் கூட முடியாத அளவிற்கு துக்கங்களைக் கொடுக்கிறுர்கள்.*

*அதற்குப் பிறகு கோடை நாட்களில் வ்ருக்ஷமோ, ஜலமோ, இல்லாத சூன்யமான மறுபூமிக்குக் கொண்டு*

*சென்று தாகத்திஞலும், சூரிய கிரணங்களிஞலும் அவர்களைத் தவிக்க செய்கிருர்கள்.*

*என்னுடைய கோரமான யமக்கூட்டங்கள் வெகுகாலம் வரைக்கும் அவர்களை மகத்தான வேலைகளால் தவிக்கச் செய்து, அவர்களை இங்கேயேயிழுத்து விடுகிருர்கள். அது மாத்திரமல்லாமல் எனது யமக்கூட்டங்கள் அவர்களை யமதர்ம ராஜாவினுடைய முன்னிலையில் கொண்டு நிறுத்துகிருர்கள்.*

*கால ராஜனும் அவர்களைப் பார்த்தவுடனேயே அவர்களுடைய துற்செய்கைகளை எண்ணிக் கணக்குப் பார்த்து வஸ்திரமில்லாமலும், பசி தாகத்திஞல் வருந்தியும், முதுகுடன் வயிறு ஒட்டிக் கொண்டிருக்கும்படியான அவர்களைப் பார்த்துவிட்டு அவர்களை ருத்திர பிசாசுகளிடம் ஒப்படைக்கிருன்.*

*அதற்குப் பிறகு அந்த ருத்திர பிசாசுகள் பைரவரின் வேலையாட்களாக ஆகி பசியாலும் தாகத்திஞலும் மிக்க துடிக்கும்படி செய்கிருர்கள். சில சமயங்களில் ரத்தமும் சீழும் சேர்ந்த அன்னத்தைப் புஜிக்கச் செய்கிருர்கள். இந்த விதமாக முப்பதிஞயிரம் வருஷங்கள் துன்பத்தையனுபவித்து விட்டு ஸ்மசானத்தில் உள்ள கம்பத்தில் முட்கள் நிறைந்த சுறுக்குக் கயிற்ருல் கட்டி காலத்தைக் கழிக்கச் செய்கிருர்கள். அவர்கள் மிகவும் ஒரு துளி ஜலத்திற்கு வேண்டி தாகத்துடன் தவிக்கும்படிச் செய்கிருர்கள்.*

*இதற்குப் பிறகு கால பைரவர் வந்து அவர்களுக்கு தரிசனம் கொடுக்கிருர். அவருடைய தரிசனத்திஞல் இந்த ஸ்தானத்தில் திரும்பவும் ஜன்மமெடுத்து அவர்கள் முக்தர்களாகிருர்கள்.*

*அதஞல் மகத்தான பயனையடைய பேராசையுடைய ஜனங்கள் பாபகர்மங்களைச் செய்யாமல் விலகியிருக்க வேண்டும். எப்பொழுதும் தூய்மையான நடத்தை யுடையவர்களாக இருக்க வேண்டும்.*

*அவிமுக்த க்ஷேத்ரத்தில் மரணமடைவதினுல் ஒரு பாபிகூட நரகத்திற்குச் செல்லமாட்டான். என்னுடைய அனுக்ரகத்தினுல் பரமகதியே அடைவான். இங்கிருக்கும் என்னுடைய ஒருபக்தன் உண்ணுவிரதம் இருந்தானுனுல் நூறுகோடி கல்பங்கள் சென்ருல் கூடத் திரும்பவும் பிறக்கமாட்டான்.*

*அந்த பாபமயமான மனுஷ்ய சரீரத்தை எப்பொழுதும் நச்வரமென்றெண்ணி ஸம்ஸாரபய மோசனமான அவிமுக்த க்ஷேத்திரத்தையே ஸேவிக்க வேண்டும். கலியுகத்தில் ஸர்வபாப விஞசினியான வாராணஸிபுரியை விட்டுச் சென்ற பிராணிகளுக்கு வேறு பிராயச்சித்தமே கிடையாது.*

*ஏனென்ருல் ஆயிரக்கணக்கான ஜன்மங்களில் சேர்த்து வைத்திருந்த பாபங்கள் காசியில் பிரவேசித்த உடனேயே க்ஷயமடைகின்றன. யோகிகள் ஆயிரக்கணக்கான ஜன்மங்களாக யோகாப்யாஸத்தை இடைவிடாமல் செய்து முக்தியடைகிருர்கள். ஆனுல் இந்த இடத்தில் மரணம் அடைவதனுலேயே பரமபதத்தை அடைகிருன்.*

*இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தில் வஸிக்கும் மனிதரல்லாத இதர பிராணிகளும் காலக்ரமத்தில் மரணமடைந்தவுடன பரமகதியே அடைகின்றன. மூடர்கள் மோகாந்தகாரத்தில் மூழ்கி அவிமுக்த க்ஷேத்திரத்தில் வாஸம் செய்யாமல் போனுர்களானுல் அவர்கள் மேலும் மேலும் மலமூத்திர வீர்யம் நிறைந்த குழியில் மூழ்கி மூழ்கி அழிகிருர்கள்.*

*யாதொரு அறிவாளி காசியில் லிங்கஸ்தானம் செய்கிருனே, அவன் நூறுகோடி கல்பம் முடிந்த பின்னும் ஜன்மம் எடுக்கமாட்டான். காலகதியை அனுஸரித்து க்ரஹ நக்ஷத்திரம் இவைகளுக்குக்கூட வீழ்ச்சி ஏற்படுகிறது. ஆனுல் இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தில்*

*மரணமடைந்தவர்களுக்கு ஒருபொழுதும் வீழ்ச்சி ஏற்படுவதில்லை.*

*எவன் ஒருவன் ப்ரம்மஹத்தி செய்தாலும்கூட ஒழுங்கான மனத்துடன் காசியில் ஜீவனை விட்டானானால் அவன் ஸந்தேஹமில்லாமல் முக்தியடைகிறான். ஏ! பிராம்மணோத்தமர்களே, பதிவ்ரதை ஸ்த்ரீகளும் என்னிடம் பக்திபாவத்துடன் இருந்து அவிமுக்த க்ஷேத்திரத்தில் மரித்தார்களானால் அவர்களும் பரமபதத்தை அடைவார்கள்.*

*இங்கு பிராணனை விடும் ஸமயத்தில் நானே அவர்கள் காதில் தாரகநாமத்தை உபதேசிக்கிறேன். அதனால் அவர்கள் ப்ரம்மமயமாகவே ஆகிறார்கள்.*

*என்னுடைய பக்தன் என்னுடன் ஈடுபடுத்திய மனத்துடன் ஸமஸ்தகர்மங்களையும் எனக்கே அர்ப்பணித்துவிட்டு இந்த ஸ்தானத்தில் எவ்வித மோக்ஷத்தை அடைகிறானோ, அதுபோல் வேறெங்கும் இவ்விடம் ஆவதில்லை. மரணம் நிச்சயம் உலகத்தில் துக்கத்தைத்தருவது நமக்கேற்படும் விஷயஸுகங்களெல்லாம் க்ஷணப்பொழுதில் மறைந்துவிடும் என்றெண்ணிக் காசியை ஆச்ரயித்து வாழவேண்டும்.*

*எவனொருவன் மனோவாக்கு காயங்களுடன காசியை ஆச்ரயித்து இருக்கிறானோ, அந்த நிர்மலமான புத்தியுடையவனை மோக்ஷலக்ஷ்மி தானே வந்து தழுவிக் கொள்கிறாள்.*

*ஒருவன் ந்யாயவழியில் ஸம்பாதித்த பணத்தினால் காசியிலுள்ள ஒருவனுக்காவது அவன் ஸந்தோஷப்படும்படி ஸேவை செய்தால் அவன் என்னுடன் மூன்று உலகங்களையும் ஸந்தோஷப் படுத்தியவனாகிறான்.*

*விப்ர ஜனங்களே! அப்படி இந்த நிர்வாண நகரியில் வசிக்கும் ஒருவனை ஒரு புண்ணியாத்மா ஸந்தோஷப் படுத்திஞல் அதனை நான் நான்கு புருஷார்த்தங்களிலும் ஸந்தோஷமடையச் செய்கிறேன்.*

*ராஜர்ஷி திவோதாஸ் தர்மபூர்வகமாக இந்தக் காசியை பாவித்தபடியிஞல் சரீரத்துடனேயே என்னுடைய பதவியை அடைந்தார். அங்கிருந்து அவர் இனி திரும்பி வரமாட்டார்.*

*இங்கு ஒரே ஜன்மத்திலேயே யோகஸித்தியும் ஞானப்ராப்தியும் முக்திலாபமும் கிடைக்கின்றது. அதஞல் இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தைவிட்டு விட்டு வேறு அன்னிய க்ஷேத்திரங்களுக்கு தபஸ் செய்வதற்காகப் போக வேண்டாம்.*

*மோக்ஷம் கிடைப்பது துர்லபம் என்று எண்ணியும் ஸம்ஸாரம் மிக பயங்கரம் என்று அறிந்தும் வேறு எங்கும் செல்லாமல் காலனின் வழியை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்.*

*மூட ஜனங்கள் காசியைவிட்டு விட்டு வேறு இடங்களுக்குப் போவதைப் பார்த்துவிட்டு என்னுடைய பூத கணங்கள் பரஸ்பரம் கையைத்தட்டிக் கொண்டு கேலி செய்து சிரிக்கிருர்கள். பரம உத்தமமான ஸித்திக்ஷேத்ரமும் பவித்ரமுமான காசி க்ஷேத்ரத்தை விட்டுவிட்டு வேறு எங்கேயாவது செல்வதற்கு எந்த ப்ராணிக்குத்தான் புத்தி தோன்றும்?*

*வேறு இடங்களில் மகத்தான தானம் செய்வதிஞல் என்ன பலன் கைகூடுமோ, அது அவிமுக்த க்ஷேத்திரத்தில் ஒரு சோழியைக் கொடுப்பதிஞலேயே கைகூடும்.*

*இங்கு ஒரு மனிதன் லிங்க பூஜை செய்கிருன்; மற்ருெருவன் தபஸ் செய்கிருன்; இவர்களில் யார் ச்ரேஷ்டர் என்ருல் லிங்க பூஜை செய்கிறவர்களே ச்ரேஷ்டர்.*

*மற்ற தீர்த்தங்களில விதிபூர்வமாக கோதானம் செய்வதற்கும் காசியில் வசிப்பதற்கும் எது மேல் என்ருல் ஒரு தினம் காசியில் வசிப்பதே மேல் ஆகும்.*

*மற்ற இடங்களில் கோடிக்கணக்கான பிராம்மணர்களுக்கு அன்னதானம் செய்வதும், இந்தக் காசியில் ஒருவனுக்கு அன்னதானம் அளிப்பதும் சரிக்கு சரியே.*

*ஸூர்ய க்ரஹண சமயத்தில் குருக்ஷேத்திரத்தில் துலாபுருஷதானம் செய்வதும் காசியில் ஒருபிடி அரிசி பிக்ஷையிடுவதும் சமமே; என்னுடைய பரம ஜோதியே பாதாளத்திலிருந்து ஸப்த லோகங்கள் வரையிலும் வியாபித்துக்கொண்டு இந்த இடத்தில் லிங்க ரூபமாக இருக்கிறது.*

*பூமியில் அந்நிய பாகங்களில் இருக்கும் ஜனங்கள் கூட என்னுடைய அவிமுக்த லிங்கத்தை ஸ்மரித்தார்களாஞல் அவர்களுடைய மிகப்பெரிய பாபங்களும் விலகுகின்றன. ஒருவன் இநத க்ஷேத்திரத்தில் என்னைத் தரிசித்து, ஸ்பர்சித்துப் பூஜிப்பாஞகில் அவன் தாரக ஞானத்தையடைந்து பிறகு ஜன்மம் எடுக்க மாட்டான்.*

*எவஞெருவன் இங்கு என்னை அர்ச்சித்து விட்டு அந்நியஸ்தானத்தில் சென்று ப்ராணனை விடுவாஞஞல் அவன் ஜன்மாந்தரங்களுக்குப் பிறகு என்னை வந்து அடைகிருன். பகவான் சங்கரர் அந்த பிராம்மணர்களுக்கு இந்த விதமாகக் காசிக்ஷேத்திரத்தின் மஹிமைகளைக் கூறிவிட்டு அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மறைந்துவிட்டார்.*

*அந்த எல்லா பிராம்மஞேத்தமர்களும் ஸாக்ஷாத் விரூபாக்ஷரைப் பிரத்யக்ஷமாகத் தரிசித்து ஹ்ருதயத்தில் ஆழ்ந்தவுடன் அந்த இடத்தைவிட்டுச் சென்றனர். பிறகு அந்த பிராம்மஞேத்தமர் க்ருபாநிதியும் ஸர்வக்ஞரும்*

*பகவானுமான சம்புவின் வசனங்களை அனுஸரித்து த்ருடவிச்வாஸத்துடன் கூட மற்ற கர்மங்களையெல்லாம் விட்டு விட்டு சிவலிங்கத்தையே பூஜிக்கத் தொடங்கினூர்கள்.*

*ஸ்கந்தர் கூறினூர்:- சிரத்தையுடன் ஒருவன் இந்த உத்தமரஹஸ்ய வ்யாக்யானத்தைப் பாராயணம் செய்தானேயாஞல் அல்லது படிக்கச் சொல்லிக் கேட்டானேயாகில் எல்லாப் பாதகங்களிலிருந்தும் விடுபட்டுச் சிவலோகத்தில் பூஜிக்கப் படுகிறுன்.*

*இவ்விதம் ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தார்த்த பாஷாடீகாவான காசீ மஹாத்ம்ய ரகசிய வர்ணனம் என்னும் அறுபத்திநான்காவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 65

நந்திகேஸ்வரர் வியாக்ரேஸ்வரர் இவர்களின் கதையும், அன்னிய அநேக லிங்கங்களின் வர்ணனையும் ஸ்கந்தர் கூறுவார்:- ஏ! கும்ப ஸம்பவா! ஜ்யேஷ்டேஸ்வரருக்கு நான்கு பக்கங்களிலும் ஐயாயிரம் சிவலிங்கங்கள் இருக்கின்றன. இவைகளெல்லாம் முனிவர்களுக்கு ஸித்தியைக் கொடுக்க வல்லவைகளாகும்.

பராசரேஸ்வரர் என்னும் ஒரு மஹாலிங்கம் ஜ்யேஷ்டேஸ்வரருக்கு வடக்குப் பக்கத்தில் எழுந்தருளியிருக்கிறது. இதை தரிசித்ததினுலேயே நிர்மலமான ஞானம் பெறலாம்.

அதே ஸ்தானத்தில் மாண்டவ்யேஸ்வரர் என்னும் பெயருள்ள மற்ருெருலிங்கமும் இருக்கிறது. அதைத் தரிசித்தால் மனிதர்களுக்குக் கெட்ட புத்தியே ஏற்படாது.

அங்கேயே எப்பொழுதும் மங்களத்தையே தரும் ஸங்கமேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதற்குப் பக்கத்திலேயே பக்தர்களுக்கு ஸர்வஸித்தியையுமளிக்கும் ப்ருகு நாராயணர் சோபிதமாக விளங்குகிருர்.

அதே இடத்தில் அதி சித்தி அருளும் ஜாபாலீஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசித்தால் போதும். ஜனங்கள் துர்புத்தியடைய மாட்டார்கள்.

அங்கேயே ஸுமந்து ரிஷியினுல் ஸ்தாபிக்கப்பட்ட பிரதான ஆதித்ய பகவான் எழுந்தருளியிருக்கிருர். அவரை தரிசித்தால் தொழுநோய் சாந்தமடைகிறது.

அங்கேயே பயங்கர உருவுடன், பீஷுணு என்னும் பெயருடைய பைரவி இருக்கிருள். பக்தி பாவத்தினுல் அவளுக்குப் பூஜை செய்வதினுல் காசி க்ஷேத்திரத்திலுள்ள ஸமஸ்த பயத்தையும் போக்குகிருள்.

*அந்த ஸ்தானத்தில் ஸமீபத்திலேயே கர்வீபந்த மோக்ஷகர் என்னும் லிங்கமும் இருக்கிறது. ஆறுமாத பர்யந்தம் அவரை விடாமல் சேவித்தால் பரம ஸித்தியைக் கொடுக்கிருர். அங்கு ஒரே இடத்தில் சேர்ந்தாற்போல பரத்வாஜேஸ்வரர் லிங்கமும், மாத்ரீஸ்வரர் லிங்கமும் எழுந்தருளியிருக்கின்றன. புண்ணியம் செய்திருந்தால் தான் அவைகளேத் தரிசிக்க முடியும். ஓ அகஸ்தியா, அங்கு அருணனுல் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம் இருக்கிறது. அதை சேவிப்பதினுல் எல்லா வ்ருத்திகளும் ஏற்படுகின்றன.*

*அங்கேயே வாஜஸ தேயர் என்னும் மிகவும் மனோகரமான ஒரு லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசிப்பதினுல் வாஜபேய யக்ஞம் செய்த பலன் கிடைக்கிறது.*

*மேலும் கண்வேஸ்வரர், காத்யாயனேஸ்வரர், வாமதேஸ்வரர், ஔஷதேஸ்வரர், ஹாரிதேஸ்வரர், காலவேஸ்வரர், கௌஸ்துபேஸ்வரர், அக்னி வர்ணேஸ்வரர், நைத்திவேஸ்வரர், வத்ஸேஸ்வரர், பர்ஞதீச்வரர், சத்துப்ரதேஸ்வரர், கணுதீஸ்வரர், மாண்டு கேஸ்வரர், பாஸ்ரவேஸ்வரர், சிலாவ்ருத்தீஸ்வரர், வநேஸ்வரர், லாங்காயநேஸ்வரர், காளிந்தேஸ்வரர், அக்ரூத நேஸ்வரர், காபோத வ்ருத்தீஸ்வரர், தும்புநீஸ்வரர், மதங்கேஸ்வரர், மருத்தேஸ்வரர், மஹதேஸ்வரர், கங்கேஸ்வரர், குந்தலேஸ்வரர்,*

*கண்டேஸ்வரர், ககோலேஸ்வரர், தும்புரீஸ்வரர், மதங்கேஸ்வரர், மருத்தேஸ்வரர் மஹதேஸ்வரர், ஜாதுகர்ணேஸ்வரர், ஜம்புகேஸ்வரர்; சாருதீஸ்வரர்; ஜலேஸ்வரர்; ஜாலமேஸ்வரர்; ஜாலகேஸ்வரர் முதலிய ஐயாயிரம் சிவலிங்கங்கள் எழுந்தருளியிருக்கின்றன. மிகவும் பாவனமான ஜேஷ்டஸ்தானத்தில் இந்த மங்களகரமான லிங்கங்களே தரிசித்து, ஸ்பர்சித்து, பூஜித்து,*

ப்ராணுயாமம் பண்ணி நமஸ்கரித்து, துதிப்பவன் எந்தப் ப்ராணியாஞலும் பாவங்கள் அவனைத் தொடக்கூடச் செய்யாது.

ஸ்கந்தர் கூறிஞர்:- ஏ! கும்பத்தில் பிறந்த மஹாமுனியே! பரம பவித்ரமான ஜேஷ்ட ஸ்தானத்தில் ஒரு சமயம் நடந்த பாபநாசனமான சரித்திரத்தைக் கூறுகிறேன் கேளும்.

அங்கு பகவான் மஹேஸ்வரர் ஸ்வதந்திரமாக விளையாடிக் கொண்டிருந்தார். பார்வதியும் அங்கு பந்து விளையாடிக் கொண்டிருந்தாள்.

அந்தச் சமயத்தில் பகவதி பார்வதி விளையாட்டில் ஈடுபட்டிருக்கும் போது அவளது சரீரம் விரிந்தும், ஒடுங்கியும் வளைந்தும் தன்னுடைய லகுத்தன்மையை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. அவள் வெளிவிடும் மூச்சுகளின் சுகந்தத்திஞல் மயங்கி அவளைச் சுற்றி வரும் வண்டுகளைக் கண்டு, பயத்தை வெளியிடும் கண்களும், தன்னுடைய விரிந்த கேச பாசத்தில் செருகியிருக்கும் புஷ்பமாலையிலிருந்து, புஷ்பங்கள் சிதறி பூமியை மறைக்கவும், கன்னத்தில் எழுதப்பட்டிருக்கும் பத்ராவளியிலிருந்து, சிதறும் முத்துப் போன்ற வேர் வைத்துளியிஞல் சோபித்துக் கொண்டும் பந்தைத் தூக்கி எறிந்து விளையாடும்போது விலாப்புறம் கிழிந்த ரவிக்கையிஞல் வெளிப்படும் அங்க சோபையிஞல் மஞேஹரமாயும் மேலே வீசி எறிந்த பந்தை அடிக்கடி பிடிப்பதிஞல் ரக்தவர்ணமான கர கமலங்களோடும், மேலும் கீழும் செல்லும் பந்தைப் பார்த்துக் கொண்டிருப்பதிஞல் புருவத்தின நுனிகளை உயர்த்தியும், சுழற்றியும், ஜகஜ்ஜனனியான பார்வதியானவள் பந்து விளையாட்டில் ஈடுபட்டிருப்பவளாகக் காணப்பட்டாள்.

*அந்த சமயத்தில் ஆகாயத்தில் இரண்டு அசுரர்கள் காணப்பட்டார்கள்; அவர்கள் ப்ரம்மதேவனைப் பூஜித்து வரம் பெற்றவர்கள். அதனால் மூன்று உலகத்திலுள்ள புருஷர்களையும் த்ருணமாத்ரமாக மதிப்பவர்கள். தங்கள் புஜபலத்தால் கர்வமடைந்தவர்கள். இந்த ஆகாச ஸஞ்சாரிகளான பிதலன், (உத்பனன்,) என்ற இரண்டு அஸுரர்களும் அவர்களுக்கு மரணம் கிட்டுவதை, அறியாமல் பரம ஸுந்தரியான தேவியை பார்த்தவுடனேயே காமபாணத்தினால் பீடிக்கப்பட்டு, மாயையினால் அதிசீக்ரமாக ஆகாச மண்டலத்திலிருந்து கீழே இறங்கினார்கள்.*

*இந்தப் பரம சஞ்சல சித்தமுள்ள துராசாரிகளான இரண்டு தானவர்களும் சிவகணங்களின் உருவைத் தரித்துக் கொண்டு, அம்பிகையை நெருங்கி வந்தனர்.*

*அப்பொழுது ஸர்வக்ஞரான பகவான் அவர்களிருவரையும் அவர்களது கண்கள் வெளியிடும் கபடப்பார்வையினாலேயே தெரிந்துகொண்டு, துர்காஸுரனைக் கொன்ற பகவதிக்குக் கண்களினாலேயே ஸமிக்ஞை செய்தார். பிறகு சொல்வதற்கு என்ன இருக்கிறது? ஸர்வக்ஞருடைய தேவி அர்த்தாங்கி பகவானுடைய நேத்ர ஸமிக்ஞையை அறிந்துகொண்டு தன் பந்தினாலேயே ஒரே ஸமயத்தில் அந்த இரண்டு அஸுரர்களையும் கொன்றாள்.*

*மஹாசக்தி சாலினி மஹாமாயையினுடைய விளையாட்டுப் பந்தினால் காயப்படுத்தப்பட்ட அந்த இரண்டு அஸுரர்களும் தலைச்சுற்றி கிளையிலிருந்து பழுத்து விழுந்த பழம் போலவும் இந்திரன் வஜ்ராயுதத்தினால் அடிபட்ட மஹாபர்வத சிகரம் போலவும் கீழே விழுந்தனர்.*

அதன் பிறகு கெட்ட கார்யம் செய்யத் தயாராக இருந்த அந்த இரண்டு துஷ்டதைத்யர்களேயும் கொன்றுவிட்டு அந்தப்பந்து லிங்க ரூபமாக ஆகிவிட்டது.

அப்பொழுதிலிருந்து ஜேஷ்டேஸ்வரருடைய ஸமீபத்தில் எல்லா துஷ்டர்களேயும் நாசம் செய்யும் இந்த லிங்கம் கந்துகேஸ்வரர் என்னும் பெயருடன் விளங்குகிறது. ஒருவன் கந்துகேஸ்வரருடைய இந்த உற்பத்திக் கதையைக் கேட்டு ஸந்தோஷத்துடன் அதைப் பூஜை செய்தானுனல் அவனுக்குத் துக்கத்தினுல் பயம் ஏற்படாது.

ஸமஸ்த பயங்களேயும் நாசம் செய்யும் பவானியே கந்துகேஸ்வரருடைய பாபமற்ற பக்த ஜனங்களுடைய யோகக்ஷேமங்களேயும் வகிக்கிருள்.

பார்வதிதேவி ப்ரதிதினமும் தானே அந்தலிங்கத்துக்குப் பூஜை செய்கிருள். மேலும் தானே சாந்நித்யமாக இருந்து பக்தர்களுக்கு ஸித்திதானம் அருளுகிருள்.

கந்துகேஸ்வரர் என்னும் மஹாலிங்கத்தைப் பூஜைபண்ணுதவர்களுக்கு சிவபார்வதி எவ்விதம் அபீஷ்ட பலனேத் தரமுடியும்?

ஸமஸ்த பாபராசிகளேயும் விஞசம் செய்யும் கந்துகேஸ்வரரின் பெயரைக் கேட்டவுடனே பாபராசிகள் சீக்கிரம் க்ஷயமடையத் தொடங்கிவிடுகின்றன. சூரியன் உதயமாகும் பொழுது இருட்டு பரவுமா? இப்படிப்பட்ட கந்துகேஸ்வரலிங்கத்தை கருத்துடன் தரிசிக்க வேண்டும்.

ஸ்கந்தர் கூறிஞர்: ஓ! மஹாபுண்யசாலியான ப்ராம்மேணுத்தமா! ஜேஷ்டேஸ்வரருக்கு சமீபத்திலேயே மற்ெருரு அதிசயமான சம்பவம் நிகழ்ந்தது. அதைக் கேளும் என்று மேலும் கூறுவார்;

*பூர்வ காலத்தில் தேவரிஷிகள், பித்ருக்கள் இவர்களுக்குத் திருப்தியைக் கொடுக்கக்கூடிய தண்டகாதம் என்னும் மஹாதீர்த்தக்கரையில் சில பிராம்மணர்கள் நிஷ்காம்யமாகக் கடுந்தவம் இயற்றிக்கொண்டிருந்தார்கள்.*

*அந்த சமயத்தில் ப்ரஹ்லாதனின் மாமா துந்துமிநிஹ்ராதன் என்னும் பெயருடைய துஷ்ட அஸுரன் ஒருவன் ஒருநாள் மனதில் இந்த தேவதைகள் எப்படி வாழ்கிறார்களென்று யோசனை செய்தான்.*

*யாருடைய பலம் அவர்களுக்கு உதவியாக இருக்கிறது? அவர்கள் எதை உண்டு வாழ்கிறார்கள்? யாருடையஸஹாயத்தைக் கொண்டு இவர்கள் நடக்கிறார்கள் என்று சிந்தித்துச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்தான்.*

*அதாவது ப்ராம்மணர்கள்தான் இதற்குக்காரணம். இவ்வாறு யோசித்து அவன் அடிக்கடி ப்ராம்மணர்களை ஹிம்ஸிக்கத் தொடங்கினான்.*

*ஏனென்றால் தேவதைகளுக்கு உணவு யக்ஞத்திலிருந்து கிடைக்கிறது. யக்ஞம் வேதம் கூறுவதுபோல் நடக்கிறது. இந்த வேதங்கள் ப்ராம்மணர்களின் அதீநத்தில் இருக்கின்றன. அதனால் தேவதைகளுக்கு சக்தி பிராம்மணர்களிடமிருந்து கிடைக்கிறது.*

*ஸர்வவேதங்களுக்கு ஆதாரமும் இந்த்ராதி தேவதைகளுக்கு அஸ்திவாரபலமும் இந்த பிராம்மணர்களே. அதனால் பிராம்மணர்களை ஒழித்துவிட்டால் வேதம் வளராது. வேதம் மறைந்தால் யக்ஞங்கள் நடக்காது.*

*யக்ஞங்கள் தடைப்பட்டவுடன் யக்ஞ ஆஹுதியினுல் பூஜிக்கப்பட்ட தேவதைகள் க்ஷீணித்து விடுவார்கள். அப்பொழுது தேவதைகளை ஜெயிப்பது எளிது.*

*பிறகு நான் மூன்று உலகங்களுக்கும் அதிகாரியாக மதிக்கப்படுவேன். தேவதைகளுடைய அளவற்ற ஸம்பத்துக்களையும் கொள்ளையடிப்பேன்.*

*பிறகு நிஷ்கண்டகமான ராஜ்யத்தில் நானே ஸுக போகங்களை அனுபவிப்பேன். இப்படி துர்புத்தியுள்ள அஸுரன் மனம்போன மட்டும் யோசிக்கத் தொடங்கினுன்.*

*ப்ரம்ம தேஜஸ்ஸினுல் பரிபூர்ணமானவர்களும் வேத அத்யயன சீலர்களும் தபோபலசாலிகான ப்ராம்மணர்கள் எங்கெங்கே இருக்கிறுர்கள்?*

*வாராணஸிதான் இப்படிப்பட்ட பிராம்மணர்கள் வஸிக்குமிடம் என்று தோன்றுகிறது. அதனுல் முதலாவது அங்குள்ள ப்ராம்மணர்களை ஸம்ஹாரம் செய்துவிட்டு மற்ற தீர்த்தங்களுக்குச் செல்லுவேன்.*

*மேலும் எந்தெந்த தீர்த்தங்களில் எந்தெந்த ஆச்ரமங்களில் ப்ராம்மணர்கள் இருப்பார்களோ, அவர்களை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டு தின்று கொண்டிருப்பேன்.*

*இந்த விதமாக அந்த துராசாரியும் மாயாவியுமான துந்துமிநிஹ்லாதன் என்னும் அசுரன் தனது குலத்துக்கு உண்டான புத்தியினுல் நிச்சயம் செய்துகொண்டு காசியில் வந்து பிராம்மணர்களைக் கொல்லத் தொடங்கினுன்.*

*தன்னை ஒருவரும் காணுத வண்ணம் மாயையினுல் வனத்தில் மிருகங்களாகவும், ஜலாசயங்களில் ஜலத்தில்*

*வாழும் பிராணிகளாகவும் தன்னை மறைத்துக் கொண்டு, வனத்தில் வரும் ப்ராம்மணர்கள் ஸமித்து, தர்ப்பை இவைகளைச் சேகரிப்பதற்காக வனத்திற்கு வந்தால் அவர்களையெல்லாம் கொன்று தின்று வந்தான். தேவதைகள் தன்னை அறியா வண்ணம் மறைந்து கொண்டிருந்தான். பகல் முழுவதும் முனிவர்களுக்கு மத்தியில் அவனும் அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தான்.*

*பகல் பூராவும் அவர்களுடைய நிலையை நன்கு கவனித்துவைத்துக்கொண்டு இரவில் புலிவடிவில் வந்து அவர்களைக் கொன்று தின்பான். அவர்களுடைய எலும்பைக்கூட மீதி இல்லா வகையில் கபளீகரம் செய்துவிடுவான். இந்த ரீதியில் அநேக விப்ரர்களைத் தின்றுவிட்டான்.*

*ஒரு சமயம் ஒரு பக்தன் சிவராத்ரியன்று தனது பர்ணக்குடியில் மஹாதேவரைப் பூஜை செய்துவிட்டு தியானத்தில் ஆழ்ந்திருந்தான்.அதே ஸமயம் தனது பலத்திஞல் கர்வம் கொண்ட தானவராஜஞன துந்திமிநிஹ்லாதன் புலிரூபம் எடுத்துக் கொண்டு அவர்மேல் பாய்ந்து, அவரை அமுக்க வேண்டுமென்று யோசனை செய்தான்.*

*ஆஞல் சிவதரிசனத்திஞல் திடசித்தரும் த்யான நிஷ்டருமான அந்த பக்தர் மந்திரங்களையே அஸ்திர ரூபமாகக் கொண்டு இருந்ததால் அஸுரஞல் அவரை ஆக்ரமிக்க முடியவில்லை. அப்பொழுது ஜெகத்திற்கு ரக்ஷாமணியும் பக்தர்களை ரக்ஷிப்பதிலேயே தத்பரமாய் இருப்பதுமான பகவான் த்ரிலோசனர் சம்பு ஸர்வாந்தர்யாமியானதால் அந்தத்துஷ்ட அசுரனின் அபிப்ராயத்தை அறிந்து கொண்டார். அதஞல் புலிஉருவத்துடன் அவர்மேல் பாயும் தருவாயில் அவனை*

*நாசம் செய்யவேண்டும் என்ற எண்ணத்துடன் அதிசீக்கிரத்தில் வெளிப்பட்டார்.*

*அந்த பக்தரால் பூஜிக்கப்பட்ட லிங்கத்திலிருந்து கிளம்பிவரும் ருத்திர தேவரைப் பார்த்தவுடனேயே அந்த அசுரன் பர்வதாகாரமான புலி உருவுடன் அவரை எதிர்த்தான். அந்த தைத்யன் அலக்ஷியமாக அவரைப் பார்த்த ஸமயத்திலேயே மஹாதேவர் அவனைப் பிடித்துத் தன்னுடைய கஷ்கத்திலேயே வைத்து நசுக்கிக் கொன்ருர்.*

*பிறகு பிஞ்சானனர் அந்தப் புலியின் தலேயில் ஒருகுத்து விட்டார். கை இடுக்கில் நசுங்கிய வேதனே பொறுக்க முடியாமல் அவன் பெரிதாக கர்ஜித்து ஆகாசத்தையும் பூமியையும் ஒன்ருக்கினுன். அப்பொழுது அந்த பயங்காரமான சப்தத்தைக் கேட்டு நடுங்கிய ஹ்ருதயங்களுடன் தபோதநர்கள் அந்த சப்தம் வந்த திக்குகளே நோக்கிப் போனுர்கள். அங்கு சென்று பார்த்தால் கை இடுக்கில் புலியை நசுக்கிக் கொண்டிருக்கும் மஹாதேவரைக் கண்டார்கள்.*

*எல்லோரும் வணங்கி ஜெய் ஜெய் என்று கோஷித்துத் துதிக்கலாஞர்கள். ஏ! ஜகத் ரக்ஷகா! தாங்கள்தான் பயங்கரமான துக்கத்திலிருந்து எங்களேக் காப்பாற்றினீர்கள். ஏ! நாதா! தாங்கள் அனுக்ரஹியுங்கள். ஏ! ஜகத்குரோ! தாங்கள் இந்த ரூபத்தில் எப்பொழுதும் இங்கு வசித்துக் கொண்டிருக்க வேண்டும். மேலும் இந்த ரூபத்துடன் இங்கு வஸித்துக் கொண்டு இந்தத் தீர்த்தவாசிகளே மற்ற விக்னங்களிலிருந்து ரக்ஷித்துக் கொண்டிருக்க வேண்டும். சந்திர பூஷண மஹாதேவர் அந்த ஜனங்களின் வார்த்தையைக் கேட்டு, அப்படியே ஆகட்டுமென்று கூறிவிட்டு மேலும் கூறுவார்.*

*எவரொருவர் சிரத்தையுடன் இதே ரூபத்தில் இங்கு*

என்னை தரிசிப்பாரோ, ஸந்தேகமில்லாமல் நான் அவர்களுடைய ஸமஸ்த உபத்திரவங்களையும் நீங்குவேன். ஒருவன் யாத்திரை வந்து இந்த லிங்கத்தைப் பூஜிப்பானுனல் அவன் கள்வர்களுக்கோ ம்ருகங்களுக்கோ பயப்பட வேண்டியதில்லை.

ஒருவன் என்னுடைய இந்த லிங்கத்தை ஸ்மரித்துக்கொண்டு ரணக்ஷேத்ரத்தில் நுழைந்தானுனல் அவனுக்கு வெற்றி கிடைக்கும். இவ்விதம் கூறிவிட்டு, மஹாதேவர் அந்த லிங்கத்துக்குள்ளேயே மறைந்து விட்டார். ப்ராதக் காலத்தில் பிராம்மணர்களும் தங்கள் தங்கள் இடத்திற்குச் சென்றுர்கள்.

ஸ்கந்தர் கூறுகிறுர், ஓ அகஸ்தியா, அப்பொழுதிலிருந்து இந்த லிங்கம் வ்யாக்ரேஸ்வரர் என்று பெயர் பெற்று ப்ரசித்தியுடன் விளங்கி நிற்கிறது. ஜ்யேஷ்டேஸ்வரரின் வடக்குபக்கத்தில் தன்னை தரிசித்து ஸ்பர்சிப்பவர்களுடைய பயத்தை நீக்கிக் கொண்டிருக்கிறுர்.

வியாக்ரேஸ்வரருடைய பக்தர்களை யமராஜனின் முக்ய தூதர்கள் கூட ஜீவர்களுக்கு ஜெயம் உண்டாக எனக்கூறிக்கொண்டு விலகியே இருக்கிறுர்கள். இந்தப் பராசரேஸ்வரர் லிங்கங்களின் கதையைக் கேட்டதினுல் மனுஷ்யன் மஹாபாபரூபமான சகதியில் விழமாட்டான்.

கந்துகேஸ்வரருடைய உற்பத்தி, வியாக்ரேஸ்வர ருடைய வருகை இவைகளைக் கேட்டவனுக்கு ஒரு உபத்திரவமும் ஏற்படாது. வியாக்ரேஸ்வரருடைய மேற்குப் பக்கத்தில் உடஜேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதுவும் பக்தர்களுடைய ரக்ஷைக்கென்றே ஆவிர்பவித்தது. அதைப் பூஜை செய்வதினுல எல்லா பயங்களும் விலகும்.

***இவ்விதமாக ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான கந்தேஸ்வர வியாக்ரேஸ்வர வர்ணனே என்னும் அறுபத்தி ஐந்தாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.***



# அத்யாயம் 66

ஸ்கந்தர் கூறுகிறார்:- வாதாபி நாசனனே, ஜேஷ்டேஸ்வரருக்கு நான்கு பக்கமும் இருக்கும் லிங்கங்களைப் பற்றி உமக்குக் கூறுகிறேன்.

ஜேஷ்டேஷ்வரருக்கு தக்ஷிணபாகத்தில் அப்ஸரஸ்ஸுகளினால் ஸ்தாபிக்கப்பட்ட ஒரு உத்தம சிவலிங்கம் இருக்கிறது அங்கு ஸௌபாக்யோதகம் என்னும் பெயருள்ள கிணறும் இருக்கிறது.

ஆண்களும் பெண்களும் அந்தக் கிணற்றில் ஸ்னானம் செய்து அப்ஸரேஸ்வரரைத் தரிசனம் செய்வார்களானால் அவர்களுக்கு துக்கமே ஏற்படாது.

இந்த கிணற்றிற்கு சமீபத்திலேயே குக்குடேஸ்வரர் என்னும் பெயருள்ள சிவலிங்கம் எழுந்தருளியிருக்கிறது. அதைத் தரிசனம் செய்பவர்களுடைய குடும்பம் பெருகும்.

ஜேஷ்டவாபிக்கு அருகிலேயே பிதாமஹேஸ்வரர் என்னும் பெயருடைய மங்களகரமான லிங்கம் ஒன்று இருக்கிறது. அங்கு ச்ராத்தம் செய்து பித்ருக்களை ஸந்தோஷப்படுத்தலாம்.

பிதாமஹேச்வரருக்குத் தென்மேற்குப் பக்கத்தில் கதாதரேச்வரர் லிங்கம் இருக்கிறது. அவரைப் பூஜித்தால் அது பித்ருக்களுக்கு த்ருப்தி அளிக்க வல்லது. அதனால் கவனத்துடன் பூஜிக்க வேண்டியதாகும்.

ஏ! முனீஸ்வரரே, ஜேஷ்டேஸ்வரருக்குத் தெற்குப் பாகத்தில் வாஸுகீஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அவரை தரிசனம் செய்வதாலும், அங்கேயே இருக்கும் வாஸுகி குண்டத்தில் ஸ்னானம், தானம் முதலியவைகள் செய்வதாலும் வாஸுகீஸ்வரரின் பிரபாவத்தினால் ஜனங்களுக்கு ஸர்ப்ப பயமேற்படாது.

நாக பஞ்சமியன்று வாஸுகி குண்டத்தில் ஸ்னானம் செய்பவர்களுக்கு விஷ பயமேற்படாது.

*வருஷ ருதுவின் போது நாக பஞ்சமியன்று அங்கு யாத்திரையாக அவஸ்யம் போக வேண்டும். அப்படி யாத்திரை செய்யும் குடும்பத்தினரிடம் நாகர்கள் மிகவும் ஸந்தோஷமடைகிறுர்கள்.*

*ஏ! அகஸ்தியா! அந்த நாக குண்டத்தின் மேற்கு பக்கத்தில் பக்தர்களுக்கு ஸித்தியுமளிக்கவல்ல தக்ஷகேஸ்வரர் என்னும் லிங்கம் மிகவும் போற்றப்படுவதாகும்.*

*அந்த லிங்கத்திற்கு உத்தரபாகத்தில் தக்ஷகுண்டம் இருக்கிறது; அங்கு ஜலதர்பணம் செய்வதனுல் ஸர்ப்பபயம் நீங்குகிறது.*

*அந்தக் குண்டத்தின் வடக்கு பாகத்தில் காசி க்ஷேத்திரத்திற்கு க்ஷேமத்தை அளிப்பவரும், பக்தர்களின் பயத்தைப போக்கவல்லவருமான கபாலி என்னும் பைரவர் எழுந்தருளியிருக்கிறுர்.*

*இந்த பைரவ மஹாக்ஷேத்ரம் ஸாதகர்களுக்கு மிகவும் ஸித்தியளிக்கவல்லது. இங்கு வித்யாமந்திரத்தை புரஸ்சரணம் செய்தால் ஆறு மாதத்தில் மந்திரம் ஸித்தியாகும்.*

*அங்கேயே பக்த விக்ன நிவாரிணி மஹாமுண்டா என்னும் பெயருள்ள சண்டிகா தேவி எழுந்தருளியிருக்கிறுள். நம்முடைய அபீஷ்டஸித்திக்காக நானுவிதமான பலி, பூஜை முதலிய உபகரணங்களினுல் அவளைப் பூஜிக்க வேண்டும்.*

*உத்தமர்கள் மஹாஅஷ்டமியன்று அங்கு யாத்திரை செல்ல வேண்டும். அப்படிச் செல்பவர்கள் யசஸ்விகளான புத்திரபௌத்திரர்களுடன் லக்ஷ்மீ கடாக்ஷம் பெற்று விளங்குவர்கள்.*

*மஹாமுண்டேஸ்வரிக்கு மேற்கு பக்கத்தில் சதுஸ்ஸாகரம் என்னும் வாபி இருக்கிறது. அதில் ஸ்னுனம்*

*செய்வதினால நான்கு ஸமுத்திரங்களிலும் ஸ்னானம் செய்த பலன் உண்டாகிறது.*

*அந்த இடம் சதுஸ்ஸாகரம் என்று பெயருடையதாக இருக்கிறது. அங்கு நான்கு ஸமுத்திர ராஜர்களாலும் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம் இருக்கிறது.*

*அந்த வாபிக்கு நான்கு புறமும் உள்ள நான்கு லிங்கங்களையும் பூஜை செய்வதினால் அவர்கள் ஸமஸ்த பாபங்களையும் பஸ்மாக்கிவிடுகின்றனர். அங்கிருந்தும் வடக்கில் சென்றால் வ்ருஷபேச்வரர் என்னும் மஹாலிங்கம் இருக்கிறது.*

*மஹாதேவருடைய ரிஷபம் மிகவும் பக்தியுடன் அந்த லிங்கத்தை ஸ்தாபித்திருக்கிறது. அதைத் தரிசனம் செய்வதனால் ஆறாவது மாதத்திலேயே முக்திலாபம் கிட்டுகிறது.*

*வ்ருஷபேஸ்வரருக்கு வடக்கு பக்கத்தில் கந்தர்வேஸ்வரலிங்கம் இருக்கிறது. அதன் கிழக்கில் கந்தர்வகுண்டம் இருக்கிறது.*

*அதில் நீராடி கந்தர்வேஸ்வரரைப் பூஜித்து தம்தம் சக்திக்குத் தகுந்தபடி தானம் செய்து தேவதைகளுக்கும், பித்ருக்களுக்கும் தர்ப்பணம் செய்தால் கந்தர்வர்களுடன் ஆனந்தமாக க்ரீடிக்கலாம்.*

*கந்தர்வேஸ்வரருக்குக் கிழக்குப் பக்கத்தில் கார்க்கோடகர் என்ற நாகமும் கார்க்கோடக வாபி என்ற கிணறும் கார்க்கோடகேஸலிங்கமும் இருக்கின்றன.*

*ஒருவன் அந்த வாபியில் ஸ்னானம் செய்து கார்க்கோடகேஸ்வரரைப் பூஜித்து கார்க்கோடக நாகத்தை ஆதரித்தால் அவன் நாகலோகத்தில் பூஜிக்கப்படுவான்.*

*ஒருவர் இந்தக் கிணற்றில் ஸ்னானம் செய்து விதிகளை முடித்து, கார்க்கோடகநாகத்தைத் தரிசித்தால் அவன் சரீரத்தில் தாவரவிஷமானாலும் சரி, ஜங்கமவிஷமானாலும் சரி ஏறாது.*

கார்க்கோடேஸ்வரருக்கு மேற்கு பக்கத்தில் துந்துமாரீஸ்வரலிங்கம் இருக்கிறது. அதைப் பூஜித்தால் ஜனங்களுக்கு சத்ருபயம் ஏற்படாது.

அதற்கு வடக்குப்பக்கத்தில் குரூரவேஸ்வரர் என்னும் பெயருள்ள லிங்கம் இருக்கிறது. கருத்துடன் தரிசனம் செய்பவர்களுக்கு அது நான்கு புருஷார்த்த பலன்களையும் கொடுக்கிறது.

அதற்கு முன்னால் ஸுப்ரதீபம் என்னும் திக்கஜத்தினால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட கீர்த்தியையும் பலனையும் பெருக்கும் ஸுப்ரதீகேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

அதற்கு முன்னால் ஸுப்ரதீப் என்னும் பெயரையுடைய ஒரு பெரியகுளம் இருக்கிறது. அதில் ஸ்னானம் செய்து அந்த லிங்கத்தை தரிசனம் செய்வதினால் திக்பாலகர்களின் பதவி கிடைக்கிறது.

அதன் பக்கத்தில் வடக்கு வாயிலை ரக்ஷிக்ககும் பொருட்டு விஜய பைரவி என்னும் மஹா கௌரி கோயில் கொண்டிருக்கிறாள். அதைப் பூஜை செய்வதால் இஷ்ட சித்தி ஏற்படும்.

வருணையின் ரமணீயமான தடத்தில் வித்வம்ஸகர்களான குண்டன், முண்டன் என்னும் பெயருடைய இரண்டு கணங்கள் க்ஷேத்திரத்தையே ரக்ஷை செய்து கொண்டிருக்கிறார்கள்.

க்ஷேத்திர ஸம்பந்தப்பட்ட இடையூறுகளை நிவர்த்திப்பதற்காக அந்த இரண்டு கணங்களையும் தரிசிப்பது மிகவும் அவசியமாகும். அங்கேயே குண்டனேஸ்வரர், முண்டனேஸ்வரர் என்று எழுந்தருளியிருக்கும் இரண்டு லிங்கங்களையும் தரிசனம் செய்தால் மனிதன் ஸுகமடைகிறான்.

ஸ்கந்தர் கூறுகிறார்:- இல்வலசத்ருவே! அகஸ்தியா, முன்காலத்தில் வருணையின் மனோஹரமான கரையில் ஒரு

அற்புதமான ஸம்பவம் நடந்தது, அதைக் கூறுகிறேன். கவனத்துடன் கேளும்.

ஒரு சமயம் கிரிராஜன் ஹிமவானின் பதிவ்ரதையான மேஞு கணவன் சந்தோஷத்துடன் இருக்கும் சமயம் பார்த்து புத்திரி உமாவை நினேத்து பெருமூச்சு விட்டுக்கொண்டு இவ்விதம் கூறுவான்:

ஓ! ஆரிய புத்திரா, கிரிராஜனே - விவாகம் ஆனபின்பு வெகுநாட்களாக நம்முடைய பெண் கௌரியைப் பற்றிய செய்தி ஒன்றும் தெரியவில்லேயே.

பஸ்மத்தையும் ஸர்ப்பத்தையும் பூஷணமாக அணிந்தவரும் மஹாஸ்மசானத்தில் வஸிப்பவரும் திகம்பரரும் ரிஷபவாஹனருமான மஹாதேவர் இப்பொழுது எங்கு இருக்கிருரோ, அதுவும் எனக்குத் தெரியவில்லே.

ஏ பிரியா! பிராம்மி முதலிய எட்டு மாதர்களும் ஸுகமாக இருப்பதாகக் காணப்பட்டாலும் என் மனது எனது புத்திரி கஷ்டப்படுவதாகவே நினேக்கிறது.

ஏ! விபோ! அந்தத் தன்னந்தனியரான த்ரிசூலிக்கு வேறு ஒருவருமே கிடையாது. அதஞல் அவரைப் பற்றிய விருத்தாந்தத்தை அறிவதற்கு முயற்சி செய்யுங்கள். அன்பான மனேவியின் இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு ஹிமாசலேசன் உமாவின் மீது இருக்கும் வாத்ஸல்யத்திஞல் தழுதழுத்த குரலுடன் கண்களில் கண்ணீருடஞும் கூறுவார்;

ஏ! மேனே! நானே அவர்களேப்பற்றி விசாரிப்பதற்காக செல்லுகிறேன். அவர்களேப் பார்க்காமல் அக்னிமேல் தஹிக்கப்படும் எனது மனதின் ப்ரேமை என்னே மிகவும் துன்புறுத்துகிறது.

கௌரி எப்பொழுது இங்கிருந்து சென்ருளோ அப்பொழுதே லக்ஷ்மியும் இங்கிருந்து போய்விட்டாள். ஏ! ப்ரியே! என்னுடைய இரண்டு காதுகளும் உமாவின்

*வசனும்ருதத்திலிருந்து வஞ்சிக்கப்பட்ட பிறகு வேறு ஒரு வார்த்தையும் என் காதில் விழுவதில்லை.*

*ஐயோ! பகலிலும் சந்திரிகையைப்போல் பிரகாசிக்கும் என்னுடைய உமா என் கண்களிலிருந்து விலகிச் சென்ற பிறகு இரவில் தோன்றும் சந்திரனும் எனக்கு வெப்பத்தையே தருகிறது.*

*ஹிமகிரி அரசன் இவ்விதமாகப் புலம்பித் தவித்துவிட்டு, நானுவிதமான ரத்னங்கள், வஸ்திரங்கள் இவைகளை எடுத்துக்கொண்டு, சுபலக்னம் பலமாக இருக்கும்பொழுது புறப்பட்டார்.*

*அகஸ்தியர் கேட்டார்:- ஏ ஷண்முகா, எந்தெந்த ரத்தினங்களை எவ்வளவெவ்வளவு எடுத்துக்கொண்டு போனுர்? அதை என்னிடம் கூறவேண்டும் என்றுர்.*

*ஸ்கந்தர் கூறுவார்:- எண்ணூறு தோலா முத்துக்கள், நூறு தோலா வைரங்களும், ஒன்பது லக்ஷத்திற்கும் அதிகமாகவே ஆறுபட்டை தேய்த்த வைரங்களும், இரண்டு தோலா சுமாருக்கு பல வர்ணங்களை உதிர்க்கும் விதவிதமான மணிகளும், பதினுறு தோலா பத்மராகக் கற்களும், ஒன்பது லக்ஷம் தோலா உள்ள புஷ்பராகங்களும், ஒரு லக்ஷம் தோலா உள்ள கோமேதக மணியும், ஐம்பது லக்ஷம் தோலா இந்த்ர நீலமணியும்; பத்து லக்ஷ தோலா மரகதக் கற்களும், ஒன்பது லக்ஷம் தோலா பவழங்களும், பெண்கள் எட்டு அங்கங்களிலும் அணியும் ஆபரணங்களும், மேன்மையும், ம்ருதுவுமான எண்ணிக்கைக்கு அடங்காத வஸ்திரங்களும், இவை இவைகளுடன் கூட நிறைய சாமரங்கள், ஸுகந்த திரவ்யங்கள், தங்கம், தாஸர்கள், தாஸிகள் இவைகளை எண்ண முடியுமா என்ன?*

*இப்பொருள்களை எடுத்துக்கொண்டு அங்கிருந்து வந்து, வருணைக்கரையை அடைந்தவுடனேயே, அங்கிருந்தே அவருக்குக் காசி தென்படத் தொடங்கியது.*

*எந்தக் காசியில் பூமி முழுவதும் ரத்தினங்கள் பதிக்கப்பட்டிந்ததோ, எதனுடைய வான மண்டலத்தை அளாவும் உப்பரிகையில், பதித்த மாணிக்கங்களின் ஜோதியினுல் விஸ்தாரமான ஆகாய மண்டலம் ஜொலிக்கின்றதோ, அந்தக் காசியைக் கண்டார்.*

*உத்தம அரண்மனைகளின் மேல் உச்சியிலிருக்கும் தங்கக்கலசங்கள் தங்களுடைய ஜோதியினுல் திக்குகளை ஒளிமயமாக்குகின்றன; அவைகளில் பறக்கும் கொடிகள் தேவதைகளின் அமராவதி பட்டணத்தைத் தோற்கடிக்கின்றன.*

*அந்நகரானது எட்டு ஸித்திகளும் விளையாடும் அற்புத நகராகும்; அந்த ஆனந்தவனம் செழிப்பாகப் பழுத்த பழங்களால் தழைத்த வ்ருக்ஷங்கள் நிறைந்து, கல்பக விருக்ஷங்கள் நிறைந்த இந்திரவனமான நந்தவனத்தையும் தோற்கடிக்கச் செய்கின்றன.*

*நான் எனக்குத் தெரிந்தமட்டிலும் இந்த நகரின் அதிகாரியைப் பற்றியும் அவருடைய காரியங்களைப் பற்றியும் கூறினேன். நீங்கள் இப்பொழுது இந்த நகரிலுள்ள அபூர்வமான விஷயங்களைப பற்றிக் கேட்டீர்கள். அதையும் கூறுகிறேன்.*

*இப்பொழுது பகவான் உமாபதி கிரிஜா தேவியுடன் காசிக்கு வந்து மிகவும் சந்தோஷத்துடன் மங்களகரமான ஜ்யேஷ்டேஸ்வரருடைய இடத்தில் எழுந்தருளியிருக்கிருர்.*

*ஸ்கந்தர் கூறினுர்;- ஏ! கும்ப முனியே! அந்த வழிப்போக்கன் கிரிஜாதேவியின் அம்ருதத்திற்கொப்பான ம்ருதுவான நாம அக்ஷரங்களைக் கூறக்கூற கிரிராஜரின் ஹ்ருதயத்தில் ஸந்தோஷ அலைகள் புரளத் தொடங்கின.*

*இவ்வுலகில் ஒருவன் உமாதேவியின் நாம ரூபத்தைப் பருகினுஞல் பிறகு அவன் மாதாவின் ஸ்தன்யபானம் செய்யான்.*

*ஏ! ப்ராம்மணரே! எவனொருவன் உமா என்ற இரண்டு அக்ஷரங்களையும் இரவும் பகலும் மந்திரம்போல் தியானித்து வருகிறானோ ப்ராணிகளுக்கு நிர்வாணப்பதவியளிப்பவரான விச்வேஸ்வரர் அவனை பாபம் செய்தவனாக இருந்தாலும் அவனை ஸ்மரிப்பதில்லை.*

*ஹிமவான் மிகவும் சந்தோஷத்துடன் மேலும் மேலும் அந்த யாத்ரிகளை பேசச்சொல்லிக் கேட்கத் தொடங்கினார். பிக்ஷுகன் கூறினான்: விச்வஸ்வரருக்கே வஸிப்பதற்காக சிறந்த வேலைப்பாடுகளுடன் ப்ரம்மாண்டமான ஒரு ராஜ மாளிகையை விச்வகர்மா அமைத்துக் கொண்டிருக்கிறான். அது மிகவும் அபூர்வமான வேலைப்பாடுகள் கூடியது. அதுமாதிரி மற்றொரு மாளிகையைப் பற்றி நான் காதால் கேட்டது கூடக்கிடையாது.*

*அந்தக் கோவிலினுடைய நான்குப் பக்கங்களிலுமுள்ள அஸ்திவாரமே நவரத்தினக் கற்களால் கதிரவனையும்விட அதிகம் (ஒளியுடன்) ப்ரகாசிக்கும் கற்களினால் கட்டப்பட்டிருக்கிறது.*

*அங்கு ப்ரகாசிக்கும் நூற்றிப் பன்னிரண்டு பெரிய பெரிய தூண்கள் ஒவ்வொரு புவனங்களையும் உறுதியாக்குவதற்கு ஒரு உலகத்திற்கு எட்டு தூண்கள் வீதம் கட்டப்பட்டிருக்கின்றன.*

*பதினான்கு உலகங்களிலேயும் உள்ள ப்ரகாசங்களையும் விட நூறுகோடி பங்கு அதிகமாகப் ப்ரகாசிக்கின்றது.*

*சந்திர காந்தக் கற்களினால் ஒவ்வொரு ஸ்தம்பத்திற்கும் ஆதாரபீடமாகக் கட்டப்பட்டிருக்கிறது. அந்த ஸ்தம்பங்களில் சித்திர விசித்திரமான ரத்தினங்களினால் ஆன பொம்மைகள் பதிக்கப்பட்டுள்ளன; அவைகள் இரவும் பகலும் சந்திரகாந்தக் கற்களில் ப்ரதிபலித்து, ஹாரத்தி சுற்றுவது போல் விளங்குகின்றன.*

*ரத்தச்சிவப்பு, மஞ்சள், கருப்பு, நீலம் என்று பலவிதமான நிறங்களினுல் ஆன பத்மாகாரமான தளவரிசையில் நான்கு பக்கங்களிலும் ப்ரதிபலிக்கும் ப்ரதிபிம்பம் அழகான சித்திரங்கள் எழுதியிருப்பதைப்போல் இருக்கின்றன.*

*கண்களைக் கூசச்செய்யும் மாணிக்கஸ்தம்பங்களின் வரிசை தன்னுடைய அவிமுக்த க்ஷேத்திரத்தில் மோக்ஷலக்ஷ்மியை அங்குரார்ப்பணம் செய்கிருற்போல் இருக்கிறது. அங்கு சிவபிரானுடைய வேலைக்காரர்கள் ஸப்த ஸமுத்திரங்களிலிருந்தும் பெருமளவு ரத்தினங்கள் கொண்டுவந்து பர்வத சிகரங்களைப்போல் குவித்து வைத்திருக்கிருர்கள்.*

*மேலும் கணகள் பாதாளத்தில் இருக்கும் நாகலோகத்தில் இருக்கும் பொக்கிஷத்திலிருந்து அநேக மணிகளைக் கொண்டு வந்து, செயற்கைக் குன்றங்களாக அமைத்து இருக்கிருர்கள். கோவிலின் ஸ்தூபிகளுக்கு சிவபக்தனுன ராவணன் த்ரிகூடாசலத்திலிருந்த கோடிக்கணக்கானத் தங்கச்சிரங்களை ராக்ஷதர்கள் மூலம் கொடுத்தனுப்பியிருக்கிருன்.*

*ஓ! நரநாதா! இங்கு கோவில் கட்டும் ஸமாசாரத்தை யறிந்து எத்தனையோ தீவுகளிலிருந்து பக்த கணங்கள் மணிகளைக் கொண்டு குவித்திருக்கிருர்கள். இதுமட்டுமா! சிந்தாமணி ரத்னம் விஸ்வகர்மா கட்டிடம் அமைக்க எந்தெந்த ரத்ன மணிகளை விரும்புகிருனே, அவைகள் அனைத்தையும் இரவும் பகலும் கொடுத்துக் கொண்டிருக்கிறது.*

*கற்பக வ்ருக்ஷ ஸமூஹங்கள் பக்தியுடன் கூட இந்த ஆலயத்தில் பறக்க விடுவதற்கு அநேக வர்ணங்களில் கொடிகளை அளித்துக் கொண்டிருக்கிறது. ஸமுத்ரங்கள் தயிர், பால், கரும்புரஸம் முதலியவைகளை தினமும் பஞ்சாம்ருதக் கலசங்களில் அனுப்பி ஆலயத்தை ஸ்னனம் செய்விக்கின்றன.*

காமதேனுவும் மிகவும் பக்தி பாவத்துடன் கூட தேன்பெருக்கைப் போல் இனிக்கும் தன்னுடைய க்ஷீரதாரையினுல் சிவலிங்க ஸ்வரூபமாக இருக்கும் விஸ்வேஸ்வரரை தினமும் அபிஷேகம் செய்விக்கின்றது.

மலேயாசலம் தன்னுடைய சந்தன ரஸத்திஞலும், கற்பூர வாழைகளிலும், கற்பூரக்குவியல்களிஞலும் பக்தி பூர்வமாக பகவானே வழிபடுகின்றன. இந்த விதமான அபூர்வ வழிபாடுகள் சிவாலயத்தில் தினம் தினம் நடந்து கொண்டிருக்கின்றன.

ஏ! ராஜனே! கடினமான மலேப்ரதேசவாஸியே! அப்படிப்பட்ட உமாகாந்தனே ஏன் இன்னும் அறிந்து கொள்ளவில்லே? கிரிராஜர் மாப்பிள்ளேயின் இந்த செழிப்புச் செல்வங்களேக் கேள்விப்பட்டு மிகவும் லஜ்ஜையடைந்தார். ஏ கும்பமுநியே! இதன் பிறகு அந்த வழிப்போக்கனே அவர் சிறந்த வெகுமதிகளால் ஸந்தோஷப்படுத்தி அனுப்பிவிட்டு பிக்ஷுரன் சென்ற யோசித்து பார்த்தார்.

ஆச்சர்யத்திஞல் மலர்ந்த கண்களுடன் தம்மனத்திற்குள்யேயே சொல்லிக் கொள்ளத் தொடங்கிஞர். இந்த நல்ல விஷயங்களே நாம் இப்பொழுது கேட்டது நல்லதாயிற்று. லீலாவிஞேதத்திஞலேயே த்ரைலோக்ய நாதஞன மாப்பிள்ளேயின் வீட்டில் இந்தவிதமான சம்பத்துக்கள் சேர்ந்திருப்பது பற்றிக் கேள்விப்பட்டது நல்லதாகப் போயிற்று.

அவர்களுக்காக நான் கொண்டுவந்திருக்கும் சீர்வரிசைகளேப் பற்றி எண்ணும்போது எனக்கே மிகவும் துச்சமாகப் படுகிறது. இதஞல் பெண்ணுக்கும் மாப்பிள்ளேக்கும் என்ன ஸந்தோஷம் ஏற்படப்போகிறது!

நான் முன்பு பார்த்தபோது எப்படியிருந்தார்களோ அப்படியே இப்பொழுதும் இருப்பார்கள் என்று நான் நினேத்தது தவறு. சம்பத்து விஷயமாகவே பராமுகமாக

*இருப்பார்கள்; ஒரு கிழட்டுக் காளை ஒன்றே அவர்களுடைய தனம். அவர்களை ஒருவருக்கும் தெரியாது. அவர்களுடைய சம்பத்தைப் பற்றி ஒரு உறுதியும் கிடையாது, அவர்கள் எந்த தேசத்தவர்கள் என்றும் தெரியாது, அவர்களுடைய தொழில் என்ன? ஆசாரம் என்ன? பெயர் அளவிற்குத் தான் ஈஸ்வரரா, ஐஸ்வர்யம் என்று ஒரு பொருளும் அவரிடம் காணப்படவில்லையே, என்றெல்லாம் யோசிக்க வேண்டியிருந்தது.*

*இப்பொழுது என்ன பார்க்கிறேனென்றால் என்னுடைய மாப்பிள்ளை தரித்திரர்களுக்கு வாரி வாரி வழங்குகிறார். ப்ரஸன்ன முகத்துடனேயிருந்து எல்லாக் காரியங்களையும் வெற்றிகரமாக நடத்துகிறார். இந்த வேதவேத்யர் இந்த ஸர்வக்ஞர், ஸர்வாந்தர்யாமி. ஸம்ஸார முழுவதுமே அவருடைய குழந்தை குட்டிகள், முதலில் யாரை ஒருவரும் அறியவில்லையோ, அவர்கள் இன்று வேதத்தால் அறியும் புகழ் கொண்டிருக்கிறார்கள்.*

*ஒன்றும் அறியாதவர் என்று இருந்தவர் இந்த ஸர்வக்ஞர் ஆகிவிட்டாரா! முதலில் நாமரூபமாக இருந்தவர் - இன்று எல்லாருடைய பெயர்களும் அவருடைய பெயர்களாகவே திகழ்கின்றனவே; எல்லா தேசங்களும் அவருடைய தேசங்களாகிவிட்டன. அவர் எல்லோருக்கும் எல்லா ஸித்திகளையும் அளித்துக் கொண்டிருக்கிறார்.*

*என்னுடைய புத்தி கடினமாக இருப்பதினால் யாரை முன்பு தேசமில்லாதவனாகவும் தொழிலில் பராமுகமாகவும் ஆசாரசூன்யனாகவும் கண்டேனோ இன்று அவரிடமிருந்தே ஸ்ருதி ஸ்ம்ருதியும் ஆசாரங்களைத் தெரிந்து கொள்கிறேன். அவர், பெயர்அளவில் ஈஸ்வரன் இல்லை, உண்மையிலேயே ஈஸ்வரன்.*

*ஆஹா! என்னுடைய மருமகன் ஸாக்ஷாத் ஈஸ்வரரல்லவா, எல்லோருக்கும் ஐஸ்வர்யத்தை வாரி*

வழங்குகிறுர் அல்லவா, எல்லா குணங்களுக்கும் ஆதாரமாக இருப்பவராக இருந்தாலும் குணூதீதரும், பரத்துக்கும் பரமாக இருக்கிறுர்.

இங்குமங்கும் பராத்பரராக இருக்கிறுர். நான் கேவலம் மலேகளுக்கு அரசன். ஆனுல் இந்த உமாபதியோ உலகத்துக்கெல்லாம் அதீஸ்வரர்.

நாஞே அளவுடன் கூடிய சம்பத்துக்கதிபதி. அவரோ அளவில்லாத தனேஸ்வரர், அதனுல் நான் கொண்டு வந்திருக்கும் இந்தச் சீர் வரிசைகள் அவர்களுக்குக் காண்பிப்பதற்கே தகுதியற்றவை.

அதனுல் நான் இந்த சமயம் அவரை சந்திப்பதற்கே தகுதியாக இல்லே. பின் எப்பொழுதாவது வந்து அவரைப் பார்க்கிறேன். சாயங்காலம் ஹிமவான் இவ்விதமாக மனதில் உறுதி கொண்டு தன்னுடைய பர்வதத்திலுள்ள மஹாபலசாலிகளான வேலேக்காரர்களேக் கூப்பிட்டுக் கூறினுன். நீங்களெல்லாரும் மிகவும் பலசாலிகள். அதனுல் நாளேக்காலே சூரிய உதயத்திற்குள் இங்கு ஒரு அழகான சிவாலயத்தை எழுப்ப வேண்டும். இது என்னுடைய உத்திரவு.

ஏனென்ருல் இங்கு ஒரு சிவாலயத்தை எழுப்புவதிஞல் இந்த லோகத்திலும் பரலோகத்திலும் க்ருதக்ருத்யனுவேன்.

மேலும் எவனெருவன் வந்து காசியில் சிவாலயத்தை நிர்மாணிக்கிருஞே அவன் மூன்று உலகங்களுக்கும் வீடுகட்டிக் கொடுத்த பலனே அடைகிறுன். மேலும் விதி பூர்வமாக ஸகல விதமான தானங்களே உத்தம பர்வங்களில் நல்ல தீர்த்த ஸ்தானத்தில் சென்று நல்ல ஸத்பாத்திரங்களுக்குக் கொடுத்தவனேயும், தர்ம வழியில் ஸம்பாதித்த பணத்திஞல் தன்னுடைய சக்தி அனுஸாரம் இங்கு மஹாதேவருடைய கோவில் கட்டுபவனேயும், கமலாதேவி ஒருபொழுதும் கைவிடமாட்டாள். ஒருவன்

*காசிக்கு வந்து சிவாலயம் கட்டினுல் - சரகுகளைத் தின்று கடினமான தபம் செய்தவனுகவே இருப்பான். இந்த ஆனந்த கானனத்தில் தேவ தேவரான சிவபிரானுடைய கோவில் கட்டி முடித்தானுல் அவனுக்கு மிகவும் கோலாஹலமாக பெரிய பெரிய யக்ஞங்களை பண்ணி முடித்த பூர்ணமான பலன் கிடைக்கிறது. இந்த விதமாகக் கூறி முடித்ததும் - கிரிராஜருடைய வார்த்தைகளைக் கேட்டு அவருடைய ஆக்ஞைபிரகாரம் அவருடைய அனுசரர்கள் பெரிய மகத்தானதொரு கோவிலை நிர்மாணித்தார்கள். ஹிமவானும் முழுதும் விடிவதற்கு முன்னுலேயே சந்திரகாந்தமணியினுல் ஜ்வலிக்கும் மண்டபத்தை பின்னும் அதிகம் ஜ்வலிக்கச் செய்யும் சைலேஸ்வர் என்னும் உத்தம சிவலிங்கத்தை ஸ்தாபிதம் செய்தார்.*

*பிறகு அவர் மற்ற பர்வதங்கள் எல்லாவற்றையும் விடத்தான் பிரதானமானவன் என்பதை ஸூசிப்பிக்க அக்ஷரங்களைப் பளிங்குக் கல்லில் எழுதி அங்கு ஸ்தாபிதம் செய்தார்.*

*அதன் பிறகு கிரிராஜர் அருணோதயம் ஆனதும் பஞ்சநதத்தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து காலபைரவரைத் தரிசித்து ஆராதித்து, தான் கொண்டு வந்த எல்லா ரத்னக் குவியல்களையும் அங்கேயே வைத்துவிட்டு, தன்னுடன் வந்த பர்வத வாஸிகளான அனுசரர்களையும் அழைத்துக் கொண்டு அந்த நிமிஷமே தன்னுடைய இருப்பிடத்திற்குச் சென்ருர்.*

*அதற்குப் பிறகு காலை வேளையில் குண்டம், முண்டன் என்ற பெயருடைய சிவபிரானுடைய இருகணங்கள் ரமணீயமான வருணு நதிக்கரையில் அழகான ஒரு சிவாலயத்தைக் கண்டார்கள்.*

*இதுவரையில் பர்த்திராத இந்த அழகான கோவிலைப் பற்றின சமாசாரத்தை பகவானிடம் தெரிவிப்பதற்காக அவர் இருப்பிடம் சென்ருர்கள். அப்பொழுது பகவதி*

உமாதேவி அவருக்குக் கண்ணாடி காட்டிக் கொண்டிருந்தார். இதைப் பார்த்துவிட்டு, நெடுஞ்சாண் கிடையாக விழுந்து தண்டம் ஸமர்ப்பித்தார்கள். பிறகு பகவானுடைய புருவ நெற்றிப்பெக்கண்டு வந்த விஷயத்தைத் தெரிவித்தார்கள்.

ஏ! தேவ! தேவா! நமக்கு யார் என்பதே தெரியாத ஒரு பக்திமான் வருணைதடத்தில் அழகான ஒரு கோவிலை நிர்மாணித்து இருக்கிறார். ஏ! விபோ! நேற்றுமாலை வரையிலும் அங்கு ஒன்றும் தெரியவில்லை. இன்று காலையில்தான் திடீரென்று அந்தக் கோவில் தோன்றியிருக்கிறது. கணங்களின் வார்த்தைகளைக் கேட்டு, ஸர்வக்ஞான பகவான் ஸகல விருத்தாந்தங்களை அறிந்திருந்தும் கூட ஒன்றும் அறியாதவர் போல பார்வதியிடம் கூறினார். ஹே! சைலேந்திர நந்தினீ! நாம் இருவரும் சென்று அந்தக் கோவிலைப் பார்த்துவிட்டு வருவோம் என்று கூறினார்.

இவ்வாறு கூறிவிட்டு மஹாதேவர் பார்வதியுடனும், கணங்களுடனும் பெரிய ரதத்தில் ஏறிக்கொண்டு அந்தக் கோவிலைக் காண்பதற்கு மிக ஆவலுடன் சென்றார். பிறகு மஹாதேவர் வருணாநதிக்கரையில் ஒரே நாளில் இரவில் கட்டப்பட்ட அந்த அழகான கலைகள் பொருந்திய கோவிலைப் பார்த்தவுடனே ரதத்திலிருந்து இறங்கி கோவிலுக்குள்ளே சென்றார். அங்கு தேஜஸ்ஸுடன் ஜ்வலிக்கும் மோக்ஷலக்ஷ்மியின் முளை எனக் கண்களுக்கு ஆனந்தத்தைத் தரும், புனர்ஜென்ம துக்கத்தை நாசம் செய்யும், சந்திரகாந்தக் கல்லினால் செய்யப்பட்ட மஹாலிங்கத்தைப் பார்த்தார்.

இந்த லிங்கத்தை யார் ஸ்தாபித்தார்! என்று கேட்க வாய் திறக்குமுன்னரே, அங்கு பளிங்குக் கல்லில் பொறிக்கப்பட்டிருக்கும் அறிவிப்பு அக்ஷரங்களைப் பார்த்தார். பிறகு மன்மதனின் கர்வத்தைத் தொலைத்த ஹரன் மனதிற்குள் யோசனை செய்து கொண்டு, பார்வதியிடம்

*கூறினார்:- ஏ! தேவீ! உன்னுடைய பிதாவின் கீர்த்தியைப் பார்த்தாயா; என்றார்.*

*இதைக் கேட்டுவிட்டு மிகவும் ஆனந்தம் அடைந்ததினால் ஸந்தோஷம் என்னும் பூக்களின் சோபையைப் போல் ஸமஸ்த அங்கங்களிலும் கதம்ப மலரின் சோபையைப் பின்னும் ப்ரகாசப்படுத்திக் கொண்டு, உமாதேவி மஹாதேவரின் அடிகளில் பணிந்து கூறினாள். ஏ! நாதா, இந்த உத்தம லிங்கத்தில் தாங்கள் எப்பொழுதும் ஸாந்நித்யமாக இருக்க வேண்டும்.*

*எவர்கள் இந்த சைலேஸ்வரலிங்கத்தின் பக்தர்களாக இருக்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம், இந்த லோகத்திலும், மறுலோகத்திலும் குறைவற்ற ஸந்தோஷத்தை எப்பொழுதும் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்றார். பகவானும் அப்படியே ஆகட்டுமென்றார். மேலும் கூறுவார். - தேவீ, எவர் ஒருவர் வருணையில் ஸ்நானம் செய்து சைலேஸ்வரரைப் பூஜிக்கிறார்களோ, மேலும் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து ப்ரஸன்னமான மனதுடன், யதாசக்தி தானம் செய்தார்களானால் அவர்கள் எல்லோருக்கும் இந்த ஸம்ஸாரத்தில் திரும்பவும் பிறக்க வேண்டி வராது.*

*நான் இந்த சுபத்தைக் கொடுக்கக்கூடிய இந்த சிவலிங்கத்தில் எப்பொழுதும் ஸாந்நித்யமாக இருப்பேன்.*

*வருணையின் இந்த அழகான கரையில் சைலேந்திரனைத் தரிசனம் செய்யும் காசி வாஸிகள் ஒரு பொழுதும் துக்கத்தினால் பீடிக்கப்படமாட்டார்கள்.*

*ஏ! கும்பமுனியே! இதன் பிறகு உமாதேவியும் வரமளித்தாள். சைலேஸ்வரருடைய பக்தர்கள் நிச்சயமாக எனக்குக் குழந்தையைப் போல பிரியமானவர்கள்.*

*ஸ்கந்தர் கூறுவார்- ஏ! மஹா முனியே! நான் இப்பொழுது உமக்கு சைலேந்திர லிங்கத்தைப் பற்றி வர்ணித்தேன். இனி ரத்னேஸ்வரர் உற்பவித்தக் கதையைக் கூறுகிறேன் கேளும்.*

பரம சிரத்தையுடன் சைலேஸ்வரருடைய மஹாத்மியத்தைக் கேட்பதினுல் மஹா பாபமாகி ஆடையைக் களைத்துவிட்டுச் சிவலோகத்தில் சுபமாக வஸிக்கிறுர்கள்

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான கா கண்டத்தில் உத்திரார்த்தபாஷா டீகாவான சைலேஸ்வரா லிங்கவர்ணனம் என்ற அறுபத்து ஆருவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# *அத்யாயம் 67*

*அகஸ்தியர் கூறுவார்:- ஏ! ஷடானனு, தாங்கள் இப்பொழுது ரத்னேஸ்வரர் உற்பத்தியை வர்ணியுங்கள். ஏனென்றல் அந்த மஹாலிங்கம் காசியில் ரத்னங்களாலானது என்று கூறுகிறூர்கள்.*

*ஸ்கந்தர் கூறினூர்:- ஏ! முனீஸ்வரா! நான் இப்பொழுது ரத்னேஸ்வர லிங்கத்தைப் பற்றியும் அவர் எப்படி வெளிப்பட்டார் என்பதையும் கூறுகிறேன்.*

*ஏ! ரிஷியே! எந்த லிங்கத்தின் நாமத்தைக் கேட்டவுடனேயே மூன்று ஜன்மங்களாகச் சேர்த்து வைத்த பாபங்கள் நாசமடைகின்றனவோ, அந்த லிங்கம் தோன்றிய கதையை வர்ணிக்கிறேன். பர்வத ராஜர் ஹிமாலய காலபைரவரின் வடக்கு பாகத்தில் ரத்னங்களைக் குவித்து விட்டுச் சென்றூர். என்று சொன்னேமேயல்லவா? அவர்கள் புண்யேஸ்வரரான பர்வதராஜருடைய தபோபலத்தினூல இந்திரதனுஸிற்கு சமமான வர்ணங்களுடன் ஸமஸ்த ரத்னங்களின் ஒளியெல்லாம் ஒன்று சேர்த்து ஒரு லிங்கரூபமாகப் பரிணமித்தது.*

*அந்த லிங்கத்தைத் தரிசித்தவர்கள் ஞானரத்தினத்தையடைவார்கள். சைலேஸ்வரரைப் பார்த்துவிட்டு மஹாதேவரும் பார்வதியும் அங்கு வந்தார்கள். ஏ! முனிவரே, ரத்தினமயமான இந்த லிங்கம் எல்லா ரத்தினங்களும் ஒன்று சேர்ந்து உருவான தொன்றுகும். அந்த லிங்கத்தின் ஒளியினூல் ஆகாச மண்டலம் முழுவதும் ஒளி வ்யாபித்திருக்கிறது.*

*அங்கு ஸகலமான ரத்னங்களினூல் உற்பத்தியான, இதுவரை பார்த்திராத அந்த லிங்கத்தைக் கண்டவுடன் பவானி சங்கரரிடம் விண்ணப்பித்துக் கொண்டாள்- ஏ! தேவாதி தேவா! ஜகன்னூயகா! ஸர்வ பக்த அபயப்ரதா! ஏழாவது உலகமான பாதாளத்திலேயே அஸ்திவாரம் போன்ற இந்த லிங்கம் எவ்விதம் கிளம்பி வந்தது?*

என்னுடைய ஜ்வாலையினுல் ஆகாசமும் ஒளியினுல் திக்குகளும் வ்யாபித்து இருக்கின்றன. ஏ! பவாந்தகா; இந்த லிங்கத்தினுடைய பெயரென்ன? அதனுடைய ஸ்வரூபம் எப்படிப்பட்டது? அதன் ப்ரபாவம் என்ன?

இதைப்பார்த்தவுடனேயே என் மனம் மிகவும் ஸந்தோஷம் அடைந்து இதிலேயே லயித்துவிட்டது. தாங்கள் தயைசெய்து இதனுடைய விஷயங்களை எல்லாம் கூறவேண்டும். மஹாதேவர் கூறுவார்:- ஏ! அபர்ணே! நீ கேட்டபடியே பரம தேஜோமயமான இந்த லிங்கத்தின் ரூபத்தைப் பற்றிக் கூறுகிறேன்-

ஏ! பாமினி! உன்னுடைய பிதா கிரிராஜனுனவன் அநேகரத்னக் குவியல்களை இங்கு கொண்டு வந்தார். ஹிமவான் தன் செய்கைகளினுல் ஸம்பாதித்த அந்த ரத்தின குவியல்களை எல்லாம் இங்கேயே குவியலாகக் குவித்துவிட்டுத் தன்னுடைய ஸ்தானத்திற்குச் சென்று விட்டார்.

ஏ! குற்றமற்றவளே, இந்தக் காசி புரியில் உனக்காகவும் எனக்காகவும் சமர்பித்தப் பொருள்கள் இப்படித்தான் பக்குவமடைகின்றன.

ஏ! உமே! ரத்னேஸ்வரர் என்ற லிங்கம் எனக்கு ஸமமாகும். மேலும் வாராணஸியில் என்னுடைய ப்ரபாவம் போற்றத் தக்கதாக இருக்கும்.

இங்குள்ள எல்லா ரத்தினங்களுக்கும் மேலாகத் திகழும் ரத்னேஸ்வரலிங்கமானது நிர்வாணப் பதவியை அளிக்கும் உத்தம லிங்கமாகும். அதனுல் இந்த லிங்கம் ரத்தினேஸ்வர லிங்கம் என்ற பெயருடன் உற்பத்தியாகி இருக்கிறது.

ஏ! மஹேஸ்வரீ! உன்னுடைய பிதாவினுல் சேர்த்துவைக்கப்பட்ட இந்த சுவர்ணக் குவியலினுல் இந்த லிங்கத்திற்கு ஒரு கோயிலை ஏற்படுத்துவாய்.

*ஒரு லிங்கத்திற்கு ஒரு சிவாலயம் அமைப்பதினுலும், பழுதடைந்த கோவில்களைச் சீர்படுத்துவதினுலும் லிங்கத்தை ஸ்தாபிதம் பண்ணின புண்ணியம் அனுயாஸமாகக் கிடைக்கிறது.*

*ஏ! முனியே! பகவதியும் ஸ்வாமியிடம் ஆக்ஞைக்கு சரியென்று கூறிவிட்டு ஸோமநந்தி முதலான எண்ணிக்கையற்ற கணங்களை ஏவி, கோவில் கட்டும்படி ஆக்ஞாபித்தார்.*

*அந்த கணங்களும் ஒரு நாழிகைக்குள்ளாகவே அநேக நூதன சித்திர, விசித்திர வேலைப்பாடுகள் அமைத்த ஸுமேரு பர்வதத்திற்கொப்பான ஸுவர்ணத்தினுலான கோவிலை எழுப்பிவிட்டார்கள்.*

*தேவி, அந்தக் கோவிலைப் பார்த்துவிட்டு மிகவும் சந்தோஷமடைந்து அந்தக் கணங்களுக்கு அளவில்லாத வெகுமதிகளை அளித்தாள்.*

*ஏ! முனிவரே, இதற்குப் பின் பகவதி மஹாதேவரிடம் அந்த லிங்கத்தின் மகிமையை ப்ரமாண ரூபமாகக் கூறவேண்டும் என்ருள்.*

*சங்கரர் கூறினுர்:- ஏ! தேவி! மங்களத்தைக் கொடுக்கும் இந்த லிங்கம் அனுதி சித்தமானது. ஆனுல் இச்சமயம் உன்னுடைய பிதாவினுடைய புண்ணிய ப்ரபாவத்தினுல் வெளிக்கிளம்பியுள்ளது.*

*இந்த க்ஷேத்திரத்தில் மனோவாஞ்சிதமான பலனைக் கொடுக்கக் கூடியது. அதிரகஸ்யமான; பொருள்களைவிட அதிரகஸ்யமான இந்த ரத்னேஸ்வர லிங்கத்தை இந்தக் கலியுகத்தில் அதிலும் விசேஷமாக பாவபுத்தியுள்ள ஜனங்களிடமிருந்து மிகக் கவனமாக மறைத்து வைக்க வேண்டும்.*

*வீடுகளிலேயே விலையுயர்ந்த ரத்தினங்களை மறைத்து வைப்பது போலவே இதையும் மிக கவனத்துடன் மறைத்து வைக்க வேண்டும். ஏனென்ருல்*

லோபபுத்தியுடைய ஜனங்கள் இதை அறியக்கூடாது. என்னுடைய அவிமுக்தம் எனும் க்ருஹத்தில் ரத்தினங்களாலான லிங்கம் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. இந்த ப்ரம்மாண்ட மண்டலத்தில் எத்தனை லிங்கங்கள் உள்ளனவோ அவைகள் அத்தனையும் பூஜித்தால் என்ன பலன் கிடைக்குமோ அவ்வளவு பலன்கள் இந்த ரத்தினேஸ்வரரைப் பூஜிப்பதினுல் கிடைக்கிறது.

ஏ! கௌரியே! ஒருவர் விளையாட்டுக்காகக்கூட அந்த ரத்னேஸ்வரரை அர்ச்சித்தாளுனுல் அவர்கள் ஏழு த்வீபங்களுக்கும் அரசனுவார். இது நிச்சயம்.

ஒருவன் ஒரு தடவையாவ ரத்னேஸ்வரரை அர்ச்சித்தாளுனுல் மூன்று உலகங்களிலும் ரத்தினத்திற் கொப்பான பொருள்களைப் பெறுவான்.

எவர் ஒன்றையும் விரும்பாது காமரஹிதராய் ரத்தினேஸ்வரரை பூஜித்தாராளுல் அவர்கள் எல்லோரும் என்னுடைய தரிசினத்தைப் பெறுவார்கள்.

கோடிக்கணக்கான ருத்ரஜபம் செய்தால் என்னென்ன பலன் கிடைக்குமோ, அந்தப் பலன் ரத்தினேஸ்வரரை ஒரு முறை பூஜித்தால் கிடைக்கும்.

இந்த அனுதிஸித்தி சிவலிங்கத்தின் விஷயமாக ஸர்வ பாபங்களையும் நாசம் செய்யும் மிகவும் ஆச்சர்யகரமான ஒரு ஸம்பவம் நிகழ்ந்தது. அதன் விவரத்தை உன்னிடம் கூறுகிறேன் கேள்.

பூர்வ காலத்தில் ஆடல் பாடல்களில் சிறந்த கலாவதி என்னும் நர்த்தகி இதே நகரத்தில் இருந்தாள். அவள் ஒருசமயம் பங்குனி மாதம் சிவராத்ரிபர்வத்தில் இரவு பூராவும் கண்விழித்து உத்தம கீதங்களை பாடிக் கொண்டு அநேகவிதமான வாத்யங்களை வாசிக்கலானுள். அதற்கு பிறகு அந்த வாத்யங்களில் தேர்ந்த அவள் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் வாத்யங்கள்

*வாசித்துக்கொண்டும் ரத்தினேஸ்வரரை ஸந்தோஷப்படுத்திவிட்டுத் தன்னுடைய சொந்த தேசத்திற்குச் சென்றுவிட்டாள்.*

*அந்த உத்தம நர்த்தகி காலதர்மத்தின் வசத்திஞல் வஸீபதி என்னும் கந்தர்வ ராஜனின கன்னிகையாகப் பிறந்தாள்.*

*சிவராத்ரி பர்வத்தில் கண்விழித்து வாத்யங்கள் வாசித்து ரத்னேஸ்வரருக்கும் முன் ஆடிப்பாடின பலத்திஞல் அந்த ரூபலாவண்யவதியும் கலாகல்பங்களில் தேர்ந்தவளும், மதுர ஆலாபனம் செய்பவளும், பிதாவிற்கு ஆனந்தத்தைக் கொடுப்பவளும் ஸமஸ்த கந்தர்வ சாஸ்திரங்களில் நிபுணையும் குணங்களாகிய ரத்தினத்தின் சிகரமுமான அந்த அழகான பெண் ரத்ஞவளி என்ற பெயரால் கீர்த்தி அடைந்தாள்.*

*கும்பத்தில் பிறந்தவரே! ஏ முனியே! அவளுக்கு சசிலேகா, அனங்கலேகா, சித்ரலேகா என்ற மூன்று ஸகிகள் இருந்தனர். அவர்கள் மிகவும் சாதுர்யமானவர்கள்.*

*மூவரும் ஒருமித்து ஒரே ஸமயத்தில் வாக்தேவியை ஆராதித்தார்கள். வாக்தேவி பரமானந்தமடைந்து அவர்களுக்கு அறுபத்து நான்கு கலைகளிலும் நிபுணத்வம் வருமாறு வரமளித்திருந்தாள்.*

*ஏ! கௌரி! அந்த ரத்ஞவளி ஜன்மாந்தர வாசனையினல் அந்த ரத்னேஸ்வரரை தரிசிக்க ஒரு நியமம் வகுத்துக்கொண்டாள். காசியில் ரத்னபூத ரத்னேஸ்வர லிங்கத்தைத் தரிசிக்காமல் ஒரு வார்த்தை கூடப் பேசமாட்டாள்.*

*இந்த விதமாக அந்த கந்தர்வ கன்னிகை தனது மூன்று ஸகிகளோடு கூட நியமமாக தினந்தோறும் ரத்னபூதேஸ்வரரைப் பூஜை செய்து வந்தாள். ஒரு ஸமயம் அவள் உத்தமமான ரத்னேஸ்வரரை ஆராதனை செய்து கொண்டு அவள் இனிய கீதங்களிஞல் என்னை ஸந்தோஷப்படுத்திஞள்.*

*ஏ! உமே! அப்பொழுது அவளுடைய மூன்று ஸகிகளும் லிங்கத்தை வலம் வந்து கொண்டிருந்தனர். அதே சமயத்தில் நான் அவளுக்கு வரம் கொடுக்க எண்ணி, அவளிடம் கூறினேன்.*

*ஏ! கந்தர்வ கன்னிகையே! இன்று இரவில் உன்னுடைய பெயரையுடைய ஒருவன் உன்னுடன் க்ரீடித்தாஞுல் அவனே உன் கணவஞுவான். அந்த ரத்திஞுவளி லிங்கரூபியான அந்த ஸமுத்திரத்திலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட அந்த வசஞம்ருதத்தைக் கேட்டு ஆனந்த பூரிப்புடன் மந்தமாகி மிகவும் லஜ்ஜையடைந்தாள்.*

*பிறகு தனது ஸகிகளுடன் கூடத் தன் பிதாவின் வீட்டிற்கு வந்து தன் ஸகிகளிடம் எல்லா விருத்தாத்ந்தங்களேயும் ஸந்தோஷத்துடன் கூறிஞள். அவர்கள் எல்லோரும் ஆஹா! ஆஹா! நன்று! மிகவும் நன்று என்று மிக்க சந்தோஷத்துடன் அவளே உற்சாகப் படுத்திஞர்கள்.*

*ரத்திேனஸ்வரரைத் தினமும் பூஜித்ததிஞல் உன் மஞேரதம் பூர்த்தியாயிற்று. இன்று இரவு உன்னுடைய யெளவனத்தை அபஹரிக்கும் அக்கள்வன் வந்தானேயாஞல அவனே உனது பாஸுபாசத்திஞல் கட்டிவைத்துக் கொள் என்ருர்கள். மறுநாள் காலேயில் ரத்திேனஸ்வரன் சமீபத்தில் உன்னுடைய அன்பிற்குப் பாத்திரமான ஸுக்ருதசாலியான அன்பரை நாங்களும் பார்ப்போம்!*

*அடியம்மா! உன்னுடைய புண்ணியந்தான் எப்படிப்பட்டது! ஆஹா! ரத்திேனஸ்வரரை வணங்கி ஸந்தோஷத்துடன் வந்து பிறகு உன்னுடைய புண்ணிய பலத்திஞல் ரத்னேஸ்வரரை ப்ரத்யக்ஷமாகக் கண் முன்ஞல் பார்த்தாயா!*

*ஆஹா! பாரடி, ஜனங்களுடைய பாக்கியத்தின் பலத்திஞல் எப்படிப்பட்ட புண்ணியம் உதித்திருக்கிறது; நாம் எல்லோரும் சேர்ந்திருப்பதும் கூட ஒருவருக்குத்தான்*

*ஸித்தியாயிருக்கிறதல்லவா. தெய்வம்தான் முக்கியம் என்று சொல்லுகிறவர்கள் தெய்வம்தான் பலனளிக்கிறது என்று சொல்வார்கள். நம்முடைய முயற்சியினுலோ, மற்ற பலன்களினுலோ ஒன்றுமில்லை; அது ஒன்றே நிஜம், மற்றவைகள் பொய்.*

*நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரே முயற்சியில் இறங்கியிருந்தோம். ஆனுல் உன்னுடைய அதிர்ஷ்டம் உனக்குப் பலன் அளித்தது. எங்களுக்கு இல்லை.*

*ஏ! ஸகியே! இது தற்செயலாக நிகழ்ந்தது என ஜனங்கள் சொல்வார்கள். இது உண்மையில் உனது மனோரதத்தின் பலனேயாகும் என்பது எங்கள் எண்ணம்.*

*இப்படி அவர்கள் பேசிக் கொண்டு தங்களுடைய வழிநடை மார்க்கத்தை லகுவாக ஆக்கிக் கொண்டு தங்கள் தங்கள் க்ருஹத்திற்கு வந்தார்கள்.*

*பிறகு காலையானதும் அவர்கள் எல்லோரும் ஒன்று கூடினர். அப்பொழுது ரத்னுவளி மௌனமாக இருக்கக்கண்டு, மனதிற்குள்ளேயே ஸுகித்துக் கொண்டிருக்கிருள் என்ருர்கள்.*

*அதற்கு பிறகு அவர்கள் அதே போல் மௌனத்துடன் காசிக்கு வந்து மந்தாகினி தீர்த்தத்தில் நீராடி, எல்லோரும் ரத்னேஸ்வர லிங்கத்தில் எழுந்தருளியிருக்கும் என்னை வந்து தரிசித்தார்கள்.*

*பிறகு நித்ய நியமங்களுடன்கூட என்னை தரிசனம் செய்தார்கள். பிறகு நியமங்களை ஸமாப்தி செய்து கொண்டு திரும்பும்போது, ஸகிகள் பிடிவாதமாகக் கேட்கவே, லஜ்ஜையினுல் கண்களைத் தாழ்த்திக் கொண்டு கூறினுள்:*

*ஸகிகளே! நேற்று ரத்னேஸ்வரருக்கு யாத்திரை செய்து திரும்பிவந்த பிறகு நீங்கள் உங்கள் வீடுகளுக்குத் திரும்பிவிட்டீர்கள். நான் ரத்னேஸ்வரருடைய வசனும்ருதத்தை நினைத்துக் கொண்டு அங்கு விசேஷ ரூபமாக சந்தனம், புஷ்பம் முதலிய வாசனை பொருந்திய*

*சாமான்களால் என்னை அலங்கரித்துக் கொண்டு படுக்கையறைக்கு வந்தேன், அங்கு அவரை தரிசிக்க வேண்டும் என்ற பேராசையினுல் எனது கண்களுக்கு நித்திரையே தரித்திரமாகி விட்டது.*

*இருந்தாலும் நடக்க இருக்கும் சம்பவத்திற்காக திடீரென்று கண் மயங்கினது. சற்று கனவு காணத் தொடங்கினேன். அப்பொழுது இரு காரணங்களினுல் என்னை மறந்தேன்.*

*முதலாவது நித்திரை மயக்கம். இரண்டாவது அவருடைய ஸ்பரிசம். இரண்டினுலும் நான் என்னையே மறந்தேன். பிறகு என் தூக்கக் கலக்கத்தினுலும், அவருடைய அங்கஸ்பரிசத்தினுலும் மதிமயங்கி என்னவாயிற்று? நான் எங்கிருக்கிறேன்? நான் யார்? அவர்யார்? என்பதே மறந்தேன். ஏ! ஸகிகளே, அவர் சயன அறையை விட்டு வெளியே போகத் தொடங்கினுர். அப்பொழுது நான் அவரைப் பிடிப்பதற்காகக் கைகளை நீட்டினேன். அப்பொழுது என்கைகளின் கங்கணங்களே எனக்கு சத்ருவாகி கலகலவென்று சப்தித்தன.*

*ஒரே காரணத்தினுல் சுகமயமாகிய அம்ருத ஸரஸில் மூழ்கி எழுந்திருந்து வியோகமென்னும் அனல் ஜ்வாலையில் விழுந்த மாதிரி இருந்தது.*

*பிரியஸகிகளே! அவருடைய தேசமென்ன, எந்த குலத்தில் பிறந்தார், அவருடைய பெயர் என்ன, இது ஒன்றும் நான் அறியேன். ஆனுல் அவரைப் பிரிந்த விரஹாக்னி என்னை எரிக்கிறது.*

*ஏ ஸகிகளே! இரவில் போகித்துச் சென்றவரை திரும்பவும் அடைய வேண்டும் என்ற ஆசையினுல் சித்தம் மிகவும் ஆசையாக இருக்கிறது. இதோ போய்க் கொண்டிருக்கும் பிராணனை பிடித்து நிறுத்த மகா ஔஷதம் அவருடைய தரிசனமே ஆகும். அவரை நான் திரும்ப தரிசிப்பது என்பது உங்களுடைய கையிலேதான் இருக்கிறது.*

ஏ ஸகிகளே! அன்பான அழகிய ஸகிகளிடம் கூட ஒருவர் பொய் சொல்லுவார்களா? அவரைத் தரிசித்தால்தான் என் பிராணன் இந்த உடலில் தங்கும். இல்லையென்றால் கிளம்பி ஓடிவிடும். எனக்கு மரணாவஸ்தை ஸமீபித்துவிட்டது.

இந்த விதமாக மிகவும் தீனமான ரத்னாவளி கூறிய வார்த்தைகளைக் கேட்டுவிட்டு, அவர்கள் எல்லாரும் நடுங்கும் ஹ்ருதயத்துடன் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு பேசத்தொடங்கினார்கள்.

ஸகிகள் கூறினார்கள். ஏ! பத்ரே! எவருடைய குலம் பெயர் ஒன்றும் தெரியாதோ அவரை எவ்வித உபாயத்துடன் ஸந்திக்க முடியும்?

ரத்னாவளி ஸகிகளுடைய இந்த ஸந்தேகம் நிரம்பிய வார்த்தைகளைக் கேட்டுவிட்டு கூறத்தொடங்கினாள். ஏ ஸகிகளே! அவரை சந்திக்க வேண்டுமென்று நினைத்தவுடனேயே நீங்களும் மூர்ச்சித்து விடுவீர்கள் போலிருக்கிறதே. மூர்ச்சை என்ற வார்த்தையைச் சொல்ல ஆரம்பித்தவுடனேயே அந்த கந்தர்வ கன்னிகையான ரத்னாவளி மூர்ச்சை அடைந்து விட்டாள்.

அப்போது அவளுடைய மூர்ச்சையைத் தெளிவிப்பதற்காக ஸகிகள் உடனேயே சைத்யோபசாரம் செய்யத் தொடங்கினார்கள்.

எந்தனையோ உபாயம் செய்தும் அவள் மூர்ச்சை தெளிவாகாதது கண்டு, ஒரு பெண் ரத்னேஸ்வரருடைய அபிஷேக ஜலத்தைக் கொண்டு வந்து அவள் முகத்தில் தெளித்தாள்.

அந்த ஜலம் தெளித்த மாத்திரத்திலேயே ரத்னாவளி மூர்ச்சை தெளிந்து எழுந்தாள். தூங்கி எழுந்ததுபோல எழுந்திருந்து சிவ, சிவ என்று உச்சரிக்கத் தொடங்கினாள்.

ஸ்கந்தர் கூறினார் - பகவானிடம் சிரத்தையுள்ள

பக்தர்களுக்குப் பெரிய சங்கடம் நேர்ந்தால் ஈசனிடம் சரணுகதியைவிட வேறு உபாயம் ஏது?

சரீரத்திற்குள்ளேயும் வெளியேயும் உள்ள வியாதிகளெல்லாம் சிரத்தையுடன் சிவ சரணும்ருதத்தை ஸ்பர்சித்தமாத்திரத்தில் நஷ்டமடைந்துவிடுகிறது. இதில் ஸந்தேஹமில்லே. ஒருவன் பகவானுடைய சரணும்ருதத்தை அருந்திஞல் அவனுடைய அகமும் புறமும் ஒழுங்காகிறது. அதஞல் அவனுக்கு ஒரு துர்க்கதியும் வராது.

ஏ! முனியே! இதற்குப் பிறகு இந்த கந்தர்வ கன்னிகை நிீனவுபெற்று எழுந்தவுடன் தீரபுத்தியுடனேயும் அதிம்ருதுத்தன்மையும் உடையவர்களான ஸகிகளிடம் உசிதமான முறையில் பேசத் தொடங்கிஞள். ரத்ஞவளி கூறுகிருள்:- ஏ! சசிலேகா, ஏ! சித்ரலேகை, ஏ! அனங்கலேகா! என்னுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதற்கு உங்களுக்கே ஸாமர்த்யம் இல்லாமல் போய்விட்டது?

உங்களுடைய கலேகளெல்லாம் எங்கு போய்விட்டன? எனக்கு ஹிதத்தை செய்பவர்களே, பகவான் ரத்னேஸ்வரருடைய அனுக்ரகத்திஞல் என்னுடைய பிராண நாதனே அடைவதற்கு நல்ல ஒரு உபாயம் தோன்றுகிறது. அதற்கு நீங்கள் எனக்கு உதவி செய்ய வேண்டும். ஏ! சசிலேகா! நீ என்னுடைய சித்திரங்களேயும் எழுது. ஏ! சித்ரலேகா! நீ பாதாளவாஸிகளான யுவர்களின் சித்திரங்களே எழுது. ஏ! அனங்கலேகா! பூமியில் உள்ள வாலிபர்களின் சித்திரங்களேயெல்லாம் நீ எழுது.

இதைக் கேட்டுவிட்டு ஸகிகள் அவளுடைய சாதுர்யத்தை மெச்சி முறையே குமாரப் பருவத்திலிருந்து, யெளவனப் பருவத்தில் காலடி வைக்கும் தருண யுவர்களே சித்திரத்தில் எழுதிஞர்கள். ரத்ஞவளி காலே சந்திகளேப் பார்ப்பது போல அந்த சித்திரங்களில் உள்ள

*அசரகுமாரர்களைப் பார்க்கத் தொடங்கினாள். அந்த மான்விழியாள் ஸமஸ்த சூரர்களின் சித்திரங்களைப் பார்ப்பதும் கூட அந்த சித்திரங்களால் அவளுடைய கண்கள் திருப்தியடையவில்லை.*

*பிறகு மத்திய லோகவாசிகளான முனிகுமாரர்கள், ராஜகுமாரிகளைப் பார்த்தார்கள்; அதுவும் ப்ரேமையுடன் பார்க்கும் கண்களுக்கு ஆனந்தமளிக்கவில்லை.*

*பிறகு அழகிய விசாலமான கண்களையுடைய பாலையான ரத்னவளி தன்னுடைய த்ருஷ்டியைப் பாதாளத்து இளைஞர்களின் சித்திரத்தில் பரவவிட்டாள். காமபாணத்தால் துளைக்கப்பட்ட அந்த கந்தர்வகன்னிகை அசுர, ராக்ஷஸ நாகக் குமாரர்களைப் பார்த்தும் ஸந்தோஷமடையவில்லை.*

*நிலவின் கிரணமாகிய பாணங்களினால் மிகவும் வருத்தப்பட்ட சரீரத்துடன் கூட நாக குமாரர்களின் வரிசையைப் பார்த்துக் கொண்டு வரும்பொழுது ஒருவள் நெடுமூச்செறிந்தாள்.*

*என்ன ஆச்சர்யம்! அந்தப் பெண்கள் எழுதிய சித்திரங்களில் உள்ள போகத்திற்கு அருகதையான புருஷர்களைப் பார்த்தவுடனேயே அவள் மனதிற்கு திருப்தி ஏற்பட்டாற் போலிருந்தது.*

*பின்பு அவள் சேஷன், தக்ஷகன், வாஸுகி, புலிகள், அனந்தன், கார்க்கோடகன், பத்ரன் இவர்கள் வம்சத்தில் ஜனித்த எல்லா நாகக் குமாரர்களின் சித்திரங்களைப் பார்த்துக் கொண்டு வரும்போதே ரத்னசூடனின் படத்தைப் பார்த்தவுடனேயே த்ருஷ்டி அங்கேயே நிலைத்துவிட்டது. (ரத்னசூடன்)*

*சரி, பிறகு என்ன! ரத்னசூடனின் சித்திரத்திலேயே கண்கள் பதித்தவுடனேயே லஜ்ஜையால் இமைகள் தாழ்ந்தன. அவளுடைய காலிலிருந்து தலைவரை மயிர் சிலிர்த்தது.*

*அப்பொழுது அவளுடைய லஜ்ஜையைப் பார்த்துவிட்டே, அதி சாதுர்யவதியான சித்ரலேகை அவளுடைய கன்னித்தன்மையைக் கவர்ந்த யௌவனனைக் கண்டு பிடித்துவிட்டாள்.*

*பிறகு கேலி செய்வதில் குதூஹலம் உள்ள சித்ரலேகை தனது புடவையின் முந்தானையை வீசி அதை மறைத்து விட்டாள்.*

*அப்பொழுது ரத்னுவளி லஜ்ஜையினுல் முகத்தைத் தாழ்த்தி உதடுகள் துடிக்க சித்திர லேகாவை கடைக்கண்ணுல் பார்த்தாள். இதற்குப் பிறகு அனங்கலேகை சசிலேகாவின் கண்ணின் ஸமிக்ஞையிலிருந்து சித்ரலேகாவால் மூடப்பட்ட முந்தானையை விலக்கினுள்.*

*வஸுபூதியின் கன்னிகை ரத்னுவளி சங்கசூடனின் புத்ரனுன ரத்னசூடனைத் திரும்பவும் சித்திரத்தில் பார்க்கத் தொடங்கினுள்.*

*அதைப் பார்த்த க்ஷணத்திலேயே கண்களிலிருந்து பெருகும் ஆனந்தக் கண்ணீர் கன்னங்களை நனைத்தது. முகத்தில் வேர்வைத்துளிகள் அரும்பின.*

*புளங்காகிதத்தையே ரவிக்கையாக அணிந்து கொண்டிருந்த அவளுடைய சரீரமாகிய கொடி நடுங்கத் தொடங்கியது. க்ஷணநேரம் கண்களை மூடிக்கொண்டு அவளும் சித்திரத்தில் எழுதியது போல் இருந்தாள்.*

*அதன் பிறகு சித்திரலேகை அவளருகில் வந்து கனிவுடன் கூறினுள். ஏ! கந்தர்வ புத்ரீ! அதைர்யமடையாதே, இன்று உன் மனேரதம் பூர்த்தியாயிற்று.*

*இப்பொழுது அந்தப் புருஷனுடைய பெயர், தேசம் எல்லாம் நாம் அறிந்து கொண்டோம். ஆதலால் நீ கொஞ்சமும் வருந்தாதே. இந்த ரத்னேஸ்வரருடைய பிரஸாதம் கிடைத்துவிட்டது.*

*ஆஹா! பாக்கிய வசத்தால் ரத்னேஸ்வரர் உனக்கு ஸகலவிதத்திலும் பொருத்தமானவரஞக அளித்து சந்தோஷப்படுத்தியிருக்கிருர். நமக்கு ஸர்வமும் அருளும் தாதா பகவான் ரத்னேஸ்வரரேதான், ஆதலால் நாம் அவரிடமே செல்வோம்.*

*இப்படி பேசிக்கொண்டிருந்து விட்டு அந்த நான்கு ஸகிகளும் ஆகாசமார்க்களாக வீட்டிற்குத் திரும்பிஞர்கள். இதன் மத்தியில் பாதாள வாசியான ஸுபாகு என்னும் அரக்கன் யத்ருச்சையாக அவர்களைப் பார்த்துவிட்டான்.*

*பயங்கரமான பற்களுடைய சிம்மம் மான்கூட்டத்தில் பாய்வதுபோல அவன் பாய்ந்து அந்த நான்கு ஸகிகளையும் பிடித்துத் தன்னுடைய மாளிகைக்குக் கொண்டு சென்ருன்.*

*பெரிய பெரிய பற்களிஞல் பயங்கரமான முகத்தையுடைய அந்த அரக்கனைப் பார்த்துவிட்டு அந்த கந்தர்வ குமாரிகள் நடுநடுங்கினர். ரத்தத்தைப் போல் சிவந்த நேத்திரங்களை யுடையவஞன அந்த அரக்கனைப் பார்த்துக் காற்றில் அடிபட்ட வாழைகளைப் போல் பயத்திஞல் கிடுகிடுக்கலாஞர்கள்.*

*ஐயோ, அம்மா, ஐயோ பிதாவே - எங்கள் விதியே - காப்பாற்றுங்கள், எங்களை அஞதைகள் என்று கண்டுகொண்டு, அந்த துஷ்ட அரக்கன் எங்களை நிஷ்டூரமாகத் துன்புறுத்த விரும்புகிருன். அவனிடமிருந்து எங்களைக் காப்பாற்றுங்கள்.*

*ஐயோ தெய்வமே! நாங்கள் அபாக்கியவதிகள். என்ன பாபம் செய்தோம்? மனத்திஞலேயும் கூட நாங்கள் பாபங்களை நினைக்கவேயில்லையே, நாங்கள் எல்லாரும் பெண்களுக்குள்ள விளையாட்டிலும் ரத்னேஸ்வரரை பூஜிப்பதிலும் மாதாபிதாவிற்கு ஸேவை செய்வதிலும் இப்படியாக எங்கள் நேரங்களை செலவு செய்திருக்கிருேமல்லாமல் - வேருென்றும் அறியோமே -*

*ஏ எங்கும் நிறைந்தவரே, சம்போ, ரத்னேஸ்வரா, பாதாள லோகத்தில் செல்லும் பதிதைகளும், அநாதைகளும் தங்களுடைய சரண தாஸிகளான பெண்களுக்குத் தங்களைவிடக் காப்பாற்றுகிறவர் வேறு யார் இருக்கிறார்கள்!*

*இந்த சமயத்தில் மஹாமதிப்புக்குரிய நாகராஜன் ரத்ன சூடன் இந்தப் பெண்களின் தீனக்குரலைக் கேட்டான்.*

*ஐயோ இவர்கள் யாரோ தெரியவில்லையே, என்னுடைய ஸ்வாமியான - கர்மத்தளையருக்கும் ரத்னேஸ்வரரின் பெயரை உச்சரிக்கின்றார்களே, என்று யோசிக்கும்போதே - திரும்பவும் பாலிகைகளுடைய ரத்னேஸ்வரா! ரக்ஷியுங்கள், ரக்ஷியுங்கள் என்ற புலம்பலைக் கேட்டவுடன் அவன் ஜடிதியில் அஸ்திர சஸ்திரங்களை எடுத்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியில் வந்தான்.*

*அங்கு மது மாம்ஸபக்ஷிணியும்: உன்மத்தஸ்வபாவமும் துஷ்டக்ருத்யங்களைச் செய்பவனுமான அரக்கனைக் கண்டு கொண்டான். உடனே அதட்டி அழைத்துக் கூறினான்.*

*அடே துஷ்டா, உயர்குலப்பெண்களை அபகரிப்பவனே, அதம அரக்கனே, இன்று என்னுடைய கண்களுக்கு தட்டுப்பட்டுவிட்டு, எங்கே ஓடப்பார்க்கிறாய்?*

*ஏ துர்புத்தியுடையவனே, இந்த அபலைகளை ரக்ஷிப்பதற்கு நான் திடமாய் இருக்கிறேன். இன்னும் சிறிது நேரத்தில் நீ எனது பாணவகைகளினாலும் அடிபட்டு, பிராணனை இழந்து யமபுரிக்குப் போகிறாய். எவர்கள் ப்ரளயகாலத்திலும், ஆபத்து நிறைந்த போதிலும் ரத்தினேஸ்வரன் பெயரை உச்சரிக்கிறார்களோ, அவர்கள் பயத்தில் சிக்கியவர்களானாலும் உன்னைப் போன்றவர்களிடம் கொஞ்சமும் பயப்படவேண்டியதில்லை.*

*எவர்கள் ரத்னேஸ்வரர் என்னும் மஹாநாமத்திஞல் ரக்ஷிக்கப்படுகிருர்களோ அவர்களுக்குப் பிறவி, ஜரை, (முதுமை) பிணி, கலி, காலம் இவற்ருல் பயமேன்! நாகராஜன் சங்கசூடனின் புத்திரஞன ரத்னசூடன் பயத்தில் சிக்கிய அந்த கந்தர்வ குமாரிகளேப் புலியால் முகரப்பட்ட மான்களுக்கு ஸமமாகத் தன்னேயே பரிதாபமாகப் பார்ப்பதைப் பார்த்துவிட்டு, நீங்கள் கொஞ்சமும் பயப்பட வேண்டாம், என்று சொல்லிவிட்டு ஸாவதானமாக காதுபரியந்தம் பாணத்தை இழுத்துவிடத் தொடங்கிஞன்,*

*அப்பொழுது அந்த அசுரேந்திரனும் காலால் நசுக்கப்பட்ட ஸர்ப்பம்போல் சீறிக்கொண்டு, காலதண்டத்தைப் போன்ற முஸலத்தைச் சுழற்றி ரத்ன சூடன் மீது எறிந்தான். எவருடைய ஹ்ருதயத்தில் ரத்னேஸ்வரலிங்கம் பூர்ண சைதன்யமாய் இருக்கிறதோ, அவன் மேல் காலதண்டத்தை வீசிஞலும், அது வாழைத்தண்டை எறிந்தது போலானதாகும்.*

*ரத்னசூடன் மத்தியிலேயே பாணங்களிஞல் அந்த முஸலத்தை வெட்டியெறிந்தான். பிறகு அதேபாணத்திஞல அந்த துஷ்டனேயும் ஸம்ஹரித்தான். இப்படி காலாக்னி போலச் சீறிவந்த அந்த பாணம் அவனுடைய வக்ஷஸ்தலத்தைத் தேடி நுழைந்தது. அவனுடைய ப்ராணனே எடுத்துக்கொண்டு திரும்பவும் அம்பருத் தூணியில் வந்து நுழைந்தது.*

*அது எப்படியிருந்தது என்ருல் ரத்னசூடனுடைய பாணம் திக்குகளாகிய அங்கனேகளுக்கு, அந்தத் தானவனுடைய ஹ்ருதயத்தில் இருக்கும் துஷ்ட எண்ணங்களே தத்வ பூர்வமாக எடுத்துச் செல்வதற்காகவே, மீண்டும் வந்ததுபோல் இருந்தது. ஒருவன் அநியாயமாகச் சம்பாதித்த பணத்திஞல ஸுகபோகங்களுக்கு இச்சித்தாஞஞல் அந்தத் திரவ்யங்களுடன் அவனுடைய ப்ராணனும் நஷ்டமாகிறது. பிறகு சுகம் எப்படிக் கிடைக்கும்?*

இதற்குப் பிறகு அந்த மஹாபலியான நாகராஜன் தானவனைக் கொன்று விட்டு, அந்தக் கன்னிகைகளிடம் கேட்டான். நீங்கள் யார்? யாருடைய பெண்கள்? இந்த துஷ்டாத்மாவை எங்கு ஸந்தித்தீர்கள்? நீங்கள் எல்லோரும் ரத்னேஸ்வரலிங்கத்தை எங்கு பார்த்தீர்கள்?

அவருடைய பெயரைச் சொன்னவுடனே ஸகல ஆபத்திலிருந்தும் விடுபட்டீர்கள். சரியான ரீதியில் அறிந்து கொள்ளுமாறு உண்மையைக் கூறுங்கள். ரத்தின சூடனின் வார்த்தையைக் கேட்டு அன்பு ததும்பும் மனத்தினராய் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு, தங்களுக்குள் சொல்லிக் கொண்டார்கள். இவர் யார்? இவரை நாம் எங்கேயோ பார்த்தாற்போலிருக்கிறதே.

இவர் எங்கிருந்தோ ஆபத்திற்கு உதவும் மித்ரனாக நம்முடைய துக்க சமயத்தில் வந்து சேர்ந்தாரே. பெண்களாகிய நம்மைக் காப்பாற்றினாரே.

இவரைப் பார்த்தவுடனேயே நம்முடைய மனது ஏன் சஞ்சலப்படகிறது? அம்ருதத்தைக் கலக்குவதுபோல; நம்முடைய இரண்டு கண்களும் இவருடைய பரம ரமணீயமமான முகத்தைப் பார்த்த பிறகு மற்ற இடங்களைப் பார்ப்பதற்கு மறுக்கிறதே.

நம் காதுகள் இரண்டும் அவருடைய வசனாம்ருதத்தைப் பருகின பிறகு மற்ற சப்தங்களைக் கேட்க இச்சிக்கவில்லையே; நம்முடைய மனரூபமான மணியைத் திருடின இந்த நவகுமாரனைப் பார்த்து, நமது கால்கள் செல்ல மறுக்கின்றனவே, இப்படி பாலிகைகள் தங்களுக்குள் சொல்லிக்கொண்டு, சித்திரத்தில் ஒரு தடவைப் பார்த்தும் கூட நேரில் காணும்பொழுது அவரை அறிந்து கொள்ள முடியாதவர்களாக இருந்தார்கள்.

ஏனென்றால் மிகவும் பயங்கர உருவமுள்ள அந்த அரக்கனைக் கண்ட பயத்தினால் அவர்கள் கண்கள் மங்கியிருந்தன. அதனால் அந்த மான் விழியாள்களால் அவனை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

*பிறகு தங்கள் பிராணனைக் காப்பாற்றிய அந்த யுவனிடத்தில் அவர்கள் கூறினார்கள்; அன்பு நிறைந்த இதயத்துடன் கேட்கிறீர்கள்; நாங்கள் கூறுவதை க்ஷணநேரம் ஸாவதானமாகக் கேளுங்கள். இக்கந்தர்வ ராஜன் வஸு பதியின் பெண்; இவள் பெயர் ரத்னாவளி; இவள் குணங்களாகிய ரத்னங்களின் பொக்கிஷம்; நாங்கள் மூவரும் அவளுடைய ஸகிகள். நிழலைப் போல் அவளைப் பின் தொடர்பவர்கள்.*

*இவள் சிறுபிராயம் தொட்டு பிதாவின் ஆக்ஞை பெற்று, தினந்தோறும் காசியில் ரத்னேஸ்வரர் என்று லிங்கத்தைப் பூஜிக்கச் செல்லுவது வழக்கம். சங்கரர் அதனால் மிகுந்த சந்தோஷமடைந்து, அவளைப் பார்த்து! ஏ! பெண்ணே, யாதொரு நவயுவன் கனவில் வந்து உனது கன்னித்தன்மையையழிக்கிறானோ எவனுக்கு உன்னுடைய பெயர் உள்ளதோ, அவன் உனக்குக் கணவனாவான் என்ற வரமருளினார்.*

*இப்படி அவள் சொப்பனத்தில் அனுபவித்த குமாரனை நேரில் காணாமல் துக்கமனுபவித்திருக்கிறாள். இப்படி அவள் விரஹதாபத்தினால் மிகவும் தவிக்கும் பொழுது நாங்கள் கற்றகலையின் சாதுர்யத்தினால் எல்லா யுவர்களையும் சித்திரத்தில் எழுதி அவளுக்குக் காண்பித்தோம்.*

*பெயர், குலம், வம்சம் ஒன்றும் அறியாத ஒருவனை சித்திரத்தில் பார்த்தபொழுது இவள் அடையாளம் கண்டுகொண்டாள். இந்த சமாசாரத்தை ரத்னேஸ்வரருக்குத் தெரிவித்து வணங்கிச் செல்வதற்காக நாங்கள் வந்து கொண்டிருந்தோம். ஆகாச மார்க்கமாக இவளுடன் வந்து கொண்டிருந்த எங்களையும் சேர்த்து நடுவில் எதிர்பாராமல் வந்த துஷ்ட அரக்கன் பாதாள லோகத்திற்கு இழுத்துச் சென்றான். இதன் பிறகு அந்த அதமனான அரக்கனின் கதி என்னவாயிற்று என்றெல்லாம் தங்களுக்குத் தெரியும்.*

*ஏ! க்ருபாநிதியே! எங்களுடைய விருத்தாந்தத்தை பூராவும் தாங்கள் அறிந்துகொண்டீர்கள். கனவானே! இப்பொழுது ஸந்தோஷத்துடன் தாங்கள் யார் என்று தெரிவிக்க வேண்டும். பயத்திலிருந்து ரக்ஷித்தவரே! இந்த அரக்கனைப் பார்த்ததிலிருந்து எங்களுடையக் கண்கள் மின்னலைப் பார்த்ததுபோல் கூசுகின்றன.*

*நாங்கள் எங்கு வந்திருக்கிறோம், எங்கு போக வேண்டும்? தாங்கள் யார்? இப்பொழுது என்ன நேர்ந்து விட்டது, என்ன நேரப்போகிறது? இவை ஒன்றும் எங்களுக்குத் தெரியவில்லையே, நிர்மல புத்தியுள்ள புண்ணியாத்மாவான நாகராஜ குமாரனுன அந்த ரத்னசூடன் பயத்தால் கலவரமடைந்திருக்கும் அந்த கந்தர்வ பெண்களின் வார்த்தையைக் கேட்டுவிட்டு அவர்களை ஆச்வாசப்படுத்திக் கூறினுன்.*

*நீங்கள் எல்லோரும் என்கூட வாருங்கள். உங்கள் எல்லோரையும் அழைத்தக் கொண்டு ரத்தினேஸ்வரரைத் தரிசனம் செய்விக்கிறேன். ரத்னசூடன் இவ்விதம் கூறி அவர்கள் எல்லோரையும் ஸுகோதகம் என்னும் பெயருடைய ஜலக்ரீடை செய்யும் நீர் நிலையத்திற்கு அழைத்துச் சென்றுன். அந்த நீர் நிலையம் விசித்திரமணிகளிழைத்த படிக்கட்டுகளினுல் சோபையுடன் விளங்கியது. ஹம்ஸம், கோகநதம் முதலிய ஜலபக்ஷிகளினுடைய மதுரத்வனி இவர்களை வரவேற்பது போலிருந்தது.*

*நாகக் குமாரியின் ஆக்கினைப்படிக்கு நான்கு பெண்களும் க்ரீடாஸரஸில் மூழ்கி எழுந்து, புஷ்ப, ஆபரணுதிகளால் நன்றுக, அலங்கரித்துக் கொண்டு மறுபடியும் மூழ்கினுர்கள்.*

*அவர்கள் மூழ்கி எழுந்தவுடன் தங்களைக் காலபைரவருக்கண்டையில், ரத்னேஸ்வரருக்கு அருகில் தங்களைக் கண்டதும் ஆச்சர்ய பூரிதர்களானுர்கள்.*

*அப்பொழுது அவர்கள் திகிலடைந்து ஒருவரையொருவர் பார்த்துப் பேசிக்கொண்டார்கள். இது கனவா? அல்லது நினைவா? அல்லது ரத்னேஸ்வரரின் லீலையா? அல்லது நமது புத்திதான் மாருட்டமடைந்து விட்டதா? நாம் கந்தர்வ கன்னிகைகளில்லையா? இந்த்ரஜாலம் போலிருக்கிறதே, ஒன்றும் புரியவில்லையே நமக்கு, ஆனால் இங்கு கங்கை உத்திரவாஹினியாக ஓடுவது நன்றாகத் தெரிகிறதே, இதுதான் சங்க சூடனின் வீடு, இது பஞ்ச நதத்தீர்த்தம், இது வாஹீஸ்வரியினுடையக் கோவில், இதைத்தரிசினம் செய்த மாத்திரத்திலேயே வாக்ப்ரபாவம் பெருகுகிறது.*

*இதுதான் சங்கசூடேஸ்வரர். இவரைத் தரிசிப்பதினால் ஜனங்களுக்குக் காலபைரவ பயமிருக்காது.*

*இது பவித்ரதீர்த்தஸ்தானமான மந்தாகினி என்னும் வாபி, இதில் இறங்கி ஜலக்கிரீடை செய்வதினால் மனிதர்களுக்குத் திரும்பவும் ம்ருத்யு லோகத்திற்கு வரவேண்டிய அவசியம் இருக்காது.*

*இது ஆசாபூரி என்னும் தேவியின் கோவில். இது மந்தாகினியின் கரையிலேயே இருக்கிறது. த்ரிபுராஸுரனை ஜயிப்பதற்கு விரும்பிய த்ரிபுராந்தகனால் ஸ்துதி செய்யப்பட்ட கோவில். இன்றும் அவளைப் பூஜித்தால் ஆபத்துகளிலிருக்கும் ஜனங்களுக்கு நம்பிக்கை பூரணமாக ஏற்படுகிறது. மந்தாகினிக்கு மேற்கு பக்கத்தில் ஸித்யஷ்டகேஸ்வரர் இருக்கிறார்.*

*அவரைப் பூஜிப்பதினால் வீட்டில் அணிமாதி ஸித்யஷ்டகம் என்ற ஒரு குண்டம் இருக்கிறது.*

*அதில் ஸ்னானம் செய்து ஸ்ராத்த தர்ப்பணம் செய்வதினால் வைராக்யம் வந்து ஸ்வர்கத்திற்குப் போகிறார்கள். அங்கேயே அஷ்ட ஸித்திகளின் மூர்த்தியிருக்கிறது. அவர்கள் காசிக்கு முழுவதும் ஸர்வஸித்திகளும் அளிக்கிறார்கள்.*

*இங்கேயே ஸர்வஸித்திகளுக்கும் தாதாவான விநாயகர் எழுந்தருளியிருக்கிறார். அவரை வணங்குபவர்களுக்கு எல்லா இடையூறுகளையும் நீக்குகிறார்.*

*இது ஸித்தேஸ்வரருடைய உயர்ந்த கோவில். இது தங்கத்தகடுகளினால் வேயப்பட்டிருக்கிறது. ரத்னங்களிழைத்த கொடி மரத்தில் கொடிகள் பறக்கின்றன. அவைகளைத தரிசித்தாலே மத்ய பாகத்தில மத்யமேஸ்வரர் இருக்கிறார். அவரைத் தரிசிப்பதனால் மத்யலோகத்திலும், பாதாள லோகத்திலும் வாஸம் ஏற்படாது.*

*ஒருவன் இந்த மத்யமேஸ்வரரைப் பூஜித்தானானால் சமுத்திரத்தின் எல்லை வரைக்கும் உள்ள பூமிக்கு அதிபதியாகிக் கடைசியில் மோக்ஷத்தையடைகிறான்.*

*அதற்குக் கிழக்கு பக்கத்தில் ஐராவதேஸ்வரர் என்ற லிங்கம் இருக்கிறது. அவர் இஷ்டஸித்திகளைப் பூர்த்தியாக்குகிறார். அக்கோவிலின் கொடியில் ஐராவதத்தின் சித்திரம் இருக்கிறது.*

*இதுவேதான் விருத்த காலேஸ்வரரின் ரத்னங்கள் பதித்த கோவில். இதில் ஒவ்வொரு அமாவாசை இரவுதோறும் நக்ஷத்ரங்களுடன் சந்திரன் வந்து வணங்குகிறான்.*

*இதைத் தரிசிப்பதினால ஸந்தேகமில்லாமல் கலிகாலத்தில் ஏற்படும் கல்மஷங்களெல்லாம் நீங்கிவிடும்.*

*அந்த நான்கு பெண்களும் திகிலடைந்தவர்களாய் ஒருவருக்கொருவர் இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும் சமயம் கந்தர்வராஜனான வஸுபூதி வெகுசீக்கிரம் அவ்விடம் வந்து சேர்ந்தார்.*

*தேவரிஷி நாரதர் மூலமாக ஸகிகளுடன் கூட அவருடைய அருமைப்பெண் ரத்னாவளி ரத்தினேஸ்வரரைத் தரிசிக்கும் பொருட்டுச்*

*சென்றவிவரமும், திரும்பும் வேளையில் சூன்யமான ஆகாச மார்க்கத்தில் ஸுபாகு என்னும் தானவன் அவர்களை அபகரித்துப் பாதாளத்திற்குக் கொண்டு சென்ற விவரத்தையும், அங்கு ரத்திநேஸ்வரரின் பக்தரும், சிறந்தவில்லாளியுமான ரத்னசூடனுக்கும் ஸுபாவிற்கும் யுத்தம் நடந்ததையும், ரத்ன சூடனின் பாணங்களினுல் தானவன் ஸுபாஹு கொன்று வீழ்த்தப்பட்டதையும், பிறகு பெண்களின் வாயிலாக விருத்தாந்தங்களையறிந்த ஸ்தலத்தில் உள்ள நீர்நிலையில் மூழ்கச் செய்து, அதன் வழியாகக் காசிக்கு வந்து காசிநகரைப் பார்த்துவிட்டு கந்தர்வப்பெண்கள் திகிலடைந்து, பரபரப்புடன் இங்குமங்கும் நோக்குவதையும், ஆகிய இத்தகைய விவரங்களையெல்லாம் கேட்டுவிட்டு கந்தர்வராஜன் வெகுவேகமாகக் காசிக்கு வந்தார். அங்கு தன்பெண்ணையும், அவர்களுடைய ஸகிகளையும் மலர்ந்த தாமரையைப் போல் உள்ள முக கமலங்களுடன் பார்த்துவிட்டுத் தன் பெண் அப்பொழுதுதான் பிறந்தனளோ என்று எண்ணத் தோன்றி அவளை அடிக்கடி ஆலிங்கனம் செய்துகொண்டு, உச்சிமுகர்ந்து, அவளை மடியிலிருத்தி ஆத்திரத்துடன் நடந்த விஷயங்களைப் பற்றி விசாரிக்கத் தொடங்கினுர்.*

*அப்பொழுது ரத்னுவளி ரத்திநேஸ்வரர் அவளுக்கு அளித்தவரத்தைப் பற்றியும், தானவனுல் அவர்கள் அபஹரிக்கப்பட்ட விருத்தாந்தத்தையும், விரிவாகக் கூறினுள். ஆனுல் கனவில் ரத்ன சூடனுடன் க்ரீடித்த விவரம் மாத்திரம் கூறவில்லை.*

*அப்பொழுது அந்த ஸுஹ்ருத்தான கந்தர்வராஜன் மிகவும் ஸந்தோஷமடைந்து, மிகவும் உல்லாஸத்துடன் ரத்னேஸ்வரருடைய ப்ரபாவத்தை வர்ணிக்கத் தொடங்கினுன்.*

*ரத்னுவளியின் முகத்திலிருந்து அவளுடைய மனுேபாவத்தையறிந்து கொண்டு அவளுடைய ஸகியான*

ஸஸிலேகை தெளிவாக எல்லா விருத்தாந்தங்களேயும் கூறிஞள்.

ஸ்கந்தர் கூறுவார்:- ஹே! விந்தியத்தின் வளர்ச்சியை அடக்கினவரே, முனிஸ்ரேஷ்டா, கேளும். நியமவாஞன ரத்னசூடன் தினமும் அதேநீர் நிலேயத்தின் வழியாகத் தன்னுடைய நாகலோகத்திலிருந்து, இங்கு வந்து மந்தாகினியில் ஸ்ஞனம் செய்து ரத்னேஸ்வரரைப் பூஜை செய்த பிறகு எட்டு அஞ்சலி ரத்னங்கள், தங்கத்திஞலான எட்டு கமலங்கள், இவைகளே ஸந்தோஷத்துடன் பகவானுக்கு ஸமர்ப்பித்து வந்தான். ஒரு ஸமயம் அவன் கனவில் ரத்னேஸ்வரர் எழுந்தருளி, த்ருடத்துடன கூடிய தன் பக்தன் ரத்னசூடனேப் பார்த்துக் கூறிஞர். நீ ஒரு தானவனே யுத்தத்தில் வென்று கொன்று அவன் அபகரித்துக் கொண்டு வரும் கன்னிகையை விடுவிப்பாய். அவளே உனக்கு பத்தினியாவாள். பிறகு அந்த மஹா மனஸ்வியான நாகராஜா இந்த வரதானத்தை மனதில் எண்ணி தன்னுடைய வீரத்தின் பலத்திஞல் ஸுபாகு தானவனேக்கொன்று அந்த கந்தர்வக் கன்னிகையை விடுவித்து, நீர்நிலேயத்தின் வழியாக பூமிக்குக் கொண்டு வந்தார்.

பிறகு அந்த புததிமாஞன அரசகுமாரன் ப்ரதிதினமும் தான் செய்துவரும் நியமம் வழுவாமல் அன்றும் ரத்னேஸ்வரரைப் பூஜித்து நமஸ்கரித்து, ஸுககரமான ரத்னேஸ்வரருடைய அந்த மண்டபத்திலிருந்து வெளியே வந்தான். உடனேயே அந்த எல்லாப் பெண்களேயும் கந்தர்வராஜஞன வஸுபூதியும் கண்டான். அந்த சமயம் சசிலேகை இவர்தான் அந்த தன்யவாஞன நாககுமாரன் என்று வஸுபூதிக்குத் தன் சுண்டுவிரலால் சுட்டிக்காட்டிஞள்.

நாகராஜ குமாரனேப் பார்த்துவிட்டு கந்தர்வ அரசன் மகிழ்ச்சியிஞல் கண்கள் விரிய, சரீரம் புல்லரிக்க எழுந்து மனதிற்குள்ளேயே அவனது உருவத்தையும் யௌவனத்தையும் குலத்தையும் புகழத் தொடங்கிஞன்.

*ரத்திநேஸ்வரர் தன்னுடைய வரதானத்தினுல் எனக்கு மிகவும் அனுக்ரகம் புரிந்துள்ளார்; அதனுல் நான் மிகவும் தன்யனுனேன்; என்னுடைய இந்தக் கன்னிகையோ பரம தன்யையானுள். அவளுக்குப் பொருத்தமான பதி கிடைத்து விட்டானே.*

*வஸுபூதி தன் மனதிற்குள் இவ்வாறு சிந்தித்துக் கொண்டு, அந்த ஸுந்தரகுமாரனை அருகில் அழைத்து அவனுடைய பெயர், குலம், கோத்திரம் இவைகளை விசாரித்து மனதிற்குள் கணித்து, நிச்சயம் செய்து கொண்டு, ரத்னேஸ்வரருடைய முன்னிலையிலேயே மிகவும் ஸந்தோஷத்துடன் கூடத் தன்னுடைய கன்னிகையை அவனிடம் ஒப்புவித்தார். பிறகு விவாகத்திற்குரிய மங்கள சடங்குகள் யாவும் செய்து முடித்து, அங்கு முறைப்படி விவாஹ விதிப்படி, மதுபர்க்கம் முதலிய மரியாதைகளைச் செய்து பாணிக்கிரஹணம் செய்து கொடுத்தார். அளவற்ற ரத்தினங்களையும் சீர்வரிசையாகக் கொடுத்தார்.*

*ஏ! கும்பமுனியே! சசிலேகா, அனங்கலேகா, சித்ரலேகா மூவரும்கூடத் தங்கள் பிதாவிடம் தெரிவித்துக் கொண்டு, ரத்னசூடனையே பதியாக வரிக்க விரும்பினுர்கள்.*

*இதற்குப் பிறகு அந்த நாககுமாரன் அந்த அழகிய கந்தர்வ கன்னிகைகள் நால்வரையும் விவாஹம் செய்துகொண்டு, அவர்கள் நால்வரையும் அழைத்துக் கொண்டு, தன் பிதாவின் இல்லத்திற்குச் சென்றுன். நான்கு வேதங்களோடு கூட ப்ரணவம் செயது வணங்கியதைப் போல நாகராஜ குமாரன் அந்த நான்கு நவவதுக்களையும் அழைத்துக் கொண்டு தன் பிதாவின் வீட்டிற்குச் சென்றுன்.*

*ரத்னேஸ்வரருடைய க்ருபையாகிய இந்த அதிசய விருத்தாந்தத்தைத் தன் பெற்றவர்களுக்குக் கூறி நாககுமாரன் அவர்களுடன் சுகபூர்வமாக இருந்தான்.*

*சங்கரர் கூறினுர்:- ஏ! கிரிஜே! யாவருக்கும் எல்லாவற்றையும் அளிக்கவல்ல ஸ்தாவர ரூபமான*

என்னுடைய இந்த ரத்னேஸ்வர லிங்கத்தின் பிரபாவத்திற்கு ஈடாக ஒருவரையும் சொல்ல முடியாது. ஏ! துடியிடையாளே! இந்த லிங்கத்தை ஆயிரக்கணக்கான ஸித்தர்கள் பூஜித்து அதிக ஸித்திகளை அடைத்திருக்கிறுர்கள். ஆனுல் இந்த லிங்கம் இதுவரை மறைமுகமாகவேயிருக்கிறது.

என்னுடைய பரம பக்தனும், உன்னுடைய பிதாவுமான ஹிமவான் தன்னுடைய புண்ணிய பலத்தினுல் சேகரித்த, மஹாரத்னங்களை சேகரித்து இந்த லிங்கத்தை வெளியாக்கினுர். ஏ! கிரிராஜஸுதே, இந்த லிங்கம் எனக்கு மற்ற எல்லாவற்றையும் விட மிகவும் ப்ரியமானது. அதனுல் வாராணஸி க்ஷேத்திரத்தில் யாவரும் மிக்க பக்தியுடன் கருத்துடன் ஒன்றுபட்டு அந்த லிங்கத்தைப் பூஜிக்க வேண்டும்.

ஏ! ப்ரியே உமே! ரத்னேஸ்வரரின் க்ருபையால் நானுவிதமான ரத்ன ஜாதிகளையும் ஸ்தரீ ரத்னத்தையும், புத்ரரத்னத்தையும், ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் எல்லாவற்றையும் அடையலாம். இங்கு ஒருவன் ரத்னேஸ்வரரை வணங்கிவிட்டுப் பரதேசம் போனுலும், அகஸ்மாத்தாக அவனுக்கு அங்கு மரணம் நேரிட்டாலும்கூட அவன் நூறு கோடிகல்பம் வரைக்கும் ம்ருத்யு லோகத்திற்குத் திரும்பவே வேண்டாம்.

ஏ! தேவீ, ரத்னேஸ்வரருக்குக் அருகிலிருந்து கிருஷ்ணபக்ஷத்து சதுர்தசியன்று உபவாஸம் இருந்து இரவு கண்விழித்து, பூஜை செய்தால் அவனுக்கு நிச்சயமாக என்னுடைய ஸாந்நித்யம் கிடைக்கும்.

ஏ! ப்ரியே, இந்த ரத்னேஸ்வரருக்குக் கிழக்கு பக்கத்தில் உன்னுடைய பூர்வ ஜன்மத்தில் நீ தாக்ஷாயணியாக இருந்தபோது தாக்ஷயணீஸ்வரர் என்னும் லிங்கத்தை பக்தியுடன் ப்ரதிஷ்டை செய்தாய். அதைத் தரிசனம் செய்தால் மனிதன் துர்கதியடையமாட்டான். ஏ! அழகான இடையுடையவளே! இந்த இடத்தில் நீ அம்பிகை

*கௌரியாக இருக்கிறுய்; நான் அம்பிகேஸ்வரர் என்னும் பெயரால் அழைக்கப்படுகிறேன். உன்னுடைய புத்திரனுன ஷடானனன் அங்கு ஸாந்நித்யமாக இருக்கிறுன். ஏ! உமே, இம்மூவர்களையும் தரிசனம் செய்வதிஞல் ஒருவன் மீண்டும் கர்பத்தில் பிரவேசிக்க மாட்டான்.*

*இப்பொழுது நான் இந்த ரத்னேஸ்வரருடைய மாஹாத்ம்யத்தை உனக்குச் சொன்னேன். கலியுகத்தில் இருக்கும் பாவிகளின் கண்களுக்குப் படாமல் இதை முற்றிலும் மறைத்து வைக்க வேண்டும்.*

*ஒருவன் தினமும் இந்த ரத்னேஸ்வர உபாக்யானத்தைப் பாராயணம் பண்ணி வந்தானேயாஞல் அவன் ஒரு பொழுதும் புத்ரன், பௌத்ரன், வளர்ப்புடு ம்ருகங்கள் இவைகளின் வியோகத்தை அடைய மாட்டான்.*

*ஒருவன் ரத்தினேஸ்வரரின் சரித்திரத்தைக் கேள்விப்பட்டாஞுல் அவன் விவாஹம் ஆகாதவனுக இருந்தால் தன் குலத்திற்குப் பொருத்தமான ஸ்த்ரீ ரத்னத்தைப் பெறுவான்.*

*அதுபோல் ஒருபெண் இம்மனேரம்யமான இதிஹாஸத்தைக் கேட்டாளாஞல் ஒரு நற்குணசீலனுன பதியை அடைந்து, மஹாபதிவ்ரதையாக இருப்பாள்.*

*இந்த இதிஹாஸத்தைக் கேட்கும் ஸ்த்ரீயாஞலும், புருஷஞுலும் தங்களுக்குப் பிரியமானவர்களைப் பிரிந்து ஸந்தாபத்தை அடைய மாட்டார்கள்.*

*இவ்விதம் ஸ்ரீ ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்திரார்த்த பாஷா டீகாவான ப்ரசம்ஸாவர்ணனம் என்ற அறுபத்து ஏழாவது அத்யாயம்*

*ஸம்பூர்ணம்.*

# அத்யாயம் 68

*ஸ்கந்தர் கூறுகிறுர்:- ஏ! விப்ரேந்திரா! இங்கு மஹாபாதகங்களேயும் நசிப்பிக்கும் மற்ெருரு பரம ஆச்சர்யகரமான ஒரு விருத்தாந்தத்தையும் கேள்.*

*மஹேச்வரர் ரத்னேஸ்வரரைப் பற்றிய கதையை பார்வதிக்குக் கூறிக்கொண்டிருக்கும் அதே ஸமயத்தில் காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள், என்று குரல் கேட்டது.*

*தன்னுடைய வீரத்தின் அஹங்காரத்திஞல் உன்மத்தஞன மஹிஷாஸுரனுடைய புத்திரஞன கஜாஸுரன் ஒருவர் பாக்கியில்லாமல் சிவபிரானின் அவ்வளவு கணங்களேயும் மிதித்து நசிப்பித்துக் கொண்டு அவ்விடம் வந்து கொண்டிருந்தான்.*

*அவன் எங்கெங்கு தன் பாதங்களே வைக்கிருஞே, அங்கங்கு பூமி அவனுடைய கால்பாரம் தாங்காமல் நடுங்கியது.*

*அவனுடைய தேஹத்திஞலே மரங்களும் துதிக்கையால் மோதுவதால் மலேச் சிகரங்களும், தவிடு பொடியாகிக் கீழே விழுந்து கொண்டிருக்கின்றன.*

*அவனுடைய தலேயில் மோதுவதஞல் மேகக் கூட்டங்கள் ஆகாசத்தைவிட்டு ஓடிப்போகின்றன. ஆகாயம் இன்றுவரை நீலமாக இருப்பதற்குக் காரணம் அவனுடைய தலேமயிர் உரசினதால்தான்.*

*அவனுடைய பெருமூச்சிஞல் ஸமுத்திரத்தில் பெரிய பெரிய அலேகள் கிளம்பின. நதிகளும் அதிலுள்ள ப்ராணிகளும் உருண்டு புரண்டன.*

*அந்த மாயாவியினுடைய சரீரத்தின் உயரமும் பருமனும் ஒன்பதாயிரம் யோஜனே தூரம் வரை விரிந்திருந்தன.*

*அவனுடைய நேத்ரங்களிலிருந்து கிளம்பின மஞ்சளான கதிர்களும் சஞ்சலத்தன்மையும் இன்றுவரை*

*மின்னலில் ஒன்றிப் போயிருக்கின்றன. இப்படிப்பட்ட துஷ்டன் வெகு வேகமாக வந்து கொண்டிருக்கிறுன்.*

*இந்த ஸஹிக்க முடியாத பலமுள்ளதானவன் ப்ரம்மாவிடம் காமனே வென்ற ஸத்ரீபுருஷர்களால்தான் வதைக்க முடியும் என்று வரம் பெற்றிருந்தான். உத்தண்டத்துடன் மூன்று உலகத்தையும் த்ருணமாக மதித்தான்.*

*இதற்கு பிறகு த்ரிசூலதாரி மஹாதேவர் அந்த தைத்யராஜனே மற்றவர்களாலே கொல்ல முடியாது என்றறிந்து, அவன் அவருடைய சமீபம் வந்ததும் தனது த்ரிசூலத்திஞல் அவனேக் கொன்ருர்.*

*அந்த தைத்யஞன கஜாஸுரனேத் தன்னுடைய த்ரிசூலத்திஞல் குத்தி உயரத் தூக்கித் தலேக்குமேல் குடையைப் போல் உயரே பிடித்தர். அப்பொழுது அந்த அஸுரன் சிவபிரானிடம் கூறிஞன்- ஏ! த்ரிசூபாணி! தேவேசா, தாங்கள் காமனே ஸம்ஹாரம் செய்தீர்கள். நான் தங்களே நன்ருக அறிவேன். ஆஞல் ஏ! த்ரிபுராந்தகா, தங்கள் கையிஞல் கொல்லப்படுவதையே நான் மங்களமாகக் கருதுகிறேன்,*

*ஹே! ம்ருத்யுஞ்ஜயா, இச்சமயம் நான் தங்களிடம் ஒன்று விண்ணப்பித்துக் கொள்கிறேன். நான் பொய் சொல்கிறேஞ, ஸத்யம் உரைக்கிறேஞ என்பதை மனத்துடன் ஈடுபட்டுக் கேளுங்கள்.*

*ஹே! தேவா! தாங்கள் மூன்று உலகத்தாராலும் வணங்கத்தகுந்தவர்; எல்லோருக்கும் மேலானவர். ஆஞலும் என்னேத் த்ரிசூலத்திஞல் குத்தித் தங்கள் தலேக்குமேலே தூக்கிப் பிடித்தீர்கள். அதஞல் நான் தங்களுடைய அனுக்ரஹத்திஞல் தன்யஞனேன். இன்று வெற்றி என்னுடையது; ஆஞல் காலதர்மத்தை யனுசரித்து எல்லோரும் ஒருநாள் இல்லாவிட்டால் இன்ஞெருநாள் இறக்கவேண்டியவர்களே: அப்படிஇறப்பவர்களுக்கு*

என்னைப்போல் மரணம் கிடைக்கவேண்டும். அதைவிட மேலானது ஒன்றுமில்லை.

ஏ! கும்பமுனியே! பரம கருணாமயமான தேவாதிதேவனான சம்பு அவனுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டுச்சிரித்துக் கொண்டு கஜாஸுரனிடம் கூறினார்-

ஹே! கஜாஸுரா! மஹாபுருஷா! உன் ஸத்புத்தியைக் கண்டு நான் மிகவும் மகிழ்ந்தேன். ஏ! தானவா! நீ உனக்கு அனுகூலமான வரத்தைக் கேள். நான் கொடுப்பதற்குத் தயாராக இருக்கிறேன்.

அந்த தைத்யேந்திரன் சிவபிரானுடைய அந்த வார்த்தையைக் கேட்டுக்கூறினான்- ஏ! திகம்பரா, ஏ! விரூபாக்ஷா, தாங்கள் ஸந்தோஷமாக இருக்கிறீர்களானால் இந்த ரணக்ஷேத்திரத்தில் ஜயிக்கப்பட்டதும், த்ரிசூலத்தின் நெருப்பினால் துளைக்கப்பட்டதும், அகலமும் நீளமும் சுகத்தைக் கொடுப்பதுமான என்னுடைய தோலை நீங்கள் எப்பொழுதும் போர்த்திக் கொண்டிருக்க வேண்டும்.

என்னுடைய இந்தத் தோல் தங்களுடைய க்ருபையினால் உத்தம வாசனையுள்ளதாகவும் ம்ருதுவாகவும், நிர்மலமாகவும் தங்களுக்கு அலங்காரமாக இருக்கட்டும்.

ஏ! ப்ரபோ, இந்தத்தோல் தீர்க்ககாலம் வரை தபஸ்ஸாகிற அக்னிஜ்வாலையினால் தஹிக்கப்பட்டதானாலும் எரிந்து போகவில்லை. அதனால் பவித்ரத்திற்கும், ஸுகந்தத்திற்கும் தகுந்ததே இது.

ஏ! நாதா! மேலும் என்னுடைய இந்தத்தோல் மிகவும் புண்ணியம் செய்திருக்கிறது.

அதனாலே ஏ! திகம்பரா! இந்த யுத்தத்தினால் தங்களுடைய அங்கத்தை ஸ்பர்சிக்கும் பாக்கியம் கிடைத்தது, ஹே! சங்கரா! தாங்கள் ஸந்தோஷம்

*அடைந்தீர்களானுல் மற்ருெரு வரம்கூடக் கொடுத்தருள வேண்டும். அதாவது தங்களுடைய பெயரில் க்ருத்திவாஸன் என்பது சேர்ந்து விளங்கட்டும்.*

*அவனுடைய இந்தவசனத்தைக் கேட்டவுடனேயே பகவான் அப்படியே ஆகட்டும் என்று பக்தியினுல் நிர்மலமான சித்தத்தையடைந்த தைத்யனிடம் மறுபடியும் கூறினுர்.*

*ஏ! புண்யநிதே! தைத்யா! மற்ருெரு துர்லபமான வரத்தையும் தருகிறேன் கேள். நீ முக்திக்கு ஸாதனமான இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தில் என்னுடன் யுத்தம் செய்து சரீரத்தை விடுகிருய். அதனுல் உன்னுடைய பவித்ரமான சரீரம் இந்த க்ஷேத்திரத்தில் என்னுடைய லிங்கமாகப் பரிணமித்து இங்கேயிருக்கும் எல்லோருக்கும் முக்தியளிக்கக் கூடியதாக விளங்கட்டும்.*

*இதனுடைய பெயர் க்ருத்திவாஸேஸ்வரர் என்று விளங்கட்டும். இது மஹாபாபத்தைப் போக்கடிப்பதனுல் மற்ற லிங்கங்களுக்கு மத்தியில் இதுமஸ்தக ரூபலிங்கமாக விளங்கட்டும்.*

*வாராணஸியில் எத்தனை எத்தனை பெரியலிங்கங்கள் உள்ளனவோ, அவைகளுக்கெல்லாம் மேலானது. சரீரத்தினுடைய அங்கங்களில் தலை உன்னதமாக விளங்குவதைப் போல் இது உன்னதமாக விளங்கட்டும்.*

*மானவ ஸமூஹத்திற்கு ஹிதத்தைச் செய்வதற்காக நான் என் பரிவாரங்களுடன் இந்த லிங்கத்தில் ஸாந்நித்யமாக இருப்பேன். மனிதர்கள் இந்த லிங்கத்தை தர்சித்து, பூஜித்து ஸ்மரித்தால் க்ருதக்ருத்யர்களாகி ஸம்ஸாரத்தில் திரும்பவும் ப்ரவேசிக்க மாட்டார்கள்.*

*சாந்தமாகவும், அடக்கமாகவும், கோபமில்லாமலும், தியாக புத்தியுடையவர்களாகவும், ருத்ரர்கள், பாசுபதர்கள், ரிஷிகள், ஸித்தர்கள், தத்வசித்தர்கள் மானம் அவமானம் இரண்டிலும் ஸம நோக்குடையவர்கள், மான*

*அவமானத்தில் ஸமபுத்தியுடையவர்கள், செங்கற்கஃளயும், கற்கஃளயும், தங்கத்தையும் ஸமமாகப் பார்க்கிறவர்கள் ஆகிய என்னுடைய பக்த ஜனங்கள் மோக்ஷத்தை விரும்பி அவிமுக்த க்ஷேத்திரத்தில் வஸிக்கிருர்கள். அவர்களெல்லோருக்கும் அனுக்ரஹம் செய்வதற்காக நான் இந்த க்ருத்திவாஸ லிங்கத்தில் ஸாந்நித்யமாக இருப்பேன். ஒவ்வொரு ஆத்மாவும் பத்துகோடி ஆயிரம் தீர்த்தங்களும் மூன்று வேஃளயும் வந்து இந்த க்ருத்திவாஸேஸ்வரருக்கு அபிஷேகம் செய்துவிட்டுப் போகின்றன. கலியுகத்திலும் த்வாபரயுகத்திலும் பிறந்த ஜனங்கள், ஸதாசாரம் இல்லாமல், லோபம், மோஹம், அஹங்காரம் இவைகளுடன் கூடியவர்களாக இருக்கிருர்கள்.*

*ப்ராம்மணர்கள் சூத்திரர்களுடைய அன்னத்தை விரும்புபவர்களாகவும், ஸ்ஞனம் ஸந்தியாஜபம், யக்ஞம் இவைகளிலிருந்து காததூரம் விலகியும் இருக்கிருர்கள்.*

*ஆஞல் இவர்களெல்லாரும் கூட க்ருத்திவாஸேஸ்வரரை வந்து வணங்கி எல்லா பாபங்களிலிருந்தும் விலகி புண்ணியாத்மாக்கஃளப்போல ஸுகமான மோக்ஷபதவியை அடைகிருர்கள்.*

*இந்தக் காரணங்களிஞல் காசியில் ஜனங்கள் க்ருத்திவாஸலிங்கத்தை அவசியம் பூஜிக்க வேண்டும். ஏனென்ருல் மற்ற ஸ்தானங்களில் மோக்ஷம் ஆயிரக்கணக்கான ஜன்மங்கள் கடந்தாலும் கூடக் கிடைப்பது துர்லபம்.*

*அந்த துர்லபமான மோக்ஷம் க்ருத்திவாஸலிங்கத்தை வந்தடைந்தவுடனேயே இந்த ஜன்மத்திலேயே அஞயாஸமாகக் கிடைக்கிறது. பூர்வஜன்மங்களில் செய்த பாபங்கள் தபஸ் தானம் இவைகளிஞல் சிறிது சிறிதாகவே விலகுகின்றன. ஆஞல் க்ருத்திவாஸேஸ்வரரைத் தரிசனம் பண்ணினவுடனேயே நிமிஷத்தில் நஷ்டமடைந்து விடுகின்றன.*

*க்ருத்திவாஸேஸ்வரரைப் பூஜை செய்கிறவர்கள் என்னுடைய ஸாயுஜ்யபதவியை அடைகிறுர்கள். அவர்களுக்குப் பிறகு ஜன்மம் கிடையாது.*

*எல்லோரும் அவிமுக்த க்ஷேத்திரத்திலிருந்து, சதருத்ர ஸ்தோத்திரத்தை ஜபித்து, க்ருத்திவாஸேஸ்வரரைப் பூஜை செய்யவேண்டும்.*

*ஸப்த கோடி மஹாருத்ரம் செய்வதினுல் என்ன பலன் கிடைக்கிறதோ, அந்த பலன் காசியில் கேவலம் க்ருத்திவாஸேஸ்வரரை ஒரு முறை பூஜிப்பதனுலேயே கிடைக்கிறது.*

*மாகமாசத்து க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியன்று உபவாஸம் இருந்து இரவில் கண்விழித்து க்ருத்திவாஸேஸ்வரரைப் பூஜை செய்வதினுல பரமகதியையடையலாம். சித்திரா பௌர்ணமியன்று க்ருத்திவாஸேஸ்வரலிங்கத்திற்கு மஹத்தான உற்சவம் கொண்டாடுகிறவர்கள் திரும்பவும் கர்ப்பத்தில் ப்ரவேசிக்கமாட்டார்கள்.*

*தேவேஸ்வரர் இவ்விதம் கூறி கஜாஸுரனுடைய மிகவும் பளுவானதோலையுரித்து, தன்னுடைய தேஹத்தில் சுற்றிக்கொண்டார்.*

*ஏ! கும்பமுனியே, என்று பகவான் திகம்பரர் கஜாஸுரனுடைய தோலை உரித்து ஆடையாக அணிந்தாரோ, அன்று பெரிய மஹோத்ஸவமாகக் கொண்டாடப்பட்டது.*

*எந்த இடத்தில் த்ரிசூலத்தினுல் கெல்லி கஜாஸுரனைக் குடைபோல் தூக்கிப் பிடித்து, பிறகு பூதலத்தில் புதைக்கப் பட்டதோ, அந்த இடத்தை மறுபடியும் த்ரிசூலத்தினுல் தோண்டினபோது, அது ஒரு பெரிய குண்டமாயிற்று.*

*அந்த இடத்தில் ஸ்னுனமும், பித்ருக்குளுக்குத் தர்பணமும், க்ருத்திவாஸேஸ்வரருடைய தரிசனமும் செய்கிறவன் க்ருதக்ருத்யனுகிறுன்.*

ஸ்கந்தர் கூறினார்:- இப்பொழுது அந்தத் தீர்த்தத்தில் நடந்த ஒரு ஸம்பவத்தைக் கூறுகிறேன் கேள்; இந்தத் தீர்த்தத்தின் ப்ரபாவத்தினால் காக்கைகள் அன்னமாயின- அதைக் கேள்.

முன்னொரு காலத்தில் ஒருதடவை சித்ராபௌர்ணமியன்று, க்ருத்திவாஸத்திற்கு யாத்திரையைச் சென்று மஹோத்ஸவம் கொண்டாடினார்கள். அங்கு பூஜை செய்யப்பட்டவர்களால் அபிஷேகம் செய்யப்பட்ட அன்னம் குவியலாகக் குவிந்திருக்கிறது. ஏ! விப்ரா! அக்குவியலைப் பார்த்துவிட்டு அனேக பக்ஷிக்கூட்டங்கள் வட்டமிட்டன. அந்த அன்னத்திற்காக ஒன்றுக்கொன்று சண்டையிட்டன.

பிறகு சிறந்த பக்ஷிகள் அன்னத்தை சாப்பிட்டுவிட்டு மிகவும் பருத்துக் கொழுத்துப்போன மற்ற காகங்களைப் பார்த்து காகா என்று கத்திக்கொண்டு, நிர்பலமான காக்கைகளை அலகினால் கொத்தத் தொடங்கின.

அந்த அலகினால் கொத்தப்பட்ட காக்கைகள் அந்த குண்டத்தில் விழுந்தன. ஆயுள் மீதியிருந்த காரணத்தினால் அவைகளுக்கு உயிர் போகவில்லை. ஆகையினால் எல்லாக் காக்கைகளும் எல்லாரும் மிகவும், ஆச்சர்யப்பட்டு, கையால் சுட்டிக்காட்டிச் சொன்னார்கள்; பாருங்கள், பாருங்கள் என்ன - விசித்திரமாக இருக்கிறது;

நாம் பார்த்துக் கொண்டு இருக்கும்போதே இந்த குண்டத்தில் விழுந்த எல்லாக் காக்கைகளும் தீர்த்த ப்ரபாவத்தினால் ஹம்ஸமாகி விட்டன. ஏ! கும்ப முனியே! அது முதல் க்ருத்திவாஸருக்கு ஸமீபத்தில் இருக்கும் அந்த குண்டம் ஹம்ஸதீர்த்தம் என்று க்யாதி அடைந்திருக்கிறது.

மிகவும் இழிவு அடைந்த செய்கையைச் செய்வதினால் மிகவும் மலிவான ஆத்மாவை உடையவர்களும் ஹம்ஸ தீர்த்தத்தில் ஸ்நானம் முதலிய ஜலக்கிரியைகளைச் செய்வதினால் க்ஷணநேரத்தில நிர்மலமாகி விடுகிறார்கள்.

*எப்பொழுதும் காசியில் வாஸமும், ஹம்ஸ தீர்த்தத்தில் ஸ்ஞனமும் க்ருத்திவாஸேஸ்வரரைத் தரிசனம் செய்து வந்தால் அவர்கள் பரமபதத்தை நிச்சயம் அடைகிறுர்கள். ஏ! முனியே! காசியில் கால் வைக்கும் இடந்தோறும் லிங்கங்கள் பரவிக்கிடக்கின்றன. ஆனுல் க்ருத்திவாஸேஸ்வர லிங்கம் எல்லாவற்றிற்கும் தலே போன்றது.*

*காசியில் பக்தியுடன் கூடிய மனத்துடன் இந்த க்ருத்திவாஸேஸ்வரரை ஸேவித்தால் எல்லா லிங்கங்களேயும் ஆராதனே செய்த பலன் கிடைக்கும். க்ருத்திவாஸேஸ்வரரின் ஸமீபத்தில் தபம், ஜபம், தானம், ஹோமம், தர்பணம், தேவபூஜனம் ஆகிய எதைச் செய்தாலும் அது பதின் மடங்கு அதிகபலன் கிடைக்கும்.*

*ஏ! கலசத்தில் பிறந்தவனே! இந்தத் தீர்த்தம் அஞதிகாலந்தொட்டு மறைந்து இருக்கிறது. இப்பொழுது பகவான் மஹேச்வரருடைய ஸாந்நித்யத்திஞல் மறுபடியும் வெளிப்பட்டிருக்கிறது. இந்த எல்லா ஸித்தி லிங்கங்களும் யுகம் யுகமாக மறைந்திருந்தது பிறகு மஹாதேவருடைய ஸாந்நித்யத்திஞல் வெளிப்பட்டுள்ளன.*

*ஏ! முனியே! ஹம்ஸ தீர்த்தத்தின் நான்கு பக்கங்களிலும் மகத்துக்களான முனிவர்களால் ஸ்தாபிக்கபபட்ட பத்தாயிரத்து இருநூறு லிங்கங்கள் இருக்கின்றன. அந்த லிங்கங்கள் ஒவ்வொன்றும் கார்த்தியாயனேஸ்வரரிலிருந்து, யவனேஸ்வரர் வரையிலும் பரவியிருக்கின்றன. அவைகள் ஒவ்வொன்றும் காசி வாஸிகளுக்கு ஸித்தியைக் கொடுக்கின்றன.*

*க்ருத்திவாஸேஸ்வரருக்கு மேற்குப்பக்கத்தில் லோமசமுனியால் பிரதிஷ்டிக்கப்பட்ட லோமஸேஸ்வரர் என்னும் பெயருள்ள மஹாலிங்கம் இருக்கிறது. அதைத் தரிசனம் செய்பவர்கள், பிறகு யமராஜருக்கு ஏன் பயப்படவேண்டும்?*

க்ருத்திவாஸேஸ்வரருக்கு வடக்குப்பக்கத்தில் மிகவும் சுபத்தைக் கொடுக்கும் மாலதீஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதைப் பூஜை செய்பவர்கள் யானைப்படைகளோடு கூடிய ஐஸ்வர்யத்துடைய அரசராகிறார்கள். க்ருத்திவாஸேஸ்வரருக்கு அருகில் அந்தகேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசனம் செய்வதினால் மஹாபாபிகளும் பரிசுத்தமாகிறார்கள்.

அதற்கு ஸமீபத்திலேயே பரம ஞானத்தைக் கொடுக்கும் ஜனகேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அந்த லிங்கத்தைப் பூஜிப்பதினால் ப்ரம்ம ஞானத்தை அடைகிறார்கள்.

அதற்கு வடக்கு பாகத்தில் மிகவும் பெரிய உருவத்தையுடைய அஸித்தாங்க பைரவர் இருக்கிறார். அவரைத்தரிசனம் செய்தால் அவர்கள் யமராஜரைத் தரிசனம் பண்ண வேண்டி வராது.

அங்கேயே க்ருத்திவாஸேஸ்வரருக்கு வடக்கு திசையில் பயங்கரமான கண்களையுடைய சுஷ்கோதரி தேவி இருக்கிறாள். அவள் எப்பொழுதும் காசிவாசிகளின் விக்னத்தை பக்ஷித்துக் கொண்டிருக்கிறாள்.

அந்த தேவியிருக்குமிடத்திலிருந்து தென்மேற்குக் கோணத்தில் அக்னிசித்தன் என்னும் வேதாளம் இருக்கிறது. செவ்வாய்க் கிழமையன்று அதைப் பூஜித்தால் இஷ்டப்பட்ட ஸித்திகளைப் பெறலாம்.

அங்கேயே எல்லாவியாதிகளையும் நாசம் செய்யும் வேதாளகுண்டம் இருக்கிறது. அந்த ஜலத்தை ஸ்பர்சித்த மாத்திரத்திலேயே காயங்கள் கொப்புளங்கள் சொறி முதலிய ரோகங்கள் விலகுகின்றன.

எவனொருவன் வேதாள குண்டத்தில் ஸ்னானம் செய்து வேதாளத்தை வணங்குகிறானோ அவன் அரிதான ஸித்திகளையடைகிறான்.

அதே இடத்தில் ஒரு சிவகணம் உள்ளது. அதற்கு இரண்டு புஜங்களும் நான்கு கால்களும் ஐந்து சிரங்களும் உள்ளன. அதைத் தரிசனம் செய்தால் அந்த க்ஷணத்திலேயே பாபங்கள் ஆயிரம் துகள்களாகச் சிதறுகின்றன.

ஏ முநியே! அதற்கு வடபாகத்தில் நான்கு கொம்புகளும், மூன்று பாதங்களும், இரண்டு தலைகளும் ஏழுகைகளையுமுடைய மிகவும் பயங்கரமான வ்ருஷபரூபத்தில் ஒரு ருத்ரர் இருக்கிறார்.

ஏ! கும்பமுனியே! அவர் காசியில் இடையூறு விளைவிப்பவருக்கும், பாப புத்தியுள்ளவர்களுக்கும், தண்டனை அளிப்பதற்காகக் கையில் கோடரியை வைத்துக் கொண்டு கூக்குரலிட்டுக் கொண்டிருக்கிறார்.

ஆனால் காசியில் விக்னங்களை விலக்குபவர்களும், தர்மபுத்தியுடையவர்களாக எவர்கள் இருக்கிறார்களோ, அவர்களுடைய வம்சத்தை அமிர்தம் நிறைந்த குடத்தினால் அபிஷேகம் செய்கிறார் இந்த வ்ருஷபரூபி, ருத்ரரை தரிசனம் செய்து, பிறகு பக்தியுடன் கூட நானாவிதமான உத்தம உபசாரங்களுடன் யார் பூஜை செய்கிறார்களோ, அவர்களை ஒருவிதமான விக்னங்களும் ஆக்ரமிக்காது. மேற்கூறிய ருத்திர தேவருடைய உத்திரபாகத்தில மணிப்ரதீபம் என்னும் ஒரு நாகர் இருக்கிறது.

அதற்கு எதிரிலேயே கடுமையான விஷயங்களையும் வியாதிகளையும் போக்கடிக்கும் மணிகுண்டம் இருக்கிறது. அந்த குண்டத்தில் நீராடி அந்நாகத்தைத் தரிசனம் செய்வதால், மணிமாணிக்கங்களும், யானை, குதிரை, ரதம், ஸ்த்ரீரத்னம், புத்ரரத்னம் இவைகளுடன் ராஜ்யமும் கிடைக்கும்.

காசிபுரியில் க்ருத்திவாஸேஸ்வர லிங்கத்தைத் தரிசனம் செய்யாதவர்கள் எல்லாம் இந்த ம்ருத்யு லோகத்தில் ஸந்தேஹமில்லாமல் பூமிக்குப் பாரமாகத்தானிருக்கிறார்கள்.

ஸ்கந்தர் கூறுவார் எவர்கள் இந்த உலகில் க்ருத்திவாஸேஸ்வரருடைய உற்பத்திக் கதைகளைக் கேட்கின்றனரோ, அவர்கள் லிங்கத்தைத் தரிசனம் செய்வதைவிட அதிக புண்ணியத்தை அடைகிறுர்கள், இதில் கொஞ்சம் கூட ஸந்தேஹமில்லை.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் உத்திரார்த்த பாஷாடீகாவான கஜாஸுரவதம், க்ருத்திவாஸேஸ்வரருடைய ஆவிர்பாவம் இவைகளை வர்ணிக்கும் அறுபத்தெட்டாவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# *அத்தியாயம் 69*

*ஸ்கந்தர் கூறுகிறுர்; ஏ தபோ ராசியே, அகஸ்தியா, காசியில் எந்தெந்த லிங்கத்தை ஸேவிப்பதால் பவித்ராத்மாக்கள் முக்தி அடைகிறுர்களோ, அவர்களின் கதையைச் சொல்லுகிறேன் கேளும்.*

*எந்த ஸ்தானத்தில் மஹாதேவர் கஜாஸுரனுடைய தோலேயுரித்து தரித்துக் கொண்டாரோ, அந்த ஸர்வஸித்தி அருளும் ஸ்தானத்திற்குப் பெயர் ருத்திரவாஸம் என்பதாக ப்ரஸித்தி அடைந்தது.*

*அங்கு உமாதேவிக்குப் பக்கத்தில் பகவான் க்ருத்திவாஸேஸ்வரர் இருப்பதால் ஒரு தினம் நந்திதேவர் வந்து நமஸ்கரித்துத் துதித்துவிட்டுக் கூறினுர்- ஹே! தேவதேவேசா! விச்வேச்வரா! இங்கு ஸமஸ்த ரத்னங்களினுல் சோபிதமான ரம்யமான (அழகான) 68 சிவாலயங்கள் கட்டப்பட்டிருக்கின்றன.*

*பூலோகம், பாதாளம் ஸ்வர்க்கம் இவைகளில் முக்தி அளிக்கவல்ல எத்தனை எத்தனை ஸ்தானங்கள் உள்ளனவோ அவைகளில் அனைத்தையும் நான் இங்கு கொண்டு வந்திருக்கிறேன்.*

*ஹே! நாதா! எங்கெங்கெல்லாம் இருந்து கொண்டு வரப்பட்டதும், எங்கெங்கெல்லாம் அவைகளை ஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றனவோ அவைகளைப் பற்றிக்கூறுகிறேன். தயவுசெய்து காது கொடுத்துக் கேட்கவேண்டும்.*

*குருக்ஷேத்திரத்திலிருந்து மோக்ஷத்தையளிக்கவல்ல தேவருடைய மோக்ஷப்ரதமான ஸ்தாணு என்னும் மஹாலிங்கத்தை இங்கு கொண்டு வந்திருக்கிறேன். அங்கு அவருடைய ஒரு கலைமாத்திரமேயிருக்கிறது. அதற்கு முன்னுல் லோலார்கருடைய மேற்கு திக்கில் ஸமீபத்திலேயே மங்களகரமான ஒரு பெரிய குளம்*

இருக்கிறது. அதுவும் குரு க்ஷேத்ர பூமியைச் சேர்ந்ததுதான்.

சுபத்தை விரும்புகிறவர்கள் அங்கு ஸ்ஞனம், ஜபம், தபம், தானம் இவைகளைச் செய்கிறுர்கள். ஆஞல் இங்கு அதனுடைய பலன் கோடிபங்கு அதிகம், இது உண்மை. ஹே! விபோ! தேவதேவர் என்னும் மஹாலிங்கம் பிரும்மாவர்தம் என்னும் கிணற்றுடன் நைமிசாரண்யத்தில் ஒரு அம்சமே மாத்திரம் வைத்துவிட்டு, இங்கு வந்து தோன்றியிருக்கிறது.

டுண்டிராஜருக்கு வடக்குப் பக்கத்தில் ஸாதகர்களுக்கு ஸித்தியளிக்கும் தேவதேவர் என்னும் பெயருள்ள லிங்கம் இருக்கிறது. அதற்குக் கொஞ்சம் முன்ஞல் ப்ரம்மாவர்த்தம் என்னும் பெயருள்ள ஒரு கிணறு இருக்கிறது. அக் கிணற்று ஜலஸ்ஞனத்திஞல் மனிதர்கள் புனர் ஜன்மம் இல்லாதவர்களாகிறுர்கள். அந்தக் கிணற்று ஜலத்தில் ஸ்ஞனம் செய்து தேவதேவரைப் பூஜித்தால் நைமிசாரண்ய ஸ்ஞனத்தைவிடக் கோடி கோடி பங்கு புண்ணியபலன் கிடைக்கிறது.

இந்தக் காசியில் கோகர்ண க்ஷேத்திரத்திலிருந்து வந்த மகாபலர் என்னும் பெயருடைய ஒரு லிங்கம் ஸாம்பாதித்யருடைய ஸமீபத்தில் தானே தோன்றியிருக்கிறது. இதை ஸ்பரிசனம், தரிசனம் இரண்டும் செய்தால் மஹாபலம் பொருந்திய பாபம்கூடக் காற்றில் அலைக்கப்பட்ட பஞ்சுப் பொதிபோல சிதறிப்போகிறது. கபால மோசனத்திற்கு முன்ஞல் இருக்கும் மஹாலிங்கத்தைத் தரிசனம் செய்வதால் மஹாபலத்தையடைந்து நிர்வாண பதவியை அடைவார்கள். (ருண மோசனர்) ருண மோசனருக்கு கிழக்கே ப்ரபாஸ க்ஷேத்திரத்திலிருந்து வந்த, சசி பூஷணர் என்னும் லிங்கம் ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. அந்த லிங்கத்தின் தரிசனத்திஞல், பூஜை செய்பவஞும் சசிபூஷணஞக, அதாவது சிவனுடைய ஸாயுஜ்யத்தை அடைகிறுன்.

அதாவது சிவனுடைய ஸாயுஜ்யபதவியை அடைகிறுன். மேலும் ப்ரபாஸ க்ஷேத்திரத்திற்கு யாத்திரை செய்து வந்ததைவிடக் கோடிபங்கு அதிகபுண்ணியபலன் கிடைக்கிறது உஜ்ஜயினியிலிருந்து பகவான் மஹாகாலர் தானே இங்கு வந்திருக்கிருர்.

அவரைக் கேவலம் ஸ்மரணம் செய்வதிஞலேயே கலி, காலன் இவர்களுடைய பயம் ஏற்படாது. ஓங்காரேஸ்வரர் என்னும் பெயருள்ள மஹாலிங்கத்துக்குக் கிழக்குப் பக்கத்தில் அந்த கல்மஷத்தைக் கொடுக்கும் மஹாகாலேஸ்வரருடைய லிங்கமிருக்கிறது. அயோகந்தேஸ்வரலிங்கம் புஷ்கரமஹாதீர்த்தத்துடன் இங்குவந்து தானே வெளிப்பட்டு இருக்கிறது. மசோதரிக்கு வடக்கில் அயோகந்தேஸ்வரருடைய தரிசனமும், அயோகந்த குண்டத்தில் ஸ்ஞனம் செய்வதால் ஒருவன் தனது பித்ருக்களை பவஸாகரத்திலிருந்து கரையேற்றுகிறுன். அட்டஹாஸ க்ஷேத்திரத்திலிருந்து மகாஹாதேஸ்வரர் என்னும் லிங்கம் இங்கு எழுந்தருளியிருக்கிறது.

த்ரிலோசனருக்கு உத்தர பாகத்தில் இருக்கும் இந்த லிங்கத்தைத் தரிசனம் செய்வதிஞல் முக்திலாபம் கிட்டுகிறது. மருத்கோடம் என்னும் ஸ்தலத்திலிருந்து மஹாற்சகேஸ்வரர் என்னும் லிங்கம் இங்கு வந்திருக்கிறது. அது காமேஸ்வரருடைய வடக்கு பக்கத்தில் இருக்கிறது. அதைத் தரிசனம் செய்வதால் அதிநிர்மலமான ஸித்தியைக் கொடுக்கிறது.

விசுவஸ்தானத்திலிருந்து விமலேஸ்வரர் என்னும் பெயருள்ள லிங்கம் இங்கு ஆவிர்பவித்திருக்கிறது. அது ஸ்வர்நீலேஸ்வரருடைய மேற்கு பக்கத்தில் இருக்கிறது. அதைத் தரிசனம் செய்வதிஞல் விமலமான ஸித்தியை அளிக்கிறது.

மஹேந்த்ர பர்வதத்திலிருந்து மஹாவ்ரதர் என்று பெயருள்ள மஹாலிங்கம் இங்கு எழுந்தருளியிருக்கிறது.

அது ஸ்கந்தேஸ்வரருக்கு சமீபத்தில் மஹாவ்ரதிகளுக்கு வ்ரத பலனைக் கொடுக்கிறது.

ஸத்ய யுகத்தில் தேவதைகளும் முனிவர்கள் ஸ்துதித்தற்காக பேதிக்க முடியாத கடினமான மஹாபூமியைப பிளந்துகொண்டு ஒரே மஹாலிங்கம் உற்பத்தியாயிற்று.

அந்த லிங்கம் எல்லோருடைய மனோரதங்களையும் பூர்ணமாக்கினபடியால் மஹாதேவர் என்ற பெயருடன் இருக்கிறது. அப்பொழுதிலிருந்து வாராணசியில் மஹாதேவர் என்ற யெர் பிரஸித்தமாகியுள்ளது.

அந்த மஹாலிங்கமே காசீ க்ஷேத்திரத்தை முக்தி க்ஷேத்திரமாக ஆக்கியது. அதனுல் இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தை ஒருவன் மஹாதேவரை தரிசனம் செய்தால் இதைத் தரிசித்தவன் வேறு எந்த தேசத்தில் மரித்தாலும் கடைசியில் சிவலோகத்தையே அடைகிருன். அதனுல் மோக்ஷத்தில் இச்சையுள்ளவர்கள் - அவிமுக்த க்ஷேத்திரத்தில் அந்தலிங்கத்தை மிகவும் கருத்துடன் ஸேவிக்க வேண்டும்.

இந்த லிங்கஸ்வரூபரான மஹாதேவரே கல்ப முடிவில்கூட ஆனந்தவனத்தை விட்டுச்செல்லவில்லை.

இந்தச் சிவாலயம் உவமை கூறமுடியாத அநேக ரத்னங்களினுல் அமைக்கப்பட்டு அவருடைய சிவாலயமாக அமைகிறது.

இவ்வளவு தூரம் நான் கூறிவந்த ஸர்வலிங்கத்தின் ஸ்வரூபமாயுள்ள மஹாதேவர் என்ற லிங்கமே வாராணஸிக்கு அதிர்ஷ்டாத்ரியாகவும் ஸகல அபீஷ்டங்களையும் கொடுப்பவளாகவும், காவல் தேவதையாகப் பெண் வடிவம் கொண்டு ஹிரண்யகர்ப்பதீர்த்தத்தின் மேற்குப் பகுதியில் இருந்துகொண்டு காசீ க்ஷேத்திரத்தை ரக்ஷிக்கிருள்.

எவர் ஒருவர் வாராணஸி க்ஷேத்திரத்தில் லிங்கரூபமாக இருக்கும் மஹாதேவரை தரிசனம் செய்கிறுரோ, அவர் ஸந்தேஹமில்லாமல் மூன்று லோகங்களிலும் பரவியிருக்கும் ஸமஸ்தமான லிங்கங்களேயும் இந்தக் காசீ க்ஷேத்திரத்திலேயே தரிசனம் பண்ணின பலனே அடைகிறுர்கள்.

ஒருவன் காசியில் ஒரு தடவையாவது மஹாதேவரைப் பூஜை செய்தானேயாஞல் அவன் மஹாப்ரளயம் வரும்வரை சிவலோகத்தில் உல்லாஸமாக வஸிக்கிறுன். எவஞெருவன் சிரவணமாஸத்தில் பவித்ரமான பக்ஷத்தில் அல்லது சுக்ல சதுர்த்தசியன்று மிகவும் கருத்துடன் மஹாதேவலிங்கத்துக்கு பூணூல் ஸமர்பித்தானேயாஞல் அவன் தாயின் கர்ப்பத்தில் மறுபடியும் பிரவேசிக்கவேமாட்டான்.

பிதாமஹேஸ்வரர் என்னும் பெயருடைய மஹாலிங்கம் பல்குநி நதி முதலிய ஏழரைகோடி தீர்த்தங்களுடன் கயாவிலிருந்து இங்கு எழுந்தருளியிருக்கிறுர். இந்த இடத்தில் தர்மராஜன் பத்துயுகம் வரைக்கும் ஸ்ரீமத் தர்மேஸ்வரர் என்னும் லிங்கத்தை சாக்ஷியாக வைத்துக் கடினமான தபஸ் செய்தார்.

காசியில் இந்த இடத்தில் பிதாமஹேஸ்வரர் என்னும் மஹாலிங்கத்தை மகிழ்ச்சியாகப் பூஜை செய்வதிஞல் இருபது தலைமுறை வரையில் ஒருவர் ஸந்தேஹமில்லாமல் முக்தியடைகிறுர். ப்ரயாகையென்னும் தீர்த்த ராஜருடன் அங்கிருக்கும் நீலகண்டேஸ்வரர் என்னும் லிங்கம் இங்கும் விஜயம் செய்துள்ளது.

அழகான நிர்வாண மண்டபத்திற்குத் தெற்கு பக்கத்தில் மிகவும் நிர்மலமான பொன்னின் ஒளியுடன் போட்டியிடுகிற ஒரு கோவில் ஸுமேருபர்வதத்துடன் போட்டிபோட்டுக் கொண்டு விளக்குகிறது.

ஏ! தேவா! முன்னொரு யுகத்தில் தாங்களே காசியில முதல் முதலாகப் பாபங்களை நாசம் செய்யும் சூலடங்கேஸ்வரரைப் பூஜை செய்ய வேண்டும் என்று கூறியிருக்கிறீர்கள்.

ஒருவன் பிரயாகை தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து மிகுந்த பூஜாத்திரவ்யங்களுடன் சூலடங்கேஸ்வரரைப் பூஜித்து வணங்கினுனல் அவனுக்கு பிரயாகையில் ஸ்னானம் செய்வதைவிட நூறுபங்கு பலன் அதிகமாகக் கிடைக்கும். இதில் கொஞ்சமும் ஸந்தேஹமில்லை. சங்குகர்ணன் என்ற பெயருடைய மிகப்பெரிய தீர்த்தத்திலிருந்து தேஜஸ்ஸுக்கும் தேஜஸ் கொடுக்கின்ற மஹாதேஜஸ் என்ற லிங்கம் இங்கு ஆவிர்பவித்திருக்கிறது.

அந்த லிங்கத்தினுடைய தேஜஸ்ஸுக்கே நிதியான மாணிக்கத்தினுல் நிர்மாணிக்கப்பட்ட கோவில் தனது ஒளியை ஆகாசத்தில் பரப்பிக் கொண்டிருக்கிறது. இந்த லிங்கத்தைத் தரிசித்து, ஸ்பர்சித்து, ஸ்துதித்து, பூஜித்து பரமபதத்தையடையலாம். அங்கு சென்றால் யோசிப்பதற்கு ஒன்றும் இருக்காது.

விநாயகேஸ்வரருக்குக் கிழக்கில் மஹாதேஜஸ் லிங்கத்தைப் பூஜை செய்வதினுல் தேஜோமயமான விமானத்திலேறி சிவலோகத்தையடையலாம்.

பரமபாவனமான ருத்ரகோடி என்னும் தீர்த்தத்திலிருந்து மஹாயோகேஸ்வரர் என்னும் லிங்கம் இங்கு வந்து தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது. பார்வதீஸ்வரருக்கு ஸமீபத்திலேயே அந்த லிங்கம் இருக்கிறது. அநேக ஸித்திகளை அளிக்கவல்ல அந்த லிங்கத்தைத் தர்சித்தால் கோடிலிங்கங்களைத் தர்சித்த பலன் கிடைக்கிறது.

இந்த மஹாயோகேஸ்வரருடைய கோவிலின் நான்கு பக்கங்களும் கோடிக்கணக்கான ருத்ரமூர்த்திகளினுல் அமைக்கப்பட்ட ஒரு ரமணீயமான சிவாலயம் இருக்கிறது. பேதவாதிகள் காசியில் அந்த இடத்தை ருத்ரவிதலீ என்று

*கூறுகிறார்கள். இங்கு பூச்சியானாலும், புழுவானாலும், க்ருமிகளானாலும், பக்ஷிகளானாலும், ம்ருகமானாலும், ம்லேச்சர்களானாலும், தீக்ஷிதர்களானாலும் யாராயிருந்தாலும் சரி இந்த இடத்தில் மரித்தால் அவர்கள் ருத்ரஸ்ரூபர்களாகிறார்கள். அதனால் அவர்கள் ஸம்ஸாரத்தில் மறுபடியும் பிறப்பதில்லை.*

*ஆயிரக்கணக்கான ஜன்மங்களில் சேர்த்து வைத்த ஸஞ்சித பாபங்கள் ருத்ரஸ்தலியில் கால் வைத்தவுடனேயே எல்லாம் க்ஷயமாகி விடுகின்றன. நிஷ்காமமாகவோ, ஸகாமமாகவோ திர்யக்யோனியில் பிறந்திருந்தாலோ யாராயிருந்தாலும் இந்த ருத்ரஸ்தலியில் கால் வைத்தால் என்னுடைய பரமபதத்தையடைகிறார்கள்.*

*மஹாலிங்கத்தை தரிசனம் செய்பவர் பரமகதி யடைகிறார்.*

*தந்தகூட கணேசருக்கு ஸமீபத்திலேயே யவத்தை நாசம் செய்யும் பகவான் நீலகண்டர் காலஞ்சரம் என்னும் பர்வதத்திலிருந்து வந்து இங்கு எழுந்தருளியிருக்கிறார். இந்தக் காசீ க்ஷேத்திரத்தில் இந்த நீலகண்டரைப் பூஜைசெய்பவர்கள் தானே நீலகண்டனாகவும், சந்திரசேகரனாகவும் ஆகிறார்கள்.*

*காஷ்மீரிலிருந்து பகவான் விஜயேஸ்வரர் இங்கு லிங்க ரூபமாக வந்திருக்கிறார். அவர் சாலகண்ட கணேசருடைய கிழக்கு பாகத்திலிருந்துகொண்டு ஜனங்களுக்கு எப்பொழுதும் ஜயத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.*

*விஜயேஸ்வரரைப் பூஜை செய்வதனால் யுத்தத்தில், ராஜ ஸபையில், சூதாட்டத்தில், விவாதத்தில் எங்கும் ஜனங்களுக்கு ஜயம் உண்டாகிறது.*

*கஷ்டமான கணேசரின் முன்னாலிருக்கும் லிங்கத்திற்குப் பெயர் ஊர்த்வரேதா: இவர் த்ரிதண்டா தீர்த்திலிருந்து இங்கு எழுந்தருளியிருக்கிறார்.*

ஏகாம்பர க்ஷேத்திரத்திலிருந்து பகவான் க்ருத்திவாஸர் இங்கு வந்து க்ருத்திவாஸா லிங்கத்தில் பிரவேசமாகியுள்ளார். இந்த ஸ்தானத்தில், ஜகதம்பாள், ரிஷி சிவகணங்களோடுகூட பகவான் இருந்துகொண்டு ஸ்வயமாகவே பக்தர்கள் காதில் வேதவிஹித ப்ரம்மத்தை உபதேசிக்கிறார்.

ஸித்தி அளிக்கவல்ல இந்தக்காசீ க்ஷேத்திரத்தில் மருஜாங்கல் என்னும் தீர்த்தத்திலிருந்து குவியல்களை நூற்றுக்கணக்கான துண்டுகளாகச் சிதற அடிக்கிறார்.

பரசபாணி கணேசர் அருகில் இருவரும் இந்த சண்டீஸ்வரர் மஹாலிங்கத்தை தரிசனம் செய்பவர் பரமகதியடைகிறார். தந்தகூடகணேசருக்கு ஸமீபத்திலேயே பவத்தை நாசம் செய்யும் பகவான் நீலகண்டர் காலஞ்சரம் என்னும் பர்வதத்திலிருந்து வந்து இங்கு எழுந்தருளியிருக்கிறார்.

இந்தக் காசீ க்ஷேத்திரத்தில் இந்த நீலகண்டரைப் பூஜை செய்பவர்கள் தானே நீலகண்டனுகவும், சந்திர சேகரனுகவும் ஆகிறார்கள். காஷ்மீரிலிருந்து பகவான் விஜயேஸ்வரர் இங்கு லிங்க ரூபமாக வந்திருக்கிறார். அவர் சாலகண்ட கிழக்கு பாகத்திருந்து கொண்டு ஜனங்களுக்கு எப்பொழுதும் ஜெயத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்.

விஜயேஸ்வரரைப் பூஜை செய்வதனுல் யுத்தத்தில் ராஜஸபையில் சூதாட்டத்தில், விவாதத்தில் எங்கும் ஜனங்களுக்கு ஜயம் உண்டாகிறது. கூஷ்மாண்ட கணேசரின் முன்னுல் இருக்கும் லிங்கத்திற்குப் பெயர் ஊர்த்வரேதா: இவர் த்ரிதண்டா தீர்த்தத்திலிருந்து இங்கு எழுந்தருளியிருக்கிறார்.

ஊர்த்தவரேதேஸ்வரரை தரிசனம் செய்வதினுல் ஊர்த்வகதி கிடைக்கிறது. இந்த லிங்கத்தின் பக்தர்களுக்கு அதோகதி ஒரு நாளும் ஏற்படாது.

*ஸ்ரீகண்டரின் பக்தர்களெல்லாம் ஸ்ரீகண்டராகவே ஆகிறார்கள். இந்த லோகத்திலும் பரலோகத்திலும் கூட எங்குமே அவர்கள் ஸ்ரீ ஹீனராக இருக்கமாட்டார்கள்.*

*சாக்கலாண்டம் என்னும் மஹாதீர்த்தத்திலிருந்து பகவான் கபர்தீஸ்வர பிசாச மோஹனதீர்த்தத்தில் தானே வெளித்தோன்றியிருக்கிறார்.*

*கபர்தீஸ்வரரைப் பூஜை செய்வதினால் மனிதன் நரகத்தையடைய மாட்டான். அவன் கொடிய பாபம் செய்திருந்தாலும் இங்குப் பிசாசாக ஆகமாட்டான்.*

*சூக்ஷ்மேஸ்வரர் என்னும் லிங்கம் ஆம்ராதகேஸ்வரக்ஷேத்திரத்திலிருந்து இந்த மங்களகரமான க்ஷேத்திரத்திற்கு வந்து எழுந்தருளியிருக்கிறார்.*

*விகடதந்த கணேசருக்கு ஸமீபத்தில் இவர் இருக்கிறார். இந்த சூக்ஷ்மேஸ்வரலிங்கத்தைத் தரிசனம் செய்வதினால் சூக்ஷ்மகதி கிடைக்கிறது. யாதொருவன் கங்காபாகீரதியின் பவித்ரஜலத்தில் நீராடி ஜெயந்தேஸ்வரரை தரிசனம் செய்தால் அவன் தான் விரும்பிய ஸித்தியைப் பெறுவான். எங்கும் ஜெயமே அடைவான். ஜெயந்தேஸ்வரலிங்கம் மதுகேஸ்வரத்திலிருந்து வந்துள்ளது. இவர் லம்போதர கணபதிக்கு முன்னால் இருக்கிறார்.*

*ஸ்ரீசைலத்திலிருந்து தேவாதி தேவரான த்ரிபுராந்தகர் இங்கு எழுந்தருளியிருக்கிறார். ஸ்ரீ சைலபர்வதத்தைத் தரிசிப்பதினால் என்ன பலன் கிடைக்குமோ, அந்தப் பலன் த்ரிபுராந்தகரைத் தரிசிப்பதினால் அனாயாஸமாகக் கிடைக்கிறது. விஸ்வேஸ்வரருடைய மேற்கு பாகத்தில் இருக்கும் த்ரிபுராந்தகேஸ்சர லிங்கத்தை மிகவும் பக்தியுடன் பூஜைசெய்தவன் மறுபடியும் கர்பத்தில் பிரவேசிக்கமாட்டான். ஸௌம்யஸ்தானம் என்னும் இடத்திலிருந்து பகவான் குக்குடேஸ்வரர் இங்கு*

வந்திருக்கிறார். அவர் வக்ரதுண்ட கணேசருக்கு அருகில் இருக்கிறார். அவரைத் தரிசித்துப் பூஜித்தால் எல்லா ஸித்திகளும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கிடைக்கிறது.

ஜாலேஸ்வரர் என்னும் தீர்த்தத்திலிருந்து ஸர்வ ஸித்திகளையும் அருளும் த்ரிசூலி என்னும் பெயருடைய லிங்கம் ஸ்வயமாகவே கூட தந்த கணேசருக்கு முன்னால் வந்து அமர்ந்திருக்கிறார்.

ஸேதுபந்தமானராமேஸ்வர மஹாக்ஷேத்திரத்திலிருந்து ஜடதேவர் வந்திருக்கிறார். அவர் ஏக தந்த கணேசருக்கு உத்தரபாகத்தில் வஸிக்கிறார். அவரைப் பூஜிப்பதினால் ஸகல விருப்பங்களும் பூர்த்தியாகும்.

த்ரிசந்தியம் என்னும் தீர்த்தத்திலிருந்து பகவான் த்ரியம்பகர் இங்கு வந்திருக்கிறார். அவர் த்ரியம்ப கணேசருடைய கிழக்கு பாகத்தில் எழுந்திருளியிருக்கிறார். அவரைப் பூஜிப்பவர்கள் த்ரியம்பகராகவே ஆகிறார்கள். ஹரிச்சந்திர க்ஷேத்திரத்திலிருந்து ஹரேஸ்வரலிங்கம் இங்கு வந்திருக்கிறது. அது ஹரிச்சந்திரேஸ்வரருக்கு எதிரில் இருக்கிறது. அவரைப் பூஜிப்பவர்கள் எப்பொழுதும் ஜெயம் அடைகிறார்கள்.

மத்யமகேச்வரம் என்னும் தீர்த்தத்திலிருந்து ஸர்வநாமகம் என்னும் லிங்கம் இந்த காசீ க்ஷேத்திரத்திற்கு வந்துள்ளது. இவர் சதுர்வேதேஸ்வர லிங்கத்தை முன்னிட்டுக் கொண்டு அமர்ந்திருக்கிறார். ஒருவர் பரம ஸித்தியளிக்கும் ஸர்வர் என்னும் லிங்கத்தைக் காசியில் பூஜித்தால் அவர் திர்யக் யோனியில் ஜன்மம் எடுக்கமாட்டார்.

ஸ்தானேஸ்வர தீர்த்தத்திலிருந்து மஹாலிங்கம் ஸகலயக்ஞங்களின் பலன்களையும் அருளும் யக்ஞேஸ்வர லிங்கத்திற்கருகில் தானே தோன்றியிருக்கிறது. மிகவும் சிரத்தையுடன் அந்த மஹாலிங்கத்தைப பூஜிப்பவர்களுக்கு

இந்த லோகத்திலும் பரலோகத்திலும்கூட ஸகல செல்வ ஸம்பத்துக்களும் கிடைக்கிறது.

ஸுவர்ணம் என்னும் தீர்த்தத்திலிருந்து ஸஹஸ்ராக்ஷர் என்னும் மஹாலிங்கம் இங்கு வந்திருக்கிறது. அதைத் தரிசிப்பவர்களுக்கு ஞானக்கண் திறக்கப்படுகிறது. சைலேஸ்வரருக்குத் தெற்குப்பக்கத்தில் இருக்கும் பகவான் ஸஹஸ்ராக்ஷரை தரிசனம் செய்வதினால் நூறாயிரம் ஜன்மங்களில் செய்யும் பாபங்கள் விடுபடுகின்றன.

ஹர்ஷித க்ஷேத்திரத்திலிருந்து ஹர்ஷிததேஸ்வரர் என்னும் பெயருடைய தமஸ்ஸை நாசம் செய்யும் லிங்கம் இங்கு வந்திருக்கிறது. அவரை தரிசித்து, ஸ்பர்சிப்பதினால் மிகவும் ஸந்தோஷம் ஏற்படுகிறது. மந்தரேஸ்வரருக்கு ஸமீபத்திலேயே ஹர்ஷிதேஸ்வரருடைய சிவாலயம் இருக்கிறது. அவரைப் பார்ப்பதினாலேயே நமக்குத் தொடர்ச்சியாக ஸந்தோஷம் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கிறது.

ருத்திர மஹாலயம் என்னும் இடத்திலிருந்து ருத்திரேஸ்வரர் இங்கு லிங்கரூபமாக எழுந்தருளியிருக்கிறார். அவரை தரிசிப்பவர்கள் நிச்சயமாக ருத்திரலோகத்திற்குச் செல்லுகிறார்கள். இந்தக் காசீபுரியில் ஒருவன் ருத்திரேஸ்வர லிங்கத்தைப் பூஜை பண்ண முடியுமானால் அவன் மனிதனாக இருந்தாலும் ருத்திர ரூபமாக அறியத் தகுந்தவன். அதில் கொஞ்சம் கூட ஸந்தேஹமில்லை.

த்ரிபுரேஸ்வரருக்கு ஸமீபத்தில் இருக்கும் பகவான் ருத்திரேஸ்வரரின் தரிசனத்தைப் பெற்றால் அவர் உயிருடனிருந்தாலும் இறந்தாலும் அவரை ருத்திரராகவே எண்ண வேண்டும். வ்ருஷபத்வஜ தீர்த்தத்திலிருந்து தர்மபத வ்ருஷபேஸ்வரர் இங்கு வந்து பாணேஸ்வரர் வர மஹாதேவருக்கு ஸமீபத்தில் எப்பொழுதும் சோபையுடன் இருக்கிறார்.

கேதார தீர்த்தத்திலிருந்து ஈசானேஸ்வரர் இங்கு வந்து விளங்கியிருக்கிறுர். பிரஹ்லாதகேஸ்வரருக்கு மேற்கு பக்கத்தில் இருக்கும் இந்த லிங்கத்தை அவசியம் தரிசனம் செய்ய வேண்டும்.

உத்தரவாஹினியான கங்கையில் ஸ்ஞனம் செய்து ஒருவன் ஈசானேஸ்வரரைத் தரிசனம் செய்வாஞனேயாகில் அவன் ஈசானேச்வரரைப்போல் ப்ரபாவசாலியாக ஈசான லோகத்தில் வசிக்கப் பெறுவான்.

பைரவ க்ஷேத்திரத்திலிருந்து மஞேகரமான பைரவமூர்த்தி இங்கு எழுந்தருளியிருக்கிறுர். அவருடைய பெயர் ஸம்ஹார பைரவர். அவரைக் கருத்துடன் ஸேவிப்பது அவசியம்.

கர்வவிநாயகருக்குக் கிழக்குப் பக்கத்தில் இருக்கும் இவரைப் பூஜை செய்தால் எல்லா ஸித்திகளேயும் அருளுவார்.காசியில் இருக்கும் ஸம்ஹார பைரவர் எல்லா பாபங்களேயும் ஸம்ஹாரம் செய்கிறார்.

ஸர்வ ஸித்திகளேயும் அளிக்கவல்ல உக்ரேஸ்வரர் கனகல் தீர்த்தத்திலிருந்து இங்கு வந்து லிங்க ரூபமாக வெளிப்பட்டிருக்கிறுர். அவரைத் தரிசிப்பவருடைய உக்ரமான பாபங்கள் எல்லாம் நாசம் அடைகின்றன.

அர்க்க விஞயகருக்குக் கிழக்குப் பக்கத்தில் இந்த உக்ரேஸ்வர லிங்கத்தை எப்பொழுதும் ஸேவிக்க வேண்டும். அவரை தரிசிப்பதிஞல் உக்ரமான பாபங்களெல்லாம் நஷ்டமடைகின்றன.

ஹே, பிரபோ! வஸ்த்ரபாதம் என்னும் மஹாக்ஷேத்திரத்திலிருந்து பகவான் பீமசண்டிக்கு ஸமீபத்தில் வந்து தான் ஆவிர்பவித்திருக்கிறுர்.

ஒருவன் இந்த பவேஸ்வர லிங்கத்தை அர்ச்சனே செய்வதிஞல் பவஸாகரத்தில் விழமாட்டான். மேலும் ஆக்ஞை செலுத்துபவஞக ராஜராஜர்களுக்கும் பிரபுவாக இருப்பான். பாதகத் தொடர்களே தண்டிப்பதற்கான

பகவான் தண்டீஸ்வரர் தேவதாரு வனத்திலிருந்து வாராணசிக்கு வந்து லிங்காரூடராக ஆவிர்பவித்திருக்கிறுர்.

தேஹலீஸ்வரருக்குக் கிழக்குப் பக்கத்திலிருக்கும் டண்டீஸ்வரரைப் பூஜிக்க வேண்டும். அவரைப் பூஜிப்பதனுல் புனர் ஜன்மமில்லை. பத்ரகர்ணஹ்ரதம் என்னும் ஸ்தலத்திலிருந்து காசியில் பகவான் பத்ரகர்ணம் என்னும் பொய்கையுடன் வந்திருக்கிறுர். அவரைப் பூஜிப்பதனுல் புனர்ஜன்மமில்லை. பத்ரகர்ணஹரதம் என்னும் ஸ்தலத்திலிருந்து காசியில் பகவான் பத்ரகர்ணம் என்னும் பொய்கையுடன் வந்திருக்கிறுர். அவரைப் பூஜிப்பதனுல எல்லாருக்கும் மங்களம் உண்டாகும்.

உத்தண்ட கணேசருக்குக் கீழ்பக்கத்தில் பத்ரகர்ண பொய்கை இருக்கிறது. அதைப் பரம தீர்த்தம் என்று கூறுகிறுர்கள். அதில் ஸ்ஞனமும் செய்து, அருகில் உள்ள சிவலிங்கத்தைப் பூஜிப்பதாலேயே எங்கும் மங்களம் உண்டாகிறது. மேலும் பத்ரகர்ணேச்வரருடைய பூஜையினுல் எல்லா ஜீவராசிகளுடைய பாஷைகளையும் கேட்கலாம். எல்லாருடைய சுபமும் அவரவர்கள் கண்களிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

ஹரிச்சந்திரேஸ்வரருக்கு முன்னுல் சங்கரர் என்னும் பெயருடைய லிங்கம் இருக்கிறது. அதை அர்ச்சித்தால் பிறகு மாதாவின் கர்ப்பத்தில் ஜனனமாக வேண்டாம் யமலிங்கம் என்னும் பெயருடைய மஹாதீர்த்தத்திலிருந்து காலலிங்கம் இங்கு வந்திருக்கிறது. அந்த சந்திரேஸ்வருடைய மேற்கு பாகத்தில் கலசேஸ்வரர் என்னும் பெயருடன் பிரசித்தமாக இருக்கிறது.

மித்ராவருணருடைய தெற்குபாகத்தில் இருக்கும் யமதீர்த்தத்தில் நீராடி, கலாலிங்கத்தைத் தரிசனம் செய்தால் கலிக்கும் காலத்திற்கும் பயப்படவேண்டிய அவசியமில்லை. செவ்வாய்க் கிழமையன்று சதுர்த்தியும் சேர்ந்திருந்தால் அங்கு யாத்திரையாகச் செல்ல வேண்டும்.

*அவ்வாறு செய்கிறவர்கள் பாதகர்களானுலும் யமபுரிக்கு யாத்திரை செல்ல மாட்டார்கள்.*

*நேபாள மஹாக்ஷேத்திரத்திலிருந்து பசுபதிநாதர் இங்கு வந்து இருக்கிருர். இந்த இடத்தில பிஞகபாணி தேவதேவ ப்ரம்மாதி தேவர்களுக்கு முக்தியளிக்கும் பொருட்டு அவர்களுக்கு பாசுபத யோகத்தை உபதேசித்தார். அவரைத் தரிசனம் செய்தால் பசபாசத்திலிருந்து விடுபடுவார்கள்.*

*காவீரகம் என்னும் தீர்த்திலிருந்து கபாலீவரர் இங்கு வந்து கபால மோசனதீர்த்தில் வந்திருக்கிருர். மிக்க முயற்சியுடன் அவரைத் தரிசனம் செய்வது நல்லது. ஏனென்ருல் அவரை தரிசிப்பதால் ப்ரம்மஹத்திதோஷம்கூட விலகுகிறது. தேவிகதீர்த்தத்திலிருந்து வந்த உமாபதியும் இங்கு தங்கியிருக்கிருர்.*

*அவரைத் தரிசனம் செய்தாலும்கூட அநேக தினங்களாகச் சேர்த்து வைத்திருக்கும் பாபங்கள் விலகுகின்றன. மஹேஸ்வர க்ஷேத்திரத்திலிருந்து தீபேச்வரர் வந்து உமாபதிக்கு ஸமீபத்தில் லிங்கரூபமாக அமர்ந்திருக்கிருர். காசியின் மத்திய பாகத்தில் இருக்கும் இந்த தீபேஸ்வரலிங்கம் இஹலோகத்திலும் பரலோகத்திலும் இருக்கும் தமஸாகிற அந்தகாரத்தை விலக்கி போகமும் மோக்ஷமும் அளிக்கிறது.*

*காயாரோஹண தீர்த்திலிருந்து ஆசார்ய நகுலீச்வரர் லிங்கரூபமாக எழுந்தருளி மஹாபாசுபத வ்ரததாரிகளாக சிஷ்யர்களுடன்கூட மஹாதேவருடைய தக்ஷிண பாகத்தில் எழுந்தருளியிருக்கிருர்கள். இவரைத் தரிசிப்பதிஞல் உடனேயே கர்ப்பம் ஸம்ஸாரம் ஆகிய விஷயங்களிலுள்ள அக்ஞானத்தை நாசம் செய்கிருர்கள.*

*கங்கா ஸாகர தீர்த்தத்திலிருந்து அமரேஸ்வரர் என்னும் பெயருடைய லிங்கம் இங்கு வந்திருக்கிறது.*

அதைத் தரிசனம் செய்வதிஞலேயே துர்லபமான அமரத்வம் கிடைக்கிறது.

ஸப்தகோதாவரி தீர்த்தத்திலிருந்து பகவான் பீமேச்வர பிரபு இங்கு வந்து மனிதர்களுக்கு போகத்தையும் மோக்ஷத்தையும் அளிப்பதற்காக லிங்கரூபமாகப் பிரகாசிக்கிருர்.

நகுலீஸ்வரருடைய பூர்வபாகத்திலிருக்கும் பீமேச்வரர் பிரபுவைத் தரிசனம் செய்வதிஞல் மஹாபயங்கரமான பாபமும் சீக்கிரத்தில் நஷ்டமடைந்து விடுகிறது.

பூதேச்வர க்ஷேத்திரத்திலிருந்து பஸ்ம காத்திரர் என்னும் பெயருடைய லிங்கம் இங்கு வந்து பிரசன்னமாகிறது. கருத்துடன் அதைப் பூஜை செய்தால் யாதொரு புண்ணியம் பூர்ண ரீதியாக - நூற்றுக்கணக்கான வருஷங்கள் பாசுபதயோகத்தை ஸாதனம் பண்ணிஞல் கிடைக்குமோ அது இங்கு கிடைக்கிறது. அதஞல் பஸ்மகாத்ரலிங்கம் தரிசனம் செய்வது உசிதம்.

ஸ்வயம்பு என்னும் பெயருடைய பிரஸித்தியான லிங்கம் நகுலீஸ்வர தீர்த்தத்திலிருந்து வந்து காசியில் தன்னைத்தானே வெளிப்படுத்திக்கொண்டிருக்கிறது.

மஹாலக்ஷ்மீஸ்வரருடைய முன்ஞல் இருக்கும் ஸித்தி என்னும் பொய்கையில் ஸ்ஞனம், செய்து ஸ்வயம்பு லிங்கத்தைப் பூஜை செய்பவன் திரும்பவும் ஜன்மம் எடுக்கமாட்டான்.

ப்ரயாகை தீர்த்தத்திற்கு ஸமீபத்தில் பவழத்தைப் போன்ற பிரகாசமுடைய ஒரு சிவாலயம் தரணீ வராஹமூர்த்தியுடையது; இவர் சிவகணங்கள் ரிஷிகள் தேவமண்டலியுடன் திரும்பி வந்ததைக் கேட்டுவிட்டு விந்த்யாசலத்திலிருந்து இங்கு வந்திருக்கிருர்.

காசியில் தரணீவராஹ மூர்த்தியை மிகவும் கருத்துடன் தரிசிக்க வேண்டும். ஏனென்ருல் அவர் ஆபத்து

ரூபமான ஸமுத்ரத்தில் மூழ்கிக் கொண்டு, தனது சரணங்களைத் தியானிக்கும் பக்தர்களைக் கரையேற்றுகிறார்.

கர்ணிகா தீர்த்தத்திலிருந்து கர்ணிகா பூப்போன்ற காந்தியுள்ளவரும், ஆயிரக் கனக்கான பாபங்களை நாசம் செய்பவரும் ஒருகையில் கதையைத் தாங்கியவருமான விநாயகரும் இங்கு வந்திருக்கிறார்.

மேற்கூறிய தரணிவராஹருக்கு மேற்கு திசையில் இருக்கும் இந்த கணேசரைப் பூஜை செய்வதினால் கணபதியின் பதவியே கிடைக்கிறது.

விரூபாக்ஷர் என்னும் பெயருள்ள லிங்கம் ஹேமகூட க்ஷேத்திரத்திலிருந்து வந்து இங்கு மஹேஸ்வரருக்கு தக்ஷிணபாகத்தில் அமைந்துள்ளது. அதைத் தரிசித்தால் ஸம்ஸாரத்தை லகுவாகத் தாண்டலாம்.

ஹரித்வாரத்திலிருந்து பனியைப்போலப் ப்ரகாசமான ஹிமஸ்தேச்வரர் இங்கு வந்திருக்கிறார். ப்ரும்மநாளத்தில் மேற்கு பக்கத்தில் இருக்கும் இவரைத் தரிசிப்பதினால உடனே ஸமஸ்த ஸித்திகளையும் கொடுக்கிறார்.

ஏ! பிரபோ! கைலாஸ பர்வதத்திலிருந்து மிகவும் பலசாலிகளான ஏழுகோடி கணங்கள் தங்கள் தலைவருடன் இங்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் ஸப்த ஸ்வர்க்கத்திற்கு சமமான வாசல்களும், பெரிய பெரியக் கதவுகளும் யந்திரங்களோடு கூடிய பெரிய பெரிய கோட்டைகள் இங்கு கட்டியிருக்கிறார்கள்.

இந்தக்கோட்டையில் நூற்றுக்கணக்கான ஸேனைத்தலைவர்கள் உலாவலாம். எல்லாவிதமான செழிப்பும் நிறைந்திருக்கிறது. இவர்கள் தங்கம், வெள்ளி, செம்பு, வெண்கலம், பித்தளை கண்ணாடி முதலியவைகளால் கட்டப்பட்டிருக்கின்றன.

காந்தத்தைப் போல் ரமணீயமானதும், ஆகாயம்

*வரையில் பரவியும் இருக்கிறது. அவர்கள் காசிக்கு நான்கு பக்கமும் கோட்டைகளை எழுப்பியிருக்கிறார்கள்.*

*இந்தக் கோட்டையைச் சுற்றிய அகழிக்கு அதளபாதாளத்திலுள்ள மத்ஸ்யோதரியிலிருந்து ஜலம் கொண்டு வரப்பட்டுள்ளது. இதனால் மத்ஸ்யோதரியின் ஜலம் கீழேயும், மேலேயுமாக இரண்டு முக்யதீர்த்தமாகிறது. மழைக்காலத்தில் கங்கை ஜலம் பெருகிவரும்பொழுது இங்கு தலைகீழாகப் பெருக்கெடுக்கிறது. மிகவும் புண்ணியம் செய்திருந்தால்தான் இந்த மத்ஸ்யோதிரி தீர்த்தம் கிடைக்கும்.*

*ஸூர்ய சந்திர கிரணங்களுக்கும் நூறுமடங்கு அதிகமான பர்வங்கள் ஏற்பட்டிருக்கின்றன. கங்கா ஜலம் மத்ஸ்யோதரியில பெருகும்பொழுது, ஸமஸ்த பர்வங்களும், ஸமஸ்த தீர்த்தங்களும் ஸமஸ்த லிங்கங்களும் இங்கு வருகின்றன.*

*எவன் ஒருவன் முடிந்த மட்டிலும் மத்ஸ்யோதரியில் ஸ்னானம் செய்து பிண்ட தர்ப்பணம் செய்வானானால், அவன் மாதாவின் உதிரத்தில் திரும்பவும் - ஜனிக்கமாட்டான். ஜான்னவியின் ஜலம் மத்ஸ்யோதரியுடன் சேரும்போது, இந்த அவிமுக்த க்ஷேத்திரமே மத்ஸ்யாகாரமாகப் பரிணமிக்கிறது.*

*இந்த சமயத்தில் மத்ஸ்யோதரியில் ஸ்னானம் செய்பவர்கள் மற்றவர்களைவிட உத்தமர்களாகக் கருதப்படுகிறார்கள். அவர்கள் எத்தனை பாபம் செய்திருந்தாலும் யமபுரியைப் பார்க்க மாட்டார்கள். எவ்வளவு என்றுகூறுவது? அநேக தீர்த்தங்கள் ஸ்னானம் செய்து, அநேக கடூரதபஸ் செய்தாலும் என்ன பலன் உண்டோ அவை (பலன்கள்) மத்ஸ்யோதரியில் ஒருமுறை ஸ்னானம் பண்ணினால் கிடைக்கும். பிறகு அவர்களுக்கு கர்ப்பவாஸத்தின் பயமேன்?*

*எங்கெங்கு மனிதர்கள், தேவதைகள், ரிஷிகள்*

இவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கங்கள் இருக்கின்றனவோ, அவைகளையெல்லாம் தரிசனம் செய்கிற பலன் இந்த மத்ஸ்யோதரி தீர்த்தத்தால் கிடைக்கின்றது. ஸ்வர்க்க, மத்ய, பாதாளத்தில் எத்தனைத் தீர்த்தங்கள் உள்ளனவோ அவைகளெல்லாம் மத்ஸ்யோதரிக்கு கோடியில் ஒரு அம்ஸம்கூட ஆகாது: இது நிச்சயம்.

ஏ! விபோ! மிகவும் உதாரமான காரியத்தைச் செய்யும் கைலாஸவாஸியான காணுதிபன் இந்த விதமான இந்தத்தீர்த்தத்தை மிகவும் முக்யமுள்ளதாக ஆக்கிவிட்டான்.

இந்தக் காணுதிபனுடைய கிழக்குப்பக்கத்தில் கந்தமாதன பர்வதத்திலிருந்து பூர், புவ: என்னும் பெயருடைய லிங்கம் தானே தோன்றியுள்ளது.

புண்ணியசாலிகள் பூர், புவ: என்னும் லிங்கத்தைத் தரிசனம் செய்து புவர்லோகம், பூலோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம் இவைகளுக்கு மேலே சென்று வெகுகாலம் வரை திவ்யபோகங்களை அனுபவித்துக் கொண்டு வசிக்கிறுர்கள். ஏ! நாதா! தாடகேஸ்வரர் என்னும் மஹாலிங்கம் பாதாளநதியான போகவதியுடன் கூட ஏழாவது உலகமான பாதாளத்திலிருந்து கிளம்பி இங்கு வந்திருக்கிறது.

சேஷன் வாஸுகி, முதலான முக்யநாகர்கள் மாணிக்கம் முதலான ரத்தினங்களிஞல் மிகவும் சிரத்தையுடன் காசியில் இந்த லிங்கத்திற்கு மிகவும் அழகிய பெரிய கோவில்கள் எழுப்பியிருக்கிறுர்கள்.

அந்த லிங்கம் உயர்ந்த பொன்ஞல் ஆனது. அநேக ரத்தினமாலைகளிஞல் அலங்காரம் செய்யப்பட்டிருக்கிறது. ஈசானேச்வரருக்குக் கிழக்கில் இருக்கும் இந்த லிங்கத்தை மிகவும் கருத்துடன் பூஜிக்க வேண்டும். பக்தியுடன்கூட இந்த லிங்கத்தைப் பூஜை செய்வதால் ஸமஸ்த செல்வமும்

*பூரணமாகும். எண்ணிக்கையில்லாத போகங்களை அனுபவித்துக் கடைசியில் நிர்வாண பதவியை அடைவார்கள்.*

*நக்ஷத்ர லோகமான ஆகாயத்திலிருந்து ஜோதி ரூபமான தாடகேஸ்வரர் என்னும் லிங்கம் இங்கு வந்து ஞான வாபிக்கு முன்னாலேயே எழுந்தருளியிருக்கிறது. அந்த லிங்கத்தை அர்சனை செய்வதினால் தாரக ஞானம் கிட்டும். அறிவாளி ஒருவன் ஞானவாபியில் நீராடி ஸந்தியாவந்தனம் முதலிய நித்ய கர்மாக்களைச் செய்து பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து மௌனவ்ரதத்துடன் தாரகேஸ்வரரைத் தரிசனம் செய்வானானால், அவன் அப்பொழுதே எல்லாப் பாபங்களிலிருந்தும் விலகி அனந்த மயமான புண்ணியத்தை அடைகிறான். அந்திம காலத்தில் தாரகநாமம் அடைந்து, அதன் மூலமாக முக்தியும் அடைகிறான். முன்காலத்தில தாங்கள் எந்த ரூபமாக வேடரூபம் எடுத்தீர்களோ, அந்தக் கிராதத் தீர்த்தத்திலிருந்து பகவான் கிராதேஸ்வரர் இங்கு தோன்றியிருக்கிறார்.*

*பாரபூதேஸ்வரருக்குப் பின்பக்கத்திலிருக்கும் இந்த கிராதேஸ்வரலிங்கத்தை வணங்கினால் மனிதன் திரும்பவும் தாயின் உதரபாகத்தில் சயனிக்கமாட்டான். லங்காபுரியிலிருந்து மருகேஸ்வரர் லிங்கரூபமாக இங்கு வந்திருக்கிறார். அவரைப் பூஜிப்பதால் ஜனங்களுக்கு ராக்ஷஸாதிகளால் பயம் ஏற்படாது.*

*தென்மேற்கு திக்கிலிருந்து வந்ததினால் நைருகேஸ்வரன் என்னும் பெயருடன் ஒரு லிங்கம் விபீஷணனால் ஸ்தாபிக்கப்பட்ட பௌலஸத்திய ராகவருக்கும் பின்னால் இருக்கிறார். அவரைப் பூஜித்தால் அவர் துஷ்டர்களை ஸம்ஹாரம் செய்கிறார் என்பது ப்ரஸித்தம். ஜல லிங்கம் என்னும் இடத்திலிருந்து பவித்ரமான ஜலப்பிரியர் என்னும் லிங்கம் இங்கு வந்து கங்கா ஜலத்தில் பிரதிஷ்டையாகி இருக்கிறது.*

*கங்கை மத்தியில் எல்லா தாதுக்களாலும் ரத்தினங்களாலும் அமைக்கப்பட்ட இந்த ஜல லிங்கத்தின் அதி விசித்திரமான கோவில் காணப்படுகிறது.*

*இந்தக் காலத்தில் சிலருக்கு மகத்தான புண்ணியத்திஞல் இந்த தரிசனம் கிடைக்கிறது. கோடேசுவரர் என்னும் இடத்திலிருந்து ச்ரேஷ்டேஸ்வரர் எனும் லிங்கம் வந்திருக்கிறது. அதைத் தரிசனம் பண்ணிஞல் கோடி லிங்கங்களைத் தரிசனம் பண்ணிய பலன் கிட்டும். இந்த ச்ரேஷ்ட ஸித்திகளை அருளும் சிரேஷ்டேஸ்வரர் ஜ்யேஷ்டேஸ்வரருக்குப் பின்பக்கம் இருக்கிருர்.*

*வடவானலலிருந்து உற்பத்தியான அனலேஸ்வரர் இங்கு லிங்க ரூபமாக நளேச்வரருடைய முன்ஞல் எழுந்தருளி இருக்கிருர். அவரைப் பூஜித்தால் எல்லா ஸித்திகளும் ஏற்படும். விரஜா தீர்த்தத்திலிருந்து தேவதேவரான த்ரிலோசன பகவான் அஞுதிஸித்தமான த்ரிவிஷ்டப லிங்கத்தில் எழுந்தருளியிருக்கிருர்.*

*ப்ராணிகளுக்கு ஞானத்தையருளும் பிப்பிலா தீர்த்தத்தில் அமர கண்டத்திலிருந்து வந்த பகவான் ஓங்காரேஸ்வரர் தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொண்டிருக்கிருர்.*

*எப்படிக் காசி த்ரைலோக்யத்தையும் சுற்றிவிட்டுப் பிறகு தன்னை வெளிப்படுத்திக் கொண்டதோ அப்போதிலிருந்து அது தாரகேந்திரர் என்னும் பெயருடன் விளங்குகிறது. வெகு காலத்திற்குப் பின்பே, கங்கை இங்கு வந்தது.*

*இந்த இடத்தில் ஓங்காரஸ்வரூபமான ஒரு லிங்கம் தோன்றியிருக்கிறது. அந்த லிங்கத்தின் மஹிமையைத் தங்களைத் தவிர வேறு யாரும் அறியார்கள்.*

*ஹே! பகவான்! இவர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் இடங்களில் ஒரு அம்சத்தை விட்டுவிட்டு பாக்கி அம்சங்களுடன் பரிபூர்ணமாகக் காசியை*

*அடைந்திருக்கிறுர்கள். இதைத் தவிர வேறு இல்லே. இந்த லிங்கங்களுக்கெல்லாம் வாராணசியின் நான்கு பக்கங்களிலும் சிவாலயங்கள் உள்ளன.*

*இந்தக் கோவில்களெல்லாம் விசித்ர விசித்ரமான தாதுக்களால் கட்டப்பட்டிருக்கின்றன. எல்லாவித ரத்னங்களும் பதிக்கப்பட்டு ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்றன. இவைகளின் கலசத்தைத் தொட்டாலும் முக்தியுண்டு.*

*ஹே ஸுரஸத்தம! இங்கு இருக்கும் இந்த லிங்கங்களினுடைய பெயர்களேக் கேட்டாலும் ஆயிரக்கணக்கன ஜன்மங்களில் செய்த பாபங்கள் க்ஷணத்தில் நாசமடையும்.*

*இப்பொழுது எனக்கு என்ன ஆக்ஞையிடுகிறீர்கள்? அதைச் செய்வேன். அனுக்ரஹியுங்கள். இவர்களேயெல்லாம் ஸித்தர்கள் என்றே மதிக்க வேண்டும்.*

*ஸ்கந்தர் கூறுவார்:- ஏ கும்பமுனியே! தேவதேவரான மஹேச்வரர் நந்தியினுடைய இந்த வார்த்தைகளேக் கேட்டு, பரமசந்தோஷமடைந்து கூறிஞர்.*

*ஆனந்தத்தையருளும் நந்தியே! நீ மிகவும் நல்ல காரியம் செய்தாய். இப்பொழுது நீ எனது ஆக்ஞைப்படி 9 கோடி சண்டிகைகளே பூதபேதாளங்களாகிய தத்தம் தேவதைகளுடன் இருக்கிறுர்களே, அவர்கள் எலலாரையும் வாகனம், ஸேனைகள், ஆயுதங்கள் ஸகிதம் இந்த நகரத்தை ரக்ஷிப்பதற்காக இங்கு அழைத்துவா. அவர்களேத் தனித்தனியான கோட்டைகளில் காவல் தெய்வமான துர்க்கையின் நான்கு பக்கமும் அமர்த்திவை.*

*ஸ்கந்தர் கூறிஞர்:- பகவதி பார்வதியுடன் பகவான் சங்கராநந்திக்கு இந்த ஆக்ஞையையளித்துவிட்டு முக்திபீஜத்துக்கு முனேயாக விளங்கும் த்ரிவிஷ்ப க்ஷேத்திரத்திற்கு எழுந்தருளிஞர்.*

*இங்கு சிலாதருடைய புத்ரனான நந்தியும் சிவாக்ஞையை சிரம் மேல் தாங்கி எல்லா துர்க்கைகளையும் அழைத்துவந்து காசிக்ஷேத்திரத்தின் நான்கு பக்கங்களிலும் எழுந்தருளியிருக்கச் செய்தார்.*

*மனிதன் சிரத்தையுடன் இந்த வருகைகளைக் குறிக்கும் கதைகளைக் கேட்டால் ஸ்வர்க்கத்திற்கும் மோக்ஷத்திற்கும் அதிகாரியாகிறான்.*

*இந்த அறுபத்தெட்டு லிங்கங்களுடைய விவர பூர்வமானக் கதையைக் கேட்டால் ஒருவனும் மாதாவின் கர்ப்பத்தில் பிரவேசிக்கமாட்டான்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான அறுபத்தொன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 70

அகஸ்தியர் கூறினுர்:- ஏ! பார்வதீ நந்தனு! மஹாதேவருடைய ஆக்ஞையினுல் உலக முழுவதும் ஆனந்தத்தையளிக்கும் நந்தி, தேவிகள் விஷயமாக எவ்விதமான விவகாரம் எடுத்துக் கொண்டார்? அதைச் சொல்லும்: ஏ! தேவா! காசி க்ஷேத்திரத்தை ரக்ஷிப்பதற்காக எந்தெந்த தேவதைகளைப் ப்ரதிஷ்டை செய்தாய் என்பதையெல்லாம் க்ருபையுடன் யதார்த்த ரீதியில் சொல்ல வேண்டுமென்றுர்.

சங்கர குமாரன் அகஸ்தியரின் வார்த்தையைக் கேட்டு ஆனந்தவனத்தில் எந்தெந்த தேவிகள் எங்கெங்கே ஆனந்தமாக இருக்கிறுர்களென்று வர்ணிக்கத் தொடங்கினுர்; வாராணஸிபுரியில் காசி க்ஷேத்திரத்திற்குப் பரம இஷ்டதாத்ரியான பகவதி விசாலாக்ஷிதேவி தனக்குப் பின்புறத்தில் கங்கையிலேயே விசாலமெனும் பெயருள்ள தீர்த்தத்தை அமைத்துக் கொண்டிருக்கிறுள்.

மேற்கூறிய விசால தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து விசாலாக்ஷி தேவியை வணங்கியவுடன் இரண்டு லோகத்திற்கும் மங்களத்தையருளும் விசால லக்ஷ்மியின் ஸௌபாக்கியத்தைப் பெறுவாய்.

ஏ! கும்பமுனியே! புரட்டாசி மாதம் த்ருதியையன்று இரவு விசாலாக்ஷியின் ஸமீபத்தில் கண் விழித்திருந்து, ப்ராதக் காலத்தில் பதினுன்கு குமாரிகளுக்கு முடிந்த மட்டும் மாலை, வஸ்த்ரம், பூஷணம் இவைகளையளித்து மன ஸந்தோஷத்துடன் அவர்களுக்குப் போஜனம் அளிக்க வேண்டும்.

பிறகு தனது புத்ரன், ஸேவகன் குடும்பத்துடன் பாரணை செய்யவேண்டும். அப்படிச் செய்பவர்கள் காசிவாஸத்தின் பூர்ணப் பலனைப் பெறுவார்கள். காசி வாஸிகள் யாவரும் கஷ்டம் நீங்கி சாந்தமாக இருப்பதற்கும் மோக்ஷ லக்ஷ்மியை அடைவதற்கும் முழுமனதுடன்

மேற்கூறிய திதியில் விசாலாக்ஷி கோவிலுக்கு மஹாயாத்ரையாகச் செல்ல வேண்டும்.

வேறு நாடுகளிலிருந்து வந்தவர்கள்கூட தூபம், தீபம், வாசனை புஷ்பங்கள், சுவையுள்ள நைவேத்யங்கள், மணி, முத்து இவைகளால் அலங்கரித்து விசித்திர மேற்கட்டி, சாமரம் வாஸனைத்திரவ்யங்கள், புது வஸ்திரங்கள், இவைகளை ஸமர்ப்பிதது, விசாலாக்ஷிதேவியைப் பூஜை செய்ய வேண்டும். ஏனென்றால் முனிவரே! ஸாது ஜனங்கள் மோக்ஷலக்ஷ்மியை அடைவதற்காக ஒரு அற்பப் பொருளாயினும் ஸமர்ப்பித்தார்களானால் அவர்கள் இரண்டு உலகங்களிலும் முடிவில்லாமல் வஸிக்கிறார்கள்.

இந்த விசாலாக்ஷியின் மஹாபீடத்தில் தானம், ஜபம், ஹோமம், ஸ்த்தோத்திரம் இவைகளைச் செய்தால் அதனுடைய முடிவு மோக்ஷமாக ஆகிறது. இது பற்றிக் கொஞ்சம்கூட யோசிக்கவேண்டாம். கன்னிகைகள் விசாலாக்ஷியைப் பூஜித்தால் குணம், சீலம் இவைகளால் பூஷிதனான தனவானான பதி கிடைப்பான். புத்திர ரத்னத்தையும் அடைவார்கள். மலடிகள் கர்ப்பவதியாக ஆவார்கள்.

ஸௌபாக்யம் இல்லாத ஸ்த்ரீ மிகவும் ஸௌபாக்யவதியாக ஆவாள். விதவைகள் அடுத்த ஜன்மத்தில் வைதவ்யதுக்கத்தையனுபவிக்க மாட்டார்கள்.

எவ்வளவென்றுதான் கூறுவது, ஸ்த்ரீயானாலும், புருஷனானாலும் யாருக்கு முக்தியில் விருப்பம் இருக்கிறதோ அவர்கள் காசியில் விசாலாக்ஷியின் புகழைக் கேட்டு, பூஜித்து தரிசனம் செய்தால் அவர்களுடைய எல்லா அபிலாஷைகளும் பூர்த்தியாகின்றன. அதற்கருகிலேயே கங்கா கேசவரின் ஸமீபத்திலேயே லலிதா தீர்த்தம் என்று ஒரு கட்டம் இருக்கிறது. அங்கு க்ஷேத்திரத்தை ரக்ஷிக்கும் லலிதா தேவி ப்ரஸன்னமாகிறாள்.

மிகவும் முயற்சியுடன் எல்லா ஸம்பத்துகளும் பெறும் நிமித்தம் அவளுடைய பூஜையைச் செய்யவேண்டும். ஏனென்றால் லலிதையைப் பூஜிப்பவர்களுக்கு யாதொரு விக்னமும் ஏற்படாது.

ஐப்பசி மாதம் (அசுவனி நக்ஷத்ரம்) க்ருஷ்ணபக்ஷத்து த்விதியையன்று லலிதாதேவியைப் பூஜிப்பதனால் ஸ்த்ரீயானாலும் புருஷனானாலும் வாஞ்சித பலனையடைவார்கள்.

லலிதா கட்டத்தில் ஸ்னானம் செய்து லலிதாதேவியை வணங்கி முடிந்தமட்டும் ஸ்துதி செய்வதனால் எங்குமே ஸௌந்தர்யத்தைக் காணும் மங்களம் உண்டாகும்.

ருஷிவரரே! விசாலாக்ஷிக்கு முன்பாகவே உலகமே பூஜிக்கும் கௌரியிருக்கிறாள். அவள் காசியில் வஸிக்கும் பக்திமான்களுடைய இடையூறுகளை நாசம் செய்கிறாள்.

ஐப்பசி மாதம் நவராத்ரி முழுவதும் மிக்க முயற்சியுடன் அவளுடைய கோவிலுக்கு யாத்திரையாகச் செல்ல வேண்டும். ஏனென்றால் அந்த விச்வபுஜா, கௌரி எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றி வைக்கிறாள்.

காசியில் விஸ்வபுஜா தேவியை வணங்காத துராத்மாக்களுக்கு இடையூறு இல்லாத சாந்தி எவ்விதம் கிட்டும்? எப்படிக் கிட்டும்?

எந்த புண்ணியாத்மா துதித்து பூஜை செய்கிறானோ, அவனுக்கே ஒருபோதும் விக்னங்களினால் இடையூறு ஏற்படாது.

காசியில் யக்ஞவராஹத்துக்கு ஸமீபத்தில் மற்றொரு வாராஹிதேவி இருக்கிறாள். அவளைப்பக்தி பூர்வமாக வணங்குகிறவன் ஒரு பொழுதும் ஆபத்துக்கடலில் மூழ்கமாட்டான்.

அங்கேயிருக்கும் ஆபத்விநாசினீ சிவதூதி தேவியையும் தரிசிப்பது உசிதம். அவள் ஆனந்தவனத்தை

ரக்ஷிப்பதற்காக த்ரிசூலத்தைத் தூக்கி சத்ருக்களை ஹதம் செய்கிறாள்.

ருத்ரேச்வரருக்குத் தெற்கு பக்கத்தில் சிறந்த யானையைக் கட்டிய ரதத்தில் ஏறிக்கொண்டு கையில் வஜ்ராயுதத்தைத் தாங்கிக்கொண்டு ஐந்திரிதேவி இருக்கிறாள். அவளைப் பூஜிப்பதனால் எப்பொழுதும் ஸர்வஸம்பத்தை அருளுகிறாள்.

ஸ்கந்தேஸ்வரருக்கு ஸமீபத்தில் மயில்வாஹனத்துடன் கௌமாரிதேவி இருக்கிறாள். மஹத்தான புண்ணிய லாபம் கிடைப்பதற்காக அவளைத் தரிசனம் செய்யவேண்டும்.

மஹேஸ்வரருக்குத் தென்பக்கத்தில் மாஹேச்வரி தேவி இருக்கிறாள். அவள் ருஷபத்தின்மேல் ஆரோஹணித்து விளங்குகிறாள். அவளைப் பூஜிப்பதனால் நமக்கு தர்மாபிவிருத்தி ஏற்படும்.

மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்கள் நிர்வாண நரஸிம்மர் ஸமீபத்தில் சக்கரத்தை சுழற்றிக் கொண்டிருக்கும் ஹஸ்தாநரஸிம்மி தேவியை அர்ச்சிப்பது அவசியம்.

ப்ரம்மேஸ்வரருக்கு மேற்கில் ஹம்ஸ வாஹனத்தில் அமர்ந்து ப்ரம்மாதேவி இருக்கிறார். அவள் கமண்டலுவிலிருந்து விழும் ஜலத்தை உள்ளங்கையில் ஏந்தித் தெளித்து சத்ருக்களை ஸ்தம்பிக்கச் செய்கிறாள்.

ப்ரம்மவித்தையின் எழுச்சியை விரும்புபவர்களான காசிபுரியில் இருக்கும் ப்ராம்மணர்களும், ஸன்யாஸிகளும் ஆத்மதத்வபோதத்தை விரும்புபவர்களும் பிரதிதினம் அவளைப் பூஜிக்க வேண்டும்.

காசிபுரியில் சார்ங்கம் என்னும் வில்லில் மிக்க கூர்மையான பாணங்களை ஏற்றி விக்னங்களை இங்குமங்குமாகச் சிதறடிக்கும், நாராயணிதேவியை ஆச்ரயிக்க வேண்டும்.

*கோபி கோவிந்தர்க்கு மேற்கு பக்கத்தில் சுண்டு விரலால் சக்ரத்தைச் சுழற்றிக்கொண்டிருக்கும் நாராயணியை ஒருவன் காசியில் வணங்கினால் அவனுக்கு மிக்க மேன்மையுண்டாகும்.*

*பிறகு தேவயானிக்கு உத்தர திசையில் விரூபாக்ஷி கௌரியை பக்தி பூர்வமாகப் பூஜித்தால் ஒருவன் வாஞ்சித பலனை அடைவான். சைலேச்வரிக்கு ஸமீபத்தில் இருக்கும் சைலேஸ்வரி கௌரியை அவசியம் பூஜிக்க வேண்டும். அவள் தனது வலது கை சுண்டு விரலினால் பக்தர்களுக்கு சங்க தோஷத்தினால் ஏற்படும் உத்பாதங்களை விலக்குகிறாள்.*

*பக்திமான் விசித்ர பலனையளிக்கும் சித்ரகூபத்தில் ஸ்னானம் செய்து, சித்ரகுப்தேஸ்வரரைத் தரிசனம் செய்து, சித்ரகண்டாதேவியைப் பூஜித்தால், அவன் அநேக பாதகங்கள் நிரம்பியவனாயினும் சரி, தர்மமார்க்கத்திற்குப் புறம்பாயிருந்தாலும் சரி, அவன் சித்ரகண்டாவைப் பூஜை செய்வதினால் அவன் சித்ரகுப்தனுடைய கணக்கில் வரமாட்டான்.*

*நரனானாலும், நாரியானாலும், யாராயிருந்தாலும் சித்ர கண்டாவைப் பூஜிக்க வில்லையானால் காசியில் அவனுக்கு பதத்துக்குப்பதம் இடையூறுகள் ஏற்பட்டுக் கொண்டிடேயிருக்கும். சித்திரை மாதத்து சுக்லபக்ஷத்விதியையன்று, மிக்க முயற்சியுடன் அவனுடைய கோவிலுக்கு யாத்திரையாகச் சென்று கோலாஹலமஹோற்சவம் நடத்தி, இரவு கண்விழித்து, அநேக விதமான உபசாரங்களோடு பூஜை செய்து, சித்ரகண்டாவை அர்ச்சித்தால் அவன் யமராஜனுடைய வாஹனமான எருமையின் கழுத்தில் கட்டியிருக்கும் மணியின் ஓசையைக் கேட்கமாட்டான்.*

*சித்ராங்கதேஸ்வரருடைய பூர்வபாகத்தில் எழுந்தருளியிருக்கும் சித்ரக்ரீவா தேவியை வணங்குவதினால் அவர்களுக்கு விசித்திரமான*

யமயாதனைகள் ஒருபொழுதும் உண்டாகாது. பத்ரவாபியில் ஸ்னானதிகார்யங்கள் முடித்துக்கொண்டு பத்ரநாகத்திற்கு முன்னால் இருக்கும் பத்ரகாளியை தர்சித்தால் எங்கும் அமங்களமான முகங்களைப்பார்க்க மாட்டான். ஸித்திவிநாயகருக்குக் கிழக்கு பாகத்தில் இருக்கும் ஹரஸித்திதேவியைப் பூஜிக்கும் ஸாதுக்களுக்கு மஹாஸித்திகள் கிடைக்கின்றன.

விதீஸ்வரருக்கு ஸமீபத்தில் இருக்கும் விதிதேவியின் நானாவிதமான த்ரவ்யங்களினால் விதிப்படி பூஜித்தால் அநேக விதமான ஸித்திகளைப் பெறுவார்கள். ப்ரயாகை கட்டத்தில் ஸ்னானம் செய்து (விலங்கு)பஞ்ஜனியான வந்தி தேவியை அர்ச்சனை செய்வதினால் மனிதன் இரும்பு விலங்குகளால் கட்டுப்படமாட்டான்.

விலங்கு மாட்டக்கூடிய அளவிற்கு அபராதம் செய்தவர்கள் அதிலிருந்து விலகுவதற்கு ஒவ்வொரு மங்களவாரமும் பக்தியுடன் ஒருவேளையே உணவு உண்டு காசியில் நிகடபஞ்சமி வந்திதேவியைப் பூஜை செய்வது நல்லது.

அப்படிப் பூஜை செய்வதால் அந்தத் தேவி ஸம்ஸாரபந்தனங்களை அறுத்து எறிகிறாள். அப்படியிருக்கும்போது சாதாரண விலங்குகள் எம்மாத்திரம்? காசியில் சிரத்தையுடன் வந்திதேவிக்கு சரணஸேவகனாயிருந்த ஒருவனுக்கு உரிய பந்து ஒருவன் பரதேசத்தில் கைதியானால் கூட விடுபடுகிறான்.

மனதில் ஏதாவது ஸந்தேஹமிருந்தால் நியமபூர்வமாக நியமங்களை விலக்கும் வந்திதேவியைப் பூஜித்தால் பூஜித்தவரது மனோரதங்களை அவள் பரிபூர்ணமாக்குகிறாள். கையில் உலக்கையும், உளியும் தரித்துக்கொண்டு பக்த ஜனங்களின் பந்தனங்களை அறுத்தெறிபவளும் தீர்த்த ராஜருக்கு ஸமீபத்திலும் இருப்பவரான பகவதீ வந்திதேவி நமது எந்த விருப்பங்களைத்தான் நிறைவேற்றமாட்டாள்?

பசுபதீஸ்வரருக்குப் பின்பக்கத்தில் அம்ருதேச்வரருக் கண்டையில் அம்ருதேஸ்வரி தேவியிருக்கிருள். மிகவும் ச்ரமப்பட்டாவது அம்ருத கூபத்தில் ஸ்ஞனம் செய்து அவளைத் தரிசனம் செய்ய வேண்டும்.

பக்தி பாவத்துடன் அம்ருதேச்வரி தேவியைப் பூஜித்து அவளுடைய சரணுவிந்தங்களை ஸேவித்தால் நிச்சயமாக அமுதநிலை நமக்குக்கிடைக்கும்.

வலது கையில் அம்ருத பாத்ரமும் இடது கையில் அபயமளிக்கும் முத்ரையுடன் கூடின அந்த மஹாமாயையை த்யானம் செய்தால் அம்ருதத்வத்திற்கு (மரணமில்லாமைக்கு) அருகதையாக மாட்டார்கள்.

அதே அம்ருதேஸ்வரருக்கு மேற்கு பக்கத்தில் ப்ரபிதாமஹேஸ்வர லிங்கத்திற்கு முன்ஞல் ஜகன்மாதா ஸித்தலக்ஷ்மிதேவி எழுந்தருளியிருக்கிருள். அவள் ஸகலஸித்திகளையும் அருளுபவள். ஸித்த லக்ஷ்மியின் கோவிலில் தாமரை வடிவில் லக்ஷ்மீதேவி எழுந்தருளியிருக்கிருள். அவள் ஸகலஸித்திகளையும் அருளுபவள்

ஸித்த லக்ஷ்மியின் கோவில் தாமரை வடிவில் லக்ஷ்மீவிலாஸம் என்ற பெயருடன் இருக்கிறது. அதைப் பார்த்தால் யாருக்குத்தான் லக்ஷ்மீ கடாக்ஷம் ஏற்படாது?

ப்ரபிதாமஹருடைய மேற்குப் பக்கத்தில் நளகூபேஸ்வரருக்கு முன்ஞல் ஜகஜ்ஜனனீ குப்ஜா தேவி இருக்கிருள். அவளை ஸேவிப்பது அவசியம். அவளை ஸேவிப்பதஞல் தேவி ஸமஸ்த உத்பாதங்களையும் விலக்குகிறாள். அதஞல் தங்களுக்கு மங்களங்களை விரும்புகிறவர்கள் மிக்க கருத்துடன் அவளை வணங்க வேண்டும்.

நளகூபேச்வரருக்கு மேற்குப் பக்கத்தில் குப்ஜாம்பரேஸ்வரர் என்னும் ஒரு லிங்கம் இருக்கிறது. அதே ஸ்தானத்தில் அபீஷ்டங்கள் அளிக்கும் த்ரைலோக்ய ஸௌந்தரியான கௌரீ பூஜிக்கத் தகுந்தவளாக இருக்கிருள்.

*த்ரைலோக்ய ஸுந்தரிதேவி மூன்றுலோகங்களுக்கும் ஸித்தியளிக்க வல்லவள். அவளைப் பூஜை பண்ணும் ஸுமங்கலிகள் வைதவ்யத்தையே அடையமாட்டார்கள்.*

*ஸாம்பாதித்யருக்கண்டையில் (ஸூர்ய குண்டத்தில்) 'தீப்தா' என்னும் மஹா சக்தியிருக்கிறது. அவளைப் பூஜித்தால் லக்ஷ்மீ கடாக்ஷத்தினால் விளங்குகிறார்கள்.*

*ஸ்ரீ கண்டேச்வரருக்கு ஸமீபத்தில் ஜகத்தாத்ரீ மஹாலக்ஷ்மி தேவியிருக்கிறாள். அந்த லக்ஷ்மீ குண்டத்தில் ஸ்நானம் செய்து ஜகதம்பிகையைப் பூஜை செய்ய வேண்டும்.*

*அந்த லக்ஷ்மி குண்டத்தின கரையில் விதிப்படிக்கு பித்ருக்களுக்குத் தர்பணம் பண்ணி அநேக விதமான தானங்களைச் செய்வதினால் ஒருவன் லக்ஷ்மியின் அருளை அடைகிறான். ஸாதகர்களுக்குப் பரம ஸித்தியைக் கொடுக்க கூடிய லக்ஷ்மீக்ஷேத்ரம் என்னும் மஹாபீடம் இருக்கிறது. அங்கு மந்த்ரஸாதனம் பண்ணுபவர்கள் அநாயாஸமாக ஸித்திகளை அடையலாம்.*

*காசியில் ஸித்தியை அளிக்கவல்ல அநேகபீடங்கள் இருக்கின்றன. ஆனால் மஹாலக்ஷ்மிக்கு ஸமமான லக்ஷ்மீ பீடத்திற்கு மேல் ஒன்றும் கிடையாது.*

*ஐப்பசி மாதம் அஷ்டமியன்று இந்த மஹாலக்ஷ்மி பீடத்திற்கு யாத்திரையாகச் சென்று வருகிறவர்களுடைய வீட்டைவிட்டு மஹாலக்ஷ்மி ஒருக்காலும் விலகமாட்டாள். மஹாலக்ஷ்மி காசியில் விதிப்படித் தன்னைப் பூஜித்தவர்களை ஒரு போதும் கைவிடமாட்டாள்.*

*மஹாலக்ஷ்மிக்கு வடக்குப் பக்கத்தில் கோடாலியும் கையுமாக ஹயகண்டி என்னும் தேவீ இருக்கிறாள். அவள் தினந்தோறும் காசியில் பக்தர்களின் இடையூறுகளாகிய பெரிய பெரிய மரங்களை வெட்டி வெட்டி வீழ்த்திக் கொண்டிருக்கிறாள்.*

*மஹாலக்ஷ்மிக்குத் தெற்குப் பக்கத்தில் கௌர்மி என்னும் சக்ல்யிருக்கிறாள். அவள் கையில் பாசத்துடன் விளங்குகிறாள். அவள் பிரதி க்ஷணமும் இந்த க்ஷேத்திரத்தின் இடையூறுகளைப் பாசத்தினால் கட்டிக் கொண்டிருக்கிறாள்.*

*அவளைப் பூஜிப்பதனால் மனிதன் க்ஷேத்திரஸித்தி யடைகிறான். அதுபோலவே, க்ஷேத்திரத்திற்குப் பரம ரக்ஷையைக் கொடுக்கக் கூடிய சிகிண்டி தேவியென்பவள் வாயு கோணத்திலிருக்கிறாள். அவள் மயிலைப் போன்ற குரலுடன் கூடியவளாக விக்ந ரூபமான ஸர்பங்களை சாப்பிட்டுவிடுகிறாள். அவள் தரிசன மாத்திரத்திலேயே ஸமஸ்த வியாதிகளும் நீங்குகின்றன.*

*பீமேஸ்வரருக்கு முன்னாலேயே பாசத்தையும் அங்குசத்தையும் தரித்துக்கொண்டிருக்கிற பீமாசண்டிதேவி தனக்கே உரிய பயங்கர கம்பீரத் தோற்றத்துடன் க்ஷேத்ரத்தில் வடக்குபாகத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறாள்.*

*ஒருவன் பீமகுண்டத்தில் ஸ்நானாதி கர்மங்களை முடித்துக் கொண்டு பீமசண்டிதேவியைத் தரிசனம் செய்தால் அந்த புண்ணியாத்மா பீமாகாரமான (பயங்கரமான) யமராஜருடைய தூதர்களை ஒருக்காலும் பார்க்கமாட்டான்.*

*வ்ருஷபத்வஜருக்கு தக்ஷிணபாகத்தில் ஸாகவக்த்ரேச்வரி என்னும் தேவியிருக்கிறாள். அவள் எப்பொழுதும் விக்னம் பாபம் என்னும் மரத்து இலைகளைச் சுவைத்துக் கொண்டேயிருக்கிறாள்.*

*அவள் ஸந்தோஷப்பட்டால்தான் காசி வாஸம் கிடைக்கும். அதனால் ஐப்பசிமாத மஹாஷ்டமியன்று அவளைப் பூஜிக்க வேண்டும். ஸங்கமேஸ்வரருக்கு தக்ஷிணபாகத்த்தில் பயங்கரமான முகத்தையுடைய பனைமரத்தையே ஆயுதமாகத் தரித்துக்கொண்டு தாலஜங்கேஸ்வரி என்னும் தேவியிருக்கிறாள்.*

*அவள் ஆனாதவனத்தின் மத்தியில் இருக்கும் இடையூறுகளாகிய வ்ருக்ஷக்கூட்டங்களைப் பெயர்த்து எறிந்து கொண்டிருக்கிருள். தாலஜங்கேஸ்வரியை வணங்கினுல் எந்தவிதமான விக்னங்களினுலும் அவன் அமுக்கப்படமாட்டான்.*

*உத்தாலகத் தீர்த்தத்தில் உத்தாலகேச்வர லிங்கத்துக்குத் தெற்குப் பக்கத்தில் யமதம்ஷ்ட்ரா என்னும் பெயருள்ள தேவியிருக்கிருள். அவள் விக்ன ஸமூஹங்களைச் சுவைத்துத் துப்பி விடுகிருள்.*

*உத்தாலக தீர்த்தத்தில் இருக்கும் யமதம்ஷ்ரா தேவியை வணங்கினவர்கள் பெரியதிலும் பெரியதான பாபங்கள் செய்த போதிலும்கூட யமராஜரிடம் அவர்கள் கொஞ்சம்கூட பயப்படவேண்டாம்.*

*தாரகேஸ்வர தீர்த்தத்தில் தாரகேஸ்வரருக்கு ஸமீபத்திலேயே சர்மமுண்டா என்னும் ப்ரஸித்தமான தேவியிருக்கிருள். அவளுடைய உள்நாக்கு வரைக்கும் முகம் பாதாளத்திலும், மேலுதடு ஆகாசத்திலும் கீழ் உதடு பூமியிலும் இருக்கிறது. அவள் ப்ரம்மாண்டம் பூராவுமே விழுங்கப் பார்க்கிருள். அவள் ஒட்டியவயிறுடனும், இறுகிய நரம்புகளுடனும் கூடின தேஹத்துடனும் க்ஷேத்ரத்தின் கிழக்கு பாகத்தை விக்ன ஸமூஹத்திலிருந்து, மீட்டுக்கொண்டிருக்கிருள். அவள் கைகளில் மண்டையோடும், கத்தியும் இருக்கின்றன. ஆயிரம் புஜங்களுடன் சோபிக்கிருள். குடிலபார்வையுடன் விளங்குகிருள்.*

*அவள் கடல் வரையில் நீண்டுள்ள தன்னுடைய கைகளில் சத்ருரூப மோதகத்தை வைத்துக் கொண்டிருக்கிருள். மிகவும் கடுமையாக அட்டஹாஸம் பண்ணிச் சிரித்துக் கொண்டிருக்கிருள்.*

*த்ரிசூலத்தின் நுனியினுல் குத்தி எடுக்கப்பட்ட துராத்மாவான க்ஷேத்திரத்துரோகிகளின் சரீரத்தையும்,*

*பாபிகளின் எலும்புகளேயும் தாமரைத் தண்டுகளின் நாளத்தைப் போல வாயிலிட்டு சுவைத்துக் கொண்டிருக்கிருள்.*

*அவளுடைய பூஷணங்கள் முண்டமாலே ஸ்வரூபம் மிகவும் பயங்கரமானது. இப்படிப்பட்ட சர்மமுண்டா தேவியை வணங்கிஞல் க்ஷேத்ரத்திலுள்ள இடையூறுகளால் பீடிக்கப்படமாட்டார்கள். சர்மமுண்டாதேவியைப் போலவே மஹாமுண்ட தேவி என்னும் ஒரு தேவியிருக்கிருள். அவளுக்கும் இவளுக்கும் வித்தியாசம் என்னவென்ருல் இவள் முண்டமாலேயைத் தரித்துக் கொண்டிருக்கிருள். அவள் ருண்டம் என்னும் சரீரமாலேயைத் தரித்துக் கொண்டிருக்கிருள்.*

*இவர்களிருவரும் மிகவும் பலசாலியான தேவிகள். இவர்கள் பரஸ்பரம் கைகளே விரித்துக் கொண்டும் கரத்தாளம் போட்டுக் கொண்டும், சிரித்துக் கொண்டும், க்ஷேத்திரத்தைப் பாதுகாக்கிருர்கள்.*

*ஹயக்ரீவேஸ்வரத் தீர்த்தத்தில் லோலார்க்கருக்கு வடக்கு பக்கத்தில் பக்தர்களுடைய விக்னங்களே ஹதம் செய்யும் ப்ரசண்டானனு என்னும் மஹா குண்டாதேவி எப்பொழுதும் வஸித்துக்கொண்டிருக்கிருள். இந்த சர்ம முண்டாதேவிக்கும் மஹாருண்டா தேவிக்கும் மத்தியில் முண்டரூபிணீ என்னும் சாமுண்டாதேவியிருக்கிருள்.*

*க்ஷேத்திரவாஸிகள் தவருமல் இம்மூன்று தேவிகளேயும் கருத்துடன் பூஜிக்க வேண்டும். ஏனென்ருல் இவர்கள் மூவருமே தனதான்யங்களேயும் புத்திர பௌத்திரர்களேயும் அளிக்கிருர்கள்.*

*இந்த தேவிகள் எல்லோரையும் சிரத்தையுடன் பூஜித்தும், தரிசித்தும், ஸ்பர்சித்தும், த்யானித்தும் வணங்கியும் செய்பவர்களுடைய எல்லா உபத்ரங்களேயும் நாசம் செய்து பக்தர்களுக்கு முக்திஶ்ரீயை அளிக்கிருர்கள்.*

*மேற்குறிக்கப்பட்ட மஹாருண்டாதேவிக்கு மேற்குப் பக்கத்தில் சுபமயமான ஸ்வப்னேஸ்வரி இருக்கிருள். இவள் ஸ்வப்ஞவஸ்தையில் மனிதர்களுக்கு முன்ஞல் தோன்றி வருங்காலத்தின் சுபாசுபங்களைச் சொல்லிவிடுகிருள்.*

*எந்தத் தினமாஞலும் சரி; பவித்திரமான அஸிஸங்கமத்தில் ஸ்ஞனம் செய்து ஸ்வப்னேஸ்வரியைத் தரிசனம் செய்து, அங்குள்ள ஸ்வப்னேஸ்வரலிங்கத்தையும் பூஜை செய்யும் புருஷஞஞலும் ஸ்த்ரீயாஞலும் உபவாஸமிருந்து பூமியில் சயனித்தார்களாஞல் அவர்களுக்கு தேவி வந்து ஸ்வப்னத்தில் சொல்லுவாள்.*

*அறிவாளி ஒருவன் இன்றுவரை நடக்கின்ற இந்த விஷயத்தை நம்ப வேண்டும். இரவில் ஸ்வப்னேஸ்வரி கனவில் தோன்றி இறந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் இவைகளைக் கூறுவாள்.*

*காசீபுரியில் ஞானத்தை அடையும் ஜனங்கள் அஷ்டமி, நவமி, சதுர்த்தசி, இம்மூன்று தினங்களில் இரவாஞலும் பகலாஞலும் இந்தத் தேவியை முயன்று பூஜிக்க வேண்டும்.*

*இந்த ஸ்வப்னேச்வரியின் மேற்கு பக்கத்தில் துர்க்காதேவி எழுந்தருளியிருக்கிருள். அவள் க்ஷேத்திரத்தின் தக்ஷிண பாகத்தை எப்பொழுதும் காத்துக் கொண்டிருக்கிருள்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் உத்திரார்த்த பாஷாடீகாவான தேஸ்தாபன வர்ணனம் என்னும் எழுபதாவது அத்யாயம்*

*ஸம்பூர்ணம்.*

# *அத்யாயம் 71*

*துர்காசுரன் தேவியுடன் யுத்தம் - தேவிக்கு துர்க்கை என்று ஏன் பெயர் வந்தது? காசியில் அவளை எவ்விதம் வணங்கவேண்டும்? இவைகளை எனக்கு வர்ணிக்க வேண்டும். என்று அகஸ்தியர் கேட்டார்.*

*கந்தர் பதில் கூறுவார்:- ஹே! மஹாமதே! கும்பமுனியே! எப்படி தேவிக்கு துர்க்கை என்ற பெயர் வந்தது? ஸாதகர்கள் அவளை எப்படி ஆராதிப்பது உசிதம் என்பதைக் கூறுகிறேன்.*

*ருரு என்னும் அஸுரனுடைய புத்ரன் துர்க்க என்ற பெயருள்ள மஹா அஸுரன் கடுமையான தவம் செய்து புருஷர்களால் ஜயிக்க முடியாத வரத்தைப் பெற்றுக்கொண்டான். பிறகு அவன் தனது பராக்ரமத்தால் சண்டையில் ஜெயித்து, பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்கலோகங்களையும் தனது அதீனமாக்கிக் கொண்டான். அந்த மகாபலிஷ்டனான அஸுரன், அவனே இந்திரன், சந்திரன், வாயு, யமன், வருணன், அக்னி, குபேரன், ஈசானன், ருத்ரன், ஸூர்யன், யக்ஷ கணங்கள் எல்லாருடைய வேலைகளையும் செய்து வந்தான் அவனுடைய பயத்தால் பெரிய பெரிய தபஸ்விகள் கூட தபஸ் செய்வதை விட்டுவிட்டார்கள். ப்ராம்மணர்களும் அவனுடைய பயத்தால் வேதாத்யயனம் செய்வதில்லை.*

*அவனுடைய ஸஹிக்க முடியாத தொல்லை கொடுக்கும் ஸேவகர்கள் யக்ஞசாலைகளை அழித்தார்கள்.*

*மேலும் எல்லாத் தீயவழியில் செல்லும் அவர்கள் எத்தனையோ ஸதிகளைக் கெடுத்தார்கள். இப்படியாக அந்த அண்டமுடியாத க்ரூர கர்மாக்களைச் செய்யும் தைத்ய கணங்கள் பலாத்காரமாக மற்றவர்களுடைய செல்வங்களை அபஹரித்து அனுபவிக்கத் தொடங்கினார்கள்.*

*அந்த சமயம் நதிகள் தவறான கதியில் செல்லத் தொடங்கின. அக்னியும் எரியும் சக்தியை இழந்துவிட்டது.*

அவனுடைய பயத்தினுல் வ்யாகுலமடைந்தவரைப் போன்று, எல்லா ப்ரகாசங்களைத் தரும் ஜோதிகளும் ஒளி இழந்துவிட்டன. நான்கு பக்கங்களிலிருந்தும் எல்லா திக்கு கன்னிகைகளின் முகங்கள் சொல்ல ஒண்ணுத துக்கத்தினுல் வெறுப்பைக் காட்டின.

தர்மமும் காமமும் லோபமடைந்து பாப ஆசாரங்களின் ப்ரசாரம் அதிகரித்தது. அந்த அஸுரனே தன்னுடைய லீலையினுல் மேகமாக வர்ஷிக்கத் தொடங்கினுன். பூமியும் அவனுடைய பயத்தினுல் விதைக்காமலே பயிரை விளைவித்துக் கொடுத்தது. எப்பொழுதும் மலட்டு மரங்கள்கூட பழத்தைத் தந்தன.

அந்த மகாகர்வியான அஸுரன் ரிக்ஷிபத்னிகளை சிறைப்படுத்தினுன். ஸ்வர்க்க வாஸிகளை வனவாஸிகளாக்கினுன். அவனுடைய பலத்தினுல் வ்யாகுலமடைந்த மனிதர்களும்கூட அவனுடைய பயத்தினுல் தப்பி வந்த தேவதைகளுக்கு ஆதரவு அளிக்க பயப்பட்டார்கள்.

ஸ்கந்தர் கூறுகிருர் - ஹே! முனியே! உயர் குலமும் நன்னடத்தையும் மாத்திரமே பெருமையளிக்காது! பதாதிகாரமே பெருமையையும் பதவீழ்ச்சிச் சிறுமையையும் கொடுக்கிறது.

எவர்கள் ஆபத்து வந்தடைந்த போதிலும்கூட தீனத்தன்மையினுல், பணப்பெருமையினுல் சித்தம் மலினமடைந்த தனவந்தர்கள் வீட்டு முற்றத்திற்குப் போகாமல் இருக்கிருர்களோ - அவர்களே தன்யர்கள், ஸம்ஸாரத்தில் வறுமைப்பட்டு இறந்து போவதே மேல். சிறுமையுடன் சிரஞ்சீவித்வம் கிடைத்தாலும் அது வேண்டாம்.

எவருடைய மனமாகிற கடல் ஆபத்துக் காலங்களில் கூட அமைதியாக இருக்கிறதோ அவர்களே இவ்வுலகத்தில் வாழத்தகுந்தவர்கள். மாறி மாறிச் செல்வம்

*கிடைத்தாலும், ஆபத்துக்கள் வந்தாலும் இரண்டுமே நமது அதிர்ஷ்டத்தின் அதீனத்தில் இருக்கிறது என்று நினைக்கும் ஜனங்கள் தங்கள் தீரத்தன்மையை விடமாட்டார்கள்.*

*பண்டிதர்கள் சந்த்ர சூரியர்களுடைய உதயாஸ்தமனத்தைப் பார்த்து விட்டு என்ன அறிந்து கொள்கிறுர்கள் என்றுல் ஸந்தோஷமும் வருத்தமும் மீண்டும் மீண்டும் வரும் போகும்? அவைகள் நிஷ்பலமானவை என்று அறிந்து கொள்கிறுர்கள்.*

*எவன் ஒருவன் ஆபத்துவந்ததும் தீனஞகி இறந்து போகிறுஞே அவனுக்கு இரு உலகமும் கிடையாது,*

*அதஞல் எப்பொழுதுமே தீனமடையக்கூடாது என்று சொல்கிறது. எவஞெருவன் ஆபத்துக் காலத்திலும் தைர்யமாக இருக்கிறுஞே அவனுடைய தைரியத் தன்மையே இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஆபத்துக்கள் வராமல் தடுக்கிறது.*

*இங்கு தேவதைகள் ராஜ்யம் செல்வம் இவைகளை இழந்து பகவான் மகேஸ்வரரை சரணமடைந்தார்களாஞல் ஸர்வக்ஞுஞன சிவபிரானும் அஸுரர்களைக் கொல்வதற்கு தேவிக்கு உத்தரவு கொடுத்தார்.*

*அதற்குப் பிறகு மிகவும் சந்தோஷத்தோடுகூட மகாதேவனுடைய ஆக்ஞையைப் பெற்று தேவதைகளுக்கு அபயமளித்து யுத்தத்திற்கு முயற்சி செய்தாள். ருத்ராணி உடனேயே தன்னுடைய லாவண்யத்திஞல் மூன்று லோகங்களையும் மேஹிக்கச் செய்யும் காளராத்ரியை அழைத்துத் தூதாக விடுத்தாள்.*

*பிறகு காளராத்ரிதேவி அந்த துஷ்ட சித்தத்தையுடைய தைத்யனுக்கு சமீபத்தில் சென்று கூறிஞள். ஹே! தைத்யராஜனே! நீ மூன்று உலகத்து ஸம்பத்துக்களையும் விட்டுவிட்டு ரஸாதலத்துக்குச்செல். இந்த மூன்று உலகத்து அரசுரிமைகளையும் இந்திரன் திரும்பவும் பெறட்டும். வேதவாதிகளுடைய வேதாத்யயனத்துடைய க்ரியைகளும்*

முன்போல நடக்கட்டும், இந்த விஷயத்தில் உன்னுடைய அஹங்காரத்தை நீ விடமாட்டாயானால் யுத்தத்திற்கு அறை கூறுகிறேன்.

''நீ வா! உயிர் வாழ விருப்பமுண்டானால் தேவராஜனை சரணமடை. மஹா மங்கள சொரூபி மஹேஸ்வரி தேவி, உன்னிடம் இதைக் கூறுவதற்காகவே என்னை அனுப்பியிருக்கிறாள். அவளுடைய வார்த்தைகளை நீ உபேக்ஷிப்பாயானால், உனக்கு நிச்சயம் மரணம்தான் கிடைக்கும். அதனால், ஹே! மஹாஸுரா! உனக்கு எது உசிதம் என்று தோன்றுகிறதோ, அதைச் செய்: அல்லது நான் சொல்வதைக் கேட்பாயானால் உயிரைப் பிடித்துக் கொண்டு ஓடு. இந்த விதமாக மகா காளியான தேவியுடைய வார்த்தையைக் கேட்டுவிட்டு, அவன் கோபத்தினால் அக்னியைப் போல் ஜ்வலித்துக் கூறினான். பிடி அவளை! அந்த த்ரைலோக்யமோகினி என்னுடைய பாக்யத்தின் கௌரவத்தினால் இங்கு என்னிடம் வந்திருக்கிறாள்.

இவளே த்ரைலோக்ய முழுவதுமுள்ள ராஜ்ய ஸம்பத்தில் பழுத்த பழம். நான் இவளுக்காகவே தேவதைகளையும், ரிஷிகளையும், அரசர்களையும் சிறைசெய்தேன். இன்று என்னுடைய சுப கர்மங்களின் பலனாக, அனயாஸமாக என்னிடம் வந்திருக்கிறாள். ஒருவனுக்கு யோக்யமான பொருள் மனதில் இருக்கட்டும், அல்லது வீட்டில் இருக்கட்டும், அதிர்ஷ்டம் இழுத்தடிக்கும்போது, அது தானாகவே கையில் கிட்டுகிறது.

இப்பொழுது என்னுடைய அந்தப்புரத்து வேலைக்காரர்கள் இங்கு வந்து இவளை எனது அந்தப்புரத்துக்கு அழைத்துப் போகட்டும். இன்று இந்த ஸ்த்ரீ ரத்தினத்தினால் என்னுடைய ராஜ்யமே அலங்காரமாக விளங்குகிறது. ஆஹா! உதாரஹ்ருதயத்தை உடைய எனக்கு அதன் பலன் இன்றே உதயமாயிற்று.

எனக்கு மாத்திரமா? எங்கள் ஸமஸ்த தைத்ய வம்சத்தினுடைய பாக்கியமே இன்று உதயமாகியிருக்கிறது.

என்னுடைய பூர்வ புருஷர்கள் ஆடிப்பாடி ஆனந்தம் கொண்டாடட்டும், என்னுடைய பந்து ஜனங்கள் வாயால் சொல்லி சந்தோஷப் படட்டும். மரண காலத்து அந்திம தசை வரைக்கும் தேவைகள் எனக்குப் பயந்து கொண்டிருக்கட்டும். இதன் மத்தியில் கஞ்சுகி ஜனங்கள் தேவியை அந்தப் புரத்திற்கு அழைத்துச் செல்லவந்தார்கள். அப்பொழுது காள ராத்ரி தானவ ராஜரிடம் கூறினுள்.

ஹே மஹாப்ராக்ஞா, தைத்ய ராஜனே! நீங்கள் இப்படிச் செய்வது உசிதமில்லே. ராஜநீதி அறிந்தவர்களில் ச்ரேஷ்டனே! நாங்கள் தூதர்கள்; எந்தச் சிறுமையுடைவனும் தூதர்களிடம் தாறுமாருக நடந்து கொள்ளமாட்டான்.

அப்படியிருக்கும்போது தங்களேயொத்த பலசாலியான ராஜாவைப்பற்றி நான் என்ன சொல்வது? ஹே மஹாராஜா; இந்தத் தாழ்ந்த தூதியுடன் தங்களுக்கு ஏன் இந்த அனுராகம்? எங்களுடைய யஜமானியை ஜயித்து வந்தீர்களாளுல், நாங்கள் எல்லோரும் தானே உங்கள் பின்னுல் வருவோம். ஏ! தைத்யாதிபதே! தாங்கள் யுத்தம் செய்து எங்கள் யஜமானியை வெல்லுங்கள்.

எங்களேப் போன்ற ஆயிரக்கணக்கான ரமணிகளுடன் போகத்தை அனுபவியுங்கள். இன்றே நீங்கள் எங்கள் யஜமானியைப் பார்த்தீர்களாளுல் தங்களுக்கும் தங்கள் முன்னேர்களுக்கும் மிகவும் ஸந்தோஷம் ஏற்படும்.

இன்றே உங்களுடைய நெடுநாளேய ஆவலான மனேபீஷ்டம் நிறைவேறும். ஏனென்றல் அவள் ஒருவரும் இல்லாத அபலே. அவளே ரக்ஷிப்பதற்கு ஒருவரும் கிடையாது.

அவள் ஸர்வரூப மயீ. நீங்கள் ஒருதரம் வந்து அவளேப் பாருங்கள். இந்த ஜகத்தின் கஜாளு இருக்குமிடத்தை

*தங்களுக்குக் காண்பிக்கிறேன். என்னை மாத்திரம் பிடித்து வைத்துக் கொள்வதினால் தங்களுக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை. நான் தங்களை விட்டு இங்கிருந்து ஒரு பொழுதும் போகப் போவதில்லை.*

*அதனால் என்னை அழைத்துப் போக வந்திருக்கும் இந்த சில்லறை ஆசாமிகளை இங்கிருந்து விலக்குங்கள். இவ்விதமாக காளராத்ரி கூறிய வார்த்தைகளைக் கேட்டு காமக்ரோதத்தால் மோஹமடைந்தவனாக அந்த துஷ்ட அஸுரன் மரணத்தின் தூது சொல்ல வந்த அந்த காளராத்ரியை மிகவும் அறிவுரைத்து எடுத்துக் கூறினான்.*

*ஏ! முனியே! அவனுடைய இந்த ஆக்ஞையைப் பெற்றவுடனே அந்த மஹா பலசாலிகளான நபும்ஸகர்கள் அவளைப் பிடிக்க முயற்சித்தனர்.*

*அப்பொழுது காளராத்ரியின் ஹுங்காரத்தினின்று கிளம்பின அக்னிஜ்வாலை அவர்களெல்லோரையும் பஸ்மமாக்கிவிட்டது. அதன் பிறகு க்ஷணமாத்திரத்தில் அவளால் பஸ்மமாக்கப்பட்ட அந்த மூவாயிரம் தைத்யர்களையும் கண்ட தைத்யராஜன் மிகவும் கோபமடைந்தான். பிறகு துர்தரன், துர்முகன், கரன், க்ஷிரபாணி, பாசபாணி, சுரேந்த்ரமதனன், ஹனு, யக்ஞசத்ரு, கட்கலோமா, உக்ராஸ்யன், தேவகம்பனன், இவர்களைப் பார்த்துத் திரும்பக் கூறலுற்றான்.*

*ஏ! தானவ வீரர்களே! இந்த துஷ்டையான தானவதூதியைப் பிடித்து அணிகளையும், துணிகளையும் பற்றி, கேசத்தையும் பிடித்து இழுத்துக்கட்டி விடுங்கள் என்றான். பிறகு தைத்யாதிபதியின் ஆக்ஞையினால் அந்தப் பர்வதாகாரமாக வளர்ந்திருந்த பலசாலிகளான துர்தரன் முதலிய தானவகணங்கள், பாசம், வாள் முதலிய அஸ்திர சஸ்திரங்களைக் கையில் எடுத்துக் கொண்டு அவளைப் பிடிப்பதற்கு முயற்சித்தார்கள்.*

*அப்பொழுது அவள் விட்ட பெருமூச்சிலிருந்து எழுந்த சண்டமாருதத்தினால் அவர்கள் சிதறப்பட்டு, திக்கு*

திக்காந்திரங்களில் போய், விழுந்தார்கள். இந்த விதமாக அந்த நூறுகோடி தைத்யர்களேயும் பறக்கவிட்டு காளராத்ரி தேவியானவள் ஆகாசமார்க்கமாக அங்கிருந்து புறப்பட்டாள்.

அவள் இப்படிக் கிளம்பிப் போவதைப் பார்த்துவிட்டு, ஆயிரம் ஆயிரங்கோடிகளாக மஹாஸுரகணங்கள் ஆகாசமும், பூமண்டலமுமாக வ்யாபித்துக் கொண்டு, அவளுக்குப் பின்னுல் ஓட ஆரம்பித்தார்கள்.

அதன்பிறகு தைத்யநாயகன் துர்காஸுரன் நூற்றுக்கணக்கான ரதங்கள், அளவற்ற யானேப்படைகள், கோடிக்கணக்கான அச்வ சேனேகள், கணக்கில் அடங்காத காலாட்படைகள், பூமியை மிதிப்பதினுலேயே தவிடு பொடியாக்கும் வல்லமையுள்ள ஆயுததாரிகள் மகா பயங்கரமானவர்கள். மூன்று உலகங்களேயும் பயமடையச் செய்பவர்கள் இவர்களேத் தன்னுடன் கூட்டிக்கொண்டு அதிககோபத்துடன் அங்கிருந்து சென்முன்.

இதற்குப் பிறகு காளராத்ரி தேவி திரும்பிச் சென்று விந்த்யாசல வாஸினியான மஹாதேவியிடம் துர்காஸுரனுடைய எல்லா அபராதங்களேயும் எடுத்துச் சொன்னுள்.

இப்பொழுது துர்காஸுரன் யுத்தத்தில் ஆவலுள்ளவளும், மிக்க தேஜஸ்வினியும், பயங்கர ஆயுதங்களேத் தரித்திருப்பவளும், ஆயிரம் புஜங்களேயுடைய தேவியைக் கண்டான்.

அவளுடைய ஸுந்தரமான முகம், கிளம்பும் சந்திரனுடைய ஆயிரம் கிரணங்களினுல் துடைத்துவிட்டதுபோல் இருந்தது லாவண்ய சமுத்திரத்திலிருந்து கிளம்பும் சஞ்சல சந்திரிகையைப் போல் ஜ்வலித்துக் கொண்டிருந்தது.

*அவளுடைய சரீரம் முழுவதும் மாணிக்க ஸமூகங்களின் காந்திபோல் பிரகாசித்தன. த்ரிபுவனமான ரமணீய நகரால் ப்ரகாசமான தீப ஒளியைப்போல் ஜ்வலித்துக் கொண்டிருந்தாள்.*

*மஹாதேவருடைய நேத்ரமாகிய அக்னியில்பட்ட காமதேவனை எழுப்புவதன் பொருட்டு எழும்பிய ஸஞ்சீவிக் கொடியோ அல்லது எல்லா அழகையும் சேர்த்து உலகை மோகம் அடையச் செய்யும் ஒரு மகா ஔஷதியோ என்று நினைக்கும்படியாக இருந்தாள்.*

*அவளைப் பார்த்தவுடனேயே, துர்க்காஸுரனுடைய இதயம் காமனம்புகளால் துளைக்கப்பட்டது. பிறகு உக்ரசாஸனனாகிய துர்காஸுரன் தனது ஸேனாதிபதிகளிடம் கூறினான்.*

*ஹே! ஜம்ப, மஹா ஜம்ப, குஞ்சபா, விகடானனா, மகாகாயா, மகாதம்ஷ்ட்ரா, மஹாஹனுவே, பிங்காக்ஷ, மகிஷ்க்ரீவ, மஹோக்ர, அத்யுக்ரவிக்ரஹ, க்ரூராக்ஷ, க்ரோதன, ஆக்ராந்தக, ஸங்க்ரந்தன, மகாபய, ஜிதாந்தக, மஹாபாஹோ, மஹாவக்ர, மகிதர, துந்துபி, துந்துபிரவ, மகாதுந்துபிநாசிக, உக்ராஸ்ய, தீர்க்கதர்சன, மேககேச, வ்ருகானன, ஸிம்ஹாஸ்ய, ஸுகரமுக, சிவாராவ, மஹோத்கட, சுகதுண்ட, ப்ரசண்டாஸ்ய, பீமாக்ஷ, க்ஷுத்ரமானஸ, உலூகநேத்ர, கங்காஸ்ய, காகண்ட, கராலவாக், தீர்க்கக்ரீவ, மஹாஜங்க, மேலகஸிரோதர, ரக்தபிந்தோ, மஹாநேத்ர, வித்யுத்ஜிஹ்வ, அக்னிதாபன, தூம்ராக்ஷ, தூமநிப்ஶ்வாஸ, சண்ட, சண்டாம் சுதாபன, மஹா பயங்கரமான அஸுரகணங்களே! நீங்கள் மரியாதையுடன் எனது ஆக்ஞையைக் கேளுங்கள்.*

*உங்களில் யாராவது பலத்தாலோ, தந்திரத்தாலோ, சாதுர்யத்தாலோ, தைர்யத்தாலோ இந்த விந்த்ய - வாஸினியைப் பிடித்துக் கொண்டு வருவீர்களா? நான் இன்று அவனை நிச்சயமாக இந்திரனுக்குவேன். அதில்*

*கொஞ்சமும் சந்தேகமில்லை, ஏனென்றால் இந்த ஸுந்தரியைப் பார்த்ததும் எனது மனது மிகவும் சஞ்சலப்படுகிறது.*

*இந்த ரமணியைச் சேராமல் போனேனானால் எனது இதயம் காமதேவனுடைய பாணத்தினால் பீடிக்கப்பட்டு சிதிலமாகப் போகும். அதற்கு முன்னால் இவளை சீக்கிரமாகப் பிடித்துக் கொண்டு வாருங்கள்.*

*அந்த சமயம் தநுஜேஸ்வரனான துர்க்கனுடைய வார்த்தையைக் கேட்டு, எல்லா ஸேனாதிபதிகளும் கைகூப்பிக் கொண்டு கூற ஆரம்பித்தார்கள்.*

*ஹே மஹாராஜ்! கேளுங்கள், இது எங்களுக்கு ஒரு கஷ்டமான காரியமா? முதலாவது அவள் அபலை. அதுவும் விசேஷமாக இவளுக்குத் துணை யாருமில்லை.*

*ஹே ப்ரபோ! இந்த அனாதையான ஸ்த்ரீயைக் கவருவதற்கு இத்தனை ஏற்பாடுகள் ஏன்? இம்மூவுலகிலும் ப்ரளயகால அக்னிஜ்வாலையைப் போன்றிருக்கும் எங்களைத் தங்களுடைய ஸந்தோஷத்திற்காக நாங்கள் முயற்சிக்கும்போது அதைத் தடுக்க யாரால் முடியும்?*

*இப்பொழுது நீங்கள் விரும்பினால் இந்திரனை அவனுடைய அந்தப் புரத்துடன் எடுத்துவந்து தங்கள் காலடியில் வைக்கத் தயார். பூ; புவ; ஸ்வர்க்கம் ஜனம், தப; ஸத்யம் முதலிய எல்லா உலகங்களும் தங்கள் வசமாகி, தங்களுடைய அதிகாரத்திற்குள் இருக்கிறது. ஹே மாஹாரஸுர! தங்களுடைய ஆக்ஞை கிடைத்தால் இந்த எல்லா லோகங்களிலும் எங்களால் ஆகாத காரியமொன்றுமில்லை.*

*மற்றவர்களைப் பற்றி என்ன? ஸ்வயம் வைகுண்டநாதனே ஆக்ஞைப்படி நடக்கின்றார். நல்ல நல்ல ரத்னங்களை உங்களுக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறார். கைலாஸநாதரை நாங்களாகவே ஐயோ பாவம் என்று விட்டு விட்டோம். ஏனென்றால் அவர்*

*விஷபானம் பண்ணுகிறவர். பரமதரித்ரர், பாம்புகளை ஆபரணமாக அணிந்தவர். தோலை உடுத்தவர்.*

*அவர் எங்களுக்கு பயந்தே ஒரு பெண்ணைத் தனது பாதி உடலில் மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறார். அவரது இருப்பிடத்தில் ஒரு ஆஸனம் தவிர வேறு கிடையாது.*

*ஒரே ஒரு கிழட்டுமாடு வாஹனமாக இருக்கிறது. மற்றவர்களிடம் இருந்தால் அது உயிருடனேயே இருக்காது. அவருடைய வேலையாட்களான கணங்கள் ஸ்மசானத்தில் இருக்கிறார்கள். ஒரு கௌபீனமே ஆடை. பஸ்மத்தைப் பூசிக்கொண்டு இருக்கிறார்கள்.*

*ஜடையை வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள். அதனாலே ப்ரபோ! பரமதரித்திரர்களான சிவகணங்களை நாங்கள் என்ன செய்ய? தங்களுக்காக எல்லா ஸமுத்திரங்களும் தினம் தோறும் ரத்தினங்களை மூட்டை மூட்டையாக அனுப்பிக் கொண்டிருக்கின்றன.*

*தயைக்குப் பாத்திரங்களான நாககணங்கள் ஒவ்வொரு நாளும் ஸந்த்யா ஸமயத்தில் தங்கள் படங்களை விரித்துத் தங்கள் தலையிலுள்ள நாகரத்தினங்களை தீபங்களின் ஒளிவீசிக்கொண்டு நமக்கு வெளிச்சம் காட்டிக் கொண்டிருக்கிறார்கள்.*

*ஏ, நாதா! தங்களுடைய ப்ரசாதத்தினால் எங்களுடைய வீடுகளிலும்கூட அனேக கற்பக வ்ருக்ஷங்களும், காமதேனுக்களும், சிந்தாமணிக் குவியல்களும் நிறைந்திருக்கின்றன.*

*வாயு பகவான்கூட தங்களுக்கு விசிறியைப் போல சேவை செய்து கொண்டிருக்கிறான். வருணன் தினம் நிர்மலமான ஜலத்தைக் கொண்டு கொடுக்கிறான். அக்னி துணிகளைத் துவைத்துக் காயவைக்கிறான். சந்திரன் குடையாக நிழல் கொடுக்கிறான்.*

*ஸூர்யன் தாங்கள் ஜலக்ரீடை செய்யும் தடாகத்தில் தாமரைகளை மலரவைக்கிறுன். தாங்கள் சந்தோஷப்பட வேண்டுமென்று விரும்பாத, தேவர்களிலும், மனிதர்களிலும், ஸர்பங்களிலும் யார் இருக்கிறுர்கள்? ஸுரர்களும், அஸுரர்களும், பறவையினங்களும் தங்களை ஆச்ரயித்துக் கொண்டிருக்கிறுர்கள்.*

*ஏ ராஜன்! எங்கள் பௌருஷத்தைப் பாருங்கள். நாங்கள் எல்லோரும் இந்த அபலையை பலவந்தமாக தூக்கி வந்துவிடுகிறேம். இப்படிக்கூறி அந்த தைத்யர்கள் எல்லோரும் ப்ரளய காலத்தில் உலகை மூழ்க அடிக்கச் சீறி எழும் ஸமுத்திரங்களைப் போல ஒரே பயங்கர ரூபம் கொண்டார்கள்.*

*நாலு பக்கங்களும் யுத்தபேரி முழங்கிற்று. அதைக் கேட்டவுடன் பயந்தவர்கள் சூரர் வீரர்கள் எல்லோருக்குமே புல்லரிப்பு உண்டாயிற்று. தேவர்கள் பயமடைந்தார்கள். பூமிதேவி நடுங்கினுள். எல்லா சமுத்திரங்களும் வற்றின.*

*ஆகாயத்திலிருந்து நக்ஷத்திரங்கள் குவியல் குவியலாக விழுந்தன. எக்காளத்தின் ஒலியினுல் ஆகாயமும் பூமண்டலமும் நிறைந்தது, அப்பொழுது பகவதி விந்தியவாஸினி தன்னுடைய சரீரத்திலிருந்தே நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் சக்திகளை உண்டு பண்ணினுள். அந்த எல்லா சக்திகளும் அந்தப் பரம பலசாலிகளும் தைத்யர்களின் ஸேனுரூபமான கரையில்லாத கடல்களை நான்கு பக்கத்தில் இருந்தும் தடுத்தார்கள். அந்த ரணக்ஷேத்திரத்தில் அந்த மகா பலசாலிகளான அஸுரர் எந்த எந்த கூர்மையான அஸ்த்ர சஸ்த்ரங்களைச் செலுத்தினுர்களோ அவைகள் எல்லாவற்றையும் அந்த சக்திகள் துரும்பு போல் எடுத்து தூர எறிந்தார்கள். அப்பொழுது இந்த ஜம்பம் முதலான தேவசத்ருக்கள் கோபம் கொண்டவர்களாய் மேகங்கள் ஜலத்தைப் பொழிவதைப் போல் தேவியின் மேல்*

எல்லோரும் ஒன்று சேர்ந்து, வாள், சக்ரம், புசுண்டி, கதை, உக்கரம், தோமரம், பிண்டி, பாலம், பறிக்கம், குந்தம், சல்யம், சக்தி, அர்த்த சந்த்ரபாணம், க்ஷுரப்ரம், நாராசம், சிலிமுகம், மஹாபல்லம், பரசுவிதுரம், முதலிய மர்மத்தை பேதிக்கும் சஸ்த்ரங்களேயும் வ்ருக்ஷங்களேயும், கற்களேயும் பெரிய மழையெனப் பொழிந்தார்கள்.

அதன் பிறகு மஹாமாயை விந்தியவாஸினி மஹேஸ்வரி பயங்கரமான தனுஸை வளேத்து வாயு அஸ்த்ரத்தை அநுயாஸமாய் விடுத்து, அஸுரர்களால் விடப்பட்ட அஸ்த்ர சஸ்த்ர ஜாலங்களே சிதறடித்தாள். அப்பொழுது அநத மகராஸுரனுகிய துர்கன் தன்னுடைய சைன்யங்கள் நிராபுதபாணிகளாக நிற்கக் கண்டு தேவியின் பேரில் எரிந்து கொண்டிருக்கும் ஒரு சக்தியை விடுத்தான். பகவதியும் ரண க்ஷேத்திரத்தில் தன்னே நோக்கி வேகமாக வந்து கொண்டிருக்கும் அந்தச் சக்தியைத் தன்னுடைய தனுஸ்ஸிலிருந்து விடுபட்டு வரும் பாணத்தினுல் துண்டு துண்டாக்கினுள்.

அப்பொழுது அந்த மகாஸுரன் தன்னுடைய சக்தி பங்கப்பட்டதை அறிந்து தைத்யர்களுக்கு மிகவும் சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடிய சக்ரத்தை விட்டான். தேவி அதையும் தன்னுடைய நூற்றுக்கணக்கான பாணங்களால் நடுவிலேயே துகள்துகளாக்கினுள். அதற்குப் பிறகு தேவர்களே ஹதம் செய்யும் துர்க்கன் இந்த்ர தனுஸுக்கு ஸமானமான தன்னுடைய வில்லே வளேத்து தேவியின் ஹ்ருதயத்தை அடிக்க விரும்பினுன். அதற்காக அவன் ஒரு பாணத்தை விட்டான். அது தேவியினுல் விடப்பட்ட வேகமாக வரும் பாணங்களினுல் தடுக்கப்பட்டபோதிலும்கூட அவைகளே புறக்கணித்து விட்டு தேவியின் அருகிலேயே வந்துவிட்டது.

தேவி பகவதி யமனுடைய மற்றொரு தண்டம் போல் வருகிற அந்த பாணத்தைத் தன்னுடைய தனுஸ்ஸின் அடி பாகத்தினுல் அடித்து வீழ்த்தினுள். பிறகு அந்த அடங்காத

தானவ ராஜன் தன்னுடைய பாணங்கள் வ்யர்த்தமாவதைக் கண்டு, மிகவும் கோபமடைந்து ப்ரளயாக்னிக்கு ஸமமான தேஜஸ்ஸையுடைய தன்டைய த்ரிசூலத்தை எடுத்து தேவியைக் குறிவைத்து மிகவும் வேகமாகச் செலுத்தினுன்.

அப்பொழுது சண்டிகாதேவி தன்னுடைய த்ரிசூலத்தைச் செலுத்தி துர்க்கனுடைய த்ரிசூலத்தைப் பாதி வழியிலேயே தைத்யனுடைய ஜயக்கொடியை வீழ்த்துவதுபோல வீழ்த்தினுள். எப்பொழுது அந்த மகா த்ரிசூலமும் தேவியின் த்ரிசூலத்தினுல் வ்யர்த்த மாயிற்றே, அப்பொழுது அந்த மகாபலி தைத்யேந்த்ரன் கதை எடுத்துக் கொண்டு திடீரென்று அவள் மேல் பாய்ந்தான். பின்பு தேவியின் புஜத்தின் அடிப்பாகத்தில் அடித்தே விட்டான்.

பர்வத ராஜனின் சிகரம் போன்ற அந்த கதை தேவியின் பாஹுவின் அடித்தளத்தில் பட்டவுடன் நூருயிரம் துண்டகளாகப் பொடிந்து விழுந்தது. பிறகு பகவதி அந்த தைத்யேந்த்ரனை இடது காலின் அடிப்பாகத்தினுல் அடித்து பூமியில் வீழ்த்தினுள். பிறகு அவனுடைய நெஞ்சில் ஏறி நின்று வேகமாக அமுக்கினுள். ஆனுல் அந்த தைத்யேந்த்ரனை துர்க்கன் விழுந்த மாத்திரத்திலேயே எழுந்தும் விட்டான். காற்று பட்ட தீபம் போல் மறைந்தும் விட்டான்.

அப்பொழுது ஜகஜ்ஜனனீ அவளது எல்லா சக்திகளையும் தைத்ய சேனையின் மீது ஏறிவிட்டாள். அவர்கள் ப்ரளயகாலத்து ம்ருத்யு ராஜனின் ஸேனையைப் போல ஸஞ்சரிக்கத் தொடங்கினுர்கள்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி காண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான துர்காஸுர தேவியுத்த வர்ணனம் என்னும் பெயருள்ள எழுபத்தி ஒன்ருவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.

# அத்தியாயம் 72

*அகஸ்தியர் கேட்டார்? ஏ! பார்வதீ ஹ்ருயானந்தா! ஸர்வக்ஞநந்தனு! ஸ்கந்தா! இத்தனை சக்திகளைப் பற்றிக்கூற வந்தீர்களே, அவர்களின் பெயர் என்ன என்று கூறுங்கள் - ஸ்கந்தர் கூறினார் - கும்பசம்பவ முனியே! அந்த மகேஸ்வரியின் சரீரத்திலிருந்து உற்பத்தியான அந்த எல்லா மகாசக்திகளுடைய நாமத்தையும் சரியாகக் கூறுகிறேன் கேளும்.*

*த்ரைலோக்ய விஜயா, தாரா, க்ஷமா, த்ரைலோக்யரைக்தரி, த்ரிபுரா, த்ரிஜகன்மாதா, பீமா, த்ரிபுரபைரவ, காமாக்யா, அமலாக்ஷீ, த்ருதீ, தீருபுரதாபினீ, ஜயா, ஜெ ஜயந்தி, விஜயா, ஜலேசி, அபராஜிதா, சங்கினீ, கஜவக்த்ரா, மகிஷக்னீ, ரணப்ரியா, சுபாநந்தா, கோடவாராக்ஷீ, வித்யுஜ்ஜிஹ், சிவாரவா, த்ரிநேத்ரா, த்ரிவக்த்ரா திருபதா, ஸர்வமங்களா, ஹும்காரகேதி தாலேசி, ஸர்ப்பாஸ்யா, ஸர்வஸுந்தரீ ஸித்திபுத்தி, ஸ்வதா, ஸ்வாஹா, மகா - நித்ரா, சராஸனு, பாஸபாணி, கரமுகீ, வஜ்ரதாரா, ஷடானனு, மயூரவதனு, காக்கி, ஸுகீ, பாஸீ, கருத்மதி, பத்மாவதீ பத்மகேசீ, பத்மாஸ்யா, பத்மவாஸினீ, அக்ஷரா, த்ரிஅக்ஷரா, தந்து, ப்ரணவேசி, ஸ்வராத்மிகா, த்ரிவர்கா, கர்வரஹிதா, அஜபா, ஜபஹாரிணீ, ஜபசித்தி, தபசித்தி, யோகசித்தி, பராம்ருதா, மைத்ரீக்ருது, மித்ரநேத்ரா, ரக்ஷோக்நீ, தைத்யதாபனீ, ஸ்தம்பினீ, மோஹினீ, மாயா, மஹாமாயா, பலோத்கடா, உச்சாடனீ, ஸ்தம்பினீ மோஹினீ, மாயா தநுஜேந்த்ர ஜனுஜேந்த்ர, மஹாமாயா, பலோத்கடா, உச்சாடநீ, மஹோல்காஸ்யா, ஜயங்கரீ, க்ஷேமகரீ, சித்திகரீ, சின்நமஸ்தாஸீபானனு, சாகம்பரீ, மோக்ஷலக்ஷ்மி, த்ரிவர்கபலதாயினீ, வார்த்தூலி, ஜம்பவீ, க்னனு, அச்வரூபா, ஸுரேச்வரீ, ஜ்வாலாமுகீ முதலிய மகாபலசாலிகளான ஒன்பது கோடி சக்திகள் இருந்தார்கள்.*

*இவர்கள் எல்லோரும் லீலா மாத்திரமாகவே மிக்க பராக்ரமிகளான தானவ சேனையை ப்ரளய காலத்தும் கொழுந்துவிட்டு எரியும் அக்னி எப்படி எல்லா இடத்தையும் ஸம்ஹாரம் செய்கிறதோ, அதுபோல் நாசம் செய்யத் தொடங்கினார்கள்.*

*அதேசமயம் தானவாதி துர்கன் இருண்ட மக்களுக்கு மத்தியில் இருந்து ஆலங்கட்டி மழையை வர்ஷிக்கத் தொடங்கினான்.*

*அது வாயுவின் மோதலால் மிக வேகமாக அதிகரிக்கத் தொடங்கியது. அப்பொழுது பகவதிதேவி சோஷணாஸ்தரம் என்னும் ஜலப்பெருக்கை வற்றடிக்கின்ற பாணத்தினால் ஆலங்கட்டி மழையை க்ஷண நேரத்தில் தூர விலக்கினாள்.*

*அப்பொழுது போகத்தை விரும்பும் ரமணி நபும்-ஸகரிடம் சென்று பலனில்லாமல் திரும்புவதைப்போல அந்த தைத்யனுடைய பனிக்கட்டி மழை தேவியினிடத்தில் வ்யர்தமாகப் போயிற்று.*

*இதன் பிறகு தைத்யராஜன் அதிகரித்த கோபத்துடன் புஜங்களைத் தட்டிக்கொண்டு ஒரு பெரிய பர்வத சிகரத்தை எடுத்து ஆகாச மண்டலத்தில் வீசி எறிந்தான். தேவி பெரிய பளுவான அந்த பர்வத சிகரம் தன்னை நோக்கி வருவதைக் கண்டு வஜ்ராயுதத்தின் ஒரே அடியினால் சிதல்சிதலாகச் செய்தாள்.*

*அப்பொழுது அந்த தைத்யன் யானை உரு எடுத்துக்கொண்டு தந்தங்களினால் சோபிக்கும் மஸ்தகத்தை அடிக்கடி தாழ்த்திக் கொண்டு ரண க்ஷேத்திரத்தில் ஓடத் தொடங்கினான்.*

*தேவி பர்வதாகாரமான அந்த யானை தன்னை நோக்கி வருவதைக் கண்டு துரிதமாக பாசத்தால் கட்டி கட்கத்தால் அதன் துதிக்கையை வெட்டிவிட்டாள்.*

*பிறகு தேவியால் துதிக்கை வெட்டப்பட்ட அந்த யானை கோரமாக பிளிறத் தொடங்கியது. அதால் வேறு ஒன்றும் செய்ய முடியாமல் எருமையின் உரு எடுத்துக் கொண்டது.*

*பிறகு பலசாலியான அந்த தைத்யன் தன்னுடைய குளம்புகளின் தாக்குதலினுல் பூமியை நடுங்கச் செய்துகொண்டு கொம்புகளினுல பர்வதங்களை பெய்ந்த்தெறியத் தொடங்கினுன்.*

*அந்த வேளையில அவனுடைய பெருமூச்சினுல் பெரிய பெரிய மரங்கள் பூமியில் சாய்ந்தன.*

*ஏழுகடல்களும் தங்கள் தங்கள் கரை கடந்து ஆர்ப்பரித்தன. அதிகம் கூறுவானேன். ப்ரளய காலத்து வாயுவைப்போல மஹாபலதானவன் தன்னுடைய பயங்கர மகிஷ உருவத்தினுல் மூன்று உலகங்களையும் கிடுகிடுவென நடுங்கச் செய்தான்.*

*எல்லா ப்ரம்மாண்டங்களிலும் இருப்பவர்கள் அவனுடைய பலத்தால் வ்யாகுலமடைந்தார்கள். இதைப் பார்த்து பகவதி மிகவும் கோபமடைந்து அவனை த்ரிசூலத்தினுல் குத்தினுள்.*

*அந்தத் திரிசூலத் தாக்குதலினுல் அவன் சக்ராகாரமாகச் சுழன்று பூமியில் விழுந்தான். உடனேயே அவன் எழுந்து தன்னுடைய மகிஷ ரூபத்தை விட்டுவிட்டு ஆயிரம் கைகளுடைய ஒரு யுத்தவீரன் ஆகிவிட்டான். அதே சமயத்தில் அடக்க முடியாத வலிமை வாய்ந்த தர்க்காசுரன் ஆயிரம் கைகளிலும் ஆயுதம் ஏந்தி காலாந்தகனுக்கு ஸமமாக சோபிக்கத் தொடங்கினுன்.*

*பிறகு அவன் துரிதமாக யுத்தத்தில் நிபுணியான பகவதியைப் பிடித்து ஆகாச மண்டலத்தில் எடுத்துக்கொண்டு போய்விட்டான்.*

*பிறகு அவன் ஜகதம்பிகையான தேவியை ஆகாச மண்டலத்தில் வெகுதூரத்தில் எறிந்துவிட்டு மிகவும்*

*வேகமாக க்ஷணமாத்திரத்தில் பாணங்களை வலையாக விரித்து அவளை மறைத்தான்.*

*அந்த சமயத்தில் ஆகாச மண்டலத்திலிருக்கும் பகவதி அவனுடைய பானங்களுக்கு மத்தியில் மறைந்துண மேகங்களினால் மறைக்கப்பட்ட மின்னலைப் போல் விளங்கினாள்.*

*அப்பொழுது அவள் தன்னுடைய பாணங்களினால் சரவலையை நீக்கிவிட்டு கூர்மையான பாணத்தினால் அந்த தைத்யனை அடித்தாள். பிறகு தேவியினுடைய இந்த மஹாபாணத்தினால் இதயம் துளைக்கப்பட்ட அந்த தைத்யன் கண்கள் சுழல மிகவும் கலவரமடைந்து பூமியில் விழுந்தான். அவன் தேகத்திலிருந்து ரத்தப் பெருக்கு நதியாக ஓடிற்று.*

*இந்தவிதமாக அந்த துர்க்காசுரனை வதைத்தபிறகு தேவதைகளின் துந்துபிகள் முழங்கின. உலகம் களிப்புற்றது. சூரியன், சந்திரன், அக்னி, தங்கள் தேஜஸை திரும்ப அடைந்தார்கள். அந்த சமயத்தில் மகரிஷிகளுடன்கூட தேவதைகளும் புஷ்பமாரிபொழிந்து கொண்டு அங்கு வந்து சேர்ந்தார்கள். மிகவும் மரியாதையுடன் உத்தமோத்தமமான அந்த மஹாதேவியை ஸ்துதிக்கத் தொடங்கினார்கள்.*

*ஏ ஜகத்தாத்ரி! பரமேச்வர மகாசக்தி தேவி! தாங்களே மூன்று உலகங்களிலும் கொடுமையான யுத்தம் செய்கிறவர்கள். தானவரூபமான விருக்ஷங்களை வெட்டுவதற்கு கோடாரி ஸ்வரூபமாகும்.*

*ஹே! த்ரிலோகத்திலும் வ்யாபித்திருப்பவளே! சிவே! சங்குசக்கர கதாதாரியான விஷ்ணு ரூபிணியே! தாங்கள் துஷ்டர்களை சிதைப்பதற்காக நாணையிழுப்பதில் கைவிரல்களை உபயோகப்படுத்திக்கொண்டே இருக்கிறீர்கள். தங்களுக்கு நமஸ்காரம், ஏ!ஸர்வ ஸ்ருஷ்டி விதாயினி! ஹம்ஸ வாஹினி! ப்ரம்மஸ்வரூபிணி தாங்களே*

*வேதவசனங்களின் இருப்பிடம், தங்களுக்கு நமஸ்காரம் ஏ! தேவி! தாங்களே இந்த சக்தி, தாங்களே குபேரசக்தி, தாங்களே வாயுசக்தி, தாங்களே வருணசக்தி, தாங்களே யமசக்தி, தாங்களே நிர்ருதி சக்தி, தாங்களே ஈசானசக்தி, தாங்களே அக்னி சக்தி, தாங்களே சந்திரனுடைய நிலவின் சக்தி, தாங்களே சூரியனுடைய ப்ரபா சக்தி, தாங்களே சர்வதேவமயி, பரமேச்வரியின் சக்தி, தாங்களே கௌரி, சாவித்திரி, காயத்ரி, ஸரஸ்வதி, மதி, ப்ரக்ருதி, அகங்க்ருதி ஸ்வரூபியாகும்.*

*ஏ! அம்பிகே! தாங்களே சேதனுஸ்வரூபி, ஸர்வேந்த்ரியமூர்த்தி, தாங்களே பஞ்சதன்மாத்ரஸ்வரூபி, மகாபூதாத்மிகை.*

*ஏ! தேவி! இந்த்ரியங்களுக்கு அஷ்டாத்ரி தேவியும் நீங்களே, ப்ரம்மாண்டத்தில் செயல்படுத்துபவளும், ப்ரம்மாண்ட ரூபிணியும் நீங்களே.*

*ஹே! தேவி! நீயே பரா ஈச்வரீ, பரா அபரா, இரண்டின் உருவமும் நீயே! தாங்களே பரமாத்மஸ்வரூபி. ஏ! ஈசானீ! எங்கும் நிறைந்தவளே! உருவமில்லாமலேயே ஸர்வ ஸ்வரூபிணியும் அம்ருதஸ்வரூபிணியும் நீயே!*

*மஹாமாயே நீங்களே சித்சக்தி, ஸ்வாஹா, நீங்களே ஸ்வதா, தாங்களே வஷட், வௌஷட் இரண்டினும் ஸ்வரூபம் தாங்களே ப்ரணவாத்மிகா, தாங்களே ஸ்ர்வமந்த்ரமயி, ப்ரும்மாதிகளும் தங்களிடமிருந்து உண்டானுர்கள். சதுர்வர்க்க பலதாயினியும் நீயே. தர்மார்த்தகாம மோக்ஷ ஸ்வரூபிணியும் நீயே!*

*ஹே! ஜகத்கர்த்ரீ! உலக முழுவதும் தங்களிடமிருந்தே உண்டாயின. தாங்களே உலகத்தை ப்ரதிஷ்டை செய்பவள்.*

*ஸ்தூலம், சூஷ்மம், வர்த்தமானம், த்ருச்யம், அத்ருச்யம் எல்லாம் தங்களுடைய சக்தியிலிருந்தே விளங்குகின்றன. தங்களுக்கு வேருக ஒருவஸ்துவும் உலகில் இல்லை.*

*ஏ மாதா! துர்காஸுரன் தேவதைகளுக்கு வேண்டி தைத்யசேனையை விஸ்தாரப்படுத்தினான். தாங்களே அந்த மஹாசைலேந்த்ரனைக் கொன்று எங்களை ரக்ஷித்தீர்கள்.*

*ஏ, ப்ரணத பாலினி! தங்களைவிட்டுவிட்டு யாரை சரண் அடைவோம்?*

*ஹே! ஈச்வரி! எவர்மேல் தங்கள் க்ருபா கடாக்ஷம் வீழ்கிறதோ அவர்கள் தனதான்ய ஸம்ருத்தி, புத்ர பௌத்ரர்கள், அழகான மனைவி, உற்றமித்திரங்கள் இவர்களை அடைகிறார்கள். அந்த ஜனங்களிடமிருந்து பரவுகின்ற சந்த்ரகிரணத்தின் நிலவு போன்ற சுத்தகீர்த்தியினால் உலகம் நிரம்பியிருக்கிறது.*

*ஏ த்ரிபுராரி பத்னியே! எந்த ஜனங்களுடைய சித்தத்தில் தங்களுடைய பக்தி நிரம்பியிருக்கிறதோ அவர்களை விபத்து க்லேசமாத்திரம் அணுகாது. தங்களை வணங்குகிறவர்களுக்கு க்லேசத்தின் அனுபவம் எப்படி உண்டாகும்? வாழ்க்கை முழுவதும் தங்களுடைய பெயரை உச்சரித்துக் கொண்டிருப்பவர்களுக்கு உலகத்தில் ஏன் ஜன்மம் உண்டாகப் போகிறது?*

*ஏ! பவானீ! ஒருவர் எத்தனை துஷ்டனாக இருந்தபோதிலும் தங்கள் அருள்நோக்கு அவன்மேல் விழும்போது அவன் ஒருபோதும் அதோகதி அடையமாட்டான். இதை அறியாதவர் யாவர்? ஆனால் இப்பொழுது எங்களுக்கு ஆச்சரியம் என்னவென்றால் இந்த துர்காஸுரன் யுத்தத்தில் தங்கள் அமுதமயமாய அருள் நோக்குக்குப் பாத்திரமாகியும்கூட எப்படி ம்ருத்யுவை அடைந்தான்?*

*ஹே! தேவி! தங்களுடைய அஸ்த்ரசஸ்த்ரங்களாகிற அக்னியில் விட்டில்களைப் போல விழுந்தும் சூரிய மண்டலத்தைப் பிளந்துகொண்டு ஸ்வர்க்கத்துக்குப் போகிறார்களே அதனாலேயே வணங்கும் ஸ்வபாவமுள்ள ஸஜ்ஜனங்கள் துஷ்டர்களிடமும் சாதுக்களைப் போன்று*

அவர்களுக்கு நீசபுத்தியை விட்டு ஸ்வர்க்க பதத்தை உபதேசம் செய்கிறார்கள்.

ஏ! ம்ருடானீ! நாங்கள் எல்லோரும் உங்களை வணங்குகிறோம். த்ரிபுராந்தக மகிஷி, மஹேசி, பவானி, உனது பக்தர்களாகிய எங்களை ஒவ்வொரு க்ஷணத்திலும் ஆபத்துக்களிலிருந்து மீட்டு, நான்கு பக்கங்களிலும் எங்களைக் காக்க வேண்டும்.

ஏ! ப்ரும்மாணி! தாங்கள் எனது மேற்புறத்தை ரக்ஷிக்கவேண்டும். ஏ! வைஷ்ணவி! தாங்கள் எனது கீழ் புறத்தை ரக்ஷிக்க வேண்டும். தாங்கள் ம்ருத்யுஞ்ஜய உருவத்தில் ஈசான கோணத்தையும், த்ரிநயனரூபத்தில் அக்னி கோணத்தையும், த்ரிபுராஸ்வரூபமாக நிருருதி கோணத்தையும், த்ரிசக்தி ரூபத்துடன் வாயு கோணத்தையும் எப்பொழுதும் ரக்ஷிக்க வேண்டும்.

கிரிஜா நாசியையும், ஜெயா மேலுதடையும், விஜயா கீழ்உதடையும் ரக்ஷிக்கட்டும். ஸ்ருதிஸ்வனு இரண்டு காதுகளையும், ஸ்ரீதேவி பல்வரிசைகளையும், சண்டிகா இரு கன்னங்களையும், வாணி நாக்கையும், ஜெய மங்களா முகவாயையும், கார்த்தியாயனி ஸமஸ்த முக மண்டலத்தையும் ரக்ஷிக்க வேண்டும்.

நீலகண்டி கண்டப் பரதேசத்தையும், வராஹி கழுத்தின் கண்டியையும் ரக்ஷிக்க வேண்டும். பூர்வசக்தி தோள்களையும், ஐந்த்ரி புஜதண்டத்தையும், பத்மா கை தலங்களையும், கமலா கை விரல்களையும், விரஜா நக வரிசைகளையும், ஸுர்ய மண்டலத்தில் இருக்கும் தமோ நாசினியான சூர்யசக்தி கை இடுக்குகளையும், ஸ்தல சரீ, வக்ஷஸ்தலங்களையும், தரித்ரீ (பூமியைத் தாங்குபவள்) ஹ்ருதயத்தையும், க்ஷணதா சாக்னீ (ஒவ்வொரு க்ஷணத்திலும் சலனத்தை நீக்குபவளான நீ எங்களுடைய வயிற்றை ரக்ஷிக்கட்டும்.

ஜகதீச்வரி எங்கள் உதர மடிப்பையும் - போகதி எங்கள் நாபியையும், அஜாதேவி ப்ருஷ்ட தேசத்தையும்,

விகடாதேவி கடிப்பிரதேசத்தையும், பரமா நிதம்ப ஸ்தலத்தையும், குஹரிணிகுஹ்ய ப்ரதேசத்தையும், அபாய ஹந்த்ரீ பாயுஸ்தானத்தையும், விகுலா இரு தொடைகளையும், லலிதா முட்டுகளையும், ஜெயாதேவி இரண்டு அடித்தொடைகளையும், கடோதரா இரு குதிகால்களையும், சாந்த்ரீ, கை நகங்களையும் தல வாஹினிதேவி எங்கள் உள்ளங்கால்களையும், க்ஷேமகரி நாங்கள் இருக்கும் இடத்தையும், ப்ரியகரி புத்திரர்களையும், ஸஞகரி ஆயுளையும், மஹாதேவி கீர்த்தியையும் ரக்ஷிக்கட்டும்.

தனுர்தரி தர்மத்தையும், குலதேவி குலத்தையும் ரக்ஷிக்கட்டும். ஸர்வாணி தேவி யுத்தத்தில் ரக்ஷிக்கட்டும். ஸத்கதி ப்ரதா ஸத்கதியை ரக்ஷிக்கட்டும். ராஜகுலம், யுத்தம், சத்ரு சங்கடம், மணிகை! வளம் ஜலம் இவைகளிலிருந்து எப்பொழுதும் காக்கட்டும். இந்த விதமாக மகரிஷிகள் கந்ர்வர்கள் சாரணங்கள் ஸகிதம் இந்த்ராதி தேவர்கள் ஸ்துதி செய்து அடிக்கடி வீழ்ந்து வணங்கினார்கள். பிறகு ஜகத்தாத்ரி பரம ஸந்தோஷமடைந்து அந்தஸுரோத்தமர்களை பார்த்துக் கூறினாள்-

ஹே!தேவர்களே! நீங்கள் முன்புபோல் தங்கள் தங்கள் ஸ்தானங்களில் அதிகாரம் செய்து வாருங்கள். உங்களுடைய இந்த யதார்த்தமான ஸ்துதியைக் கேட்டு மகிழ்ந்தேன். அதனால் வேண்டிய வரங்கள் கொடுக்கிறேன். எந்த மனிதன் இந்த ஸ்தோத்திரத்தை பக்தி பூர்வமாகப் படிக்கிறானோ அவனை அணு அணுவாக கவனித்து அவனுடைய ஆபத்திலிருந்து ரக்ஷிப்பேன்.

இந்த வஜ்ரபஞ்சரம் என்னும் ஸ்லோகத்தை கவசமாக எவன் தரிக்கிறானோ அவனுக்கு ஒருபொழுதும் பயம் ஏற்படாது. ரண க்ஷேத்திரத்தில் யாராலும் அண்டமுடியாத துர்காஸுரனை நாம் வதம் செய்தால் இன்றிலிருந்து எனக்கு துர்க்கை எனும் பெயர் பிரசித்தமாக விளங்கட்டும்.

எவர்கள் என்னை துர்க்கையாக பாவித்து சரணுகதி அடைகிருர்களோ அவர்கள் ஒருபொழுதும் துர்கதியை அடையமாட்டார்கள். இந்த வஜ்ரபஞ்சரம் எனும் பவித்ரமான ஸ்துதியை எவன் கவசம் போல் தரித்துக் கொள்கிருனே அவனுக்கு யமனிடம்கூட பயம் ஏற்படாது. பூதம், ப்ரேதம் டாக்கினி, பிசாசு, ராக்ஷஸர்கள், க்ரூரர்கள், விஷசர்ப்பங்கள், அக்னி, திருடன் வேதாளம், கங்காளம், க்ருஹங்கள், பாலக்ரஹங்கள், வாதபித்தங்களிஞல் ஏற்படும் விஷஜ்வரங்கள் இந்த ஸ்துதியை கேட்ட மாத்திரத்தில் ஓடிவிடும்.

இந்த உத்தம ஸ்தோத்திரத்தைச் சொன்ஞல் ஓடிவிடும் இந்த வஜ்ரபஞ்சகம் என்னும் ஸ்தோத்திரம் துர்க்கையின் மகிமையை ப்ரகாசிக்கச் செய்கிறது.

இந்த ஸ்தோத்திர கவசத்திஞல் ரக்ஷிக்கப்பட்டவருக்கு வஜ்ராயுதத்திற்கும் பயப்பட வேண்டாம். ஒருவர் இந்த மந்த்ரத்தை அபிமந்திரித்து அந்த ஜலத்தைக் குடித்தால் உதிரபீடை நீங்கும்.

மேலும் இந்த ஸ்தோத்திரத்தை மந்திரித்து ஜலத்தை குடித்தால் கர்பபீடை நீங்கும். குழந்தைகளுக்கு பரம சாந்தியைக் கொடுக்கும். உலகத்தில் எங்கெங்கெல்லாம் இந்த ஸ்தோத்ரம் சொல்லப்படுகின்றதோ அங்கெங்கெல்லாம் இந்த சக்திகளும் என்கூட இருந்து என்னுடைய ஆக்ஞையிஞல் என் பக்தர்களை பரிபூர்ணமாக ரக்ஷிக்கிருர்கள்.

இந்த விதமாக தேவதைகளுக்கு வரம் அளித்து விட்டு பகவதி மறைந்தாள். அந்த தேவதைகளும் மிகவும் சந்தோஷத்தோடு தங்கள் இடத்திற்குத் திரும்பிஞர்கள் - ஸ்கந்தர் கூறிஞர் - ஏ! மகரிஷே! இந்த ப்ரகாரம் இந்த மகாதேவிக்கு துர்க்கை என்று பெயர் வந்தது. அவளை காசியில் ஆராதிப்பது எப்படி என்பதை உன்னிடம் கூறுகிறேன் கேள்.

*அஷ்டமி சதுர்தசி, விசேஷமாக மங்களவாரம், இந்த தினங்களில் காசியில் துர்கதியை நீக்கும் துர்காதேவியை நிரந்தரமாக பூஜிக்க வேண்டும். மிகவும் கருத்துடன் நவராத்திரி முழுதும் ப்ரதிதினமும் பூஜை செய்வதினுல் விக்கினராசிகளைத் தொலேக்கிருள்.*

*நல்ல புத்தியை கொடுக்கிருள். நாஞவிதமான உபசாரபூஜைகளும், மகாபலிதானமும், கொடுப்பதினுல், காசியில் துர்காதேவி சந்தேஹமில்லாமல் அபீஷ்ட சித்திகளைக் கொடுக்கிருள். ஸுகத்தை விரும்பும் ஜனங்கள் குடும்பத்துடன் ச்ரத்தையாக ப்ரதி வர்ஷமும் சரத் நவராத்திரியிலும், வசந்த நவராத்திரியிலும் துர்காயாத்திரை பண்ணி முடிக்க வேண்டும்.*

*ப்ரதி வருஷமும் யாத்திரை செய்யாத மதியீனர்களுக்கு காசியில் ஒவ்வொரு க்ஷணமும் ஆயிரக்கணக்கான விக்கினங்கள் ஏற்படும். நவராத்திரி முழுவதும் எல்லாவிதமான ஆபத்துக்களைப் போக்கடிக்கும் பகவதி துர்கா தேவியை துர்கா குண்டத்தில் ஸ்ஞனம் செய்து விதிப்ரகாரம் பூஜித்தால் ஒருவன் ஒன்பது ஜன்மங்களின் ஸஞ்சித பாபங்களிலிருந்து விடுதலே அடைகிருன்.*

*பகவதி துர்காதேவி காளராத்ரி முதலிய சக்திகளோடு கூட காசிபுரியை நான்கு பக்கங்களிலிருந்தும் ரக்ஷிக்கிருள். அதனுல் அவர்கள் எல்லோரையுமே ச்ரத்தையுடன் பூஜிக்க வேண்டும்.*

*இவைகளைத் தவிர மற்றும் திக்குகளை ரக்ஷிக்கும் அதிஷ்டாத்ரிதேவிகளான நவசக்திகள் இருக்கின்றன. அவர்களும் ஒழுங்காக இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தை ஆயிரக்கணக்கான உபத்திரவங்களிலிருந்து ரக்ஷிக்கிருர்கள். சத நேத்ரா, ஸகஸ்ராஸ்யா, அயுதபூஜா அஸ்வாடா, கஜாஸ்யா, த்வரிதா, அஸ்வவாஹினீ, விஸ்வாகௌரீ ஸௌபாக்யகௌரீ இந்த ஒன்பது க்ஷேத்ர ரக்ஷகிகளான தேவிகளை பூர்வாதி எட்டு திசைகளிலும், மத்யத்திலும் மிகவும் யத்தனத்துடன் பூஜிக்க வேண்டும்.*

*இந்த ரீதியாக எட்டு பைரவர்களும் எட்டு திசைகளிலும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் நிர்வாண லக்ஷ்மியின் ஸ்தானமான காசி க்ஷேத்திரத்தை நிரந்தரமாக ரக்ஷிக்கிறார்கள்.*

*அவர்களுடைய பெயர்கள், ருரு, சண்டா, அஸிதாங்கா, கபாலி, க்ரோதனு, உன்மத்தா, ஸம்ஹாரா - ஈஷண பைரவா, ருண்ட மாலைகளினால் அலங்கரிக்கப்பட்டு மண்டையோடும் கத்திரியும் கையிலேந்திக்கொண்டு நாய்களை வாஹனம் ஆகக் கொண்டும் ரத்தம் போன்ற சிகப்பான முகத்துடன் பெரிய பெரிய பற்களுடன் நீண்ட புஜங்களும் நிர்வாண தேகமும், விரிந்த கேசமும், ரத்தத்தையும் மதுவையும் குடிப்பதினால் மத்த நிலைமையும், வேண்டிய உருவம் எடுத்துக்கொள்ள வல்லவர்களும், நானுவிதமான அஸ்த்ரசஸ்த்ரங்களை கையில் ஏந்தியவரும் தன்னைப்போலவே கோடிக்கணக்கான அனுசரங்கள் பின்தொடர வித்யுத் ஜிஹ்வன், லலஜ்ஜிஹ்வன், க்ரூராஸ்யன், க்ருரலோசனன், உக்ரன், விகடதம்ஷ்ட்ரன், வக்ரமுகன், னக்ரஞாஸிகன், ஜம்பகன், ஜ்ரும்பணமுகன், ஜ்வலாநேத்ரன், வ்ருகோதரன், கர்த்தநேத்ரன், மகாநேத்ரன், துச்சநேத்ரன், அந்தர மண்டலன், ஜ்வலத்கேசன், கம்புஸிரா, ஹர்வக்ரீவன், மஹாஹனு, மஹாநாசா, லம்பகர்ணு, கர்ணப்ரவர்ணு, அநஸா, இவ்விதம் துர்வருத்தர்களான ரத்தவெறி பிடித்த அறுபத்துநாலு வேதாளங்கள் கெட்ட - நடத்தையுள்ளவர்களை விரட்டிக்கொண்டு நான்கு திக்குகளிலும் எப்பொழுதும் க்ஷேத்திரத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறார்கள்.*

*ஏ! கும்பமுனியே! நான் முன்னால் த்ரைலோக்ய விஜயாவிலிருந்து ஜ்வாலாமுகி வரை அநேக சக்திகளை வர்ணித்தேன் அல்லவா?*

*அவர்கள் எல்லோரும்கூட நான்கு திசைகளிலும் ஆயுதஸன்னத்தர்களாய் காசீபுரியை ரக்ஷிக்கிறார்கள்.*

பெரிய பெரிய விக்கினங்களின் நிவர்த்தியின பொருட்டு இவர்கள் எல்லோரையும் நன்ருக பூஜிக்க வேண்டும்.

இதுபோலவே முற்கூறிய ருரு முதலிய பைரவர்களேயும் பூஜிக்க வேண்டும். ஏனென்ருல் அவர்கள் எல்லோரும்கூட காசியில் பயமும் பயப்படக்கூடிய பயங்களே விலக்கி ஸர்வஸம்பத்துக்களேயும் அளிக்கக் காரணமாக இருக்கிருர்கள்.

வித்யுத் ஜிஹ்வா முதலிய உக்ரமான வேதாளங்களும் காசியில் பூஜிக்கப்படும் பொழுது பயங்கரமான விக்கின கூட்டங்களே நாசம் செய்கிருர்கள். இங்கு மேலும் நாளுவிதமான பயங்கர உருவமுடையவர்களும் அஸ்த்ரசஸ்த்ரங்களிளுல் ஸன்னத்தமான ஒருகோடி பூதகணங்களும் இந்த புரியை ரக்ஷிக்கிருர்கள்.

இவர்கள் எல்லோரும்கூட ஒவ்வொரு நிமிஷமும் நிர்வாணலக்ஷ்மி க்ஷேத்ரத்தை பாலிக்கிருர்கள். அதளுல் காசியில் மோக்ஷத்தை விரும்பும் ஜனங்கள் இந்த எல்லா தெய்வங்களேயும் அவசியம் பூஜிக்க வேண்டும்.

துர்க்கா விஜயம் என்னும் பெயருள்ள அனேகம் சக்திகளின் திறமையுள்ள இந்த புண்ணிய அத்யாயத்தின் கதையைக் கேட்பதால் சீக்கிரம் ஆபத்திலிருந்து விடுபடுவார்கள். இதில் அனேக பைரவர்களேப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.

வேதாளங்களேப் பற்றி வர்ணிக்கப்பட்டுள்ளது. அவைகளுடைய போர்களே கேட்ட மாத்திரத்திலேயே ஒருவனே இடையூறுகள் தொந்தரவுசெய்யாது.

மேற்கூறிய பூதகணங்கள் நம்முடைய கண்களுக்குப் புலப்படாவிட்டாலும் இந்தக் கதையைப் படிப்பவர்களேயும் அவர்கள் ஸர்வ ஜாக்கிரதையாக ரக்ஷிக்கிருர்கள். அதளுல் காசிபுரியில் எவர்களுக்கு திடமான பக்தியுள்ளதோ அவர்கள் மகா விக்கின

*நிவாரணமான இந்தக் கதையை அவசியம் கேட்க வேண்டும்.*

*யாதொரு க்ருஹத்தில் இந்த உபாக்கியானம் எழுதப்பட்டு பக்தி ச்ரத்தையுடன் வைக்கப்பட்டிருக்கிறதோ அவர்களை தேவகணங்கள் ஆயிரக்கணக்கான ஆபத்துகள் நேர்ந்தாலும் அவைகளில் இருந்து ரக்ஷிக்கிறார்கள். காசீபுரியின் உறுதியான ப்ரேமையுடைவர்கள் மிக்க மரியாதையுடன் இந்த வஜ்ரபஞ்சகம் என்னும் உபாக்யானத்தைக் கேட்க வேண்டும்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ காண்டத்தில் உத்ரார்த்த பாஷாடீகாவான எழுபத்திரண்டாவது அத்யாயம்*

*ஸம்பூர்ணம்.*



# *அத்யாயம் 73*

*அகஸ்தியர் கூறிஞர்:- ஏ! ஷடானனு! பகவான் மகேஸ்வரர் ஜகதம்பிகையுடன் த்ரிலோசன லிங்கத்திற்கு சமீபத்தில் சென்று என்ன செய்தார்? அதை சீக்கிரம் சொல்லுங்கள்!*

*ஸ்கந்தர் கூறிஞர்:- ஏ! கும்ப முனியே! நீ கேட்டதை கூறுகிறேன் கேள். அதை ஸர்வ ஸித்திகளும் அருளும் விரஜாபீடமாகக் கூறுகிருர்கள். அந்த பீடத்தை தரிசித்த உடனேயே ஒருவனுக்கு ரஜோ குணம் விலகிவிடுகிறது. த்ரிலோசன மஹாலிங்கம் எங்கிருக்கிறதோ அங்கேயே பிலம்பிலா தீர்த்தம் என்னும் ஒரு கட்டம் கங்கையில் இருக்கிறது. காசியில் அந்த தீர்த்தத்தை ஸர்வதீர்த்த மயம் என்று கூறுகிருர்கள்.*

*முனிவரே !அதன் காரணமென்னவென்ருல் மூன்று உலகங்களிலும் எத்தனை தேவதைகள், ரிஷிகள், மனிதர்கள், நாகர்கள், நதிகள், பர்வதங்கள், அரண்யங்கள் இருக்கின்றனவோ, அவைகளெல்லாம் இங்கு ஒன்று சேருகின்றன. அந்தக் காரணத்திஞல், இந்தத் தீர்த்தமும், த்ரிலோசன லிங்கமும் த்ரிவிஷ்டபம் என்னும் பெயருடன் இன்றுவரை ப்ரக்யாதி அடைந்திருக்கிறது.*

*முனியே! அங்கு வந்து பகவான் பிஞகி ஜகஜ்ஜனனியிடம் த்ரிலோசன லிங்கத்தின் மகிமையை எவ்விதம் வர்ணித்தாரோ அதையும் உமக்குக் கூறுகிறேன். தேவி கூறிஞள், ஹே! தேவதேவா, ஜகன்ஞதா, ஸர்வப்ரதா, ஸர்வ வ்யாபகா, சமதர்சி, ஸர்வ ஜனகா, சர்வா, நான் தங்களிடம் ஒன்று கேட்கிறேன். தாங்கள் கூறவேண்டும்.*

*இந்தக் காசி க்ஷேத்ரம் கர்ம விதைக்கு மஹா ஔஷதமாக இருக்கும். மோக்ஷ லக்ஷ்மி ஆலயம் எப்படி*

தங்களுக்குப் பிரியமானதோ, அப்படியே எனக்கும் பிரியத்தைக் கொடுக்கக்கூடியது. இந்த க்ஷேத்திரத்தின் தூளிக்கு முன்னால் மற்ற க்ஷேத்திரங்களைப் பற்றிச் சொல்வதற்கு ஒன்றும் இல்லை.

அதன் பூரண மகிமை யாருக்குத் தொரியும்? இங்கே எத்தனை லிங்கங்கள் இருக்கின்றனவோ? அவைகள் தானாக முளைத்தாலும் நிர்வாண பதவியைக் கொடுக்கவல்லது.

ஏ! சங்கரா! இவைகள் எல்லாம் தெரிந்த விஷயம்தான் என்றாலும், இந்தக் காசியில் அனாதிகாலம் தொட்டு, எந்தெந்த சித்த லிங்கங்கள் இருக்கின்றனவோ, அவைகளைப் பற்றிக் கூற வேண்டும்.

தாங்கள் பராசக்தியுடன், பிரளய காலத்தில் கூட பிரியாமல் இருக்கும் காசிக்கு அதனாலேயே முக்திபுரி என்ற பெயர் வந்தது. எதன் பெயரை நினைத்த மாத்திரத்தில், பாபம் க்ஷயம் ஆகிறதோ, எதை தரிசிப்பதனாலும், ஸ்பர்சிப்பதனாலும், ஸ்வர்க்கமும் மோக்ஷமும் கிடைக்கிறதோ, ஜன்மம் முழுவதிலும் பூஜித்தாலும், காசியிலுள்ள ஸமஸ்த லிங்கங்களையும் பூஜித்த பலன் கிடைக்கிறதோ அவைகளைப் பற்றி கருணாம்ருதஸாகரா! சம்போ! எனக்கு க்ருபையுடன் அவைகளைச் சொல்ல வேண்டும். நான் தங்கள் சரணங்களில் வணங்குகிறேன்.

ஏ விந்திய சத்ருவே, முனி ஸப்தமா, மஹாதேவா, இந்த மாதிரி தேவியின் நல்ல வார்த்தைகளைக் கேட்டு, எவைகளின் பெயர்களை, கேட்ட மாத்திரத்தில் பாபராசிகள் க்ஷயமாகிறதோ, புண்யங்கள் குன்றாகக் குவிகிறதோ, அந்த முக்திக்குக் காரணமாக இருக்கும், காசியிலுள்ள, அந்த மஹாலிங்கங்களின் பெருமைகளைக் கூறுகிறேன்.

தேவாதி தேவன் கூறினார் - ஏ, தேவி! க்ஷேத்திரத்திலுள்ள பரம ரகசியமான முக்திக்குக்

*காரணத்தை கூறுகிறேன் - இந்த விஷயத்தை, ப்ரும்மா, விஷ்ணு முதலியவர்களும், அறிவார்கள். ஏ, பார்வதி, இந்த ஆனந்தவனத்தின் பெரிதும், சிறிதுமான கணக்கில்லாத லிங்கங்கள் இருக்கின்றன. அவைகள் நாணுவிதரத்தினங்கள், தாதுக்கள், கற்கள், இவைகளாலானவை.*

*எத்தனையோ சுயம்புலிங்கங்கள் இருக்கின்றன. அனேக ரிஷிகளாலும், தேவர்களாலும், ஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றன. எத்தனையோ சித்தர்களும், சாரணர் களும், கந்தர்வர்களும், யக்ஷர்களும், ராக்ஷஸர்களும், இவைகளைப் பூஜித்து இருக்கிறார்கள். அஸுரர்கள், நாகர்கள், மனிதர்கள், தானவர்கள், அப்ஸரஸ்கள், திக்கஜங்கள், பர்வதங்கள், தீர்த்தங்கள், யக்ஷர்கள், வானரர்கள், பக்ஷிகள் கின்னரர்கள், இவர்களெல்லோரும் தங்கள் தங்கள் நாமத்துடன் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட 23 லிங்கங்கள் இருக்கின்றன.*

*ஏ, ப்ரியே, இவைகளெல்லாமே, இங்கு முக்திக்குக் காரணமாகும்.*

*ஏ! ப்ரியே! இந்த லிங்கங்கள் கண்ணுக்குத் தெரிந்தாலும் சரி, தெரியாவிட்டாலும் சரி, பழுதடைந்திருந்தாலும் சரி, அவைகள் எல்லாம் பூஜிக்கத்தகுந்தவை.*

*ஏ! சுந்தரி, ஒரு தரம் நான் இவைகளை கோடிக்கணக்காக எண்ணி இருக்கிறேன். ஹே ஈசே! இங்கு கங்கா ஜலத்தில் எட்டு கோடி சித்த லிங்கங்கள் இருக்கின்றன. கலிகாலத்தில் அவைகள் கண்ணுக்குத் தெரியாது.*

*அடி ப்ரியே! நான் எண்ணிய பிறகு, என்னுடைய பக்த ஜனங்கள் அளவற்ற லிங்கங்களை ப்ரதிஷ்டை*

செய்திருக்கிருர்கள். அவைகளே இதுவரை ஒருவரும் எண்ணவில்லே.

ஏ! சுந்தரி! இப்பொழுது நீ எந்த லிங்கத்தைப்பற்றி கூறிஞயோ, எவைகளிஞல் இந்த க்ஷேத்திரம் ஸர்வோத்தமம் ஆயிற்றோ, எவைகள் மோக்ஷத்திற்குக் காரணமோ, அவைகளேப் பற்றிக் கேள், ஏ, கிரீந்த்ரநந்தினி, இந்த லிங்கங்கள் எல்லாம் மகா ரகஸ்யமானவை.

அதஞல் அவைகளுடைய ப்ரபாவங்களிஞல் அந்தந்த இடங்களில் வெளிப்படையாகத் தெரிகின்றன. எவர்கள் கலியின் கல்மஷத்திஞல், துஷ்டத்தனம் மிகுந்து, நாஸ்திகர்களாகவும், பொல்லாதவர்களாகவும், இருக்கிருர்களோ அவர்களுக்கு இந்த ஸித்த லிங்கங்களின் பெயர்கள்கூடத் தெரியாது.

ஏ! சுபானனே! கேவலம் இந்த லிங்கங்களுடைய பெயர்களேக் கேட்ட மாத்திரத்தில் பாபக் கூட்டங்கள் நசிக்கின்றன. புண்ணியராசிகள் வ்ருத்தியாகின்றன?

அவைகளில் முதலாவது ஓங்காரேஸ்வரர், இரண்டாவது த்ரிலோசனர், மூன்ருவது மகாதேவர், நான்காவது க்ருத்திவாஸேஸ்வரர், ஐந்தாவது ரத்னேஸ்வரர் ஆருவது சந்த்ரேஸ்வரர், ஏழாவது கேதாரேஸ்வரர், எட்டாவது தர்மேஸ்வரர், ஒன்பதாவது வீரேஸ்வரர், பத்தாவது காமேஸ்வரர், பதிஞென்ருவது விஸ்வகர்மேஸ்வரர், பனிரண்டாவது மணிகர்ணிகேஸ்வரர், பதிமூன்ருவது அவிமுக்தேஸ்வரர், பதிஞலாவது விச்வேச்வரர், ஏ!ப்ரியே, இந்த பதிஞலு லிங்கங்களும், மோக்ஷ சம்பத்துக்கு வேர் ஆகும்.

ஹே! ஸுந்தரி, இந்த லிங்க ஸமூஹங்களே முக்தி க்ஷேத்ரங்கள் என்று கூறுகிருர்கள். இந்த க்ஷேத்திரத்திற்கு பரம அதிஷ்டான தேவதைகள், இவர்களே ஆவர், இவர்களே ஆராதித்தால் கைவல்ய - சம்பத்தை தானமாக அளிக்கிருர்.

*ஏ! ப்ரியே! ஆனந்த வனத்தில கூறிய இந்த பதினாலு லிங்கங்களும், மானிட தேஹிகளின் முக்திக்காக பூஜிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு மாதத்திலும், ப்ரதமை திதியில் ஆரம்பித்து, சதுர்தசி வரையில் இந்தப் பதினாலு லிங்கங்களுக்கும் யாத்திரை செய்ய வேண்டியது அவசியம்.*

*ஏ! கும்ப ஸம்பவா! இந்த எல்லா மஹாலிங்கங்களிலேயும் மஹாதேவரை ஆராதிக்காமல் காசியில் முக்தி எவருக்குக் கிட்டும்?*

*இது முக்காலும் ஸத்தியமே. அதனால் ஏ! முனியே, காசி வாஸத்தின் பலனை விரும்புபவர்கள், மிகவும் ப்ரயத்னத்துடன் பக்திபாவத்தோடு, பூஜிப்பது உசிதம். அகஸ்தய முனிவர் கூறினார்-*

*ஏ! ஷண்முகா! காசியில் இந்த லிங்கங்கள் மட்டுமே முக்திக்குக் காரணமானவைகளா, அல்லது வேறு லிங்கங்களும் உண்டா? உண்டானால் அவைகளைப் பற்றியும் கூறுங்கள், ஸ்கந்தர் கூறினார்-*

*ஏ!... விருத்தரே. இங்கு இன்னும் எத்தனையோ மகாலிங்கங்கள் இருக்கின்றன. ஆனால் கலியுக ப்ரபாவத்தினால் அவைகள் மறைந்தே இருக்கின்றன.*

*எவர்களுக்கு ஈஸ்வரரிடம் உண்மையான பக்தி ஏற்படுகிறதோ, எவர்கள், காசி தத்வத்தை நன்றாக அறிந்து இருக்கிறார்களோ, அவர்கள் இந்த லிங்கங்களின் பெயர்களை ஜபத்தினால், கலிகல்மஷத்தை நாசம் செய்யும் இந்த லிங்கங்களை அறியமுடியும்.*

*மற்றொருவராலும் அறிய முடியாது. அவர்கள் பெயர்களைக் கூறுகிறேன் கேள். (1) அமிர்தேஸ்வரர், (2) தாரகேச்வரர், (3) ஞானேஸ்வரர், (4) கருணேஸ்வரர், (5) மோக்ஷத்வாரேஸ்வரர், (6) ஸ்வர்க்கத்வாரேஸ்வரர், (7)*

*ப்ரம்மேஸ்வரர், (8) லாங்கலீஸ்வரர், (9) வ்ருத்தகாலேஸ்வரர், (10) விருக்ஷேஸ்வரர், (11) சண்டீஸ்வரர், (12) நந்திகேஸ்வரர், (13) மஹேஸ்வரர், (14) ஜோதிரூபேஸ்வரர் இந்தப் பதினாலு லிங்கங்களும் மிகவும் ப்ரசித்தி பெற்றவை, அடி ஸுந்தரி, இந்த பதினாலு மகாலிங்கங்களும் ஆனந்த கானனகாசியில் முக்திகொடுக்கவல்லவர்.*

*கலியுகத்தில் பாப புத்தியுள்ள ஜனங்களிடம் இந்த லிங்கங்களைப் பற்றின விபரங்கள் ஒருபொழுதும் சொல்லக்கூடாது. காசியில் எவர் ஒருவர் இந்தப் பதினான்கு லிங்கங்களை ஆராதனை செய்கிறார்களோ, அவர்கள் ஸம்ஸார யாத்திரைக்குத் திரும்பி வரமாட்டார்கள். இவைகள் காசியின் விலை மதிக்க முடியாத பொக்கிஷங்கள். அதனால் இதே காசியில் அங்கும் இங்கும் பிரகடனப் படுத்தக்கூடாது.*

*அடி வரானனே! இந்த லிங்கங்களின் நாமஉச்சாரணமே பெரிய பெரிய ஆபத்துக்களிலிருந்தும், துக்கங்களிலிருந்தும் காக்கவல்லவை.*

*இதுவே இந்த க்ஷேத்திரத்தின் பரம ரஹஸ்யம், ஹே! கிரிஸுதே! இந்த பதினாலு லிங்கங்களிலும் நான் ஸான்னித்தியம் இருப்பதனால் இவைகள் இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தின் ஹ்ருதய ஸ்வரூபம் ஆகும்.*

*எல்லோரும் முக்தி அளிக்கக்கூடிய இப்பதினான்கு லிங்கங்களும் என்னுடைய பரம பக்தர்களிடம் எனக்கு இருக்கும் தயையினால் பதினாலு புவனங்களின் ஸாரங்களை எடுத்து என்னால் செய்யப்பட்டதாகும்.*

*இந்த க்ஷேத்திரத்தில் முக்தி கிட்டும் என்பது ப்ரசித்தம், அதற்குக் காரணம் என்னுடைய இந்தப் பதினான்கு லிங்கங்களே ஆகும்.*

*ஏ! காந்தே! என்னுடைய பக்திமான்கள் ஆனந்தவனத்தில் இந்த லிங்கங்களை எப்பொழுதும் ஸ்மரித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களே வ்ரததாரிகள், தபஸ்விகள் காசியில் இந்த லிங்கங்களை தரிசனம் செய்பவர்கள் யோகாப்யாஸம், தானம் இவைகளின் பலனை அடைகிறார்கள்.*

*முனீஸ்வரர்கள் தங்கள் இஷ்டபூர்த்திக்காக எந்த தர்மங்களை அனுஷ்டிக்கிறார்களோ, அவைகளின் பலனை ஜன்மம் முழுவதும் பாபமில்லாதவர்கள் ஆக, இவைகளை தரிசிப்பவர்கள் ஆகிறார்கள்.*

*ஏ, பார்வதி! ஒருவன் அவிமுக்த க்ஷேத்திரத்தை அடைந்து இந்த லிங்கங்களை எல்லாம் ஒரு தடவையாவது பூஜிப்பானானால், அவன் நிச்சயமாக முக்தி அடைகிறான். இதில் ஸந்தேகம் இல்லை.*

*ஸ்கந்தர் கூறினார். ஓ அகஸ்திய முனியே, வித்யா ஜலத்தை பங்கப்படுத்தியவரே, பகவான் சங்கரர் தன் பக்தர்களின் ஹிதத்திற்கு வேண்டி, இந்த லிங்கங்களைப் பற்றியும் கூறி இருக்கிறார்.*

*அவைகளையும் கேள். (1) சைலேஸ்வரர், (2) சங்கமேஸ்வரர், (3) ஸ்வர்லினேஸ்வரர், (4) மத்யமேஸ்வரர், (5) ஹிரண்யகர்பேஸ்வரர், (6) ஈசானேஸ்வரர், (7) கோப்ரேக்ஷேஸ்வரர், (8) வ்ருஷபத்வஜேஸ்வரர், (9) உபசாந்தசிவன் (10) ஜேஷ்டேஸ்வரர், (11) நிவாஸேஸ்வரர், (12) ஸுக்ரேஸ்வரர், (13) வ்யாக்ரேஸ்வரர் (14) ஜம்புகேஸ்வரர் இவைகள் பதினாலு லிங்கங்கள்.*

*ஹே! முனே! இந்தப் பதினான்கு லிங்கங்கள் மஹத்தானவை. இந்த லிங்கங்களை சேவித்தாலும் மனிதர்கள் மோக்ஷமடைகிறார்கள்.*

உத்தம பக்தர்கள் கருத்துடன் சித்திரை மாதத்தில் க்ருஷ்ணபக்ஷத்து ப்ரதமையில் ஆரம்பித்து சதுர்தசி வரையிலும் இந்த லிங்கங்களை பூஜிக்க வேண்டும்.

மோக்ஷத்தை விரும்பும் ஜனங்களும் இந்த லிங்கங்களுக்கு வருஷாந்தர யாத்திரையை பெரிய உற்சவமாகக் கொண்டாட வேண்டும். இதனுல் ஸம்பூர்ணமாக க்ஷேத்திரத்தின் ஸித்தி அவர்களுக்குக் கிடைக்கிறது.

ஏ! மஹா முனியே! இப்பதினுன்கு லிங்கங்களையும் மிக யத்தினத்துடன் தரிசனம் செய்வதால் ஒருவரும் துக்கஸார, ஸம்ஸாரத்தில் பிறக்கமாட்டார்கள். இவ்வாறு பகவான் பார்வதியிடம் மேலும் கூறுவார். க்ஷேத்திரத்தின் பரமதத்துவம் இதுவே ஆகும்.

நிச்சயமாக ஸம்ஸார ரூபமான ரோகத்தினுல் பீடிக்கப்பட்டு இருப்பவருக்கு இதுவே பரம ஔஷதமாகும்.

இதுவே இந்த க்ஷேத்திரத்தின் உபநிஷத்தாகும். இதுவே உத்தம முக்திக்கு விதையாகும். அடி ப்ரியே! லிங்கங்களெல்லாம் கர்ம ரூபமான அரண்யத்திற்கு அக்னியாகும். இந்த ஒவ்வொரு லிங்கங்களின் மகிமைக்கும், ஆதியும் அந்தமும் இல்லை. இதைப் பூரண ரூபமாக நான் அறிவேனே தவிர, வேறு ஒருவரும் அறியமாட்டார்கள்.

ஹே! மகரிஷே! இந்த வார்த்தையைக் கேட்டு தேவி, புளகாங்கிதமடைந்து, ஸர்வஸ்வதாதா, பகவான் ஈசான தேவரை வணங்கி, கூறலுற்ருள். ஹே! ப்ராண வல்லபா!‘ தாங்கள் பரம ரகஸ்யத்தைக் கூறினீர்கள். இதைக் கேட்டு என் சித்தம் பரம குதூஹலமடைந்தது.

ஹே! கார்ய காரணங்களுக்கு ஈச்வரரே, தாங்கள் இந்த லிங்கங்கள் ஒவ்வொன்றினுடையவும் மிகவும் மேன்மையான, ஸாரமயமான, காசியில் மோக்ஷத்துக்குக் காரணத்தையும் கூறினீர்கள்.

ஹே! புவன நாயகா! இவைகளைக் கேட்ட மாத்திரத்திலேயே, பாபங்களைப் போக்கடிக்கும். பதினான்கு லிங்கங்களின் மகாத்ம்யத்தையும் ஒவ்வொன்றாக விவரித்துக் கூறுங்கள். மிகவும் புண்ணியம் வாய்ந்த அமரகண்ட க்ஷேத்திரத்திலிருந்து வந்த ஓங்காரரேஸ்வரரைப் பற்றிக் கூறுங்கள்.

ஹே! ஈசா! இந்த ஓங்காரேஸ்வரர் யாருக்கு ஆத்மாத்மகமாக இருப்பவர்? அவருடைய ஸ்வரூபம் என்ன? அப்படி ஆராதித்தவர்களுக்கு, இவர் என்ன வரம் கொடுத்தார்? பார்வதி தேவியின் இந்த வசன அம்ருதத்தைப பருகி, பரமசிவன் ஓங்காரேஸ்வரருடைய பரம விசித்ர கதையை, கூறத் தொடங்கினார்.

தேவதேவர் கூறினார், அபர்ணே! முதலாவது ஓங்காரேஸ்வரர் இங்கு எப்படி ஆவிர்பவித்தார் என்பதைக் கூறுகிறேன். ஹே! மஹாதேவி! பூர்வகாலத்தில் விச்வகர்த்தா ப்ரம்மா இதே ஆனந்தவனத்தில் உக்ரஸமாதியில் இருந்து மிகவும் கடுமையான தவம் செய்தார். பின் ஆயிரம் யுகமான பின்பு, பாதாளத்தைப் பிளந்து கொண்டு, திக்குகளை ப்ரகாசப்படுத்திக் கொண்டு ஒரு பெரிய ஜோதி கண்ணெதிரே தோன்றியது.

ப்ரம்மாவின் அந்த: கரணத்தின் நிஷ்காம ஸமாதியின் பலத்தால் உண்டான பரம ஜோதியே வெளிவந்ததெனலாம்.

ஒரு நாழிகை பூமி பிளந்ததால், சடசடசப்தம், உண்டாயிற்று. இந்த சப்தத்தினால் வசீகரிக்கப்பட்ட

*ப்ரும்மதேவரின் ஸமாதி மெல்ல மெல்லக் கலைந்தது;*

*ப்ரம்மா ஸமாதி கலைந்து மெல்ல கண்ணைத் திறந்து நோக்கினார். அவர் தன் முன்னால் அதி அற்புதமாக ஜொலித்துக் கொண்டிருக்கக்கண்டார்.*

*ஸத்வகுணம் நிறைந்த ரிக்வேதத்தின், க்ஷேத்ரமான ஸ்ருஷ்டியின் பாலகனாய் நர நாராயணாத்மகனாய் தமோகுணத்துக்கும் அப்பால் நின்ற ஸாக்ஷாத் அகாரத்தையும், அதன் முன்பாக ரஜோகுணமயமான யஜுர்வேதத்தின் ஜன்ம பூமி.*

*எல்லா ஸ்ருஷ்டிகளுக்கும் காரணமான எல்லா ப்ரம்ம ஸ்ருஷ்டிக்கும், ப்ரதி பிம்பஸ்வரூபஉகாரத்தையும், அதற்குப் பிறகு ஸங்கேதமாகக் கூறிய மந்திரத்தைப்போல், நிச்சப்தமாக க்ருஷ்ணவர்ணரூபமான தமோரூப ஸாமவேதத்தின் ஜன்ம ஸ்தலமான ஸாக்ஷாத் ருத்ரஸ்வரூப, ப்ரளயத்துக்குக் காரணமான மகாரத்தையும் பார்த்தார்.*

*பிறகும் தன் கரங்களை அகலவிரித்து, விச்வரூபம் எடுத்து நிற்கும் ஆதாரமான, ஸகுண நிர்குண சொல்லமுடியாத நாத ப்ரும்மத்துக்கு இருப்பிடமாக பரமானந்தமான, ஒரு பூர்த்தியையும் கண்டார்.*

*எதை எல்லாம் வாங்மயங்களுக்கும் காரணமான சப்தப்ரம்மம், அதாவது வேதம் என்று கூறுகிறோமோ, அந்த நாதத்தின்மேல் ஸர்வ ப்ரதானமான காரணங்களுக்கும் காரணமான ஜகஜ்ஜோதிதபோ பலத்தினால் கண்ணுக்கு தென்பட்ட பிந்து ரூபத்தையும் ப்ரும்மா பார்த்தார்.*

*அது தனது ப்ரபாவத்தினால் ஸமஸ்த லோகங்களையும் பாலித்து வருகிறதோ, ஓம் என்று கூறப்படுகிறதோ, அந்த பரத்துக்கும் பரமான, மேலான பரம்பொருளான அந்த*

உருவமற்ற பொருளை உருவமாக இங்கு ப்ரம்மா பார்த்தார்.

அது தனது ஜெபத்திலேயே ஆழ்ந்து இருக்கும் பக்தனை பவஸாகரத்துக்கு அப்பால் கரை சேர்கிறதோ, அப்படி தாரணை செய்வதாலேயே தாரகம் என்று பெயர் பெற்றதுவோ, அதை ப்ரம்மா ப்ரத்யக்ஷமாகப் பார்த்தார்.

பரமமோக்ஷத்தை விரும்பும் ஜனங்களால் துதிக்கப்படும்போது அல்லது ஸர்வத்திற்கும் மேலானதானது என்று த்யானிக்கப்படும்போதும், ப்ரணவம் என்று அறியப்படுகிறதோ, தன்னை சேவிப்பவர்களுக்குப் பரமபதத்தை அருளுகிறதோ, அந்த சாந்தமயமான ப்ரணவத்தை ப்ரம்மா பார்த்தார்.

எது வேதம் மூன்றுக்கும் தத்துவமோ எது ஸாக்ஷாத் பரமாத்மாவோ, எது துரீயத்திற்கும் மேலானதோ, எது ஸர்வாத்மஹமோ, அதை, அந்த நாதபிந்து ஸ்வரூபத்தை, ஹம்ஸவாகன ப்ரம்மா பார்த்துத் தனது கண்களில் ஏற்றிக் கொண்டார். எல்லாவற்றுக்கும் ஜன்மஸ்தானமாயும், எல்லா வேதத்திற்கும் உற்பத்தி ஸ்தானமாயும் இருக்கும். அதை, பத்மயோனி ப்ரம்மா தனது முன்னால் கண்டு தனது கண்களுக்கு விருந்தாக்கிக் கொண்டார். எது திரிகுணத்தினால் கட்டுண்டு, விருஷப உருக்கொண்டு எப்பொழுதும், போ; போ; என்று கூறிக்கொண்டு இருக்கிறதோ, அதை பரமேஷ்டியான ப்ரம்மா தனக்கு முன்னால் தரிசித்தார்.

எதற்கு நான்கு கொம்புகளும் ஏழு கைகளும், இரு மஸ்தகங்களும், இருக்கின்றனவோ, அந்த தர்மமான வ்ருஷபத்தையும் ப்ரம்மாகண்டார். எதன் உதரத்தில் பூத, பவிஷ்யத்வர்த்தமானங்கள் அடங்கியிருக்கின்றனவோ, நான்கு வேதங்கள், புராணங்கள், ஐந்து ப்ரம்மாக்கள் இவைகள் அடங்கி உள்ளனவோ, (அகாரம், உகாரம், மகாரம் நாதம் பிந்து இவை ஐந்து ப்ரம்மாக்கள்) இவை

எல்லாம் அடங்கிய அந்த ப்ரம்ம ஸ்வரூபத்தை இந்த ப்ரம்மா பார்த்தார்.

பிறகு ப்ரம்மா ப்ரபஞ்சத்துக்கு வேருனதும், பஞ்சாக்ஷரமயலிங்கரூபம் ஆனதும், ஈச்வர ரூபமானதுமான சங்கரரைத் துதித்துக் கொண்டாடத் தொடங்கிஞர். ப்ரம்மா கூறிஞர்.

ஹே! ஸதாசிவா! தாங்களே அக்ஷர உருவானவர் அகாராதி அக்ஷரங்களுக்கு உற்பத்தி ஸ்தானம், ஓங்கார ஸ்வரூபம், தங்களுக்கு அடிக்கடி வணக்கம் செலுத்துகிறேன்.

ஹே! நிராகாரா! தாங்களே அகார, உகார, மகாரமானவர். தாங்கள் ரூபாதீதர்... ஆனுலும் ருக், யஜுர், ஸாமவேதத்தின் உருவும் தாங்களே, அதனுல் தங்களுக்கு நமஸ்காரம்.

நீங்களே நாத பிந்து, கலாஸ்வரூபம் உருவமற்றவராஞலும் உருவத்துடன் கூடியவர், ஸர்வஸ்வரூபங்களுக்கும் ஸ்வரூபம் ஆதி அந்த ரஹிதர் தாங்கள், தங்களுக்கு நமஸ்காரம். தாங்கள் ஜோதிநிதியானவர். ருத்ரஸ்வரூபி. தங்களுக்கு அனேக நமஸ்காரம், தாங்களே உக்ரம், பீமம், பசுபதி, தாங்கள் தாரக ப்ரும்மஸ்வரூபி, எல்லா காரியங்களுக்கும் காரணமானவர்.

தங்களே அடிக்கடி வணங்குகிறேன். ஹே சிதிகண்டா! தாங்கள் மாயா சூன்யர், பரம மங்களஸ்வரூபி, ஜடாமகுடதாரி, தங்களுக்கு அனேக வணக்கங்கள்.

ஏ! கீரிசா, பலனளிப்பவரில் தாங்களே ச்ரேஷடர், பசுக்களாகிய ஜீவர்களுக்கு யக்ஞரூபமாக விளங்குபவர். சிறியதும், பெரியதும், பருத்ததும், ஜரை அடைந்துமான, எல்லா உருவங்களும் நீங்களே. தாங்களே குமரனுக்குகுரு,

குமரனுடைய வடிவமும் தாங்களே.

தாங்களே ஸ்வேத வர்ணமாகவும், ஸாம வர்ணமாகவும், ரக்த வர்ணமாகவும், மஞ்சள் வர்ணமாகவும் இருக்கிறீர்கள். தாங்களே, புகைவர்ணமாகவும், அழுக்கடைந்த வர்ணமாகவும், பல வர்ணமாகவும், பச்சை வர்ணமாகவும், ரோஜா வர்ணமாகவும், பாடலவர்ணமாகவும், தேஜோரூபியாக இருக்கிறீர்கள். தங்களுக்கு வணக்கம்.

தாங்களே உயர்ந்த நாதமாகவும், நாதத்தின் ஸ்வரம் ஆகவும் விஸர்க்கத்தோடு கூடிய புள்ளியாகவும், தீர்க்கமாகவும், மூன்று மாத்திரையோடு கூடிய புலதமாகவும் இருக்கிறீர்கள். தாங்களே அனுஸ்வரமாக இருக்கிறீர்கள். நாஸிக உச்சாரணமாகவும் இருக்கிறீர்கள்.

தந்த்யம் (பல்லிறைல் உச்சரிக்கக்கூடிய வார்த்தை) தாலவ்யம் (உள்நாக்கின் உதவியால் உச்சரிக்கூடிய வார்த்தை, உதட்டிறைல் உச்சரிக்கும் வார்த்தையும், கண்டத்திறைல் உச்சரிக்கக்கூடிய அக்ஷரங்களும் நீங்களே.

ஊஷ்மமும் (மேல் பரவும் நாக்கிறைல் உச்சரிக்கக்கூடியவை) நீங்களே. அந்தஸ்த வர்ணம் (ய, ர, ல, வ) தாங்களே. தங்களுடைய இந்த ஒவ்வொரு உருவங்களுக்கும் என் வணக்கங்கள்.

பிறைகமென்னும் தனுஸை தரித்தவரே, தாங்களே பஞ்சம ஸ்வரம், நிஷாதஸ்வரம், தாங்களே நிஷாதராஜன். வீணை, வேணு ம்ருதங்கம் முதலிய வாத்ய ஸ்வரூபங்கள் தாங்களே, தாங்களே உச்சத்வனி. தாங்களே கம்பீரசப்தம். தாங்களே பயங்கரமான வாக்கியங்கள்.

கோமள சப்தங்களின் ஸ்வரூபமும் தாங்களே. தாங்களே நாற்பத்து ஒன்பது ராகங்களின் மூர்ச்சனைகள். இருபத்தோரு மூர்ச்சனைகளின் நாதனும் தாங்களே. கீழ்ஸ்தாயி, மேல்ஸ்தாயி என்று கூறப்படும் ஸஞ்சார

*பேதங்களின் ஸ்வரூபமும் தாங்களே, தாளத்தின் ஸ்வரூபமும் தாங்களே. தாளப்ரியரும் தாங்களே. லாஸ்யம், தாண்டவம் என்று கூறப்படும் இரண்டு விதமான நர்த்தனங்களின் உற்பத்தி ஸ்தானங்களும் தாங்களே. தங்களுக்கு நமஸ்காரம்.*

*ந்ருத்ய கீத வாத்யத்தின் ப்ரியமானவரே, பக்திபாவத்தோடு ஆடிப்பாடித் தாளம் போடுபவர்களுக்கு தாங்கள் மோக்ஷலக்ஷ்மியை தானமாக அளிக்கிறீர்கள்.*

*ஸ்தூலம், சூக்ஷ்மம், த்ருச்யம், அத்ருச்யம், அனேகம் ஸத்துக்கும் அஸத்துக்கும் காரணமான ஸ்வரூபம் நவீனம், ப்ராசீனம் எல்லா உருவமும் தாங்களே. தங்களுக்கு நமஸ்காரம். தாங்கள் வாக்ப்ரபஞ்சத்தின் ஸ்வரூபம். வாக்ப்ரபஞ்சத்திற்கு காரணமும் தாங்களே.*

*தாங்கள் ஒருவரே, ஆனால் தங்களுடைய பேதம் அனேகம். ஸத்துக்கும் அஸத்துக்கும் காரணமான ஸ்வரூபம் தாங்களே. தங்களுக்கு நமஸ்காரம். தாங்களே சப்தப்ரும்மம். தாங்களே பரப்ரும்மம் தங்களை அடிக்கடி வணங்குகிறேன்.*

*ஏ! பார்வதீசா! தாங்களே வேதாந்தத்தினால் அறியப்படுபவர். வேதபதி, வேதஸ்வரூபர், வேதத்திற்கும் அப்பாற்பட்டவர்.*

*ஏ! ஜகதீசா, அப்படிப்பட்ட தங்களுக்கு அனேக தடவை வணக்கங்கள். தேவதேவேசா, தாங்களே தேவதைகளுக்கு திவ்யபதத்தைக் கொடுப்பவர். ஹே! மஹேஸ்வரா, சங்கரஸ்வரூபா! தங்களுக்கு நமஸ்காரம்.*

*ஏ! ஜகதாநந்தா, ஹே சந்த்ர சேகரா! ஏ! ம்ருத்யுஞ்ஜயா, ஏ த்ரியம்பகா, ஏ! பினாகபாணே, ஏ! த்ரிசூலம் தரித்தவரே, ஏ! த்ரிபுராந்தகரே, அந்தக நிஷூதரே, மன்மதனின் கர்வத்தை அழித்தவரே, ஜலந்தராஸூரனின் சத்ருவே, தங்களுக்கு வணக்கங்கள்.*

*தாங்களே காலன், காலனுக்கும் காலன். காலகூட விஷத்தை புஜித்தவர், பக்தர்களின் வருத்தத்தைப் போக்கடிப்பவர், பக்தியில்லாதவர்களுக்கு வருத்தங்களைக் கொடுப்பவர்.*

*ஞானமும் நீங்களே, ஞானத்தின் உருவமும் நீங்களே, ஸர்வக்ஞர், தங்களுக்கு அனேக நமஸ்காரங்கள். யோகஸத்ரே, யோகிகளுக்கு யோகஸித்திகள் கொடுப்பவரும் நீங்களே.*

*ஏ! தபோதனரே, தபஸ்விகளுக்குத் தவத்தின் பலனை அளிப்பவரும் தாங்களே. தாங்கள் மந்த்ரஸ்வரூபம். மந்திரங்களின் பலமும் தாங்களே. மஹத்தான தானங்களின் பலனும் தாங்களே. அந்த தானங்களைக் கொடுப்பவரும் தாங்களே.*

*ஏ! நாதா! தாங்களே யக்ஞ புருஷர். பெரிய பெரிய யக்ஞங்களின் பலனை அளிப்பவர் தாங்களே. தாங்களே எல்லாம். தாங்களே எங்கும் நிறைந்தவர். தாங்களே எல்லாம் அளிப்பவர். தாங்கள் ஸமதர்சி. தங்களுக்கு வணக்கம். தாங்களே ஸர்வபோஜி. ஸர்வகர்த்தா. ஸர்வ ஸம்ஹாரகாரகர். தாங்களே யோகிகள் ஹ்ருதயாகாசத்தில் எழுந்தருளியிருக்கிறீர்கள். தங்களுக்கு நமஸ்காரம்.*

*ரக்ஷிப்பவரே, ஸத்வமூர்த்தியே, தாங்களே விஷ்ணு உருவாக சங்கம், சக்ரம், பத்மம் இவை தரித்துக்கொண்டு மூன்று உலகங்களையும் ரக்ஷிக்கிறீர்கள். தங்களுக்கு வணக்கம்.*

*ஹே! மோக்ஷபத தாயகா, தாங்களே ரஜோ குணத்தை எடுத்துக்கொண்டு ப்ரம்மஸ்வரூபமாக சட்டதிட்டங்களுக் குட்பட்ட உலகை ஸ்ருஷ்டிக்கிறீர்கள்.*

*ஹே! மகாஸ்மசானவாசியே, தாங்களே மகாருத்ரர், மகாகாலர், மகாபயங்கரர், ஸர்ப்பாபரணங்களை*

அணிந்தவர், காலனுக்கும் காலன், தாங்களே தாமஸ சரீரத்தை தரித்துக் கொண்டு, கடைசியில் காலாக்னிஸ்வரூபமாக ஆகி ப்ரளயத்தை ஏவிவிடுபவரும் நீங்களே. பிறப்பு அற்றவரே, தாங்களே ப்ரக்ருதி, புருஷன் என்னும் இரு உருவங்களுடன் மஹதஹங்காரத்துடன் கூடிய அகில ஜகத்தையும், கண்ணிமைக்கும் நேரத்திற்குள் வெளியாக்குகிறீர்கள். கண்களின் இமைப்பும், திறப்பும், தாங்களே, தங்களுடைய கண்களின் இமைப்பில் ஸ்ருஷ்டியும், மலர்ப்பில், ப்ரளயமும் உண்டாகிறது.

ஏ துர்ஜடா! தாங்கள் ஸ்வதத்ரமாகத் திரிபவர். தங்களுடைய கபாலமாலை தங்களுக்கு லீலா மாத்ரமே தங்களுடைய கழுத்தில் நரமுண்டமாலை சோபிக்கிறதே அது நிச்சயமாக தங்கள் உதரத்தில் பஸ்மீகரிக்கப்பட்ட விதைகளின் அடையாளமே. ஏ! சம்போ, தங்களாலேயே உலகம் வ்யவஹரிக்கிறது. தங்களையே நம்பியிருக்கிறது.

தாங்கள் புராதனர் - வாக்பதத்திற்கும் எட்டாதவர். துதிப்பவனும், துதியும் - துதிக்குக் காரமானவரும் தாங்களே. எனக்கு நமசிவாய என்று மாத்திரம் சொல்லத் தெரியுமே தவிர, வேறு ஒன்று மறியேன். தாங்களே என் சரணதாதா, தாங்கள் பரமகதி, நான் தங்களையே வணங்குகிறேன்.

இந்த விதமாக ப்ரம்மா அனேகம் தடவை ஓங்காரேஸ்வரர் என்னும் மஹாலிங்கமான மஹேஸ்வரரை ஸ்தோத்தரித்து பூமியில் தண்டமென விழுந்து வணங்கினர்.

இப்பொழுது ஈஸ்வரர் கூறினர்- கிரீந்த்ரதனயே, அப்பொழுது நான் ப்ரம்மாவின் பரமஐச்வர்ய சம்பத்துக்கு மூலதனமான இந்த விசித்ர ஸ்துதியைக் கேட்டுவிட்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்தேன்.

பிறகு எனக்கு உருவமில்லையானுலும் அந்த லிங்கத்தின் சங்கர - மூர்த்தியாக ஆவிர்பவித்து ப்ரம்மாவிடம் கூறினேன். நான் ஸந்தோஷமடைந்தேன். வரம் கேள் என்று. இது கேட்டு ப்ரம்மா எழுந்து நின்று உடனே என்னைக்கண்டு ஜய ஜய என்று கோஷித்து இரு கைகளையும் கூப்பி வணங்கி, கூறலுற்ருர்.

அவர் குரல் ஆனந்தமிகுதியால் தழுதழுத்தது. கண்கள் ஆனந்த பாஷ்பத்தை - பெருக்கின. புளகாங்கிதமடைந்து தழுதழுத்த குரலில் கூறத்தொடங்கிஞர்.

ப்ரபோ! தாங்கள் என்னிடம் சந்தோஷமாக இருக்கும் பக்ஷத்தில், எனக்கு வரம் அவசியம் தரவேண்டும், என்று எண்ணும் பக்ஷத்தில் ஹே! சங்கரா! இந்த மகாலிங்கத்தில் எப்பொழுதும் தங்கள் ஸான்னித்யம் இருந்து கொண்டிருக்கவேண்டும். எனக்கு வரத்தை அருளவேண்டும். வேறு ஒரு வரமும் வேண்டாம், இந்த லிங்கத்திற்கு ஓங்காரேஸ்வரர் என்ற பெயர் வழங்கப்படும். இந்த லிங்கம், பக்தர்களுக்கு மோக்ஷத்தை அளிக்கவல்லதாக இருக்கட்டும்.

ஸ்கந்தர் கூறிஞர். ஹே! அகஸ்திய ரிஷியே, பகவான் சிவபிரான் விதாதா கூறுவதைக்கேட்டு, அதை ஆமோதித்து ததாஸ்து என்ருர். மேலும் இந்த ஸ்துதியிஞல் பெரிதும் மகிழ்ச்சி அடைந்த சங்கரர் மேலும் அனேக வரங்களை அளித்தார்.

ஈச்வரன் கூறிஞர். ஹே! ஸுரச்ரேஷ்ட! பரம தபஸ்வியே! நீ எல்லா வேதங்களுக்கும் இருப்பிடமாக விளங்குவாய். எனது அனுக்ரஹத்திஞல் ஸ்ருஷ்டித் தொழிலை நடத்த அருகதை உடையவஞய், நீ எல்லோருக்கும் பிதாமஹராகவும், மதிக்கத் தகுந்தவராகவும் இருப்பாய்.

ஹே! விதியே! சப்த ப்ரும்ம ஓங்கார ரூப மகாலிங்கம் உன் தபஸ்ஸிற்கு பலனளிக்கவே வெளிப்பட்டிருக்கிறது. அதை ஆராதிப்பவருக்கு ப்ரம்ம பதம் வெகுதூரத்தில் இல்லை. இந்த ஆனந்த கானனத்தில எல்லோருக்கும் மோக்ஷம் அளிக்க அகாரம், உகாரம், மகாரம், நாதம், பிந்து இவைகளின் சின்னமாக இந்த லிங்கம் இனி சிவ பஞ்சாயதனம் என்று அழைக்கப்படும்.

ஒரு பிராணி மத்ஸ்யோதரி தீர்த்தில் ஸ்னானம் பண்ணி, ஓங்காரேஸ்வரரை தரிசனம் செய்தால், பிறகு ஜனனியின் உதரதுக்கத்தைப் பார்க்கமாட்டான். இது நாதேஸ்வரலிங்கம். இது மிகவும் துர்லபமானது. ரம்யமான மத்ஸ்யோதரி தீர்த்தத்தில் இதை தரிசனம் செய்து தொட்டு தடவிக்கொடுத்தால், அவனுக்கு இது விசேஷ முக்தியை அளிக்கும். இந்த லிங்கத்தில் கபிலதேவரின் ஜோதி ஜ்வலித்துக்கொண்டு இருக்கிறது. அதனுல் இதை கபிலேஸ்வர லிங்கம் என்றும் கூறலாம்.

மழைக்காலத்தில் கங்கை பெருகி மத்ஸ்யோதரி தீர்த்தத்தில் கலக்கும் ஸமயம் கபிலேஸ்வரருடைய ஸமீபத்தில் வருகிறது. அச்சமயம் இதில் ஸ்னானம் செய்கிறவனுக்கு ப்ரம்மஹத்தி தோஷம் விலகுகிறது.

கங்கைஜலம் வருணையை எதிர்த்து, வருணை நீர் எதிர்த்துச் செல்லும் சமயம், அதில் ஸ்னானம் செய்து நாதேஸ்வரரான இந்த லிங்கத்தை வழிபட்டு த்யானித்தால் ஜனங்களுக்கு ஒருநாளும் சோகம் ஏற்படாது. ஒருநாளும் சோகம் ஏற்படாது.

அஷ்டமி, சதுர்தசி முதலிய தினங்களில், எட்டாயிரம் தீர்த்தங்கள், ஸப்த ஸமுத்ர தீர்த்தத்துடன் மத்ஸ்யோதரியில் கலக்கிறது. அந்த சமயம் கங்கையும் ஓங்காரேஸ்வரருக்கு ஸமீபத்தில் வருகிறது. அது மிகவும் புண்யமான தினம் ஆகும்.

*தேவதைகள், ரிஷிகள், பித்ருக்களுக்கு, இது ஒரு பிரியமான தினம் ஆகும். அந்தஸமயத்தில் மத்ஸ்யோதரி தீர்த்தத்தில் ஓங்காரேஸ்வரருடைய சமீபத்தில் ஸ்னானம், தானம், ஜபம், ஹோமம், தேவபூஜை முதலியவைகளைச் செய்தால் அது அக்ஷயமான பலனை அளிக்கும்.*

*ஓங்காரேஸ்வரரை தரிசித்த மாத்திரத்தில் அச்வமேதயாகம் செய்த பலன் கிட்டுகிறது. அதனால் காசி க்ஷேத்திரத்தில் மிகுந்த ப்ரயத்னம் செய்தாவது ஓங்காரேஸ்வரரை தரிசனம் செய்ய வேண்டும். எவர் ஒருவர் இந்த நாதேஸ்வரரை தரிசனம் செய்யவில்லையோ, அரிதாகக் கிடைத்த அவனுடைய மனித ஜன்மம், நான்கு புருஷார்த்தங்களுக்கும் ஸாதனம் ஆக இருந்த போதிலும் கூட நீர்மேல் குமிழ்போல் வ்யர்த்தமேயாகும்.*

*மத்ஸ்யோதரிஸ்னானம் பிண்டதானம், கபிலேஸ்வரருடைய தரிசனம் இவைகளால் மனிதன் பித்ரு ருணத்திலிருந்து விடுபடுகிறான். மோஹவசத்தினால் அனேக பாதகச் செயல்களைச் செய்தாலும் காசியில் ஓங்காரேஸ்வரருடைய தரிசனம் ஒன்றினால் யமராஜ தர்சனம் கிடைக்காமல் போகும்.*

*பித்ருக்கள் தங்கள் வம்சத்தில் பிறந்த ஒருவன் ஓங்காரேஸ்வரருடைய தரிசனத்துக்குச் செல்வதைக் கண்டால், ஸந்தோஷம் அடைந்து நடனமாடுகிறார்கள். காரணம் என்னவென்றால், அந்த புத்திசாலியான ஸந்தானம் எந்தெந்த பித்ருக்களை நினைத்து தியானம் செய்கிறானோ அந்த பித்ருக்கள், ப்ரம்மபதம் அடைகிறார்கள்.*

*ஒருலக்ஷம் ருத்ரஜபம் செய்தால் கிடைக்கும் பலன் பக்திபூர்வமாக ஓங்காரேஸ்வரரை தரிசித்தால் கிடைக்கும். எவன், ஆனந்தவனத்தில் ஸர்வாபீஷ்ட தாயகரான ஓங்காரேஸ்வரரை தரிசனம் செய்யவில்லையோ அந்த ஜன்மம் எடுத்தவன் பூமிக்கு பாரமேஒழிய, வேறு இல்லை.*

ஓங்காரேச்வரருடைய தர்சன மாத்ரத்திலேயே பூ மண்டலத்திலுள்ள ஸமஸ்த லிங்கங்களேயும் தர்சனம் பண்ணிய பலன் கிடைக்கிறது.

மாந்தர் இங்கு ஓங்காரேஸ்வரரை தரிசனம் செய்துவிட்டு வேறு இடங்களில் சென்று மரித்தாலும், ஸ்வர்கத்தை அடைந்து சிலகாலம் இருந்து பிறகு காசியில் பிறந்து முக்திபதத்தை அடைகிருர்கள்.

ஹே! ப்ரம்மன், நான் எப்பொழுதும் இந்த லிங்கத்திலேயே ஸாந்நித்யமாக இருப்பேன். இது நிச்சயம். இந்த லிங்கத்தை அர்ச்சித்தவர்க்கு நிச்சயமாக மோக்ஷம் அளிப்பேன்.

ஒருதரமாவது ஓங்காரேஸ்வரரை வணங்கிஞல் என் பரம அனுக்ரஹத்தால் அவன் க்ருதக்ருத்யஞகிருன். ஓங்காரேஸ்வரருடைய மேற்கு பக்கத்தில் தாரக தீர்த்தம் இருக்கிறது.

இங்கு ஸ்ஞனம் முதலிய ஜலக்ரியைகளேச் செய்வதிஞல் மனிதன் துர்கதியில் இருந்து விடுதலேயாகிருன். ஓங்காரேஸ்வரருடைய உபாஸகர்கள் சாதாரண மனிதர்கள் அல்ல. அவர்கள் மனிதத் தோலிஞல் போர்த்தப்பட்ட, ஜீவன் முக்தரான ருத்ர ஸ்வரூபமேயாகும்.

இந்த லிங்கத்தின் மஹிமை இங்கு வேறு ஒருவருக்கும் தெரியாது. ஏனென்ருல் ஏ! ப்ரம்மன், உன் புண்ணியோதயத்திஞலேயே இந்த லிங்கம் இங்கு தோன்றியிருக்கிறது.

நீ இந்த லிங்கத்தின் ப்ரபாவத்தாலேயே. எல்லா தத்வங்கங்களேயும் உண்மையாக அறிவாய். இந்த ஞானத்தைக் கொண்டே நீ எந்த சராசரஜகத்தையும் ஸ்ருஷ்டிப்பாய். பகவான் சம்பு பத்மயோனி

*ப்ரம்மதேவனுக்கு இவ்விதமான வரத்தை அளித்து மகாலிங்கத்திலேயே மறைந்தார்.*

*ஸ்கந்தர் கூறினர். ஹே! கலசஉத்பவா! இன்று வரை ப்ரம்மா இந்த லிங்கத்தைப் பூஜித்துகொண்டிருக்கிறர். தன்னுல் இயற்றப்பட்ட, ப்ரம்மஸ்தவத்தையே துதித்துக் கொண்டிருக்கிறர்.*

*இந்த ப்ரம்ம தத்வத்தை துதித்துக் கொண்டுவந்தால் எல்லா பாபங்களும் விடுதலையடைந்து அவன் பூர்ணஞானம் பெறுகிறன்.*

*ஒருவருஷம் வரை மூன்று காலங்களிலும் இந்த ப்ரம்ம ஸ்தவத்தை பாராயணம் செய்துவந்தால் அந்திம காலத்தில் ஞானத்தை அடைவான். அதன்மூலமாக அனுயாஸமாக பந்தத்திலிருந்து விடுபடுகிறன்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்ரார்த்தத்தில் பாஷாடீகாவான ஸ்ரீமத் ஓங்காரேஸ்வர மகாத்ம்ய வர்ணனம் என்ற எழுபத்திமூன்றும் அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 74

ஸ்கந்தர் கூறினார்:- ஏ! வாதாபி பஞ்சனு! புராதன பத்ம கல்பத்தில் தமன் எனும் ப்ராம்மணன் ஒருவன் இருந்தான். அவனுடைய பாபத்தைத் தொலேக்கக் கூடிய சம்பவம் ஒன்று காசியில் நடந்தது. அதைக் கூறுகிறேன். கேளுங்கள்.

பரத்வாஜருடைய புத்ரர்களில் ஒருவன் பெயர் தமன் என்பதாகும். அவனுக்கு யக்ஞோபவீத தாரணம் ஆனபின் எல்லாவித்தைகளேயும் படித்தபின் ஸம்ஸாரத்தை துக்கமயமென்றும் வாழ்வை நீர் மேல் குமிழி என்றும் அறிந்து, அதனுல் வைராக்யமடைந்து வீட்டைவிட்டு வெளியேறினுன். பிறகு அவன் மனம் வெறுத்து மனம்போன போக்கில் சென்ருன்.

அநேக ஆச்ரமங்களிலும், ஒவ்வொரு வனத்திலும், சமுத்திரதீரத்திலும், பர்வதங்களிலும், தீர்த்தங்களிலும், நதிக்கரையிலும் தவமியற்றிக் கொண்டு திரிந்து வந்தான். அவன் இந்திரியங்களே மனதோடு கூட நியமனம் செய்துகொண்டு உலக முழுவதும் எங்கெல்லாம் ஸித்த க்ஷேத்ரங்கள் இருக்கின்றனவோ, அங்கெல்லாம் போய் வஸிக்கத் தொடங்கினுன்.

அவனுக்குத் தன் மனதுக்கு இசைந்த குரு ஒரு இடத்திலும் கிடைக்கவில்லே. ஒருநாள் தபஸ்வியான அந்த தமன் தற்செயலாக நர்மதா நதி தடத்தில் அமர தீர்த்தத்திலும் பரம பவித்ரமான ஓங்காரேஸ்வர ஸ்தலத்தைக் கண்டான். அதைப் பார்த்ததும் அவன் மனம் பரம சந்தோஷத்தையும் வைராக்யத்தையும் அடைந்தது.

அங்கு அவன் விபூதி பூஷணராய் பாசுபதவ்ரததாரிகளான எத்தனேயோ தபோபோதனர்கள் லிங்க பூஜை செய்துவிட்டு ப்ராண யாத்திரைக்கு வேண்டிய வ்யவஹாரங்களே முடித்துக் கொண்டு ஸ்திர சித்தமுடைவராய் தாங்கள் குரு தேவரின் முன் அமைதியாக அமர்ந்து ஆகம சாஸ்திரத்தை விவாதித்துக் கொண்டிருக்கக் கண்டான்

*தமனும் அவர்களை வணங்கிக் கூப்பிய கையனாய் மிகவும் வணக்கத்தோடு அவர்களின் ஆசாரியர் பக்கத்தில் சென்று அமர்ந்தான். அப்பொழுது தன் பக்கத்தில் அமர்ந்த அவனை தபஸினால் க்ருசமான சரீரமுடையவரும் வார்த்திகத்தினால் பீடிக்கப்பட்டவரும் தபஸ்விகளில் ச்ரேஷ்டரும், சிவாராதனத்தில் ச்ரேஷ்டருமான மஹாமுனி கர்காசார்யர் கேட்டார்.*

*ஹே! ஸத்வா, நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? ஏன் இந்தயௌவன பருவத்திலேயே விரக்தனாகக் காணுகிறாய். அதைச் சொல் என்றார். அன்பினால் நனைந்த இவ்வார்த்தைகளைக் கேட்டு தமன் கூறினான்.*

*ஹே! பூஜ்யரே; சிவாராதனையில் தத்பரரே, பாசுபதத்தின் ஆசாரியரே! நான் என் மனதில் நிகழும் நிகழ்ச்சிகளை உண்மையாக உங்களிடம் விண்ணப்பித்துக் கொள்கிறேன். நான் ப்ராமணச் சிறுவன். பரிச்ரமத்துடன் வேத சாஸ்த்ரங்களைக் கற்றிருக்கிறேன்.*

*ஸம்ஸாரத்தின் ஸாரமற்ற தன்மையை அறிந்து வானப்ரஸ்தாச்ரமத்தை ஆச்ரயித்திருக்கிறேன். இந்த சரீரத்துடன் பரம ஸித்தியை அடையும் பொருட்டு அநேக தீர்த்தங்களில் ஸ்னானம் செய்து கோடிக்கணக்கான மந்த்ரங்களை ஜெபித்து அனேகதேவதைகளை பூஜித்து எத்தனையோ ஹோமங்களைச் செய்து, அனேக நாட்கள் குருஸமூஹத்திற்கு சிச்ருஷையும் பண்ணி வந்தேன். ஸ்மசானத்தில் அனேக இரவுகளைக் கழித்தேன். பர்வத சிகரங்களில் ஸ்திரமாக வஸித்தேன்.*

*ஆயிரக்கணக்கான திவ்ய ஔஷதிகளை ஸேவித்தேன் எத்தனையோ ரஸாயனங்களை ஸேவித்தேன். யமராஜருடைய வாயைப் போன்ற பெரிய பெரிய குகைகளில் வஸிக்கும் ஸித்தர்களை ஸேவிக்க நுழைந்தேன். கடுமையான யமநியமங்களைக் கைக்கொண்ட உன்னதமான தவங்களைச் செய்து வந்தேன்.*

*ஆனால், ஹே! ப்ரபோ! எங்கும் ஸித்திகளின் முளையைக்கூடக் காணவில்லை. இப்படி பூமண்டலத்தில் அலைந்து திரிந்துகொண்டு தங்கள் சரணங்களில் வந்தடைந்தேன்.*

*இங்கு விரும்பிய ஸித்தியை அடைந்து மனம் ஸ்திரமாக இருப்பதுபோல் தோன்றுகிறது. நிச்சயமாகத் தங்கள் முக கமலத்திலிருந்து உதிரும் வசனங்களைக் கேட்ட மாத்திரத்திலேயே எனக்குப் பரமஸித்தி கிடைக்கும். இதில் கொஞ்சம்கூட ஸந்தேஹமில்லை. ஆனால் இந்த ப்ருத்வி ஸம்பந்தமான ஸ்தூல சரிரத்திலேயே பரமஸித்தியடையும்படியான ஒரு உத்தம உபதேசத்தைச் செய்தருளுங்கள்.*

*அப்பொழுது தமனுடைய இந்த வசனங்களைக் கேட்டு கர்காசார்யர் தான் நேரில் அனுபவித்த ஒரு ஆச்சரியகரமான ஸம்பவத்தைக் கூறத் தொடங்கினார். அங்குள்ள பாசுபத வ்ருததாரிகளான த்ருடசித்தத்தையுடைய மோக்ஷத்தை விரும்பும் சிஷ்ய கணங்களும் தயாரானார்கள், (25-26-27) கர்காசார்யர் கூறுவார்.*

*நீ இந்த சரீரத்துடனேயே ஸித்தியடைவதற்கு விருப்புகிறாயானால் அதற்கு ஒரு உபாயம் கூறுகிறேன். ஸாவதானமாகக் கேள்.*

*அவிமுக்தம் எனும் ஒரு மஹா க்ஷேத்ரம் இருக்கிறது. அது ஸஜ்ஜனங்களுக்கு ஸர்வ முக்தியும் அளிக்க வல்லது. தர்மார்த்த காம மோக்ஷங்களுக்கு அது இருப்பிடமாகும். அங்கு ஆஶ்ரயித்திருக்கும் ஸர்வ ஜந்துக்களுடையவும் கர்ம ரூபமான விட்டில் பூச்சிகளுக்கு அது தீப ஒளிக்கு ஸமானமாகும்.*

*ஸூர்யனைப் போல் அந்தகார ரூபமான அக்ஞானத்தை நாசம் செய்வதால் அது கர்மரூபமான வ்ருக்ஷங்களுக்குக் காட்டுத்தீ. ஸம்ஸாரமான ஸாகரத்திற்கு அது வடவாமுகாக்னி. மோஷலக்ஷ்மிக்கு க்ஷீர ஸமுத்ரம். ஸுகத்தைச் சுட்டிக் காட்டும் கோயில்.*

மயக்கமாகிய நீண்ட நித்ரையில் படுத்திருப்பவர்களுக்கு அவர்களை விழிக்கச் செய்யும் கண்டாநாதமாகும். அது வந்து போகும் களைப்படைத்த வழிப்போக்கர்களுக்கு வழியில் உள்ள வ்ருக்ஷமாகும். தங்குவதற்கு உள்ள ஆச்ரயஸ்தானமாகும்.

அது அநேக ஜன்மங்களாக சஞ்சலப்படுத்தி வைத்த கோர பாபரூபமான மலைகளின் இறக்கைகளை வெட்டுவதற்கு இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கு ஸமானமாகும். கேவலம் தன்னுடைய நாமத்தை நலன்களையும் கொடுப்பதாகும்.

அது பகவான் விச்வேஸ்வரருடைய முக்யமான ராஜதானியாகும். அது ஸ்வர்க்கத்திற்கும் அபவர்கத்திற்கும் எல்லை ஸ்தானமாகும். அதனுடைய பூமி ஸ்வர்க்க நதியான கங்கையினுடைய சலிக்கும் அலைகளினால் நித்யமும் கழுவப்படுகிறது. ஸகல துக்கங்களையும் ஸம்ஹரிக்கும் இந்த மஹாக்ஷேத்திரத்தில் ஏ! மஹாமதியே! என் எதிரிலேயே ஒரு ஸம்பவம் நடந்தது. அதைக் கேளும், சொல்கிறேன்.

எங்கு காலனுக்கு பயப்படவேண்டாமோ பாபத்திற்கு நடுங்க வேண்டாமோ அப்பேற்பட்ட க்ஷேத்திரத்தின் மஹிமைகளைப் பூர்ணரீதியாக யாரால் வர்ணிக்க முடியும்!

பூமண்டலத்தில் ஜந்துக்களின் பாபத்தை நாசம் செய்ய எத்தனையோ தீர்த்தங்கள் இருக்கின்றன.

அவைகளெல்லாம் தங்களை சுத்தமாக்கிக் கொள்ளும் பொருட்டு காசீபுரிக்கு வருகின்றன. காசீ வாஸி மனிதர்கள் ஸர்வத்தையும் புஜித்துவிட்டு, ஸர்வத்தையும் துறந்துவிட்டு எந்த கதிக்குப் போகிறார்களோ! அந்த கதியை மற்ற இடங்களில் அனேக தான யக்ஞங்களை பண்ணினாலும் அடைய முடியாது

அநுராகம் எனும் விதையிலிருந்து முளைத்தெழுந்த ஸம்ஸார ரூபமாகிய வ்ருஷம் காசியில்

*மீளாநித்ரையென்னும் கோடரியிஞல் வெட்டப்பட்ட பிறகு தளிர் விடாது.*

*எல்லா களர் பூமிகளிலும் காசியே ஸர்வ ப்ரதானமான களர் பூமி. ஏனென்ருல் அங்கு விதைத்தவிதை ஒருபொழுதும் முளேவிடுவதில்லே.*

*உலகத்தில் காசியை ஸ்மரித்த மாத்திரத்தில் எல்லோரும் ஸாது மகாத்மா ஆகிருர்கள். அவர்கள் பாபக் கூட்டங்களிலிருந்து விடுபட்டு உத்தம கதியை அடைகிருர்கள்.*

*ஸத்யம் முதலிய ஸகல லோகங்களிலிருக்கும் ஐச்வர்யம் க்ஷணபங்குரம். சாச்வதமாக இருக்கும் ஸம்பத்து அவிமுக்த க்ஷேத்ரம் ஒன்றே. ஆஞல் அது சிவபிரானுடைய ஆக்ஞை ஒன்றிஞலேயேதான் கிடைக்கும்.*

*அவிமுக்த க்ஷேத்ரத்தில் புழு பூச்சிகளுக்குக்கூட சரீரத்தை விட்டவுடன் என்ன மஹிமை ஏற்படுகிறதோ, அது இந்த ப்ரம்மாண்ட மண்டலத்திலும் வேறு எங்கு ஏற்படுகிறது?*

*கால க்ரமத்தில் ஒருவன் அகஸ்மாத்தாய் காசியை அடைந்தாஞஞல் அங்கிருந்து வெளியில் போகாம்ல் இருப்பதற்கு உபாயம் செய்ய வேண்டும்.*

*கிழக்கில் மணிகர்ணிகேச்வரரும், தெற்கில் ப்ரம்மேச்வரரும், மேற்கில் கோகர்ணேச்வரரும், உத்தரத்தில் பாரபூதேஸ்வரரும் ஆகிய இடங்கள் அவிமுக்த க்ஷேத்ரத்தில் ஸர்வச்ரேஹ்டமும் மஹாபலனே அளிக்கக்கூடியன ஆகும்.*

*ஒருவன் மணிகர்ணிகையில் ஸ்ஞனம் செய்து பகவான் விச்வேஸ்வரரை தரிசனம் செய்துவிட்டு மேற்கூறிய படி காசிக்ஷேத்ரத்தை உள் ப்ரதக்ஷிணமாக செய்து வந்தானேயாஞல் அவன் ராஜஸூய யாகம் செய்த பலனே அடைகிருன்.*

*அவ்விடங்களில் ச்ராத்தம் செய்தால் பித்ருக்கள் முக்தி அடைகிறார்கள். ப்ரம்மாண்ட மண்டலத்தில் அவிமுக்த க்ஷேத்ரத்திற்கு ஸமானமான ஸாதகர்களுக்கு ஸித்தி அளிக்கக்கூடிய மற்றொரு க்ஷேத்ரம் வேறு ஒரு இடத்திலும் இல்லை. இது எப்பொழுதும் ஸத்யம்; ஸத்யம்; ஸத்யம்:*

*இந்த க்ஷேத்ரத்தை ஸித்த புத்தியுள்ள உக்ரமான சிவகணங்கள் கையில் பாசமும் வாளும் கொண்டு துஷ்டர்களிடமிருந்து எப்பொழுதும் ரக்ஷித்துக் கொண்டிருக்கிறார்கள்.*

*பயங்கர அட்டகாஸர்கள் என்னும் பெயருள்ள காவலாட்கள் ஒருகோடி சிவகணங்கள் சூழ இரவும் பகலும் துர்நடத்தையுள்ள ஜனங்கள் அணுகாமல் இந்த க்ஷேத்ரத்தின் வாசலின் மேற்கு பாகத்தை ரக்ஷிக்கிறார்கள்.*

*அதைப் போலவே கோடி சிவ கணங்கள் உடன்கூடபூததாத்ரீசன் என்னும் பெயருடைய தலைவன் தெற்கு பக்கத்தில் ரக்ஷிக்கிறான். அதே போல கோகர்ணன் எனும் பெயருடைய கணன் மேற்கு துவாரத்தை ரக்ஷிக்கிறான். வடக்கு வாசலை கண்டா கர்ணன் என்னும் தலைவன் ரக்ஷிக்கிறான். அதைப்போல ஈசான் முக்கைசாகவக்த்ரனும் அக்னி கோணத்தை பீஷணனும், நிர்ருதி கோணத்தை சங்கு கர்ணனும் வாயு கோணத்தை த்ருமிசண்டனும் ரக்ஷிக்கிறார்கள். இந்த விதமாக இந்த பெரிய தேஜஸுள்ள கணங்கள் க்ஷேத்ரத்தை ரக்ஷிக்கிறார்கள்.*

*கங்கைக்கு அக்கரையிலிருந்து கொண்டு, காலாக்ஷன், ரணபத்ரன், கௌலேயன், காலகப்பணன் எனும் பெயருடைய சிவ கணங்கள் மேற்கு பாகத்தை ரக்ஷிக்கிறார்கள். அஸி நதிக்கு அக்கரையிலிருந்து கொண்டு வீரபத்ரன், லபன், கர்தமஸித்த விக்ரகன், ஸ்தூல கர்ணன், மஹாபாஹு, எனும் கணங்கள் தெற்கு பக்கத்தை ரக்ஷிக்கிறார்கள்.*

தேகலி விஞயகருக்கு, ஸமீபத்திலேயே இருந்துகொண்டு, விசாலாக்ஷன், குண்டோதரன், மஹாபீமன், மஹோதரன் எனும் கணங்கள் மேற்கு த்வாரத்தை ரக்ஷிக்கிருர்கள்.

வருணையின் அக்கரையிலிருந்து கொண்டு. நந்திசேனன், பஞ்சாலன், கரபதன், கரண்டகன், ஆனந்தகோபன், வப்ரூ இவர்கள் வடக்கு பாகத்தை ரக்ஷிக்கிருர்கள்.

இந்த விதமாக நன்ருகப் பாதுகாக்கப்பட்ட இந்த புண்ய மஹாக்ஷேத்ரத்தில் ஓங்காரேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. இங்கு அனேக ஸாதகர்கள் இந்த சரீரம் இருக்கும் பொழுதே பரம ஸித்திகள் அடைந்திருக்கிருர்கள்.

இந்த லிங்கத்தை ஆராதனை செய்த கபிலர், காவர்ணி, ஸ்ரிகண்டர், பிப்பல், அம்ஸுவான் ஆகிய எல்லா சைவ சித்தாந்திகளும் ஸித்தி அடைந்திருக்கிருர்கள்.

இவர்கள் எல்லோரும் இந்த லிங்கத்தை பஞ்சோபசாரங்கடன் பூஜை செய்து உடுக்கை அடித்துக் கொண்டு நடனமாடி இந்த லிங்கத்தில் லயம் அடைந்திருக்கிருர்கள்.

ஏ மஹா புத்திசாலியான ப்ராம்மண ச்ரேஷ்ட! உத்தமனே! அங்கு இன்னும் ஒரு விசித்திரமான ஸம்பவம் நிகழ்ந்தது. அதையும் உன்னிடம் கூறுகிறேன். ஒரு தவளை அந்த லிங்கத்தின் பக்கத்தில் திரிந்து கொண்டு ப்ரதக்ஷிணமாக வருவதும் லிங்கத்திற்கு ஸமர்பிக்கப்பட்ட அக்ஷதையைத் தின்றுகொண்டும் இருந்தது.

ஆஞல் சிவனுடைய நிர்மால்யத்தை புஜித்ததால் அங்கு அதற்கு மரணம் ஏற்படவில்லை. அது சிவ நிர்மால்யத்தை புஜித்த பாபத்திஞல் க்ஷேத்திர எல்லைக்கு வெளியில் சென்று மரணம் அடைந்தது.

*விஷத்தை புஜிப்பது நல்லது. ஆனுல் சிவ நிர்மால்யத்தை ஒருபொழுதும் புஜிக்கக்கூடாது. ஏனென்ருல் விஷம் சாப்பிட்டவனைத்தான் கொல்லும். ஆனுல் சிவ நிர்மாலயம் புத்ரபௌத்ரர்கள் வரையில் நாசமடையச்செய்யும்.*

*சிவ ஸம்பத்தைச் சாப்பிட்டுக் கொழுத்திருக்கும் ஜனங்களை ஸாதுக்கள் தொடக்கூடாது. ஏனென்ருல் சிவஸம்பத்தை அனுபவித்தவர்கள் அந்த பலத்தினுல் ரௌவம் என்ற நரகத்தை அடைகிருர்கள்.*

*அது, இருக்கட்டும். ஒருநாள் அந்தத் தவளை இங்குமங்குமாக தாவுவதைப் பார்த்த காகம் அதைத் தன் அலகினுல் கொத்திக் கொண்டு க்ஷேத்திர எல்லைக்கு வெளியில் சென்றது.*

*அந்தக் காகம் தவளையைத் தூர எறிந்துவிட்டது. அதனுல் அது இறந்துவிட்டது. அதன் பிறகு அந்தத் தவளை காலகிரமத்தில் அந்த க்ஷேத்திரத்தில் லிங்கத்தை ப்ரதக்ஷிணம் செய்து தொட்ட புண்ணியத்தினுல் பவித்ரமாகி காசியிலேயே புஷ்பவடு எனும் க்ருஹத்தில் புண்யவதி என்னும் பெயருள்ள பெண்ணுகப் பிறந்தது.*

*அந்தப் பெண்ணின் எல்லா அங்கங்களும் ஸாமுத்ரிகா லக்ஷணப்படி மிக லக்ஷணமாக அமைந்திருந்தன. ஆனுல் நிர்மால்யமான அக்ஷதையைத் தின்றதனுல் அவளுடைய முகம் மட்டும் கழுகின் முகம் போல் அமைந்தது.*

*அந்தப் பெண் மிகவும் இனிமையான குரலுடன் ஸங்கீத ஸாஸ்திரத்தை ஒழுங்காக அறிந்து இருந்தாள். ஸப்தஸ்வரங்களை மூன்று க்ரமங்களையும், இருபத்தி ஒன்று மூர்ச்சனைகளையும், நாற்பத்தொன்று ஆலாபனைகளையும், நூற்றிஒன்று தாளங்களையும், ஆறு ராகங்களையும், அந்த ராகங்களுடைய ஐந்து ஐந்து உபராகங்களையும் இந்த விதமாக முப்பத்தாறு ராக ராகினிகளையும் அறிந்து பாடகர்களின் ஸந்தோஷத்தை அறிந்து கொண்டு வந்தாள்.*

பிறகு காலதேச விசேஷத்திஞல் அறுபத்தி ஐந்து ராகங்களின் பத்துகிளைகளான ராகராகினிகள் ஏற்பட்டன.

எத்தனை தாளங்கள் உண்டோ அத்தனை ராகராகினிகள் உண்டு. இந்த விதமாக கந்தர்வ உபநிஷதம் கூறுகிறது.

இந்த விதமாக அந்த ஸ்வரதை மதுரமாக ஆலாபனை செய்யும் மாதவி எப்பொழுதும் ஓங்காரரேஸ்வரரைப் பூஜித்துக் கொண்டு வந்தாள்.

அதே புஷ்பவடுவின் புத்ரியான அப்பெண் மதிக்க முடியாத யௌவன தசையை அடைந்திருந்தும் கூட பூர்வ ஜன்ம வாஸனு பலத்திஞல் ஓங்கார ஈச்வரரை பக்தி செய்து வந்தாள்.

ஏ! தமனு! அவளுடைய மனம் சஞ்சலம் அடைந்தாலும் கூட மஹாத்மாக்கள் மனம் எப்படி யோகாப்யாஸத்தில் சலியாமல் போகுமோ, அதுபோல ஓங்காரேஸ்வருடைய பூஜையில் சலியாமல் உறுதி பெற்றது. பகலில் பசி தாகமும் இரவில் உறக்கமும் அவளைத் துன்புறுத்தவில்லை.

அந்த லிங்கத்தின் தரிசனம் செய்ததிஞல் அவள் மனம் சோம்பலின்றி அமைதியாக இருந்தது. இரவும் பகலும் அவள் இமைகளைக் கொட்டும் நேரத்தைக் கூட அந்த ஸாத்வீயான கன்னிகை லிங்க பூஜைக்கு இடையூருகக் கருதிஞள்.

இந்தக் கண்கள் மூடித் திறப்பது கூட லிங்க தரிசனத்திற்கு இடையூருகவல்லவா இருக்கிறது.

இதற்கு பிராயச்சித்தம் என்ன செய்வது என்று எண்ணிஞள். அந்தக் கன்னிகை இந்தவிதமாகச் சிந்தித்துக் கொண்டு லிங்கத்தை ஆராதித்து வந்தாள்.

தாஹமெடுத்தால் கூட லிங்கத்தின் நாமாம்ருதத்தையே தண்ணீராகப் பருகிஞள்.

காதளவோடிய பெரிய பெரிய கண்கள் ஸஜ்ஜனங்களின் ஹ்ருதயாகாசவாஸியான ஓங்காரரே ஸ்வரரைத் தவிர மற்ற இடங்களில் நிலைக்கவில்லை.

அவளுடைய காதுகளில் ஓங்காரரேஸ்வரரின் ஜபத்தைத் தவிர வேறு சப்தங்கள் விழவில்லை. அவளுடைய இரண்டு கைகளும் ஓங்காரேஸ்வரருக்கு மாலை தொடுப்பதைத் தவிர வேறு காரியம் செய்யவில்லை.

அவளுடைய இரண்டுகால்களும் மோக்ஷ லக்ஷ்மி எழுந்தருளி இருக்கும் ஓங்காரேஸ்வரர் ஆலயத்தை விட்டு வேறு எங்கும் ஸுகத்தை வேண்டிச் செல்லவில்லை.

ப்ரம்ம ப்ரகாசகர், ப்ரணவத்திற்கு வாச்யமானவர், பரம ஸாரஸ்வரூபர், மூன்றுவேதஸ்வரூபர், ஸப்தப்ரும்மம், நாதபிந்து, ஸர்வ கலைகளுக்கு இருப்பிடம்.

அக்ஷரஸ்வரூபம், விச்வரூபர், கார்யகாரணத்மகர், வரேண்யர், வரப்ரதர், ஸர்வச்ரேஷ்டர், சாச்வதர், ஈச்வரர், ஸர்வ லோகத்திற்கும் பிதா, ஸர்வ ஜந்துக்களையும் பாலிப்பவர், எல்லா உலகங்களையும் ஸம்ஹரிப்பவர், எல்லா உலகங்களாலும் வந்திக்கப்படுபவர், ஆதி அந்த மற்றவர், நித்தியர், ஸர்வ மங்களர், சங்கரர், அவ்யயர், அத்யுதயர், த்ரிகுணந்துயர், பக்தஹ்ருதயவாஸி, நிருபாதி, நிராகாரர், நிர்விகாரர், நிரஞ்ஜனர், நிர்மலர், நிரஹங்காரர், நிஷ்ப்ரபஞ்சர், ஸ்வப்ரகாசர்.

ஸ்வாத்மாராமர், அனந்தர், ஸர்வ வ்யாபகர், ஸர்வதர்சகர், ஸர்வஸ்வதாதா, ஸர்வ ஸுகாஸ்பதர், எல்லாம் ஓங்காரேஸ்வரரே. இந்த மாதிரி அவளது நாக்கு எப்பொழுதும் இரவும் பகலும் ஜபித்துக் கொண்டே இருக்கும். வேறு ஒரு பெயரும் அவள் நாவில் வராது. அவளுடைய நாக்கு எப்பொழுதும் ஓங்காரேஸ்வரருடைய நாம ரஸத்தையே ருசி பார்க்கும். வேறுரஸங்கள் அவளுக்கு ருசிக்காது.

மாதவி அங்கு ப்ரதிதினமும் பெருக்கி மெழுகுவாள். சித்திர விசித்ரமான கோலம் போடுவாள். பூஜா பாத்திரங்களைத் தேய்த்து வைப்பாள். அந்த இடத்தில் ஓங்காரேஸ்வரரை நித்திய பூஜை பண்ணுபவர்கள் பாசுபத யோகத்தைச் சேர்ந்தவர்கள். அந்தப் பெண் அவர்களைத் தகப்பனார் என்று மதித்து ச்ரத்தையோடு சிச்ரூஷை செய்வாள்.

ஒரு தடவை வைகாசி மாதத்து சுக்ல பக்ஷ சதுர்தசி அன்று பகல் முழுவதும் உபவாஸம் இருந்து இரவு கண் விழித்து காலையில் ஸ்னானம் செய்த மாதவி, ப்ராத: காலத்தில் தரிசனம் செய்ய யாத்ரையாக வந்த பக்த ஜனங்கள் இங்குமங்கும் சென்ற பின்னர், மிகவும் ஸந்தோஷதுடன் கோவிலைப் பெருக்கி, துடைத்து லிங்கத்திற்குப் பூஜை செய்த பிற்பாடு மதுர கீதங்களைப்பாடி பக்தி பரவசமாக ஆடிக்கொண்டு ஓங்காரேஸ்வரரைத் த்யானித்துக் கொண்டு அந்த லிங்கத்தில் மறைந்து போனாள்.

அங்குள்ள ப்ரதான ஆசார்யரும் மகா தபஸ்விகளும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே மகா புத்திமதியான அக்கன்னிகை அந்த பார்த்திவ சரீரத்துடனே வானளவாகக் கிளம்பிய ஓங்கார லிங்கத்தின் ஜோதியில் ஜோதி ரூபமாகக் கலந்து விட்டாள்.

இன்னாள் வரையில் அந்த க்ஷேத்ர நிவாஸிகள், வைகாசி மாதத்தில் சுக்ல சதுர்தசி அன்று அந்த ஓங்காரரேஸ்வர ஆலயத்திற்கு யாத்ரையாக சென்று உற்சவமாக கொண்டாடுகிறார்கள்.

அங்கு சதுர்தசியன்று உபவாசமிருந்து கண்விழித்தவர்கள் வேறு எங்கு மரணமடைந்தாலும் ஞானவான் ஆகிறார்கள். ப்ரம்மாண்டத்துள் அடங்கிய ஸர்வ தீர்த்தங்களும், இந்த வைகசசி மாத சுக்லபக்ஷ சதுர்தசி அன்று ஓங்காரேஸ்வரரைத் தரிசிக்க ஆவல் கொண்டு

வருகின்றன. சிவபுராணத்திலும் இதைப்பற்றிக் கூறி இருக்கிறது.

லிங்கத்திற்கு முன்னுல் ஸ்ரீ முகி என்னும் உத்தமமான குஹை இருக்கிறது. அது பாதாளத்திற்குப் போகும் வாசற்படி என்று கூறப்படுகிறது. இங்கு ஸித்தர்கள் வஸிக்கிருர்கள்.

உத்தமவ்ரதம் இருந்து ஐந்து இரவுகள் அந்தக் குகையில் வஸித்தால் அவர்களுக்கு நாக கன்னிகைகளின் தர்சனம் கிடைக்கிறது. அவர்கள் வ்ரததாரிகளுக்கு சுபாசுப பலன்களைக் கூறுகிருர்கள்.

இந்த குகைக்கு வடக்கு பாகத்தில் ரஸோதகம் என்னும் கிணறு இருக்கிறது. ஆறு மாதங்கள் வரையில் அந்த ஜலத்தைக் குடித்தால் ப்ரம்மரஸாயனம் குடித்த ருசி ஏற்படுகிறது.

அங்கே நாதம் பிறந்த இடமான நாதேஸ்வரர் எனும் லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசனம் செய்வதால் உலகத்திலுள்ள எல்லா சப்தங்களும் காதில் கேட்கின்றன.

அங்கே கங்கை வருண ஜலத்தினுல் நிரம்பிய மத்ஸ்யோதரி தீர்த்தத்தில் ஸ்னனம் செய்வதினுல் மனிதன் க்ருதக்ருத்யனுகிருன். அவர்களைப் பிறகு சோகமே அணுகாது.

ஓங்காரேஸ்வருடைய ஸேவார்த்திகள் பார்த்திவ சரீரத்துடன் திவ்ய ரூபமாகி உடனேயே பரமஸித்தியை அடைகிருர்கள்.

முதலாவது ஸமஸ்த ப்ரம்மாண்டத்திலும் அவிமுக்த க்ஷேத்ரம் ப்ரதானமாகும். அதிலும் மத்ஸ்யோதரி கரையிலிருக்கும் ஓங்காரேஸ்வருடைய ஸ்தானம் அதிலும் ச்ரேஷ்டமானது.

எவர்கள் காசியில் ஓங்காரேஸ்வரரை வணங்கவில்லையோ, பூஜிக்கவில்லையோ அவர்கள்

எல்லோரும் மாதாவின் யௌவனத்தை சீரழிக்கப் பிறந்தவர்கள்.

ஏ! ப்ராம்மணோத்தமரே! எப்பொழுது பகவான் விச்வேச்வரர் மந்த்ராஜலத்திலிருந்து ஆனந்தவனத்திற்கு வந்தாரோ, அப்பொழுது முதல் அங்கு நதி ஸமுத்ரம், பர்வதம், தீர்த்தம் தீவுகளுடன் எல்லா தேவதைகளும் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருக்கிறார்கள்.

என்னுடைய பாக்யத்தினாலேயே நீர் இதை இச்சமயம் எனக்கு ஞாபகப் படுத்தினீர்கள். நானும் வருகிறேன்.

இந்த மகா பாசுபதவ்ரததாரிகள் ஆன இந்த என் சிஷ்யர்களும் கூட காசிக்குச் செல்ல விரும்புகிறார்கள். ஏனென்றால் மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் எவரும் வார்தக்யம் அடைந்தும் கூட காசியை அடையவில்லையோ, அவர்கள் எல்லாம் மிக அரிதான இந்த மானிடஜன்மம் அடைந்த பிறகும்கூட அவர்கள் மஹாஸுகத்தை அடையமாட்டார்கள்.

இந்த்ரியங்கள் தளவதற்கு முன்னால் ஆயுள் நஷ்டமடைவதற்கு முன்னால் சங்கரருடைய ஆனந்தவனத்திற்குச் சென்று கட்டாயம் தரிசிக்கவேண்டும். எவர்கள் லக்ஷ்மீகரமான மஹாதேவர் ஆலயம் இருக்கும் ஆனந்தவனத்தை ஆச்ரயிருக்கிறார்களோ, அந்த மகா ஸுகத்தையே ப்ரதான ஆதாரமாகக் கொண்ட அவர்கள் லக்ஷ்மி தேவி சலனத்தை விட்டு அவர்களிடமிருந்து பிரியாமல் இருக்கிறாள்.

இந்த விதமாக பாசுபதச்ரேஷ்டர்களான கர்காசார்யர் இந்த ரமணீயமான கதையைக் கூறிவிட்டு பரத்வாஜரின் புத்ரனான தமனோடுகூடக் காசீபுரியை அடைந்தார்.

அந்த தர்மாத்வான தமனனும் கர்காசார்யருடன் ஸ்ரீ ஓங்காரேஸ்வரரை ஆராதித்து அந்த லிங்கத்தில் மறைந்தான்.

*ஸ்கந்தர் கூறுவார் - ஏ இல்வலசத்ருவே! அவிமுக்த க்ஷேத்ரத்தில் ஓங்காரேஸ்வரர் ஒரு ப்ரதான ஸ்தானமாகும், ஏனென்றால் அங்கு அனேகஸாதகர்கள் பரமஸித்தியை அடைந்திருக்கிறார்கள்.*

*கலியுகத்தில் பாபஹ்ருதயம் படைத்தவருக்கு விசேஷமாக நாஸ்திக ஜனங்கள் ஓங்காரேச்வர மாஹாத்மியத்தை ஒருபொழுதும் கூறக்கூடாது. எந்த அறிவிலிகள் மகாதேவரை நிந்திக்கிறார்களோ, க்ஷேத்ரத்தை நிந்திக்கிறார்களோ, புராணத்தை நிந்திக்கிறார்களோ, அவர்களுடன் பேசுவது கூடாது. உலகத்தில் ஓங்காரேஸ்வரருக்கு சமமாக வேறு லிங்கமே கிடையாது. இந்த விஷயத்தை மஹாதேவர் தீர்மானமாக கௌரியிடம் கூறி இருக்கிறார்.*

*ஒருமைப்பட்ட மனத்துடன் இந்த அத்யாயத்தைக் கேட்பவர்கள் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபட்டு சிவலோகத்தை அடைகிறார்கள்.*

*இந்த விதமாக ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான காசி காண்டத்தில் உத்ரார்த்தத்தில் பாஷாடீகா வான எழுபத்தி நான்காவது அத்தியாயம் ஸம்பூர்ணம்.*



# அத்தியாயம் 75

*ஏ! விசாகா, மஹா பாதக நாசினியான அந்த ஓங்காரேஸ்வரருடைய கதையைக் கேட்கக் கேட்க த்ருப்தியே ஏற்படுவதில்லை. ஆதலால் இப்பொழுது தாங்கள் த்ரிலோசனேஸ்வரரின் கதையைக் கூறுங்கள்.*

*ஹே! மஹாபுத்தே! ஷண்முகா! பகவான் மஹாதேவர் பகவதியிடம் பிறகு த்ரிலோசன லிங்கம் வெளிப்பட்ட கதையை எந்த விதமாகக் கூறினார்? அதைக் கூறவும்.*

*ஸ்கந்தர் கூறினார்:- ஹே! முனியே! தேவதேவர் த்ரிலோசனரின் உற்பத்தியாகிய ச்ரமத்தை நீக்கும் கதையை எப்படிக் கூறினாரோ அப்படிக் கூறுகிறேன். கேளும்: இந்த ஸ்தானம் காசியில் விரஜாபீடம் என்று ப்ரஸித்தமாக இருக்கிறது. அங்கு உள்ள லிங்கத்தின் பெயர் த்ரிவிஷ்டபர் என்று கூறப்படுகிறது. அந்த பீடத்தை தரிசனம் செய்வதால் மனிதர்களுடைய ரஜோகுணம் நீங்குகிறது.*

*ஏ! கும்ப முனியே! த்ரிலோசனத்திலிருந்து தெற்கு பக்கத்தில் மூன்று நதிகள் ஒன்று சேருகின்றன. இம்மூன்றும் பாபத்தைப் போக்கக் கூடிய புண்ய தீர்த்தம். அந்த லிங்கத்தை ஸ்னானம் செய்விக்கவே, ஸரஸ்வதி, நர்மதா, யமுனா, ஆகிய மூன்று நதிகளும் அங்கு மூன்று சிறு ஊற்றுகளாகப் பெருகி வருகின்றன.*

*இந்த மூன்று நதிகளும் கையில் ஜலம் நிறைந்த கும்பத்தை ஏந்தி, மகா தேஜஸ்வியான த்ரிவிஷ்டப லிங்கத்திற்கு மூன்று காலமும் அபிஷேகம் செய்கின்றன. அந்த லிங்கத்தின் மூன்று பக்கங்களில் அம்மூன்று நதிகளும் தங்கள் தங்கள் பெயரில் ஒரு லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்திருக்கின்றன. அந்த லிங்கங்களை தரிசனம் செய்தால், அந்த நதிகளில் ஸ்னானம் செய்த பலன் கிடைக்கும்.*

*த்ரிவிஷ்டபருக்குத் தெற்கு பக்கத்தில் ஸரஸ்வதீச்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசித்து*

*ஸ்பர்சித்தால் ஜடத்தன்மை விலகி சாச்வதம் என்னும் வித்வத் பதவியைக் கொடுக்கும், யமுனேஸ்வரர் என்னும் லிங்கம் மேற்கு பக்கத்தில் இருக்கிறது அதை பக்தியுடன் பூஜித்தால் அவர்களுடைய யமலோக பயம் நீங்குகிறது.*

*த்ரிலோசனருக்குக் கிழக்கு பாகத்தில் பரம மங்களத்தைக் கொடுக்கும் நர்மதேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதை பூஜிப்பவர்கள் கர்ப்ப வாஸத்தை அடையமாட்டார்கள்.*

*த்ரிவிஷ்டபலிங்கத்து ஸமீபத்தில் பில்பிலாதீர்த்தத்தில் ஸ்னானம் செய்து த்ரிலோசன லிங்கத்தை தரிசனம் செய்தால் பிறகு ஒருவன் ஏன் சோகப்பட வேண்டும்? அதிகம் கூறுவானேன்? ஒருவன் த்ரிவிஷ்டபலிங்கத்தை நினைத்தாலே போதும், ஒருவன் த்ரிவிஷ்டபத்திற்கு அதாவது ஸ்வர்கத்திற்கு அதிபதியாவான். அதைப்பற்றி யோசிக்கவே வேண்டாம்.*

*த்ரிவிஷ்டபரை தரிசனம் செய்பவர்கள் நிச்சயமாக ப்ரம்ம பதவியை அடைவார்கள். பிறகு அவர்களே உலகத்தில் சிறந்த அறிவாளிகளாகவும், க்ருதக்ருத்யர்களாவும் ஆவர்.*

*ஆனந்த வனத்தில் த்ரிவிஷ்டபர் மூர்த்தியை வணங்கினவர் அல்லது அவர் நாமத்தைக் கேட்ட அறிவாளிகள் உலகில் ஏழு ஜன்மங்களில் செய்த ஸஞ்சித பாபங்கள் விலகி ஸந்தேஹமில்லாமல் பவித்ரம் ஆவார்கள்.*

*உலகத்தில் எத்தனை லிங்கங்கள் இருக்கின்றனவோ, அவர்கள் தர்சனத்தால் என்ன பலன்கள் கிடைக்கின்றனவோ, எனக்குத் தெரிந்தமட்டில் காசியில் த்ரிவிஷ்டப லிங்கத்தை தரிசனம் செய்வதால் அந்த பலன்கள் கிடைக்கின்றன.*

*ஏனென்றால் காசியில் த்ரிவிஷ்டப லிங்கத்தை தரிசனம் செய்வதால் ஸ்வர்க்கம் கண்ணுக்கு*

தென்படுகிறது. மேலும் க்ஷணமாத்திரத்தில் அந்த மனிதன் பாபமில்லாதவன் ஆகிவிடுகிறுன்.

கர்ப்பவாஸியும் ஆகமாட்டான். எவன் ஒருவன் உத்தரவாஹினியான கங்கை ஜலத்தில் பில்பிலா தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்கிறுனே அவனுக்கு எல்லா தீர்த்தங்களிலும் ஸ்ஞனம் செய்த பலனும், யக்ஞத்தில் அவப்ருத ஸ்ஞனம் செய்த பலனும் கிடைக்கிறது.

எங்கு இந்த பரம பவித்ரமான நதிகள் வாஸம் செய்கின்றனவோ அங்கு ச்ராத்தம் செய்ய முடிந்தால் கயா ச்ராத்ததினுல் என்ன ப்ரயோஜனம்? பில்பிலா தீர்த்தத்தில் ஸ்ஞனமும் பிண்டதானமும் திரிவிஷ்டப லிங்கத்தின் தரிசனமும் செய்வதால் கோடி தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்த பலன் கிடைக்கிறது. அன்னிய ஸ்தானங்களில் ஸம்பாதிக்த பாபங்கள் காசியின் தரிசனத்தினுலேயே விலகிவிடுகின்றன. ஆனுல் காசியில் செய்த பாபங்களோ வென்றுல், அவர்களை பிசாசு உருவமாக்கிவிடுகிறது.

பூமண்டலங்கள் எல்லாவற்றிலும் ஆனந்தகானனமே ச்ரேஷ்டமானது. அதிலும் அங்கு தீர்த்த ஸ்ஞனம் அதைவிட மேலானது. இவைகளெல்லாவற்றையும் விட ஓங்காரேஸ்வரர் உடைய ஸ்தானம் பெரிதானது.

மோக்ஷ மார்கத்தைக் காண்பிக்கும் ஓங்காரேஸ்வர மகாலிங்கத்தைவிட, ச்ரேயஸை அளிக்கும் த்ரிலோசனலிங்கம் அத்யந்த ச்ரேஷ்டமானது.

தேஜஸுக்கு ஸுர்யனும், பார்ப்பதற்கு சந்திரனும், எவ்வளவு ப்ரதானமோ, அதுபோல எல்லா லிங்கங்களைக் காட்டிலும் த்ரிலோசனலிங்கம் முக்கியமானது.

அசாதாரணமாக மஹா ஸுகத்தின் கஜானுவான நிர்வாண லக்ஷ்மியின் பரமபதத்தையும் கூட த்ரிலோசனரை பூஜிப்பவருக்கு கடினமானது அல்ல.

த்ரிலோசனரை ஒருமுறை பூஜை செய்வதினுல் என்ன நலன்கள் கிட்டுகின்றனவோ, அந்த பலன்கள் அன்னிய

லிங்கங்களைத் தன் வாழ்நாள் பூராவும் பூஜைசெய்தாலும் கிடைப்பதில்லை.

காசியில் த்ரிலோசனலிங்கத்தை அர்ச்சனை செய்யும் மஹாபுத்திமான்கள் எல்லாம் என்னுடைய ப்ரேமைக்கு பாத்திரமானவர்கள். மூன்று உலகத்தவராலும் பூஜிக்கத் தகுந்தவர்.

நரர்கள் எல்லாவற்றையும் துறந்து ஸன்யாஸம் எடுத்துக்கொண்டு பாசுபத மதத்தை எடுத்துக்கொண்டு விட்டால் நியமங்களிலிருந்து நழுவினால் ஏன் பயப்பட வேண்டும்? மகாபாதகத்தொடர்களை ஸம்ஹரிப்பதும், மோக்ஷத்தின் கோசக்ருஹமானவரும், புண்யராசியும் ஆனவருமான த்ரிவிஷ்டப மகாலிங்கம் திருவுருக் கொண்டு எழுந்தருளி இருக்கிறார்.

அந்த த்ரிவிஷ்டபரான த்ரிலோசன மஹாலிங்கத்தைப் பூஜித்தால் நூற்றுக்கணக்கான ஜன்மங்களில் சேர்த்து வைத்த பாபங்கள் எல்லாம் நிமிஷத்தில் நசித்துவிடுகின்றன.

ப்ரம்மஹத்தி செய்தவர், தங்கத்தைத் திருடினவர், குரு பத்தினியைப் புணர்ந்தவர், வருஷக்கணக்காக இவைகளோடு சேர்க்கையுடன் இருப்பவன் இவர்கள் எல்லோரும் மஹாபாபிகள் என்று கூறப்படுவார்கள்.

பரஸ்தீரீ கமனம் செய்பவர்கள், பரஹிம்ஸை செய்பவர்கள், பரநிந்தை செய்பவர்கள், விச்வாஸ த்ரோஹி, நன்றிகெட்டவர்கள், கருச்சிதைவு செய்தவர்கள்,

சூத்திரன், பதி, மாதா, பிதா, குரு இவர்களைத் த்யாகம் பண்ணினவர்கள், தீவைத்தவர்கள், விஷம் வைத்தவர்கள். கோவதை செய்தவர்கள், ஸ்தீரீவதை செய்தவர்கள், சூத்திரரைக் கொன்றவர், கன்னிகைகளை தூஷிப்பவர், க்ரூரத்தன்மையுடையவர்கள், கஞ்ஜர்கள், ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்காதவர்கள், பரநிந்தை செய்பவர்கள், நாஸ்திகர்கள், பொய்ஸாக்ஷி சொன்னவர்கள், அபவாதம்

சொன்னவர்கள், புஜிக்கத் தகாதவற்றை புஜிப்பவர்கள், விற்கக்கூடாதவற்றை விற்பவர்கள், இப்படியான எல்லா பாபங்களேயும் செய்தாலும்கூட த்ரிலோசனலிங்கத்தை வணங்கிஞல் இத்தகைய மஹா பாபங்களிலிருந்து விடுபடுவார்கள்.

ஆஞல் சிவநிந்தை செய்தவர்களுக்கு கதியே கிடையாது. சிவபிரானே நிந்திப்பவர்கள், சிவசாஸ்த்ரங்களே நிந்திப்பதில் ஈடுபட்டவர் ஆகிய மூடர்களுக்கு நற்கதி என்னவென்று ஒரு சாஸ்திரமும் கூறவில்லே.

சிவநிந்தை செய்யும் மஹா அதமன், ஆத்மத்ரோகம் செய்தவன் மூன்று உலகங்களுக்கும் தீங்கு செய்தவன், அவன் பேசுவதற்கே தகுதி அற்றவன். சிவபிரானேயோ, சிவ பக்தர்களேயோ நிந்தை செய்பவர்கள், சந்த்ர ஸுூர்யர் உள்ளவரை நரகத்தில் ஆழ்ந்திருப்பார்கள்.

காசியில் மோக்ஷத்தை விரும்புகிறவர், கருத்துடன் சைவ சிந்தார்த்திகளே பூஜிக்க வேண்டும். ஏன், என்ருல் அவர்களே பூஜிப்பதஞல் சிவபிரான் ஸந்தேஹமில்லாமல் ப்ரஸன்னமாவார்.

உலகத்தில் எல்லா பாபங்களுக்கும் ப்ராயஸ்த்தம் பண்ண வேண்டுமாஞல் ப்ரமாணமறிந்தவர் என்ன செய்ய வேண்டுமென்ருல் பாபத்திற்கு பயந்துகொண்டு ப்ராயஸ்சித்தம் செய்யவேண்டுமாஞலும் சாஸ்திர ப்ரமாணமான வார்த்தைகள் உண்மை என்று எண்ணிஞலும் மனதில் திடநிச்சயம் கொண்டு எல்லாவற்றையும் விட்டுவிட்டு சிவபிரான் எழுந்தருளியிருக்கும் ஆனந்த கானனத்திற்குச் செல்லவேண்டும்.

அந்த க்ஷேத்திரத்தில் ப்ரவேசித்தவுடனேயே நம்பிக்கை உள்ளவர்களுக்கு பாபங்களிஞல் ஒரு இடையூறும் ஏற்படாது. மிகுந்த தர்மம் ஏற்படுகிறது.

இங்கு மூன்று நதிகளினுல் சேவிக்கப்பட்ட அத்யந்த நிர்மலமான த்ரிலோச்சனருடைய த்ருஷ்டி பட்ட உடன் மஹாபாதகங்கள் விடுபடுகின்றன.

பரம பவித்ரமான மூன்று நதிகளும் ஸங்கமமாகும் பிப்பிலாதீர்த்தத்தில் க்ருஹஸ்தர்களுக்கு உள்ள விதிப்படி ஸ்ஞனம் செய்து பித்ருக்களுக்குத் தர்பணம் பண்ணி பணமமதையை விட்டு முடிந்தவரையில் தானம் செய்து த்ரிவிஷ்டப லிங்கத்தை தரிசனம் செய்து பரமபக்தியுடன் நானுவிதமான வாஸனேயுடன் கூட பஞ்சாம்ருதம், தூபம், மாலேகள், தீபம், நைவேத்யம், வஸ்த்ரங்கள், ஆபரணங்கள், மணி, கண்ணுடி, சாமரம், விசித்திரமான கொடிகள், ஆலவட்டங்கள் முதலிய பூஜா ப்ரதக்ஷிணம், நமஸ்காரம், கோவில் சேவை செய்பவர்களுக்கு வெகுமதி, தானம் இவைகள் மூலமாக நான் பாபமில்லாதவன் ஆகிவிட்டேன் என்று சொல்லிக்கொண்டு ப்ராம்மணர்கள் வாயிலிருந்தும் நீ பாபமற்றவன் ஆகிவிட்டாய் என்ற சொல்லேக் கேட்டும், பாபஹிரதனுகிருன்.

பிறகு பஞ்சகங்கா கட்டத்தில் ஸ்ஞனம் செய்து மணிகர்ணிகையிலும் ஸ்ஞனம் செய்து விச்வேச்வரரையும் பூஜை செய்தால் புண்ணியத்திற்கு அர்ஹதை உள்ளவனுகிருன். இது மஹா பாபங்களேக் கழுவும் மஹா ப்ராயஸ்த்தம் என்று கூறப்படுகிறது.

காசி மஹாத்மியத்தை நிந்தை செய்கிறவர்களிடமும் நாஸ்திகர்களிடமும் ஒருபொழுதும் கூறக்கூடாது.

ஏ! கும்பமுனியே! பணத்திற்கு ஆசைப்பட்டு, நாஸ்திகனுக்கு இந்த உத்தம ப்ராயஸ்சித்தத்தைக் கூறினுல் அவன் நரகத்தை அடைவான். இது முற்றிலும் ஸத்யம், ஸத்யம், ஸத்யம்;

உலகம் முழுவதும் வலம் வந்தால் என்ன பலன் கிடைக்கிறதோ, அந்தப் பலன், ப்ரதோஷ ஸமயத்தில் காசியில் த்ரிலோசனரை ஒருமுறை வலம் வந்தால் கிட்டும்.

காசியில் ஸர்பத்தை மேகலையாக அணிந்த த்ரிவிஷ்டபலிங்கத்தை தரிசனம் செய்தால் அவன் காசியை விட்டு வேறு எங்கு மரணமடைந்தாலும் மறுஜன்மத்தில் முக்தி அடைகிறுன்.

மற்ற எல்லா லிங்கங்களையும் விசேஷ காலத்தில் தர்சித்தால புண்ணியம் என்று கூறுகிறுர்கள். ஆனுல் திரிவிஷ்டப லிங்கத்தை தரிசிப்பவருக்கு இரவு, பகல் எப்பொழுதுமே புண்ணிய காலம்தான். ஓங்காரம் முதலிய மஹாலிங்கங்களும் பாபங்களை நாசம் செய்பவைகளே. ஆனுல் ஏ! பார்வதி! த்ரிலோசனரரின் சக்தி அப்படி அல்ல.

ஏ! அபர்ணே! எந்தக் காரணத்தினுல் இந்த லிங்கம் மற்ற எல்லா லிங்கங்களையும்விட மிக உத்தமமானது என்று கூறுகிறேன்? காது கொடுத்துக்கேள்.

பூர்வகாலத்தில் இந்த மகாலிங்கம் நான் யோக நித்ரையில் இருக்கும் பொழுது, புவர்ஸ்தலத்தில் இருந்து ஏழு பாதாளலோகங்களைத் துளைத்துக்கொண்டு எல்லோருக்கும் முன்னுல் வெளிப்பட்டது?

ஏ! கௌரி! இந்த லிங்கத்தை மிகவும் ரஹஸ்யமாக ப்ரதிஷ்டை செய்து அதை தரிசிப்பதற்காக உனக்கு மூன்றுவது கண்ணைக் கொடுத்தேன். அப்பொழுது நீ அதை நன்றுக தரிசித்தாய்.

ஏ! தேவேசீ! அப்பொழுது முதல் மூவுலகிலுமுள்ளவர்கள் ஞானத்ருஷ்டி அளிக்கும் இந்த லிங்கத்தை தரிசனம் செய்த பக்தர்கள் எல்லாம் முக்கண் உடையவராகி எனக்கு பாரிஷதர்கள் ஆனுர்கள். அவர்கள் எல்லோரும் ஜீவன் முக்தர்கள்.

ஏ! மஹேஸ்வரி, த்ரிலோசனலிங்கத்தின் மஹிமைகளை நான் மறைத்து வைத்திருக்கிறேன். அதனுல் அதை ஒருவரும் அறிந்து கொள்வதில்லை.

வைகாசி மாத சுக்லபக்ஷ த்ருதியை அன்று பிலபிலா தீர்ததத்தில் ஸ்னனம் செய்து பக்தி பாவத்துடன் உபவாஸம்

*இருந்து இரவு முழுவதும் கண் விழித்திருந்து த்ரிலோசன லிங்கத்தைப் பூஜிக்க வேண்டும். இந்தப் புண்ணியத்தின் ப்ரபாவத்தால் பக்தர்கள் தங்கள் பார்த்திவசரீரத்தை த்யாகம் செய்துவிட்டு என்னுடைய கணங்களில் ஒருவராக ஆகிறார்கள்.*

*ஹே! கௌரீ! தேவதைகள், மனிதர்கள், நாகர்கள் எல்லோரும் ஸம்ஸார சக்ரத்தில் சுழன்று கொண்டேதான் இருக்கிறார்கள். காசியில், த்ரிலோசன லிங்கத்தை தரிசனம் செய்து ஒரு தடவையாவது பிலபிலா கட்டத்தில் ஸ்னானம் செய்து த்ரிலோசன லிங்கத்தை தரிசனம் செய்தவர்கள் பிறகு இந்த லோகத்தில் மாதாவின ஸ்தன்ய பானம் செய்ய மாட்டார்கள்.*

*ஏ, பாமினி! ஒவ்வொரு மாதத்திலும் அஷ்டமி, சதுர்தசி ஆகிய தினங்களில் எல்லா தீர்த்தங்களும் த்ரிவிஷ்டபரை தரிசனம் செய்ய இங்கு வருகின்றன. தரிவிஷ்டப லிங்கத்திற்குத் தெற்கு பக்கத்தில் இருக்கும் பிலபாலா தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து ஒரு தடவையாவது ஸந்தியா வந்தனம் செய்தால், அவர்களுக்கு ராஜஸூய யக்ஞத்தின் பலன் கிடைக்கிறது.*

*அதன் அருகிலேயே பாபத்தை நாசம் செய்யும் பாதோதகம் என்ற கிணறு இருக்கிறது. அதன் ஜலத்தை ஒருதரம் குடித்தவர்கள் ம்ருத்யு லோகத்தில் திரும்பவும் பிறக்கமாட்டார்கள். திரிலோசனருக்கு அருகிலேயே லிங்கங்கள் இருக்கின்றன.*

*அவர்களை ஒருதரம் தர்சித்து ஸ்பர்சித்தால் அங்கேயே கங்கைக் கரையில் ஸரந்தனவேஸ்வரர் என்னும் லிங்கம் ப்ரதிஷ்டை செய்யப் பட்டிருக்கிறது. அதை தரிசனம் செய்தால் ஸம்ஸாரத்தில் தவிக்கும் ஜனங்களுக்கு சாந்தி கிடைக்கிறது.*

*ஹே முனியே! அதற்குத் தெற்கு பக்கத்தில் பீஷ்மேஸ்வரர் என்னும் ஒரு மகாலிங்கம் இருக்கிறது.*

அதை தரிசித்தவர்களுக்கு, கலியும், காலனும், ஒரு பொழுதும் தீங்கு செய்யமாட்டார்கள்.

அதற்கு மேற்கு பக்கத்தில் த்ரோணேஸ்வரர் என்னும் பெயருடைய கீர்த்திவாய்ந்த ஒரு மகா லிங்கம் இருக்கிறது. அதைப் பூஜை செய்ததினுல்தான் த்ரோணுசாரியர் ஜோதி ரூபத்தை அடைந்தார்.

அதற்குச் சற்று முன்னுல் தள்ளி பரம புண்ணியத்தை அளிக்கும் அஸ்வத்தாமேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதைப் பூஜை செய்ததினுல்தான் த்ரோண புத்ரன் காலனுக்குகூடப் பயப்படவில்லே. த்ரோணேஸ்வரக்கு வாயுதிக்கில் வாலகில்யேஸ்வரர் என்னும் ப்ரதானலிங்கம் இருக்கிறது.

அவரை ச்ரத்தையுடன பூஜித்தால் யக்ஞங்களும் புரிந்த பலன் கிடைக்கும். அவருக்கு இடது பக்கம் வல்மீகேச்வர லிங்கம் ப்ரஸன்னராக இருக்கிறது. ஒருவன் அதை விதிப்பிரகாரம் பூஜித்தாஞனுல் சோகரஹிதன் ஆகிறுன்.

ஹே கும்பமுனியே! இங்கு இந்த ஸமயம் நடந்த ஒரு ஸம்பவம் பற்றிக் கூறுகிறேன், கேளும், தேவதேவர் பகவதியிடம் த்ரிவிஷ்டபர் உடைய மகாத்மியத்தைக் கூறியவாறு உமக்குக்கூறுகிறேன்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்தத்தில் பாஷாடீகாவான 75ம் அத்யாயம் ஸம்பூர்ணம்.



*Sunday, October 24, 2010*

# அத்யாயம் 76

ஸ்கந்தர் கூறுவார் - ஹே மித்ராவருணபுத்ர! அகஸ்த்யரே! விரஜர் என்னும் பெயருடைய ஸித்தி பீடத்தில் பூர்வ காலத்தில் ரதந்தர கல்பத்தில் என்ன நடந்ததோ, அந்த இதிஹாஸத்தைக் கேளும். த்ரிலோசனருடைய கோவில் மணிகள், மாணிக்கம் முதலியவைகளால் நிர்மிதமானது.

அதில் நாலு ப்ரகாரமான ஜன்னல்களும், சிறு ஜன்னல்களும் உள்ளன. கோயில் ஸுமேரு பர்வதத்தைப்போல் உயரமானது.

விச்வகர்மா ப்ரளயகாலத்தில் ஸ்வர்க லோகத்தை விழாமல் காக்கும் பொருட்டு, பலமான அஸ்திரவாரமாக ஒருதூணை நட்டது போல் இருக்கிறது.

ஏ! முனிவரே! அந்தக் கோவிலின் உச்சியில் பறக்கும் கொடிகள், காற்றின் வேகத்தால் அங்கு மிங்கும் அசையும்போது பாபக்கூட்டங்களை அண்டவிடாமல் தடுப்பது போல் இருக்கிறது.

அதன் உச்சியில் இருக்கும் பளப்பளப்பான ஸ்வர்ண கலசத்தைப் பார்த்தால், சந்திரன்தான் களைப்படைந்து, ச்ரம பரிஹாரம் செய்வதற்காக, கோவிலின் உச்சியில் களைப்பாறிக் கொண்டு இருக்கிருரோ என்று தோன்றுகிறது.

அந்தக் கோவிலின் கலசத்தின் நிழலில் ஒருஜோடி மாடப்புருக்கள் கூடுகட்டி வஸித்து வந்தன. அவைகள் வேகமாகப் பறக்கும்பொழுது அவைகளின் இறக்கைகளின் அசைவினுல் உண்டாகும் காற்றினுல் கோவிலின் படிந்திருக்கும் தூசிகள் அங்குமிங்குமாகப் பறக்கும்.

அவைகளுடைய காதுகளில் பக்தர்கள் உரத்த குரலின் கூறும் 'ஹே! த்ரிவிஷ்டா, ஹே! த்ரிலோசனு என்னும்

நாமங்கள் ஒலித்துக் கொண்டேயிருக்கும்.

மகாதேவருக்கு மிகவும் பிரியமான வெண்கலம் முதலிய தாதுக்களால் ஆன வாத்தியக் கருவிகளின் ஒலி அந்த ஜோடிகளின் காதுகள் என்னும் குகைகளில் எதிரொலித்துக் கொண்டேயிருக்கும்.

அந்த ''பக்ஷிகளின் கண்களில் த்ரிகாலத்திலும் எடுக்கும் ஹாரத்தியின் ஒளி மூன்று வேளையும் பாய்ந்து, பக்தர்களின் பூஜை முதலிய செய்கைகளைக் காண்பித்து கொண்டேயிருக்கும்.''

சிற்சில சமயங்களில் அந்த இரு பறவைகளும் இரை தேடக் கூட போகாமல் தன் மயமாய் மணிக்கணக்கில் உட்கார்ந்து கொண்டேயிருக்கும்.

ஏ! மஹர்ஷே! அந்தக் கோவிலின் அக்கம் பக்கங்களில் அக்ஷதை இறைத்திருப்பார்கள். அவைகள் இரண்டும் பிரதக்ஷிணமாக வந்து அந்த அக்ஷதைகளைச் சாப்பிடும்.

ஹே! விப்ரா!, அவை இரண்டும் தாகம் எடுக்கும்போது பகவானுக்கு தக்ஷிண திக்கில் ஓடும் கங்கா, யமுனா, ஸரஸ்வதி, நர்மதா என்னும் நான்கு ஊற்றுகளிலிருந்து பெருகி வரும் ஜலத்தைக் குடிக்கும்.

இந்த விதமாக த்ரிலோசனருடைய ஸமீபத்திலேயே ஸஞ்சரித்துக்கொண்டு அந்த ஸாது ஸ்வபாவம் உள்ள இரண்டு பக்ஷிகளையும் ஒருநாள் ஒரு கழுகு தன்னுடைய க்ரூர த்ருஷ்டியினால் தேவாலயத்தின் மத்தியில் இருக்கும் ஜன்னலின் சட்டத்தில் ஸுகபூர்வமாக அமர்ந்திருக்கும்போது பார்த்தது.

அந்தப் புறாஜோடிகளைப் பிடிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் அந்தக் கழுகு வான வெளியினின்றும் பாய்ந்து அருகில் இருக்கும் மற்றொரு சிவாலயத்தில் சென்று அமர்ந்தது.

எங்கிருந்து சென்று, எந்தவேளையில என்ன செய்கின்றது, எந்த விதமாக இவ்விரண்டையும் பிடிக்க முடியும்? இவைகள் கோவில் கோட்டைக்குள் நுழைந்துவிட்டால் பின் இவை என் வசமாகாது. இவ்விதம் நினைத்துக்கொண்டு அக்கழுகு அப்புருக்களையே நோக்கிக் கொண்டு அமர்ந்திருந்தது.

ஆஹா புத்திசாலிகள் கோட்டையின் பெருமையைப்பற்றிச் சொல்வது மிகவும் சரியே. ஏன், என்றால் கோட்டைக்குள் இருக்கும், துர்பலர்களும் சத்ருக்கள் கையில் எளிதாகச் சிக்கமாட்டார்கள்.

கோட்டைக்குள் இருந்தே ஒரு அரசனுக்கு என்ன வெற்றி கிடைக்கிறதோ அந்த வெற்றி கோட்டைக்கு வெளியே ஆயிரக்கணக்கான யானைப்படைகளினாலும், லக்ஷக்கணக்கான குதிரைப் படைகளினாலும், கிடைக்காது.

கோட்டை பலம் பொருந்தியதாயும் ரஹஸ்ய வாயில்களையும் அந்தரங்க ஸுரங்கங்களையும் உடையதாக இருந்ததோ சத்ருக்களினால் அதை ஒருபொழுதும் வீழ்த்த முடியாது.

அந்தக் கழுகு கோட்டையின் பலத்தைப் பற்றிப் புகழ்ந்து விட்டுக் கோபத்தினால் சிவந்த கண்களுடன் வானவெளியில் பறந்து சென்றது.

அதன்பிறகு கேவலம் கோட்டையின் பலத்தையே ஆதாரம் ஆகக் கொண்ட அந்தப்பெண் புறா தங்கள் சத்ருவாகிய கழுகு பறந்து செல்வதைப் பார்த்துவிட்டு தன்னுடைய ஸ்வாமியும் ஆண்மை நிறைந்ததுமான, ஆண் புறாவிடம் சொல்லத் தொடங்கியது.

ஏ! எல்லா கர்மங்களையும் ஸுகமாகக் கொடுக்கக் கூடியவரே! ப்ரியதமா, ஆண்புறாவே! நம்முடைய ப்ரபல சத்ருவான இந்தக் கழுகைப் பார்த்தீர்களா? என்றது.

*கபோதியின் வசனத்தைக் கேட்ட ஆண்புறு மிகவும் கர்வத்துடன் கூறியது. அன்பே! ஏன் கவலைப்படுகிறேம்? ஏ பாக்கியவதியே! இங்கு நம்மைப்போல் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறுர்கள் என்பதை நீ பார்க்கவில்லை? இவர்கள் எல்லோரிடமும் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தால் ப்ரியே! நாம் எப்படி ஸுகமாக இருக்கமுடியும்?*

*ஏ! ஸுந்தரி! கண்டிப்பாய் அக்கவலையை விட்டுத் தள்ளு. நான் என் மனதில் இக் கழுகை ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. அப்பொழுது அந்தப் பெண் புறு இவ்வார்த்தைகளைக் கேட்டுவிட்டு பதியின் சரணங்களில் தன் த்ருஷ்டியைச் செலுத்திப் பேசாமல் அமர்ந்திருந்தது.*

*ஏனென்றுல் பதியின் ஸுகத்தையே விரும்பும் பதிவ்ரதையான நாரீ அவருடைய நன்மையைப்பற்றிக் கூறிவிட்டுப் பின்பு சும்மா இருக்கவேண்டும். அதாவது அவ்வார்த்தைகள் அனுசிதம் என்று தெரிந்தாலும் அதைக் கண்டனம் செய்யக்கூடாது. பதி இடும் கட்டளை என்று தெரிந்தாலும் கூட அதையே நிறைவேற்ற வேண்டும்.*

*மறுநாள் அந்தக் கழுகு அங்கு வந்து ஆயுள் முடிந்தவனை மரணதேவன் பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டு அவைகளையே உற்றுநோக்கிக் கொண்டிருந்தது.*

*பிறகு கோவிலின் நான்கு பக்கங்களிலும் சுற்றி சுற்றிப் பறந்து வந்து அந்தப் பறவைகள் பறப்பதையும் அமருவதையும் பார்த்து விட்டுத் திரும்பவும் ஆகாயத்தில் பறந்து திரிந்து சென்றது. இந்த அக்கழுகு வானவெளியில் பறந்து சென்ற பிறகு, அப்பெண்புறு, முதல் நாளைப் போலவே தன் பதியிடம் கூறியது. அந்த துஷ்ட சத்ருவை நீங்கள் பார்க்கவில்லையா என்றது.*

*அதன் வார்த்தையைக் கேட்டு ஆண்புறு கூறியது. ப்ரியே! நாமும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்கள்தான். என்னை இவனுல் என்ன செய்ய முடியும்?*

மேலும் இந்தக் கோட்டையோ ஸ்வர்க்கத்திற்கு ஸமானமானது. இதிலிருந்து கொண்டு நமக்கு சத்ருக்களுக்கு பயப்பட வேண்டாம். ஆகாய மண்டலத்தில் இவை செய்யும் தந்திரங்கள் எனக்குத் தெரியும், நல்லது! இவனால் என்ன செய்ய முடியும்?

ஆகாயத்தில் நாம் செல்லும் கதி எட்டு விதம் என்று கூறி இருக்கிறது. ப்ரடீனு, உடீனு, ஸண்டீனு, காண்டயாடா, காபடிகா, ஸ்ரம்ஸனி, மண்டலவதி, மேலே பறப்பது என்று எட்டு விதமான கதிகள் இருக்கின்றன.

ப்ரியே! கபோதியே! இந்த ஜால சித்ரங்களிலெல்லாம் நான் நிபுணத்வம் அடைந்து இருக்கிறேன். இதைப் போன்ற கதிகளை வேறு ஒருவராலும் காட்ட முடியாது.நீ ஸௌக்யமாக அமர்ந்திரு. நானிருக்கும் போது உனக்கென்ன கவலை?

இந்த வார்த்தையைக் கேட்டு விட்டு அந்தப் பதிவ்ரதையான பெண்புறா ஊமையைப்போல் பேசாமல் இருந்தது. மறுதினம் அக்கழுகு அந்தக் கோவிலுக்கு மறுபுறம் ஒரு பாறையின் இடுக்கில் மறைந்து உட்கார்ந்திருந்தது. பகல் முழுவதும் அப்படி இருந்து விட்ட தன் இறையை நன்றாகக் கவனித்துக் கொண்டு விட்டுத் திரும்பவும் பறந்து சென்றது.

அப்பொழுது அந்தப் பெண் புறா திரும்பவும் பயந்து கொண்டு சொல்லியது- பாருங்கள், இன்று அவன் மிக்க ஸந்தோஷத்துடன் இன்னும் கூட அருகில் வந்து உட்கார்ந்திருக்கிறான். அதனால் துஷ்டத்ருஷ்டியினால் வியாபிக்கப்பட்ட இந்த இடத்தைவிட்டு நீங்குவதே நமக்கு நல்லது என்றது. இதற்குப் பிறகும் அந்த ஆண் புறா கூறியது-

அடிபேதையே! நம்மை அவனால் என்ன செய்ய முடியும்? மான் விழியார்களின் ஸ்வபாபம் யாரைக் கண்டாலும் நடுங்குவது பயங்கொளித்தனம் என அஹங்காரத்துடன் கூறியது. முதல் நாளைப் போலவே

மறுநாளும், மகா பலம் பொருந்திய கழுகு வந்து அந்த இடத்தில் உட்கார்ந்தது.

இரண்டு நாழிகை நேரம் புறாக்களை இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தது. இப்புறாக்கள் செல்லும் மார்க்கங்களை கவனித்துவிட்டுப் பறந்து சென்றது.

அது பறந்து சென்ற பிறகு பெண் புறா திரும்பவும் கூறியது, நாதா! இங்கு மரணம் நம்மை நெருங்கி வருகிறது. அதனால் நாம் வேறு இடம் பார்த்துக் கொண்டு செல்வது நல்லது.

கொஞ்ச நாள் அங்கு இருந்தால் இந்த துஷ்டன் இங்கு வருவது நின்றுவிடும்.

பிறகு திரும்பவும் நாம் இங்கு வந்து வஸிக்கலாம், ப்ரியதமா: இறகு உள்ளவர்களுக்கு எங்குசென்றாலும் காரியம் ஸித்தியாகுமே, இப்படி இருக்க ஸ்வதேச ஆசையில் சத்ருவின் கையில் அகப்பட்டு நாசமடைய வேண்டுமா?

எவன் உபத்ரவம் நிறைந்த தனது தேசத்தை விட்டு வெளியில் செல்லத் தயங்கிகுறானே, அவன் நதிக்கரை வ்ருக்ஷத்தைப் போல் சீக்கிரமாகவே நாசமடைவான்.

அந்த ஆண் புறா, பத்தினியின் வசனத்தைக் கேட்டு விட்டு கர்வத்துடன் வரும் காலத்தைப் பற்றிக் கூறியது- ப்ரியே! அந்தக் கழுகிடமும் நீ பயப்படாதே, மறுதினம் அக்கழுகு அதிகாலையிலேயே வந்து இரவு வெகுநேரம் வரை அங்கு தங்கி இருந்தது.

ஸூர்யன் அஸ்தாசலத்தில் மறைந்த பின் கழுகும் பறந்து சென்றது.அப்பொழுது பெண் புறா கூண்டிலிருந்து வெளிப்பட்ட ஆண் புறாவிடம் கூறியது: ஹே! நாதா, அந்தக் காலதேவனை கழுகு போய்விட்டது.

இப்பொழுது நமக்கு இங்கிருந்து பறந்து செல்ல சரியான சமயம். அவன் திரும்பி வருவதற்கு முன் என்னைக் கூட விட்டு விட்டு நீங்கள் பறந்து சென்று விடுங்கள்.

உலகில் தாங்கள் உயிருடன் இருக்கும் வரை ஒரு வஸ்துவுக்கும் கஷ்டப்பட வேண்டாம். ஏன் என்றால் தாங்கள் புருஷர் உயிருடன் இருக்கும் வரை, மனைவி புத்ரன், தனம், வீடு எல்லாம் திரும்பத் திரும்பக் கிடைத்துக் கொண்டேயிருக்கும். ஒருவனுக்கு ஸ்தீரி, தனம் இவைகளை விட்டு விட்டு தங்களைத்தானே காப்பாற்றிக்கொள்ள ஸாமர்த்தியம் இருந்தால், அவன் இவ்வுலகில் ராஜா ஹரிச்சந்திரன் போல் எல்லாவற்றையும் திரும்பப் பெறமுடியும்.

ஆத்மாவே நமக்கு உற்றபந்து, ஆத்மாவே பரமதனம், தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் இவைகளை ஸம்பாதிப்பதும் இந்த ஆத்மாவே. தன்னுடைய இஷ்டஸௌகம் க்ஷேமம் , உங்களுக்கு ஸந்தோஷம் என அவன் நினைக்கிறான்.

ஆனால் அறிவாளி அந்த க்ஷேமத்தையும் புகழுடன் ஸம்பாதிக்க விரும்புகிறான். புகழ் இல்லாத க்ஷேமத்தைவிட இறப்பதே மேல். இந்த க்ஷேமமும் நியாய மார்கத்தில் சென்றால் தான் கிடைக்கும்.

அதனால் நீதியை அனுஸரித்து இங்கிருந்து செல்வது நல்லது. தாங்கள் இங்கியிருந்து பறந்து செல்லவில்லையானால் காலையில் எனது வார்த்தைகளை நினைத்துப் பாருங்கள்.

இந்த விதமான பரம, புத்திமதியான மனைவி அடிக்கடி கூறியும்கூட அந்த ஆண்புறா வருங்காலத்துக்கு வசப்பட்டு அங்கிருந்து செல்ல மறுத்தது

ஹே! மஹர்ஷே! மறுநாளும் அக்கழுகு அதிகாலையிலேயே ஆஹாரத்தை முடித்துக் கொண்டு இந்தப் புறாக்கள் செல்லும் மார்க்கத்தைத் தடுத்துக் கொண்டு வந்தமர்ந்தது.

கொஞ்ச நேரம் கழிந்து அந்தச் சதுரனான கழுகு, அடே கபோதியே! உனக்கு ஆண்மை இல்லை சீ, சீ, இழிவு.

ஹே! துர்புத்தே, வெளியில் வா, என்னுடன் சண்டையிடு. வெளியில் வா, எத்தனை நாள் பட்டினியுடன் கஷ்டப்படுவாய். இறந்து நாசத்தை அடைவாய்.

இதில் சந்தேகமேயில்லை. நான் தனி. நீங்கள் இருவர், தோல்விக்கும், வெற்றிக்கும் ஒரு தீர்மானம் இருக்கிறதா? பராக்ரமத்துடன் யுத்தம் செய்பவர்களுக்கு...... தனது கோட்டையே திரும்பக் கிடைக்கிறது.

பராக்ரமிக்கு விதாதா பகவான், உதவி செய்கிறார். இந்த விதமாக அந்தக் கழுகு சண்டைக்கு அறைகூவி அழைத்துடனும் பத்தினிதைர்யம் சொல்ல, அந்த ஆண்புறா, அதன் இருப்பிடத்தைவிட்டு, கழுகுடன் சண்டைபோட ஆரம்பித்தது. பிறகு, அந்த பலம் பொருத்தி பசியுடனும் தாஹத்துடனும் வாடும் அந்த ஆண்புறாவைத் தன் கால்களினாலும், தன் அலகினால் அநதப்பெண் புறாவையும் பிடித்துக் கொண்டது. பிறகு அவ்விரண்டையும் எடுத்துக் கொண்டு ஆகாயத்தில் பறந்து சென்றது.

பிறகு வேறு பக்ஷிகளே இல்லாத ஒரு சூன்யமான இடத்தை அடைந்து அவைகளைச் சாப்பிட நினைத்தது. அச்சமயம் புத்திசாலியான பெண் புறா ஆண் புறாவிடம் கூறிற்று.

ஏ! நாதா! தாங்கள் பெண் என்று நினைத்து என் வார்த்தையை அலக்ஷியம் பண்ணினீர்கள். அதனால் தங்களுக்கு இந்த நிலை வந்தது. நான் ஒரு அபலை. என்னால் என்ன செய்ய முடியும்?

ப்ரியரே! இப்பொழுதாவது தாங்கள் என் வார்த்தையைக் கேட்டீர்களானால் நான் தங்களுக்கு ஹிதமான ஒரு வார்த்தை கூறுகிறேன். அதைத் தாங்கள் யோசிக்காமலும் விசாரிக்காமலும் செய்யவேண்டும். அந்த

ஒரு வார்த்தையைக் கேட்டதினுலேயே மனைவி வசம் ஆகிவிட மாட்டீர்கள். இந்தக் கழுகு நம்மைத் தூக்கிக் கொண்டு ஒரு பத்திரமான இடத்தையடைந்து அமருமுன் நீங்கள் அதனுடைய காலை பலமுடன் கடியுங்கள் பத்தினியின் வார்த்தையைக் கேட்டு அந்தப்புரு அப்படியே செய்தது.

அப்பொழுது அந்த கழுகிற்கு காலில் கடுமையான வலி ஏற்படவே அது வாயைத் திறந்து ச்சீ ச்சீ என்று கத்தியது. இதனுல் அதன் அலகு திறந்ததோ இல்லையோ பெண்புரு தப்பி ஓடியது. வேதனையினுல் கால் விரல்கள் அகலவே ஆண்புருவும் கீழே விழுந்தது.

புத்திசாலிகளுக்கு ஆபத்து நேர்ந்தாலும் முயற்சியைவிடக் கூடாது பாருங்கள். அந்த புருஜோடி சத்ருவின் வாயில் அகப்பட்டும், அதன் காலில் கடித்து, அந்த பலசாலியான சத்ருவிடமிருந்து விசித்ர ரீதியாக மீண்டது.

உண்மையில் பலவீனனுன ஒருவன்கூட முயற்சி செய்வதினுல் அதன் பலனை அடைகிருன். அதனுல் அத்ருஷ்டத்தின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு முயற்சி செய்தால் கட்டாயம் பலன் கிடைக்கும்.

பண்டிதர்கள் ஆபத்துக் காலத்தில் முயற்சி செய்வதைப் புகழ்கிருர்கள். இந்தவிதமாக அந்த இரண்டு புருக்களும் ம்ருத்யுவின் வாயிலிருந்து நழுவி காலக்கிரமத்தில் ஸரயூ தீரத்தில் முக்தி க்ஷேத்ரமான அயோத்யாபுரியில் மரணமடைந்தன. அயோத்தியில் மரணமடைந்தவர்களுக்குக்கூடக் காசியில் மரணமடைந்த பலன் கிடைக்கிறது.

பிறகு அந்த ஆண்புரு மந்தார தாமன் என்பவனுக்குப் புத்ரனுகப் பரிமளாலயன் எனும் பெயருடன் பிறந்தான். அவன் பால்யாவஸ்தையிலிருந்தே அனேகம் வித்தைகளைக் கற்றுத் தேர்ந்தான்.

ஸகல கலைகளையும் கற்றுத் தேர்ந்து பரமசிவ பக்தனானான். அவன் ஜிதேந்த்ரியனாக ஏகபத்னி வ்ரதனாக இருப்பேன் என்று நிச்சயம் செய்து கொண்டான்.

உலகில் பரஸ்தீரீகளிடம் ஆசை வைத்தால் ஆயுள், கீர்த்தனம், ஸுகம், பலம், ஸ்வர்கம் எல்லாம் நஷ்டமடைந்துவிடும் அதனால் அறிவாளிகள் பரஸ்தீரீ கமனத்தை ஒருக்காலும் மனதாலும் நினைக்க மாட்டார்கள்.

த்ரிலோசனரை ஆச்ரயிப்பதால் கழிந்த ஜன்மத்தின் அப்யாஸத்தினால் அவன் மற்றொரு திடமான வ்ரதத்தை எடுத்துக் கொண்டான். சரீரம் ஆரோக்யமாக இருக்கும் வரைக்கும், இந்திரியங்கள் சிதிலமடையாமல் இருக்கும் மட்டும். மீதியற்ற புண்ணியத்தின் இருப்பிடமும் நான்கு புருஷார்த்தங்களுக்கும் ஸாதனஸ்தலமும், ஸகல விருப்பங்களை அளிக்கும் தாதாவும் பகவான் த்ரிலோசனரை காசி க்ஷேத்ரத்தில் பூஜை செய்யாமல் உணவு உட்கொள்ள மாட்டேன்.

இந்த விதமாக அந்த மந்தாரதாமன் புத்ரனான பரிமளாலயன் தினந்தோறும் காசியில் த்ரிலோசரை தரிசனம் செய்து வந்தான். அங்கு அந்தப் பெண்புறாவும் பாதாளத்தில் நாகராஜனான ரத்ன தீபனுடைய க்ருஹத்தில் ரத்னாவளி என்னும் பெயருடைய கன்னிகையாகப் பிறந்தாள்.

அந்த ரத்னாவளி என்னும் பெயருடைய கன்னிகை எல்லா நாக கன்னிகைகளிலும் அதிகரூபமும், குணமும், ஸகல கலா குணங்களும் பொருந்தி ரத்னமாகத் திகழ்ந்தாள். அவளுக்கு பராவதி, கலாவதி என்று பெயருடைய இரண்டு ஸகிகள் இருந்தார்கள்.

அவர்கள் எப்பொழுதும் அவள் கூடவே இருந்தார்கள். ஏ கும்ப முனியே! சரீரத்தின் நிழலும் காந்தியும் போல் அந்த ஸகிகள் இருவரும், ரத்னாவளியை விட்டு நீங்காமலேயே இருந்தார்கள். ரத்னாவளிக்குப்

*பிள்ளை பிராயம் கழிந்து யௌவனத்திற்கு அறிகுறி தொடங்கும் ஸமயத்தில் அவளுடைய பிதா சிவபக்தராக இருப்பது அறிந்து தானும் சிவபக்தையாக ஸாதகம் செய்து வந்தாள். அவள் ஒரு நாள் பிதாவிடம் கூறினாள்.*

*பிதாவே நான் தினம்தோறும் இந்த ஸகிகளுடன் காசிக்குச் சென்று த்ரிலோசனரைப் பூஜை செய்த பின்தான் பேசுவேன். அதுவரை மௌனமாகவேதான் இருப்பேன்.*

*இந்தவிதமாக அந்த நாககுமாரி பிதாவின் அனுமதி பெற்று அந்த ஸகிகளுடன் த்ரிலோசனரைப் பூஜைசெய்து, க்ருஹத்திற்கு வந்த பின் பேசுவாள்.*

*அவள் தினமும் அதிகாலையில் எழுந்சது தேர்ந்தெடுத்த வாசனையுள்ள புஷ்பங்களினால் விசித்ர விசித்ரமான மாலைகளைத் தொடுத்து பகவானுக்கு ஸமர்ப்பிப்பாள்.*

*மூவரும் மனோஹரமான காந்தாரஸ்வரத்தில் இனிமையான கீதங்களைப் பாடிக்கொண்டு ராஸ மண்டலமாக வகுத்துக் கொண்டு ஆடுவார்கள்.*

*பகவானுக்கு ஸமீபத்திலே தினமும் பக்க வாத்யங்களுடன் லயம், தாளம் சிறிதும் தவறாமல் மிகவும் ஸந்தோஷமாக வேணுகானம் செய்வார்கள்.*

*இந்தவிதமாக அம்மூன்று அரசியரும் தம் தம் மாலை கீதம் முதலியவைகளினால் பகவான் த்ரிலோசரை ஆராதித்து வந்தார்கள்.*

*இந்தவிதமாக ஒருஸமயம் வைகாசி மாத சுக்ல பக்ஷ த்ருதியை அன்று உபவாஸம் செய்து, கண்விழித்து, ந்ருத்திய கீதம் இவைகளினால் இரவைக் கழித்துவிட்டு மறுநாள் சதுர்தசி அன்று பிலபிலா தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து த்ரிலோசநரை ஆராதித்துப் பாரணை செய்து ரங்க மண்டபத்தில் சென்று இளைப்பாறி நித்திரை போய்விட்டார்கள். இவர்கள் தூங்கிய பிறகு பகவான்*

த்ரிலோசனர் பாம்பு சுற்றியிருந்த லிங்கத்திலிருந்து கற்பூரத்திற்கு ஸமமான வெண்மை வர்ணமும் ஜடாமகுடம் தரித்து சந்த்ரசேகரனுகக் கழுத்தில் தமால வ்ருக்ஷத்தின் வர்ணத்தில் விஷம் துலங்கும் ஸர்பபூஷணமும், யக்ஞோபவீதம் சோபிக்க அழகான உருவுடன் அக்குமரிகளை எழுப்பிக் கூறலுற்ருர். எழுந்திருங்கள்.

அவர்கள் பரபரப்புடன் எழுந்திருந்து தங்கள் விசாலமான கண்களைக் கசக்கிக் கொண்டு கொட்டாவி விட்டுக்கொண்டு திகைப்புடன் பார்த்தார்கள்.

அவர்கள் கலவரம் அடைந்து முன்னுல் பார்த்தவுடன் பகவான் த்ரிலோசனர் நிற்பதைக் கண்டார்கள். பிறகு அந்த நாக கன்னிகைகள், சின்னங்களை அடையாளம் கண்டுகொண்டு பரமேச்வரன் அல்லவா என்று அறிந்து ஸந்தோஷத்துடன் தொண்டை அடைக்க, தழுதழுத்த குரலுடன் அவரைப் போற்றத் தொடங்கினுர்கள்.

ஹே! விபோ! எங்கும் நிறைந்தவரே - ஜய விஜயீபவ; ஹே! ஈசனே! தாங்கள் எல்லாமும் ஆளும் வள்ளல் - ஐயனே, த்ரிபுராந்தகா, தாங்களே அந்தகன் என்னும் அஸுரனை வதைத்தீர்கள். ஜய விஜயீபவ, மூன்று லோகத்துக்கும் பிதா! தங்கள். ஜலெந்தர என்னும் அசுரனை நாசம் செய்தீர்கள்.

ஹே! விசுவநாத! மூன்றுலகங்களாலும் வணங்கப்பட்டவரே; ஹே! ப்ரம்மநாதா; எப்பொழுதும் தாங்கள் பக்தர்கள் அதீனத்தில் இருப்பவர்.

தங்களுக்கு வெற்றி உண்டாகட்டும். ஹே தேவா; தங்கள் ஜடாமகுடத்தில் மூன்று உலகிலும் ப்ரவஹிக்கும் மாதா கங்காதேவி அலை மோதுகிருள்.

தங்கள் மகுடமணியாக விளங்கும் சந்திரனுடைய கலைகளினுல் மூன்று உலகங்களும் ப்ரகாசமடைகிருர்கள். ஜய விஜயீபவ ஹே! ப்ரபோ! தங்கள் சரீரம் சர்ப்பங்களிவன்

நாகரத்தினங்களினுல் சோபிதமாக விளங்குகிறது. கிரிராஜ நந்தினி தங்களுடைய பாதி சரீரத்தை தன் தபோபலத்தால் விலைக்கு வாங்கி இருக்கிருள்.

ஜய விஜயீபவ, ஹே! சுடலை வாஸியே, தாங்கள் ஆனந்தவனத்தில் வஸிப்பவர்களுக்கு மோக்ஷத்தை அருளுகிறீகள்.

தங்களுக்கு ஜயம் உண்டாகட்டும் ஹே! விச்வநாதா ஸர்வ கலாதீதா, ந்ருத்ய ப்ரியா, ஸமஸ்தசீத விசாரதா, ஜயஜய ஹே! சூலபாணே! தங்களையே ப்ரணவம் ஆச்ரயித்து இருக்கிறது.

ஸமஸ்ததேஜஸ்களுக்கும் தாங்களே..... நிதி ஹே! விரூபாக்ஷா! தாங்கள் வணங்கியவர்களுக்கு ஸமஸ்தமும் அருளும் தாதா; ஜய; ஜய; ஹே! நாத ப்ரம்மஸ்வரூபா! நாங்கள் எல்லாம் அறிந்தவர்கள் ஆனுலும் தங்களைத் துதிக்க வார்த்தைகள் கிடையாது.

தங்களை, வாசஸ்பதிக்கு ராணியான ஸரஸ்வதியின் வாக்குகளும் ஸ்துதிக்கச் சக்தியற்றவையாகின்றன.... வேதக்கூட்டங்களை உண்மையாக அறிந்து கொள்ளவில்லை. அப்படியிருக்க ஸம்ஸாரத்தில் ஆழ்ந்திருக்கும் எங்களைப்போலொத்தவர்கள் ஆதி அந்தமற்றவரான தங்களை மனதினுல் மனனம் செய்ய எப்படி முடியும்?

அதனுல் ஹே! த்ரிலோசனு! தங்களை அடிக்கடி வணங்குகிறேன். த்ரிவிஷ்டபா! நாங்கள் எல்லோரும் அடிக்கடி விழுந்து விழுந்து வணங்குகிருேம். இப்படி எல்லா நாககன்னிகைகளும் ஸ்துதி செய்து தண்டமென பூமியில் விழுந்து வணங்கினுர்கள். அப்பொழுது பகவான் சசி பூஷணர் அந்த எல்லா குமரிகளையும் எழுப்பிக் கூறத்தொடங்கினுர்.

மந்தாரதாமன் என்னும் வித்யாதரன் பிள்ளை பரிமளாலயன் உங்களுக்குப் பதியாவான். நீங்கள் வெறு நாட்கள் வித்யாதர உலகத்தில் போகங்களை

அனுபவித்துவிட்டுக் காலம் வரும்போது காசியில் பரமஸித்தியை அடைவீர்கள்.

நீங்கள் மூவரும் வித்யாதர இளைஞன் ஆகிய, நால்வரும் கடைசியில் இங்கே மோக்ஷமடைவீர்களள். பூர்வஜன்மக் கடைசியில் நீங்கள் எனக்கு இரவுபகல் ஸேவை செய்திருக்கிறீகள். அதனுலேயே இந்த ஜன்மம் நிர்மலமானதாகவும், பக்தி உடையைதாகவும் இருக்கிறது.

உங்களால் ஸ்துதிக்கப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தை தினம் பாராயணம் செய்பவர்களை உங்களைப்போலவே அவர்களுடைய மனோரதங்களையும் நான் பூர்த்தி செய்வேன்.

மனிதர்கள் காலை வேளையில் இந்தத் துதியைப்படித்தால் முதல்நாள் இரவு செய்த பாபங்களிலிருந்து நிவ்ருதி அடைவார்கள். பகவான் இவ்வாறு கூறவும், நாககன்னிகைகள் மூவரும் ஸந்தோஷத்துடன் இரு கைகளையும் கூப்பிக் கொண்டு பகவானிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

ஹே! கருணுகரனே! சங்கரா! நாங்கள் நால்வரும் பூர்வஜென்மத்தில் தங்களுக்கு எவ்விதமான ஸேவை செய்திருந்தோம்! மேலும் ஹே! கருணுநிதியே, மஹாதேவா! பவதேவா அந்த ஸுக்ருதன் வித்யாதரன் என்ன செய்தான்?

அவனுடைய பூர்வஜன்ம வ்ருத்தாந்தத்தையும் தாங்கள் கூறவேண்டும் என்ருர்கள். பகவான் சிவபிரான் நாககன்னிகைகளின் இந்த விதமான விண்ணப்பத்தைக்கேட்டு, அவர்கள் எல்லாவருக்கும் பரிமளாலயனுடைய பூர்வஜன்ம வ்ருத்தாந்தத்தைக் கூறத் தொடங்கினுர்.

ஹே! நாககன்னிகைகளே! உங்கள் மூவருடையவும், அந்த வித்யாதர குமாரன் உடையவும் பூர்வஜன்ம வ்ருத்தாந்தத்தைக் கூறுகிறேன். கவனமாகக் கேளுங்கள்.

இந்த ரத்னவளியும் அந்த வித்யாதரனும் இருவரும் போன ஜன்மத்தில் புறுக்களாக இருந்தார்கள். என்னுடைய இந்தக் கோவிலிலேயே இருவரும் வெகுநாள் வஸித்து வந்தார்கள்.

அவர்கள் இவ்வாலயத்தில் படிந்த தூசுகளை தங்கள் இறகுகளால் விசிறி விசிறிப் போக்கடித்தார்கள். ஆகாயத்தில் பறந்து உயர இருந்தும் கோவிலின் சுற்றுப் ப்ராகாரத்தில் வளைய வந்ததும் இவர்கள் இருவரும் என்னை எத்தனையோ முறைகள் வலம் வந்திருக்கின்றனர். இங்குள்ள நாலு நதிகளிலும் அனேகம் தடவை ஸ்னனம் செய்திருக்கிறுர்கள்.

இந்த ஜலத்தைக் குடித்து இருக்கிறுர்கள். தங்கள் மதுரத்வனியினுல் என்னை ஸந்தோஷப்படுத்தியிருக்கிறுர்கள். இவர்களிருவரும் ஸந்தோஷமாக த்ருடசித்தத்துடன் எனது பக்தர்கள் இங்கு புரியும் எத்தனையோ விதமான க்ரியைகளைப் பார்த்திருக்கின்றனர். எனது மங்கள ஆரத்தியின் சோபையை தரிசித்திருக்கிறுர்கள். தங்கள் காதாகிய தொன்னையினுல் எனது நாமம் ஆகிய அம்ருதத்தை பருகியிருக்கிறுர்கள்.

இவ்வளவு இருந்துகூட பறக்கும் ஜாதியில் பிறந்ததால் என் ஸமீபத்தில் அவைகளுக்கு மரணம் ஏற்படவில்லை. ஆனுல் எங்கு மரணம் அடைந்தால் காசியில் மரணம் அடைந்தர்க்கு ஸமானமோ அப்படிப்பட்ட அயோத்தியில் அவைகளுக்கு மரணம் ஏற்பட்டது.

அயோத்யாவில் மரணம் அடைந்ததால் இவள் ரத்னத்வீப நாகனுடைய கன்னிகையானுள். இவளுடைய பதியான அந்த ஆண்புறு வித்யாதரனுக்குப் புத்ரனுனுன்.

இப்பொழுது நாகராஜனுன அந்த பத்மியின் கன்னிகை ப்ரபாவதியும், த்ரிஸிரஸ் என்னும் பெயருள்ள நாகேந்திரனின் புத்ரி - ஆன கலாவதியும் எங்கு பிறந்தார்கள் என்பதைக் கூறுகிறேன் கேள்.

இந்த ஜன்மத்திற்கு மூன்று ஜன்மம் முன்னுல் மகரிஷி நாராயணருக்கு நற்குணமும் ப்ரேமையும் நிறைந்தவர்களான பெண்ணுய் பிறந்து குணத்தை அனுஸரித்து சீலவதி, ப்ரேமாவதி என்று பெயரிட்டார்கள்.

பிறகு இவ்விருவரின் விருப்பத்தின்படி இவர்கள் பிதா நாராயணரிஷி இவ்விருவரையும் அமுஷ்யாயனர் என்னும் மகரிஷியின் புத்ரனுன நாராயணனுக்குக் கன்யாதானமாகக் கொடுத்தார்.

ஆனுல் இந்த ரிஷிகுமாரன் யௌவன பிராயத்தை அடைவதற்கு முன்னுலேயே இந்த வனத்தில் ஸமித்து சேகரிக்கச் சென்ருன்.

யதேச்சையாக அவனை அங்கு பாம்பு கடித்துவிட்டது. அப்பொழுது கலாவதி என்ற பவானியும், ப்ரேமாவதி என்ற கௌதமியாகிய இரு கன்னிகைகளும் வைதவ்யத்தை அடைந்து மிகவும் துக்கத்தினுல் தீனுவஸ்தையை அடைந்தார்கள்.

அப்பொழுது முதல், விபரம் தெரிந்த எவரும் நதிகள், தேவதைகள், இவர்கள் பெயருள்ள பெண்களை விவாஹம் செய்து கொள்ளத் தயங்கினுர்கள்.

பிறகு அவர்கள் இருவரும் ஒருதினம் மற்றொரு மகானுகிய ரிஷியின் ஆச்ரமத்திற்குச் சென்ருர்கள். அங்கு தெய்வ வசமாக வைத்திருக்கும் வாழைப் பழங்களில் இரண்டை ஒருவரும் கொடுக்காமலேயே தாங்களாக எடுத்துக்கொண்டார்கள். அதன் பிறகு இவ்விரு ரிஷிகுமாரிகளும் மாஸோபவாஸம் முதலிய வ்ரதங்களை மிகவும் கடினமாக அனுஷ்டித்துக்கொண்டு, காலக்ரமத்தில் மரணமடைந்தார்கள்.

ஆனுல் வானரங்களாகப் பிறந்தார்கள். பழத்தைத் திருடியதால் வானரமாகப் பிறந்தாலும், அவர்களுடைய குணத்தினுலும் அன்பினுலும் அவர்கள் காசியில் பெண் குரங்குகளாய்ப் பிறந்தார்கள்.

*அந்த நாராயணன் எனும் பெயருள்ள ரிஷிகுமாரன் பிதாவின் ஸேவாதர்மத்தை நன்ருக அனுஷ்டித்து வந்தாலும் அவனும் காசியில் புருவாகப் பிறந்தான்.*

*இந்தவிதமாகப் பரிமளாலயன் என்ற வித்யாதரன் பூர்வ ஜன்மத்தில் இவ்விருவர்களுக்கும் பதியாக இருந்து இருக்கிருன். இப்பொழுது இவளேயும் சேர்த்து, மூன்று பேர்களுக்கும் பதியாகப் போகிருன்.*

*அந்தக் கோவிலுக்குப் பக்கத்தில் மிகவும் பெரியதான ஒரு ஆல வ்ருக்ஷம் இருந்தது. அனேகம் கிளேகளுள்ள அந்த ஆலமரத்தில் அந்த இரண்டு வானரிகளும் வஸித்து வந்தன.*

*விளேயாட்டாக இந்த இரண்டு வானரிகளும் சதுர் நதிதீரத்தில் மூழ்கி விளேயாடும். தாகம் எடுத்தால் அத்தீர்த்தத்தையே குடிக்கும். அவைகளின் ஜாதிஸ்வபாவமான சஞ்சலத்தன்மையிருல் குதித்துக்கொண்டு, கோவிலேச் சுற்றிச் சுற்றி வரும், லிங்கத்தைப் பார்க்கவும் செய்யும்.*

*ஒருதடவை அந்த ஆலமரத்தின் பக்கத்தில் இரண்டும் சுற்றிக் கொண்டிருந்தன. அச்சமயம் யோகி வேஷம் தரித்த ஒரு குரங்காட்டி அவைகளே கண்ணி வைத்துப் பிடித்துவிட்டான்.*

*இவைகளிரண்டிற்கும் அவன் ஆடவும் பிச்சை எடுக்கவும், கற்றுக்கொடுத்தான். சில தினங்களுக்குப் பிறகு இவை இரண்டும் இறந்துவிட்டன.*

*அப்பொழுது காசி வாஸத்தின் புண்ணிய பலனிருலும், த்ரிலோசனரை சுற்றி வந்ததாலும், இரண்டும் நாக கன்னிகைகளாகப் பிறந்தன.*

*இப்பொழுது திரும்பவும் அந்த வித்யாதர குமாரரைப் பதியாகப் பெற்று ஸ்வர்க்க ஸுகங்களே அனுபவித்து காசியின் நிர்வாண பதவியை அடைவார்கள்.*

*காசியில் அல்பமாய் ஸத்கர்மங்களைச் செய்தாலும் அதன் பலனாக என் க்ருபையால் மோக்ஷம் ஸித்திக்கும். இம்மூவுலகங்களிலும் உள்ள என் ஸ்தானங்களில் காசீபுரிக்கு ஸமானமான ஸ்ரேஷ்ட ஸ்தானம் எங்கும் இல்லை. அவைகளிலும் ஓம் காரேச்வரர் எல்லாவற்றிலும் ப்ரதானம். இந்த த்ரிலோசனருடைய ஸ்தானம் அவைகள் எல்லாவற்றிலும் உயர்ந்தது.*

*இந்த லிங்கத்தில் நான் எப்பொழுதும் சான்னித்யமாக இருந்து, நான் பக்தர்களுக்கு போகத்தையும் மோக்ஷத்தையும் கொடுத்துக் கொண்டிருக்கிறேன்.*

*அதனால் காசியில் எல்லோரும் த்ரிலோசனரை பூஜை செய்வது அத்யாவச்யம். இவ்விதம் கூறிய பகவான் த்ரிலோசனர் மூன்று உலகங்களையும் தாங்கும் காரண பூதராக இருந்தாலும் கூட சூக்ஷ்ம ரூபத்தை எடுத்துக்கொண்டு கோவிலுக்குள் சென்று விட்டார்.*

*இங்கு இந்த நாக கன்னிகைகள் மூவரும் தங்கள் தங்கள் வீடுகளுக்குப் போய் தங்கள் அன்னையிடம் எல்லா விஷயங்களையும் தெரிவித்து க்ருதக்ருத்யர்கள் ஆனார்கள். பிறகு ஒருசமயம் வைகாசி மாதத்து மகாயாத்திரை வந்தது.*

*அச்சமயம் த்ரிலோசநரை தரிசிக்க அந்த வரஜஸ்க மகா பீடமாகிய மஹாக்ஷேத்திரத்தில் தங்கள் தங்கள் பந்து மித்ரர்களுடன், எல்லா வித்யாதரர்களும், நாகர்களும் ஒன்று சேர்ந்தனர். தேவதைகளுடைய க்ருபையால் அவர்கள் ஒருவருக்கு ஒருவர் குசலப்ரச்னம் விசாரித்துக் கொண்டனர்.*

*நாகர்கள் வித்யாதரருடைய புத்ரனான பரிமளாலயனக்கு இம்மூன்று பெண்களையும் கன்னிகாதானம் செய்து கொடுத்தார்கள். பரிமளாலயனுடைய பிதா மந்தாரதாமனும் மூன்று புத்ரவதுக்களையும் அடைந்து சந்தோஷமடைந்தான்.*

*அதுபோலவே நாகராஜனான ரத்னத்வீபன், பத்மி,*

த்ரிசிகன் மூவரும் பரிமளாலயனை எல்லாவிதத்திலும் யோக்யனான மருமகனாகப் பெற்று ஸந்தோஷம் அடைந்தார்கள்.

அதுபோலவே இரு தரத்து பந்துபாந்தவர்களும் ஸந்தோஷத்தினால் விரிந்த கண்களுடையவர் ஆனார்கள். இந்தவிதம் அவர்களெல்லோரும் விவாஹ உத்ஸவத்தைச் சிறப்பித்து, த்ரிலோசனரின் பெருமைகளைப் பாடிக்கொண்டு தங்கள் தங்கள் உலகத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

அதன்பிறகு ஸ்ரீமான் பரிமளாலயன் என்னும் வித்யாதரன் அந்த மூன்று நாக கன்னிகைகளுடன் கூட விபுலமான ஸுகபோகங்களை அனுபவித்துவிட்டு வ்ருத்த தசையில் காசியை அடைந்தான்.

அங்கு ஸ்ரீத்ரிலோசனருக்கு ஸேவை செய்துகொண்டு மதுரகீதங்கள் பாடிக்கொண்டு, நாக கன்னிகைகளுடன் தன்னையிழக்கும் நிலை வந்ததும் அந்த த்ரிலோசன லிங்கத்திலேயே ஐக்யமானார்கள்.

ஸ்கந்தர் கூறினார்:- கலியுகத்தில் மகாதேவர் த்ரிலோசன லிங்கத்தின் மகிமைகளை மறைத்து வைத்திருக்கிறார். அதனால் அல்ப புத்தியுள்ள இந்த இந்த கலிகாலத்து ஜனங்கள் அதை உபாஸிப்பதில்லை.

ஆஹா! இந்த த்ரிலோசனரின் கதை பாபிகளின் காதுகளில் விழுந்தால் கூட அவர்கள் பாபம் நசித்துப் பரமகதியை அடைகிறார்கள்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகாண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான எழுபத்தாறுவது அத்யாயம்.

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 77

பார்வதி கூறினாள்:- ப்ரணதஜன தயாநிதே, தேவிதேவேசா, நான் தங்களை வணங்குகிறேன். தாங்கள் பக்தர்களிடம் க்ருபை வைத்து, கேதாரேஸ்வரரை வர்ணியுங்கள், ஏன் என்றால் காசியில் அந்த லிங்கத்தில் தங்களுக்கு மிகுந்த பிரியம்.

அவருடைய பக்தர்களும் ஞானவான்கள். மகாதேவர் கூறினார். ஹே அபர்ணே! நான் கேதாரேஸ்வருடைய கதையைக் கூறுகிறேன் கேள்.

இதைக் கேட்ட மாத்திரத்தில் மஹா பாபிகளும், நிஷ்பாபர்களாய் விடுகிறார்கள். எவர் ஒருவர் வைராக்யவானாய், கேதாரேஸ்வரரை யாத்திரையாகச் சென்று வணங்குகிறானோ, அவனுடைய ஜன்மஜன்மாந்த்ர ஸஞ்சித பாபம், உடனே நாசமடைகிறது.

எவரொருவர் கேதார யாத்திரைக்காக வீட்டிலிருந்து கிளம்புகிறார்களோ, அவருடைய இரண்டு ஜன்மங்களாகச் சேர்த்து வைத்த பாபங்கள், சரீரத்திலிருந்து முற்றிலும் மறைந்து விடுகிறது.

பாதி வழி வந்தவருக்கு மூன்று ஜன்ம பாபம் விலகி விடுகிறது.

தேகமாகிய வீட்டிலிருந்து பெருமூச்சுடன் கிளம்பிச் செல்கிறது. ஒருவர் தனது வீட்டிலிருந்து கொண்டு ஸந்த்யா ஸமயம் கேதாரத்தின் நாமத்தை மூன்று முறை ஜபித்தாலும், அவனுக்கு நிச்சியமாக கேதாரேஸ்வர தர்சன பலன் கிடைக்கிறது. கேதார சிவனுடைய ஆலய ப்ராகாரத்தைப் பார்த்து அங்குள்ள ஜலத்தை குடிப்பவர்களுக்கு ஏழுஜன்மம் செய்த பாபம், நசிக்கிறது.

ஹரபாப குண்டத்தில் ஸ்னானம். கேதாரேஸ்வரரை பூஜித்தால், இவை கோடிக்கணக்கான ஜன்மங்களின் பாபங்களை விலக்குகின்றன.

ஒருவன் ஹரபாப குண்டத்தில் ஸ்ஞுஞதிகளே முடித்துக் கொண்டு, தனது இதயரூப கமலத்தில் கேதாரேஸ்வர லிங்கத்தை வைத்து, ஒரு தரமாகிலும் வணங்கிஞல், அவன் கடைசி காலத்தில், நிச்சயம் முக்தியை அடைகிருன்.

ஹரபாப குண்டத்தில் ச்ரத்தையுடன் ஸ்ஞனம் செய்தவனுக்கு, ஏழு தலேமுறை பித்ருக்கள் கரை ஏறுகிருர்கள். அவர்கள் எனது லோகத்திற்கு வருகிருர்கள்.

ஹே அபர்ணே! பூர்வ காலத்தில் ரதந்தர கல்பத்தில் என்ன விஷயம் நடந்ததோ, அதை உனக்கு விளக்கிச் சொல்கிறேன், காது கொடுத்துக்கேள்.

ஒரு ப்ராம்மண பையனுக்கு தகப்பஞர் யக்ஞோப வீதம் செய்து வைத்தார். அவன் ப்ரம்மசர்ய வ்ரதம் எடுத்துக் கொண்டு, உஜ்ஜயினியில் இருந்து இங்கு வந்தான்.

ஜடா மகுட அலங்காரமும் லிங்க பூஜையும், பஸ்மம் பூசிய தேஹமும், பிக்ஷாபாத்திரத்தில் ஸந்தோஷப்படும் இதயமும். கங்காஜலபானமும் பாசுபத ப்ராம்மணர்கள் நிறைந்த சிவபுரியான காட்சியைப் பார்த்தான் மிக்க ஸந்தோஷமடைந்தான்.

அங்கேயே ஹிரண்ய கர்பர் எனும் ஆசார்யரிடம் பரம உத்தமான பாசுபத வ்ரதமெடுத்துக் கொண்டான். அவன் பேர் வஸிஷ்டர். அவன் சைவர்களுக்கெல்லாம் மேலே ப்ரதானமாக விளங்கிஞன்.

அதிகாலேயில் எழுந்து ஹரபார குண்டத்தில் ஸ்ஞனம் செய்வான். பிறகு மூன்று காலங்களிலும் லிங்கபூஜை செய்வான். சிவலிங்கத்துக்கும் குருவுக்கும் அவனுக்கு பேதம் தெரியாது. ஒரு சமயம், அப்பொழுது அவனுக்குப் பன்னிரண்டு வயதே நிரம்பியிருந்தது.

தன் குருவுடன் கேதாரேஸ்வரரை தரிசிக்க இமாலயம் சென்ருன். அங்கு சென்ருலே ஸம்ஸாரிகளின்

சோகமெல்லாம் விலகும். அங்கு லிங்காகாரமாக இருக்கும் தண்ணீரைக் குடிப்பதனாலேயே அவர்கள் லிங்காகாரமாக ஆகிறார்கள்.

இதற்குப் பிறகு வசிஷ்டருடைய ஆசாரியரான தபஸ்வி, இரண்யகர்பர் அஸிதார பர்வதத்திற்குச் சென்றிருக்கும் சமயம், காலமாகி விட்டார். பிறகு அங்கு எல்லா தபஸ்விகளும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது சிவனுடைய, அனுசரர்கள் வந்து, ஸ்வயமாகவே இயங்கும் விமானத்திலேற்றி, மிக்க சந்தோஷத்துடன் கைலாஸத்திற்குக் கொண்டு சென்றார்கள்.

கேதாரேஸ்வரரை தரிசிக்க வேண்டுமென்ற உத்தேசத்துடன் ஒருவன் யாத்திரையாக காசிக்கு வரும்பொழுது பாதி வழியில் மரணம் அடைந்தானானால், அனேக நாட்கள் வரை அவன் கைலாஸத்தில் வசிக்கிறான்.

இந்த ஆச்சர்யமான சம்பவத்தைப் பார்த்துவிட்டு தபோதனனான வஸிஷ்டர் நிச்சயமாக கேதாரேஸ்வரர்தான் மற்ற லிங்கங்களைவிட உயர்ந்தது என மனதில் எண்ணினார்.

பிறகு ஹிமாலயத்தில் உள்ள கேதாரஸ்வரரை தரிசித்து விட்டுக் காசிக்குத் திரும்பி வந்தார். இந்த நியமத்தை மனதில் விட்டு காசிக்குத் திரும்பி வந்தார். இந்த நியமத்தை மனதில் கொண்டு செய்கையிலும் கடைபிடித்து வைத்தார்.

ஒவ்வொரு வருஷமும் தான் உயிருடன் இருக்கும்வரை காசியில் இருந்தாலும் நான் சித்ரா பௌர்ணமி அன்று கேதாரேச்வரரை தரிசிப்பேன் என்று ஸங்கல்பம் செய்து கொண்டார்.

பிறகு அவன் ஆனந்தவனத்திலிருந்து கொண்டே, பால ப்ரும்மசாரி 61 தரம் யாத்திரை போய் வந்தான். இப்படியாக அவன் தலை நரைத்து, கிழப்பருவம் வந்த பின்னும், மிக உற்சாகத்துடன் கூட சித்திரை வந்ததும், கேதார யாத்திரைக்கு தயார் செய்வார்.

*இதைப் பார்த்துவிட்டு அவருடைய ஸாது ஸங்கத்தை சேர்ந்த தபஸ்விகள் வ்ருத்தாப்யம் ஏற்பட்டதால் வழியில் என்ன செய்வது என்ற பயத்தால் அவரைத் தடுத்தார்கள்.*

*'அந்த திடசித்தமுள்ள சைவ மதஸ்தருடைய உற்சாகம் குறையவில்லை. அவர் யோசித்தார். நான் மார்க்கத்திலேயே இறந்து விட்டேனுல் என் குருவைப்போல் எனக்கும் நற்கதி கிடைக்கட்டுமே என்று எண்ணினர்.*

*ஏ! பார்வதி! இந்த விதமாக திடசங்கல்பம் செய்துகொண்டிருந்த, ப்ராம்மணர்களுடைய அன்னத்தையே புஜிக்கும் அந்த தபோதனிடம், நான் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். அதனுல் அந்த தபோத்தமன் கனவில் எழுந்தருளிக் கூறினே.*

*ஏ! த்ருடவ்ரதா, நான் உன்னிடம் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். நீ என்னை கேதாரேஸ்வரர் என்றே அறிவாய் என்ருர். உனக்கிஷ்டமான வரங்களை, என்னைப் ப்ரார்தித்து வாங்கிக்கொள். இதற்கு நீ யோசிக்க வேண்டாம் என்றேன். அவர் அப்பொழுது கூறினுர். கனவு கண்டால் போதுமா, அது பொய்யல்லவா, என்ருர். அப்பொழுது நான் திரும்பவும் அவனிடம் கூறினேன்.*

*அபவித்ரமான ஜனங்களின் கனவுதான் பலிக்காது. உன்னைப் போல் ஜிதேந்த்ரியர்களுடைய கனவுகள் தான் பலிக்கும்.*

*ஏ, ப்ராம்மணேத்தமா! நீ கனவில் ஸந்தேகத்தைவிட்டு விட்டு வரம்கேள். ''உன்னைப்போன்ற ஸாத்விக வ்ருத்தி உடையவர்களுக்குக் கொடுக்கக் கூடாதது ஒன்றும் இல்லை. என்னுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டுவிட்டு இரண்யகர்பரின் சிஷ்யரான அத்தபோத்தமன் என்னிடம் வரம் கேட்டான்.*

*ஏ! தேவேசா, தாங்கள் சந்தோஷமடைந்தீர்களா. ஆனுல் என்கூட வரும் எல்லோருக்கும் தாங்கள் அனுக்ரஹம் செய்ய வேண்டும் ஹே சூலி. இந்த வரமே எனக்கு வேண்டும்.*

*ஹே!, தேவி! அந்த பரோபகாரியான வசிஷ்டரின் வாக்குகளைக் கேட்டு, நான் மிகவும் சந்தோஷமடைந்தேன் அவரிடம் நான் அப்படியேயாகுக என்றேன். நான் அவரது பரோபகார புத்தியைக் கண்டு அவரது தபஸின் பலனை இருமடங்காக்கினேன்.*

*மறுபடியும் ஒருவரம் கேள், என்றேன்; ஹே! உமே, அந்த த்ருடசைவ வ்ரதஞன மகாப்ராக்ஞன் வசிஷ்டன், அப்படியானல் தாங்கள் இமாசலத்திலிருந்து இங்கு வந்து வசிக்க வேண்டும் என்று வரம் கேட்டான்.*

*பிறகு நான் அவனுடைய தபஸ்ஸினல் ஆகர்ஷிக்கப்பட்டு இமாலயத்தில் ஒரு கலையை மாத்திரம் விட்டு விட்டு; பாக்கி கலைகளுடன் இங்கேயே வசிக்கத் தொடங்கினேன்.*

*பிறகு அதிகாலையானதும் எல்லோரும் பார்க்கும்போது தேவதைகளும் ரிஷிகளும் துதிக்க, நான் ஹிமாலயத்திலிருந்து புறப்பட்டேன். வசிஷ்டரை முன்னிட்ட ஸமஸ்த யாத்ரீக வர்கங்களையும் தினமும் அனுக்ரஹித்துக் கொண்டு ஹரபாபமென்னும் ஸரஸின் கரையில் வசிக்கத் தொடங்கினேன்.*

*என்னையும், என்னைச் சார்ந்த, ஹரபாப தீர்த்தத்திலும் ஸ்ஞனமும் ஆராதனையும் செய்து வசிஷ்டரும் அவருடைய தோழர்களும் சரீரத்துடனேயே ஸித்தி அடைந்தார்கள்.*

*அப்பொழுது முதலே நான், அவிமுக்த க்ஷேத்திரத்தில் விசேஷமாக கலியுகத்தில் இந்த கேதாரலிங்கத்தில் ஸாதகர்களுக்கு ஸித்தியளிக்கும் பொருட்டு எப்பொழுதும் வசிக்கத் தொடங்கினேன். இமாலய பர்வதத்தில் ஏறி கேதார நாதரை தரிசித்தால் என்ன பலன் கிடைக்குமோ, அதைவிட ஏழுபங்கு அதிக புண்ணியம் காசியில் கேதாரேச்வரரை தரிசித்தால் கிடைக்கிறது. ஹிமாலயத்தில் நிர்மலமான, கௌரிகுண்டம், ஹம்ஸ தீர்த்தம், மதுதாரா, இவைகள் இருக்கின்றன. அவைகள் காசியில் அப்படி அப்படியே இருக்கின்றன.*

முன்பெல்லாம் இந்த ஹரபார தீர்த்தம் ஏழு ஜன்மங்களில் செய்த பாபங்களை போக்கடித்துக் கொண்டு இருந்தது. பிறகு கங்கை வந்து அதில் சேர்ந்தபின், கோடிக்கணக்கான ஜன்மங்கள் செய்த பாபங்களையும் நாசமடையச் செய்கிறது.

அங்கு ஒருதரம் இரண்டு காகங்கள் சண்டை போட்டுக் கொண்டு கீழே கங்கையில் விழுந்தன

அவை இரண்டும் பலர் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஹம்ஸ பக்ஷிகளாக மாறிப் பறந்து சென்றன.

அதனாலேயே இதற்கு ஹம்ஸ தீர்த்தம் என்று பெயர் வந்தது.

ஹே! கௌரீ இந்த மஹத்தான மடுவில் நீ தான் முதல் முதல் ஸ்னானம் செய்தாய். அந்த காரணத்தால் இது தீர்த்தங்களில் உத்தமமான கௌரீகுண்டம் என்று ப்ரஸித்தமாயிற்று.

இங்கு கங்கைக்கு மதுதாரை என்று பெயர் உண்டு. ஏன் என்றால் அது இங்கே மகாமோஹாந்தகாரத்தை விலக்கி, அனேக ஜன்மங்களாக உண்டான ஜடத்தன்மையைப் போக்கடிக்கிறது.

இந்த ஹரபாப தீர்த்தத்தில் பூர்வகாலத்தில் மானஸம் என்னும் ஸரோவரம் வந்து, மிகவும் கடினமான தவம் செய்தது.

அதனால் இதற்கு மானஸ தீர்த்தம் என்னும் மற்றும் ஒரு பெயர் உண்டானது.

முன்பு இங்கு ஸ்னானம் செய்தால் போதும். முக்தி கைமேல் கிடைத்து வந்தது. ஆனால் துன்பத்தில் சிக்கிய தேவர்கள் இந்த விஷயமாக என்னிடம் ப்ரார்த்தித்துக் கொண்டார்கள்.

அதாவது, ஹேதேவ! இந்த கேதார குண்டத்தில் ஸ்ஞனம் செய்வதாலே எல்லோருக்கும் முக்தி கிடைக்கும் என்று இருந்தால் வர்ணுஸச்ரம தர்மம் சிதறிப் போய்ச் ச்ருஷ்டி மறைந்துவிடும்.

அதனுல் தாங்கள் இங்கு சரீரத்தை விடுபவர்களுக்கே, முக்தி கொடுக்க வேண்டும். ஸ்ஞனம் செய்தால் மட்டும் போதாது.

நான் அவர்களுடைய வேண்டுகோளுக்கு சரி என்று சொல்லி விட்டேன். ஆனுல் ஹே! மகாதேவி, அப்பொழுது முதல் கேதாரகுண்டத்தில் ஸ்ஞனம், பக்தி பாவத்துடன் எனது பூஜை, என் நாம, ஜபம் இவைகளைச் செய்வதால், அன்னிய ஊரில் மரணமடைந்தவர்கூட என்னுல் மோக்ஷ லக்ஷ்மியை தானம் செய்யப் பெறுகிறுர்கள்.

இங்கே, கேதார, தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து ஒருவன் திடசித்தத்துடன் பிண்டதானம், செய்தானுனுல், அவனுடைய நூற்றி ஒரு தலைமுறையை சேர்த்த பித்ருக்கள் ஸம்ஸார ஸாகரத்தில் இருந்து கரை ஏறுகிறுர்கள்.

மங்கள வாரத்தன்று அமாவாஸ்யை வந்தால் அன்று கேதாரகுண்டத்தில் ச்ராத்தம் செய்வானேயானுல் கயாச்ரார்த்தத்தினுல் ஒரு ப்ரயோஜனமும் இல்லை. ஒருவன் கேதாரத்திற்கு யாத்திரை செய்ய விரும்பினுல், அவனுக்கு நான் இந்த புத்தியைக் கொடுக்கிறேன்.

அதாவது காசியிலேயே கேதாரரேஸ்வரரை ஸ்பர்சித்து க்ருத க்ருத்யர் ஆகுங்கள், என்று சொல்வேன். ஒருவன் சித்திரை மாதத்து க்ருஷ்ண பக்ஷத்து சதுர்தசி அன்று வ்ரதமிருந்து மூன்று கை ஜலம் குடித்து விட்டு உபவாஸம் இருப்பானுனுல், அவன் ஹ்ருதயத்தில் கேதாரேஸ்வரர் வசிப்பார்.

ஹிமாலய கேதாரேஸ்வரருடைய தீர்த்தத்தைப் பானம் பண்ணினுல் உண்டாகும் அதே பலன், இங்குள்ள கேதாரேஸ்வர தீர்த்தத்தைப் பானம் பண்ணினுல் ஸ்த்ரீயானுலும் புருஷனுனுலும், அதே பலன் கிடைக்கும்.

*ஒருவன் தனம் வஸ்த்ரம் அன்னம் இவைகளினுல் கேதாரேஸ்வரருடைய பக்தர்களை பூஜித்தாலும் தன்னுடைய பிறவி முழுவதிலுள்ள பாபத்திலிருந்து விடுபட்டு ஸ்தானத்தை வந்தடைகிருன்.*

*ஆறுமாதம் வரையிலும் ப்ரதினமும் ஒருவன் மூன்று வேளைகளும் கேதாரநாதனை வணங்கினுல், அவர்களை யமராஜன் முதலிய அஷ்டதிக்பாலர்கள் எப்பொழுதும் வணங்குகிருர்கள்.*

*கலியுகவாஸிகளுக்கு அனேகமாக எல்லோருக்கும் கேதாரத்தின் மகிமை தெரியாது. ஆனுல் அப்படித் தெரிந்த ஒரு புண்யாத்மாவிற்கு எல்லாம் தெரியும். ஒருவன் ஒரு தடவையாவது கேதாரேஸ்வரரை தரிசித்து இருந்தால், அவன் என்னுடைய அனுசரனுகி விடுகிருன். அதனுல் கருத்துடன் கேதாரேஸ்வரரை தரிசிக்க வேண்டும்.*

*கேதாரேஸ்வருடைய வடக்குபாகத்தில் பரம உத்தமான சித்ராங்கதேஸ்வர லிங்கம் இருக்கிறது. அதை தரிசனம் செய்வதினுல் ஒருவன் ஸ்வர்க்கத்தின் நித்ய போகத்தை அனுபவிக்கிருன் கேதாரேஸ்வரருக்குத் தென்பாகத்தில் நீல கண்டேஸ்வரர் இருக்கிருர்.*

*அதை தரிசனம் செய்தால், ஸம்ஸாரமாகிய ஸர்ப்பத்தால் கடியுண்ட ஜனங்களுக்கு அதன் விஷத்தினுல் ஒரு பயமும் ஏற்படாது. அதற்கு வாயுகோணத்தில் அம்பரீஷேஸ்வரரை தரிசனம் செய்தால் அவன் ஸம்ஸாரத்தின் கர்ப்பவாஸ யாதனையை அனுபவிக்க மாட்டான்.*

*அதன் பக்கத்திலேயே இந்த்ரத்யும்னேஸ்வரர் என்னும் லிங்கத்தை பூஜை செய்தால் அவன் தேஜோமயமான இந்த்ர விமானத்திலேறி சொர்க்கலோக ஆனந்தத்தை அனுபவிப்பான்.*

*அதற்குத் தெற்கு பக்கத்தில் காலஞ்ஜரேஸ்வரர் என்னும் ஒரு லிங்கம் இருக்கிறது. அதை தரிசனம்*

செய்தால், அவன் காலத்தையும், வயோதிகத்தையும் ஜயித்து என் உள்ளத்தில் என் உலகத்தில் அனேக நாட்கள் வஸிக்கிறுன்.

சித்ராங்கதேஸ்வரருக்கும் வடக்கு பக்கத்திலிருக்கும் க்ஷேமேஸ்லிங்கத்தை தர்சனம் செய்தால் இஹ லோகத்திலும், பரலோகத்திலும் எங்கும் அவனுக்கு க்ஷேமமே, உண்டாகும்.

ஸ்கந்தர் கூறுவார். ஹே விந்தய விவர்த்தகரே! இந்த விதமாக மஹாதேவர் கேதாரேஸ்வரருடைய ஆவிர்பவமான இந்தக் கதையைக் கேட்டவன் கண மாத்திரத்தில் நிஷ்பாபனுகி சிவ லோகத்தை அடைகிறுன்.

இவ்விதம் ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான ஸ்ரீ காசீ கண்டத்தில் உத்ரார்த்தபாஷாடீகாவான எழுபத்தேழாவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 78

*பார்வதி கூறுவாள், ஹே! சம்போ, ஆனந்த கானனத்தில் புண்ணியத்தை அதிகரிக்கும் இன்னும் எத்தனை லிங்கங்கள் உள்ளன? எவைகளின் நாமங்களை ஸ்மரித்தால் மகா பாதங்களும் க்ஷயமாகும்?*

*ஸாதகர்கள் எந்த லிங்கங்களில் அதிகமாக பிரியம் வைத்திருக்கிறார்கள்? யாரை எப்பொழுதும் சேவிக்க விரும்புகிறார்கள்? யாருடைய ஸமீபத்தில் ஸ்னானம் ஜபம், தானம், ஹோமம் இவைகளைச் செய்தால் அக்ஷயமாய் விளங்கும்? எந்த லிங்கங்களை ஸ்மரித்தாலும், தரிசனம் செய்தாலும், ஸ்பர்சித்தாலும், வணங்கினாலும் பஞ்சாமிர்தம் முதலிய அபிஷேகங்களும், பூர்வ பூஜையும் செய்தாலும் அளவில்லாத மங்களம் உண்டாகும். அப்பேர்பட்ட அந்த லிங்கத்தைத் தாங்கள் வர்ணியுங்கள்.*

*ஏ, கும்ப முனியே! பகவதியுடைய இந்தக் கேள்விகளைக் கேட்டு, ஸர்வக்ஞரான பகவான் என்ன பதில் கூறினாரோ அதை உமக்குக் கூறுகிறேன். கேளும்.*

*மகாதேவர் கூறினார்: ஏ, உமாதேவியே, நீ ஸம்ஸார பந்தனத்திலிருந்து நீக்கும் லிங்கங்களைப் பற்றிக் கேட்டாய் அல்லவா? நான் அதைக் கூறுகிறேன், நீ மனோலயத்துடன் கேள். ஏன் என்றால் இந்த ஆனந்தவனமான காசீ க்ஷேத்திரத்தில் இது ஒரு முக்யமான ரஹஸ்யம். இதை நான் இதுவரை ஒருவரிடமும் கூறியதில்லை. ஏனென்றால் இதைப்போல் கேட்பதற்கே ஒருவருக்கும் தெரியாது.*

*ஏ, ப்ரியே! ஆனந்தவனத்தில் என்னுடைய லிங்கங்கள் இருக்கின்றன. ஆனால் நீ எந்த அபிப்பிராயத்தில் கேட்டாயோ அதன் பிரகாரமே கூறுகிறேன் கேள்.*

*ஏ, விஸ்வேஸ்வரி, எங்கு நீயே நித்திய ஸ்வரூபமாக இருக்கிறாயோ, எங்கு உன்னுடைய புத்ரனே க்ஷேத்ரத்தின்*

*விக்னங்களை நிவர்த்தி செய்து கொண்டு அமர்ந்திருக்கிறேன். த்ரிபுர ஸம்ஹார காலத்தில் நானே அவனை மிகவும் ஸ்துதி செய்து லட்டுகளை ஸமர்பித்ததனால் என்னுடைய வெற்றியின் இச்சையை அவன் பூர்த்தி செய்தான். இங்கு பாபத்தை நிவர்த்தி செய்யும் பித்ருக்கள் ப்ரீதியை அதிகரிக்கச் செய்யும் ஒரு உத்தம தீர்த்தம் இருக்கிறது.*

*இந்திரனே அதில் ஸ்னனம் செய்து வ்ருத்ராஸுரனைக் கொன்ற ப்ரம்மஹத்தி தோஷம் நீங்கப் பெற்றான். பின் தர்மராஜரும் அங்கு ஸமாதியிலிருந்து கடினமான தபஸ்செய்து தர்மாதிகாரி என்ற பதத்தைப் பெற்றார்.*

*அங்கு பக்ஷிகள் கூட ஸம்ஸாரத்திலிருந்து முக்தி அடையும் ஞானத்தைப் பெற்றன. அங்கு மிகவும் ஸுகத்தையளிக்கும் சொர்ணமயமான ஆலமரம் இருக்கிறது. பக்ஷிகள் அதில் வஸிக்கின்றன.*

*துர்த்தமன் என்னும் அரசன் ப்ரஜைகளை மிகவும் கிளர்ச்சி செய்து, ஆண்டு வந்தான்.*

*அவன் இந்த லிங்கத்தைத் தரிசனம் செய்த மாத்திரத்திலேயே நல்ல புத்தியைப் பெற்றான்.*

*ஹே! ஸுந்தரி, அப்பேறப்பட்ட மகா பாதகங்களை நாசம் செய்யும் லிங்கத்தின் மஹாத்ம்யத்தைப் பற்றியும், அதன் உற்பத்தியும் பற்றி வர்ணிக்கிறேன் கேள்.*

*என்னுடைய இந்த ஆனந்த வனத்தில் இந்த இடம் தர்ம பீடம் என்னும் பெயருடன் ப்ரஸித்தமாய் விளக்குகிறது.*

*அந்தப் பீடத்தை தரிசித்த மாத்திரத்தில் எல்லா பாபமும் நீங்கும். ஏ, விசாலாக்ஷி! பூர்வ காலத்தில் ஸூர்ய நாராயண புத்திரரும், பரம ஆசார, சீலனன யமராஜன் அங்கு உனக்கு முன்னலேயே கடினமான தபம் செய்து வந்தான்.*

*குளிர்காலத்தில் தண்ணீரின் மத்தியிலும், மழைகாலத்தில் திறந்த வெளியிலும், வேனிற்காலத்தில் பஞ்சாக்னி மத்தியிலும் கடும் தவம் புரிந்தான்.*

*அவன் அனேக நாட்களாக ஒற்றைக் காலில் நின்று தபஸ் செய்தான். பிறகு வலதுகால் பெரு விரலை மாத்திரம் ஊன்றிக் கொண்டு தவம் செய்தான்.*

*இந்த பாக்யவானை யமன், அனேக ஸமயங்களில் வாயு போஜனம் மாத்திரம் பண்ணி வந்தான். தாகம் எடுத்தால் தர்ப்பை நுனியிலிருந்து சொட்டும் ஒரு துளி ஜலத்தையே நக்கி விட்டுக் காலத்தைக் கழித்தான்.*

*அவன் என்னை தரிசனம் செய்வதற்காக உக்ரமான ஸமாதியிலிருந்து நான்கு யுகங்களில் நான்கு சதுர்யுகம் பர்யந்தம் கோரமான தபஸ் செய்தான்.*

*அப்பொழுது யமராஜருடைய தபஸ்ஸினால் சந்தோஷமடைந்து அவனுக்கு வரம் அளிப்பதற்காக அவன் முன்னால் ப்ரத்யக்ஷமானேன். அங்கு கனகசாக எனும் பெயருள்ள ஒரு வட வ்ருக்ஷம் இருக்கிறது. அனேகம் பக்ஷிகளால் நிறைந்து குளிர்ந்த நிழலுடன் தபஸ்ஸினால் தாபத்தைப் போக்கிக் கொண்டிருந்தது. அந்த வடவ்ருக்ஷம் மந்த மாருதத்தின் அசைவினால் தன்னுடைய இலைகளாகிய கைகளை நீட்டி வழி நடந்ததால் களைத்துப் போன யாத்ரீகர்களை 'வாருங்கள்' எனக் குளிர்ந்த நிழலில் வந்து இளைப்பாருங்கள் என்று அழைத்துக் கொண்டு இருந்தன.*

*அதன் அழைப்புக் கிணங்கி அதனை ஆச்ரயித்த வழிப்போக்கர்களுக்கு, தன்னுடைய வாஸனையும் ருசியும் உள்ள பழுத்த உருண்டையான பழங்களை அளித்து அவர்களை மகிழ்வித்தது. அதே ஆலமரத்தடியில் வந்து யமராஜனைப் பார்த்தேன், ஆழ்ந்த நீலமான ஆகாசமண்டபத்தில் தன்னுடைய தேஜஸ்ஸினால் ஜொலிக்கும் சூர்யனைப் போல காணப்பட்டான். அவனது தபஸ்ஸின் ஒளி நான்கு பக்கங்களிலும் அவனைச் சுற்றி*

வட்டம் இட்டு, இருந்தது. மிகவும் பக்தியுடன் கூட அவன் சூர்யகாந்த மணியிஞல் ஆன மகாலிங்கத்தைத் தன்னுடைய, நாமமாகிய 'யமமேச்வரர்' என்று பெயரிட்டு தன் தேஜஸ்ஸிஞலேயே, பூஜித்துக் கொண்டிருந்தான்.

பின் அந்த லிங்கத்தையே சாக்ஷியாக வைத்துக்கொண்டு, மரக்கட்டையைப் போல், அசைவற்ற தேகத்துடன் நாசியின் நுனியில் திருஷ்டியைப் பதித்து. அந்த சூர்ய தனயன் கோரமான தவம் புரிந்து வந்தான். அப்பொழுது நான் தர்மராஜரிடம் கூறினேன். ஹே, பாஸ்கரநந்தன! மகா பாக்யவானே! வரம் கேட்பாய். இனி தவம் புரியவேண்டிய அவசியமில்லே. ஹே ஸு்வ்ரதனே, நான் மிகவும் சந்தோஷம் அடைந்தேன் என்றேன். இதைக் கேட்டு யமராஜன் என்னே நன்ருக உற்றுப் பார்த்துவிட்டு வணங்கிஞன். அவன் மிகவும் சந்தோஷ மனத்தினஞய் நிஷ்கபட பாவத்தோடு ஸமாதியை விட்டு, என்னேத் துதிக்கத் தொடங்கிஞன்.

ஹே, காரணத்திற்கும் காரணரே! உமக்கு வணக்கம். காரணரஹிதரே! உமக்கு வணக்கம். தாங்கள் எல்லா செயல்களுக்கும் ஸ்வரூபம் ஆகி இருந்தும் கூட, கார்யங்களில் இருந்து விலகிய ஸ்வரூபமாகவும், இருக்கிறீர்.

அதஞல் தங்களே அடிக்கடி வணங்குகிறேன். ஹே சந்த்ரசூடா! தாங்கள் உருவமில்லாதவர். ஆஞல் தங்கள் மாயையிஞல் எல்லா உருவங்களிலும் பரிபூர்ணமாக இருக்கிறீர்கள். தாங்கள் பரமாணுவாகவும் இருக்கிறீர்?

ஆஞல் கார்யகாரண ஸ்வரூபமாகவும் இருக்கிறீர். கடக்க முடியாததையும் கடக்க வல்லவரே! தாங்களே ஸம்ஸார ரூபமான பயங்கரக் கடலேக் கடத்தி, எங்களே அக்கரை சேர்க்க வல்லவர். அதஞல் தங்களுக்கு வணக்கம்.

ஹே! ஸ்வாமி! தங்களுக்குத் தலேவஞக ஒருவரும் இல்லே. ஸகல ஜகத்துக்கும் தலேவர். தாங்களே

*குணங்களுக்கு உள்ளும் அப்பாலும் இருக்கிறீர்கள். தாங்களே காலமூர்த்தி, ஆனால் தாங்களே காலத்திற்கும், இயற்கைக்கும் அப்பால் உள்ளவர்,*

*ஆனால் காலத்துள் இருக்கும். ப்ரக்ருதியும், தாங்களே. ஹே! அந்த சக்தியே, தாங்களே நிர்வாண பதவி, தாங்களே நிர்வாண பதத்தை அழிப்பவர். தாங்களே ஆத்மா, தாங்களே பரமாத்மா ஸமஸ்த சராசரமும் தாங்களே. ஹே ஜகத்தின் ஒரே பந்துவே, இந்த எல்லா ஜகத்தும் தங்களிடம் இருக்கிறது.*

*தாங்களே ஸாக்ஷாத் விச்வரூபர். உலக முழுவதும் தங்களுடையது. தாங்களே இந்த ஜகத்தை உயிர்பித்தும், வாழ்வித்தும் கடைசியில் ஸம்ஹரிக்கவும் செய்கிறீர். அதனால் ப்ரம்மா, விஷ்ணு ருத்ர ஸ்வரூபராகிய தங்களை அடிக்கடி வணங்குகிறேன்.*

*தாங்களே ம்ருடஸ்வரூபர். வேத வ்ருத்தமாகிய நடத்தையுள்ளவர்களுக்குத் தாங்களே பயங்கர பீமமூர்த்தியாக இருக்கிறீர்கள். ஹே! உமா பாகரே, தங்களுடைய பக்தர்களுக்குத் தாங்கள் மங்களத்தைக் கொடுக்கும் சங்கர மூர்த்தியாக இருக்கிறீர்கள்.*

*பக்தியில்லாதவர்களுக்கு தாங்கள் உக்ரமுள்ள ருத்ரமூர்த்தியாக இருக்கிறீர்கள். அதனால் தங்களுக்கு அனேக நமஸ்காரங்கள். ஹே! நாதா, சத்ருக்குளுக்கு தாங்கள் சூலபாணி, ஆனால் மனோ, வாக்கு, காயம் முதலியவற்றால் வணங்குகிறவர்களுக்கு தாங்கள் சிவஸ்வரூபம். தங்கள் சரணங்களையே அடைக்கலமாக்கிக் கொண்டவர்களுக்கு தாங்கள் ஸ்ரீ கண்டராக விளக்குகிறீர்கள். (ஸ்ரீ - மங்களம்) ஆனால் துராத்மாக்களுக்கு ஹாலாஹல விஷத்தைத் தரித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீ கண்டராக விளக்குகிறீர்கள்.*

*(ஸ்ரீ - விஷம்) ஹே! சாந்தமூர்த்தே, சங்கரா, சம்போ, சந்த்ர கலாதர, ஸர்ப்பபூஷணா, பினாகபாணியே, அந்த*

சத்ருவே தங்களுக்குக் கோடி கோடி, நமஸ்காரங்கள். ஏ! பகவான், இந்த உலகில் தங்களிடம் பக்தி பண்ணி பூஜை செய்பவனே தன்யன் க்ருதக்ருத்யன். உங்களை துதிசெய்பவர்களை இந்த்ராதி தேவர்களும் துதிக்கிறார்கள். எல்லையில்லா மகிமை உள்ளவரே, என்னைப்போல் மந்தபுத்தியுடையவர்களால் உங்களை எவ்வாறு துதிக்க முடியும்? கேவலம், வணங்கத்தான் முடியும். ஸ்கந்தர் கூறுவார் - ஸுரிய புத்ரரான யமராஜா இந்த விதம் ஸ்துதி பாடி, அத்யந்த தெய்வ சித்தத்துடன் நம: சிவாய என்று சொல்லிக்கொண்டு, பூமியில் தலைபட விழுந்து ஆயிரம் தரம் நமஸ்கரித்தான். அப்பொழுது பகவான் சங்கரர் தபஸ்ஸினால் மிகவும் வணங்கியவனைத் தடுத்து நிறுத்தி வரம் கொடுக்கலானார்.

அப்பனே! உன் பெயர் தர்மராஜன் என்று வழங்கட்டும் இன்றிலிருந்து உன்னை நான் ஸ்தாவரஜங்கம தேஹதாரிகளான ஸகலத்துக்கும் தர்மாதிகாரியாக நியமித்திருக்கிறேன். அதனால் என்னுடைய ஆக்ஞையால் நீ எல்லாருடைய தர்மத்தையும், அதர்மத்தையும் அடக்கி ஆள்வாய். நீ தக்ஷிணதிக்கிற்கு அதீச்வரனாகி எல்லாருடைய கர்மங்களுக்கும் சாக்ஷியாக நில். உன்னால் காண்பிக்கப்பட்ட மார்கத்தை அனுஸரித்தே, உத்தமர்கள் அதமர்கள் எல்லோரும், தங்கள் கதியை அடைவார்கள்.

ஏ! தர்மராஜா, எனது பரமபக்தா, இந்தக் காசியில் நீ ஆராதனை செய்த லிங்கத்தை எவன் தரிசித்து ஸ்பர்சித்து பூஜிக்கிறானோ, அவன் மிகவும் அல்பகாலத்திற்குள்ளேயே, ஸித்த லாபம் அடைவான்.

எவன் ஒருவன் சித்த சுத்தியுடன் உன்னால் ஏற்படுத்தப்பட்ட தர்ம தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து ஒரு தரமாவது தர்மேஸ்வரரை தரிசித்தானானால் அவனுக்கு நான்கு புருஷார்த்தங்களின் ஸித்தியும் அதிக தூரத்தில் இல்லை. ஒருவன் ஆயிரம் பாபங்கள் செய்தவனாய் இருந்தும் கூட தெய்வ க்ருபையால் காசிக்கு வந்து தர்மேஸ்வரரை

*ஸேவித்தானுனுல் அவன் நரகதுக்கத்தை அனுபவிக்கமாட்டான்.*

*ஆனுல் ஸ்வர்கத்தில் தேவதைகள் அவனைப்பற்றி எப்பொழுதும் புகழ்ந்து கொண்டேயிருப்பார்கள். ஒருவன் இவ்வுலகில் காசி அடைந்து தர்ம பீடஸ்தானத்தைக் கண்டும், தன் நலனிற்காக முயற்சி செய்யாவிட்டால், அவன் உன்னைப்போல் தேஜஸ்வியாகவும், க்ருதார்த்தனுகவும் எப்படி ஆவான்? ஏ தர்மராஜா! நீ இங்கு எப்படி கடும் தபஸ்ஸினுல் உன் மனோரதங்களை பூர்ணமாகப் பெற்ருயோ, அப்படியே தர்மேஸ்வரரின் பக்தர்களுடைய சகல காமனைகளும் பரிபூர்ணமாக நிறைவேறும். பெரிய பெரிய பாபங்களைச் செய்தவனும்கூட இங்கு வந்து ஒருதரமாவது தர்மேஸ்வரரை பூஜை செய்தானுனுல் அவன் நீ பூஜித்த லிங்கத்திற்கு பக்தனுகிருன்.*

*ஆனுல் அவன் உனக்கு பிரியமான பந்து ஆகிருன்? பிறகு அவன் ஏன் உன்னிடம் பயப்படுகிருன்? ஹே! தர்மா, ஒருவன் பத்ரம், புஷ்பம், பழம், ஜலம் இவைகளினுல் தர்மேஸ்வரரை பூஜை செய்தானுனுல் தேவதைகள் ப்ரஸன்னமடைந்து மந்தார மாலையினுல் அவனை பூஜிக்கிருர்கள்.*

*அனேக பாபங்களைச் செய்துவிட்டு உன்னிடம் பயப்படுபவர்கள் கூட தர்மேஸ்வரரை பூஜித்து, உனக்கு பந்துவாகி உன் மனத்தை சந்தோஷப்படுத்தி, உன்னிடம் ஒருபொழுதும் பயப்படாமல் இருக்கிருர்கள்.*

*ஜனங்கள் இங்கு உத்தரவாகினீ கங்கையில் ஸ்னுனம் செய்து இந்த தர்மேச்வர லிங்கத்தை வணங்கி விட்டு இந்த தர்மபீடத்தில் யதாசக்தி தானம் செய்தால், அது யுக முடிவுவரை அக்ஷய பலனைக் கொடுக்கும்.*

*கார்த்திகை மாதத்து சுக்லாஷ்டமி அன்று வ்ரதமிருந்து தர்மேஸ்வரர் ஆலயத்திற்கு யாத்திரையாக*

வந்து, இரவு கண் விழித்து உற்சவம் கொண்டாடினார்களானால் அவர்கள் திரும்பவும் பூமியில் பிறக்கமாட்டார்கள். ஒருவன் உன்னால் கூறப்பட்ட, இந்தஸ்துதியை, உனக்கு முன்னால் எப்பொழுதாவது படித்தால், அவன் பாபம் நீங்கி என்னுடைய உலகத்திற்குப் போகிறான். உனக்கும் மித்ரன் ஆகிறான்.

சூர்ய குமாரனான தர்மராஜனே, உனக்குக் கொடுக்கக் கூடாத பொருள் என்னிடம் ஒன்றும் இல்லை. அதனால் உனக்கு எது விருப்பமோ, அதைக்கேள், கேவலம் உனக்குக் கேட்கவேண்டிய சிரமம்தான்.

ஸ்கந்தர் கூறுவார்:- யமராஜர் இப்பொழுது தன் மனோரதத்தை பூர்த்தி செய்து வைக்கும், கருணாமய பகவான் சங்கரருடைய ப்ரஸன்ன மூர்த்தியைப் பார்த்துவிட்டு, ஆனந்த ரஸம் நிரம்பிய தடாகத்தில் முழுகினார். சற்றுநேரம் வரை அவரால் ஒன்றும் பேச முடியவில்லை.

இவ்விதம் ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான தர்மேஸ்வர லிங்கோத்பத்தி வர்ணம் என்னும், எழுபத்தி எட்டாவது அத்யாயம்

ஸம்பூரணம்.



# *அத்யாயம் 79*

*ஸ்கந்தர் கூறுவார். ஸுதாஸாகரரான பகவான் சங்கரர் ஆனந்த பாஷ்பத்திஞல் பேச முடியாமல் தொண்டை அடைபட்ட தர்மராஜரை அமுதம் தமது இரண்டு கைகளிஞலும் தடவிக் கொடுத்தார்.*

*அப்பொழுது பரமதபஸ்வியான தர்மராஜருடைய தபோரூபமான அக்னி கொழுந்து விட்டெரிய புளகாங்கிதம் அடைந்தார்.*

*அதன் பிறகு தபனநந்தனன் சாந்தன் பரம சாந்த அனுசரர்களால் சூழப்பட்டவன். ப்ரஸன்ன முகத்தோடு தேவதேவஞன உமா பதியிடம் கூறிஞர்.*

*ஹே ஸர்வக்ஞரே, கருணுநிதியே, ஈசானரே, ஸந்தோஷமடைந்ததிஞல் எனக்கு முன்பு எழுந்தருளி இருக்கிறீர்கள். அப்பொழுது மற்ற வரத்திஞல் ப்ரயோஜனம்?*

*எவரை வேதங்கள் அறியவில்லையோ, வேதபுருஷர்களான, ப்ரம்மா, விஷ்ணு இருவரும் அறியவில்லையோ, அவரால் வரம் கொடுக்கத் தகுதி உள்ளவஞக நான் ஆனேன் என்ருல் பிறகு எனக்கு வேறு என்ன வேண்டும்? ஆஞலும் ஹே நாதா, தங்களைப் பிராத்திக்கிறேன்.*

*ஹே, ஸ்ரீ கண்டா! இந்த மதுரமான மொழி என் தவத்துக்கு சாக்ஷியான எனக்கு எதிரிலேயே பிறந்த அன்னை தந்தை அற்ற, இதிஹாஸம் புராணம் முதலியவைகளை நன்கு அறிந்த அகார விகாரங்களற்ற இந்த இரண்டு கிளிப்பிள்ளைகளுக்கும்கூட வரம் அளியுங்கள்.*

*இந்த இரண்டு குஞ்சுகளும் பிறந்த உடனேயே வ்யாதியிஞல் பீடிக்கப்பட்ட இவைகளின் தாய் இறந்து விட்டது. இவைகளின் தந்தையைக் கழுகு தின்று விட்டது.*

அதனால் என்றும் அனுதையாகி என் முகத்தையே உற்று நோக்கிக்கொண்டு இருக்கும் இவ்விரண்டு பக்ஷிகளேயும், ஹே அனுதிநாதா, தாங்களே இவைகளின் ஆயுளின் மீதி ஸ்வரூபமாக இருந்து காப்பாற்றினீர்கள்.

ஹே! மஹரிஷே! மகாதேவர் தர்மராஜருடைய பரோபகாரத்தால், நிர்மலமான, வசனங்களைக் கேட்டு மிகவும் சந்தோஷமடைந்த மனத்துடன் வினயத்தினுல் தலைவணங்கிக் கொண்டிருக்கும் இரு கிளிக் குஞ்சுகளேயும் அருகில் அழைத்துக் கூறத் தொடங்கினுர்.

தங்களுடைய ஸங்கத்தினுல் ஸாதுவான பக்ஷிகளே, நீங்கள் ஸத்ஸங்கம் அடைந்து ஜன்மாந்தர பாபங்களையெல்லாம் போக்கிக் கொண்டு விட்டீர்கள், தர்மேச்வரருக்கு சேவை செய்கிறீர்கள். உங்களுக்கு என்ன வரம் தரலாம். என்று இவ்வாறு கூறிய மஹேஸ்வரருடைய வசனங்களைக் கேட்டு அந்த பக்ஷிகள் சங்கரரை வணங்கிக் கூறின.

ஹே பவநாசன, ஹே! பவ! தங்களுக்கு வணக்கம். ஹே!அனுதநாதா, ஸர்வக்ஞா, நாங்கள் பக்ஷி ஜாதிகளாகப் பிறந்தும், தங்களை தரிசிக்க பாக்யம் பெற்றுக் கொண்டோம். இதைவிட நாங்கள் விரும்பும் வேறென்ன இருக்கிறது?

ஹே! கிரீசா! உலகத்து ஜனங்களுக்கு, முயற்சியினுல் உலக ஸுகங்களில் நூற்றுக்கணக்கான லாபம் கிடைக்கிறது. இப்பொழுது நாங்களே உங்களே ப்ரத்யக்ஷமாக ப்ரார்த்திக்கிறோம், இதைவிட பரமலாபம் எங்களுக்கு வேறு என்ன இருக்கிறது?

ஹே! நாதா, இங்கு காண்பதெல்லாம் க்ஷணத்தில் அழியக் கூடியது. தாங்களும், தங்கள் பூஜையுமே அழியாதன. அதனுல் இந்தத் தபஸ்ஸினுல் ப்ரதிஷ்டை செய்யப்பட்பட லிங்கத்தின் பூஜையை பார்ப்பதினுல் எங்களுக்குக் கோடிக்காணக்கான ஜன்மங்களின் ஞாபகசக்தி ஏற்பட்டிருக்கிறது.

ஹே! ஈசானரே, எங்களுக்கெல்லோருக்கும் தேவர்கள் ஆகும் பாக்கியம் கிடைத்திருக்கிறது. அப்பொழுது மிக நாட்கள் வரைக்கும் தேவர்களுடைய போக ஸுகமும் கிடைத்திருந்தன.

அஸுரயோனி, தானவயோனி, நாகயோனி, ராக்ஷஸயோனி, கின்னரயோனி, வித்யாதரயோனி, கந்தரர்வயோனி இவைகளிலும் பிறந்தாகிவிட்டது.

மனித யோனியில் பிறந்து, எத்தனையோ தரம் அரசன் ஆக இருந்திருக்கிறோம். ஜலத்தில் வாழும் ஜந்துக்காளாகவும்கூட இருந்து இருக்கிறோம்.

வனத்தில் வாழும் குடிமக்களாகவும், கிராமங்களில் வாழும் கிராமவாஸிகளாகவும் இருந்தோம். ப்ரபுக்களாகவும், யாசகர்களாகவும் ரக்ஷகர்களாகவும், கொலையாளிகளாகவும் இருந்திருக்கிறோம்.

ஸுகியாகவும், துக்குகளாகவும், ஜெயித்தவராகவும், தோற்றவராகவும், படித்தவராகவும், முட்டாளாகவும் ஸ்வாமியாகவும், ஸேவகர்களாகவும் இருந்திருக்கிறோம். எவ்வளவு என்று சொல்வது? நான்கு விதமான பிறப்புகளிலும்; உத்தமம், மத்யமம், அதமர்களாக இருந்து இருக்கிறோம்.

எத்தனையோ பிறவிகள் ஆகிவிட்டன. ஆனால் திட வைராக்யம் கிடைக்கவில்லை. இந்த யோனியிலிருந்து அந்த யோனி, அதிலிருந்து மற்ற யோனியில்.

ஓ பினாகியே, ஒரு யோனியிலும் ஸுகம் லவலேசமும் கிடைக்கவில்லை. ஆனால் இப்பொழுது தர்மேஸ்வரரைத் தரிசித்த புண்ணியத்தினால், மேலும் தர்மராஜருடைய தபரூபமான அக்னிஜ்வாலையினால் பாபராசிகள் தகிக்கப்பட்டு ஓ! முக்கண்ணரே, தங்களின் ஸாஷாத் தரிசனம் கிடைத்து பாபம் நீங்கி க்ருதார்த்தரானோம்.

ஏ! தூர்ஜடே! இந்தத் தீனர்களும் ஹீனர்களும்

*பரிதாபத்தோடு கூடினவர்களான எங்களைச் சேர்ந்த பக்ஷி ஜாலங்களுக்குத் தாங்கள் வரம் கொடுக்க விரும்புவீர்களானால், ஏ! ஸர்வக்ஞா, ஞானத்தின் மூலமாக போதிக்க முடியாத ப்ரக்ருதியின் பாசத்தில் சுழலும் நாங்களும் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுவோம்.*

*எங்களுக்கு இந்திர பதவியும் வேண்டாம். சந்திர பதவியும் வேண்டாம். வேறொரு பதவியும் வேண்டாம். ஹே சம்போ! இன்னும் ஏதாவது, நாங்கள் கேட்கவேண்டுமென்று விரும்பினால், மறுபடியும் ஜன்மம் எடுக்காமலிருக்கம்படிக்கு எங்களுக்குக் காசியில் மரணத்தை அளியுங்கள்.*

*ஏ, ஸர்வக்ஞா! தங்களுடைய ஸான்னித்யத்தினால் நாங்கள் எல்லாமறிந்து கொண்டோம். சந்தனமர வாசனையில் காற்று பட்டவுடன் மற்ற எல்லா மரங்களும் சந்தன மணம், அடைவது போல், நாங்களும் எல்லாமறிந்து கொண்டோம்.*

*இந்தப் பரம ஞானமே ஸம்ஸாரத்தை வேருடன் கெல்லி எறியக் கூடியது. தங்களுடைய இந்த ஆனந்த வனத்தில் காலக்கிரமமாக எங்கள் சரீரம் விழட்டும்.*

*ஸமஸ்த வாங்மய கோசத்தையும் மதித்து அதன் ஸாரமான ஒரு வார்த்தையை ப்ரம்மா நமக்கு எடுத்துத் தந்தார். அது என்னவென்றால் காசியில் மரணமடைபவர்களுக்கு முக்தி கிடைக்கிறது என்பதே.*

*அனேகமனேகம் க்ரந்தங்கள் எதை வர்ணிக்கின்றனவோ அதையே பகவான் ஹரி சூரியதேவரிடம் எட்டு அக்ஷரங்களில் விளக்கிக் கூறினார். அதாவது* ***''கைவல்யம் காசீஸம்ஸ்தௌ''***. *காசியில், மரணமடைவதால் தான் கைவல்ய பதவி கிடைக்கும்.*

*முனீர்ச்வரர்களின் ஸம்ராட்டான யாக்ஞவல்க்யர் சூரிய நாராயணரிடம் ஸமஸ்த வேதங்களையும் படித்துவிட்டு ரிஷி ஸமாஜத்தில் அதன் ஸாரத்தைக்*

*கூறினார். அதாவது காசியில் அந்திம காலம் கழித்தால் அந்திம ப்ராப்தி கிடைக்கிறது என்று.*

*முன்பொரு தடவை தாங்களும் மந்த்ராசலத்தில் இருக்கும் பொழுது ஜகதாம்பிகையிடம், காசியே நிர்வாண ப்ராப்திக்கு ஜன்ம பூமி என்று கூறினீர்கள்.*

*க்ருஷ்ணத்வைபாயனரான, வேதவ்யாஸரும் என்ன கூறுகிறார் என்றால் எங்கு ஸாக்ஷாத் விஸ்வேஸ்வரர் எழுந்தருளி இருக்கிறாரோ அங்கு பதத்துக்கும் பதம் முக்தி கிடைக்கிறது என்கிறார்.*

*தீர்த்த ஸன்யாஸிகளான, லோமசர் முதலிய வேறு பழங்காலத்து ரிஷிகள் என்ன சொல்கிரார்கள் என்றால் காசியே மோக்ஷ ப்ரகாசினீ.*

*நாங்களும் என்ன நினைக்கிறோமென்றால் சொர்க்க தரங்கிணியான கங்கை உத்தரவாஹினியாக ஓடும் அந்த மஹாதேவருடைய ஆனந்த கானனத்தில்தான் மோக்ஷம் நிச்சயம் என்பதே. இதே தர்மேஸ்வரருடைய பரம அனுக்ரஹத்தினால் நாங்கள் ஸ்வர்க்க, மத்ய, பாதாளங்களிலும் பூத பவ்ய வர்த்தமானங்களிலுள்ள எல்லா செய்திகளையும் அறிவோம்.*

*ஏ! சங்கரா! இதனாலே ப்ரம்மா என்ன கூறினாரென்றால், நான் சொல்வது விஷ்ணு கூறியது,. முனிவர்கள் ஸம்பாஷித்தது, எல்லாம் நாங்கள் அறிவோம் என்று. ஏன் தாங்கள் சொல்வதெல்லாம்கூட நாங்கள் அறிவோம்.*

*இந்த தர்மபீடத்தை ஸேவித்ததினால் இந்த ஸமஸ்த ப்ரம்மாண்ட மண்டலத்தில் எல்லா காரியங்களும் உள்ளங்கை நுணியில் எப்பொழுதும் இருந்து கொண்டேயிருக்கிறது.*

*ஏ! விபோ, தர்மராஜனின் தவ ப்ரபாவத்தினாலேயே நாங்கள் ஈனமாக பக்ஷி ஜாதிகளாக இருந்தாலும்*

விகல்பமில்லாமல் ஸமஸ்த தத்துவங்களேயும் அறியத்தக்க பாத்திரவான்கள் ஆகிவிட்டோம்.

தேவதேவர் இந்தவிதமாக மதுரமாகவும் ம்ருதுவாகவும், ஸத்யமாகவும், ஹிதமாகவும், மிதமாகவும், பண்பாட்டுடனும், த்ருஷ்டாந்தத்துடனும், அனுபவஸித்தமாகவும் இந்த பக்ஷிகள் கூறிய வசனங்களேக் கேட்டு மிகவும் ஆச்சர்யமடைந்தவராக தர்மபீடத்தின் பெருமையைப் புகழத் தொடங்கினர். இந்த மூன்று உலகங்களிலுமுள்ள எல்லா நகரங்களுக்கு மேலாக இந்த காசியே என்னுடைய ராஜதானியாகும்.

அதிலும்கூட மோக்ஷலக்ஷ்மி விலாஸம் என்னும் பெயருள்ள பரம மங்களமயம் ஆன, இக்கோவிலாகிய மாளிகை அனேக விலே உயர்ந்த மணிரத்னங்களால், பதிக்கப்பட்ட என்னுடைய போகபவனமாகும்.

இந்த என் பவனத்தில் உச்சியில் ஸ்வதந்த்ரமாக ஆகாசத்தில் பறந்து கொண்டு இருக்கும் பக்ஷிஜாலங்களும், இதை ப்ரதக்ஷிணம் செய்யும் வ்யாஜத்தில், விமானத்தில் ஸஞ்சரிக்கும் தேவதைகளாகவே ஆகிறுர்கள்.

மோக்ஷலக்ஷ்மி விலாஸம் என்னும் இக்கோவிலே தரிசிப்பதனுல், ப்ரம்மஹத்தி, இந்த சரீரத்திலிருந்து விலகும்.

எவர்கள் மோக்ஷலக்ஷ்மி விலாஸம் என்னும் இக்கோவிலின் சிகரத்தில் உள்ள இக்கலசத்தை வேண்டாமென்றுலும், பதத்திற்குப் பதம் வந்து ஒட்டிக்கொள்ளும்.

இந்தக் கோவிலின் சிகரத்தில் பறக்கும் கொடியை யார் தூரத்திலிருந்தே தரிசிக்கிறுர்களோ அவர்கள் எனக்கு அதிதிகளாகிறுர்கள்.

அந்த ப்ரகாசத்தை வ்யாஜயமாய் வைத்துக்கொண்டு, பூமியைத் துளேத்துக் கொண்டு, ஆனந்தம் என்னும்

பெயருள்ள ஒரு கிழங்கு பரம அபூர்வமாய் முளைவிட்டு வெளிக் கிளம்பி வந்திருக்கிறது.

என்ன ஆச்சர்யமான விஷயம். ப்ரம்மாவிலிருந்து ஸ்தாவரம் வரைக்கும் சித்திரபடத்தில் எழுதியிருப்பவைகூட, என்னை உபாஸிக்கின்றன. அந்தக் கோவிலே எல்லா உலகங்களிலும் வைத்து எனக்கு ஆனந்தத்தை அளிக்கும் ஸ்தானம், அதுவே என் கேளீக்ருஹம். என் நம்பிக்கைக்கும் அந்தரங்கத்திற்கும் அஸ்திவாரம். நான் எங்கும் நிறைந்தவனானாலும் இந்தக் கோவில் நான் நிச்சயமாக உறையும் ப்ரதான ஸ்தானமாக இருக்கிறது. பரம உபநிஷத்துக்களும், என்னை நிராகார ப்ரம்மம் என்று கூறுகின்றன. அந்த நிராகாரமே, இங்கு பக்தர்களின்மேல் இரக்கப்பட்டு என் உருவமாக இங்கு வந்திருக்கிறது

மோக்ஷலக்ஷ்மி விலாஸம் என்னும் கோவிலின் தெற்குபக்கத்தில் என்னுடைய ஒரு மண்டபம் இருக்கிறது. நான் இங்கு எப்பொழுதும் ப்ரஸன்னமாக இருக்கிறேன்.

அங்கு ஒருவன் வந்து நிமிஷமாவது திடசித்தத்துடன் அமர்ந்திருந்தானானால் அவன் நூறு வருஷ பரியந்தம் யோகாப்யாசம் செய்த பலனை அடைகிறான்.

அந்த ஸ்தானம் உலகத்தில் முக்திமண்டபம் என்ற பெயருடன் ப்ரசித்தம் ஆக இருக்கிறது. அங்கமர்ந்து வேதத்தை ஒரு தடவை படித்தாலும் ஸமஸ்த வேதங்களையும் அப்யஸித்த பலன் கிடைக்கும்.

அந்த முக்தி மண்டபத்தில் அமர்ந்து ஒரு தடவை ப்ராணயாமம் செய்தாலும் போதும், அதன் பலன் வேறிடங்களிலும் பத்தாயிரவருஷம் அஷ்டாங்கயோகாப்யாசம் பண்ணின பலன் கிடைக்கும்.

ஒருவன் இந்த மண்டபத்தில் உட்கார்ந்து ஒருதரமாவது சிவபிரானுடைய பஞ்சாக்ஷரத்தை ஜபித்தானானால் ஒருகோடி வருஷம் ருத்திர ஜபம் பண்ணின பலன் கிடைக்கும்.

*கங்காஜலத்தில் ஸ்ஞானம் செய்து சதருத்ர ஜபத்தை பவித்ரமாக முக்தி மண்டபத்தில் அமர்ந்து ஜபித்தால் அவனே ப்ராம்மண வேஷம் தரித்த ருத்ரனுகவே எண்ண வேண்டும்.*

*ஒருவன் என்னுடைய தக்ஷிண மண்டபத்தில் அமர்ந்து ஒரு தடவையாவது, ப்ரம்ம யக்ஞம் செய்தானுனுல், அவன் ப்ரம்மலோகம் அடைந்து, ப்ரம்மாவே ஆகிருன்.*

*நிஷ்காமமாக ஒருவன் அங்கு தர்ம சாஸ்திரம், இதிஹாஸம், புராணம் படித்தானுனுல், அவன் என்னுடைய இல்லத்தில் , என்னுடனேயே வஸிக்கிருன்.*

*ஒரு புண்ணியசாலி இந்திரியங்களின் சஞ்சலத்தன்மையை ஒரு க்ஷணமாவது அடக்கிக்கொண்டு, முக்தி மண்டபத்தில் உட்கார்ந்தானுனுல் அவனுக்கு மற்ற ஸ்தானங்களில் கடும் தபஸ் செய்த பலன் கிடைக்கிறது.*

*வேறு இடங்களில் நூறு வருடம் வாயு பக்ஷணம் செய்து கொண்டு இருந்தால் என்ன பலன் கிடைக்குமோ, அந்தப் பலன் முக்தி மண்டபத்தில் மௌனமாக அரைநாழிகை அமர்ந்தாலும் போதும், அதே பலன் கிடைக்கிறது.*

*முக்தி மண்டபத்தில் ஒரு குன்றிமணி அளவு தங்கம் தானம் செய்தால் ஸ்வர்க்கத்தில் ஸ்வர்ண விமானத்தில் ஏறிச் சுற்றுலா போகிருன்.*

*கேளும், அங்கு ஏதாவது ஒருநாள் வ்ரதமிருந்து இரவு கண் விழித்து, லிங்கத்தைப் பூஜை செய்தால் ஸமஸ்த வ்ரத புண்யங்களுக்கும் பாத்ரமாகிருன், அங்கு மிகவும் தானம் செய்தாலும் மஹாவ்ரதங்களை அனுஷ்டித்தாலும், ஸமஸ்த வேதங்களைப் பாராயணம் செய்தாலும், அவன் ஸ்வர்க்கத்திலிருந்து நழுவிவிழமாட்டான்.*

*இந்த முக்தி மண்டபத்தில் வைத்து ஒருவனுக்கு உயிர் பிரிந்தால் அவன் என்னில் லயமாகி இங்கு நான் இருக்கும் வரை அவனும் இருக்கிருன்.*

*நான் உமாதேவியுடன் ஞானவாபியில், எப்பொழுது ஜலக்ரீடை செய்கிறேனே அதை பானம்பண்ணினவனுக்கு நிர்மல ஞானம் உண்டாகிறது.*

*என்னுடைய அரச மாளிகையில் அந்த ஜலக்ரீடை செய்யும் இடம் எனக்கு மிகவும் ப்ரியமானது. அது குளிர்ச்சியான ஜலத்தினால் நிரம்பியிருக்கிறது.*

*இந்த மண்டபத்தின் முன் பக்கத்தில் என் ச்ருங்கார மண்டபம் இருக்கிறது. அதை பீடம் என்றே எண்ண வேண்டும். அது ஸ்ரீ ஹீனமான ஜனங்களை ஸ்ரீமான் ஆக்குகிறது.*

*அந்த ஸ்தானத்தில் யாராயிருந்தாலும் என்பொருட்டு நிர்மல வஸ்த்ரம், பரமவிசித்ர மாலைகள், களப கஸ்தூரிகள் நாநாவிதமான ச்ருங்காரப் பொருள்கள், பூஜாத்ரவ்யங்கள் இவைகளை ஸமர்ப்பணம் பண்ணினால் அவன் எப்பொழுதும் எங்கும் ஸ்ரீமான் ஆகி விளங்குவான்.*

*அவன் எங்கு மரணம் அடைந்தாலும் நிர்வாணலக்ஷ்மி அவனுக்கு நிர்வாண பதவி கொடுப்பதற்காக அவனை வரிக்கிறாள்.*

*என்னுடைய மோக்ஷலக்ஷ்மி விசாலம் என்னும் பெயருடைய மாளிகையின் ரமணீயமான ஐச்வர்ய மண்டபம் இருக்கிறது. அங்கு நான் எல்லோருக்கும் ஐச்வர்யத்தை தானம் அளிக்கிறேன்.*

*என் கோவிலின் கிழக்குப் பக்கத்தில் ஞான மண்டபம் இருக்கிறது. அதில் அமர்ந்து என்னைத் தியானம் செய்கிறவர்களுக்கு, நான் எப்பொழுதும் ஞானோபதேசம் செய்கிறேன்.*

*பவானியுடைய ராஜபவனமே என் ஜீவனாலயம், அங்கு எனக்குக் காணிக்கையாக என்ன பொருள் வைக்கிறார்களோ, அதை நான் ஸந்தோஷமாக ஏற்றுக் கொள்கிறேன்.*

*விசாலாக்ஷி தேவியின் கோவில் என்னுடைய இளைப்பாறும் இடம். அங்கு நான் ஸம்ஸாரத்திலிருநது வெறுத்து வெளி வந்தவர்களுக்கு அவர்கள் இளைப்பாறும் இடமாகக் கொடுக்கிறேன்.*

*நான் நியமமாக பரமதத்வம் ஸ்ஞனம் செய்யும் தீர்த்தம் மணிகர்ணிகை. அங்கு ஸ்ஞனம் செய்கிறவர்களுக்கு நான் நிர்மலத்தன்மையைக் கொடுக்கிறேன்.*

*எது சாஸ்திரத்தில் பரமதத்வம் என்னும் பெயரால் கூறப்படுகிறதோ, எது ஸர்வோத்தமப்ரம்மம் என்று அழைக்கப்படுகிறதோ, எது தன்னைத்தானே ப்ரம்மம் என்று அறியப்படுகிறதோ கடைசி காலத்தில் அதையே உபதேசம் செய்கிறேன்.*

*எதை தாரக ஞானம் என்று சொல்கிறோமோ எது பரம் நிர்மலம் என்று கூறப்படுகிறதோ, எது ஸ்வாத்மாராம் என்று அறியப்படுகிறதோ, அதை மணிகர்ணிகா கட்டத்தில், கடைசி காலத்தில் உபதேசம் செய்கிறேன்.*

*உலக முழுவதற்கும் மங்கள பூமியான மணிகர்ணிகையில் கர்மபாசத்தால் பந்தப்படுத்தும் பசு என்று கூறப்படும் பிராணிகளை நான் அவிழ்த்து விடுகிறேன்.*

*எங்கு நான் மோக்ஷ பிக்ஷையிடுவதற்கு இரவு பகல் என்றும் ஸத்பாத்ரம், குபாத்ரம் என்றும் கொஞ்சம்கூட யோசிக்காமல் கொடுக்கிறேனே (ஆனந்த வனத்தில்) அதுவே தானம் கொடுக்கக் கூடிய இடம்.*

*மிகவும் ஆழமாகிய ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கும் பிராணிகளாகிய படகுகளுக்கு எங்கு மாலுமியாக இருந்து நான் அக்கரை சேர்க்கிறேனே, அதே மணிகர்ணிகை ஸௌபாக்யத்திற்கும் ஸௌபாக்யம் கொடுக்கும் பூமியாகும். ஆகையால் நான் அங்கு முதல் வர்ணத்தவரிலிருந்து கடைசி வர்ணத்தவர் வரை எல்லாருக்கும் எல்லாவற்றையும் அளிக்கிறேன்.*

*மஹாஸமாதியிலிருப்பவர்களுக்கு, வேதாந்த அர்த்தங்களை ஸேவிப்பவர்களுக்கு, வேறு ஸ்தலங்களில் மோக்ஷம் என்பது துர்லபம்தான். அதனால் இங்கு சோகத்திலாழ்ந்த எல்லாருக்கும் அந்த முக்தி கிடைக்கிறது.*

*ஒருவன் யக்ஞதீக்ஷை பெற்றிருந்தாலும், சண்டாளனானாலும், பண்டிதனானாலும், முட்டாளானாலும், மூர்க்கனானாலும் அவன் மணிகர்ணிகைக்கு வந்து விட்டானானால் மோக்ஷ தீக்ஷை பெறுவதற்கு அவன் ஸமானனான அதிகாரியாகிறான். அன்னிய இடங்களில் எதைக் கொடுப்பதற்கு கஞ்சத்தனம் பண்ணுகிறோமோ, இந்த மணிகர்ணிகையில் நாம் நெடுநாளாகச் சேர்த்து வைத்திருந்த சொத்து அனைத்தையும் நான் இந்த மணிகர்ணிகையில் பிராணிகளுக்கு அளிக்க தத்பரனாக இருக்கிறேன்.*

*இங்கு தெய்வ வசத்தால் ஒருக்காலும் ஒன்று சேராத பொருள்கள் மூன்றும் ஒன்றுசேர்ந்தால், நெடுநாள் சேர்த்து வைத்திருந்த ஸர்வ சொத்தையும் அவர்களுக்கு அளிக்கிறேன்.*

*சரீரம், சம்பத்து, மணிகர்ணிகை இந்த மூன்றும் ஒன்று சேருவது மிகவும் துர்லபம். அப்படி மூன்றும் ஒன்று சேர்வதே த்ரிச்ம யோகம் ஆகும், இது இந்த்ராதி தேவர்களுக்கும் கிடைக்க துர்லபமானதாகும்.*

*இதை அடிக்கடி சிந்தித்துப் பார்த்து நான் எல்லாப் பிராணிகளுக்கும் மணிகர்ணிகையில் முக்தி லக்ஷ்மியை தானம் கொடுக்கிறேன்.*

*இந்த வாராணஸி புரியில் இந்த இடமே, நான் முக்திதானம் அளிக்க ப்ரதான இடமாகும், ஏனென்றால் இந்த மூன்று உலகங்களும் அந்த பூமியின் தூளிக்குக்கூட ஸமானமாகாது.*

*என்னை லிங்கமாக வழிபடுவதற்கு முக்யமான ஸ்தானம் அவிமுக்தேஸ்வரராகும். அங்கு ஒரு மனிதன் ஒரு*

தடவையாவது பூஜை செய்திருந்தானுனல் அவன் க்ருத க்ருத்யனுவான்.

ஸந்த்யா ஸமயத்தில் நான் பசுபதீஸ்வரர் ஆலயத்தில் சைவ சந்தியா செய்கிறேன். அந்த இடத்தில் கேவலம் விபூதியைப் பூசிக் கொள்வதாலேயயே பசுபாசத்தில் கட்டுப்படமாட்டான்.

காலேவேளே சந்தி சமயத்தில் நான் எப்பொழுதும் ஓங்காரேஸ்வரருடைய கோவிலின் இருப்பேன். ஏனென்ருல் அங்கு ஒரு வேளே சந்திபண்ணினுலும், ஸமஸ்த பாபங்களும் விலகுகின்றன.

ஒவ்வொரு சதுர்தசி அன்றும் க்ரத்திவாஸேச்வருடன் தங்குகிறேன். அங்கு இரவில் கண்விழித்தால் தாயின் கர்பத்தில் பங்கு கொள்ள வேண்டாம்.

பக்தியுடன் கூட ரத்னேஸ்வரரை பூஜை செய்தால், அவர் நிறைய ரத்னங்களே வாரி வழங்குவார். ஒருவன் ரத்னங்களால் அந்த லிங்கத்தை அர்சித்தால், அவனுக்கு ஸ்திரீரத்னம் முதலியன கிடைக்கும்.

நான் த்ரிலோகம் முழுவதும் எங்கும் வியாபித்துக் கொண்டிருக்கிறேன், இருந்தாலும் பக்தர்கள் மனேரதத்தை, நிறைவேற்ற எப்பொழுதும் த்ரிலோசனருடன் அமர்ந்து கொண்டு இருக்கிறேன்.

அது விரஜஸ்க, மகாபீடமாகும். அந்த பீடத்தை சேவித்தும் சதுர்நத தீர்த்தத்தில் ஜலக்ரியை செய்து கொண்டும் இருந்தால், அவன் நிச்சயமாக ரஜோகுண சூன்யமாகி விடுவான்.

மகாதேவர் இருக்கும் இடத்தில் என்னுடைய ஸாதகர்களுக்கு ஸித்தியை அளிக்கும் மகாபீடம் இருக்கிறது. அந்த மகாபீடத்தை தரிசனம் செய்வதால் கொடூரபாபங்களிலிருந்து விலகிவிடுகிருன்.

*பித்ருக்களுக்கு பரம ப்ரீதியைக் கொடுக்கும் வ்ருஷபத்வஜ தீர்த்தம் இருக்கிறது. அங்கு பித்ருக்களுக்கு தர்பணம் செய்பவன் க்ஷணமாத்திரத்தில் பித்ருக்களைக் கரை ஏற்றி விடுகிறான். ஆதிகேசவ பீடத்தில் நான் ஆதிகேசவ ரூபமாக இருக்கிறேன். அங்கு என் பரம ப்ரியபக்தர்களுக்கு ஸ்வேதத்வியம் கிடைக்கும்படிச் செய்கிறேன்.*

*ஸர்வ மங்களத்தைக் கொடுக்கும் மங்களபீடம் பஞ்சநத தீர்த்தத்துக்கு ஸமீபத்தில் இருக்கிறது. அங்குநான் பக்தர்களைக் கரை ஏற்றுகிறேன்.*

*எங்கு நான் பிந்து மாதவ ரூபத்தில் இருக்கிறேனோ, அங்கு பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும் என் வைஷ்ணவ பக்தர்களை விஷ்ணுவின் ப்ரஸித்த பரமபதத்துக்கு அனுப்புகிறேன்.*

*பஞ்ச முத்திர என்னும் மகாபீடத்தின் வீரேச்வரரை ஸேவித்துக் கொண்டு இருக்கும் பக்தர்கள் கொஞ்ச காலத்தில் நிர்வாண பதத்தை அடைகிறார். சந்த்ரேச்வருக்கு ஸமீபத்தில் ஸித்தேச்வரி பீடம் இருக்கிறது. அங்கு இருப்பவர்களுக்கு ஆறு மாதங்களில் ஸித்தி கிடைக்கும்.*

*காசியில் யோக ஸித்தியை விதரணம் செய்யும் யோகினி பீடத்தில் உச்சாட முதலிய ஸித்திகளைப் பெறாத ஸாதகர்கள் யாரிருக்கிறார்?*

*இந்தக் காசி புரியில் அடிவைக்கும் இடம் தோறும் அனேக பீடங்கள் இருக்கின்றன. ஆனால் தர்மேச்வர பீடத்திற்கு ஒரு அபூர்வ சக்தி இருக்கிறது.*

*அங்கு ரக்ஷியுங்கள், ரக்ஷியுங்கள், என்று அபாயக் குறல் எழுப்பி வரும் இந்தக்கிளிக் குஞ்சுகளுக்கும் என்னுடைய உத்தம உபதேசத்தினால் நிர்மலஞானம் கிட்டி இருக்கிறது*

*ஹே, சூர்ய நந்தன, இன்றிலிருந்து நான் உன்னுடைய உத்தமமான தபோவனத்தில் இருக்கும் தர்மேச்வர பீடத்தை ஒருபொழுதும் விடமாட்டேன்.*

*ஹே! ரவி புத்திரனே, பார்! என் அனுக்ரஹத்தினால் இந்த எல்லாக்கிளிகளும், திவ்ய விமானத்தில் ஏறிக்கொண்டு என் மகாபுரத்துக்குச் செல்லுகின்றன.*

*உன் ஸத்ஸங்கத்தினால் இவைகளெல்லாம் பரம நிர்மலமாகி என்னுடைய உலகில் அனேக தினங்கள் வரை ஸுகபோகங்களை அனுபவித்து, பிறகு என்னால் கூறப்பட்ட ஞானத்தை, அடைந்து அங்கேயே முக்தி அடைவார்கள்.*

*பகவான் சங்கரர் இவ்விதம் கூறிய உடனேயே ருத்திர கன்னிகைகளால், அலங்கரிக்கப்பட்டு கைலாஸத்தின் சிகரம் போன்ற திவ்ய விமானம் அங்கு வந்தடைந்தது*

*பரமநிர்மலமான இந்த எல்லா கிளிக்குஞ்சுகளும் திவ்ய ரூபம் எடுத்துக்கொண்டு தர்மராஜரிடம் விடைபெற்று விமானத்தில் ஏறிக் கைலாசத்திற்குச் சென்றன.*

*இவ்விதமாக ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான எழுபத் தொன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 80

ஸ்கந்தர் கூறுவார், ஜகதம்பிகை, அந்த ஆச்சர்யகரமான ஸம்பவத்தைப் பார்த்துவிட்டு, ப்ரணதார்த்தி ஹரனுன, பகவான் சிவனிடம் கூறினுள்.

ஹே! மஹேஸ்வரா! மஹாதேவா! இந்த பீடத்தினுடைய மஹாத்ம்யம் தான் என்ன? பக்ஷி ஜாலங்களுக்குக்கூட ஸம்ஸார மோசனமான ஞானத்தை அளிக்கிறது.

ஹே! துர்ஜடே, அந்தக் காரணத்தினுல் தர்மபீடத்தின் ப்ரபாவத்தை அடைந்ததால் இன்றிலிருந்து நான் எப்பொழுதும் தர்மேஸ்வரருடைய சமீபத்தில் இருந்துக்கொண்டே இருப்பேன்.

எந்த ஸ்த்ரீகள், புருஷர்கள், இந்த லிங்கத்தின் பக்தர்காளாக இருக்கிருர்களோ, நான் எப்பொழுதும் அபீஷ்ட ஸித்திக்காக ஸாதனே புரிந்து கொண்டே இருப்பேன்.

ஈஸ்வரன் கூறினுர். ஸஜ்ஜனங்களுடைய மனேரதங்களேப் பூர்த்தி செய்யும் இந்த தர்மபீடத்தை ஆச்ரயித்து.

இங்கு உன்னே விஸ்வ புஜாதேவியாக பூஜைசெய்பவர்கள் இந்த ஸம்ஸார ஸுகங்களே அனுபவித்து, உலகமே பூஜிக்கத் தகுந்தவராக உலகத்தில் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் செய்யும் விச்வபுஜே, விஸ்வே, உன்னே இங்கு பூஜிப்பவர்கள் நிர்மல ஹ்ருதய மூடையவர்களாக ஆவார்கள்.

மனேரத த்ருதியையன்று, புருஷனுனுலும் உன்னுடைய வ்ரதத்தை, அனுஷ்டிப்பதனுல், இந்த உலகில் எண்ணங்கள் நிறைவேறி கடைசியில் ஞானமும் பெறுவார்கள்.

தேவி கேட்டாள் - ஹே நாதா, மஞேரத த்ருதியை என்னும் வ்ரதம் எப்படி? அதனுடைய கதை என்ன? அதை அனுஷ்டிப்பதனுல் என்ன பலன் கிடைக்கும்? யார் அதை அனுஷ்டித்தார்கள்? இந்த விஷயங்களெல்லாம் தயவுசெய்து சொல்ல வேண்டும்.

ஈசன் கூறிஞர்- ஹே! ஸம்ஸாரதாரிணி, தேவி! நீ கேட்டாயே, அந்த மஞேரத வ்ரதம் ரஹஸ்யத்திலும் அதிரஹஸ்யம். பூர்வ காலத்தில் புலோமரிஷிக்குப் புத்ரி 'ஸசி' தன் மஞேரதம் ஸித்தியாகும் பொருட்டு கோரமான தபஸ் பண்ணிஞள். ஆஞல் தபஸ்ஸின் பலன் கிடைக்கவில்லே.

அப்பொழுது அவள் மிகவும் பக்தியுடன்கூட, ஸந்தோஷ மனத்தினளாய், குயிலேப் பழிக்கும் மதுரஸ்வரத்துடன், அந்த ரஹஸ்யமான கீதங்களிஞல் என்னேப் பூஜித்தாள். ஸங்கீதக் கலேயில் தேர்ந்த பூர்ண அழகான ராகதாளத்தோடுகூட அவள் ம்ருதுவான குரலில் பாடுவதைக்கேட்டு, நான் மிகவும் ஸந்தோஷம் அடைந்து, அவளிடம் கூறினேன்.

ஹே! புலோம புத்ரியே, உன்னுடைய உண்மையான தபஸ்ஸிஞலேயும், உன் பூஜையிஞலேயும், நான் ஸந்தோஷமடைந்தேன். வேண்டிய வரம், கேள், என்ருர்.

புலோமஜா கூறிஞள்- ஹே! தேவாதிதேவா! மஹாதேவியின் ப்ரியமானவரே, ஹே! மஹாதேவா! தாங்கள் என்னிடம் ப்ரியம் அடைந்தீர்களாஞல் என்னுடைய மஞேரதத்தை பூர்த்தி செய்யுங்கள்.

தேவர்களால் மதிக்கப்பட்டவரும், தேவர்களுள் அழகானவரும், யக்ஞம் செய்பவரில் ச்ரேஷ்டமானவரும் ஆக இருப்பவரே எனக்குப்பதியாக வரவேண்டும்.

ஹே, பவா! தாங்கள் என்னிடம் த்ருப்தி அடைந்தீர்களாஞல் நான் என் விருப்பம்போல் ரூபமெடுக்கவும், என் விருப்பப்படி ஸுகம்

அனுபவிக்கவும், என் விருப்பப்படி எனக்கு ஆயுஸூம் கொடுக்கவும். என் மனதின் மகிழ்ச்சிக்காக, என் பதியுடன் ஸங்கமம் செய்யும் ஒவ்வொரு தரமும் அந்த சரீரத்தை விட்டு விட்டுப் புதிய சரீரத்துடன் விளங்க வேண்டும்.

ஸம்ஸாரத்திலிருந்து முக்தி அளிப்பவரே, பவா! சிவலிங்க பூஜை பண்ணியதற்காக எப்பவும் ஜனன, மரணங்களில்லாமல், தங்களிடம் உத்தமமான பக்தியைச் செலுத்திக்கொண்டு இருக்கும்படி அனுக்ரஹியுங்கள்.

எனது கணவர் இறந்து விட்டால் ஒரு நிமிஷம்கூட நான் வைதவ்யம் அடையக்கூடாது, என் பாதிவ்ரத்ய தன்மையும் அழியக்கூடாது.

ஸ்கந்தர் கூறினார்:- த்ரிபுரசூதன் மஹாதேவர் புலோமஜையுடைய இந்த விதமான எண்ணத்தைக் கேட்டு க்ஷணநேரம் ஆச்சர்யத்துடன் புன்சிரிப்பு தவழக் கூறினார்.

ஈசர் கூறினார்: ஹே! ஜிதேந்த்ரியே, புலோமரின் புத்ரியே! உன்னுடைய இந்த மனோரதம் நிறைவேறவேண்டுமானால் நீ வ்ரதம் எடுத்துக்கொள்.

இதற்காக மனோரதத்ரிதீயை என்னும் வ்ரதம் இருக்க வேண்டும். அதன் விதிகளை நான் உனக்குக் கூறுகிறேன். என் சொல்படி நீ செய்ய வேண்டும்.

ஹே, சரணாகதி அடைந்தவர்களுக்கு அனைத்தையும் அடைந்த அனைத்தையும் அளிக்கும் வள்ளலே, ஹே தயாசமுத்ரமே, சங்கரா! அந்த வ்ரதத்தின் பலன் என்ன? அதன் சக்தி என்ன? அதற்கு எந்த தேவதையைப் பூஜை செய்ய வேண்டும். அந்த வ்ரதத்தை எப்பொழுது அனுஷ்டிக்கவேண்டும்? அதன் நியமம் என்ன என்றாள்.

இதைக் கேட்ட சிவபிரான் அவளிடம் கூறத் தொடங்கினார். இந்த சுபத்தை அளிக்கும் வ்ரதம் மனோரதத்ருதீயை அன்று இருக்கவேண்டும். அன்று இருபது கரங்களுடன் இருக்கிற விச்வ புஜாகௌரீயைப் பூஜிக்க வேண்டும்.

வ்ரதம் இருப்பவர் என்ன செய்யவேண்டுமென்றால் தேவிக்கு முன்னால் ஒருகையில் வரமுத்ரையும், மற்றொரு கையில் அக்ஷமாலையும், மூன்றாவது கை அபயமுத்ரையாகவும் நான்காவது கையில் மோதகமுமாக, ஆசாவிநாயகரைப் பூஜிக்க வேண்டும்.

சித்திரைமாதத்துக்கு சுக்ல த்ருதியையில் பல்சுத்தி செய்து ஸாயங்கால ஸந்தியை முடித்துக் கொண்டு இரவு சொல்ப ஆகாரம் பண்ண வேண்டும்.

பின் கோபம் முதலியவைகளை விட்டு விட்டு ஜிதேந்த்ரியனாக தீண்டக்கூடாததைத் தொடாமல் பவித்ரமாக ஒரு மனப்பட்டு இந்த நியமத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

ஹே, அனேக மாதா! விச்வபுஜேதேவி! நான் நாளைக்காலை வ்ரதம் இருப்பேன். அச்சமயம் என்மனோரதத்தின் பூர்த்திக்காகத் தாங்கள் எழுந்தருள வேண்டும்; இவ்விதமாக மனதில் நினைத்துக் கொண்டு, நியமத்துடன் மங்களகரமான எண்ணத்துடன் தூங்க வேண்டும். பிறகு காலையில் எழுந்தவுடன் காலைக்கடன்களை முடித்துவிட்டு, சோகங்களை மாற்றும் அசோக வ்ருக்ஷத்தின் குச்சியினால் பல் விளக்கவேண்டும்.

பிறகு அந்த விதிகளைப் பூர்ணமாக அறிந்த அறிவாளி நித்யக்ருத்யங்களை முடித்துக் கொண்டு, ஸ்நானத்திற்குப் பிறகு சுத்த வஸ்த்ரம் தரித்து ஸந்த்யா காலத்தில் கௌரிதேவியை பூஜிக்க வேண்டும்.

முதலாவது கணேசரை பூஜை செய்து வெல்லப்போளி நிவேதனம் செய்து, அவருக்கு குங்குமத்தை அனுலேபனம் பண்ணி உத்தம அசோக புஷ்பம் அகர்பத்தி, அசோக நெய் மோதகம் இவைகளினால் விஸ்வபுஜாகௌரியை பூஜிக்க வேண்டும்.

பிறகு அசோக வத்தியுடன் கூட மனோஹரமான நெய் மோதகத்தை ஒருவேளை புஜிக்க வேண்டும். புலோம புத்திரி

இந்த விதமாகச் சித்திரை மாத சுக்லத்ருதியை கழிந்தவுடன் வைகாசி மாதத்திலிருந்து பங்குனி மாதம் வரையில், ஒவ்வொரு சுக்ல பக்ஷத்து, த்ருதியைக்கும் வ்ரதம் இருக்கவேண்டும், க்ரமமாக பாக்கி, பதிஞெரு மாதங்களிலேயும் பற்குச்சி. பூஜிக்கும் த்ரவ்யங்கள், புஷ்பம், கணபதி, கௌரீ, இவர்களின் நைவேத்யம் ஒருவேளே அன்னத்துடன், ஹே! சுபவ்ரதே! வ்ரதமிருந்தால் இதன்பலன் நமக்குக் கிடைக்கும்.

நான் உன்னிடம் சொல்கிறேன். நாவல் மரத்துக் குச்சி சிசுடா என்னும் ஒரு மரத்தின் குச்சி, மாமரத்தின் குச்சி, கடம்ப மரத்தின் குச்சி, (40,41) இலந்த மரத்தின் குச்சி, வடவ்ருக்ஷத்தின் குச்சி, பேரீச்சை மரத்தின் குச்சி, எலுமிச்சை மரத்தின் குச்சி, மாதுளே மரத்தின் குச்சி (42) சிந்தூரம் அகர் கஸ்தூரி, ரக்தசந்தனம், கோரோஜனே, மஞ்சள் தாமரைவேர், ஏபாலே, இந்தப் பூக்களேயும் ப்ரீதியுடன் ஸமர்ப்பிக்க வேண்டும். இவைகள் ஒன்றும் கிடைக்காவிட்டால், கற்பூரத் தைலம் மிகவும் உத்தமம்.

ஒருபாகம் கஸ்தூரி, இரண்டுபாகம் கேஸரி, மூன்றுபாகம் சந்தனம், ஒருபாகம் கற்பூரம் இவைகளே அரைத்த கலவையை, யக்ஷ, கர்த்தமம் எனப்படும். இவைகள் தேவதைகளுக்கு மிகவும் பிரியமானது இந்தலேபனத்தைத் தடவி எந்த புஷ்பங்களிஞல் பூஜை பண்ண வேண்டும் என்று சொல்கிறேன் கேள்.

ரோஜா வில்வம், தாழம்பூ, அரளி, ராஜமல்லிகை, பிச்சி இவ்வகைப் பூக்கள் கிடைக்காவிட்டால் அந்தந்த வ்ருக்ஷத்தின் இலேகளே எடுத்துக் கொள்ள வேண்டும். தெய்வ யோகத்திஞல் இந்த புஷ்பங்கள் கிடைக்காவிட்டால் வேறு அன்னிய புஷ்பங்களேக்கொண்டு பூஜிக்கலாம். தயிரும் கல்கண்டும் கலந்த சத்துமா, தயிர் அன்னம், மாம்பழத்தில் கலந்த கஞ்சி, கம்பி மிட்டாய்போல இனிப்பு, வடை, சர்க்கரை கலந்த கோவா, பயத்தம் பருப்பு, நெய்யும் கலந்த அன்னம்

இவைகள் கார்த்திகை மாதம் செய்ய வேண்டிய நைவேத்யம். மார்கழியில் இண்டேரிக் காய் என்னும் ஒரு விதபக்ஷணம், தைமாதம் லட்டு, மாகமாதம்- ஹல்வா, பங்குனி மாதம் சர்க்கரை நிரம்பிய நெய்யில் நைவேத்தியம் பண்ணவேண்டும்.

எந்த வஸ்துக்களை நைவேத்தியம் செய்கிறோமோ அதையே சாப்பிட வேண்டும். ஒருபொருளை நைவேத்தியம் செய்து விட்டு மற்றொன்றை சாப்பிட்டானானால், இதை சாப்பிடும் மூடன் பதிதன் ஆகிறான்.

ஒரு வருஷம் இந்த ரீதியாக ப்ரதிமாதம் சுக்லத்ருதியை ஆராதனை செய்து பிறகு வ்ரதம் முடிக்கும் ஸமயம் வைஸ்வதேவம் செய்யும் சிறிய பீடத்தில் அக்னி வளர்த்து பூஜை செய்ய வேண்டும்.

வ்ரதகர்த்தா, ஜாதவேதஸம் என்னும் மந்திரத்தினால் விதிப்படி எள்ளு, நெய், முதலிய த்ரவியங்களினால் நூற்றிஎட்டு தடவை ஆஹுதி செய்ய வேண்டும்.

எப்பொழுதும் அந்தப் பூஜை இரவிலேயே செய்யவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. இரவிலேயே போஜனமும் செய்ய வேண்டும், ஹோமமும் இரவிலேயே க்ஷமாயாசனம் செய்ய வேண்டும்.

ஹே! மாதா, தாங்கள் பக்திபூர்வமாக என்னால் செய்யப்பட்ட இந்த பூஜையை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஹே விச்வபுஜே, நான் தங்களை வணங்குகிறேன். தாங்கள் சீக்கிரமாக என் மன விருப்பங்களை நிறைவேற்றவேண்டும்.

ஹே! ஆசா விநாயகா, தாங்கள் விக்னங்களை விலக்குபவர். அதனால் தங்களை அடிக்கடி வணங்குகிறேன். தாங்கள் விஸ்வபுஜா தேவியுடன் சேர்ந்து, எனது மனோரதங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

இந்த இரண்டு மந்திரங்களை உச்சரித்து, கௌரியையும் கணேசரையும் பூஜை செய்யவேண்டும். வ்ரதத்தைப்

பூர்த்தி செய்யும் சமயம் மேல்கட்டி தோரணம், தலையணை, கண்ணாடி இவைனகளோடுகூடக் கட்டிலில் ஆசார்யரோடு பத்தினியையும் அமரச் செய்யவேண்டும்.

பிறகு வ்ரதகர்த்தா, வஸ்தரம், கை, காதுகளுக்கு அணியும் பூஷணம், வாசனைத்ரவியம், சந்தனம், மாலை, தட்சிணை இவைகளினால் ஸந்தோஷமாகப் பூஜை செய்ய வேண்டும்.

ஒரு வ்ரதத்தை முடிப்பதற்கு பார்பசு, குடை, கமண்டலம், லோட்டா முதலிய ஸாமக்ரிகளை தானம் செய்ய வேண்டும்.

மேலும் இந்த மனோரதத்ருதியையை நான் முடிக்கிறேன். அதைத் தன் புகழுரைகளினால் பூர்த்தி செய்கிறேன்.

இந்தவிதம் ஆசாரியரிடம் மரியாதை செய்து, அவர் ததாஸ்து என்று சொன்ன பிறகு, அவரை, அவர் வீட்டு வாயிற்படி வரைக் கொண்டு விட்டு வந்த பிறகு மற்றவர்களுக்கு யதாசக்தி தக்ஷிணை கொடுக்கவேண்டும். பிறகு ஸந்தோஷ சித்தத்துடன் இரவில் தன்னால் ஆதரிக்கப்பட்ட பந்து ஜனங்களுடன் அமர்ந்து போஜனம் செய்ய வேண்டும். பிறகு மறுநாள் காலை சதுர்தசி அன்று, நான்கு குமாரர்களுக்கும் பன்னிரண்டு குமாரிகளுக்கும், சந்தனம், புஷ்பம் முதலியவைகளால் பூஜித்து போஜனம் செய்விக்கவேண்டும். இந்தவிதமாக இந்த வ்ரதம் பூர்த்தியடைகின்றது.

இந்த வ்ரதத்தை தங்கள் மனோரதம் பூர்த்தியாக வேண்டும் என்லு ஒவ்வொருவரும் செய்யவேண்டும். விவாஹம் ஆகாத வாலிபர்கள் ஒரு வருஷம் வரை, இந்த வ்ரதத்தை அனுஷ்டித்தால் மனதுக்கு ரம்யமானவளும், நற்குலத்தில் பிறந்தவளும், மனதறிந்து நடப்பவள், துக்கமய ஸம்ஸாரத்திலிருந்து கரை ஏற்றுபவளும், பதிவ்ரதையுமான பத்தினியை அடைவான்.

வ்ருதம் முடிப்பவள் குமரியானுல், செல்வ சம்பத்தும், குணஸம்பத்தும் அதிகமாக உள்ள பதியை அடைவாள், ஸுமங்கலி அனேக புத்ரர்களேயும், தனது பதிக்கு அனேக ஸுகலாபங்களேயும் அளிப்பாள்.

அபாக்யவதி ஸௌபாக்யவதியாவாள். தரித்ரிணி, தனவதியாவாள். விதவை வைதவ்யதுக்கத்தை அனுபவிக்கமாட்டாள்.

கர்ப்பவதி தீர்காயுளும் சுபலக்ஷணங்களுமுள்ள குழந்தையைப் பெறுவாள். ப்ராம்மணனுக்கு ஸௌபாக்யதாயினி வித்தை கிடைக்கிறது.

ராஜ்யத்தை இழந்த அரசன் ராஜ்யத்தை அடைகிருன். வைச்யன் வ்யாபாரத்தில் லாபம் அடைகிருன். சூத்ரன் தன் மனேரத பலத்தை அடைகிருன்.

தர்மத்தை விரும்புவன் தர்மத்தை அடைகிருன். தனத்தை விரும்புபவன் தனத்தையும், காமத்தை விரும்புவன் காமத்தையும், மோக்ஷத்தை விரும்புகிறவன் மோக்ஷத்தையும் அடைகிருர்கள்.

மனேரத த்ருதீயை என்னும் வ்ரதத்தை அனுஷ்டிப்பவன் எந்தெந்தப் பொருளே விரும்புகிறனே, அவைகள் நிச்சயமாகக் கிடைக்கும்.

ஸ்கந்தர் கூறிகிருர். மகாதேவர் கூறக் கேட்ட பகவதி, ஸந்தோஷம் நிறைந்த மனத்தினளாய் விஸ்வேஸ்வரரிடம் கேட்டாள்.

ஏ! ஸதாசிவா! எவன் காசியிலிருந்து அன்னியஸ்தானங்களின் வ்ரதங்களேச் செய்பவர்கள் என்னேயும், ஆசாவினுயகரையும் எவ்விதம் பூஜிப்பார்கள்?

மகாதேவர் கூறினுர். ஏ, ஸர்வஸந்தேக நிவாரணி! நீ மிகவும் சரியாகக்கேட்டாய். ஹே! விச்வே! வாராணஸிபுரியில் வந்து வணங்கியவர்கள் தூரதேசத்தில் சென்றிருக்கும் ஜனங்களேயும் இழுத்து, அவர்கள் சிந்தித்த

ஸர்வ மனோரதங்களையும் பூர்த்தி செய்து, எல்லோருடைய ஆசைகளையும் பூர்த்தி செய்விக்கும், எல்லை இல்லா விக்னங்களை நாசமாக்கும் என்னுடைய க்ஷேத்ரத்தின் நலனை விரும்பும், ஆசா விநாயகருடன் உன்னை பூஜிக்கட்டும்.

ஆனால் ஏ! சிவே! மற்ற ஸ்தானங்களில் ஐந்து குந்து-மணிக்கும் மேலாக உன்னுடையவும், கணேசனுடையவும் மூர்த்தி செய்ய வேண்டும்.

வ்ரதம் இருப்பவன் வ்ரதம்முடிக்கும் சமயம் இரண்டு ப்ரதிமைகளையும் எடுத்துக் கொண்டு, ஆசாரியருக்கு அர்ப்பணிக்க வேண்டும்.

இவ்விதம் ஒருதடவை செய்பவன் க்ருதார்த்தனாகிறான். ஏ, தேவி! அதன் பிறகு இதைக்கேட்டு, ஸுலோமரின் புத்ரியான இந்த்ராணி, இந்த உத்தம வ்ரதத்தை அனுஷ்டித்துத் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டாள்.

இந்த வ்ரதத்தை அனுஷ்டித்ததால் அருந்ததி வஸிஷ்டரையும் அநஸூயை அத்ரியையும், பதியாக அடைந்தார்கள், ஸுனீதி, ராஜா உத்தானபாதனை அடைந்து, புத்ரனான துருவனையும் அடைந்தாள். இதே வ்ரதத்தை அனுஷ்டித்ததால் தன் துர்பாக்கியத்தையும் விலக அடித்தாள்.

க்ஷீர ஸாகரத்தின் கன்னிகை லக்ஷ்மி, விஷ்ணுவைப் பதியாக அடைந்தாள். ஹே! தேவி இவ்வளவுதான் நான் கூறுவேன். எவன் இந்த வ்ரதத்தை அனுஷ்டிக்கிறானோ, அவன் ஸகல வ்ரதங்களையும் அனுஷ்டித்தமாதிரி.

புத்திமான்கள் மனோயோகத்துடன் இவ்ரதத்தை அனுஷ்டிப்பதால் சுத்தபுத்தி அடைகிறான். பாபங்களிலிருந்து விடுபடுகிறான். இப்படி ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான எண்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 81

அகஸ்தியர் கூறினார்:- ஏ ஸ்கந்தா! பகவான் சம்பு தேவியிடம் தர்மதீர்த்த மாகாத்மியத்தை எந்த விதமாக வர்ணித்தார்? ஸ்கந்தர் கூறினார். விந்தியாசலத்தின் கர்வத்தைப் போக்கடித்தவரே! கோப்ராக்ஞா! பகவான் எப்படி தர்ம தீர்த்தம் உண்டான மாகாத்மியத்தைச் சொன்னார் என்பதை நான் உனக்குச் சொல்கிறேன் என்றார்.

இந்திரன் வ்ருத்தாஸுரனைக் கொன்றதால் அவனை ப்ரம்மஹத்தி பிடித்துக் கொண்டுவிட்டது. மிகவும் பச்சாத்தாபத்துடன் ப்ருஹஸ்பதியை அணுகி, ஏதாவது ப்ராயஸ்சித்தம் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டான்.

இந்தத் தள்ளமுடியாத ப்ரம்மஹத்தியில் இருந்து விடுதலை பெற இச்சிக்கிறாயானால் விச்வநாதரால் ஆளப்பட்ட காசி தேசத்துக்குச் செல். தேசத்துக்குச் செல்.

ஹே! ஸர்வவேச்வரர் ஆன விச்வேச்வரருடைய பெரிய ராஜதானியாகிய காசியை விட்டுவிட்டு ப்ரம்மஹத்தியாகிய நோய்க்கு ஔஷதம் எங்கும் இல்லை. ஹே! வ்ருத்ரசத்ருவே! எந்த ஆனந்த வனத்தில் ப்ரம்மாவின் தலை, பைரவருடைய கையில் இருந்து இற்று விழுந்ததோ அந்த இடத்துக்கு நீ செல்லக்கடவாய். ஹே! சக்ர ஆனந்தவனத்தினுடைய எல்லையை அடைந்ததும்.

ப்ரம்மஹத்யை ஆதாரமில்லாமல் உன்னை விட்டு நடுங்கிக் கொண்டே ஓடிவிடும். விச்வேச்வரரால் ஆளப்படும் காசி எத்தனையோ பாபிகளின் பெரிய பெரிய பாபங்களையும் போக்கடித்திருக்கிறது.

ஹே! சதச்ரதோ! மகாபாதங்களுக்குக் காசியில் முக்தி கிடைப்பது போல் மகாஸம்ஸாரத்திலிருந்தும் காசியிலேயே முக்தி கிடைக்கிறது. வேறு எங்கும் அவ்விதம் கிடைக்காது.

காசியே முக்திபுரி. காசி எல்லா பாபங்களையும் ஸம்ஹரிக்கிறது. விச்வேச்வரர் உடைய ப்ரேமைக்கு பாத்தரமான காசி எனும் பெண்ணே! உனது ஸ்வர்க்கம் கூடக் காசிக்கு ஈடாகாது.

ப்ரம்மஹத்திக்குப் பயப்பட்டால் ஸம்ஸாரத்திற்கு பயப்பட்டால் முக்தி ப்ரகாசினி காசியை ஒரு பொழுதும் விடக்கூடாது. அங்கு தேகத்யாகம் செய்வதினால் எல்லா ப்ராணிகளின் கர்மபீஜமும் சிவபிரானுடைய திருஷ்டியினால் உலர்ந்துபோய் விடும். பிறகு முளைக்காது.

ஹே! வ்ருத்ரசத்ருவே! இந்தக் காசியில் சென்று வ்ருத்ராசுரனுடைய ப்ரம்ம ஹத்தியிலிருந்து விடுபடும் பொருட்டு உலகம் முழுவதுக்கும் உயிரை அளிக்கும் விச்வேச்வரரை ஆராதனை செய். ப்ருஹஸ்பதியின் வார்த்தையைக் கேட்டு, இந்திரன் மகாபாதகங்களை நாசம் செய்யும் காசிக்கு சீக்கிரமே போய்ச் சேர்ந்தான்.

உத்தரவாஹினி கங்கையில் நீராடி தர்மேஸ்வரருக்கு ஸமீபத்தில் தங்கி, ப்ரம்ம ஹத்தியிலிருந்து விடுபடும் பொருட்டு, மகாதேவரை ஆராதனை பண்ணத் தொடங்கினான்.

பிறகு ஒருதரம் மகாருத்ரமந்ரத்தை ஜபம் செய்து கொண்டு லிங்கத்தை வலம் வரும்போது, லிங்கத்தின் மத்தியிலிருந்து, தனது ஜோதியில் ஆகாசத்தை ப்ரகாசிப்பித்துக் கொண்டு வெளிவரும் த்ரிலோசனரை தரிசனம் செய்தான்.

பிறகு வேதத்தில் அனேக விதமாகக் கூறி இருக்கும் ருத்ரனாகிய தங்களைத் துதிக்கத் தொடங்கினான். அதன் பிறகு மகாதேவர் லிங்கத்திலிருந்து வெளி வந்து, இந்த்ரனைப் பார்த்துக் கூறினார்.

ஹே. சசீபதே! தர்மபீடத்தை பூஜிப்பவனே! நான் ஸந்தோஷம் அடைந்தேன். வரம் கேள். ஹே! ஸுவ்ரத! என்னிடத்திலிருந்து என்ன விரும்புகிறாய். அதை சீக்கிரமாகக் கூறு.

வ்ருத்ரகாதகன் பகவானுடைய இந்த ப்ரேம பூர்ணமான வார்த்தைகளைக் கேட்டு, அவரிடம் கூறினான்.

ஹே! ஸர்வக்ஞா! தங்களுக்குத் தெரியாத மறைந்த பொருள் ஏதெனும் உண்டோ! பிறகு தர்மபீடத்தை ஸேவித்த இந்த்ரனிடம் க்ருபை கொண்டு அங்கு ஒரு தீர்த்தத்தை ச்ருஷ்டித்து இந்த்ரனிடம் கூறினார். இங்கு நீ ஸ்நானம் செய் என்றார்.

இந்திரன் ஸ்நானம் செய்த க்ஷணமாத்திரத்திலேயே திவ்ய வாசனை நிரம்பியவனாக யாகம் செய்ததினால் ஏற்பட்ட தனது ஒளியைத் திரும்பவும் பெற்றான். பிறகு நாரதாதி முனீச்வரர்கள் இந்த அதிசயத்தைப் பார்த்து, பாபநாசனம் செய்யும் அந்த திவ்ய தர்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தார்கள்.

திவ்ய பித்ருக்களுக்கு ச்ராத்தமும், தர்பணமும், அந்த தீர்த்தத்தைக் குடங்களில் மொண்டு தர்மேஸ்வரருக்கு அபிஷேகம் செய்தார்கள். அன்றிலிருந்து இந்த தீர்த்தம் ப்ரம்மஹத்தி தோஷத்திலிருந்து கழுவும் இந்த ஜலத்துக்கு தர்மகூபம் என்று பெயர் வைத்தார்கள்.

தீர்த்தராஜர் ப்ரயாகையில் ஸ்நானம் பண்ணினால் என்ன பலன் கிடைக்குமோ, அதைவிட ஆயிரம் மடங்கு பலன் இந்த தர்மகூப ஸ்நானத்தினால் கிடைக்கும். ஹரித்வார், குருக்ஷேத்ரம், கங்காஸாகரம், ஸங்கமம் இவைகளில் ஸ்நானம் பண்ணினால் என்ன புண்யம் கிடைக்குமோ, அந்த புண்யம் தர்மகூப ஸ்நானத்தில் கிடைக்கும்.

ப்ருஹஸ்பதி ஸிம்ம ராசியில் ஸஞ்சரிக்கும் பொழுது கௌதமி, ஸரஸ்வதி நர்மதையில் ஸ்நானம் பண்ணினால் என்ன புண்ணியம் கிடைக்குமோ அந்த புண்ணியம் இந்த தர்மகூப ஸ்நானத்தினால் கிடைக்கும்.

மானஸஸரோவர் புஷ்கரதீர்த்தம், த்வாரகையில் ஸமுத்திர ஸ்நானம் இவைகளில் கிடைக்கும் பலன் தர்மகூப ஸ்நானத்தினால் கிடைக்கிறது.

*கார்த்திகை பௌர்ணமியன்று ஸூகர க்ஷேத்திரத்திலேயும், சித்ரா பௌர்ணமியன்று கௌரீகுண்டத்திலும், ஹரிவாஸரத்தில், சங்குத்வார தீர்த்தத்தில் ஸ்னனம் பண்ணினல் என்ன புண்ணியம் கிடைக்குமோ அந்த புண்ணியம் தர்மகூபத்தில் கிடைக்கும்.*

*கங்கையிலும் தர்மகூபத்திலும், ஸ்னனம் பண்ணுபவர்களிடம் இருந்து பிண்டம் பெற்றுக்கொள்ள பித்ருக்கள் ஆசையுடன் காத்து இருக்கிறர்கள்.*

*கயையில் பிதாமஹேஸ்வரருக்கு ஸமீபத்தில் பல்குனி நதியிலும் காசியில் தர்மமேஸ்வரருக்குப் பக்கத்தில் தர்மகூப நதியில் செய்யும் பிண்டதானத்திலும் பித்ருக்கள் ஸந்தோஷமடைகிறர்கள்.*

*ஒருவன் தர்மகூபத்தில் ஸ்னனம் செய்து பித்ருக்களுக்கு தர்பணம் செய்தானுனல் கயைக்குச் சென்று பித்ருக்களுக்கு பிண்டதானம் செய்வதினல், இதைவிட சந்தோஷம் கொடுக்கக்கூடிய காரியமாக அது ஆகாது.*

*பித்ருக்கள் கயையில் பிண்டதானம் செய்வதனல் எப்படித்ருப்தி அடைகிறர்களோ, அதே, த்ருப்தியை தர்ம தீர்த்தத்தில் ஸ்னனம் செய்வதால் அடைகிறர்கள். இதில் கொஞ்சம் கூட அதிகம் குறைவு என்று கிடையாது.*

*எந்த ஸத்புத்ரர்களில் ஒருவன் தர்மதீர்த்தத்தில் பித்ருக்களுக்கு கர்மம் செய்து பித்ருக்களின் கடனிலிருந்து விடுபடுகிறனே அவனே தன்யன். அவனே பித்ருக்களின் ப்ரீதியை சம்பாதித்துக் கொள்பவன்.*

*அப்படிப்பட்ட இந்த தீர்த்தத்தின் ப்ரபாவத்தினல் இந்திரன் க்ஷண மாத்திரத்தில் ப்ரும்மஹத்தி தோஷம் நீங்கப்பெற்றன். ப்ரும்மஹத்தி தோஷம் நீங்கி தன் அமராவதி பட்டணத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.*

*ஏகும்பமுனியே! அந்த தர்ம தீர்த்தத்தின் மஹிமை அபாரமானது. அந்தக் கூபத்தில் ஒருவன் தன் நிழலைப்*

பார்த்துக் கொண்டாலே போதும். அவன் அக்ஷயமான பலனை அடைகிறான். அந்தக் கிணற்றடியில் ப்ராம்மணன், ஸன்யாஸி தபஸ்வி இவர்களுக்கு உணவளித்தால் அன்னத்தில் ஒவ்வொரு அணுவுக்கும் வாஜபேயயக்ஞத்தின் பலன் கிடைக்கிறது.

இந்திரன் அங்கிருந்து அமராவதிக்குப்போய் தேவதைகளுக்கு முன்னால் காசியின் தர்ம பீடத்தைப்பற்றி மிகவும் புகழ்ந்தான். அதன் பிறகு அங்கிருந்து மகாதேவருடைய ஆனந்தவனத்திற்கு தேவதைகளுடனும் ரிஷிகளுடனும், இந்திரன் வந்து ஒரு லிங்கத்தை ஸ்தாபிதம் பண்ணினான்.

இந்த்ரனுடைய லிங்கத்தை தாரகேச்வரருக்கு மேற்கு பக்கத்தில் இந்த்ரேஸ்வர் என்னும் பிரஸித்த லிங்கம் இருக்கிறது. அதை தரிசித்தவர்கள் இந்த்ர லோகத்திற்கு அதிக தூரம் செல்ல வேண்டாம்.

அதற்கு தக்ஷிண பாகத்தில் இந்த்ராணியால் ஸ்தாபிக்கப்பட்ட ஸசீஸ்சவரர் என்னும் பெயருடைய லிங்கம் இருக்கிறது. ஸசீஸ்வர பூஜை செய்வதினால் ஸ்த்ரிகள் அளவற்ற சௌபாக்கியவதிகளாவார்கள்.

அதற்கு ஸமீபத்திலேயே ரம்பேஸ்வரர் இருக்கிறார். அவர் அளவற்ற ஸுகங்களைக் கொடுக்கும் தாதாவாக இருக்கிறார். இந்த்ரேஸ்வரருக்கு ஸமீபத்திலேயே லோகபாலேச்வரர் என்ற மற்றொரு லிங்கம் இருக்கிறது.

இந்த்ரேஸ்வரருக்குப் பக்கத்தில் இருக்கும் லோகபாலேஸ்வரரை பூஜிப்பதனால் லோகபாலர்கள் அளவற்ற செழிப்பைக் கொடுக்கிறார்கள். தர்மேஸ்வரருக்கு மேற்கு பக்கத்தில் இருக்கும் லிங்கத்தின் பெயர், வருணேச்வரர் ஆகும். அதை தரிசிப்பதனால் ராஜகுலத்து தைர்யமும் ராஜ்யமும் கிடைக்கும்.

தர்மேச்வரருக்கு தக்ஷிணபாகத்தில் தத்வேஸ்வரர் என்ற ஒரு லிங்கம் இருக்கிறது. கட்டாயம் அதைப் பூஜிக்க வேண்டும். அதைப் பூஜிப்பதனால் தத்வஞானம் ஏற்படும்.

*தர்மேஸ்வரருக்குக் கிழக்குபக்கத்தில் வைராக்யேஸ்வரர் என்ற லிங்கம் இருக்கிறது. அந்த லிங்கத்தைத் தொடுவதனுலேயே சித்த நிவர்த்தி ஏற்படும். தர்மேஸ்வரருக்கு ஈசான பக்கத்தில் தேகமெடுத்தவர்களுக்கெல்லாம் லிங்க ஞானத்தைக் கொடுக்கும் ஞானேச்வர லிங்கம் இருக்கிறது. வடக்கு பக்கத்தின் ஐச்வர்யேஸ்வர லிங்கம் இருக்கிறது.*

*அந்த லிங்கத்தை தரிசனம் செய்வதனுல் மனம் விரும்பும் ஐச்வர்யங்களெல்லம் கிடைக்கும். ஏ! கும்பமுனியே! இந்த லிங்கங்களெல்லாம் ஸாக்ஷாத் ஐந்துமுக ஸ்வரூபமாக இருக்கிறது.*

*இவைகளை ஸேவிப்பதால் மனிதர்கள் சாச்வத பதவியை அடைகிருர்கள். ஏ! முனியே! அங்கு மற்ருெரு ஸம்பவம் நடந்தது. அதையும் சொல்கிறேன் கேள்.*

*அதைக் கேட்பதால் மனிதர்கள் ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்க மாட்டார்கள், இங்கே கதம்பசிகரமென்னும் பெயருடைய விந்த்யபர்வத்திலிருந்து வந்த ஒரு குன்று இருக்கிறது.*

*அங்கே ராஜா தமனுடைய புத்திரன் துர்த்தம் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். பிதா சாந்தமடைந்த பின் அவன் ராஜ்யத்தைப் பெற்ருன். ஆனுல் அவனுக்கு மனது சஞ்சலமடைந்துகொண்டேயிருந்தது.*

*அவன் காமத்தினுல் மோஹமடைந்தவனுய் ஊரிலுள்ள யுவதிகளை எல்லாம் பலபூர்வமாக இழுத்துக்கொண்டுவந்து கொண்டிருந்தான். துஷ்டர்களே அவனுக்கு இஷ்டமானவர்கள். நல்லவர்களைக் கண்டால் அவனுக்கு வெறுப்பு. அவன் நிரபராதிகளை தண்டித்து வந்தான், அபராதிகளை மன்னித்து வந்தான். வேடர்கள் வனசரர்கள்கூட எப்பொழுதும் வேட்டையாடி வந்தான்.*

*அவனுக்கு புத்தி சொல்பவர்களையெல்லாம் ராஜ்யத்திலிருந்து வெளியேற்றி வந்தான். தாழ்ந்த*

ஜாதியினரை தர்மாதிகாரிகளாக நியமித்து வந்தான். ப்ராம்மணர்களிடம் வரி வசூலித்து வந்தான்.

பிறர் மனைவியருடன் கூடி ஸந்தோஷித்தான். தன் மனைவிகளிடம் பராமுகமாக இருந்தான். அவன் ஒருபொழுதும் துக்கத்தைத் துடைப்பவரும், ஸர்வ பாபங்களைப் போக்குபவரும், விரும்பியதை அளிக்கும் தாதாவும், ஸம்ஸாரத்தின் ஸாரமானவரும், எல்லோருக்கும் ஸ்வாமியுமான, தேவதேவர் ஹரி, ஹரன் ஒருவரையும் பூஜிக்கமாட்டான்.

அந்த துர்த்தமன் என்னும் பெயருடைய அரசன் பிரஜைகளை, காலமில்லா காலத்தில் நாசம் அடையச் செய்கின்ற வால் நக்ஷத்ரமாக விளங்கி வந்தான்.

ஒரு சமயம் பாபத்தைச் சேமித்து வைத்தவனும், கெட்ட ஸ்வபாவம் உடையவனுமான அந்த அரசன் வேடர்களுடன் குதிரையில் ஏறி, நீலப்பசு (மளா) ஒன்றை பின்பற்றி ஓடினான். அதன் பின்னால் ஓடிஓடி, அடர்ந்த காட்டுக்கு உள்ளே சென்று விட்டான்.

அப்பொழுது வில்லை எடுத்துக்கொண்டு குதிரையில் ஏறித் தற்செயலாக ஆனந்தவனத்தை அடைந்தான்.

இங்கு எங்கும் மனோரம்யமான நிழலினால் சூழப்பட்ட மிக விஸ்தாரமான பெரிய பெரிய பழம் பழுக்காத மரங்களைக் கண்டவுடன் அவன் களைப்பு மாறிவிட்டது. இந்த மரங்கள் எல்லாம் தங்கள் இலைகளாகிய விசிறியால் மந்தமாருதத்தை உத்தம வாஸனையுடன் வீசிக்கொண்டிருந்தன.

அந்த வனத்தைப் பார்த்தவுடன் அரசனுக்கு வேட்டையாடிய கிலேசம் மாத்திரம் மாறவில்லை. ஜன்மம் முழுவதும் இருந்து வந்த க்லேசம் மறைந்துவிட்டது.

அந்த வனத்தில் மத்தியில் ஆகாசத்தை முத்தமிடும் உயர்ந்த சிகரங்களோடு கூடிய ரத்னங்கள் பதித்த மிகப் பெரிய ஒரு கோயிலைக் கண்டான்.

*உடனேயே அரசன் குதிரையில் இருந்து இறங்கி, ஆச்சர்யத்துடன் தர்மேஸ்வரருடைய கோவில் மண்டபத்துள் வந்தான்; அதைப் பார்த்துவிட்டுப் புகழத் தொடங்கினுன்.*

*ஆகா! இன்று நான் தன்யனுகி, ஸந்தோஷமடைந்தேன், என் இரு கண்களும் இன்று ஸபலம் ஆயின. இத்தினம் சுபதினம். இன்று இந்த பூமியைக் கண்ட பாக்யமே பாக்யம். பின் தர்ம பீடத்தின் ப்ரபாவத்தால் ஞானம் பிறந்து தன்னைத்தானே நிந்தித்துக் கொள்ளத் தொடங்கினுன்.*

*துர்ஜனங்களை நண்பர்களாகவும், ஸஜ்ஜனங்களை விரோதிகளாகவும் கருதி வந்தேனே, என்ன இழிவான செய்கை செய்தேன். நான் பிராணிகளுக்கு உத்வேகத்தைக் கிளப்பிவிடும் செய்கையைச் செய்தும், ஜனங்களை ஹிம்ஸித்தும் பண்டிதர்களைத் துன்புறுத்தியும், பரஸ்த்ரீகமனம் செய்தும் எத்தனை துக்ககரமான காரியங்கள் செய்திருக்கிறேன்.*

*இன்றுவரை என் அல்பபுத்தியினுல் என்வாழ்நாள் வீணுகிப் போய்விட்டது. நான் இதுபோல் உத்தமமான இடங்களை இதுவரை பார்த்ததில்லை. இப்படி அந்த துர்த்தமன் தன்னைத்தானே நித்தித்துக்கொண்டபிறகு, பகவான் தர்மேஸ்வரரை நமஸ்கரித்து, குதிரையில் ஏறி ராஜ்யத்திற்குத் திரும்பினுன்.*

*பிறகு அந்த அரசன் பரம்பரையாக வந்த தன் மந்திரி ப்ரதானிகளை அழைத்து, தன் துர்மந்திரிகளை விலக்கிவிட்டு ஊர் ஜனங்களைக் கூப்பிட்டனுப்பினுன்.*

*பிறகு ப்ராமணர்களுக்கு அனேக க்ராமங்களை தானம் செய்து ராஜ்ய பாரத்தை புத்ரனிடம் ஒப்படைத்துவிட்டு தன் ப்ரஜைகளை தர்ம நெறியில் வாழக்கட்டளையிட்டு விட்டு, தண்டிக்க வேண்டியவர்களை தண்டித்து, ஸஜ்ஜனங்களை ஸந்தோஷப்படுத்தி, ஸ்திரீகளைப் புறக்கணித்து விஷய வாஸனைகளில் வெறுப்படைந்தான்.*

*பிறகு ச்ரேயஸ் விகாஸீக்கும் காசிக்குத் தனியாகவே வந்து தர்மேஸ்வரரை ஆராதித்து வந்தான். காலக்ரமத்தில் நிர்வாண பதவி அடைந்தான். அந்ததுர்த்தமன் ஆரம்பத்தில் துஷ்டனுக இருந்த போதிலும், தினம் தர்மேஸ்வரரை தரிசனம் செய்ததால் ஜிதேந்த்ரியர்களில் முதல்வனுகத் திகழ்ந்தான். மோக்ஷத்தையும் அடைந்தான்.*

*ஹே! கும்பமுனியே, இந்த தர்மேஸ்வர மாகாத்ம்யத்தை உமக்குச் சுருக்கிச் சொன்னேன். ஆனுல் இந்த தர்மேஸ்வரருடைய மாகாத்ம்யத்தை யாரால் விளக்கிக்கூற முடியும்?*

*உத்தமன் ஒருவன் தர்மேச்வரருடைய ப்ரபாவங்களைக் கேட்டால், அதே நிமிடம், ஜன்மபர்யந்தம் சேர்த்து வைத்திருந்த ஸஞ்சித பாபங்களிலிருந்து, க்ஷணத்தில் விடுபடுகிறுன்.*

*புத்திமான்கள் விசேஷமாக ச்ராத்த ஸமயத்தில் பித்ருக்களைத்ருப்திப்படுத்த இந்த தர்மேஸ்வர வ்யாக்யானத்தை ப்ராம்மணர்களுக்குப் படித்துகாட்ட வேண்டும். தூர தேசத்தில் இருந்தாலும், இந்த தர்மேஸ்வரருடைய உபாக்யானத்தைப் கேட்டவுடன் ஸமஸ்த பாபங்களிலிருந்து விடுபட்டுக் கடைசியில் சிவ ஸாயுஜ்ய பதவியை அடைவார்கள்.*

*இவ்விதம் ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்ரார்த்தத்தில் பாஷாடீகாவான எண்பத்தொன்றுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 82

*பார்வதி கூறினாள்- ஹே! மஹேச்வரா, வீரேச்வருடையய மஹிமைகளைக் கேள்விப்பட்டு இருக்கிறேன். அங்கும் நூற்றுக்கணக்கான பேர்கள் ஸித்திலாபம் அடைந்திருக்கிறார்கள் என்று கேள்வி. அந்த உத்தம லிங்கம் காசியில் எப்படி ஆவிர்பவித்தது? எப்படி அது சீக்கிரமாக ஸித்திகளை அள்ளிக்கொடுக்க முடிந்தது? ஹே! ஸத்பதி, இவைகளை எனக்குக் கூறுங்கள். மஹேஸ்வரர் மறுமொழி கூறினார்-*

*ஹே! மஹாதேவி! வீரேச்வரருடைய உன்னத உற்பத்தியைக் கூறுகிறேன், கேட்பாயாக. ஹே! சிவயே, அதைக்கேட்கும் நரன் எல்லையில்லாத புண்ணியத்தை அடைகிறான்.*

*அமித்ரஜித் என்னும் பெயருடைய அரசன் மிகவும் தார்மிகனாகவும் ப்ரதாபசாலியாகவும், பரமஸம்பன்னனாயும் ப்ரஜைகளை ரக்ஷிப்பதில் கருத்து உடையவனாயும் இருந்தான்.*

*கீர்த்திவானாகவும் ஸூக்ஷ்ம புத்தியுடையவனாகவும், ப்ராம்மண ப்ரியனாகவும் வினய சீலனாய், குணஸம்பன்னனாய்; கர்மம் செய்வதில் நிபுணனாய், வித்யாஸாகரத்தைக் கடந்தவனாய்; பிறரது நல்ல குணங்களை க்ரஹிக்கின்றனவனாய், நன்றியுடையவனாய், மதுரபாஷியாய், பாபகர்மங்களில் பராமுகனாய், ஸத்ய பாஷியாய், ஆசார சீலனாய், மதுரபாஷியாய், ஜிதேந்த்ரியனாய், ரணபூமியில் யமராஜனுக்குத் துல்யனாய், ஸபையில் திக்கஜ வித்வானாய், சலியா மனம், தைர்யம் இவைகளோடு கூடியவனாய், தேசகால மறிந்து காரியம் செய்வதில் நிபுணனாய், மதிக்க வேண்டிய ஜனங்களை மதிப்பவனாய் ஒரு குற்றம்கூட இல்லாதவனாய் இருந்தான். அவன் முன் நெற்றிமயிர்கள் அவப்ருதஸ்னானங்களினால் எப்போதும் நனைந்தே இருந்தன.*

அவன் தன் சித்த வ்ருத்தியை பகவான் வாஸுதேவருடைய சரண கமலங்களில் இருத்தி, ஒருவிதமான உபத்திரவமும் இல்லாதவனாய் ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான்.

அதிகார கூட்டத்தை மீறுதவனாக விஷ்ணுவின் பரமபக்தனான அமிர்ஜித், ஸமஸ்த போகங்களையும் விஷ்ணுவின் சரண கமலங்களில் அர்பித்துவிட்டு அவரது ப்ரஸாதம் ஆகவே போகங்களை அனுபவித்து வந்தான்.

அந்த மஹா பாக்யசாலியான ராஜாவின் ராஜ்யத்தில் அடிக்கொரு விஷ்ணுவின் பெரிய கோவில்களும், ஒவ்வொரு வீடுகளும் ஆலயமாக இருந்தன.

அவனுடைய ராஜ்யத்தில் எங்கு பார்த்தாலும் ஏ, கோவிந்தா! கோபாலா, கோபீஜனசித்த சோரா, சுதாரா, குணாதீதா, குணபூர்ணா, கருடத்வஜா, கேசிசூதனா, கைடபாரே, கம்ஸாரே, கமலபதே, கிருஷ்ணா, கேசவா, கமலநேத்ரா, ம்ருத்யுபயநாசனா, புருஷோத்தமா, பாப ஹாரி; புண்டரீகாக்ஷா, பீதாம்பரதாரீ, பத்மநாபா, பராதீரா, ஜகன்னாதா, ஜான்னவீ ஜலத்தின் ஜன்ம பூமியே.

ஜன்மிகளின் ஜன்மத்தைப் போக்கடிப்பவனே, யக்ஞம் செய்யும் ஜனங்களின் பாபத்தைப் போக்கடிப்பவனே!

ஸ்ரீ வத்ஸவக்ஷா, ஸ்ரீ காந்தா, ஸ்ரீகரா, ஸ்ரீநிதியே, ஸ்ரீரங்கா, சாரங்கபாணே, சௌரே, (அஸுரர்களின் சத்ருவே) தானவாரே, தாமோதரா, துரந்தகா! தேவகீ ஹ்ருதயானந்தா சேஷசாயீ விஷ்ணுவே, வைகுண்ட நிலயா, பாணாஸுரஸம்ஹாரின், விஷ்டரஸ்ரவா விஷ்வக்ஸேனா, விராதனைக் கொன்றவனே, வனமாலியே, வனப்ரியனே, த்ரிவிக்ரமனே, த்ரைலோக்யநாதனே, சக்ரபாணியே, சதுர்புஜா, மதுசூதனா ஆகிய மதுரமான, பவித்ரமான நாமங்கள் ஒவ்வொரு வீடுகளிலும் கோபாலர்கள் வ்ருத்தர்கள் ஸ்திரீகள் இவர்கள்

ஒவ்வொருவர் வாயிலிருந்தும் உச்சரித்தவண்ணமே யிருந்தது.

எல்லா வீடுகளும் துளஸீவனமாகக் காணப்பட்டன.

மாளிகைகளிலும் வீட்டுச்சுவர்களிலும் சதுர சைத்ரிகளுல் எழுதப்பட்ட பகவான் கமலாபதியின் பரமபவித்ர விசித்ர சித்ரங்கள் காணப்பட்டன. ஹரிகதையைத் தவிர வேறு வார்த்தைகளே அவர்களுக்குத் தெரியாது

மான்களுக்குக்கூட ஹரிணீ என்ற பெயர். ஹரியின் அம்சமாகப் பொருந்தியிருப்பதனுல் வேடர்கள்கூட அரசனுக்கு பயந்து கொண்டு மான்களை வதைக்க மாட்டார்கள். அதனுல் வனங்களில் மான்கள் நிர்பயமாகத் திரிந்து கொண்டிருந்தன.

பகவான் விஷ்ணு மத்ஸ்யாவதாரம், கூர்மாவதாரம் எல்லாம் எடுத்ததினுல், மாம்ஸம் சாப்பிடுவர்கள் கூட பயத்தால் ஆமை, பன்றி இவைகளைக் கொல்லமாட்டார்கள்.

அமிர்ஜித் அரசனின் ஆட்சியில் பால் பருகும் குழந்தைகள் கூட ஏகாதசி அன்று பால் குடிக்காது.

மனிதர்களைப் பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? ஏகாதசியன்று பசுக்கள்கூடப் புல் தின்னுது.

இந்த அரசனின் ராஜ்ய சாஸனத்தில் ஏகாதசி தோறும் ஜனங்கள் மிகவும் உத்ஸவமாகக் கொண்டாடுவார்கள்.

அந்த அரசன் விஷ்ணு பக்தியில்லாதவர்களுக்கு ப்ராண தண்டனையும் அபராதத் தொகையும் விதிப்பான்.

அவனுடைய ராஜ்யத்தில் கீழ்ஜாதி ஜனங்களில்கூட விஷ்ணு மந்திரம் தீக்ஷை பெற்றவர்கள் இருந்தார்கள். சங்கு சக்கரம் முத்திரை தரித்துக்கொண்டு ப்ராம்மணர்களைப் போலவே சோபையுடையர்களாக இருந்தார்கள். ஜனங்கள்

அன்றன்று செய்யும் செயல்களை எல்லாம், பலனை உத்தேசிக்காமல் வாஸுதேவனுக்கு அர்பணம் பண்ணி வந்தார்கள்.

பரமானந்த, அச்யுத, கோவிந்த, முகுந்த என்ற நாமத்தைத் தவிர வேறொரு நாமமும் ஜபியார்கள். வேறொரு ஜபத்தை மதிக்கவும் மாட்டார்கள்.

அந்த பூபதிக்கு பகவான் க்ருஷ்ணனே பரமகதி, பரமபந்து. இந்த விதமாக ராஜா அமிர்தஜித் ராஜ்யாதிகாரம் பண்ணிக் கொண்டிருக்கும் போது ஒருதரம் ஸ்ரீமான் தேவரிஷி நாரதர் அவரைப் பார்ப்பதற்காக வந்தார். ராஜா பரமானந்தம் அடைந்து விதிப்படி மதுபர்க்கம் ஆஸனம் முதலியவைகளால் அவரைப் பூஜித்தார்.

இதன் பிறகு ராஜா அமிர்த் ஜித்திடம் கூறினார் ஏ! நரபாலா, நீயே தன்யன், நீயே க்ருதார்த்தன், நீயே தேவதைகளாலும் கூட மதிக்கப்படுபவன். ஏனென்றால் நீ எல்லா பூதங்கள் இடத்திலும் பகவான் கோவிந்தனையே பார்க்கிறாய்.

ஏ ராஜா, ஸத்தமா வேதத்தினால் மதிக்கப்படும் மஹாபுருஷர் யக்ஞ புருஷன் ஆன ஹரியை, இந்த ஜகத்துக்கு அந்தராத்மாவை, உயிரளித்து, ரக்ஷித்து, ஸம்ஹரித்து, செய்யும் மஹா விஷ்ணுவிடம் மனதை வைத்து ஜகத்தை எங்கும் விஷ்ணு மயமாகப் பார்க்கிறாய்.

உன் மங்களகரமான தரிசனத்தைப் பெற்று நான் பவித்ரனானேன், இந்த நீர்க்குமிழி போன்ற உலகில், ஸகல மங்களங்களையும் அருளும் கமலாகாந்தனின் சரணாரவிந்தங்களில் பக்தி செய்வதே ஸாரமான பொருள்.

ஒரு புத்திமான் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, கேவலம் விஷ்ணு பக்தி பண்ணுவானாலால் எல்லாப் பொருட்களும் அவனையே அடையும்.

ரிஷீகேசனிடம் எவனுடைய இந்த்ரியங்கள் லயித்து

இருக்கின்றனவோ, அதே மனிதன் இந்த பரம சஞ்சலமான ப்ரம்மாண்டத்திலேயே ஸ்திரமாக நிற்கிருன்.

தனம், யௌவனம், ஆயுள் இவைகளைத் தாமரை இலைத்தண்ணீர்மேல் நிலையில்லாதது எனத் தெரிந்து தனியஞக பகவான் அச்சுதன் பதங்களையே அடையவேண்டும்.

யாருடைய சொல்லிலும் ஹ்ருதயத்திலும் எங்கும் பகவான் ஜஞர்த்தனர் எழுந்தருளியிருக்கிருரோ, அந்த நரரூபம் எடுத்த ஜஞர்த்தனர், எங்கும் எல்லோராலும் வணங்கத் தகுந்தவர்.

இந்த பூதலத்தில் நிச்சலமான த்யான யோகத்திஞல் ஸ்ரீபதியான விஷ்ணுவை ஆராதித்து எவன்தான் புருஷோத்தம பதவியை அடையவில்லை. ஏ! பூபதே, உன்னுடைய விஷ்ணு பக்தியைப் பார்த்து விட்டு பரமஸந்தோஷமான மனத்தினஞய் உனக்கு ஒரு உபகாரம் செய்ய விரும்புகிறேன். அதைக் கூறுகிறேன் கேள்.

மலயகந்தினி என்னும் பெயருடைய ஒரு வித்யாதர கன்னிகை இருக்கிருள். அவள் தன் பிதாவின் தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது கபாலகேது என்னும் ஒரு அசுரனின் புத்ரஞன கங்காளகேது எனும் பலசாலியான தானவன் அவளை அபகரித்துச் சென்று விட்டான். வரப்போகிற த்ருதியை அன்று அந்தப் பெண்ணை விவாகம் செய்து கொள்வது என்று தீர்மானம் செய்து இருக்கிருன்.

அவள் பாதாளத்தில் சம்பாவதி என்னும் நகரில் வாழ்கிருள். நான், அவள் ஹாடகேசுவரரை தரிசனம் செய்து விட்டு, வரும் ஸமயம், அழுது கொண்டிருக்கும் அவளைக்கண்டேன். உடனே அவள் வணங்கிக் கூறிஞள்-

ஏ, ப்ரும்மசாரியாகிய முனிச்ரேஷ்டரே! நான் கந்தமாதன பர்வதத்தில் ஸகிகளுடன் விளையாடிக் கொண்டிருந்தபோது துராசாரியான கங்காளகேது என்ற

*இந்த தானவன் என்னை அபஹரித்து வந்து விட்டான்.*

*இவனை யுத்தத்தில் எந்த அஸ்திரங்களாலும் கொல்ல முடியாது. அவன் கையில் இருக்கும் த்ரிசூலத்தினலேயே அவன் மரணமடைவான். அவன் உலக முழுவதும் வ்யாகுலமடையச் செய்து விட்டு நிர்பயமாக இங்கு தூங்கிக்கொண்டிருக்கிறன்.*

*ஏதாவது ஒரு நன்றியுள்ள மஹா புருஷன் இருப்பானுனல், அவனுடைய சூலத்தை அபஹரித்து வைத்துள்ள என்னிடமிருந்து அதனுல் அவனைக் கொன்றுவிட்டு என்னை விடுவித்துக் கொண்டு போவானு?*

*நீங்கள் ஏதாவது ஒரு உபகாரம் செய்ய விரும்பினீர்களானுல் என்னை இந்த துஷ்ட தானவனிடமிருந்து காப்பாற்றுங்கள். எனக்குத் தேவி பகவதி ஒரு வரம் கொடுத்திக்கிறுள். அதைச் சொல்லுகிறேன்-*

*அதாவது, ஏ புத்ரி! ஒரு புத்திமானும் விஷ்ணு பக்தனும்யௌவன பிராயம் உடையவனுமான ஒரு அரசன் இந்த வரப்போகிற த்ருதியைக்குள் வந்து உன்னை விவாஹம் செய்வான் என்று வரம் தந்திருக்கிறுள். பகவதி வாக்கு பலிக்காமல் போகாது. ஆகையால் நிமித்த மாத்ரமாக இருந்து இந்த விஷயத்தில் கொஞ்சம் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்றுள். ஆகையால் ஏ! அரசனே! விஷ்ணு பக்தியில் தத்பரனும் யௌவனமாக உள்ளவனும், புத்திமானும் ஆன உன்னைத் தேடி வந்திருக்கிறேன்.*

*அதனுல் தாங்கள் சீக்கிரமாகவே இந்த காரியசித்திக்காக பிரயாணம் மேற்கொள்ளுங்கள். அந்த துஷ்ட தானவனைக் கொன்று அந்த சுபலக்ஷணியான மாயகந்தினியை விடுவித்துக் கொண்டு வாருங்கள்.*

*ஏ, நரநாதனே! இந்த அப்பாவியான வித்யாதரப் பெண் உங்களை அடைந்தால் தான் உயிருடன் இருப்பாள்.*

தாங்கள் பார்வதிதேவி கொடுத்த வாக்குப் பிரகாரம் சற்று முயற்சி எடுத்துக்கொண்டு அந்த துஷ்டனைக் கொல்லுங்கள்.

இந்தவிதமாக நாரதர் கூறிய வசனங்களைக் கேட்ட அந்த அரசன் அமிர்ஜித் வித்யாதரக் கன்னிகையை மீட்க வெகு ஆவலாக எழுந்து வந்தான்.

அவன் சம்பாவதி நகருக்குச் செல்லும் உபாயத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

ஏ! கிரிநந்தினி, அப்பொழுது நாரதர் கூறினார். ஏ! அரசனே, பௌர்ணமி அன்று ஒரு கப்பலில் ஏறிக்கொண்டு கடலில் கொஞ்ச தூரம் சென்றால், ஒரு ரதத்தையும், அதன்மேல் கல்பகவ்ருக்ஷங்கள் அடர்ந்திருப்பதையும் பார்ப்பீர்கள். அதன் மேல் ஒரு அழகான கட்டிலில், தேவ கன்னிகையை ஒத்த ஒரு மாது வீணையை வைத்துக் கொண்டு, மதுரமான ஸ்வரத்துடன், பாட்டைப் பாடுவாள். நல்ல கர்மம் ஆனாலும் கெட்ட கர்மம், ஆனாலும் எதைச் செய்தாலும் ஈசுவரனின் பாசக்கயிற்றில் கட்டுப்பட்டு அதன் பலனை அவசியம் அனுபவிக்க வேண்டும் என்று பாடுவாள்.

இவ்விதம் பாடிவிட்டு அந்த தேவகன்னிகை, விருக்ஷம் - ரதம் கட்டில் இவைகளுடன் ஸமுத்திரத்தில் மறைந்து விடுவாள்.

ஏ, அரசனே! அதே நிமிஷத்தில் தாங்களும் யக்ஞவராஹ மூர்த்தியை த்யானித்துக் கொண்டு, ஸந்தேஹம் பயம் இரண்டையும் விலக்கி, கப்பலில் இருந்து மஹா ஸமுத்திரத்தில் குதித்து, அவளைப் பின் பற்றுங்கள்.

இப்படி அந்த கன்னிகைக்குப் பின்னால் பாதாளத்திற்குச் சென்று பரம மனோஹரமான சம்பகாவதி நகரைப் பார்ப்பீர்கள்.

இவ்வாறு கூறிவிட்டு ப்ரம்ம புத்ரரான நாரதர் அந்தர் த்யானமானார். அரசனும் முனி சொன்னபடியே கப்பலில்

போய் அவர் கூறியபடி எல்லாமும் இருக்கக்கண்டு ஸமுத்திரத்தில் நுழைந்து சம்பகாவதி நகரை அடைந்தான்.

அதற்குப் பிறகு அந்த வித்யாதரப் பெண்ணை, தன் கண்களால் நேரில் பார்த்தான். அவளைப் பார்த்ததும் அரசனின் மனதும் அறிவும், வாதவிவாதம் பண்ணத் தொடங்கியது. என்ன மூன்று உலகம் புகழும் ஸௌந்தர்ய லக்ஷ்மி இவள்தானோ? அல்லது என் கண்களுக்கு விருந்தளிக்கும் பாதாளத்தின் அதி தேவதையா?

அல்லது விஷ்ணு பகவான் ப்ரம்மாவிடத்தில் போட்டி போட்டுக்கொண்டு இந்த ஸௌந்தர்யவதியை ஸ்ருஷ்டித்தாரா? அல்லது அமாவாஸைக்கும் ராஹுவிற்கும் பயந்துகொண்டு, சந்திரனின் நிலவு ஸ்திரீரூபம் எடுத்துக்கொண்டு, இங்கு நிர்பயமாக இருக்குமென்று வந்து மறைந்திருக்கிறாளா?

இந்தவிதமாகக் கொஞ்ச நேரம் யோசித்துவிட்டு இதற்குப் பிறகு அந்த கன்னிகையையும் ஸுந்தர வடிவுடன், வாஸனையுள்ள துளஸிமாலை வக்ஷஸ்தலத்தில் ப்ரகாசிக்க, இரண்டு புஜங்களிலும், சங்கு, சக்ர முத்ரை தரித்துக்கொண்டு, அழகான பல்வரிசையுடன், ஹரிநாம அக்ஷரமாகிய நாமத்தை, கடித்து, ருசித்து, புஜித்துக் கொண்டு, பவானியிடத்தில் பக்தி என்னும் வித்திலிருந்து முளைத்த புருஷ ரூபமான வ்ருக்ஷத்தைத்தன் மனோரதமான பழங்களுடன் விளங்கக் கண்டு, பின் ஆடிக்கொண்டிருக்கும் ஊஞ்சல் பலகையிலிருந்து எழுந்து. லஜ்ஜையால், வணங்கிய தலையுடன் சரீர நடுக்கத்தை ஒருவாறு சமாளித்துக்கொண்டு, அரசரிடம் அக்கன்னிகை கூறுவாள்.

அழகான வடிவு உடையவரே! இந்த அபாக்யவதியின் சித்த வ்ருத்தியைத் துளைத்துக்கொண்டு, இங்கு வந்து நிற்கும் நீங்கள் யார்? தெரிந்துதான் இந்த யமராஜர் வீட்டிற்கு வந்தீர்களா?

*மஹா பாக்கியவானே! கடோரமானவனும் மற்றவர் சாஸ்திரங்களிஞல் வெல்ல முடியாதவனும், பரம துராசாரியும் ஆன கங்காள கேது எனும் தானவன் மூன்று உலகங்களேயும் வ்யாகுலப்படுத்தச் சென்றிருக்கிருன்.*

*அவன் திரும்பி வரும் வரையில் நீங்கள் இந்த பள்ளமான ஆயுத சாலேயில் மறைந்திருங்கள். பார்வதி தேவியிடம் பெற்ற வரத்தின் மஹிமையால் என் கன்னித் தன்மையை அவஞல் அழிக்க முடியவில்லே.*

*அதஞல் த்ருதீயை திதியான நாளே மறுநாள் என்னே விவாஹம் செய்துகொள்ள விரும்புகிருன். அந்த துராத்மா என் சாபத்திஞலேயே பாதி ஜீவனே இழந்திருக்கிருன்.*

*அதஞல் வாலிபரே! அவனுக்கு நீங்கள் கொஞ்சம்கூட பயப்பட வேண்டாம். தாங்கள் வந்த காரியமும் சீக்கிரமாகவே முடிந்து விடும்.*

*வித்யாதரி இவ்விதம் கூறவும், மஹா பாஹுவும் வீரனுமான அந்த அரசன் அஸுரன் வரவை எதிர்பார்த்து, ஆயுத சாலேயில் ஒளிந்து கொண்டிருந்தான்.*

*இதற்குப் பிறகு ஸந்த்யாஸமயத்தில் பயங்கர உருவையுடைய அந்த அஸுரன் கையில், மரணதேவனும் கண்டு பயப்படும் வகையில் த்ரிசூலத்தை கழற்றிக்கொண்டு, வந்ததும் வராததுமாக தானவன், ப்ரளய காலத்து, மேகத்தைப்போல, கம்பீரமாக கர்ஜித்துக்கொண்டு, மதத்தால் நிமிர்ந்த கண்களேச் சுற்றிக் கொண்டு, வித்யாதரியிடம் கூறுவான்.*

*ஹே! ஸுந்தரி, இந்த திவ்யரத்ஞபரணங்களே வாங்கிக்கொள்ள நாளே மறுநாள் பாணிக்கிரகணம் ஆனவுடன், உன் கன்யாவ்ரதம் அழித்துவிடும், வர்ணனேக்கு அதீதமானவளே! நாளேகாலே விடிந்த உடனேயே, பத்தாயிரம் தாதிகளே உன்னிடம் அனுப்புகிறேன். நூற்றுக்கணக்கான அழகான அஸுரப்பெண்கள், தெய்வப்பெண்கள்,*

*கந்தர்வகுமாரிகள், கின்னரகுமாரிகள், மானிடப்பெண்கள், யக்ஷிணிகள், நாககன்னிகைகளும், இது தவிர இங்குள்ள எண்ணூறு ராக்ஷஸப்பெண்கள், நூறு அப்ஸரஸ்கள், இவர்கள் வேலைக்காரிகளாக உனக்குப் பணிபுரிவார்கள். என்னை மணம் புரிந்து கொண்டாயானால், இந்திரன் முதலிய திக்பாலர்கள் மனையில் என்ன ஸம்பத்துண்டோ, அவ்வளவிற்கும் நீ யஜமானியாவாய்.*

*என்னை விவாஹம் செய்து கொண்டாயானால், திவ்ய போகங்களை அனுபவிப்பாய். ஆஹா! அந்த தினம் எப்போது வரும்!*

*நான் உன் அங்கஸங்கத்தின் தாரையில் முழுகி பரமானந்த போகத்தை எப்பொழுது அனுபவிப்பேன்? நாளைமறு தினம் இன்றே வந்துவிடாதோ?*

*என் ஹ்ருதயத்தில் எத்தனை நாட்களாக என் மனோரதத்தையடக்கி வைத்துக் கொண்டிருக்கிறேனோ, அவை நாளன்றைக்கு உன் ஸங்கமத்தால் செயல்படும்.*

*ஏ, மான்விழியாளே, இந்த்ராதி தேவதைகளை யுத்தத்தில் ஜயித்து, த்ரிலோகங்களில் உள்ள ஸமஸ்த ஐச்வர்யங்களுக்கும் உன்னை யஜமானி ஆக்குவேன்.*

*இந்த விதமாக ப்ரலாபித்துவிட்டு, நரமாம்ஸ போஜனமுண்டதால் ஸந்தோஷமுடையவனாகத் தன் த்ரிசூலத்தை, மாரில் சார்த்திக் கொண்டு தூங்க ஆரம்பித்தான்.*

*அப்பொழுது அத்த வித்யாதரகுமாரி, பார்வதியிடம் பெற்ற வரத்தை மனதில் நினைத்துக்கொண்டு, மதத்துடன் சங்கையில்லாமல் தூங்கும் அந்த தானவனைக் கண்டு தன் எதிர் காலத்தில் விஷ்ணு பக்தியின் மூலமாகத் தன்னை ரக்ஷிக்க இருக்கும், நரவரனை ஏ ப்ராணநாதா, என்ற ஸம்போதநத்துடன் அழைத்து அந்த தானவனின் நெஞ்சில் இருக்கும் த்ரிசூலத்தை எடுத்து அவர் கையில் கொடுத்து இவனைச் சீக்கிரமாகக் கொல்லுங்கள் என்றாள் அப்பொழுது*

*பாலஸூர்யனைப் போல் ப்ரகாசிக்கும் மஹாபாஹுவான ராஜா அமித்ரஜித் அவள் கையிலிருந்த த்ரிசூலத்தை வாங்கிக் கொண்டு அவளுக்கு ஆறுதல் அளித்து மிக்க ஸந்தோஷத்துடன் மெச்சிக்கத் தொடங்கினான்.*

*பிறகு அந்த அரசன் நிர்பயமாய் அந்த தானவனை இடது காலால் ஒரு உதைவிட்டு விட்டு, அவன் ஹ்ருதயத்தில் ஜகத்ரக்ஷகரான பகவான் சக்ரதரர் ஹரியை ஸ்மரித்துக் கொண்டு கூறினான். ஹே துஷ்டா! கன்னிகையை அழிக்கவிரும்பும் தானவனே! எழுந்திரு, என்கூட யுத்தம் செய், தூங்கும் சத்ருவை நான் கொல்ல மாட்டேன்.*

*இதைக்கேட்டுத் திடுக்கிட்டெழுந்த தானவன், ப்ரியே! அந்த த்ரிசூலத்தைக் கொடு' என்று அடிக்கடி கேட்கக் தொடங்கினான்.*

*அய்யோ! யாரிவன் மரணத்தின் வீட்டிற்கு வந்திருகக்கிறானே, யமராஜன் இன்று யாரிடம் கோபமடைந்திருக்கிறார்? இன்று யாருடைய ஆயுள் செல்லாக்காசாக ஆகப்போகிறது? யாரிங்கே வந்திருக்கிறார்கள்?*

*என் இந்தத் திரண்ட புஜத்தின் தினவைச் சொறிந்துக்கொள்ளக் கூட இவன் லாயக்கில்லை. இவன் ஒரு துச்சமனிதன்.*

*ஹே! ஸுந்தரி! த்ரிசூலத்தினால் கூட என்ன ப்ரயோஜனம்? நீ கொஞ்சம்கூடப் பயப்படாதே. என்பதை இப்பொழுது காண்பாய். இப்பொழுது நான் இவனைச் சாப்பிட்டு விடுகிறேன். என்னிடம் பயந்துகொண்டு காலன் இவனை எனக்காக, இங்கே அனுப்பியிருக்கினான்.*

*இப்படிக் கூறிக்கொண்டு, அந்த தானவன் பாறையைப் போன்ற கடினமான அரசனுடைய மார்பில் மிகுந்த வேகத்துடன் ஒரு குத்துவிட்டான். ஆனால் பகவான் சக்ரபாணி, அரசனைப் பாதுகாத்துக்கொண்டு இருப்பதால், அரசனுக்கு நோவே ஏற்படவில்லை. ஆனால் அரசனுடைய*

கடினமான நெஞ்சில் குத்தியதால், அஸுரனுக்குத்தான் கை வலித்தது.

அப்பொழுது அரசன் மிகவும் கோபித்து, அவன் கன்னத்தில் ஒரு அறை விட்டான். அந்த அறை பொறுக்காமல் அந்த மகாபலசாலியானவன் தலை சுற்றி பூமியில் விழுந்தான். பிறகு மெதுவாக எழுந்து, தைர்யத்துடன் கூறினான். அடே! நீ மனிதனல்ல. நீ நர ரூபம் எடுத்து வந்த நாராயணன்.

தானவர்களுக்கு முடிவு ஏற்பட்டுவிட்டது. தருணம் பார்த்து என்னைக் கொல்ல வந்திருக்கிறாய்.

ஹே! மதுரிபோ! நீ உன்னை பலவான் என்று எண்ணி கொண்டிருக்கிறாய் ஆனால், என் த்ரிசூலத்தைக் கீழே வைத்துவிடு. உன் சொந்த ஆயுதத்தை எடுத்துக்கொண்டு என்னுடன் போர் புரிவாய்.

நீ கபடமாகவே மஹாபலசாலியான கைடபர் முதலியவர்களைத் தந்திரமாகக் கொன்றாய். பலத்தினால் கொல்லவில்லை. நீயே கபட ப்ராம்மணனான ப்ராம்மண வேஷத்தை எடுத்துக்கொண்டு பலியை பாதாளத்தில் தள்ளிவிட்டாய். நரசிம்மரூபம் எடுத்துக் கொண்டு ஹிரண்யகசிபுவைக் கொன்றாய்.

நீயே ஜடாதாரியான தபஸ்வி வேஷம் பூண்டு, ராவணனை நாசம் செய்தாய். பிறகு கோபாலனின் வேஷம் தரித்து கம்ஸன் முதலியவர்களைக் கொன்றாய்.

நீ தான் மோகினி வேஷம் தரித்து அசுரர்களை ஏமாற்றி, அம்ருதத்தைக் களவாடினாய். பின்ஜலஜந்துவாகி சந்தன் முதலிய அனேக அசுரர்களைக் கொன்றாய்.

ஸர்வமர்மங்களும் அறிந்த ஸாதகன் நீ. மாயாவிகளின் தலைவன் நீ. அதனால் நீ என் த்ரிசூலத்தைக் கீழே வைத்துவிடு. பின் உன்னிடம் கொஞ்சம்கூடப் பயப்படமாட்டேன். ஆனால் பயந்தவனைப்போல் இப்படிப்

பேசிக்கொண்டு இருப்பதில் அர்த்தமில்லை. த்ரிசூலத்தை விடமாட்டாயானால் நானும் உன்னை யுத்தத்தில் ஜயிக்க முடியாது.

சரீரம் எடுத்தவர்களுக்கு, இன்றில்லாவிட்டால் நாளை மரணம் நிச்சயம். பலத்தினாலும் சரி, தந்திரத்தினாலும் சரி, உன் பெண் சுத்த ஸதி. இவளை நான் கெடுக்கவில்லை. இவளை ஸாக்ஷாத் லக்ஷ்மி என்றே நீ நினைத்துக் கொள். இவளை நான் உனக்கென்றே பாதுகாப்பாக வைத்திருக்கிறேன்.

இவ்விதம் கூறிவிட்டு அந்தத் தானவன் பர்வதங்களை நடுங்கச் செய்யும் தன் புஜத்தினால் நிஷ்டூரத்தடன் அரசனின் மார்பில் அடித்தான்

மகானுபாவான அரசனும் ரணக்ஷேத்ரத்தில் அவன் கடினமான அடியை ஸஹித்துகொண்டு, கையில் த்ரிசூலத்தை எடுத்து அவனுடைய மார்பைக் குறிவைத்து அடித்த ஒரு அடியினாலேயே தானவனுக்கு ஒரு நிமிஷத்தில் பிராணன் போயிற்று. இந்தவிதம் அரசன் அமிர்தஜித் தேவதைகளின் இதயத்தை நடுங்கச் செய்த கங்காளகேதுவை கொன்றுவிட்டு, இவ்வளவையும் பார்த்துக் கொண்டு மெய்சிலிர்க்க நிற்கும் வித்யாதரப் பெண்ணைப் பார்த்து, அழகிய பெண்ணே, மகரிஷிநாதரின் சொற்படி நீ விரும்பிய காரியத்தைச் செய்து முடித்தாய். ஏ, நன்றியுடையவளே! நான் வேறு என்ன செய்யவேண்டும்? என்பதையும் கூறு.

ராஜாவின் பௌருஷமான வார்த்தையைக் கேட்டுவிட்டு மலயகந்தினி கூறுவாள். ஏ, உதாரமதியே! வீரனே! தன் உயிரை அடகுவைத்து, இந்தக் குற்ற மற்றக் கன்னிகையைக் காப்பாற்றினீர்.

இப்பொழுது ஏன் என்னிடம் கேட்கிறீர்கள்? அந்தக் கன்னிகை இவ்வாறு கூறிக்கொண்டிருக்கும் ஸமயம் சுயேச்சயாய் ஸஞ்சரிக்கும் நாரதமுனி அனாயாஸமாக அங்கு வந்தார்.

அவரைக் கண்டதும் அரசனும், குமாரியும் வணங்கினார்கள். அப்பொழுது நாரதர் அவ்விருவரையும் ஆசீர்வதித்து பாணிக்கிரஹண விதிப்படி, இருவரையும் சேர்த்து வைத்தார்.

பிறகு நாரதர் சொன்னபடி மங்கள விதிகளை அனுஷ்டித்து, அங்கிருந்து கிளம்பி வந்தார். பிறகு மலயகந்தினியுடன் அரசன் அமிர்ஜித் வாராணசிக்கு வந்து, ஊர்ஜனங்கள் மங்களாசரணம் செய்து வரவழைத்தார்கள்.

எந்த ஒரு நகரத்தை தரிசனம் செய்தவுடனேயே, மனிதன் ஒருபோதும் நகரத்துக்குச் செல்லமாட்டானோ, உத்தமமான கதியை அடைவானோ, அப்பேற்பட்ட நகரத்தில் ப்ரவேசித்தார்கள்.

எத்தகைய வல்யத்துக்குத் தாயான வாரணஸியில் இந்த்ராதி தேவர்களுக்குக்கூட எளிதில் ப்ரவேசிக்க முடியாததோ, அந்த ஊரில் அமித்ரஜித் ப்ரவேசித்தார்.

மூன்று உலகங்களாலும் விரும்பப்படும் காசிபுரியை நினைத்த மாத்திரத்திலேயே, மனிதன் பாபசக்தியில் அழுந்த மாட்டான். எந்த நகரத்தில் ப்ரவேசிக்கிறவன் மகாபாதங்களில் ஒரு பொழுதும் ப்ரவேசிக்கமாட்டானோ, அதே காசியில் ராஜா, அமித்ரஜித் ப்ரவேசித்தான்.

இந்த வித்யாதர குமாரியும் தூர இருந்தே காசியைப் பார்த்து விட்டு, பாதாளத்தையும், ஸ்வர்க்கத்தையும் இகழ்ச்சியாகக் கூறினான். பரமானந்தத்தை அளிக்கும் கோவில்கள் சூழ்ந்த காசீபுரியைத் தரிசித்தவுடன், அவள் அமித்ரஜித்தை பதியாக அடைந்ததைவிட அதிகம் ஸந்தோஷமடைந்தாள்.

இந்த புத்தியையும். காசிபுரியையும் அடைந்த மனஸ்வினி தன்னை தன்யையாக எண்ணி, பரமானந்தத்தை அடைந்தான். அரசன் அமித்ரஜித்தும், மலயகந்தினியை பத்னியாக அடைந்து, தர்ம ப்ராதானமான காரியங்களைச் செய்து கொண்டு, ஸர்வவோத்தம ஸுகத்தை அடைந்தான்.

ஒரு ஸமயம் பரம பதிவ்ரதையான ராணி புத்திரப் பேற்றுக்காக ஆசைப்பட்டு ஏகாந்தத்தில் அசாதாரண விஷ்ணு பக்தரான தன் பதியிடம் கூறினாள்- பூபதியே, தாங்கள் உத்தரவு கொடுத்தால் புத்ரபலனைப் பெறுவதற்காக. அபீஷ்டத்ருதியை என்னும் மகா வ்ரதத்தை அனுஷ்டானம் செய்யலாமா, என்று கேட்டாள்.

அரசன் கூறினான் - ஹே, தேவி, அபீஷ்டத்ருதியை என்றால் என்ன? அதற்கு என்ன தேவதையை, பூஜிக்க வேண்டும்? அதன் விதி என்ன? பலன் என்ன?

ஒரு ஸ்திரீபதியின் உத்தரவில்லாமல் விரத அனுஷ்டானம் பண்ணினால் அவள் இருக்கும்போதும், துக்கம் அடைவான், சரீரம் போனபோதும் நரகத்தை அடைவாள். அரசன் இவ்விதம் கூறியதும். பதிவ்ரதையான அந்த ராணி, அந்த வ்ரதம் எப்படிச் செய்ய வேண்டும் என்பதை ரகஸ்யமாக கூறினாள்.

இந்தவிதமாக ஸ்காந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான 'வீரேஸ்வரவைபவம்' என்னும் எண்பத்தி இரண்டாம் அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 83

ராணி கூறினுள்- மஹாராஜா! கவனமாகக் கேளுங்கள். நான் இந்த வ்ரதத்தின் முறையையும், பலனேயும் இஷ்ட தேவதையையும் பற்றி விவரமாகக் கூறுகிறேன்.

அந்தக் காலத்தில் ப்ரம்மபுத்ரர் நாதமுனி, புத்ரனேப் பெற விரும்பி குபேரன் மனேவி ஸ்ரீமுகிதேவியிடம் இந்த வ்ரதத்தை எடுத்துக் கூறியிருந்தார்.

பிறகு அந்த தேவி, வ்ரதம் இருந்தாள். அவளுக்கு நளகூபரன் என்ற புத்ரன் பிறந்தான். பின்னும் அனேகஸ்திரீகள் இந்த வ்ரதத்தை அனுஷ்டித்தார்கள். இந்த வ்ரதத்தின் ப்ரபாவத்தால் அவர்களும் புத்ரலாபத்தை அடைந்தார்கள்.

ஹே! எல்லாம் அறிந்தவரே, இந்த வ்ரதத்தைக் குழந்தைக்கு முலேப்பால் கொடுத்துக் கொண்டிருக்கும் கௌரீதேவியையே தேவதையாகப் பாவித்து, அனுஷ்டிக்க வேண்டும்.

மார்கழி மாதத்து சுக்லத்ருதியை யன்று கலசத்தில் அரிசியை நிரப்பி, வைக்க வேண்டும். அந்தக் கலசம் செம்பால் ஆனதாக வேண்டும். அந்தக் கலசத்தின் மேல் கிழிக்காத முழுவஸ்த்ரத்தையும் சாத்த வேண்டும். அது மஞ்சள் நிறமாகவும் மிகவும் மெல்லியதாகவுமம், புத்தம் புதியதாகவும் இருக்க வேண்டும்.

அதன்மேல் அன்று மலர்ந்த கமல புஷ்பத்தை வைத்து, அதன் மத்தியில்... ரூபாய் எடையுள்ள தங்கத்தில் ப்ரம்மாவின் மூர்த்தி செதுக்கிய தகட்டை வைக்க வேண்டும்.

ரத்ன, பட்டு வஸ்த்ரம் நாளுவிதமான ரமணீயமான புஷ்பம், ஆரஞ்சு முதலிய பழங்கள் கற்பூரம், கஸ்தூரி, குங்குமப்பூ இவைகள் சேர்ந்த வாஸனே நிறைந்த சந்தனம், நாளுவித சித்ரான்னங்கள்.

*அகர்பத்தி, தூபம் இவைகளை ஸமர்பித்து புஷ்பக் குவியலுக்கு மத்தியில் ப்ரம்மாவை வைத்து பூஜை செய்ய வேண்டும். இரண்டு கண்விழித்து, மிக உன்னதமாக உற்சவம் கொண்டாட வேண்டும்.*

*பிறகு மந்திரம் அறிந்த ப்ராம்மணன், கலசத்தில் நெய், மது இவைகளின் முக்கியமானதாக தானுகவே மலர்ந்த ஆயிரம் கமல புஷ்பங்களை ஜாதவேதஸ் முதலிய மந்தரங்களைச் சொல்லி ஒருகையகலம் உள்ள ஹோமகுண்டத்தில் அர்சனை செய்ய வேண்டும்.*

*ஆசார்யருக்குப் புதிதாகக் கன்று போட்ட ஸாதுவான கபிலப் பசுவை அலங்காரம் செய்து தானம் செய்ய வேண்டும். கர்த்தா பத்னியுடன் உபவாஸம் இருந்து, மறுநாள் சதுர்த்தியன்று காலையில் ஸ்னனம் செய்து புது வஸ்தரம் உடுத்தி, மிக ஆனந்தத்துடன் மரியாதையாக ஆசாரியருக்கு, வஸ்த்ரம், மாலை, பூஷணம், தக்ஷிணை இவைகளைக் கொடுத்து பூஜித்து எல்லா பூஜா த்ரவ்யங்களுடன், அந்த மூர்த்தியைப் பின் வரும் மந்திரத்துடன் ஆசாரியருக்கு அளிக்க வேண்டும்.*

*உலகம் அறிந்தவனே! நானுகாரணகார்ய ரூபமானவளே! விச்வரூபியே! தேவி! உனக்கு வந்தனம். நீ இந்த வரத்தினுல் ஸந்தோஷமடைந்து, என் வம்சம் விருத்தியடைய புத்திரனைக் கொடு. இப்படிக் கூறி தானம் செய்து விட்டு 1000 ப்ராம்மணர்களுக்குத் திருப்தியுடன் உணவு அளிக்க வேண்டும்.*

*அதுபோக மீதியிருக்கும் அன்னத்தை வ்ரதம் இருப்பவர்கள் பூஜிக்க வேண்டும். அரசனே, இந்த வ்ரதத்தை நான் தங்களுடன் சேர்ந்து அனுஷ்டிக்க விரும்புகிறேன்,*

*அபீஷ்ட பலன் கிடைக்குமாறு என்னுடைய இந்தப் பரம ப்ரியமான காரியத்தை உடனிருந்து நடத்திவையுங்கள்.*

*ஹே, முனியே அந்த சிறந்த அரசன் சந்தோஷத்தோடு இந்த விரதத்தை மனேவியுடன் அனுஷ்டித்தான். அதனுல் ராணி கர்ப்பம் தரித்தாள்.*

*கௌரி தேவியும் ராணியின் பக்தியால் மிக்க மகிழ்ச்சி அடைந்தாள். பிறகு அந்த கர்ப்பவதியான ராணி, தேவியை மனமுருகி ப்ரார்த்தித்தாள்.*

*ஹே மகாமாயையே! எனக்கு ஸாக்ஷாத் விஷ்ணு அம்சமான புதல்வனேக் கொடுத்தாய். குழந்தை பிறந்தவுடனேயே, ஸவர்க்த்துக்கு ஒருதரம் சென்ற பிறகு இங்கு திரும்பி வரட்டும். ஸதாசிவபக்தி தடையில்லாமல் செய்து கொண்டிருக்கட்டும், எல்லா உலகங்களிலும் ப்ரஸித்தி உள்ளவனுக வளரட்டும்.*

*தாய்ப்பால் இல்லாமலேயே ஒரு நிமிஷத்தில்16 வயது பிள்ளேயாக வளரட்டும். ஹே தேவி! இது மாதிரியான ஒரு பிள்ளேயைக் கொடுக்க எனக்கு க்ருபை செய்யடி அம்மா என்று ப்ரார்த்தித்தாள்.*

*ராணியின் பக்தியினுல் ஸந்தோஷமடைடைந்த ஜகன்மாதா அப்படியே ஆகுக என்று வரமளித்தாள். பிறகு கால க்ரமத்தில், 'மூல' நக்ஷத்திரத்தில் ஒரு புதல்வன் பிறந்தான்.*

*அப்பொழுது நலனே விரும்பும் மந்திரி பிரதானிகள் ப்ரஸவ அறைக்கு வந்து கூறினுர்கள். ஹே! தேவி, தாங்கள் அரசனே உயிருடன் இருக்க விரும்பினுல், இந்த கெட்ட நக்ஷத்ரத்தில் பிள்ளேயைத் தியாகம் செய்யுங்கள்.*

*பதிவ்ரதையும், நீதி, நிபுணத்வம் அறிந்தவளும்...... மந்திரி ப்ராதனிகள் வார்த்தையைக்கேட்டு.......பிறந்த அந்த பிள்ளேயைத் தியாகம் செய்து விட்டாள். ராணி செவிலித்தாயை அழைத்துக் கூறினுள்.*

*ஹே! தாதியே, பஞ்சமுத்ரை எனும் பெயருடைய மகாபீட ஸ்தானம் ஒன்றுள்ளது. அங்கு விகடா எனப்*

*பெயர்பெற்ற ஒரு மாத்ருகா தேவி இருக்கிருள். அவளுடைய முன்னுல் இந்த குழந்தையை கிடத்தி, இவ்விதம் கூறவேண்டும்.*

*அதாவது கௌரி தேவியால் அளிக்கப்பட்ட, இந்தக் குழந்தையை, அரசனுடைய அன்பையே பிரதானமாகக் கருதும், ராணி, மந்திரிகளுடைய சொல்லால் புத்ரனை தியாகம் செய்ய வேண்டும் என்று கூறியதால் த்யாகம் செய்திருக்கிறேன்.*

*இதைத் தங்களிடம் கூறச் சொன்,ள். பிறகு அந்த தாதி, ராணி கூறிய, வார்த்தைகளை அப்படியே 'விகடா" தேவிக்கு முன்னுல் ஸமர்பித்து, அழகான சந்த்ரபிம்பம் போன்ற குழந்தையை தேவியின் எதிரில் கிடத்திவிட்டு, திரும்பிஞள்.*

*பிறகு விகடாதேவி, யோகினிகளைக் கூப்பிட்டு, கூறிஞள் இந்தக் குழந்தையை மாத்ருகா, தேவியிடம் உடனே எடுத்துச் செல்லுங்கள். அவர்களின் அனுமதி பெற்று குழந்தையை ஸர்வ ஜாக்கிரதையாக காப்பாற்ற முயற்சி செய்யுங்கள்.*

*இந்த... யோகினிகள் விகடா தேவியின் வார்த்தையைக் கேட்டு, குழந்தையை..... முதலில் மாத்ருகா தேவியிருக்குடத்திற்கு ஆகாய மார்க்கமாக நிமிஷத்தில் கொண்டு போஞர்கள்.*

*யோகினிகள் அந்த மாத்ருகா தேவியின் யாவரையும் வணங்கி விட்டு ஸூர்யன் போன்ற தேஜஸ் உடைய பாலகனை, அவர்களுக்கு முன்பாகக் கிடத்திஞர்கள். விகடா தேவியின் ஸந்தோஷத்தையும் கூறிஞர்கள்.*

*அப்பொழுது ப்ராம்மா, வைஷ்ணவி, ரௌத்ரி, வாராகி, நாரஸிம்ஹி, கௌமாரி... சாமுண்டி, சண்டிகா முதலிய மாத்ருகா தேவியர் விகடாதேவி அனுப்பிய அந்த அழகான குழந்தையைப் பார்த்து, அதனிடம் ஒரே சமயம் எல்லாருமாகக் கேட்டார்கள். உனது மாதா, பிதா, யார்? சொல், என்ருர்கள்?*

*மாத்ருகைகள் இவ்விதம் கேட்டதும் அந்தக் குழந்தை ஒன்றும் கூறவில்லை. அப்பொழுது மாத்ருகாதேவிமார்கள், யோகினி கூட்டத்தைப் பார்த்துக் கூறினர்.*

*உத்தமோத்தம லக்ஷணத்துடன் விளங்கும் இந்த பாலகன் அரசனாக யோக்யதை உள்ளவனவன். அதனால் ஹே, யோகினிகளே! இவனை உடனேயே நினைத்தபடி வரம் அளிக்குமம் பஞ்சமுத்ரா தேவியிடம் எடுத்துச் செல்லுங்கள். அவளை ஸேவித்தவர்களுக்கு, மோக்ஷ லக்ஷ்மி அருகிலேயே இருக்கிறாள்.*

*ஸாரூபத்தை நல்கும் காசியில் அடிக்கு ஒரு தீர்த்தமும் லிங்கமும் புண்யம் நல்கக் காத்துக்கொண்டிருந்தன. ஆனாலும் பஞ்சமுத்ரா தேவியின் பீடம் ஸமஸ்தஸித்திகளையும் விசேஷ ரூபத்தில் அளிக்கவல்லது.*

*பிறந்த உடனேயே 16 வயது வளர்த்தியுள்ள இந்த பிள்ளைக்கு பரம ஸித்திகள் விச்வேச்வரருடைய பரம அனுக்ரஹத்தினால் அந்த பீடத்தை ஸேவிப்பதால் உடனேயே கிட்டும்.*

*யோகினிகள், இந்த விதமாக மாத்ருதேவிகளால் ஆசீர்வதிக்கப்பட்ட அந்த பாலகனை அந்த மாத்ருகைகளின் வசனப்படி பஞ்ச முத்ர பீடத்திற்கு கொண்டு சேர்த்தார்கள்.*

*ஸ்வர்க்கலோகத்திலிருந்து திரும்பி வந்த அந்தப்பிள்ளை, ஆனந்த வனத்தில் உள்ள அந்த மகா பீடத்தை அடைந்து, அங்கு கடுமையான தவம் செய்யத் தொடங்கினான்.*

*நிச்சல இந்த்ரியங்களுடன், திடசித்துடன், தீவிரமாக தபஸ் செய்யும் பாலகனுடைய தபஸ்ஸினால் களி கூர்ந்த சங்கர பகவான், அவன் முன்னால் லிங்க ரூபத்தில் ஆவிர்பவித்தார். பிறகு கூறினார்.*

*ஹே, ராஜகுமாரனே, நான் சந்தோஷமடைந்தேன். வரம் கேட்பாய், என்றார்.*

*ஸ்கந்தர் கூறினூர் - பரம அனுக்ரஹத்துடன் பாதாளத்தளத்தைப் பெயர்த்துக் கொண்டு,... ஜோதிர்மயமாக வசனங்களை பேசும் அந்த லிங்கத்தை எதிரிலேயே பார்த்து, அந்த அரசகுமாரன், சந்தோஷித்து, தண்டத்தைப் போல் பூமியில் விழுந்து நமஸ்கரித்தான்.*

*போனஜன்ம அப்யாஸ வசத்தால் மறந்து போகாமல் இருக்கிற ருத்ர... மகாதேவரை இனிய ராகத்துடன் துதிக்கத் தொடங்கினூன்.*

*அப்பொழுது தேவாதி தேவா விருஷபத்வஜர் சங்கரர் மிகவும் சந்தோஷித்து அவன் தபஸைக் கண்டு, அதிசயித்துப் பின்வருமாறு கூறினூர்-*

*பாலகா! நீ வரம் கேள், நீ இந்தப் பாலக சரீரத்துடன், கடுமையான தவத்தை அனுஷ்டித்திருக்கிறுய். உன் தேகத்தையும் மிகவும் வருத்திக்கொண்டிருக்கிறுய்.*

*அதனூல் என் மனதை வசீகரித்திருக்கிறுய், என்று பரமசிவன் அடிக்கடி கூறவே, மயிர்கூச் செறிந்த சரீரத்துடன் அந்த ராஜ புத்ரன் வரதானம் கேட்கத் தொடங்கினூன்.*

*குமாரன் கூறினூன் - ஹேதேவாதிதேவ, மகாதேவ, எனக்கு வரம் கொடுக்கத் தீர்மானிப்பீரானூல், நீங்கள் ஸம்ஸாரத்தின் தாபத்தை நாசம் செய்து கொண்டு இங்கேயே இருங்கள்.*

*ஹே சம்போ! தாங்கள் இந்த லிங்கத்தில் எப்பொழுதும் இருந்து கொண்டு பக்தர்களுக்கு அவர்களிடமிருந்து மந்திரமோ, தபமோ ஒன்றும் எதிர்பாராமல் வரம் கொடுத்துக் கொண்டிருங்கள்.*

*ஹே விபோ! இங்கு தர்சனமும், ஸ்பர்சனமும் வணக்கமும் ஒருவன் செய்வானூனூல் அவனுக்கு உத்தமஸித்தியை அருளுங்கள். ஒருவன் மனதாலும், வாக்காலும், க்ரியையாலும் இந்த லிங்கத்துக்கு பக்தன் ஆவானூனூல் அவனைத் தாங்கள் எப்பொழுதும் அனுக்ரஹிக்க வேண்டும்.*

நான் இந்த வரத்தைத்தான் உங்களிடம் வேண்டுகிறேன். இந்த விதமான அவனது வரத்தைக் கேட்டு, லிங்கரூபமான, பகவான் கூறினுர்.

ஹே வீரா, நீ வைஷ்ணவ புத்திரன், நீ நினைத்தபடி எல்லாமும் நடக்கும். என் பக்தனுன குழந்தையே, விஷ்ணு பக்தனுன அரசன் அமிர்ஜித்துக்கு நீ விஷ்ணு அம்சமாகப் பிறந்திருக்கிருய். அதனுல் ஹே வீரா, உன் பெயரால் இது வீரேஸ்வரலிங்கம் என்று விளங்கட்டும்.

காசியில் இந்த லிங்கம் பக்தர்களுக்கு, மனே அபீஷ்டத்தை நிறைவேற்றி வைத்துக் கொண்டு விளங்கட்டும்.

இன்றிலிருந்து என்றும் நான் இந்த லிங்கத்தில், உறைபவனுகவும், ஆச்ரித ஜனங்களுக்கு பரமஸித்தியை அளித்துக் கொண்டு, விளங்குபவனுகவும், இருப்பேன் இதில் ஸந்தேஹமே வேண்டாம். ஆனுல் கலியுகத்தில் என் மகிமையை ஒருவரும் அறிய மாட்டார்கள்.

அரிதில் யாராவது அவனுக்கு பரமஸித்திகளும் லாபமாகக் கிடைக்கும். இங்கு தபம், ஜபம், ஹோமம், தானம், ஸ்துதி, பூஜை, ஜீர்ணேத்தாரணம் இவைகளைச் செய்தால் அதிக பலன் உண்டாகும்.

ஒரு அரசராலும் அடைதற்கரிய பெரிய ராஜ்யத்தைப் பெற்று அனேக போகங்களை அனுபவித்துக் கடைசியில் மகத்தான ஸித்தியை அடைவாய். உலகம் முழுவதிலம் வாரணுசிபுரியே மிக மகத்தானது.

மேலும் அதில் கங்கையில் அஸிநதியின் சங்கமம் மிகவும் புண்யமானது. அதிலும் புண்யமானது ஹயக்ரீவ தீர்த்தம்.

பகவான் அங்கு ஹயக்ரீவ உருவத்துடன் இருந்து பக்தர்களுடைய மனேரதங்களைப் பூர்த்தி செய்கிருர். கஜதீர்த்தம் ஹயக்ரீவ தீர்த்தத்திலும் விசேஷமானது.

அங்கு ஸ்னனம் செய்வதால் கஜத்தை தானம் செய்த பலன் கிடைக்கும், கஜதீர்த்தத்திலும் அதிக புண்யம் வாய்ந்தது கோகா வராக தீர்த்தம்.

அங்கு கோகா வராக மூர்த்தியைப் பூஜை செய்தால் மனிதன் மீண்டும் ஜன்மம் எடுக்க மாட்டான். கோகா வராகத்தைவிட திலீபேஸ்வரருக்கு ஸமீபத்தில் இருக்கும் திலீப தீர்த்தம் மிகவும் ச்ரேஷ்டமானது. அது விரைவில் மகாபாபங்களேயும் நாசம் செய்யும். அதன் பிறகு ஸாகரதீர்த்தம் இருக்கிறது. அதன் பக்கத்தில் ஸகரேஸ்வரர் இருக்கிறுர்.

அங்கு ஸ்னனம் செய்வதால் மனிதன் துக்க ஸாகரத்தில் முழுகமாட்டான். ஸகர தீர்த்தத்தைவிட ஸப்த ஸாகர தீர்த்தம் மிகவும் சுபத்தைக் கொடுக்கக் கூடியது.

அங்கு ஸ்னனம் செய்வதால் ஸப்த ஸாகரங்களிலும் ஸ்னனம் செய்த பலன் கிடைக்கிறது. இந்த ஸப்த ஸாகரத்தைவிட மகோததிதீர்த்தம் ப்ரஸித்தமானது.

அங்கு ஒரு தடவை ஸ்னனம் செய்தாலும் போதும். அவன் தனது, பாப மஹோததியை பஸ்பமாக்கி விடுகிறுன். கபிலேச்வரர் பக்கத்தில் செர தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னனம் செய்வதால் தங்கம் முதலிய திரவ்யங்களேத் திருடின பாபம் க்ஷயமாகிறது. கேதாரேஸ்வரர் பக்கத்தில் ஹம்ஸதீர்த்தமிருக்கிறது. அது இதைவிட அதிகம் பூஜைக்கு உகந்தது.

அங்கு நானே ஹம்ஸரூபியாக இருந்கொண்டு தேஹம் தரித்தவர்களே ப்ரம்மபதத்திற்கு அனுப்பிக் கொண்டு இருக்கிறேன். அதன் பிறகு த்ரிபுவன கேசவதீர்த்தமிருக்கிறது. அது அத்யந்த புண்யப்ரதமானது. அங்கு ஸ்னனம் செய்தவர்கள் பிறகு ம்ருத்யு லோகத்தில் ப்ரவேசிக்க மாட்டார்கள்.

அதையும் விட அதிக பலன் வாய்ந்தது கோவ்யாக்ரேஸ்வர தீர்த்தம். அங்கு பசுவும் புலியும் தம்

இயற்கையான விரோதத்தை மறந்து ஸித்தி அடைந்தன.

ஹே வீரா, மாந்தாதா தீர்த்தம் அதைவிட ச்ரேஷ்டமானது. அங்கு ராஜா மாந்தாதாசக்ரவர்த்தி பதவி அடைந்தார்.

பிறகு முகுந்த தீர்த்தமிருக்கிறது. அது இதைவிட புண்ணியம் அளிக்க வல்லது. அங்கு ஸ்னானம் செய்தால் சத்ருக்களால் தோற்கடிக்கப் படமாட்டான்.

பரமகல்யாண ஸாதனமான புது தீர்த்தம் இதைவிட மேலானது. அங்கு ப்ருத்வீச்வரர்லிங்கத்தை தரிசனம் செய்வதினால் ஒருவன் பூமிக்குப் பதியாகிறான்.

அதன் பின் மேலான ஸித்தியைக் கொடுக்கக் கூடிய பரசுராம தீர்தம் இருக்கிறது. அங்கு ஜமதக்னி புத்ரன் க்ஷத்ரியர்களைக் கொன்ற பாபத்திலிருந்து விடுதலை அடைகிறான்.

அங்கு தெரிந்தோ, தெரியாமலோ ஸ்னானம் செய்தால் க்ஷத்ரியவத பாபம் விடுபடுகிறது. க்ருஷ்ணபிரானின் தமயன் பலராமருடைய தீர்த்தமிருக்கிறது. அது இதைவிடச் சிறந்தது. பலராமர் அங்கு ஸூத முனிவரைக் கொன்ற பாபத்திலிருந்து முக்தி அடைந்தார்.

அங்கேயே மஹாபுத்திமானான அரசன் திவோதாசன் தீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்வதால், ஒருவன் அந்திம, காலத்தில் ஞான ஹீனன் ஆகமாட்டான்.

ஸர்வபாப நாசமான, பாகீரதீ தீர்த்தம் இதைவிடப் பெரியது. அங்கு பகவதி பாகீரதீ உயிருள்ள சிலை ஆக வீற்றிருக்கிறாள். விதி அறிந்தவர்கள் பாகீரதீ தீர்த்தத்தில் ஸ்னானம் ச்ராத்தம், ஸத்பாத்ரங்களுக்கு தானம் செய்து, மறுஜன்மா வராமல் போக்கடித்துக்கொள்கிறார்கள்.

ஹே! வீரா! பாகீரதீ தீர்த்தத்திலேயே ஹரபாப தீர்த்தமிருக்கிறது. (கேதார குண்டம்) அங்கே ஸ்னானம்

*செய்வதால் மகாபாப ஸமூஹங்கள் நாசம் அடைகின்றன.*

*அங்கே இருக்கும் நிஷ்பாபேஸ்வரரை தரிசனம் செய்தால் அந்த லிங்க தரிசனத்தின் ப்ரபாவத்தால் க்ஷண மாத்திரத்தில் பாபமற்றவனுகிருன்.*

*தசாச்வமேத தீர்த்தம் எல்லாவற்றையும்விட மிகச் சிறந்தது. அங்கு ஸ்னனம் செய்வதனுல் பத்து அச்வமேத யாகம் செய்த பலன் கிடைக்கிறது. பந்தீ தீர்த்தம் இவைகளெல்லாவற்றையும்விட அதிக மங்களமானது. அங்கு ஸ்னனம் செய்பவர்கள், ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிருர்கள் என்று கூறப்படுகிறது.*

*பூர்வகாலத்தில் தேவதைகள் அஸுரன் ஹிரண்யாக்ஷனின் மூலமாக அனேகம் தடவைகள் விலங்குகள் போடப்பட்டு, சிறைப்படுத்தப்பட்டார்கள். அப்பொழுது அவர்கள் எல்லோரும் ஜகதம்பாளைத் துதித்தார்கள்.*

*அம்பிகையின் அருளால், விலங்கும் தகற்கப்பட்டு அவர்கள் அம்பிகையைத் துதித்தார்கள். அன்றிலிருந்து இதுவரை அந்த அம்பாளை பந்திதேவி என்று கூறுவார்கள்.*

*அங்கேயே மகாநிகட கண்டனம் என்னும் பந்தி தீர்த்தமும் இருக்கிறது. அங்கு ஸ்னனம் செய்வதால் எல்லா கர்ம பாசங்களிலிருந்தும் விடுபடுகிருர்கள். ஹே! அரசனே! காசி புரியில் பந்தி தீர்த்தம் மிகவும் முக்யமானது. ஏன், என்ருல் அங்கு ஸ்னனம் செய்வதால், தேவியின் அனுக்ரஹத்தால் முக்தி அடைகிருர்கள்.*

*எங்கு ஸமஸ்த யாக பலன்களையும் அளிக்கவல்ல ப்ரயாக மாதவர் எழுந்தருளியிருக்கிருரோ அங்கே இருக்கும் ப்ரயாகை என்னும் ப்ரஸித்தி பெற்ற தீர்த்தம் மிகவும் ச்ரேஷ்டமானது.*

*அதன் பிறகு பரம ஸுகத்தை அளிக்கவல்ல சோணிவராஹ தீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்னனம்*

செய்பவன் பசு, பக்ஷி ம்ருகங்களாக ஜன்மம் எடுக்க மாட்டான். ஹே! வீரா! அதற்கு முன்னுல் மிக ச்ரேஷ்டமான காலேஸ்வர தீர்த்தமிருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்பவருக்கு கலியும், காலமும் ஒருவித இடையூறும் விளேவிக்க மாட்டாது.

அங்குள்ள அசோக தீர்த்தம் இன்னும் சுபத்தைக் கொடுக்கக் கூடியது. அதில் ஸ்ஞனம் செய்வதால் மனிதன் சோக ஸாகரத்தில் மூழ்க மாட்டான். சுக்ர தீர்த்தம் இவை எல்லாவற்றையும் விட மிக முக்கியமானது. இதில் ஸ்ஞனம் செய்யும் உத்தம ஜனங்கள், ஒருபொழுதும் சுக்லசோணித மூலமாக ஜன்மம் எடுக்க மாட்டார்கள்.

அரசனே! உத்தமமான பவானி தீர்த்தம் இதைவிட அதிக புண்யம் வாய்ந்தது. அங்கு ஸ்ஞனம் செய்து பவானியையும் சிவபிரானேயும் தரிசனம் செய்வதால் பிறகு ஜன்மமே எடுக்க வேண்டாம்.

ப்ரபாஸ தீர்த்தம் அதைவிட விசேஷ ஸுகத்தைக் கொடுக்கக் கூடியது, ஸோமேஸ்வரருக்கு முன்னுல் இருக்கும் அந்த தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்தால், ஸ்திரீகள் கர்பத்தை அடையமாட்டார்கள்.

அதன் பிறகு ஸம்ஸார ரூபமான விஷத்தை நாசம் செய்வதான கருட தீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்து கருடேஸ்வரரைப் பூஜித்தால் பிறகு சோகிக்க வேண்டாம்.

ஹே வீரா! ப்ரம்மேஸ்வரருக்கு முன்னுல் அவரைவிட பவித்ர தீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்பவன், ப்ரம்ம வித்தைக்கு அதிகாரியாகிருன்.

அதைவிட அதிமான வ்ருத்தார்க்க தீர்த்தமிருக்கிறது.

அதைவிட மேலான விதிதீர்த்தம் ச்ரேஷ்டமானது. அங்கு ஸ்ஞனம் செய்வதால் மனிதன் நிர்மலமான சூர்ய லோகத்திற்குச் செல்லுகிருன்.

*மஹா பயத்தை நிவர்த்தி செய்யும் நரசிம்ம தீர்த்தம் அதை விட உத்தமம் ஆனது. அங்கு ஸ்னனம் செய்பவர்கள் காலனுக்கு பயப்பட அவசியமில்லை.*

*அதைவிட அதிக புண்ணியம் அளிக்கவல்ல, சித்ரரதேஸ்வரர் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னனமும் தானமும் செய்தால் சித்ர குப்தனைப் பார்க்க வேண்டாம்.*

*தர்மேஸ்வரருக்கு முன்னல் தர்ம தீர்த்தம் இருக்கிறது.*

*அது எல்லாவற்றையும் விட பவித்ரமானது. அங்கு ஸ்னனம் ச்ராத்தம் இவைகள் செய்வதால் பித்ரு ருணத்திலிருந்து விடுபடுகிறுன்.*

*அதைவிட தாராளமான பலனை அளிக்கக்கூடிய விசால தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னனம் செய்து விசாலாக்ஷியை தரிசனம் செய்தால் பிறகு கர்ப வாஸம் செய்ய வேண்டாம்.*

*ஜராஸந்தேஸ்வரருக்கு சமீபத்தில் ஜராஸந்த தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னனம் செய்வதால் ஸம்ஸாரஜ்வரத்தின் பீடையால் மயக்கம் அடைய வேண்டாம்.*

*லலிதா தீர்தம் அதைவிட அதிக ஸௌபாக்கியத்தைக் கொடுக்கிறது. அங்கு ஸ்னனம் செய்து லலிதா தேவியை தரிசனம் செய்தால் ஒருவன் தரித்திரன் ஆகமாட்டான், துக்கப்படவும் மாட்டான்.*

*ஸமஸ்த பாபங்களையும் போக்கும் கௌதம தீர்த்தம் அதை விட சிலாக்யமானது. அங்கு ஸ்னனமும் பிண்டதானமும் செய்பவன் வாழ்க்கையில் ஒருதடவை கூட பச்சாத்தாபமடைய மாட்டான்.*

*அதற்கு முன்னல் கங்கா கேசவ தீர்த்தமும், பிறகு அகஸ்திய தீர்த்தம் பின் யோகினி தீர்த்தம், அதன்பிறகு த்ரிஸந்த்ய நாம தீர்த்தம் இருக்கிறது.*

அதற்கு அப்பால் நர்மதாதீர்த்தம், அருந்ததி தீர்த்தம், வஸிஷ்ட தீர்த்தம் பின் எல்லாவற்றிலும் உத்தமமான மார்க்கண்டேய தீர்த்தம் இருக்கிறது.

இந்த தீர்த்தங்களெல்லாம் ஒன்றைவிட ஒன்று அதிக புண்ணியத்தைக் கொடுக்கக்கூடியது என்று அறியவேண்டும். இரகர்த்தரி தீர்த்தம் அதைவிட விசேஷமானது. அங்கு ஸ்ராத்தம் முதலியவைகள் செய்வதினுல் ஒருவன் பாபங்களிலிருந்து விடுபடுகிறுன். அதன் பிறகு ராஜரிஷி பகீரதனின் பரம புண்ணிய தீர்த்தம் இருக்கிறது. அங்கு அல்பமாத்ரமே ஒரு பொருளே தானம் செய்தால்கூட, அந்தப் பலன் கல்பாந்த காலம் வரை க்ஷயமடையாது. இந்த எல்லா தீர்த்தங்களேயும்விட காசியில் இருக்கும் மூன்று கோடி லிங்கங்களில், வீரேஸ்வரலிங்கம் ச்ரேஷ்டமானது.

வீரேஸ்வர தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து வீரேஸ்வரரைப் பூஜை செய்தால் எல்லா தீர்த்தங்களிலும் ஸ்ஞனம் செய்த பலனே அடைகிறுன். இதில் கொஞ்சம்கூட ஸந்தேஹமில்லே.

ஒருவன் இரவில் வீரேஸ்வர லிங்கத்தைப் பூஜித்தால், அவன் மூன்று கோடி லிங்கங்களேயும் பூஜித்தபலன் அடைகிறுன்.

போகத்தையும் முக்தியையும் விரும்புகிறவன் இவைகளே அளிக்கும் லக்ஷ்மியை அடையக் கருத்துடன் வீரேஸ்வர லிங்கத்தைப் பூஜிக்க வேண்டும்.

சதுர்தசி அன்று இரவுகண் விழித்து வீரேஸ்வரரைப் பூஜை செய்தால் அவன் இந்த பஞ்ச பௌதிக சரீரத்தை அடையமாட்டான்.

ஸித்தியை விரும்பும் மக்கள் எப்பொழுதுமே இந்த லிங்கத்தைப் பூஜை செய்யவேண்டும். இதைப் பூஜிப்பதால் இஹத்திலுமம் பரத்திலும் உள்ள விருப்பங்கள் நிறைவேறும்.

இந்த வீரேஸ்வர அங்கத்தை பஞ்சாம்ருதத்தால் அபிஷேகம் செய்தால் க்ஷணத்துக்கு க்ஷணம் குடம்குடமான பலன் அவனுக்குக் கிடைக்கும். மற்ற லிங்கங்களில் கோடிக்கணக்கான புஷ்பங்களை ஸமர்பிப்பதனுல் என்ன பலன் கிடைக்கிறதோ, அந்தப் பலன் வீரேஸ்வரருக்கு ஒரு புஷ்பத்தை ஸமர்ப்பிப்பதனுலேயே கிடைக்கிறது.

வீரேஸ்வரருக்கு ஸமீபத்தில் ஹோமத்தில் ஒரு ஆஹுதி செய்தாலும் கோடி ஹோமம் செய்த பலன் சந்தேகமில்லாமல் கிடைக்கிறது.

வீரேஸ்வரருக்கு நொய்யில் சிறிதளவானும் நிவேதனம் செய்தாலும் அது மிக அல்பமானுலும், அதனுல் அக்ஷயமான பலன் ஏற்படுகிறது.

வீரேஸ்வரருக்கு ஸமீபத்தில் மஹாருத்ர மந்த்ரத்தை ஒரு தரம் ஜபித்தாலும், அல்லது ஜபிக்கச் சொன்னுலும் நிச்சயமாக கோடிருத்ர ஜபத்தின் பலன் கிடைக்கிறது.

வ்ரதானுஷ்டானம் செய்பவர்கள் வீரேஸ்வரருக்குப் பக்கத்தில் வ்ரதங்களை முடித்தார்களானுல் வ்ரதத்தின் பலனை அவர்கள் நூறு பங்காகப் பெறுவார்கள். வீரேஸ்வரருக்கு எதிரில் எட்டு நமஸ்காரங்கள் பண்ணினுலும் போதும்- எட்டு கோடி ஸாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணின பலன் கிடைக்கும். இதில் கொஞ்சம்கூட ஸந்தேஹம் இல்லை.

ஏ, வீரா, என் வரத்தின் ப்ரபாவத்தினுல் வீரேஸ்வரலிங்கம் ஸமஸ்த ஸம்பத்துக்களையும் அளிக்கும் ஸ்தானமாகிறது. இதில் சந்தேஹம் இல்லை.

இந்த லிங்கத்தை ஸேவிப்பதால் ஜிவிததசையில் தாரக ஞானம் என் ஆக்ஞையால் கிடைக்கிறது. அதனுல் சுபத்தை விரும்பும் ஜனங்கள் இதை ஸேவிக்க வேண்டும்.

ஸ்கந்தர் கூறுவார் - அமித்ரஜித்தின் புதல்வனுன வீரன் என்னும் பெயருடைய பாலகன் தன் மனோரதங்கள்

எல்லாம் பூரணமாகும் இந்த வார்த்தையைக் கேட்டு விட்டுத் திரும்பவும் கூறுவான்.

ஹே! தேவேசா, என்னிடம் இப்போது வர்ணித்த தீர்த்தங்களைவிட இன்னும் அதிகமாக ஆதிகேசவரிடமிருந்து, பகீரத தீர்த்த பர்யந்தம் என்ன, என்ன ப்ரஸித்த தீர்த்தங்கள் இருக்கின்றனவோ. எவைகளின் பெயரைக் கேட்டதுமே, மனிதன் பாபமற்றவன் ஆகிருனே, நீங்கள் அவைகள் எல்லாவற்றையும் தயவு செய்து எனக்கு எடுத்துச் சொல்லுங்கள்.

அந்த விதமாக அந்த அரச குமாரன் ப்ரார்த்தனை செய்தவுடன், பகவான் மகாதேவர், திரும்பவும் கங்கைக்கரையிலுள்ள எல்லா தீர்த்தங்களையும் வர்ணிக்கத் தொடங்கினர்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தின் உத்தரார்த்தத்தின் பாஷாடீகாவான எண்பத்தி மூன்ருவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 84

ஸ்கந்தர் கூறினார்:- ஏ! விப்ராவ, கங்கை வருணையினுடைய பவித்ர சங்கமஸ்தலத்தில் மஹாதேவர் தன்னுடைய தீர்த்தத்தை ஸ்தாபித்திருக்கிறார்.

அந்த சங்கமத்தில் ஸ்னானம் செய்து சங்கமேஸ்வரரை பூஜிப்பதனால் ஒருவன் ஒருபொழுதும் மாதாவின் கர்ப்பத்தை அடையமாட்டான். இங்கேயே பாதோதக தீர்த்தம் இருக்கிறது.

இங்குதான் பகவான் விஷ்ணு முதன் முதலில் மந்த்ராசலத்திலிருந்து வந்தபோது தன் கால்களைக் கழுவிக் கொண்டார். இந்த விஷ்ணு பாதோதக தீர்த்தத்தில் வியதீபாத யோகத்தில் ஒருவன் ஸ்னானம் தர்ப்பணம் முதலிய ஜலக்ரியைகளைச் செய்வதால் பின் அவனை ஸம்ஸாரத்தின் துர்கதி அணுகாது.

காசியில் பாதோதகத்திற்கு முன்னால் க்ஷீராப்தி என்றொரு தீர்த்தம் இருக்கிறது. அங்கு புண்யகர்மம் பண்ணுகிறவர்கள் க்ஷீர ஸாகரக் கரையில் வஸிக்கிறார்கள்.

க்ஷீரஸாகரத் தீர்த்தத்திற்கு தெற்கு பக்கத்தில் சங்க தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்கிறவன் சங்கநிதிக்கு யஜமானாகிறான். சங்க தீர்த்தத்தின் பின்னால் ஸர்வோத்தம 'சக்ர' தீர்த்தம் இருக்கிறது. இந்த தீர்த்தத்தில் நீராடுபவன் ஸம்ஸார பந்தத்தை அணுகமாட்டான்.

கதா தீர்த்தம் இருக்கிறது, அதுவும் ரோகத்தை நாசம் செய்யும். இங்கு ச்ராத்தம் ஸ்னானம் முதலியவை செய்தால் கதாதரர் ப்ரஸன்னமாவார்.

இதற்கு முன்னால் பத்மாடவியினால் ஏற்படுத்தப்பட்ட பத்ம தீர்த்தம் இருக்கிறது. இது பித்ருக்களுக்கு த்ருப்தியை அளிக்கக் கூடியது. ஸர்வ ஸம்பத்தும் அளிக்க வல்லது. ஸகலபாபத்தையும் நாசம் செய்யக் கூடியது.

இதற்குப்பின் மஹா புண்யத்தை நல்கும் மகாலக்ஷ்மி தீர்த்தம் இருக்கிறது. இங்கு மகாலக்ஷ்மியை ஆராதித்தால் நிர்வாண லக்ஷ்மியை அடையலாம்.

பிறகு காருத்ம தீர்த்தம் இருக்கிறது. இது ஸம்ஸார விஷத்தைப் போக்க வல்லது. அங்கு உதகக்கிரியை செய்பவன் வைகுண்டத்தை அடைவான்.

பிறகு ப்ரம்ம வித்வாவுக்கு ஏகமாத்ர காரணமான நாரத தீர்த்தம் இருக்கிறது. இதில் ஸ்ஞானம் செய்து நாரத பகவானை தரிசித்து முக்திலாபம் அடையலாம்.

இதற்குத் தென்பக்கத்தில் மகத்தான பக்தியை அளிக்கும் ப்ரஹ்லாத தீர்த்தம் இருக்கிறது. இங்கு ஸ்ஞானம் செய்பவன் விஷ்ணுவுக்குப் பிரியமானவன் ஆகிறான்.

பிறகு மகா பாதகத்தை நாசம் செய்யும் அம்பரீஷ தீர்த்தமிருக்கிறது. அங்கு சுபகர்மம் பண்ணினவர்களுக்கு கர்பவாஸம் கிடையாது.

அதற்கு முன்னால் ஆதித்ய கேசவர் என்னும் பெயருள்ள உத்தம தீர்த்தம் இருக்கிறது. அங்கு நீராடுபவர்கள் ஸ்வர்கராஜ அபிஷேகம் செய்யப்படுகிறார்கள்.

அதற்கு சமீபத்தில் மூன்று உலகத்தையும் விடப் புனிதமான தத்தாத்ரேய தீர்த்தமாகிறது. இதில் கேவலம் பக்தி பாவத்தோடு ஸ்ஞானம் செய்தாலே போதும், லோக ஸித்தியைக் கொடுக்கிறது.

அதற்குக் கொஞ்சம் முன்னால் போனால் பரம ஞானத்தைக் கொடுக்கும் பார்க்கவ தீர்த்தம் இருக்கிறது. அங்கு விதிப்படி ஸ்ஞானம் செய்தால் பார்க்கவ லோகத்தை அடையலாம்.

அதற்குப் பிறகு வாமன தீர்த்தம் இருக்கிறது. இங்கு ஸ்ஞானம் செய்தால் பித்ருக்களின் கடனிலிருந்து விடுபடலாம். மேலும் விஷ்ணு லோகத்தை அடையலாம்.

*பிறகு மஹா சுபத்தைக் கொடுக்கும் நர நாராயணர் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்பவர் கர்ப வாஸம் அடையமாட்டார்.*

*அதன் தென்பக்கத்தில் யக்ஞராக தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்பவர்களுக்கு ராஜஸூய யக்ஞத்தின் பலன் நிச்சயம் கிடைக்கும்.*

*அங்கேயே பரமஞானத்தைக் கொடுக்கும் விதார நரசிம்மம் என்னும் தீர்த்தம் இருக்கிறது. அங்கு கேவலம் ஒருதரம் ஸ்னானம் செய்தாலும் நூற்றுக்கணக்கான ஜன்மங்களின் பாபங்கள் நஷ்டமடைகின்றன.*

*அதன் பிறகு விஷ்ணு லோகத்தைக் கொடுக்கக் கூடியதான கோபிகா கோவிந்த தீர்த்தமிருக்கிறது. அதில் ஸநானம் செய்பவன் கர்பயாதனை இன்னதென்று அறியமாட்டான்.*

*கோபிகோவிந்த தீர்த்தத்தின் தெற்குப் பக்கத்தில் லக்ஷ்மீ நரஸிம்ம தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்பவர்களுக்கு லக்ஷ்மியே நிர்வாண பதம் கொடுக்கிறாள்.*

*அதற்குத் தெற்கு பாகத்தில் உத்தமமான சேஷ தீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்னானம் செய்பவர்களுக்கு கோரமான பாபங்களின் மீதி (சேஷம்) இருக்காது.*

*சங்கமாதவதீர்த்தம் இருக்கிறது. அதை ஸேவித்தாலே ஜனங்களுக்கு ஸம்ஸாரத்தைப்பற்றிய மிகவும் பெரியதான பயம் ஏன் இருக்கப்போகிறது?*

*அதைவிட பரமபவித்ரமானதும், உடனேயே ஸித்தி அளிக்கவல்லதும், ஒப்பு சொல்ல முடியாததுமான நீலக்கிரீவ தீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்னானம் செய்பவர் எப்பொழுதும் மிகவும் பவித்திரமாக இருக்கிறார்கள்.*

*அங்கேயே ஸர்வ பாபநாசகமான உத்தாலக தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்பவர்களுக்கு மிகுந்த*

செழிப்பு ஏற்படுகிறது. அதன் பின் ஸாங்கேஸ்வருக்கு சமீபத்தில் சாங்கிய தீர்த்தமிருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்பவருக்கு சாங்கிய யோகம் சித்திக்கிறது.

அதன் ஸமீபத்திலேயே ஸ்வர்லீனேஸ்வரருக்கு பக்கத்தில் ஸ்வர்லீனேஸ்வர தீர்த்தம் இருக்கிறது. பகவான் உமாபதி ஸ்வர்க்க லோகத்திலிருந்து வந்து இந்த தீர்த்தத்தில் மறைந்தாராம். அதனுல் ஸ்வர்லீனம் என்று பெயர் ப்ரஸித்தமாயிற்று.

அங்கு சிரத்தையுடன் ஸ்ஞனம், தானம், ஜபம் ப்ராமணயோஜனம், ஹோமம், பூஜை இவைகளைச் செய்வதால் அக்ஷயமாகின்றன.

அதற்கு ஸமீபத்திலேயே பரம பாவனமான மஹிஷாஸுர தீர்த்தம் இருக்கிறது. அங்கு தானவேஸுரன் கடினமான தபஸ் பண்ணி தேவர்களை ஜயித்தான்.

இந்த தீர்த்தத்தை ஸேவித்தவன் இன்றுவரை ஒரு பொழுதும் சத்ருக்களிடம் தோற்றதில்லை. பெரிய பாதகங்களும் அவனை அழித்ததில்லை. வேண்டிய வரமும் பெறுவான்.

அதற்கு சமீபத்திலேயே பாணஸுரனுக்கு ஆயிரம் புஜங்களைக் கொடுத்த பாணலிங்கம் என்னும் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்பவன் சிவபிரானிடம் திடமான பக்தியைப் பெறுகிறுன்.

அதற்குச் சற்று முன்னுல் சென்றுல் உத்தமமான கோப்ரதார் என்னும் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்பவன், குற்றம் இல்லாவிட்டாலும் வைதரணியை ஸுகமாகக் கடக்கிறுன்.

அதற்குத் தெற்குபக்கத்தில் இரணிய கர்பம் என்னும் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்பவனிடம் எப்பொழுதும் ஸ்வர்ணம் இருந்து கொண்டிருக்கும். அதன் பிறகு எல்லா தீர்த்தங்களிலும் உத்தமமான ப்ரணவ தீர்த்தம்

இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்தால் அவன் ஜீவன் முக்தனுகிறுன். பின் பிசங்கிலா தீர்த்தமிருக்கிறது. அதை தரிசித்த மாத்திரத்திலேயே பாபங்களை அபஹரிக்கின்றன.

ஏ! அகஸ்த்ய முனியே! அங்கேயே நான் தங்கும் பரமஸித்தி ப்ரதான ஸ்தானம் இருக்கிறது. பிசங்கிலா தீர்த்த ஸ்ஞனம், பின் யதாசக்தி தானம் இவைகளைச் செய்வதால் வேறு எங்கேயாவது மரணம் அடைந்தால்கூட அவன் சோகிக்கமாட்டான்.

ஒருவன் பிசங்கிலா தீர்த்தத்தினுல் ஸ்ஞனம் செய்து என்னை ஸேவித்தால் சூரியனைப் போன்ற தேஜஸுடன் என் மித்திரனுவான். அதற்குப் பக்கத்திலேயே் பிலப்பிலா தீர்த்தம் இருக்கிறது.

அங்கு எப்பொழுதும் த்ரிவிஷ்டப லிங்கத்தின் த்ருஷ்டிபட்டுக் கொண்டு இருப்பதால் அந்த சூழ்நிலையே நிர்மலமாவதோடு மனமும், மலம் நீங்கி சுத்தமாகிறது.

அங்கு ச்ராத்தாதி பண்ணுவதாலும் தீனர்களையும் அனுதிகளையும் சந்தோஷப்படுத்துவதாலும், நிலையான பெரும் சம்பத்து கிடைக்கிறது.

அதன் பிறகு நாகேஸ்வர தீர்த்தம் இருக்கிறது. அது பெரிய பாபங்களை சுத்தி செய்கிறது. அந்த தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்வதால் பாபங்கள் க்ஷயமாகின்றன. அதற்கு தெற்கு பாகத்தில் பரம உத்தமமானதும் பவித்ரமானதும் ஆன 'கரணுதித்யம்' என்னும் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்பவன் சூரியனைப் போல தேஜஸ்வியாகிறுன்.

பிறகு மஹாபாதகங்களை நசிக்கச் செய்வதும் நான்கு புருஷார்த்தங்களைத் தருவதும் ஸர்வ விக்னங்களை நாசம் செய்வதுமான பைரவ தீர்த்தம் இருக்கிறது.

அங்கு செவ்வாய்க் கிழமை அஷ்டமி வந்தால் ஸ்ஞனம் செய்து பித்ருக்களுக்கு தர்பணம் செய்து

காலபைரவரை தரிசனம் செய்தால், காலம், கலி இரண்டையும் ஜயிக்கலாம்.

பைரவி தீர்த்தத்திற்கு முன்னுல் கர்வநஸிம்ம தீர்த்தமிருக்கிறது அங்கு நீராடுபவனுக்குப் பாவத்திஞல் பயம் ஏன் ஏற்படுகிறது? அதன் தெற்கு பக்கத்தில் அதி நிர்மலமான மார்க்கண்டேய தீர்த்தம் இருக்கிறது,. அங்கு நீராடுபவனுக்கு அகால ம்ருத்யு ஏற்படாது.

அதற்குப் பிறகு பஞ்சநத தீர்த்தம் இருக்கிறது. அதை எல்லா தீர்த்தங்களுமே சேவிக்கின்றன. அங்கு ஸ்ஞனம் செய்வதால் மனிதன் ஸம்சாரி ஆகமாட்டான்.

இந்த ப்ரம்மாண்ட உதரத்திற்குள் எத்தனே தீர்த்தங்கள் இருக்கின்றனவோ அவை எல்லாம் நாலாபக்கமிருந்தும் வந்து இந்த தீர்த்தத்தில் தங்கள் பாபங்களேக் கழுவுகின்றன. மேலும் அவை எல்லாம் தங்களே நிர்மலமாக்கிக் கொள்ளும் பொருட்டு ஒவ்வொரு தசமியிலிருந்தும் சேர்ந்தார்போல் மூன்று நாட்கள் அங்கு தங்குகின்றன.

காசியின் மத்தியில் அடிக்கு ஒரு தீர்த்தம் இருக்கிறது. ஆனுல் பஞ்சநத தீர்த்தத்தின் மகிமை, ஒரு தீர்த்தத்திற்கும் வராது. அங்கு கார்த்திகை மாதத்தில் ஒரு தினமாவது ஜபம், ஹோமம், பூஜை, தானம் இவைகளால் தன்னேப் புனிதமாக்கிக் கொண்டால் அவன் எப்பொழுதும் க்ருதக்ருத்யன் ஆகிறுன்.

ஒரு தராசின் தட்டில் உலகத்தின் எல்லா தீர்த்தங்களேயும் வைத்து மற்ருெரு தட்டில் பஞ்சநத தீர்த்தத்தை வைத்தால் பதிஞறில் ஒரு பங்குகூட, தராசின் தட்டு தாழாது.

அதனுல் புத்திமானுனவன் பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து பகவான் பிந்து மாதவரை தரிசித்தானுனுல் அவன் மாதாவின் கர்பத்தில் நுழைய மாட்டான்.

*அதன் பின் ஜடங்களின் ஜடத்தை ஹரணம் செய்யும் ஞானஹ்ரததீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்பவருக்கு ஞானம் ஒருக்காலும் நழுவாது. அந்த ஞான ஹர தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து, ஞானேஸ்வரரை தரிசனம் செய்தால் ஒன்றிலும் இடையூறு ஏற்படாத ஞானத்தை அடைகிறுன்.*

*அதற்குப் பிறகு எல்லா அமங்களங்களேயும் நாசம் செய்யும் மங்கள தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்பவனுக்குப் பொங்கும் மங்களம் எங்கும் தரும்.*

*அந்த மங்கள தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்பவனுக்கு அமங்களங்கள் நாசமடைவதோடு அல்லாமல் அனேக மங்கள காரியங்கள் நடக்கும். அங்கு வணங்குபவருக்கு மங்களமே உண்டாகும்.*

*அதற்குச் சற்றுமுன்ஞல் போஞல் மலத்தை நாசம் செய்யும் கபஸ்திமாலிகா தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்து கபஸ்தீஸ்வரரை தரிசனம் செய்வதால் மனிதன் நிர்மலமாகிறுன்.*

*அங்கு மகேஸ்வருக்குப் பக்கத்தில் மகதீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்வதால் உத்தமமான யக்ஞங்களேச் செய்ய அதிகாரி ஆகிறுன்.*

*அதற்கு சமீபத்திலேயே பரமஞானத்திற்குக் காரணம் ஆன பிந்து தீர்த்தம் ஒன்று இருக்கிறது. அங்கு ச்ராத்தாதி காரியங்கள் செய்வதால் மிக்க புண்யம் கிடைக்கிறது. அதன் தென் திசையில் பிப்பலாத தீர்த்தம் இருக்கிறது.*

*அங்கு சனிக்கிழமையன்று ஸ்ஞனம் செய்து பிப்பலாதேஸ்வரரை தரிசித்து, அச்வத்த முதலிய மந்திரங்களிஞல் அரச மரத்தை ப்ரதக்ஷிணம் முதலியன செய்து வந்தால் சனி க்ரஹத்திஞல் ஏற்படும் பீடைகள் இருக்காது. கெட்ட கனவுகள் காணமாட்டார்கள். அதற்குப் பிறகு பரம பாவனமான தாமர வராஹம் என்னும் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம், தானம் செய்வதால் பாப ஸாகரத்தில் மூழ்கமாட்டார்கள்.*

அதற்குச் சற்று முன்னுல் கலிகல்மஷ நாசினியான கால கங்கையிருக்கிறது. அதில் நீராடிய க்ஷணத்திலேயே ஒருவன் பாபமற்றவனுகிருன்.

இந்த்ரத்யும்னேஸ்வரருக்கு முன்னுல் இந்த்ரத்யும்னன் என்னும் மஹாதீர்த்தம் இருக்கிறது. அங்கு ஜலக்ரியைகள் செய்வதால் இந்த்ரலோகம் கிடைக்கிறது.

அதன் பின்னுல் ராமேஸ்வரருடைய ராமதீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்வதால் விஷ்ணு லோகம் கிடைக்கிறது.

பிறகு ஸகல பாபங்களேயும் நசிப்பிக்கும் இக்ஷ்வாகு தீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்வதால் ஒருவன் பவித்ராத்மா ஆகிருன்.

அதன் பக்கத்தில் மருத்வ தீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்து அந்த லிங்கத்தைப் பூஜிப்பதால் மிகுந்த ஐச்வர்யம் ஏற்படுகிறது.

அதன் பிறகு மஹா பாதகங்களே நாசம் செய்யும் மைத்ரா வருண தீர்த்தமிருக்கிறது. அங்கு பிண்டம் போடுவதால் பித்ருக்கள் சந்தோஷம் அடைகிருர்கள்.

அதற்குப் பிறகு அக்னீஸ்வரருக்கு முன்னுல் அக்னி தீர்த்தமிருக்கிறது. இதில் ஸ்ஞனம் செய்பவர் அக்னி லோகத்துக்குச் செல்கிருர்கள்.

அங்கேயே அங்காரேஸ்வரருக்கு சமீபத்தில் அங்காரக தீர்த்தமிருக்கிறது. அங்கு அங்காரக சதுர்தசியன்று ஸ்ஞனம் செய்தால் நிஷ்பாபனுகிருன்.

பின் சற்று முன்னே சென்ருல் கலசேஸ்வரருக்குப் பக்கத்தில் வைகல தீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்து அந்த லிங்கத்தை பூஜிப்பதால் கலிகாலத்தின் பயம் அறவே ஒழிந்துவிடும். அங்கு சந்த்ரேஸ்வரருக்குப் பக்கத்தில் சந்த்ரதீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம் செய்து சந்த்ரேஸ்வரருக்குப் பூஜை செய்தால் சந்த்ரலோகம் கிடைக்கிறது.

*அதற்கு முன்னால் வீரேஸ்வரருக்கு ஸமீபத்தில் வீர தீர்த்தமிருக்கிறது. அந்த தீர்த்தத்தைப் பற்றி முன்னாலே உனக்குச் சொல்லியிருக்கிறேன்.*

*அதற்குப் பிறகு ஸர்வ விக்னங்களையும் நாசம் செய்யும் விக்னேஸ்வர தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்வதால் விக்னங்களுக்கு அடிமையாக மாட்டான். அதற்கு முன்னால் ராஜரிஷி ஹரிச்சந்திரருடைய உத்தம தீர்த்தமிருக்கிறது. அதில் ஸ்னானம் செய்பவன் எப்பொழுதும் ஸத்யம் தவறாமல் நடப்பான்.*

*ஹே! வீரா, ஹரிச்சந்திரருடைய தீர்த்தத்தில் செய்யும் ஸத்கர்மங்களால் இஹலோகத்திலும், பரலோகத்திலும் பலன் கிடைக்கிறது.*

*அதற்குப் பின் பர்வதேச்வரருக்குப் பக்கத்தில் பர்வத தீர்த்தமிருக்கிறது. அங்கு பர்வங்களில் ஸ்னானம் செய்தாலும், வெறும் தினங்களில் ஸ்னானம் செய்தாலும் நல்ல பலன் கிடைக்கும்.*

*அங்கேயே ஸகலவிதமான விஷயங்களைப் போக்கடிக்கும் கம்பலாஸ்பத்ர தீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்வதால் ஒருவன் ஸங்கீத வித்தையில் மஹா நிபுணனாகிறான்.*

*அதன் பிறகு ஸமஸ்த வித்தைகளும் அளிக்கவல்ல ஸாரஸ்வத தீர்த்தம் இருக்கிறது. அங்கு எப்பொழுதும் தேவதைகளும், பித்ருக்களும், ரிஷிகளும் வஸிக்கிறார்கள். அங்கேயே ஸமஸ்த சக்திகளும் சூழ்ந்த உமாதீர்த்தமிருக்கிறது. அங்கு ஸ்னானம் செய்வதால் உமாதேவியின் லோகம் கிடைக்கிறது.*

*ஏ, வீரா! அதற்கு பக்கத்திலேயே மூவுலகங்களிலும் ப்ரஸித்தி பெற்று, மூன்று உலகங்களையும் உத்தாரணம் செய்யவல்ல பரம ஸ்ரேஷ்டமான மணிகர்ணிகா தீர்த்தமிருக்கிறது.*

*முன்பு விஷ்ணு அதை சக்கர புஷ்கரிணியாக ஆக்கியிருந்தார். கேவலம் அதன் பெயரைக் கேட்டவுடனேயே தேவதைகள் மூன்று காலமும் மணிகர்ணிகையின் பெயரை ஜபித்துக் கொண்டிருக்கிறார்கள். அதன் பெயரைக் கேட்டவுடன் தானே மனிதர்களுக்கு மங்களம் உண்டாகிறது.*

*ஒருவன் மணிகர்ணிகையின் பெயரைக் கேட்டவுடன், அல்லது நினைத்தவுடன் அல்லது பார்த்தவுடன் ம்ருத்யு லோகத்தில் அவன் தன்யனாகிறான். ஏ, அரசனே! மூன்று லோகங்களிலும் மணிகர்ணிகையின் பெயரை எவர்கள் ஜபிக்கிறார்களோ, அவர்கள் பெயரை நான் ஜபிக்கிறேன்.*

*மணிகர்ணிகை என்னும் பஞ்சாக்ஷரத்தை வாயினால் உச்சரிக்கிறவன் நூறாயிரம் வராஹன் தக்ஷிணைகளுடன் பரிபூர்ணமாக எண்ணிக்கையற்ற யாகங்களைச் செய்த பலனை அடைகிறான்.*

*ஏ, வீரா! மணிகர்ணிகைக்கு வந்து சேர்ந்து எந்த புண்ணியாத்மா என்னை பூஜிக்கிறானோ, அவன் மிகப்பெரிய தானம் செய்தவர்களுக்கு ஸமம் ஆகிறான். இது நிச்சயம். கயாதீர்த்தத்தில் மது, பாயஸம் இவைகளால் பித்ருக்களுக்கு ச்ராத்தம் செய்வதால் என்ன பலன் கிடைக்குமோ அது மணிகர்ணிகையில், கேவலம் வெறும் ஜலத்தினால் தர்பணம் செய்த அதே பலனை அடைகிறான்.*

*சுத்த புத்தியுள்ளவன் மணிகர்ணிகையின் ஜலத்தைப் பானம் செய்தால் அவன் திரும்பவும் பிறக்கமாட்டான் என்னும் காரணத்தால், ஸோமபானம் செய்வதினால் என்ன பிரயோஜனம்?*

*சிறந்த பர்வங்களில் மஹாதீர்த்தங்களில் அனேகம் தடவைகள் ஸ்நாநம் செய்வதால் என்ன பலன் கிடைக்கிறதோ அல்லது அனேக யக்ஞங்களில் அவப்ருத ஸ்நானத்தினால் என்ன பலன் கிடைக்கிறதோ, அந்தப்*

பலன்கள் மணிகர்ணிகையில் ஒருதரம் ஸ்னனம் செய்தாலேயே கிடைக்கிறது.

ஒருவன் ஸ்வர்ணத்தினுலும், புஷ்பத்தாலும், ரத்னத்தினுலும், மணிகர்ணிகையை பூஜை செய்வானுனுல் அவனைப்பற்றிக் கூற என்ன இருக்கிறது? எவர்கள் யக்ஞங்களின் மூலமாக, ப்ரம்மா விஷ்ணு இவர்களைப் பூஜை செய்கிற பலனை அடைகிறூர்களோ அவர்கள் ப்ரதி தினமும் மணிகர்ணிகையை பூஜித்தர்களானுல் சைவதீக்ஷை பெற்று பார்வதிஸஹிதம் என்னை அர்ச்சனை செய்த பலனை அடைகிறூர்கள்.

ஒருவன் ச்ரத்தையோடு கூட ஸ்ரீமதி மணிகர்ணிகையை ஸேவித்தால் அவன் அனேக தினங்கள் வரை உலர்ந்த சருகுகளை புஜித்து தபஸ் செய்த பலன் அடைகிறுன்.

சிலர் பெரிய தானங்களைச் செய்து அனேக யக்ஞங்களை முடித்து, கோரமான, அரண்யத்தில் கடினமான தபஸ் செய்து ஸ்வர்க போகத்தை அனுபவித்து விட்டு ப்ருதிவியில் வந்து பிறக்கிறூர்கள். அப்பொழுது அவர்கள் இந்த பூமியில் பஞ்சகோசத்துள் பரம மனேஹாரிணியான மணிகர்ணிகாவை அடைந்தார்களானுல், அவர்கள் இறந்த பின் மறுபடியும் பிறக்கும், புனராவ்ருத்தியால் உண்டாகும் துக்கத்தில் இருந்து விடுபடுகிறூர்கள்.

நான் அறிந்த மட்டில், தானம், வ்ரதம், யக்ஞம், தபஸ் இவைகளின் ஒரே பலன் என்னவென்றூல் மணிகர்ணிகையை அடைவதாகும்.

இந்த ஸ்ரீமதி மணிகர்ணிகா ஸாக்ஷாத் மோக்ஷலக்ஷ்மி ஆவாள். இவளது பூர்ண மஹிமைகளை நான்கூட அறியமாட்டேன். மணிகர்ணிகாவுக்குத் தெற்குபக்கத்தில் மிகவும் முக்கியமான பாசுபத தீர்த்தம், ருத்ரவாஸ தீர்த்தம் விஸ்வதீர்த்தம் இவைகள் இருக்கின்றன.

அதன் பிறகு ரமணீயமும், உத்தமமுமான, முக்தி தீர்த்தம், அபிமுக்த தீர்த்தம், தாரகதீர்த்தம், ஸ்கந்ததீர்த்தம், டுண்டி தீர்த்தம் இவைகளிருக்கின்றன.

அதன்பின், பவாநீதீர்த்தம், ஈசானதீர்த்தம், ஞானதீர்த்தம், நந்திதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், பிதாமஹதீர்த்தம் இவை சோபிதமாக இருக்கின்றன. இதன்பின் நாபிதீர்த்தம் என்னும் ப்ரம்ம நல்ல தீர்த்தம் இருக்கிறது. அதற்கு முன் நான் முன்பு வர்ணித்த பாகீரதீதீர்த்தம் இருக்கிறது.

காசியில் ப்ரவஹிக்கும் உத்தரவாஹிநியான கங்கையில் அனேக பவித்ர தீர்த்தங்கள் இருக்கின்றன. ஆனால் உனக்குச் சிலவற்றை மட்டுமே கூறினேன்.

ஹே! க்ருபநந்தன! இவைகள் எல்லாவற்றிலும் பஞ்சநத தீர்த்தமே மேலானது. அதில் ஸ்னானம் செய்பவன் ஒருபொழுதும் கர்பவாஸதுக்கத்தை அனுபவிக்க மாட்டான்.

முன்னாளில் அஸி ஸங்கம தீர்த்தம் ப்ரதானமாக இருந்தது. அதன்பின் ஆதிகேசவர் ஸமீபத்தில் பாதோதக தீர்த்தம் உண்டானது. பிறகு ஸமஸ்தபாபங்களும் நசிக்கும் பஞ்சநத தீர்த்தம் ஏற்பட்டது.

ஏ, உத்தமா! இந்நான்கு தீர்த்தங்களிலும் உத்தமமானது மணிகர்ணிகா ஆகும். அது மனம், இந்திரியங்களை சுத்தப்படுத்துகிறது. பர்வகாலங்களில் நானும், ப்ரம்மா, விஷ்ணு முதலிய தேவதைகளும், ரிஷிகளுடன் மணிகர்ணிகையில் ஸ்னானம் செய்கிறோம்.

இந்தக் காரணத்தினால், ஸ்வர்க வாஸிகள் பாதாள வாஸிகள் எல்லோரும் வேதசம்பந்தமான இந்த பழமொழிகளைக் கூறுகிறார்கள். இந்த விஷயம் எப்பொழுதும் சத்தியம். இந்த ப்ரம்மாண்ட கோணங்களில் மணிகர்ணிகைக்கு ஸமமான, ஒரு தீர்த்தமும் இல்லை. இது ஸத்யம், ஸத்யம், ஸத்யம்.

காசியில் பஞ்சநத தீர்த்தத்தில் ஸ்னுனம் செய்கிறவன் பிறகு பஞ்ச பூதங்களால் ஆன சரீரத்தை அடையமாட்டான். ஒருவேளை அடைந்தாலும் பஞ்சமுகமான சிவஸ்வரூபியாவான்.

இந்த விதமாக ஹரன், ராஜகுமார் வீரனுக்கு தீர்த்தங்களின் மகாத்ம்யங்களைக்கூறி விட்டு அந்தர்த்யானம் ஆனுர், அந்த ராஜ குமாரனும் வீரேஸ்வரரைப் பூஜை செய்து தன் இஷ்டஸித்திகளை அடைந்தான்.

ஸ்கந்தர் கூறுவார்கள் - ஹே அகஸ்த்யா! ஒருவன் பவித்ரமான தீர்த்த அத்யாயம் கேட்பானுனல் நூற்றுக்கணக்கான ஜன்மங்களில் சேர்த்து வைத்த பாபம் நீங்கும்.

ஏ, முனியே! தீர்த்தக்யான ப்ரஸங்கத்தில் வீரேஸ்வரருடைய மகாத்ம்யத்தை உனக்குக் கூறினேன். இப்பொழுது காமேஸ்வரரின் கதையைக் கூறுகிறேன்.

இவ்விதம் ஸ்கந்தர் புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான எண்பத்திநாலாவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 85

*ஸ்கந்தர் கூறினார்:- அகஸ்திய முனியே! ஜகதாம்பாள் பார்வதியிடம் பகவான் த்ரிபுராரி கூறிய பவித்ரமான கதையை உமக்கு வர்ணிக்கிறேன். புராதன காலத்தில் ஒரு தடவை மஹா கோபிஷ்டரும், அத்யந்த தேஜஸ்வியும், பரம தபஸ்வியும் ஆன துர்வாஸ மகரிஷி, கடல், பர்வதம், காடு, நதி, புரி, கிராமம், பட்டினங்கள் ஆகிய இவைகளைச் சாகிறவரை ப்ரதக்ஷிணம் செய்து கொண்டு மஹாதேவருடைய ஆனந்த வனத்திற்கு வந்து சேர்ந்தார்.*

*அனேக விதமான மாளிகைகளும், குளங்களும், தடாகங்களும், மண்டிக் கிடக்கும் இந்த மஹேஸ்வரரின் உத்யான வனத்தைப் பார்த்து, மிகவும் ஸந்தோஷமடைந்தார்.*

*அங்கு காலனின் மஹா பயத்தை ஜயிக்கும் முனிவர்களின் பர்ணசாலைகளும், வேதிகைகளும் பதத்திற்குப் பதம் நிரம்பி இருப்பதைப் பார்த்து துர்வாஸமுனி மிகவும் ஆச்சரியமடைந்தார்.*

*அங்கு எல்லா ருதுக்களிலும் புஷ்பிக்கும் செடி, கொடிகளையும், இளம் தளிர்களாலும், பழங்களாலும் நிறைந்து அழகான கொடிகளால் சுற்றப்பட்ட வ்ருக்ஷங்களையும் பார்த்துவிட்டு மிகவும் ப்ரஸன்னம் அடைந்தார்.*

*பிறகு துர்வாஸர் கௌபீனம் மாத்திரம் தரித்துக் கொண்டும், ஸர்வாங்கங்களிலும் பஸ்மத்தைப் பூசிக் கொண்டும் ஜடா மகுடதாரியாய், சுரைக்காய் ஓடை கட்கத்தில் இடுக்கிக் கொண்டு டுடுடுடுடு என்னும் த்வனியினால் மேக கர்ஜனை செய்து கொண்டும், ஸ்மரஹரனின் த்யானத்தில் ஆழ்ந்த உத்தமமான பாசுபத மதத்தைச் சேர்ந்த சிவயோகிகளையும் தரிசித்து மிகவும் ஸந்தோஷமடைந்தார்.*

*அங்கு ஏகாங்கியாய் மனைவி மக்களை பஹிஷ்கரித்து, தேவ பூஜை ஸம்புடமும், தண்டு கமண்டலங்களை மாத்திரம் தரிசித்த த்ருதண்டி சாமிகள் காலனையும் லக்ஷ்யம் செய்யாமல் விச்வேஸ்வரரை சரணாகதி அடைந்தவர்களாகப் பார்த்தார்.*

*சில இடங்களில் வேத ரஸம் அறிந்த ஆபால ப்ரம்மசாரிகள் தினமும் கங்காஸ்னானம் செய்வதால் செம்பட்டை ஜடையுடன் இருப்பதைப் பார்த்துவிட்டு துர்வாஸர் மிகவும் ஸந்தோஷப்பட்டார்.*

*காசியில் கோக்களின் சாந்தத் தன்மையும், மான்களின் வேகத்தையும், பக்ஷிகளின் ஸந்தோஷத்தையும் பார்த்து, துர்வாஸர் வேறு இடங்களில் அப்படி இருக்கவில்லை என்று நினைத்தார்.*

*அங்குள்ள பரமானந்தமான ஸந்தோஷச் செழிப்பு, ஸ்வர்க்க வாஸிகளான தேவதைகளுக்குக்கூட இல்லை என்று நினைத்தார். ஆனந்தவனத்தில் ஸஞ்சரிக்கும் பசுக்கூட்டங்களின் ஸந்தோஷம் நந்தவனத்தில் ஸஞ்சரிக்கும் தேவதைகளை விட அதிகமாக இருக்கிறது. ஏன் என்றால் இவை எப்பொழுதும் ஸதா தன் மயமாக இருக்கின்றன. தேவதைகள் அப்படி இருப்பதில்லை.*

*அந்திம காலத்தில் ஸ்ரூபமான முடிவை அடைவதால் காசிபுரியில் இருக்கும் மிலேச்ச ஜாதிகளே மிகவும் உத்தமமானது. ஆனால் முக்திக்குப் பாத்திரம் ஆகாத அன்னிய இடங்களில் பிறந்த, தீக்ஷை எடுத்துக்கொண்ட ப்ராம்மணர்களும், ச்ரேஷ்டர்கள் ஆக மாட்டார்கள்.*

*துர்வாஸர் நினைக்கிறார்: இந்த விஸ்வநாதபுரி என் மனதை ஆகர்ஷிப்பதைப் போல் பாதாளம், ஸ்வர்க்கம், பூமி இவைகள் ஆகர்ஷிப்பதில்லை. நான் பூமி முழுவதும் சுற்றி இருக்கிறேன்; இங்கு என் மனம் லயம் ஆனது போல் வேறு எங்கும் ஆகவில்லை.*

*ப்ரம்மாண்டம் முழுவதிலும்கூட இந்த ரமணீயபுரியைப் போல் காணவில்லை. என்று காசியின் பெருமையைக் கூறி துர்வாஸ முனி தபஸில் ஈடுபட்டார்.*

*ஆனால் அந்தத் தபஸ்வி கடுமையான தபஸ் செய்தும்கூட ஒரு பலனும் ஏற்படவில்லை. அதனால் மிகவும் கோபமடைந்து கூறினார். துர்வாஸர் தன்னைத்தான் கூறிக்கொண்டார். தான் ஒரு துஷ்ட தபஸ்வி, ஐயோ, வெட்கம், வெட்கம், ஒழுங்கில்லாமல் செய்யும் என் தபஸ் இழிவு, மஹாதேவரின் இந்த க்ஷேத்திரமும் மோசமானது. இங்கிருக்கும் தபஸ்விகளெல்லோரும் மோசமானவர்கள், வஞ்சகர்கள். இங்கு இருப்பவர்களுக்கெல்லாம் கிடைக்காதபடிக்கு நான் ஒரு கார்யம் செய்கிறேன்; பார், என்று சாபம் கொடுப்பதற்காகக் கையில் தீர்த்தத்தை எடுத்துக் கொண்டார். இதைக் கேட்டுவிட்டு பகவான் சங்கரர் சிரித்தார்.*

*சிரித்துக்கொண்டே அங்கு ஒரு லிங்கமாகத் தோன்றினார். அந்த லிங்கத்திற்கு ப்ரஹஸிதேஸ்வரர் என்று பெயர், அந்த லிங்கத்தைத் தரிசித்தவர்களுக்கு பதத்திற்கு பதம் ஸந்தோஷம் உண்டாகும், அதன் பிறகு பகவான் மஹேஸ்வரர் ஆச்சரியம் அடைந்து மனத்துக்குள்ளேயே கூறிக்கொண்டார்- இப்பேறுபட்ட தபஸ்விகளுக்கு அடிக்கடி நமஸ்காரம்.*

*இந்த ப்ராம்மணர்கள் எங்கு தபஸ் செய்ய உட்காருகிறார்களோ அங்கே ஆச்ரமமும் அமைத்துக் கொள்கிறார்கள். அந்த இடத்தில் கீர்த்தியும் பெறுகிறார்கள். அதே ஸமயம் அந்த இடத்தைப் பற்றிப் பொறாமையும் படுகிறார்கள்.*

*தங்கள் தபஸின் ஸித்திகளை அடைய முடியாமல் போனால் தபஸ்ஸை நாசம் செய்யும் க்ரோதத்தாலேயே ஜயிக்கிறார்கள்.*

ஆனாலும் தங்கள் நன்மை வ்ருத்தி அடைய விரும்புகிறவர்களுக்கு தபஸ்விகள் மிக்க மதிப்புக்குறியவர்களாகிறார்கள். கோபமாக இருந்தாலும் அல்லது சாந்தமாக இருந்தாலும் தபஸ்விகளுக்கு அதைப்பற்றி கவலை ஏன்?

பகவான் மஹாதேவர் மனத்திற்குள் இப்படி எண்ணிக்கொண்டிருக்கும்பொழுது துர்வாஸருடைய கோபாக்னி, ஆகாசமண்டலம் முழுவதும் பரவிற்று.

அந்த க்ரோதாக்னியிலிருந்து புகைமண்டலம் எழும்பியது பாருங்கள். அது இன்றுவரை ஆகாசம் முழுவதும் வியாபித்துக் கொண்டு ஆகாசத்தை நீலநிறமாக்கிக் கொண்டிருக்கிறது.

அதன் பிறகு அந்த புன்னகைக் படலத்தைப் பார்த்துவிட்டுச் சிவகணங்கள் ப்ரளய காலத்துக் கடல்நீரைப் போலக் கலங்கினார்கள், ஐயோ, இது என்ன? என்ன என்ற ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள்.

பிறகு அஸ்த்ர சஸ்த்ரத்தை எடுத்துக்கொண்டும், கர்ஜித்துக் கொண்டும், சிவபுரியிலிருந்து நாலாபக்கங்களிலும் ஓடினார்கள்.

பின் மகாதேவருடைய பாரிஷதர்கள் ஒருவரை ஒருவர் யுத்தத்திற்கு அறை கூவிக்கொண்டு, யமனாயிருந்தாலென்ன? காலனாயிருந்தாலென்ன? ம்ருத்யுவாகயிருந்தாலென்ன? அந்தகனாயிருந்தாலென்ன? ப்ரம்மாவாயிருந்தால்லென்ன? விஷ்ணுவாயிருந்தால் என்ன? தேவதைகளாயிருந்தாலென்ன? நாங்கள் கோபித்தெழுந்தால் எங்களுக்கு முன் யாரால் நிற்க முடியும்? நாங்கள் விரும்பினால் அலையைத் தண்ணீராக மாற்றுவோம். எல்லா பர்வதங்களையும் நொறுக்கித் தூளாக்குவோம். ஏழு ஸமுத்திரங்களையும் வற்ற அடித்துப் பாலைவனம் ஆக்குவோம்.

பாதாளத்தை உயரக் கொண்டு வருவோம். ஸ்வர்கத்தை கீழே தள்ளிவிடுவோம்.

இந்த ப்ரம்மாண்ட ரூபமான பாண்டத்தை க்ஷண பொழுதில் உடைத்துவிடுவோம். காலனையும் ம்ருத்யுவையும் பிடித்து, பனம் பழங்களைப் போல ஒன்றுடன் ஒன்றை மோதி நசுக்கி எறிந்து விடுவோம்.

இந்த வாராணஸியில் இருந்தால் எல்லா ப்ராணிகளுக்கும் முக்தி கிடைக்கும். அதனால் இந்த வாராணஸியை மட்டும் விட்டு விட்டு மற்ற ஸமஸ்த புவனங்களையும் விழுங்கி விடுவோம்.

இந்தப் புகைமண்டலம் பெரிய குன்றம் போன்ற ஜ்வாலை எங்கிருந்து கிளம்புகிறது? அது யாரவர்? மதத்தினால் மோகமடைந்து பகவான் ம்ருத்யுஞ்ஜயரான சங்கரருடைய ப்ரபாவத்தை அறியவில்லையா?

இவ்விதமாக மஹா பயத்துக்கும் பயத்தை அளிக்கக்கூடிய இந்த கணங்கள் நான்கு பக்கமும் வனத்தை சூழ்ந்துகொண்டார்கள்.

அந்த ப்ரளயாக்னியைக் கற்களைப்போல் துண்டு துண்டாக்கி, நந்தி, நந்திசேஷனன், சோமநந்தி, மஹோதரன், மஹாக்கனு,மஹாக்ரீவன், மஹாகாலன், ஜிதாந்தகன், ம்ருத்யுப்ரகம்பனன், பீமன், கண்டாகர்ணன், மகாபலன், க்ஷோபணத்திராவணன், ஜம்பீ, பஞ்சாஸ்யன், பஞ்சலோசனன், த்விசிரா சோமன், பஞ்சஹஸ்தன், தசானனன்.

சண்டன், பிருங்ரிடி, துண்டி, ப்ரசண்டன், தாண்டவப்ரியன், க்ஷேமகன் பிஞ்சிண்டிலன், ஸ்தூலசிரஸ், ஸ்தூலகேசன், கபஸ்திமான், க்ஷேமதன்வா, வீரபத்திரன், ரணப்பிரியன், சண்டபாணி, சூலபாணி, பாசபாணி, க்ருசோதரன்.

*தீர்கக்ரீவன், பிங்காக்ஷன், பிங்கனன், பிங்கள மூர்த்தஜன், பகுநேத்திரன், லம்பகர்ணன், கர்வன், பர்வத விக்ரஹன், கோகர்ணன், கஜகர்ணன், கோகிலாக்ஷன், கஜானனன், மயினேகமேயன், விகடாஸ்யன், அட்டஹாஸகன், சீரபாணி, சிவாராமன், வயனீகன், வேணு வானனன், துராதர்ஷன், துஸ்சகன், கர்ஜனன், ரிபுதர்ஜனன் முதலிய நூறு கோடிகணேசர்கள் காசியைச் சூழ்ந்துகொண்டு காற்றின் வேகத்தைக்கூடத் தடை செய்து விட்டார்கள்.*

*துர்வாஸரின் கோபத்திஞல் வ்யாகுலமடைந்த மூன்று புவநங்களும் அந்த நாழியில் அந்த வீரர்கள் கோபமடைந்ததும் கிடுகிடுவென்று நடுங்க ஆரம்பித்தார்கள். அந்தக் காலமே அப்படி இருந்தது.காசியில் சிவகணங்கள் உத்தரவில்லாமல் அவர்கள் தேஜஸ்ஸிஞல் ப்ரகாசமிழந்து சூரியசந்திரர்கள் கூட அங்கு ப்ரவேசிக்க மாட்டார்கள்.*

*இதைப் பார்த்து விட்டு பகவான் உமாபதி மிகவும் கோபமடைந்த சிவகணங்களைத் திருப்பி அனுப்பி விட்டு, கூறிஞர், இந்த அனுசூயாகுமாரன், ஆனமுனி, என்னுடைய அம்சமேயாகும்.*

*அங்கு துர்வாஸரால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கத்திலிருந்து மஹாதேஜோமயமான க்ருபாநிதி பகவான் சம்பு காசிபுரியைக் காப்பாற்றுவதற்காக அந்த லிங்கத்தின் மூலமாகத் தன்னைத்தானே வெளிக்காட்டிக் கொண்டார்.*

*காசியில் முனிவரின் சாபம், அங்கு கொடுக்கும் முக்திக்கு இடையூறு இல்லாதிருக்க வேண்டுமென்று எண்ணி, தானே ப்ரத்யக்ஷமாஞர்.*

*பகவான் துர்வாஸரிடம் கூறிஞர். ஏ மஹா கோபியே, தபஸ்வியே! நான் ஸந்தோஷமடைந்தேன். நீ ஸந்தேஹப்படாமல் என்னே வேண்டுமோ கேள் என்ருர்.*

இப்பொழுது சாபம் கொடுப்பதற்கு தயாராக இருந்த துர்வாஸமுனி மிகவும் லஜ்ஜை அடைந்து கூறினார். கோபத்தினால் நான் குருடாகி புத்தி இழந்து விட்டேன்.

க்ரோதம் என்னும் சத்ருவுக்கு வசப்பட்ட நான் மிகவும் இழிவானவன். நான் மூன்று உலகங்களுக்கும் காசியையே சாபம் கொடுக்க எண்ணினேன். வெட்கம், வெட்கம்.

ஸம்சாரஸாகரத்தில் மூழ்கிக் கிடப்பவர்களுக்கு அடிக்கடி ஜனனமரணம் ஆகிய போக்கு வரவு கழலில் அகப்பட்டு அல்லல்படுபவருக்கு கர்மபாசத்தால் கழுத்து இறுக்கப்பட்டவருக்கு முக்திக்கு சாதனம், இந்த காசி ஒன்றுதான்.

இந்த காசி ஸமஸ்த ஜீவர்களுக்கும் மாதா மகா அமிர்த ரூபமான முலைப்பால் புகட்டி பரமபதத்திற்கு அனுப்புகிறாள்.

மாதாவுக்கும் காசிக்கும் உவமை கூற முடியாது. ஏன் என்றால் மாதா குழந்தையை கர்பத்தில் தரித்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் காசி எப்பொழுதும் கர்பதுக்கத்திலிருந்து விடுதலை அளிக்கிறது.

காசிக்கு ஒருவர் சாபம் கொடுத்தால் சாபம் கொடுத்த வருக்குத்தான் அந்தப் பலன் கிடைக்குமே தவிர காசிக்குக் கிடைக்காது.

இந்த விதமாக துர்வாஸருடைய இந்த வசனம் கேட்டுவிட்டு பகவான் த்ரிலோசனர், காசியை அவர் புகழ்வது கேட்டு மிகவும் சந்தோஷம், அடைந்து கூறினார்.

காசியை ஒருவன் புகழ்ந்தால் அல்லது காசியை ஹ்ருதயத்தில் த்யானித்தால், அவன் கடுமையான தபஸ் செய்யவேண்டிய அவசியமில்லை. அந்தத் தபஸின் பலனும் கோடிக்கணக்கான யாகத்தின் பலனும் அவனுக்குக் கிடைக்கிறது.

காசி என்னும் இரண்டு அக்ஷரங்கள் ஸதா யாருடைய நாக்கு நுனியில் இருந்துகொண்டு இருக்கிறதோ, அந்த புத்திமான் ஒரு பொழுதும் கர்பவாஸத்தை அடையமாட்டான்.

ஒருவர் காலையில் எழுந்திருந்ததும், காசி என்னும் இரண்டு அக்ஷரங்களை ஜபிப்பானுனால் இந்த இரண்டு லோகங்களையும் ஜெயித்து, அலௌகிமான பதத்தை அடைகிறான்.

ஹே! அனுசூய நந்தன! இச்சமயம் காசியைத் துதித்த புண்ணியத்தினால் உனக்கு ஞானம் கிடைக்கிறது. முன்பு செய்த கடும் தபஸ்ஸினால் கூட இந்த ஞானம் கிடைக்கவில்லை.

ஹே! முனியே! என் தீக்ஷையைப் பெற்று என் பூஜையைச் செய்பவர்கூட எனக்கு ப்ரியமானவர் இல்லை. ஏனெனில் அவர்களை விட காசியை ஸ்துதிக்க ஆசை கொண்டவர்களே, எனக்கு ப்ரியமானவர்கள். இது முக்காலும் ஸத்யம்.

நானுவிதமான, தானங்கள், யக்ஞங்கள், தபஸ்கள் இவைகளைச் செய்வது எனக்கு ஸந்தோஷம்தான். ஆனால் காசியைப் புகழ்வதே இவைகள் எல்லாவற்றையும்விட ஸந்தோஷமளிக்கிறது.

நல்ல இதயம் படைத்த ஆனந்தவனத்தைத் துதித்தால் அது வேதோக்த ஸூக்திகளால் என்னைத் துதித்த மாதிரியாகிறது.

ஏ அனுஸூய குமாரனே! தவஸ்ரேஷ்டனே, உன் எல்லா விருப்பங்களும் நிறைவேறட்டும். மகாமோஹத்தையும் நாசம் செய்யும் உத்தம ஞானம் கிடைக்கட்டும்.

ஏ! குற்றமற்றவனே, நீ மற்றும் வேண்டும் வரம்கேள். உனக்குக் கொடுக்கக் கூடாதது என்ன இருக்கிறது?

*கோபித்துக்கொண்டோமென்று லஜ்ஜை அடையாதே, ஸஜ்ஜனங்கள் உன்னைப் போன்ற முனிவர்களையே பெருமையாகக் கூறுகிறார்கள்.*

*இவ்வுலகில் தவம் செய்ய சக்தி உள்ளவர்களே கோபித்துக் கொள்வார்கள், இல்லை என்றால் ஸாமர்த்தியம் இல்லாத புருஷர்கள் தங்கள் பலவீன வ்ருத்தியினால், என்ன செய்ய முடியும்?*

*இதைக் கேட்டவுடன் துர்வாஸ மஹர்ஷி ஸந்தோஷமாக புளகாங்கிதம் அடைந்து மகாதேவரை ஸ்துதி செய்தபின் வரம் கொடுக்கும்படி ப்ரார்த்தித்தார்.*

*ஹே! தேவதேவா, ஜகன்னாதா, கருணாகரா, சங்கரா, மஹா அபராதத்தை த்வம்ஸம் செய்பவனே, அந்தக அந்தகனே, மன்மத சத்ருவே, ம்ருத்யுஞ்ஜயா, உக்ரா,ம்ருடாநீ வல்லபா, த்ரிலோசனா, நாதா, என்மேல் க்ருபை செய்து எனக்கு வரம் கொடுக்க விரும்பினீர்களானால் இந்த ஸ்தலத்திலிருக்கும் லிங்கம் 'காமதர்' என்னும் பெயருடன் விளங்கட்டும். என்னால் தோண்டப்பட்ட இந்தக் குண்டமும் காமகுண்டம் என்னும் பெயருடன் விளங்கட்டும்.*

*இதைக்கேட்டு தேவதேவர் கூறினார், ஏ பரம கோபமுடையவரே, மஹாதேஜஸ்வியே, அவ்விதமே ஆகட்டும். உம்மால் ஸ்தாபிக்கப்பட்ட, இந்த லிங்கம் துர்வாஸேஸ்வரர் என்னும் பெயருடன் விளங்கட்டும்.*

*ஜனங்களின் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுவதானால் காமேஸ்வரர் எனும் பெயருடன் விளங்கட்டும். சனிவாரத்தன்று த்ரயோதசியும் ப்ரதோஷமும் சேர்ந்தால் உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த காமகுண்டத்தில் ஸ்னானம் செய்து உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த காமேஸ்வர லிங்கத்தை தரிசனம் செய்தால் கர்மத்தினால் ஜனித்த தோஷத்தின் காரணமான யம யாதனை அனுபவிக்க மாட்டான்.*

அனேக ஜன்மங்களில் உண்டான ஸஞ்சித பாபங்களும் காம குண்டத்தில் ஸ்ஞனம் செய்த மாத்திரத்தில் க்ஷணத்தில் கரைந்து போகும்.

காமேஸ்வரரை ஸேவிப்பதால், அவர்களுடைய ஸமஸ்த காமனேகள் பரிபூர்ணமாகும். பகவான் சம்பு இந்த விதமாக துர்வாஸருக்கு வரம் அளித்துவிட்டு, அந்த லிங்கத்தில் மறைந்து போனுர்.

ஸ்கந்தர் கூறினுர் - இந்த லிங்கத்தை ஆராதிப்பதனுல் துர்வாஸரின் ஸமஸ்த விருப்பங்களும் பூர்ணமாயின. அதனுல் காசியில் விருப்பங்கள் நிறைவேறும் பொருட்டு மிகவும் கருத்துடன் காமேஸ்வரரை பூஜிக்க வேண்டும்.

மஹா பாதகங்கள் சமனம் அடையும் பொருட்டு காமகுண்டத்தின் அத்யாயத்தை எவன் ஒருவன் படிக்கிறுனே அல்லது கேட்கிறுனே அவன் பாபமற்றவனுகிறுன்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான எண்பத்தைந்தாம் அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 86

பார்வதி கூறினாள் - ஹே தேவதேவா, காசிபுரியில் விஸ்வகர்மேஸ்வரர் என்னும் ப்ரஸித்தி பெற்ற லிங்கம் இருக்கிறது. அந்த லிங்கம் ஆவிர்பவமான கதையைக் கூறுங்கள் என்று கேட்டுக்கொண்டார்கள்.

தேவாதி தேவர் கூறினார் - இப்பொழுது பாதகத்தை நாசம் செய்யும் விஸ்வகர்மேஸ்வர லிங்கத்தின் மனோகரமான, உற்பத்தியின் கதையைக் கூறுகிறேன், கேள்.

பூர்வகாலத்தில், த்வஷ்டா என்னும் ப்ருஹஸ்பதி புத்திரனும், ப்ரம்மாவே மற்றொரு சரீரம் எடுத்து வந்தார்போல் கர்மத்தில் அதிநிபுணனுமான, விஸ்வகர்மா என்றொருவர் இருந்தார்.

அவர் உபநயனமானவுடன், பால்யகாலத்திலேயே பிக்ஷை எடுத்து, சாப்பிட்டு கொண்டு, குருகுலத்தில் வசித்து, குரு ஸேவை செய்து வந்தார்.

ஒருதடவை மழைக்காலத்தின்போது அவருடைய குரு கூறினார் - அப்பனே, எனக்கு மழைக்காலத்தில் கஷ்டப்படாமல் இருக்கும்படியாக ஒரு பர்ணசாலை அமைத்துக் கொடு என்று கூறினார்.

அந்த பர்ணக்குடில் ஒருபொழுதும் ஜீரணமாகக் கூடாது. பழையதாகவும் ஆகக் கூடாது என்றார். குருபத்னி கூறினாள் - த்வ்ஷ்டநந்தனனே! என் சரீரத்துக்குப் பொருத்தமான ஒரு அங்கிதைக்க வேண்டும். பெரியதாக அல்லது தொள தொளவென்று இருக்கக் கூடாது. அது துணியினால் ஆனதாக இல்லாவிட்டால், மிக நல்லது. எப்பொழுதும் ப்ரகாசமாக இருக்கும். மரவுரியினாலானதாக அது இருக்கட்டும்.

பின் குருபுத்ரன் கூறினான் - எனக்கு ஒரு ஜோடி

பாதுகைகள் வேண்டும். இதை அணிவதால் காலில் ஒரு பொழுதும் சகதி ஒட்டாமல் இருக்க வேண்டும். அது தோலினுல் கட்டியதாக இருக்கக் கூடாது. ஓடியாடுவதற்கு இடையூறு செய்வதாக இருக்கக் கூடாது. மேலும் அதை அணிந்துகொண்டு தண்ணீரில் வெகு வேகமாக ஓடக்கூடியதாக இருக்கவேண்டும் என்முன்.

பின் குருகன்னிகை கூறினுள் - ஏ, பெரியவரே, என் காதுக்குத் தகுந்ததாக தங்கத்தால் ஆன ஒரு ஒரு ஜோடி குண்டலங்கள் தங்கள் கையினுல் பண்ணித் தரவேண்டும்.

மேலும் யானை தந்தத்தால் செய்த பெண்கள் விளையாடும் விளையாட்டு சாமானும் உங்கள் கையாலேயே பண்ணித் தரவேண்டும். ஏ, ஸுபுத்தி உடையவனே. குடித்தனத்திற்கு வேண்டிய உபகரணங்களான உரல், உலக்கை முதலியவைகளையும், ஒருபொழுதும் உடையாதவையாகப் பண்ணித் தரவேண்டும்.

மேலும் தேய்க்காமலேயே உள்ளும் புறமும் பளபளவென்றிருக்கும் பாத்திரங்களும் செய்து தரவேண்டும். மேலும் ருசியாக இருக்கும்படி சமைக்க கற்றுக் கொடுக்க வேண்டும். அழலில், என் கைகள் சுட்டுவிடாமல் இருக்க உபாயமும் சொல்லிக்கொடுக்க வேண்டும். மரத்தாலான ஒரு தூணை ஆதாரமாகக் கொண்டு, ஒரு வீடுகட்டிக் கொடுங்கள். அது நான் எங்குபோக விரும்புகிறேனே அதையும் எடுத்துக்கொண்டு போக சௌகரியமாக இருக்கவேண்டும்.

விஸ்வகர்மாவைவிட வயதில் பெரியவர்களான அவனது சகாக்களும் அவனுல் செய்யப்பட்ட பொருளை விரும்பிக் கேட்டார்கள், ஹே! கிரிஸுதே, அந்த சமயம் விச்வகர்மாவிற்கு ஒன்றும் தோன்றவில்லை.

அவன் அப்படியே எல்லோரிடமும் செய்து கொடுப்பதாக ப்ரதிக்ஞை செய்து விட்டு, பயத்தினுலும்

கவலையினாலும், சிந்தனையுடன் திகிலுடன் வனத்திற்குச் சென்றான்.

எல்லாரிடமும் எல்லாம் செய்து தருவதாக நான் ப்ரதிக்ஞை பண்ணினது வாஸ்தவம், ஆனால் ஒன்றும் பண்ணத் தெரியவில்லையே என்று யோசித்தான். என்ன செய்வேன், எங்கு செல்வேன், எனக்கு புத்திசொல்லி யார் சகாயம் செய்வார்கள்? யாரைச் சரண் அடைவேன்?

குரு, குரு பத்தினி, அவர்கள் சந்தானங்கள் எல்லோருக்கும் வாக்குக் கொடுத்து விட்டு வந்தேனே, அதைச் செய்யாவிட்டால் நரகத்திற்கு அல்லவா போக வேண்டி இருக்கும்?

ஏனென்றால் ப்ரம்மசாரிகளுக்கு குருஸேவை ஒன்றே தர்மம். அவர்களின் வார்த்தையை நிறைவேற்றா விட்டால், நான் எப்படிக் கடைத்தேறுவேன்?

குருவின் ஆக்ஞைகளை நிறைவேற்றினால் தான் ஸமஸ்த மனோரதங்களும் ஸித்தி அடையும். இல்லாவிட்டால் அடையாது. அதனால் கட்டாயம் அவர்கள் எல்லோருடைய கார்யங்களையும் முடித்தாக வேண்டும்.

நான் இந்த வனத்தில் உட்கார்ந்து கொண்டு குருவின் ஆக்ஞையை எப்படி நிறைவேற்றுவேன்? புத்தியற்ற எனக்கு யார் உதவுவார்கள்?

குருவின் வார்த்தையை தூரவிடுங்கள். ஒரு சாதாரண மனிதனிடம்கூட ஒரு காரியத்தைச் செய்வதாக வாக்குறுதி கொடுத்து விட்டு அதைச் செய்யாவிட்டால் அதோகதிதான
கொடுத்து விட்டு அதைச் செய்யாவிட்டால் அதோகதிதான
அடையவேண்டும்.

நான் ஒன்றும் அறியாதவன். உதவியில்லாதவன், இந்த கர்மங்களை எப்படிச் செய்வேன். அவர்களிடம் பயந்து

கொண்டு ஆகட்டும் என்று உறுதி கூறி விட்டு வந்து விட்டேன். ஏ, வருங்காலமே உனக்கு நமஸ்காரம்.

விஸ்வகர்மா அரண்யத்தில் இவ்விதமான சிந்தனையுடன் உட்கார்ந்து கொண்டிருந்தான். அச்சமயம் ஒரு தபஸ்வி அவ்வழியே வருவதைப் பார்த்தான்.

அப்பொழுது விஸ்வகர்மா அவ்வனத்தில் தன்னை நோக்கி வந்து கொண்டு இருக்கும் தபஸ்வியைப் பார்த்து, வணக்கம் செய்து கூறினன். ஏ! பகவானே! தங்களை தரிசனம் செய்த உடன் சிந்தையெனும் அக்னியால் தஹித்துக் கொண்டிருக்கும் என் சரீரம் க்ஷணப்பொழுதில் காற்றினல் சிதறப்பட்ட, மூடு பனியில் மூழ்கினதுபோல் குளிர்ந்து விட்டது.

என் இதயமும் ஆனந்தமடைகிறது. தாங்கள் யார்? நான் பூர்வஜன்மத்தில் செய்த தபோபலனே, தபஸ்வியின் உருவமாக என்முன் வந்திருக்கிறதா, அல்லது தயா ஸாகரரான சிவபிரானே என் முன்னல் எழுந்தருளியிருக்கிருரா?

சரி, தாங்கள் யாராக இருந்த போதிலும் தங்களுக்கு நமஸ்காரங்கள். தாங்கள் எனக்கு நற்புத்தி கூறுங்கள். குரு, குருபத்தினி, ஸந்தானங்கள் இவர்கள் உடைய எண்ணத்தை நான் எப்படி நிறைவேற்றுவேன்? தாங்கள் நிர்ஜனமான இந்த வனத்தில் எனக்கு பந்துவாகக் கிடைந்திருக்கிறீர்கள். தாங்கள் இந்த அற்புதமான காரியத்தைச் செய்ய எனக்கு உதவுங்கள் என்றுர்.

கருணையான சித்தத்தையுடைய தபஸ்வியான அந்த ப்ரம்மசாரி, விஸ்வகர்மா இவ்வாறு கூறியதும் சரியானபடி அவனுக்கு உபதேசம் செய்யத் தொடங்கினர்.

ஆப்தனென்று நினைத்து ஒருவன் ஒரு கேள்வி கேட்டால் துர்புத்தியுடைய ஒருவன் சரியானபடி பதில்

சொல்லாவிட்டால் அவன் கல்பம் முடியும்வரை நரகத்தில் வசிக்கிறுன்.

தபஸ்வி கூறிஞர்- ஏ! ப்ரம்மசாரியே, நான் சொல்வதைக் கேள். நீ கூறிய இக்காரியம் அப்படி என்ன அதிசயமானதா? விஸ்வேஸ்வரரின் அனுக்ரஹத்தால ப்ரம்மா கூட ச்ருஷ்டி செய்வதில் நிபுணத்வம் அடைந்து இருக்கிறுரே; ஏ! த்வஷ்டாவின் புதல்வனே? நீ காசிக்குச் சென்று விஸ்வேஸ்வரரை ஆராதித்து வந்தாயாஞல் விச்வகர்மா என்ற உன் பெயர் நிச்சயமாக ஸத்யமாகும்.

காசியில் விஸ்வேஸ்வரரின் க்ருபையால் ஒருவருடைய அபிலாஷையும் நிறைவேறுமல் இருக்காது. பரம துர்லபமான மோக்ஷம்கூட அங்கு சரீரத்தை விடுபவர்களுக்குச்சுலபமாகிறது.

விஸ்வேஸ்வரரின் பரம அனுக்ரஹத்தால் ப்ரம்மா ஸ்ருஷ்டி செய்யவும் விஷ்ணு அதை ரக்ஷிக்கவும் சாமர்த்தியம் உடையவர்களாஞர்கள். ஏ! குழந்தாய், நீ உன் மனேரதங்கள் நிறைவேற வேண்டும் என்று விரும்பிஞயாஞல் நிர்வாண லக்ஷ்மியின் அதிஷ்டானமான காசிக்குச் செல்.

அந்த பகவான் சங்கரர், எல்லாருடைய மனேரதங்களை பூர்ணமாக்குகிறுர். உபமன்யு கொஞ்சம் பால் கேட்டதற்காக க்ஷீரஸாகரத்தையே வரவழைத்துக் கொடுத்தார்.

அங்கு வசிப்பவர்களுக்கு பதத்திற்குப்பதம் தர்மக்குவியல்கள் கிடைக்கிறது. பகவான் மகாதேவருடைய ஆனந்த வனத்தில் கங்கையின் ஜலத்தை ஸ்பர்சித்ததுமே, மகாபாதகத் தொடர்கள், உடனே நாசமடைகின்றன. அத்தகைய காசியை யார்தான் ஆச்ரயிக்கமாட்டார்கள்?

*கோடிக்கணக்கான யக்ஞங்கள் செய்தாலும் இந்த தர்மராசி கிடையாது. ஆனால் காசியின் தெருக்களில் திரிவதால் பதத்திற்குப் பதம் தர்மம் வந்து அடைகிறது. கோடிக்கணக்கான யக்ஞங்கள் செய்தாலும் கிடைக்காத தர்மபதம், காசியின் தெருக்களின் அலைவதனாலேயே கிடைக்கிறது.*

*தர்மார்த்த, காம, மோக்ஷத்தை அடைய விரும்பினால் த்ரைலோக்யபாவவனம் ஆன, காசிபுரிக்கு யாத்திரை செய் காசியில் எல்லாவற்றையும் அளிக்கும் தாதாவான விஸ்வநாதரை ஆச்ரயம் அடைந்தால் ஜனங்களில் எல்லா விருப்பங்களின் பலன்களும் கிடைக்கும்.*

*விச்வகர்மா தபஸ்வியின் வார்த்தைகளைக் கேட்டு சந்தோஷமடைந்து அவரிடமே காசியை அடையும் உபாயத்தைக் கேட்கத் தொடங்கினான். விஸ்வகர்மா கூறினான். ஏ, தபோத்தமா! காசியில் ஸாதகர்களுக்கு மூவுலகிலும் உள்ள பதார்த்தங்கள் சுலபமாகக் கிடைக்குமென்று கூறினீர்கள். அந்த மகாதேவரின் ஆனந்த வனம் எங்கிருக்கிறது? ஸ்வர்க்கத்திலா, பாதாளத்திலா, பூமியிலா எங்கிருக்கிறது?*

*எங்கு ஸம்ஸாரத்தைக் கடத்தும் பகவான் விஸ்வேஸ்வரன் ஜீவன்களுக்கு தாரக ஞானத்தை உபதேசிக்கிறாரோ? எதனால் அவர்கள் தன்மயம் ஆகிறார்களோ, அந்த ஆனந்தவனம் எங்கிருக்கிறது?*

*எங்கு ஸஞ்சாரம் செய்பவர்களுக்கு மோக்ஷலக்ஷ்மி ஸுலபமாகக் கிடைக்கிறாள் என்று கூறினீர்களோ, அங்கு நம் மிகச்சிறிய மனோரதங்கள் நிறைவேறுவது என்ன அதிசயம்?*

*நல்லது, இப்பொழுது அன்புடன் தாங்கள் சொல்லுங்கள், என்னை இந்தக் காசிக்கு யார் அழைத்துக்கொண்டு போவார்கள், என்று? அல்லது நான்*

எப்படித் தனியாகப் போக முடியும் என்றான். தபஸ்வி விஸ்வகர்மாவினுடைய, பக்தி நிரம்பிய இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கூறினார்.

நானே வந்து உன்னை அழைத்துச் செல்லுகிறேனப்பா, ஏனென்றால் நானும் அங்கு போவதற்கு விரும்புகிறேன். துர்லபமான மனுஷ்ய ஜன்மம், கிடைத்த பிறகும் காசிக்குப் போய்ச் சேவிக்கவில்லையானால், பின் இந்த மனுஷ்ய தேஹம் கிடைக்குமா? கர்மபந்தனத்தை நாசம் செய்யும் ச்ரேயஸ் பூமியான காசிதான் கிடைக்குமா? காசி கிடைக்காமலேயே இந்த மனுஷ்ய ஜன்மம் கழிந்துவிட்டால் ஆயுளும் வருங்காலமும் வீணாகப் போகும் அல்லவா, அதனால் சஞ்சலம் ஆன இந்த மனுஷ்ய ஜன்மத்தை நான் பயனுள்ளதாக ஆக்கிக்கொள்வதற்கு காசிக்குப் போகிறேன்.

நீயும் மாயையை உதறிவிட்டு என்கூட காசிக்கு வா, இவ்வாறு கூறவே விஸ்வகர்மா இந்த தயாளுவான தபஸ்வி கூடவே விஸ்வநாத நகருக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கு சென்றதுமே அவன் மனது சாந்த மாயமாய் திகழ்ந்தது. விஸ்வ கர்மாவை அங்கு கொண்டு சேர்த்துவிட்டு தபஸ்வி எங்கு மறைந்தாரோ, தெரியாது.

அப்பொழுது விஸ்வகர்மா நினைத்தான். எல்லோருக்கும் அபீஷ்டத்தைக் கொடுக்கும் தாதாவான விஸ்வநாதரே தபஸ்வியாக வந்தார் என்பதில் சந்தேகமில்லை.

யாருடைய சித் வ்ருத்தி ஸத்ய பதத்தில் நிலை நிற்கிறதோ, அவர் தள்ளியிருந்தாலும் ஹ்ருதயத்தின் உள்ளேயே இருப்பதாக அர்த்தம்.

பகவான் முக்கண்ணர் தன் க்ருபா கடாக்ஷத்தை யார் மேல் வீசுகிறாரோ அவர்கள் வெகு தூரத்தில் இருந்தால் கூட தன் வழியைக் காட்டி தன் பக்கத்தில் இழுத்துக் கொள்கிறார். இது முற்றிலும் உண்மை.

*பகவான் த்ரிலோசனருடைய அற்புதலீலை, அவர் பக்தர்கள் எங்கேயிருந்தாலும் அவர்களுக்கு ஒன்றும் துர்லபம் இல்லை. வனத்தின் ஒரு மூலையில் சிந்தையினால் வ்யாகுல சித்தனாகி, ஞான ஹீனனாகி இருந்த நான் எங்கே, எனக்கு ஸத் உபதேசம் செய்து என்னைக் காசிக்கு இழுத்து வந்த தபஸ்வி எங்கே?*

*நான் பூர்வ ஜன்மத்தில் பகவான் சங்கரரை ஆராதிக்கவில்லை என்பது தெரிகிறது. ஏனென்றால் சரீரம் எடுத்தவுடனேயே எனக்கு அது நன்றாக தெரிந்துவிட்டது. இந்த ஜன்மத்தில் இப்பொழுதுவரை பிள்ளைப் பருவத்தின் காரணத்தினால் ஒரு ஆராதனையும் செய்யவில்லை. இது ஸ்பஷ்டமான ப்ரத்யக்ஷமாகும், பின் சிவனுடைய அனுக்ரஹம் என் மேல் எப்படி விழுந்தது?*

*என் குரு பக்தியே மஹாதேவரின் ஸந்தோஷத்தின் காரணம் என்று தோன்றுகிறது. அதனாலேயே விஸ்வேஸ்வரர் இதுவரை அழைத்து வந்து தயை புரிந்திருக்கிறார். மற்ற தேவதைகளைப் போல மஹேஸ்வரர் கார்ய காரணங்களைத் தேடிக் கொண்டிருப்பதில்லை. கேவலம் க்ருபையினாலேயே தரித்திரர்களுக்கு தயை செய்கிறார்.*

*என்னிடம் அவருக்கு தயை இல்லை என்றால், இந்த தபஸ்வியின் ஸந்திப்பு, எனக்கு எப்படி ஏற்படும். மஹாதேவரே இந்தத் தபஸ்வி ரூபமாக என்னை இங்கு அழைத்து வந்திருக்கிறார். இது ஸத்யம்.*

*கேவலம் தானத்தினாலும், யக்ஞத்தினாலும், தபத்தினாலும் சிவபிரானை ஸந்தோஷமடையச் செய்ய முடியாது. கேவலம் அவருடைய க்ருபையே அவர் ஸந்தோஷமடையக் காரணமாகிறது.*

*ஸாதுக்கள் மதிக்கும் வேத மார்க்கத்தை அனுசரித்து எவன் செல்கிறானோ, அவனுக்கு விஸ்வேஸ்வரர் கட்டாயம் தயை புரிகிறார்.*

இந்த விதமாக விஸ்வேஸ்வரருடைய க்ருபையை உறுதி செய்து கொண்டு த்வஷ்டாவின் புத்திரனுன விஸ்வகர்மா, பவித்திரமாகவும், உறுதியான சித்தத்துடனும் ஒரு சிவலிங்கத்தை ஸ்தாபித்து அதை ஆராதிக்கத் தொடங்கினுர்.

கந்த மூல பலங்களே புஜித்து கொண்டு தினமும் வனத்திலிருந்து அந்தந்த காலங்களில் புஷ்பிக்கும் பூக்களேக்கொண்டு வந்து ஸ்ஞனம் செய்து பூஜிக்கத் தொடங்குவார்.

இவ்விதம் மூன்று வருடங்கள் வரை இடைவிடாமல் விஸ்வகர்மா லிங்க ஆராதனேயில் மூழ்கி இருக்கும்போது சங்கரர் அவன் பூஜையால் சந்தோஷமடைந்தார்.

அப்பொழுது அவர் அந்த லிங்கத்தில் ஆவிர்பவித்துக் கூறுவார் - ஏ, த்வஷ்ட நந்தனு, உன் இந்த திடபக்தியும், குருவின் ப்ரயோஜனத்திற்காக நீ மனவுறுதியுடன் செய்த பூஜையையும் கண்டு நான் சந்தோஷமடைந்தேன், புத்திரனே! நீ வரம் கேள், நான் தருகிறேன்.

உன் குருவும் அவர் பத்தினியும், அவர்களின் இரு குழந்தைகளும், அவர்கள் சொன்னதெல்லாம் நீ செய்து கொடுக்கக்கூடிய சாமர்த்தியம் உன்னிடம் பரிபூர்ணமாக இருக்கும்.

அப்பனே, உன்னுடைய இந்த ஆச்சரியமயமான லிங்கத்தில் நான் இருப்பேன். இதில் விதிப்படி நீ பூஜை செய்ததைப்பற்றி நான் சந்தோஷித்தேன். அதனுல் இன்னும் சில வரங்களே நான் உனக்குத் தருகிறேன்.

ஸ்வர்ணம் முதலிய உலோகங்கள், மரம், கல், மணி, ரத்னம், புஷ்பம், வஸ்த்ரம், கற்பூரம் முதலிய ஸுகந்த த்ரவ்யங்கள், ஜலம், கிழங்கு, வேர், பழம், தோல் முதலிய பதார்த்தங்கள் இவைகளெல்லாம். செயற்கையில்

*செய்வதற்குண்டான சக்தி உனக்கு உண்டாகட்டும். யார் யார் எங்கெல்லாம், எந்தெந்த தேவாலயங்கள் கட்டவேண்டும் என்று நினைக்கிறார்களோ, அவைகளைக் கட்டக் கூடிய சக்தி நீ பெறுவாய்.*

*அனேக விதமான நகைகள் செய்வது, ஸகலவித சிற்பங்கள் செய்வது, யந்த்ரங்கள் செய்வது இவைகள் எல்லாவற்றையும் மற்றொரு ப்ரம்மா போல் நீ அறியக்கடவாய். நானாவிதமான யந்த்ரங்கள், அனேகவிமான ஆயுதங்கள், நீர் நிலைகள், அழகான கோட்டைகள் இவைகளை மற்றொருவர் செய்ய முடியாத வண்ணம் அதிசயிக்கத்தக்க விதமாய் நீ செய்வாய்.*

*என் வரதானத்தின் பலனாய் இந்தக்கலைகள் எல்லாம் உனக்கு ஸ்வயமாகவே வரும். எல்லாவிதமான இந்த்ரஜால, மஹேந்த்ர ஜால வித்தைகளும் உனக்கு அதீனமாகும். ஸகலகலைகளின் நுட்பமும், புத்தி அறிவும் உனக்கு உண்டாகும்.*

*என் வரத்தின் ப்ரபாவத்தால், எல்லாருடைய மனோ வ்ருத்தியையும், நீ அறிந்து கொள்வாய். எவ்வளவென்று கூறுவது? ஸ்வர்க்க, மத்ய, பாதாளமான மூன்று உலகின் கர்மங்களும், நீ தானே அறிந்து கொள்வாய்.*

*ஏ, குற்றமற்றவனே, ஸமஸ்த உலகங்களிலும் உள்ள எல்லா கர்மங்களும் நீ அறிவதனால் விஸ்வகர்மா என்று உன் பெயர் அர்த்தமுள்ளதாகிறது.*

*ஆச்சர்யம் லிங்கபூஜையில் ஆழ்ந்திருப்பவனுக்கு என்று, கொடுக்க கூடாதது ஒன்றும் கிடையாது. இன்னும் வரம் வேண்டுமோ, கேள், நான் தருகிறேன்.*

*ஸத்புத்தியுடைய ஜனங்கள் வேறு எந்த இடங்களில் சிவ பூஜை செய்தாலும் அவர்களுக்கு வாஞ்சித பலனை நான் அளிக்கிறேன். அப்பொழுது காசியில் செய்யும்*

பூஜையைப்பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? இந்தக் காசிபுரியில் லிங்கபூஜையோ, லிங்க ஸ்தாபனமோ, லிங்கஸ்துதியோ செய்யும் ஒருவன், என் உருவைத் தரித்துக்கொள்ளும் நிலைக்கண்ணாடியாகிறான்.

அதனால் லிங்கபூஜை செய்யும், ஏ ஸுக்ருதனே! நீ காசியில் லிங்கபூஜை செய்வதால் என் மூன்று கண்களுக்கும் கண்ணாடியாகிறாய்.

மந்த மதி படைத்த பன்றியைப் போன்ற ஜனங்கள் இந்தக் காசிபுரியில் என்னைவிட்டு, வேறு தேவதைகளை பூஜித்தால் அவன் முகத்திலிருந்து வஞ்சிக்கப்படுகிறான்.

ப்ரும்மா, விஷ்ணு, சந்த்ரன், இந்திரன் முதலிய தேவதைகள் கூட என்னைத் தவிர வேறு ஒருவரையும் பூஜிப்பதில்லை. அதனால் மோக்ஷ அர்த்திகள் இந்த ஆனந்தவனத்தில் என்னையே பூஜிக்க வேண்டும்.

நீ ஆனந்தவனத்தில் வந்து என்னைப் பூஜித்த மாதிரி, அனேக புண்ய கர்மங்கள் செய்தவர்கள் இங்கு வந்து என்னைப் பூஜித்து என்னை அடைந்து இருக்கிறார்கள். நீ என் அனுக்ரஹத்திற்குப் பாத்திரமாகி விட்டாய்.

அதனால் அதிக துர்பலமான வரங்களைக் கேட்க விரும்பியானாலும் அவைகள் கிடைத்ததாகவே எண்ணிக்கொள். இப்பொழுது தாமதமில்லாமல் சீக்கிரம் கேள்.

விஸ்வகர்மா கூறினார்- ஏ, சங்கரா, நான் முட்டாளாக இருந்தபோதிலும், இந்த லிங்கத்தை ஸ்தாபித்திருக்கிறேன். இதை மற்றவர்கள் எல்லாம் ஆராதித்து உத்தம புத்தியை அடைவார்களாக.

தவிர என்னுடைய இன்னொரு காரியம் இருக்கிறது. அதையும் தாங்கள் அவசியம் கொடுக்க வேண்டும். எத்தனையோ கலைகளைத் தாங்கள் எனக்கு வரமாகக்

கொடுத்திருக்கிறீர்கள். என்னைக் கொண்டு தங்கள் கோவிலை எப்பொழுது கட்டச் சொல்வீர்கள்? மஹாதேவர் கூறினார், அப்படியே, ஆகுக.

நீ கூறியபடியே உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கத்தை ஆராதிப்பவர்கள், சகல செல்வமும் பெற்று மோக்ஷ தீக்ஷை பெறுவார்கள்.

அப்பனே சில நாட்கள் கழித்து, ப்ரம்மாவிடம் வரம் பெற்ற திவோதாஸ் வெகு தினங்கள் வரை ராஜ்யபோகத்தை அனுபவித்துவிட்டு கணேசனின் மாயையால் மிக வைராக்ய சித்தனாவார்.

பிறகு விஷ்ணுவின் உபதேசத்தால், சஞ்சலமான ராஜலக்ஷ்மியை தியாகம் செய்து ஆராதித்து, நிர்வாண லக்ஷ்மியை இங்கேயே அடைவான். அப்பொழுது நீ எனக்கு இங்கு அரண்மனையைப் போன்ற பெரிய கோவிலை நிர்மாணிப்பாயாக. இப்பொழுது நீ போ. குருவின் ஆக்கினையைப் பூர்த்தி செய்யப் ப்ரயத்தனம் செய். குருவிடம் பக்தி செலுத்தபவர்கள். ஸந்தேஹம் இல்லாமல் எனக்கு பக்தி செய்பவர்களேயாவார்.

குருவை அவமானப்படுத்துகிறவர்களை நானும் அவமானப் படுத்துவேன். ஒரு சிஷ்யனுக்கு உசிதமான குருவின் ஆக்ஞையைப் பூர்த்தி செய்வாய். பிறகு அங்கிருந்து வந்து என்னண்டையில் இருந்து கொண்டு தூய்மையான உள்ளத்துடன் தேவதைகளுக்கு ஹிதமான காரியங்களைச் செய்து கொண்டு, முக்தி அடைய விரும்பும் வரை என்னிடமே இரு.

உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கத்தில் நான் எப்பொழுதும் ஸான்னித்யமாக இருந்து கொண்டு வருகிறவர்களுக்கு அபீஷ்ட பலன் கொடுத்துக் கொண்டிருப்பேன். பக்தர்களுக்கு முக்தியைக் கொடுக்க மோக்ஷலக்ஷ்மியும் சமீபத்திலேயே இருப்பாள்.

அங்காரேஸ்வரருக்கு வடக்குப் பக்கத்தில் இருக்கும் லிங்கத்தைப் பூஜை செய்பவர்களுடைய மனோரதம் க்ஷணத்திற்கு க்ஷணம் நிறைவேறும். இவ்வாறு கூறி பகவான் சிவபிரான் அந்தர்த்யானமானார்.

விஸ்வகர்மாவும் தன் குருவிடம் சென்று, அவர்கள் விரும்பிய காரியங்களெல்லாம் முடித்து, தன் வீட்டை அடைந்தார். அங்கும் தன் காரியங்களினால் மாதா பிதாக்களை ஸந்தோஷம்படுத்தக் காசிக்கு வந்தார் புத்திமானான த்வஷ்டாகுமாரன் ஸமஸ்த தேவதைகளுக்கும் ப்ரியமாக நடந்து கொண்டு, இன்று வரை தான் ப்ரதிஷ்டித்த லிங்காராதனையில் ஆழ்ந்து காசியிலே இருக்கிறார்.

மஹாதேவர் கூறினார்- ஏ, மலையரசன் மகளே, தேவி, காசியில் முக்தி கொடுப்பதில் ஸமர்த்தரான லிங்கங்களைப்பற்றி நீ கேட்டாய், நான் அவைகளை உனக்கு எடுத்துக் கூறினேன்.

ஓங்காரேஸ்வரர், த்ரிலோசனர், மகாதேவர் - க்ருத்திவாஸேஸ்வரர், ரத்னேஸ்வரர், சந்த்ரேஸ்வரர், கேதாரேஸ்வரர், தர்மேஸ்வரர், வீரேஸ்வரர், காமேஸ்வரர், விஸ்வகர்மேஸ்வரர், மணிகர்ணிகேச்வரர் எனக்கும் பூஜிக்கத் தகுந்தவரான அவிமுக்தேஸ்வரர் உலக ப்ரஸித்தி பெற்ற ஸகல ஸௌக்யங்களையும் அளிக்கும் என் பெயருடன் இருக்கும் விஸ்வேஸ்வரர் இந்த 14 லிங்கங்களும் முக்கியமானவை.

அவிமுக்த க்ஷேத்ரத்துக்கு வந்து, விஸ்வநாதரை பூஜை செய்தாரானால் அவர்கள் நூறுகோடி கல்பம் ஆனாலும் புனர் ஜன்மம் எடுக்கமாட்டார்கள்.

ஒழுங்கான ஸந்யாசிகளுக்கு ஒரே இடத்தில் சேர்ந்தாற்போல் ஒரு வருஷம் இருக்கக்கூடாது. அவர்கள் நான்கு மாதம் ஒரு இடத்தில் இருந்து விட்டு, எட்டுமாதம் சுற்றிக்கொண்டிருக்க வேண்டும்.

ஆனால் காசியை அடைந்தவர்களுக்கு அப்படி சுற்றிகொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை ஏனென்றால் இங்கு மோக்ஷம் நிச்சயம். அதனால் காசியை விட்டு ஒருநாளும் போகக்கூடாது.

ஆனந்தவனத்தைத் தவிர வேறு ஒரு தபோவனத்திற்கும் போகக்கூடாது. ஏனென்றால் என்னை நம்பி வந்தவர்களுக்கு இங்கேயே தபம், யோகம் மோக்ஷம் எல்லாம் கிடைக்கும்.

எல்லா ஜந்துக்களுக்கும் க்ருபைபுரியவென்றே, நான் இந்த க்ஷேத்ரத்தை நிர்மாணித்திருக்கிறேன். இந்த க்ஷேத்ரத்தின் ஸாதகர்கள் நிச்சயமாக ஸித்தி பெறுகிறார்கள்.

ஏனென்றால் இறந்த காலத்தில் செய்த பாபமானாலும், நிகழ்காலத்தில் செய்ததானாலும் அறியாமலோ செய்ததானாலும் அவைகள் எல்லம் ஆனந்த வனத்தை தரிசித்ததுமே மறைந்து போகும்.

அதி உக்ரமான தபஸ், மஹாதானங்கள், கடுமையான வ்ரதங்கள் யமம், நியமம், அத்யாத்ம யோகாப்யாஸம், மகாயக்ஞம் ஸமஸ்த உபநிஷத்துக்கள் கூட வேதாந்த சாஸ்திரத்தை அப்யஸித்தால் என்ன பலன்கள் கிடைக்குமோ, அது இந்த க்ஷேதரத்தில் அனாயாஸமாகக் கிடைக்கும்.ஜீவர்களுக்கு இதுவரை கர்ம சூத்திரத்தால் கட்டுண்டு உலகத்தில் சுழன்று வரவேண்டியிருந்தது. ஆனால் அது விஸ்வேஸ்வரர் புரிக்கு வந்து சரீரத்தை த்யாகம் செய்யும் வரைக்கும்தான்.

ஏ, தேவி! இந்த காசியில் நான் லீலா விநோதமாகவே எண்பத்திநாலு லக்ஷம் ஜீவராசிகளுக்கும் என் பதவி அளிக்கிறேனே, அதை மஹா மஹாயாகங்கள் செய்தவர்களாலும் அடைய முடியாது.

இந்த அவிமுக்த க்ஷேத்ரத்தில் வஸிப்பதால் மகாபூதங்களினால் உண்டான நாலுவித பூதங்களுக்கும்

*காலக்ரமமாக மரணமடைந்த பிறகு, அத்யந்த விஷய வாசனையில் சிக்கியவரும் தர்மத்திலிருந்து பரா முகமாக இருப்பவரும், இங்கு காலக்கிரமத்தில் சரீரத்தை த்யாகம் பண்ணினவுடன் அவர்கள் திரும்பவும் ஸம்ஸாரத்தில் ப்ரவேசிக்க மாட்டார்கள்.*

*ஹே! தேவி! மஹாமகத்தில் உஷர்காலத்தில் தீர்த்த ராஜ் ப்ரயாகையில் தீர்த்தஸ்னைம் செய்வதால் அந்தப் பலன் வாராணஸியில் கோடிபங்கு அதிகமாக க்ஷணம்தோறும் கிடைக்கிறது.*

*இந்த க்ஷேத்ரத்தின் மஹிமையை வெறும் வாக்கினால் வர்ணிக்க முடியாது. நான் உன்னை ஸந்தோஷப்படுத்துவதற்காக ஒரு உத்தேசமாக எடுத்து சொன்னேன். உத்தம ஜனங்கள் இந்த 14 லிங்கங்களின் பலனைக் கேட்டார்களானால் அவர்கள் இந்த 14 லோகங்களிலும் பூஜிக்கப்படுவார்கள் என்பது திண்ணம்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான எண்பத்திஆறுவது அத்யாயம்*

*ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 87

அகஸ்த்யர் கூறினார் - ஏ ஸர்வக்ஞபுத்ர, ஷடானன, இந்த முக்தியளிக்கும் எல்லா லிங்கத்தினுடைய கதையைக் கேட்டு அமுதம் பருகிய தேவர்களைப் போல் நான் பரம திருப்தி அடைந்தேன். உண்மையில் இந்த ஆனந்த கானம் இந்த ஓங்காரேஸ்வரர் முதலிய லிங்கங்களின் ஸான்னித்யத்தினால், இந்த உலகில் பாபிகளுக்கும்கூட ஆனந்தத்தை அளிக்கிறது. இந்த ஸமஸ்த லிங்கங்ளுடைய வ்ருத்தாத்தங்களைக் கேட்ட நான் காசி க்ஷேத்திரத்தின் தத்வத்தைக் கேட்டுவிட்டு ஜீவன் முக்த தசையில் இருக்கிறேன். ஹே - விபோ! அங்குள்ள தக்ஷேஸ்வரர் முதலிய சதுர்தச லிங்கங்களைப்பற்றிக் கூறினீர்கள். அவைகளுடைய மாகாத்ம்யங்களையும் வர்ணியுங்கள்.

எந்த தக்ஷப்ராஜபதி பகவான் சங்கரரை நிந்தித்தானோ அவன் பிறகு எப்பொழுது சிவலிங்கம் ப்ரதிஷ்டை செய்தான்? இது விசித்ரமான விஷயம். .

இந்தவிதமான அகஸ்த்யருடைய வார்த்தையைக் கேட்டு மயூரவாகனர் ஸ்கந்தர், தக்ஷேஸ்வரருடைய உற்பத்திக் கதையைக் கூறத் தொடங்கினார்.

ஸ்கந்தர் கூறுவார் - ஹே! முனியே! கல்மஷத்தைப் போக்கும் அந்தக் கதையை நீர் கேளும். தக்ஷப்ரஜாபதி ததீசி முனிவர் நிந்தித்தவுடன் ஆட்டு முகத்துடன், விரூபலக்ஷணத்துடன், ப்ராயசித்தம் செய்துகொள்ள ப்ரம்மாவிடம் சென்றார் - பின் ப்ரம்மாவின் உபதேசத்தால் யாகம் செய்யும் உத்தேசத்துடன் காசியை வந்தடைந்தார்.

இதன் மூலகாரணம் பின்வருமாறு - ஒருதரம் தேவாதி தேவரான, சந்திரமௌலியை தரிசிப்பதற்காக பகவான் விஷ்ணு, ப்ரம்மா, இந்த்ராதிலோக பாலர்கள், விசுவேதேவர், மருத்கணங்கள், ஆதித்யர், வாயு, ருத்ரகணங்கள், ஸாத்யர்கள், வித்யாதரர்கள்,

*நாககணங்கள், மகரிஷிகணங்கள், அப்ஸரஸ்கள், யக்ஷர், கந்தர்வ ஸித்தர்கள், சாரணகணங்கள் முதலியவர்களுடன் கைலாஸம் சென்றார்.*

*அவர்கள் மெய்சிலிர்த்து பகவான் சங்கரரை, நானாவிதமாகத் துதித்தார்கள். சிவபிரானும் அவர்களுக்கு உசிதமான மரியாதை செய்தார். அவர்களும் பகவானையே பார்த்துக்கொண்டு அவரவர் ஆஸனங்களில் அமர்ந்தார்கள்.*

*அவர்கள் எல்லோரும் அமர்ந்த பின், சிவபிரான் பகவான் விஷ்ணுவைக் கைகளால், தொட்டுக்கொண்டு கூறுவார்.*

*ஸ்ரீவத்ஸ மருவினால் அலங்கரிக்கப்பட்டவரே, ஹரியே! உமது மூவுலக ஆழியும் முழுமையாகக் கண்டனம் இல்லாமல் இருக்கிறது. ரணஸ்தலத்தில் நீர் தைத்ய தானவர்களை, ஆளுகிறீர். சுத்த ப்ராம்மணர்களை எனது ருத்ர உருவமாகவே காணுகிறீர்.*

*உலகத்தில் பசுக்கள் இடையூறு இல்லாமல் வாழ்கின்றனவா? ஸ்த்ரீகள் லக்ஷ்மீ கடாக்ஷத்துடனும், பாதிவ்ரத்யத்துடனும் வாழ்கிறார்களல்லவா?*

*உலகில் மிகுந்த தக்ஷிணையுடன் விதிப்ரகாரம் யக்ஞங்கள் நடக்கின்றன அல்லவா? தபஸ்விகளின் தபஸில் ஒரு விதமான இடையூறும் இல்லாதிருக்கிறதல்லவா?*

*த்விஜர்கள் ஆனந்தத்துடன் அங்கவர்களுடன் வேதபாராயணம் பண்ணி வருகிறார்களல்லவா? ஹே, கேசவ! அரசர்கள் உம்மைப்போல் பிரஜைகளை பரிபாலனம் செய்கிறார்களா?*

*நான்கு வர்ணத்தவரும் ஸந்தோஷ சித்தராக இந்த்ரியநியமத்துடன் தங்கள் தங்கள் தர்மத்தில் நிஷ்டாபூர்வமாக இருக்கிறார்கள் அல்லவா?*

*இந்தவிதம் தூர்ஜடி ஸந்தோஷ மனத்துடன் வைகுண்ட நாதரிடம் கேட்டுவிட்டு ப்ரம்மாவிடம் வினவினர் ஹே! ப்ரம்மன்! ப்ரம்ம தேஜஸ்கள் வளருகிறதல்லவா? உமது த்ரைலோக்ய மண்டலத்தில் ஸத்ய தர்மம் வழுவாது பாதுகாக்கப்படுகிறதா? ஹே! விதியின் தாதாவே! எல்லாத் தீர்த்தங்களும் தடங்கல் இல்லாமல் யாத்திரை செய்ய எளிதாக இருக்கிறதா?*

*ஹே! இந்த்ராதி தேவ கணங்களே! நீங்கள் விஷ்ணுவின் புஜதண்டத்தால் பாலிக்கப்பட்டு, தங்கள் நகரங்களில் ஸ்வதந்த்ரமாக ராஜ்ய பரிபாலனம் செய்து வருகிறீர்களல்லவா?*

*இப்படியாக பகவான் பூதநாதர் ஒவ்வொரு தேவதையினிடமும் ப்ரத்யேகம், ப்ரத்யேகமாகக் கேட்டு விட்டு அவர்கள் வந்த காரணங்களை அறிந்து, அவர்களை அனுப்பிவிட்டுத் தனது மாளிகைக்குத் திரும்பினர்.*

*ஸந்தோஷமடைந்த தேவதைகளை அவரவர் ஸ்தானங்களுக்கு அனுப்பிய பின்பு, தனித்து நின்ற தேவியின் பிதாவான தக்ஷப்ரஜாபதி வழியிலேயே நின்று கொண்டு யோசிக்கத் தொடங்கினர். எனக்கும் மற்ற தேவதைகளைப் போல்தான் மதிப்பு கிடைத்தது. ஒன்றும் அதீதமாக நடக்கவில்லை. இருந்தும் அவர் மந்த்ராசலத்தினல் கலக்கப்பட்ட ஸமுத்ரம்போல் மிகவும் மனம் கலங்கினர். மிகப் கோபமடைந்து தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டார்.*

*இந்த சங்கரன் எனது பெண்ணைத் திருமணம் புரிந்து கொண்டதால், மிக அகங்காரி ஆகிவிட்டான். அவனும் ஒருவருக்கும் உறவினன் அல்ல.*

*மற்றவர்களும் அவனுக்கு உறவில்லை. இவன் எந்த வம்சத்தில் ஜனித்தான்? இவன் கோத்ரம் என்ன? எந்த தேசவாஸி? இவன் ஸ்வபாவம் எப்படி? ஜீவனம் எப்படி*

நடத்துகிறுன்? நடத்தை எப்படிப்பட்டது? விஷத்தைக் குடித்தான். காளை மாட்டின் மேலேறி ஊர் சுற்றுகிறுன்.

எப்பொழுதும் இவன் தபஸ்வி கூட்டத்திலும் சேர்ந்தவனல்ல. இவன் என்ன தபஸ்வி? அஸ்த்ர சஸ்த்ரங்களை வைத்துக் கொண்டிருக்கிறுனே, க்ருஹஸ்தன் என்றும் கூற முடியாது. எப்போது பார்த்தாலும் சுடலையில் அல்லவா திரிந்துகொண்டிருக்கிறுன்.

இவன் ப்ரம்மாசாரியும் இல்லை. அதுதான் விவாஹம் பண்ணிக் கொண்டிருக்கிறுனே. இவன் தன் ஐச்வர்யத்தில் கர்வத்துடன் நிமிர்ந்து நிற்கிறுன். இவனை வானப்ரஸ்தன் என்றும் எப்படிக் கூறுவது?

வேதம் ஓதமாட்டான். அதனுல் இவன் ப்ராம்மணன் அல்ல. அஸ்த்ர சஸ்த்ரம் வைத்துக்கொண்டிருப்பதாலேயே க்ஷத்ரியன் என்றும் கூறமுடியாது.

ஏனென்றுல் க்ஷத்ரியனுனுல் விபத்திலிருந்து உலகைக் காக்க வேண்டும். இவன் உலகில் பிரளயத்தை அல்லவா உண்டுபண்ணுகிறுன். இவனை வைச்யன் என்று கூறலாம? கூடாது. இவன் எப்பொழுதும் தரித்திரர்களுடன் அல்லவா வாஸம் செய்கிறுன்?

நாகத்தை பூணூலாகத் தரித்துக் கொண்டிருக்கிறுன். அதனுல் சூத்ரன் என்றும் கூறுவதற்கில்லை. இவ்விதம் நான்கு வர்ணங்கள் ஆச்ரமங்கள் இவைகளுக்கு அதீதனுக இருக்கிறபடியால் இவனை என்ன என்று நினைப்பது?

எல்லாருடையவும் பரிசயம், அவர்கள் ப்ரக்ருதியினுலேயே அறியமுடியும். இவன்தான் ப்ரக்ருதியை லக்ஷ்யம் செய்வதில்லையே. கேவலம் மரக்கட்டை போல் அல்லவா செயலற்று இருக்கிறுன். இவனைப் புருஷன் என்றும் கூறமுடியாது. பாதி தேஹம் பெண்ணுக அல்லவா இருக்கிறது.

இவன் பிள்ளை பிராயத்தவன் அல்ல. இவனைப் பெண்ணென்றும் கூறமுடியாது.

ஏனென்றால் முகத்தில் மீசை, தாடி இருக்கிறது. இவனை நபும்ஸகன் என்றும் கூறமுடியாது. இவனுடைய லிங்கத்தைத் தான் எங்கும் பூஜிக்கிறார்களே, இவன் வாலிபனும் இல்லை.எல்லா உலகமும் இவனையே, புராணன், அனாதி வ்ருத்தன் என்று புகழ்கிறதே.

அதனால் இந்தப் பழமையான கிழவனை யௌவனன் என்றும் கூறத்தரமில்லை. பின்னும் ஜராமரணம் அற்றவனைக் கிழவன் என்றும் எப்படிக் கூறுவது?

ப்ரளய காலத்தில் ப்ரம்மாதி தேவதைகளை ஸம்ஹரித்த பிறகும் இவனைப் பாதகன் என்று கூறமுடியாது. மேலும் கோபத்துடன் ப்ரம்மாவின் சிரத்தைக் கிள்ளியதால் இவனுக்கும் புண்ணியம் என்பது லேசமும் கிடையாது.

எப்பொழுதும் எலும்புகளையே ஆபரணமாகப் பூண்டு கொண்டு இருக்கிறான். துணியை எறிந்துவிட்டு நிர்வாணமாக இருக்கிறான். இவனிடம் பவித்ரத்தன்மை எங்கிருக்கிறது? இவனுடைய சேஷ்டைகளையும் சரித்திரத்தையும் பற்றி எவ்வளவென்று சொல்வது?

இந்த ஜடத்தினுடைய அற்புதமான துடுக்குத்தனத்தைத்தான் பார்த்தோமே, பூஜிக்கப்பட்டமாமனார் வந்திருக்கிறாரே என்று ஆசனத்தை விட்டு எழுந்திருக்கக்கூட எல்லையே.

பெரும்பாலும் பெற்றோர்கள் இல்லாத பிள்ளைகள் இப்படித் தான் குலம் கெட்டு, குணம் கெட்டு, கர்ம ப்ரஷ்டனாய், அடக்குவாரில்லாதிருப்பார்கள்.

சுயேச்சயாய்த் திரிந்துகொண்டும், அஸஹாயமாய் இருந்த போதிலும் எங்குமே அவர்கள் அஹங்காரிகளாகத்தான் இருப்பார்கள். பரம தரித்ரனாக

இருந்த போதிலுமம் தங்களை ஐச்வர்ய சாலிகளாக நினைத்துக் கொள்வார்கள்.

விசேஷமாக மாப்பிள்ளைகளின் ஸ்வபாவமே அப்படித்தான். அவர்களுக்குப் பெயருக்கு இரண்டு காசு சேர்ந்தபோதிலும், மிகவும் கர்வப்பட்டுக் கொள்வார்கள்.

என் மாப்பிள்ளையான சந்திரனே மஹா கர்வி. என் பெண்களில் ரோகிணியைத்தான் விரும்புவான். க்ருத்திகை முதலியவர்களிடம் அன்பே கிடையாது. அதனால் அவனை நான் க்ஷயரோகியாகப் போகக் கடவது என்று சாபமிட்டேன். இன்று அந்த த்ரிசூலியும் அவன் வீடு தேடிச் சென்ற என்னை அவமானப்படுத்தினான். அதனால் நானும் அவன் கர்வத்தைப் போக்கடிக்கிறேன்.

எல்லாவிதத்திலும் அவன் மானத்தை வாங்கிவிடுவேன் என்று இந்த விதமாக மனதில் தர்க்க விதர்க்கங்கள் பண்ணிக்கொண்டு அந்த தக்ஷப்ரஜாபதி தன் வீடு வந்து சேர்ந்தார்.

பின் இந்த்ராதி தேவதைகளை அழைத்துக் கூறினார். நான் ஒரு யாகம் செய்யப் போகிறேன். நீங்கள் எல்லோரும் எனக்கு ஸஹாயம் செய்யவேண்டும் என்று கூறினார்.

சீக்கிரமாக யக்ஞ ஸாமக்ரிகளைச் சேகரித்துவிட்டு தக்ஷப்ரஜாபதி ஸ்வேத த்வீபத்திற்குச் சென்ற பகவான் அச்சுதரை இந்த மகாயக்ஞத்திற்கு, மேற் பார்வையாளராகவும் யக்ஞபுருஷனாகவும் வரித்தார். ஸமஸ்த வேதாத்யாயிகளான ரிஷிகளையும் யக்ஞத்திற்கு ரித்விக்குகளாக வரித்தார்.

பிறகு தக்ஷ ப்ரஜாபதியின் மஹாயக்ஞம் ஆரம்பமாயிற்று. பின் தக்ஷனுடைய விசாலமான யக்ஞ சாலையில் எல்லா தேவதைகளும் வந்திருப்பதையும், ஸாக்ஷாத் பரமேச்வரர் மாத்திரம் வரவில்லை என்பதையும்

ப்ரம்மா அறிந்துகொண்டார். பின் ஏதோ ஒரு வ்யாஜத்தை வைத்துக்கொண்டு ப்ரம்மா தன் லோகத்தை அடைந்தார்.

பின் ததீசிமுனியும், ஸமஸ்த த்ரைலோக்யவாஸிகளும் தக்ஷனுடைய யக்ஞ சாலைக்கு வந்திருப்பதையும், வஸ்த்ராலங்காரங்களினுல் தக்ஷன் அவர்களை ஸன்மானப்படுத்துவதையும் பார்த்தார்.

ஆனுல் அங்கு மகாதேவனையும், ஸதியையும் மாத்திரம் காணவில்லை. தக்ஷனின் நன்மையை விரும்பி ததீசிமுனிவர் கூறினுர்.

ஏ, தக்ஷ ப்ரஜாபதியே, நீ மூர்த்திகரித்தப் பெரிய தர்மவான். பெரியதாதா, உன்னைப்போல் ஸாமர்த்யசாலி ஒருவரும் கிடையாது என்பதில் ஸந்தேஹமில்லை.

ஏ, மஹாமதியே, நீ யக்ஞத்திற்கு ஏற்பாடு செய்திருப்பதைப் பார்த்தால், இதுபோல் இதுவரை வேறு ஒருவரும் செய்ததில்லை என்று தெரிகிறது.

இதனுல் யக்ஞம் என்பது எப்பொழுதும் செய்யக்கூடிய காரியமல்ல. யக்ஞத்தைப்போலத் தீங்கு விளைவிக்கக் கூடியதும் வேறு ஒன்றும் இல்லை.

ஆனுல் உன்னைப் போல ஐச்வர்யசாலிகள் இவ்விதம் யக்ஞம் செய்யவேண்டியதுதான். உன்னுடைய குண்டத்தில் அக்னிதேவர் தானே வந்து எழுந்தருளியிருக்கிருர். இந்த்ராதி தேவர்களும் ப்ரத்யக்ஷமாய் இருக்கிருர்கள்.

ஸமஸ்த மந்த்ரங்களும் மூர்த்திகரித்து இங்கு எழுந்தருளி இருக்கின்றன. பகவான் யக்ஞபுருஷர், அவரே இங்கு எழுந்தருளியிருக்கிருர். ஸ்வயம் தேவாசாரியரான ப்ருஹஸ்பதியே ஆசார்ய பீடத்தில் எழுந்தருளியிருக்கிருர். இங்கு வீற்றிருக்கும் கர்மகாண்ட, பாரங்கதரான ப்ருகு ஸாஷாத், ப்ரம்மாவே தான்.

*இந்த பூஷா, பகர், பகன், ஸரஸ்வதிதேவி எல்லோரும் இங்கு எழுந்தருளியிருக்கிறார்கள். இந்த திக்பாலர்கள் எல்லோரும் தாங்களாகவே வந்து யக்ஞத்தை ரக்ஷிப்பதற்காக இங்கு எழுந்தருளி இருக்கிறார்கள்.*

*தாங்களே, சதரூபா தேவியும் யக்ஞதீக்ஷை மாப்பிள்ளையான தர்மராஜர் தன் பத்தினிகளுடன் இங்கு எழுந்தருளியிருந்து தானே மிகுந்த பத்து கருத்துடன் ஸர்வ தர்ம காரியங்களையும் கவனித்துக் கொள்கிறார்.*

*தங்கள் மாப்பிள்ளைகளில் மூத்தவரான பரமவித்வான் சந்த்ரன் தன் இரு மனைவிகளுடன் இங்கு வந்திருந்து காரியங்களை மேற்பார்வையிட்டு ஔஷதிகளையும் கொண்டு வந்து சேகரித்துக் கொண்டு இருக்கிறார்.*

*முன்பு, ராஜஸூய யக்ஞத்திற்காக தீக்ஷை எடுத்துக் கொண்டு மூன்று உலகங்களும் புகழும்படி தக்ஷிணை கொடுத்தவரும், ப்ரஜாபதிகளில் ஸர்வ ச்ரேஷ்டரும், மரீசியின் புதல்வரான, காஸ்யபர் தமது 13 பத்தினிகளுடன் இங்கு எழுந்தருளி இருந்து, காரியங்களை மேற்பார்வையிட்டுக் கொண்டிருக்கிறார்.*

*ஸ்வயம் காமதேனுவே ஹவிஸ்ஸுக்கு வேண்டிய நெய்யைக் குடம் குடமாக அளிக்கிறாள். கற்பக வ்ருக்ஷம் ஸமித்துக்களும் தர்ப்பையும் கொடுப்பதோடல்லாமல் யாகக் கரண்டிகளான ஸமஸ்ஸு முதலியவைகளும், இன்றி அமையாத மரப்பாத்திரங்களையும், சகடம்,மண்டபம் முதலியவைகளையும் சேகரித்து வைத்துக் கொண்டிருக்கிறது.*

*விஸ்வகர்மா அதிதிகளையும், ரித்விக்குகளையும் வரவேற்று, வஸ்த்ர பூஷணங்களினும் அலங்கரித்துக் கொண்டிருக்கிறார். எட்டு வஸுக்களும் தனங்களையும், வஸ்த்ரங்களையும் கொண்டு வந்து குவித்துக் கொண்டு, இருக்கிறார்கள்.*

*எதுவரைக்கும் கூறுவது? ஸாக்ஷாத் லக்ஷ்மி இங்கு தானே வந்து ஸௌபாக்யவதிகளான குலவதூக்களுக்கு அலங்காரம் செய்து கொண்டிருக்கிறாள். இவர்களை நாலாபக்கமும் பார்த்த எனக்கு ஸந்தோஷம் தாங்க முடியவில்லை. ஆனால் ஒரு விஷயம் எனக்கு மிகவும் துக்கத்தைக் கொடுக்கிறது. தாங்கள் ஒருவேளை மறந்திருக்கலாம்.*

*சரீரத்திற்கு வஸ்த்ர பூஷணங்களால் அலங்காரம் செய்தாலும், ஜீவன் இல்லாமல் சோபிக்காது. அதுபோல் ஈஸ்வரன் இல்லாத யக்ஞம் ஸ்மசானம்போல் சூன்யமாக இருக்கிறது.*

*இந்த விதமாக ததீசி முனிவரின் வார்த்தைகளைக் கேட்ட தக்ஷ ப்ரஜாபதி குடங்குடமாய் நெய் வார்த்த அக்னியைப்போல கோபத்தால் மிகவும் சீறி எழுந்தார்.*

*ததீசி ஸ்துதித்தபோது மிகவும் சந்தோஷப்பட்ட அவர் அதே க்ஷணம் வாயிலிருந்து ஹோதாக்னியை உமிழ்வதைப் பார்த்தார்.*

*தக்ஷப்ராஜாபதியின் உடல் கோபத்தால் கிடுகிடுவென்று நடுங்கியது. அட்டஹாஸத்துடன் எழுந்து நின்று கொண்டு மறுமொழி கூறத் தொடங்கினார்.*

*ஏ, ததீசியே! முதலாவது நீ ப்ராம்மணர். இரண்டாவது நான் யக்ஞதீக்ஷை எடுத்துக் கொண்டிருக்கிறேன். அதனால் உங்களைத் தண்டிக்க வசமில்லாமல் இருக்கிறது. இல்லாவிட்டால் நான் உங்களை என்ன செய்வேன் என்று தெரியாது.*

*ஏ, ஜடமே, உங்களை யார் இங்கு கூப்பிட்டது? நீர் ஏன் இங்கு வந்தீர்? வந்தாலும் உம்மிடம் யார் இதெல்லாம் கேட்பார்கள்? சும்மா வளவளவென்று உளறிக் கொண்டிருக்கிறீர்.*

இங்கு எல்லா மங்களங்களும் மங்களத்தைக் கொடுக்கக் கூடிய ஶ்ரீமான் பகவான் ஹரி தானே யக்ஞபுருஷராக ஒப்புக்கொண்டிருக்கிறுர்.

அப்படி இருக்க இந்த மகா யக்ஞத்தை ஸ்மசானத்துக்கு உவமையாகக் கூறுகிறுய். தர்மாதர்மத்தைப் பாகுபடுத்தும், தர்மத்தை நிலைநாட்டும், தர்மராஜர் தானே இங்கு எழுந்தருளியிருக்கிறுர்.

குபேரனே.! இங்கு பொக்கிஷதாரனுக இருக்கிறுர். யக்ஞபாகத்தை ஸ்வீகரிக்க ஸாக்ஷாத் அக்னி தேவரே இங்கு எழுந்தருளி இருக்க நீ இந்த மங்கள பூமியை அமங்களமான ஸ்மசானத்திற்கு உவமையாகக் கூறுகிறுய்.

தேவாசாரியரே! ஆசார்ய ஸ்தானத்தில் அமர்ந்திருக்கும் போது எந்த அஹங்காரத்தினுல் ஸ்மசானம் என்று கூறுகிறுய்? வஸிஷ்டர் முதலிய மஹரிஷிகள் ரித்விக்குகளாக அமர்ந்திருக்கும் இந்த யாக சாலையை ப்ரேத பூமி என்றுய்.

இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு ஞானிகள் நடுங்கினர். ததீசி முனிவர் கூறுவர், ஹே! தக்ஷ, யக்ஞ புருஷரான ஹரி என்றும் மங்களத்தை அருளுபவர்.

வேதத்தில் விஷ்ணுவை சாம்பவி சக்தி என்றே குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆதி தேவரின் இடதுபாகம் விஷ்ணு, வலதுபாகம் ப்ரம்மா என்று வேதம் கூறுகிறது.

இந்த நூறு அச்வமேத யாகத்தில் தீக்ஷை செய்யப்பட்ட வஜ்ராயுதம் தரித்த இந்திரன் இருக்கிறுனே. இந்த சிவாம்சமான இந்த்ரனை க்ஷணப் பொழுதில் அலக்ஷ்மீகரமாக துர்வாஸ முனிவர் ஆக்கி விட்டார்.

பிறகு அவன் இதே பூதநாதனை ஆராதித்து அமராவதியை திரும்பப் பெற்றுன். எந்த தர்மராஜர் இந்த யக்ஞத்தை ரக்ஷிக்கிறுர் என்று நீ கூறினுயோ, அவருடைய பலத்தை அவர், சுவேத கேதுவைக் கட்டும்போது

*தேவர்கள் எல்லாம் அறிந்து கொண்டார்கள். இந்த குபேரன் சிவபிரானுடைய இணைபிரியாத மித்ரன் என்று நீர் கேட்டதில்லையா? இந்த அக்னி அவருடைய கண்ணுயிற்றே.*

*ப்ருஹஸ்பதி என்னும் தேவாசாரியர் இருக்கிறார். அவருடைய பரம சுந்தரியான தாராவை, உனது மாப்பிள்ளை சந்திரன் கெடுத்தான். பின் அவனை நீ சபிக்க, சிவபிரான் அவனுக்குக் கை கொடுத்தார்.*

*உனது ரித்விக்குகளாக வஸிஷ்டர் முதலியவர்களும், சங்கரனை நன்கு அறிவார்கள். ருத்ரதேவன் ஒருவனே எங்கும் நிறைந்து இருக்கிறார். வேறு ஒருவரும் அல்ல.*

*இந்த விஷயத்தை இந்த யக்ஞசாலையில் கூடியிருக்கிற ஸகலரிஷிகளும் அறிவார்கள், இருக்கட்டும். இப்பொழுதாவது நீ உனக்கு ஹிதமானதைக் கூறும் இந்த ப்ராம்மணருடைய வார்த்தையைக் கேளும்.*

*யக்ஞத்தின் ஸ்வாமியான பகவான் விஸ்வேஸ்வரரை அழையும். அவர் இல்லாமல் இந்த யக்ஞத்தைச் செய்வதும் செய்யாததும் ஒன்றுதான்.*

*இந்த ஸகல லோகத்துக்கும் ஸாக்ஷியாகிய மஹாதேவர் இங்கு இருந்தால் இங்கு கூடியிருக்கும் எல்லோருடைய மனோரதங்களும் பூர்த்தியாகும்.*

*ஜடரூபமான விதை தானே முளையாது. அதுபோல் ஈசவரன் இல்லாமல் எந்த ஜடகர்மாக்களும் பலனளிக்காது.*

*அர்த்தமில்லாத வாக்கு, தர்மமில்லாத சரீரம், பதி இல்லாத நாரீ சோபிக்க மாட்டாள். அதுபோல் சிவன் இல்லாமல் ஒரு க்ரியையும் சோபிக்காது.*

*கங்கையில்லாத தேசம், புத்ரன் இல்லாத க்ருஹம், தானம் செய்யாத ஸம்பத்து, சிவன் இல்லாத க்ரியை இவை வ்யர்த்தமே.*

*மந்திரி இல்லாத ராஜ்யம், வேதம் ஓதாத ப்ராம்மணன், நாரி இல்லாத க்ருஹம் இவைகள் என்ன நிலே அடையுமோ, அதைப்போலவே சிவன் இல்லாத கர்மத்தையும் எண்ணுவாய்.*

*தர்ப்பை இல்லாத ஸந்த்யாவந்தனம், எள்ளில்லாத தர்ப்பணம், நெய் இல்லாத ஹோமம் இவைகள் வீணுவதுபோல் மஹேச்வரர் இல்லாத காரியங்களும் வீணே.*

*அர்த்தமில்லாத கவிதையும் பதி இல்லாத வனிதையும், தானம் செய்யாத சம்பத்தும், கங்கையில்லாத பூமியும் போல் சிவனில்லாத க்ரியைகள் ஆகும்....தேவருடைய மாயையால் மோஹமற்ற தக்ஷன் புத்தியில் தக்ஷனுலும் ததீசிமுனிவரின் வார்த்தையைச் செவிகொடுத்துக் கேட்கவில்லே.*

*மேலும் மேலும் கோபம் பொங்கிவரக் கூறலுற்ருன். என் யக்ஞத்தைக் குறித்து நீ கவலே கொள்ள வேண்டாம். இவ்வுலகில் யக்ஞம், முதலிய எல்லா கர்மங்கள் இயற்கையாக ஒழுங்காகச் செய்தால், ஸித்தியாகும். அனுசிதமான முறையில் ஒரு காரியம் செய்தால், அது ஈசவரன் நிஜனத்தாலும் ஸித்தியாகாது.*

*என் கார்ய ஸித்திக்கு வேண்டி இங்கு இருப்பவரும் எல்லாரும் ஈச்வராம்சமேயாகும். இருக்கட்டும், ஈச்வரன் எல்லா கர்மத்துக்கும் ஸாக்ஷி என்ற நீ கூறினுயே.*

*அது சரிதான் சாக்ஷி... யாஞல் பலன் இருக்காது.*

*பிறகு நீ கூறினுய் ஜடரூபம் என்று ஈச்வரன் இல்லாமல் அது பலவிதமாகாது என்றும் கூறினுய். அதற்கு ஒரு த்ருஷ்டாந்தம் கூறுகிறேன் கேள். விதைகள் எல்லாம் ஜடமாஞலும் உரியகாலம் வந்தவுடன் முளேத்து எழும்பி வளர்ந்து காய்க்கிறது.*

*அதுபோல ஈசவரன் இல்லாமலே கால கிரமத்தில் எல்லா காரியங்களும் பலவிதமாகும். அதனுல் அந்த மஹா மங்கள மூர்த்தி ஈசுவரனுல் இங்கு என்ன ப்ரயோஜனம்.*

*இதற்கு ததீசி கூறுவார் உண்மையைக் கூறுமிடத்து சில சமயங்களில் காரியங்கள் ஸித்தியடைகின்றன என்பது வாஸ்த்வமே, ஆனுல் ஈச்வரனுக்கு ப்ரதிகூலமான கார்யங்கள் சீக்கிரம் நஷ்டமடைகின்றன.*

*உண்மையில்லாத ஸம்பவங்கள் கூட ஈச்வர இச்சையின் பலன் இருக்குமானுல் ஸித்தி அடையும். அப்படி இல்லையானுல் இங்கு கூடி இருக்கும் எல்லா தேவதைகளும் ஸமர்த்தர்கள் ஆனுலும் அவர்களும் ஈச்வர அதீனமானவர்கள்.*

*ஸாமான்ய ஸாக்ஷிகளைப்போல் ஈச்வரன் எல்லா கார்யங்களுக்கும் எல்லா ஜனங்களுக்கும் ஸாக்ஷியாக மாட்டார். அவர் ஸந்தேகமில்லாமல் சாக்ஷி மாத்திரம் அல்ல, பலனுக்கு ஆதார சிலையும் அவர்தான்.*

*அந்த ஸர்வ கர்த்தாவான ஈச்வரர், பூமி, ஜலம் முதலிய பஞ்ச பூதங்களில் நுழைந்து தானே காலமாகவும், விதையாகவும் ஆகி முளைத்தெழுகிருன்.*

*ஈச்வரன் இல்லாமலேயா காலானுஸாரமாக கர்மங்கள் பலனைக் கொடுக்கிறது என்று கூறினீர். அதுவும் நிஜமே, ஏன் என்ருல் ஸர்வ கர்த்தாவான பகவான் ஈச்வரன் காலரூபமாகவும் இருக்கிருர்.*

*மகாமங்கள மூர்த்தியாயான ஈச்வரன் இங்கு எதற்காக வருகிருர். அவரால் என்ன ப்ரயோசம் என்றீர். ரொம்ப சரி.*

*எவர்கள் மஹான்களோ, அவர்கள் மங்கள மூர்த்திகளேயாகும். அப்படி எல்லாராலும் ஈச்வரன் என்று கொண்டாடப்படும் மூர்த்தியினுல் இங்கு என்ன ப்ரயோஜனம் என்றீர்.*

இந்த விதமாக ததீசி முனிவரும் தக்ஷனும் வாதப்ரதிவாதம் செய்து கொண்டிருக்கையில் ஐச்வர்ய ஸம்பத்தால் மதர்த்துப் போன தக்ஷப்ரஜாபதி கட்டுக்கடங்காமல் கோபம் கொண்டார்.

அங்கும் இங்கும் பார்த்துவிட்டு அண்டையில் இருப்பவர்களிடம் கூறத் தொடங்கிஞர். இந்த நீச புத்தியுள்ள ப்ராம்மணனை யாகசாலையில் இருந்து வெளியே தள்ளுங்கள் என்ருர். இதைகேட்டு சிரித்துவிட்டு ததீசி முனிவர் கூறிஞர்.

அட, மூடா, நீ யாரடா, என்னை வெளியில் தள்ளுபவன் இங்கு கூடி இருக்கும் எல்லோருடன்கூட நீயும் ஸமஸ்த மங்கள காரியங்களிலிருந்தும் தூர விலகுவாய்.

ஹே ப்ரஜாபதியே! த்ரைலோக்யநாயகரான மஹேஸ்வரருடைய கோபமாகிய தண்டம் வெகு சீக்கிரம் உன் தலையில் விழப் போகிறது.

ததீசி முனி இவ்வாறு கூறிவிட்டு, அந்த யாகசாலையிலிருந்து வெளியேறிஞர். அவர் போனவுடன் தூர்வாஸர், ச்யவனர், அகஸ்த்யர், (நீங்கள்)

இத்தனைபேர் உதங்கர், உபமன்யு, ரிசீகர், உத்தாலகர், மாண்டவ்யர், வாமதேவர், காலவர், கர்க்கர், கௌதமர்.

இவர்களும் மற்றும் சிவதத்வத்தை யறிந்த அனேக ரிஷிகளும் யாகசாலையை விட்டு வெளியேறிஞர்கள். ததீசி முனிவர் சென்றதிஞல் அங்கு ஒன்றும் குறைந்துவிடவில்லை. யக்ஞ காரியம் ஆனந்தமாக நடக்கத் தொடங்கியது.

யக்ஞசாலையில் தங்கியிருந்த ப்ராமணர்களுக்கு எல்லாம் தக்ஷப்ரஜாபதி இருமடங்காக தக்ஷிணையும் மற்ற தானங்களும் கொடுத்தான்.

தன் மாப்பிள்ளைகளுக்கும் அபாரஸம்பத்தைக் கொடுத்து கௌரவித்தான். தன் கன்னிகைகளுக்கும் மிகவும் படாடோபத்துடன் அபார ஆபரணங்களால் அலங்கரிக்கச் செய்தான்.

இந்தப் பிரகாரமாக ஸமஸ்த ரிஷிபத்னிகள் தெய்வ ஸ்திரீகள், ஊரில் இருக்கும் பெண்கள் எல்லாருக்கும் ஒரு குறையும் இல்லாமல் ஸம்மானம் அளித்தார்.

தக்ஷன் ஸந்தோஷசித்தத்துடன் ப்ராம்மணர்கள் உயர்ந்த குரலில் சொல்லும் வேதத்த்வனியினால் ஆகாசம் ஸப்தகுணங்கள் வாய்ந்தது என்பதை நிரூபித்தார்.

அவர் தீக்ஷை பெற்று ஆஸனத்தில் அமர்ந்து யக்ஞ குண்டத்தில் பெய்த ஆஹுதியினால் அக்னிக்கும் அஜீர்ணரோகம் ஏற்பட்டது. ஹவிஸ்ஸின் நருமணம் நான்கு திக்குகளிலும் பரவியது.

ஸ்வாஹாகாரம், வஷட்காரம் இந்த மந்த்ரங்களினால் தேவதைகளின் தொந்தி பெருத்து விட்டது. அடிக்கொரு இடத்தில் ஆயிரக்கணக்கான அன்னக் குவியல் பர்வதம்போல், நெய்யன்னங்கள், தேன் அன்னங்கள், பாலின் பெரிய ஸரோவரம், தயிர் நிறைந்த பெரிய மடுக்கள், வஸ்த்ர குவியல்கள், ரத்னகுவியல்கள் என்று யக்ஞபூமி முழுவதும் தங்கம் வெள்ளி மயமாக ஆக்கியிருந்தான்.

அந்த யக்ஞத்தினன் தேடிப்பார்த்தால்கூட ஒரு பிக்ஷுகன் கிடைக்கவில்லை. அங்கு வேலைசெய்த பரிசாரகர்கள்கூட ஸந்தோஷத்துடனும், புத்தியோடும் காணப்பட்டார்கள்.

மங்கள கீதங்களின் த்வனியினால், ஆகாசம் நிரம்பியது. அப்ஸரஸ்கள், கந்தர்வர்கள், வித்யாதரர்கள் எல்லோரும் மிகவும் ஆனந்தமடைந்தனர். பூமியும் மிகவும் செழித்தோங்கியது. இந்த ப்ரகாரமாக இங்கு தக்ஷனின் மகா

யக்ஞும் வைபவ விஸ்தாரத்துடன் பெருகிக்கொண்டு இருக்கும்போது நாரதர் கைலாச பர்வதத்தைச் சென்றடைந்தார்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி, கண்டத்தில் உத்தார்த்த பாஷாடீகாவான எண்பத்தி ஏழாவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



*Sunday, October 24, 2010*

# *அத்யாயம் 88*

*அகஸ்த்யர் கூறுவார்:- ஹே, ஆறுமுகா! ப்ரம்ம புத்ரரான நாரதரிஷி கைலைக்குச் சென்று, என்ன செய்தார்? அந்தக் குதூகலம் நிரம்பிய கதையைத் தாங்கள் வர்ணியுங்கள்.*

*ஸ்கந்தர் கூறினார்:- ஏ! கும்பமுனியே! மஹாத்மா நாரத ரிஷி அந்த சமயம் சிவலோகமான கைலாஸத்திற்குச் சென்று, என்ன செய்தார் என்பதை வர்ணிக்கிறேன், கேளுங்கள். ரிஷிவரர் ஆகாசமார்க்கமாகச் சிவபுரியான கைலாஸத்தை அடைந்து தேவியையும், மஹாதேவரையும் வணங்கியான பின் சிவபிரான் மரியாதையுடன் ஆஸனமளித்தார்.*

*நாரதரும் அவர்களின் பரம ஸல்லாபல்களைப் பார்த்துக் கொண்டு, அவர் காட்டிய இடத்தில் அமர்ந்தார். ஆனால் அவர்களிருவரும், சதுரங்கம் விளையாடிக் கொண்டு இவர் பக்கமே திரும்பாதிருப்பதைக் கண்டு நாரதருக்குத் தன் உற்சாகத்தைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை. கடைசியில் கூறியே விட்டார்.*

*தேவ தேவா! இந்த ப்ரம்மாண்ட மண்டலம் தங்களின் விளையாட்டுக் கருவி, இந்த ப்ரம்மாண்ட ரூபமான சொக்கட்டான் பலகையில் பன்னிரண்டு மாதங்களே காய்கள் வைக்குமிடம். அந்த சுக்லபக்ஷம், க்ருஷ்ண பக்ஷம் என்பதே வெளுப்பும் கறுப்புமான சதுரங்கக் காய்கள். இரண்டு பக்ஷங்களே பகடைகளாகும்.*

*ஸ்ருஷ்டியும் ப்ரளயமுமே தோல்வியும் வெற்றியும். தேவி ஜெயித்தால் ஸ்ருஷ்டி ஏற்படும். தாங்கள் ஜயித்தால் ப்ரளயம் ஏற்படும். தாங்கள் விளையாடும் ஸமயமே ச்ருஷ்டிகளை பாவிக்கும் சமயமாகும். இந்த விதமாக இந்த ப்ரம்மாண்ட மண்டலம் முழுவதும் தேவியும் பதியை*

*ஜயிக்க மாட்டாள், பதியும் தேவியை ஜெயிக்க மாட்டார். நான் தங்களிடம் சில ப்ரார்த்தனைகளைச் சொல்ல வந்து, இருக்கிறேன்.*

*ஏ! மாதா! தாங்களும் அதைக் கேட்க வேண்டும். அவர் ஸர்வ யக்ஞராக இருந்தபோதிலும், அவருக்கு ஒன்றும் தெரியாது. அவர் மானம் அவமானம் இரண்டிலும், வெகுதூரம் விலகியிருக்கிறார். அவர் லீலா விநோதமாக இருக்கும்போது, ஸகுண ப்ரம்மமாகத் தோன்றுகிறார். ஆனால் யோசித்துப் பார்த்தால் பரம நிர்குணரே ஆவார். ஏன் என்றால், அவர் கர்மங்களில் ஈடுபட்டிருந்தபோதிலும் கர்மம் அவரைக் கட்டுப்படுத்தவில்லை.*

*அவர் ஸ்வயம் உதாஸீனராக இருந்தபோதிலும் ஒவ்வொரு செய்கைகளுக்கும் மத்யஸ்தராக இருக்கிறார். இதனாலேயே அவர் சத்ரு, மித்ரன் இருவர் இடமும் ஸமான நோக்குடையவராக இருக்கிறார்.*

*ஏ, தேவி! நீங்கள் பகவானுடைய சக்தியானதால் எல்லோராலும் மதிக்கக்கூடிய ஸ்தானத்தில் இருக்கிறீர்கள். தாங்களே சந்தானமாகி தக்ஷனின் கௌரவத்தை அதிகப்படுத்தினீர்கள். ஆனால் தாங்களே பரம ஜகத்துக்கும் ஏகமாத்ர ஜனனீ. இதில் ஸந்தேகமில்லை ப்ரம்மா, விஷ்ணு, இந்திரன் ஆகிய எல்லோரும் தங்களிடமே பிறந்தார்கள்.*

*ஆனால் தாங்கள் பரம சிவனுடைய மாயையால் மோகமடைந்துள்ளதினாலே தாங்கள் யார் என்று தங்களுக்கே நினைவில்லை. இதனால் என்மனம் மிகவும் துக்கமடைகிறது.*

*தங்களைப்போலவே வேறு பதிவ்ரதா ஸ்திரீகள் பதியின் சரணாரவிந்தத்தைத் தவிர்த்து வேறு ஒன்றும் அறியார்கள்.*

*நல்லது, இப்பொழுது இந்த விஷயம் இருக்கட்டும். நான் வந்த விஷயம் கூறுகிறேன். இன்று ஹரித்வாரத்தின் ஸமீபத்தில் லீலாசரபர்வதத்தில் ஒரு அற்புதமான ஸம்பவத்தைப் பார்த்தேன். ஆச்சர்யத்திஞலும், வருத்தத்திஞலும், ஆத்திரத்தில் தங்களிடம் அதை கூறுவதற்கு வந்தேன்.*

*ஆச்சர்யத்தின் காரணமென்னவென்ருல் மூன்றுலகங்களில் ஆண்பால் என்று பெயர் பெற்றவரெல்லாம் தங்கள் பத்னியுடன் தக்ஷன் செய்யும் யாகசாலையில் வந்திருக்கிருர்கள்.*

*அங்கு தக்ஷஞல் கௌரவம் கிடைக்கப்பெற்று அலங்கரிக்கப்பட்டு ஆனந்தத்தால் கமலம் போன்ற மலர்ந்த முகத்தையுடையவர்களாய், மற்ற எல்லா காரியங்களையும் மறந்துவிட்டு தக்ஷனுடைய யக்ஞத்தில் ஈடுபட்டிருக்கிருர்கள்.*

*இதில் எனக்கு வருத்தத்தைத் தரும் விஷயம் என்னவென்ருல், யாரால் ஸமஸ்த ஜகமும் உண்டானதோ, யாரால் ரக்ஷிக்கப்படுகிறதோ, ஸமஸ்த ஜகத்தும் கடைசியில் யாரிடம் ஒடுங்குகிறதோ,*

*அப்படி பவபயத்தைப் போக்கடிக்கும் ஜோடிகளான தாங்கள் இரண்டு பேரையும் மாத்திரம் எனக்கு அங்கு தரிசிக்கக் கிடைக்கவில்லை. அங்கு தங்களைத் தரிசனம் செய்யாததுதான் எனக்கு அடங்காத வருத்தத்தையளிக்கிறது.*

*அங்கு உங்களுடைய தரிசனம் கிடைக்கவில்லை என்பது மாத்திரம் இல்லை. அப்புறம் என்ன நடந்தது என்று நான் சொல்வதற்கில்லை. ஆஞல் அவைகளைச் சொன்னது தக்ஷனேயாகும்.*

*அந்த வார்த்தைகளைக் கேட்ட ப்ரம்மா. உடனே அந்த இடத்தைவிட்டு அகன்ருர். பிறகு மகரிஷி ததீசி அதைக் கண்டித்தார்.*

தேவதைகளும், ரிஷிகளும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே ப்ரஜாபதி சாபம் கொடுத்தார். நான்கூட நிந்தைகள் நிறைந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் காதுகளைப் பொத்திக் கொண்டேன்.

ததீசியுடன் துர்வாஸர் முதலிய அனேகம் ப்ராம்மணர்களும் மகாதேவரை நிந்திக்கும் வார்த்தைகளைக் கேட்டவுடன் அங்கிருந்து எழுந்து போய்விட்டார்கள்.

அதன் பிறகு கொழுத்துப்போன ஜனங்களால் அந்த யாகம் தடை இல்லாமல் நடந்துகொண்டிருக்கிறது. இவைகள் எல்லாவற்றையும் என்னுல் பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை. அதனுல் அங்கிருந்து வந்துவிட்டேன்.

ஏ, தேவி, அங்கு உங்கள் ஸஹோதரிகளுக்கும் அவர்களுடைய பதிகளுக்கும் நடந்த மரியாதைகளைப் பார்த்தால் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை.

இந்த வார்த்தைகளைக் கேட்டு விட்டு தக்ஷனின் குமாரியான சதிதேவி கையிலிருக்கும் பகடைகளை வைத்து விட்டு க்ஷணநேரம் மனதிற்குள் யோசனை செய்தாள், அதன் பின் கூறிஞள்.

எனக்கு ஸகலமும் மகாதேவரே என்று கூறிவிட்டு, மனதில் இவ்வெண்ணத்தை உறுதி செய்து கொண்டு சீக்கிரமாக எழுந்தாள்.

பிறகு சங்கரரை வணங்கி விட்டுத் தலைமேல் கைவைத்துக் கொண்டு மகாதேவரை ப்ரார்த்தித்தாள். தேவி கூறிஞள். ஹே அந்தகத்வம்ஸகா, த்ரிலோசனு, தத்ரிபுராரி, ஜய விஜயீபவ, ஹே சதாசிவா, தங்கள் சரணுர விந்தங்களே என்னை ரக்ஷிக்கட்டும் அதனுல் தாங்கள் இப்பொழுது எனக்கு உத்தரவு தரவேண்டும்.

தாங்கள் என்னைத் தடுக்காதீர்கள் என்று

*ப்ராத்திக்கிறேன். நான் பிதாவினிடம் செல்ல விரும்புகிறேன். இவ்வாறு கூறிவிட்டுத் திரும்பவும் மகாதேவரின் சரணாரவிந்தங்களில் சிரஸை வைத்து வணங்கினாள்.*

*பிறகு மஹாதேவர் கூறினார், ஹே பாமினி, ம்ருடானீ, ஸௌபாக்ய ஸுந்தரி எழுந்திரு, நல்லது உனக்கு இங்கு என்ன குறையிருக்கிறது அதைக் கூறு.*

*ஹே ஈச்வரி, லக்ஷ்மிக்கு ஸௌபாக்கியத்தையும் ஸரஸ்வதிக்கு உத்தம காந்தியையும், இந்த்ராணிக்கு நித்ய யௌவனத்தையும் நீதானே அளித்தாய்.*

*ஏ தேவி, இந்த விசாலமான ஐச்வர்யத்தை ரக்ஷிப்பதில் நீ எனக்குத் துணையிருப்பதால் நான் சக்தி வாய்ந்தவனாக இருக்கிறேன். மற்றும் என் லீலாவினோதங்களுக்குத் தகுந்தவாறு உருவம் கொள்ளவல்ல சக்தியாகிய உன்னை அடைந்து உன் லீலா வினோதத்தை அனுஸரித்தே இங்கு ஸ்ருஷ்டி, ரக்ஷண ஸம்ஹாரத்தை செய்து கொண்டிருக்கிறேன்.*

*என் வாம பாகக் கிளியே, தேவியே, நீ ஏன் என்னை விட்டுச் செல்ல நினைக்கிறாய்? என்றார்.*

*மகாதேவர் இவ்வாறு உரைக்கவே ஸதிதேவி, நான் தங்களை விட்டுவிட்டு ஒரு இடமும் போகமாட்டேன் என்றான்.*

*என்னுடைய மனம் எப்பொழுதும் தங்கள் சரணத்திலேயே நிச்சலமாய் அமர்ந்திருக்கும். நான் இதுவரை யக்ஞமே பார்த்ததில்லை. அதனால் பிதாவின் இந்த யக்ஞத்தைக் காணவிரும்புகிறேன்.*

*தாக்ஷாயணி தேவியின் இந்த வார்த்தையைக் கேட்டு மகாதேவர் கூறினார் அப்படியா, உனக்கு யாகம் செய்வதைக் காண இச்சையிருந்தால் இங்கேயே அதற்கு ஏற்பாடு செய்து விட்டால் போகிறது.*

இல்லாவிட்டால் ஒன்றுசெய். நீ எனக்கு சக்தி சிவபரூமே ஆவாய். நீயே ஒரு யக்ஞத்திற்குண்டானதை ஸ்ருஷ்டி செய்து விடேன். மற்ெறுரு யக்ஞபுருஷனையும் திக்பாலர்களையும் ச்ருஷ்டி செய்துவிடு.

அதுபோலவே ரித்விக்குக்களுக்காக வேறு ரிஷிகளையும் உற்பத்தி செய்துவிடு என்று சிவபெருமான் கூறியவுடன் பார்வதி தேவி கூறினுள்.

இல்லை ஸ்வாமி, எனக்கு என் பிதாவின் யக்ஞோத்ஸவத்தைக் காண கட்டாயம் போய்த் தீரவேண்டும். இவ்விஷயத்தில் என்னைத் தடுக்காமல் உத்தரவு கொடுங்கள்.

ஏ, நாதா! கீழ்நோக்கிச் செல்லும் சித்தத்தையும் பள்ளத்தை நோக்கி ஓடும் ஜலத்தையும் யாரால் தடுக்க முடியும்? அதனுல் இவ்விஷயத்தில் என்னைத் தடுக்காமல் உத்தரவு கொடுங்கள்.

இதைக் கேட்ட பூதநாதரான ஸர்வக்ஞர் திரும்பவும் கூறினுர்- ஏ, தேவி, என்னைத் விட்டுவிட்டு நீ போகாதே போனுயானுல், என்னை நீ திரும்பவும் சந்திக்க மாட்டாய்.

ஏ, ப்ரியே! இன்று சனிவாரம், ஜேஷ்டா நக்ஷத்ரம், நவமிதிதி இம்மூன்றும் சேர்ந்து கிழக்கு திசையில் யாத்திரை செய்வதைத் தடுக்கிறது.

அதுவுமின்றி இன்று வ்யதீபாத யோகம். நீ தநிஷ்டா நக்ஷத்ரத்தின் மத்தியில் (சதயம்) பிறந்தாய். அதனுல் இன்று உன் நக்ஷத்ரத்திற்கு ஐந்தாவது நக்ஷத்ரமாக இருக்கிறது.

அதனுல், தேவி, நீ இன்று போகாதே, நீ இன்று போனுல் திரும்பவும் என்னைப் பார்க்க மாட்டாய். இதைக் கேட்டு பகவதி கூறினுள். என்பெயர் ஸதியானுல் மற்ெறுரு தேஹம் எடுத்துத் தங்களுக்கே தாதியாவேன். அப்பொழுது மகாதேவர் கூறினுர் அப்படியா ஒரு ஸ்திரீயினுடைய

அல்லது புருஷனுடைய மனோவேகத்தை யாரால் தடுக்க முடியும்?

ஆனால் ஸத்யமாக நான் கூறுகிறேன். இனி என்னை நீ ஸந்திக்க மாட்டாய். மற்றொரு விஷயமம் கூறிவிடுகிறேன். எவர்கள் தங்கள், மானம் மரியாதை என்ற ஸம்பத்தைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புகிறார்களோ அவர்கள் பெற்றோர்கள் க்ருஹம் ஆனாலும், அவர்கள் அழைப்பில்லாமல் போகக் கூடாது.

நதி ஸமுத்திரத்தை அடைந்து, பின் திரும்பாததுபோல் இன்று நீ போனாயானால், திரும்பி இங்கே வரமாட்டாய்.

தேவி கூறினாள் - ஏ, பகவன்! நான் உண்மையில் உங்கள் சரணாரவிந்தத்தை, உள்ளன்புடன் நேசிப்பேனேயானால் நான் இன்னொரு ஜன்மம் எடுத்தாலும், அந்த ஜன்மத்திலும் நீங்கள் தான் எனக்கு ஸ்வாமீ ஆவீர்கள். இவ்விதம் கூறிய ஸதீதேவி, கோபத்தின் கண்மூடித்தனமாக அங்கிருந்து கிளம்பி விட்டாள். யாத்திரை புறப்படுமுன், யாத்திரை பலன் ஸித்தியாகும் பொருட்டு சிற்சில சடங்குகள் செய்வார்களே, அதுகூடச் செய்யவில்லை.

அவள் மகாதேவரை, வலம் வரவுமில்லை, வணங்கவுமில்லை. இது எதை சூசிப்பிக்கிறதென்றால், தேவியோ போய் விட்டாள். ஆனால் திரும்பிவர மாட்டாள். இங்கு என்பதையே. இன்னும் ஜனங்கள் மஹாதேவரை வலம் வரவும் வணங்காமலும் சென்றார்களானால் அவர்கள் திரும்பி அந்த இடத்திற்கு வரமாட்டார்கள்.

அவள் த்ரைலோக்ய நாதருடைய ராணி, பாதசாரியாகச் சென்று பழக்கப் படாதவள், அதனால் பாதையில் நடப்பது அவளுக்குக் கடினமாக இருந்தது.

அப்பொழுது சிவபெருமான ஸதீதேவி நடந்து செல்வதைப் பார்த்துவிட்டு மிகவும் வேதனை அடைந்தார். உடனே சீக்கிரமாக கணங்களைக் கூப்பிட்டார்.

நீங்கள் சீக்கிரமாகச் சென்று ஒரு விமானத்தைக் கொண்டு வாருங்கள். மனோவேகமும், காற்று வேகமுமே அதன் சக்கரங்களாக இருக்கட்டும். பதினாயிரம் சிம்மங்களைக் கூட்டுங்கள். ரத்னமிழைந்த த்வஜஸ்தம்பத்தை நாட்டுங்கள்.

கொடுங்காற்றே கொடியாக இருக்கட்டும். அதில் மகத்தத்வமே வில்லாக வளைந்திருக்கட்டும். நர்மதையும், அலகநந்தா நதிகளும் இரு பக்க தண்டமாக இருக்கட்டும்.

சூரியனும் சந்த்ரனும் குடைகளாக இருக்கட்டும். உத்தமமான வராஹி சக்தி தேரின் முகப்பில் வைத்திருக்கும் மகரமுகமாக இருக்கட்டும். காயத்ரி அச்சாக இருக்கட்டும். தக்ஷகன் முதலிய ஸர்ப்ப கணங்கள் கடிவாளமாக இருக்கட்டும். ப்ரணவமே ஸாரதியாக இருக்கட்டும். ப்ரணவத்வனியே ரதம் ஓடும்பொழுது ஏற்படும் சப்தமாக இருக்கட்டும்.

வேதாங்கங்கள் பாதுகாப்பாக அமையட்டும். ஏழு சந்தஸ்ஸுகளும் ஸேனையாக அமையட்டும் என்று கூறிய மகாதேவரின் ஆக்ஞைப்ரகாரம் சிவபாரிஷதர்கள், அந்த விமானத்தில் ஸதீ தேவியை அமர்த்தி, அந்த திவ்யதேஜோமயீ மகாதேவிக்குப் பின்னால் சென்றார்கள்.

க்ஷண மாத்ரத்தில் த்ரிலோசனரின் பட்டமஹிஷிதேவி, தக்ஷனின் மண்டபத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். பார்த்துக்கெண்டிருக்கும்பொழுதே, ஆகாசத்திலிருந்து வேகமாக இறங்கினாள்.

ஸதீதேவி, யாகசாலையின் பாதுகாவலர்கள், ஆச்சர்யமாகப் பார்த்துக்கொண்டு இருக்கும்பொழுதே, மங்களமாக அலங்காரத்துடன் கிரீடம் அணிந்து

கொண்டிருக்கும் மாதாவைப் பார்த்துவிட்டு அப்பால் சென்ருன்.

புது மெருகுடைய ஆபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு தங்கள் பதியுடன் நிற்கும் தன் ஸஹோதரிகளேயும் பார்த்தாள். அவர்கள் ஆச்சர்யம், கர்வம், பயம், ஆனந்தம் கலந்த பாஷையில் தங்களுக்குள் சொல்லிக்கொண்டார்கள்.

இந்த ஹரவல்லபை அழைக்காமலேயே திடீரென்று விமானத்தின் மூலமாக க்ஷணமாத்திரத்தில் இங்கு எப்படி வந்தாள் என்று பேசிக்கொண்டு அவளே உற்று பார்த்தார்கள்.

ஆனுல் ஸதீதேவி அவர்கள் ஒருவரிடமும் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் நேராக தக்ஷனருகில் சென்று நின்ருள். அப்பொழுது அவள் மாதா பிதாக்கள் கூறினூர்கள். அம்மா நீ வந்தது மிக நல்லதாயிற்று.

இதற்கு ஸதி கூறினுள் - பிதாவே நான் வந்தது நல்லதாயிற்று என்று கூறினீர்கள். தாங்கள், என் சகோதரிகளே அழைத்த மாதிரி என்னே ஏன் அழைக்கவில்லே?

தக்ஷன் கூறினூர்- அடி மகா தன்யே, பெண்ணே, நீ மிகவும் ச்ரேஷ்டமானவள். ஸர்வ மங்களகரமானவள். உன்பேரில் ஒரு குற்றமும் இல்லே. ஆனுல் என் பேரில் குற்றம்.

நான் அறிவுகெட்டு உன்னே இப்பதிக்கு கொண்டுபோய்க் கொடுத்தேன். அல்லவா, நிரீஸ்வரவாதியான அவனே ஈஸ்வரன் என்றெண்ணிக் கொண்டேன்.

நான் அந்த மாயாவியை உள்ளபடி அறிந்து இருந்தேனுனல் உன்னே அவன் கையில் ஏன் பிடித்துக்

கொடுக்கிறேன்? அவனுடைய மங்களகரமான 'சிவன்' என்ற பெயரைக் கேட்டு ஸந்தோஷப்பட்டேன். அவன் 'அசிவன்' அமங்களமானவன் என்று நான் எண்ணவில்லை.

பிதாமகரான ப்ரம்மா என்னிடம் அவனை சங்கரன் சம்பு, சிவன், பசுபதி என்று அனேகம் தடவை வர்ணித்தார்.

அவர் இன்னமும் கூறினார். அவர் ஸ்ரீகண்டன், மகேசன், வ்ருஷபத்வஜன், ஸர்வக்ஞன், வில்லாளி அதனால் அவனுக்கு உன் கன்னிகை ஸதியை தானமாகக் கொடு என்றார்.

குழந்தாய்! ப்ரம்மாவின் அந்த வார்த்தையைக் கேட்டு, உன்னை நான், அவனுக்குக் கொடுத்துவிட்டேன். ஆனால் அவன் மூன்று கண்களை உடையவன். மாட்டின்மீது ஏறுபவன், விஷத்தை உண்டவன்.

மயானத்தில் வசிப்பவன், த்ரிசூலதாரி, மண்டை ஓட்டை மாலையாக அணிந்தவன், ஸர்ப்பங்களை பூஷணமாக அணிந்தவன், தலை ஜடையில் தண்ணீரை வைத்துக்கொண்ருப்பவன்.

அவன் தன் நெற்றியில் களங்கமடைந்த சந்திரனை வைத்துக் கொண்டு இருப்பவன்.

சரீரம் முழுதும் சாம்பலைப் பூசிக்கொண்டிருப்பவன். சில ஸமயம் வெறிபிடித்தவனாய் அம்மணமாக அலைகிறான். சிலஸமயம் கௌபீனத்தை தரித்துக்கொண்டிருக்கிறான்.

சிலசமயம் யானைத்தோலை உடுத்தியிருக்கிறான். பிச்சைவாங்கி பூஜிப்பதில் சந்தோஷமடைபவன், தமோகுணம் நிறைந்தவன், முன் கோபி, பயங்கரமான பூதகணங்களே அவனுக்கு அனுசரர்கள்.

அவனும் ரௌத்ராகாரமானவன், அவன் தோழர்களும் ரௌத்ராகாரம் ஆனவர்கள். அவன் மஹாகாலமூர்த்தி, மானிடரின் எலும்புகளை மாலை ஆக

அணிந்துகொண்டிருக்கிறான். அவன் ஜாதி, குலம், கோத்ரம் ஒன்றும் தெரியாது. அவனை முற்றிலும் அறிந்தவர் ஒருவருமில்லை. நான் தெரிந்துகொண்டே ஏமாற்றமடைந்தேன், புத்திசாலியான புத்ரீ, அவனைப்பற்றி என்ன சொல்ல?

பஸ்மமும், மானிடரின் மண்டை ஓடுகளுமே அவனுக்கு அலங்காரம். ஸர்ப்பக் கூட்டம் அவனுக்கு பாஹுவலயம், சில ஸமயம் நீண்ட ஜடை விரித்து ஆடுகிறான்.

சந்திரனின் ஒரு துணுக்கைத் தலையில் தரித்துக்கொண்டு, எப்பொழுதும் உடுக்கை அடிப்பதிலேயே ஆழ்ந்திருக்கிறான்.

என்னவெல்லாம் அமங்களமான சேஷ்டை உண்டோ அவைகளை எல்லாம் அபிநயம் பிடித்து ஆடுகிறான். அதனால் தனயே! மங்களமயமான யக்ஞத்தில் அவன் அழைக்கத் தகுந்தவனா?

இக்காரணத்தால்தான் ஏ! ஸர்வமங்களே, அவனை யக்ஞத்திற்கு அழைக்கவில்லை. உனக்காக உத்தம வஸ்த்ரங்கள் ரத்னாபரணங்கள் முதலியவற்றை முதலிலேயே, தனியாக எடுத்து வைத்திருக்கிறேன். நீ, வா அம்மா! அவைகளை பார்த்து ஏற்றுக்கொள்.

மங்களகரமான கர்மத்தில் இந்த்ராதி ஸமஸ்த தேவதைகளும், மங்கள வேஷத்துடன் சோபிதமாக இருக்கும் சமயம், அந்த சூலாதாரியான முக்கண்ணனைக் கூப்பிடுவது தகுதியா? நீ யோசித்துப்பார். இப்பிரகாரம் பிதா கூறும் வார்த்தைகளை அந்த பரமஸாத்வீயான ஸதீதேவி கேட்டு மிக துக்கமடைந்த சித்தத்துடன் கூறினாள்.

ஏ, ப்ரபுவே, தாங்கள் இவ்வளவு நேரம் கூறிய வார்த்தையும் என் செவியில் விழவில்லை. தாங்கள் முதலில் கூறிய இரண்டு மூன்று வார்த்தைகளே என் செவியில்

விழுந்தன. அது விஷயமாக நான் இரண்டு வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கேளுங்கள்.

நான் அவரைப்பற்றி நன்ருக அறியவில்லை என்று கூறினீர்கள். ஆனுல் அறிந்திருந்தும், ஏமாற்றப்பட்டேன் என்றும் கூறினீர்கள். அது மிகவும் சரியே, ஏனென்றுல் அந்த ஸதாசிவத்தை இன்றுவரை உள்ளபடி அறிந்தவர் யார் இருக்கிருர்?

நீங்கள் முன்பு ஏமாந்தது போலவே இப்பொழுதும் ஏமாறிக் கொண்டு இருக்கிறீர்கள். இப்பொழுது அவருடன் ஸம்பந்தம் ஏற்படுத்திக் கொண்டு ஸம்பந்தாஸம்பந்தம் இல்லாமல் உளறுகிறீர்கள்.

சங்கரனை உள்ளபடி நான் அறிந்து கொள்ளவில்லை என்று சற்றுமுன் கூறினீர்கள் அப்படியிருந்தும் என்னை ஏன் அவருக்கு தானம் அளித்தீர்கள்?

அவரை அறிந்து கொள்ளவில்லை என்பதற்கு உங்கள் புத்தி காரணமாகாது. அது என் பூர்வஜன்ம புண்ணியத்தின் கௌரவமே காரணமாகும்.

இந்த விதமாகப் பலவாறு எடுத்துச் சொல்லி பிற்பாடு அவள் கூறினுள்; என்னுடைய இந்த சரீரத்தைக் கொடுத்தது. தாங்கள் நான் என் இந்த சரீரத்துடனே, என் பதியைப்பற்றி உள்ள நிந்தையைக் கேட்டேன்?

அதனுல் இதற்குப் பிராயச்சித்தம் என்வென்றுல் என்னுடைய இந்த சரீரத்தை த்யாகம் செய்வதேயாகும். உத்தம ஸ்த்ரீக்கு மெச்சத்தகுந்த வம்சாவளி இருக்கும்வரை தான் உயிருடன் இருக்க வேண்டும்.

பிராண நாதரைப்பற்றிய நிந்தையைக் கேட்டபின் சரீரத்தை வைத்துக்கொண்டு இருப்பது அழகல்ல. இவ்விதம் கூறி ஸதிதேவி மகாதேவஸ்ரூபமாகி தன் சரீரமாகிய ஸமித்தை ஹோமம் செய்தாள்.

*அப்பொழுது இந்த்ராதிஸகல தேவதைகளும் களை இழந்து காணப்பட்டார்கள். அக்னிமுன்போல் ஆஹுதி பண்ணப்பட்டும் சீறி எழவில்லை. மந்த்ரங்கள் உச்சரிக்க வரவில்லை. சொல்லுபவர்களுக்கும் தடை ஏற்பட்டது. இந்த அரிஷ்டம் எப்படி ஏற்பட்டது?*

*ப்ராம்மணர்கள், ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு எழுந்துபோகத் தொடங்கினார்கள். இதற்குள் பர்வதங்களையே வேருடன் பறிக்கும்படியான கொடுங்காற்று ஒன்று கிளம்பியது.*

*க்ஷணநேரத்தில் அது யக்ஞ பூமியைச் சூழ்ந்துகொண்டது. மின்னல் மின்னி, இடி இடித்து, பூமி ஆடத் துவங்கியது.*

*ஆகாயத்திலிருந்து வால் நக்ஷத்ரம் உதிரத் தொடங்கியது. பிசாசுகள் யக்ஞ சாலையில் நடனமாடத்துடங்கின. ஆகாசத்தில் கழுகுக் கூட்டம் சூரியனை மறைத்துக்கொண்டு வட்டமிடத் தொடங்கின. நரிகள் ஊளை இடத்தொடங்கின. மேகத்திலிருந்து மழைத்துளிகள் ரத்தத்துளிகளாக விழுந்தன.*

*ஹ்ருதயத்தை நடுங்கச் செய்யும் பூகம்பம் அதிர்ந்தது.*

*திவ்யமான அஸ்த்ரங்கள் தங்களுக்குள்ளேயே, ஒன்றைஒன்று மோதத் துவங்கின.*

*ஹோமஸாமக்ரியைகளை நாயும், நரியும் முகர்ந்து பார்க்கத் துவங்கின. யக்ஞ குண்டத்தைச் சுற்றி சகோர பக்ஷிகளும் காகங்களும் பறக்கத் தொடங்கின.*

*க்ஷண நேரத்தில் யக்ஞ பூமி ஸ்மசான பூமியின் தோற்றம் அளிக்கத் தொடங்கியது.*

*யார் எங்கு இருந்தார்களோ, அவர்கள் அங்கேயே விழத்தொடங்கினர்.*

எல்லோரும் சித்திரத்தில் எழுதிய மாதிரி, அசைவற்று இருந்தனர். எல்லாப் பொருள்களும் சோபையிழந்தன.

விஷ்ணு முதலிய தேவர்கூட வாயடைந்து மௌனமாகி இருந்தனர்.

எல்லாருடனும் தக்ஷனுடைய முகமும் வாடிவிட்டது. இதைப் பார்த்த ப்ராம்மணர்கள் திரும்பவும் யக்ஞத்தைத் தொடர முற்பட்டனர்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான எண்பத்தெட்டாவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 89

ஸ்கந்தக் கூறுவார்:- ஹே! அகஸ்திய! நாரத முனி தேவிக்கு முன்னுலேயே அங்கு சென்று விட்டார். அங்கு நடந்த விருந்தாந்தங்களை நேரில் கண்டு, மஹா தேவரிடம் கூறுவதற்காகத் திரும்பவும் கைலாஸத்தையடைந்தார்.

நாரதர் அங்கு மஹாதேவர் நந்தியிடம் ஆள்காட்டி விரலைச் சுட்டிக்காட்டிக் கொண்டு ஏதோ கூறுவதைக் கவனித்தார். அவரும் சென்று நமஸ்கரித்தார்.

நந்தி அளித்த ஆஸனத்தில் மிக்க வேண்டா வெறுப்பாக அமர்ந்து கொண்டார். சில நிமிஷங்கள் மட்டும் அவருக்குப் பேச நா எழவில்லை. ஸர்வக்ஞரான சிவபெருமான் அவருடைய உருவத்தைக் கொண்டே எல்லாவற்றையம் அறிந்து கொண்டார். ஏன் இப்படி மௌனமாக இருக்கிருரென்பதை யெல்லாவற்றையும் சீக்கிரமே தெரிந்து கொண்டார்.

பிறப்பதுமிறப்பதும் சரீரம் எடுத்தவர்களுடைய இன்றியமையாத விஷயம். இது மாதிரியே தேவசரீரமும் காலகதியில் மறைந்து விடும்.

இங்கு காண்பதெல்லாம் நச்வரம், எது சுதந்திரமற்று இருக்கிறதோ அதுவும் காலப்போக்கில் அழியவே அழியும். அதனுல் ஹே! பிராம்மண! இந்த விஷயத்தில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது? காலம் யாரைத்தான் நாசம் செய்யவில்லை?

எது பாலிதம் இல்லையோ அது ஒருபொழுதும் ஏற்படாது. அதனுல் பண்டிதர்கள் இந்த விஷயத்தில் யோசிக்கமாட்டார்கள். சம்பு பகவானுடைய இந்த வார்த்தையைக் கேட்டு விட்டு முனிபுங்கவர் கூறினுர்:- பிரபு தாங்கள் கூறுவது உண்மையே;

எது நடக்கவேண்டுமோ ஒன்றுகூடக் குறையாது.

தாங்கள் அவ்யயமாகவும் பூரணமாகவும் இருக்கிறீர்கள். தங்களுக்கு ஹானி, விருத்தி இரண்டும் கிடையாது.

இந்த துக்கமான ஸம்சாரம் ஈசுவரன் இல்லாவிடில் எப்படியிருக்கும். இன்றிலிருந்து உங்களை ஒருவரும் பூஜை செய்ய மாட்டார்கள்.

காரணம் தக்ஷப்பிரஜாபதி யக்ஞத்திற்குத் தங்களையழைக்கவில்லை. இன்று அவனுல் அவமதிக்கப்பட்ட தங்களை தேவதைகள், மனுஷர்கள் வரை அவமதிப்பார்கள்.

எவர் அவமானப்படுத்தப்பட்டார்களோ, அவர்களுக்கு ஐஸ்வர்யத்திஞல் என்ன பலன்? அவமானமடைந்தவர்கள் காலபலத்தை ஜயித்தாலும் சரி, ஐச்வர்யசாலிகளாக இருந்தாலும் சரி, அவர்கள் எப்படி கௌரவத்திற்குப் பாத்திரமாவார்கள்?

உலகில் அடிக்கடி அவமானப்படுகிறவர்கள் தங்கள் அபிமானம், கௌரவம் என்னும் சொத்தைக் காப்பாற்ற முடியாமல் இருக்கிருர்களோ, அவர்கள் ஆயுளையும் ஸம்பத்தையும் அதிகமாக அடைந்து என்ன பிரயோசனம்?

அசேதனனும், அவமானப்பட்டவனும் உயிருடன் இருந்தாலும் புகழுக்குப் பாத்திரவாஞகான். ஆஞல் ஸ்த்ரீகளில் அபிமானமாகிற தனத்தைப் பாதுகாக்கும் ஸதீதேவி தன்யையாவாள்.

அவள் தங்களை தக்ஷன் நிந்திப்பதைக் கேட்ட மாத்திரத்திலேயே உயிரைத்துரும்பென மதித்து, துறந்துவிட்டாள். இதைக் கேட்டவுடனேயே பகவான் மகா காலர் ஸம்பூர்ண ரீதியுடன் ஸதிதேவியின் சரீர த்யாகத்தைக் கேட்டுவிட்டுக் கூறிஞர்.

ஹே முனியே! நிஜமாகவே ஸதீதேவித்தன் உயிரை த்ருணமாக மதித்துத்தன் உயிரை விட்டு விட்டாளா?

*என்றார். இதுகேட்டு நாரதமுனி பயத்தினால் வாய்மூடி மௌனியானார்.*

*இதைக்கண்டு ருத்திரதேவர் கோபாக்னியினால் ஜ்வலித்து ரௌத்ராகாரமானார். உடனேயே அவருடைய கோபாக்னியிலிருந்து ஒளிமயமாக, பர்வதாகாரமாக காலம் ம்ருத்யுவையும் நடுங்கச் செய்யும் ஒரு புருஷன் உண்டானான். அவர் மஹாதேவரையும் நமஸ்கரித்து விட்டுக் கூறினார்.*

*ஹே! பிதாவே! ஆக்ஞையிடுங்கள். தங்களுக்கு உத்தம தாஸனான நான் தங்களுக்கும் இப்பொழுது என்ன செய்யவேண்டும். இந்த ப்ரம்மாண்டத்தையும் ஒரே கவளமாக விழுங்கவா?*

*ஒரே ஆசமனத்தில் ஸப்த ஸாகரங்களையும் வற்ற அடிக்கவா? தங்களுடைய உத்தரவானால் பாதாளத்தை பூமியிலும், பூமியைப் பாதளத்திலுமாகப் பந்தாடுவேன். லோகபாலர்களுடன் இந்த்ரனைக் குடுமியைப் பிடித்து இழுத்து வரட்டுமா?*

*வைகுண்டநாதர் அவர்களுக்கு ஸகாயத்துக்கு வந்தால் அவரையும் நிராயுதபாணியாக்கி இங்கு கொண்டுவந்து விடுவேன்.*

*யுத்தம் செய்யத் திறமையில்லாத இந்தத் தானவஸேனை எம்மாத்திரம்? இவர்களில் ஒருவர் தப்பித் தவறிப் பிரபலமானாலும் அவர்களையும் அழித்துவிடுவேன்.*

*யுத்தத்தில் காலனையும் கட்டிக் கொணர்வேன். பிறகு ம்ருத்யுவுக்கும் ம்ருத்யுவைக் கொண்டுவருவேன். ஹே மஹேஸ்வரா! தங்களுடைய பிரதாபத்தில் அமர்களத்தில் கொதித்து எழுந்தேனேயானால் எனக்கு எதிராக ஒருவரும் நிற்கமாட்டார்கள்.*

*ஒரு உதை விட்டேனானால் இந்த பூமண்டலம் ரஸாதலத்துடன் வாழை இலைபோல் பதறும். இந்த*

புஜதண்டத்தினுல் இடித்தேனுனல் குலாசலங்களெல்லாம் தவிடு பொடியாகிவிடும்.

எத்தனையென்று கூறுவது? தாங்கள் உத்தரவு கொடுத்தால் என்னுல் செய்ய முடியாதது ஒன்றும் இருக்காது.

தங்கள் சரணத்தின் சக்தியை எனக்களித்து அபீஷ்டங்களெல்லாம் நிறைவேறி விட்டதென்றெண்ணுங்கள் என்ருர். மஹேஸ்வரர் அவருடைய இந்த பிரதிக்ஞையை கேட்டுவிட்டு காரியம் சாதகம் ஆயிற்று என்றெண்ணி மிக்க சந்தோஷத்துடன் கூறினுர்; நீ என்னுடைய கணங்களில் எல்லாவற்றையும் விட உயர்ந்த வீரன். அதனுல் நீ வீரபத்ரன் என்ற பெயருடன் பிரஸித்தமாவாய்.

ஹே சுபலக்ஷணே! எனது புத்ர! நீ சீக்கிரமாக இங்கிருந்து சென்று தக்ஷனுடைய யாகத்தை த்வம்ஸம் செய். அங்கு யாராவது தக்ஷனுக்கு உதவியாக நின்று உன்னை அவமானப் படுத்தினுல் அவர்களைப் பொருட்படுத்தாமல் திரஸ்கரித்துவிட்டு என்னிடம் வந்துவிடு. இப்பொழுதே செல். வீரபத்ரன் இந்தவிதமாக மஹாதேவருடைய ஆக்ஞையை சிரஸ்ஸால் வஹித்து, அவரை வலம் வந்துவிட்டு, மிக்க வேகத்துடன் சென்ருர்.

பிறகு சிவபிரான், தனது பெருமூச்சினின்றும் ஒன்பது கோடி வீரர்களை ஸ்ருஷ்டித்து வீரபத்ரருக்கு உதவி செய்ய அனுப்பினுர். அவர்களும் வீரபத்ரர் வேகமாகச் செல்வதைக் கண்டு அவருக்கு முன்னுல் வேகமாக செல்லத் தொடங்கினுர்கள்.

சிலர் பின்னுல் சென்ருர்கள், சிலர் பக்கத்தில் சென்ருர்கள். அந்த சூரியனைவிட அதிக தேஜஸ் வாய்ந்த சிவகணங்கள் ஆகாசம் முழுவதும் மறைத்துக் கொண்டு சென்ருர்கள். சிலகணங்கள் பர்வதத்தைப் பறித்து வைத்துக்

*கொண்டார்கள். சிலர் சிகரத்துடன் மலையை அசைத்தார்கள்.*

*சிலர் பெரிய பெரிய வ்ருக்ஷங்களைப் பெயர்த்தெடுத்துக் கொண்டு, யக்ஞ பூமியை அடைந்தனர். அங்கு சிலர் யக்ஞ சாலைக் கம்பங்களைப் பிடுங்கினர்; சிலர் ஹோமகுண்டங்களைத் தரைமட்டமாக்கினர்.*

*சிலர் கோபத்துடன் யக்ஞ மண்டபத்தையே பெயர்க்கத் தொடங்கினர். சிலர் கையில் த்ரிசூலம் ஏந்தி முக்ய குண்டவேதிகையையே பெயர்க்க ஆரம்பித்தார்கள். சிலர் அங்கு வைத்திருந்த ஹவிஸ்ஸைச் சாப்பிட ஆரம்பித்தனர். சிலர் தயிர், பாலைக் குடித்தார்கள்.*

*பர்வதாகாரமாகக் குவித்திருக்கும் அன்னக்குவியலை இங்கும் அங்குமாகக் சிதற அடித்தார்கள். சிலர் பாயஸத்தை உறிஞ்சினார்கள், சிலர் பாலைக் குடித்தார்கள்.*

*சிலர் சித்ரான்னங்களைச் சாப்பிட்டு விட்டுப் பாத்திரங்களை உடைத்தார்கள். சில புஜபராக்ரமிகள் யக்ஞபாத்ரங்களையும் தண்டத்தையும் உடைத்தார்கள்.*

*சிலர் சகடங்களைத் துண்டுதுண்டாக்கினார்கள். சிலர் யாகப்பசுக்களை முழுசாக விழுங்கினார்கள். சிலர் அக்னிக்கு ஸமானமான தேஜஸ்ஸையுடையவர்கள் அக்னியையே முழுங்க ஆரம்பித்தார்கள். சிலர் அக்னியை அணைத்தார்கள்.*

*சிலர் அங்கு வைத்திருந்த ஆடைகளை ஸந்தோஷமாக அணிய ஆரம்பித்தார்கள். சிலர் மலை மலையாகக் குவித்திருக்கும் ரத்னங்களைச் சூறையாடினார்கள்.*

*ஒருவன் பகதேவன் உற்றுபார்ப்பதைக் கண்டு அவனுடையக் கண்ணைப் பிடுங்கினான். ஒருவன் கோபம் கொண்டு பூஷா தேவனுடைய பற்களைத் தட்டினான்.*

*சிலர் யக்ஞதேவரையே மான்ரூபம் எடுத்துக் கொண்டு ஓடுவதைப் பார்த்து சக்ரத்தினால் தள்ளியிருந்தே அவருடைய சிரஸ்ஸைத் துணித்துவிட்டான்.*

ஒருவன் ஸரஸ்வதி தேவி ஒரு பக்கமாகப் போவதைப் பார்த்து விட்டு அவளுடைய மூக்கை அறுத்துவிட்டான். ஒருவன் கோபம் கொண்டு அதிதியின் உதடுகள் இரண்டையும் அறுத்துவிட்டான்.

ஒருவன் அர்யமா தேவனுடைய கைகளைப்பிடுங்கிவிட்டான். ஒருவன் பலவந்தமாக அக்னிதேவருடைய நாக்கை அறுத்து விட்டான். ஒருவன் யமராஜரைக் கட்டி வைத்துத் தர்மம் என்பது என்னவென்று கேட்டான்.

எந்த தர்மத்தில் பரமேச்வரருக்கு முதல் பூஜை பண்ணவில்லையோ அது என்ன தர்மம் என்று கேட்டான். மற்ெறாருவன் நைர்ருதியுடைய தொந்தியைப் பிடித்து நன்ருக அசைத்து, சநீஸ்வரருடைய ஹவிஸ்ஸை சாப்பிட்டாய் என்று ஏசி உதைத்துத் தள்ளினுன். மற்ெறாருவன் குபேரனுடைய கைகளைப் பற்றித் தூக்கி சுழற்றினுன். இதனுல் அவன் இதுவரை சாப்பிட்ட ஹவிஸ்ஸைக் கக்க நேரிட்டது.

லோக பாலர்களுடன் ஒரே பந்தியில் உட்கார்ந்திருந்த பதிெனாரு ருத்திரர்களையும் ருத்திரர் என்று பேர் இருப்பதினுலேயே ஒன்றும் ஹிம்ஸிக்காமல் விட்டுவிட்டார்கள்.

மற்ெறாருவன் வருணனுடைய வயிற்றை அமுக்கி அவர் அது வரையில் சாப்பிட்ட தக்ஷனுடைய யக்ஞ ஹவிஸ்ஸைக்கக்க வைத்தார்கள்.

மகாமதியான இந்திரன் மயில் உருவெடுத்துக்கொண்டு, பர்வதத்தின் மேலேறி இங்கு நடக்கும் ஸம்பவங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். கணங்கள் மற்ற பிராம்மணர்களை வணங்கி போங்கள். இங்கிருந்து போங்கள் என்று பிடித்துத் தள்ளாத வண்ணம் வெளியில் அனுப்பினுர்கள்.

பிறகு பிக்ஷுக்களை அடித்து துரத்தினார்கள். இந்த விதமாக முதலாவதாக வந்த பிரமதகணங்கள் முதலாவதாக யாககுண்டங்களைப் பெயர்த்து அட்டஹாஸம் செய்த பின்பு வீரபத்ரர் ஸாவகாசமாக அங்கு வந்து சேர்ந்தார்.

பிறகு அவர் முதலாவதாக வந்த கணங்களினுடையச் செயல்களைக்கண்டு யக்ஞசாலை ஸ்மசானம்போல் மிகவும் வருந்தத்தக்க நிலையில் இருப்பதைக் கண்டு கூறினார்.

ப்ரமத கணங்களே! பாருங்கள் ஈஸ்வரரை பராமுகமாக்கி விட்டுச் செய்யும் காரியங்களுக்கு இதுதான் முடிவு என்பதைப் பாருங்கள். பகவானிடம் த்வேஷித்துக் கொண்டால் இதே கதிதான். பகவானுக்கு யாரிடமும் த்வேஷம் கிடையாது.

தர்ம காரியம் செய்தாலும் பரமேஸ்வரரான பரமசிவனை மறந்தவர்கள் செய்யும் காரியம் இத்தகைய முடிவிற்குள்ளதாகிவிடும்.

ப்ரமத கணங்களே! அந்த துராசாரி தக்ஷன் எங்கே? அந்த யக்ஞ - ஹவிஸ்ஸை உண்ட தேவக் கூட்டமெங்கே? நீங்கள் இப்பொழுதே சென்று அவர்களைப் பிடித்துக்கொண்டு வாருங்கள்.

இந்த விதமாக வீரபத்ரர் ஆக்ஞாபித்ததும் ப்ரமதகணங்கள் சீக்கிரமாகக் கிளம்பியதும் கோபத்தினால் ஜ்வலிக்கும் முகத்துடன் கதாதரர் எதிரில் வருவதைக் கண்டார்கள்.

அவர் அந்த மஹாபல பராக்மம் கொண்ட கணங்களை கொடுங்காற்றில் அகப்பட்ட சருகுகள் போல சின்னாபின்னமாகப் பறக்க விட்டார்.

இதற்குப் பிறகு விஷ்ணுபகவானுடைய பயத்தினால் ப்ரமத கணங்கள் நான்கு பக்கமும் ஓடலானார்கள். அப்பொழுது வீரபத்திரர் கோபத்தினால் வடவானலைப் போல் பொங்கி எழுந்தார்.

சற்று முன்னால் வரும் விஷ்ணுவைப் பார்த்தார். அந்த மஹா பலசாலியான தைத்யர்களை ஜயித்து, சங்கு, சக்ரம், கதை, சார்ங்கம் இவைகளைத் தரித்த நான்கு கைகளையும் உடைய அவரை எண்ணிக்கையில்லாத கணங்கள் வணங்கி நின்றார்கள். அப்பொழுது வீரபத்ரர் தைத்ய சூதனரான ஸ்ரீ விஷ்ணு பகவானைப் பார்த்துக் கூறினார்.

இந்த மஹாயக்ஞத்தை நடத்திவைக்கும் பிரதம புருஷர் நீங்கள்தானல்லவா. நீரே உமது வீரத்தின் பலத்தினால் ரக்ஷித்தீரல்லவா? இப்பொழுது நீர் தக்ஷனைப் பிடித்து வாரும். இல்லையென்றால் என்னுடன் யுத்தம் செய்யும். தக்ஷனைப் பிடித்துவரா விட்டால் அவனைக் கருத்துடன் காப்பாற்றுங்கள் பார்க்கலாம்.

பெரும்பாலும் ஸமஸ்த சிவபக்தர்களுக்கும் நீரே முதலாவது வருகிறீர் என்று கூறுகிறார்கள். நீரே முன்பு ஆயிரம் கமலங்களினால் சிவனை அர்ச்சிக்க நினைத்து, அதில் ஒரு கமலம் குறைந்தவுடன் உமது கண்ணைப் பிடுங்கி கமலத்திற்கு பதிலாக அர்ச்சித்தீர்கள்.

அதனால் சந்தோஷமடைந்த சங்கரர் உமக்கு இந்த ஸுதர்சன சக்கரத்தைப் பரிசாக அளித்தார். அதனால் நீர் யுத்தங்களில் அஸுரத் தலைவரை ஜயித்து வருகிறீர்.

இந்தப் பிரகாரம் வீரபத்ரருடைய கர்வமான வார்த்தைகளைக் கேட்ட விஷ்ணு பகவான் அவருடைய பலத்தை பரீக்ஷிக்க விரும்பி அவரிடம் கூறினார்.

நீ மஹாதேவருடைய புத்ரஸ்தானத்தில் இருக்கிறாய். இந்த கணங்களுக்கும் ப்ரதமத் தலைவனாக இருக்கிறாய். மேலும் பகவான் மஹேஸ்வரனுடைய ஆக்ஞையைப் பெற்று அதிகபலவானாக இருக்கிறாய்.

அது எப்படி வேண்டுமோ இருக்கட்டும்; நான் தக்ஷனைக் காப்பாற்ற உறுதி கொண்டுள்ளேன். இப்பொழுது

*உன்னுடைய சாமர்த்தியதைப் பார்க்கிறேன். நீ எப்படி தக்ஷனை தண்டிக்கிருயென்று பார்க்கிறேன்.*

*சாரங்கபாணி (விஷ்ணுதேவரின்) யின் இந்த வார்த்தையைக் கேட்டவுடன் வீரபத்ரன் புருவ நெருப்பினுலே யுத்தம் செய்யும் படித் தன் கணங்களுக்கு ஆக்ஞையிட்டான்.*

*பிறகென்ன! ரணபூமியில் ப்ரமத கணங்களுடைய தாக்குதலைத் தாங்கமாட்டாமல் வாயில் புற்களை கடித்துக்கொள்ளும் பசுக்களைப்போல் விஷ்ணு தூதர்கள் மடிய ஆரம்பித்தார்கள்.*

*அப்பொழுது கருடத்வஜர் அதிகோபமடைந்து ஒவ்வொரு கணங்களையும் ஆயிரமாயிரம் பாணங்களினுல் துளைத்து, அடிக்கத் தொடங்கினுர்.*

*அதனுல் எல்லா பிரமதகணங்களும் மார்பு பிளந்து, ரத்தம் பெருக, வசந்தகாலத்துப் பலாச புஷ்பம்போல் சோபிக்கலானுர்கள்.*

*மேலும் மதம் பெருகும் யானையைப் போலவும், பர்வதங்களின் ஸந்திகளில் உள்ள தாதுக்களின் சோபையும் போலவும் சிகப்புவர்ணமாகக் காணப்பட்டனர். அந்த தாதுக்களின் வர்ணத்துடன் கலந்து பெருகும் அருவிகளைப் போலவும் தோன்றின.*

*அதன் பிறகு சிரிப்புடன் வீரபத்ரர் கூறினுர். ஹே வைகுண்ட நாதா, சார்ங்கபாணியே, தங்களை நான் நன்ருக அறிவேன், நீங்கள் யுத்த களத்தின் பண்டிதர்.*

*ஆனுல் நீங்கள் தைத்ய தானவர்களுடனேயே, சண்டை செய்து பழக்கப்பட்டவர். ஆனுல் சிவ பாரிஷதர்களுடன் சண்டையிட முடியாது. இவ்விதம் கூறி வீரபத்ரன் கையில் புசுண்டி எடுத்துக்கொண்டார்.*

*கதாதரரும் தைத்ய பர்வதங்களைப் பொடிப்*

*பொடியாக்கும் தனது கதையைத் தூக்கினார். அப்பொழுது வீரபத்ரர் தனது புசுண்டியினால் கதாதரரை காயமடையச் செய்தார்.*

*அந்தப் புசுண்டி கதாதரருடைய அங்கத்தில் பட்டதும் சுக்கு நூறாகச் சிதறியது. கதாதரரும் ப்ரதாபசாலியான வீரபத்ரரைத் தனது கௌமோதகியினால் அடித்தார்.*

*ஆனால் வீரபத்ரருக்கு அதனால் வலியே தோன்றவில்லை. அப்பொழுது வீரபத்ரரும் தன்னுடைய கட்வாங்கத்தை எடுத்துக் கொண்டு, கதாதரருடைய இடது புஜத்தில் அடித்த அடியினால் அவருடைய கதை பூமியில் விழுந்து விட்டது. பிறகு மதுசூதனரும் கோபித்துக் கொண்டு வீரபத்ரரைத் தனது சக்ரத்தினால் அடித்தர்.*

*அந்த சக்ரம் தன்னைப் பார்த்து வருவதைக் கண்டதும் வீரபத்ரர் மனதில் சங்கரை ஸ்மரித்தார். அவர் சங்கரரை ஸ்மரித்ததும் அந்த சக்ரம் வளைந்து விட்டது. வீரபத்ரருடைய கழுத்தில் பட்டதும் பூர்ணரீதியில் ஸுதர்னமாகி விட்டது.*

*ஹாரம் மாதிரி அந்தச் சக்ரத்தையணிந்து கொண்ட வீரபத்ரர் வீரலக்ஷ்மியினால் ஜயமாலை அணியப்பட்டதுபோல் விளங்கினார்.*

*அப்பொழுது விஷ்ணுபகவான் தன்னுடைய சக்ரம் வீரபத்ரருடைய கழுத்தாபரணமாக விளங்குவதைக் கண்டு திகிலடைந்து பிறகு சிரிப்புடன் நந்தகம் என்னும் தன்னுடைய வாளையுருவினார்.*

*அப்பொழுது வீரபத்ரர் ஆகாசத்தில் ஸித்த புருஷர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே, அவருடைய ஒரு ஹ்ரீம்காரத்தினால் ஸ்தம்பிக்கச் செய்துவிட்டார்.*

*அப்பொழுது வீரபத்ரர் ஆயாசத்துடன் த்ரிசூலத்தை ஓங்கிக் கொண்டு விஷ்ணுவைப் பார்த்து ஓடி அவர்மேல் பாய்ச்ச நினைத்தவுடனே ஆகாசவாணி கூறியது இந்தக் குருட்டு தைரியச் செயலைச் செய்யாதே, என்று.*

*அப்பொழுது வீரபத்ரர் விஷ்ணு பகவானை அங்கேயே விட்டு விட்டு தக்ஷன் பக்கத்தில் வந்தார்; அடே ஈசுவர நிந்தனை செய்பவனே! தக்ஷா! இழிவு இழிவு, யாரிடம் அளவற்ற ஸம்பத்து இருக்கிறதோ, தேவதைகள் யாருக்குத் துணை நிற்கிறார்களோ, ஸகல கார்யங்களிலும் யார் சாதுர்யவான்களாக இருக்கிறார்களோ அவர் ஈச்வரனை அவமதித்து ஒரு கர்மம் செய்யலாமோ, எந்த அபவித்ர முகத்தினால் நீ சிவனை நிந்தித்தாயோ, அந்த முகத்தை நான் நான்கு பக்கங்களிலிருந்தும் கன்னத்தில் அடித்துக் தூள்தூளாகச் செய்து விடுவேன் என்றார்.*

*பிறகு அந்த யாகத்திற்கு (யாகோத்ஸவம்) வந்திருந்த ஸ்த்ரீகள், அதிதிகள் முதலான யாவரையும் காது மூக்கு இவைகளை பங்கபடுத்தி விகாரமாக்கினார்.*

*இந்த சிவபிரானின் பிரியபுத்ரன் வீரபத்ரன் கோபத்தினால் சில பேரைக் குடுமியைப் பிடித்துப் பிய்த்து எறிந்தார். சிலருடைய கைகளை வெட்டினார்; சிலருடைய ஸ்தனங்களை அறுத்தார்.*

*சிலபேருடைய விரல்களை வெட்டியெறிந்தார்; அவர் ரோஷம் பொறுக்க முடியாமல் மஹாதேவரை நிந்தித்தவருடைய நாக்கையறிந்தார்; காதையறுத்தார்.*

*எவர்கள் தேவரான மஹாதேவர் இல்லாமல் அவரை அசட்டை செய்து, யாகஹவிஸ் உண்டனரோ, அவர்களை யாக சாலைத் தூண்களில் தலைகீழாகக் கட்டிக் தொங்கவிட்டார்.*

*சந்திரன், தர்மர், ப்ருகு, கசியபர் இவர்களை மிகவும் அவமானப்படுத்தினார்.*

*இவர்களெல்லாரும் தக்ஷனின் மருமகன்களல்லவா? தக்ஷனும் மஹேஸ்வரனைத் தவிர்த்துவிட்டு, அதிகம் பகுமானித்தானல்லவா?*

யக்ஞ குண்டங்கள், யூபஸ்தம்பங்கள், மணிமண்டபங்கள், வேதிகைகள், யக்ஞ பாத்ரங்கள், விதம் விதமாக ஹவிஸ்ஸுகள்,

யக்ஞ ஸாமக்களானவைகள், வேலை செய்தவர்கள், ரக்ஷகர்கள், மந்திரங்கள் எல்லாமே அனுயாஸமாக நஷ்டமாயின. பிறரை வஞ்சிப்பதால் சம்பாதித்த சொத்துக்களனைத்தும் சில தினங்களுக்குள்ளாகவே நஷ்டமாவதுபோல சிவபிரானை அவமதித்ததால் தக்ஷனுடைய சொத்துகளனைத்தும் யக்ஞத்தில் நஷ்டமாயிற்று; நாசமடைந்தன.

கணங்களுடன் வீரபத்ரர் தக்ஷயக்ஞத்தை இந்த நிலையில் கொண்டு நிறுத்தினுர். அப்பொழுது ப்ரும்மா விதலோ படைந்த காரணத்தைக் காட்டி மஹாதேவரை அங்கு அழைத்து வந்தார். சிவன் இல்லாத யக்ஞம் இந்த நிலையை அடைந்திருக்கிறது. அப்பொழுது மஹா தேவர் அங்கு எழுந்தருளியதும் வீரபத்ரர் அவரைப் பார்த்து மிகுந்தலஜ்ஜையடைந்தார்.

வீரபத்ரர் தேவரை வணங்கமட்டும் செய்தார். ஆனுல் ஒன்றும் சொல்வில்லை. ஆனுல் பகவான் எல்லாவற்றையும் புரிந்துகொண்டார்; பிறகு பிரும்மா சிவபிரானை சந்தோஷப்படுத்தக் கொண்டு கூறினுர்.

ஏ தயாளுவே, சங்கரா, இந்த அபராதியான தக்ஷனையும் மன்னிக்க வேண்டும் என்ருர்; கைகால்கள் ஒடிந்த மற்றவர்களும் முன் போலாகட்டும்;

வைதீக விதிகளும் முன்னைப்போல் நடக்கட்டும்; தாங்கள் உத்திரவு கொடுங்கள். ஏனென்ருல் ஈசுவரனை முன்னிட்டுத்தான் கர்மங்கள் ஸித்தியாகின்றன.

ஏ பரமேஸ்வரா, ஈஸ்வரனை நினையாமல் செய்யும் கர்மங்கள் எல்லாம் இப்படித்தன் அதிகமாக இடையூறுகளாக ஆகின்றன.

*கொஞ்சம் யோசனை செய்து பார்த்தோமானால் இந்த தக்ஷனைப்பேல் தங்களுடைய பக்தன் வேறு ஒன்றுமில்லையென்று கொள்ளலாம், ஏனென்றால் அநீஸ்வரவாதியாக இந்த கர்மத்தைச் செய்து, மற்றவர்களுக்கு ஒரு திருஷ்டாந்தத்தைக் காட்டி விட்டார்.*

*யாராயினும் சரி மகேஸ்வரரை நீக்கி விட்டுக் கர்மம் செய்தால் அந்தக் கர்மத்தின் ஸித்தியும் தக்ஷனுடைய யாகம் ஆனது போலவேயாகும்.*

*அதனால் தக்ஷனுடைய இந்த நிலைமையைக் கேட்டு விட்டு, கர்மமும் செய்ய மாட்டார்கள்.*

*பகவான் மகேசர் ப்ரும்மவினுடைய இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு புன்முருவலுடன் வீரபத்ரரை நோக்கி இவர்களையெல்லாம் முன்போலவே ஆக்கிவிடுங்கள் என்று கூறினார்.*

*வீரபத்ரர் சிவபிரானுடைய ஆக்கினைபடி மற்றவர்களையெல்லாம் முன்போலவே ஆக்கினார். வெர்கள் ஈசுவரனை நிந்திக்கிறார்களோ அவர்கள் பசுவிற்கு சமானம். அதல கணத்தலைவரான வீரபத்திரர் தக்ஷனுடைய முகத்தை மாத்திரம் ஆட்டு முகமாக்கி விட்டார்.*

*இங்கு பகவான் சிவபிரானுடைய கிரகஸ்த தர்மம் சதியில்லாமல் நஷ்டமடைந்தபடியினால் ப்ரும்மாவிடம் விடை பெற்றுக் கொண்டு தவம் செய்வதற்காக பாரிஷதர்களுடன் ஹிமாலயத்தில் வானப்ரஸ்தாச்ரமியாகச் சென்றார்.*

*புருஷர்களுக்கு ஒரு ஆச்ரமும் இல்லாமல் ஒரு க்ஷணமும் கூட வீணாகக்க கழிக்கக் கூடா. அதுனால் ஏதாவது ஒரு ஆச்ரமத்தை பற்றி இருப்பதே நல்லது. உலகத்துக்கு எடுத்துக்காட்டாக எவ்வித தபஸ்களுக்கும் பல தாதவாக இருக்கும் மஹேஸ்வரனே அனுசரர்களுடன் தபஸ் செய்வதற்காகச் சென்றார். அப்பொழுது ப்ரும்மாதக்ஷனுக்குப் பின்வருமாறு புத்தி கூறினார்.*

சிவபிரானை நிந்தித்ததனால் உண்டான பாபமான சகதியைக் கழுவுவதற்கு விரும்பினால் வாராணசிக்குச் செல்; மஹா பாதங்களை விநாசம் செய்யும் காசீபுரிக்குச் சென்று. நீ லிங்கப்பிரதிஷ்டைச் செய்வாயாக, அதனால் சிவபிரான் உள்ளம் மகிழ்வார், மஹேஸ்வர் சந்தோஷமடைந்தால் இந்த சராசர உலகமும் சந்தோஷமடையும். காசீபுரியை விட்டு வேறு எங்கும் உன் பாபகர்மங்கள் விலகாது.

ஆச்சாரியார்கள் ப்ரும்மஹத்தி முதலான பாபங்களுக்குப் பிராயச்சித்தம் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் சிவ நிந்தனைக்குப் பிராயச் சித்தம் கிடையாது அதற்கு முக்திபூமியான காசியேதான் கதி.

எந்தப் புண்யாத்மாக்கள் காசியில் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைச் செய்திருக்கிறார்களளோ, அவர்கள்தான் தர்மம் செய்தவர்கள். புருஷார்த்திகளே ஆவார்கள்.

தக்ஷன் ப்ரம்மாவினுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு விட்டு சீக்கிரமாக அவிமுக்தக்ஷேத்ரத்தில் சென்று கடுமையான தவம் செய்யத் தொடங்கினார்.

அவர் விதிபூர்வமாக லிங்கத்தை ஸ்தாபனம் செய்து அந்த லிங்கத்தை ஆராதிப்பிதிலேயே ஆழ்ந்தார். இவ்வுலகத்தில் லிங்கத்தைத் தவிர வேறு ஒன்றுமே அவர் அறியவில்லை.

சாதுர்யவானான தக்ஷப்ரஜாபதி இரவும் பகலும் மஹேஸ்வரருடைய ஸ்துதி, பூஜை, நமஸ்காரம், தியானம், தரிசனம் இவைகளைச் செய்து வந்தான்.

ஏகாக்ர சித்தத்துடன் ஈஸ்வரருடைய லிங்கத்தைத் தியானம் செய்துக்கொண்டு தக்ஷனுக்கு பன்னீராயிரம் வருஷங்கள் கழிந்தன.

இதன் நடுவில் சதிதேவி ஹிமானின் பத்னியான மேனாவின் கர்பத்தில் ஜனித்து உமை என்னும் பெயருடன்

*கடுமையான தபம் செய்தும் மஹாதேவரை தன்னுடைய பதியாக அடையமுடியவில்லை.*

*அதுவரையில் தக்ஷன் தவத்தில் திடசித்தத்துடன் லிங்கத்தை ஆராதனை செய்து கொண்டிருந்தா. இதற்கு பிறகு கீரீந்த்ர நந்தினி பதவியை அடைந்து அவருடன் காசிக்குச் சென்றார்.*

*அங்கு தக்ஷனை ஏகாத்ர சித்தத்துடன் சிவலிங்கார்ச்சனையில் ஈடுபட்டிருப்பதைக் கண்டு மஹாதேவரை வேண்டிக் கொண்டு கூறினாள்.*

*பிரபு இந்த பிரஜாபதி தவத்தினால் மிகவும் க்ஷீணமாய்கக் காணப்படுகிறார். ஏ! கருணைக் கடலே, தாங்களே இப்பொழுது மகிழ்ச்சியுடன் இவருக்கு வரம் அளிக்கவேண்டும், பார்வதி இவ்வாரறு கூறியதும் பகவான் சம்பு தக்ஷனிடம் கூறினார்.*

*ஏ மஹாபாக வரம் கேட்பாய். நீ விரும்பிய வரத்தை நான் தருகிறேன். சிவனுடைய வார்த்தையைக் கேட்ட தக்ஷன் அடிக்கடி வணங்கிக் கொண்டு; நானாவித ஸ்த்தோத்திரங்களினால் ஸ்துதி கானம் செய்தார்.*

*ஏதேவவேசா, தங்களுடைய சரணங்களில் எனக்குத் தடை படாதபக்தி பெருகட்டும். நாதா இங்கு என்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த மகாலிங்கத்தில் தாங்கள் எப்பொழுதும் வசிக்க வேண்டும்.*

*ஏ கிருபா நிதியே, தேவதேவ! நான் எத்தகைய அபராதம் செய்திருந்தாலும் அவைகளை க்ஷமித்தரும வேண்டும்.*

*இந்த வரங்களைக் கொடுங்கள். வேறு எந்த உத்தம வரன்களினாலும் எனக்கு யாதொரு பிரயோஜனமும் இல்லை. இதைக் கேள்விப்பட்டு, பகவான் மஹேஸ்வரர் கூறினார். நீ கூறியபடியே நடக்கட்டும். அதற்கு அன்னியமாக ஒன்றும் நடக்காது.*

ஏ! பிரஜாபதே! இப்பொழுது நானுக மற்ருெரு வரம் கொடுக்கிறேன். நீஸ்தாபித்த இந்த லிங்கத்திற்கு தக்ஷேஸ்வரர் என்ற பெயர் விளங்கட்டும்.

இதைஸேவிப்பதனுல் நான் ஜனங்களின் ஆயிரக்கணக்கான அபராதங்களே மன்னிப்பேன். அதனுல் எல்லாரும் இந்த லிங்கத்தைப் பூஜிக்கட்டும்.

நீ எந்த லிங்கத்தைப் பூஜை செய்வதினுல் எல்லாருலும் மதிக்கத்தகுந்தவனுகிருய். இரண்டு பரார்த்த வருஷங்களுக்குப் பிறகு மோக்ஷத்தை அடைவாய்.

இவ்விடம் கூறி தேவர் அந்த லிங்கத்திலேயே மறைந்தார். தக்ஷன் தன் மனேரதம் நிறைவேறி இருப்பிடம் அடைந்தார்.

ஸ்கந்தர் கூறுவார்: ஏ! அகஸ்தியா, இதுவரையில் தக்ஷேஸ்வரருடைய உற்பத்தி வர்ணனையைக் கூறினேன். இதைக்கேட்டு ஜீவர்கள் நூற்றுக்கணக்கான அபராதங்களிலிருந்தும் விடுபடுகிருர்கள்.

தக்ஷேஸ்வரருடைய உற்பத்தியோடு கூடிய இந்த பவித்ரமான சரிதத்தைக் கேட்பதினுல் மனிதர்கள் அபராதத்திற்கு பிறப்பிடமாக இருந்தபோதிலும் பாபமான சகதியை அவர்கள் பூசிக் கொள்ளமாட்டார்கள்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீகண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான எண்பத்தி ஒன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# ''அத்யாயம் 90''

*அகஸ்த்ய முனி கூறினூர்:- பார்வதி ஹ்ருதயானந்தா. இதற்கு முன்னூல் தாங்கள், பாபநாசகரான பார்வதீச லிங்கத்தைப் பற்றி கூறியிருக்கிறீர்கள். அது வெளிப்பட்ட வ்ருத்தாந்தத்தைக் கூறுங்கள்.*

*ஸ்கந்தர் கூறினூர்:- அகஸ்த்ய முனியே, கேளுங்கள் ஹிமாசலநாதனின் பதிவ்ருதையான மேனு தன் செலிவியிடம் கேட்டாள். ஏ, புத்ரீ இந்த மாப்பிள்ளேயான மகேஸ்வரனுடைய தேசமெங்கு இருக்கிறது? இவைகளெல்லாம் உனக்குத் தெரியுமா? எனக்கென்னமோ வீடு, வாசல் ஒன்றுமில்லேயென்று தோன்றுகிறது. இவர்களுக்கு சொந்த பந்து மித்திரர்கள் இல்லே.*

*அன்னேயின் இந்த விதமாக வார்த்தையைக் கேட்டு, கிரீந்த்ர நந்தினி பிறகு, ஸமயம் பார்த்து, மகாதேவரை வணங்கிவிட்டு, கூறினுள். நான் இன்று நிச்சயமாக மாமியாரின் க்ரஹத்திற்கு போக விரும்புகிறேன். இனிமேல் நான் இங்கிருப்பது நல்லதல்ல. அதனூல் நாதா, என்னே இப்பொழுது, தாங்கள் தங்கள் க்ரஹத்திற்கு அழைத்துச் செல்லுங்கள்.*

*தத்வ வேதாவான பகவான், கிரீசர் சைலபுத்ரி தேவியின் வார்த்தையயைக் கேட்டு, ஹிமாலயத்தை விட்டு ஆனந்த வனத்திற்கு வந்தார். பார்வதிதேவி பரமானந்தமடைந்து ஆனந்தவனத்தில் வந்து தகப்பனுரின் கிரகத்தை மறந்து சந்தோஷமாக இருந்தாள்.*

*பிறகு ஒருநாள் கௌரீ கிரீசரிடம் இவ்வாறு கூறினுள் நாதா, இந்த க்ஷேத்ரத்தில் இடைவிடாமல் ஆனந்த மகோத்ஸவத்துடன் இருப்பதன் காரணம் கூறுங்கள் என்ருள்.*

*பார்வதியின் இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு பினுகபாணியாக பகவான், சிவபெருமான கூறினூர். ஏ!*

*தேவி! பஞ்சக்ரோச பரிமாணத்துக்குள்ளடங்கிய இந்த முக்திமந்த்ர க்ஷேத்ரத்தில் லிங்கமில்லாமல் ஒரு எவ்வளவு பூமிகூட சூன்யமா இருக்கவில்லை.*

*தேவி வேறு சிற்சில இடங்களிலெல்லாம் ஒரு லிங்கம் இருந்தால், அதைச் சுற்றி ஒரு கோசம்வரை ஆனந்தமயமாய் இருக்கும். ஆனால் இந்த பரமானந்தம் அளிக்கும் ஆனந்தவனத்திலோ என்றால் பரமானந்தஸ்வரூபமான அனேகமனேகம் லிங்கங்கள் இருக்கின்றன.*

*பதினாலு உலகங்ளிலும் எத்தனை எத்தனை புண்யாத்மாக்கள் இருக்கிறார்களோ அவர்களெல்லோரும் இங்கு தங்கள் பெயரால் லிங்கத்தை ஸ்தாபிதம் செய்து சந்தோஷமாக இருக்கிறார்கள்.*

*ஏ, தேவி! ஒருவன் என்னுடைய லிங்கத்தை இங்கு ப்ரதிஷ்டை செய்தானானால் விசேஷக்ஞன சேஷன்கூட அவனது மங்களத்தின் எல்லை அறிய முடியாது.*

*கிரீந்த்ரதனயே! விசேஷமாக இந்த இடம் லிங்கங்களால் நிறைந்திருப்பதால் நிரந்தரம் பரமானந்தத்தைத் தருவதற்குக் காரணமாக இருக்கிறது. இதைக்கேட்டு பார்வதிதேவி திரும்பவும் சங்கருடைய சரணாரவிந்தங்களை வணங்கிவிட்டுக் கூறினாள்.*

*ஏ, மஹாதேவா, எனக்கும் ஒரு லிங்கத்தை ஸ்தாபிக்க அனுமதி தாருங்கள்.*

*ஒரு பதிவ்ரதையான பெண் பதியின் ஆக்ஞையைப் பெற்று ஒரு மங்களமான கார்யத்தை செய்தாளானால், அதற்கு ஹானி ப்ரளயத்தினாலும் ஏற்படாது.*

*இந்தவிதம் பகவான் மஹாதேவரை சந்தோஷப்படுத்தி அவர் அனுமதி பெற்று பார்வதி தேவி மஹாதேவர் என்ற லிங்கத்திற்குப் பக்கத்திலேயே தன்னுடைய லிங்கத்தை ஸ்தாபித்தாள்.*

*அந்த லிங்கத்தை தரிசனம் செய்த மாத்திரத்தில், ப்ரம்ம ஹத்தி முதலிய பாபங்கள் கூட ஸந்தேகமில்லாமல் விலகிவிடும். பின் தேக பந்தனமும் இருக்காது.*

*ஏ, முனிவரா, தேவதேவர் பக்தர்களின் நன்மைக்காக என்னென்ன வரங்கள் கொடுத்தாரோ, அதைக்கேளும்.*

*ஒருவன் காசியில் பார்வதீச்வர லிங்கத்தை பூஜித்தால் அவனுடைய சரீரத்தின் மறைவுக்குப்பின் அவன் காசியிலேயே லிங்கஸ்வரூபமாக ஆவான்.*

*அவன் லிங்கமாகி விட்டானென்றால், அவன் எனக்குள் ஐக்யமாகி விட்டான் என்று அர்த்தம். சித்திரை மாதத்து சுக்ல பக்ஷத்ருதியையன்று பார்வதீச்வரரை பூஜித்தால், அவனுக்கு இந்த உலகத்தில் ஸௌபாக்யமும் பரலோகத்தில் உத்தமகதியும் கிடைக்கும். ஸ்திரீயானாலும் புருஷனானாலும் பார்வதீச்வரரை ஆராதித்தால். கர்ப்பவாசம் பண்ணவேண்டிவராது.*

*அவன் பரமஸௌபாக்யத்திற்குப் பாத்திரமாவான் பார்வதீச்வரரின் நாமத்தை ஜபிப்பவர்களுக்கு சேர்த்து வைத்திருக்கும் ஸஞ்சித பாபம் அதே க்ஷணத்தில் க்ஷயமாகிவிடும். எவனொருவன் பார்வதீச் வரலிங்கத்தின் மஹாத்ம்யத்தைக் கேட்கிறானோ, அந்த மகாபுத்திமான் இஹலோகத்திலும் பரலோகத்திலும் அவனுக்குள்ள ஸமஸ்த விருப்பங்களையும் நிறைவேற்றிக் கொள்கிறான்.*

*இந்த விதமாக ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான தொண்ணூறாவது அத்யாயம்*

*ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 91

ஸ்கந்தர் கூறினுர்:- குற்றமில்லாத முனிவரே, பார்வதீச்வரருடைய மஹிமையை உமக்குக் கூறுகிறேன். இப்பொழுது கங்கேஸ்வரருடைய வருகையின் கதையைக் கூறுகிறேன்.

இந்தக் கதையை எந்த ஊரிலிருந்து கேட்டாலும் கங்கா ஸ்ஞன பலன் கிட்டும். கங்கையானவள் திலீபநந்தனஞன பகீரதனுடன் கூட ஆனந்த கானனத்தில் உள்ள சந்த்ர புஷ்கரிணி தீர்த்தத்தில் வந்து சேர்ந்தவுடன் சிவனுடைய ப்ரியமான க்ஷேத்ரத்தின் உவமையற்ற ப்ரபாவத்தைப் பார்த்து விட்டு, காசியில் லிங்க பிரதிஷ்டை செய்யக் கூடிய பலனேப் பற்றி நினேத்துக் கொண்டு கங்காதோவி விஸ்வேஸ்வரருடைய பூர்வபாகத்தில் உத்தம லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்தாள்.

காசி புரியில் அந்த கங்கேஸ்வர லிங்கத்தின் தரிசனம் கிடைப்பது மிகவும் துர்லபம். ஆனுல் தசரா திதியன்று கங்கேஸ்வரரைப் பூஜை செய்வதால், அவனது ஆயிரம் ஜன்மத்தின் ஸஞ்சித பாபங்கள் க்ஷணமாத்திரத்தில் க்ஷயமடைகின்றன. ஆனுல் கலியுகத்தில் கங்கேஸ்வர லிங்கம் மறைந்தே இருக்கிறது.

ஆனுல் புருஷர்களின் புண்ய பரிபாகத்திஞல் அதன் தரிசனம் கிடைக்கக் கூடும். ஒருவன் பரம துர்லபமான கங்கேஸ்வர லிங்கத்தின் தரிசனத்தைச் செய்தால் அவன் ப்ரத்யக்ஷமாக மூர்த்திகரித்து வந்த கங்கையின் தரிசனத்தைப் பெற்றுவிட்டான் என்பதில் சந்தேகமில்லே.

ஏ! மித்ராவருணருடைய புத்திரரே! ஸர்வ கல்மஷங்களேயும் போக்கும் பகவதி பாகீரதியின் தரிசனம் கலிகாலத்தில் கிடைப்பது துர்லபம் என்பதில் சந்தேகமில்லே. கலியுகம் முற்றிய பின்பு காசி புரியிலும் கூட அவளது தரிசனம் கிடைப்பது மிகவும் துர்லபம்.

அதுவுமில்லாமல் காசியில் கங்கேஸ்வரர் என்னும் பெயருடைய லிங்கத்தைப் பார்ப்பது மிகவும் துர்லபம். ஏனென்ருல் அதனுடைய தரிசனம் ஜனங்களின் பாபம் க்ஷயமாகும் காலம் வந்தால்தான் கிடைக்கும். கங்கேஸ்வர லிங்கத்தின் மாஹாம்யத்தைக் கேட்பதால் ஒருவன் நரகத்தை அனுபவிக்கமாட்டான். புண்யத்தின் குவியலை அடைவான். மனதில் நினைத்த வஸ்து அவனுக்குக் கிட்டும்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்தத்தின் பாஷாடீகாவான தொண்ணூற்று ஒன்ரும் அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 92

ஸ்கந்தர் கூறினுர் ஹே முனியே! இப்பொழுது உமக்கு நர்மதேஸ்வரர் லிங்கத்தைப்பற்றிக் கூறுகிறேன் கேளும். கேவலம் அதை ஸ்மரித்த மாத்திரத்திலேயே மகா பாபங்கள் க்ஷயமாகும்.

வராஹகல்பம் ஆரம்பமாகும் ஸமயம் ப்ரதானமான முனிவர்களெல்லாம் ஒன்றுகூடி, மார்க்கண்டேய முனிவரிடம் கேட்டார்கள்- ஹே! ம்ருகண்டு நந்தனு! நதிகளில் எந்த நதி ச்ரேஷ்டமானது? அதை எங்களுக்குக் கூற வேண்டும் என்ருர்கள்.

மார்க்கண்டேயர் கூறினுர். முனிவர்களே! கேளுங்கள். நதிகளில் எத்தனேயோ நதிகள் பாபத்தைப் போக்கடிக்கக் கூடியவைகள், புண்யத்தைத் தரக் கூடியவைகள் இருக்கின்றன.

அவைகளில் எல்லாம் நேராக ஸமுத்திரத்தை அடையக்கூடிய நதிகள் ச்ரேஷ்டமானவை. அவைகளிலும் சில உத்தமமான நதிகள் உள்ளன. அவைகள் மிக ச்ரேஷ்டமானவை என்று கூறப்படுகின்றன.

புனிதமான முனிவர்களே, கங்கா, யமுனு, ஸரஸ்வதி, நர்மதை இவை நான்கும் எல்லா நதிகளேயும் விடப் பரம உத்மமானவை.

கங்கை ரிக்வேதத்தின் சின்னம். யமுனுயஜுர் வேதத்தின் சின்னம். நர்மதா ஸாம வேதரூபிணீ. இது நிச்சயமமான விஷயம். கங்கை மற்றெல்லா நதிகளும் பிறப்பிடமான ஆதி கடலேயே நிரப்பக் கூடியவள். அதனுல் உலகில் கங்கைக்கு ஸமமாக வேறு ஒருத்தியும் கூற முடியாது.

உத்தமர்களே! பூர்வ காலத்தில் நர்மதா கடினமான தபஸ் செய்து வரம் கொடுக்கத்தயாராக வந்த ப்ரம்மாவிடம் ப்ரார்த்தித்துக் கொண்டாள்.

*ஹே, ப்ரபுவே! விதியின் தாதாவே! தாங்கள் எனது தவத்தில் த்ருப்தி அடைந்தீர்களானுல், எனக்கு கங்கைக்கு ஸமானமானவள் என்ற பட்டத்தைத் தாருங்கள். அப்பொழுது ப்ரம்மா சிறு சிரிப்புடன் கூறினுர்.*

*மாதேவருக்கு ஸமானமான ஒரு தெய்வம் உண்டென்ருல் மற்ற நதிகளும் கங்கைக்கு ஸமமாகக் கூடும்*

*யாராவது ஒரு புருஷன் புருஷோத்தமரான மஹாவிஷ்ணுவுக்கு சரிக்கு சரியானுல் அன்ய நதிகளும் கங்கைக்கு ஸமமாக முடியும்.*

*ஒருபெண்மணியாகிலும் கௌரிக்கு துல்யமாக ஆவாளானுல் மற்ற நதிகள் கங்கைக்கு ஸமமாக ஆக முடியும்.*

*காசிக்கு ஸமமாக வேறு ஒரு நகரம் உண்டானுல் ஸ்வர்கா தரங்கிணி கங்கைக்கு ஸமமாக ஒரு நதி இருக்கலாம்.*

*நதியில் ச்ரேஷ்டமான நர்மதை, ப்ரம்மாவின் வார்த்தையைப் புறக்கணித்துவிட்டு நேராக காசிக்கு வந்தாள்.*

*காசியில் லிங்கஸ்தாபனம் பண்ணுவதைவிட சிரேஷ்டமான காரியம் உலகில் இல்லை, அதைவிட ஒரு நற்கர்மமும் கிடையாது.*

*அதனுல் நர்மதை எனும் பவித்ர நதியானவள் பிலப்பிலாதீஸ்வரரான த்ரிலோசனருக்கு ஸமீபத்திலேயே, விதி பூர்வமாக ஒரு லிங்கத்தை ஸ்தாபித்தாள்.*

*அப்பொழுது சிவபிரான் ஸௌபாக்யவதியான நர்மதையின் செய்கையினுல் சந்தோஷமடைந்து கூறினுர், ஹே, கபே, வரம் கேட்பாய். ஹே குற்றமற்றவளே, உனக்கு எது விருப்பமோ, அந்த வரத்தைக் கேள் என்ருர்.*

*நர்மதை எனும் சிறந்த நதியானவள் அந்த வார்த்தையை விட்டுக் கூறினுள்- ஹே தேவதேவா,*

தூர்ஜடே, துச்சமான பலனைத் தரும் அன்யவரங்களினால் என்ன ப்ரயோஜனம்?

தங்கள் சரணாரவிந்தங்களில் இடையூறில்லாத பக்தியைத் தாருங்கள். பகவான் ஹரன், நர்மதையின் இந்த உத்தம வார்த்தையைக் கேட்டு மிகுந்த ஸந்தோஷமடைந்தார்.

பிறகு கூறினார். ஏ, மேலான நதியே, நீ என்ன கூறினாயோ அது மாதிரியே ஆகட்டும். புண்ய நிலயே! அப்பொழுது நானாகவே உனக்கு ஒரு வரம் அளிக்கிறேன்.

ஹே நர்மதே, உனக்குக் கரையில் உள்ள கற்கள் எல்லாம் எனது ப்ரபாவத்தால் சிவலிங்கங்களாகட்டும்.

மேலும் உனது தவத்தினால் சந்தோஷமடைந்தேன். மற்றொரு உத்தம வரத்தையும் அளிக்கிறேன். அதையும் கேள்.

ஹே நர்மதே, கங்கை தன்னிடத்தில் ஸ்னானம் செய்பவர்களுக்குத்தான் உடனே பாபத்தைப் போக்குகிறாள். யமுனை ஒரு வாரம் ஸ்னானம் செய்தால்தான் பாபத்தைப் போக்குவாள். மூன்று நாட்களில் தான் ஸ்னானத்தால் ஸரஸ்வதி பாபங்களை நாசம் செய்கிறாள்.

ஆனால் நீ என்னை தரிசித்த மாத்திரத்திலேயே பாபத்தை நாசமடையச் செய்கிறாய்.

தர்சனத்தினாலேயே பாபத்தைப் போக்கடிப்பவளே! நர்மதே! மற்றும் ஒருவரம் அளிப்பேன். உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இந்த லிங்கத்தின் பெயர் நர்மதேஸ்வரர் என்று இருக்கும்.

இந்த பரம புண்யப்ரதலிங்கம் சாச்வதமான முக்தியை அளிப்பார். இந்த லிங்கத்தைப் பக்தி பண்ணும் ஜனங்கள் மங்களத்தைக் கொடுக்கும் பொருட்டு அதை வணங்குவார். ஹே! தேவி! காசியில் அடிக்கு ஒரு லிங்கம் இருக்கிறது.

ஆனால் விசித்ரமான விஷயம் என்னவென்றால், இது பார்த்த போதே பாபத்தை க்ஷயம் செய்யக் கூடியது. இவ்வாறு கூறிவிட்டு பகவான் அந்த லிங்கத்திலேயே மறைந்தார்.

நர்மதாவும் அற்புத பவித்ரமான இவ்வரங்களைப் பெற்று மிக ஸந்தோஷமடைந்தாள். அற்புதமான பவித்ர தன்மையை அடைந்து மிகவும் ஸந்தோஷித்தாள். பின் தன் இருப்பிடம் சென்றாள்.

இவ்விதமாக மார்க்கண்டேயர், உரைத்த கதையைக் கேட்டு முனிகணங்களும் தங்கள் நித்ய ஸாதனைகளைச் செய்து கொண்டு சௌக்யமாக இருந்தார்கள்.

ஸ்கந்தர் கூறினார்: ஒரு பெண் பக்தி பூர்வமான இந்த நர்மதா மகாத்ம்யத்தைக் கேட்டவுடன், பாபப் போர்வைகளைக் களைந்து, உத்தம ஞானத்தை அடைவாள்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான தொண்ணூற்றிரண்டாம் அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 93

*அகஸ்தியர் கூறினுர்:- ஹே, ஸ்கந்தா! இப்பொழுது கர்மா - நாசனம் ஆன நர்மதா த்யானம் நான் கேட்டேன். இப்பொழுது சதீஸ்வரர் அவதரித்த கதையைக் கூறுங்கள்.*

*ஸ்கந்தர் கூறினுர்:- அகஸ்த்யா! காசியில் ஸதீஸ்வரர் ஆவிர்பவித்த கதையை இப்பொழுது கூறுகிறேன் கேளும்.*

*பூர்வ காலத்தில் ஒரு சமயம் ப்ரம்மா, கடும் தவம் புரிந்தார். அதனுல் ப்ராம்மண ப்ரியரும், ஸர்வக்ஞரும் லோகாத்மாவும் ஆன பகவான் சிவபிரான் ஸந்தோஷம் அடைந்தார். அப்பொழுது ப்ரம்மாவுக்கு வரம் கொடுக்கத் தயாராக அவர் முன் ஆவிர்பவித்துக் கூறினுர்.*

*ஹே, லோககர்த்தரே! வரம் கேளும், ப்ரம்மா கூறினுர். தாங்கள் வரம் கொடுக்க இசைந்தால் கேட்கிறேன். தாங்கள் எனக்குப் புத்திரனுக வரவேண்டும். தேவி தக்ஷ கன்னிகையாகப் பிறக்கட்டும். எல்லாவற்றையும் அருளும் தாதாவான மகாதேவர் பகவதியின் முகத்தைப் பார்த்துச் சற்று சிரித்துவிட்டு, சதுர் முகனிடம் கூறினுர்.*

*ஹே! பிதாமஹா, உமக்குக் கொடுக்காதது என்னிடம் என்ன இருக்கிறது? உம்முடைய வாஞ்சிதபலன், சித்தியாகட்டும். இவ்விதம் கூறி பகவான் சந்த்ரமௌலி ப்ரம்மாவின் கபாலத்திலிருந்து பாலரூபமாக வெளியிட்டார். அந்த பாலகன் உரக்க சப்தமிட்டு அழுதுகொண்டு ப்ரம்மாவின் முகத்தை நோக்கினுன் ப்ரம்மா அந்தப் பிள்ளையை நோக்கி என்னைப் பிதாவாக அடைந்தும் நீ ஏன் அழுகிருய்? என்ருர்.*

*அவர் வார்த்தையைக் கேட்டுவிட்டு பாலகன் கூறினுன். பிதா மஹரே! எனக்கு ஒரு பெயர் வையுங்கள். நான் என் பெயருக்காக அழுகிறேன். அப்பொழுது அந்த மாயா மயமான பாலகன் அழுவதைக் கண்டு அக்குழந்தைக்கு ருத்ரன் என்று பெயர் சூட்டினுர்.*

*அப்பொழுது அகஸ்தியர் கூறுவார் - ஏ! ஷடானனு - மஹேஸ்வரர் பாலகனுகப் போன பிறகு, ஏன் அழுதார். இதன் காரணம் தங்களுக்குத் தெரியுமானுல் கூறுங்கள். நான் அதைக் கேட்பதற்கு ஆவலுள்ளவனுக இருக்கிறேன்.*

*ஸ்கந்தர் கூறினுர் - ஹே கும்பஸம்பவா, நான் ஸர்வக்ஞருடைய புத்திரனுனதால் அதன் காரணத்தைக் கொஞ்சம் அறிவேன். அதனுல் அழுததின் காரணத்தைக் கூறுகிறேன் கேள்.*

*பரமாத்மா தேவாதி தேவர் மனதில் ஏன் தோன்றியது என்ருல் அஹோ, ஆச்சரியம், இவர் ஸத்ய லோகத்திற்கு அதிபதி, விதாதா. பரமேஷ்டி, இவரது புத்தி வைபவத்தைப் பார்த்தாயா, என்னையே புத்திரனுக்கிக் கொண்டானே. இந்த ஆனந்தத்தினுல் தான் மகாதேவர் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகிறது.*

*அகஸ்தியர் மறுபடியும் கேட்டார். ப்ரம்மாவின் இக்காரியத்தில் பாலகன்கூட அறிந்து ஸந்தோஷப்படும்படி அவர் என்ன புத்திசாலித்தனத்தைக் கண்டார்.*

*ஏ, ஸர்வக்ஞருக்கு ஆனந்தத்தை அதிகரிக்கச் செய்யும் ப்ராக்ஞரே, இந்த விஷயத்தை ஸ்பஷ்டமாகக் கூறுங்கள். இந்த விதமான வார்த்தையைக் கேட்டு, தாரகாஸுரருடைய சத்ருவான ஸ்கந்தர் கூறுவார்.*

*ஏ, கும்பஜமுனியே, மஹாதேவர் மனதில் என்ன எண்ணினுர் என்ருல் ஒரு குழந்தையைவிடப் பிதாவை முன்னேற்றுவதற்கு யார் தான் ஸமர்த்தர் ஆவார்? ப்ரம்மாவின் மனோரதம் என்னவென்ருல் மேற்கூறிய காரணம் ஒன்று. இரண்டாவது நினைத்தவர்க்கெல்லாம்கூட, ஜன்மதுக்க நாசம் செய்யும் இவர், எனக்குக் குழந்தையானுல் கணம்தோறும் பார்த்துக் கொண்டிருக்கலாம்.*

*ஒவ்வொரு க்ஷணமும் தேஹத்தைத் தொட்டுப் பார்க்கலாம். ஒரே படுக்கையில் படுக்கலாம். ஒரே*

ஆசனத்தில் அமரலாம். ஒன்ருக உண்ணலாம், விளையாடலாம்.

வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாதவன் எனக்குப் புத்திரனுகி விட்டால் வேறு என்னதான் எனக்குக் கிடைக்காது? ஒருவன் இவரை ஸந்தோஷமாகப் பார்த்தாலும் அவனுக்கு மறுபடியும் ஜன்மம் எடுக்க வேண்டாம். ஆனந்த போகஸுகங்களும் அவனை வஞ்சிக்காது.

அவன் எப்படியாவது எனது வீட்டில் விளையாட்டுப் பொருள் ஆகி விட்டானுனல் ஸந்தேகமில்லாமல் பரம ஸுகத்திற்குக் களஞ்சியமாவேன். இந்த மஹேஸ்வரன் ஸர்வக்ஞன் ஆனதால், பிதாமஹரின் இந்த விருப்பத்தை அறிந்து மூன்று கண்களிலும் ஆனந்த பாஷ்பத்தைப் பெருக்கினுன்.

ஸ்கந்தருடைய இந்த வார்த்தையைக் கேட்டு அகஸ்தியர் ஆனந்தத்துடன் கூறினுர், ஜெயவிஜயீ பவ. நீங்களே தன்யர். நீங்கள் ப்ரம்மாவின் மனதை அறிந்து விட்டீர்கள். மகாதேவரின் மனத்தையும் நீங்கள் அறிந்து விட்டீர்கள். உண்மையில் நீங்கள் அவர்கள் மனதை உள்ளது உள்ளபடி அறிந்து விட்டீர்கள். ஆதலால் சிதாத்மஸ்வரூபரான உமக்கு நமஸ்காரம்.

பகவான் ஸ்கந்தரும் கேட்பவரின் ஆனந்தத்தைக் கண்டு மிகவும் சந்தோஷமடைந்து கூறினுர். ஏ! அகஸ்தியா நீர் மிகவும் தன்யவான். கேட்க வேண்டிய யதார்த்த ரீதியை நீர் அறிந்திருக்கிறீர். உமக்குக் கதை சொன்ன எனக்கு பலன் உள்ளதாக ஆயிற்று.

இவ்விதம் பகவான் ருத்ரரானபின்பு, பகவதியும் ஸதி என்ற பெயருடன், தக்ஷனுக்கு புத்திரி ஆனுள். அந்த, ஸதிதேவியும் தனக்குச் சரியான கணவர் கிடைக்கவேண்டுமென்று காசிபுரியை அடைந்து கடுமையான தவம் புரிந்தாள். லிங்கஸ்வரூபமான தன் முன்னுல், ஆவிர்பவித்த மகாதேவரைக் கண்டாள்.

*அப்பொழுது லிங்கஸ்வரூபமான ஹரன் தெளிவான குரலுடன் அவளிடம் கூறினுர்.*

*ஏ மஹாதேவி! இனிமேல் தபஸ் செய்வதால் ஒரு பிரயோஜனமும் இல்லே. மேலும் இந்த லிங்கம் உன் பெயரை அனுஸரித்து ஸதீஸ்வரர் என்று விளங்கும். அடி தக்ஷதனயே, இப்படி உன் மனோரதம் பூர்ணமானதும் இந்த லிங்கத்தை ஆராதனே செய்யும் மற்ற ஜனங்களுடைய மனோரதமும் பூர்த்தியாகும்.*

*இந்த லிங்கத்தை ஆராதனே செய்வதால் கன்னிப் பெண்கள் அவர்கள் மனதில் நினேப்பதைவிட உத்தமமான பதியை அடைவார்கள். அதுபோல் விவாகமாகாத வாலிபர்கள் ஆராதித்தாலும் இந்த சதீஸ்வரலிங்கத்தை பூஜிப்பதாலும், யார், யார் எதை விரும்புகிறுர்களோ, அது பூர்ணமாகும். சதீஸ்வரரை பூஜை செய்து வந்தால் அவர்கள் நினேத்ததெல்லாம் சித்தியாகும். இன்றிலிருந்து எட்டாவது நாள், உன் பிதாவான தக்ஷப்ரஜாபதி உன்னே எனக்கு கன்னிகாதானம் செய்து கொடுப்பார். அதனுல் உன் மனோரதம் பூர்த்தியாகும்.*

*இவ்வாறு கூறி, மகாதேவர் அங்கேயே அந்தர்த்யானம், ஆனுர். அதன் பின் தக்ஷகுமாரி ஸதிதேவி, ஸந்தோஷத்துடன் தன் வீட்டை அடைந்தாள். அதன்பின் பிதாதக்ஷன் அவளே ருத்ரனுக்கு கன்னிகாதானம் செய்து கொடுத்தான்.*

*இவ்விதம் காசியில் ஸதீஸ்வரலிங்கம் வெளிப்பட்டது. அதை ஸ்மரித்தாலே ஸத்வகுணம் மேலிடும்.*

*ரத்னேஸ்வரருக்கு கிழக்குப் பக்கத்தில் வீற்றிருக்கும், இந்த ஸதீஸ்வரரை தரிசிப்பதால் அதே நிமிஷம் பாப முக்தி அடைவார்கள்.*

*இவ்விதமாக ஸ்கந்தபுராணத்தில் நான்காவதான காசி கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான தொண்ணூற்றி மூன்றுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*

# அத்யாயம் 94

*ஸ்கந்தர் கூறினார்:- ஏ மஹா முனியே! எவருடைய பெயரும் அம்ருதத்தை வர்ஷிக்க வல்லதோ, அந்த அம்ருதேஸ்வரர் முதலிய ஒவ்வொரு லிங்கங்களின் கதையும் கூறுங்கள்.*

*முன் காலத்தில் சனுரு என்னும் பெயரையுடைய ஒரு க்ருஹஸ்த முனி, காசியில் இருந்தார்; அவர் தினமும் ப்ரம்ம யக்ஞம் பண்ணுவார். எப்பொழுதும் அதிதி பூஜை செய்வார்.*

*அவர் எப்பொழுதும் லிங்க பூஜை செய்வார். தீர்த்தக்கரையில் தானம் வாங்க மாட்டார். அந்த ரிஷி குமாரனை வனத்தில் ஸர்ப்பம் கடித்து விட்டது. பிறகு அவனை அவனுடைய தோழர்கள் ஆஸ்ரமத்திற்குக் கொண்டு வந்தார்கள்.*

*சனுரு முனி பிரலாபித்துக் கொண்டு அந்த உபஜங்கினியை ஸ்வர்க்கத்வாரத்திற்கு அருகில் இருக்கும் மஹாஸ்மசான பூமிக்கு தூக்கிச் சென்றார்.*

*அங்கு நெல்லிக்கனி அளவு உள்ள ஒரு லிங்கம் ரஹஸ்யமாக மறைந்திருக்கிறது. ரிஷி தனது புத்திரனை அறியாமலேயே அந்த லிங்கத்தின்மேல் வைத்துக் கொண்டு யோசிக்கத் தொடங்கினார்.*

*பாம்பு கடித்தவனுடைய ஸம்ஸ்காரம் எவ்விதம் செய்ய வேண்டுமென்று யோசிக்கத் தொடங்கினார். இதற்குள் உபஜங்கினி என்னும் பாலகன் தூங்கி விழித்தவன் போல் எழுந்து விட்டான்.*

*பிறகு சனுருரிஷி இறந்து போன உபஜங்கினி உயிர் பெற்று எழுந்ததைக் கண்டு ஆச்சர்யம் அடைந்தார்.*

*என்னுடைய பிள்ளை இந்த ஸ்மசானத்திற்கு வருவதற்கு முன்பே இறந்துவிட்டான். பின் எப்படி இவனுக்கு உயிர் வந்தது!*

என்று யோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே ஓர் பாம்பு எங்கிருந்தோ ஒரு புழுவைத் தூக்கி வந்தது. இந்த பூமியின் ஸ்பரிசம் அதன்மேல் பட்டவுடனேயே அது உயிர் பெற்றுவிட்டது. அப்பொழுது அவர் உயிர் பெற்று எழும்படிச் செய்யும் அம்ருத ஸஞ்சீவியான ஒரு வஸ்து இங்கு இருக்கிறது என்று எண்ணினார்.

அப்பொழுது தன்னுடைய மிருதுவான விரல்களினால் அந்த இடத்தைத் தோண்டிப் பார்க்கத் தொடங்கினார். அப்பொழுது அவர் ஒரு நெல்லிக்கனி அளவுள்ள லிங்கம் அங்கிருக்கக் கண்டார்.

பிறகு அந்த சனருமுனி அங்கேயே் அதை பிரதிஷ்டை செய்து பூஜை செய்து நெடுநாட்கள் வரைக்கும் அம்ருதேஸ்வரர் என்னும் பெயரை உண்மையாக்கினார்.

ஆனந்தவனத்தில் அம்ருதேஸ்வரர் என்னும் லிங்கம் இப்பொழுதும் உள்ளது. அந்த லிங்கத்தைத் தொட்டால் இப்பொழுதும் அம்ருதத்வத்தை அடையலாம்.

பிறகு அவர் அம்ருதேஸ்வரருடைய பூஜையை முடித்துக் கொண்டு உயிர்பெற்று எழுந்த புத்திரனுடன் தன் இல்லத்திற்கு வந்ததும் ஜனங்கள் மிகவும் ஆச்சர்யப்பட்டார்கள்.

ஏ! முனிஸ்வரரே, அப்பொழுதிலிருந்து இந்த அம்ருதேஸ்வர லிங்கம் காசியில் ஜனங்களுக்கு முக்தியளித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் கலிகாலத்தில் இது மறைந்தே இருக்கிறது.

அம்ருதேஸ்வரரை ஸ்பர்சித்த மாத்திரத்தினால் இறந்தவன் உயிர் பெற்று எழுவான். உயிரோடிப்பவன் தொட்டால் அம்ருதத்வத்தையடைவான். அம்ருதேஸ்வரருக்கு ஸமமான ஒரு லிங்கமும் பூமியில் இல்லை. அதனால் பகவான் சங்கரர் கலிகாலத்தில் மிகவும் கருத்துடன் மூடி வைத்திருக்கிறார்.

அம்ருதேஸ்வரரின் நாமத்தைச் சொன்னாலும் போதும் அவனுக்குத் திரும்பிப் பிறக்கும் பயம் இருக்காது.

ஏ! முனிவரே, மோக்ஷத்வாரத்துக்கு சமீபத்தில் மோக்ஷேஸ்வரருக்கு முன்னால் கருணேஸ்வரர் என்னும் மற்றொரு லிங்கம் இருக்கிறது. அந்தக் கருணாமய லிங்கத்தைத் தரிசனம் செய்வதினால் அவிமுக்த க்ஷேத்திரத்திலிருந்து ஒருவரும் வெளியில் போகமாட்டார்கள்.

மணிகர்ணிகையில் ஸ்னானம் செய்து அந்தக் கருணேஸ்வரரைத் தரிசனம் செய்வதால் இந்த இடத்தில் பிறப்போமோ என்ற பயமானது ஸந்தோஷத்துடன் விலகுகிறது. ஒருவன் ஸோம வாரத்தன்று ஏக பக்த விரதனாய் கருணா மலர்களினால் கருணேஸ்வரரை ஒருதரம் பூஜை செய்தானானால் கருணா ஸாகரரான கருணேஸ்வரர் அவனிடம் மிகவும் ஸந்தோஷமடைந்து இந்த க்ஷேத்திரத்திலிருந்து வெளியில் விடாமல் வைத்துக் கொள்கிறார். அதனால் இந்த விரதம் கட்டாயம் செய்யத் தகுந்தது.

கருணா புஷ்பம் கிடைக்காவிட்டால் கருணா செடியின் இலையோ, அல்லது பழமோ. பூஜை செய்வது நல்லது. கருணேஸ்வர லிங்கத்தை அடையாளம் கண்டு கொள்ள முடியாவிட்டால்; இப்பூஜையால் தேவதேவர் சந்தோஷம் அடையட்டும் என்று சொல்லி கருணா செடியையே பூஜிக்கலாம், இந்த விதமாக ஒருவன் வருஷம் முழுவதும் ஒவ்வொரு ஸோமவாரமும் இந்த வ்ருதம் இருந்தானானால் பகவான் கருணேஸ்வரர் அவன்பேரில் ஸந்தோஷம் அடைந்தது, அவனுடைய அபிலாஷைகளைப் பரிபூர்ணமாக்குகிறார்.

அதனால் காசியில் இருப்பவர்கள் மிகவும் சிரமப் பட்டாவது கருணேஸ்வரரைப் பூஜிக்க வேண்டியது.

நான் இவ்விதமாக உமக்கு கருணேஸ்வரருடைய மகத்தான வர்ணனை பற்றி விவரித்தேன். இதைக்

*கேட்பதினால் காசியில் இருப்பவர்களுக்கு தெய்வீக உத்பாதங்கள் ஒன்றும் ஏற்படாது.*

*ஒருவன் காசீ க்ஷேத்திரத்தில் மோக்ஷத்வாரேஸ்வரர், ஸ்வர்க்கத்வாரேஸ்வரர், இவ்விரண்டு லிங்கங்களையும் தரிசனம் செய்வானானால் மோக்ஷத்தையும், ஸ்வர்க்கத்தையும் அடைவான்.*

*மற்றும் காசியில் ஜோதி ரூபேஸ்வரர் என்ற பிரகாசமான ஒரு லிங்கம் இருக்கிறது. பக்தர்கள் அதைப் பூஜித்தால் ஜோதி ரூபமாகிறார்கள்.*

*சக்கர புஷ்கரிணியான மணிகர்ணிகா தீரத்தில் இருக்கும் ஜோதி ரூபேஸ்வரருக்கு அர்ச்சனை செய்தால் ஸந்தேஹமில்லாமல் அவன் ஜோதி ரூபமாகிறான்.*

*நதிகளின் மஹா ராணியான ஸ்வர்க்க தரங்கிணி. பகவதி பாகீரதி கங்கா காசிக்கு வந்தததிலிருந்து மிகுந்த சந்தோஷத்துடன் ப்ரதிதினமும் இந்த லிங்கத்தைப் பூஜிக்கிறாள்.*

*பூர்வ காலத்தில் பகவான் விஷ்ணு அங்கு தபஸ் பண்ணிக் கொண்டிருந்தார். அப்பொழுது அந்த தேஜோமயமான லிங்கம் தானாகவே அங்கு முளைத்தது. அதனால் இந்த க்ஷேத்திரமே ஸர்வோத்தமமாயிற்று.*

*தூர தேசத்திலிருந்து கூட சக்கர புஷ்கரிணியில் எழுந்தருளியிருக்கும் இந்த ஜோதி ரூபேஸ்வரரைத் தியானம் செய்தால் அவருக்கு ஸித்திகள் அதிக தூரத்தில் இல்லை.*

*முன்பு கூறிய மிகுந்த வீரியத்தையுடைய சதுர்த்தச லிங்கம் எப்படியோ, அதைப்போலவே கர்மரூப வீர்யத்தை பஸ்மமாக்குவதில் வடவானலுக்கு ஸமமாக இந்த எட்டு லிங்கமும் இருக்கின்றன.*

*இந்த தக்ஷேஸ்வரர் முதலிய எட்டு லிங்கங்களும், ஓங்காரேஸ்வரர் முதலிய பதினான்கு லிங்கங்களும்*

இதேபோலவே சிரேஷ்டமானவைகள். இந்த விதமாக முப்பத்தாறு லிங்கங்களும் க்ஷேத்திரஸித்திற்கு முக்கிய காரணமானவை.

இந்த முப்பத்தாறு லிங்கங்களிலும் முப்பத்தாறு தத்வஸ்ரூபமாக (மஹாதேவர்) ஸதாசிவர் இருந்துகொண்டிருக்கிறுர். இப்படியிருந்துகொண்டு, இந்த க்ஷேத்திரத்தில் தினமுமே தாரக நாமத்தை உபதேசிக்கிறுர்.

இவ்விதமாக காசீக்ஷேத்ரத்தில் முப்பத்தாறு லிங்கரூபத்தில் தத்வஸ்வரூபம் விளங்குகிறது.இவைகளை பூஜிப்பதினுல் ஜனங்களுக்கு ஒரு நாளும் துர்க்கதி ஏற்படாது. ஏ முனியே, இந்த லிங்கங்கள் மிக ரஹஸ்யமாக இருக்கின்றன இவைகளில் ப்ரபாவத்தினுல் காசியில் முக்தி ஸ்திரமாக இருக்கிறது.ஏ! மஹாமதியே! இந்த லிங்கங்களின் காரணத்தினுல்தான் மோக்ஷ க்ஷேத்திரமாக இருக்கிறது. யுக யுகங்களாக இவைகளும் மற்றும் உள்ள ஸித்த லிங்கங்களும் காசியில் பிரகாசமாக இருக்கிறது.

இந்த ஆனந்தவனம் பகவான் சம்புவினுடைய அனுதிஸித்த க்ஷேத்ரம். அதனுல் இங்கிருக்கும் யாவரும் ஸந்தேகமில்லாமல் ஸித்தர்களே.

இந்த க்ஷேத்திரத்தில் யோகஸித்தி, தபஸ்ஸித்தி, வ்ரதஸித்தி, தீர்த்தஸித்தி இவைகள் நிச்சயமாகக் கிடைக்கின்றன. அணிமாதி எட்டு ஸித்திகளைக் கூறுகிறுர்களல்லவா? அவைகளுக்குப் பிறப்பிடம் இந்த மஹாதேவருடைய ஆனந்தவனமேயாகும்.

இந்த ஆனந்தவனம் மோக்ஷலக்ஷ்மியின் மாளிகையாகும். அதனுல் பூர்வ புண்ணியம் பிரபாவத்தினுலே காசி கிடைத்தால் ஸம்ஸாரத்தில் பயப்படும் ஜனங்கள் அதைவிட்டு ஒரு பொழுதும் போகக்கூடாது. இதுவே நமக்குப் பெரிய லாபமாகும். இதுவே பெரிய தபஸ்ஸாகும். இதுவே மஹாபுண்ணியம்; காசி கிடைக்கட்டும், அதுவே போதும்.

*எவன் ஜன்மம் எடுத்தானே, அவன் ஒரு நாளில்லாவிட்டால் ஒருநாள் அவஸ்யம் மரணமடைவான். கர்மத்தை அனுசரித்து ஸத், அஸத் கதிகளை அநுபவிக்கத்தான் வேண்டும். அதனால் மரணம் இவர்கை, கதிகள் கர்மத்தைப் பின்பற்றுவன, என்பதையறிந்து ஸர்வகர்ம பந்தங்களையும் வேரறுத்துவிடும் காசிவாசத்தை அவசியம் செய்யவேண்டும்.*

*அந்த நீர்மேல் குமுழியைப் போன்ற மனித ஜன்மத்தை அடைந்து, எந்த மூடர்கள் காசியை ஸேவிக்கவில்லையோ, அந்த மந்தபுத்திகள் நிச்சயமாக தெய்வத்தால் ஏமாற்றப்படுகிறார்கள்.*

*துர்லபமான மனுஷ்ய ஜன்மம் எடுத்த பிறகு அதிலும் பரம துர்லபமான காசீபுரி கிடைத்துவிட்டால் பிறகு முக்தி நம்மை விட்டு எங்கு செல்லும்?*

*இந்த உலகத்தில் இதேபோல ஸாதனங்களும் வேறு எங்கு இருக்கின்றன? யாருக்கு முக்தி கிடைக்கின்றதோ எவனுக்கு உத்தமோத்தம மோக்ஷம் கிடைக்கிறதோ தெரியாது. ஆனால் இந்த பூமண்டலத்தில் இந்தக் காசிக்கு ஸமமான புண்ணிய ஸ்தானம் வேறு இல்லை யென்பதை அடிக்கடி இது ஸத்யம் ஸத்யம் என்று அறை கூவுவேன்.*

*எங்கு பகவான் விஸ்வேஸ்வரர் வந்து தானே நேரில் வந்து முக்தி தானம் அளிக்கிறாரோ, எங்கு முக்தி கொடுப்பதற்கென்றே பகவதி பாகீரதி உத்தரவாஹினியாக ஓடுகின்றாளோ, அந்த ஆனந்த கானனத்தில் முக்தி கிடைக்கின்றது. மற்ற இடங்களில் முக்தியில்லை.*

*முக்தியைக் கொடுக்கும் தாதா கேவலம் விஸ்வேஸ்வரரே, வேறு ஒருவரும் இதுவரை ஜீவர்களைக் காசிக்கு அழைத்துச் சென்று முக்தி கொடுப்பவர்களில்லவேயில்லை. பின் மற்றவர்களிடமிருந்து முக்தி எப்படிக் கிடைக்கும்?*

கேவலம் காசியில் மட்டும் தான் ஸாயுஜ்ய முக்தி கிடைக்கிறது. ஆனால் மற்ற இடங்களிலெல்லாம் கேவலம் கொடூரக்லேசத்தை அனுபவித்த பின்னர் ஸாந்நித்யம் கிடைக்கிறது.

ஸ்கந்தர் கூறுவார்:- மஹாபாக்யசாலியான அகஸ்தியரே, இப்பொழுது நான் (பவிஷ்யத்) வருங்காலத்தைப்பற்றிக் கூறுகிறேன். எதை க்ருஷ்ண த்வைபாயனர் வேதவியாஸர் மிகப் பெரிய விஷயமென்று மனதில் நிச்சயம் செய்துகொண்டு, பின்னால் எப்படிச் சொல்லுவாரோ, அதை இப்பொழுதே சொல்லுகிறேன் நீர் கேளும்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்திரார்த்த பாஷாடீகாவான தொண்ணூற்று நான்காவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# *அத்யாயம் 95*

*வியாஸர் கூறுவார்:- ஏ! சூதமுனிவரே! ஸர்வக்ஞரான ஸ்கந்தர் அகஸ்தியரிடம் என்னைப் பற்றிய வருங்காலச் செய்தியைச் சொன்னாரோ அதை அப்படியே உமக்கு கூறுகிறேன் கேளும்.*

*ஸ்கந்தர் கூறுவார், மைத்திராவருணரின் புத்திரரே, மஹா பாக்யசாலியான அகஸ்திய முனிவரே, பராசரரின் புத்திரரான மகரிஷி வேதவியாசர் எந்த விதமாக மோகத்தையடைந்தாரென்பதைக் கூறுகிறேன் கேளும்.*

*பரம புத்திமானான வியாசர் நான்கு வேதங்களையும் அநேகக் கிளைகளாக வகுத்து சூதமுனிவர் முதலானவர்களுக்கு பதினெட்டுப் புராணங்களாக வகுத்துக் கூறினார். ச்ருதி, ஸ்ம்ருதி, புராணம் இவைகளில் ஸாரஸங்க்ரஹமாக எல்லாருடைய மனத்தையும் ஆகர்ஷிக்கும் அம்மஹாபாரதமான அபூர்வ கிரந்தத்தை எழுதினார்.*

*அந்த க்ரந்தம் ஸமஸ்த பாபங்களையுமம் நாசம் செய்வது, பரம சாந்தியளிப்பது. அதைக் கேட்ட மாத்திரத்திலேயே ப்ரம்மஹத்தி தோஷம் விலகிவிடும்.*

*ஒரு ஸமயம் அவர் பூமண்டலத்தில் யாத்திரையாகக் கிளம்பி நைமிசாரண்யத்துக்கு வந்தார். அங்கு சௌனகர் முதலிய எண்பத்து ஒன்பதினாயிரத்து தபோதனர்களான முனீஸ்வரர்களைக் கண்டார். அவர்கள் எல்லோரும் நெற்றியில் த்ரிபுண்ட்ரமும், கழுத்தில் ருத்திராக்ஷ மாலையும், விபூதி பூசிய திருமேனியும் உடையவர்களாய் ருத்திர ஸூக்தத்தைப் பூஜித்துக் கொண்டு, லிங்க ஆராதனையும், சிவநாம பஜனையும் செய்து கொண்டிருந்தார்கள்.*

*பகவான் விச்வேஸ்வரர் ஒருவரே முக்திதாதா, வேறு ஒருவருமில்லை. இந்த விஷயத்தை மனதில் உறுதியுடன் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்கள். மஹாமுனி*

*வியாசர் அவர்களை, உறுதியாய் சைவ சித்தாந்திகள் என்பதையறிந்து கொண்டு ஆள்காட்டி விரலைத் தூக்கிக் கொண்டு உச்சஸ்வரத்தில் கூறத் தொடங்கினார்.*

*ஸமஸ்த சாஸ்திரங்களையும் கடைந்து அடிக்கடி நவநீதத்தை எடுப்பதுபோல், எடுத்த முடிவு என்னவென்றால் எல்லோருக்கும் தலைவர் ஹரி ஒருவரே, அவரையே பூஜிக்க வேண்டும்.*

*வேதங்கள் புராணங்கள் மஹாபாரதம் இவைகளில் ஆதி, மத்யம், அந்தத்திலும் ஹரியே வியாபித்திருக்கிறார். மற்றொருவரும் இல்லை.*

*நான் சபதம் பண்ணி இது உண்மையிலும் உண்மையென்று கண்டறிந்து கூறுகிறேன்- வேதத்திற்கு மிஞ்சிய வேறு சாஸ்திரங்கள் இல்லை. பகவான் விஷ்ணுவை விடவேறு பெரிய தேவதைகள் இல்லை.*

*கேவலம் லக்ஷ்மீபதி ஒருவரே எல்லாவற்றையும் அளிக்க வல்லவர். அதனால் லக்ஷ்மீ நாதர்தான் தியானம் செய்யத் தகுந்தவர், வேறு ஒருவருமில்லை. அதனால் அவரையே ஸேவிக் வேண்டும்.*

*மந்த புத்தியுடையவர்கள் கேசவதேவரை விட்டுவிட்டு மற்றவர்களை சேவிக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் ஓயாமல் சுழலும் ஸம்ஸார ஸாகரத்தில் அடிக்கடி விழுந்து சுழலுகிறார்கள்.*

*ரிஷி கேசரே எல்லாருக்கும் மேலானவர். அகில உலகத்திற்கும் ஸ்வாமி. நிரந்தரமாக அவரையே சேவிக்கும் மனிதன் மூன்று உலகங்களாலும் ஸேவிகக்கப்படுகிறான்.*

*விஷ்ணுவே தர்மதாதா, ஹரியே அர்த்தத்தைத் தருபவர், காமத்தைப் பூர்த்தி செய்வதும் அவரே, அச்சுதனே மோக்ஷத்தையளிக்கவல்லவர்.*

*பகவான் சாரங்கதரரை நீக்கிவிட்டு அன்னிய தேவதைகளை உபாஸிக்கிறவர்களை, ஸாதுஜனங்களை வேதம்*

தெரியாத ப்ராம்மணர்களை எல்லாக் கர்மங்கலிருந்தும் நீக்குவதுபோல் நீக்க வேண்டும்.

இந்தவிதமாக வியாசருடைய வார்த்தையைக் கேட்டு நைமிசாரண்யவாஸிகளான முனீஸ்வரர்கள் நடுங்கும் ஹ்ருதயத்தடன் கூறினார்கள்.

ஏ! மஹாமதியே, பராசரரே! தாங்கள் வேதங்களை நான்காக வகுத்தீர்கள். புராணங்களின் தத்வத்தை அறிந்தவர்கள். நான்கு வர்ணாஸ்ரமங்களையும் நிச்சயப்படுத்தினீர்கள். மஹாபாரதத்தை இயற்றினீர்கள். அதனால் தாங்கள் எங்கள் எல்லோருக்கும் பூஜிக்கத் தகுந்தவர்கள்.

ஏ! ஸத்யவதி நந்தனரே, இங்கு தங்களைவிடப் பெரிய தத்வக்ஞர் ஒருவருமில்லை. அதைத் தாங்கள் ஆள்காட்டி விரலை உயர்த்தி சபதம் செய்து உயர்த்தி விட்டீர்கள்.

ஆனால் இங்குள்ள தங்கள் குழந்தைக்கு அதில் நம்பிக்கை ஏற்படுவதில்லை. எங்களுக்குத் தங்களுடைய பிரதிக்ஞையில் நம்பிக்கை ஏற்பட வேண்டுமானால் தாங்கள் சிவபுரியான காசிக்குச் சென்று அங்கும் தாங்கள் சபதம் கூறுவதாக பிரதிக்ஞை செய்யுங்கள். அப்பொழுதுதான் எங்களுக்கு அதில் சிரத்தையுண்டாகும்.

அதனால் ஏ! வியாஸமுனிவரே. எங்கு பகவான் விஸ்வேஸ்வரர் பிரத்யக்ஷமாக எழுந்தருளியிருக்கிறாரோ, எங்கு யுகதர்மம் வைத்த சட்டம் செல்லாதோ, எந்த பூமி உலகத்துக்குள்ளிருந்தும் வேறாகக் கருதப்படுகிறதோ, அந்த வாராணஸி புரிக்குச் செல்லுங்கள்.

இதை இவ்வாறு கூறியதும் வியாஸ முனிவர் மனதில் சற்று கோபத்துடன் தன்னுடைய பதினாயிரம் சிஷ்யர்களையும் கூட்டிக் கொண்டு உடனேயே அங்கிருந்து சென்றுவிட்டார். பிறகு காசிக்குச் சென்று பஞ்சகங்கா தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து பிந்து மாதவரைப் பூஜைசெய்து பாதோதக தீர்த்ததுக்குச் சென்றார்.

*அங்கும் ஸ்ஞானதிகளெல்லாம் முடித்துக்கொண்டு ஆதிகேசவரைத் தரிசனம் செய்துவிட்டு பாதோதக தீர்த்தத்துக்குச் சென்றார்.*

*ஐந்து தினங்கள் அங்கு தங்கி, அங்கிருந்து முன்னும் பின்னும் சங்கத்வனி முழங்க ஆடம்பரத்துடன் புறப்பட்டார்.*

*வழிநெடுகிலும் வைஷ்ணவ பக்தர்கள் வணங்க, ஜெயவிஷ்ணு, ஜெய ரிஷீகேசா, ஜெய கோவிந்தா, ஜெய மதுசூதனா, ஜெய அச்சுதா, ஜெய ஆனந்தா, ஜெயவைகுண்டா, ஜெய மாதவா, ஜெய உபேந்த்ரா, ஜெயகேசவா, ஜெயத்ரிவிக்ரமா, ஜெயகதாபாணே, ஜெய சாரங்கபாணே, ஜெய ஜனார்த்தனா, ஜெய ஸ்ரீவத்ஸ வக்ஷ, ஜெய ஸ்ரீகாந்தா, ஜெய பீதாம்பரா, ஜெய புராந்தகா, ஜெய கைடபாரே, ஜெய பலித்வம்ஸி, ஜெய கம்ஸாரே, ஜெய கேசீ சூதனா, ஜெய நாராயணா, ஜெய அஸுரபுரி, ஜெய க்ருஷ்ணா, ஜெய சௌரி, ஜெயசதுர் புஜா, ஜெய தேவகீஹ்ருதயானந்தா, ஜெய யசோதானந்தவர்த்தனா, ஜெய புண்டரீகாக்ஷா, ஜெய தைத்யாரே, ஜெய தாமோதரா, ஜெய பலப்ரியா, ஜெய பபாலாரிஸ்துதா, ஜெயஹரே, ஜெயவாஸுதேவா, ஜெயவஸுப்ரதா, ஜெய விஷ்வக்ஸேனா, ஜெயமஹாபாஹோ, ஜெய க்ஷமாதரா, ஜெயபத்மநாபா, ஜெய ஜலசயனா, ஜெய நரசிம்மா, ஜெய யக்ஞ வராஹா, ஜெய கோபா, ஜெய கோபால வல்லபா, ஜெய கோபீபதே, ஜெய குணாதீதா, ஜெய கருடத்வஜா, ஜெய கோத்ர - ப்ருதே.*

*ஜெய சாணூர மர்த்தனா, ஜெய ஆத்யந்தரஹிதா, ஜெய த்ரைலோக்யரக்ஷணா, ஜெய ஆனந்த ஸொரூபா, ஜெய நீலோத்பல ப்ரகாசா, ஏ கௌஸ்துப பூஷணா, ஹேபூதநாதா, ஸோஷணா, தங்களுக்கு ஜெயமுண்டாகட்டும், ஹே ஜகத்ரக்ஷகமணியே, ஹே நரகஹாரகா, எங்களை ரக்ஷியுங்கள்.*

*ஆயிரம் சிரஸையுடைய புருஷனே, தாங்களே இந்திரனுக்கு ஸ்வர்கத்தைக் கொடுத்தீர்கள். இறந்த காலமும், வருங்காலமும் தங்கள் கைக்குள்ளேயே இருக்கின்றது. நீங்களே புராண புருஷர்.*

*இந்த விதமாக நாமாவளியினால் வனமாலியை ஸ்துதி செய்து கொண்டு, ஸந்தோஷம் அதிகரித்ததினால் சுயேச்சையாக நடனமாடிக்கொண்டு, மிகவும் ஸந்தோஷத்துடன் சிஷ்யர்கள் புடை சூழ விஸ்வேஸ்வரருடைய கோவிலையடைந்தார். அங்கு ஞான வாபிக்கு முன்னால் துளசிமாலையைக் கையில் தரித்துக் கொண்டு, பரமபாகவதர்கள் புடைசூழ கைகளால் தாளம் போட்டுக் கொண்டு, ஆடத்தொடங்கினார்.*

*அவர் குழல் வாசித்து வாசித்து ச்ருதியுடன் லயமாகி விட்டார். விதவிதமாக ந்ருத்யங்களும் ஸமாப்தி அடைந்த பின் சிஷ்யர்களுக்கு மத்தியில் வியாஸர் தனது வலது கையை உயர்த்தி, உயர்ந்த குரலில் பாடிக்கொண்டு பின்வரும் சுலோகங்களைப் படித்தார்.*

*ஸமஸ்த வாக் ஸமூஹங்களை மத்தித்து இந்த முடிவையே வெண்ணை எனத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். ஸ்வயம் பகவான் ஹரி ஒருவரே வணங்கத்தக்கவர். இவ்வாறு கூறிக்கொண்டே வலதுகை உயர்த்தியபடியே விஷ்ணுவின் நாமாவளி பாடினார்.*

*இதைப் பார்த்த நந்தித்தேவர் அவருடைய தூக்கியக்கையையும் நாக்கையும் ஸ்தம்பிக்கச் செய்து விட்டார்.*

*இதே ஸமயம் விஷ்ணுபகவான் அங்கு வந்தார். அவர் வ்யாஸரிடம் கூறலானார்:- ஹே வ்யாஸ, நீர் பெருத்த அபராதம் செய்து விட்டீர் இதில் ஸந்தேஹமில்லை.*

*உமது அபராதத்தினால் எனக்கு மிகுந்த பயம் ஏற்பட்டிருக்கிறது. இந்த விஸ்வநாதர் ஒருவரேயெல்லாம். அவரைத் தவிர வேறு ஒன்றுமில்லை.*

அவருடைய ப்ரஸாதமாகவே எனக்கு இந்தஸுதர்சன சக்கரம் கிடைத்திருக்கிறது. அவருடைய ப்ரபாவத்தினுலேயே நான் லக்ஷ்மீபதியாக இருக்கிறேன். அந்த சம்புவே மூன்று லோகங்களையும் ரக்ஷிக்கும் சாமர்த்தியத்தை எனக்களித்திருக்கிறுர்.

அவரை பக்தி பண்ணியே நான் இவ்வளவு ஐஸ்வர்யசாலியாக இருக்கிறேன். அதனுல் நீர் எனது ஸௌபாக்யத்தை விரும்பினீர்களானுல் அதே மஹாதேவரைத் துதியும்.

அது மாதிரி புத்தியே இனி தரியாமல் பார்த்துக்கொள்ளும். இந்த விதமாக ஹரியினுடைய வாக்யத்தைக் கேட்ட வ்யாஸர் ஸமிக்ஞையினுல் கூறினுர்.

நந்தியைப் பார்த்தவுடனேயே எனது கை ஸ்தம்பித்து விட்டு பயத்தினுல் பேச்சும் தடைப்பட்டு விட்டது. தாங்கள் எனது கழுத்தைத் தடவுங்கள்.

அதனுல் பயம் நீங்கி பவானிபதி சங்கரை நான் துதிக்கட்டும். அதன் பிறகு பகவான் விஷ்ணு ரஹஸ்யமாக அவருடைய கண்டத்தைத் தடவிக் கொடுத்து விட்டுச் சென்றுர்.

அப்பொழுது உதாரபுத்தியுடைய ஸத்யவதிநந்தனனை வ்யாஸர் அதேவிதமாகக் கைகள் ஸ்தம்பித்திருக்கும் நிலையிலேயே விஸ்வேஸ்வரரைத் துதிக்கத் தொடங்கினுர்.

ஏனென்றுல் அவரே ப்ரும்மம்; அவரைத் தவிர ப்ரம்மாண்டத்தில் வேறு ஒன்றும் இல்லை. எங்காவது வேறு ஒருவர் இருந்தால் அவர் எனது முன்னுல் வந்து அவரது சக்தியைக்காட்டட்டும்.

மந்த்ராசலத்தினுல் மத்தித்த பிறகு க்ஷீர ஸமுத்திரத்திலிருந்து வெளிவந்த மஹாபயங்கரமான காலகூடவிஷம் உற்பத்தியாயிற்று. அதன் ஜ்வாலையினுல்

*விஷ்ணு கறுத்த தேகம் அடைந்து கிருஷ்ணனுனர். அதைத் குடித்த மஹேஸ்வரரைத் தவிர யார் அப்படிச் செய்வார்கள்.*

*யாருடைய பாணம் விஷ்ணுவோ, ஸாரதி ப்ரம்மாவோ, உலகமே யாருடைய ரதமோ, வேதங்கள் யாருடைய குதிரைகளோ, அவருடைய ஒரு பாணத்தினுல் திரிபுரத்தின் எல்லா திக்குகளும் எரிந்து சாம்பராயினவோ அந்த மஹா தேவரைப் போல் யார் இருக்கிறுர்கள்.*

*கேவலம் புஷ்பபாணத்தினுல் த்ரைலோக்யத்தையும் ஜயித்த காமதேவர் அந்நிய தேவதைகளுக்கு சமமாக அவர் பார்வை பட்டதும் எரிந்து விட்டார்.*

*எவரை ப்ரம்மா, விஷ்ணு, மனம், வாக்கு இவர்கள்கூட அறிய முடியாதோ, அந்த தேவாதி தேவர் விஸ்வநாதரை என்னைப் போன்ற அல்ப புத்தியுடைவர்கள் உள்ள விதமாக எப்படியறிய முடியும்?*

*யார் ஸ்வயம் உலகத்துக்கு ஆதாரமாக இருந்தும் எங்கும் எல்லா இடத்திலும் ஸாந்நித்யமாக இருக்கும் அவரே ஸம்ஸாரத்துக்குக் காரணமாக இருந்தும் 'ரக்ஷிக்கிறவராகவும்' ஸம்ஹரிக்கிறவராகவும் இருக்கிருரோ அவருடைய பிறப்பைப்பற்றி யாருக்கும் தெரியாது. ஆனுல் அவரே எல்லாருக்கும் ஆதிகாரணமாக இருக்கிருர். அவருக்கு முடிவு இல்லை. ஆனுல் அவர் எல்லாருடைய முடிவுக்கும் காரணமாக இருக்கிருர். அந்த மஹா தேவரை நான் வணங்குகிறேன்.*

*அவருடைய புனித நாமத்தை ஒருதரம் உச்சரித்தாலே போதும், அவருக்கு அஸ்வமேத யக்ஞத்திற்கு ஸமமான பலன்கள் இருக்கும். அவரை ஒருதரம் வணங்கினுல் போதும். இந்திர ஸம்பத்தே துச்சமாகப்படும். அவரைத் துதித்தால் ஸத்ய லோகத்தையடையலாம். அது போலவே அவரைப் பூஜித்தால் மோக்ஷலஷ்மி அவரை விட்டு விலகியிருக்கவே மாட்டாள்.*

ஸ்ரீ மஹேஸ்வரரைத் தவிர வேறெந்த மற்ற தேவதைகளையும் நான் அறியவே மாட்டேன். பகவான் சம்புவைத் தவிர, மற்ற தேவதைகளைத் துதிக்கமாட்டேன். த்ரிலோசனரைத் தவிர அந்ய தேவர்களை வணங்கவே மாட்டேன். இது முற்றிலும் உண்மை, உண்மை. இதில் கொஞ்சம் கூட ஸந்தேஹமில்லை.

மஹரிஷி வேதவியாசர் இந்த விதமாக மஹாதேவரைத் துதித்துக் கொண்டிருக்கும்போது நந்திகேஸ்வரருடைய பார்வையினுலே அவருடைய ஸ்தம்பித்த கை அசையத் தொடங்கியது. அப்பொழுது நந்தி புன்சிரிப்புடன் கூறினுர். இந்த எல்லா ப்ராம்மணர்களுக்கும் நமஸ்காரம்.

நந்திகேசுவரர் திரும்பவும் கூறுவார்:- ஹே! வேதவியாஸ! உம்மால் இயற்றப்பட்ட இந்தப் பரம பவித்ரத் துதியை எந்த புத்திமான் படிக்கிருனே, அவனிடம் பகவான் சங்கரர் பிரஸன்னமாக இருப்பார்.

இந்த சிவஸாந்நித்யகாரகமாகிய வியாஸாஷ்டகத்தைக் காலை வேளையில் கருத்துடன் தியானித்தால் ஸமஸ்த துர்ஸ்வப்பனங்களும் விலகும். பரமசாந்தி கிட்டும்.

தாயைக் கொலை செய்தவன், தந்தையைக் கொன்றவன், பசுவதை செய்தவன், பாலகர்களைக் கொன்றவன், குடிகாரன், தங்கத்தைத் திருடியவன், இவர்கள்கூட இந்தத் துதியைத் துதித்தால் பாபரஹிதர்களாகி விடுகிறுர்கள்.

ஸ்கந்தர் கூறுவார்:- அப்பொழுதிலிருந்து வேதவியாஸர் கண்டாகர்ண புஷ்கரிணிக்கு மேல்பாகத்தில் வியாஸேஸ்வரர் எனும் பெயருள்ள லிங்கத்தை ஸ்தாபித்து மிக உக்ரமானவராகி விட்டார்.

அவர் தினந்தோறும் ஸர்வாங்கத்திலும் விபூதி பூசிக் கொண்டும், ருத்ராக்ஷ மாலை தரித்துக் கொண்டும், ருத்ர

ஸூக்தத்தை ஜபித்துக்கொண்டும் லிங்க பூஜையிலேயே ஆழ்ந்து வந்தார்.

அப்பொழுதிலிருந்து அவர் முக்திதாயினியான காசியின் தத்வத்தை அறிந்துகொண்டு, இன்று வரை காசியை விட்டுப் போகாமல் இருக்கிறார்.

மனிதர்கள் கண்டாகர்ண புஷ்கரிணியில் ஸ்னனம் செய்து, வியாஸேஸ்வரரைத் தரிசனம் செய்தால் அவர்கள் எங்கு மரணமடைந்தாலும், அவர்களுக்குக் காசியில் மரணம் அடைந்த பலன் கிடைக்கிறது.

உத்தமர்கள் காசியில் வியாஸேஸ்வர லிங்கத்தைப் பூஜிப்பவர்கள் ஒரு பொழுதும் ஞான பிரஷ்டனாக மாட்டார்கள். பாபச்சுழலிலும் விழமாட்டார்கள்.

எவர்கள் வியாஸேஸ்வரருடைய பக்தர்களோ, அவர்களை கலி, காலன், பாபம், க்ஷேத்ரங்களின் இடையூறுகள், இவையனைத்தும் அணுகாது. காசி வாஸிகள் க்ஷேத்ர ஸம்பந்தமான பாபங்களிலிருந்து விலக இச்சையுள்ளவர்கள், கண்டாகர்ண புஷ்கரிணியில் ஸ்னனம் செய்து வியாஸேஸ்வரரைத் தரிசிக்க வேண்டும்.

இவ்விதம் ஸ்கந்தபுராணம் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான தொண்ணூற்றைந்தாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 96

அகஸ்தியர் கேட்டார்:- ஹே! ஸ்கந்த! வியாஸரான க்ருஷ்ணத்வைபாயனர், சிவபக்தி பராயணர், க்ஷேத்திரத்தின் ரஹஸ்யத்தை அறிந்தவர், பரமஞானி, க்ஷேத்ர ஸந்யாஸம் எடுத்துக்கொண்ட பிறகு ஸர்வஸ்ரேஷ்டமான வாராணஸிபுரிக்குச் சென்று ஏன் சாபம் கொடுத்தாரென்று கேழ்க்கிறுர்கள்?

ஸ்கந்தர் கூறிஞர்:- ஹே மகரிஷியே, நீர் சரியான கேள்வி கேட்டீர்கள். நல்லது, அதை, அதாவது வேதவியாஸருடைய பவிஷ்யத் (வருங்கால) சரித்திரத்தை நீர் கேட்டதால் கூறுகிறேன் கேளும்.

ஹே! அகஸ்திய முனிவரே, நந்திதேவர் அவருடைய புஜத்தை ஸ்தம்பிக்கச் செய்தாரல்லவா, அப்பொழுதிலிருந்து மிகவும் ஆதுரத்துடன் வேதவியாஸர் மஹேஸ்வரருடைய ஸ்துதியைப் பாடிக்கொண்டிருந்தார்.

ஆஞலும் காசியில் எத்தனையோ தீர்த்தங்களும் லிங்கங்களும் இருக்கின்றன. இருந்தாலும் விஸ்வேஸ்வரருடைய தரிசனம், மணிகர்ணிகை ஸ்ஞனம் இவைகளைச் செய்வதே தகுந்தது. லிங்கங்களில் விசேஷம் விஸ்வநாத லிங்கமும், தீர்த்தங்களில் விசேஷம் மணிகர்ணிகையுமே. இதைச் சொல்லிக் கொண்டு வேதவியாஸர் இவை இரண்டையும் பெரிதாக மதித்தார்.

அவர் பிரதி தினமும் மணிகர்ணிகையில் ஸ்நானத்திற்குப் பிறகு முக்தி மண்டபத்தில் அமர்ந்து, வீஞை வாத விவாதங்களைத் தவிர்த்து, கேவலம் மஹாதேவருடைய மகிமைகளையே சொல்லத் தொடங்கிஞர்.

அந்த மகரிஷி வேதவியாஸர் சிஷ்யர்கள் முன்பில் மிக்க ஸந்தோஷத்துடன் க்ஷேத்திரத்தின் மஹிமையை வர்ணிப்பார். இந்த க்ஷேத்திரத்தில் உத்தம, அல்லது

*அதமமான எந்தக் கர்மம் செய்தாலும் ப்ரளய காலத்தில் கூட அது முடிவடையாது. அதனுல் இங்கு நற்கார்கர்யம் தான் செய்ய வேண்டும்.*

*எந்தப் புண்ணியவானுவது இந்த க்ஷேத்திரத்தில் ஸித்தியை விரும்புகிருனே, அவன் ஒருபோதும் மணிகர்ணிகை ஸ்ஞனத்தை விடக்கூடாது.*

*தினமும் சக்ர புஷ்கரிணியில் ஸ்ஞனம் செய்து, பத்ரம், புஷ்பம் ஜலத்தினுல் அதுபோல் விஸ்வநாதரைப் பூஜை செய்வது மிக முக்யம்.*

*தங்கள் தங்கள் வர்ணுசிரம தர்மத்தை யனுசரித்து பிரதி தினமும் சிரத்தையுடன் க்ஷேத்ர மாகாத்மியத்தைக் கூறுவது உசிதம்.*

*அங்கு யதாசக்தி ரஹஸ்யமாக தானம் செய்தாலும் உத்தமம். விக்னங்களைத் தூர விலக்க விரும்பினுல் அன்னதானம் செய்வது விசேஷம்.*

*இங்கு எப்பொழுதும் பரோபகாரம் செய்வதே புத்திமான்களுக்கு உசிதம். மேலும் பர்வங்களில் ஸ்ஞனம், தானம் இவைகளை விசேஷமாகக் செய்ய வேண்டும்.*

*மேலும் விசேஷ பூஜைகளைப் பெரிய உற்சவமாகச் செய்ய வேண்டும். அதிகமான யாத்திரைகளும், க்ஷேத்திர தேவதைகளுக்குடைய பூஜையும் அவசியம் செய்ய வேண்டும்.*

*இந்த க்ஷேத்திரத்தில் பரதாரம், பரத்ரவ்யம், பராபகாரம் இவைகள் விலக்க வேண்டும். ஒருவருடைய ரஹஸ்ய அவயவங்களைப் பற்றியும் பேசக்கூடாது. ஒருபொழுதும் ஒருவரையும் பழிகூறக் கூடாது. பிராணன் கழுத்துவரை வந்தால்கூடப் பொய் சொல்லக் கூடாது.*

*நன்மையாகவாவது, அல்ல தீமையாகவாவது, இந்த க்ஷேத்திரத்தில் இருக்கும் ஒருவரைக் காப்பதற்காகப்*

பெரிய பொய் சொன்னால் அதனால் கேடில்லை.

கருத்துடன் இங்குள்ள ஜீவர்களை ரக்ஷிக்க வேண்டும். காசியில் கருத்துடன் ஒரு ஜீவனை ரக்ஷித்தால் மூன்று உலகத்திலுள்ள ஜீவர்களையும் ரக்ஷித்த பலன் கிடைக்கும்.

எவர்கள் க்ஷேத்ரஸந்யாஸம் எடுத்துக்கொண்டு காசியில் தங்குகிறார்களோ, அவர்கள் யாரும் ஜீவன் முக்தர்களாகவும், ருத்ரஸ்வரூபமாகவும் ஆவார்கள் என்பது திண்ணம்.

அவர்கள் ஸந்தோஷம் அடைந்தார்களானால் பகவான் விஸ்வேஸ்வரரும் ஸந்தோஷம் அடைகிறார். அதனால் அவர்கள் எல்லோரையும் கருத்துடன் பூஜைசெய்து ஸ்துதி நமஸ்காரம் இவைகளினால் ஸந்தோஷமடையச் செய்ய வேண்டும்.

தூரதேசத்தில் இருக்கும் ஸ்ரீமான்கள் விஸ்வநாதரை ஸந்தோஷமடையச் செய்ய காசியிலுள்ள ஸாதுக்களின் யோக க்ஷேமங்களை அடிக்கடி விசாரித்துக் கொள்ள வேண்டும்.

காசி வாசம் செய்பவர்களுக்கு இந்திரியங்கள் எப்பவும் சாந்தமாகவும் மனஸ்சஞ்சலத்தை எப்பவும் கருத்துடனும் வைத்துக் கொள்ள வேண்டும்.

புத்திசாலிகள் இங்கு மரணத்தையும், மோக்ஷத்தையும் விரும்பக்கூடாது. சரீரத்தை உலர்த்துவதற்கு முயற்சிக்கக் கூடாது.

ஆனால் வ்ரதம் ஸ்னானம் இவைகளில் ஸித்திக்காக சரீரத்தை ஸ்வஸ்தமாகவும் மஹாபலனான முக்தியின் ஸம்ருத்திக்காக நீண்ட ஆயுளைப்பற்றி சிந்திக்க வேண்டும்.

இங்கு நம்முடைய மங்களமான விருத்திக்கு வேண்டி ஆத்மாவை ரக்ஷிக்க வேண்டும்.

காசியில் ஆத்மாவைத்யாகம் பண்ணவேண்டுமென்ற எண்ணம் உதிக்கவேகூடாது. காசியில் ஸ்ரேயஸ்ஸைக்

*கொடுக்கக்கூடிய பலன் தினத்தில் கிடைக்கும். ஆனல் மற்ற இடங்களில் நூற்றுக்கணக்கான வருஷங்கள் இருந்தாலும் இந்தப் பலன் கிடையாது.*

*மற்ற இடங்களில் வாழ்க்கை முழுதும் யோகாப்யாஸம் செய்தால் என்ன பலன் கிடைக்குமோ, அது வாராணஸியில் ஒரே ப்ராணுயாமத்தில் கிடைக்கும்.*

*இந்த ஆனந்தவனத்தில் மணிகர்ணிகை ஒரு முழுக்குப் போட்டாலும் என்ன புண்ணியம் கிடைக்கிறதோ, அது - அன்னிய இடங்களில் ஜன்மம் முழுவதும் புண்ணியத் தீர்த்தங்களில் ஸ்னனம் பண்ணினலும் கிடைக்காது.*

*ஜீவன் முழுவதும் வேறு இடங்களில் சிவலிங்க ஆராதனையினல் என்ன புண்ணியம் கிடைக்குமோ, அந்த புண்ணியம் சிரத்தையுடன் விஸ்வேஸ்வரரை ஒரே ஒருமுறை பூஜை பண்ணுவதினல் கிடைக்கிறது.*

*ஆயிரக்கணக்கான ஜன்மங்களில் சேர்த்து வைத்த புண்ணிய வசத்தினல் விஸ்வநாதருடைய தரிசனம் கிடைக்கிறது.*

*கோடிக்கணக்கான பசுக்களை விதிப்படிக்குத் தானம் செய்தால் கிடைக்கும் பலன் - விஸ்வேஸ்வரரைத் தரிசனம் செய்த மாத்திரத்திலேயே கிடைக்கும்.*

*மஹர்ஷிகள் பதினறுவிதமாக மஹாதானங்களின் பலனைக் கூறியிருக்கிருர்கள். அந்தப் பலன்கள் - விஸ்வநாதருக்கு ஒரே ஒரு புஷ்பத்தை ஸமர்ப்பித்தாலும் கிடைக்கும்.*

*அஸ்வமேதம் முதலிய யக்ஞங்களினல் என்ன பலன் கிடைக்குமோ, அந்த பலன் விஸ்வநாதருக்கு ஒருமுறை பஞ்சாமிர்த ஸ்னனம் செய்விப்பதிலேயே கிடைக்கும்.*

*ஆயிரக்கணக்கான வாஜபேய யக்ஞங்களினல் என்ன பலன் கிடைக்குமோ, அந்த பலன் ஒருதரம்*

விஸ்வநாதருக்கு உத்தமமான நைவேத்யம் செய்வதாலேயே அதைவிட அதிகமாகக் கிடைக்கும்.

கொடி, குடை சாமரம் இவைகளினுல் விஸ்வேஸ்வரருக்கு ஸேவை செய்தால் அவன் உலகத்திற்கு ஏகசக்ராதிபதியாவான்.

பகவான் விஸ்வநாதருக்கு பூஜை சாமக்ரிகளேச் சேகரித்துக் கொடுத்தவனுக்கு உலகத்தில் ஒரு பொழுதும் ஸம்பத்துக்குக் குறைவே ஏற்படாது.

பகவானின் பூஜைக்கான எல்லா ருதுக்களிலும் பூக்கும் புஷ்பச்செடிகள் நிறைந்த நந்தவனத்தை ஒருவன் நிர்மாணம் செய்தால் அவனுடைய வீட்டு அங்கணத்தில் கல்பக விருக்ஷத்தின் சீதளமான நிழல் பரவும்.

ஒருவன் புதிதாகக் கன்று போட்ட பசுவை விஸ்வேஸ்வரருக்கு பாலபிஷேகத்திற்காக அர்ப்பணம் செய்தால் அவனுடைய முன்னேர்கள் எப்பொழுதும் க்ஷீர ஸாகரக் கரையில் வசிப்பார்கள்.

விஸ்வநாதருடைய ராஜ போகத்தோடு கூடியகோவிலில் சுண்ணும்பு பூசி வெள்ளேயடித்தாலோ, சித்திரங்கள் எழுதுவித்தாலோ கைலாசத்தில் அவனுடைய பவனம் சித்திரங்களினுல் அலங்கரித்ததாக இருக்கும்.

இந்தக் காசிபுரியில் பிராம்மண ஸந்யாஸி, சிவயோகி இவர்களுக்கு சிரத்தையுடன் அன்னமிட வேண்டும். அதனுல் கோடிபங்கு அதிகமாகப் பலன் பெறுவார்கள். இங்கு தவம், தானம் ஹோமம், ஜபம் இவைகளால் விஸ்வேஸ்வரரைத் திருப்திப் படுத்த வேண்டும்.

வேறு இடங்களில் கோடி கோடி எண்ணிக்கையில் ஜபம் செய்தால் என்ன பலன் ஏற்படுமோ, அது காசியில் 108 எண்ணிக்கையில் கிடைக்கும்.

அன்னிய இடங்களில் கோடி ஆஹுதி செய்வதால் என்ன பலன் கிடைக்குமோ, இங்கு 108 தரம் ஆஹுதிகள்

செய்வதாலேயே கிடைக்கும். இப்படிப் பண்டிதர்கள் கூறுகிறார்கள்.

ஆனந்த வனத்தில் விஸ்வேஸ்வரர் ஸந்நிதியிலே ருத்ர ஸூக்தத்தைப் பாராயணம் செய்தால் என்ன பலன் கிடைக்குமோ, அதை வார்த்தைகளால் கூற முடியாது, காசியில் நித்திய வாஸமும் உத்தரவாஹினியான கங்கையில் ஸ்னானம் செய்ய வேண்டியது முக்யம்.

மிகவும் பயங்கர ஆபத்து ஏற்பட்டாலும் காசியை விட்டுப் போகக்கூடாது. ஏனென்றால் இந்த ஆபத்துக்களை விஸ்வேஸ்வரரே போக்கடிப்பார்? இங்கு அவரே நமக்கு ரக்ஷகர்.

காசியில் அநுஷ்டிக்கும் கர்மங்கள் மிகுந்த பலன் கொடுக்கவல்லவை. அதனால் இங்கு ஸ்னானம், தானம் தவம், ஜபம் இவைகளால் நமது நாட்களைப் பயன் உடையதாகச் செய்து கொள்வது உசிதம்.

இங்கு கருத்துடன் க்ருச்ர, சாந்த்ராயணாதி விரதங்கள் அநுஷ்டிப்பது மிகவும் முக்யம். இந்திரிய விகாரங்களுக்குள்ளாகக் கூடாது.

ஏனென்றால் இங்கு இந்திரியங்கள் மநிதர்களுக்கு விகாரங்களை ஏற்படுத்தும் (பரீட்சைக்காக) அதனால் காசி வாஸத்தில் ஸித்தி கிடையாது.

அகஸ்தியர் கூறுவார்: ஹே, கார்த்திகேய, வியாஸதேவர் இந்திரியங்களுடைய சுத்திக்காக எந்த க்ருச்ர, சாந்த்ராயண வர்ணங்களைக் கூறினாரோ, அவைகளை எனக்குக் கூறவேண்டும்.

ஸ்கந்தர் கூறுவார்: ஹே மகாமதியே, சாந்த்ராயண வ்ரதம் முதலாவனவற்றிலுடைய மஹிமைகளைக் கூறுகிறேன் கேளும்- சுவைகளை அநுஷ்டிக்கிறவன் சரீர சுத்தியைப் பெறுவான்.

முதல்நாள் ஒருவேளை உணவு, மறுதினம் இரவு மட்டும் உணவு, மூன்றாம்நாள் தன் முயற்சியில்லாமல்

*கிடைத்த உணவு, நான்காம் நாள் முழு உபவாசம் இதை பாத க்ருச்ர சாந்த்ராயண வ்ரதம் என்பார்கள்.*

*வடவிருக்ஷம், கமலம், வில்வ பத்ரம், தர்ப்பை இவைகள் அபிஷேகம் பண்ணிய ஜலம் இது பர்ணக்ருச்ர விரதம் எள்ளுபிண்ணுக்கு, நெய், மோர், ஜலம், ஸத்துமா, இவைகளை ஒவ்வொன்றை ஒவ்வொரு தினம் சாப்பிட்டு ஒருநாள் விட்டு ஒருநாள் உபவாஸம் இருப்பது ஸௌம்யக்ருச்ர விரதம்.*

*மூன்று தினம் காலையில், மூன்றுதினம் மாலையில், மூன்றுதினம் கேட்காமல் கிடைக்கும் நெய் இவைகளைச் சாப்பிடுதல் மூன்றுநாள் உபவாஸமாம். பிறகு 33 தினம் ஒவ்வொரு கவளம் மாத்திரம் சாப்பிடுதல், பிறகு மூன்று தினம் உபவாசம் இருப்பது, இது அதிக்ருச்ர விரதம்.*

*19வது தினம் கேவலம் பால் மட்டும் பருகிவிட்டு இருக்கிறது க்ருச்ராதி க்ருச்ரவிரதம்; 12 நாட்களுக்குச் சேர்ந்தாற்போல் உபவாஸம் இருப்பது இது பராக விரதம். ப்ராஜாபத்ய விரதம் அனுஷ்டிக்க வேண்டுமானல் மூன்றுதினம், காலை, மூன்றுதினம் மாலை, மூன்றுதினம் முயற்சியில்லாமல் கிடைப்பது, மூன்று தினம் உபவாஸம்.*

*கோமூத்ரம், சாணம், பால் தயிர், நெய், தர்ப்பை ஜலம் இவைகளை முறையாக ஒவ்வொரு நாளும் குடித்துவிட்டு ஒரு இரவு உபவாசம் இருப்பது க்ருச்ர சாந்த்ராயண விரதம் என்று கூறுகிறுர்கள்.*

*முன் கூறிய சாந்த்ராயண வ்ரதத்தில் 6 திரவ்யங்களையும் புஜிக்காமல் ஏழு நாட்களும் உபவாஸமாக இருத்தல் க்ருச்ரமகா சாந்த்ராயண வ்ரதமாகும். தப்த க்ருச்ர விரதம் என்பது பிரதி தினமும் ஒருமுறை ஸ்ஞனம் செய்து ஜாக்ரதையாக வெந்நீர் பால், நெய், வாயு இவைகள் மாத்திரம் பானம் செய்ய வேண்டும்.*

*மூன்றுதினம் வெந்நீர், மூன்றுதினம் சூடான பால், மூன்றுதினம் சூடான நெய், மற்ற நாட்களுக்கு வாயுபக்ஷணம்.*

*இந்த வ்ரதத்தில 4 ரூபாய் எடையுள்ள (பலம்) ஜலம், பால், இரண்டு பழம் நெய் அளவு இதை தப்தக்ருச்ர விரதமென்பார்கள், கோமூத்ரத்தை பானம் செய்தால் அதுவும் சரீர சுத்திக்கான ஏகான்ஹிக க்ருச்ரவிரதம் என்பார்கள்.*

*பகல் முழுவதும் கைகளை உயர்த்திக் கொண்டு வாயு பக்ஷணம் செய்து, இரவு ஜலத்திலமர்ந்து விடியுமட்டும் இருந்தால் அதுவும் ப்ராஜாபத்ய வ்ருதத்துக்கு ஸமமாகக் கூறப்படுகிறது.*

*மூன்று வேளை ஸ்னானம் செய்து க்ருஷ்ணபக்ஷத்தில் ஒவ்வொரு கவளமாகக் குறைத்துவந்து சுக்ல பக்ஷத்தில் கூட்டிக்கொண்டே வந்து முடிப்பது சாந்த்ராயண வ்ரதத்தின விதி என்று சொல்லப்படுகிறது.*

*சுக்லபக்ஷத்தில் கவளம் ஒவ்வொன்றாக கூட்டிக்கொண்டே போய் க்ருஷ்ணபக்ஷத்தில் ஒவ்வொரு கவளமாகக் குறைத்துக்கொண்டே வந்து, அமாவைசையன்று ஒன்றும் சாப்பிடாமல் இருந்தால் அதுவும் சாந்த்ராயண வ்ரதம்தான்.*

*ஒழுங்காக காலை நான்கு கவளம், சூரிய அஸ்தமனம் ஆனதும் நான்கு களவமும் போஜனமும் செய்தால் அது ப்ரம்மசாரிகளுடைய சாந்த்ராயண வ்ரதமாகும்.*

*ஒழுங்காகச் சரியான மத்யான்ன வேளையில் எட்டு கவளம் பவிஷ்ய நித்ய போஜனம் செய்தால் அது யதி சாந்த்ராயண வ்ரதமாகும்.*

*ஒரு மாதம் முழுவதிலும் க்லுப்தமாக ஏதாவது ஒரு ரீதியில் 240 கவளம் ஹவிஷ்யான்னத்தைப் புஜித்தால் அவன் சந்திரலோகத்திற்கதிகாரியாகிறான். சரீரத்திற்கு சுத்தி ஜலத்தினாலும், மனதினுடைய சுத்தி, ஸத்யத்தினாலும், பூதாத்மாவின் சுத்தி வித்தை, தபஸ்ஸினாலும் புத்திக்கு சுத்தி ஞானத்தினாலும் ஏற்படுகிறது.*

ஆனால் அந்த ஞானம் ஜனங்களுக்கு யதார்த்த ரீதியாகக் காசியை ஸேவிப்பதினாலேயே கிடைக்கிறது. ஏனென்றால் காசியை ஸேவிப்பதனாலேயே விஸ்வேஸ்வரருக்கு தயை ஏற்படுகிறது.

அப்போது கர்மத்தை நிர்மூலனம் செய்வதில் வல்லதான ஞானோதயம் ஆகிறது. அதனால் காசீபுரியில் கருத்துடன் ஸ்னானம் தானம், ஜபம், தபம், வ்ரதம், புராணச்ரவணம், தர்மசாஸ்திரத்தில் கூறியிருக்கும் வழி நடத்தல் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு க்ஷணமும் விஸ்வநாதருடைய சரணத்தியானத்தில் மூன்று காலத்திலும் லிங்கத்தைப் பூஜித்தல், லிங்கப் பிரதிஷ்டை செய்தல், ஸாதுஸங்கம் பண்ணல், அடிக்கடி சிவசிவ என்னும் நாமத்தை உச்சரித்தல்;

அதிதி ஸத்காரம், காசிவாசியாக வந்தவரிடம் தோழமை பூணல், ஆஸ்திக புத்தி, வணக்கம், மானாபிமானத்தில் ஸமபுத்தி, விருப்பு வெறுப்பின்மை, அஹிம்ஸை, ஒருவரிடமும் ஒன்றும் யாசியாமை, இரக்கசித்தம்.

டம்பமின்மை, பொறாமையின்மை, ஒருவரிடமும் யாசியாமல் கிடைத்ததை வைத்துக் கொண்டு ஸந்தோஷித்தல், லோபமின்மை சோம்பலின்மை அஹங்காரமில்லாதிருத்தல்.

இந்த ஸத் ப்ரவர்த்திகளை காசி வாசிகளாக உள்ளவர்கள் அவசியம் பின்பற்ற வேண்டும். இதைத் தங்களைச் சேர்ந்தவர்களுக்கும் பிரதிதினமும் உபதேசம் செய்ய வேண்டும்.

வியாஸரும் பிரதிதினமும் மூன்று காலஸ்னானமும், லிங்கபூஜையில் ஈடுபாடும், பிக்ஷான்னம் போஜனமாகக் கொண்டும் காசிவாசம் செய்யத் தொடங்கினார்.

அதன்பிறகு மஹாதேவருக்கு ஒருநாள் வியாஸரை பரீக்ஷை செய்ய வேண்டுமென்று தோன்றியது. அதை பார்வதியிடம் கூறினார்.

*ஏ! சுந்தரீ, இன்று பரமதார்மிகரான வியாஸர் பிக்ஷுக்காக எங்கும் சுற்றி வரும்பொழுது, எங்கும் ஒருபிடி அன்னம்கூட கிடைக்காமல் இருக்கும்படி செய்யவேண்டும் என்று கூறினார்.*

*பவானி பவநாசகரான பவருடைய ஆக்கினையை வந்தனையுடன் ஏற்றுக் கொண்டாள். அவருக்கு ஒரு வீட்டிலும் பிக்ஷு கிடைக்காதவாறு தடுத்துவிட்டாள். இதனால் அந்த முனீஸ்வரரான வியாஸர் (பிக்ஷு கிடைக்காததனால்) தன்னுடைய சிஷ்யர்களுடன் மிகுந்த வருத்தத்தையடைந்தார்.*

*பகல் கழிந்துவிட்டது. எங்கும் நகரத்தைச் சுற்றி வந்தார். இவர்களைத் தவிர மற்றெல்லா பிக்ஷுகளுக்கும் வீட்டிற்கு வீடு பிக்ஷு கிடைத்தது.*

*ஆனால் சிஷ்யர்களுடன்கூட வியாஸமுனிக்கு ஒரு இடத்திலும் பிக்ஷு கிடைக்கவில்லை. அதற்கு பிறகு வியாஸமுனி தன்னுடைய சிஷ்யர்கள்கூட சந்தியோபாஸனை முதலிய கர்மங்களை முடித்துக்கொண்டு அன்றிரவும், பகலும் சுத்த பட்டினியாகக் கிடந்தார்.*

*பிறகு வியாஸமுனிவர் மறுநாள் மாத்யான்னிக விதிகளையெல்லாம் முடித்துக்கொண்டு, சிஷ்யர்களுடன் நகரத்து நான்கு மூலைகளிலும் சுற்றி வந்து களைத்துப்போய் ஓரிடத்தில் அமர்ந்து யோசிக்கத் தொடங்கினார். அடிக்கடி ஒவ்வொரு பணக்கார வீடுகளையும் சுற்றிச் சுற்றி வந்தார். பாக்கியமில்லாதவனுக்கு தனம் கிடைக்காதவாறு போல அவருக்கு பிக்ஷு கிடைக்கவில்லை.*

*என்ன காரணம்? ஸாவதானமாக விதிவழுவாது நடந்தும் பிக்ஷு கிடைக்கவில்லையேயென்று தன் சிஷ்யர்களை அழைத்துக்கேட்டார்.*

*உங்களுக்கும் இன்று பிக்ஷுயொன்றும் கிடைக்கவில்லையல்லவா? நல்லது நான் சொல்கிறபடி செய்யுங்கள். இரண்டு மூன்று பேராகச் சேர்ந்து இந்நகரத்தில் என்ன நடக்கிறது என்று பார்த்து வாருங்கள்.*

மிகுந்த முயற்சி எடுத்துக் கொண்டும் மறுதினமும் பிக்ஷை கிடைக்கவில்லை. ஒருவேளை ஏதாவது துர்சம்பவம் நடந்திருக்கிறதோ என்னவோ, இந்த விசாலமானக் காசீபுரியில் க்ஷணநேரத்தில் அன்னம் கிடைக்காமல் போய்விட்டதே; ஒருவேளை எல்லா ஜனங்களும் ஒரேயடியாக ராஜ தண்டனைக்கு ஆட்பட்டிருக்கிறார்களோ? அல்லது நம்மிடம் பொறாமைப்பட்டு ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு, நமக்கு பிக்ஷைபோடாமல் தடுத்துவிட்டார்களோ? இதை நன்றாக விசாரித்துக் கொண்டு வர இப்பொழுதே நீங்கள் செல்லுங்கள் என்றார்;

இந்த விதமாக பூஜ்யபாதரான குருவின் ஆக்ஞையைப் பெற்று நகர் பூராவும் சுற்றிப் பார்த்து, நகரத்தாரின் செழிப்பு நிலையைப் பற்றி அறிந்து சிஷ்யர்கள் கூறினார்கள், ஆராத்யதேவரே, தாங்கள் கேளுங்கள், இங்கு ஒருவிதமான உபத்ரவமும் நேரவில்லை. ஒருவரும் ஒருவேளை கூட ஆகாரம் இன்றி இருக்கவில்லை.

இங்கு விஸ்வநாதர் எழுந்தருளியிருக்கிறார்; இங்கு ஸ்வர்க்கதரங்கிணி கங்கை பிரவாஹிக்கிறாள். தங்களைப் போலொத்த மகர்ஷிகள் இருக்கிறார்கள். ஏன் எங்கிருந்து இடையூறுகளினால் பயம் ஏற்படுகிறது?

இந்த விஸ்வநாதபுரியில் ஸாதாரண ஜனங்களிடம் எத்தனை செல்வம் இருக்கிறதோ, (அவ்வளது) அளகாபுரியை உவமை கூறுவானேன்? வைகுண்டத்தில்கூட இல்லை.

ஹே! முநியே! இங்கு சிவநிர்மால்யம் சாப்பிடுகிற பண்டாக்களின் வீடுகளில் கூட எத்தனை ரத்னங்கள் இருக்கிறதோ, அத்தனை ரத்னாகரம் என்று பெயர் வாங்கிய ஸமுத்ரத்தில்கூட இல்லை.

இங்கு இருக்கும் ஒவ்வொரு வீட்டிலும் எத்தனை தான்யக்குவியல்கள் உள்ளனவோ, அத்தனையளவு கல்பக விருக்ஷம்கூட இந்திரபுரியில் அளிக்கவில்லை என்று கூறலாம்.

*எந்த நகரத்தில் தேவி விசாலாக்ஷி அதிகமான பலனையளிக்கிறளோ, அங்கு இருக்கும் ஒரு மனிதன் கூட நிர்தனமாக இருக்கமாட்டான்.*

*மோக்ஷலக்ஷ்மியினுடைய இந்த விசால பவனமான ஆனந்த கானனத்தில் எப்பொழுது முக்தியே ஸுலபமாகக் கிடைக்கின்றதோ, அங்கு வேறெந்த வஸ்துதான் ஸுலபமாகக் கிடைக்காது?*

*இங்கு உள்ள ஒவ்வொரு நாரீமணிகளும் பாதிவ்ரத்யத்தில் ஆழ்ந்து, ஸாக்ஷாத் பவானியாகவே திகழ்கிறாள். தங்களுடைய உத்தம கர்மாக்களையெல்லாம் சிவ ஸமர்ப்பணம் செய்கிறார்கள்.*

*இந்தக் காசியில் உள்ள புருஷர்கள் எல்லாரும் கண திபதிகளாகவோ, தாரகசத்ரு குமாரக் கடவுளாகவோ இருக்கிறார்கள்.*

*இங்கு நெற்றியில் த்ரிபுண்ட்ரம் உடையவர்களெல்லாம் சாக்ஷாத் சந்திரசேகரனாகவே காக்ஷியளிக்கிறார்கள். ஆயிரக்கணக்கான இடையூறுகளால் பீடிக்கப்பட்டிருந்தாலும் கூட காசியை விட்டுப் போகாமல் ஸர்வக்ஞராகத் திகழ்கிறார்கள். இங்கு ஒவ்வொரு வீட்டிலும் குழந்தைகள் முதல் ப்ரம்ம விவாதம் செய்கிறார்கள்.*

*கங்கா ஜலத்தினால் பாபம் நீங்கி எல்லாரும் சதுர்முகர்களாகத் திகழுகிறார்கள். எல்லா க்ஷேத்திர ஸன்யாஸிகளும் மோக்ஷலக்ஷ்மிக்குப் பதியாக இருக்கிறார்கள்.*

*ஒவ்வொருவரும் ரிக்ஷீகேசராகவும், புருஷோத்தமராகவும், அச்சுதராகவும் காணப்படுகிறார்கள். ஏனென்றால் அவர்களெல்லாரும் இந்த க்ஷேத்திரத்திற்கு பாத்யஸ்தர்களாக ஆகி விட்டார்கள்.*

*ஸ்த்ரீகளும் புருஷர்களும் இங்கு முக்கண்ணராகவும், நான்கு கையினராகவும் நீலகண்டராகவும்*

ம்ருத்யுஞ்ஜயராகவும் ஆகிவிட்டார்கள். இதில் கொஞ்சமும் ஸந்தேஹமேயில்லை. ஒவ்வொருவரும் மோக்ஷலக்ஷ்மிக்குத் தனது சரீரத்தில் இடம் கொடுத்திருப்பதால் அர்த்த நாரீஸ்வரராகத் திகழ்கிறார்கள்.

இங்கு தர்மார்த்த காமமோக்ஷங்கள் குவியல் குவியலாகக் கிடக்கின்றன. இங்குக் கலியும் காலனும் ஒரு விதமான இன்னலும் விளைவிப்பதில்லை. அதனால் காசிவாஸிகளுக்கு கர்ப்பவாஸம் அனுபவிக்க வேண்டாம். இங்கு விஸ்வநாதருடைய சரணார்த்திகளுக்கு பாபத்தைப் பற்றிச் சிறிதும் பயம் இருப்பதில்லை. இங்கு ஸ்வயம் விஸ்வநாதர், நாத, பிந்து கலாத்மகராக எழுந்தருளியிருக்கிறார்.

அதனால் இங்கு மந்திரஸ்வரூபமான ப்ரணவம் த்வனிமயமாகவும் ஆகியிருக்கிறது. இதே காரணத்தினால் இந்தக் காசிமாநகரில் நான்கு வேதங்களும் மூர்த்திகரித்து உலாவுகின்றன. இது நிச்சயமான விஷயம்.

இங்கு வாக்தேவியான ஸரஸ்வதி, நதி ரூபமாகிப் பெருகிக்கொண்டிருக்கிறாள். அதனால் சாஸ்திரங்களுக்கெல்லாம் கோவிலாகிய இந்த ஆனந்தவனம் ஸமஸ்த தர்ம சாஸ்திரங்களுக்கும் ப்ரதான ஸ்தானமாக விளங்குகிறது.

ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்களெல்லாம் ஒருவர் விடாமல் இங்கு குடிகொண்டிருக்கிறார்கள். இது பொய் அல்ல. எப்பொழுதும் நாகர்கள் ரஸாதலத்திலிருந்து வந்து தங்கள் நாகரத்னத்தினால் விசுவநாதருக்கு ஹாரத்தி ஒளியைக் காட்டுகிறார்கள்.

இங்கு காமதேனுவுடன் ஏழுகடல்களும் வந்து விசுவநாதருக்கு பஞ்சாம்ருத அபிஷேகம் செய்கின்றன. மந்தாரம், பாரிஜாதம், சந்தநம், ஹரிசந்தனம், கல்பக வ்ருஷம் முதலியன அநேக அன்ய வ்ருக்ஷங்களுடன் இங்கு எப்போதும் வாஸம் செய்கின்றன.

*இங்கு எல்லா தேவதைகளுள், எல்லா ரிஷிகளும், எல்லா யோகீஸ்வரர்களும் வந்து காசிநாதரை உபாஸனே செய்கிறுர்கள்.*

*காசி எல்லா வித்தைகளுக்கும் ஜன்ம பூமி, லக்ஷ்மியின் உத்தம வாசஸ்தலம். முக்குணங்களோடு கூடிய இந்தக்காசிக்ஷேத்ரம் முக்தி க்ஷேத்ரமாகும்.*

*இதைக் கேட்டு ருஷியான உத்தம பராசர குமாரன் தனது சிஷ்யர்களிடம் கூறுவார். இதோ இருக்கும் ச்லோகத்தை இன்னுமொருதரம் வாசியுங்கள். எல்லா வித்யைகளுக்கும் களஞ்சியமான கமலாலயம் இருப்பிடம்; த்ரயீமயீயான இந்தக் காசி வெளிப்படையாகவே முக்திக்ஷேத்ரமாகும் என்று அவர்கள் படித்தார்கள்.*

*ஸ்கந்தர் கூறுவார்:- ஹே கும்பமுனியே, இதைக் கேட்டவுடனேயே, கோபத்திஞல் கண்கள் குருடானவரும், பசியென்னும் ஜ்வாலேயிஞல் தஹிக்கப்பட்டவருமான வ்யாஸபகவான் காசிக்கு சாபம் கொடுக்கத் தொடங்கிஞர்.*

*காசியில் மூன்று புருஷர்களுக்கு வித்தையே வராது; மூன்று புருஷர்களுக்கு செல்வமே இராது; மூன்று புருஷர்களுக்கு முக்தியே கிடையாது. இந்த விதமாக வ்யாஸபகவான் காசிக்கு சாபம் கொடுத்தார்.*

*அதாவது இங்குள்ள படித்தவர்கள் வித்தையின் அஹங்காரத்திஞல், செல்வந்தர்கள். செல்வத்தின் அஹங்காரத்திஞல், ஸாதுக்கள் நமக்கு முக்தி நிச்சயம் என்ற கர்வத்திஞல் பிக்ஷுகர்களுக்குப் பிக்ஷையிட மறுக்கிறுர்கள்.*

*இவ்வாறு எண்ணியே வியாஸபகவான் காசி க்ஷேத்திரத்திற்கு சாபம் கொடுத்தார். இவ்வாறு கோபம் கொண்டு சாபம் கொடுத்த பின்னும்கூட, அவர் பிக்ஷைக்குச் சென்றுர்.*

ஆகாசத்தை நோக்கியவாறே, அவர் ஒவ்வொரு வீடாக நுழைந்து இறங்கினுர். அன்றும் நாள் பூராவும் திரிந்தும்கூட பிக்ஷை கிடைக்கவில்லை.

கடைசியில் சூரியன் அஸ்தமனமாவதைப் பார்த்துவிட்டு பிதா (வியாஸர்) பாத்திரத்தைத் தூர எறிந்து விட்டு ஆசிரமத்தை நோக்கிச் சென்ருர். இவ்விதமாக சிஷ்ய ஜனங்களும் திரும்பியபின் வீட்டு வாசலில் உட்கார்ந்திருக்கும் ஒரு சாதாரணக் க்ருஹிணியைப் போல் உருவெடுத்துக் கொண்ட மஹாதேவி அன்னபூரணி தனது க்ருஹத்துக்கு அதிதியாக வரவேண்டுமென்று பிராத்தித்தாள்.

அவள் கூறினுள்:- பகவானே! இன்று ஒரு இடத்திலும் பிக்ஷுகர்களையே காணவில்லையே, அதிதிகளுக்கு அன்னமிடாமல் என் பதி சாப்பிடமாட்டார். ஸாவகாசமாகவும், தாமதமாகவும், வைஸ்வதேவம் முதலிய க்ரியைகளை முடித்துக்கொண்டு, எனது பதி அதிதிகளை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிருர். விபரீதமாக இன்று ஒருவரைக் கூடக் காணேமே. தாங்கள் இன்று கட்டாயமாக எனது க்ரஹத்திற்கு அதிதியாக வரவேண்டும்.

ஏனென்ருல் அதிதிக்கு அன்னமிடாமல் புஜிக்கும் க்ருஹஸ்தன் பித்ருக்களுடன் பாபத்தைப் புஜிப்பவனுகிருன்.

அதனுல் தாங்கள் தயைசெய்து எங்கள் க்ருஹத்திற்கு வந்து, அதிதிபூஜையினுல் தனது க்ருஹஸ்தாசிமரத்தைப் பயனடையதாகச் செய்யவிரும்பும் என்னுடைய கணவருடைய மனேரதத்தைப் பூர்த்தி செய்யவேண்டும்.

இதைக்கேட்டவுடன கோபமெல்லாம் தணிந்த வ்யாஸபகவான் ஆச்சர்யத்துடன் கூறினுர். ஹே பத்மே! நீ யாரம்மா? நீ எங்கிருந்து இங்கு வந்தாய்? உன்னை இதுவரை நான் பார்த்ததில்லையே!

*உன்னை சுத்த ஹ்ருதயம் படைத்த தர்மமே உருவெடுத்து வந்ததாக நினைக்கிறேன். ஏனென்றால் உன்னைப் பார்த்தமாத்திரத்திலேயே எனது ஸமஸ்த இந்திரியங்களும் ஸந்தோஷத்தினால் சுத்தமாக இருக்கின்றன.*

*ஹே! ஸர்வாங்க ஸுந்தரி! நீ நிச்சயமாக அம்ருதலக்ஷ்மியேதான். மந்த்ராசலம் கலங்கியதால் பயமடைந்து நீ க்ஷீரஸாகரத்தை விட்டு இங்கு வந்திருக்கிறாய்.*

*ஏனென்றால் நீ சந்திரனுடைய கலாதேவியே, அமாவாஸையில் ராஹு பீடிப்பான் என்று பயந்துகொண்டு, ஸ்த்ரீ ரூபம் எடுத்துக்கொண்டு இங்கு வந்திருக்கிறாய். இங்குவந்து சங்கையில்லாமல் காசிவாஸம் செய்துவருகிறாய்.*

*இல்லையென்றால் நீ லக்ஷ்மியே, தனது வாஸஸ்தலமான கமலம் இரவில் மூடிவிடுவதால் வெட்கப்பட்டுக் கொண்டு எப்போதுமே மலர்ந்திருக்கும் காசியில் வந்து இரவுதோறும் வஸிக்கிறாயா?*

*அல்லது நீ காசியில் வஸிக்கும் புண்ணியாத்மாக்களுடைய துக்கத்தை அபஹரிக்கும் கருணாமயியான தயாமூர்த்தியா? அல்லது நீ இந்த வாராணஸியினுடைய அதிஷ்டாத்ரீ தேவதையா; காசியில் முக்தி லக்ஷ்மி வஸிப்பதாகக்கூறுகிறார்களே, அந்த முக்திலக்ஷ்மியா நீ?*

*சண்டாளனிடமும், வாஜபேய யாகம் பண்ணின ப்ராம்மணனிடமும் ஸமத்ருஷ்டியுடன் நோக்குகிற அந்த தேவியா நீ? எனது பாக்யமே ஸ்த்ரீ ரூபமாக இங்கு வந்திருக்கிறது. அல்லது பக்தர்களைக் கரையேற்றும் அன்னபூர்ணியா நீ! உன்னுடைய மஹிமைகளை இங்கு புகழ்ந்துபேசமுடிவதில்லை.*

நீ நிச்சயமாக ஸாதாரணப் பெண் அல்ல. நாகக் கன்னியுமில்லை. கந்தர்வப் பெண்ணுமல்ல. யக்ஷிணியும் அல்ல நீ.

உண்மையில் எனது மோஹத்தை அகற்றி வைக்கும் எனது இஷ்ட தேவியே ஆவாய். இருக்கட்டும், ஹே ஸுந்தரி! நீ யாராக இருந்தால் என்ன? இந்தக் கவலையால் எனக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை.

இப்பொழுது உன்னுடைய தரிசனத்தினாலேயே நான் மிகவும் தன்யன் ஆகிவிட்டேன். உன்னுடைய ஆக்ஞைப்படியே நடப்பேன்.

ஹே! ஸுபே, ஸுலோசனேயே! இந்த தபஸ் செய்யும் நேரத்தைத் தவிர மற்ற நேரங்களிலெல்லாம், நீ என்ன வேலையைக் கொடுக்கிறாயோ, அதை நான் எப்பொழுதும் செய்யத் தயாராக இருக்கிறேன்.

உன்னைப் போன்ற ஸாது பெண்ணினுடைய வார்த்தைகள் ஸாதுக்களின் பெருமையைக் குலைக்காது. ஆனால் ஹே ஸுபே! நீ யார்? இதை உண்மையாக நீ என்னிடம் உரைப்பாய்.

நிர்மல லோசனியே! உன்னுடைய பவித்ரமான தேசத்திலே அஸத்யம் லேசமாத்திரமும் இருக்காது: ஸ்கந்தர் கூறுவார்:- வ்யாஸருடைய இந்த வார்த்தையைக் கேட்டுவிட்டு விஸ்வஜனனீ கூறுவாள்:- ஹே முநியே! நான் இங்குள்ள ஒரு க்ருஹஸ்தரின் தர்மபத்னியேதான். தாங்கள் தங்கள் சிஷ்யர்களுடன் தினமும் பிக்ஷைக்கு வருவதை நான் கண்டிருக்கிறேன்.

உங்களுக்கு என்னைத் தெரியாது, ஆனால் நான் தங்களை அறிவேன். இது பேசிக்கொண்டிருக்கிற ஸமயமல்ல. சூரிய நாராயணர் அஸ்தமனம் ஆகும் முன்னமேயே தாங்கள் என்னுடைய ஸ்வாமியின் ஆதித்யத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும்; இதைக்கேட்டு முனிவர் கூறுவார்:-

*ஏ சுபே, எனக்கு ஒரு நியமம் உண்டு, முடிந்தவரை அதைப் பின்பற்றி வருகிறேன். அதன்படியானால்தான் நான் பிக்ஷை செய்வேன். இல்லையென்றால் மாட்டேன்;*

*இந்த விதமாக வியாஸர் கூறவே பகவதி கேட்டாள்; ஹே! பகவான்! தங்களுடைய நியமத்தை ஸங்கோசம் இல்லாமல் கூறுங்கள். ஏனென்றால் என் கணவரின் அருளினால் இங்கு ஒரு வஸ்துவிற்கும் குறைவு இல்லை; இதைக்கேட்டு ஸந்தோஷமடைந்த வ்யாஸர் கூறுவார்:-*

*எனது பத்தாயிரம் சிஷ்யர்களையும் என் கூடவைத்துக்கொண்டுதான் நான் உண்பேன்; சூர்யன் இருக்கும்போதே உண்டுவிடுவேன், பிறகானால் சாப்பிடுவதில்லை.*

*இதைக் கேட்டு ஸந்தோஷமடைந்த அந்தப் பெண் கூறினாள்- அப்பொழுது, தாங்கள் ஏன் தாமதிக்கிறீர்கள்? தங்களுடைய எல்லா சிஷ்யர்களையும் அழைத்து வாருங்கள்.*

*பிறகு வியாஸர் அந்த நாரீமணியிடம் கூறினார்:- அம்மா! உனக்கு ஏதாவது ஸித்திகள் உண்டா? எல்லா சிஷ்யர்களையும் உணவினால் திருப்திபடுத்த உன்னால் முடியுமா?*

*இதைக் கேட்ட அந்தப் பெண் சிறிது சிரித்துவிட்டுக் கூறினாள். பதிதேவருடைய அனுக்ரஹத்தினால் எனது வீட்டில் ஒரு பொருளுக்கும் குறைவில்லை. எல்லாம் ஸித்தமாக இருக்கிறது.*

*இங்கிருப்பவர்கள் எல்லோரும் ஸந்தோஷம் அடையும் வண்ணம் திருப்தியாக விருந்தளிப்பேன். பதியையும் சந்தோஷம் அடையும் வண்ணம் திருப்தியாக விருந்தளிப்பேன். பதியையும் ஸந்தோஷிக்கச் செய்வேன் (அதிதி ஸத்காரத்தினால்) பதியை ஸந்தாபம் அடையும்படி செய்யக்கூடிய பெண்களில் ஒருவளல்ல நான்.*

சிலர் அதிதிகள் வீட்டில் வந்தபின்தான் சமையலுக்கான திட்டம் வகுப்பார்கள்; எனது ஸ்வாமியின் க்ருபையினுல் எனது வீட்டில் எல்லாம் பரிபூர்ணமாக இருக்கிறது.

எல்லோருடைய மனேரதங்களேயும் என்னுல் பூர்ணமாக்க முடியும். இப்பொழுதே எல்லாம் தயாராகச் சீர்படுத்திவிட்டுத்தான் வந்திருக்கிறேன். அதனுல் தாங்கள் எல்லோருடனும் (எத்தனே பேர் வேண்டுமானுலும்) வாருங்கள்.

ஏனென்ருல் அதிதிப்ப்ரியரான எனது பதி மிகவும் விருத்தாப்யதசையில் இருக்கிருர். அதனுல் அவரை அதிகம் தாமதப்படுத்தக் கூடாது.

அதனுல் தாங்கள் எல்லோரும் எல்லோரையும் கூட்டிக்கொண்டு அதிதிஸத்காரத்துக்காக சூர்யாஸ் தமனத்திற்கு முன்பே வாருங்கள். அப்பொழுது வியாஸர் மிகவும் ஸந்தோஷித்து நான்கு பக்கங்களிலும் சென்றிருந்த சிஷ்யர்களே மிகுந்த பலத்த குரலில் அழைத்தார்.

அவர்கள் எல்லோரும் வந்து தன்னே நோக்கி நிற்பதைக் கண்டு கூறினுர்:- ஹே! மாதா! நாங்கள் எல்லோரும் வந்துவிட்டோம். சீக்கிரமாக போஜனம் அளிப்பாயாக;

இப்பொழுது சூரியபகவான் அஸ்தாசலத்துக்குப் புறப்பட்டுக்கொண்டிருக்கிருர். இவ்விதம் கூறிக்கொண்டே அவர் சிஷ்யர்களுடன் கோவிலுக்குள் சென்ருர்; கோவிலுக்குள் மணிகளின் கிரணராசிகள் சூரியனுக்கும் சோபையளிக்கவல்லதாக இருக்கக் கண்டு அந்தத் தபஸ்விகள் கோவிலின் திறந்த அங்கணத்துக்கு வந்தார்கள்.

அங்கு பரிசாரகன் அவர்கள் கால்களேக் கழுவினுன், ஒருபெண் அவர்களேப் பூஜை பண்ணினுள், ஒருபெண் அவர்களேயழைத்து இருத்தி உணவுவகைகளேப்

*பறிமாறினுள், அவர்கள் உண்டு, சந்தனம், பூமாலைகள் இவைகளையணிந்த பின்பு,*

*அவர்கள் ஸாயங்காலத்து ஸந்தி உபாஸனுதிகளை முடித்துக்கொண்டு, க்ருஹபதிமுன்னுல் அமர்ந்து அனேக ஆசிவசனங்களைக் கூறிவிட்டு எழுந்துசெல்லத் தயாரானுர்கள்.*

*அப்பொழுது, அந்த விருத்தரான க்ருஹஸ்தர், மனைவியை ஒருமுறை உற்றுப் பார்த்துவிட்டுப் பிறகு சும்மா இருந்தார். அப்பொழுது அந்த ரமணி கூறினுள்; இந்தத் தீர்த்தத்தில் வஸிக்கிறவர்களுடைய முக்யகார்யமென்னது என்று, தாங்கள் கூறினீர்களானுல் அதன்படி இந்த தீர்த்தஸ்தானத்தில் நடப்போம், தர்மத்தில் ச்ரேஷ்டர் ஆன வேதவியாஸர் க்ருஹிணியுடைய ப்ரச்னத்தைக் கேட்டுக் கூறினுர்:-*

*அவர்கள் அவர்களுடைய அதிதி ஸத்காரத்தினுல் மிகுந்த ஆச்சர்யமடைந்து, கொஞ்சம் சிரித்துவிட்டு அந்த ஸர்வக்ஞையான க்ருஹிணியிடம் கூறினுர்:- வியாஸர் கூறுவார்:- ஹே! நிர்மலமான இதயம் படைத்தவளே! மாதா, நீ எங்களுக்குப் பரம உத்தமமான இஷ்டமான போஜனம் அளித்துப் பெரிய ஸத்காரம் செய்தாய், ஹே! தேவீ! நீ எந்தக் கார்யம் இப்பொழுது செய்தாயோ அதுவே தர்மம். அதைவிட வேறேயாக ஒரு தர்மமும் கிடையாது.*

*பதிஸேவையில் ஈடுபட்டு இருக்கும் நீ தர்மத்தின் மர்மத்தை அறிந்தவள். ஆனுலும் நீ என்னிடம் விரும்பிக்கேட்கிருய்; அதனுல் கூறுகிறேன். ஏனென்ருல் ஒரு விஷயம் கேட்டால் அதை ஒருவர் அறிந்திருந்தால் கட்டாயம் பதில் கூற வேண்டும். உனது பதி ஸந்தோஷம் அடையும் காரியங்களைச் செய்ய வேண்டும். அதுவே தர்மம். அதைவிட வேறு தர்மமும் இல்லை. க்ருஹிணி கூறினுள்:-*

*ஏ! முநியே! இது தெரிந்த தர்மம்தான், என்னுல் முடிந்தவரை பின்பற்றியே வருகிறேன். ஆனுல் நான்*

*தங்களிடம் ஸாதாரண தர்மம் பற்றிக் கேட்கிறேன். அதை எனக்குக் கூறுங்கள் என்ருள். வியாஸர் கூறினுர்:- ஒருவருக்கும் வருத்தம் தராத வார்த்தைகளைக் கூறவேண்டும். எவருடைய மேன்மையையும் பார்த்துப் பொருமைப்படக்கூடாது. எல்லாக் கார்யங்களையும் ஆழ்ந்து யோசித்துச் செய்ய வேண்டும். அத்துடன் தன்னுடைய குடும்பமும் முன்னுக்கு வரும் விஷயம் யோசிக்கவேண்டும். இதுவே ஸாதாரண தர்மமாகும்.*

*இதன் மத்தியில் க்ருஹஸ்தர் கூறினுர்:- ஏ! வித்வானே! இந்த எல்லா தர்மத்திலும் தாங்கள் எந்த தர்மத்தைக் கடைப்பிடிக்கிறீர்? அதை எனக்குக்கூறுங்கள். அப்பொழுது வ்யாஸருக்குத் தூக்கிவாரிப்போட்டது. ஒரு பதிலும் கூற முடியவில்லை.*

*பிறகு வ்ருத்தரான க்ருஹஸ்தர் திரும்பவும் அந்த தபோதனர் வியாஸரிடம் கூறினுர்-*

*இப்பொழுது கூறியவைகளையே உத்தமதர்மம் என்று நினைத்தீர்களானுல் சாபமான (உமது) உத்தமதானம் கொடுத்து உமது உத்தண்டத்தையே ஸ்பஷ்டமாக வெளிப்படுத்திக் கொண்டுவிட்டீர்.*

*தயா, தீரத்தன்மை இவைகளுக்கு எல்லை உம்மிடத்திலேயே இருக்கிறது. அதனுல் காமத்தையும் க்ரோதத்தையும் கட்டுப்படுத்தி வைப்பதும் உமது தர்மமாகும்.*

*உத்வேகம் இல்லாமல் பேசும் ரீதியே நீர் அறிந்திருக்கிறீர். மற்றவர்கள் முன்னுக்கு வருவதைப் பார்த்து ஸந்தோஷப்படும் ரீதியும் உங்களுக்குத் தெரியும்.*

*அதனுல் ஏ வித்வான்! என்னுடைய ஒரு விஷயத்துக்குத் தாங்கள் பதில் சொல்லவேண்டும். ஏதோ அபாக்யவசமாகத் தன்னலக்கார்யம் நடக்காவிட்டால், கோபமடைந்து சாபம் கொடுப்பதென்றுல் அந்த சாபத்தின் பலனை யார் அனுபவிப்பார்கள்?*

*வியாஸர் கூறினார்:- துரதிர்ஷ்டவசமாக ஒருவனுக்கு கார்யஸித்தி ஏற்படாவிட்டால், கோபமடைந்து அவர் சாபம் கொடுத்தாரானால், அந்த சாபத்தை விவேகியான கொடுத்த அவன்தான் அனுபவிக்க வேண்டிவரும்.*

*கிரீசர் கூறினார்:- வாரும் விப்ரரே, எங்கும் அலைந்து திரிந்தும் உமக்கு பிக்ஷை கொடுக்கவில்லையானால், அதற்காக அப்பாவிகளான க்ஷேத்ரவாஸிகள் என்ன அபராதம் பண்ணினார்கள்?*

*ஏ தபோதனரே! என்னுடைய வார்த்தையைக் கேளும், என்னுடைய இந்த ராஜதானியின் மற்றவர்களின் செல்வத்தைப் பார்த்துப் பொறாமைப்படுகிறவர்கள் தாங்களே சாபத்துக்கு ஆளாகிறார்கள்.*

*ஏ கோபமுனியே! சாபசூன்யரே! என்னுடைய க்ஷேத்திரத்தில் இன்றிலிருந்து தாங்கள் இருக்காதீர்கள். இங்கு இருப்பதற்குத் தகுந்த யோக்யதை தங்களிடமில்லை.*

*நீங்கள் இப்பொழுதே இந்த க்ஷேத்திரத்திலிருந்து வெளியில் போய்விடுங்கள், மோக்ஷஸாதனமான இந்த க்ஷேத்ரம் தங்களைப் போலொத்தவர்களுக்கு இருக்க லாயக்கில்லை. என்னுடைய க்ஷேத்திரத்தில் வசிப்பவர்கள் யாராவது சிறுதுஷ்டத்தனம் செய்தால்கூட அந்ததுஷ்ட காரியத்தின் பலத்தினால் அவன் ருத்ர பிசாசாக ஆகவேண்டி வரும்.*

*இந்த வார்த்தையைக் கேட்டவுடனேயே வியாஸருக்கு உதடும் தொண்டையும் ஒட்டிக்கொண்டு பகவதியின் சரணங்களுக்கு முன்னால் வீழ்ந்துவணங்கினார்.*

*மிகவும் அழுதழுது புலம்பத் தொடங்கினார்; அதைக் கண்டு தேவியானவள் பகவானை ப்ரார்த்திக்கத் தொடங்கினாள்; வ்யாஸர் கூறினார்.*

*ஏ! நாதா! இந்த அக்ஞானியான அநாதை சிசுவைப் பாதுகாத்து ரக்ஷிக்க வேண்டும் என்றாள். எங்களுடைய*

*துஷ்டஹ்ருதயம் அபராதத்திற்கு இருப்பிடம். ஆனாலும் சரணாகதியடைந்த என்னைக் காப்பாற்றம்மா, தாஸனை என்னிடம் தயை புரியம்மா, ஒவ்வொரு அஷ்டமியன்றும் சதுர்தசியன்றுமாவது நான் இந்த க்ஷேத்திரத்தில் ப்ரவேசிக்க தயை புரியம்மா! பகவான் சங்கரர் உன்னுடைய வார்த்தையைத் தட்டமாட்டார்.*

*வ்யாஸருடைய வார்த்தையைக் கேட்டு கருணாமயியான அன்னபூரணிதேவி தன்னுடைய ஸ்வாமியான விஸ்வநாதரின் முகத்தைப் பார்த்து அவருடைய ஆக்ஞையையறிந்து அப்படியே ஆகட்டுமென்றாள்.*

*அதன் பிறகு இந்த க்ஷேத்திரத்திற்கு மங்களத்தைச் செய்பவர்களான மஹாதேவனும், பார்வதியும் அந்தர்தானமாகிவிட்டார்கள். வ்யாஸரும் தன்னுடைய அபராதத்தை நினைத்துருகிக் கொண்டு, க்ஷேத்திரத்திற்கு வெளியில் போய்விட்டார்.*

*அவர் அப்பொழுதிலிருந்து அகக் கண்களினாலேயே இரவும் பகலும் க்ஷேத்திரத்தைத் தரிசனம் பண்ணிக்கொண்டும், அஷ்டமியன்றும் சதுர்தசியன்றும் க்ஷேத்ரத்திற்குள்ளே வருவார்;*

*லோலார்க் கரையிலிருந்தும் அக்னி கோணத்தில் கங்கையின் கீழ்க்கரையில் (கிழக்கு) அமர்ந்து கொண்டு, அவர் இதுவரை காசியின் மஹிமை பொருந்திய கோவிலின் சோபையைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறார்.*

*ஸ்கந்தர் கூறினார்:- ஏ! கும்ப முனியே, இந்த விதமாக மகர்ஷி வேதவியாஸர் அந்த க்ஷேத்திரத்திற்கு சாபம் கொடுத்தார்; இதே காரணத்தினால் அவரும் க்ஷேத்திரத்தை விட்டு வெளியே போனார்.*

*இதனால் ஒருவர் அவிமுக்த க்ஷேத்திரத்திற்கு நன்மையை விரும்பினால் அவருக்கு நன்மை விளையும்!*

இதற்கெதிராக எண்ணிஞல் விபரீதமான பலனே கிடைக்கும்.

யாருடைய செவிகளில் இந்த வ்யாஸருடைய சாபமும் விமோசனமும் என்னும் பவித்ரமான அத்யாயம் பிரவேசிக்கிறதோ அவனுக்குப் பெரிய பெரிய இடையூறுகளிஞல் கூட பயம் கிடையாது.

இந்த விதமாக ஸ்கந்த புராணத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான தொண்ணூற்று ஆருவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 97

அகஸ்தியர் கூறினார்:- ஹே சிவநந்தனு, வேதவ்யாஸரின் வருங்காலத்தின் இந்த ஸம்பவங்களைக் கேட்டுவிட்டு நான் மிகவும் ஆச்சர்யமடைந்துவிட்டேன். இப்பொழுது நீங்கள் இந்த ஆனந்த கானனத்தில் எங்கெல்லாம் லிங்கஸ்வரூபமுள்ள தீர்த்தங்கள் இருக்கின்றன? அதை வர்ணித்துக்கூறுங்கள்.

ஏ, கும்ப முனியே! பகவதி கேட்டவுடன் பகவான் இந்த விஷயமாக என்ன கூறினார் என்பதை நான் உமக்குக் கூறுகிறேன்.

தேவி கூறினாள்:- பிரபு மஹேஸ்வரா! இந்தக் காசிபுரியில் எங்கெங்கு என்னென்ன தீர்த்தங்கள் இருக்கின்றன, அவைகளின் யதாஸ்தானங்கள் யாது? அதை எனக்குக் கூறுங்கள்.

தேவதேவர் கூறினார்:- ஹே விசாலாக்ஷி! நீ கேட்பதை நான் கூறுகிறேன் கேள். எல்லா லிங்கங்களும் தீர்த்தம் என்று கூறப்படுகிறது. அந்த மூர்த்திகளோடு சம்பந்தப்பட்ட ஜலாசயங்களும் தீர்த்தம் என்று கூறப்படுகிறது.

ப்ரம்மா, விஷ்ணு, சூரியன், கணேசன் முதலிய (தேவ மூர்த்திகள்) இருக்கின்றன. ஆனால் முக்கியமாக சிவலிங்கம்தான் ப்ரஸித்தி வாய்ந்தது. இந்த லிங்கங்கள் இருக்கின்ற எல்லா இடமும் தீர்த்தம் எனப்படுகிறது.

இந்த வாராணஸிபுரியில் முதலாவது தீர்த்தம் மஹாதேவரே. அதற்கு வடக்குப் பக்கத்தில் ஸாரஸ்வத பதவியைக் கொடுக்கக் கூடிய ஒரு பெரிய கிணறு இருக்கிறது.

க்ஷேத்திரத்திற்கு வடக்கில் இருக்கும் இந்தக் கிணற்றை தரிசனம் செய்தால், ஒருவன் பசுபாசத்திலிருந்து முக்தியடைகிறான். அதற்குப் பின் பக்கத்தில் மூர்த்திகரித்த வாராணஸி தேவி எழுந்தருளியிருக்கிறாள்.

அவளைப் பூஜை செய்தவர்களை சுகபோகமாகக் காசியில் வசிக்கும் பேற்றைத் தானமாகக் கொடுக்கிறாள். மஹாதேவருக்குக் கிழக்கில் கோப்ரேக்ஷர் என்னும் உத்தம லிங்கம் இருக்கிறது. அவரைத் தரிசனம் செய்தால் ஸம்பூர்ண கோதானபலன் கிடைக்கிறது. அக்காலத்தில் பகவான் சங்கரர் கோலோகத்திலிருந்து பசுக்களை அனுப்பியிருந்தார்.

அவைகளெல்லாம் காசியில் வந்தன. அதனால் அந்த லிங்கத்தின் பெயர் கோப்ரேக்ஷர் என்று விளங்கலாயிற்று. கோப்ரேக்ஷருடைய தெற்கு பக்கத்தில் ததீசீஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

அந்த லிங்கத்தைத் தரிசனம் செய்பவருக்கு யக்ஞம் செய்த பலன் கிடைக்கிறது. அவருக்கும் கிழக்கில் மதுகைடபர்களால் பூஜை செய்யப்பட்ட அத்ரீஸ்வரர் எழுந்தருளியிருக்கிறார்.

கருத்துடன் அந்த லிங்கத்தைப் பார்ப்பதனால் விஷ்ணுலோகம் கிடைக்கிறது. கோப்ரேக்ஷருக்குக் கிழக்குப் பக்கத்தில் விஜ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. ஜ்வரத்தினால் பீடிக்கப்பட்டவர் அதைப் பூஜித்தால் ஜ்வரத்திலிருந்து விடுபடுகிறார். அதற்கும் கிழக்கில் நான்கு வேதங்களின் பலனையும் கொடுக்கும் வேதேஸ்வரர் எழுந்தருளியிருக்கிறார்.

இந்த வேதேஸ்வரருக்கு வடக்கு பாகத்தில் க்ஷேத்ரக்ஞன ஆதிகேசவர் இருக்கிறார். அவரைத் தரிசனம் செய்வதினால் மூன்று உலகங்களையும் தரிசித்த பலன் அவசியம் கிடைக்கிறது.

அதற்கும் கிழக்கில் ஸங்கமேஸ்வரலிங்கத்தைத் தரிசிப்பதனால் பாபங்கள் அற்று விடுகின்றன. அதற்கு முன்னால் சதுர்முக ப்ரம்மாவால் ஸ்தாபிக்கப்பட்ட சதுர்முகேஸ்வர லிங்கம் இருக்கிறது.

சதுர்முக ப்ரயாகேஸ்வரர் என்னும் அந்த லிங்கத்தைப் பூஜை செய்வதால் ப்ரம்மலோகம் கிடைக்கும். அங்கேயே சாந்தீகரீ என்னும் தேவி இருக்கிறுள். அவளேப் பூஜை செய்வதால் சாந்தி அடையலாம்.

வருணேக்குக் கிழக்குப் பக்கத்தில் குந்தீஸ்வரர் இருக்கிறுர். அவரைப் பூஜை செய்வதால் குலத்தைப் பிரகாசிக்கச் செய்யும் உத்தம புத்திரர்களேப் பெறலாம்.

குந்தேஸ்வரருக்கு வடக்கில் கபிலா தாரா என்னும் பெரிய தீர்த்தம் இருக்கிறது.

அங்கு ஸ்ஞனம் செய்துவிட்டு, வ்ருஷபத்வஜரை அர்ச்சனே செய்தால் ராஜஸூய யக்ஞம் செய்த பலன் கிடைக்கும். அங்கு ச்ராத்தம் செய்வதால் ரௌரவாதி நரகங்களில் விழுந்திருக்கும் கோடிக்கணக்கான பித்ருக்கள் கறையேறி பிதுர் லோகத்திற்குச் செல்வார்கள்.

ஏ! முனியே, கோப்ரேஷருடைய வடக்குப் பக்கத்தில் அனுசயேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

அதைத் தரிசனம் செய்யும் ஸ்தீரீகளுக்கு பாதிவ்ரத்ய பலன் கிடைக்கிறது. இந்த லிங்கத்திற்குக் கிழக்குப் பக்கத்தில் இருக்கும் ஸித்தி விநாயகரையும் பூஜிக்க வேண்டும். அங்கு வணங்கின மாத்திரத்தில் யார் எந்த ஸித்தியை விரும்பினுர்களோ அது கிடைக்கும்.

அந்த கணேசருடைய மேற்குப் பக்கத்தில் இரண்ய கசிபுவினுல் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்தால் தங்கமும் குதிரைகளும் ஆன ஸம்பத்து கிடைக்கிறது.

அதற்கு மேற்குப்பக்கத்தில் ஸித்திகளே அளிக்கவல்ல முண்டாஸ்வரேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. முன்பு கூறிய கோப்ரேக்ஷருடைய நிர்ருதி கோணத்தில் வ்ருஷபேஸ்வரர் என்னும் லிங்கம் எழுந்தருளியிருக்கிறது. ஏ! முனிநாதா! மஹாதேவருக்கு மேற்கில் என்னுல்

ஸ்தாபிக்கப்பட்ட கந்தேஸ்வர லிங்கம் இருக்கிறது. அதைப் பூஜித்தால் என்னுடைய லோகத்தில் அவர்கள் வஸிக்கிருர்கள்.

அதற்குப் பக்கத்திலேயே சாகேஸ்வரர், விசாகேஸ்வரர், நைகமேயேஸ்வரர், இவர்களைத் தவிர நந்தி முதலிய சிவகணங்களால் ஸ்தாபிக்கப்பட்ட, ஆயிரக்கணக்கான சிவலிங்கங்கள் சோபையுடன் விளங்குகின்றன. அவைகளைத் தரிசனம் செய்பவர்கள் அந்தந்த கணங்களின் லோகங்களில் வஸிக்கிருர்கள்.

நந்நீஸ்வரருடைய மேற்குப்பக்கத்தில் உபத்திநாசகர், சிலாதேஸ்வரர், மஹாபலத்தைக் கொடுக்கக்கூடிய சுபமயமான ஹிரண்யாக்ஷேஸ்வரர் இவர்கள் இருக்கிருர்கள்.

அதற்கு தக்ஷிணபாகத்தில் எல்லா ஸுகங்களையும் அளிக்கவல்ல அட்டஹாஸேச்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதன் கிழக்கில் சுபத்தையளிக்கவல்ல ப்ரஸன்னவதனேஸ்வரர் இருக்கிருர்.

அவரைத் தரிசனம் செய்யும் பக்தர்கள் எப்பொழுதும் மலர்ந்த முகத்துடனேயே இருப்பார்கள். அதற்கு வடக்கில் பிரசன்னோதகம் என்னும் பெயருடைய ஜனங்களுக்கு நிர்மலத்தையளிக்கும் குண்டம் இருக்கிது.

மேற்கூறிய அட்டஹாஸேஸ்வர லிங்கத்துக்கு மேற்கில் மித்ராவருணர் என்னும் பெயரையுடைய இரண்டு லிங்கங்கள் எழுந்தருளியிருக்கின்றன. அதைப் பூஜிப்பவர்கள் அவர்களுடைய லோகத்தில் வஸிப்பார்கள்.

பிறகு அட்டஹாஸலிங்கத்திற்கு நிர்ருதி கோணத்தில் வ்ருத்தவாஸிஷ்டர் என்னும் பெயருள்ள லிங்கம் இருக்கிறது. அதைப் பூஜிப்பவர்களுக்கு ஸம்பூர்ணஞானம் உண்டாகும்.

வஸிஷ்டேஸ்வரருக்கு ஸமீபத்திலேயே விஷ்ணு லோகத்தையளிக்கவல்ல க்ருஷ்ணேஸ்வரர் அவருக்குத்

தெற்குப் பக்கத்தில் ப்ரம்ம தேஜஸ்ஸை அதிகரிக்கச் செய்யும் யாக்ஞவல்க்யேஸ்வரரும் இருக்கிறார்.

அவருக்குப் பின்னால் பக்தியை அதிகரிக்கச் செய்யும் ப்ரஹ்லாதேஸ்வரர் லிங்கம் இருக்கிறது. அங்கு பகவான் தானே சிவபக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்யவேண்டி எழுந்தருளியிருக்கிறார்.

அந்த ப்ரஹ்லாதேச்வரருக்குக் கிழக்கில் ஸ்வலீனம் என்று பெயருடைய லிங்கத்தைக் கருத்துடன் பூஜிக்க வேண்டும். ஏனென்றால் பரமானந்தத்தை விரும்பும் ஞானநிஷ்டர்களுக்கு எந்த கதி கிடைக்குமோ, அது ஸ்வலீனேஸ்வரருக்கு ஸமீபத்தில் சரீரத்தை விடுகிறவர்களுக்குக் கிடைக்கும்.

ஸ்வலீனேஸ்வர லிங்கத்துக்கெதிரிலேயே வைரோசனேஸ்வரர் இருக்கிறார். அவருக்கு வடக்கில் மஹாபலத்தை வர்த்திக்கும் பலீஸ்வரர் இருக்கிறார்.

அங்கு பூஜை செய்பவர்களுக்கு வாஞ்சித பலனையளிக்கும் பாணேஸ்வர லிங்கம் இருக்கிறது. சந்திரேஸ்வரருக்குக் கிழக்கில் வித்யேஸ்வரர் இருக்கிறார்.

அந்த லிங்கத்தை ஸேவிப்பவர்கள் வித்யைகளை ஸந்தோஷத்துடன் அடைகிறார்கள். அதற்குத் தெற்கில் மஹாசித்தி விநாயக வீரேஸ்வர லிங்கம் இருக்கிறது.

அங்கு ஸமஸ்த துக்கங்களையும் போக்குகிற விகடாதேவி இருக்கிறாள். அந்த ஸ்தானம் ஸர்வஸித்தி தாயக பஞ்ச முத்ராபீடம் என்று கூறப்படுகிறது.

இங்கு பெரிய கடினமான மந்திரங்களெல்லாம் வெகுசீக்கிரத்தில் ஸித்தியாகின்றன. இதில் ஸந்தேஹமேயில்லை. இதற்கு வாயு கோணத்தில் ஸமரேஸ்வரர் என்ற பெயரையுடை பெரிய லிங்கம் இருக்கிறது. அது பூஜிக்கத் தகுந்தது.

அதைப் பூஜிப்பதால் அச்வமேத யக்ஞத்தின் பலன் பூர்ணமாகக் கிடைக்கும். அதற்கு ஈசான திக்கில்

திர்யக்யோனி நிவாரணமாக வசீஸ்வர லிங்கம் இருக்கிறது.

அதற்கு உத்தரபாகத்தில் மகா பாபராசிகளை ஸம்ஹரிக்கும் ஸுச்ரீச்வர லிங்கம் இருக்கிறது. அங்கேயே ப்ரம்மசர்ய பலனைக் கொடுக்கும் ஹஜமதீஸ்வர லிங்கம் இருக்கிறது.

அதே இடத்தில் ஜாம்பவதீசுவர லிங்கம் இருக்கிறது. அதற்கு பிறகு கங்கா மேற்கு பக்கத்தில் அசுவனீ குமாரர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட அஸ்வனீயேஸ்வரர் என்ற இரண்டு லிங்கங்களையும் பூஜிக்க வேண்டும்.

அதற்கு வடக்கு பாகத்தில் பசுவின் பாலினுல் நிரம்பிய விதிபூர்வமாக ஆயிரம் கபிலை பசுக்களை தானம் செய்தால் என்ன பலன் கிடைக்குமோ, அது பத்ரஹ்ருதத்தில் ஸ்னானம் செய்தால் கிடைக்கும். எப்பொழுதாவது பூர்வபாத்ரபாத நக்ஷத்ரத்தனறு பௌர்ணமியும் கூடிவந்தால் அது அங்கு புண்ணிய காலமாகிறது.

அந்த நாழிகையில் அங்கு ஸ்னானம் செய்தால் அசுவமேதயக்ஞபலன் கிடைக்கும். அந்த பத்ரேஸ்வரருடைய மேற்குக் கரையில் பத்ரேஸ்வரரைத் தரிசனம் செய்வதனுல், அவன் நிச்சயமாக கோலோக வாஸியாகிறுன். தர்சனம் செய்வதினுல் அதனுடைய புண்யபலன் அதேதான். ஹே! முநியே! பத்ரேஸ்வரருடைய நிர்ருதி கோணத்தில் உபசாந்த சிவன் இருக்கிறுர்.

அந்த லிங்கத்தைத் தொட்டாலேயே பரம சாந்தி கிட்டும். பின்னும் அந்த உபசாந்தமென்னும் பெயருடைய சிவலிங்கத்தின் தரிசனம் செய்வதினுல் நூற்றுக்கணக்கான ஜன்மத்தில் சேகரித்து வைத்துள்ள ஸஞ்சித பாபராசிகளை விலக்கி புண்ணியராசிகளை அடையச் செய்கிறது.

அதற்கு வடக்கு பாகத்தில் யோனி சக்கரத்தை நிவாரணம் செய்யும் சக்ரேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதற்கும் வடபாகத்தில் மஹா புண்ணியத்தை விருத்தி செய்யும் சக்கரதீர்த்தம் இருக்கிறது.

ஒருவன் அந்த சக்கர தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து சுத்த ஹ்ருதயத்துடன் அந்த சிவ லிங்கத்திற்குப் பூஜை செய்தால் சிவலோகத்திற்குச் செல்லுகிறுன். அதற்கு நிர்ருதி திக்கில் சூலேஸ்வரரை கடுமுயற்சி செய்தாவது தரிசனம் செய்யவேண்டும்.

ஏ! வரவர்ணினீ, அந்தக் காலத்தில் நான் ஸ்ஞனம் செய்வதற்கு வரும்போது என்னுடைய த்ரிசூலத்தை ஊன்றிவைத்தேன். சூலேஸ்வரருக்கு முன்ஞல் நான் பட அது பெரிய குளமாகிவிட்டது.

அந்தக் குளத்தில் ஸ்ஞனம் செய்து பகவான் சூலேஸ்வரரைத் தரிசனம் செய்தால் ஸம்ஸாரமாகிய பள்ளத்தைத் தாண்டி ருத்ரலோகத்திற்குச் செல்லுவார்கள்.

அதற்கு பூர்வபாகத்தில் தேவரிஷி நாரதர் கடுமையான தவம் செய்து ஒரு உத்தமமான மடு ஏற்படுத்தி ஒரு சிவலிங்கத்தையும் ஸ்தாபனம் செய்தார்.

அந்த மடுவில் ஸ்ஞனம் செய்து நாரதேஸ்வரரைத் தரிசனம் செய்பவன் அந்த மகா கோரமான ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து அப்பால் போடுகிறுன். இதில் துளியும் ஸந்தேஹமில்லே. நாரதேஸ்வரருக்குக் கிழக்கு பாகத்தில் இருக்கும் அவப்ராந்த கேசவரைத் தரிசனம் செய்வதால் ஸமஸ்த பாதங்களேயும் தூர ஓட்டிவிட்டு நிர்மல கதியையடைகிறுன்.

அதற்கு முன்ஞல் தாமரைக் குண்டம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்பவன் ஒரு பொழுதும் கர்ப்ப துக்கத்தையனுபவிக்கமாட்டான். அதற்கு வாயுகோணத்தில் ஸமஸ்த விக்கினங்களேயும் நாசம் செய்யும் விக்கினகர்த்தா கணேசர் இருக்கிருர்.

மேற்கூறிய இடத்தில் விக்கினஹரமென்னும் பெயருள்ள ஒரு தடாகமும் இருக்கிறது. அதில் ஸ்னனம் செய்பவர்களுக்கு ஒரு இடையூறும் நேராது. அதற்கு வடக்கு பாகத்தில் அஜரகேஸ்வரர் என்னும் பெயருடைய ஒரு உத்தமலிங்கம் விளங்கிக் கொண்டிருக்கிறது.

அஜர குண்டம் என்ற ஒரு தடாகமும் இருக்கிறது. அதில் ஸ்னனம் செய்வதினால் நரகத்தையனுபவிக்க வேண்டாம். அதற்கும் வடக்கில் வருண நதியின் ரமணீயமான கரையில வருணேஸ்வர லிங்கம் இருக்கிறது.

ஏ! மஹாமுனியே! இந்த லிங்கத்தை ஆராதனை செய்து அக்ஷபாதன் என்னும் பெயருள்ள ஒரு சிவயோகி இந்த ஸ்தூலசரீரத்துடனேயே சாஸ்வத ஸ்திதியை அடைதான். இற்கு மேற்கு பக்கத்தில் பரம நிர்வாணத்தையளிக்கும் சைலேஸ்வர தீர்த்தம் இருக்கிறது. அங்கு சைலேஸ்வரர் இருக்கிறார். அவருக்குத் தெற்குப் பக்கத்தில் சாஸ்வத ஸ்திதியையளிக்கும் கோடீஸ்வர லிங்கம் உள்ளது.

அங்குள்ள கோடி தீர்த்தம் என்னும் மடுவில் ஸ்னனம் செய்து கோடீஸ்வரரைப் பூஜை செய்தால் ஒருவன் கோடி கோதானம் செய்த பலனையனுபவிக்கிறான். கோடீஸ்வரருக்கு அக்கினி திக்கில் மஹாஸ்மசானம் இருக்கிறது. அங்கு ஒரு தூண் நாட்டப்பட்டிருக்கிறது. உமாதேவியுடன் அங்கு மஹாதேவர் எப்பொழுதும் வஸிக்கிறார். அந்த ஸ்தம்பத்தை அலங்கரிப்பதனால் மனிதன் ருத்ரபதத்தையடைகிறான. அதற்குப் பக்கத்திலேயே் கபாலேஸ்வர லிங்கம் இருக்கிறது. அதற்குப் பக்கத்திலேயே மிகப் பெரியதான ஒரு தீர்த்தம் இருக்கிறது. அதற்கு கபாலமோசனம் என்று பெயர்.

அதில் ஸ்னனம் செய்வதினால் அஸ்வமேத யக்ஞம் செய்த பலன் கிடைக்கிறது. அதற்கு அருகில் சோபனமான ருணமோசன தீர்த்தம் இருக்கிறது. ஒருவன் அந்த தீர்த்தத்தில் ஸ்னனம் செய்தால் தான் பட்ட கடனிலிருந்து

விடுபடுகிறுன். அதே ஸ்தானத்தில் அஹங்கார தீர்த்தம் இருக்கிறது. அது நெருப்புத் துண்டுமாதிரி உஜ்வலமாக இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்வதிஞல் ஒருவன் கர்ப்பவாஸியாகமாட்டான்.

ஒருவன் மங்கள வாரத்தோடு கூடிய சதுர்த்தியன்று அந்த தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்தாஞுல் அவனுக்கு ஒருவிதமான வ்யாதியோ, துக்கமோ ஏற்படாது. அதற்கு உத்தரபாகத்தில் ஞானத்தையளிக்கும் விச்வகர்மேச்வரலிங்கம் இருக்கிறது. அதற்கு தக்ஷிணபாகத்தில் உத்தமமான மஹாமுண்டேஸ்வர லிங்கம் இருக்கிறது.

ஸுபோதகம் என்னும் பெயருடைய ஒருகிணறும் இருக்கிறது. அது ஸ்ஞனம் செய்யத் தகுந்தது. அது என்னுடைய முண்டமாலேயை ஒரு ஸமயம் கழற்றி வைத்த இடம்.

அங்கு அந்த முண்டமாலேயிலிருந்து பாதகங்கங்களே நாசம் செய்யும் மஹாமுண்டா என்று ஒருதேவி உற்பத்தியாஞள். என்னுடைய கட்வாங்கத்தைக் கழற்றி வைத்த இடத்தில் கட்வாங்கேஸ்வர லிங்கம் இருக்கிறது.

அந்த லிங்க தரிசனம் செய்பவன் பாபமற்றவஞுகிறுன். அதற்குத் தெற்கு பாகத்தில் புவனேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அப்பெயருடன் ஒரு குண்டமும் இருக்கிறது.

அந்தக் குண்டத்தில் ஸ்ஞனம் செய்வதிஞல் புவனேஸ்வரஞகவே ஆகிவிடுகிறுன். இதற்குத் தெற்குப்பக்கத்தில் விமலேஸ்வர லிங்கமும் இருக்கிறது. அந்தக் குண்டத்தில் ஸ்ஞனம் செய்து விமலேஸ்வரரைத் தரிசனம் செய்யும் ஒருவன் நிர்மலஞகிறுன். அங்கு த்ரியம்பக என்னும் பெயருடைய ஒரு சிவயோகி ஸித்தியடைந்தார்.

*அவர் இந்த சரீரத்துடனேயே இந்திரலோகத்தை யடைந்தார். அதற்கு மேற்கு பக்கத்தில் பரம புண்ணிய தரிசனஸ்தானமான ப்ருகுமுனிவரின் ஆசிரமம் இருக்கிறது.*

*அந்த ஆசிரமத்தில் விதிப்படிக்குப் பூஜை செய்தால் சிவ லோகத்துக்குப் போகிறுன். அதற்குத் தெற்குப் பக்கத்தில் பரம சுபத்தையளிக்கிற சுபேஸ்வர லிங்கம் இருக்கிறது.*

*அந்த லிங்கத்தினுடைய பிரதாபத்திஞல் மஹாதபஸ்வியான கபிலரிஷி என்னும் பெயருடைய சைவர் ஸித்தராகியிருக்கிறுர். அந்தக்கபிலேஸ்வரருக்கு பக்கத்திலேயே ரம்யமான ஒரு குஹையிருக்கிறது.*

*அந்த குஹையில் ஒருவன் நுழைந்தாஞுஞல் பிறகு அவன் கர்ப்பத்தில் நுழையமாட்டான். அங்கு யக்ஞோதகம் என்னும் ஒரு கிணறும் இருக்கிறது. அந்தக் கிணற்றில் ஸ்ஞனம் செய்தால் அச்வமேத யக்ஞத்தின் பலன் கிடைக்கிறது. இந்தக்கபிலேஸ்வரர் ஆதிவர்ஜுத்மகமான ஓங்காரேஸ்வரர்.*

*மத்ஸ்யோதரிக்கு வடக்குப் பக்கத்திலிருக்கும் நாதேஸ்வரர் நானேயாவேன்.*

*அதஞல் அந்த நாதேஸ்வரரே பரப்ரம்மம். பரமகதி, அந்த ஸ்தானமே துக்கமயமான ஸம்ஸாரத்திற்கு மோசனத்தைத் தரக்கூடிய பரமகதி.*

*எப்பொழுதாவது பகவான் நாதேஸ்வரரைத் தரிசிப்பதற்கு பகவதி ஜாந்நவி கங்கா அங்கு சென்றுளாஞல் அப்பொழுது அந்த தீர்த்தம் மத்ஸ்யோதரி என்று சொல்லப்படுகிறது. அந்த க்ஷணத்தில் அங்கு ஸ்ஞனம் செய்தால் பரம புண்ணியம் கிடைக்கிறது.*

*ஏ மஹாதேவி எப்பொழுது கபிலேஸ்வரருக்குக் கிழக்குப் பக்கத்தில் கங்கை கலந்து மத்ஸ்யோதரீ தீர்த்தம்*

ஆகிறுளோ, அந்த ஸங்கமம் மிகவும் துர்லபமாக ஏற்படக்கூடியது.

கபிலேஸ்வரருக்கு வடக்கே உத்தாலகேஸ்வர லிங்கம் இருக்கிறது. அவரைத் தரிசனம் செய்வதினுல் பரமஸித்தி கிடைக்கும்.

அவருக்கும் கிழக்கில் ஸர்வார்த்த ஸித்திதாயகரான லாங்குலீஸ்வரலிங்கம் இருக்கிறது. அதற்குத் தெற்கில் கௌஸ்துபேஸ்வரலிங்கம் இருக்கிறது.

அவரைப் பூஜை செய்வதனுல் மனிதர்களுடைய பெட்டிகளில் ரத்னம் நிறைந்து கொண்டேயிருக்கும். கௌஸ்துபேஸ்வரருக்குக் கிழக்கில் சங்குகர்ணேஸ்வரர் இருக்கிறுர்.

இந்த லிங்கத்தை ஆராதனே செய்யும் ஸாதகன் ஒருவன் இன்றுகூட பரம ஞானத்தையடைவான். கபிலேஸ்வரருக்கு ஸமீபத்தில் இருக்கும் குஹையின் வாசலிலேயே சுபமயமான அஹோரேஸ்வரர் இருக்கிறுர்.

அதற்கு வடக்கு பாகத்தில் அசுவமேத பலனேயளிக்கும் அகோரம் என்னும் கிணறு இருக்கிறது. அங்கேயே வேறு கர்க்கஸேஸ்வரர், கமனேஸ்வரர் என்ற இரண்ட லிங்கங்களும் இருக்கின்றன.

அங்கு கர்க்கர், கமனர் என்ற இரண்டு முனிவர்களும் இந்த சரீரத்துடனேயே ஸித்தியடைந்தார்கள். அதற்குத் தென் பாகத்தில் ருத்ரவாஸம் என்னும் தடாகம் இருக்கிறது. அங்கு ருத்ரேஸ்வரனேப் பூஜை செய்தால் கோடி ருத்ரர்களேப் பூஜித்த பலன் கிடைக்கும்.

ஹே அபர்ணே! சதுர்த்தசியன்று ருத்ர நக்ஷத்ரமான திருவாதிரை நக்ஷத்திரமும் சேர்ந்திருக்கும்போது மகாபலனே அருளும் ஸர்வ உத்தம புண்ணியகாலம் ஆகும்.

அந்த ஸமயம் ஒருவன் ருத்ர குண்ட ஸ்னுனமும் ருத்ர லிங்கத்தின் தரிசனமும் செய்வானுனுல் அவன் எந்த

*தேசத்தில் மரித்தாலும் ருத்ரலோகத்துக்கே சென்று வசிக்கிறுன்.*

*அதற்கு நிர்ருதி கோணத்தில் ப்ரம்மலயேஸ்வரர் லிங்கம் இருக்கிறது. அதற்கு முன்ஞல் பித்ருக்கள் எப்போதும் வஸிக்கும் பித்ருகூபம் இருக்கிறது. அங்கு ஸ்ராத்தம் செய்து பிண்டத்தை அதே கூபத்தில் போட்டால் சிரார்த்தகர்த்தா தனது 21-வது தலைமுறைவரை ருத்ர லோகத்தில் வசிக்கிறுன்.*

*ஹே! தேவி அந்த இடத்தில் மேற்கு திக்கை நோக்கி (நடந்தால்) வைதரணி என்ற ஒரு நடைகிணறு இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்தால் நரகத்தில் விழமாட்டான். ருத்ரகுண்டத்திற்கு மேற்கில் ப்ருஹஸ்பதி லிங்கம் இருக்கிறது. பூசநக்ஷத்ரத்துடன் கூடிய குருவாரத்தன்று அதைத் தரிசித்தால் நாம் பேசுவதெல்லாம் தேவவாக்கிற்கு ஸமமாக இருக்கும்.*

*ருத்ரவாஸத்திற்குத் தெற்கில் ஸர்வோத்தமமான காமேஸ்வரலிங்கம் இருக்கிறது. அதற்கும் தெற்கில் ஒரு மகத்தான குண்டம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்தால் நினைத்ததெல்லாம் நிறைவேறும்.*

*சைத்ர சுக்ல த்ரயோதசியன்று அங்கு சென்று தரிசித்தால் மனோவாஞ்சித பலன்களெல்லாம் கட்டாயம் நிறைவேறும். காமேஸ்வரருக்குக் கிழக்கில் நளகூபரலிங்கம் இருக்கிறது.*

*அதற்கு முன்ஞல் செழிப்பாக தனதான்யங்களை பவித்ரமான கிணறு ஒன்று உள்ளது. அந்த நளகூபர லிங்கங்கள் சேர்ந்தாற்போல இருக்கின்றன.*

*அவர்களிருவரையும், தரிசித்தால் அக்ஞானந்தகாரம் விலகும். அதற்குத் தெற்கில் அந்தகேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசித்தால் மோக நாசமுண்டாகும்.*

*அங்கேயே பரமஸித்தியளிக்கும் ஸித்திதாயக லிங்கம் இருக்கிறது. அதன் பக்கத்திலேயே மங்களேசருடைய பதத்தையருளும் பவசனேஸ்வர லிங்கம் இருக்கிறது.*

*காம குண்டத்திற்கருகில் ஸர்வ ஸம்பத்தும் அருளும் ச்யவனேஸ்வர லிங்கம் இருக்கிறது. ராஜஸூய யக்ஞத்தின் பலனையருளும் ஸநகேஸ்வரரும் அங்கு இருக்கிறார்! அதற்குப் பின்னால் யோகஸித்தியளிக்கும் ஸனத்குமார லிங்கம் அங்கு இருக்கிறது. அதற்கு வடபக்கத்தில் ப்ரம்ம ஞானத்தையருளும் ஸனந்தேஸ்வர லிங்கம் சோபையுடன் விளங்குகிறது.*

*அதற்குத் தெற்குப் பக்கத்தில் ஆஹூதீஸ்வர லிங்கம் இருக்கிறது, அதைப் பார்த்தாலேயே ஹோமம் செய்த பலன் கிடைக்கும். அதற்கு தக்ஷிண பாகத்தில் புண்யத்துக்கு இருப்பிடமான பஞ்சசிகேஸ்வர லிங்கம் இருக்கிறது.*

*அதற்கு மேற்கில் புண்யத்தை அதிகரிக்கும் மாக்கண்டேயதடாகம் இருக்கிறது. அதில் ஸ்னானம் செய்பவன் சோகமடையமாட்டான். அங்கு ஸ்னானமும், தானமும் அக்ஷய புண்யத்தைத் தருகின்றன. அதற்கு வடக்கில் ஸமஸ்த ஸித்திகளும் விளங்கும் குண்டேஸ்வரலிங்கம் இருக்கிறது.*

*ஹே! விப்ரரே! பாசுபத மந்திர தீக்ஷைபெற்று பன்னிரண்டு வருஷம் தபஸ் செய்தால் என்ன பலன் கிடைக்குமோ, அது குண்டேஸ்வர லிங்கத்தின் தரிசனத்தினால் கிடைக்கிறது.*

*மார்க்கண்டேய தடாகத்துக்குக் கிழக்கில் பரம புண்ணியங்களையருளும் பகவான் சாண்டில்யேஸ்வரர் எழுந்தருளியிருக்கிறார். அதற்கும் மேற்கில் சூரிய கிரஹணத்தைப் போல் பாபநாசனமான சண்டேச்வரலிங்கம் இருக்கிறது.*

*கபாலேஸ்வரருடைய தெற்கு பக்கத்தில் ஸ்ரீகண்டம்*

என்னும் பெயரையுடைய ஒரு குண்டம் இருக்கிறது. அதில் ஸ்னனம் செய்பவன் லக்ஷ்மீதேவியை ஸந்தோஷப்படுத்தவதினல் பெரியதாக விளங்குவான்.

அந்தக் குண்டத்துக்கு ஸமீபத்தில் மஹாலக்ஷ்மீச்வரலிங்கம் இருக்கிறது. அந்தக் குண்டத்தில் ஸ்னனம் செய்து மஹாலக்ஷ்மியைத் தரிசித்தால் தேவஸ்த்ரீகள் அவனுக்கு சாமரம் வீசும் ஸுகம் பெறுவான்.

ஸ்வர்க்கவாஸிகளான தேவதைகள் தங்கள் பத்னிகளுடன் ஸ்வர்க்கலோகத்திலிருந்து மத்ஸ்யோதரி தரிசனத்திற்காக வருகிறார்கள். அவர்கள் மஹாலக்ஷ்மீஸ்வரரையும் தரிசித்துச் செல்லுகிறார்கள்.

ஹே! முனி ஸத்தம! அதனல் அந்த இடத்திற்குப் பெயர் ஸ்வர்க்கத்வாரம் என்று ப்ரஸித்தமாக இருக்கிறது. அந்தக் குண்டத்துக்கு தக்ஷிண பாகத்தில் பிரம்மபதத்தையளிக்கும் ஒரு லிங்கம் இருக்கிறது.

அங்குள்ள காயத்ரீஸ்வரர், ஸாவித்ரீஸ்வரர் என்னும் இரண்டு லிங்கங்களையும் கருத்துடன் பூஜிக்க வேண்டும். மத்ஸ்யோதரியின் ரமணீயமான கரையில் ஸத்யவதீஸ்வர லிங்கம் இருக்கிறது.

காயத்ரீஸ்வரர், ஸாவித்ரீஸ்வரர் இவர்களுக்குக் கிழக்கில் தப: ஸ்ரீவர்தனர் என்னும் லிங்கம் இருக்கிறது. லக்ஷ்மீஸ்வரருக்குக் கிழக்கில் உக்ரேஸ்வரர் என்னும் மஹாலிங்கம் இருக்கிறது; அதற்குத் தெற்கில் உக்ரகுண்டம் இருக்கிறது. மனிதன் இதில் ஸ்னனம் செய்வதினல் தனது ஜாதியை அறிந்தவனுகிறன். அந்தக் குண்டத்தின் கரைகள் தீர்த்தத்தைவிட பவித்ரமானவை.

அந்தக் குண்டத்திற்கு மேற்கு பக்கத்தில் கரவீரேச்வர லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசித்தால் ஸர்வ ரோகங்களும் தொலைகின்றன.

அதற்கு வாயுதிக்கில் பாபநாசகரான மரீசிகுண்டம் இருக்கிறது. அதற்குப் பின்பக்கம் இந்திரகுண்டமும் இந்திரேஸ்வரர் என்னும் லிங்கமும் இருக்கிறது.

இந்திரேஸ்வரருடைய தெற்கு பாகத்தில் கார்க்கோடகலிங்கம் உள்ளது. அதைத் தரிசித்தவன் நாகலோகத்துக்கதிபதியாவான்;

அதற்குப் பின்னால் ப்ரம்மஹத்தியைப் போக்கடிக்கும் த்ருமிசண்டேஸ்வர சிவலிங்கம் இருக்கிறது.

அதற்குத் தெற்கில் தன்னிடம் ஸ்னானம் செய்தவர்களை ருத்ரலோகத்தில் சேர்க்கும் ஒரு பெரிய குளம் இருக்கிறது. அதற்கு மேற்கில் அக்னீஸ்வரர் என்னும் பெரிய ப்ரஸித்த லிங்கம் இருக்கிறது.

அக்னீஸ்வரருக்குக் கிழக்கில் அக்னிலோகத்தைப் பலனாக அளிக்கவல்ல அக்னி குண்டம் இருக்கிறது. அதற்குத் தெற்கில் மற்றொரு குண்டம் இருக்கிறது.

அதில் ஸ்னானம் செய்வதால் ஒருவன் தன் முன்னோர்களுடன் ஸ்வர்கத்தையடைகிறான். அதன் கிழக்கில் சந்திரலோகத்தையே அளிக்கும் பாலசந்திரசேகரலிங்கம் இருக்கிறது.

அநேக சிவகணங்களால் ஸ்தாபிக்கப்பட்ட அநேக சிவலிங்கங்கள் இருக்கின்றன. அந்த லிங்கங்களைத் தரிசனம் செய்வதால் கணநாயகருக்குத் தலைவனாகலாம்.

பாலசந்திரசேகருக்கு ஸமீபத்திலேயே, பித்ருக்களுக்காகவே ஒரு பெரிய குளம் இருக்கிறது. அங்கு ஸ்ராத்தம் செய்வதினால் ஏழு தலைமுறையினர் முன்னேறுகிறார்கள்.

இதற்குமுன் கிணற்றுக்கு முன்னால் விஸ்வேஸ்வரர் என்னும் பவித்ரலிங்கம் உள்ளது. அதற்குக் கிழக்கில் வ்ருத்தகாலேஸ்வரர் என்னும் மஹாலிங்கம் இருக்கிறது.

அதற்கு முன்னால் காலோதகம் என்னும் பெயருடைய கிணறு இருக்கிறது. அது எல்லா வ்யாதிகளையும் நாசம் செய்வது. ஒரு ஸ்த்ரீயோ, புருஷனோ, அந்தக் கிணற்று ஜலத்தைக் குடித்தார்களானால், சதகோடி

கல்பங்கள் சென்ருலும் கூட அவர்களுக்கு மாறுதல் ஏற்படாது. அதன் ஜலத்தைக் குடித்து ஜன்ம பந்தனபயத்திலிருந்து விடுபடலாம்.

அந்தக் கிணற்றடியில் சிவயோகிகளுக்குக் கொடுக்கும் தானம், ஏ! கும்ப முனியே! ப்ரளய காலத்தில்கூட அழிவில்லாமல் இருக்கும். அந்தக் கிணற்றையும் அதன் சுற்றுப்புறத்தையும் ஒருவன் ஜீர்ணோத்தாரணம் செய்தானேயாஞல் அவன் ருத்ரலோகத்தையடைந்து, அங்கு ஸந்தோஷமாய் ஸல்லாபித்துக்கொண்டிருப்பான்.

காலேஸ்வரருக்கு தக்ஷிண பாகத்தில் அபம்ருத்யுவை நாசம் செய்யும் ம்ருத்யுஞ்ஜயர் என்னும் ஒரு லிங்கம் இருக்கிறது. ஒரு கிணறும் இருக்கிறது. அந்தக் கிணற்றுக்கு வடபாகத்தில் தக்ஷேஸ்வரலிங்கம் இருக்கிறது.

அதற்குப் பூஜைசெய்து ஆராதித்தால் ஆயிரக்கணக்கான அபராதங்களை அவர் க்ஷமிப்பார்,

தக்ஷேஸ்வரருடைய கிழக்கு பாகத்தில் பெரியதான மஹாகாலேஸ்வர லிங்கம் இருக்கிறது. அங்கு இருக்கும் மஹாகாலலிங்கத்தைத் தரிசனம் செய்து, மஹாகால குண்டத்தில் ஸ்னனம் செய்து, மஹாகாலரைப் பூஜித்தால், சராசரமான ஜகத்தையே பூஜித்த பலன் கிடைக்கும். அதற்குத் தெற்கில் அந்தகேச்வரரைப் பூஜை செய்தால் யமராஜருடைய பயம் நீங்கும்.

ஏ! முனியே! அந்த லிங்கத்திற்கும் தெற்கில் ஹஸ்தி பாலேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதைப் பூஜை செய்தால் யானையைப் பூஜித்த பலன் கிட்டும்.

அங்கேயே ஐராவத குண்டமும், ஐராவதேஸ்வர லிங்கமும் இருக்கிறது. அதைப் பூஜிப்பதிஞல் ஒருவன் தன தான்யங்களுடன் செழிப்பாக வாழ்வான்.

அதற்குத் தக்ஷிண பாகத்தில் மங்களத்தை அளிக்கக் கூடிய மாலதீஸ்வர லிங்கம் இருக்கிறது.

ஹஸ்திபாலேச்வரரின் வடக்கு பக்கத்தில் ஜெயத்தைத் தரும் ஜயந்தேஸ்வர லிங்கம் இருக்கிறது.

அதே இடத்தில் காசீபுரியும் ப்ரசித்தி பெற்ற பாபத்தை நாசம் செய்யும் பந்தீகுண்டம் இருக்கிறது. அங்கு ஸ்ஞனம், தானம், ஸ்ராத்தம் செய்வதஞல் அந்தப் பலன் கிடைக்கிறது.

அதற்குப் பக்கத்தில் தன்வந்தீஸ்வரர் குண்டம், லிங்கத்திற்கும் மற்ருெரு பெயரும் உண்டு. லிங்கத்தைத் துங்கேஸ்வரர் என்றும், குண்டத்தை வைத்தேஸ்வரர் என்றும் கூறுகிருர்கள்.

இந்தக் குண்டத்தில் தன்வந்தரி இங்கு ஆரோக்கியமாகவும் அம்ருதஸ்வரூபமாயுமுள்ள ம்ருத ஸ்ஞ்ஜீவினி முதலிய மகத்தான ஔஷதிகளைப் போட்டிருக்கிருர். இந்தக் குண்டத்தில் ஸ்ஞனமும், லிங்கத்தைத் தரிசனமும் செய்தால் கடுமையான பாபங்களும் வியாதிகளும் நஷ்டமடைகின்றன.

அதற்கு உத்தரபாகத்தில் பலிசேகரர் என்ற லிங்கம் இருக்கிறது. அதுவும் எல்லா ரோகங்களையும் நாசம் செய்கிறது. துங்கேஸ்வர லிங்கத்திற்குத் தெற்குப் பக்கத்தில் ஸுகத்தைச் செய்யும் சிவேஸ்வரர் லிங்கம் இருக்கிறது.

அதற்கும் தெற்கு பாகத்தில் ஜமதக்னீஸ்வரர் லிங்கம் இருக்கிறது. அதற்கு மேற்கு பக்கத்தில் பைரவேஸ்வர லிங்கம் இருக்கிறது.

அதற்குப் பக்கத்தில் உத்தமமான பைரவகுண்டம் இருக்கிறது. அந்த ஜலத்தைத் தொட்டாலேயே எல்லா யக்ஞங்களும் செய்த பலன் கிடைக்கிறது. (கூபத்திற்கு மேற்கில் யோகஸித்திகளைக் கொடுக்கக்கூடிய சுகேஸ்வரலிங்கம் இருக்கறது.)

அதற்கு நிர்ருதி திக்கில் நிர்மல ஜலத்தைக் கொடுக்கக்கூடிய வ்யாஸ கூபம் இருக்கிறது. அந்த

ஜலத்தில் ஸ்னனம் செய்த பிறகு தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும் தர்ப்பணம் செய்தால் அக்ஷய ரூபமாக, எந்த உலகத்தை விரும்புகிரேமோ, அது கிடைக்கும்.

அந்த வ்யாஸ தீர்த்தத்திற்கு மேற்கு பக்கத்தில் கர்ணகண்டா என்னும் பெயருடைய பெரிய குளம் இருக்கிறது.

அந்த கர்ண குளத்தில் ஸ்னனம் செய்து வியாஸேச்வரரை தரிசனம் செய்தால் அவர் எந்த இடத்தில் இறந்தாலும் காசியில் இறந்த பலன் கிடைக்கும்.

கர்ணகண்டா குளத்தை ஒட்டியே பஞ்சசூடா என்னும் பெயருடைய அப்ஸரஸினுடைய ஸரோவரம் இருக்கிறது. அதில் ஸ்னனம் செய்து பஞ்சசூடேஸ்வரரைத் தரிசனம் செய்தால், அந்த மனிதன் ஸ்வர்க லோகத்திற்குப்போய் பஞ்சசூடா என்னும் பெயருடைய அப்ஸரஸ்ஸின் ப்ரியத்துக்குப் பாத்திரவானுக இருப்பான்.

அதற்குத் தென்பக்கத்தில் எந்தவிதமான ஜடத்தன்மையையும் கழுவிவிடும் கௌரிகூபம் என்னும் கிணறு இருக்கிறது.

அந்த பஞ்சசூடா என்னும் ஸரோவரத்திற்கு வடக்குப் பக்கத்திலேயே மஹாபாபங்களேப் போக்கடிக்கும் மந்தாகினீ என்னும் பெயரையுடைய மஹாதீர்த்தம் இருக்கிறது.

அந்த மந்தாகினீ ஸ்வர்க்கத்திலேயே மிகவும் பவித்ரமும், மிகவும் புகழும் உடையதாக இருக்கிறது. அப்படியிருக்கும்போது இந்த மத்யலோகததில் அதைப்பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? அதற்கு வடக்குபாகத்தில் மத்யமேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அது அவிமுக்தேஸ்வரருக்கு நேர் கிழக்கு பாகத்தில் இருக்கிறது.

சித்திரைமாதத்து அசோகாஷ்டமியன்று அங்கு இரவு கண்விழித்திருந்து ஆராதித்தானுல் அவன் சோகத்துக்கு

ஆளாகமாட்டான். ஆனந்த ஸ்வரூபனுக இருப்பான்.

இந்தப் பரம புண்ணியப்ரதமத்யமேஸ்வர லிங்கத்திலிருந்து நான்கு பக்கமும் ஒவ்வொரு கோசதூரம் (20 மைல்) இந்த முக்திக்ஷேத்ரத்தின் எல்லேயென்று கூறப்படுகிறது.

பித்ருக்கள் எப்பொழுதும், ''நம் வம்சத்தில் ஒருவன் பிறக்க மாட்டாளு?'' மனே நியமத்துடன் மந்தாகினீ ஜலத்தில் ஸ்னுனம் செய்து ப்ராம்மண ஸந்நியாஸி, சிவபக்தர்களுக்கு போஜனம் அளிக்கமாட்டாளு என்று எண்ணிக்கொண்டேயிருக்கிறுர்கள். தரிசித்தானேயாளுல், ருத்ர லோகத்தில் இருபத்தியோரு தலேமுறை ஸுகமாக வஸிக்கிறுன். மத்யமேஸ்வரருக்குத் தெற்குபாகத்தில் விஸ்வ தேவேஸ்வரர் என்னும் பவித்ரலிங்கம் இருக்கிறது.

அந்த ஒரு லிங்கத்தைப் பூஜிப்பதனுலேயே பதிமூன்று விஸ்வேதேவர்களேப் பூஜித்த பலன் கிடைக்கிறது. அதற்குக் கிழக்கில் மஹாவீரபதத்தையளிக்கும் தாதாவான வீரமுக்தேஸ்வரர் இருக்கிறுர்.

அதற்குத் தெற்குப் பக்கத்தில் மங்களத்தையளிக்கும் பகவதி பத்ரகாளி எழுந்தருளியிருக்கிறுள். இங்கேயே மிகவும் மங்களத்தையளிக்கக் கூடிய பத்ர - காலன் என்னும் பெயருடைய குளமும் இருக்கிறது.

இதற்குக் கிழக்கில் பரம ஞானத்தையளிக்கும் ஆபஸ்தம்தம்பேஸ்வர லிங்கம் இருக்கிறது. அதற்கு வடக்குபாகத்தில் அதற்குப் பின்னுலேயே மிகவும் புண்ணியத்தையளிக்கும் சௌனகர் என்னும் குளமும் இருக்கிறது.

அந்தக் குளத்திற்கு மேற்கு பக்கத்தில் நற்புத்தியைக் கொடுக்கும் சௌனகேஸ்வர லிங்கமிருக்கிறது. ஒருவர் அந்தத் தடாகத்தில் ஸ்னுனம் செய்து சௌனகேஸ்வர லிங்கத்தைத தரிசனம் செய்தால் ம்ருத்யுவையும் கடக்கச் செய்யும் திவ்ய ஞானம் கிடைக்கிறது.

*அதற்குத் தென் பக்கத்தில் ஜம்புகேச்வர லிங்கம் இருக்கிறது. அது திர்யக் யோனியில் பிறக்கும் துக்கத்தைப் போக்கடிக்கிறது.*

*அதற்கு வடக்கு பக்கத்தில் கானவித்தையைக் கொடுக்கும் மதங்கேச்வரருடைய வாயு கோணத்தில் நான்கு பக்கமும் அநேக முனிவர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட, ஸித்திகளைக் கொடுகக்கூடிய அநேக லிங்கங்கள் இருக்கின்றன.*

*பரப்ரும்மராதேஸ்வரர் என்னும் லிங்கம் மதங்கேஸ்வரருக்குத் தெற்கு பாகத்தில் இருக்கிறது. அதைத் தரிசனம் செய்வதினுல் ஒருகாலமும் அகால ம்ருதயு பயம் ஏற்படாது.*

*அங்கேயே பித்ருக்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட அநேக லிங்கங்கள் இருக்கின்றன. அங்கேயே மிகவும் பிரசித்தமான ஆக்ஞபேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.*

*இந்த எல்லா லிங்கங்களையும் ஸேவித்தால் பித்ருகள் ஸந்தோஷமடைவார்கள். இவைகளுக்கு தக்ஷிண பாகத்தில் ஒரு ஸித்தகூடம் இருக்கிறது.*

*அங்கு ஆயிரக்கணக்கான ஸித்த லிங்கங்கள் இருக்கின்றன. வாயு ஸ்வரூபமாகவும், சூரிய கிரணங்களிலும் இருக்கிருர். அநேக ஸித்தர்களால் ஸ்தாபிக்கப்பட்ட ஒரு ஸித்தேஸ்வர லிங்கமும் இருக்கிறது. அதைத் தரிசித்தால் எல்லா ஸித்திகளும் கிடைக்கும்.*

*அதற்கு மேற்கு பாகத்தில் ஒரு ஸித்தி வாபியிருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்தாலும், பானம் பண்ணிஞலும் ஸித்தியைக் கொடுக்கிறது. அந்த ஸித்தி கூபத்திற்குக் கிழக்கில் வியாக்ரேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.*

*அதைத் தரிசித்தால் புலி முதலிய துஷ்டம்ருகங்களிஞலும், கொள்ளைக்காரர்களிஞலும் பயம்*

ஏற்படாது. அதற்குத் தெக்கில் ஜ்யேஷ்டஸ்தானத்தில பரமஸித்திகளைக் கொடுக்கும் ஜ்யேஷ்டேச்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

அதற்குத் தெற்கு பாகத்தில் ஆனந்தத்திற்கிருப்பிடமான ப்ரஹஸிதேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. இதற்கு வடக்கு பாகத்தில் காசிவாசத்தின் பலனையளிக்கும் நிவாஸேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

அங்கேயே சதுஸ் ஸமுத்திரம் என்ற கிணறு இருக்கிறது. அதில் ஸ்நானம் பண்ணினல் ஸமுத்திர ஸ்நானம் பண்ணின பலன் கிடைக்கும். அங்கேயே ஒரு ஜ்யேஷ்டா தேவியும் இருக்கிருள். அவளை நமஸ்கரித்தாலேயே உயர்ந்த தன்மையைக் கொடுக்கிருள்.

வ்யாக்ரேஸ்வரருக்கு தக்ஷிணபாகத்தில் சண்டீஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதற்கு வடக்கு பாகத்தில் பித்ருக்களுக்கு ஸந்தோஷத்தை அளிக்கவல்ல தண்டகாதம் என்னும் ஸரோவரம் இருக்கிறது.

க்ரஹணத்திற்கு பிறகு அங்கிருக்கும் தேவகாதன் என்னும் குளத்தில் ஸ்நானம் செய்தால் அது மிகவும் மஹிமை பொருந்தியது ஆகும். அங்கு ஜயகீஷ்வ்ய முனியின் குஹையும், ஜயகீஷவ்யலிங்கமும் சோபிதமாக இருக்கிறது.

அங்கு மூன்றுநாள் இரவு சேர்ந்தாற்போல் உபவாசம் இருந்தால் நிர்மலமான ஞானத்தையடையலாம். அதற்குப்பின் பக்கத்தில் மகத்தான புண்யத்தை அளிக்கும் தேவரேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

அதற்கு அடுத்தாற்ப்போல் அண்டையிலேயே சதகாலன் என்னும் லிங்கம் இருக்கிறது. ஏ கும்பஸம்பவா, மஹா உமாபதி இந்த லிங்கத்தை வெளிக் காட்டுவதற்காக நூறு வருஷ பர்யந்தம் காசியிலேயே காலத்தைச் செலவழித்தார்.

*அந்த லிங்கத்தைத் தரிசித்தவர்கள் முழுமையாக நூறு வருஷம் ஜீவித்திருப்பார்கள். அவருக்குத் தெற்குப் பக்கத்தில் மஹா ஜபத்திற்குப் பலனையளிக்கும் ஸதாதபேச்வரர் என்னும் லிங்கமிருக்கிறது.*

*அதற்கு மேற்கு பக்கத்தில் மகத்தான பலனுக்குக் காரணமான ஹேதுக்கேஸ்வரர் இருக்கிறார். அதற்கு தக்ஷிண ப்ரதேசத்தில் மஹா ஞானத்தையளிக்கும் அக்ஷபாதேஸ்வரர் இருக்கிறார்.*

*அதற்கு கொஞ்சம் முன்னே தள்ளி கணதேஸ்வரர் இருக்கிறார். அங்கேயே புண்ணியத்தையளிக்கும் கணத்கூபம் என்னும் கிணறு இருக்கிறது. அதில் நீராடி கணதீஸ்வரரைப் பூஜித்தால் ஒருபொழுதும் தனதான்யத்திற்குக் குறைவு இருக்காது.*

*அதற்குத் தெற்கில் ஸஜ்ஜனங்களுக்கு அனுபூதி ஸம்பத் அளிக்கும் பூதேஸ்வரர் தரிசனம் செய்வதற்குத் தகுந்தவராக இருக்கிறார்.*

*அவருக்கு மேற்கில் பாபநாசகரான ஆஷாடீஸ்வரர் இருக்கிறார். அவருக்குச் சற்றுமுன்னால் விரும்பிய ஸம்பத் அளிக்கும் துர்வாஸேஸ்வரர் இருக்கிறார். அவரது தக்ஷிணபாகத்தில் பாபபாரத்தைப் போக்கடிக்கும் பார பூதேஸ்வரர் இருக்கிறார்.*

*முன்கூறிய வியாஸேஸ்வரருடைய பூர்வாம்சத்தில் மஹாஞானத்தையளிக்கும் சங்க்கேஸ்வரர், லிகிதேஸ்வரர் என்ற இரண்டு லிங்கங்கள் இருக்கின்றன. காசியில் முயற்சியெடுத்துக் கொண்டாவது இந்த இரண்டு லிங்கங்களையும் தரிசிக்க வேண்டும்.*

*பாசுபத வ்ரதத்தைப் பூர்த்தி செய்து வ்ரதோத்யாபனம் செய்தால் என்ன புண்ணியம் கிடைக்கிறதோ, ஒரு தடவை க்ஷணநேரமாவது விஸ்வேஸ்வரரை தரிசித்தால் அந்த பலன் கிட்டும். அதற்கு ஈசான கோணத்தில் யோக ஞானத்தை அளிக்கும் அவதூதேஸ்வர தீர்த்தமும் இருக்கின்றன.*

அதை ஸேவிப்பதினுல் ஜனங்களுடைய பசுபாசமும் விலகிவிடுகின்றன. அந்த பசுபாசங்களை விலக்கும் பகவதீச்வர லிங்கம் அவதூதேஸ்வரருக்குக் கிழக்கு பாகத்தில் இருக்கிறது. அதற்கு தெற்கில் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்யும் வரன் கொடுக்கும் கோபிலேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அதற்குப்பின் பக்கத்தில் ஜீமூத வாஹனேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

அந்த லிங்கத்தை ஸேவிப்பதினுல் ஒருவன் வித்யாதரனுகிருன். பஞ்சநத தீர்த்தத்தில் மயூகாதித்யன் இருக்கிருர். அங்கேயே கபஸ்தீஸ்வரர் இருக்கிருர்.

அதற்கு வடக்குப் பக்கத்தில் ததிகல்பம் என்னும் ஒரு பெரிய கிணறு இருக்கிறது. அந்த கூபஸ்னுனமும், கபதீஸ்வரர் தரிசனமும் கிடைப்பது மிகவும் கடினமானது. கபதீஸ்வரருக்கு வடக்கில் ததிகல்பேஸ்வர லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசிப்பவன் கல்பகாலம் சிவ லோகத்தில் வசிக்கிருன்.

கபதீஸ்வரருக்குத் தெற்கு பக்கத்தில் மங்களத்திற்கிருப்பிடமான மங்கள கௌரீ இருக்கிருள். அவளை உத்தேசித்து முடிந்த மட்டும் ப்ராம்மண தம்பதிகளை அலங்கரித்து உணவளித்தால் எல்லையில்லாத புண்ணியங்கள் கிடைக்கிறது.

மங்கள கௌரிக்குப் பக்கத்திலேயே முகப்ரதேஸ்வரர் வடக்கில் ஸர்வஸித்திகளையும் கொடுக்கும் வதனப்ரேக்ஷுணு என்னும் தேவி விளங்குகிருள்.

முகப்ரக்ஷேஸ்வரருக்கு வடக்கில் த்வஷ்ட்ரீஸ்வரர், வ்ருத்தீஸ்வரர் என்னும் இரண்டு லிங்கங்கள் உள்ளன. அவர்களைத் தரிசிப்பதினுல் ஸ்வர்ணதானம் பூமிதானம் பண்ணிய பலன் கிடைக்கும்.

அவருக்கும் வடக்கில் சுபதர்சனத்தையளிக்கும் சர்ச்சிகாதேவி இருக்கிருள். சர்ச்சிகாதேவிக்கு முன்னுல் சாந்தியளிக்கும் ரேவதேஸ்வரர் இருக்கிருர்.

அவருக்கு முன்னுல் மஹாசுபத்தையளிக்கும் பஞ்சநதேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது. அங்கேயே மங்களகௌரிக்கு மேற்கில் மங்களோதகம் என்னும் ஒரு பெரிய கிணறு இருக்கிறது.

அங்கேயே உபமந்யுவினுல் ஸ்தாபிக்கப்பட்ட மஹாலிங்கம் இருக்கிறது. அதற்குப் பின்னுல் புலிகளின் பயத்தைப் போக்கடிக்கும் வியாக்ரபாதேஸ்வரர் என்னும் ஒரு பெரிய கிணறு இருக்கிறது.

அங்கேயே உபமன்யுவினுல் ஸ்தாபிக்கப்பட்ட மஹாலிங்கம் இருக்கிறது. அதற்குப் பின்னுல் புலிகளின் பயத்தைப் போக்கடிக்கும் வியாக்ரபாதேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

கபஸ்தீஸ்வரருடைய நிர்ருதி கோணத்தில் பாபஸமூகங்களை நாசம் செய்யும் சசாங்கேஸ்வரர் இருக்கிறுர். அவருக்கு மேற்குபாகத்தில் திவ்யகதியை அளிக்கும் க்ஷயத்ரதேஸ்வரர் இருக்கிறுர்.

தேவதேஸ்வரருக்கு மேற்கில் மஹாபாதகங்களை நாசம் செய்யும் ஜைமினேஸ்வரர் இருக்கிறுர். ஏ ரிஷி ஸத்தமரே! அங்கு அநேக ரிஷிகளால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கங்கள் இருக்கின்றன.

ஜைமினேஸ்வரருக்கு வாயுகோணத்தில் ராவணேஸ்வர லிங்கம் இருக்கிறது. அதைத் தரிசனம் செய்யும் ஜனங்களுக்கு ராக்ஷஸர்களிடமிருந்து பயம் ஏற்படாது.

அவருக்கு தக்ஷிணபாகத்தில் வரகேஸ்வரர் இருக்கிறுர். அவருக்கும் தக்ஷிண பாகத்தில் மாண்டவ்யேஸ்வரர் இருக்கிறுர். அதற்கு தெற்கே ப்ரசண்டேஸ்வரரும் அவருக்குத் தெற்கில் யோகேஸ்வரரும், அவருக்கு தெற்கில் தாதேஸ்வரரும இருக்கிறுர்கள். அவருக்குச் சற்று முன்னுல் சென்றுல் சோமேஸ்வரலிங்கம் இருக்கிறது.

*அவருடைய நிர்ருதி கோணத்தில் ஸத்ஜனங்களுக்கு ஸுவர்ணத்தையள்ளிக் கொடுக்கும் கனகேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.*

*பிறகு அவருக்கு வடக்கே பஞ்ச பாண்டவர்களால் ஸ்தாபிதம் பண்ணப்பட்ட ஸந்தோஷத்தையளிக்கும் ஐந்து லிங்கங்கள் இருக்கின்றன. அதற்கு முன்னால் ஸம்வர்த்தேஸ்வரர் இருக்கிறார். மேற்கு திக்கில் ஸ்வேதஸ்வர லிங்கம் இருக்கிறது.*

*அதற்குப்பின் பக்கத்தில் காலனிடமிருந்து அபயமளிக்கும் கலசேகாலிங்கம் இருக்கிறது. அந்த லிங்கம் ச்வேதகேது காலபாசத்தில் சிக்கியபோது அமுதம் நிரம்பிய குடத்திலிருந்து வெளிவந்தது.*

*அதற்கும் வடக்கில் பாபங்களை நாசம் செய்யும் சித்ரகுப்தேஸ்வரலிங்கம் இருக்கிறது. அதற்குப் பின்னால் மஹா பலனையளிக்கும் த்ருடேஸ்வரர் இருக்கிறார்.*

*கலசேகருக்குத் தெற்கில் க்ரஹேஸ்வரர் என்னும் உத்தமலிங்கம் இருக்கிறது. அதைத் தரிசனம் செய்தால் எல்லா க்ரஹங்களிலிருந்தும் இடையூறுகள் விலகிவிடும்.*

*சித்ர குப்தேஸ்வரருக்குப் பின் பக்கத்தில் எதிர்சசேஸ்வரலிங்கம் இருக்கிறது. அதுவும் மிகவும் புண்ணியம் பலத்தையளிக்கிறது. பிறகு க்ரஹேச்வரருக்குத் தெற்கில் உதத்யவாம தேவேஸ்வர லிங்கம் இருக்கிறது.*

*அதற்குத் தெற்கில் கம்லாஸ்வதேஸ்வரர் என்னும் பெயருள்ள இரண்டு லிங்கங்கள் இருக்கின்றன. அங்கேயே நளகூபர்களால் பூஜிக்கப்பட்ட ஒரு நிர்மலமான லிங்கம் இருக்கிறது. அதற்குத் தெற்கில்தான் மணிகர்ணிகேஸ்வரர் இருக்கிறார்.*

*அவருக்கு வடக்கு திசையில் பலிதேஸ்வரர், ஜராஹரேஸ்வரர் என்னும் இரண்டு லிங்கங்கள் இருக்கின்றன. அதற்குப் பின்னால் பாபநாசன லிங்கம் இருக்கிறது.*

அதற்கு மேற்கில் நிர்ஜரேஸ்வரர் இருக்கிறார். அங்கிருந்து நிர்ருதி கோணத்தில் பிதாமஹேஸ்வரர் இருக்கிறார். அங்கேயே பிதாமஹஸ்ரோதி என்னும் தீர்த்தம் இருக்கிறது. அங்கு ஸ்ராத்தம் செய்வதினால் அதிக பலன் கிடைக்கிறது.

அதற்குத் தெற்கில் வர்ணேஸ்வரரும், தெற்குபாகத்தில் கங்கேஸ்வரரும் இருக்கிறார்கள். அதற்கு வடக்கு பாகத்தில் நிம்னரகஸ்வரர் என்ற பெயருள்ள அநேக லிங்கங்கள் இருக்கின்றன.

அங்கேயே வைவஸ்வதேஸ்வரர் இருக்கிறார். அவரைத் தரிசித்தால் யமலோகத்திற்குச் செல்ல வேண்டாம். அவருக்குப் பின்னால் அதிதீஸ்வரரும், முன்னால் சக்ரேஸ்வரரும் இருக்கிறார்கள்.

அவருக்குச் சற்று முன்னால் சென்றவுடன் பார்த்தவுடனேயே நம்பிக்கையையளிக்கும் காலகேஸ்வர லிங்கம் இருக்கிறது. அங்கு ஒரு நிழலும் காணப்படுகிறது. அவரைத் தரிசனம் பண்ணினால் ஒருவன் நிஷ்காம்யனாக ஆகிறான்.

அவருக்கு முன்னால் தாரகேஸ்வரர் இருக்கிறார். அவருக்கு முன்னாலேயே சுவர்ண பாரதீஸ்வரர் இருக்கிறார். அவருக்கு வடக்கில் மருத்தேஸ்வரர் இருக்கிறார். அவருக்கு முன்னால் இருக்கிறார்.

அவருக்குத் தெற்கில் ரம்பேஸ்வரரும் அங்கேயே சசீஸ்வரரும் இருக்கிறார்கள். அவருக்கு வடபாகத்தில் எல்லா லோகபாலர்களாலும் ஸ்தாபிக்கப்பட்ட அநேக லிங்கங்கள் இருக்கின்றன.

அங்கேயே நாகர், கந்தர்வர், யக்ஷர், கின்னரர், அப்ஸரஸ்ஸுகள் தேவதைகள் இவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட அநேக லிங்கங்களும், பின்னும் அநேக ஸித்திகளை அளிக்கும் லிங்கங்களும் சோபிதமாக இருக்கின்றன.

*சக்ரேஸ்வரருக்குத் தெற்கில் மஹாபாபத்தை அபகரிக்கும் பல்குனேஸ்வரர் இருக்கிருர். அவருக்குத் தெற்கில் பரம சுபங்களுக்கும் கர்த்தாவான மஹா பாசுபதேஸ்வரர் இருக்கிருர்.*

*அதற்கு மேற்கில் ஸமுத்ரேஸ்வரர் இருக்கிருர். வடக்கில் ஈசானேஸ்வரர், கிழக்கில் ஸர்வஸித்தியை அளிக்கும் லாங்கலீஸ்வரரும் இருக்கிருர்கள்.*

*ஏ! தேவீ, ராகத்வேஷாதிகளை விட்டுவிட்டு இந்த லிங்கங்களை பூஜை செய்பவர்கள் ஸித்தியை அடைவார்கள். அவர்களுக்கு மோக்ஷம் கிடைக்கிறது. அதனுல் அவர்களை வேறுமனிதர்கள் என்று சொல்ல முடியாது.*

*இந்த லாங்கலீஸ்வரரிடத்தில் மதுப்பிங்கர், ச்வேதகேது என்னும் இரண்டு தபஸ்விகள் இந்த சரீரத்ரதுடனேயே பரமஸித்தியை அடைந்திருக்கிருர்கள்.*

*அங்கேயே நகுலீஸ்வரர் கபிலேஸ்வரரும் இருக்கிருர்கள். என்னுடைய விரதத்தை எடுத்து கொண்டவர்களுக்கு இந்த லிங்கங்களும் பரம ரஹஸ்ய ஸொரூபம்.*

*அதற்குப் பக்கத்திலேயே எனக்கு அதிகமான ப்ரியத்தைக் கொடுக்கிற ப்ரீகேஸ்வரர் இருக்கிருர். அங்கு ஒருநாள் உபவாசம் இருந்தால் போதும். நூற்றுக்கணக்கான வருஷங்கள் வ்ரதம் அனுஷ்டித்துக்கொண்ட உத்தம பலன் கிடைக்கிறது.*

*எவன் ஒருவன் என்னுடைய சிவராத்ரி முதலிய விரதங்களின் பர்வத்தில் வ்ரதம் இருந்து ப்ரீதி கேஸ்வரருக்குப் பக்கத்தில் ஒரு நாளாவது இரவு கண்விழித்தானுனல் அவன் நிச்சயமாக எனது கணமாகிருன்.*

*அந்த லிங்கத்திற்கு தக்ஷிணபாகத்தில் தண்ணீர் நிரம்பிய ஒரு வாபி இருக்கிறது. அதன் ஜலத்தைக்*

குடித்தால்போதும். மறுஜன்மத்தின் துக்கத்தையனுபவிக்கமாட்டான்.

அந்த வாபிக்கு மேற்குப் பக்கத்தில் தண்டபாணியும், கிழக்கில் தாரகேஸ்வரரும், தெற்கில் காலேஸ்வரரும், வடக்கில் நந்திகேச்வரரும் எப்பொழுதும் கண்காணித்து வருகிறார்கள்.

அதன் தண்ணீரை ச்ரத்தையுடன் பருகினால் பருகுபவர்களுடைய ஹ்ருதயத்தில் முன்கூறிய மூன்று லிங்கங்களும் வஸிக்கிறார்கள். எப்படியானாலும் சரி, அந்த வாபியின் ஜலத்தைப் பருகும் உத்தம ஜனங்கள் எப்பொழுதும் க்ருதார்த்தர்களாகிறார்கள்.

அவிமுக்தேஸ்வரரை ஒட்டியே மோக்ஷ புத்தியைக் கொடுக்கும் தாதாவான பூஜநீயரான மோக்ஷேச்வரர் இருக்கிறார். அவருக்கு வடக்கில் இருக்கும் தயைக்கு இருப்பிடமான கருணேஸ்வரரையும் பூஜிக்க வேண்டும்.

அவருக்குக் கிழக்கில் கவர்ணுக்ஷேஸ்வர லிங்கம் இருக்கிறது. அங்கேயே சௌபாக்யத்தையும் சம்பத்தையும் அளிக்கும் சௌபாக்ய கௌரிலிங்கம் இருக்கிறது. அவளை அவசியம் பூஜை செய்ய வேண்டும். சுவர்ணுக்ஷேஸ்வர லிங்கத்திற்கு வடக்கில் ஞானதேஸ்வர லிங்கம் இருக்கிறது.

விஸ்வேஸ்வரருக்கு தென்பக்கத்தில் க்ஷேத்திரத்தைக் கண்காணிக்கும் நிகும்பேஸ்வரர் இருக்கிறார். அவரைக் கருத்துடன் பூஜிக்க வேண்டும். அவருக்குப் பின் பக்கத்தில் எல்லா விக்னங்களையும் போக்கடிக்கும் விக்ன விநாயகர் இருக்கிறார்.

சதுர்த்தி அன்று அவரை அர்ச்சிக்க வேண்டும். பிறகு நிகும்பேஸ்வரருடைய அக்னி கோணத்தில் நல்ல ஸித்தி அருளும் விரூபாக்ஷேஸ்வரலிங்கம் இருக்கிறது.

அதற்குத் தெற்கு பக்கத்தில் சுக்ரேஸ்வரர் இருக்கிறார். அவர் புத்திர பௌத்ரர்களை விருத்தி செய்கிறார். அவருக்கு

வடக்கு பக்கத்தில் தேவயானியேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.

சுக்ரேஸ்வரருக்கு முன்னால் பூஜனீயகச்சேஸ்வரர் இருக்கிறார். அங்கு சுக்ரகூபம் என்னும் கிணறு இருக்கிறது. அதன் ஜலத்தை ஸ்பர்சித்தாலேயே அஸ்வமேத யக்ஞபலன் கிடைக்கிறது.

சுக்ரேஸ்வரருக்கு மேற்கில் தன்னுடைய பக்தர்களை எப்பொழுதும் கரைசேர்க்கும் சுபத்தையளிக்கும் பவானி சங்கரர் இருக்கிறார்.

சுக்ரேஸ்வரருக்குக் கிழக்குதிக்கில் இருக்கும் அழகேஸ்வரரையும் மதாலகேஸ்வரரையும் பூஜை செய்யவேண்டும். அதற்குச் சற்று கிழக்கில் ஸர்வ விக்னத்வம்ஸகரும் ஸமஸ்த ஸித்திகளையருளும் கணேசர் எழுந்தருளியிருக்கிறார்.

ஹே முனியே, லங்கேஸ்வரனை ஸம்ஹாரம் செய்துவிட்டு, ரகுநாதனால் ஸ்தாபிக்கப்பட்ட ரகுநாதேஸ்வரலிங்கம் இருக்கிறது. இதை ஸ்பர்சித்தாலே போதும். ப்ரம்மஹத்தி செய்த மனிதன்கூட அதனால் சுத்தனாகிறான்.

பிறகு அங்கேயே மஹாபுண்ணியத்தையளிக்கும் திரிபுராந்தகேஸ்வரர் என்னும் மற்றொரு லிங்கம் இருக்கிறது.

அதற்கு மேற்கில் சுபமயமான தத்தாத்ரேயேஸ்வரர் இருக்கிறார். அதற்கு பிறகு கோகர்ணேஸ்வரர் இருக்கிறார்.

அதற்கெதிரில் கோகர்ணம் என்னும் தடாகம் இருக்கிறது. அது பாபங்களை நாசம் செய்ய வல்லது. அதற்குப் பின்னால் துருவேஸ்வரர் இருக்கிறார்.

அதற்கு முன்னால் பித்ருக்களுக்கு பரம ப்ரீதியளிக்கும் துருவ குண்டம் இருக்கிறது. அதற்கு வடக்கில் பிசாசு பிடித்தவர்களைத் தெளிவாக்கும் பிசாசேஸ்வரர் இருக்கிறார்.

*அதற்குத் தெற்கில் பித்ருகுண்டம் இருக்கிறது. அங்கேயே பித்ரேஸ்வரர் லிங்கமும் எழுந்தருளியுள்ளது. அங்கு ஸ்ராத்த செய்பவனுடைய பித்ருக்கள் மிகவும் சந்தோஷமடைகிறுர்கள்.*

*துருவேஸ்வரருக்கு முன்னுல் தாரேஸ்வரர் இருக்கிறுர். அவரை வைத்யநாதர் என்றும் கூறுகிறுர்கள். அதிலிருந்து நிர்ருதி முக்கில் மனுவினுல் ஸ்தாபிக்கப்பட்ட வம்ச விருத்தி அளிக்கும் மஹாலிங்கம் இருக்கிறது. வைத்ய நாதருக்கு எதிரிலேயே ப்ரியவிருஸ்வரர் இருக்கிறுர்.*

*தேஸ் அவருக்குத் தெற்கில் முசுகுந்தேஸ்வரரும் பக்கத்திலேயே கௌதமேஸ்வரரும் இருக்கிறுர். அவர்களுக்கு மேற்கு பக்கத்தில் பத்ரேஸ்வரர் இருக்கிறுர். அவருக்குத் தெற்கில் ரிஷ்ய சிருங்கேஸ்வரர் இருக்கிறுர்.*

*அவருக்கு முன்னுலேயே ப்ரும்மேஸ்வரர் இருக்கிறுர். அவருக்கு ஈசான கோணத்தில் பர்ஜன்யேஸ்வரர் இருக்கிறுர்.*

*அவருக்கு முன்னுல் நகுஷேஸ்வரர் இருக்கிறுர். அவருக்கு முன்னுல் விசாலாக்ஷி தேவியிருக்கிறுள்.*

*அங்கேயே க்ஷேத்திரத்தில் இருக்க அனுமதிக்கிற விசாலாக்ஷீஸ்வர லிங்கம் இருக்கிறது. அதற்குத் தெற்கில் ஜ்வரநாசகராஜ ஜராசந்தேஸ்வரர் இருக்கிறுர்.*

*அவருக்கு முன்னுல் ஸுவர்ணம் அளிக்கிற ஹிரண்யாக்ஷேஸ்வரர் இருக்கிறுர். அவருக்கு மேற்கில் கயாதீஸ்வரர் இருக்கிறுர். அவருக்கு மேற்கில் பகீர்வேஸ்வரர் இருக்கிறுர்.*

*ஏ! அகஸ்திய முனியே அவருக்கு முன்னுல் ப்ரம்மேஸ்வரருடைய மேற்குத் திக்கில் திலீபேஸ்வரர் இருக்கிறுர். அங்கு ஒரு குண்டமும் இருக்கிறது. அதில் ஸ்னுனம் செய்பவர்களுக்கு இஷ்ட பலனையளிக்கிறது.*

அங்கேயே விஸ்வாவஸுவினுல் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம் இருக்கிறது. அதற்குக் கிழக்கில் குண்டேஸ்வரர் இருக்கிருர். அவர்களுக்குத் தெற்கில் விதீஸ்வரர் இருக்கிருர். அவருக்கு தெற்கில் வாஜபேதீஸ்வரர் இவர்களிருக்கிருர்கள்.

தஸாஸ்வ மேதத்தில் ஸ்ஞனம் செய்து அந்த லிங்கங்களைத் தரிசனம் செய்தால் பத்து அஸ்வமேதயாக பலன் கிடைக்கும்.

அதற்கு வடபாகத்தில் மாத்ரு தீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்ஞனம் செய்பவர்களுடைய ஜென்ம பயத்தை நீக்குகிறது. அங்கு ஸ்த்ரீயாளுலும், புருஷுஞுலும் ஸ்ஞனம் செய்தாலும் அவன் மாத்ருகா தேவியின் க்ருபையினுல் இச்சித்த பலனையடைகிருன். உம்முடைய அகஸ்திய குண்டத்திற்குத் தெற்கில் பிரசித்தமான புஷ்பதந்தேஸ்வரர் இருக்கிருர்.

அவருக்கு அக்னிகோணத்தில் தேவதைகளினுலும் ரிஷிகளினுலும் ஸ்பாபிக்கப்பட்ட அநேக லிங்கங்கள் இருக்கின்றன. முன்கூறிய புஷ்பதந்தேஸ்வரருக்குத் தெற்கில் பரமஸித்தியை அளிக்கும் ஸித்தேஸ்வரர் இருக்கிருர்.

அவரைப் பஞ்சோபசாரத்தினுல் பூஜை செய்தால் அவர்அவர்களுடையக் கனவில் வந்து பரம ஸித்தியை அருளுகிருர். ஹரிச்சந்திரேஸ்வரைப் பூஜைசெய்தால் ஜனங்களுக்கு ராஜ்யம் கிடைக்கும்.

அவருக்கு மேற்கில் நிர்ருதேஸ்வரர் இருக்கிருர். அவருக்கு தெற்கில் அங்கீரேஸ்வரர் இருக்கிருர். அவருக்குத் தெற்கில் க்ஷேமேஸ்வரர் இருக்கிருர். அவருக்கும் தெற்கில் சித்ராங்கேஸ்வரர் இருக்கிருர். அவருக்கும் தெற்கில் பிரசித்தமான கேதாரேஸ்வரர் இருக்கிருர். அவர் தன்னை வணங்கினவர்களை மஹாதேவர்களுடைய

*அனுசரர்களாக்குகிறுர். கேதாரேஸ்வரருடைய தக்ஷிணபாகத்தில் சூரிய, சந்திர வம்சத்து அரசர்களால் ஸ்தாபிதம் செய்யப்பட்ட நூறுயிரம் லிங்கங்கள் இருக்கின்றன.*

*லோலார்க்கர் தெற்கில் அர்க்க விநாயகர் இருக்கிறுர். அவரைப் பூஜை செய்தால் அவர் எல்லாருடைய ஆசைகளையும் பூர்த்தி செய்கிறுர். அவருக்கு மேற்கில் மகத்தான பலனையளிக்கும் கர்த்தமேஸ்வர லிங்கம் இருக்கிறது. அவருக்கு மேற்கில் துர்கா குண்டத்தில் மஹாதுர்க்கை எழுந்தருளியிருக்கிறுர். அவள் பக்தர்களுடைய துர்க்கதியை தூர ஓட்டி விடுகிறுள்.*

*அவளுக்குத் தெற்கில் கஷ்கா என்னும் அச்சிறு நதியினுல் பூஜித்த கஷ்கேனவரர் இருக்கிறுர். அவருக்கு மேற்கில் ஜனகேஸ்வரர் இருக்கிறுர். அவருக்கு வடக்கில் சங்குகர்ணேஸ்வரர் இருக்கிறுர்.*

*அவருக்குக் கிழக்கில் எல்லா ஸித்திகளையும் அருளும் மஹாஸித்தேஸ்வர லிங்கம் இருக்கிறது. ஒருவன் அங்கு ஸித்த குண்டத்தில் ஸ்ஞனம் செய்து மஹாஸித்தேஸ்வரரைத் தரிசனம் செய்தால் அவன் எல்லா ஸித்திகளுக்கும் அப்பால் போகிறுன்.*

*இது ஸமஸ்த ஸித்திகளுக்கும் அப்பாற்பட்டது. சங்குகர்ணேஸ்வரரின் வாயுகோணத்தில் வாயுவேஸ்வரர் என்னும் லிங்கம் இருக்கிறது.*

*அவருக்கு முன்ஞல் விபாண்டேஸ்வரர் இருக்கிறுர். அவருக்கு வடக்கு பாகத்தில் கஹோலேஸ்வரர் இருக்கிறுர். அங்கு துவாரேஸ்வரர் லிங்கமும் துவரரேஷ்வர தேவியும் இருக்கிறுர்கள்.*

*அவர்களை ஆராதனை செய்தால் ஆனந்தவனத்தின் வாஸம் ஸித்தி ஆகும். ஏ முனியே, அந்தஸ்தானத்தில் ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு, பலவித ரூபங்களில் சிவகணங்கள் காசீபுரியை ரக்ஷிக்கிறுர்கள்.*

அங்கேயே ஹரிதீஸ்வரரும், காத்யாயனீஸ்வர லிங்கமும் இருக்கிறது. அதற்குப் பக்கத்திலேயே ஜாங்கலீஸ்வரர் இருக்கிறார். அவருக்குப் பின்னால் முகுடேஸ்வரர் இருக்கிறார். அங்கேயே முகுடகுண்டம் இருக்கிறது.

எல்லா லிங்கங்களையும் ஸர்வ யாத்திரையாகச் சென்று பலன் பெற வேண்டுமானால் நிர்மலமான முகுண்டத்தில் ஸ்னானம் செய்து பகவான் முகுடேஸ்வரரைத் தரிசிக்க வேண்டும்.

அப்பொழுது அவனுக்கு ஸமஸ்த லிங்கங்களையும் தரிசித்த பலன்கள் கிடைக்கிறது. அந்த பூமியே யோகாப்யாஸத்திற்கோ தபஸ்ஸிற்கோ ஸித்தி அருளும் இடம்.

ஏ! முனியே! அங்கேயே ஸித்திக்காக ஆயிரக்கணக்கான லிங்கங்கள் சோபிதமாக இருக்கின்றன. ஆனால் ஹே தேவீ! வாராணஸியில் வடக்கு திசை ஒன்றே எனக்கு மிகப்பிரியமானது.

அதிலும் பஞ்சாயதனமான ஓங்காரேஸ்வர ஸ்தானமே மிகவும் பிரியமானது. அங்கு ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரளயம் இம்மூன்று காலங்களிலும் நான் எப்பொழுதும் இருக்கிறேன்.

ஹே! ப்ரியே! இந்த மர்மத்தை அறிந்தவன் பாபத்தில் அழுந்தமாட்டான்.

என்னுடைய உலகத்திற்குச் செல்ல விரும்புகிறவர்கள் சீக்கிரமக அங்கேயே சென்று இருக்க வேண்டும். உனக்கு இது சுருக்கமாகக் கூறினேன்.

பக்தி பரவசத்தால் இரண்டு இரண்டாகவும் மூன்று மூன்றாகவும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறேன். என்னால் இவைகளை எடுத்துச் சொல்ல முடியாது. சிரத்தையுடன் அவைகளையெல்லாம் பூஜிக்க வேண்டும் என்று மாத்திரம் கூறினேன்.

*முன்கூறப்பட்ட இந்த லிங்கங்கள், குண்டங்கள் கிணறுகள், வாபிகள், தடாகங்கள் இவைகளிடம் அறிவாளிகள் ச்ரத்தாவிஸ்வாஸத்துடன் இருக்க வேண்டும்.*

*இவைகளெல்லாம் தரிசனம் செய்வதாலும், இவைகளில் ஸ்ஞனம் செய்வதாலும் மேலும் மேலும் அதிகபலன்கள் அடையலாம்; காசியிலுள்ள லிங்கங்கள், கிணறுகள் தடாகங்கள், ஸரோவரங்கள், வாபிகள், தெய்வமூர்த்தங்கள் இவைகளுடைய எண்ணிக்கையை யாரால் கூற முடியும்; வேறு எங்கும் உள்ள எல்லா தேவதைகளைவிட ஆனந்த கானனத்திலுள்ள புல்லே ஸ்ரேஷ்டமானது. காரணமென்னவென்ருல் இவைகளுக்கும் வேறு ஜன்மம் எடுக்க வேண்டாம். எண்ணிக்கையில்லாத லிங்கங்களையுடைய காசியே எல்லாத் தீர்த்தங்களுக்கும் ஜன்ம பூமி.*

*இவைகளைத் தரிசனம் செய்வதிஞல் ஸ்வர்க்கமும் அந்திமகாலத்தில் ஸேவிப்பதிஞல் மோக்ஷமும் கிடைக்கிறது. ஏ! தேவீ நீ உன்னுடைய தபஸ்ஸிஞல் மிகவும் பிரியமுள்ளவளாகவும் ஆஞய்.*

*ஆஞல் இந்தக் காசியே எனக்கு ஸுகமாகவும் இளைப்பாறுவதற்கும் உரிய ஸ்தலமுமாகும், காசியின் பெயர்களைக் கூறுபவர்களும், அதை ஆமோதிப்பவர்களும் எனக்கு, விசாகன், சாகன், நந்தி, கணேசன் முதலியவர்களுக்கு ஸமமானவர்கள். காசிவாசிகளே! க்ஷேமத்திற்கு அதிகாரியாவார்கள்.*

*ஏனென்ருல் கடுமையான தபஸ்ஸும் பெரிய பெரிய வ்ரதங்களும் மகத்தான தானம் பண்ணினவர்களுக்கு மாத்திரமே காசிவாசம் கிடைக்கிறது.*

*எவர்கள் ஆனந்த வனத்தில் வஸிக்கிருர்களோ, அவர்களுக்கு எல்லாத் தீர்த்தங்களில் ஸ்ஞனமும், எல்லாயக்ஞங்களில் தீக்ஷை எல்லா தர்மங்களும் பரிபூர்ணமாகச் செய்த ஸௌபாக்யம் கிடைக்கிறது.*

ஸுரர்கள், அஸுரர்கள், நாகர்கள், யக்ஷர்கள், நரர்கள் யாராகிலும் சரி அந்திமகாலத்தில் காசிவாசம் செய்யவில்லையானுல் அவர்களால் பூமிக்கு பாரம் என்றே எண்ண வேண்டும். வேறு இடங்களில் வசிக்கும் வைதிகப் ப்ராம்மணர்களைக் காட்டிலும் காசிவாசம் செய்யும் சண்டாளனே ஸ்ரேஷ்டமானவன்.

ஏனென்ருல் காசிவாசம் செய்யும் சண்டாளன் பவஸாகரத்தைத் தாண்டுகிருன். ஆனுல் அன்னிய இடங்களிலுள்ள ப்ராம்மணன் அதோகதியில் விழுந்து அழுகிக் கொண்டிருக்கிருன்.

ஸர்வக்ஞனும் தூரதிருஷ்டியுடையவன் யாரென்ருல் காசியில் மண்ணிஞல் ஆன சரீரத்தைத் தியாகம் பண்ணிவிட்டு, அமுதமயமான திவ்ய சரீரத்தை எடுப்பவனேயாகும்.

ஸமஸ்த தீர்த்தங்களில் ரஹஸ்யங்கள் நிறைந்த இந்த பவித்ர அத்யாயத்தைக் கேட்பவன் நிச்சயமாகக் காசிதரிசனத்தின் பலனை அடைகிருன்.

பிரதி தினமும் காலை வேளையில் இந்த பவித்ர அத்யாயத்தைப் பாராயணம் செய்வதினுல் ஸமஸ்த தீர்த்தங்களையும் தர்சனம் பண்ணின பலன் கிடைக்கிறது. எந்த ஒரு புத்திமான் தினமும் இந்த எல்லா லிங்கங்களைப் பற்றின அத்யாயத்தை ஜபிக்கிருனே, அவனுக்கு யமன் என்ன? பாபம் என்ன? ஒன்றுக்கும் பயம் கிடையாது.

ஸுக்ருத் ஒருவன் பவித்ரமான இந்த அத்யாயத்தைப் பாராயணம் பண்ணிஞல் ப்ரம்ம யக்ஞத்தின் பலன் கிடைக்கிறது.

அவனுக்கு ஸமஸ்த குண்டங்களில் ஸ்நானம் செய்த பலனும், எல்லாவாபிகளின் தீர்த்தம் பருகிய பலனும் எல்லா லிங்கங்களையும் தரிசனம் செய்த பலனும் கிடைக்கிறது.

வேறு சிறுசிறு பலன்களைக் கொடுக்கக்கூடிய ஸ்த்தோத்திரங்களினுல் என்ன பலன்? என்னிடம் பிரியம் வைத்தவர்கள் மஹாபலனைக் கொடுக்கும் அந்த அத்யாயத்தை ஜபிப்பது உசிதம்.

இந்த அத்யாயத்தைக் கேவலம் ஒருதரம் படிப்பதினுல் என்ன பலன் என்ருல் இந்த உலகத்தில் பெரிய பெரிய மஹாதானங்கள் செய்த பிறகும்கூட இந்த பலன் கிடைக்குமோ என்னமோ ஸந்தேகம்தான்.

இந்த எல்லாத் தீர்த்தங்கள் ஸ்னைத்திலுலும் இந்த எல்லா லிங்கங்கள் தரிசனத்திலுலும் என்ன பலன் கிடைக்குமோ, அது இதைப் பாராயணம் செய்வதினுல் அவசியம் கிடைக்கும்.

ஏ முனியே, இதுவே உக்ரமான தபஸ், இதுவே மகத்தான ஜபம், காசிலிங்காளி என்னும் இந்த அத்யாயத்தைப் பாராயணம் செய்வதினுலேயே மேற்கூறிய பலன்கள் கிடைக்கும். என்னுடைய விரோதி, சிவத்ரோஹி, நாஸ்திகன், வேதத்தை நிந்திப்பவன் அவர்களுக்கு இந்த அத்யாயத்தை ஒருபொழுதும் சொல்லக்கூடாது.

ப்ரம்மஹத்தி, செய்யத்தகாத இடங்களுக்குச் செல்வது, சாப்பிடக்கூடாததைச் சாப்பிடுவது, குருஸ்த்ரீகமனம், தங்கம் திருடுவது, மாதா பிதாவைக் கொல்வது, கோஹத்தி, பாலர்களை வதைப்பதை இத்யாதி மனம், வாக்கு, கர்மங்களால் அறிந்தோ அறியாமலோ செய்த பாபங்கள், பாதகம், உபபாதகம், மஹாபாதகம் இவைகளும் இந்த அத்யாயத்தைப் படிப்பதனுல் நீங்குகின்றன. என்னுடைய ஆக்ஞை என்னவென்ருல் புத்திரன், பௌத்திரன், தனம் தான்யம் களத்ரம் க்ஷேத்ரம் ஸுகம், ஸ்வர்க்கம், மோக்ஷம் முதலிய மனோவாஞ்சித பலன்களை இந்த அத்யாயத்தைப் படிக்கும் ஸாதுக்கள் அடைவார்கள் என்பதே ஆகும். இது மிகவும் ஸத்யம்.

*பகவான் சிவபிரான் தேவி ஜகதாம்பாளிடம் இவ்விஷயங்களைக்கூறி கொண்டிருக்கும்போது நந்தி வந்து நமஸ்கரித்துவிட்டு விண்ணப்பித்துக் கொண்டது; பகவானே! விசாலமான ராஜபவனம் நிர்மாணித்து முடிக்கப்பட்டது. ரதமும் அலங்கரிக்கப்பட்டுத் தயாராக இருக்கிறது. ப்ரம்மா முதலிய தேவர்களும் தயாராக இருக்கிறார்கள்.*

*பகவான் புண்டரீகாக்ஷனும் கருடன்மேல் ஆரோஹணித்து, தன்னுடைய க்ருஹப்ரவேச மஹோத்ஸவத்தைத் தரிசிக்க ஆவல் கொண்டு இங்கு வந்து கூடியிருக்கிறார்கள்.*

*நந்தியினுடைய இந்த வார்த்தையைக் கேட்ட பகவான் சங்கரர், பார்வதி தேவியுடன் திவ்ய ரதத்தில் ஆரோஹணித்து த்ரிவிஷ்டபம், த்ரிலோசனம் என்னும் இடத்திலிருந்துப் புறப்பட்டார்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தார்த்த பாஷாடீகாவான தொண்ணூற்றேழாவது அத்யாயம்*

*ஸம்பூர்ணம்.*



# அத்யாயம் 98

*வியாசதேவர் கூறினார்:- பகவான் கார்த்திகேயன் அகஸ்திய முனி கேட்டவுடன் மஹாதேவருடைய மஹத்வத்தை வர்ணிக்கிறார்கள்.*

*ஸ்கந்தர் கூறினார்:- ஏ! மஹா ப்ராக்ஞா அகஸ்தியா, மூன்று லோகங்களுக்கும் ஆனந்தத்தை வளர்ப்பதும் மஹாபாதகங்களை நாசம் செய்வதுமான விஸ்வேஸ்வரருடைய க்ருஹப்ரவேசத்தின் கதையைக் கேளுங்கள்.*

*சித்திரை மாதத்து சுக்ல த்ரயோதசியில் பகவான் சங்கரர் மந்த்ராசலத்திலிருந்து வாராணஸிக்கு வந்து இங்குமங்குமாகச் சுற்றிக் கொண்டிருந்தார்.*

*அதன் பிறகு மோக்ஷலக்ஷ்மி விலாஸம் என்னும் ராஜமாளிகை கட்டி முடிக்கப்பட்டதும் சுக்லப்ரதமையன்று புதன் கிழமை அனுராதா நக்ஷத்ரம் கூடிய ஸப்தம ராசியில் சந்திரனும் மற்ற க்ரஹங்கள் எல்லாம் உச்சநிலையில் இருக்கும்போது பகவான் விச்வேஸ்வரர் த்ரிலோசன பீடத்திலிருந்து வந்து அரண்மனையில் பிரவேசித்தார்.*

*அந்த வேளையில் வாத்யங்கள் முழங்கின. திசைகளிலிருந்து சுகமாகக் காற்று வீசியது. வேறு ஒரு சப்தமும் கேட்க முடியாமல் பிராம்மணர்களுடைய வேதத்வனி முழங்கிற்று.*

*இந்த கோலாஹலத்தில் பூலோகத்திலிருந்து புவர்லோகத்தின் மத்யபாகம் வரைக்கும் சப்தம் எதிரொலித்தது. என்னவென்று வர்ணிப்பது? சங்கரரின் அரண்மனைப் பிரவேசத்தில் எல்லோரும் பரமானந்தம் அடைந்தார்கள்.*

*கந்தர்வர்கள் மங்கள கீதங்கள் பாடினார்கள். அப்ஸரஸ்ஸுகள் ஆடினார்கள். சித்த சாரணர்கள்*

மனோஹரமாகத் துதித்தார்கள். தேவதைகளின் ஸந்தோஷத்திற்கு எல்லையே இல்லை.

அச்சமயம் நான்கு பக்கங்களிலிருந்தும் ஸுகந்தமான காற்று வீசிற்று. ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பொழிந்தது. எல்லோரும் மங்களமாக அலங்கரித்துக்கொண்டு மங்களமான ஸம்பாஷணையில் ஈடுபட்டார்கள்.

ஸ்தாவர ஜங்கம, ஜீவ ஜந்துக்களெல்லாம் ஆனந்தமயமாயின. அந்த ஸமயம் தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள் நாகர்கள் அதில் எல்லா ஸ்த்ரீ புருஷர்களிடமிருந்தும் இடையூறு இல்லாமல் தர்மார்த்த காம மோக்ஷ நான்கு புருஷார்த்தங்களும் அடிக்கடி பிரகாசித்துக் கொண்டிருந்தன.

ஏ முனியே! அந்த சமயம் தூபப் புகையினால் ஆகாயம் நிறைந்தது. எவ்விதத்தாலும் தன்னுடைய நீலவர்ணத்தை விடாத ஆகாயம் தூபங்களினால் புகைமயமாயிற்று. ஆரத்திக்கு ஏற்றப்பட்ட தீபங்களின் ஜோதி, ஆகாசத்தில் நக்ஷத்ரங்கள் என்னும் பேரில் இதுவரையில் ஜ்வலிததுக் கொண்டிருக்கின்றன. மாளிகையின் ஒவ்வொரு உப்பரிகையின் மேல் நாநாவித வர்ணக்கொடிகள் பறந்தன.

ஒவ்வொரு சிவாலயத்தின் மேலும் ரமணீயமான கொடிகள் பறந்து கொண்டிருந்தன. சில இடங்களில் நடிகர்கள் ஆடிக்கொண்டிருந்தார்கள்.

சில இடங்களில் நாநாவிதமான வாத்யங்கள் முழங்கிக்கொண்டிருந்தன. வழி நெடுகிலும் சந்தனத்தைக் கரைத்து தெளித்து பூமி குளிர்ச்சியாக இருந்தது.

ஒவ்வொரு கிரஹங்களின் அங்கணங்களில் பச்சை, வெள்ளை கருப்பு, நீலம் மஞ்சள் முதலிய வர்ணங்கள் தீட்டப்பட்டு அலங்காரமாகத் திகழ்ந்தன.

க்ருஹங்களின் வாயில் நிலைகளில் நாநாவிதமான ரத்னங்கள் பதித்திருந்ததினால் அந்தந்த பூமி பாகங்கள்

ஜ்வலித்துக் கொண்டிருந்தன. சுண்ணும்பு அடித்திருந்த உப்பரிகைகளுக்கு அன்றிலிருந்தே சௌதம் என்ற பெயர் ஏற்பட்டது.

ஏ! கும்பமுனியே! அந்த சமயத்தில் உயிரில்லாத அசேதனவஸ்துக்கள்கூட உயிருள்ள வஸ்துக்களைப் போல் திகழ்ந்தன. உலகத்தில் மங்களகரமாக எவைகளெல்லாம் நினைக்கப்படுகின்றனவோ அவைகளெல்லாம் ஜன்மோற்சவம் கொண்டாடின.

இந்த விதமாக பகவான் மஹேஸ்வரர் தன்னுடைய குமாரர்கள் நெருங்கி சூழ்ந்துவர பகவதி பவானியுடன் உன்னதமான ஸிம்மாஸனத்தில் ஏறி அமர்ந்தார். அப்பொழுது நான்முகனுன ப்ரம்மதேவர், மகரிஷிகள்கூட அவருக்கு அபிஷேகம் பண்ணத் தொடங்கினர்.

பிறகு தேவர்களும், நாகர்களும், ஸப்தஸமுத்திரங்களும், மலை அரசர்களும் தூய்மையுள்ளம் படைத்த மகாபுத்திமான்களும் எண்ணிக்கையில்லாத ரத்னங்களினுலும், அநேகவித மாலைகளினுலும், சித்ரமாலைகளினுலும் அபூர்வ ஸுகந்த திரவ்யங்களினுலும் மிகவும் ஸந்தோஷத்துடன்கூடப் பூஜை செய்யத் தொடங்கினுர்கள். அதேசமயம் மாத்ருகா மாதர்கள் பகவானுக்கு மங்கள ஆரத்தி எடுத்தார்கள்.

அதன் பிறகு ஸகல தேவதைகளினுல் வந்திருக்கப்பட்ட பகவான் ஹ்ருதயத்தில் வெகுகாலமாக இருந்த அபிலாஷைகளைப் பூர்த்தி செய்து அவர்களை ஸந்தோஷப் படுத்தி ப்ரம்மாவையும் வெகுமதித்துவிட்டு விஷ்ணுவிடம் மரியாதையுடன் கூறினுர்.

வாரும்; இங்கு அமர்ந்து கொள்ளும்; என்னுடைய பெருமைக்கெல்லாம் நீரே காரணம் அல்லவா? நீர் தூர இருந்தாலும் நீர் எப்பொழுதும் என்னுடைய சமீபத்திலேயே இருக்கிறீர். உம்மைப் போலக் காரிய தரிசி எனக்கு மற்றெருருவருமில்லை.

*நீர் ராஜாதிவோதாசனுக்கு உத்தம உபதேசம் அளித்தீர். அதனுல் அந்த ராஜா பரம ஸித்தி அடைந்தான். ஜன்ம அபிலாகைஷகளெல்லாம் பூர்த்தி ஆயிற்று.*

*ஏ! விஷ்ணுவே, உம்முடைய மனதில் தோன்றிய வரங்களைக் கேளும். ஏனென்ருல் உமக்குக் கொடுக்கக்கூடாதது என்னிடம் ஒன்றுமில்லை. இந்த ஆனந்த கானனத்துக்கு நான் வருவதற்கு நீரும் கணேசனும் காரணமாக இருந்தீர்கள்.*

*இம்மூவுலகங்களிலும் பக்தியளிக்கவல்லதும், ப்ரும்ம ரஸாயனக்களஞ்சியமும், பரம சௌக்யத்திற்கு இருப்பிடமான இந்த வாராணஸிபுரி எனக்கு மிகவும் பிரியமானது. இதற்கு சமமாக மூவுலகத்தில் எங்குமேயில்லை.*

*பகவான் விஸ்வேஸ்வரருடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு விஷ்ணுதேவர் வரன் கொடுக்கத் தயாராக இருந்த சங்கரரைப் பாரத்துக்கூறினுர். ஏ!பினுக பாணியே! நீங்கள் என்னிடம் சந்தோஷமாக இருக்கிறீர்களாளுல் தங்கள் சரணுரவிந்தத்தை விட்டு நான் விலகாமல் இருக்கும் வரத்தைத் தாருங்கள்.*

*பகவான் மதுசூதனருடைய இந்த வார்த்தையைக் கேட்டு சந்தோஷமடைந்து, பகவான் த்ரிபுராரி கூறினுர். ஏ! முராரியே! நீ இந்த மோக்ஷலக்ஷ்மி விலாஸத்தில் என்னுடைய பக்கத்திலேயே இருப்பாயாக,*

*ஏ சக்ரபாணியே, ஒருவன் என்னிடம் பரமபக்தனுக இருந்தும் கூட முதலாவது உன்னை ஆராதிக்காமல் என்னை ஆராதித்தாளுனுல் அவன் விருப்பத்தை என்னுல் நிறைவேற்ற முடியாது.*

*இந்த முக்தி மண்டபத்தில் எங்கு நான் இருந்தாலும் சரி எனக்கு சுகம் அளிக்கிறதோ அது நிர்மலமான கைலாசபர்வதத்திலும் திடபக்தியுடைய என்னுடைய பக்தர்கள் ஹிருதயத்திலும் கூட இல்லை.*

ஒருவன் திடமான சித்த விருத்தியுடன் ஒரு நிமிஷமாவது இந்த மண்டபத்தில் அமர்ந்தானுனல் அந்த ஆழ்ந்த பக்தியுடையவன் பிறகு கர்ப்பத்தில் பிரவேசிக்கமாட்டான்.

எல்லாத் தீர்த்தங்களுக்கும் முகுடமணியான சக்கர புஷ்கரிணி தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து, மனோநியமத்துடன் இந்த முக்தி மண்டபத்தில் பிரவேசிக்கிறார்களோ, அவர்கள் பாபமற்றவர்களாகவே ஆவது மன்றில் என்னுடைய பரிஜனங்களில் ஒருவராக ஆவார்கள்.

ஒருவர் இந்த முக்தி மண்டபத்தில் க்ஷணநேரமாவது அமர்ந்து என்னை நினைத்துக்கொண்டு தனக்கு முடிந்தமட்டிலும் தானம் பவித்ரமான கதாச்ரவணங்கள் இவைகளைச் செய்வானுனல் அவர்களுக்கு நூற்றுக்கணக்கான கோதானப் புண்ணியபலன்கள் கிடைக்கின்றன.

ஏ! உபேந்திரா! மணிகர்ணிகையில் ஸ்னனம் செய்து, ஒருக்ஷணநேரமாகிலும் இந்த முக்தி மண்டபத்திலமர்ந்து தியானம் செய்தார்களானுல் அவர்களுக்குக் கடுமையான தபம் செய்த பலனும், ஸமஸ்த தீர்த்தங்களில் நீராடின பலனும் ஸம்பூர்ணமாகக் கிடைக்கும்.

ஓ நாராயணு! இந்தக்காசியில் அடிவைக்கும் இடந்தோறும் தீர்த்தங்கள் இருக்கின்றன. ஆனுல் அவைகள் எல்லாம் மணிகர்ணிகைக்கு நிகராகுமா? அதுபோல் எத்தனையோ உத்தமமான மண்டபங்கள் இருந்தாலும் இந்த முக்தி மண்டபத்திற்கு ஈடாகுமா?

ஏ! விஷ்ணு! வருகிற துவாபரயுகத்தில் இந்த முக்தி மண்டபம் என்ற பெயர் பிரசித்தமாகும். விஷ்ணு கூறினர்:- 'ஓ பிரணு கண்ணுதலே! தாங்கள் கூறுவதுபோல் எவ்விதம் பிரசித்தமாகும் என்பதைக் கூறுங்கள், என்றுர்.

அப்பொழுது தேவதேவர் கறினூர்:- ஏ சதுர்புஜா, இப்பொழுது வரும் துவாபரயுகத்தில் மஹாநந்தன் என்னும் பெயருடைய பிராம்மணன் இருப்பான். அவன் ருக்வேதி. ஸதாசாரத்தில் தத்பரனாக இருப்பவன். தீர்த்தக் கரைகளில் தானம் வாங்கமாட்டான்.

டம்பமில்லாதவன்; ஸரளசித்தத்துடன் கூடியவன். அதிதி உபசாரகன்; அவன் யௌவன தசையை அடைந்தவுடன் பாணங்களினால் அடிக்கப்பட்டு அவன் ஒருவன் பெண்ணை சிநேகம் செய்து தன்னுடன் கூடவைத்துக்கொள்வான்.

அந்த விபசாரியின் வலையில் விழுந்து காமாதுரனாக இருந்து புசிக்கத் தகாதவைகளைப் புஜித்து, இவ்விதமாக அனாசாரத்தினால் சொத்துக்களைப் பூராவும் அழிப்பான். அந்த மூடாத்மா தனிகர்களான வைஷ்ணவர்களைக் கண்டால் வைஷ்ணவவேடம் பூண்டு சைவர்களை நிந்திப்பான்.

தானசீலர்களான சைவர்களின் சமாஜத்தில் நுழைந்து பாசுபத தீக்ஷைபெற்றவனாக நடித்து, வைஷ்ணவர்களை நிந்திப்பதில் முதல்வனாக நிற்பான்.

இந்த மஹாநந்தன் என்னும் பிராம்மணன் பாஷண்ட தர்மத்தில் நிபுணனாய் ஸ்னானம் ஸந்தியா ஒன்றும் செய்ய மாட்டான்.

பெரியதிலகமும், பெரிய மாலையும் போட்டுக்கொண்டு வெளுத்த வஸ்திரத்தையுடுத்திக் கொண்டு, குடுமியை ஆட்டிக்கொண்டு, இழிவான தானங்களை வாங்குவதற்கு எல்லோருக்கும் முன்னால் கையை நீட்டிவான். இப்படிப்பட்ட துஷ்டனுக்கு இரண்டு பிள்ளைகள் பிறப்பார்கள்.

அவனுடைய இந்த நடத்தை உச்சகட்டத்தில் இருக்கும் சமயம் ஒருதனவந்தர் தீர்த்தயாத்திரைக்காக மலைப்பிரதேசத்திலிருந்து வருவார்.

*அந்தப் பணக்கார யாத்ரிகன் மணிகர்ணிகையில் ஸ்னானம் செய்துவிட்டுச் சொல்லுவான். நான் ஜாதியில் சண்டாளன் ஆனாலும் உத்தம குலத்தைச் சேர்ந்தவன். எனக்கு இங்கு தானம் பண்ணவேண்டுமென்ற இச்சையிருக்கிறது.*

*யாராவது இங்கு தானம் வாங்குபவர்கள் உண்டா? அதைக் கூறினால் நான் தானஸங்கல்பம் பண்ணிக் கொள்ளுவேன் என்பான். அந்தத் தாழ்ந்த குலத்தவனுடைய வார்த்தையைக் கேட்டு பக்கத்திலிருந்த ஒரு மனிதன் சுட்டிக்காட்டி அதோ அங்கு ஒருவன் தியான முத்ரையினால் ஜபம் செய்து சொண்டிருக்கிறான் பாருங்கள்.*

*அவன் உன்னுடைய தானத்தை வாங்குவான். வேறு ஒருவரும் வாங்கமாட்டார்கள் என்பான்.*

*அப்பொழுது நீச்சகுலத்தவன் சதானந்தன் சமீபத்தில் சென்று ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து கூறுவான்.*

*மஹாப்பிராம்மணா! என்னிடம் கொஞ்சம் பொருள் இருக்கிறது. அதைத் தயவு செய்து தாங்கள் வாங்கிக்கொண்டு என்னுடைய தீர்த்த யாத்திரையை பலனுடையதாகச் செய்து என்னை உத்தாரணம் செய்யவேண்டும் என்பான்.*

*அப்பொழுது அவன் கையால் காதை வளைத்துக்கொண்ட தியானத்தைவிட்டு சமிக்ஞையினால் கேட்டான். உன்னிடம் எவ்வளவு தனம் இருக்கிறதென்று, அவன் மஹாநந்தனுடைய சமிக்ஞையைப் புரிந்துகொண்டு எவ்வளவு பொருள்கள் கிடைத்தால் தாங்கள் சந்தோஷப் படுவீர்களோ; அவ்வளவு கொடுப்பேன். அதில் ஒன்றும் வித்யாசம் கிடையாது என்பான்.*

*பிறகு இவ்வார்த்தைகளைக் கேட்டவுடனேயே துஷ்டனான மஹாநந்தன் தன்னுடைய மௌனத்தைக் கலைத்து மிகவும் சந்தோஷத்துடன் கூடக் கூறுவான், எனக்கு தானம் வாங்குவதில் கொஞ்சம்கூட இச்சை கிடையாது.*

ஆனால் நீ பிரார்த்திக்கிறாய். அதனால் ஸங்கோசத்துடன் வாங்கிக் கொள்கிறேன்; அதுவும் உன்னை அனுக்ரஹம் செய்வதற்குத்தான். ஆனால் உத்தமோத்தமா! நீ நான் சொல்வதை ஒப்புக்கொண்டால் நான் தானம் வாங்கிக்கொள்கிறேன்.

அப்பொழுது தாழ்க்குலத்தவன் கூறுவான்; ''ஏ! விப்ரா, நான் விஸ்வேஸ்வரரை ஸந்தோஷப்படுத்துவதற்காக எவ்வளவுதனம் கொண்டு வந்திருக்கிறேனோ, அவ்வளவையும் உனக்குத் தருகிறேன். ஏனென்றால் நீரே என்னுடைய விஸ்வநாதர்.

ஏ! உத்தம பிராம்மணரே! இந்த விஸ்வநாதருடைய ராஜதானியில் யார் இருக்கிறார்களோ, அவர்கள் தாழ்ந்தவர்களிலும் தாழ்ந்தவர்களானாலும் சரி அல்லது உயர்ந்தவர்களிலும் சரி எல்லோரும் விஸ்வேஸ்வரருடைய அம்ச ரூபியாவார்கள்.

எவர்கள் மற்றவர்களை உயர்த்துகிறார்களோ, எவர்கள் மற்றவர்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறார்களோ, எவர்களுடைய ஸ்பாவம் பரோபகாரம் செய்வதிலேயே ஈடுபட்டிருக்குமோ, அவர்களெல்லாம் விஸ்வேஸ்வரருடைய அம்சம்.

ஸதானந்தன் இந்த வினயமுள்ள வார்த்தைகளைக் கேட்டுப் பரம ஸந்தோஷமடைந்து அவனிடம் கூறுவான்.

அப்பொழுது தர்ப்பையை எடுத்துக்கொண்ட சீக்கிரமாகவே ஸங்கல்பம் செய்துகொள். சுபஸ்யசீக்ரம். இதைக்கேட்ட அந்த உதாரமான பர்வதவாஸி மிகவும் சந்தோஷமடைந்த விஸ்வநாதர் சந்தோஷம் அடையட்டும் என்று சொல்லிக்கொண்டு சங்கல்பம் செய்த பொருளைத் தானம் செய்துவிட்டு, தன் தேசத்திற்குச் செல்வான். பிறகு ஸதானந்தன் மற்ற பிராம்மணர்கள் அவனை இழிவாக நிந்தித்ததையும் பொருட்படுத்தாமல அங்கேயே இருந்து கொண்டிருப்பான்.

*அவன் வெளியில் போகும்பொழுதெல்லாம் மற்றவர்கள் அவனை நிந்தித்துக் கோண்டே கூறுவார்கள். சண்டாளனுடைய தானம் வாங்கினதினால் இவனும் சண்டாளன்தான், என்று கூறி, அவனை ஜாதிப்ரஷ்டம் செய்துவிடுவார்கள். இப்படிச் சொல்லிக்கொண்டு 'தூ, தூ' என்று என்று அவன் பின்னாலேயே போவார்கள்.*

*அப்பொழுது அவன் காகத்தைக் கண்ட ஆந்தையைப்போல ஊர்க்காரர்களுக்கு பயந்துகொண்டு வீட்டை விட்டு வெளியே வரமாட்டான். லஜ்ஜையினாலேயே எப்பொழுதும் அவன் தலை தாழ்ந்தேயிருக்கும்.*

*அதற்கு பின் அவன் தனது வைப்பாட்டியுடன் ஸம்பந்தம் வைத்துக்கொண்டு வாராணஸிபுரியை விட்டுவிட்டு கயைக்குப் பக்கத்திலுள்ள கீக்கடதேசத்திற்குச் செல்வான்.*

*வழியிலேயே அவன் ஸாதுக்களின் சங்கத்தில் இருந்தாலும்கூட அவனிடம் நிறைய பணம் இருக்கிறது என்று திருடர்கள் அவனை சூழ்ந்துக் கொள்ளுவார்கள்.*

*அப்பொழுது அவர்கள் ஸதானந்தனை குடும்பத்துடன் பிடித்துக்கொண்டுபோய் ஒரு பயங்கரமான வனத்திற்குள் அழைத்துச் சென்று அவனுடைய தனத்தை எல்லாம் பரித்துக் கொள்வார்கள்.*

*பிறகு அவர்கள் யோசிப்பார்கள் இவனிடம் அதிகமான தனம் இருப்பதனால் இவனை உயிரோடு விட்டுவிட்டால் நமக்கு ஆபத்து அதனால் இவனை அவன் குடும்பத்துடன் கொன்று விடுவதே சரி,*

*அந்தக் கொள்ளைக்காரர்கள் இவ்விதம் நிச்சயம் செய்துகொண்டு கூறுவார்கள். ஓ! யாத்ரீகனே! நீ உன் இஷ்ட தெய்வத்தை நினைத்துக்கொள். உன்னை உன் குடும்ப ஸஹிதம் கொன்றுவிடப் போகிறோம்.*

இதைக் கேட்ட பிராமணன் மனதிற்குள் யோசிப்பான். நான் யாருக்கு வேண்டி சண்டாளனிடமிருந்து இத்தனை பணம் வாங்கினேனோ அவர்கள் எல்லோரும் கொல்லப்படுவார்கள்.

நான் தானம் வாங்கினதும் வியர்த்தமே. என்னுடைய வாழ்க்கையே வீணாயிற்று, காசி வாசத்தையும் விட்டாயிற்று.

என்னுடைய துர்புத்தியினாலேயே ஒரேயடியாக நாசம் ஆகிவிட்டேனே, அந்த நீசனிடம் தனம் வாங்கினதினால் காசியில் மரணம் அடைவதற்கும் கொடுத்து வைக்கவில்லையே,

இப்படி அந்திம ஸமயத்தில் காசியையும் குடும்பத்தையும் நினைத்துக் கொண்டு அந்தப் பிராம்மணன் கொள்ளைக்காரர்களால் கொலை செய்யப்பட்டும் கூட கீக்கட தேசத்தில் கோழியாகப் பிறப்பான்.

அவனுடைய மனைவி பெட்டையாகவும், குழந்தைகள் கோழிக்குஞ்சாகவும் பிறக்கும். அந்திம ஸமயத்தில் காசியை நினைத்துக்கொண்டு பிராணனை விட்டதினால் அவர்களுக்கு முன் ஜன்ம ஞாபகம் இருக்கும்.

இந்த விதமாக வெகு தினங்கள் சென்ற பிறகு முன்பு அவனுடன் யாத்திரை செய்த ஸாது ஜனங்கள் இந்தக் கோழிகள் இருக்கும் வழியாக வருவார்கள்.

அப்பொழுது இந்த சாதுக்கள் உரத்த குரலில் பேசிக்கொண்டே வருவார்கள். அப்பொழுது அந்தக் கோழிகள் ஸாதுஜனங்களுடைய வார்த்தையைக் கேட்டு முந்திய ஜென்மத்தின் நினைவோடு இருப்பதினால் அவர்களுக்குப் பின்னால் இந்தக் கோழிகளும் போகும்.

அந்த சாது ஜன்மங்களும் தயையுடன் கோழிகளுக்கு அரிசி முதலிய தானியங்களை இறைத்துக்கொண்டு, காசி க்ஷேத்திரத்திற்குக் கூட்டிக்கொண்டு போவார்கள்.

*அந்தப் பரம பவித்ரமான முக்தி மண்டபத்தில் நான்கு பக்கங்களிலும் திரிந்து கொண்டிருக்கும். அப்பொழுது இந்தக் கோழிகள், உணவை ஜெயித்தவர்களும், நியம சீலர்களும் காமக்ரோதத்திற்குப் பராமுகம் காட்டுபவர் களும், லோப, மோஹமற்றவர்களும், கங்காஸ்னுனத் தினுல் நனைந்த கேசத்துடன் இருப்பவர்களும், என்னுடைய நாமத்தை உச்சரிப்பதிலேயே நினைவாக இருப்பவர்களும், என்னிடத்திலேயே லயித்த மனத்தையுடையவர்களும், என்னுடைய க்ஷேத்திர வாஸிகளான பக்தர்களைப் பார்த்துக்கொண்டேயிருக்கும்.*

*இதற்குப் பிறகு அந்த ஸாது ஜனங்கள் கூட இக்கோழிகள் முன்ஜென்மத்தில் நல்ல ஸம்ஸ்காரங்கள் கொஞ்சம் இருந்தபடியால்தான் ஸத்கர்மங்களை அவலம்பிக்கின்றன என்று ஒருவருக்கொருவர் கூறிக்கொண்டு அக்கோழிகளை மிகவும் மதிக்கத் தொடங்குவார்கள்.*

*அக்கோழிகளும் ஆஹாரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டே வந்து கடைசியில் பிராணனை விட்டுவிடும். ஹே! விஷ்ணுவே இந்தக் கோழிகள் - எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே - எனது க்ருபையினுல் விமானத்தில் ஏறி கைலாசம் வந்து, வெகு தினங்கள் வரை ஸர்வ உத்தமமான திவ்ய போகங்களை அனுபவித்து விட்டு பரம ஞானிகளாகி சாஸ்வத முக்தியையடையும்.*

*அப்பொழுது துவாபரயுகத்து ஜனங்கள் இந்த முக்தி மண்டபத்தை குக்குடமண்டபம் என்று அழைத்து பிரஸித்தியடையச் செய்வார்கள்.*

*எவர்கள் இந்த முக்தி மண்டபத்தில் அமர்ந்து, அந்தக் கோழிகளின் சரிதத்தை ஸ்மரிக்கிருர்களோ, அவர்கள் எல்லோரும் பரமகல்யாண மங்களத்தையடைவார்கள்.*

*பகவான் மகாதேவர் விஷ்ணு தேவரிடம் இந்த வருங்காலக் கதையைக் கூறிக்கொண்டு இருந்தார். அதே சமயம் மணியடிக்கும் பலத்த சப்தம் கேட்டது.*

அப்பொழுது தேவ தேவர் உமாபதி நந்தியை அருகில் அழைத்து, ஹே! நந்தி இந்த பலத்த மணிசப்தம் எங்கிருந்து வருகிறது என்பதைப் பார்த்துவா, என்றூர்.

அப்பொழுது நந்திதேவர் சந்தோஷ சித்தத்துடன் சென்று விசாரித்துக் கொண்டு கைகளைக் கூப்பிக்கொண்டு ப்ரணயாமம் செய்து வ்ருஷபத்வஜரிடம் விண்ணப்பித்துக் கொண்டார்.

நந்திதேவர் கூறுவார், ஹே தேவர் கூறுவார், ஹே தேவாதி தேவ, த்ரிலோசன, நான் இப்பொழுது ஒரு அபூர்வ ஸமாசாரம் தங்களுக்குத் தெரியப்படுத்தப் போகிறேன். அங்கு மோக்ஷலக்ஷ்மி விலாஸத்தைப் பார்த்து வெகு அழகாக அதற்குப் பூஜை செய்து கொண்டிருக்கிறூர்கள்.

மகாதேவர் அறிந்து புன்னகையுடன் கூறினூர், நமது முயற்சி வெற்றியடைந்து அதற்கு பிறகு மங்களமய விஸ்வேஸ்வரர் பகவதி அன்னபூர்ணு ப்ரம்மா விஷ்ணு அவர்கள் ஸஹிதம் எழுந்து ரங்கமண்டபத்துக்குச் சென்றூர்.

ஹே! அகஸ்தியா! என்று அழைத்து ஸ்கந்தர் கூறுவார்:- பரம ஆனந்தத்துடன் இந்த அத்யாயத்தைக் கேட்பவர் இங்கு மிக்க ஆனந்தத்தை அனுபவித்து விட்டு கடைசியில் கைலாசத்தை அடைவார்.

இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான தொண்ணூற்று எட்டாவது அத்யாயம்

ஸம்பூர்ணம்.



# அத்யாயம் 99

வியாஸர் கூறுவார்:- ஹே ஸூதரே, ஸ்கந்ததேவர் அகஸ்தியருக்கு தேவாதிதேவர் பரமாத்மா விஸ்வநாதருடைய சரித்ரத்தை எவ்விதம் வர்ணித்தாரோ, அவ்விதமே கூறுகிறேன் கேளும்.

அகஸ்தியர் கேட்டார். ஹே ஸ்கந்த பகவான் விஸ்வேஸ்வரர் தேவகணங்களுடன் முக்திமண்டபத்திலிருந்து சென்று என்ன செய்தார்? அதைத் தாங்கள் எனக்குக் கூறுங்கள் என்ருர்.

ஸ்கந்தர் கூறுவார்:- ப்ரம்மா விஷ்ணுவுடன் மஹேஸ்வரர் முக்தி மண்டபத்திலிருந்து எழுந்திருந்து சிருங்கார மண்டபத்திற்குச் சென்று என்ன செய்தாரென்பதை நான் உமக்குக் கூறுகிறேன்.

பகவான் சங்கரர், பகவதி மற்றும் நாங்கள் எல்லோரும் பின்தொடர சிருங்கார மண்டபத்திற்குச் சென்று கிழக்கு முகமாக அமர்ந்தார்.

இந்திரன் சாமரம் வீசினுன், நான்கு பக்கங்களிலும் ஸப்த ரிஷிகள் சூழ்ந்து கொண்டார்கள், பின்பக்கம் அஸ்திர, சஸ்திரதாரிகளாக அலங்கரித்துக் கொண்டு சில கணங்கள் அமர்ந்திருந்தார்கள். அச்சமயம் பகவான் சம்பு தனது வலக்கையைத் தூக்கிக் கொண்டு விஷ்ணு பகவானுக்குக் காட்டிக் கொண்டு கூறினுர்.

''பாரும் பாரும்! இந்த லிங்கம் பரம ஜோதிஸ்வரூபமானது, இது எல்லா விதத்திலும் மேலானது, இதுவே பரமஸித்தி தரும் வள்ளலாகவும், என்னுடைய ஸ்தாவரஸ்வரூபமும் ஆகும். இவர்கள் எல்லாரும் சிவமதஸ்தர்கள்; கபால ப்ரம்மசாரிகள், இந்திரியங்களை ஜயித்தவர்கள், தபோநிஷ்டர்கள், பஞ்சதத்வத்தின் அர்த்தஞானத்தில் நிபுணர்கள், பஸ்மக்குவியலில் தூங்குபவர்கள். தமோகுணத்தை

விட்டவர்கள், அடக்கம் என்னும் குணத்தை ஆச்ரயித்தவர்கள். பரம சுசீலர்கள்; ஊர்த்வரேதஸ்கள் லிங்கார்ச்சனத்தில் ஈடுபட்டவர்கள்; எப்பொழுதும் ஏகாக்ர சித்தமானவர்கள், எப்பொழுதும் அக்நியிலும், ஜலத்திலும் நீராடி, நிர்மலமான சரீரம் படைத்தவர்கள்.

கந்தமூல பலத்தையே புஜிப்பவர்கள், பரம தத்வதர்சனத்தில் நிலைத்த த்ருஷ்டியுடையவர்கள். ஸத்யசீலர்கள், கோபஹீனர்கள், நிர்மோகிகள், ஸர்வத்தையும் தியாகம் செய்தவர்கள்;

நிஸ்ப்ருகமானவர்கள் (ஆசையற்றவர்கள்), ப்ரபஞ்சத்தை சூன்யமாகப் பார்ப்பவர்கள் ஆதங்கமற்றவர்கள், நிராமயர்கள், ஐஸ்வர்யதியாகிகள், செயலற்றவர்கள், ஸங்கத்திலிருந்து பராமுகமானவர்கள், சுத்தாந்த: கரணமுடையவர்கள்.

ஸம்ஸார ஸாகரத்தைக் கடந்து சென்றவர்கள், நிர்விகல்பர்கள், புத்ரனுக்கு ஸமமானவர்கள், எனது ப்ரதிநிதிகள், என்னை உபாஸிப்பவர்கள். இவர்கள் எல்லோரையும் நான் என்று நினைத்தே வணங்க வேண்டும், பூஜிக்க வேண்டும்.

இவர்களைப் பூஜித்தால் நான் நிச்சயமாக சந்தோஷமடைவேன். இதில் சந்தேகமேயில்லை. இந்த விஸ்வநாதபுரியில் சிவயோகிகளுக்கு உணவு அளிக்க வேண்டும்;

இங்கு ஒருவருக்கு போஜனம் அளித்தால் கோடி கோடி பேர்களுக்கு அளித்த பலனைத் தருகிறது. இவர்களே ஸ்தாவரரூப விஸ்வேஸ்வரரான ஜகத் பிரபு; இவ்வுலகில் ஸர்வ பக்திமான்களுக்கும் ஸித்தி அருளும் கர்த்தா இவரே. ஹே தேவர்களே, நான் இந்த ஆனந்த கானனத்தில் சில ஸமயம் மறைந்திருப்பேன். சிலசமயம் கண்களுக்குத் தோன்றுவேன்;

என் இஷ்டப்படி இருப்பேன்: ஆனால் பக்தர்களுக்கிரங்கி எப்பொழுதும் லிங்கஸ்வரூபமாக அபீஷ்டங்களை அருளிக்கொண்டு அமர்ந்திருப்பேன். இந்த லிங்கத்தைத் தரிசிப்பதற்காக மற்ற ஸ்வயம்பூ லிங்கங்களும், பிரதிஷ்டித்த லிங்கங்களும் நாலுபக்கத்திலிருந்தும் இங்கு வந்து கொண்டிருப்பார்கள்.

ஆனால் எல்லா லிங்கத்தினிலும் நான் இருந்தாலும் இந்த லிங்கமே எல்லாவற்றிலும் உத்க்ருஷ்டமானது. இதில் ஸந்தேகமேயில்லை.

ஹே! ஸ்வர்க்க வாஸிகளே! எவர்கள் சுத்த மனதுடன் சிரத்தையுடன் இந்த லிங்கத்தை தர்சனம் செய்பவர்களோ, அவர்களே என்னை ஸாக்ஷாத்காரமான தர்சனம் செய்தவர்களாவார்கள்.

ரிக்ஷிகளுடன்கூட நீங்களும் இதைக் கேளுங்கள். இந்த லிங்கத்தின் பெயரைக் கேட்டமாத்திரத்திலேயே, க்ஷணமாத்திரத்திலேயே ஸஞ்சித கர்மங்களையே நஷ்டமடையச் செய்கிறது.

இந்த லிங்கத்தை ஸ்மரணம் செய்த மாத்திரத்திலேயே எனது சொல் பிரகாரம் இரண்டு ஜன்மங்களாகச் சேர்த்து வைத்த பாபங்கள் நிச்சயமாக சீக்கிரம் நஷ்டமடையும். இதில் ஸந்தேஹமில்லை.

இந்த லிங்கத்தைத் தரிசனம் செய்யவேண்டுமென்று மனதில் நினைத்து வெளியில் கிளம்பினவுடனேயே மூன்று ஜன்மங்களில் சேர்த்துவைத்த ஸஞ்சித கர்மங்கள் உடனேயே விலகுகின்றன.

ஏ அமரர்களே! மேலும் இந்த லிங்கத்தைத் தரிசனம் செய்பவர்களுக்கு நான் தயையுடன் நூற்றுக்கணக்கான அஸ்வமேத யாகங்களுடைய பலனைக் கொடுக்கிறேன்.

ஏ! ஸுரஸமூகமே! என்னுடைய இந்த ஸ்வயம்புவான விஸ்வேஸ்வர லிங்கத்தைத் தரிசனம் செய்த மாத்திரத்திலேயே ஆயிரக்கணக்கான ராஜஸூய

யக்ஞங்கள் செய்த பலன் கிடைக்கும்.

பக்தி பாவத்துடன் கூட இந்த லிங்கத்திற்கு ஒரு கை ஜலம் ஸமர்ப்பித்து ஒரே ஒரு புஷ்பத்தை ஸமர்ப்பித்தாலும் நூற்றுக்கணக்காண ஸ்வர்ணபுஷ்பத்தை ஸமர்ப்பித்த பலன் கிடைக்கும்.

இந்த லிங்கம்ராஜருக்கு பக்தி பாவத்துடன் சாதாரணப் பூஜையைசெய்தாலும் ஆயிரக்கணக்கான ஸ்வர்ண புஷ்பங்களால் அர்ச்சித்த பலன் கிடைக்கும்.

பஞ்சாம்ருதம் முதலிய த்ரவ்யங்களினுல் இந்த லிங்கத்திற்குப் பூஜை செய்தால் தர்மார்த்த காமமோக்ஷங்களாகிய நான்கு புருஷார்த்தங்களும் கைமேல் கிடைக்கும்.

வாசனையோடு கூடின சந்தனத்தினுல் இந்த லிங்கத்திற்கு லேபனம் செய்தால் அமர பெண்கள் உங்களுக்கு சந்தனம் பூசுவார்கள். வாஸனை மயமான தூபத்தை ஸமர்ப்பித்தால் உயர்ந்த வாசனைகள் அவர்களை வந்தடையும். நெய் தீபத்தை ஸமர்ப்பித்தால் ஜோதிரூபமாக விமானத்தில் ஏறி என்னுடைய உலகத்தையடையலாம்.

பக்தியுடன் கூட ஒரு தரமாவது கற்பூர ஹாரத்தி எடுத்தால் கற்பூரம் போன்ற வெண்மையான திருமேனியடைந்து நெற்றிக்கண்களுடன் விளங்குவார்கள்.

இந்த லிங்கத்திற்கு ஸாதாரணமாக ஒரு நைவேத்யம் செய்தாலும் ஒவ்வொரு அணுவிற்கும் ஒவ்வொரு யுகபோகங்களை அனுபவித்து அவன் கைலாஸ பர்வதத்தில் வசிப்பான்.

ஒருவன் விஸ்வேஸ்வரருக்கு சர்க்கரையும், நெய்யும், கலந்த சர்க்கரைப் பொங்கலை ஸமர்ப்பித்தால் அவன் தேவதைகளையும், பித்ருக்கள், மனுஷ்யர்களுடன் மூன்று லோகங்களையும் த்ருப்தி படுத்துகிருன்.

*ஒருவன் கண்ணுடி, சாமரம், சத்ரம், கட்டில் முதலியவைகளை ஸமர்ப்பித்தாளுனுல் அவனுக்கு இவ்வளவென்று கூறமுடியாத பலன் கிடைக்கிறது.*

*ஸமுத்ரத்திலுள்ள ரத்னங்களை எண்ணிஞலும் எண்ணலாம், இந்த சத்ர, சாமரங்களை ஸமர்ப்பித்தவனுடைய பாக்கியங்களை யாரால் அளவிட முடியும்?*

*ஒருவன் பக்தியுடன்கூட என்னுடைய கோவில் மணி முதலிய பூஜைக்கரிய உபகரணங்களை ஸமர்ப்பித்தாளுனுல் அவன் எப்பொழுதும் என் பக்கத்திலேயே இருப்பான்.*

*ஒருவன் எனக்காக கீதம், வாத்யம், ந்ருத்யம் இவைகளில் ஒன்றைச் செய்தாலும்கூட அவன் இரவும் பகலும் இந்த போகங்களை அனுபவிப்பான்.*

*ஒருவன் என்னுடைய கோவிலில் சித்திரங்கள் தீட்டி அழகு செய்வாளுனுல் அவன் எனக்கு முன்னுல் உட்கார்ந்துகொண்டு மஹாபோகங்களை அனுபவிப்பான்.*

*அறிவாளி ஒருவன் அவன் வாழ்விற்குள் ஒருநாளாவது விஸ்வேஸ்வரரை வணங்கிஞல் மூன்று லோகங்களும் அவன் கால்களில் வணங்கக்கூடிய பூபதியாகிறுன்.*

*ஒருவன் விஸ்வநாதரைத் தரிசனம் செய்து, பிறகு அன்னிய இடங்களுக்குச் சென்று இறந்தாலும் அடுத்த ஜன்மத்தில் அவன் கட்டாயம் மோக்ஷத்தை அடைகிறுள்.*

*யாருடைய நாக்கு நுனியில் விஸ்வநாதருடைய நாம ஜபமும், காதுகளில் விஸ்வேஸ்வரருடைய கதையும், சித்தத்தில் விஸ்வேஸ்வரருடைய த்யானமும் எப்போதும் இருந்து கொண்டிருக்கிறதோ அவனுக்குப் புனர்ஜென்மம் ஏது?*

*ஒருவன் இந்த விஸ்வநாதர் என்ற பெயருடைய லிங்கத்தைத் தரிசனம் செய்து அதைப்பற்றி எப்பொழுதும்*

புகழ்ந்து கொண்டேயிருந்தானுனல் அவன் புண்ணியமாகிய பதத்தையடைந்த என்னுடைய பாரிஷதர்களில் ஒருவனுகிருன்.

நற்செய்கைகளேயுடைய ஒருவன்! விஸ்வநாதா! விஸ்வேஸ்வரா! விஸ்வேசா! என்று எப்பொழுதும் ஜபித்துக்கொண்டிருந்தானுனல் அவன் என் சித்தத்தில் எப்பொழுதும் குடியிருக்கிருன்.

ஏ தேவ கணங்களே! இந்த மஹாலிங்கம் எனக்குப் பரம பூஜ்யமானது, என்னேக் கருத்துடன் பூஜிக்க வேண்டும்.

விஸ்வேஸ்வரரைத் தரிசனம் செய்யாதவர்களேயும், விஸ்வநாதரை நினேக்காதவர்களேயும் யமராஜருடைய தூதர்கள் பார்த்துக்கொண்டேயிருக்கிருர்கள். அவர்கள் கர்ப்பதுக்கத்தையடிக்கடி அனுபவித்துக் கொண்டேயிருக் கிருர்கள்.

ஒருவன் இந்த லிங்கங்கத்தை வணங்கினுல் அவனே ஸுராஸுரர்களும் வணங்குவார்கள். ஒருதரம் நமஸ்கரித்த பலனேப் பார்த்தோமானுல் திக் பாலர்களுடைய பதவியும் அதற்கீடாகாது.

ஏனென்ருல் திக் பாலர்கள் பதவியிலிருந்து ஒருநாள் கீழே விழவேண்டியிருக்கும், மஹாதேவனே நமஸ்கரித்தவனுக்கு ஒரு நாளும் வீழ்ச்சி ஏற்படாது.

ஏ! மஹரிஷிகளே! தேவதைகளே! கவனமாகக் கேளுங்கள், பரோபகாரத்துக்கு வேண்டியே நான் இதைக் கூறுகிறேன். பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜனலோகம் இவைகளிலெல்லாம் விஸ்வேஸ்வரருக்கு ஸமானமாக ஒரு லிங்கம் கூடக் கிடையாது.

விஸ்வநாதருக்கு ஸமானமான லிங்கமும் மணிகர்ணிகைக்குத் துல்யமான தீர்த்தமும், என்னுடைய ஸுபமயமான ஆனந்த வனத்திற்கு நிகரான தபோவனமும் மற்ருென்று கிடையாது.

இந்த வாராணஸிபுரியே தீர்த்தமயமாக இருக்கிறது. அதனுடைய பெயரே தீர்த்தங்களுக்கெல்லாம் தீர்த்தம் என்று முழங்குகிறது. இருந்த போதிலும் இந்த மஹா பவித்ரமான மணிகர்ணிகையே, எனக்கு ஸௌக்யத்தைக் கொடுக்கும் பூமி.

என்னுடைய இந்த அரண்மனையிலிருந்து வடகிழக்கு திசைக்கு மத்தியில் இடதுபக்கத்தில் 200 அடியும், தெற்கு பக்கத்தில் 300 (இந்த வடகிழக்கு மத்திய பாகத்தில் 500 அடி கங்கைக்கு மத்தியில்) மணிகர்ணிகையின் எல்லையாகும்.

இந்த பூமி த்ரிலோகங்களுக்கும் ஸாரஸ்வரூபமாகும். பரமாத்மாவிற்கும் ஆதாரஸ்தானமானது; அதனால் மணிகர்ணிகையை ஸேவிப்பவர்கள் என்னுடைய இதயத்தில் ஸுகமாகத் தூங்குகிறார்கள்.

என்னுடைய இந்த ஆனந்தவனத்தில் என்னுடைய இந்த அமுதமயமான லிங்கம் இருக்குமிடம் எல்லா ஸ்தானங்களுக்கும் மோக்ஷ ஸ்தானமாகும். இது பக்தர்களிடம் க்ருபையினால் ஏழு பாதாள லோகங்களையும் பேதித்து எழுந்திருக்கிறது.

க்ருத்ரிம புத்தியினால் இந்த லிங்கத்தைப் பற்றி, இது தானாகவே முளைத்து எழுந்ததல்ல, ப்ரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கமே என்று எவனாவது கூறினால் அவனுக்கு விதித்திருக்கும் தண்டனை என்னவென்றால் அவனுக்கு கர்ப்ப வாஸத்திலிருந்து விடுதலையே கிடையாது.

என்னுடைய பக்த ஜனங்களுக்கு உசிதமானதென்னவென்றால், இந்த லிங்கத்திற்கு பதார்த்தங்களை ஸமர்ப்பிக்க வேண்டும். ஏனென்றால் வேறு இடங்களில் செய்த பாபங்கள் மாதிரி இங்கு ஸமர்ப்பிக்கப்படும் வஸ்துக்கள் ஓரிடத்திலும் (இந்த லோகத்திலும் பரலோகத்திலும் கூட நாசமடையாது.)

எவர்கள் தூரதேசத்திலிருந்துகொண்டு என்னுடைய இந்த லிங்கத்தை அங்கேயே கருத்துடன் விசேஷமாக ஆராதித்துக்கொண்டு இருக்கிறுர்களோ, அவர்களை மோக்ஷலக்ஷ்மி, நான் அவர்களுக்குக் கொடுத்த போகங்கள் ஸஹிதம் இங்கு வஸிக்கச் செய்கிகிறுள்.

ஏ விஷ்ணு! ஏ ஸ்ருஷ்டிகர்த்தாவே! ஏ தேவகணங்களே! ஏ ரிஷீச்வரர்களே, நீங்கள் நான் சொல்வதை நன்கு கவனிக்க வேண்டும். என்னுடைய இந்த லிங்கம் ஸத்புருஷர்களுக்குப் பரமஸித்தி அளிக்கவல்லது. எனக்கும் இந்த லிங்கத்திற்கும் கொஞ்சம்கூட பேதம் கிடையாது.

ஸமஸ்த ஸித்திகளுக்கும் ஸாதன ஸ்வரூபமான என்னுடைய இந்த லிங்கத்தில் எவர்கள் ஸத்கர்மத்தால் ஸம்பாதித்த செல்வத்தை ஸமர்ப்பிக்கிறுர்களோ அவர்களுக்கு நான் அதற்குப் பதிலாக எல்லா ஸௌக்யங்களுக்கும் ஏகமாத்ர ஸாதனமான நிர்பயமான நிர்வாணபதத்தை தானமாக அளிக்கிறேன்.

நான் கைகளை உயர்த்திக்கொண்டு ஸத்யமாகக் கூறுகிறேன்- இந்த மூன்று உலகங்களிலும் எனக்கு ஸாரமான வஸ்து விஸ்வேஸ்வரருடைய லிங்கம், மணிகர்ணிகையின் ஜலம், காசீபுரி இம்மூன்றுமேயாகும்.

மஹாதேவர் இவ்வாறு கூறினபிறகு பராசக்தியும்கூட அந்த லிங்கத்திற்குப் பூஜை செய்து அதிலேயே மறைந்துவிட்டாள். அப்பொழுது ஸமஸ்த தேவதைகளும் ஜய ஜய என்று கோஷித்துக்கொண்டு வணங்கிவிட்டுத் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்றுர்கள்.

ஸ்கந்தர் கூறினுர்:- ஏ, மஹா முனியே! மித்ரா வருண நந்தனரே! நீரும் காசியைப் பிரிந்து விரஹத்துடன் இருக்கிறீர். அதனுல் தான் உமக்கு என்னுடைய புத்திக்கெட்டினமட்டும் இந்த அவிமுக்த க்ஷேத்திரத்தினுடைய பாபத்தை நாசம் செய்யும்

*மஹாத்மியத்தை வர்ணித்தேன். நீரும் கூடின சீக்கிரம் சில தினங்களுக்குள்ளாகவே காசியை அடைவீர்.*

*இப்பொழுது பகவான் பாஸ்கரர் அஸ்தாசலத்தின் சிகரத்தில் ஏறிவிட்டார். நாம் இருவரும் இப்பொழுது மௌனமாக இருக்க வேண்டிய ஸமயம்.*

*வ்யாஸர் கூறினார்:- ஏ ஸூத முனிவரே! இதைக் கேட்டுவிட்டு லோபாமுத்ரை ஸஹிதமாக அகஸ்திய முனிவர் உமாபுத்ரரான ஸ்கந்தரை அடிக்கடி வணங்கி ஸந்த்யோபாஸனைக்காக அங்கிருந்து சென்றார்.*

*விஸ்வநாதருடைய க்ஷேத்திரத்தின் அந்த ரஹஸ்யத்தை அறிந்ததனால் தர்மசித்தத்துடன் மஹர்ஷி அகஸ்தியர் விஸ்வநாதரை ஆராதிப்பதில் சித்தத்தைச் செலுத்தினார்.*

*ஏ ஸூதரே! நூற்றுக்கணக்கான வருஷங்கள் சென்றாலும்கூட ஆனந்த கானனத்தின் மஹிமையைத் துதிக்க சக்தியுள்ளவர் ஒருவருமில்லை. பரமாத்மா மஹாதேவர் ஜகதம்பா பார்வதி தேவிக்குக் கூறிய பிரகாரம் மஹாத்மா ஸ்கந்தர் அதை அப்படியே கும்பமுனிக்கு வர்ணித்தார்.*

*ஏ! உத்தமரே! நான் அதை அப்படியே உமக்கு சுகர் முதலியவர்களுக்கு முன்னால் கூறினேன். இன்னும் ஏதாவது கேட்க விரும்புகிறீர்களானால் கேளுங்கள். அதை நான் கூறத்தயாராக இருக்கிறேன்.*

*ஸகல வாஞ்சித பலன்களையும் அளிக்கக்கூடிய ஸகல கல்மஷங்களையும் நாசம் செய்யக்கூடிய பவித்ரமான இந்த அத்யாயத்தைக் கேட்பதிலுல் ஒருவன் மிகவும் ஸுக்ருத் ஆகிறான்.*

*இவ்விதம் ஸ்கந்த புராணத்தில் நான்காவதான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான தொண்ணூற்றொன்பதாவது அத்யாயம் ஸம்பூர்ணம்.*

# *அத்யாயம் 100*

*ஸூத முனிவர் கூறினார்:- ஏ மஹாத்மா! இந்த ஸ்கந்த புராணத்தில் அடங்கியுள்ள ஸர்வோத்தமமான காசீ கண்டத்தைக் கேட்டு மிகவும் ஸந்தோஷமடைந்தேன். அக்கதையை என்னுடைய இதயத்திலும் இறுத்திக்கொண்டுவிட்டேன்.*

*ஏ பராசர குமாரரே! தாங்கள் இப்பொழுது இந்த க்ரந்தத்தை கர்மக்ரம பூர்வமாக அதனுடைய உவமைகூற இயலாத மஹாத்மியத்தை மறுமுறை சுருக்கிக் கூறுவார்கள். அதனால் அது பூர்ணமாகட்டும்.*

*வ்யாஸர் கூறுவார்:- ஏ தர்மாத்மா! ஜாதுகர்ணீயின் தநயரே! ஸூதரே! நான் எல்லோருடைய பாபங்களையும் நாசம் செய்து, புண்ணியத்தை விருத்தி செய்யும் அநுக்ரமணிகர் என்னும் கதை சுருக்கமாகிய அத்யாயத்தையும் காசீ கண்டத்தினுடைய மகாத்மியத்தையும் வர்ணிக்கிறேன். மிக்க கவனத்துடன் கேளும், இதை சுகர் வைசம்பாயனர் முதலிய பிள்ளைகளும் கேட்கட்டும்.*

*இந்தக் காசீ கண்டத்தின் முதல் அத்யாயத்தில் விந்த்யபர்வதத்திற்கும் நாரத முனிக்கும் ஏற்பட்ட ஸம்வாதம் கூறப்பட்டிருக்கிறது. பிறகு க்ரமமாக ஸத்யலோக ப்ரபாவம், அகஸ்த்யாச்ரமத்திற்கு தேவதைகளின் வருகை, பதிவ்ரதையின் சரித்ரம், அகஸ்திய முனியின் புறப்பாடு.*

*தீர்த்தத்தின் மஹிமை, ஸப்த புரிகளின் வர்ணனை; ஸூர்ய லோகத்தின் விவரணம், சிவசர்மா இந்திர லோகத்தையும் அடைதல், அக்னியின் ஜன்மம் (பிறப்பு) நிர்ருதியும் வருணனும் பிறந்தகதை, கந்தவதி அலகாபுரி இவைகளின் விருத்தாந்தம். சிவசர்மாவின் சந்திரலோக யாத்திரை, நக்ஷத்ர லோகத்தின் கதை, சுக்கிர பகவானின் பிறப்பு, செவ்வாய், ப்ருஹஸ்பதி, சனி ஆகிய*

*உலகங்களின் வர்ணனே, ஸப்தரிஷி மண்டலத்தின் விவரம், துருவனின் தபஸ், துருவலோகத்தின் நிலே.*

*சிவசர்மாவின் ஸத்யலோக தரிசனம், சதுர்புஜனின் அபிஷேகம், சிவ - சர்மாவின் நிர்வாணப்ராப்தி,*

*ஸ்கந்தர் அகஸ்திய ஸம்வாதம், மணிகர்ணிகையின் உற்பத்தி கதை, கங்கா மஹாத்மியம், கங்கா தசஹராஸ்த்தோத்திரம்,*

*கங்கா ப்ரபாவத்தின் வர்ணனம், கங்காஸஹஸ்ர நாமம், வாராணஸியின் கீர்த்தி, காலபைரவரின் ஆவிர்பாவம்,*

*தண்டபாணியின் உற்பத்தி, ஞானவாபியின் உற்பத்தியின் கதை, கலாவதி உபாக்யானம், ஸதாசார நிரூபணம்.*

*ப்ரம்மசாரி ப்ரகரணம், ஸ்த்ரீலக்ஷணம், கர்த்தவ்ய, அகர்த்தவ்யம் இவைகளின் விவரணம், அவிமுக்தேஸ்வரரின் வர்ணனம்,*

*க்ருஹஸ்தாச்ரம தர்மயோக நிரூபணம், காலஞானம், ராஜா திவோதாஸனின் சரிதம்;*

*காசீவர்ணனம் யோத்னீ கணங்களின் கதை, லோலார்க்கரின் கதை, உத்தரார்க்கரின் வர்ணனே,*

*ஸாம்பாதித்யனின் மகாத்மியம், த்ருபதாதித்யன் (மயூகாதித்யன்) கதை, கருடோபாக்யானம் அருணார்க்கர் முதலியவர்களின் வர்ணனே.*

*தசாஸ்வமேத தீர்த்தத்தின் வர்ணனே; மந்த்ராசலத்திலிருந்து கணங்களின் வருகை, பிசாச மோசனத்தின் கதை, கணேசனின் புறப்பாடு;*

*கணேசரின் மாயாவர்ணனம், டுண்டிராஜரின் ப்ராதுர்பாவம், விஷ்ணுமாயையின் விஸ்தாரம், திவோதாஸரின் விஸர்ஜனம்.*



*பஞ்ச நதத்தின் உற்பத்தி, பிந்து மாதவத்தின் ஆவிர்பவம், வைஷ்ணவத் தீர்த்தங்களின் மகாத்மியம்.*

*வ்ருஷபத்வஜ சூலபாணி மந்த்ராசலத்திலிருந்து காசிக்கு வருகை, ஜ்யேஷ்ட ஸ்தானத்தில் மஹாதேவருக்கும் ஜயகீஷவ்ய முனிவருக்கும் ஸம்வாதம்.*

*பாப நாசகமான க்ஷேத்ர ரஹஸ்யத்தின் மகிமை, கந்துகேஸ்வரர், வ்யாக்ரேஸ்வரர் இவர்களுடைய கதை,*

*சைலேஸ்வரருடைய வர்ணனை, ரத்னேஸ்வரருடைய தரிசனம், க்ருத்தி வாஸேஸ்வரரின் உற்பத்தி; அறுபத்தெட்டு கோவில்களில் (அவர்களின்) வருகை.*

*காசியில் தேவதைகளின் அதிஷ்டானம், துர்க்காஸுரனுடைய பராக்ரமத்தின் வர்ணனை; துர்க்காதேவியின் விஜயம், ஓம்காரேஸ்வரர் வர்ணனை;*

*ஓம்காரேஸ்வரருடைய மஹிமையின் ஸ்துதி; த்ரிலோசனருடைய உற்பத்தி, த்ரிலோசனருடைய மகாத்மியம், பக்ஷிகளின் கதை, விஸ்வபுஜா கௌரியின் உபாக்யானம், துர்த்தமனின் கதை;*

*வீரேஸ்வர உபாக்யானம், வீரேஸ்வரருடைய மகிமை, கங்கா தீர்த்தத்தையும், துறைகளையும் காமேஸ்வரரையும் பற்றியுள்ள மகாத்மியம்.*

*விஸ்வகர்மேஸ்வரருடைய கதை, தக்ஷனுடைய யக்ஞத்தைப் பற்றிய விவரம், ஸதியின் தேகத்யாகம், தக்ஷேஷ்வரருடைய உற்பத்தி.*

*பார்வதீஸ்வரருடைய வர்ணனையின் கீர்த்தனம், நாமதேஸ்வரரின் உற்பத்தி, கங்காகேசவருடைய மகாத்மியம்.*

*சதீஸ்வரருடைய கதை, அம்ருதேஸ்வரர் முதலியவர்களின் வர்ணனை, வியாஸருடைய புஜத்தை ஸ்தம்பிக்கச் செய்தல், வியாஸருடைய சாப விமோசனம்.*

*க்ஷேத்ரத்திலுள்ள ஸமஸ்த தீர்த்தங்களின் வர்ணனே; முக்தி மண்டபத்தின் கதை, விஸ்வேஸ்வரருடைய ஆவிர்பாவம், யாத்ராமார்க்கத்தின் பிரதக்ஷிண விதிகள், இந்த நூறு ஸங்க்யையுள்ள உபாக்யானம் இந்த க்ரந்தத்தில் க்ரமமாகக் கூறப்பட்டிருக்கின்றன.*

*இந்த ஸூசிகையை (அட்டவணையை) கேட்பதினுல் ஸமஸ்த காசீ கண்டத்தையும் கேட்ட பலன் கிடைக்கும். இந்த அட்டவணை அடங்கியுள்ள அத்யாயத்தின் யாத்திரையின் முறையும் கிரமமாகக் கூறப்பட்டுள்ளது;*

*ஸூதர் கூறினுர்:- ஏ! ஸர்வோத்தமா, ஸத்யவதியின் நந்தனரே, இப்பொழுது தாங்கள் ஸித்தியை விரும்பி பிரார்த்திப்பவர்கள் யாத்திரையை எவ்விதம் முறையாக அனுஷ்டிக்க வேண்டும் என்பதைப் பற்றி வர்ணிக்க வேண்டும்.*

*வியாஸர் கூறினுர்:- மஹாப்ராக்ஞரே, மிகவும் சிரத்தையுள்ள யாத்திரிகர்கள் முதலாவது ஸந்தோஷத்துடன் எப்படி யாத்திரை செய்ய வேண்டும் என்பதைக் கூறுகிறேன்.*

*யாத்ரிகர்கள் முதலாவது மணிகர்ணிகா குண்டத்தில் வஸ்திர ஸஹிதமாக ஸ்னனம் செய்துவிட்டு, தேவதைகளுக்கும், பித்ருக்களுக்கும் தர்பணம் செய்துவிட்டு, பிராம்மணர்களையும், பிக்ஷுகர்களையும் ஸந்தோஷப்படுத்த வேண்டும்.*

*பிறகு ஸூரியதேவர், விஷ்ணு, தண்டபாணி மஹேஸ்வரர்களை வணங்கிவிட்டு, டுண்டிராஜ் கணேசரை தரிசனம் செய்யவேண்டும்.*

*அங்கிருந்து ஞானவாபி ஜலத்தை ஸ்பர்சித்து, ஆசமனம் செய்துவிட்டு, நந்திகேஸ்வரர், தாரகேஸ்வரர், மஹாகாலேஸ்வரர் இவர்களுடைய பூஜைகளை முடித்துக்கொண்டு,*

தண்டபாணீஸ்வரரைப் பூஜிக்க வேண்டும். இந்த யாத்ரையின் பெயர் பஞ்சதீர்த்த யாத்ரை.

பெரிய பலன்களை விரும்பும் ஜனங்கள் ப்ரதி தினமும் இந்த பஞ்ச தீர்த்த யாத்திரையைச் செய்வது உசிதம். ஸர்வஸித்திகளையும் அருளும் விச்வேச்வரத்துக்கு யாத்திரை செய்ய வேண்டும்.

கிருஷ்ண பக்ஷத்து ப்ரதமையில் ஆரம்பித்து சதுர்தசி வரையில் பதினன்கு தினங்களில் விதிபூர்வகமாக முன்கூறிய பதினன்கு கோவில்களுக்கும் யாத்திரை சிரத்தையாகச் செய்ய வேண்டும்.

க்ஷேத்திர ஸித்தியை விரும்புகிறவர்கள் ஒவ்வொரு சதுர்தசிக்கும் ஒவ்வொரு தீர்த்தமாக ஸ்னனம் செய்து அந்தந்த லிங்கங்களைப் பூஜிக்க வேண்டும்.

எவன் மௌனமாக யாத்திரை செய்கிருனே, அவனுக்கு அந்த யாத்திரையின் பலன் உடனேயே கிடைக்கும். முதலாவது மத்ஸ்யோதரி தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து க்ரியைகளை முடித்துக்கொண்டு, ஓம்காரேஸ்வரரைத் தரிசிக்க வேண்டும்.

பிறகு த்ரிலோசனர், மஹாதேவர், க்ருத்திவாஸேஸ்வரர், ரத்னேஸ்வரர், சந்த்ரேஸ்வரர், கேதாரேஸ்வரர், தர்மேஸ்வரர், வீரேஸ்வரர், காமேஸ்வரர், விஸ்வகர்மேஸ்வரர், மணிகர்ணிகேஸ்வரர் இவர்களை தரிசனம் செய்து பூஜை செய்ய வேண்டும். க்ஷேத்ரவாஸிகள் கருத்துடன் இந்த யாத்திரையைச் செய்ய வேண்டும்.

ஒருவன் க்ஷேத்திரத்தில் இருந்துகொண்டு இந்த யாத்திரையைச் செய்யாமல் விட்டால் அவனை க்ஷேத்திரத்திலிருந்து வெளியே தள்ளுவதற்கான அநேக இடையூறுகள் நேரிடும்.

ஒவ்வொரு அஷ்டமிக்கும் விசேஷசமாக மேற்கூறிய இடையூறுகள் வராமல் இருப்பதற்காக சாந்திக்காக வேறு

எட்டு கோவில்களுக்கு யாத்திரை செய்ய வேண்டும். அதற்கு தக்ஷேஸ்வரரைத் தரிசனம் செய்து, பார்வதீஸ்வரர், பசுபதீஸ்வரர், கங்கேஸ்வரர், நர்மதேஸ்வரர், கபஸ்தீஸ்வரர், ஸதீஸ்வரர், தாரகேஸ்வரர் இவர்களைத் தரிசனம் செய்யவேண்டும்.

பெரிய பெரிய பாபங்களின் சாந்தியின் பொருட்டு இந்த எட்டு லிங்கங்களையும் தரிசனம் செய்ய வேண்டும். இவைகளைத் தவிர இன்னும் மேலான யோக க்ஷேமத்தையும் சுபத்தையும் கொடுக்கக்கூடிய மற்றொரு யாத்திரை இருக்கிறது.

இதை க்ஷேத்திர வாஸிகள் ஸமஸ்த விக்னங்களும் சமனம் ஆகும் பொருட்டு, அவசியம் செய்தாக வேண்டும். அதாவது முதலில் வருணா நதியில் ஸ்னானம் செய்துவிட்டு, ஶைலேஸ்வரரைத் தரிசனம் செய்ய வேண்டும்.

பிறகு வருணா கங்கா ஸங்கமத்தில் ஸ்னானம் செய்து ஸங்கமேஸ்வரரைத் தரிசனம் செய்ய வேண்டும். பிறகு ஸ்வலீன தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து ஸ்வலீனேஸ்வரரைத் தரிசிக்க வேண்டும்.

பிறகு மந்தாகினீ தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து மத்யமேஸ்வரரைத் தரிசிக்க வேண்டும். பிறகு ஹிரண்ய கர்ப்ப தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து ஹிரண்ய கர்ப்பேஸ்வரரைத் தரிசனம் செய்ய வேண்டும்.

அதன் பிறகு மணிகர்ணிகா தீர்த்தத்தில் ஸ்னானம் செய்து ஈசானேஸ்வரரைத் தரிசிக்கவேண்டும்.

பிறகு கோப்ரேக்ஷ கூபஜலத்தினால் ஸ்னானம் செய்து கோப்ரேக்ஷ்வரரைத் தர்சிக்க வேண்டும்.

அதற்குப் பிறகு கபிலேஸ்வர மடுவில் ஸ்னானம் செய்து வ்ருஷபத்வஜரைத் தர்சனம் செய்யவேண்டும். பிறகு உபசாந்தமென்னும் கிணற்றில் ஜலதர்பணம் செய்து, உபசாந்த சிவனைத் தரிசனம் செய்யவேண்டும்.

பிறகு பஞ்சசூடா மடுவில் ஸ்னனம் செய்து ஜேஷ்டஸ்தானத்தை அர்ச்சிக்க வேண்டும். பிறகு ஸமுத்ரம் என்ற கிணற்றில் ஸ்னனம் செய்து சதுஸ்ஸமுத்ரேஸ்வரரைப் பூஜிக்க வேண்டும்.

அவருக்கு முன்னுல் இருக்கும் கிணற்றின் ஜலத்தை ஸ்பர்சித்து சுக்ர கூபத்தில் ஜலதர்பணம் செய்ய வேண்டும். பிறகு சுக்ரேஸ்வரரைத் தரிசிக்க வேண்டும்.

தண்டகாத தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து வ்யாக்ரேஸ்வரரைப் பூஜிக்க வேண்டும். பிறகு சௌனகேஸ்வர தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து ஜம்புகேஸ்வரரைத் தரிசிக்க வேண்டும். இந்த விதமாக யாத்திரை செய்துமுடித்தவன் துக்கஸாகரமான ஸம்ஸாரத்தில் திரும்பவும் ஜன்மமே எடுக்கமாட்டான்,

கிருஷ்ணபக்ஷத்து பிரதமையில் ஆரம்பித்து சதுர்தசிவரை க்ரமமாக இந்தக் கோவில்களுக்கு யாத்திரை செய்ய வேண்டும்.

இந்த யாத்திரை செய்வதினுல் மனிதன் திரும்பவும் ஜன்மம் எடுக்கமாட்டான். இதேமாதிரி மற்றும் பதினெரு கோவில்களுக்கு யாத்திரை செய்ய வேண்டியது.

அக்னீந்தர குண்டத்தில் ஸ்னனம் செய்து அக்னீந்த்ரேஸ்வரர், ஊர்வசீஸ்வரர், நகுலீஸ்வரர், ஆஷாடீஸ்வரர், பாரபூதேஸ்வரர், லாங்குலீஸ்வரர், த்ரிபுராந்தகேஸ்வரர், மனப்ரகாமேஸ்வரர், ப்ரீதிகேஸ்வரர் மதலாஸேஸ்வரர், திலதர்ப்பணேஸ்வரர், இந்தப் பதினேரு லிங்கங்களையும் முயற்சி எடுத்துக்கொண்டு யாத்திரையாகச் சென்று பார்க்க வேண்டும். இந்த யாத்திரையைப் பண்ணுகிறவர்கள் ருத்திர பதவியையடைவார்கள்.

இப்பொழுது நான் உவமை கூற முடியாத கௌரியாத்திரையைப் பற்றிக் கூறுகிறேன். சுக்ல பக்ஷத்து த்ரிதீயையன்று இந்த யாத்திரையைச் செய்வதினுல் பரம ஸௌக்யம் ஏற்படும்.

*முதலாவது கோப்ரேக்ஷ தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து முகநிர்மாலிகா தேவியைத் தரிசிக்க வேண்டும். பிறகு ஜ்யேஷ்டாவாபியில் ஸ்ஞனம் செய்து ஜ்யேஷ்டா கௌரியைத் தரிசிக்க வேண்டும், பூஜிக்கவேண்டும்.*

*அதன் பிறகு ஞானவாபியின் ஜலக்ரியைகள் முடித்துக்கொண்டு ஸௌபாக்ய கௌரியை அர்ச்சிக்க வேண்டும்; பிறகு அங்கேயே ஸ்ஞஞதிகளை முடித்துக்கொண்டு ஸ்ருங்கார கௌரியைத் தரிசிக்கவேண்டும்.*

*விசாலமான கங்கையில் ஸ்ஞனம் செய்து விசாலாக்ஷியைத் தர்சிக்கவேண்டும். பிறகு லலிதா தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து லலிதா தேவியைத் தர்சிக்கவேண்டும்.*

*பிறகு பவானி தீர்த்தத்தில் ஸ்ஞனம் செய்து பவானியான அன்ன பூரணியைத் தரிசிக்க வேண்டும்; பிறகு பிந்து தீர்த்தத்தில் ஸ்ஞனம்செய்து மங்களா கௌரியைத் தரிசித்துப் பூஜிக்க வேண்டும்.*

*அதன் பிறகு ஸ்திர லக்ஷ்மி மேலும்மேலும் விருத்தியடையும் பொருட்டு மஹாலக்ஷ்மிக்கு யாத்திரை செல்ல வேண்டும்.*

*முக்திக்கு ஜன்ம பூமியான காசீ க்ஷேத்திரத்தில் இந்த யாத்திரை செய்தவன் இந்த லோகத்திலும்கூட துக்கத்தையனுபவிக்க மாட்டான். இந்தப் பிரகாரம் இங்கு ஒவ்வொரு சதுர்த்திக்கும் கணேசருடைய யாத்திரையைச் செய்ய வேண்டும்.*

*கணேசரை திருப்தி செய்யும் பொருட்டு ப்ராம்மணர்களுக்கு லட்டு தானம் பண்ணவேண்டும். பிறகு ஒவ்வொரு மங்கள வாரத்துக்கும் மஹா பாதக நாசினியான பைரவிக்கு யாத்திரையாகச் செல்லவேண்டும்.*

*ஸமஸ்த விக்னங்களும் சாந்தியடைவதற்காக ரவிவாரத்திலும் பானு ஷஷ்டியிலும், பானு ஸப்தமியிலும்*

ஸூர்ய நாராயணத்துக்கு யாத்திரையாகச் செல்ல வேண்டும்.

அஷ்டமியிலும், நவமியிலும் சண்டி துர்க்கைக்கு சுபயாத்திரை செல்ல வேண்டும். ஒவ்வொரு நாளும் முடிந்தமட்டிலும் காசீக்ஷேத்திரத்தில் உள்புற யாத்திரை செய்ய வேண்டும்.

அதாவது முதலாவது ப்ராத:க் காலம் கங்கையில் ஸ்ஞானம் செய்து, பஞ்ச விநாயகர்களை நமஸ்கரித்து விட்டு முக்தி மண்டபத்திலமர்ந்து விஸ்வேஸ்வரரை த்யானிக்க வேண்டும்.

பிறகு ஸமஸ்த பாபங்களும் சாந்தியடையும் பொருட்டு காசிக்ஷேத்ரத்தின் உள்பிராகார யாத்திரையைச் செய்கிறேன் என்று ஸங்கல்பம் செய்து கொண்டு மணிகர்ணிகைக்குச் செல்ல வேண்டும்.

அங்கு மௌனமாக ஸ்ஞானம் செய்துவிட்டு மணிகர்ணிகேஸ்வரரைப் பூஜிக்க வேண்டும். பிறகு இரண்டு கல்பலாஸ்வரதேஸ்வரர்களையும் வாஸுகேஸ்வரரையும் நமஸ்கரிக்க வேண்டும்.

அதன் பிறகு பர்வதேஸ்வரர், கங்காகேசவர், லலிதாதேவி, ஜராசந்தேஸ்வரர் இவர்களைத் தரிசிக்க வேண்டும். பிறகு சோமநாதர் ஆதிவராஹத்தின் வழியாகப் போய் ப்ரம்மேஸ்வரர், அகஸ்தீஸ்வரர் இவர்களை வணங்க வேண்டும்.

கஸ்யபேஸ்வரரை நமஸ்காரம் செய்துவிட்டு பிறகு ஹரிகேசவன், வைத்யநாதன், த்ருவேஸ்வரர் இவர்களைத் தரிசனம் செய்துவிட்டு, கோகர்ணேஸ்வரரைப் பூஜித்து விட்டு ஹாடகேஸ்வரத்துக்கு வந்து ஹஸ்திக்ஷேப தடாகத்தை (கடஹரஸேநியா) கீகேஸ்வரரைத் தரிசனம் செய்து பிறகு பாஸ்ரபூதேஸ்வரர், சித்ரகுப்தேஸ்வரர், சித்ரகண்டாதேவி இவர்களை நமஸ்கரித்துவிட்டு பசுபதீஸ்வரர், பிதாமஹேஸ்வரர், கலஸேஸ்வரசந்திர

*சேகரேஸ்வரர், வீரேஸ்வரர், வித்தேஸ்வரர், அக்னீஸ்வரர், நாகேஸ்வரர், ஹரிசந்த்ரேஸ்வரர், பிறகு விக்னங்களை நாசம் செய்யும் சிந்தாமணி விநாயகர் ஸேனுவிநாயகர் இவர்களைத் தரிசிக்க வேண்டும்.*

*பிறகு வஸிஷ்டரும் வாமதேவரும் இவர்கள் சிலாரூபமாக இருந்துகொண்டு, காசியில் பெரிய பெரிய விக்னங்களையெல்லாம் விரட்டியடித்துக் கொண்டேயிருக்கிறுர்கள். அதனுல் அவர்களை மிக்க முயற்சி செய்து தரிசனம் பண்ண வேண்டும்.*

*அதற்குப் பிறகு சீமாவிநாயகர், கருணேஸ்வரர் இவர்களைத் தரிசித்துக்கொண்டு, த்ரிசந்தேஸ்வரர். விசாலாக்ஷிதேவி, தர்மேஸ்வரர், விஸ்வபுஜாகௌரி, ஆசாவிநாயகர், விருத்தாதித்யர், சதுர்வக்தாரஸ்வரர், ப்ராம்மீஸ்வரர், மனப்ரகாமேஸ்வரர், ஈசானேஸ்வரர், சண்டிகாதேவி, சண்டீஸ்வரர், பவானிரங்கர், இவர்களைத் தரிசித்துவிட்டு டுண்டிராஜ் கணபதியை வணங்கிய பிறகு ராஜ ராஜேஸ்வரரைப் பூஜை செய்யவேண்டும்.*

*அதன் பிறகு லாங்குலேஸ்வரர், நகுலீஸ்வரர், பரான்னேஸ்வரர், பரத்வ்யேஸ்வரர், ப்ரக்ரஹேஸ்வரர், நிஷ்களங்கேஸ்வரர், மார்க்கண்டேயேஸ்வரர், அப்ஸரேஸ்வரர், சுங்கேஸ்வரர், இவர்களைப் பூஜித்து தர்சனம் பண்ணிக்கொண்டு பிறகு ஞானவாபியில் ஸ்னனம் செய்யவேண்டும்.*

*பிறகு நந்திகேஸ்வரர், தாரகேஸ்வரர், மஹாகாலேஸ்வரர், தண்டபாணி, மஹேஸ்வரர், மோக்ஷேஸ்வரர், வீரபவரேஸ்வரர், அவிமுக்தேஸ்வரர், பஞ்சவிநாயகர்கள், இவர்களை வணங்கி விஸ்வநாதரிடம் வரவேண்டும்.*

*இதுவரை மௌனமாக இருந்ததை விட்டுவிட்டு, கீழ்க்கண்ட மந்திரத்தைச் சொல்ல வேண்டும்.* ***''அந்தர்க்ருஹஸ்ய யாவரேயம் யதாவத்யா மயாக்ருதா, ந்யூனுதிரிக்தயா ஸம்பூப்ரியதாம் அனயா***

விபு:'' அதாவது என்ஞல் முடிந்தமட்டும் நான் செய்த இந்த அந்தர்க்ரஹ யாத்திரை மூலமாக நான் செய்வது குறைவாஞலும் அதிகமாஞலும் விஸ்வேஸ்வரர் அதை ஏற்றுக் கொண்டு என்னிடம் ப்ரஸன்னமாக இருக்க வேண்டும்.

இந்தப் பிரார்த்தஞ மந்திரத்தை ஜபித்துவிட்டு க்ஷணமாத்திரம் முக்தி மண்டபத்தில் இளைப்பாறிவிட்டு பாவங்களற்றுப் போன புண்ணியவாஞன அந்த யாத்ரி தன் க்ருஹத்துக்குத் திரும்ப வேண்டும்.

இதைப் போலவே ஹரிவாஸரம் வந்தால் மஹா புண்ணியத்தை சேகரிக்கும் பொருட்டு கருத்துடன் ஸமஸ்த விஷ்ணு க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செய்யவேண்டும்.

பாத்ரபதமாஸம் (புரட்சி) பௌணர்மியன்று வாட்டபைரவர் என்னும் குலஸ்தம்பத்தை பூஜிக்க வேண்டும். அதைப் பூஜித்தால் ருத்ர பிசாசுகளிஞல் ஏற்படும் துக்கத்தையனுபவிக்க வேண்டாம்.

காசி வாசம் செய்பவர்கள் ச்ரத்தையோடுகூட இந்த யாத்திரைகளை மேற்கொள்ள வேண்டும். மேலும் பர்வங்களில் விசேஷமாக, அவச்யமாக எல்லா இடங்களுக்கும் யாத்ரை செல்லவேண்டும்.

புண்ணியத்தை விரும்பும் ஜனங்கள் யாத்ரை செய்யாமல் ஒருதினம் கூட வீணுக்கக்கூடாது. ஆஞல் இரண்டு யாத்திரைகளைக் கருத்துடன் செய்ய வேண்டும்.

அதாவது ஒவ்வொரு தினமும் அவசியமாக கங்காஸ்ஞனமும், விசுவநாத தரிசனமுமான இரண்டு யாத்திரைகள் செய்ய வேண்டும்.

எவர்கள் காசியில் இருந்து கொண்டுகூட தினம் யாத்திரை போகாமல் தினங்களை வீணுகக்கழிக்கின்ருர்களோ, அவர்களுடைய ஸமஸ்த பித்ருக்களும் அவநம்பிக்கையடைகிருர்கள்.

*அன்றே அவன் காலரூபமான ஸர்ப்பத்தினுல் தீண்டப்பட்டு ம்ருத்யுவிற்கு லக்ஷ்யமாகிருன். ஒருநாள் பகவான் விஸ்வேஸ்வரரின் தரிசனம் கிடைக்காவிட்டால் அவனுடைய புண்ணியங்கள் அத்தனையும் கொள்ளையடிக்கப்படும்.*

*ஒருவன் மணிகர்ணிகையில் ஸ்ஞனமும் விஸ்வேஸ்வரரின் தரிசனமும் செய்வாஞனுல் எல்லாக் கோவில்களின் யாத்திரையையும் எல்லா தீர்த்தங்களில் ஸ்ஞனமும் செய்த பலனை அனுபவிப்பான். இது முற்றிலும் உண்மை. தினமும் மணிகர்ணிகையில் ஸ்ஞனமும் விஸ்வேஸ்வரரின் தரிசனமும் அவசியம் செய்ய வேண்டும்.*

*வ்யாஸர் கூறுவார்: ஏ ஸூத முனிவரே! ஸ்கந்த புராணத்தில் எடுத்துக்கூறிய இந்த உத்தமமான காசீகண்டத்தைக் கேட்பவர்கள் ஆயிரக்கணக்கான பாபங்களைச் செய்தவர்களாஞலும் ஒரு பொழுதும் நரகத்துக்குப் போகமாட்டார்கள்.*

*எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்ஞனம் செய்வதினுல் ஸம்பாதிக்கும் புண்ணியம் முழுவதும் இந்தக் காசீகண்டத்தைக் கேட்டவுடனேயே கிடைத்துவிடும். ஏ ஸூதா! இதில் கொஞ்சங்கூட சந்தேகமேயில்லை.*

*கேவலம் இந்த கிரந்தத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே எல்லா விதமான தானபலன்களும் அநேகவிதமான யக்ஞங்களை அனுஷ்டித்து புண்ணிய பலன்களும் அவர்களுக்குக் கிடைக்கும்.*

*கோரமான தபஸ்செய்வதினுல் ஏற்படும் மகத்தான பலனும் இந்தக் காசீ கண்டத்தை சிரவணம் செய்வதாலேயே அவர்களுக்குக் கிடைத்துவிடும். இது மட்டுமா! காசீ கண்டத்தைக் கேட்பதினுல் ஸாங்கோபாங்கமாக வேதத்தை அத்யயனம் செய்த பலனும் கிடைக்கும்.*

*கயாதீர்த்தித்தில் பிண்டதானமும், காசீகண்ட சிரவணமும் இவை இரண்டையும் செய்பவர்களின் பித்ருக்கள் ஒரேமாதிரி திருப்தியடைகிறார்கள்.*

*ஸமஸ்த மங்களங்களுக்கும் இருப்பிடமான காசீகண்டத்தைக் கேட்பவர்களுக்கு எல்லாப் புராணங்களையும் கேட்ட பலன் கிடைக்கும்.*

*பரம புண்ணிய சீலர்களான ஜனங்கள் ஸ்திரத்தோடும் உவமை கூற முடியாத காசீ மகாத்மியத்தைக் கேட்பவர்களானால் சகல தர்மங்களைக் கேட்ட பலன் அனுபவிப்பார்கள்.*

*ஏ! பிராம்மணோத்தமர்களே! இந்தக் காசிகண்டத்தைப் படித்தாலும் கேட்டாலும் ஸர்வோத்தமமான தேவ பூஜை செய்த பலனையடைவார்கள்.*

*இந்த காசீகண்டத்தில் ஒரு உபாக்யானம் கேட்டாலும் போதும். தர்ம சாஸ்திரங்களைக் கேட்ட பலன்களையடைகிறான். இந்தக் காசீகண்டம் பரமதர்மங்களையும் உற்பத்தி செய்வது; மகத்திலும் மகத்தான அர்த்த நுட்பங்களை எடுத்துக்கூற வல்லது. எல்லா விருப்பங்களையும் அடைய ஏகமாத்ர ஸாதனம் என்று கூறப்படுகிறது.*

*இதைக் கேட்பதினால் ஸ்வர்க்க ப்ராப்தி கிடைக்கும் என்பதற்கல்ல- முக்தியும் அதிக தூரத்தில் இல்லை. இந்த உத்தம காசீகண்டத்தைக் கேட்பவர்களுடைய பூர்வ புருஷர்கள் மிகவும் சந்தோஷமடைகிறார்கள்.*

*விஷ்ணு, மஹாதேவர் முதலிய எல்லா தேவதைகளும், ஸனக, ஸனந்தனர் முதலிய மகரிஷிகளும் மற்ற முனிவர்களும் சந்தோஷமடைகிறார்கள்.*

*எவ்வளவென்று தான் சொல்வது? வாராணஸி புரியின் இந்த மகிமையைக் கேட்பதினால் அண்டஜம், பிண்டஜம், உத்பிஜம், ஸ்வேதஜம் என்னும் நான்கு ஸ்ருஷ்டிவர்க்கங்களும் பரம சந்தோஷமடைகின்றன.*

ஒரு வித்வான் காசீகண்டத்தை முழுவதுமோ, அல்லது பாதியோ, அல்லது கால்பாகமோ, அல்லது ஒரு பதமாவது படித்துக் கூறுவானுனல் அவரை இஷ்டதேவதை போல் கருதி கருத்துடன் நமஸ்கரித்துப் பூஜிக்க வேண்டும். விச்வேஸ்வரரைத் திருப்திப்படுத்தும் பொருட்டு, நம்மால் முடிந்த அளவு அவருக்கு மரியாதை, செய்து தானமும் செய்ய வேண்டும்.

ஏனென்றுல் அந்த வாசகர் சந்தோஷமடைந்தாரென்றுல் பகவான் விஸ்வேஸ்வரரும் சந்தோஷமடைகிறுர். இதில் கொஞ்சம் கூட சந்தேகமேயில்லே. எங்கெங்கு பரமானந்தத்திற்கு இருப்பிடமான காசீகண்டம் கூறப்படுகிறதோ, ஆங்காங்கு அமங்களத்தின் சாயை துளிக்கூட இருக்காது.

புண்ணியாத்மாவான வித்வான் ஒருவர் இந்தக் காசீ கண்டத்தைப் படித்தாலும் சொன்னுலும் கேட்டாலும் அவன் ருத்ர ஸ்வரூபமாக ஆகிறுன். ஒருவர் இந்த ரமணீயமான புஸ்தகத்தை எழுதி ஒரு பிராம்மணருக்கு ஸமர்ப்பித்தாரானுல் அவருக்கு ஸமஸ்த புராணங்களேயும் எழுதி தானம் செய்த பலன் கிட்டுகிறது. இதற்கு மறுப்பில்லே.

இந்த கிரந்தத்தில் எத்தனே உபாக்கியானங்கள் இருக்கின்றனவோ, எத்தனே ஸ்லோகங்கள் இருக்கின்றனவோ, எத்தனே பதங்கள், எத்தனே அக்ஷரங்கள், எத்தனே குறிகள் இருக்கின்றனவோ, பதங்களில் எத்தனே வரிசைகள் இருக்கின்றனவோ இந்த ரம்யமான புஸ்தகத்தின் அட்டையில் எத்தனே நூல்கள் ஊடும் பாவமாகச் சென்றிருக்கின்றனவோ, எத்தனே சித்திரங்கள் இருக்கின்றனவோ அத்தனே ஆயிரம் யுகங்கள் புஸ்தகத்தைத் தானம் செய்தவர் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகிறுர். ஒருவர் இந்த ஸர்வோத்தமமான காசீ கண்டத்தை 12 தடவை கேட்டதனுல் மஹாதேவருடைய அனுக்ரகத்தினுல் அவர் ப்ரம்மஹத்தி செய்திருந்தால்கூட அத்தோஷம் சீக்கிரமே விலகிவிடும்.

புத்திரர்கள் இல்லாதவர்கள் ஸ்ஞனம் செய்து புனிதத்துடனும் சிரத்தையுடனும் விதிப்பிரகாரம் இதைக் கேட்டால் அவருக்கு சங்கரரின் ஆக்ஞை பிரபாவத்தினுல் புத்திரரத்னம் கிடைக்கும்.

ஏ! ஸுதமுனிவரே! என்னவென்று கூறுவது? யார் யாருக்கு என்னென்ன மனோரதங்கள் உண்டோ, அந்த மனோரதங்களெல்லாம் கேட்டவுடனே பூர்த்தியாகிவிடும்.

ஒருவன் தூரதேசத்தில் இருந்தாலும், இந்த உவமை கூற முடியாத காசீகண்டத்தைக் கேட்டானுனல் சிவாக்ஞையினுல் அவனும் காசீவாசம் செய்த புண்ணியத்திற்குப் பாத்திரவானுவான்.

இதைக் கேட்பதினுல் சுத்த இதயம் படைத்த ஜனங்கள் எங்கும் வெற்றியையே காண்பார்கள். எப்பொழுதும் ஸௌபாக்யமே உண்டாகும்.

எந்தப் பரம நிர்மல சித்தமுடைய புண்ணிய சீலர்களான ஜனங்களிடம் பகவான் விஸ்வேஸ்வரர் சந்தோஷமடைந்தாரானுல் அவன் ஒருவனுக்கு இத்தகிரந்தத்தைக் கேட்கவேண்டுமென்கிற புத்தி ஏற்படுகிறது.

ஸமஸ்த மங்களங்களுக்கும் கிட்டுவதற்காகத் தங்கள் வீடுகளில் மங்களப் பொருள்களுக்கு மத்தியில் ஸர்வோத்தம பரம மங்களமயமான **காசீகண்டம்** எழுதின புத்தகத்தை வைத்துப் பூஜிக்கவேண்டும். ஸுமங்களமான வ்ருத்தியைக் கொடுக்கும் இந்தப் புனிதமான காசீகண்டம் படித்துக் கேட்டு, ஹ்ருதயத்தில் அறிந்தால் ஞான ஸித்தியைக் கொடுக்கிறது.

ஹே! காசீ விஸ்வநாதா! உன்னுடைய க்ருபையினுலேயே இந்தக் காசீகண்டத்தின் மொழிபெயர்ப்பை என்னுல் எழுத முடிந்தது.

ஹே! நாதா! தங்களுடைய பாத கமலங்களில் இதை ஸமர்ப்பிக்கிறேன். உன்னுடைய சேவகனுல்

***உபாயனமாகக் கொடுத்து காணிக்கையாக இதை ஏற்றுக்கொள்ளுங்கள் நாதா!***

***இவ்விதம் ஸ்கந்தபுராணத்தில் 4வது கண்டமான காசீ கண்டத்தில் உத்தரார்த்த பாஷாடீகாவான ஒவ்வொரு அத்யாயத்தின் சுருக்கத்தின் சூசகமான நூறுவது அத்யாயம் ஸம்பூர்ணம்.***

## *இந்தக் கிரந்தமும் பூர்ணமடைந்தது.*

